மனநிறைவை உண்டாக்கும் மொத்தப் பணபுக் கூறு களையும் ஆராய்வது. வேலை மனநிறைவை அளவிடு தலில் இவ்விரு முறைகளும் ஒரேவகையான முடிவு களைத்தான தருகினறன.

பணியாளா வேலை மனநிறைவை அளவிட அளவுகோல முறையும் பயன்படுத்தபபடுகிறது. காப் பேக்கு (Hoppock) எனபவர் 1935-ஆம் ஆணடில் 'வேலை மனநிறைவு' என்ற நூலை வெளியிட்டாா. அதில் அவர் இலிக்காட்டு அளவுகோல் நுணுககமுறை யைப் பயனபடுததி வேலை மனநிறைவை அளவீடு செய்துளளாா. இத்தகையஆய்வில் ஈடுபட்ட உட்சு (W A.Woods)எனபாா தாசுடன அளவுகோல் நுணுகக முறையைப் பயனபடுததி மனநிறைவை அளவீடு செயதுளளார்.

வேலை மனநிறைவை அளவிட ஓர் எதிாமறை யான வழியும பினபற்றப்படுகிறது அது ஒருவேலை யைவிட்டு வெளியேறிச சென றவாகளின பணபுக கூறுகளைக கணடறிந்து அவர்களின மனநிறைவைக கணிப்பதாகும அதன்படி பாாக்குமபோது வேலை மனநிறைவின்மைககு ஒரு குறிப்பிட்ட பணபுக் கூறு அன்றி பல பணபுககூறுகள காரணமாக இருபபது தெரியவந்தது.

தனியாளகளையும அவர்களின நலன்களை யும ஆராய்வதன வாயிலாகப பணியாளாகளின வேலை மனநிறைவு அளவிடப்படுகிறது. இதன அடிப் படையில ஒருவரை வேலைக்குச் சோககும முனனரே அவரின் மனநிறைவு அலலது மனநிறைவினமை முனன மைவூட்ட (Predispose)முடியுமெனறு நமபப்படுகிறது

ஒரு வேலையில் ஒருவா ஆறு மாதஙகளுக்கு மேல நிலைத்து நிறபாரானால அவா வேலை மனநிறைவு உடையவா எனறு கருதப்படுகிறாா. வேலைக்கேறற திறமையிலலாதவர்களும, மனநிறைவு இலலாதவர் களும் இடையிலேயே வேலையைவிட்டு வெளியேறி விடுவா. கி இரா

தொழில்முறை வழிகாட்டல்.ஏறககுறைய 50 ஆண்டுகளுககு முனனர் ஒருவரை அடையாளங காண்பது அவரின் சமயம் அல்லது சாதியை மைய மாகக கொணடதாக இருநதது அநதந்த இனததவா களுககெனத் தனிததனி வீதிகள இருநதன. முதலி யார்பேட்டை, கிறித்தவர் பேட்டை அக்கிரகாரம, வைசியாவீதி, தேவாஙகப் பேட்டை என்றெலலாம இருநதன. அத தொகுதிகளில பிறர் குடியிருபபதென் பது விதிவிலக்காகத்தான் இருககும. இனறு பெருவா ரியாக அவ்வாறிலலை. இனறு மககளின் உடை, குடி யிருப்பு, பேசசு, வாழககை முறை போனறவை அவர வர்களின தொழிலைப பொறுத்திருககினறன. காவற காரர் குடியிருப்பு. ஆசிரியர் குடியிருபபு, மருத்துவா குடியிருப்பு, தொழிலாளர்குடியிருப்புஎனஉளளது சந்திப்பவர்களகூட'என்ன சாதி' எனறு கேட்பதைத தவிாத்து 'எனனவேலை செய்கிறீர்கள்?' எனறு கேட் கின்றனர்.தொழிலானது வாழககையின் போககு என றாகி விட்டது. சாதி, சமயம அழிந்து விடவில்லை எனினும், இனறு ஒருவரின வாழககையில ஆதிக்கம் செலுததுவது அவர் செய்யும தொழில்தான தொழி லுலகில் வாய்ப்பிலலை எனறால மதிப்பிலலை. எந்த வேலைக்கும போகாதவருககுச் சொந்த வீட்டிலும் மரியாதை இருப்பதிலலை,

முன்பு, தொழிலகளை வெளிபபடையாக அறிய முடிநதது இன்று, பல தொழில்கள இயஙகும முறையை அறியமுடிவதில்லை. ஆகவே, தொழில முறைவழிகாட்டல தேவையாகிவிட்டது முனபெல லாம் இலாடம், நகை, ஓடு, பொறி, வேட்டி, கூடை, வண்டி போன்றவை எவவாறு செய்யப்பட்டன எனப தைப் பாாக்கமுடிநதது. சட்டைககுப் போடும பொத தான, கரையும் காபபிபபொடி, மருநதுகள, பேனா, குளிர்பதனப் பெட்டி போனறவைஎவ்வாறு செய்யப படுகின்றன எனபது தெரிய முனபோனற வாயபபு கள் இருபபதிலலை. நூற்றுக்கணக்கில புதுப்புதுத தொழிலகள வேறு வந்தவணணம் உளளன. ஆகவே எநதெநதத் தொழிலுக்கு எததகைய கலவியும் பயிற சியும தேவை என்பதும,வேலைவாய்பபுகளும் தெரிவ திலலை இக் காரணஙகளினாலதான தொழில்முறை வழிகாட்டல் தேவைபபடுகிறது. அமெரிககாவில்தான இதறகான பெரும முயற்சி எடுக்கப்பட்டது.

அந்நாட்டின தேசிய தொழில்முறை ஆற்றுப்படுத தும சங்கமானது(National Vocational Guidance Association)1937-ஆம ஆண்டில கருப்பொருள விளக கம (Definition) ஒனறு தநதது. வழிகாட்டுவது ஒரு நிகழ்ச்சி அன்று; அது தொடர்நதுஅளிக்கப்பட வேண டும எனறு கருதினா அவவாறு வழிகாட்டுவது உதவியாகஇருக்கக கூடாது; தனககுத தானே உதவிக கொளளும முறையில நெறிபபடுத்தபபட வேணடும ஆகவே, அவவாறு முயலுவதோடு துணைநிற்பது தான நலலது தொழிலமுறை ஆறறுப்படுததலென பது (Vocational Guidance) தனியொருவன ஒரு தொழிலைத தேர்நதெடுபபதிலும, அதறகென ஆயத தமாகி அபபணியில் ஈடுபடுவதிலும், வளர்வதிலும் தொடர்ந்து துணைநிற்கும செயறபாஙகாகும் (Process) தொழிலைத் தேர்நதபிறகு. பயிறசி பெறறுப பணியில நுழைநது வளாச்சிபெறுதல எனபது பழைய முறை

தன் தொழிலைச செயவதிலிருநது மகிழசசிபெறு தல முக்கியமெனக் கருதபபட்டது. பேருந்துகளில

நடமாடும் சேப்படித் திருடர்கள் மகிழத்தான் செய்கின்றனர். அத்தொழிலில் திறமைபெற்று வளரவும் செய்கின்றனர். ஆனால், சமூகத்திற்குத் தீங்கிழைக்கினறனர். அவர்களின் ஆளுமையானது மனவளம் கெட்டிருக்கும். அக் குறைகளைக் காண ஏறக்குறைய 15ஆணடுகள் பிடித்தன. ஆகவே, 1951-ஆம் ஆணடில் தோனாலடு சூபர் எனபவரால் தொழில்முறை ஆற்றுப்படுத்தல் பற்றிய மறு கருப்பொருள் விளக்கம் தரப்பட்டது. 'தொழில்முறை ஆற்றுப்படுத்தலானது ஒருவர் தம்முடைய ஆளுமையைப் போதிய அளவு முழுமையாக வளர்த்து மனமார ஏறறு, அதோடு த் தொழிலுலகில் தம் பங்கினையும் உணர்ந்து, இ ககூற்றை மெய்மை நிலையில் சோதித்து இக்கருத்தை மெய்யியல்பாக்கித் தமக்குத்தாமே மனநிறைவைத் தேடிக்கொள்வதோடு சமூகத்திற்குப் பயனுடைய வராக இருப்பதற்கும் உதவுவதாகும்' என்பதே அவ் விளககமாகும்.

**வரலாற்றுக் குறிப்புகள** அமெரிக்காவிலிருக்கும் போசுடன் நகரத்து பிரான்க்பார்சன (Frank Parson) எனபவரைத்தான் தொழில்முறை வழிகாட்டலுக்கான இயக்கத்தின் தந்தை என்பர். தனியாளின் திறமைகளும், தொழிலின தேவைக்கும் ஒப்பிட்டு இணக்கம் காண்பதுதான் அவருடைய முயற்சியாக இருந்தது (செர்ட்சர், இசுடோன் 1974).

கல்கத்தாப் பல்கலைக்கழகத்தில்தான் முதன் முறையாகத் திட்டவட்டமான நெறிப்படுத்தும் முறையானது அப்பொழுதிருந்த உளவியல் துறைத் தலைவர், முனைவர் போசு என்பவரால் 1938-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது தொழில்முறை வழிகாட்டலை அடுத்த ஆண்டில்தான் (1939) தொடங்கினர். மூன்று ஆண்டுகள் கழித்துஇக்கருத்தானது பாட்லிபாய் என்ற வணிகரால் பம்பாய் நகருக்குச் சென்றது. ஆறு ஆண்டுகள் வெற்றியுடன் செயற்பட்ட பிறகு இவருடன் ஓர் உளவியற்பேராசிரியரான முகர்சி என்பவர் சேரவே, ஆற்றுப்படுத்தலில் (Guidance) பயிற்சியையும் தந்தனர். நாடு சுதந்திரமடையும் வேளையில் (1947) இதனைச் சில பார்சி இனத்தவர் ஏற்றுப் 'பார்சி பஞ்சாயத்துத் தொழில நெறிப்படுத்தும் அமைப்பு' எனற பெயரில் மிகவும் சிறப்பாக இயக்கினர். அதன்பிறகு உத்தரப்பிரதேசம், பீகார் மகாராட்டிரம் போனற அரசுகளே தொழில்முறை வழிகாட்டல் அமைபபுகளைத் தொடஙகின. தொழில்முறை வழிகாட்டலுக்கான மைய அமைப்பு ஒனறு 1954-ஆம் ஆண்டு தில்லியில் தொடங்கப்பட்டது. அதனபிறகு நாடு முழுவதும் வழிகாட்டல் மையங்கள் தொடங்கப்பட்டன. இவைதவிரத் தனியார் முயற்சியின் பயனால் ஆங்காங்கே சுழல் சங்கங்களும் (Rotary Clubs) கல்கத்தா, பம்பாய், பெங்களூர் போனற மாநகரங்களில் கிறித்தவ இளைஞர் சங்கங்களும் (YMCA) எளிய முறையில் தொழில் முறை வழிகாட்டலைச் செய்து வருகின்றன.

**தொழிலாசிரியர் கடமைகள்:** தொழில்முறை வழிகாட்டலுககு மிகவும் முக்கியமானவை கல்வி-தொழில பற்றிய செய்திகள். பொதுவாகத் தொழில் ஆசிரியர்களின் வாயிலாக இச்செய்தியைப் பெறலாம ஆனால, எல்லாப் பள்ளிகளிலும் தொழில் ஆசிரியர்கள் (Career Masters) நியமிக்கப்படுவதில்லை; அவர்களை நூல் நிலையங்களிலும் வேலைவாய்ப்பு அலுவலங்களிலும் காணலாம்.

தொழிலாசிரியர் எட்டாம் வகுப்பு மாணவர்களுக்குக்கூடத் தொழிலுலக அமைப்பையும், பயிற்சி வாய்ப்புகளையும் பொதுவாக அறிமுகப்படுத்த வேண்டும. மாணவர்களின் ஆர்வத்தையும் ஆற்றலையும் அடிப்படையாகக் கொணடு பினனா விருப்ப பாடங்களைத் தேர்நதெடுப்பதிலும் உதவலாம் பள்ளியின் நெறிப்படுததுநருடன் (Counsellor) சேர்ந்து இதனைச் செய்வது மிகவும் பயனுடையதாக இருக்கும். மேல் வகுப்பு மாணவர்களுக்குக் கல்லூரிகளிலிருக்கும் கல்வி வாய்ப்புகளையும் தெளிவாக அறிமுகம் செய்வதுண்டு

தொழில்களைப் பற்றியும் பயிற்சிகளைப் பற்றியும் பேச்சுகளை அமைப்பதோடு மாணவர்களுக்கு நேரடி உறவு ஏற்படுத்தக் களச் செலவுகளையும் (Field trips) ஏற்பாடு செய்யவேண்டும். வெவ்வேறு தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களை அழைத்துத தத்தம் தொழிலை பறறிப் (Career talk) பேசவைப்பதோடு மாணவர்களுடன் உரையாட வைப்பதும் மிகவும் பயனை அளிப்பதுணடு. தொழிற்பேச்சைத் தருபவர்கள தம்முடைய அன்றாடப் பணிகளையும், தாம் தொழிலில் நுழைந்த விதத்தையும், வருவாயையும், தொழிலிலிருக்கும இடுக்கணகளையும், வசதிகளையும், வளர்ச்சிக்கான வாய்ப்புகளையும் விளக்கினால் இளம் மாணவாகள சிறந்த விளக்கத்தைப பெறுவார்கள் (சுரேந்திரநாத்து-1963).

இந்தியப் பள்ளிகளில் தொழிலாசிரியர், ஆசிரிய நெறியாளர் (Teacher Counsellor), நெறிப்படுத்துநர் என மூன்றுவகையில் பயிற்சி பெற்றோர் தொழில் முறை வழிகாட்டலை நடத்தி வருகின்றனர். இதற்கான பயிற்சியை 5மாதம் முதல ஓர் ஆண்டு வரை மாநிலத் தொழில் ஆற்றுப்படுத்தல் மையங்களிலும் (Guidance Bureau), பல்கலைக் கழகஙகளிலும அளித்து வருகின்றனர். (மெகதா கனடே 1963).

**பயன்படு கருவிகள்:** தொழில்முறை வழிகாட்டலுக்குப் பலவகையான ஆதாரங்கள் தேவைப்படுகின்

றன. அதற்காகப் பயன்படுவன தேர்ச்சிச் சோதனை, கள், ஆர்வ நிரல்கள, தொழிலாற்றல் சோதனைகள் சமூகவியல் அளவீடுகள், நேர்முக உரையாடல், தொடர் பதிவேடுகள், தனிப்பட்டவரின் தொழில் வெற்றி வரலாறுகள், வேலைவாய்ப்பு அலுவலக வெளியீடுகள், ஒவ்வொரு தொழிலிலும் தனித்தனி வேலைக்கான கையேடுகள், படச்சுருளகள, சுவ ரொட்டிகள, நெறிப்படுத்தலுக்கான மாத, காலாண்டு ஏடுகள முதலியனவாகும். ம.பெ.

**துணை நூல்கள:**


Mileer, C.H., Guidance Services, John Weather hill. Inc. Tokyo, 1965.

Pandit, J.C., World of Work, Orient Longmans, Bombay, 1970.

Surendranath,K; Handbook for Career Masters, NCERT, New Delhi, 1962.


***தொழில் முனைவோர்***: உறபத்திக்கு அடிப் படையாக அமையும் காரணிகள் பல. நிலம்,உழைப்பு, மூலதனம் ஆகியன உற்பததியை நிருணயிககின்றன என்று தொட்க்க நிலையில் பொருளியல் அறிஞர்கள கூறினர். தொழிற்புரட்சிக்குப் பின் உலகில் பல நாடு களில தொழிற்சாலைகள பெருகின. சந்தையில பல பண்டங்களுக்குப்போட்டிகள உருவாயின. தொழிலின பல்வேறு நுண்ணிய நுட்பஙகளை அறிந்து பொருள களின் உற்பத்தியையும் தரததையும் பெருக்குவதறகு முயற்சிகள் மேறகொளளப்பட்டன. இநநிலையில தொழில்களைத தொடஙகி, உருவாக்கி மேலாண்மை செய்கிறவர்கள் தொழில் முனைவோர்(Entrepreneur) என்று சொல்லப்படுகின்றனர். எனவே, தொழில முனைவோரின ஆக்கப் பணியும் உற்பத்திபில ஒரு காரணியாக அமையத்தொடஙகியது.மேலுமதொழில முனை வோரின் நடவடிக்கை வேளாண்மை, தொழில, வணிகம், தொழில பணி போனற பொருளாதாரச செயல்களோடு இணைநதுள்ளதாகும. அதாவது உற பத்தி இடம், உற்பத்தி அளவு, உற்பத்திப் பொருள, உற்பத்திக் காலம், உற்பததி முறை, உறபததிக் காரணிகளின் இணைப்பு அளவுகள், விற்பனை முறை, விற்பனை இடம் போன்ற பலவற்றில் முடிவுகளை மேற்கொள்பவர் தொழில் முனைவோர் ஆவர். சந்தையில் ஏற்படும் போட்டி, தேவை, ஆர்வம் போன்ற சிக்கல்களையும் தொழில முனைவோர் எதிர்நோக்கிச் செயறபடுவா. இதனால் முன்னேற்ற மும் தேக்கமும் தொழில் முனைவோரின் ஆக்கத்தை யும் திறனையும் பொறுததே அமைகினறன.

பல்வேறு அறிஞாகள தொழில் முனைவோரின பணிகளைப் பற்றி விளககியுள்ளனர். கேணடிலன் (Cantillon) என்ற பிரஞ்சு அறிஞர் முதன்முதலில் தொழிலில்ஈடுபடும் ஊகததைக் கணித்து வழிநடத்தும் பணியைச் செய்பவரே தொழில் முனைவோர் எனறு இலக்கணம் வகுத்தார். சே. பி.சே. (J.B. Say) 'உற்பத் திக் காரணிகளை ஒருங்கிணைத்து உற்பத்தி நடவடிக் கைகளில ஈடுபடுவோர் தொழில முனைவோர்' என்று கூறினார். பொருளியல் தந்தை என்று சொல்லப்படும ஆதம் சுமித்து (Adamsmith) தொழிலை நடத்தும் முதலாளி எனறும, மூலதனத்தை அளிப்பவர் எனறும் குறிப்பிட்டார். மேலும் தொழிலாளருக்கும, நுகா வோருக்கும் இடையில் பணியாற்றும் மேலாளரும் தொழில் முனைவோரே ஆவர் என்றும் கூறினார். பொருளியல் அறிஞர் தாவீது இரிக்கார்டோ (David Ricardo), தொழில முனைவோர் மூலதன ஆக்கத் தைச செய்து பொருளாதார வளாச்சியை ஊககு விப்பவர் என்று கூறினார். சும்பீட்டர் (Schumpeter) தொழில் முனைவோர் பொருளாதாரத்தின ஆக்க சக்தி எனறும், புதிய கண்டுபிடிப்பாளர் (innovator) எனறும் கூறினார் மேலும் தொழில் முனைவோர் என்பவர் வணிகத் தலைவர்கள என்பதும் வெறும மூலதனத்திறகு மட்டும் சொந்தக்காராகள அல்லா என்பதும் இவர் கருத்தாகும்.

தொழில் முனைவோர் வளாந்துவரும நாடுகளில மிகப்பெரிய பங்கினை வகிக்கின்றனா. இவாகள் ஆற்றும் பஙகினைப் பற்றிப் பல ஆய்வுகள் மேற் கொள்ளப்பட்டன. மேலை ஐரோப்பிய நாடு களிலும், சப்பான், இலத்தீன அமெரிக்க நாடுகளிலும் தொழில் முனைவோர் ஒரு குறிப்பிட்ட சமுதாய, பொருளாதார வகுப்பிலிருந்துதான் தோன்றியுள ளார்கள என்றும, இங்கிலாந்து, அமெரிக்கா, துருக்கி போன்ற நாடுகளில் வணிகததிலிருந்துதான் தொழில முனைவோர் தோனறியுள்ளார்கள் எனறும் குறிப் பிடப்படுகிறது, சில மதஙகளும்கூடத்.தொழில் முனை வோரின் ஆக்கத்தை ஊக்கம் செய்துள்ளது. கிறித்தவ மதத்தின ஒரு பிரிவான சீர்திருத்தக் கிறித்தவ மதத் தினபண்பாடு, ஐரோப்பிய நாடுகளில புதிய தொழில் முனைவோரைத் தோற்றுவித்தது எனவும் ஆய்வா ளர்கள கூறுகின்றனர்.

இநதியாவில. தொழில் வளர்ச்சி தொடஙகிய காலத்தில் சில சமய சமூகத்தினர் தொழில முயற் சியை மேற்கொண்டனர். பார்சிகள (Parsees), மார் வாடிகள (Marwadees), சிந்திகள் (Sindies) போனற வாகளே முதன்முதலில் தொழில் முனைவோர்களாக இருந்தனர் என்றும், வட்டார அளவில பல வகுப் பினரிடமிருந்து தொழில முனைவோா தோன்றினர் எனறும் ஆய்வுகள் கூறுகின்றன. செனனை, கோய முத்தூர் போனற தொழில் நகரஙகளில் நாயுடு, பிராமணர், செட்டியார் போன்ற சமூகப் பிரிவினரிட

மிருந்துதான் தொழில் முனைவோர் தோன்றியுள்ளனர். மேலும், தொழில் முனைவோர் பல்வேறு சமூக, பொருளாதாரச்சூழ்நிலைகளுக்கேற்ப ஒவ்வொரு நாட்டிலும் வளர்ந்துள்ளனர். உலக அளவில் போக்குவரத்துத் தொடர்பு சாதனங்கள் பெருகித் தொழில வளர்ச்சியும், தொழில்நுட்ப வளர்ச்சியும் பெருகியுள்ளதால், தொழில் முனைவோரின திறமையிலும செயற்படும் முறையிலும் உலகம் தழுவிய தாக்கங்கள ஏற்பட்டுள்ளன. பொதுத்துறைத் தொழில் நிறுவனங்களில தொழில்முனைவோரின் பணிகள மேலாண்மை இயக்குநரால் (Managing Director) ஒழுங்குபடுத்தப்படுகின்றன. கல்வி, தொழில் நுட்பக கல்வி, மேலாண்மைப் பயிற்சி போன்ற புதிய பயிற்சிகளால் உலகெங்கிலும் தொழில முனைவோரின திறமை வளர்ந்து வருகிறது. மு நா.

**துணை நூல:**

Gangadhara Rao, N., Entrepreneurship and Growth of Enterprise in Industrial Estates, New Delhi, 1986.

***தொழிலக உளவியல்*** தொழிற்சாலைகளிலும் பணிமனைகளிலும் பணிபுரியும பணியாளர்களின நடத்தையை முறையாக ஆராய்கிறது; இந்தப் பணியாளர்களின் நோக்கங்களையும், பணிக்கான அவர்களின் தகுதிகளையும் ஆராய்கிறது. பயிற்சியினால ஏற்படும் பழக்கத்தின் திறமைகளையும், தொழிலக வேலைக்கான நோக்கங்களையும், வேலைச் சூழ்நிலையின் பொருட்சார்ந்த பகுதிகளையும் தொழிலக உளவியல (Industrial Psychology) நோக்கமாகக் கொண்டுள்ளது. வெப்பமும வெளிச்சமும் உற்பத்தியின் மீது கொண்ட மேலாண்மையும, வேலைச சூழலில் தொழிலாளர்களின் பாதுகாப்பும் தொழிலக உளவியலின் செய்திப் பொருளாகும். வேலையில ஏற்படும் சோர்வு, சலிப்பு ஆகியவற்றின காரணங்களையும் தொழிலக உளவியல ஆராய்கிறது; தொழிற்சாலையில பணியாற்றும் அனைத்து மனிதர்களின் மன நலத்திலும் நாட்டம் கொண்டுள்ளது; குழப்பமடைந்தவர், மனமுறிவு கொண்டவர் போன்றவர்களுக்கு உதவிசெய்து அவர்களின் மனநலத்தை மேம்படுத்த முனைகிறது.

தொழிலக உளவியலின் அடிப்படை நோக்கம தனி மனிதர்களையும், பணியாளர் குழுக்களையும் வேலைச் சூழல்நிலையில ஆராய்வதாகும். பணியாளர்களுக்கும் அவர்களை மேற்பார்வை செய்வோருக்குமிடையே உள்ள உறவு, தொழிலாளர்களுக்கும் நிருவாகத்திற்குமிடையே உள்ள உறவு நலிவிணக்கம், அவற்றிற்கான காரணங்கள ஆகியவை பற்றியும் தொழிலக உளவியல ஆர்வம கொண்டுள்ளது.

தொழிலக உளவியல் பலவகைகளில் பயன்படுகிறது அது தொழிலகத்தில் வேலை கொடுப்போர், வேலை பெறுவோர், வேலை செய்வோர் என்ற மூவகை மனிதர்களுக்கும் பணியாற்றுகிறது; பல வகைத் தொழில் வல்லுநர்களுக்கும், தொழில இயக்கங்களுக்கும் ஆலோசனை வழங்குகிறது. தொழில்களைப் பாகுபாடு செய்து, இயக்கம் அல்லது அசைவு (Motion) பற்றி ஆய்வது, தொழிலாளர்களின் ஊதியம், வாழ்க்கைப படி பற்றி விவாதிப்பது ஆகியனவும் தொழிலக உளவியலின பயனாக உள்ளன.

தொழிலக உளவியல் புதிய தொழிலாளர்களைத் தேர்ந்தெடுக்கவும் அவர்களின் தகுதி, உளஆற்றல், நுண்ணறிவு, பயிற்சித்தன்மை முதலியனவற்றை ஆராய்ந்து அதற்குத்தக்க பணியில் அமர்த்தவும பயன்படுகிறது. தொழிலாளர்களின பயிற்சித திறமைகளுக்கேற்ப அவர்களுக்குப் பணியுயர்வு, பணி நீக்கம், பணிமாற்றம் அளித்திடுவதில் பெரும பங்காற்றுகிறது. தொழிலாளர்களைத் தரம் பிரித்தல், அவர்களின மனநலம், மன ஒழுக்கம ஆகியவற்றிலும இது ஆர்வம் காட்டுகிறது.

தொழிலக உளவியல் சோதனை முறை, மருத்துவ முறை, எல்லை அளவாய்வுமுறை என்ற மூன்றுவகைகளைப் பெரிதும் பயன்படுத்தித் தொழிற்கூடங்கள், தொழிலாளர்கள், நிருவாகத்தினர் ஆகியோரிடையே காணப்படும் பல்வேறு சிக்கல்களை ஆராய்கிறது.

தொழிலக உளவியல் 1913-ஆம் ஆண்டில் தோன்றியதாகக் கருதப்படுகின்றது. இவ்வாண்டில் ஹ்யூகோ மன்சுடர்பர்கு (Hugo Munsterberg) எழுதிய 'உளவியலும் தொழிலகச் செய்திறமையும்' என்ற நூல தொழிலக உளவியலுக்கான அடிப்படையாகும். பின்னர் முதலாம உலகப்போருக்குப்பின் அமெரிக்க உளவியலார் இத்துறையில பல முன்னேற்றங்களைச செய்தனர். 'பயனமுறை உளவியல் ஆய்வு சஞ்சிகை' (Journal of Applied Psychology) 1917-ஆம் ஆண்டு வெளிவந்தது. தொழில்கூடம பற்றிய பலவேறு ஆராய்ச்சிக் கட்டுரைகள இதில் வெளியிடப்பட்டதைத் தொடர்ந்து அமெரிக்கக் கலலூரிகளில் பயன் முறை உளவியல் ஒரு பாடமாகப் புகுத்தப்பட்டது. பின்னர் இதோடு உறவுடைய பணித்துறையாளர் உளவியல, வாழ்க்கைத் தொழில உளவியல பாடங்களும் ஏற்படுத்தப்பட்டன. இசுகாட்டு (Scott) என்பவர் 1919-ஆம் ஆண்டில் 'பிலடெல்பியாவின் இசுகாட்டுக் குழு' என்ற அமைப்பைத் தொழிலகங்களில ஏற்படும் நிருவாக மற்றும் பணித்துறையாளர் சிக்கல்களைத் தீர்வு செய்திடும நோக்கத்தோடு ஏற்படுத்தினார்.

தொழிலக உளவியலில் ஓர் எல்லைக் கல்லாகச் சொல்லப்படும் காவதுரோன் ஆய்வுகள் (Hawthorne)

Studies) 1927-ஆம் ஆண்டு அமெரிக்கச் சிகாகோ நகரிலுள்ள மேலைநாட்டு மினகுழுவினால் நடத்தப் பட்டன. மனித உறவு, மறறும் குழு ஒழுங்குணர்வில் மன ஊக்கத்தின் பாஙகினையும், தொழிலகத்தே தொழிலாளரிடையே காணப்படும் களைப்பிற்கும், சலிப்பிற்கும் இடையிலான உறவினையும், தொழில் கூடத்தின் வெளிச்சத்திற்கும், உற்பத்தித் திறனுக்கு முள்ள உறவினையும கணடறிவதில் காவ்த்ரோன் ஆய்வுகள் பெரிதும் ஆர்வம காட்டின.

இரணடாம் உலகப் போரின் போது தொழிற் கூடங்களின் உளவியலின் வளர்ச்சி மேலும் வலுப் பெற்றது. அமெரிக்கப் பயனமுறை உளவியல மன்றம 1937-இல்அமைக்கப்பட்டது இம்மன்றம வெளியிட்ட பல ஆய்வுக் கடடுரைகள தொழிலக உளவியலின் இன்றியமையாமையினை வலியுறுத்தின. இக்காலத்தில தான் அலுவலர் தேர்வு,பல்வகைப்பயிறசிததிட்டங்கள், வேலைப் பகுப்பாய்வு, வேலை மதிப்பீட்டு முறைகள முதலியன தோனறின. 'பணியாளா உளவியல்' என்ற பயன்முறை உளவியல இதழ 1948-இல வெளி வந்தது இது தொழிற்பயிறசி, வேலைப் பாகுபாடு, வேலை நிலைகள, கருவிகள் உருவாககுதல, ஊககம், கட்டுப்பாடு முதலியவை பற்றிய ஆய்விற்கு முன் னுரிமை கொடுத்தது.

இரண்டாம் உலகப்போருக்குப் பின தொழிலக உளவியலின் வளர்ச்சி குறிப்பிடுமபடியாக வளர்ந்தது. அமெரிக்கப் பயன்முறை உளவியலாளர்கள் மனித காரணிச் சஙகம் (Human Factor Society) எனற அமைப்பைத் தோற்றுவித்தனா. இது மனித பொறி யியல் பற்றிய ஆய்வுகளில பெரும் ஈடுபாடு காட்டி யது. பிரிட்டனில் ஒரு மனித காரணிச் சங்கம் தோன்றி மனித ஆற்றல பறறிய இதழ் ஒன்றினை வெளியிட்டது. 'நிருவாக நடத்தையும் மனித செயற் பாடும்' எனற இதழ் 1966-ஆம் ஆணடில் அமெரிக்கா விலிருந்து வெளிவரத் தொடஙகியது. இது பயன முறை உளவியல் பறறிய கொள்கைக் கோட்பாடு களின் வளர்ச்சியினை வலியுறுத்துகிறது.

அண்மைக்காலத்தில், உளவியலார், நிருவாகம் மற்றும் குழுவிற்குள் ஏற்படும செயதித் தொடர்பு பற்றிய சிக்கல்களை ஆயவதில ஆர்வம காட்டுகினற னா. ஒரு தனி மனிதன செயதித் தொடர்பில எவ் வாறு பொருந்திச் செயறபடுகிறானெனறும, அது போலவே ஒருகுழுஒரு துறையில எவவாறு பொருநதிச் செயற்படுகிறதெனறும் உளவியலார் கணிககினறனா. நிருவாகிகளின்வளர்சசிஆயவுகள இக்காலத்தில உறுதி யான உசாவுகளுடன் நனகு முனனேறி வருகின்றன. அதுபோலவே தொழிறகூடஙகளில் மனித நலம பற்றியும் உளவியலார் ஆர்வம் காட்டி வருகினறனர். தொழிலக மனித நலம் வேலைக்கு வாராமை, உற் பத்தி, மற்றும் குடிப்பழக்கம் போனற சிக்கல்களை ஆயகின்றது. இயந்திரப் பொறிகளின் கண்டுபிடிப்பும், செயற்படு ஆய்வுகளும் தொழிலக உளவியலாரை மனித-இயந்திர அமைப்பின இணைப்பாளராக்கி யுள்ளன.

கி இரா.

**தொழிலாளர் இயக்கம்**: தொழிலாளர் இயக்கம் இஙகிலாந்தில் கி.பி 18-ஆம் நூற்றாணடில் நடைபெற்ற தொழிற்புரட்சிக்குப்பின் தோனறத் தொடஙகிற்று. மிகுதியான தொழிலாளர்களைத் தொழிற் கூடத்தில்அமாத்தி வேலை செயயும் முறை இப்புரட்சிக்குப்பின்னரே தோன்றியது. தொழிற் கூடங்களில் தொழிலாளர்கள ஒன்று சேர்ந்து பணி யாற்றும் பொழுது அவர்கள பல இடையூறுகளைச் சநதிக்கலாயினா. குறைநத கூலி, நீண்டநேரம் வேலை வாஙகுதல, சுற்றுச்சூழல், தூய்மைக்கேடு, விபத்து ஏற்படும்போது போதிய பாதுகாப்பினமை போன்ற நிலைமைகளால தொழிலாளாக்ளுக்கு உடல, உளளப்பாதிப்புகள ஏற்பட்டன. அதன் காரணமாக அளவற்ற தொழிலாளர்கள் நிலை கேடுற்றது இந்நிலையைப் போக்கவும், தொழிலாளர்கள் தங் களின்உரிமைகளை நிலைநாட்டிக்கொள்ளவும் தொழி லாளர் இயக்கம் (Labour movement)தோனறியது.

தொழிலாளர் சங்கஙகள (Labour Unions) கி.பி 18ஆம நூறறாண்டில் தோன்றத் தொடஙகினாலும் கி பி. 19-ஆம நூற்றாண்டிலும் 20-ஆம் நூற றாண்டிலும் முழு வளர்ச்சியடைந்து, பெரும் சகதி யாக உருவெடுத்து, அரசின் ஒப்புதலையும் பாது காப்பையும் பெறத் தொடங்கின.

தொழிலாளர் நல இயககங்கள் பல்வேறு நாடு களில பல்வேறு முறைகளில வளர்ந்து வநதுள்ளன. அந்நாடுகளின பொருளாதார, சமூகத் தேவைகளை யொட்டித் தொழில் மயமாதல், அரசியல் வரலாற்று அடிப்படையில் அமைந்துள்ளது. இங்கிலாந்து நாட்டில் இவ்வமைப்பு கூட்டுறவக் குழு முறையில (Guild System) வளர்ந்தது. தொழில் வாணிக அடிப்படையில் இயங்கிவந்த தொழிலாளர்கள ஒன்று சேர்நது தொழிற் கழகங்களை அமைத்தனர். ஆசுததிரேலிய நாட்டிலும் இம்முறையே பின்பற்றப் பட்டது.

அமெரிக்க நாட்டில் நாடு தழுவிய தேசியகழகங கள(National Unions) தொழில்துறை அடிப்படையில் இயஙகி வருகின்றன. சோவியத்து ஒன்றியத்தில் (U.S. S R.) தொழிலாளர் நலக் கழகஙகள தொழில அடிப் படையில அமைநதுள்ளன. தொழிற்கூடஙகளில் பணி யாறறும் எல்லோரும்தொழிலாளா கழகத்தில உறுப் பினராக இருப்பார்கள. பிரான்சு, இத்தாலி, பெல்சி யம போனற நாடுகளில் தொழிலுக்கு ஏறறவாறு இக்

கழகஙகள் அமைக்கப்படுகின்றன. இந்நாடுகளில் மதச் செல்வாக்கும தொழிலாளர் கழகஙகளில் உள்ளன.

சப்பான் நாட்டில் 80 விழுக்காட்டிற்கு மேல் தொழிலாளர்கள ஒரே தொழிற் கழகத்தின் கீழ் இயங்கி வருகிறார்கள. இநதியாவில் தொழிலாளர் கழகங்கள் மேறகூறிய நாடுகளில் அமைந்துள்ளது போல் இருப்பினும் தொழிற் சங்கத்தில் ஈடுபடும் தலைவர்கள பல்வேறு இடையூறுகளையும் தியாகங களையும சநதிக்க நேர்ந்துள்ளது. இந்தியாவில் மிகுதி யான தொழிலாளாகள உடல் உழைப்பை மூலதன மாக வைத்துப் பல்வேறு தொழிலகளில் ஈடுபடு கின்றனா. அதனால, தொழிலகளின தன்மையும் திறமையும் மாறுபடுகினறன.

இநதியாவின் பெரும் தொழிலில ஈடுபடும் தொழிலாளாகள் பல்வேறு தொழில நகரங்களில் வாழகினறனர் மேலும் இந்தியாவில் தொழிற செறிவு சில நகரஙகளைச் சுற்றி ஏற்பட்டுளளது. எடுத்துக் காட்டாக,நெசவு ஆலைகள் பம்பாய், கான்பூர், அகம தாபாது, இந்தூா போனற நகரஙகளிலும, மேற்கு வங்காளம, தமிழநாடு, கேரளா போனற மாநிலங களிலும மிகுந்த அளவில உளளன.அதுபோனறு சணல ஆலைத் தொழில் கலகத்தா நகரைச் சுறறி வளாந துளளது ஐநதாண்டுத் திட்டக் காலங்களில இரும்பு கனரகத் தொழிலகள, பொறியியல் தொழில்கள, சாக்கரை ஆலைகள், நிலக்கரிச் சுரங்கஙகள. சிமெண்டு தொழிற சாலைகள, இரசாயனத் தொழில கள், பாறை எணணெய்ச் சுத்திகரிப்புத் தொழில்கள போனற தொழில்களும் வளர்ந்துளளன. பொது நிறுவனஙகளும், தனியார் நிறுவனஙகளும் பெரும தொழிலகளில முதலீடு செய்துள்ளன. எனவே, இத தொழிலில் ஈடுபடுவோர் தொழிலாளா கழகங்கள அமைத்துளளனர். இத் தொழிலாளா கழகங்களின கூட்டமைபபு அகில இந்திய அளவில் இயஙகி வரு கினறது இந்தியத் தேசிய காங்கிரசு, இந்தியப் பொது வுடைமைக் கட்சிகள் சார்புடைய தொழிலாளர் கழகஙகள் பெரும அளவில் உளளன. குறிப்பாக மாநில அளவிலும், வட்டார அளவிலும் தொழி லாளர் கழகஙகள இநதிய விடுதலைக்குப்பின் வளர்ந் துளளன.

தொழிலாளர்கழக இயககம் உலகம் தழுவியபேரியக் கமாக இருந்து வருகிறது. நாடுகளும் பெருந்தலைவர் களும் தொழிலாளர் கழக இயக்கத்தின முக்கிய பஙகினை உணர்நதுள்ளனர். தொழிலாளர் இயக்கம் அமெரிகக நாட்டில முதன் முதலாக மலரத் தொடங் கியது. புதைமிதித் தொழிலில் (Shoe maker)ஈடுபடும் தொழிலாளர்கள் கி.பி.1794-ஆம் ஆண்டு தொழிலாளர் கழகத்தை அமைத்தனர். முதன முதலாகத் தங்களின் உரிமைக்காக கி.பி. 1799-ஆம் ஆண்டு வேலை நிறுத் தம் செய்தனர். தேசிய அளவில் கி.பி.1834-ஆம் ஆண்டு தொழிலாளர் கழகம் பேரியக்கமாக உருவெடுத்தது.

முதல் உலகப் போரின்போது தொழிலாளர்களுக் கும் நிருவாகத்தினருக்கும் ஒரு நல்லுறவு ஏற்பட்டது ஆனால் அந்நல்லுறவு நீணட நாள் நீடிக்கவிலலை. பொருளாதாரப் பெரு வீழ்ச்சியின்போது (Great Depression) இரு வகுப்பினருக்கும் ஏற்பட்ட நல்லுறவு சிதைந்து விட்டது. தொழிலாளர்கள் தஙகள உரிமை களை வலியுறுத்தத் தொடங்கினர். இரண்டாம் உலகப்போரின் போது மீண்டும் நல்லுறவு ஏற்பட்டுப் போர் முடிந்தவுடன் இவ்வுறவு முறியத் தொடங் கியது. அமெரிக்கத் தொழிற்சங்க வரலாற்றில் மிக்க அளவில் மார்க்சிய கண்ணோட்டத்துடன் தொழிலா ளர் கழகம் வளரவில்லை. ஊதிய உயர்வுககாவும் வேலை உறுதிக்காகவும் மிகுதியான தொழிலாளர் கழகங்கள் பாடுபடுகினறன.

இஙகிலாநதிலதொழிலாளர்கழகம் தொழிற் புரட் சிக்குப் பின்னரே மெல்ல வளரத் தொடஙகியது. சிறிய அளவில் தொழிற சஙகங்கள் தோன்றிப் பின் தேசிய அளவில் ஒனறுபட்டன. பாராளுமன்றமும ஆஙகில அரசும் தொழிற்சங்கஙகள் தொடககக் காலத்தில் உருவாவதை விரும்பவிலலை. அதன் விளைவாக கி பி. 1799-1800-ஆம் ஆணடுகளில் உருவான சட்டங் கள், தொழிற்சங்கங்கள் பொதுவான அமைப்பாக உருவாவதைத் தடை செயதன(General Combination Acts of 1799-1800). நீண்ட பெரும் போராட்டத் திற்குப் பிறகு மீண்டும் 1924-25-ஆம் ஆணடுகளில் இச்சட்டம் திருத்தப்பட்டது. இருப்பினும் மறைமுக மான முறையில் தொழிலாளர் கழகங்கள் ஒன்றுபடு வதைத் தடுததுக் கொண்டுவநதது. இராபர்ட்டு ஓவல் (Robert Owel) என்ற சமதரும எண்ணம் படைத்த அறிஞரின் முயற்சியாலும், செல்வாக்காலும் 1834-ஆம் ஆண்டு இவை இணையத்தொடங்கின. இவவாறு கி.பி. 1834-ஆம ஆண்டு ஏற்பட்ட இவவமைப்பில் 10 இலட்சம் தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து தொழிற் சங்கங்களின்.கூட்டமைப்பை (Grand National Consolidated Trade Unint) உருவாக்கினர். அதன பின் னர்ப் பேருரிமைக்கிளர்ச்சி இயக்கம் (Chartist Movement)தொழிலாளர்களுக்காகஉருவானது இவ்வியக்கம் அரசியல் எண்ணங்களை எதிரொலித்ததனால் வெற்றி பெறவில்லை. முதல் உலகப் போரின்போதுதான தொழிலாளர் இயக்கம் அரசின் நல்லெணணத்தைப் பெறத் தொடஙகியது. அரசும் பல்வேறு தொழிலா ளர் பாதுகாப்புச் சட்டஙகளை உருவாக்கியது. பினபு 1926 ஆம் ஆண்டு நடைபெற்ற தொழிலாளர் வேலை நிறுத்தம் இங்கிலாந்தின் பொருளாதாரத்தைப் பெரு மளவில் கேடுறச்செய்யவே1927ஆம் ஆணடு தொழிலா ளர் இயக்கத்தை நசுக்குவதற்குச்சட்டம் உருவாக்கப்

பட்டது. இச்சட்டத்தினபடி வேலைநிறுத்தம சட்ட விரோதமானது என்று கூறப்பட்டது. மீண்டும் தொழி, லாளர் எதிர்ப்புச் சட்டம் 1946-இல் தான் மாற்றப் பட்டது. இவ்வாறு பலவேறு எதிர்ப்புகளையும், சோதனைகளையும் சந்தித்த தொழிலாளர் கழக இயககம், தொழிலாளர்களுடைய வாழ்க்கைத் தரத்தை முன்னேற்றுவதோடுஅவர்களுடைய வாழக் கைப பாதுகாப்பிற்கும் பல்வேறு சட்டப் பாதுகாப்பு களை உருவாக்கிக் கொடுத்துப் பெரும் வெற்றிச் சாதனையும் புரிநதது.

சோவியத்து நாட்டில் 1905-இல முதன முதலில் தொழிலாளா இயககம் தோன்றத் தொடங்கியது. தொழிற கழக இயக்க வரலாற்றில் பெரும சாதனை யைப் புரிநதது சோவியத்துத் தொழிலாளர் கழக மாகும். சார் மன்னர்கள் (Czar emperors) ஆட்சிக் காலததில் தொழிலாளர் கழகம் கடுமையான சோத னைககு உட்படுத்தப்பட்டது. இத்தொழிலாளர் இயககம் பொதுவுடைமை ஆட்சி ஏற்படுவதற்குப் புரட்சி மையமாகச் செயற்பட்டது. பினபு 1917-ஆம் ஆணடில் ஏறபட்ட அக்டோபர் புரட்சிக்குப் பின சோவி யதது நாட்டில் தொழிலாளர் நல அரசு ஏற்பட்டது. எனவே, தொழிற் கழகஙகள அரசின முககிய நிலை யஙகளாகச் செயற் படுகின்றன. சோவியத்து நாட் டில உருவாகிய புரட்சி அரசின் அடிப்படையில்தான் பல கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் தொழிலாளா இயக்கம் வளர்நதது.பொதுவுடைமை அரசை 1949 -ஆம் ஆண்டு அமைத்த செஞசீனாவில வேளாணமைத் தொழிலாளர் கூட்டமைப்பின் மூலம் பெரும் வெற்றி கள் ஈட்டப்பட்டன. இநநாட்டிலும் தொழிலாளா கழக இயக்கம் அரசாங்கத்தின ஓர் உறுப்பாகச் செயற்பட்டு வேளாண்மைத் தொழிலாளர் உரிமைக் காகப் பாடுபடுகிறது. உற்பத்திப் பெருக்கத்திற்கும, நாட்டின பொருளாதார முன்னேற்றத்திற்கும மையங களாக இத்தொழிற் சஙகங்கள அமைந்துள்ளன.

இந்தியாவில தொழிலாளர் கழக இயக்கம் 20-ஆம் நூற்றாணடின தொடக்கத்திலதான் தோன்றி யது எனலாம். முதல பருத்தி ஆலைத் தொழில் (Cotton) கி.பி. 1854- ஆம் ஆண்டில் பம்பாய் நகரில். தொடங்கப்பட்டது. வங்காளத்தில் கி.பி. 1855 - ஆம் ஆணடு சணல ஆலைத் தொழில் தோன்றி யது. தொழிற் கூடஙகளில் பெருமளவில தொழி லாளர் வேலை செய்யும வாய்ப்பு இக்கால கட்டத் தில்தான் எற்பட்டது. பம்பாயிலும் வஙகாளத்திலும் தோனறிய பெரிய தொழிற் கூடங்களில தொழிலா ளர்களைச் சுரண்டும் நிலையில் பெண்களையும் குழநதைகளையும் தொழிறகூடஙகளில் அமர்த்தி நீணட நேரம் உழைப்பை உறிஞ்சினா. கல்வியினமை, சுகாதாரமினமை போனற சமுதாயக் கேடுகள தொழிலாளர்களைச் சூழ்நது கொணடிருந்தன கொடை உள்ளமும், சமூக சேவை எணணமும் படைத்த பெங்காளி (S S. Bengalee) என்பவர் கி.பி. 1875,-ஆம்ஆணடு தொழிலாளர்களின இழி நிலைக்கு எதிராகப் போர்க்குரல் எழுப்பினாா. குறிப்பாகப் பெண்களையும் சிறுவர்களையும் தொழிற்கூடஙகளில் வேலையில் அமர்த்திக் கொடுமைகள புரிவதை எதிர்த்தார். அதன் காரணமாக முதன் முதலாகத் தொழிற்கூடக் குழு (Factory. Commission) கி.பி. 1875-ஆம் ஆணடு பம்பாயில் நியமிக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து கி பி. 1881-ஆம் ஆணடு தொழிற்கூடச சட்டம (Factory Act) இயற்றப்பட் டது. இச்சட்டத்தில் போதிய அளவில தொழிலா ளர்களுக்குப் பாதுகாப்பு இல்லையெனறு உலோ காந்தே (N.M. Lokhande) எனகிற தொழிலாளா இச்சட்டத்தை எதிர்த்துப் போராட்டம் நடத்தி னார். அரசால் கி.பி.1884-ஆம் ஆணடில நியமிக்கப் பட்ட தொழிற்கூடக்குழுவிற்குப்(Factory Comm- ssion) பல அறிக்கைகளையும் வேண்டுகோளகளை யும் விடுத்தார். உலோகாந்தே கருத்துகள் ஆங்கில அரசால் ஏற்றுக் கொளளப்படவில்லை.

உலோகாநதே கி.பி.1890 ஏப்பிரல 24 ஆம் நாள் 10 ஆயிரம் தொழிலாளர்கள் கலந்து கொணட பேர ணியை நடத்திப் பல வேணடுதல்களை எழுப்பினார். குறிப்பிட்ட அளவு வேலைநேரம், வார விடுமுறை, மதிய ஓய்வு, விபத்திற்கு இழப்பீடு போன்ற வேண்டுதல் களை முன்வைத்தாா. இவர் முயற்சியால்தான் பம் பாய் நகரில் வார விடுமுறை முதன் முதலில நடை முறைப்படுத்தப்பட்டது. உலோகாந்தேதான் முதன முதலில பம்பாய் நகரில் ஆலைத் தொழிலாளா சங்கத்தை உருவாக்கி, அதன் தலைவராகத் தோந் தெடுக்கப்பட்டார். அதன்பின்னர்ப் பல்வேறு தொழிற் சங்கங்கள தோனறின. ஒருஙகிணநத தொடர்வண டித் தொழிலாளர் கழகம்(Amalgamated Society of Railway Servants of India) கி.பி. 1897-இலும, அச்சகத தொழிலாளர் கழகம் கல்கத்தாவில 1905-ஆம ஆணடிலும் (Printers Union Calcutta) 1905, பம்பாய அஞ்சல் தொழிலாளர் கழகம்(Bombay Postal Union) 1907-இலும் தோன்றின. இத்தொழிலாளர் கழகங்கள தொழிலாளர் பாதுகாப்புச் சட்டங்களை ஆங்கில அரசு இயற்றவேண்டுமென்றும், தொழிலாளர்களுக்கு அரசும் ஆலைகளும் பாதுகாப்பு அளிககவேண்டுமென றும் வலியுறுத்தி வந்தன. இவ்வாறாக இந்தியாவில் தோன்றிய தொழிலாளர் கழகம், மற்றநாட்டுத் தொழிற்கழகங்களைப்போல முதல உலகப்போருக குப் பின் புதிய வலிவையும், பொலிவையும் பெறத் தொடஙகியது இககாலததில் இந்தியாவின எலலாப் பகுதிகளிலும் தொழிலாளர் கழகங்கள் உருவாகக முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

அகமதாபாது நகரில் பஞ்சாலைத் தொழிலாளர்களின் ஒருங்கிணைப்பினை 1917-ஆம் ஆண்டில் திருமதி அனுசியாபென் (Anusuyaben) என்பவர் உருவாக்கினார். வி.பி.வாடியாவும், அன்னி பெசண்ட்டு அம்மையாரும் சென்னையில் 1918-ஆம் ஆண்டில் தொழிலாளர் கழகத்தை (Madras Labour Union) உருவாக்கினர். சென்னையில் உருவாகிய தொழிலாளர் சங்கத்தில் பஞ்சாலைத் தொழிலில் ஈடுபட்ட அனைத்துத் தொழிலாளர்களும் உறுப்பினர்களாயினர். தொழிலாளர் கழக இயக்கம் இந்தியாவில் பலவேறு காரணங்களால் வலுப்பெற்றது. விலைவாசி உயர்வு, குறைந்த கூலி போன்ற பொருளாதாரக் காரணங்கள் தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரத்தில் பெரும் பாதிப்பை ஏற்படச் செய்தன. மேலும், காந்தி அடிகள் தலைமையில் 1919-1921 ஆண்டுகளில் ஒத்துழையாமை இயக்கம் வலுப்பெற்றதால் அரசியல் தாக்கம் தொழிற் சங்கங்களில் ஊடுருவியது. அகில உலகத் தொழிலாளர் கழகம் (International Labour Organisation) 1919-ஆம் ஆண்டு உருவானதும் தொழிற்சங்க இயக்கத்துக்கு உலக அளவில் பெரும் வெற்றியாகக் கருதப்பட்டது. இந்தியா முழுவதிலும் 1920-ஆம் ஆண்டில் மட்டும் 200 முறை வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன.

அனைத்திந்தியத் தொழிலாளர் கழகம்(All India Labour Union) 1920-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. இவ்வமைப்பு இந்தியத்தொழிற் சங்க இயக்கத்திற்குப் பொலிவை ஏற்படுத்தியது.அனைத்துலகத்தில் நடைபெறும் தொழிலாளர்களின் மாநாட்டிற்கு இவ்வமைப்பின் சார்பில் உறுப்பினர் அனுப்பப்பட்டனர். தொழிற் சங்க இயக்கத்தில் தீவிரவாத இயக்கங்கள் 1924-ஆம் ஆண்டிலிருந்து பங்கு கொள்ள முற்பட்டன. பொதுவுடைமைக் கட்சிகள் தொழிற் கழகங்களைக் கைப்பற்றின பின்1927-ஆம் ஆண்டில் இந்தியத் தொழிலாளர் கழகங்கள் அரசியல் சார்புடையவை, சார்பற்றவை என்ற இரு வேறு திசைகளில் செல்லத் தொடங்கின. பொதுவுடைமைச் சார்பு அல்லாத மிதவாதத் தொழிற் கழகத்திற்குத் தலைவர்களாக என்.எம் சோசி(N.M. Joshi), வி.வி. கிரி (V.V. Giri), பீ. சிவராவ் (B. Sivarao) ,பக்கலே (Bakhale) ஆகியோர் இருந்தனர்.

அரசியல் கட்சிகளின் சார்பில் இந்தியத் தேசிய தொழிலாளர் கழகம் (Indian National Trade Union Congress),காங்கிரசுப் பேரியக்கத்தின் சார்பில் செயற்பட்டது. அனைத்திந்தியத் தொழிலாளர் பேரியக்கம் (All India Trade Union Congress) பொதுவுடைமை இயக்கத்தினரால் 1920-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. விடுதலை பெற்றபின் தொழிலாளர் கழகம் இந்தியா முழுவதிலும் பொது, தனியார் நிறுவனங்களில் தொழிலாளர் உரிமைக்காகப் பாடுபட்டு வருகின்றது. இந்து மசுதூர் சபா(Hind Mazdoor Sabha) என்ற தொழிற் கழகம் சம தருமச் சிந்தனை படைத்த தலைவர்களால் 1948-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இன்றுஇந்தியாவில் தொழிலாளர் கழக இயக்கம் எல்லா மாநிலங்களிலும் எல்லாத் தொழில் நிறுவனங்களிலும் தொழிலாளர் நலனுக்காகப் பாடுபட்டு வருகின்றது. மு.நா.

**துணை நூல்கள்:**

Bhagoliwal.T.N., Economics of Labour and Social Welfare, Sahitya Bhawan, Agra, 1974.

Sidney and Beatrice Webb, History of Trade Unionism, London, 1920.

***தொழிலாளர் உழைப்பைச் சேமிக்கும் வழிகள்:*** ஒரு நாட்டின் வளர்ச்சியும் செழிப்பும் அந்நாட்டின் மொத்தப் பொருள்களின் உற்பத்தியையும் அதனைப் பங்கிடும் முறையையும் பொறுத்து அமைகின்றன.தேசிய உற்பத்தி, நாட்டின் பொருளாதாரத் துறைகளான வேளாண்மை, தொழில், வாணிகம்,போக்குவரத்து ஆகியவற்றிலிருந்து பெறப்படுகிறது. ஒவ்வொரு துறையிலும் நாட்டின் இயற்கை மூலதனம், தொழில்நுட்பம், மனித வளங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்திப் பொருள்கள் தயாரிக்கப்படுகின்றன இந்த உற்பத்தி முயற்சியால் தொழிலாளர் உழைப்பின் பங்கு உன்னதமானதும் தீர்க்கமானதுமாகும். தொழிலாளரின் உழைப்பு முயற்சி இல்லையெனில் ஒரு நாடு மற்ற வளங்களை மிகுதியாய்ப் பெற்றிருப்பினும் ஒரு வளர்ச்சியற்ற நாடாகத்தான் இருக்கமுடியும். மாறாக அந்நாடு வளங்கள் குறைவாகப் பெற்றிருந்தும் திறமைமிக்க தொழிலாளர்களைப் பெற்றிருக்குமேயானால் அது செழிப்பான நாடாகத் திகழ முடியும். பொதுவுடைமைக் கருத்துள்ள அறிஞர்கள் ஒரு நாட்டின் வளம் முழுவதும் தொழிலாளர் உழைப்பினால் உருவாக்கப்படுகிறது என்று கருதுகின்றனர்.

இவ்வாறு பொருளாதார வளர்ச்சியில் அரிய பங்கினை ஆற்றும் தொழிலாளரின் உழைப்பைச் சேமிக்கவேண்டிய சூழ்நிலைகள் சில நேரங்களில் சில காரணங்களுக்காக ஏற்படுகின்றன. குறிப்பாகத் தொழில் நுட்பம் விரைவாகப் பரவிவரும் புதிய காலத்தில் தொழிலாளர் உழைப்பின் பங்கைக் குறைத்து அல்லது உழைப்பை மிகக் குறைவாகப் பயன்படுத்தி உற்பத்தியை உருவாக்கலாம் என்ற சூழ்நிலைகள் மிகுதியாக உருவாகியுள்ளன. அந்த நோக்கத்திற்காக மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகளைத்தான் உழைப்பைச் சேமிக்கும் வழிகள்(Labour

saving devices) என்று கூறுகின்றனர். பொருளாதார வளர்ச்சி பெருகியுள்ள நாடுகளான அமெரிக்கா, இங்கிலாந்து, சப்பான, மேற்குச் செருமனி ஆகிய நாடுகளில் இவ்வழிகள மிகவும் பயனபடுத்தப்படுகின்றன.

**உழைப்பைச் சேமிக்கவேண்டிய காரணங்கள் (அ) சூழ்நிலைகள்:** உற்பத்தியில உழைப்பைச் சேமிப்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவறறுள முக்கியமானவை:

**1) தொழிலாளர் பற்றாக்குறை:** உற்பத்தித் துறையில மற்றக் காரணிகளை ஒபபிடும்போது தொழிலாளா உழைப்பின் அளிப்பு (Labour Supply) குறைவாக உளளபோது உழைப்பைச் சேமித்து அதற்குப்பதிலாக அதிக அளிபபுள்ள மறறக் காரணிகளைப் பெரிதும் பயனபடுததவேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. உழைப்புப் பற்றாக்குறையாக உளளபோது அது ஒரு அரிய வளமாக ஆகிறது. அந்த வளத்தை எவ்வளவு குறைந்த அளவில, திறமையுடன் உபயோகப்படுத்த முடியுமோ அநத அளவுக்குப பயனபடுத்தி மிகுதியான பயனை அடைய வேணடும். வளர்நத நாடுகளான அமெரிககா, இங்கிலாநது ஆகியவற்றில குறைநத மக்கள்தொகை வளாசசியின காரணமாகத தொழிலாளர் எணணிக்கையும் குறைவாக உளளது. அங்குளள மககள தொகை, உற்பத்தித்துறை அனைததுககும போதுமான தாக இருப்பதிலலை. எனவே, அந்தப் பற்றாககுறையைப் போக்க மனித உழைப்பைச் சேமித்து எலலாத துறைகளுக்கும் சமமாகப் பயன்படுத்தவேணடிய கட்டாயம ஏற்படுகிறது. வளாந்துவரும இந்தியா போன்ற நாடுகளில பொதுத் தொழிலாளர் அளிப்பு அதிகமிருப்பினும் குறிப்பிட்ட, திறமைமிக்க தொழிலாளர்கள (Skilled labour)பற்றாக்குறையாக இருப்பதைககாணமுடிகிறது,எடுத்துக்காட்டாககைவினைஞர்கள், இயநதிரக கருவிதயாரிபபோர் (tool maker), பற்ற வைப்பவர் (welder), இயநதிரக கருவி இயக்குவோர் (operator) ஆகியோா போதுமான அளவு தில்லை.இச்சூழ்நிலைகளிலதொழிலாளா உழைப்பைச் சேமிக்க வேணடியுள்ளது.

**2) உழைப்பினால் உருவாகும் பொருள்களின தேவை மாற்றம்:** நுகர்வோரின விருபபம், நுகாவு ஆகியவற்றால ஏற்படும் பொருளகளின தேவை மாற்றம் காலத்திற்குத் தகுந்தவாறும், நாட்டின வளர்ச்சிக்குத் தகுநதவாறும் உணடாகும். எடுத்துக்காட்டாக, மககளின தேவை வேளாண்மையையும அதன தொடர்பான துறைப் பொருள்களையும் சார்நதிருக்கும போது மக்களின வருமானமும வாழ்க்கைத தரமும குறைநதிருக்கும் அந்நிலையில உழைபபின உதவியால் செயபபடும் பொருளகளுக்கு மிகுநத தேவை ஏற்படும. ஆனால், வாழ்க்கைத தரம உயர உயர ஆடம்பரப் புதிய பொருள்களின் தேவை அதிகரிக்கப் படுகிறது இத் தேவையை உழைப்பின் உதவியை நாடியுளள தொழிற்சாலைகளால் நிறைவு செய்ய முடியாது. அதேநேரததில உழைப்பினால் தயார் செயயப்படும பொருளகளை அங்காடியில் விற்கமுடியாது. இக்காரணஙகளால தொழில் உற்பத்தியில் சரிவும், மநதமும் உணடாகிப் பெருத்த இழப்பும் ஏற்படுகிறது. அச்சமயத்தில் உழைப்பின பயனைக் குறைத்து மக்களின் தேவைக்கேற்ற பொருளகளைத தயாரிக்க உதவும் இயநதிரஙகள, தொழில்நுட்பம் ஆகியவற்றைப் புகுதத உற்பத்தியாளர்கள முயலுகின்றனர்.

**3) நிறுவனங்களிடையே போட்டி:** ஒரு பொருளைத் தயாரிக்கும் பல நிறுவனங்களிடையே போட்டி ஏற்படுவதுண்டு. அந்தப் போட்டியில் வெற்றிபெறும் நிறுவனங்களே அங்காடியில் நீணடகாலததிற்கு நிலைத்து நிற்கமுடியும. எனவே, போட்டியில் வெற்றிபெற விரும்பும் ஒவவொரு நிறுவனமும் குறைந்த செலவில தரமான பொருள்களை நுகர்வோருக்கு அளிக்க முறபடும். இப் பொருளகளைத் தயாரிக்கப் புதிய தொழில் நுட்பத்தை அறிமுகப்படுத்த விழையும் பொழுது பல போட்டிப புத்தாக்கஙகளைத் (Competitive innovations) தொழில் துறையில ஏற்படுத்த வேண்டிய தேவை ஏற்படுகிறது. இதனால, தொழிலாளர் உழைப்பின் பங்கு குறைந்து உழைப்புச் சேமிக்கப்படுகிறது.

**4) உயர்வான கூலி:** பொதுவாக மற்ற உற்பத்திக காரணிகளின விலையைவிடத் தொழிலாளரின விலை அதாவது கூலி மிகுதியாக இருக்கும்போது உழைப்பைச் சேமிக்கவேணடும் எனற எணணம் தோனறும். குறிப்பாகத் தொழிலாளர் பெறும் கூலி அவர் களின உற்பத்தித்திறனைவிட மிகுதியாக இருக்கும்போது முதலாளிகள் தொழிலாளர்களை மிகுதியாக அமர்த்துவதனால் இழப்பு அடைவர். இந்நிலையைப் போக்க உழைப்பை எவ்வளவு சேமிக்க முடியுமோ அவ்வளவு சேமிக்கும் கட்டாயம் ஏற்படுகிறது.

**5) தொழிலாளர் மேலாண்மை உறவு பாதிப்பு:** தொழில உற்பத்தி தடையின்றி ஏற்படத் தொழிலாளர் மேலாணமை உறவு நன்றாக இருக்கவேணடும். ஆனால ஊதிய உயர்வு, ஊக்கத்தொகை, தொழிற் சங்க ஒப்புதல ஆகியவற்றிற்குத் தொழிலாளாகள போராடும்போது இவ்வுறவுகள பெரிதும் பாதிக்கப் படுகினறன. சில நேரங்களில் தொழிற்சங்கம் முன்னுரிமை பெற்று விளங்கும்போது தானாகவே ஒரு கூலியை நிருணயித்து அதைத்தான தொழிலாளர் களுக்கு அளிக்கவேணடும என்று வலியுறுத்தும். அது முதலாளிகும் மேலாண்மைக்கும உகநததாக இலலாத நிலையில வேலைநிறுததம், கதவடைப்பு

போன்றவை நிகழும். இந்தச் சூழ்நிலைகளைத் தவிர்க்க மேலாணமை உழைப்பைக் குறைக்கும் நடவடிக்கைகளில ஈடுபடும்.

**6) மற்ற உற்பத்திக் காரணிகளின் உற்பத்தித்திறன் அதிகரித்தல்:** தொழிலாளாகளின் சராசரி உற்பத்தித் திறன குறைந்து மற்ற இணை உற்பத்திக் காரணிகளின் உற்பத்தித்திறன் உயரும்போது தொழிலாளர்களின் உழைப்பைச் சேமிக்கவேண்டிய தேவை ஏற்படும். எடுத்துக்காட்டாக, வேளாணமையில் ஒரு தொழிலாளியின உற்பத்தித்திறன் குறைவாகவும், இயந்திரத்தின உற்பததித்திறன் மிகுதியாகவும் இருப்பதால் உழைப்பைக் குறைத்து இயந்திரஙகளின பஙகை உயர்த்துவது இலாபகரமாக அமைகிறது.

**உழைப்பைச் சேமிக்கும் வழிகள்:** உறபத்தித் தொழிலில் ஈடுபடும் உழைப்பைப் பல வழிகளில் அல்லது முறைகளில் குறைக்கலாம். அவற்றுள முக்கியமானவை:

**1. காரணிப் பதிலீட்டு முறை(Factor Substitution)**: பொருள் உறபத்தி எனபது நிலம், உழைப்பு, மூலதனம், இயந்திரம், கச்சாப்பொருள்கள் ஆகியவற்றைச் சோக்குமபோது ஏற்படுகிறது. இவற்றில் மற்றக் காரணிகளில ஒன்று அலலது அனைத்தையும பதிலீடு செய்யும்போது உழைபபும் சேமிககப்படுகிறது எடுத்துக்காட்டாக, உழைப்பும் இயந்திரமும் இணைநது செயறபடும் வேளாண்மையை அல்லது ஒரு தொழிற்சாலையை எடுத்துககொணடால் உழைப்புத் தேவையில்லை என்று கருதும்போது அல்லது உழைப்பைச் சேமிக்கவேண்டும் என்ற சூழ்நிலை ஏறபடும்போது உழைப்புக்குப் பதிலாக இயந்திரத்தைப் பயனபடுத்தலாம். வேளாண்மைத் துறையில் மனித உழைப்புப் பல வேலைகளுக்குப் பயனபடுகிறது. நிலத்தை உழுதல், நீர் இறைத்தல், விதையிடுதல், அறுவடைசெய்தல், கதிர் அடித்தல், பூச்சி மருந்து தெளித்தல் ஆகிய வேலைகளில மனித உழைப்பு மிகுநத அளவில உபயோகப்படும். ஆனால், இவ்வேலைகளில மனிதஉழைப்புக்குப் பதிலாக இயந்திரங்களைப் பயன்படுத்தலாம். உழுவண்டி, நீர் இறைக்கும் இயந்திரங்கள், அறுவடைக கருவி, மருந்தடிக்கும கருவி ஆகியவற்றை உபயோகப் படுத்தலாம். இதனால் உழைப்புச் சேமிக்கப்படுகிறது. இதைப்போல தொழில்துறையிலும் உழைபபுககுப் பதிலாகப பல இயந்திரங்களைப் பயனபடுத்தி ஒரே அளவு உற்பத்தியைப் பெறலாம்.

**2. தொழில் நுட்ப மாற்றமும் முன்னேற்றமும்:** தொழிலில பயனபடுத்தப்படும் தொழில்நுட்பத்தில் (Technology) மாற்றம் ஏற்படும்போது உழைப்புச் சேமிக்கப்படுகிறது. இக்சு என்னும பொருளியல நிபுணர் தொழில் நுட்பத்தை மூன்று வகையாகப் பிரிக்கிறார். அவை: 1) நடு நிலைமைத் தொழில்நுணுக்கம் (Neutral Technology), 2) உழைப்பைச் சேமிக்கும தொழில் நுட்பம் (Labour Saving Technology), 3) முதலைச் சேமிக்கும் தொழில் நுட்பம் (Capital Saving Technology) ஆகியவையாகும். இயந்திரம் போன்ற முதல் பொருள்களும் உழைப்பாளரும் சேர்ந்து பணி புரியும் தொழிலில புகுத்தப்படும் தொழில நுட்பத்தினால் மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தித் திறன் (Marginal Productivity of Capital) உழைப்பாளரின் இறுதிநிலை உற்பததித் திறனைவிட அதிகரிக்கும போது அந்தத் தொழில்நுட்பத்தை உழைப்பைச் சேமிககும் தொழில்நுட்பம என்று கூறுவர். எடுத்துக்காட்டாக, இப்போது நடைமுறையிலுள்ள ஓர் இயந்திரத்தின் செயறபாட்டு வேகததை விரைவுபடுத்தும் முறையில் ஒரு தொழிலநுட்பம கண்டுபிடிக்கப்பட்டால் அது அந்த இயந்திரத்தின இறுதிநிலை உற்பத்தித்திறனை அதிகரிக்கும். எனவே, புதிய தொழில் நுட்பத்தைப் புகுத்த முதலாளிகள முயலவார்கள். அதனால், மூலதனத்தின் வேலை வாய்ப்பு மிகுதியாகித் தொழிலாளரின் உழைப்புக் குறையும். தானியங்கிக் கருவிகள, கணிப்பொறிகள், இயந்திர மனிதன முதலியவை இந்தப் புதிய காலத தொழில்நுட்பத்தால் இயககப்படுபவை இவற்றின் உபயோகத்தினால் மனித உழைபபுச் சேமிக்கப்படுவது அனைவரும் அறிந்ததே.

**3) செறிந்த உற்பத்தி முறை:** தொழிலில் செறிந்த முறையை உபயோகிக்கும்போது இயந்திரம் போன்ற மூலதனப் பொருள்களின் பஙகு அதிகரித்து உழைப்பாளரின் பங்கு குறைகிறது. எடுத்துக்காட்டாக, வேளாண்மையில் உற்பத்தியைப் பெருக்க உழைப்பாளர் உதவியைக் குறைத்து வீரிய விதைகள, நவீன உரங்கள், உழுவண்டி போன்ற வேளாணமைக் கருவிகளைப் பயன்படுத்துவதனால் உற்பத்தி பெருகி உழைபபுச் சேமிக்கப்படுகிறது.

**4) தொழிலாளர் உற்பத்தித்திறனைப் பெருக்குதல்:** உழைபபின் உற்பத்தித் திறனை உயர்த்துவதன மூலமும் உழைப்பைச் சேமிக்க முடியும். உற்பத்தித் திறன குறைவாக இருக்கும்போது ஒரு குறிப்பிட்ட அளவு மொத்த உற்பத்தியை ஈட்ட மிக்க உழைப்பை மேற்கொள்ள வேணடியுளளது. ஆனால், திறன் அதிகரித்தால் குறைந்த உழைப்போடு அதே உற்பத்தியைப் பெறமுடியும். எனவே, திறனை அதிகரிக்கும் கீழ்க்காணும் காரணிகள அனைததும உழைப்பைச் சேமிகக உதவும். அவை: (1) உற்பத்திக்கு ஏற்ற ஊதியம் அளித்தல், 2) தொழிலாளருககுச் சமூகப பாதுகாப்புக் கொடுத்தல், 3) ஊக்கத் தொகை வழங்குதல், 4) தொழிலாளருககுப் பொதுக்

கல்வி, தொழிறகல்வி பயிற்சி அளித்தல், 5) புதிய இயந்திரங்கள், தொழில் நுணுக்கம் ஆகியவற்றைத் தொழிலாளருக்கு அளித்தல், 6) வேலைப் பாகு பாட்டினை அறிமுகம் செய்தல் (Division of labour), 7) தொழிற்சாலைகளின் உள்ளே அளிக்கப்படும் சுகாதாரமான இடம், காற்று வசதி, சூரிய வெளிச் சம், மின வசதி, இடைவெளியோடு கூடிய வேலை நேரம், காலம் தவறாது கொடுக்கப்படும கூலிமுறை ஆகியவற்றை மேமபடுத்துதல், (8) திறமையான நிரு வாகம (Efficient management) போன்றவையாகும். நிருவாகம திறமையுள்ளதாக இருப்பின அது தொழி லாளர்களை நலலமுறையில் பிரித்து, அவாகளுக்குத் தேவையான கருவிகளையும் பயிற்சியையும அளித்து, அவர்களைத் திறமையுளளவாகளாக மாற்றுவ தோடு, தொழிலாளா சிக்கல்களையும நல்ல முறையில தீர்த்து அவர்களுடன் உறவுகளை மேம்படுத்தி வேலை நிறுத்தம, கதவடைபபு ஆகியவற்றையும் தவிர்க்க முடியும்.

**5. தொழிலாளர் இடப்பெயர்வு**: குறைந்த வளர்ச சியுடைய நாடுகளில் தொழிலாளர்கள் நாட்டின் எல் லாப பகுதிகளிலும் ஒரேமாதிரியாகப் பரவியிருபபது கிடையாது. உழைப்புத தேவை அதிகம் உள்ள இடங் களில் அளிப்புக் குறைவாகவும், தேவையிலலாத இடங களில அளிப்பு மிகுதியாகவும் காணப்படுகினறன இது தொழிலாளர் இடப் பெயர்வின்மையினால immobility of labour) ஏற்படுகின்றது குடும்பத் தினருடன் ஒன்றாக வாழவேணடுமெனற ஆசை, வேறு வேலைக்குச் சென்று மிகுதியாகச சமபாதிக்க வேணடுமென்ற பொருளாசை இலலாமை, மொழி சாதி, சமுதாயம் ஆகியவற்றின்பால் உள்ள ஈடுபாடு ஆகியவை தொழிலாளா இடப்பெயர்வினமைககுக் காரணங்களாக உள்ளன. இவவாறு ஒரே இடததில தொழிலாளர் குவிநது கிடப்பதால் தொழிலாளர் இறுதிநிலைத் திறன பூசியமாக இருக்கும். இம்மாதிரி யான சூழ்நிலையில் உழைப்பாளர்களை ஓரிடத்தி லிருந்து மற்ற இடத்திற்கு மாற்றினால் தொழி லாளர்களின் உழைப்பைச் சேமிதது உற்பததித் திறனை மேம்படுத்த முடியும்.

**உழைப்பைச் சேமிக்கும் முறைகளால் ஏற்படும் விளைவுகள்**: மேற்கூறிய முறைகளினால் பல பொரு ளாதார, சமூக விளைவுகள ஏற்படுகின்றன. 1) உழைப்பைச் சேமிககும் முறைகளினால் உழைப் பின் திறனை மிகுதிப்படுதத முடியும். 2) நாட்டின மொத்த உறபததி அதிகரிககும. 3) தொழிலாளியின் கூலி ஒருபுறமும், முதலாளியின் இலாபம மறுபுறமும் அதிகரிக்கும. அதனால நாட்டின முதலீடும சேமிப் பும் பெருகும். 4) காலததை மிச்சப்படுத்தி உற்பத்தி யின அளவைப் பெருக்குவதால் சராசரி உற்பத்திச் செலவு குறையும். இது பொருளாதார முன்னேற்றத் தை ஊக்குவிக்கும். 5) உற்பத்தி பெருகுவதால் விலை வாசி உயர்வைக் கட்டுப்படுத்த முடியும். 6) உழைப் பைச் சேமிப்பதற்குத் தொழில் நுணுக்கம் மிகுந்த கருவிகளைப் பயன்படுத்துவதன் மூலம் தொழில் நுணுக்க அறிவை வளாத்து அதைப் பல துறைகளி லும் புகுத்தமுடிகிறது. அதனால், ஏற்றுமதி அதிகரிக் கும்; நாட்டின் செல்வம் வளரும். 7) நீண்டகாலத் தில் மிகுதியானவர்களுக்கு வேலைவாய்ப்புக் கிடைக் கக்கூடும்.

உழைப்பின் அளிப்புப் பற்றாககுறையாக உளள வளர்ந்த நாடுகளில் இம் முறைகளினால பெரும்பலன் கிடைக்கிறது. ஆனால, தொழிலாளர் மிகுதியாக உள்ள வளர்ந்துவரும் நாடுகளில் இம்முறைகள் மேலும்வேலையிலலாத் திணடாட்டத்தை உருவாககு கின்றன. மேலும், இம்முறைகளினால் முதலாளித் துவம் பெருகி வருமானப் பிரிவில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுகினறன. இந்தத் தீய விளைவுகளைப் போக்கி னால் நாடு செழிப்படையும் என்பதில ஐயமில்லை.

மு.இராம.

**துணை நூல்கள்:**

**Campbell R. McConnell and Stanley L. Brue**, Contemporary Labour Economics, Mcgraw Hill Book Co, U. S. A. 1986

**Gould J.P andC.E.Ferguson**, Micro Economic Theory, All India Traveller Book Seller, New Delhi, 1983.

**Guruprasad Murthy**, Capital Investment: Decisions in Indian Industry, Himalaya Publishing House, Bombay, 1985.

**Nanda, J.N.**, Science and Technology in India, Transformation, Concept Publishing Co, New Delhi, 1986.

**Peter Hall**, Technology Innovation of Economic Policy, Heritage Publishers, New Delhi, 1986.

*தொழிலாளர் கல்வி*: 'எணணும் எழுததும் கணணெனத் தகும்' என்பது முதுமொழி. இது கல்வி யின் இன்றியமையாமையை உணர்த்துகிறது. கல்வி எனபது வெறும் எணணும் எழுத்தும மட்டுமன்று; மனித வாழ்க்கையையும் ஆற்றலையும் வளமாக்கு வதே கல்வி. மனிதனைப் பண்பாடுளளவனாகவும், ஆற்றல மிக்கவனாகவும், சமுதாயத்திறகுப் பயனுள்ள வனாகவும் ஆககும் திறன கல்விக்கே உணடு. அத தகைய கல்வி, கல்விக் கூடங்களில் மட்டும் அளிக்கப் படுவதில்லை. பிறந்த அநத நொடி முதலே தொடக்க

மாகும் கல்வி, மனிதனின கடைசி மூசசோடு முடிவடைகிறது.ஒருவர்பெறும அனுபவஙகள அனைத்தும கல்வியின பகுதியே. பட்டஙகள பெறுவது மட்டும் கல்வி அன்று. ஒருவன தனனை உயர்ததிக கொளள மேறகொளளும ஒவவொரு முயறசியும் கல்வியே. ஆகவே, தொழிலாளர் கல்வி எனபது தொழிலாளா தமது உறபத்தியைப் பெருககிக் கொள்ளவும் திறனை வளர்த்துக் கொள்ளவும் பெறும் அறிவேயாகும.

**தொழிலாளர் கல்வியின் வரலாறு**· இரணடாம உலகப் போருக்குப் பினனாத்தான தொழிலாளா கல்விககுப் பெரும முககியததுவம கொடுக்கப்பட்டது· சிறப்பாக, தொழிற புரட்சிக்குப்பின் மேலை நாடுகளில் தொழிலாளர் கலவியின முக்கியததுவம பெரிதும் உணரப்பட்டது. ஆனால, 1947 ஆம் ஆணடுதான உலகக கூட்டுத தொழிலாளர் கலவி எனற அமைப்பு உலகத் தொழிலாளா நிறுவனத்தின் உதவியோடு (International Labour Organization) தொடஙகப்பட்டது பத்தாணடுகள கழிததுத் தொழிலாளர் கல்வி, ஐக்கிய நாட்டுக் கல்வி சமூகப்பண்பாட்டு நிறுவனத்தின் (UNESCO) உதவியோடு செயற்படத் தொடஙகியது.

இந்தியாவில 1918 ஆம் ஆணடிலேயே இந்தியத் தொழிலாளா குழு (Indian Industrial Commission) தொழிலாளர் கல்வியின் முக்கியததுவத்தை உணர்த்தியது. மீண்டும் 1931 ஆம் ஆணடு அரசு தொழிலாளர் குழு(Royal Commission on Labour) இதனை வலியுறுத்தியது. அதன பயனாகப் பம்பாய், அகமதாபாது போனற தொழில நகரஙகளில் தொழிலாளர் கல்வி தொடஙகியது. ஆனால, அது தொழிலாளர் சங்கம் பற்றிய அறிவைத்தான் வளர்த்தது. இந்தியா சுதந்திரம அடைந்தபின மத்திய தொழிலாளர் கலவி வாரியம் (Central Board of Workers Education) ஒன்று 1958 ஆம் ஆணடு தொடங்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து தொழிலாளர் பயிறசிச் கலலூரி தோன்றியது. தொழிலாளர் சஙகங்களால தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது.

தொழிலாளர் கல்வி கீழ்க்காணும் நோககஙகளுக்குச் சிறப்பிடம அளிக்கிறது. 1) உறபத்தியைப் பெருக்குவதற்குத் தொழிலாளர் கலவியின மூலமாகத் தொழிலாளாகளுககு உறபத்திததிறனை வளர்ப்பதறகான திறன்கள வளர வாய்ப்பளிககப்படுகிறது. ஒவ்வொரு தொழிலின நுட்பஙகளையும, இயநதிரவியலையும கற்றுத் தருவதன மூலமாகத தொழிலாளர்களின திறமை வளர வாய்ப்பு அளிக்கப்படுகிறது. திறன் வளருமபோது உற்பத்தியும பெருகுகிறது. அதனால் தொழிலாளியும முதலாளியும் வளரமுடிகிறது 2) தொழிலாளர்களுக்கு உறபத்தி பற்றிய அறிவும், இயந்திரங்கள் பற்றிய அறிவும், திறமையும வளருமபோது அவர்கள உற்பத்தி செயயும பொருளின தரமும் உயர்கிறது. அப்பொருளகளின விற்பனையும மிகுதியாகிறது. 3) தொழிற சாலைகளுக்குத் தேவையான வல்லுநாகளை உருவாக்கப் பிற்காலத்தில் தொழிலில் சிறநத வலலுநர்கள தேவைப்படுமபோது அவாகள தொழிலாளர் கல்வியின மூலமாக உருவாக்கபபடுகிறார்கள், நனமுறையில பயிறசி அளித்தால பின்னால் ஏற்படும காலியிடங்களில சிறநத தொழிலாளர்களை நியமனம செய்ய இயலும். 4) நிருவாகச சூழல முன்னேற்றமடையத் தொழிலாளர்களுககுக் கலவியளிப்பதன மூலம் நிருவாகத்திற்கும், தொழிலாளாகளுக்கும் இடையே சுமுகமான சூழ்நிலை நிலவ வாய்ப்பளிக்கபபடுகிறது. அதனால் இருவரும ஒருவரையொருவா புரிநது கொணடு நடப்பர். அதனால் தொழிறசாலையின் பணியும் செவவனே நடைபெற இயலும். உற்பத்தியும பெருகும். 5) உடல நலத்தையும், பாதுகாப்பையும மேம்படுத்தத் தொழிலாளர்களுக்குத் தேவையான கல்வி அறிவை அளித்தால் தொழிற்கூடஙகளில ஏற்படும் விபத்துக்களைத் தடுக்கலாம். பாதுகாப்பு நிறைநத தொழிற் சாலைகளில் பணியாற்றும் ஊழியர்களின உடலும் உள்ளமும் நல்ல நிலையில் இருக்கும். தொழிலைப்பற்றிய அவர்களது ஆர்வமும, உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என்ற உணர்வும் மிகும். 6)மனிதவளமும் ஆற்றலும் வீணாதல் தடுக்கப்படுகிறது சிறந்த கல்வியும் பயிற்சியும் தொழிலாளாகளின் ஆக்கத்திறனை ஊக்குவிக்கின்றன. வயது,மன நிலை, உடல்நிலை ஆகியவை காரணமாக ஆர்வமும் திறனும் குறையும்போது தொழிலாளர் கல்வி ஓர் ஊக்கியாக இருந்து அவர்களது ஆற்றல வீணாவதைத் தடுக்கிறது. 7) தொழிலாளர்கல்வி, தனிமனிதனின ஆறறல் வளர்ச்சியிலும் சிறந்த இடத்தை வகிக்கிறது. ஒரு தொழிலாளி மிகத் திறமையோடு தொழில நுணுக்கங்களைக கற்றுக் கொளளும்போது அவரால் தனித்தும் அதே போன்று தொழிலைத் தொடங்க இயலும்.

தொழிலாளர்களுககுக் கலவியளிப்பதற்குப் பலவேறு காரணங்கள் உள்ளன. 1) அறிவியல் வளர்ச்சியின் காரணமாகத் தொழில் நுட்பங்கள் பெருகிவிட்டன. இந்தத் தொழில் நுட்பங்களைக கையாணடால தான உற்பத்தியைப் பெருக்க இயலும். 2) தொழிலாளர்களின் தேவை மிகுந்து வருகிறது. தொழிற் பெருக்கம், தொழிளாளர்களின் இறப்பு, நோய்கள், விபத்துகள, ஓய்வுபெறுதல் போனற பலவேறு காரணங்களால தொழிலாளர்களின எண்ணிக்கை குறைகிறது. இதனை ஈடுகட்டத் தொழிலாளர் கல்வி தேவையாகிறது. 3) தேவை மிகுதலின காரணமாக உறபத்தியைப் பெருக்குவதற்குத தொழிலாளா

களுக்குத் தேவையான கல்வியை அளித்தல் இன்றியமையாததாகிறது. 4) அனுபவம் இல்லாத தொழிலாளர்களுக்கு அவர்களது திறன் வளரத் தொழிலாளர் கல்வி உதவும். 5) அனுபவமிக்க தொழிலாளர்களுக்கும், அத்தொழிலில் ஏற்படும் புதிய மாற்றங்களுக்கு ஏற்ப மறுபயிற்சி தேவை. அப்போதுதான் அவர்களால் புதிய கருவிகளைக் கையாள இயலும். 6) குறைந்த நேரத்தில் குறைந்த சக்தியில் உற்பத்தியைப் பெருக்குவதற்குத் தொழிலாளர் கல்வியால்தான முடியும். மூலப் பொருள்களை வீணாக்காது, தரமான பொருள்களை உற்பத்தி செய்வதற்கும் தொழிலாளர் கல்வி உறுதுணையாக உள்ளது. 7) தொழிலாளர்களின் துயர்துடைக்கவும், குறைக்கவும் விபத்துகளைக் குறைக்கவும் தொழிலாளர் கல்வி தேவைப்படுகிறது. 8) தொழிலாளர்களிடையே நட்புறவும் ஒழுக்கமும் வளரவேண்டுமாயின் தொழிலாளர் கல்வி தேவை. 9) தொழிலாளர்கள் நிருவாகிகள் ஆகியோரிடையே சுமூகமான உறவு நிலவத் தொழிலாளர் கல்வி வழிவகுக்கிறது

தொழிலாளர் கல்வி தனிமனித நலனுக்கும வளர்ச்சிககும் மட்டுமலலாது, சமுதாய வளர்ச்சிக்கும, நாட்டின் பொருளாதார முன்னேற்றததிறகும மிகவும் தேவையான ஒனறு. நாட்டின் உறபத்தித் திறன் பெருகவும், அதன காரணமாகப் பொருளாதார, சமூக முன்னேற்றம் ஏற்படவும், உலகில் ஒரு நாட்டின நிலை உயரவும் தொழிலாளர் கல்வி பெரிதும் உதவுகிறது. ஞா.ப.

**தொழிலாளர் நலம்**; உழைக்கும் மக்களின் உடல் நலம், மன நலம, சமூக நலம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு எடுத்துக்கொளளும் முயற்சியே தொழிலாளர் நலம் (Labour Welfare)எனப்படும். தொழிலாளர்களின் தொழிற சூழ்நிலையையும அவர்களுடைய குடும்பத்தின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துவதே தொழிலாளர் நலத்தின் குறிககோள ஆகும். தொழிலாளர் நலத்தில் தொழில தொடர்பான சட்டஙகள, சமூகக் காப்பீடு ஆகியவையும் அடங்கும்.

தொழிற்சாலைகள் தொடஙகப்பட்ட காலத்தில தொழிலாளர் நலத்தைப் பற்றியும், முதலாளி, தொழிலாளி உறவைப் பற்றியும் போதுமான கவனம் செலுத்தப்படவிலலை. முன்னாப் பெரும்பாலான தொழிற்சாலை நிருவாகத்தினா, நலத் திட்டஙகளால ஏறபடும நிதிச் சுமையை ஏற்கத தயங்கினார்கள. ஆனால, இரணடாம் உலகபபோருக்குப் பினனர் இந்திய அரசு தொழிலாளர் நலத்திட்டஙகள் மேல் கவனம் செலுத்தத் தொடஙகியது. தொழிலாளர் நலனின செயல் நோக்கம் (Motive) பறறியும், அதன் நன்மை பறறியும் வேறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன.

தொழிலாளர் நலம் என்பது தொழிலாளர் துயர்துடைக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடன் தொடஙகப்பட்ட ஒனறாகும். பின்னால் அது உற்பத்தியைப் பெருக்கவேணடும் என்ற பயனகருதிய செயல் நோக்கமாக மாறியது.

மக்களின சமூக-பொருளாதார வளர்ச்சி, தொழில் மய மாதலின் அளவு, சமூகப் பழக்கவழக்கஙகள, மக்களின் கல்வியறிவு, அரசியல் சூழ்நிலை, தொழிற்சாலையின் தனமை ஆகிய இவைகளைப் பொறுத்துத் தொழிலாளர் நலம நாட்டுக்கு நாடு, இடததிறகு இடம், தொழிறசாலைக்குத தொழிசாலை, காலத்திறகுக் காலம் மாறுபடும் தன்மையுடையது. வாழ்க்கை வசதி பெருகப் பெருக, புதிய சூழநிலை உருவாக உருவாக நலபபணிகள (Welfare Services) விரிவாகும.

'பொருளாதாரச சந்தையின நிலைமை, தொழிற்சாலையின பழக்கம், தொழிற்சட்டம் ஆகிய வறறிற்கும மேலாகத் தொழிலாளாகளுககுத தேவையான வாழ்க்கை பண்பாட்டு வசதிகளை முதலாளிகள் தொழிற்சாலைமுறைகளுக்கு உட்பட்டுத்தாமாக முன்வந்து செய்துகொடுப்பது தான தொழிலாளர் நலம் எனச் சமூக அறிவியற கலைச்சொல அகராதி விளக்குகிறது.

பன்னாட்டுத் தொழிலாளர் அமைப்பு (International Labour Organization) கீழ்ககாணுபவை தொழிலாளா நலத்தில் அடங்கும் எனப் பரிநதுரைத்துளளது. அவையாவன:

அ) தொழிற்சாலையிலோ அதன அருகிலோ உணவு வசதி செய்து தருதல்,

ஆ) ஓயவு, பொழுதுபோககு ஆகிய வசதிகள் செயது தருதல்,

இ) போககுவரத்து இலலாத இடங்களில அலலது குறைவாகவுளள உள்ள இடங்களில தொழிற்சாலையிலிருந்து போகவும் வரவும் வசதி செய்து தருதல.

தொழிலாளர் நலம் என்பது தொழிற்சாலையில தொழிலாளாகளுக்கு உணவுவசதி செய்துகொடுத்தல், ஓய்வுஎடுக்கும்வசதி, பொழுதுபோக்கு வசதி, மருத்துவ வசதி, சுகாதார வசதி, தொழிற்சாலைக்குப் போக வர வசதி, கல்வி வசதி, வீட்டுவசதி, சம்பளத்துடன் கூடியவிடுமுறைவசதி, மகப்பேறுவிடு முறை(Maternity Leave)வசதி, குழந்தைகளவசதி, சமூகக் காப்பீடு வசதி, ஒய்வு உதவித்தொகை (Gratuity), ஒய்வு ஊதியம் (Pension) சேமநல நிதி (Provident Fund) வசதி ஆகியவறறை உளளடக்கியதாகும்.

மேற்கூறிய தொழிலாளர் நலத்தை 1963-இல கூட்டப்பட்ட தொழிறசாலைத தொழிலாளாகளுக கான நல வசதிகள பறறிய வல்லுநர் குழு இரு வகைகளாகப பிரிக்கிறது முதலாவது தொழிற் சாலை வளாகததிலேயே ஏறபடுததிததருகிற நல வசதிகள் ஆகும. இவற்றில் சிறறுணடிச் சாலைகள, குடிநீா, கழிவறை, குழநதைகள காபபகம, மருத்து வம ஆகிய வசதிகள அடங்கும. இரண்டாவது தொழிற்சாலை வளாகத்திறகு வெளியே ஏறபடுத் தித்தருகிற நல வசதிகள ஆகும இவறறில வீட்டு வசதி, முதியோர் கலவி, பொழுது போககு வசதிகள் முதலியவை அடஙகும்

**தொழிலாளர் நலனின் முக்கியத்துவம்**: நலப் பணிகள மூலம் தொழிலாளாகளுககு நலவுணர்வுகள ஏறபடுகினறன. இநநல்லுணாவுகளால தொழில் அமைதி ஏறபட வாயப்புளளது தொழில உறவு (Industrial Relation) வளர ஏதுவாகிறது தொழி லாளர்கள் கவலையிலிருந்து விடுபடவும், உடலநலத் தைக் காக்கவும, திறமையை வெளிக் கொணரவும் உதவுகிறது. தொழிலளார்களிடையே கூட்டுறவுப் பொறுப்புணர்சசியும முயற்சியும கட்டுப்பாடும் வளரவும் இநநலவுணாவுகள துணை செயகினறன.

தொழிற்சாலையினுளளே பல நலவசதிகள் கிடைப்பதால மிகச சாதாரண காரணங்களுககாக வேலைநிறுத்தம் செய்வது குறைகிறது தொழிலாளா களின வருகை மிகுகிறது. தொழிலாளர் நலனால் பொருளாதாரப் பயன மட்டுமல்லாது சமூகப் பயன் களும் தொழிலாளாகளுககு மிகுதியாகக கிடைக கின்றன. உணவு வசதி, மருத்துவ வசதி ஆகியவற றால் தொழிலாளர் உடல நலம பேணப்படுகிறது. அதனால உறபத்திப் பெருக்கினைக் காணமுடிகிறது.

**தொழிலாளர் நலச் செயல்களின் நோக்கம்**: தொழிலாளர் நலச் செயலகளின மிக முககியமான நோக்கம் அவர்களுடைய இனறியமையாத் தேவை களை நிறைவேறறுவதுதான. அதை அவாகளுடைய ஊதியத்தில் குறைத்துவிட்டுச செயற்படுததுதல கூடாது. தொழிலாளாகள் தம தேவைகளை நிறை வேறற வேணடிய பொறுபபும கடமையும தொழிற் சாலை நிருவாகத்தினருக்கு இருககினறன ஒவவொரு பிரிவைச சேர்ந்த தொழிலாளாகளுக்கும் ஒவவொரு வகையான நலப்பணிகள தேவையாக இருக்கும். தோட்டத் தொழிலாளர்களின தேவைகள சுரங்கத தொழிலாளாகளின் தேவைகளிலிருநதுமாறுபட்டிருக கும். அதனால், தொழிலாளர்களின் தேவைகளை நன்கு அறிந்து அதற்கேறப முனனுரிமை அளிதது அவர்களுடைய இன்னல்களை நீகக வேண்டும

தொழிலாளர்களின உடல் ஆரோககியமும் ஆளுமை (Personality) வளர்ச்சியும் நலப்பணியின் முககிய குறிக்கோளாக இருத்தல் வேணடும். நலப் பணிகள் தொழிற்சாலை அமைப்பின் மேலிருந்து கீழ் வரை அனைவருக்கும பயன்படும்வகையில் அமைந் திருத்தல் வேணடும.

நலப்பணிகளின வெற்றி அவறறின்தனமை,தரம், அவற்றைச் செயறபடுத்தும் விதம ஆகியவற்றைப பொறுத்துளளது தொழிலாளர்கள தம ஒத்துழைப்பு, கூட்டுறவு, ஊக்கம், முயற்சி, பொறுப்பு, பஙகெடுத் தல் முதலியன இனறி நலபபணிகள முழுமையாக நிறைவேறா.

நலப்பணிகளுக்கு ஆகும் செலவை முனகூட்டியே கணக்கிட்டு நிதிநிலையை நன்றாக வைத்துக்கொள்ள வேணடும். நிதிப் பறறாக்குறையோடு திட்டமில்லா மல நிறைவேற்றப்படும் நலப்பணிகள தோலவியுறும் அல்லது நிருவாகததினருக்கு மிகுந்த நிதிப பளுவை உணடாக்கும.

தொழிலாளர்கள எலலோருமஒனறுகூடிக் கலநது விவாதித்து முடிவெடுத்துத் திட்டமிட்டபடி செய லாறற வேண்டும். அதனால தொழிலாளர் நலத் திட்டங்கள் தங்களால், தங்களுக்கு உருவாக்கப்படு கின்றன எனற பெருமை ஏற்படும்.

தொழிலாளர் நலப்பணியின் பொறுப்புகள் நிரு வாகம், தொழிலாளாகள், தொழிற் சங்கம ஆகியவற் றுககுப் பகிாநதளிக்கப்பட வேணடும். இது நேரப்படி செயலாற்றும திறனை வளாக்கிறது; தொழிலாளர் கள தஙகளை வளர்த்துக்கொளளவும் உதவுகிறது.

**தொழிலாளர் நலனுக்கான அணுகுமுறைகள்**: முதலாவதாக, முதலாளி அலலது தொழிற்சாலைக்கு வெளியிலுளள சில அமைப்புகள, மனிதாபிமான முறையிலோ மதம் கருணை ஆகியவற்றின் அடிப் படையிலோ தொழிலாளர்களின சில குறைகளைத் தீர்க்க நேரடியாக முன்வந்து உதவி செய்வது ஓா அணுகுமுறையாகும்.

இரண்டாவதாக, தொழிலாளர் நலன் பற்றிய பொதுமககளின சிந்தனை மாறியதாலும், பெரிய பெரிய தொழிற்சாலையின் தோற்றததாலும் தொழி லாளர் நலனுக்குரிய அணுகுமுறையில் மாற்றம ஏற் பட்டது. முன்பிருநத ஆட்சார்புடைய உறவுநிலையை (Personal Relationship) அடிப்படையாகக் கொணட அணுகுமுறை மாறி ஆட்சார்பற்ற உறவுநிலையை (Impersonal Relationship) அடிப்படையாகக் கொணட அணுகுமுறை ஏற்பட்டது. தொழிற்சங்கம் அல்லது அரசாங்கம் கட்டாயப்படுத்தும் பொழுது முதலாளி இவ் வணுகுமுறையை மேற்கொளகிறார்.

இ-்பு போட்டியின அடிப்படையில் உருவாகிறது. இலாபம, உறபத்திப் பெருக்கம போனற நோக்கங களை அடிப்படையாகக் கொணடு இந்த அணுகு முறை ஏற்படுகிறது தொழிலாளர்நலம மூலம் தொழி லாளா திறமையை வளர்த்து, அதன்மூலமாக உறபத் தியைப் பெருக்குவது இதன நோககமாகும்

மூனறாவதாக, தொழிலாளர் நலததைப பொது நலனின (General Welfare) ஓர் அஙகமாகக் கருதிச செயற்படுத்துகினறனர் மனிதாபிமானத்தின அடிப் படையிலோ தொழிலாளா திறமையை வளர்க்கவேண டுமஎனற தனனல நோககின அடிப்படையிலோ இல் லாமல், பொதுவான சமூக, பொருளாதார முனனேற றம் ஏற்படவேணடும எனற எணணத்தின காரண மாக இது ஏறபடுகிறது.

**தொழிலாளர் நலப்பணியின் செயலகள** தொழிலா ளர் நலப்பணியினை நிறைவேறறப் பலஅமைப்புகள உள்ளன. மததிய, மாநில அரசுகள, நிருவாகத்தினர், தொழிலாளர்கள, தொழிறசங்கஙகள, பிறசமூக அமைப்புகள முதலியவை தொழிலாளர் நலப் பணி யில் ஈடுபடடுளளன பல்வேறு அமைபபுகளின வழி கள வெவவேறாக இருந்தாலும குறிக்கோள ஒன் றாகவே உளளது.

நாட்டின் பொருளாதார வளாசசி, சமூக அமைப்பு, நிதிநிலைமை ஆகியவறறைப் பொறுத்து அரசாங்கத்தின பஙகு நாடடிற்கு நாடு வேறுபடும். சட்டப்பூாவமான பொறுப்புகள நீஙகலாக முன மாதிரி நிருவாகமாக இயஙக வேணடிய சமூகப பொறுப்புகளும அரசாஙகததிறகு உணடு. தொழி லாளர்கள வசிககக்கூடிய இடஙகளில் பளளிகள, மருத்துவமனைகள போனற வசதிகளை அரசாஙகம் செயது தரலாம.

மத்திய அரசு தொழிலாளா நலத்திற்கு ஒவ் வோர் ஐந்தாண்டுத திட்டத்திலும் பல கோடி உரு பாய் ஒதுககுகிறது. இப் பணம பலவேறு பயிற் சித திட்டஙகளுக்குச செலவிடப்படுகிறது.

மாநில அரசுகள தொழிலாளர் நல மையங்களை ஏற்படுத்தி உளளன. அவற்றினமூலம் தொழிலாளர் களுடைய கல்வி, பொழுதுபோககு, பணபாட்டுத் தேவைகள ஆகியன வழஙகபபடுகின்றன இப்பொழுது இம் மையஙகளின் எணணிககை மிகுதியாக்கபபட்டு, அவற்றின நடவடிக்கைகளும் விரிவாககப்பட்டுளளன.

நிருவாகத்தினரால் தொழிற்சாலையிலேயே தொழிலாளாகளுக்கு வேணடிய உணவுச்சாலைகள, குழநதைகள காபபகம் போனற வசதிகள அளிக்கப படுகினறன. தொழிலாளர்களின் பொதுத தேவை களான கடன் வசதி, வீட்டு வசதி ஆகியவறறிறகு அவர்களுடைய பொது அமைப்பான கூட்டுறவுச் சங் கங்களே (Co-oprative Societies) சிறநததாகும். தொழிற் சஙகஙகளும் தொழிலாளர்களுக்குத் தேவை யான வசதிகளைச செயகினறன; அவர்களுக்கு விட்டுபபோன சலுகைகள மீணடும் கிடைக்கவும் ஆவன செயகினறன.

சில நகராட்சிகளும் தொழிலாளர் நலத்திறகெனச் சில வழிவகைகள் செய்துள்ளன. எடுத்துக்காட்டாக, சென்னை மாநகராட்சி சில மையஙகள அமைத்து, அவறறின மூலம முதியோர் கலவி, குழநதைகள காபபகம், சிற்றுணடிச் சாலை வசதி ஆகியவற்றை ஏறபடுததியுளளது குழநதைகளுககுப்படிபபுடன இல வச மதிய உணவுத் திட்டமும் செயலிலுளளது. பல வேறு சமூகப் பணிக கழகஙகளும் தொழிலாளர் நலததில அக்கறை காட்டுகினறன. இக் கழகஙகளின முதன்மை நோக்கம் தொழிலாளர்களின வாழககைத் தரத்தையும, தொழிற்சாலைச சூழ்நிலையையும உயர்த்துவதாகும்.

மேறகூறிய அமைப்புகள தவிரத் தொழிலாளர் நல அதிகாரியின (Labour Welfare Officer) பஙகும சிறப்பானது. ஒவ்வொரு தொழிற்சாலையிலும தொழிலாளர் நல அதிகாரி பதவி ஏறபடுத்தபபட் டுளளது. தொழிலாளாகளின சிக்கல்களைப் பறறி அறிநதுகொளவதும், அவர்களுடைய உரிமைகளை அவர்களுக்கு விளக்குவதும், தொழிலாளர் நலக் கொள்கைகளை வகுப்பதில நிருவாகத்தினருககு ஆலோசனைகூறுவதும், நிருவாகததிறகும் தொழிலா ருக்கு மிடையேயும, தொழிறசாலைக்கும வெளி யிலுளள அமைப்புகளுககும இடையேயும் இணைப்பு (Liaison) அலுவலராகவும தொழிலாளர் நல அதிகாரி செயற்படுகிறாா.

தொழிலாளர் நலப்பணியில் தொழிலாளர்களு டைய உடல் நலமும, மன மகிழ்ச்சியும, தூய்மையான தொழிறசாலைச சூழ்நிலையும், தொழிறசாலை உற வில முனனேற்றமும, உறபத்திப் பெருககமும ஏற் படுகின்றன என்பதை எலலோரும் உணருகின்றனர். ஆனால, இப்பணியின் தனமையும் தரமும தொழிற் சாலைககுத் தொழிற்சாலை, இடத்திறகு இடம் மாறுபடுகின்றன. பெரும்பான்மையான நலப்பணிகள நிதி திரட்டவும, கணககுக் காணபிப்பதற்கும செயற படுகினறன. இந்நிலை இருத்தல் கூடாது. சில வசதி கள சட்டபூர்வமாகக் கட்டாயப்படுத்தப்படல் வேண டும. தொழிற்சாலையைப பொறுத்தும, அவர்களு டைய சிக்கலைப் பொறுத்தும சில கூடுதல வசதிகள அளிக்கப்படலாம். எஸ.சொ.

**துணை நூல்கள்:**

Mehrotra,S.N., Labour problems in India, S Chand &Co Ltd , New Delhi, 1981.

**Punekar, S.D., Deodhar S.B. and Saraswathi San karan**, Labour Welfare, Trade Unionism and Industrial Relations, Himalaya Publishing House, Bombay, 1978.

**Tyagi, B.P.,** Labour Economics and Social Wel fare, Jai Prakash Nath and Co, Meerut, 1976,

*தொழிலாளர் பதவி உயர்வு* என்பது, பொதுத்துறை ஆட்சியில் (Public Administration), பொதுமக்கள் நலனைக் கருதிப் பணியாளருக்குத் தாழ்ந்த நிலையிலிருந்து உயர்நிலைக்கு அல்லது பத விக்குக் கூடுதல் ஊதியத்துடனும் கூடுதல் பொறுப்பு களுடனும் அளிக்கப்படும் ஒரு முன்னேற்றம் அல்லது உயர்வு (Promotion) ஆகும். அரசாங்கப் பதவிகளெல லாம், பணிகளின் இயல்பு, ஊதியம் ஆகியவற்றின அடிப்படையில வகைப்படுத்தப்பட்டுள்ளன. பதவி களின வகைப்பாட்டிலே (Classification of Positions) உயர் பதவுகளிலேற்படும் வெற்றிடங்களைக் கீழ் நிலையிலிருப்போருக்கு உயர்வளித்து நிரப்புவது அரசாங்கம் பின்பற்றும் ஒரு கொள்கை ஆகும். ஒரே வகைப் பதவியிலிருப்போர் ஆண்டுதோறும், அப்பத விக்குரிய ஊதிய அளவின்படி (Pay Scale) ஊதிய உயர்வு(Increments) பெறுதல் பதவி உயர்வு ஆகாது. பதவி உயர்வு என்பது, கூடுதல் பொறுப்புகளும் கூடு தல ஊதியமுமுடைய உயர்பதவிக்குச் செலவுதலைக் குறிக்கும.

**பதவி உயர்வு விதிகள்.** அரசாங்க ஆட்சித் துறை களில் பொதுவாக ஒரேதுறையில் உயர் வகுப்புப் பதவிகளிலேற்படும் வெற்றிடங்களை நிரபபுதற்கு அதே ஆட்சித்துறையில கீழ்ப்பதவிகளிலிருபபோருக்கு உயர்வு கொடுத்து நிரப்புதல் வழக்கம். இந்த உள துறைப் பதவி உயர்வைத் தவிர, பலதுறைப் பதவி உயர்வு முறையும் உணடு. ஓராட்சித் துறையில உயர் பதவிலேற்படும் வெற்றிடங்களை நிரப்புதற்கு வேறொரு துறையிலிருந்து பதவி உயர்வு வாயிலாக ஆட்களை அமர்த்துதல பலதுறைப் பதவி உயர்வு முறை ஆகும். ஆனால, இந்த முறையும் வெறுமை ஏற் படுகிற ஆட்சித்துறையில் தகக ஆட்களிலலாத போது தான் பின்பற்றப்படுகிறது. புதியதொரு ஆட்சித் துறையை நிறுவும்போதோ இருக்கும் ஆட்சித் துறை யை விரிவுபடுத்தும்போதோ தோனறும் வெறறிடங் களை நிரப்புவதற்கு அரசாங்கம் வேறு பல துறை களிலிருந்து ஆட்களைப் பதவி உயர்வு வாயிலாக் அமர்த்துவதுணடு.

ஆட்சித்துறை அடிப்படையில் பதவி உயர்வு அளிப்பதில் சில சிக்கல்கள் ஏற்படுகின்றன. ஓர் ஆட்சித் துறைப் பணியாளர்கள் யாவருக்கும் அதே ஆட்சித் துறையிலேயே பதவி உயர்வுக்கான சம வாய்ப்புகள தோன்றுதல் அரிது. ஆட்சித் துறைகள யாவற்றிலும் சம எண்ணிக்கையில் பதவிகள இருப்பது மிலலை. ஆகையால் சில துறைகளில் பதவிகள கூடு தலாக இருப்பதால் அவறறில் உளளோருக்குப் பதவி உயர்வு வாய்ப்புகள் மிகுதி. இக்குறையை நீக்கி யாவ ருக்கும் சமமாகப் பதவி உயர்வை அளிக்கும்பொருட் டுப் பதவி உயர்வுக்குத் தகுதியுடையவர்களை ஒரு நடுவண் தொகுப்பில் (Central Pool System) சேர்ப் பதும் உண்டு பதவிகளில் வெறுமை ஏற்படும்போது நடுவண தொகுப்பிலிருந்து வெற்றிடங்களை நிரப் புவர். இம்முறையிலும் குறைகளுள்ளன. பதவி உயர் வுககு நிறைய வாய்ப்புகளையுடைய துறைகளில் பணிசெய்வோர், நடுவண் தொகுப்பில் சேர விரும் பார். மேலும் ஒரு துறைக்குரிய ஆட்சிப பணியில் அனுபவம் உடையோரை இந்நடுவண் தொகுப்பின் வழியாக வேறொரு வகையான ஆட்சிப் பணிக்கு அமாத்துதல முறையன்று. மேலும் நடுவண் தொகுப் பில் பல்வேறு துறைகளிலிருந்தும் அலுவலர்களைச் சேர்த்தற்குரியஒரு பொதுவான தகுதி அளவுகோலும் இல்லை. இந்தியாவில் பல்வேறு துறைகளுக்கும் வேண்டிய அலுவலரை அளித்தற்காக ஒரு பொது வான நடுவண் தொகுப்பில் இந்திய ஆட்சிப் பணி யாளர்கள (Indian Administrative Service) சேர்க் கப்பட்டுளளனர்.

ஒரே ஆட்சித் துறையில் ஒரு தரத்திலிருந்து (Grade) அடுத்த உயர்நத தரத்துக்குப் பதவி உயர்வு அளித்தல்தான் முறை. சில சமயங்களில் ஒருவகைப பதவியிலிருந்து வேறொரு வகைப் பதவிக்கு (Class) உயர்வு அளித்தலும் உணடு. ஆனால், ஒருவகைப் பணியிலிருந்து (Service) வேறுவகைப் பணிக்குப் பதவி உயர்வு அளித்தல் இல்லை. எடுத்துக்காட்டாக பொறியாளர் பணியில் ஏற்படும் பதவி வெறுமை யில மருத்துவப் பணியைச் சேர்நதோர் அமர்த்தப் படமாட்டார். ஆயினும், இம்முறையில் சில விதி விலக்குகளும் உண்டு.

பதவி உயர்வுகளுக்கான வாய்ப்புகள ஆட்சித் துறைகளில் மிகவும் சுருக்கமாக இருப்பதாலும், ஒவ் வோர் ஆட்சித் துறையின் அமைப்பும் அடித்தளத்தில் விரிந்தும், மேலே போகப்போகக் குவிந்துங்கூம்பு வடி வத்தில் இருப்பதாலும் (Pyramidal), எலலாப் பணி யாளருக்கும தம் வாழ்நாளில உயர்நத பதவிக்குப் பதவி உயர்வு கிடைத்தல் என்பது இயலாது பதவி உயர்வு இலலாத நிலை பணியாளருக்கு வேலையி

லுள்ள ஈடுபாட்டைக் குறைத்தல கூடும். ஆகையால பதவி உயர்வு என்பதும் மனம்போன போக்கில் அளிக் கப்படாமல், சில அடிப்படை விதிகளை ஒட்டி அளிக்கப் பட்டால, அதனால் பணியாளர்களுடைய மனநிலை கெடாமலிருத்தற்கு வழி உண்டாகும்.

பதவி உயர்வு அளித்தற்குக் கையாளப்படும் அளவுகோல்கள் இரண்டு; ஒன்று, பணிமுதுநிலை அடிப்படையில் (Seniority Principle) பதவி உயர்வு அளித்தல் மற்றொன்று, தகுதி அடிப்படையில்(Merit Principle) பதவி உயர்வு அளித்தல். இருமுறைகளை யும் இணைத்துக் கையாளுதலும் உணடு.

**முதுநிலை அடிப்படையில் பதவி உயர்வுமுறை:** இதற்கு ஒருவர் மற்றவரை விட நீணடகாலமாகப் பணிசெய்துள்ள காரணத்தால், அவர் பதவி உயர்வு பெறுதற்குத் தகுதி பெறுகிறார் எனறு பொருளன்று. எடுததுக் காட்டாக, நெடுங்காலமாகக் கடைநிலை ஊழியராக ஓர் அலுவலகத்தில் வேலை செய்பவர், அவருக்குப் பின்னர் எழுத்தராக அதில் வேலையில் சேர்ந்த ஓர் இளைஞரைவிட அவ்வலுவலகத்தில பதவி உயர்வு பெறுதற்குத் தகுதி உடையவராக மாட்டார். பதவி உயர்வுக்கு எடுததுககொளளப் படுபவர் ஒரே தரத்திலுள்ள, ஒரேஊதிய அளவிலுளள பதவிகளிலிருத்தல் வேணடும. ஒரே தரத்தில் பணி செய்பவருள நீண்டகாலப பணி உடையோருக்கே பணிமுதுநிலை இருப்பதாகக் கருதப்படும்.

பணி முதுநிலை அடிப்படையில் பதவி அளித்தல எனபதிலுளள ஒரே ஒரு சிறப்பு, இந்த முறையில பதவி உயர்வளிககும அதிகாரிக்குத தனது வெறுப்பு விருப்புகளை வெளிப்படுததுதற்கான வாய்ப்புககே இடமில்லாமல், பதவி உயாவு வேணடுவோருடைய பணியின் கால அளவுக்கே முதன்மை அளிக்கப் பட்டிருத்தலதான. இம்முறையில் உயா அதிகாரி தமக்கு வேணடியவருக்குப் பதவி அளித்தல் இயலாது. மேலும், தகுதியினடிப்படையில் ஆணடில் இளையோ ருக்குப் பதவி உயர்வளித்தலை விருமபாத முதிய பணியாளரெல்லாம் இந்த முறையைத்தான் ஆதரிப் பா. மேலும யாவருக்கும் 'தகுதி' (Merit)ஏறபடுதலும் இயலாது; இதனாலும, என்றாவதொரு நாள் ஒவ் வொரு பணியாளருக்கும் முதுநிலை அடிப்படையில் பதவி உயர்வு ஏற்படவாயப்பு இருப்பதாலும், இம் முறையினடிப்படையில பதவி உயாவு அளிககப் படு தலையே பொதுவாக எல்லாப் பணியாளரும் விரும்பு கின்றனர்.

முதுநிலை விதியில குறைகளும இருக்கினறன. பணியாளர் யாவருக்கும் பதவி உயாவு பெறுதற்குத் தகுதி வயதினால வந்துவிடுகிற தெனபது சரியன்று. பதவி உயர்வின் நோக்கம் தகுதியுடையோரை உயர் பதவிகளில் அமர்த்துதல் ஆகும்; தனிப்பட்ட பணியா ளருடைய முனனேற்றத்துக்கு வழிவகுப்பதனறு. இதனால நீண்டகாலப்பணி, தகுதியை அளக்கும் அளவுகோலாகாது எனற உணமை வெளிபபடுகிறது. மேலும், அனுபவம் என்பதும் வேலையில் சேர்ந்தசில காலத்தில் ஏற்படுகிறது. பின்னாப் பணியாளர் அதில் தேக்கநிலை அடைகிறார். மேலும் அனுபவம் எனபது வேலையிலிருப்பவருக்கும, வேலையில் புதிதாகச் சேர வருபவருக்குமிடையேயுளள வேறுபாட்டைக் காட்டுகிறதே தவிர, ஒரே தரத்தில் நீண்டகாலமாகப் பணியிலிருப்பவருக்கும, அவரைவிடச் சிறிது குறை வான காலத்துககுப் பணியிலிருப்பவருக்குமிடையே எந்த வேறுபாட்டையும எடுத்துக்காட்டவில்லை.

இவவளவு குறைபாடுகள முதுநிலைமுறையில் காணப்பட்டாலும், இந்த முறை இக்காலப்பணிகளில முற்றிலும் கைவிட்டுவிடப்படவிலலை. ஒரு பணித துறையில் (Service) ஒரே இயல்புடைய பணிகளைக கொணட கீழ்த்தர அலுவல்களில் அல்லது பதவிகளில உயர்வு அளித்தறகாக முதுநிலை முறையைப பின்பற் றுதல சிறந்ததென்றும், நடுத்தர, மேல்நிலைப் பதவி களில் உயர்வு அளித்தற்குத் தகுதி முறையைப் பின பற்றுதல சிறநததெனறும கருதுகினறனர். மேல் நிலைப் பதவிகளில் முதுநிலை முறை அறவே நீககப் பட்டு, தகுதிமுறையே கையாளப்படுதல வேணடு மெனறும், நடுத்தரப் பதவிகளுக்கு உயர்வு கொடுக்கும போது தகுதி ஒரு முதனமைக காரணியாகவும், முது நிலை இரணடாம் காரணியாகவும் கருதப்படுதல வேண்டுமெனறும். கடைநிலைப் பதவிகளில்உயர் வளித்தற்கு முதுநிலை ஒனறே பினபற்றப்படுதல் வேணடுமென்றும் கூறப்படுகிறது.

**தகுதி அடிப்படையில் பதவி உயர்வுமுறை:** ஒருவர் தமது அறிவு வளர்ச்சியின் அடிப்படையில் பதவி உயாவுக்குத் தகுதிபெறுகிறார் என்பதே இம் முறையின உணமை ஆகும் தகுதி என்பதும் பட்டங்க ளின வாயிலாகவும் தேர்வுகளின் வாயிலாகவும் (Examinations) வெளிப்படுத்தப்படுகின்ற அறிவு வளர்ச்சியை மட்டுமல்லாமல், ஒருவருடைய ஆளுமை (Personality), தலைமை தாங்குதறகுரிய தகுதி (Capacity for Leadership) பண்பு, ஆற்றல் முதலியவைகளை யும் குறிப்பிடுவதாகையால், தகுதி எனபது என்ன எனறு வரையறுத்தல் இயலாது. ஆயினும், ஒருவரு டைய தகுதியைச் சோதித்தறிதற்கு, அ) நோகாண லோடு கூடிய (Interview) அல்லது நேர்காணல் இல லாத எழுததுத தோவு, ஆ), ஆட்சித் துறைத்தலைவா பணியாளரையும் அவருடைய பணியையும் பறறித தாம் அறிநதவற்றை அடிப்படையாக வைத்துத

தம் விருப்ப அதிகாரப்படி (Discretion) பணியாள ருடைய தகுதியைத் தீர்மானித்தல, இ) பணிப்பதிவே டுகள் (Service Records), தகுதியை அளத்தல் (Service Rating) முதலியவற்றின் அடிப்படையில் துறைத் தலைவர் பணியாளருடைய தகுதியைத் தீர் மானித்தல் முதலிய முறைகள கையாளப்படுகின்றன.

**பதவி உயர்வு அளிக்கும் அதிகாரி:** பதவிக்கு ஆள் சேர்த்தற்குததுறை சாராத பொதுப்பணி ஆணையம் (Public Service Commission) இருப்பதுபோல, பதவி உயர்வைத் தீர்மானித்தற்கும் துறைத் தலைவ ருடைய வெறுப்பு, விருப்பைச் சாராமல், ஓரஞ்சாரா டல் இயங்கக்கூடிய பொதுப்பணி ஆணையம் அதி சாரம் பெறுதல் வேண்டுமென்று பொதுவாகப் பணி யாளர் விருமபுகினறனர். பதவி உயர்வளிக்கும் அதி காரம் ஆட்சித்துறைத் தலைவர்களிடம் இருத்தல் வேண்டுமென்று பொதுவாக ஆட்சியாளர்கள் விரும்பு கின்றனர். பிரிட்டனிலும் இந்தியாவிலும் ஆட்சித் துறைத் தலைவர்களே பதவி உயர்வு அளிக்கும் அதி காரம் பெற்றுள்ளனர். பிரிட்டனில் பதவி உயர்வுக் கழகஙகள (Promotion Boards) அமைக்கப்பட்டுள் ளன. அதில்நிறுவன அதிகாரி (Establishment Officer), வெறுமை இடம் அல்லது பதவி இருககும் துறையின் தாழ்ந்த பிரிவின அதிகாரி, வேறு சில துறை அதி காரிகள ஆகியோர் இடம்பெறுகின்றனர். பணியாள ருடைய குழுவின் பிரதிநிதியும் (Whitley Council) சேர்க்கப்படுகிறார். இக்கழகம் பதவி உயர்வுக்குரிய வேட்பாளர்களையெல்லாம் நேர்காணல் செய்து, தனது பரிநதுரையை ஆட்சித் துறைத்தலைவருக்கு அளிக்க, அவர் பதவி உயர்வுக்கான ஆணையை விடுக் கிறார். அவருடைய தீர்ப்புக்கெதிராக மேல்முறையீடு செய்யும் உரிமையும் பணியாளருககு இருக்கிறது.

இந்தியப் பதவி உயர்வு முறையில் சில குறைகளி ருப்பதை நடுவண் ஊதிய ஆணையம் (Central Pay Commission) சுட்டிக் காட்டியுள்ளது. சிலசமயங களில் உயர்வு கேட்டு விடுக்கப்பட்டுள்ள விண்ணப்பங் களுள் சிலவற்றைப்பொதுப்பணி ஆணையத்தின பார் வைக்கு அனுப்பாமல் துறைத் தலைவர்கள விட்டு விடுகின்றனர். பதவி உயர்வளித்தல் பற்றித் துறைத் தலைவர்கள் செய்யும் முடிபும் நியாயமானதென்று கூற இயலாது பணியாளருடைய பணிப்பதிவேடும் சீரிய முறையில் வைக்கப்படுதலில்லை. எந்தப் பணி யாளருக்கு எதிரான கருத்து பதியப்படுகிறதோ, அது அவருக்குச சிலசமயங்களில் தெரிவிக்கப்படுவதில்லை. பதவி உயர்வுக்கான வெற்றிடங்கள பறறிப் பணியா ளருக்குத் தகவலளிப்பதில்லை. பணிமுதுநிலை ஒன்றே கவனிக்கப்பட்டுத் தகுதி புறக்கணிக்கப்படுகிறது. பல சூழ்நிலைகளில் ஆட்சித் துறைத் தலைவருடைய தன் விருப்பத்தின்பேரிலும், முறையற்ற வகையிலும் பதவி உயர்வுகள் அளிக்கப்படுகின்றன. புறக்கணிக்கப்பட்ட பணியாளர் மேல்முறையீடு செய்தற்கும் வாய்ப்புகள் போதுமானதாக இலலை.

ஆட்சித் துறைத் தலைவரிடம் பதவி உயர்வு அதிகாரம் இருத்தல் சரியே எனறும், இதில் ஓரள வுககு அவருடைய தனவிருப்பம் செயறபடுதற்கு வழி இருக்கிறதென்றும் கூறப்படுகிறது. பொதுவாக, ஆட்சிமுறை சிறப்புறுவதற்குப் பணிமுதுநிலை, தகுதி ஆகிய இரண்டு கொளகைகளும் இனறியமையாதன.

பா.சு.

**துணை நூல்கள்:**

Tha Indian Institute of Public Administration, The Organisation of the Government of India, Asia Publishing House, Bombay, 1958.

Willoughby, W.F., Principles of Puplic Administration, The Brookings Institution, 1939.

***தொழிலாளர் பொருளியல்:*** தொழி லாளர் பொருளியல் என்பது பொதுப் பொருளிய லின் ஒரு பகுதியாக விளஙகுகிறது. தொழிலாளர் என்னும் காரணி சமுதாயத்தின் அரிய உற்பத்திக் கருவிகளுள் ஒன்று. அதனை எவவாறு திறமை யாகவும் இலாபகரமாகவும் பயனபடுத்திச்சமுதாயத் தேவைகளை நிறைவு செய்து கொளவது என்ற சிக்க லைத் தீர்ப்பதற்குப் பொருளியலின நுணணியல் பேரியல் கோட்பாடுகள் கையாளப்படுகின்றன. அவ்வாறு பயன்படுத்தப்படும பொருளியல் கோட் பாடுகள சேர்ந்த ஒத்த கருத்துததான் 'தொழிலாளர் பொருளியல்' (Labour Economics) என்று கூறப்படு கிறது.

தொழிலாளர் பொருளியலின் முதன்மை, பல காலமாக உணரப்பட்டு வந்திருந்த போதிலும் அது அணமைக்காலத்தில் வேகமாக உயர்ந்துள்ளது. இதற்குப்பல காரணங்கள் உணடு. முதலாவதாக, தொகையின அடிப்படையில் பார்க்கும் பொழுது தொழிலாளர்கள் ஒரு கணிசமான அளவு வளமாகத திகழ்கின்றனர். எனவே, தேசிய வருமானத்தில பெரும் பங்கு தொழிலாளர்களுக்குக கூலியாகவும், ஊதிய மாகவும் செல்கிறது. உண்மையில் பெரும்பாலான மக்களுக்கு அவர்களது தொழில உழைப்பால் கிடைக் கும் கூலியும் ஊதியமும் அடிப்படை வருமானமாக அமைகின்றன. தேசிய வருவாயிலிருந்து இந்த வருமானம் எவ்வாறு பகிர்ந்தளிக்கப்படுகின றது என்பதை அறியப் பொருளியல் தேவைப்படு கிறது. இரண்டாவதாக, இனறைய சமுதாயத்தில் காணப்படும் பல சமூகப் பொருளாதாரச் சிககலகள் தொழிலாளரையே மையமாகக் கொணடுளளன,

எடுத்துக்காட்டாக, வேலையில்லாத் திண்டாட்டம், தொழிலாளர் வேலை நிறுத்தம், விலைவாசி உயர்வினால் ஏற்படும் வருமானத் தேய்வு, தொழிலாளர் உறபத்தித் திறன குறைவு, பெண்களின் வேலை வாய்ப்பு ஆகியவை தொழிலாளரை அடிப்படையாகக் கொண்டுள்ளன. இச்சிக்கல்களைத் தீர்ப்பதற்குத் தொழிலாளர் பொருளியல் இன்றியமையாது வேணடப்படுகிறது. மூன்றாவதாக, தொழிலாளர் சேவைகளை வாங்கும் விறகும் இடமான தொழிலாளர் அங்காடிகள், மற்ற அங்காடிகளை விட வேறுபட்ட குணச்சிறப்பை உடையனவாக இருக்கின்றன. அவற்றின் நிலைகளைப் பொதுவான பொருளியல் கோட்பாடுகளின உதவியால் விளக்க முடியாது. ஒரு தனிப்பட்ட சிறப்பான தொழிலாளா பொருளியல் தேவைபபடுகிறது எடுத்துக்காட்டாகப் பொருளியலில் பயனபடும அளிப்பு, தேவை போன்ற கருத்துகளைத் தொழிலாளர் காரணிக்கு நேரடியாகப் பயன்படுத்த முடியாது.

**தொழிலாளர் பொருளியலின் பொருளடக்கம்:**தொழிலாளர் பொருளியல், நீணட காலமாக வரலாற்று அடிப்படையிலான விவரிக்கத் தக்க ஓர் இயலாக இருந்து வந்தது. அது, தொழிலாளர் இயக்கத்தின் வரலாறு, தொழிலாளர் சட்டம், முக்கிய நீதிமன்ற வழக்குகள், தொழிற் சங்கங்களின் நிறுவன அமைப்பு, பேர சக்தி ஆகியவற்றையே வலியுறுத்தி வந்தது அந்தக் கூறுகளை விளக்குவதற்குப் பொருளியற கோட்பாடுகள் நேரடியாக மிருந்த அளவில் கையாளப் படுத்த முடியாமல் இருந்து வந்தன. அந்த அணுகுமுறைக்கு ஓர் அடிப்படைக் காரணம் தொழிலாளர் அங்காடிகளில் காணப்பட்ட சிக்கல்களை விளக்கும் அளவிற்குப் பொருளியல் கோட்பாடுகள் வளரவில்லை என்பதாகும். தொழிலாளர் அங்காடிகள், வேலையின்மை ஆகியன பற்றிச் சிறிது கவனமே செலுத்தப் பட்டது என்பது உணமை. ஆனால், அவற்றில பொருளாதாரப் பகுப்புக் குறைவாகவும மேலெழுந்த வாரியாகவும் இருந்தது. இவ்வாறு நீண்ட வழககத்தில் இருந்து வந்த தொழிலாளர் பொருளியலைத் 'தொனமைத் தொழிலாளர் பொருளியல' என்று கூறலாம். ஆனால், அண்மைக் காலங்களில் இத்தொன்மைத தொழிலாளர் பொருளியலில் பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.பொருளியல் நிபுணர்கள் பல பகுப்பு உத்திகளைத் தொழிலாளர் துறையில் புகுத்தி உளளனர். அதன விளைவாக வரலாறு நிருவாக, சட்ட அணுகுமுறை மாறிப் பொருளாதாரக் கோட்பாடுகள ஓங்கித் தொழிலாளர் இயலுக்கு ஒரு புதிய வடிவம் தோன்றியுள்ளது. அதாவது தொழிலாளா பொருளியல், நுணணியல், பேரியல் கோட்பாடுகள் மிகுதியாகப் பயன்படுத்தப்படும் இயலாக மாறியுள்ளது.இதனைப் 'புதிய தொழிலாளர் பொருளியல்' எனக் கூறலாம்.

தொழிலாளர் பொருளியலின், பெரும்பாலான பகுதிகளை நுண்ணியல் பொருளியல் கருத்துகளுடன் விளக்கலாம். எடுத்துக்காட்டாக, ஒரு தனிப்பட்ட அஙகாடியில் தீர்மானிக்கப்படும கூலியையும் வேலை வாய்ப்பினையும் நுண்ணியல் கோட்பாடுகளோடும், சராசரி கூலி நிலை, மொத்த விலைவாசி ஆகிய வற்றைப் பேரியல் கோட்பாடுகளின் உதவியோடும் விளக்கலாம்.

நுணணியல தொழிலாளா பொருளியலில் கீழ்க் காணும கூறுகளைக் காணலாம்.

**தொழிலாளர் அளிப்பு** இஙகே ஒரு தொழிலாளி தன் உழைப்பை அளிக்க ஏன் முன வருகிறான; அவனது உழைப்பு நேரத்தைத் தீர்மானிக்கும் காரணங்கள் என்ன என்பவை ஆராயப்படுகின்றன. கூலிக்கும் தொழிலாளியின உழைப்பு அளிப்புககும உளள உறவு இப்பகுதியில் வரையறுக்கப்படும். இநத உறவின் மூலமாகத் தனிததொழிலாளர் கணணோட்டத்தோடு தொழிலாளர் அளிப்புக் கோட்பாடு உருவாக்கப்படுகிறது. மேலும் பல தரப்பட்ட ஊதியத திட்டங்களும், வருமானத் திட்டஙகளும், வருமான பராமரிப்புத் திட்டங்களும,ஒருவனது உழைப்பு அளிப்பை எந்த அளவில் பாதிககினறன எனபதும் இந்தப் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. ஒரு தனித் தொழிலாளியின் அளிப்பிலிருந்து ஒரு குடுமபததின உழைபபு அளிப்பைப் பற்றி ஆராயப்படுகிறது. அதன மூலம் ஒவ்வொரு மக்கள தொகுதியின உழைப்பு அளிப்பு முடிவுகளை நனகு தெரிந்துகொளள முடியும. எடுத்துக்காட்டாக,திருமணமான பெண்டிர், இளைய ஆடவர், வயதான ஆடவர் ஆகிய மக்கள தொகுதிகள் தங்கள உழைப்பின் அளிப்பை எவ்வாறு அளிக்கின்றன. ஒவ்வொரு தொகுதிக்கும் உள்ள வேறுபாடுகள் எனன என்பன பற்றி அறிந்து கொள்ளவும் முடிகிறது. மேலும், மேற்கூறிய மககள் நீணட காலப்போக்கில எவவாறு உறபத்தியில் பஙகு கொண்டிருக்கிறாாகள், வணிகச் சூழல்களின காரணமாக அவர்களின் உழைப்பு எவ்வாறு பாதிக் கப்படுகிறது என்பதை இங்கே காணலாம்.

உழைப்பின் அளிப்பு வெறும் தொழிலாளர் எணணிக்கையை மட்டும்பொறுத்ததன்று. அதுதொழிலாளரின் தரம், திறமை, அவர்கள் பெற்றுளள கல்வி, பயிற்சிஆகியவற்றையும் பொறுத்துள்ளது. அவற்றைத் தொழிலாளர்கள் பெறுவதற்கு மூலதனம் செலவிட வேணடிய தேவை ஏற்படுகிறது. அநதமூலதனத்தை மனித வள முதலீடு என்று கூறுவர். அந்த மூலதனத்தின அளவையும் அதனைச் செலவிடுவதற்குரிய காரணங்களைப் பற்றியும் தொழிலாளர் பொருளியல் ஆராய்கிறது.

**உழைப்புத் தேவை:** தொழிலாளர்களின் சேவை ஏன் தேவைப்படுகிறது, எங்கிருந்து எப்படி உழைப்

பின தேவை உருவாகிறது, உழைப்பின் தேவை மறை முகத் தேவையா நோமுகத் தேவையா என்பன பற்றியெல்லாம் தொழிலாளர் பொருளியல் எடுத் துரைக்கிறது. குறுகிய கால, நீண்ட காலத் தேவையை எவ்வாறு கணக்கிடுவது, தேவைக்கும் கூலிக்கும் உள்ள தொடர்பு என்ன, எந்த அளவிற்கு உழைப்புத் தேவை தொழிலாளர் கூலியுடன நெகிழ்ச்சி உடைய தாக இருககிறதெனபன பற்றியும் தொழிலாளர் பொருளியல விவரிக்கிறது.

**கூலி நிருணயம்:** உழைப்பின் தேவையையும் அளிப்பையும் கணககிட்டு உழைப்பாளர் அங்காடி களில கூலி நிருணயம் செய்யபபடுகிறது. தேவை, அளிப்பு ஆகியவற்றில் ஏற்படும் மாற்றங்களைப் பொறுத்துக் கூலியின்நிலையும் மாறும். கூலி நிருணயததில் பல்வேறுபட்ட உழைப்பு அங்காடிகளும் அவற்றின் குணச்சிறப்பும் சிறப்பான பங்கினை வகிக் கின்றன.மேலும், ஒவ்வோர் அங்காடியிலும உழைப்பு சமூகக் கணணோட்டத்துடன் கூடிய திறமை யோடு பயன்படுத்தப்படுகிறதா? இல்லையென்றால அதனால் சமுதாயத்திற்கு ஏற்படும் பொருளாதார இழப்பு என்ன என்பன பற்றியும் தொழிலாளர் பொருளியல் கூறுகிறது.

**உழைப்பாளர் அங்காடியின் செயற்பாடு.** அங்காடி, காரணிகளைத் தவிர வேறுபல காரணஙகளாலும் பாதிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாகத் தொழி லாளர் சங்கஙகளின் நடவடிக்கைகள, அரசாங கக் கொளகைகள, பேதம் காட்டும (Discrimination of wages) முறை ஆகியவை கூலி விகிதங்களையும், தொழிலாளா திறமையையும், உறபத்தித் திறனை யும், வருமானப் பங்கீட்டினையும் பாதிக்கின்றன. அரசாங்கம் பொதுத்துறையை நிறுவிப் பல தொழிற் சாலைகளை நடத்துகிறது. எனவே, அது ஒரு வேலை கொள்பவராகக் கருதப்படுகிறது. இந்நிலையில் தொழிலாளர் பொருளியல், அரசின் பங்கு, அத னுடைய அரசியற் கொள்கை ஆகியவை தொழி லாளர் அங்காடிகளை எவ்வாறு பாதிக்கின்றன என பதை விளக்குவதோடு அரசின பல சட்ட திட்டங் கள, தொழிலாளர் இனம், பால் போன்றவற்றின் அடிப்படையில் தொழிலாளர் அங்காடிகள் எவவாறு பாதிக்கப்படுகின்றன என்பன பற்றியும் கணிக்கிறது.

**கூலி அமைப்பும் வருமானப் பங்கீடும்:** தொழிலா ளர் பொருளியலின மற்றோர் அங்கமாக விளங்குவது கூலி அமைப்பு முறையும் வருமானப் பஙகீடும் ஆகும். ஒரு நாட்டின் கூலி முறை துறைவாரியாக, தொழில் வாரியாக, பால் வரியாக எவ்வாறு அமைந்துள்ளது எனபதும், ஏன் கூலி, தொழிலாளர்களுக்கிடையே வேறுபடுகின்றது என்பதும் விவரிக்கப்படுகின்றன. சமுதாயத்தில் ஒருவருடைய வருமானம் போல இனனொருவருடைய வருமானம் அமைவதில்லை. சிலர் பிறரைவிட மிகுதியாகப் பொருள் ஈட்டுகிறார் கள். தனிமனிதர் வருமானம் எவ்வாறு பங்கிடப் படுகிறது, தனிஆள் வருமானங்களில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படக் காரணம் என்ன, இடப் பெயர்ச்சி, அரசாங்கத்தின் நடவடிக்கைகள், தொழி லாளர் குடிபெயர்தல் ஆகியவை வருமான ஏற்றத் தாழவிற்கு எவ்வாறு காரணங்களாக அமைகின்றன என்பன பற்றியும் தொழிலாளர் பொருளியல் கூறுகிறது.

உழைப்பாளர் அஙகாடிகள, பொருளாதாரக் கோட்பாடுகளுக்கு அப்பாற்பட்டு நிறுவனக் கூறு களின் காரணஙகளுக்காகச் செயற்படுகின்றன. இந்த நிறுவனக் கூற்றின்படி கூலி என்பது, உழைப்பின் தேவை, அளிப்பு ஆகியவற்றின அடிப்படையில் உரு வாக்கப்படுவதில்லை; மாறாகத் தொழிலாளர் சங்கங் களின் பேர சக்தியின மூலமாகவும், அரசியல் நிறு வனங்களின் செயற்பாட்டின் மூலமாகவும் தீர்மானிக் கப்படுகிறது.

**பேரியல் தொழிலாளர் பொருளியல்.** இறுதியாகப் பேரியல் தொழிலாளர் பொருளியல் கருததுகள தொழிலாளர்களின வாழ்க்கைத் தரமும், அவர் களின் சராசரி உணமைக கூலிநிலையும், அவா களது உற்பத்தி திறனைப் பொறுத்து அமைவதால், தொழிலாளர் உறபத்தித் திறனைத் தீர்மானிக் கும் பொதுக் காரணிகளைப் பற்றியும், உற் பத்தித்திறன எவவாறு மாறுகிறதெனபதைப் பற்றி யும் விளக்குகின்றன அடுத்து நாட்டினமொத்தத்தேசிய வருமானத்தில் தொழிலாளர் கூலியின் பஙகு எந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் பிரிக்கப்படுகிறது என்பதைப் பற்றியும், முழு வேலை வாய்ப்பினை எவ்வாறு வரையறுப்பது, வேலையில்லாச் சிக்கலை எவ்வாறு அளப்பது, வேலையில்லாச் சிக்கலின வகைகள் யாவை அவற்றிற்குள்ள வேறுபாடு என்ன என்பதனையும் இப்பொருளியல் விளக்குகிறது. நாட் டில் நிலவும் விலைவாசிக்கும், கூலி நிருணயத்திற்கும் உளள தொடர்பினையும், விலைவாசி உயர்வு கூலி உயர்வுக்குக் காரணமா, கூலி உயர்வு விலைவாசி உயர்வுக்குக் காரணமா என்பதையும் விளக்கு கிறது. கூலி, விலை உறவை மையமாகக் கொணட வருமானக் கொள்கையினையும் கோட்பாடுகளை யும் நோக்கங்களையும் பேரியல் தொழிலாளர் பொருளியல் கோடிட்டுக் காட்டுகிறது.

மேலே விவரிக்கப்பட்ட தொழிலாளர் பொருளிய லின் பொருளடக்கத்தைப் பின்வரும் படத்தின் மூலம் சுருக்கிக் காட்டலாம். மு.இராம.

 தொழிலாளர் பொருளியல்


தொழிலாளர் பொருளியல்
நுணணியல் தொழிலாளர் பொருளியலில்
பேரியல் தொழிலாளா பொருளியல்
உழைப்பின தேவை
உழைப்பின் அளிப்பு
உற்பத்தித் திறன
தேசிய வருமானத்தில் தொழிலாளா பஙகு
வேலைவாய்ப்பு வேலையின்மை
கூலி யும விலைவாசியும்
தொழிலாளர் உழைப்பு ஓயவு முடிவு
தொழிலாளர் பங்கு விகிதஙகள
உழைபபின் தரம்
உழைப்பு அங்காடிகள்
கூலி நிருணயம்
பாதிக்கும் காரணிகள்
கூலி தொடர்பான கூறுகள்
தொழிலாளர் சங்கங்கள்
அரசாங்கக் கொள்கைகள்
பேதங்காட்டல்
நிறுவனக் காரணங்கள
கூலி அமைப்பு
தனிமனிதர் வருமானப் பங்கீடு
இடப்பெயர்ச்சி

**துணை நூல்கள்**

Campbell, R. McConnell - Stanley L. Bure, Contemporary Labour Economics, McGraw-Hill Book Company, 1986.

Fearn, Robert, M., Labour Economics, The Emerging Synthesis, Mass: Winthrop Publishers, Inc., Cambridge, 1981.

Fleisher, Belton M., and Thomas J. Kniesner, Labour Economics Theory-Edvidence and policy, Prentice Hall, Inc, 1984.

Reynolds, L.G, Labour Economics and Labour Relations, Prentice-Hall, Inc., 1982.

## தொழிலாளர் வருக்கத்தின் வல்லாட்சி

என்ற கருத்து, காரல் மார்க்சு வகுத்த பொதுவுடைமைக் கொள்கையிலும் அதனைத் தொடர்ந்து இலெனின் (Lenin) வகுத்த அரசு, புரட்சி பற்றிய கொள்கையிலும் காணப்படுகிறது. பொருள்களை உற்பத்தி செய்தலிலும், பகிர்ந்தளிப்பதிலும் ஈடுபட்டுள்ள தொழிலாளர் வருக்கமே சமூகத்தை முழு அதிகாரத்தோடு ஆட்சி செய்யும் நிலைக்கு வரும் என்பதே இக்கருத்தின் பொருளாகும்.

**மார்க்சு வகுத்த கருத்து:** மார்க்சு வகுத்த தருக்க வாதப் பொருளியல் (Dialectical Materialism) என்ற கருத்தில் காணப்படும் பொருளாதாரத் தீர்மானிப்பு அல்லது பொருளாதார உருவாக்கம் (Economic Determinism) என்பதுதான் தொழிலாளர் வருக்கத்தின் வல்லாட்சிக்கு அடிப்படையாகும் மனித வரலாற்றை உருவாக்கும் காரணிகள் பொருளாதார இயல்புடையவை; அதாவது பொருளாதார உற்பத்திமுறை தான் சமூகத்தின் வரலாற்றை உருவாக்கும் ஆற்றலாகும். பொருள்களை உற்பத்தி செய்யும் முறையும், சமூகத்தவரால் உண்டாக்கப்பட்ட பொருளைப் பகிர்ந்தளிக்கும் வழியும்தான் உற்பத்தி முறையையே இயங்கச் செய்கின்றன. அதைத் தொடர்ந்து, பொருளைப் பகிர்ந்தளிக்கும் முறையானது பல சமூக வருக்கங்களைத் தோற்றுவிக்கிறது. பொருள் உற்பத்தி முறையில் ஒவ்வொரு வருக்கமும் அததற்குரிய நிலையின் வழியாக உருவாக்கப்படுகிறது ஒவ்வொரு சமூகத்தினுடைய பொருளுற்பத்தி முறைதான் அச்சமூகம் நிலைத்திருப்பதற்கே சிறந்த அடிப்படையாகும். பொருளுற்பத்தி முறைதான் ஒரு சமூகத்தினுடைய அரசியல், பண்பாட்டு நிலைகளை எடுத்துக் காட்டுகிறபடியால், அம் முறையிலேற்படும் மாறுதல்கள், சமூக அரசியலிலும் பண்பாட்டிலும் ஏற்படும் மாறுதல்களை விளக்குகின்றன. இப்பொருளாதாரத் தீர்மானிப்புக் கருத்தை மார்க்சு எதிர்காலச் சமூக வரலாற்றோடு இணைத்துத் தொழிலாளர் வருக்கப் புரட்சித் திட்டத்தை வகுத்தார். அதன்படி தொழிலாளர் புரட்சி, சமத்துவமின்மையை ஒழித்து, இறுதியில் சமநிலையான (Socialistic), வருக்க வேறுபாடற்ற சமூகத்தை உண்டாக்கும்.

**இலெனின் கூறிய கருத்து:** மார்க்சிய சமநிலைக் கொள்கை பரப்புதலை உருசியக் குடியானவர்களை நோக்கிச் செய்தபோது பயனில்லாமல் போகவே, அதனை நகரிய ஆலைத் தொழிலாளர்களை நோக்கிச் செய்தல் வேண்டுமென்று உருசிய மார்க்சியவாதிகள் உணர்ந்தனர். அவ்வாறிருந்த போதிலும், வேளாண் தொழிலாளருடைய அப்போதைய ஒப்புதலையாவது சமநிலைப் புரட்சியாளர்கள் பெற்றால்தான் சமநிலைப்புரட்சி வெற்றியடையுமென்று இலெனின் தெளிவாக உணர்ந்து, வேளாண் உற்பத்திமுறையில் சமநிலைக் கொள்கையைப் பின்பற்றும் முறையை 1917-இல் அவர் ஒத்திப்போட்டு, அவ்வழியே குடியானவர்களுடைய ஆதரவைத் தாம் நடத்திய புரட்சிக்குப் பெற்றார். உருசியாவில் நடைபெறும் புரட்சிக்கு ஆதரவாக மேற்கு ஐரோப்பியத் தொழில் வளமிக்க நாடுகளில், புரட்சிகள் நடந்தால்தான் உருசியாவில் புரட்சி நிலையாக இருக்கும் என்று இலெனினும் திராட்சுகியும் தெளிவாக உணர்ந்தனர்.

இலெனின் தாம் 1917-இல் எழுதிய 'அரசும் புரட்சியும்' (State and Revolution) என்ற நூலில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் நடைபெற்ற புரட்சிகளின் விளைவாக ஒருவகையான தொழிலாளர் அரசு தோன்றிற்று என்றும், உருசியாவில் 1905-இலும் 1917-இலும் தொழிலாளர் கழகங்கள் (Soviets) உருவான நிகழ்ச்சியே இதனை உணர்த்துமென்றும் கூறினார். ஆயினும், அவர் நிறுவிய தொழிலாளர் அரசு உறுதியான அடிப்படையின்றி மறையும் நிலையிலிருந்தது. அவருடைய திட்டம் புரட்சியையே ஒழித்தது. உழைப்பாளர் அரசினியல்புகளைப் பெறவில்லை; தொழிலாளர் புரட்சியின் விளைவாக ஆட்சி அதிகாரத்தை ஒரு வகுப்பிலிருந்து வேறொரு வகுப்புக்கு மாற்றுவர் என்று அவர் கூறினார். தொழிலாளர் நடைமுறையிலுள்ள குடியாட்சி அரசாங்கத்தை அழித்துத் தங்களுடைய அரசாங்கத்தை நிறுவுதல் வேண்டும். தொழிலாளர்களின் வல்லாட்சி சுரண்டும் வருக்கத்தாரை அடக்க வேண்டும். புதியதொரு பொருளாதாரச் சமூக அமைப்பை நிறுவவேண்டும். புதியதொரு பொருளாதாரச் சமூக அமைப்பை நிறுவுதலென்பது கட்சியின் வேலை ஆகும். இலெனின் இவ்வாறு கூறியதிலிருந்து தொழிலாளர் வருக்கத்தின் வல்லாட்சி என்பது, நடைமுறையில் கட்சியினுடைய வல்லாட்சியே ஆகும் என்பது தெளிவாகத் தெரி

கிறது. தொழிலாளருடைய அரசாங்கமானது சிறிதும நெகிழ்ச்சி இல்லாமலும் நீடித்தும் இருக்கும் இயல்புடையது. பொருளுற்பத்திக்கு வேண்டிய தொழில், மக்கள் நுகர்வுக்கு வேண்டிய பொருள ஆகியவற்றின அளவை அவ்வரசாங்கம், சமூகம், அரசு ஆகியவற றின் சார்பில் கடுமையாக வரையறை செய்யும். இப் புதிய குடியாட்சி வலலந்தத்தைக் கையாளுமாயினும் அதுவே பழைய நடுத்தர வகுப்பாரின குடியாட்சியைவிட உயர்ந்தது. அதில அதிகாரம் குவிககப்பட்டிருந்தாலும், அவ்வதிகாரக் குவிப்பும மககளுடைய விருப்பத்தின்பேரிலேயே இருககும். அதில் ஒவவொருவரிடமிருந்தும் வேலை வாஙகப்படும்; ஒவ்வொவருககும் வேலை அளிக்கப்படும். யாவருக்கும் சமமான ஊதியம் அளிக்கப்படும், வலலுநரும் தொழில்நுட்ப வல்லுநரும் வேலைககமாத்தப்பட்டு அவர்கள முனபு முதலாளிகளுக்கு வேலை செயததைப் போல, இப்பொழுது தொழிலாளருக்காகத தமவிருப்பத்தின பேரில் வேலை செய்வர். முதலாளிகளும் அதிகார வருக்கமும் ஒழிக்கப்பட்டு, ஆட்சி தொழிலாளா கைககு வந்துவிட்டால, எல்லாக் குடிமக்களும ஒரே தேசிய கழகத்தினுடைய சம்பளத்துக்கமர்த்தப்பட்ட பணியாளர்களாகி விடுவர்.

இலெனின கூறிய தொழில்களைத் தொழிலாளர் ஏற்று நடத்துதல் எனற கருத்தை மேலைநாட்டுச் சமநிலையாளர் ஏற்றுக் கொள்ளவில்லை. அதற்குக் காரணம் நடைமுறையில் தொழிலாளருடைய தொழில் நிருவாக முறை திறமாக அமைய இயலாது எனறு சமநிலையாளர் எணணியதேயாகும். அவ்வகையில் இலெனின் நடத்திய பரிசோதனை பொருளாதார முறையையே அழித்துவிடும் நிலைக்குக் கொணடுவந்தது கட்சி உறுப்பினர்கள தொழிலாளருடைய ஊதியத்தைப் பெற்றனர். உறபத்தியைப் பெருக்குவதற்கு முயற்சி செய்யப்பட்டபோது, கூடுதல் உற்பத்தியாளருக்கு முதலாளித்துவ நாடுகளில் வழங்கப்படுவது போல ஊக்கத்தொகை வழங்கப்பட வேண்டியதாயிற்று அந்நிலையில் இலெனின 1920-இல் சமூகநீதி என்ற குறிக்கோளுக்கு முதனமை அளிக்காமல் கூடுதல் உற்பத்தி எனபதில் நாட்டம் செலுத்தினார். இலெனின கூறிய கருததினபடி, புரட்சியின் முதல் நிலையில் உறபத்திக் காரணிகள சமூக உடைமையாக்கப்பட்டு, ஓரளவு சமத்துவ நிலை ஏற்படும். முடிவில் உணமையான பொதுவுடைமைக்கு மக்கள் இனம் ஆயத்தமாகி, வருகக வேறுபாடற்ற சமூகம உருவாகும். இலெனினுடைய அரசியல் கொள்கை வெற்றியாக நிலைபெறுவதற்கு உறுதுணையாக இருந்தது பொதுவுடைமைக கட்சி ஒன்றே ஆகும் பா.கு.

**துணை நூல்கள்:**

Derek, J.R. Scott, Russian Political Institutions, London, 1958.

Raymond, A. Bauer, Alex Inkeles, and Glyde Kluckho, K., How the Soviet System Works: Cultural, Psychological and Social Themes, Cambridge, Massachussetts, 1956.

***தொழிலாளி***: இந்தியத் தொழிற் சச்சரவுக்கான சட்டமும், தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டமும், இந்திய ஆலைச் சட்டமும் தொழிலாளி (Workmen) எனறால் யார் என்பது குறித்த விளக்கத்தை அளிக்கினறன.

தொழில் சச்சரவுச சட்டததின பிரிவு 2 (S) தொழிலாளியைப் பற்றிய இலக்கணம கூறுகிறது. அதனபடி எந்த ஒரு தொழில துறையிலும (Industry) வேலைக்கு அமர்ததப்பட்டிருககும் தொழில அறிவு கொண்ட, தொழில் அறிவு இலலாத, மேற்பார்வைப் பணிபுரிகினற, தொழில் நுணுக்கப் பணி புரிகினற அல்லது எழுத்தராகப் பணி புரிகின்ற எந்த ஒரு ஒருவரையும், அவர் அந்தப் பணிககாக அமர்த்தபபட்டிருந்தாலோ அதற்கான ஊதியம் பெறறாலோ அவரைத் தொழிலாளி எனக் கூறலாம். அவ்வகையில் அமைநதவர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டாலோ, பணியிலிருநது விலக்கப்பட்டாலோ பணியில்லாத காரணத்தால் வேலை செய்யாதிருந்தாலோ மேற் கூறிய காரணஙகளில் எதுவும் ஒரு தொழில் சச்சரவுக்குக் காரணமாக விளஙகினாலோ மேறகண்ட நிலையில் இருப்பவர் எவரும் 'தொழிலாளர்' எனறே குறிக்கப்படுவர்.

ஆனால், இவற்றிற்கு விதி விலக்குகளும் உணடு இநதிய இராணுவத்தில் முப்படையின் கீழ்ப்பணிபுரிகினறவர்களும் காவல மற்றும் சிறைச்சாலைத் துறையில் பணிபுரிபவர்களும மேலாளராகவோ, ஆட்சித் துறையில பணி புரிவோராகவோ இருப்பின அவர் தொழிலாளி ஆகார். அதுபோலத் தாளாணமைப் பணியில ஈடுபட்டிருப்பவர்கள மாதம் உரூ. 1600க்கும் கூடுதலான ஊதியம பெறுவாரேயானால் அவர்களும் 'தொழிலாளி' ஆகக் கருதப்படமாட்டார்கள்.

தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தின கீழ் நிரந்தரமற்ற தொழிலாளர்கள் தொழிலாளாகளாகக் கருதபபடப்படுவதில்லை. ஆனால் நிரந்தரமற்ற தொழிலாளிகள் கூட வேலைக்கு வைத்துக் கொளபவரின் (Employer) வாணிகம அல்லது தொழிலுக்காக வேலைக்கு அமர்த்தப்பட்டிருப்பாரேயானால

'தொழிலாளர்' என்றே கருதப்படுவர். மேலும வேலை செய்கின்ற ஒருவர் தொழிலாளியா என பதைக் கணடறிய இச் சட்டத்தின இரணடாம் அட்டவணையைப் பார்த்தே முடிவு செய்ய இயலும்.

தொழிலாளி எனற சொல் 1948 ஆம் ஆண்டு ஆலைச் சட்டத்தில் வேறு பொருளைக் குறிப்பதாக அமைகிறது. அதன்படி தொழிலாளி என்னும் சொல் வேலைக்கு அமர்த்துபவர் அறிந்தோ அறியா வண்ணமோ அவரது முகவரால் ஊதியத்திற் காகவோ ஊதியமினறியோ ஓர் ஆலையில நடைபெறுகின்ற தயாரிப்புப் பணியில் ஈடுபடுபவரைக் குறிக்கும். இது எந்த வகையிலும் இராணுவத்தில் பணிபுரிபவர்களைக் குறிக்காது. ஆலைச் சட்டத்தின் கீழ்த் தொழிலாளராகக் கருதப்படுபவருக்கும் அந்த ஆலையில் அவரைப் பணியில அமர்த்தியவருக்கும் முதலாளி-தெழிலாளி என்ற உறவு முறை நிலவுவது மிகவும் தேவையான தொன்றாகும்.

மேறகண்ட எடுத்துக் காட்டுகளிலிருந்து 'தொழி லாளி' எனற சொல் சட்டத்திற்குச் சட்டம் மாறு கிறது என்பதைக் கண்டு கொள்ளலாம். எனவே, ஒரு தொழிலாளி எந்தச் சட்டத்தின் கீழ்த் தொழிலாளி யாகக் கருதப்படுகின்றார் என்பதை வைத்தே அவ ருக்கு சட்ட வகைப் பரிகாரம் வழங்கப்படுகிறது.

ம.கா.

*தொழிற்கட்சி* எனபது இப்போதைய பிரிட்ட னின் அரசியலில் மிகவும் செல்வாக்குடைய ஓர் அரசி யற்கட்சி ஆகும. பாராளுமன்றக் குடியாட்சி அரசாங்க அமைப்பை ஏற்றுக்கொண்டு, சமநிலைக கொளகைக்கு ஒத்த சமூக, பொருளாதார, அரசியல் சீர் திருத்தங்களைச செய்வதற்குத் தொழிற்கட்சி முயலு கிறது.

**தோற்றம்:** பிரிட்டனின் தொழிற்கட்சியானது (British Labour Party) தொழிற சங்கங்களி லிருந்து தோன்றியதாகும். பிரிட்டன் தொழிற் சங்கங்களும், சமநிலைக் கொள்கைகளைக் கொணட பல குழுக்களும ஒரு கூட்டாக இணைய (Federation), அக்கூட்டிலிருந்து 1900-ஆம் ஆணடு பிப்பிரவரி 27 -ஆம் நாள தொழிற்கட்சி தோன்றிற்று. இதற்கு முதலில் இருநத பெயா தொழிலாளர் பிரதிநிதித்து வக் குழு (Labour Representation Committee) என்ப தாகும். தொழிற்கட்சி என்ற பெயர் 1906-இல் இதற்கு இடப்பட்டது. இக்கட்சி பேபியர் கழகம் (Fabain Society) எனற ஓர் அமைப்பிலிருநது தோனறிற்று என்று கூறவும் இடமிருக்கிறது. (காணக: சமநிலைக் கொள்கை: பேபியர் கொளகை) பேபியர் கழகத்தாரும் வேறுசில அமைப்பாளரும் அமைதியான முறையிலே அரசியற் செயல்களில் ஈடுபட்டுத் தொழி லாளர் நலனைப் பாதுகாத்தற்கு முயனறனர். எனவே, பிரிட்டனின் தொழிற்கட்சி அமைதியான முறையில் சமநிலைக் கொளகையின் நோக்கங்களை அடைய முயலுகிறது. தொழிற் கட்சிக்கு நேரடி யான மறறொரு அடிப்படையாக இருந்தது கி.பி.1893 -இல சேம்சு கீர் ஆர்டி என்பவரால் (James Keir Hardie) அமைக்கப்பட்ட சுதந்திரத் தொழிற்கட்சி (Independent Labour Prarty) ஆகும்.

**நோக்கம்:** தொடக்கத்தில் இக்கட்சியின் நோக்கம் தொழிலாளர் குழு என்று ஒரு தனிக்குழுவைப் பாராளுமன்றத்தில் ஏற்படுத்துதலும், அதற்கென்று தனியாகக் கட்சிக் கொறடாக்களை அமர்த்தி அதற் கென ஒரு கொள்கையை வகுத்துக்கொளளுதலும், தொழிலாளருடைய நலன்களை வளர்க்கக்கூடிய சட்டங்களை எநத ஓர் அரசியற் கட்சி கொண்டு வந்தாலும் அந்தக் கட்சியுடன அவ்வளவிற்கு முழு ஒத்துழைப்புத் தருதலும் ஆகும். இப்பொழுது தொழிற்கட்சியின் நோக்கம் சமநிலைக் கொள்கைக்கு உகந்த சீர்திருத்தங்களை வாழ்வின் எல்லாத் துறை களிலும் கொண்டு வருதலாகும்.

**கட்சியின் அமைப்பு:** இக்காலத்தில் தொழிற்கட்சி யின் அமைப்பு அதன் பணிகளுக்கேற்றவாறு மூன்ற டுக்கு அமைப்புகளைப் பெற்றுள்ளது. 1) கீழ்நிலை யில் இருப்பது ஒவ்வொரு பாராளுமன்றத் தொகுதி யிலும் அமைக்கப்பட்டுள்ள உள்ளூர்க் கட்சிக்குழு (Local Party Committee) ஆகும். இது உள்ளூராட்சி மன்றங்களுக்கான கட்சி வேட்பாளர்களைத் தேர்ந தெடுக்கிறது. இது, தனது தொகுதிப் பாராளுமன்ற உறுப்பினரோடும், கட்சியின் நடுவண் அலுவலகத் துடனும் முழுமையாக ஒத்துழைக்கிறது. 2) கட்சியின் அடுத்த மேல்நிலை அமைப்புப் பாராளுமன்றக் கட்சி (Parliamentary Patry) ஆகும். இதில் பாராளு மன்றத்துக்கு இக்கட்சியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட எல்லா உறுப்பினரும அவர்களால் தேர்ந்தெடுக்கப பட்ட தலைவரும் இருக்கின்றனர். பாராளுமன்றத் தில் இக்கட்சி கடைப்பிடிக்கவேணடிய கொளகையை வகுப்பது பெரும்பாலும் பாராளுமன்றக் கட்சி என்ற அமைப்பே ஆகும். கட்சி ஒரு நடுவண் அலுவலகத்தை அமைத்து அதில் கட்சி பற்றிய ஆராய்ச்சி செய்தற் கும் கட்சிக் கொள்கைகளைப் பரப்புதற்கும், தேர்தல களில் வாக்குகளைத் திரட்டுதற்கும் அலுவலாளர் களை அமர்த்தி, அவர்களுக்கு ஊதியம் வழங்குகிறது. இவ்வலுவலரே தொகுதி அமைப்புக்களுக்கிடையே இணைப்பை ஏற்படுத்துபவாகளாக இருக்கின்றனர். கட்சியின் தலைமைக் கொறடா கட்சிக்கு வேண்டிய நிதி திரட்டியும், கட்சிச் சார்பான பாராளுமன்ற வேட்பாளர்களின் செயல்களை ஆய்வு செய்தும் கூடு

மானவரை நடுவண் அலுவலகத்தால் பரிநதுரை செய்யப்பட்ட வேட்பாளர்களைத் தொகுதியாளாகள ஏற்றுக்கொள்ளுமாறு செயதும் பணி செய்கிறார். 3) மூன்றாவதாகத் தேசிய மட்டத்திலிருப்பது தொழிற் கட்சியின் ஆணடு மாநாடு (Labour Annual Conference) ஆகும். ஆண்டுமாநாட்டில் கட்சியின் வேலைத்திட்டம் வகுககப்பட்டு, நாட்டில் கட்சியின் பொதுவான நிலை ஆய்வு செய்யபபட்டுக் கட்சியின் நிலையைச் சீர்த்திருத்துதற்கான வழிகளும் ஏற்றுக் கொளளப்படுகின்றன.

**கட்சிக்கொள்கைகள்:** தொழிற்கட்சி படிப்படியாக அமைதியான முறையில சமநிலைக் கொள்கையைச செயற்படுத்த முயலுவதால் இது ஒரு செயல் திட்டத்தை வகுத்துள்ளது: பாராளுமனறக் குடியாட்சி முறையை இது முற்றிலும் நம்பிக்கையோடு பின்பற்றுகிறது. முழு வேலைவாயப்பு, போதிய ஊதியங்கள, கலவி வசதி, ஒய்வு, வேலையில்லாமைக் கும் நோய்க்கும் முதுமைக்கும எதிராகக் காப்பீட்டு வசதி முதலியவை யாவருக்கும் கிடைக்குமாறு செய்தல், வரிவிதிப்பில படிப்படியாகக் கூடுதல் என்ற கொளகையைப் பின்பற்றுதல், போக்குவரவு, செய்தித் தொடர்பு போனற பொது நிறுவனங்களையும், இயற்கைத் தனிச் சலுகைகளையும தேசிய உடைமை யாக்குதல், பின்னர் நிலத்தையும், எலலாவகையான தொழில மூலதனத்தையும் தேசிய உடைமையாக்குதல், அயல்நாட்டு உறவில் கூட்டுப்பாதுகாப்பை நிறுவுதல் முதலியவை தொழிற்கட்சியின வேலைத் திட்டத்தில் அடங்கியுளளன. இக்கட்சி 1951-ஆம் ஆண்டுத் தேர்தலில் வெளியிட்ட தோதல அறிக்கையில் இச்செயல்திட்டம் காணப்படுகிறது. இத்திட்டத் தால் இககட்சிக்குத் தொழிலாளர் வகுப்பின் ஆதரவு கிடைக்கிறது. சமத்துவ அடிப்படையில் நல அரசை நிறுவுதலே இக்கட்சியின குறிககோளாகும்.

**தொழிற்கட்சியின் வளர்ச்சி** தொழிற்கட்சிக்கு ஓர் அடிப்படையாக இருநத சுதந்திரத் தொழிற்கட்சி, தொழிற்கட்சியினுளளேயே ஒரு வலுவான கூறாக அமைந்து, சமநிலைக கொளகையையும் அமைதியையும் ஆதரித்தது, பின்னர் 1914-இலும் 1931-இலும் தொழிற்கட்சியுடன் மாறுபட்டுப் பிரிந்து நினறது. தொழிற்கட்சி 1906-ஆம் ஆண்டுத் தேர்தலில் நிறுத்திய 50 வேட்பாளர்களுள 29 பேர் வெற்றிபெற்றனர். பொதுமக்கள் சபையில இதற்கு 1910-இல் 42 இடஙகள் கிடைத்தன. முதல் உலகப்போா தொடஙகிய போது அச்சபையில் தொழிறகட்சியின் தலைவராகச் சிறப்புடனிருநதவர் சேம்சு இராம்சே மாக்டனால்டு (James Ramsay Macdonald) ஆவர் அவர் போரை விரும்பாமல் அமைதியை ஆதரித்தமையாலகொளகை வேறுபாடு காரணமாகப்பிரிட்டனின் அமைச்சரவையிலிருந்து விலகிவிட்டார். போருக்குப்பின் 1918-இல் நடநத தேர்தலில் தொழிற்கட்சி 57 இடங்களைப் பெற்றது. எண்டர்சன் (Henderson) என்பவர் பிரிட்டனிலிருந்த பலவேறு தொழிற்சங்கங்களையும், சமநிலைக் கொள்கைக் குழுக்களையும் இணைத்தார். பொதுமக்கள சபையில் இக்கட்சி 1922-ஆம் ஆணடுத் தேர்தலில் 144 இடங்களைக் கைப்பற்றி வலுவான எதிர்க்கட்சியாகச் செயற்பட்டது, அடுத்த ஆணடில் அதன எணணிக்கை 192 ஆக உயர்ந்தது.

**தொழிற்கட்சி அரசாங்கம்:** பாராளுமனறத்துக்கு 1922 - இல் தேர்ந்தெடுக்கப்பட்ட இராம்சே மாக டனால்டு 1923-இல் பாராளுமனறத் தொழிற் கட்சித் தலைவராகப் பொறுப்பேற்க அவர் பாராளுமன்ற முற்போக்குக் கட்சி உறுப்பினரளித்த ஆதரவுடன் தமது முதலாம் பிரிட்டனின் தொழிற்கட்சி அரசாங்கத்தை அமைத்தார். ஆயினும் இவவரசாஙகம் 1924 சனவரி 22முதல் 1924 நவம்பர் 4வரை தான ஆட்சியிலிருந்தது. இக் குறுகியகால ஆட்சியில மாக்டனால்டு இஙகிலாந்து, பிரான்சு, செருமனி ஆகியவை பற்றிய சில சிக்கலான கேள்விகளைத் துணிவுடன ஏற்று வெற்றியாகத் தீர்த்துவைத்தார். ஆயினும் உள்நாட்டுத் துறையில சமநிலைக் கொளகையை ஒட்டி வேலையின்மைக்கெதிராக ஒரு காப்பீட்டுச் சட்டத்தைத் தவிர வேறெதனையும் அவரால் செய்ய இயலவில்லை. மேலும் அவர் சோவியத்து நாட்டுடன் அமைதி உடனபடிக்கைகள செய்யப்படுதற்கான தீர்மானங்களைக்கொணடுவந்த போது அதுவரை அவருக்கு ஆதரவு அளித்த முற் போக்குக்கட்சி உறுப்பினர் அப்போது மறுத்தனர். புதிய தேர்தல் 1924 அக்டோபர் 29-இல் நடப்பதற்கு முனனர் வெளியான 'சினோவின் கடிதம்' (Zinoviev Letter) எனற ஒரு கடிதத்தில் இங்கிலாந்தில் ஒரு வல்லநதப் புரட்சியைத் தொடஙகுமாறு பொதுவுடைமைக் கட்சியார் மக்களுக்கு விடுத்த அழைப்பு இருப்பதாக ஆங்கில மக்கள் கருதி அஞ்சினர். எனவே தேர்தலில் பழைமைப் பற்றாளர் கட்சியார்(Conservative Party) பெரும்பானமை நிலையைப் பெறவே மாக்டனால்டு பதவிதுறந்தார். ஆதலின் தொழிற் கட்சி பிரிட்டனின் அரசியலரங்கில தனியாக ஒதுக்கப்பட்டது.

பிரிட்டனில் 1926-இல் நடந்த பொது வேலை நிறுத்தத்தில ஈடுபட்டோருக்குத் தொழிற் கட்சித தலைவர்கள ஆதரவளித்தனர். தொழிற்கட்சி 1929 தேர்தலில் மொத்தல் 289 இடஙகளைப் (பழைமைக கட்சியைவிட 27 இடங்களைக் கூடுதலாகப்)பிடிக்கவே மாக்டனால்டு 59 முற்போக்குக் கட்சி உறுப்பினர்களுடைய இசைவுடன தம் இரணடாம் தொழிற்கட்சி

அரசாங்கத்தை அமைத்தார். ஆயினும், நெடுங்காலமாகத் தொழிற்கட்சி கூறிவந்த தீவிரச் சீர்திருத்தத் திட்டங்களைச் செயலுக்குக் கொணடுவருதலில் பல தடைகளைத் தொழிற்கட்சி அரசாங்கம் எதிர், நோக்க வேண்டியதாயிற்று. அதற்குக் காரணம் அப்பொழுது உலகம் முழுவதும் பரவிய பெரும் பொருளாதார முடக்கந்தான் (The Great Economic Depression). அதனால் தோன்றிய பொருளாதாரக் கேள்விகளைத் தீர்த்தற்கு மாக்டனாலடு பழைமைப் பற்றாளர் கட்சியாரின் ஆலோசனைகளை ஏற்று, நிதிச் சிக்கன முறைகளையும், வேலையில் ஆட் குறைப்பு முறைகளையும் கையாணடு, அதுவரை அரசாங்கம் செய்துவந்த சமூகப் பணிகளையும் நிறுத்திவிட்டார். அதனால் தொழிறகட்சியினுள்ளேயே அவருக்கு எதிர்ப்பு வளர அவர் கட்சித் தலைமையை 1931-இல் துறந்து, அவ்வாணடு ஆகசுட்டில் தலைமை அமைச்சர் பதவியிலிருந்து விலகி, உடனே ஒரு கூட்டு அமைச்சரவையையும் அமைத்தார். அவ்வாணடு அக்டோபரில் நடைபெற்ற தேர்தலில தொழிற்கட்சி தோற்றது. ஆயினும் மாக்டனால்டு பழைமைப் பற்றாளர் கட்சியைச் சேர்நத பல அமைச்சர்களைக் கொண்ட ஒரு தேசிய அரசாங்கத்தின தலைவராக (National Government) 1935 வரை பதவியில் தொடர்ந்து இருந்தார். அப்போது அவர் தொழிற்கட்சியிலிருந்து நீக்கப்பட்டபடியால அவருக்கு அவருடைய பழைய நணபர்களான தொழிற் கட்சியாரின ஆதரவும் கிடைக்கவில்லை. அவரும் தமது முந்தைய நாளின் சமநிலைக் குறிக்கோள்களைக் கைவிட்டுவிட்டார்.

தொழிற்கட்சி மாக்டனால்டை நீக்கியபின மிகவும் பினதங்கியிருந்தாலும் அது ஒற்றுமையுடனும், வலுவாகவும் இருந்தது. அது பாராளு மனறத்தில 1935-ஆம் ஆணடுத் தேர்தலில 154 இடங்களைப் பிடித்தது. அதுவே 1935 முதல் 1945 வரை பாராளு மனறத்திலிருந்தது. அதன் புதிய தலைவராக 1935-இல் கிளமண்ட்டு இரிச்சர்டு அட்லி பொறுப்பேற்றார். ஐரோப்பாவில் பாசிச, நாசிச அரசாங்கங்களின செயல்கள் அச்சத்தை விளைவிக்க இங்கிலாந்து மீணடும் படைவலி பெறுதல் வேணடுமென்றும் அமைதிக் கொள்கை கைவிடப்படுதல வேண்டுமென்றும் கருத்துகள் தோன்றின.

இரண்டாம் உலகப்போரில் வின்சுடன சர்சசில் அமைத்த கூட்டு அமைச்சரவையில் தொழிறகட்சிக்குப் பிரதிநித்துவம் அளிககப்பட்டது. இக்கட்சி 1945, சூலையில் நடைபெற்ற தேர்தலில் 11,971,464 வாக்குகளைப் பெற்று 393 இடங்களைக் கைப்பற்றியது. இத்தகைய வெற்றியை இதன் தலைவர்களே எதிர்பார்க்கவில்லை. அட்லி அமைத்த (1945-இல்) தொழிற்கட்சி அரசாங்கத்தில் பழைய கூட்டமைச்சரவையிலிருந்த, எல்லாத் தொழிற்கட்சி உறுப்பினரும் இடம் பெற்றனர். தொழிற்கட்சி அரசாங்கம் பிரபுக்கள் சபைக்கு இருந்த சாதாரண மசோதாக்களை இரண்டாணடுகளுக்கு ஒத்திப்போடும் இடைக்கால நிறுத்த அதிகாரத்தை ஓராண்டாகக் குறைத்துச் சட்டம் இயற்றிற்று. பல சீர்திருத்தங்களை இது செய்து 1951-ஆம் ஆண்டுக்குள் பிரிட்டனின் துறைகளில் ஐந்தில ஒரு பங்கை அரசாங்க உடைமையாக ஆக்கிற்று. பல எதிர்ப்புக்களுக்கிடையே இது ஒரு தேசிய சுகாதாரக் காப்பீட்டுத் திட்டத்தையும், ஒரு சமூகப் பாதுகாப்புத திட்டததையும் கொண்டுவந்து செயற்படுத்திற்று. அயலநாட்டுத் துறையில் தொழிற்கட்சி அரசாஙகம் 1947-இல இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்கிற்று; பொதுவுடைமைச் சீனாவுக்கு 1950-இல் ஒப்புதலளித்தது; தெனகொரியா மீது படையெடுத்த பொதுவுடைமைக்கெதிராக ஐக்கிய நாடுகள் சபை எடுத்த நடவடிககையை ஆதரித்தது. இக்கட்சிக்கு 1950-ஆம் ஆணடுத் தேர்தலில் குறைந்த அளவு பெரும்பான்மையே கிடைத்தமையால் அட்லி தொடர்ந்து தலைமைப் பதவியை ஏற்பதிலுள்ள இடர்ப்பாடுகளை உணர்ந்து, பொதுமக்களுடைய ஆதரவைப் பெறும்பொருட்டு 1951 அக்டோபரில் பாராளுமனறத்தைக் கலைத்துப் பொதுத்தேர்தலை நடத்த, அதில் பழைமையைப்பற்றாளர் கட்சியாரும் அவர்களுடைய கூட்டாளிகளும் 17 இடங்களைக் கூடுதலாகப் பெற்று அரசாஙகத்தை அமைத்தனர்.

தொழிற்கட்சிக்கு 1955-ஆம் ஆணடுத்தேர்தலில் 277 இடங்களே கிடைத்தன. ஆதலின், அட்லி தலைமைப் பதவியிலிருந்து நீங்கினார். கட்சித் தலைமைக்குக் கியூ கெயிட்சுகல் (Hugh Gaitskell), எர்பர்ட்டு மாரிசன் (Herbert Morrison), தொழிற்கட்சியின் இடச்சாரித் தலைவரான அனூரின் பெவான் (Aneurin Bevan) ஆகியோர் போட்டியிட்டனர். கெயிட்சுகல் தலைமைப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சூயசுக் கால்வாய்ப்போரின் போது (1956) தொழிற்கட்சிக்குத் துணைத் தேர்தல்களில் ஆதரவு கிடைத்த போதிலும் கட்சியினுள்ளேயே பூசல்களும் பிளவுகளும் இருந்ததால் அதனால் நல்ல வாய்ப்பைப்பயன்படுத்திக்கொள்ள இயலவில்லை. கட்சியில் மீண்டும் ஒற்றுமையை ஏற்படுத்தக் கெயிட்சுகல் முயன்று ஓரளவு வெற்றியும் பெற்றார். அவர் 1963-இல் இறநதுவிட்டதால், தொழிற்கட்சியில் மிதமான இயல்புடைய ஏரால்டு வில்சன் (Harold Wilson) தலைவரானார். தொழிற் கட்சிக்கு 1964-ஆண்டுத் தேர்தலில் பழைமைப் பற்றாளர் கட்சியைவிட மூன்று இடங்கள் கூடுதலாகக் கிடைக்க வில்சன்-அரசாங்கத்தை அமைத்தார். இவர் துணைத் தேர்தல

களில தொழிறகட்சிக்குப் பொதுமக்களுடைய ஆத ரவு இருப்பதைக் கண்டு 1966 மார்சசில் பாராளு மன்றத்தைக் கலைத்துவிட்டுப் பொதுத் தேர்தலை நடத்தினார். இதில் தொழிற்கட்சி 97 இடங்களைக் கூடுதலாகப் பெறவும் விலசன புதிய அமைச்சர வையை அமைத்தார். இவர் பிரிட்டனின் அயல் நாட்டு எஞ்சிய வணிகச் செலாவணியைப் (Balance of Payments) பெருமளவு குறைததாா. மேலும், 1967-இல் பிரிட்டனின் பவுன் நாணய மதிப்புக குறைககப்பட்டதால் இவருக்குத தொழிற் கட்சியி னுளளேயே எதிர்ப்பு வளர்ந்தது. கட்சிககும பொது மக்களின ஆதரவு குறைந்ததைத் துணைத் தேர்தல கள் எடுத்துக்காட்டின. வில்சன 1971வரை ஆட்சியி லிருந்தார். அவவாணடில் தொழிற்கட்சி தன வலுவை இழக்க அதிலிருந்து பழைமைப பற்றாளா கட்சியே ஆட்சியிலிருநது வருகிறது. பா.சு.

**துணை நூல்கள்:**

Cob, G D.H. and portgate, Raymond W., The British People, 1746-1946, New York, 1947.

Webb, Sidney and Webb, Beatrice, The History of Trade Unionism, London, 1920.

***தொழிற்கல்வி***: மனித வள மேமபாட்டை உருவாககககூடிய மிக சகதி வாய்ந்த ஒரு கருவி கல்வி எனறால் அது மிகையாகாது. இப்போதைய கலவி நிலை பெரும்பானமையோருக்கு மன நிறைவின மையை அளிப்பதன காரணமாகக் கல்வியை வாழக் கைக்கு உகநததாகவும் மக்களின் எண்ணஙகளை நிறைவு செயவதாகவும் மனித வளத்தை மேம்படுதது வதாகவும் அமைக்கும முகத்தான மிகபபல முயற்சி களமேற்கொளளப்பட்டு வருகினறன. கல்விக் கொள கைகளை அவ்வப்போது சீர்படுததும் முயறசிகளிலே பொதுக கல்விக்கும தொழிற் கல்விககும் ஓா இணைப்பை ஏற்படுத்தும் முயறசிகளும இணைந்து நடைபெறுகின்றன. மிகக் குறைநத காலத்தில் மிகச சிறப்பான கலவி நிலையை எய்திய பெருமையை யுடைய உருசிய நாடு, தொழிலாளிககுக் கல்வியின் தேவையையும் கல்விக்குத தொழிலின முக்கியத்துவத் தையும், நனகு உணர்நதிருந்தது. ஆனால், இந்திய நாட்டிலே கல்விக்கும் தொழிலுக்குமிடையே ஒரு பெரும் பிளவு இருக்கிறது; கறறவர் தொழில செய் வதை இழிவு என்று நினைககும் நிலையும, தொழில செய்பவர் கலவி தேவையில்லை எனறு நினைககும் நிலையும் நிலவி வருகினறன. இது நாட்டிற்கு நன்மை பயப்பதாகாது.

இராதாகிருட்டிணன் தலைமையில் 1948-இல அமைககப்பட்ட கலவிக்குழு உயா கல்வியின தரத்தை மேம்படுத்தும் பொருட்டும், குறிக்கோளின்றி உயர் கல்வியை நாடும் மாணவரின் எணணிககையைக் குறைககும பொருட்டும் இடை நிலைக் கல்வியில் தொழிற் கல்வியைபபுகுத்தியது; ஏறக்குறைய ஐம்பது விழுக்காட்டினராவது வாழ்வுககு வழி தேடிக்கொளள ஆயததப்படுததப்பட வேணடுமென விருமபியது. இலட்சுமணசாமி முதலியார் தலைமையில் 1952-ஆம ஆணடு அமைக்கப்பட்ட கல்விககுழுவின பரிந துரைகளின் பேரில் எட்டாம் வகுப்பு முடிததவருக்கு 6 முதல் 11 வகுப்புகளில் தொழிற கலவியைத தேர்ந்து கொளவதறகான வாய்ப்பு அளிக்கப்பட்டது. பொறியியல் தொழில நுட்பம், வேளாணமை, குடும் பக்கலை, வணிகவியல் போனறவற்றில் தொழிற் கல்வி இடம்பெற்றது. தாழ்ந்த சமூகப பொருளாதார வகுப்பைசசேர்ந்தவர், படிப்பிலபிறபட்டவர், தொழில செய்து வருவாய் ஈடட ஆர்வமுளளோர் முதலியோர் இத்துறையில் சேர ஊககுவிககபபட்டனர். சரிவரத திட்டமிடப்படாததாலும், உற்பத்திப் பொருளகள் வாழக்கைககு உணமையானவையாக இராமையா லும தொழிலில ஈடுபட, மேறகொணடு பயிறசி தேவைப பட்டதாலும், உயா கல்வி தொடர வாயப்பு இலலா மற் போனதாலும இத்திட்டம தோலவி அடைநது கல்வித்திட்டத்திலிருநது தொழிலகலவி அகறறப்பட் டது.

ஒரு நாட்டின பொருளாதார நிலை உயரத் தொழிற் கலவி பெரிதும் உதவும எனபதைப் பெசுட லாசி மிகப்பல ஆணடுகளுககு முனபே உணர்நதிருந தார் அவர் தொழிற கலவி நல்ல உளளததுடன கூடிய திறமையை வளர்பபதறகாக அமைய வேணடு மென்பதை வலியுறுத்தினார். தொழிற் கல்வி, நூல் களில படிப்பனவற்றிற்கு ஓர் அனுபவம் வாய்ந்த விளககம பெறவும், பல வகையான செயல திறன் களைப் பெறவும, ஏட்டுக் கொளகைகளுககுப் புதுப புது பயனகளை நடைமுறையில கணடறியவும், அவற்றை உணர்ந்து செயலாறறக் கூடிய திறமை களை வளர்க்கவும துணை செய்கிறது. இளைய தலை முறைக்குத் திட்டமிடவும் குறிக்கோளகளை அடைய வும், செய்யும் வேலைகளை மதிப்பிடவும் தொழிற கலவி நல்ல பயிறசி அளிக்கிறது. முடிவு செய்யும் திறமை, விவாதிதது பல கருத்துகளை அறிந்து அவற் றால் பயன பெறும் மனப்பான்மை, புதுபபுது கருத்து களையும் வழிமுறைகளையும் சோதித்தறியும உளளப் பாங்கு, மனிதாபிமானம முதலிய பலவகையான உடல், உளளத் திறமைகள் சார்நத பணபுகளையும தொழிற் கல்வி பெரிதும் வளாககிறது. சரியான முறைகளில நிருவகிககப்பட்டால் தொழிற் கலவி யினால் மாணவர்க்கு ஏற்படக்கூடிய நன்மைகள

மிகபபல. இவறறை உணர்நதே மேலநிலைப் பளளி களில் தொழிறகலவி மீளவும் புகுததப்பட்டுள்ளது.

பழைய அனுபவஙகளின் அடிப்படையில் தோல் விக்கு வழி வகுதத அததனை குறைகளும புதுத்திட்டத்தில் நீக்கப்பட்டுளளன. தொழிற கல்வியில நுழைபவர்கள் பத்து ஆணடுப் பொதுக் கல்வி பெற்றவர். பலவகையான தொழிற் கலவிகளுள விருப்பிறகேற்றதைத் தேர்ந்தெடுகக வாய்ப்புணடு. பாடங்கள தேர்ச்சி பெற்ற ஆசிரியர்களால் கையாளப்படுகின்றன. செயல்முறைப் பயிற்சிகளுககு நிருவாகங்களுடன் இணைந்து ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. தொழிற் கல்வி முடிந்த பினனர் மேறகொணடு உயர் தொழில் கலவியைத தொடரவும், மற்ற உயா கலவியைத் தொடரவும் வழியுள்ளது. இப்போதைய தொழிறகலவி மாணவரை ஈர்ககக் கூடியதாக மாற்றியமைக்கப்பட்டுள்ளது.

இருப்பினும், இனனும் தொழிற் கலவியில் முன்னேற்றங்கள தேவைப்படுகினறன. குறிப்பாகத் தொழிற் கல்வியில பெண்கள பாகுபடுத்தப்படுகினறனர். பொறியியல (Engineering), வேளாணமை போனற பல துறைகளில இனனும் பெணகளுக்குச் சமவாய்ப்பு அளிககப்படவிலலை. குடும்பக்கலை போனற பாடஙகளில மிக்க எணணிககையுள்ள பெணகள படிக்கிறாாகள. இறைவன படைப்பிலே ஆணும் பெணணும் சமம. அறிவிலும், உளள வளத்திலும், உடல வளத்திலும் கூடப் பெணகள ஆண்களுக்குச் சமமாக இயங்கமுடியுமென ஆராய்ச்சிகள் மெய்ப்பிக்கின்றன பெணகளை மட்டம் தட்டிக் குடும்பப் பொறுப்புத் தவிரப் பிற ஈடுபாடுகள் தேவையற்றன என்று நிருணயிககும் நிலை இன்னும் தொடரத்தான செய்கிறது. தொழில துறையில் பெண்ணுக்கு ஒத்த வாய்ப்பு இல்லை; ஒத்த நிலை இல்லை; ஒத்த ஊதியம் இல்லை; ஒத்த பயிற்சி இல்லை; ஊக்குவிப்பவர் மிகக் குறைந்த அளவினரேயாவர்.

இவையனைத்தையும கருத்திற் கொணடு பின்வரும் பரிந்துரைகள் அளிககப்படுகின்றன:

1. பளளிச் சூழலில்கிடைககககூடிய மூலப்பொருளகள் அமைந்த தொழில நிறுவனஙகள, மனிதவளம், வேலை வாய்ப்புகள முதலியவற்றின் அடிப்படையில் தொழிற்கலவி தேர்ந்தெடுக்கப்படவேணடும்.
2. பாடத்திட்டம் அந்தத் தொழில்துறை நிபுணர்கள், நிறுவனங்கள் ஆகியவற்றுடன் தொடர்பு கொணடு முடிவு செய்யப்பட வேணடும.
3. தகுதியும் திறமையும் ஆர்வமுமுளள ஆசிரியர்கள், மாணவர்களின தனித்தனமைகள, திறமைகள், தேவைகள் ஆகிய பாடங்களை நடத்த வேண்டும்
4. செய்முறைப் பயிறசி உணமைச் சூழ்நிலையில அமையவேண்டும்
5. தொழில நிறுவனங்கள், பெறறோர் - ஆசிரியர் சஙகம், பள்ளி ஆகியவை இணைந்து மாணவர் முன்னேற்றததிறகும அவாகளுடைய வளமான வாழ்விறகும் செயற்பட்டால இளைய தலைமுறை ஏற்றமுளள தலைமுறையாக வளரும் எனபதில் ஐயமில்லை.
6. மூலவளஙகளின அடிபபடையிலும், மக்களின தேவைகளின அடிப்படையிலும், புதுப்புதுத் தொழில் துறைகளை உருவாக்கும முயறசியிலும், கல்வி நிறுவனங்களும் பெறறோர்-ஆசிரியர் சஙகங்களும் ஈடுபடலாம. கூட்டுறவு முறையில் தொழில் மையஙகள் அமைக்கவும், வஙகிகளிலிந்து நிதி உதவி பெறவும், நிறுவனஙகளை நிருவகிக்கும் முறையில் தேர்ச்சி பெறவும் ஆணகளுக்கும் பெணகளுககும் பயிற்சி அளிக்கப்படலாம்.

மே.ஜோ.

*தொழிற் சங்கங்கள்*: பொருளாதாரத்தில உழைப்பை உடல மூலமாகவும், மூளைச் சகதியாலும் செலுத்துகிறபோது அவவுழைப்பிற்குரிய பயனை ஊதியமாகப் பெறுவர் உழைப்பாளர் என்று கருதப்படுகின்றனர். உழைப்பாளர், உழைப்பாளி (labourer) தொழிலாளி (worker) பணியாளர் (employee) என்றும் அவாகளவழங்க்கப்படுகினறனர். காரல்மார்க்சு (Karlmarx), மூளை உழைப்பைச் செலுத்துபவரும் உடல் உழைப்பைச் செலுத்துபவரும் சமுதாயத்தில் மிகை மதிப்பை (Surplus labour) உருவாக்குகிறார்கள் என்று வாதித்தார். வேளாண் தொழிலில் ஈடுபட்டு உறபத்தியைப் பெருக்கும் தொழிலாளர்கள் வேளாண் தொழிலாளர்கள் என்று குறிக்கப்படுகின்றனர். தொழிற்சாலைப் பணியில் ஈடுபடும் தொழிலாளர்களே உலகில் முதனமுதலில் தொழிற்சங்கங்களை (Trade union) உருவாககினார்கள். தொழிற்சஙகஙகள தொழிலுக்கு ஏற்றவாறு தனமையிலும் குறிக்கோள்களிலும் வேறுபடுகினறன. உலகெஙகிலும் தொழில அமைப்பிலும், பணியமைப்பிலும் (Service organization), ஒருமுகப்படுத்தபெற்ற (Organised) அமைப்புகளிலும் வேலை செய்வோர் தொழிற் சங்கங்களை உருவாக்கியுள்ளனா. தொழிற்சஙகம் தொழிலுக்கு ஏறற தன்மையில் அமைந்தாலும், பல்வேறு தொழிற்சாலைகளில் உளள தொழிறசங்கங்கள ஒருங்கிணைநது தொழிற் சஙகஙகளை உருவாக்கியுளளன. சி.டி.எச்.கோல் (G.D.H. Cole)எனபவர், தொழிற்சங்கம் எனபது தஙகளுடைய அன்றாடப பணியின தொடர்பாக ஏறபடும் இன்னலகளை எதிர்நோக்கித் தொழிறசங்க உறுப்பினாகளின் பாதுகாப்பிற்காகவும் பொருளாதார நலன்களுக்காகவும் செயற்படும்

அமைப்பு என்று கூறினார். வெப்பு (Webb), காரல் மார்க்சு (Karl marx) போன்ற அறிஞர்களும் தொழிற்சங்கம் பற்றிய கருத்துகளை விளக்கியுள்ளனர். காண்க: தொழிலாளர் இயக்கம்.

தொழிற்சங்கங்கள் பொருள் உற்பத்தியிலும், ஊதியத்தைப் பெற்றுத் தருவதிலும், ஊதியக் கொள்கை (Wage policy)வகுப்பதிலும் பெரும் பங்கினை ஆற்றுகின்றன. அதனால், பொருளாதாரக் காரணிகளில் தொழிற்சங்கம் இன்றியமையாத காரணியாக இடம் பெறுகிறது. வளருகின்ற பொருளாதார நாடுகளில் தொழிற்சங்கங்கள் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைகின்றன. தொழிற் சங்கம உரிமை, உறவு என்ற இரண்டு சிறந்த செயற்பாடுகளை நிறைவேற்றுகின்றது. உரிமைச் செயற்பாடு என்பது அடிப்படையில் தொழிலாளர்களின் உரிமைக்காகப் போராடுவதாகும். உறவுச் செயற்பாடு என்பது போராட்டக் காலங்களில் தொழிலாளர்களுக்கு ஏற்படும் இழப்புகள், நோய் தாக்குதல்கள் போன்ற எதிர்பாராத சிக்கல்களில் தொழிலாளர் நலன் காத்து நிற்பதாகும். பொதுவாகத் தொழிலாளர்களின் வேலை நிலை மேம்பாட்டிற்காகப் பாடுபடுவதும், உழைப்புக்கேற்ற கூலிக்காக வாதிடுவதும், கூட்டுச் சோர்ந்து நிருவாகத்திடம் தொழிலாளர் நலனுக்காக வேலை நிறுத்தம், போராட்டம், பேச்சு வார்த்தை போன்ற செயல்களில் ஈடுபடுவதும் தொழிற்சங்கங்களின் கடமையாகக் கருதப்படுகின்றன.

தொழிற்சங்கங்கள் முதலாளித்துவ நாடுகளில் மேற்கூறிய செயல்களின் அடிப்படையில் அமைந்துள்ளன. தொழிற் சங்கங்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவதும், பல்வேறு தொழிற சங்கங்களுக்குக்கிடையே பிரிவுகள் இருப்பதும், முதலாளித்துவ நாடுகளிலும் வளருகின்ற நாடுகளிலும் காணப்படும் சிக்கலாகும். சமதரும நாடுகளில் தொழிற்சங்கங்கள் அரசியல் அடிப்படையில் அமைவதாலும், ஒரே தொழிற்சங்கமாகச் செயற்படுவதாலும் மிகுதியான சிக்கல்கள் ஏற்படுவதில்லை. மேற்கு ஐரோப்பிய நாடுகளில் தொழிற் சங்கங்கள் பெரும்பாலும் அரசியல் சார்பில்லாமல் தொழிலாளர்களின் கூலி உயர்வு, கல்வி, சுகாதாரம், வீட்டுவசதி போன்ற சமூக நலன்களுக்காகவே பாடுபடுகின்றன. இந்தியாவில் தொழிற்சங்கம் 1920-ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் வளர்ச்சியடையத் தொடங்கியது. விடுதலை பெற்றபின் இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட தொழிற சங்கங்கள் 2666 ஆக இருந்தன. அவை 1060-61 ஆம் ஆண்டில் 119,84 ஆக உயர்ந்தன.

பின்பு, 1980-ஆம் ஆண்டில் 2000,00 தொழிற்சங்கங்கள் பதிவு செய்யப்பட்டன. மாநில அளவிலும், வட்டார அளவிலும் இந்தத் தொழிற் சங்கங்கள் செயற்பட்டாலும், அகில இந்திய அளவில் நான்கு தொழிற் சங்கங்களின் கூட்டமைப்பே (Labour union Federation) வலுவுள்ளதாக அமைந்துள்ளது இத் தொழிலாளர்களின் கூட்டமைப்புகள் அரசியல் கட்சிகளின் அடிப்படையில் பிரிந்துள்ளன இந்தியத் தேசிய தொழிலாளர் பேரியக்கம் (Indian National Trade Union Congrses - INTUC) என்ற அமைப்பு காங்கிரசுக் கட்சியின் சார்பு அமைப்பாகச் செயற்படுகிறது. பல இலட்சக்கணக்கான உறுப்பினர்களைக் கொண்ட இவ்வமைப்பு தனியார், பொது நிறுவனங்களிலும் தொழிலாளர்நலனுக்காகப் போராடி வருகிறது. தொழிலாளர்களின் ஒட்டுமொத்தமான நன்மைக்காகவும், சமுதாய, பொருளாதார, அரசியல் சுரண்டல்களைத் தவிர்ப்பதற்காகவும், ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பதற்காகவும் பாடுபடும் என்பது இவ்வமைப்பின் குறிக்கோளாகக் கூறப்பட்டுள்ளது. அனைத்துலகத் தொழிலாளர் கழகத்துடன் (International Labour Organization - I.L.O) இவ்வமைப்பு இணைந்து செயற்படுகிறது. அகில இந்தியத் தொழிலாளர் பேரியக்கம் (All India Trade Union Congress) (A I.T.U.C) என்ற மற்றொன்று 1920-ஆம் ஆண்டு பொதுவுடைமை இயக்கத்தினரால் உருவாக்கப்பட்டது. சமதரும அரசை உருவாக்க இச்சங்கம் பாடுபடும் என்ற சிறந்த குறிக்கோளுடன் தொடங்கப்பட்டது. நாட்டின் உற்பத்திச் சாதனங்களை அரசே பயன்படுத்த வேண்டுமென்பது வலியுறுத்தப்பட்டது. சமதரும அரசு உருவானால்தான் முதலாளித்துவ அமைப்பு அழிந்து கூலி அடிமைத்தனம் (Wage Slavery) நீங்குமென்றும் இச்சங்கம் அறிவித்தது. இவ்வமைப்பு மேற்கு வங்காளம், கேரளம், மகாராட்டிரம், ஆந்திரம் போன்ற மாநிலங்களில் செல்வாக்குடன் விளங்குகிறது.

சி.ஐ.டி.யு (Centre of Indian Trade Unions) என்ற (C.I.T.U) இந்தியப் பொதுவுடைமை இயக்கம் கொள்கை வேறுபாட்டின் காரணமாக இரண்டு இயக்கமாக 1962இல் பிரிந்தது. இந்தியப் பொதுவுடைமைக் கட்சியின்(CPI) சார்பில அனைத்திந்தியத் தொழிலாளர் பேரியக்கம் செயற்படுகிறது இவ்வமைப்பிலிருந்து பிரிந்த (CITU) தொழிலாளர் இயக்கப் பேரவை இந்திய மார்க்சிய (CPM) இயக்கத்தின் சார்பில் இயங்குகிறது. இவ்வமைப்பு மேற்கு வங்காளம், கேரளம் ஆகிய மாநிலங்களிலும், சென்னை, கோவை மற்றும் தொழில் செறிந்த நகரங்களிலும் செல்வாக்குடன் இயங்குகிறது. இவ்வமைப்பும் இந்தியாவில் சமதரும கருத்துகள் வெற்றி பெற வேண்டும் என்றும், தொழிற்துறை முற்றுரிமையை (Monopoly) முடிவுக்குக் கொண்டுவர வேண்டும் என்றும், முதன்-

மையான பொருளாதார இடங்கள அரசின் கட்டுப பாட்டின் கீழக் கொணடு வர வேணடுமெனறும வலியுறுத்துகிறது.

இந்து மசுதூர் சபை (Hindu Mazdoor Sabha) இந்தியாவின் விடுதலைககுப் பின வட மாநிலஙகளில் சமதருமக் கட்சிகளின சார்பில் (Socialist Party) 1948-ஆம ஆண்டில் சனநாயகச சமதரும அரசை இந்தியாவில் உருவாக்க வேண்டுமென்ற நோக்கத் தோடு தொடஙகப்பட்டது. பொருளாதார, சமூக, அரசியல, பணபாட்டு நன்மைகளை இந்திய உழைக் கும் இனம பெற வேணடுமென்றும இவவியக்கம் வலியுறுததியது.

ஒருஙகிணைந்த தொழிற்சங்கம் (United Trade Union Congress) இந்து மசுதூர் சங்கத்தின் கொள் கைகளைப பிடிககாத தலைவர்களால் 1949-ஆம ஆண்டு உருவாக்கப்பட்டது. இத்தொழிற் சங்கத்தில் முழு அளவில் அரசியல் சார்பில்லாமல தொழிலாளர் நலனுக்காகவே பாடுபட வேண்டுமென்பதும் இடச் சாரிப் பொருளாதாரக் கொள்கைகளை ஆதரிக்க வேண்டு மெனபதும் வலியுறுத்தப்பட்டன.

மாநில அளவில், தொழிற் சங்கங்கள் ஆங்காங்கே செயற்பட்டாலும் மேற்கூறிய தொழிற் சங்கங்களைப் போல பரந்த அளவில் செயற்படவில்லை. தமிழகத தில திராவிட முன்னேற்றக கழகம் (D.M.K.) 1967க் குப் பின் தொழிலாளர் முனனேற்றப் பேரவை (Progressive Labour Federation) ஒன்றை ஏற்படுத்தி தி.மு கவின அரசியல் சார்போடு செயறபடுத்தியது. இத தொழிறசஙகம மாநில அரசால் நடத்தப்படும பொது நிறுவனஙகளிலும் தனியார் நிறுவனஙகளிலும் செயறபட்டு வருகிறது. தி.மு.க. விலிருநது பிரிந்த அனைத்திநதிய அண்ணா திராவிட முனனேற்றக், கழகம் (A I A D M K)1977க்குப் பின்னாத் தமிழ கத்தில் தொழிற்சங்கப் பேரவையைச செயலாறறி வருகிறது

இந்தியத தொழிற்சஙகஙகள தங்களுடைய வலல மையால் தொழிலாளர் நலனகளுக்காகப் பல திட்டங்களைக கொண்டு வநதுளளன. தொழி லாளர் காப்பீட்டு சட்டம் (Employees State, Insurance Act,) 1948-ஆம் ஆணடிலும்,தொழிலாளர் பொதுநல நிதிச் சட்டம் (Employees Provide Fund Act) 1952 ஆம்ஆணடிலும் உருவாக்கப்பட்டன. இச்சட்டங்களின் மூலம் தொழிலாளர் நலன் இந்தியா முழுவதும பாது காக்கப்பட்டது. தொழிலாளர்களின மருத்துவ, மகப் பேறு போனற நலன்களின் பாதுகாப்பிற்கும் தொழி லாளர்கள் சிக்கல்களைத் தீர்ப்பதற்கும பல சட்ட அமைப்புகளும் (Tribunal) உளளன. இந்தியா முழு மைக்கும் ஒரே சீரான பணிக் கொடை செலுததல் சட்டம (Payment of gratuity Bill 1971) 1971-ஆம் ஆணடு நாடாளுமன்றத்தில் நிறைவேற்றபபட்டது. அச் சட்டம் ஆலைகளில், சுரங்கஙகளில், தோட்டத் தொழில்களில, பெரும் வாணிக நிறுவனங்களில் பணியாற்றும் தொழிலாளர் அனைவருக்கும் பணிக் கொடைப் பணத்தைக் கொடுப்பதற்கு உறுதி செய் கிறது தொழிலாளர்கள் ஓய்வு பெறும்போதும், திடீ ரென மரணமடையும் போதும இப்பணம் தொழிலா ளர்களுக்குத் தரப்படுகிறது தொழிற் சங்கங்கள் இவ் வாறு பல பாதுகாப்புகளையும் நலன்களையும், போராட்டங்களினாலும, பேச்சுவார்த்தைகளினா லும் பெற்றுத் தந்துள்ளன. அதேசமயம் 1960 க்கும் 1970க்கும் இடைபபட்ட ஆணடுகளில் பல்வேறு வேலை நிறுததங்களினால இநதியாவில் தொழில்,உற்பத்தி கேடுற்றது. தொழிற்சஙகஙகள மிக்க அளவில் அரசி யல நோக்கத்தோடு செயற்பட்டதே இதற்குக் காரணமாக இருக்கலாம் என்று கூறப்படுகிறது. மேலும், தொழிறசங்கங்களுககிடையில தேவையறற போட்டியும் சச்சரவுகளும் தொழில் அமைதியைக் கேடுறச் செய்கின்றன எனறும் கூறப்படுவதுண்டு இந்தியாவில் தொழிறசஙக அமைப்புகள் உயர்ந்த இலட்சியங்களுக்காகப் பாடுபடப போவதாக அறிவித் தாலும்,பொதுவான முறையில் கூலி உயர்வுக்காகப் பெரும் அளவில பாடுபட்டுள்ளன தொழிலாளர் சமு தாயத்தின மறறப் பிரிவினரின நலனகளுக்காகப் பாடு படுகின்ற அளவிற்குத தொழிற்சங்கங்கள கலவி போதிக்கவிலலை எனறு குறை கூறுபவரும் உண்டு. இநதியாவில் 67 விழுக்காட்டிற்கு மேல் உளள மககள் கிராமஙகளில வாழ்ந்து வருகினறனர். வேளாண்மை உழைப்பையே நம்பியுளள இததொழிலாளாகளுககுத தொழிற சங்கம் அமைத்துப் போராடுகினற வாய்ப்பு இலலை. எனவேதான், தொழிற்சஙகஙகள பெரும் பாலும் நகர்களையும் நகர்ப் புறங்களையும ஒட்டியே வளர்நதுள்ளன. மு.நா.

**துணை நூல்:**

**Bhagoliwal, T.N.** Economics of Labour and Social welfare, Sahitya Bhawan, Agra, 1974.

***தொழிற் சமூகவியல்:*** சமூகவியலின பலவேறு பிரிவுகளை ஒப்பிடும்போது தொழிற் சமூகவியல என் பது அணமைககாலத்தில தோன்றியதாகும். இந்த நூற்றாண்டின் மததியில்தான இது நடைமுறைப் படுத்தப்பட்டது. அந்த நேரத்தில அமெரிககாவில சிகாகோ நகரிலுளள மேலை மின்சார நிறுவனம (Western Electric Company), ஆத்தார்ன் (Hawthorn) எனும் இடத்தில் நடத்திவந்த தொழிறசாலையில பல ஆய்வுகள் நடத்தப்பட்டுப் பிரபலமடைந்தன. சார்சு எலட்டன மேயோ (George Elton Mayo) எனபவர் தம் உதவியாளர்களுடன் நடத்திய அந்த ஆயவுகளின

விளைவுகளே இந்தத் தொழிற சமூகவியலின் (Industrial Sociology) வளர்ச்சிககு முக்கிய காரணமாகும்.

முன்னேறி வரும்பலவேறு நாடுகளைப் போலவே இந்தியாவும் தொழில் வளர்ச்சியில ஈடுபட்டுள்ளது. தொழில வளத்தைப் பெருக்குவதன் மூலமே பொருளாதார, சமூகச் சிக்கலகளுக்குத தீர்வு காண முடியும். இந்த நம்பிக்கையின அடிப்படையில்தான இந்தியாவில தொழிற சமூகவியலுக்குச் சிறப்பிடம அளிக்கப்படுகிறது.

அதுமட்டுமலலாது தொழில் நிறுவனம என்பது சமூகம், சமுதாயம் ஆகியவற்றோடு பினனிப் பிணைந்துள்ளது ஒருபுறம் தொழிலும் மறுபுறம் சமூகம், சமுதாயம் ஆகியவையும் ஒன்றின்மீது ஒன்று தாக்கம் செலுத்துகினறன. ஆகவே தொழில் தனிததே இயஙகுவதிலலை. ஒரு தொழிற்சாலையை இயக்குவதற்கு ஒரு மக்கள் கூட்டமே தேவைப்படுகிறது. கூலியாட்கள், பொறியியல் வலலுநர்கள், நிருவாக அதிகாரிகள் கணக்கர்கள், சுருககெழுத்தாளர்கள். விற்பனையாளர்கள் என்று பலர் தேவைப்படுகின்றனர். அவாகள் ஏற்கெனவே உருவாக்கப்பட்ட ஆளுமை, கருத்துகள மன நிலைகள, விருப்பு வெறுப்புகள் ஆகியவற்றோடு தொழிற்சாலைகளுக்குள் நுழைகிறாாகள. பின்னா வேலைமுடிந்து வெளியே வரும்போது அவாகளது ஆளுமை அவாகள்செய்யும வேலையின் பாதிப்பால மாறி அமைகிறது. மேலும தொழில என்பது, ஆண பெண ஆகிய இருபாலாரின குணநலனகளைப் பாதிப்பதன் மூலம சமுதாயததிலுளள மறற நிறுவனங்கள அமைப்புகள, குழுக்கள ஆகியவற்றையும் பாதிககிறது. எடுத்துக்காட்டாக, குடும்பம, சமூக வகுபபுகள், சுற்றுப்புறம், பொழுதுபோக்குக் குழுககள, கோயிலகள் முதலியன பாதிக்கப்படுகினறன. தொழிலும சமூகமும் இவவாறே ஒன்றையொனறு பாதிககின்றன.

மேற்கூறியவை அல்லாமல் தொழிலும் சமூகமும் ஒன்றையொனறு 'நேரடியாகவும்' பாதிப்பை ஏற்படுத்துகின்றன. தொழிறசாலை அது அமைநதிருக்கும் சமுதாயத்தின் குணநலனகளை ஓரளவு வெளிப்படுத்துகிறது. அதன போக்குவரத்து, அது அமைநதிருக்கும் இடம் (ஆற்றங்கரை, இருப்புப பாதை, ஏரிக்கரை முதலியன) வேலை, நிருவாகம், ஊழியம ஆகியவை குறித்து அதன் எணணங்கள முதலியன வற்றை அது வெளிப்படுத்துகிறது. இது ஒருபுறம் எனறால், மறுபுறம் தொழிற்சாலை சமுதாயத்தின் பல்வேறு நிறுவனஙகளையும் பாதிக்கிறது. ஒரு தொழிற் சாலையில் ஏற்படும் குறிப்பிட்ட தொழில நுட்ப மாறுதலால இரவு நேர வேலைக்குத் தேவை ஏற்படக்கூடும அதனால் குடும்பத்தில் கணவன்-மனைவி, தநதை-குழநதைகள இவர்களின உறவில் சில அடிப்படை மாறுதல்கள் வியக்கத்தக்க அளவில் ஏற்படுகின்றன. அதுபோலவே சமூக வகுப்புகளும் மாறுதல்களை அடைகின்றன. மக்களின் குணநலன்களும் மாறுபடுகினறன. சிலசமயம ஒரு சமூகமே வேரற்று அழியும் நிலைமையும் ஏற்படலாம; பிற சமயங்களில் மக்கள ஊரைவிட்டு வேறு இடம்செல்ல நேரிடலாம்; அலலது அமைதியாக உறங்கிக கிடக்கும் சிற்றூர் புத்துயிர் பெற்று விரைவாக இயங்கும் பெரு நகராக மாறும் வாய்ப்பும் உணடு.

தொழிலும் சமூகமும் ஒனறையொன்று உணர்ச்சியோடும், தீாமானத்தோடும் பாதிக்கும் சநதாப்பஙகள பல உண்டு சமூகததில ஏற்படும் ஏதாவதொரு சிக்கல் அலலது சச்சரவைத தீர்க்க நிருவாகம், ஊழியம் ஆகிய இரணடுமே முயற்சிசெய்யலாம் எடுததுக் காட்டாகப் பொதுமக்கள் கருததைத உருவாக்குவதன் மூலம, அரசியற் செல்வாக்கின மூலம் அல்லது சட்டத்தின் மூலம் செயற்படலாம்.

இககாலத்திய அரசு மேலும் மேலும் தொழிலைத் தன் கட்டுப்பாட்டுகருள் வைத்திருக்கவே முயலுகிறது. தொழிறசாலையின நிருவாக அமைப்பு, நிருவாகம், ஊழியம் ஆகியவறறிடையே நிலவும உறவு முறை, உற்பத்திப் பொருள்களின விற்பனை, அவற்றின விலையை நிருணயம் செய்வது ஆகிய பலவற்றையும் ஓர் ஒழுஙகுமுறைக்குள கொணரவே அரசு முயறசி செய்கிறது. சில சமயம் தொழிலுககும் சமுதாயத்துக்கும் உள்ள பிணைப்பு குறைபாடுளளதாகவே அமைகிறது. இநதக் குறைபாடானது இரணடிற்குமிடையே முடிவில்லாத முரணபாடுகளைத தோற்றுவிக்கிறது. இதனவிளைவாகத தொழில, சமுதாயம இரணடுமே ஒனறனமீது ஒனறு ஆதிக்கம் செலுத்த முயறசிசெய்கினறன; எதிராளியைத தமக்குச் சாதகமாகவே செயறபட வைக்க விருமபுகினறன.

தொடக்க காலத்தில தொழிற்சாலை எனபது தொழிலசார்நத பொருளாதார அமைப்பாகக் கருதப்பட்டது. ஆனால், இப்புதிய காலததின் 'கணடுபிடிப்பு' எனனவென்றால் தொழிற்சாலை என்பது பொருள், சேவை ஆகியவற்றின் உறபததிக்கும் விறபனைககும உரிய சிறப்பான ஒரு சமூக அமைப்பு எனபதேயாகும் இதுதான் பொதுவாகச சமூக அறிவியல்களுக்கும், குறிப்பாகச சமூகவியலுக்கும் அளிக்கப்படும் முக்கியத்திற்குக் காரணமாகும. ஆகவே, தொழிறசாலைகளில் நிலவும் உறவுமுறைகள, உற்பததி, திடமான மனநிலை, அதிகாரம் ஆகியவறறின மீதான அதன தாக்கம் ஆகியவற்றிற்குச் சமூகவியல சிறப்பிடம் அளிக்கிறது. பரவலான, பொதுவான கருத்துகளைச் சொலலுவதோடு மட்டுமல்லாமல தொழிலசார்நத நடைமுறைகளுக்கு ஏறறதான

ஒரு சமூக அறிவியலாகவும் திகழுகிறது. தொழிற சமூக வியலின முககிய நோக்கம் எனனவென்றால் தொழிலை சார்ந்த அடிப்படைச் சமூகக் காரணிகளை மட்டு மல்லாமல் அவறறோடு இடைவினை கொளளும் பிற காரணிகளையும (எடுத்துக்காட்டாக மதம், பொருளாதாரம்,அரசியல, சட்டம், பொழுதுபோக்கு) தேர்வுசெய்து படிப்பதாகும்.

இது சமூகவியலின் ஒரு சிறப்புப் பிரிவு ஆகும். இது மூல இயலின கோட்பாடுகளையும் புதிய ஆராயசசி முறைகளையும் பயனபடுத்தி வளர்நது வருகிறது. தொழிற்சாலைகள வணிக நிறுவனங்கள போன்ற அமைப்புகளை முறையாக ஆய்வு செய் வதற்குச் சமூகவியல கோட்பாடுகள் உதவுகின்றன ஆயினும், தொழிற் சமூகவியல நெறிப்படுததப் படாத எளிதில் வரையறுகக முடியாத ஓர இயலாகவே உள்ளது. இது சமூகவியல் அணுகுமுறைகளைக் கொணடு தொழிற் சிக்கல்களைத் தீர்வுகாண ஏற்படுத் தப்பட்ட ஒன்று எனச் சொல்லலாம.

தர்க்கைம் (Durkheim), வீபர் (Weber) ஆகி யோருடைய கருத்துகளைக் கொணடு தொழில் நிறுவனங்களை ஆய்வுசெய்வது இயலுமேயானாலும் கூடத் தொடக்ககாலத்தில நடந்த ஆய்வுகளில் அந்தப் பாதிப்புக காணபபடவில்லை. புகழ்பெற்ற ஆத் தார்ன் ஆய்வுகளுக்குப் பிறகு முறையான அனுபவ அடிப்படையிலான ஆயவுகள் நடத்தப்பட்டன. காலம்காலமாகப் பொருளாதாரம், உளவியல் ஆகிய வற்றின் தனிப்பட்ட சமூகக் காரணிகள சாராத ஆராயச்சிகளே இதறகான ஒரு காரணமாகும். மேலும், தொழிறசாலைகளின் குழுக்களிடையே நிலவும் உறவுமுறைகளைப் பற்றி ஆய்வுசெய்யப் படுவதை உயர்மட்டத்தில இருபபவர்கள விரும்பு வதிலலை. ஆகவே தொழில்சார் ஆய்வுகள அண்மைக காலமாகத்தான் பரவலாக நடத்தப்பட்டு வருகின்றன.

அணமையில் நடத்தப்பட்டு வரும் ஆய்வுகள வெளியார உதவியோடு அவர்களுக்கு ஏறபுடைமை யானவையாக மேற்கொளளப்பட்டு வருகின்றன. அவை பெரும்பாலும் தொழிற் சாலைகளில் நிலவும் சிக்கலகளைப் பற்றியும் அவற்றின தீர்வுகளைப் பற்றி யுமே நடைமுறைக்கு ஏற்றவாறு நடத்தபபட்டு வரு கினறன. நிருவாகம், ஊழியம் ஆகியவறறிடையே நிலவும் உறவுமுறைகள் பல்வேறு கோணஙகளில் ஆய்வு செயயப்பட்டு வருகின்றன.கூட்டு ஆலோசனை, கணகாணிக்கும் தலைமை, பலவிதமான ஊழியக் குழுக்கள் ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் கொடுககப் பட்டு வருகின்றன. தொழில் நுட்பம் குறித்தும் ஆய்வு கள் நடத்தப்பட்டு வருகினறன. அவற்றின் மாறுபாடு கள். தேவைகள், பாதிப்புகள், அவற்றைக் கையாளும் முறைகள், அவை தவிரத் தொழில் நுட்பத்தின ஏற்றத்தாழ்வுகள் பற்றிய ஆய்வுகளும் நடத்தப்பட்டு வருகின்றன. பலவிதமான நிருவாக அமைப்புகள, தொழிற்சங்க அமைப்புகள், அவற்றின் செயல்முறை கள, நிருவாகம், தொழிற்சங்கம் அவற்றின உறவு பறறிய ஆயவுகள் ஆகியவை பரவலாக நடத்தப்பட் டிருந்தாலும், சமூகவியல் அறிஞர்களால ஆய்வு செய் யபபட்டிருப்பது மிகக் குறைவே. அண்மைக் காலத் தில அலுவலகக் குழுக்களின் அமைப்பு, பங்கு, குறிப் பாக உடலுழைப்பறற தொழிற்குழுவினர் (White-Coller Groups) ஆகியவை பற்றிய ஆய்வுகள் நடத் தப்பட்டிருக்கின்றன.

தொடக்க காலத்தில் நடநத பல அனுபவ அடிப் படையிலான ஆய்வுகளில் வரையறுக்கப்பட்ட சில சிக்கல்களே கையாளப்பட்டிருந்தன. இப்போது பரவ லான சிக்கல்களைப் படிப்பதும், ஆய்வுகளை நடத்து வதும் காணப்படுகின்றன. பல்வேறு சமூகக் காரணி கள் ஒன்றுக்கொனறு சார்புள்ளவை எனபது ஒத்துக் கொள்ளப்பட்டு, குறிப்பிட்ட சிக்கல்களை அவற்றின பரவலான சமூக அமைப்புகளின் பின்னணியோடு அணுகவேணடும் என்ற கருத்தும் ஏற்றுக் கொள்ளப் பட்டது. ஆகவே, தொழிற்சாலைகள அல்லது அதன ஒரு பகுதியான நிருவாகம் ஆகியவற்றைச் சமூக அமைப்புகள் என்ற முறையில் பல்வேறு கோணங் களில் ஆய்வு செய்கிறார்கள. இக்காலத்திய ஆய்வு களில தொழில் நிறுவனததின சமூக ஒழுங்கமைப்புகள் அல்லது நிருவாக அமைப்புப் பற்றிய ஆய்வுகளே மிகுதியாக மேற்கொளளப்படுகின்றன. அதாவது தொழிற் சாலைகளின அமைப்பு முறை, நிருவாகம் பறறிய ஆய்வுகளே சிறப்பிடம பெறுகின்றன. மேலும் நடைமுறையில் கண்டுபிடிப்புகளைச் சீரமைத்துக் காலம் காலமாக இருந்துவரும் நிருவாக அமைப்பு களை ஓர் ஒழுங்குமுறைககுள் கொண்டுவரப் பெரு முயற்சிகள் மேறகொள்ளப்பட்டு வருகினறன. அது போலவே அண்மைக்காலத்தில் தொழில் நிறுவனங் களின் அமைப்புப் பற்றிய கூறுகள, சமூகத்தின முக்கிய கூறுகள (எடுத்துக்காட்டு: கலவி, வகுப்பு) ஆகியவற் றின் தொடர்பைத் துணடிககும முயற்சிகளும் நடக் கின்றன. கோட்பாடுகளின் எல்லை விரிவாககப்பட்டுப் புதுமையாக்கப்படுகின்றன. நடைமுறையில கண்டு பிடிக்கப்பட்டவை கட்டுக்கோப்பாக வைக்கபபட்டி ருப்பதால், மேலும் மேலும் ஆய்வுகளை நடத்தவும பரவலான கருத்துக்களை உருவாக்கவும் நல்ல அடிப் படை அமைந்துள்ளது. தொழிலமைப்பு, நிருவாகத் தலைமை, அலுவலகக் குழுககள் ஆகியவை தொடர் பான ஆய்வுகள பறறிய மதிப்புரைகள மிகுதியாக வெளிவந்துளளன.

ஆகவே, தொழிற் சமூகவியல் வலலுநரின் இன்றைய ஆயவுகள, தொழிற்சாலை நிறுவனங்கள, -அமைப்புகள், இவற்றினிடையே நிலவும் உறவுமுறைகள், தொழில் தொடாபுடையவை,சமூகம், இவறறினிடையே உள்ள தொடர்பு ஆகியவைகளைச் சுற்றி அமைகின்றன எனலாம். இதை ஒரு கருத்தாக ஏற்றுக்கொண்டாலும் நடைமுறைப்படுத்தப்பட வேணடியவை மிகப்பல உள்ளன.

தொழிற்சாலைகள, தொழில் தொடர்பான அமைப்புகள இவற்றில நிலவும் சிக்கல்கள ஆகியவற்றைப் பற்றிய ஒழுங்கமைக்கப்பட்ட புலமையே குறைவு எனலாம். அவற்றில் தொழில் அமைப்புகளுக்கும், பிற அமைப்புகளுககும இடையே நிலவும் தொடர்பு பற்றிய புலமை அதைவிட மிகக் குறைவு எனலாம. வி.கோ.

**தொழிற்சாலைக் கூலிப் பட்டாளம்:** குறைந்த வளர்ச்சியுடைய நாடுகள வறுமை என்னும் நச்சுச் சுழலிலிருந்து விடுபட்டுப் பொருளாதார முன்னேற்றமடையத் தக்க வழியில், ஒன்றைக் காரல் மார்க்சு (Karl Marx) குறிப்பிட்டுள்ளார். காரல் மார்க்சின் கருத்துப்படி 1) பொருளாதாரக் காரணிகளின் அடிப்படையில்தான வரலாற்று நிகழ்ச்சிகள் தோன்றுகின்றன. வரலாற்று நிகழ்ச்சிகள் ஏதோ தற்செயலாக நடப்பவை அல்ல, சமுதாயத்தில் இருக்கும் பல்வகைப் பிரிவு மக்களிடையே தொடர்ச்சியாக நிகழ்ந்து கொணடே இருக்கும் வருக்கப் போராட்டத்தின் விளைவுகளே வரலாற்று நிகழ்ச்சிகள. உற்பத்தி முறைக்கும்(Mode of Production) உற்பத்தித் தொடர்பிற்கும் (Relations of Pro duction) உள்ள வேறுபாட்டின் விளைவாகச் சமுதாயத்தில் பல விதமான மோதல்கள் தோன்றுகின்றன. இம் மோதல்களின விளைவே புதிய சமுதாய அமைப்புகளும் வரலாற்று நிகழச்சிகளும்; 2) உற்பத்திச்சாதனங்களையும் செல்வத்தையும் பிற வசதிகளையும் கொண்டுள்ள பொருளாதார வசதி படைத்த முதலாளி வருக்கத்தினர், இவ் வசதிகளும் வாயப்புகளும் இல்லாத ஏழைகளை எப்போதுமே நசுக்கித் தம் நிலையை உயர்த்திக் கொளவதிலேயே கணணும கருத்துமாக இருப்பாாகள். சாது மிரண்டால் காடு கொள்ளாது என்னும் முதுமொழிககிணங்க அடங்கி ஒடுங்கிக் கிடக்கும் ஏழைகள கொதித்தெழுந்து புரட்சி செய்யத் தலைப்படுவர். சமுதாயத்தில் இப் போராட்டம் நிகழ்ந்து கொண்டே இருக்கும், 3) உற்பத்தி செய்யப்படும் பண்டங்களின் மதிப்பு அதை ஆக்குவதற்கான உழைப்பின் மதிப்பிற்குச் சமமாக இருப்பதால் நாட்டில உற்பத்தியாகும் பண்டங்களின் மதிப்பு முழுவதும் அவற்றை ஆக்கிய தொழிலாளர் வகுப்பிற்கே உரியது; 4. ஒவ்வொரு பணடத்தின் மொத்த மதிபபை, மாறா மூலதனத்தின பங்கு, மாறும் மூலதனத்தின பங்கு, மிகை மதிப்புஎன்று மூன்று வகைபபடுத்தலாம். மொத்த மதிப்பு உரூ.1,000/- எனறும மாறா மூலதனத்திறகுரிய பஙகு உரூ.200/- என்றும இருந்தால், தொழிலாளர் உழைப்பின் பஙகு உரூ 800/ ஆகிறது. ஆனால, தொழிலாளர்களுக்கு முதலாளிகள கூலி என்ற வடிவததில உரூ.300/– ஐக் கொடுக்கிறார்கள என்றால் மாறும் மூலதனத்தின் பஙகு உரூ.300/-. மீதியுள்ள உரூ./500 ம் உண்மையில தொழிலாளாகளுக்குச் சேர வேணடியது. ஆனால், முதலாளிகள அதனைத்தாமே அடைநது'கொளகினறனர். இதனை மிகை மதிப்பு (Surplus Value) என்று மார்க்சு குறிப்பிடுகிறார். இநத மிகை மதிப்பின் அளவைப் பெருக்குவதே முதலாளிகளின அடிப்படை நோக்கமாக இருக்கும்.

**தொழிற்சாலைக் கூலிப்பட்டாளம்:** முதலாளிகள தொழிலாளர்களை எந்த அளவுக்குச் சுரண்ட முடியுமோ அந்த அளவுக்குச் சுரண்டுவதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு செயற்படுவர். பேர ஆற்றல்(Bargaining Power) மிகவும் குறைவாக உளள ஏழைத் தொழிலாளர்கள் தம் வளம் பறிக்கப்படுவதால துன்பத்திற்கு மேல் துனபத்தை அனுபவித்து வருவார்கள். அதனோடு முதலாளிகள் இயந்திரஙகளைப் பயன்படுததிப் பல தொழிலாளர்களை வேலை இழககச் செய்யும் முயற்சியிலும ஈடுபடுவர். அதன்விளைவாகத்தொழிலாளாகளிடையேவறுமையும் வேலையினமையும் பல்கிப் பெருகி நிற்கும். இவ்வாறு பெருகி நினறு வேலையில்லாமலும்,. குறைந்த வேலையிலும் அவதியுறும் தொழிலாளர்களைத் தொழிற்சாலைக் கூலிபபட்டாளம் என்பர் (Industrial reserve army)(IRA)இக் கூலிப் பட்டாளத்தின் அவல நிலையைக் கருதாமல் முதலாளிகள இலாபம பெறுவதையே குறிககோளாகக் கொணடு செயற்படுவர். தொழிலாளர்கள் வேலை பார்க்கும் கால அளவை அதிகரிப்பதன்மூலமாகவும், கூலியைக் குறைப்பதன மூலமாகவும், உற்பத்திச் செலவைக குறைக்கத் தகக உற்பத்தி முறைகளைப் புகுத்தித் தொழிலாளாகளின உற்பத்தித்திறனை அதிகரிப்பதன மூலமாகவும், மிகுதியான மிகை மதிப்பைப் பெற முதலாளிகள் முயன்று கொண்டே இருப்பார்கள. முதல் இரண்டு முறைகளுக்குத் தொழிலாளர்களிடையே எதிர்ப்புத் தோன்றினாலும் முதலாளிகள் மூனறாம் முறையை முனைப்பாகப்பயன்படுத்த முயல்வா. அதன் விளைவாக வேலையின்மை பெருகித் தொழிற்சாலைக் கூலிப்பட்டாளத்தின் அளவு பெருகி விடும். தொழிற்சாலைக் கூலிப்பட்டாளத்தின் அளவு அதிகமாக அதிகமாக அந்நிலையைப் பயனுபடுத்தி முதலாளிகளமேலும்மேலும்கொள்ளை இலாபம் அடிப்பதையே

குறிக்கோளாகக் கொண்டு செயற்படுவர். முதலாளி களின் எண்ணங்களுக்கு மாறாகச் செயற்படும் தொழிலாளர்களை மிக எளிதாக வேலையிலிருந்து நீக்கிவிட்டு, வேலையை எதிர்பார்த்து ஏங்கி நிற்கும் தொழிலாளர்களுக்குத் மிகக் குறைந்த கூலியையும் கொடுத்து மிகுதியான இலாபத்தை முதலாளிகள் பெற்றுக் கொண்டே இருப்பார்கள். எனவே, தொழிற் சாலைக் கூலிப் பட்டாளத்தின் அளவைப் பெருக்குவ திலும் அதனைத் தம் நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்வதிலும் முதலாளிகள் கண்ணும் கருத்துமாக இருப்பர். மூலதனக்குவிப்பும் ஆபத்தான வீழ்ச்சியுமே அதனுடைய இறுதிவிளைவு.

முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் முழு வேலை நிலவும் என்ற எடுகோள் (Assumption) இருக்கிறது. தாமசு இராபர்ட்டு மால்தசு (Thomas Robert Malthus), தாவீது ரிக்கார்டோ (David Ricardo) போன்ற பொருளாதார அறிஞர்கள் தவிரத் தொன்மைப் பொருளியல் அறிஞர்கள் எல்லோரும் முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் முழு வேலை நிலவும் என்ற எடுகோளில் நம்பிக்கை கொண்டவர்களாகவே காணப்படுகின்றனர். இந்த எடுகோள் தவறானது என்பதைக் காரல் மார்க்சு தமது விளக்கத்தின் மூலம் தெளிவு படுத்தினார்.

குறுங்காலச் சுழல் மாற்றங்களோடு (with short run cyclical movement) தொழிற்சாலைக் கூலிப் பட்டாளத்தின் அளவு மிகுதியாகிக் கொண்டே செல லும் தன்மையுடையது என்பது மார்க்சின் கருத்து. 1. வேளாண்மைத் துறையிலும் தொழில் துறையிலும் தோன்றும் தொழில் நுட்ப மாற்றங்கள் (Technological change), 2. அதிகரித்து வரும் பங்கு பெறும் விகிதம் (Increased Participation Rate), 3. மக்கட் பெருக்கம் ஆகிய மூன்று காரணிகளும் தொழிற்சாலைக் கூலிப் பட்டாளத்தை நீண்டகால அளவிலும் அதிகரிக்கச் செய்கின்றன.



தொழிற்சாலைக் கூலிப்பட்டாளம்

பழமையான வேளாணமை முறைகளுக்குப் பதிலாகச் சிறிய, நடுத்தர மற்றும பலவிதமான இயந்திரங்களைப் பயனபடுத்தும் வேளாணமை முறைகள தோனறுவதால், ஏறகெனவே வேலையிலிருந்த தொழிலாளாகள தொழிற்சாலைக் கூலிப்பட்டாளத் தொகுப்பிறகு வலுக்கட்டாயமாகத் தளளப்படுகிறாாகள. வேளாண்மையில் நிகழ்வதைப் போன்று தொழில் துறையிலும் பலவகை இயந்திரங்களையும், உழைப்புச்சிக்கன முறைகளையும் பயன்படுத்துவதனால், இத்துறையிலும் வேலையினமை பெருகுகிறது. மூலதனக் குவிப்பினாலும, பெருகிய முதலீட்டு அளவினாலும் ஆணகள், பெண்கள, சிறுவர்கள என்ற பல தரப்பட்ட தொழிலாளர்களும வேலைகளில் சேர ஈர்க்கப்படுவர். ஆனால, முதலாளிகளின செயல்களால் உபரி மதிப்புத்தான பெருகுமேதவிரத் தொழிலாளர்கள் நிலை உயர ஏறபடும வாயப்புகள மிகச சொறபமே. நாளாவட்டத்தில வேலையின்மை அளவு பல்கிப பெருகிவிடும். இவறறோடு பெருகி வரும மககள தொகையும் அதன விளைவாகப் பெருகி வரும் தொழிலாளர்களின அளவும் தேவைக்கு அதிகமாக இருக்குமாதலால, தொழிறசாலைக் கூலிப பட்டாளத்தின அளவு நீணட கால அளவிலும் பெருகிச செலலும போககைப் பெறுகிறது. தொழிலாளாகளின தேவையைக் காட்டிலும அளிபபுக குறைவாவதாலும், முதலாளிகளின சுயநல நடவடிக்கைகளாலும தொழிற்சாலைக் கூலிப்படடாளத்தில குறையும அளவைக் காடடிலும், தொழிறசாலைக கூலிபபடடாளத்தில அதிகரிககும அளவு அதிகமாகிக் கொணடே செலலும எனபதை மேற்காடடிய படததின மூலம எளிதில உணரலாம்.

தொழிற்சாலைக கூலிபபட்டாளத்தின அளவு அதிகரிககவே பொதுவான கூலி மட்டம மிகவும் குறைந்து, பிழைப்பூதிய நிலையை அடைந்து தொழிலாளர்கள எல்லையிலாத துயா அடைவாாகள என்பது கருத்து.

தொழில நுட்பததை அதிகரிப்பதும, உறபததி முறைகளை மேமபடுததுவதும தொழிலாளாகளின உறபததித திறனை மிகுதியாககும என்றும், அதன விளைவாக முதலாளிகள் மிகுதியான மிகை மதிப்பைப (Surplus Value) பெறுவாாகள என்றும், அதனால தொழிலாளாகளிடையே வேலையின்மை தோன்றித் தொழிலாளர்கள பட்டினிப பட்டாளமாக இருப்பார்கள என்றும காரல மாாகசு குறிப்பிடுவது, சாதாரணமான ஒரு நிலையை வேண்டுமென்றே மிகைபபடுததிக் கூறப்பட்ட கூறறாகும் என்று காரல் மாாகசின கருத்துகளை மறுப்பவாகள் குறிப்பிடுகிறாாகள. தொழில நுட்ப முன்னேறறம, அறிவியல வளாசசி, நல அரசுகளின நடவடிககைகள், கலவியில முன்னேற்றம் போனற பல மாற்றங்களால தொழிலாளர்கள நல் வாழவைப் பெறறிருப்பதை மறுக்க இயலாது என்று இவாகள சுட்டிக் காட்டுகின்றனா. இருப்பினும் பல கோடித தொழிலாளர்கள தங்களின் நல வாழ்விற்கும, தொழிலாளர் சமுதாய முன்னேற்றத்திற்கும தேவையான புரட்சிகரமான கருததோவியங்களை வரைந்து வழிகாட்டிய உததமன காரல மார்க்ஸ் என்று குறிப்பிட்டுத் தொழிற்சாலைக் கூலிப்பட்டாளம் பற்றிய காரல் மாாகசின் கருததுகளை ஆதரித்து வருகினறனர். என்.எஸ.பா.

**துணை நூல்கள:**

**பாலசுப்பிரமணியன், என்.எஸ** திட்டமும் வளர்ச்சியும், உமா பப்ளிகேஷன்ஸ, மதுரை, 1987.

**Junankar, P.N**, Marx's Economics, B.R. Chawla Heritage Publishers, New Delhi, 1983.

**Thingan, M L.**, The Economics of Development and Planning, Vikas Publishing House, Pvt. Ltd, New Delhi, 1978.

***தொழிற்சாலைத் தொழிலாளர்கள்:*** சுதந்திர இந்தியாவில், கலப்புப பொருளாதார அமைப்பில் தனியார் துறையைவிட வேகமான வகையில பொதுத் துறையில தொழில் நிறுவனங்கள தொடங்கப்பட்டுள்ளன. அவற்றின் காரணமாக இந்தியா உலகத்தில் உள்ள தொழில முன்னணி நாடுகளுள் பத்தாம் இடத்தைப் பெற்றுள்ளது, தொழில நுட்பப் பயிற்சியும் நுணணறிவும பெற்ற மனிதசகதியில் மூன்றாம இடத்தைப் பெற்றுள்ளது. இவவியக்கத்தகக சாதனையால் தொழிறசாலைத் தொழிலாளர்களின எணணிககை பெருமளவில அதிகரித்துள்ளது.

தொழிற்சாலைத் தொழிலாளர் (Industrial workers) எனபது பெரிய, சிறிய தொழில நிறுவனங்களில வேலை செய்கினற தொழிலாளர்களைக் குறிக்கும் இவர்கள தொழில திறமையற்ற தொழிலாளர்கள (Unskilled workers), ஓரளவு திறமைபெற்ற தொழிலாளாகள (Semiskilled workers), திறமை பெற்ற தொழிலாளர்கள என்ற மூனறு பிரிவுகளில அடங்குவாாகள். இவாகள தங்களிடம் உறபத்திச் சாதனங்கள இல்லாததால, அதனைச் சொநதமாக வைததிருபபவாகளிடம தங்களுடைய உழைபபுச் சக்தியைத் தருகினறனா.

**தன்மைகள:** இநதியாவிலுள்ள தொழிற்சாலைத் தொழிலாளர்களுள் பெருமபானமையோர் கிராமங்களிலிருந்து வநதவர்கள. இவர்கள படிபபறிவு இலலாதவாகள. மொழி, மதம், இனம, மற்றும் மாநிலங்கள ஆகியவற்றை அடிப்படையாகக் கொணடு பல

பிரிவுகளும், உட்பிரிவுகளும உருவாகியிருப்பதால இவர்களிடையே ஒற்றுமையிருப்பதிலலை.

மேலும், இநதியாவிலஉள்ள தொழிலாளா வகுப்பினை (Working Class) நானகு பெரும்பிரிவுகளாகப பிரிக்கலாம். முதல் பிரிவு, குடும்ப ஊதியத்தைவிட அதிகமாக ஊதியம் பெறுபவர்கள: இரணடாம் பிரிவு, குடுமப ஊதியத்திற்குச் சமமான ஊதியம் பெறுபவர்கள: மூனறாம் பிரிவு உழைப்புச் சக்தியின உற்பத்தி உடனடிச் செலவுக்குத் தேவையான ஊதியம பெறுபவர்கள. இவர்கள் தம் உழைபபுச் சக்தியினால், இனப பெருக்கத்திற்குத் தேவையான செலவுகளுக்காக வேறு உபரி வருமானம் பெறுவது அலலது செலவுகளைக் குறைப்பது அவசியமாகிறது நானகாம் பிரிவு, உழைப்புச் சக்தியின உற்பத்திககான உடனடிச் செலவுகளைக கூட மேற்கொளள இயலாத ஊதியம் பெறுபவர்கள. மேலே சொல்லபபட்ட குடும்ப ஊதியம் என்பது உழைப்புச் சக்தியின உறபததியையும்,இனப்பெருக்கத்திற்குத் தேவையானசெலவுகளையும் குறிக்கும். இநதியச் சூழ்நிலையில், 1982 -இல் நிலவிய விலையில் உரூ.1110க்கும் உரூ.1200க்குமிடையே குடும்ப ஊதியம் நிருணயிக்கப் பட்டுள்ளது. இதனை அடிப்படையாகக் கொணடு தொழிலாளா வகுப்பில் எந்தப் பிரிவு குடும்ப ஊதியத்தை விடக் குறைவான ஊதியம் பெறுகினறது என மதிப்பீடு செய்யப்படுகிறது. தொழில திறமை பெற்ற தொழிலாளர்களுக்கான குடும்ப ஊதியமானது உரூ. 1440 என நிருணயிக்கப் பட்டுளளது.

பல்வேறுபட்ட தொழிற்சாலைகளிலும், மாறுபட்ட உரிமையாளர் நிறுவனங்களிலும், தொழிலாளர்களுக்குத தரப்பட்ட ஊதிய விகிதங்களில் 1950 ஆம் ஆண்டு வரை பெருமளவுமாற்றஙகள் இல்லை. அதன் பின்னர் ஊதிய விகிதங்கள பெருமளவு மாறுபட்டனவாக உளளன. மிகச்சிறு பகுதியினரே குடும்ப ஊதியத்தை விட அதிகமாக அல்லது சமமாக ஊதியம பெறுகின்றனர். பெரும்பானமையினர் குடும்ப ஊதியததைப் பெறுவதில்லை. பழமையான தொழில் துறைகளான பருத்தி, நெசவு, சணல், கரும்பு, காகித ஆலைகளில் உள்ள நிரந்தரத் தொழிலாளர்களும்,தேயிலைத தோட்டங்களில் உளள நிரந்தரத் தொழிலாளர்களும் இதில் அடங்குவர். அவர்கள 1983 இல பெறற ஊதியம் ஒரு நாளுக்கு உரூ 10.45 ஆகும். ஊதியமறற ஓய்வு நாளகளை விட்டுக் கணக்கிடும்பொழுது ஒரு மாதத்திற்கு உரூ271 ஆகும். தோட்டத் தொழிலாளர்களுக்குத்தரப்படும் ஏனைய வசதிகளைக் கணக்கிட்டால் சராசரியாக மாத ஊதியம் உரூ 320-உம் உச்ச அளவு இலை பறிக்கும் காலத்தில் உரூ500-உம் ஆகும். இந்நிலையில் முழுநேர ஊதியம் பெறுபவர் இருவர் ஒருகுடும்பத்தில் இருந்தாலுமே அக் குடும்பததிற்குப் போதுமான ஊதியம் கிடைப்பதில்லை.

தொழிலாளர்கள் பெறும் சராசரி மாதஊதியங்களை அடிப்படையாக வைத்துத் தொழில் நிறுவனங்களை வரிசைப்படுத்துங்கால், இந்தியாவிலேயே முதன்மையான ஊதியம் தரும் நிறுவனம் கல்லெண்ணெய் இரசாயனத் தொழிறசாலை(உரூ1913). மருந்துப் பொருள்கள தயாரிக்கும் தொழிற்சாலை இரணடாம் இடத்தையும் (உரூ1583), எஃகுத் தொழிறசாலை நான்காம் இடத்தையும (உரூ.1390), பொறியியல் தொழிற்சாலை ஏழாம இடததையும் (உரூ. 1292), கல்லெண்ணெய்த் தொழிற்சாலை எட்டாம் இடத்தையும் (உரூ.1072) பெறுகின்றன.

குடும்ப ஊதியத்தைவிடக குறைவாக ஊதியம பெறுபவர் தஙகள வருமானததைப் பெருக்க ஆண்களோடு பெணகளும் வேலையில் சேருகினறனர், அல்லது வருமானத்தை நிறைவுபடுதத வேளாண்மைத் தொழில், கோழி வளாப்பு, மாடு வளர்ப்பு மூலம் பால் உற்பத்தி ஆகியவறறில் ஈடுபடுகினறனர். சில சமயஙகளில் ஆணகள் தங்கள் மனைவி, குழந்தைகளைக் கிராமத்திலேயே விட்டுவிட்டுத தொழில மையத்திறகு இடம் பெயர்ந்து செலகின்றனர். ஓயவு நாளகளில மட்டும் கிராமததிறகுச் செனறு வருகின்றனர்.

முனனேற்றமடைந்த நாடுகளில் உள்ள தொழிலாளர்களை விட இந்தியத தொழிலாளர்கள திறமை குறைந்தவர்களாக இருக்கிறாரகள. அதறகு முக்கிய காரணஙகள: இந்தியாவில நிலவும் தட்ப வெப்ப நிலையானது கடின உழைப்புக்கு ஏறறதாக இல்லாமையாகும். ஏழ்மையான உணவின் காரணமாக இவர்களுடைய தேகக்கட்டு கடினமான வேலைககுப் பொருந்துவதாக இல்லை. மேலும், இவர்களுடைய அறியாமை, படிப்பறிவு இன்மை காரணமாகச் செயயும் வேலையில் திறனில்லை. தொழிறசாலைகளில நிறுவப்பட்டுளள இயந்திரசாதனஙகளும, கருவிகளும் தரங் குறைநதனவாக இருப்பதாலும், இந்தியத் தொழிற்சாலைத் தொழிலாளாகளின் திறன் குறைவாக உளளது இவற்றின காரணமாக இவர்களுக்குத தரப்படும்ஊதியமும் குறைவாக உளளது. எனவே, இவர்களின வாழ்க்கைத் தரம் குறைநததாகவும், தங்கியிருககும் வீட்டு நிலைமை கேடானதாகவும் இருக்கினறன.

**தொழிற் சங்கங்கள்:** தொழிலாளாகளின திறன் குறைவாக உளளதால ஊதியம் குறைவாக உளளதா ஊதியம குறைவாக உளளதால் திறனகுறைவாக உளளதா என்பது விவாதத்திறகுரிய வினாவாகும். இந்தியாவைப் பொறுதத மட்டில வெளிப்படை

யாகத் தோன்றும் நிலை என்னவென்றால், தொழிற் சாலைத் தொழிலாளர்களின் பண வருவாய் அதிகரித்துக் கொண்டு சென்றாலும், உண்மை வருவாய் குறைந்து கொண்டே செல்கிறது. தொழிறசாலைத தொழிலாளர்களின சராசரி மாத வருவாய் 1964-இல் உரூ 145, 1968 இல் உரூ.204, 1971 இல் உரூ.238. 1981 இல் உரூ. 342,1984 இல் உரூ. 381 என அதிகரித்துள்ளது. நுகர்வோர் பண்டங்களின் விலையும் வேகமாக அதிகரித்துக் கொண்டு செல்வதால், உண்மை வருவாய் அதாவது தொழிலாளர் தங்களது பண வருவாய் மூலம் வாங்க முடிகின்ற பண்டங்கள், பணிகளின் அளவு குறைந்து செல்கினறது. மேலும், 1961 உடன் ஒப்பிட்டுப பார்க்கும் பொழுது பணடங்களின் விலை 1984-இல் நான்கு மடங்காக அதிகரித்துள்ளது. ஆனால். தொழிலாளர்களின ஊதியமோ 2½ மடஙகு தான் அதிகரித்துள்ளது

தொழிற்சாலைத் தொழிலாளர்களின் குறைந்த ஊதியத்தை அதிகப் படுத்தவும், கடினமான வேலைச் சூழ்நிலை காரணமாக இவர்களின் நலனைப் பாதுகாக்கவும், அதிகரிக்கவும் தொழிற் சங்கங்கள் எனற தனனிச்சையான அமைப்புகள் (Voluntary Organisations) ஏறபடுத்தப்பட்டன. தொழிலாளர்களின் நலன் கருதிக் காங்கிரசுக கட்சி 1947-இல் இந்தியத் தேசிய தொழிற் சங்கக் காங்கிரசைத் (INTUC) தொடங்கியது. பொதுவுடைமைக் கட்சி அகில இந்திய தொழிற் சஙகக் காங்கிரசைத (AITUC) தொடங்கியது. அத்துடன் இநதியத் தொழிற்சங்கக் காஙகிரசு (CITU) என்ற அமைப்பையும் உருவாக்கியது. இவவாறாக 1951-இல்4623 ஆக இருந்த பதிவு செயயப்பட்ட தொழிறசஙகங்களின எணணிக்கை 1978-இல 32207 ஆகஉயர்ந்துள்ளது. அங்கத்தினர்களின் எண்ணிக்கையும் 30 இலட்சத்திலிருந்து 60 இலட்சமாக அதிகமாகியுள்ளது. போராட்டஙகள் சங்கிலித தொடராக உருவாயின அவற்றின் எணணிக்கை 1010-இலிருந்து 2162ஆக 1951-இலிருந்து1982-வரை உயர்ந்துளளது.

இவ்வாறாகத தொழிற்சங்கஙகளின பஙகு அதிகரித்த பொழுதிலும், தொழிலாளர்களின வேண்டுகோள்கள் நிறைவேறுவது, வேலை வாங்குபவருக்கும் வேலை செய்பவர்களுக்குமிடையே நடக்கும் பேரத்தின் அளவைச் சார்நதுள்ளது. அத்துடன் அரசியல் குறுக்கீடுகளின காரணமாகத் தொழிற் சங்கஙகளின பங்கு தொழிலாளர்களின நலனைப பெருமளவு அதிகரிப்பதாக அமையவில்லை. எனவே, அரசு குறைந்த அளவு ஊதிய வரமபை நிருணயித்துள்ளது. திறமையற்ற தொழிற்சாலைத் தொழிலாளாகளுக்கு (Unskilled labour) நாள வருமானம் உரூ.7.50 முதல் உரூ 11.25 வரை எனவும், சுரங்கத் தொழிலாளர்களுக்கு உரூ. 11.75 எனவும் நிருணயிக்கப் பட்டுளளது. அத்துடன் குறைந்த அளவு ஊக்கத்தொகை ஆண்டு ஊதியத்தில் 4 சதவீதமெனவும், அதிக அளவு 20 சதவீதமெனவும் வரையறுககப்பட்டுள்ளது.

இவற்றுடன் தொழிலாளா நலனை மேம்படுத்த வைப்பு நிதி, குடும்பஒய்வூதியத் திட்டம் ஆகியவற்றைத் தொடங்கியுளளது. பூதலிஙகத்தின் தலைமையிலான குழு குறைந்த அளவு மாத ஊதியமாக 1978—இன் அகவிலைப்படி உரூ. 150-ஐ நிருணயித்துளளது. அத்துடன வேலை செய்பவருக்குத் தொழில் நிருவாகக் குழுவில் இடம், பங்குத் தொகையில உரிமை ஆகியனவும வலியுறுத்தப்பட்டுள்ளன. இவற்றின வாயிலாகத் தொழிலாளரின் திறனை மேமபடுத்தவும், உற்பத்தியை அதிகப்படுத்தவும், நாட்டின தொழில் வளர்ச்சி வீதத்தை உயர்த்தவும் முடியும்.

மா.தே.

**துணை நூல்கள்**

Dev Nathan, Structure of working Class in India, Economic and Political weekly, May 2, 1987.

Sharma, B R , The Indian Industrial worker-Some Myths and Realities, Economic and Political Weekly, May 30, 1970.

**தொழிற்சாலை முறை:** விசையால இயங்கும் இயந்திரங்களைக் கொண்டு குறுகிய காலத்தில் மிகுதியான அளவு பொருள்களை உறபத்தி செய்கினற முறை தொழிற்சாலை முறை (Factory System எனப்படும் இது தொழில் வளர்ச்சி நிலைகளுள் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். நாடு தொழில்மயமாவதற்கு (Industrialisation)இம்முறையே அடிகோலியது எனலாம். வேலைப் பகிர்வும் (Division of Labour), இயந்திரப பயனபாடு மிகுந்திருப்பதும் இம்முறையின தனி இயலபுகளாகும்.

ஒரு நாட்டின சமூக, பொருளாதார வளர்சசி வேட்டை நிலை, மேய்ச்சல் நிலை, வேளாண்மை நிலை, வணிக நிலை முதலியவற்றைத் தாண்டி இறுதியாகத் தொழில் நிலையை அடைந்துள்ளது. இத் தொழில் நிலையைப் பொறுததே 'ஒரு நாட்டின் சமூக, பொருளாதார வளர்ச்சிநிலைஅறியப்படுகிறது.

வேட்டை நிலையில அம்பு, ஈட்டி போன்ற கருவிகளை மனிதன் தானே அமைத்துக் கொண்டான. பின்னாப் பயிர்த் தொழில் செய்வதற்குரிய கருவிகளைச் செய்யத் தொடங்கினான். வேளாண்மை நிலையின்போது மக்கள உற்பத்திக்கருவிகளைச் செய்ததோடு தங்களுக்குத் தேவையான பொருள்களையும் குடிசைத் தொழில்கள மூலம் தாங்களே செய்துகொண்டனர். பின்னர்த் தொழில் வளர்சசி

யடைந்து பல்வேறு நிலைகளைக் கடந்து இன்றைய நிலையை அடைந்துள்ளது. தொழிலின் அமைப்பு, நிருவாகம், இயல்பு போன்றவை காலத்திற்குக் காலம் மாறி வளர்ச்சியடைந்துள்ளன இத் தொழில் வளர்ச்சி நிலைகளைப் பினவருமாறு பிரிக்கலாம். அவை 1) கைத்தொழில் நிலை(Handi-Craft Stage),2)தொழில் கூட்டுறவுக் குழு நிலை(Guild Stage), 3)இல்லத் தொழில் முறை (Domestic System), 4) தொழிற் சாலை முறை (Factory System),5) தொழில்மயமா தல் (Industrialisation) எனபனவாம்

போக்குவரத்து வளர்ச்சி கி.பி. 18-ஆம் நூற் றாணடில ஏற்பட்ட பின்னர் நாட்டில் அஙகாடிகள விரிவடையத் தொடஙகின. மக்கள தொகையும் வருவாயும் கூடியமையால் பொருள்களின் தேவை மிகுந்தது. பெருகிவரும் தேவையைப் பழம முறை களைக் கொண்டு நிறைவு செய்ய இயலவில்லை. எனவே, உற்பத்தியைப் பெருக்குவதற்குப் பல புதிய கருவிகள் தோன்றத் தொடஙகின. மனித உழைப்பைச் சேமித்துக் குறுகிய கால அளவில் மிகுந்த அளவு உற் பத்தி செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது. விசை யால் இயஙகும் இயந்திரங்கள் தேவையின் காரண மாகக் கண்டுபிடிக்கப்பட்டன அனைத்து நிலைகளி லும் தொழில் வளாசியுறத் தொடங்கிற்று. பின்னர் இவ்வாறான தொழில் வளர்ச்சி இங்கிலாந்தைத் தொடர்ந்து பிற நாடுகளிலும் ஏறபட்டது. அனைத்து நாடுகளிலும் தொழிற்சாலைகள் பெருகின.

தொழிற்சாலை முறையில் தொழிலாளர்கள ஒரே கூரையின்கீழ வேலை பார்த்தனர். நேரடியான மேற்பார்வையில் எல்லா உற்பத்தி நிலைகளும் நடைபெற்றன. இங்கு முதலீடு பெருமளவு செய்யப் பட்டது. இதன் காரணமாக முதலாளிகள் செல் வாக்குப் பெற்றுத் திகழ்ந்தனர். தொழிலாளாகள அவர்களிடம் கூலி பெறும் நிலையில இருந்தனர். கூலியைப் பெற்றுக்கொணடு உழைப்பை வழங்கினர். உற்பத்தி பெரிய அளவில மேற்கொள்ளப்பட்டது. வேலைப் பகுப்பு முறை (Division of Labour) ஏற் பட்டமையால உற்பத்தி பெருகியது. பொருளகளின தரமும் கூடியது. மககள் குறைந்த விலையில், பொருள்களைப் பெற்றனர். நீராவி, பாறை எண் ணெய் (Petrol), மின்சாரம் போன்ற புதிய சக்திகள் பயனபடுத்தப்பட்டன. அதன்காரணமாக உற்பத்தி பெருகி மககளின் வாழககைத்தரம் உயர்ந்தது.

ஆனால், தொழிற்சாலை முறையால சமூக அமைப்பில் அடிப்படை மாறுதல்கள ஏறபட்டன. இம்முறை தோன்றுவதற்கு முனனர் முதலாளி, தொழிலாளி எனற வேறுபாடிலலை. தொழிலாளியே தொழிலுககு உரியவனாகவும் இருந்தான். ஆனால் தொழிற்சாலை முறை தொடங்கியதும் தொழிலாளி களால் தொழிற்சாலைகளைத் தொடங்க முடிய வில்லை. இயந்திரம் முதலியன வாஙகுவதறகு மிகுந்த முதலீடு தேவை. எனவே, பணவசதி படைத்தவர்கள் தொழிற்சாலைகளைத் தொடங்கினர். தொழிலாளி கள் அவற்றில் கூலியாட்களாக வேலை செய்தனர். இவ்வாறாக முதலாளி, தொழிலாளி என்ற இரு வருக்கங்கள ஏற்பட்டன.

மேலும், குடும்பச் சூழ்நிலைகள் சீர்கெடத் தொடங்கின குடும்பத் தொழில், கைத்தொழில் முதலியன நலிவுற்றன. துணைத் தொழில்கள் மறைநதன. முதலின் (Capital) ஆதிக்கம் கூடி யது. தொழிலாளர்களுக்கு உழைப்புக்கேற்ற ஊதி யம் கிடைக்கவில்லை. எனவே, தொழிலாளர் கள அமைதியிழந்தனர். வகுப்புப் போராட்டம் தொடஙகிற்று. தொடக்க காலத்தில தொழிறசாலை கள் உடல்நலத்தைப் பாதிப்பனவாகவும் தொழி லாளர்களுக்குத் தேவையான வசதியில்லாதனவாக வும் இருந்தன. சிறுவர்களும் சிறுமியரும் தொழிற் சாலைகளில் வேலைசெயதனர். இவ்வாறு தொழில் சாலை முறை பல நன்மைகளோடு சில சமூக, பொருளா தார, அரசியல் தீமைகளையும் கொணடுவந்தது.

ஆனால், இப்பொழுது இக்குறைபாடுகள பல புதிய முயறசிகளால சிறிது சிறிதாகக் களையப்பட்டு வருகின்றன. தொழிறசாலைக் கட்டடத்தைச் சுகாதார வசதியோடு கட்டுமாறு வற்புறுத்தவும், தொழிலாளி களுக்குக் குறைந்த வேலை நேரம், ஓய்வு, பொழுது போக்கு வசதி முதலியன அளிக்கவும் சட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன விபத்துகளால ஏறபடும் இழப்பு களை ஈடுசெய்ய ஈடுறுதிப் பாதுகாப்புகளும் உள் ளன. தொழிலாளர்கள் கூட்டுறவு முறையில் தங்க ளுக்குத் தேவையான பொருளகளைப் பெறவும், வீடுகள கட்டிக்கொள்ளவும வசதிகள இருககின்றன. தொழிலாளர்கள தஙகள உரிமைகளைக், காப்பாற றிக் கொள்ளத் தொழிறசங்கங்கள் உளளன.

**தொழிற்சாலை முறையின் சிறப்பியல்புகள்:** 1) இயங்கும் சக்தி, தேவையான மூலப்பொருளகள், விற்பனைச் சந்தை போனற வசதி வாய்ப்புகள எளி தில கிடைக்கின்ற இடஙகளிலேயே பெரிய தொழிற சாலைகள் பொதுவாக அமையும். அதாவது இலாபம் கிடைப்பதறகும் எளிதில் தொழில நடப்பதறகும ஏறற இடங்களிலேயே தொழிறசாலைகள் அமையும். 2) இத் தொழிறசாலைகளில வீணாக, மனிதசக்தியை யும் விலங்குகளின சக்தியையும் பயனபடுததுவது தவிர்க் கப்பட்டு இயநதிர சக்தி பயனபடுத்தப்படுகிறது. நாட்டில நீராவி இயநதிரத்தின பயனை மனிதன அறிந்தபின்னர்த் தொழிற்சாலைகள தமவிருப்பப்படி செயற்படத தொடஙகின. நூற்பு இயநதிரங்கள்

கண்டுபிடிக்கப்பட்ட பின்னர் இயந்திர சக்தியைப் பயன் படுத்துவதில் தொடர்ச்சியாக நல்ல முன்னேற்றம் ஏற்படத் தொடங்கியது. 3) தொழிற்சாலை முத லாளிகளுக்கு இலாபம் கிடைக்கவில்லையெனில் தொழிற்சாலை முறை இருக்காது. ஆள், பணம், மூலப் பொருள்கள், இயந்திரங்கள் முதலியன தொழிற்சாலை இயங்குவதற்கான முக்கிய தேவைகளாகும். பூ.த.

**துணை நூல்:**

**Gisbert, Pascual.,** Fundamentals of Industrial Sociology, Tata Mc-Graw Hill Publishing Co., Ltd., New Delhi, 1972.

***தொழிற்சாலை விபத்துகள்:*** விபத்து என்பது ஒரு செயல் முற்றுப்பெறுவதைத் தடைசெய்கின்ற எதிர்பாராத நிகழ்ச்சியைக் குறிப்பதாகும். என்ரிசு (Heinrich) என்பவரின் கூற்றுப்படி விபத்து என்பது திட்டமிடப்படாத, கட்டுப்படுத்தமுடியாத நிகழ்ச்சியாகும். இத்தகைய நிகழ்ச்சி தொழிற்சாலையில் நிகழும்போது அது தொழிற்சாலை விபத்தாகிறது. அதன் விளைவாக எவருக்கேனும் காயமோ, கருவிகள், இயந்திரங்கள், கட்டடங்கள் போன்ற சொத்துகளுக்குச் சேதமோ ஏற்படலாம். இவ்விபத்துகளைப் பற்றி அறிவியல், தொழில் நுணுக்க இதழ்கள், கருத்தரங்குகள் ஆகியவற்றில் விவாதங்கள் மேற்கொள்ளப்பட்டன. குறிப்பாக இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தொழிற்சாலை விபத்துகளைப் பற்றிய படிப்பில் நாட்டமேற்பட்டது.

விபத்துகள் நடைபெறத் தொழில் நுணுக்கங்கள் மட்டுமன்றி மனிதனும் காரணமாக இருக்கலாம் என்பதால், பொறியியல் வல்லுநர்கள் மட்டுமன்றி உளவியல், சமூகவியல் வல்லுநர்களும் இத்துறையில் ஆர்வங் கொண்டுள்ளனர். அதனுடன் விபத்துகள் மூலம் பொருள் உற்பத்தியில் இழப்பு ஏற்படுவதால் பொருளியல் நிபுணர்களும் இதனைப் பற்றிய ஆய்வினை மேற்கொண்டுள்ளனர்.

**விபத்துகளின் வகைகள்:** விபத்துகளை விபத்தின் தன்மை, விபத்துக்கான காரணம், விபத்தின் விளைவுகள் என்று மூன்றுவிதமான அடிப்படைகளில் பிரிக்கலாம். விபத்தின் தன்மையின் அடிப்படையில் அவை தொழிலாளருக்கு ஊறு விளைவிப்பனவாகவோ, தொழிற்சாலைக் கருவிகளுக்குத் தீங்கு விளைவிப்பனவாகவோ இருக்கலாம். விபத்தின் காரணங்களின் அடிப்படையில் அவை பௌதிக, தொழில் நுணுக்க அல்லது உளவியல் காரணங்களாக இருக்கலாம். விளைவின் அடிப்படையில் அவை நிலைத்த சேதம் அல்லது இடைக்காலச் சேதத்தை உருவாக்கியனவாகவும் இருக்கலாம்.

**விபத்துகளின் காரணங்கள்:** இக்காலத்தில் தொழிற்சாலை விபத்துகள் பெருமளவில் அதிகமாகியுள்ளன. காரணம் தொழில் மயமாதலுக்குப் பின் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை பெருமளவில் அதிகரித்துள்ளது. அதனுடன் தொழிற்சாலைகளில் தொழிலாளர்களைவிட அதிக அளவில் இயந்திர சாதனங்களும், மின்னணு, இரசாயன சாதனங்களும் பயன்படுத்தப்படுகின்றன. இந்நிலையில் இயந்திர சாதனங்கள் புரிந்துகொள்ள, கையாளக் கடினமான செயல்முறையைக் கொண்டனவாக உள்ளமையாலும், தேவையின் காரணமாக மோசமான நிலையிலுள்ள இயந்திரங்கள் பயன்படுத்தப்படுவதாலும் விபத்துகள் உருவாக வாய்ப்புகள் ஏற்படுகின்றன.

**தொழிலாளர் சம்பந்தப்பட்ட காரணங்கள்:** உழைப்பாளரின் தேசிய செயற்குழுவின் கூற்றுப்படி தொழிலாளர்களின் சொந்தக் காரணங்கள் (Personal factors) – கவனமின்மை, அறியாமை, போதுமான அறிவுத் திறனின்மை, சரியான மேற்பார்வையின்மை ஆகியன விபத்துகள் ஏற்படக் காரணமாக அமைகின்றன. தொழிலாளர்களின் சொந்தச் சிக்கலினால் மனவெழுச்சி ஏற்படுவதும், மனக்கவலையின் காரணமாக மேற்கொள்ளப்படுகின்ற கவனமற்ற நடவடிக்கைகளும் விபத்துகளுக்குக் காரணங்களாகும். வேலைச் சூழ்நிலையும் வேலை முறையும், பயன்படுத்தும் கருவிகளும் மாற்றமில்லாமலிருக்கும் போது தொழில் அனுபவம் அதிகமானால் விபத்து விகிதம் குறைவது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. தொழிலாளரின் வயது அதிகமாகும் போது விபத்து விகிதம் குறைவதும் ஆராய்ச்சியில் உறுதியாக்கப்பட்டுள்ளது. மேலும் உடல் நலமின்மையின் விளைவாக விபத்து விகிதம் அதிகரிக்கலாம்.

**தொழில் நுணுக்கக் காரணங்கள்.** தொழிற்சாலையை விரிவுபடுத்துதல், புதுமைப்படுத்துதல் போன்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளும்போது புதிய தொழில் நுணுக்கத்தை அடிப்படையாகக் கொண்டு புதிய தொழிற்சாலைகள் தொடங்கப்படுவதால், வேலையிலுள்ள தொழிலாளர்களுக்குப் போதிய படிப்பறிவின்மையின் விளைவாகவும் விபத்துகள் உருவாகலாம். மேலும், பழுதடைந்த இயந்திரங்கள், இயந்திரங்களை மொத்தமாக ஒரு அறையில் வைத்திருத்தல், அபாயகரமான இயந்திரங்களுக்கு வேலியிடாமல் இருத்தல் போன்றவையும் விபத்துகளை ஏற்படுத்துகின்றன.

கடுமையான காலநிலை, போதிய அளவு வெளிச்சமின்மை, மோசமான காற்றோட்டம் ஆகியவற்றால் தொழிலாளர்களுக்கு வசதிக் குறைவும், களைப்பும்

தோன்றி விபத்துகள் ஏற்படுகின்றன. உற்பத்தித் திறனை அதிகப்படுத்த வேண்டுமென்பதற்காக வேலையை மிக வேகமாகச் செய்தால் விபத்துகள் உருவாகும் வாய்ப்புகள் அதிகமாகின்றன.

தொழிலாளர் நிருவாகத்தினரிடையே பாது காப்பு உணர்வு குறைவாக இருப்பின பாதுகாப்பு விதிகள் பின்பற்றப்படாமல், முதல உதவிச் சாதனங் களும் பாதுகாக்கப்படாமல இருக்கும். இவற்றோடு விபத்துகளின் காரணமாக நிதி நிலைமையில் ஏற்படும் கேடுகளைச் சரியாகத் தெரிந்துகொள்ளாதிருப்பதும் விபத்துகள் அதிகரிக்கக் காரணமாகிறது. மத்திய பிரதேச மாநிலத்தில் 1984-இல் போபால் என்னுமிடத் தில் உள்ள ஒரு பெரிய தொழிற் சாலையில் நச்சு வாயுக் கசிவு ஏற்பட்டதால் பெருமளவு பொருள் இழப்பும் உயிர் இழப்பும் ஏற்பட்டன.

எனவே, தொழில் விபத்துகளும், பாதுகாப்பற்ற நடவடிக்கைகளும்வேலை நிலையின் விளைவுகளாகவே அமைகின்றன.

**விபத்துகளின் செலவுகள்:** தொழிற்சாலை விபத் துகளின் காரணமாக ஏற்படும் சேதங்கள் அவற்றின் செலவுகள் எனப்படுகின்றன. இந்தச் செலவுகள் நேரடியான, மறைமுகமான செலவுகள் எனவும்; கண் ணுக்குத் தெரிந்த, தெரியாத செலவுகள் எனவும்; பணம், பணமில்லாத செலவுகள் எனவும் பலவகைப் படும். கண்ணுக்குத் தெரியாத செலவுகளை மதிப்பிடு வதோ அளவிடுவதோ முடியாததாகும். எனினும், எந்த ஒரு நாடும் விபத்துகளினால் ஏற்படுகின்ற சமூக, பொருட் சேதங்களுக்கு ஏதாவதொரு வடிவில் இழப்பை ஈடுகட்ட வேண்டியுள்ளது.

விபத்துகள் சிறிய அளவில, இயந்திரத்தில் சேதம் ஏற்படுத்தும்போது அதனைச் செப்பனிடப் பணம் செல விடப்படுகிறது. அவ்வாறின்றித் தொழிலாளருக்கு வேலை செய்யமுடியாத அளவு காயத்தை ஏற்படுத் தும்போது வேலைநாட்களின் இழப்பினால் உற்பத்தி கேடுறுகிறது. மேலும், பாதுகாப்பற்ற, நலமற்ற சூழ் நிலை காரணமாக விபத்துகள் ஏற்பட்டால தொழி லாளர்கள் முழுத் திறமையுடன் வேலைசெய்ய முடி யாததோடு, வேலையில் மன நிறைவும் பெறமுடி யாது என்பதாலும் உற்பத்தித் திறன் கேடுறும் நிலையான ஊனமோ, நாசமூட்டும் காயங்களோ (Fatal injuries) ஏற்பட்டால் காயம்பட்டவர்களின் குடும்பத்திலுள்ள அங்கத்தினர்கள் வெறுப்பு, கோபம், துன்பநிலை முதலியவற்றை அடைகின்றனர். சமூக நலப் பாதுகாப்புத் திட்டங்கள் மூலமாகவோ, நன் கொடை நிறுவனங்கள் மூலமாகவோ ஈட்டுத்தொகை கொடுப்பதனால் அந்தத் தொழிற்சாலைக்கும் நாட் டிற்கும் இழப்பு ஏற்படுகிறது. எனவே, விபத்துகளின் போக்கினை அறிந்து அவற்றைக் கட்டுப்படுத்துவது தேவையாகிறது.

நேரடிச் செலவுகளைவிட நான்கு மடங்காக மறைமுகச் செலவுகள் உள்ளன. எயின்ரிச்சு என்ப வரின் கூற்றுப்படி மறைமுகச் செலவுகள் பின்வரும் காரணங்களால் உருவாகின்றன. அவை காயம்பட்ட தொழிலாளி இழந்த வேலைநேரம், காயமபட்டவ ருக்கு உதவி செய்யவந்த பிற தொழிலாளர்கள் இழந்த வேலைநேரம், இயந்திரங்களுக்கு ஏற்பட்ட சேதம், காயம்பட்டவரின் நலம கருதித் தரப்பட்ட ஈட்டுத் தொகை, இலாபத்தில் ஏற்பட்ட இழப்பு முதலியன.

**விபத்துகளின் வளர்ச்சி:** தொழில் முன்னேற்ற மடைந்த நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது இந்தியாவில் அதிக அளவில் தொழிற்சாலை விபத்து கள் ஏற்படுகின்றன ஆண்டுதோறும் அவை அதிகரித் துக்கொண்டே செல்கின்றன. இந்தியாவில் 1000 தொழிலாளர்களுக்கு உண்டாகும் விபத்து விகிதம 60.2; இங்கிலாந்தில் 34.8; அமெரிக்காவில் 24.7. இதற்கு உற்பத்தி முறையில் பெருமளவில் பயன்படுத்தப்படும் மனித சக்தியும், தொழிலாளர்களிடையே போதிய படிப்பறிவின்மையும் காரணங்களாகக் கருதப்படுகின் றன.

ஒவ்வோர் ஆண்டும் இலட்சக்கணக்கான தொழி லாளர்கள் விபத்துகளினால் துன்புறுகின்றனர். உயி ருக்கு இடர்விளைவிக்கும் காயங்கள், சாதா ரணக் காயங்கள் (fatal and non-fatal) என விபத்து கள் இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

கடந்த இருபதாண்டுக் காலத்தில் விபத்துகள் பெருமளவில அதிகரித்துள்ளன. இயந்திரக் கோளாறு களினால 30 விழுக்காடு விபத்துகளும், கருவிகளைத் தவறாகக் கையாள்வதனால் 10 விழுக்காடு விபத்து களும ஏற்பட்டிருக்கின்றன. மொத்த விபத்துகளில் 10 விழுக்காடு விபத்துகள் தமிழநாட்டில் நடைபெற் றுள்ளன. தமிழநாடு தொழில் முன்னேற்றம் பெற்ற மாநிலமாக இருப்பது இதற்கான இன்றியமையாத காரணம்.

**விபத்துகளைத் தவிர்க்கும் முறைகள்:** எயின்ரிச்சு சேகரித்த புள்ளிவிவரங்களின்படி 98 விழுக்காடு விபத்துகள் பாதுகாப்பற்ற செயல்களாலும் பாதுகாப் பற்ற இயந்திரங்களினாலும் உருவாகின்றன. எனவே, விபத்துகளைத் தவிர்க்கவும் குறைக்கவும் பின்வரும் நடவடிக்கைகள் பரிந்துரைக்கப்பட்டுள்ளன.

**பாதுகாப்புக் குழு.** எல்லாத் தொழிற்சாலை களிலும் பாதுகாப்புக்குழுக்கள் தொடங்கப்பட்டுப் பாதுகாப்பு மேற்பார்வையாளர் நியமிக்கப்பட வேண்டும். தொழிற்சாலைச் சட்டத்தின்படி இயந

திரங்களின இடர்மிகுந்த பகுதிகள் வேலியிடப்பட வேண்டும். இடரான பணிகளில் பணிபுரியும்போது மிகுதியான பாதுகாப்பு முறைகளைக் கையாள வேண்டும். தீ, வாயுக்கசிவு, ஊறு விளைக்கும் புகை போன்றவற்றிற்கு முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். தொழிற்சாலையின கட்டுமானம் உறுதியானதாக இருத்தல் அவசியம். தொழிற்சாலையில பாதுகாப்பு நிருவாகம பற்றிய தேசிய கருத்தரங்கில 1984-இல் தொழிற் சங்கங்களின் பணி வலியுறுத்தப்பட்டது. மேலும் உலகத் தொழிலாளர் அமைப்பும் விபத்துகளைத் தடுக்கப் பயிற்சி தருதல, தொழிலாளர்கள், நிருவாகி ஆகியோருக்குப் பாதுகாப்புப் பற்றிய கலவியைத் தருதல்போன்றவற்றைப் பரிந்துரை செய்துள்ளது. இவவாறான விபத்துத் தடுப்பு நடவடிக்கைகள் மக்கள நலனைப் பெருக்கி நாட்டுவளத்தை மேம்படுத்தும.

மா.தே.

**துணை நூல்கள்:**

**Boley, J.W.**, A guide to Effective Indusrtial Safety, Gulf Pub. Company, Taxas, 1977.

**Heinrich, H.W.**, Industrial Accident Prevention, Mc-graw Hill Book Company, Delhi, 1959.

**Saxena, R.C.**, Labour Problems and Social Welfare, Gupta Morning Press, Meerut, 1974.

**Vernon, H.M.**, Accidents and their Preventions, Cambridge University Press. London, 1936.

*தொழிற் புரட்சி:* தொழிலமைப்பு, தொழில உற்பத்தி முறை ஆகியவற்றில் பெரும் மாறுதல்களைப் பெற்று உலகில் முதன்முதலாகத் தொழில்மயமான நாடு இங்கிலாந்துதான. இங்கு கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் கைத்தொழில் முறைகளில் ஏற்பட்ட மாறுதல் தொழிற்புரட்சி(Industrial Revolution) எனப்படுகிறது. தொழிற்புரட்சி என்ற சொல முதனமுதலாக 'நிலக்கரிச் சிக்கல' என்னும் நூலில் சூவான்சு என்பவரால் பயன்படுத்தப்பட்டது. எனினும், இதனை அர்னால்டு தாயின்பீ (Arnold Toynbee) என்ற அறிஞரே பெரிதும் அறிமுகப்படுத்தினார். புரட்சி என்ற சொல் திடீரெனத் தோன்றி வெடிக்கும் கருத்தில எழுந்ததன்று. தொழிற்புரட்சி மெல்ல மெலல ஏற்பட்டபோதும் அது புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்தியதாலேயே அவ்வாறு சொல்லப்படுகிறது. இந்த மாறுதல திடீரென்றோ வலுக்கட்டாயமாகவோ ஏற்பட்டதன்று. எல்லாத் தொழில்களையும் ஒரே நேரத்திலோ ஒரே அளவுக்கோ பாதித்ததுமன்று. ஆனால், இது ஒரு மிகப்பெரிய மாறுதலாகும். இது கைத்தொழிலும் வாணிகமும் பலமடங்கு பெருகுவதற்கான மாறுதலாகும். எனவேதான இம் மாறுதல் 'புரட்சி' எனச் சொல்லப்படுகிறது.

தொழிற்புரட்சி முதனமுதலாக இங்கிலாந்தில் தொடங்கியது. அறிவியல அறிவு வளர்ச்சியின பயனாகப் புதியன பல கண்டறியப்பட்டன. அவை தொழில்துறையில் பயனபடுத்தப்பட்டன. இங்கிலாந்து தொழிலிலும் வாணிகத்திலும உலக அரங்கில் மிக உயர்வாக விளங்கியது. இங்கிலாந்து உலகத்தின தொழிற்சாலையாக விளங்கியது. இங்கிலாந்திற்கு அதன் குடியேற்ற நாடுகள் பக்கபலமாகத் திகழ்ந்தன. அவற்றிலிருந்து, மூலப் பொருள்கள் கிடைத்தன. அந்நாடுகளே உற்பத்தியான பொருள்களுக்குச் சந்தையாகவும் விளங்கின.

தொழிற்புரட்சி நாளடைவில் பிரான்சு, செருமனி போன்ற பிற ஐரோப்பிய நாடுகளிலும் பரவியது. செருமனியில் கி.பி. 1871-இல் பேரரசு நிறுவப்பட்ட பின்னரே தொழிற்புரட்சி தொடங்கப்பட்டபோதிலும் அங்குத் தொழில்நுட்ப அறிவு விரைவில் வளர்ந்து, செருமனி இங்கிலாந்துடன் உலகச்சந்தையில் போட்டியிடத் தொடங்கியது. அமெரிக்காவில நாட்டை ஒன்றுபடுத்திய உள்நாட்டுப்போர் நடந்தபின்னர்த் தொழிற்புரட்சி தொடங்கிற்று. உருசியாவில் 1917-ஆம் ஆண்டிற்குப் பின்னர்த்தான தொழிற்புரட்சி தொடங்கிற்று. இந்தியா, சீனா போன்ற ஆசிய நாடுகளில் 20-ஆம் நூற்றாண்டில்தான் தொழிற்புரட்சி தொடங்கிற்று.

தொழிற்புரட்சியால் பலவகையான பொருள்கள் பெருமளவில் உற்பத்தி செய்யப்பட்டன. பலம் வாய்ந்த இயந்திரங்கள கண்டுபிடிக்கப்பட்டதும் தொழிலமைப்புகள வளர்ச்சியுற்றதும் இதற்குக் காரணமாக அமைந்தன. புரட்சி ஏற்படுவதற்கு முன்னர்க் கையால் அல்லது எளிய இயந்திரங்களினால் பொருள்கள உற்பத்தி செய்யப்பட்டு வந்தன. மேலும், பெருமளவில் மக்கள் கிராமப்புறங்களிலேயே பணிபுரிந்தனர். சிலர் மட்டுமே நகர்ப்புறங்களில் தொழிற் கூட்டுறவுக் கூடங்களில் பணிபுரிந்தனர். ஆனால், தொழிற்புரட்சி ஏற்பட்டபின்னர் வீடு, சிறிய பட்டறை ஆகியவற்றில் உற்பத்தி செய்வது அழிந்தது. கையால உற்பத்தி செய்வது விலக்கப்பட்டு இயந்திரத்தால் தொழிற்கூடங்களில் உற்பத்தி செய்யப்பட்டது. அந்த இயந்திரங்களை இயக்குவதற்குத் தொழிலாளர்கள் நியமிக்கப்பட்டனர்.

மிகுதியான முதலீடு செய்கின்ற தனியார்களுடன், நிதி நிறுவனங்களும் தொழில்மயமாதல் பெருகுவதற்குத் தேவைப்பட்டன. அதனால் வங்கிகளுக்கும்,

கடன் தருபவர்களுக்கும் முக்கியத்துவம் ஏற்பட்டது. முதல்முறையாக ஐரோப்பிய வரலாற்றில் பணம் படைத்த முதலாளிகள், உற்பத்தி செய்கின்ற அமைப்பு களைத் தங்கள் கைவசம் கொண்டுவந்தனர் நாட்டில பல சமூக, பொருளாதார, அரசியல் மாற்றங்கள் ஏற்படத் தொடங்கின.

**இங்கிலாந்தில் தொழிற்புரட்சி:** தொழிற்புரட்சி யின் முன்னோடி நாடாக இங்கிலாந்து திகழ்வதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவையாவன: 1) குறை வான மக்கள்தொகை இருந்ததால் உழைப்பைச் சேமிக்கும் இயந்திரங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன. வாணிகமும் பெருகிவந்தது. எனவே, இயந்திர சாதனங்கள் விரைந்து உற்பத்தி செய்யப்பட்டன. 2) இங்குச் சிறப்பான வெளிநாட்டு அங்காடிகள் இருந் தன. இங்கிலாந்தின் குடியேற்ற நாடுகள் வாணி கத்தைப் பெருக்குவதற்குப் பயன்பட்டன. 3) இங்குச் சிறந்த வங்கி முறை இருந்தது. பரவலான இந்த வங்கி முறை நிதிப் பற்றாக்குறையை நீக்கிறது. 4) வாணிகத்தில் ஈட்டிய இலாபம் தொழில் வளர்ச்சிக் குப் பயன்படுத்தப்பட்டது. வங்கி முறையும் சேமிப் பினைத் திரட்டித் தந்தது. 5) நிலக்கரி, இரும்பு போன்ற கனிவளங்கள் இங்குப் பெருமளவு கிடைத் தன. அதனால் பல்வேறு தொழில்கள் வளர்ந்தன. மேலும், அவை மிக அருகருகே கிடைத்தன. நிலக்கரியும் இரும்பும் இணைந்து பெற்றெடுத்த குழந்தையே தொழிற்புரட்சியாகும். 6) திரைகட லோடி வாணிகம் செய்ததால் விரிவான அங்கா டியை இங்கிலாந்து பெற்றிருந்தது. குடியேற்ற நாடுகள் மூலப்பொருள்களை அளித்ததோடு பெருகி வரும் அங்காடியாகவும் திகழ்ந்தன. இங்கிலாந்தில் புவியியல் அமைப்புக் கடல வாணிகத்திற்கு மிகவும் ஏற்றதாக அமைந்தது. மேலும், சிறந்த மாலுமிகள் சிறந்த கப்பல்களைச் செலுத்தி இங்கிலாந்தைக் கடல் ஆதிக்கமுள்ள நாடாகமாற்றினர் 7). போக்கு வரத்து வளர்ச்சி-சாலைகள், கால்வாய், புகைவண்டி என விரைவாக விரிவடைந்தது. 8) தலையிடாக் கொள்கை காரணமாகத் தனி மனிதர்கள் முயன்று முதலீடு செய்தனர். இங்கிலாந்தில இவ்வாறு தம் முயற்சியுடைய முதலீடு செய்வோர் நிறைந்திருந்தனர். மேலும், அரசு தொழிலின் மீது இருந்த கட்டுப்பாடு களை நீக்கிறது. 9) அரசியல் அமைதி காரணமாகவும நிலையான சூழ்நிலை காரணமாகவும் தனியார் கள் பயமின்றித் தொழில முயற்சிகளில் இறங்கினர். அரசியல் புரட்சிகள் ஏதும் தோன்றவில்லை. 10) மதச் சார்பற்ற நிலையின் காரணமாக வெளிநாட்டி னர் பலர் இங்கிலாந்திற்கு வந்து தொழில்களை வளர்த்தனர். ஊகுநோக்கள்(Huguenots)என்ற இனத் தவர் குடியேறிப் பட்டுத் தொழிலை வளர்த்தனர். 11) பல புதிய கண்டுபிடிப்புகள் தொழிற்புரட்சி ஏற் படத் துணைபுரிந்தன. போக்குவரத்துச் சாதனங் கள், வேதியியல் தொழில், நெசவுத்தொழில் போன்ற வற்றில் பலவகை இயந்திரங்கள் பயன்படுத்தப்பட் டன.

**மாற்றங்கள்.** தொழிற்புரட்சியால் இங்கிலாந்தில் மட்டுமன்றி, அதைத்தொடர்ந்து அனைத்து நாடு களிலும பின்வரும் நிலைகளில் பல மாறுதல்கள் ஏற்படத்தொடங்கின.

**1. இயங்கும் சக்தி:** நீராவி இயந்திரங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. எனவே, அனைத்துத் தொழிற் சாலைகளும் கி.பி 1871-ஆம் ஆண்டிற்குள் நீராவியின் இயக்கும் சக்தியைப் பயன்படுத்தத் தொடங்கிவிட் டன. முதன்முதலாக நியூ கோமன் (New Comen) என்ற அறிஞரும் பின்னர்ச் சேம்சு வாட்டு (James Watt) என்ற அறிஞரும் நீராவி இயந்திரங்களைக் கண்டுபிடித்தனர்.

**2. இரும்பு, நிலக்கரி:** நாட்டில் இரும்பு, நிலக்கரி ஆகியன சார்ந்த தொழில்கள் முன்னேறின. இரும் பும் நிலக்கரியும் தொழிற்புரட்சியின் இரு கண்கள் போன்றவை. இயந்திரங்கள் செய்யவும், அவற்றை இயக்கவும், போக்குவரத்துச் சாதனங்கள் செய்யவும் அவை பயன்பட்டன. பொறியியல் துறை வளர்ச்சி அடைந்தது. சுரங்கத்திலிருந்து தண்ணீரை வெளி யேற்றும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. போக்கு வரத்து வளர்ச்சியடைந்தது.

**3. துணி, வேதியியல் தொழில்கள்:** முதன்முதலாகப் பருத்தி நூற்பு, நெசவு ஆகிய துறைகளில விரைவான மாற்றங்கள் ஏற்பட்டன. பல புதிய கண்டுபிடிப்புகள் விரைந்து நிகழ்ந்தன ஆர்கிரீவு என்பவர் கண்டு பிடித்த நூற்புக் கதிர்ப்பொறி (Hargreave's Spinning Jenny), கிராம்டனின் நூல நூற்கும் இயந்திரம் (Crompton's Mule), ஆர்க்ரைட்டின் நீர்ச்சட்டம் (Arkwright's Water Frame), கேயின் எறிநாடா (Kay's Flying Shuttle) போன்றவை முக்கிய படைப்புகளாகும்.

**4 போக்குவரத்து:** மூலப் பொருள்களையும தொழிலாளர்களையும் கொண்டுவரவும், உற்பத்திப் பொருள்களை நுகர்வோரிடம் சேர்க்கவும் போக்கு வரத்து வளர்ச்சி ஏற்பட்டது. முதலாவதாக நீர்வழி முன்னேற்றம் அதிகமான எடையுள்ள பொருள்களைக் கொண்டு போகப் பயன்பட் டது. பல கால்வாய்கள் வெட்டப்பட்டன. மேலும் கி.பி. 1830-ஆம் ஆண்டிற்குப் பின்னர் புகை வண்டிப் போக்கு வரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற் பட்டது. மெக்காடம் (Mecadam) போன்ற பொறியி யல் அறிஞர்கள் சாலைப் போக்குவரத்து முன்னேற் றிற்கு வித்திட்டனர். போக்குவரத்து முன்னேற்றத்தி

னால் புதிய அங்காடிகளை விரைவில் அடைந்துவிட முடியுமாதலால் வாணிகமும் பெருகிற்று.

**5 தொழிலமைப்பு:** தொழிலமைப்பு முறையில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. கூட்டுப் பங்கு நிறுவனங்கள் (Joint-Stock Companies) பல தோன்றின, அதனால் பரவலாகப் பெரும் மூலதனங்களைத் திரட்ட முடிந்தது. தொழில் இணைப்புகளும்(Amalgamations) தொகுப்புகளும் (Combinations) பெருமளவு தொழிலுக்கு வழிகோலின.

**தொழிற் புரட்சியின் விளைவுகள்:** தொழிற்புரட்சியினால் சமூகம், அரசியல், பொருளாதாரம் போன்ற அனைத்துத் துறைகளிலும் பின்வரும் மாற்றங்கள ஏற்பட்டன.

**சமூக விளைவுகள்:** 1) தொழிற்புரட்சியினால் நகரங்களில் தொழிற்கூடஙகள பெருகின. நகரங்களில் பணியாற்றுகின்ற சூழநிலை தொழிலாளர்களுக்கு ஏற்பட்டமையால் குடும்பத்தினர் பிரிந்து வாழ வேணடிய சூழ்நிலை ஏற்பட்டது.2)தொழிலாளாகளிடம்சில ஒழுககக்கேடுகள தோன்றத் தொடங்கின. 3) சிறுவர்கள் தொழிற்கூடங்களுக்கு வேலைக்குச் சென்றமையால் கல்வி பாதிக்கப்பட்டது. 4) பெணகளும் தொழிற்கூடங்களுககு வேலைக்குச் செல்வதை மிகுதியாக விருமபினர். 5) தொழிலாளர்கள் தங்கள் திறமையை வளர்த்துக் கொண்டனர். 6) நடுத்தர வகுப்பு மககள் சமூகததின மேலநிலைக்கு வருவதற்கான வாய்ப்புகள பெருகின. மேலும் தொழிற்புரட்சி பல புதிய வகுபபினரைத் தோற்றுவித்தது.

**அரசியல் விளைவுகள்:** தொழிறபுரட்சியினால பெருநிலககிழார்களின செல்வாக்கும பின்னா வணிகர்களின் ஆதிக்கமும நீங்கித் தொழிலதிபர்களின் கை மேலோங்கியது பல சீர்திருத்தங்கள் ஏற்பட்டன. பொருளாதார வலிமையின் காரணமாக இங்கிலாநது பிரான்சு நாட்டின வலிமையை நசுக்கியது.

**பொருளாதார விளைவுகள்:** 1) தொழிறபுரட்சியினால் பல புதிய தொழில்கள் தோன்றின. இருமபு எஃகு, பொறியியல், இயந்திரக் கருவி உற்பத்தி, நெசவுத் தொழில போன்றவறறோடு வேதியியல் தொழிலகளும் வளர்ந்தன. 2) இல்லத் தொழில் முறை நீங்கி, தொழிற்கூட முறை தோனறியதால் தொழிலாளர்கள ஒரே இடத்தில் காலை முதல் மாலை வரை தொழிற்கூடஙகளில் வேலை பார்த்தனர். குடிசைத் தொழிலகள் சீரழிந்ததால பெரும்பானமையானோர் தொழிலாளர்களாக மாறினர். 3) உலகிலுளள அனைத்து நாடுகளுக்கும் இங்கிலாந்து பணடஙகளை ஏற்றுமதி செய்து பெரும்பொருள் ஈட்டியது. வாணிகம பலகிப் பெருகியது. 4) மக்கள தொழில்நிறைந்த நகரங்களுக்கு நகரத் தொடஙகினர். நகர்ப்புறங்கள் வளர்ச்சியடைந்தன. பல புதிய நகரங்கள் தோனறின. இதன் காரணமாகக் குடியிருப்பு, தூய்மை, சுகாதாரம் ஆகியவை பற்றிய பல சிககல்கள தோன்றின. 5) பெருமளவு உற்பத்தி முறை ஏற்பட்டுப் பெரும் தொழிலகங்கள் தோன்றின. அதனால செல்வமும் ஆதிக்கமும் சிலா கைகளில் குவிந்தன. தொழிலாளி-முதலாளி என்ற பிரிவினை உணர்வு தோன்றியது. அதனால்தான தொழிற்புரட்சி பல தீமைகளையும் உள்ளடக்கியது எனச்சில அறிஞர்கள் கூறுகினறனர். காரல்மார்க்சின் Karl Marx) கருத்துகள தோன்றுவதற்குத் தொழிலாளர்களின் தாழ்ந்த நிலையே காரணமாகும. எனவே, தொழிறசங்கஙகள் தோனறத் தொடங்கின. 6) நாட்டின் செலவம வளர்ந்தது. வேலைவாய்ப்புப் பெருகியது. இங்கிலாந்து உலகின தொழிற்சாலை, உலகின் உலை, உலகின வங்கி எனச் செல்வம தழைத்தோஙகிய நிலையை அடைந்தது. 7) மக்களின் வாழ்க்கைத் தரம் முனனேறியது. இயந்திர உற்பத்தி காரணமாகப் பெருமளவு பொருள்கள உற்பத்திசெய்யப்பட்டதால குறைந்த விலைக்குப் பண்டங்கள கிடைத்தன. மக்கள் வருவாயும் பெருகியது.

தொழிற்புரட்சியினால் பின்வரும் தீமைகளும் தோன்றின 1) பணடக் கூலி முறை தொழிலாளர்களுக்குப் பாதகமாக அமைந்தது. 2) தொழிற்கூடங்கள் காற்றோட்டமின்றியும் வசதிகளற்றும் இருந்தன. 3)குடும்பத்தினருடன இனிமையாகத் தொழிலில் ஈடுபட்ட நிலை மாறியது. 4) துணைத் தொழில்களின்மையால் வருவாய் குறைநதது. 5) குழந்தைகள் வேலைக்கு அமர்த்தப்பட்டனர். 6) உணவுப் பொருள் உற்பத்தி இறக்குமதி செய்யும் நிலை ஏற்பட்டது. 7) வணிகச் சுழல்கள் தோன்றத் தொடங்கின.

பூ.த.

**துணை நூல்:**

Cole, G D H., A Short History of the British Working Class Movement 1789-1947, George Allen & Unwin Ltd., London, 1948.

***தொழிற்பெயர்:*** ஒரு தொழிலின் நிகழ்வினைச் சுட்டும் பெயர் தொழிற்பெயர் எனப்படும். அமைப்பு நிலையில் தொழிற்பெயர் அடிச்சொல்லாகவோ அன்றி அடிச் சொல்லுடன் விகுதிகள் இணையப் பெற்றோ அமைந்திருககும். 'மத்தளம் நன்கு அடி இனிது' என்னும் வாக்கியத்தில் 'அடித்தல்' என்னும் பொருணமையினைக் குறிக்கும் 'அடி' எனும் வடிவம் அடிச்சொல் அமைப்பினைக் கொண்ட தொழிற்பெயராகும். 'அருவி வீழ்தல் கண்டேன்' என்னும் வாக்கியத்தில் 'வீழ்தல்' (வீழ்+தல்) என்பது விகுதிபெற்ற

தொழிற்பெயராகும். இத்தொழிற்பெயா வினையடி யுடன் பெயராக்க விகுதியினை இணைப்பதன் வாயி லாக ஆக்கம் பெற்றுள்ளது. ஈண்டுக் குறிப்பிடப் பெற்றுளள தொழிற்பெயர்கள் முக்காலத்திற்கும் பொருந்துவனவாய் அமைந்து வருமட.

தொடரியல் நிலையில் தொழிற்பெயர் வினை யடை (நன்கு பாடுதல்) அன்றி வினையெச்சத்தால் (ஓடி வருதல்) சிறப்பிக்கப்பெற்று இவற்றை அணமை உறுப்புகளாகப் பெற்றமையும். தொழில் நிகழ் வினைச் சுட்டுதல், வினையடை, வினையெச்சத்தால் தழுவப்பெறுதல் போன்ற வினைக்குரிய பண்புகளை யும், வேற்றுமை உருபினை ஏற்றும் ஏறகாமலும, தொடரில் எழுவாய் அன்றிச் செயப்படுபொரு ளாகச் செயற்படுதலாகிய பெயரின் பணபினையும் இவை கொண்டிருப்பதால் தொழிற்பெயர் எனகிற பெயரினைப் பெற்றுள்ளன.

**தொழிற்பெயர் வகைகள்:** தொழிற் பெயர்களை அவற்றின் அமைப்பு அடிப்படையில் முதனிலைத் தொழிற்பெயர்கள் எனவும் விகுதி பெற்ற தொழிற் பெயர்கள் எனவும் இரண்டாகப் பகுக்கலாம்.

**முதனிலைத் தொழிற்பெயர்:** வினையடிகளே தொழிற்பெயர்களாகச் செயறபடும் நிலையில் அவை முதனிலைத் தொழிற்பெயர்கள எனப்படும். மறமில்லா மனனர் செரு புகு இன்னா' என்பதில புகுதல்' என்னும் தொழில நிகழ்வினைச் சுட்டும் 'புகு' எனனும் வடிவம் தொழிற்பெயராகும். முதனிலைத் தொழிற்பெயர்கள் எல்லா இடஙகளி லும் தொழிற்பெயர்களாகச் செயற்படுதலில்லை. 'பிணிபட்டோனை அடி இன்னா' அவனுக்கு அடிவிழுந் தது' ஈண்டு 'அடி' என்னும் வடிவம் முதல் வாக்கியத் தில் தொழில நிகழ்வினைக் குறிக்கும் தொழிறபெய ராகவும், இரண்டாம் வாக்கியத்தில் ஒருதொழிலின பெயராகவும் அமைந்துள்ளது.

தொழிற் பெயாகளாகச் செயற்படும் நிலையில இவை வினையடை, வினையெச்சத்தால் தழுவப் பெறும். தொழிறபெயர்களல்லாப் பெயர்களாகச செயற்படும்போது பெயரடை பெயரெச்சத்தால் தழுவபபெறும்.

முதனிலைத் தொழிற்பெயர் அமைப்பினது முதல சையின முதலோ பிறவோ நீண்டோ திரிந்தோ வருமாயின், அது முதனிலை திரிந்த தொழிற்பெயர் எனப்படும். 'அந்தணர் இல்லிருந்து ஊண் இன்னா' என்பதில் 'ஊண்' (உண் > ஊண்) என்னும் வடிவம் 'உண்ணுதல்' என்னும் பொருளில் முதனிலை திரிந்த தொழிற பெயராகச செயற்படுகின்றது.

முதனிலைத் தொழிற்பெயாகளையும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்களையும் தொடரில அவற் றின் செயற்பாட்டு நிலையினை அடிப்படையாகக் கொண்டுதான் அவை தொழிற் பெயர்களாகச் செயறபடுகினறனவா என்பதைக் கண்டறிதல் இய லும். ஆனால், வடிவத்திறகு முதலிடம் கொடுத்து இலக்கண நூலார் சிலரும் உரையாசிரியர்களும் இவற்றை அனைததுச் சூழல்களிலும் தொழிற்பெயர் களாகவே குறிக்கினறனர்.

**விகுதி பெற்ற தொழிற்பெயர்கள்:** விகுதி பெற்ற தொழிற்பெயர்களைக் காலம் காட்டாதன எனவும் காலம் காட்டுவன எனவும் இரணடாகப் பகுக்கலாம்.

காலம் காட்டா விகுதி பெறற தொழிற்பெயர் கள வினையடியுடன் 'அல்', 'தல்', 'சி' போன்ற பெய ராக்க விகுதிகளை இணைப்பதன் வாயிலாகப் (வரல், ஓடுதல்) பெறப்படுகின்றன. இத் தொழிற்பெயர்கள் தொழில் நிகழ்வினைச் சுட்டும் நிலையில் முக்காலத் திற்கும் பொருந்தி வருவனவாக அமையுமட.

காலம் காட்டும் விகுதி பெற்ற தொழிற்பெயர் களை வினையாலணையும் பெயரின் அமைப்பினைக் கொணட தொழிற்பெயர்கள் எனவும் மையீற்றுத் தொழிறபெயர்கள எனவும் இரண்டு வகையின வாகப் பிரிக்கலாம்.

கால இடைநிலைகளோடு கூடிய வினையடிகளு டன் அஃறிணை ஒன்றன் பால, பலவின் பால் விகுதி களின் வடிவம் கொண்ட விகுதிகளை இணைப்பதன் வாயிலாக வினையாலணையும் பெயரின அமைப் பினைக் கொண்ட தொழிற்பெயர்கள் (வருவது, உழுவன) பெறப்படுகினறன. இத்தொழிற்பெயர் கள காலம் காட்டுவதாலும் வினையாலணையும் பெயரின் அமைப்பினைப் பெற்றிருப்பதாலும் இவற் றைப் பயன் நிலையில்தான் வினையாலணையும் பெயரினின்றும் வேறுபடுத்திக் கண்டறிதல இயலும்.

கால இடைநிலைகளோடு கூடிய வினையடிகளு டன் மையீறறினை இணைப்பதன் வாயிலாக மையீற் றுத் தொழிற்பெயர்கள (வந்தமை, கண்டமை) ஆக் கம் பெறுகினறன.

'அருவி வீழ்ந்தமை கண்டேன்' என்பதில் 'வீழ்ந் தமை' என்னும் வடிவம் வீழ்தல் ஆகிய தொழில் நிகழ்வுடன் தொழில் நிகழ்வின பண்பினையும் சுட்டு வதால் மையீற்றுத் தொழிற்பெயர்களை வினைப் பணபுப்பெயர்களாகக் கருதுவதும் உண்டு.

ஈண்டுக் குறிப்பிடப்பெற்றுள்ள தொழிற்பெயா நீங்கலாகச் சில புதிய அமைப்புடைய தொழிற்பெயர் களும் தமிழிலக்கியங்களில் காணக்கிடைத்துள்ளன.

'விளக்குப் புக இருள மாய்ந்தாங்கு' எனபதில் 'மாய்ந்து'என்னும் செய்து என்னும்வாய்பாட்டு வினை யெச்ச அமைப்பினைக் கொணடவடிவம் 'ஆங்கு'என னும்உவமப் பொருளைச்சுட்டும் வடிவத்தின் முனபாச அமைந்து 'மாய்தல' என்னும் தொழில் நிகழ்வினைச் சுட்டித் தொழிற் பெயராகச செயறபடுகின்றது.

நிபந்தனை வினையெச்ச அமைப்பினைக்கொண்ட வினைவடிவங்களும் தொழிற்பெயர்களாகச் செயற் படுகின்றன. 'தீர்ந்தால் போல் தீரா வரும்' என்பதில் 'தீர்ந்தால்' எனனும வடிவம 'தீர்தல்' என்னும் பொருளின தொழிற்பெயராகச் செயலாற்றுகினறது.

வரலாற்று நிலையில் முதன் முதலில் முதனிலைத் தொழிற்பெயர்களும், பின்னர்க் காலங்காட்டாவிகுதி பெற்ற தொழிற்பெயர்களும், அதனபின்னரே காலம் காட்டும் விகுதி பெற்ற தொழிறபெயர்களும தோற் றம் பெற்றுளளன எனபதாக அறிஞாகள் கருது கின்றனா.

தொழிற்பெயர்கள் சில, செயவெனெச்சத்தோடு உறழ்ச்சியில் அமைந்து வரும் (நீ வரல் வேண்டும்; நீ வரவேண்டும்). எனவேத ன் தொழிற்பெயருக்கும். செயவெனெச்சததிற்கிடைய வரலாற்று நிலையில தொடர்பு இருப்பதாகப் பலர் கருதுகின்றனர். ஏ.ஆ.

**தொழு நோய் மறுவாழ்வுத் திட்டங்கள்:**
தொழு நோய் ஒரு நாட்பட்ட (Chronic) நோய் ஆகும். வெப்பப் பிரதேசத்திலும் 'மிதவெப்பப் பிர தேசத்திலும் பரவலாக இந்நோய் காணப்படுகிறது. 'தொழுநோய் நுண்ணுயிர்க் கிருமி' களால் (Micro Bacterium Leprosy) தொழுநோய் உண்டாகிறது. தொழு நோயைப் பற்றிய குறிப்புகள் கி.மு.6-ஆம் நூற்றாண்டிலேயே காணக் கிடைக்கின்றன. ஐரோப் பிய நாடுகளில் கி பி 12-ஆம் நூற்றாண்டுகளில் பர வலாகக் காணப்பட்ட இந்நோய், சமூகக கட்டுப் பாட்டு முறைகளினால் பெருமளவு ஒழிககப்பட்டது. இந்தியாவில் சமூகப் பொருளாதாரம, தட்பவெப்ப நிலை ஆகியவை தொழு நோய் பரவுவதற்கு ஏறற தாகவும, அதைத் தடுப்பதில் சிக்கல்களை ஏற்படுத் தும் காரணிகளாகவும் இருக்கினறன.

இந்தியாவில் மட்டும் ஏறக்குறைய 32 இலட்சம தொழு நோயாளிகள் உளளனர் என 1980-ஆம் ஆணடுக் கணக்கெடுப்பு அறிவிக்கின்றது. இவர்களுள 8 இலட்சம போ தொற்றும வகை நோய் கொண்ட வர்கள். இதைத்தவிர, 37.2 கோடி மக்கள் தொழு நோய் பற்றக் கூடிய நிலையில் இருக்கினறனர் எனக் கணடறியப்பட்டுள்ளது.

'தேசிய தொழு நோய் தடுப்புத திட்டம்'1955-ஆம் ஆணடிலிருந்து நடைமுறையில் இருநது வரு கிறது. பொதுவாக இவவகைத் திட்டம் மூனறு வகை யாகப் பிரிக்கப்பட்டுளளது. முதலாவதாக, தொழு நோய் வருமுன்னர்த் தடுப்பதாகும். இத்திட்டத்தின பலனை இதுவரை 21.2 கோடி மக்கள் பெற்றுள்ளார் கள். இரணடாவதாகத் தொழு நோய் வந்தபின மருத்துவ வசதி அளிப்பது. நாடெங்கிலுமுளள அனைத்து மருத்துவ மனைகளிலும் இதற்குரிய வசதி செய்யப்பட்டிருக்கிறது. மூனறாவதாகத் தொழு நோயால் தாக்கப்பட்டவர்களுக்கு 'மறுவாழ்வு' அளிப்பதாகும். இப்பணியில் அரசும், சேவை நிறு வனங்களும் முழுமூசசுடன ஈடுபட்டு வருகின்றன. தமிழ்நாட்டில் மதுரை, புதுக்கோட்டை, தஞ்சாவூர், தென்னார்க்காடு, செங்கற்பட்டு ஆகிய மாவட்டங் களில் தொழு நோய் மறுவாழ்வு நிலையங்கள்' அமைக்கப்பட்டிருக்கின்றன.

இந் நிலையங்களின் பணி விரிவானது. தொழு நோயாளிகளைத் தனியாகப் பேணுதல் சமூக நல னுக்கு இனறியமையாதது. இல்லாவிடில் இநநோய் அனைவருக்கும் பரவிச் சமூகத்திற்குக் கேடு விளை விக்கக் கூடும். இட வசதியின்மை, வறுமை ஆகியவற் றின் காரணமாக நோயாளிகளை வீட்டில வைத்துப் பேணுதல் இயலுவதில்லை. அத்துடன இவ்விதம பேணுதல நோயாளிகளின் மனத்தில தாழவு மனப் பான்மையை ஏறபடுத்தக்கூடும். தொழு நோய் மறு வாழ்வு நிலையங்கள நோயாளிகளை ஓரிடத்திலதஙக வைத்து மருத்துவ வசதி அளிக்கின்றன.

மருததுவத்தின மூலம் தொடக்க காலத்திலேயே இநநோயினை முழுவதுமாகக் குணப்படுத்த இயலும. தாமதமாக வருவோரின் நோயைக்கூட மேலும் பர வாமலும், உடல் ஊனம் ஏற்படாமலும் தடுகக இயலும. இது மட்டுமல்லாது மருத்துவ சிகிச்சை பெறும் நோயாளி, 'நோய் எதிர்ப்புச் சக்தி பெறுவ தால, அவரிடமிருந்து அந்நோய் மறறவாகளுக்குப் பரவாது.

இந்நிலையங்களின அடுத்தகட்டப்பணி நோயாளி களுக்கு மறுவாழ்வு அளிப்பதாகும். நிலையஙகளிலேயே நோயாளிகள் அவர்களால் இயன்ற தொழில் செய் வதற்குப் பயிற்சி அளிக்கப்படுகின்றனர். எடுத்துக் காட்டாகச் செருப்புத் தயாரிக்கும் பணி, பாய் முடைதல, படுக்கை விரிப்புகள் தயாரித்தல், வேளாண மைப் பணி ஆகியவறறில் அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. அவர்கள் உற்பத்தி செய்யும் பொருளகளை விற்பதற்கும் அரசே உதவுகிறது.

இப்பணிகளுக்கு ஊக்கத்தொகையாக ஓரளவு பணமும் நோயாளிகளுக்கு அளிக்கப்படுகிறது. இதன் மூலம் நோயாளிகளுக்கு ஒரு தொழிலைக் கறகும்

வாய்ப்புக் கிட்டுவதோடு அவர்கள மனததில் தனனம பிகசை வளரவும் ஏதுவாகிறது.

இந்நிலையஙகளில் நோயாளிகளுக்கு முழுமை யான பேணுதலும் இலவசமாகவே அளிக்கபபடுகிறது. அது மட்டுமல்லாமல் நிலையஙகளிலேயே தத்தம் மனைவி, மக்களுடன் வசிக்கவும் நோயாளிகளுக்கு வசதி செயது தரபபடுகிறது. இதன்மூலம் சமூகத்தி லிருந்து தனியாகப் பிரித்து வைக்கிறார்கள எனனும் மனப்பானமை நீங்குகிறது. நோயாளிகளின் குழந்தை களைத் தனியிடத்தில வைத்து வளர்ப்பதோடு, அவா களது கல்விக்கான ஏற்பாடுகளும் செய்யப்படுகின் றன மொத்தத்தில் இதனை ஒரு 'முழுமையான அணுகுமுறை' எனலாம்.

எனினும், இந்த வாய்ப்புகளைப பயன்படுத்த மிகுந்த அளவில் நோயாளிகள முன்வருவதில்லை. பல நிலையங்களில் இடவசதி இருக்கும அளவு நோயாளி கள் இருப்பதில்லை. இந்நிலைக்குப் பல காரணஙகள இருக்கினறன. ஒன்று அறியாமை. இனனமும் பல ருக்கு இதுபோன்ற வசதிகள இருப்பது முழுமை யாகத் தெரியவில்லை. அடுத்தது, தொழு நோயா ளர்கள் தம் நோயைக் காட்டிப் பிச்சையெடுப்பதை மிக்க இலாபம் தரும் தொழிலாகக் கருதுகிறார்கள். தொழு நோய் மறுவாழ்வு நிலையங்கள இத்தனை இருந்தும்கூடப் பேருந்து நிலையங்களிலும், கோயில் வாசல்களிலும், தொழுநோய்ப் பிச்சைக்காரர்கள நிறைந்திருக்கிறார்கள். இவாகள் ஓரிடத்தில் கட்டுப் பட்டு வாழ்வதில் நாட்டமில்லாமல் பிச்சைஎடுததுப் பிழைப்பதையே பெரிதும் விரும்புகிறார்கள.

இந்தியாவில 364 தொழுநோய் தடுப்பு நிலை யஙகள இயங்கி வருகினறன. நாடெங்கிலும் 231 தொழு நோயாளா இல்லங்கள இயங்கி வருகின்றன. தொழு நோயால் ஏற்பட்ட உடற் குறைபாடுகளை. அறுவை சிகிச்சையின் மூலம் சரிசெய்யும் 42 நிலை யஙகள் இயங்குகினறன.

நாற்பது தேசிய சேவை நிலையங்களும், எட்டுப் பன்னாட்டுச் சேவை நிலையங்களும் இப்பணியில் ஆளபலம், பொருள பலத்துடன் பணிபுரிந்து வரு கின்றன, 'ஆசியாவிற்கான சப்பானியத்தொழுநோய் இயக்கம்' (Japanese Leprosy Mission for Asia), தேமியன தொழு நோய் நிலையம் போனறவை குறிப்பிடத்தக்கவையாகும். தேசிய தொழுநோய் ஆலோசனைக் குழுவும் (National Leprosy Advisory Committee) இத்துறையில் தம் பணியைச் செயது வருகிறது.

சுருக்கமாகத், தொழுநோய் மறுவாழ்வுத் திட்டங் களை இரணடு வகைகளாகப் பிரிககலாம். ஒன்று பொருளாதார மறுவாழவு; மற்றொன்று, உடல் இயக்க அடிப்படையிலான மறுவாழ்வு. தொழு நோயாளிகள் உடல் அடிப்படையில மறுவாழ்வு பெறுவதறகாகத்தான மருத்துவ வசதிகளும், அறுவைச் சிகிச்சை வசதிகளும் தரப்படுகின்றன. பொருளா தாரத்தில் முன்னேறறம் அடைய அவர்களுக்குக் கைததொழிலகள கற்றுத தரப்படுகின்றன.

இருப்பினும, சமுதாயததின ஓர் உறுப்பாகத தொழுநோயாளிகள் ஒப்புக்கொள்ளப்படாத நிலையே இன்னும் இருந்து வருகிறது. இதற்கு முக்கிய காரணம் அறியாமை. தனக்கும் அநத நோய் வந்து விடுமோ என்ற அசசமே இதற்குக காரணமாகும். தொழுநோயில் பல வகைகள் உண்டு என்ற விவரத தையும் அவை எல்லாமே தொற்றும் தன்மையுடை யன அல்ல என்ற உணமையையும் மக்கள் அறிய வேணடும் பல ஆணடுத் தொடர்பின் மூலம் மட்டுமே தொழு நோய பரவும் என்கிற தெளிவையும் மககள் பெற வேண்டும்.

பயிற்சி பெற்ற சமூகப் பணியாளர்களின் (Trained Social Workers) பங்கு இபபணியில் குறிபபிடத் தக்கதாகும். தொழு நோய் கண்டறியும் பணியில் அவர்கள் ஈடுபடலாம். தொழு நோய் பற்றிய அறி வியல் உண்மைகளைப் படக்காட்சிகள, பட விளக்கக காட்சிகள், நாடகங்கள ஆகியவை மூலம் பரப்பலாம். தொழுநோய் தொடக்க காலத்தில கணடறியப்பட் டால் முழுவதும் குணப்படுத்தப்படக்கூடியது என னும் உண்மையை மககள் அறியச் செய்தல் வேண டும். தொழு நோயாளிகள் 'தீண்டத்தகாதவர் அல் லர்' என்னும் கருத்தும பரப்பப்படுதல் வேணடும். குணப்படுத்தப்பட்ட தொழு நோயாளிகளுக்கு வேலைவாய்ப்பு வசதிகள் ஏற்படுத்தித் தரும் பணி யில் சமூகப் பணியாளர்கள ஈடுபடலாம்.

மொத்தத்தில் தொழு நோயை முற்றிலும் ஒழிக் கும் பணியில் குடிமக்கள அனைவருககும் பொறுப பும் பங்கும் இருக்கினறன. பெ.இரா.

**துணை நூல்கள:**


Anderson, Clifford R., Your Guide to Health, Oriental Watchman Publishing House, Poona, 1976.

Ghosh, R.N., Manual of Social and Preventive Medicine, Vijoya Publishing House, Calcutta, 1980.

Ludmila Aksenora, M.D., Skin and Venereal Diseases, Mir Publishers, Moscow, 1981.

Sengal, V.N., Clinical Leprosy, Vikas Publishing House Pvt. Ltd., Ghaziebad, 1979.

**தொறு தத்து:** தொறு தத்து என்னும் இந்தியப் பெண்பாற் கவிஞர் ஆங்கிலத்தில் பாக்கள் புனைந்து புகழ் பெற்ற ஒருவர் ஆவார்; இவர் பிரெஞ்சு மொழிப் புதினம் ஒன்றும் எழுதியுள்ளார்.

கல்கத்தாவில் 'கோவிந்து சந்திர தத்து (Govind Chunder Dutt) என்னும் மொழியியலாரின் மூனறாம் மகளாக கி.பி. 1856-இல் பிறந்தவர் தொறுதத்து (Toru Dutt). அவர் உடன் பிறந்தவர் இருவர்.

தத்துக் குடும்பத்தினர் பலரும் கிறித்தவ மதத்தைத் தழுவினர்; அம்மதத்தின் பால ஈர்க்கப் பெற்ற திருமதி கோவிந்தும் இயற்கை எய்தினார். பின்னர் அந்தக் குடும்பம் கி.பி. 1869-இல் ஐரோப்பாவிற்குச் சென்றது. அங்கேதொறு ஆங்கிலக் கவிஞர் மில்டன் எழுதின'துறக்க நீக்கம்' (The Paradise Lost)என்னும் காப்பியத்தைப் படித்து இன்பச்சிலிர்ப்புற்று இலக்கியக் கல்வியில தம்மை இழந்தார்.

ஐரோப்பாவில் 'நைசு' (Nice) என்னும் ஊரில் இவர் ஒரு பிரஞ்சுமொழிப் பள்ளியில் சேர்ந்து பயின்றார். பின்னர், இந்தக் குடும்பம் இலண்டன மாநகர் சென்றடைந்தது. தொறுவுக்குப் பிரஞ்சு மொழியிலும் ஆங்கிலத்திலும் சரளமாக உரையாட முடிந்தது. இந்தக் குடும்பம் கி.பி. 1871-இல் 'கேம்பிரிட்சு சென்றது. அங்கே மகளிாக்கான உயர்நிலைச் சொற பொழிவில் இவர் கலந்து கொண்டார். அவ்விடத்தில் நட்புக் கொணட 'மேரி மார்ட்டின' என்னும் பெண்மணிக்குப் பிறகாலத்தில் தொறு நிறையக் கடிதம் எழுதியுளளாா.

பிரஞ்சு மொழியிலிருந்து திரட்டினசெய்திகளைப் பிரஞசு வயல் திரட்டு (A Sheaf gleaned in French Fields)என்னும் நூல் வடிவில கி.பி.1875-இல் தொறு ஆங்கிலத்தில் வெளியிட்டார்.

பிறகு, தந்தையும் மகளும் சமசுகிருதம் பயிலத் தொடங்கினர். சமசுக்கிருத மொழியின் கடினம் பற்றித் தொரு, மேரிககுக் கடிதம் எழுதினாலும், அம் மொழியில் இராமாயணம், மகாபாரதம், சாகுந்தலம் முதலிய இலக்கியஙகளைப் படித்துத் தேர்ந்தார். சமசுக்கிருத மூலக கதைகள் சிலவறறை ஆஙகிலத தில் மொழி பெயர்த்தார்.'சமசுக்கிருத வயல் திரட்டு' (A Sheaf gleaned in Sanskrit Fields)எனனும் நூலை வெளியிடத் திட்டமிட்டிருந்தார். ஆனால் காய்ச்ச லால் அவர்தம உடல் நலம் குன்றியது, தொறு கி.பி. 1877-இல் இயற்கை எய்தினார்.

மக்கள் மூவரையும இழந்து பரிதவித்த கோவிநது தத்து, தம் மகள் தொறுவின் நினைவாகப் 'பிரஞசு வயல திரட்டு' என்னும் நூலை விரிவாக வெளியிட்டார். இதன் இரண்டாம் இந்தியப் பதிப்பு இருநூறு பாக்களுடன் கி.பி.1878-இல் வெளிவந்தது. 'ஆர்தர் சைமன்சு' என்பார்தம் முன்னுரையுடன் இதன் மூன்றாம் பதிப்பு 'கேகன்பால்'(Kegan Paul) என்பாரால் இங்கிலாந்தில் வெளியிடப் பெற்றது. தொறுவினால் எழுதப்பட்ட 'பியனாகா அல்லது இசுபானிய இளங் கன்னி' (Bianaca or The Young spanish Maiden) என்னும் முற்றுப் பெறாத புதினம் கி.பி. 1878 இல வங்காளமொழியில் வெளியிடப் பெற்றது. பொன்.பா.

**தொன்மைக் கட்டுப்பாடற்ற பொருளியற்கருத்துக்கள்:** ஆடம்சுமித்திற்குப் பின்னர்த் தோன்றிய மால்தசு (இங்கிலாந்து), தாவீது ரிக்காரடோ (இங்கிலாந்து), சே.பி.சே. (பிரான்சு), சே எசு.மில (இங்கிலாந்து) முதலிய அறிஞர்களைத் தொனமைப் பொருளியலறிஞர்கள் என்று அறிஞர் பெருமக்கள் குறிப்பிட்டுள்ளனர். இவர்களுடைய நூல் களில விளக்கப்பட்டுள்ள கருத்துகள தொன்மைப் பொருளாதாரம் என்று குறிப்பிடப்படுகினறன. இவர்களால் விளக்கப்பட்டுள்ள பொருளாதாரத்தைத் தொன்மைப் பொருளாதாரம் என்று குறிப்பிடுபவரும் சுதந்திர வாதப் பொருளாதாரம் எனறு கூறுபவரும் உளளனர். முதலாளித்துவப் பொருளாதாரம் என்ற முடிவிற்கு வருபவர்களுமுள்ளனா.

**தலையிடாக் கொள்கையின் அமிசங்கள்** (Features of Laissey-faire Policy):தொன்மைப் பொருளியலறிஞர்கள அரசின் தலையீட்டை ஆதரிக்கவில்லை. பொருளாதார நடவடிக்கைகளிலாகட்டும், பிற சமூக நடவடிக்கைகளிலாகட்டும் அரசு தலையிடுவதைத் தொன்மைப் பொருளியல் அறிஞர்கள எதிர்த்தனர். இதைத் தொன்மைக் கட்டுபாடற்ற பொருளியற் சிந்தனைகள் என்று கூறலாம். (Classical Liberael Economic Thoughts) குறைந்த அளவிற்குத் தலையிடுகினற அரசுதான் சிறநதஅரசாகக் கருதப்பட்டது. நுகர்பவர்கள் தாம் விரும்புகின்ற பணடங்களை வாங்கி நுகர்வதற்கு முழுமையான சுதந்திரம் வழஙகியாக வேண்டும். அதேபோன்று உற்பத்தியாளர்களுக்கும் முழுமையான சுதந்திரம் வழஙகியாக வேண்டும். அவ்வாறு, நுகர்பவர்களைச் சுதந்திரமாகச் செயற்படச் செய்வதனமூலம், பண்டங்களுக்கான நிரந்தரமான தேவையின் அளவை அறிந்து கொளளமுடியும. முடிவில், தேவையின் அளவை (Ievel of demand) அனுசரித்து உற்பத்தியின் அளவை (Ievel of production)அமைத்துக்கொளள வாய்ப்பேறபடுகிறது. இநத வகையில், சநதையில் இயல்பாகவே பண்ட அளிப்பிற்கும், பண்டததிற்கான தேவைக்குமிடையே ஏற்படுகின்ற சமநிலைதான் நிரந்தரமான சமநிலையாகும். இத்தகைய சமநிலை தோனறுவதற்குச் சிறிது காலம பிடிக்கும். இச்சமநிலை சந்தைநிலைக் காரணிகளால் உருவாக்கப்பட்ட காரணத்தினால நிரந்தர

மான,முறையான சம நிலையாகக் கருதப்படுகின்றது என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள் விளக்கியுள்ளனர். இவ்வாறு சந்தையில் நுகர்பவர்களையும் (Consumers),தொழிற்றுறை வேளாண்மைத்துறை உற்பத்தியாளர்களைச் சுதந்திரமாக முடிவுகளை மேற்கொள்ளச் செய்வதனமூலம் 'இயல்பான, நிரந்தரமான சமநிலை' (Natural and Stable Equilibrium) தோன்றுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டனர்.

**சந்தையில் போட்டி நிலையும், நுகர்வோர் நலமும்** (Competition among Producers and the Interest of the Consumers): உற்பத்தியாளர்களைச்சுதந்திரமாகச் செயற்படச் செய்வதன பயன் என்ன என்ற வினாவிற்குத் தொன்மைப் பொருளியலறிஞர்கள் கீழ்க்காணுமாறு விடையளித்துள்ளனர். உற்பத்தியாளர் மத்தியில போட்டி ஏற்படும்பொழுது, பண்ட உற்பத்தி முறையில் மிகச் சிறந்த முறையைத் தேர்ந்தெடுப்பர். அதன்மூலம் குறைந்த விலையில் பண்டங்களை உற்பத்தி செய்ய முடிகிறது. அதேபோன்று, காரணிகளையும் (Factors of production) மிகச் சிறந்த முறையில் பயன்படுத்த முனைவர். உற்பத்தியாளர்கள் குறைந்த விலையில் கிடைக்கின்ற காரணிகளைப் பெருமளவிற்குப் பயன்படுத்திக் கொள்ள விரும்புவார்கள. நுகர்பவர்களும் குறைந்த விலையில் கிடைக்கும் பண்டங்களையே வாங்கி நுகர்வு செய்ய விரும்புவார்கள. உற்பத்தியாளரின குறிக்கோள், குறைந்த செலவில பண்டங்களை உற்பத்தி செய்து, நிறைந்த நுகர்பவர்களைக் கவர்ந்து, அதிக இலாபம் பெறுவதாக அமைகிறது. நுகர்பவர்களின் குறிக்கோள்,குறைந்த செலவில் அதிக அளவு பண்டங்களை நுகர்வு செய்து அதிகப் பயன்பாட்டைப் பெறுவதாக அமைகிறது. இவவாறு நுகர்வும் உற்பத்தியும் தொடர்ந்து நடைபெறும் என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள குறிப்பிட்டனர்.

**தடையிலா இடப்பெயர்ச்சி** (Free Mobility): பொருளாதார அமைப்பைத் தொன்மைப் பொருளியலறிஞர்கள் இரண்டு துறைகளைக் கொண்டதாகக் கருதினர். அவை 1. இல்லத்துறை (Household Sector), 2. உற்பத்தித் துறை (Productive Sector) என்பனவாகும். இல்லத்துறை உற்பத்திக் காரணிகளாகிய நிலம், உழைப்பு, மூலதனம் மற்றும் தொழில்நுட்பம் முதலியவற்றை வழங்குகின்றது. உற்பத்தித் துறை என்ற பிரிவில தொழிற்றுறையும் வேளாண்மைத் துறையும் அடங்கியுள்ளன. உற்பத்திக் காரணிகளாகிய நிலம், உழைப்பு, மூலதனம் மற்றும் தொழில்நுட்பம் முதலியவை உற்பத்தித் துறையில் பயன்படுத்தப்படுகின்றன. இதன விளைவாகப் பண்டங்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன.தொழில்களையும் வேளாண்மையையும் உள்ளடக்கிய உற்பத்தித் துறையில் இருந்து வெளியாகின்ற பண்டங்களை இல்லத் துறை நுகர்வு செய்கின்றது. இவவாறு இல்லத்துறையும் உற்பத்தித் துறையும் ஒனறோடொன்று இணைந்து இயங்குகின்றன. முடிவில், உற்பத்திக் காரணிகள் அதிக அளவு பயன் தரும் வகையில் பயன்படுத்தப்படுகின்றன. தொழிலாளர்கள் அதிகக் கூலியைப் பெறுவதற்கு வாய்ப்புள்ள தொழில்களைத் தேடிச் செல்கின்றனர். தொழிலாளர் இடம்பெயர்வதற்கு எந்தவித தடையுமில்லை. அதேபோன்று, அனைத்துக் காரணிகளுமே தடையின்றி இடம்பெயர்ந்து செல்கின்றன. நுகர்பவர்களும் குறைந்த விலையில் பெறப்படும் பண்டங்களை அதிகம் வாங்கி நுகர்கின்றனர். அதிக நுகர்பவர்களைக் கவரவேண்டும் என்றால், அடக்கச் செலவைக் குறைத்தாக வேணடும். அதற்காகக் குறைந்த செலவில் காரணிகளை அமர்த்திக் கொள்வதில் உற்பத்தியாளர் கவனம் செலுத்துவர். பிற வகை உறபத்திச் சீர்திருத்த நடவடிக்கைகளையும் உற்பத்தியாளர் மேற்கொண்டு குறைந்த அடக்கச் செலவில் பண்டங்களை உற்பத்தி செய்ய முனைவர். இலாபகரமான துறையை நோக்கிக் காரணிகள் இடம்பெயர்ந்து செல்லும். நுகர்பவர்கள் சுதந்திரமாகத் தாம் விரும்பும் பண்டங்களைக் குறைநத விலையில வாங்க முனைவர் என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனா.

**கண்ணுக்குப் புலனாகாத கரம்** (Invisible Hand): தனிமனித வாழ்க்கையிலும் சரி, சமூக வாழ்க்கையிலும் சரி, கண்ணுக்குப் புலனாகாதகரம் செயற்படுகிறது என்று ஆதம் சுமித்து நம்பினார். அவருக்குப் பின்னர்த் தோன்றிய அறிஞர்களும் இக்கருத்தையே உறுதிப் படுத்தினார்கள். இயல்பாகவே மனிதன் சுயநல முடையவனாகவும் (Self interest),விடாமுயற்சியுடையனாகவும் வாழ்ந்து வருகின்றான. அவையே மனிதனின் முன்னேற்றத்திற்கும், சமூகப பொருளாதார வளர்ச்சிக்கும் துணை புரியும் கரங்களாகப் பயன்படுகின்றன என்று தொன்மைப்பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர் இயலபாகவே மனிதன் சிக்கனமாக வாழவிரும்புவான். தன்னிடமுள்ள பணத்தையோ நேரத்தையோ உழைப்பையோ வீணான வழியில் செலவிடுவதில் ஈடுபடமாட்டான். தன்னுடைய முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளவற்றைக் கண்டறிந்து, அவற்றை அகற்றுவதை இயல்பாகச் செய்யக்கூடிய வகையில் மக்கள வாழ்வார்கள்; எனவே சுதநதிரமான போக்கு சமூகத்திற்கு நன்மை பயக்கக் கூடியது என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர்.மால்தசுமட்டுமே மக்கள்தொகை வளர்ச்சி வேகத்தைக் குறைப்பதற்குச் செயற்கைத் தடைகளைக் கூறியுள்

ள ர் அவையும மக்களுடைய வாழ்க்கையில் இயல் பாக மேற்கொளளப்பட வேண்டியவை என்றே மால் தசும் குறிப்பிட்டுள்ளார். மிகவும் புரட்சிகரமான முறை யில் புதிய குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளை மால்தசு குறிப்பிடவில்லை.

**அரசின் தலையீடு நல்லதன்று:** தனி மனிதன், சமூ கம் ஆகியவற்றின் பொருளாதார நடவடிக்கைகளில் அரசாங்கம் தலையிடுவதைத் தொன்மைப் பொருளி யலறிஞர்கள் முற்றிலும் எதிர்த்தனர். அவ்வாறு அரசின தலையீட்டை எதிர்த்ததற்குக் கீழ்க்காணும் காரணங் களைச சுட்டிக் காட்டியுள்ளனர். அரசாங்கம் சரியான, தெளிவான கொள்கைகளின அடிப்படையில் திட்டங் களை வகுத்துச் செயற்படுத்தாத நிலையில பணம் வீணாகச் செலவிடப்படுகிறது. உறபத்தித் துறையில் ஏற்படுகின்ற பல்வேறு வகையான சிக்கல்களுக்கும் உடனுக்குடன் தீர்வு நடவடிக்கைகளை மேற்கொளள வேண்டும். இலலையெனில், உற்பத்தி பாதிக்கப்பட்டு இழப்பு ஏற்படுகிறது. தனியார் துறையினர் தொழிற துறைச் சிக்கல்களுக்கு உடனுக்குடன் தீர்வை மேற கொள்வதில் ஆர்வமுடன ஈடுபடுவதுபோல், அரசாங கம், செயற்படுவதில்லை. சிறுசிறு சிக்கல்கள கூடப் பெரிய அளவில் வளர்ந்து, பூதாகாரமான வடிவை அடைந்தவுடன்தான் அரசாங்கம் தீர்வு நடவடிக்கை பற்றிச் சிந்திக்க முனைகிறது. அதனவிளைவாகத் தொழிற்றுறையின் வளர்ச்சி பாதிக்கிறது. எனவே, உற்பத்தி நடவடிக்கையில் அரசு தலையிடுவது முறை யனறு என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள குறிப்பிட்டுள்ளனர்.

மேலும், அரசு அலுவலர்கள ஊதியம் பெறுவதில் குறியாயிருப்பர்; தாம் பணிபுரிகினற தொழிற்கூடத் திலுள்ள சிககல்களுக்குத் தீாவுகாண முனைப்புடன் ஈடுபடமாட்டார்கள் என்பதாகத் தொன்மைப் பொருளியலறிஞர்கள், அரசு அலுவலர்களின பொறுப் பில் நம்பிக்கையின்மையைத தெரியப்படுததுகின்றனர்.

நாட்டில சட்டம ஒழுஙகைப் பராமரித்தல், வெளிநாட்டுப் போர் அபாயத்திலிருந்து நாட்டைக் காத்தல், பாதுகாப்புக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழில்களை நடத்துதல முதலிய பொறுப்புகளை மட்டுமே அரசாங்கம் மேற்கொள்ளவேணடும் என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள வலியுறுத்தி உளள னர்.

**தடையிலா வாணிகம்:** உளநாட்டு வாணிகத்தி லும், பன்னாட்டு வாணிகததிலும் அரசாஙகம் தலை யிடக்கூடாது என்று தொன்மைப் பொருளியலறிஞா கள் குறிப்பிட்டுளளனர். ஒவ்வொரு நாட்டிலும காணப்படும் சாதகமான சூழல்களை அடிப்படையா கக் கொணடுதான குறிப்பிட்ட பண்டஙகள உற்பத்தி செய்யப்படுகின்றன. அதன் விளைவாகத்தான பன னாட்டு வாணிகம் தோனறுகிறது. உற்பத்திக்குச்சாத கமற்ற தொழிலில் ஈடுபடுவது நல்லதன்று. இறக்கு மதி வரி, ஏற்றுமதி வரி முதலிய வரிகளைத் தொன் மைப் பொருளியலறிஞர்கள எதிர்த்தனர். இவ்வரி களின்மூலம் சுதந்திரமான வாணிகம் தடைப்படு கிறது எனறும் அவர்கள குறிப்பிட்டனர். தடையிலா வாணிகததின்மூலம் மட்டுமே நுகர்பவர்களுக்குத் தர மான பணடங்களை நியாயமான விலையில பெற்றுத் தரமுடியும் எனறு அவர்கள நம்பினார்கள. சு.வெ.பா.

**துணை நூல்கள்:**

**Canan E.** (Ed,) Wealth of Nations, London, 1930.

**Haney, L.H.,** History of Economic Thought, Surjeet Publications, New Delhi, 1979.

**Overton H. Taylor,** A History of Economic Thought, Mcgraw Hill Book Company, Inc., Kogakusha Co Ltd.,Japan, 1956.

**Schumpeter J.A.,** Ten Great Economists, Oxford University Press, Newyork, 1951.

*தொன்மைக் கலை:* உலகம் முழுவதிலும் வாழும் தொழில்துறை சாராத (Non-industrial) சிறுகுடிகளின் கலையே தொனமைக் கலை எனக் குறிக்கப் பெறும். இவ்வகை மக்கள் பழஙகுடிகள் (Tribes) என்றும், தொன்மை மக்கள் (Primitive people) எனறும், எழுத்தறிவு பெறாத மக்கள (Non-literates) என்றும பலவாறு கூறப்படுவர். இவர் களின் கலை, முன் வரலாற்றுக் காலத்தில் (Prehistoric period) வாழந்த மக்கள கொணடிருந்த கலை யின் தொடர்ச்சியாகவும இக்காலப்புதிய சமுதாயத் தினரின் கலையிலிருந்து மாறுபட்டதாகவும் விளங்கு கிறது. ஒருசில சூழல்களில் தொன்மைக் கலை எனபது தொடகக கால இத்தாலியக் கலையையும், 'பிளமிசுக்' (Flemish) கலையையும், மனவளர்ச்சி குன்றியோரின் கலையையும், குழந்தைகளின கலை யையும் குறிக்கும். இருப்பினும தொனமைக் கலை (Primitive Art) என்னும வழக்கு எளிய பணபாட் டைக கொண்ட பழங்குடிகளின (தொன்மை மக்கள) கலையையே குறிக்கும.

தொனமைக் கலை பற்றிப் பல நூற்றாண்டு களாக வெளி உலக மக்கள அறிந்து வந்திருந்தனர். ஆனால், கி.பி.18-ஆம் நூறறாண்டின் இடைக் காலத் தில் உரூசோ (Rousseau) எனற தத்துவவியலார் தொன்மை மக்களைப் 'போற்றத் தகக எளிய பண பாட்டினர்' (Noble Savage) என்று சிறப்பித்துக் கூறிய பிறகே வெளி உலகத்தவர்கள இவர்களின்

கலையைப் போற்றத் தொடங்கினர். இருப்பினும் தொழில் துறையில் வளர்ச்சி பெற்ற மேலைநாட்டவர் பழங்குடிகளின கலை மிகச் சாதாரணமானது; அழகியல் சிநதனையற்றது; அழியக்கூடியது என்று கருதினர்.

தொழில் மயமாக்கமும், குடியேற்ற அரசுகளின் தோற்றமும், தார்வினின் படிமலர்ச்சிக் கொள்கையும் (Darwin's Evolutionary Theory) கி.பி. 19 - ஆம் நூற்றாண்டில் ஒருசேர உருவானபோது, மேலை நாட்டுக் கலையின் எதாரத்த வாதத்திற்கும்(Realism) புனைவியல் சார்ந்த புதுமைப் போக்கிறகும் (Romanticism) அடிப்படையாக விளஙகியது தொன்மைக் கலையே என்ற கருத்து வலியுறுத்தப்பட்டது. தொன்மைக் காலத்தில் விளங்கிய சிறப்பு ஆகமங்களின் (Canons) உதவியுடனே 20-ஆம் நூற்றாண்டில மேலைநாட்டுக் கலைஞர்களும் அறிஞர்களும் புதிய வெற்றிகளைக் கண்டனர். அவர்களுள குறிப்பிடத் தக்கவர்கள்,கலைத் துறையில் பிககாசோவும் (Picasso), இசைத் துறையில் இசுட்ராவின்சுகியும் (Stravinsky),இயற்பியலில்அய்ன்சுட்டினும்(Einstein), உளவியலில் பிராய்டும் (Freud) ஆவார்கள். இந்த அறிஞர்களின வளர்ச்சிக்கும் வெறறிக்கும் மேலை நாட்டவர்கள் தொன்மைக் கலையைக் கண்டறிந்தது ஒரு காரணமாக அமைந்தது எனக் கூறலாம்.

தொனமைக் கலை உலகின் எநத ஒரு நாட்டோடும புவிப் பரப்போடும் இணைத்துக் கூற முடியா அளவிற்கு அனைத்துப் பகுதியிலும பரவிக் காணப் படுகிறது. ஆப்பிரிக்கா, பசிபிக்குக் கடற்பகுதி, அமெரிககா, ஐரோப்பாவில் இலாப்பியர்கள் (Lapps) வாழும் பகுதி, வடதுருவச் சைபீரியா, ஆசியாவில் ஆப்கானிசுத்தான் தொடங்கிவியட்நாம்வரை உள்ள பகுதி, தோடர் (Todas), நாகர் (Nagas) உட்படப் பல இந்தியப் பழங்குடிகள வாழும பகுதி, இந்தோனேசியப் பகுதி, சப்பான (Japan) நாட்டு அய்னு (Ainu) பழஙகுடிகள வாழும் பகுதி முதலான இடஙகளில் 20-ஆம் நூற்றாணடு வரை இவ்வகைக் கலை கண்டறியப்பட்டது. அறிஞர்களுள ஒருசிலர், சகாராப் பாலைவனத்தின் உட்பகுதியில வாழும் மககளின கலையையும், ஆப்பிரிக்க நாடுகளில் உளள மரபுக் கலையையும் தொன்மைக் கலை எனக் கூறுவர்.

தொனமைக் கலையானது வெளி உலகத்திடமிருநது ஓரளவு தனிமைப்படுத்தப்பட்ட பகுதிகளில் தோன்றி வளர்நதது என ஒரு கொள்கைக்குழுவினர் கூறுவர். இருப்பினும், மேற்கு ஆப்பிரிக்கக கலை வகைகளில் பெரும்பாலானவை வடஆப்பிரிக்கப் பகுதியிலிருந்து சகாராப் பாலைவனம் வழியாகப் பரவிய இசுலாமியக் கலையை ஒத்திருக்கின்றன என பது குறிபபிடத் தக்கது. அவ்வாறே பணடைய தென கிழக்காசியநாகரிகத்தின் கலைக் கூறுகள் நியூகினி, ஆசுத்திரேலியா (Australia), பாலினீசியா (Polynesia) முதலான பகுதிகளுக்குப் பரவியுள்ளன. அவ்வாறே அமெரிக்க இந்தியப் பழங்குடிகளின கலையும் அமெரிக்காவின மரபுசாராப்புதிய குடிகளிடையே பரவியுளளது.

உலகின பலவேறு நிலப்பகுதிகளில் காணப்படும் எண்ணிலடங்காக் கலை வகைகளை ஒருமுகக் கருத்துடன் பொதுமைப் படுத்திக் கூறுவது எளிதன்று. இருப்பினும ஒருசில கூறுகளைப் பொதுமைப் படுத்திக் காணமுடியும். தொன்மைக குடிகளில் கலைப் பொருள்களைச் செய்பவர்கள் சிறந்த பயிற்சி பெற்றவர்களாக உளளனர். இத்தொழிலை முழுநேர வேலையாகக் கொளளாமல் பகுதிநேர வேலையாகக கொணடுள்ளனர். இத்தன்மை, தொனமைக் குடிகளின் சமுதாயத்தில் தொழிலிறகென்ற உட்பிரிவுகள் இல்லை என்பதையும், ஒருபடித்தான(Homogenous) சமுதாய அமைப்பு உளளதையும் குறிக்கின்றது. ஆசுத்திரேலியப் பழங்குடிகள், மேற்கு ஆப்பிரிக்கத் தோகான் பழங்குடியினர் முதலான பல பழங்குடிகளிடையே பயிற்சி பெறாத சிலரும் சிலவகைக் கலைப் பொருள களைச் செய்கின்றனர். பாலினீசியாவில் கலைப் பொருளகளைச் செய்பவர்கள் சிறநத பயிற்சி பெற்றவர்களாகவும் சமயச் சடஙகுகளை மேற்கொளபவர்களாகவும் உள்ளனர்.

நீலகிரியில உள்ள பழங்குடிகளின கூட்டு வாழ்க்கையைக் (Symbiosis) காணும்போது எவ்வாறு ஒரு பழஙகுடியினர் கலைப் பொருள்கள செய்வதையே முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழ முடியுமென்பதை அறிய முடியும். இம்மலைத் தொடரில் ஆயர் வாழ்க்கை மேறகொணடுள்ள தோடர்கள் எருமைகளை வளர்த்தும், படகர்கள்(Badagas)வேளாண் தொழில செய்தும், குறும்பர்கள் உணவுப் பொருள்கள சேகரித்தல், மந்திரம கூறுதல சடங்கு நிகழ்ச்சிகள் செய்தல முதலானவற்றை மேற்கொண்டும், கோத்தர் பழங்குடியினர் கைவினைப் பொருள்கள செய்தும் வாழ்கினறனர். இவர்கள அனைவரும் ஒவ்வொரு வகையான தனித் தொழிலைச் செய்து வருவதால் வாழ்க்கைக்கு வேணடிய அனைத்தையும் பெற ஒருவர் தம்மிடமுளள பொருள அல்லது தொழிலை மற்றவர்களுக்குக் கொடுத்துத தமக்கு வேண்டியவற்றைப் பிறரிடமிருந்து பெற்று வாழ்கின்றார். இந்நிலையில் கோத்தர்கள இசைக் கருவிகள், வேளாண கருவிகள் முதலான பல பொருளகளைச் செய்து வாழ்க்கை நடத்துகினறனர்.

பழஙகுடிகளிடையே உள்ள கலை உணர்வுகளும் கலைப் பொருள்களும் வாழவின் உள்ளார்ந்த மதிப்புகளோடு (Intrinsic Values)தொடர்புடையன. இவை

பெருமபாலும் சமயச் சடஙகுகளோடும் பிற பொரு ளாதாரச் செயலகளோடும் நேரடியாகத் தொடர்பு கொண்டுள்ளன. பணபாட்டின் முதனமையான மதிப்புகளைக் கற்றுணர்நது கலைப் பொருளசளைச் செய்ய வேண்டியுள்ளதால் இத்தொழில் தலைமுறை தோறும் வழிவழியாக வருகிறது கலைப் பொருள களைச் செய்வதில புதிய திறமை, இயல்பிறநத ஆற்றல்கள் (Supernatural powers) மூலம் கிடைக கின்றது எனறு இவவகைச் சமுதாயஙகளில நமபப் படுவதால், இத்தொழில பறறிய அறிவு மிகுநத இரகசியமாகக் காக்கப்படுகிறது

தொன்மைக் கலைகளின பல கூறுகள் சமயச சடங்குகள சார்ந்தவையாக உளளன எனபது குறிப் பிடத் தக்கது. அதாவது, ஒவவொரு பொருளும் வாழவின் அன்றாடச செயல்களோடும் சமயச் சடஙகு களோடும் பினனிப் பிணைந்தவையாக இருக்குமாறு செய்யப்படுகிறது. புதிய காலச சமுதாயஙகளில் பல கலைகள் அழகிற்காகவும் பொழுது போக்கிறகாகவும் உளளன. ஆனால, தொனமைக் கலையின் பல கூறு கள், இதறகு மாறாக இருப்பதைக் காண முடியும். குறிப்பாக, இசை, பாடலகள, பேசிமகிழதல, உடை, உடலில் வணணம் பூசுதல், நடனம முதலான எந்த ஒரு கலையும் அவர்களின வாழவோடும் சடங்கு களோடும் தொடர்புடையதாக உளளது. எநத ஒரு சமுதாயத்தைக் காடடிலும் பழஙகுடிச சமுதாயத்தில் சடங்குகளும் அதைச சாாந்த செயல்களும மிகுதியாக இருக்கும். நவகோ (Navaho) சமுதாயததில் உடல வலியைப் போககும மருத்துவததிறகுப பின உடலில வரைதல கலை மேறகொள்ளப்படுகிறது. ஆப்பிரிககப் பழஙகுடிகளிலும் பசிபிக்குக் கடறகரைப் பகுதிகளிலும் பொமமைகள செய்வதும அதை அழகுபடுததலும் அனைத்துக கருவளச் சடங்கின்போதும் (Fertility Rites) செய்யப்படுகினறன. இதைப் போனறு பழங்குடி களின் பணபாட்டிலிருநது ஆயிரக்கணக்கான எடுத்துக காட்டுகளைக கூறலாம.

தொனமைக கலையில பலவேறு உருவவியல கருத்துகள (Iconographic Themes) உளளன. முன னோர்களை உணமை உருவஙகளாகவோ, மரபுக கதை கூறும் செய்திகளைக் கொணடு கறபனையில ஆக்கப்படும் உருவஙகளாகவோ செயயும் முறை பரவலாக உளளது. இதனையடுத்துத தொனமைக கலையில் பரவலாக உளள கருப்பொருள, இயறகைக் கும் மனிதனால் ஆக்கபபட்ட பணபாட்டிறகுமுளள வேறுபாடுகளைக் காட்டுவதாகும. இயறகையிடம் உள்ள கணிக்க முடியாத ஆற்றல்கள, இவற்றால உணடாகும் நனமை தீமைகள், இவவனைத்தையும் ஏறறு வாழும்போது மக்கள மேற்கொளள வேண்டிய வழிமுறைகள முதலானவை கருப் பொருள்களாக உளளன. இவறறோடு ஒவ்வொரு பண்பாட்டினரும் உலகம் தோன்றிய கருததையும், இநத உலகத்தின் அனைத்துச் செயலகளையும இயக்கும ஆறறலையும அவற்றுள வடிவஙகளையும எவ்வாறு காணகின்றனர் எனபது முதனமையாக இடம் பெற்றிருக்கும. இதனடிப்படையிலேயே அவரவர் வழிபடும் தெய்வங் களின உருவஙகளும் அத்தெய்வங்களின் ஆறறலகளும் உருவகப்படுததப்படுகினறன.

மககள அவரவர்களுடைய பண்பாட்டின கருத்து களைக கலைப பொருளகளில சித்திரிகக முறபடுவர். அதோடு நடைமுறை வாழவில இடமபெறும நிகழ்ச்சி கள பற்றியும் விளக்க முறபடுவர். மேறகூறிய இரணடு வகைகளில் முதல வகையைச சேர்நத கலை வடி வங்கள கருத்துகளை மிகைபபடுத்தியனவாகவும், விசிததிர உருவமுளளனவாகவும், ஒருசில வேளைகளில் கோரமானவையாகவும் காணப்படும. இரணடாம வகை பொதுவாக இயலபாகவும் நடைமுறைக கருத் திற்கு ஒததனவாகவும இருக்கும.

பெருமபாலான கலைகளைப் போனறே தொன மைக் கலையும் பண்பாட்டால் ஏறறுக் கொளளப பட்ட மதிப்புகளை (Values) வெளிப்படுத்துவதாக உளளது. அதிகாரம ஓரிடம குவிந்த அரசியலமைப் பைப்பெறற பழஙகுடிகளில ஒருசில கலைப் பொருள் கள மிகுந்த திறமையுடன் பல நாளகள் செய்யுமள விறகுப் பொருள் செலவு மிகுதியாகத் தங்கம். தந்தம, மணி, கிளிஞ்சல் முதலான விலையுயர்ந்த பொருள களால செயயப்படுகின்றன. இவை அதிகாரம், புனி தத்தன்மை ஆகியவற்றின் இருப்பிடமாகக் கருதப்படு கின்றன. இவவகையான முறைகளைக் கொண்டுள்ள பழஙகுடிகளுள் சில என நைசீரியாவின் இபி(Ife), பெனின் (Benin), கானா நாட்டில வாழும் அசாந்தி (Ashanti), செயா (Zaire) நாட்டில் வாழும் கூபா (Kuba), மைகரோனீசியா, பாலினீசியா, இந்தோனீ சியா முதலான தீவுககூட்டஙகளில வாழும் பழங் குடிகள ஆகியவற்றைக குறிப்பிடலாம்

அதிகாரம் ஓரிடம் குவியா அரசியலமைபபைக் கொணட ஒருசில பழஙகுடிகளிடம் தகுதி அடிபபடை யிலான சமுதாய அமைபபு(Rankbased social organization) உளளது. நியூசிலாநதில வாழும் மயோரிகள் (Maoris), அமெரிககாவின் வடமேற்குக கடறகரையில வாழும் எயடா (Haida) போன்ற பல பழங்குடிகள தகுதி அடிப்படையிலான சமுதாய அமைப்பைக் கொணடுள்ளனர். இவர்களிடம் உளள கலைப் பொருளகள, விலங்கு உருவங்கள, மனித உருவஙகள, கற்பனை உருவங்கள் போனறனவாகஉள்ளன. குறைந்த தகுதியுடையவர்கள் விலங்கு உருவங களையும், ஓரளவு தகுதிமிகுநதவர்கள மனித உருவங

களையும் சிறப்புத் தகுதியுடன உளளவர்கள கறபனை உருவஙகளையும் கொணட கலைப் பொருளகளைப் பெற்றுளளனர்.

மேற்கூறிய செயலகள மட்டுமலலாது வேறுவகை யான பலசெயலகளையும் தொன்மைக் கலை கொண டுள்ளது. ஒருசில வேளைகளில் சமுதாயக் கட்டுப் பாட்டைக காக்கவும், தீமைகளிலிருநது விடுவிககவும், தனிமனிதரின் தகுதியை உயாத்தவும, சமயச் சடஙகு களின் தனிததனமைமையச சிறப்பித்துக காட்டவும தொனமைக் கலை பயனபடுத்தப்படுகிறது மேற் கூறிய செயல்களைச் செய்யும் சமய குருக்கள் (Priests), தெய்வத் தனமையுற்றவர்கள் (Shamen), மருத்துவம செய்வோர் முதலானவாகள அவாகளின தனித் திறமைகளை வெளிப்படுத்தும பொருட்டுப்பல கலைப் பொருளகளை அணிநது கொளகின்றனா.

தொன்மைக் கலையில் காணப்படும் அழகியல் கோட்பாடுகள (Aesthetic concepts) சமுதாயஙகளின வகைகளுக்கேற்ப மாறுபடுகினறன. தொனமைக் கலைகள மிகவும் பணபடாத நிலையில் உளளன பெரும்பாலானவை மூடநம்பிக்கைகளாலும், மாய வித்தைகளாலும் ஏற்பட்டுளளன எனற ஒரு கருதது நிலவுகிறது இககருத்து தவறானது இவ்வகைக் கலை யின முறை ஓர் ஒழுஙகான தனமையைய பெற் றுள்ளது மூடநம்பிககைகளையும் மாயவித்தைகளை யும் சாராத கலைகளும் உளளன. இதறகு எடுததுக் காட்டாக எணணற்ற பழஙகுடிகளின் கலையை எடுத் துக் கூறலாம். இருப்பினும், புவியமைபபையும இயறகைச் சூழலையும விளக்குவது, மனிதர்களின் முழு உருவப்படததை உருவாக்குவது போனற முயறசிகள தொனமைககலையில் இல்லை எனபது குறிபபிடத்தககது. அதோடு பல வணணக கலவை களைக கொணடு வணணமிகு பொருளகளைச் செய் யும் முறையும ஏற்படவிலலை. சீ ப.

**தொன்மைப் பண்பாடு**: பணபாட்டுப் படி மலாச்சியினை (Evolution) ஆராயும்போது கி பி. 19-ஆம் நூற்றாணடு மானிடவியலார்களிடம் 'தொன்மைப் பணபாடு' எனனும் வழககுச் சிறபபுப் பெற்றது. இருப்பினும, இதன் பொருள சற்று வேறு படுத்திக் கூறும நிலையில் தொன்மை (Primitive) எனனும் சொல் இனறு பொதுவழக்காக இருந்து வருகிறது. சொறபிறபபியல் முறையில பொருள் படுத்திக் காணும்போது தொனமைப் பணபாடு எனபது, உலகின அநதந்தப் பகுதிகளில காலம் காவ மாக வாழ்நது அம்மணணிற்கே உரியவர்களாகவும் மிகவும் எளிய பணபாட்டினைக் கொணடுளளவர் களாகவும் உளள மக்களின வாழ்க்கைப் பாஙகு என் பது புலப்படும்.

வாழககைப் பாஙகால் ஒனறுபட்ட மக்களின் வெளிப்பாடாக அமைவதே பண்பாடாகும். இது ஒரு குறிப்பிட்ட மக்களை ஒனறுபடுத்திக் காட்டுகிறது. அனைவரும் ஒத்த பல பணபுகளால் பிணைக்கப்படு கினறனர்; ஒன்றுபட்ட நமபிககைகள், உணர்வுகள், நடத்தைமுறை முதலானவற்றைக் கொணடுள்ளனர். ஒரு பணபாட்டைச் சோந்தவாகள் உலகின் பிற மககளிடமிருந்து ஏதோ ஒரு வகையில் தனித்தனமை பெற்றவாகளாக இருப்பா. அதனால, உலகில் இனறு- தனித்தனமை பெற்ற பணபாடுகளின் எணணிக்கை பலவாகும் ஒரு பணபாட்டைச சேர்ந்தவர்கள் ஒரு குறிப்பட்ட நிலப் பகுதியில பெருமபாலும் காணப படுவதால அநதநத நிலததின பெயரைப் பெறுகின்ற னர். எ-டு. இந்தியர், அமெரிககர், சபபானியர் (Japanese) செருமானியர். பணபாடுபற்றி மானிடவியலாா வகுதத வரையறை அனைத்துத துறையினராலும சிறப்பாக ஏறறுக் கொளளப்பட்டுளளது. பெரும் புகழ் பெற்றவரான தைலர் (E.B.Tylor) 100 ஆணடுகளுக்கு முனனர் எழுதிய தொன்மைப் பணபாடு (Primitive Culture, (1871) எனனும் நூலில் பண்பாடு பற்றி வரை யறை செய்தாா. அவரது வரையறைபபடி பணபாடு என்பது அறிவு, நம்பிககை, கலை, ஒழுக்க நெறிகள Morals), சட்டம, வழக்கங்கள ஆகியவற்றோடு சமுதா யத்தில் மனிதன் ஓா உறுப்பினனாக எவையெல்லாம் ஏறபடுத்திக கொள்கிறானோ அவை அனைத்தும அடஙகிய ஒரு கலப்புத தொகுதி என்பார். இதன மூலம் பணபாடு என்பது மனிதனால் ஏற்றுக் கொளளப்பட்டவை எனபது புலப்படும். அவறறுள் ஏறறுக் கொளளப் பட்ட பண்புகள தொனமைத் தனமையாக இருககுமானால அவை தொன்மைப் பண்பாடு எனறு குறிப்பிடப்படுகினறன.

தொடகக காலத்தில் மானிடவியலார் தொன மைப பணபாட்டினா அல்லது தொனமைச் சமுதாயத் தினர் என்று கூறப்படுவோரையே மிகுநத ஈடுபாட்டு டன ஆராயந்து வநதனர். இவாகள ஆராய்நதவர் களுள அமெரிகக இந்தியாகள, ஆசுத்திரேலிய (Australia) ஆதிககுடிகள, தென் பசுபிககுப் பழங்குடிகள ஆகியோரே அடஙகியிருநதனா இவர்களுள ஆசுத்தி ரேலிய ஆதிககுடியினரே மிகத் தொனமையானவர் என இன்றளவும் கருதப்படுகிறது. இவாகளுககு ஒரு குறிப்பிட்ட மனத்திறன தவிர்த்துச் சிந்திக்கும திறன் இலலை என்னும் கருத்து பலரிடையே நிலவுகிறது. அதனாலேயே வரலாறு கடந்த நாகரிகங்களைப் போலன்றி அனைதது நிலையிலும் குறைந்த பணபு களைப் பெற்றுளள மககளைத் தொன்மைப் பண பாட்டினர் எனறு குறிக்கின்றனர் அதன பொருளி லேயே விலங்குத் தனமை (Savage), காட்டுமிராண்டித தனமை (Barbarous) முதலான சொற்கள வழக்கி லுளளன. பணபாட்டுப் படிமலர்ச்சியை ஆராயந்த போது, விலங்குத் தனமை, காட்டுமிராணடித

தன்மை, நாகரிகம் ஆகிய மூன்று நிலைகளில் பண்பாட்டு வளர்ச்சி பெற்றுள்ளது என்று மதிப்பிடப் பட்டது. இதன் அடிப்படையில் பல வேளையில் பண்பாடுகளை மதிப்பிடும்போது தொன்மைநிலை என்றும் நாகரிக நிலை என்றும் தரம் பிரித்துக் காட்டப்படுகிறது.

தொன்மைப் பண்பாடு என்று ஒரு பண்பாட்டைக் குறிப்பிடுவதற்குக் குறிப்பிட்ட சில பண்புகளைக் கையாளுகின்றனர். அவற்றுள் உறவுமுறை, பண்டமாற்றுப் பொருளாதாரம், சமயம், திருமண முறைகள், குடும்ப வகைகள் உலகப்பார்வை (world view), குடிவழி அமைப்பு, எழுத்தறிவு, பகுத்தறிவுத் தன்மை முதலானவை முதன்மையாக இடம் பெறுகின்றன. தொன்மைப் பண்பாடு என்று குறிக்கும்போது ஒரு சில குழப்பம் பெறக்கூடிய கருத்துகள் இடம் பெற்று விடுகின்றன. அதற்குக் காரணம் இனமையக் கொள்கை (Ethnocentrism) சார்புடையதும், சுய பண்பாட்டுப் பெருமையால் கூறப்படுவதுமாகும். நாகரிக மக்களைக் காட்டிலும் தொன்மைப் பண்பாட்டினர் பெரும்பாலான கூறுகளில் ஒத்த தன்மையுடைய பாங்கினைக் கொண்டுள்ளனர். இவை நாகரிகமடைந்தவர்களைக் காட்டிலும் சற்றுக் கூடுதலாகும். தொன்மைப் பண்பாட்டினருள் சிலர் 'நாகரிக மக்களைப் போன்று பண அடிப்படையிலான பொருளாதாரத்தைக் கொண்டுள்ளனர் மற்றவர்களுள் ஒரு சிலர் பண்ட மாற்று முறையையும், சிலர் தன்னிறைவு கொண்ட பொருளாதார முறையையும் பெற்றுள்ளனர். ஒரு சிலர் குலக்குறி அமைப்பைப் (Totemism) பெற்றுள்ளனர். பலர் இம்முறையைக் கொண்டிருக்கவில்லை. சிலர் குல(Clan) அமைப்பைப் பெற்றுள்ளனர். பலர் இந்த அமைப்பைக் கொண்டிருவில்லை. மானிடவியல் வழக்கில தொன்மைத் தன்மை அல்லது விலங்குத் தன்மைஎன்னும் சொற்கள், தாயன்பீ(Toynbee) போன்றோரும் பிறமானிடவியல் சாராதவர்களும் பயன்படுத்திய பொருள் கொண்டவையல்ல. மானிடவியலார் இச் சொல்லை ஐரோப்பிய-அமெரிக்கப் பண்பாட்டைச் சேராதவர்களையும் எழுத்துமொழி கொண்டிராதவர்களையும் மட்டுமே குறிக்கப் பயன்படுத்தினர். அண்மைக் காலங்களில் இச்சிக்கலான நிலைக்கு ஒரு பொதுவான தீர்வு காணும் பொருட்டுத் தொன்மை மக்களைக் குறிக்க வரலாறு சாராதவர்கள், எழுத்தறிவிற்கு முந்தையோர், எழுத்தறிவில்லாதார் ஆகிய சொற்கள் பெருமளவு பயன்படுத்தப்படுகின்றன.

இன்று தொன்மைப் பண்பாட்டினர் இக்கால நாகரிக மக்களுடன் மிகுந்தஅளவுதொடர்புகொண்டு வருவதால அவர்களின் நிலை மாறியுள்ளது. இந்தியா, மெக்சிகோ, தென் அமெரிக்கா, வட அமெரிக்கா, பசிபிக்குத் தீவுகள், அந்தமான் தீவுகள் முதலான அனைத்துப் பகுதிகளும் இதற்குச் சான்றுகளாக உள்ளன. இதனாலேயே மானிடவியலார் பழங்குடிகளை ஆராயும் நிலையிலிருந்து ஊரகச் சமுதாயம், நகரச் சமுதாயம், தொழில் துறைச் சமுதாயம் முதலான அனைத்தையும் ஆராயும் முறைகளை ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். ஜே.பா.

**துணை நூல்கள்:**

**Harris, Marrin** Cultural Anthropology, Harper and Row Publishers, New York, 1983.

**Herskovits, M J.,** Cultual Anthropology, Oxford and IBH Publishing Co., Calcutta, 1955.

**Tylor E B.,** Primitive Culture, John Murray, London, 1871.

*தொன்மைப் பொருளியல் வளர்ச்சிக் கோட்பாடு*: ஆதம்சுமித்து, தாவீது ரிக்கார்டோ மற்றும் மால்தசு முதலிய அறிஞர்களின் நூல்களிலிருந்து பொருளாதார வளர்ச்சிக் கோட்பாட்டைப் புரிந்துகொள்ள முடிகிறது. தலையிடாக் கொள்கையை அடிப்படையாக அமைத்துப் பொருளாதார வளர்ச்சியைப் பெறமுடியும் என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள் முடிவாக நம்பினர். தனியார் துறையினரே உற்பத்திக் காரணிகளையும், கனிவளங்களையும் சிறப்பாகப் பயன்படுத்துபவர்கள்; அவர்களுடைய பொருளியல் நடவடிக்கைகளே நாட்டின் பொருளாதாரத்தை வளர்ச்சிப் பாதைக்கு உறுதியாக எடுத்துச் செல்கின்றன என்று முழுமையாக நம்பியவர்கள் தொன்மைப் பொருளியலறிஞர்கள்.

**உற்பத்திச் சார்பு**(Production Function): மொத்த உற்பத்தியை நிருணயிக்கும் காரணிகளைத் தொன்மைப் பொருளியலறிஞர்கள் சுட்டிக் காட்டினர்.
$(Y = f(K, N, L, S)$

- Y நாட்டு வருவாய் அல்லது மொத்த உற்பத்தி
- K மூலதன இருப்பு (Capital Stock).
- N நிலம்-இயற்கை அமைப்பு, தட்பவெப்பநிலை, கனிவளங்கள் (Land, Natural Factors Include Climatic Conditions, Minerals).
- L உழைப்பு (Labour Force).
- S தொழில்நுட்ப அறிவு (Technical Know-how).

நா.வ. சா (மூ. இ, நி, உ, தொ. நு.)

$$Y = f(K, N, L, S)$$

**தொழிலநுட்ப வளர்ச்சியும், மூலதனத் தேவையும்** (Technical Progress and Capital Requirements):

தொழில்நுட்ப வளர்ச்சியின முதன்மையைத் தொன மைப் பொருளியலறிஞர்கள வலியுறுத்தியுள்ளனர். தொழில்நுட்ப வளர்சசியினையொட்டியே உற்பத்திப் பெருக்கம் அமைகிறது பினதங்கிய உறபத்தி முறையில வளர்ச்சி தோன்ற வாய்ப்பில்லை. உறபத்தி முறையில் புத்தாக்கங்களை அறிமுகப்படுத்தவேணடுமாயின், பெரிய அளவில் ஆராய்ச்சிகளை மேற்கொளளவேணடும். ஆராய்ச்சியின முடிவைக் கணடறியப் பல ஆணடுககாலம் பிடிப்பதுணடு. இந்த வகையில ஆராய்ச்சி நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கும், புதிய இயந்திர உற்பத்தியில் ஈடுபடுவதற்கும் மூலதனம் பெருமளவில் தேவைப்படுகிறது. மூலதனத் திரட்சியையொட்டியே புதிய உற்பத்தி முறை தோனற வாய்ப்பு ஏற்படுகிறது. மூலதனத் திரட்சி இல்லையெனில், பின்தங்கிய உற்பத்தி முறையே நிலவும். முடிவில், மொத்த உறபத்தி குறையும் எனறு தொன்மைப் பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டுளளனர்.

**நிகரமுதலீடும் இலாபமும்** (Net Investment and Profits): நிகர முதலீடு பெருகும்பொழுதுதான, மூலதன இருப்பு (Capital Stock) மிகும் எனறு தொனமைப பொருளியலறிஞர்கள கருதினர். அனைத்து உற்பத்தி நடவடிக்கைகளும் இலாப நோககுடனதான மேறகொளளப்படுகின்றன எனறு தொனமைப் பொருளியல் அறிஞர்கள் கருதினர். எனவே, இலாப விகிதம் மிகுநதுள்ள சூழநிலையில், முதலீடும் மிகுந்துகொண்டே செல்கிறது. முதலீடு மிகும் பொழுது, பல துறைகளிலும் மொத்த உற்பத்தி மிகுதியாகிறது எனறு தொனமைப் பொருளியலறிஞாகள குறிப்பிட்டனா.

இலாப அளவை நிருணயம் செய்யும் காரணிகளைத் தொனமைப் பொருளியலறிஞர்கள சுட்டிக் காட்டியுள்ளனர். உழைப்பாளர் அளிப்பும, தொழில நுட்ப வளர்சசியும் இலாப நிலையை நிருணயிக்கின்ற காரணிகளாகும் (Labour Supply and Technological Progress determine the level of Profit). மக்கள்தொகை மிகுதியாகும்பொழுது தொழிலாளர்களின் அளிப்பு மிகும். நிலத்தின அளிப்பு மாறாத கூறாகும். மேலும், வேளாண துறையில் குறைந்து செல் விளைவு விதி (Law of Diminishing Returns) மிக விரைவில் செயறபடத்தொடஙகுகிறது. எனவே, உணவுப் பணட உறபத்தி குறைந்து விடுகிறது. முடிவில் உணவுப்பணடப் பற்றாக்குறை ஏற்படுகிறது. மக்களின பொதுவான வாழ்க்கைத் தரம் பாதிககப்படுகிறது; சிறப்பாகத் தொழிலாளர்களின் வாழ்க்கை பாதிக்கப்பட்டு அவர்களின உற்பததித் திறன குறைந்துவிடுகிறது. மொத்தத்தில உற்பத்தி குறைந்து, இலாப விகிதம் குறைநதுவிடுகிறது எனறு தொனமைப் பொருளியலறிஞர்கள விளக்கியுள்ளனர்.

தொழில்நுட்ப வளர்ச்சியின்மூலம், சிறநத புதிய உற்பத்தி முறையைக் கண்டறியமுடியும். சிறந்த உற்பத்தி முறையினமூலம் கனி வளங்களைச் சிறப்பாகப பயன்படுத்திக்கொள்ளமுடியும்; குறைந்த உற்பத்திச் செலவில பண்டங்கள் உற்பத்தி செய்யமுடியும். காரணிகளைச் சரியான விகிதத்தில் கலந்து அடக்கச் செலவைக் குறைத்துக்கொள்ளப் புதிய உற்பத்தி முறை வழிவகுக்கும். இவற்றின் விளைவாக, இலாப விகிதம் மிகுதியாக வாய்ப்புள்ளது என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள விளக்கியுள்ளனர்.

கூலிநிதி, உழைப்பு அளிப்பை நிருணயிக்கிறது (Wage fund determines the Labour Supply). உழைப்பாளர் எண்ணிக்கையைக கூலிநிதி நிருணயிககும் காரணியாகும்என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள கருதினர். கூலிக்கென்று ஒதுக்கப்படும் தொகை மிகுதியாகவும், தொழிலாளர்களின எண்ணிக்கை குறைவாகவும் இருப்பதாகக் கொணடால் கூலிநிதியைத தொழிலாளர்களின எண்ணிக்கையால் வகுத்துப் பெறப்படும் தொகை கூலி என்று நிருணயிககபபடும். கூலிநிதி மிகுதியாகவும், தொழிலாளர்களின எண்ணிக்கை குறைவாகவும் இருப்பின, நிருணயிக்கப்படும் கூலி மட்டம், பிழைப்பு மட்டக் கூலியை (Subsistence Wage Level) விட மிகுதியாக இருக்கும். பிழைப்பு மட்டச் செலவிற்கும் மிகுநத அளவில் கூலியைப் பெறும் தொழிலாளர்கள மிகுதியாகக் குழநதைகளைப பெறுவா. அதன விளைவாக மக்கள தொகை மிகும். தொழிலாளர்களின எணணிக்கையும் மிகுதியாகிவிடுகிறது. இவவாறு கூலி நிதியை அடிப்படையாகக் கொணடு தொழிலாளாகளின் அளிப்பு அமைகிறது எனறு தொன்மைப் பொருளியலறிஞர்கள் கூறியுள்ளனர்.

கூலிநிதியை, முதலீட்டு அளவு நிருணயிக்கும் காரணியாகும் (Level of Investment Decides the Wage Fund) ஒவவொரு தொழிலையும் தொடங்கத் திட்டமிடும்பொழுது, கூலிக்கென்று நிதியை ஒதுக்கிக் கொள்வதுணடு. தொழிலாளாகளை வேலைககு அமாத்திக கொளவதற்காக ஒதுக்கபபடும் தொகை கூலிநிதியெனறு கருதப்படுகிறது. மொத்த முதலீட்டின் அளவையொட்டியே கூலிநிதியின அளவும் நிருணயிக்கப்படும் என்று தொன்மைப் பொருளியலறிஞர்கள குறிபபிட்டுள்ளனர். முதலீட்டிற்கெனறு ஒதுக்கபபடுகினற மொத்தத் தொகையில ஒருபகுதிதான கூலிநிதியாகும் எனறும் தொனமைப் பொருளியலறிஞர்கள குறிப்பிட்டுள்ளனா.

தொன்மைப் பொருளியலறிஞர்களின வளர்ச்சிக் கோட்பாட்டை மிகச் சுருக்கமாகக் கீழ்க்காணுமாறு விளக்க முற்படலாம். தொன்மைப் பொருளியலறிஞர்கள் சுட்டிக் காட்டும் வளர்ச்சிப் புானதை முதலாளித்துவ உற்பத்தி முறைக்கு இட்டுச் செல்

கிறது. முதலாளித்துவ உற்பத்தி முறையில் தனியார் துறையினர் இலாப வேட்கையினால்தான் பொருளியல் நடவடிக்கைகளை மேற்கொள்கின்றனர். இலாப விகிதம் எந்தவித விளைவுகளைத் தோற்றுவிக்கிறது எனபதையும் தொன்மைப் பொருளியலறிஞர்கள் கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளனர்.

dR – dI – dK – dS – dW – dL – dR இலாபவிகித அதிகரிப்பு – முதலீடு அதிகரிப்பு – மூலதன இருப்பு -தொழில் நுட்ப வளர்ச்சி-கூலிநிதி அதிகரிப்பு-தொழிலாளர் அளிப்பு அதிகரிப்பு-இலாப விகிதமகுறைதல.

இவவாறு இலாப விகிதம அதிகரிப்பு என்ற கூற்றில தொடஙகிய பொருளியல் வளர்ச்சி நடவடிககை பல விளைவுகளை ஏறபடுத்தி முடிவில் 'நிலையான நிலை' அலலது 'முடிவான நிலை' (Stationary State) என்ற இறுதிக்கட்டத்தில் முடிவுபெறுகிறது 'நிலையான நிலை' என்பது பொருளாதார வளர்சசிக கட்டத்தில் 'முதிர்ச்சி நிலையைக் (Mature of Economy) குறிககிறது எனறு தொனமைப் பொருளியலறிஞர்கள குறிப்பிட்டுள்ளனா.

சு.வே பா.

**தொன்மைப்பொருளியலறிஞர்கள்:** ஆதம சுமித்து, மால்தசு, தாவீது இரிககாடோ, சே.எசு. மில், சே.பி.சே. முதலிய பொருளியல் அறிஞர்களைத தொன்மைப் பொருளாதாரப் பள்ளியைச் (Classical School) சார்ந்தவர்கள என்று அறிஞாகள குறிப்பிட்டுளளனர். அவர்களின் கோட்பாடுகளில் குறிபபிடத் தகுந்த அளவிற்குக் கருத்தொற்றுமை நிலவியது.

'தன்னலம்' என்பது இயல்பாகவே மனிதர்களிடம காணபபடும் பண்பாகும். இதனடிப்படையில 'இயல்பூக்கம்' தோன்றிச,சமூகம் முன்னேற்றப் பாதையில் செல்லத் தொடஙகுகிறது. சமூகத்தைச் சுதந்திரமாகச் செயறபட அனுமதிக்கும பொழுது, கிடைப்பருமையான வளங்களும, உழைப்பும் முறையாகவும், சிக்கனமாகவும் பயனபடுததப்படுகின்றன. முடிவில நாடும் நாட்டுமககளும முனனேற்றப் பாதையில் பயணம் செய்ய வாய்ப்பு ஏற்படுகிறது. இதுவே, தொனமைப பொருளியலறிஞர்தம் கருததுகளின சாரமாகும.

**ஆதம் சுமித்து** (1723-1790): இவர், பொருளியற சிந்தனை வரலாற்றில் சிறப்பான இடத்தைப் பெறறுள்ளார். இவர் சிறந்த பேசசாறறல் மிகுந்தவராகவும் எழுத்தாளராகவும் திகழந்தார்; கிரேக்க, இலத்தீன், பிரெஞ்சு மொழிகளிலுள்ள இலக்கியஙகளையும் தத்துவ நூல்களையும் தெளிவுறக் கற்றவராவார். நாடுகளின் செல்வம் (Wealth of Nations-1776), நெறியுணர்வுக் கோட்பாடு (System of Moral Philosophy-1759), அரசியற் பொருளாதாரக் கொளகை ஆய்வு (Political Discourses-1752) ஆகியவை ஆடம்சுமித்தின் நூல்களாகும். இவற்றிலிருந்து ஆடம்சுமித்தின பொருளியற் கருததுகளை நன்கு அறிந்துகொளள முடிகிறது.

உழைப்பின முதன்மையை வலியுறுத்திக் கூறிய ஆடம்சுமித்து, உழைப்பின் அடிப்படையிலே தான நாட்டின செல்வநிலையே அமைகிறது எனற கருத்தைத் தீர்ககமாகக் கூறினார்; உழைப்புச் சக்தியின அளவும், உழைப்புச் சகதியின தரமும நாட்டின பொருளாதார வளர்சசி வேகத்தை நிருணயிககும் காரணிகளாகும் என்று கருதினார். எனவேதான், மக்களின வாழககைக்குத் தேவையான அடிபபடை வசதிகளையும பிற வசதிகளையும் வழஙகுகிற நிதியாக உழைப்புச சகதி என்ற காரணி விளங்குகிறது' என்று ஆடமசுமித்து கூறியுளளாா.

**உழைப்பைப் பகுத்தாய்தல்:** உழைபபைப் பயனுள்ள உழைப்பென்றும், பயனற்ற உழைப்பெனறும் இரண்டாக ஆடம்சுமித்து பிரித்துளளார். பருப்பொருள் உற்பத்தியைத் தரும் உழைப்பு மட்டும் பயனுள்ள உழைபபாகும். பருப்பொருளை வெளிக்கொணராத எந்தப் பணியினையும் பயனதரா உழைப்பென்று ஆடம்சுமித்து கருதுகிறாா. இந்தவகையில ஆசிரியரின பணி, மருத்துவரின மருத்துவம முதலியவை பயன்தரா உழைப்பாகவே கருதப்பட்டன. உழைப்புச செலவினை அடிப்படையாகக் கொண்டே பணடங்களின மதிப்பு நிருணயிககப்படுகிறது எனறு ஆடம்சுமித்து குறிப்பிட்டுளளார். ஒரு பேனாவை உற்பத்தி செய்வதறகு, ஒரு தொழிலாளிக்கு மூனறு மணி நேர உழைபபுச செலவிடப்படுவதாகக் கொணடால் அவ்வாறு செலவிடப்படுகினற உழைப்பின அளவைக் கொண்டு பணடஙகளின மதிப்பு நிருணயிக்கப்பட்டது

**உழைப்புப் பகுப்பு:** உழைப்புப் பகுப்புக் (Division of Labour) கருத்தை ஆதம்சுமித்து விளககியுள்ளார். தொழிலாளர்களின் உறபததித்திறனை மிகைப்படுததுவதற்கு வழிவகையினை ஆராயநத ஆதம்சுமித்து உழைப்புப பகுப்புக கருத்தை விளக்க முற்பட்டார். உற்பத்தி நடவடிககைகளை நுட்பமுறையில் சிந்தித்து, பலப்பல சிறு கட்டங்களாகப் பிரிப்பதை வேலைப பகுப்பு என்று குறிப்பிட்டுளளார். குணடூசித் தொழிலை எடுத்துக்காட்டாகக் கொணடு, ஒரு தொழிலாளி, குண்டூசி உற்பத்தியின் அனைத்து நடவடிக்கைகளையும மேற்கொள்ளும்பொழுது, அவரின் ஒரு நாளைய உற்பத்தி 10 குணடூசிகளேயாகும். ஆனால், குண்டூசித் தொழிற்கூடத்தில வேலைப பகுப்புத் திட்டத்தைச் செயறபடுத்தும்பொழுது, சராசரியாக ஒரு தொழிலாளியின் ஒரு நாளைய உற்பத்தி 12 இராத்தல் குண்டூசிகளாகும் என்று விளக்கியுள்ளார்.

**மதிப்பு வகைப்படுத்தப்படுதல்:** ஆதம்சுமித்து பண்டங்களுக்கான மதிப்பை 1. பயன்வழி மதிப்பு, 2. பரிமாற்ற மதிப்பு (Value-in-use and Value-in-Exchangee) என இரண்டாக வகைப்படுத்தியுள்ளார். மக்களுக்குப் பெரிதும் பயனளிக்கும் பண்டங்கள் என்ற வகையில் நீர் குடிப்பதற்கும், காற்று சுவாசிப்பதற்கும், சூரிய ஒளி தாவரங்கள மற்றும் உயிரினங்கள் வாழ்வதற்கும் பெரிதும் பயன்படுகினறன. எனவே, இவையனைத்தும் பயன்வழி மதிப்பைப் பெற்ற பண்டங்களாகும். பண்டங்களைப் பரிமாற்றம் செய்யும் பொழுது, ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் பரிமாற்றம் செய்து கொளளப்படும். எடுத்துக்காட்டாக, ஒரு கிலோ அரிசியை உரு.4-க்கு வாங்குவதாகக் கொண்டால் அதில், அரிசியின் பரிமாற்ற மதிப்பு உரு.4 எனக் கணக்கிடப்படுகிறது. பரிமாற்ற மதிப்பு எவ்வாறு நிருணயிக்கப்படுகிறது என்று ஆடம்சுமித்து குறிப்பிடும்பொழுது எடுத்துக்காட்டாக, ஒரு நாற்காலியை உற்பத்தி செய்வதறகு ஒரு தொழிலாளி எட்டு மணி நேரம் உழைப்பதாகக் கொண்டு, அவவாறு செலவிடப்படும் உழைப்பின் அடிப்படையில நாற்காலியின் பரிமாற்ற மதிப்பு நிருணயிக்கப்படுகிறது என்கிறார்.

**வாரக் கோட்பாடு:** நிலத்திலிருந்து பெறப்படுகின்ற நிகர உற்பத்தி (Net Production) வாரம் எனக் கணக்கிடப்படுகிறது எனறு ஆதம்சுமித்து விளக்கியுள்ளார். நிலத்தின் வளத் தன்மையின காரணமாகவோ வேறு சிறப்பான தன்மையின காரணமாகவோ நிலத்திலிருந்து நிகர உற்பத்தியைப் பெறமுடிகிறது 'நிலத்தில் பாடுபடும் தொழிலாளர்களின் தேவைக்கும் மிகுதியாகவே உணவுப்பண்டங்களை நிலத்திலிருந்து உற்பத்தி செய்ய முடிகிறது. இந்த நிகர உற்பத்தியில் ஒரு பகுதி நிலவுரிமையாளருக்கு வாரமாக ஒதுக்கபபடுகிறது' எனறு ஆதம் சுமித்து 'நாடுகளின் செலவம்' என்ற தமது நூலில் குறிப்பிட்டுளளார்.

**கூலிக் கோட்பாடு:** கூலி நிருணயம் குறித்து ஆதம்சுமித்து முடிவான கருத்தைக குறிப்பிடவில்லை. தொழிலாளாகளின் அளிப்பு, தொழிலாளர்களுக்கான தேவை இவ்விரு காரணிகளின் அடிப்படையில் கூலி நிருணயம செய்யப்படுகிறது எனறு குறிப்பிட்டுள்ளார். பிறிதோர் இடத்தில் தொழிலாளர்களின் எணணிககை மிகுதி; தொழிலதிபர்களின் எண்ணிக்கை குறைவு. எனவே, தொழிலாளர்களின பேரசக்தி (Bargaining Power) குறைநது காணப்படுகிறது. தொழிலதிபர்களின் பேரசக்தி மிகுதி; எனவே பேரசக்தியை மிகுதியாகப் பெற்றுள்ள தொழிலதிபர்கள், பிழைப்பு மட்டக் கூலியை (Subsistence Wage Level) நிருணயம் செய்கின்றனர். வாழக்கைச் செலவிற்குச் சமமான அளவில்தான் கூலி அமையும் எனறு ஆதம் சுமித்து குறிப்பிட்டுள்ளார்.

**வரிவிதிப்புக் கொள்கை:** ஆதம்சுமித்து வரி விதிப்புக் கொள்கையின் சிறந்த கூறுகளைத் தெளிவாகச் சுட்டிக்காட்டியுள்ளார். 1) திறன் விதி (Canon of Ability)யின்படி, மக்களுடைய வரிசெலுத்தும் திறனின் அடிப்படையில்தான் வரித்தொகை நிருணயிக்கப்பட வேணடும். 2) உறுதிவிதி ( Canon of Certainty)யின்படி, குடிமக்களுக்குத் தங்களுக்கு எந்த அடிப்படையில் வரி நிருணயிக்கப் படுகிறது, எப்படி வசூலிக்கப் படுகிறது, எந்தக் காலத்தில் வரியைச் செலுத்த வேண்டும் எனபன போன்ற செய்திகள் உறுதியாகத் தெரிந்திருக்கவேண்டும். அரசாங்கமும் தான் வரிமூலம் பெறும் தொகையைப் பற்றித்தெளிவாகவும் உறுதியாகவும் தெரிந்திருக்கவேண்டும். 3) வசதி விதியின்படி (Canon of Convenience) வரி செலுத்துவோரின் வசதிக்கேற்ப வரியை வசூலிக்க வேண்டும். 4) சிக்கன விதி (Canon of Economy)யின் படி வரியை வசூலிப்பதற்கென்று ஆகும் செலவு மிக மிகக் குறைவாக இருக்க வேண்டும்.

**சமூகத்தின் பிரிவுகள்:** நிலக்கிழார், தொழிலாளர், தொழிலதிபர் என்று மூன்றுவகையான பிரிவுகளைக் கொணடதே சமூகம்; இதில் நிலக்கிழார் மிகுதியான வாரத்தையும் தொழிலதிபர் மிகுதியான ஆதாயத்தையும், தொழிலாளர் மிகுந்த கூலியையும் பெறுவதில் குறியாயிருப்பார்கள் என்பது ஆதம் சுமித்தின கருத்தாகும்

**இயல்பு விலையும், அங்காடி விலையும்:** பணடங்களுக்குரிய விலையை இரண்டாக வகைப்படுத்தியவர் ஆதம்சுமித்து. இயல்பாக, பண்டங்களின் விலை அவற்றின் உற்பத்திச் செலவிற்குச் சமமாக அமையும். நீண்ட காலத்தில் ஒவ்வொரு பண்டத்திற்கும் இயல்பு விலை தோன்ற வாய்ப்பு உள்ளதென்று ஆதம்சுமித்து குறிப்பிட்டுளளார்.

**இயல்பூக்கமும் திட நம்பிக்கையும்:** வாழ்க்கையில் முன்னேறவேணடும், பல சோதனைகளிலிருந்தும் வெற்றி பெறவேணடும் எனபதுமக்கள் மனத்தில்இயலபாகத் தோன்றும் உணர்வுகளாகும். அவற்றின் அடிப்படையில மக்கள தம்மிடமுள்ள பணத்தையும் நேரததையும் உழைப்பையும் சிக்கனமாகவும ஆதாயம் அளிப்பனவாகவும் பயனபடுத்திக் கொளளவே விரும்புகினறனர். முடிவில் சமூகம் ஒட்டுமொத்தமாக வளர்ச்சிப் பாதையை நோக்கித் திட நம்பிககையுடன் வீறுநடை போடுகிறது என்ற கருத்தைத் தெளிவாக முழுமையாக வலியுறுத்திக் கூறியவர் ஆதம் சுமித்து ஆவார். அவர் கருத்துப்படி பொருளியல் நடவடிக்கைகள அனைத்தும் இயல்பானவையாகும்;

பல்வேறு புத்தகங்களும் கருவிகளும் சமூகத்திற்கு நன்மை பயப்பனவாகவே உள்ளன. 'தன்னலம்' என்ற மிக அடிப்படையான பண்பு நலனிலிருந்துதான் பொருளாதார நடவடிக்கைகள் தோன்றுகின்றன என்று ஆதம்சுமித்து நம்பினார். உழவன் தன் வயிற்றை நிரப்புவதற்காகத்தான் வேளாண்மையில் ஈடுபட்டான். நெசவாளி தன் துணித் தேவையைச் சமாளிப்பதற்குத்தான் நெசவு செய்யமுற்பட்டான். பின்னர்ப் படிப்படியாக வேளாண்மைத்துறை வளர்ச்சியடைந்தது; நெசவுத் தொழில் மேம்பட்டது என்று ஆதம்சுமித்து குறிப்பிட்டுள்ளார். பண்டமாற்று முறையில் காணப்பட்ட பல்வேறு சிக்கல்களைப் போக்கிக்கொள்ளும் முகத்தான் மனிதன் சிந்திக்க முற்பட்டான் 'பணம்' என்ற; அடிப்படையான கூற்றைக் கண்டறிந்தான். இதுபோன்ற கருத்துகளை விளக்கி, மனிதனின் இயல்பான நடவடிக்கைகளின் தன்மைகளையும், அவற்றால் பெறப்படும் நன்மைகளையும் ஆதம் சுமித்து சுட்டிக்காட்டினார். எனவே தான் ஆதம்சுமித்தைத் திட நம்பிக்கை கொண்ட இன்ப நோக்குடையவர்(Optimist) என்று அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

**சேன் பாப்டிசுட்டு சே (கி.பி. 1767-1832):** பிரெஞ்சு நாட்டில் பிறந்த சே.பி.சே. என்ற அறிஞர் ஆதமசுமித்தின் நூல்களை நன்கு படித்தறிந்தார். ஆதம்சுமித்தின் கருத்துகளில் காணப்பட்ட முரண்பாடுகளைச் சுட்டிக்காட்டினார்.'அரசியற் பொருளாதாரக் கட்டுரைகள்' (Traite 'd' Economic Politique-1803), 'முழுமையான அரசியல பொருளாதார நடைமுறைத் திட்டங்கள்'(A Course Complete 'd' Economic Politique Practique-1828) முதலியன இவர்தம் நூல்களாகும்.

**பொருளாதார அறிவியலின் பரப்பு.** அரசியலவாதிகள், திட்டமிடுவோர், வணிகத்தில் ஈடுபட்டுள்ளவர்கள், தொழிலதிபர்கள், பொதுமக்கள்-இவ்வாறு பல்வேறு துறையிலும் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் நடைமுறையில் பயனளிக்கும் உண்மைகளைத் தெளிவாக விளக்குவது பொருளாதார அறிவியலாகும் என்று சே பி சே. குறிப்பிட்டுள்ளார் பண்ட உற்பத்தி, நுகர்வுப் பகிர்வு முதலிய பொருளாதார நடவடிக்கைகளைப் பற்றிப் பொருளியலில் ஆய்வுகள் செய்யப்படுகின்றன. இந்நடவடிக்கைகளோடு தொடர்புடைய விதிகள் விளக்கப்பட்டுள்ளன. உற்பத்திக் காரணிகளின் தன்மைகள் சுட்டிக்காட்டப்படுகின்றன. நிலம், உழைப்பு, முதல், தொழில் அமைப்புகள் ஆகிய நான்கும் உற்பத்திக் காரணிகளாகும். இவை பயன்படுத்தப்படுவதையொட்டியே பண்ட உற்பத்தி அமைகிறது. உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்துவதற்கு, அவற்றுக்கு ஊதியம் வழங்கவேண்டும். அந்த வகையில் நிலத்திற்கு வாரமும், உழைப்பிற்குக் கூலியும், முதலுக்கு வட்டியும், தொழில் அமைப்புகளுக்கு ஆதாயமும் வழங்கப்படுகின்றன. வாரம், கூலி, வட்டி, ஆதாயம்-இவை எவ்வாறு நிருணயிக்கப்படுகின்றன என்பதைப் பொருளாதாரம் விளக்குகிறது என்று சே.பி.சே. விளக்கியுள்ளார்.

**தொழிற்றுறையே இன்றியமையாதது**' ஆதம்சுமித்து வேளாண்மைத்துறையே முக்கியமான துறையென்று கூறினார். சே பி சே. இக்கருத்தை மறுத்து நாட்டின் வளர்ச்சி வேகம் மிகுதியாகவும், தொழிலாளர்களுக்கு நிலையான வருமானத்தை வழங்கவும், கனி வளங்களும், உற்பத்திக் காரணிகளும் சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதற்கும் தொழிற்றுறை இன்றியமையாததாகும் என்று குறிப்பிட்டுள்ளார். தொழிற்றுறையைப் புதுப்பிக்கும்பொழுது புதிய இயந்திரங்கள் அறிமுகப்படுத்தப்படுகின்றன. அவை தொழிலாளர்களுக்கான தேவையைக் குறைத்துவிடுகின்றன. அதன் விளைவாகத் தொழிலாளர்கள் வேலையிழக்க வேண்டிய நிலை தோன்றுகிறது. தொழிற்றுறையைப் புதுப்பிக்கும்பொழுது புதிய தொழில்களும் தொடங்கப்படுகின்றன, புதிய தொழிற்கூடங்களில் வேலைவாய்ப்புகள் தோன்றுகின்றன என்றும் சே.பி சே. குறிப்பிட்டுள்ளார். அரசாங்கமும் தொழில் நிறுவனங்களும் வளர்ச்சித் திட்டங்கள், தொழிலாளர் நலத் திட்டங்கள் ஆகியவற்றில் ஆர்வம் காட்ட வேண்டும்.வளர்ச்சித் திட்டங்களின்மூலம் கிராமப்புறங்களில் வேலைவாய்ப்புத் தோன்றுகிறது தொழிலாளர் நலத் திட்டங்களின் பயனாகத் தொழிலாளர்களின் உண்மை வருவாய் பெருகுகிறது, அவர்களின் வாழ்க்கைத் தரம் உயருகிறது என்று இவர் விளக்கியுள்ளார்.

**சந்தை விதி:** 'பண்டங்களின் அளிப்பே அவற்றிற்கான தேவையை உருவாக்குகிறது' (Supply Creates its own demand)என்பது சே.பி.சே.யின்சந்தை விதியாகும் (Law of Market). பண்டங்களை உற்பத்தி செய்யும்பொழுது, உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்துவதற்காகப் பணம் செலவிடப்படுகிறது. காரணிகளால் பெறப்படும் தொகை, பண்ட நுகர்விற்காகச் செலவிடப்படும் என்பது சே.பி சே யின் சந்தை விதி சுட்டிக்காட்டும் கருத்தாகும்.

**எடுகோள்கள்:** கீழ்க்காணும் எடுகோள்களின் அடிப்படையில் சந்தை விதி விளக்கப்பட்டுள்ளது.

1) தலையிடாக் கொள்கை (அரசின் தலையீடு இல்லை, விலைக் கட்டுப்பாடு இல்லை), 2) வருமானம் முழுமையும் நுகர்வில் செலவிடப்படுகிறது, 3) பணம் முழுமையும் பதுக்கப்படாமல் புழக்கத்தில்

உள்ளது, 4) பிறநாட்டுப் பொருளாதாரத்துடன் எந்தவித தொடர்பும் இல்லை (Closed Economy).

பண்டங்களை உற்பத்தி செய்யும்பொழுது நிலம், உழைப்பு, மூலதனம், தொழில் அமைப்பு முதலிய காரணிகள் பெறுகின்ற வாரம், கூலி, வட்டி, ஆதாயம் முதலிய வருமானம் முழுமையும் பண்ட நுகர்வில் செல விடப்படுகிறது என்று சே.பி.சே. குறிப்பிட்டுள்ளார். மிகை உற்பத்தி (Over Production) ஏற்படுவதற்கு வாய்ப்பே இல்லை தேவையைப் பெற்றுள்ள பண்ட (Demanded Goods) உற்பத்தியை மட்டுமே உற்பத்தி என்று சே.பி.சே. குறிப்பிட்டுள்ளார். சந்தைகளில் நிலவும் பண்டங்களுக்கான தேவையை அறியாமல் தொழிலதிபர்கள் உற்பத்தியில் ஈடுபடமாட்டார்கள் என்றும், உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்கள் தேங்கிவிடுமாயின் அது உற்பத்தியாளரின் குறைதான் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

**செரிமி பெந்தம்** (கி.பி. 1748-1832): ஆங்கில நாட்டில் தோன்றிச் சட்டத் துறையில் பட்டம் பெற்று, சமூகச் சீர்திருத்தத்தில் ஆர்வம் காட்டியவர் செரிமி பெந்தாம். இவர்தம் நூல்கள்: 1) கடும் வட்டிக்கு ஆதரவு வாதம் (Defence of Usury-1787), 2), சட்டம் மற்றும் நெறி முறைகளுக்கு அறிமுக நூல் (An Introduction to the Principles of Morals and Legislation-1789),3) நிலவரிக் கொள்கைக்கு எதிர்ப்பு வாதம் (Protest Against Land Taxes-1795), 4) வறியோர் பாதுகாப்புச் சட்டம் பற்றிய ஆய்வு (Observations on the Poor Bill of Mr. Pitt-1797), 5) அரசியல் பொருளாதாரம் பற்றிய அறிக்கை (A Manual of Political Economy-1798).

**இன்பத்தை நிருணயிக்கும் காரணிகள்:** மக்கள் இயல்பாகவே இன்பத்தை நாடும் தன்மையுடையவர்கள் என்ற கருத்தில் அசையாத நம்பிக்கை கொண்டவர் செரிமி பெந்தாம் இன்பத்தை நிருணயிக்கும் காரணிகளை மிக எளிய நடையில் பெந்தாம் சுட்டிக் காட்டியுள்ளார். இவரின் கருத்துப்படி 14 காரணிகளே இன்பத்தை நிருணயிக்கின்றன. அவை 1) சொத்து, 2) எதிர்பார்ப்பு, 3) கற்பனை, 4) உழைப்பில் நாட்டம், 5) சான்றோர் உறவு, 6) நட்புடன் பழகுதல், 7) நினைவாற்றல், 8) துன்பத்தைத் தாங்கிக்கொள்ளுதல், 9) ஏமாற்றத்தைத் தவிர்த்தல், 10) எளியோருக்கு இரங்குதல், 11) அதிகாரம் செலுத்துதல், 12) சிக்கனமாய் வாழ்தல், 13) பணத்தைச் சிக்கனமாகவும் திறமையாகவும் பயன்படுத்துதல், 14) சமூகப் பொருளியல் அமைப்புகளைப் புரிந்து கொள்ளுதல் ஆகியனவாகும். இவ்வாறு குறிப்பிடப் பட்டுள்ள 14 இயல்புகளையும் தெளிவாகப் புரிந்து கொள்ளும் தனி மனிதனும், சமூகமும் இன்பமுடன் வாழமுடியும் என்று திடமாக நம்பினார் பெந்தம். மக்கள் பெறுகின்ற இன்பத்தை அதன் தன்மையை யொட்டி அளவிடமுடியும் என்றும் விளக்கியுள்ளார்.

**மட்டற்ற மகிழ்ச்சி நிலை:** தூய வழியில், தொலை நோக்கில் பெறப்படும் மகிழ்ச்சியை 'மட்டற்ற மகிழ்ச்சி நிலை' என்று பெந்தம குறிப்பிட்டுள்ளார். மட்டற்ற மகிழ்ச்சி நிலையைப் பெறுவதில் மக்கள் நாட்டம் கொள்ளுதல் வேண்டும். அரசாங்கமும் தூய வழிமுறையில் தொலைநோக்கில் மக்களுக்கு நலன்பயக்கும் திட்டங்களை வகுத்துச் செயற்படுத்த வேண்டும் என்ற கருத்தைப் பெந்தம் பெரிதும் வலியுறுத்தியுள்ளார் பெரும்பான்மையான மக்களுக்குப் பயனளிக்கும் திட்டங்களே சிறந்தவை என்றும், குறைவான மக்களுக்கு மிகக் குறைந்த அளவு இடர்களைத் தோற்றுவிக்கும் திட்டங்களும் ஓரளவிற்குச் சிறந்தவை என்றும் பெந்தம் குறிப்பிட்டுள்ளார். எழுத்துரிமை, பேச்சுரிமை, சமய சுதந்திரம் முதலியவற்றில் அரசாங்கம் தலையிடுவதை பெந்தம் எதிர்த்துள்ளார்.

**தாவீது இரிக்கார்டோ** (கி.பி. 1772-1823): இவர் தம் நூல்கள்: 1) பொன்னின் மிகுந்தவிலையே வங்கிப் பணத்தின் மதிப்புக் குறைந்தமைக்குச் சான்றாக விளங்குகிறது (The High Prices of Bullion-A Proof of the Depreciation of Bink Notes-1810), 2) திரு. போசன் குவெடு என்ற அறிஞரின் ஆயவிற்குப் பதிலுரை (Reply to Mr. Bosan Quet 's Practical Observations-1811), 3) தானியத்தின் குறைந்த விலைக்கும் பங்குச்சந்தையில் நிலவும் இலாபத்திற்கு மிடையே உள்ள தொடர்பு (Essay on the influence of a low Price of corn on the Profit of stock-1815), 4) சிக்கனமான பாதுகாப்பான பொருளியல் நிலையை அடைவதற்குத் திட்ட அணுகுமுறை (Proposals for Economical and secure Economy-1816), 5) அரசியற் பொருளாதாரக் கோட்பாடும் வரிவிதிப்புக் கோட்பாடும் (The Principles of Political Economy and Taxation-1817), 6) வேளாண்மைக்குப் பாதுகாப்பு (On Protection to Agriculture-1822), 7) தேசிய வங்கியை நிறுவ ஒரு திட்டம் (A Plan for the Establishment of National Bank-1823), 8) மால்தசின் அரசியற் பொருளாதாரக் கோட்பாடுகள் பற்றிய குறிப்புகள் (Notes on Malthus's Principles of Political Economy-1823).

**வாரக் கோட்பாடு:** அழிக்கமுடியாத, மூலச் சக்தியைப் பெற்றுள்ள வளம் பொருந்திய நிலத்தைப் பயன்படுத்துவதற்காக, நிலத்தின் உற்பத்தியில் ஒரு பகுதி நிலக்கிழாருக்கு வாரம் என்ற பெயரில் வழங்கப்படுகிறது. நில வளவேறுபாடு வாரம் தோன்றுவதற்கான அடிப்படை என்பது அவர்தம் கருத்து.

ஒரு தீவில மக்கள குடியேறுவதாகவும் அத்தீவில் அ, ஆ, இ என்றமூன்று தரமுள்ள நிலங்கள் இருப்பதாக வும் அவற்றுள் 'அ' நிலம் வளம் பொருந்திய நிலம்; 'ஆ' நிலம் இரண்டாம் தரமுள்ள நிலம்; 'இ' நிலம் மூன்றாம் தரமுள்ள நிலம்;இவற்றின் உறபத்தித்திறன் வேறுபாடு வாரம் எனக் கணக்கிடப்படுகிறது என்றும் இரிக்கார்டோ விளக்குகிறார். குறிப்பிட்ட அளவு செலவில் 'அ' நிலத்தில் 100 கண்டி உற்பத்தி என்றும், 'ஆ' நிலத்தில் 80 கண்டி உறபத்தி என்றும், 'இ' நிலத் தில் 60 கண்டி உற்பத்தி என்றும் வைத்துக்கொளள லாம். பொருளின்விலை C தர நில உற்பத்திச் செல வுக்குச் சமமாக இருக்குமாதலால், 'அ' நிலத்திற்கான, வாரம் 40 கணடி எனறும், 'ஆ' நிலத்திறகான வாரம் 20 கண்டி என்றும், 'இ' நிலம் வாரமறற நிலம் (No rent land) என்றும் இரிக்கார்டோ குறிப்பிட்டுள்ளார்.

**மதிப்புக் கோட்பாடு:** பண்டங்களின மதிப்பை அவற்றை உற்பத்தி செய்வதற்குச் செலவிடப்படு கின்ற உழைப்பு நிருணயிக்கிறது என்றும், பரிமாற்ற மதிப்பையே பொருளாதாரத்தில் முக்கியமான கூறு என்றும் இரிக்கார்டோ குறிப்பிட்டுள்ளார். இவர்தம் மதிப்புக் கோட்பாடு 'உழைப்புச் செலவு மதிப்புக் கோட்பாடு' (Labour Cost Theory of Value) என்று குறிப்பிடப்படுகிறது.

தொன்மையான நாணயங்கள, ஓவியங்கள், கிடைப் பருமையான நூல்கள்-ஆகியவற்றிற்கான மதிப்பிற கும் உழைப்புச் செலவிற்கும் தொடர்பில்லை என்றே இரிக்கார்டோ கருதுகிறார். இந்த வகைப் பணடங களுக்கான தேவை நிலையையும, அளிப்பையும் அடிப்படையாகக் கொணடு இவற்றின் மதிப்பு நிருண யிக்கப்படுகின்றது என்று இரிக்கார்டோ குறிபபிட்டுள் ளார். பண்டங்களின் அளிபபு மிகுதியாகும பொழுது அவற்றின் மதிப்புக் குறைநதுவிடும் என்ற கருத்தை இரிக்கார்டோ ஏறகவிலலை. அளிப்பு மிகுவதன விளைவாகப் பணடஙகளின மதிப்புக் குறைவது இடைக்காலமான நிலையாகும். அதுவும் காலப் போககில், போட்டிச் சநதையில மாறிவிடும என்றும் இரிக்கார்டோ குறிப்பிட்டுளளார்.

**கூலிக் கோட்பாடு:** உழைப்புக காரணியின அடிப் படையான தன்மையையொட்டி பிழைப்பு மட்டக் கூலி (subsistence wage) வழங்கப்படும் எனறு இரிக் கார்டோ குறிப்பிட்டுளளார். தொழிலாளர்கள, தமது உழைப்பைச் சேமித்து வைககமுடியாது, தமது உழைப்பைச் செலவிட்ட பினனர்ப் பெறப்படும் கூலியை வைததுத்தான அன்றாடச் செலவுகளைத் தொழிலாளர்கள சமாளித்தாக வேண்டும். மேலும், தொழிலாளர்களின் எண்ணிக்கை மிகுதியாக உள்ளது. இக்காரணங்களின் விளைவாகத் தொழிலாளர்களின பேரசக்தி (bargaining Power) மிகவும் குறைவாகும். மாறாகத் தொழிலதிபர்களின் எணணிக்கை குறை வாக உள்ளது தொழிலதிபர்கள், உழைப்புச் சக்திக்கு மாற்றாக இயந்திரங்களைப் பயனபடுத்திக் கொள்ள முடியும். இதன்விளைவாகத் தொழில் அதிபர்களின் பேரசக்தி மிகுதி. எனவே, தொழிலதிபர்கள் மிக எளிதில் பிழைப்பு மட்டக் கூலியைத் தொழிலாளர் களுக்கு நிருணயம் செய்கிறார்கள் என்று இரிக் கார்டோ குறிப்பிட்டுள்ளார்,

**வருக்கப்போர்:** 'கொள்கைகள்' என்ற நூலில இரிக் கார்டோ 'வருக்கப்போர்' பற்றிய கருத்துகளை கூறி யுள்ளார். நிலக்கிழார் மிகுதியாக வாரம் வசூலிப்பதில் குறியாயிருப்பர் தொழிலதிபர்கள் தொழிலாளர் களுக்குக் குறைந்த கூலியை நிருணயிப்பதில் குறியா யிருப்பார்கள்; கூலி உயர்வு எப்பொழுதும் தமது ஆதாயத்தைக் குறைத்துவிடும் என்று நம்புவார்கள. தொழிலாளர்கள் கூலி உயர்வைப் பெறுவதில குறி யாயிருப்பர். இவவாறு ஒருவரின் நலன் மறறவரின நலனைப் பாதிப்பதாக ஒனறிற்கொன்று முரணாக அமைகிறது எனறு இரிக்கார்டோ குறிப்பிட்டுளளாா.

**வரிக்கொள்கை:** வரியின் சுமை ஒரு குறிப்பிட்ட மனிதாமீதோ, சமூகத்தின் மீதோ விழுந்துவிடுவதாக இருத்தல் கூடாது வரிச்சுமை பரவலாக்கப்படுதல வேணடும். மூலதனத்திரட்சியைப் பாதிகும் வகையில் வரிச்சுமை அமையக கூடாது. நுகர்வுப் பண்டங களின்மீது மிகுந்த வரியை விதிக்ககூடாது. குறைந்த வருவாயுளள மக்களின நுகர்வைக கட்டுப்படுத்தும் வகையில அடிப்படைத் தேவைப் பண்டங்களின்மீது மிகுந்த வரி விதித்தல் கூடாது. இந்த வகையான கருததுகளை இரிக்கார்டோ விளககியுளளார்.

**பன்னாட்டு வாணிகம்** பனனாட்டு வாணிகம் தோன்றுவதறகான காரணத்தைத் தெளிவாக விளக் கியவர் தாவீது இரிககாரடோ. ஒவவொரு நாடும் ஒவ் வொரு வகையான இயற்கையமைப்பைக் கொண் டுள்ளது. அதன்விளைவாகக் குறிபபிட்ட பணட உறபத்தியில் ஈடுபடுவதில துணையான நிலை நிலவு கிறது. எடுத்துக்காட்டாக, இநதியாவில் சணல உற் பத்தி செய்வதற்குச் சாதகமான நிலை நிலவுகிறது இயற்கை அமைப்பு, மணணின் வளம், கால நிலை, பருவ மழை முதலிய கூறுகள, சணலை மிகக் குறைந்த செலவில் உற்பததி செய்வதறகுச் சாதக மான நிலையை இந்தியா பெற்றுள்ளது என்பதைக காட்டுகினறன. சணலைப் பிறநாடுகளில உற்பத்தி செய்ய உற்பத்திச் செலவு இந்திய உற்பத்திச் செலவைவிட மிகுதியாக ஆகிறது. எனவே, பிறநாடு கள் சணல் உற்பத்தி செய்துகொளவதைவிட இந் தியாவிலிருநது இறக்குமதி செய்து கொள்ளுவது இலாபகரமானதாகும. இவ்வாறு சாதகமான உற்

பத்திநிலையினை அடிப்படையாகக் கொண்டு பேரளவு உற்பத்தியும், பன்னாட்டு வாணிகமும் தோன்று கின்றன என்று இரிக்கார்டோ குறிப்பிட்டுள்ளார்.

**பணத்தின் அளிப்பும், பணத்தின் மதிப்பும்:** பண வெளியீட்டுக் கொள்கை பற்றி இரிக்கார்டோ தெளிவான கருத்தை வெளியிட்டுள்ளார். 'பொன் மற்றும் வெள்ளியின் விலை உயர்வு'(Rise in the Price of Bullion -1797) என்ற நூலில் இரிக்கார்டோ, பண வெளியீட்டுக் கொள்கையை விளக்கியுள்ளார். பணத்தின் மதிப்பு குறைந்துவிடாத வகையில் அதன் அளிப்பை நிருணயம் செய்து கொள்ளவேண்டும். அளிப்பை நிருணயம் செய்துகொள்ளுவதற்குப் பொன் அல்லது வெள்ளியை இருப்பாக வைத்துக் கணக்கிட வேண்டும். சரியான விகிதத்தில் பொன்னையும் வெள்ளியையும் இருப்பாக வைத்துக்கொண்ட பின்னரே பணத்தை வெளியிட வேண்டும் என்பது இரிக்கார்டோவின் பண வெளியீட்டுக் கொள்கையாகும். பணத்தின் அளிப்பு மிகுதியாக இருப்பின் பணத்தின் மதிப்புக் குறைந்துவிடும் என்ற காரணத்திற்காகவே அளிப்பை நிருணயம் செய்துகொள்ளுவதன் இன்றியமையாமையை இரிக்கார்டோ வலியுறுத்திக் கூறுகிறார்.

**தாமசு இராபர்ட்டு மால்தசு** (கி.பி. 1766-1834): இவர்தம் நூல்கள் 1)மக்கள்தொகை பற்றிய கட்டுரைகள் (Essays on Population), 2) அரசியற் பொருளாதாரக் கோட்பாடுகள் (The Principles of Political Economy-1820), 3) பல வசதிகளுக்கு வழங்கப்படும் உயர்ந்த விலை (High Prices of Provisions-1800), 4 தானியச் சட்டங்களின் விளைவுகள் பற்றிய ஆய்வு (Observations on the Effects of the Corn Laws 1814), 5) வாரத்தின் இயல்பும் வளர்ச்சியும் (Nature and Progress of Rent-1815), 6) தானிய இறக்குமதித் தடைக்கொள்கை பற்றிய ஆய்வு (Grounds of an opinion of the Policy of Restricting the Importation of Foreign Corn-1815), 7) வறியோர் சட்டம் (The Poor Laws-1817), 8) மதிப்பை அளவிடுதல் (Measure of Value-1823), 9) அரசியற் பொருளாதாரம் பற்றிய விளக்கம் (Definition of Political Economy-1827).

இந்நூல்களிலிருந்து மால்தசின் பொருளியல் கருத்துகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடிகிறது.

**மக்கள்தொகைக் கோட்பாடு:** மக்கள்தொகைப் பெருக்கத்தால் நாட்டுப் பொருளாதாரமும், நாட்டு மக்களும் கேடுறுவது உண்மை என்ற கருத்தை மால்தசு சுட்டிக்காட்டியுள்ளார். மால்தசின் மக்கள் தொகைக் கோட்பாட்டில் மக்கள்தொகைப் பெருக்க வேகமும், உணவுப் பண்ட உற்பத்தி வேகமும் ஒப்பிடப்பட்டுள்ளன. மக்கள்தொகைப் பெருக்க வேகம், 2,4,8, 16,32 64 என இரண்டிரண்டு மடங்குகளாகப் பெருக்கல் எண் வளர்ச்சி வேகத்தில் அமைகிறது. உணவுப் பண்ட உற்பத்தி 1,2,3,4,5.. இவ்வாறு படிப் படியாக உயர்ந்துகொண்டு செல்லும் கூட்டல் எண் வளர்விகிதத்தில் அமைகிறது. முடிவில் மக்கள் தொகை மிகுந்து, உணவுப் பண்டங்களும் மற்றும் பிற வசதிகளும் பற்றாக்குறையாகும் நிலை உண்டாகிறது; இதன்விளைவாக மக்களின் நலன் கேடுற்றுக் குறைந்த வாழ்க்கைத் தரத்துடனும் நோய்களுடனும் வாழ்ந்து பலர் இறக்கநேரிகிறது. முடிவில் மக்கள் அளவு குறைகிறது.

1) மக்கள் வாழ்க்கையில் இனக் கவர்ச்சியைத் தவிர்க்க முடிவதில்லை. இதன்விளைவாக மக்கள் தம் வாழ்க்கையை அனுபவிக்கும் பொழுது இயல்பாகவே மக்கள்தொகைப் பெருக்க வேகம் பெருக்கல் எண் வளர்விகிதத்தில் அமைகிறது.

2) வேளாண் துறையில் குறைந்து செல் விளைவு விதி செயற்படுகிறது இதன்விளைவாக வேளாண் துறையில் உணவுப் பண்ட உற்பத்தி வேகம் கூட்டல் எண் வளர்விகிதத்தில் அமைகிறது.

இவ்விரண்டு கருத்துகளின் அடிப்படையில் மால்தசு தமது 'மக்கள் தொகைக் கோட்பாட்டை' விளக்கியுள்ளார்.

**மக்கள்தொகைப் பெருக்கத் தடைகளும், மக்கள் தொகைப் பெருக்கத்தின் விளைவுகளும்:** பெருக்கல் வளர்விகிதத்தில் அமைகின்ற மக்கள்தொகைப் பெருக்கத்தைச் செயற்கையாகத் தடை செய்தாகவேண்டும் என்பது மால்தசின் கருத்தாகும். அவ்வாறு தடை செய்யாவிடில் 25 ஆண்டுகளுக்குள்ளாக மக்கள் தொகை இரண்டு மடங்காக உயர்ந்துவிடுகிறது ஆனால், உணவுப் பண்ட உற்பத்தி, உயர்ந்துள்ள மக்கள்தொகையின் உணவுத்தேவையைச் சமாளிக்கும் அளவிற்கு அமைவதில்லை என்பதால் மக்கள் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தத் தடுப்பு நடவடிக்கைகளை(Preventive Checks) மால்தசு பரிந்துரைத்தார்.

திருமணமே செய்துகொள்ளாதிருத்தல், காலம் தாழ்த்தித் திருமணம் செய்துகொள்ளுதல், புலனடக்கம் முதலிய நடவடிக்கைகள் மூலம் மக்கள்தொகை வளர்ச்சியைச் செயற்கையாகத் தடை செய்வதைச் செயற்கைத் தடுப்பு நடவடிக்கையென மால்தசு குறிப்பிட்டுள்ளார். இத்தகைய தடுப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளாத நிலையில் பஞ்சம், பட்டினி முதலிய இயல்புத் தடைகள் (Positive Checks) தோன்றி, அவற்றின் விளைவாக மக்கள்தொகை குறைந்துவிடும்

என்று மால்தசு குறிப்பிட்டுள்ளார். பஞ்சத்தினாலும் பட்டினியாலும் பலர் இறந்துவிடுகின்றனர். மக்கள் தொகை குறைந்து விடுகிறது. வெள்ளம், போர் முலியவற்றையும் இயல்புத் தடைகள் என்றே மால்தசு குறிப்பிட்டுள்ளார். இக் காலத்திலுள்ளபுதிய குடும்பக் கட்டுப்பாடு முறைகளைப் பற்றி மால்தசு குறிப்பிடவேயில்லை.

**செல்வத்தைப் பெருக்குவதற்கான வழிவகை:** நாட்டின செலவத்தைப் பெருக்கலாம் என மாலதசு சுட்டிக்காட்டியுள்ள வழிகள வருமாறு:

1) புதிய உற்பத்தி முறையின மூலம் அனைத்துத் துறைகளிலும் உற்பத்தியைப் பெருக்கிச செல்வத்தைப் பெருக்கமுடியும். 2) நிலத்தை நனகு பயன்படுத்தும்பொழுது உற்பத்திப் பெருகிச் செல்வ வளமும் பெருகும். 3) உற்பத்தி முறையில புத்தாக்கங்களைக் (Innovations) கண்டு, அவற்றைச் செயற்படுத்தும்போது உற்பத்திப் பெருகிசசெல்வமும் பெருகும். 4) குளிர்ச்சியான காலநிலையின்போது தொழிலாளர்களின் உற்பத்தித் திறன பெருகிச் செல்வமும் பெருகும் 5) செல்வமும் வருமானமும் முறையாக மற்றும் சமமாகப் பகிர்வு செய்யப்படும்போதும் மக்களின் உறுதித் தேவை மிகுதியாகும போதும் செல்வம் பெருகும.

**வாரக் கோட்பாடு:** 'வாரத்தின இயல்பும் வளர்ச்சியும்' என்ற நூலில் மால்தசு 'வாரம்' (Rent) பற்றிய கருத்துகளை விளக்கியுள்ளார். நிலததின வளத தன்மை இடத்திற்கிடம் வேறுபடுகிறது என்ற உணமையை மாலதசு ஏற்றுக்கொண்டு வாரக் கோட்பாட்டை விளக்குகிறாா. நிலததிறகான தேவை ஏன எழுகிறது? எனற வினாவை எழுப்புகிறார். மக்கள் தொகை பெருகப் பெருக, வளம் குறைந்த நிலம்கூட வேளாண்மைககுக் கொணடு வரப்படுகிறது. ஒரே நேரததில் வளம்குறைநத நிலமும், வளம்நிறைந்த நிலமும் வேளாணமைககுப பயனபடுத்தப்படும்பொழுது அவறறின உற்பத்தியளவு வேறுபாட்டை நிலக்கிழார் அறிந்து கொளளுகின்றார். இவ்வகை உற்பத்தி வேறுபாட்டின்அடிப்படையிலேயே வாரம் தோன்றுகிறது. அதாவது வளம் மிகுந்த நிலத்திறகு மிகுந்த வாரம் கிடைக்கிறது எனறு மால்தசு குறிபபிட்டுளளாா. உணவுப் பண்டங்களின் விலைஉயரும்பொழுது வாரம் மிகுதியாகும் எனற கருத்தையும் மாலதசு குறிப்பிட்டுள்ளார். மக்கள் தொகை பெருகுமபோது உணவுப் பண்டங்களுக்குத் தேவை மிகும. அதன்விளைவாக உணவுப்பணடங்களின விலையும் உயாகிறது முடிவில் வளம்நிறைந்த நிலத்திலிருந்து பெறபபட்ட மிகுதிஉறபததிககு மிகுந்த தொகை பெறவாயப்பு ஏற்படுகிறது இவ்வாறு வளம் நிறைந்த நில உடைமையாளா மிகுதியானவாரத்தைப் பெறுவதற்கும் வாய்ப்பு ஏற்படுகிறது என்று மால்தசு குறிப்பிட்டுளளார்.

**மிகை உற்பத்திக் கோட்பாடு:** பேரளவு உற்பத்தி முறையின முடிவான விளைவுகளைச் சுட்டிக்காட்டிய பின்னர், மிகை உற்பத்திக்கோட்பாட்டை மால்தசு விளக்கியுள்ளார். பண்டங்கள் மிகையாக உற்பத்தி செய்யப்படுவதற்கு வாய்ப்பில்லை எனறு சே.பி.சே. கூறிய கருத்தை மால்தசு மறுத்துரைத்தார். மககளின வாங்கும் திறன் குறையும்போது பண்டஙகள சநதைகளில் தேங்கிவிடுகின்றன பண்டங்களுககான உறுதித் தேவை குறைந்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேணடும் உறுதித்தேவை (Effect.ve Demand) குறைந்துவிடின, அங்காடிகளில் பணடங்கள் தேங்கிவிடுகின்றன. முடிவில் தொழில்கள் பாதிக்கப்பட்டு மூடப்படுகின்றன எனறு மால்தசு குறிப்பிட்டுளளார். மந்த நிலையையும், தேக்க நிலையையும் போக்குவதற்கு அரசாங்கம் எந்த வகையாலும் செலவைப் பெருக்கி மக்களுக்கு வேலை வாய்ப்புகளைக் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். அவ்வாறு செய்யும் பொழுது மக்களின வருமானம் பெருகும்; வாங்கும் திறனும மிகுதியாகும் என்று மாலதசு குறிப்பிட்டுளளார்.

**வறியோர் பாதுகாப்புச் சட்டத்தை (Poor Law) எதிர்த்தல்:** மாலதசு வறியோர் பாதுகாப்புச் சட்டத்தை எதிர்த்தாா. வறியோர் பாதுகாப்புச் சட்டத்தினபடி வறியவர்களுக்கு அரசாங்கம் பல சலுகைகளையும், வசதிகளையும வழஙகுகிறது அவற்றை நனகு அனுபவிப்பதிலேயே வறியவர்கள குறியாயிருக்கினறனர். அரசு வழங்கிய சலுகைகளையும் வசதிகளையும் அனுபவித்துககொணடு வாழக்கைச் செலவின சுமைபற்றித சிந்திக்கததவறிவிட்டனர் முடிவில் வறியவர்களின் குடும்பங்களில்தான மிகுதியாகக் குழநதைகள் பிறக்கினறன எனறும் மால்தசு விளக்கியுளளார்.

**கூலிக கோட்பாடு:** தொழிலாளர்களின அளிப்பு, தொழிலாளர்களுக்கான தேவை முதலிய இரணடு காரணிகளே கூலியை நிருணயிக்கின்றன எனறு மாலதசு குறிப்பிட்டுள்ளார். தொழிலாளர்களின உற்பத்தித்திறன பெருகுவதற்கு அவர்களின கலவியின தரம் உயரவேணடும்; அவர்களுககு முழுமையான சுதந்திரம் வழஙகவேணடும்; எதிர்காலம் பறறிய உறுதியான நம்பிக்கையை உறுதி செய்தாக வேணடும் என்றும் மால்தசு குறிப்பிட்டுள்ளார்.

**சான் இசுடுவர்ட்டு மில் (கி.பி 1806-1873)·** ஆதம் சுமித்து மற்றும் இரிக்கார்டோவின் பொருளியற கருத்துகளைப் பாமரருக்கும் புரியும வகையில் மிக எளிய நடையில் விளக்கியவர் சான இசுடுவர்ட்டுமில ஆவாா. இவர்தம் நூல்கள 1) அரசியற் பொருளா

தாரக் கோட்பாடுகள் (Principles of Political Economics-1848), 2) தருகக இயல முறை (System of Logic-1843), 3) அரசியற் பொருளாதாரத்தில் சில தீரகப்படாத சிக்கலகள் பறறிய கட்டுரை (Essay on Some Unsettled Questions in Political Economy-1844), 4) சுதந்திரம் (On Liberty-1858), 5) அரசியல், தத்துவம், வரலாற்று அடிப்படையில அமைந்த விளக்கக் கட்டுரைகள் (Dissertations and Disquisitions-Political, Philosophical and Historical-1859), 6) பெண்களின அடிமைநிலை (The Subjection of Women-1869), 7) சுயசரிதை (Autobiography-1873), 8 மதம் பற்றி மூன்று கட்டுரைகள (Three Essays on Religion-1874) ஆகும்.

**மதிப்புக் கோட்பாடு:** மதிப்புப் பற்றிச் சிந்திப்பது தான் பொருளியல் அறிஞர்களின தலைசிறந்த பணி யாகும் என்று மில் குறிப்பிட்டுள்ளார். தொன்மையான ஓவியங்கள, சித்திரஙகள், முத்திரைத் தாளகள், நாண யங்கள முதலியவற்றின அளிப்பு முற்றிலும் மாறாத தாகும். அவற்றின மதிப்பு அவற்றிற்குரிய தேவையை யொட்டி அமைகிறது. அப்பண்டங்களின மூலம் எவ்வகைப் பயனையும் பெற முடிவதில்லை. இருப்பினும் அவற்றை வைத்துப் பாதுகாத்து வருவ தில பெருமையும் சமூக மதிப்பும ஏற்படுவதாக உணரப்படுகிறது. இவ்வகையில்தான் இவ்வகைப் பண்டஙகளுக்கான தேவை எழுகிறது. பிற நுகர்வுப் பண்டங்களுக்கும், உற்பத்திச் சாதனஙகளுக்கும் மேற கொள்ளப்படுகின்ற செலவினை (Cost of Production) அடிப்படையாகக் கொண்டு அவற்றின் மதிப்பு நிரு ணயிக்கப்படுகிறது என்று சே. எசு. மில் குறிப்பிட் டுள்ளார்.

**கூலிக்கோட்பாடு:** தொழிலதிபர்கள கூலிக்கென ஒதுக்கி வைத்துள்ள நிதியினை (Wage fund) யொட்டிக் கூலி நிருணயிக்கப்படும் எனறு சே. எசு. மில குறிப்பிட்டுள்ளார். இவவாறு ஒதுக்கப்படும நிதியின் அளவு ஓரளவிற்கு நிலையான தொகையேயாகும். எனவே, மிருந்த கூலி நிருணயிக்கப்படும்போது குறைந்த அளவு தொழிலாளர்கள அமாத்தப்படு கினறனர் என்று பொருள்படுவதாகச் சே. எசு மில கருதி யுள்ளார். மக்கள்தொகைப் பெருக்கத்தைப் பெரிதும சாடுகிறார். மக்கள்தொகைப் பெருகக வேகம் மிகுதி யாகும் பொழுதுதான் தொழிலாளர்களின் எண் ணிக்கை கூடுகிறது எனவே, மக்கள்தொகைப் பெருக் கம் கூலியைக் குறைத்துவிடுகிறது. இதன் விளை வாகத் தொழிலாளர்களின வாழ்ககைத் தரமும் குறைந்துவிடுகிறது. குடிப்பழக்கத்தைப் போனறே மிகுதியாகக் குழநதைகளைப் பெறுவதும் தீமை பயக் கும் நடவடிக்கையென்று மில் குறிப்பிட்டுள்ளார்.

**வாரக் கோட்பாடு:** நிலத்தின் வளத்தன்மை இடத் திற்கு இடம வேறுபடுகிறது. இதனவிளைவாக நிலத் தின் உற்பத்தித்திறனும் வேறுபடுகிறது. இத்தகைய உற்பத்தி வேறுபாட்டின் அடிப்படையில்தான வாரம் எழுகினறது என்று மில கருதினார். வாரம், வேளாண மைப் பணட உற்பத்திச் செலவில் சேர்த்துக் கணக் கிடப்படுகினறது என்றும் மில குறிப்பிட்டுள்ளார். நிலத்தைப் பலவகையிலும பயன்படுத்திக்கொள்ள முடிகின்றது என்ற நிலத்தின் தனித் தன்மையையும் மில்சுட்டிக்காட்டியுள்ளார்.

**வலைப் பகுப்புத் திட்டம்:** ஆதம்சுமித்தால் விளக் கப்பட்ட வேலைப் பகுப்புத் திட்டத்தைச சே எசு. மில் ஆதரித்துள்ளார். சீட்டுக்கட்டு உற்பத்திசெய்யும் தொழிலை எடுத்துக்காட்டாக எடுத்துக்கொண்டு தமது கருததை விளக்கியுள்ளர். வேலைப் பகுப்புத் திட்டத்தால தொழிலாளார்களின் திறமையும் வளர் கிறது; உறபத்தியும் பெருகுகிறது; அவர்களுக்கு வரு மானமும் மிகுகின்றது என்ற உணமையைச சே. எசு. மில் சுட்டிக் காட்டியுள்ளார்.

**சமதருமக் கொள்கை:** சே.எசு. மில். தொழிற் சங்கங்களின் இன்றியமையாமையைப் பெரிதும் வலி யுறுத்திக் கூறியுள்ளார். தொழிலாளர்கள் ஒற்றுமை யுடன் போராடுவதனமூலம் நிருவாகத்திடமிருந்து கூலி உயர்வைப் பெறமுடியும் என்ற கருத்தை விளக் கியுள்ளாா. அரசாங்கம் சொத்துடைமைப் பகிர்வு, வருமானப் பகிர்வு முதலிய கூறுகளில் தீவிரமான திட்டஙகளை வகுத்துச் செயற்படுத்த வேண்டும் என்று கூறிஅதற்குக் கீழ்க்காணும் நடவடிக்கைகளையும் பரிந்துரை செய்துள்ளார்.

1) வறியோர், செல்வர் என்ற வேறுபாட்டை ஒழிககும் பொருட்டு வாரிசுரிமைச் சட்டத்தைத் திருத்தவேண்டும்.

2) வளம்நிறைந்த நிலத்தில் பெறப்படும மிகுதி உற்பத்தியை (வாரத்தை) நிலவுடைமையாளர் மடடும் அனுபவிப்பதைத் தடை செய்ய வேணடும்; அதனை அனைவ நுககும் பொதுவுடைமையாக்க வேண்டும்.

3) தொழிலதிபர்களுககும் தொழிலாளர்களுக்கு மிடையே சகோதர உறவுநிலை நிலவவேணடும். தொழிலாளர்களின் எதிர்காலம் பற்றித் திடமான நம்பிக்கையைத் தோற்றுவிக்கும் வகையில் தொழிலதி பர்கள் செயறபட வேணடும. இவற்றால் தொழிலதி பர்கள பெரிதும் பயன்பட முடிகிறது. தொழிலாளா களின உற்பத்தித்திறன் மிகுவதால் நேரடியாகப் பெரிதும் பயனடைவது தொழிலதிபர்களே எனறும் சே. எசு. மில் குறிபபிட்டுளளார். புரட்சிகரமான செயல் திட்டங்களை வகுத்துக் கொடுத்தாலும் தனி

யார் சொத்துரிமைச் சமுதாயத்தையும் மில ஆதரித்தார்.

தொன்மைப் பொருளியல்அறிஞர்களின 'இயற்கை விதி' (Natural Law) எனற கருத்தை ஒதுக்கிவிட்டுப் பிற கருத்துகளை நடைமுறை நிலையோடு பொருத்திப் பார்த்தவர் சே. எசு. மில். எனவேதான, தொன்மைப் பொருளியலறிஞர்களின் கருததுகளுககுப் புதுப்பொலிவு ஊட்டியவர் மில் எனறு சிறப்பாகக் கூறுகினறனர். சு.வெ.பா.

**துணை நூல்கள்:**


Guide and Rist. A History of Economic Doctrine Oxford University Press, New York, 1983.

Haney, L.H., History of Economic Thought, Surjeet Publications, New Delhi, 1977

Schumpeter,J A., History of Economic Analysis, Oxford University Press, NewYork, 1954.


*தொன்மை மக்கள்:* ' எழுத்து வடிவம் பெறாத மொழிகளைப் பேசும் சமுதாயத்தினரும், வாழவின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்து கொளளும் பொருட்டு மக்கள ஏற்படுத்திக கொளளும பொருளசார் பணபாட்டினை (Material Culture) மிக எளிய நிலையில் கொணடுளளவர்களும, பொருளீட்டுவதில் வளர்ச்சிபெறா, எளிய தொழில் நுட்பத்தைக கொணடுளளவர்களும தொனமை மக்கள், (Primitive people) எனக் கூறபபடுவர். ஆனால, பொதுவான வழக்கில் 'தொனமை மக்கள்' என பதறகுத் தாழ்ந்த பணபாட்டைக் கொணடவர்கள், காட்டுமிராணடிகள (Barbarians), விலங்குத் தன்மையுடையவாகள (Savages) என்னும் பொருளே முதன்மையாகக் கொளளப்படுகிறது. ஆனால், மானிடவியலார் இவ்வகை வழககினை ஏறபதிலலை. இமமக்கள தாழ்நதவாகள அலலர், பணபாட்டு வளர்ச்சியின பல நிலைகளுள் ஒரு நிலையை ஏற்றுளளவர்கள. இந்நிலை எளிய நிலையில இருப்பதாகக் கூற வேண்டுமே ஒழியத தாழந்த, இழிவான நிலையில் இருபபதாகக கூறமுடியாது எனபா.

தொன்மைச் சமுதாயங்கள, பெருமபான்மையாகக குறைந்த மக்கள்தொகையைக் கொணடவையாக இருக்கினறன. இவ்வகைச சமுதாயத்தினா பெரும்பாலும தனிமைப்படுததப்பட்ட நிலப்பகுதிகளில் வாழவர்; ஒவவொரு குடியினரும் குறிப்பிட்ட நிலப்பகுதிக்குள வாழவா. இப்பகுதி சிதறிக காணபபடாமல ஒரு தொடர்சசியைக் காட்டுவதாக இருக்கும். ஒவ்வொரு குடியினரும் ஒரே மொழியைப் பேசுபவராக இருப்பா; பொதுவான பண்பாட்டைக் கொண்டிருப்பர். சமுதாயத்தில் பல படிநிலைகளோ உட்பிரிவுகளோ இலலாமல் ஒருபடித்தான சமுதாய (Homogeneous Society) அமைப்பைப் பெற்றிருப்பர். பொதுவாக அனைவரும் ஒரு மூதாதையரிடமிருநது தோன்றியவர்களாக இருப்பர். சமுதாயத்தின்பெயர் அனைவருககும் பொதுவாக இருக்கும். இவற்றோடு தொனமைச் சமுதாயத்தினர் மரபுசார்நத சட்டங்களைக் கொணடவராகவும் (Customary laws), ஆவியுலகச் சமய நமபிக்கையில மிகுந்தவர்களாகவும், விரைவான சமுதாய மாற்றஙகளுக்கு உட்படாதவர்களாகவும் இருப்பர்.

மானிடவியலாா இன்று தொனமை மக்கள்எனறு சிறப்பாகக் கூறிவரும தொடா ஏறக்குறைய 500 ஆணடுகளுக்கு முன வெளி உலகத்தவரால் கணடறியப்படாதவர்களையே குறிக்கும். இந்த அடிப்படையிலேயே தொனமை மக்கள முன்வரலாற்றுக் காலத்தில (Prehistoric period) வாழ்ந்த மக்களிடமிருந்து வேறுபடுத்தப்படுகின்றனர். குறிப்பாக, 500 ஆணடுகளுககு முன் அமெரிக்கா, சகாராப் பாலைவனத்தின உட்பகுதி, பசிபிக்குக் கடல்பகுதிகள, யுரேசியாவின நெடுநதொலைவுப் பகுதிகள முதலான இடங்களில வாழ்ந்த மக்கள வெளியாருடன் தொடர்பறறு விந்தையான முறையில் மிகவும தொன்மைத் தனமையுடன வாழ்ந்து வந்தனர். இவர்களின் நிலை அனறிருநது பெரிதும மாற்றமடையாமல் உளளதால், இவர்கள தொனமை மக்கள எனக் குறிப்பிடப்படுகினறனர். இவ்வகையான மக்களுள குறிப்பிடத்தக்கவர்கள எனச் சில குடியினரைக் கூறவேணடுமானால் ஆசுத திரேலிய முதுகுடிகள, (Australian aborigines) ஆப்பிரிக்க முதுகுடிகள, நியூகினித் தீவில் வாழும் முதுகுடியினர், ஆனை மலைக் காடர், கேரளத்தில் வாழும் சோளநாயக்கர் முதலானவர்களைக் குறிப்பிடலாம. பிலிப்பைன்சுத் தீவில குகைளில் வாழநதுவரும் தசாதே (Tasaday) குடியினர் 1972 ஆம் ஆணடுதான வெளி உலகத்தவரால் கணடுபிடிககபபட்டனர். மேற்கூறிய குடியினரைப் போனறு எணணறற தொனமைக குடியினர் உலகம் முழுதும வாழ்கின்றனர்.

தொன்மை மக்கள, தொனமைச் சமுதாயம் முதலான வழக்குகள் கி பி.19-ஆம் . நூறறாணடின தொடககத்திலிருந்து சரியான பொருளைப் பெறத் தொடஙகின எனலாம். இவ் வழக்குகளுக்குத் தகக விளக்கங்கள் கூறியவர்கள மானிடவியலார் ஆவர். மனிதப் பண்பாட்டின் படிமலர்ச்சி நிலைகளைப் (Evolutionary Stages) பல படிகளாகப் பிரித்து அறிந்த மானிடவியல அலலாத அறிஞர்கள தனிமைபபடுத்தப்பட்ட பகுதிகளில வாழ்ந்த மக்கள சமுதாய அமைப்பிலும், நடத்தை முறைகளிலும வளர்ச்சியடையாமல் குனறிய பண்பாட்டைக் கொணடிருந்ததால அவர்களைத் தொன்மை மக்கள எனக் குறிப்பிட்டனர்

இதனமூலம் வளர்ச்சி பெற்ற உயர் பண்பாட்டின ருக்கும் வளர்ச்சிபெறாத தாழ்ந்த பண்பாட்டின ருக்கும் உளள வேற்றுமை நன்கு புலப்படுகிறது என்று கூறினர். மானிடவியல் சாராத அறிஞர்களின் இவ்வகைக் கருத்தினை மானிடவியலார் ஏற்றுக் கொளளவில்லை. மானிடவியலாரின் கருத்துப்படி எழுத்து வடிவம் பெறாத மொழியைப் பேசிவரும் தொன்மை மக்கள் பண்பாட்டு வளர்ச்சியில் தாழ்ந்த நிலையில் இல்லை; எளிய நிலையில் உள்ளனர். இருப் பினும் அவர்கள மற்றவர்களைப் போலல்லாது வேறு சில நிலைகளில் வளர்ச்சியடைந்துள்ளனர். எடுத்துக்காட்டாக, எசுக்கிமோவினர் (Eskimos) தொழில்நுட்பம், சுற்றுச்சூழலோடு கொண்டுள்ள தகவமைப்பு, நம்பிக்கை முறைகள் முதலான அனைத் துப் பண்பாட்டு நிறுவனங்களிலும் சிறப்பான முறை களை ஏற்படுத்திக் கொண்டுளளனர். உயர்ந்த பண் பாட்டினரின் முறையோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது இவை புதுமையாகவும் தனித் தன்மையாக வும் காணப்படும். அதனால், எசுக்கிமோவினர் பண் பாடு உயர் பண்பாட்டினரோடு ஒத்திருக்கவில்லை என்று கருதி, அதைத் தாழ்ந்த பண்பாடு என்று கூறு வதறகில்லை. இதுபோன்ற பல எடுத்துக்காட்டு களைத் தொன்மை மக்களின் பணபாட்டிலிருந்து கூறலாம்.

படிமலர்ச்சியியலார் முதனமுதலில் பயன்படுத்திய தொன்மை மக்கள, தொன்மைச் சமுதாயம் முதலான சொற்களின் உட்பொருள ஒருவகையான நிறைவற்ற போக்கைக் கொண்டிருந்ததால், அச்சொல்லைவிடுத்து வேறுசில சொற்களைப் பயன்படுத்த மானிடவியலார் முனைந்தனர். குறிப்பாகப் பழங்குடி (Tribe), முது குடி (Aborigine), எழுத்தறிவிற்கு முநதையோர் (Pre-literates) போன்ற பல சொறகள முனமொழியப் பட்டன. ஒவ்வொரு சொல்லும் ஒருவகையான குறை யைப் பெற்றிருந்ததால் எந்த ஒரு சொல்லும் முழு நிறைவைத் தரவில்லை. இம்மகக்ள எழுத்து வடிவம் பெறாத மொழியைப் பேசி வருகினறனர் எனபதால 'எழுத்தறிவு பெறாத மக்கள்' (Non-literate people) என்ற சொல் பெரும்பானமையாக ஏற்றுக கொள ளப் பட்டது. இருப்பினும் இதுபற்றிய விவாதம் தொடர்கிறது.

தொன்மை மக்கள எனற வழககிற்கும் இவர் களுள் ஒருசில குடியினரின பணபாட்டிறகும் பெரும் இடைவெளி இருப்பதை யாவரும் அறிய முடிகிறது. அமெரிகக இநதியப் பழங்குடிகளுள ஒரு குடியின ரான இன்கா (Inca) மக்கள் எழுத்து வடிவம் பெற்ற மொழியைக் கொண்டிருக்கவிலலை. எனினும், இவர் களின பண்பாட்டு வளர்சசி நாகரிக நிலையை அடைந்தது.

இன்று பெரும்பாலான தொன்மைக் குடியினரின் தொன்மைத் தன்மை (Primitivism) மாறி வருகின் றது. குறைந்த அளவில் மாற்றங்களைப் பெற்று வருபவர்கள் என்றாலும் வெளி உலகினரின் தொழில் நுட்பத்தோடும் வாழ்க்கை முறையோடும் இத் தொன்மை மக்கள பெருமளவில் தொடர்புகொள்ள வேண்டிய சூழலுக்கு வந்துவிட்டனர். சீ.ப.

***தொன்னூல் விளக்கம்*** இநநூல் வீரமாமுனி வரால் இயற்றப்பெற்றது. இவர் ஓர் ஐரோப்பிய உரோமன் கத்தோலிக்கச் சமயகுரு. இவர் கி.பி. 1680 -ஆம் ஆண்டு இத்தாலி நாட்டு வெனிசு மாகாணத்தின் காசுதிகிளியோன் என்னும் சிற்றூரில் பிறந்தார். இயற் பெயர் சோசப் கொன்சுடான் சியுசுபெசுகி. இவர் கிரேக்கம், எபிரேயம், இலத்தீன், பிரெஞ்சு, போர்ச்சு கீசு ஆகிய மொழிகளும் அறிந்தவர்; தம்முடைய முப்ப தாம் வயதில் சமயப்பணியாற்ற இந்தியாவிற்கு வந்து சுப்பிரதீபக் கவிராயரிடம இருபது ஆண்டுகள் தமிழ பயின்றார். தமிழ் கற்றுத் தமிழில சமய விளக் கம் செய்து, தமிழில் புல நூலகள் இயற்றியுள்ளார். இந்தியாவில் இருநத காலததில தெலுஙகு, கன்னடம், ஆரியம, இநதுசுத்தானி ஆகிய மொழிகளையும கற் றார்.

தமிழரொடு வாழ நினைதத பெசுகி தம்முடைய பெயரைத் தைரியநாதர் என மாற்றிககொண்டார். உலகிற்குத் தம் புலமை வெளிப்படுமாறு அகராதி, இலக்கண நூல்கள, காப்பியம், கலம்பகம், அந்தாதி, உரைநடை நூல்கள பலவும இயற்றியுள்ளார். தேம் பாவணிக் காப்பியம் இவருக்கு வீரமாமுனிவர் என்ற சிறப்புப் பட்டத்தைப் பெற்றுத்தந்தது.

தொன்னூல் விளக்கம் தமிழில் உள்ள ஐந்திலக் கணங்களையும் விளக்கி நிற்கிறது. இலக்கணத் துறை யில இநநூல் குட்டித் தொல்காப்பியம் எனறு புகழப் படுகிறது. வீரமாமுனிவரின் தமிழிலக்கணப் புலமைக் குச் சானறாக இந்நூல் விளங்குகிறது. இது கி.பி. 1730-ஆம் ஆணடில் எழுதப்பட்டது.

செந்தமிழ்த் தன்மை விளக்கும் பழைய நூல்க ளுககு எலலாம் விளக்கமாக அமைவதால் தொனனூல விளக்கம என்ற பெயர் பெறுகிறது. தொன்னூல்களை விளக்குவதறகுரிய விளக்குப் போனறும், தொன்னூல் களாகிய இலக்கண நூல்களைப் புரிந்து கொளவதற் குத் துணையாக நிற்கும் விளக்குப் போன்றும் அமைய வேண்டும் என்று படைக்கப்பட்டதால தொன்னூல் விளக்கம் எனபபட்டது.

இந்நூல் எழுத்து, சொல், பொருள, யாப்பு, அணி என ஐந்து அதிகாரங்களைக் கொணடுள்ளது. மொத் தம் 370 நூற்பாககள் உள்ளன. பொதுப்பாயிரம ஒனறு, சிறப்புப் பாயிரம் ஒனறு, எழுத்ததிகாரம் 38,

சொல்லதிகாரம் 102, பொருளதிகாரம் 58, யாப்பதி காரம்100, அணியதிகாரம் 70 என்ற அளவில நூற் பாக்கள் அமைந்துள்ளன.

எழுத்ததிகாரம எழுத்தியல், எழுத்தின் வகுப்பு, எழுத்தின் விவகாரம் என்ற மூன்று பிரிவுகளை உடை யது. சொலலதிகாரம் சொற பொதுவியல்,பெயரியல் (வேற்றுமையில், பகுபதப் பெயரியல், தொகை நிலைத் தொடர்மொழிப் பெயரியல், சுட்டு, வினா) வினைச் சொல்லியல (முக்கால முற்றுவினை, ஏவல், வியங் கோள், ஈரெசசம், வினைக்குறிப்பு), இடைசசொல் லியல், உரிச் சொல்லியல் என ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது.

பொருளதிகாரம், பதிகம், காரணம, விரிவு, தெகையுந்துணிவும், உரிமை (கால உரிமை, இட உரிமை, பணபுரிமை, சாதித் தொழிலுரிமை, பறறு தலுரிமை, வடிவு முதலிய உரிமை, ஒழுக்க உரிமை, சொல்லுரிமை) என்ற பகுப்புகளைக் கொண்டுள் ளது. யாப்பதிகாரம், செய்யுளுறுப்பு (அசை, சீர், தளை, அடி, தொடை), செய்யுளியல் (வெணபா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, மருட்பா, பாவினம், வெண டுறை, ஆசிரியத்துறை, கலித்துறை, வஞ்சித்துறை தாழிசை, விருத்தம் ஆகியவற்றின் இலககணஙகள்), செய்யுள் மரபியல்எனப் பகுக்கப்பட்டுள்ளது. அணியதி காரம், சொல்லணியியல் (மறிநிலையணி, சொன மிக் கணி, சொல்லெஞ்சணி, சொல்லொப்பணி), பொருள ணியியல் என வகுககப்பட்டுள்ளது

மரபு வழியைப் பின்பறறி எழுதியிருக்கினற காரணத்தால பழைய இலக்கண நூல்கள பெருமள வில பயனபடுததப்பட்டுள்ளன. எழுத்தும் சொலலும் நன்னூலையும், பொருள்-நம்பியகப்பொருள, இலக் கண விளக்கம் ஆகிவற்றையும், யாப்பு பாட்டியல் களையும், அணி தண்டியலங்காரததையும் பினபற்றி அமைநதுள்ளன.

ஒவ்வோர் இயலின் தொடக்கத்திலும் கடவுள் வணக்கம் பாடப்பட்டுள்ளது. பொருள, யாப்பு,அணி என்னும் சொற்களைக கொணடு அவவதிகாரங களில் கடவுள் வணக்கம் செய்திருப்பது குறிப்பிடத தகுந்தது.

நூலாசிரியரே உரையெழுதிய சிறப்புடையது இத்தொனனூல் விளக்கம். இதனை ஆசிரியர் கூற வில்லை. ஆனால், உரையிலிருந்து இதனை நன்கு உய்த்துணர முடிகிறது.

'நான தெரிந்துரைப்பத் துணிந்தேன்,நான் விரித் துரைப்பத் துணிநதேன' (148) எனனும தொடர்கள இந்நூலுக்கு இவரே உரை எழுதியதை உறுதி செய் கின்றன.

உரையில் தம் சமய உணர்வினை மிகுதியாகப் புலப்படுத்துகிறார். உரையாசிரியரும் இவராகவே இருப்பதனால தாம் கூற விரும்பும் கருத்தினை விரி வாக, விளக்கமாகத தெரிவிப்பதறகு வாய்ப்புப் பெற்றிருக்கிறார். ஆசிரியரின் எணணங்களை முழுமை யாகப் புரிந்துகொள்வதற்கும, மாறுபட்ட கருத்து களைத் தவிர்க்கவும் இது உதவுகிறது. ஆசிரியரின் இலக்கண, இலககியப் பயிற்சியையும் அறியமுடிகிறது.

ஒவ்வோா இயலிலும கூறப்பட்டுளள கருத்துகள் அவ்வியலில் இறுதி நூற்பாவில் தொகுத்துக் கூறப் படுகின்றன. இநநூல் முதலில கி.பி. 1838 – இல் புது வையில பதிப்பிக்கப்பட்டது. பினனர் நாகையில் கி.பி 1864-இல் அமிர்தநாதா பதிப்பித்துளளார். 'உ. சிரீநிவாச இராகவாசாரியாரவாகள கி.பி. 1891-இல் பார்வையிட்டுத் தர, சி. மெக்கென்சி காபின் அய் யர் பதிப்பித்தாா.

தொன்னூல் விளக்கம் எழுத்திலககணததை மொழியியல் அடிப்படையில் தோற்றம் (Origin of Sounds) வகுப்பு(Classification of Sounds)தோன்றும விகாரம் (Morpho-Phonemics) எனத் தெளிவாக விளக்குகிறது. எழுத்துகளின் வரிவடிவத்தில் மாற்றத் தைச செய்திருக்கிறார்.

'மெயயின் இயற்கை புள்ளியொடு நிலையல்' (தொல. நூன் மரபு 15), 'எகர ஒகரத் தியறகையும் அற்றே' (தொல். நூன் மரபு 16), என்ற நிலையிலி ருந்து 'நீட்டல் சுழித்தல், குறில் மெயக்கு இருபுளளி' (12) என்ற நிலைககு மாற்றியிருக்கிறார். உடம்படு மெய்யில் 'எ' கரத்தையும் இணைததிருககிறார் (20).

சொல்லதிகாரத்தில வட சொல, திசைச சொல் குறித்து எதுவும் பேசவில்லை. உயர்திணையில் பலர் பாலுக்குக 'கள்' விகுதி வரும் (79) என உரைக்கின் றார். ஈ, தா, கொடு எனற சொற்களைப் பயனபடுத் தும் முறை கூறப்பட்டுள்ளது (115).

பொருளதிகாரத்தைப் பார்க்கும நோக்கம் புதி தாக உளளது. அறம், பொருள், இனபம், வீடு எனற நூலிற்குரியபயன்களைப் பொருளதிகாரம்கூறவேண்டு மென்று நினைக்கின்றார்.அகத்திணை, புறத்திணை களுக்கு இவா காணும் பொருள்கள வேறு. அகத் திணையை மனத்தின் ஒழுக்கம் என்ற நிலையில் விளக்குகினறார். அகவொழுக்கம் மனத்துக்கண் மாசிலன ஆதல் (149 உரை) என்று கூறி அவ்வகத் திணையை இயல்பு, வகை, பொது, சிறப்பு, உவமை, புறநிலை, எதிர்நிலை, கருவி, காரியம், காரகம்,முன னவை, பினனவை எனப் பன்னிரண்டு வகைகளாகப் பிரிக்கின்றார். இப்பனனிரணடு அகத்திணைகளையும் கடைப்பிடிக்கப் புறநிலையில் இலக்கியச் சானறு

களை எடுத்துக்காட்டி நிறுவுதல் புறத்திணை என்று கூறுகின்றார். புறத்திணையை ஒழுக்கம், நூல், புறக்கரி (161) என மூன்று வகைகளாகப் பிரிக்கின்றார். ஒவ்வொரு நாட்டின் அரசியல் அமைப்பின்படி நடத்தல் ஒழுக்கம். வேதநூல், நீதி நூல், மனுநூல் முதலிய வற்றுள் விதித்தன கொண்டு விலக்கியன நீக்கல் ஒழுக்கமாகும். அறிவுடையோர் உரைத்தவற்றையும் எழுதியவற்றையும் தம் செயலுக்குச் சான்றாகக் காட்டுதல் புறக்கரியாகும். மரபின் வழிச் செல்கிறவர் என்பதைக் காட்டிக்கொள்ளப் பொருளதிகார இறுதியில் (199) அகப்பொருள், கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என ஏழு எனவும், புறத்திணை, ஏழு எனவும் கூறியிருக்கிறார். இவற்றிற்குச் சான்றுகளாக நம்பியகப் பொருள், புறப்பொருள் வெண்பாமாலை நூற்பாக்களை மேற்கோள்களாகக் காட்டியிருக்கிறார்.

பெரும்பாலும் பண்டைய விதிகளை ஒட்டியே யாப்பு விதிகளை அமைத்திருக்கிறார். பா, நான்கு என்ற கருத்திற்கு மாறாகத் தொன்னூல் விளக்கம், பா ஐந்து என மருட்பாவையும் இணைத்துத் தருகிறது (219) கட்டளைக் கலிப்பாவிற்கு இலக்கணம் தரும் நூல் தொன்னூல் விளக்கம் மட்டுமே ஆம்.

அணியின் இருவகைகளான சொல்லணியும் பொருளணியும் வேறுபடுத்தி விளக்கப்படுகின்றன. இது இந்நூலுக்கே உரியது; சொல் மாற அணி கெடுவது சொல்லணி எனவும், அவ்வாறு மாறினும் நிலைக்கும் அணி பொருளணி எனவும் தெளிவாக விளக்கம் தருகிறது

சிறப்புப் பாயிரத்தின் உரையில் தாம் நூலை எழுதியதற்கான காரணத்தையும், நூல் எப்படி அமைந்துள்ளது என்பதையும் விளக்கமாகக் கூறியிருக்கிறார். தம் கருத்துக்கு ஒவ்வாவிடினும் மரபுவழியைப் பின்பற்றி அதனை அமைத்ததாக உரையில் விளக்கம் தருகிறார்.

உரையில் பொதுநிலையில் நூற்பா என்ன கூறுகிறது என்று கூறிப் பின் அதில் உள்ளவற்றைத் தந்திருக்கிறார். அதற்குச் சான்று அடுத்தாற் போல் வருகிறது பல இடங்களில் முன் அல்லது பின் உள்ள நூற்பாக்களோடு தொடர்பு படுத்திக் காட்டுகின்றார். உவமைகளைப் பயன்படுத்தித் தம் கருத்துகளை மேலும் விளக்கியுள்ளார்; கூடுமானவரை எல்லாவற்றிற்கும் சான்றுகள் வழங்கியிருக்கிறார். சில சான்றுப் பாடல்கள் ஆசிரியரே எழுதியிருப்பாரோ என ஐயுறத்தக்க வகையில் உள்ளன. நூலாசிரியரே உரையாசிரியர் என்ற நிலையிலிருந்தும் தம்மை விடுவித்துக் கொண்டு பொது நிலையில் நின்று தம் கருத்துகளைக் கூறும் திறம் குறிப்பிடத்தக்கது. கு.சு.தே.

***தொனிமொழி***: உலகெங்கும் பரவலாகப்பரந்து காணப்படும் சில மொழிகளில் இடம் பெறும் ஒலிக் கும் முறையிலுள்ள குரல் ஒலிப்பு(ஏற்ற இறக்க) வேறுபாடுகள் (Pitch differences) ஒரு சொல்லை மற்றொரு சொல்லிலிருந்து வேறுபடுத்திக் காட்டப் பெரிதும் துணை நிற்கின்றன. குறிப்பாகச் சீனமொழி, ஆப்பிரிக்க மொழியின் சில பிரிவுகள், தெற்கு ஆப்பிரிக்க மொழிகள் போன்றவற்றைக் கூறலாம். இவ்வாறு, இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சொற்களின் வேறுபாடுகளைக் கண்டறியும் வகையில் துணைநிற்கும் காரணியாக அமைவதைத் தொனி (Tone) என்றும் இத்தொனிகளைத் தன் இயல்புகளாகக் கொண்ட மொழியைத் தொனி மொழி என்றும் குறிப்பிடுவர்.

சீன மொழிகளில் மிகப் பரந்த அளவில் பேசப் பெறும் பலவேறுவகையான மொழிப்பிரிவுகள் தொனி மொழிகளாகக் காணப் பெறுகின்றன என மொழியியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இத்தொனி மொழியில் பயன்படுத்தப்படும் தொனிகள் ஒரே அழுத்த அளவாகவோ (Single level of Pitch) உச்ச நிலையாகவோ (rise) தாழ்நிலையாகவோ (fall) உச்ச நிலையும் தாழ்நிலையும் கூடியனவாகவோ தாழ் நிலையும் உச்ச நிலையும் கூடியனவாகவோ இருக்கலாம் எனக் கருதப் பெறுகின்றது. இத்தொனிகள், அழுத்தம் (Pitch) செலவும் திசையினால் வேறுபடுத்தப்படுகின்றன.

சீனமொழியின் ஒலிஅமைப்பில் பலஇன்றியமையாத சிறப்புத் தன்மைகள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்றாகக் கொள்ளப் பெறுவது தொனி அமைப்பு ஆகும் சீனமொழியின் பேச்சு வழக்கு மொழிகள் தொனிமொழி வகையைச் சார்ந்தவையாகும். ஏனெனில், சீனப் பேச்சு வழக்கு மொழியில் ஒவ்வோர் அசையும் இயல்பாக ஒரு முக்கியத்துவத்தையும் வேறுபாட்டையும் பெற்றிருக்கும். ஆனால் அவற்றுள் தொடர்புடைய அழுத்தங்கள் இடம்பெறக் காணலாம். இவ்வழுத்தங்களும் ஒரே சீரானவையாக அல்லது ஏற்றத், தாழ்வுடையனவாக இருக்கலாம். ஆனால், இவை சீரான அழுத்தத்தி லுள்ள ஒரு சொல்லின் அசை அல்லது அசைகளிலுள்ள ஒலிப்பு முறையின் அங்கமாகக் காணப்பெறும். அவை ஒரு சொல்லை மற்றொரு சொல்லிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் பணியைச் செய்கின்றன. இயல்பான அழுத்தத்திற்குப் பதில் ஓர் அசை வலுவிழந்த அழுத்தமாக இருப்பின் அது தன் மாறுபட்ட மற்றும் தொடர்புடைய அழுத்தங்களை இழந்து விடுகின்றது. இதனால், ஒழுங்கான தொனியைப் பெறமுடிவதில்லை. இந்நிலையில் இவ்வசை பொதுநிலைத் தொனி எனக் குறிக்கப் பெறுகின்றது. இதன் பொருள் யாதெனில் தொனி வேறுபாடு பொதுவாக்கப்படுகிறது

என்பதே ஆகும். எனவே, வலுவிழந்த அழுத்தத்தைக் கொண்ட அசைகள தொனியைப் பெற முடியவில்லை.

தொனிமொழிகளின் அழுத்த நிலைகள அலலது உயர் நிலை மற்றும் தாழ்ந்த அழுத்தங்கள அகராதிக் கூறுகளான சொற்களின பெற்றிகளாகக் (Properties) காணப்பெறுன்றன. சான்றாக, வட சீன மாணடரின மொழியை எடுத்துக் கொண்டால் அதில் /L/ta/ என்ற சொல அது ஒலிக்கப்படும் தொனியின் தன்மைகளுக் கேற்ப வேறுபட்டபொருள்கள தருவதைக்கூறலாம். சீரான தொனியில கூறும்போது 'எழு' என்றும, உயர் தொனியில கூம்போது 'பாய்ச்ச' எனறும், தாழந்த-உயர் தொனியில் கூறும்போது 'தாக்க' என்றும், தாழ்ந்த தொனியில கூறும்போது 'உயர்ந்த' என்றும நான்கு பொருள்கள் தருவதைக் கூறலாம்.

சில தொனிமொழிகளில் குறிப்பிட்ட தொனிகள் அல்லது வேறுபட்ட அழுத்தங்கள், குரல்வளை நெரிப் பொலியான கிரீச்சு ஒலி (creakness), அதிர்வொலி ஆகிய ஒலிப்பு முறைக் காரணிகளுடன் இணைந்து நிற்பதையும காணலாம்.

சில ஐரோப்பிய மொழிகள் 'பகுதித் தொனி மொழிகளாக'க் காணப்பெறுகின்றன. நார்வே மொழி, சுவீடிசு மொழி, செர்போ-குரோட்டு(Serbo-Croat) மொழி ஆகிய மொழிகளில இக்கூறுகளைக் காணமுடிகிறது. இவண் சில குறிப்பிட்ட சொற்கள, மற்றச் சொறகளின அமைப்பிலிருந்து சில உள்ளார்ந்த வேறுபாடுகளைக் கொண்ட அழுத்த அமைப்பைப் பெற்றுள்ளன. தா.ஈ.

**துணை நூல்கள்:**

Charless,N. Li & Sardra, A, Thompson Chinese-Dialect variation and Language Reform, 'Language and their Status', Winthrop Publishers, Cambridge, 1979.

Robin H R., General Linguistics, An Introductory Survey, Longmans Green Co, Ltd., London, 1964.

**தோ** தகரத்திற்கும் ஓகாரத்திற்கும் கொடுக்கப்பட்ட குறிப்புகளைப் பார்க்க. நுனிநா மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒட்டியபடி பிறக்கும் தகரத்தோடு வாய் குவித்து எடுத்த நிலையில் வெளிப்படும் ஒலியே தோ ஆகும்.

**வடிவம்:** தகரத்தின் வளர்ச்சியோடு ஓகாரத்திற்கு இடப்புறம் ஒரு கோடும் வலப்புறம் ஒரு கோடுமாகத் தோ என்ற எழுத்தின உருவம் தோன்றிற்று. இருபுறமும் உள்ள கோடுகளுள இடப்புறம் உள்ளது கொமபாகவும் வலப்புறம் உள்ளது காலாகவும் மாறின.... ... ...

குகைக் கல்வெட்டுகளில கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இவ வடிவம் காணப்படுகின்றது. இதன்மேல் புள்ளி இடப்பட்டிருந்தால் தொ என்று படிக்கவேண்டும். பெரும்பாலும் புள்ளி இடும் வழக்கம் இல்லாததால் தொ தோ இரண்டின் உருவங்களும் ஒன்றாகவே காணபபடும. சூழ்நிலையை ஒட்டி,மொழியின போக்கை ஒட்டி தொ அல்லது தோ என்று படித்துக் கொளள வேண்டும்.

கி.பி 5-ஆம் நூற்றாண்டு இருளப்பட்டி வட்டெழுததுக் கல்வெட்டில இதன உருவம் 'கோ' என்பதன் அடிப்படையில் ஏற்பட்டிருககக் கூடிய உருவம ஆகும். கோடு வளைவு பெற்றது. .. ..

அதே நூற்றாண்டில் அம்மனகோயில் பட்டிக் கல்வெட்டில் இதன்வடிவம் தகரத்தின் வளர்ச்சியோடு இருபுறமும் கோடுகள் தோன்றின... ... ...

கி.பி. 9-ஆம் நூற்றாணடுச் சோழன் ஆதித்தன் கலவெட்டில கொம்பு வளர்ந்தது; கால் பிரிந்தது.. ... .

கி.பி. 11-ஆம் நூற்றாணடில் சோழன இராசேந்திரன கல்வெட்டுகளில் முழுமையாக இவவுருவம் வளர்ந்து விட்டது. .

கி.பி. 14-ஆம் நூற்றாணடில் சம்புவரையா கல்வெட்டுகளில் ஏறக் குறைய இன்றைய வடிவம் தோன்றியது. . .

வீரமாமுனிவரின இலக்கண முறையால் கொம்பு நோமேல் சுழியோடு கூடிய கொம்பாக மாறிற்று. ஆனால், பிற்காலக் கலவெட்டுகளில் இவவுருவம் காணப்படவில்லை. தொ, தோ இரணடும் வேறுபாடு இல்லாமல எழுதப் பெறறன. ..

வட்டெழுத்தில் இரு கோடுகளும் வேறுவிதமாக மாறிவநதன. இடப்புறககோடு நடுவில் வளைந்தும் வலப்புறக்கோடு மாறாமலும் கி.பி. 9-ஆம் நூற்றாணடுவரை எழுதப்பெற்றன. இந்த வடிவமே வட்டெழுத்து மறையும் வரை இருந்தது.

கே.ஜி.கி.

**தோக்கியோ:** சப்பானியத் தலைநகரான தோக்கியோ நகரம் அந்நாட்டில் சுமீதாகாவா (Sumidagawa) என்னும் பகுதிக்குக் கிழக்கே மணபொதிந்த நிலப்பகுதியில் உள்ளது. தோக்கியோ நகருக்கு மேற்கே பெரும் மலைப்பகுதி உள்ளது. இம்மலைப பகுதி ஏறத்தாழ 50 மீட்டரிலிருந்து 200 மீட்டா வரை உயருகிறது. இம்மலை தோக்கியோவுக்கு (Tokvo) மேற்கிலும் தெற்கிலும அமைந்துள்ள 'ஒகுதாமா' (Okutama) 'கிரிசியோ' (Crichio) ஆகிய மலைத்தொடருடன் இணைகிறது. தோக்கியோ நகரின் இப்பகுதியில்தான் 'தேசிய பூஙகா' ஒனறு அமைக்கபபட்டுள்ளது.




தோக்கியோ அமைவிடம்

தோக்கியோவின் தட்பவெப்பநிலை சிலசமயங்களில் மிதமானதாகவும், கோடைப் பருவத்தில மிகுந்த வெப்பமாகவும் உள்ளது குளிர்கால,கோடைக்காலக் காறறுகள் இதன் தடபவெப்பநிலையைக் கட்டுப் படுததுகினறன. கோடைக காலத்தில் பசிபிக்குக் கடலிலிருந்து இங்கு ஈரப்பசையுடன கூடிய காற்று வீசுகிறது. குளிர்காலத்தில் சைபீரியாவிலிருந்து கடுமையான குளிா காற்றும் வீசுகிறது. ஒவவோர் ஆணடிலும் இரு தடவைகளிலாவது சபபானில வீசும சூறாவளிக் காற்று(Typhoon) தோக்கியோவையும் பெரிதும் பாதிக்கிறது. இந்நகரில சனவரி-மார்ச்சு மாதங்களில் கடுமையான பனி கொட்டுகினறது. மார்ச்சு இறுதி, ஏப்பிரல, மே மாதங்களில் செர்ரி மலர்கள பூத்துக் குலுங்குவதைக காணலாம். இம்மலர்கள சிவப்பு நிறமுடையவை.

'ஒடோ'நகரம் எனபது தோக்கியோ நகரின் பழைய பகுதியாகும். பழைய ஒடோ நகரின் கோட்டையில தான் சப்பானியப் பேரரசரின் அரண்மனை உள்ளது. இந்தக் கோட்டைப் பகுதியில் உயர்குல மககளும் நிலக்கிழார்களும் மாளிகைகளைக் கட்டிக் கொணடு வாழ்கின்றனர்.

'பட்டுப்பொருள் நகர்', 'கொலலர் நகா', 'மீன் நகர்' என்னும் பெயர்களில தோககியோ நகரின புறப்பகுதிகள உளளன. 'கோபுகோ-சோ' (Gofuko-cho) என்றால 'பட்டு', 'சகமா-மாச்சி' (Sakama Machı) என்றால் 'மீன்', 'கசிகோ' (Kajıcho) எனறால 'கொல்லா' எனப் பொருளபடும். மீன் எனனும் சொல்லுக்கு 'மச்லி' (Machlı) எனறு இந்தி, உருது மொழிகளிலும 'மச்சம்' எனறு வடமொழியிலும வழஙகப்படுவது இஙகுக குறிப்பிடத்தககது. தோககியோ நகருக்குள்ளே ஒவ்வொரு எட்டு கி.மீ. எல்லைக்குள் இணைப்புப் புறநகர்கள உளளன; அவற்றுள் 'சிகாமோ' (Shigamo) 'சீன்சுகு' (Shunjuku) 'இடாபாசி' (Itabashı) 'செஞ்சு' (Shenju) ஆகியவை குறிப்பிடத்தக்க இணைப்புப் புகநகர்களாகும்.

தோக்கியோவில் அரண்மனைக்குக் கிழககே 'மருனோச்சி' (Marunochi) எனனும் மாவட்டம் ஒனறு உள்ளது. தோக்கியோ நகரின் இப்பகுதியைச் சப்பானின வணிகத் தலைநகரம்எனறு சொல்கிறாாகள். மாவட்டத்தின் பரப்பளவுககுச் சப்பானின் முக்கிய வணிக நிலையங்கள் அமைநதுள்ளன. அரணமனைக்கு நெருக்கமாகக்'கின்சா'த் (Kınza) தெரு எனனும் சிறபபு அங்காடிகள் கொண்ட கடை வீதி ஒனறும் உள்ளது; இவ்வஙகாடியில சப்பானின் நவீன பொருளகளை அனைத்தையும் வாஙக முடியும்.

தோக்கியோ நகரில் மருனோச்சி மாவட்டத்தின் தெற்குப் பகுதியில்தான் அரசு அலுவலகஙகள அனைத்தும் அமைந்து இயங்கி வருகினறன. தோக்கியோ நகரின் வடக்கே அகழிகள் உளளன. இவ்வகழிகளுக்கு அப்பால் வட பகுதியில் பல்கலைக்கழகஙகளும் மருத்துவ நிலையங்களும், பதிப்பகங்களும் மிகுகியாக அமைநதுளளன. 'தோககியோ' 'வசீதா' 'கியோ' (Tokyo, Waseda, Kıo) பல்கலைக்கழகங்கள் இப்பகுதியில் தான அமைந்துள்ளன. தோக்கியோவின் சிறப்பான பகுதியை 'யோககாமா' (Yoga hama)என்கின்றனா. இவ் வியோக காமாப் பகுதியே 40-48கி.மீ. பரப்பளவில் அமைந்துள்ளது.

தோக்கியோ நகரில் தான் தேசிய போக்குவரத்து நிலையங்களின் தலைமையகம் உளளது. ஒசாகா (Osaka)விலிருந்து நாட்டின் பிற பகுதிகளுககுச் செல்லும் நெடுஞ்சாலைகளும், இருப்புப்



பிளாசா அரண்மனை, தோக்கியோ

பாதைகளும்,தோக்கியோத்தலைநகரில்தான கூடுகின றன மிகுதியான மினசார இரயில்களும தலைநகரி லிருநது பிற நகரங்களுக்குச் செலகின்றன.

உந்து வாகனங்களைப் பொறுத்தவரையில் தோக் கியோ நகரில் மட்டுமே 20க்கும் மிகுதியான இடங களில் நிறுவனங்களால் உரிமை பதிவு செய்யபபட்டு உந்துவணடிகள தயாரிககப்படுகினறன. குறிப்பிட்ட ஆண்டில் மட்டுமே, தோக்கியோ நகரில் மட்டும 2,025,000 உந்துவண்டிகள இருப்பதாகக் குறிப்பிடப் படுகிறது. சராசரியில் ஒருவருக்குப்பல உந்துவணடிகள் இருப்பதாகக் கணககிடப்பட்டுளளது

தோககியோவுக்கு 13கி.மீ. தொலைவில், நகரின் பகுதியான 'அமேதா' எனனுமிடத்தில் பன்னாட்டு விமான நிலையம் ஒன்று அமைநதுள்ளது. இதுவே உள்நாட்டு விமான நிலையம் ஆகும் இங்கிருந்து 'ஒகினாவா', 'ஒக்கேட்டோ', 'ஒசாகா' ஆகிய உள நாட்டு இடங்களுக்கு விமானங்கள் செல்லுகினறன.

தோககியோவிற்கு மட்டுமே 4 துறைமுகங்கள அமைக்கப் பட்டுள்ளன. அவற்றுள யோககாமா துறை முகம் மிகச்சிறப்புடையது ஆகும். எலலாப் பொருட் களின ஏற்றுமதியும் இறக்குமதியும் இத்துறைமுகம் மூலம் நடைபெறுகின்றன 'கவசாகி', 'சியோலி' (Kswasaki and Chioli) என்னும் மற்ற இரணடு துறைமுகங்கள தளவாடசசாமான்கள், பெரும் இயந் திரப் பொருள்களுககு என்று ஒதுககப்பட்டுள்ளன. தோக்கியோத் துறைமுகம் மூலம் வெளிநாட்டினர் வருகை, உளநாட்டினர் வெளிநாடுகள செல்லுதல் ஆகியவை மேற்கொள்ளப்படுகின்றன.

தோககியோ நகரின் தெனமேற்கில் 'காசுமிக சாகிப் (Kasumigasaki) பகுதியில் தான் இப்பொழு தைய பேரரசரின் அரண்மனை உள்ளது. இவ்வரண மனையின சூழல்களும், கதவுகளும், உளளிருக்கும் சித்திர வேலைப்பாடுகளும் சப்பானின் நெடிய வர லாற்றைக் கூறும். இவவரண்மனையையொட்டித்தான தேசிய பாராளுமன்றக கட்டடம் உளளது (National Diet). இக்கட்டடம 147 மீட்டர் உயரம் உள்ளது.

தோககியோவின் மககளதொகை 8151,000ஆகும் என்று கணக்கிடப்பட்டுளளது (1983). யோககாமா 2868000: கவாசாகி 1039000 எனறும் குறிப்பிடப்படு கிறது (1983). இரணடாம் உலகப் போருக்கு முனபு ஒசாகா நகரம்தான் முதலிடத்தை வகித்தது; தோக்கியோ இரண்டாம் இடம; இப்போது நிலைமை மாறிவிட்டது. கனரக இயந்திரங்கள, பாறைஎண்ணெய், தளவாடங்கள் சுத்திகரிப்பு ஆலை கள, இரசாயனப் பொருள ஆலைகள், கப்பல் கட்டும் தளங்கள,உந்துவாகனத்தொழிற்சாலைகள்ஆகியவை அனைத்தும தோக்கியோத் தலைநகரிலும் சுற்றுப்



நவீன தங்கும் விடுதியும் பாராளுமன்றக் கட்டடமும்

புறநகர்களிலும் மிகவும பெருகி, ஓயாது இயங்கி வரு கின்றன. இதனால விபததுகள் அடிக்கடி ஏற்படுவது முற்றும் இயல்பான நிகழ்ச்சியாகும. 8844 தீ விபத் துக்கள் 1969-ஆம் ஆண்டில் மட்டுமே நிகழ்நதுள என. தோக்கியோ நகர மக்கள் எநநேரமும, தீ விபத்துகள், வெள்ளம, புயல் ஆகிய இயறகை அழிவு களை எதிர் நோக்க வேணடியுள்ளனர்.

1970 ஆம் ஆணடில்116 பல்கலைக்கழகங்கள் இயங்கி வந்தன. மருத்துவம், பொறியியல், வேளாண்மை ஆகியவற்றிற்கு உரிய தனித்தனிப் பலகலைக்கழங்கங்களும் இதில் அடங்கும். தோக கியோப பல்கலைக்கழகம் 100 ஆணடுகளுககும் மேலாக உளளது; மிகப் புகழ பெறற பல்கலைக் கழகமாக விளஙகிவருகிறது. எச்.அ.

**தோகாலாந்து**: தோகாலாந்து எனனும நாடு மேறகு ஆப்பிரிக்காவில தென்கடறகரைப பகுதியில், முனபு செருமனிக்கு உட்படிருந்த நாடாகும (German Dependency). சென்ற நூற்றாண்டின் இறுதியில் கி.பி.1884-ஆம் ஆண்டிலபுதியநாடு கணடறியும் செரு மனிய மாலுமியான 'நாகடிகல்' (Nauchtigal) என்ப வரால் கணடறியப்பட்டுச் செருமனிய ஆளுகைக்கு உட்பட்டது. அடுத்த 15 ஆணடுகளில செருமானியர் கள் இந்நாட்டின் பல பகுதிகளில் உட்புகுந்து அப் பகுதிகள் அனைத்தையும் தம் ஆளுகைக்கு உட்படுத் தினர். முதல் உலகப் போரின் முடிவில்தான கிழக் குப் பகுதியான தோகாலாந்தைப்பிரானசும், மேறகே 'கானா' போன்ற பகுதியைப் பிரிட்டனும் பிரித்து எடுத்துக் கொண்டன. 1919-ஆம் ஆணடில் வெர்சே உடன்படிக்கையினபடி பிரான்சும், இங்கிலாந் தும் இந்நாட்டைப் பிரித்துப் பங்கு போட்டுக கொணடன. தோகாலாந்து 1922-ஆம் ஆணடில் 'பாதுகாபபு நாடு' (Protectorate) ஆக மாறியது. ஐ நா. சபையின் தருமகர்த்தாப் பாதுகாப்பு சபைககு (U.N O Trusteeship rule) உட்பட்ட நாடாக 1946-ஆம் ஆணடில் மாறறப்பட்டது. தோகாலாந்து மக்கள தனிநாடுவேண்டி, அதாவது 'தங்ககடற்கரை நாடு' (Gold Coast Country) எனறு மாறுமாறு 1956-ஆம் ஆணடில் கிளர்ச்சி செய்தனர். தோகா லாநது, கானாநாடுபகுதிகள் அனைத்தும் 1957ஆம் ஆணடில் இணைநத கானா என்று பெயரிடப்பட் டன. இறுதியாக, மீணடும் பிரெஞ்சுப் பகுதியாக ஆளுகைக்கு உட்பட்டிருந்த தோகாப் பகுதி மட்டும், முழுச்சுதநதிரம் அடைநத தோகாலாநது நாடாக உரு வாகியது.

**தோகோ:** (மேறகு ஆப்பிரிக்காவில் உள்ள குடியரசு) இநநாட்டின் வடககே வோலடா (Upper Volta) நாடு அமைநதுளளது. கிழககே தகோமி (Dahomy) நாடு உளளது. மேறகே, முன்பே இணைந திருந்த கானா நாடும், தெறகே கடற்கரைப் பகுதியும் எல்லைகளாக உளளன. 'உலோமே' என்னும் (Lome) நகரம இதன் தலைநகராகும் இது தெற்கே அமைந்துளள கடல் துறைமுகமும் ஆகும். இத் தலை நகரத்துறை முகப்பட்டினத்திறகு 32கி.மீ. தொலைவில் 'புமே' (Kpmef) என்னும் மறறோர் துறைமுகம் உள்ளது தோகோலாந்தினவடபகுதியில்'சொகோதே' (Sokode) என்னும் மற்றோர் சிறப்பான நகரம் அமைநதுள்ளது.




தோகோ அமைவிடம

தோகோ நாட்டில் ஆறு முககிய நதிகள் ஓடுகின்றன. அவற்றுள தோகோ எனபதே முககிய சிவ நதியின் பெயராகும். இதனாலேயே தோகோலாந்து என்று நாட்டின் பெயரும் அமைநதுள்ளது. காகோ (Haho),காரா (Kara),மோ (Mo),மானோ (Mono), சியோ (Sio) என்பவை மற்ற நதிகளாகும். 'அவகாத்சே' (Avagadje) என்பது இந்நாட்டில செல்லும் முக்கிய மலைத் தொடரின் பெயராகும்.



தோகோ வேளாண்மையினர்

தோகாலாந்தில் 6 முக்கிய நிலப்பகுதிகள் காணப்படுகின்றன. ஒன்று, குறுகிய மணறபாங்காக உள்ள கடற்கரைப்பகுதியாகும், இதனாலேயே தோகோலாந்து என்று நாட்டின் பெயரும் அமைந்துள்ளது. இப்பகுதி கழிமுகஙகள நிறைந்த பகுதியாகும். இரணடு, இதன வடக்கேயுளள 'ஊட்சி' (Outchi) எனனும் பீடபூமிப் பகுதியாகும். இப்பகுதி 32கி.மீ. தொலைவிற்கு 92மீ.வரை உயர்ந்து செல்லும் பீடபூமிப் பகுதி. இதன் நிலம் செமமண் படிந்ததாகும. மூன்று, அநநாட்டின் வடகிழக்கில் உள்ள மிக உயர்நத பீடபூமிப்பகுதி, வட பீடபூமியின் தொடர்ச்சியாகும். ஆனால, இப்பகுதியில இப்பீடபூமியின உயரம 366 மீ.முதல் 397மீ.வரை உளளது. நான்கு, இதனையடுதது இதறகு வடக்கு வடமேற்கே செல்லும் பெருமலைத் தொடர்ப் பகுதியாகும் இம் மலைத் தொடர் 'அட்டகோரா' எனனும் பகுதியிலிருந்து தொடஙகி, தோகோலாந்து, தகாமி, கானா ஆகிய மூனறு நாடுகளில் பரவி நிற்கும் மலைத் தொடர்ப் பகுதியாகும் இம் மலைத்தொர்டர்ப் பகுதி 970மீ வரையில தோகோலாந்தில உயர்நதுளளது. இம் மலைத்தொடரைப் 'பௌமன்' (Bauman Mountains) மலைத்தொடர் எனறும் சொல்லுகின்றனர். ஐநது, வறட்சியான கடற்கரைப் பகுதி. தோகாலாந்து நாட்டிலேயே மிகக் குறைவாக மழை பெயயும் பகுதி, இக் கடற்கரைப்பகுதி தான் ஆகும். நாட்டின் பிற பகுதிகள, காடுகள் உட்பட்ட ஆறாம் புவியியற் கூறு உடையதாகும் பிற

இடங்களில் ஆண்டொனறுககு70 மி.மீ. மழை கிடைக் கிறது. தெற்குப்பகுதியிலும் நாட்டின் மையப் பகுதி யிலும் காடுகள் நிறைந்துளளன. அக்காடுகளில எல்லாம் சிங்கங்கள, சிறுத்தைகள், யானைகள நிறைந்து காணப்படுகின்றன. குரங்குகள, மானகள், காட்டெருமைகள், கோவேறு கழுதைகள், காட்டுப் பன்றிகள், கலைமான்கள, ஊர்வனவற்றுள முதலை கள், பாம்புகள, பெரும் பல்லிகள் முதலிய எல்லா விலங்குகளும், அடர்ந்த காடுகளிலும, சதுப்பு நிலக காட்டுப்பகுதிகளிலும் நிறைந்துள்ளன.

(Gur) மொழியைப் பேசுகின்றார்கள். 'தாமெயர்மா', 'பசாரி', 'மோரோ,'மோபோ' (Tamayarma, Basari, Moro,Mopo) ஆகிய மொழிகளைப் பேசும் வெவ்வேறு இனததவர்களும் இஙகு உளளனர். அதுபோன்றே 'பூலானி', 'குவா' (Fulanı, Kua) ஆகிய மொழிகளும் மக்களால் அதிகமாகப் பேசப்படுகினறன இந்நாட்டின மொதத மக்களதொகை 2,000,000 ஆகும். இம் மக் கள் தொகையில் 400,000 கிறித்தவர்களும் 150,010 முசுலீம்களும வாழகினறனர். எஞசியுள்ளவர்கள நாட்டின பழைய இனஙகளைச் சார்நதவர்கள்.மககள்



தோகோ பெண்கள்

கிரோ நதியோரப் பகுதிகளில மக்கள அடர்நது வாழ்கினறனர். தலைநகரான உலோமே நகரில் அரசாஙக அலுவலகஙகள பலவும, மக்களின் குடியி ருப்புப் பகுதிகளும் நிறைந்துளளன. 'அநெகோ' (Anecho), 'பாலிமே' (Palıme), 'அடக்பாமே' (Atak-pame) ஆகியவை பிற முககிய குறிப்பிடத் தக்க நகரங்களா.

தோகோலாந்தில 30க்கும அதிகமான வெவ வேறு இனத்தவர்கள் வாழகினறனர். 'குர்மா' (Gur-ma), நகிதா (Nahıda) என்னும இனததவர்கள 'குர்'

தொகையில பெரும்பாலோா பெணகளே, ஆண களைவிடப் பெணகளின் சதவீதம் கூடுதல விழுக்காடு ஆக உளளது. நாட்டு மக்களின் எண்ணிககையில் 54 விழுக்காடு 20 வயதுக்கும் உட்பட்ட இளைஞர் களேயாவா(1970-ஆம் ஆணடுக் கணக்கெடுப்பின்படி).

எச்.அ

**தோகான்**, வடகிழக்கு ஆப்பிரிக்காவில வாழும் தொன்மையான குடியினர். மாலி (Malı) நாட்டில் நைசர் (Nıger) நதிப் பகுதிக்கும் மேல் வோல்ட்டா (Upper Volta) பகுதிக்கும் இடைப்பட்ட பகுதியில்

இவர்கள மிகுதியாக வாழ்கின்றனர். தோகான (Dogon) மக்கள 2,50,000 எணணிக்கையே உள்ளன ரேனும தங்களுககெனறு தனிப்பட்ட பணபாட்டைக் கொணடுளளனா

தோகான் மக்களின் வரலாறு நீணடது. இம் மககள் வாழந்த பகுதியில பல பேரரசுகள தோனறி மறைநதன. குறிப்பாகக் கானா, மாலி, சோங்காய் (Songhai) முதலிய பகுதிகளை ஆணட அரசர்கள தொடர்ந்து தோகான மக்கள் வாழ்ந்த பகுதியைக் கைபபறற முயன்று வந்தனர். ஆனால், தோகான மககள தஙகள பகுதியைஒருபோதும் விட்டுககொடுக்க வில்லை. கறகள நிறைந்த மேடடுப் பகுதியாகத் தேர்ந்தெடுதது இவர்கள வாழவிடஙகளை அமைத் துக் கொண்டதால் எதிரிகளிடமிருந்து விடுபட்டிருக்க முடிந்தது.


தோகான் முதியவர்

தோகான மக்கள் கொண்டுள்ள தொன்மங்களும் (Myths) உலகம் தோனறிய முறை பற்றிய கருத்து களும் மிகப்பலவாகும். இவர்கள் மொழியில் ‘கிசிஉசி’ (Kize-Uzi) எனக் கூறப்படும் ஒருவகை விதையிலி ருந்தே இந்த உலகம் தோன்றியது எனபர். அநத விதையில ஏற்பட்ட ஒருவித அதிர்சசியின மூலம அது உயிர்பெற்று அதனினறு வளையம் வளையமான வடி வத்துடன் ஏழு பருப்பு வகைகள் உண்டாயின. வளையம் வளையமாக உள்ள அமைப்பு உலகம் முடி வுறாத தன்மையைக் காட்டுகிறது என்று கூறுவர். இந்த வளையங்கள எதிரெதிராக வளைந்து (Zigzag) இருப்பதைப் போனறே இவாகளின வீடு களும் கோயில்களும அமைந்துளளன. எதிர் எதிரான வளைவுகள உலகில் காணப்படும அனைதது எதிர் எதிர்ப் பண்புகளையும சுட்டிககாட்டுகின்றன என நம்புகினறனா எடுத்துககாட்டாக வலம-இடம், உயர்நதது-தாழ்ந்தது, ஆண்-பெண, ஒப்புமையுடைய தும்-ஒப்புமையற்றதும் முதலான அனைத்தும் உலகத் தின் இயக்கத்திற்கு இனறியமையாதன என்னும் கருத்தை எதிரெதிரத் தன்மை விளக்குகிறது என்று கருதுகினறனர். ஒவவொருவரும் எதிரெதிர்த் தன்மை களை அவர்களுக்குளளேயே பெற்றுள்ளனர் என்பா. இன்முகமாக இருக்கும் ஒருவா கோபமாக நடந்து கொள்வது எடுத்துக்காட்டாகும. இதைப்போன்று மக்களிடம காணபபடும் பிற பண்புகளும் எதிர்த் தன்மைகளை உணர்த்துகின்றன என்பர்.

தோகான் வீடுகள் மனித உறுப்புகளைக் குறிக் கும்வகையில் கட்டப்படுகின்றன. வீட்டின மைய அறை வயிற்றுப்பகுதி எனவும், வடமூலையில் அமைந் திருக்கும் சமையல் அறை தலைப்பாகம் எனவும், இரு அடுப்புகள் கணகள எனவும், நீணட இரு வைப் பறைகள கைகள் எனவும், தென்மூலையிலுள்ள இரணடு முகப்புகள காலகள் எனவும், வீட்டின் நடு விலுள்ள அறைக்குக கல்லில பச்சைத் தானியங்கள அரைக்கும் போது வெளிப்படும் திரவம் விந்துத் திர வம் என்றும், கல்லில திரவம் செல்லும்பாதை ஆண குறியைக் குறிக்கின்றது என்றும் கூறுவர்.

தோகான மக்களின் ஒவ்வொரு குடியிருப்பும் இம்மக்களின் உலகம் பற்றிய தத்துவத்தின் அடிப் படையில் அமைந்துள்ளது. குடியிருப்பைச் சுற்றி வளைந்து வளைந்து காணப்படும் நிலங்களுககு நடு விலுளள குடியிருபபில் பல்வேறு குடும்பங்கள் அமைந துள்ள நிலை குறிப்பிடத்தக்கதாய் உள்ளது. சதுர மாகவோ நீள்வட்ட வடிவமாகவோ உளள குடியிருப பின் ஒரு முனையில இரும்புதொழில் செய்வோர் உளளனர். இது உடலின தலைப்பாகத்தைக் குறிப்ப தாக உள்ளது.

வழிபடும் பலிபீடங்கள் மறு முனையில் உளளன. அவை காலடியைக் குறிக்கினறன. அவ்விரணடு முனைகளுக்கும் இடையில் ஆண்கள் கூடும் வீடு தலைப்பகுதியைக் குறிக்கும் இடத்திலும், பெண்கள கூடும் வீடு கைப் பகுதியைக் குறிக்குமிடத்திலும், குடும்ப வீடுகள மாாபகத்தைக் குறிக்குமிடத்திலும், எண்ணெய் ஆட்டும் கல் பெண் இன உறுப்பைக் குறிக்கும் இடத்திலும், கிராமப் பலிபீடம் ஆண் இன உறுப்பைக் குறிக்குமிடத்திலும் உள்ளன.


தோகான் குடியிருப்பு

தோகான மககள கூட்டுக் குடுமபங்களாக வாழ கினறனர். ஒவவொரு குடும்பத்தினரும் தங்களுக்குரிய நிலங்களில உழுது பயிரிடுகின்றனர். ஆண, பெண் இருபாலருக்குமிடையே தொழிற்பகுப்பு மிகுதியாக இல்லை எனலாம் முதிய ஆண்கள் வீட்டு வேலை களைச் செய்கின்றனா. வலிமையான பெண்கள கடினமான வேளாணமைப் பணிகளிலும் ஈடுபடுகின றனர். ஒரு சில செயல்களில் மட்டுமே ஆண, பெண இருபாலாருக்கும்தனித்தனித் தொழிலகள உளளன எனக கூறலாம்.

குடியிருப்பின் அமைப்பைப் போன்றே ஒவ வொரு வீடும் இந்த அடிப்படையில் கட்டப்படுகின றது. வீட்டின் பெரிய அறை வயிற்றுப் பகுதியையும், வடபகுதியில் அமைக்கப்படும் சமையல் அறை தலைப் பகுதியையும்,இரணடு அடுப்புகள் இரு கணகளையும, வீட்டின இரு பக்கஙகளிலும் அமைநதுளள வைபபு அறைகள கைகளையும், வீட்டின தெனமுனையில அமைந்துளள இரு கூம்புகள கால்களையும் குறிக்கின றன. வீட்டின் மையப்பகுதியில அமைககப்பட்ட தானியங்களை அரைக்கும் இயந்திரம் ஆண இனக் குறியைக் குறிப்பதாக உளளது.

சமுதாய அமைப்பிலும், திருமணம் சமயச் சடங் குகள் முதலான அனைத்து நிகழ்ச்சிகளிலும் இவ


தோகான் பெண்

வாறான குறியீட்டு முறையை அடிப்படையாகக் கொண்டுளளனா. இவர்களின் திருமணமுறை பல துணை மண முறையைக் (Polygynous Marriage) கொணடது. பெரும்பாலானோா இரணடு மனை வியரைக் கொணடுளளனர்.

தோகான பழங்குடியினர் 'அமமா' (Amma) என் னும் தெய்வத்தை முதன்மையாகக் கருதுகினறனர். இத்தெய்வமே இவ்வுலகைப் படைததது என நமபு கினறனா. இவாகளின நான்கு மூதாதையருள ஒருவ ரின பெயா அமமா சேரு(Amma Seru)எனபது குறிப் பிடத்தக்கது. இவர்களின தொனமைப் பண பாடு வளர்நது வரும் மாலி நாட்டின தேசிய பண பாட்டால பெரும் மாறறத்திறகு உளளாகியுளளது.

சீ.ப.

**தோங்கா தீவு**: தெற்குப் பசிபிககுக்கடற்பகுதி யில் அமைந்துள்ள 150 க்கும் மேற்பட்ட சிறு சிறு தீவுக கூட்டங்களைக் கொணடது இந்நாடு. இது ஒரு முடியரசு நாடாகும். தோங்கா தாபு (Tonga-tapu), ஆபெய் (Haapai), வாவா (Vavau)ஆகிய தீவுக் கூட் டங்கள தோங்கா (Tonga) நாட்டின் சிறபபான பகுதிகளாகும்; இமமூனறும் பவளத் தீவுக் கூட்டங் களாக அமைந்துள்ளன. இந்நாடு, இயறகைக்கூறுகள பொருந்திய தீவுக் கூட்டஙகள் அனறு. இந

நாட்டின் கிழக்குப் பகுதியில் எரிமலைத் தீவுக் கூட்டங்களும்உள்ளன.அவவாறு,'நியு ஆபாவோ'('Niuafoou') என்றதொரு தீவுக் கூட்டம் பெரும் தீவுக் கூட்டங்களுக்கு வடமேற்கில் அமைந்துள்ளது. இதனைத தகரக்குவளைத் தீவு, (Tin-can-island) எனறும் குறிப்பதுணடு இது எப்போதும் எரிமலைப் பிழம் பாகவே இருப்பதனால், அடிககடி இங்குள்ள இவ வெரிமலைகள நெருப்பைக் கககுகின்றன.




தோங்கா அமைவிடம்

தோங்கா நாட்டினதென்மேற்கேஆசுத்திரேலியாக் கணடமும் நியூசிலாந்தும் அமைந்துள்ளன. நேர் மேற்கே பிசித் தீவு நாடும், சாலமன் தீவுகளும் உள்ளன. தெற்கே மகரரேகையும், வடக்கே பூமத்தியரேகையும் செலலுகின்றன. இந்நாட்டின் வடமேற்கில் அவாய்த்(Hawaii) தீவுகள அமைந்துள்ளன. தோங்கா நாட்டின் பரப்பளவு 671 ச.கி மீ. 1970-ஆம் ஆண்டின் மககள் தொகைத் கணக்குப்படி மொததம் 8,80500 மக்களுள், தலைநகரான நுகுவாலோபாவில் 17,000 மக்கள் வாழ்கின்றனர்.

தோங்கா, ஆஙகிலம் ஆகிய இருமொழிகள இந் நாட்டு மக்களால் பேசப்படுகின்றன. 'பாங்கா' (Pa'anga) என்பது இந்நாட்டின நாணயமாகும். இந் நாட்டின் தேசிய கொடி சிவப்பு நிறம் கொணடது. இதன் இட மூலைப் பகுதியில் வெண்மையான பரப்பில சிவப்பு நிறத்தில் செஞ்சிலுவைச(Red cross) சினனம் பொறிக்கப்பட்டுள்ளது.

தோங்கா (Tonga) மிதமான தட்பவெப்ப நிலையில் அமைந்திருந்தபோதிலும், அதன பொதுவான தட்பவெப்ப நிலை தீவுக்குத்தீவு வேறுபடுகின்றது. நாட்டின் தென்பகுதியில் சில சமயஙகளில ஈர மில்லாத வெற்றுநிலையும், சில சமயங்களில் ஈரம் நிறைந்தநிலையும் காணப்படுகின்றன. வடபகுதிகள பொதுவாகவே வெப்பம நிறைந்த பகுதிகளாகும்.

'பாலினேசியர்கள' (Polynesians)என்ற இனத்த வர்கள ஏறத்தாழ 2500 ஆணடுகளாக இங்கு வாழ்நது வருவதாகக கூறபபடுகிறது. இந்நாட்டில் 1970-ஆம் ஆண்டின் மக்களதொகைக் கணக்கெடுப்பினபடி 88,500 மக்கள வாழ்கின்றனா. பெதுவாக மக்கள தொகைப் பெருக்கம் ஆண்டொனறுக்கு 3.4 விழுக் காடாக இருந்துவருவது தோங்கா நாட்டு அரசின் மிகமுக்கியச் சிக்கலாகக் கருதப்படுகிறது. 'நுகுவா லோபா' (Nukualofa) என்பது தோஙகாத்தீவு நாட்டின தலைநகரமாகும் இத் தலைநகரம் 'தோங்கா தாபு' என்னும் முதனமைத் தீவில் அமைந்துள்ளது.

மக்களுள் பெரும்பாலோனோர் கிறித்தவ மதத் தைச் சார்ந்தவாகள. இம்மக்கள் தச்சுப் பாதிரிமார் களின் முயற்சிகள காரணமாக கி.பி. 1840-45 ஆணடுகளில் கிறித்தவ மதத்தை ஏறறுக் கொண்டனர்.

கட்டாயக் கல்வி இந்நாட்டில் நடைமுறையில் உள ளது. சிறுவர் சிறுமியர்களுக்கு 5 வயது முதற்கொண்டு 9 வயது முடியத்தொடக்கப் பள்ளிகள் மிகுதியாக ஏற் படுத்தப்பட்டுள்ளன. உயர்நிலைப் பள்ளிகளும், ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளும் இன்னும் மிகுதியாக ஏற்படுத்தப்பட்டுள்ளன.ஆனால்,மாணவ மாணவிகள பட்டமேற்படிபபிற்குச் செல்ல விரும்பினால் அருகி லிருக்கும் நியூசிலாந்து, பிசித்தீவு, ஆசுத்திரேலியா ஆகிய நாடுகளுக்குத்தான் செலல வேண்டும்.தோங்கா நாடு ஒரு வேளாண்மை நாடு. தம மக்களுக்கு வேண் டிய உணவுப் பொருள்களை அந்நாட்டு மக்களே பயி ரிடுகின்றனர். அரிசி, கோதுமை, வாழை, கிழஙகு வகைகள் ஆகிய உணவுப் பொருள்களைப் பெரிதும் பயிரிடுகினறனர். கொப்பறைத் தேங்காய், வாழைப் பழங்கள் ஆகியவை இந்நாட்டிலிருந்து வெளிநாடு களுக்கு மிகுதியாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

தோங்கா நாட்டில் புதுமையான நிலச் சாகுபடிச் சட்டம் நடைமுறையில் உள்ளது. இச் சட்டத்தின்படி 16 வயது அடைந்த இளைஞர் ஒவ்வொருவரும் நாட் டிற்கு ஒரு சிறுவரி கொடுப்பதன் மூலம் 8¼ ஏக்கர் (3.3 எக்டர்) நன்செய் நிலமும், கிராமத்தில் வீட்டுக் குடியிருப்பு மனை ஒன்று பெறுவதற்குத் தகுதி



நுகுவாலோபா நகரம்

உடையவராகிறார். சட்டப்படி எல்லா நிலங்களும். அரசுக்கே சொந்தமாகும். ஆயினும் நடைமுறையில நிலப் பிரபுகளும், பெரும் நிலக்கிழார் குடும்பங்களும் நிலங்களை அவர்களின விருபபத்தின்படியே குத்த கைக்கு விட்டுவிடுகினறனர்.

இத் தோஙகா நாட்டின் தீவுக் கூட்டங்கள் சில வற்றைப்'பசிபிக்கின கொலம்பசு' எனக குறிககப்படும் ஆங்கில மாலுமியான கேப்டன சேமசுகுக்கு(Captain James Cook)என்பார் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில, கண்டுபிடித்து,இவற்றிக்கு'நட்புறவுத்தீவுகள்(Friendly isles) என்று பெயரிட்டார். பல நூற்றாண்டுகளாக இந்நாட்டில முடியரசே நிலவி வநதுள்ளது.கடந்த நூற்றாணடில், கி பி.1845-ஆம் ஆணடில் ஓா உள நாட்டுப் போா ஏறபட்டது. அதன முடிவாக, முத லாம் சார்சு துப்போ (George Tupou I) எனபவர் அனைத்துத் தீவுக் கூட்டஙகளுக்கும் மன்னராக ஏற்றுக் கொள்ளப்பட்டு அவ்வாறே அறிவிக்கப் பெற்றார். இநநாடு 1900-ஆம ஆண்டில பிரிட்டிசு பாது காபபிற்கு உட்பட்ட காலனி நாடாயிறறு.இரண்டாம உலகப்போருக்குப் பிறகு இந்நாட்டு மக்களின அர சியல் விழிப்புணர்வு காரணமாக, இந்நாட்டின மீது பிரிட்டிசு அரசின மேலாணமை குறைந்து வர லாயிற்று.

தோஙகா நாட்டைச் 'சபோதே' இராணியர் (Queen Sobote) எனபவர் 1918-ஆம ஆணடிலிருந்து 1965-ஆம ஆண்டுவரை ஆட்சிபுரிநதார். இவரது ஆட்சி யினகீழ் நாட்டின வெளிநாட்டுக கடன சுமை குறைந் தது;நாட்டின கல்வியினமையின தொகையும் குறைந் தது. அதன பினனர் இறுதியாக 1970-ஆம் ஆண்டில், சூன்மாதம் 4 ஆம தேதியனறு பிரிட்டிசு அரசிலிருந்து தோங்காநாடு விடுதலை பெறறது எனினும் இனறு வரையில் தோங்காத தீவு நாடு சட்ட வரமபுககுட் பட்ட முடியரசாகவே திகழ்நது வருகிறது இப்போது இந்நாட்டின மன்னர்' நான்காம் தௌபாகெஹுபோ (King TaufahauTupou IV))எனபவராவார். எச்.அ.

தோடர் நீலகிரி மலையில் வாழ்ந்து வரும் ஆயா பழங்குடியினத்தவர். இவர்கள தமிழகத்தின பிற மாவட்டங்களில் மிகக் குறைந்த எணணிக்கை யில் காணப்படுகினறனர். நீலகிரியில இவர்கள் தோடா நாடு, குந்தா நாடு, பெரங்கா நாடு, மேற்கு நாடு போன்ற இடஙகளில் வாழ்கிறார்கள. இவர்கள மக்கள் தொகை கி.பி. 1868-ஆம் ஆணடில 704-ஆக இருந்தது. அது 1987-ஆம் ஆணடுவரை ஓரளவுதான் பெருகியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது

உடலளவுகளைக கொண்டு தோடர்கள் (Todas) 'வடக்கு இண்டிட்டு' (North Indid) பிரிவைச் சார்ந்

தவர்கள் என எய்க்சுடெட்டு (Eickstedt) கூறுகிறார். அய்யப்பன போன்ற மானிடவியலாளர்கள தொல் மத்தியதரைக்கடல் இனத்தைச் (Proto Medi-terranean) சேர்ந்தவர்கள என்று கூறுகிறார்கள. கிரேக்க அறிஞர் பீட்டர், தோடர்களின் தெய்வங்களின் பெயரும் சுமேரியரது தெய்வங்களின் பெயரும தொடர்புடையனவாகக் காணப்படுவதால் தோடர்கள் சுமேரிய இனத்தைச் சார்ந்தவர்கள் என்று கூறுகிறார். உருவ அமைப்பிலும் சில ஒற்றுமைகள் காணப்படுவதால் தோடர்கள் மெசபடோமியாவினின்றும் வந்தவர்கள் என்று கூறுவார்கள். கான் ரேவு எனபார், தோடர்கள் சித்திய இனத்தைச் சார்ந்தவர்களாக இருக்க வேண்டும் என்கிறார். பிளவட்சுகி (Blavatsky) என்பவரும் இதே கருத்தைக் கொண்டவா. பேராசிரியர் எமனோ (Emeneau) தோடர்கள. சித்திய இனத்தைச் சார்ந்தவர்கள் என்ற கருத்தை மறுக்கின்றார். உருவத்தோற்ற அமைப்பில இவர்கள் தொல் மத்தியதரைக்கடல் இனத்தைச் சார்ந்தவாகள் என்று கூறுகிறார். தோடர்களுக்கு உரோமானியர்களைப் போன்று மூக்கு இருப்பதால், உரோமானிய இனத்தைச் சார்ந்தவர்கள என்றும் சிலர் கூறுவர்.

தோடர் பழங்குடி ஆண்களும், பெணகளும ஏறத்தாழப் பழுப்பு நிறம் உடையவர்கள. பொதுவாக நீணட தலையுடனும், பழுப்பு நிறக் கண்களுடனும், வட்டவடிவ முகத்துடனும், அகன்றெழுந்த மூக்குடனும், மிதமாகப் பருத்த இதழுடனும் காணப்படுகின்றனர் எனலாம். இவர்கள் தஙகளைத 'தூதா' என்றே குறிக்கின்றனா.

தோடாகளது தொன்மை பற்றிப் பல கருத்துகள நிலவுகின்றன. கொச்சி சிரியன் கிறித்தவப் பாதிரியார் பெர்ரிரி எனபவர்தாம் கி பி. 1602 ஆம் ஆண்டு முதன்முதல் தோடர்களைப் பற்றிய விவரஙகளை வெளியிட்டார். டாக்டா போப்பு 'தொழுவன்' என்ற சொல் தொதுவா, தூத என மாறியதாகக் கூறுகிறார். தோடர்கள கி பி. 12-ஆம் நூற்றாண்டில் நீலகிரியில் இருநதனர் என்பதற்குச் சானறாக கி.பி. 1117-இல் செதுக்கப்பட்ட ஒரு கலவெட்டு இங்கு உளளது. இதற்கு முனபு எப்பொழுது நீலகிரிக்கு வந்தனர்? நீலகிரியிலேயே பிறந்து வளர்ந்த இனமா? என்பன ஆராய்ச்சிக்குரியனவாகும். இராவணனிடம் பல்லக்குத் தூக்குபவர்களாகப் பணியாற்றி இராமன், இராவணனைக் கொனறபிறகு இங்கு வந்து குடியேறியதாக பி.எசு. வார்டு (R.S. Ward) தம் நூலில குறிப்பிட்டுளளாா. தோடரது குடிசையமைப்பைக் கொணடு பல்லவ இனத்தைச சார்ந்தவர்களாக இருக்கலாம் என ஊகிக்கின்றனா. தங்களைப் பஞ்சபாணடவ மரபினர் எனக் கூறிக்கொளகின்றனர். தேக்


தோடாப் பெண்


தோடர் ஆண்கள்

குறிச்சி என்ற தெய்வம்தான தோடர்களையும் எரு மைகளையும படைத்ததாகக் கூறுகினறனர். தோடர் கள் மலபாரினின்றும் வந்திருக்க வேண்டுமென இரி வர்சு (W.H.R. Rivers) கூறுகிறாா. பேராசிரியர் எமனோ போனறோா மேற்கண்ட பழக்க வழககங் கள இவாகளுக்கு மட்டுமன்றி எல்லாத் தென்னிந தியப் பழங்குடி மககளுககும் பொருந்தும் என்கிறார். எனவே, தோடாகள நீலகிரியிலே பிறந்து வளாந்த வா எனக் கூறலாம்.

தோடர்கள தங்கள் வாழுமிடத்தை 'மநது' எனக கூறுவா. ஒவ்வொரு மந்திலும் எருமைத தொழுவஙகள, புனிதப் பால் பண்ணைகள, இரண்டு அல்லது மூன்று வீடுகள் இருக்கும். தோடரது குடிசை வட்ட வடிவமாக இருக்கும். மூஙகிலால் பினனிக் கூரை வேயப்பட்டிருக்கும். சிறு வாசலொனறு உண்டு. அனைவரும் குனிந்துதான செல்ல வேண்டும். வலப் புறத்தில் தூங்குவதற்கெனப் பெரிய திணணையும் இடப்புற மூலையில அடுப்பும் உள்ளன. வீட்டில் நிறைய எருமைக் கொம்பு போன்ற வடிவங்களைக காணலாம்.

வயது முதிர்நத பெரியவர்களைக் கண்டால் பெண்கள மணடியிட்டு வணஙகவேணடும். அவர் தனது பாதத்தைத் தூக்கி அப்பெண்ணின் நெற்றி யில் வைத்து வாழ்த்துவாா. இதனை அவர்களது மொழியில் 'கோல மீள் விடுத்து' எனபர். இது அவர் களுடைய சிறப்பு வணக்கமாகும். ஆண்களும் பெணக ளும 'பூத்குளி' எனும் ஆடையை அணிகின்றனர். இப் போர்வை சித்திர வேலைப்பாடு மிக்கதாகும்.

தோடர்களது வாழக்கை முழுதும் எருமையை மையமாகக் கொண்டது. தெய்வத்திற்கு அடுத்த படியாகஎருமையைததானதெயவமாகவழிபடுகிறார் கள. எருமைகளைப் புனிதத் தன்மை வாய்ந்தவை என்றும், சாதாரண எருமைகள எனறும் இரு பிரி வாகப் பிரிக்கினறனர். சாதாரண எருமைகளின் பாலை வீட்டில் பருகுவர்; வெளியிலும் விற்பர். புனித -எருமையின பாலை அவவாறு செய்யமாட் டாா்கள. 'பனி உப்பு', 'கார உப்புப்போன்ற உப்பு வகைகளை எருமைகளுககுக் கொடுக்கிறார்கள. எரு மையை வைததுத்தான அவர்களது செலவம மதிக் கப்படுகிறது. எருமையைப் பற்றியே நூறறுக்கும் அதிகமான சொற்கள இவர்களது மொழியில் காணப் படுகின்றன.

தோடர் பழங்குடி மக்களிடையே இரு பெருங காலவழி (Moiety) உணடு. அவறறைத் தேர்த்தாள, தெவிளி ஆள் எனக் கூறுவர். இவர்கள் அகமணப் பகுப்பைச் (Endogamous) சார்ந்தவாகள். ஒரு பெருங் கால்வழியைச் சார்ந்தவர்கள், • அடுத்த பெருங்கால் வழியில் திருமணம் செய்துகொள்ள மாட்டார்கள். ஒவ்வொரு பெருங்காலவழியிலும் பல காலவழிகள் (Lineages) உண்டு. தேர்த்தாள பிரிவில் நொர்சு, காசு, தாரோடா, மெளகாசு, கேரொடர், பீரகோட்டு, நெற்றி இனிகிதி, மேட்டு ஆகிய கால்வழிகள் உண்டு. தெவிளியாள பெருஙகால்வழியில் கியெதே, அம்காசு, மதிகெட்டா, பீட்டு, கோனிகொர், பீர்கோட்டு ஆகிய கால்வழிகள உணடு. தேர்த்தாள் பிரிவினர் தங்களை உயாவாகக் கருதிக்கொளகின்றனர்.

இவர்கள் பேசும் தோடா மொழி திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது. பொனார்டு சுமித்து, காலடுவெல் போனறோர் தோடா மொழி யிலுளள பெரும்பாலான சொற்கள் தமிழோடு நெருங்கிய தொடர்புடையன எனக் குறிப்பிடுகின் றனா. சே. இலார்த்து போன்றோர் தமிழும் கன்னட மும் கலநத மொழியொன்றைப் பேசிய போதிலும் தோடாகள் மொழி தமிழே எனறு குறிப்பிட்டுளள னர். டாக்டா ஒப்பாட்டு தெலுங்கு மொழியின கிளைமொழி எனறும், போப்பு போன்றோர் கனனட மொழியின் கிளைமொழி என்றும், இரிவர்சு மலையாள மொழியின் கிளைமொழி எனறும் குறிப் பிடடாாகள். பேராசிரியர் எமனோ போனறோா இம்மொழியை ஆராய்ந்து இது எம்மொழியின் கிளை யுமன்று, இது ஒரு தனி மொழியாகும் எனறும், தென் திராவிட மொழிப் பிரிவினைச் சார்நதது என்றும் உறுதி செய்தனா.

பெணகள் பருவமடைந்தவுடன் தனிக் குடிசை யில் வைக்கப்படுகினறனர். அமாவாசைககுப் பின குளிக்கச்செய்து தீட்டுக் கழித்து வீட்டிறகு அழைத்து வருகிறாா்கள. அனறு விருந்தும் நடனமும் நடை பெறும். தோடாகளிடையே பெண குழந்தை பிறந்த வுடன் பையன ஒருவனை நிச்சயம் செய்துவிடும் வழக்கம் முன்பு இருந்தது. அப் பையன அப் பெண ணுக்கு வருடாவருடம துணி கொடுக்க வேண்டும. பெண வீட்டில் யாரேனும் இறந்து விட்டால் பலி யிடுவதறகு எருமைகள கொடுகக வேணடும். அப் பெண பருவமடைந்தவுடன அப் பையனையே திரு மணம செய்யலாம் அல்லது வேறொருவரையும் திரு மணம் செய்யலாம. ஒரு பையனுக்கு நிச்சயிக்கப் பட்ட பெண வேறொருவரை மணந்தால மணந் தவன, முனனால நிச்சயிக்கப்பட்டவனுக்கு எருமை கள கொடுக்கவேணடும். அதற்குத் 'தெர்இா' எனறு பெயா. தோடர்களிடையே திருமணம் மிகவும் எளி மையாக நடததப்படுகிறது. மணமக்கள் புத்தாடை புனைநது ஆசி பெறுவா. பெரியோர்கள் காலைத் தூக்கி நெறறியில வைதது வாழத்தி, பணமும் அளிப் பர். அனறு விருந்தும் நடனமும் நடைபெறும்.


தோடர் குடிசை


தோடர் கோயில்

தோடர்களிடையே ஒரு பெண ஒருவனைத் திருமணம் செய்து கொண்டால அவள் அவனுக்கு மட்டுமனறி அவனுடன் பிறந்த சகோதரர்களுக்கும் மனைவியாகிறாள். சகோதராகள் அல்லாத பலரும் ஒருததியை மணந்துகொள்கின்றனர். மனைவியுடன பலர் உடலுறவு கொள்வதால் தந்தைத்தன்மையைப் பெறுவதறகு இவர்களிடையே ஒரு முறை உள்ளது. ஏழாம் மாதம் வில்சடங்கு நடத்துபவனே பிறக்கும் குழந்தைக்கு மரபுப்படி தநதையாகிறான். மலட்டுத் தனத்துக்காகவோ ஒழுக்கக் கேட்டிற்காகவோ விவாகரத்து செய்யப்படுவதில்லை. ஒருவர் மனைவியை மற்றவர் அழைத்துச்சென்று மறுமணம் செய்து கொள்கிற நிகழ்ச்சியைச் சாதாரணமாகக் காணலாம். இப்பொழுது பலகணவர் மணம் ஓரளவு குறைந்து ஒருதுணை மணமுறை இளைஞர்களிடையே செல்வாக்குப் பெற்று வருகிறது. மற்றவர்களின் தொடர்பால் ஏற்பட்ட மாற்றம் இது எனலாம். இப் பழங்குடியில் தந்தையில்லாப் பிள்ளைகளைக் காண முடியாது. திருமணம் ஆகாமல் இறப்பதைப் பாவமாகக் கருதுகின்றனர்.விவாகரத்தும் மறுமணமும் சாதாரணமாக நடைபெறுகின்றன.

தோடர்கள் ஆவியுலகக் கோட்பாட்டில் நம்பிக்கையுடையவர்கள. மந்தை மேய்த்து வாழும் பழங்குடி மககளாதலால் சடங்குகள் பெரும்பாலும் புனித எருமையையொட்டியே நடைபெறுகின்றன. சடங்கின் போது புனித எருமையின் பால், நெய் பயன்படுத்தப்படுகினறன. எல்லா மந்திலும் கோயில்கள் உண்டு. கோயிலுக் கெனப் பூசாரி உண்டு. பூசாரி பல புனிதச் சடங்குகளில் ஈடுபட்டுத் தன்னைப் புனிதத்தன்மை பெற்றவனாக ஆக்கிக்கொளள வேண்டும்.மறு உலகத்திலும் நம்பிக்கை உடையவர்களாக உள்ளனர்.

தோடர்கள் இறந்தவர்களை எரிக்கினறனர். ஈமச்சடஙகில் எருமையைப் பலியிடுவதுதான் மிகவும் முக்கியமானது. இரண்டு விதச் சடங்குகளை மேற்கொள்கினறனர். இறந்த அனறு செய்யும் சடங்கினைப் பச்சைச்சாவு ('எத்வொய்நோள்கெயோடர்') என்றும்,அதற்கடுத்துச் செய்யும் சடஙகினைப் 'பால் சாவு எனறும் கூறுவர். ஒருவர் இறந்தவுடன் உறவினர் அனைவருக்கும் சொல்லி அனுப்பப் படுகிறது. பெரும்பாலும் இறந்த மறுநாள பிணத்தை எடுக்கிறாாகள். பிணத்தைப் புதுத் துணியால் போர்த்தி அணிகலன்களை அணிவித்துப் பாடையில் வைக்கின்றனர். அப் பிணத்தை நானகு பேர் தூக்கிச் செல்ல மற்றவர்கள் பினதொடருகிறார்கள். நாகமரக் கட்டையை அடுக்கி அதன் மீது பிணத்தை வைக்கிறார்கள். இறந்தவர் பயன்படுத்திய பொருள்களையும் பிணத்துடன் வைக்கினறனர். பிணததின்மீது தானியத்தைத் தூவுகிறார்கள். பலியிடுவதற்குரிய எருமையை இளைஞர்கள் இழுத்துவந்து கோடரியால் அடித்துக்கொல்லுகிறார்கள். பிணத்தின் வலக்கையை

எடுத்து எருமைக்கொம்பில் தொடும்படி செய்கிறார்கள். இறந்தவர் பெண்ணாக இருப்பின விரலை மூக்கில்விட்டு எடுக்கிறார்கள். அனைவரும் எருமையின் கொம்பைத் தொட்டு வணஙகுகிறாாகள. இறந்தவரின் தலை முடியை வெட்டிப் பத்திரப்படுத்துகிறார்கள. பின,பிணததிறகுத தீமூட்டுகிறாாகள. பிணம் எரியும்வரை அனைவரும் விம்மி அழுகின்றனர். பிணம் எரிந்தபிறகு எலும்புத் துண்டுகளையும் பத்திரப்படுத்துகிறார்கள. ஒரு காலத்தில அனைவரும் மொட்டை அடித்து வேறுமந்துக்கே செல்வதும உண்டு. ஈமச் சடங்கில் கலந்துகொண்ட அனைவரும் குளித்துத்தான் வீடு திரும்ப வேணடும்.

இரண்டாம ஈமச்சடஙகில், முன்னர்ச் செய்த வற்றைமீணடும் செயகிறாாகள்.மீண்டும எருமையைப் பலியிடுவதும் உண்டு. முனபு பாதுகாக்கப் பட்ட முடி, எலும்புத் துண்டுகளை எரிதது விடுகிறார்கள். இவ விடத்தை மும்முறை வலம்வந்து புதிய மட்குடத்தைப் போட்டு உடைக்கிறார்கள.கொனற எருமையைக் கட்டிப்பிடித்து அழுகின்றனா.ஆணகள வட்டமாக நினறு நடன மாடுகினறனா சிலர் இறந்தவர்மீது பாட்டுப பாடுகினறனர். எருமைகளைப் பலியிடா விட்டால் இறந்தவரின ஆவி இவ்வுலகத்தையே சுற்றும் எனறும், எருமைகளைப் பலியிட்டால இறந்தவரின ஆவி மறு உலகிறகுச்செல்லுமென்றும் நம்புகிறார்கள. தோடர்கள ஈமச்சடஙகில எருமையைப் பலியிடுவதுபோலச் சித்தியர்கள குதிரையைப் பலியிடுவது இஙகுக் குறிப பிடத்தக்கதாகும். சு.ச.

**தோடர்மல், இராசா**: முகலாய அரசர்களுள் தலைசிறந்து விளங்கிய அகபருடைய தலைமை அமைச்சராகப் பணியாற்றியவர். தோடர்மல் உததரப்பிரதேசத்தில் ஒரு காத்ரிக (Khatri)குடும்பததில் பிறந்தவர். ஆனால் தோற்றத்திலும் மனநிலையிலும் செய்யும் தொழிலிலும் இவர் ஒரு இராசபுத்திரா போலவே காணப்பட்டார். அக்பருடைய மிக உணமையான ஆதரவாளர்களுள் இவர் ஒருவர். அகபருடைய அரசின முக்கியமான தூண்கள் எனக் கருதப்பட்டவர்களுள இவரும ஒருவர். இவரைப் போன்றவர்களுடைய வீரச் செயல்களை ஓரிரு நாடுகளின வரலாற்று ஏடுகளில் தான் காண இயலும்.

தோடர்மல (Todarmal) தமது வாழக்கையைச செர்சாசூரின (Sher Shah Sur)கீழ்த் தொடங்கினார். சூர் அரசகுலம வீழசசியுறற பிறகு அக்பரின கீழ்ப் பணியிலமர்ந்தார். தொடக்கத்தில் இவர் ஒரு சாதாரண எழுத்தராகப பணியாறறி வநதாா. கி.பி. 1562 ஆம ஆணடுககுள இவர் முக்கியமான அதிகாரியானார். விரைவில முன்னேறிகி.பி.1572 இலபுதிதாக உருவாக்கப்பட்ட குசராத்து மாகாணத்தின திவானாகப் (Diwan) பொறுபபேறறார். குசராத்தின் வருவாய்கள சரிவரச் செலுத்தப்படவிலலை எனபதால இவர் அஙகு அனுபபப்பட்டார். நிலஉடைமைகளைப் பற்றிய விவரங்கள அனைத்தையும சேர்த்து அவற்றிலிருநது அரசுக்குச் சேரவேணடிய தொகையை வரையறுத்து அதனைச் சரியாகக் கணககிடும் பணி இவருக்கு அளிக்கப்பட்டது ஆறு மாதஙகளுக் குளளாகவே அஙகிருநத நிலங்களை அளநதாா. இவருடைய அரிய முயற்சியின காரணமாக நிருவாகச் செலவு போகப பேரரசருடைய கருவூலம ஆணடு தோறும் ஐநது மிலலியன உருபாயகளைக குசராத்திலிருந்து பெறறது இவருடைய சீரிய பணியின மேனமையை உணர்ந்த அகபர் இவரை வசீராக (Wazir)நியமித்தார். வசீர் வருவாய்த் துறையின மிக உயர்ந்த அதிகாரியாவார். வசீரை நிதி அமைசசா என்று கூறலாம். இவர் கி.பி. 1582 இல பிரதம அமைசசராக நியமிககப்பட்டார்.

தோடர்மலின் பாதுகாப்பு (Bandobast) முறை முகலாய வருவாய் நிருவாகத்தின அடித்தளமாக விளஙகியது. பழைய முறைப்படி விளைச்சலில மூன்றில் ஒரு பங்கு நிலவரியாக வசூலிககப்பட்டது. நிலவரிபணமாகச்செலுத்தப்பட்டதால் அப்போதைய விலைவாசிக்கேற்ப மாறுபட்டது. நிலத்தின வளம அதில விளைவிககபபட்ட பயிர், பயிரிடப்படும் காலம ஆகியவற்றைக் கருத்தில கொள்ளாமல் மனததிறகுத தோன்றியபடி நிலவரி தீர்மானிக்கப்பட்டது. அத்தகைய முறையில பல குறைபாடுகள் இருப்பதைத் தோடர்மல கணடார். அம்முறையை மாறறி நிலையான வருவாயத் திட்டம ஒனறை இவர் புகுததினாா. அத்திட்டததின முக்கிய கூறுகள் மூன்றாகும். முதலாவது நிலத்தைப் பார்தது அதனை முறையாக அளத்தல்; இரணடாவது தரம் வாரியாக அதைப் பிரித்தல; மூனறாவது வரியை முடிவுசெய்தல். நிலத்தைப் பார்த்து அதனுடைய சொநதக்காரா முதலில் கணடுபிடிக்கப்பட்டார். நிலத்தை அளக்கக் குறைபாடுடைய பழைய கருவிககுப் பதிலாக வெப்பநிலை காரணமாக அளவு மாறுபடுவதறகு வழியற்ற புதிய அளவுகோல பயனபடுத்தபபட்டது. விளைநிலம் நானகு தரமாகப் பிரிக்கபபடடது. ஆணடுதோறும பயிர் செய்யக்கூடிய நிலம்; ஓரிரு ஆணடுகள தரிசாக விடப்படும நிலம்; மூனறு அல்லது நானகு ஆணடுகள தரிசாக விடப்படும் நிலம்; ஐநது ஆணடுகளுக்குமேல் தரிசாக விடப்படும நிலம. நிலஅளவு, நிலத்தின்தரம், விளைவிக்கப்பெறும் பயிர் ஆகியவற்றைக் கணக்கிட்டு மூன்றில ஒரு பஙகு வரியாக வரையறுககப்பட்டது. பின்னர் ஒவ்வொரு பகுதியிலும் கடந்த 19 ஆணடுகளாக நிலவி வநத விலைவாசியையொட்டி வரியின மதிப்புகளைக கணககிட்டு அத்தொகை வரியாக வசூலிக்கப்பட்டது. இத்திட்டததின் முககியமான

கூறு யாதெனில் குடியானவருக்குத் தாம் செலுத்த வேண்டிய வரியின் மதிப்பு முன்கூட்டியே தெரிந்து கொள்ளும் வாய்ப்பு அளிக்கப்பட்டதேயாகும். வருவாய அதிகாரிகள இனித் தங்கள் விருப்பப்படி வரியை மாறறி அமைததுக குடியானவருக்கு இன்னல் விளைவிக்க இயலாது. இம் முறையின வாயிலாக அரசு வருவாய இரண்டு மடங்காக உயர்ந்தது. முகலாயர் ஆட்சி வீழ்ந்துவிட்ட போதிலும் அவர் புகுத்திய வருவாய்ச் சீர்திருத்தம் நிலையாக நின்றுவிட்டது. மராத்தியரும ஆங்கிலேயரும் அதைக் கடைப்பிடித்தனர்.

தோடர்மல் ஒரு சிறந்த போர் வீரராகவும விளங்கி அக்பருடைய பேரரசு விரிவடைவதற்குத துணை புரிந்துள்ளார். சூரததுப்படையெடுப்பினபோது சூரத்துக் கோட்டைக்குள செல்லும் வழிகள், வெளியேறும் வழிகள் ஆகியவற்றை ஆய்ந்து வரும்படி அக்பர் இவரை அனுப்பி வைத்தார். ஒரு வாரத்திற்குள அப்பணியை நிறைவேற்றி அக்பரிடம் தமது அறிக்கையைக் கொடுத்தார். அக்பருடைய வெற்றிக்கு அது உதவியது. தண்டாவை (Tanda) வென்ற பிறகு மன்னரான தாவூத்தைத் துரத்திப பிடித்து வரும் பணி தோடர்மலுக்கு அளிக்கப்பட்டது. ஒரிசாவில் துகாராய் (Tukarai) என்ற இடத்தில் நடைபெற்ற போரில தோடர்மல்பெரும்பங்கு கொண்டார். போரில் வெறறிபெற்றபிறகு தோடாமல் தாவூதைப்பின் தொடர்ந்து பல சண்டைகளில் வெற்றி கண்டார். படைத் தலைவர் கான் கானான் தாவூதுடன் சமாதானம் செய்துகொளவதைத தோடாமல் விரும்பாமையால்ஒரிசாபற்றியஏற்பாட்டில்இவர்பங்கு கொள்ளவில்லை. பீகாரை வெலலும் பணியிலும் தோடர்மல் ஈடுபட்டிருந்தார். ஆப்கானியர்கள் முகலாயப் படையைத் தோற்கடித்த போது அப்படைப் தலைவர்களை நீக்கிவிட்டுத் தோடர்மல்லின் கீழ்ப் பெரிய படையொன்றை அகபர் அனுப்பிவைத்து நிலமையைச் சீராககித திரும்பும்படி கட்டளையிட்டார். மலைப்பாங்கான ஆபகானிய நாட்டில் தோடர்மல் மிகக் கவனமாகச செயறபட்டார். அங்கும் இங்குமாககோட்டைகள கட்டினார். ஆப்கானியருக்குக்குத துன்பம விளைவித்துஅவர்களுடைய பலத்தைக்குறைத்தார். இறுதியில் முகலாயர்கள வெற்றி கண்டனர்.

நிருவாகம் முழுவதற்கும் ஒரு பொதுவான மொழி தேவை என்பதை இவர் உணர்ந்தார். எனவே, இவர் பாரசீக மொழியை எல்லா ஆவணஙகளிலும் பயன்படுத்த வேணடும் என்று அறிவித்தார். கீழ் மட்டத்தில பணியாற்றி வந்த இந்து அதிகாரிகள் இமமொழியைக் கற்று அதைத் தஙகள மொழியாகவே மாறறி விட்டனர்.

தோடர்மல் நேர்மையானவர்; கள்ளங்கபடமற்றவர்; அஞ்சாநெஞ்சினர்; இந்திய நாட்டு விவகாரங்கள் மற்றும் நிருவாகம் ஆகியவற்றைப் பற்றி முழுமையான அளவில் தெரிந்து வைத்துக்கொண்டவர் என்று அபுல்பசல் இவரைப் பற்றி எழுதியுள்ளார். பேரரசு அதிகாரிகளுள் இவரைவிடச் சிறந்தவராக வேறெஙகும் இருக்க இயலாது என்று கூற இயலும்.

தி.அர.இரா.

*தோடாமொழி*: பல நூற்றாண்டுக் காலமாக நீலகிரி மலையில வாழபவாகள் தோடர்கள். இவர்கள நீலகிரியிலுள்ள தோடா நாடு, குந்தாநாடு, பொல்கா நாடு, மேற்கு நாடு போன்ற பகுதியில் வாழ்ந்து வருகின்றனர். இவர்களின் எண்ணிக்கை 1971–ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பினபடி 920 ஆகும். இவர்கள் பேசும் மொழி தோடாஎனப்படுகிறது. இம்மொழியை இவர்கள் ‘ஆள்பாஃசை’ எனக் குறிப்பிடுகின்றனர். இதற்கு எழுத்து வடிவம் இல்லை. ஆனால் வாய் மொழி இலக்கியஙகள் மிகுதியாக உள்ளன. இது திருந்தா மொழிகளுள ஒன்றாகக் கருதப் பெறுகின்றது. ஒப்பியல மொழி இலக்கணத்திற்குத் தோடா மொழி மிகவும் இன்றியமையாத உதவி செய்கின்றது.

தோடா மொழியைப் பற்றி முதலில் குறிப்பிட்டவர்கள ஆர்க்குனெசு,பெர்னாாடு இசுகிமித்து என்னும் அறிஞர்க்ளாவா இவர்களதோடாமொழியைப்பற்றிய ஆய்வுகளை மேற்கொணடனர், பிரடரிக்குமெட்சு ஆட்குசின போன்றோர் இம்மொழி கனனடத்துடன் தொடர்புடையது எனறும், போப்பு, கால்டுவெல் போனறோர் பழஙகன்னடத்துடன் தொடர்புடையது என்றும், ஆர்ட்டு எனபோர் தமிழும் கனனடமும் கலநதது என்றும, இரிவர்சு மலையாளத்துடன தொடர்புடையதுஎனறும்குறிப்பிடுகினறனர் தோடா மொழியை விளக்க மொழியியல் அடிப்படையில் ஆராய்நத எமனோ எனபவர் இம்மொழிப் பெயர் மற்றத் திராவிட மொழிகளாகிய தமிழ், மலையாளம், கோத்தா, கனனடம போனறவற்றுடன தொடர்புடையதாக உளளது எனக் கூறுகின்றனர்.

தோடா மொழியில குறில ஒலிகள எட்டும நெடில் ஒலிகள எட்டும் என 16 உயிர் ஒலிகள காணப்படுகினறன. எ,ஏ எனறிரு ஒலிகளுககு மட்டும் ஒனறிற்கு மேறபட்ட மாற்றொலிகள உளளன. இவற்றுள அ,இ,ஊ,ஏ,ஒ,ஓ எனற ஆறும் தனித்து நினறு பொருள உணர்த்த வல்லனவாய்க் காணப்படுகினறன. இஅ, ஒஎ, ஓஈ, அஎ, ஏஓ, ஓஅ, ஊஓ, ஊஇ, ஒஓ, உஆ என்ற பத்து வகை உயிரொலி இணைகள் உளளன.

மூக்கொலிகள 4, உரசொலிகள 11, மருஙகொலிகள் 4,வருடொலிகள் 2, ஆடொலி 1, தொடரொலி

கள் 2, அடைப்பொலி மற்றும் அமைப்பு உரசொலி கள் 14 என 38 மெய்யொலிகள காணப்படுகின்றன. க்,ர்,ப்,ம்,ஸ்,ய் என்பன மொழி முதல், இடை, கடை களில் வரும் இயல்பின.

இம்மொழியில் மெய்யொலி இணைகள் மலிந்து காணப்படுகினறன.பெரும்பாலானசொற்கள் ஓரசைச் சொறகளாகக் காணப்படினும் நூற்றுக்கும் அதிகமான மெய்யொலி இணைகள காணப்படுகின்றன. மூன்று, நான்கு மெய்கள் கூட இணையும் தன்மையினையும் காண முடிகிறது.

பெயர்ச்சொற்கள், உயர்திணைப் பெயர்கள் அஃறிணைப் பெயர்கள் என இரு வகையாக உள்ளன. உயர்திணைப் பெயர்கள் ஆண்பால் காட்டுவன பெணபால் காட்டுவன என இருவகைப்படும். உயர் திணைப் பெயர்கள் பன்மை விகுதி ஏலாதன, பனமை விகுதி ஏற்பன என மேலும் இருவகையாக அமை கின்றன. அஃறிணைப் பெயர்கள எண்ணப்படாப் பெயர்கள எனவும் எண்ணப்படும் பெயர்கள் எனவும் இருவகைப்படும். எண்ணப்படாப் பெயர்கள் திரட் பெயர் என்றும் இடப்பெயர் என்றும் பகுக்கப்படும். திரட்பெயர் அளக்கக்கூடிய பெயர் எனவும் இயல்புப் பெயர் எனவும் இருவகையாகக் காணப்படுகின்றது. இவை பன்மை உருபுகளை ஏற்பதில்லை.

வேற்றுமைகளாகப் பதினொன்று இடம் பெறுகி கின்றன. அவற்றுள் முதல் வேற்றுமையாக எழுவாய் வேற்றுமை அமைகின்றது. ஏனைய வேற்றுமைகள வேற்றுமை உருபுகளால் உணர்த்தப் பெறுகின்றன.

காலம் காட்டும் ф் இடைநிலைகளுள் ஸ்ф் எனபது இறந்த காலம் காட்டும் இடைநிலைகளாகவும் ф், ப்,த் என்பன நிகழ்காலம் காட்டும் இடைநிலைகளா கவும் ஓ என்பது எதிர்மறை இடைநிலையாகவும் விளங்குகின்றன.

இடம, பண்பு, நேரம் என்பனவற்றை வெளிப் படுததும் வினை அடைகளும்அய்,இய், ஏய், அத்,இத், எத் போனற பெயரடைகளும் இம்மொழியில் காணக் கிடக்கின்றன.

உயிரொலி இழத்தலை இம்மொழியின் சிறப் பியல்புகளுள் ஒன்றாகக குறிப்பிடுவா. இரட்டைக கிளவிகளின் ஆட்சிகளையும் இம்மொழியில காண லாம். ஏறத்தாழ இரண்டாயிரத்துக்கும் அதிகமான சொற்கள் இம்மொழி வழக்கில் உள்ளன. பல இலட் சங்கள வரை இம்மொழியில் எண்ணமுடியும். இது இம்மொழியின் வளர்ச்சியையும பண்பாட்டு வளர்ச்சி யையும் காட்டுவதாகக் கூறுவர். திட்டை, நஞ்சு, கூகை, உகிர், மிடறு, புள், கோடு, உணங்கு, ஆவி, மீன், திங்கள் முதலிய சொற்கள தமிழ்ச் சொற்க ளோடு ஒத்துக் காணப்படுவதாகக் கூறுகினறனா.

தா.ஈ.

**துணை நூல்கள்:**

**கண்ணுசாமிப் பிள்ளை, சிவ.காழி & அப்பாத்துரைப் பிள்ளை, கா.** (மொ.பெ.ஆ) காலடுவெல் ஒப்பிலக் கணம, கழகம், 1976.

**பாலகிருட்ணன், இரா.** நீலகிரி மொழிகள், அனைத திந்தியத தமிழ் மொழியியல கழக வெளியீடு, 21, அணணாமலை நகர், 1944.

**தோதகத்தவள்ளி** கருநாடக மாநிலத்தில் ஆசன் மாவட்டத்தில் உள்ளதோரூர். ஆசனிலிருந்து (Hassan) 18 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள தோத கத்தவள்ளி (Doddagaddavalli) கோயிற் கட்டடக் கலைச் சிறப்புப்பெற்ற ஊராகும். இங்குள்ள மகா லட்சுமி கோயிலை கி.பி.1113-ஆம் ஆண்டில் குல்லா கன இரகுதா (Kullahana Rahuta) என்னும் வணி கரும் அவர் மனைவி சகசதேவி (Sahajadevi)யும் கட்டினர். இவர்கள் ஒய்சாள அரசர் விட்டுணுவர்த் தனரின் காலத்தைச் சார்ந்தவர்கள் ஆவர். இக் கோயில பஞ்சாயதன வகையைச் சார்நத கோயி லாகும். நான்கு கோயில்கள நடுவில் ஒரு மணடபத் துடன் இணைத்துக் கட்டப்பட்டுள்ளன. இமமண்டபம் 16 தூண்களைப் பெற்றுள்ளது. ஒவ்வொரு கோயிலின் உளளேயும் ஒரு சிறு கருவறையும், இடைக்கழியும் உள்ளன. கருவறையின் மேல் ஒயசாளா கட்டடக் கலைப்பாணியைச் சார்ந்த சிகரம் காணபபடுகினறது. அதன்மேல் ஒய்சாளரின் அரச இலச்சினைச் சினன மான புலியுடன் மனிதன் போரிடும் சிற்பம் உளளது.



தோதகத்தவள்ளி-மகாலட்சுமி கோயில்

கோயிலின பெரிய அறையைச் சுற்றி மூலைகளில் பல சிறு கோயிலகள உள்ளன. எனவே இக்கோயிலபார்ப் பதற்கு 9 கோயிலகள ஒனறிணைநது இருப்பதுபோல் உளளது. கிழக்குக கோயிலில் மகாலட்சுமியும் மேற கில் பூதநாதசிவனும் தெற்கில் பைரவரும் வடக்கில் காளி கோயிலும் உளளன. இப்பொழுது வடக்கி லுள்ள காளி கோயில,முனபு திருமால் கோயிலாக இருந்திருக்கவேணடும். இக்கோயிலின முன் மேடை மீது அமைந்துள்ள கருடச்சிற்பம் இதைத் தெளிவாகக் கூறுகிறது. கோயிலின் வெளிப்புறச் சுவர்களில் பல மாடக்குழிகள் உள்ளன. ஒவவொரு மாடக் குழியின் பக்கங்களும் புடைப்புத் தூணகளுடனும் சிறு சிகரங் களுடனும் அழகாக அணி செய்யப்பட்டுள்ளன. மகாலட்சுமி கோயிலின் நடனமாடும் சிவன் சிற்பமும் அழகு வாய்ந்தது. காளி கோயிலில யோக நரசிம்மர் சிற்பமுல பூதநாதர் கோயிலில கசலட்சுமி சிற்பமும் வனப்பு மிக்கவை. காளி கோயிலில் வேதாளததை எலும்புக்கூடுபோனறு செதுக்கியுள்ளமை மிக நேர்த்தி யாக உள்ளது. இக்கோயிலைக் கட்டிய கட்டடக கலைஞர் மல்லோசர் மணியோசர் ஆவா. இவர்பெயா கோயில் கல்வெட்டு ஒன்றால் அறியப்படுகின்றது.

சு.இரா.

**தோதோத்து**, என்போா வடகிழகது ஆப்பிரிக்க நாடுகளுள் ஒன்றான உகாண்டாவில் வாழும் ஒரு பழஙகுடி இனத்தவர். இவாகள போாத்திறன் பெறற ஆயா குடியினர். தோதோத்துப் (Dodoth) பழஙகுடி யினர் நைல்நதிக்கரை மக்களினத்தவருடன் குசைத்து இனத்தவருக்கு (Gusites) ஏறபட்ட கலபபினால் உண்டானவர்கள். இவர்கள் நீக்கிரோ இனத்தைச் சோநதவர்கள; மிக உயரமானவாகள். சுருண்ட தலை மயிர், தடித்த உதடுகள, குட்டையான மூக்கு, நீண்ட முகம், கருத்ததோல முதலான உடற்பணபுகள இவா களை அடையாளங காட்டும் ஆண்கள வணண மணி களால் அணிந்து செய்யப்பட்ட மாலைகளை எப்போ தும்கொணடிருப்பர். சாதாரண ஆடவன குறைந்தது 20 முதல 30 மாலைகள வரை அணிந்து கொண டிருப்பான். காதுகளின மேற்புறத்திலிருந்து கீழப்புறம் வரைவணண மணிகளால செய்யப்பட்ட அணிகலன் களை அணிந்திருப்பர். உரிய வயது வநதபின் ஆண் கள தலைமயிரை வெட்டாமல் விட்டுவிடுவா. நீண்டு வளரும் மயிரை ஒருவகைப் பறவையினம் கட்டும் கூட்டினைக் கொணடுவநது அதனுள் மயிரை அடைத் துக்கொளவர். பெண்கள காதுகளில மிகப்பெரும் வளையஙகளையும் கழுத்தில் அதைக்காட்டிலும் மிகப் பெரிய வளையங்களையும் மணிகளால் பினனப்பட்ட மாலைகளையும் அணிந்துகொள்வர்.

தோதோத்து மக்களிடம் மரபுக் கதைகளும வழக்காறுகளும் (Folklore) நிறைந்துள்ளன. மனிதன்



தோதோத்து ஆடவன்

தோனறிய முறை குறித்த இவர்களின் கதை சிறப் பானது. அக்கதைப்படி மக்கள் அக்குசு (Akuj) என்னும் கடவுளுடன் முதன்முதலில் ஆகாயத்தில்தான வாழ்ந்தார்கள். பூமியிலிருந்து பறந்து சென்ற ஒரு குருவி சிறு கயிறு ஒனறை அலகில் கவவிச் சென்றது. திரும்பி வரும் போது அதனைப் பறறிக் கொணடு மக்கள் பூமிககு வந்துசேர்ந்தனர்.

இப் பழங்குடியினர் வாழும் பகுதிகள் பெரும் பாலும் வறணட நிலப்பகுதியில் உள்ளன. இதனால் வேளாண்மையை நம்பி வாழ இயலா நிலைக்குத தளளப்பட்டனர். இவர்களின் முக்கிய தொழில் கால் நடைகளை வளர்த்தலாகும். ஓரளவு மழைபெய்யும் இடங்களில் குடியிருப்புகளை அமைத்துக கொளகின் றனர். குடியிருப்புப் பகுதிகளைச் சுற்றித தினை வகைகளைப் பயிரிடுகின்றனர். வேலை செய்யுந் திற னுடைய ஆண்கள் ஆணடில பெரும்பகுதியைக் கால் நடை மேய்ப்பதில் செலவிடுகின்றனர். ஒருசில பருவங் களில் மேய்ச்சல் நிலம் தேடிக் குடியிருப்பிலிருந்து நெடுந்தூரப் பகுதிகளுக்குச் சென்றுவருவர். ஒருசில வேளைகளில் இவர்கள சென்றுவரும் தூரம் 160 கி மீ. தூரத்திற்கும் மிகுதியாக உள்ளது. ஆகையால் முதி யோர்களே வேளாண பணிகளைக் கவனித்துக் கொள கினறனர்.

இப் பழங்குடியினருக்கும் பிற குடியினருககும் அவவப்போது சண்டைகள ஏற்படுகின்றன. அவை

பெரும்பாலும் கால்நடைகளை மேய்த்தல் மூலமாக ஏற்படுகின்றன. குறிப்பாக வறட்சி மிகுந்த காலங்களில் தோதோத்து போன்ற பிற ஆயர்குடிப் பழங்குடியினரும் கால்நடைகளை மேய்க்க முற்படும் போது குறைந்த மேய்ச்சல் நிலமே உள்ளதால் போட்டியும் சண்டையும் ஏற்படுகின்றன.

கால்நடைகளைச் சுற்றியே வாழக்கை அமைந்துளளதால் உணவு, உடை, உறைவிடம் போன்றவை கால்நடைகளிடமிருந்து பெறப்படுகின்றன. பால், பாலிலிருந்து செய்யும் பொருள்கள, இறைச்சி முதலானவற்றை மிகுதியாக உண்கின்றனர். கால்நடைகளின் தோலினைக்கொணடு சில உடை வகைகளையும், வீட்டுப் பொருளகளையும் செய்துகொளகின்றனர். நெடுநதொலைவுப் பகுதிகளுக்குச் செல்லும் போது கூடாரம் அமைப்பதற்கும் பெரிய கால்நடைகளின் தோல்கள் பயன்படுத்தப்படுகின்றன.

இவ்வகை ஆயர்குடிச் சமுதாயங்கள் கட்டுக் கோப்பான அரசியல் முறைகளைக் கொண்டதன்று. நிலையான இடத்தில் வாழாததாலும், நகராச் சொத்துக்களான நிலம், வீடு முதலானவற்றை மிகுதியாகக் கொண்டிராததாலும் முதியவர்கள் அடங்கிய பழங்குடி ஆட்சிக்குழு இவர்களிடையே இல்லை. வீரச் செயல்களைச் செய்வோரும் கால்நடைகளை மிகுதியாக வைத்திருப்போரும் இச சமூகத்தில் சிறப்பிடம் பெறுகின்றனா. இவர்களே சமூகத்தில் எழும் சிக்கல்களைத் தீர்த்து வைக்கின்றனா.

தோதோத்து சமூகத்தில் நடைபெறும் ஏற்புச் சடங்கு (Initiation Ceremony) சிறப்பிடம் பெற்றது. ஆண் இளைஞர்கள 18 வயது அடையும்போது படைப் பிரிவில் சேர்க்கப்படுவர். ஒவ்வொரு பிரிவிலும் போதுமான அளவு இளைஞர்கள் தேவைப்படுவதால் ஏற்புச்சடங்கு 5 முதல் 6 ஆணடுக் காலம்வரை தொடரும். சிறிது கால இடைவெளிக்குப பின், மீணடும ஒரு புதிய படையை உருவாக்க ஏற்புச்சடங்கு நடைபெறும். பெரும்பாலான பழங்குடிச்சமூகத்தில ஏற்புச் சடங்கு நடத்துவதன நோக்கம் திருமணம் உட்பட அனைததுச் சமுதாய நிகழ்சசிகளிலும் பஙகுபெறும் தகுதியினை ஒருவருக்கு வழங்குவதாகும்.தோதோத்து சமூகத்தில் ஏற்புச் சடங்கு படைப்பிரிவில் சேர்ப்பதை முக்கியமாகக் கொணடுள்ளது.

திருமண வயதை அடைவதற்கு முன்னர் இளைஞாகள் அவர்கள் விரும்பும் பெண்களுடன சேர்ந்து பழகலாம். திருமணத்தின்போது மணமகன் வீட்டாரும் மணமகள வீட்டாரும் மணப்பணமாகக் கால்நடைகளைப் பரிமாறிக்கொள்கின்றனர். கால்நடைகளைக் கொடுக்காதவர் பிறக்கும் குழநதை மீது உரிமை கொண்டாட முடியாது.

பெரும்பான்மையான பழஙகுடிகளைப் போன்றே இவர்களும் ஆவியுலக நம்பிக்கையிலும் இயல்பிறந்த ஆறறல்களிலும் நம்பிக்கை கொணடுள்ளனா. அக்குசு எனனும் ஆகாயக் கடவுளை (Sky God) முதன்மையாக வழிபடுகின்றனா. ஒவ்வொரு குறிப்பிட்ட நிகழ்ச்சிகளுக்கு ஒரு குறிப்பிட்ட ஆவியை வழிபடும் முறையையும் கொணடுள்ளனா. மக்களுக்கு ஏற்படும் கொடிய நோய்களையும், தீஙகுகளையும் நீக்குவதில் சூனியக்காரர் முதன்மையாக உள்ளார். நோய்களும் மக்களுக்கு ஏற்படும் தீங்குகளும் மிகுதியாகும்போது கால்நடைகளைப் பலியிடுவர். இறந்தவர்களைச் சிறப்பிக்கும் வகையில் அவர்களின் செல்வங்களாகத் திகழும் காலநடைகளுள் ஒன்றைப் பலியிடுவர். சீ.ப.

**தோபிகா**: அமெரிக்காவில் உளள கானசாசு (Kansas) மாநிலத்தின் தலைநகர் தோபிகா(Topeka). இது இம்மாநிலத்தின் வடகிழக்கில் கான்சாசு ஆற்றங் கரையில் உள்ளது. செழுமையான வேளாண் பகுதி இந்நகரைச் சுற்றியுள்ளது. கால்நடைகளும் கோதுமையும் இங்கிருந்து கப்பல்கள மூலம் பிற இடஙகளுக்கு அனுப்பப்படுகின்றன. பல்வேறு பண்ணைப் பொருள்களின வாணிக மையமாகவும் தோபிகா திகழகிறது. புகை வண்டிக்குரிய சாமான்கள் தயாரித்தல், புலால் உணவு கட்டுமானம் செய்தல், இரப்பர் செய்தல் முதலியன இங்குச் சிறப்பாக நடைபெறுகின்றன.மரப்பசைச்சத்திலின்று செய்யப்படும்பளிங்கு நிறத்தாள் போன்ற பொதிபொருள்கள் (Cellophane) இஙகு உற்பத்தி செய்யப்படுகின்றன. தானிய அறவை இயந்திரச் சாலைகள் பல இங்கு உண்டு. உள மருத்துவ ஆராய்ச்சிக் கூடங்களின் மையமாகவும் தோபிகா விளங்குகிறது.இதன் மக்கள் தொகை 115,266 (1980). தெ.பா.

**தோபு**: கிழக்கு நியூகினியின் தென் கடற்கரைக் கப்பால் உள்ள தோபுத் தீவுகளில் வாழும் தொன்மையான பழஙகுடியினர். இத்தீவுகள் நியூகினித் தீவுத் தொகுதியில் தி என்ட்ரகாசுட்டே (d' Entrecasteaux) தீவுக் கூட்டத்தைச் சேர்ந்தவை. தோபு (Dobu) மக்களைப் பற்றி, மாலினோசுகி (Malinowski) மெலனீசியப் பழங்குடி மக்களை ஆராயச் சென்ற போது கண்டறிந்து வெளி உலகிற்கு அறிவித்தார். தோபு மக்கள் வடமேற்கு மெலனீசியப் பழங்குடிகளிலேயே மிகவும் தெற்கே வாழ்பவர்களாவர்.

இவர்கள் வாழும் இருப்பிடம், இயற்கைச் சூழல அனைத்தும் வாழ்க்கைக்கு ஏற்றனவாக உள்ளன. இத்தீவுக் கூட்டத்தோடு சேர்ந்தனவே திரோபிரியாண்டுத் (Trobriand) தீவுகளும் ஆகும். தோபு மக்கள் திரோபிரியாண்டுத் தீவுகளுக்குப் பணடமாற்றம் செய்வதற்காக அடிக்கடி படகில செலலும்படி

தீவுக் கூட்டங்களும் அருகருகே உள்ளன. திரோபிரி யாண்டுத் தீவுக் கூட்டம் மண் வளமிக்கதும் மீன்கள் நிறைந்ததுமாகும். கடலேரிகள் நிறைந்துள்ள இந்தத் தாழ்நிலப் பகுதிகள் ஆண்டு முழுவதும் மீன்பிடிக்க வசதியாக உள்ளன. ஆனால், தோபுத் தீவுகள் எரிமலை வெடிப்புக்களால் தோன்றியமையால் ஆங்காங்குப் பாறைகள் உள்ளன.



தோபு மக்கள்

தோபு மக்களின் சிற்றூர்கள் சிறியதும் தனித் தனியானதுமாக உள்ளன. பத்துப் பதினைந்து குடும் பங்களே ஒவ்வொரு சிற்றூரிலும் உள்ளன. வெள்ளையர்கள் இப்பகுதிகளுக்குக் குடியேறுவதற்கு இரண்டு தலை முறைகளுக்கு முன்னால் இவர்கள் அனைவரும் தன்னின உண்ணிகளாக (Cannibals) இருந்தனர். இப்போது இப்பழக்கத்தைக் கைவிட்டுள் ளனர். இவர்கள் பொதுவாகப் போர்க்குணமிக்கவர் கள். இவர்கள் இனத்திற்குள்ளே இவ்வாறான போக்கைக் கொண்டுள்ளனர். ஒவ்வொரு மனிதனும் மற்றவனுக்கு எதிரியாகிவிடும் இயல்பினர். இவர் களின் அண்டைய மக்களான திரோபிரியாண்டுத் தீவினர் மதிப்புமிக்க தலைவர்களைக் கொண்டு பொருள்களைப் பண்டமாற்றம் செய்து கொண் டும் உரிமைகளைப் பகிர்ந்து கொண்டும் சிறப் பாக வாழ்கின்றனர். தோபுச் சமுதாயம் 'சுசு' எனனும் பல கூட்டங்களாகப் பாகுபட்டுள்ளது. இது திருமணம், பொருளாதாரம், சமய உறவுகளை நெறிப்படுத்துவதாகும். ஒவ்வொரு 'சுசு'வும் தாய்வழி மரபுடையது. (Matriliny) ஒவ்வொரு 'சுசு'வும் அத னுடன் தொடர்புள்ள மற்றைய 'சுசு'க்களோடு நெருங்கிய உறவுடன் வாழ்கின்றது ஒரு சிற்றூரில் மற்றவர்கள் அனுமதியின்றி நுழைய முடியாது.

சமயத் தொடர்பான விழாக்கள், ஏற்புச் சடங்கு கள் (Initiation Ceremonies), அறுவடை விழாக்கள் இவற்றில் எதுவானாலும் தோபு மக்கள் கட்டுப் பாடின்றி ஒன்று கூடுவதில்லை. இவ்வகை விழாக் களைச் சிற்றூரின் நடுவேயுள்ள இடுகாட்டில் நடத்துகின்றனர். வெளியார்கள் இவ்விழாக்களில் கலந்துகொண்டால் அவர்களால் ஏற்படும் பொறா மையும், அவர்கள் வைக்கும் சூனியம் முதலானவும் அழிவு ஏற்படுத்தும் என அஞ்சுகின்றனர்.

ஒவ்வொரு கூட்டத்தினருக்குமிடையே பகைமை நிலவினாலும் ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர் வேறொரு கூட்டத்தினரோடு மட்டுமே மணம் செய்து கொள்ள வேண்டும். பகைமை கொண்டுள்ள சிற்றூர் களைத் திருமணச் சடங்கு ஒன்றுசேர்க்கிறது. ஆனாலும், இதனால் வெறுப்புணர்வு குறைவதில்லை.

மாமியார் (பெண்ணின் தாய்) செய்யும் விரோ தச் செயலால் திருமணம் பற்றிய பேச்சு தொடங்கு கிறது. தோபு இளைஞர்கள் வயதடைந்த அன்றி ருந்து ஒவ்வொரு நாளும் அவர் விரும்பும் வீட்டில் பெண்களோடு சுதந்திரமாகப் பழகுகின்றனர். இரவு தூங்கிவிட்டு விடியற் காலையில் வீட்டை விட்டு எழுந்து சென்றுவிடுவர். இவ்வாறான காலங்களில் ஒரு பெண்ணின் தாய் அவள் வீட்டில் அன்று இரவு தங்க வந்த இளைஞரை அதிகாலையில் வெளியே விடாமல் தடுத்துத் தன் பெண்ணை மணந்து கொள்ள ஒப்புதல் பெறுகிறாள்.

திருமணமான இளைஞன் அவன் மனைவி சிற்றூ ரில் வாழ வேண்டும் மாமியார் அவனிடத்தில் கோண்டுகழி கொடுத்து வேலை செய்ய உத்தரவிடு வாள். மாமனார், மாமியார் மேற்பார்வையில் அவன் வேலை செய்ய வேண்டும். அவர்கள் சமைத்துச் சாப்பிடும்போது கூட அவன் வேலை செய்து கொண் டிருக்க வேண்டும். ஏனெனில் அவர்கள் முன்னிலை யில் அவன் உணவருந்தக் கூடாது. இதைப்போன்றே ஒவ்வொரு நிலையிலும் இவனுக்கு மரியாதை கொடுக்கப்படுவதில்லை. பொருளாதாரச் செயல் களின் போது வேலைப் பளு மிகுதியினால் தாயின் உடன்பிறந்தானை உதவிக்கு அழைக்கலாம். அப் போது வீட்டிற்கு வந்துள்ள மருமகனை எல்லோரின் எதிரிலும் அறிவுரை கூறுவதற்கும், தாறுமாறாகப் பேசி அவனைச் சிற்றூரிலிருந்து வெளியேற்றற்கும் தாய்மாமன் தயாராக உள்ளான்.

திருமண உறவிலும்கூட இச்சமுதாயத்தின ரிடையே சிக்கல்கள் ஏற்படுகின்றன. கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் நெறி பிறழாது நடக்க வேணடும என்று எதிாபார்க்கபபடுவதிலலை. கூடா ஒழுக்கமும, பிறன மனைப புணர்தலும் இவர் கள விருமபுகினற பொழுதுபோக்கு. இவர்களின தொனமக்கதைகளில் இது அடிக்கடி போற்றப்படு கிறது.



தோபுத்தீவில் தென்னை

ஒவ்வொரு குடும்பததினரும அவரவருக்கெனறு தனித்தனியான நிலங்களைககொண்டுள்ளனர். வள்ளிக் கிழங்கு வகையைச் சேர்ந்த கிழங்கு வகையை மிகுதி யாகப் பயிரிடுகின்றனர். தோபு மககளின் வேளாண மையில் மந்திரச் சடங்குகளின்றி எதுவும் நடை பெறாது. ஒவ்வோரு கூட்டத்தின் தலைவனும மந்தி ரங்களைக் கூறி நிலஙகளைச் செப்பனிடும் பணியைத் தொடங்கிவைப்பான். அதன் பின்னர் ஒவ்வொரு முக்கிய கட்டத்திலும் தலைவனின மந்திரம கூறும் சடங்கு மேற்கொள்ளப்பட்டபின்பே மற்ற வேலைகள தொடரப்படுகின்றன. உற்பத்தியில் ஒவ்வொரு குடும் பத்தாரிடமும் போட்டி, பொறாமை நிலவுகினறன.ஒரு வனுக்கு விளைச்சல் மிகுதியாகக் கிடைத்தால் அது அடுத்த நிலத்துக்கு உரியவன் வைத்த சூனியத்தால் அவனுக்கு வநது விட்டது என எணணுகின்றனர். இதனால், ஒவவொருவரும தன் நிலத்தின விளைச்சல் குறையாமல் இருக்கவும் அடுத்தவன்விளைச்சல் தமது நிலத்திற்கு வரவும சூனியம வைத்துக் கொளகின்ற னா.

திரோபிரியாணடுததீவில் நடை பெறும் பரிமாற் றம்மிகவும் சிறபபுப்பெற்றது சற்றேறக் குறைய 250 கி.மீ. விட்டமுளள வட்டத்திற்குள் அமைந்திருககும் தீவுகளிடையே நடக்கும் பண்டமாறறுததான இவா களின முதனமையான வாணிகமாகும். இந்த வட்டத் திறகுளதோபு மககளின தீவும் அடங்கும்.அரை ஆண டிறகொருமுறை மதிப்புமிக்க பணடங்களான சிவப்புச சஙகுகளிலான கழுத்தணிகளை எடுததுக் கொணடு வலச்சுழியாகவும (Clockwise) வெள்ளைகைவளையங களை எடுத்துக் கொணடு இடச்சுழியாகவும் (Anti Clockwise) செல்கின்றனர். ஒவ்வொரு தீவிலும் பண டங்களைக் கொடுக்க ஒவ்வொருவனுக்கும் கூட்டாளி உணடு. கூட்டாளியைப் பேச்சாலும் வாசனைப் பொருள்களாலும் வசீகரித்து அவனிடம் தாம் கொணடுபோன பொருளை ஒப்படைத்து விடுவான். அதற்கு ஈடான பொருள் உடன் கிடைத்தாலும் பெற்றுக கொள்வான். உடன் கிடைக்கவில்லையாயின் திரும்பி வந்து விடுவான். பினனர் அதற்கு ஈடான பொருள் வந்து சேரும். இவர்களின நட்பு வாழ்நாள முழுதும் இருககும் மதிப்புமிகக கழுத்தணிகளையும் கைவளையங்களையும் பெற்றுக் கொண்ட ஒருவர் அவற்றை நெடுநாட்களுக்கு வைத்திருப்பதில்லை. தமக்கடுத்துள்ளவரிடம் கொடுத்துவிடுவார். இந்த வட்டத்தைச்சேர்ந்ததீவுகள்மிகுதியானதாலும் பரநத பரப்புடையதாலும் ஓரிடத்திலிருந்து செனற பொருள கள்அப்பகுதிக்குவந்துசேர 2முதல் 10ஆண்டுகள வரை ஆகும். இப்பயணததில் தகுதியுடைய ஆண்களே செல் கினறனா அவாகள் மந்திரம் கற்றவர்களாக இருப்பர். அவாகளின செயல்களைக் கற்க இளையவர்களும உடன செல்வா. இவவகைப் பணடமாற்ற முறையில படகு கட்டுதல, பயணம் செய்தல் முதலானவற்றில் நனகு தோசசியுறறார்களாக உளளனர். இப்பயணங் களில் சிறப்புப் பொருளகளான கழுத்தணிகளையும் கைவளையங்களையும் விலையுயர்ந்த கற்களையும் கொணடு செலலும்போது அவரவர் பகுதியில் கிடைக் கும் பிற பொருள்களான மீன்கள், பாய், கூடைகள தேஙகாய் முதலானவற்றையுங் கொணடு சென்று கொடுத்து விட்டு அவற்றிற்கு ஈடாக அஙகுளள பொருள்களைப் பெற்றுவருகின்றனர். இந்த வணிகத் திலவிலைபேசுவதோ எடைபோடுவதோ பொருளுக்கு ஈடாகக் கேட்பதேகிடையாது.

தோபு மக்கள் நோயைக கணடு மிகவும் அஞ்சு கினறனர். ஒருவர் நோய்வாய்ப்பட்டு இறக்க நேரிடின

அவருககு மிகவும் நெருங்கியவர் உடனே இறந்துவிடு வர் என அஞ்சுகின்றனர். இறநதவரின் உடலை அடக் கம் செய்வதில் அவனது கூட்டத்தைச் சோநதவர்கள பங்குகொளகினறனர். இறந்தவன செலவனாக இருந் தால் அவன உடலை மதிப்புயர்ந்த பொருளகளைக் கொணடு அலங்கரிக்கின்றனர். இறந்தவன சிறநத தோட்டககாரனாக இருந்தால் அவனைச்சுற்றிக் கிழங குகளை வைக்கினறனர். ஊரின நடுவிலுள்ள இடுகாட் டில் இறந்தவாகளைப் புதைக்கின்றனர். எம்.சு.

**தோரமானன்:** இவர் இந்தியாவில் ஆட்சிசெலுத் திய ஊண அரசர். ஊணர்கள (Huns) ஒரு நாடோ டிக் கூட்டத்தினர். அவர்கள முதலில மததிய ஆசியா வில் வாழ்ந்து வந்தனர். பாரசீக நாட்டை வெல் வதில் ஈடுபட்டிருநதபோதே ஊணர்கள எனும் நிலை யினர், குப்தர்கள் ஆட்சியின் போது இநதியாவின் மீது படையெடுத்து வந்தனர். அத்தலைவர்களுள ஒரு வரே தோரமானன் ஆவார். சிலர், இவர் ஊணர் அல்லர்என்றும் ஊணப் படைகளை நடத்திவந்த குசானர் என்றும் கூறுகினறனர்.

தோரமானனைப் பற்றி இரணடு கல்வெட்டு கள் உளளன. அவற்றுள் ஒன்று ஈரானிலும் (Eran), மற்றொன்று கூரா (Kura)விலும உளளன. இவரைப் பற்றிய குறிப்பு சமண இலக்கிய நூலான குவலய மாலாவில் உள்ளது. இந்நூல கி.பி.788-இல் ஆக்கப் பட்டது. இதில் தோரமானன் உததரபதாவை ஆண்ட வன் என்று கூறப்பட்டுள்து. தோரமானனைப் பற்றிக கல்கணர் (Kalhana) எழுதிய இராசதரங்கினி என்ற நூலிலும் கூறப்பட்டுள்ளது. ஆனால, அதில கூறப் பட்டுள்ள வரலாறும் பிற வகையில கிடைத்துள்ள செய்திகளும் மாறுபட்டுளளன.

தோரமானன் கி.பி.500-ஆம் ஆணடிற்குப் பிறகு தமது அதிகாரத்தின் தலைமையிடமான காந்தாரம் அல்லது பஞ்சாபிலிருந்து புறப்பட்டு மாளவம் வரை வெற்றியுடன்படை நடததிச் சென்றார்; மாளவத்தை வென்றபிறகு மகாஇராசாதிராசா என்ற பட்டத்தைச் சூட்டிக்கொணடார். இவவெற்றி நிலையாக இருக்க வில்லை. பானுகுப்தர் என்பவரிடத்தில் இவர் படு தோலவியுற்றார். இவர் திறமைமிகக அரசராகவிளங் கினார்; அரசியலாணமை மிககவர்; மக்களைத் துன் புறுத்தவிலலை; மதச் சகிப்புத்தன்மை கொணடவர். இவா சமண மதத்தைத் தழுவினாா எனக் கூறப்பட் டுளளது. சத்திரபாகா ஆற்றங்கரையிலுள்ள பாவய்ய என்னுமிடததில இவர் வாழ்ந்து வந்தவர்என்றும. கூறப்படுகிறது. இவர் விட்டுச்சென்ற பணி யினை இவர் மகன மிகிரகுலா தொடர்ந்து நடத்தி வந்தார். காண்க: ஊணர்கள. தி.அர.இரா.

**தோலாமொழித் தேவர்:** தோலாமொழித் தேவா சமண சமயத்தைச் சேர்ந்தவர். ஐஞ்சிறு காப் பியங்களுள ஒன்றான சூளாமணியை இயற்றியவா. இவருடைய இயற்பெயர் இன்னதெனறு தெரிய விலலை. இவர் சூளாமணியில் இரண்டு இடங்களில் 'ஆர்க்குந் தோலாதாய்' (1472) என்றும், 'தோலா நாவிற கச்சுதன்' (307) என்றும் பாடியிருத்தலால் இசசொற்றொடர்களின் அருமையை உணர்ந்த பிற காலத்துச் சான்றோர் இவரைத் தோலாமொழித் தேவர் என வழங்கலாயினர்.

இவர் தரும தீர்த்தங்கரரிடத்தில பெரிதும் ஈடு பாடுடையவர் என்பதும், கார்வெட்டியரசன் விசயன் காலததவர் எனபதும், அவ்வரசன் வேண்டுகோளின் படி சூளாமணியை இயற்றினார் என்பதும், அந் நூலைப் பயில்வார் அறியாமை நீங்கி ஆன்றவிந்த சான்றோராதல் திண்ணம் எனபதும் இவர் பற்றி எழுநத செய்யுளால் தெரிய வருகின்ற செய்திகளா கும்.

மற்றொரு செய்யுள் இவருடைய நூலினைத் 'தோலாச் சீரச் சூளாமணி' என்று குறிக்கிறது.

இந்நூலாசிரியர் தம் நூலினைச சேந்தன் என னும் அரசனுடைய அவையில் அரங்கேற்றினரெனக் குறிப்பிடுகின்றாா (பாயிரம் 4). கார்வெட்டியரசன் விசயனே ஆசிரியரால் சேந்தன் என்று குறிப்பிடப் படும் வேந்தனாதலும் கூடும். இச்சேந்தனுடைய காலமோ, தோலாமொழித் தேவா காலமோ இது வரையில் வரையறுக்கப் பெறவில்லை. இவர்கள காலம் கி.பி. 897க்குப் பின்னராதல் வேண்டும் என்று ஒரு சிலர் கூறுவர். ஆயின் இதறகு அவர்கள் காட்டும் சானறுகள பொருத்தமுடையன அல்ல; ஊகமாகவே அவர்கள் கூறுகினறனர்.

சமண சமயம் பெரிதும் அழிக்கப்பட்ட தேவார காலத்திறகுப் பின் இக்காப்பியம் தோனறியது என பது பொருநதாது. சமண சமயம செழிப்புற்றிருநத காலமே தோலாமொழித் தேவா காலம் ஆகும். இவர கூறும் அரசியல், அமைச்சியல், துறவியல் பற்றிய செய்திகளும் இககருத்திற்கு அரண் செய்கின்றன. சீவக சிந்தாமணி ஆசிரியருக்குத் தோலாமொழித் தேவர் பிற்பட்டவா எனபதை யாரும் மறுக்கவில்லை எனவே, தோலாமொழித் தேவர் திருத்தக்க தேவர், காலததிறகுப் பினபு வாழ்ந்தவர் என்பது பொருத்த முடையதாக இருக்கிறது. எனவே இவா காலம் கி.பி. 10 ஆம நூ. ஆகலாம்.

தோலாமொழித் தேவர் காப்பியத்தின் தொடக் கத்திலேயே சிறந்த சாரணர் இருவரைக் கொணர்ந்து சடி மன்னனுக்கு அறவுரை கூறும் வாயிலாகச் சமண சமயத்திற்குரிய அறவுரைகளைச் சுருக்கமாகவும்

தெளிவாகவும் தெரிவிக்கின்றார். இங்ஙனமே இக்காப் பியம் வறிய அரசர் வரலாறாக மட்டும் அமையா மல் மெய்ஞ்ஞான நூலாகத் திகழ வேண்டும் என் னும் கருத்தால் இடையிடையே அருகக் கடவுளை வழிபடும் முகததால பக்திச சுவையைத் தோற்று வித்திருக்கிறார். இது இவருடைய புலமையையும் சமய ஈடுபாட்டையும் புலப்படுத்துகிறது. இது தவிர காவியத்தில் எண சுவைகளும் தோனறும்படி படைத் திருப்பது இவருடைய நுணமாண நுழைபுலத்தைக காட்டுகிறது இவருடைய காப்பியம் பணடைக்காலத் தில் சான்றோராகளால பெரிதும் பயிலப்பட்டிருந் தது எனபதனை அடியார்க்குநல்லாரும், நச் சினார்க்கினியரும், பிற உரையாசிரியர்களும் இந் நூலினின்றும் மேற்கோளகள் பலவற்றை எடுத் துக் காட்டுவதால உணரலாம். சு.சு தே.

**தோழப்பர்**: தோழபபர் என்பவர் நம்மாழ வாரிடம் மிகவும் ஈடுபாடு கொண்டவர். ஒரு சமயம் ஆழ்வார திருநகரி அர்ச்சையுருவான நமமாழவாரைக் காப்பாற்றித் தம் உயிரைத் தியாகம் செய்தவா.

திருவரங்கததில 'பிள்ளைலோகாசாரியர்' என்ற ஆசாரியர் காலத்தில் முகமதியர்களின படையெடுப்பு ஏற்பட, அப்போது நம்பெருமாளின் திருமேனியைக் காப்பதற்காகப் பிள்ளை உலகாரியரும், அவரது சீடா களும் திருவரங்கத்திலிருநது வெளியேறி, ஆங்காஙகுப் பலவிடஙகளில தஙகி, இறுதியில கேரளத்தைச் சாாந்த கோழிக்கோடு என்கிற இடத்தை அடைந தாாகள். வழியிடையில் 'சியோதிட்டகுடி' என்ற சிறறூரில் பிளளை உலகாரியா திருநாட்டுக்கெழுந் தருளினார் (காலமானார்). கோழிககோட்டில் திரு வரஙகம் நம்பெருமாள் எழுந்தருளியிருககும்போது மற்றத்திவ்வியதேசத்து எம்பெருமான்களும், நமமாழ வாருமு அங்கே எழுந்தருளினா. அஙகிருநது நம்பெரு மாளை புறபபடும போது நம்மாழவாரைத் தென மேற்கே எழுந்தருளப் பணணிக்கொணடு செனறார் கள். அங்கே திருடா பயம் மிகுந்திருநதமையால, முந்திரிப்பு எனற இடத்திலுளள மலையின் சரிவிலே ஒரு குகை கண்டு ஆழ்வாரை ஒரு பெட்டியில எழுந் தருளப் பண்ணி, இரு பக்கமும் சஙகிலி கட்டி அந்தக் குகையில் பாஙகான ஓரிடத்தில் இறக்கிவைத்து விட்டு, அவரவர்கள தஙகள இருப்பிடத்தை அடைந் தனர்.

அவாகளிலே தோழப்பர் எனபவா மதுரையில் திவானாக விளஙகிய 'திருமலையாழ்வார்' என்பவரி டம் இச்செய்தியைச் சொல்லி, அவரது செல்வாக் காலே கேரள அரசனின துணை கொண்டு, பலருடன முந்திரிப்பு மலையை அடைந்தாா. ஆழ்வார் எழுந் தருளியிருக்கும் குகையில் இறஙகுவதற்கு ஒருவரும் முன்வராத தருணத்தில் தோழப்பர் தாமே முனவந் தார். இரு சங்கிலிகளுடன கூடிய ஊஞ்சற் பலகை யில் தோழப்பர் அமர, அப்பலகையை அக்குகையில இறக்கினாாகள. இருளடர்நத அக்குகையில் ஒரு பற வையின் குரல கேட்டுத் தோழப்பா அங்குச் சென்ற போது ஒரு பெட்டியைக் கண்டு அதைத் திறக்க அதில நம்மாழவார் எழுநதருளியிருந்தாா. மிகவும் களிபபுறற தோழப்பர் அஙகு நடந்த செய்தியை ஒரு ஓலையில எழுதி, அநதப் பெட்டியோடு ஊஞசற பலகையை மேலே ஏற்றிவிட்டாா. தோழபபர் ஏறி வருதற்காக மறுபடியும் ஊஞ்சற்பலகையைக் கீழே இறக்கிவிட அவரும் அதில அமாநது மேலே வநது கொணடிருக்கும்போது இடையில் ஒரு பாறை குறுக கிட்டதால் தோழப்பர் கீழே விழுநது இறந்தார். ஆழவாரைக காப்பாறறித் தமது உயிரைத் தியாகம செய்த தோழப்பரை 'ஆழ்வார் தோழபபர்' என்று கொணடாடி, அவாதம் புத்திரரான அப்பன் பிள்ளை எனபவருக்கும் அவா குலத்தில் பிறந்தவர்களுக்கும் சிறப்பான மரியாதைகளைச் செயயும பழக்கம ஆழ வார் திருநகரியில் ஏற்பட்டது. எஸ்.கி.

**தோற்கூற்றியல்**; மனித உடலில் உளளங்கை களிலும், உளளங் காலகளிலும், விரல்களிலும் உள்ள இரேகைகள, விரியமைப்புகள் முதலானவற்றைப்பற்றி அறியும் ஒரு பிரிவே தோறகூற்றியல (Dermatoglyphics) ஆகும். இது உடலசார் மானிடவியலின (Physical Anthropology) முதன்மையான உட்பிரிகளுள் ஒன்று

தோற்கூற்றியல் கூறுகளைக கொணடு மனித இனஙகளை அடையாளங காணும் துறையாக முதன முதலில இப்பிரிவு தோனறிற்று. இனறு இப்பிரிவின அறிவு பல நிலைகளில் வளர்சசி பெறறு மருத்துவத் துறையிலும் பெரும் பயனுடையதாக உளளது. கம் மின்சுவும மிட்லோவும (Cummins & Midlo) 1926-ஆம் ஆணடு தோறகூற்றியல என்னும் பொருளுடைய சொல்லை (Dermatoglyphics Derma-skin; pglyhics-Carving) உருவாக்கினர். இதன பினனரே முறைப் படியான அறிவியல் முறையில் இத்துறையின வளாச்சி ஏற்படடது. இருப்பினும் தோற்கூறறியல் பறறிய அறிவு கி.பி.1858 முதலே தோற்றம் பெற்று விட்டது எனலாம்.

வில்லியம் எர்சல் (Sir William Herschel) முதன் முதலில் தனிமனிதர்களை அடையாளங் காணபதற் காகக் கைகளிலுளள வரியமைப்புகளை கி.பி.1858 -ஆம் ஆணடு பயனபடுத்தினார். தோற்கூற்றியல பற்றிய அறிவு, கி.பி.19-ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் உலகில் எந்தெநதப் பகுதிகளில எந்த நிலைகளில் இருந்தது என்பதை வரலாற்று ஆவணங்கள் மூலம் அறிய முடிகிறது.

மனிதர்களை அடையாளங் காண்பதற்காகப் பண்டைய எகிப்திய மன்னர்கள் விரலின் இரேகைகளைப் பதிவு செய்து வைத்திருந்தனர். பண்டைய அசிரியர்களும் (Assyreans) முக்கியமான ஆவணங்களில் விரலின் இரேகைகளைப் பதித்து வைத்திருந்திருந்தனர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சீனர்கள் விரல் இரேகைகளின் முக்கியத்துவத்தை உணர்ந்திருந்தனர். 'உ' பேரரசர் (Emperor Wu) காலத்தில்(கி.மு.156-87) சீனர்கள் பயன்படுத்திய ஒரு வகைக் களிமண் முத்திரைகளில் ஒருபக்கத்தில் கைவிரலின் பெயரும் உள்ளது இம்முறை குறிப்பிட்ட சிலரை அடையாளங் காண்பதற்காக ஏற்படுத்தப்பட்டது எனத் தெரிகிறது.

தோற்கூற்றியல் பற்றிய இன்றைய மானிடவியலறிவு மேற்கூறியவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. மானிடவியலார் மனித இனங்களில் மேல் தோலில் உள்ள வரியமைப்புகள் பல்வேறு மக்களினத்தவர்களிடையே வேறுபட்டுள்ளதற்கு என்ன காரணம், பல்வேறு வரியமைப்புகளின் தன்மைகள் என்ன என்பன போன்ற பலவற்றைப் பற்றி ஆராய்கின்றனர்.

கருவளர்ச்சியடையும்போது நான்காம் மாதத்திலிருந்தே மேல் தோலில் வரியமைப்புகள் ஏற்படத் தொடங்கி விடுகின்றன. ஆறாம் மாதம் நிறைவுறும் போது வரியமைப்புகளின் தெளிவான வளர்ச்சியைக் காணமுடியும். கருப்பேறு காலத்தில் தோன்றும் இந்த வரியமைப்புகள் மனிதன் இறக்கும்வரை உள்ளங்கையிலும் உள்ளங்காலிலும் உள்ளன. மனிதனின் புறத்தோலில் வேறு எந்தப் பகுதியிலும் இந்த வரியமைப்புகளைக் காணமுடியாது. இந்த அமைப்புகள் மரபுவழியில் ஒவ்வொரு மக்களினத்தவரிடமும் ஒரு தனிப்பட்ட முறையில் காணப்படுகின்றன. மனிதர்களின் உடற்பண்புகள் மரபணுக்களால் (Genes) நிருணயிக்கப்படுகின்றன. ஒவ்வோர் மக்களினத்திலும் தனிப்பட்ட சிறப்புப் பண்புகளைக் கொண்டு செல்லும் மரபுப் பண்புகள் உள்ளன. இவைபுறச்சூழலால் பாதிக்கப்படாதவை; மரபுவழியில் வருபவை. ஒவ்வொரு குறிப்பிட்ட இனத்தவரிடையேயும் கூட்டு மரபணுக்கள் (Polygenes) பல இணைந்து அவ்வினத்தவரின் உடற் பண்புகளை உண்டாக்குகின்றன. இதனால் ஒவ்வொரு குறிப்பிட்ட உடற்பண்பும் வெவ்வேறு இனத்தவரிடையே வேறுபட்டுக் காணப்படுகிறது. இக்கூற்றினைச் சில எடுத்துக்காட்டுகள் மூலம் அறியலாம். இன்றுள்ள மக்களைக் காக்கேசியர்கள் (Caucasoids), மங்கோலியர்கள் (Mongoloids), நீக்கிரோவினர் என முப்பெரும் இனங்களாகப் பகுத்துக் கூறலாம். இந்த ஒவ்வோர் இனத்திற்கும் எனச் சில குறிப்பிட்ட பண்புகள் தனிப்பட்டவையாக உள்ளன. குறிப்பாகத் தலை மயிர் காக்கேசிய இனத்தவர்களிடம் நீண்டும் மென்மையாகவும், அலையலையாகவும் (Soft wavy) இருக்கும். மங்கோலியர்களிடம் தலைமயிர் நீண்டிருந்தாலும் பொதுவாக நேராக, சொரசொரப்பாக (Coarse hair) இருக்கும். நீக்கிரோவினரிடையே குட்டையாகவும் சுருட்டையாகவும் இருக்கும். அவ்வாறே, ஒவ்வோர் இனத்தவரிடையேயும் உள்ளங்கையிலும் உள்ளங்காலிலும் உள்ள வரியமைப்புகள் தனிப்பட்டவையாக உள்ளன.

தோற்கூற்றியல் பண்புகள் கூட்டு மரபணுக்களால் நெறிப்படுத்தப்படுகின்றன (Polygenically Controlled) என்பதால்,இக்கூட்டு மரபணுக்கள் ஒன்றோடு ஒன்று சேரும் முறையில் ஏற்படும் மாற்றமே தோற்கூற்றியல் பண்புகள் வெவ்வேறு இனத்தவரிடையே மாறுபட்ட முறையில் காணப்படுவதற்குக் காரணமாகும். மூன்றாம் நான்காம் மாதத்தில் கருவளரும் போது கருவளர்ச்சியின் தன்மையில் ஏற்படும் மாறுபட்ட அழுத்தங்களும் (Differential pressure), ஒவ்வொருவரின் உள்ளங்கை, உள்ளங்காலில் காணப்படும் வரியமைப்புகளில் வேறுபாடுகள் தோன்றக் காரணமாக உள்ளன. தோற்கூற்றியல் அறிஞரான பிளேட்டோ (Plato)என்பவரின் கருத்துப்படி,தோற்கூற்றியல் மாற்றங்களுக்கு மரபியல் பண்புகளைக் காட்டிலும் மேற்கூறிய மாறுபட்ட அழுத்தங்களின் தன்மையே மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ளது. இதனாலேயே தோற்கூற்றியல் பண்புகள் ஒரு பகுதி மரபு வழியைப் பொறுத்தும் மற்றொரு பகுதி கருப்பையில் வளரும் சூழ்நிலையைப் பொறுத்தும் அமைகின்றன.

தோற்கூற்றியல் ஆய்வுகள் மூன்று பெரும் தலைப்புகளில் அமைகின்றன. அவை: 1) விரல் தோற்கூற்றியல் (Finger Dermatoglyphics), 2) உள்ளங்கை தோற்கூற்றியல் (Palmar Dermatoglyphics). 3 உள்ளங்கால் தோற்கூற்றியல் (Plantar Dermatoglyphics) ஆகியவை. விரல் தோற்கூற்றியல் விரல் நுனியில் உள்ள வரியமைப்புகளைக் (Ridge pattern) கூர்ந்து ஆராய்கிறது. உள்ளங்கைத் தோற்கூற்றியல், உள்ளங்கையிலுள்ள வரியமைப்புகளையும், உள்ளங்கையைப் பல பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொரு பகுதியிலும் உள்ள வரியமைப்புகளையும் அவற்றின் பிணைப்புகளையும் பற்றி ஆராய்கிறது. உள்ளங்கால் தோற்கூற்றியல்,கால் பெருவிரலின் வரியமைப்புகளையும், அடிக்காலின் பிற பகுதிகளிலுள்ள வரியமைப்புகளையும் ஆராய்கிறது. இம்மூன்று பிரிவுகளில் ஆராயும் போது கீழ்க் குறிப்பிடப்படும் பொதுவான தோற்கூற்றியல் பண்புகள் அனைத்துப் பகுதிகளிலும் காணப்படுகின்றன. அவற்றைத் தெரிந்து கொண்ட பின்னரே தோற்கூற்றியல் பற்றி விரிவாக ஆராய முடியும்.

**1. மூவார வளைவு:** பெருவிரல் தவிர ஏனைய விரல்களின் அடியில் மூவார வளைவுகள் (Triradii) காணப்படுகின்றன. இவை மூன்று வரியமைப்புகளைக் கொண்டவை. இதன் அமைப்பைப் படத்தில் காண்க.



மூவார வளைவுகள்-மூன்று வரியமைப்புகள

மூவார வளைவுகள் மூன்று வரியமைப்புகள் ஒன்று சேருவதால் ஏற்படுகின்றன. இவை ஒன்றுக் கொன்று சேரும்போது ஏறக்குறைய 120° (பாகை) கோணம் ஏற்படும். ஒரு சில கைகளில் விரலின் அடியில் மூன்று வரியமைப்புகளும் சேராமல் போகும் வாய்ப்புள்ளது. இவ்வாறான காலங்களில் விரலடிக்குச் சற்றுக் கீழே இதன் அமைப்பைக் காணமுடியும்.

**2. மையப் புள்ளி:** அனைத்துவகையான வரியமைபுக்களையும் ஆராயும் போது அதன் மையப்புள்ளியைக் (Core) கணக்கிடுவது இன்றியமையாததாகிறது. இந்த மையப் புள்ளி ஒவ்வொரு வகையான வரியமைப்பிலும் சற்று மாறுபட்டு இருக்குமாதலால் இதனைத் துல்லியமாகக் கணக்கிடுவது தோற்கூற்றியல் பண்புகளை ஆராய்வதற்கு உதவும். மையப்புள்ளி வளைந்த மையமாகவோ (Spiral Core), குட்டையான நேர் மையமாகவோ (Short-Straight Core) தடித்த மையமாகவோ (Rod Core) இருக்கும். சுழல வளைய (Loop) வரியமைப்பில் மையஇடம் (Core) அதன் அடிப்பகுதியில தொடங்கும் கோட்டையே குறிக்கும். சுழல் வளையம் பற்றி, விரலமைப்பைப் பதிவு செய்யும் முறையின் அடிப்படைகள என்னும் உளதலைப்பில் காண்க.

**பிரியுமிடம்:** மூன்று இரேகைகள் அல்லது வரிகள் எந்தப் புள்ளியில் பிரிகிறதோ அந்த இடம் பிரியு



வளைந்த மையம் குட்டையான நேர்மையம் தடித்த மையம்

மிடம் (Fork) எனக் கணக்கிடப்படுகிறது. உள்ளங் கையிலும் உள்ளங் காலிலும் உள்ள வரிமைப்புக் களைக் காணும் போது இரண்டு வகையான பிரியு மிடங்கள் உள்ளன. அவை மேற்புறத்தில் பிரியுமிடம் (Ascending Fork), கீழ்ப்புறத்தில் பிரியுமிடம் (Descending Fork) ஆகும்.



மேற்புறத்தில் பிரியுமிடம் கீழ்ப்புறத்தில் பிரியுமிடம்

**விரலமைப்பைப் பதிவு செய்யும் முறையின் அடிப் படைகள்:** கை, கால் விரல்களில் வரியமைப்புகளைப் பதிவு செய்யும் போது பல கூறுகளை உற்று நோக்க வேண்டியுள்ளது. இப்பகுதிகளில் கோடுகளின் சேர்ம மும் அமைப்பும் பல நிலைகளில் உள்ளமையால் அவற்றை வகைப்படுததி ஆராய வேணடியுள்ளது.

**1. சுழி:** இவ்வகை அமைப்பில் இரணடு அல்லது அதற்கு மேற்பட்ட மூவார வரைவுகள் (Triradii) இடம் பெற்று ஒரு மையப் புள்ளியைச் சுற்றிப் பல சுழற்கோடுகளாகக் காணப்படும். சுழியின் (Whorl) தனமை அது கொண்டுள்ள மையப் புளளியைப் பொறுத்தும் கோடுகளைப் பொறுத்தும் மாறுபடு கின்றது.

**சுழல் வளையம்:** இவ்வகை வரியமைப்புப் 'ப' வடிவத்தில் காணப்படும். பொதுவாக ஒரு மூவார வளைவுடன் இணைந்தே காணப்படும். சுழல் வளை யங்களின் (Loops) அமைப்பைப் பொறுத்து அவற்றை ஆரச் சுழல்வளையம் (Radial Loop) என்றும், ஓரச் சுழல் வளையம் (Ulnar Loop) என்றும் வகைப்படுத் தலாம். மையப் புள்ளியிலிருந்து பிரியும் கோட்டின் தன்மைக்கேற்ப இது வகைப்படுகிறது. கைவிரல் நுனி யில் உளள சுழல் வளையங்களை, கண வடிவச் சுழல் வளையம் (Eyed Loop) உட்புகும் சுழல் வளையம்



சுழிகளின் வகைகள்

(Invaded Loop), முழுமை பெறாச் சுழல் வளையம் (Nascent Loop), 'L' வடிவச் சுழல் வளையம் ('L' Shaped Loop) என அவற்றின் வடிவத்திற்கேற்ப வகைப்படுத்தலாம்.



ஆர - சுழல் வளையம் ஒர - சுழல் வளையம்

**வில் வளைவு:** இந்த வகையான அமைப்பில் தோலில் உள்ள வரிகள் ஓரளவு வளைந்து மணி (Bell) போன்ற வடிவத்தைப் பெறுகின்றன. சுழி சுழல் வளையம் போன்றே இதன் வடிவமும் மாறு படுகின்றது. இவ்வடிவத்தின் அடிப்படையில் சாதா ரண வில் வளைவு (Plain Arch), கூம்பு வடிவ வில் வளைவு (Tented Arch) என இருவகையாகப் பிரிக்க லாம். சாதாரண வில்வளைவில் ஒரு மூவார வளைவு கள் இடம் பெறுவதில்லை. கூம்புவடிவ வில வளை வில் ஒரு மூவார வளைவு இருக்கும்.



சாதாரண வில வளைவு. கூம்புவடிவ வில் விளைவு

**உள்ளங்கைப் பகுதிகளை ஆராய்தல்:** மனிதனின உள்ளங்கைப் பகுதி வரியமைப்புக்களைப் பொறுத்துப் பல பகுதிகளாக வேறுபடுகிறது. ஒவ்வொரு பகுதியி லும் உள்ள வரியமைப்புகள் அதன் நெருக்கத் தன்மையாலும் நீளத்தாலும் வேறுபடுகின்றன. இப் பண்புகளைக் கொண்டு உள்ளங்கையைப் பொதுவாக ஏழு பகுதிகளாகப் பிரிக்கலாம் அவை 1. பெருவிரலின் திரளைப் பகுதி (Thenar ccease), 2. உள்ளங்கையின் மையத்தை நோக்கி அமைந்துள்ள பகுதி (Proximal crease), 3. மையத்திலிருந்து விலகிச் செலலும பகுதி




உள்ளங்கையின் பகுதிகள்

(Distal crease), 4. நடுவிரல் பகுதி (Middle Finger crease), 5. மோதிரவிரல் பகுதி (Ring Finger crease), 6. சுண்டு விரல் பகுதி (Little finger crease), 7. கை அடிப்பகுதி (Hypothenar crease) ஆகியன. இவற்றில் முதல் மூன்று பகுதிகளே பெரும்பாலானவாக ஆய்வுகளுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன

மேற்கூறிய அனைத்துப் பண்புகளையும் கொண்டு பல்வேறு மக்களினத்தவர்கள் உடற்பண்புகளால் வேறுபட்டுள்ளதற்கு எந்த வகையில தோற்றியல பண்புகள காரணமாக உள்ளன என்பது தன்மையாக ஆராயப்படுகிறது. நீக்கிரோ இனம், காக்கேசிய இனம் (Caucasoid Race), மங்கோலிய இனம், தொன்மை ஆசுத்திரேலிய இனம் (Proto-Austroloid) முதலான பல இனத்தவர்கள் எந்த வகையில் தோற்கூற்றியல் பண்புகளில் வேறுபட்டுள்ளனா என்பது ஆராயப்படுகிறது. இதனடிப்படையிலேயே ஓர் இனத்தைச் சேர்ந்த மக்கள் எந்த வகையில் பல வட்டார இனத்தவாகளாக (Local Races) மாறிக் காண்பப்படுகின்றனர் என்பதையும் தோற்கூற்றியல் ஆய்வாளர்கள ஆராய்கினறனர். எம்.சே., சீ.ப.

**தோற்பாவை நிழற்கூத்து:** தென்னிந்திய நாட்டுப்புறக் கலைகளுள் தோற்பாவை நிழற்கூத்து மிகவும் சிறப்புப் பெற்றது. இது நிகழ்கூத்து என்றும், நிழலாட்டம் என்றும் வழங்கப் பெறும். தோற் பொம்மைகளை நுணுக்கமாக அசைத்து, அவற்றின நிழலைத் திரையில் விழச் செய்து கதை கூறுவதே தோற்பாவை நிழற்கூத்தாகும். ஆண்டு முழுவதும் நிலையாக ஓரிடத்தில் தங்காமல், தமிழகக கிராமப் பகுதிகளைச் சுற்றி வருகின்ற இராவுசி எனப்படும் மராட்டியத் தமிழர்களே இதனை நடத்தி வருகினறனர். இக்கலை இன்று அழிந்து கொண்டிருக்கும் கிராமியக் கலைகளுள் ஒன்றாக இருப்பினும் கிராம மக்கள் பெரிதும் விரும்பும் கலைகளுள் ஒனறாக உள்ளது. இது வரை கிடைத்துள்ள ஏட்டுச் சானறுகள் மூலமாகச் சீனாவில் இத்தகைய தோற்பாவைக் கலை முதன் முதலில் தோற்றுவிக்கப்பட்டிருக்கக் கூடும் என நம்பப்படுகிறது. இன்று இந்தியா, மலேசியா, கம்போடியா, துருககி, தாய்லாந்து, இந்தோனேசியா, சீனா முதலிய நாடுகளில் இக்கலை மக்களிடம் சிறப்புப் பெறற கலையாகத் திகழகிறது. மரம் அல்லது களிமண்ணால் அமைந்த பாவையைக் கொண்டு மக்களின் செயல்களை நடித்துக் காட்டக் கூடிய முறை, கீழை நாடுகள், மேலை நாடுகள் ஆகிய இரண்டிலும் பரவியிருந்ததாகத் தெரிகிறது.

இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் மணிவாசகரின் திருவாசகத்தில் (கி.பி. 9 – ஆம் நூ.) தோற்பாவைநிழற்கூத்துக்குறிக்கப்பட்டுள்ளது. தஞ்சாவூரை மராட்டியர் ஆண்ட காலத்தில் குறிப்பாக, சரபோசி மன்னன் காலத்தில்தான் (கி.பி, 16 – ஆம் நூ.) இக்கூத்து சிறந்த நிலையை அடைந்தது எனலாம்.

தோற்பாவை நிழறகூத்தில், பாவைகள் அல்லது பொம்மைகள் என்று கூறப்படும் மரப்பாவைகளும் தோற்பாவைகளும் பயன்படுத்தப்படுகின்றன சில சமயங்களில் தகரம் அல்லது தாளகளில் கூட இப் பொம்மைகள் செய்யப்படும்.

பாவைகளின் நிழலைக் கொணடு நிகழ்த்தும் கூத்தின்போது தோறபாவைகளைப் பயன்படுத்தினால் அக்கூத்திற்குத் தோற்பாவை நிழற்கூத்து (Leather Puppets shadow Play) என்று கூறுவர். இக் கூத்து வழங்கப்பெறும் இடததிற்கு ஏற்றாற்போல் பெயர் மாறிக் காணப்படுகிறது. சென்னையில் இக் கூத்தைத் தோல் பொம்மலாட்டம் என்றும், ஆந்திராவில் 'தோலு பொமமலாட்டா' என்றும், கருநாடகாவில் 'தொலு பொம்பே ஆடா' அல்லது 'சக்கல கொம்பே ஆடா என்றும், கேரளத்தில் 'தோற் பாவைக் கூத்து' அல்லது 'நிழற்காட்சி' அல்லது 'ஓலப் பாவைக் கூத்து' என்றும், ஒரிசாவில 'இராவன சாயா' எனறும், மகாராட்டிராவில் 'சர்ம பகுவி நாட்டியா' என்றும் சொல்லப்படுகிறது. மேலைநாடுகளில் குறிப்பாக இந்தோனேசியாவில் வயாங்கு (Wayang) என்பது நிழல் என்ற பொருளிலும், வயாங்குலிட் அல்லது வயாங்கு பூர்வா (Wayang kulit or Wayang Purva) எனபது நிழற்பாவையை நிழலாகக் காட்டி நடிக்க வைக்கும் பொருளிலும், வயாங்கு கிலிடிக்கு (Wayang Klitic) என்பது தோல் பாவைகளிலிருந்தும் வேறுபட்ட மரப் பொம்மைகளைக் குறிக்கும் பொருளிலும், வயாங்கு ஓங்கு (Wayang Wong) என்பது மனிதர் நடனமாடுவதைக் குறிக்கும் பொருளிலும் வழங்கப்படுகினறன.

**தோற் பொம்மைகளைத் தயாரிக்கும் முறை:** ஆட்டின தோலைப் பொதுவாகச் சந்தைகளில் இக்கலைஞர்கள் வாங்குவர். சந்தையில் விலை மிகுதியாக இருப்பதால் சிறறூர்ப் பகுதிகளில் நடைபெறும் திருவிழாக்களில் பலி செலுத்தப்படுகின்ற ஆட்டின் தோல்களைத் திருவிழாக்களில் குறைந்த விலைக்கு வாஙகுவர். வாங்கியதோலைச் சுடும நீரில் தோய்த்து உரோமத்தை ஒரு கூரிய கத்தியால் சுரண்டி எடுப்பர். தயாரிக்கப்படும் தோல் ஒரே கனத்துடன் கூடியதாக இருத்தல் வேண்டும். அடுத்த நாள் ஈரமாயுள்ள, உரோமம் எடுக்கப்பட்ட தோல், காய வைக்கப் படுகிறது. காய்ந்த தோல வெண்மையாகவும், மெனமையாகவும், 1/32 அங்குலம் பருமன உடையதாகவும், ஒளி ஊடுருவிச் செல்லக் கூடியதாகவும்

செய்யப்படுகிறது. தோற்பாவை நிழறகூத்தில் வரும் ஒரு மனித பாத்திரத்தின் முழு உருவம் அமைக்க இவ்விதமாகத் தூய்மை செயயப்பட்ட மூன்று ஆட்டுத் தோல்கள் தேவையாயுள்ளன.

இவவிதமாகச் சுத்தம் செய்யப்பட்ட தோலில், விரும்பும் உருவத்தின் படத்தை நிழலாட்டக் கலைஞன் வரைகின்றான். இவ்வுருவங்களின் படங்கள பொதுவாக அனந்தப்பூரை அடுத்துள்ள இந்துப்பூரில் உள்ள இலீபாக்சி (Lepakshi) கோவிலின் தள மட்டத்தில் வரையப்பட்ட ஓவியங்களிலிருந்து தான் தேர்ந்தெடுக்கப்படுகினறன. தேர்ந்தெடுத்த உருவத்தைத் தோலில் வரைநது பிறகு வெட்டி எடுப்பர். பிறகு உருவத்தில காணப்படும் அணிகள, ஆடைகளில் காணப்படும் பலவித உருவங்கள் போனறயாவும் பலவித புள்ளிகள், துவாரங்களின் உருவில வரையப்பட்டு அப்பகுதிகள் உளியினால் செதுக்கப்பட்டு, முழு உருவத்திற்கு ஏற்ற சிறப்பான, அழகான தன்மையை அளிக்க முயலுகின்றனர். உருவ அமைப்புகள் தவிர, அந்த ஓவியங்களிலிருந்துஅவற்றின் வணணமும தோல் பொம்மைகளுக்கு ஏற்றப்படுகினறன.பொதுவாக இரசாயன சாயம் பயன்படுத்தப்படுகிறது. இவ்வித சாயங்கள தண்ணீரில் கலக்கப் பட்டுத் தோல உருவத்தின் மேல்புறத்திலும், பினபுறத்திலும், துணியின உதவியால் தடவப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட பாத்திர உருவத்திற்குக் குறிப்பிட்ட வண்ணம் தான கொடுக்கப்படல் வேணடும எடுத்துக்காட்டாக இராமர், கிருட்டிணர் ஆகியோருக்குப் பச்சையும், பெண பாத்திரங்களுக்கு ஆரஞசு அல்லது மஞசள் வண்ணமும் தீட்டபபடுகின்றன. இவவிதமாகத் தயாரிக்கபபடும் தோல் பொமமைகள் உயிருள்ள பாத்திரஙகளாகவும், உயிரறற பாத்திரங்களாகவும் வகைப்படுத்தப்படுகினறன. முறகாலத்தில தயாரிககப்பட்ட பாத்திரங்கள ஒரே ஒரு தோலில் அசைக்கப்படாத வகையில கைகளும், காலகளும் சேர்நது இருக்கும். ஆகவே, ஓர் அசைவைக் கொடுக்க வேணடுமானால் முழு உருவத்தையே சாய்க்க வேணடிவரும். ஆனால், இககாலத தோல் பொமமைகள யாவும் இணைபபுகள கொணடனவாக அமைக்கப்படுகினறன. ஆகவே, பகுதி பகுதியாக, (எ-டு. கழுத்து, கைகள, கால்கள, மணிக்கட்டு) இணைப்புகள இருப்பதால நமக்கு வேண்டிய முறையில அப்பகுதியைத் திருப்பலாம். அசைவுகளை வேணடியபடி செய்து இக்கூததில்பொலிவினை ஏறபடுததலாம். எல்லாத் தோல் பொமமைகளின பாத்திரஙகளும் நேர்நேராகப் பேசுகின்ற முறையில் அமைய, பாத்திரங்களின முகஙகள் யாவும் ஒரு பக்கம் சாய்வான அமைப்பைப் பெறறிருககின்றன.

தோல்களின விலை மிகுதியாக இருக்கும் காலங்களில், இக்கலைஞாகள் கனத்த தாளகள அலலது பால்பவுடர் அட்டைகளில் பாத்திர உருவங்களைச் செய்து கூத்தில் உபயோகிப்பர். இவற்றிற்குத் தாள பாவைகள் என்று பெயர்.

**தோற்பாவை நிழற கூத்தின் காட்சிகள்:** தோற்பாவை நிழலாட்டம் அல்லது கூததில் கடவுள் வாழ்த்து, கூத்துத் தொடக்கம், கதைப் பகுதி, முடிவு என நானகு பெரும் பகுதிகள அடஙகும். கடவுள வாழ்த்தில் கணபதி, கலைமகள் ஆகிய தெய்வங்களின் வணக்கப் பாடல்கள் இடம்பெறும். கதைக்குத் தொடக்கம் அல்லது முனபகுதியில் கோமாளி தன்னைப் பாாவையாளர்களுககு அறிமுகம செய்து கூத்தையும் அறிமுகம் செய்வான. ஒரு நகைச்சுவையுடன இக்கூட்டத்தை அவன் முடிபபான. கதைப் பகுதியில கதையின் ஆரமபப் பாடல, கதை நிகழசசி, நகைச சுவைக் காட்சி இடம் பெறும். குறிப்பாக இந்த நகைச்சுவைக்காட்சிப் பகுதியில இறுதிக்கு முன்பு, தில்லி முத்தம்மா நடனம், நரிக்குறவன் நடனம், சல்லிக்கட்டு, கடாச் சணடை ஆகியவை இடம் பெறும். முடிவுரையில அடுதத நாள் நிகழ்சசியும், பார்வையாளர்களை வாழ்த்தி அனுபபுதலும் இடம்பெறும்.

**ஆட்டக் கலைஞர்கள்:** நிழறகூத்து ஒரு கூட்டுக குடும்பக் கலையாகும். குடும்பத்தின அனைவரின ஒததுழைப்பாலும், இணைப்பினாலும் இவ்வாட்டஙகள் நடைபெறுகின்றன. நிழலாட்டததின் அரஙகில் பாவையாட்டியே முக்கியக் கலைஞராவார். திரையின இவர் பினபுறத்தில மறைவாக அமர்ந்து பாவைகளைக கதைக்குத் தக்கவாறு அசைவைக் கொடுத்து இயக்குவாா. மற்றும் சுரப்பெட்டி, மத்தளம், சாலரா ஆகிய இசைக் கருவிகளை இயக்குகினறவர்கள் திரைக்கு முன்னால அமர்ந்திருப்பர், இவர்களைத் தவிர அனுமதிச் சீட்டு வழங்குபவர், உள்ளே அனுமதிப்பவர், அறிவிபபாளா ஆகியோரும நிழலாட்ட நிகழச்சியில் பஙகு கொளபவராவா. பாவையாட்டி, கூதது நடைபெறும் நேரத்தில மேடைக்குள அவர் ஒரு நாடகாசிரியராகவும், நடிகராகவும், பாடகராகவும் இசை மீட்டுகினறவராகவும் செயறபடுவார். இது தவிர மேடைககு வெளியே, இவரே இந்த நிழறகூத்துவின இயககுநராக, ஓவியராக, நிதியாளராக, நிருவாகியாக, தோலின் நுணுககஙகளை அறிந்தவராகப் பல பணிகளை ஏற்கிறார். நிழலாட்டத்தின் வெற்றி தோல்வி ஆகியவை இவர் பெற்றுள்ளதோச்சியின அடிப்படையில்அமைந்துள்ளது

**தமிழ்நாட்டில் தோற்பாவை நிழற்கூத்து:** தமிழ நாட்டில் தோற்பாவை நிழற்கூத்தின அரங்கு மிகவும் சிறியது, கூடாரம் போன்ற அமைப்பை உடையது. அரஙகைச் சுற்றிலும் பெரிய வட்ட வடிவில் மறைப்புத் துணியால் மறைக்கப்பட்ட இடத்தில்தான பார்வையாளாகள அமர்ந்து காட்சியைப் பாாப்பர்.

அரங்கின் முனபுறத்தில் வெணமையான திரைச்சீலை அமையப்பட்டிருக்கும். இத் திரைச்சீலை சற்றுச்சாய்வுடன் இறுக்கமாகக் கட்டப்பட்டிருக்கும். இது பொம்மைகளின நிழல வெளியில் முன்புறம தெரிவதற்காக அமைந்த ஏற்பாடுகளில் ஒன்றாகும. பெரும்பாலும் கூத்து அரங்குகள 3மீ நீளம், 2மீ அகலம, 1½மீ உயரமுளளதாக இருக்கும். திரைச் சீலையின் நீளம 3மீ, அகலம் 1மீ அமைப்பர். சில குழுக்கள 2மீ உயரம், 1-5மீ அகலம், 1மீ உயரத்தில அரஙகை அமைத்துத் திரைச்சீலையை 1 5மீ நீளம, ¾மீ அகலத்தில அமைப்பதும் உணடு பாவைகளை ஆட்டுகிறவா இத்திரைககுள் அமர்நது, தமது தலைக்கு மேலே பொருத்தபபட்டுள்ள எணணெய் விளககு அலலது ஆவி விளக்கு அல்லது மினகுழல் விளக்கின் ஒளியில் பாவைகளை ஆட்ட, நிழல் திரைக்கு வெளியில் பார்வையாளாகளுககுத் தெரியும். நிழலாட்டக் காட்சிகள அனைததும் பொதுவாக இராமாயணம், நல்லதங்காள கதைஅல்லது மக்களிடம் செல்வாக்குப் பெற்ற பிற கதைகளிலிருந்து எடுக்கப்பட்டவையாகும். நிழற்கூத்து பொதுவாக இரவு 9 மணிக்கு ஆரம்பித்து இரணடரை அல்லது மூன்று மணி நேரம வரை நிகழும்.

**பிறமாநிலங்களில் தோறபாவை நிழற் கூத்து:** கேரளாவின் தோல பொம்மைகள தடிததவை. மிகவும் சிறியனவாக இருக்கும். வணணமும் கிடையாது. பொம்மைகளின அசைவுகளும் மிகக் குறைவு, பாடலகள் யாவும தமிழில் அமைந்துள்ளன. பாடலகள் யாவும கம்பராமாயணத்தைச் சார்ந்தன. ஆனால், உரைநடை விளக்கம், தமிழும் மலையாளமும் கலந்த நிலையில் உள்ளன. பறை, சால்ரா, செணடை ஆகிய இசைக் கருவிகள பயனபடுகினறன. நிழலாட்டத்தை நடத்துபவர் பெரும்பாலும் நாலவா; அவர்களுள் இருவர் பாவைகளை அசைப்பர். ஒருவா கதை விளக்கத்தைக கூறுவர். பெருமபாலும கூத்து அரங்கம் 8மீ நீளத்தில அமையும. மினவிளக்குகளின் நிழலில பாவைகள் அசைககப்படுகின்றன. கேரளாவில் முக்கியமாகப் பகவதி கோயில் கூத்து மாடங்களில் 7, 11, 18, 21, 41 நாட்கள நடைபெறும். திருவிழாககாலஙகளிலும் இக்கூத்து நடைபெறும். இஙகு மராட்டியர் அலலாமலபூநாயா, முதலியார், மன்றாடியார், செட்டியார் போனற கேரள, தமிழக இனஙகளைச் சோநதவாகள இககூத்தை நடத்துகினறனர்.

ஆந்திரப் பகுதியில மேடை 4.25மீ நீளததில் 1.5மீஅகலத்திலஅமைக்கப்படுகிறது கூத்தை நடத்துபவர் ஒன்பதுபேர். எழுவர் ஆடவர்;இருவர் பெணடிர். பினனணிக்கு ஒரு பெணடிரும பெண பாவைகளை ஆட்ட ஒரு பெணடிரும் உள்ளனர். மூனறு ஈச்சங குச்சிகள பெண் பாவைகளின்கழுத்து, இரண்டுகைகளுடன்இணைக்கப்பட்டு அழகாக அசைக்கப்படுகின்றன. ஆண்களுக்குக் கழுத்திலும் அசைக்கப்படும் ஒரு கைக்கும் குச்சிகள உண்டு. இந்தப் பாவைகள் வணணச் சிறப்பு மிகுந்துள்ளன. பாவைப் பொம்மைகள் ஓர் ஆள் உயரம் வரை உள்ளன. ஆந்திராவில் இக்கலையை நடததுபவர்கள் 'ஆரே' என்று கூறப்படுகின்றனா.குறிப்பாக ஆறிகாபுலு, இரெட்டி ஆகிய பிரிவினரே இதை நடத்துகின்றனர்.

கருநாடக மாநிலத்தின் தோற்பாவைகள் மூனறு வகைப்படும். வடக்குக் கருநாடகப் பகுதியில் பொதுவாக மிருகங்களின் பாவைகள (யானை, குதிரை, பசு) செய்யப்பட்டுக் காட்சியில சேர்க்கப்படுகின்றன. இவைகள் 90 செ மீ உயரமானவை. மத்திய கருநாடகாவில பாவைகள 15 முதல் 60 செ.மீ. உயரமானவையாகவும் துவாரஙகள இடப்பட்டனவாகவும், பினனணியில் சித்திரஙகள வரையப்பட்டனவாகவும் உளளன. தெற்குக் கருநாடகாவில்ஆண பாத்திரங்கள் அணிகலன்கள்அணிந்தனவாகவும், மேலாடை இல்லாமலும் காட்சியளிக்கின்றன. கருநாடகப் பாவைகள் யாவும் வண்ணம்தீட்டப்பட்டனவாகவும், ஒளி புகக்கூடியனவாகவும் துவாரஙகள் பெறப்பட்டனவாகவும உளளன. இதன் தனிசசிறபபு ஒரே தோற்பாவையில் பல சித்திரங்கள வரையப்பட்டிருப்பதாகும் இப்பாவைகளின் அசைவுகள் அழகாகத் திரையில காட்டப்படுகின்றன. இம் மாநில நிழற்கூத்தர்கள கிள்ளிக்யாதர்கள (Kıllıkyatas) எனபவர். இவர்களின் உட்பிரிவான பொம் பெயாட்சு (Bombeyadsu) அல்லது பொம பெயாடதவரு (Bombeyatadavaru) என்பவர்களே பாவையாட்டிகளாகப் பணிபுரிகின்றனர்

ஒரிசாவின் பாவைகளுக்கு வணணம் தீட்டப்படுவதில்லை வணணம் தோலைக் கெடுக்கும் என்று இக்கலைஞர்கள் கருதுகினறனா. இப் பாவைகள் மெல்லியவை, ஒளிப் புகமுடியாதவை.மேலும் இவை உருவில கேரளப் பாவைகளைப் போன்று சிறியவை.

**வெளி நாட்டுநிழற் கூத்துப் பொம்மைகள்:** கிடைத்துள்ள ஏட்டுச் சான்றுகள் வழியாகச் சீன நாட்டில் தோற்பாவைகள முதன்முதலில தோற்றுவித்திருக்கக்கூடும் என்பது கருதப்படுகிறது. இவ்வாட்டம் இனறளவும எட்டு நாடுகளில் உளளது. இநதியா, இநதோனேசியா, திவாங்கு, மலேசியா, தாய்லாநது, கம்போடியா, துருக்கி, சீனா ஆகியநாடுகளில் வளர்ந்து வந்துள்ளது. இந்நாடுகளுடன் சாவா, சப்பான், எகிப்து, பர்மா, சயாம் நாடுகளிலும் நிழலாட்டம் பரவியுள்ளது. ஐரோப்பாவின் எப்பகுதியிலும் நிழலாட்டத்தைக் காணமுடியவில்லை. இநதிய நாட்டுத் தோற்பாவைகளையும், உலக நாடுகளின் தோற்பாவைகளையும் ஒப்பிட்டுப் பாாக்கும்போது, இந்தியாவின் ஒளிபுக முடியாத தடித்த தோலாலான

(கேரளா பாவைகள்) ஒரு வகைப் பாவைகள் இன்றும் மலேசியா, தாய்லாந்து, இந்தோனேசியாவில் காணப்படுகின்றன. அடுத்த வகையான ஒளிபுகக் கூடிய மெல்லிய, ஆனால் வண்ணம் நிறைந்த தோலில் அமைக்கப்பட்ட இந்தியப் பாவைகள் (ஆந்திரம், கருநாடகம்) இன்றும் சப்பான், துருக்கி, சீனா, எகிப்து நாடுகளில் காணப்படுகின்றன. சாவாவின் தோல் பாவைகளில் வண்ணமும், அசைக்கக் கூடிய பகுதிகளும் இருந்தாலும் இப்பாவைகள் தடித்தவை, ஒளிபுகக்கூடியவையாக இல்லை. ஆனால், பாமா பாவைகள் அசைக்கக் கூடிய வசதிகள் பெற்றிருக்கவில்லை. தாய்லாந்துக் கலைஞர்கள் இலாவோசில் (Laos) மிகப் பெரியதும், ஒளிப்புகக் கூடியதுமான தோல் பாவைகளை இயக்குகின்றனர். சயாமில் நாங் தாலுங்கு (Nang Talung) எனப்படும் நிழற் கூத்தின் பாவைகள் கீழிருந்து தாங்கிக் கொள்ளப்படுகின்றன. மலேசியாவில் 'இகாயதசேரி ராமா கதையின் பலவேறு துணைக் கதைகளைத் தோற்பாவை நிழற்கூத்தின் வழியே ஏழு இரவுகளில் நடத்திக் காட்டுகின்றனர். சீனாவில் இரண்டு வகையான தோற்பாவைகள் உண்டு. பீக்கிங்கு (Peking) பகுதியில் சிறிய பாவைகளும், இசிச்வான் (Szechwan) பகுதியில் பெரிய பாவைகளும் அவற்றின் அசைவு அமைப்புகளினால் சிறந்த காட்சியை மக்களுக்கு அளிக்கின்றன.

**தோற்பாவைநிழற்கூத்தில் மரப்பாவைகள்:** நிழலாட்டத்தில் பங்கேறகும், தோல் பாவைகளைப்போன்றே மரப்பாவைகளும் இடம் பெறுகின்றன. இலக்கியச சான்றுகளின்படி, மரப்பாவைக் கூத்து அல்லது மரப் பொம்மலாட்டத்தைப் பற்றித் திருக்குறளில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை, நாணா லுயிர் மருட்டி யற்று -(குறள் 1020). இரப்பாரை யில்லாயி னீர்ங்கணமா ஞாலம் மரப்பாவை சென்றுவந்தற்று (குறள் 1058) பட்டினத்தார், மரக்கூத்தை,

'நாட்டமென்றே யிரு சற்குரு பாதத்தை நம்பு, பொம்மலாட்ட மென்றேயிரு ..., (சித்தர் பாடல்கள் 1968-79) என்று குறிப்பிடுகிறார். இவர் காலம் கி.பி. 10 அல்லது 11 ஆம் நூற்றாண்டு. இதில் பொம்மலாட்டம் என்பது மரப்பாவைக் கூத்தைக் குறிக்கிறது. மேலும் அருணந்தி சிவாச்சாரியா 'தோற்பாவைக் கூத்தும் தொல்லை மரப்பாவை இயக்கமும்' (சிவஞானசித்தியார் சுபக்கம், சூத்திரம 4, அதிகாரம் 224) என்று கூறியிருப்பதிலிருந்து சிவாச்சாரியர் காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு என்றும், அதிலிருந்து தோற்பாவைக் கூத்தை விட மரப் பாவைக் கூத்து காலத்தால் பழையது, தொன்மை வாய்ந்தது என்றும் கருத இடம் உண்டு.

**கூத்தின் பயன்கள்:** நிழலாட்டங்கள் தென்னிந்தியக் கிராமங்களில், திருவிழாக் காலங்களில் மட்டும் அல்லது அறுவடைக் காலங்களில் மட்டும் என்று எந்த வரையறையும் கொள்ளாது எக்காலத்தும் நடத்தப்படக்கூடிய, குடும்பமாகச் செயற்படக் கூடிய கூத்து ஆகும். இது கிராமிய மக்களின் பொழுது போக்காகவும், சமூக வாழ்வில் மக்களை நலவழிப்படுத்தும் கருவியாகவும், ஒரு முதியோர் கல்வி பரப்புச் சாதனமாகவும், கிராமங்களில் பண்பாட்டையும், நாகரிகத்தையும் வலுப்படுத்தக் கூடிய கருவியாகவும் செயற்பட்டு வருகிறது.

**இப்போதைய நிலை:** இக்காலத்தில் தமிழகத்தில் நிழலாட்டத்தை நடத்திவரும் மராட்டியத் தமிழர்களின் முன்னோர்கள், தஞ்சாவூர் சரபோசி மன்னன் காலத்தில் மிகுதியான சலுகையைப் பெற்றுக் கலையை வளர்த்தனர் பிறகு வந்த ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கலைஞர்கள் தங்கள் உடைமைகளை இழந்தனர். வருவாய் குறைந்ததால் நிழலாட்டக் கலையைக் கொண்டு ஊர் ஊராகச் சென்று பிழைப்பை நடத்தத் தொடங்கினர். கிராமியப் பகுதிகளில் திரைப்பட அரங்குகள் மிகுந்து விட்டன. இக் கலையாட்டத்தில் புதுமை மிகுதியாக இல்லை. பார்வையாளர்களுக்கும் இடமில்லை. இவ்வாட்டங்களில் தங்களின் மெய்ப்பாட்டு உணர்ச்சியை நேரடியாகத் தெரிவிக்கவும் முடியாத நிலை. எளிய அரங்குகள், கலைஞர்களின் குறைந்த பொருளாதார வசதி முதலானவையே இக்கலை மேலும் வளரத் தடையாகின்றன.

தோற்பாவை நிழற்கூத்துக் கலைஞர்களின் படைப்புகளை ஒன்றுதிரட்டிக் கிராமியக்கலைக்கூடக் காட்சியில் வைக்கச் சென்னை அரசு அருங்காட்சியகமும், மைசூர் நாட்டுப்புறவியல் அருங்காட்சியகமும், மத்திய தோல் வளர்ச்சி நிறுவன அருங்காட்சியகமும் (சென்னை) பாடுபட்டு வருகின்றன. சென்னை அருங்காட்சியகத்தில் மட்டும் ஆந்திரம், தமிழ்நாடு, மைசூர், கேரளம், மலேயா, இந்தோசீனா, சாவா போன்ற பகுதிகளிலிருந்து பெறப்பட்ட 350 - க்கும் மேலான நிழலாட்டப் பாவைகள் காட்சிக்கும், ஆய்விற்கும் வைக்கப்பட்டுள்ளன. நே.தே.

**துணை நூல்கள்.**

**இராமசாமி, மு.,** தோற்பாவை நிழற்கூத்து, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1983.

**Devasahayam, N.,** Puppets in the Collection of the Madras Government Museum: A bulletin of the Madras Museum, Madras, Vol.XI, No.1, 1973.

**தோற்றக் கொள்கை:** உடல், உள்ளம், ஆன்மா ஆகியவை உணமையாக இருக்கின்றன என்று பலர் நம்புகிறார்கள். இவை தொடர்பாக, உடலும் உள்ளமும் எவ்வாறு தொடர்புடையன எனற சிக்கலைப் பற்றியும் பல்வேறு கருத்துகள் உளளன மேலும், உடல் அழியக் கூடியது என்றும், ஆனமா அழிவில்லாதது எனறும், ஆன்மாவே உயர்ந்த மதிப்புடையது என்றும் பல தத்துவஞானிகள் கூறுவர். ஆயினும், இக் கருத்துகளுடன் உடன்படாத கொள்கைகளும் உணடு. அவற்றுள ஒன்று தோற்றக் கொளகை (Epiphenomenalism). அதைப் பின்வருமாறு விரித்துரைக்கலாம்.

தோற்றக் கொளகை கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தாமசு எனறி அக்சிலி (கி.பி. 1820-1903) என்பவரால் உருவாயிறறு. மனித உடலின நிகழ்ச்சிகள உளளத்தின் நிகழ்ச்சிகளை அதாவது, சிநதனைகள் கருத்துப் படிவங்கள் (images), கருத்துகள் (ideas), உணர்ச்சிகள் முதலியவற்றை ஏறபடுத்தும்; ஆனால், உள்ளததில் நிகழ்வன, உடலின செயல்களுக்கோ வேறு ஏதேனும் உளள நிகழ்ச்சிகளுக்கோ காரணமாக அமைய முடியாது. உள்ளம் என்பது உடலின் அல்லது மூளையின் துணை உற்பத்திப் பொருளாகவும், முக்கியத்துவம் பெறாததாகவும், பயனற்றதாகவும் கருதப்படுகிறது. இக்கொளகையில, இந்த நிலையினைத்தான ஆனமாவும் பெறறிருக்கிறது. உடல்தான் அடிப்படை உணமை என்றும், உளளம உள்ளபோதிலும பயனற்றதெனறும் கருதப்படுகிறது. இக்கொள்கையைப் பினவரும் விளக்க வரைபடத்தின் வாயிலாகத் தெரிந்து கொளளலாம்:



இங்கு அ,ஆ,இ என்ற எழுததுக்கள் உடலின் நிகழசசிகளையும் 1,2,3 என்பவை உள்ளத்தில் நிகழ்வனவற்றையும் குறிக்கின்றன. அம்புக்குறி எங்குத் தொடங்குகிறதோ அங்குக் காரணமும், எங்கு முடிகிறதோ அஙகுக் காரியமும இருக்கினறன. உடலில் நிகழ்வன (Physical Processes) காரணமாகவும், உளளத்தில் நிகழ்வன (Mental Processes) காரியமாகவும் அமையும். ஓர் உடலின நிகழ்ச்சி (Physical event) மற்றொரு உடலின் நிகழ்சசிக்குக் காரணமாகும். ஆனால், எந்த ஓர் உள்ள நிகழ்ச்சிக்கும் காரணமாக இயங்கும் தன்மை இல்லை என்பது விளங்குகிறது. மேலும், மனிதனின் ஆனமிகத்தன்மை, அவன் உடலின் வேலைகளால் (physiological activities), அதாவது, அவன நரம்பு மண்டலத்திலும், மூளைப் பகுதியிலும் நிகழ்வனவற்றினால் தோற்றுவதேயன்றி வேறொன்றுமில்லை. உடலை அடிப்படையாகக் கொண்டு நிரூணயிக்க இயலாதவற்றை உண்மையென்று இக்கொள்கை ஏற்பதில்லை. உள்ளத்தையோ ஆன்மாவையோ எவரும் புலன்களால் அறிந்ததில்லையாதலால் அவற்றை அடிப்படை உணமைகளாக ஏற்பதில்லை. உள்ளமும் ஆன்மாவும உடலின் துணை உற்பத்திப் பொருள்களாகக் கருதப்படுகின்றன. உடல் இருப்பதால் தான் ஆன்மா உள்ளது என்றும, உடல் அழிந்து விடின ஆன்மாவும் அழிந்தாக வேண்டுமென்றும் கருதப்படுகிறது. இக்காரணங்களால், இக கொள்கையின்படி ஆன்மா நிலையானதெனறு நமபுவது தவறாகும்.

இக்கொளகையை எதிர்த்துச் சில கருத்துகள கூறப்படுகின்றன. அவையாவன: 1 உளளத்தின் நிகழ்ச்சிகளைத் தோற்றக் கொளகையினர் பெரிதும் மதிப்பதில்லை. ஆனால், அவாகள் தோற்றக் கொள்கையின் சிறப்புப் பற்றிக் கொணடுள்ள நன் மதிப்பு, அக் கொள்கைக்கு ஆதரவாகக கூறப்படும் வாதஙகளைப் புரிந்து கொணடு அவற்றை ஏற்றுக கொணடதால் ஏற்பட்ட நனமதிப்பனறு. இவர்களது நம்பிக்கை தங்கள மூளையில ஏற்பட்ட மாறுதல்களால ஏற்பட்ட விளைவேயாகும. ஆதலால், தோற்றக் கொளகையை நம்புகிறவர்கள, அவர்களது நமபிக்கையைத் தோற்றக் கொள்கையின் அடிப்படையில் சிறப்புடையதாக நிலை நிறுத்த முடியாது.

2. ஒரு நாடகம் எழுதும் நாடக ஆசிரியர், காட்சிகளையும், நாடகப் பாத்திரஙகளையும் கற்பனையில் வடித்துக் கதையின் மையக்கருத்தை வளாப்பதில் சிநதனையைச் செலுத்தி, அதனபின் நாடகத்தை எழுதுகிறார். அந்நாடகம் எழுதப்படுவது விளஙகுகிறது. ஆனால் தோறறக் கொளகையர் இவ்வாறு கூறுவதில்லை. நாடகாசிரியர் உள்ளத்தில தோன்றுபவை ஒன்றும் நாடகம எழுதுவதற்குக் காரணமாக மாட்டாதென்பர். நாடகாசிரியரின மூளையில மிக நுட்பமான மாறுதல்கள் ஏற்பட்டு, அவற்றின விளைவாக நாடகம் எழுதுதல் எனப்படும் கைததசைகளின் இயக்கம் ஏற்படுகிறது. மேலும், இவ்வாறு மூளையில் நிகழும் மாறுதலகளுக்கு ஏற்ப, நாடகாசிரியரின் உணர்வு நிலையில் (Consciousness) விருப்பம, கற்பனை, சிந்தனைகள் முதலியன தோன்றுகின்றன என்றும் தோற்றக் கொள்கையர் கூறுவர். ஆயினும், இவவாறு உள்ளத்தில் தோனறுபவை எவ்வகையிலும் நாடகம் எழுதக் காரணமாவதில்லை எனபர். இக் கொளகை விசித்திரமாக உளளது. நாடகம் உருவாவதற்குக் காரணம் மூளையில் ஏற்படும் அசைவுகளதாம என்றும், ஆசிரியரின் மதிநுட்பமும் (Intelligence)

அவரது படைப்புப் பலருக்குப் பயனுடையதாக இருக்க வேண்டும என்ற அவரது செயல் நோக்கமும் காரணங்களாகாவென்றும் தோற்றக் கொள்கை கூறு வதால், இதனை ஏறறால, நாடகத்தின் அறிவுத் திறனும் பயனுடைமையும விளங்காதனவாகினறன. இந்நிலை ஏற்புடையதன்று.

3. தோற்றக் கொள்கை தவறானது எனபது அன்றாட வாழ்வில் ஒவ்வொரு நாளும் பலமுறை நிரூபிக்கப்படுகிறது ஒருவரின நடவடிக்கைகள அவர் உள்ளத்தில் தோன்றுவனவற்றால ஏற்படுகின்றன என்பது நன்றாகப் புலனாகிறது. என்ன செய்வ தென்று ஒருவர் முடிவு செயயும் பொழுதெல்லாம் அவர்தம் விருப்பாற்றலும் (Will) உள நோக்கமும் (motive) அறிவும் (knowledge) விருப்பங்களும் அவர் செயல்களை நிருணயிக்கின்றன என்பது யாவரும் அறிந்ததொன்று. ஒருவர் நம்புவதும் விரும்புவதும் அவர் செயலுககுக்காரணமாகும் என்பது உண்மை யாதலால், தோற்றக்கொளகையை ஏற்பதற்கிலலை.

4. விதி விலக்கு இன்றி, எல்லா உள்ளத்தின் நிகழ்ச்சிகளுக்கும் தோற்றக் கொள்கை பொருந்தும் என்று பேசப்படுகிறது. உடல்நூலில ஒருவர் போது மான அறிவு பெற்றிருந்தால், உள நிகழச்சிகள் எத னையும் உடல்நூலின் விதியின்படி விளக்கமுடியும என்பர் தோற்றக் கொள்கையர். அதன்படி இயநதிர அறிவியலின் (Mechanical Science) அடிக்கோள்களு டன (Postulates) விதி சிறிதும் பிறழாது உடல்நூல் உடனபாடுடையதாக வேண்டும். அவ்வாறு உடல் நூல் இருப்பின், மனிதனின செயல்கள் அனைத்தும் அவனது விருப்பு வெறுப்புகள், உளநோக்கங்கள் அறிவு, அறிவியல் கோட்பாடுகள முதலியவற்றால் நிருணயிக்கப்படமாட்டா. ஆதலின் மனிதனுக்குத்தன் விருப்பாற்றல் (Freedom of will) இல்லை என்பது தெளிவாகிறது. அதாவது ஊழவலிக் கோட்பாடு (Fatalism)என்னும் கொளகை நிலைத்து விடுவதால், அதன் விளைவாக வரும் தீமைகள அனைத்தும் மனி தனைப் பறறுகினறன. சி.சா.

**துணை நூல்கள:**

**Ewing, A.C.**, The fundamental questions of philosophy, Allied publishers private limited, Madras.

**Richard Taylor**, Metaphysics, Prentice - Hall, Inc., Englewood Cliffs, New Jersey.

**Taylor, A.E.**, Elements of Metaphysics, Methuem Co., Ltd., London.

***தோற்றுவிப்பாளர்***: நிறுமம் ஒன்றைத் தோற் றுவிக்கப் பெரும் முயற்சி எடுத்துத் திட்டம் தீட்டி அதைச் செயலிற் காட்டுபவர் தாம் தோற்றுவிப் பாளர் (Promoter). இவா தனியொருவராகவோ கூட்டாகவோ பலர் ஒன்றிணைநத சஙகமாகவோ, நிறுமமாகவோ இருக்கலாம். முதற்கண என்ன தொழிலில் ஈடுபடலாம் என்றுஆய்ந்து பின்னர் அதற் குத்தேவையான மூலதனம், இடம், தொழில் நுட்பம் போன்றவைகளை எவவாறு பெறுவது எனத் திட்ட மிடுவது தான் தோற்றுவிப்பாளரின் முககிய வேலை. பின்னர்ப் பல வல்லுநர்களின் உதவியுடன நிறு மததைத் தோறறுவிக்கும் பொருட்டு அதைப் பதிவு செய்யும் நடவடிக்கைகளை மேறகொள்வார்.

தோற்றுவிப்பாளர் எனற சொல வாணிகளு சம்பந்தப்பட்டதேயன்றிச் சட்ட சம்பந்தமானது அன்று. சட்டத்தில் எங்கும் இவரைப் பற்றி விளக்கிக் கூறவே இல்லை. எனவே, மேற்சொல்லியபடி யாரொ ருவர் வாணிக வாய்ப்பினைக் கண்டுபிடித்து நிறு மத்தை உருவாககி அதன வளர்ச்சிக்கு வழிகோலு கின்றாரோ அவரே தோற்றுவிப்பாளர். அவர்கள வியாபாரத தனமை நிறுமத்தின் நோக்கம், விவகார எல்லை போன்றவற்றைத் திட்டமிட்டு முடிவுசெய் கின்றனர். தொடக்க நிலை மூலதனத்திற்கு வழி வகுக்கின்றனர். நடந்து வரும் வாணிகததை வாங்கு கின்றனர் தேவையான பத்திரங்களைத் தயார் செய்ய வழக்கறிஞர்களை வேணடுகின்றனர். இயக்கு நர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். தகவல் அறிக்கை வெளியிடுகின்றனா. நிறுமத்தின் பங்குகளை மக்கள் வாங்கிடத் தூண்டுகினறனர். பதிவுக் கட்டணத்திற் குப் பணம் சேர்க்கின்றனர். நிறுமம் தோற்று விப்ப தற்கு ஆகும செலவிற்குப் பணம் வழங்கியதால் அல்லது அமைப்பு முறையேட்டில் கையொப்பம் இட்ட தால் ஒருவர் தோற்றுவிப்பாளராக முடியாது. அது போல் அமைப்பு முறையேட்டில கையொப்ப மிட்டு விட்டுத் தோற்றுவிப்பாளர் ஆற்றும் செயலை ஆற்றாமலிருநதால் அவர் தோற்றுவிப்பாளர் அல லர்.

**தோற்றுவிப்பாளர்களின் வகைகள்:** தேற்றுவிப் பாளர்களில இரு முக்கிய வகையுணடு. ஒன்று நிறு மங்களைத் தோற்றுவிப்பதையே தமது அலுவலாகக் கொணடிருக்கும் தோற்றுவிப்பாளர்களுக்கு அலுவல முறைத்தோற்றுவிப்பாளர்கள்(Professional Promoters) எனப் பெயர். இவர்கள பெரும்பாலும் புதிய புதிய தொழில்களை மேற்கொள்ளுவதற்காக நிறுமங் களை உருவாக்குவர். இவர்கள் இப்பணியில் நல்ல தேர்ச்சியும் புலமையும் பெற்றிருப்பது இயல்பாகை யால் இவர்கள் தோற்றுவிக்கும் நிறுமங்கள நிலை யான வெற்றி வாய்ப்பைப் பெறும்.

மற்றொன்று, ஒரு குறிப்பிட்ட நிறுமத்தைத் தோற்றுவிப்பதோடு தமது தோற்றுவிப்புப் பணியை

முடித்துக் கொள்ளுபவர்கள் 'தறுவாய்க்கான தோற்றுவிப்பாளர்கள்' (Occasional Promoters)எனக் கூறப்படுகின்றனர். பொதுவாக இவர்கள் தனி வாணிகத்தையோ கூட்டாண்மையையோ தொழில் விரிவு கருதி நிறுமமாக மாற்ற விழைபவர்களாவர். ஒரு நிறுமத்தை உருவாக்க முன் தொழில் நுட்ப ஆய்வை மேற்கொள்ளுவதற்காக அமர்த்தப்படும் பொறியர்கள வழக்கறிஞர்கள், தணிக்கையார் போனறோர் பிறகு அந் நிறுமத்தைக் கூட்டுருவாக்கம் செய்யும் பொழுது அதன தோற்றுவிப்பாளர்கள் வரிசையில் சேர்த்துக் கொளளப்படுகின்றனர். இவர்களும் தறுவாய்க்கான தோற்றுவிப்பாளர்களே. அது போலவே முதலீடு செய்வதற்கான சூழ்நிலை மிகவும் சாதகமாக இருக்கும் பொழுது புது நிறுமங்களைத் தோற்றுவிப்பதில் முதலீட்டாளர்களே முனைந்து ஈடுபடலாம் இவர்களும் இவ்வகையைச் சேர்ந்தவர்களே. நிதியத் தோற்றுவிப்பாளர்கள் அல்லது முதலீட்டுத் தோற்றுவிப்பாளர்கள் என்ற சிறப்புப் பெயரால் இவர்கள் கூறப்படுகின்றனர்.

இவ்விரண்டு வகைகளுக்கும் இடைப்பட்ட மூன்றாம வகைத் தோற்றுவிப்பாளர்களும் உள்ளனா. இவர்கள, தாம் உருவாக்கும் நிறுமங்களின் நிருவாக முகவராக வர வேண்டும் என்பதற்காக அவற்றைத் தோற்றுவிப்பர். இவர்களை 'நிருவாக முகமைத் தோற்றுவிப்பாளர்கள்' (Managing Agency Promoters) என்க குறிப்பிடலாம்.

**ஊதியம்.** தோற்றுவிப்பாளர் ஊதியம பெறும் உரிமையிருந்தும் அவரது ஊதியத்தை நிருவாகத்தினரிடம கேட்பது அரிது. அவர் வாங்கின சொத்துகளை அதிக விலைக்கு நிறுமம விற்று அதில் வரும் இலாபத்தை ஊதியமாகப்பெறுவார். நடந்து வநத வியாபாரத்தை வாஙகின விலையின் மீது அவருக்குக் கழிவு கொடுப்பதுணடு. அவருக்கு ஊதியம் உரொககப் பணமாகவோ பங்காகவோ கடனீட்டுத் பத்திரமாகவோ வழங்கப்படலாம.நிறுமத்தால விற்கப்பட்ட பங்குகளின் மேல் ஒரு குறிப்பிட்ட விகிதம் ஊதியமாகத் தரப்படலாம். இவவாறு இவருக்கு அளிக்கப்படும் ஊதியம் தகவலறிக்கையில குறிப்பிடப்பட வேண்டும்.

**தோற்றுவிப்பாளரின் பொறுப்பு:** நிறுமம் தோனறினாலன்றித் தோற்றுவிப்பாளா ஒரு முகவராகவோ பாதுகாவலராகவோ ஆக முடியாது. அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட நிறுமத்திற்கும் அவர்களால் ஊக்கு விக்கப்பட்ட பங்குதாரர்களுக்கும் நம்பிக்கையுள்ளவராக அவர் நடந்திட வேண்டும். நிறுமத்தின சார்பாக அவர்கள ஈடுபடும் செயல்களில் இரகசிய இலாபம் ஒன்றும் பெறக் கூடாது. நிறுமம் அமைக்கும் போது அவர்கள் பெற்ற இலாபத்தைத் தகவல் அறிக்கையில் குறித்திடல் வேணடும். இயக்குநர் குழு அதை ஏற்றுக் கொள்ள வேணடும். நிறுமக் கணக்கில் அவர்கள் பெற்றுக் கொண்ட பணத்தைக் காட்ட வேணடும். அவர் நேர்மையுடனும் நன்னம்பிக்கையுடனும் கம்பெனியின் நலனில் அக்கறையுடையவராகவும் இருத்தல் வேண்டும். அவர்கள் வெளியிடும் செய்தி உண்மையானதாகவும், வெளிப்படையாகவும் இருக்க வேண்டும். அவர்கள் எல்லாப் பங்குதாரர்களுக்கும் புரியும்படியாக அல்லது தெரியும் படியாக வெளியிட வேணடும்.

தகவல் அறிக்கையில் முக்கியமாக வெளியிட வேணடியதைவிட்டு விட்டாலும அல்லது பொய்யுரை புனைந்திருந்தாலும் அவர்கள் பொறுப்பாளியாவார்கள். இரகசிய இலாபம் அல்லது வெளியிடாத இலாபம் போன்ற வற்றை அவர்களிடமிருந்து நிறுமம வசூல் செய்து விடும். அவர்கள் செய்துள்ள ஒப்பநதத்தை நிறுமம் நீக்கி விடலாம் அல்லது அதனால் அவர் பெற்றுள்ள இலாபத்தைத் திரும்ப வசூல் செய்து விடலாம். அவர்களின் கடமை தவறிய செயல்களாலும் மோசடிகளாலும் ஏற்படும் நட்டங்களுக்கு அவர்கள் பொறுப்பாளியாவார்கள.

**தோற்றுவிப்பாளரின் நிலை:** நிறுமத்தைத் தோற்றுவிப்பவர் என்ற முறையில் நிறுமத்திற்கும் அவருக்குமிடையே ஒரு நம்பக உறவு (Fiduciary relationship) இருக்கிறது. எனவே, அவர் தமது சொத்தை நிறுமத்திற்கு விற்கும் பொழுது அதைப்பற்றி அந்நிறுமத்தின் இயக்குநரவையிடம் தெளிவுபடுத்துவதும் அச்சொத்தை வாஙகுவதா வேண்டாமா என்பதை முடிவு செய்யும் உரிமையை அவையிடம் விட்டுவிடுவதும் அவர் தம் கடமைகளாகும். தோற்றுவிப்பாளா என்ற முறையில் தாம் பெறும் ஊதியத்தைத் திட்ட அறிவிப்பில் வெளியிடுவதோடு அவையின் ஒப்புதலையும் பெற வேண்டும். அவரது உறவு நம்பக உறவாகையால் இரகசிய இலாபம் சேர்க்க முயலககூடாது. அவர் தம் சொத்தை நிறுமத்திற்கு விற்பதைப பற்றிக் கீழ்க்காணும் நான்கு நிலைகளில் தெளிவு படுத்தலாம்.

1. தாம் எதிர்காலத்தில் தோற்றுவிக்க இருக்கும் நிறுமத்திற்கு அதை இலாபத்திற்கு விற்று விடலாம் என்ற எண்ணத்தில் அவர் அச்சொத்தை முன்னதாக வாங்கியிருந்தால், அதை அந்நிறுமத்திற்கு விற்பதன் வழியாகப் பெறும் இலாபத்தை அவர் அதனிடம் தர வேண்டுவதில்லை. ஆனால தாம் அதை விறபவர் தம்மிடமிருந்து தான் நிறுமம் அச்சொத்தைப் பெறுகிறது, சொத்து தமக்குரியதுதான் என்ற செய்திகளை அவர் வெளியிட வேண்டும்.

2. நிறுமத்தைத் தோற்றுவிப்பதற்கும கூட்டுரு வாக்கம் செய்வதற்கும் முன்னர் அவர் வாங்கிய அச்சொத்தைத தம் பெயருக்கு உரிமை மாற்றம் செய்து கொள்ளாமல் விருப்புரிமை ஒப்பததமாகவோ முற்றுப் பெறாத (Uncompleted) ஒப்பந்தமாகவோ அந்த ஏற்பாட்டைச் செய்திருநதாலும், நிலைமை மேலே கூறியது போல நிறுமத்தைத் தோற்றுவித்த பிறகு, அவர் அச் சொத்தை அதற்கு விற்பதன வழியாகப் பெறும் இலாபம் அவருக்குரியதே.

3. தோற்றுவிக்கும் பணியைத் தொடங்கிய பின்னா நிறுமத்திறகு விற்க இருக்கும் சொத்தைத தம் பெயருக்கு வாஙகியிருந்தால் அதைப் பிறகு அந்நிறுமத்திற்கு விற்பதால் எழும் இலாபம் நிறுமத் திற்கே உரியது. தமக்கு அச்சொத்து விற்கப்படும ஒப்பநதத்தை மறுககவோ, அதை ஏறறுக் கொண்டு அதனால் வரும இலாபததை வேண்டவோ நிறுமத் திற்கு உரிமையுணடு.

4. நிறுமததைச் கூட்டுருவாக்கம் செயத பிறகு அவர் அச் சொத்தை வாஙகுவதறகு ஒப்பந்தம் செய் திருந்தால் அதன முகவராகச் செயற் பட்டவராகவே அவர் கருதப்படுவார். எனவே, அச் சொத்தை நிறுமத்திற்கு விற்பதனால எழும் இலாபத்தை அவா அதனிடம் தந்து விட வேண்டும். இல்லையெனறால, முதல்வருக்குத் தெரியாமல் இரகசிய இலாபம் பெறற குறறததிற்கு அவா ஆளாக நேரும.

**தொடக்க ஒப்பந்தமும் தோற்றுவிப்பாளர் பொறுப்பும்:** நிறுமம தோன்றுவதற்கு முன அது யார் மீதும் வழக்குத் தொடர முடியாது அதன் மீதும் யாரும் வழக்குத் தொடுக்க இயலாது. தோன்றுவதற்கு முன் ஏற்பட்ட ஒப்பந்தத்தால் நிறுமத்திற்கு எவ்வித இலாபமும் இலலை. இன்னும் தோன்றாத நிறுமத்திற் காகவும் தோற்றுவிப்பாளர்கள் சில சொத்துகளை வாங்குவர். அத்தகைய ஒப்பந்தஙகள் நிறுமம தோன்றிய பிறகு செல்லா. நிறுமம் தோற்றிவைத்த பின்னர் இவ்வொப்பந்தங்கள உறுதி செய்யப்பட மாட்டா. விறபனையாளர் மீதும வழக்குத் தொடர முடியாது. நிறுமம் ஒப்பந்தங்களை ஏற்கும்வரை அவா கள் தனிப்பட்ட முறையில் பொறுப்பாளியாவாாகள்.

**தோற்றுவிப்பாளரின் முக்கியத்துவம்:** தோறறு விப்பாளர் புதுப்புது தொழிலகளை உருவாக்குகிறார். புதுப்புதுத் தொழில் நிறுமஙகளைத் தோறறு விக்கிறார், புதிய புதிய பொருள்கள் மக்களுக்குக் கிட்டுமாறு செய்கிறார். இவரது உழைப்பால் நாட்டில் செல்வம் சேருகிறது, வருமானம் பெருகுகிறது; வேலை வாய்ப்புக் கூடுகிறது; மக்களின வாழக்கைத் தரம்உயருகிறது. சிறந்தபொருள்கள குறைந்தவிலைக் குக்கிடைக்கினறன. கடுமையாகஉழைத்து, இவர் உரு வாக்கும் தொழில்கள் நாட்டின் பொருளாதார முன னேறறததிற்கு வழி வகுக்கின்றன.பல நாடுகளில இன்று காணும் தொழில் வளர்ச்சி இவரது சேவைக்கு ஆதாரமாக விளங்குகிறது. இவரது முயற் சியின் பயனாகப் பாதுகாப்பிலும் சமுதாயந்திலும் உறஙகிக் கிடக்கும முதல் (நிதி) தொழில் வளர்ச் சிக்கு ஆற்றுப்படுத்தப்படுகிறது.இவரது இடையீட்டின காரணமாகத தான முதலீட்டு வாய்ப்புகளும் முத லீட்டு நிதிகளும் ஒனறாக இணைந்து பொருளாதார முன்னேற்றத்திறகு விததிடுகின்றன. கே என்.இரா.

**துணை நூல்:**

Ashok.K. Bagrial, Company Law, Vikas Publishing House, New Delhi, 1982.

## தோனிசு, பெர்டினாண்டு சூலியசு (கி.பி. 1855-1936)

புகழ்பெற்ற செருமானியச சமூகவிய லறிஞர். இவர் கி பி. 1855-இல் மேறகுச் செருமனியி லுளள சில்சுவிக்கு (Schleswig) என்னுமிடத்தில் பிறந தார். இவா கி.பி. 1877-இல பணடைய மொழிநூல ஆய்வில (Classical Philology) முனைவர் பட்டம் பெறறார்;ஆனால்,பின்னாச சமூகவியலிலும் அரசியல தத்துவவியலிலும் மிகுந்த கவனம செலுத்தினார். பல சமூகவியல நூலகளையும கட்டுரைகளையும பெர்டினாண்டு சூலியசு தோனிசு (Ferdinand Julius Tonnies) எழுதினார். இவர் கி.பி. 1881-ஆம ஆணடு கீல் (Kiel) பல்கலைக்கழகத்தில தத்துவவியல் துறை ஆசிரியரானார். இவர் 1909-இலிருந்து 1933 முடியச் செருமன சமூகவியல கழகத்தின தலைவராக விளங கினார். இக் கழகத்தைத தோற்றுவித்தவரும் இவ ரேயாவார.



தோனிசு, பெர்டினாண்டு சூலியசு

இவர் பொதுவுடைமை, தொழிற்சங்கம், கூட்டுறவு முதலிய இயக்கங்களில் தீவிரமாகப் பங்குகொண்டார்; பின்லாந்திலும் (Finland)) அயர்லாந்திலும் (Ireland) நடைபெற்ற விடுதலை இயக்கங்களை ஆதரித்தார். மேலும் இவர் செருமனியிலுள்ள சமூகக் குடியரசுக் கட்சியிலும் தீவிரமாகப் பங்குகொண்டார். எனவே, இவர் சருவாதிகாரி இட்லரின் அரசால் 1932-இல் தம்முடைய சமூகவியல் சிறப்புநிலைப் பேராசிரியர் பதவியை இழக்க நேரிட்டது.

செருமானிய மொழியில் கி.பி. 1887-இல் வெளியிடப்பட்ட இவர்தம் நூலான 'சமுதாயமும் சமூகமும்' (Gemesinschaft and Gesellschaft) இவரை உலகிற்குக் காட்டியது. இவர் கி.பி.17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தாமசு ஆப்சு (Thomas Hobbes) என்ற தத்துவ அறிஞரின் நூல்கள் பலவற்றை ஆய்வு செய்து ஆங்கிலத்தில் வெளியிட்டார். அதன்மூலம் இங்கிலாந்திலும் இவர்தம் புகழ் பரவியது. 'வழக்கம்' (Custom), 'பொதுமக்கள் கருத்து பற்றிய திறனாய்வு' (A Critique of Public Opinion) ஆகிய நூல்கள் இவர்தம் பிற முக்கிய படைப்புகளாகும்.

மனிதனுடைய விருப்பாற்றல் (Will), சமூகத்திலுள்ள உயிரின, சமூக ஒப்பந்தக் கருத்துகள் ஆகியவற்றை இவர்தம் கோட்பாடுகள் விவரிக்கின்றன. வாழ்க்கையில் ஏற்படும் பொதுவான பட்டறிவின் மூலம் இவர்தம் கோட்பாடுகள் உருவாக்கப்பட்டதால் அவை மிகவும் மதிக்கத்தக்கதாக விளங்கின. இவர் சமுதாயத்திற்கும் சமூகத்திற்கும் உள்ள வேறுபாடுகளை நன்கு வரையறுத்துக் கூறினார். இவர் பண்பாட்டுப் படிமலர்ச்சியையும் சமூகத்தின வகைகளையும் மிகுதியாக விவரித்துள்ளார். இவர் அனைத்துச் சமூக அமைப்பும் ஓர் ஒட்டுமொத்தமான விருப்பாற்றலைக் (Collective Will) கொண்டிருப்பதாகக் கூறுகிறார்.

இவர் மேற்குச் செருமனியிலுள்ள கீலில் 1936-ஆம் ஆணடு தம் 81 ஆம் வயதில் இறந்தார். பூ.த

**தௌ** தகரத்திற்கும் ஔகாரத்திறகும் கொடுக்கப்பட்ட குறிப்புகளைப் பார்க்க. தகரத்தோடு வாய்திறந்து வரும் ஒலியைப் பின் குவித்து நீட்டிய நிலையில் வெளிப்படும் ஒலியே தௌ ஆகும்.

**வடிவம்:** கல்வெட்டுகளில பணடைககாலததில இவ்வெழுத்து பயின்று வர வில்லை. இலக்கிய வழக்கிலும் ஐ யை அய் எனறும் ஔ, வை அவ் எனறும எழுதி வந்திருக்கலாம் எனத் தோனறுகினறது. எனினும், இன்று எழுதபபடும் வடிவம் எவவாறு வந்திருக்கவேண்டும் என்பதை ஒருவாறு உய்த்து உணரலாம்.

முதலில் தோ என்ற எழுத்து எழுதப்படுவது போலவே இடப்புறம் ஒரு கோடும் வலப்புறம் ஒருகோடும இடப்பட்டு மிகப் பிற்காலத்தில் அதாவது கி.பி.15-ஆம் நூற றாணடிறகுப் பின் வலப்புறக் கோட்டில் நடுவே ஒரு கீழ நோக்கிய சிறுகோடு இணைக்கப்பட்டது. இது ஊகாரத்தில் உ என்ற எழுத்தின் மேலுள்ள வெறுங்கோடு இரு வளை கோடுகளாக மாறியதைப் போல் ஆகும் என்பது தெளிவு. (உ-உ-ஊ) ஆகக் கொமபும் ள கரம் போன்ற இரு வளை கோடுகளும் கலநது தௌ உயிர் மெய்க் குறியாக வழங்கிற்று.... ...

கே ஜி கி.

*தௌலதாபாது:* இது மராட்டிய மாநிலத்தின் ஒரு சிற்றூர். அஙகுள்ள பெரிய நகரஙகளுள ஒன்றான ஔரஙகாபாதிலிருந்து 13 கி.மீ. தொலைவில் இது அமைந்துள்ளது; வரலாற்றுச் சிறப்புப் பெற்ற ஒரு கோட்டையைத் தன்னகத்தே கொணடுள்ளது. அக்கோட்டையால்தான் இவ்விடத்திற்குச் சிறப்பு. கோட்டையின் கூம்பு போன்ற அமைப்பு நெடுந்தொலைவிலிருந்து பார்ப்பவருககும் தெரிகிறது. அந் நிலப்பகுதி முழுவதையும் இக் கோட்டை ஆக்கிரமித்துக் கொண்டுள்ளது.

தௌலதாபாதின வரலாறு ஏறக்குறைய கி.பி.12-ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்குகிறது. அபபோது தக்காணத்தில் ஆட்சித் தலைநகராகத் தேவகிரி என்ற பெயரில் இது விளங்கி வந்தது தேவகிரி என்பது கடவுள்களின குன்று எனப் பொருளபடும. தேவகிரி முக்கியத்துவம் வாய்நத ஒரு மலை அரணாக விளங்கியது. இருப்பினும் இது இசுலாமியர்களின் தொடர் தாக்குதல்களுக்கு உட்பட்டு கி.பி. 1308-ஆம் ஆண்டில் தில்லிச் சுல்தான்களினால் கைப்பற்றப்பட்டது. 30 ஆண்டுகளுக்கு பின்பு இது இநதியாவின தலைநகரமாக இருக்கும் வாய்ப்பைச் சிறிது காலம் பெற்றது. முகமதுபினதுக்ளக்கு. தில்லியில் சுல்தானாக ஆனவுடன் தன் தலைநகரைத் தேவகிரிக்கு மாறறினான தேவகிரிக்கு 'நல்வாய்ப்பின் நகரம்' (City of Fortune), எனற பொருளைத் தரும் 'தௌலதாபாது' என்ற புதிய பெயரை இட்டான். அவன தன் தலைநகரை மட்டும் மாற்றவில்லை. அத்துடன் தில்லியிலிருந்த ஆண், பெண, பணக்காரன், ஏழை, மிருகங்கள உள்ளிட்ட அனைவரையும் தேவகிரிக்கு மாற உத்தரவிட்டான். இதிலிருந்து வயோதிகர்கள், நோயவாய்ப் பட்டவர்கள மேலும் இயலாதவர்கள கூடத் தப்ப முடியவில்லை. அவர்கள் அனைவரும் 1120 கி.மீ. தொலைவு நீணட பயணம் செய்து தேவகிரியை அடைந்தார்கள். அவர்கள் அப்போது சொல்லொணாத் துயரங்களையும் கடினங்களையும் அனுபவித்து வந்தனர். அதனால் ஆயிரககணக்கான மக்கள் மாண்டு போயினா. இவவாறு அவர்கள் பட்ட துயரெல்லாம் வீணாகிப் போயிற்று. ஏனெனில் சுல்தான் தனது தலைநகரை மாற்றிய முடிவிற்காக வருந்தி இடம் பெயர்நத மக்கள அனைவரையும் மீணடும் தில்லிக்குச் செல்லுமாறு உத்தரவிட்டான்.

இருந்தபோதிலும் இவ்வாறு கைவிடப்பட்ட தௌலதாபாது தில்லிக்கு இணையாகப் பெரிய நகரமாக வளர்ந்தது அகழிகளால் சூழப்பட்டு, வழு வழுப்பான, செங்குத்தான குன்றின் உச்சியில் அமைந்துள்ள இக்கோட்டையை எதிரிகளால் நெருங்க முடியவில்லை. பழைய கோட்டை விரிவாக்கப்பட்டுப் பீரங்கிகளைத் தாங்கிய கொத்தளங்களுடன் புதுப்பிக்கப்பட்டது. கொத்தளங்களையுடைய பெரிய மதிற்சுவர்கள் எதிரிகளைத் தடுத்து நிறுத்தின. கோட்டையின் புறமதிற் சுவர் ஏறத்தாழ 5. கி.மீ. நீளம் உடையது அதன் உள்ளே பல உட்சுவர்கள் உள்ளன. அவற்றிடையே காணப்படும் இரும்புக் கதவுகளில் யானைப் படையின் தாக்குதலைத் தடுக்கும் வகையில் ஈட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன. கோட்டையின் முதல் நுழைவுவாயில், ஒரு பெரிய மேலநிலை நீர்த்தொட்டிக்கும் அதனை அடுத்துள்ள ஒரு புராதன இந்து கோயிலுக்கும் இட்டுச் செல்கிறது. அக் கோயிலின் கூரையை 150 தூண்கள் தாங்கி நிற்கின்றன. இவற்றிற்கு வலப்புறத்தில் சண்டுமினார் (Chandminar) என்ற வெற்றிச்சின்னம் உள்ளது. தௌலதாபாதைத் தான் வெற்றி கொண்டதற்கு அடையாளமாக ஓர் அரசனால் அது நிறுவப்பட்டுள்ளது. அந்த நெடிய மினாரின் நடுவே அலங்கார வளைவுகளைக் கொண்ட பலகணி உள்ளது கோட்டையில் ஒரு நீர்த்தேக்கம் (Reservoir) அமைந்துள்ளது. இது சுனைகளிலிருந்து வரும் நீரால் நிரப்பப்பட்டது முற்றுகைக் காலங்களில் இதன் பயன் மிக்க முக்கியத்துவமுடையதாக இருக்கும். கோட்டை முழுவதும் வலிமைப் படுத்தப்பட்ட பல மேடைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. தக்க இடங்களில் பீரங்கிகள் அமைக்கப்பட்டிருந்ததால் எதிரிகளைச் சுடுவதற்கு வசதியாக இருந்தது. இங்கு வந்து செல்லும் ஐரோப்பியப் பயணிகள் இக்கோட்டையினைப் பெரிதும் பாராட்டிச் செல்கிறார்கள். இக்கோட்டையின் கட்டடக்கலை மத்தியகால ஐரோப்பியரின் கோட்டைகளை ஒத்திருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

எம்.க.

தௌலி ஒரிசா மாநிலத்தில் புவனேசுவரத்திற்கு மிக அருகில் உள்ளதோரூர். இங்கு மௌரியப் பேரரசர் அசோகரின் பாறைக் கல்வெட்டுச் சாசனம் உள்ளது.


யானைச்சிற்பம்

இக்கல்வெட்டுச் சாசனம் உள்ள இடத்திற்கு அருகில் இயற்கையான பாறையில் யானையின் புடைப்புச் சிற்பம் ஒன்று குடையப்பட்டுள்ளது. இவ்யானைச் சிற்பத்தின் காலம் கி.மு.3-ஆம் நூற்றாண்டு ஆகும். இச்சிற்பம் மிக நேர்த்தியான முறையில் பெரிய அளவில் குடையப்பட்டுள்ளது. புத்தர் தமது தாயின் வயிற்றில் யானையாகப் பிறந்தமையைக் குறிப்பிடும் வகையில் இது அமைக்கப்பட்டுள்ளது. கசதமா (Gajatama) எனக் கூறப்படும் இச்சிற்பம் புத்தரின் ஞான அறிவு புலப்படுமாறு செதுக்கப்பட்டுள்ளது மௌரியர் காலச் சிற்பிகளின் கைவண்ணத் திறன் தௌலிச் சிற்பங்களில் மிளிர்கின்றது. தௌலியில் உள்ள அசோகரின் பாறைக் கற்றூண் சாசனம் கி.மு.257-ஆம் ஆண்டைச் சார்ந்ததாகும். சு.இரா.

ந நெடுங் கணக்கில் மெய் எழுத்துகளில எட்டாவதாக வரும் இவவெழுத்து நுனிநா மேல் அண்ணத்தில் பல்லை ஒட்டிய நிலையில் மூககொலியாக வெளிப்படும் ஒலியைக் குறிககும்.

**வடிவம்:** முதன்முதலில மேலிருந்து கீழ் நோக்கி வரும் நேர்கோடு அடிககோட்டின் நடுவைத் தொட்டு நிற்பதே இதன பழைய வடிவம் இந்தியா முழுவதும் கணட பழைய கல்வெட்டுக்களில் முதலில காணப்படும் வடிவம் இது. தமிழ்-நாட்டில் தென பாணடி நாட்டில மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் உள்ள குகைக் கல்வெட்டுகளிலும் இவ்வுருவமே காணப்படுகிறது. கி.மு. 3-ஆம் நூற றாண்டில் இந்த உருவம் தோன்றுகிறது. . ... ...

கி பி. 5–ஆம் நூற்றாண்டில் செஙகம் நடுகற்களில் காணப்படுவதைப் போல இநத உருவத்தில் அடிக்கோட்டின் இடப்புறம் உள்ள பகுதி மறைந்து ஒரே கையாக எடுக்காமல் எழுதும் முறையால் மாறிற்று இது தமிழுக்கும் வட்டெழுத்துக்கும் பொதுவான வடிவம். . . .

கி.பி. 6–ஆம நூற்றாணடில் பல்லவ மகேநதிரவாமனின வலலம் கல்வெட்டில் காணப்படும் உருவத்தில் அடிக்கோட்டின் வலப்பகுதி வளைவாக மாறிற்று. தலைக் கட்டுத் தோன்றலாயிற்று. .. ... .

கி.பி.8–ஆம் நூற்றாண்டில் பலலவ நந்திவர்மன், தநதிவர்மன் கலவெட்டுகளில் தலைககட்டு இடப் புறம் நீணடு வளரத் தொடங்கியது. இநத உருவம் சிறிது சிறிதாக மாறி 11, 12, 13-ஆம் நூற்றாண்டுகளில் கீழ்நோக்கிய கோடு தோனறலாயிற்று,

கி.பி.14-ஆம் நூற்றாண்டில் இடப்புறக் கோடு நீண்டு முழு உருவம் அடைந்தது.

கி பி.16–ஆம் நூறறாணடில் இனறு காணப்படுவதைப் போல் வலப்புறம் அடியில உளள வளைவுக்கோடு இடபபுறமாக நீணடு இறங்கிற்று. .. . . .

வட்டெழுத்தில் கி பி.6-ஆம் நூற்றாணடில் மேலிருந்து கீழ வரும் நேர்கோடு வளையத் தொடஙகிற்று. அடிக்கோடு தமிழ் எழுத்தில் காணப்படுவதைப் போல வளையவில்லை. .

கி.பி. 9–ஆம் நூற்றாண்டில இந்த உருவம் முழுதும் வளைந்த நிலையை அடைந்தது. பிற்காலத்தில் எந்த மாறுதலும் இல்லை.. . .

கே.ஜி.கி.

***நக்கண்ணையார்:*** சங்க இலக்கிய பெண பாற் புலவர்களுள நக்கணணையாரும் ஒருவர். இவர் பெருங்கோழி நாய்கன மகள் நககணணையார் எனறே குறிக்கப்பட்டுளளார் பெருங்கோழி என்ற ஊரப்பெயரினைப் புதுககோட்டை மாவட்டம் பெங்களூர்ச் சிவன் கோவில் கல்வெட்டால் அறிய

முடிகிறது. இக்கல்வெட்டு இவ்வூரைத் 'தென்பனங்காட்டு நாட்டுப் பெருங்கோழியூர்' என்று குறிப்பிடுகிறது. நக்கண்ணையார் ஊரும், ஆமூர் மல்லனைச்சோழ இளவரசன் வென்ற இடமும் இதுவாக இருக்கலாம். கோழியூராகிய உறையூருக்கு அண்மையிலும் சோழ நாட்டின தென் எல்லையை ஒட்டியும் இவ்வூர் அமைந்திருப்பது இக்கருத்துக்கு அரண் சேர்க்கும். நாய்கன் என்பதைச் சிலப்பதிகாரத்தில் 'மாநாய்கன்' என்று வருவது போல உயர்குடி வணிகரைச் சுட்டும் பெயராகக் கொள்ளலாம். நக்கண்ணை என்னும் பெயர் வழக்கு சுலோசனை என்று வடமொழியிலும் வழங்கக் காணலாம். இவர் பாடியனவாகச் சங்க இலக்கியத்தில் ஆறு பாடல்கள் உள்ளன. இப் பெண்பாற் புலவர், சோழ மன்னன் தித்தனின் மகனான போர்வைக் கோப்பெருநற்கிள்ளி மீது அவனறியாது தான் மட்டும் கொண்ட ஒருதலைக்காம(கைக்கிளை) நிலையினை இவரது புறப்பாடல்கள் (புறம்.83,84,85) மூன்றும் விளக்குகின்றன. இப்பெண்பாற் புலவர் இம்மன்னனை ஒரு பாடலில் 'என் தலைவன்'(என்ஐ) என்றே குறிக்கிறார். ஆமூர் மல்லனை மற்போரில் வென்ற இக்கிள்ளியைக் காதலித்து, அடைய விரும்பி இயலாத நிலையில் தன்மேனி பசலை பூத்ததையும், தன் காமத்துயரம் பொறாது ஊரைப் பழித்த நிலையினையும் இரண்டு பாடல்கள் விளக்கிக் காட்டுகின்றன. மூன்றாம் பாடல் ஆமூர் மல்லனை வென்ற போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் வெற்றிச் சிறப்பை நேரிற்கண்டு நக்கண்ணையார் எடுத்து மொழிவதாக அமைந்துள்ளது.

நற்றிணையில் இடம்பெற்ற இவரது இரண்டு பாடல்கள் (நற். 19, 87) நெய்தல்திணைப் பாடல்கள், தலைவி தன்னிலைக்குத் தானே இரங்கி அவலமுறுவதாக அமைந்துள்ளன. அவற்றுள்ளும் ஒரு பாடலில் சோழ மன்னன் அழிசியினது ஆர்க்காட்டைச் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

குறிஞ்சித்திணையிலமைந்த இவரது அகநானூற்றுப் பாடல் (அகம் 252) 'சிறுகோட்டுப் பெரும்பழம்' எனத்தலைவியின் அளவிறந்த காம உணர்வைச் சுட்டி நிற்பதைக் காணமுடிகிறது. இவருடைய அகப் பாடல்களையும் புறப்பாடல்களையும் ஒத்திட்டு நுனித்து நோக்குகின்றபோது புறப்பாடல்களில் வெளிப்பட்டுத் தோன்றும் இவரது ஒருதலைக் காமமே இவருடைய அகப்பாடல்களுக்கும் பொருளாகியிருக்குமோ என எண்ணத் தோன்றுகிறது. புறப் பாடல்களில் காமம் பாடிய பெண்பாற் புலவர் இவர் ஒருவரே. ச.செ.

**நக்கவாரம்**: முதலாம் இராசேந்திரன், கடற்படை கொண்டு சென்று கடாரம் முதலிய கடல் கடந்த நாடுகளை வென்ற செய்திகளை அவனுடைய கல்வெட்டுகளிலமைந்த மெய்க்கீர்த்திப் பகுதிகள் கூறுகின்றன. அவ்வாறு அம்மன்னன் கடல்கடந்து சென்று போர்புரிந்து வென்ற பகுதிகளில் ஒன்று நக்கவாரம். இதனை, அம்மன்னனின் மெய்க்கீர்த்தி, 'தேனக்கவார்பொழில் மாநக்கவாரம்' என்று குறிப்பிடுகிறது. அப்பகுதி நிக்கோபார்த் தீவுகள் என்று இக்காலத்தில் வழங்கப் படுவதாகும் என்று ஆய்வாளர்கள் காட்டியுள்ளனர். காண்க: நிக்கோபார்த் தீவுகள். அ.மா.ப.

**நக்கீரர் (1) (பாட்டு தொகைகளில் இடம் பெறுபவர்)**: நக்கீரர் என்னும் பெயருடையார் தமிழ் நூற்பரப்பில் பலர் விளங்குகின்றனர். அவருள் முன்னவர் பத்துப் பாட்டு எட்டுத் தொகைகளில் இடம் பெற்றுள்ள நக்கீரர் ஆவர்.

நக்கீரர் மதுரை நக்கீரர் எனவும், கணக்காயனார் மகனார் நக்கீரனார் எனவும் கூறப்படுகின்றார். கீரர் என்னும் பெயருடையவர் பலர் இருத்தலால் அவரின் விலக்குதற்கும் இவரின் சிறப்புணர்த்துதற்கும் 'நல்' என்னும் சிறப்புப் பொருளுணர்த்தும் 'ந' என்னும் எழுத்தை முன்வைத்துக் கூறினர்.

பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படையும், நெடுநல்வாடையும் பாடியவர் இந்நக்கீரர். ஏனைய நூல்களில் இவர்பாடியன நற்றிணையில் ஏழு பாடல்களும், குறுந்தொகையில் எட்டுப் பாடல்களும், அகநானூற்றில் பதினேழு பாடல்களும், புறநானூற்றில் மூன்று பாடல்களும் ஆகும். இவற்றால் நக்கீரர் மதுரையினர்; இவர் தந்தையார் கணக்காயனார்; இவர் மகனார் கீரங்கொற்றனார் என்பன புலனாகின்றன.

இவர் பாடிய புறப்பாடல்களில் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய பாண்டியன் நன்மாறனையும், சோழநாட்டுப் பிடவூர் கிழான்மகன் பெருஞ்சாத்தனையும் பாடியுள்ளார். பெருஞ்சாத்தன் 'போன போன் மடந்தையைக் காட்டி இவனை, எனப்போற்றுப் போற்று' என்ற அருமையை நினைந்து உருகுகின்றார் (395). நாட்டு வேந்தனுக்கும் காட்டு மாந்தனுக்கும் 'உண்பது நாழி உடுப்பவை இரண்டே, பிறவும் எல்லாம் ஓரொக்குமமே' என்று பொருண்மொழிக் காஞ்சித் துறையில் கூறி அனைவரும் சமம் என்பதை உணர்த்துகின்றார் (185).

இவர் பாடும் அகப்பாடல்களில் சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தர்களையோ சிற்றரசர்களையோ குறித்த வரலாற்றுச் செய்திகளை ஆங்காங்குக் குறிப்பிடுதலால் இவர் பாடல்களின் வழியே அறியவரும் பெருமக்களும் புலவர்களும் பலராவர். அவ்வாறே ஊர்ப்பெயர்களும் பலவாகும்.

பாணடியன் தலையாலங்கானத்துச செருவெனற நெடுஞ்செழியன், கிள்ளி வளவன், அன்னி, திதியன, கழுவுள், எருமை, குட்டுவன் சேரல், திரையன், பழையன்மாறன, அருமன் முதலியோர் இவரால் பாடப்பட்டுள்ளனர். இவர் தூங்கல் ஓரியார், கபிலர் ஆகிய புலவர்களைப் புகழ்ந்து பாடியிருக் கிறார். காவிரிப்பூம்பட்டினம், மருங்கூர்ப் பட்டினம, தொணடி, மதுரை, ஊணூர், பவத்திரி, சிறுகுடி ஆகிய ஊாகள இவா பாடலகளில குறிக்கப் பட்டுளளன.

பாரியின பறம்பு மலையை மூவேந்தரும முற்றுகை யிட்டிருநத போது கபிலர் கட்டளையால கிளிகள தினைக்கதிா கொய்துகொண்டுவரக கோட்டைக்குள இருந்தோர் உணடு வாழநத செய்தியை இவர் கூறுவதும் (அகம் 78), கார்த்திகை மாதததுக் கார்த்திகையில புதுமண மகளைப் பககமுயர்ந்த பெரிய அடுப்பில் பால்காயச்சச செய்வதும், கார்கால நெல்லைப் பதனுடன் இடித்துப் பொரித்துப் படைப் பதும், வீடுகளிலும் தெருக்களிலும் விளககேற்றி வைத்து வழிபடுவதுமாகிய செயதிகளை (அகம். 141) இவர் பாடலகள கூறுகின்றன.

**நக்கீரர்**[2] – **(களவியலுரையாசிரியர்)**: களவியல் எனப்படும் இறையனார் அகப்பொருளுககு உரை கண்டவர் நக்கீரனார் எனப்படுகின்றார். இவர் சங்க கால நக்கீரனாராக இருததல இயலாது. இவருக்குச சில நூற்றாணடுகளுக்குப் பின்னாத தோன்றிய இந்நூலுக்கு இவா உரை எழுதியிருத்தல் இயலாது. இவா வழியில வநதவரோ பிறிதொருவரோ நகசீர னார் எனனும் பெயருடையவராய இருநது உரை யெழுதியிருத்தல் வேணடும் என்பர். பாணடிக் கோவையைப் பாட்டுடைத் தலைவனாகக் கொணட பாணடியன காலம் கி.பி 640-670 எனப்படுவதாலும், அக்கோவைப் பாடல்கள களவியலில் மேற்கோளாக ஆளப்பட்டிருத்தலாலும் இவவுரையாளர் காலம் அக்காலத்திறகுப பிறபட்டதேயாம

களவியறகு அமைநத உரைகளுள சிறநத ஒனறைத் தேர்ந் தெடுப்பதற்காக இறைவனால அருளப்பட்ட உருத்திரசன்மன், 'கணக்காயனார் மகனார் நக்கீரனார், உரைத்த இடததுப் பதந் தொறும் கணணீர் வார்ந்து மெயம்மயிா சிலிாப்ப இருந்தான். இருப்ப ஆர்ப்பெடுதது 'மெயயுரை பெற்றாம் இந்நூற்கு' எனறார்' என வருவதும், 'மதுரை ஆலவாயிற் பெருமானடிகளாற் செய்யப் பட்ட நூற்கு நக்கீரனாரால் உரை கணடு குமார சுவாமியால கேட்கப்பட்டது என்க', எனவருவதும், 'தூணடில் வேட்டுவன வாஙக வாராது என்று சான றோர் சொல்லியது எனபது' எனவருவதும் இவா சங்க காலத்தவர் அல்லாத பிறிதொருவா என்பதை விளக்கும். களவியல் உரை தனி இலக்கியம எனறு கொள்ளத்தகக அவவளவு நயமிக்கது; உரைநடை உலகில் முதனமையானதும இணையற்றதும் ஆகும; பல இடங்களில் பாடலென நடையிடுகினறது.

ஒரு நூலுக்குப்பாயிரம் இன்றியமையாதது என் பதை, 'கருவமைந்த மாநகர்கு உருவமைநத வாயில மாடம் போலவும் அளபபரிய ஆகாயத்திறகு விளக்க மாகிய திஙகளும் ஞாயிறும் போலவும் தகைமாணட நெடுஞசுவர்க்கு வகைமாணட பாவை போலவும்' (1) என உவமைகளையடுககிச் செய்யுள நடையிற் செல் கினறது. 'காா மருஙகின மின்னுப போலவும், நீர் மருஙகிற் கொடிபோலவும தளிரும முறியும் ததைநது குளிரும் நளிரும் கவினி எழா நினறதொரு கவின பெறு கொடிப்போலும காரிகை. 'கணணாடி மணடி லத்து ஊது ஆவிபோலககாண ஒளிமழுங்கிக் கனலமுள இட்டமெழுகுப் பாவைபோல மனம் உருகிப்பசந்து காட்டினாள'(2)என இவவுரை வருணனை நயத்துடன் இயலகின்றது.

களவு உலகியலில் குறறமுடையதாகக் கொள்ளப் படுவது. ஆயினும இக்களவியலில கூறபபடும கள வொழுக்கம் உயர்ந்ததாகுமோ? எனனும வினாவை எழுப்பிக் கொணடு, உலகியல் நிகழ்ச்சி ஒன்றைக குறிக்கிறார் களவியல் உரைகாரர். ஒரு பெண தன் குடும்பத்தில் சணடையிட்டு மனநொநது 'நஞ்சுணடு சாவேன' எனத் திட்டப்படுத்திக்கொண்டு எவரும் வீட்டில இலலாதபொழுதினை எதிர்பார்த்திருக்க, அவள எணணத்தைக் குறிபபால அறிநது கொண்ட ஒருவன், அவள அறியாமல் அநநஞ்சை எடுத்துக் கொணடு போயக் கொட்டினான். அவள உரிய வேளையில் நஞசைத்தேட அது கிட்டாமையால் சாவு தவிர்நதாள. இக்களவின விளைவு நனமையா யது போலவே இக்காதல களவும நனமை பயககும என விளக்குகினறார்.

நக்கீரனாா தொடஙகி உரை நடநதுவந்த முறையையும் இவ்வுரை உரைககிறது:

'மதுரைக் கணக்காயனாா மகனார் நக்கீரனார் கீரங கொறறனார்க்கு உரைததாா, அவர் தேனூர் கிழார்க்கு உரைத்தார்; அவா படியஙகொற்ற னார்க்கு உரைத்தார்; அவர் செலவததாசிரியர் பெருஞ்சுவனார்க்கு உரைததார்; அவர் மணலூராசி ரியா புளிஙகாய்ப் பெருஞ்சேந்தனார்க்குஉரைததார்; அளர் செலலூராசிரியா ஆண்டைப் பெருஙகுமர னார்க்கு உரைத்தார்; அவர் திருககுனறத் தாசிரி யர்க்கு உரைத்தாா; அவர் மாதளவனார் இளநாக னார்க்கு உரைத்தார். அவாமுசிறியாசிரியர் நீலகண னார்க்கு உரைத்தாா. இங்ஙனம் வருகினறது உரை' எனகிறது

**நக்கீரர்[3] (இலக்கண நூலாசிரியர்):** 'நககீரர் அடிநூல்' என்றொரு நூலும், நக்கீரர் நாலடி நானூறு என்றொரு நூலும் நககீரா பெயரால் அறியப்படு கின்றன. அவற்றை இயற்றிய நககீரர் முன்னே குறிக்கப்பட்ட நககீரர்களின் வேறொருவராவர்.

நக்கீரர் அடிநூலைப் பற்றிய செய்தி யாப்பருங் கலவிருத்தி உரையில் வருகின்றது. வெணபாவில் ஐஞ் சீரடி வாராது என்று கூறும் யாப்பருங்கல விருத்தி யுரை (செய்யுளியல் 40), 'ஐஞ்சீர் வெள்ளையுட் புகாமை எவற்றாற் பெறுதும் எனின, 'ஐஞ்சீர் அடுக் கலும் மண்டிலம் ஆக்கலும், வெண்பா யாப்பிறகுரிய வல்ல' என்று நககீரனார் அடிநூலுள் எடுததோதப் பட்டமையாற் பெறுதும் என்கிறார்.

ஐஞ்சீரடி வெண்பாவிற் புகாது என்றமையால, அவ்வைஞ்சீரடி அகவற்பாவிலும் கலிப்பாவிலும்வரும் என்று ஏற்றுக் கொண்டார் என்றும், தொல்காப்பிய யாக்கும் அது உடன்பாடே என்றும் யாப்பருங்கல விருத்தியுரைகூறுகின்றது: 'தொல்காப்பியனார்நக்கீர னார் முதலாகவுள்ளார் ஒரு சாராசிரியர் 'ஆசிரியத் துள்ளும் கலியுள்ளும் ஐஞ்சீரடியும் அருகிவரப் பெறு மென்று காட்டுவாராகலின்' என்று கூறி 'ஐஞ்சீரடுக்க லும்' என்னும் நூறபாவையே எடுத்துக்காட்டுகிறார். மேலும், நக்கீரர் அடிநூலுள வெண்பாயாப்பிற்குரிய வல்ல என்றமையால் ஆசிரியத்துக்கும் கலிக்கும் ஐஞ்சீ ரடி புகுதலும் மண்டல மாக்கலும் உரியவென்று விரித் துரைத்தார் எனக் கொளக' எனறும் எழுதுகிறார்.

'நக்கீரர் நாலடி நானூறு' என்னும் நூலும் யாப் பருங்கல விருத்தி உரையால் அறியப்படுவதேயாகும். வண்ணஙகளுள ஒன்று தூங்கல் வண்ணம், 'தூங்கல வணணம் வஞ்சிபயிலும்' எனபது இதன் இலக்கணம் (தொல். செப். 228). இதற்கு யாப்பருங்கலவிருத்தி சில வெணபாக்களை எடுத்துக் காட்டுகின்றது. பின னர், 'இன்னவை பிறவும் நக்கீரர் நாலடி நானூற்றில வணணத்தால் வருவனவும எல்லாம் தூங்கிசைச் செப்பலோசை' என்கிறது. இதனால் நக்கீரர் நாலடி நானூறு, தூஙகிசைச் செப்பலோசையால் அமைந்த நானூறு வெண்பாக்களையுடையது என அறியலாம்.

இவ்விரணடு நூல்களும் யாப்பிலககணம் கூறு வன எனறும், இவற்றை யாப்பருங்கல விருத்தியுடை யார் மேற்கோள் காட்டி எழுதலால அவர் காலமா கிய கி.பி.10–ஆம் நூற்றாண்டிற்கு இந நக்கீரர் முற் பட்டவர் என்றும் கொள்ளலாம. வேறு வகையால் இந்நூலைப் பற்றி அறியப்படாமையால இம முடிவைக் கொள்ள நேர்கினறது.

**நக்கீரர்[4] (பதினோராந்திருமுறையில் உள்ள நூல்களைப் பாடியவர்)** பதினோராந் திருமுறையில திருமுகப் பாசுரம் முதலாகத் திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை இறுதியாக நாற்பது நூல்கள இடம் பெற்றுள்ளன. இவற்றுள் 1) கயிலை பாதி காளத்திபாதி அந்தாதி, 2) திரு ஈங்கோய்மலை எழுபது, 3) திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, 4) திரு எழு கூற்றிருக்கை, 5) பெருந்தேவபாணி, 6) கோபப் பிரசாதம், 7) கார் எட்டு, 8) போற்றித் திருக்கலி வெணபா, 9) திருமுருகாற்றுப்படை, 10) திருக் கண்ணப்ப தேவர் திருமறம் என்னும் பத்து நூல்கள் நக்கீர தேவநாயனார் என்னும் பெயரால் உள்ளன. திருமுருகாற்றுப்படை ஒன்று நீங்கிய ஒன்பதும் இந் நக்கீர தேவநாயனார் பாடியனவேயாகும். முன்னே குறிப்பிட்ட நக்கீரர் மூவருள எவரும் நக்கீர தேவ நாயனார் என்னும் பெயர் பெற்றனர் அல்லர். இவர் காலம் கி பி. 10-ஆம் நூற்றாணடு என்பர்.

இறைவன் பாடலில் குற்றம் கூறிய நக்கீரர், இறைவன் நெற்றிவிழி நெருப்புக்கு ஆற்றாமல் பொற் றாமரைக் குளத்துள் வீழ்ந்தார். சங்கப் புலவர்கள் இறைவனை வேணடினர். இறைவன் அம்மையுடன் காட்சி வழஙகினான். அப்பொழுது நக்கீரர் 'கயிலை பாதி காளததி பாதி' என்னும் நூலைப் பாடினார். கயிலையைப் பற்றி ஒரு வெண்பாவும், காளத்தியைப் பற்றி அடுத்த வெண்பாவுமாக நூறு பாடல்களை அநதாதியாகப் பாடினமையால் இந்நூல் இப்பெயர் பெற்றது. இறைவன் நக்கீரர் பாடலைக் கேட்டு மகிழ்ந்து அவர் கையைப் பற்றிக் கரை சேர்த்தார். அப்பொழுது நக்கீரர் கோபப் பிரசாதம், பெருந் தேவபாணி, திருவெழு கூற்றிருக்கை என்பவற்றைப் பாடினார் என்று திருவிளையாடற் புராணம் கூறு கிறது.

இவற்றுள கோபப் பிரசாதம என்பது அருள புரிதலும் தண்டித்தலும் ஆகியவை மாறி மாறி வரப் பாடியது. தீமை செய்தாரை மறக்கருணையால் தணடித்தலும், நனமை செய்தாரை அறக்கருணை யால் அருள் செய்தலும் இதில் எடுத்துரைக்கப்பட் டுள்ளன. இது 100 அடிகளால் அமைந்த ஓர் இணைக் குறள் ஆசிரியப்பா ஆகும். பெருந்தேவபாணி இறை வனை முன்னிலைப் படுத்திப் பாடிய பாட்டாகும. இது 67 அடிகளையுடையது. இறுதியில ஒரு வெண் பாவும் உளளது. எழு கூற்றிருக்கை என்பது எண் அழகுப் பாட்டு. 1; 1–2–1; 1-2-3-2-1; என்னும் வரி சையில் ஒனறு முதல் ஏழுவரை ஏறியும் இறங்கியும் வரப்பாடும் பாட்டு. 55 அடிகளையுடைய இப்பாட லுடன் ஒரு வெண்பாவும் உண்டு.

குளித்தலைக்கு அணமையில் இருப்பது ஈங்கோய் மலை. அது பாடுபுகழ் பெற்றது. அதனைப் பற்றிய 70 வெணபாக்களையுடைய நூல் திரு ஈங்கோய்

மலை எழுபது. அகர முதலாக முதனிலை வரிசை பெற்றுவரும் இப்பாடல்களுள சில மாறிக் கிடக்கின்றன.

சுவாமி மலைக்கு அருகில் உள்ள திருக்கோயில் திருவலஞ்சுழி அதனை முறையே அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறைப் பாக்கள 15 அந்தாதி அமைப்பில் வருமாறு பாடிய நூல் திருவலஞ்சுழி மும்மணிக கோவையாகும். மும்மணிக்கோவை பெரும்பாலும் 30 பாடலகளைக்கொண்டிருக்கும். இவ்வாறு குறைந்தும் வருமெனபது திருக்கழுமல மும்மணிக்கோவையாலும் தெரிய வருகின்றது. அதன பாடல்கள 12.

இறைவன சடை, கணடம் முதலியவறறைக் கார் முகிலுடன் ஒப்பிட்டுப் பாடப்பட்ட எட்டு வெணபாக்களையுடையது கார் எட்டு என்னும் நூல். கலிவெணபாவினால இறைவனைப் போறறிப் பாடியது போற்றிக்கலிவெண்பா. அது 45 கணணிகளை யுடையது.

திருக்கணணப்ப தேவா திருமறம் எனபது கண்ணப்பர் வரலாறறைக கூறுவது. 158 அடிகளை யுடைய ஓரகவற்பாவும், ஒரு வெணபாவும கொண்டது. குயககொணடான் எனபான 'ஆரியம நன்று தமிழ் தீது' என்று கூற அவனை இறககப் பாடியும பினனர் உயிர்த்தெழப் பாடியும் உய்யக் கொண்டார் என்று சொல்லப்படும் நக்கீரர், இந்நக்கீரர் நாலவருள முன்னவர் நீஙகிய ஒருவரோ வேறு ஒருவரோ தெளிவாக அறியக் கூடவில்லை. சில தனிப்பாடல்களும நக்கீரர் பெயரால் வழங்குகினறன.

திருப்பரஙகுனறத் திருக்கோயிலில் நக்கீரர் திருவுருவம் உளளது. மதுரை மேலைமாசி வீதியில நக்கீரர் கோயில் ஒனறுள்ளது திருக்காளத்தியில் இறைவர் நக்கீரநாதர் அல்லது நககீரலிஙகம என னும் பெயருடன எழுநதருளியிருப்பது அறியவருகின்றது (புறநானூறு: பாடினோர் வரலாறு. உ.வே.சா.). இரா.இ.

**நகர அரசுகள்**: நகர அரசுகளின் தோற்றமும் வளர்சசியும் உலக வரலாற்றில குறிப்பிடததக்கதொரு செயதியாகும். இவற்றின் வளர்ச்சிக்கு முதன முதலில் உழைத்தவர்கள கிரேககர்களும் உரோமானியர்களும் ஆவார்கள். அவாகளால அமைககப் பட்ட நகர அரசுகளுள சில ஒரு பெரிய பேரரசுக்கு நடுநாயகமாக விளஙகின.

தொடக்கத்தில மககள தனித்தனிக் குலஙகளாகப் பிரிந்தே வாழ்ந்து வந்தனர். நாளடைவில ஒவ்வொரு குலமும தன கிளைகளோடு ஒனறாகச் சேர்ந்து ஒரு சிற்றூரை அமைத்துக் கொண்டது. பொதுவான அரசியல-சமுதாய-பொருளாதார அடிப்படையில் அமைந்த இச்சிற்றூர்ச் சமுதாயங்களே காலப் போக்கில் நகர அரசுகளாக மாறின.

நகர அரசுகள வேறுபட்ட குலஙகளைக் கொணட சிறறூர்களின் கூட்டுறவில் பிறந்தவை. இக் கூட்டுறவு பல காரணஙகளால ஏறபட்டது. வழிபாட்டிற்காக ஒனறு சேர்நத மக்கள் நாளடைவில அரசியல் நடைமுறைகளுககாக ஒருங்கிணைநதனர். வாணிகத்திற்காக அடிக்கடி சந்தித்த நிலையில் ஒறறுமையேற்பட்டு ஓர் அரசியல் சமுதாயத்தை உருவாக்கினர். தறகாப்பின காரணமாகவும் பல சிறறூர்கள் ஒன்று சேர்ந்தன அரசர்கள தஙகள வலிமையைப் பெருககிக் கொளவதறகாக மற்றச் சிற்றூர்களைத் தஙகள ஆட்சியில சேர்த்துக கொணடனர். மலைகளால் சூழப்பட்ட பள்ளத்தாக்குகளில ஏற்பட்ட சிற்றூர்கள இணைந்து நகர அரசுகளாக மாறின. பொதுவான வாழிடம என்ற காரணததால் ஏறபட்ட நாட்டுப் பற்றானது பல நகர அரசுகளின தோற்றத் திறகு அடிப்படையாய் மலர்ந்தது.

நகர அரசுகளின அரசியலமைப்பு பல மாறறங்களுக்கு உட்பட்டது. தொடக்கத்தில முடியாட்சி ஏற்பட்டிருநதது. கி.மு.8-ஆம நூறறாண்டின இடைக் காலத்தில முது மக்கள் அவையினா மனனரின் அதிகாரஙகளைப் பறிததுக் கொணடு உயர்குடிப் பெரு மக்களாட்சியை (Aristocracy) உருவாக்கினர். இத் தகைய ஆட்சி முறையில் தான நகர அரசுகளின் அமைப்பு, முழுமையான வளர்ச்சி பெறறுப்பின மக்களாட்சி நடைமுறைக்கு வழிவகுத்தது. கி.மு.7-ஆம் நூற்றாண்டில் தன்னலம் படைத்த செலவச் சிறுகுழு ஆட்சி அல்லது தனிப்பட்ட மனிதனது வரமபற்ற வல்லாட்சியாக (Tyrannys) இது மாறியது. அவர்கள காலத்தில் இலக்கியம கலை, சமயம ஆகிய துறைகள் மேம்பட்டு விளங்கின. மககள நாளடைவில் தனமனிச்சை ஆட்சியை ஒழித்து மக்களாட்சியை ஏறபடுத்தினர்.

கிரேககர நகர அரசுகளில்இசுபார்ட்டாவும் ஏதன்சும் முதனமையாகத் திகழநதன. இசுபார்ட்டா நகரத்தை மையமாகக் கொணட ஐந்து சிறறூர்கள ஒரு நகர அரசாக விளங்கின. இசுபார்ட்டாவில் பிரபுக்கள் (Spartia) வணிகர்கள (Perioeci), அடிமைகள (Helots) என்ற மூனறு பெரும பிரிவுகள் காணப் பட்டன.

இசுபார்ட்டா நகர அரசு வலுக்காட்டாய முறையில் அணடை நாடுகளைத் தன்னுடன் இணைத்துக் கொண்டது. அத்துடன பெலப்பொனீசியத் தீபகறபத்தின் பெரும் பகுதியைக் கைப்பற்றி இசுபார்ட்டாவின் தலைமையில் ஓா இணைக் கூட்டரசை அமைத்தது. அத்தீபகற்பகத்தில இருநத பல நகர அரசு

களும் அதன் தலைமையை ஏற்றுக்கொண்டன. ஆனால், பாரசீகப் படையெடுப்புக் காலத்தில் இசுபார்ட்டா ஏதென்சுக்கு உதவி செய்ய முன் வரவில்லை. ஏதென்சு தனியே நின்று போராடியது. மற்ற நகர அரசுகளுக்கும் உதவியது. அதனால், ஏதென்சின் பெருமையும் செலவாக்கும் உயர்ந்தன.

ஏதென்சு, அட்டிகாவின் பன்னிரண்டு சிற்றூர்கள் ஒன்றாக இணைந்து ஓர் ஒன்றியமாக (Synoceism) உருவான நகர அரசாகும். அட்டிகாவில் வாழ்ந்த மக்கள் தங்களை அத்தீனியர்கள் என்று குறிப்பிட்டுக் கொண்டனர். ஏதென்சு தன்னுடன் இணைந்த நிலப்பகுதியில் வாழ்ந்த மக்களுக்கெல்லாம் முழுமையான அரசியல் உரிமைகளை வழங்கி மக்களாட்சிக் கொள்கைக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது.

ஏதென்சில் முதன் முதலில் மன்னராட்சி நிலவியிருந்தது பின்னர்ப் பிரபுக்களாட்சி ஏற்பட்டது. ஏதென்சு கி.மு. 8-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வணிகப் பெருக்கம் காரணமாகச் செல்வச் சிறப்படைந்தது. அதனால், வணிகச் செல்வராட்சி ஏற்பட்டது. ஏதென்சின் பொருளாதாரச் சீர்கேட்டை நீக்கச் சோலன் என்பவர் அரிய முயற்சி மேற்கொண்டார். ஏழை மக்களின் இடையூறுகளை நீக்கி, நகரத்தின் ஆட்சித் திட்டத்தையும் சீர்படுத்தினார். பின்னர்ச் சோலனின் அரசியலமைப்பை ஒரு சிறிதும் மாற்றாமல் பைசிசுடிராடசு என்பார் அரசியலமைப்புக்கு உட்பட்ட சருவாதிகார (Constitutional Tyranny) ஆட்சியை ஏற்படுத்தினார்.

சோலனின் அரசியலமைப்பில் இருந்த ஒரு சில குறைபாடுகளைக் களைந்து மக்களாட்சியை ஏற்படுத்திய பெருமை கிளையசுதனிசையே சாரும். அவரை அடுத்து வந்த பெரீக்ளீசு என்பவர் காலத்தில் அத்தீனியப் பேரரசு உருவாகத் தொடங்கியது. அதீனியப் பேரரசு 250-க்கு மேற்பட்ட நகரங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கியது. ஒவ்வொரு நகரமும் தனது ஆட்சியைத் தானே நடத்தி வந்தது. தத்துவ ஞானிகளான சாக்ரட்டீசு, பிளாட்டோ, அரிசுடாட்டில் போன்ற அறிஞர்கள் ஏதென்சின் மேன்மைக்கு வித்திட்டனர். அத்தீனியப் பேரரசு கிரேக்கச் சுதந்திர வேட்கைக்கு ஊறு விளைவிப்பதாக இருந்தமையால், பல நகர அரசுகள் இசுபார்ட்டாவின் தலைமையில் அதனுடன் போரிட்டு அதனை அழித்தன. இரண்டாம் முறையாக ஏதென்சு பேரரசு அமைக்க முற்பட்ட போது, மாசிடோனியா அதனுடன் போரிட்டுவென்றது. அதன் பிறகு கிரீசில் நகர அரசுகள் மறைந்தன.

பண்டைய இத்தாலியில் உருவான நகர அரசுகளுள் முதன்மையானது உரோம நகர அரசாகும். உரோம் நகரத்தை முதலில் மன்னர்கள் ஆண்டனர். மக்கள் கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் குடியரசு முறையைக் கொண்டு வந்தனர். அரசர்களுக்குப் பதிலாக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரிகள் (Consuls) நகரை ஆளலாயினர்.

கி.மு.3-ஆம் நூற்றாண்டிற்குள் உரோமின் வலிமை மிகுந்தது. உரோமாபுரியின் ஆதிக்கம் வடக்கு இத்தாலியில் ஒரு பகுதி தவிர, இத்தாலியின் மற்றப் பாகங்களில் எல்லாம் பரவியது. கி.மு. 2-ஆம் நூற்றாண்டின் இடைக் காலத்தில் கார்த்தேசுடன் (Carthage) போர் ஏற்பட்டது. அதன் விளைவாக, இசுபெயினும், வடஆப்பிரிக்காவின் ஒரு பகுதியும் அதன் ஆளுகைக்கு உட்பட்டன. கிரீசு சிரியா, மேற்கு ஆசியா ஆகிய தென்கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் உரோம் ஆதிக்கம் பரவிற்று. அது கி.மு.2- ஆம் நூற்றாண்டின் முடிவில் அட்லாண்டிக்கு மாகடலிலிருந்து மேற்கு ஆசியா வரை பரவியிருந்தது. அதற்குப் பிறகு அதிகார வருக்கத்தினரின் செல்வாக்குக் குன்றத் தொடங்கியது. பெருங்குடி மக்கள் நாட்டு நலனை மறந்து, தந்நலமிக்கவராக வாழ்ந்தனர். அதனால் குடியரசு வீழ்ந்தது; முடியாட்சி ஏற்பட்டது. கி.பி.5- ஆம் நூற்றாண்டில் உரோமப் பேரரசும் அழிந்தது.

நகர அரசுகளுக்கும் இக்காலத்துத் தேசிய அரசுகளுக்கும் உள்ள வேறுபாடுகள் பல. உருவத்தில் நகர அரசுகள் மிகமிகச் சிறியவை. எனவே, அங்கு வாழ்ந்த குடிமக்கள் அனைவரும் அரசாங்க அலுவல்களில் பங்கெடுத்துக்கொள்ள முடிந்தது. ஆனால், இக்காலத்துத் தேசிய அரசு நகர அரசைவிடப் பன்மடங்கு பெரியது. எனவேதான் குடிமக்கள் தங்கள் பேராளர்களைத் தேர்ந்தெடுத்துச் சட்டமன்றங்களுக்கு அனுப்புகின்றனர். நகர அரசுகளில் வாழ்ந்த மக்கள் நாட்டுப்பற்று மிகுந்தவர்கள். நகர அரசுகளின் தலைநகர் என்ற அச்சினைச் சுற்றித்தான் அரசியல் வாழ்வு முழுதும் சுழலும். தலைநகர் ஒன்றுதான் நாட்டில் முதலிடம் பெற்றுத் திகழும். ஆனால், இக்காலத்தேசிய நாடுகளில் தலைநகர் என்பது முக்கியத்துவம் வாய்ந்ததன்று. இங்ஙனம் பல வகைகளில் இக்கால அரசுகளை விடச் சிறந்து விளங்கிய நகர அரசுகளில் ஒரு சில குறைகளும் இருந்தன. அளவில் சிறியனவாயிருந்ததால், அவை எளிதில் எதிரிகளின்வயப்பட்டுவிட்டன. மாசிடோனியா போன்ற பெரிய நாட்டுக்கு முன் நகர அரசுகள் தலை நிமிர்ந்து நிற்க இயலவில்லை. குறுகிய நாட்டுப்பற்றின் விளைவாக நகர அரசுகள் இடைவிடாது சண்டையிட்ட வண்ணமிருந்தன. கட்சிப் பூசல்களும் போட்டியும் பொறாமையும் வளர்ந்தன. அரசியலில் பங்கெடுத்துக் கொண்டவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாகவும் மற்றவர்

உரிமையற்ற அடிமைகளாகவும் இருந்ததால நகர அரசுகள சமுதாயக் கட்டுக்கோப்பற்று நாளடை வில் குலைந்து போயவிட்டன. மு.ந.

**துணை நூல:**

**Harold Mattingly,** Out lines of Ancient History, Cambridge University Press, 1914.

***நகர, ஊரகச் சுகாதாரம்:*** சமூகம் செழித்து, மேம்பட்டுச் சிக்கலின்றி இனபுறத்தக்க நிலைமையில் இருப்பதற்கு நனமுறையிலான வசதி யும் அழகும் அமைந்த நகரமோ கிராமமோ (ஊர கம்) இன்றியமையாதது. அதாவது நகரமாயினும் கிராமமாயினும் சுகாதாரமான சூழ்நிலையில் அமைந் திருத்தல் நலமாகும். நகரம, கிராமம் ஆகியவற்றின் அமைப்புத்திட்டங்களின் குறிக்கோளாக இது அமை தல் சாலச் சிறந்ததாகும். மனிதன் உடல்நலமுடன் வாழ அடிப்படைச் சுகாதாரப் பாதுகாப்பு இனறி யமையாதது. 1. முதலாவதாக அவன குடியிருககும் வீடு, பள்ளிக்கூடம், தொழிறசாலை மற்றும் பிற சுற் றுப்புறச் சூழ்நிலைகள் ஆகியவை தூய்மையாக இருகக வேணடும். 2) தூய குடிநீர் கிடைக்க வேண் டும். 4) உணவுப் பொருளகளைச சுகாதாரமாக வைத்திருத்தல் வேண்டும். 4) பூச்சி வகைகளை ஒழித்துச் சுகாதாரத்தைக் காப்பாற்ற வேணடும். இவ்வாறான சுகாதார அடிப்படையில் நகரத்தையும் கிராமத்தையும் அமைத்தலே நகர, ஊரகச சுகா தாரம (Urban Rural-Health) எனப்படும்.

**வீடு, பள்ளிக்கூடம், தொழிற் சாலை போன்றவற் றின் சுகாதாரம்:** மனிதன குடியிருக்கின்ற வீடும் அதைச் சுற்றியுள்ள இடங்களும பாதுகாப்பாகவும வீட்டில வாழபவாகளுக்கு வசதியாகவும், தொற்று நோயகளுககு இடந்தராதனவாகவும இருக்க வேண்டும். வீட்டை ஒதுக்குப புறங களிலோ, தண்ணீர் தேங்கும் இடஙகளிலோ, ஈயும் கொசுவும் சேரக்கூடிய நிலங்களிலோ கட்டக்கூடாது வீடு காற்றோட்டம உள்ளதாகவும், மிகுந்த சூடு இல்லாததாகவும், குளிா தாக்காததாகவும், ஒளி கண ணைப் பறிக்காததாகவும் குடியிருப்போருக்கு வேண் டிய இடவசதி உளளதாகவும இருத்தல் வேணடும்.

வீட்டின் தளம் தரைமட்டத்திலிருந்து உயாநத தாகவும், நீா ஊறாததாகவும, எளிதில் கழுவிவிடக் கூடியதாகவும், விரைவில உலர்நதுவிடக் கூடியதாக வும் இருத்தல் வேணடும. வீட்டின் சுவர்கள நீர் ஊறாதவையாக இருததல முக்கியமானதாகும்.

வீட்டில் தூய நீர் போதுமான அளவு கிடைப்ப தறகும் மனிதர்கள செயயும் அசுத்தங்களையும், பிற அசுததங்களையும அப்புறப் படுத்துவதற்கும் வேண டிய ஏற்பாடுகளைச செயய வேணடும. வீடு எவவித இன்னலுககும் இடம் தராததாக இருக்கவேணடும. தொறறு நோய உணடாக்கும் ஈ, கொசு, எலி போன றவை தஙகுதல கூடாது. கிராமஙகளில் வேளாண மைககு வேணடிய மாடுகளையும், ஏர் முதலிய பொருளகளையும் வீட்டினினறு தனியே பிரிதது வைபபதறகேறற வசதி செயய வேணடும.

பள்ளிக்கூடஙகள், மிகுந்த சுகாதாரமுடையதா யிருத்தல் இன்றியமையாதது. குழந்தைகளுக்கு உடலைச் சுகாதாரமான முறையில வைத்துக் கொள்வது பற்றிய அறிவைப் புகட்டவேண்டும. தனி மனிதனின் சுகாதாரததுக்கும் சமூகத்தினரின் சுகா தாரததிற்கும் உளள தொடர்பை அவர்களுக்கு விளக்க வேணடும.

தொழிழசாலைகளைத் தொழிலாளர்களுக்கு இனனல ஏறபடாதவாறும், வசதியாக வேலைசெய யத் தக்கவாறும் அமைகக வேணடும். இயநதிரங கள், நீராவிக் கருவிகள், மின்சாரம், நெருப்பு, நசசுப் புகை முதலியவற்றால இஙகு ஆபதது ஏறபட வாய்ப்புணடு. தொழிற்சாலையில வேலை செய் வோருககு மிகுந்த சூடிலலாததும் தூசியில்லாதது மான தூய்மையான காறறும, போதுமான வெளிச்ச மும் கிடைக்குமாறு செய்யவேணடும. மேலும,இரைச் சல குறைவாகவும, வசதிகள மிகுந்தும் இருக்க வேணடும்.

நகரஙகளிலும், கிராமங்களிலும வாழும் மக்கள் நோயுறறால் அவாகளுக்குச் சிகிச்சை செய்வதற்கும், தொறறுநோய் ஏறபட்டால் அதைப் பரவாமல தடுப்பதற்கும் மருததுவமனைகள வேண்டும. பொது மருத்துவ மனைகளும், மகப்பேறு மருத்துவமனை களும் ஊருக்கு நடுவே அமைததல நலம ஆனால் தொற்றுநோய் மருத்துவமனைகள், காசநோய்க குடி யிருப்புகள் போன்றவற்றை ஊருககு வெளியே, ஆனால் எளிதில் சென்று வரக்கூடிய இடததில் தனி யாக அமைக்க வேணடும. ஊரில பாதாளச சாக கடை வசதிகள இருத்தல் நலம். அவ்வாறு இவலாத இடஙகளில் நல்ல வசதியும, அசுத்தஙகளை அப்புறப் படுத்தும ஏற்பாடும் செய்யவேணடும. மேலும், பாது காக்கப்பட்ட தூய குடிநீர் வசதிகளை ஊரில் செய் வது இனறியமையாதது.

பளளிகள், தொழிலபுரியும் இடஙகள, திரை யரங்குகள போனற இடஙகளில் மிகுதியான மக்கள் கூடுதலை அனுமதிககக்கூடாது. அங்குக் கூடுகிற மக்களுககுப் போதுமான தூய குடிநீா கிடைப்பதற்கு வசதிகள செய்ய வேணடும். ஆண, பெண இரு பாலாருக்கும் போதுமான கழிப்பிடஙகள அமைக்க வேண்டும். மேலும, இவற்றைப் பாதாளச் சாக்கடை

யுடன் இணைத்துவிட வேணடும். பாதாளச் சாக்கடை வசதி இல்லாவிட்டால, தொற்று நீக்கித் தொட்டிகள (Septic Tanks) அமைக்க வேண்டும் இவ்வாறான பொது இடஙகளில தொற்று நோயாளிகள் செல்லுவதற்கு அனுமதிக்கக்கூடாது.

மக்கள் குளிப்பதற்கும் நீந்துவதறகும் ஏறபடுத்தும் பொதுக் கிணறுகளோ, நீச்சல குளஙகளோ தூய்மையாக இருக்குமாறு ஏறபாடுகள செய்யவேணடும. நீச்சல் குளங்களிலுள்ள தண்ணீரை அடிக்கடி அப்புறப்படுத்திப புது நீரை நிரப்புதல இன்றியமையாதது.

பொதுமக்கள் கண்ட இடஙகளில் மலம் கழிபபதைத் தடுக்க வேண்டும்.ஏனெனில் மலம் தண்ணீரை அசுத்தப்படுத்தும், மலத்தில் உட்கார்ந்த ஈக்கள வீட்டினுள் வருவதன் மூலமும் பல வகையான குடல கோளாறுகள் ஏற்படும். எனவே, பாதாளச் சாக்கடைகளை அமைத்து அவற்றுடன் கழிப்பிடங்களையும் வீட்டுச் சாக்கடைகளையும் இணைக்க ஏற்பாடு செய்யவேணடும். பாதாளச் சாக்கடைகள் மூலமாகச் சேரும் சாக்கடைக் கழிவுகள (Sewages) நலவழி முறையில் அப்புறப்படுத்தப்பட வேணடும்.

பாதாளச் சாக்கடை வசதியிலலா நகரஙகளிலும், கிராமங்களிலும் தொறறுநீக்கித் தொட்டியுடனகூடிய கழிப்பிடஙகளை அமைத்து அத் தொட்டியிலிருந்து வழியும் நீர் தரைக்குள உறிஞ்சபபட ஏற்பாடு செய்ய வேணடும். இதற்கும போதுமான வசதி இலலையெனில், கழிவுகளைச் சேகரித்து வணடிகளில் கொண்டுபோய்க் குப்பை கொட்டும் குழிகளில் கொட்டி மூடிவிட வேணடும

**தூய குடிநீர் வசதி:** மனிதன் உயிரோடு இருப்பதற்குக் காற்று, உணவு, உறையுள் முதலியன இன்றியமையாதன போல நீரும் வேண்டப்படுவதாகும. தணணீர், பருகுவதற்காக மட்டுமனறிச் சுததம் செய்யவும் உதவுகிறது. நச்சுக் காய்ச்சல (Typhoid), வயிற்றுப்போக்கு (Diarrhoea), வாந்திபேதி போன்ற பல இரைப்பை-குடல் நோய்கள் பரவுவதற்குத் தணணீரே காரணமாக அமைகிறது. எனவே, நகரத்திற்கும் கிராமத்திற்கும் கிடைக்கினற தணணீர் தூய்மையாகப் பாதுகாக்கப்பட்டதாகவும், தேவைக்குப் போதுமான அளவுளளதாகவும் இருத்தல் வேண்டும்.

நகரத்திலுளள மக்களுககாகக் குழாய் நீர்த் திட்டம் அமைத்தல் இன்றியமையாதது. மேலும் தண்ணீரில அசுத்தம் சேராதவாறு பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்தல் வேணடும்.கிணறுகள,குடியிருக்கும் வீடுகளுக்குஅருகில்அமைந்திருத்தல் நலம்.ஆறு,வாய்க்கால், ஏரி முதலியவற்றிலிருந்து நீரைத் தேவைப்பட்டால் வேதியற் பொருள்களைச் சேர்த்துத் தூய்மையாக்கி வடிகட்டித் தெளியவைத்துப் பயன்படுத்த வேண்டும். பூமிக்குள் வைக்கப்படும் நீருறிஞ்சும் குழாய்கள (Infiltration Wells),கிணறுகள்ஆகியவற்றின் வழியாக வரும் நீரை வடிகட்ட வேணடிய தேவையில்லை.

தண்ணீரைக குழாய் மூலம் தரும் போது குழாயில் இடைவிடாமல நீர் வருமாறு செய்யவேணடும். இடையிடையே வருவதாயின் அந்த நீர் அசுத்தமாகலாம். மேலும், தெருக்குழாய்களின் வாய (Tap) அழுத்தினால் மட்டும் திறப்பதாக இருத்தல் நலம். இலலையெனில் தண்ணீர் வீணாய்ப் போக நேரிடலாம். தெருக் குழாய்களில வழியும் தண்ணீர் எளிதில் கழிவதற்கு நல்ல வசதிகள செயயவேண்டும்.

கிராமங்களில் படிகளைக கொண்ட கிணறுகள் அமைப்பதைத் தடுக்க வேணடும் இறை கிணறுகளையே கட்டி அவற்றைத் தூய்மை கெடாதபடி பார்த்துக்கொளள வேண்டும்.

**உணவுச் சுகாதாரம்:** உணவானது உடல்நலத்திற்குப் பலவகையிலும் உதவுகிறது உணவிலுள்ள சில இன்றியமையாத ஊட்டப்பொருள்கள, உயிரச்சத்துகள (Vitamins) ஆகும். இவை குறைநதால பல நோய்கள் உணடாகின்றன.மேலும் உணவுப் பொருள்கள கெட்டுப் போய்விட்டாலும அவை பல நோய்களை உருவாக்கும்.எடுத்துக்காட்டாக,பால், இறைச்சி போனற உணவுப் பொருள்களில் தொற்று நோய்க் கிருமிகள் சேர்ந்து உணவுடன உடலுள் வந்து சோந்துவிடுகினறன. மேலும், உணவிலும் உணவைப் பாதுகாக்கப் பயன்படுத்தும் பொருள்களிலும் சேரும் நோய்க்கிருமிகள் உடல்நலததைக் கெடுக்கக் கூடிய நஞ்சுகளை உருவாக்குகினறன. எனவே, நகரங்களிலும், கிராமஙகளிலும் உளள உணவு விடுதிகள், பலகாரக் கடைகள், பாலபண்ணைகள், ரொட்டிக் கடைகள் போன்ற உணவுப்பொருள் மையங்களில் பின்வரும நடவடிக்கைகளை எடுக்க வேணடும். அவை:

1) ஈக்கள் பெருகி வளரககூடிய இடங்களில் கடைகள் இருக்கக்கூடாது. 2) பயன்படுத்தப்படும் பாத்திரங்கள் உணவைக் கெடுக்காதனவாகவும், எளிதில தூய்மை செய்யததககனவாகவும நீரில் கொதிக்கவைத்துப் பயனபடுத்துவனாகவும் இருத்தல் வேணடும். 3) கடைகளைச் சுகாதாரமான முறையில் தூய்மையாக வைத்திருக்க வேண்டும. 4) இவற்றில் பணியாற்றுபவர்களுக்குப் போதுமான நல்ல தண்ணீர், சுகாதாரம் ஆகிய வசதிகள் கிடைக்குமாறு செய்ய வேண்டும். 5) மேலும், பணியாற்றுபவர்களுக்கு நோய் உள்ளதா எனக் குறிப்பிட்ட காலங்களில் மருத்துவப் பரிசோதனை மூலம் அறிய வேண்டும். 6) உணவுப் பொருள்கள் தூய்மையாக

இருக்கின்றனவா என அடிக்கடி சோதனை செய்ய ஏற்பாடு செய்யவேணடும். 7) கழிவுப் பொருள்களை உடனுக்குடன் தகுந்த முறையில் அப்புறப்படுத்தி அழிக்க ஏற்பாடு செய்யவேண்டும். உணவு வகைகள நல்லமுறையில் தூய்மையாகத் தயாரிக்கப்பட வேணடும்.

**பூச்சி வகைகளை ஒழித்தல்:** சில பூச்சி வகைகளும பிராணிகளும் தொற்று நோய்களைப் பரவச் செய கினறன. முக்கியமாக ஈ, கொசு, எலி போனறவை எளிதில் நோய்களைப் பரப்புவனவாக உள்ளன. எனவே, இவைபோன்ற பூச்சி இனஙகளை ஒழித்து நோய் பரவாமல் மக்கள் தங்களைப் பாதுகாத்துக் கொளள வேணடியது இன்றியமையாதது. மேலும் மக்களுக்கு நோய் பரவாமல் தடுத்து நல்ல உடல் நலத்துடன் வாழச் செய்வது அரசின் முக்கிய கடமைகளுள் ஒனறாகும்.

**ஈத்தடை:** ஈக்கள், நசசுக்காய்ச்சல், வயிறறுப் போக்கு, வயிறறுக் கடுப்பு, ஒட்டுண்ணிப் புழுக்கள் போன்றநோய்கள் பரவுவதற்கு உதவுகின்றன. மேலும் சில தோல், கண் நோய்களையும் பரப்பு கின்றன. தோல், கண் நோய்களை வெப்ப மண்டல நாடுகளில் ஈக்கள வேகமாகப் பரப்புகினறன.

**ஈக்களினால் நோய் பரவாமல் தடுக்கும் முறைகள:** 1) ஈக்களின் உணவுகளை அழித்தல், 2) கழிப்பிடங் களைப் பயன்படுத்துவதன மூலம் மனிதர்களின் மலத் திலிருந்து ஈக்கள், நோய்க்கிருமிகளைப் பரப்புவதைத் தடுத்தல், 3) உணவுகளில் ஈக்கள் மொய்ககாமல் தடுத்தல், 4) சக்களை அழித்தல் போன்றவை ஈக்க ளினால நோய் பரவாமல் தடுக்கும முறைகளாகும்.

வீட்டில மிகுதியாக ஈக்கள் சேருவதற்குக் காரணம், வீட்டின் சுற்றுப்புறச் சூழ்நிலையே. எனவே வீட்டின பக்கததிலும், வீட்டின் உளளும், வெளிச் சுற்றுப்புறங்களிலும் ஈககள உற்பத்தியாவதறகு வசதி யான இடம் ஏதாவது இருக்கிறதா எனபதைக் கவனிக்க வேண்டுமசாணம், குப்பைக் கூளஙகள், அழுகிய பொருள்கள் போன்றவை இருநதால அவற்றைச் சுத்தமாக எடுத்துவிட வேண்டும். வீட்டி னுள்ளே ஈ மொய்க்குமபடியாகப் பொருள்களைத் திறந்து வைக்கக்கூடாது. தரையையும் பாத்திரங் களையும் தூய்மையாக வைத்துக்கொண்டால் ஈக்கள் மொயக்கா. வீட்டில் ஈக்கள் மிகுதியாக மொய்த்தால் அந்த இடத்தில் மண்ணெணணெயுடன் சோப்புக் கரைத்த தணணீரைக் கலந்து நன்றாகத் தெளித்து விட்டால் ஈக்கள் ஓடிவிடும்.

**கொசுத்தடை:** மனித இரத்தத்தைக் குடித்து உயிர் வாழுகின்ற பூச்சி இனத்தில் ஒன்று கொசு வாகும். வீடுகளில் வசிக்கும் கொசுக்கள் சாதாரண மானவை. இவை மனிதனுடைய இரத்தத்தை உறிஞ்சி விடுவதுடன் தூக்கததையும் கெடுக்கின்றன. சில நேரங்களில் நோய்களையும்கூடப் பரப்புகின்றன. இதல்லாமல்வேறுவகையானகொசுக்களும் பல உண்டு. அவை குளிர் காய்ச்சல் (Malaria), முடக்குக் காய்ச் சல் (Dengue Fever), மஞ்சள் காய்ச்சல (Yellow Fever), யானைக்கால் நோய் (Filariasis of Elephantiasis), காசநோய் போன்றவை பரவுவதற்குக் காரணமாக இருக்கின்றன. எனவே, இந்த நோய் களைப் பரப்பும் கொசுக்கள் எந்த இனத்தைச் சார்ந் தவை என ஆராய்நது அதற்கேற்றவாறு நடவடிககை எடுததல் வேணடும்.

**கொசுக்களினால் நோய் வராமல் தடுக்கும் முறைகள்:** தடுப்பு முறைகள் இரண்டு வகைப்படும் அவை. 1) கொசு கடிக்காமல் தடுத்துக் கொளவது, 2) கொசுக்களை ஒழிப்பது.

1. அ) வீடுகள, படுக்கை அறைகளின் கதவுகள் சன்னல்கள ஆகியவற்றில் வலைத் திரையிடுதல (Screening), ஆ) கொசு வலையிட்டுத் (Mosquito Net) தூங்குதல, இ)பல வகையான எணணெய்கள், களிம்பு கள போன்ற கொசு விரட்டிகளைப் (Mosquito Repellants) பயன்படுத்துதல் முதலியன நோய்தடுப்பு முறைகளில அடங்கும். 2 அ) மீனகளை வளர்த்தல் மூலம் இலார்வாக்களை அழிப்பது, ஆ) மருநது களை அடிப்பதின் மூலம் முழு வளாசசியடைந்த கொசுக்களை அழிப்பது போனறவை கொசுக்களை ஒழிக்கும் முறைகளாகும

கொசுக்கள மிகுதியாக உற்பத்தியாவதற்குக் காரணம் தேங்கி நிறகும் நீர்நிலைகளே.மீன, தவளை கள் இல்லாத சாக்கடைத் தொட்டிகள், பளளங்கள், பல நாளகளாகத் தண்ணீர் தேஙகி நிற்கும் பாத் திரங்கள் போன்றவற்றில தான கொசுக்கள மிகுதி யாக உற்பத்தியாகின்றன. கொசு உற்பத்தியாவ தறகு மிகுதியான தணணீர் தேவை என்பதில்லை, ஒரு கொட்டாங்கச்சியில் தணணீா தேங்கி நினறா லும் கூடபபோதுமானது. அநதத் தண்ணீரில் நூற் றுக்கணக்கான கொசுக்கள் உற்பத்தியாகி விடும்.

எனவே, வீட்டின் பக்கத்தில் தண்ணீர் தேங்கி நிற்கவிடக் கூடாது. பள்ளத்தை மூடிவிடலாம் அல் லது தண்ணீர் பரவலாகச் சென்று உலர்ந்துவிடும்படி பளளத்தை ஒழுங்குபடுத்தலாம். சாக்கடையில தண ணீரைத் தேங்கவிடக் கூடாது. மேலும், அடிக்கடி சாக்கடையைச் சுத்தம் செய்யவேணடும். தொட்டி யாக இருநதால் அந்தத் தணணீரை அடிக்கடி எடுத துத் தூரக் கொணடு போய்க் கொட்டிவிட வேணடும்.

வீட்டிலுள்ள பாத்திரங்களையும் அடிக்கடி சுத்தப் படுத்தி வரவேண்டும்.

**எலித் தடை:** எலி போன்ற பிராணிகள் கொள்ளை நோய் (Plague) முதலிய நோய்களைப் பரவச் செய்யும். எனவே, அவற்றைப் பொறி வைத்துப் பிடிக்க வேண்டும் அல்லது புகையூட்டிக் கொல்ல வேண்டும். எலி வாழ முடியாதவாறு வீடுகளைக்கட்ட வேண்டும். உணவையும் கழிவுப் பொருள்களையும் நன்கு இறுக்கமாக மூடிய பாத்திரங்களில் இடவேண்டும. பூ.த.

**துணை நூல்கள்:**

**சைராசா. எசு. ஏ**, வீட்டுச் சுகாதாரம், ஸடார் பிரசுரம், சென்னை, 1983.

**வேங்கடசாமி, சி., இலலிதா காமேசுவரன், கதிரேசன ஏ.**, பூச்சிகளால் பரவும் நோய்களும தடுக்கும் முறைகளும்., நியூ செஞ்சுரி புக் கவுசு பிரைவேட் லிமிடெட், சென்னை, 1977.

**நகரச் சமூகவியல்:** நகர வாழக்கையை அறிவியல் அடிப்படையில் ஆராய்கின்ற சமூகவியற் பிரிவு, நகரச் சமூகவியல (Urban Sociology) எனப்படும். 'இது நகரச் சமூகத்தையும், நகர வாழக்கை முறைகளையும பற்றி ஆராய்கிறது. அதாவது, நகர வாழ்க்கை முறையின தாக்கத்தினால் மாறுபடுகின்ற சமூக இடைவினைகள், சமூக உறவுகள், சமூக நிறுவனம், பணபாடு போனறவற்றை இது விளககுகிறது மேலும், இது தொழில்மயமாதலால் நகர வாழக்கையில் திடீரென ஏற்படுகின்ற சிககலகளை அறிவியல அடிப்படையில் ஆராயகிறது. எனவே, நகரச் சமூகவியலின நோககம் நகர வாழ்க்கையின அனைத்துக் கூறுகளையும் ஆராய்வது எனக் கொள்ளலாம்.

**நகரச் சமூகவியல் தோற்றம்:** சமூகத்தை அறிவியல் அடிப்படையில் ஆராய்கின்ற இயல சமூகவியல் ஆகும. இது கி.பி.19-ஆம நூற்றாண்டின் தொடக்கத்திலே தோன்றிய புதிய துறையாகும். இச் சமூகவியலின ஒரு பிரிவே நகரச் சமூகவியலாகும். இது மிக அணமைக்காலத்தில் தோனறிய பிரிவாகும். நகரச் சமூகவியல், ஒரு முறைப்படியான ஆய்வாக 20-ஆம் நூற்றாண்டில்தான் வளர்சசியுற்றது.

பழைமையான கலை நுணுக்கத்துடன் கூடிய நாகரிக வாழக்கைக்கு எடுததுக்காட்டாக விளஙகுபவை நகரங்கள ஆகும். இருப்பினும் கல்வித்துறையை ஒப்புநோக்குமபோது நகரஙகளைப் பற்றிய ஆய்வுகள் மிக அண்மைக்காலத்திலதான் தோனறின. தொழிற்புரட்சி ஏற்படுகிறவரை பெரும்பாலான சமூகவியற் சிந்தனையாளர்கள நகர ஆய்விறகுச் சிறப்பிடம் அளிக்கவில்லை. நகரத்தைச் சமூகத்தின் ஓர் அங்கம் என்ற கண்ணோட்டத்திலேயே பார்த்து வந்தனர். சமூக வாழ்க்கையின் ஒரு சிறப்புவாய்ந்த அல்லது தனித்தன்மை வாய்ந்த அமைப்பாக நகரத்தைப் பார்க்கவில்லை. தொழிற்புரட்சி ஏற்பட்டதன விளைவாக நகரங்கள் பெருகின; நகரமயமாதல் ஏற்பட்டது. மேலும் நகரச் சிக்கலகள் பல தோன்றின. இதுவே சமூகவியல் அறிஞர்களையும், புவியியல் அறிஞர்களையும் நகரங்களைப் பறறி ஆய்வு செய்யத் தூணடியது. நகரச் சமூகவியலும் வளர்ச்சியுற்றது

பண்டைய காலத்திலேயே நகரங்கள இருந்தமைக்கான சான்றுகள் பலவற்றைப் பிளேட்டோ (Plato), அரிசுட்டாட்டில் (Aristotle), கவுடில்யர் (Kautilya), அகசுட்டின் (Augustine) ஆகியோர்தம் நூல்களிற் காணலாம். இடைக்காலத்தில் மறுபடியும் தோன்றிய நகர வாழ்க்கையைப் பற்றி மாக்கிய வெல்லியும் (Machia Velli) கி.பி.18-ஆம் நூற்றாணடில் இருந்த நகரமைப்பைப் பற்றி உரூசோவும் (Rousseau) தம் கட்டுரைகளில் கூறியுள்ளனர். எனினும், நகரத்திற்கு முதன்மையளித்து ஆய்வு செய்தோர் மிகச் சிலரே. எடுத்துக்காட்டாக கி.பி. 17-ஆம் நூற்றாண்டுத் தத்துவவாதியான சீன் பாடின (Jean Bodin) போன்றோர நகரத்தைப் பற்றி ஆய்வு செயதுள்ளனர்.

நகரத்தைப் பற்றிய அறிஞர்களின் எணணங்களும் கருத்துகளும் தொழிற்புரட்சி ஏற்பட்டபின்னர் முழுமையாக மாறின. ஏனெனில், நகரங்கள தாமாகவே மாறின புதிதாகத் தோன்றிய தொழில் நகரங்கள் சிறிது சிக்கலானவையாகவும், குழப்பமானவையாகவும் இருந்தன. மேலும அவற்றில தோன்றிய சிக்கல்கள் ஆராயப்பட வேண்டியனவாக இருந்தன. ஆனால், சில எளிய அடையாளங்கள் அல்லது பண்புகளின் மூலம் நகரச் சிக்கல்களை அறிந்துகொள்ள இயலவில்லை. இதுவே மேலை நாடுகளில் நகரத்தைப் பற்றி ஆராய வழிவகுத்தது.

மேலும், நகரம் எனபது பொதுவாக ஒரு புரியாத புதிராக விளங்குகிறது. இது மனித வருக்கத்தின் மிகப்பெரிய பணபாட்டுச் சாதனைக்கு அடையாளமாக இருப்பினும் பலவகையான சிக்கலகளையும் கொணடுள்ளது நகரங்களில் மிகப்பெரிய பல்கலைக் கழகங்களும், நூல் நிலையங்களும் இருககின்றன. ஆயினும், மிகுதியான மாணவர்கள் பள்ளிகளை விட்டு விலகுகிற சூழ்நிலையையும் மிகக் குறைந்த கலவியறிவு இருககினற நிலையையும் காணலாம. இங்கு அதிசயிக்கத்தக்க கோயிலகளுடன் மிக அதிக அளவிலான குற்றங்கள் நிறைந்திருப்பதையும் காணலாம். இங்கு அழகுமிக்க கலைக் கூடஙகளுடன அருவருக்கத்தக்க சேரிகளையும காணலாம். இஙகு மிக உயர்வான மருத்துவ மையங்கள் இருக்கினறன. ஆனால், மிகுதியான பரத்தையா தொழிலும்

சட்டத்திற்குப் புறம்பான போதை மருந்து விற்பனைகளும் இங்குத்தான் இருக்கின்றன. மக்கள், பொதுவாகத் தங்களது நலவாழ்விற்காகவே நகரத்திற்கு வருவதற்கு விரும்புகின்றனர். ஆனால், நகரத்தில் வாழ்வோர் நகரம், மிகச் சலிப்பூட்டுவதாகவும், மகிழ்ச்சியற்றதாகவும் இருப்பதாகக் கூறுகின்றனர்.

நகரத்தில் உள்ள இவ்வாறான வேறுபாடுகளே அனைத்து நாடுகளையும நகரத்தைப் பற்றி ஆராயத் தூண்டின.

தொடக்க காலத்தில நகரச் சமூகவியலைப் பற்றிய மிகுதியான ஆய்வுகள அமெரிக்காவில்தான செய்யப்பட்டன. பின்னர் அனைத்து நாடுகளும் ஆராயத் தொடஙகின. இந்தியா அதனுடைய பல வேறுபட்ட சமூக நிலைகளின் காரணமாகப் பல காலம் கடந்தபின்னரே நகரத்தைப பற்றி ஆராயத் தொடங்கிற்று. ஆனால, அணமைக் காலமாக அனைத்து நாட்டிலுமுள்ள நகர ஆயவு அறிஞர்களின் கவனத்தை இவை மிகுதியாகக் கவர்ந்துள்ளன. மேலும் இப்போது மிகவும் செறிவான ஆய்வுகள் (Intensive Study) இதில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. நகரங்கள், குடியுரிமை, நகர முன்னேற்றம், நகரச் சுற்றுப்புறச் சூழல், நகரங்களிலுள்ள சமூக ஒழுங்குக்குலைவு, மக்கள் தொகைப் போக்குகள், சமுதாய வாழ்க்கை, ஆளுமை, குடும்பம், திருமணம், திருமண முறிவு ஆகியவற்றின் மீது நகரத்தின் தாக்கம் போன்றவற்றை விளக்கும நூலகள் பல வெளியிடப்பட்டுள்ளன. இவைதவிர்த்து நகர வாழ்க்கையில் முன்னேறறம், சீர்திருத்தம் ஆகியன பற்றிய ஆய்வுகளும் மேறகொள்ளப்படுகின்றன. அவை யாவன: நகரத்தில சமூகநலத் திட்டங்கள், ஓய்வு நேரஙகள், சமயம், பண்பாடு, கல்வி நிறுவனம் ஆகியனவற்றைப் பயனுள்ளவாறு செயறபடுத்துதல; நகரமைப்புத் திட்டம்; புனர்வாழவு மற்றும் பிற.

மேற்கூறிய அனைத்துப் பணிகளும் வெளிநாடுகளில, முக்கியமாக அமெரிக்காவில் மிகுதியாக ஆராயப்படுகினறன. ஆனால், இந்தியாவில் மட்டும் நகரச் சமூகவியலைப் பற்றிய ஆய்வுகள் மிகக் குறைநத அளவிலேயே நடைபெற்று வருகின்றன.

**நோக்கங்களும் பண்புகளும்:** நகரச் சமூகவியலின் நோக்கங்களும் பணபுகளும் பரவலானவை. இது மிக்க அளவில நகர வாழ்கனகயின் அனைத்துக் கூறுகளையும் ஆராய்கிறது. நகரச் சமூகவியல் போதுமான அளவு முனனேற்றமடைந்திருந்தாலும் ஓர் அறிவுசார்ந்த தனிப் பிரிவாகக் கருதும்போது இது மிகவும் புதியது.

பொதுவான கொளகைகள், நகர வளர்ச்சி, சமூக ஒழுங்குக் குலைவு, நகர வாழ்க்கையிலும் நகரமைப்புத் திட்டத்திலும் உள்ள சிக்கல்கள், நகரச் சூழ்நிலைகளுக்கு இடையிலான இடைவினை, மனித ஆளுமை வளர்ச்சி, குடும்பத்தின் கட்டமைப்பு, பஙகு, அதில் மாறுதலடைகிற கூறுகள், திருமணம், திருமணத்தில் ஏற்பட்டுள்ள மாற்றுப் போக்குகள். குடும்ப ஒழுங்குக் குலைவு, நகரச் சமூகங்களில் தொழில்மயமாதலால் ஏற்பட்டுள்ள வகுப்பமைப்பு, வருக்கப் போராட்டம், நகர வளர்ச்சியினால் ஏற்பட்டுள்ள பல்வேறு நகரக் குற்றங்கள், இளங் குறற நடத்தை, பரத்தைமை, பிச்சையெடுத்தல, வேலையிலலாத திண்டாட்டம், தொழில்மயமாதலால ஏற்பட்டுள்ள தூய்மையற்ற காற்று, சேரிகள், சூதாட்டம், இரவு வாழ்க்கை, தொழிலாளர் சிக்கல்கள், சமூக இறுக்கம் மற்றும் பிறவற்றை ஆராய்வது நகரச் சமூகவியலின் முக்கிய நோககங்களாகும்.

மேற்கண்ட நகரச் சமூகவியலின நோக்கங்கள் பொதுவாகப் பின்வரும் தலைப்புகளில் ஆராயப்படுகின்றன. அவை 1) அடிப்படை நோக்கங்கள் (Introductory Scope), 2) பகுப்பாய்வு நோக்கங்கள் (Analytical Scope), 3) சீர்படுத்துகிற நோககங்கள் (Reformative Scope) எனபனவாகும்.

**நகரச் சமூகவியலின் அடிப்படை நோக்கங்கள்:** நகரச் சமூகவியல், நகர வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளை முதனமையாகக் கூறுகிறது இது பினவரும் துணைத் தலைப்புகளில ஆராயப்படுகிறது.

**அ) நகரச் சூழலியல்:** நகரச் சூழ்நிலையில் சமுதாயத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள், நகரச் சூழலியல் (Urban Ecology) பிரிவில் ஆராயப் படுகின்றன. அதன்படி நகரச் சமுதாயம், அதனுடைய அமைப்பு, சமூக, பணபாட்டு நிறுவனம் ஆகியவை நிருமாணிக்கப்படுகின்ற முறைகள், மக்கள்தொகைப் பெருக்கம் முதலியன அறியப்படுகின்றன.

**ஆ) நகர வடிவமைபியல்:** நகரப பகுதிகளின் சமூக வாழக்கை, நகர நிலையமைப்பு முதலியன நகர வடிவமைப்பியலில (Urban Morphology) ஆராயப் படுகின்றன.

**இ) நகர உளவியல்:** நகரப் பகுதிகளில் வாழும் மக்களின் வாழக்கை முறை, நடத்தை ஆகியவை நகர உளவியலில (Urban Psychology) ஆராயப்படுகினறன.

**பகுப்பாய்வு நோக்கம்:** அடிப்படை நோக்கங்களுக்குப் பினனர் நகரங்களைப் பகுப்பாய்வு செய்வது நகரச் சமூகவியலின் முக்கிய ஆய்வுப் பிரிவாகும். இப்பகுப்பாய்வு நோக்கின்கீழ நகர வாழ்க்கையின் முககிய பண்புகளைப் பற்றிய பல்வேறு கருத்துகள உருவாக்கப்படுகின்றன. மேலும் ஆய்வு செய்யப்படு

கின்றன. அக் கருத்துகள் பின்வரும் கூறுகளின் தொடர்புடையன.

**அ) நகரம்.** நகரச் சமூகவியலின அடிப்படைக் கருததுகள் நகரத்தைப் பற்றியவையாகும். சொரோகின் (Sorokin), சிம்மர்மேன் (Zimmerman) போன்ற அறிஞர்கள் இது தொடர்பாக ஆய்வு செய்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள்.

**ஆ) நகரச் சமுதாயம்:** நகரச் சமூகவியலின் முக்கிய பிரிவு நகரச் சமுதாயத்தை (Urban Community) பகுப்பாய்வு செய்தலாகும். இப் பகுபபாய்வினை மேற்கொள்ளும்போது சமுதாயம் என்பது பற்றிய இனறைய கருத்தில நிறைய மாற்றங்கள் செய்ய வேண்டும்.

**இ) நகரமயமாதல்:** நகரமயமாதலைப் பகுப்பாய்வு செய்வதும், நகரச் சமூகவியலில் அடங்கும். இதில் நகர வாழ்க்கைக்கும் கிராம வாழ்க்கைக்கும் உள்ள வேறுபாடு அறியப்படும். நகரமயமாதலில் மிகுதியாக ஆய்வு செய்த பெருமை நியூ(New), கார்ப்பெண்டர் (Carpenter) ஆகியோரைச் சாரும் மக்கள் வாழுகின்ற விதத்தைப் பொறுத்து நகரமயமாதலை இரித்து (Writh) என்ற அறிஞரும் விளககியுள்ளார்.

**சீர்படுத்துகிற நோக்கங்கள்:** இது நகர்மயமாவதால் (Urbanism) ஏற்படும் சிக்கல்களையும், அதைத தீர்ப்பதற்கான வழிமுறைகளையும் ஆராய்வதாகும். இது நகரச் சிக்கல்கள், நகரமைப்புத திட்டம் ஆகியவற்றைப் பற்றி ஆராய்வதை உள்ளடக்கியுள்ளது

**அ) நகரச் சிக்கல்கள:** நகரமயமாதலால் திடீரெனத் தோன்றுகிற நகரக் குற்றங்களையும், சமூக ஒழுங்கு குலைதலையும் பிறவற்றையும் ஆராய்தல் நகரச் சிக்கல் பற்றிய ஆய்வாகும். மேலும், நகரின மக்கள்தொகைப் பெருககத்தால் குடியிருப்பு,சுகாதாரம், போக்குவரத்து ஆகியவற்றில் ஏற்படும் சிக்கல் களையும், சூழ்நிலை மாசு, தண்ணீர் மாசு, ஒலி மாசு காற்று மாசு போன்றவற்றால் ஏற்படும் சிக்கலகளையும் பறறி இது ஆராய்கிறது.

**ஆ) நகரமைப்புத் திட்டம்:** இது நகரமைப்புத் திட்டத்தின வளர்ச்சியையும், சீர்படுத்துகிற முறைகளையும் ஆராய்கிறது. அதாவது நகர்ப்புற வளர்ச்சி அல்லது மேம்பாட்டுத் திட்டங்களையும் அவற்றைச் செயற்படுத்துகிற முறைகளையும் பற்றி இது ஆராய்கிறது. பூ.த.

**துணை நூல்கள்:**

**Abrahamson Mark.**, Urban Sociology, Prentice Hall Inc., Englewood Cliffs, New Jersey, 1980.

**Popenoe David.**, Sociology, Prentice Hall, Inc, Englewood Cliffs, New Jersey. 1977,

*நகரச் சிக்கல்கள்:* உலகில் இன்று வேகமாக நிகழ்ந்துவருகிற செயற்பாங்கு நகரமயமாதல்(Urbanization) ஆகும். நகரங்களின எண்ணிக்கை பெருகிக் கொண்டே வருகிறது. நகரங்களின் எண்ணிக்கை மட்டுமன்றி நகரமக்கள் தொகையின் எண்ணிக்கை அளவும் கூடிக்கொண்டே வருகிறது. வளர்நத நாடுகளில் மட்டுமன்றி, வளர்ந்துவரும் நாடுகளிலும் நகர மக்களதொகை வேகமாக வளர்ந்துவருகிறது. இந்தியாவில இப்பொழுது நகரமயமாதல வேகமாக வளர்ந்து வருகிறது. நகர மக்கள்தொகை தொய்வின்றிக் கூடிக்கொண்டே வருகிறது. ஆண்டுதோறும் நான்கிலிருந்து ஐந்து விழுக்காடு என்ற அளவில் அது வளர்ந்து வருகிறது. இந்தியாவில் 1901-இல் நகர மக்களதொகை 25.6 மிலியனாகவும், மொத்த மக்கள் தொகையில் 11 விழுக்காடாகவும் இருந்தது. இந்த எண்ணிக்கை 1941-இல் முறையே 44 2 மிலியனாகவும், 14.11 விழுக்காடாகவும், 1951-இல் 62.4 மிலியனாகவும், 17,17 விழுக்காடாகவும் அதிகரித்து 1981-இல் இந்த எண்ணிக்கை 160 மிலியனாகவும் 23.73 விழுக்காடாகவும் உயர்நதது. இந்த எணணிக்கை 1985-இல் 192 மிலியன அளவை எட்டியுளளது. இது 1991-இல 230 மிலியன் அளவையும், 2000-இல் 315 மிலியன அளவையும் எட்டக்கூடும் என்று மதிப் பிடப்பட்டுளளது.

நகர மக்கள்தொகையின் இந்த வேகமான வளர்ச்சிக்குக் குடிப்பெயர்வே(Migration)முக்கியமான காரணமாகும். ஊரகங்களில பெருகிவரும் மக்கள தொகையினால் நிலத்தின்மீது அதிக அழுத்தம் ஏற்பட்டு மக்களுக்குப் போதிய வேலைவாய்ப்புகள் இலலாமல் போகிறது. அதன் காரணமாக வேலை வாய்ப்புகளைத தேடியும், அதிக வருமானம் ஈட்ட வேண்டும் என்பதற்காகவும் ஊரகங்களிலிருந்து மக்கள நகர்ப்புறங்களுக்கு,குறிப்பாகப் பெரிய நகரங்களுக்குக் குடி பெயர்கிறார்கள். அதே காரணஙகளுககாகச் சிறிய நகரஙகளிலிருந்தும் மக்கள் பெரிய நகரங்களுக்கு வருகிறார்கள். எடுத்துககாட்டாக, கலகத்தாவுக்கு ஒவ்வொரு நாளும் 2000 பேரும், பம்பாய்க்கு ஒவ்வொரு மாதமும் 25,000 பேரும், தில்லிக்கு ஆண்டுதோறும் 1.2 இலட்சம் பேரும் மேற்சொன்ன காரணங்களுக்காக ஊரகப் பகுதியிலிருந்தும், சிறிய நகரங்களிலிருந்தும் குடிபெயர்ந்து வருகிறாரகள். இவ்வாறு குடிபெயர்கிற மக்களால் நகரங்களில் மக்கள்தொகை மிகவும் அதிகரிக்கிறது. நகரமக்களில் 40 விழுக்காட்டினர் (பெரிய நகரங்களில் 49 விழுக்காட்டினர்) இவ்வாறு வேறிடங்களிலிருந்து குடி

பெயர்ந்து வருகிறவர்களே என்று ஓர் ஆய்வறிக்கை கூறுகிறது.

இவ்வாறு குடிப்பெயர்வினால் நகர மக்கள் தொகை அதிகரிப்பதால் நகரங்கள் நெரிசல் பெற்று அடர்த்தியடைகின்றன. இந்தியாவில் 1971-இல் நடந்த கணக்கெடுப்பின்படி நகர மக்கள்தொகை அடர்த்தி சராசரியாக ஒரு சதுரக் கிலோமீட்டருக்கு 2505 பேர் என்ற அளவில் இருந்தது. பெரு நகரங்களில் (Metros) இந்த அடர்த்தி அனைத்திந்தியச் சராசரியை விட இரண்டு மடங்கு மிகுதியாக இருந்தது. எடுத்துக் காட்டாக, கல்கத்தாவில (1971) ஒரு சதுரக் கிலோ மீட்டருக்கு 5628 பேர் என்ற அளவில மக்கள் வசித்தனர்.

**வீட்டு வசதிச் சிக்கல்:** இவ்வாறு மக்கள்தொகை அதிகரிப்பும் நெருக்கமும் ஏற்படுவதால் நகரங்கள் பல சிக்கல்களைச் சந்திக்கின்றன. அவற்றிலொன்று வீட்டு வசதிச் சிக்கல். நகரின் இடப்பரப்பை மீறி மக்கள்தொகை அமைவதால வீட்டுவசதி ஒரு சிக்கலாக உருவெடுக்கிறது. மக்கள்தொகை வளர வளர வீட்டு வசதிச் சிக்கலும் மிகுதியாகிறது.

இந்திய அரசின் வீட்டு வசதி மற்றும் பொதுப் பணி அமைச்சகம், 1981-ஆம் ஆண்டில், நகர்ப்புறங் களில் 6.7 மிலியன் வீடுகள் பற்றாக்குறையாக இருந்தன என்று மதிப்பிட்டது. இந்தப் பற்றாக்குறை தீர்க்கப்படாத சமயத்தில் கி.பி. 2000-இல் நகர்ப் புறங்களில் வீட்டுப் பற்றாக்குறை 33.2 மிலியன் வீடுகள (பெரு நகர்களில் 11 மிலியன் வீடுகள், மற்ற நகரங்களில் 22.2 மிலியன வீடுகள்) என்ற அளவில் அதிகரிக்குமென்று அஞ்சப்படுகிறது.

இவ்வாறு வீட்டுப் பற்றாக்குறை நகரங்களில் கடுமையாக இருப்பதற்குக் காரணம், நகரங்களில ஏற்படும் கட்டுக்கடங்காத மக்கள தொகைப் பெருக் கமே. ஆண்டுதோறும நான்கிலிருந்து ஐந்து விழுக் காடு வரை இந்தியாவில் நகர மக்களதொகை பெருகு வதால் வீட்டு வசதித் தேவையும் கூடிக்கொண்டே போகிறது. ஆனால, மக்கள்தொகைப் பெருக்கமோ வீட்டு வசதியைக் காட்டிலும் விஞ்சி நிற்கிறது.

பெருகிவரும் மக்கள்தொகையின வீட்டு வசதித் தேவையை நிறைவேற்ற வேண்டுமானால நகரங் களில் ஆண்டொன்றுக்கு 1.2 மிலியன் வீடுகள் கட் டப்பட வேண்டும். இந்த இலக்கை அடையவேண்டு மானால் ஐக்கிய நாடுகள் சபை அறிவுறுத்தியதுபோல அரசு, ஆண்டொன்றுக்கு ஆயிரம் பேருக்கு 10 வீடுகள் என்ற விகிதத்தில் வீடுகள கட்ட வேண்டும். ஆனால் இந்தியாவிலோ ஆயிரம் பேருக்கு ஒரு வீடு என்ற அளவிலேதான் வீடுகள் கட்டப்படுகின்றன. போதிய நிதியாதாரம் இன்மையே இந்தப் பின்னடைவு நிலைக்குக் காரணமாகும். பெருகிவரும் நகர மக்கள தொகைக் கேற்ப வீட்டு வசதி அமையாமல் போவ தால் ஏராளமான பேர்கள் நகரங்களில் வீடில்லாமல் அவதிப்படுகிறார்கள்.

தங்குவதற்கு வீடு இருக்கின்ற மக்களும் திருப்தி கரமான வீட்டு வசதியைப் பெற்றிருக்கிறார்களா என்றால் அதுவுமில்லை. சுமார் 50 விழுக்காடு மக் கள் (பம்பாய் போன்ற பெருநகர்களில் இந்த விகிதம் 80) ஓர் அறைக் குடியிருப்புகளில் குடியிருக்கின்றனர். இன்னொரு 25 விழுக்காடு மக்கள் இரண்டு அறைக் குடியிருப்புகளில் குடியிருக்கின்றனர். இந்தக் குடி யிருப்புகள் அளவில் சிறியனவாகவும், நெரிசலாகவும் இருக்கின்றன. அவை இருக்கும் இடங்கள் சுகாதார வசதிகள் இன்றி இருப்பதுடன் அவை அமைந்துள்ள கட்டடங்களும் பழையனவாக இருக்கின்றன.



சேரிகள், புதுதில்லி

**சேரிகள்:** நகரங்களிலேயே பிறந்து வளருபவர் களில் பெரும்பான்மையினருக்கு இத்தகைய நிலைமை தான் அமைகிறது. ஆனால், இந்தக் குறைந்த அளவு வசதிகூடக்குடிப்பெயர்ந்து வருகிறவர்களுக்கு அமைவ தில்லை. நகரங்களுக்குக் குடிபெயர்ந்து வருகிறவர் களுக்குத் தங்குவதற்கு இடம் கிடைப்பது ஒரு பெரும் பிரச்சினையாக இருக்கிறது. நகரங்களில தங்குவதற்கு வீடுகள் கிடைப்பது அரிதாக இருப்பதாலும், கிடைக்கிற வீடுகளுக்கு அதிகமான வாடகையும், அதற்கு மேலாக அதிகமான முன்பண மும் கட்டவேண்டியிருப்பதாலும் குடி பெயர்ந்து வருகிறவர்களுக்கு வீட்டு வசதி ஒரு பெரும் பிரச் சினையாக அமைகிறது. அவர்களுடைய பொருளா தார நிலைக்கேற்பச் சரியான, போதிய வீட்டுவசதி கிடைக்காமல் அவர்கள் தவிக்க நேரிடுகிறது. இதன காரணமாக அவர்கள் எங்கெங்குக் காலியிடங்கள்

இருக்கின்றனவோ அங்கு ஆக்கிரமிப்புச செய்கின்றனர். பிறருக்கு உரிமையான காலி மனை நிலங்கள், திறநத வெளி நிலங்கள், பூங்காக்கள், விளையாட்டுத் திடல்கள, குப்பை கொட்டும் இடங்கள, கழிவு நீர்க்கால் கரைகள, ஆற்றுக் கரைகள் என்று பல வேறு இடங்களில் ஆக்கிரமிப்புச் செய்து குடிசைகள் போட்டுக்கொள்ளுகின்றனர்.இப்படிப் போடப்படுகிற குடிசைகள் எந்த விதமான ஒழுங்கின்றியும், திட்டமிடப்படாமலும் அமைக்கப்பட்டுத் தாறுமாறாகக காட்சியளிககின்றன.

இந்த வகையில் அமைகிற குடிசைப பகுதிகள அதாவது சேரிகள, நகர மக்களதொகையில் ஒரு கணிசமான பகுதியினரைத தமக்குள் அடக்குகின்றன. தேசிய திட்ட ஆணையம் (National Planning Commission) 1981-ஆம் ஆணடில் நடத்திய ஓர் ஆய்வின் படி நகரஙகளில் சேரிகள், நகர மக்களதொகையில் ஏறத்தாழ 20 விழுக்காடு அளவு கொணடுள்ளன. பெருநகர்களில் இந்த விழுக்காட்டு அளவு 30-இலிருந்து 40 வரை போகிறது.

சேரிகள் நகர மக்கள்தொகையில் ஒரு கணிசமான பகுதியினரைக் கொண்டிருந்தாலும் அவை மிகக் கேவலமான நிலையிலிருக்கின்றன. அங்குள்ள குடிசைகள் எந்தவித திட்டமும் இன்றித் தாறுமாறாகக் கட்டப்படுகின்றன.அந்தக குடிசைகள் மனிதர்கள்வாழ்வதற்கு எந்தவகையிலும் தகுதியிலலாமல் இருக்கின்றன. இங்குக் கழிவுநீர் போகச் சாய்க்கடை இல்லாமல இருக்கிறது. அதனால கழிவு நீர் தேங்கி எங்கும் சுகாதாரமின்றி இருக்கிறது. குப்பைக் கூளங்கள போட எதுவும் ஏற்பாடிலலை. இதனால் எங்குமகுப்பைக்கூளங்கள சிதறி ஒரே அசுததமாக இருககிறது. ஈ, கொசு, எலி முதலிய உயிரினங்கள் தோனறிப் பெருகி நோய்களை உண்டாக்குகின்றன. குடிசைக்குப் போகச் சாலையோ தெருவோ இல்லை. அவற்றில் 'தெரு விளக்குகள்' இலலை. சேரிகளில் குடிநீர் வசதி கிடைப்பதில்லை. கழிப்பிடங்களோ, குளியலறைகளோ இலலை. அதனால் மககள் சேரிகளைச் சுறறி மலம், சிறுநீர் கழித்துத தம் கடனகளை நிறைவேற்றிக கொளளுகின்றனர். இதனால அந்த வட்டாரமே சுகாதாரமற்று நாற்றமெடுககிறது.

இதன்காரணமாக அவை தம்முள வாழ்வோருடைய உடல் நலத்திற்குப் பெருங்கேடு விளைவிககின்றன. மைய அரசின் நகர, மற்றும் நாட்டுப்புறத் திட்ட நிறுவனம் (Town and Country Planning Organization) 1975-ஆம் ஆணடில் தில்லியிளள நான்கு சேரிப் பகுதிகளில் ஓர் ஆய்வு நடத்தியது. அநத ஆய்விலிருந்து அங்கு 56 விழுக்காடு குடும்பங்கள் குளிர் காய்ச்சலாலும் 27 விழுக்காடு குடும்பங்கள் ஒரு வகை வயிறறுப்போக்கினாலும் பாதிக்கப்பட்டிருந்தன என்று கண்டறியப்பட்டது. பம்பாயில்ஒரு சேரியில் நடந்த ஓர் ஆய்வில் 19 விழுக்காடு மக்களுக்கு ஒருவகையான வயிற்றுப்போக்கு இருந்ததும், அதே அளவு மக்களுக்குக் காய்ச்சலும் இருந்ததும் தெரிய வந்தன. கல்கத்தா நகரச் சேரிகளிலுள்ள மக்களின் உடல்நலம் இவற்றைவிட மோசமாக இருக்கிறது. அங்குள்ளவர்களில் 74 விழுக்காடு பேருக்குச் சுவாச நோயகளும், 9.3 விழுக்காடு பேருக்கு வயிற்றுப்போக்கும் இருக்கிறது எனறு ஓர் ஆய்வு தெரிவிக்கிறது.

சேரிகள் அல்லாத பகுதிகளுடன் ஒப்பிடுகையில் சேரிகளில் குழநதை இறப்பு விகிதம் அதிகமாக உளளது. அது தேசிய சராசரியைவிட அதிகமாகும். அங்கு ஐந்து வயது வரையிலான குழந்தைகள் ஆயிரம் பேருக்கு 97 போ என்ற அளவில் நோய்களினால இறபபதாக ஓர் ஆய்வு காட்டுகிறது. தில்லிச் சேரிகளைப் பொறுத்தவரையில் நுரையீரல் நோய் (Pneumonia), வயிற்றுப் போக்கு, மஞ்சட் காமாலை, வாந்திபேதி, காய்ச்சல் ஆகியவை குழந்தை மரணத்துக்குக் காரணங்களாக உள்ளன.

இப்படிப்பட்ட மக்களின் ஆரோக்கியமற்ற நிலைக்குச் சேரிகளின் புற நிலைகள் மட்டுமல்லாமல் சேரிவாழ் மக்களின பொருளாதார நிலையும் ஒரு காரணமாகும். நகரங்களில நிலவும், சமூக, பொருளாதாரச் சிக்கல்களில் வறுமையும் ஒன்று. மைய அரசின் நிதி அமைச்சகம் நடத்திய ஒரு மதிப்பீடு (1985-86), நகர மக்கள்தொகையில் 25 விழுக்காடு வறுமைக்கோட்டிற்குக்கீழ (அதாவது மாத வருமானம் 122 உரூபாய்க்குக் குறைவான நிலையில்) இருக்கின்றது என்று தெரிவிக்கிறது.

**நடைபாதைக் குடியிருப்புகள்:** சேரிகள் மட்டுமன்றி நடைபாதைகளும் நகரங்களில் முக்கியமாகப் பெருநகர்களில், ஏழைகள வசிக்கும் இருப்பிடங்களாக அமைகின்றன. பம்பாயில் நடைபாதைகளில் 1,25,000 பேர் வசிக்கின்றனர். சென்னையில் ஏறத்தாழ 15,000 பேர் நடைபாதைகளில் குடியிருக்கிறார்கள்.கல்கத்தாவில இதைவிட அதிகமாக மக்கள்நடைபாதைகளில் வசிககிறார்கள். நடைபாதைவாசிகள உண்பது, உறங்குவது, வாழ்வது எலலாமே நடைபாதைகளிலதான். ஆனால, அவர்களை மாநகராட்சியினர் அங்கீகரிக்க மறுத்து அவர்களுடைய உடலநலத் தேவைக்குப் பொறுபபேற்பதில்லை.

**குடிநீர் வசதியின்மை:** வீட்டுவசதியின்மை மட்டுமனறிக் குடிநீர் வசதியினமையும் நகரங்களைப் பெரிதும் பாதிக்கிறது. நகரங்களில வளர்ந்துவரும் மக்கள் தொகையின் தேவைக்கேறபக் குடிநீர் கிடைப்பது இல்லை. முக்கியமாக வறட்சியான கோடைக் காலத்தில் குடிநீர்ப் பற்றாக்குறை கடுமையடைந்து மக்களை வாட்டுகிறது. எடுத்துக்காட்டாகச்

சென்னை மாநகரின் தண்ணீர்த் தேவை ஒருநாளைக்கு 55 மிலியன் காலன்கள். ஆனால் சாதாரணக் காலத்தில்கூட 42 மிலியன் காலன்களே தண்ணீர் கிடைக்கிறது. இது கோடைக்காலத்தில் குறைந்து விடுகிறது. சென்னையில் சராசரியாக ஆண்டுதோறும் 1400 மிலியன் கியூபிக்கு மீட்டர் மழைநீர் பெய்கிறது. இதில் 600 மிலியன் கியூபிக்கு மீட்டர் நீர் கிடைத்தாலே சென்னை நகரின் குடிநீர்த் தேவையை நிறைவேற்றலாம். ஆனால் மழை நீரில் கணிசமான அளவு சேமிக்க வசதியில்லாததால் கடலில் சென்று கலந்து வீணாகிறது.

விழுக்காட்டு மக்களுக்கும், அகமதாபாதில் 33.1 விழுக்காட்டு மக்களுக்கும் குழாய்த் தண்ணீர், பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைப்பதில்லை என்று ஒரு மதிப்பீடு (1987) கூறுகிறது.

அப்படிக் கிடைக்கிற தண்ணீரும் நாள் முழுவதும் கிடைப்பதில்லை. சென்னையில் பெரும்பாலும் குடிநீர் ஒரு நாள் விட்டு ஒரு நாள்தான் கிடைக்கிறது. பெங்களூரில் ஒரு நாளில் இரண்டு மணி நேரம் மட்டுமே குடிநீர் வழங்கப்படுகிறது. இலக்னோ, பாட்னா முதலிய நகரங்களில் ஓரளவு கூடுதல் நேரத்திற்குக்





குடிநீர்ச் சிக்கல்

இப்படிப்பட்ட காரணங்களால் நகரங்களில் எல்லோருக்கும் குடிநீர் குறிப்பாகப் பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைப்பதில்லை. ஓர் ஆய்வின்படி நகர மக்களில் 50 விழுக்காட்டினருக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைப்பதில்லை (ஆனால் உலக உடல்நல நிறுவனம் ஆசிய-பசிபிக்குப் பகுதிகளில் நகர மக்களில் 70 விழுக்காட்டினருக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைப்பதில்லை என்று கூறுகிறது).

கல்கத்தாவில் 66.9 விழுக்காட்டு மக்களுக்கும், சென்னையில் 68.6 விழுக்காட்டு மக்களுக்கும், பெங்களூரில் 56.5 விழுக்காட்டு மக்களுக்கும், தில்லியில் 48.6 விழுக்காட்டு மக்களுக்கும், பம்பாயில் 41.7

குடிநீர் வழங்கப்படுகிறது. ஆனால் குழாய்களில் அது சொட்டுச் சொட்டாகத்தான் வருகிறது. இதனால் நகர மக்களுக்குப் போதிய குடிநீர் கிடைப்பதில்லை. கிடைக்கிற குடிநீரைப் பிடித்து வைப்பதற்காக அவர்கள் இரவு முழுவதும் காத்துக் கிடக்க வேண்டியுள்ளது.

**சுகாதார வழியின்மை:** நகரங்கள் மக்கள்தொகை அடர்த்தியினால் நெரிசல் அடைவதால் பல சுகாதாரக் கேடுகள் உண்டாகின்றன. கட்டுக்கடங்காத அளவில் மக்கள்தொகை பெருகிவருவதால் நகரங்களில் அதிகக் குப்பைகளும், கழிவுநீரும் சேருகின்றன. தில்லியில் நாள்தோறும் 2,300 கண்டிக்குப்பைகள் சேரு

கின்றன. சென்னையில் இதற்குச் சற்றுக் குறைவாக அதாவது 2,200 கண்டிக் குப்பைகள் நாள்தோறும் சேருகின்றன. ஆனால் மாநகராட்சிகளுக்கு நாள் தோறும் சேருகிற குப்பைகளை அகற்றப் போதிய வாகன, ஆள், நிதி வசதிகள் இல்லாததால் அவற்றின் பெரும்பகுதி நகரிலேயே தேங்கிவிடுகிறது. அகற்றப் படும் குப்பைகளைக் கொட்டவும் போதிய இடவசதி இல்லாததால் மாநகராட்சிகள் நகரங்களுக்குள்ளேயே தமது காலியிடங்களில் குப்பைகளைக் கொட்டுகின் றன. இதன் காரணமாக நகரங்களில் ஆரோக்கிய நிலை பெரிதும் பாதிக்கப்படுகிறது. பலவித நோய்கள் ஏற்படுகின்றன.

இவ்வாறே கழிவு நீர் அகற்றுவதும் பெரும் பிரச் சினையாக அமைகிறது. நகரங்களில் குறிப்பாகப் பெருநகர்களில் இலட்சக்கணக்கில் மக்கள் இருப்ப தால் நாள்தோறும் ஏராளமான கழிவுநீர் குடி யிருப்புகளிலிருந்து வெளியேறுகிறது. எடுத்துக்காட் டாகத் தில்லியில் 118 மிலியன் காலன் கழிவு நீர் நாள் தோறும் வெளியேறுகிறது. இந்த எடுத்துக்காட்டே பெருநகர்களில் நிலவும் கழிவுநீர் நிலமையை எடுத் துக் காட்டப் போதுமானதாகும்.

ஆனால், பல நகரங்களில் இப்படி இலட்சக்கணக் கான காலன் கணக்கில் சேருகிற கழிவுநீரை அகற்றச் சரியான அமைப்பு முறை இல்லை. நாட்டிலுள்ள 3400 க்கு மேற்பட்ட நகரங்களில் 200 நகரங்களில் மட்டுமே கழிவுநீர் அகற்றும் அமைப்பு முறை உள் ளது. (அவற்றிலும் எட்டு நகரங்களில் மட்டுமே கழிவு நீரைச் சுத்திகரிக்கும் அமைப்புமுறை உள்ளது). கழிவுநீர் அகற்றும் அமைப்பு முறை பல நகரங் களில் இல்லாததால் கழிவுநீர் ஆங்காங்கே தேங்கிச் சுகாதாரக் கேட்டை உண்டாக்குகிறது. இருக் கின்ற கழிவு நீர்க் குழாய்களும் பல ஆண்டு களுக்கு முன்பு அன்றைய மக்கள்தொகைக் கேற்பப் போடப்பட்டவை. இப்போது மக்கள் தொகை பல மடங்கு பெருகிவிட்ட நிலையில் அந்தக் குழாய்களை அதிகரிக்கவும், நீட்டிக்கவும் போதுமான நிதி வசதியில்லாததால், மாநகராட்சிகள் கழிவு நீர் அகற்றும் பணியில் செம்மையாகச் செயற்பட முடிய வில்லை. சென்னைப் பெருநகர் குடிநீர் வழங்கு மற் றும் வடிகால் வாரியம் நகரில் சேரும் கழிவுநீரில் 70 விழுக்காட்டை மட்டுமே வெளியேற்றுகிறது.

நகரங்களில் கழிவுநீரை அகற்றச் சரியான அமைப்பு முறை இல்லாததால் வேறு வழியில்லாத நிலையில் கழிவுநீர் ஆற்றில் விடப்படுகிறது. இதோடு குப்பை கூளங்களும் ஆற்றில் விடப்படுகின் றன. அவற்றின் அளவு இலட்சக்கணக்கான கண்டிக் கணக்கில் உள்ளது.

**போக்குவரத்துச் சிக்கல்:** மக்கள்தொகைப் பெருக் கம் ஏற்பட ஏற்பட, நகரங்கள் அதற்கு ஓரளவு ஈடு கொடுக்கும் வகையில் விரிவடைகின்றன. இவ்வாறு மக்கள் பரவலாகக் குடியமரும்பொழுது அவர்களு டைய போக்குவரத்துத் தேவையும் விரிவடைகிறது. அவர்களுக்கு அன்றாடம் அலுவலகங்களுக்கும், பணி மனைகளுக்கும், தொழிற்சாலைகளுக்கும் போக பிறகு வீடு திரும்பப் போக்குவரத்துப் பயன்படுகிறது. இவ்வாறு மக்களின் எண்ணிக்கையும், மக்க ளின் குடியிருப்புகளும் அலுவலகங்களும் பெருகப் பெருக அதையொட்டி நகரின் இடப்பரப்பும் விரிய, நகரப் போக்குவரத்துத் துறையில் பெருத்த மாற்றம் ஏற்படுகிறது. பலவகையான போக்கு வரத்துச் சாதனங்கள் ஏற்படுத்தப்பட்டு மக்களுடைய போக்குவரத்துத் தேவை சமாளிக்கப்படுகிறது.

தில்லியில் 1981-இல் 5.35 இலட்சம் மோட்டார் வாகனங்கள் இருந்தன. பம்பாயில் 2.82 இலட்சம் வாகனங்களும், கல்கத்தாவில் 1.83 இலட்சம் வாக னங்களும்,பெங்களூரில் 1.91 இலட்சம் வாகனங்களும் சென்னையில் 1.22 இலட்சம் வாகனங்களும் இருந் தன.இந்த நகரங்களில் 1986–இல் வாகன எண்ணிக்கை ஏறத்தாழ இருமடங்காகியது. தில்லியில் 10.42 இலட் சம் எனவும், பம்பாயில் 5.14 இலட்சம் எனவும் கல்கத்தாவில் 3.70 இலட்சம் எனவும், பெங்களூரில் 3.58 இலட்சம் எனவும், சென்னையில் 2.30 இலட்சம் எனவும் மோட்டார் வாகனங்களின் எண்ணிக்கை உயர்ந்தது. நகர மக்களுடைய போக்குவரத்துத் தேவை அதிகரிப்பே மோட்டார் வாகனங்களின் அதிகரிப்புக்குப் பெரிதும் காரணமாகும். இத்தகைய அதிகரிப்பினால் நகர மக்களுடைய போக்குவரத்துத் தேவை ஓரளவு நிறைவேறுகிறது.

ஆயினும் மோட்டார் வாகனங்களின் எண்ணிக்கை அதிகரிப்பினால் போக்குவரத்து நெரிசல் மிகுந்து விட்டது. போக்குவரத்து நெரிசல் இல்லாத நகரங் களை இப்பொழுது இல்லையெனும் அளவுக்குப் போக்கு வரத்து நெரிசல் மிகவும் சாதாரணமாகி விட்டது. குறிப்பாக உச்சி நேரங்களில்(Peak Hours) போக்குவரத்து நெரிசல் கடுமையாக இருக்கிறது.

போக்குவரத்து நெரிசல் மட்டுமன்றிச் சாலை விபத்துகளும் இந்தப் போக்குவரத்து வாகனங்களின் அதிகரிப்பினால் ஏற்படுகின்றன. இந்தியாவில் ஒவ் வோர் ஆண்டும் 2 இலட்சம் சாலை விபத்துகள் ஏற் படுகின்றன.அவற்றில் 39,000 பேர் உயிரிழக்கின்றனர் என்று ஒரு மதிப்பீடு கூறுகிறது. உலக மொத்த வாகனங்களில் ஒரே ஒரு விழுக்காடுதான் இந்தியா வில் உள்ளது. ஆயினும் உலகின் சாலை விபத்து களில் ஆறு விழுக்காடு இந்தியாவில் தான் நிகழ்கிறது.


போக்குவரத்து நெரிசல்

இதற்குக் காரணம் போக்குவரத்து வாகனங்களின் எண்ணிக்கைக்கு ஏற்பச் சாலைகளின்எண்ணிக்கையோ பரப்பளவோ அதிகரிக்கப்படாததே ஆகும். பொதுவாக ஒரு நகரப் பரப்பளவில் 20-இலிருந்து 25 விழுக்காடு வரை சாலைகளாக இருக்கவேண்டும் என்று போக்குவரத்து வல்லுநர்கள் கூறுகிறார்கள். ஆனால், இந்திய நகரங்களில் சாலைகளின் பரப்பளவு நகரப் பரப்பளவில் 3-இலிருந்து 15 விழுக்காடு வரை தான் இருக்கிறது. கல்கத்தாவில் சாலைகள் நகரப்பரப் பளவில் 3 விழுக்காடு தான் இருக்கிறது. பம்பாயிலும் தில்லியிலும் சென்னையிலும் 10-இலிருந்து 15 விழுக்காடு வரை இருக்கிறது. சாலைகளின் பரப்பளவு குறைவாக மட்டுமன்றிப் பெரிதும் மாறாமலும் இருக்கிறது. சாலைப் போக்குவரத்து வாகனங்கள் 1981-இலிருந்து 1986 வரைக்குட்பட்ட ஐந்தாண்டுக்காலத்தில் 100 விழுக்காடு அதிகரித்துள்ளன. ஆனால் அவை ஓடுகிற சாலைகளின் எண்ணிக்கையும், நீள அகலமும் மாறாமலே இருக்கின்றன. பம்பாயில் 1981-இல் 2.82 இலட்சமாக இருந்த வாகனங்களின் எண்ணிக்கை, 1986-இல் 5.14 இலட்சமாகவும், 1987-இல் 5.6 இலட்சமாகவும் உயர்ந்தது. ஆயினும் 1981-இல் சாலைகள் எந்த அளவில் இருந்தனவோ (1400 கி.மீ.) அதே அளவில்தான் 1987-இலிலும் இருந்தன. இப்படிச் சாலைகளின் அளவு மாறாமல் போக்குவரத்து வாகனங்கள் மட்டும் அதிகரிப்பதால், சாலைகளில் வாகனங்களின் நடமாட்டம் அதிகரித்துப் போக்குவரத்தில் ஒரு நெருக்கடி ஏற்படுகிறது. போக்குவரத்து நெரிசலோடு சாலை விபத்துகளும் ஏற்படுகின்றன. 1,000 வண்டிகளுக்கு 34.6 விபத்துகள் என்ற அளவில் சாலை விபத்துகள் ஏற்படுகின்றன. மற்றைய நாடுகளுடன் குறிப்பாக அமெரிக்கா (14), பிரான்சு (9.4), சுவீடன் (4.8) ஆகியவற்றுடன் ஒப்பிடுகையில் இந்த விபத்து விகிதம் மிக அதிகம்.



சாலைகள் மட்டுமன்றி வாகனங்கள் நிறுத்தும் இடப்பரப்புகளும் (Parking Spaces) போக்குவரத்து வாகனங்களின் எண்ணிக்கைக் கேற்பப் போதுமான அளவில் அமையாததால், நகரங்களில் போக்குவரத்து நெருக்கடி ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாகப் பம்பாயின் நாரிமன் முனைப் பகுதியில் ஒரு நாளில் குறைந்தது 50,000 வாகனங்கள் நுழைகின்றன. ஆனால் அங்கு வாகனங்கள் நிறுத்துவதற்கு ஒதுக்கப்பட்டுள்ள இடப்பரப்பு 1200 வாகனங்களுக்கு மட்டுமே போதுமானது. இந்த நிலையில் இந்த அளவை மீறி வாகனங்கள் வரும்போது அத்தகைய இடங்களில் போக்குவரத்து நெருக்கடி ஏற்படுவதியல்பே.

**சூழ்நிலை மாசு:** நகரங்கள் பெரும்பாலும் தம் மகத்தே தொழிற்சாலைகளையும் பட்டறைகளையும் கொண்டிருக்கின்றன. இவை நாட்டின் பொருளாதாரத்தில் முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கின்றன. மக்களுக்கு வேலை வாய்ப்புகளையும், பொருளாதாரச் சேவைகளையும் அளிக்கின்றன. ஆயினும் இவை நகரச் சூழ்நிலைக்குக் கேடு-மாசு விளைவிப்பனவாக இருக்கின்றன. நகரின் சூழ்நிலைத் தூய்மை கெட இவை ஓரளவு காரணமாகின்றன. நகரின் தண்ணீரும் காற்றும் மாசுபடவும், அதனால் மக்களின் உடல்நலம் கெடவும் இவை காரணமாகின்றன

**தண்ணீர் மாசு:** நகரங்களிலுள்ள பெரும்பாலான தொழிற்சாலைகளுக்குக் கழிவுப் பொருளகளைப் பாதுகாப்பாக வெளியேற்ற வசதி – குறிப்பாக இடவசதி இல்லை. தொழிற்சாலைகளையொட்டி மக்களுடைய குடியிருப்புகள் ஏற்பட்டுவிடுவதால் தொழிற்சாலைகள் தமது கழிவுப்பொருள்களை வெளியேற்ற வழியில்லாமல் நகர ஆறுகளில் விடுகின்றன. ஏற்கனவே நகரக் கழிவுநீர் ஆறுகளில் கலக்கும் நிலையில் தொழிற்சாலைகளின் கழிவுப் பொருள்களும் அதோடு சேர்ந்து கலப்பதால் ஆறுகள் அளவிட முடியாத அளவுக்கு மாசுபட்டுத் தூய்மை இழக்கின்றன.

கங்கையாற்றில் அதன் கரைகளில் அமைந்துள்ள கான்பூர், அலகாபாது, வாரணாசி, பாட்னா முதலிய நகரங்களிலிருந்து நாள்தோறும் 900 மிலியன் கழிவுநீர் கலக்கிறது இதோடு குப்பை கூளங்களுடன் பிணங்களும் (ஆண்டுதோறும் ஆயிரம் பிணங்கள் கங்கையில் வீசப்படுகின்றன என்று அதிகாரப் பூர்வ

மற்ற ஒரு மதிப்பீடு கூறுகிறது) கங்கையில் எறியப்படுகின்றன. இதன் காரணமாகக் கங்கையின் தூய்மை கெட்டு உலகிலேயே அதிகமான மாசுபட்ட ஆறு என்ற அவப் பெயரை ஏற்றுள்ளது. இந்தக் கழிவு நீரில் 75 விழுக்காடு வீடுகள், அலுவலகங்கள் ஆகியவற்றிலிருந்து வெளிவருகிறது. மீதி 25 விழுக்காடு தொழிற்சாலைகளிலிருந்து வெளிவருகிறது.

காவிரியாற்றில் நாள்தோறும் 50 கோடி இலிட்டருக்கும் மேலாகக் கழிவுப்பொருள்கள் வந்து கலக்கின்றன என்று சீனிவாசன் குழு என்ற ஓர் ஆய்வுக் குழு கண்டுபிடித்துள்ளது. காவிரியும், அதன் கிளைநதிகளும் பாயும் இடங்களுக்கருகே நிறுவப்பட்டிருக்கும் தொழிற்சாலைகள், சாயப் பட்டறைகள் ஆகியவற்றிலிருந்து நாள்தோறும் வெளியேற்றப்படும் கழிவுப் பொருள்களாலும், நகர்ப்புறங்களிலிருந்து வெளியேறும் சாய்க்கடை நீராலும் காவிரி எந்த அளவுக்கு மாசுபடுத்தப்பட்டுள்ளது என்று அக்குழு தெரிவிக்கிறது.

இதே நிலைமைதான் கருநாடகாவில் உள்ள கபினி, பத்ரா, துங்கபத்திரா ஆறுகளுக்கும்; ஆந்திராவில் ஓடும் கிருட்டிணா, கோதாவரி, பெண்ணாறு, துங்கபத்திரா, மூசி ஆறுகளுக்கும்; கேரளாவில் பாயும் கண்டேயப்பர், மூவாட்டுப்புழை ஆகிய ஆறுகளுக்கும்; குசராத்தில் பாயும் மகி, தபதி, நருமதா, சபர்மதி ஆறுகளுக்கும்; இராசசுத்தானிலுள்ள உலூனி, பண்டி, கார்க்கரா, பார்வதி, பனாசு, சம்பல் ஆகிய ஆறுகளுக்கும்; உத்தரப்பிரதேசத்தில் ஓடும் காளி, யமுனை, கோமதி ஆகிய ஆறுகளுக்கும்; பீகாரிலும், மேற்கு வங்காளத்திலும் ஓடும் தாமோதர் ஆற்றுக்கும்; மேற்கு வங்காளத்தில் ஓடும் மகாநதி, சாங்கினி, உருசிகுல்யா ஆகிய ஆறுகளுக்கும் உள்ளன. இந்த ஆறுகள் நகரப்பகுதிகளில்தான் மாசுபடுகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஆறுகள் மட்டுமல்லாமல் ஏரிகளும் கழிவுநீரால் மாசுபடுகின்றன. சிரீநகரில் உள்ள தல் ஏரியும், நாகின் ஏரியும், மணிப்பூரில் உள்ள உலோக்டக்கு ஏரியும், சில்கா (ஒரிசா) நகரத்து ஏரியும், பரத்பூர், இராம்கர் (இராசசுத்தான்) ஆகிய இடங்களிலுள்ள ஏரியும், உதகமண்டலத்து ஏரியும், கொடைக்கானல் ஏரியும், ஐதராபாது-செகந்தராபாது நகரங்களின் உசென்சாகர் ஏரியும் கழிவுநீர் பாய்ந்து அசுத்தமடைந்து இருக்கின்றன.

தொழிற்சாலைகளிலிருந்து குறிப்பாக இரசாயனத் தொழிற்சாலைகள், தோல் பதனிடும் தொழிற்சாலைகள் ஆகியவற்றிலிருந்து வெளியேறும் கழிவுப் பொருள்களில் நச்சு வேதியல் பொருள்கள் அடங்கியிருக்கின்றன. ஆகவே அவை ஆற்றுநீரை அமிலத்தன்மை உடையதாக்கி அதில் வாழும் உயிரினங்களைக் கடுமையாகப் பாதிக்கின்றன. காவிரியாற்றில் அதன் கரையிலுள்ள பல்வேறு தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறும் மரச்சக்கை, வருணச் சாயங்கள், சாராயக் கழிவுகள், வெண் துத்தம், அலுமினியம் நீரக உயிரகை (Aluminium Hydroxide) போன்ற இரசாயனப் பொருள்கள் முதலியவை ஆற்று நீரையும், அதன் உயிரினங்களையும் கடுமையாகப் பாதிக்கின்றன. பள்ளிப்பாளையத்திலுள்ள காகிதத் தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் மரச்சக்கை காவிரியாற்றில் மீன்களுக்குத் தேவையான மிதவை உயிர்கள் என்ற நுண்ணுயிரினத்தைக் கிட்டத்தட்டக் கொன்றே விட்டது. இதனால் பல இடங்களில் கெண்டை மீன் குஞ்சுகள் இலட்சக் கணக்கில் சாகின்றன என்று சீனிவாசன் குழு கூறுகிறது. இதே நிலைமையே கேரளாவிலுள்ள வெல்லூர் காதி ஆலை அமைந்துள்ள மூவாட்டுப் புழை ஆற்றின் உயிரினங்களுக்கும் அமைந்துள்ளது என்று ஓர் ஆய்வறிக்கை கூறுகிறது.

உயிரினங்களைக் கொல்வது மட்டுமன்றி அவற்றின் உடலுக்குள்ளும் நச்சு இரசாயனக் கழிவுகள் உட்புகுந்துவிடுகின்றன. இதனால் அந்த உயிரினங்களைப் பிடித்து உண்ணும் மக்களின் உடலிலும் நச்சுத்தன்மை குடிபுகுந்து அவர்களுக்கு உடல்நலக் கேட்டை உண்டாக்குகிறது.

**காற்று மாசு:** குடிக்கும் நீர் மட்டுமன்றிக் கிடைக்கும் காற்றும் நகரங்களில் மாசுபட்டே அமைகிறது. இக்காலத்திய நகரங்களில் தூய்மையான காற்றுக்கே இடமில்லாமல் போய்விட்டது. தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறும் புகையும், மோட்டார் வாகனங்கள் வெளியேற்றும் புகையும் காற்றை மாசுபடுத்துகின்றன.

தொழிற்சாலைகளிலிருந்தும், மோட்டார் வாகனங்களிலிருந்தும் வெளிவரும் புகை பல நச்சு இரசாயனத் துகள்களைக் கொண்டிருக்கிறது. இந்தத் துகள்கள் அடங்கிய புகை காற்றில் கலக்கும்போது காற்று மாசு படிந்து நச்சுத்தன்மை அடைகிறது.

குறிப்பாகச் சிமெண்டு, இரும்பு, எஃகு போன்ற தொழிற்சாலைகள், அனல் மின் நிலையங்கள், எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலைகள் அமைந்துள்ள நகரப்பகுதிகளில் காற்று மாசு மிகுந்த அளவில் இருக்கிறது. ஒவ்வொரு நாளும் பம்பாயில் குறைந்தது 1500 கண்டி மாசுத் துகள்கள் காற்றில் கலக்கின்றன என்று ஒரு மதிப்பீடு கூறுகிறது. தொழில் நகரங்களின் சூழ்நிலையில் காற்றில் மாசுத் துகள்கள் கலப்பது சாதாரணமாதுவைதான்; தவிர்க்க இயலாததுங்கூட. ஆயினும், மேலைநாடுகளில் பொதுவாகக் காற்றில்

கலக்கிற மாசுத்துகள்கள் அளவைவிடப் பம்பாயில் காற்றில் கலக்கும் மாசுத் துகள்களின் அளவு ஐந்து மடங்கு அதிகமாக இருப்பதாக ஆய்வறிக்கைகள் புலப்படுத்துகின்றன.

சென்னையிலும், இவ்வாறே காற்றுப் பெரிதும் மாசுபட்டிருக்கிறது. பேசின் பாலம், எண்ணூர் ஆகிய இடங்களிலுள்ள அனல் மின் நிலையங்களும், மணலி எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலையும் அதிகமான மாசு படிந்த புகையை வெளிவிட்டு நகரின் காற்றை அசுத்த மாக்குகின்றன. சென்னையில் பாரி முனை, வால் டாக்சு சாலை, சென்ட்ரல் நிலையம் ஆகிய பகுதி களில் மட்டும் ஒரு கனசதுர மீட்டரில் 260-இலிருந்து 385 மைக்ரோகிராம் வரை கரிய ஒருயிரகை கந்தக ஈருயிரகை அடங்கிய மாசுத் துகள்கள் காற்றில் கலக்கின்றன பேசின் பாலம் பகுதியில் மட்டுமே 730 மைக்ரோ கிராம் மாசுத் துகள்கள் காற்றில் கலந்திருக்கின்றன என்று ஓர் ஆய்வறிக்கை கூறுகிறது. இந்தக் காற்று மாசு அளவு, உலகிலுள்ள முக்கிய பெரு நகர்களில் காணப்படும் காற்று மாசு அளவைவிட இரண்டு மடங்கு பெரியதாகும்.

கல்கத்தா, தில்லி ஆகிய பெருநகர்களில் முறையே ஒரு கனசதுரமீட்டரில் 604 மைக்ரோகிராம் மாசுத் துகள்களும், 491 மைக்ரோகிராம் மாசுத் துகள்களும் காற்றில் கலந்திருக்கின்றன என்று ஓர் ஆய்வு கூறுகிறது. கல்கத்தாவில் ஒருவர் தினமும் சுவாசிக்கும் காற்று இரண்டு பாக்கெட்டு வெண் சுருட்டு வெளியிடும் புகையை உள்ளிழுப்பதற்கு ஒத்தி ருக்கிறது என்று ஒரு மதிப்பீடு கூறுகிறது. உலக உடல் நல நிறுவனம் காற்றில் 125 மைக்ரோகிராமுக்கு மேலேயே மாசுத்துகள்கள் போனால் அது காற்று மாசாகும் என்று கூறுகிறது. இந்தியாவைப் பொறுத்த அளவில் நாக்பூரில் உள்ள தேசிய சூழ் நிலைப் பொறியியல் ஆராய்ச்சி நிறுவனம் (NEERI) 150 மைக்ரோ கிராம் வரை அனுமதிக்கிறது. ஆயி னும் இந்தியப் பெருநகர்களில் ஏற்படும் காற்று மாசு இந்த அளவைவிட மிகுந்தே இருக்கிறது.

மாசுபட்ட காற்றை நகர மக்கள் சுவாசிப்பதனால் அவர்களுக்குப் பலவித உடல்நலக் கேடுகள் ஏற்படு கின்றன. இருதயச் செல்குழாய் நாளச் சிக்கல்கள், கண் பார்வைக் குறைவு, நுரையீரல் நோய்கள், தலை வலி, சுவாச நோய்கள், ஈரல் மற்றும் சிறுநீரகக் கோளாறுகள், இரத்தச் சிவப்பணுக்கள் பாதிப்பு என்று பல்வேறு உடல்நலக் கேடுகள் ஏற்படுகின்றன. பம்பாய் மாநகராட்சி, 1981-ஆம் ஆண்டில் பம்பாயில் அதிகக் காற்று மாசு ஏற்படுகிற சயான்-செம்பூர், இலால்பாக்கு முதலிய இடங்களில் நகரின் சராசரி அளவைவிட அதிகமான நோய்கள் காணப்படுவதாகக் கண்டறிந்தது. அப்பகுதிகளில் வாழ்ந்த மக்களில் 12 விழுக்காடு பேர் நுரையீரல் வீக்கம் (Emphysema) காசநோய் ஆகிய நோய்களுக்கும், 9 விழுக்காடு பேர் மார்புச்சளி (Bronchitis) நோய்க்கும், 20 விழுக்காடு பேர் தடுமனுக்கும், 12 விழுக்காடு பேர் தலைவலிக்கும், 15 விழுக்காடு பேர் கண் நோவு களுக்கும், 9 விழுக்காடு பேர் தோல் அழற்சி நோய்க் கும் (Dermatitis) ஆளாகியிருந்தது கண்டுபிடிக்கப் பட்டது. மேலும், அந்தக் காற்று மாசுப் பகுதிகளில் மற்றப் பகுதிகளைவிடப் புற்றுநோய் பீடிப்பு இரண் டரை மடங்கும், இதயநோய்கள்பீடிப்பு மூன்று மடங் கும் அதிகமாக இருந்தது கண்டறியப்பட்டது.

**ஒலி மாசு:** தானியங்கி மோட்டார் வாகனங் களும், தொழிற்சாலைகளும் காற்று மாசை மட்டு மன்றி ஒலி மாசையும் (Noise Pollution) உண்டாக்கு கின்றன. உலக உடல்நல நிறுவனம் 45 அலகு அளவுதான் ஒலி இருக்கலாம் என்று நியதி வரைந் திருக்கிறது. ஆனால் நகரங்களில் இப்பொழுது தானியங்கி வாகனங்கள் எழுப்பும் ஒலியாலும், தொழிற்சாலை இயந்திரங்கள் ஏற்படுத்தும் இரைச் சலாலும் ஒலி அளவு சாதாரணமாக 70 அலகு களுக்கு மேல் காணப்படுகிறது. பம்பாயில் சாதாரண மாகவே ஒலிஅளவு 80-90 தெசிபல் அளவு இருக்கிறது. இவ்வாறே சென்னையிலும் சராசரி 70 தெசிபல் களுக்கு ஒலி அளவு இருக்கிறது. மதுரையில் பல இடங் களில் 61-இலிருந்து 90 தெசிபல் வரை ஒலி அளவு இருக்கிறது. பொதுவாக இந்திய நகரங்களில் ஒலி அளவு 57-இலிருந்து 91 தெசிபல் வரை இருப்பதாக ஓர் ஆய்வு கூறுகிறது.

சாதாரணமாக 70 தெசிபல்களுக்கு மேல் ஒலி அளவு இருந்தால் அது ஒலி மாசு எனப்படும். இந்த ஒலி மாசு கேட்கும் சக்தியைப் பாதிக்கும். மேலும் உறக்கமின்மைநோய் (Insomnia), அளவுக்கு அதிக மான இரத்த அழுத்தம் (Hypertension), பார்வை மந் தம் முதலியகோளாறுகளைக்கூட உண்டாக்குமென்று மருத்துவ ஆய்வு அறிக்கைகள் கூறுகின்றன. இந்தப் பாதிப்புகள் உடனடியாக வராவிட்டாலும் சில ஆண்டுகளில் அவைவெளிப்பட்டுவிடும்.

இவ்வாறு பலவிதமான சிக்கல்கள் நகரங்களை அலைக்கழிக்கின்றன. இவற்றோடு வறுமையும், பிச்சையெடுப்பும், வேலையின்மையும் சேர்ந்து நகரங் களின் சமூகச் சூழ்நிலையைப் பாதிக்கின்றன. இவை யன்றிக் குற்றம், இளஞ்சிறார் குற்றம் முதலிய சமூக விரோத நடவடிக்கைகளும் நகரங்களில் மலிந்து காணப்படுகின்றன. பம்பாயில் 1961-ஆம் ஆண்டில் 19,379 குற்றங்கள் நடைபெற்றன. இந்த எண்ணிக்கை 1971-இல் 25,066 என்றும் 1981-இல் 35,263 என்றும்

உயர்ந்தது. தில்லியில் 1961-இல் 9,983 என்றிருந்த குற்றங்களின் எண்ணிக்கை 1971-இல் 26,433 என்றும், 1981-இல் 29,311 என்றும் உயர்ந்தது. பெங்களூரில் 1961-இல் 4,317 குற்றங்கள் நிகழ்ந்தன. இந்த எண்ணிக்கை 1971-இல் 8,961 என்றும், 1981-இல் 17,122 என்றும் உயர்ந்தது. சென்னையில் 1961-இல் 5,686 என்றும், 1971-இல் 7,205 ஆகவும், 1981-இல் 15,693 ஆகவும் உயர்ந்தது. கல்கத்தாவில் 1961-இல் 14,161 ஆகவும், 1971-இல் 10,911 ஆகவும், 1981-இல் 13,951 ஆகவும் அமைந்தது. அகமதாபாதில் 1961-இல் 436 ஆகவும், 1971-இல் 3,060 ஆகவும் இருந்த குற்றங்களின் எண்ணிக்கை 1981-இல் 10,502ஆக உயர்ந்தது.

குற்றங்களோடு சூதாட்டம், போதை மருந்துப் பழக்கம், பரத்தைமை போன்ற பிரச்சினைகளும் நகரங்களில் தலைதூக்கி நிற்கின்றன.

நகர வாழ்வில் அமையும் யாரும் அறியா நிலையும், நெறிமுறை சாராக் கட்டுப்பாடின்மையும், குற்றங்களும், பிற கேடுகளும் நடைபெறுவதற்குப் பெரிதும் துணை புரிகின்றன.

இவற்றையெல்லாம்விட நகர வாழ்வே ஒரு சுமையாக அமைந்துவருகிறது. பல்வேறு சிக்கல்களினால் நகர வாழ்வு அமைதியற்றுப் போகிறது. அவசர கதியில் மக்கள் தம் வாழ்வை நடத்துகின்றனர். எதிலும் எங்கும் அவசரம் என்ற பதட்ட நிலைமையே காணப்படுகிறது. இந்த அவசரமும், பதற்றமும் நகர மக்களுக்கு நரம்பியல் சிக்கல்களைத் தோற்றுவித்து அவர்களுடைய உடல் மற்றும் மனநிலையை மிகுதியும் பாதிக்கின்றன. சி.என்.ந.

**நகரச் சூழலியல்:** சூழலியல் என்பது ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அங்குள்ள கூறுகள் எவ்வாறு தாம் இருக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப அனுசரித்து நடந்து கொள்ளுகின்றன என்பதையும், அத்தகைய நிலையில் அவை எவ்வாறு தமக்குள் ஓர் உறவை அமைத்துக் கொள்ளுகின்றன என்பதையும் ஆராயும் அணுகுமுறையாகும். இயற்கைச் சூழலியல், தாவரங்களும் விலங்குகளும் தாம் வாழும் சூழ்நிலையில் நிலவும் நிலைமைகளுக்கேற்ப எவ்வாறு அனுசரித்து நடந்து கொள்ளுகின்றன என்பதை ஆராய்கிறது. இவ்வாறே நகரச் சூழலியலும் (Urban Ecology) நகரச் சமூகத்தில் இருக்கும் மக்களும், பல்வேறு நடவடிக்கைகளில் ஈடுபடும் நிறுவனங்களும் தம்மை நகரச் சூழ்நிலையில் நிலவும் இட நிலைமையில் எவ்வாறு ஒத்தமைத்துக் கொள்ளுகின்றன என்பதை ஆராய்ந்து விளக்குகிறது.

எந்த ஒரு சூழ்நிலையிலும் அங்கு வாழும் கூறுகள் சூழ்நிலையின் நிலைமைக்கேற்பக் கட்டுப்படுகின்றன. ஓர் இயற்கைச் சூழ்நிலையில் வாழும்போது விலங்குகளும், மனிதர்களும் அந்தச் சூழ்நிலையின் நிலைமைகளுக்கேற்பக் கட்டுப்படுகின்றனர். அவற்றின் எண்ணிக்கையும், வளர்ச்சி விகிதமும், அடர்த்தியும், இயக்கமும் சூழ்நிலையின் நிலைமைக் கேற்ப அமைகின்றன. நிலைமை சாதகமாகவும் ஊக்குவிப்பதாகவும் தாராளமாகவும் இருக்குமானால் இந்த எண்ணிக்கை, அடர்த்தி முதலிய கூறுகள் கட்டுக்குள் இருப்பதில்லை. ஆனால் நிலைமை கட்டுப்பட்டதாக இருந்தால், இந்தக் கூறுகளும் கட்டுக்குள் இருக்க வேண்டிய நிலைமை ஏற்படும். ஆனால், விலங்குகளைப் போல மனிதனுடைய வாழ்க்கை சூழ்நிலையின் நிலைமைகளுக்கேற்ப நிருணயமாவது கிடையாது. மனிதர்கள் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தித் தாம் வாழும் சூழ்நிலையின் நிலைமைகளை மாற்றியமைத்து அதற்கேற்பத் தம்மை ஒத்தமைத்துக் கொள்ளுகிறார்கள். இத்தகைய நிலையில் அவர்கள் ஒரு நிலையமைப்பை ஏற்படுத்திக் கொண்டு தமது வாழ்க்கையை நடத்துகிறார்கள்.

நகரச் சூழ்நிலையின் முக்கியமான கூறு அதன் இடப்பரப்பு ஆகும். இந்தச் சூழ்நிலைக் கூறு வரையறுக்கப்பட்ட அளவில் தான் அமைந்திருக்கும். இதன் காரணமாக நகரச் சூழ்நிலையில் வாழும் மக்கள் தொகை, இந்தச் சூழ்நிலைக் கூறுக்கேற்பப் பகிர்ந்து அமைகிறது. நகரத்தில் நடைபெறும் நடவடிக்கைகளும் (அதாவது தொழில், வாணிகம், பண்பாடு முதலிய நடவடிக்கைகள்) இடப்பரப்புக்கு ஏற்பப் பகிர்ந்து அமைகின்றன. இடப்பரப்பின் மீது மக்கள் தொகையின் நகர நடவடிக்கைகளின் அழுத்தமும் ஆக்கிரமிப்பும் மிகும்போது, இடப் பகிர்வுக் கோலம் நிலைமைக் கேற்ப மாற்றமடைந்து ஒத்தமைகிறது.

**சூழலியல் செயற்பாங்குகள்:** இவ்வாறு இடப்பரப்புக் கேற்ப நகரத்தில் மக்கள் தொகையும் நகர நடவடிக்கைகளும் மற்றும் அவற்றைச் சார்ந்த நிறுவனங்களும் ஒத்தமைந்துப்பகிர்வடைகின்றன. இப்படி அவை ஒத்தமைந்துப் பகிர்வடையும் போக்கில் சில செயற்பாங்குகள் அமைகின்றன. இந்தச் செயற்பாங்குகளைச் சூழலியற் செயற்பாங்குகள் (Ecological Processes) என்பர். இவை பொதுவாக ஆறு வகைப்படும். அவை: ஒருமுகப்படுதல் (Concentration), ஒருமுகப்பாடு தளர்தல் (Deconcentration), மையப்படுதல், தனிமைப்படுத்தப்படுதல் (Segregation), படையெடுப்பு, படையெடுப்புத் தொடர்தல் ஆகியன.

**ஒருமுகப்படுதல்:** ஒரு குறிப்பிட்ட காலத்தில் நகரத்தின் ஒரு பகுதி மக்களும், நகர நடவடிக்கைகளும் ஒருமுகப்பட்டு அடர்ந்து இருந்தால், அது ஒருமுகப்படுதல் எனப்படும். ஏதாவதொரு நகரத்தின் மக்கள்தொகை, நகர நடவடிக்கைகள் ஆகியவற்றின்

பகிர்வு சம்பந்தமான வரைபடத்தை ஆராய்ந்து பார்த்தால், அதில் ஒரு சில பகுதிகளில் மட்டும் மக்கள் தொகையும், நகர நடவடிக்கைகளும் ஒரு முகப்பட்டு அடர்ந்து குவிந்திருப்பதைக் காணலாம். அப்பகுதிகளில் ஒருமுகப்படுவதற்குச் சாதகமான நிலைமைகள் அமைந்திருக்குமாதலால், மக்களும், நகர நடவடிக்கைகளும் அங்கு ஒருமுகப்பட்டு அமை கின்றன. நிலத்தின் நிலைமை, கடைகள், போக்கு வரத்து முதலிய வசதிகள் இருக்கின்ற இடங்களில் மக்களின் குடியிருப்புகள் ஒருமுகப்பட்டு இருக்கும். வங்கி வசதி. போக்குவரத்து வசதி, மூலப்பொருள் கிடைக்கும் நிலைமை முதலிய வசதிகள் கிடைக்கிற இடங்களில் தொழில், வாணிக நடவடிக்கைகள் ஒரு முகப்பட்டு இருக்கும்.

**ஒருமுகப்பாடு தளர்தல்:** ஒரே பகுதியில் ஒருமுகப் பட்டுக் குவிந்துள்ள மக்களும், நகர நடவடிக்கைகளும் இட நெருக்கடியினால் இடர்ப்படும் போது, அவை ஒருமுகப்பாடு தளர்வடையும். ஒருமுகப்பாட்டுப் பகுதிகளிலிருந்து நாற்புறமும் மக்களும் நடவடிக்கை களும் வெளியேறும்போது, அதனால் ஒருமுகப்பாடு தளர்தல் நிகழும். ஒருமுகப்பாட்டுப் பகுதிகளிலிருந்து நாற் புறமும் மக்களும், நடவடிக்கைகளும் வெளி யேறும்போது, அதனால் ஒருமுகப்பாடு தளர்வது மட்டுமன்றி, நகர விரிவும் ஏற்படும். இட நெருக்கடி யினால் ஒருமுகப்பாட்டுப் பகுதிகளிலிருந்து மக்கள் புறநகர்ப் பகுதிகளுக்குக் குடியேறும்போது, அவர் களுடைய தேவைகளை நிறைவேற்றும் பொருட்டுப் பணித்துறை ஊழிய நிறுவனங்களும் அவர்களைத் தொடரும். இவ்வாறு புறநகர்ப் பகுதிகளில் மக்களும், அவர்களைத் தொடர்ந்து பணித்துறை ஊழியம் சம்பந்தப்பட்ட நிறுவனங்களும் பரவும்போது,அங்குக் குடிதண்ணீர், மின்சார, மருத்துவ வசதிகளும் பெருகு கின்றன. சாலை வசதிகளும், போக்குவரத்து வசதி களும் மிகுகின்றன. இவை மேன்மேலும் ஒருமுகப் பாடுதளர வழி வகுக்கும்.

**மையப்படுதல்:** நகரப் பொருளாதார, பணித் துறை ஊழிய நடவடிக்கைகள் பொதுவாக நகரில் பரந்து அமைவதில்லை. அவை குறிப்பிட்ட இடங் களில் மட்டும் கொத்தாகத் திரண்டு மையம் கொள் ளும். இந்தச் செயற்பாங்கு மையப்படுதல் எனப் படும். கடை வணிகம் ஓரிடத்திலும், தொழிற் சாலைகள் பிறிதோரிடத்திலும், வங்கித் தொழில் மற்றோரிடத்திலும், பத்திரிகைத் தொழிலும் கேளிக்கை விளையாட்டுகளும் வெவ்வேறு இடத் திலும் எனப் பல்வேறு நடவடிக்கைகள் தனித்தனி இடங்களில் திரண்டு மையம் கொள்ளும். பொது வாக, இந் நடவடிக்கைளின் மையங்கள் நகரின் நடுப் பகுதியில் தான் அமையும்.

**தனிமைப்படுத்தப்படுதல்:** இது ஒரு வகையான ஒருமுகப்படுதல் ஆகும். ஒரு குறிப்பிட்ட அமிசத்தின் அடிப்படையில் மக்களோ நடவடிக்கைகளோ வகைப் படுத்தப்பட்டு, அவற்றுள் சில குறிப்பிட்ட வகைகள் (அதாவது சில குறிப்பிட்ட வகை மக்களோ, நட வடிக்கைகளோ) தனிமைப்படுத்தப்பட்டு நகரின் குறிப்பிட்ட பகுதிகளில் மட்டும் அமையும் வண்ணம் ஒதுக்கப்பட்டால், அது தனிமைப்படுத்தப்படுதல் எனப்படும். விலை மகளிர் தனிமைப் படுத்தப்பட்டுச் 'சிவப்பு விளக்குப் பகுதி'யில் ஒதுக்கி வைக்கப்படு வதுண்டு. அவ்வாறே சூதாடுமிடங்கள் தனியொரு பகுதியில் ஒதுக்கி வைக்கப்படுவதுண்டு. ஓட்டை உடைசல் கார்களைக் கொண்டு போய்க் கொட்டு வதற்கென்று ஒரு தனிப்பகுதி பல நகரங்களில் ஒதுக்கி வைக்கப்படுவதுண்டு.

தனிமைப்படுத்தப்படுதல் தன்னியல்பாகவும் அமையலாம் அல்லது தன் விருப்பத் தேர்வின்றியும் அமையலாம். குடியிறக்கக் குழுக்கள் (Immigrant groups) பெரும்பாலும் தாமாகவே தம்மை மூலச் சமு தாயத்திடமிருந்து தனிமைப்படுத்திக் கொண்டு தனி யிடம் தேடி ஒதுங்கி வாழ்வதுண்டு. சில வேளைகளில் நீக்கிரோ போன்ற இனக் குழுக்கள் அவை விரும்பா மலே வலுக் கட்டாயமாகத் தனிமைப்படுத்தப்பட்டுத் தனியிடத்தில் ('கெட்டோ' என்று சொல்லப்படுகிற பகுதியில்) ஒதுக்கி வைக்கப்படுவதுண்டு.

**படையெடுப்பு:** ஒரு குறிப்பிட்ட வகையான மக்களோ நடவடிக்கையோ மையம் கொண்டுள்ள அல்லது தனிமைப்படுத்தப்பட்டு ஒதுக்கி வைக்கப்பட் டுள்ள ஒரு பகுதியில், வேறு வகையான மக்களோ நடவடிக்கையோ ஊடுருவினால், அதற்குப் படை யெடுப்பு என்று பெயர். ஒரு குறிப்பிட்ட வகையான வாணிக நடவடிக்கைப் பகுதியில் மற்றொரு வகை யான வாணிகர் உள் நுழைந்தால், அது ஒரு படை யெடுப்பு ஆகும். மக்கள் வாழும் ஒரு குடியிருப்புப் பகுதியில் ஒரு வணிக நடவடிக்கை உள் நுழைந்தால், அதுவும் படையெடுப்பே. மேல்நிலை வகுப்பார் வசிக் கும் ஒரு குடியிருப்புப் பகுதியில் கீழ்நிலை வகுப்பார் ஊடுருவினால் அல்லது ஏழை மக்கள் வாழும் ஒரு குடியிருப்புப் பகுதியில் ஒரு வணிக நடவடிக்கை உள் நுழைந்தால், அதுவும் படையெடுப்பே. மேல் நிலை வகுப்பார் வசிக்கும் ஒரு குடியிருப்புப் பகுதியில் கீழ் நிலை வகுப்பார் ஊடுருவினால் அல்லது ஏழை மக்கள் வாழும் ஒரு குடியிருப்புப் பகுதியில் மேல் நிலை வகுப்பார் ஊடுருவினால், அதுவும் படையெடுப்பே. ஒரு குறிப்பிட்ட இனக்குழு மக்கள் நிறைந்திருக்கும் ஒரு தனிமைப்படுத்தப்பட்ட பகுதியில் வேற்று இனக் குழு மக்கள் குடியேறினால், அதுவும் படையெடுப்பே. இப்படிப் படையெடுப்பு எந்த உருவிலும் அமையக் கூடும்.

**படையெடுப்புத் தொடர்தல்:** ஒரு குறிப்பிட்ட பகுதியில் ஒரு படையெடுப்பு நடந்து அதோடு அத்தகைய நிலைமை முடிந்து விட்டால் சிக்கல் ஏதுமில்லை. ஆனால் ஒரு படையெடுப்பைத் தொடர்ந்து, மேலும் பல படையெடுப்புகள் நிகழ்ந்தால், அது படையெடுப்புத் தொடர்தல் எனப்படும். இந்தத் தொடர்தலினால் தனிமைப்படுத்தப்பட்ட பகுதியின் தொடக்க அமைப்பு முற்றிலும் சிதைந்து போய் வேறுபட்ட அமைப்பு ஏற்படும். சிகாகோ நகரில் அதன் மேற்குப் பகுதியில் தொடக்கத்தில் ஐரிசாரும், செருமானியரும் மட்டுமே குடியிருந்து வந்தனர். நாளடைவில் அங்கு யூதர்கள் வரத் தொடங்கினர். அவர்களைத் தொடர்ந்து இத்தாலியர்களும், போலந்து நாட்டவரும், இலித்துவேனியரும், கிரேக்கர்களும், துருக்கியர்களும், கடைசியாக நீக்கிரோக்களும் குடியேறத் தொடங்கினர். இவ்வாறு சிகாகோ நகரின் மேற்குப் பகுதியில் படையெடுப்புகள் தொடர்ந்து ஏற்பட்டன. அதன் விளைவாக அதன் அமைப்பே முற்றிலும் மாறியது. இதே நிலைமையே நியூயார்க்கு, பிலடெல்பியா முதலிய நகரங்களுக்கும் ஏற்பட்டது.

**நகரச் சூழலியற் கோட்பாடுகள்:** இவ்வாறு சூழலியற் செயற்பாங்குகள் நகரத்தில் மக்கள் தொகைப் பகிர்வையும், நகர நடவடிக்கைகளின் பகிர்வையும் ஏற்படுத்துகின்றன. இந்தப் பகிர்வுகளுக்கு ஏற்ப நகரத்தின் சூழலியல் அமைப்பு, அதாவது அக அமைப்பு நிருணயமாகிறது. இவ்வாறு அமையும் நகரச் சூழலியல் அமைப்பு எவ்வித கோலத்தில் (pattern) அமையும் என்பதைச் சில கோட்பாடுகள் (Theories of urban Ecology) எடுத்துக் கூறுகின்றன. அந்தக் கோட்பாடுகள் ஆர்.எம். அருடு (R.M. Hurd) என்பவரின் நட்சத்திரக் கோட்பாடு (Star Theory), எர்னசுட்டு பர்கெசு (Ernest Burgess) என்பவரின் பொது மையம் கொண்ட மண்டலக் கோட்பாடு (Concentric Zone Theory), ஓமர் ஆய்ட்டு(Homer Hoyt), என்பவரின் வட்டப் பகுதிக் கோட்பாடு (Sector Theory), சான்சி ஆரிசு, எட்வர்டு உல்மான் (Chauncy Harris and Edward Ullman) ஆகிய இருவரின் பன்மடங்குக் கருமையங்கள் கோட்பாடு (Multiple Nuclei Theory) ஆகியன ஆகும்.

இந்தக் கோட்பாடுகள் ஒரு நகரத்தின் சூழலியல் அமைப்பு, இடப் பகிர்வுக் கோலம் ஆகியவற்றை ஒட்டி அமையும் என்று தெரிவிக்கின்றன. இவை அமெரிக்க நகரங்களின் சூழலியல் அமைப்பு, வளர்ச்சி ஆகியவற்றை ஆராய்ந்து ஏற்பட்ட கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் அமைந்திருக்கின்றன.

**நட்சத்திரக் கோட்பாடு:** இந்தக் கோட்பாடு 1903-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்டது. ஒரு நகரம் நட்சத்திர வடிவத்தில் அமைந்திருக்கும் என்று இக்கோட்பாடு கூறுகிறது. அருடு என்பவர் 'முதலில் ஒரு மையமான பகுதியில் மக்கள் தொகையும், நகர நடவடிக்கைகளும், நிறுவனங்களும் அடர்ந்திருக்கும்; பிறகு நகரம் மெல்ல மெல்ல வெளியே ஐந்து திசைகளில் நகர்ந்து வளர்ந்து நட்சத்திர வடிவமைப்பை அடையும்' என்கிறார். நகரில் போக்குவரத்து வழிகள் ஐந்து திசைகளில் செல்லும். அதனாலேயே, நகரம் நட்சத்திர வடிவமைப்பை அடையும் என்கிறார் அருடு. ஆனால் அருடின் கோட்பாட்டுக்கு ஒப்ப இப்பொழுது - ஏன் முன்பு கூட - எந்த ஒரு நகரமும் நட்சத்திர வடிவிலான சூழலியல் அமைப்பைப் பெற்றிருக்கவில்லை. ஆகவே இக்கோட்பாடு ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது.

**பருகெசின் பொதுமையம் கொண்ட மண்டலக் கோட்பாடு:** இக் கோட்பாடு 1925 ஆம் ஆண்டில் எழுந்தது. சிகாகோ நகரை அடிப்படையாக வைத்து இக்கோட்பாடு எழுந்தது. இக்கோட்பாடு நகரம் விரிவடையும்போது அது ஒரு பொது மையத்தை மூலமாகக் கொண்ட வட்டமான மண்டலங்களையுடைய கோலத்தை எய்தும் என்கிறது. அத்தகைய கோலத்தில் அமையும் மண்டலங்களின் எண்ணிக்கை ஐந்தாக இருக்கும், அவை: மைய வாணிக வட்டகை (Central Business District), நிலை திரிவு மண்டலம் (Zone in Transition), தொழிலாளர்களின் குடும்பங்கள் அடங்கிய மண்டலம் (Zone of workingmen's Homes), குடியிருப்பு மண்டலம் (Residential Zone), நகருக்குப் போய் வருவோர் மண்டலம் (Commuter's Zone) ஆகியனவாகும்.

நகர நிலம் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதன் அடிப்படையில் இம்மண்டலங்கள் அமைகின்றன. ஒவ்வொரு மண்டலத்திலும் நகர நிலம் ஒரு குறிப்பிட்ட விதத்தில் பயன்படுத்தப்படுகிறது. அதை ஒட்டியே இந்த ஐந்து மண்டலங்களும் அமைகின்றன.

**மைய வாணிக வட்டகை:** நகரத்தின் மையமான பகுதி இம்மண்டலமே. ஆகவே இது நகரின் இதயமாக விளங்குகிறது. இப்பகுதியில்தான் நகரத்தின் வாணிகம் பெரிதும் ஒருமுகப்பட்டிருக்கும். இங்கு வானளாவிய கட்டடங்களும், சிறப்புப் பேரங்காடிகளும், பலதரப்பட்ட மலிவான சரக்குகள் விற்கும் கடைகளும், சில்லரை விற்பனை நிலையங்களும், உணவகங்களும், சிற்றுண்டி விடுதிகளும், நாடக, திரைப்பட அரங்குகளும், மதுபான விடுதிகளும், கேளிக்கை விடுதிகளும் ஒருமுகப்பட்டிருக்கும். இவையன்றி அரசு அலுவலகங்களும், தனியார் அலுவலகங்களும் இங்குத்தான் ஒருமுகப்பட்டிருக்கும். இதன் காரணமாக இப்பகுதியில் நிலத்தின் மதிப்பு மிகுதியாக இருக்கும். விலை மிக அதிகமாக இருக்கும். ஒரு சிறிய துண்டு

நிலத்திற்குக் கூட மிகுந்த கிராக்கியும், கடுமையான போட்டியும் இருக்கும். எனவே, இங்குச் சாதாரண வணிக நிறுவனங்களோ குழுமங்களோ இயங்குவதில்லை. இயங்கும் நிறுவனங்கள் எல்லாம் பெரிய, பெரிய வணிகக் குழுக்களைச் சேர்ந்தவையாக இருக்கும். ஏனெனில் அவற்றால் மட்டுமே இப்பகுதியின் நிலத்தின் விலைக்கும் வாடகைக்கும் ஈடு கொடுக்க முடியும்.

பெரும்பாலான நகரங்களில் இத்தகைய மைய வாணிக மண்டலத்திற்குத் தனித்த பெயர்கள் உண்டு. சிகாகோவில் இதற்கு உலூப்பு (Loop) என்பது பெயர். நியூயார்க்கில் 'நடுநகரம்' (Mid Town) என்பது பெயர். பிட்சுபர்க்கில் 'தங்க முக்கோணம்' (Golden Triangle) என்பது பெயர். சென்னையில் உள்ள 'சாருசு நகரம், (George Town) இத்தகைய மண்டலமே.

**நிலை திரிவு மண்டலம்:** மைய வாணிக வட்டக்கையை ஒட்டி அடுத்துச் சுற்றி வருவது நிலை திரிவு மண்டலம் என்று சொல்லப்படும் பகுதி. இந்தப் பகுதியில் குறைந்த வருவாய்ப் பிரிவினர், பிற நாடுகளிலிருந்து குடிபெயர்ந்து வந்தவர்கள், ஊரகப் பகுதிகளிலிருந்து வந்து குடியமர்ந்தவர்கள், கீழ்நிலை மக்கள், குற்றம் புரிவோர், விலைமகளிர் என்ற இவ்வகையான மக்களே மிகுதியாக வாழ்வர். ஆனால இவர்கள் வசிக்கும் வீடுகள் பெரும்பாலும் அவர்களுக்குச் சொந்தமாக இரா. அங்குக் குடியிராத மற்றவர்களுக்குச் சொந்தமாக இருக்கும். அவர்கள் அந்த வீடுகளில் வாடகைக்குக் குடியிருப்பர்.

இம்மண்டலத்தில் வசிக்கும் அனைவருடைய பொருளாதார நிலையும் பொதுவாகத் தாழ்ந்த நிலையில் இருக்குமாதலால், இம்மண்டலம் வறிய தோற்றத்தோடு ஒரு கடைப்பட்ட பகுதியாக-சேரியாகத் தோற்ற மளிக்கும். குடியிருப்புக் கட்டடங்கள் பழையனவாகவும், பழுதடைந்தும், அசுத்தமாகவும் இருக்கும். ஆயினும் இந்த நிலைமை இப்படியே நீடிப்பதுகிடையாது. மைய வாணிக வட்டகையில் இருக்கும்; வணிக, தொழில் நிறுவனங்கள் தம்மை விரிவு படுத்திக் கொள்ள முனையும்போது, அவற்றுக்கு இடம் தேவைப்படுமாதலால், அவை தம் பகுதியை ஒட்டிய இந்த நிலை திரிவு மண்டலத்துக்குள் தான் ஊடுருவும்; ஊடுருவ வேண்டியுமிருக்கும்.

'இவ்வாறு இம்மண்டலத்திற்கு மைய வாணிக வட்டகையினரின் படையெடுப்புக்கு ஆளாகக் கூடிய வாய்ப்பு இருப்பதால், இம்மண்டலத்தில் உள்ள வீடுகளுக்கும் மனைக்கட்டுகளுக்கும் உரிய சொந்தக்காரர்கள் அவற்றைப் பாதுகாக்கவும், பேணவும் ஆர்வம் செலுத்துவதில்லை. ஏனெனில்' அவற்றுக்குப் பின்னாளில் மைய வாணிக வட்டகையினரிடமிருந்து கிராக்கி வருமாதலால், அவர்கள் அவற்றை மேம்படுத்தாமல் வைத்திருப்பர். கிராக்கி ஏற்படும்போது அவற்றை மிக அதிகமான வாடகைக்கு விட்டுவிடுவர் அல்லது மிக அதிகமான விலைக்கு விற்று விடுவர். அவற்றை வாடகைக்கு அல்லது விற்பனைக்கு எடுக்கிறவர்கள் வணிகச் சீமான்கள் என்பதால், அவை புதுப்பிக்கப்பட்டுப் பொலிவு பெறும்; பழைய கட்டடங்கள் இடிக்கப்பட்டுப் புதிய கட்டடங்கள் கட்டப்படும்.

இவ்வாறு படையெடுப்புச் சாத்தியமும், அதைத் தொடர்ந்து யற்றச் சாத்தியமும் இருப்பதாலேயே இம்மண்டலம் நிலைதிரிவு மண்டலம் எனப்படுகிறது. இதற்கு என்று உறுதியான, திட்டமான தோற்றம், தன்மை கிடையாது. படையெடுப்புக்குப் பின்னர் அதன் தோற்றமும் தன்மையும் மேலே குறிப்பிட்டுள்ள வண்ணம் மாறக் கூடும்.

**தொழிலாளர் குடும்ப மண்டலம்:** இது நிலைதிரிவு மண்டலத்துக்கு அடுத்து வருகிறது. ஆயினும் இது தோற்றத்தில் நிலைதிரிவு மண்டலத்தை விட நன்றாக இருக்கும். இங்குத் தொழிலாளர்கள் நிறைந்து காணப்படுவர். அவர்களுடைய பொருளாதார நிலை ஓரளவு நன்றாக இருக்குமாதலால் அவர்கள் போதுமான வாழ்க்கை வசதிகளைக் கொண்டிருப்பர். நகர ஆடம்பரங்களும் கூட ஓரளவு இம்மண்டலத்தில் காணப்படும். ஆகவேதான் இது நிலைதிரிவு மண்டலத்தை விட நன்றாக இருக்கிறது.

**குடியிருப்பு மண்டலம்:** தொழிலாளர்கள் வாழும் மண்டலத்தை ஒட்டி வருவது இம்மண்டலம். இங்குப் பெரும்பாலும் நடுத்தர மக்களும், மேல் நடுத்தர மக்களும் குடியிருப்பர். இவர்கள் வாழ்க்கைத் தொழில்களிலும், மேலாண்மைப் பணிகளிலும் ஈடுபட்டிருப்பர். இவர்கள் வசிக்கும் வீடுகள் பெரும்பாலும் தனிக் குடியிருப்புகளாகவே இருக்கும். மாடிக் குடியிருப்புகளைக் கொண்ட வீடுகள் கூட இம்மண்டலத்தில் உண்டு. குடியிருப்புகள் அன்றி, உணவு விடுதிகளும் சிறப்பங்காடிகளும் கூட இங்கு அமைந்திருக்கும்.

**நகருக்குப் போய் வருவோர் மண்டலம்:** இம்மண்டலம் நகர எல்லைகளுக்கு அப்பால் நகரை ஒட்டிச் சுற்றி அமைந்திருக்கும். நகரைச் சார்ந்து இயங்கும் துணைக்கோள் நகரங்களும் (Satellite Towns), புறநகர்ப் பகுதிகளுமே இம்மண்டலத்தில் அடங்கும். பெரும்பாலும் இம்மண்டலத்தில் மேல் வகுப்பு மக்களும், மேல் – நடுத்தர மக்களுமே குடியிருப்பர். இவர்கள் இங்குக் குடியிருந்த போதிலும், தமது தேவைகளுக்கு நகரையே சார்ந்திருப்பர். ஆகவேதான் இப்பகுதிகள் நகர எல்லைகளுக்கு அப்பால் இருந்தாலும்,

இவை நகரச் சூழலியல் அமைப்பின் ஒரு கூறாக அமைகின்றன.

இந்தப் பகுதிகள் சில ஆசிரியர்களால் 'படுக்கை யறைச் சமுதாயங்கள்' (Bedroom Communities) என்று குறிக்கப்படுவதுண்டு. ஏனெனில் இங்குக் குடியிருப்போருக்குப் பெரும்பாலான பொழுது நகருக்குள் தான் கழியும். தங்கள் அலுவல்களை நகருக்குள் பகலில் முடித்துவிட்டு, இரவில் படுக்க மட்டும் அவர்கள் இப்பகுதிகளுக்கு வருவதால் இவை 'படுக்கையறைச் சமுதாயங்கள்' என்று சொல்லப்படுகின்றன.

இவ்வாறு நகரம் ஐந்து பொது மையம் கொண்ட மண்டலங்களைக் கொண்டு அமைந்திருக்கும் என்று பருகெசு கூறுகிறார். ஆயினும் இம்மண்டலங்கள் நகரின் சூழலியல் அமைப்பை மட்டும் எடுத்துக் காட்டவில்லை என்பது அவருடைய கருத்து. நகரில் நிலவும் குற்ற விகிதம், பாலின விகிதம் (அதாவது 100 அல்லது 1000 பெண்களுக்கு எவ்வளவு ஆண்கள் இருக்கின்றனர் என்ற அளவு), அந்நிய மண்ணைச் சேர்ந்தவர்களின் சத விகிதம் ஆகியவற்றின் பகிர்வையும் அவை எடுத்துக்காட்டுகின்றன என்கிறார் பருகெசு. நகரம் ஒவ்வொரு மண்டலமாகப் பக்கவாட்டில் வெளியே விரிவடைய, விரிவடைய அதன் குற்ற விகிதம், பாலினவிகிதம், வெளிநாட்டவர் சதவிகிதம் ஆகியவை குறைந்து கொண்டே வரும் என்கிறார். மைய வாணிக வட்டகையில் குற்ற விகிதம், பாலின விகிதம், வெளிநாட்டவர் சதவிகிதம் முதலியன அதிகமாகவும், அதை அடுத்து வருகிற மண்டலங்களில் இவ் விகிதங்கள் படிப்படியாகக் குறைந்து கொண்டும் வரும் என்கிறார் பருகெசு.

ஆனால், பருகெசின் கோட்பாடு எல்லா நகரங்களுக்கும் பொருந்தி வரவில்லை. குறிப்பாகத் தொழில் வளர்ச்சி ஏற்படாத காலத்தில் நிலவிய நகரங்களுக்குப் பருகெசு குறிப்பிடும் பொது மையம் கொண்ட மண்டலக் கோலம் பொருந்தி வரவில்லை. அந்நகரங்களில் இந்தவிதமான அமைப்பு முறையே காணப்படவில்லை. அப்படியே ஒரு வகையான பொது மையம் கொண்ட மண்டலக் கோலம் காணப்படும் ஒருசில நகரங்களிலும் பருகெசின் கோட்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ள மண்டல நிரல் ஒழுங்கு அமையவில்லை. ஏழைகள் நகரின் எல்லைப் புறத்திலும், வசதி படைத்தவர்கள் நகரின் மையப் பகுதியை ஒட்டிய மண்டலத்திலும், வாழ்ந்து வருகின்றனர். மேலும் அம்மண்டலங்கள் பருகெசு கூறுவதைப் போல ஒரு பொது மையத்தைச் சுற்றி வட்டமாக அமையவில்லை.

பருகெசு தமது கோட்பாட்டில் ஒரு குறிப்பிட்ட குடியிருப்பு மண்டலம் ஒரே வகையான பொருளாதாரப் பிரிவினரை மட்டும் கொண்டு அமையும் என்கிறார். ஆனால் பாசுட்டன் நகரை ஆராய்ந்த பீரீ (Firey) என்பவர், பருகெசின் கோட்பாடு கூறுவதைப் போல நகரில் ஒரு குறிப்பிட்ட குடியிருப்பு மண்டலம் ஒரே வகையான பொருளாதாரப் பிரிவினரை மட்டும் கொண்டு அமைவதில்லை என்று கூறுகிறார். பாசுட்டன் நகரின் எல்லைப் புறத்தில் செல்வர்கள் வசிக்கும் சொகுசுக் குடியிருப்புகள் மட்டுமன்றி, ஏழை குடியிருக்கும் குடிசைகளும் அமைந்திருந்ததைக் கண்டறிந்தார். அதைக் கொண்டு, 'பொது மையத்தைச் சுற்றி வரும் எந்த ஒரு குடியிருப்பு மண்டலமும் ஒரே சீராக – ஒரே வகையான சமூக – பொருளாதார வகுப்பைச் சேர்ந்தவர்களை மட்டும் கொண்டு அமைவதில்லை' என்று பீரீ கூறுகிறார்.

பருகெசு மைய வாணிக வட்டகையை ஒட்டிய பகுதி கீழ்நிலைப் பொருளாதார வகுப்பினர் வசிக்கும் நிலைதிரிவு மண்டலமாக இருக்கும் என்கிறார். இதையும் பீரீ மறுக்கிறார். பாசுட்டன் நகரில் மைய வாணிக வட்டகையை ஒட்டிய பகுதியாக (அதாவது நிலை திரிவு மண்டலம் என்று பருகெசு குறிப்பிடும் மண்டலமாக) விளங்குகிற பீகன் குன்று, வெசுட்டு எண்டு ஆகிய இடங்களில் மாறுபட்ட இயல்புகளைக் கொண்ட மக்கள் குடியிருக்கின்றனர். பீகன் குன்றின் ஒரு பகுதி சொகுசான பகுதியாக, வசதி படைத்த மக்களைக் கொண்டு அமைந்திருக்கிறது. அதை ஒட்டிய மற்றொரு பகுதி ஏழ்மையான பிற நாட்டவர் குடியிருப்புப் பகுதியாக அமைந்துள்ளது. இவ்வாறு இரு வேறு துருவங்களாக விளங்குகின்ற இரு பிரிவினர் ஒரே மண்டலத்தில் வசிக்கிற நிலைமை அங்குக் காணப்படுகிறது. இதைக் கொண்டே பருகெசின் கருத்தைப் பீரீ மறுக்கிறார்.

பருகெசு எந்தவொரு நகரத்திலும் மையப் பகுதி மேலோங்கியிருக்கும்; அது வாணிகத்தின் ஆதிக்கத்தில் இருக்கும் என்கிறார். ஆனால் சிசுட்டு, பாவா (Gist and Fava) ஆகியோர் இப்பொழுது இந்த நிலைமை மாறியிருக்கிறது என்கின்றனர். போக்குவரத்துத் துறையில் ஏற்பட்டு வருகிற மகத்தான புரட்சியமைந்த மாற்றங்களால் இன்றைக்கு நகரங்களின் சூழலியல் அமைப்பு மாறி வருகிறது. மைய வட்டகை மதிப்பிழந்து, புறநகர்ப் பகுதி இன்று சிறப்பிடம் பெற்று வளர்ந்து வருகிறது. பெரும்பான்மையான நகரங்களில் மைய வாணிக வட்டகை விரிவடையாமல் தேங்கி விட்டது. இன்றைக்குப் போக்குவரத்து வசதிகளைக் கொண்டு, வாணிகம் தவளை தாவுவதைப் போலப் புறநகர் விற்பனை மையங்களுக்குத் தாவிச் செல்லுகிறது. வணிகர்களின் இந்தப் போக்கினால் தேங்கிக் கிடக்கிற மைய வாணிக வட்டகை சீரழிந்து வருகிறது.

அதில் நிகழும் கலவரங்கள், தூய்மையற்ற நிலை, பாதுகாப்பற்ற தன்மை, இடநெருக்கடி, சீரழிவு எல்லாம் வணிகர்களைப் புறநகர் நோக்கிப் புறப்பட வைக்கின்றன. இதன் காரணமாகப் புறநகர்ப் பகுதிகள் நகரப் பொருளாதாரத்தில் சிறப்பிடம் பெற்று வருகின்றன என்கின்றனர் சிசுட்டும்பாவாவும்.

**வட்டப்பகுதிக் கோட்பாடு:** ஓமர் ஆய்ட்டு என்பவர் தமது வட்டப்பகுதிக் கோட்பாட்டை 1939-இல் உருவாக்கினார். அமெரிக்கக் கூட்டரசின் வீட்டு வசதி நிருவாகம் (Federal Housing Administration) 142 அமெரிக்க நகரங்களில் நிலவிய நிலப் பண்பாட்டு முறையை ஆராய்ந்து அளித்த தகவல்களைக் கொண்டு இக் கோட்பாட்டை உருவாக்கினார்.

பருகெசின் பொது மையம் கொண்ட மண்டலக் கோட்பாடு, நகரத்தில் ஒரு குறிப்பிட்ட கோலத்தில் நிலப் பயன்பாடு அமையும் என்கிறது. மையப் பகுதியில் நிலம் தொழில், வாணிக, பொருளாதார நடவடிக்கைகளுக்காகப் பயன்படும். இம்மண்டலத்துக்குவெளியே அமையும் நிலம், பல்வேறு வகுப்பினரின் முறையே-கீழ்நிலை, நடுத்தர, மேல்நிலை வகுப்பினரின்-குடியிருப்புக்கென அமையும் என்கிறது. ஆனால் ஆய்டின் வட்டப் பகுதிக் கோட்பாடு, நகரின் நிலம் பயன்படுத்தப்படும் விதம் ஒரே சீராக ஒரே கோலத்தில் அமைவது இல்லை; வெவ்வேறு திசைகளில் நிலம் வெவ்வேறு விதங்களில் பயன்படும் என்கிறது. ஆயினும், அந்த நிலப் பயன்பாட்டு விதங்கள் குறிப்பிட்ட அளவிலேதான் அமையும் என்கிறது. நிலம் பயன்படுத்தப்படும் விதத்தை ஒட்டி நகரச் சூழலியல் அமைப்பு அமையும். அந்த அமைப்பு 'பை' வரைபடத்தைப் (Pie Diagram) போன்ற வடிவில் பல வட்டப் பகுதிகளைப் பல்வேறு அளவுகளில் கொண்டு அமைந்திருக்கும். ஒவ்வொரு வட்டப்பகுதியும் ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையைச் சார்ந்து அமையும். ஒரு குறிப்பிட்ட நடவடிக்கைக்காக நிலம் பயன்படுத்தப்படும்போது அந்த நடவடிக்கையை ஒட்டி ஒரு வட்டப் பகுதி அமையும். தொழில் நடவடிக்கைகளுக்காக ஒரு நிலப் பகுதி பயன்படுத்தப்படும்போது அங்கு ஒரு வட்டப்பகுதி ஏற்படும். இவ்வாறே வாணிகத்திற்கென ஒரு வட்டப் பகுதி, மக்கள் குடியிருப்புக்கென ஒரு வட்டப்பகுதி என்று பல வட்டப் பகுதிகள் நகரில் ஏற்படும். ஆயினும் இந்த வட்டப் பகுதிகள் எங்கெங்கு முக்கியமான போக்குவரத்து வழித்தடங்கள் அமைந்திருக்கின்றனவோ, அங்குத்தான் அவற்றைச் சுற்றி அமையும்.

நகரின் மையப் பகுதியில் வாணிகம் சிறந்து விளங்கும். எனவே, அந்தப் பகுதி ஒரு வட்டப் பகுதியாக, வாணிகத்துக்கென்று அமைந்த வட்டப் பகுதியாக அமையும்.

அதற்கு அருகில் உற்பத்தித் தொழில் அமைந்த வட்டப்பகுதி அமைந்திருக்கும். அந்தப் பகுதி இரயில்வே போக்குவரத்து அமைந்த முக்கியமான வழித்தடத்தில் அமைந்திருக்கும். அங்குத் தண்ணீர் வசதியும் தாராளமாக இருக்கும். இத்தகைய இயற்பியல் வசதிகள் தொழில் வளர்ச்சிக்கு ஆதாரமாகவும், ஆதரவாயும் இருப்பதால் அப்பகுதியில் தொழில் நிலை பெறுகிறது.

மையப் பகுதிக்கு எதிரேயுள்ள பகுதியில் மேல்நிலை வகுப்பினரின் குடியிருப்பு அமைந்திருக்கும். இப்பகுதி நகரின் எல்லையோரத்தில் அமைந்திருக்கும். இப்பகுதி மேல்நிலை வகுப்பினரின் குடியிருப்புப் பகுதி என்பதால், அது ஆடம்பரமாக, நிறைந்த வசதிகளுடன் இருக்கும். நிலத்தின் விலையும், வீட்டு வாடகையும் மிகுதியாக இருக்கும்.

மேல்நிலை வகுப்பினரின் குடியிருப்புப் பகுதிக்கு இடப்பக்கத்திலும், வலப்பக்கத்திலும் நடுத்தர வகுப்பினரின் குடியிருப்புகள் காணப்படும் அவை வசதிகள் அனைத்தும் கொண்டிராவிடினும், அங்குக் குடியிருப்போருக்கு வேண்டிய வசதிகளைப் போதுமான அளவில் கொண்டிருக்கும்.

மைய வாணிகப் பகுதிக்கும், மேல்நிலை வகுப்பினர் குடியிருக்கும் வட்டப்பகுதிக்கும் இடையேயுள்ள




வட்டப்பகுதிக் கோட்பாடு

1. மைய வாணிக வட்டகை
2. மொத்த, எளிய உற்பத்தித் தொழில் வட்டப்பகுதி
3. கீழ்நிலை வகுப்பினரின் குடியிருப்பு வட்டப் பகுதி
4. நடுத்தர வகுப்பினரின் குடியிருப்பு வட்டப் பகுதி
5. மேல்நிலைவகுப்பினரின் குடியிருப்பு வட்டப் பகுதி

பகுதிகளில் கீழ்நிலை வகுப்பினரின் குடியிருப்புப் பகுதிகள் அமைந்திருக்கும். இப்பகுதிகளிலன்றித் தொழில் வட்டப் பகுதிக்கு அப்பாலும், மைய வாணிகப் பகுதிக்கு இடப்பக்கமும், வலப்பக்கமும் கீழ்நிலை வகுப்பினரின் குடியிருப்புகள் அமைந்திருக்கும். அவற்றில் பெரும்பாலும் தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்களும், வணிக நிறுவனங்களைச் சார்ந்து வாழும் சுமை தூக்குவோர், சில்லரை விற்பனைக்காரர்கள் முதலியோரும் வசிப்பர். கீழ்நிலை வகுப்பினரின் வருமான நிலை, வாழ்க்கைத் தரம் ஆகியவை குறைவாக இருக்குமாதலால் அவர்கள் வாழும் பகுதிகள் சாதாரணமாக இருக்கும். நிலத்தின் விலையும், வீட்டு வாடகையும் மிகுதியாக இரா.

ஆய்ட்டின் கோட்பாட்டின்படி நடவடிக்கைகளை ஒட்டி வட்டப் பகுதிகள் அமைந்தாலும், அந்த வட்டப் பகுதிகள் ஒரே பகுதியில் ஒருமித்து அமைவதில்லை. நடவடிக்கைகள் சிதறி அமைவதால், அவற்றைச் சார்ந்த வட்டப் பகுதிகளும் சிதறியவண்ணம் அமைந்திருக்கும். எடுத்துக்காட்டு: பல்வேறு வகுப்பினரின் குடியிருப்புப் பகுதிகள்.

பருகெசின் கோட்பாட்டைப் போலவே ஆய்ட்டின் கோட்பாடும் எல்லா நகரங்களுக்கும் பொருந்திவரவில்லை. மேலும் பருகெசின் கோட்பாட்டைப் போலவே ஆய்ட்டின் கோட்பாடும், மைய வாணிக வட்டகையை ஒட்டிய பகுதியில், அதாவது, நிலை திரிவுப் பகுதியில் கீழ்நிலை மக்களே குடியிருப்பர் என்று கூறுகிறது. பாசுட்டன் நகரை ஆராய்ந்த பீரீ, அத்தகைய பகுதியில் ஒரே வகையான பொருளாதாரப் பிரிவினர் வசிப்பதில்லை என்று கண்டறிந்தார். இருவேறு துருவங்களாக விளங்குகின்ற மேல்நிலைப் பிரிவினரும், கீழ்நிலைப்பிரிவினரும் அத்தகைய பகுதியில் வசிப்பதைப் பீரீ தமது ஆய்வில் கண்டறிந்தார். (குறிப்பு: பருகெசின் கோட்பாடு பற்றிய பத்திகளைக் காண்க).

**பன்மடங்குக் கருமையங்கள் கோட்பாடு:** சான்சி ஆரிசும், எட்வர்டு உல்மானும் பருகெசின் கோட்பாட்டையும், ஓமர் ஆய்ட்டின் கோட்பாட்டையும் விலக்கி, 1955-இல் ஒரு புதிய கோட்பாட்டை உண்டாக்கினார்கள். அவர்களுடைய கோட்பாடு நகரங்கள் எந்தவொரு குறிப்பிட்ட சூழலியல் கோலத்தையும் பின்பற்றுவதில்லை என்கிறது. ஒரு நகரத்தில் பல தனித் தனிக் கருமையங்கள் இருக்கும். ஒவ்வொரு கருமையமும் ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையைக் கொண்டு அமைந்திருக்கும். தொழில் உற்பத்தி, மொத்த வணிகம், சில்லறை வணிகம், நிதி, ஆட்சி, கேளிக்கை, கல்வி, குடியிருப்பு என்ற குறிப்பிட்ட ஒரு நடவடிக்கையைச் சார்ந்து அமைந்திருக்கும். நடவடிக்கைகளின் எண்ணிக்கைக் கேற்பக் கருமையங்களின் எண்ணிக்கை அமையும். ஆக, இந்த வகையில் தான் நகரத்தின் சூழலியல் அமைப்பு பல்வேறு நடவடிக்கைகளைச் சார்ந்த பல்வேறு கருமையங்களைக் கொண்டிருக்கும் என்று இக்கோட்பாடு கூறுகிறது. இக்கருமையங்கள் ஒரு பொது மையப் பகுதியை, அதாவது பருகெசும் ஆய்ட்டும் குறிப்பிடுவதைப் போல மைய வாணிக வட்டகையை மூலமாகக் கொண்டு அமைவதில்லை. எல்லாச் கருமையங்களும் தாமாகவே சுயேச்சையாகவே அமைகின்றன என்பது இக்கோட்பாட்டின் கருத்து.




பன்மடங்குக் கரு மையங்கள் கோட்பாடு

1. மைய வாணிக வட்டகை
2. மொத்த, எளிய உற்பத்தித் தொழில் மையம்
3. கீழ்நிலை வகுப்பினரின் குடியிருப்பு மையம்
4. நடுத்தர வகுப்பினரின் குடியிருப்பு மையம்
5. மேல்நிலை வகுப்பினரின் குடியிருப்பு மையம்
6. கனரக உற்பத்தித் தொழில் மையம்
7. தொலைஒதுக்கமாக இருக்கும் வாணிக வட்டகை
8. மக்கள் வசிக்கும் புறநகர்
9. தொழிற்சாலைகள் நிரம்பிய புறநகர்.

பன் மடங்குக் கருமையங்கள் கீழ்க்காணும் காரணங்களினால் தோன்றும். முதலாவதாக, சில நடவடிக்கைகளுக்கு என்று தனியாகச் சிறப்பு வசதிகள் தேவைப்படும். எனவே, அவை தமக்குத் தேவையான சிறப்பு வசதிகள் கிடைக்கும் இடங்களில் ஒருமுகப்பட்டு அமையும். கனரகத் தொழிலுக்கு மிகுந்த நிலப்பரப்பும், தொலை தூரத் தொடர்பு வசதிகளும் தேவைப்படும். எனவே, அது அத்தகைய வசதிகள்

கிடைக்கிற இடங்களில் ஒருமுகப்படுகிறது. சிறு தொழில்கள், சில்லரை வாணிகம் போன்றவற்றிற்குச் சிறிது நிலமும், வாடிக்கையாளர்கள் எளிதில் தம்மை நாடி வரும் வண்ணம் வசதியாக இருக்கும் நிலைமையும் தேவைப்படும். எனவே, அவை அத்தகைய வசதிகள் கிடைக்கிற இடங்களில் பொதுவாக நகரத்துக்குள் – ஒருமுகப்படுகின்றன.

இரண்டாவதாக, ஒத்த உறவுடைய நடவடிக்கைகள் அருகருகே இருப்பது அவற்றுக்கு நன்மை பயக்கும். ஆதலால் அவை ஒரே பகுதியில் மையம் கொண்டிருக்கும். எடுத்துக்காட்டாக, மோட்டார் வண்டிகளின் உதிரிப்பாகங்கள் விற்பனையும் மோட்டார் வண்டிகளுக்கு வேண்டிய இருக்கைகள் தயாரிப்பும் ஒத்த உறவுடைய நடவடிக்கைகள். ஆதலால், அவை ஒரே மையத்தில் அருகருகே குழுமியிருக்கும்.

மூன்றாவதாக, சில நடவடிக்கைகள் வேறுபட்டு ஒத்திராமல் இருக்கும். ஒரு நடவடிக்கை மற்றொரு நடவடிக்கைக்கு இடைஞ்சலாக இருக்கும். அப்படிப்பட்ட நிலையில் ஒரு நடவடிக்கை தனக்கு இடைஞ்சல் தரும் நடவடிக்கையிலிருந்து விலகித் தனியே ஒரு மையத்தில் நிலை கொள்ளும். எடுத்துக்காட்டாகப் பேருந்து, சரக்குந்து முதலியவற்றுக்குச் சீர்காப்பு (Service) செய்திடும் பட்டறைகளுக்கு நிறைய இடம் தேவைப்படும். மேலும் குறுக்கீடுகள், இடைஞ்சல்கள் ஏற்படாத நிலைமையும் தேவைப்படும். இத்தகைய நிலையில் மிகுதியான மக்கள் புழங்குகிற சில்லரை வணிகம் அவற்றிற்குப் பக்கத்தில் இருந்தால், அது அவற்றின் பணிகளுக்கு இடைஞ்சலாக இருக்கும். எனவே, அவை சில்லரை வணிகம் புழங்குகிற பகுதிகளிலிருந்து தனியே விலகி அமைந்திருக்கும்.

நான்காவதாக, சில நடவடிக்கைகள் நகருக்குள் அமைவது மிகவும் செலவு பிடிக்கக் கூடியதாக இருக்கும். எனவே அவை அவ்வளவு செலவு பிடிக்காத புறநகர்ப் பகுதிகளில் மையம் கொள்ளும்.

பல கருமையங்கள் தொடக்கத்திலிருந்தே தனித்தே இயங்கி வரும். எடுத்துக்காட்டாக இலண்டனில் ஆட்சிக் கருமையமும், நிதிக் கருமையமும் தனித்தே தோன்றித் தனித்தே இயங்கி வருகின்றன. சிலவேளைகளில் ஒரு மையத்திலிருந்து பல மையங்கள் தோன்றி வளரும். எடுத்துக்காட்டாகச் சிகாகோவில் முதலில் கனரகத் தொழில் தாழ் நகரம் (Down Town) என்ற உள்நகரப் பகுதியில்தான் மையம் கொண்டிருந்தது. நாளடைவில் அதில் பல பிரிவுகள் தோன்றி, அப்பிரிவுகள் நகரின் தென்கிழக்குப் பகுதிக்கு நகர்ந்து, அங்கு ஒவ்வொரு பிரிவும் ஒரு சிறு பகுதியை மையமாகக் கொண்டு வளர்ந்தது.

சில வேளைகளில் ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையைச் சார்ந்து அமையும் ஒரு கரு மையம் தன்னுள் பல பிரிவுகளை - துணைக் கருமையங்களைக் கொண்டு அமைவதுண்டு. பெரிய நகரங்களில் பெரும்பாலும் மைய வணிக வட்டகையில் முக்கியமாகச் சில்லறை வணிகந்தான் நடைபெறுவதுண்டு. ஆயினும் அது அந்த வட்டகை முழுவதும் பரவியிருப்பதில்லை. வட்டகையின் ஒரு பகுதியில் - குறிப்பாக நடுப்பகுதியில் - அது மையம் கொண்டிருக்கும். பிற பகுதிகளில் மொத்தக் கொள்முதல் விற்பனை, சரக்குகளை வாங்கிப் பகிர்ந்திடும் தரகுத் தொழில் முதலியன தனித்தனித் துணைக் கரு மையங்களைக் கொண்டு மையம் கொண்டிருக்கும்.

**முடிவுரை**: பருசெசின் கோட்பாட்டையும், ஓமர் ஆய்ட்டின் கோட்பாட்டையும் போலவே, சான்சி ஆரிசு எட்வர்டு உல்மான் ஆகிய இருவரின் பன்மடங்குக் கரு மையங்கள் கோட்பாடும் நகர ஆய்வுகளிலிருந்து கிடைத்த செயலறிவுத் தரவுகளைச் (Empirical Data) கொண்டுதான் அமைக்கப்பட்டுள்ளது. ஆயினும், முந்தைய கோட்பாடுகளைப் போலவே பன்மடங்குக் கரு மையங்கள் கோட்பாடும் எல்லா நகரங்களுக்கும் பொருந்தி வரவில்லை.

மேற்குறித்த மூன்று கோட்பாடுகளும் ஒரு குறிப்பிட்ட பரிமாணத்தில் தான் நகரச் சூழலியல் அமைப்பு அமைகிறது என்று கூறுகின்றன. ஆனால், இக்காலத்தில் நடைபெறும் நகரச் சூழலியல் பற்றிய ஆய்வுகள், ஒரு குறிப்பிட்ட பரிமாணத்தில் அமையாமல் பரிமாணங்களிலேயே நகரச் சூழலியல் அமைப்பு அமைகிறது என்று தெரிவிக்கின்றன.

ஆயினும், இக்கோட்பாடுகள், ஓர் உண்மையைத் தெரிவிக்கின்றன. நகரங்கள் கண்டபடி வளர்வதில்லை. அவை ஒரு குறிப்பிட்ட பாணியில்-கோலத்தில் தான் வளர்கின்றன (அதாவது விரிவடைகின்றன) என்பதைத் தெரிவிக்கின்றன.

சி.என்.ந.

**துணைநூல்கள்:**

Horton, Paul B. and Hurt, Chester L., Sociology, McGraw-Hill International Book Company, Tokyo, 1984.

Sheqard, John M., Sociology, West Publishing Company, Minnesota, 1981.

Sutherland, Robert., L., Wood ward., Julian L., and Mexwell, Milton A., Introductory Sociology, Oxford and IBH Publishing Company, Calcutta, 1961.

*நகரப் பொருளியல்*: நகர்ப்புறங்களில் தொடங்கப்பட்ட தொழிற்சாலைகள் காரணமாக நகர்மயமாதல் விரைவு துரிதப்படுத்தப்படுகிறது. இவை வேலை வாய்ப்பினைத் தருவதால்கிராமப்புறங்களில் போதிய வேலைகிடைக்காதவர்கள் நகரத்திற்கு இடம்பெயர்ந்து செல்கிறார்கள். இதனால் மக்களின் வருமானம் பெருகி நாட்டின் வருமானம் மிகுதியாகிறது. இவ்வாறாக நகர்மயமாதல் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தூண்டுகோலாக உள்ளது.

சில பொருளியல் அறிஞர்கள் நாட்டின் மக்கள் கிராமப்புறத்திலிருந்து நகர்ப்புறத்திற்கு இடம்பெயர்வதன் மூலம் நாட்டின் முன்னேற்றம் உறுதிப்படுத்தப்படும் என்கின்றனர். மேலும் நகர்மயமாதல், மிகுந்து வரும் சிறப்புத் தேர்ச்சியைச் சார்ந்துள்ளதுடன் பொருளாதார வளர்ச்சியையும் சார்ந்துள்ளது என்ற கருத்தும் கூறப்படுகிறது. இதற்கு மறுப்பாக மைக்கேல் லிப்டன் (Michael Lipton), கோலின் கிளார்க்கு (Colin Clark),பால் இசுடிரீட்டன் (Paul Streeton) போன்ற பொருளியல் அறிஞர்கள் நகர்மயமாதலைச் சார்ந்ததே பொருளாதார வளர்ச்சி என்பதை எதிர்க்கின்றனர். இவர்களுடைய கூற்றின் படி வேளாண்மை, கிராம வளர்ச்சி ஆகியவற்றின் மூலமே நாட்டின் வளர்ச்சி சிறந்த முறையில் பெறப்படும் என்று அறியப்படுகிறது.

இவ்விரு சாராரின் கருத்துக்களின்படி நகர்மயமாதல், பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிப்பதுடன் அதனைக் கட்டுப்படுத்துவதாகவும் அமைந்துள்ளது. அதாவது நகர்மயமாதல், சில நேர்மறை விளைவுகளையும், எதிர்மறை விளைவுகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது. இதனை விளக்குவது நகரப்பொருளியல் (Urban Economics) எனப்படும்.

**நகர்மயமாதலும் பேரளவுச் சிக்கனங்களும்**: சிறிய நகரமானது பெரிய நகரமாக விரிவடையும் பொழுது தோன்றும் அளவுச் சிக்கனங்கள் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிப்பதாகும். நகர்ப்புறத்திலேயே தொழில்கள் குவிதலின் காரணமாகப் புறச் சிக்கனங்கள் உருவாகும். அதன் காரணமாக உற்பத்திச் செலவும் குறையும்.அதனுடன் விரிவடைந்த நகர்ப்பகுதி, புறநகர்ப் பகுதி ஆகியவற்றின் தோற்றத்தினால், மக்கள்தொகை மிகுதியாகும்.அதனால், அங்கு வாழும் மக்களின் பொருளாதார நடவடிக்கைகளும் பெருகும்.அவற்றின் காரணமாக மேன்மேலும் மக்களும், தொழில் நிறுவனங்களும் கவர்ந்திழுக்கப்படுகின்றன. போக்குவரத்து, மக்கள் தொடர்புச் சாதனங்கள் ஆகியவற்றின் வளர்ச்சியில் முன்னேற்றங்கள் தோன்றுகின்றன. உற்பத்திப் பண்டங்களின் தேவை மிகுதியாகின்றது.

நகர்மயமாதல், உற்பத்தியில் சிறப்புத் தேர்ச்சி தோன்றக் காரணமாகிறது. நகரத்திலேயே உற்பத்தியாளர்களும், பல துறையில் நுண்ணறிவு பெற்ற தொழிலாளர்களும், நிருவாகிகளும் இருப்பதால் உற்பத்திச் செலவு குறைகிறது. மேலும் முன்னேற்றமடைந்த தொழில் நுட்பம், மூலதனச் செறிவின் காரணமாகப் புதிய கண்டுபிடிப்புகள் ஆகியவை தோன்ற வாய்ப்பு ஏற்படுகிறது. அதனால், நகரவாசிகளுக்குக் குறைந்த விலையில் பண்டங்கள் கிடைக்கின்றன. இதற்கு முக்கிய காரணம், இப் பண்டங்கள் அங்காடியில் பேரளவில் இருப்பதுடன் அளவுச் சிக்கனங்களை உறுதிப்படுத்துவதாகவும் அமைந்திருப்பதாகும். இவ்வாறு நகர்மயமாதலின் காரணமாக உற்பத்தியில் தோன்றும் அளவுச் சிக்கனங்கள், கண்டுபிடிப்புகள், திறமையான போக்குவரத்து, தொடர்பு சாதனங்கள் ஆகியவற்றின் மூலமாகப் பொருளாதார வளர்ச்சி ஊக்குவிக்கப்படுகிறது.

**நகர்மயமாதலும், கிராம வளர்ச்சியும்**: திட்டமிட்ட நகர்மயமாதல் கிராம வளர்ச்சியையும் ஊக்குவிக்கும், ஏனெனில், நகரங்களிலுள்ள தொழிற்சாலைகளிலிருந்துதான் வேளாண்மைக்குத் தேவையான உற்பத்தி சாதனங்கள் பெறப்படுகின்றன. அத்துடன் கிராமத்தில் உற்பத்தி செய்யப்பட்ட உணவுப் பொருள்களும் மூலப்பொருள்களும் நகர அங்காடிகளுக்குச் செல்வதால் அவற்றின் விற்பனை மூலம் கிராம மக்களுக்கு வருமானம் கிடைக்கிறது. இந்த வருமானம் நகரத்தில் உற்பத்தி செய்யப்பட்ட நுகர்வுப் பொருள்களை வாங்கப் பயன்படுத்தப்படுகிறது. மக்களின் போக்குவரத்து, பொருள்களின் போக்குவரத்து காரணமாகப் போக்குவரத்துத் துறையிலும் வளர்ச்சிகள் ஏற்படுகின்றன. இவ்வாறான சங்கிலித் தொடர் வளர்ச்சி, ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைகிறது.

நிக்கோலசு (Nicholas) என்ற பொருளியல் அறிஞர் குறிப்பிட்டபடி கிராம-நகர உறவு காரணமாகத் தோன்றும் சந்தைத் தொடர்புகள் பின்வருவனவற்றை உருவாக்குகின்றன. அ) கிராமங்களில் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் நகரத்தில் விற்பனையாவதால் கிராம மக்களின் வருமானம் மிகுகிறது. ஆ) தொழில்துறையிலிருந்து பெறப்படும் மூலதனம், அத்துறை மேன்மேலும் வளர்ச்சியடைய உதவுகிறது. இ) கிராம, நகர்ப்புறம் ஆகியவற்றில் உழைப்புக்குத் தேவை மிகுதியாகிறது. ஈ) உற்பத்தி செய்யப்பட்ட நுகர்வுப் பொருள்கள், வேளாண்மைத் துறைக் கருவிகள், இரசாயன உரங்கள் ஆகியவற்றிற்குத் தேவை மிகுதியாகிறது. உ) இவ்வாறாக மக்களின் வாங்கும் சக்தி மிகுவதாலும் பண்டங்களுக்கு

அங்காடி உருவாவதாலும் நிலம், நிலமற்ற சொத்துகள் பகிரப்படுகின்றன.

நகரத்தின் அமைப்பும், அதன் வளர்ச்சியும் வேளாண் துறை, கிராமப் பகுதி ஆகியவற்றின் வளர்ச்சியை ஊக்குவிப்பதாக அமைய வேண்டும். கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் இடையேயுள்ள இணைப்பு சிறந்தமுறையில் இருந்தால் மட்டுமே, விளை பொருள்களும் உற்பத்திப் பொருள்களும் குறைந்த விலையில் மக்களுக்குக் கிடைக்கும். அதன் காரணமாக நாட்டு மக்கள் நன்மை பெற இயலும்.

**நகர்மயமாதலின் எதிர்மறை விளைவுகள்:** நகர்மயமாதல் காரணமாகப் பொருளாதார வளர்ச்சிக்குப் பாதிப்பு ஏற்படுகிறது. அதிலும் மூலதனம் குறைந்த அளவிலுள்ள வளர்ந்துவரும் நாடுகளில் நகர்மயமாதல் சிக்கலுக்குரிய ஒன்றாகும். ஏனெனில், நகரங்களில் வாழும் மக்கள் எண்ணிக்கை மிகும்போது அவர்களுடைய நலனுக்காகச் செய்யவேண்டிய செலவுகள் நாட்டின் வளர்ச்சிக்குப் பயன்தருவதில்லை. இவ்வாறாக நாட்டிலுள்ள கிடைத்தற்கரிய பொருள்வளம் நகர்வாழ் மக்களின் வீட்டுவசதி, அடிப்படை வாழ்க்கை வசதி ஆகியவற்றிற்காகச் செலவு செய்யப்படுகிறது. அதனால், நாட்டின் உற்பத்தியளவும் உற்பத்தித்திறனும் பாதிக்கப்படுகின்றன. அதனால்தான் நகர்மயமாதல், பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிப்பதுடன் அதனைக் கட்டுப்படுத்துவதாகவும் கருதப்படுகிறது. இத்தகைய எதிர்மறை விளைவினைத் தவிர்க்க மிகுதியான மக்கள் நகரங்களை நோக்கிப் படையெடுப்பது நிறுத்தப்பட வேண்டும்.

இரட்டர் டட்டு (Ruddar Dutt) என்பவர் நகர்மயமாதலின் விளைவுகளைத் தீர்மானிக்கத் தனிஆள் வருவாய், வேலையின்மை, வறுமை ஆகியவற்றுடன் நகர்மயமாதலின் ஒட்டுறவுக் கெழுவினைக் கணக்கிட்டுள்ளார். இந்தியாவிலுள்ள 17 மாநிலங்களிலும் உள்ள மொத்த மக்கள்தொகையில் நகர மக்கள் தொகையின் விழுக்காட்டை நகர்மயமாதலைக் குறிப்பதாக எடுத்துக்கொண்டு, அதற்கும் வேலையற்ற மக்களுக்கும் இடையே உள்ள ஒட்டுறவுக் கெழு 0.18 என்றும், அதற்கும் வறுமைக் கோட்டிற்கும் கீழுள்ள மக்களின் விழுக்காட்டிற்கும் உள்ள ஒட்டுறவுக் கெழு 0.22 என்றும், அதற்கும் தனிஆள் வருவாய்க்கும் இடையேயுள்ள ஒட்டுறவுக் கெழு 0.56 என்றும் கணக்கிட்டுள்ளார். இந்தியாவைப் பொறுத்தவரையில் வேலையின்மை காரணமாக வறுமைநிலவுவதால், நகர்மயமாதல், தனிஆள் வருவாய் உயர உதவி செய்யுங் கருவியென்பதாக எடுத்துக்கொள்ளலாம்.

நகர்மயமாதலின் சிக்கல்களைத் தவிர்க்கவேண்டுமெனில் சிறிய நகரங்களின் வளர்ச்சியை ஊக்குவிக்க வேண்டும். அத்துடன் சமமான பொருளாதார வளர்ச்சி முறை பின்பற்றப்பட வேண்டும்.

மா. ரே்த.

**துணைநூல்கள்:**


Francis Cherunilam, Urbanisation in Developing Countries, Himalaya Publishing House, Bombay, 1984.

Robert L. Bish, Robert, J. Krik, Economic Principles and Urban Problems, Prentice Hall Inc., New Jersey, 1974

Werner Z. Hirsch, Urban Economic Analysis, Tata Mcgraw Publishing Company Ltd., New Delhi, 1982.


**நகரம்:** மிகுதியான மக்கள் வாழுகின்ற நிலப்பகுதி நகரம் எனப்படுகிறது. இது பொதுவாகச் சாலை வசதிகளையும், திட்டமிடப்பட்ட ஒழுங்கில் அமைந்த போக்குவரத்தையும், மக்கள் குடியிருக்கின்ற அருகருகேயமைந்த உறுதியான வீடுகளையும் கொண்டிருக்கும். இருப்பினும் நகரம் (City) என்பதைத் திட்டவட்டமாக வரையறுத்துக் கூறுதல் எளிதன்று.

சில அறிஞர்கள் நகரத்தையும் கிராமத்தையும் அவற்றின் கட்டமைப்பையும், மக்கள்தொகை அளவையும் பொறுத்து வேறுபடுத்துகின்றனர். ஆனால் எல்லா நாடுகளிலும் ஒரே அளவிலான தரத்தில் இவை அமைவதில்லை; இவை நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றன. எடுத்துக்காட்டாக, அமெரிக்காவில் 2500 அல்லது அதற்கு மேற்பட்ட மக்கள்தொகையினரைக் கொண்ட பகுதி நகரம் எனப்படுகிறது. ஆனால் பிரான்சில் 2,000 பேரும், சப்பானில் 30,000 பேரும், இந்தியாவில் 10,000 பேரும் வாழுகின்ற நிலப்பகுதி நகரம் எனச் சொல்லப்படுகிறது.

எனவே, சில அறிஞர்கள், சமுதாய வாழ்க்கையின் அடிப்படையில் நகரத்தையும் கிராமத்தையும் வேறுபடுத்திக் கூறுகின்றனர். ஆனால், சில கோணங்களில் இக் கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இருப்பினும், பிறஅறிஞர்கள்முழுமையாக ஏற்றுக்கொள்ளவியலாது என்கின்றனர். ஏனெனில் சில நகரங்களில் கிராமத்தின் இயல்புகள் அல்லது கூறுகள் இணைந்தே இருக்கின்றன. அதுபோலவே நகரங்களுக்கருகில் அமைந்துள்ள கிராமங்களில் நகரக் கூறுகளையும், நகர வாழ்க்கைத் தரத்தையும் காணலாம். மேலும் வேறுபட்ட மன நிலையுடன் கூடிய மக்கள், நகரங்களிலும் கிராமங்களிலும் இருப்பதைக் காணலாம்.

இவ்வாறு நகரத்தை வரையறுத்துக் கூறுதல் கடினமெனினும் சமூகவியல் அறிஞர்கள் நகரத்தையும்




இராசமுந்திரி நகரம், இந்தியா

கிராமத்தையும் பல வழிகளில் வேறுபடுத்திக் கூறுகின்றனர். அதாவது நகரங்களும் கிராமங்களும் பின்வரும் முக்கிய பண்புக் கூறுகளில் வேறுபடுகின்றன என்கின்றனர். அவையாவன 1)பல வேறுபட்ட சமூக இனத்தவர், 2) குறைந்த அளவிலான சமூகத் தொடர்புகள், 3) சமரச மனப்பான்மை, 4) குறைந்த அளவிலான கட்டுப்பாடு, 5) தொண்டு நிறுவனங்கள், 6)நெருக்கமற்ற உறவு, 7)சாதி உணர்வு இல்லாமை, 8) தளர்ந்த நடத்தை விதிகள், 9) அமைதியிழந்த மனிதர்கள், 10) எங்கும் நிறைந்திருக்கும் குற்றம், 11) இயந்திர மயமான வாழ்க்கை, 12), தொடர்ந்து நிகழும் மாற்றம், 13) செயற்கையான வாழ்க்கை என்பன.

**நகரத்தின் இயல்புகள்:** பொதுவாக அனைத்து நகரங்களும் தமக்கெனத் தனி இயல்புகளைக் கொண்டிருக்கின்றன. அவ்வாறான தனித்த இயல்புகளின் மூலம் ஒரு குறிப்பிட்ட நகரத்தைப் பிற நகரங்களிலிருந்தும் இடங்களிலிருந்தும் வேறுபடுத்திக் கூற வியலும்.எனினும், குறிப்பிட்ட இயல்புகள் அனைத்து நகரங்களிலும் ஒரேமாதிரியாக இருக்கும். அவையாவன:

**1) வேளாண்மை தவிர்த்த தொழில்கள்:** கிராமப் புறங்களில் மக்கள் மிகுதியாக வேளாண்மையையே



காபூல் நகரிலுள்ள திறந்தவெளி அங்காடி

நம்பி வாழுகின்றனர். இப்போதுங் கூடக் கிராம மக்கள் தாங்கள் வாழுவதற்கு வேளாண்மையையே தங்களின் முக்கிய தொழிலாகக் கொண்டுள்ளனர். இது உலக நாடுகளிலுள்ள அனைத்துக் கிராம வாழ்க்கைக்கும் பொருந்தும். ஆனால் நகரத்தவர், கிராமத்தவரைப்போன்று வேளாண்மையைச் சார்ந்து வாழவில்லை. நகரங்களில்வேளாண்மையைத் தவிர்த்த பிற தொழில்களையே (Non-Agricultural Occupation) செய்து வருகின்றனர். முக்கியமாக, நகரத்தவர் வணிகம், பொருள்களை உற்பத்தி செய்தல் போன்ற வற்றைச் சார்ந்துள்ளனர். அவற்றின்மூலம் கிடைக் கின்ற வருவாயைக் கொண்டு தங்களுடைய வாழ்க்கைத் தேவைகளை அவர்கள் நிறைவேற்றிக் கொள்கின்றனர். எனவேதான் சேம்சு குயின் (James A. Queen) போன்ற அறிஞர்கள், வேளாண்மை தவிர்த்த பிற தொழில்களை மேற்கொள்ளுவது நகரத்தின் முக்கிய சிறப்பு எனக் கூறுகின்றனர். ஆனால் நகரத்தவர், உழவர்களுக்குத் தேவையான வற்றை உற்பத்தி செய்து கொடுத்து அவர்களிட மிருந்து தங்களுக்குத் தேவையான பொருள்களை வாங்கிக் கொள்கின்றனர்.



தோக்கியோ நகரின் வணிகமையம்

வேளாண்மைத் தொழில்கள் நகரங்களில் நடை பெறாவிட்டாலும் நகர மக்கள் வேளாண்மை உற் பத்திப் பொருள்களைப் பயன்படுத்துகின்றனர். அது போன்றே கிராமத்தவர், நகரத்தில் உற்பத்தி செய்யப் படுகின்ற பொருள்களைப் பயன்படுத்துகின்றனர். எனவேதான், நகரங்களும் கிராமங்களும் ஒன்றை யொன்று சார்ந்து செயற்படுகின்றன.

**மக்கள்தொகை நெருக்கம்:** மக்கள்தொகை நெருக்கம் (Density of Population) நகரத்தையும் கிராமத்தையும் வேறுபடுத்துகிறது. பொதுவாக ஒரு ச.கி.மீட்டருக்கு ஒரு குறிப்பிட்ட அளவு மக்கள் வாழுவது மக்கள்தொகை நெருக்கம் எனப் படுகிறது. நகரத்தில் வணிகம் செய்வதற்குப் போது மான இடம் வேளாண்மை செய்வதற்குப் போது மானதாக இருக்காது. எனவே, நகரங்களில் வணி கமும் தொழில்களும் நிறைந்திருக்கும். அதனால் இங்கு மக்கள்தொகை நெருக்கம் மிகுந்திருக்கும். ஆனால், கிராமங்களில் வேளாண்மை மிகுதியாகவும் மக்கள்தொகை நெருக்கம் மிகக் குறைவாகவும் இருக் கும். மேலும் நகரத்தில் ஆள் வசதிகளும் பொருள் வசதிகளும் கிராமத்தில் கிடைப்பதைவிட எளிதாக இருக்கும்.



மக்கள் தொகை நெருக்கம்

**மக்கள்தொகை அளவு:** மக்கள்தொகை விரிவடை வதைக் கொண்டு நகரச் சமுதாயத்தையும், கிராமச் சமுதாயத்தையும் வேறுபடுத்திக் கூறலாம். ஆனால் இம்முறையில் மிகவும் சரியான வரையறை செய்ய

வும் இயலாது. ஏனெனில், பொதுவாக அனைத்து இடங்களிலும் மக்கள் மிகுதியான அளவிலோ குறைவாகவோ வாழுகின்றனர். அதுபோல மக்கள் தொகைப் பெருக்கமும் விரைவாகவோ மெதுவாகவோ இருக்கலாம். ஒவ்வொரு நாடும் நகரத்தையும் கிராமத்தையும் வேறுபடுத்த வெவ்வேறு மக்கள் தொகை அளவுகளைக் (Size of Population) கொண்டுள்ளது.

எடுத்துக்காட்டாக, அமெரிக்காவில் 2,500 பேருக்கு மேற்பட்டோர் வாழுகின்ற பகுதி நகரம் எனப்படுகிறது. ஆனால் பிரான்சு, பெல்சியம்,எகிப்து ஆகிய நாடுகளில் முறையே 2,000,5,000,11,000 பேர் வாழுகின்ற நிலப்பகுதி நகரம் எனப்படுகிறது.

பொதுவாக,மக்கள்தொகைப் பெருக்கமும் நெருக்கமும் சமூக உறவுகளின் அடிப்படையில் நகரத்தைக் கிராமத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றன. ஒரு குறிப்பிட்ட இடத்தில் வாழுகின்ற மக்கள் தொகை, மிகுதியான அளவு உயரும்போது அங்கு உறவின் நெருக்கம் குறைகிறது.

**நிலைப்பெயர்வு:** நகரத்தைக் கிராமத்திலிருந்து வேறுபடுத்துவதில் நிலைப் பெயர்வும் (Mobility) முக்கிய பங்கு வகிக்கிறது. நகரங்களில் செய்யப்படுகின்ற தொழில்கள்,மக்கள்தொகை அளவு,மக்கள் தொகை நெருக்கம் ஆகியன அடிக்கடி மாறக்கூடிய தன்மை உடையனவாகும். ஆனால், கிராமங்களில் இவை போன்ற மாற்றங்கள் சிறிதளவே ஏற்படும்.

**உறுதிச் சமநிலை:** நகரச் சமுதாயத்தில் ஒவ்வொரு மனிதனுக்கும் குடியிருப்பதற்கென நிலையான இடமொன்று இருக்கும். ஒருவன், ஒரு வீட்டைவிட்டுக் காலி செய்யும்போது அவனுடைய வீட்டில் வேறொருவன் குடியேறுகிறான்.ஆனால் இதுபோன்ற நிலையான குடியிருப்புகள் கிராமங்களில் குறைவாக இருக்கும். அனைத்து நகரங்களும் பள்ளிகள், குடியிருப்புகள், தொழில், கோயில், மசூதி, கிறித்தவக் கோயில், தெருக்கள் போன்றவற்றை அதிக அளவு கொண்டிருக்கும். இவற்றை ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்திற்கு மாற்றுவது எளிதன்று. வழக்கமாக இவை ஒரே இடத்தில் நிலையாக இருக்கும்.

**பலதரப்பட்ட மக்கள்:** நகரத்தில் பல்வேறுபட்ட மக்கள் இணைந்து வாழுவதைக் காணலாம். இது நகரத்தின் ஒரு முக்கிய இயல்பாகும். அதாவது பல வகையான இனங்கள், மதங்கள், சாதிகள் ஆகியவற்றைச் சார்ந்தவர்கள் நகரத்தில் வாழுகின்றனர். மேலும் பல வேறுபட்ட வகுப்பினரும் தரத்தினரும் நகரத்தில் வாழுவர். அதாவது மேல்நிலை, நடு நிலை, கீழ் நிலை என மூன்று வகையான வகுப்பினர் நகரத்தில் வாழுவர். ஆனால் கிராமங்களில் இவ்வாறான வேறுபாடுகள் மிகுதியாகக் காணப்படுவதில்லை. கிராமங்களில் மிகுந்த அளவு ஒரே இனம் அல்லது சாதியினரும், ஒரே தரத்தினரும் (Standard) வாழுகின்றனர். மேலும் கிராம மக்களின் வாழ்க்கையில் மிகுதியான வேறுபாடுகளைக் காண்பது அரிது.

**குறிப்பிடத்தக்க சமூக உறவுகள்:** சமூக உறவுகளின் அடிப்படையிலும் நகரமானது கிராமத்திலிருந்து வேறுபடுகிறது. மக்கள்தொகை பெருகுதல், மக்கள்தொகை நெருக்கம், நிலைப்பெயர்வு ஆகியவற்றினால் நகரங்களில் வாழுகின்ற மக்களின் சமூக உறவுகள் சீர்கேடுறுகின்றன. வெவ்வேறு இனம், சாதி, மதம் ஆகியனவற்றைச் சார்ந்தவர்கள் நகரங்களில் வேறுபாடின்றிப் பழகுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. ஆனால். கிராமங்களில் அவ்வாறு ஒருங்கிணைந்து பழகுவதற்கோ வாழுவதற்கோ வழியில்லை.

**நெருக்க மற்ற உறவு:** நகர வாழ்க்கை என்பது, இயந்திரமயமான ஒன்றாகும். இங்குப் பலவேறுபட்ட உணர்வுகள், இனங்கள், சாதிகள், மதங்கள் ஆகியவற்றைச் சார்ந்த மக்கள் வாழுகின்றனர். அவர்கள் தங்களுடைய நேரமின்மையாலும் சிக்கல்களாலும் ஒருவரோடொருவர் தொடர்பு கொள்வதில்லை. ஒருவரோடொருவர் தொடர்பு கொண்டாலும் கூட அந்த உறவுகள் நெருக்கமுடையனவாகஇருப்பதில்லை. அவர்களுக்கிடையே உறவுகள் மிகவும் சாதாரணமானதாகவும் நெருக்கமற்றதாகவும் (Impersonal) இருக்கும். ஆனால், கிராமத்தில் உள்ளவர்களின் உறவுகள் அவ்வாறன்றி மிகவும் நெருக்கமானதாக அமைந்திருக்கும்.

**சிக்கலான சமூக வாழ்க்கை:** நகரம் சிக்கலான சமூக வாழ்க்கையை (Complexity of Social Life) உடையதாக இருக்கும். மனிதன் ஒவ்வொருவனும் தன் வாழ்க்கைக்காக ஏதேனும் ஒரு வழியில் ஒரு குறிப்பிட்ட தொழிலைத் திறமையாகச் செய்து பொருளைத் தேடுகிறான். ஒவ்வொரு மனிதனுடைய சமூக வாழ்க்கையும் அவனுடைய வாழ்க்கைத் தொழிலைப் பொறுத்தது. எனவே, தொழில்களில் போட்டி ஏற்படுகிறது. நகரச் சமுதாயத்தில் இவ்வாறு அனைத்து நிலைகளிலும் போட்டிகள் நிறைந்திருப்பதால் சமூக வாழ்க்கை சிக்கல் நிறைந்ததாக அமைகிறது. ஆனால், கிராம வாழ்க்கை மிகவும் எளிமையானது. இங்குள்ள சமூக உறவுகளும் பரந்த நோக்கமுடையனவாக இருக்கும்.

**அகப் பண்பு சார்ந்த நிலையமைப்புகள்:** நகரச் சமுதாயத்தின் மற்றுமொரு முக்கிய பண்பு, அகப் பண்பு சார்ந்த நிலையமைப்புகள்(Internal Organisation) மிகுதியாகப் பரவியிருத்தலாகும். பொதுவாக

வேளாண்மை தவிர்த்த தொழில்கள், நெருக்கமற்ற சமூக உறவு, மக்கள்தொகை அளவு, கட்டடங்கள், அலுவலகங்கள் போன்றவை இருப்பதைக் கொண்டு அதை நகரம் எனக் கூறவியலாது. குடியிருக்கிற மக்களின் வாழ்க்கை ஒரு குறிப்பிட்ட நோக்கில் ஒழுங்கமைக்கப்பட்டுள்ள இடமே நகரம் எனப்படும். இந் நிலையமைப்பு பின்வரும் இரண்டு பண்புக் கூறுகளைக் கொண்டிருக்கும்.

**அ) இடப் பண்புக் கூறு:** விரிவாக்கப்பட்ட வடிவ நோக்கில் நகரமானது பலவகையான பிரிவுகளாகப் பிரிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, விற்பனையும் தொழில் செய்வதற்குமான மையப் பகுதி. சிறு தொழில் செய்வதற்கான மையம், மக்கள் குடியிருப்பதற்கான குடியிருப்பு மையம் என நகரில் பிரிவுகள் இருக்கின்றன. ஆனால், அனைத்து மையங்களும் ஒன்றையொன்று தகவல்தொடர்பு, போக்குவரத்துப் போன்றவற்றால் இணைக்கப்பட்டிருக்கும். ஆனால் அனைத்துத் துறையினரும் ஒரு குறிப்பிட்ட இடத்திலேயே குறிப்பிட்ட வணிகத்தையும் தொழிலையும் செய்கின்றனர். எனவே, அங்கு மக்கள் நெருக்கம் மிகுதியாகிறது.

**ஆ) சமூகப் பண்புக் கூறு:** நகரத்தில் பல வேறுபட்ட சமூகங்களும் சமுதாயங்களும் இருக்கின்றன. இவை ஒன்றுக்கொன்று வேறுபட்டு இருந்தாலுங்கூட ஒரே சமூகத் தொகுதியாக ஒருங்கிணைந்திருக்கின்றன. தங்களுடைய அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள நகரத்திலுள்ள சமூகங்களில் மக்கள், ஒரு தொழில் ஒற்றுமையைக் கொண்டிருப்பர். மேலும், அனைத்து நகர மக்களும் அதுபோலவே. ஒற்றுமையுடன் பொழுதுபோக்கில் ஈடுபடுகின்றனர். இங்கு அனைத்து மக்களுக்கும் தேவையான பள்ளிகள், செய்தித்தாள்கள் போன்றவை கிடைக்கும் வசதியுண்டு.

**நகர வளர்ச்சியும் முன்னேற்றமும்:** நகரம் என்பது வரலாற்றினால் திடீரென அளிக்கப்பட்ட கொடையன்று. பலவேறுபட்ட மூலங்களின் வளர்ச்சியால் நகரமைப்பு வளர்ச்சியுற்றது. இயற்கையாக மனிதன் ஒரு சமூக விலங்கு எனப்படுவான். அவன், தன்னையும் தன்னைச் சார்ந்தவர்களையும் காத்துக்கொள்ளுவதற்காகப் பாதுகாப்பான இருப்பிடத்தில் மட்டுமன்றி ஒருவரையொருவர் சார்ந்தும் வாழ்ந்துவந்தான். மேலும் இயற்கையாக மனிதனிடையே ஏற்படுகிற குழு மன உணர்வுடன் இணைந்து வாழுவதற்குத் தலைப்பட்டபோது சமுதாயம் தோன்றியது. அவன் பயிர்த்தொழில் செய்யத்தொடங்கிய காலத்தில் கிராமங்களும், சமுதாயங்களும் வளர்ச்சியுறத் தொடங்கின; பின்னர்ப் பிற தொழில்களும் வளர்ச்சியுற்றன; மக்கள்தொகையும் பெருகியது. எனவே, மனிதன் ஓரிடத்தில் நிலையாக வாழத் தொடங்கினான். அதன்காரணமாகக் கிராமங்கள் நகரங்களாக மாறின; புதிய நகரங்களும் தோன்றத் தொடங்கின.

பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே மனிதன், அறிவியல் அறிவில் முன்னேற்றம் அடைந்துள்ளான். எடுத்துக்காட்டாகப் பல ஆண்டுகளுக்கு முன்னரே போக்குவரத்து வசதிகளைப் பெருக்கியுள்ளமைக்கான சான்றுகள் பல உள்ளன. போக்குவரத்து இக்காலத்தில் தோன்றிய ஒன்றன்று. குட்பெல்லோ (Good, Fellow) என்ற அறிஞர், மனிதனின் கலை, நம்பிக்கை, குடும்பம், தொழில் போன்றவை ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இருப்பது மட்டுமன்றி அவை பண்டைக்காலத்திலிருந்தே வளர்ச்சியடைந்தும் வருகின்றன என்று கூறுகிறார். மனிதன் மாறிவரும் காலத்துடன் தன்னை ஒருங்கிணைத்துக் கொள்ள முயற்சி செய்கிறான். அதன்மூலம் அடிப்படை அறிவைப் பெறுகிறான். அதைக்கொண்டு மனிதன் சுற்றுப்புறச் சூழலுக்கேற்பத் தன்னிடமுள்ள பொருள்களைக் கொண்டு வசதியாக வாழுகிறான். எனவே, அங்கு நகரங்கள் தோன்றத் தொடங்குகின்றன.

முதன்முதலாக எப்போது நகரம் தோன்றியது என்பதைக் கண்டறிதல் மிகக் கடினமான செயலாகும். இருப்பினும் நகரங்கள் முதலாவதாக கி.மு. 6000க்கும் கி.மு. 5000 க்கும் இடைப்பட்ட காலத்தில் தோன்றியிருக்கக்கூடும் என அறிஞர்கள் மதிப்பிடுகின்றனர். அப்போது தோன்றிய நகரங்கள் சிறியனவாகவும் கிராமப்புறங்களிலிருந்து மிகுந்த வேறுபாடு இல்லாதனவாகவும் இருந்தன. ஆனால், கி.மு. 3000 த்தில் தோன்றியவை உண்மையான நகரங்கள் என்று மதிக்கத்தக்கவாறு அமைந்திருந்தன. அதற்குப் பின்னர் ஏறக்குறைய 2,000 ஆண்டுகளுக்கு நகரங்களைப் பொறுத்தவரை தாமதம் நிறைந்த காலமாக இருந்தது. இந்த நிலை கிரேக்க- உரோமானியர் காலங்களில் நகரங்கள் தோன்றுவதுவரை நீடித்தது. அப்போது நகர வாழ்க்கை முதலாவதாகத் தோன்றிய நாடுகளில் நகரங்கள் மறைந்து புதிய நாடுகளில் உருவாயிற்று. சில காலங்களுக்குப் பின்னர் வேளாண்மையை அடிப்படைப் பொருளாதாரமாகக் கொண்டிருந்த மெசபடோமியா, இந்தியா, எகிப்து, கிரீசு, உரோம் ஆகிய நாடுகளில் நகரங்கள் தோன்றின. பின்னர் மேற்கு ஐரோப்பாவில் நகரங்கள் மிகுதியான அளவில் தோன்றத் தொடங்கின. மேலும், இங்கு நகரங்களின் வளர்ச்சியும் இப்பொழுதுவரை மிகுந்துகொண்டே இருக்கிறது. ஆனால், கி.பி. 19-ஆம் நூற்றாண்டில்தான் உண்மையான நகரப் புரட்சி ஏற்பட்டது. மேலும் கி.பி. 18-



உரோம், பழமையான நகரம்

ஆம் நூற்றாண்டிலிருந்து நடைபெறுகிற நகரமய மாதல், உலக வரலாற்றில் இதற்கு முன்னர் இருந்திராத அளவிற்கு விரைவான விகிதத்தில் மிகுந்தது.

**நகர வளர்ச்சிக்கான காரணிகள்:** நகரங்கள், நாகரிகம் தோன்றிய காலத்திலிருந்தே தோன்றியிருப்பினும் பின்வரும் சில காரணிகளால் மிகுதியாக வளர்ச்சியுற்றன.

**1) மிகையான மூலதனங்கள்:** மனிதனுடைய வாழ்க்கைத் தேவைக்கும் மிகையான மூலதனங்களை (Surplus Resources) யுடைய சமூகங்களில் பொதுவாக நகரங்கள் வளர்ச்சியுறுகின்றன. தொன்மைக் காலங்களில் மனிதனை மனிதன் அடக்கி ஆண்டதின் மூலம் அம்மூலதனங்கள் பெறப்பட்டன. ஆளுகின்ற வகுப்பினரால் ஏற்படுத்தப்பட்ட கட்டாய உழைப்பு அல்லது வரிவிதிப்பு, நகர வாழ்க்கையின் வளர்ச்சிக்கு அடித்தளம் இட்டது. இக் காலங்களில் மனிதன் இயற்கையையும் வென்று தனது திறமையை மிகுதிப் படுத்திக் கொள்கிறான். தொழில் நுட்ப வளர்ச்சியின் மூலம் நாட்டிலுள்ள இயற்கை மூலதனங்களைத் தன்னால் இயன்றவரையிலும் பயன்படுத்திக்கொள்கிறான். அறிவியல், தொழில்நுட்பம் ஆகியவற்றில் ஏற்பட்ட முன்னேற்றத்தால் வேளாண்மைப் புரட்சி ஏற்பட்டுள்ளது. குறைந்த மனித உழைப்பைக் கொண்டு மிகுதியான விளச்சலை அளிக்கவல்ல வேளாண்மைக்குரிய கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றின் மூலம் ஒரு சிலரின் உழைப்பால் பலருடைய அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றப்படுகின்றன. மனிதனுடைய அறிவியல் அறிவால் மிகையான மூலதனங்கள் நாட்டில் கிடைக்கின்றன. இயற்கைக்கும் அப்பாற்பட்டு விரிவடைந்துள்ள இம் மனித சக்தியே, முக்கியமாக மேலை நாடுகளில் புதிய நகர வளர்ச்சிக்கும், நகர மக்கள்தொகைக்கும் அடிப்படைக் காரணமாக அமைந்தது.

**2) தொழில்மயமாதலும் வணிகமயமாதலும்:** தொழிற்புரட்சியால் கண்டுபிடிக்கப்பட்ட புதிய உற்பத்தி முறைகளினால் நகர வளர்ச்சியானது பெரிதும் தூண்டப்படுகிறது. இயந்திரங்களின் கண்டுபிடிப்பு, நீராவிச் சக்தியின் முன்னேற்றம், கணிசமான மூலதனத்தின்மூலம் தொழிற்சாலைகளைத் தொடங்குதல் ஆகியவற்றினால் மிகப்பெரிய தொழிற்பேட்டைகள் உருவாக்கப்பட்டன. அவற்றின் மூலம் இத் தொழிற்சாலைகளில் நிலையாகத் தொழிலாளர்கள் பணியாற்ற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. எனவே, தொழிற்சாலைகளைச் சுற்றித் தொழிலாளர்கள் நிலையாகக் குடியேறினர். பிறருடன் சேர்ந்து பணியாற்றவும், மிகுதியான ஊதியத்தைப் பெறவும் மனிதன் கிராமத்திலுள்ள பணிகளை விட்டுவிட்டுத்

தொழில் சார்ந்த நகரங்களுக்கு இடம் பெயர்ந்தான். எடுத்துக்காட்டாக, இந்தியாவிலுள்ள சாம்செட்பூர், பிற நாடுகளிலுள்ள சிகாகோ, இலிவர்ப்பூர், மான்செசுட்டர், பிட்சுபர்கு, கிளாசுகோ போன்ற பெரிய தொழில் நகரங்கள் இவ்வாறே உருவாயின.

இயந்திர சக்தி கண்டுபிடிக்கப்பட்டதால் உலகில் புதிய புவியியல் மாற்றமே ஏற்பட்டது. முன்னர் விளைச்சல் தரக்கூடிய சமவெளிகள் நிறைந்த பகுதிகளான நதிக்கரைகளிலேயே மக்கள் வாழ்ந்து வந்தனர். ஆனால், இப்பொழுது நிலக்கரி, இரும்பு போன்ற மூலதனங்கள் கிடைக்கின்ற இடங்களுக்கு அருகிலேயே மிகுதியான மக்கள் வாழுகின்றனர். அறிவியல் முறைகளையும், மின்சாரத்தால் இயங்கும் இயந்திரங்களையும் பயன்படுத்திப் பொருள்கள் மிகுதியான அளவு உற்பத்தி செய்யப்படுவதால் கால் பகுதியினர் உழைப்பினால் பிற முக்கால் பகுதியினர் பயனடைய முடிகிறது. ஆனால், ஒரு நூற்றாண்டிற்கு முன்னர்க் கால் பகுதியினருக்குத் தேவையான பொருள்களுக்கு முக்கால் பகுதியினரின் உழைப்புத்தேவையாக இருந்தது. மேலும், நகரங்கள் இப்போது வேளாண்மை நிலங்களின் போதுமான தொடர்பின்றியே வளருகின்ற நிலையில் உள்ளன.

தொழில்மயமாதல் நகர வளர்ச்சிக்குத் தூண்டுதலாக அமைவதால் வணிகம், தொழில் ஆகியவையும் நகரம் விரிவடைவதற்கு உறுதுணையாக இருக்கின்றன. தொன்மையான நாகரிகக் காலங்களிலும் கூடப் பொருள்கள் வழங்கப்பட்ட இடங்களிலும், வணிகம் நடந்த இடங்களிலுந்தான் நகரங்கள் வளர்ச்சியடைந்துள்ளன. எடுத்துக்காட்டாக. ஏதென்சு. இசுபார்ட்டா, வெனீசு, பாடலிபுத்திரம் (இன்றைய பாட்னா) ஆகியவை இதன் காரணமாகவே மிகப் பெரிய தொழில் மையங்களாகத் திகழ்ந்திருக்கின்றன. இன்றைய காலங்களில் ஏற்பட்டுள்ள புதிய அங்காடிகளின் வளர்ச்சியும், பண்டமாற்று முறைகளும் நகரங்களின் வளர்ச்சிக்கு முக்கிய காரணமாக அமைகின்றன.

3) **போக்குவரத்திலும் தகவல்தொடர்பிலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள்:** போக்குவரத்து, தகவல் தொடர்பு ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களும் வசதிகளும் நகர வளர்ச்சியை எடுத்துக்காட்டுகின்றன. தொழில்மயமாதல் போக்குவரத்தையே சார்ந்துள்ளது. ஏனெனில், மூலப் பொருள்களையும் உற்பத்திப் பொருள்களையும் மிகுதியான அளவில் கொண்டுசெல்லப் போக்குவரத்து வசதிகள் தேவைப்படுகின்றன. எனவேதான், தொழிற்சாலைகள் நிறைந்துள்ள நகரில் போக்குவரத்து வசதிகளும், தகவல் தொடர்பு வசதிகளும் முன்னேற்றம் அடைந்திருப்



தொழில் நகரம், பிட்சுபர்கு





தகவல் தொடர்பு முன்னேற்றம்

பது இன்றியமையாததாகிறது. பொதுவாகப் புகை வண்டிகள், பேருந்துகள், பொருள்களை ஏற்றிச்செல் லும் வண்டிகள் (Lorries) போன்ற போக்குவரத்து வசதிகள் நிறைந்த இடங்கள், சிறந்த வணிகம் அல்லது தொழில் மையங்களாகத்தான் திகழும் என்பது வெளிப்படையான உண்மையாகும்.

நகரமானது நாட்டிற்கு உள்ளேயும், வெளியேயும் உள்ள பிற பகுதிகளுடன் தொடர்பு கொண்டிருக்கும். மேலும், நகரம் அதே நகரத்திலுள்ள பிற பகுதிகளுடனும் வட்டாரப் போக்குவரத்துக் கருவிகளின் முன்னேற்றத்தினால் தொடர்புடைய தாக இருக்கும். தொழிற்சாலைகள் தோன்றிய காலத்தில் வட்டாரப் போக்குவரத்து வசதிகள் மிகவும் நலிவடைந்திருந்தன. ஆனால், தொழிலாளர்கள் தாங்கள் பணிபுரிகின்ற இடங்களுக்கு அருகிலேயே குடியிருக்க வேண்டிய கட்டாயத்தில் இருந்தனர். எனவே, குடியிருப்பு நெருக்கம் ஏற்பட்டது. பின்னர் நகர மக்களுக்காக வட்டாரப் போக்குவரத்தின் எல்லைகள் விரிவாக்கப்பட்டன. நகரமானது அங்காடிப் பகுதி, குடியிருப்புப் பகுதி, குடிசைப் பகுதி, தொழிற்சாலைப் பகுதி போன்ற பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. பழமையான நகரங்களில் வட்டாரப் போக்குவரத்து வசதிகள், குறைவாக இருந்தமையால் இவ்வாறு பல பகுதி களாகப் பிரிக்கப்படாமல் இருந்தன. ஆனால், இன்றைய புதிய நகரங்களின் ஒவ்வொரு பகுதியும் ஒன்றுக்கொன்று வேறுபடுகிறது.

4) **நகரின் பொருளாதாரத் திறன்:** கிராமப் பகுதியைவிட நகரங்கள் மனித முன்னேற்றத்திற்கு மிகுதியான வாய்ப்புகள் அளிக்கின்றன. புதிய வணிகமும் தொழிலும் போதுமான ஊதியங்கள் கிடைக்க வழிசெய்வதால் இளைஞர்கள், நகரங்களுக்கு இடம் பெயருகின்றனர். பொதுவாக மக்கள், குடியிருப்பு வசதிக்காக நகரங்களுக்குச் செல்லுவதில்லை. நகரங்களில் எளிதாக வேலை கிடைக்கின்ற வாய்ப்புள்ளது எனக் கருதியே செல்லுகின்றனர். வணிகர்கள்கூட மிகுதியான ஆதாயம் கிடைப்பதற்கான வசதிகள் இருக்கின்ற நோக்கில்தான் கிராமங்களைவிட்டு நகரங்களில் குடியேறுகின்றனர். நாட்டின் வாழ்க்கைத் தரம் உயரும்போது நகரங்களிலும், நகரங்களால் வழங்கப்படுகின்ற பொருள்களின் தேவையும் மிகுகின்றது. இவ்வாறு தேவைகள் மிகுகின்றன என்பது, நகரங்களில் மக்கள் மிக்க அளவில் வாழ்க்கைத் தேவையைப் பெற இயலும் என்பதையே குறிக்கிறது. சுருங்கக்கூறின், நகரங்களில் மட்டுமே மிகப்பெரிய சாதனைகளும், உயர்ந்த வாழ்க்கையும்

கிடைக்கின்ற வாய்ப்புகள் இருப்பது, நகரங்கள் வளர்ச்சியடையக் காரணமாக விளங்குகிறது.

5) **கல்வியும் பொழுதுபோக்கு வசதிகளும்:** உயர் கல்வி வசதிகள் நகரங்களிலேயே மிக்க அளவு கிடைப் பதற்கான வாய்ப்புகள் உள்ளன. மேலும் கிராமங் களில் இளநிலை, உயர்நிலைப் பள்ளிகள் வரை இருப் பினும் நகரங்களில் உள்ளனபோன்று உயர்ந்த தர முடையனவாய் அமைதல் அரிது. பயிற்சிப் பள்ளிகள், கல்லூரிகள், தொழில்நுட்பப் பள்ளிகள், பல்கலைக் கழகங்கள் நகரங்களிலேயே மிகுதியாக இருக்கின்றன. பெரிய நூல் நிலையங்கள், கலைக்கூடங்கள், அருங் காட்சியகங்கள் போன்றவை நகரங்களிலேயே அமைந்துள்ளன. சிறந்த அறிஞர்களின் சொற் பொழிவுகள்கூட நகரங்களிலேயே நடைபெறுகின் றன. இவ்வாறான அனைத்து வசதிகளும் நகரங் களிலேயே கிடைப்பதால் இயல்பாக இளம் ஆண் களும் பெண்களும் உயர்கல்வி பெற நகரங்களுக்குச் செல்லவே விரும்புகின்றனர்.

அதுபோல நகரங்களில் பொழுதுபோக்கு வசதி களும் நிறைந்துள்ளன. திரைப்பட அரங்குகள், இசை அரங்குகள், கேளிக்கை அரங்குகள், விளையாட்டு அரங்குகள் போன்றவை நகரங்களில் உள்ளன. எனவே, இளைஞர்கள் முதல் முதியோர் வரை தங் களுடைய எண்ணங்களை,ஆசைகளை நிறைவேற்ற நகரங்களில் குடியேறுகின்றனர்.

**நகரங்களின் வகைப்பாடுகள்:** நகரங்கள் பலவழி களில் வகைப்படுத்தப்படுகின்றன. கிசுடு (Gist), அல் பெர்ட்டு (Halbert) ஆகிய அறிஞர்கள் செயற்பாடு களைக் கொண்டு நகரத்தை ஆறு வகையாகப் பிரித் துள்ளனர். அவை: 1) உற்பத்தி மையங்கள் (Production Centres). இரும்பு, எஃகு ஆகியன உற்பத்தி செய்யப்படுகின்ற சாம்செட்பூர், துணி உற்பத்தியில் புகழ்பெற்ற அகமதாபாது, இரப்பர் உற்பத்தி செய் யப்படுகின்ற அக்ரான் போன்ற நகரங்கள் இதற்கு எடுத்துக்காட்டுகளாகும. 2) தொழில் மற்றும் வணிக மையங்கள் (Centres of Trade and Commerce). நியூயார்க்கு, ஆம்பர்கு, ஆம்சுடர்டாம், புது தில்லி, உலூதியானா போன்ற நகரங்கள் இதற்கு எடுத்துக்காட்டுகளாகும். 3) அரசியல் தலைமையகங் கள் (Political Capitals), எடுத்துக்காட்டாகப் புது தில்லி, சண்டிகார், வாசிங்டன், இலண்டன் போன் றவைகளைக் குறிப்பிடலாம், 4) பண்பாட்டு மையங் கள் (Cultural Centres). எடுத்துக்காட்டாக ஆக்சு போர்டு, கேம்பிரிட்சு, சாந்திநிகேதன், வாரணாசி போன்வற்றைக் கூறலாம். 5) சுற்றுலா மையங்கள் (Resort Cities). எடுத்துக்காட்டாக பாதாம்பீச்சு, சிரீநகர்,சிம்லா, ஊட்டி போன்றவை அமையும். 6)பல வகையினை உடைய நகரங்கள் (Diversified Cities), அதாவது ஒரு குறிப்பிட்ட செயலுக்காக மட்டு மன்றிப் பல்வேறு சிறப்புடைய நகரங்கள்.


நியூயார்க்கு

இவ்வாறே முன்சு (E.E. Muntz) என்ற அறிஞர், அங்கு நடைபெறுகின்ற முதன்மையான செயலின் அடிப்படையில் நகரங்களை வகைப்படுத்தி ள்ளார். அவையாவன: 1) குயூபெக்கு (Quebec), மெக்சிகோ, மணிலா போன்ற தற்காப்பு நகரங்கள் (Defence Cities); 2) இலண்டன், நியூயார்க்கு, பம் பாய் போன்ற வணிக நகரங்கள் (Commercial Cities): 3) சாம்செட்பூர், மான்செசுட்டர் போன்ற தொழில் நகரங்கள் (Industrial Cities); 4) புதுதில்லி, சண்டிகார், வாசிங்டன் போன்ற அரசியல் நகரங்கள் (Political Cities); 5) செருசலம், வத்திகன் போன்ற சமய மையங்கள் (Religious Centres); 6) ஆக்சு போர்டு, கேம்பிரிட்சு, சாந்திநிகேதன் போன்ற கல்வி சார்ந்த நகரங்கள் (Educational Cities); 7) மாண்டி கார்லோ (Monte Carlo), சிரீநகர், சிம்லா போன்ற சுற்றுலா நகரங்கள் (Resort Cities).

மேற்கூறியவாறு நகரங்கள் பல்வேறுவகையில் வேறுபடுத்தப பட்டாலும் இப்பொழுது ஒரு நகர மானது ஒரு தனிச் செயலினால் மட்டும் சிறப்புற் றிருப்பதில்லை. நான்கு அல்லது ஐந்து செயற் சிறப்பு களைக் கொண்டிருக்கின்றன. அதாவது ஒரு நகரம் வணிகம், உற்பத்தி செய்தல், அரசியல், கல்வி சுற்றுலா ஆகிய அனைத்துச் செயற் சிறப்புகளையும் உடையதாக இருக்கலாம். எடுத்துக்காட்டாக,

பம்பாய் நகரமானது வணிகம், அரசியல், கல்வி, சுற்றுலா ஆகிய நான்கு துறைகளிலும் சிறப்புற்றுள்ளது.
பூ.த.

**துணை நூல்கள்:**


Bose, Ashish, India's Urbanization 1901 - 2001, Tata McGraw Hill Publishing Co. Ltd., New Delhi, 1978.

Gopi, K.N., Urban Growth and Industrial Locations, I.B.H. Publishing Co., New Delhi, 1980.

Manzoor Alam, S. and K.G. Gopi, Urbanization in Middle Africa, Oxford, IBH Publishing Co., New Delhi, 1976.

Prabha K., Towns: A Structural Analysis, Inter-India Publications, Delhi, 1979.


*நகர மக்கள் கல்வி*: இந்திய மக்கள் தொகையுள் 80 விழுக்காட்டினர் கிராமங்களிலும் 20 விழுக்காட்டினர் நகர்ப்புறங்களிலும் வாழ்கின்றனர். இதனை 1971-ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு மீண்டும் ஒருமுறை உறுதிப்படுத்தியுள்ளது. இந்தியாவின் மொத்த மக்கள்தொகையும், நகரிய வளர்ச்சியும் இந்த வேகத்திலேயே வளர்ந்து கொண்டிருக்குமானால் இந்தியப் பெருநகரங்கள் கட்டுக்கடங்காத விதத்தில் வளர்ந்துவிடும். மக்கள்தொகைப் பெருக்கம் உயரும்போது கிராமங்களிலிருந்து நகரங்களுக்குச் செல்லும் மக்களின் எண்ணிக்கை உயருகிறது. இந்தியாவிலுள்ள மொத்தம் 20,000 நகரங்களுக்கு 1950-2000 வரையிலான காலஇடைவெளியில் 150 மில்லியன் மக்கள் கிராமங்களிலிருந்து வரும் வாய்ப்புள்ளது.

**புறநகர் மக்களின் கல்வி நிலை:** ஒவ்வொரு நகரத்திலும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கையும், கற்றவர்களின் எண்ணிக்கையும் அவர்கள் சார்ந்திருக்கும் சமயம், சாதி அவர்கள் அந்த இடத்தில் வசித்துவரும் கால அளவு ஆகியவற்றைப் பொறுத்தே அமைகின்றன. மேலும் கற்றவர்களின் எண்ணிக்கை, அந்த இடத்தில் வசிப்பவர்களின் ஆண்டு வருமானம், பள்ளி செல்லும் நிலையிலுள்ளோரின் வயது, பால் முதலியவற்றையும் சார்ந்திருக்கிறது

பொதுவாகப் புறநகர்ப் பகுதி மக்களிடையே எழுத்தறிவு, கல்வி ஆகியவற்றைப் பெறுவதில் ஆர்வமும் முன்னேற்றமும் இருபாலாருக்கும் இருப்பினும், அவ்விருபாலருக்கும் இடையில் கற்றோரது எண்ணிக்கையில் உள்ள இடைவெளி மிகுதியாகிக் கொண்டே செல்கின்றது. இரண்டாவதாக எழுத்தறிவு பெற்றவர்களும், குறிப்பிட்ட தொழிலில் சிறப்புப் பயிற்சி பெற்றவர்களும் கல்விக்கூடங்களுக்கு வெளியிலேயே அவற்றைப் பெற்றதாகத் தெரிகிறது. இருப்பினும் இந்த முறைசாராக் கல்வி பற்றிப் பெரும்பாலானவர்களுக்குத் தெரியவில்லை. மூன்றாவதாக, சமூகமும் பண்பாடும் கல்வி இன்றியமையாத ஒன்று என்று உணர்த்திய போதும் பள்ளிக்குச் செல்லும் வயதுடைய சிறுவர், சிறுமியரில் பெரும்பான்மையானவர்கள் பள்ளிக்குச் செல்லாததற்குக் காரணம் வறுமையே ஆகும். நான்காவதாக முறை சார்ந்த கல்வி, முறைசாராக் கல்வி இவ்விரண்டுமே நகர்ப்புறங்களில் வாழும் ஏழை எளிய மக்களின் அன்றாடத் தேவைகளை நிறைவு செய்வனவாக அமையவில்லை. மக்களின்பொருளாதாரம், சமூக அமைப்பு,வாழும் சுற்றுப்புறச்சூழ்நிலை, மக்களின் பண்பாடு போன்றவைகளே மக்கள் எழுத்தறிவு பெறுவதற்கும், கல்வியறிவு பெறுவதற்கும், சிறப்புப் பயிற்சி பெறுவதற்கும் தடையாக இருப்பதாகக் கொள்ளலாம். எழுத்தறிவு பெற்றவர்களின் எண்ணிக்கையை உயர்த்தவும் கல்வியறிவு பெற்றோரின் எண்ணிக்கையை உயர்த்தவும் விரும்பினால் மேற்கூறியவைகளைக் கருத்தில் கொள்ளவேண்டும்.

**எழுதப் படிக்கத் தெரிந்தோரின் எண்ணிக்கை:** சில சமயங்களில் புறநகர்ப் பகுதிகளில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை, கிராமப் புறங்களில் உள்ள எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கையைவிடக் குறைவாக உள்ளது. புறநகர்ப் பகுதிகளில் உள்ளவர்களில் கற்றவர்களின் எண்ணிக்கை நகர்ப்புற மக்களை மொத்தத்தில் நோக்கும்போது குறைவாக உள்ளது. இளைய தலைமுறையினரிடம் ஒரு புதிய சிந்தனைப் போக்கும் முன்னேற வேண்டும் என்ற ஆர்வமும் காணப்படுகின்றன. இருப்பினும் சிறுவர்களில் அதிக விழுக்காடும் அதைவிடச் சிறுமியரில் அதிக விழுக்காடும் கல்வியறிவு பெறாமலேயே இருக்கின்றன. இந்த நிலையே நீடிக்குமானால் வரும் நாள்களில் அது ஒரு மிகப் பெரிய சிக்கலாக உருவாகும்.

கல்விக் கூடங்களில் வந்து பயின்றுதான் மக்கள் எழுத்தறிவு பெறவேண்டும் என்ற தேவையில்லை. பொதுவாக அவ்வாறு நடப்பதும் இல்லை. கல்வியாளர் மசும்தார் கோடிட்டுக் காட்டுவது போல் தில்லிப் புறநகர்ப் பகுதிகளில் கல்வியறிவு பெற்ற பெரியவர்களில் 80 விழுக்காடு கல்விக்கூடங்களுக்குச் செல்லாமலேயே அதைப் பெற்றிருக்கின்றது. கல்வியறிவு பெற்றவர்களின் எண்ணிக்கை, வயதைப் பொறுத்தும், ஆண், பெண் பாலரைப் பொறுத்தும் அமையுமென்பது பம்பாய்க் குடிசைப் பகுதிகளில் நடத்திய ஆய்வுகளிலிருந்து தெரியவருகிறது. மேலும் இந்த ஆய்வு புதிய தலைமுறையினருக்கும் பழைய

தலைமுறையினருக்கும் இடையே கல்வியறிவு பெறும் ஆர்வத்தில் மிகுதியான அளவு வேறுபாடு இருக்கிறது என்பதை மெய்ப்பிக்கிறது. பொதுவாகக் கல்வியறிவு ஆண்களுக்கு வேலை வாய்ப்பையும், திருமணத் தகுதியையும் மேம்படுத்துவது போன்று பெண்களின் நிலையை உயர்த்துவது இல்லை.

சராசரி குடும்ப வருமானத்தில் 5 விழுக்காடு குழந்தைகளின் கல்விக்குச் செலவழிக்கப் படுகிறது. ஆகவே வறிய குடும்பங்களிலிருந்து படிக்க விரும்புப வர்கள், உதவித்தொகை கொடுத்துப் பள்ளிக்குப் பிள்ளைகளை அழைப்ப இயலாது இருக்கின்றனர். குடிசைப்பகுதி மக்களின்கல்வி நிலையை மேம்படுத்த முயலும்போது இவற்றையும் வேறு சில கடுமையான சமூகச் சிக்கல்களையும் கருத்திற் கொள்ள வேண்டும்.

சென்னை, தில்லி போன்ற நகரங்களில் கல்விக் கூடங்களைக் குடிசைப் பகுதிகளில் புதிதாகத் திட்ட மிட்டு அமைப்பதற்கு இயலும் கூறுகள் உள்ளன. ஆனால், கல்கத்தா போன்ற நகரங்களில் இது இயலாததாகிறது.

குடிசைப் பகுதிகளைப் பொறுத்தமட்டில் முறை சாராக் கல்வி பற்றி மக்கள் மிகக் குறைவாகவே அறிந்துள்ளனர். நடத்தப்பட்ட ஆய்வுகளிலிருந்து மையங்களுக்கு வருவோர் எண்ணிக்கை குறைவதற் குக் காரணம் மையச் செயற்பாடுகளில் வசீகரத் தன்மை இல்லாததேயாகும். ஆனால், முறைசாராக் கல்வியில், பெண்கள் மிகுந்த விருப்பம் கொண்டவர் களாகவும் ஆண்கள் அக்கறை அற்றவர்களாகவும் காணப்படுகின்றனர் என்று ஓர் ஆய்விலிருந்து தெரிய வருகிறது. ஆனால், பெரும்பாலானவர்கள் கல்விக் கூடங்களுக்கு வெளியிலேயே கல்வியறிவு பெறுகின்ற னர் என்பதைக் கருத்திற் கொண்டு இதில் மேலும் ஆய்வுகள் செய்யப்பட வேண்டும்.

தெளிவற்ற ஒருங்கிணைப்பு, மக்களின் தேவை யைக் கருத்தில் எடுத்துக் கொள்ளாமை, தொழிற் பயிற்சி பெறும் மக்களையும் வெளியுலகையும் தொடர்புபடுத்தாமல் விட்டுவிடுவது போன்றவை, முறைசாராக் கல்வியில் காணப்படும் குறைகளாகும். சென்னைப் புறநகர்ப் பகுதிகளில் நடத்தப்பட்ட மாலை நேர வகுப்புகளைப் பயிற்றுநர்களின் பற்றாக் குறையாலும், மாணவர்களின் வருகைக்குறைவினா லும் கைவிட வேண்டியிருந்தது. பெண்களுக்குத் தையல் பயிற்சியளிக்கப்பட்டது. அவர்கள் தைத்த துணிகளை வெளிச் சந்தையில் விற்க இயலவில்லை. பயிற்சி முடிந்தவுடன் வேலை கிடைக்கவில்லை.ஏ ன் றால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட தையற்பயிற்சி சிறந்ததாக அமையவில்லை. மேலும் தட்டச்சு, சுருக் கெழுத்துப் போன்ற பெரும்பாலான தொழிற் பயற்சி களுக்கு எழுத்தறிவு இன்றியமையாததாகிறது. இத னால் பெரும்பான்மையான குடிசை வாழ் பெண்கள் முறைசாராக் கல்வியின் பயனை அடைய முடியாமல் இருக்கிறது.

பொருளாதார முறையில் இலாபமற்ற தொழில் களே பெரும்பாலும் முறைசாராக் கல்வி மையங் களில் கற்பிக்கப்படுகின்றன. அவற்றின் மூலப் பொருள்கள் கிடைப்பதற்கும் தயார் செய்யப்பட்ட பொருள்களை விற்பனை செய்வதற்கும் எந்தவிதமான வசதிகளும் செய்யப்படவில்லை. தொழிற் பயிற்சி களை ஏற்பாடு செய்யும்போது இவற்றையும் கருத்தில் கொள்ள வேண்டும். ஒவ்வொரு செயலையும் உடனுக் குடன் ஆய்வு செய்தோமென்றால் நல்ல பலனை எதிர்பார்க்கலாம். ஒருங்கிணைந்த செயற்பாடுகள் எவ்விதத்தில் ஏழைகளுக்குப் பெருத்த உதவியாக இருக்கும் என்பதை அகமதாபாதில் பெண்கள் நடத் தும் சுயவேலை வாய்ப்பு நிறுவனம் வெளிக்காட்டு கிறது. அவர்கள் பொருள்களை வாங்குவதற்கும் விற்பதற்கும் கூட்டுறவு முறையில் உதவி செய்கின்ற னர்.

முறைசாராக் கல்வி பொருளாதார முன்னேற் றத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டு செயற் படத் தேவையில்லை. அது மக்களின் வாழ்க்கைத் தரத்தை முன்னேற்றுவதாகவும் அமையவேண்டும். பெண்கள் சுகாதாரம், அடிப்படை எழுத்தறிவு, உடல் நலம் போன்ற கல்வியறிவில் அதிக ஆர்வம் காட்டு கின்றனர். சத்துணவு, குழந்தைகள் நலம் போன்ற வற்றில் குறைந்த அளவு கவனமே செலுத்தப் படுகிறது. ஏழைகளுக்கு எந்தெந்த உணவு வகைகள் சத்தானவை என்பது தெரிந்திருக்கின்றது. ஆனால் அவற்றை உண்பதற்கு வழிவகையின்றியே இருக் கின்றனர்.

நகர்ப்புற ஏழைகளின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்த முறைசாராக் கல்வி நிறைய வழிமுறை களையும், செயற்பாடுகளையும் கொடுக்கிறது. இந்த மையங்கள் வருமானத்தைப் பெருக்க வழி சொல் வதன் மூலமும், எழுத்தறிவைக் கற்பிப்பதன் மூலமும் இதனைச் செய்ய இயலும். இதனை வெற்றியுறச் செயற்படுத்த விரும்பினால் அது குறித்து விரிவான, ஆழமான ஆய்வுகள் செய்யப்பட வேண்டும்.

குடிசை வாழ் மக்களின் எல்லாத் தரப்பினருக் கும் பொருந்துமாறு நிகழ்ச்சிகளைக் கண்டறிய வேண்டும். அதன் பின்னர் அந்தந்த வட்டாரத் தேவைகள் என்ன? அங்குக் கிடைக்கும் பொருள்கள் என்ன என்பதற்குத் தகுந்தவாறு நிகழ்ச்சிகளைத் தொகுத்து அளிக்கவேண்டும். பயிற்சிமுடித்தவர்களை எங்கு, எந்த வேலையில் அமர்த்த இயலும் என்

பதையும், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை எப்படி விற்பனை செய்ய இயலும் என்பதையும் உடனுக்குடன் தெளிவாக ஆய்ந்து கண்டறிய வேண்டும். மக்களுக்கு மொத்தமாகக் கற்பிக்கப் பட வேண்டிய பொருள் யாது, அதனை எவ்வாறு சொல்ல வேண்டும் என்பது பற்றி புதிய ஆய்வுகள் செய்யப்பட வேண்டும்

குடிசைப் பகுதிகளிலும், நடைபாதைகளிலும் வாழும் மக்களுள் பெரும்பாலானோர் எழுத்தறி வின்றியே இருக்கின்றனர். அனைத்து மட்டத்திலும் சிறுமியரும் பெண்களுமே பாதிக்கப்பட்டுள்ளனர். எழுத்தறிவு, கல்வி, தொழிற்பயிற்சி முதலியவற்றைப் பெறுவதில் பொருளாதாரம், சுற்றுப்புறச்சூழல், பண் பாடு முதலியவை முட்டுக்கட்டையாக உள்ளன. வீட்டில் பெரியவர் ஒருவர் வீட்டுப் பொறுப்பைக் கவனித்துக் கொள்ளலாம். அப்போது மற்றவர்கள் பயில வசதியாக இருக்கும். அந்தச் சூழ்நிலையிலும் மற்றவர்களால் வரும் வருமான இழப்பையும் கவனத் தில் கொள்ள வேண்டும். சுற்றுப்புறக் காரணங் களாகக் காணப்படுபவை குறைவான வசதி, பள்ளி கள் வெகுதொலைவில் இருப்பது, அந்தந்தப் பகுதி களில் பள்ளிக்கூடம் திறப்பதில் உள்ள இடவசதி யின்மை, சட்டபூர்வமான சிக்கல்கள், படிக்கும் இடத்தில் காணப்படும் உடல் நலத்திற்கேலாத, விரும்பத்தகாத சூழ்நிலைகள் ஆகியனவாம்.

இவையே முதியோர் கல்வி, முறைசாராக் கல்வி ஆகியவற்றின் வெற்றி தோல்வியை நிருணயிக் கின்றன. இந்த அடிப்படைச் சிக்கல்களைப் பற்றி நல்ல ஆழமான அறிவு இருந்தால் நகர்ப்புற ஏழை களின் கல்வியில் நல்லதொரு முன்னேற்றத்தைக் காணலாம். கே.ஆ.

**நகரமயமாதல்**: மிகுதியான மக்கள் கிராமங் களிலிருந்து நகரங்களுக்குக் குடி பெயருகின்ற செயற் பாங்கு நகரமயமாதல் (Urbanization) எனப்படும். அதாவது, பெரும்பாலான மக்கள் நாட்டின் வேளாண் மைப் பகுதியிலிருந்து வெளியேறி ஏதேனும் வேலை அல்லது வணிகத்திற்காக நகரங்களில் குடியேறும் போது நகரமயமாதல் செயற்பாங்கு உருவாகிறது. இது கிராம வாழ்க்கையிலிருந்து நகர வாழ்க்கைக்கு மிகுதியான மக்கள் மாறுகிற செயற் பாங்காகும்.

மக்கள் வேளாணமை நிலங்களிலிருந்தும் கிராமங் களிலிருந்தும் நகரங்களுக்குக் குடிபெயருதல் பல ஆண்டுக் காலமாக நடைபெற்று வருகிறது. இருப் பினும் கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இங்கி



நகரமயமாதல்

லாந்தில் நடைபெற்ற தொழிற்புரட்சியே இந்த இயக்கம் வலுப்பெறக் காரணமாக அமைந்தது. தொழிற் புரட்சியால் கையால் உற்பத்தி செய்கின்ற நிலை மாறி இயந்திர உற்பத்தி நிலை ஏற்பட்டது. வீட்டிலேயே பணிபுரிவது மாறித் தொழிற்சாலைகளில் பணி புரிகின்ற நிலை ஏற்பட்டது. வேளாண்மையில் நல்ல முன்னேற்றம் அடைந்த பின்னர்க்கூட வேளாண்மைத் தொழில்-புரிவோர் தொழிற்சாலைகளில் பணியாற்றவும், வணிகம் செய்யவும் நகரங்களுக்கு ஓடினர். மேலும் வேளாண்மை, பொருள்களை உற்பத்தி செய்தல், போக்குவரத்து, செய்தித்தொடர்பு ஆகியவற்றில் ஏற்பட்ட தொழில்நுட்ப முன்னேற்றங்கள் நகரமயமாதலுக்கு வழிவகுத்தன. எடுத்துக்காட்டாகப் பருத்தி அரைக்கும் இயந்திரம் (Cotton Gin), அறுவடை இயந்திரம் (Reaper) போன்ற வேளாண்மைத் தொழில் நுட்ப முன்னேற்றங்கள் ஏற்பட்ட பின்னர் மிகுதியான மக்கள் நிலங்களை விட்டுவிட்டு நகரங்களில் தங்கிப் பணியாற்ற முடிந்தது.

தொடக்க காலத்தில் குறைந்த மக்கள் தொகையினரே நகரத்தில் வாழ்ந்தனர். பெரும்பான்மையினர் கிராமங்களிலே வாழ்ந்து வந்தனர். வேளாண்மை முறைகள் மிகப் பழமையானவையாகவும், திறனற்றவையாகவும் இருந்தன தேவையான உணவை உற்பத்தி செய்ய மிகுதியானோர் உழைக்க வேண்டியிருந்தது. போக்குவரத்தும் மந்தமாக இருந்ததால் நகரங்களுக்கு உணவைக் கொண்டு செல்வது கடினமாக இருந்தது. அதன்காரணமாக நகரங்கள் சிறியனவாக இருந்தன. சுகாதார வசதிகள் மிகவும் மோசமாக இருந்தன. மிகுதியான நகர மக்களை இவை உடல் நலம் கெடச் செய்தன. எனவேதான், பழைய நகரங்களில் 50,000-இத்திலிருந்து 1 இலட்சம் வரையிலான மக்கள் மட்டுமே வாழ்ந்து வந்தனர். ஆனால் இன்றைய புதிய நகரங்களில் 10 இலட்சத்திற்கும் மேற்பட்ட மக்கள் வாழுகின்றனர்.

**உலகளவில் நகரமயமாதல்:** தொழில்மயமாதல் (Industrialization) உலகில் முன்னேறி வரும் பகுதிகளில் மிகுதியாகப் பரவி வருவதால், நகரமயமாதல் இப்பொழுது ஓர் உலகளவிலான நிகழ்வாக நடைபெற்று வருகிறது. எனவே, நகரமயமாதல் பற்றியும் அதன் வளர்ச்சியைப் பற்றியும் ஆராய்தல், கொள்கை வகுப்பதிலும் திட்டமிடுவதிலும் முக்கிய பங்கு வகிக்கிறது. நகர வளர்ச்சியும் பொருளாதார முன்னேற்றமும் ஒன்றுடன் ஒன்று இணைந்துள்ளன. சமூகம் புதுமையடைதலின் முக்கிய கூறுகளுள் ஒன்று நகரமயமாதல் ஆகும்.



நகரமயமாதல், அமெரிக்கா

இக் காலத்தில் எல்லா நாடுகளும் மரபுவழிப்பட்ட வேளாண்மைப் பொருளாதார அமைப்பிலிருந்து நீங்கிப் பெரிதும் தொழில்மயமான, நகரமயமான பொருளாதார அடிப்படையைப் பெறும்போது, பிறப்பு இறப்பு விகிதங்கள் மிகுதியாக இருக்கும் நிலை மாறி, குறைந்த பிறப்பு, இறப்பு விகிதங்கள் ஏற்படுகின்றன என்று மக்கள்தொகை ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

நகரமயமாதல், பொருளாதார வளர்ச்சியுள் ஒரு முக்கிய குறியீடாகக் கருதப்படுகிறது. பொருளாதார அடிப்படையில் முன்னேறியுள்ள நாடுகளான இங்கிலாந்து, கனடா, பிரான்சு, அமெரிக்கா, சப்பான், சோவியத்து ஒன்றியம் போன்ற நாடுகளில் நகர மக்கள்தொகை மொத்த மக்கள்தொகையுள் 50 முதல் 80 விழுக்காடு வரை உள்ளது.

வளர்ந்துவரும் நாடுகளில் நகரமயமாதலின் வளர்ச்சி விகிதம் அண்மைக் காலங்களில் பெரும் அளவினதாக (ஆண்டுக்கு 4 விழுக்காடு) உள்ளது. வளர்ந்துவரும் நாடுகளில் நகரங்களின் மக்கள்தொகை 1950-70-ஆம் ஆண்டுகளில் 27.5 கோடியிலிருந்து79.4 கோடியாக உயர்ந்துள்ளது. இது ஆண்டுக்கு 2.6 விழுக்காடு வளர்ச்சியாகும். அடுத்த 25 ஆண்டுகளில் நகரங்களின் மக்கள்தொகை 200 கோடியாக உயரும் என எதிர்பார்க்கப்படுகிறது.

20-ஆம் நூற்றாண்டு முடிந்து சில காலத்துக்குள் உலகத்திலுள்ள நகர மக்களின் தொகை மொத் மக்கள்தொகையுள் 50 விழுக்காடு கொண்டதாக இருக்கும் என மதிப்பிடப்படுகிறது. இப்போது உலக மக்கள்தொகையில் 40 விழுகாட்டிற்குமேல் நகரங்களில் வசிக்கிறார்கள். இந்தியாவில் 1981-ஆம் ஆண்டின் மக்கள் தொகைக்கணக்கெடுப்பின்படி மொத்த நகரங்களின் மக்கள் தொகை, மொத்த மக்கள்தொகையுள் 23.73 விழுக்காடு என்று மதிப்பிடப் பட்டுள்ளது.

**இந்தியாவில் நகரமயமாதல்:** இந்தியாவில் 1971-ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி மகாராட்டிர மாநிலம் 31.2 விழுக்காடு நகர மக்கள் தொகையுடன் முதல் இடத்தைப் பெற்றுள்ளது. ஒரிசாவில்தான் நகரங்களின் மக்கள்தொகை மிகக்குறைவாக 8 விழுக்காடு அளவிலுள்ளது. மகாராட்டிர மாநிலம் 1981-இல் 35 விழுக்காடு நகரமக்கள்தொகையுடன் முதல் இடத்திலும், ஒரிசா 11.8 விழுக்காடு நகர மக்கள்தொகையுடன் கடைசி இடத்திலும் தொடர்ந்து இருக்கின்றன. இந்தக் கால அளவில் தமிழ்நாட்டில் நகரங்களின் மக்கள்தொகை ஒரே விகிதத்தில் இருந்துள்ளது.

மகாராட்டிரம், உத்தரப்பிரதேசம், தமிழ்நாடு மேற்கு வங்காளம் ஆகிய நானகு மாநிலங்களில் நகரங்களின் மொத்த மக்கள்தொகை, இந்தியாவில் நகரங்களின் மொத்த மக்கள்தொகையுள் 48.2 விழுக்காடு அளவுக்கு உள்ளது. மகாராட்டிரத்தில் மட்டும் 2.2 கோடி மக்கள் நகரங்களில் வசிக்கிறார்கள். நாட்டின் மொத்த நகர மக்கள்தொகையில் இது 14 விழுக்காடாகும். அந்த மாநிலத்தை ஒட்டியுள்ள குசராத்திலும் நகர மக்கள்தொகை விகிதம்உயர்ந்தே காணப்படுகிறது (31 விழுக்காடு). அவ்வாறே தமிழ்நாட்டிலும் இந்த விகிதம் உயர்வாகவே உள்ளது (33 விழுக்காடு). பிற பெரிய மாநிலங்களான கருநாடகம், பஞ்சாபு, மேற்கு வங்காளம் ஆகியவற்றிலும் நகரங்களின் மக்கள்தொகை தேசிய சராசரியை விட மிகுதியாகவே உள்ளது.

தேசிய அளவில் நகர மக்கள்தொகை வளர்ச்சி கணிசமாகவே இருந்துள்ளபோதிலும், மகாராட்டிரம் குசராத்து ஆகிய இரண்டு மாநிலங்களிலும், முந்திய பத்தாண்டுக் காலத்தில் நகர மக்கள்தொகை உயர்ந்துள்ளது போலவே 1971-81-ஆம் ஆண்டுகளிலும் உயர்ந்துள்ளது. வியக்கத்தக்க வகையில் தமிழ் நாட்டில் நகரங்களின் மக்கள்தொகை விகிதம் குறைந்துள்ளது. நகரமயமாதல் குறைந்த அளவில் உள்ள, முன்னேற்றம் குறைந்த உத்தரப்பிரதேசம் போன்ற மாநிலங்களில் பிறப்பு விகிதம், இறப்பு விகிதம் ஆகியவை மிகுதியாகவும்,பெருமுன்னேற்றம்அடைந்துள்ள மேற்கு வங்காளம், மகாராட்டிரம், தமிழ்நாடு போன்ற மாநிலங்களில் அவை குறைவாகவும் உள்ளன.

**தமிழ்நாடு-மிக உயர்ந்த அளவில் நகரமயம்:** மகாராட்டிரம், தமிழ்நாடு, மேற்கு வங்காளம், ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் நகரமயமாதல் மிகப் பெரும் அளவில் இருப்பதற்குக் காரணம், அவை முற்றிலும் நகரமயமான பம்பாய், சென்னை, கல்கத்தா, ஐதராபாது ஆகிய நகராட்சிப் பகுதிகளைத் தம்முள் கொண்டிருப்பதேயாகும். இந்தப் பெரிய நகரங்களில் குடிசைப்பகுதிகள் மிகுதியாக உள்ளன. இந்த நகரமயமாகும்மாவட்டங்களின்மக்கள் தொகையை நீக்கிவிட்டுப் பார்த்தால் இம் மாநிலங்களில் நகரமயமாதலின் அளவு வேறுபட்டுக் காணப்படும். இவ்வாறு பார்க்கும் போது நகரங்களின் மக்கள்தொகை விகிதத்தில் தமிழ்நாடு முதல் இடம் பெறுகிறது. அடுத்த இடங்களில் மகாராட்டிரமும், ஆந்திரப்பிரதேசமும் இருக்கின்றன.

**தமிழ்நாட்டின் நகரமயமாதல்:** தமிழ்நாடு மக்கள் தொகையில் இந்திய மாநிலங்களில் ஏழாம் இடத்தையும், நகர மக்கள்தொகையில் இரண்டாம் இடத்தையும் பெறுகிறது. தமிழ்நாட்டின் மொத்த மக்கள்

தொகை 1981-ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி 482.9 இலட்சம் ஆகும். இது நாட்டின் மொத்த மக்கள் தொகையில் 7.06 விழுக்காடாகும். மக்கள் தொகை வளர்ச்சி விகிதம் 1961-71 ஆகிய பத்தாண்டுக் காலத்தில் 22.30 விழுக்காடாகவும், 1971-81-ஆகிய பத்தாண்டுக்காலத்தில் 17.23 விழுக்காடாகவும் இருந்தது. இதே காலங்களில் நாட்டில் மொத்தமாக மக்கள்தொகை வளர்ச்சி விகிதம், 21.33 விழுக்காடு, 24.75 விழுக்காடு என்ற அளவில் இருந்தது. தமிழ்நாட்டில் 1971-81 ஆகிய பத்தாண்டுக் காலத்தில் நகரங்களின் மக்கள் தொகை 27.7 விழுக்காடு உயர்ந்தது. இதே காலத்தில் மாநிலத்தின் மொத்த மக்கள்தொகை உயர்வு விகிதம் 17.2 விழுக்காடாக இருந்தது.

சென்ற பத்தாண்டுகளில் தமிழ்நாட்டில் மொத்த மக்கள்தொகை உயர்வு விகிதமும், நகரங்களின் மக்கள் தொகை உயர்வு விகிதமும் நாட்டிலேயே மிகக் குறைவாக இருந்தன. மொத்த மக்கள்தொகை உயர்வு விகிதம் குறைவாக இருந்ததால், கிராமங்களிலிருந்து நகரங்களுக்குச் சென்ற மக்கள்தொகையும் குறைவாகி, நகரங்களின் மக்கள் தொகை வளர்ச்சி விகிதமும் குறைந்தது. தமிழ் நாட்டிலிருந்து வேலை தேடிப் பிற மாநிலங்களுக்குச் சென்ற மக்களின் எண்ணிக்கை காரணமாகவும் இந்த மாநிலத்திற்குள்ளேயே கிராமங்களிலிருந்து நகரங்களுக்கு இடம்பெயர்ந்து சென்றவர்களின் விகிதம் குறைந்திருக்கக்கூடும். ஆயினும், விவரங்களை விரிவாக ஆராய்ந்து பார்த்தபோதும் உறுதியான முடிவு எதையும் காண இயலவில்லை.

தமிழ்நாட்டில் தொழிற் பெருக்கம் 1971-81-இல் விரைவாக நடைபெறாத காரணத்தால், நகரங்களின் மக்கள்தொகை மிகுதியாக வளரவில்லை என்றும் கூறமுடியும். அல்லது தமிழ்நாட்டில் நகரமயமாதல் பரவலாகவும் ஒழுங்குபட்ட அடிப்படையிலும் நடந்துள்ள தென்றும் கூறலாம். தமிழ்நாட்டில் நகரங்களின் எண்ணிக்கை உயர்வு திடீரென்று குறைந்ததற்குச் சரியான விளக்கம் காண இயலவில்லை.

மொத்த மக்கள்தொகையில் நகரங்களின் மக்கள் தொகை 33.0 விழுக்காடாகும். மீதமுள்ள மக்கள் 'கிராமப்புற' மக்களாகக் கருதப்படுகிறார்கள். தமிழ் நாட்டில் சென்ற முப்பதாண்டுகளில் மொத்த மக்கள் தொகையில் கிராமப்புற மக்கள்தொகையின் விகிதம் 82.71 விழுக்காட்டிலிருந்து 67 விழுக்காடாகக் குறைந்துள்ளது. தமிழ்நாட்டில் 1981-ஆம் ஆண்டின் கணக்கெடுப்பின்படி நகரங்களில் வாழும் மக்கள்தொகை 159 இலட்சம் (33 விழுக்காடு) ஆகும். அதாவது தமிழ்நாட்டில் மூன்று பேருக்கு ஒருவர் நகரவாசியாயிருக்கிறார்.

**நகரமயமாதலுக்குத் தேவையான சூழ்நிலைகள்:** அர்ட்டன் (Horton), அண்டு (Hunt) ஆகிய அறிஞர்கள் பின்வரும் சூழ்நிலைகள் நகரமயமாதலுக்கு இன்றியமையாதவை எனக் கூறுகின்றனர். அவையாவன: 1) தொழில் நிலைகளில் வேலைப்பகுப்பு முறை (Division of Labour) கட்டாயமாக இருக்க வேண்டும். 2) உறவுமுறையைக் காட்டிலும் தொழில், சமூக வகுப்பு ஆகியவற்றின் அடிப்படையில் சமூக நிலையமைப்புகள் (Social Organizations) அமையவேண்டும். 3) குடும்பம் என்ற சமூக நிறுவனத்தைக் காட்டிலும் நிலப்பரப்பின் அடிப்படையிலான அரசு நிறுவனங்கள் கட்டாயம் இருக்கவேண்டும். 4) வணிக அமைப்பு முறை இருத்தல் இன்றியமையாதது. 5) செய்தித்தொடர்பு சாதனங்கள் வளர்ச்சியுற்றிருக்க வேண்டும். 6) பகுத்தறிவு அடிப்படையிலான தொழில் நுட்பத்தைப் பயன்படுத்த வேண்டும். பூ.த.

**நகரமயமாதலும் சிக்கல்களும்:** நகரமயமாதல் என்பது, மக்களின் சிந்தனையிலும் நடத்தையிலும் ஏற்படுகின்ற அடிப்படை மாற்றத்தோடும் அவர்களுடைய சமூக விழுமியங்களில் (Social Values) ஏற்படுகின்ற மாற்றத்தோடும் தொடர்புடையது. இது ஒரு தனி மனிதனோ, ஒரு குழுவோ ஒருவகையான வேலையிலிருந்து மற்றொரு வகைக்கு மாத்திரம் மாறுகின்ற செயலன்று. ஆனால், வேலை தொடர்பான மனோநிலையில் ஏற்படுகின்ற மாற்றத்தையும், ஒரு புதிய மற்றும் எப்போதும் மாறுகின்ற வேலையைப் பங்கிடுதலில் ஈடுபடுவதையுமே குறிக்கிறது. ஆகவே நகரமயமாதல் என்பது ஒரு வழிச் செய்முறையன்று. நகர வாழ்க்கைவகை, நகர மற்ற மற்றும் குறைவான நகரப் பகுதிகளுக்கும் பரவக்கூடிய குணமுடையது.

நகரமயமாதல் என்பது ஒரு வாழ்க்கை வகை என்று பார்த்தால் அது பெரிய தலைநகர் மையங்களிலிருந்து தோன்றியிருந்தாலும், அது ஓர் ஊர் அல்லது நகர எல்லைக்கு உட்பட்டதன்று. அது ஒருவகை நடத்தை என்றும் மற்றும், ஒருவன் கிராமத்தில் வாழ்ந்தாலும் அவன் நகரில் உள்ளவர்களுக்குரிய மனோநிலையினாலும், நடத்தையினாலும் அவன் நகரத்திற்குரியவனாக இருக்கமுடியும் என்றும் குறிப்பிடுகிறது. அதேபோல் நகர்மயமே ஆகாத ஒருவர் மிகவும் நகரமயமாக்கப்பட்ட ஒரு நகரின் ஒரு பகுதியில் வாழலாம்.

ஆகவே, ஒரு குறிப்பிட்ட பகுதியைக் கிராமம் அல்லது நகரம் என்று முடிவு செய்வதற்கு அந்தப் பகுதி

யில் வாழும் மக்கள்தொகையைவிட அந்தப் பகுதியில் வாழும் மக்களின் நடத்தையும் மனோபாவமுந்தான் மிக முக்கியம். சில நாட்டில் கடிதம் மற்றும் வாகனப் போக்குவரத்துகளின் வளர்ச்சியினால் நகரமயமாக்குதல் தொடர்ந்து வேகமாக நடைபோடுகிறது. மிகுதியாக ஒருவரையும் சுட்டிக் குறிக்காத (Impersonal), ஒருவருக்கொருவர் செய்யும் உதவி குறைந்தும், ஒப்பந்த அடிப்படையிலும் அமைந்த சங்கங்கள் மிகுதியாகக்கூடிய நிலைக்கு வாழ்க்கை மாறியுள்ளது. பொருளாதாரம், சமூகம், பொழுது போக்கு மற்றும் கல்வித் தொடர்பான புதிய கருத்துகள் கவனத்தைக் கவருவதால் புற வடிவம் சார்ந்த அல்லது ஒழுங்குபட்ட சங்கங்கள் பெருகியுள்ளன. ஒரே இயல்பான (Homogenity) மக்கள்தொகை மேலும் மேலும் பலதரப்பட்ட தன்மைக்கு (Heterogenity) இடங்கொடுக்கிறது. மனோநிலையில் மாறுபாடு ஏற்படுகின்றது. எப்படியாகிலும் அவ்விதமான மாற்றங்கள், தொழில்மயமாக்குதல் குறைவாக நடைபெறுகின்ற, வளர்ச்சியடையாத நாடுகளைவிட வளர்ச்சியடைந்துள்ள நாடுகளில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

ஆகவே, தொழில்மயமாக்குதலினால் அல்லது நகரமயமாதலினால் விளைகின்ற சில சிக்கல்கள் பொதுவானவை. அச் சமயத்தில் மற்றவை இவை இரண்டில் ஏதேனும் ஒன்றின் பின் விளைவுகளாகும். இவைகளினால் விளையக்கூடிய சிக்கல்களைச் சமூகவியல் அறிஞர்கள் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கிறார்கள். அவை பொருளாதாரம், சமூகம் மற்றும் வெளிப்புறம் (Physical) எனப்படும். ஓர் ஊரைப் பொருளாதாரம் மற்றும் சமூகச் சங்கங்களின் அமைப்பாகப் பார்த்தால் அது தொழில்நுட்பத் துறை மற்றும் பொருளாதார வளர்ச்சியுடன் சம்பந்தப்பட்டது என்று சமூகவியல் அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள். ஒரு சமுதாயத்தின் பொருளாதாரம் மற்றும் சமூகச் சங்கங்களின் முக்கிய வேலை என்னவென்றால் கிராமங்கள், ஊர்கள், நகரங்கள், தலைநகரங்கள் ஆகியவற்றில் சிறிய அல்லது பெரிய அளவில் குவிந்துள்ள (Agglomerations) மக்கள் தொகையைப் பற்றியும் அவர்களின் குணங்களைப் பற்றியும் எடுத்துச்சொல்வது. முக்கியமாக எந்த அளவிற்கு உழைப்பு பங்கிடப்பட்டுள்ளது என்பதையும் அவர்கள் சிறந்த கவனம் செலுத்துகின்ற பகுதியையும் சேர்த்து, வாகனம்மற்றும் செய்திப் போக்குவரத்து, வேளாண்மை மற்றும் வேளாண்மையல்லாத ஏனைய உற்பத்தித் திறன்,அரசியல் மற்றும் சமூக அமைப்புகள் ஆகியவை பற்றியும் குறிப்பிட்டுச் சொல்லுவதாகும். மேலே கூறிய உண்மையின் அடிப்படையில் நகரமயமாதலினால் ஏற்படக்கூடிய சிக்கல்களை மூன்று பாகமாகப் பிரித்துக் கூறலாம். அவை 1) பொருளாதாரம், 2) சமூகம், 3) வெளிப்புறம் என்பன.

**1) பொருளாதாரச் சிக்கல்கள்:** நகரமயமாதலினால் விளைகின்ற பொருளாதாரச் சிக்கல்களை இரண்டாகப் பிரிக்கலாம். ஒன்று, தொழில் நுட்பத் துறையை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார முன்னேற்றம். இந்தப் பொருளாதார முன்னேற்றம் தொழிலமைப்பில் மாற்றத்தை ஏற்படுத்துகிறது. எடுத்துக்காட்டாக, வேளாண்மையிலிருந்து வேளாண்மையற்ற மற்றத் தொழில்களுக்கு மாற்றுகிறது. இவ்வாறாக மக்கள் தொழிற்சாலைக்குப் பக்கத்தில் ஒரே இடத்தில் குடியேறுகிறார்கள். மேலும், இது ஒரு குறிப்பிட்ட வேலையில் சிறந்து விளங்க வாய்ப்பளிக்கிறது. அந்தத் தொழில் நிலையம் மேலும் மேலும் பெருக்கமடைதலினால் அதில் பணிபுரிவோர் திறமையும் மிகுதியாகிறது. அதேபோல அடுத்தடுத்துப் பல உற்பத்திப் பிரிவுகள் தோன்றுகின்றன. இரண்டாவதாக, இரண்டாம் நிலையிலுள்ள தொழில்களின் வளர்ச்சியைவிட, மூன்றாம் அல்லது குடிசைத் தொழில்களின் வளர்ச்சி நகர்ப் பகுதிகளில் மிகுதியான வேலைகளைக் குவித்துவிடுகின்றது. இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்குத் தொழில்களைக் கிராமப்புறங்களிலும் சிறிய நகரங்களிலும் அமைத்து வளர்ச்சி செய்யவேண்டும்.

**2) சமூகச் சிக்கல்கள்:** நகரமயமாதல் வெளிப்புறச் சூழலிலும், புதிய பொருளாதாரச் சங்கங்களிலும் மட்டும் மாற்றங்களை ஏற்படுத்துவதில்லை. அது சமூக ஒழுங்கு (Social Order) மற்றும் மனிதனின் நடத்தையையும் மனோநிலையையும் மிகுதியும் தாக்குகிறது. பெரும் வேகத்தில் நகரமயமாகிக் கொண்டு இருக்கின்ற சில ஆசிய நாடுகளில், நகரங்களில் குடியேறுகிறவர்களின் சில தனிப்பட்ட சிக்கல்கள் குறிப்பிட்டுக் கூறப்பட்டுள்ளன. இந்தியாவில் தொழில்மயமாதல் மற்றும் நகரமயமாதலின் சமூகப் பாதிப்புப் பற்றிய ஐக்கிய நாடுகளின் கல்வி, சமுதாயம், பண்பாட்டு அமைப்பின் மையம் (UNESCO Centre on the Social Implication of Industrialization and Urbanization in India), ஆசியாவின் நகரச் சூழ்நிலைகளில் குடியேறுகிறவர்களுக்கு வசிக்குமிடம் கொடுப்பதில் விளையும் சிக்கல்கள், குடும்பத்தில் நகர வாழ்க்கையினால் ஏற்படுகின்ற விளைவுகள், சமூக மற்றும் தனிப்பட்டோர் சீர்குலைவு, முக்கியமாகச் சட்ட விரோதமான காரியம் மற்றும் கடமை தவறுதல் போன்றவைகளால் ஏற்படும் சிக்கல்கள், நிலையற்ற வேலையினால் ஏற்படும் சிக்கல்கள், திறமையின்மை மற்றும் குறைந்த உற்பத்தித் திறன், கல்வி மற்றும் மிகுதியும் நகரமயமாகுதலைக் குறைப்பதற்கான வழிமுறைகள் ஆகிய சிக்கல்களுக்கு முக்கிய கவனம் கொடுக்கிறது.

பொதுவாகச் சிறியதும் ஒரே இயல்புடைய மக்கள் கூடி வாழ்கின்றதுமான கிராமத்தைச் சேர்ந்த

வர்கள் பெரியதும், பலதரப்பட்ட இயல்புடைய மக்கள் வாழ்கின்றதுமான நகரத்தில் குடியேறும்போது தங்களை நகர வாழ்க்கைக்கு ஏற்ப் அமைத்துக் கொள்வதில் ஏற்படும் சிக்கல்கள் எண்ணற்றன. ஒருவன் கடைப்பிடிக்கவேண்டிய மிக முக்கியமான புதிய சூழ்நிலைகளில் புதியதும், இதற்குமுன் தெரியாததுமாகிய புதிய வாழ்க்கைவழியை அமைத்துக்கொள்ளுதல், காலந் தவறாத வேலை நேரங்கள், உண்மையான (Warm) குடும்ப வாழ்க்கை இல்லாமை, மிகுதியாக ஒருவரையும் சுட்டிக் குறிக்காத தொடர்புகள், புதிய பொழுதுபோக்கு வடிவங்கள் மற்றும் முற்றிலும் புதிய வெளிப்புற அமைப்புகளான புதுவிதமான வீடு, சுற்றுப்புறச் சூழ்நிலை, போக்குவரத்து நெரிசல் முதலியனவாகும். நகர வாழ்க்கைக்கு ஏற்பத் தன்னை அமைத்துக்கொள்ளுதலில் உள்ள மிக முக்கிய சிக்கல் யாதெனில், ஒருவன் பிழைப்பு நடத்துவதிலிருந்து பணப் பொருளாதாரத்திற்கு மாறுவதும், பிழைப்பிற்காக ஒரு வேலையை வைத்திருப்பதுமாகும். எப்படியாகிலும் அவனுடைய மதப் பழக்கவழக்கங்கள்கூடச் சீர்கேடடைகின்றன. அவனுடைய மத சம்பந்தப்பட்ட மனோநிலைகூட மாறுபடுகின்றது. சில சமயங்களில் ஒழுங்குபடுத்தப்பட்ட கட்டுப்பாடுகளில் ஏதேனும் ஒரு தடங்கல் ஏற்படக்கூடும். அதன்விளைவாகத் தனிப்பட்டோர் சீர்குலைவு ஏற்பட வாய்ப்புண்டு.

குடும்ப அமைப்புகளும் பல வழிகளில் தாக்கப்படுகின்றன. குடும்பம் ஓர் அடிப்படைச் சமூகக் குழு. குடும்பம் பல கடமைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. எடுத்துக்காட்டாகப் பொருள் உற்பத்தி, உற்பத்தி செய்த பொருள்களைப் பயன்படுத்துதல், கல்வி கற்பித்தல், சமய வழிபாடு போன்றவற்றைக் குறிப்பிடலாம். ஆனால், இன்று நகரமயமாக்கப்பட்டதால் பல கடமைகள் குடும்பத்திலிருந்து பிரிக்கப்பட்டுப் பல தனிப்பட்ட நிறுவனங்களாலும் அரசாங்க நிறுவனங்களாலும் மேற்கொள்ளப்பட்டு நிறைவேற்றப்படுகின்றன. எடுத்துக்காட்டாகக் கல்வி, பொழுதுபோக்கு நிறுவனம் ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

எப்படியாகிலும் நகரமயமாதலின் விளைவாகக் குடும்பத்தில் சில மாற்றங்களைக் காணமுடிகிறது. எடுத்துக்காட்டாகத் திருமணமான ஒருவர் வேலைக்காக நகரத்தில் வாழ்வதும், அடிக்கடி தன்னுடைய சொந்தக் கிராமத்திற்குப் போய் வருவதும் அவருடைய நடத்தையையும் மனோநிலையையும் பெரிதும் பாதிக்கின்றன. மாறாக அவர் குடும்பத்துடன் நகரத்தில் குடியேறினால் குடியேறிய குடும்பத்தில் உள்ளவர்களின் மனோநிலையிலும், அந்தப் புதிய சமூகத் தொடர்புகளும் சூழ்நிலைகளும் தாக்குதலை ஏற்படுத்துகின்றன. ஒப்பந்த அடிப்படையிலான நகர வாழ்க்கை அவர்களுடைய ஆளுமையை மிகவும் பாதிக்கின்றது. இவ்வாறு மரபுவழிக் குடும்ப அமைப்பில் ஏற்பட்ட பிளவு, புதிய நிறுவனங்களாகிய பள்ளிக்கூடம், விளையாட்டு மைதானம், அனாதைகள் இல்லம், வேலையில்லாதவர்களுக்கு நட்ட ஈடு, மருத்துவமனைகள் போன்றவைகள் தோன்றக் காரணமாகியது. பொழுது போக்கு வடிவங்கள்கூட நகர வாழ்க்கையில் மாறுபடுகின்றன. பார்ப்பவர்களின் மனத்தில் பலவிதமான விளைவுகளை ஏற்படுத்துகின்ற திரைப்படங்கள் போன்ற பொழுதுபோக்கு மக்களிடையே செல்வாக்கடைந்து வருகிறது. மேலும் மக்கள் பங்கெடுத்துக்கொள்ள முடியாத சில புதிய விளையாட்டுகளையும் அவர்கள் விரும்பிப் பார்க்கிறார்கள்.

**3) வெளிப்புறச் சிக்கல்கள்** நகரமயமாதலின் வெளிப்புறப் பகுதிகள், நகரமயமாதலுக்கும் வெளிப்புறச் சூழ்நிலைக்கும் இடையே உள்ள சம்பந்தம். அதாவது சேரிகள், நெருக்கம் போன்ற மற்றவை, நகரமயமாக்குதலின் செய்முறையில் வீடு அளித்தல், வீடு கட்டுதல் மற்றும் சமுதாய முன்னேற்றம் ஆகியவற்றின் பங்கு, வெளிப்புற அல்லது சுற்றுப்புறச் சூழ்நிலை பற்றித் திட்டமிடுதல், மற்றும் நகரமயமாதலுக்கு ஒரு வழிகாட்டிக் கருவியாகப் பிரதேசத்திட்டமிடல் அணுகுமுறையைப் பின்பற்றுவது முதலானவற்றை உள்ளடக்கியுள்ளன.

இதற்குமுன் ஆராய்ந்து விவாதிக்கப்பட்ட ஆசிய நாடுகளுக்கேயுரிய சிறப்பு முக்கியத்துவம் வாய்ந்த சமூக மற்றும் பொருளாதாரச் சிக்கல்களைத் தவிர வளர்ச்சியுற்ற அல்லது வளர்ச்சியடையாத நாடுகளுக்குப் பொதுவான வேறுசில சிக்கல்களைப் பற்றியும் அவசியம் விவாதிக்க வேண்டும். அந்தச் சிக்கல்களாவன: 1) இறப்பு மற்றும் நோய்கள், 2) தீய பழக்கங்கள், 3) சட்டவிரோதமான காரியம், 4) அரசியல் நேர்மையற்ற தன்மை, 5) சேரிகள் மற்றும் வீடு அளித்தல் பற்றிய சிக்கல்கள், 6) பொதுமக்கள் உபயோகங்கள் மற்றும் நகரத் திட்டமிடல், 7) சமுதாய அமைப்பு மற்றும் சீர்குலைவு.

நகரங்களில் சில தொழில்துறைகளால் ஏற்படுகின்ற நோய்களினால் இறப்பு விகிதம் மிகுதியாக உள்ளது. ஆனால், அதேசமயத்தில் சிலர் ஆரோக்கியக் குறைவால் உழவு தொழில் செய்ய இயலாமல் நகரத்தில் குடியேறியிருக்கிறார்கள். நகரத் தொழிற்சாலைகளின் துணைப் பொருள்களாகிய மிகுந்த மாசு, தூசி, புகை மற்றும் வேறுவகையான காற்று அசுத்தங்கள் மக்களிடையே இறப்பையும் நோயையும் ஏற்படுத்துகின்றன.

மதுபானம் அருந்துகின்ற பழக்கம், போதைப் பொருள்களுக்கு அடிமையாதல், விபசாரம், சூதாட்டம், பிச்சையெடுத்தல் போன்ற தீய பழக்கங்கள் நகரமயமாதலினால் மிகுதியாவதற்கு வாய்ப்புள்ளது. எந்தச் சமூகமும் இதற்கு விதிவிலக்கன்று. ஆனால், கிராமங்களைவிட நகரமயமாக்குதலினால் ஏற்படக் கூடிய சூழ்நிலையில் இவற்றின் எண்ணிக்கை மிகுதியாக உள்ளது. அதுபோலவே அரசியல் நேர்மையற்ற தன்மை, நகரங்களில் பொதுவாக எல்லா இடங்களிலும் காணப்படுகின்றது. எப்படியாகிலும் நகராட்சி அல்லது மாநகராட்சி ஆட்சியில் அரசியல் நேர்மையற்றதன்மை அதற்குரிய சிறப்புப் பெற்றுள்ளது. சேரிகள் மற்றும் வீடு அளித்தலில் ஏற்படக்கூடிய சிக்கல்களைக் கிராமங்களில் காண முடியாது. இவை நகரமயமாக்குதலுக்கேயுரிய சிறப்புச் சிக்கல்களாகும். தொழிற்புரட்சிக்குப் பிறகுதான் மக்கள் மிக்க அளவில் நகரங்களில் வேலைதேடிக் குடியேறத் தொடங்கினர். அப்போதிருந்து இந்தச் சிக்கல் பெரிதாயிற்று.

இச்சிக்கல்களுக்கெல்லாம் தீர்வு காணவேண்டியதற்காக எடுக்கப்பட்ட திட்டங்களில் நகர்த் திட்டமிடலும் ஒன்று. குடிநீர் அளித்தல், ஆரோக்கிய வாழ்க்கை வசதி, பூங்கா அமைத்தல், போக்குவரத்து மற்றும் மின்சாரம், பொருளாதார முன்னேற்ற வழிமுறைகள், தொழிற்சாலைகளுக்கு இடமளித்தல் மற்றும் நிலப்பரப்பைச் சரியான முறையில் பயன்படுத்துதல் முதலியவைகள் நகர்த்திட்டமிடலின் முக்கிய கூறுகளாகும். இந்த முக்கிய கூறுகளைத் திட்டமிட்டுச் செயற்படுத்தினாலும், நகரமயமாக்குதலினால் ஏற்படக்கூடிய விளைவு சமுதாயத்தைத் தாக்கக் கூடியதாகவே உள்ளது. சமுதாயச் சீர்குலைவுக்கு மிகமுக்கியமான காரணிகளில் ஒன்று நகரங்களில் காணப்படுகின்ற சேரிகள், மற்றொன்று ஒரு சூழ்நிலையிலிருந்து வேறு ஒரு சூழ்நிலைக்கு மாறுகின்ற பகுதி. அதாவது, நகரமயமாக்கப்படுகின்ற புதிய பகுதி. இவை இரண்டில் சேரிகளைவிட மாறுகின்ற புதிய பகுதியில்தான் சமுதாயச் சீர்குலைவு மிக்க அளவில் ஏற்பட்டு அது சமூகத்தை முழுவதுமாகப் பாதிக்கிறது.

ஆனால், ஒரு வேளாண்மை நாட்டை நகரமயமாதல் நிலைக்கு மாற்றுவது மேலே கூறியது போன்ற பல சிக்கல்களை விளைவிக்கும் என்பதில் எந்தவித ஐயமுமில்லை. ஆனால், அதேசமயத்தில் நகரமயமாதலினால் விளையக்கூடிய முழுப் பயனும் எதிர்மறையானது அன்று என்பதை இங்குச் சுட்டிக் காட்டுவது தேவையாகும். நகரங்களே தொழில் நுட்பத் துறையிலும், உற்பத்தியிலும், வாழ்க்கைத் தரத்திலும் மேலும் அறிவியல் வளர்ச்சியிலும், புதிய கலைவடிவங்களை உண்டாக்குவதிலும் மிகப்பெரிய சாதனைகளைப் படைக்க வழி வகுத்துள்ளன என்பதைக் குறிப்பிட்டுக் கூறுவது இன்றியமையாத ஒன்றாகும். கோ.இரா.

**துணை நூல்கள்:**

**Asba A. Bhende & Tara Kanitkar**, Principles of Population Studies, Himalaya Publishing House, Bombay, 1978.

**Madan, G.R.**, Social Change and problems of Development in India, Allied publishers, Calcutta, 1971.

***நகர மானிடவியல்*** என்பது பண்பாட்டு மானிடவியலின் பிரிவுகளுள் ஒன்று. மானிடவியலறிவினைக் கொண்டு நகர மக்களின் பண்பாட்டை ஆராய்வதே இப்பிரிவின் தலையான நோக்கம். மனிதப் பண்பாட்டை அனைத்துத் துறை அறிவுடன் ஆராயும் முழுதளாவிய அணுகுமுறையைக் (Holistic Approach) கொண்ட மானிடவியலார், இன்று இயற்கைச் சூழலில் நாகரிக நிலையை அடையாத பழங்குடி மக்கள் முதல் தொழில் நுட்பத்திலும் நாகரிகத்திலும் மேம்பட்ட நகர மக்கள் வரை அனைவரையும் பல நிலைகளில் ஆராய்கின்றனர்.

நகரப் பண்பாடு என்பது அரசு அமைப்புடைய சமுதாயங்களில் (State Society) மட்டுமே காணக் கூடியதாக உள்ளது. இவ்வமைப்பைக் கொண்டிராத தொன்மைச் சமுதாயத்திலோ பழங்குடிச் சமுதாயத்திலோ நகரப் பண்பாட்டைக் காண இயலாது. இருப்பினும், அனைத்துச் சமுதாயத்திலும் பண்பாடு ஒரு பொதுப்படையான விதிமுறைகளின் (Principle) அடிப்படையில் காணப்படுகிறது என்றாலும், அதன் இயக்காற்றலில் (Dynamics) வேறுபாடுகள் உள்ளன. அவற்றின் அடிப்படையிலேயே ஒவ்வோர் இனத்தவரின் அல்லது சமுதாயத்தின் பண்பாடும் வேறுபடுகின்றது.

பிற சமுதாயங்களின் பண்பாட்டைப் போன்றே நகரச் சமுதாயத்தின் பண்பாட்டையும் பல உட்கூறுகள் இணைந்து முழுமை (Whole) கொண்டது எனக் கொள்வர் நகர மானிடவியலார்(Urban Anthropologists). நகரப் பண்பாடு என்பது ஒருதனி கூறன்று. பல கூறுகள் ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டு இடைவிடாமல் இயங்குவதன் மூலம் நிலை பெற்றிருக்கக் கூடியது. இக்கூறுகள் தனிமனிதன், குடும்பம், திருமணம், உறவுமுறை, உற்பத்தி முறை, தொழில் நிறுவனங்கள், செய்தித் தொடர்பு அமைப்புகள், மக்கள் தொகை அமைப்பு, இடப் பெயர்ச்சி (Migration), நகரமயமாக்கல்(Urbanization), அதிகார அமைப்புகள், போர், சமயம், விழாக்கள், சடங்குகள் அல்லது

இவை போன்ற பல கூறுகள் இதனுள் இடம் பெற்றுள்ளன. இக்கூறுகள் எவ்வாறு ஒன்றோடு ஒன்று தொடர்பு கொள்கின்றன, எவ்வாறான இயக்கத்தைப் பெறுகின்றன என்பதைப் பற்றி அறிவதே நகர மானிடவியல் (Urban Anthropology).

நகர மானிடவியலில் நகர (Town) மக்களின் வாழ்க்கை முறையும் மாநகர (City) மக்களின் வாழ்க்கை முறையும் முதன்மையாக ஆராயப்பட்டாலும், இவ்விடங்களைச் சுற்றியுள்ள பகுதிகளில் வாழும் மக்களைப் பற்றியும் ஆராயப்படுகின்றது. உலகம் முழுவதிலும் ஒரே முறையிலான நகர வாழ்க்கையோ மாநகர வாழ்க்கையோ காணப்படவில்லை. அதற்குக் காரணங்கள் பல. மக்கள் தொகையின் எண்ணிக்கை, எவ்வகையான நகரம் ஆகியவை குறிப்பிடத்தக்க காரணங்களாகும். பெரும்பாலான நகரங்கள் வாணிகத் தலங்களாகவோ, தொழில் துறைத் தலங்களாகவோ, புனிததலங்களாகவோ, அரசியல்தலங்களாகவோ, படைத்துறைத் தலங்களாகவோ காணப்படுகின்றன. அல்லது அனைத்து வகையான செயல்களையும் கொண்டு ஒன்றினை முதன்மையாகப் பெற்று விளங்குவனவாகவும் உள்ளன.

நகரங்கள் என்று எதைத் குறிப்பிட வேண்டும் என்பதில் மாறுபட்ட கருத்துகளே நிலவுகின்றன, பிரீசு (Breese) என்பார் 20,000க்கும் மேற்பட்ட மக்கள் தொகையுடைய இடங்கள் நகரங்கள் என வரையறை செய்வார். நகர மானிடவியலின் பல்வேறு கூறுகளைப் பற்றி அறியுமுன் நகர வாழ்க்கையின் தன்மையைப் (Urbanism) பற்றி அறிந்து கொள்ள வேண்டும். நகர மக்களின் தொழில்கள் பலவகையானவை. அவை பெரும்பாலும் விளை நிலத்தோடு தொடர்பற்றவையாக இருக்கும். தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்தல், அரசுப் பணி, வாணிகம், மக்களை ஆட்சி செய்தல் முதலானவையே முதன்மைத் தொழில்களாக உள்ளன. நகரங்களின் சுற்றுச்சூழல் (Environment) இயற்கைச் சூழலிலிருந்து பெரும்பாலும் துண்டித்துக் கொண்டதாக இருக்கும். மனிதனால் ஏற்படுத்தப்பட்ட சூழலே மிகுதி. நகரங்களில் வாழும் மக்கள் தொகையின் அளவு தொடர்ந்து மாறிக் கொண்டேயிருக்கும். இங்கு ஊரகப்பகுதிகளைக் காட்டிலும் மக்கள் தொகையின் நெருக்கம் (Population Density) மிகுதியாக இருக்கும். பொதுவாக மக்கள் இடம் விட்டு இடம் பெயர்ந்து கொண்டே (Migration) இருப்பர். சாதி அல்லது வேறு எந்த வகையான பொதுப் பெயரைக் கொண்ட சமூகத்தினரை (Community) அடையாளங் காணுவதைவிட வகுப்பு முறையையே(Class System) எளிதில் அடையாளங் காண முடியும். மக்களுக்கிடையே பொருளாதார வேறுபாடுகள் மிகுதியாக இருக்கும். இவ்வகையான தன்மைகளை மையமாகக் கொண்டதே நகரப் பண்பாடாகும்.

தொன்மை மக்களை (Primitive People) மிகுதியாக ஆய்வு செய்து கொண்டிருந்த மானிடவியலார், ஊரக, மற்றும் நகரப் பகுதிகளில் வாழும் கலப்புச் சமுதாயங்களையும் (Complex Society) ஆராய முற்பட்டுள்ளனர். இன்றைய நகர மானிடவியலார் பின் வரும் தலைப்புகளில் நகரப் பண்பாட்டை மிகுதியாக ஆராய்ந்து வருகின்றனர்.

**நகரச் சூழலியல்:** சூழலியல் (Ecology) என்பது இரு வேறுபட்ட கூறுகளுக்கிடையில் நிகழும் உறவுகளையும் தொடர்புகளையும் விளக்குவது. எடுத்துக் காட்டாக, மனிதச் சூழலியல் (Human Ecology) என்பது, மனிதனுக்கும் அவன் சார்ந்துள்ள இயற்கை உயிரினங்கள் ஆகியவற்றிற்குமிடையே நிலவும் தொடர்புகளை விளக்குவது. அவ்வாறே விலங்குச் சூழலியல் (Animal Ecology) என்பது, விலங்குகளுக்கும் இயற்கைக்கும் மனிதனுக்கும் நிலவும் உறவுகளை விளக்குவது. இவற்றைக் கொண்டு நகரச் சூழலியலைப் பற்றி ஓரளவு ஊகித்துக் கொள்ள முடியும். நகர வாழ்க்கையின் சூழலியலை ஐந்து கூறுகளாகப் பகுத்துக் கூறுவர் நகர மானிடவியலார். அவை: மக்கள்தொகை (Population), அமைப்பு (Orgnization), சுற்றுச்சூழல் (Environment), தொழில்நுட்பம் (Technology), சமுதாய உளவியல் காரணிகள் (Social-psychological factors).

நகரப் பகுதிகளில் வாழும் மக்கள், அப்பகுதியின் சமுதாய அமைப்பு இயக்கத்தில் தொடர்ச்சியான மாறுதல்களைச் செய்யும் போக்கைக் கொண்டுள்ளனர். ஏனெனில், நகரங்களில் பல்வேறு இன மக்கள் பரவி வாழ்கின்றனர். அவர்கள் வாழுமிடம் எங்குள்ளது, அவர்களின் அண்டைய மக்கள் யார் என்பன போன்ற கூறுகள் இன உறவுகளிலும், குழு நடவடிக்கைகளிலும். சமுதாயச் செயற்பாடுகளிலும் சிறப்பிடம் பெற்றுள்ளன.அதோடு நகரங்களுக்குத் தினமும் வருவோரின் எண்ணிக்கையும் செல்வோரின் எண்ணிகையும் நகரச் சூழலியலில் ஆராயப்பட வேண்டிய தொன்றாகிறது. அதன் அளவைப் பொறுத்துச் சமுதாய, பொருளாதாரச் செயற்பாடுகளையும் மனித உறவுகளையும் அறிய முடியும்.

நகர மக்கள் தொகையின் நெருக்கமும் அளவும், இயற்கை வளங்கள், காலநிலை, தட்பவெப்ப நிலை ஆகிய சுற்றுச்சூழல் காரணிகளால் அறுதியிடப்படுகின்றன. இக்காரணிகளின் தன்மைக்கேற்ப மக்களின் தகவமைப்பு ஏற்படும். இதனடிப்படையில் அப்பகுதியின் வாழ்க்கை அமைகிறது. பெரும்பாலான நகரச் சூழலியல் மனிதனால் ஏற்படுத்தப்பட்டவையாக





நகர்ப்புறத் தொழிற்சாலைகள்

உள்ளதால் இயற்கையாக உள்ள தாவரங்கள், விலங்கு களைக்காட்டிலும் மனிதனால் கொண்டு வரப்பட்ட புதிய வகைகளே மிகுதியாக இருக்கின்றன. அதனோடு நகரச் சுற்றுச்சூழல் மனிதக் கழிவுகளையும், தொழில் நிறுவனங்களின் கழிவுப் பொருள்களையும் கொண்ட ஒரு சூழலாக அமைந்துள்ளதால் இயற்கையின் சாயலே இல்லாத ஒரு நிலை ஏற்படுகிறது. இவை யனைத்தும் நகரப் பண்பாட்டுத் தன்மைகளின் ஒரு கூறாகச் செயற்படுகின்றன.

மனிதனுக்கும் அவனால் ஏற்படுத்தப்பட்ட செயற் கைச் சுற்றுச் சூழலுக்குமுள்ள உறவு, அம்மக்களின் தொழில்நுட்பத்தால் ஏற்படுகிறது. சமுதாய அமைப் பும் இதனால் வடிவமைக்கப்படுகிறது என்றால் மிகை யாகாது. மக்கள் அவர்கள் வாழும் பகுதிகளைத் தேர்ந்தெடுப்பதிலும் தொழில் நுட்பம் இன்றியமை யாக் கூறாக உள்ளது. மக்கள் அவரவர் செய்யும் தொழிற்கேற்ப அவர்களின் வாழுமிடங்கள் வேறுபட் டுக் காணப்படுகின்றன என்பது கண்கூடு. போக்குவரத் தில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி, மக்களிடையே அவர்கள் பணிபுரியும் இடத்திற்கருகில் வாழ வேண்டும் என்ற ஆர்வத்தைக் குறைத்துள்ளது. இவ்வாறான காரணி கள் ஒவ்வொரு நகரச் சூழலியலிலும் எவ்வாறு செயற் படுகின்றன என்பதை ஆராய்வது நகர மானிடவிய லின் முதன்மையான அணுகுமுறைகளுள் ஒன்றாகும்.

மக்கள் தங்கள் விருப்ப உணர்வுகளையும் (Sentiments) அவரவர் சமூகத்தின் மதிப்புகளையும் என்றும் போற்றி வாழ வேண்டும் என்று எண்ணுவர். பல இனத்தவர்கள் வாழும் சூழலில், பொருளாதார அடிப்படையில், ஏற்றத் தாழ்வுகளைக்கொண்ட பல வகுப்புகளாக வாழும் சூழலில், மக்கள் எவ்வாறு அவரவர்களின் சமூக, உள உணர்வுகளைக் கட்டிக் காக்கின்றனர் என்பது நகர மானிடவியலில் பெரும் ஆய்விற்குரிய பொருளாகும். ஓர் இன மக்கள் தங்கள் விருப்பாற்றலை மற்றவர்கள் மீது திணிக்க முயல் வதும் அதனால் ஏற்படும் குழு முரண்பாடுகளும் சமு தாயச் செயற்பாடுகளைப் பெரிதும் பாதிக்கக் கூடி யனவாக உள்ளன.

நாட்டுப்புற நகரத் தொடர்பு (Folk-Urban-Con tinuum) நகர மானிடவியலில் பெரும் ஆய்வுப் பொருளாக உள்ளது. ஒரு குறிப்பிட்ட புவிப்பரப்பில் சமுதாயப் பண்பாட்டு மாற்றத்தை இக்கருதுகோளு டன் மானிடவியலார் ஆராய்கின்றனர். எளிய நிலை யிலுள்ள சமுதாயம் என்றும், தொடர்ச்சியான மாற் றத்தைப் பெற்றுவருகிறது என்றும், அம்மாற்றம் பல தொடர் நிலைகளைக் கடந்த பின்னரே வளர்ச்சி யுற்ற இறுதி மாற்றத்தினை அடைகிறது என்றும் இதன்மூலம் விளக்குவர். நாட்டுப்புற நகரத் தொடர் பினை இராபர்ட்டு இரட்பீல்டு (Robert Redfield)



நகர்ப்புறச் சேரி

என்னும் அமெரிக்க மானிடவியலறிஞர் சிறப்பாக விளக்குகிறார். இவரது இவ்வாய்வு மூலம் நகரமய மாக்கத்தின் (Urbanization) தன்மைகளையும் புரிந்து கொள்ள முடியும். இரட்பீல்டு நான்கு வகையான இடங்களைத் தேர்வு செய்து கொண்டு நகரமயமாக் கத்தின் தன்மைகளை ஆராய்கிறார். இவர், 106 பேரைக் கொண்ட ஒரு பழங்குடிச் சிற்றூரையும், அதற்கருகினில் உள்ள 250 பேரைக் கொண்ட ஊரகக் கிராமத்தையும், அதற்கடுத்து 1200 பேரைக் கொண்ட ஒரு நகரத்தையும், அந்நகருக்கருகில் 1 இலட்சம் மக்கள் தொகையைக் கொண்ட ஒரு மாநக ரையும் எடுத்துக் கொண்டு சமுதாயம் எவ்வாறு நிகழ்கிறது என ஆராய்ந்தார். இவரது இவ்வகை ஆய்விற்குப்பின், நகர மானிடவியலில் நகரமயமாக் கம்பற்றியும் பண்பாட்டு மாற்றம்பற்றியும் புதிய அணுகுமுறை கிடைத்தது.

பழங்குடிக் கிராமத்தில் தொடங்கி மாநகரம் முடியத் தொடர்ச்சியாக நிகழும் இம்மாற்றங்களில் மூன்று நிலைகளில் பண்பாடு, மாற்றம் பெறுகிறது. 1) பழங்குடியினர் பண்பாட்டில் சிதைவு (Cultural Disorganization) ஏற்படுகிறது. 2) கூட்டுணர்வு குறைந்து தனி மனிதத் தன்மை மிகுதியாகிறது, 3) சமய நம்பிக்கைகள் குறைந்து உலகியல் சார்ந்த கொள்கைகளும் சமயச் சார்பற்ற கருத்துகளும் உண் டாகின்றன. நகரத்தின் தாக்கத்திற்குட்பட்டும் பல ஊரகச் சமுதாயங்கள் (Rural Societies) தொடர்ச் சியாக மாற்றங்கள் பெறுகின்றன. இவ்வகையான பண்பாட்டு மாற்றங்களை அறிவதில் நகர மானிட வியலார் மிகுந்த ஆர்வங் கொண்டுள்ளனர்.

நகர மானிடவியலார் நகரங்களில் உள்ள சேரி, வறுமை நிலைப் பண்பாடு (Culture of Poverty) முதலானவற்றையும் ஆராய்கின்றனர். வல்லரசு நாடு கள் முதற் கொண்டு இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாடுகள் வரை அனைத்து நாட்டு நகரங்களி லும் சேரிகள் காணப்படுவது நகர வாழ்வின் தவிர்க்க இயலாக் கூறாக உள்ளது.

நகரங்களில் தொழில் துறைகளின் பெருக்கம் நாளுக்கு நாள் மிகுதியாகிக் கொண்டே செல்வதால் நகரங்களைச் சுற்றியுள்ள எளிய பிரிவினர் வேலை தேடி நகரங்களுக்குக் குடிபெயர்கின்றனர். அவர்களுள் பலர் மிகக் குறைந்த கூலியுடன் பணியில் அமர்கின் றனர். அவர்களால் நிலையான குடியிருப்புகளில் வாழ இயலா நிலை ஏற்படுகிறது. இவ்வாறான சூழலில் நகரின் ஒதுக்குப் புறங்களிலும் கழிவு நீர் ஓடும் ஓடைகளின் ஓரங்களிலும் மிகச் சிறிய குடிசை களை அமைத்து வாழ்கின்றனர். இவர்களின்வாழ்க்கை

முறை நகர மக்களின் வாழ்விலிருந்து தனிப்பட்டதாக உள்ளது. ஓர் ஆதிக்கப் பண்பாட்டிற்கும் வறுமையில் வாழ்வோரின் பண்பாட்டிற்கும் உள்ள உறவுகள் என்ன? அதன் தன்மைகள் என்ன என்பனவற்றைப் பற்றி நகர மானிடவியலார் ஆராய்கின்றனர். சீ.ப.

**துணை நூல்கள்:**

**Fox, Richaod G.** Urban Anthropology, Prentice-Hall, New Jersey, 1977.

**Southhall, Aidan ed.** Urban Anthropology: Cross-Cultural studies of Urbanization, Oxford University Press, New York, 1973.

***நகரமைப்புத் திட்டம்:*** நாடோடியாக வாழ்ந்த முற்கால மனித இனம், பயிர்த் தொழிலைத் தொடங்கியபோதுதான், மனித குடியிருப்புகள் தோன்றலாயின என்பது வரலாற்றுச் சான்று. வேளாண்மையைத் தொடர்ந்து பிற தொழில்கள் முக்கியத்துவம் பெற்றபோது கிராமங்கள் வளர்ந்தன, வளர்ந்த கிராமங்கள் சிறிய ஊர்களாகவும், நாளடைவில் நகரங்களாகவும் மாநகரங்களாகவும் வளர்ச்சி பெற்றன. மக்களின் சமய வளர்ச்சி சமுதாய வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சி, கல்வி வளர்ச்சி, பலதரப்பட்ட அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சி ஆகியவை ஒருநகரம் உருவாவதற்கு மட்டுமன்றி அதன் தொடர்வளர்ச்சிக்கும் அடிகோலின. மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்த போதெல்லாம் நகரத்தின் பல்வேறு உட்பகுதிகளும் அதற்கேற்ப மாற்றங்கள் பெற்றன. எடுத்துக்காட்டாகச் சமய மையங்கள் சமுதாயமையங்களாகவும், சிறிய வணிகச் சாலைகள் பெரிய வணிக மற்றும் தொழில் மையங்களாகவும் மாறின

நகரங்களைநிருமாணிப்பதிலும் அவை பாங்குடன் வளர்ச்சி பெற வழிமுறைகளை வகுப்பதிலும் இந்தியா வரலாற்றுக் காலத்திலிருந்தே முதன்மை பெற்றுச் சிறந்து விளங்கியது. அன்றைய இந்திய நகரங்களைப் பற்றியும் அவற்றின் வடிவமைப்புப் பற்றியும் அவை களில் நடைபெற்ற பல்வேறு நகரமைப்புப் பணி களைப் பற்றியும் பல அறிஞர்களும் இந்தியாவிற்கு வந்த பயணிகளும் பாராட்டி எழுதியுள்ளனர். மான சாரா, அர்த்தசாத்திரம் போன்றவை இந்திய புராதன நகரமைப்புத் திட்டங்களை வழி முறைப்படுத்தி விளக்குகின்றன. சிந்துவெளி நாகரிகத்தில் தொடங்கிக் குப்தர்கள், மௌரியர்கள், முகலாயர்கள், இராசபுத்திரர் கள் காலத்திலும் தமிழ்நாட்டில் சேர, சோழ, பாண்டிய, பல்லவர் காலங்களிலும் திட்டமிடப்பட்ட நகரங்கள் நிருமாணிக்கப்பட்டு வந்தன.

**தொழிற்புரட்சியின் விளைவுகள்:** ஆனால், அண்மைக் காலத்தில் ஏற்பட்ட தொழிற்புரட்சியால் குடியிருப்புப் பகுதிகளில், குறிப்பாகச் சிறிய நகரங்களிலும் பெரிய நக்ரங்களிலும் பெரும் மாற்றங்கள், மிகக் குறுகிய காலத்தில் பெரும் அளவில் மக்கட் பெருக்கத்தால் ஏற்பட்டன. உலகிலுள்ள எல்லா



நகரமைப்புத்திட்டம்

நாடுகளிலுமுள்ள நகரங்களும் இப்புரட்சியால் பாதிப்பு அடைந்தன. ஓர் இலட்சத்திற்கும் குறைந்த மக்கள் தொகை கொண்ட சிறிய நகரங்கள், மிகக் குறுகிய கால அளவில் 10 இலட்சத்திற்கும் மேம்பட்ட மக்கள் தொகை கொண்ட பெரு நகரங்களாக வளர்ந்தன. நகர்ப்புறத்தில் தொழில் வளர்ச்சியால் தோன்றும் பல்வேறு வேலைவாய்ப்புகளாலும், அவற்றில் எதிர்பார்க்கப்படும் வருமானங்களாலும் பெரிதும் கவரப்பட்டு அதன் விளைவாகக் கிராமப்புறங்களிலிருந்து குடிபெயர்ந்து நகர்ப்புறங்களில் வந்து சேர்ந்துவிடும் மிகுதியான மக்கள்தொகையால் புதிதாக ஏற்பட்டுவிட்ட நகர்ப்புற வளர்ச்சியால், பல நடைமுறைச் சிக்கல்கள் உருவாயின. யாதொரு முன்னறிவிப்போ, தயார் நிலையோ ஏதுமின்றி நகர்ப்புறத்துக்கு வந்து குவியும் மக்கள் பல இன்னல்களை எதிர்நோக்கினர். எடுத்துக்காட்டாக வீட்டு வசதியின்மை, மக்கள் நெருக்கம், குடியிருப்பிலிருந்து தொழில்மையத்திற்குச் செல்லவும் கல்வி, உடல்நல, ஓய்வு நேர, சமய பண்பாட்டுத் தேவைகளைநிறைவு செய்யவும் தேவையான நெடுந்தூரப் பயணங்கள், அவற்றால் விளையும் கால பொருளாதார விரயங்கள் மற்றும் மன நிறைவின்மை, மனச்சுமை, மேலும் பெருங்கூட்டத்தின் நடுவே வாழ்ந்த போதிலும் தன்னிலை, தன்சுய கௌரவத்தை இழக்கும் பரிதாப நிலை என்று ஒரு பெரிய பட்டியலே போடலாம். மேலும் திருடு கொள்ளை, கொலை, விபசாரம், ஆக்கிரமிப்பு, வன்முறை போன்ற சமுதாய நலிவுகளும் கேடுகளும் பெரும் அளவில் வளர்ந்தன.

**இந்திய நாட்டின் நிலை:** இந்திய நாட்டின் நிலையைப் பார்க்கும்போது முதலாகத் தெரிவது இந்தியாவின் மக்கள்தொகையும் அதன் அதிவேக வளர்ச்சியுமே. உலகத்தில் வாழும் மனிதர்களில் ஒவ்வொரு ஏழாம் மனிதனும் இந்தியன். ஆனால், உலக நிலப் பரப்பில் இந்தியாவின் பங்கு நாற்பதில் ஒன்றே. 75 கோடியை எட்டியிருக்கும் இந்திய மக்கள்தொகை ஆண்டொறுக்கு 1.4.-1.5 கோடியாக வளர்கிறது. இந்த ஓர் ஆண்டு வளர்ச்சி ஆசுத்திரேலியாத் துணைக் கண்டத்தின் மொத்த மக்கள்தொகையாகும். ஆனால் ஆசுத்திரேலியாவின் நிலப்பரப்போ இந்திய நாட்டைப் போன்று இரண்டரை மடங்கு. இந்தியாவில் இருப தாண்டுகளில் வளரும் தொகை உருசிய நாட்டின் அல்லது அமெரிக்கா நாட்டின் மக்கள்தொகைக்குச் சமமாகும்.

இந்திய நாட்டிலும் தமிழ் மாநிலத்திலும் (நகர்ப் புற வாசிகள் 33%) கவலையளிக்கும் செய்தி பெரும் பாலான இந்நகர மக்கள் பெருநகரங்களில் குழுமியிருப்பதுதான். இந்தியாவில் 3000க்கும் மேற்பட்ட நகரங்கள் உள்ளன. தமிழ்நாட்டின் சென்னையிலும் மற்றும் நான்கு பெரிய நகரங்களிலும் தமிழ்நாட்டின் 50% நகர்ப்புற வாசிகள் உள்ளனர். தமிழ்நாட்டில் 400 நகரங்களுக்கு மேல் உள்ளன. தவிரப் பெருநகரங்களின் வளர்ச்சி வேகம், தொடர்ந்து மற்ற நகரங்களின் வளர்ச்சியை விஞ்சியே இருக்கிறது. இவ்விதமான சமனில்லா மக்கள் வாழ் அமைப்பு, இப்போதுள்ள குறைகள், தட்டுப்பாடுகள், வாழ்க்கைத் தரத்தில் உள்ள மிகுதியான வேறுபாடுகள் ஆகியவை மேலும் சீரழியக் காரணமாக இருக்கின்றன. ஆகவே தான் நகர்ப்புற வளர்ச்சிக்கும் மேம்பாட்டுக்கும் தீட்டப்படும் பல்வேறு திட்டங்களை மிகக் கவனத்துடன் பல்வேறு கோணங்களில் பரிசீலனை செய்ய வேண்டியிருக்கிறது.

நகர்ப்புற வளர்ச்சி அல்லது மேம்பாட்டுத்திட்டம் சீரிய முறையில் நிறைவேற மூன்று முக்கிய பிரிவினருடைய ஒத்துழைப்பும் பங்கு பணியும் மிகவும் தேவை எனக் கருதப்படுகிறது. அவையாவன: 1) அரசும் அதனைச் சார்ந்த நிறுவனங்களும்: இவற்றின் முக்கிய பணி, அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்வதும் பொருளாதாரத் தகுதி குறைந்த மற்றும் நலிவுற்ற பிரிவினருக்கு உதவியும் மானியமும் அளித்தலும். 2) தனியார் துறை: பொருளீட்டுவதும், இலாபத்தைப் பெருக்குவதும் இத்துறையின் முக்கியநோக்கமாகும். 3) பாதிக்கப்பட்டோர் அல்லது பயன் அடைபவர்கள்: வசதிகள், அவற்றின் முன்னுரிமை, அவற்றைப் பெறப் பொருளாதாரத் தகுதி, அதற்கேற்ற அரசு உதவி அல்லது மானியம் பெறுதல் முதலியவை முக்கிய பங்கேற்கும் பகுதிகளாகும்.

தனியார் நிறுவனங்கள், வளர்ச்சித் திட்டத்தில் பொறுப்பேற்று மேம்பாட்டிற்கு வழிவகுத்தாலும் அவை பெரிதும் தம் இலாபம் கருதியே செயற்படுகின்றன. எனவே, இத்தனியார் நிறுவனங்கள் சமுதாயத்தினர் மிக்க அளவில் பயன் பெறும் விதத்தில் தங்கள் திட்டங்களைச் செயலாக்க வழிமுறைகளை அமைப்பது தேவையாகிறது. இத்தகைய நெறிமுறைப்படி, செயலாக்கப்படும் திட்டங்கள் சிலவற்றினால் குறிப்பிட்ட சிலருக்கு இடையூறுகளும் சிரமங்களும் நேர்ந்தாலும் பொதுநன்மையைக் கருதி அவற்றைச் சமுதாயம் ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது. ஆனால், இவ்வாறு ஏற்படும் இடையூறுகளுக்கும் சிரமங்களுக்கும் தகுந்த இழப்பீடு கொடுக்கப்பட வேண்டும் என்பதும் ஏற்கப்பட்டுள்ளது.

**வளர்ச்சித் திட்டங்கள்:** இப்பயன்களைப் பெறக் கீழ்க்காணும் முயற்சிகளை மேற்கொள்ளத் தேவை ஏற்படுகிறது.

**மேம்படுத்தப்பட்ட வளர்ச்சித்திட்டம்:** இதனால் இன்றைய தேவைகளின் தட்டுப்பாடுகளை அறிவது

மட்டுமன்றி, வளரும் தேவைகளையும், வருங்காலத் தேவைகளையும் கண்டறிந்து, கணக்கிட்டு, இத் தேவைகளுக்கான நிலப்பரப்புகளைச் சரியான இடங்களில் தேர்ந்தெடுத்து அவற்றின் அளவை, தேவைப்படும் குறியீட்டைக் கண்டறிந்து அவற்றை உரிய காலத்தில் செயற்படுத்துவதும அரசு மற்றும் பொது நிறுவனங்களின் கடமையாகும். அதுபோலவே வளரும் தேவைக்கேற்ப உகந்த இடங்களைத் தேர்ந்தெடுத்து அந்நிலங்களை வீடுகள் மற்றக் கட்டடங்கள் கட்டுவதற்கு ஏற்றவையாக உருவாக்குவதும் அதற்கான சாலைகள் உருவாக்குவதும், குடிநீர் மற்றும் மின்சார வசதிகள் போன்ற அடிப்படை வசதிகளைச் செய்து தருவதும் இதில் அடங்கும். இவைகளைப் பெருவாரியான தனியார் நிறுவனங்கள் போதுமான அளவிலும் தேவையான தரத்திலும் சரிவர அமைத்துக் கொடுப்பதில்லை. அதற்கு முக்கிய காரணங்கள் சந்தர்ப்பவாதிகளின் குறுகிய கண்ணோட்டமும் பெரும் அளவில் இலாபம் ஈட்டும் ஆர்வமுமேயாகும்.

தொடர்ந்து வளர்ந்து வரும் இத்தேவைகளை நிறைவு செய்யத் தரக்குறைவான இடங்களில் குறைவான வசதிகளைத் தந்து அளவுக்கு அதிகமாகப் பணத்தையும் பிற கட்டணங்களையும் தனியார் நிறுவனங்கள் மக்களிடமிருந்து பெற்றுக் கொள்கின்றன. இதைத் தடுப்பதற்காகச் சில விதிமுறைகள் உள்ளன. வளர்ச்சிக் கட்டுப்பாட்டு விதிகள் எனச் சொல்லப்படும் அவை, வளர்ச்சித் திட்டப் பணிக்காக அதன் அனுமதி வேண்டும் யாவரும் இந்த வளர்ச்சிக்காகத் தேவைப்படும் போதிய தகுதிகளான முக்கிய சாலையிலிருந்து நேரடி வழியைப் பெறுதல், கடைகள், பள்ளிகள், விளையாடுமிடங்கள் மற்றும் பல்வேறு வசதிகளுக்கான நில ஒதுக்கீடு செய்தல் ஆகிய வற்றைக் கடைப்பிடிக்க வழிவகை செய்கின்றன. குடியேறுபவர்களின் அடிப்படை வசதிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கவும், அதே சமயத்தில் தம் லாபம் கருதித் தகுதிக் குறைவான திட்டங்களைச் செயற்படுத்தும் சிலரைத் தடுக்கவும், அவ்விதிகள் வகை செய்கின்றன. காலி இட ஒதுக்கீடு, பொதுப் பயன் ஒதுக்கீடு, பூங்கா ஒதுக்கீடு, சாலைகளின் போதிய அகலம் போன்ற குறைந்தபட்சம் வேண்டப்படும் பல்வேறு தகுதிகள் ஆகியவை ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவற்றின் முக்கியத்துவத்தைப் பற்றி இந்த வளர்ச்சி திட்டத்தின் மூலமாக அறிவுறுத்தி விதிமுறைகளைக் கடைப்பிடிக்கும்படி அவர்களைக் கட்டாயப் படுத்துவது, மக்களின் வாழ்க்கைத் தரத்தைக் காக்கத் தேவைப்படுகிறது.

நகர்ப்புற வளர்ச்சித் திட்டத்தின் மற்றொரு முக்கிய நோக்கம் சுற்றுப்புறச் சூழ்நிலையைப் பாதுகாப்பதாகும். மத்திய அரசும் மாநில அரசும் இதைக் கருத்திற் கொண்டு பல்வேறு சுற்றுப்புற விதிமுறைகளால் இச்சூழ்நிலையைப் பாதுகாக்கின்றன. வீட்டு மனைப் பகுதிகளிலும், தொழிற்சாலைப் பகுதிகளிலும், வணிகப் பகுதிகளிலும், சமுதாயத்தினர் பெரும் அளவில் நலன் பெறத்தக்கவகையில், திட்டங்களை அனுமதிக்கும் போதும் செயற்படுத்தும் போதும் சுற்றுப்புறச் சூழ்நிலையின் பாதுகாப்பும் வற்புறுத்தப் பட வேண்டும். ஆனால், பெரும்பாலான நகர்ப்புற வாழ்க்கையில் சீர்கேடான சுற்றுப்புறச் சூழலால் வாழ்க்கையின் தரம் பாதிக்கப்பட்டுள்ளது. மற்றும் நடைமுறையில் உள்ள வளர்ச்சிக் கட்டுப்பாட்டு விதிகளைத் தவிர, இந்திய நாட்டில் சில நகரங்களில் மட்டும் நடைமுறையில் இருக்கும் கட்டடக் கலைப் பாதுகாப்பு விதிமுறைகளைச் செயற்படுத்துவது, நாட்டின் எல்லா நகரங்களிலும் முக்கியமான நகர மையங்களிலும், வாணிக மையங்களிலும் கட்டடக் கலையின் தரத்தை உயர்த்தி அழகுபடுத்துவதற்கு மட்டுமன்றி இந்தியப் புராதன கலையுணர்வு மிகுந்த, வரலாற்றுப் புகழ்பெற்ற கட்டடங்களையும், நகரப் பகுதிகளையும் காப்பாற்றிப் பேணிப் பாதுகாக்கவும் தேவையாகிறது.

மத்திய அரசு மற்ற மாநில அரசுகளிடம் கலந்தாலோசித்து ஒரு தேசிய வீட்டுவசதி கொள்கைத் திட்டத்தை உருவாக்கி வருகிறது. இந்தத் திட்டத்தைப் பற்றிய அறிக்கையில் ஒரு பகுதி, வீட்டு வசதி, பொதுவாகச் சமுதாயத்திற்கு உதவுவதற்காக மட்டுமல்லாமல், ஒட்டுமொத்தத்தில் பொருளாதாரம் வளர்ச்சியடையவும், மக்களுக்குப் பல அடிப்படைத் தேவைகளை வீட்டை மையமாகக் கொண்டு நிறைவு செய்யவும் பல திட்டங்களை அமைக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறது. இதற்கு உதவியாகத் தேசிய வீட்டு வசதி வங்கிகள் உட்படப் பல பண முதலீட்டு நிறுவனங்கள் நிறுவப்பட்டும் உள்ளன; நிறுவப்படவுமிருக்கின்றன.

**தமிழ்நாட்டில் வளர்ச்சித் திட்டங்கள்:** தமிழ் நாட்டில் நிலைமையைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது இந்நூற்றாண்டின் இறுதிக்குள் நகர்ப்புற மக்கள் தொகை இருமடங்காக உயரக்கூடிய நிலையில் உள்ளது. தமிழ்நாட்டின் நில வளங்களும், நீர் வசதிகளும் ஏறக்குறைய முழுவதுமாகப் பயன்படுத்தப்படும் இப்போதைய நிலையில், இவற்றை மேலும் விரிவாக்கும் சாத்தியக் கூறுகள் காணப்படவில்லை. எனவே வேளாண்மை உற்பத்தியில் ஓர் உச்சியை எட்டிவிட்ட இந்நேரத்தில் வேளாண்மை தவிர்த்த பல்வேறு வாய்ப்புகளில் மக்களை ஈடுபடுத்த வேண்டிய தேவை உருவாகியிருக்கிறது. அதனால் நகர்ப்புற வாழ்க்கையை நாடும் மக்கள் தொகை மிக அதிகமாக வளர

விருக்கும் இந்தச் சூழ்நிலையில், திட்டமிட்டுச் செயற்பட வேண்டிய அவசரத்தையும் தேவையையும் உணர்ந்த தமிழக அரசு, அதனுடைய நகரமைப்புத் துறையின் 1971-ஆம் ஆண்டுச் சட்டத்தின் மூலம் பெருமளவு அபிவிருத்திகளையும் மண்டலத்திட்டங்களையும் நகர முழுமைத் திட்டங்களையும் புதிய நகர வளர்ச்சித் திட்டங்களையும் விரிவு வளர்ச்சித் திட்டங்களையும் வகுத்துச் செயற்படுத்த வழிவகைகளைத் தேர்ந்தெடுத்திருக்கிறது. மேலும், கிராமங்களும் சிற்றூர்களும் நகரங்களும் மாநகரங்களும் ஒன்றையொன்று சார்ந்து, ஒன்றொடொன்று பிணைந்து, பொருளாதார வளர்ச்சியிலும், சமுதாய மறுமலர்ச்சியிலும் பங்குபெறவும், இயற்கை வளங்களை உரிய முறையில் கையாண்டு பயன்பெறவும் சுற்றுப்புறச்சூழல் தூய்மைக்கேடு, காடு அழித்தல் போன்ற சீர்கேடுகளைத் தவிர்க்கவும், நலிவுற்ற பகுதிகளை மேம்படுத்தி உயர்த்தவும், முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. திட்டப் பணிகளை மண்டல அளவில் முதற்கண் அமைத்துச் செயற்படுத்தி, இத் திட்டங்களின் அடிப்படையில் மேலும் விரிவான திட்டஙகளைத் தனிக்கிராமங்களிலும், சிற்றூர்களிலும், நகரங்களிலும் மாநகரங்களிலும் செயற்படுத்துவதே இன்றைய நிலைக்கு ஏற்றது என யாவரும் ஒப்புக்கொண்டு உள்ளனர்.

மாநில அளவில் முறையாக விரிவுபடுத்த ஏற்கெனவே அரசின் வசம் உள்ள பல்வேறு திட்டக் கோட்பாடுகளுடன் மண்டல விரிவு அமைப்புத் திட்டங்களையும், 1971 – ஆம் ஆண்டுச் சட்டத்தில் கண்ட பல்வேறு திட்டப்பணிகளையும் ஆக்கபூர்வமாக மேற்கொள்ள வேண்டுவது தேவையாகிறது. மற்றும் இந்திய மத்திய அரசும் மாநில அரசும் தீட்டியுள்ள கொள்கைத் திட்டங்கள், பொருளாதார, சமுதாய வளர்ச்சி,சமூகமேம்பாடு அடிப்படைகளைக் கொண்டவை எனினும், அவற்றைச் செயற்படுத்தும் போது அவை வேளாண்மை, தொழிற்றுறை உற்பத்தியை உயர்த்தும் திட்டங்களாக இருப்பினும்,அல்லது போக்குவரத்து மேம்பாட்டுத் திட்டங்களாயினும் சமுதாய வளர்ச்சிக்குத் தேவையான கல்வி, சுகாதாரத் திட்டங்களாயினும், அவையாவற்றையும் நிலத்தைச் சார்ந்தே செயற்படுத்த முடியும். அணைக்கட்டுகள் கட்டி நிலத்தின் உற்பத்தித் திறனைப் பெருக்குவதும் தொழிற்சாலைகள் நிருமாணிப்பதும், சாலைகள், புகைவண்டிப் பாதைகள் அமைப்பதும், பள்ளிகள், கல்லூரிகள், சுகாதார நிலையங்கள் மருத்துவ மனைகள் ஏற்படுத்துவதும் முழுப்பயனைப் பெற வேண்டுமாயின், அவை எங்கு, எந்தநிலப்பகுதியில், எப்போது, எந்தச் சமுதாயத்தின் தேவைகளைத் தீர்க்க ஏற்பட வேண்டும் என்ற ஆய்வே முதல்தேவையாகிறது. இந்த ஆய்விற்கு அடிகோலுவதே மேற்கூறிய மண்டலத்திட்டமாகும்.

அடுத்த மட்டத்தில் நகர முழுமைத் திட்டங்களும், புதிய நகர வளர்ச்சித் திட்டங்களும் விரிவு வளர்ச்சித் திட்டங்களும் இடம் பெறுகின்றன. அவை சிற்றூர், நகரம், மாநகரம் மற்றும் அவற்றைச் சார்ந்த பகுதியையும், அவற்றின் பிரிவுகளையும் ஆராய்ந்து, இப்போதுள்ள குறைபாடுகள், தேவைகள் மட்டுமன்றி, அடுத்த15-20 ஆண்டுகளில் தேவைப்படும் வசதிகளையும் வாய்ப்புகளையும் கணக்கிட்டுப் படிப்படியான திட்டங்களை வகுத்து, அவை செயற்படுவதற்கான நெறிமுறைகளையும் பணவசதி, ஆட்சி முறைகள் ஆகியவற்றையும் வகுத்து, மேலும் முக்கியமாக இத்திட்டங்களை அப்போதைக்கப்போது திறனாய்வு செய்து, அந்த அடிப்படையில் வேண்டிய மாற்றங்களைச் செய்து முழுப்பயனைப் பெறப் பயன்படுத்தப்படும் திட்டங்களாகும். இத்திட்டங்களின் பிரிவுகள், மக்கள்தொகை, மக்கள் சமுதாயத்தின் கூறுபாடுகள், பொருளாதாரம், வேலைவாய்ப்பு,இயற்கை வளம், மனித வளம் மற்றும் நகர வள மேம்பாடு, அதற்குத் தேவையான அடிப்படைத் தேவைகளின் வளர்ச்சி, நிலப்பாகுபாடு, ஒவ்வொரு பகுதிக்கும் ஏற்ற பயன் மற்றும் அங்கு வாழும் மக்களுக்குத் தேவையான வசதிகள், போக்குவரத்து, குடிநீர் மற்றும் அடிப்படைத் தேவைகள் போன்ற பலதரப்பட்டவையாகும். இத்திட்டத்தின் அடிப்படையில் அந்த ஊரோ நகரமோ ஒழுங்காக வளரவும், மக்களின் வாழ்க்கைத் தரம் உயரவும், மக்களுக்குச் சீரிய முறையில் இடர்ப்பாடற்ற முறையில் செயலாற்றும் சூழ்நிலைகளை உண்டாக்கவும் வழிவகைகள் வகுக்கப்படுகின்றன.

**நடைமுறைத் தட்டுப்பாடுகள்:** பெருவாரியான திட்டங்கள் தீட்டப் பெற்றிருக்கும் இந்நாளில் இவற்றைச் செயற்படுத்துவதில் பலவித தட்டுப்பாடுகள் காணப்படுகின்றன. முக்கியமாகப் பண வசதியின்மை, தேர்ச்சிபெற்ற வல்லுநர்கள் போதிய அளவு இல்லாமை, காலதாமதமாகும் சட்ட வழக்குகள், செயல் முறைகளிலும் ஆட்சிமுறைகளிலும் நெறி முறைகளிலும் உள்ள சிறுகுறைகள் ஆகியவை இவற்றில் இடம் பெறும்.

அதனால் பல சமயங்களில் முழுமை நகர வளர்ச்சித் திட்டங்களையும் புதிய நகர வளர்ச்சித் திட்டங்களையும் விரிவுத்திட்டங்களையும் முழுமையாக அவற்றின் கால வரைக்குள் செயற்படுத்த முடிவதில்லை. ஆயினும் இத்தட்டுப் பாடுகளினால் இத்திட்டங்களைச் செயற்படுத்துவதை நிறுத்துவதும் முறையன்று. அதனால் சில முக்கிய சிக்கல்களை மட்டும் தெரிந்தெடுத்து, தேசிய, பிற

நாட்டு அல்லது பன்னாட்டுப் பண முதலீட்டு நிறுவனங்களிலிருந்தும் வங்கிகளிலிருந்தும் கடன் உதவி பெற்று, அம்முக்கிய திட்டங்கள் முன்னுரிமை கொடுக்கப்பட்டு நிறைவேற்றப்பெறுகின்றன. இது போன்றதிட்டம் சென்னை மாநகர வளர்ச்சிக் குழுமத்தால் பல ஆண்டுகளாகச் செயற்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. இதுவே, இப்போது விரிவுபடுத்தப்பட்டுத் தமிழகத்தின் முக்கிய நகரங்களில் செயற்படுத்த ஏறக்குறைய 350 கோடி உரூபாய் உலக வங்கிக் கடன் உதவியுடன் ஒரு திட்டமாக வகுக்கப்பட்டு ஒப்புதல் பெற்றுள்ளது.

நகர்ப்புற மக்கள்தொகை இன்னும் இருபதாண்டுகளில் இரட்டிப்பாகக் கூடிய இந்த நிலையில், தமிழ்நாட்டில், மக்கள்தொகையைப் பொறுத்தும், பொருளாதாரச் செயற்பாடுகளைப் பொறுத்தும், மற்றும் பல அடிப்படை வசதிகளைப் பொறுத்தும், மிக முக்கியமாக மேற்கண்ட எல்லாவற்றிற்கும் இடையே வாகனத் தொடர்புகள், தகவல் தொடர்புகள், பொருளாதார சமுதாயத் தொடர்புகள் போன்ற நடைமுறைத் தொடர்புகள் ஆகியவற்றைக் குடியிருப்புப் பகுதிகளுக்கும், குடியிருப்பில் வாழும் பல சமுதாயத்தினருக்கும் ஏற்படுத்துதல் மிகவும் இன்றியமையாதது என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. இதன் அடிப்படையில் தமிழ்நாடு மாநில அரசின் ஊரமைப்புத்துறை, மேற்கூறிய வளர்ச்சிக்கான வழிவகைகளைக் கொண்ட திட்டத்தை எதிர்காலத்தில் வளர்ச்சித் திட்டங்களுக்கு உதவும் ஓர் எடுத்துக்காட்டாக அரசின் ஒப்புதலுடன் மாநில அளவில் உருவாக்கியுள்ளது. இதற்காக மண்டலத் திட்டக்குழுமம், உள்ளூர்த் திட்டக் குழுமம், புதிய நகர வளர்ச்சிக் குழுமம் போன்ற பல்வேறு திட்டக் குழுமங்களை அமைத்து, பொதுவான வளர்ச்சியைச் செவ்வனே மேம்படுத்த வழிமுறைகள் ஏற்கெனவே ஏற்படுத்தப்பட்டுள்ளன. இப்போது நடைமுறையில் உள்ள சட்டங்களைத் திருத்தி அவற்றைப் பாதுகாத்து, திருத்தி அமைக்கப்பட்ட சீரிய நிருவாகக் குழுக்களை ஏற்படுத்தி, போதிய நிதிவசதிகளைப் பெருக்கி வளர்ச்சி திட்டங்களுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்து இந்த அணுகு முறை முன்னேறுகின்றது. அரசு நிறுவனமான வீட்டுவசதி போன்றவைகளின் மூலம் தேவையான பண உதவிகளைப் பெறுவதில் மிகுந்த அக்கறையைக் காட்டி வருகிறது. எல்லாவற்றுக்கும் மேலாகத் திட்டக் குறியீட்டில் பொருந்துமாறு செயற்படுத்த வேண்டிய தேவையும் வலியுறுத்தப்பட்டிருக்கிறது. மக்களைஅவர்களாகவே இதில் ஈடுபடச் செய்து நேரடியாகவே அவர்களைப் பொறுப்பாளர்களாக ஆக்க வேண்டிய நிலையும், சமுதாயத்தில் நலிந்தோர்களும், பெருளாதாரத்தில் பின்தங்கியவர்களும் பாதுகாப்பு அளிக்கப்பட்டு அடிப்படை வசதி படைத்தவர்களாக அவர்களை முன்னேற்ற வேண்டிய அவசரமும் அறியப் பட்டிருக்கின்றன. இதற்காகச்சமுதாயத்தில் பிற அங்கத்தினர்களோடு இவர்களையும் சமமாக நடத்த, வளர்ச்சித் திட்டங்களில் சமமான உரிமையையும் பங்கையும் தேவையான சலுகைகளையும் இவர்களுக்கு வழங்க, இவர்கள் குடியிருக்கும் நிலமோ வீடோ இவர்களுக்கே சொந்தமாக்குதல் போன்ற பற்பல ஊக்குவிக்கும் மேம்பாட்டுத் திட்டங்களை ஏற்படுத்தி, அதன் வாயிலாக இவ்வர்க்கத்தினருக்கு உரிமைகளைக் கொடுத்து, அதன்விளைவாகப் பொறுப்புகள் மிகுந்த சமூகத்தினராக் பிறசாரரைப்போல் இவர்களையும் உயர்த்தப் பல முயற்சிகள் எடுக்கப் பட்டிருக்கின்றன.

**வளர்ச்சிக் கண்ணோட்டம்:** இத்திட்டங்களையும் இவற்றைச் செயற்படுத்தும் வழிமுறைகளையும் பின்னோக்கிப் பார்க்கையில் கிராம, நகர மண்டல வடிவமைப்புத் திட்டஅணுகுமுறையில் ஒரு பரிணாம வளர்ச்சியைக் காணலாம். இந்நூற்றாண்டின் முதற் பகுதியிலிருந்தே வரலாற்றுக் காரணங்களினால் இந்த வழியில் ஈடுபட நேர்ந்துள்ளது. அந்த நேரத்தில் இன்றைய வளர்ச்சியடைந்த நாடுகள் பல இந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. எனினும், முற்காலத்தில் இந்திய அணுகுமுறை ஒரு கட்டுப்பாட்டுத் திட்டமாக மட்டுமே இருந்ததே தவிர ஒரு வளர்ச்சித் திட்டமாக இல்லை. அரசும் அதனைச்சார்ந்த நிறுவனங்களும் குறிப்பாக நகராட்சிகள், அவற்றின் பல முன்னோடி வேலைகளின் இறுக்கத்தால் வளர்ச்சித் திட்டங்களில் மிக்க அக்கறை காட்டவில்லை. சிலவிரிவு வளர்ச்சித் திட்டங்கள் சிறு பகுதிகளில் சாலை அகலப்படுத்துதல், பூங்கா அமைத்தல், கடை அல்லது பேருந்து நிலையம் விரிவு படுத்துதல் என்று தனிப்பட்டு நின்றன. பிறகு வளர்ச்சித் திட்டங்களுக்காகவே ஏற்படுத்தப்பட்ட நகர்ப்புற வளர்ச்சிக் கழகங்களும் நிறுவனங்களும் தாமதமாகச் செயற்பட்டன. ஒருசில வீட்டு வசதிக்காக அதுவும் நடுநிலை மேல் நிலை மக்களுக்காகப் புறநகர்ப் பகுதிகளை ஏற்படுத்தின. இந்திய விடுதலைக்குப் பிறகே, முழுமை நகர்ப்புற வளர்ச்சித் திட்டங்களும் மண்டல வளர்ச்சித் திட்டங்களும் வரலாயின. இம் முயற்சியில் மாநில அரசுத் துறைகளும் புதிதாக ஏற்படுத்தப்பட்ட நகர வளர்ச்சிக் குழுமங்களும் முக்கிய பங்கேற்றன.

இதே வளர்ச்சியை மற்றொரு கண்ணோட்டத்தில் பார்க்கும்போது முதலில் கண்ட கட்டுப்பாட்டு அணுகுமுறை வளர்ச்சி அணுகுமுறையாக மாறும்போது, முதலில் எவ்வளவு செலவு செய்யப்பட்டது என்பதிலேயே இருந்த குறிக்கோள், பிறகு எண்ணிக்கைக் குறிக்கோளாக மாறியது. எடுத்துக்காட்டாக

எத்தனை வீடுகள் கட்டப்பட்டன, எவ்வளவு தூரம் சாலைகள் போடப்பட்டன என்று பின் கட்டத்தில் இந்தக் குறிக்கோள் திட்டங்களினால் மக்களுக்கு ஏற்பட்ட நன்மைகள் என்ன, அவர்களின் வாழ்க்கைத் தரம் எவ்வளவு உயர்ந்தது என்று ஆராய்ந்து, பெரும்பாலான நலிவுற்றோர் பெற்ற நன்மை மிகக் குறைவாக இருந்ததை அறிந்து, வெறும் வீடும் சாலையும் குடிநீரும் என்ற புறவசதிகளில் மட்டும் கவனம் செலுத்தாமல், ஒட்டு மொத்தமாக இவ்வசதிகளை அளிக்கும்போது, அதே சமயத்தில் நலிவுற்ற சமுதாயத்தினரின் பொருளாதார, சமுதாய மேம்பாட்டிற்கும்வழி செய்யும் வகையில் கல்வி, சுகாதாரம், மருத்துவம், சத்துணவு, வேலை வாய்ப்பு, அதற்கான பயிற்சி முதலியவற்றையும் சேர்த்துக் குழந்தைகள், குடும்பத்தார், முதியோர் என்ற எல்லாப் பிரிவினருக்கும் ஏற்ற முறையில் திட்டங்கள் தீட்டப்பட வேண்டிய தேவையை அது வலியுறுத்தியது. குறிப்பாக, நலிவுற்ற பிரிவினரின் பொருளாதாரத் தேக்க நிலை கருதி அவர்களுக்குக் கடன் உதவி தவிர மானியமும் அளிக்கப்பட்டது. ஆனால், இவ்வளவு முன்னேற்றம் ஏற்பட்டபோதும் இந்தத்திட்ட முயற்சிகளில் ஈடுபட்டு இருப்பவர்களின் இன்றைய கடமை இதனோடு நிற்காமல் மேலும் மிகுதியாகிறது. அதாவது, மக்களுக்கு அதிலும் நலிவுற்ற பிரிவினருக்கு முதலில் திட்டங்களையும் அவற்றின் குறிக்கோள்களைப் பற்றியும் விரிவாக அறிவித்துப் புரிய வைக்க வேண்டும். திட்டங்களினால் ஏற்படக்கூடிய நல்ல, தீய விளைவுகளை விளக்க வேண்டும் பொருளாதார நெருக்கடியால் எல்லாத் தேவைகளையும் உடனே தீர்க்க முடியாத நிலையில் அவர்களே உணர்ந்த, தெரிந்தெடுத்த முன்னோடித் தேவைகளை அறிய வேண்டும். அவர்களுடைய உரிமைகளையும் கடமைகளையும் விளக்கிப் பிற்காலத்தில் அவர்கள் விரைவில் வளரவும் அவர்கள் திறமைகளை வளர்க்கவும் அவர்களின் வாழ்க்கைக்குறிக்கோள்களை மாற்றியமைத்து, மேம்படுத்தி அதற்கான வழிமுறைகளைக் காட்டி, அவற்றைத் தவறாது அடையக்கூடிய சாத்தியக் கூறுகளை விளக்கி, அவர்களே தங்கள் வாழ்க்கை நிலையை உயர்த்திக்கொள்ள வழி செய்ய வேண்டும். இதனை நன்குணர்ந்த மாநில அரசும் மத்திய அரசும் முழு தீவிரத்துடன் இதைச் செயற்படுத்த முனைந்திருப்பது, குறுகிய காலத்தில் மக்கள்நலமும் வாழ்க்கைத்தரமும் முன்னேற்றமடையவும் மேம் படவும் முடியும் என்ற நம்பிக்கையை எல்லோருக்கும் அளிக்கிறது. சீ.து.ரா.

**நகரமைப்பு முறைகள்:** நகரங்கள், உருவாக முக்கிய காரணம் தொழில் மயமாதலாகும். நகரங்களின் அமைப்பு அது தோன்றும் முறை காரணமாக மாறுபடுகிறது. சில நகரங்கள் ஏற்கெனவே உள்ள நகரங்கள் விரிவடைவதாலும், ஏனையவை கிராமங்கள் நகரங்களாக மாறுவதாலும் தோன்றுகின்றன. நகரமைப்பு முறையினையும், (Urban System) அதன் தன்மைகளையும் தெரிந்துகொள்வதன் மூலமாகவே நாட்டில் நிலவுகின்ற பொருளாதாரம், சமூகச் சிக்கல்கள் ஆகியவற்றிற்குத் தீர்வு காணமுடியும்.

நகரத்தின் அமைப்பானது மக்களின் பல்வேறுபட்ட நடவடிக்கைகளின் தொடர்பினால் தோன்றுகின்ற சிக்கலான செயலாகும். இதனைப் பற்றிப் புரிந்துகொள்ள உதவும் அளவு கோல்கள் நகரத்தினுள் இருக்கும் பிரிவுகள், நகரங்களுக்கிடையே இருக்கும் பிரிவுகள் ஆகியனவாகும். குறிப்பிட்ட நகரமைப்பு வரலாறு, சமூகம், பொருளாதாரம், நிருவாகம் முதலிய காரணிகளால் தீர்மானிக்கப்படுகிறது.

பொதுவாக நகரங்களின் பல்வேறு பகுதிகளில் ஒரே தன்மையான சமூகமும் ஒரே தன்மையான தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களின் வீடுகளும் நெருங்கியுள்ளன. பர்கெசு (Burgess 1928), காய்டு (Hoyt 1939), காரிசு, உல்லமென் (Harris and Ullaman 1945) போன்றவர்கள் மூவகையான நகரமைப்புகளை அடிப்படையாகக் கொண்டே எல்லா நாடுகளிலும் நகரங்கள் உருவாகியுள்ளன எனக் கூறுகின்றனர். இம் மூன்று அமைப்புகளும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டவையாகும். அவை: 1) தொழிற்செறிவிற்கு முந்திய நகரம் (Pre-industrial City). தொழிற்செறிவு. தொடங்குவதற்கு முன்னர்த் தோன்றிய நகரங்களின் மையப்பகுதி வளமிக்கதாகவும், அதைச் சுற்றிய பகுதி வறுமை நிறைந்ததாகவும்இருக்கும் 2) கடைகள், உழவர்கள் நகரம்( Bazaar-Peasant Economy). இத்தகைய நகரமைப்பு குடியேற்ற நகரத்தின் மாதிரியாகும். இதில் மையப் பகுதியில் கடைகளும், சுற்றுப்புறப் பகுதியில் உழவர்களின் குடியிருப்பும் அமைந்திருக்கும். வளர்ந்து வரும் நாடுகளிலுள்ள குடியேற்ற நகரங்கள் இதற்கு எடுத்துக்காட்டாகும். 3) தொழில் நிறுவனங்களைக் கொண்ட முதலாளித்துவ நகரம் (Firm-type Capitalist Economy). இத்தகைய நகரங்களின் மையப் பகுதியில் மூலதன முடையோரால் தொடங்கப்பட்ட தொழில் நிறுவனங்கள் பெருமளவில் இருக்கும்.

இந்தப் பின்னணியில் பார்க்கும்போது இந்தியாவிலுள்ள நகரங்கள் இருவித அமைப்பைக் கொண்டவையாக உள்ளன (Dual Structure). மெக்கீ (Mcgee, 1971) என்பவர் இந்திய நகரங்கள் கடைகள், உழவர்கள் நகரம், தொழில் நிறுவனம் கொண்ட முதலா

ளித்துவ நகரம் ஆகியவற்றின் இணைப்பாக உள்ளன வெனக் கூறுகிறார். இவை பழமையும், தொழில்மய மாகும் தன்மைகளும் இணையப்பெற்றனவாக உள்ளன. சமூக, பொருளாதார அடிப்படையில் பார்க்கும்போது இந்தியாவில் வாணிகத் தலமாகத் திகழும் நகரங்கள் பல தொழிற்செறிவிற்கு முந்திய நகர அமைப்பைக் கொண்டுள்ளன. எடுத்துக்காட்டாகக் கிழக்குக் கடற் கரையோர நகரமாக விசயவாடா, தென்னிந்தியா வில் கோயம்புத்தூர், அருகே உள்ள நிலக்கடலை வாணிகத்திற்குப் பெயர்பெற்ற பொள்ளாச்சி முதலிய வற்றைக் குறிப்பிடலாம். இவற்றின் மையப் பகுதி யில் பணக்காரர்களும், சுற்றுப்புறத்தில் வறியவர் களும் உள்ளனர். ஆனால், வேறு பல வாணிகத் தலங்களில் மக்கள் தங்குமிடங்கள் விரிவுபடுத்தப் பட்ட காரணத்தால் புறநகர்ப் பகுதியும் வளமிக்க தாக மாறியிருக்கிறது.

இப்பொழுது இந்திய நகரங்கள் மேலே சொல்லப் பட்ட எளிதான இருவிதமான அமைப்பைக் கொண்ட வாக இல்லை. நகரங்களின் அமைப்பு சிக்கலானதாக உள்ளது. சரித்திரப் புகழ்வாய்ந்த வாரணாசி, தில்லி போன்ற நகரங்கள் அரசியல் பண்பாட்டு மாற்றங் களினால் பெரிய மாறுதலை அடைந்துள்ளன. தெளி வற்ற, குழப்பமான, பொருத்தமற்ற அமைப்பைக் கொண்டதால் இந்நகரங்கள், தொழிற்செறிவிற்குப் பிந்திய நகரத்தில் வாழும் 'தொழிற்செறிவிற்கு முந்திய சமூகம்' எனச் சொல்லப்படுகின்றன. தேவிசு (Davis, 1974) என்பவர் கூறுவதுபோலப் பழமையில் ஊறிய இந்திய நகரங்கள், தொழிற்செறிவிற்கு முன் னிருந்த கூடுதல் பிறப்பு விகிதமும், தொழிற்செறி விற்குப் பின் நிலவும் குறைவான இறப்பு விகிதமும் கொண்டுள்ளன.

நகரத்தில் முக்கியமான மையப்பகுதியில் வாணி கம் மிகுதியாக இருப்பதால் நெருக்கடியாக (Congestion) இருந்தாலும் குடிசைப் பகுதிகள் (Slums) கிடையாது. அத்துடன் வருவாய் குறைவாக இருப்பதால் தாழ்த்தப்பட்ட பிரிவினரின் குடியிருப்புகள் நகரின் மையப்பகுதியில் இருப்பதில்லை. தொழிற்சாலைக்கு அருகே அதில் வேலைபார்க்கும் தொழிலாளர்களின் குடியிருப்புகள் உள்ளன. இவ்வாறாகக் குடிசைவாழ் மக்களும், தாழ்த்தப்பட்ட பிரிவினரும் புற நகர்ப் பகுதியிலும், மையப் பகுதிக்கும் நகர எல்லைக்கும் இடைப்பட்ட பிரதேசத்திலும் குடியிருக்கின்றனர். எனவே, நகரத்தில் மக்கள் தங்கும் இடங்கள் பெரும் பாலும் அவர்களுடைய வருவாய், சாதி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளன.

நகரத்தில் சமூக பொருளாதார நிலையில் உயர்நத பகுதிகளில், மக்கள்தொகை நெருக்கம் (Density) குறைவாக இருப்பதுடன் நகர்ப்புற வசதி கள் பெருமளவில் கிடைக்கின்றன. அதனுடன் குடி பெயர்ந்தவர்கள் குறைவாகவே இருப்பர். ஆனால் சமூக, பொருளாதார நிலையில் தாழ்ந்த பகுதிகளில் மக்கள்தொகை நெருக்கம் மிகுதியாக இருப்பதுடன் நகர்ப்புற வசதிகள் குறைவாகவே உள்ளன. அதோடு குடிபெயர்ந்து வந்தவர்களின் எண்ணிக்கையும் பெரு மளவில் உள்ளது. நகரத்தின் பல்வேறு பகுதிகளில் குடியிருக்கும் மக்களின் எண்ணிக்கையில் வேறுபாடு கள் இருப்பதற்கான காரணிகளை நான்கு பிரிவு களாகப் பிரிக்கலாம். அவையாவன: அ) சமூக, மற்றும் பொருளாதார நிலை, ஆ) மதத்தின் அடிப்படையில் உருவான பிரிவுகள், இ) இட நெருக்கடி, ஈ) வேலை செய்யும் பெண்களின் விகிதாச்சாரம், தங்கியுள்ளோர் குடிபெயர்ந்தோர் விகிதம் (Resident - migrant Ratio). இக்காரணிகளில் வேறுபாடுகள் இருப்பதன் காரணமாக நகரமைப்பு பணக்கார மையமும், ஏழைப் புறநகர்ப் பகுதியும் (Rich Centre, Poor Periphery) கொண்ட அமைப்பாக உள்ளது. மதத்தை அடிப்படையாகக் கொண்ட கிழக்கு, மேற்குப் பகுதி களும் சமூக மற்றும் பொருளாதாரக் காரணிகளை அடிப்படையாகக் கொண்ட மத்திய, இடைப்பட்ட புறநகர்ப் பகுதிகளும் கொண்டதாக நகரத்தின் அமைப்பு மாறிவருகிறது. நடுத்தர வருக்கத்தினர் மையப் பகுதியிலும் இடைப்பட்ட பகுதிகளிலும் குடி யிருக்கின்றனர். மக்கள் நெருக்கத்தின் காரணமாகப் புறநகர்ப் பகுதிகள் வெளிப்பக்கமாக விரிந்து செல் கின்றன எனவே, பழைய புறநகர்ப் பகுதிகள் நகரின் இடைப்பட்ட பகுதிகளாக மாறுகின்றன.

மக்கள்தொகை மிகுதலின் காரணமாகவும், நகர் மயமாதலாலும் நகரங்களின் மையப்பகுதியில் விடப் பட்ட பகுதிகள் முதலில் நிரப்பப்பட்டன. நகர் மையத் தில் மொத்தச் சந்தை, கோவில், தொழிற்சாலை ஆகியவை அமைந்திருப்பதால் அதனைச் சுற்றியே நகரம் விரிவடைகிறது. நகர் மையத்தை நோக்கி இழுக்கும் விசை காரணமாகச் சுற்றுப்புறக் கிராமங் கள் நகரத்தோடு இணைகின்றன. சிறிய நகரத்தில் இத்தகைய விரிவானது கிராமப்புற எல்லையுடன் நின்றுவிடுகிறது. பெரிய நகரங்கள் ஒழுங்கற்ற முறை யில் விரிவடைகின்றன. இதனால் வேளாண்மைக் குரிய நிலங்களும் பிற பயன்களுக்கு மாற்றப்படு கின்றன. எனவே, நகரத்தின் வளர்ச்சியானது உகந்த அமைப்பினை அடைவதாக இருக்க வேண்டும்

மா.தே.

**துணை நூல்கள்:**

**Kopardekar, H.D.**, Some Aspects of Urban Development, Popular Prakasam, Bombay, 1986.

**Sovani, N.V.**, Urbanisation and Urban India, Asia Publishing House, Bombay, 1960.

**நகராட்சியியல்:** நகராட்சி என்பது நாட்டின் உள்ளாட்சி அரசாங்க வகைகளுள் ஒன்று. இந்தியா ஆட்சி வசதிக்காக மாநிலங்கள், மாவட்டங்கள், வட்டங்கள், நகரங்கள், ஊர்கள், என்று பல உட்கூறுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவுக்கும் ஓர் ஆட்சியமைப்பு நிறுவப்பட்டுள்ளது. நடுவண் அரசாங்கத்தால் அமர்த்தப்பட்டு, அதற்கே பொறுப்பாக உள்ள உள்ளூர் முகவர்களின் அல்லது செயலிகளின் வாயிலாக நாட்டின் எல்லாப் பிரிவுகளையும் ஆட்சி செய்தலே உள்ளாட்சி அரசாங்கம் ஆகும். இதனின்று வேறுபட்ட கருத்து மேலை நாட்டவர் கூறும் சுய உள்ளாட்சி அரசாங்கம் (Local Self Government) என்பதாகும். உள்ளூர்ப் பிரிவு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர்களுக்குப் பொறுப்புடைய பிரதிநிதிகளை உடையதாய், வரி விதிக்கும் அதிகாரமும் ஆளும் அதிகாரமும் பெற்று, ஆட்சிப் பொறுப்புக்குரிய பயிற்சிக் களமாக இயங்கி, நாட்டு அரசாங்க அமைப்பின் உயிர்நாடியான உட்கூறுகளுள் ஒன்றாக இருப்பது தான் சுய உள்ளாட்சி அரசாங்கம் ஆகும். இந்த நகராட்சி அரசாங்க முறையை (Municipal Administration) ஆங்கிலேயர் இந்தியாவை ஆண்டபோது பல்வேறு நிலைகளில் ஏற்படுத்தினர்.

**வரலாறு:** ஆங்கில வாணிகக் கழகத்தாரின் ஆட்சியிலே (கி.பி. 1757 முதல் 1857 வரை) இந்தியாவில் உள்ளாட்சி அரசாங்கக் கூறுகள் மேலை நாட்டு முறையில் நிறுவப்படவில்லை. நடுவண், மாகாண அரசாங்கங்களிலும் அரசாங்கக் கொள்கைகளை வகுப்பதில் இந்தியர்களுக்குப் பங்கு இல்லை. அரசாங்கப் பணிகள் பற்றிய கொள்கைகளை வகுத்து, அவைகளைத் திறமையாகவும் விரைவாகவும் சிக்கனமாகவும் நிறைவேற்றினோர் அரசாங்கத்தால் நிலையாக மாத ஊதியத்தில் அமர்த்தப்பட்ட, மேலதிகாரிகளுக்குப் பொறுப்புடைய அதிகாரிகளே ஆவர். இத்தகைய ஆட்சிக் காலத்திலும் கி.பி. 1865, 1871 -ஆம் ஆண்டுகளின் சென்னை நகரங்கள் சீரமைப்புச் சட்டங்களின்படி ஒவ்வொரு பட்டணத்திலும் ஒரு சிறிய நகர அரசாங்கம், அந்தந்த நகர எல்லையினுள் சாலை வசதிகளையும், சுகாதார வசதிகளையும் நிறுவிப் பராமரிப்பதற்காக நிறுவப்பட்டது. இதில் நகர மக்களிடையே இருந்து 5 நகர ஆணையாளர்களையும், சில அதிகாரிகளையும் ஓராண்டிற்கு மாகாண அரசாங்கம் அமர்த்திற்று. இவர்கள் அரசாங்க விதிப்படி நகர மக்களிடம் வரிவாங்கி, நகராட்சி நிதியிலிருந்து சாலை, சுகாதார வசதிகள், நகரக் காவல் துறைச் செலவு முதலியவற்றுக்குச் செலவிட்டனர். மொத்த வரி விதிப்பில் காற்பங்கை அரசாங்கம் மானியமாக அளித்தது. பின்னர்க் காவல் துறைச் செலவு நீக்கப்பட்டு, மருத்துவமனைகள், பள்ளிக் கூடங்கள், பிறப்பு, இறப்புப் பதிவுகள் முதலிய கூடுதல் பொறுப்புகள் அளிக்கப்பட்டன. ஆணையாளர்கள் 3 ஆண்டுகளுக்குச் சொத்துத் தகுதியினடிப்படையில் நகர மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இச் சட்டத்தின்கீழ்த் தமிழ்நாட்டில் திருச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி முதலிய நகராட்சிகள் அமைக்கப்பட்டன.

இந்திய உள்ளாட்சி அரசாங்க வரலாற்றிலே மிகவும் பாராட்டத்தக்க ஒரு நிலை இந்தியாவின் அரசப் பிரதிநிதியாக கி.பி. 1880 முதல் 1884 வரை ஆண்ட இரிப்பன் பிரபுவின் (Lord Ripon) ஆணைப் படி கி.பி. 1882 – இல் நிறைவேற்றப்பட்ட ஒரு நிருவாகக் குழுவின் தீர்மானமாகும். அதன்படி சுய உள்ளாட்சி நிறுவனங்கள் மாவட்ட, வட்ட, நகர, ஊர்ப் பிரிவுகளில் ஏற்படுத்தப்படுதல் வேண்டும்; அதன் நோக்கம் உள்ளாட்சி முறையைச் சீர்திருத்துவதன்று. நாட்டில் பெருகி வரும் கல்விப் பயிற்சியும், பொது நல உணர்வும் மிக்க மக்களை ஆட்சிப் பொறுப்பிலீடுபடுத்தி, அவர்களுக்கு அரசியற்பயிற்சி கிடைக்குமாறு செய்தலே ஆகும். ஆகையால், உள்ளாட்சிக் கழகங்கள் அளவில் சிறிய உட்பிரிவுகளில் அமைக்கப்பட்டு, அவை ஒவ்வொன்றின் மொத்த உறுப்பினருள் 2/3 பங்கு பேர் அரசாங்க அலுவலரல்லாத பெரும்பான்மையாளராக இருத்தல் வேண்டும். அவர்கள் அந்தந்தப் பிரிவில் வாழும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுதலும், ஆட்சிக் கழகத் தலைவர்களும் தேர்ந்தெடுக்கப்படுதலும் வேண்டும். அவற்றின் மீது அதிகாரி உறுப்பினர்களின் அகக் கட்டுப்பாடு இல்லாமல், அரசாங்கத்தின் புறக் கட்டுப்பாடு இருத்தல் வேண்டும்.

தாராள இயல்புடைய இத்தீர்மானத்தை ஒட்டிச் சென்னை அரசாங்கத்தின் 1884-ஆம் ஆண்டின் சென்னை மாவட்ட நகராட்சிகளின் சட்டத்தின்படியும், சென்னை உள்ளாட்சிக் கழகச் சட்டத்தின்படியும், 20,000 அல்லது அதற்கு மேற்பட்ட மக்களையுடைய ஒவ்வொரு பட்டணத்திலும் ஒரு நகராட்சி அரசாங்கமும், மாவட்ட ஆட்சிக் கழகங்களும், தாலுக்காக் கழகங்களும், இணையக் கழகங்களும் (Union Boards) நிறுவப்பட்டன. இச்சட்டத்தைப் பெரிதும் பின்பற்றியே 1920-இல் சென்னை மாவட்ட நகராட்சிகளின் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இதில் அவ்வப்போது பல மாறுதல்கள் மாநில அரசாங்கத்தால் செய்யப்பட்டன. பொதுப் பணிகள், கல்வி, சுகாதாரம் முதலிய துறைகளைப் போன்று உள்ளாட்சி அரசாங்கத்துறையும் மாகாண அரசாங்கத்தில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சரின் பொறுப்பில் 1920 முதல் 1937 வரை இருந்தது. இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி – (1933) மாகாண நிருவாகத் துறைகளெல்லாம் மாகாண மக்களவைக்

ரப் பொறுப்புள்ள அமைச்சர்களிடம் வந்தன. இந்திய நாடு 1947-இல் சுதந்திரம் பெற்றபின் அதற்கென்று ஓர் அரசியலமைப்புச் சட்டம் வரையப்பட்டது. முதலாம் ஐந்தாண்டுத் திட்டத்தில், உள்ளாட்சி அரசாங்கக் கழகங்களெல்லாம் மாநில, தேசிய அரசாங்கங்களின் அமைப்பைப் போலவே மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுக் குடியாட்சி இயல்புடனிருத்தல் வேண்டுமென்ற ஒரு கொள்கைவலியுறுத்தப்பட்டது. அதன்படி எல்லா உள்ளாட்சி மன்றங்களின் உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்படலாயினர்.

**நகராட்சிகளின் அமைப்பு, அதிகாரங்கள், பணிகள்:** இப்போது தமிழ் நாட்டிலுள்ள நகராட்சிகளின் அமைப்பு, அதிகாரங்கள், பணிகள் மற்றும் பிற இயல்புகள் ஆகியவெல்லாம் அவ்வப்போது செய்யப்பட்ட திருத்தங்களோடு கூடிய 1920-ஆம் ஆண்டின் சென்னை மாவட்ட நகராடசிகளின் சட்டத்தின் படியே நடைமுறையிலிருந்து வருகின்றன. நகராட்சியின்அதிகாரிகள் (அ) நகராட்சி மன்றம், (ஆ) தலைவர் (Chairman), (இ) நிருவாக அதிகாரி அல்லது ஆணையாளர் (Commissioner) ஆகியோர் ஆவர்.

**(அ) நகராட்சி மன்றம்** சட்ட இயலான ஒரு நிலையும், அதிகாரங்களும், பணிகளும் உடைய ஒரு குழு (Corporate body) ஆகும். குறைந்தது 20,000 மக்கள் வாழும் நகராட்சியின் மன்றத்தில் 16 உறுப்பினரும், அதற்கு மேற்பட்ட மக்கள் தொகையின் அடிப்படையில் மிகுதியான உறுப்பினரும் மாநில அரசாங்கத்தால் வரையறை செய்யப்படுகின்றனர். நகர மக்களுள் 21-உம் அதற்கு மேலும் வயதுடைய மக்களால் உறுப்பினர்கள் யாவரும் 3 ஆண்டுக் காலத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நகராட்சிக்கு வரி பாக்கி இல்லாமல் வேட்பாளர்கள் செலுத்தி இருத்தல் வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பினர், பெண்கள் ஆகியோரின் பிரதிநிதிகள் அவர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். தேர்தலுக்காக நகராட்சி பல தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அரசாங்க அலுவலர் எவரும் மன்ற உறுப்பினராதற்குத் தகுதி உடையரல்லர். நிறைவேற்றப்படாத நகராட்சிப் பணிகளையும், வீணாக்கப்படும் நகராட்சிச் சொத்துக்களையும், நகர மக்களின் தேவைகளையும் சுட்டிக் காட்டவும், தீர்மானங்களைக் கொண்டுவருவதற்கும், நகராட்சி விதிகளுக்குட்பட்ட பொருள்களைப் பற்றி விவாதிக்கவும் மன்ற உறுப்பினருக்கு அதிகாரம் உண்டு. மன்றத்திற்குப்பணிகள் பற்றிய பதிவேடுகளை வருவிக்கவும், தனது கல்வி நிலையங்களையும், மருத்துவ மனைகளையும் கண்காணித்தற்குத் தம் உறுப்பினர்கள் சிலரைக் குழுக்களாக அமைக்கவும் அதிகாரம் உண்டு. மன்றம் மாதமொரு முறையேனும் கூடுதல் வேண்டும். உறுப்பினருள் மூன்றில் ஒரு பங்கினரேனும் (அவர்கள் குறைந்தது 6 பேராவது இருத்தல் வேண்டும்) இருந்தால்தான் கூட்டம் நடைபெறும். கூட்டம் நடைபெறுதற்கு 3 நாள்களுக்கு முன்னர் உறுப்பினருக்குக் கூடும் இடம், காலம், நிகழ்ச்சி நிரல் முதலியவைகளை அறிவித்தல் வேண்டும். மூன்றில் ஒரு பங்கு உறுப்பினருடைய வேண்டுகோளின் படியும் மன்றம் கூடலாம். கூட்டத்துக்கு வந்து வாக்கெடுப்பிலும் கலந்து கொள்ளும் உறுப்பினருள் பெரும்பான்மையோருடைய ஆதரவு இருந்தால் மன்றத்தில் தீர்மானங்கள நிறைவேறும். கூட்ட நடவடிக்கை அறிக்கையைத் தலைவர் அவ்வப்போது மாவட்ட ஆட்சியருக்கு அனுப்புதல் வேண்டும். தலைவரோ எந்த உறுப்பினரோ, அவர் தொடர்பான எந்தத் தீர்மானமும் மன்றத்தின் வாக்கெடுப்புக்கு வரும்போது அதில் கலந்து கொள்ளுதல் கூடாது. அரசாங்கத்தால் அமர்த்தப்பட்ட நகராட்சி அதிகாரிகள் (ஆணையாளர், சுகாதார அதிகாரி, பொறியாளர் முதலியோர்) மன்றக் கூட்டத்தில் தத்தம் துறை பற்றிய செய்திகளைக் கூறலாம், வாக்கு அளித்தல் இயலாது. மன்றம் தனது பணியாளருடைய பணி பற்றிய விதிகளை மாநில அரசாங்கத்தின் ஒப்புதலோடு வரையலாம்; சுகாதார அதிகாரி, பொறியாளர், மின் பொறியாளர் ஆகியோரை மாநில அரசாங்கம் அமர்த்துவதால், இவர்களல்லாத மற்ற நகராட்சி அதிகாரிகளை மன்றம் நீக்குதலும் நிறுத்திவைத்தலும் கூடும்.

**(ஆ) தலைவர்:** ஒவ்வொரு நகராட்சிக்கும் ஒரு தலைவரையும், துணைத் தலைவரையும் மன்ற உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கின்றனர். தலைவரே 1933-ஆம் ஆண்டுவரை நகராட்சியின் எல்லா நிருவாகப் பணிகளையும் செய்து வந்தார்; அவ்வாண்டில் செய்யப்பட்ட ஒரு சட்டத்தின்படி நிருவாக அதிகாரங்களும், பணிகளும் ஆணையாளருக்கு மாற்றப்பட்டன. மன்றம் அமைக்கும் ஒவ்வொரு குழுவிலும் தலைவரும் உறுப்பினராவார். தலைவர் அல்லது துணைத் தலைவர் மன்றக் கூட்டங்களை நடத்தி வைக்கிறார். ஆணையாளர் அரசாங்கத்துக்கு விடுக்கும் செய்திகளும், அரசாங்கம் நகராட்சிக்கு விடுக்கும் செய்திகளும் தலைவர் வழியாகச் செல்லுகின்றன; அவர் அவற்றை மன்றத்தாருக்கு அறிவிக்கிறார். தலைவரை அல்லது துணைத் தலைவரைப் பதவி நீக்கம் செய்தற்காக மன்ற உறுப்பினருள் பாதிப்பேர் கையெழுத்திட்ட நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தைக் கொண்டுவர, அதை மன்ற மொத்த உறுப்பினருள் ஐந்தில் மூன்று பங்கு பேர் ஆதரித்தால், தலைவர், அல்லது துணைத் தலைவர் பதவி நீக்கம் செய்யப்படுவார்.

**(இ) ஆணையாளர்:** சட்டத்துக்கு 1933 – ஆம் ஆண்டில் செய்யப்பட்ட ஒரு திருத்தத்தின்படி, மன்றத் தலைவருக்குப் பதிலாக ஒரு முழுநேர நிருவாக அதிகாரியை அல்லது ஆணையாளரை மாநில அரசாங்கம் ஒவ்வொரு நகராட்சியிலும் அமர்த்திற்று. அவர் நகராட்சி நிதியிலிருந்து மாத ஊதியமும், படிகளும் பெறும் நிலையான அதிகாரி ஆவர். அவரை மாற்றுதல் வேண்டுமென்று மன்ற உறுப்பினர் 2/3 பங்கு ஆதரவுடன் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றினால், அவரை மாநில அரசாங்கம் மாற்றும். முன்பு தலைவர் செய்து வந்த எல்லா நிருவாகப் பணிகளும் ஆணையாளருக்கு மாற்றப்பட்டன. அவர் மன்றத் தீர்மானங்களைச் செயற்படுத்தி, பணிகளின் வளர்ச்சியைப் பற்றி மன்றத்திற்கு அறிவித்து, நகராட்சிக்கு வரவேண்டிய வரிகளையும் வாங்கினார். ஆயிரம் ரூபாய் வரை மதிப்புள்ள ஒப்பந்தப் பணிகளை (Contract) அவர் தீர்மானித்தல் கூடும். நகராட்சி அதிகாரிகளையும், அலுவலர்களையும் பற்றி பட்டியல் வரையவும், அவர்களுடைய ஊதியம் முதலியவற்றைப் பற்றித் திட்டங்கள் வரையறை செய்யவும், கல்வித் தகுதிகளைத் திட்டம் செய்து, விடுப்பு, ஓய்வூதியம் முதலியவைகளை வழங்கவும் அதிகாரங்களை ஆணையாளர் பெற்றுள்ளார். தலைவர் வழியாக மாநில அரசாங்கத்துக்குச் செய்திகளை விடுத்தும், மன்றக் கூட்டங்களிலும், குழுக் கூட்டங்களிலும் வாக்களிக்காமல் கலந்து கொண்டும், நகராட்சி அலுவலர்களையெல்லாம் கட்டுப்படுத்தியும் செயற்படுகிறார். நகராட்சியின் ஆண்டு ஆட்சி அறிக்கையை ஆணையாளர் வரைந்து, மன்றத்தின் ஒப்புதலைப் பெற்றபின், மாவட்ட ஆட்சியருக்கும், மாநில அரசாங்கத்துக்கும் அனுப்புகிறார். மன்றம் மக்களுடைய நல்வாழ்வுக்கும், பாதுகாப்புக்கும் இன்றியமையாத பணிகளை நிறைவேற்றுதற்கு ஒப்புதலளிக்காவிடில், அவற்றை நகராட்சி நிதியிலிருந்து செலவு செய்து நிறைவேற்றி, மன்றத்துக்குத் தெரிவிக்கவும், அரசாங்கம் விடுக்கும் பணிகளை நிறைவேற்றவும் அதிகாரங்களை அவர் பெற்றுள்ளார்.

**நகராட்சியின் வருமான ஆதாரங்கள்:** மாநில அரசாங்கம் விதித்துள்ள விகிதங்களின்படி நகராட்சி வரிகளை வாங்கி, வரிவிதிப்பு ஏடுகளையும், வரவு, செலவுக் கணக்கு ஏடுகளையும் நல்ல முறையில் வைத்திருத்தல் வேண்டும். மாநில அரசாங்கத்தின் ஒப்புதலில்லாமல், அது எந்த வரியையும் நீக்கவோ குறைக்கவோ கூடாது. அதற்கு வருமானங்களை அளிக்கும் ஆதாரங்கள் 1) சொத்து வரி(வீட்டு வரி), 2)தொழில், தொழில் நிறுவனங்கள் வரி, 3) வருமான வரியின்மீதான கூடுதல் வரி, 4)வாகன வரி, 5)நகராட்சிக் கட்டடங்கள், பேருந்து நிலையங்கள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் கட்டணங்கள், 6)இதர உள்ளாட்சி நிறுவனங்களால் செலுத்தப்படும் தொகைகள் ஆகியவை.

**நகராட்சியின் செலவினங்கள்:** நகராட்சிச் சாலைகளை அமைத்துப் பாதுகாத்தல், மருத்துவமனைகளை நடத்துதல், சுகாதார மேம்பாட்டுக்கு ஆவண செய்தல், குடிநீர் வசதிகள் அமைத்தல், கழிகால் கட்டித், துப்புரவுக்கு ஏற்பாடு செய்தல், பள்ளிகளை நிறுவி நடத்துதல், பயணிகள் விடுதிகள் மற்றும் நகராட்சிக் கட்டடங்களைப் பாதுகாத்தல், நகராட்சி அலுவலர்களுக்கு ஊதியங்கள் முதலியவற்றை வழங்குதல் ஆகியவை நகராட்சியின் செலவினங்களாகும்.

**நகராட்சியின் மீதுள்ள கட்டுப்பாட்டு அதிகாரங்கள்:** நகராட்சியும் மற்ற உள்ளாட்சி நிறுவனங்களைப் போலச் சட்டத்தில் விதிக்கப்பட்டுள்ளபடி மாநில அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதே ஆகும். மாவட்ட ஆட்சியர் எந்த நகராட்சியையும் பார்வை இடவும், அவரும், மாநில அரசாங்கமும் மன்றத் தீர்மானங்களையும், வரவு செலவுத் திட்டங்களையும், வரைபடங்களையும், பணிகள் பற்றிய அறிக்கைகளையும், பதிவேடுகளையும் வருவித்துப் பார்வை இடவும், நகராட்சியின் ஆண்டறிக்கையை வாங்கி அதனை ஆய்ந்து, மன்றம் செய்யத் தவறிய பணிகளைச் செய்யுமாறு அவற்றைத் தூண்டவும் கூடும். மன்றத் தீர்மானமெதுவும் அதற்குரிய அதிகார வரம்பை மீறியதாயின் அதனைத் தள்ளுபடி செய்யவும், மன்றத் தீர்மானத்தை நிறைவேற்றத் தவறும் தலைவரை நீக்கவும், தம் பணிகளைச் செய்யத் தவறும் மன்றத்தைச் செயற்படாமல் நிறுத்தி வைக்கவும், கலைத்து விட்டு மறு தேர்தல் நடத்தவும், நகராட்சிக்கு வேண்டிய குடிநீர் வசதி, கழிகால் வசதித் திட்டங்களை நகராட்சி நிதியிலிருந்து செலவு செய்து நிறை வேற்றவும், நகராட்சிகளை ஆய்வு செய்து அறிக்கை அனுப்புமாறு ஆய்வாளர்களை அனுப்பவும், நகராட்சியின் கணக்குகளை அரசாங்கத் தணிக்கையாளர்களினுதவியால் தணிக்கை செய்யவும் நகராட்சிகளின் மீது பலவகையான கட்டுப்பாட்டதிகாரங்களை மாநில அரசாங்கம் செலுத்துகிறது. பா.கு.

**துணைநூல்:**

The Madras District Municipalities Act, 1920, Government of Tamil Nadu.

**நகுடன்:** இவன் சந்திர வமிசத்தரசன்; ஆயுவிற்குச் சுவர்பாவியிடம் பிறந்தவன்; சந்திரனிலிருந்து ஐந்தாம் தலைமுறையினரின் மகன்; புரேவசுவின் பேரன். இவன் தேவி பிரியம்வதை எனப்படுவாள்.

ஆயாதி, உத்தவன், சங்கியாதி, யயாதி, எதி, மருதி போன்றவர்கள் இவன் மக்களாவார்கள் (பாகவதம்).

இவன் காண்டவப்பிரத்தத்தை ஆண்டவன்; செம்படவர் வலையிலகப்பட்ட சௌநகரை மீட்கப் பசுவை விலையாகத் தந்தவன்; பற்றற்று நின்றுதவஞ் செய்து நூறுவேள்வி புரிந்தவன்; அதாவது நூறு அசுவமேத யாகம் செய்துஇந்திரப்பதவிபெற்றவன். இந்திர பதவி பெற்றவர்களுக்கே இந்திராணி உரியவள் என்ற முறைப்படி இவன் இந்திராணியிடம் செல்ல விரும்பினான். சப்த முனிவர்கள் எனப்படும் தவத்திற் சிறந்த முனிவர்கள் சுமக்கும் பல்லக்கினில் இந்திராணியின் அரண்மனையை நோக்கிச் சென்றான். முனிவர்களை விரைந்து செல்லும்படி 'சர்ப்ப' 'சர்ப்ப' என்று கூறினான். சிவிகையின் முன்பக்கத்தைத் தூக்கிச் சென்ற அகத்திய முனிவர் சினந்து நகுடனைச் சர்ப்பமாகும் படி? சபித்தார். சர்ப்பம் என்பது 'நட' என்றும் 'பாம்பு' என்றும் பொருள் படும். நகுடன் சாபத்தால் மலைப்பாம்பு ஆனான்.

பாண்டவர்கள் வனவாசத்தின்போது கந்தமாதனத்தை விட்டுக் கயிலயங்கிரியைத் தரிசித்து விட்டு வரும் வழியில் பதரிகாசிரமத்தை அடைந்தனர். அங்கு ஒரு மாத காலம் தங்கியிருந்தனர். அப்போது பக்கத்திலிருந்த காட்டிற்கு வேட்டையாடச் சென்றிருந்த பீமன் அந்த மலைப்பாம்பிடம் அகப்பட்டுக் கொண்டான். பீமன், 'தானும் சந்திர வமிசத்திலிருந்து வந்தவன் எனக்கூறித் தன்னை விட்டு விட வேண்டும்' எனக் கேட்டுக் கொண்டான். மலைப் பாம்பான நகுடன் கேட்கும் கேள்விகளுக்கு எவன் தக்கவிடை கூறுகிறானோ அப்போதுதான் அவன் சாபவிமோசனம் அடைவான் என்று அகத்தியர் சொல்லியிருந்தார். பீமனைத் தேடித் தருமன் அங்கு வந்து சேர்ந்தான். அப்போது மலைப்பாம்பு வினாக்கள் கேட்கிறது. 'யாரை அந்தணன் எனலாம் என்றும் ஒருவன்அறியத் தக்கது எது'என்றும் கேட்கிறது. உண்மை, கொடை பொறுமை, நல்லொழுக்கம், இரக்கம்,தவம், கருணை முதலிய பண்புகளைஉடையவனே அந்தணன் ஆவான் என்று மறுமொழி கொடுக்கிறான் தருமன். மேலும், இன்பம், துன்பம் இரண்டும் அற்று எங்கும் நிறைந்திருக்கிற பரம்பொருளே அறியத்தக்கது என்றும் கூறுகிறான்.

தருமன்சில வினாக்களைக் கேட்கிறான். வேதங்கள் அவற்றின் அங்கங்கள் முதலியவற்றைக் கற்றுக் கரைகண்டவர்களைக் காட்டிலும்,எவனுக்கு அதிலும் மேலான நற்கதி கிடைக்கும் என்று கேட்டான். உண்மையோடு இனிமையாகப் பேசி அகிம்சையில் பற்றுடன் இருந்து எவன் சான்றோரை ஆதரிக்கிறானோ அவன்தான் நற்கதி அடைவான் எனமலைப் பாம்பும் கூறுகிறது. மலைப்பாம்பு தான் கேட்ட வினாக்களுக்குத் தக்க பதிலைத் தருமனிடமிருந்து பெற்றதால்சாபவிடுதலை பெறுகிறது. பழைய உருவத்தினைத் திரும்பப் பெற்று நகுடன் சொர்க்கத்தைச் சென்றடைகிறான். செருக்கினால் மயங்கிப் பெரியோர்களையும் தவஒழுக்கம் மேற்கொண்டிருப்பவர்களையும் இகழ்வோன் இழிவு அடைவான் என்பதற்கு நகுடனின் இந்தக்கதை எடுத்துக்காட்டாக விளங்குகிறது. சித்தாந்த சிந்தாமணியும் அகத்தியனால் மலைப்பாம்பாக்கப்பட்ட நகுடனின் கதையைக் கூறிப்பிடுகிறது. இரா.பா.

**நகுலன்**: பாண்டுவின் மனைவி மாத்திரி என்பாளுக்கும் கதிரவனின் மக்களாகிய அசுவினித் தேவர்களுக்கும் பிறந்த இரட்டையர்களில் மூத்தவன் நகுலன்; மற்றொருவன் சகாதேவன் எனப்படுவான். பாண்டுவின் மூத்த மனைவி குந்திதேவி, துருவாசர் மூலம் அருளப் பெற்ற அருமறைப் பேற்றை முறைப்படி மாத்திரிக்கும் உரைத்திருந்தாள். அம்மறைமொழியின் பயனாய் ஏற்கெனவேகுந்தவி தேவிக்குத் தருமன், வீமன், அர்ச்சுனன் ஆகியோர்கள் பிறந்திருந்தார்கள். நகுலன், சகாதேவன் இருவர்களையும் இணைத்து ஐவரும் பாண்டவர்கள் எனப்பட்டார்கள். நகுலன் அழகிற் சிறந்தவன்; குதிரைகள் பற்றிய இலக்கணம் அறிந்தவன்.

நகுலனுக்குத் திரௌபதியிடம் சதாநீகனும் இரேணுமதி என்பாளிடம், நிர்மித்திரனும் புத்திரர்களாகப் பிறந்தனர். இவன் சிறந்த போர் வீரன்; கடற்கரைப் பகுதியிலிருந்த மிலேச்சர்களை அடக்கியவன்; பகலவர், கிராதசு, யவனர், சாகர் போன்ற பழங்குடியினர்மேல் படையெடுத்து வென்றவன். மேலும் சயிரீசாக நாட்டில் வாழ்ந்த மத்த மயூரர்களை அடக்கிய சிறப்பும் இவனுக்கு உண்டு.இராச இரிசியான அக்ரோசானனைச் சந்தித்தவன்(மகாபாரதம் XXXII, ப. 97 இராய்சு பதிப்பு). தருமன் இராசசூயவேள்வி இயற்றி அரசர்க்கு அரசராக விரும்பினான். அப்போது இவன் மேல்திசைக்குப் படையோடு சென்று பல அரசர்களை அடக்கிக் கப்பம் பெற்றான்; சிந்து நதிக் கரையிலுள்ளோரையெல்லாம் வெற்றி கொண்டான்; மத்தர நாட்டை அடைந்து நட்பு முறையில் சல்லியனிடமிருந்து கப்பப் பொருள் பெற்றான்; தான் ஈட்டிய கப்பப் பொருள்களையெல்லாம் பதினாயிரம் ஒட்டகங்கள் மீது ஏற்றி இந்திரப் பிரத்த நகரத்திற்கு யாகத்தின் போது கொண்டு வந்தான்.

பாண்டவர்கள் 12 ஆண்டுகள் வனவாசமிருந்து விட்டு 13-ஆம் ஆண்டு மறைந்து வாழ்வதற்காக விராட நாட்டைத் தேர்ந்தெடுத்தார்கள். அப்போது, தாமக்கிரந்தி என்ற மறை பெயரில் விராட

நாட்டரசனின் குதிரைகளைப் பராமரித்தான். பின்,நடந்த பாரதப் போரில் சகுனியின் மகனான சௌபலனைக் கொன்று சகுனியின் குடும்பத்தை வேரறுத்தான்.

பாரதப் போருக்குப் பின் பெற்ற அரசை நன் முறையில் அரசாட்சி செய்த பாண்டவர்கள் திரௌ பதியுடன் மரவுரிதரித்துக் காட்டிற்குப் போனார்கள். மகாப்பிரசுத்தானம் என்னும் இந்நீண்ட நெடும் பய ணத்தால் சகா தேவனுக்குப் பின் நகுலன் இறந்த னன். நகுலன் தன்னை அழகுள்ளவன் என நினைத் துச் செருக் குற்றதால் இந்நிலையடைந்ததாகத் தெரிகிறது (பாகவதம்).

நகுலன் அவன் சகோதரர்களுடன் இணைத்த நிலையில் சாதகக் கதைகளிலும் பேசப்படுகிறான்.

இரா. பா.

**நகுவர்:** வட அமெரிக்காவையும் தென் அமெ ரிக்காவையும் இணைக்கும் நிலப் பகுதியில் வாழும் தொன்மைக் குடியினரே நகுவர் (Nahuas). நகுவர் என்ற பெயர், ஏழு தொன்மைக் குடிகளின் பொதுப் பெயராகும். இவ்வேழு குடியினருள் மிகச் சிறப்பு வாய்ந்தவர்கள் அசுதெக்குகள் (Aztecs), இவர்கள் மாயா (Maya) இனத்தவர்களைப் போன்றே தனி நாகரிகத்தைப் பெற்றிருந்தனர். ஆனால், கி.பி. 16



நகுவச் சிறுவர்கள்

-ஆம் நூற்றாண்டில் இசுபானியர்களால் (Spaniards) அசுதெக்குகள் அழிக்கப்பட்டனர். ஆயினும் இவர் கள் பேசிய நகுவாட்டுல் (Nahuatl) மொழி இன்றும் ஒரு மிலியன் நகுவர்களால் பேசப்படுகின்றது.

நகுவர்களின் வீடுகள் ஓர் அறையைக் கொண்ட சிறு வீடுகளே. வைக்கோல் போன்ற மெல்லிய தாவர வகைத் தட்டுகளையும் மண்ணையும் கலந்து செய் யும் பெரும் மண் கட்டிகளால் வீட்டுச் சுவர்களை எழுப்புகின்றனர். ஒவ்வொரு வீட்டை ஒட்டியும் ஒரு சாய்வான கால்நடைக் கொட்டகை அமைக்கப்படும். இவர்கள் விரும்பி வளர்க்கும் பசுக்கள், கோவேறு கழுதைகள், கோழிகள், வான் கோழிகள், பன்றிகள் முதலானவற்றிற்கு இவ்விடம் பாதுகாப்பளிக்கிறது.

நகுவர்களின் பொருளாதார்த்தில் தோட்டப் பயிர்கள் குறிப்பிடத்தக்க பங்கைப் பெற்றுள்ளன இவற்றை விளைவிப்பதற்குப் பரந்த நிலத்தையோ பண்பட்ட நிலத்தையோ இவர்கள் தேடுவதில்லை, ஒவ்வொரு வீட்டிற்கருகிலுமுள்ள இடங்களில் இப் பயிர்கள் பயிர் செய்யப்படுகின்றன. தோட்டப் பயிர்களைத் தவிர இவர்களின் நிலங்களில் மக்காச் சோளத்தைப் பெருமளவு விளைவிக்கின்றனர். இது இவர்களது முதன்மையான பயிர். நிலம் ஒவ்வொரு குடும்பத்தவருக்கும் என்று தனித் தனியாக இருந் தாலும் வேளாண் பணிகளைப் பெரும்பாலும் கூட் டாகச் சேர்ந்து செய்கின்றனர்.

நகுவர்களின் பண்பாட்டில் சிறப்புக் கூறாகத் திகழ்வது அவர்களது மருத்துவ முறையாகும். இம் முறை கொலம்பசு காலத்திற்கு முந்திய (Pre-Columbian) கால முறையிலிருந்து வருவதாகும். இம் மருத்துவ முறை மிகவும் வளர்ச்சி பெற்றது என மதிக்கப்படுகிறது. 'குரந்தராசு' (Curendaras) என்ற மருத்துவர்கள் நோய்க்குத் தக்க மருந்துகளைக் குறிப்பிடுகின்றனர். மூலிகைகள், பூக்கள், இலைகள், மரப்பட்டைகள், தாவர எண்ணெய்கள் முதலான வற்றின் மூலம் அனைத்து வகையான நோய்களும் குணப்படுத்தப்படுகின்றன. இவர்களது மருத்துவ முறையில் வெப்ப ஆவிக் குளியல் (Steam bath) மிக வும் சிறப்புப்பெற்றது. ஒரு சிறிய இடத்தில் நான் கைந்து பேர் அமர்ந்தபின் அவ்விடத்திற்கு மேல் நீரைக் காய்ச்சும்போது வெளிவரும் ஆவியை அறைக் குள் செலுத்துவர். இவ்வாவியில் இருப்பதால் பல நோய்கள் நீங்குகின்றன என நம்புகின்றனர். குறிப்பாக, குழந்தைப் பேற்றுக்குப்பின் பெண்கள் சில சடங்குகளைச் செய்தபின் ஆவிக்குளியலை மேற் கொள்கின்றனர்.

மந்திரமும் சடங்குகளும் இவர்களிடையே மிகுந் துள்ளன. தீரா நோய்களை மந்திரம் மூலம் குணப்

படுத்த முடியும் எனக் கருதுகின்றனர். காற்றில் வாழும் ஒருவகை ஆவியே தீய நோய்களுக்குக் காரணமாக உள்ளது என்றும், அதனை விரட்டு வதற்கு மூலிகைகள் கலந்த நீரில் குளித்துவிட்டுச் சில சடங்கு நிகழ்ச்சிகளை நடத்தி அந்த ஆவியை அமைதிப் படுத்தலாம் என்றும் கூறுவர். ஆவிகளை அமைதிப்படுத்துவதற்கு உணவு, பூஞ்சுருட்டு (Cigarette) முதலானவற்றைப் படையல்களாக வைக்க வேண்டியது அவசியம் என்பர்.

நகுவர்களின் தொன்மை மருத்துவ முறை காலத் தால் அழிந்து வருகிறது. அமெரிக்க நகர நாகரிகத் தின் தாக்கத்தினால் மேலை நாட்டு நவீன மருத்துவ முறைகள் பரவத் தொடங்கியுள்ளன. நகுவர்கள் கலைத் தொழில்களில் வல்லவர்கள். குறிப்பாக, ஆடை நெய்வதில் இவர்கள் திறமையானவர்கள். இவர்கள் அணியும் மரபு உடைகளைக் காணும்போது அதன் வேலைப்பாடுகளின் திறனை அறியமுடியும். ஆண் பெண் இருபாலாருமே நெய்யும் தொழிலில் ஈடுபடுகின்றனர். சீ.ப.

**நங்கபர்வத சிகரம்** இமயமலைத் தொடரில் உள்ள ஒரு சிகரம். இது பாகிசுத்தானில் உள்ள பஞ் சாபுப் பகுதியில் உள்ளது. இதன் உயரம் 8,131.3மீ. உலகில் உள்ள சிகரங்களில், உயரத்தைப் பொறுத்த வரை இது ஏழாம் இடத்தைப் பெறுகிறது. ஒரு செருமானிய ஆசுத்திரிய மலையேறுங்குழு 1953-இல் இதன் உச்சியை அடைந்தது. இந்தச் சிகரத்தின் வடக்கில் சிந்து ஆறும், கிழக்குச் சரிவில் பனியாறும் ஓடுகின்றன. தெ.பா.

**நச்சர்**: திருக்குறளுக்கு உரையெழுதிய ஆசிரியர் களுள் ஒருவர். 'தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்' எனத் தொடங்கும் ஒரு பழைய வெண்பா திருக்குறளுக்கு உரை எழுதியவர் எனக் கருதப்பெறும் பதின்மர் பெயரையும் தொகுத்துக் கூறுகிறது. தொல் காப்பியம், பத்துப்பாட்டு, சிந்தாமணி முதலியவற் றிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியரைச் சுருக்க மாக நச்சர் எனக் குறிப்பிடும் மரபுண்டு. அதனால், திருக்குறள் உரையாசிரியராகக் கருதப்படும் நச்சரும் தொல்காப்பிய உரையாசிரியராகிய (நச்சினார்க்கினி யரும்)நச்சரும் ஒருவர் எனச் சிலர் கருதினர். ஆயினும், ஆய்வாளர்கள், இருவரும் வெவ்வேறானவர் என் பதனைத் தெளிவுபடுத்தியுள்ளனர்.

நச்சர் எழுதியதாகக் கூறப்படும் திருக்குறள் உரை இன்று கிடைக்கவில்லை. திருக்குறள் உரை வளம், திருக்குறள் உரைக் கொத்து ஆகிய நூல்களில் கடவுள் வாழ்த்து அதிகாரத்திலமைந்த இரு குறள் களுக்கான நச்சர் உரைகளை அவற்றின் பதிப்பா சிரியர்கள் காட்டியுள்ளனர். அவ்விருகுறள் உரை களும் நச்சருடையன எனக் காட்டப் பெற்றிருப்பி னும், பிறகுறள்களுக்கு அவருரை கிடைக்காமையால் அவற்றை அவ்வாறு கொள்ளத் தயங்குவர் சிலர். 'இருள்சேர்' என்னும் குறளுக்கு, 'அஞ்ஞானம் பற்றி எழாநின்ற இருவினைகளும் மெய்த்தன்மை வாய்ந்த சிவபிரானது திருப்புகழைப் பாராட்டுவானிடத்துச் சேரா' என்பதும், 'பொறிவாயில்' என்னும் குறளுக்கு 'ஐம்பொறிகளின் வழியாக நுகரப்படும் ஐம்புலன் களையும் வென்றானது பொய்நீங்கிய ஒழுக்க நெறி யில் நின்றார் இகத்திலும் பரத்திலும் நெடுங்காலம் வாழ்வார்' என்பதும் நச்சர் உரைகளாகக் காட்டப் பட்டுள்ளன. இறைவன் என்பதற்குச் சிவபிரான்என்று கூறுவது கொண்டு இவர் சைவசமயத்தவர் ஆகலாம் என்பதனை உணர்தல் கூடும். அ.மா.ப.

**நச்சினார்க்கினியர்**: புகழ்வாய்ந்த உரையா சிரியர்களுள் ஒருவர் நச்சினார்க்கினியர். இவர் மதுரையைச் சேர்ந்தவர் என்பதும், பிராமணர் வகுப்புகளுள் ஒன்றாகிய பாரத்துவாசப் பிரிவைச் சேர்ந்தவர் என்பதும், 'மதுரையாசிரியர் பாரத்து வாசி நச்சினார்க்கினியர்' என இவர் உரைவரைந்த நூல்களின் பகுதிகள் தோறும் இடம் பெற்றுள்ள தொடரால் இனிது விளங்கும்.

**வரலாறு**: 'நச்சினார்க் கினியர் போலும் நாக வீச் சரவ னாரே' எனத் தேவாரத்திலும் (திருநா. திருநாகேச்சரம்), 'நச்சினார்க் கினியாய் போற்றி, எனக் காஞ்சிப் புராணத்திலும் (சத்ததான.11) வரும் தொடர்களால் சிவபெருமானை, 'நச்சினார்க்கு இனி யனாகக்' கூறப்பட்டுள்ளமை விளங்கும். இத்தொடர்க் குறிப்புக்கு ஏற்றவாறு, இவர் சைவ நெறி சார்ந்த வர் என்பதற்கு இவருரையில் சான்றுகள் பல உள் ளன. அன்றியும், சீவக சிந்தாமணி உரைச் சிறப்புப் பாடலில், 'நவின்ற வாய்மை நச்சினாக் கினியன்' எனமுடியும் பகுதியால் இச்செய்திகள் விளக்கமாம்.

**உரைகண்ட நூல்கள்**: நச்சினார்க்கினியர் தொல் காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, சிந்தா மணி ஆகிய நூல்களுக்கு உரைகண்டுள்ளார். குறுந் தொகையில் பேராசிரியர் எழுதாமல் விடுத்தஇருபது பாடல்களுக்கு உரைகண்டார் என்பர். அவ்வுரை கிடைக்கவில்லை.

தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரம் சொல்லதி காரம் இரண்டற்கும் முழுமையாக இவருரைகிடைத் துளது. பொருளதிகாரத்தில் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் ஆகியவற்றுக்கும் செய்யுளியலுக்கும் இவருரை கிடைத்துளது. மெய்ப்பாட்டியல், உவமயியல், மர பியல் ஆகிய மூன்று இயல்களுக்கும் இவருரை கிடைத்

திலது. எனினும், இவ்வியல்களுக்கும் உரை வரைந்தமை இவர்தம் உரையால் அறிய வருகின்றது.

பத்துப்பாட்டு, கலித்தொகை ஆகிய இரண்டற்கும் இவருரை முழுமையாகக் கிடைத்துளது. இவ்வாறே சிந்தாமணிக்கும் முழுவுரை கிடைத்துள்ளது. குறுந்தொகைக்குப் பேராசிரியர் உரை கிடையாமை போலவே, இவருரையும் கிடைத்திலது.

மூல நூலாசிரியர்க்கு ஒப்பான பெருமை, உரையாசிரியர்க்கும் உண்டு. மூலநூலை விளக்கம் செய்து பரப்புநராக உரையாசிரியர்கள் இருந்ததுடன், மூல நூல்களை அழியாமல் காத்தவராகவும் இருந்தனர். பத்துபாட்டின் மூலத்தை, உரையில் இருந்து பிரித்தெடுத்தே, அமைத்துக் கொள்ள நேர்ந்தது என்பதை அறிந்தால் மூல நூலை உரையாசிரியர்கள் காத்த காவற் கடமை இனிது விளங்கும். உரை காணப்பட்ட நூல்களே பெரும்பாலும் அழிவினின்றும் காக்கப்பட்டுள்ளன என்பதை அறிபவர் உரையாசிரியர்களின் தொண்டினைக் குறைத்து மதிப்பிடார்.

**தனிப்பெருந் தொண்டு:** நச்சினார்க்கினியர், முற்றாகத் தம் வாழ்வைக் கல்விக்கெனவே ஒதுக்கிய உயர்வாளர்; வடமொழியும் தேர்ந்தவர்; தமிழ் நூற்கடற்பரப்பில் ஒரு கலம் செலுத்திக் கரைகண்ட உரவோர். அவர் காலம் வரையில் தோற்றமுற்று நின்ற நூல்களையெல்லாம் முழுமையாகக் கற்று நெஞ்சக் களஞ்சியத்தில் அல்லது கருவூலத்தில் வைத்துக் கொண்டு வேண்டியவற்றை வேண்டிய இடத்தெல்லாம் தட்பின்றி வழங்கிய தனிப்பெரு வள்ளல். இவரால் அறியப்பட்ட நூல்களும், வரலாற்றுக் குறிப்புகளும் பழக்க வழக்கங்களும் எண்ணற்றவை. உரையெழுதுவதையே பிறவி நோக்கமாகவும், தகவார்ந்த தவமாகவும் கொண்ட தனிப் பெருந் தன்மையர் என்பது இவர் எழுதியுள்ள உரைப்பரப்பைக் காண எளிதில் தெளிவாம். இதனாலேயே 'உச்சிமேல் புலவர் கொள் நச்சினார்க்கினியர்' எனப் பாடு புகழ் பெற்றார். 'நச்சினார்க்கினியன் நாவின் நல்லுரை கொள்வர் நல்லோர்' என்று பாராட்டி, இவர்தம் உரைக் கொடையைக் கைம்மாறு வேண்டாக் கடப்பாடுடைய மழைக் கொடையுடன் புலவர்கள் ஒப்பிட்டு உரைத்தனர்.

**ஒரு நூலுக்கு ஈருரை:** நச்சினார்க்கினியர் சமணப் பெருங்காப்பியமாகிய சிந்தாமணிக்கு உரை கண்டமை அவர்தம் சமயச் சால்பை நன்கு விளக்கும். 'சமயங் கடந்தது மொழித் தொண்டு' என்பதைத் தம் செயலால் காட்டியவர் நச்சினார்க்கினியர். முதற்கண் சிந்தாமணிக்கு ஓர் உரை கண்டார் என்றும், அவ்வுரை அச்சமயக் கோட்பாடுகள் சிலவற்றுக்குப் பொருந்தி வாராமல் இருந்ததென்றும், அதனால் சமண சமயம் சார்ந்து அச்சமய நூல்களை முறையே கற்று மீளவும் ஒருரை எழுதி அச்சமயச் சான்றோர் பாராட்டுமாறு வழங்கினார் என்றும் அறியவரும் செவிவழிச் செய்தியால், ஒரு நூலுக்கு மரபுப்படி உரைகாண்டற்காக அவர் எடுத்துக் கொண்ட இனிய முயற்சிகள் விளங்கும். இவற்றை நினைவார், நல்லபல பாடங்களைப் பயில்வார் எனலாம்.

**உரைகண்ட வகை:** தொல்காப்பிய உரையில் 'சிந்தாமணியுள் யாம் கூறிய உரைகள் பலவற்றானும் உணர்க' (தொல். செய். 210, 211, 238) என்று கூறுவதால் தொல்காப்பியத்திற்கு உரை செய்யுமுன்னரே, சிந்தாமணிக்கு உரை செய்தார் என்பது விளங்கும். சிந்தாமணி உரையில் (72; 892, 1913, 2690) 'தொல்காப்பியத்தில் கூறினாம்' என்று கூறுவதால், சிந்தாமணிக்கு முன்னர்த் தொல்காப்பியத்திற்கு உரை கண்டமை விளங்கும். இதனை ஆய்ந்த பதிப்பாசிரியர் டாக்டர் உ.வே. சாமிநாதையர், 'தொல்காப்பியத்திற்கு உரை இயற்றுமுன் சிந்தாமணிக்கு முதன்முறை உரை இயற்றியதையும், இரண்டாம் முறைஇவர் அந்நூலுக்கு உரை இயற்றிய பின் இயற்றியதையும் ஒருவகையாகப் பார்த்தால், மேற்கூறிய வரலாற்றை வலியுறுத்தி நிற்றல் காண்க' என்பார். மேற்குறித்த வரலாறு என்பது இருமுறை சிந்தாமணிக்கு உரை கண்டமை.

**மேற்கோள்:** இற்றை நாளில் வழக்கில் இல்லாத பல நூல்களை உரைகளில் ஆங்காங்கு எடுத்துக் காட்டியுள்ளார். அவிநயம், கடகண்டு, குணநாற்பது, கூத்தநூல், சிறுகுரீஇயுரை, தந்திரவாக்கியம், திருவுலாப்புறம், நாடக நூல், பூதத்தார் அவையடக்கு, பூதபுராணம், 'பெரும்பொருள் விளக்கம், மாபுராணம், மோதிரப்பாட்டு, யாழ்நூல், வசைக்கடம், வசைக்கூத்து, வளையாபதி, விளக்கத்தார் கூத்து என்பவை சில.

**வரலாற்றுக் குறிப்புகள்:** ஒருவன் மேற்சென்றுழி ஒருவன் எதிர்செல்லாது தன்மதிற்புறத்து வருந்துணையும் இருப்பின் அது உழிஞையின் அடங்கும். அது 'சேரமான் செல்லுழித் தகடூரிடை அதியமான் இருந்ததாம்' எனவும் (புறத்.7), இது 'அதியமானாற் சிறப்பெய்திய பெரும்பாக்கனை மதியாது சேரமான் முனைப்படை நின்றானைக் கண்டு அரிசில் கிழார் கூறியது' எனக் 'கையகந்தமரும்' என்னும் தகடூர் யாத்திரைப் பாடலைக் காட்டுவதும் (புறத்.8), 'இராமன் இலங்கை கொள்வதன் முன் வீடணற்குக் கொடுத்த துறையும் அது' என்று 'கொள்ளார் தேஎங் குறித்த கொற்றம்' என்பதை விளக்குவதும் (புறத். 12), 'குருகுல வேந்தனைக் குறங்கறுத்த

ஞான்று இரவு ஊரெறிந்த பாஞ்சாலரையும் பஞ்ச வர் மக்கள் ஐவரையும் கொன்று வெற்றி கொண்ட அச்சுவத்தாமாவின் போர்த்தொழில் போல்வன' என்று 'நல்லிசை நிலைக்குக் கூறுவதும்' (புறத். 17) இன்ன பிறவும் இவர்தம் வரலாற்றுத் திறத்திற்குச் சான்று பகர்வனவாம்.

**உரைவளம்:** இலக்கியம் படைப்பார் போல இவர் எழுதும் உரைவளத்திற்கு ஒரு சான்று. 'காரும் மாலையும் முல்லை' என்பது தொல்காப்பிய அகத் திணையியலில் வரும் ஒரு நூற்பாவின் தொடர்.

'பிரிந்து மீளும் தலைவன் திறமெல்லாம் பிரிந் திருந்த கிழத்தி கூறுதலே முல்லைப் பொருளாயும், பிரிந்து போகின்றான் திறங் கூறுவனவெல்லாம் பாலையாகவும் வருதலின் அம்முல்லைப் பொரு ளாகிய மீட்சிக்குந் தலைவி இருத்தற்கும் உபசாரப் படுவது கார்காலமாம். என்னை? வினைவயிற் பிரிந்து மீள்வோன் விரைபதித் தேர் ஊர்ந்து பாசறை யினின்று மாலைக் காலத்து ஊர்வயின் வரூஉம் காலம் ஆவணியும் புரட்டாதியும் ஆதலின், அவை வெப்பமும் தட்பமும் மிகாது இடைநிகர்த்தவாகி ஏவல் செய்துவரும் இளையோர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும் ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறு தலிற் களி சிறந்து மாவும் புள்ளும் துணையோடு இன்புற்று விளையாடுவன கண்டு தலைவர்க்கும் தலைவிக்கும் காமக் குறிப்பு மிகுதலானும் என்பது. புல்லை மேய்ந்து கொல்லேற்றோடே புனிற்றாக் கன்றை நினைந்து மன்றிற்புகுதரவும் தீங்குழல் இசைப்பவும் பந்தர் முல்லை வந்து மணங் கஞற்ற வும் வருகின்ற தலைவர்க்கும் இருந்த தலைவிக்கும் காமக் குறிப்புச் சிறத்தலின் அக்காலத்து மாலைப் பொழுதும் உரித்தாயிற்று' என்கிறார்.

தொல்காப்பியர் தமிழ் இலக்கணம் கூறுபவர். அவர், காலம், உலகம் முதலிய சொற்களுக்கு இலக் கணம் கூறுகிறார். இச் சொற்கள் வடசொற்கள் எனக் கருதினாரும் இருந்தனர். அதனால், அவர் களைத் தெளிவிப்பதற்காகக் 'காலம், உலகம்' என் பன வடசொற்கள் அல்ல; ஆசிரியர் வடசொற்களை எடுத்தோதி இலக்கணம் கூறார் ஆகலின்' என்று உறுதி மொழிகின்றார்.

'அமிழ்தினும் இனிய தமிழ்மடவரல்செய் அருந் தவத்தின், பெரும் பயனாக அவதரித் தருளிய மகோபகாரி' என்றும், 'எவனால வாயிடைவந் தமுதவா யுடையானென இயம்பப் பெற்றோன், எவன் பண்டைப் பனுவல் பல இறவாது நிலவ வுரை யெழுதி ஈந்தோன், எவன் பரம உபகாரி, எவன் நச்சினார்க்கினியன் எனும் பேராளன்' என்று உ.வே சாமிநாதையர் இவர் புகழ் பரவுதல் அறியத்தக்கது.

நச்சினார்க்கினியர், இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர் ஆகியோரைத் தம் உரையில் குறிப் பிட்டு எழுதுகின்றார். பரிமேலழகர் உரையை மறுத் தும் உரைக்கின்றார் (திருமுரு 106). இவர் காலம் கி.பி. 14-ஆம் நூற்றாண்டு எனல் தகும். இரா.இ.

***நச்சுமனார்***: இவர் திருக்குறளின் சிறப்புகளை கூறிப் பாராட்டும் பாக்களைக் கொண்ட திருவள்ளுவ மாலையில் இடம்பெற்றுள்ள ஒரு தமிழ்ப்புலவர். 'எழுத்தசை சீர் அடி எனத் தொடங்கும் இவரது திருவள்ளுவ மாலைச் செய்யுள், எழுத்து அசை சீர் அடி, சொற்பொருள், யாப்பு, வனப்பு, அணி, வண் ணம் என யாப்பிலக்கணம் கூறும் யாப்பியல் சிறப்பு கள் ஒன்றும் குறைபடாது அமைந்துள்ள நூல் திருக் குறள் என்று அதனைச் சிறப்பிக்கின்றது. இவரை அடுத்துத் திருவள்ளுவமாலையில் அக்காரக்கனி நச்சுமனார் என்பார் பெயரில் 'கலை நிரம்பிக் காண் டற்கு இனிதாய்' எனத் தொடங்கும் ஒரு வெண்பா இடம் பெற்றுள்ளது. இவர் அவரினும் வேறுபட்டவ ராவர் என்பதனைத் தெளிவுபடுத்துவதற்காகவே அக்காரக்கனி என்னும் அடைமொழி சேர்த்துக் குறிப்பிடப் பெற்றுள்ளார். அ.மா.ப.

***நச்செள்ளையார்***: காண்க: காக்கைபாடினி யார் நச்செள்ளையார்.

***நசீர் அக்பராபாதீ***: நாட்டுப் பற்றும் புதிய முறையில் கவிபாடும் திறமையும் பெற்றிருந்த நசீர் அக்பராபாதீ (Naziri-Akbrabadi) என்ற உருதுக் கவிஞர் கி.பி. 1740 முதல் 1830 வரை, இந்தியாவின் உத்தரப்பிரதேச மாநிலத்தில் வாழ்ந்தார். இவருடைய இயற்பெயர் வலீ முகம்மது. நசீர் அக்பரா பாதீ என் பது இவர் அமைத்துக் கொண்ட புனை பெயராகும். அக்பராபாது (இக்கால ஆக்ரா) என்னும் ஊரில் இவர் வாழ்ந்தார். இவர் இசுலாமிய சமயத்தவராக இருந்தபோதிலும் மற்றச் சமயங்களை வெறுக்க வில்லை; விரும்பவும் செய்தார். இவருடைய கவிதை கள் இன்றும் எடுத்தாளப்பெறும் பெருமை பெற் றவை. இசுலாமிய மதபோதகர்கள் இவருடைய கவிப்பகுதிகள் சிலவற்றை எடுத்துக்காட்டிச் சமய விளக்கம் தந்து வருகிறார்கள். இவருடைய கவிதை களில் இசுலாமிய மத விழாக்களைப் பற்றியவை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. அன்றாட நிகழ்ச்சி களை அழகாகச் சிறப்பிக்கும் இவர்தம் ஆற்றல் போற்றற்குரியது. அக்காலத்திய ஆக்ராவின் தன் மையை அறிந்துகொள்ள இவர் கவிதைகள் உதவு கின்றன. ஆதலால், வரலாற்றறிஞர்களுக்கு இவர் ஆக்கிய பாக்கள் மூலச்சான்றாக உள்ளன. சமய வெறுப்பு இல்லாத இவர், இந்து தெய்வமான கண்ணனைப் பற்றியும் பாடியுள்ளார். இவருடைய

கவிதைகளிற் சில, சிறுவர் மிகவும் விரும்பத்தக்கன வாக உள்ளன. இந்து-இசுலாமிய சமய ஒற்றுமைக்கு உதவிய பெரியார்களுள் இவரும் ஒருவர். இவர் பாரசீகச் சொற்களைவிட மிகுதியாக இந்தியச் சொற்களையே தம் கவிதைகளில் பயன்படுத்தியுள்ளார்.

இவர் ஆக்கியுள்ள கவிதைகளில், பாரசீக மரபை விட இந்திய மரபே மிகுதியாகப் பின்பற்றப்பட்டுள்ளதைக் காணலாம். அக்காலத்தில் மிகச் சிறந்தவர்களாக ஏழு உருதுக் கவிஞர்கள் தேர்வு செய்யப்பட்டிருந்தனர். அவர்களுள் நசீர் அக்பராபாதியும் ஒருவர். இவர் கவிதைகள், பாரசீகம், இந்தி, உருது ஆகிய மும் மொழிகளில் இருப்பதைக் காணலாம்.

தெ.பா.

**நசீரீ சைநாப்பூரீ:** இப்புனை பெயர் பாரசீகக் கவிஞரான குவாசா முகம்மது உசைன் என்பாருக்குரியது. பாரசீகத்தில் நைசாப்பூரில் பிறந்த நசீரீ நைசாப்பூரீ (Naziri Naishapuri) இளமையிலேயே தம் தந்தையை இழந்துவிட்டதால், பிழைப்பை நாடி, ஈராக்கு நாட்டுக்குச் சென்றார். இந்தியாவில் சலாலுதீன் அக்பர் என்னும் முகலாயப் பேரரசர் ஆட்சி புரிந்து கொண்டிருந்தபோது நசீரீ இந்தியாவுக்குச் சென்றார். சகாங்கீர் பேரரசரும் (Jahanghır) அப்துர் இரகீம்கான்-இ-கானான் என்னும் செல்வரும் நசீரீயை ஆதரித்தனர். இந்த ஆதரவுக்கு முக்கிய காரணம் நசீரீயின் சிறந்த கவிபாடும் திறனே யாகும். தெளிந்த நடையில் கற்பனைத் திறம் கொண்டு இவர் எழுதியுள்ள பாரசீகக் கவிதைகள் பல அறிஞர்களால் போற்றப்பட்டுள்ளன. கி.பி. 1613-இல் இவர் இறப்பதற்குப் பத்து ஆண்டுகள் முன்னதாக மெக்காவிற்கு புனிதபயணத்தை மேற்கொண்டார். பிறகு இந்தியா திரும்பி, குசராத்து மாநிலத்தில் உள்ள அகமதாபாது நகரில் தம் வாழ்நாளைப் பயனுள்ள வகையில் கழித்து வந்தார். சகாங்கீர் பேரரசனிடம் பாராட்டும் அன்பளிப்பும் பெற்ற கவிஞர்களுள் இவரும் ஒருவர்.

தெ.பா.

**நசுருல் இசுலாம், காசி:** இருபதாம் நூற்றாண்டுத் தலையாய வங்கமொழிக் கவிஞர்களுள் காசி நசுருல் இசுலாமும் (Kazi Nazrul Islam) ஒருவர். இவர் 'புரட்சிக்கவி', 'மக்கள் கவி' என வங்க மக்களால் சிறப்பித்துப் போற்றப்படுகிறவராவார்.

இன்றுள்ள மேற்குவங்க மாநிலத்தின் பர்துவான் மாவட்டத்திலுள்ள சுருலியா என்ற கிராமத்தில் கி.பி 1899-ஆம் ஆண்டு பிறந்தார். இவருடைய தந்தையின் பெயர், காசிபக்கிரி அகமது; தாயார் பெயர் சகேதா சாத்துன் பக்கிரி.நசுருலின் முன்னோர்கள் முகலாயர்கள் காலத்தில் 'காசி' (Kazi- நீதிபதி) பதவி வகித்தவர்கள் ஆவர். அதிலிருந்து 'காசி' என்பது அவர்தம் குடும்பப் பெயராக நிலைத்துவிட்டது.



நசுருல் இசுலாம், காசி

நசுருல் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவராதலாலும் இளம் வயதிலேயே தந்தையை இழந்தவராதலாலும் இவர்தம் பள்ளிப் படிப்பைச் சரிவர முடிக்க முடியாமல் போயிற்று. அக்காலத்திய வெள்ளையர்களின் கொடுங்கோன்மையை முறியடிக்க வேண்டும் என்று எண்ணி,ஆயுதப் பயிற்சி பெறுவதற்காக 1917-ஆம் ஆண்டில் இந்திய இராணுவத்தில் சேர்ந்தார். அதில் இவர் இரண்டாண்டுகளுக்குள்ளேயே ஐந்து பதவி உயர்வுகள் பெற்றார். பின்னர், 1920-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் நசுருல் இருந்து வந்த 49-ஆம் எண்ணுள்ள படைப்பிரிவு கலைக்கப்படவே இவர் இராணுவத்திலிருந்து விடுபட்டார். பின்பு இலக்கியப் பணியிலும் தேசிய விடுதலைப் போராட்டத்திலும் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். இவர் தம்முடைய நாற்பத்து மூன்றாம் வயதில் அதாவது 1942-ஆம் ஆண்டு பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டுப் பின்னர் தம் நினைவையும் பேச்சாற்றலையும் இழந்தார். இலண்டன்,வியன்னா முதலான மேலை நாடுகளிலும் இவருக்கு மருத்துவச்சிகிச்சை அளிக்கப்பட்டது. இருப்பினும் அது பயனளிக்காமல் 1976-ஆம் ஆண்டு காலமானார்.

நசுருல் வெறும் கவிஞர் மட்டும் அல்லர்.புதினம், சிறுகதை, நாடகம் முதலான இலக்கியப் படைப்புகளையும் படைத்துள்ளார்; சிறந்த கட்டுரை ஆசிரியராகவும் மொழி பெயர்ப்பாளராகவும் இதழாசிரியராகவும் திகழ்ந்தார். இவர் சுய நினைவோடு வாழ்ந்த அக்குறுகிய காலத்திற்குள் ஐம்பதிற்கும் மேலான நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். அவற்றுள்

பெரும்பாலானவை கவிதை நூல்கள். 'பித்ரோகி' (Bidrohi – புரட்சிக்காரன்), 'அக்னிவீணா' (Agnibina), 'பிரளய சிகா' (Pralaya sikha) முதலான கவிதைத் தொகுப்புகள் புகழ்பெற்றுள்ளவற்றுள் சில. இவருடைய கவிதைகள் தேசியபற்று மிக்கன; எழுச்சியும் உணர்ச்சியும் கொண்டன; உழவர், தொழிலாளர், மீனவர், மாணவர் முதலான சமூகத்தின் பல்வேறு பிரிவினரையும் பற்றியன. மூன்று புதினங்களும், மூன்று சிறுகதைத் தொகுதிகளும், மூன்று நாடகத் தொகுதிகளும் எழுதியுள்ளார். இவருடைய கதைகள் பெரும்பாலானவை வங்காளத்தின் சமகால அரசியல் பொருளாதார நிலையைச் சித்திரிக்கின்றன. இவருடைய சில கதைகள் திரைப்படமாக்கப்பட்டும் உள்ளன. இவர் ஏறத்தாழ 3,300 இசைப் பாடல்கள் இயற்றித் தாமே அவற்றிற்கு இசையும் அமைத்துள்ளார். இவருடைய இசைப் பாடல்கள் 'நசுருல் கீதி' என்ற பெயரில் வங்க மக்களிடையே பெரிதும் வரவேற்பைப் பெற்று வருகின்றன. அப்பாடல்கள், 'சுதேசிகான்' (பொதுவாழ்வுப் பாடல்கள்), 'பிரேம் கீதி' (காதற் பாடல்கள்), 'பிரகிருதி கீதி' (இயற்கை வருணனைப் பாடல்கள்), 'அத்யாத்ய கீதி' (ஆன்மிகப் பாடல்கள்), 'கௌதுக் கீதி' (கதம்பவகைப்பாடல்கள்)எனபபட்டு,வைணவம், இசுலாமியம் ஆகிய சமயக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டவை என்பது குறிப்பிடத் தக்கதாம். இவர் எழுதிய கட்டுரைத் தொகுதிகள், இந்திய விடுதலை வேட்கை, அரசியல்-பொருளாதார மேம்பாடு, மகளிர் நலம், சாதிசமய வேறுபாடு தவிர்த்தல், தேசிய கல்வி முதலான உட்பொருள்களைத் தாங்கி நிற்கின்றன. நசுருல் மொழிபெயர்ப்புக் கலையிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். இவர் உமர் கயாம் பாடல்களையும் ஆபிசின் காதற்பாடல்களுள் (Gajal) எழுபத்து மூன்றினையும், குர்ரானின் ஒரு பகுதியையும் வங்க மொழியில் நேரடியாக மொழி பெயர்த்துள்ளார். இவருடைய படைப்புகள் பல அக்கால இதழ்களான 'முசுலீம் பாரத்', 'பிசலி', 'கல்லோல்' முதலான வங்கமொழி இதழ்களில் வெளிவந்தனவாகும். தவிரவும் தாமே முன்னின்று வங்க மொழியில் பல இதழ்கள் வெளியிட்டு அவற்றின் மூலம் மக்களிடத்தில் விழிப்புணர்ச்சியைத் தூண்டினார். அவற்றுள் 'நவயுகம்', 'தூமகேது', 'இலாங்கல்' முதலானவை குறிப்பிடத் தகுந்தவை. குழந்தைகளுக்காக இவர் சில கவிதைத் தொகுதிகளும், வேடிக்கை நாடகங்களும் எழுதியுள்ளார்.

நசுருல் மிகச் சிறந்த பண்பாளர்; பிறர்க்கு உதவும் மனப்பான்மையராய் வாழ்ந்தார்; பகைவனுக்கும் அருளும் மாண்பினர். இந்தியத் தேசிய விடுதலைப் பேராட்டத்தில் இவருடைய பங்கு மிகப் பெரியது. காந்தியின் தன்னலமற்ற தியாகத்தையும் நாட்டுப்பற்றையும் மதித்துப் போற்றினாரே தவிர அவருடைய மிதவாத அரசியற் கொள்கை இவருக்குப் பிடிக்கவில்லை. 'நூலிலிருந்து துணி கிடைக்கும். நாட்டிற்கு விடுதலை கிடைக்காது' என்று காந்தியின் கதரியக்கத்தை ஏளனம் செய்தார். தீவிரவாதியான திலகரின் அணியில் இருந்து தொண்டாற்றிய இவர் ஆயுதப் புரட்சியால் மட்டுமே நாடுவிடுதலை அடைய முடியும் என்று நம்பினார். இவர் மக்களிடையே தேசிய எழுச்சிபெற எழுதி வெளியிட்ட 'அக்னிவீணா' என்ற கவிதை நூலிற்காக ஓராண்டுக் கடுங்காவல் தண்டனையும், 'பிரளய சிகா' என்ற கவிதை நூலிற்காக ஆறு மாதக் கடுங்காவல் தண்டனையும் பெற்றார். இவருடைய பல இலக்கியப் படைப்புகள் ஆங்கிலேய அரசால் பறிமுதல் செய்யப்பட்டன. இவர் குறிப்பாக இந்து-முகமதியர்களிடையே ஒற்றுமையை வளர்க்கவேண்டித் தாமே பிரமிளா என்ற ஓர் இந்து பெண்ணைப் பல்வேறு எதிர்ப்புகளுக்கிடையில் 1924-ஆம் ஆண்டில் திருமணம் செய்து கொண்டார். இவருக்குப் பொதுவுடைமைக் கொள்கையில் மிகவும் ஈடுபாடு இருந்தது. உலகலாவிய நிலையில் எழுந்த சமூக விடுதலைப் போராட்டங்களும் புரட்சிகளும் இவருடைய கவனத்தை ஈர்த்தன. உலகலாவிய தலைவர்களையும் போற்றினார். தன் இரு புதல்வர்க்கும் சன்யாட்சென், இலெனின் ஆகிய பெயர்களை இட்டு மகிழ்ந்தார். ஏழை எளிய பாட்டாளிகளின் நலவாழ்வில் ஈடுபாடு கொண்டு தொண்டாற்றினார்.

இவருடைய சிறப்பியல்புகளைப் புகழ்ந்து 1954-ஆம் ஆண்டில் கல்கத்தாப் பல்கலைக் கழகம் 'சகத்தாரிணி' என்ற தங்கப் பதக்கமும், 1960-ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கம் 'பதுமபூசணம்' என்ற விருதும், 1969-ஆம் ஆண்டில் இரவீந்திர பாரதிப் பல்கலைக் கழகம் 'மதிப்பியல் டாக்டர்' பட்டமும், 1975-ஆம் ஆண்டில் வங்கதேச அரசு, அந்நாட்டின் மிக உயர்ந்த இலக்கிய விருதான '21-ஆம் நாள் பதக்கமும்' அளித்துச் சிறப்பித்தன. 'சல்சல்சல்' என்று தொடங்கும் இவருடைய பாடல் வங்கதேசத்தின் இராணுவ அணிவகுப்புப் பாடலாக உள்ளது. இவருடைய இலக்கியப் படைப்புகளுள் சில பிற இந்திய மொழிகளிலும் ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. பா.ந.

**துணை நூல்கள்:**

**Chakravarty, B.**, Kazi Nazrul Islam, New Delhi, 1968.

**Chaudhury, S.I.**, Introducing Nazrul Islam, Karachi, 1965.

**நஞ்சன்குடி** இந்தியாவில் கருநாடக மாநிலத்தில் மைசூர் மாவட்டத்தில் உள்ள ஒரு நகரம். நஞ்

சங்கூடு என்றும் இது குறிப்பிடப்படுகிறது. நஞ்சங்குடி வட்டத்தில் கபினி ஆற்றங்கரையில் உள்ள நஞ்சன்குடி, அந்த வட்டத்தின் தலைநகராகத் திகழ்கிறது. இங்கு மிகுதியாக விளையும் பொருள் சோளம். இங்கு கி.பி. 1870-ஆம் ஆண்டு முதல் நகராட்சி மன்றம் செயற்பட்டு வருகிறது. இவ்வூரில் நஞ்சுண்டேசுவரர் என்ற பெயரில் இறைவன் கோயில் கொண்டுள்ளான். இப்பெயரிலிருந்து இவ்வூர் நஞ்சன்குடி என்று கூறப்படலாயிற்று. தெ.பா.

*நஞ்சீயர்*: இவர் மைசூர் திருநாராயணபுரத்தில் ஒரு பங்குனி உத்தர நன்னாளில் தோன்றியவர். மாதவர் என்பது இவரது இயற்பெயராகும். அக்காலத்தில் ஆறு ஆசனம் இட்டுக்கொண்டு 'வேதாந்தி' என்று பண்டித உலகில் புகழ்பெற்றிருந்தார். இவரை வெற்றி கொண்டு வைணவ மதத்தில் பிரசித்த வித்துவானாக ஆக்கவேண்டும் என்று இராமானுசர், கூரத்தாழ்வான் குமாரரான பராசர பட்டரை நியமித்துச் சென்றார். ஒரு பிராமணன் மூலமாகப் பட்டர் பெருமையை வேதாந்தி கேள்விப்பட்டு உள் நடுக்கம் கொண்டிருந்தார். பட்டர் தருக்கம், மீமாம்சை முதலான எல்லாச் சாத்திரங்களிலும் வல்லவர். முக்கியமாக, திருநெடுந்தாண்டக சாத்திரத்தில் மிக வல்லவர்' என்பதைக் கேள்விப்பட்ட வேதாந்தி 'திருநெடுந் தாண்டகம் என்னும் சொல்லுக்குப் பொருளே விளங்கவில்லையே, அவர் எப்படிப்பட்ட வித்துவானோ' என்று வியந்து கொண்டிருந்தார். பட்டர் நம் பெருமாள் நியமனம் கொண்டு திருநாராயணபுரம் சென்று வேதாந்தியின் இருப்பிடத்தை அடைந்தார். அங்கு ஒரு மண்டபத்தில் மதிப்போடு வீற்றிருந்த வேதாந்தியின் அருகில் சென்ற பட்டரை 'இங்கு ஏன் வந்தீர்?' என்று வேதாந்தி கேட்க, 'உம்மோடு தருக்கம் செய்ய வந்தேன்' என்று பட்டர்கூற, முன்பு அந்தப் பிராம்மணன் சொன்ன சொற்கள் நினைவிற்கு வந்து, 'நீர் பட்டரோ?'என்று வேதாந்தி கேட்க 'ஆம்!' என்று பட்டர் கூற, இருவருக்கும் வாதப்போர் தொடங்கிற்று. ஒன்பது நாள் முடிவில்லாமல் வாதம் சென்ற பின்பு, பத்தாம் நாள் மாயாவாத மதத்தை பட்டர் பலவாறு கண்டித்து, விசிட்டாத்வைத மதக் கொள்கைகளை அசைக்க முடியாதபடி நிலைநாட்டினார்.

அதைக் கேட்ட வேதாந்தி நடுங்கி எழுந்திருந்து 'உம்மை எளிய மனிதராக நினைத்தேன். உறங்கும் பெருமாள் சிரீரங்கநாதர். உலாவும் பெருமாள்நீர்' என்று சொல்லிப் பட்டர் திருவடிகளில் விழுந்தார். பட்டரும் அவரைச் சீடராக ஏற்று எல்லாப் பொருள்களையும் அருளிப் பின் திருவரங்கம் எழுந்தருளினார். சிலகாலம் சென்றபின் துறவறம் பூண்ட வேதாந்தியாக நஞ்சீயரைக் கண்ட பட்டர் 'நம்முடைய சீயர் வந்தார்' என்று வாரியணைத்துக் கொண்டார் அன்று. முதல் 'நஞ்சீயர்' என அழைக்கப்பட்டார். திவ்வியப்பிரபந்தத்தின் பொருள்களைப் பராசர பட்டரிடம் கேட்டறிந்த நஞ்சீயர் திருவாய்மொழிக்கு 'ஒன்பாதினாயிரப்படி' என்ற விரிவுரை அருளினார். இவர் சீடரே நம்பிள்ளை என்னும் மகாசாரியர். எஸ்.தி.

*நஞ்சு நூல்*: இது ஒரு தொகுப்பு நூல். தேரையர், அகத்தியர், போகர், கருவூர்த் தேவர், புலிப்பாணி போன்ற சித்தர்கள் எழுதிய நூல்களிலிருந்தும் நாகாரூடம், விடசங்கார ஆரூடம், சித்ராரூடம், சர்ப்பாரூடம், சிவாரூடம், கருடாரூடம், வாகடசந்திரோதயம் போன்ற நூல்களிலிருந்தும் செய்திகள் தொகுத்து 'நஞ்சுநூல்' எனப் பெயரிட்டுச் சென்னை இறையாட்சியாளர் ஏற்படுத்திய பாடபுத்தகக் கழகத்தாரால் க.ச. முருகேச முதலியாரால் பார்வையிடப்பெற்று 1933-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

உலகில் வாழும் மக்கள் யாவரும் இன்புற்று வாழ அன்பே உருவாய் அவ்வப்பொழுது தோன்றிய சித்தாதி மருத்துவ அறிஞர்கள், மக்கட்குப் பேருதவியாய்த் தோன்றிய பலபொருள்களிலும் உள்ள நற்குண தீக்குணங்களை ஏராளமாக வெடுத்துரைத்துள்ளார்கள். அவற்றை மக்களிற் சிலர் அறியாமலும், சிலர் தெரிந்திருந்தும் உயிர் வாழ்க்கையை வெறுத்துத் தற்கொலை புரிந்து கொள்ளவும், மற்றுஞ் சிலர் தம் பகைஞரைக் கொல்ல விரும்பியும் கொல்ல விரும்பாது துன்புறுத்தும் பொருட்டும், மூடப் பெண்களிற் சிலர் கருவைக் கலைப்பதற்கும், ஆடவரிற் சிலர் மகளிரையும், மகளிரிற் சிலர் ஆடவர்களையும், வேலையாட்களிற் சிலர் தம் தலைவர்களையும் தத்தம் கைவசப்பட்டொழுகுமாறு சில பொருளைத் தனித்தேனும், மற்றப்பொருளோடு சேர்த்தேனும் உணவுப் பொருள்களோடு கலந்தும் பயன்படுத்துகிறார்கள். இச்செயல்களால் உண்டாகுந் தீமைகள் எண்ணிலடங்கா. இக்கொடிய துன்பத்திற்கு இலக்காயுள்ள பொருள்களில் முக்கியமானவற்றின் தீக்குணங்களையும், அவற்றால் விளையுங் கெடுதிகளையும், அக்கெடுதிகளைக் களையும் வழியையுந் திரட்டிக் கூறுகின்றது இந்நூல்.

இந்நூல் தாது வகுப்பு, தாவர வகுப்பு, சீவ வகுப்பு என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. தாது வகுப்பு இரசம், வீரம், பூரம், இலிங்கம், இரசச் செந்தூரம் போன்றவற்றின் பொதுக் குறிக்குணங்களும் தன்மையும் நஞ்சுமுறிவுக்கு வழிவகையும் கூறிச் சித்தர் பாடலுடன் உரை விளக்கமும் தந்துள்ளது.

பயறு வகைகளையும், கிழங்குகள், பழங்கள் முதலியவற்றையும் மக்கள் உணவாக உட்கொள்ளுகின்றனர். அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு என்பது போல இவ்வுணவுப் பொருள்களையும் மிகுதியாக உண்டால் உடலுக்கு ஊறு விளைக்கும். அளவுக்கு மிஞ்சி உண்டால் இப்பொருள்கள் தருகின்ற நோய்களும் அவற்றை நீக்க உட்கொள்ள வேண்டிய முறிவு வகைகளும் தாவர வகுப்பில் கூறப்பட்டுள்ளன.

சீவ வகுப்பில் உயிருள்ள அஃறிணை, உயர்திணை என்னும் இருவகைப் பிராணிகளின் கடியால் உண்டாகும் நஞ்சு பற்றி விளக்கப்பட்டுள்ளது. விடப் பாம்புகளின் வகைகள், மற்றும் நாய்,குரங்கு, பூனை, பூரான், சிலந்திப் பூச்சி போன்றவற்றின் கடிவிடங்களுக்கு மருந்துகள், பத்தியங்கள், விடப்பாம்புகள் தீண்டுங்காலம், கடி அறியும் முறைகள், பாம்புகள் நெருங்காதபடி தடுக்கும் மனைமூலிகைகள் போன்ற பல அரிய செய்திகளும் இந்நூலிற் காணப்படுகின்றன.

எம்.சீ.

**நடத்தைக் கொள்கை:** மனித நடத்தை முறைகளைப் பற்றிப் பல துறைகள் ஆராய்ந்தாலும் உளவியல் துறை பிற துறைகளைக் காட்டிலும் விரிவாக ஆராய்கிறது. இத் துறையில் மனித நடத்தை முறைகளைப் பற்றி விளக்குவதே நடத்தைக் கொள்கை (Behaviourism). இது மிகவும் சிக்கலான ஆய்வுப் பொருள். உளவியலறிஞர்கள் பல கோணங்களிலிருந்து மனித நடத்தையை நோக்குகின்றனர். இக் கோணங்களுக்கேற்பப் பல அணுகுமுறைகள் ஏற்பட்டுள்ளன. அதனால் பல கொள்கைகள் உருவாகியுள்ளன. அவற்றில் அமைப்பியற் கொள்கை (Structuralism), நோக்கக் கொள்கை (Purposivism), நடத்தைக் கொள்கை, உளப்பகுப்புக் கொள்கை, முழுநிலைக் காட்சிக் கொள்கை (Gestal theory) போன்றவை குறிப்பிடத் தக்கனவாகும். அவற்றுள் நடத்தைக் கொள்கையானது 'நடத்தை' என்பதை விளக்கிப் பொருள் காண்பதிலும், நடத்தையைப் பற்றி ஆராய்வதிலும் தனித்து விளங்குகிறது.

உளவியலின் ஆய்வுப் பொருளாக நடத்தை முறை அண்மைக் காலங்களில் மட்டுமே எடுத்துக் கொள்ளப்பட்டது. தொடக்கத்தில் உளவியலானது தத்துவத்தின் ஒரு பகுதியாக இருந்தது. உளவியலில் முறைப்பட்ட வளர்ச்சி கி.பி. 16-ஆம் நூற்றாண்டுக்குப் பின் ஏற்படலாயிற்று. உளவியலின் வளர்ச்சிப் போக்கில் அது எடுத்து விளக்கிய பொருள்களும் மாற்றம் பெற்றன. முதலில் உளவியல் ஆன்மா பற்றிய இயலாகவும், பின்பு உள்ளம், மனம் பற்றிய இயலாகவும், அதன் பின்னர் நனவுநிலை பற்றிய இயலாகவும் நிலவி, இன்று 'நடத்தை'த் தொடர்பான அறிவியலாக வளர்ச்சியடைந்துள்ளது.

நடத்தை என்பது விரிவான பொருள் தரும் சொல்லாகும். பிறரால் கண்டு அறியப்படும் வெளிப்படைச் செயல்களும், சிந்தித்தல், உணர்ச்சி வயப்படுதல், துணிதல் போன்ற உள்ளார்ந்த செயல்களும் மனித நடத்தையில் அடங்கும். நடத்தை என்னும் சொல் சூழ்நிலையால் உந்தப்பட்டு ஓர் உயிரி இயற்றும் செய்கைகள் 'அனைத்தையும் குறிக்கும் என்பர். இதனைத் தூண்டல், துலங்கல் தொடர்பாகவும் விளக்குவது உண்டு.

உளவியல் கொள்கையினரில் நோக்கக் கொள்கையினர், நடத்தையின் காரணம் உயிரிகளிடம் காணப்படும் உயிர் உந்தல் என்பர். நடத்தையின் இயல்பினை, போக்கினை நனவிலி மனம் நிருணயிக்கிறது என்பர் உளப்பகுப்புக் கொள்கையினர். முழுநிலைக் காட்சிக் கொள்கையினர், உளச்செயல்கள் ஒவ்வொன்றும் ஒழுங்காக அமைந்த முழுமைகள், அவற்றை முழுமையாகக் கண்டறிய வேண்டும்; பகுதிகளாகப் பிரித்து அறிதல் கூடாது என்பர். வெளிப்படையான புறச்செயல்களே நடத்தை என்ற சொல்லுக்குரியது என்பர் நடத்தைக் கொள்கையினர். இவ்வாறு உளவியல் அறிஞர்கள், நடத்தை என்பது எது பற்றியது அல்லது எதைப் பற்றியதாக இருத்தல் வேண்டும் என்ற அடிப்படையில் வேறுபட்டு, அவரவரின் கருத்துகளைக் கொள்கைகளாகத் தந்துள்ளனர். அவர்கள் கொள்கைகளுள் ஒவ்வொன்றும் நடத்தையின் உள்ளடக்கம் என்ன, நடத்தைக்குப் பின்னணி என்ன, நடத்தையை எவ்வாறு காண வேண்டும் என்ற போக்கில் தனித்து விளங்குகின்றது; நடத்தையை விளக்குவதில் ஒவ்வொரு கொள்கையின் பங்கும் இருக்கிறது; ஆனால் எத்தனிக் கொள்கையும் நடத்தையை முழுமையாகத் தந்துவிடவில்லை. எனவே, உளவியல் தொடர்பானவற்றில் சமரசக் கருத்தைப் பெரும்பாலோர் கொண்டுள்ளனர்.

நடத்தைக் கொள்கையானது, நடத்தை என்ற சொல்லுக்குரிய பொருள் எது என்பதையும், எது அன்று என்பதையும் குறிப்பிடுகிறது. அதன்படி உளவியலானது மனிதனின் வெளிப்படை நடத்தைகளைப் பற்றியதாகும். மேலும், மனம், நனவுநிலை போன்ற கருத்துகள் இதற்கு உடன்பாடில்லை. உற்று நோக்கலிலும் சோதனை முறையிலும் இதற்குப் பங்கு உண்டு. நடத்தையை அறிவதில் அகநோக்கு முறை பயன்படாது என்பதும் இக் கொள்கையினரின் கருத்தாகும். சுருங்கக் கூறினால் 'மனித உடல் ஒன்றே' இவர்கள் ஏற்றுக் கொள்ளக்கூடிய உண்மைப் பொருளாக அமைகிறது.

சான் வாட்சன் என்ற அமெரிக்க உளவியலறிஞர் நடத்தைக் கொள்கையைத் தோற்றுவித்தார். புறத்தேயிருந்து ஆராயத்தக்க மனித நடத்தை மட்டுமே

இவருக்கு உடன்பாடு. உடலினுள் நிகழும் நுணுக்கமான செயலைக்கூடப்புற நடத்தையாக இவர் விளக்குவார். உடற்பகுதியினது இயக்கங்களின் விளைவே உள்ளத்தில் செயல்களெனப்படுகின்றது. என்பார். எடுத்துக்காட்டாக, சிந்தனை என்பது குரல் நாண்களின் நுட்பமான துடிப்பின் விளைவு என்பதாகக் குறிப்பிடுகிறார். இவரும் இக் கொள்கையினரும் மனித நடத்தையை, இயக்க நடத்தை, குரல் நாண்களின் அசைவுகள், உள்ளுறுப்புகளின் இயக்கத்தினின்றும் எழும் நடத்தைகள் என மூவகைப்படுத்துவர். மேலும்,நடத்தையின் அடிப்படை மறிவினைபோன்ற இயற்கையாக அமைந்த தூண்டல், துலங்கல் தொடர்புகளாகும்; வளர்ச்சி பெற்ற மனிதனிடம் காணப்படும் நடத்தைக் கோலங்களுக்குக் காரணம் இயற்கைத் தூண்டல்கள் ஆக்க நிலையுறுத்தப்படுதலாகும் என்பது இக் கொள்கையார் விளக்கும கும். இக்கொள்கையினரால் ஆய்வில் புறவய முறைகளும், பரிசோதனை முறைகளும் சிறப்பிடம் பெற்றுள்ளன. நடத்தைக் கொள்கையினர் விலங்குகளின் நடத்தை பற்றியும் அரிய சோதனைகளை நடத்தி விளக்கம் தந்துள்ளனர்.

இருபதாம் நூற்றாண்டில் உளவியல் வளர்ச்சியில் நடத்தைக் கொள்கையினருக்குச் சிறப்புப் பங்குண்டு. அமெரிக்க உளவியலறிஞர்களிடம் நடத்தைக் கொள்கையின் தாக்கம் மிகுதியாகும். இக் கொள்கையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள உளவியலறிஞர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஓல்ட்டு, அண்டர், தால்மென், இசுகின்னர் (Skinner) ஆகியோர் ஆவர். இவர்களுள் தால்மென் போன்றோர் மனிதன் கற்றலில் பல உண்மைகளைத் தந்துள்ளனர். இசுகின்னர் செயல்சார் ஆக்கநிலையுறுத்தல் என்ற கருத்தையும் திட்டமிட்டதைக் கற்றல் என்ற தனிக்கற்றல் முறையையும் தந்துள்ளார். வளர்ந்து வரும் உளவியலின் பகுதியான கல்வி உளவியலில் நடத்தைக் கொள்கையினரின் பங்கு சிறப்பிடம் பெற்றுள்ளது. செ.செ.

**நடத்தைக்கோட்பாடு**: உளவியல் நன்கு வரையறுக்கப்பட்ட வழிமுறைகளைக் கொண்டு 20-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்திலிருந்து வளர்ந்து, தத்துவத்தின் ஒரு கிளையாகக் கருதப்பட்டு அறிவியலுக்கு வேண்டிய தனித்தகுதியைப் பெறத்தொடங்கியது. இவ் வளர்ச்சிக்குப் பல கோட்பாடுகள் காரணமாக இருந்தன. அவற்றுள் நடத்தைக் கோட்பாடும் (Behaviour Theory) ஒன்றாகும்.

அகவய நோக்குக் கோட்பாட்டு(School of Introspection) மரபிற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் நோக்கத்துடன் நடத்தைக் கோட்பாடு அமெரிக்க நாட்டைச் சேர்ந்த வாட்சன் (Watson) என்பவரால் முதலில் தோற்றுவிக்கப்பட்டது. இவர், மனிதனின் அல்லது குழந்தையின் அல்லது விலங்கின் நடத்தையைப் படிப்பதன் மூலம்தான் உளவியலை அறிவியலின் எல்லைக்குள் கொணரமுடியும் என்று முன்மொழிந்தார். இருந்தாலும் வாட்சனுக்கு முன்பே மக்டுகல் (McDougall) போன்ற சில உளவியல் வல்லுநர்கள் உள்ளத்தைப் பற்றிப் படிக்க நடத்தையைக் கொண்டு அறியவேண்டும் மென்று கூறியுள்ளனர். ஆனால் இவ்வுளவியல் வல்லுநர்களுக்கும் வாட்சனுக்கும் உள்ள அடிப்படை வேறுபாடாவது, மக்டுகல் முதலியோர் அகவயநோக்கிற்கு முதன்மை கொடுத்ததாகும்.

தார்ண்டைக்கு என்ற இன்னொரு அமெரிக்க வல்லுநர், விலங்கின் நடத்தையைச் சோதனைசெய்து விலங்கு எங்ஙனம் இயல்பான மற்றும் இயற்கையான ஆற்றலுடன் (Instinctive Capacity) கற்கிறது என்பதைக் காட்டினார். அவர் கோழிக்குஞ்சு, பூனை, குரங்கு முதலியவை மீது சோதனைகளை நடத்திவிலங்குகள் 'முயற்சி மற்றும் பிழை' (Trial and Error) மூலம் கற்பதாகக் கருத்துத் தெரிவித்தார். அதாவது வினா ஒன்றிற்குத் தகுந்தவிடைகிடைக்க, தவறானஇயக்கங்களைத் தவிர்த்துச்சரியான இயக்கங்களை வலுப்படுத்திச்செயற்படுவது என்பதாகும். ஆனால் இது எவ்வாறு நடககிறது என்பதை அவரால் சரிவர விளக்க இயலவில்லை. ஏனெனில் அகவயநோக்கு முறையை விலங்குகளிடம் பயன்படுத்த முடியாது. இருந்தாலும் தார்ண்டைக்கு கற்கும் முறை இரு விதிகளை (Laws) உள்ளடக்கியதாக இருக்கவேண்டுமெனக் கருதினார், அவ்விரண்டு விதிகளாவன: 1) பயிற்சி விதி (Law of Exercise), 2) விளைவுவிதி(Law of Effect)எவ்வளவு மிகுதியாகக் கற்கிறோமோ அவ்வளவு மிகுதியாக வெற்றி அடைகிறோம். எவ்வளவு மிகுதியாக வெற்றி காண்கிறோமோ அவ்வளவு மிகுதியாக உளநிறைவு அடைகிறோம் என்று சுருக்கமாகத் தார்ண்டைக்குத் தமது கருத்தினைத் தெரிவித்தார். தார்ண்டைக்கின் இக்கருத்தினை எதிர்ப்புறமாக எண்ணிப் பார்த்தாலும் அதுவும் உண்மையாக இருக்கலாம்.

கல்வி உளவியலைப் (Educational Psychology) படிக்கும் போது தார்ண்டைக்கு இதேமுறையைப் பயன்படுத்தி (அதாவது விலங்கைப் பற்றிப் படிக்கும் முறை) குழந்தையின் நடத்தையை அறிய முயன்றார். பின்னர், படிப்படியாகத் தொடர்ந்து பல சோதனைகளை நடத்தி மனிதனின் இயல்பை அறிய வேண்டுமாயின் அவனது நடத்தையை நன்கு கவனத்துடன் படிக்க வேண்டும் என்று கூறினார்.

வாட்சன், தார்ண்டைக்கின்நோக்கைத்தொடர்ந்து நடத்தைக் கோட்பாட்டிற்காக உறுதியுடன் வாதாடி

னார். விலங்கு உளவியல் வல்லுநர்களுக்கு ஏற்றவாறு வாட்சன் அகவயநோக்கு முறையை உளவியல் சோதனைகளிலிருந்து நீக்கி, உளவியல் சோதனைகள் புறநிலைமெய்மை (Objective) சார்ந்தவாறு இருத்தல்வேண்டும் என்றுமுயற்சிசெய்தார். தார்ண்டைக்கு போன்ற விலங்கு உளவியல் வல்லுநர்கள் சோதனைகளை நடத்தியது போன்று வாட்சனும்பல சோதனைகளை நடத்தி, நடத்தைக் கோட்பாட்டின் ஏற்புடைமையை (Validity)வலுப்படுத்தினார்.

நடத்தைக் கோட்பாடு மூன்று சிறப்புக் கூறுகளைக் கொண்டது. 1) கட்டுப்பாட்டு மறிவினைகள் (Conditioned Reflexes) நடத்தைக்கு அடித்தளமாக அமைவது; 2) நடத்தை என்பது கற்றலினால் ஏற்பட்ட ஒன்று- கல்லாமையால் அன்று என்பது; 3) விலங்கின் நடத்தைக்கு முதன்மை அளிப்பது ஆகும்.

நடத்தைக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு சில வல்லுநர்கள் நடத்தையை நல்லபடி திருத்தியமைப்பது எங்ஙனம் என்று ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தனர். இவ் வல்லுநர்கள்,உளநரம்புப் பிணியாளர்களிடமோ (Psychoneurotic Patients) உள நோயாளிகளிடமோ (Psychotic Patients) காணப்படும் பிறழ்வு நடத்தைப் பிணியைக் குறிக்க வில்லை; மாறாக அப்பிறழ்வுபொருத்தமின்மையைக்(Mal adjustment) காட்டுகிறது. இப்பொருத்தமின்மை தவறான கற்றலினால் ஏற்பட்ட ஒன்று. எனவே, அக் கற்றலின் விதியைக் கொண்டேஅவர்களின்நடத்தையைத் திருத்தியமைக்கலாம் என்று கூறுகின்றனர். இதற்கு நடத்தைத் திருத்தம் (Behaviour Modification) என்பது பெயர். வ.தே.சா.

**துணை நூல்:**

Seargent,W. E., Psychology, Teach Yourself Series 1944.

**நடத்தை மாற்றும் அறுவை மருத்துவம்,** கடுமையான மன நோய்க்கும் வலிப்பு நோய் போன்ற மூளை நோய்களுக்கும் செய்யப்படும் ஒருவகை மூளை அறுவை மருத்துவமாகும். ஏனைய வகை உளப்பிணி மருத்துவ முறைகள் போன்றே இந்த அறுவை மருத்துவமும் குறிப்பிட்ட காரண காரியத்தைச் சார்ந்துள்ளது. 'சில நோயாளிகளின் நோயுற்ற மூளையில் சில முரண்பாடான கருத்துகள் சுற்றிச் சுற்றிச் சுழன்று வந்து மன நோய்கள் ஏற்படுகின்றன என்று ஈகாசு மோனிசு என்ற போர்ச்சுக்கீசிய நரம்பியல் அறிஞர் கூறியுள்ளார். உளப் பிணியாளர்களிடையே இந்த எதிர் விளைவுச் சுழற்சியை நிறுத்த, மோனிசு அறுவை சிகிச்சை மூலம் மூளையில் ஏனைய பகுதியிலிருந்து, முன்பகுதியின் தொடர்பைத் துண்டித்தார். சில நோயாளிகளின் நோய்க்கடுமையை இந்த அறுவை மருத்துவம் தணித்தது.

மோனிசு 1930-ஆம் ஆண்டில் மூளை அறுவை செய்யத் தொடங்கியதிலிருந்து பெருமளவு உளப்பிணி அறுவை முறை மிகவும் மேம்படுத்தப்பட்டது. இன்றைய தொழில் நுட்பம், மிகவும் தெளிவாகவும் நுட்பமானதாகவும் மிகக் குறைந்த மூளைப் பரப்பையே பாதிப்பதாகவும் அமைந்துள்ளது.

மருந்துகளும் பிறவகை உளப்பிணி மருத்துவங்களும் பயனளிக்காத சில செய்திகளில் 'நடத்தை மாற்றும் அறுவை சிகிச்சை' பயனளித்துள்ளது. குறிப்பாக வலிப்பு நோயாளிகளின் செய்தியில் மிகுந்த பயன் தந்துள்ளது. வலிப்பு நோயாளிகளுக்கு அறுவை மருத்துவர்கள், மூளையின் இரண்டு பக்கங்களையும் இணைக்கும் தசைநார்களின் தொகுதியைத் (கார்பசு கொலோசம்) துண்டித்து விடுகின்றனர். இந்த மூளையை இருகூறுகளாகப் பிரிக்கும் அறுவைச் சிகிச்சையினால் நோயின் எதிர்பாராதத் தாக்குதல் குறிப்பிடத் தக்க அளவிற்குக் குறைகிறது; நோயாளியும் இயல்பாகச் செயற்பட முடிகிறது. இருப்பினும் இதனால் சில மாற்று விளைவுகளும் ஏற்படுகின்றன. இதில் நடத்தை மாற்றும் மூளை அறுவை, உளப் பிணியாளர்களின் நோய் தீர்த்து இயல்பானவர்களாக ஆக்குவதற்குப் பதிலாக, அவர்கள் தோற்றத்தில் இயல்பாகத் தோன்றியபோதிலும் (அதாவது எல்லோரைப் போல் நடப்பார்கள், பேசுவார்கள்) பேரவா, செயல்திறம் அல்லது நுண்திறம், கற்பனை ஆற்றல், தன் உணர்வு முதலிய உணர்வுகளின்றி உணர்வு மற்றும் அறிவாற்றலற்ற வாழ்வுவாழச்செய்கிறது. ஆகையால் மூளையின் சிறிய பகுதியையும் அழிக்கும் வகையில் கையாளுதல் கூடாது என்றும், கற்றறிதல், தனிப்பண்பு, ஆக்கத்திறன், மன எழுச்சி, எண்ணம் முதலானவற்றால் மூளையின் பங்கு மிக இன்றியமையாதது என்பதால் அதைச் சிதைத்தல் சிறிதளவே ஆயினும் ஆபத்தானது என்றும் மூளை அறுவை பற்றிய ஆய்வாளர்கள் எடுத்துக் கூறுகின்றனர். மூளைத் திசுவின் ஒரு பகுதி ஒரு முறை சிதைக்கப் பட்டால் அது தானாகவே ஈடு செய்து கொள்வதில்லை.

நடத்தை மாற்றும் மூளை அறுவை மருத்துவம் செய்துகொண்டவர்கள் பலர் நிலையான பின் விளைவுகளால் வருந்தவில்லை என்றும், அறுவை மருத்துவம் செய்யப்பட்டாலன்றி இயக்கம் பெரிதும் பழுதடையத்தக்க பிணியாளர்களுக்கு மட்டுமே மூளை அறுவை மருத்துவம் செய்யப்படுகிறது என்றும் இவ்வறுவை மருத்துவத்தின் ஆதரவாளர்கள் எடுத்துக் கூறுகின்றனர். நடத்தை மாற்றும் மூளை அறுவை, எச்சரிக்கையுடன் அணுகவேண்டிய மருத்

துவ: முறையாகும். நடத்தை மாற்றும் மூளை அறுவை இன்னமும் 'விளைவை முன்னதாக அறிந்து தெரிவிக்க முடியாததும், பேரிழப்பை ஏற்படுத்தக் கூடியதுமான சோதனை நிலையில் உள்ள நடைமுறையாகும்' என்று ஓர் ஆய்வாளர் கூறியுள்ளார்.

வே.ந.

**நடப்புக் கணக்கு:** வங்கியில், வாடிக்கையாளர் வைத்துக்கொள்ளக்கூடிய கணக்கு வகைகளுள் நடப்புக் கணக்கு (Current Account) என்பதும் ஒன்றாகும். நடப்புக் கணக்கில் பணத்தைக் கட்டுவதிலும், அதிலிருந்து வேண்டும்போது பணத்தை எடுத்துக்கொள்வதிலும் எவ்விதக் கட்டுப்பாடும் இராது. வாடிக்கையாளர் மட்டுமன்றி மற்றவர்கள்கூட நடப்புககணக்கில் எந்த ஒரு வாடிக்கையாளர் பெயரிலும் பணத்தைக் கட்டலாம். ஒரு நடப்புக் கணக்கில் பணத்தை மட்டுமன்றி மற்றவர்களிடமிருந்து பெறும் காசோலைகளையும் வசூலித்துக் கணக்கில் சேர்க்கும்படி செலுத்தலாம். ஆனால், நடப்புக் கணக்கில் இருக்கும் பணத்தை அந்தக் கணக்கை வைத்திருக்கும் வாடிக்கையாளர் மட்டுமே காசோலையின் மூலம் தாமோ, தம் ஆணையைப் பெற்றவரோ பெறும்படி செய்யமுடியும். வாடிக்கையாளர்களின் நடப்புக் கணக்குகளை வைத்திருத்தல் வங்கியருக்கு மட்டுமே உரிய சிறப்புப் பணியாகும். எனவேதான் "கேட்கும் போது திருப்பியளிக்கவேண்டிய வைப்புகளைப்பெற்று அதன்மேல் காசோலைகளை வரைந்து பணத்தைத் திரும்பப் பெறும் உரிமையை அளிப்பதையே வங்கியின் பணி எனலாம்' என வங்கிகளின் பணிகளுக்கு இலக்கணம் அமைக்கும்வகையில் நடப்புக் கணக்குகள் சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றன.

வாடிக்கையாளர்களுக்கு நடப்புக் கணக்கு வைத்திருப்பது பல வகையிலும் வசதியாக இருக்கும். வங்கியில் நடப்புக்கணக்கு வைத்திருப்பவர்கள் மிகுதியாகப் பணத்தை வீட்டில் பணமாக வைத்திருக்கும் இடரினைத் தவிர்க்கிறார்கள். பணம் பாதுகாப்பாக வங்கியில் இருக்கும். வேண்டும்போது வேண்டும் நேரத்தில் காசோலை மூலம் வங்கியிலிருந்து பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம். பெரும் தொகையைச் செலவழிக்க நேரிடும்போது பணத்தை எண்ணிக்கொண்டிராமல் ஒரே காசோலையில் முழுத் தொகையையும் எழுதிச் செலுத்திவிடலாம். ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பணத்தைச் சுமந்துசெல்ல வேண்டியதில்லை. காசோலைப் புத்தகத்தை எடுத்துச் சென்றால் பணத்தைக் காசோலை மூலம் செலுத்தி விட்டு வந்துவிடலாம். நடப்புக் கணக்கு, பணப்புழக்கத்தை எளிமையாக்குகிறது

பொதுவான வாடிக்கையாளர்களைவிட வணிகர்களுக்கு நடப்புக் கணக்கு இன்றியமையாததாகும். செலவுகளைப்பணத்தின்மூலம் செய்வதைக்காசோலைகளை எழுதியளிப்பதின் மூலம் செய்வது பாதுகாப்பாகவும் எளிமையாகவும் இருக்கிறது. எந்த ஒரு குறிப்பிட்ட தொகைக்கும் விரைவில் காசோலை எழுதி அளித்துவிடலாம். ஒரு குறிப்பிட்ட பெயரில் காசோலை எழுதி அதைக் கீறல் (Crossing) செய்துவிட்டால் அதை அவர் மட்டுமே தம் வங்கிக் கணக்கில் வரவாக வைத்துக்கொள்ள முடியும். இதன் மூலம் மோசடிகள் தவிர்க்கப்படுகின்றன. காசோலைகள் மூலம் பணம் செலவு செய்வதால் அவை செல்லுப் புத்தகத்தில் (Pass Book) பதிவாகி, பிறகு அவை கணக்குடன் ஒப்பிட்டுப் பார்க்க உதவுகின்றன. மேலும், வணிகர்களுக்கு வருவாய், காசோலை மூலமே பெரும்பாலும் கிடைக்கிறது. வங்கியில் நடப்புக் கணக்கில்லையெனில் அவற்றை வசூலிக்க இயலாது. சேமிப்புக் கணக்குகளுக்கும்கூடக்காசோலைகளை வசூலித்துத் தரும் வசதியை வங்கிகள் தருகின்றன. என்றாலும் நடப்புக் கணக்குகளுக்குத் தரப்பட்டிருந்த உரிமைதான் பிறகு சேமிப்புக் கணக்குகளுக்கு விரிவுபடுத்தப்பட்டிருப்பதாகக் கொள்ள வேண்டும். நடப்புக் கணக்கிற்கு வங்கியர் அளித்திருக்கும் சிறப்புரிமை, இக்கணக்கில் மட்டும்தான் வாடிக்கையாளர் 'மேல்வரைப்பற்று' முறையில் (Over Draft System) கடன்வசதி பெறலாம். இந்த முறையில் ஒரு வாடிக்கையாளர் தான் கணக்கில் வைத்துள்ள தொகையை மிஞ்சும் அளவிற்குக் காசோலை வரையும் உரிமையை வேண்டிப் பெறுகிறார். எடுத்துக்காட்டாக உரூ.500 கணக்கில் வைத்திருப்பவர் வங்கியில் முன் அனுமதியுடன் உரூ.2000-க்குக் காசோலை வரையலாம். இந்த அதிகப் பற்றான உரூ.1500 கடனாகக் கருதப்பட்டு வட்டியுடன் திருப்பிச் செலுத்தப்படவேண்டும். இத்தகைய வசதி நடப்புக் கணக்கு வைத்திருப்பவருக்கு மட்டுமே உண்டு.

எனவே, பணத்தைக் கையில் வைத்திருந்து செலவு செய்வதைவிட அதை ஒரு வங்கியின் நடப்புக்கணக்கில் வைத்துக் காசோலைகள் மூலம் செலவழிப்பது அதிகப் பணத்தைப் புழங்க வேண்டியிருக்கும் நிறுவனங்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும். வணிக நிறுவனங்களல்லாமல் கல்வி நிறுவனங்கள், அறநிலையங்கள், நகராட்சிகள் முதலியன வங்கியில் வைத்துள்ள நடப்புக் கணக்குகள் மூலமே தங்கள் பண நடவடிக்கைகளைக் கையாளுகின்றன மத்திய, மாநில அரசாங்கங்கள் தங்களின் வங்கியான மைய வங்கி அல்லது பாரத மாநில வங்கி ஆகியவற்றில் நடப்புக் கணக்குகளை வைத்துள்ளன. இதைத்தவிரப் பெரிய தொழிலதிபர்கள், நிலஉரிமையாளர்கள்

முதலானோரும் தங்கள் பெயரில் தனிப்பட்ட நடப்புக் கணக்கு ஒன்றை வங்கியில் திறந்து பயனடைவதுண்டு.

நடப்புக் கணக்கிலுள்ள பணத்தை வாடிக்கையாளர் கேட்டவுடன் திருப்பித் தரவேண்டிய கடமை வங்கியருக்கு இருக்கிறது. எனவே, இக்கணக்கிலுள்ள பணத்தை வங்கி எந்தநேரத்திலும் பணமாகவே வைத்திருக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. எனவே, நடப்புக் கணக்கிலுள்ள பணத்திற்கு வங்கிகள் வட்டி ஏதும் தருவதில்லை. மைய வங்கியும், வங்கிகள் நடப்பு வைப்புகளின் (Dcmand Liabilities) மீது வட்டி வழங்கக்கூடாது என விதித்துள்ளது. இதனால் நடப்புக் கணக்கு என்பது பயன்கருதித் திறக்கப்படும் கணக்கல்லாது சேமிப்புக்காக வைக்கப்படும் கணக்காகக் கருதப்படுவதில்லை.

**புதிய நடப்புக் கணக்கைத் தொடங்குதல்:** வங்கியில் நடப்புக்கணக்கைத் தொடங்க விரும்பும் மனிதர் முதலில் வங்கியொன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தம் பண நடவடிக்கைகள் யாவும் வங்கியின்மூலமே நடத்த இருப்பதால் அத்தகைய வங்கி தம் முழு நம்பிக்கையையும் பெற்றதாக இருத்தல் வேண்டும் என விரும்புவது இயல்பேயாகும். ஆயினும், பெரும்பான்மையான வங்கிகள் நாட்டுடைமையாக்கப்பட்டு விட்டன. மேலும், வங்கியிலுள்ள வைப்புகள் ஒரு குறிப்பிட்ட தொகையைத் திரும்பப் பெறும் அளவிற்குக் காப்பீடு செய்யப்பட்டுள்ளன. எனவே, ஒரு வாடிக்கையாளர் வங்கிகள் ஒழுங்குமுறைச் சட்டத்தின் (Banking Regulations Act) கீழ் வங்கி என ஏற்றுக்கொள்ளப்படும் எந்த வங்கியிலும் தமது நடப்புக் கணக்கைத் திறக்கலாம்.

வங்கியின் கிளை, தமது அலுவலகத்திற்கு அல்லது இல்லத்திற்கு அருகிலிருந்தால் வாடிக்கையாளருக்கு வசதியாக இருக்கும். வணிக நிறுவனங்கள் கடன் மேல்வரைப்பற்று தர ஒப்புதல் அளிக்கும் வங்கியில் தங்களது நடப்புக் கணக்கைத் திறக்க விரும்புகின்றன. அதிகக் கிளைகளுள்ள பெரிய வங்கியில் நடப்புக் கணக்கைத் திறப்பதன்மூலம் காசோலைகளை எங்கிருந்து பெற்றாலும் விரைவில் வங்கி மூலம் வசூலித்துக்கொள்ள முடியும். வணிகர் தங்கள் வாடிக்கையாளர் அதிகமாக உள்ளஇடங்களில் கிளைகளை உடைய வங்கியைத் தேர்ந்தெடுத்து நடப்புக் கணக்கைத் திறப்பார்கள்.

தாங்கள் நடப்புக்கணக்கைத் திறக்க விரும்பும் வங்கிக் கிளையைத் தேர்வு செய்தபின் வாடிக்கையாளர் கிளையின் மேலாளரை அணுகவேண்டும். வங்கி, நடப்புக்கணக்கு ஒன்றைத் தொடங்குவதற்குமுன் சில நடவடிக்கைகளை மேற்கொள்ளும். முதலாவதாக வாடிக்கையாளரைப் பற்றியும் அவரது வணிகத் தன்மை, நிதி நிலைமை, கடன்மேல் வரைப்பற்று பெறக்கூடிய தகுதி முதலியவற்றை முன்கூட்டியே மேலாளர் விசாரிப்பார். இரண்டாவதாகப் புதிதாகக் கணக்குத் திறப்பவர் வங்கிக்கு நன்றாகத் தெரிந்த மனிதர் ஒருவரின் அறிமுகக் கடிதம் (Letter of Introduction) ஒன்றை வங்கிக்குப் பெற்றுத் தருதல் வேண்டும். குறிப்பாக அதே வங்கியில் ஏற்கெனவே கணக்கு வைத்திருக்கும் ஒருவரிடமிருந்து அறிமுகக் கடிதம் பெற்றுத் தருதல் வேண்டும். பெரும்பாலும் அறிமுகம் செய்பவரின் பெயர், முகவரி, அவரது வங்கியிலுள்ள கணக்கு எண், அவர் யாருக்காக அறிமுகம் செய்ய விரும்புகிறார் முதலிய விவரங்கள் அடங்கிய அச்சிட்ட அட்டையை வங்கியின் மேலாளர் புதிய வாடிக்கையாளருக்கு அளித்து அறிமுகம் செய்ய விரும்புபவரின் கையொப்பத்தைப் பெற்றுவரச் சொல்லுவார்.

கிளையின் மேலாளர் புதிதாகக் கணக்கைத் திறக்க விரும்புபவர் வங்கியின் வாடிக்கையாளராக இருக்கும் தகுதியைப் பெற்றவர்தான் என மனநிறைவு பெற்றபிறகு கணக்கைத் திறப்பதற்குரிய விண்ணப்பத்தாள் ஒன்றை அவருக்கு வழங்குவார். அதில் வாடிக்கையாளராக விரும்பும் மனிதரைக் குறித்த விவரங்கள் குறிக்கப்பட்டு இருப்பதுடன் வங்கியின் விதிமுறைகளுக்குட்பட்டு நடந்துகொள்வதாக உள்ள ஒப்பந்த வாசகமும் இருக்கும். அதில் கையொப்பமிட்டு வாடிக்கையாளர் தருதல் வேண்டும்.

கிளை மேலாளர் அடுத்தபடியாக விண்ணப்பதாரரின் மாதிரிக் கையொப்பத்தை ஒரு குறிப்பிட்ட படிவத்தில் தம் முன் போடச் செய்வார். இரண்டு அல்லது மூன்று முறை மாதிரிக் கையொப்பம் இவ்வாறாகப் பெறப்பட்டு வங்கியரின் ஆவணங்களோடு சேர்க்கப்படுகிறது. வாடிக்கையாளர் விடுத்த காசோலையிலுள்ள கையொப்பம் இந்த மாதிரிக் கையொப்பத்துடன் தேவைப்படின் ஒப்புநோக்கப்படும். வேறுபாடு காணப்பட்டால் வங்கியர் காசோலையைக் 'கையொப்பம் வேறுபடுகிறது' என்று குறிப்புடன் திருப்பி விடுவார்.

கணக்குத் தொடங்கப்படும்போது வாடிக்கையாளர் கணக்கில் குறைந்த அளவு இருக்க வேண்டிய பணத்தையாவது பணமாகச் செலுத்தவேண்டும். நடப்புக் கணக்காக இருப்பின் இந்தக் குறைந்த அளவுத் தொகை உருபாய் நூறு அல்லது இருநூறாக வங்கியைப் பொறுத்து இருக்கும். புதிதாகக் கணக்குத் தொடங்குபவர் எவரும் பணத்திற்குப் பதிலாகக் காசோலையைச் செலுத்திக் கணக்கைத் தொடங்குவதை வங்கியர் அனுமதிப்பது இல்லை.

இவ்வாறு நடப்புக் கணக்கைத் தொடங்கிய மனிதருக்கு வங்கி காசோலைப் புத்தகம் (Cheque

Book), செல்லுப் புத்தகம் (Pass Book), பணம் செலுத்தும் சீட்டு (Paying-in-Slip) ஆகியவற்றைத் தரும். காசோலைச் சீட்டு வங்கியிலுள்ள பணத்தைத் தனக்காகவோ, தனது ஆணையைப் பெற்றவருக்காகவோ எடுக்க உதவுகிறது. செல்லுப் புத்தகத்தில் வங்கியில் அவ்வப்போது போடப்பட்டு வரும் பணம், காசோலை மூலம் எடுக்கப்பட்டபணம், நிலுவையாக அந்தச் சமயத்தில் உள்ள பணம் முதலியவை வங்கியால் பதிவு செய்யப்பட்டு வாடிக்கையாளரிடம் திருப்பித் தரப்பட்டுவிடும். வங்கியில் பணத்தைப் போடும்போது பணம் செலுத்தும்சீட்டை வாடிக்கையாளர் நிறைவுசெய்து பணத்தையோ காசோலையையோ தமது கணக்கில் செலுத்தலாம். இதன்மூலம் நடப்புக் கணக்கை நடத்துவதற்கான வசதி யாவற்றையும் வாடிக்கையாளர் பெறுகிறார்.

ஒரு வாடிக்கையாளர் ஒன்றிற்கு மேற்பட்ட நடப்புக் கணக்குகளைத் தேவையேற்படின் ஒரே கிளையில் வைத்துக் கொள்ளலாம். பெரிய வணிக நிறுவனங்கள் தங்கள் தேவைகளுக்கேற்பப் பல வங்கிகளில் தங்கள் நடப்புக் கணக்குகளை வைத்துக்கொள்ளும்.

நடப்புக் கணக்குகள் வைத்துக்கொள்ளும் வசதியில்லையெனில், வணிக நடவடிக்கைகள் யாவும் பணப் புழக்கத்தின்மூலமே நடைபெற வேண்டிய இக்கட்டான நிலையில் பெரிய நிறுவனங்கள் சிக்கித் தவிக்க நேரும். எனவேதான், நடப்புக் கணக்குகளும் அவற்றின்மூலம் வங்கிகள் வணிக சமூகத்திற்குச் செய்யும் பணிகளும், வங்கிகளின் தலையாய பணிகளாகக் கருதப்படுகின்றன. கோ.கோ.

**துணை நூல்:**

**Tamman M.L.,** Banking Law and Practice, Thacker & Co., Bombay, 1979.

**நடப்பு நாணயம்**: நாட்டின் நடைமுறையில் இருக்கும் பணம் நடப்பு நாணயம் (currency) எனப்படுகிறது. அரசு அச்சடித்து வெளியிடும் உலோக நாணயங்கள் (Metal coins), காகிதப் பணம் (Paper currency), வங்கி வெளியிடும் காசோலை (Cheque), வரைவோலை (Draft), உண்டியல் (Bills)போன்றன நடைமுறையில் நாணயமாகக் கருதப்படுகின்றன. ஆனால், இவற்றுள் எவை நடப்பு நாணயம் என்பது குறித்த கருத்து வேறுபாடுகள் பல உள்ளன. இடையீட்டுக் கருவியாகப் (Medium of Exchange) பயன்படும் எல்லா நாணயங்களும் நடப்பு நாணயமாகும். என்று இர்விங்கு பிசர் (Irving Fisher) கூறுகிறார். மேலும், சரக்கு வாங்குவதற்குப் பயன்படும் சாதனம் நாணயமாகும். அச்சாதனம் பொன்னாகவோ காகிதப் பணமாகவோ உண்டியல்களாகவோ நாணயமாகவோ இருக்கலாம் என்று தாமசு தூக்கி (Tooke) என்பவர் வலியுறுத்துகிறார். வேறு பல அறிஞர்களும் இவ்வாறே கருதுகின்றனர். உண்டியல்களும் நாணயமும் நடப்பு நாணயமல்ல என்று வெளிப்படையாகக் கூறப்படவில்லை, எனவே இடையீட்டுக் கருவியாகப் பயன்படும் உலோக நாணயங்கள், காகிதப்பணம் வங்கித் தாள்கள் (Notes) காசோலை, உண்டியல் முதலிய எல்லாச் சாதனங்களும் நடப்பு நாணயமாகும்.

இந் நாணயங்களின் வெளியீடானது மிகுதியாகவோ குறைவாகவோ இருக்கும். பெரும்பான்மையான நேரங்களில் மிகுதியாக இருந்திருக்கிறது. இவ் விருவகைச் சூழ்நிலைகளிலும், விலைகளும் வணிகச் செயல்களும்கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், இக்காலப் பொருளாதாரத்தில் இதன் அளவினால் (quantity) ஏற்படும் பாதிப்பைக் குறைக்கும் பொருட்டு நாணய அளவானது (quantity of money) அரசுக் கொள்கைகள் அல்லது பொருளாதாரச் சூழல் இவற்றுக்குத் தக்கவாறு வரையறுக்கப்படுகின்றன. நாணயத்தின் அளிப்பில் நெகிழ்ச்சித் தன்மை (elasticity) விரும்பத்தக்கது மட்டுமன்று; தேவையானதுமாகும். எனவே, அந்தந்த நாட்டுப் பொருளாதாரச் சூழலுக்குத் தக்கவாறு நாணய அளிப்பானது வேறுபடுகிறது.

மேலும், நடப்பு நாணயத்தைக்கணக்கீட்டுப் பணம் (Money of Account), நடைமுறைப் பணம் (Common money) என வகைப்படுத்தலாம். கணக்கீட்டுப் பணம் என்பது, ஒவ்வொரு நாட்டிலும் நடைமுறையிலிருக்கும் நாணயத்தைக் குறிப்பிட்டதொரு அலகின் அடிப்படையில் குறிப்பிடுவதாகும். எடுத்துக்காட்டாக, இந்தியாவில் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் மதிப்பு 'உரூபாய்' என்ற அலகினால் குறிப்பிடப்படுகிறது. இவ்வடிப்படை அலகுகள் நாட்டுக்கு நாடு வேறுபடுவதுண்டு. இந்தியா, இலங்கை, பாகிசுத்தான் (Pakistan) பர்மா ஆகிய நாடுகளில் நாணயத்தின் அடிப்படை அலகானது உரூபாய் என்றும், அமெரிக்கா, கனடா (Canada), ஆசுத்திரேலியா (Australia), மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் தாலர்($-Dollar)என்றும், இங்கிலாந்தில் இசுடெர்லிங்கு (£ - Sterling) என்றும், சோவியத்து நாட்டில் உரூபிள்(Ruble) என்றும், பிரான்சில் பிராங்கு (Franc) என்றும், சப்பானில் என்(Yen) என்றும், சுவீடனில் எசு. குரோனர் (S.Croner) என்றும் இவ்வாறு நாட்டுக்கு நாடு நாணயத்தின் பெயர் மாறுபடுகிறது.

நடை முறைப் பணம் பொதுவாகப் பணம் என்று குறிப்பிடப்படுகிறது. இதனை உலோகப் பணம், காகிதப் பணம், வங்கிப் பணம் என மூவகையாகப் பிரிக்கலாம்.

**உலோகப் பணம்:** தங்கம், வெள்ளி, செம்பு, பித்தளை போன்ற உலோகங்களிலான நாணயங்கள் உலோகப் பணம் (Metallic money) ஆகும். இவற்றுள் நாணயத்தின் முகமதிப்பு (Face value) அதன் உள்ளுறை மதிப்பிற்குச் (intrinsic value) சமமாக இருக்கும் பணத்தை நிலையான பணம் (standard money)என்றும், முகமதிப்பு மிகுதியாகவும், உள்ளுறை மதிப்பு குறைவாகவும் உள்ள பணத்தை அடையாளப் பணமென்றும் (Token money) வகைப்படுத்தலாம். இப்பொழுது நடைமுறையில் உள்ள நாணயங்கள், காகிதப்பணம் போன்றன அடையாளப் பணமாகும். இவ்வகைப் பணம் சட்டப்படி செல்லத்தக்கதாகும் (Legal tender).

**காகிதப் பணம்:** தங்கம், வெள்ளி போன்ற விலை யுயர்ந்த உலோகங்களின் அருமைப்பாட்டாலும் நாணயங்களை இட மாற்றுவதில் உள்ள இடையூறு களினாலும் காகிதப் பணம் (Paper money) தோன் றியது. இன்று ஏறக்குறைய எல்லா நாடுகளும் இக் காகிதப் பணத்தை நடைமுறைப்படுத்தியிருக்கின்றன. மேலும், காகிதப் பணத்தின் இனமானது (denomination) நாட்டுக்கு நாடு வேறுபடுவதுமுண்டு; காலத் துக்குக் காலம் மாறுபடுவதுமுண்டு. எடுத்துக் காட்டாக; அமெரிக்காவில் $1, $5, $10, $100 என்ற வகைகளாக உள்ளது.

மேலும், காகிதப் பணத்தை பிரதிப் பணம் (Representative Money), மாற்றுரிமைப் பணம் (Convertible money), மாற்றுரிமை அற்ற பணம் என மூவகைப்படுத்தலாம். இதில் பிரதிப்பணம் என்பது உலோகப் பணத்திற்குப் பதிலாகக் காகிதப் பணத் தைப் பயன்படுத்துவதைக் குறிக்கிறது. இப்பணம் தங்கமாக (அல்லது குறிப்பிட்ட வகை உலோகமாக) மாற்றத் தக்கது. இவ்வகைப் பணம் பொதுவாக நடைமுறையில் இல்லை. மாற்றுரிமைப் பணம் என் பது குறிப்பிட்டதொரு விகிதத்தில் குறிப்பிட்டதொரு உலோகமாக மாற்றுவதற்கு உரிமையுள்ள பணமா கும். மாற்றுரிமை அற்ற பணம் (Inconvertible money) அல்லது கட்டளைப் பணம் (Fiat money) என்பது தங்கமாக அல்லது வேறு உலோகமாக மாற்றுவதற்கு உரிமையற்றது. காகிதப் பணம் இவ்வகையைச்சாரும். இதனைக் காகிதப் பணமாக அல்லது உலோக நாணயங்களாக மட்டுமே மாற்ற முடியும் என்பதால் இதனைக் கட்டளைப் பணம் என்று குறிப்பிடலாம்.

**வங்கிப் பணம்:** வங்கிகளில் உள்ள வைப்புகள் வங்கிப்பணமாகும் (Bank Money). இப்பணம் காசோலை (Cheque) வரைவோலை (draft) போன்ற கருவிகளாக நடைமுறையில் பயன்படுகிறது. இவ்வகைப் பணமே இப்பொழுது மிகுதியான அளவில் நடைமுறையில் இருந்து வருகிறது. ஆனால் இவ் வகைப் பணம் மற்ற இரு வகைகளிலிருந்து வேறுபடு கிறது காரணம் உலோகப் பணமும், காகிதப் பண மும் அரசாங்கத்தின் ஒப்புதலோடு அரசாங்கத்தால் அல்லது மைய இருப்பு வங்கியினால் (Reserve Bank) வெளியிடப்படுவதால் அவை சட்டச் செலாவணி என்று குறிப்பிடப்படுகின்றன. பேரங்களுக்கு எல் லோரும் இதனை மறுக்காமல் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆனால் வங்கிப் பணம் அரசாங்கத்தால் மட்டும் வெளியிடப்படுவதில்லை. வங்கி நோட்டுகள் அல்லது வங்கி நாணயம் தனியாருக்குச் சொந்தமான வணிக வங்கிகள் அல்லது தனியாருக்கோ அரசுக்கோ சொந்தமான மைய வங்கிகளால் வெளியிடப்படுகிறது. எனவே, சட்டபடி இவைகளை ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டாயம் இல்லை.

மேலும் சட்டச் செலாவணியை வரையறைக்குட் பட்ட சட்டச் செலாவணி (Limited legal tender), வரையறைக்குட்படாத சட்டச் செலாவணி (Unlimited legal tender) என இருவகைப்படுத்த லாம். பேரங்களில் குறிப்பிட்டதொரு அளவுவரை பயன்படுத்தலாம் என்றிருக்கும் பணம் வரையறைக் குட்பட்ட பணமாகும். இந்தியாவில் 50 காசு நாண யத்திற்கும் குறைவான மதிப்புள்ள நாணயங்களைச் சட்டப்படி உரு. 10/-மதிப்பு வரை செலாவணிக்கு ஏற்றுக் கொள்ள வேண்டும். ஒருவர் உரு.20/-கொடுக் கும்போது அதனை 40 ஐம்பது காசுகளாகக் கொடுத் தால் பெறுபவர் சட்டப்படி ஏற்றுக் கொள்ள மறுக் கலாம். மேற்கண்டவை தவிர மற்ற வகை நாணயங் களும் காகிதப்பணமும் வரையறையற்ற சட்டச் செலாவணியாகும்.

**அமெரிக்காவில் நாணயம்:** அமெரிக்காவின் நாண யமுறையானது 1930,1940 களில் எடுக்கப்பட்ட நட வடிக்கைகளினால் மிகவும் எளிதாக்கப்பட்டுக் கூட்டு இருப்பு வங்கியால் வெளியிடப்படும் தாள்களே FederalReserve notes) பண இடையீட்டுக் கருவியாக் கப்பட்டது.

**கனடாவில் நாணயம்:** கனடா நாட்டு வங்கி அமைப்புத் தொடங்குவதற்கு முன்னர் 1934-இல் கனடா நாணயமானது உரிமைக் கணக்கு வங்கிகளா லும் (Chartered Banks), கருவூலங்களாலும் (Treasuries) அச்சடிக்கப்பட்டு வந்தது. இந்த வங்கிகள் 25 விழுக்காடு தங்க/பொன் சேமிப்புக்கு எதிராக $120 மிலியன் நாணயத்தாள்கள் வெளியிடவும், அதோடு கனடா நாட்டு அரசால் உத்தரவாதமளிக்கப்பட்ட சிறப்புப்புகைவண்டி கடனுறுதிச் சீட்டுக்கு எதிரான 26 மிலியன் நாணயங்கள் வெளியிடவும் செய்தன. பின்னர் கனடா நாட்டு வங்கிச் சட்டம் 1931-இன்படி




இந்திய உரூபாய்

கருவூலம் நாணயத்தாள்கள் வெளியிடுவதை நிறுத்தியும், உரிமைக் கணக்கு வங்கிகள் தங்களுக்கு வெளியிட இருந்த உரிமையைமெதுவாகக்குறைத்தும்கொண்டன. பின்னர் வணிகச் சட்டம் 1944இன் படி, 1945-இலிருந்து உரிமைக் கணக்கு வங்கிகள் கனடா நாட்டு நடைமுறைக்குத் தாள்களை/நாணயங்களை வெளியிடுவதோ, திரும்ப வெளியிடுவதோ கூடாது என்று நிறுத்தி வைக்கப்பட்டது. தொடர்ந்து 1950-இலிருந்து கனடா ஐக்கிய நாட்டின் தாள்களின் பொறுப்பு முழுவதும் கனடா வங்கிக்கு மாற்றப்பட்டு, கனடா நாணய வெளியீட்டுக்கு முக்கிய வளமாகத் திகழ்கிறது.

**இந்தியாவில் பணத்தின் அளிப்பு:** இந்தியாவில் பண அளிப்பில் இரு சிறப்புக் கூறுகள் உண்டு. 1) பொது மக்களிடம் உள்ள காகிதப் பணமும் நாணயங்களும்; 2) பொது மக்களிடம் உள்ள வங்கிப் பணம் (Depositmoney). இந்தியாவில் உரூ.10,000/-, உரூ. 5000/-, உரூ.1000-/, உரூ,500/-, உரூ.100/-, உரூ.50/-, உரூ. 20/-, உரு 10/-, உரூ.5/-, உரூ,2/-, ஆகிய காகிதப் பணத்தை இந்திய மைய இருப்பு வங்கியும். (Reserve Bank of India), உரூ.1/- காகிதப் பணத்தையும், எல்லாவிதமான நாணயங்களையும் மைய அரசின் நிதி அமைச்சகமும் வெளியிடுகின்றன. உலக நாடுகளில்/நாணயத்தின் அளிப்பானது மக்கள் தொகை வளர்ச்சி, பிற பொருளாதாரக் காரணிகளின் வளர்ச்சி ஆகியவற்றோடு பெருமளவில் அதிகரித்து வருகிறது.

கா.தி.இ.

**துணை நூல்:**

Trescott, paul, B., Money, Banking and Economic Welfare, New York, 1965.

***நடராசன், பா:*** பொருளாதார மேதையும், தமிழறிஞரும், மொழிபெயர்ப்பாளரும், சிறந்த பேச்சாளருமாகிய டாக்டர் பா.நடராசன் உழைப்பால் உயர்ந்தவர். அவர் தமிழ்நாட்டின் தென்பகுதியாகிய கன்னியாகுமரி மாவட்டத்தில் ஆசிராமம் என்னும் ஊரில் திரு. பாலசுப்பிரமணிய பிள்ளை, திருமதி தாயம்மாள் என்பார்க்குப் பிறந்த எண்மருள் முதல் மகனாக கி.பி.1910-ஆம் ஆண்டு பிறந்தார்.

அவர் இளமையில் சுசீந்திரம், நாகர்கோவில் உயர்நிலைப் பள்ளிகளில் கற்றுத் தேறி, நாகர்கோவில் இசுகாட்டுக் கிறித்தவக் கல்லூரியில்(1926-28) இடைநிலை வகுப்புத் தேர்வில்(Intermediate Course) தேறினார். இறுதியாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பொருளாதாரத்தில் மேனிலைப் பட்டக் கல்வி (B.A. Honours) கற்றுத் தேறினார்.

அவர் தேரூரில் வாழ்ந்த தமிழாசிரியர் திரு.சிதம்பரதாணுபிள்ளையின் மூத்த மகளாரை மணக்க, ஓராண்டளவில் அவ்வம்மையார் காலமானார். பின்னர்ச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சி மாணவராகி டி.லிட். (D.Litt.) பட்டம் பெற்றார். (1935). சென்னையில் பெரியார் அவர்கள் தலைமையில் அரிசன வகுப்பைச் சார்ந்த திருமதி செயம்

மாளைத் தம் வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டார்.

தமிழ்நாட்டில் திரு.ஓ.பி.இராமசாமி ரெட்டியார் முதலமைச்சராக இருந்தபோது, அவர் தமிழக அரசின் பொருளாதார அறிவுரையாளராகப் பணியாற்றினார் (1948). இப்பணியை 1953 வரை ஏற்றிருந்தார். பின் ஆந்திர நாட்டில் திரு.பிரகாசம் முதலமைச்சராயிருக்கும்போது (1953-55) பொருளாதார அறிவுரையாளராகவும், இணைச் செயலராகவும், வளர்ச்சித் திட்ட ஆணையராகவும் இருந்தார்.

செருமனி, உருசியா, எகிப்து, சிரியா போன்ற நாடுகளுக்கு அரசுப் பணிக்குழு உறுப்பினராகவும் சென்றுள்ளார். திரு.இராசாசி அவர்கள் முதலமைச்சராக இருந்தபோதும் பொருளாதார அறிவுரையாளராகச் சிறிது காலம் பணியாற்றினார்.

நாகர்கோவிலில் 1955 முதல் 1957 வரை தெ.தி. இந்துக் கல்லூரியின் முதல்வராகப் பணியாற்றிக் கல்லூரி வளர்ச்சிக்குப் பலவகையில் உதவியுள்ளார். குமரகுருபரர் வழிபாட்டு மண்டபம், சித்திரா மாணவர் விடுதி, கலையரங்கம் முதலியன அவர் முயற்சியால் கட்டப்பெற்றன. அவரால் 1956-இல் முதன் முதல் தமிழ் முதுகலை வகுப்புத் தொடங்கப்பெற்றது.

கன்னியாகுமரி மாவட்டத்தில் தமிழ்நாட்டுச் சட்டமன்றத் தேர்தலில் 1963-இல் வெற்றி பெற்றார். எனவே 1963-68 வரை திரு. காமராசர், திரு. பக்தவத்சலம் அவர்கள் முதலமைச்சர்களாக இருந்த போது சட்டமன்ற உறுப்பினராக இருந்தார். தொடர்ந்து இந்தியன் வங்கி (Indian Bank) இயக்குனராகவும் (Director), இந்தியன் எக்சுபிரசு (Indian Express) அறிவுரையாளராகவும் பணியாற்றினார்.

கருத்தில்லாது அவரது பேச்சு இராது. குறைகளைத் திருத்துவார். இந்நிலையில் நகைச்சுவை மிகுதியும் காணும். பொது மேடைகளிலும், கலை மேடைகளிலும் நன்கு பேசும் ஆற்றலுடையவர். எழுத்திலும் வல்லவர் என்பதனை அவர் நூல்கள் எடுத்துரைக்கும். வேளாண்மைக் கடன், சிந்தனையமுது, ஒளி விளக்குகள், பொருள்வளம், இந்தியப் பொருளியல் முதலாயின அவர்தம் படைப்புகளாகும்.

திருமந்திரம், தாயுமானார் பாடல்கள், திருவுந்தியார் ஆகியவற்றை ஆங்கில மொழியில் பெயர்த்தெழுதியுள்ளார். சைவ சமயம் குறித்த தெளிந்த அறிவும், அதன்கண் பற்றும் உடையவர். தமிழ்நாட்டின் சைவ மடங்களோடு பெருந்தொடர்பு உடையவர். அவாயில் (Hawai) ஐரோப்பியர் ஒருவர் சுப்பிரமணியசுவாமி என்னும் பெயர்கொண்டு சிவன் கோயிலைக் கட்டுவதற்குப் பெரிதும் உதவி, அங்குச் சென்று அதன் திறப்பு விழாவிலும் கலந்துகொண்டார்.

உழைப்பு அவர் உயிர்நிலையும் உயர்நிலையுமாகும். உழைப்பவர்க்கும், ஏழையர்க்கும் பெரிதும் உதவுபவர். உழையாதவரை வெறுக்கும் இயல்பும் உடையவர். சமுதாயக் குறைகளை நீக்கி நல்வகைப் படுத்த வேண்டும் என்ற நல்லெண்ண முடையவர்.

அவர் தமது 75-ஆம் வயதில், 1984-இல் தமது பிறந்த நாளன்று மாரடைப்பால் மறைந்தார். சி.சு.

**நடராசனார், கீரனூர்:** 'சாதக அலங்காரம்' என்னும் தமிழ்ச் சோதிட நூலின் ஆசிரியர் கீரனூர் நடராசனார். இவர் கி.பி.17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் புதுக்கோட்டை மாவட்டத்தில் கீரனூர் உள்ளது. நடராசனார் சைவ சமயத்தவர். இவர்தம் நூல் செய்யப் பெற்ற ஆண்டு சாலிவாகன சகாப்தம் (கி.பி. 1587-1665) என்பது நூலின் பாயிரத்தால் அறியலாகும். இந்த நூல் பாயிரம் 15 பாடல் உட்பட 1146 பாடல்களை உடையது. ஆசிரிய விருத்தம், கலித்துறை, கலிவிருத்தம், வெண்பா முதலிய யாப்பு வகையினால் ஆன இந்த நூலில், சிலபல இடங்களில் அந்தாதியும், சில பாடல்களில் மகடூஉ முன்னிலையும் உள்ளன. வடமொழியில் உள்ள ஓராசாரம், சாராவளி, பாராசரியம், சந்தானதீபம், பிருகத் சாதகம், சாதக அலங்காரம் முதலிய பல சோதிட நூல்களைப் படித்து இந்த நூலை இயற்றியதாகப் பாயிரத்தில் குறிப்பிடுகிறார் ஆசிரியர். வடமொழியில் கணேச தைவக்ஞர் என்பார் இயற்றிய 'சாதக அலங்காரம்' என்னும் நூல் 110 சுலோகங்களை உடையது, இந்த நூலின் பெயரை மட்டும் நடராசனார் எடுத்துக் கொண்டார். இந்த நூலின் நேரடி மொழிபெயர்ப்பாகத் தம் நூலை இவர் இயற்றவில்லை; சோதிடப் பயன்களையும் சாதகக் கணிப்பினையும் அழகுறச் சொல்லும் தம் நூலுக்குச் 'சாதக அலங்காரம்' என்று பெயரிட்டார். இதன்கண், மேடம் முதலிய பன்னிரண்டு இராசிகள், அவற்றின் இயல்புகள், கிரகங்களின் ஆட்சி, உச்சம், நீசம், பகை, நட்பு, பாவகங்கள், இலக்கின நிச்சயக் கணிதம், குளிகாதியர் நால்வர், தூமாதியர் ஐவர், இராசயோகப் பயன்கள், தனயோகம், நிர்த்தனயோகம், அரிட்டம், காலச் சக்கரதசை, கோசாரப் பயன்கள், அட்டவர்க்கப் பலன், நவாம்சம், திரேக்காணம் முதலிய சட்வர்க்கப் பகுப்பு, ஆயுர்த்தாயக் கணிதம, திருமணப்பயன்கள், புத்திரப் பேறு, முதலிய சோதிடக் கணிதமும் பயன்களும் சிறந்த முறையில் சொல்லப் பெற்றுள்ளன. பொன்.பா.

**நடாதூர் அம்மாள்:** இராமாநுசருடைய மருமகனான நடாதூராழ்வான் என்பவரின் பேரரா

வார் நடாதூரம்மாள். இவரது இயற்பெயர் வரதா சாரியர் என்பதாகும். காஞ்சீபுரம் வரதராசப் பெரு மாளுக்குத் தாய்போல் மிகப் பரிவுடன் கைபொறுக் கும் படியாகப் பாலமுது காய்ச்சி அளித்து வந்தமை யால் வரதாசாரியருக்கு 'அம்மாள்' என்ற திருநாமம் ஏற்பட்டது. இப்பெயருடன் நடாதூர் என்ற அவரது ஊரும் சேரப் பெற்று 'நடாதூரம்மாள்' என வழங்கப் படுகிறார். இராமாநுசரின் சீடராய், திருவெள்ளறை யில் எழுந்தருளியிருந்த எங்களாழ்வான் என்ற ஆசாரி யரின் முக்கியமான சீடர் இவர்.

நடாதூரம்மாள் சிறுவயதில் ஒரு சமயம் தமது. பாட்டனாரான நடாதூராழ்வானிடம் பாசிய காலட்சேபம் தொடங்கியபோது 'அகிலபுவந' என்று தொடங்கும் மங்கள சுலோகத்தின் விவரணத்தி லேயே ''அகிலபுவந' என்று சொல்லுவானேன்? 'நிகிலபுவந' என்றோ, 'சகலபுவந' என்றோ சொல்ல லாகாதா?'' என்று கேள்வி கேட்டார். உடனே நடா தூராழ்வான் தம் பேரனுக்குத் தக்கபடி காலட் சேபம் சொல்லுவது தம்மால் இயலாது என்று உணர்ந்து, 'தினவுகெடச் சொல்லுவன் திருவெள் ளறைச் சோழியன். நீ திருவெள்ளறைக்குச் சென்று எங்களாழ்வான் என்ற ஆசாரியனிடம் சிரீபாசிய காலட்சேபம் செய்து வருவாய்' என்று நியமித்து அவரைக் காஞ்சியிலிருந்து திருவெள்ளறைக்கு அனுப்பினார். திருவெள்ளறைக்குச் சென்ற நடா தூரம்மாள் எங்களாழ்வான் திருமாளிகைக்குச் சென்று கதவைத் தட்டி அழைத்தார். உள்ளிருந்த படியே எங்களாழ்வான் 'யார்'? என்று வினவ, 'நான் தான்' என்றார் நடாதூரம்மாள். 'நான் செத்த பிறகு வா' என்று கூறி அனுப்பிவிட்டார் எங்களாழ் வான். 'நான் என்னும் அகங்காரம் செத்தபிறகு வா' என்ற அவ்வாக்கியத்தின் உட்கருத்தை அறியாத நடாதூரம்மாள், காஞ்சி சென்று பாட்டனாரிடம் இச்செய்தியைத் தெரிவிக்க, 'அடியேன் என்று சொல் லாமல் 'நான்' என்று கூறிய இவர் மடமையைச் சுட்டிக் காட்டி, தினவுகெடச் சொல்லிவிட்டார் பார்த்தாயா; மறுபடியும் அவரிடம் சென்று 'அடி யேன்' என்று கூறி அவரிடம் பிரார்த்தித்துச் சிரீபாசிய காலட்சேபம் கேட்டுவருவாய்' என்று மறுபடியும் அவரை திருவெள்ளறைக்கு அனுப்பினார். நடா தூராழ்வான். மறுபடியும் திருவெள்ளறை சென்று 'அடி யேன்' என்று பதில் சொல்லி, எங்களாழ்வானின் அரு ளுக்குப் பாத்திரரானார். திருவெள்ளறையிலேயே நீண்ட நாள் வாழ்ந்து சிரீபாசியத்தின் பொருள் அனைத்தையும் கசடறக் கற்றார்.

எங்களாழ்வானின் காலத்திற்குப் பிறகு நடா தூரம்மாள் காஞ்சீபுரத்தில் இருந்துகொண்டு பலருக்குச் சிரீபாசிய காலட்சேபம் செய்து வந்தார். சுருதப் பிர காசிகை எனும் சிரீபாசியவுரையை இயற்றிய பட்டர் இவரிடம் முக்கியமான சீடராயிருந்து பாசிய காலட் சேபம் கேட்டார். சிரீபாசியத்தின் பொருள்களைச் சுலோகங்களாக வடித்துக் கொடுக்கும் 'தத்துவசாரம் என்ற கிரந்தத்தை அருளினார் நடாதூரம்மாள்.

எஸ்.கி.

**நடுகல்**: பண்டைக் காலத்தில் போர்க்களத் தில் பெருவீரங்காட்டிப் போர்புரிந்து வீரமரணம் அடைந்த வீரனுக்கு, அவன் வீழ்ந்த இடத்தில் நடுகல் நட்டு வழிபடும் வழக்கம் இருந்தது. இதனை வீரக்கல், நடுதல் என்று குறிப்பிடுவர். நினைவுக்கல் எனவும் இதனைக் குறிக்கலாம்.

**இலக்கியத்தில் நடுகல்:** தொல்காப்பியம் முத லாகப் பிற்கால இலக்கிய நூலான சுவாமிநாதம் முடியவும் உள்ளவற்றில் நடுகல் எடுத்தலுக்குரிய இலக்கணம் பேசப்பட்டுள்ளது. தொல்காப்பியமும் புறப்பொருள் வெண்பா மாலையும் நடுகல் வழிபாட்டு வளர்ச்சியைத் தெளிவாகக் காட்டுகின்றன. 'காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுதல் – சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல் என்று இரு மூன்று மரபிற் கல்' என்று தொல்காப்பியர் நடுகல்லுக்கு ஆறு துறை களை அளிக்கிறார். அவற்றுள் பெரும்படையும், வாழ்த்தலும் நடுகல் வழிபாட்டைக் காட்டுவன.


நடுகல்

வீரரின் பெயரும் பீடும் எழுதப்பட்டுவிளங்கிய நடுகற்கள் வழிபடப்பட்டு வந்தமையைச சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்

கள் குறிப்பிடுகின்றன. பண்டைத் தமிழர்கள் நடு கல்லைத் தெய்வமாக வழிபட்டனர். நடுகற்கோயில் களைப் போன்று, அரசனைப் புதைத்த இடத்தில் சமாதிக் கோயில்கள் உருவாயின. இக்கோயில்கள் பள்ளிப்படைக் கோயில்கள் என்று கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகின்றன.

**யாருக்கு நடுகல்:** போரில் வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு மட்டுமன்றி வடக்கிருந்து உயிர் துறந்த வருக்கும், உடன்கட்டை ஏறிய உத்தமமாதர்களுக் கும், கடவுள் கோயில் கட்டியவருக்கும் கால்வாய் வெட்டியவருக்கும், நரபலியாக வெட்டுண்டவருக்கும், நற்காரியத்தின் பொருட்டுத் தற்கொலை செய்து கொண்டவருக்கும், நிரைகவர்தல்-நிரை மீட்டல் ஆகிய போர்களில் ஈடுபட்டு இறந்த வீரர்களுக்கும் நடுகற்கள் எடுக்கப்பட்டன. அப்படி இறந்துபட்ட வீரர்களின் பீடும் பெயரும் பொறித்து வீரக்கல் எடுக்கப்பட்டது. விலங்கினங்களிடமிருந்து ஊர்மக்க ளைக் காக்கும் பொருட்டு விலங்குகளுடன் போரிட்டு மாண்ட வீரருக்கும் நடுகல் எடுக்கப்பட்டது. (எ.கா.) புலியுடன் போரிட்டு மாண்ட வின்றன் வடுகன் என் னும் வீரனுக்கு எடுக்கப்பட்ட மோத்தக்கல் என்னு மிடத்தில் உள்ள நடுகல் கல்வெட்டைக் குறிப்பிட லாம். மனிதர்களுக்கு மட்டுமன்றிச் செயற்கரிய செயல் செய்த விலங்குக்கும் நடுகல் எடுக்கப்பட்டது. 'கோவிவன்' என்ற நாய்க்கு எடுக்கப்பட்ட எடுத்த னூர் நடுகல் கல்வெட்டைக் குறிப்பிடலாம்.

சங்க காலத்திய நடுகற்கள் இதுகாறும் கிடைக்க வில்லை. கி.பி. 5-ஆம் நூற்றாண்டு முதல் 20-ஆம் நூற்றாண்டு வரையிலான காலப் பகுதியைச் சார்ந்த நடுகற்கள் பல தொல்பொருள் துறையின் முயற்சி யால் கிடைத்துள்ளன. இவற்றின் அமைப்பும் உருவ மும் எழுத்தும் பலவகைப்பட்டன.

நடுகற்களைக் குலதெய்வமாகவும் சிறுதெய்வ மாகவும் கருதி மக்கள் வழிபடுகின்றனர். 'நடுகல் தெய்வங்களையன்றிப் பிற தெய்வங்களை வழிபட மாட்டோம்' என்று மறக்குடி மகளிர்கூறியதாகப் புறநானூறு (335:9-12) கூறுகின்றது. பழந்தமிழரின் வீரவழிபாட்டு அடிப்படையில் நடுகல் தெய்வங்கள் தோன்றின. இந்நடுகல் வழிபாடே பிற்காலத்தில் சிறு தெய்வ வழிபாடு தோன்றக் காரணமாக அமைந்தது போலும். இந்நடுகற்கள் உள்ள இடங்கள் வேட்டுவன் கோயில், வேடியப்பன் கோயில், பட்டான்கோயில், ஐயனாரப்பன்கோயில், மீனாரப்பன் கோயில் எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கப்படுகின்றன.

**நடுகற்களின் வகைகள்**: கற்புடைய பெண்களுக்கு நாட்டப்படும் கல், மகா சதிக்கல், மாசுதிக்கல்(மாஸ் திக்கல்) சதிக்கல் என்று வழங்கப்பட்டது. கருநாடக மாநிலத்தில் தான் மாசதிக்கல் மிக்க அளவில் காணப் படுகிறது. கணவன் இறந்த போது, மனைவி உடன் கட்டையேறிய நினைவாகச் சதிக்கற்கள் எடுக்கப்பட் டன. கருநாடக மாநிலத்தில் இவை 'மகாசதிக்கல்' என்றும் 'உறாசன தோளுகல்லு' என்றும் சொல்லப் படுகின்றன. இவை கேரள மாநிலத்தில் புலச் சிக்கல் என்றும், குசராத்துப் பகுதிகளில் 'பாலியா' என்றும் சொல்லப் படுகின்றன. இக்காலத்திலும் இவை 'வீர மார்த்தி கோயில்', 'வீரமரணர்த்தி கோயில்' என்றும் கூறப்படுகின்றன. சமணப் பெரியார்கள் சல்லேகனை விரதம் இருந்து உயிர் விட்டால் அவர்கட்கு 'நிசீதிகைக்கல்' என்ற நினைவுக் கல் நாட்டுவது வழக்கம். 'சங்ககால நடுகல்' 'நெடு நிலை நடுகல்' ஆக இருந்ததாக இளங்கீரனாரும் 'ஓங்கிய கல்' ஆக இருந்ததாக ஐயனாரிதனாரும் குறிப்பிடுவர். சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்கும், தனது தாய்க்கும் கல் நட்டதனைச் சிலப்பதிகாரம் கூறும். வடக்கிருந்து இறந்த போது கோப்பெருஞ் சோழனுக்கு நடப்பட்ட கல் பற்றிப் புறநானூறு குறிப் பிடுகின்றது.

**நடுகல்லின் சிற்ப அமைதி:** நடுகற்களில் வீரனது உருவம் போர் செய்யும் நிலையில் செதுக்கப் பட்டிருக்கும். வீரனின் இடையில் நீண்ட துணி சுற்றப் பட்டிருக்கும் தலையில் முடியலங்காரம் அல்லது கவசம் இருக்கும். மிடுக்காகத் தோற்ற மளிக்கும் வீரனின் இடக் கையில் கேடயமும், சில சமயங்களில் வில்லும் காணப்படும். வலக் கையில் வாளும் அல்லது குறுவாளும் இருக்கும். விலங்குடன் போரிடும் வீரனின் இடக் காலுக்கருகில் கெண்டி கண்ணாடி, சிமிழ், ஆகியவை இருக்கும். இவை மங் கலப் பொருள்களாகக் கருதப்பட்டன போலும். இறந்த வீரனின் உருவத்திற்குக் கீழே அல்லது மேலே கல்வெட்டுப் பொறிக்கப் பட்டிருக்கும். பலவற்றில் கல்வெட்டுகள் காணப்படவில்லை.

**காணப்படும் இடங்கள்:** தென்னிந்தியாவில் கரு நாடகம், கேரளம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் நடுகற்கள் காணப்படுகின்றன. தமிழ் நாட்டில் செங் கற்பட்டு, தருமபுரி (ஊத்தங்கரை வட்டம்), சேலம் வடார்க்காடு, பெரியார் மாவட்டங்களில் மிகுதியான நடுகற்கள் காணப்படுகின்றன. கருநாடகத்தில்தான் மிக்க அளவில் இவை உள்ளன. ம.இரா.

**துணைநூல்கள்:**

**கேசவராஜ் வெ.**, 'நடுகல் வழிபாடு-சிறுதெய்வ வழி பாடு', இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 13-ஆம் கருத்தரங்கு ஆய்வுக் கோவை- தொகுதி-3, அண்ணாமலை நகர், 1981.

Nagaswamy, R., Seminar on Hero Stones, The State Department of Archaeology, Government of Tamil Nadu, Madras, 1974.

*நடுநிலை நாடுகள்*: ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் போர் நடக்கும் பொழுது அந்தப் போரில் ஈடுபடாமல், போரில் எத்தரப்பினருடனும் சேராமல், போர்த் தரப்பினர்களுக்கு இடையே பாகுபாடு காட்டாமல், போரில் தன்னாட்டு மக்கள் ஈடுபடுவதனைத் தவிர்த்தும், போர்க் காலத்தில் சகிப்புத் தன்மையைக் கையாண்டும், போர்த் தரப்பைச் சார்ந்தவர்கள் தன் நாட்டிலிருந்து போர் நடவடிக்கையில் ஈடுபடாமலும் பார்த்துக் கொள்ளுகின்ற நாட்டினை நடுநிலை வகிக்கின்ற நாடு என்று கொள்ளலாம். இவ்வகை நாட்டினை 'நடுநிலை நாடு' (Neutral States) என்று கூறுவர்.

இவ்வாறு நடுநிலை வகிக்கின்ற நாட்டின் ஆள் நிலப்பரப்பினையும் அந்த நாட்டின் உரிமைகளையும் போரில் ஈடுபட்டிருக்கின்ற நாடுகள் மதித்து நடக்க வேண்டும் என்று பன்னாட்டுச் சட்டம் கூறுகிறது.

போரில் ஈடுபட்டிருக்கின்ற நாடுகள் தவிர ஏனைய நாடுகள் அனைத்தும் நடுநிலை நாடுகள் என்று கொள்ளுதல் கூடாது. ஏனெனில், போரில் கலந்து கொள்ளாத நாடுகள் கூடப் போரில் ஈடுபட்டிருக்கின்ற நாடுகளுக்கு மறைமுகமாக ஆதரவு தருவது உண்டு. இது போன்ற நாடுகள் நடுநிலை நாடுகள் அல்ல. மாறாக, எந்த நாடு போர்த் தரப்பினருக்கு ஆதரவு அளிக்காது இரு தரப்பினருக்கும் பொதுவானதாக வேற்றுமை பாராட்டாது விளங்குகிறதோ அதனையே நடுநிலை நாடாகக் கொள்ளல் வேண்டும்.

நடுநிலை நாடுகள், பன்னாட்டுச் சட்டத்தின் கீழ்ச் சில உரிமைகளையும், கடமைகளையும் பெற்று விளங்குகின்றன. நடுநிலை நாடுகளின் உரிமைகளும் கடமைகளும் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வரையறுக்கப்பட்டு விட்டன. இதில் 5-ஆம் Aக்கு ஏற்பு விதிகளும், 13-ஆம் Aக்கு ஏற்பு விதிகளும் மிகவும் முக்கியமானவைகளாகும். 5-ஆம் Aக்கு ஏற்பு விதிகள் உலகப் போரின் போது நடுநிலை நாடுகளின் உரிமை மற்றும் கடமைகளையும், 13-ஆம் Aக்கு ஏற்பு விதிகள் கடற்போரின் போது நடுநிலை நாடுகளின் கடமைகளையும் உரிமைகளையும் பற்றிக் கூறுகின்றன.

இரண்டாம் உலகப் போரின் போது இவ்விதிகள், பெருமளவில் பெல்சியம், இலக்சம்பர்க்கு, நெதர்லாந்து, டென்மார்க்கு, நார்வே போன்ற நாடுகளால் மீறப்பட்டன. போருக்குப் பின்னர் நிறுவப்பட்ட ஐ.நா. அமைப்பு தொடர்ந்து நடுநிலை நாடுகள் தொடர்பான விதிகளை ஏற்றுக்கொள்ளும் முகமாக அவற்றைத் தனது சாசனத்தில் இரண்டாம் பிரிவில் 5-ஆம் பத்தியில் குறிப்பிட்டது.

ஐ.நா. சாசனம் இயற்றிய பின்னர் ஏற்படுத்தப்பட்ட சட்ட உருவாக்க உடன்படிக்கைகளில் (Law making Treaties) 'நடுநிலை' என்ற சொல் சட்டச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். 1949-ஆம் ஆண்டுச் செனீவா ஏற்பு விதிகளில் 'நடுநிலை நாடு', 'நடுநிலை அதிகாரம்' என்ற சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.

உலகத்தைப் போர் மேகங்கள் சூழ்ந்திருக்கின்ற இக்காலத்தில் 'நடுநிலை' வகிப்பது என்பது மிகவும் கடினமான செயலாகவே இருக்கிறது. இருப்பினும் 'நடுநிலை'க் கொள்கையானது இன்னும் உயிர் பெற்றே விளங்குகிறது என்பதை இக்காலப் பன்னாட்டு உறவுகள் தெளிவாகவே செய்கின்றன.

ம.கா.

*நடுநிலைப் பள்ளிகள்*: 14 வயது வரை சிறுவர்கட்குக் கட்டாயமாக இலவசக் கல்வி அளிக்கப்படல் வேண்டும் என்று இந்திய அரசியல் சட்டம் 45-ஆம் பிரிவு கூறுகிறது. அதன்படி குறைந்த அளவு கல்வித் தகுதியை இந்தியக் குழந்தை ஒவ்வொன்றும் பெற்றிருக்க வேண்டும். அதாவது இந்தியக் குடிமகன் ஒவ்வொருவனுக்கும் 8-ஆம் வகுப்பு வரையாவது கல்விகற்கக் கூடிய வாய்ப்பும் வசதியும் அளிக்கப்பட வேண்டும். இதன் அடிப்படையில் நோக்கினால் இச் சட்டம் கல்வியை, எல்லோருக்கும் கட்டாயமாக்கியதோடு நடுநிலைப் பள்ளி வரை இலவசமாகவும் அளித்திட வேண்டுமெனக் கூறுகிறது.

ஒன்று முதல் ஐந்து வகுப்பு வரை உள்ள பள்ளிகளைத் தொடக்கப் பள்ளிகள் (Primary Schools) என்றும், ஆறு, ஏழு, எட்டு வகுப்புகள் உள்ள பள்ளிகளை நடுநிலைப் பள்ளிகள் (Middle Schools) என்றும் பகுத்துக் கூறுதல் வழக்கு. நடுநிலைப் பள்ளிப் பிள்ளைகளின் வயது 11 முதல் 13 வயது வரை என வரையறுக்கப்பட்டுள்ளது. நடுநிலைப் பள்ளிகள் சில இடங்களில் உயர்நிலைப் பள்ளிகளின் பகுதியாகவும், சில இடங்களில் தொடக்கப் பள்ளிகளின் பகுதியாகவும், சில இடங்களில் மூன்றும் சேர்ந்தும் இயங்குகின்றன. அதாவது, ஒன்றாம் வகுப்பிலிருந்து எட்டாம் வகுப்பு வரையிலோ, 6 ஆம் வகுப்பிலிருந்து 10 ஆம் வகுப்பு வரையிலோ ஒன்றாம் வகுப்பிலிருந்து 10 ஆம் வகுப்பு வரையிலோ உள்ள பள்ளிகள் உண்டு. ஆயிரத்து ஐந்நூற்றுக்கு மேல் மக்கள் தொகை கொண்ட அனைத்து இடங்களிலும் ஒரு நடுநிலைப் பள்ளி இருத்தல் வேண்டுமென்று அரசு திட்டமிட்டுள்ளது.

**நடுநிலைப் பள்ளிகளின் பாடத் திட்டம்**: குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமானால் நடுநிலைப் பள்ளி தொடக்கப் பள்ளியின் தொடர்ச்சியேயாகும். ஆகவே, தொடக்கப் பள்ளிப் பாடத்திட்டங்கள் எக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு வகுக்கப்படுகின்றனவோ அவற்றின் அடிப்படையை மனத்தில் கொண்டு நடுநிலைப் பள்ளிகளின் பாடத் திட்டங்கள் அமைக்கப்படுகின்றன. ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறும் போது ஏற்படக்கூடிய துன்பங்கள் இல்லாமல் மாணவர்கள் நடுநிலைப் பள்ளிக்குச் செல்ல வேண்டுமேயாயின் அப்பாடத் திட்டம் தொடக்கப் பள்ளிகளின் பாடத் திட்டத்தின் தொடர்ச்சியாக அமைதல் இன்றியமையாத ஒன்று. தொடக்கப் பள்ளிப் பாடத்திட்டம், செயல்களை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. ஆகவே, நடுநிலைப் பள்ளிப் பாடத்திட்டமும் செயல்களை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது.

மனித வளர்ச்சி பற்றிய அறிவையும், செயல்களையும் பொதுவான முறையில் நடுநிலைப் பள்ளிகளில் கற்பிக்க வேண்டும். இலட்சுமணசாமி முதலியார் தலைமையில் ஏற்படுத்தப்பட்ட கல்விக் குழு நடுநிலைப் பள்ளிகளில் தாய்மொழி, தேசிய அளவில் ஒன்றுபட இந்திய (இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் வேறு ஒரு மொழி பயில வேண்டும்) இசை, சமுதாயவியல் சார்ந்த படிப்பு (Social Studies), இயற்கை அறிவியல்கள் (Natural Sciences), கணிதவியல், கலை, கைத்தொழில், உடற்கல்வி ஆகியவை கற்பிக்கப்பட வேண்டும் எனப் பரிந்துரை செய்தது. ஏனெனில் இவை உயர்நிலைப் பள்ளிகளில் கற்பிக்கப்படும் பாடங்களின் . அடிப்படையாகவும் அமைகின்றன. ஆழமாக இல்லாது பொதுவான முறையில் இப்பாடங்களைக் கற்பிப்பதற்கு மற்றொரு காரணமும் உள்ளது. நடுநிலைப் பள்ளிகளில் பயிலும் மாணவர்களுக்கு ஆழ்ந்து ஒரு குறிப்பிட்ட பாடத்தைப் படிக்கும் திறன் இல்லை, முதிர்ச்சியும் இல்லை. அதே நேரத்தில் இப்பருவத்தில் பல்வேறு துறைகளிலும் ஆர்வத்தை வளர்ப்பது கடமையாகும்.

நடுநிலைப் பள்ளிகளில் கற்பிக்கப்படும் பாடங்கள் மனித வரலாற்றையும், பண்பாட்டின் வளர்ச்சியையும், அவற்றின் முக்கியத்துவத்தையும், சிறந்த நெறிமுறைகளையும் மாணவர்களுக்கு உணர்த்துவதோடுகூட அவற்றை அவர்கள் வாழ்க்கையிலும் கடைப்பிடிக்க முடியும் என்ற உணர்வையும் ஊட்ட வேண்டும். மனித வரலாற்றில் மனிதன் அடைந்த வெற்றிகள் மாணவர்களுக்கு வழிகாட்டியாக அமையும் வண்ணம் பாடங்கள் கற்பிக்கப்பட வேண்டும்.

இசையையும், தம் நாட்டுக் கலைகளையும் கற்பதால் மாணவர்களது மனத்தைப் பண்படுத்த முடியும், மன எழுச்சிகளைக் கட்டுப்படுத்தி அவற்றைச் சிறந்த முறையில் வழிநடத்தும் திறனைப் பெறுதல் இயலும். அவ்வாறே கைத்தொழில்களைக் கற்றுக் கொள்வதால் உடல் வளர்ச்சியும் செய் திறன்களும் வளர்கின்றன. உடல் உழைப்பின் முக்கியத்துவத்தையும் அதற்குரிய மதிப்பையும் அளிக்க மாணவர்கள் கற்றுக் கொள்கிறார்கள். ஆகவே, நடுநிலைப் பள்ளிப் பாடத் திட்டம் மாணவர்களின் முழுவளர்ச்சியை உருவாக்கும் வகையிலும் அறிவு, உணர்ச்சி உடல் திறன் முதலானவற்றை ஊக்குவிக்கும் வகையிலும் அமைந்திட வேண்டும்.

**கற்பிக்கும் முறை**: தொடக்கப் பள்ளியின் ஒரு தொடர்ச்சியாக நடுநிலைப் பள்ளிகள் உள்ளமையால் தொடக்கப் பள்ளியில் கைக்கொள்ளப்பெறும் முறைகள் தொடர்ச்சியாக நடுநிலைப் பள்ளிகளிலும் அமைய வேண்டும். குழந்தைகள் எப்போதும் எதையாவது செய்து கொண்டே இருக்க வேண்டும் என்ற உணர்வுடையவர்கள். ஆகவே, பாடங்களைக் கற்பிப்பதற்கும், கற்பதற்கும் செயல்முறைகளைக் (Activity method) கையாளும்போது அவர்களது கற்கும் திறன் அதிகமாகிறது. ஆர்வமும் விருப்பும் அதிகரிக்கின்றன. கல்வியையும் பள்ளியையும் வெறுக்காமல் ஆசையோடு அணுகக்கூடிய சூழ்நிலை ஏற்படும். ஞா.ப.

## நடுவர் தீர்ப்பு முறை

**நடுவர் தீர்ப்பு முறை** என்பது இருவர்க்கிடையே ஏற்படும் பணம், சொத்து, ஒப்பந்த முறிவு போன்ற சமூகச் செய்திகள் குறித்து ஏற்படும் சிக்கல்களை ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட நடுவர்களின் தீர்ப்புப்படி நீதிமன்றத்திற்குப் போகாமலேயே தீர்த்துக்கொள்ளும் முறையாகும். நடுவர் தீர்ப்பு முறையின் (Arbitration) சாரம் என்னவென்றால் நடுவர்கள் நீதிமன்றத்திற்குப் போகாமலேயே ஒரு வழக்கின் தீர்ப்பை வழங்குகின்றனர். ஆனால், நடுவர் தீர்ப்பு முறை நடவடிக்கைகளில் தலையிடும் உரிமையும், அதனுடைய முடிவு பற்றித் தீர்ப்பு வழங்கும் உரிமையும் நீதிமன்றத்திற்கு உண்டு.

இந்தியாவில் வழக்குகளைக் கிராமப் பஞ்சாயத்து முறையில் தீர்த்துக்கொள்ளும் முறையும், நடுவர் தீர்ப்புப்படி வழக்கு மன்றத்திற்குச் செல்லாமல் அவர் தீர்ப்பை ஏற்றுவரும் பழக்கமும் நெடுங்காலமாகவே இருந்துவருகின்றன. நடுவர் அல்லது பஞ்சாயத்தார், நடுவர் தீர்ப்புக்கு விடல் அல்லது பஞ்சாயத்து என்ற இரு சொற்களும் இந்தியநாட்டு வரலாற்றைப் போலப் பழமை வாய்ந்தவை. பஞ்சாயத்து என்ற சொல் வழக்கமாக நான்கைந்து பேர்கள், வழக்காடுபவர்களின் வழக்கை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் முறையைக் குறிப்பதாகும். ஒரு வழக்கை நீதிமன்றத்தில் தாக்கல்

செய்வதைவிட நடுவர் தீர்ப்புமுறையில் தீர்த்துக் கொள்வது மிகவும் நல்லது; செலவும் மீதமாகும்; கால விரயம் ஏற்படாது; நடத்திடும் முறையும் எளிது. நடுவர்களின் தீர்ப்பை நீதிமன்றம் ஒருமுறை ஏற்று விட்டால் அதுவே இறுதியானது. அதன்பின்னர் மேல் முறையீடு இல்லை. எனவேதான் வணிக நடவடிக்கைகள் தொடர்பான ஒப்பந்தங்கள் நடுவர் தீர்ப்பு முறை சரத்தைத்தம்மகத்தேகொண்டுள்ளன. காரணம், ஒப்பந்தம் பற்றி ஏதாவது சிக்கல் எழுமானால் அதை நடுவர் தீர்ப்பு முறையில் தீர்த்துக் கொள்ளலாம் என்பதாகும்.

**நடுவர் தீர்ப்பு உடன்பாடு:** சட்டத்தின் பிரிவு (2) 'அ' வின்படி நடுவர் தீர்ப்பு உடன்பாடு என்பது (Arbitration Agreement), நடுவர் பெயர்அதில் குறிப்பிட்டிருந்தாலும் குறிப்பிடப் படாமலிருந்தாலும் அவருக்கு இக்கால அல்லது எதிர்காலச் சிக்கல்கள் பற்றித் தரப்படும் ஓர் எழுத்து மூலமான உடன்பாடாகும். ஒரு செல்லத்தக்க நடுவர் தீர்ப்பு கீழ்க் காணும் சிறப்புக் கூறுகளைப் பெற்றிருத்தல் வேண்டும். அவை: 1) உடன்பாடு எழுத்து மூலம் இருக்க வேண்டும். 2) இக்கால அல்லது எதிர்காலச் சிக்கல்கள் நடுவர் தீர்ப்புக்கு விடும்வகையில் உடன்பாடு இருக்கவேண்டும். 3) சிக்கல்களுக்குத் தீர்வு காணச் சம்பந்தப்பட்டவர்கள் விரும்பவேண்டும். 4) நடுவர் தீர்ப்புக்கு அவர்கள் கட்டுப்பட வேண்டும். 5) நடுவர் தீர்ப்பு உடன்பாடு ஓர் ஒப்பந்தத்தின் சிறப்புக் கூறுகளைப் பெற்றிருக்க வேண்டும். 6) நடுவரின் பெயர்கள் உடன்பாட்டில் குறிக்கப்பட வேண்டிய தேவையில்லை.

மேற்கூறிய கட்டுப்பாடுகள் நிறைவேற்றப்பட்டால்தான் நடுவர் தீர்ப்பு முறை ஒப்பந்தம் செல்லத்தக்கது. நடுவர் தீர்ப்புக்கட்டுப்பாடுகள் அல்லது நடுவரின் கட்டுப்பாடுகள் அதில் பயன்படுத்தப்பட்டனவா என்பதெல்லாம் தேவையில்லை. மேலும் அவர்கள், நடுவர் தீர்ப்புக்கு இசையவில்லையென்றால் உடன்பாடு செல்லாது. தீர்ப்பும் அவர்களைக் கட்டுப்படுத்தாது. 'சோதி பிரதர்சு எ சிரீதுர்கா மைனிங் குழுமம்' என்ற வழக்கில், நடுவர் தீர்ப்புச் சரத்தின் படி சிக்கல் ஏற்பட்டால் அது ஓர் ஆலோசனை மூலம் தீர்த்துக் கொள்ளப்படலாம் என்றிருந்தது. எனவே அந்த வழக்கில் அது ஓர் உடன்பாடு அன்று என்று தீர்ப்பளிக்கப்பட்டது. காரணம் அங்குச் சொற்கள் உறுதியாக இல்லை. நடுவர் தீர்ப்புக்குப் போகமுடியும் என்றுதான் இருந்ததேயொழிய போகவேண்டும் என்றில்லை. அது போலவே ஓர் உடன்பாட்டில் நடுவர் தீர்ப்புச் சரத்து தொடக்கத்திலிருந்து செல்லத்தகாததாகவும், சட்ட விரோதமானதாகவும் இருந்தால், அந்த நடுவர் தீர்ப்பு முறைச் சரத்து அதைக் கட்டுப்படுத்தாது. மோசடி, பொய்க்கூற்று என்ற அடிப்படையில் செல்லத்தகாத ஓர் ஒப்பந்தத்தில் நடுவர் தீர்ப்புச்சரத்துஇருந்தால் அது செயற்படுத்தக் கூடியதாக உள்ளது என்று 'பம்பாய் மாநிலம் எ ஆதம்சி' என்ற வழக்கில் தீர்ப்புக் கூறப்பட்டது.

**நடுவர் தீர்ப்பு உடன்பாட்டின் விளைவு:** தங்களின வழக்குகள் ஒரு நடுவர் தீர்ப்பு முறைக்குத் தாக்கல் செய்யப்பட்டபோது அந்தக் காரணத்துக்காக நீதிமன்றத்தில் வழக்குப் போடுவது இயலாது. ஒருவர் இந்த உடன்பாட்டைப் பொருட்படுத்தாமல் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தால் மற்றொருவர் அந்த வழக்கு நடக்காதபடி தடுத்துவிடலாம். சட்டத்தின் 34-ஆம் பிரிவின்படி நீதிமன்றம் அத்தகைய வழக்கைத் தள்ளுபடி செய்யலாம். ஆனால், மற்றொருவர் அந்த வழக்கிற்குத் தடை விதிக்கக் கேட்டுக் கொள்ளாவிட்டால் நீதிமன்றம் அவ்வழக்கை விசாரித்துத் தீர்ப்பு வழங்கலாம்.

**நடுவர் தீர்ப்பு முறையின் நன்மைகள்:** நீதிமன்றத்திலுள்ள ஒரு வழக்கோடு ஒப்பிடும்போது நடுவர் தீர்ப்பு முறை கீழ்க்காணும் நன்மைகளைப் பெற்றுள்ளது. இதன் நடைமுறை விதிகள் மிகவும் எளியவை. நீதிமன்றங்களில் கையாளப்படும் அளவில்லாத நடவடிக்கைகள் இதற்கில்லை. மேலும் நீதிமன்றத்தில் ஒரு வழக்கு தொடுப்பதற்கு ஆகும் செலவைவிட இதற்காகும் செலவு குறைவு. காலம் மீதமாகிறது. நீதிமன்ற நடவடிக்கைகளில் ஏற்படும் காலதாமதத்தால் உண்டாகும் வசதிக்குறைவிலிருந்து இது ஒருவரைக் காத்து வேகமாகச் செயற்படுகிறது. நீதிமன்ற நடவடிக்கைகள் போல அவ்வளவாக வெளியுலகிற்கு இது தெரியவாராது. ஆனால், இதன் நடைமுறைகளைத் தனியாகத்தான் நடத்திட முடியும். வழக்கு சம்பந்தமான சிக்கல், தொழில்நுட்பத் தொடர்புடையதாக இருந்தால் தொழில்நுட்ப வல்லுநரை நடுவராக அமர்த்திடலாம்.

**நடுவர் தீர்ப்பு முறையின் தீமைகள்:** நடுவர் தீர்ப்புக்கு வந்துள்ள வழக்கு அல்லது தகராறு சட்டமுறையான வினாவை எழுப்பினால் நடுவர் அதைத் தீர்ப்பதற்குத் தகுதிவாய்ந்தவர் அல்லர். மரபுக்கு ஒவ்வாத முறையில் வழக்கு நடைபெறுவதால் சில நேரங்களில் அநீதி கிட்டவும் வாய்ப்புண்டு.

**நடுவர் தீர்ப்புக்கு எடுத்துச் செல்லுவதற்கு உரியவை:** பொதுவாக உரிமையியல் தன்மை வாய்ந்த எல்லா வழக்குகளையும் நடுவர் தீர்ப்புக்கு எடுத்துச் செல்லலாம். ஆனால், 'முழுதும் குற்றப்பிரிவு சார்புடைய வழக்குகளை எடுத்துச்செல்ல முடியாது; எனினும் கீழ்க்காணும் வழக்குகளை எடுத்துச்செல்லலாம்-

**மனிதர்களின் தனி உரிமையைப் பாதிப்பவை:** எடுத்துக்காட்டாக ஒரு கோயிலில் பூசகராகப் பணியாற்றும் உரிமை; காலங்கடந்த உரிமையை வேண்டுதல்; சட்டத்தொடர்பான வினா; திருமணத் தொடர்பான வினாக்கள்; மனைவிக்கு வழங்கப்படும் வாழ்க்கைப் பணம் (alimony): ஒப்பந்த முறிவிற்காக நிருணயிக்கப்படும் நட்ட ஈடு; ஒருவரின் மரியாதைத் தொடர்பான சிக்கல்கள்; ஒரு நொடித்தவர் 'அவருக்குக் கடன் தந்தவர்கள் ஆகியோர்க்கிடையே ஏற்படும் சிக்கல்கள் போன்றவற்றை நடுவர் தீர்ப்பிற்கு எடுத்துச் செல்லலாம்.

**நடுவர் தீர்ப்புக்கு எடுத்துச்செல்ல முடியாதவை:** திருமணத் தொடர்புடைய சிக்கல்களான மணவிலக்குப் போன்றவைகள்; நொடிப்புத் தொடர்பான நடவடிக்கை விதிமுறைகள்; ஒருவர் எழுதிவைத்துச் சென்ற உயிலின் செல்லுபடித் தன்மை பற்றிய சிக்கல்கள்; இளவர்-மனச் சமநிலை இழந்தவர்கள் போன்றவர்கள் பற்றிய செய்திகள், அற நிலையங்கள்-பொது அறம் போன்றவை பற்றிய சிக்கல்கள்; கடனாளியின் சொத்துகளைப் பொது விற்பனைக்குக் கொண்டுவர எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளின் நிறைவேற்றம்; திருடு, கொலை போன்ற குற்றப் பிரிவியல் தொடர்பான கருத்துகள் போன்றவை நடுவர் தீர்ப்பிற்கு எடுத்துச்சொல்ல முடியாதவைகளாகும்.

**நடுவர் தீர்ப்பை வேண்டும் வழிகள்:** நிகழ்கால விவாதத்திற்குரியவற்றைக் கொடுத்தல்(Submission) என்பது பற்றியும், எதிர்கால விவாதத்திற்குரியவை பற்றி வேண்டல் (Reference) என்பது பற்றியும், நடுவர் தீர்ப்பை வேண்டும் வழிகளைப் (Modes of Submission) பார்ப்பதற்கு முன்னர் ஒருவர் அறிய வேண்டும்.

**நிகழ்கால விவாதத்தை அளித்தல்:** இருவர்களிடையே ஏற்பட்டுவிட்ட அதாவது ஒரு நிகழ்கால விவாத்தை அவர்கள் ஓர் உடன்பாட்டின்படி கொடுப்பது நிகழ்கால விவாதத்தைக் கொடுத்தலாகும். அதாவது அவர்கள் தம் விவாதத்திற்குப் பின்னால் நடுவர் தீர்ப்பு முறைக்கு உடன்பட்டால் அது நிகழ்கால விவாதத்தைக் கொடுத்தலெனப்படும். உடன்பாடு ஏற்பட்டபொழுது அங்கு விவாதம் இருக்கவேண்டும்.

மேற்கூறியதற்கு மாறாக அவர்கள் எதிர்காலத்தில் தோன்றக் கூடிய வேறுபாடுகளை ஓர் உடன்பாட்டின்மூலம் கொடுத்தால் அது ஓர் உடன்பாடு வேண்டல் ஆகும். ஓர் உடன்பாடு வேண்டல், கொடுத்தல் எனப்படாது. காரணம் உடன்பாடு ஏற்படும்போது அங்குவிவாதங்கள் இல்லை. ஒரு விவாதத்திற்குரிய செய்தியை நடுவர் தீர்ப்புக்கு மூன்று வழிகளில் கொடுக்கலாம். அவை;

1) **நீதிமன்றக் குறுக்கீடில்லாத நடுவர் தீர்ப்புமுறை:** இம்முறையில் அவர்கள் தங்கள் விவாதங்களை நீதிமன்றக் குறுக்கீடு இல்லாமல் தாமே நடுவர் தீர்ப்பு முறைக்குக் கொடுக்கலாம். ஏற்கெனவே சொல்லிய விதம் குறித்து அவர்களிடையே ஓர் உடன்பாடு எழுத்துமூலம் ஏற்படவேண்டும்.

2) **தீர்ப்பு வழங்கப்பெறாத நிலையில் இல்லாதபோது நீதிமன்றக் குறுக்கீட்டுடன் நடுவர் தீர்ப்புமுறை:** வழக்காடுபவர்களுக்கு நீதி மன்றத்தின் குறுக்கீடு இல்லாதபோதும் உடன்பாட்டின்படி நடுவர் தீர்ப்பிற்கு விடக்கூடிய ஒரு விருப்பம் அவர்களுக்குத் தரப்பட்டுள்ளது. நடுவர் தீர்ப்பு உடன்பாடு அவர்களிடையே ஏற்கெனவே ஏற்பட்ட போதும் அதை நடுவருக்கு எடுத்துச்செல்லாத நிலையில், உடன்பாட்டைத் தாக்கல் செய்யவேண்டி நீதிமன்றத்திற்கு விண்ணப்பம் செய்யலாம்.

3) **தீர்ப்பு வழங்கப்பெறாத நிலையில் நடுவர் தீர்ப்புமுறை:** சில சமயங்களில் நிறைவுபெறாமல் நீதிமன்றத்திலிருக்கும் வழக்கினை நடுவர் தீர்ப்பு முறையில் தீர்த்துக்கொள்ள அவர்கள் விழைவதுண்டு. அந்நிலையில் தீர்ப்பு வழங்குவதற்கு முன்னர் அவர்கள் அதனை நடுவர் தீர்ப்பு முறைக்கு எடுத்துச்செல்ல வேண்டி விண்ணப்பம் செய்வர். அவ் விண்ணப்பம் எழுத்து மூலம் இருக்க வேண்டும். விண்ணப்பத்தை ஆய்ந்து நீதிமன்றம் நடுவரை நியமிக்கும். நடுவர் நியமனம் ஏற்பட்டபின்னர் நீதிமன்றம் வழக்கினை விசாரித்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் தீர்ப்பினை வழங்கவேண்டுமென்று நடுவரை வேண்டும். அவ்வாறு ஒரு வழக்கு நடுவர் தீர்ப்பிற்கு எடுத்துச் செல்லப்பட்டபின்னர்ச் சட்டத்தில் சொல்லியுள்ள விலக்கு முறைகளைத் தவிரச் சாதாரணமாக நீதிமன்றம் அதில் தலையிடாது. கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Bose, S.K.**, Base on the Arbitration Act, Eastern Law House Pvt. Ltd, Calcutta, 1982.

**Kuchhal, M.C.**, Mercantile Law, Vikas Publishing House Pvt. Ltd., New Delhi, 1981.

***நடுவில் திருவீதிப் பிள்ளைபட்டர்***: நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர், கூரத்தாழ்வான் என்ற ஆசாரியரின் திருப்பேரனாராவார். இவர் நம்பிள்ளை என்ற ஆசாரியரின் பெருமையைப் பொறாது அவரிடம் விரோதம் பாராட்டிக் கொண்டிருந்தார். அரசவையில் வித்துவானாயிருந்த பட்டர் ஒருமுறை அரசவைக்கு எழுந்தருளும்போது நம்பிள்ளையின் சீடரான பின்பழகிய பெருமாள் சீயரையும் அழைத்துச்

சென்றிருந்தார். அரசன் பட்டரை ஒரு கேள்வி கேட்டான். நான் என்னை மனிதனாகவே நினைக்கிறேன் (ஆத்மாநம் மாநுகம் மந்யே) என்று தன்னை அறுதியிட்டிருந்த இராமபிரான், சடாயுவைக் குறித்துச் சடாயுவே ஒப்பற்றதான மோட்ச உலகத்திற்குச் செல்வீராக (கச்ச லோகாநநுத்தமாந்) என்று அருளிச் சடாயுவுக்கு மோட்சம் கொடுத்தது எப்படி? என்னும் கேள்வியைப் பட்டரிடம் கேட்டு விட்டு அரசன், தம்செயல்களில் ஈடுபட்டான். அந்த இடைவெளியில் பட்டர் இதற்குப் பதில் எதுவும் தோன்றாது அருகிலிருந்த சீயரைப் பார்த்து 'சீயா! நம்பிள்ளை இவ்விடத்திற்கு எப்படிச் சமாதானம் அருளிச் செய்வர்?' என்று கேட்டார். அதற்குச் சீயர் 'சத்யேந லோகாந்சயதி' என்று சுலோகம் கொண்டு நிருவகிப்பார்'என்று கூறினார். பட்டரும் மேதாவியாகையாலே உடனே புரிந்துகொண்டு அரசுச் செயலில் ஈடுபட்டிருந்த அரசன் இவரை நோக்கித் திரும்பிய போது இராமன் உண்மை உரைத்தலாலே உலகங்களை வெல்கிறான் (சத்யேநலோகாந் சயதி) என்று வால்மீகியே அருளிச் செய்திருக்கையாலே, உண்மை உரைத்தலாலேயே எல்லா உலகங்களையும் தன் வசப் படுத்தியிருக்கும் இராமன், மனிதபாவனையோடு இருந்த போதிலும், உண்மை உரைத்தலின் பலத்தாலே சடாயுவுக்கு மோட்சம் கொடுத்தலில் முரண் இல்லை என்று அருளிச் செய்தார். அதைக்கேட்ட அரசன் மிகவும் ஆனந்தமடைந்து, பட்டருக்கு ஏராளமான பொருள்களைக் கொடுத்தனுப்பினான். உடனே பட்டர் சீயருடன் நம்பிள்ளையிடம் வந்து அவர் திருவடிகளில் வணங்கி அரசன் அளித்த பரிசுகளை அளித்து; 'தேவரீர் அருளும் சுவைப்பொருள்கள் பதினாயிரங் கோடியிலே ஒன்றுக்குப் பெற்ற செல்வம் இது. ஆகையாலே அடியேனையும் இந்தச் செல்வங்களையும் ஏற்றருள வேணும்' என்று வேண்டினார். நம்பிள்ளையும் சீயர் மூலம் நடந்தவற்றை அறிந்து பட்டரை எடுத்து வாரியணைத்துக்கொண்டு எல்லாப் பொருள்களையும் அருளிச் செய்தார்.

நம்பிள்ளை பட்டருக்குத் திருவாய்மொழியின் பொருளை அருளினார். அதை ஓர் எழுத்து விடாமல் வியாக்கியானமாக எழுதிப் பட்டர் நம்பிள்ளையிடம் காட்ட, நம்பிள்ளை, அனுமதியில்லாமல் செய்ததால் அதைக் கரையானுக்கு இரையாக்கி விட்டார்.

எஸ். கி.

**நடுவு நிலைமை** என்பது ஒரு நாடு அல்லது அரசு, வேறு இரு அரசுகளுக்கிடையே நடைபெறும் போரில் கலந்துகொள்ளாத நிலையைக் குறிப்பதாகும்.

**கடமைகள்:** ஓர் அரசு நடுவுநிலையிலிருப்பதாகக் (Neutrality) கருதப்படுதலும், அது ஒரு நடுவுநிலை அரசுக்குரிய உரிமைகளை அடைதலும் வேண்டுமாயின், அது சில கடமைகளை மேற்கொள்ளுதல் வண்டும். முக்கியமாக அது போர் எதிலும் கலந்து கொள்ளாமல் ஒதுங்கியிருத்தல் வேண்டும். அது போர் செய்யும் நாட்டுக்கு ஆதரவளித்தலோ அதனைத் தடுத்தலோ கூடாது. மேலும் நடுவுநிலையில் இருக்கும் நாடு தனது நிலப்பகுதிகளைப் போர் செய்யும் நாடு பயன்படுத்துதலையும் தடுத்தல் வேண்டும். அது தனது நடுவு நிலையை மீறும் எந்தத் தாக்குதலுக்கும் எதிராகத் தற்காத்துக்கொள்ளுதல் வேண்டும். நடுவுநிலையிலுள்ள நாட்டின் நிலப்பகுதிகளிலோ நீர்ப்பகுதிகளிலோ போரிலீடுபட்டுள்ள நாடுகள் போர்ச் செயல்களைச் செய்யுமாறு உடன்பாடு தருதலும் கூடாது. நடுவு நிலை நாட்டின் பொதுமக்கள் கருத்தும், செய்தித்துறையும், அதன் அரசாங்கமும் கூடப் போரிலீடுபட்டுள்ள இரு நாடுகளுள் ஒன்றின்மீது பரிவு உணர்வு காட்டுதல் கூடும்; ஆனால், இப்பரிவுணர்வும் அதனுடைய நடுவுநிலையை மீறும் செயல்களாக வெளிப்படுதல் கூடாது.

**வகைகள்:** நடுவுநிலையில் நிலையான நடுவு நிலை (Perpetual Neutrality) என்பது ஒருவகையாகும். இந்நிலையை ஓர் அரசு மேற்கொண்டுள்ளது என்பது ஒரு தனிப்பட்ட உடன்படிக்கையின் வாயிலாகப் பல அரசுகளால் ஒப்புக்கொள்ளப்படுமாயின், அது நிலையான நடுவுநிலை நாடு என்று கூறப்படும். எடுத்துக் காட்டாகச் சுவிட்சர்லாந்து நாடு எக்காலத்தும் நடுவுநிலையுடைய நாடு என்று அண்டை நாடுகளால் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. அந்நாட்டின் அரசியலமைப்பிலேயே, அதன் அரசாங்கம் அந்நாட்டின் நடுவு நிலையைக் காத்தற்கு ஆவன செய்தல் வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது.

முற்காலத்தில் நலன்பயக்கும் நடுவுநிலைமை (Benevolent Neutrality) என்ற ஒரு கருத்து நிலவிற்று. இதில் போரிலீடுபட்டுள்ள நாட்டின் சார்பாக ஓர் அரசு போருக்குச் செல்லாமல், அந்நாட்டுக்கு உதவி செய்தற்கு அவ்விரு நாடுகளுக்குமிடையே உள்ள உடன்பாட்டில் வகை செய்யப்பட்டிருக்கும். இத்தகைய உதவியும் இக்காலத்திய நடுவுநிலை பற்றிய கருத்தின்படி தவறான செயல் ஆகும்.

ஓரளவு நடுவுநிலை என்ற ஒரு புதிய வகையும் (Partial Neutrality) உள்ளது. இதன்படி ஓரரசின் நிலத்தில் ஒருபகுதி நடுவுநிலைக்குள்ளான பகுதி என்று அறிவிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஆலந்துத் தீவுகள் (சுவீடனுக்கும், பின்லாந்துக்குமிடையே வட பால்ட்டிக்குக் கடலில் இருக்கும் சிறுதீவுகள்), பின்லாந்துக்குச் சொந்தமானவை என்று உருசியா நீங்கலான

10 அரசுகளால் 1921-ஆம் ஆண்டு உடன்படிக்கையினால் ஒப்புக்கொள்ளப்பட்டு, அவைகளுக்குத் தன்னாட்சி வழங்கப்பட்டு, அவற்றில் படைகள் ஏதும் வைக்கப்படலாகாது என்று ஏற்பாடும் செய்யப்பட்டது. சுவீடன், பின்லாந்து, உருசியா முதலிய நாடுகளைத் தாக்குதற்கு இத்தீவுகளைத் தளங்களாகப் பயன்படுத்துதல் கூடுமாகையால், இத்தகைய நடுவுநிலை 1921-ஆம் ஆண்டின் உடன்படிக்கையின் வாயிலாக இத்தீவுகளில் நிறுவப்பட்டது. இத்தீவுகளில் பின்லாந்து கோட்டைகளைக் கட்டுவதுமில்லை, தன்படைகளை நிறுத்துவதுமில்லை.

**நடுவுநிலை உடன்படிக்கை:** நடுவுநிலை உடன்படிக்கை (Treaty of Neutrality) என்பது, அதை ஏற்றுள்ள நாடுகள், தம்முள் எந்நாடாயினும் இவ்வுடன்படிக்கையில் சேராத நாட்டினால் தாக்கப்படுமாயின், அப்பொழுது, இவ்வுடன்படிக்கையில் சேர்ந்துள்ள நாடுகள் நடுவுநிலையைப் பின்பற்றுதல் வேண்டுமென்று கூறுகிறது. இரண்டாம் உலகப் போருக்கு முற்பட்ட காலத்தில் நடுவுநிலை உடன்படிக்கைகள் 1933-இல் இத்தாலிக்கும் யூகோசுலேவியாவுக்குமிடையேயும், 1935-இல் இத்தாலிக்கும் உருசியாவுக்குமிடையேயும், 1935-இல் உருசியாவுக்கும், பால்ட்டிக்கு நாடுகள் ஒவ்வொன்றுக்கும் இடையேயும் (எசுத்தோனியா, லிதுவேனியா, லாட்வியா பின்லாந்து ஆகிய ஒவ்வொன்றுக்கும் இடையேயும்) செய்யப்பட்டன. ஆயினும், இவ்வுடன்படிக்கையில் சேர்ந்துள்ள நாடுகளுள் ஏதேனுமொன்று மற்றவைகளை விடப் படை வலிமிக்கதாக இருக்குமாயின், அது தன் விருப்பம் போல் நடுவுநிலை உடன்படிக்கையை மீறுதலும் உண்டு. பா.கு.

**நடேச சாத்திரி, ச.ம.:** இவர் பதினெட்டு மொழிகளில் புலமையுடைய பன்மொழிப் புலவர். திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த மகாலிங்கனாருக்கும் அகிலாண்டேசுவரி அம்மையாருக்கும் இவர் கி.பி. 1859-ஆம் ஆண்டு மகனாகப் பிறந்தார். குடந்தைக் கல்லூரியிலும் பின்னர்ச் சென்னை அரசுக் கல்லூரியிலும் பயின்று இளங்கலைப் பட்டம் பெற்றார். இந்தியக் கல்வெட்டுத் துறையிலும் சிற்ப ஆய்வுத்துறையிலும் பணியிற் சேர்ந்தார். தம்முடைய பன்மொழி அறிவாற்றலால் குறுகிய காலத்திற்குள் உயர்ந்த ஊதியம் பெறுமளவிற்கு உயர்ந்தார். இத்துறையில் முதன்மைப் பொறுப்பிலிருந்த இராபர்ட்டு சிவல் என்னும் ஆங்கிலேயர் இவர் 'பண்டிதர்' என்னும் பட்டம் பெறக் காரணமாக இருந்தார். அதனால், இவர் பண்டித நடேச சாத்திரி என்றே பெரும்பாலோரால் குறிக்கப் பெற்றாவர். பின்னர்க் கருநாடக மாநிலத்திற்குச் சென்று இதே துறையில் ஆய்வுப்பணி ஆற்றினார். இரண்டாண்டுகளுக்குப் பின் மீண்டும் தமிழகம் திரும்பி கி.பி. 1888-ஆம் ஆண்டு உதகையில் சிறைக் கண்காணிப்பாளர் அலுவலகத்தில் பணியில் அமர்ந்தார். பத்திரப் பதிவுத் துறைக்கு 1900-இல் மாற்றலானார். இத்துறையில் திருவள்ளூரிலும் ஆர்க்காட்டிலும் பணிபுரிந்து சென்னையிலுள்ள பத்திரப் பதிவுத்துறையில் தலைமைக் கண்காணிப்பாளர் அலுவலகத்தில் மேலாளராகப் பதவி உயர்வு பெற்றார்.

பல்துறைப் பணிகளுக்கு நடுவே சிறந்த நூல்களைப் படைத்தார். தமிழில் வால்மீகி இராமாயணம், தீனதயாளு, மதிகெட்ட மனைவி, தூக்குத் தூக்கி, திக்கற்ற இரு குழந்தைகள், மாமி கொலுவிருக்கை, ஈசாப்புக் கதைகள், தக்காணத்துப் பூருவ கதைகள், தக்காணத்து மத்திய காலக் கதைகள் முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

இவர் வடமொழியில் சாகுந்தல நாடகத்திற்கு எழுதிய திறனாய்வு நூல் சிறப்பானது. மேலும் வடமொழியில் அர்ச சரித்திர விமரிசனம், இரகுவமிச உரைநடை முதலிய நூல்களையும் ஆக்கியுள்ளார்.

இவர் ஆங்கிலத்திலும் சிறந்த புலமையாளராக விளங்கியவர். இந்துமத விழாக்கள், திராவிட கால இராக்கதைகள், தென்னிந்திய நாட்டுக் கதைகள், அரசனும் நான்கு மந்திரிகளும், சூரியன் கதைகள், தெனாலிராமன் கதைகள் முதலிய ஆங்கில நூல்களையும் இயற்றியுள்ளார். அஞ்சாமையையும் நேர்மையும் கொண்டவராக நேரிய வாழ்க்கை நடத்திய இவர் 1906-ஆம் ஆண்டு திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் விழாவுக்குச் சென்றபோது ஒரு குதிரையால் தள்ளப்பட்டு, பெருங்காயமடைந்து இறந்தார். சா.உ.

**நடேசப்பிள்ளை, சு.:** இவர் கி.பி. 1895-ஆம் ஆண்டு தஞ்சையில் பிறந்த தமிழறிஞர். தஞ்சை புனித பீட்டர் பள்ளியிலும், திருச்சி புனித சோசப்புக் கல்லூரியிலும் சென்னைச் சட்டக்கல்லூரியிலும் கல்வி பயின்றவர் இவர். கல்வி வாழ்க்கையை நிறைவு செய்த இவர், இலங்கை சென்று வாழலானார்.

பரமேசுவரக் கல்லூரியின் முதல்வராக 1924 ஆம் ஆண்டு முதல் பணியாற்றினார். இவர் இலங்கைப் பல்கலைக் கழகக் கல்லூரியின் ஆட்சிக்குழுவில் 1934 ஆம் ஆண்டு முதல் 1947 ஆம் ஆண்டுவரை பணி ஆற்றினார். இலங்கையில் அரசியல் கட்சி ஒன்றின் (Uuited National Party) துணைத் தலைவராகவும் இவர் இருந்தார்.

காங்கேயன்துறைத் தொகுதியில் 1952-ஆம் ஆண்டு பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அஞ்சல், செய்தித்துறைஅமைச்சராகஇவர்பணியாற்றினார்; இலங்கைப் பல்கலைக் கழக நீதிமன்றம், ஆளவை மன்றம், கீழ்நாட்டுக் கலைத்துறை ஆகியவற்றில் பல ஆண்டுகள் தொண்டு செய்தார்; சுன்னாகம் இராமநாதன் மகளிர் கல்லூரியின் அறங்காவலராகவும் நற்பணி புரிந்தார்.

தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையினர் இவருடைய சைவ சித்தாந்தப் புலமையைப்போற்றிச் 'சித்தாந்தப் பெருங்காவலர்' என்னும் பட்டத்தை வழங்கினர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் சொர்ணாம்பாள் அறக்கட்டளைச் சொற்பொழிவை முதன் முதலாக இவர் நிகழ்த்தினார்.

'இலங்கை பல்கலைக் கழக வரலாறு' என்னும் நூலில் தமிழ் வரலாறு குறித்த இவருடையஎண்ணங்கள் சிறப்பானவை. சகுந்தலை வெண்பா என்னும் நூலை இயற்றி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இவர் அரங்கேற்றம் செய்தார். சிவஞானமாபாடியத்தை இவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கொண்டிருந்த போது 1965-ஆம் ஆண்டு மறைந்தார். சா.உ.

நடேசன், சி.ஏ. (கி.பி. 1873-1949): இவர் தமிழ்நாட்டைச் சேர்ந்த புகழ்மிக்க பத்திரிகை ஆசிரியரும் சமூகச் சீர்திருத்தவாதியும் ஆவார். அரசியலமைப்பின் ஆய்வாளராகவும் (Constitutionalist) திகழ்ந்த இவர், தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டார். இவர் சிறந்த கல்வியாளராக விளங்கியதுடன் அரசினரால் அமர்த்தப்பட்ட பல குழுக்களில் அங்கம் வகித்தார். எழுத்தாளரான இவர் சில நூல்களையும் இயற்றியுள்ளார்; காந்தியடிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். ஆங்கில அரசு இவருக்கு இராவுபகதூர் பட்டம் அளித்துச் சிறப்பித்தது.

தஞ்சை மாவட்டத்தில் திருவையாற்றிற்குக் கிழக்கே கணபதி அக்ரகாரத்தில் கி.பி. 1873-இல் அண்ணாத்துரை ஐயரின் மகனாக நடேசன் தோன்றினார். கும்பகோணம் நகர உயர்நிலைப் பள்ளியிலும், திருச்சி புனித சூசையப்பர் உயர்நிலைப் பள்ளியிலும், சென்னை இந்து உயர்நிலைப் பள்ளியிலும் இவர் கல்வி பயின்றார். பின்னர்ச் சென்னை மாநிலக் கல்லூரியில் கல்லூரிக் கல்வியை முடித்தார். மங்களாம்பாள் என்னும் மங்கையை மணந்துகொண்ட இவருக்கு இரண்டு ஆண் மக்கள் பிறந்தனர்.

எழுத்துத்துறையில் ஆர்வம் கொண்ட இவர், கி.பி. 1897-இல் சி.ஏ. நடேசன் குழுமம் என்னும் பெயரில் புத்தக வெளியீட்டகம் ஒன்றினை (G.A. Natesan & Co Publishers and Printers) நிறுவினார். இவர் 1900-இல் ஆங்கிலத்தில் இந்தியப்பதிப்பாய்வு, என்னும் மாத இதழ் ஒன்றினைத் (Indian Review) தொடங்கி, தொடர்ந்து நடத்தி வந்தார். அதன் பதிப்பாசிரியராகவும் இவர் 50 ஆண்டுக் காலம் விளங்கினார். மக்களின் சுதந்திர எண்ணங்களை அரசுக்கு உணர்த்தும் வகையில்இவர் 'இந்திய அரசியல்' (Indian Politics) என்னும் மாத இதழையும் தொடங்கினார். காந்தியடிகள், கோபாலகிருட்டிண கோகலே, அன்னி பெசன்ட்டு, ஆர். சி.தத்து, சி.பி. ஆண்ட்ரூசு முதலான புகழ்மிக்க எழுத்தாளர்களின் கட்டுரைகளைத் தாங்கி இந்த இதழ் வெளிவந்தது.

அரசியல் அமைப்பின் ஆய்வாளராகப் புகழ்பெற்ற நடேசன் அரசியல் துறையில் ஒரு மிதவாதியாகவே திகழ்ந்தார்; சென்னை மாநகராட்சியின் அங்கத்தினராக 1914 முதல் 1934 முடிய இருந்து மக்கள் பணியில் ஈடுபட்டார்; சென்னைப் பல்கலைக் கழகத்தின் பேரவை உறுப்பினராகவும், ஆட்சிக்குழு உறுப்பினராகவும் இருபத்தைந்து ஆண்டுகள் பணிபுரிந்து கல்வி வளர்ச்சிக்குப் பாடுபட்டார். பொதுப் பணியில் பெரிதும் ஈடுபாடு கொண்ட இவர், சென்னை மாநில மேலவையின் (கவுன்சில்) உறுப்பினராகப் (1923 முதல் 1933 முடிய) பத்தாண்டுகள் பணியாற்றினார். அதனால் இவரது புகழ் தமிழ்நாடு முழுவதும் பரவியது. பேரரசின் பாராளுமன்றக் குழுவின் தலைவராக 1928 இல் பொறுப்பேற்றுக் கனடாவில் நடந்த மாநாட்டில் கலந்துகொண்டார். அச்சுத் தொழில், எழுதுபொருள் பண்டசாலைகளுக்கான பணியாளர் நியமனக் குறைப்புக் குழுவின் (Retrenchment Committee for Stores, Printing and Stationery) தலைவராகவும் இவர் அமர்த்தப்பட்டார். இவர், பல்கலைக் கழகங்களின் மாநாட்டில் 1929-இல் கலந்துகொண்டார். மேலுமிவர், 1933 இல் இந்திய காப்புவரிக் கழகத்தின் (Indian Tariff Board) அங்கத்தினராகவும், 1935-இல் சென்னைப் பெருமகனாகவும் (Sheriff) அமர்த்தப்பட்டு நற்பணி புரிந்தார்.

இவர் சிறிது காலம் சென்னை, பக்கிங்காம்-கர்னாட்டிக்குத் (B&C) தொழிற்சாலையின் இயக்குநராகவும் பொறுப்பேற்றார்; சென்னைப் போர் விளம்பரக்குழுவின் தலைவராகப் பணியாற்றினார். அனைத்திந்தியச் செய்தித்தாள் பதிப்பாசிரியர்களின் மாநாட்டில் இவர் கலந்துகொண்டார். அனைத்துலக விவகார இந்தியக் கழகத்திலும் இவர் தீவிர பங்கேற்றார். இந்திய முற்போக்கு அவையின் (Indian Liberal Federation) முதலாம் பொதுச் செயலாளரும் இவரே. ஐ.சி. எசு. தேர்வு இங்கிலாந்தில் மட்டுமே நடத்தப்பட்டு வருவதனை இவர்

வன்மையாகக் கண்டித்து இடைவிடாது எழுதி வந்த தன் விளைவாக, அத்தேர்வு இந்தியாவிலும் நடை பெறலாயிற்று. அரிசனங்களின் முன்னேற்றத்திற்கும், சமூக ஏற்றத் தாழ்வுகள் ஒழிக்கப்படுவதற்கும் இவர் அரும்பாடுபட்டார். இவரது பொது நல சேவையைப் பாராட்டும் வகையில் ஆங்கில அரசு இவருக்கு இராவ்பகதூர் பட்டத்தை வழங்கிப் பாராட்டியது. தொடக்கத்தில் காந்தியக் கொள்கைகளுக்கு ஆதர வளித்த நடேசன், அவரது சட்டமறுப்பும், சத்தியாக் கிரகமும் தமக்கு ஏற்புடையனவாக இல்லாமை யால் காந்தி வழியினின்றும் மாறுபட்டார். இவர் 1949-இல் காலமானார்.

சிறந்த எழுத்தாளரான இவர் 'இந்தியா எதனை விரும்புகிறது' (What IndiaWants) 'பேரர சிற்குள் சுயாட்சி' (Autonomy with in the Empire) என்னும் நூல்களை எழுதியதுடன், வடமொழிக் காப்பியங்களை ஆங்கில மொழிபெயர்ப்புடன் பதிப் பிக்கவும் செய்துள்ளார். திருவல்லிக்கேணி நடேசன் சாலை இவரது நினைவாகவே பெயரிடப்பட்டுள்ளது.

ம.இ.

**நடைமுறை ஒப்புதல்:** எந்த ஒரு புதிய அர சாங்கம் அல்லது அரசு தனது பன்னாட்டுக் கடமை களையெல்லாம் நிறைவேற்றுதற்கு இயலாமலோ விருப்பமில்லாமலோ இருந்தாலும்,அது தனது கட்டுப் பாட்டிலுள்ள நிலப்பகுதியில் நடைமுறையிலே சுதந்திர மானதாகவும், அதிகாரத்தைப் பயன்படுத்துவதா கவும் ஒப்புக்கொள்ளப்படுமாயின், அது நடைமுறை ஒப்புதலைப் பெறுவதாகக் கூறப்படும். நடைமுறை ஒப்புதலைப் பெறுவதற்கு (De Facto Recognition)ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் ஓர் அரசாங்கம் தன் அதிகாரத்தை வேறெந்த அரசாங்கத்தின் கட்டுப் பாட்டிற்கும் உட்படாமல் திறமையாகக் கையாளுதல் வேண்டும். ஆனால் அது மற்ற நாடுகளைப் போலப் பிறநாடுகளோடு தூதியலுறவுகளை (Diplomatic Relation) வைத்துக்கொள்ள இயலாமலோ விருப்ப மில்லாமலோ இருத்தல்கூடும்.

பிரிட்டன் இவ்வாறு சில புதிய அரசாங்கங்களுக்கு நடைமுறை ஒப்புதலளித்தல் வழக்கம். ஆனால் பிரித்தானியத் தூதியல் வழக்கத்தின் படி, அந்நாடு, அதனுடைய நடைமுறை ஒப்புதலைப் பெறும் அர சாங்கத்தோடு, தூதியலுறவுகளை வைத்துக்கொள்ளு வதுமில்லை, புதிய அரசாங்கத்தின் பேராளர்களுக்குத் தூதியலாருக்குள்ள சலுகைகளை (Diplomatic Immunities) வழங்குவதுமில்லை. ஆனால் ஐக்கிய அமெரிக்க நாட்டரசாங்கம் நடைமுறை ஒப்பு தலைப் பெறும் புதிய அரசாங்கத்தின் பேராளர் களுக்குத் தூதியல் சலுகைகளை வழங்குகிறது. ஓர் அரசாங்கத்துக்கு அளிக்கப்படும் நடைமுறை ஒப்புதல் என்பது, இடைக்கால ஒப்புதல் (Provisional recognition) ஆகும்.

**சட்டஇயலான ஒப்புதல்:** சட்ட இயலான ஒப்பு தல் என்பது, நடைமுறை ஒப்புதலைப்போல, ஒரு புதிய அரசாங்கத்துக்கு அல்லது அரசுக்கு அளிக்கப் படுவதாகும். ஒரு புதிய அரசாங்கம் அல்லது அரசு சுதந்திரமானதென்றும், அது தனது கட்டுப்பாட்டி லுள்ள நிலப்பகுதியில் திறமாகத் தன் அதிகாரத் தைக் கையாளுகிறது என்றும், அது மற்றநாடுகளோடு தூதியலுறவுகளை ஏற்படுத்திக் கொண்டு, தன் பன் னாட்டுக் கடமைகளை நிறைவேற்றுவதற்கு விருப்பத் துடனும், ஆற்றலுடனும் இருக்கின்றது என்றும் சொல்லப்படும் நிலையைச் சட்ட இயலான ஒப்புதல் (De Jule Recogntion) என்ற தொடர் குறிக்கும். ஆகையால் சட்ட இயலான ஒப்புதலைப் பெறும் நாடு அல்லது அரசாங்கம்,பிறநாடுகளோடு முழு அள வில் தூதியலுறவுகளை வைத்துக் கொள்ளும் உரிமை யைப் பெறுகிறது. அதனுடைய பேராளர்களும் தூதியல் சலுகைகளைப் பெறுதற்குரிய உரிமைகளைப் பெறுகின்றனர்.

பா.சு.

**நடைமுறை மூலதனம்:** ஒவ்வொரு தொழில் நிறுவனமும் தனது அன்றாடச் செலவினங்களுக்கென ஓரளவிற்கு நிதியை ஒதுக்கி வைத்துக்கொள்வதுண்டு. அவ்வாறு ஒதுக்கப்பட்ட நிதி நடைமுறை மூலதனம் எனப்படும். அன்றாடச் செலவினங்கள் எனக் குறிப் பிடும்பொழுது ஒவ்வொரு நாளுக்குமுரிய செலவினங் கள் என்று குறுகிய காலத்தைக் குறிப்பிடுவதில்லை. தொழில் நிறுவனத்தையொட்டி ஒரு வாரக்காலத்தை யும், ஒரு மாதக்காலத்தையும் குறிப்பிட்டு அந்தக் காலத்திற்குரிய செலவைச் சமாளிப்பதற்கென ஒதுக் கப்பட்ட நிதியே நடைமுறை மூலதனம் (Working Capital) எனக் குறிப்பிடப்படுகிறது.

**நிலைத்த மூலதனமும், நடைமுறை மூலதனமும்:** நிலைத்த மூலதனத்தையும், நடைமுறை மூலதனத் தையும் (Fixed Capital and Working Capital) ஒப் பிடும்பொழுது நடைமுறை மூலதனத்தைப் பற்றித் தெளிவாகப் புரிந்துகொள்ள முடிகிறது. தொழிற் சாலை, தொழில் நிறுவப்பட்டுள்ள இடம், இயந்தி ரங்கள், தளவாடச் சாமான்கள் முதலியவற்றை நிலைத்த மூலதனம் (Fixed Capital) என்று குறிப்பிட லாம். அவற்றில் ஏற்படுத்தப்பட்ட பணம் நிலையாக இருக்கிறது. அதாவது, அவற்றைச் சேகரிப்பதற்கும், நிறுவுவதற்கும் மேற்கொள்ளப்பட்ட செலவு மாறாத தாக அமைகிறது. காலப்போக்கில் அவற்றின் மதிப்பு வேண்டுமானால் மாறக்கூடும். அவற்றைச் சிறப்பாகப் பயன்படுத்தும்பொழுது மிகுந்த அளவு உற்பத்தியைப்

பெறமுடியும். உற்பத்திப் பெருக்கம் தோன்றும் விகிதாச்சாரத்திற்குச் சமமாக நிலைத்த மூலதனத்தின் வகைச் செலவு அதிகரிப்பதில்லை. மூலப்பொருள்கள்மீது (Raw materials) செலவிடப்படும் தொகையை அல்லது மூலப்பொருள்களை வாங்குவதற்கென்று ஒதுக்கப்பட்டுள்ள நிதியை நடைமுறை மூலதனம் என்று குறிப்பிடலாம். மிகுதியான பண்டங்களை உற்பத்தி செய்யவேண்டுமெனில் அதிகஅளவு மூலப் பொருள்களை வாங்கியாக வேண்டும். எடுத்துக்காட்டாக அதிகஅளவு துணியை உற்பத்தி செய்ய வேண்டுமெனில் அதற்குத் தேவையான அளவு மூலப்பொருளான பருத்தியை வாங்கியாக வேண்டும். அதேமாதிரி தொழிலாளர்களுக்குக் கூலி கொடுககவும், ஒவ்வொரு தொழில் நிறுவனத்திற்கும் நடைமுறை மூலதனம் தேவைப்படுகிறது. இவ்வாறு உற்பத்தியளவையொட்டி மிகுதியாகவும் குறைவாகவும் மாறிக் கொண்டேயிருக்கும் தன்மையைப் பெற்றிருப்பது நடைமுறை மூலதனமாகும்.

வணிகம் பெருமளவில் நடைபெறும்பொழுது கடன் வணிகத்தைத் (Credit Sales) தவிர்க்க முடியாது. தொழில் நிறுவனங்கள் தமது பண்டங்களை மொத்த வணிகர்களுக்கு விற்கும்பொழுது கடன் வணிகத்தில் ஈடுபட்டாகவேண்டியுள்ளது. இதுபோன்ற நிலையிலும் தொழில் நிறுவனங்கள் மிருந்த அளவு நடைமுறை மூலதனத்தைப் பெற்றிருக்க வேண்டியுள்ளது. போதிய அளவு நடைமுறை மூலதனத்தைப் பெற்றுள்ள நிறுவனங்கள் தாராளமாகக் கடன் வணிகத்தில் ஈடுபடுவதன்மூலம் பெரும் வணிகர்களைக் கவரமுடியும். முடிவில் அத்தகைய தொழில் நிறுவனங்கள் வேகமாக வளர வாய்ப்பைப் பெறுகின்றன. மேலும் தொழிலாளர்களுக்குப் பல சிறப்பான சலுகைகளை வழங்குவதற்கும், தொழிலாளர்களின் நன்மதிப்பைப் பெறுவதற்கும், தொழில் நிறுவனங்கள் வெற்றியுடன் செயற்படுதற்கும் போதிய நடைமுறை மூலதனத்தைப் பெற்றிருக்க வேண்டும். நடைமுறை மூலதனம் தொழில் நிறுவனத்தின் நிதிநிலையைத் தெளிவுபடுத்துகிறது. அந்தவகையில் பங்குதாரர்கள் (Share-holders) மத்தியில் சிறந்த செல்வாக்கைப் பெறுவதற்குத் தொழில் நிறுவனங்கள் போதிய நடைமுறை மூலதனத்தைப் பெற்றிருக்க வேண்டும்.

மூலப் பொருள்களின் விலை மாறும் தன்மையை அறிந்து குறைந்த விலை நிலவும்பொழுது அவற்றை மொத்தமாகக் கொள்முதல் செய்வதற்கும் போதிய நடைமுறை மூலதனம் தேவைப்படுகிறது. அதாவது, மொத்தமாக மூலப்பொருள்களை அவை விளைகின்ற இடத்திலேயே சென்று கொள்முதல் செய்து இருப்பு வைத்துக்கொள்வது சிறந்த நடவடிக்கையாகும். இவ்வாறு செய்வதன் மூலம் தொழிலுக்குத் தேவையான அளவு மூலப்பொருள்களை முன் எச்சரிக்கையாகக் குறைந்தவிலையில் வாங்கி இருப்பு வைத்துக்கொள்ள முடிகிறது. அதன்விளைவாகப் பண்ட உற்பத்திச் செலவைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்துகொள்ள முடியும்.

நடைமுறை மூலதனம் எவ்வாறு திரட்டப்படுகிறது, நடைமுறை மூலதனத்தைத் தீர்மானிக்கும் காரணிகள் யாவை என்று பார்க்கும்பொழுது தொழில் நிறுவனங்கள் தம்மிடம் பணமாக வைத்திருக்கும் நிதியை அன்றாடச் செலவிற்குப் பயன்படுத்தும்பொழுது அது நடைமுறை மூலதனமாகக் கருதப்படுகிறது. இந்தவகை நிதி, தொழில் நிறுவனங்களின் தன்மையையொட்டி அமைகிறது. பெரிய தொழில் நிறுவனங்களின் அன்றாடச் செலவினம் அதிகமாக இருக்கும் என்பது மட்டுமல்லாமல் மிகுந்த அளவில் மூலப்பொருள்களையும் கையிருப்பில் வைத்திருக்க வேண்டும். எனவே, பெரிய தொழில் நிறுவனங்கள் மிகுதியாக நடைமுறை மூலதனத்தைக் கையிருப்பில் வைத்திருக்க வேண்டும். மேலும் பங்குப்பத்திரங்கள் (Shares), கடன் பத்திரங்கள் (Debentures) முதலியவற்றை விற்பதன்மூலமும் பெரும் அளவிற்குத் தொழில் நிறுவனங்கள் நடைமுறை மூலதனத்தைத் திரட்டுவதுண்டு. மக்களிடம் நற்பெயரை ஈட்டியுள்ள தொழில் நிறுவனங்களின் பங்குப் பத்திரங்களும், கடன் பத்திரங்களும், எளிதில் விற்பனையாகின்றன. தொழில் நிறுவனங்களின் கொள்கையையொட்டியும் நடைமுறை மூலதனத்தின் அளவு அமைகிறது. குறைந்த அடக்கச் செலவில் பண்டங்களை உற்பத்தி செய்வதுதான் கொள்கையென்று ஒரு தொழில் நிறுவனம் கருதுவதாகக் கொண்டால், அந்தத் தொழில் நிறுவனத்தில் உற்பத்தி நடவடிக்கை எக்காரணம் கொண்டும் நின்றுவிடக் கூடாது; பெருமளவில் உற்பத்தி இருந்தாக வேண்டும்; தேவைப்பட்டால் மிகுதியான தொழிலாளர்களை அமர்த்தத் தொழில் நிறுவனம் தயாராக இருக்கவேண்டும்; தொழிலாளருக்கு மிகுதியான கூலியை வழங்கவும் நிறுவனம் தயாராக இருக்கவேண்டும்; மூலப்பொருள்களைக் கொள்முதல் செய்து தயாராக வைத்திருக்க வேண்டும்; இவற்றுக்கெல்லாம் அதிக நடைமுறை மூலதனம் இன்றியமையாததாகிறது. இவற்றோடு போக்குவரத்துச் செலவும் நடைமுறை மூலதனத்தின் அளவை நிருணயிக்கிறது. மூலப்பொருள்களை உற்பத்திக் கூடங்களுக்கு எடுத்துச்செல்லவும், உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களைச் சேமிப்புக் கிடங்குகளுக்கு எடுத்துச் செல்லவும் செலவு மிகுதியாகும். அவ்வகைச் செலவுகளைச் சமாளிப்பதற்கு மிகுந்த அளவு நடைமுறை மூலதனம் தேவைப்படுகிறது.

நடைமுறை மூலதனத்தை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை 1) வழக்கமாக, நிலையாக ஒதுக்கப்படும் நடைமுறை மூலதனம் (Regular and Permanent Working Capital).2) பருவகாலச்சூழ்நிலையை யொட்டி ஒதுக்கப்படும் நடைமுறை மூலதனம் (Seasonal Working Capital), 3) சிறப்பு நடைமுறை மூலதனம் (Special Working Capital) என்பனவாகும்.

ஒவ்வொரு நிறுவனமும் தனக்கு, நிகழ்காலச் செலவைச் சமாளிக்க ஒரு குறிப்பிட்ட அளவு நிதியை நிலையாக ஒதுக்கி வைப்பதுண்டு. உற்பத்தித்திறன், நிறுவனத்தின் வளர்ச்சிக் கொள்கை, தொழிலாளர்களின் உற்பத்தித்திறன், இடுபொருள்களின் தேவை, எரிசக்தியின் தேவை முதலிய அமிசங்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டு வழக்கமாக நடைமுறை மூலதனத்தை ஒதுக்குவதுண்டு. பருவ காலச் சூழ்நிலையையொட்டி ஒதுக்கப்படும் நிதி பருவகால நடைமுறை மூலதனம் எனக் குறிப்பிடப் படுகிறது. சில தொழில் நிறுவனங்கள் பருவகால நிறுவனங்களாகும். எடுத்துக்காட்டாகச் சர்க்கரைத் தொழிலைக் கூறலாம். கரும்புப் பயிரிடும் உழவர்களைக் கண்டறிந்து அவர்களுக்குத் தேவையான காலத்தில் முன்கூட்டியே பணத்தைக் கொடுத்து விடுவதுண்டு. இவ்வாறு செய்வதன்மூலம் சர்க்கரைத் தொழிற்சாலைக்குத் தேவையான கரும்பை முன் கூட்டியே உறுதியாகப் பெற்றுக் கொள்வதற்கான உறுதித் தன்மையைப் பெறமுடிகிறது. இதுபோன்று குறிப்பிட்ட காலத்தில்தான் மூலப் பொருள்களை வாங்கிக் கையிருப்பில் வைத்துக்கொள்ள முடியும். குறிப்பிட்ட காலத்தில் மட்டுமே சில பண்டங்களை விற்பனை செய்யமுடியும். இதுபோன்ற பண்டங்களைக் கடன் வணிகத்தின்மூலம் மொத்த விற்பனையாளர்களின் துணைக்கொண்டு குறிப்பிட்ட காலத்தில் விற்றாக வேண்டும். கடன் வணிகத்திற்கு நிறுவனத்திடம் மிகுந்த அளவு நடைமுறை மூலதனம் இருந்தாக வேண்டும். தொழில் நிறுவனங்கள் எந்த நேரத்திலும் இடர்களைச் சந்திக்க நேரிடலாம். தொழிலாளர் போராட்டத்தினால் சிக்கல் தோன்றலாம்;தீ விபத்தினால் சிக்கல் தோன்றலாம்; ஒரே தொழிலிலுள்ள பல நிறுவனங்களுக்கிடையே தோன்றுகின்ற போட்டியினால் சிக்கல் தோன்றலாம். எந்தவகையான சிக்கலையும் சமாளிக்கும் ஆற்றல் பெற்றுத் திகழும் நிறுவனம் சிறந்த நிறுவனமாகும். அவ்வாறு சமாளிப்பதற்கு நிறுவனங்கள் நிறைந்த நடைமுறை மூலதனத்திறனைப் பெற்றிருகக வேண்டும். இது போன்ற எதிர்பாராத இடர்களைச் சந்திப்பதற்குத் தயாராக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள நிதி சிறப்பு நடைமுறை மூலதனம் எனக் குறிப்பிடப்படுகிறது.

சு.வெ.பா.

**துணை நூல்கள்:**

**Acharya, B.K, & Govekar P.B.**, Principles of Business Orgnisation, Kitab Mahal, Allahabad, 1972.

**James Stephenson**, Principles and Practice of Commerce, Sir Isaac Pitman and Sons Ltd., London, 1951.

**Sohrab, R.Davar**, Organisation of Commerce, Progressive Corporation Pvt. Ltd., Bombay, 1971.

**நடையியல்:** ஓர் இலக்கியப் படைப்பின் வடிவம், கருத்து ஆகிய இரண்டினுக்கும் இடையே காணப்படும் உறவினை ஆய்ந்து விளக்கிச் சொல்வதே நடையியலின் அடிப்படை நோக்கமாகும். வடிவத்தினை மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக்கொண்டால் அது மொழியியலையும், கருத்தினை மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக்கொண்டால் அது பெரிதும் இலக்கியத் திறனாய்வினையும் சார்ந்ததாகிவிடும். இவ்விரு துறைகளும் மயங்கும் வேளையிலேயே நடையியல் மலர்கிறது. இலக்கியப் படைப்பு எவ்வளவு தொன்மை வாய்ந்ததோ, அவ்வளவு தொன்மையானது இலக்கியச் சுவைப்புமாகும். இவ்விலக்கியச் சுவைப்பினுக்குப் பெரிதும் துணை நிற்பது நடையியற் கோட்பாடு.

நடையியற் கோட்பாட்டின் அணுகு முறையில் தொல்காப்பியத்தை நோக்கும்போது தொல்காப்பியரது நடையியற் சிந்தனைகள் புலப்படுகின்றன. 'எழுத்தும், சொல்லும்' ஓர் இலக்கியத்தை ஆக்குவதற்குத் தேவையான மொழி என்னும் வடிவத்திற்கான இலக்கணத்தை விளக்க, 'பொருள்' அவ் விலக்கியம் வெளிப்படுத்தும் கருத்திற்கான இலக்கணத்தை விளக்கி நிற்கிறது. செய்யுளியலின் முதல் நூற்பா இதனையே வலியுறுத்துகிறது. மாத்திரை முதலாகச் சொல்லப்பட்ட சிலஉறுப்புகளும், வண்ணமும் வடிவத்திற்குரியவை; திணை முதலாகச் சொல்லப்பட்ட உறுப்புகள் சில கருத்திற்குரியவை; அம்மை முதலாகச் சொல்லப்பட்டவை, வடிவத்தினையும் கருத்தினையும் கொண்டு ஆக்கப்பட்ட இலக்கிய வகைகள். வடிவமும் கருத்தும் ஒருசேரக் காணப்படும்போதே இலக்கியச் சுவைப்பு நிகழ முடியும் என்பதே தொல்காப்பியர் முடிவு.

சமசுகிருத மரபினருள்ளும், கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குந்தகா, 'அணியும் அணிசெய்யப்படுவதுமாகிய இரண்டும் ஒருங்கிணைந்ததே கவிதையாகும்' எனும் கருத்தினையே வலியுறுத்திச் செல்கிறார். 'இரண்டையும் வேறுபடுத்துதல் ஒரு செயற்கையான போக்கு' எனக் கூறும் அவர் பல்வேறு நடைவகைகளை இனங்காண முயலுகிறார்.

பழங்கிரேக்கத்தில் நடை பற்றிய ஆய்வு புலப் பாட்டு நெறியின் ஒரு பகுதியாகவே விளங்கியது. இந்தியப் பெருநிலத்தில் நடையியற் சிந்தனைகள் கவிதையைச் சுற்றியே வளர்ந்தபோதும், கிரேக்கத்தில் அது உரைநடையைச் சுற்றியே முதலில் வளர்ந்தது என்பது குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும். பல் வேறு நடைகளை இனங்காணும் முயற்சி அங்கு பலராலும் மேற்கொள்ளப்பட்டது. அரிசுடாட்டில் சிசரோ, குவிண்டிலியன் போன்றோர் நடை ஆய்வில் முக்கிய பங்கேற்றனர்.

செய்யுளியல், அணியியல், புலப்பாட்டு நெறியி யல் என்று ஏதேனும் ஒன்றின் ஒரு பகுதியாகவே விளங்கிய நடை ஆய்வு, தனியொரு துறையாக நடையியல் என்ற பெயரில் மலர்ந்தது அண்மைக் காலத்திலேயே எனலாம். இக்கால நடையியலின் வளர்ச்சிக்குக் கால்கோளிட்டவர் சார்லசுபாலிஆவார். வரலாற்று மொழியியல், இலக்கியத் திறனாய்வு ஆகிய இரண்டு துறைகளிலும் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் நிகழ்ந்த சில மாறுதல்கள் நடையியல் மலர்ச்சிக்கு உந்துகோலாய் அமைந்தன. சார்லசு பாலி, தம் ஆசிரியர் திசசூரின் மொழியியற் கோட் பாட்டின் செல்வாக்கிற்குப் பெரிதும் ஆட்பட்டு, அதே அடிப்படையில் (மொழி என்பதும் பேச்சு என் பதும் வேறு வேறு நிலைகள் என்ற கோட்பாடு) நடையியலை அணுகினார். நடையைப் பற்றிய பாலியின் சிந்தனை பேச்சு வடிவினை ஒட்டியே எழுந் தது.

நடை என்றால் என்ன என்பதற்கான ஒரு வரை விலக்கணத்தைத் தருவதற்குப் பலரும் முயன்றுள்ள னர். எனினும், அனைவராலும் ஒப்புக் கொள்ளப் படக்கூடிய ஒன்று எதுவும் கிட்டவில்லை. 'தெரிவு, என்பதனையும், 'பிறழ்ச்சி' என்பதனையும் அடிப் படையாகக் கொண்டு பலரும் நடையினை விளக்க முயன்றுள்ளனர். படைப்பாளி அல்லது படைப்பு அல் லது படிப்பாளி என்ற அணுகு முறையில் இவை தரப் பட்டுள்ளன. எனினும், 'கரு-உரு' ஆகிய இரண்டிற் குமிடையே காணப்படும் உறவினை, அதாவது, ஒரு குறிப்பிட்ட கருத்து ஒரு குறிப்பிட்ட உருவத் தினை எங்ஙனம் பெறுகின்றது என்பதனை வெளிப் படுத்துவதே இன்று நடை ஆய்வாகக் கருதப்படுகிறது.

அன்றாட வாழ்க்கையில் ஒரு படைப்பாளி தான் பயன்படுத்தும் மொழியை எவ்வாறு படைப்பு மொழி யாக மாற்றுகின்றான் என்பதை வெளிப் படுத்தும் போதே அவனது அல்லது அப்படைப்பினது நடை வெளிப்படுகிறது. அவ்வாறு மாற்றும்போது கையாளப் படும் உத்திகளே திட்டப்பாங்குகள் எனப்படுகின்றன. இவை 'பயின்று வருதல்' 'விரித்தல்' 'நீக்கல்' 'நிலை மாற்றம்' எனப் பல வகையின. எடுத்துக்காட்டாக ஓர் ஒலி பயின்று வருவது எதுகை என்றும், மோனை என்றும், வண்ணம் என்றும் குறிப்பிடப்படுகின்றது. அதைப்போன்றே, ஒரு சொல் அல்லது தொடர் பயின்று வரலாம். கலித்தொகையினுள் வருவதனைப் போன்று ஒரு கருத்தே (சுரிதகம்) பயின்று வரலாம். ஒவ்வொரு படைப்பாளியும் இவ்வுத்தியைத் தனது தனித்தன்மைக்கேற்பப் பயன்படுத்திக் கொள்கிறான். இவ்வுத்திகள் பலவும், பல்வேறு நிலைகளில் பல்வேறு முறைகளில் கையாளப்படுகின்றன. ஒலிநிலை, இலக் கண நிலை, சொல்நிலை, பொருள்நிலை எனப் பல் வேறு நிலைகளிலும் நடைஉத்திகளைக் காணலாம். இவ்வாறு இனங்காணப்படும் உத்திகளை அடிப்படை யாகக் கொண்டு பல்வேறு நடை வகைகளை வரிசைப் படுத்தலாம். ஆசிரியர் நடை, கால நடை, இலக்கிய வகை நடை, மொழிநடை, நடைப் பொதுமை என அவை பலவகைப்படும்.

ஒரே நடைவகையினுள்ளேயே பல்வேறு நடை களைக் காணமுடியும். ஓர் ஆசிரியரே தேவைக்கேற்ப வேறு வேறு நடைகளைக் கையாளலாம். கட்டுரை நடை, வருணனை நடை, கவிதை நடை, விவரிப்பு நடை எனப் பலவகையினை ஒரே நூலினுள் பல்வேறு மாந்தர், பின்னணி, காலம், நிகழ்ச்சி ஆகியவற்றை விளக்குவதற்குப் பயன்படுத்தலாம்.

ஓர் ஆசிரியர் அல்லது படைப்பின் நடையினை இனங்கண்டு கொண்டுவிட்டதாலேயே அதனை ஒரு வர் ஒரு விதி முறைக்கு ஆட்படுத்த முடியாது. படைப் பாளியின் படைப்புரிமை எல்லையற்றது. ஒரே கருத் தைப் பல புலவர்கள் தம்முடைய பாடற்பொருளாகக் கொண்டுள்ளதைச் சங்க இலக்கியத்தில் பெரிதும் காணலாம். எனினும், எந்த இருவருடைய பாடல் களும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. நடை உத்தி களை வகைப்படுத்தலாமேயன்றி முன்னுரைக்கும் விதிகளாக மாற்ற முடியாது.

நடை உத்திகளை இனங்கண்டு கொளவது இலக்கியச் சுவைப்பிற்கு மட்டுமன்றி வேறு பலவற்றிற் கும் துணை செய்ய வல்லது சிதைந்துபோன சுவடி. களில் பாடலடிகளை மீட்டுருவாக்கம் செய்தல், ஆசிரியர் இன்னாரெனத் தெரியாத பாடல்களின் ஆசிரியரை ஓரளவிற்குக் கணித்தல், இரு ஆசிரியர் களுக்கிடையே காணப்படும் வேறுபாட்டினை விளக்கு தல், நூலின் காலத்தைக் கணித்தல் என இலக்கிய வரலாற்றின் பல நிலைகளில் நடை ஆய்வு துணை செய்ய வல்லது. ஜெ.நீ.

**துணை நூல்கள்:**

**Corbett, Edward, P.J.,** Classical rhetoric for the modern Student, Oxford University Press, 1971.

Enkvist, N.E., (et.al.) Linguistics and style, Oxford University Press, 1964.

Hough, Graham. Style and stylistics, Routledge Kegan Paul, New York, 1969.

**நத்தத்தனார்:** இப்பெயருடைய புலவர்கள் நால்வரைத் தமிழிலக்கியத்தில் காணலாம். ஒருவர் திருவள்ளுவ மாலையில் 'ஆயிரத்து' எனத் தொடங்கும் 16-ஆம் பாடலைப் பாடிய புலவர் ஆவர். மற்றொருவர் 'நத்தத்தம்' என்ற இலக்கண நூலை இயற்றிய புலவர் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். இவருடைய நூற்பா ஒன்று யாப்பருங்கல விருத்தியுரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கிறது. மூன்றாவதாக, பிசிராந்தையார் கோப்பெருஞ் சோழனோடு வடக்கிருந்த போது அவரைப் பற்றிக் கண்ணகனார் பாடியதாகக் குறிக்கப்படும் 'பொன்னும் மணியும்' என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடலை (புறம். 218) நத்தத்தனார் பாடினார் என்ற பாட வேறுபாட்டையும் உ.வே.சா. பதிப்பிற் காணலாம்.

நாலாமவராகப் பத்துப்பாட்டுள் ஒன்றான சிறுபாணாற்றுப்படையைப் பாடிய இடைக்கழி நாட்டுநல் லூர் நத்தத்தனார் என்ற புலவரைக் குறிப்பிடலாம்.

பெயரொற்றுமை கருதி மேற்குறிப்பிட்ட நால்வரும் ஒருவரே என மயங்க வேண்டுவதில்லை. தத்தன் என்ற பெயர் வழக்கு கி.பி.12-ஆம் நூற்றாண்டுவரை தமிழகத்தில் வழக்கிலிருந்து வந்துள்ளதைப் பிற்கால இலக்கியங்களால் அறியலாம். தத்தன் என்ற பெயரே, சிறப்பினை உணர்த்தும் 'ந' என்ற இடைச்சொல் லோடும் மதிப்பை உணர்த்தும் 'ஆர்' என்னும் விகுதியோடும் கூடி நத்தத்தனார் என வழங்கப்பட்டது.

இப்புலவர் நால்வருள் சிறுபாணாற்றுப்படை பாடிய நத்தத்தனாரே நாடும் ஊரும் அறியத்தக்க புலவராக உள்ளார். இவருடைய ஊர் திண்டிவனத்தையடுத்து உள்ள நல்லூர் ஆகும். இவ்வூருக்கு 8 கி.மீ. தெற்கேயே நல்லியக்கோடன் ஆண்ட ஓய் மாநாட்டுப் பகுதி உள்ளது. இப்பகுதி இன்றும் மக்களால் 'இடைக்கநாடு' என்று வழங்கப்படுகிறது.

திருவள்ளுவமாலையைப் பாடிய நத்தத்தனாரும் இவரோ என்று கொண்டால் 269 அடிகளை உடைய சிறுபாணாற்றுப்படையில் திருக்குறளின் சாயலை ஓரளவேனும் கண்டிருக்க முடியும். மேலும், அப்பாடலின் மொழிநடை மிகவும் நெகிழ்ச்சியாக உள்ளது. எனவே, இவர் நல்லூர் நத்தத்தனார் அல்லர் என்பது தெரிகிறது.

நத்தத்தம் என்ற இலக்கணநூலை இயற்றிய நத்தத்தனாரைப் பற்றித் தமிழிலக்கியத்தில் வேறு எங்கும் எச்செய்தியும் அறியக்கூடவில்லை. எனவே, இவர் நல்லூர் நத்தத்தனார் என்று கொள்வதற்கு இடமில்லை.

புறநானூற்று 218-ஆம் பாடலைப் பாடிய புலவர் பெயர் பாடவேறுபாடாகவே நத்தத்தனார் என்று வந்துள்ளது. இப்பெயருக்கு முன்னர் ஆற்றுப்படை பாடிய நத்தத்தனார் போல எவ்வித அடைமொழியும் காணப்படவில்லை. எனவே, நத்தத்தனார் என்ற பெயருடைய புலவர்கள் நால்வர் இருந்தனர் என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது. இவருள் சிறப்பிடம் பெறுபவர் சிறுபாணாற்றுப்படையை இயற்றிய இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரே ஆவார். இவர் தம் ஊருக்கு அருகில் இருந்த ஓய்மாநாட்டுத் தலைவன் நல்லியக்கோடனையும், அந்நாட்டில் சிறப்புற்று விளங்கிய எயிற்பட்டினம், வேலூர், ஆமூர், கிடங்கில், மாவிலங்கை ஆகிய ஊர்களைப் பற்றியும் தெளிவான செய்திகளைக் கூறியுள்ளார். மேலும் தம் நூலில் சேரநாட்டு வஞ்சி மாநகரத்தையும், பாண்டி நாட்டுக் கொற்கைத் துறைமுகத்தையும், மதுரை மாநகரையும், சோழர்களின் உறையூரையும் இவர் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். எனவே, இவர் பயண நாட்டம் உடைய புலவர் என்று கருதலாம். ச.செ.

**நத்தானியல் ஆதார்ன் (கி.பி. 1804-1864):** சிறந்த புதின ஆசிரியரும், சிறுகதையாளரும் ஆகிய நத்தானியல் ஆதார்ன் கி.பி.19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; தம் இலக்கியப் படைப்புகளில் குறியீடுகளையும் உருவகங்களையும் மிகுதியாகப் பயன்படுத்தியவர். கலையுணர்ச்சி மிக்க அமெரிக்க எழுத்தாளர் என்று பாராட்டப்பெறும் இவரது ஆங்கில நடை செப்பமும் செறிவும் நிரம்பியதாகும். கதைமாந்தர் தம் உணர்ச்சிகளை அவர்தம் வாழ்க்கைச் சூழலின் பின்னணியோடு படம் பிடித்துக்காட்டுவது இவரது சிறப்பியல்பு.

ஆதார்னின் முன்னோர் கி.பி.17-ஆம் நூற்றாண்டின் மத்தியில் அமெரிக்கப் பெருநிலப்பரப்பின் நியூ இங்கிலாந்துப் பகுதியில் மசாசுசெட்டு நகரில் வணிகர்களாகக் குடியேறியவர்கள். இவர் தந்தை திரைகடலோடித் திரவியம் தேடியவர். நத்தானியல் ஆதார்ன் அமெரிக்க நாட்டுச் சேலம் நகரில் கி.பி.1804-ஆம் ஆண்டு பிறந்தார். இவர் நான்காண்டுச் சிறுவராக இருந்தபோது, கடற் பயணத்தில் சென்றிருந்த இவர் தந்தை மஞ்சள் சுரத்தினால் பாதிக்கப்பட்டு மரணம் அடைந்தார். எனவே, தாய்வழிப் பாட்டனாருக்குச் சொந்தமான கிராமப்புறப் பண்ணையில் இவர் வளர்ந்தார். சுற்றிலும் மரங்கள் அடர்ந்த அப்

பகுதிகளில் தூண்டிலும் துப்பாக்கியுமாகத் திரிவது இவரது பொழுதுபோக்கு. ஒன்பதாம் வயதில் காலில் ஏற்பட்ட ஒரு காயம் ஏறத்தாழ மூன்றாண்டுகள் இவரை முடமாக்கி விட்டது. இல்லத்திலேயே அடைபட்டுக் கிடந்தமையால், தொடர்ந்து புத்தகங்களைப் படிக்கும் பழக்கம் ஏற்பட்டது. சேக்சுபியர் நாடகங்களையும், சர் வால்டர் இசுகாட்டு புதினங்களையும் இவர் விரும்பிப் பயின்றார். சான் பனியன்போன்ற மதபோதகரின் படைப்புகளை ஆழ்ந்து சுவைத்தமையினால், உருவகமாக எழுதும் பழக்கம் இவருக்குக் கைதேர்ந்த கலையாயிற்று.

இவர்கி.பி.1821-ஆம் ஆண்டு முதல்நான்கு ஆண்டுகள் ஆதார்ன் கல்லூரியில் பயின்றார். அங்கு மாணவராக இருந்தபோதே சிறுகதைத் தொகுதி ஒன்றை வெளியிட்டார். அமெரிக்கக் கவிஞர் இலாங்பெல்லோ இவர்தம் வகுப்புத்தோழர், கல்லூரிப் படிப்பு முடிந்ததும் ஆதார்ன் பாசுட்டன் நகரில் அறிவியல் தொடர்பான வார மாத இதழ்களின் பதிப்பாசிரியராகச் சில காலம் பணியாற்றினார்; குழந்தைகளுக்கேற்ற கதை கட்டுரைகளையும்எழுதினார். எட்கார்ட் ஆலன்போ, எமர்சன், தோரு போன்ற சிந்தனையாளர்களும் எழுத்தாளர்களும் இவர்தம் நண்பர்கள். சோபியா பேபடி எனும் நங்கையை கி.பி. 1842-ஆம் ஆண்டு இவர் காதல் மணம் புரிந்தார். எழுத்துப் பணியில் கிடைத்த வருமானம் இந்த இளந் தம்பதியருக்குப் போதுமானதாக இல்லை. பின்னர் கி.பி. 1846–ஆம் ஆண்டில் சேலம் துறைமுகத்தில் சுங்கவரித் துறையில் அரிதின் முயன்று ஒரு பதவியினைப் பெற்றார். ஆயினும் எழுத்துப் பணியினை மட்டும் நிறுத்தவேயில்லை. மூன்றாண்டுகளுக்குப் பின்னர் அமெரிக்கத் தேர்தலில் குடியரசுக் கட்சி மாறிய போது இவர் தம் பதவியை இழக்க நேரிட்டது. அதனால் ஏற்பட்ட மனவருத்தத்தையும் கசப்பான உணர்ச்சிகளையும் 'சிவப்புக் கடிதம்' (Scarlet Letter – கி.பி. 1850)என்னும் புதினத்தின் முன்னுரையில் இவர் குறிப்பிடுகிறார். குற்றம் செய்த நால்வர்தம் குறுகுறுத்த நெஞ்சங்களை மையமாகக் கொண்ட இப்புதினத்தில் பாவம் செய்தோர் வருந்தி மனம் திருந்துவதே முடிவாக அமைகிறது. இவர் எழுதியவற்றுள் இதுவே மிகச் சிறந்த புதினமாகும். தமது இளமைக் காலப் பண்ணை வாழ்வினை நினைவு கூர்ந்து, இவர் புதினம் எழுதியுள்ளார்.

சேலம் நகரத்துப் பெரிய மாளிகை உழைக்காது உண்ணுவோரின் பொறுப்பில் வெறும் ஆடம்பரச் சின்னமாகத் திகழ்கிறது. இதனைப் பற்றிய 'ஏழு காப்புறைக் கம்பிகளின் மாளிகை'(1851)என்னும் நூல் சிறந்த குறியீட்டுப் புதினமாகும். காலப்போக்கில் அம்மாளிகையின் தோட்டம் சீரழிகிறது. கிணற்று நீர் கரிக்கிறது. பின்புலத்தில் உள்ள கோழிப்பண்ணை நலிகிறது. அந்த மாளிகை அதே குடும்பத்தைச் சார்ந்த உழைப்பாளி ஒருவனுக்குச் சொந்தமானதும் சீராக உயர்கிறது. செழிப்படைகிறது. தோட்டம் பூத்துக் குலுங்குகிறது. கிணற்று நீர் தூய்மையாகிறது. கோழிப்பண்ணையில் ஏராளமாக முட்டைகள் கிடைக்கின்றன. புதினத்தின் போக்கினையும், கதை மாந்தரின் உயர்வு தாழ்வினையும் இப்படிக் குறியீடுகளின் மூலம் திறம்படக் கையாளுவதில் ஆதார்ன் கைதேர்ந்தவர்.

அமெரிக்கக் குடியரசுத் தலைவர் பிராங்கிளின் பியர்சு என்பார் ஆதார்னை இங்கிலாந்தில் இலிவுலர் பூல் நகரில் கி.பி. 1853-இல் அமெரிக்கச் சார்பாளராக அமர்த்தினார். பியர்சு இவர்தம் வகுப்புத் தோழர். அவரது வாழ்க்கை வரலாற்றினையும் இவர் எழுதியுள்ளார். இங்கிலாந்தில் பணியாற்றிய போது பிற ஐரோப்பிய நாடுகளான பிரான்சு, இத்தாலி போன்ற பிற ஐரோப்பிய நாடுகளையும் சுற்றிப் பார்த்தார். இத்தாலியில் குடியேறிய அமெரிக்கக் கலைஞரது வாழ்வைப் பற்றி எழுதிய புதினமே இவர் எழுதிய கடைசி நூலாகும்.

இங்கிலாந்தில் பணியினை முடித்து கி.பி. 1860 -ஆம் ஆண்டு தம் குடும்பத்துடன் இவர் அமெரிக்காவுக்குத் திரும்பினார். அங்கு உள்நாட்டுச் சண்டை தொடங்கிவிட்டது. உடல்நலம் குன்றிய நத்தானியல் ஆதார்ன் கி.பி. 1864 – ஆம் ஆண்டு தமது அறுபதாம் வயதில் காலமானார். ஆயினும் இறக்கும் வரை எழுத்துப் பணியை நிறுத்தவேயில்லை. இவர் கட்டுரைகளையும் கதைகளையும் புதினங்களையும் எழுதிக் கொண்டேயிருந்தார். அவற்றுள் முற்றுமாக எழுதப்பட்ட சில நூல்கள் அவரது மறைவுக்குப் பின்னரே வெளிவந்தன. ப.அ.

**துணை நூல்கள்:**

Nathaniel Hawthorne – Randall Steward, New Haven, 1948.

Nathaniel Hawthorne – Mark Van Doren, New York, 1949.

**நதிநீர்ப் போக்குவரத்து**: நீர்ப் போக்குவரத்தில் நதிப் போக்குவரத்து ஒரு தனித்துறையாக விளங்குகிறது. நீர்ப் போக்குவரத்தில் மூன்று துறைகள் உள்ளன. அவை 1) நதிப் போக்குவரத்து (River transport), 2) கால்வாய்ப் போக்குவரத்து (Canal transport), 3) கடற் போக்குவரத்து (Sea transport) எனப்படும்.

நதிகளின் நீர்ப்போக்கைப் பயன்படுத்திப்பொருள்களைச் சிறிய படகுகளிலும் கப்பல்களிலும் ஏற்றிச்

செல்வது நதிப் போக்குவரத்து எனப்படும். சில நேரங்களில் பொதுமக்களும் நதியைக் கடந்து செல்வதற்குப் படகுகளிலும் கப்பல்களிலும் பயணம் செய்ய வேண்டிய நிலை ஏற்படுவதுண்டு. பிரான்சு, செருமனி முதலிய நாடுகளில் தொடக்க காலத்தில் நதிப் போக்குவரத்து செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. மணல், நிலக்கரி முதலியவை நதிப் போக்குவரத்தின் துணைக்கொண்டு எடுத்துச் செல்லப்பட்டன. நதிப் போக்குவரத்தின் பயன்கள் பலவாகும். நீர்ப் போக்குவரத்து என்று பார்க்கும்போது அவற்றின் மூலம் விளைகின்ற பயன்களால் நாட்டின் பொருளாதாரம் பெருமளவிற்குப் பயன்பெற வாய்ப்புள்ளது. நதிப் போக்குவரத்தை உள்நாட்டு நீர்ப் போக்குவரத்து என்றும், கடல் போக்குவரத்தைப் பன்னாட்டு நீர்ப் போக்குவரத்து என்றும் குறிப்பிடலாம் கடல்வழி நீர்ப் போக்குவரத்தில் இந்தியா பெரும் புகழைப் பெற்றிருந்தது. தமிழகத்திலிருந்து சாவா, சுமித்திரா, கடாரம், பிலிப்பைன்சு முதலிய நாடுகளுக்கெல்லாம் கடல்வழிப் போக்குவரத்தின் மூலம் பண்டங்கள் ஏற்றுமதி செய்யப்பட்டதற்கு வரலாற்றுச் சான்றுகள் உள்ளன. கிரேக்கம், உரோமாபுரி முதலிய நாடுகளுடனும் வாணிகத் தொடர்பு கடல்வழி மூலம் இருந்து வந்துள்ளது.

படகில் பண்டங்களை ஏற்றிச் செல்வது எளிது. நதிப் போக்குவரத்து வளரும்பொழுது சிறிய கப்பல் உற்பத்தி செய்வதும், படகு உற்பத்தி செய்வதும் மிகுதிப்பட வாய்ப்புள்ளது. பண்டங்கள், தொழில் நகரங்களில் இருந்து பல நகரங்களிலுள்ள அங்காடிகளுக்கும் எடுத்துச் செல்லப்படுகின்றன. பண்டங்கள் தேங்கிவிடாமல் விற்பனைக்கு எடுத்துச் செல்லப்படுவது தொழில் வளர்ச்சிக்கு வழிவகுக்கிறது. பல நன்மைகள் இருப்பினும் நீர்ப் போக்குவரத்திற்கே உரிய பல சிக்கல்களும் உள்ளன. நதிப் போக்குவரத்து சுற்றுப்பாதைகளைக் கொண்டதாகவே அமைந்துள்ளது. மேலும், நதிகளின் கரைகளில் அமைந்துள்ள நகரங்களுக்கு மட்டுமே பண்டங்களைக் கொண்டு செல்ல முடிகிறது. நதிகள் அனைத்தும் போதிய ஆழமானதாக இருப்பதில்லை. நதிகளில் பாறைகள் உள்ளன; நீர்வீழ்ச்சிகளும் உள்ளன. இந்தவகையான நதிகளில் போக்குவரத்தை வளர்ச்சியடையச் செய்ய முடியவில்லை.

தமிழகத்தில் காவிரி ஆற்றில் நீர் நிரம்பி வழிந்த போது படகுகளின் துணைக்கொண்டு போக்குவரத்து நடைபெறுவதுண்டு. கேரளாவில் உள்ள உப்பங்கழிகளிலும் படகுகள் மூலம் போக்குவரத்து நடைபெறுகிறது. கங்கை, யமுனை, பிரமபுத்திரா முதலிய நதிகள் வற்றாத நதிகளாகும். இவற்றில் நதிப் போக்குவரத்து நடைபெறுகிறது. பிரமபுத்திராவில் 1280 கிமீ. தூரத்திற்குப் பண்டங்கள் படகுகள் மூலம் ஏற்றிச் செல்லப்படுகின்றன. இந்தியாவில் நதிப் போக்குவரத்தை வளர்ப்பதற்கென உள்நாட்டு நீர்ப் போக்குவரத்துக் குழுவை 1986-இல் இந்திய அரசு அமைத்தது. அலகாபாதிற்கும் கால்டியாவிற்கும் இடைப்பட்ட நீர்வழிப் பாதையைத் தேசிய நீர்வழிப் பாதையாக இந்திய அரசு அறிவித்தது. கங்கை-பாகீரதி-ஊக்ளி ஆற்றுவழிப் பாதையைச் சீர்படுத்தும் பணியில் இந்திய அரசு தீவிரமாக ஈடுபட்டுள்ளது.

சு.வெ.பா.

**துணை நூல்கள்:**

**Ghosh B.B.**, Business Organisation, Mukherjee& Co. Pvt. Ltd., Calcutta, 1951.

**Sohrab R. Davar.**, Organisation of Commerce, Progressive Corporation Pvt.Ltd., Bombay, 1971.

***நந்தகுமார்***: இராசா நந்தகுமார் வங்காளத்தில் செல்வாக்கு மிகுந்த ஒரு பிராமணர் ஆவார். வங்காள நவாபுகளான சிராசு-உத்-தௌலா, மீர்சாபர் ஆகியவர்களின் கீழ் இவர் உயர்ந்த பதவிகள் வகித்து வந்தார்.

கல்கத்தாவில் தலைமை ஆளுநர் வாரன் ஏசுடிங்சிற்கும் அவரது ஆலோசனை மன்ற உறுப்பினர்களுக்குமிடையே மிகுந்த கருத்து வேறுபாடு தோன்றியிருந்த பொழுது, நந்தகுமார் வாரன் ஏசுடிங்சு மீது குற்றம் சாட்டினார். ஏசுடிங்சு (கி.பி.1775-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் மீர்சாபரின் விதவை மனைவி முன்னி பேகத்தை இளைஞராகயிருந்த நவாபு முபாரக் உத்-தௌலாவின் காப்பாளராக நியமிப்பதற்கு, முன்னி பேகத்திடமிருந்து ரூ.3,54,105 கையூட்டுப் பெற்றார் எனக் குற்றம் சாட்டினார். இக்குற்றச் சாட்டினை ஆலோசனை மன்ற உறுப்பினர்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். நந்தகுமார், மன்றத்தின் முன் வந்து குற்றச்சாட்டைக் கூறுவதாகக் கூறினார். ஏசுடிங்சு மன்ற உறுப்பினர்கள் அமர்ந்து தம்மீது சாட்டப்படும் குற்றத்தைக் கேட்க அனுமதி மறுத்ததோடல்லாமல் கூட்டத்தைக் கலைத்துவிட்டுச் சென்றார், அவர் இல்லாமல் மன்ற உறுப்பினர்கள் நந்தகுமாரை அழைத்துக் குற்றச் சாட்டைக் கேட்டறிந்தனர். பின்பு, கையூட்டாகப் பெற்ற பணத்தைக் குழுவின் கருவூலத்தில் செலுத்துமாறு வாரன்ஏசுடிங்சிடம் தெரியப் படுத்தினர்.

வாரன்ஏசுடிங்சு நந்தகுமாரின் மீது ஒரு சதித் திட்டக் குற்றத்தினைச் சுமத்தினார். இவ்வழக்கு நடந்துகொண்டிருந்தபொழுது நந்தகுமாரின் பழைய எதிரியான மோகன் பிரசாத்து, ஐந்தாண்டுகட்கு

முன்பு நடந்த வழக்கொன்றில் இவர் கள்ளக் கையெழுத்திட்டார் என்று குற்றம்சாட்டினார் உடனே நந்தகுமார் சிறைபிடிக்கப்பட்டார். புதிய உச்சநீதிமன்றம் இவ்வழக்கினைக் கேட்டு நந்தகுமார் குற்றவாளியெனத் தீர்ப்பளித்துத் தூக்குத் தண்டனை அளித்தது. நந்தகுமார் தூக்கில் இடப்பட்டார்.

அறிவுரை மன்ற உறுப்பினர்களின் உதவியை நந்தகுமார் நாடிய பொழுது அவர்கள் வாய்திறவாது இருந்தனர். 'நந்தகுமாரின் இறப்பு தலைமை ஆளு நரை எதிர்ப்பதற்கு மிகவும் வலிமையான ஆயுத மாக இருக்கும்' என்று ஒருவேளை அவர்கள் கருதி யிருக்கக் கூடும்.

பெயரளவில் கள்ளக் கையொப்பமிட்ட குற்றத் திற்காக மரணதண்டனை பெற்றாரெனினும் உண் மையில் தலைமை ஆளுநரைக் குற்றஞ் சாட்டியதற் காகவே இவருக்கு அத்தண்டனை தரப்பட்டது என்று நம்பினர்.

வாரன்ஏசுடிங்சும் தலைமை நீதிபதி எலிசா இம்பியும் (Elijah Impey) சதி செய்தமையால் இவ் வழக்கில் நீதி கொலையுண்டது என்று கருதப்படு கிறது. ஆனால், தலைமை நீதிபதியும் ஏசுடிங்சும் சந் தித்துப் பேசியதற்கு ஆதாரமில்லை. இவ்வழக்கில் தலைமை நீதிபதி மட்டுமல்லாமல் அவருடன் மற்ற மூன்று நீதிபதிகளும் சேர்ந்து தீர்ப்பு வழங்கியுள்ள னர். ஏசுடிங்சு மற்ற மூன்று நீதிபதிகளையும் தூண்டி னார் என்பதற்கு ஆதாரமில்லை. மேலும் மரண தண்டனையை ஆயுள் தண்டனையாக மாற்றுமாறு நந்தகுமாரின் சார்பில் நீதிமன்றத்தில் முறையீடு செய்யப்பட்டதற்குரிய சான்றுகள் ஒன்று கூடக் கிடைக்கவில்லை. ஆதலால்,இந்த வழக்கில் ஏசுடிங்சு தலையிட்டார் என்பதற்குச் . சான்றுகள் இல்லை யென்றே கருதலாம்.

முகமதிய சட்டதிட்டங்களை அடிப்படையாகக் கொண்டு வகுக்கப்பட்டதும், வங்காளத்தில் நடை முறையில் இருந்ததுமான குற்ற இயல் சட்டத்தின்படி கள்ளக் கையெழுத்திடுதல் என்னும் குற்றத்திற்கு மரண தண்டனை விதிப்பது பொருத்தமற்றதாகும். நன்கு நிறுவப் பெற்ற இந்திய நீதித் துறை மரபிற்கு முரணாக ஆங்கிலக் குற்றவியல் தண்டனையை இந்திய நாட்டு வழக்கிற்கு விதித்தது மாபெருந்தவ றாகும். மேலும், இவ்வழக்கில் நீதிபதிகளோ நந்த குமாரின் சாட்சியங்களைக் கடுமையாகக் குறுக்கு விசாரணை செய்துள்ளதும் வருந்தத்தக்கதாகும். இதில் ஒன்று மட்டும் உண்மை என்று எளிதில் புல னாகிறது, நீதி தவறாக வழங்கப் பட்டுள்ளது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். அ.சி.

**துணைநூல்கள்:**

**Chhabra, G.S.** 'Advanced Study in the History of Modern India, Vol.I Sterling Publishers Pvt. Ltd., New Delhi, 1978.

**Majumdar, R.C. (Ed.)** History and Culture of the Indian People. Vol. VIII. The Maratha Supremacy, Bharatiya Vidya Bhavan, Bombay, 1977.

**Roberts, P.E.** History of British India, Oxford University Press, London, 1970.

**நந்தகோபன்:** இவன் கோகுலம் என்னும் ஊரில் வாழ்ந்த குறுநில மன்னன்; இடையர்களுக் குத் தலைவன். இவன் நந்தகோன் என்றும் வழங் கப்பட்டான்; கோகுலத்தரசன் வசுதேவருக்கு நண் பன், இவன் மனைவி பெயர் யசோதை. இவன் முற் பிறவியில் துரோணன் என்ற பெயரிலும் இவன் மனைவி யசோதை வசுமதி என்ற பெயரிலும் இருந் தனர். இருவரும் பிரமதேவனைக் குறித்துத் தவம் செய்தார்கள். மிகுந்த பத்தியுணர்வோடு செய்த தவத்தை மெச்சிப் பிரமதேவன் பிறருக்கு எளிதில் கிட்டாத வரத்தை அருளினார். துரோணனும் வசு மதியும் நந்தகோபன் யசோதையாகக் கோகுலத்தில் பிறந்து, அவதாரம் கொள்ளும் கண்ணனை வளர்க் கும் சிறந்த பேற்றினைப் பெறுமாறு பிரமதேவன் அருளிச் செய்தான். அவ்வாறே வசுதேவர், தேவகிக் குப் பிறந்த எட்டாம் குழந்தையாகிய கண்ணனைக் கம்சனுக்கு அஞ்சி, நந்தகோபன் இல்லத்தில் கொண்டு வந்து விடுத்தார். கண்ணன் கோகுலத்தில், இவனு டைய இல்லத்தில் வளர்ந்தபோதுதான் குழந்தைத் திருவிளையாடல்களைப் புரிந்தார்.

2) சீவக சிந்தாமணியில் வரும் கோவிந்தையா ரின் தந்தை. இவன் இராசமாபுரத்தின் ஆயர்களுக் குத் தலைவனாக விளங்கினான். இவன் மனைவி கோதாவரி. அரசனின் பசுக் கூட்டங்களை வேடர் கள் கவர்ந்து சென்றதையும், அவற்றை மீட்கமுடியா மல் படைகள் திரும்பியதையும் இவன் அறிந்தான். வருத்தம் அடைந்த நந்தகோபன் நிரையை மீட்டு வருபவர்க்குத் தன் மகள் கோவிந்தையைத் தருவ தாக அறிவித்தான். இச்செய்தியறிந்த சீவகன் தன் தோழன் பதுமுகனோடு சென்று நிரை மீட்டுவந்த பின் கோவிந்தையைப் பதுமுகனுக்கு மணம் முடித்து வைத்தான். சா.கி.

**நந்தர்கள் (கி.மு.375-324):** இவர்கள் பண் டைய இந்தியாவில் மகத நாட்டை கி.மு.4-ஆம் நூற் றாண்டில் ஆண்ட அரசமரபினர். சைசுநாக மரபினை அடுத்து ஆட்சிக்கு வந்த நந்த மரபினர் நவநந்தர் கள் என்று சொல்லப்பட்டனர். இம்மரபைத்

தோற்றுவித்தவன் மகாபத்ம நந்தன் ஆவான். பாடலி புத்திரம் இவர்களின் தலைநகரம்.

**நவநந்தர்கள்:** இன்றைய பட்னா, கயா முதலிய மாவட்டங்களைக் கொண்ட பீகார் மாநிலத்தின் தென்பகுதியே பண்டு மகதநாடு என்று சொல்லப் பட்டது. நவநந்தர்கள் என்பதற்கு ஒன்பது நந்தர். கள் எனப் பலர் பொருள் கொள்கின்றனர். புராணங் களும் ஒன்பது நந்தர்கள் நூறு ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் என்று கூறும். நவநந்தர்கள் என்பதற்குச் புதிய நந்தர்கள் எனப் பொருள் கொள்வாரும் உளர். இவர்கள் 155 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் எனச் சமண நூல்கள் குறிப்பிடுகின்றன. இலங்கை பௌத்த நூல்கள் இவர்கள் 22 ஆண்டுகளே (கி.மு 345-321) ஆண்டனர் எனக் கூறுகின்றன.

மகா வமிசத்தில் உக்கிரசேனன், பந்துகன், பந்து கதி, பூதபாலன், இராட்டிரபாலன், கோவிசனகன், தசிசுத்தகன், கவிவரான், தனன் ஆகிய ஒன்பது நந்தர் கள் குறிக்கப்படுகின்றனர்.

**மகாபத்ம நந்தன்:** இம்மரபின் முதல் வேந்தனும் புகழ்மிக்க வேந்தனும் இவனேயா வன். இவன் சத்திரபந்து என்னும் சைசுநாக மரபு மன்னனுக்கும் சூத்திரப் பெண் ஒருத்திக்கும் பிறந்தவன் என்றும், நாட்டியமாதுக்கும் நாவிதன் ஒருவனுக்கும் பிறந்தவன் இவன் என்றும் பலவிதமாகக் கூறப்படுகிறது. மகாபத்மநந்தன் 'ஏகராசா' என்று குறிக்கப்படுகிறான். இவன் வடக்கில் இச்சவாகு, பாஞ்சாலம், காசி, கலிங்கம், அசுமகா, குரு, மைதில கம், சூரேசனம் முதலான நாடுகளையும், தெற்கே குண்டல நாடு எனப்படும் மேற்குத்தக்காணத்தையும், வடக்கு மைசூரையும் வென்றான். மகாபத்ம நந்தன் கலிங்கத்தையும் மற்றும் சில இடங்களையும் வெற்றி கொண்டு, அவ்விடங்களில் இருந்த புனித பொருள் களை அகற்றினான் என்று கூறப்படுகிறது. இவன் மாபெரும் படையை நிருவகித்தான் என்று 'கர்ட்டி யசு' (Curtius) என்னும் கிரேக்க ஆசிரியர் கூறு கிறார்.

**தனநந்தன்:** மகாபத்ம நந்தனுக்குப்பின் அவனு டைய எட்டு மகன்களும் ஒருவர்பின் ஒருவராக அரசு கட்டிலேறினர். அவர்களுள் கடைசியாக ஆண்டவன் தான் தனநந்தன். இவன் நிறைந்த செல்வத்தைப் பெற்றிருந்ததால் தனநந்தன் எனச் சொல்லப்பட் டான். சீனப்பயணி யுவான் சுவாங்கும் தமிழ்ச் சங் கப் புலவர்களும் இவனது பெருஞ்செல்வத்தைக் குறிப்பிட்டுள்ளனர்.

**வீழ்ச்சி:** இவர்கள் சமணச்சார்புடையவர்கள். புராணங்கள் இவர்களைச் சமயமற்றவர்கள் (அதர் மிகர்) என்று இழித்துரைக்கின்றன. சந்திரகுப்தன் ஏறத்தாழ கி.மு.324 அல்லது 323-இல் சாணக்கிய னின் உதவியுடன் தனநந்தனை வீழ்த்திவிட்டு, மௌரியப் பேரரசினைத் தொடங்கினான். மகத நாட்டில் நந்தர் குலம் ஒழிந்து மௌரியர் மரபு எழுந்தது. ம.இ.

**துணை நூல்கள்:**

**கோ.தங்கவேலு**, இந்திய வரலாறு, கி.பி.1206வரை, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1973.

**Prakash OM**,. (Editor)-Early History of India(From earliest Times to 319 A.D.). The Indian Press (Pubs) Private Ltd., Allahabad. 7th Enlarged Edit. 1980.

***நந்தனார்***: காண்க: திருநாளைப் போவார்.

***நந்தனார் சரித்திரக் கீர்த்தனை*** என்னும் நூல் கோபாலகிருட்டிண பாரதியாரால் இயற்றப் பெற்றது. இந்நூலாசிரியர் கி.பி. 19-ஆம் நூற் றாண்டில் வாழ்ந்தவர். இவர் திருவாரூருக்கு அருகி லுள்ள நரிமணம் என்ற ஊரில் அந்தணர் குலத்தில் இராமசாமி பாரதியாரின் திருமகனாகப் பிறந்தவர். பரம்பரையாக இசைத்துறை வல்ல குடும்பமாதலின் இவரும் இசைக்கலையில் வல்லவராயிருந்தார். இவர் கோவிந்தய்யர் எனும் குருவை அடுத்து உபதேசம் பெற்று பிரமசாரியாகவே வாழ்ந்து வந்தார். இவரே நந்தனார் சரித்திரத்தைக் கீர்த்தனையாகப் பாடின தோடன்றிப் பல ஊர்களிலும் கேட்டோர் மகிழும் வண்ணம் இசைச் சொற்பொழிவுகளும் ஆற்றினார். இவர் பெரியபுராணத்திலுள்ள வேறுசில நாயனார் வரலாறுகளையும் கீர்த்தனங்களாகப் பாடினாலும் இந்நூலே யாவராலும் மெச்சத்தக்க தலைமையிடத் தைப் பெற்றுள்ளது. இவர், தம் தொண்ணூறாம் வயதில் இறைவன் திருவடி அடைந்தார்.

நந்தனார் சரித்திரக் கீர்த்தனை இறைவணக்கம் கீர்த்தனம், கட்கா, பெரியகட்கா, தண்டகம், நொண்டிச்சிந்து, சிந்து, இலாவணி, கண்ணி, தோடயம், மங்களம், ஆனந்தக்களிப்பு, இருசொல் அலங்காரம், அகவல், ஏசல், நாமாவளி, கலித்துறை, துக்கடா, கவாய், விருத்தம், வசனம் என்னும் இருபத் தொரு உறுப்புகளைக் கொண்டுள்ளது. இடை யிடையே வரும் வசனம் நீங்கலாகப் பல்லவி, அனு பல்லவி, சரணம் என்ற பகுதிகளைக் கொண்ட 134 கீர்த்தனங்களோடு சேர்த்து மொத்தம் 298 பாடல் களை இந்நூல் கொண்டுள்ளது. நொண்டிச்சிந்து, இலாவணி, கண்ணி, ஆனந்தக்களிப்பு, ஏசல் முதலிய பகுதிகள் யாவும் பாமர மக்களையும் தன்வயப்படுத்

தும் தன்மை வாய்ந்தவை. அதனாலேயே நந்தனார் சரித்திரக் கீர்த்தனை குக்கிராமங்கள் தோறும் பாமர மக்கள் வாயிலும் பாடும் பெருமை பெற்றிருந்தது. 'ஐய ஒரு செய்தி கேளும்' என்னும் நொண்டிச் சிந்தும், 'மார்கழி மாதம் திருவாதிரை நாள்' என்னும் கண்ணியும், 'சிவலோக நாதனைக்கண்டு' 'சிதம்பரம் போகாமலிருப்பேனோ' என்னும் கீர்த்தனங்களும் இப்பொழுதும் நினைத்தால் மயிர்க்கூச்செறியவைக் கும் உணர்ச்சிமிக்க பரவசமூட்டும் பாடல்களாகும். நந்தனாரின் பத்திப்பெருக்கை நினைத்து அவரைச் சேர்ந்த மற்றவர்களெல்லோரும் எள்ளி நகையாடு கின்றனர். அப்பகுதி ஏசலென்னும் தலைப்பில் காணப் பெறுகிறது. நந்தனாரைப் பார்த்து ஒருவர் 'மூக்கு நுனியைப் பார்த்து முணுமுணுத் தெந்நேரம் காக்கை போலச் சும்மா கதறுகிறீர்' என்றார். அதற்கு விடை யாக 'வாக்கிலே சிவநாமம் வாராத பாவிகள் நாக்கிலே ஊசியை நாட்டுவேனென்றார்' என்று நந்தனார் கூறும் பதில் எவ்வளவு பத்தி உறைப்பா யுள்ளது என்பது நினைக்கத்தக்கதாம். அதுபோன்றே இலாவணி, ஆனந்தக்களிப்பு முதலியனவும் பெரும் மகிழ்ச்சிக்கடலில் திளைக்கவைக்க வல்லவை. கட்கா, பெரியகட்கா, தோடயம், துக்கடா, கவாய் முதலிய உறுப்புகள் இச்சரித்திரக் கீர்த்தனையில் காணப் பெறும் புதிய உறுப்புகளாகும். பல கீர்த்தனப் பாடலாசிரியர்களுக்கும் வழிகாட்டியாய் அமைந்த இவர் தமிழ்த்தாய்க்கு ஒரு புத்தணியைச் சூட்டிய பெருமகனாராவார். இரா.ச.

**நந்தாதேவி** இந்தியாவில் உத்தரப்பிரதேசத் தில் இமயமலைத்தொடரில் உள்ள ஒரு மலைச்சிகரம். இதன் உயரம் 7,821.8 மீ. புராணத்தின்படி, இச்சிகரத் தைச் சிவபெருமான் மனைவி நந்தாதேவி தன் இருப் பிடமாகக் கொண்டனள் என்று ஒரு நம்பிக்கை நிலவுகிறது. இச்சிகரத்தை அடுத்துள்ள மாவட்டத் தின் பெயர் தேரீ-கார்வால் (Tehri-Garwal)என்பதா கும். ஆங்கில-அமெரிக்கக் கூட்டுக் குழு ஒன்று 1936 -இல் இச்சிகரத்தின் உச்சிக்குச் சென்றது. இம்முயற்சி யில் வெற்றி பெற்றவர்கள் தில்மான்(Tilman), ஓடெல் (Odell) என்ற இருதலைவர்களாவர். தெ.பா.

**நந்தி**: இவர் 'நந்திகேசுவரர்', 'இடபம்', 'விடை' என்றும் கூறப்படுகிறார். சிவன்கோயில்களில் கரு வறைக்கு எதிரில் இவர் வீற்றிருப்பார். இவரை முதலில் வழிபட்டுப் பின்பு தான் இறைவனை வழி படச் செல்ல வேண்டும். ஞானம், தருமம் ஆகியவற் றின் உருவமே நந்தியாகும். இவருடைய சிறப்பை இலக்கியம், புராணம், கலை ஆகியவற்றின் வாயி லாக அறியலாம்.



நந்தி

சிவபெருமான் தேவியுடன் தமக்கு விருப்பமான நந்தி வாகனத்தின் மீது ஏறி அமர்ந்து, பக்தர்களுக் குக் காட்சியளிக்கிறார். இதுகுறித்துச் சம்பந்தர், அப் பர், சுந்தரர் ஆகியோர் பாடியுள்ளனர்.

சிவபெருமான் நடனமாடும்போது, இவர் 'முழவு என்னும் இசைக்கருவியை வாசிப்பார். இதற்குச் சுத்த மத்தளம் என்று பெயர். இவர் சிவ கணங் களின் தலைமைப் பதவியையும் சிவன்கோயில்களின் தலைவாசல் காக்கும் உரிமையையும் பெற்றவர்.

நந்திகேசுவரருடைய பிறப்பைப் பற்றிப் பலவித மான கதைகள் வழங்குகின்றன. சாலங்காயனன் என்ற முனிவர் நெடுங் காலமாகத் தமக்கு மகன் இல்லையே என்றவருத்தம் காரணமாகத் திருமாலை நோக்கித் தவம் செய்தார். திருமால் அவர் முன் தோன்றி அவர் கேட்டவற்றை அளித்தார். அவரிட மிருந்து சிவபெருமானைப் போன்ற ஓர் உருவம் தோன்றி, முனிவருக்கு மகனாக அமைந்தது. அம்மகன் நந்திகேசுவரன் என்றபெயர் பெற்றார். அவர்சிவபெரு மானைக் குறித்துக் கடுந் தவம் புரிந்தார். இறைவன், அவருடைய தவத்தைப் பாராட்டி அவருக்குக் சிவ கணங்களின்தலைமைப் பதவியை அளித்தார் என்பது ஒருகதையாகும்.

'சிலாத' என்ற கண் பார்வையற்ற முனிவர், இறை வனை நோக்கித் தமக்கு மகன் வேண்டித் தவம்புரிந் தார். சிவபெருமான் தாமே அவருக்கு மகனாகி, 'நந்திகேசுவரர்' என்று பெயர் சொண்டார் என்பது பிறிதொரு கதை. மேலும் இவரைப் பற்றிப் பாகவத புராணம், விட்டுணு தருமோத்திரம் ஆகிய நூல்கள் குறிப்பிடுகின்றன.

தமிழகத்தில் உள்ள மிகப் பழமையான குகைக் கோயில்களுள் திருமயம் குகைக் கோயில் ஒன்றாகும். இக்கோயிலின் கருவறைக்கு எதிரில், நந்தி உள்ளது. இது தனிக் கல்லால் அமைக்கப்பட்டது அன்று. பாறையைக் குடைந்து குகைக்கோயில் அமைக்கும் பொழுது நந்திக்கென்று ஒரு பகுதியை விட்டு விட்டுப் பிறகு அதில் நந்தியின் உருவத்தைச் செதுக்கி அமைத்துள்ளனர். பல்லவ மன்னன் இராசசிம் மனால் எடுக்கப்பெற்ற மாமல்ல புரத்தில் உள்ள பஞ்ச பாண்டவ இரதங்கள் எனப்படும் ஒற்றைக்கல் கோயில்களுக்கிடையில் மிகவும் அழகான தோற்ற முடைய நந்தி காணப்படுகிறது.

சோழர்காலக் கோயில்களில் விமானத்தின் கழுத் துப் பகுதிக்குக் கீழே நான்கு மூலைகளிலும் நான்கு நந்திகள் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். கரு வறைக்கு எதிரில் உள்ள நந்திக்கு மேலே ஒருமண்ட பம் கட்டப்பட்டது. அது நந்தி மண்டபம் எனப்பட்டது. பிற்காலக் கோயில்களில் நந்திகள் சிறியனவாகவும், மிக்க வேலைப்பாட்டுடனும் விளங்கின. ஆனால், முற் கால நந்திகள் சிற்ப வேலைப்பாடுகள் மிகுதியாக இல்லாவிட்டாலும், அழகுடனும் எடுப்பான தோற் றத்துடனும் விளங்குகின்றன.

**சிற்பங்களில், செப்புத் திருமேனிகளில்:** நந்திகேசு வரர் கருவறைக்கு எதிரில் தனியாக வீற்றிருக்கும் போது கற்சிற்பமாகவோ செம்பாலமைக்கப்பட்டோ விளங்குவார்.

சிவன்கோயில்களில் இவர் தலைவாசலில் இருந்து காக்கும் பெருமை பெற்றவர் ஆவார். அப் போது இவர் மனித உருவத்துடன் இறைவனைப் போலவே விளங்குவார். நான்கு கைகளுடன், பின்னிரு கைகளில் மழுவும் மானும் ஏந்தியிருப்பார். முன்னிரு கைகள் அஞ்சலி செய்த வண்ணம் இருக்கும், இவருக்கு அதிகார நந்தி' என்று பெயர். இவர் அருகில் இவரு டைய மனைவி சுசரிதையும் இருப்பார். இச்சிற்பங் களைச் சிவன்கோயில்களின் நுழைவு வாயிலில் காண லாம். இத்திருவுருவங்கள் செப்புத் திருமேனிகளாகச் செய்யப்பட்டுக் கோயில்களில் வழிபாடு செய்யப்படு வதையும் காணலாம்.

இறைவன் தேவியுடன் இடப வாகனத்துடன் இருக்கும் சிற்பத்திற்கு இரிடபாரூடமூர்த்தி என்பது பெயர். இறைவனுக்குப் பின்னால் நந்தி நின்றுகொண் டிருப்பார். அவர்மீது இறைவன் வலக் கையை வைத் துச் சாய்ந்து நின்றுகொண்டிருப்பார். இத்தகைய சிற்பம் செப்புத் திருமேனியாகச் செய்யப்பட்டிருக் கும். ஆனால் நந்தியின் உருவத்தைக் காணமுடியாது. சிவபெருமான் நந்தியிருக்கும்போது எவ்வாறு கையை வைத்துச் சாய்ந்த நிலையில் இருப்பாரோஅத்தகைய நிலையில் இருப்பார். ஆனால் அம்பர் மாகா ணம், தண்டந் தோட்டம், வேதாரணியம், திருவெண் காடு ஆகிய இடங்களில் உள்ள செப்புத் திருமேனி களில் இரிடபாரூடர் நந்தியுடன் விளங்குகிறார்.

இறைவன் அர்த்தநாரி உருக்கொண்டு விளங்கும் போது நந்தியுடன் விளங்குவார். இச்சிற்பத்திற்கு இரிடபாரூட அர்த்தநாரீசுவரர்' என்று பெயர். கோயில்களில் சூலதேவர் என்ற ஒரு செப்புத் திரு மேனி இருக்கும். இறைவன் வீதி உலாச் செல்லு முன் சூல தேவரை வீதி உலா எடுத்துச் சென்று வருவர். அத்தகைய செப்புத் திருமேனிகளில் சூலத் தின் நடுவில் சிறிய அளவில் இரிடபாரூட அர்த்தநாரி யின் உருவம் இருக்கும்.

சில இடங்களில் இறைவன் தேவியுடன் அமர்ந்த நிலையில் உள்ள சிற்பங்களைக் காணலாம். இதற்கு 'இரிடபாந்திகர்' என்று பெயர். பொதுவாக, இச்

சிற்பம் கல்லில் தான் செய்யப்பட்டிருக்கும் திரு வானைக் கோயிலில் இத்தகைய அழகிய சிற்பம் ஒன்றைக் காணலாம்.

சில சமயங்களில் நந்திகேசுவரர் மனித உருவத்துடன் விளங்குவார். அப்பொழுது இவருடைய தோள்மீது இறைவன் கையை ஊன்றி இவருக்கு அருள் செய்யும் வண்ணத்தில் இருப்பார். இதற்கு 'நந்தீச அனுக்கிரக மூர்த்தி' என்று பெயர். இத்தகைய சிற்பம் ஒன்று மாமல்லபுரத்தில் தருமராச இரதக் கோயிலில் உள்ளது.

சிதம்பரம் அருகில் உள்ள மேலைக்கடம்பூர் என்ற கோயிலில் நந்தியின்மீது இறைவன் ஆடும் நிலையில் உள்ள செப்புத் திருமேனி உள்ளது. அது வங்காளப் பகுதியில் ஆண்ட 'பால மன்னர்களின்' கலைப் பாணியில் உள்ளது. முதலாம் இராசேந்திரன் வடநாடு வரை சென்று வென்றுவந்த போது இத்திருமேனியை இக்கோயிலுக்கு அளித்திருக்கலாம்.

மரத்தால் செய்யப்பட்டு வெள்ளி மற்றும் தங்க முலாம் பூசப்பட்ட தகடுகளால் மூடப்பட்ட இடப வாகனங்களைக் கோயில்களில் காணலாம்.

**ஓவியம்** தஞ்சைக் கோயிலில் உள்ள ஓவியங்களுள் ஓர் ஓவியத்தில் சிவபெருமான் கைலாய மலையில் வீற்றிருக்கிறார். அவர் முன்பு நந்தி வீற்றிருக்கு மாறு தீட்டப்பட்டுள்ளது. இடபத்தின்மீது அமர்ந்து காட்சி தரும் ஓர் ஓவியமும், நந்தி மனித உருவத்துடன் மழு, மான் ஏந்தி இறைவன் முன் நிற்பது போல் உள்ள ஓர் ஓவியமும் திருவலஞ்சுழிக் கோயிலில் தீட்டப்பட்டுள்ளன. இந்த ஓவியங்கள் நாயக்கர் காலத்தைச் சார்ந்தவை.

**காசுகள்:** தென்னிந்தியாவை ஆண்ட பல மன்னர்கள் நந்தியின் உருவத்தைக் காசுகளில் பொறித்துள்ளனர். பல்லவ மன்னர்கள் தம் காசுகளில் நின்ற அல்லது அமர்ந்த நிலையில் உள்ள நந்தியின் உருவத்தைப் பொறித்தனர். ஆந்திரப் பகுதியை ஆண்ட காகத்திய மன்னர்கள் நந்தி, இலிங்கம், திரிகுலம் ஆகியவற்றைத் தங்கள் காசுகளில் பொறித்தனர். ஒரு பக்கம் நின்ற மனிதன் உருவமும், மறுபக்கம் நந்தியின் உருவமும் பொறிக்கப்பட்ட காசுகள் தமிழகத்தில் கிடைத்திருக்கின்றன. இவை பிற்காலச் சோழர் காலத்தைச் சார்ந்தவையாக இருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர். தமிழகத்தில் தென் பகுதிகளில் கிடைத்த காசுகளில் ஒருபுறத்தில் நின்ற மனிதன் உருவமும் மறுபுறம் நந்தியும், சேது என்ற எழுத்தும் பொறிக்கப்பட்டுள்ளன. இவை இராமநாதபுரப் பகுதியை ஆண்ட சேதுபதி மன்னர்களின் காசுகள் ஆகும்.

**இந்தியால் சிறப்புப் பெற்ற ஊர்கள்:** திருச்சி மாவட்டத்தில் உள்ள திருமழபாடி என்னும் திருத்தலத்தில் நந்திதேவருக்கும் சுசரிதைக்கும் திருமணம் பங்குனி மாதத்தில் நடைபெறுகிறது. இங்குக் கருவறைக்கு எதிரில் நந்தியில்லை. அதற்குப் பதிலாக அதிகார நந்தி தன் இரு கைகளை அஞ்சலி செய்த வண்ணம் உள்ள சிற்பம் உள்ளது. மயிலாடுதுறையில் வள்ளலார் கோயிலில், நந்தியின்மீது அமர்ந்துள்ள தட்சிணாமூர்த்தியின் சிற்பம் உள்ளது. நந்திதேவரின் ஆணவத்தை அடக்கி ஞானஉபதேசம் செய்த இடம் இதுவேயாகும். தஞ்சையில் ஒரே கல்லினால் ஆன பெரிய நந்தி உள்ளது. இதைப்போலப் பெரியநந்தி தென்னிந்தியாவில் இலேபாட்சி, வாரங்கல், சாமுண்டிமலை, பசவன்குடி ஆகிய இடங்களில் உள்ளது.

சில கோயில்களில் நந்தி தேவர் கருவறைக்கு எதிரில் இல்லாமல் சற்று விலகி அமர்ந்திருப்பார். அத்தகைய நந்தி விலகிய திருத்தலம் திருப்புன்கூர். இவ்வூரில் நந்தி நந்தனாருக்காகவிலகியதை எல்லோரும் அறிவர். திருப்பூந்துருத்திக் கோயில் அப்பர் பெருமான் தம் உழவாரப்படை கொண்டு திருப்பணி செய்த இடம் ஆகையால், ஞான சம்பந்தர் இத்தலத்தைத் தம் காலால் மிதிக்ககூடாது என்று கோயிலுக்கு வெளியே இருந்து இறைவனைக் காண விரும்பினார். நந்தி மறைக்கவே இறைவன் நந்தியைச் சற்று விலகச் சொன்னார் என்றுவரலாறு கூறுகிறது. பட்டீச்சுரத்திலும் நந்தி சற்று விலகி உள்ளது. மதுரைக்கு அருகில் உள்ள திருப்பூவணம் என்ற தலத்தில் நந்தி சற்றுச் சாய்ந்துள்ளது. சில இடங்களில் சன்னிதியைப் பார்க்காமல் பின் புறமாக இறைவன் பக்கம் நந்தி தேவர் இருப்பார். இத்தகைய திருத்தலங்கள் திருவலமும் திருவைகாவூரும் ஆகும். கி.ஸ்ரீ.

**நந்திக்கலம்பகம்:** இது நந்தி என்னும் மன்னன் மீது பாடப்பட்ட கலம்பகமாகும். இது தமிழில் தோன்றிய முதல் கலம்பகம் என்று ஆய்வாளர் கருதுகின்றனர். தமிழகத்தில் கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் ஆண்ட தெள்ளாறு எறிந்த நந்திவர்மபல்லவ மன்னனைச் சிறப்பித்துப் பாடுவதாக அமைந்துள்ளமையால் இதன் காலமும் அதுவேயாகும். ஏனைய கலம்பக நூல்கள் போலல்லாது, இந்நூல் வரலாற்றுக் குறிப்புகள் மிகக்கொண்டுள்ளது. கச்சிநாடு, வட வேங்கடநாடு, தென்னாடு, சோணாடு, அங்க நாடு முதலிய நாடுகள் பற்றிய குறிப்புகளும், கடம்பூர், குருக்கோட்டை, தெள்ளாறு, பழையாறு, தொண்டி, வெள்ளாறு, வெறியலூர் முதலிய இடங்களில் நடந்த போர்கள் பற்றிய குறிப்புகளும் இந்நூலில் உள்ளன. நந்திவர்மனின் தெள்ளாற்று வெற்றியை 16 பாடல்கள் சிறப்பாக விளக்குகின்றன.

கலம்பகப் பெயர் ஊர்ப்பெயரொடு வழங்கும் இயல்பிற்கு மாறாக இது,பாட்டுடைத் தலைவன் பெயர் கொண்டு நந்திக் கலம்பகம் என்று வழங்கப்படுகிறது.

இந்நூலில் கைக்கிளைத் துறைகள், ஐந்திணைக்குரிய அகப் பொருள் துறைகள், வெட்சி, கரந்தை, வாகை முதலிய புறத் திணைகளுக்குரிய துறைகள் பற்றி அமைந்த பாடல்கள் இடம் பெறுகின்றன. இந்நூலில், கலம்பக உறுப்புகளாகக் கூறப்படுவனவற்றுள் சிலவே வந்துள்ளன. அதனை இக்கலம்பகத்தின் தொன்மைக்குக் காரணமாகக் கூறுகின்றனர். பொதுவாகப் பலவகைப் பொருளோடும் பலவகைச் செய்யுள்களோடும் நூறு பாட்டுகளோடு அமைவதே கலம்பகம் எனினும், 'அரசர்க்குத் தொண்ணூறு' என்றபடி 90 பாடல்கள் (கழகப் பதிப்பு) உள்ளன. மதுரைத் தமிழ்ச்சங்கப் பதிப்பில் 88 பாடல்கள் மட்டுமே நூலுக்குரியன என்பது குறிக்கப் பெற்றுள்ளது. இந்த எண் வேறுபாடுகள் பிரதி செய்தவர்களாலும், பிற்காலத்தே எழுதிச் சேர்த்தவர்களாலும் நேரிட்டிருத்தல் கூடும்.

இந்நூலைப் பாடியவர் யாரென்று அறிய முடியவில்லை. பாட்டுடைத் தலைவன் மூன்றாம் நந்திவர்மனின் மாற்றாந் தாய்க்குப் பிறந்த நால்வருள் ஒருவரே இந்தக் கலம்பக ஆசிரியர் என்று சிலர் கூறுவர். அவர் அறம் வைத்துப் பாடும் திறமை உடையவர் என்றும், அவர் பாடிய வகைக் குறிப்புகள் அடங்கிய கலம்பகப் பாடல்களைப் பச்சை ஓலைப் பந்தலின் கீழிருந்து கேட்டுத் தமிழ்ச்சுவை மிக்க நந்தி வர்மன், தீப்பற்றி மாண்டான் என்றும் ஒரு கதை வழங்கி வருகிறது. மேற்குறித்த கதைக்கு 'நந்தி கலம்பகத்தால் மாண்ட கதை நாடறியும்' என்ற சோமேசர் முதுமொழி வெண்பாத் தொடரும், 'கலம்பகமே கொண்டு காயம்விட்ட தெள்ளாறை நந்தி' என்ற தொண்டை மண்டல சதகத்தொடரும் சான்றாகக் காட்டப் பெற்று வருகின்றன. இந்நூலில் 'காடவற்கு முன் தோன்றல்' என்று நந்தி வர்மனைக் குறிப்பிடுதலால் இந்நூலாசிரியர் பெயர் 'காடவர்' ஆக இருக்கலாம் என்று கருதுவர்.

இந்த நந்திவர்மன் பெரிய புராணத்துள் பாடப் பெற்றுள்ள 'கழற்சிங்க நாயனார்' என்றும் கூறுவர். ஆனால் பெரிய புராணத்துள் இதற்குச் சான்றில்லை.

தமிழிலக்கியத்தில் ஏற்பட்ட புது வளர்ச்சியாக இச் சிற்றிலக்கியம் அமைந்துள்ளது. 'மங்கையர்கண் புனல் பொழிய மழை பொழியும் காலம்' எனத் தொடங்கும் பாடல் இந்நூலின் கவிதைச் சுவைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இத்தகைய கவிதை வளம் கருதியே, கலம்பக இலக்கியங்களுள் 'நந்திக் கலம்பகம்' சிறப்பாக இன்றும் போற்றப்பட்டு வருகிறது. சா.உ.

**நந்திக் கிராமம்** அயோத்தியைச்சார்ந்த பகுதி; இராமனின் திருவடியை வைத்துப் பரதன் வழிபட்ட இடம். இராமன் காடு சென்று திரும்பும் வரையில் அவனது திருப்பாதுகையை வைத்துப் பரதன் காத்த கிராமம். இதில் பரதகுண்டம்,சத்துருக்கன குண்டம், கயாகுண்டம், சடா குண்டம், பிசாசவிமோசன தீர்த்தம், மாசை தீர்த்தம் ஆகியன இருக்கின்றன.

இராமன் பரதனை நோக்கித் தந்தை எதைச் செய்தாரோ அதை மாற்ற நமக்கு வலிமையில்லை. சந்ததியில்லாமற் போனால் ஒருவனுக்குப் பதில் மற்றொருவன் அதைச் செய்யலாம். வாய்மைக்குரியவனாய் இருப்பவன் அதைச் செய்தல் கூடாது. ஆகையால் பதினான்காண்டுகள் காட்டில் உறைந்த பின் அரசாட்சியை ஏற்றுக் கொண்டு தந்தையை வாய்மைக்குரியவனாக்குவேன் என்றனன். பரதன் இராமனின் மனவுறுதியைக் கண்டு 'இந்தப் பாதுகைகளில் உன் பாதங்களையிட்டு ஏறுவாயாக, இவையே எல்லாவுலகத்தின் நன்மைக்குரியவைஎனவேண்டினன்'. அவ்வாறே இராமனும் தனது திருவடியைப் பாதுகைகளில் நுழைவித்தனன். பரதன் மகிழ்ந்து அதனைத் தம் திருமுடிமீது ஏந்தி இராமனைத் தொழுது வணங்கினான். பின்னர்ப் பரதன் அயோத்திநகர் போகாது நந்தியம்பதியில் தங்கியிருந்தான். து.ப.

**நந்திபுர விண்ணகரம்**:கும்பகோணத்துக்குத் தென்மேற்கே சுமார் 5 கிலோமீட்டரில் உள்ள திவ்வியதேசம் நந்திபுர விண்ணகரம். நாதன் கோவில் என்றும் தட்சிண சகந்நாதம் என்றும் இது சொல்லப்படுகிறது. இங்கு நந்திக்குக்காட்சி அளித்தமையால் இது 'நந்திபுர விண்ணகரம்' எனச் சொல்லப்படுவதாகப் புராணம் கூறுகிறது. நந்திவர்மன் என்ற அரசன் ஏற்படுத்திய ஊர் ஆதலால் இப்பெயர் பெற்றதாகவும் கூறுவர். 'நந்தி பணி செய்த நகர்' என்றார் திருமங்கையாழ்வார்.

சகந்நாதப் பெருமாள் செண்பகவல்லித் தாயாரோடு மேற்கே திருமுக மண்டலத்துடன் வீற்றிருந்த திருக்கோலத்தில் இங்கு எழுந்தருளியிருக்கிறார். இங்கு நந்திக்கும் சிபிச் சக்கரவர்த்திக்கும் வெளிப்பட்டருளினார். திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழி ஐந்தாம் பத்து, பத்தாம் திருமொழியில் பத்துப் பாடல்களால் இத்தலத்தை அனுபவித்துள்ளார். இக்கோயில் வானமாமலை மடத்து ஆதீனத்தில் உள்ளது. திருமங்கையாழ்வார் ஒன்பது பாட்டுகளிலும் 'நந்திபுர விண்ணகரம் நண்ணு மனமே' என்று தம் திருவுள்ளத்தை நோக்கிக் கூறுவதன் மூலம் எல்லோரையும் இந்தத் திவ்வியதேசத்தை

அடைந்து எம்பெருமானது அருளைப் பெற அழைக்கிறார். 'மண்ணில் இதுபோல் நகரில்லை என வானவர்கள் தாம் மலர்கள் தூய் நண்ணி உறைகின்ற நகர் நந்திபுர விண்ணகரம் நண்ணுமனமே' என்று பூலோகத்தில் எழிலுடைய திவ்வியதேசம் இதுபோல் மற்றொன்றில்லை என்று கூறிக்கொண்டு தேவர்கள் இத்தலத்தை அடைந்து எம்பெருமான் திருவடிகளில் தூய்மையான மலர்களைத் தூவி வழிபடுவராம். 'சிறைகொள் மயில் குயில் பயில மலர்கள் உக அளி, முரல அடிகொள் நெடு மா நறைசெய் பொழில்' என்று சிறகையுடைய மயில்களும் குயில்களும் நெருங்க, அதனால் பூக்கள் உதிர, வண்டுகள் ஆளத்திவைக்க, உயர்ந்திருக்கும் மாமரங்களில் தேன்பெருகச் சோலை விளங்குகிறது என்று நந்திபுர விண்ணகரத்தின் சோலை வனப்பை அனுபவிக்கிறார் திருமங்கையாழ்வார்.

இந்திரியங்களுக்கு வசப்பட்டுச் சிற்றின்பக் கலவியைச் சிந்திக்காமல் நந்திபுர விண்ணகரத்தை நாடும்படி வேண்டுகிறார் பிள்ளைப் பெருமாளையங்கார்.

எஸ். கி.

**நந்திவர்மன்**: காண்க: தமிழ் நாடு.

**நந்தீசர் கண்ணி**: குணங்குடி மசுத்தான் சாகிபு என்னும் முகமதியப் புலவரால் பாடப்பட்ட ஒரு நூல் நந்தீசர் கண்ணி. இதில் 51 கண்ணிகளும், ஒரு கட்டளைக் கலித்துறைப் பாடலும் உள்ளன. கண்ணி என்பது ஈரடிகளையுடைய பாடல். இரண்டு இரண்டு பூக்களைத் தொடுப்பது கண்ணி எனப்படுவது போல, இரண்டு அடிகளையுடைய பாடல் கண்ணி எனப்பட்டது. நந்தி ஈசர், நந்தீசர்; இவர் சிவபெருமான். ஒவ்வொரு கண்ணியின் இறுதியிலும் 'நந்தீசுரனே' என வருதலால் இப்பெயர் பெற்றது. 'ஆதியந்தங்கடந்தவுமை யாளருள் நாதாந்தச், சோதியந் தங்கடந்த செழுஞ் சுடரேநந் தீசுரனே' என்பது முதற் கண்ணி. குணங்குடியார் வாலை வழிபாட்டினர். அதனால், 'ஆத்தாளைத் தேடி அலைந்தலைந்து விண்பறக்குங், காற்றாடி யானேன்என் கண்ணேநந் தீசுரனே' 'கன்றினுக் கேயிரங்குங் காலியென என்னனை தான் என்றும் எனக்கிரங்க இசைப்பாய்நந் தீசுரனே' என் பவை வாலையருளைப் பெறத் தவிக்கும் தவிப்பின் வெளிப்பாடுகள்.

திருச்சியில் 'அத்தர்' முதலிய மணப்பொருள் வணிகராக இருந்த குணங்குடியார், சித்தர் பெருநெறியைக் கொண்டு வாழ்ந்தவர். இவர் பாடிய பாடல்கள் தாயுமானவர் பாடல்களைப் போன்ற பாவமைப்பும், எளிமையும் பொருள் நலமும் உடையவை. இவர் குரு, குணங்குடியில் இருந்தவர் என்பதும். முகைதீன் என்னும் பெயரினர் என்பதும் இவர் தம் குருவணக்கப் பாடலால் அறியலாம். குணங்குடியார் என்னும் பெயரால் இவர் ஊர்ப்பெயரும் விளங்கும். இவ்வூர் இராமநாதபுரத்தைச் சார்ந்தது. இவர் இயற்பெயர் சுல்தான் அப்துல் காதி என்பது. இவர் சென்னையில் காலமானார். நந்தீசர் சதகம், புலவர் அகராதி, இலக்கிய அகராதி ஆகியவை மசுத்தான் சாயபு இயற்றியதாகக் கூறப்படினும், இவர் இயற்றியதுநந்தீசர் கண்ணியே. இவர் இயற்றியதாகக் கூறப்பெறும் நந்தீசர் சதகம் கிடைக்க வில்லை. இவர் காலம் கி.பி. 1788-1835.

இரா.இ.

**நந்தீசுவரநோன்பு**: இது சமணசமயமக்களால் சிறப்பாகக் கொண்டாடப்படும் நோன்புகளுள் ஒன்று. ஆண்டுதோறும் ஆடி, கார்த்திகை, பங்குனி ஆகிய மாதங்களில் நோற்கப்படும் இந்நோன்பு இம்மாதங்களின் வளர்பிறைப் பகுதியில் வரும், அட்டமி திதியில் தொடங்கிப் பௌர்ணமி வரை எட்டு நாள்கள் மேற்கொள்ளப் பெறும். இம்முறையில் ஆண்டுக்கு இருபத்து நான்கு நாள்கள் சமணர்களால் மேற்கொள்ளப் பெறும் இந்நோன்பு பற்றிய செய்தியினைக் 'கத்திகை, பங்குனி யாடிய காசறு, சுக்கிலபக்க நல்லட்டமி தன்னில், ஒத்தவோர் பாதியில் வந்த நந்தீச்சரம் புக்கவர் மைமை தொடங்கினரன்றே' (1286) என்று மேரு மந்தர புராணம் என்னும் சமண நூல் குறிக்கின்றது.

'உலோகசொரூவம்', என்னும் சமண நூல், 'நந்தீசுவர தீவம்' என்னும் தலத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. இங்குள்ள தீவம் என்ற சொல் தலத்தைக் குறிப்பதாகும். நந்தீசுவர தீவத்திலுள்ள 'சைன பிம்பங்களை' (ஒரே மாதிரியான இறைவடிவங்கள்) இந்நோன்புக் காலத்தில் தேவர்கள் வழிபடுதற்கு வருவர் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்கள்வழிபடும் இந்நாளில், பாவனையாகப் பூமியில் உள்ளவர்களும் நோன்பிருந்து வழிபடுவர். இந்நோன்பு நாள்களுக்கு 'ஆங்டானி கத் திருநாள்', என்பது பெயர்.

நந்தீசுவர தீவம், சமணர் கொள்கைப்படி, சம்புத் தீவகத்திலிருந்து எட்டாம் தீவகமாக அமைந்துள்ளது. குத்திட்ட நீள்உருளை வடிவமாக அமைந்துள்ள நந்தீசுவர தீவத்தின் உச்சியில், அத்தாணி, மண்டபம் போன்ற சிகரத்தின் மேல், 'சினசைத்தி ஆலயம் அமைந்துள்ளது. இம்மலை கருநிறம் கொண்டுள்ளதால் 'அஞ்சன பர்வதம்' என்றும் சொல்லப்படும். அதன் பக்கத்திற்குப் பதின்மூன்று மலைகளாக நான்கு திசைகளிலும் ஐம்பத்திரண்டு மலைகள் உள்ளன என்பர். அம்மலைகளையும் அவற்றின் இயல்புகளையும் சமயக் கண்கொண்டு நோக்க வேண்டும். புறக் கண்களால் காணமுடியாது.

ஆடி, கார்த்திகை, பங்குனி வளர்பிறையில் மேற் கொள்ளப்படும் இந்நோன்பின் எட்டுநாளும் உண்ணாவிரதமிருப்பர். பொதுவாக முதல் நாளும் இறுதிநாளும் உண்ணா நோன்பிருப்பது வழக்கிலுள் ளது. அந்நோன்புக் காலத்தில் ஒருவேளை உணவு உண்ணும் வழக்கமும் இருந்து வருகிறது.

இந்நோன்பினை மேற்கொள்ளுவோர் நோன்பு நாளின் இறுதியில் வரும் பௌர்ணமி யன்று சமண ஆலயம் சென்று தீவத்திற்குத் தீப தூபம் காட்டி, அபிடேகம் செய்து வழிபடுவர். இவ்வழிபாடு காலை ஆறுமணி தொடங்கிப் பத்து மணிக்குள் நிறைவுறும். இளநீர், தேங்காய்த் துருவல், பழம், பால், தயிர், நெய் ஆகியவற்றால் சாமிக்கு (சின பிம்பங்கள், நீராட்டுவர்; தண்ணீர், அரிசி, பூ, பலகாரம், பழம் சந்தனம், தீபம், தூபம் ஆகிய எண்வகைப் பொருள், களை வைத்து வழிபட்டு வீடு திரும்புவர்; ஏனைய ஏழு நாள்களில் கோவிலுக்குச் சென்று வழிபாடு மட் டும் செய்து திரும்புவர். ஆன்மாவைத் தூய்மை அடையச் செய்வது இந்நோன்பின் நோக்கமாகும். முத்தியடைவதற்கான முயற்சியாக இந்நோன்பு நோற்கப் பெறுகின்றது. சமண இராமாயணத்தில், இராவணன், இந்நோன்பு நோற்றான் என்னும், செய்தி கூறப்பட்டுள்ளது. இரா.குரு.

**நப்பசலையார்:** காண்க: காமக்கணி நப் சலையார்.

**நப்பண்ணனார்** பரிபாடற் புலவர்; இவர் செவ் வேளைப் பற்றிய ஒரு பாடல் (19) பாடியுள்ளார். பண்ணனார் எனும் பெயருடன் 'ந' எனும் முன் னொட்டுச் சேர்ந்துள்ளது. நப்பூதனார், நக்கீரனார் நப்பசலையார் எனும் பெயர்களை இவண் எண்ணிப் பார்க்கலாம். புலவர் தம் பெருமையை 'ந' எனும் முன்னொட்டுக் குறிக்கின்றது.

விண்ணில் தேவர்கள் கண்டின்புற முருகன் எழுந் தருளினார்; நங்கை தேவசேனையை மணந்தார்; மண்ணில் மக்கள் கண்டின்புறத் திருப்பரங் குன்றத்தில் கடம்பமரத்தின் கீழ் தங்கினார்; அங்கு வள்ளியையும் மணம் புரிந்தார். மைந்தரும் மகளிரும் தங்களை அழகு செய்துகொண்டு குதிரையிலும் தேரிலுமாகப் பரங்குன்றம் செல்கின்றனர். இக்காட்சிக்கு, நப்பண்ண னார், அறம் செய்து அதன் பயன் அடைவதற்குச் சிறந்தோர் உலகம் செல்வதனை உவமை கூறியுள் ளார்.

பரங்குன்றில் விழா நிகழும். மதுரையிலிருந்து மக்கள் வருவர். பாண்டியவேந்தன் மனைவிய ரொடும் அமைச்சரொடும் கோயிலை வலம் வருவான். மலையடிவாரத்தில் யானை, குதிரை, தேர் நிறுத்தப் பட்டுள்ள காட்சி பாண்டியனது பாசறை போலத் தோற்றமளிக்கும். வீணை, குழல், யாழ், முரசு ஆகியவற்றின் ஒலிகளை எழுப்பிய வண்ணம் பரங் குன்றில் பலர் இருந்தனர்.

முருகன் கோயிலில் வண்ண ஓவியங்கள் பல தீட் டப் பெற்றிருந்தன. இரதி, காமன், இந்திரன், அக லிகை, கவுதம முனிவன் முதலிய ஓவியங்களே கதைக் குறிப்புடன் அழகுற அமைந்தன. சிறுமியரும் இளம் பெண்டிருமாகப் பரங்குன்றில் விளையாடி னர்; தளிர்களைப் பறித்துச் சுனையிலிட்டு மகிழ்ந்த னர்.

மகளிர் வாய்போல் ஆம்பல் மலர்ந்தன. கைபோல் காந்தள் விரிந்தன. தோன்றி, நறவம், கோங்கம் ஆகியவை மலர்ந்தன. இவ்வண்ணம் பன் னிறமான மலர்கள் மலர்ந்து கிடந்த காட்சி கீழ் வானத்தை ஒத்திருந்தது.

கன்னிப் பெண்களும் மணமுடித்த பெண்களும் செவ்வேளின் ஊர்தியாகிய யானையை அலங்கரிப்பர்; பூசை செய்து வழிபடுவர்; யானையுண்ட மிச்சிலைத் தாமும் உண்பர்; உண்ணாதார் குறைவிலாக் கொழு நரைப் பெற இயலாதாரென்றும், கணவன்மாரின் சிறந்த அன்பைப் பெறவியலாதவர் என்றும் கருதினர்.

முருகனின் ஆடை, மாலை, வேற்படை, முகம் அனைத்தும் செந்நிறமுடையவை. 'செவ்வேள்' என்ப தற்கு ஒப்ப அமைபவை. மாமரமாகவும், கிரவுஞ்ச மலையாகவும் உருவெடுத்த சூரபதுமனை அழித் தொழித்தமையைப் பிற புலவர் பாடியுள்ளது போல இப்புலவரும் பாடியுள்ளார். திருப்பரங்குன்றம் சிறந் தோருலகமாகவும், பாண்டியர் பாசறை போலவும், ஒலிமலி நகராகவும், ஓவிய அழகு பெற்ற இடமாகவும், மலர்ப்பண்ணையாகவும், பழம்பண்பாட்டின் உறை விடமாகவும் விளங்கியமையை நப்பண்ணனார் இப் பாடலின் வழி வெளிப்படுத்தியுள்ளார். து.ப.

**நப்பாலத்தனார்:** இவர் சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் பாலத்தனார் என்றும் சொல்லப்படு கிறார். 'ந' சிறப்புப் பொருள் உணர்த்துவதோர் இடைச்சொல்; நச்செள்ளை, நப்பாலத்தன், நக் கீரன் என்றாற் போல' என்ற நச்சினார்க்கினி யரின் சிந்தாமணி உரையால் (482) நப்பாலத்தன் என வழங்கி வந்தமை அறிய முடிகின்றது.

நற்றிணையில் பாலத்தனார் என்ற பெயரில் 52 –ஆம் பாடலும், நப்பாலத்தனார் என்ற பெயரில் 240–ஆம் பாடலுமாக இரு பாடல்கள் காணப்படு கின்றன. இவை இரண்டும் பாலைத்திணைப் பாடல் கள். தலைமகன் செலவழுங்கியது (52), பிரிவிடை மெலிந்த தலைமகள் சொல்லியது (240) எனும் துறை

களில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. இருபாடல்களி லும் சொல், பொருளமைதிகள் பெரும்பாலும் ஒத்தே காணப்படுகின்றன. ஒரு பாடல் (52) ஐதேகம்ம வியைந்து செய்பொருளே' என்று முடிய வும், பிறிதொரு பாடல் (240) 'ஐதே கம்மவிவ் வுலகு படைத் தோனே' என்று தொடங்குகிறது. இவற்றால் தான் சில பதிப்புகளில் இரு பாடல்களும் நப்பாலத் தனார் என்ற பெயரிலேயே பதிப்பிக்கப் பெற்றுள் ளன.

பெருவள்ளன்மை கொண்ட ஓரியின் கொடையள விற்குப் பொருளைப் பெறுவதாயினும் தலைவியின் கூந்தல் மணத்தையும் மயக்கத்தையும் நீங்க மாட் டேன்; எனவே நெஞ்சே, நீயே பொருள்வேண்டிச் செல்க (52) என ஓரியின் கொடைத் தன்மையைப் பாராட்டுகிறார். 'மாவள்ளோரியின் கைவளம் இயைவ தாயினும் ... நீங்கல் செல்லேம்' என்பது 'முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும் வாரிரும் கூந்தல் வயங்கிழை ஒழிய வாரேன் வாழிய நெஞ்சே' எனும் பட்டினப்பாலைத் தொடர்களை (218-220) நினை வூட்டுவதாக அமைந்துள்ளது.

பிரிவுத் துயரின் வெம்மைக்கு ஆற்றாதவளாகிய தலைவி, தலைவன் கடந்து செல்லும் வழியின் வெம்மையையும் அதில் அவன் படும் துன்பத்தையும் நினைத்துப் பார்க்கிறாள். கொடிய வெம்மையோடு அவ்வழியைப் படைத்தவனாகிய இறைவன் அவ்வழி யில் சென்று துன்புறுவானாகுக என்று சபித்துக் கூறுவ தாக 240-ஆம் பாடல் அமைந்துள்ளது. இது 'இரந் தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்துகெடுக இவ்வுல கியற்றியான்' (1062) என்ற குறளின் பொருண் மையைக் கொண்டு விளங்குகிறது. இவ்விரு பாடல் களும் பாலைப் பொருண்மையின் உயிர்நாடியாகவும் நயஞ்சான்றனவாகவும் விளங்குகின்றன.

திருவள்ளுவ மாலையில் ஒரு பாடல் இவர் பெய ரில் காணப்படுகிறது. அறம் தகழியாகவும், பொருள் திரியாகவும், இன்பம் நெய்யாகவும், செவ்விய சொல் தண்டாகவும் அமைந்த விளக்கை உலகோர் மனந் திருளை நீக்குதற்கு வள்ளுவர் ஏற்றினார் என்று திருக்குறளை இப்பாடல் புகழ்ந்துரைக்கின்றது. இப் பாடலைப் பாடிய நப்பாலத்தனாரைச் சங்ககால நப்பாலத்தனாரின் வேறாகச் சிலர் கருதுவர்.

சா.கி.

**நப்பின்னை** கிருட்டிணாவதாரத்தில் கண்ண பிரானுடைய மனைவியாக வாழ்ந்தவள். பின்னை இவள் பெயர் என்பது நச்சினார்க்கினியரின் சிந்தா மணி உரையால் அறியப்படுகின்றது. பின்னை என்ப தற்கு இளையவள், இலக்குமி என்ற பொருள்களுண்டு. இச்சொல் பிஞ்ஞை என்றும் வழங்கப்பட்டுள்ளது (மணிமேலை 19-67). பின்னை என்ற சொல் சிறப்புக் கருதி நப்பின்னை என ஆட்சி பெற்றுள்ளது. நப் பின்னை மிதிலை நகரில் வாழ்ந்திருந்த கும்பகன் என்னும் ஆயனின் மகள். இவள் விட்டுணுமூர்த்தியின் சத்திகளுள் ஒன்றாகிய நீளாதேவியின் கூறு என்பர். கும்பகனின் ஆன் கூட்டத்தில் காலநேமி என்னும் அரக்கனுடைய மக்கள் காளைகளாக இருந்துவந்த னர். அம்மாயக் காளைகள் மக்களுக்கும் ஆனிரை களுக்கும் பல துன்பங்களைக் கொடுத்து வந்தன. அந்நகர் அரசன், காளைகளைக் கொல்லுதற்கு வீரர் களை அனுப்பினான். அவர்கள் அவற்றைக் கொல்ல வியலாமல் திரும்பினர். கும்பகன், அவற்றைக் கொல்லுவோருக்குத் தன் மகளை மணம் முடித்து வைப்பதாக அறிவித்தான். கண்ணன் பலராமனோடு சென்று அவற்றைக் கொன்று நப்பின்னையை மணந் தான்.

அருளாளதாசர் இயற்றிய பாகவதத்தில் நப் பின்னையின் திருமணம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. 'நிலமகட்குக் கேள்வனும் நீள்நிரை நப்பின்னை இலவு அலர்வாய் இன்அமிர்தம் எய்தினான்' எனக் கண்ணன் நப்பின்னை செய்தி சீவகசிந்தாமணியில் (482) காணப்படுகின்றது. சா.கி.

**நப்பூதனார்**: காண்க: காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார்.

**நபிகள் நாயகம்**, இசுலாம் (Islam) சம யத்தைத் தோற்றுவித்தவர். இவர் புதியதோர் அர சையும் சமயத்தையும் படைத்ததால், சிறந்ததோர் அரசியல் மற்றும் சமயத் தலைவராகப் போற்றப்படு கிறார். அராபியச் சமூகத்தைச் சீர்திருத்தியதால், இவர் ஓர் சமூகச் சீர்திருத்தவாதியாகவும் (Social Reformer) கருதப்படுகிறார். தீர்க்கதரிசிகளின் (Prophets) பட்டியலில் முகம்மது நபி இறுதியானவராகத் திகழ்கிறார். இவர் அல்-அமீன் (நம்பிக்கைக்குரிய வர்), 'அச்சாதிக்' (உண்மையாளர்), இரசூல்-அல்லா (இறைத் தூ தர்), நபி (அல்லாவின் தீர்க்கதரிசி) எனவும் சொல்லப்படுகிறார்.

**பிறப்பும் வளர்ப்பும்:** இவர் அரேபியாவிலுள்ள மெக்கா நகரில் கி.பி. 570-ஆம் ஆண்டு, ஆகசுட்டுத் திங்கள் 27-ஆம் நாள் குரேசிக் (Quareshi) கோத் திரத்தில் சாலிம் (Shalim) குடும்பத்தைச் சேர்ந்த அப்துல்லாவிற்கும், ஆமீனாவிற்கும் மகனாகத் தோன்றினார். இவர்தம் பாட்டனாரான அப்துல் முத்தலிப்பு இவருக்கு முகம்மது (மிகவும் போற்றத் தக்கவர்) என்னும் திருநாமத்தைச் சூட்டினார். இவர் தம் பிறப்பிற்கு முன்பே தந்தையையும், ஆறாம் வயதில் தாயாரையும் இழந்தார். எனவே, இவர்

இரு ஆண்டுகள் அப்துல் முத்தலிப்பின் அரவணைப்பில் வாழ்ந்துவந்தார். அப்துல் முத்தலிப்பு கி.பி. 579-இல் இறந்துவிடவே ஆபூ-தாலிப்பு என்னும் இவருடைய உறவினர் இவரை வளர்த்து வந்தார். இளமையிலேயே இவர் நற்குணங்களின் மொத்த உருவாகத் திகழ்ந்தார். பின்னர்த் தமது குலத்தொழிலான வாணிகத்தில் ஈடுபட்டு நல்ல தேர்ச்சி பெற்றார். சிலகாலம் சென்றபின்பு கதீசா (Khadijah) என்னும் செல்வச் சீமாட்டி தனது வணிகத்தை நடத்தும் பொறுப்பை இவரிடம் ஒப்படைத்தார். இவர் கி.பி. 594-ஆம் ஆண்டு தனது 25-ஆம் வயதில் இப்பெருமாட்டியை மணந்து இல்லறத்தை இனிதே நடத்தி வந்தார். இவ்விருவருக்கும் ஆண் குழந்தை ஒன்றும், பெண் குழந்தைகள் நான்கும் பிறந்தன. காசிம் என்னும் பெயர்கொண்ட ஆண் குழந்தை இளமையிலேயே இறந்துவிட்டது. பெண் மக்களின் பெயர்கள் உருக்கையா, சைனப்பு, பாத்திமா, உம்முகுல்தூம் ஆகும்.

**முகம்மது - நபிகளாதல்:** அராபிய மக்கள் மூடப்பழக்கம், அறியாமை, கல்லாமை, குடி, களவு, கொலை, கொள்ளை, சூது, பிறன் மனை விழைதல் ஆகியவற்றில் மூழ்கிக் கிடந்தனர். பெண்களுக்கு எவ்வித உரிமையும் தரப்படவில்லை. இதுபோன்ற இழிநிலைகளைப் போக்க நினைத்தார் முகம்மது. ஓய்வு நேரத்தில் தனிமையில் அமர்ந்து தியானம் செய்தார். மெக்காவிற்கு அருகில் அமைந்துள்ள கிராமலையின் (Mount Hira) குகையில் ஒருநாள் இவர் தியானத்தில் இருந்தபோது, 'கேப்ரீல்' (Gabriel) என்னும் இறை தூதரைக் கண்டு இறையருள் பெற்றார். அன்றுமுதல் இறைவனது ஆணையைச் சிரமேற்கொண்டு இறைவனின் நற்செய்திகளை மக்களுக்கு எடுத்துரைத்து வரலானார். உலகம் போற்றும் உத்தம கருத்துகளை உரைத்து வந்த அண்ணல் நபிகள் நாயகத்தின் துணைவியார் இவர்தம் முதல் சீடர் ஆனார். உத்தம நபியாம் முகம்மது சல் அவர்களின் மூன்றாண்டுப் போதனையின் விளைவாக முப்பதிற்கும் மேற்பட்டோர் சீடர்கள் ஆயினர்.

**போதனைகள்:** அராபியர்களுக்கு மெய்யறிவையும், உடன்பிறப்புச் சிறப்பையும், பகிர்ந்துண்ணும் பண்பையும், ஒரு கடவுள் சமயத்தையும் போதித்தவர் நபிகள் நாயகமே ஆவார். உருவ வழிபாட்டைக் கைவிட்டு, அல்லாவை மட்டுமே வணங்கி உய்ய வேண்டுமாய் இவர் அறைகூவல் விடுத்தார். இவர்தம் போதனைகள் யாவும் 'திருக்குரான்' என்னும் திருமறையில் தொகுக்கப்பட்டுள்ளன.

நபிகளின் தீவிர போதனையின் விளைவாக அம்சா, உமர், துபைல், இம்னு அப்ரு போன்ற பெரியவர்கள் இசுலாம் சமயத்தில் சேர்ந்தனர். நபி அவர்களுக்கு கி.பி. 619-ஆம் ஆண்டு ஒரு சோதனைக் காலமாகும். இவர்தம் தீவிர போதனைகளால் பாதிக்கப்பட்ட மக்காவின் குரேசிக் குலத்தினர் இவருக்குக் கடும் எதிர்ப்பைக் காட்டினர். அதே ஆண்டில் இவருக்குப் பெருந்துணையாக நின்ற கதீசா அம்மையாரும், பாதுகாப்பாகத் திகழ்ந்த சிற்றப்பா ஆபு - தாலிப்பும் காலமாயினர். அதன்பின் நபிகளும் இவர்தம் ஆதரவாளர்களும் சமய மற்றும் சமூக விலக்குச் செய்யப்பட்டனர். எனவே,இவர் தம்மைப்பாதுகாத்துக்கொள்ளும் பொருட்டு மக்காவிலிருந்து 100 மீ. தொலைவிலிருந்த 'தாயிப்பு' நகருக்குச் சென்றார்; அங்குத் தம் போதனைகளைத் தொடர்ந்தார். அங்கும் இவருக்குப் பேரெதிர்ப்புக்கிளம்பியதால் இவர் அங்கிருந்து எருசலேம் நகருக்குச் சென்றார். பின்னர் இவர் மக்காவிற்கே திரும்பினார்.

**மதீனாவிற்கு ஓடுதல் (கிசிரா):** மக்காவில் பெருமானாருக்கு எதிர்ப்பு அதிகமாயிற்று; இவரது உயிருக்கு ஆபத்தை ஏற்படுத்தவும் எதிரிகள் திட்டம் தீட்டினர். இந்நிலையில் மக்காவிலிருந்து 300 கி.மீ தொலைவிலுள்ள யாத்திரிபு (Yathrib) என்னும் நகர்வாழ் மக்கள் நபியைத் தங்கள் நகரத்திற்கு வர வேண்டுமென்று அழைப்பு விடுத்தனர். எனவே, நபிகள் தம்முடன் 200 ஆதரவாளர்களை அழைத்துக் கொண்டு நள்ளிரவில் யாத்திரிபு நகரத்திற்குப் பயணம் மேற்கொண்டார். நபிகளும், அபுபக்கரும் கி.பி. 622-இல் அந்நகரில் நுழைந்தனர். அதன்விளைவாக யாத்திரிபு நகரம் 'நபிகளின் நகரம்' என்னும் பொருளில் 'மதீனாத்-உன்-நபி' எனப் பெயர்பெற்றது. இதுவே 'மதீனா' என்று சுருக்கமாகச் சொல்லப்படுவதாயிற்று. நபிகள் நாயகம், மக்காவிலிருந்து மதீனாவிற்கு ஓடிய நிகழ்ச்சி ஒரு மறக்கமுடியாத நிகழ்ச்சியாகும். இசுலாம் சமய வரலாற்றில் இந்நிகழ்ச்சியே இசிரி அல்லது இசிரா (இசிரா-நாட்டை விட்டு வெளியேறுதல்) என்று குறிப்பிடப்படுகிறது. இசிரா ஆண்டுக் கணக்கீடும் இம்மாதத்திலிருந்தே தொடங்குகிறது. நபிகள் நாயகத்தின் வாழ்க்கையிலும், இசுலாத்தின் வரலாற்றிலும் இது ஒரு குறிப்பிடத்தக்க ஆண்டாகும். மதீனா மக்கள் நபிகளுக்கு உற்சாகமான வரவேற்பு அளித்தனர்; அதனோடு மதீனா அரசின் ஆட்சிப் பொறுப்பையே நபிகளிடம் அளித்தனர்.

**பதர் போர்:** மதீனா மக்கள் மக்கா வணிகர்களைத் தாக்கிக் கொள்ளையடித்தனர். அதனால் மக்கா, மதீனா நகரங்களுக்கிடையே பகைமை மூண்டது. மக்கா அரசின் தலைவனான அபு-சூபியான் (Abu-Subyan) என்பான் பெரும்படை திரட்டி கி.பி. 624-இல் மதீனாவின்மீது போர் தொடுத்தான். மதீனாவிற்குத் தென்மேற்கில் 150 கி.மீ. தொலை

வில் உள்ள பதர் (Badr) என்னுமிடத்தில் மதினா-மக்கா படைகள் சந்தித்தன. இப்போரில் நபிகளின் திறமையால் மக்கா படை தோற்கடிக்கப்பட்டது. இது இசுலாத்தின் முதல் வெற்றியாதலின் அதன் வரலாற்றில் இது ஓர் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகவே கருதப்படுகிறது.

**பிற போர்கள்:** பதர் போரினைத் தொடர்ந்து நபிகள் பல போர்களை நடத்தி வெற்றிபெற்றார். அவற்றுள் சவீக்குப் போர், உகத்துப்போர், பனுமுசுதலிக்குப் போர், அகழிப் போர், (Battle of the Ditches) ஆகியன குறிப்பிடத்தக்கனவாகும். அடுத்து இவர் கைபர் சண்டையில் உரோமானியப் பேரரசனின் பிரதிநிதியாக இருந்து சாம் நாட்டை ஆண்டுவந்த காரிசு கச்சானியைப் புறங்கண்டார். அடுத்து, மூத்தா சண்டையிலும் நபிகள் நாயகம் வெற்றி கண்டார். இறுதியாக இவர் தம் பெரும் படையினை கி.பி. 630-ஆம் ஆண்டு சனவரித் திங்களில் மக்கா நகருக்குக் கொண்டுசென்று அந்நகரைச் சரணடையச் செய்து காபாவிற்குள் நுழைந்தார்; காபா கோயிலில் இருந்த ஏறத்தாழ 360 தெய்வப் படிமங்களை உடைத்தெறிந்தார். அதே ஆண்டில் தபுக்குப்(Tabuk) பகுதியிலிருந்த யூதர்களும் கிறித்தவர்களும் இவருக்குப் பணிந்தனர். இதனைத் தொடர்ந்து உமான் கத்ர மவுத்து (Hadramaut), அல்-யமன் ஆகிய அரசுகளும், தய்யி (Tayyi), கம்தான், கிந்தா முதலான குலங்களும் நபிகளுக்குப் பணிந்தன. இவ்வாறு நபிகள் நாயகம் தம் இடைவிடாத போதனைகளாலும், போர்களாலும் அரபு நாட்டில் இசுலாத்தைப் பரவச் செய்தார். மக்காவில் 15 நாட்கள் தங்கியபின் மதினா மக்களுக்குத் தாம் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுமுகத்தான் நபிகள் மதினா திரும்பினார். கி.பி. 632 சூன் எட்டாம் நாள் நபிகள் நாயகம் இம் மண்ணுலக வாழ்வை நீத்தார்.

**நிருவாகச் சீர்திருத்தங்கள்:** நபிகள் மதினாவின் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றிருந்தபோது பல சீர்திருத்தங்களை மேற்கொண்டார். மதினாவின் உள்ளாட்சித் துறை, படை நிருவாகம், சமயம் தொடர்பானசெய்திகள் ஆகியவற்றில் பலபாராட்டத்தக்கசீர்திருத்தங்களை மேற்கொண்டார். இசுலாமியர் பின்பற்ற வேண்டிய வழிபாடு, உண்ணாநோன்பு, ஈகை முதலானவை பற்றிய சமய ஆணைகளைப் பிறப்பித்தார். திருமணம், மணவிலக்கு, அடிமைகள், பகைவர்கள், அனாதைகள், போர்க் கைதிகள் ஆகியோர் எவ்வகையில் நடத்தப்படவேண்டும் என்பது குறித்துத் தெளிவான சட்டங்களை இயற்றினார். போர்க்களத்தில் போரிடும்போது படைவீரர்கள் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளை வகுத்தார். போரின் போது மகளிர், முதியோர், உடல் ஊனமுற்றோர், குழந்தைகள் ஆகியோருக்குத் தீங்கிழைத்தல் கூடாது என்றும், வீடுகளை அழிக்கக்கூடாதென்றும் எச்சரித்தார். இரவு நேரத்தில் பகைவர்களைத் தாக்குதல் கூடாதென்றும், இறந்தவர்களின் உடலைத் துண்டித்தல் கூடாது என்றும் ஆணை பிறப்பித்தார். புதிய நாட்காட்டி (Calendar) ஒன்றினை இவர் நடைமுறைக்குக் கொண்டுவந்தமை பாராட்டுக்குரியது. இவ்வாறு நபிகள் சமயத்துறையில் மட்டுமன்றி ஆட்சித்துறையிலும் சமூகத் துறையிலும் பல சீர்திருத்தங்களை மானிட நேயத்துடன் மேற்கொண்டார்.

**குண நலன்கள்:** நபிகள், எளிமையான வாழ்வை மேற்கொண்டவர்; தம்மைப் பின்பற்றியவர்களையும் எளிமையாக வாழவேண்டுமென்று அறிவுறுத்தியவர்; எல்லோரிடமும் இனிமையாகப் பழகும் பண்பும் கொண்டவர். எவ்வுயிர்களிடத்தும் அன்புகாட்டிய இவர், தம்ஆதரவாளர்களையும் பிற உயிர்களிடத்து இரக்கம் காட்டும்படி கேட்டுக்கொண்டார். பெருந்தன்மையும் இளகிய மனமும் வாய்க்கப்பெற்ற நபிகள் ஏழைகள், அனாதைகள், ஒடுக்கப்பட்டோர், கைம்பெண்கள் ஆகியோருக்கு ஆதரவளித்தார். ஈகைக் குணமிக்க இவர், தம் ஆதரவாளர்களை ஏழைகளுக்கு உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். நல்வழி காட்டும் ஒளிவிளக்காகத் திகழ்ந்த நபிகள் நாயகம், மனிதகுலம் பெற்றெடுத்த மாணிக்கமாவர்.

ம.இ.

**துணை நூல்:**

Philip K. Hitti., History of the Arabs, The Macmillan Press Ltd., Madras, 1970.

**நம்பகத்தன்மை:** கல்வியியல், உளவியல் மற்றும் சமூகவியல் போன்ற சமூக அறிவியல்களில் பல்வேறு பண்புக்கூறுகள் அளவிடப் பெறுகின்றன. இப்பண்புகளை அளவிட்டறியப் பலவித சோதனைகள் அல்லது கருவிகள் ஈடுபடுத்தப்படுகின்றன. அக்கருவிகள் நம்பகத் தன்மை, ஏற்புடைமை, புறவயத்தன்மை, பயன்படுதன்மை போன்ற பண்புகளை உடையனவாயிருந்தால் நிறைவுடையனவாக விளங்கும். இப்பண்புகளில் நம்பகத் தன்மையும் (Reliability) ஒன்று.

ஒரு சோதனை, எதனை அளக்க வேண்டுமோ அதனைத் துல்லியமாகவும் முரண்பாடற்றதாகவும் அளந்தால் அது நம்பகமானது எனப்படும். அதாவது அடுத்தடுத்துப் பயன்படுத்தும்போது முடிவுகள் முரண்பாடின்றி ஏறத்தாழ ஒரே மாதிரியாக விளங்கும் பண்பானது நம்பகமாகும். காலத்தை அளவிட்டுக்காட்டும் கடியாரம் காலத்தைத் துல்லியமாக அளந்து காட்டினால் நம்பகமானது எனலாம். ஓர் எடுத்துக்காட்டு மூலம் இதைப் பார்க்கலாம்.

வானொலியில் இந்தியத் திட்ட நேரம் குறிப்பிடப் படும் ஒவ்வொரு முறையும் ஒரு கடியாரம் ஐந்து நிமிடம் மட்டுமே கூடுதலாகக் காட்டுகிறது என்று கொண்டால். ஒரு வாரக் கால அளவில் இதைக் கவனித்துப் பார்த்தும் அதே 5 நிமிட வேறுபாடு மட்டும் காணப்பட்டால் அக்கடியாரத்தை நம்பகமானது எனலாம். (ஆனால் சரியான நேரத்தைக் காட்டவில்லை எனக் குறிப்பிட வேண்டும். சரியான நேரத்தை அதில் அமைத்துக் கொள்ள முடியும்).

ஒரு சோதனையின் நம்பகம் அதன் ஏற்புடைமையைச் சார்ந்ததாகும். ஏற்புடைமையோடு கூட நம்பகமும் அமைந்துவிட்டால் சோதனை பெரிதளவு பயன் தருவதாக அமையும். நம்பகமான சோதனையில் ஏற்படும் பிழை மிகக்குறைவாக இருக்கும். நம்பகத் தன்மையை நம்பகக் கெழுவாகக் குறிப்பதுண்டு. நம்பகக் கெழுவின் மதிப்பு மிகுதியானால் பெறப்பட்ட விவரங்களில் ஏற்படக்கூடிய தவறுகள் மிகக் குறைந்துள்ளன எனலாம். நுண்ணறிவுச் சோதனையில் நம்பகக் கெழுவின் மதிப்பு 0.9 க்கு அதிகமாக இருந்தாலே சோதனையானது நம்பகமுடையதாகக் கொள்ளப்படும் இருவகுப்புகள் அல்லது இரு பள்ளிகளுக்கிடையே விளங்கும் நிலையை யறியும் சோதனையின் நம்பகத் தன்மைக் கெழுவின் மதிப்பு 0.5 க்கும் 0.6 க்கும் இடையில் இருந்தால் ஏற்றுக் கொள்ளப்படும்.

இவ்வாறான நம்பகத் தன்மையை அறியவும் முடிவு கூறவும் பல முறைகள் உள்ளன. அவை சோதனை மறுசோதனைமுறை (Test retest method) இணைச் சோதனை முறை (Parallel forms method), வெட்டுக்கூறு முறை (Split-half method) மற்றும் பகுத்தறிவுச் சமன்பாட்டு முறை (Rational equivalance method) என்பன.

சோதனை மறுசோதனை முறையில் குறிப்பிட்ட மாணவர்களுக்கு ஒரு சோதனையைப் பொருத்தமான கால இடைவெளியில் இரண்டுமுறை தந்து பெறப் படும் மதிப்பெண்களை ஒப்பிட்டுப் பார்த்து நம்பகக் கெழுவின் அடிப்படையில் நம்பகத் தன்மை ஏற்கப் படுகிறது. இம்முறையில் பெறப்படும் நம்பகக்கெழு, 'நிலைத்த தன்மைக் கெழு' எனப்படும். இம்முறையில் தரப்படும் கால இடைவெளி மிகுதியாயின் அறிவு வளர்ச்சி, புதுக்கற்கை போன்ற காரணிகளால் பாதிப்பு ஏற்படலாம். கால இடைவெளி மிகக் குறைவாக இருப்பின் முன்பு விடைதந்த பழக்க விளைவு, உடனடி நினைவு போன்றவை பாதிக்கக் கூடும். எனவே, முதல் சோதனைக்கும் மறுசோதனைக்குமிடையே இரண்டு அல்லது மூன்று வார கால இடைவெளி இருத்தல் நல்லது.

இணைச் சோதனை முறையில், பொருட்பகுதி, அமைப்பு முறை போன்ற எல்லாக் கூறுகளிலும் ஒத்த இரண்டு சோதனைகள் தயாரிக்கப்படும். குறிப்பிட்ட ஒரே மாணவர் குழுவிற்குப் பொருத்தமான கால இடைவெளியில் தந்து கிடைக்கும் இரு தொகுதி மதிப்பெண்களை நோக்கி நம்பகத் தன்மை குறிப் பிடப்படும். இம்முறையில் பெறப்படும் நம்பகக்கெழு சமமதிப்புக் கெழு' எனப்படும்.

வெட்டுக் கூறு முறையில் ஒரு குழுவிற்கு ஒரே சோதனையை ஒரு முறை தந்து பெற்ற முடிவுகளை ஒற்றை எண் உருப்படிக்கானவை, இரட்டை எண் உருப்படிக்கானவை எனப் பிரித்து, அவைகள் மூலம் கிடைத்த மதிப்பெண் ஒப்புமை நோக்கி நம்பகத் தன்மை அறியப்படும். எடுத்துக்காட்டாக, ஒரு சோதனையில் 50 உருப்படிகள் இருக்குமாயின் 1,3,5... 49 போன்ற உருப்படி விவரங்களின் மதிப்பும் 2,4,6...50 போன்ற உருப்படி விவரங்களின் மதிப்பும் ஒப்பிடப்படும். இந்த விதத்தில் காணப்படும் நம்பகக் கெழுவானது 'முரணாமைக் குணகம்' எனப்படும்.

'பகுத்தறிவுச் சமன்பாட்டு முறையில்' ஒரே சோதனையில் உள்ள உருப்படிகள் மூலம் பெற்ற விவரங்களை அவை அமைந்த அவ்விதத்திலேயே கருதி ஒன்றிற் கொன்றிடையே உள்ள 'உடன் மாறுபாட்டின்' அடிப்படையில் நம்பகத் தன்மை பெறப்படுகிறது. இம்முறையில் பெற்ற நம்பகக் கெழுவானது 'அகநிலை மாறாக் குணகம்' எனப்படும். செ.செ.

**நம்பாசுப் பழங்குடி**: பசிபிக்குப் பெருங்கடலிலுள்ள நியூ ஈபிரடீசு (New Hebrides) தீவுக் கூட்டங்களில் வாழும் மிகத் தொன்மையான பழங்குடிகளுள் ஒரு குடியினரே நம்பாசுப் (Nambas) பழங் குடியினர். 'நம்பா' (Namba) என்னும் சொல்லிற்கு ஆண் இனக்குறியின் மேல் தோல் எனப் பொருள் படும். இத்தீவுகளில் உள்ள இக்குடியினர் பெரிய நம்பாசுகள் (Big Nambas) என்றும், சிறிய நம்பாசுகள் (Small Nambas) என்றும் இரு பிரிவாக உள்ளனர். இவ்விரு பிரிவினரும் ஒருசில பண்பாட்டுக் கூறுகளில் வேறுபடுகின்றனர்.

பெரிய நம்பாசுப் பழங்குடியினர் நியூ ஈபிரடீசுத் தீவுக் கூட்டங்களின் வட கோடியில் வாழ்கின்றனர். சடங்கு நிகழ்ச்சிகளில் மனிதப் பலியிடும் முறையை இத்தீவில் வாழும் பிற பழங்குடிகள் அறவே விடுத்த பின்னர் இறுதியாகக் கைவிட்டவர்கள் நம்பாசுகளாவர். அதற்குக் காரணம் 1950களில் ஆங்கிலோ-பிரெஞ்சு அரசு பெருந்தடை விதித்ததாகும். சிறிய நம்பாசுகள் இம்போட்கோட்டு (Mbotgote) என்றும் கூறப்படுவர். இவர்கள் இத்தீவுகளில் தென்கோடியில் வாழ்கின்றனர். இவர்கள் வாழும் பகுதி வெளி உலகத்தவரால்


நம்பாசு ஆடவன்

எளிதில் அடைய முடியாத தூரத்தில் உள்ளதால் இவர்கள் பண்பாட்டு மாற்றத்திற்கு உட்படாமல் வாழ்கின்றனர்.

இவர்கள் மரவள்ளியைப் பெருமளவு உண்கின்றனர். இதைத் தோட்டப் பயிராக விளைவிக்கின்றனர். காட்டுப் பகுதியினை அழித்துச் சில ஆண்டுகள் பயிரிட்ட பின் மீண்டும் வேறு இடத்திற்குச் சென்று அங்குப் பயிரிடுகின்றனர். இவர்கள் வாழும் பகுதி பரந்த காட்டுப் பகுதியாக உள்ளதால் இவ்வகையான காட்டெரிப்பு வேளாண்மை எளிதாக உள்ளது. வள்ளிக் கிழங்கு மாவினைக் களிபோல் செய்து அதை இலை மேல் வைத்து, பின்னர் அதைச் சுடுகல்லின் மேல் வைத்து உண்கின்றனர். இவ்வகை உணவே இவர்களுக்கு மிகவும் பிடித்தமானது.

இவர்கள் வளர்க்கும் ஒரே விலங்கு பன்றி மட்டுமேயாகும். அவற்றுள் சிறப்பான சில பன்றிகளை நீண்ட பற்களைக் கொண்டவையாக வளர்க்கின்றனர். அதற்காக மேல் தாடையிலுள்ள பற்களை இளம் பருவத்திலேயே நீக்கி விடுகின்றனர். இவர்கள் வாழ்வில், சடங்குகளும் விழாக்களும் சிறப்பிடம் பெற்றுள்ளன. இச்சடங்கு நிகழ்ச்சிகளில் பன்றிகள் முதலிடம் பெறுகின்றன. தந்தம்போல் வளைந்து வளரும் பற்களையுடைய பன்றிகளே சடங்கு நிகழ்ச்சிகளில் விரும்பிப் பயன்படுத்தப்படுகின்றன. அதோடு மணப் பெண்களைப் பெறுவதற்கும் பன்றிகளே பயன்படுத்தப்படுகின்றன. அழகான மணப் பெண்ணைப் பெறுவதற்கு 20 பன்றிகள் வரை கொடுக்கின்றனர்.

இவர்களின் பொருளாதாரம், வேட்டையாடி உணவு சேகரித்தலையே பெரிதும் நம்பியுள்ளது. அதிலும் குறிப்பாகக் காட்டுப் பன்றிகளை வேட்டையாடுதலே இவர்களின் முதன்மையான தொழிலாக உள்ளது. வேட்டையில் நாய் பெருந்துணை புரிகிறது. பறக்கும் நரிகள் (Flying foxes) என இம்மக்கள் குறிப்பிடும் ஒருவகை வௌவால்களை வில், அம்புகள் கொண்டு வேட்டையாடுகின்றனர். அண்மைக் காலங்களில் சிறு துப்பாக்கிகளைப் பயன்படுத்தத் தொடங்கியுள்ளனர். குறிப்பாகச் சிறிய நம்பாசுகள் வேட்டைத் தொழிலையே பெரிதும் நம்பி வாழ்கின்றனர்.

இவர்கள் வாழும் பகுதிகளில் ஓடும் சிற்றோடைகளில் விலாங்கு மீன்களும், நணடு இனங்களும் கிடைக்கின்றன. வேட்டையின் மூலமும் காட்டுப் பொருள்களைச் சேகரிப்பதன் மூலமும் கிடைக்கும் உணவுடன் மீன் வகைகளும் இவர்களின் தேவையை நிறைவு செய்கின்றன.

நம்பாசப் பெண்கள் திருமணத்தின்போது முன் பற்கள் இரண்டினை எடுத்து விடுவர். அதனால், கடினமான உணவுப் பொருள்களைச் சில காலம் வரை உண்பதில்லை. ஆண்மக்கள் ஏறத்தாழ 17-20 வயதடையும் போது இனக்குறியின் நுனித்தோலை நீக்கிக் கொள்கின்றனர். இச்சடங்கு பெரும்பாலும் 20 ஆண்டுகளுக்கொரு முறை நடைபெறுகிறது.

நம்பாசுச் சமுதாயத்தில் ஒவ்வொருவரும் கொண்டுள்ள தகுதி, நிமாங்கி (Nimangi) எனக் கூறப்படும் சடங்கு நிகழ்ச்சிகள் மூலம் வெளிப்படுகிறது. இச்சமுதாயத்தில் பல தகுதி நிலைகள் உள்ளன. ஒருவர் ஒரு நிலையிலிருந்து அதற்கடுத்த உயர்ந்த நிலைக்குச் செல்ல வேண்டுமானால் ஒருவித சடங்கு நடனமும் (Ceremonial Dance), உணவு வழங்குதலும், நீண்ட பற்களைக் கொண்ட பன்றிகளைக் (Tusker Pigs) கொல்லுதலும் செய்ய வேண்டும். ஒருவர் மிக உயர்ந்த தகுதியை அடைய வேண்டுமானால் மேற்கொள்ளப்பட வேண்டிய சடங்கு நிகழ்ச்சிகள் மிகுதியாக ஆவதுடன், அவர் கொல்ல வேண்டிய பன்றிகளின் எண்ணிக்கையும் மிகுதியாக வேண்டும். தகுதியை உயர்த்திக் கொள்ளும் இச்சடங்கின் போது தனி வகையான அலங்காரம் செய்து கொள்வர்.

தகுதிப் பெயர்ச்சிச் சடங்கின்போது பழங்குடித் தலைவனுக்குப் பன்றிகள் பரிசளிக்க வேண்டும். அவற்றைப் பெற்றுக் கொள்ளும் அவர், உடலில்

சடங்குக் குறிகளை (Ritual Carvings) இடுவார். ஒருவர் பெறும் குறிகள் அவர்களின் தகுதியைக் காட்டுவனவாகும்.



தகுதிப் பெயர்ச்சிச் சடங்கில் ஆடவன்

சமூக வாழ்வில் ஏற்படும் சிக்கல்களும் முரண்பாடுகளும்மூத்தவர்களால் தீர்த்துவைக்கப்படுகின்றன. இப்பதவி மரபு வழியில் வருவதன்று. தகுதிப் பெயர்ச்சிச் சடங்குகள் மூலம் உயர்ந்த நிலையை அடைந்தவர்களே இப்பொறுப்பு வகிக்கின்றனர்.

இறப்புச் சடங்குகளில் உயர்ந்த தகுதியைப்பெற்ற மூத்தவர்களுக்கு மிக விரிவான அளவில் சடங்குகள் நடத்தப்படுகின்றன. இத்தகுதியைப் பெற்ற மூத்தவர்களின் ஆவி இறந்த பின்னரும் உயிருடன் இருக்கக்கூடியது என்ற நம்பிக்கையே இதற்குக் காரணமாகும். சிறப்புச் சடங்குகளின்போது இறந்தவரைப் போன்று செய்யப்படும் போலி உருவம் மிகவும் இன்றியமையாதது. இது சிவப்புக் களிமண்ணால் செய்யப்படும். இது இறந்தவரது உடல் அமைப்பும் அவரது இயல்பான பண்புகளும் வெளிப்படும் வண்ணம் செய்யப்படும். அதோடு அவரது தகுதி, உடலின் மீது வண்ணப்பூச்சுகளால் வரையப்படும். இப்பொம்மையை, ஆண்கள் கூடும் பொதுக்குடிசையை ஒட்டிய பகுதிகளில் செய்வர். அவ்விடத்தில் பெண்களும் ஏற்புச் சடங்கிற்கு உட்படாத (Non-initiates) ஆண்



தகுதிப் பெயர்ச்சிச் சடங்கு நடனம்

களும் செல்லக்கூடாது. ஈமச் சடங்கின் போது நடனங்களும் வித்தைகளும் நிகழ்த்தப்படுகின்றன.

இவர்களின் வாழ்வில் மந்திரம் (Magic) முதன்மையான பங்கு வகிக்கிறது. ஒருவர் மற்றவரின் மந்திரத்திற்கு ஆளாக்கப்பட்டார் என்று முதியோர்களால் உறுதி செய்யப்பட்டால், அவர் அதற்கு நட்ட ஈடாக முதியோர் கூறுமளவிற்குப் பன்றிகளைத் தர வேண்டும். வாழ்வில் நடைபெறும் பெரும் இடர்ப்பாடுகள் மந்திரத்தின் மூலமே நிகழ்கின்றன என நம்புகின்றனர்.

அண்மைக் காலங்களில் நம்பாசுப் பழங்குடியினரின் மரபுப் பண்புகள் பெருமளவு அழிந்து வருகின்றன. குறிப்பாக, பெரிய நம்பாசுகள் இதற்கு ஆளாகியுள்ளனர். இவர்களின் சமுதாயத்தில் மந்திரச் செயல்களின் மூலம் பெண்களின் எண்ணிக்கை ஓரளவு குறைந்து காணப்படுவதால் இன்றைய இளைஞர்கள் அண்டைய பகுதிகளில் வாழும் கிறித்தவப் பெண்களைத் திருமணம் செய்ய முனைந்துள்ளனர். அதனால் கிறித்தவ சமயக் கூறுகள் இவர்களிடம் வேரூன்றத் தொடங்கியுள்ளன. சீ.ப.

**நம்பாடுவான்:** வைணவத் திருத்தலங்களில் 'திருக்குறுங்குடி' என்னும் திவ்விய தேசம் தென் பாண்டி நாட்டிலுள்ளது. அங்குத் 'திருக்குறுங்குடி நம்பி' நின்றும் இருந்தும் கிடந்தும் மலைமேலும் பல திருக்கோலங்களில் சேவை சாதிக்கிறார். இத்திருத்தலத்தைப் பற்றி வராக மகாபுராணத்தில் ஒரு வரலாறு உள்ளது. முற்காலத்திலே இந்தத் திருத்தலத்தில் 'அரிசன' வகுப்பைச் சேர்ந்த ஒரு திருமாலடியார் வாழ்ந்து வந்தார். அவர் பாடுவதில் வல்லவர். அதனால் எம்பெருமானாலேயே 'நம்மைப்படுவான்' என்று அபிமானிக்கப் பெற்றார். அதுவே காரணமாகப் பிற்காலத்தில் 'நம்பாடுவான்' என்றே வழங்கப்பெற்றார். அவர் ஒவ்வொரு ஏகாதசி இரவிலும் கோவிலுக்கு வெளியிலிருந்து கொண்டு விடியும் வரை நம்பியைக் குறித்துப் பாடுவதை விரதமாகக் கொண்டிருந்தார். ஒரு கார்த்திகை வளர்பிறை ஏகாதசியன்று அவர் பாடச் செல்லும்போது, அந்தணனாயிருந்து யாகத்தில் தவறு செய்கையாலே மரணமடைந்து இராட்சசனாகப் பிறந்த ஒரு பிரமஇராட்சசன் பசிப்பிணியாலே அவரைக் கொன்றுண்ண விரும்பிப் பிடித்துக் கொண்டான். அவர் தம்முடைய விரதத்துக்கு ஊறு நேராதபடி எம்பெருமானைப் பாடுவதற்காகத் தம்மை விடுவிக்குமாறும், பாடி முடிந்தவுடன் அவனிடம் வருவதாகவும் கூறினார். அரக்கன் தயங்கினான். அவனை நம்ப வைப்பதற்காக அவர் பல சபதங்களைச் செய்தார். உன்னிடம் நான் திரும்பி வராமலிருந்தால் சிரீமந்நாராயணனை விட்டு வேறு தெய்வங்களைப் பூசித்தவர்களுடையும் கதியையும், சிரீமந்நாராயணனை மற்றத் தெய்வங்களோடு ஒத்தவனாக எண்ணுகிறவர்களடையும் பாபத்தையும் அடையக் கடைவேன்' என்பது அவர் செய்த கடைசி சபதம். இந்தச் சபதங்களைக் கேட்ட அரக்கன் நம்பாடுவானைப் பாடுவதற்காகச் சென்றுவர அனுமதித்தான். நம்பாடுவானும் எம்பெருமானைப் பாடி அவனருள் பெற்று அரக்கனிடம் திரும்பி வந்தார். அரக்கன் 'இன்றிரவு நீபாடியதின் புண்ணியப் பயனை எனக்குக் கொடுத்து எனது அரக்கப் பிறவியை நீக்கினால் நீ உயிர் தப்பலாம்' என்று ஆசை காட்டிப் பார்த்தான். அவர் அவனுடைய ஆசை வார்த்தைக்கு மயங்கவில்லை. உடனே அரக்கன் அவரைச் சரணடைந்து 'ஒருபாட்டின் புண்ணியப் பயனையாவது வழங்கி என் அரக்கப் பிறவியை நீக்க வேண்டும்' என்று வேண்டிக் கொண்டான். அதற்கிசைந்து நம்பாடுவான் அன்றிரவு பாடிய 'கைசிகம்' என்னும் பண்ணின் புண்ணியப் பயனை அரக்கனுக் களித்தார். அதனால் அரக்கன் நற்கதியடைந்தான். நம்பாடுவானும் காலக் கிரமத்தில் பரமபதமடைந்தார். இந்த வரலாற்றைக் குறிக்கும் வகையில் திருமால் திருக்கோயில்களனைத்திலும் 'கைசிக ஏகாதசி' என்று வழங்கப்பெறும் கார்த்திகை சுக்கிலபட்ச (வளர்பிறை) ஏகாதசி பெரிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது. 'கைசிகபுராணம்' என்று வழங்கப்பெறும் இப்புராணமும்சிரீபராசரபட்டரருளிய உரையுடன் எம்பெருமான் திருமுன்பே வாசிக்கப் பெறுகிறது. திருக்குறுங்குடியில் கைசிக ஏகாதசியன்று கோயிலில் இவ்வரலாறு நாடகமாகவும் நடிக்கப் பெறுகிறது. எஸ்.கி.

**நம்பிக்கை உரிமைக் கோட்பாடு:** சொத்துகளின் உண்மையான உரிமையாளரின் இசைவு பெற்று நொடித்தவர் வசம் உள்ள சொத்துகளை, அவ் வுரிமையாளர் கூட நீதிமன்ற அதிகாரிக்கு எதிராக உரிமை கொள்ள முடியாது. காரணம் நொடித்தவர்தாம் அச்சொத்துக்களின் நம்பிக்கை உரிமையாளர். எனவே, நொடிப்புச் சட்டம் நீதிமன்ற அதிகாரிக்கு அச்சொத்தின் மீது முழு உரிமை அளிக்கிறது. சில சூழ்நிலைகளில் உண்மையிலேயே சொத்துகள் நொடித்தவரின் சொத்துகளாக இல்லாவிட்டாலும் அவருடையனவாகக் கருதப்படுகின்றன (Doctrine of Reputed ownership). அதற்கான விதிமுறைகள் வருமாறு:

அச்சொத்துகள் நகரும் சரக்குகளாக இருக்க வேண்டும். வியாபாரக் கடன் பாக்கி, நொடித்தவருக்குச் சேர வேண்டிய விளைபொருள்கள் போன்றவற்றை விடுத்து மற்றவையாக இருத்தல் கூடாது. அச் சரக்குகள் வாணிகம் செய்யும் பொழுது அவர் வசம் இருத்தல் வேண்டும். தனிப்பட்ட முறையில் பயன்படுத்தும் வீட்டுக்கு வேண்டிய பொருள்களாக

அவை இருந்தலாகாது. அப்பொருள்கள் பெரும்பாலும் வணிகத்திற்குத்தான் பயன்படுத்தப்பட வேண்டும். காரணம் கடனாளி, கடனீந்தோர்களிடமிருந்து வணிகம் விடுத்து ஏனைய நோக்கங்களுக்காகக் கடன் வாங்கிடக் கூடாது. நொடிப்பு தொடங்கும் போது அப்பொருள்கள் நொடித்தவரிடம் இருக்க வேண்டும். இது உண்மையான உரிமையாளரின் அனுமதியுடன் நொடித்தவரின் வசம் இருக்க வேண்டும். எனவே,இத்தகைய காலங்களில் அவர் உண்மையான நம்பிக்கை உரிமையுடையவராகிறார். எடுத்துக் காட்டாக, பொருளை வாங்கி விட்டு, விற்பனையாளரிடமே அதை விட்டுச் செல்கிறார் வாங்கினவர். அதன் பின்னர், விற்பனையாளர் நொடித்தவராக அறிவிக்கப்படுகிறது. எனவே, வெளித்தோற்றத்திற்கு அவர் பொருளின் உரிமையாளராக விளங்கலாம். ஆனால், உண்மையான உரிமையாளர் அப்பொருளை வாங்கினவரேயாவார். இருப்பினும் அப்பொருள் நீதிமன்ற அதிகாரியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும். நொடித்தவருக்கு உரிமை இல்லாத பொருள் கூட அவ்வதிகாரியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும். இத்தகைய நிலையில் அவ்வதிகாரிக்கு நொடித்தவரை விட அதிக உரிமையுள்ளது. பொருள்களின் அடைமானங்களில் இது மிகவும் சாதாரணமாக நடக்கக் கூடியது. அடைமானம் ஏற்றுக் கொண்டவர் தம் பிணையத்தை இழக்க நேரிடும்.

பொருள்களை அடகு வைக்கும் போது அப்பொருள் பாதுகாப்பிற்காக வைக்கப்பட்டதா என்று பார்க்க வேண்டும். மேலும், அடகு பிடிப்பவருக்கு அதைப் பயன்படுத்த உரிமை உண்டா என்றும் பார்க்க வேண்டும். முதற் கூறிய வகையில் அப்பொருள் நொடித்தவருக்கு உரியதாகும். அடுத்துக் கூறிய வகையில் அது அவருக்கு உரியதன்று. எனவே, அதனைக் கடனாளி,சொத்ததிகாரியிடம் ஒப்படைக்கத் தேவையில்லை.

கிரீனிங்கு எதிர் கிளார்க்கு(Greening Vs. Clarke) என்ற வழக்கில் 'ப' என்பவரிடமிருந்து 'அ' பருத்தி வாங்கிக் கொண்டு பணம் கொடுத்து விட்டார். ஆனால் சரக்கு 'ப' விடமே இருந்ததால் அதை அவர் 'ச' விடம் அடகு வைத்து விட்டார். 'ச' அதனை விற்றுத் தமக்குச் சேர வேண்டிய பணத்தை எடுத்துக் கொண்டார். ஆனால், அவருக்குச் சேர வேண்டிய பணம் போக மீதி கொஞ்சம் இருந்தது.'ப' நொடித்து விட்டார். அந்த அதிகப் படியான தொகையை 'அ' கேட்டார். நீதிமன்ற சொத்ததிகாரியும் அப் பணத்தைக் கேட்டார். காரணம் அது 'ப'வுக்குச் சேர வேண்டியது என்பது அவர் வாதம். அச் சரக்கு நொடித்தவரிடம் இல்லாததால் அந்த மீதித் தொகையை 'அ' தான் பெற முடியும். சொத்ததிகாரி பெற முடியாது என்று நீதிமன்றம் தீர்ப்புக் கூறியது. இதனால் நம்பிக்கை உரிமை, அடகு வைப்பதைப் பாதிக்கவில்லை என்று தெரிய வருகிறது.

மேலும், பிடி ஆணை (Warrant) மூலம் பறிக்கப் பட்ட பொருள்கள் இக் கோட்பாட்டின் கீழ் வாரா. அதே போல் மோசடி அல்லது தவறான வழி மூலம் பெற்ற பொருள்களும் இக்கோட்பாட்டினால் பாதிக்கப்பட மாட்டா. ஒருவருடைய பொருளை மற்றொருவர் பாதுகாப்பில் விட்டுச் செல்வது வணிக வழக்கம். எனவே, அது நம்பிக்கை உரிமையின் பாற்படாது. நொடிப்பு விண்ணப்பம் தாக்கல் செய்யும் போதோ நொடிப்புத் தீர்ப்பளிக்கும் போதோ வாடகைக் கொள்முதல் மூலம் வாங்கிய நகரும் பொருள்களும், கடனாளி வசம் இல்லாத பொருள்களும் இக் கோட்பாட்டின் கீழ் வாரா.

மாகாண நகரங்களின் நொடிப்புச் சட்டத்திற்கும், மாகாண நொடிப்புச் சட்டத்திற்கும் இக்கோட்பாட்டைப் பொறுத்த மட்டில் வேற்றுமை உண்டு. முதலில் கூறிய சட்டத்தில் நொடிப்புத் தொடங்கும் போதே நொடித்தவர் வசம் இப்பொருள்கள் இருக்க வேண்டும்.அடைமானத்தில் உள்ள பொருள்களையும் இது கட்டுப்படுத்தும். அதிகார முறையில் உரிமை மாற்றம் பெற்ற அதிகாரி இதில் தலையிட்டால் தான், பொருள்கள் அவர் வசம் ஒப்படைக்கப்படும்; தாமாகவே அவரிடம் ஒப்படைக்கப்பட மாட்டா.

ஆனால், மாகாண நொடிப்புச் சட்டத்தின் கீழ், நொடிப்புத் தீர்ப்பு உத்தரவு வழங்குவதற்காக் விண்ணப்பம் தாக்கல் செய்யும் போது அவரிடம் அப்பொருள்கள் இருக்க வேண்டும். அடைமானத்தில் உள்ள பொருள்களை இது பாதிக்காது. இங்குப் பொருள்கள் உடனே நீதிமன்றச் சொத்ததிகாரி வசம் ஒப்படைக்கப்பட வேண்டும். அவர் தலையிட வேண்டும் என்பது அவசியமில்லை. கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Kapoor**, N.P., Elements of Mercantile Law, Sultan Chand & Sons, New Delhi, 1983.

**Pandiah**, R.H., Principles of Insolvency Law, N.M. Tripathy Ltd., Bombay, 1983.

***நம்பிக்கைகள்:*** நம்பிக்கையானது மக்களுடைய உள் உணர்ச்சிகளின் வெளிப்பாடாகும். இது ஒரு செயலின் காரணம் அல்லது சூழ்நிலைக்குரியபின் விளைவுகளைக் கொண்டதாகவும், மரபு வழியாகச் சந்ததி, பின் சந்ததியினரால் கடைப்பிடிக்கும் ஒரு வழக்காகவும் உள்ளது.

நம்பிக்கையைப் போன்றே மூடநம்பிக்கையும் மக்களுடைய எண்ணங்களிலும் கருத்துகளிலும் வேரூன்றி உள்ளது. நம்பிக்கை என்பது மக்களிடையே அனைத்து நிலைகளிலும் காணப்படும் ஒரு கூறாகும். முதன்மையாகப் படிக்காத, நாட்டவர் மக்களிடையே காணப்படும் நம்பிக்கை, படித்த உயர்குடி மக்களால் மூடநம்பிக்கை என்று கருதப்படுகிறது. இருப்பினும் ஒரு சில மக்களைத் தவிர அனைத்து மக்களிடையேயும் வாழ்வின் அனைத்து வகையிலும் நம்பிக்கை நிலை பெற்றுள்ளது.

நம்பிக்கைகளில் முதன்மையாக இடம் பெறுவது சகுனங்கள். சகுனங்களை வைத்தே மக்கள் பல வகையான நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர். வெளிநாட்டு அறிஞர்களான பக்கெட்டு (Puckett), ஆலன் தண்டசு (Allan Dundas), அலெக்சாண்டர் கிராப்பே (Alexander Krappe)போன்றவர்கள் நம்பிக்கைகளைப் பற்றிப் பல வழிகளில் ஆராய்ச்சி செய்துள்ளனர்.

அலெக்சாண்டர் கிராப்பே தம்முடைய நாட்டுப்புறவியலின் அறிவியல் (The Science of Folklore) என்னும் நூலில் நம்பிக்கையைப் பல்வகையாகப் பிரித்துக் காட்டுகிறார். அவற்றுள் சில: மதச் சார்பான நம்பிக்கைகள், விலங்கு, பறவைகள் பற்றிய நம்பிக்கைகள், வானவியல் பற்றிய நம்பிக்கைகள், குழந்தைகளைப் பற்றிய நம்பிக்கைகள், மனித உடல் உறுப்புக்களைப் பற்றிய நம்பிக்கைகள், மாதங்கள், வாரங்கள், நாள்கள் பற்றிய நம்பிக்கைகள், இறப்புப் பற்றிய நம்பிக்கைகள். கனவு பற்றிய நம்பிக்கைகள்.

பல மேனாட்டு அறிஞர்களும் நம்பிக்கைகளைப் பற்றிப் பல்வேறு வகையில் விரிவாக ஆராய்ச்சி செய்துள்ளனர். இன்றைய சூழ்நிலையில் பக்கெட்டு என்னும் அறிஞரின் ஒருசில நம்பிக்கைகளைப்பற்றிப் பல்வேறு வகையில் விரிவாக ஆராய்ச்சி செய்துள்ளனர். இன்றைய சூழ்நிலையில் பக்கெட்டு (Bucket) என்ற அறிஞரின் ஒருசில கருத்துகளைப் பின்பற்றி, ஆலன்டண்டசு (Alan Dundes), நம்பிக்கைகளைச் 1) சகுன நம்பிக்கைகள் 2) தந்திர நம்பிக்கைகள் 3) சகுன பரிகார நம்பிக்கைகள் என மூவகையாகப் பகுத்துக் காண்கிறார்.

அவற்றுள் 1) சகுன நம்பிக்கையின் கீழ் மனித சக்திக்கு அப்பாற்பட்ட, மனிதரால் கட்டுப்படுத்த முடியாத சகுனங்களைக் கொண்ட நம்பிக்கைகளைச் சகுன நம்பிக்கையாகக் கூறுகிறார், எடுத்துக்காட்டாக, 'கழுதை கத்தினால் நல்ல சகுனம்' என்று நம்பப்படுகிறது. கழுதை கத்துவது என்பது இயற்கையாக, மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு செயலாகும். இது போன்ற நம்பிக்கைகளில் மனிதரால் கட்டுப்படுத்த முடியாத ஒரு சக்தி உள்ளதாக நம்பப்படுகிறது.

2) இரண்டாவதாகக் கூறப்படும் தந்திர நம்பிக்கைகளிலும் சகுனங்கள் இடம் பெற்றாலும் அவை மனித சக்திக்கு உட்பட்ட சகுனங்களே ஆகும். எடுத்துக்காட்டாகப் 'புறாவை வீட்டில் வளர்த்தால் வறுமை வரும்' என்பது கூறப்படுகிறது. இச்செயலை மனிதரால் கட்டுப்படுத்த முடியும் என்ற காரணத்தால் இப்பகுப்பின் கீழ்க் கொணர்கிறார் அறிஞர் தண்டசு. இதுபோன்ற மனித சக்திக்கு உட்பட்ட (அ) மனிதரால் கட்டுப்படுத்தவோ தடுக்கவோ முடிகிற நம்பிக்கைகளைத் தந்திர நம்பிக்கைகளாகக் கூறலாம். ஆகவே, முதலில் கூறப்பட்ட சகுன நம்பிக்கை மனித சக்திக்கு அப்பாற்பட்ட நம்பிக்கை. இரண்டாவதாகக் கூறப்பட்ட தந்திர நம்பிக்கைகள் மனித சக்திக்கும் செயலுக்கும் உட்பட்டு உள்ளன.

மூன்றாவதாகக் கூறப்படும் நம்பிக்கை, சகுன பரிகார நம்பிக்கைகள். இதில் முதலிரண்டு நம்பிக்கைகளுமே அடங்கும். மூன்றாவதாகக் கூறப்படும் நம்பிக்கையில் ஒன்றினால், ஏற்படும் கெட்ட பின் விளைவுகளை, ஏதேனும் பரிகாரம் செய்வதன் மூலம் மாற்றவோ (Neutralize) தடுக்கவோ முடியும். எடுத்துக்காட்டாக 'ஒருவர் வெளியில் செல்லும்போது கால் தடுத்தால் செல்லக்கூடாது' என்பது நம்பிக்கை. இதனால் ஏற்படக்கூடிய பின்விளைவுகளை மாற்ற, அந்த நேரத்தில் சிறிது உட்கார்ந்துவிட்டோ நீர் அருந்திய பின்னரோ கிளம்பினால் இந்தச் சகுனத்தால் ஏற்படும் பின் விளைவுகளைத் தவிர்க்கவோ மாற்றவோ செய்யலாம்.

தமிழக நம்பிக்கைகளில் இம்மூன்று பகுப்புகளோடு நான்காம் பகுப்பாக இன்னொரு பகுப்பும் கூறப்படுகிறது. அதனைக் 'குறிப்பிட்ட முடிவில்லாத நம்பிக்கை' என்று கூறலாம். இந்நம்பிக்கை மக்களால் நம்பப்பட்டும், அதற்கான சரியான பின்விளைவுகள் கூறப்படவில்லை. எடுத்துக்காட்டாக 'மிளகாயைக் கையில் வாங்கக்கூடாது', ஏன்? என்ற வினா எழுப்பும்போது அதற்கான சரியான பின்விளைவை மக்களால் கூற முடியவில்லை. இந்தக் காரியத்தைச் (cause) செய்யக்கூடாது என்று கூறும்போது, அதனுடைய சரியான பின்விளைவு (Effect) கூறமுடியாத நிலையில் இந்நம்பிக்கைக்குக் 'குறிப்பிட்ட பின்விளைவில்லாத நம்பிக்கை' என்று நான்காம் பகுப்பாகக் குறிப்பிடப்பட்டது. நம்பிக்கையின் அமைப்பைக் கொண்டு பார்த்தால் காரணம் (cause) ஒன்று இருப்பின், நிச்சயம் அதனால் ஏற்படக்கூடிய விளைவு (effect) ஒன்று இருக்கும்.

க.சா.

**நம்பிக்கை மோசக் குற்றம்**: நம்பிக்கை மோசச் சட்டம் இந்தியத் தண்டனைச் சட்டத்தின் 405-ஆம் பிரிவில் விளக்கப்பட்டுள்ளது. ஒருவர் மற்றொருவரது சொத்தைத் தானமாக ஏற்றுக் கொண்டாலோ, சொத்தின் சொந்தக்காரரால் ஒப்படைக்கப்பட்டு ஏற்றுக்கொண்டாலோ, அந்தச் சொத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு அவருக்கு உண்டாகி விடுகிறது. அந்தப் பொறுப்பை நிறைவேற்றாது அந்தச் சொத்தைச் சுயநலத்திற்காகப் பயன்படுத்துவதோ அந்தச் சொத்தை விற்று விடுவதோ நம்பிக்கை மோசக் குற்றமாகும்.

(எ-டு) A மரணப் படுக்கையில் இருக்கும்போது அல்லது இறக்கும் தறுவாயில் உயில் (will) எழுதி, அதை B-யிடம் ஒப்படைத்து, உயிலின்படி பாதுகாத்து வரும்படி கூறுகின்றார். A-இறந்ததும் B,A-யின் சொத்தைக் கைப்பற்றி உயிலின்படி செயற்படாமல் தன் சொந்த நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்வது நம்பிக்கை மோசக் குற்றமாகும்.

(எ-டு) A - கல்கத்தாவில் வசிக்கின்றார். B-சென்னையில் வசிக்கிறார். A-யின் முகவராக B-செயற்படுகிறார் A-உரு. 10 இலட்சம் கொடுத்து அதை நிறுமப் பங்குகள் (Company shares) வாங்கும்படி கட்டளையிடுகின்றார். B அவற்றை வாங்காமல் தம் சொந்த வணிகத்தில் செலவிடுகிறார் அல்லது முதலீடு செய்து விடுகிறார். B - நம்பிக்கை மோசக் குற்றம் புரிந்தவராகின்றார்.

வருவாய்த் துறை அதிகாரி பொது மக்களிடமிருந்து பணத்தினைத் தண்டல் செய்கின்றார். அந்தப் பணத்தை உரிய கருவூலத்தில் கட்டிவிட வேண்டும். அதைப் பண வரவுப் பதிவு ஏட்டில் குறிப்பிடாமலும் உரிய கருவூலத்தில் கட்டாமலுமிருந்தால் அது நம்பிக்கை மோசக் குற்றமாகும்.

(எ-டு) A-என்பவர் வெள்ளிப் பாத்திரங்கள் செய்து கொடுக்க வேண்டும் என்று B-என்ற பொற்கொல்லரிடம் வெள்ளியைக் கொடுக்கின்றார். B-பாத்திரத்தை அசல் வெள்ளியில் செய்யாமல் பித்தளையுடன் கலந்து பாத்திரம் செய்து விடுகிறார். B-நம்பிக்கை மோசக் குற்றம் புரிந்தவராகிறார்.

நம்பிக்கை மோசக் குற்றத்தைச் சாதாரண மக்கள் புரிந்தால் அதிக அளவு தண்டனையாக 3 ஆண்டு வரை சிறைத் தண்டனையும், அதே குற்றத்தை வேலைக்காரன் அல்லது கூலிக்காரன் (Carrier) மற்றும் ஏற்றுமதியாளர், சரக்கு விற்பனையாளர், கிடங்குதாரர் செய்தால் 7 ஆண்டுவரை சிறைத் தண்டனையும் வழங்கப்படும்.

நம்பிக்கை மோசக் குற்றத்தை அரசாங்க ஊழியர், வங்கி அதிகாரி, தரகர், வியாபாரி, முகவர் வழக்கறிஞர் முதலானோர் புரிந்தால் 10 ஆண்டு வரை சிறைத் தண்டனை வழங்கப்படலாம்.

அதாவது, எந்த ஒரு மனிதரும் தவறான முறையில் மற்றவரின் பொருளினாலோ சொத்தினாலோ நன்மையடையக் கூடாது என்பது சட்டத்தின் நோக்கம். அந் நன்மையும் உரியவருக்குத் தெரியாமல் அடைவதைத்தான் நம்பிக்கை மோசக் குற்றம் எனக் கூறுகிறது சட்டம். அந்த மனிதரின் இசைவோடு எடுத்துக் கொள்ளுதல் அல்லது பற்று வைத்துக் கொள்ளுதல் நம்பிக்கை மோசக் குற்றமாகாது. ச.நா.

**நம்பிகாளியார்** ஒரு தமிழ்ப் புலவர், 'கற்குங் கவிவல்லை யாதவர் கோனம்பி காளி' எனத் தொடங்கும்நெற்குன்றவாணமுதலியாரின்பாடலால் நம்பிகாளியார் வல்லையென்னும் ஊரினர் என்பதும், யாதவர் குலத்தினர் என்பதும் அறியப்படுகின்றன. ஒருநாள் புலவர்நெற்குன்றவாணமுதலியார் என்னும் வள்ளலைப் பாடிப் பரிசு பெறச் சென்றபோது அவர் புறத்தே சென்றிருந்தமையால் அவர் தாதி புலவருக்குரிய உபசாரங்களைச் செய்து சில பரிசளித்தாள் என்றும். பின்வந்தநெற் குன்றவாண முதலியார் உவந்து பின்னும் சிலபல பொன்னுங் கொடுத்துப் புலவரின் கவிதையால் மிகவும் கவரப்பட்டவராய்த் தம்மையே அவருக்கு அடிமைப்படுத்திக் கொண்டார் என்றும் தொண்டைமண்டல சதகச் செய்யுளால் அறியலாம்.

தக்கயாகப் பரணி 457-ஆம் தாழிசை உரையில் உரையாசிரியர், உலகக் கவிப்பென்னும் பெயர் சக்கரவர்த்திகள் தாம் படைத்த திரிசொல்லென உணர்க; பண்டு நம்பிகாளியார் கடற்குப் பெயர் மழுவென்றிட்டு எறிதலும் கூர்த்தலும் திரைத்தலும் உடையதென்றார்; அதுபோலுமிது வென்க என்று ஒட்டக்கூத்தர் ஆக்கிய சொல்லிற்கு நம்பிகாளியாருடைய ஆக்கச்சொல்லை மேற்கோள் காட்டியுள்ளமையின் இவ்விருவரும் இணைத்துக் கூறப்படும்பெரும் புலவர்கள் என்பது விளங்கும். 'கம்பனென்றுங் கும்பனென்றும்' என்னும் தனிப்பாடலில் 'காளியொட்டக் கூத்தன்' என்று இவ்விருவருடைய பெயர்களும் சேர்த்துச் சொல்லப்பட்டிருத்தல் இக்கருத்தை வலியுறுத்தும்.

வள்ளலும் புலவருமான நெற்குன்றவாண முதலியார் ஒட்டக் கூத்தருடன் சமகாலப் புலவராக இருந்தவர் என்று அறியப்படுவதால் வள்ளலைப்பாடிப் பரிசில் பெற்றுத் திகழ்ந்த நம்பிகாளியாரும் கி.பி.12-ஆம்நூற்றாண்டில் வாழ்ந்த ஒட்டக்கூத்தர் காலத்தவராகலாம். இரா.செ.

**நம்பி குட்டுவனார்:** இவர் ஒரு சங்கப் புலவர். குட்டுவனார் என்னும் சொல்லை நோக்கி இவர் சேரமரபினர் எனத் தெளியலாம். இவர் எழுதிய ஐந்துபாடல்கள் (குறுந்.109,243, நற்.145,236, 345) எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ளன. இவர் நான்கு நெய்தற் பாடல்களும் ஒரு குறிஞ்சிப் பாடலும் பாடியுள்ளார். நின்னுடைய நுதலின் அழகு தலைவன் பிரிந்தபோது அழிந்தது போலவே உடனுறையும் பொழுதும் இருந்தது' (குறுந்.109) என்று தோழி கூறும் பாங்கு சிறப்புடைத்து. ஆம்பல் மலரின் மலர்ச்சிக்குச் சிறுவெண் காக்கை ஆவித்தலையும் (நற்.345) அடும்பு இலைகளுக்கு மானடிகளையும் (குறுந்.243) உவமையாகக் கூறுவது குட்டுவனாரின் கற்பனைத் திறனுக்குச் சான்றாக அமைந்துள்ளது.
சா.உ.

**நம்பி திருவிளையாடல்:** காண்க: திருவிளையாடற் புராணம்.

**நம்பி நெடுஞ்செழியன்:** இவன் மூவேந்தர்கள் காலத்தில் வாழ்ந்த குறுநில மன்னன். இவனுடைய இயற்பெயர் நம்பி என்பதாகும். மூவேந்தர்கள் தமிழகத்தை ஆண்ட காலத்தில் அவர்கள் வேண்டிய பொழுது அவர்களுக்குக் குறுநில மன்னர்கள் பணிகளை உதவி வந்தனர். அதனால் அக்குறுநில மன்னர்களைப் பாராட்டிச் சிறப்பிப்பது மூவேந்தர்களுக்கும் வழக்கமாயிருந்தது. பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்தில் வாழ்ந்தவன் இந்நம்பி. அத்தகு படையுதவியை நம்பியிடமிருந்து பெற்றதால் பாண்டியன் நெடுஞ்செழியன் தன் பெயரையே இவனுக்குப் பட்டமாக அளித்துப் பாராட்டினான். அதனால் நம்பி நெடுஞ்செழியன் என இவன் சொல்லப்பட்டான். இவன் பேரெயில் முறுவலார் என்னும் சங்கப் புலவரால் பாடப்பட்டுள்ளான். இப்புலவர் குறுந்தொகையில் 12-ஆம் பாடலையும், புறநானூற்றில் 239-ஆம் பாடலையும் பாடியுள்ளார். புறநானூற்றில் கையறுநிலைத் துறையில் அமைந்த பாடலில் இம்மன்னனுடைய சிறப்புகள் கூறப்பட்டுள்ளன. நம்பி நெடுஞ்செழியன் எதிர்பாராவகையில் இறந்தவுடன் உடலை எப்படி அடக்கம் செய்யவேண்டும் என்ற ஐயம் ஏற்படுகின்றது. அவ்வமயம் புலவரை வினவும்பொழுது அவனுடைய சிறப்புகளை யெல்லாம் எடுத்துக் கூறி, வாழும் காலத்தில் செய்யவேண்டிய நல்லனவற்றை யெல்லாம் அவன் செய்து முடித்து விட்டதால் அவனை இடுவதும் ஒன்றுதான் சுடுவதும் ஒன்றுதான் என்று கூறுவதாக அப்பாடல் அமைந்துள்ளது. நம்பி நெடுஞ்செழியனுக்குக் கூறப்படுகின்ற சிறப்புகள் யாவும் மன்னரினத்தார்க்கு மட்டுமன்றி மற்றையவர்க்கும் கொள்ளத் தக்க நெறிகளாக விளங்குகின்றன. 'வலியரென வழிமொழியலன்; மெலியரென மீக்கூறலன்' போன்ற தொடர்கள் சிறப்புடைய பாடல் அடிகளுட் சிலவாகும். சா.கி.

**நம்பியகப் பொருள்:** காண்க: அகப்பொருள் விளக்கம்.

**நம்பியாண்டார் நம்பிகள்:** நம்பியாண்டார் நம்பிகள் திருமுறை தொகுத்த சைவப் பெரியவர்; தென்னார்க்காடு மாவட்டத்தில் காட்டு மன்னார் கோயிலுக்கு அண்மையிலுள்ள திருநாரையூர் என்னும் ஊரினர்: கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப் பெறுகிறார்; ஆதிசைவக் குடும்பத்தில் தோன்றியவர். இவர் தந்தையார் திருநாரையூரிலுள்ள பொல்லாப் பிள்ளையாரைப்பூசனை செய்துவந்தவர்.

ஒருநாள் தந்தையார் வெளியூர் செல்ல நேர்ந்தது. சிறுவராகிய நம்பியாண்டார் நம்பியைப் பிள்ளையாருக்குப் பூசனை செய்யுமாறு கூறிச் சென்றார். நம்பியும் பிள்ளையாருக்கு முறைப்படி எல்லாவற்றையும் செய்துவிட்டு நிவேதனத்தை வைத்துப்படைத்தார். பிள்ளையார் நிவேதனத்தை உட்கொள்ளாமையை அறிந்து வருந்தினார். தம் பூசையில் ஏதோ குறை இருப்பதாக உணர்ந்து அருகிலிருந்த கல்லில் தம் தலையை மோதிக்கொள்ளத் தொடங்கினார். உடனே பிள்ளையார் தம் துதிக் கையால் அவரைத் தடுத்ததோடு நிவேதனம் முழுமையும் உண்டருளினார். நம்பிகள் தாம் பள்ளியில் கற்க வேண்டுவனவற்றையெல்லாம் பிள்ளையாரிடமே பயின்றார்.

சோழ மன்னனாகிய இராசராசன் தேவாரத் திருப் பதிகங்கள் அனைத்தையும் தேடிக் கண்டு தொகுக்க வேண்மென விரும்பினார். அதற்குத்தகுதி வாய்ந்தவராக நம்பியாண்டார் நம்பிகளைக் கண்டு தம்விருப்பத்தைத் தெரிவித்தார். பொல்லாப் பிள்ளையார் அருளுடன் அவர்கள் தில்லையம்பதியை அடைந்தனர். தில்லைத் திருக்கோயிலில் ஓர் அறையில் திருப்பதிகங்கள் செல்லரிக்கப் பெற்றுக் கிடப்பதைக் கண்டு வருந்தி அலற்றுள் மீதியிருந்தவற்றைஎடுத்துத் தொகுக்குமாறு செய்தார். நம்பியாண்டார் நம்பிகள் மூவர் பாடிய அத்தேவாரப் பாடல்களை ஏழுதிருமுறைகளாக வகுத்தார்.

திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் மீது இரட்டைமணிமாலை ஒன்றை இவர் இயற்றினார். இவர் இயற்றியனவாகக் காணப்பெறும் மற்றைய நூல்கள் பதினொராந் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. கோயில்திருப்பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர் திருவந்தாதி, திருஞான சம்பந்தரை வாழ்த்தும் நிலையில் அமைந்த திருவந்தாதி, திருச்சண்பைவிருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலா மாலை, திருக்கலம்பகம், திருத்தொகை, திருநாவுக்கரசு தேவர்

திருஏகதேச மாலை முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். இவர் இயற்றிய நூல்களாக இன்று பத்து நூல்கள் கிடைத்துள்ளன.

அவற்றுள் திருத்தொண்டர் திருவந்தாதி என்பது சுந்தரமூர்த்தி நாயனார் இயற்றிய திருத்தொண்டர் தொகையை அடிப்படை நூலாகக் கொண்டு பாடப் பட்டது. இது தனியடியார் அறுபத்து மூவர், தொகையடியார் ஒன்பதின்மர் ஆகியோர் வரலாறுகளை விவரிக்கும் நூலாகும். பின்னர்ப் பெரிய புராணம் தோன்றக் காரணமாக இந்நூல் இருந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

நம்பியாண்டார் நம்பிகள் தம்மை ஆதரித்த ஆதித்தன் என்ற சோழ மன்னன் ஒருவனைத் தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில் மூன்று பாடல்களில் பாராட்டியுள்ளார். சு.சா.

**நம்பியாரூரர்**: காண்க: சுந்தரர்.

**நம்பிள்ளை**: சோழமண்டலத்திலுள்ள நம்பூர் என்னும் கிராமத்தில் கார்த்திகைமாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் தோன்றியவர் நம்பிள்ளை. திருக்கலிகன்றிதாசர் என்ற திருநாமத்தையும், வரதர் என்னும் திருநாமத்தையும் உடையவரான இவர் ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்குச்சிறப்பு வியாக்கியானங்கள் ஏற்பட்டுப் பரவுவதற்காகவே தோன்றியவர் எனலாம். இவரது ஆசார்யரான நஞ்சீயர் திருவாய்மொழிக்குத் தாம் இட்டருளிய ஒன்பதினாயிரப் படி வியாக்கியானத்தை அழகாக எழுதித் தரவல்லாருண்டோ? என்று சீடர்களைக் கேட்க, அவர்களும் 'காவிரியின் தென் கரையிலிருந்து வரும் நம்பூர் வரதர் நன்றாக எழுதுவார்' என்று பதிலுரைத்தனர். நஞ்சீயரும் நம்பூர் வரதரை அவ்வாறே எழுதித்தர நியமித்துப் பட்டோலையைக் கொடுக்க, வரதரும் தம் ஊருக்குச் செல்லும்போது காவிரியை நீந்திக் கடக்கவேண்டி இருந்தமையால் பட்டோலையைத் தலையிலே கட்டிக்கொண்டு நீந்துகையில் ஓர் அலை வந்து அடித்ததால் பட்டோலை ஆற்றுக்குள் விழுந்து விட்டது. நீந்தி அக்கரையை வந்தடைந்த வரதர் தமது அளப்பரிய நினைவாற்றலால் ஒன்பதினாயிரப் படியை ஒரு பதம் தப்பாமல் எழுதி முடித்தார். தாம் தமிழில் மிகவும் வல்லவராகையால் ஒவ்வொரு பாட்டிலும் அழகான சில அரிய சொற்களை எழுதிச் சேர்த்தார். அதை நஞ்சீயரிடம் கொண்டுபோய்க் கொடுத்தபோது 'நான் எழுதிய பொருளோடு சில சிறப்புப் பொருள்களும் இருப்பதற்குக் காரணமென்ன?' என்று நஞ்சீயர் கேட்க, நடந்ததைச் சொன்னார் நம்பூர் வரதர். நஞ்சீயர் மிகவும் உகந்து வரதரை வாரியணைத்துக்கொண்டு 'நம்முடைய பிள்ளை' என்று பாராட்டினார். அன்று முதல் வரதருக்கு 'நம்பிள்ளை' என்னும் பெயர் ஏற்பட்டது.

நஞ்சீயருக்குப் பின் நம்பிள்ளை வைணவ மதத் தலைவரானார். இவரது பெருமையை அறிந்து பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை முதலான பலர் இவர்தம் சீடரானார்கள். நம்பிள்ளையின் உபந்நியாச கோட்டி கலைந்து வைணவர்கள் எழுந்தருளும்போது அதைக் காண்பவர்கள் 'நம்பெருமாள் கோட்டியோ? நம்பிள்ளை கோட்டியோ?' என்று கேட்பார்களாம்.

நம்பிள்ளைஓர் உரு திருவாய்மொழிக்குப்பொருள் அருளிச் செய்யும்போது அவர் சீடரான வடக்குத் திருவீதிப்பிள்ளை ஒவ்வொரு நாளும் பகலில் கேட்டதை இரவில் எழுதி, இவ்வாறாக 'முப்பத்தாறாயிரப் படி' வியாக்கியானத்தை முடித்தார். இந்த வியாக்கியானமே 'ஈடு முப்பத்தாறாயிரப்படி' என்று சிறப்பிக்கப்படுகிறது. இவர் சீடரான பெரிய வாச்சான்பிள்ளை நாலாயிரத்திவ்வியப் பிரபந்தங்களுக்கும் நம்பிள்ளையின் நியமனம் கொண்டு வியாக்கியானம் எழுதினார். எஸ்.கி.

**நம்புறுதி**: ஒப்பந்தம் ஏற்படுத்தும்போது இருதரப்பினர்களும் பல செய்திகளை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்கிறார்கள். அச்செய்திகளை வலியுறுத்திக் கூறுவது கருத்துரு எனப்படுகிறது. இக்கருத்துரு நிபந்தனையாகவோ (Condition) நம்புறுதியாகவோ (Waranty) இருக்கலாம். ஒப்பந்தத்தின் முக்கிய, தலையாய நோக்கத்திற்கு ஈடாக (Collateral) இருக்கும் வாசகம் நம்புறுதி எனப்படுகிறது. இந்நம்புறுதி மீறப்பட்டால் அல்லது முறிக்கப்பட்டால், இழப்பீடு வேண்டலாமே அன்றி ஒப்பந்தத்தைத் தவிர்க்க முடியாது.

ஒப்பந்தத்தில் சேர்க்கப்படும் கருத்துருக்களை கட்டுப்பாடுகள், நம்புறுதிகள் என இருவகைப் படுத்தலாம். நிகழ்விலிருக்கின்ற (Existing) அல்லது இனி வரப் போகின்ற (Future) பொருண்மையைக் குறித்த ஒரு கருத்து, ஒப்பந்தத்திற்கு மிகவும் இன்றியமையாததாக, உயிரூட்டக் கூடிய வகையில் சேர்க்கப்பட்டால் அது கட்டுப்பாடு. இக்கட்டுப்பாடு முறிக்கப்பட்டால் ஒப்பந்தமே தவிர்க்கப்படலாம். ஒப்பந்தத்தின் முக்கிய நோக்கத்திற்கு இணையானதாக ஒரு கருத்து அதில் சேர்க்கப்பட்டால் அது நம்புறுதியாகும். நம்புறுதி முறிக்கப்பட்டால் இழப்பீடு மட்டுமே வேண்டலாம்; ஒப்பந்தம் தவிர்க்கப்பட முடியாது.

இந்திய பொருள் விற்பனைச் சட்டம்(The Indian Sale of Goods Act) 12(2) ஆம் பிரிவு, கட்டளையை ஒரு ஒப்பந்தத்தின் முக்கிய நோக்கத்திற்கு மிகவும்

இன்றியமையாதது என்று வரையறுக்கிறது. அதே சட்டம் 12 (3) ஆம் பிரிவு, நம்புறுதி என்பதனை வரையறுக்கிறது. அதன்படி நம்புறுதி என்பது, ஒப்பந்தத்தின் முக்கிய நோக்கத்திற்கு இணையாயுள்ள (Collateral to the main purpose) கூறாகும். இதனை முறித்தால், இழப்பீடு வேண்டுவதற்கான உரிமை மட்டும் எழுமே தவிர ஒப்பந்தத்தைத் தவிர்க்கும் உரிமை கிடைக்காது.

எடுத்துக்காட்டாக, பெட்டினி (எ) கை (Bettine V Gye) என்ற வழக்கில் நாடகக் கலைஞரும் பாடகருமான ஒருவர் (B), G என்பவர் நடத்தும் பாட்டுக் கச்சேரியில் பாடுவதாக ஒப்பந்தம் செய்து கொண்டார். ஒப்பந்தத்தின் ஒரு வாசகம் என்னவெனில் நிகழ்ச்சி தொடங்குவதற்கு ஆறுநாளைக்கு முன்பே, ஒத்திகை பார்ப்பதற்காக இலண்டனுக்கு வந்துவிட வேண்டும் என்பது. ஆனால் B நிகழ்ச்சிக்கு இரண்டு நாளைக்கு முன்புதான் வந்ததால், G, ஒப்பந்தத்தை நீக்குதல் செய்துவிட்டார். ஒப்பந்தத்தில் கூறப்பட்ட வாசகம் கட்டுப்பாடா நம்புறுதியா என்பது வாதத்திற்கு உரியதானது. நீதிமன்றம், ஆறு நாளைக்கு முன்புவராதது ஒப்பந்தத்தைத் தவிர்க்கும் அளவிற்குக் குற்றமானதன்று; ஒத்திகை பார்ப்பதற்காகவாராதது இழப்பீடு வேண்டும் உரிமையினையே அளிக்கிறது; ஆகவே, இவ்வாசகம் நம்புறுதிதான் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

இதற்குப்பின்பு, பிரபுக்களவை தாம் அளித்த தீர்ப்பில் இசுக்ழுலர் (AG.V. Wickman Machine Tools Sales Ltd) தரப்பினர், ஒப்பந்தத்திலேயே அது கட்டுப்பாடா நம்புறுதியா என்று குறிப்பிட்டுவிடலாம் என ஆலோசனை வழங்கியது.

ஒரு சில வழக்குகளில், கட்டுப்பாடு முறிக்கப்பட்டாலும், தரப்பினர் இழப்பீடு பெற்றுக்கொண்டு ஒப்பந்தத்தைத் தொடர்ந்து நிறைவேற்றலாம். அம்மாதிரியான சூழ்நிலைகளில், கட்டளை நம்புறுதியாகக் குறைக்கப்படுகிறது.

இந்தியப் பொருள் விற்பனைச் சட்டம் 12 (4) ஆம் பிரிவின்படி, ஒப்பந்தத்தில் காணப்படும் கட்டுவாசகம் கட்டுப்பாடா நம்புறுதியா என்பதனை ஒப்பந்தத்தைப் பொருள் படுத்துவதிலிருந்து அறிந்து கொள்ள வேண்டும். ஒப்பந்தத்தில் நம்புறுதி என ஒரு வாசகம் குறிப்பிட்டாலும் அது கட்டுப்பாடாக இருக்கலாம்.

ஓர் ஒப்பந்தத்தில் 13 (1) ஆம் பிரிவின்படி, கட்டுப்பாடு நியைவேற்றப்பட வேண்டும் எனக் கூறப்பட்டிருந்தாலும், அது வேண்டாமென மறு தரப்பினர் விட்டுக்கொடுத்து அதனை நிபந்தனை முறிவு என்று கொண்டு ஒப்பந்தத்தைத்தவிர்த்துவிடாமல், நம்புறுதி முறிவு எனக் கொண்டு இழப்பீடு வேண்டலாம். ஆகவே, ஒப்பந்தத்தில் காணப்படும் கட்டுவாசகம் கட்டுப்பாடா நம்புறுதியா என்பது தரப்பினர்களின் விருப்பத்தைப் பொறுத்தும் வழக்கின் சூழ்நிலைகளைப் பொறுத்தும் அமைகிறது.

இசுமித்து எதிர் கிரீன் (Smith V Green) என்ற வழக்கில், ஒரு பசு, எந்த நோயும் இல்லாதது என்ற கட்டுவாசகத்தின் படி விற்கப்பட்டது. ஆனால் விற்கும்போது அப்பசு வாய்ப்புண்-கால்புண் என்ற நோயினால் தாக்கப்பட்டிருந்தது; அதனால் இறந்து விட்டது என்பது மெய்ப்பிக்கப்பட்டது. மேலும், ஏனைய பசுக்களுக்கும் நோய் பரவக் காரணமாயிருந்தது எனவும் மெய்ப்பிக்கப்பட்டது. இது நம்புறுதி முறிவு எனக் கொள்ளப்பட்டு, முழு இழப்புக்கும் ஈடு வழங்கப்பட்டது.

ஓர் ஒப்பந்தத்தில் கட்டுவாசகங்கள் (Stipulation) கட்டுப்பாடுகளாகவோ, நம்புறுதிகளாகவோ வெளிப்படையாகக் குறிப்பிடப்படலாம். பொருள் விற்பனைச் சட்டம், இந்தக் கட்டுவாசகங்கள் உட்கிடையாக இருக்கலாம் எனக் கூறுகிறது. விற்பனை ஒப்பந்தத்தில், கட்டுவாசகங்கள் வெளிப்படையாகச் சொல்லப்படாமலிருக்கும் சிலவற்றைச் சட்டமே உட்கிடையாகக் கொள்கிறது. அத்தகைய உட்கிடைக் கட்டுவாசகங்கள் கட்டுபாடுகளாக, நம்புறுதிகளாகவோ அல்லது நம்புறுதிகளாகக் குறைக்கப்பட்ட கட்டுப்பாடுகளாக இருக்கலாம். அத்தகைய உட்கிடைக் கட்டுப்பாடுகளுக்கான எடுத்துக்காட்டுகள்:

1. விற்ற பொருள்கள் மீதான உரிமை பற்றிய உட்கிடைக்கட்டுப்பாடு (Implied condition as to title to goods sold) 2. பொருள்கள் விவரிக்கப்பட்டு விற்கப்பட்டிருக்குமாயின் விற்ற பொருள்கள் விவரத்தினை ஒத்திருக்க வேண்டும் என்ற உட்கிடைக் கட்டுப்பாடு (Goods sold should correspond to description). 3. பொருளின் பயன் நோக்கம் தெரிவிக்கப்பட்டிருந்தால், பொருளின் தரம் (quality), தக்க தன்மை (Fitness) ஆகியவற்றைப் பற்றியதான உட்கிடைக் கட்டுப்பாடு (Implied condition as to quality and fitness). 4. பொருள்கள் வாணிகத்திற்கேற்றதாக இருக்க வேண்டும் என்பதான உட்கிடைக் கட்டுப்பாடு (Implied condition as to merchantability). 5. நலம் பயக்கும் தன்மையதான உட்கிடைக் கட்டுப்பாடு (Implied condition as to wholesomeness or soundness). 6. மாதிரி காட்டப்பட்டுப் பொருள் விற்கப்பட்டிருக்குமாயின், விற்கப்பட்ட பொருள் மாதிரியை ஒத்திருக்க வேண்டும் என்பதான உட்கிடைக் கட்டுப்பாடு (Implied condition that bulk should correspoud to samples).

மேற்குறிப்பிட்ட உட்கிடைக் கட்டுப்பாடுகள், நம்புறுதிகளாகக் குறைக்கப்பட்டு முறிக்கப்படுங்கால், இழப்பீடு கேட்பதற்கு உரிமை எழச் செய்யலாம். பொருள்களை வாங்குபவர், பொருள்களைத் திரும்பக் கொடுக்க இயலாத நிலையிலும், இழப்பீடு பெற்றுக் கொள்வதோடு நிறைவடையக்கூடிய நிலையிலும் இத்தகைய கட்டுப்பாடுகள் நம்புறுதிகளாகக் குறைக்கப்படுகின்றன. பொருள் கட்டுப்பா . ச்சட்டம் சில உட்கிடை நம்புறுதிகளைப் பற்றியும் கூறுகிறது. அவையாவன: 1 அமைதியாக உடைமையேற்பதற்கான நம்புறுதி (Warranty for quiet possession). பொருளை வாங்குபவர், பொருளினை அமைதியாக உடைமையேற்பதற்கும், அனுபவிப்பதற்குமான உரிமையில் தடையேதும் ஏற்படுமானால் வழக்கிட்டு இழப்பீடு வேண்டலாம். இதனைப் பொருள் விற்பனைச் சட்டம் 14-ஆம் பிரிவு கூறுகிறது. 2. வில்லங்கமேதுமில்லாத உட்கிடை நம்புறுதி (Warranty against encumbrances). அதாவது, வாங்கிய பொருள்கள் மூன்றாம் மனிதருக்கு எந்தவிதத்திலும் உரிமையானதாக இருக்கக் கூடாது. (பிரிவு 14) கடல் சார்ந்த சட்டத்தில் கப்பல் கடலுக்குகந்ததாக இருக்க வேண்டும் என்பதொரு நம்புறுதி.

ஆக, நம்புறுதி என்பது ஒப்பந்தத்தின் முக்கிய நோக்கத்திற்கு இணையாக உள்ள கட்டுவாசகம். இது முறிக்கப்படுங்கால் இழப்பீடு வேண்ட உரிமை கிடைக்கிறது. இவை ஒப்பந்தத்தில் வெளிப்படையாகக் கூறப்படலாம். சட்டமே சிலவற்றை உட்கிடையான நம்புறுதிகளாகக் கொள்ளலாம். ஒப்பந்தத்தின் முக்கிய நோக்கத்திற்கு இன்றியமையாத வரையறை நிபந்தனை. இது முறிக்கப்படுங்கால் ஒப்பந்தம் தவிர்க்கப்படலாம். ஆனால், சில சூழ்நிலைகளில் நிபந்தனை நம்புறுதியாகக் குறைக்கப்பட்டு இழப்பீடு வேண்டப்படலாம். ஓர் ஒப்பந்தத்தில் காணப்படும் கட்டுவாசகம் நிபந்தனையா நம்புறுதியா என்பதனை ஒப்பந்தச் சூழ்நிலைகளைக் கொண்டு பொருள்படுத்திக் கொள்ள வேண்டும். அ.பி.பொ.

**துணைநூல்கள்:**

**Jain Kagzi, M.C.**, Constitution of India, Vol.1, Metropolitan Book Co, New Delhi, 1984.

**Singh Avatar**, Law of Contract, Eastern Book, Lucknow, 1983.

**Street, Harry.**, Government Liability, University Press, Cambridge, 1953.

**நம்பூதிரிகள்** கேரள மாநிலத்தில் வாழும் பிராமணர்கள். 'நம்பு' என்றால் நம்பிக்கை யென்றும் 'திரி' என்றால் ஒளி என்றும் பொருள்படும். நம்பூதிரிகள் பரசுராமனால் கொண்டுவரப் பட்டனர் எனக் கூறப்படுகின்றனர். புதுமையான பழக்கவழக்கங்களைக் கொண்டவர்களாக உள்ளதால் உலக இனக்குழுவியலில் (Ethnography) இவர்களும் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளனர்.

கேரளக் கடற்கரையில் கி.பி. முதலாம் நூற்றாண்டிலேயே பிராமணர்கள் வாழ்ந்து வந்ததற்கான சான்றுகள், தாலமியும் பெரிபுளூசும் எழுதியுள்ள குறிப்புகளில் உள்ளன. அக்காலத்திற்கு முன்பிருந்தே வாழ்ந்து வந்த நம்பூதிரிப் பிராமணர்களுடன் கி.பி. 4,5-ஆம் நூற்றாண்டுகளில் சாளுக்கிய அரசர்களின் முன்னேற்றத்தின்போது மேலும் பிராமணர்கள் பெருமளவில் குடியேறிக் கலந்திருக்க வேண்டும் என்பது கருதப்படுகிறது. நம்பூதிரிப் பிராமணர்களின் சிறப்பான வாழ்க்கை கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் இன்னலுக் குள்ளானது. திப்புசுல்தான் மலபார்ப் பகுதியில் உள்ள மக்களனைவரையும் முகமதியர்களாக மாற்றும்படி தன்னுடைய படையினருக்குக் கி.பி. 1779-இல் ஆணையிட்டான். முகமதியர்களாக மாற மறுத்து வீட்டை விட்டு ஓடுபவர்களின் வீடுகளைத் தீக்கிரையாக்குமாறும், அம்மக்களைத்தேடிப் பிடித்து மதமாற்றம் செய்யுமாறும் தெரிவித்தான். அப்பகுதியில் வாழ்ந்த தாழ்ந்த சாதி மக்கள் முகமதியர்களாக மாறினர். சமயப்பற்று மிக்க நம்பூதிரிகள் அவர்கள் நிலத்தையும் பிற உடமைகளையும் விட்டுவிட்டுத் திருவிதாங்கூரைச் சுற்றிய பகுதிகளுக்குச் சென்று விட்டனர். இருப்பினும் தப்பி ஓட முடியாத நம்பூதிரிகள் முகமதியர்களாக மாறிவிட்டனர். இவ்வாறு முகமதியர்களாக மாறிய நம்பூதிரிகளும், நாயர்களும் அன்னாடிக்கார் என்று சொல்லப் படுகின்றனர்.

நம்பூதிரிகள் தொடக்கத்தில் இரு பெரும் பிரிவினராய் இருந்தனர். பன்றி வடிவிலான விட்டுணுவை வழிபட்ட வைணவர்கள் பன்னியூர் என்னுமிடத்தை மையமாகக் கொண்டு வாழ்ந்தனர். இவர்கள் சாளுக்கிய அரசர்களின் பேராதரவைப் பெற்றிருந்தனர். அவ்வரசர்களும் பன்றியையே தங்கள் இலச்சினையாக வைத்திருந்தனர், சோவூரை மையமாகக் கொண்டு சிவனை வழிபட்ட நம்பூதிரிகள் சோவூர் கிராமமக்கார் என்றுசொல்லப்பட்டனர். இவர்கள் சாளுக்கியர்களுக்குப் பின்பு வந்த சேர, சோழ, பாண்டியரின் சைவ ஆதரவைப்பெற்றவர்கள். சிவனை வழிபட்டவர்கள். காலப் போக்கில் படிப்படியாக மேலாதிக்கம் செலுத்திப் பன்னியூர் நம்பூதிரிகள் வேதம் படிக்கக் கூடாதெனத் தடைவிதித்தனர்.

நம்பூதிரிகளுள் தம்பூராக்கால், ஆத்தியா, விசிசுடா, சாமானியா, சாதி மத்ரா என ஐந்து சிறு பிரி

வுகள் உள்ளன. இவை தவிர மிகுந்த அதிகாரம் உள்ளவர்களை நம்பூதிரிபாடு என்றும் சொல்வதுண்டு. மேலும், இம்மக்களுள் ஒருவர், செய்யும் யாகங்கள் பலிகள் ஆகியவற்றின் எண்ணிக்கைகளுக்கேற்பவும் உயர்வான நிலையை அடைகின்றார். யாகம் செய்பவர்கள் சோமயாசி அல்லது சோமாதிரி என்றும், அதானா எனும் பலி கொடுப்பவர்கள் ஆதித்திரி என்றும், அக்கினிச் சடங்குகளைச் செய்பவர்கள் அக்கதிரி அல்லது அக்னிகோத்ரி என்றும் சொல்லபடுகின்றனர். இவ்வகையான யாகங்களை ஒருசில கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் மட்டுமே செய்ய முடியும். மணமாகாதவர்கள் இவற்றில் ஈடுபட முடியாது.

நம்பூதிரிகள் பெரும்பாலும் நிலக்கிழார்களாகவே இருந்து வந்தனர். தென்னிந்தியாவிலுள்ள பிற பிராமணர்களைப் போல நம்பூதிரிகள் அரசு வழங்கும் பணிகளை ஏற்றுக் கொள்ளாமலிருந்தனர். வணிகம் போன்ற வேலைகளில் ஈடுபடாது தங்கள் தனித்தன்மையைக் காத்து வந்தனர். ஆலயங்களில்பணிபுரிவது கூட அதிக வருமானம் இருந்தால் மட்டுமே விரும்பப் பட்டது. ஆசிரியர் தொழில் உயர்வாக மதிக்கப் பட்டதால் அதனைச் சிலர் ஏற்றுக் கொண்டனர். எப்போதும் பணி செய்யாதே என்னும் மனு தருமக் கோட்பாடு இவர்களால் கடுமையாகக் கடைப்பிடிக்கப்பட்டது, இன்று நிலைமை மாறிவிட்டது, தொன்று தொட்டு நில உரிமையாளர்களாக இருந்ததால் பெரும்பாலும் வேளாண்மை செய்தனர். திப்பு சுல்தான் காலத்தில் முகமதியர்களாக மாற்றப்பட்டுப் பின்பு மீண்டும் தாய்மதம் தழுவிய சேலை நம்பூதிரிகளிடையேயும், தெற்கு மலபார் நம்பூதிரிகளிடையேயும் மாந்திரீகர்கள் பலர் உள்ளனர் என்று கூறுகின்றனர்.

தொடக்கத்தில் நம்பூதிரிகளுள் கம்ச, காசியப, பரத்துவாச, வாத்சய, கவுண்டினிய,ஆத்திரி தாத்திரி ஆகிய ஏழு கோத்திரங்கள் இருந்தன. பிற கோத்திரங்கள் இவற்றிலிருந்து உருவாயின. ஒரே கோத்திரத்தில் உள்ளவர்களும், தாய் தந்தை வழியில் உறவு உள்ளவர்களும், திருமணம் செய்து கொள்வதில்லை. திருமணத்திற்குப் பின் மணப்பெண் கணவனின் கோத்திரத்தைச் சேர்ந்தவளாவாள். மூத்த மகன் மட்டும் நம்பூதிரிப் பெண்ணை மணம் செய்து கொண்டால் போதுமானது. இளைய புதல்வர்கள் நாயர் (Nayars) பெண்களை மணந்து கொள்ளலாம்.

முறையான திருமண நிகழ்ச்சிகள் பத்து நாள்கள் நடைபெறுகின்றன. மணமகள் இல்லத்தில் ஆபாசன அக்கினி எனும் புனிதத் தீ வளர்க்கப்படுகிறது. இது திருமணம் நடைபெறும் பத்து நாள்களும் தொடர்ந்து எரியும். அதன் பின்னரும் இதிலிருந்து எடுக்கப்பட்ட தீ ஒரு விளக்கில் அல்லது கட்டைகளில் ஏற்றப்பட்டு அவர்களின் வாழ்நாள் முழுவதும் பாதுகாக்கப்படுகிறது. யாராவது இறந்தால் சிதைக்கு இத்தீயே மூட்டப்படுவது வழக்கம்.

திருமண விழா முற்றத்தில் மணமகனை அமர்த்தி நந்திமுகம் எனும் சடங்கு மூதாதையர்களை மகிழ்விக்க நடத்தப்படுகிறது. மணமகன் செய்யும் இது போன்ற சடங்குகளை மணமகளின் தந்தையும் மணமகளும் ஓர் அறையினுள் அமர்ந்து அதே நேரத்தில் நடத்துகின்றனர். இச் சடங்குகளுக்குப் பின் மணமகளுக்குத் தாலி கட்டப்படுகிறது.

மனைவி கருவுற்றிருந்தால் கணவன் முடிவெட்டுதல், முகம்மழித்தல் ஆகியவற்றைச் செய்யாது அவற்றை வளர்ப்பான். கருவுற்றிருக்கும் பெண்ணுக்கு ஆண்குழந்தை பிறக்க வேண்டும் என விரும்பினால் மூன்றாம் மாதத்தில் பூமசாவனா எனும் சடங்கு நடத்தப்படுகிறது. குழந்தை நலமாகப் பிறக்க வேண்டும் என்பதற்காக ஆறாம் மாதத்திலிருந்து எட்டாம் மாதத்திற்குள் சீமந்த நயனா நடத்தப்படுகிறது.

நம்பூதிரிகள் மூத்தமகன் வாரிசு முறையைப் (Primogeniture) பின்பற்றுகின்றார். அதன்படி தந்தையின் சொத்து மூத்த மகனை அடைகிறது. இளையவர்கள் சொத்தைப் பாதுகாக்க மட்டுமே தகுதியுடையவர்கள். ஆண் மக்கள் ஒரு குடும்பத்தில் இல்லாவிடில் மூத்த மகள் வாரிசாகிறாள். மூத்த மகன் மட்டுமே நம்பூதிரிப் பெண்ணைத் திருமணம் செய்கின்றான். ஆனால், மூத்த மகன் இறந்து விட்டால் அடுத்தவன் அக்குடிப் பெண்ணை மணக்கலாம். ஆண் வாரிசு இல்லாத வீட்டிலுள்ள பெண்ணுக்குச் சருவசவதானம் எனும் திருமணம் நடத்தப்படுகிறது. அதன் மூலம் வேறு ஒரு வீட்டிலுள்ள மணமகன் கொண்டுவரப்பட்டு மணமகள் வீட்டின் உறுப்பினன் ஆகிறான். ஆண் மக்கள் இல்லாத வீட்டினர் தத்து எடுத்துக் கொள்ளும் வழக்கமும் உண்டு. இதற்குப் பத்துக் கைத் தத்து, சஞ்ச மடத் தத்து, குடிவழிச்ச தத்து என்று மூன்று முறைகள் உள்ளன. முதல் வகையில் தத்து எடுக்கப்படும் மகன் இரண்டு பெற்றோருக்கும் மரணச் சடங்குகளைக் கவனிப்பான் இரண்டாம் வகையில் புதிய பெற்றோருக்கே சடங்குகள் செய்வான். மூன்றாம். வகைத் தத்து விதவைப் பெண்ணால் ஏற்கப் படுவதாகும்.

அனைத்துச் செயல்களுக்கும் சகுனம் பார்க்கும் முறை நம்பூதிரிகளிடம் உள்ளது. பாம்பு, பூனை, குள்ள நரி, முயல், புகையும் நெருப்பு, வெறும்குடம், விறகு, விதவை, ஒற்றைக்கண் மனிதன் ஆகியவற்றைக் காலையில் முதலில் பார்த்தால் அன்று ஏதோ

தீய விளைவு ஏற்படுவதற்கு அது அறிகுறி என எண்ணுகின்றனர். அவற்றைப் பார்த்த பிறகு கிழக்குச் சுவரில் பல்லியைப் பார்த்துவிட்டால் அதனைச் சகுன பரிகாரமாகக் கருதுகின்றனர். ஒற்றைத் தும்மல் நல்ல சகுனமாகவும், இரட்டைத் தும்மல் தீய சகுனமாகவும் கருதப்படுகிறது.

தொடக்கக் காலத்தில் தீண்டாமையைக் கடுமையாகக் கைப்பற்றி வந்தனர். ஒரு நம்பூதிரியைப் பார்க்கும் நாயர் ஆறு அடிக்கு அப்பாலும், பன்னிரண்டு அடிக்கு அப்பாலும், அம்பட்டன் தீயன் (Tiyan) முப்பத்தாறு அடிக்கு அப்பாலும், மலையன் தொண்ணூற்றாறு அடிக்கு அப்பாலும் தள்ளி நிற்க வேண்டும். இப்போது இவ்வகை வழக்கங்கள் மாறி வருகின்றன.

இறைவனே பரம்பொருள் என நம்புகின்றனர். சூரியன், சந்திரன், விண்மீன்கள் அனைத்தும் தெய்வத் தன்மை வாய்ந்தன. கடவுள் எந்த நேரத்திலும் எந்த வடிவிலும் தோன்ற முடியும். இறைவனின் வாகனங்கள் புனிதமானவை. பசு எல்லா விலங்குகளிலும் உயர்வானது; அதன் சிறுநீர் மிகப் புனிதமான தீர்த்தம் என்பன போன்றவையும் நம்பூதிரிகளின் நம்பிக்கையாகும்.

ஒருவரின் மரணம் உறுதி எனத் தெரியவரும் போது அவர் இறக்கும் முன்னரே காதில் தைத்திரிய உபநிடத வார்த்தைகள் உரைக்கப்படுகின்றன. கூசாப் புல்லால் ஒரு படுக்கை திண்ணையில் அமைக்கப்பட்டுச் சாகும் மனிதன் அதில் படுக்க வைக்கப்படுகிறான். இறந்த பின்பு உடல் கழுவப் பட்டுப் பாடையில் வைக்கப் பெற்று வீட்டு வளாகத்திற்குள்ளேயே எரிக்கப்படுகிறது. வீட்டுத் தீயிலிருந்து ஓமம் வளர்க்கப்பட்டு அதிலிருந்து எடுக்கப்படும் தீ இறந்தவர் மார்பிலும் சிதையின் மூன்று பக்கங்களிலும் வைக்கப்படுகிறது. தீ மூட்டியவரால் கொள்ளிக் குடமும் உடைக்கப்படுகிறது. பின்பு அனைவரும் நீராடிச் செல்கின்றனர். இறந்தவரின் ஆவி சூக்கும சரீரத்தில் நுழைந்து முக்தி அல்லது நரகம் சென்றடைவதாக நம்பப்படுகிறது.

மூன்றாம் நாளில் எரிந்த உடலின் சாம்பலை ஒரு தாழியிலிட்டு, அருகிலேயே புதைக்கின்றனர். பதினொன்றாம் நாளில் அக்குடும்பத்தார் தூய்மை பெறும் சடங்கினை நடத்துகின்றனர். ப.இரா.

**நம்மாழ்வார்:** தமிழகத்தின் இருபெரும் சமயங்களான சைவம், வைணவம் ஆகியவற்றுள் வைணவ சமயத்தின் சிறப்புமிக்க அடியவர்கள் பன்னிருவர். அவர்களுள் நம்மாழ்வார் தலையாயவராகப் போற்றப்படுபவர். இவர் கி.பி.9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என அறிஞர்கள் கருதுகின்றனர்.

இவர் பொருநையாற்றுத் துறையில் திருக்குருகூரில் பிறந்தார். இவ்வூர் பின்னர் ஆழ்வார்திருநகரி எனப் பெயர்பெற்று நம்மாழ்வாரின் பெருமையை நினைவூட்டி நிற்கிறது. அங்கு வேளாளர் குலத்தில் திருவழுதி வளநாடன் என்னும் அரசன் மரபில் தோன்றியவர் காரி என்பவர். அவருடைய மனைவியார் திருவாழ்மார்பர் என்பவருடைய மகள் உடையநங்கை. அவர்களுக்குப் பல்லாண்டுகள் பிள்ளைப் பேறில்லாமல் இருந்தமையால் திருக்குறுங்குடி நம்பியை வேண்டி ஓர் ஆண்மகவினைப் பெற்றனர். வருத்தமான வெகுதானிய ஆண்டு வைகாசித் திங்கள் விசாக நட்சத்திரத்தில்குழந்தை பிறந்தது. அது பிறந்த குழந்தைகளுக்கியல்பான அழுதல், பாலுண்ணல் முதலிய செயல்களைச் செய்யாதிருந்தது. பெற்றோர்கள் குழந்தைக்கு மாறன் எனப் பெயரிட்டுப் பொலிந்துநின்ற பிரான் திருமுன்பு எடுத்துச் சென்றனர். குழந்தை அங்கிருந்த புளியமரத்தின் கீழ்ச் சென்றமர்ந்தது. பதினாறு ஆண்டு வரை கண்விழித்தல், பேசுதல் முதலிய செயல்கள் இல்லாமல் இறைவனையே தியானித்து அமர்ந்திருந்தது.

நம்மாழ்வார் தோன்றுவதற்கு முன் திருக்கோளூரில் மதுரகவியார் தோன்றினார். அவர் அந்தணர் மரபைச் சார்ந்தவர்; நான்கு வேதங்களிலும் வல்லவர். அவர் வடநாட்டுத் திருத்தலங்களைக் காணப் புறப்பட்டு அயோத்தி சென்றடைந்தார். அங்குத் தென்திசையில் பேரொளி ஒன்றினைக் கண்டு அதைப் பின்தொடர்ந்தார். அது திருக்குருகூர் வரை தென்பட்டுப்பின் மறைந்தது. அத்தலத்தில் ஏதேனும் சிறப்பு இருக்கவேண்டும் என்று உணர்ந்தார். அங்குத் திருக்கோயிலில் நம்மாழ்வார் நிட்டையிலிருப்பதைக் கண்டார். மதுரகவியார் அவரிடம் சென்று ஒரு கல்லை எடுத்து அவர்முன் இட்டு ஒலி எழுப்பினார். அதுகாறும் விழிக்காத நம்மாழ்வார் கண்திறந்து பார்த்தார். மதுரகவியார் அவரிடம் பேச எண்ணிச் 'செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்' என்று கேட்டார். அவர் அத்தைத்தின்று அங்கே கிடக்கும்' என விடையிறுத்தார். மதுரகவியார் அதைக் கேட்டு மகிழ்ந்து தம்மைச் சீடனாக ஏற்றருள வேண்டினார். நம்மாழ்வாரும் ஏற்று அவருக்குச் சித்து, அசித்து, ஈசுவரன் என்னும் மூன்றன் இயல்புகளையும் உணர்த்தினார். குரு பரம்பரைப் பிரபாவத்தில் நம்மாழ்வாரின் வரலாறு கூறப்பட்டுள்ளது. அதில் மதுரகவியார் நம்மாழ்வாருக்குக் கோயில் எடுத்து வழிபாடு செய்து வந்ததையும், நாதமுனிகளுக்கு நம்மாழ்வாரின் திருவாய்மொழி முதலான நூல்களை

ஓதியமையும் சொல்லப்படுகின்றன. புலவர்புராணம் பாடிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், காரி என்பவன் வானமாமலை என்னும் தலத்தில் அரசாண்டவன் என்றும், குழந்தை பிறந்தபின் திருக் குருகூருக்கு எடுத்துச் சென்றான் என்றும் கூறியுள்ளார்.

நம்மாழ்வாருக்குப் பல பெயர்கள் சொல்லப்படுகின்றன. அவரியற்றிய நூல்களில் சடகோபன், மாறன், பராங்குசன், வழுதிவளநாடன் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. நம்மாழ்வாருக்கு அப்பெயர்கள் காரணப் பெயரே என்பதையும், அவை நாதமுனிகள் காலத்தில் ஏற்பட்டன என்பதையும் கோயிலொழுகு என்னும் நூல் தெரிவிக்கிறது.

நம்மாழ்வார், திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு நூல்களை ஆக்கியுள்ளார். முதல் மூன்று நூல்களும் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் இயற்பாவில் அடங்குகின்றன. திருவாய்மொழி நான்காம் ஆயிரமாக இறுதியில் தொகுக்கப் பட்டிருக்கிறது.

நம்மாழ்வாரின் பாசுரங்களில் வைணவ சமயத் தத்துவம் பொதிந்துள்ளது. வைணவர் தத்துவம் மூன்று என்று கொள்வர். அவை உயிருள்ளன(சித்து) உயிரற்றன (அசித்து), இறைவன் (ஈசுவரன்)என்பன. இவை மூன்றும் அநாதியானவை; வேறு வேறு இயல்புடையன்வை; ஆயினும் என்றும் சேர்ந்தே இருப்பன; என்றும் அழிவில்லாதன. இறைவன் எல்லாவற்றிலும் அந்தர்யாமியாய் (உள்நிறைந்தவனாய்) உறைந்துள்ளான்.

இறைவனை அறியவும் அடையவும் வேதங்களே துணை செய்கின்றன. இறைவன் 'உயர்வற உயர்நல முடையவன்'; பண்புகளுடையவன்; அவன் உண்மைப் பொருள். அவன் உலகுக்குக் காரணனாக விளங்குகின்றான். அவனே அனைத்திற்கும் ஆதாரமாகவும் இருக்கிறான். உலகைப் படைத்தல், காத்தல், கரத்தல் என்னும் மூன்று தொழில்களையும் இடையறாது இயற்றுகிறான். உலகுக்கு நல்வழிகாட்டித் தீமைகளிலிருந்து காக்கிறான். இறைவன் உயிராகவும், ஆன்மாக்களும் மூலப் பிரகிருதியும் பிரகிருதியிலிருந்து தோன்றியவையனைத்தும் இறைவனுக்கு உடலாகவும் இருக்கின்றன. திருமாலே உயிர்களின் வினைகளை அறுத்து வீடுபேறு தரவல்லவன்.

உயிர் எனப்படும் ஆன்மா இறைவனை ஆதாரமாகக் கொண்டது. உயிர் உண்மைப் பொருள். அது பிரகிருதித் தத்துவத்திலிருந்து வேறுபட்டது. ஆன்மா அணு அளவினது. ஆன்மா உணர்வுடையது; இறைவனைப் போலவே நிலையானது; இறைவனுக்கு அடிமை செய்வதே தன் பண்பாக உடையது. உயிர்கள் எண்ணற்றவை. அவை தம்முடைய நல்வினை தீவினைகட்கேற்பப் பிறவிகள் எடுத்து வேறு வேறு உடம்பைக் கொண்டு வினைப் பயன்களை அனுபவிக்கின்றன. உயிர்கள் வீடுபேறடையும் வரை பிறவி எடுத்துக்கொண்டே இருக்கின்றன. எல்லா உயிர்களும் வீடுபேறடைந்தே தீரும். பிரளய காலத்தில் எல்லாம் அழிக்கப்படும்போது உடல்களும் அழிக்கப்படுகின்றன; உயிர்கள் அழிக்கப்படுவதில்லை. உயிர்கள் இறையருளை நாடி வினைத்தளையை அறுத்து வீடு பெறலாம்.

நம்மாழ்வார் பிரபத்தி நெறியைக் கடைப்பிடித்து எல்லோரும் வீடு பெறலாம் என்கிறார். பிரபத்தி என்பது இறைவனையே முற்றிலும் சரணடைந்து விடுவது. இந்நெறியைக் கடைப் பிடிப்போர்க்கு இறைவனே பற்றுக்கோடாய் விளங்குகிறான்; அவனே பயனுமாய் வழியுமாய் விளங்குகிறான். இந் நெறியிற் செல்லத் தகுதி எதுவும் வேண்டுவதில்லை.

உயிர்கள் அறிவுடையவாயினும் மாயையால் மறைப்புண்டு இறைவனை உணர்ந்து அடையமாட்டாது துன்புறுகின்றன. இருபத்து நான்கு தத்துவங்களாயிருக்கும் மாயையினை நம்மாழ்வார் கூறியுள்ளார். ஐம்பொறிகள் மனத்தை அலைத்துஇறைவனை நாடவொட்டாது தடுக்கின்றன. இத்தடையைக் கடந்து இறைவனையடைந்து பெறுகின்ற இன்பமே வீடுபேறாகும். இறைவனுக்குத் தொண்டு செய்யப் பெறுவதே பெறத்தக்க பேறுகளுள் சிறந்தது என்று நம்மாழ்வார் கூறியுள்ளார். ந.மா.

**நமச்சிவாயத் தம்பிரான்:** இவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த தம்பிரான்களுள் ஒருவர். திருவாவடுதுறை ஆதீனத்தின் ஐந்தாம் குருமூர்த்தியாய் விளங்கிய வேலப்ப தேசிகரால் அருளப் பெற்றவர். இவர் மெய்கண்டசாத்திரங்கள் பதினான்கனுள் வினாவெண்பாவுக்கும் இருபாஇருபதுக்கும் உரை எழுதியுள்ளார். இவர் எழுதிய வினாவெண்பா உரையில் 'இவ்வுரை சாலி வாகனசகம் 1600 க்கு மேற்செல்லா நின்ற பிங்கள வருடம் வைகாசி மாதம் மெய்கண்ட சந்நிதியில் திருவாவடுதுறை நமச்சிவாய மூர்த்தி மரபில் வேலப்பப் பண்டாரம் அனுக்கிரகம் பெற்ற நமச்சிவாயத் தம்பிரான் செய்த தென அறிக' என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து இது எழுதப்பட்ட காலம் கி.பி. 1678 என்று அறிய முடிகிறது. ஆகவே, இப் பெரியார் காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு என்று கூறலாம். தமிழிலும் சாத்திர அறிவிலும் இவர் சிறந்த புலமையாளர் என்பது இவர் உரைகொண்டு அறிய முடிகின்றது. இரா.ச.

**நமச்சிவாய மாலை:** நமச்சிவாயமாலை என்னும் நூல் திருவாவடுதுறை ஆதீனத்தின் மூன்றாம்

பட்டத்தில் வீற்றிருந்து ஞானச் செங்கோல் ஓச்சிய அம்பலவாண தேசிகர் இயற்றிய தசகாரியம், சன் மார்க்க சித்தியார், சிவாக்கிரமத் தெளிவு, சித்தாந் தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாயநிட்டை வெண்பா, நிட்டை விளக்கம், உபதேச வெண்பா, அதிசய மாலை, நமச்சிவாய மாலை என்னும் பத்து நூல்களுள் ஒன்றாகும். சைவ சித்தாந்தத்தை விளக் கும் மெய் கண்ட சாத்திரங்கள் பதினான்கு ஆகும். அச்சாத்திரக் கருத்துக்களின் நுட்பங்களை விளக்கத் திருவாவடுதுறை ஆதீன முனிபுங்கவர்கள் நால்வர் பதினான்கு நூல்கள் இயற்றினர். அவை பண்டார சாத்திரம் எனப் பெயர் பெறும். அவற்றில் பத்து நூல்களை இயற்றிய பெருமை அம்பலவாண தேசிக ரையே சாரும். இவர்தம் ஞானாசிரியராகிய நமச் சிவாய மூர்த்திகள் மீது பேரின்ப வீட்டினை அடைய விரும்பும் அவாமேலீட்டினால் பாடிய நூலே நமச் சிவாய மாலை ஆகும். இந்த ஆசிரியர் காலம் கி.பி. 15-ஆம் நூற்றாண்டு.

நமச்சிவாய மாலை என்பது கலிவிருத்தத்தால் ஆய 137 பாக்களும் சிறப்புப் பாயிரம் ஒரு பாடலும் பெற்று விளங்குகிறது. நூலின் ஒவ்வொரு பாட்டினி றுதியிலும், 'ஆவடுதண்துறை நமச்சிவாயனே' என்ற விளியே வந்து முடிந்துள்ளது. அதனாலே இந்நூற்கு நமச்சிவாயமாலை என்னும் பெயர் ஏற்பட்டுள்ளது. இதற்குப் பஞ்சாக்கரமாலை என்ற வேறொரு பெய ரையும் இந்நூற் சிறப்புப் பாயிரம் குறிப்பிட்டுள்ளது. 'மலக்கல் தகர்த்து நின் அருளைக் காட்டுவது இங்கு எந்நாளோ' (5) என்பது போன்று பலவாறாகத் தமக்கு அருள் வாய்ப்பது எந்நாளோ என்றே 22 செய்யுள் களில் ஆசிரியர், தம் குருநாதரை வினாவுகிறார். பின் னர் 'மணந்தாள் அல்லாரை மருவுகைக்கு அங்கு அங் கம் புணர்ந்தால். நரகதனில் போடுவது இங்கு எவ் வாறோ' (25) என எவ்வாறோ என்றே 10 பாடல் களில் கேட்கிறார். மேலும் 'ஆவியும் நீ என்றன் அங் கமும் நின் அங்கம் வினை தாவியும் மேல் சாரும் எனச் சாற்றிடுவது எத்தாலோ' (51) என்று 20 செய் யுள்களில் கேட்டுத் துன்புறுகிறார். 'பாதம் மேலுற்ற பணிபலவும் நின்னடிக்கு என்போதமே ஏற்றப்புகின் வினை எற்கு என்னாமோ' (64) என 15 பாக்களி லும் 'காதலே உற்றுக் கருதுவார் தம்மை யருள் பாதமே நோக்குதற்குப் பண்ணுவித்தால் ஆகாதோ' (69) என்பது போன்று 26 பாடல்களிலும் பல விதங் களாகக் கேட்டு வருந்துகிறார். பின்னர்க் குருநாதர் தம்மை ஆட்கொண்ட திறத்திற்கு என்ன கைம்மாறு செய்ய இயலும் என்ற நிலையில் 'மாற்றி மலத்தை வருமுயிரை நீயாகத் தேற்றி நடத்தும் செயலதற்கு என் கைம்மாறே' (127) என்பது போன்று பலவா றாகப் புகழ்ந்து கூறி 42 பாடல்களில் முடிக்கிறார். இவ்வாறு வணங்கித் துதிக்கும் திறம் சிறப்பாயுள் ளது.

இந்நூலைத் தவிர நமச்சிவாயமாலை என்னும் பெயரில் கங்காதர நாவலர், துரைசாமி ஆச்சாரி யார் முதலியோரும் வேறு நூல்களியற்றியுள்ளனர். அவை இந் நமச்சிவாய மாலை போன்று சிறப்பாகக் கருதத் தக்கனவாகவுமில்லை; பழக்கத்திலும் இல்லை. ஆதலின், இதனையே பலரும் போற்றுகின்றனர்,

இரா.ச.

**நமச்சிவாய முதலியார், கா:** இவர் கி.பி. 1876-ஆம் ஆண்டு தமிழ்நாட்டில் வடஆர்க்காடு மாவட்டத்தில் காஞ்சிக்கு மேற்கே ஏறத்தாழ 30 கி.மீ. தொலைவில் காவிரிப்பாக்கம் என்ற கிராமத் தில் வேளாண்குலத்தில் ஒரு நல்லாசிரியருக்கு மக னாகத் தோன்றினார். தந்தையோடு பழகிய நல்ல பழக்கமும் பண்பும் இவரைத் தமிழாசிரியராக ஆக்கி வைத்தன. தமிழாசியர்களுக்கு உரிய பட்டம் முதலி யன இல்லாத அந்தக் காலத்திலே இவர் தனித்த முறையிலே பயின்று சிறந்த அறிஞராகத் திகழ்ந்தார். தொடக்கப் பள்ளி ஆசிரியராக இருந்து பின் சில கிறித்தவ உயர்நிலைப் பள்ளிகளின் தமிழாசிரியராக இருந்து, 1914-இல் இராணிமேரிக் கல்லூரி தொடங் கிய நாளில் அதன் தமிழாசிரியராக நியமனம் பெற் றார். பின் தமிழ்நாட்டிலேயே உயர்ந்த கல்வி நிலைய மாகக் கருதப்பெற்ற மாநிலக் கல்லூரியில் அனந்த ராம ஐயர் ஓய்வு பெற்ற காலத்தில், இவர் தலை மைத் தமிழாசிரியர் பொறுப்பினை ஏற்றார். அக் காலத்தில் உயர் கல்லூரிகளிலெல்லாம் 'பண்டிதர்' என்றே தமிழாசிரியர்கள் குறிப்பிடப்பெற்றனர். கா. நமச்சிவாயர் சிறந்த பண்டிதராக அங்கே விளங்கி னார்.

நமசிவாயர் பயிற்றாசிரியராக மட்டுமன்றிச் சிறந்த நூலாசிரியராகவும் திகழ்ந்தார். குழந்தைகள் வகுப்பு முதல் கல்லூரி வகுப்புகள் முடிய எல்லா வகுப்புகளுக்கும் இவர் நூல்கள் பல எழுதியுள்ளார். இவர் எழுதிய சிறுசிறு அடிகள் கொண்ட எளிய பாடல்கள் பிள்ளைகள் உள்ளத்தைக் கவர்ந்தன. அந் நாள்களில் அப்பாடல்களைப் பள்ளி மாணவர்கள் எப் போதும் வாயில் மெல்ல அசைத்துக் கொண்டே இருப்பர். பல நாடகங்களும் சில அறிவு நூல்களும் எழுதியதோடு, தொல்காப்பியத்தை இளம்பூரணர் உரையோடு அச்சிட்ட பெருமையும் இவருக்குண்டு.

எளிய குடும்பத்தில் பிறந்தவராயினும், பின் தம் உழைப்பால் பெருஞ் செல்வராயினார். அக்காலத்தில் மிக உயர்ந்த ஊர்தியாக மதிக்கப்பெற்ற 'உரோல்சு ராய்சு' (Rolls Royce) என்ற மகிழ்வுந்து சென்னை யில் நால்வரிடம் இருந்தன. ஒன்று ஆளுநருடையது.


கா. நமச்சிவாய முதலியார்

கா. நமச்சிவாயரும் அந்த ஊர்தியுடைய நால்வருள் ஒருவராவார். இவர் வாழ்ந்த 'கடலகம்' என்ற மயிலைச் சாந்தோம் பகுதியிலிருந்த பெரிய மாளிகை (இன்று உருசிய அரசுச் சார்பாளர் அலுவலகமாக உள்ளது) இவர் செல்வ வளத்துக்கு எடுத்துக்காட்டு. நேரிய வழியில் நூல் எழுதியே செல்வரான இவர் பெரும் வள்ளலாகவும் இருந்தார். இவர் உடை-தலைப் பாகை-உயர்ந்த பல பொத்தான்கள் பொருத்திய நீண்ட அங்கி முதலியன இவரை வள்ளலாக மட்டுமன்றி வளமுள்ள செல்வம், செல்வாக்கு உள்ளவராகவும் காட்டின. இவர் வீட்டிற்குச் சென்றவர் யாரும் சிற்றுண்டியோ பானமோ உணவோ அருந்தாமல் வரமுடியாது. கேட்பாருக்கு இல்லை என்னாது வாரிவழங்கிய வள்ளலாக இவர் வாழ்ந்தார். முன்பின் அறியாதவராயினும் அன்புடன்ஓம்பப் பெறுவர். விருந்துபுரக்கும் தன்மையில் இவருக்கு மிஞ்சியவர் இலர். இவர்தம் துணைவியாரும் கணவர் மனமறிந்து பண்புடன் விருந்தோம்பிப் பாதுகாத்த பரிசு நினைவுகூர்தற்குரியது.

தமிழில் 'புலவர்' (அன்று வித்துவான்) பட்டத்தை உருவாக்கிப் பல்கலைக் கழக வழியே நல்கியவர் நமச்சிவாயர். அரசாங்கத்திலும் பல்கலைக் கழகத்திலும் சிறந்த செல்வாக்கினைப் பெற்ற பெரும் தமிழறிஞராக அன்று இவர் விளங்கினார். இன்று வரை அத்தகைய செல்வமும் அரசாங்கச் செல்வாக்கும் பிற உயர்நலங்களும் பெற்ற தமிழ்ப் புலவர் யாரும் இலர். இவர், சென்னைப் பல்கலைக் கழகத்திலும் அரசாங்க உட்குழுக்கள் பலவற்றிலும் சிறந்த பொறுப்புகளைப் பெற்றுத் தமிழ் வளர்த்தார். தமிழறிஞர்களை ஆண்டு தோறும் பொங்கல் நாளில் கூட்டிப் பெரு மாநாடுகள் நடத்தித் தமிழ் உணர்வை நாட்டு மக்களுக்கு ஊட்டினார். பொங்கல் விழாவினையே 'தமிழர் திரு நாளாக' உலகுக்கு உணர்த்தியவர் இவர்தாம். நமச்சிவாயர் வாழ்க்கை தமிழக வரலாற்றில்-தமிழர் வாழ்வில் ஒரு சிறந்த பகுதிஎன்பது பொருந்தும்.

இவருக்கு அறுபதாம் ஆண்டில், 1936-இல் சென்னையில் மணிவிழா நடத்தத் தமிழறிஞரும் பிறரும் தமிழ்ப் பொதுமக்களும் பெரும் ஏற்பாடு செய்திருந்த அந்த வேளையில் இவர் இவ்வுலக வாழ்வை நீத்தார். இவருக்கு மக்கள் இருப்பினும் இவர் புகழைக் கட்டிக்காக்க வகையின்றி வாழ்கின்றனர். எனினும் தமிழகம் இவர் தண்ணளியையும் தமிழ்ப்பணியையும் என்றும் போற்றும் என்பது உறுதி. அ.மு.ப.

**நமச்சிவாய மூர்த்தி** என்பவர் திருவாவடுதுறை ஆதீனத்தை முதன் முதலில் நிறுவியமுனிவர் ஆவார். வேதாரணியத்திலும் திருவாவடுதுறையிலும் இருந்த சித்தர் சிவப்பிரகாசர் என்னும் ஞானி, ஒருமுறை சிதம்பரத்திற்கு வந்து ஆடல் வல்லானை வணங்கித் திரும்பித் திருவாவடுதுறைக்கு வந்தார். வரும் வழியில் திருமயிலாடுதுறைக்கு அருகிலுள்ள மூவலூருக்கு வந்தார். அங்கு வாழ்ந்த பரம்பரைச் சைவக் குடும்பத்தினருள் ஒரு தம்பதியார் நீண்ட நாளாய்ப் பிள்ளையில்லாது வைத்தீசுவரன் கோயில் பெருமானை வேண்டித் தவம் கிடந்து, அவன் அருளால் ஓர் ஆண் மகவைப் பெற்றனர். அப்பிள்ளைக்கு அப்பெருமான் திருப்பெயரையே வைத்தியநாதன் என இட்டு மகிழ்ந்தனர். ஒரு நாள் அப்பெற்றோர் அக்குழந்தையுடன் வைத்தீசுவரன் கோயிலுக்குச் சென்று வழிபட்டபோது குழந்தையைக் காணவில்லை. பின்னர்ச்சண்டேசர் சந்நிதியில் குழந்தை தன் கையில் ஒரு சிவலிங்கத்தை ஏந்திக் கொண்டிருப்பதைப் பார்த்தனர். பின்னர் விசாரிக்கவே ஒரு சிவாசாரியர் அவ்விலிங்க உருவத்தைக் கொடுத்து உபதேசித்துச் சென்றதாகத் தெரிந்தனர். அதனைத் தெரிந்தபெற்றோர் வியப்புற்று அந்த இலிங்கத்தைத் தங்களூருக்குக் கொண்டுவந்து நிறுவிக் கோயில் கட்டி அக்குழந்தையோடு வழிபட்டு வந்தனர். இம்மூவலூருக்கு வந்த சித்தர் சிவப்பிரகாசர் அக்குழந்தையைக் கண்டார். அக்குழந்தையும் கருவிலேயே திருவுற்றதாதலின் சித்தர் சிவப்பிரகாசர் திருவடிகளில் விழுந்து வணங்கியது; தனக்கு உபதேசம் செய்து ஆட்கொள்ளுமாறு வேண்டியது. சித்தரும் அந்தச் சிறுவரின் தோற்றத்தைப் பார்த்து ஆட்கொள்ள விரும்பினார். அச்சிறுவரின் பெற்றோரை அழைத்து அவர்களின் இசைவைப் பெற்று உபதே

சித்து அருளினார். மேலும் அப்பிள்ளையைத் தம்முட னேயே திருவாவடுதுறைக்கு அழைத்துச் சென்றார். அவருக்கு நமச்சிவாயன் என்னும் தீட்சா நாமத்தை யும் வழங்கினார். மேலும் சிவஞான போதம் முதலிய மெய்கண்ட சாத்திரங்களையும் அப்பிள்ளைக்குப் போதித்தருளினார். நமச்சிவாயரும் குருநாதருக்கு வேண்டிய பணிவிடைகளைத் தவறாது செய்து வந் தார். பின்னர்க் குருநாதர் நமச்சிவாயரிடம் திருவா வடுதுறையிலேயே தங்கிச் சைவ சித்தாந்த ஞானங் களையெல்லாம் மக்களுக்கு அறிவுறுத்துமாறு ஆணை யிட்டார். குருநாதர் சொற்படியே நமச்சிவாய மூர்த்திகளும் திருவாவடுதுறை ஆதீனத்தை நிறு வினார். நமச்சிவாய மூர்த்திகளால் நிறுவப்பெற்ற ஆதீனமாதலின் இதற்குப் 'பஞ்சாக்கர தேசிகர் ஆதீனம்' என்னும் பெயரும் உண்டு. நமச்சிவாய மூர்த்திகள் அவதரித்த வீடு மூவலூரில் இப்பொழு தும் ஆதீன மேற்பார்வையின் கீழ் உள்ளது.



நமச்சிவாய மூர்த்தி

நமச்சிவாய மூர்த்திகள் ஞானச் செங்கோல் திரு வாவடுதுறை யிலிருந்து செலுத்தி வந்த காலத்துத் திருவாவடுதுறையிலேயே உள்ள மறைஞான தேசிகர் என்பவருக்கு உபதேசம் செய்து பக்குவியாக்கினார். அவர் எப்பொழுதும் நிட்டையிலேயேயிருந்து ஓர் ஆண்டு தைச் சுவாதியில் இறையருளில் கலந்தார். ஆதலின் பின்னர்த் திருவிடைமருதூரைச் சார்ந்த அம் பலவாண தேசிகரை மாணவராகப் பெற்று அவருக்கு வேண்டிய உபதேசங்களைப் புரிந்து தமக்குப் பின்னர் அவரே இவ்வாதீனத் திரு மரபு நீடூழி தழைத்து மேலோங்கி வர ஆக்கப்பணிகள் செய்து வருமாறு ஆணையிட்டார். அவ்வமயம் நமச்சிவாய மூர்த்திகள் ஒரு தைத்திங்கள் அசுவினி நன்னாளில் சிவசோதியில் கலந்தருளினார்கள். புறச்சந்தானத்தில் மெய்க்கண் டாரிலிருந்து நமச்சிவாய மூர்த்திகள்முடிய உள்ள ஆசாரிய பரம்பரைக்குப் பூத பரம்பரை எனப் பெயர் கூறுவர். நமச்சிவாய மூர்த்திகளுக்குப் பின்னர் இப் பரம்பரையில் வந்தவர்களுக்கு அபிடேக பரம்பரை என்று கூறும் வழக்கமுண்டு. நமச்சிவாய மூர்த்தியின் பெருமைகளைப் பற்றிப் பலநூல்கள் பிற்காலதது எழுந்துள்ளன. அவற்றுள் நமச்சிவாயமாலை, முத்தி பஞ்சாக்கரமாலை, நமச்சிவாய மூர்த்தித்தா லாட்டு, நமச்சிவாயமூர்த்தி ஆற்றுப்படை முதலியன தலைசிறந்தன. இம்மூர்த்திகளின் காலம் கி.பி. 15 -ஆம் நூற்றாண்டாகும். இரா.ச.

***நமிநந்தியடிகள் நாயனார்:*** இவர் அறு பத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். பெரியபுரா ணத்துள் நான்காம் சருக்கமாகிய திருநின்ற சருக் கத்துள் இவர்தம் வரலாறு கூறப்பட்டுள்ளது. சிவ லிங்கத்தால் முத்தி பெற்ற முப்பது அடியார்களுள் இவரும் ஒருவராவார். 'அருநம்பி நமிநந்தி அடியார்க் கும் அடியேன்' எனத் திருத்தொண்டத் தொகை இவரைக் குறிப்பிடுகின்றது.இவர் சோழநாட்டிலுள்ள ஏமப்பேரூர் என்னும் ஊரில் வாழ்ந்தவர்; அந்தண குலத்தைச் சேர்ந்தவர். திருவாரூர்க்கு அருகிலுள்ள இவ்வூர் திருமப்பேறு என்றும் திருநெய்ப் பேறு என் றும் இக்காலத்து வழங்கப்படுகின்றது.

இவர் திருவாரூர்க்குச் சென்று பலநாளும் வன்மீக நாதரை வழிபட்டு வந்தார். ஒருநாள் திருமுன்றிலை யடைந்து பக்கத்தில் இருக்கும் அரநெறி என்னும் ஆலயத்தில் புகுந்து இறைவனை ஒப்பனை செய்து பல தொண்டுகளும் செய்தார். இறைவனை வழிபடு தற்கு எண்ணற்ற தீபமேற்றுதற்கு எண்ணினார். மாலைக்காலம் நெருங்கிக் கொண்டிருந்ததால் தொலைவிற் சென்றுவந்தால் இருள்சூழும் என்று கருதினார். எனவே அருகில் இருந்து வீடொன்றில், 'சிவாலயத்தில் விளக்கேற்றுதற்கு நெய்தாருங்கள்' என்றார். அவ்வீடு சமணர் வீடாயிற்று. 'கையில் ஒளி விடுகின்ற நெருப்பையுடைய பரமசிவனுக்கு விளக்கு மிகையன்றோ? இங்கே நெய்யில்லை; விளக்கெரிக்க வேண்டுமானால் குளத்திலுள்ள நீரை முகந்து எரியும்' என்று அவ்வீட்டிலிருந்த சமணர் பதில் கூறினார். நமிநந்தியடிகள் அதைக் கேட்டுப் பொறாது அழுது புலம்பி இறைவனிடத்து முறையிட்டனர்.

அடிகளின் அவலம் தீர்ப்பதற்காக இறைவன், 'நமிநந்தியே நீ உன்னுடைய கவலையை நீக்குவாய். இதற்கு அருகில் இருக்கிற குளத்தில் நீரை முகந்து கொண்டு வந்து விளக்கேற்றுவாய்' என்று அசரீரியாக நின்று கூறினான். அடிகள் அச்சொற்களைக் கேட் டளவில் மனம் மகிழ்ந்து எழுந்து சென்று குளத்தில் இறங்கிச் சிவநாமத்தை உச்சரித்து நீர் முகந்து வந்து வார்த்து விளக்கேற்றினார். விளக்குகள் அனைத்தும் சுடர் விட்டு எரிந்தன. அன்று இரவு முழுவதும் நீரை

வார்த்து விளக்கெரித்து வந்தார்.

அடிகள் வீதிவிடங்கப்பெருமானுக்குப் பங்குனி மாதத்தில் மகோற்சவம் நடத்துவித்தார். இறைவன் ஒருநாள் திருமணலிக்கு எழுந்தருளியதால் அக்காட்சியைக் கண்டு களிக்கும் பொருட்டு அங்குச் சென்றார். கட்டுக்கடங்காத மக்கள் வெள்ளத்தில் நின்று இறைவனை வணங்கித் தம் இல்லம் திரும்பினார். பலரையும் தொட்டுவந்ததால் வீட்டினுள் செல்லாமல் குளித்துப்பின் சிவபூசை செய்வதாகத் தம் மனைவியிடம் கூறினார் அடிகள். மனைவி நீரெடுக்கச் சென்றதும் களைப்பில் உறக்கம் மேற்கொண்ட அவர் கனவில் இறைவனைக் கண்டார். 'திருவாரூரில் பிறந்தவர் அனைவரும் சிவகணங்கள் அதனை நீகாண்பாய்' என்று இறைவன் கனவில் கூறியதைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தார் அடிகள். மக்களுள் தீண்டத்தகாதவர் உண்டு எனத் தாம் கருதியிருந்த அறியாமையை எண்ணி மனம் நொந்தார். பிழையான தம் எண்ணத்தை மாற்றிக்கொண்டு குளிக்காமலேயே சிவபூசை செய்து பின் நிகழ்ந்ததைத் தம் மனைவியிடம் கூறினார்.

மறுநாள் வன்மீகநாதரை வழிபடத் திருவாரூர்க்குச் சென்றபோது அங்கிருந்த அனைவரும் அவர் கண்ணுக்குச் சிவகணங்களாகவே தோன்றினர். அக்காட்சியைக் கண்டு அகம் மகிழ்ந்து பூமியில் விழுந்து வணங்கினார். எழுந்து மீண்டும் பார்க்கும் பொழுது அவ்வுருவம் நீங்கி அனைவரும் முன்போல் ஆயினர். அதைக்கண்டு 'அடியேன் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்' என்று இறைவனிடம் அடிகள் வேண்டிக் கொண்டார். பிறகு திருவாரூரிலேயே குடியேறி, அங்கேயே வாழ்ந்து, சிவத்தொண்டு பல செய்து சிவபதம் அடைந்தார். இவர்தம் பெருமையை உணர்ந்த திருநாவுக்கரசு நாயனார் இவரைத் 'தொண்டர்களுக்கு ஆணிப்பொன்' எனத் திருவாரூர்த் தேவாரத்தில் புகழ்ந்துள்ளார். அடிகளுடைய குருபூசை ஆண்டுதோறும் வைகாசி மாதம் 8-ஆம் தேதி பூச நட்சத்திரத்தில் நடைபெற்று வருகின்றது. சா.கி.

**நமீபியா (தென் மேற்கு ஆப்பிரிக்கா):** இந்நாட்டின் நிலப்பரப்பு 8,24,269 ச.கி.மீ. இதன் மக்கள் தொகை 1,039,800 (1983). இதன் எல்லைகள் வடக்குப்பகுதியில் அங்கோலா, சாம்பியா நாடுகளும், கிழக்கில் போட்சுவானா நாடும், தெற்கில் தென்



நமீபிய அரசு கட்டடம்

ஆப்பிரிக்கா நாடும், மேற்கில் அட்லாண்டிக்குமாக்கடலும் ஆகும்.




நமீபியா (அமைவிடம்)

**இயற்கை வளம்:** நமீபியா (Namibia) பெரும்பாலும் ஒரு பீடபூமிப் பகுதி. மேற்குக் கடற்கரை ஓரமாக நமீம் பாலைவனம், கிழக்குப் பகுதியில் கலகாரி பாலைவனம். மூன்று நதிகள் ஓடினாலும் கடுமையான வறட்சி அடிக்கடி நிகழும். நிலத்தடி ஊற்றுக் கிணறுகள் வேளாண்மைக்கு உதவுகின்றன. ஆயினும், ஏராளமான சத்துள்ள புல்வகைகள் ஆடு மாடுகளுக்கு மேய்ச்சலாக இருப்பதால், ஆடு மாடு வளர்ப்பே பெருந்தொழில் ஆகும். வடக்கே உள்ள சுரங்கங்களின் விலையுயர்ந்த வைரமும், தாமிரம், வெள்ளீயம், துத்தநாகம், மங்கனம் மற்றும் செருமனீயம் முதலிய வற்றின் தாதுக்களும் ஏற்றுமதிகளின் மதிப்பை உயர்த்துகின்றன.

மக்கள் தொகையில் 12 விழுக்காடு வெள்ளையர். ஆப்பிரிக்கர் அல்லாதாருள், 17 விழுக்காட்டினர் செருமன் மொழியும், 6 விழுக்காட்டினர் ஆங்கில மொழியும் பேசுபவர்களாக உள்ளனர். எஞ்சியவர் ஆப்பிரிக்கான் மொழியினர், இதன் தலைநகரம் விண்டீக்கு (Windhoek) 1974-இல் நிறுவப்பட்டது. மக்கள் தொகை 76,000, புதிய வசதிகள் கொண்டது இந்நகரம்.

**முக்கியமான துறைமுகம்:** இதுமேற்குக் கடற்கரையில் வால்விசு வளைகுடாவில்முக்கிய துறைமுகமாயுள்ளது; எல்லா வகையான புதிய வசதிகளோடும்கூடியது; தென் ஆப்பிரிக்காவைச் சேர்ந்தது. இன்னொன்று உலூடரிட்சு (Luderitz); மீன் பிடிப்புக்காகவே பயன்படுத்தப்படுகிறது.

**வரலாறு:** முதலில் கி.பி, 15-ஆம் நூற்றாண்டில் போர்ச்சுகீசியர்தாம் இந்நாட்டில் ஆய்வாளராகக் காலடியெடுத்து வைத்தனர். பின்பு கி.பி. 1884-இல் இங்கிலாந்து, பிரான்சு போன்ற சில ஐரோப்பிய அரசுகளிடையே ஏற்பட்ட ஒப்பந்தங்களின்படி, இந்தப் பகுதி 'தென்மேற்கு ஆப்பிரிக்கா' என்று தனியே வகுக்கப்பட்டுச் செருமனியின் ஆதிக்கத்தில் விடப்பட்டது. முதலாம் உலகப்போர்க் காலத்தில் 1915-இல் தென் ஆப்பிரிக்கப் படைகள் செருமானியரை இங்கிருந்து விரட்டியடித்தன. போர் முடிவில், 1921 - இல் சருவதேச சங்கம். (League of Nations) நமீபியாவின் நிருவாகத்தைத் தென் ஆப்பிரிக்கா வசம் ஒப்படைத்து, (Class-C Mandated Territory) விரைவில் அது ஒரு சுதந்திர நாடாக இயங்க ஆவன செய்ய ஆணை பிறப்பித்தது. எனினும், தென் ஆப்பிரிக்கா இதனைக் தன் நாட்டின் ஒரு பகுதியாகவே கருதிச் செயற்பட்டது. இரண்டாம் உலகப் போரின் முடிவில் ஐக்கிய நாடுகள் சபையின் பாதுகாப்பில் இந்நாடு ஒப்படைக்கப்பட்டிருக்க வேண்டும். தென் ஆப்பிரிக்கா இதைச் செய்ய மறுத்ததுமன்றி, தன் நிற இன பேதக் கொள்கைகளை (Apartheid) இந்நாட்டில் புகுத்த முற்பட்டு, வெள்ளையரல்லாதாருக்குத் தனியே ஒதுக்கப்பட்ட குடியிருப்புகளை ஒதுக்கவும் செய்தது. இதற்கிடையில் அண்டை நாடான அங்கோலாவில் போர்ச்சுகீசிய ஆதிக்கம் வீழ்ந்து, இடச்சாரிகள் ஆட்சி அமைத்தனர். இது நமீபியா மக்களிடையே சுதந்திர வேட்கையை ஊக்குவித்தது. 'தென் மேற்கு ஆப்பிரிக்கப் பொது மக்கள் அமைப்பு (SWAPO) என்ற மக்கள் குழு ஒன்று நிறுவப்பட்டு, ஐ.நா. சபையாலும் அங்கீகரிக்கப்பட்டது. அக்குழு தென் ஆப்பிரிக்கா மீது அடிக்கடி கொரில்லாத் தாக்குதலை நடத்தியது. இந்தப் பிரதேசத்துக்கு மக்களால் வழங்கப்பட்ட பெயரான 'நமீபியா', 1968-இல், ஐ.நா வில் அங்கீகரிக்கப்பட்ட பெயராயிற்று. 1971 -இல் சருவதேச நீதிமன்றம், தென் ஆப்பிரிக்காவின் செயல் சட்டத்துக்குப் புறம்பானது என்று கண்டித்தது. பல மகாநாடுகள் நடந்து, முடிவில், 1978 திசம்பர் 31-ஆம் நாளுக்குள் ஐ.நா. மேற்பார்வையில் நமீபியாவில் தேர்தல் நடத்தி அரசியல் நிருணயசபை அமைக்க ஆணை பிறப்பிக்கப்பட்டது. இதைமீறித் தென் ஆப்பிரிக்கா, ஐ.நா. மேற்பார்வையின்றியே, தென்மேற்கு ஆப்பிரிக்கப் பொதுமக்கள் அமைப்புக் கலந்து கொள்ளாத ஒரு தேர்தல் நடத்தியதை உலக வல்லரசுகள், ஐ.நா. சபை மற்றும் எவரும் அங்கீகரிக்கவில்லை. அதன்பின்பு ஐ.நா. கூட்டங்கள் பலவற்றில் பேச்சு வார்த்தைகளும், விவாதங்களும் நடந்தும்கூட, நமீபியா உலக அரங்கில் ஒரு தீராத சிக்கலாகவே இருந்து வருகிறது. மு.அ.

**நயனப் பத்து**: இது தமிழில் 96 வகைப் பிரபந்தங்கள் எனக் கூறப்படும் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. கண்ணினைச் சிறப்பித்துப் பத்து ஆசிரிய விருத்தங்களால் இப்பிரபந்தம் பாடப் பெறும். ஆண் அல்லது பெண்ணின் உறுப்புகளைப் பாதாதிகேசமாகவோ கேசாதிபாதமாகவோ சிறப்பித்துப் பாடும் 'அங்கமாலை' என்னும் பிரபந்தத்தின் விளைவாகத் தனித்தனி உறுப்புகளைப் புனைந்து பாடும் மரபு தோன்றியிருக்கலாம். அவ்வகையில் தோன்றியது நயனப்பத்து என்னும் சிற்றிலக்கியமாகும். விருத்தப் பாவேயன்றிக் கலித்துறையாலும் இப்பிரபந்தம் பாடப் பெறும். இதன் இலக்கணத்தைப் பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், பிரபந்த மரபியல், இலக்கண விளக்கப் பாட்டியல், முத்து வீரியம், பிரபந்த தீபம் முதலிய பாட்டியல் இலக்கண நூல்கள் கூறுகின்றன. இதன் இலக்கணத்தைப் 'பார்வையைப் பத்துப் பாட்டால் உரைப்பது, நயனப் பத்தென நவிலப்படுமே' என முத்துவீரியமும், 'நாட்டந்தனைத் தசச் செய்யுளால் கூறல் நயனப்பத்தெனப் புகலுவார்' எனப் பிரபந்த தீபமும் விளக்குகின்றன.

அ.மா.ப.

**நயாகரா நீர்வீழ்ச்சி**: வடஅமெரிக்காவில் நியூயார்க்கிற்கும் கனடாவிலுள்ள ஒண்டேரியா மாகாணத்திற்கும் இடையில் ஓடும் ஆறு நயாகரா. இது ஈரி (Erie) ஏரியையும், ஒண்டேரியோ ஏரியையும் இணைக்கின்றது. நீளம் 54.7 கி.மீ. இந்த ஆறும் இதன் நீர்வீழ்ச்சியும் புகழ் பெற்றவை. ஆற்றின் நடுவில் நயாகரா நீர்வீழ்ச்சி உள்ளது. இந்த நீர்வீழ்ச்சி ஆறு, கோட்டுத் தீவைச் (Goat Island) சுற்றி இரு கிளைகளாகப் பிரிந்து, இரு வீழ்ச்சிகளாக விழுகின்றது. பெரிய நீர்வீழ்ச்சி கனடாவின் எல்லையைச் சேர்ந்தது. இதற்குக் குதிரைலாட நீர்வீழ்ச்சி என்பது பெயர். இந்த நீர்வீழ்ச்சியிலிருந்து வரும் தண்ணீர், ஒவ்வொரு வருடமும் அதிகமாக ஏறத்தாழ 1½மீ. நிலத்தை அரித்துவிடுகிறது. இந்த மண்அரிப்பைத் தடுப்பதற்காகப் பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. இந்த நீர்வீழ்ச்சியைக் காண்பதற்கு ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கானவர்கள் செல்லுகின்றார்கள். பிரிசுட்டு என்ற பாதிரியார் கி.பி.1678-ஆம் ஆண்டு இந்த நீர்வீழ்ச்சியைக் கண்டுபிடித்தார். இந்தக் குதிரைலாட நீர்வீழ்ச்சியின் உயரம் 48.2மீ. அகலம் 793மீ. ஆற்றுப் பெருக்கின் பெரும்பகுதி இவ் வீழ்ச்சியில்தான் விழுகிறது. இந்நீர்வீழ்ச்சியில் விழும் தண்ணீர்ச்சிதறல் மழைத்துளியைப் போல் எங்கும் காணப்படும். நீர்வீழ்ச்சியில் விழும் தண்ணீரின் கனம் ஏறத்தாழ 7மீ. இருக்கலாம் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. 1003.மீ. உயரமுள்ள ஒரு சரிவான பாறையிலிருந்து இந்த நீர்வீழ்ச்சி விழுகிறது. நீர்விழும் இடத்தில் பயங்கரமான சுழற்சி இருக்கிறது. இந்த ஆற்றிலிருந்து மற்றொரு நீர்வீழ்ச்சி அமெரிக்காவில் உள்ளது. அமெரிக்கா நீர்வீழ்ச்சியின் உயரம் 51 மீ. அகலம் ஏறத்தாழ 467மீ. அமெரிக்க நீர்வீழ்ச்சியின் அடியில் பெருங்குகை போன்ற மடு இருக்கிறது. இது ஆற்று நீர்க் குடைவால் ஏற்பட்டது.



நயாகரா நீர்வீழ்ச்சி

இந்த நீர்வீழ்ச்சியிலிருந்து தண்ணீர் பல தொழிற்கூடங்களுக்குப் பயன்படுகிறது. நீர்மின் நிலையம் கட்டப்பட்டுள்ளது. குயின்சுடோன் சிப்பவா (Queenston - chuppawa) என்ற மின் நிலையம் 1917-இல் தொடங்கப்பட்டது. அதனுடைய முதல் அலகு 1922-இல் நிறைவு செய்யப்பட்டது. இந்த ஆற்றில் 3 பாலங்கள் கட்டப்பட்டுள்ளன. அவற்றுள் வானவில் பாலம் சிறப்புடையது. இப்பாலம் 1941-இல் கட்டப்பட்டது. இதன் நீளம் ஏறத்தாழ 317மீ. நயாகரா நீர்வீழ்ச்சியின் இயற்கை அழகைப் பார்ப்பதற்கு மக்கள் வருகின்றனர். இதுகோடைக் காலத்தைவிட குளிர்காலத்தில் அழகாக இருக்கும். பனிக்கட்டிகள் விழும்போது சூரியனின் கதிர் வீச்சால் பல வண்ண நிறங்கள் உண்டாகின்றன.

சே.நா.

**நர்மதை** மத்திய இந்தியாவில் விந்திய-சாத்பூரா மலைத்தொடர்களினூடே கிழக்கிலிருந்து மேற்காகப் பாயும் ஆறு; மைக்கலா மலைப்பகுதியில் அமர் கண்டக்கு என்னும் புனித தலத்தில் தோன்றி ஓடுகிறது. இந்தியத் துணைக் கண்டத்தினை வட இந்தியா, தென்னிந்தியா என இரு கூறாகப் பிரிக்கும் நதியென இதைக் கொள்ளலாம். இந்நதிக்கு அதிகமான கிளை நதிகளோ துணை நதிகளோ இல்லை, மத்திய பிரதேச மாநிலத்தில் உற்பத்தியாகும் இது, பெரும்பகுதி அம் மாநிலத்தினிடையே ஓடிக் குசராத்து மாநிலம் வழியாகப் புரோச்சுக்கருகில் காம்பே

வளைகுடாவில் கலக்கிறது. இந்துக்கள் இதனை ஒரு புனிதமான நதியாகக் கருதுகின்றனர். இந்நதி பாயும் பகுதி விந்திய-சாத்பூரா மலைப் பள்ளத்தாக்காக உள்ளமையால் இயற்கை எழில் மிகுந்த பகுதியாக உள்ளது. மா.கா.

**நரகம்**: சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி நரகம் என்பதற்கு 'உயிர்கள் தீவினைப் பயன்களை அனுபவிக்கும் இடமான உலகம்' என்றொரு பொருளைக் கூறுகிறது. ஆங்கிலக் கலைக் களஞ்சியங்களும், பேய்கள் (Demons) முதலியன வசிப்பதும், கொடுமை, வஞ்சனை, பாபச் செயல்கள் புரிந்தவர்கள் இறப்பின் பின் சென்று தண்டிக்கப் பெறுவதுமான இடம் அல்லது நிலைமை என்றும் விளக்கியுள்ளன.

எபிரேயர், பாபிலோனியர், இந்தியர் போன்ற பழமையான நாகரிகம் வாய்ந்த மக்களிடையேயும் நரகம் பற்றிய எண்ணம் இருந்து வந்துள்ளது. பெயர் அமைப்பு, செயற்படும் நிலை முதலியவற்றில் அதனிடத்து வேறுபாடுகள் இருந்துள்ளனவெனினும் கொடியோரும் பாவிகளுமானோர் இறப்பின் பின் கொடுந்துன்பமடைவர், அதற்கெனத் தனி இடம் உண்டு என்று கூறும் அடிப்படையில் அது ஒன்றாகக் காணப்படுகிறது.

ஆன்மாக்கள் தாம் செய்த கொடுமைகளை நுகர நரகம் என்று ஒன்று இருப்பதாகக் கொள்ளப்பட்டது போலவே, அவை செய்த நல்வினைப் பயனை நுகர்தற்கான இடமும் உள்ளது என்ற கருத்தும் தொடர்ந்து நிலவிவருகிறது. நில உலகில் காணும் சிறந்த நன்மைகளையும், நீதிகளையும், அறங்களையும் தீவிரமாக எதிர்க்கும் மாந்தர் நிலையின் அடையாளமாகவும் நரகத்தைக் குறிப்பிட்டுள்ளார்கள்.

உலகின் கீழை, மேலை நாடுகளில் தோன்றியுள்ள தொன்மைச் சமயங்கள் பலவும், நரகமும் அதற்கு எதிரிடையான மோட்சமும் பற்றிய கருத்துகளை வெவ்வேறு வகையில் கொண்டுள்ளன. யூதர்கள், மக்கள் இறந்தபின் 'சோயல்' (Shoel) எனப்படும் இருண்டு மகிழ்வற்ற இடத்திற்குச் செல்வர் என்றும், வஞ்சகர் தீயோர், பாவிகள் முதலியோர் 'கென்னா' (Gehenna) என்று கூறப்படும் எரியும் பள்ளத்தாக்கில் வீழ்வர் என்றும் கருதியிருந்தனர் எனத் தெரிகிறது. கிறித்தவர்களின் பழைய ஏற்பாட்டில் (Old Testament) இத்தகு குறிப்பு உள்ளதெனக் கூறுகின்றனர். இறந்ததோர்ஆன்மாக்கள், பூமிப்பிளவினைக் கடந்து செல்ல வேண்டும் என்றும், அதற்கு மிகவும் குறுகலான பாலம் ஒன்றுள்ளது என்றும், அதில் செல்லும்போது, பாவியர்களும் கொடியவர்களும், மீளா ஆழத்தில் வீழ்ந்துபடுவர் என்றும் சில சமயங்கள் கூறுகின்றன. பாபிலோனியர், ஈபுரூக்கள், கிரேக்கர் போன்ற தொல்மரபுடைய மக்களும் புத்தர்கள், கிறித்தவர், இசுலாமியர், இந்துக்கள் போன்ற சமய மக்களும் குறிப்பிடும் நரகம் பற்றிய பெயர்கள், திரும்பிவர இயலாத நிலம், கொடுமை நிறைந்த இடம், காணமுடியாத நிலம், மறைப்புண்டிலங்கும் இடம் என்னும் பொருள் கொண்டனவாகவே உள்ளன.

நரகம் பற்றிய விளக்கங்களைக் காணுங்கால், ஒழுங்கமைந்த சமுதாயத்தில்-கடவுள் அடிப்படையில் அமைந்த சமுதாயத்தில்-மக்கள் நீதியொடும் அன்பொடும் அறத்தொடும் பாவங்கள் புரியாமல் வாழ வேண்டும் என்பதனை வலியுறுத்துவதற்காகவே நரகம் பற்றிய கருத்துத் தோற்றுவிக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது தோன்றுகிறது. அதன் பயனாகவே நரகத்திற்கு மாறுபட்ட சுவர்க்கமும் படைத்துக் காட்டப்பட்டுள்ளது என்று தெரிகிறது. நரகம், சுவர்க்கம் பற்றிக் கூறும் நூல்கள் எவையும், அவ்விடங்களைச் சென்று கண்டு அறிந்தவர்களின் கூற்றுக்கள் ஆகமாட்டா. அவற்றைக் 'கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்' என்று கூறலாம்.

இக்கருத்துகள், உலகில் வாழும் மக்கள், அன்பினராய், அற நெஞ்சினராய், கொடுமை அற்றவர்களாய் வாழ்ந்து இன்புறவேண்டும் என்னும் அடிப்படையில் தோன்றியவாதல் வேண்டும் என்பதில் வேறுபாடில்லை.

சமயங்களுள் சில, நரகம் செல்லும் உயிர்கள் அதிலிருந்து மீள முடியாதவாறு அதிலேயே இடர்ப்பட்டுக் கிடக்கவேண்டும் என்னும் கருத்துடையனவாக உள்ளன. அதனால், சிந்தனையாளர் சிலர் பெருங் கருணையாளனான இறைவன், தீங்கு புரிந்த ஆன்மாக்களை நிரந்தரமாகத் துன்பில் அழுத்தும் பாங்கினனாக இருத்தல் இயலாது என்று கருதுகின்றனர். நரகத் தண்டனை நீங்கிப் பின் நல்வாழ்வு அளிக்கும் வாய்ப்புள்ளது என்றும் அவர்கள் கூறுகின்றனர்.

இந்து சமயத்தில், ஆன்மாக்கள் செய்த தீவினையின் பயனை அனுபவித்து முடிக்கும் வரை அவை நரகத்தில் துன்புறும் என்றும், பின்னர் உலகில் பிறந்து, அறச்செயல் செய்து நன்மை எய்தும் வாய்ப்பு உண்டு என்றும் கூறப்படுகிறது.

சில புராணங்களில் நரகத்தின் இயல்புகள் பலவாறாகக் கூறப்பட்டுள்ளன. இம்மையில் பாவம் செய்த ஆன்மாக்கள் மறுமையில் அவை செய்த பாவச் செயல்களுக்கு ஏற்பச் செக்கிலிட்டு ஆட்டப் பெறல், பழுக்கக் காய்ந்த இரும்புத்தூணைத் தழுவச் செய்

தல், அரம்பம் கொண்டு அறுத்தல் போன்ற தண்டனைகளைக் கூறுகின்றன. இவற்றிற்கு மாறாக, சுவர்க்கம் புகும் உயிர்கள், தாம் வேண்டியவாறு வேண்டும் இன்பங்களை அனுபவிக்கும் என்று கூறியுள்ளன.

சங்க நூல்களிலும் நரகம் என்னும் பொருளில் நிரையம் என்னும் சொல் இடம் பெற்றுள்ளது. அங்கு நரகம் பற்றிய வருணனை இடம் பெறவில்லை. கொடுமை மிகுதியுடைய இடம் என்ற கருத்தில் ஆளப்பட்டுள்ளது. இரவில் தன் வீட்டுப் பகுதிக்கு வந்துள்ள காதலனைக் காண முடியாது. அன்னை விழித்திருந்து காக்கும் செயலுணர்ந்த தலைவி, பெண் கொலை புரிந்த நன்னன் போல அன்னை வரையா நிரையத்திற்குச் செல்வாளாக என்று கூறுகின்றாள். ஒரு மன்னனின் படையாற்றலைக் கூறும் போது, அது பகைவர்க்கு நரகம் போலும் துன்பம் செய்யத்தக்கது என்னும் பொருளில் 'நிரைய வெள்ளம்' என்று கூறப்பட்டுள்ளது.

திருவள்ளுவர் நரகத்தை 'அளறு'என்னும் சொல்லால், தம் நூலகத்து மூன்றிடங்களில் (குறள். 255 835, 919) குறிப்பிட்டுள்ளார். மேலுமவர் அதன் இயல்பினை 'இருள் சேர்ந்த இன்னா உலகம்' (குறள். 243) என்னும் தொடரால் விளக்கியுள்ளார். அதனை விளக்க வந்த பரிமேலழகர், 'இருள் செறிந்த துன்ப உலகம் என்றது திணிந்த இருளை உடைத்தாய்த் தன்கண் புக்கார்க்குத் துன்பஞ் செய்வதோர் நரகத்தை; அது கீழுலகத்துள் ஒரிடமாதலின் உலகம் எனப்பட்டது' என்று விளக்கியுள்ளார். ஈரேழு உலகங்ளுக்கும் கீழே நரகம் உள்ளது என்று கூறப்படும்.

கொடியவர்களாகிய அடங்காதவர்க்குச் செய்யும் தானமும் பாவச் செயலாக, அதனால் அதன் பயனை அதனைச் செய்தவர் நரகத்தில் சென்று இடர்ப்பட நேரும் என்பதனைச் சமணசமயம் 'அடங்கலர்க்கீந்த தானப் பயத்தினால் அலறு முந்நீர்த் தடங்கடல் நடுவுள் தீவு பலவுள அவற்றுட் சென்று' (சிந்தா.மு.இ. 244) என்று குறிப்பிடுகிறது. நரகங்கள் பல உள என்னும் கருத்தினைத் தேவார ஆசிரியருள் ஒருவராகிய திருநாவுக்கரசர், 'கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார்'என்பதில் உடன்பட்டுக் கூறுகின்றார்.

தமிழ் நிகண்டுகள், 'நிரயம், நிரையம், பவர்க்கம், கும்பி, புலவு, ஊழ்த்தல், அவரம், அள்ளல், அளறு அதோகதி, பாவம், துவாந்தம், அருஞ்சிறை, இருள், நரகு, பாதாளம், இருள்நிலம், எரி, திமிரம், இரௌரவம், தீ, சுவப்பிரம், ஊழல், பூரி முதலிய பல சொற்களை நரகத்தினை உணர்த்தும் பெயர்களாகக் குறிப்பிட்டுள்ளன. அவ்வாறே, நரகத்திற்கு மாறாகிய மோட்சத்தினையும் பல்வேறு பெயர்களால் குறிப்பிட்டுள்ளன. இப்பெயர்களில் பல காரணப் பெயராகவும், உருவக வகையாகவும் பிறவகையாகவும் அமைந்துள்ளன வாகும்.

இந்து சமயப் புராணங்கள் நரகங்களைப் பல வகையாக வகுத்தும் தொகுத்தும் கூறியுள்ளன. நரகம் தொகையால் இருபத்தெட்டும், வகையால் நூற்று நாற்பதும், விரியால் இருபத்தெட்டுக் கோடியும் ஆகும் என்று நூல்களில் கூறப்பட்டுள்ளது.

நரகம் நான்கென்போர் அவை, நரகம், மாநரகம் இவிசநரகம், இவிசரா சேச்சுரநரகம் என்பர். அதனை இரௌரவம், துவாந்தம், சீதம், வெப்பம், சந்தாபம், பதுமம், மாபதுமம், கால சூத்திரம் என்று எட்டாகவும், தமத்தமப் பிரபை, தூத்தினப்பிரபை, கருக்கராப் பிரபை, வாலுகாப்பிரபை, பங்கப்பிரபை, தூமப் பிரபை, தமப்பிரபை என்று ஏழாகவும் கூறுவர்.

நரகத்தைக் கோரம் முதல் சூசீமுகம் ஈறாக 28 வகைப்படுத்தி உரைப்பர் ஒருசாரார். பிறிதொரு சாரார்தாமிச்சரம் முதல் சூசீ முகம் வரை 28 வகையினது என்று கூறுவர். அள்ளல், இரௌரவம், கும்பீபாகம், கூடகாலம், செந்துத்தானம், பூதிமாபூதி என்று ஏழாகவும், இரௌரவம் முதல் சுவபோசனம் வகையிலான 19 ஆகவும் வகுத்துக் கூறும் முறையும் உண்டு. இவ்வகைகள், இன்னின்ன வகைப் பாவம் செய்தவர் இன்னின்ன வகை நரகடைவர் என்று கூறும் பாங்கில் அமைந்தன. எடுத்துக்காட்டாக, தாமிச்சரம் என்பது. பிறர் பொருள், மனைவியரைக் கவர்ந்தோர் சென்று மூர்ச்சித்துக் கிடக்குமிடம் என்பதாகும். வடமொழியிலுள்ள மகாபுராணங்களிலும், சில ஆகமங்களிலும் நரகம் விரிவாகப் பேசப்பட்டுள்ளது என்று கூறுகின்றனர். நாத்திகர்கள் நரகம் மோட்சம் என்பன சமய வாதிகள் உண்டாக்கிய வெறுங் கற்பனைகளே என்று கூறுவர்.

அ.மா.ப.

**நரகாசூரன்: நரக அசுரன்** என்பது நரகனாகிய அசுரன் எனப் பொருள்படும். புராணங்களில் கூறப்படும் இரணியன், இரணியாக்கன் போன்ற கொடிய அரக்கர்களுள் நரகாசூரனும் ஒருவன். பாகவத புராணம், விட்டுணு புராணம் போன்றவற்றில் இவனது வரலாறு கூறப்படுகின்றது.

திருமாலின் பத்து அவதாரங்களுள் வராக அவதாரமும் ஒன்று. இரணியாக்கன் என்ற கொடிய அசுரன் பூமியைக் கொண்டு போய்ப் பாதலத்தில் மறைத்து அழிக்க எண்ணினான். அவனை எதிர்க்கும் ஆற்றல் இன்றித் தேவர்கள் திகைத்தனர். அப்பொழுது திருமால் வராக (பன்றி) உருவங்கொண்டு அவனை அழித்துப் பூமியைத் தன் பெரிய கொம்புகளில் தாங்கிக் கொண்டு வந்து முன்போல் நிலை

நிறுத்தினார். இக்காரணம் பற்றி நிலமகளை 'ஓர் ஏன மருப்பிலே பயின்ற பாவை' என வில்லிபுத்தூரார் குறிப்பர். திருமால் பூமாதேவியுடன் கூடியதால் பிறந்வன் நரகாசூரன். இவன் மாபெரும் வலிமையும், படைக்கலங்களும் வரங்களும் பெற்றவன். ஆண்மகன் எவனாலும் கொல்ல முடியாத வரம் பெற்றவன்.

இவனது தலைநகர் பிராக்சோதிடபுரி. 'மாகிசுமதி' எனவும் கூறுவதுண்டு. நரகன் துவட்டாவின் மகளான 'கசேரு' என்பவளை மணந்து பகதத்தனைப் பெற்றான். அயக்கிரீவன், பஞ்சகன், நிசும்பன், பிராபணன், முரண் என்போர் இவன் அமைச்சர்கள்.

இவன் தனது வலிமையால் செருக்குற்ற உலகத்திற்குப் பல துன்பங்களைச் செய்தான். தேவர்களை வென்று தேவமகளிரைக் கவர்ந்து சென்று சிறை வைத்தான். அதிதியின் காதணியைக் கவர்ந்தான். வருணனை வென்று அவன் குடையைக் கைப்பற்றினான். துவிவிதன் என்னும் வானர வேந்தன் இவனது நண்பன் என நூல்கள் கூறும்.

தேவர்கள் வேண்டத் திருமால் கிருட்டிணாவதாரத்தில் இவனை எதிர்த்துப் போரிட்டார். நரகாசூரன் தனது மாயையால் அவரையும் மயங்கச் செய்தான். அப்போது கண்ணனுக்குத் தேரோட்டிச் சென்ற சத்தியபாமை வில்லை வளைத்து அம்பெய்து நரகாசூரனைக் கொன்றாள். அதனால் சத்தியபாமைக்கு 'நரகாசுர மர்த்தினி' என்ற பெயர் உண்டாயிற்று. உலகத்தை மூடியிருந்த பேரிருள் விலகியதற்காக மக்களும் தேவர்களும் மகிழ்ந்தனர்.

நரகாசூரன் சாகுந் தறுவாயில் மெய்யுணர்வு வரப்பெற்றுத் திருமாலிடம் தான் மடிந்த அந்நாளை ஒரு விழாவாகக் கொண்டாட வேண்டுமென்று வேண்டினான். அவரும் அவ்வாறே வரம் தந்தார்.

அன்று ஐப்பசித் திங்கள் கிருட்டிண பட்சத்துத் திரயோதசி இரவு. விடிந்தால் சதுர்த்தசி. எனவே, துன்ப இருள் நீங்கிய அத்தினமாகிய நரக சதுர்த்தசியைத் தீபாவளி என்ற பெயரால் உலகம் கொண்டாடியது. தீபம் ஏற்றி, வானவெடிகள் வெடிப்பதும், எண்ணெய் தேய்த்து மூழ்குவதும் தீபாவளியின் தனிச் சிறப்பு.

நரகாசூரன் வதை பற்றிய வரலாறு வேறுவிதமாக விட்டுணுபுராணத்தில் கூறப்படுகிறது. தேவர்களும் அசுரர்களும் பாற்கடல் கடைந்தனர். அப்போது மகாலட்சுமி தோன்றினாள். அவள் உதித்த தினமே தீபாவளி. அன்றே அவள் திருமாலைத் தேடித்தன் கணவனாக வரித்து மணந்தாள். மணப்பதன் முன் திருமாலிடம் ஒரு வரம் கேட்டாள். தேவ, கந்தருவ கன்னிகைகளின் கற்பை அழிக்கக் கருதி அவர்களைச் சிறைப்படுத்தி வைத்திருக்கும் மகாபாதகனான நரகாசுரனைக் கொன்று அவர்களை விடுவிக்க வேண்டும் என்பது அவ்வரம். திருமால் அவ்வாறே நரகாசுரனைக் கொன்று கன்னிகைகளைச் சிறைமீட்டார். இவ்வாறு புராண ஆய்வினால் தீபாவளி கலியாண தினம் என்பது அறியப்படுகிறது. அ.ஆ.

**நரசிங்க முனையரைய நாயனார்** சைவ சமயத் தனியடியார் அறுபத்து மூவருள் நாற்பதாமவராவார். இவர், திருமுனைப் பாடி நாட்டில் திருநாவலூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த குறுநில மன்னர். முனையரையர் குடியிற் பிறந்தவர்; வீரம் மிக்கவராய் அவர் காலத்திருந்த மற்றைய பகையரசர்களை வென்று சிறந்து விளங்கினார்; இறைவனிடத்தும் அவன் அடியாரிடத்தும் ஆராக் காதல் கொண்டு வேண்டிய தொண்டுகள் செய்து வந்தார். சிவபிரானுக்குத் திருவாதிரையான் என்பதும் ஒரு பெயராகும். அது காரணமாகத் திங்கள் தோறும் திருவாதிரை நாளில் சிவபிரானுக்குச் சிறப்பு வழிபாடாற்றி வந்தார். அன்று வரும் சிவனடியார்களுக்கெல்லாம் அறு சுவையுண்டியளித்தும் நூறு பொன்னுக்குக் குறையாமல் கொடுத்தும் மகிழ்விப்பார். இவ்வாறு திருநீறு அணிந்த அடியார்களுக்கு இவர் நிறைய உணவும் பொன்னும் அளிப்பது தெரிந்த காமுகன் ஒருவன் தானும் திருநீறணிந்து ஒரு நாள் அடியார்களோடு கலந்து காணப்பட்டான். அவனைக் கண்டு மற்றைய அடியார்கள் யாவரும் ஒதுங்கிச் சென்றனர். அதுகண்ட நரசிங்கமுனையரையர் அக்காமம் மீதூர்ந்த அடியார் நெற்றியிலும் திருநீறு விளங்குவது கண்டு அவரையும் நன்கு உபசரித்து யாதொன்றும் அவரைப் பற்றி எண்ணாதவராய் அவருக்கு வழக்கத்திற்கு மாறாக இருமடங்கு பொன் கொடுத்து மகிழ்ந்தார். இவர் ஒரு சமயம் நகர்வலம் வந்த போது நம்பியாரூரர் இளம்பாலராய்த் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தார். அக் குழந்தையின் அழகில் ஈடுபட்ட அரசர் அவர் பெற்றோர் சம்மதம் பெற்றுத் தம் அரண்மனைக்கு அக் குழந்தையை அழைத்துச் சென்று தம் மகவாகவே வளர்த்து வந்தார். அவ்வக் காலத்து அக் குழந்தைக்கு நிகழ்த்த வேண்டிய சடங்குகளை அவர் குலப் பிறப்புக் கேற்பவே நடத்தி மகிழ்ந்தார். ஆகவே, நரசிங்க முனையர் நம்பியாரூரர் என்னும் பிள்ளைத் திருநாமம் கொண்ட சுந்தர மூர்த்தி நாயனாரின் வளர்ப்புத் தந்தையும் ஆவார். இவ்வாறு அடியார் தொண்டிலும் சிவ வழிபாட்டிலும் உறைப்புடன் விளங்கி இறுதியாக இறைவன் திருவடி நிழலின் புற்று முத்தி பெற்றார். இவர் காலம் கி.பி. 8-ஆம் நூற்றாண்டு. இரா.ச.

***நரசிம்மமேத்தா*** இந்தியாவில் குசராத்து மாநிலத்தில் பவநகர் இராச்சியத்தில் உள்ள தலாசா என்னும் கிராமத்தில் பிராமண குலத்தில் பிறந்தவர். இவர் கி.பி. 1414 முதல் 1481 வரை வாழ்ந்தவர்; இளமையிலேயே பெற்றோரை இழந்ததால் தம்முடைய தமையனாரின் ஆதரவில் வாழ்ந்தவர். மாணிக்கபாய் என்னும் பெண்ணை இவர் மணந்து கொண்டார்; அவர் மூலம் சமசுதாசு என்னும் மகனையும், உமர்பாய் என்னும் மகளையும் பெற்றார்; இளமைக்காலந்தொட்டு இறைப்பற்று மிக்குடையவராயிருந்தார். அதனால் இவர் இல்லறத்தில் அதிக நாட்டமுற்றிருக்கவில்லை. குடும்பபாரத்தில் கவனம் செலுத்தாமையால் குடும்பம் வறுமையில் வாடியது. ஆயினும் அதனைப்பற்றி நரசிம்மமேத்தா கவலைப்படாது இறைவனைத் துதித்துப் போற்றுவதில் ஈடுபாடு காட்டினார்.

கிருட்டிணபக்தராக இவர் திகழ்ந்தார்; இறையருள் ஒன்றே அனைவரையும் வாழ வைக்கும்என நம்பினார். இவர் மக்களைப் படைக்கும் ஆண்டவன் முன் அனைவரும் சமம் என்ற கோட்பாடுடையவர். சாதிமத பேதங்கள் பாராட்டாமல் இறைவனின் புகழைப்பரப்புவதில் கவனம் செலுத்தினார்; பிராமண குலத்தவராயினும் அரிசனங்கள் எனப்பட்ட ஆதித் திராவிடர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்; அவர்களிடையே கிருட்டிண பக்திப் பாடல்கள் பாடுவதன் மூலம் பக்தியைப் பரப்பினார். இவர் தம் இனத்தவரிடையே இவர் செயல்களுக்குப் பெரும் எதிர்ப்பு இருந்தபோதிலும் அதனைப்பற்றிக் கவலைப் படவில்லை.

சிறந்த பக்திமானான இவர் சிறப்புமிகு எழுத்தாளராகவும் விளங்கினார்; ஆர்மாலா, சுதாமா சரித்திரம் ஆகிய காவியங்களுடன் எண்ணற்ற இசைப் பாடல்களையும் எழுதியுள்ளார். காலை நேரங்களில் உள்ளம் உருகப் பாடுந்தகுதியுடைய இவருடைய பக்திப்பாடல்கள் 'பிரபாதி' என்றுசொல்லப்படுகின்றன. இவர்தம் பாடல்கள் மார்வாடி இனத்தவருடன் இந்தியாவின் பலபிரிவினரிடையேயும் செல்வாக்குடன் திகழ்கின்றன. இவர் இயற்றிய 'வைசுணவ சனதோ' எனத் தொடங்கும் பாடல் மக்களின் ஒருமைப்பாட்டினை உணர்த்த வல்லதாய் இன்றும் ஒலிக்கின்றது.

ம.கா.

***நரசிம்மவர்மன்:*** காண்க: தமிழ்நாடு.

***நரம்பியல் உளவியல்:*** தூக்கத்தின் இருப்பிடம் மூளை. ஓய்வுக்கான இத் தூக்கமானது வேறு ஒரு காரணத்திற்காகவும் பயன்படுத்தப்படுவதுண்டு. ஆபத்தான கட்டத்திலிருந்து விடுபடப் புழு பூச்சிகள் தூங்கிவிடுவதுண்டு. தீராத பசி அல்லது கடுங்குளிரிலிருந்து தம்மைக் காத்துகொள்ள வழியேதும் இல்லாதபோது இந்நிலையிலிருந்து விடுபடுவதற்கு எசுகிமோக்களும், சைபீரிய வாசிகளும் தூங்கிவிடுவதுண்டு. சோர்வூட்டும் சொற்பொழிவுகளும், சலிப்பூட்டும் வகுப்புகளும் தூங்கவைக்கும் ஆற்றல் படைத்தவை. பல்லை நீக்கிக்கொள்ள மருத்துவரிடம் செல்லும் போதும் சிலர் அறுவைக்குச் சற்று முன்னதாகவும் கொஞ்சம் தூங்கிவிடுவர். இதெல்லாம் மயக்கம் அன்று; பிடிக்காத சூழ்நிலையிலிருந்து காத்துக்கொள்வதற்கான, மூளை கையாளும் குறுக்கு வழிகள், இதைவிடமிகையான கோளாறுகளிலும் மூளையானது தூக்கத்தில் ஈடுபடுத்திக்கொள்ளும்.

**கோளாற்றின் தன்மை:** காது கேளாமையினால் ஏற்படும் மொழிக்குறைவு நரம்பியல் வகையைச் சாராதது. ஆனால் காது கேட்டாலும் புரிந்து கொள்ளாத நிலையைத்தான் உளவியல் கோளாறு எனலாம். முன்பெல்லாம் பெற்றோர்களால் புறக்கணிக்கப்பட்டதனால் இக்குறை விளைவதாக எண்ணி வந்ததுபற்றி இக்கால உளவியல் வல்லுநர்கள் கருத்தை மாற்றிக் கொண்டனர். இதனை நரம்பு மண்டலக் கோளாறாக நம்புகின்றனர். இக்குறை உள்ளோரின் பேச்சில் நிறையப் பெயர்ச்சொற்களும், வினைச் சொற்களும், சுட்டுச் சொற்களும் காணப்பட்டு அவற்றை இணைக்கும் சொற்களும் உருபுகளும் மிகக்குறைவாகத்தான் இருக்கும். இயல்பான குழந்தைகள் தம் எண்ணத்தை வெளியிடச் சொற்கள் கிடைக்காவிட்டால் செய்கையை யாவது செய்வார்கள். இவர்களிடம் செய்கையோ, கோணிக் குறுகுவதோ இருக்காது. அதனால் தம் கருத்தைத் தெரிவிக்க முடியாதபோது மிகுந்த சினத்தைத்தான் வெளிப்படுத்துவர். ஆகையால் உடல் இயக்கமானது வேகமாக இருக்கும். நான், நீ, அவன் என்பனவற்றைத் தவறாகப் பயன்படுத்துவர். அவன் என்னுமிடத்தில் தன்னை வைத்தும், நான் என்பதை நீ என்றும் மாற்றிக் கூறுவது இயல்பாக இருக்கும்.

புரிந்துகொள்ளுதல், எழுத்து, பேச்சு, இலக்கண மொழியாற்றல் ஆகியவை சரியாக இல்லாமையினால் அவர்களின் கவனிப்பு, எண்ணுதல், பேசுதல், படித்தல, எழுதுதல், கணித்தல் ஆகிய துறைகள் குறைபாடாக முடியும். நீண்டதோர் சொற்றொடரைக் கேட்க நேரிடும்போது கேட்டது செய்தியா வினாவா என்ற தெளிவான எண்ணங்கூட இவர்களுக்கு இருப்பதில்லை.

விபத்துக்களில் மூளையில் அடிபட்டதாலோ மூளைப் புற்று அல்லது கிருமிகளின் தாக்குதலினாலோ சில கோளாறுகள் ஏற்படுவதுணடு. சிலரால் எழுதப்பட்ட சொல்லைத் தெரிந்துகொள்ள முடியும்

அல்லது எழுதவும் முடியும்! ஆனால் சொல்லின் உச்சரிப்பு நினைவில் இருக்காது. காணும் ஆற்றல் இருக்கிறது; உச்சரிக்கும் ஆற்றல் இழக்கப்பட்டிருக்கிறது என்பது தெரிகிறது.

இடப்பக்க மூளையின் சிறு பகுதி விபத்தில் காயமுற்றவர்களினால் சாதாரண சொல்லைக்கூட வாசிக்க முடிவதில்லை. கோழி என்று வாசிக்கவேண்டியதை முட்டை என்றும், சொல் என்னுமிடத்தில் பேச்சு என்றும் வாசிப்பார்கள். அதோடு உச்சரிப்பிற்குச் சற்றுக்கடினமான சொற்களை உச்சரிக்க முடிவதில்லை. 'பழமுதிர்' என்பது உச்சரிக்க வாராது. வேறு எவராவது உச்சரித்தால் அதைக் கேட்ட இவர்களும் சரியாக உச்சரிப்பார்கள். சொல்லின் பொருளைக் கூடப் பிறர் கூறாது தாமாகவே அறிவர். இருப்பினும் தெரிந்திருந்த உச்சரிப்பை மறந்திருக்கின்றனர்.

**அடிப்படைக் காரணம்:** இடப்பக்க மூளையானது தத்துவக் கருத்துகள், குறியீடுகள், பகுத்தறிதல், பேச்சு, எழுத்து, கணிப்பு போன்றவற்றில் வேகமாகச் செயற்படுகின்றது. அதோடு மேலாண்மையும் நிருவாகமும் இதற்குண்டு. ஆனால், மூளையின் வலப்பக்கக் கோளமானது உருவப்பொருள், சிந்தனை, புரிந்து கொள்ளுதல், செவிப்பொறி மூலம் கேட்ட செய்திகளை உணர்தல், முப்பக்கப்படங்களாகக் காணுதல் போன்ற தனிச் செயல்களைக் கவனிக்கின்றது என்பதை 1981-ஆம் ஆண்டில் நோபல் பரிசைப் பெற்ற ரோசர் இசுபெர்ரி என்பவர் பல ஆராய்ச்சிகளின் மூலம் கண்டறிந்துள்ளார். முன் மூளையின வலப்பக்கப் பகுதி நேர்முக உணர்வுகளின் போதும், இடப்பக்க முன் மூளையானது எதிர்மறைக் கருத்துகளின்போதும் வேகமடைவதாகவும் கண்டறிந்துள்ளனர்.

வலக்கையைப் பயன்படுத்துவோரில் 95 விழுக்காட்டினருக்கும் இடக்கையைப் பயன்படுத்துவோரில் 70 விழுக்காட்டினருக்கும் பேச்சாற்றலானது இடக்கோளத்திலிருக்கின்றது. வலப்பக்கக் கோளத்திற்கு மொழியாற்றல் இல்லை என்றெண்ணிவிடக் கூடாது. பேச்சைச் புரிந்து கொள்ளும் ஆற்றல் வலப்பக்கம் மிகுதி. பொருள்கொள்ளுதல் மொழிக்கு அடிப்படை.

மூளையின் இரு கோளங்களும் சற்று வெவ்வேறு வகைப் பணிகளைக் கவனிக்கின்றன என்பது உண்மை தான். ஆனால் எல்லாக் கலைகளும் வலப்பக்கக் கோளத்திலும் எல்லாவித அறிவியல் ஆற்றல்களும் இடப்பக்க கோளத்திலும். இருப்பதாக எண்ணிவிடக் கூடாது.ஆரியபட்டாவின் இடப்பக்க மூளையும், தியாகராச சுவாமிகளின் வலப்பக்க மூளையும்தான் வளர்ந்திருந்ததாக எண்ணிவிடக் கூடாது. கலை, அறிவியல், ஆக்கச்செயல் என்ற எநத உயர் ஆற்றலுக்கும் முழு மூளையின் இயக்கம் தேவை. அங்ஙனம் இன்றி இரு பகுதிகளும் சேர்ந்து ஒத்துழையாவிடில் ஏற்படும் விளைவுகள்தாம் நரம்பியல் உளவியலாகக் கருதப்படுகின்றன.

**உணர்ச்சிகளை மறைத்தல்:** மூளையின் தூண்டுதலால் மிகுந்த விழிப்புணர்வும் நாளமில் சுரப்பி நீரினால் நடத்தைக் குழப்பமும் உண்டாகலாம். மூளை-தண்டு வடத் திரவம் (Cerebrospinal Fluid) இரத்த ஓட்டச் சீர்மையுடன் ஓரளவிற்குத் தொடர்பு கொண்டுள்ளது. நரம்புகளின் தொடர்பான நோய்களிருப்பின் தெரிந்துகொள்ளக் கூடியது. இத்திரவத்தின் புளிமங்கள் அளவில் குறைந்தாலும் கோளாறுகள் ஏற்பட்டு ஓரளவிற்கு ஆளுமைச்சிதைவைக்கூட ஏற்படுத்தும்.

உணர்ச்சி நிறைந்த சொற்களைக் கேட்கும்போது கூட உணர்ச்சிப் போராட்டங்களை மறைத்து வாழும் உள நோயாளிகளால் சரியாக எதுவும் சொல்லமுடிவதில்லை. தாமதித்து வரும் விடை மேல்வாரியாகத்தான் இருக்கும். இத்தகைய குற்றவாளிகள் வலக்கையைப் பயன்படுத்தினாலும் மொழிக்கான மையம் இடப்பக்க மூளையிலிருப்பது போலவே வலப்பக்க மூளையிலும் மையம் கொண்டிருக்கிறது. இது ஒரு வியப்புச் செய்தி. இவர்களின் குறை நடத்தைக்கு இது காரணமாக இருக்குமோ என ஐயப்படுகின்றனர் உளவியல் ஆராய்ச்சியாளர்.

கண்டிப்பான பழக்க வழக்கங்களைக் கொண்ட குடும்பச் சூழ்நிலையினால் இவர்களைச் சீர்திருத்த முடியும். இவர்களுக்கு மருத்துவம் அளிக்காதபோது கூடத் திடீரென்று நாற்பதாம் வயதுஅளவில் குற்ற மனப்பாங்கு வெகுவாகக் குறைந்துவிடுகின்றது. மனக் கோளாறு படைத்த குற்றவாளிகள் ஏறக்குறைய 3 விழுக்காட்டினர்தான் காணப்பட்டனர். அண்மைக் காலக் கணிப்பின்படி மிகுந்தஅளவில் இத்தகையோர் குற்றங்களில் ஈடுபடுவதோடு சிறுவயதினர் முன்பு செய்த தவறுகளைவிட மிகப் பல விலங்குத்தனமான குற்றங்களில் வெற்றிகரமாக ஈடுபடுகின்றனர் என்பது தெரியவருகின்றது. இந்த இளங்குற்றவாளிகள் அப்பாவிகளை உடனுக்குடன் தயக்கமில்லாமல் காயப்படுத்தவோ கொன்றுவிடவோ செய்கின்றனர். இச் செயலுக்குப் பின்னர் கொஞ்சங்கூடத் துன்பப் பட்டவனுக்காக இரங்குவதில்லை. 'மற்றவர் நலன் காப்பது என் பொறுப்பு' என்ற எண்ணமானது வேகமாக மறைந்துவிடுகின்றது. ஆகவே, மூளைக்கோளாறு படைத்த இன்றைய குற்றவாளி சிறு வயதிலேயே சட்டத்தை மீறிக்குற்றமிழைத்து அடிக்கடி சிறைக்குள் போவதும் விடுபட்டு வெளியே வருவதும் தொடர்ந்து நிகழ்கின்றன.

மூளையின் கோளாறான இயக்கத்தைக் கட்டுப் படுத்த மண்டையோட்டில் துளையிடுவதோ, மயக்க மருந்துகள் தருவதோ அவ்வளவு தேவையில்லை. மூளையை ஒருமுகப்படுத்திச் சிக்கலைப் பற்றி ஆராய முடிந்தால் வலி என்பது இல்லாது போவதோடு உள் உறுப்புகளை அடக்க முடிவதோடு ஆக்கச் சிந்தனைக் கும் வழி வகுக்கப்படும். மனிதன் தன் முயற்சியால் தன் ஆளுமையை மாற்றியமைக்க முடிவதோடு மன வளத்தைச் செம்மையாக்கிக் கொள்ளவும் முடியும்.

ம.பெ.

**துணை நூல்கள்:**


**Ashby, W.**, A Report on the Current Status of an Attempt to Correlate Abnormality of Distribution, Journal Neuro, Mental, Disabilíties, 1950.

**Saffran, E and Maria O.**, Reading Without Phonology, Quarterly Journal of Exptl. Psychology 1977.

**Vogel, S.A.**, Syntactic Abilities in Normal and Dyslexic Children, Journal of Learning Disabilities.


***நரம்புசார் உடல் சோர்வு நோய்*** எனப்படும் மனநோய் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் மிகுந்த கவனத்தை ஈர்த்தது. இக்காலத்தில் இறுக்கத்தினால் (Stress) ஏற்படும் உடல் மற்றும் உள்ள அயற்சி இதனை ஒத்தது எனலாம். இந் நோயுற்றோர் அடிக்கடி உடல் மற்றும் உளச் சோர்வுற்றிருப்பதாக உணர்வர்.

சிக்மண்டு பிராய்டு (Sigmund Freud) எனும் அறிஞர் நரம்புத்தளர்வு நோயை இரு வகைகளாகப் பிரித்தார். பாலுணர்வு தடைபடுதல் சார்ந்த தடங்கல்கள் உண்மையான நரம்புத்தளர்வு (Actual Neuroses) என்றும், மனச்சிக்கல்கள் சார்ந்த கோளாறுகளை உளம்சார் நரம்புத்தளர்வு (Psycho Neuroses என்றும் பிரித்தார். நரம்புசார் உடல்சோர்வு நோயை (Neurasthenia) (பரபரப்பு, விளக்க இயலாத வலிகள், மற்றும்தலைவலிகள்) உண்மையான நரம்புத் தளர்வாக அவர் வகைப்படுத்தினார்.

இந் நோயுற்றோர் விரைவில் உடல் சோர்வுறுவர்; உடல் உறுப்புகள் செயற் படுதலில் பெருமளவு அக்கறை செலுத்துவர்; ஒலிகளைக் கேட்பதில் மிகுந்தஆர்வமான உணர்வு கொண்டிருப்பர்; அவ் வாறே வெளிச்சம் மற்றும் மிகுந்த குளிர்ச்சி ஆகிய வற்றினால் உணர்ச்சிவயப்படுவர். மற்றும் சிலர் முகம் சிவத்தல், வியர்த்தல், உடல் குளிர்ந்துபோதல் ஆகியவற்றிற்கு உள்ளாவர். இவர்கள் உடலை ஆடைகள் கொண்டு இறுகப்போர்த்திக்கொண்டு எப்போதும் சலதோசம் பிடித்துக்கொள்ளுமோ என்ற அச்சத்துடன் இருப்பர். ஆண்கள் உடலுறவு கொள்வதில் வலுவிழந்தும், பெண்கள் அடிக்கடி மாதவிலக்கேற் படுவதில் தடைபடுதலையும் உணர்வர். தூக்கம் கனவுகளால் பாதிக்கப்பட்டும், அடிக்கடி விழிப்புற்றும், அதனால் பகலில் சோர்வுடனும் இருப்பர். தங்கள் உடல்சோர்வு பற்றியே எப்போதும் சிந்தித்துக்கொண்டும் கவலையுடனும் இருத்தலால் இவர்களுடைய நினைவாற்றல் நலிவுற்றிருப்பதுண்டு. இவர்கள் கூச்சமுடனும் தன்னம்பிக்கை குறைந்தும் முடிவெடுக்க முடியாமல் இடர்ப்படுதலும் சிறிது சிறிதாக மனச்சோர்வு நோய்க்கு (Depression) அடிமையாவதை உணர்த்தும். இவர்களுடைய குடும்பச் சூழலில் உடல் நோய்களுக்கே மிகுதியான கவனம் செலுத்தப்பட்டு, சமுதாயத்தால் ஏற்க உகந்த செயல்களைக் கவனிக்காமல் இருந்து வந்ததாலேயே இந்நோய் உருவானது எனலாம்.

பிராய்டு தம்மிடம் வந்த நோயாளிகளை ஆராய்ந்து, இந்நோயுற்றோர் சுய இன்பம் காண்பது (Masturbation) குறித்து கட்டாய உணர்வு கொண்டிருப்பதைக் கண்டார். சுய இன்பம் காணுதலைக் கைவிடச் சொல்லித்தாம் கூறியதைக் கேட்டுக் கைவிட்ட பிறகு அவர்களுடைய மனஅழுத்தம் மறைந்தது. அச்ச உணர்வால் ஏற்படும் நரம்புத்தளர்ச்சி நோய்க்கும் (Anxiety Neuroses) இந் நோய்க்கும் உள்ள மாறுபாடு-முந்தைய நோயில் உணர்ச்சிவசப் படுதல் மிகுந்தும், பிந்தைய நோயில் உணர்ச்சி- வறட்சி மிகுந்தும் காணப்படும். வே.சு

**துணை நூல்:**


**Zax,M., & Cowen, E.L.**, Abnormal Psychology, Holt Rinehart & Winston, New York,' 1976.


***நரம்புசார் கற்பனைப் பணி***: மனித உடலின் விலா எலும்பிற்குக் கீழேயுள்ள பகுதியில் கருமைத் திரவம் சுரப்பதாகவும் அதுவே மனிதனின் துக்கத்திற்குக் காரணம் என்றும் கிரேக்க மருத்துவர்கள் நம்பினார்கள். இதனைத்தான் தொடக்ககாலத்தில்நரம்புசார் கற்பனைப் பிணி (Hypochoudria) என்று சொன்னார்கள். பின்னர் உடலுறுப்பு அடிப் படையற்ற உடல் நோய்களையும் இது குறிப்பதாயிற்று.

நரம்புசார்கற்பனைப்பிணியில் உடல்நோய் இருப்பதற்கான ஆதாரம் ஏதுமில்லாதபோது ஒருவர் தமக்கு உடல்நோய் இருப்பதாக நம்புகிறார். இத்தகைய

நிலை மனித உடல் இயக்கம் பற்றிய ஒரு தவறான தீவிர முன்கணிப்பாகும். பிரெஞ்சுக் கதையாசிரியர் மார்சல் பிரௌஸ்ட் (Marcel Proust) தமக்கு உடல் நிலை மோசமாக இருப்பதாகவும், 1900-இல் தாம் இறக்க நேரிடும் என்றும் சொல்லி வந்தார். ஆனால் 22 ஆண்டுகளுக்குப் பின்னரே இறந்தார். இதைப் போலவே ஏராளமானவர்கள் இல்லாததொரு நோயினைப்பற்றி மனநோய் கொண்டிருக்கின்றனர்.

தம்முடைய இன்றியமையாமையும் கௌரவமும் குன்றிவருவதாக நம்பும் மனிதர்கள், பிறரின் கவனத்தை ஈர்க்கும் வழிகளைக் கையாளக் கற்றுக் கொள்ள ஆரம்பிக்கின்றனர். தமது உடல்நலம் குன்றியுள்ளது என்று சொல்வது பிறரின் கவனத்தைத் தம்பால் திருப்பும் வழியாகும். இத்தகையோர் ஒரு நோயாளிபோல் அல்லது ஊனமுடையவர்போல் நடிக்கத் தலைப்படுகின்றனர். ஏனெனில், அப்போது தான் அவரது குடும்பத்தினரும், நண்பர்களும் அவரைச் சூழ்ந்திருப்பர்; அவருக்கு வேண்டிய உபசரிப்புகள் நடைபெறும்; அவர் விரும்பியதையெல்லாம் கொடுப்பார்கள் என்று இந்நோயாளி நம்புகின்றார். இத்தகைய நரம்புசார் கற்பனைப் பிணியாளர், குடும்பத்தில் ஒரு கொடுங்கோலராகத் தமக்குப் பிடித்த உடை, உணவு, வசதியான இருக்கைகள், நல்ல படுக்கை வசதி, நினைத்தபோது கேளிக்கைகள், சொன்னவுடன் வீட்டில் அமைதி அத்தனையும் பெற விரும்பிடுவர்.

சமூகக் கற்றலின் விளைவாகவும், நரம்புசார் கற்பனைப் பிணி ஏற்படக்கூடும். பல்வேறு வகை நோய்களையும், நோய்க் கூறுகளையும் மக்களுக்கு எடுத்துக் காட்டிஅவர்களைத் திக்குமுக்காடச் செய்வதால் ஏற்படும் கெட்ட பின்விளைவுகளை இங்கிலாந்துநாட்டுத் தொலைக்காட்சியின் வாராந்தர ஒளிப்பரப்பு எடுத்துக்காட்டியுள்ளது. இந்தத் தொடரில் பத்து நிகழ்ச்சிகள் இருந்தன. ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட நோயினைப் பற்றி ஒரு மருத்துவமனையின் செயற்பாட்டினை விளக்குவதாகும். நல்ல, தரமான மருந்துகளைக் காட்டுவதும், மருத்துவமனைகளுக்குச் செல்வதற்குள்ள அச்சத்தைப் போக்குவதும், நோய்கள் பற்றி ஒரு ஆரோக்கியமான ஆர்வம் மக்களிடையே தோன்றச்செய்வதும் அவ்வொளிபரப்பின் நோக்கமெனத் தொலைக்காட்சி நிலையம் சொன்னது. ஆனால், நரம்புசார் கற்பனைப் பிணியினை வளர்ப்பதாகவும், அறுவை முறைகளைக் காட்டுவதன்மூலம் ஒரு பரபரப்பினை ஏற்படுத்துவதாகவும், நோயாளி-மருத்துவர் உறவினை ஆக்கிரமிப்பதாகவும் கூறி அவ்வொலிபரப்பினை இங்கிலாந்து மருத்துவக் கழகம் குற்றம் சாட்டியது.ஒளிபரப்புச் செய்யப்பட்ட போது அதனைக்கண்ட இருவர் தமக்குப் புற்று நோய் இருப்பதாக எண்ணி வாழ்வை மடித்துக் கொண்டனர்; தமது இதய நோயின் அறுவைச் சிகிச்சைக்குத் தயாராக இருந்த வேறொருவர் தொலைக்காட்சியில் காட்டப்பட்ட அறுவைச் சிகிச்சையினைப் பார்த்துவிட்டு தற்கொலை செய்து கொண்டார்.

நிறைவின்மை உணர்வுகள், தாழ்வுமனப் பான்மை, தோல்விகள் ஆகியவற்றால் அல்லது அவற்றுடன் சேர்ந்து ஏற்படும்பதற்றத்தால் நோயினை எதிர்கொள்ளும் ஒரு முயற்சிதான் நரம்புசார் கற்பனைப் பிணி என்பது உளவியக்கக் கருத்தாகும். நோயிருப்பதாகக் கருதிக்கொள்ளுதலும், உடலில் சிரமம் இருப்பதாகச் சொல்லும் முறையீடுகளும் காரணம் கற்பித்தல் முறையில் அடங்கும். ஒருவருக்கு நோயோ வலியோ இருப்பின் அவருடைய செயல் குறைபாடு மன்னிக்கப்படலாம், தாழ்வுணர்வுடன் கூடிய பதற்றம் தவிர்க்கப்படலாம். இந்நோயில் நடத்தை மற்றும் அறிதல்சார் கூறுகள் காணப்படின் அந்நோய்க் குறிகளின் உள்ளார்ந்த பொருள்பற்றிக் கவனம் செலுத்தவேண்டும். கி.இரா.

**துணை நூல்:**

KiskerG.,W., The Disorganized personality, Mc Graw-Hill Kogakusha Ltd., New Delhi, 1977.

***நரம்பு வழி உளப் பிணிகள்:*** எளிய மனக் குழப்பங்கள் அல்லது மனநலக் கோளாறுகளால் நரம்பு வழி உளப் பிணிகள் (Psychoneurosis) ஏற்படுகின்றன.இவற்றை இயல்பான மனிதனின் உள்ளத்தினால் சிந்தனை உணர்வின்றிப் பயன்படுத்தப்படும் வழிமுறைகள் முதல் கடுமையான உளப் பிணியாளரினால் பின்பற்றப்படும் விரைவான வழிமுறைகள் வரையிலான பல்வேறு மன வலிகளின் தொடர் சங்கிலியைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

நரம்பு வழி உளப்பிணிகளைச் சார்ந்த ஆளுமைக் கோளாறுகள், ஒரு குறிப்பிட்ட மனிதன் தனிப்பட்ட உள்ளார்ந்த மனநிலைச் சிக்கல்களை எதிர்கொள்ளும் முயற்சியில் தோன்றுகின்றன எனலாம். மேலும், நோயாளியின் உள்ளத்தில் எழுகின்ற ஆபத்தை எதிர் நோக்கும் அச்சம் அல்லது பீதி காரணமாகத் தோன்றும் மன அழுத்தம் அல்லது உளப்பாதுகாப்பு உணர்வுக்குக் கேடுவரும் நிலையைச் சமாளிக்க முடியாத நெருக்கடியான மனநிலை போன்ற காரணங்களாலும் நரம்பு வழி உளப்பிணிக் கோளாறுகள் தோன்றுகின்றன. எனவே, நரம்பு வழி உளப்பிணிகள் ஏற்படுவதற்கு ஒருவருக்கு எப்பொழுது, எத்தகைய ஆபத்து வருமோ என்று எழும் அச்சம் அல்லது பீதி

பொதுவான காரணம் என்று கருதப்படுகிறது. பீதி, அல்லது அச்சத்தின் வெளிப்பாடு மாற்றமடைதல், அச்சுறுத்தும் எண்ணங்கள் தனிச்சிந்தனைக் கோவையாகப் பிரிதல், மனக் கலக்கம், மிகுதியான பயத்தைப் பயக்கும் எண்ணங்கள், செயல்கள் திரும்பத் திரும்ப நிகழ்தல் முதலானவை, அச்சத்தைக் கட்டுப்படுத்துவதற்குத் தன்னிச்சையாக மேற்கொள்ளப் படும் இயற்கைத் தடுப்பு முயற்சிகளினால் விளைபவை ஆகியவையே நரம்புவழி மன நோய்களின் அறிகுறிகளாகும்.

இயல்பாக ஒருவருக்குப் பீதியை அல்லது அச்சத்தை ஏற்படுத்தும் உணர்வுகள் மற்றும் நிலைமைகளை எதிர்கொள்ள உதவுகின்ற இயல்பான நடைமுறை அடக்கிக்கொள்ளும் (Repression) பண்பு எனப்படும். ஆனால் நரம்புவழி மன நோயாளிகளின் பீதி அல்லது அச்ச உணர்வினைத் தடுக்க அடக்கிவைக்கும் திறன் முழுமையான அளவிற்குப் பயன்படுவதில்லை. எனவே, கட்டுப்படுத்தவியலாத அச்ச உணர்வுகளும் அவை தொடர்பான பீதியும், மற்றும் அதை எதிர்ப்பதற்காக இயற்கையாக மேற்கொள்ளப்படும் முயற்சிகளுமே நரம்பு வழி உளப் பிணிகளின் அறிகுறிகளாகும் எனப் பொதுவாக அறியலாம்.

அத்தகைய சரிப்படுத்திக்கொள்ளும் முறைகள் வளர்ச்சியின் தொடக்க நிலையில் மன நிறைவளிப்பதாக இருந்திருக்கும். ஆனால், நரம்பு வழி உளப் பிணியாளர் வயதுவளர்ந்த பிறகும் திருத்திக்கொள்ள முடியாத அதே வகை நடத்தைகள் இயற்கைக்கு மாறாகத் திரியும்.

வளரும் நிலையில் விளங்கும் குறிப்பிட்ட நடத்தை, வாழ்வின் பிற்பகுதியில் அதாவது வயது முதிர்ந்த பருவத்தில் பொருத்தமற்றதாகவும், போதாததாகவும் உள்ளமை தெளிவாகிறது. எனவே, நரம்பு வழி உளப் பிணியின் வெளிப்படும் நடத்தை மாற்றங்கள் நோயாளிக்கு நிறைவளிப்பனவாகஇருப்பதில்லை. ஆகவே, பிணியாளர்கள் பேதைமை, வெட்கம், மற்றும் குற்றஉணர்வு முதலான உணர்வுகளுக்கு ஆளாகிவருந்துகின்றனர். பிணியாளர் பீதியைக் கட்டுப்படுத்தப் பின்பற்றும் எதிர்ப்பு நடவடிக்கையின் வகையைக் கொண்டு நரம்பு வழி உளப்பிணிகளின் வகைகள் முடிவு செய்யப்படுகின்றன. அமெரிக்க உளப் பிணி மருத்துவக் கழகம் திட்டமிட்டு அமைத்துப் பொதுவாகஇந்தியநாட்டிலும் பின்பற்றப்படும் நரம்பு வழி உளப் பிணிகளின் வகைகள் வருமாறு:

1) பீதி அல்லது அச்சத்தின் தாக்குதல் உட்படப் பீதியின் எதிர்விளைவு (Anxiety Reactions), 2) பிணியாளரின் உணர்வின் ஒரு பகுதி அவர் உணராமலேயே நீக்கப்படும் பகுதி நினைவோட்டம் (Dissociation), மேலும், மறதிநோய் (Amnesia), தூக்கத்தில் நடத்தல் (Sleep-Walking), மற்றும் இரு வேறுபட்ட மன நிலை மாறி மாறி வெளிப்படுதல் (Fugue) முதலான நோய்களில் நிகழ்வது, முதன்மை ஆளுமையின் (Primary Personality) உணர்வுக்குக் கிடைக்காமல் போகும் எதிர் விளைவுகள், 3) நரம்புத் தளர்ச்சியினால் ஏற்படும் வலிப்பு நோயில் (Hysteria) நிகழ்வது போன்ற அச்சமாற்ற எதிர் விளைவு, 4) கட்டுப்படுத்தவியலாத பொருளற்ற அச்சம் (Phobia), திறந்த வெளிபற்றிய அச்சம் மற்றும் உட்பகுதிகளைப் பற்றிய அச்சம் இவற்றில் நிகழ்வது போன்ற அச்ச எதிர் விளைவு, 5) ஒருவருக்கு ஒரு குறிப்பிட்ட எண்ணம் தொடர்ந்து திரும்பத் திரும்ப மனத்தில் தோன்றி அழுத்தி அவரை வருத்துவது போன்ற மனத்தை அழுத்தும் எதிர் விளைவு, கையைக் கழுவுதல் முதலான செயல்களில் ஒருவர் கட்டாயமாகவும் திரும்பத் திரும்பவும் செய்ய விழைதல் (Obsesive Compulsive Neurosis) பொருளற்ற அச்சமிகுதியின் எதிர் விளைவுகளாகும், 6) சோர்வூட்டும் எதிர் விளைவு, மேலே கூறப்பட்ட எதிர் விளைவுகளன்றிச் சில நேரங்களில் தொடர்ந்து, நீண்ட நாள் உடல் நலக் குறைவு காரணமாக ஏற்படும் நரம்புவழி உளப் பிணிகள் ஆகும். பெரும்பாலான நரம்புவழி உளப் பிணிகள் வாலிபப் பருவத்தும்மற்றும் 35 வயதிற்கு இடைப்பட்ட காலத்தும் வயது வந்தோர்க்கு வருகின்றன.

அடிப்படை நரம்பு வழி நோயின் உளப் பிணிச் சிகிச்சையில் பொருளற்ற அச்சமிகுதி நோயாளியின் நினைவாற்றலுக்கெட்டாத காரணங்களைக் கண்டு வெளிப்படுத்துவதில் கவனம் செலுத்தவேண்டும்.

வே.ந.

**நரலோக வீரன்:** பிற்காலச் சோழர் காலத்தில் பணிபுரிந்த புகழ்மிக்க அரசியல் அதிகாரி. பெரும் புகழ் பெற்ற இவன் மாபெரும் வெற்றி வீரனாகவும் திகழ்ந்தான். இவன்முதலாம் குலோத்துங்க சோழன் ஆட்சிக் காலத்தின் பிற்பகுதியிலும், அவன் மகனான விக்கிரம சோழனது ஆட்சியின் முற்பகுதியிலும் பணியாற்றியவன். இப் படைத் தலைவன் தொண்டையர் கோன், கூத்தன் போன்ற பெயர்களால் குறிப்பிடப் பட்டுள்ளான். இருப்பினும் இவனது இயற்பெயர் தெரியவில்லை. பல சாசனங்களில் இவன் நரலோக வீரன் என்று குறிக்கப் பெற்றுள்ளதால் இவன் நரலோக வீரன் என்றே கூறப்படுகிறான். இவன் தில்லைச் சிதம்பரத்தின் மீது தனி ஈடுபாடு கொண்டிருந்தான்.

தமிழ் நாட்டிலுள்ள வட ஆர்க்காடு மாவட்டத்தில் வேளாளர் குடியில் தோன்றிய இவன்

தொடக்க கால முதலே வீரமும் வெற்றியும் ஆற்ற லும் இராச பக்தியும் அடையப் பெற்றவன். முறை யான போர்ப் பயிற்சி பெற்ற இவன், வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள மணப்பாக்கம், அரும்பாக்கம் முதலான பகுதிகளைத் தன் இராணுவ சேவைக்காக மானியமாகப் பெற்றிருந்தான் எனத் தெரிகிறது.

முதலாம் குலோத்துங்க சோழனுக்கும் மேலைச் சாளுக்கிய விக்கிரமாதித்தனுக்கும் பகைமை ஏற்பட்ட போது, நரலோக வீரன் சாளுக்கியர் மீது படை யெடுத்துச் சென்று (கி.பி. 1076) வெற்றி தேடித்தந் தான். இவன் வேங்கி நாட்டிலும், இரட்டபாடி ஏழரை இலக்கத்திலும் எதிரிகளை வென்றான். சேர நாட்டிலுள்ள விழிஞம், கொல்லம் என்னும் போர்க் களங்களிலும் இவன் சேரனை வென்று, சோழருக்கு வெற்றி தேடித் தந்தான்.

சோழ நாட்டின் ஒரு பகுதியை மன்னனுடைய பேராளனாக இருந்து ஆட்சிபுரிந்தான். சிதம்பரத் திலும், திருவதிகையிலும் இவன் பல மண்டபங்களை யும் மாடங்களையும் கட்டியுள்ளான்; சிதம்பரம் கோவிலைச் சுற்றிலும் மதில் ஒன்றினைக் கட்டிய இவன் அதற்கு 'நரலோகவீரன் மதில்' எனப் பெய ரிட்டுள்ளான். இன்னும் பல மண்டபங்களும், கட்ட டங்களும் இவனது பெயரைத் தாங்கி நின்றன. இவ னது வேண்டுகோளுக்கு இணங்கியே குலோத்துங்கன் கி.பி. 1098-இல் 'வெநவீண' என்னும் ஊரிலுள்ள பொற்குடம் கொடுத்தருளிய நாயனார் கோயி லுக்குத் தேவதானமாக நிலமளித்துள்ளான் ம.இ.

**துணை நூல்:**

**நீலகண்ட சாத்திரி, க.அ.,** நரலோக வீரன் - தமிழ்ச் சங்க வெள்ளி விழா நினைவு மலர், கரந்தைத் தமிழ்ச் சங்கம், 1938.

**நரிக்குறவர்:** தமிழ்நாட்டில் ஊர் ஊராகச் சுற்றித் திரியும் நாடோடி மக்களுள் 'நரிக்குறவர் இனத்தவரும் அடங்குவர். இவர்களைக் குருவிக் காரன், நரித்தொம்பன், இராட்டியன், வாக்கிரி என வும் வழங்குவர். இம்மக்கள் தங்களைத் தம் மொழி யில் 'வாக்கிரி' என்றே குறிப்பிடுவர். இது குசராத்து மாநிலத்திலுள்ள பாக்டி என்ற மக்களுடன் தொடர்பு படுத்தவும், மொழிவாரியாக ஆராயவும் உதவும். வாக்கிரி என்ற சொல்லிற்குக் குருவி பிடிப்பவன் என்பது பொருள். தமிழகத்தில் நரி வேட்டையாடி, அதன் இறைச்சியை உண்பதாலும் நரியின் தோல், நகம், பல் ஆகியவற்றை விற்பதாலும் இவர்கள் நரிக்குறவர் என்ற பெயரைப் பெற்றனர். தமிழகப் பழங்குடி



நரிக்குறவர்



மக்களானகுனறுவாழ் குறவாகளினினறும் பிரித்தறிய 'நரி' எனற அடைமொழி வழககிலுள்ளது

நரிக்குறவ ஆடவாகள அரை நிருவாணமாக உடை உடுத்துகின்றனர். கோவணம், 'காச்சோ' என்னும் இடுப்பில அணியும் பை, தலையில சிகப்பு வேட்டியாலான தலைப்பாகை, கழுத்தில் பலவணண மணிமாலைகள அலலது நரிப்பல கோத்த மாலை முதலியன ஆடையணிகளாகும.சிலர் வேட்டி, சட்டையும் உடுத்துகின்றனா. நரிக்குறததி பாவாடை, மேற சட்டை, தாவணி முதலானவறறை அணிகினறாள, கழுத்தில் பலவணணப பாசி மணி மாலைகளையும, பழைய நாணயஙகளுடன கோத்த மாலைகளையும நரிக்குறவப் பெண்கள அணிகினறனா. இதுதவிர்த்துக காப்புகள, மோதிரஙகள, காதணிகள, மூககுததி எனப் பலவித அணிகளையும் அணிகினறனா. எப்பொழுதும ஒரு பை தோளில் தொஙகும். தகரக குவளையும் உடன தொங்கும். ஊசி, பாசி, மணி, சீப்பு, தலைமயிரில தொஙகும ஊசி எனப் பலவித பொருளகளைபபெணகள செயது விற்று வருகினறார்கள. ஆணகள பொதுவாக வேட்டையாடுவதை வழககமாகக கொணடுளளனர்.

இம்மக்கள் இரு மொழியாளாகள. தமிழருடன் கொச்சைத் தமிழில் உரையாடினாலும் தங்கள் கூட்டத்தினருடன பேசும்போது தாய்மொழியான 'வாக்கிரிபோலி' மொழியில் பேசிககொளவார்கள. இமமொழி இநதோ-ஆரிய மொழிக குடும்பததில, மேறகுப் பிரிவினைச் சோநத குசராததி-இராசசுத தானி(Rajasthan) மொழிகளுடன மிகுநத தொடர்புடையது. முகமதியாகளின படையெடுப்பினபோது மேவார், குசராத்து, இராசசுததான பகுதிகளிலிருநது குடிபெயாநது, ஆங்காஙகே தமககேறற இடங்களில வாழ முறபட்டனா எனலாம். அவவாறு வநத மககள தமிழகத்திலும ஏறககுறையப் பதது நூற்றாணடுகளாக வாழந்து வருகினறனா.

இப்பொழுது தமிழநாட்டின பல மாவட்டஙகளிலும் காணப்படுகினற நரிக்குறவாகளின எணணிககை சரியாகக கிடைககவிலலை.எனினும, இரணடு இலட்சம் மக்கள இருககககூடும் எனறு மதிப்பிடடுளளனர். இவர்கள குசராத்தி, மேவாடோ, தாபி, சேளியோ குலாம் எனற நான்கு பிரிவினாகளாகத் தம்மைக கூறிககொள்வர்.

'குசராத்தி எனனும குழுவினர் தங்களைக் குசராத்திலிருநது வநதவாகள என்ற பொருளில வழங்கினாலும, இப்பிரிவினா தாய்ககடவுள வழிபாட்டில் சக்கூர்வாளோ அல்லது வெள்ளிவாளோ என்று காளியைத் தம் குலதெய்வமாக வணஙகி வருகினறவர்கள. நரிக்குறவர்கள் அனைவருமே இந்து மதத்தினா. குசராததிப் பிரிவினரே எணணிக்கையி

லும் செலவாக்கிலும் உயர்நதவர்களாவா. இரண் டாம பிரிவினைச் சோநத மோவாடோ மேவார் பகுதியிலிருநது வநதிருககககூடும. முதற பிரிவினருக்கு அடுத்த இடததினைப பெறறுள்ள இவாகளும் எணணிககையில் மிகுதியானவாகள 'நொவவுககோடு' என்று வழஙகும் அமமனைத் தொழும் மககள இப் பிரிவினா. மூனறாம பிரிவினர் தாபிவாளோ எனப் படுவா இவாகள 'தூககை' வழிபாடடினா. நான் காம் பிரிவான சேளியோகுலாம், மாரியம்மனை வழி படும மிகச சிறிய கூட்டததினராவாாகள. இவர் களைக குலாம்-குலாம்டி என்றும கூறுவர்.

நரிககுறவா மககளிடையே ஐநது காலவழி அமைப்புணடு அவாகளுடைய முன்னோர்எநதெநதக குடுமபஙகளின் வழித்தோனறலகள எனபதை விளககு கினற முறையில ஒவவொரு நரிககுறவனும் தன மூதாதையர்களின பெயாகளை நினைவில வைத் துளளான. பத்துப் பன்னிரணடு தலைமுறையின ரைக்கூட அவர்களால் கூறமுடிகிறது. இவாகள தந்தைக காலவழி அமைப்புடையவாகள. திருமணங கள் இக காலவழிப் பிரிவின அடிப்படையிலதான நிகழும. ஒரு காலவழியினா அனைவரும் பஙகாளிகள் ஆவா வேறு கால்வழியினரிடமிருநதே பெண எடுப பதும் கொடுபபதும் நிகழ வேணடும்.

நரிக்குறவர்களின் பொருளாதாரம் வேட்டை யாடுதல, உணவு சேகரிததல், பாசி மணிகளை விற் றல் முதலானவறறை அடிப்படையாகக் கொணடது. ஆடவர்கள வேட்டைக்குச் செலகினறனர். முறகாலத் தில இவர்கள மிகுந்த சுதந்திரததுடன் துப்பாக்கி கொணடு வேட்டையாடினா. விலங்குகள் பாதுகாப புச் சட்டததினபடி அரசு இவாகளுக்குத் துப்பாக்கி வழங்குவதைப் பெருமளவு குறைத்துக்கொணடுள்ளது. அனுமதி பெறறுத துப்பாக்கி வைததிருப்பவாகளுக்கு இவாகளிடையே மதிப்பு மிகுதி. இது நலல வரு வாயையும, உணவுக்குப் பறவைகள, நரி, முயல் முத லானவற்றைப் பெறவும் உதவுகிறது. மேலும் நீர் நிலைகளிலும வயல் வரப்புகளிலும உளள அரிக் குருவி, காடை, கௌதாரி, நீர்க்கோழி, கொக்கு முதலியவற்றைப பெறவும துப்பாககி உதவுகிறது. அரசு கொணடுவநதுள்ள நெருககுதலினால் பலர் கணணி வைத்துப பறவைகளைப் பிடிக்கத் தொடங கியுளளனர். நரி பிடிக்கும கலை இவர்களிடையே சிறப்பானது சிறு வெடி மருந்தினைச சுருட்டி அதன மீது ஆட்டுக் கொழுபபினைத் தடவி ஒரிடத்தில வைததுவிட்டு ஒதுக்குப்புறத்தில் ஒதுஙகி நரியைப் போல ஊளையிடுவர் நரி அவவிடததிறகு வரும் போது இறைச்சியின் மோப்பம் கொணடு அதனைத் தினனும அபபோது அதனுள உளள வெடி வெடிததது



என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்புராணம் இன்று கிடைப்பதரிது.

**நல்லூர்ப் புராணம்**[2]: இத்தல புராணம் திரு நல்லூர்த்தலபுராணம் என்றும் வழங்கப்படுகிறது. இதனை இயற்றியவர் திருவாரூரில் தோன்றிய கமலை வைத்தியநாத தேசிகர் ஆவார். அவர்தம் தந்தையார் பெயர் வன்மீகநாத தேசிகர்; காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு ஆகும். நல்லூர் என்பதனைச் சுந்தர நகரம் என்றும் புலவர்கள் குறிப்பிடுவர். இவ்வூர் காவிரியின் தென்கரையிலமைந்துள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்றாகும். இது கும்பகோணத்திற்குத் தென் மேற்கில் காவிரியின் தென் கரையில், வயல்வளம் மிக்கு அமைந்துள்ளது. இத்தலத் திறைவனைத் தேவார மூவர் முதலிகளும் பாடிப் பரவியுள்ளனர். அப்பரடிகள் விரும்பியவாறு இறைவன் தன் திருவடியை அவர் முடி மீது வைத்தருளிய மாட்சியுடையது இவ்வூர். அதனை அப்பரடிகள், 'நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே' என்று தம் தாண்டகப் பதிகமொன்றுள் குறிப்பிட்டுள்ளார். மேலும், அருணகிரி நாதரும் இத்தலத்தைப் பாடிப் பரவியுள்ளார். அமர்நீதி நாயனார் இறைவனைப் பரவி வீடுபேறெய்திய சிறப்புடையது இவ்வூர்.

இப்புராணம், புராண அமைப்புமுறை குன்றாம லும், சைவச் சான்றோர் பற்றிய செய்திகளைப் பழந் தமிழ் இலக்கண மரபு மாறாமலும் அழகிய செய் யுட்களால் ஆக்கப் பெற்றுள்ளது. திருமுறைகள் பல வற்றால் சிறப்பிக்கும் நல்லூர்ச் சிறப்பினை இப்புரா ணம் 'வளப்பமார் நல்லூர் தானே வானகயிலாயம் அவ்வூர்க், குளப்படி நீர்களெல்லாம், குரை புனற் கங்கை, அங்கண் அளப்பறுமணல்களெல்லாம் அற புதலிங்கம்' என்று பேசுகிறது. இப்புராணம் பாயிரச் சருக்கம் முதலாக, அமர்நீதிச் சருக்கம் ஈறாக, 27 சருக்கங்களால் அமைக்கப்பட்டுள்ளது. 'இருவினை வெண்திரை' எனத் தொடங்கும் கடவுள் வாழ்த் தோடு, 1014 செய்யுட்களில் நூல் அமைந்துள்ளது. பாயிரப் பகுதியிலுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல் களில், சைவசமய குரவர் நால்வருக்கும் தனித்தனிப் பாடல்கள் அமைக்கப்பட்டிருப்பதோடு, இத்தலத்தே தோன்றியஅமர்நீதியாருக்கும் தனி வணக்கப் பாடலை ஆசிரியர் அமைத்துள்ளார். இவற்றிற்கு மேலும், இவர்களை உள்ளடக்கி அறுபத்து மூவர் என்னும் சைவ அடியார் தொகைப்பெயரால் அறுபத்து மூவர் வணக்கம் என்றொரு வாழ்த்தும் பாடியுள்ளது குறிப் பிடத்தக்கது. இப்புராணம் 'திருநல்லூர்ப் புராணம்' என்னும் பெயரில் தஞ்சை மன்னர் சரபோசி, சரசு வதி மகால் நூலகத்தாரால், பேரா. ச. பாலசுந்தர னாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 1979-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. அ.மா.ப.

**நல்லெண்ணம்**: இது ஒரு மனிதரின் ஒழுக்கம் நடத்தை, பணபாட்டுக் கூறு ஆகியவை யுள்ளடக்கிய தொன்றாகும். அக்கறையோடு, போதிய பாதுகாப் போடு, உரிய பயிற்சியோடு, திறமையோடு மற்றும் நேர்மையோடு புரியப்படும் எந்தச் செயலும் (Act) நல்லெண்ணத்துடன் புரிந்ததாகச் சட்டம் விளக்கு கிறது. ஒரு செயல் நல்லெண்ணத்துடன் புரிந்து அத னால் மற்றவருக்கு இன்னல் அல்லது நட்டம்விளையு மானாலும் அதற்கு அந்த மனிதர் பொறுப்பாவ தில்லை. இந்த அடிப்படையில்தான் இந்தியத் தண்ட னைச் சட்டத்தில 'நல்லெண்ணம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. மேலும், எந்தெந்தச் சட்டத்தில் 'நல்லெண்ணம்' (Good faith) என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதோ அந்தந்த இடங்களிலெல்லாம் இதே பொருள்படும்.

சாதாரண மக்கள் 'நல்லெண்ணம்' என்று படிக் கும் போது அது ஒரு மனிதரின் மனநிலையை மட் டும் தானே காட்டுகிறது? அது எப்படி அவரின் செயலைக் குறிக்கும் என்ற வினா எழுப்பலாம். ஒரு மனிதர் எந்தச் செயலும் புரியாமல் வெறுமனே வீற்றிருக்கின்றார் என்றால் அவர் நல்லெண்ணத் துடன் தான் அமர்ந்திருக்கின்றார் அல்லது தீயஎண் ணத்துடன் தான் வீற்றிருக்கின்றார் என்று எப்படிக் கூற முடியும்? 'மனிதனின் மனத்தைப் பிசாசு கூட அறிய முடியாது' என்பது முதுமொழி. ஆகவே, ஒரு நபர் நல்லவரா கெட்டவரா என்பதை அவரின் செய லைக் கொண்டுதான் கணிக்க முடியும். எல்லாச் சட்டங்களிலும் 'நல்லெண்ணம்' என்ற சொல் ஒரு வரின் செயலைக் குறிப்பிடவே பயன்படுத்தப்பட்டுள் ளது.

நேர்மையோடு கவனக் குறைவின்றிப் பொறுப் போடு புரியப்படும் செயல் யாவும் 'நல்லெண்ணம்' கொண்டனவாகப் பொருள் காண சட்டம் (General Clauses Act) விளக்குகிறது.

பொதுவாக நல்ல நோக்கத்தோடு புரியப்படும் செயலயாவும் நன்மையளிக்கும். ஆனால் சில வேளை களில் நல்லெண்ணத்தோடு புரியப்படும் செயல் பிற ருக்குக் கேடாகவும் தீங்காகவும் முடிந்து விடுவ துண்டு. அப்படி நேர்ந்து விடும் போது அந்தச் செய லுக்கு அந்த மனிதர் குற்றவாளியாகார் என்று கூறு கிறது.

(எ-டு) 'அ' என்ற காவல்துறை அதிகாரி 'உ' என்ற வீட்டின் முன் ஒரு குதிரை கட்டி வைத்திருப் பதைப் பார்த்தார். அந்தக் குதிரை தன் தந்தையின காணாமல் போன குதிரையைப் போன்று இருக்கவே உடனே அந்தக் காவல் துறை அதிகாரி 'அந்தக் குதிரை எங்கே வாங்கப்பட்டது' என்று, 'உ' வைக்

கேட்டார். 'இ'-யிடம் வாங்கப்பட்டதாக 'உ' அறிவித்தார். 'இ'தான் அந்தக் குதிரையைத் திருடியிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்த காவல் துறை அதிகாரி 'இ'யை வரவழைத்துக் கைது செய்தார். 'இ'யைக் கைது செய்தது நல்லெண்ணத்துடன் செயற்பட்டதாக நீதிமன்றம் ஏற்றுக் கொள்ளவில்லை.ஏன்? காவல்துறை அதிகாரி 'இ'-யைக் கைது செய்வதற்கு முன்பு தீவிர விசாரணை நடத்தாததே காரணம்.

ஒரு நீதிபதி தமக்கு முழு அதிகாரம் இருப்பதாக நினைத்து ஒரு வழக்கை விசாரித்துத் தீர்ப்பு வழங்குகிறார். ஆனால், அந்த வழக்கை விசாரணை செய்ய அவருக்கு அதிகாரமிலலை. இருப்பினும் அவர்தம் செயல் நல்லெண்ணத்தின் பாற்பட்டதாகச் சட்டம் கருதுகிறது.

பொதுவாக நீதிபதிகள் தங்களின் கடமையெனக் கருதிச் செயற்படும் செயல்கள் யாவும் நல்லெண்ணத்தின் பாற்பட்டதாகச சட்டம் விளக்குகிறது. அவ்வாறே நீதிமன்றத்தின் ஆணை மற்றும் கட்டளை நிறைவேற்றுவோரும் நல்லெண்ணத்துடன செயற்பட்டனர் எனவே சட்டம் கருதுகிறது. அதாவது, அந்த ஆணை தவறாக இருப்பினும், அதைச் செயற்படுத்துபவரைப் பொறுத்தது. அந்த ஆணை சட்டத்திற்குட்பட்டது. நீதிபதிக்கு அந்த ஆணை பிறப்பிக்க முழு அதிகாரம்இருக்கிறது' என்று முழு நம்பிக்கையோடு செயற்பட்டால் அவர் செயல் நல்லெண்ணத்தினோடு செயற்பட்டதாகும். அந்தச் செயலுக்கு அந்த ஊழியா பொறுப்பாவதில்லை.

பெரிய விபத்து அலலது நட்டத்தைத் தவிர்க்க அல்லது குறைப்பதற்கு எடுக்கப்படும் நடவடிக்கை யாவும் நல்லெண்ணத்தின பாற்பட்டதாகக் கருதப்படுகிறது.

கடலில் பயணம் செய்யும் கப்பல், அதன் தலைவனின் கவனமின்மையால் அல்லது அசட்டையினால் திடீரென்று மற்றொரு படகுடன் மோதுகின்ற நிலை உருவாகி விட்டால் எதிரே வருகின்ற இரண்டு படகுகளில் எதனுடன் மோதி, நிறுத்துவது என்ற கேள்வி எழும போது ஆட்கள குறைவாகவுள்ள படகுடன் மோதி அதை மூழ்கடிப்பதுவே நல்லெண்ணத்தின் பாற்பட்டது என்று விளக்குகிறது சட்டம். அதாவது அதிக உயிர்ச் சேதத்தைத் தவிர்ப்பதேகடமையாகும்.

அவ்வாறே ஒரு வீடு தீப்பிடித்து எரிகிறது என்று வைத்துக் கொண்டால், அந்தத் தீ மேலும் பரவாமல் இருக்க இடையில் உள்ள வீட்டைப் பிரித்து எறிவது குற்றமாகாது. அந்தச் செயல் நல்லெண்ணத்தின் பாற்பட்டதாகச் சட்டம் கூறுகிறது.

நெருக்கடியான காலம், வறுமையான காலம், புயல், கடுமையான நோய், படையெடுப்பு, கப்பல் உடைப்பு ஆகிய நேரங்களில் பெரிய நட்டத்தைத் தவிர்ப்பதற்காக எடுக்கப்படும் செயல்கள்யாவும் நல்லெணணத்தின் பாற்பட்டதே என்று கூறுகிறது சட்டம்.

பொது மக்களின் நன்மையைக் கருதியும் சொந்த நலன் கருதியும், மற்றும் மனிதரின் முன்னேற்றத்தைக் கருதியும் செய்யப்படும் திறனாய்வுகள்யாவும் நல்லெணணத்தின் பாற்பட்டனவேயாகும்.

பொது ஊழியர் அல்லது அரசாங்க ஊழியரின் ஒழுக்கம், நடத்தை, திறமை ஆகியவற்றைப் பற்றித் திறனாய்வு எழுதுவதும்,பேசுவதும்அவதூறு ஆகாது. அவவாறே பொது நலத்தொண்டு புரிய வருபவர்களின் ஒழுக்கம், நடத்தை, திறமை ஆகியவறறைப் பற்றித் திறனாய்வு செய்து எழுதுவதும் பேசுவதும் அவதூறு ஆகா.

மேலே கூறப்பட்டவையாவும் பொது நலங் கருதியோ உரிய மனிதர் திருந்த வேண்டியோ செயற்படு மாயின் அவையாவும் நல்லெணணத்தின் பாற்பட்டவை எனச் சட்டம் கூறுகிறது. ச.நா.

**நல்லெழுநியார்:** இவர் சங்க இலக்கியப் புலவர். சங்க இலக்கியத்தில் ஒரே பாடல் பாடிய புலவர்களுள் இவரும ஒருவர். பரிபாடலில், திருமாலைப் பரவும் பாடலைப் (13) பாடியுள்ளார். ஒன்றினிற் போறறிய விசும்பு எனவும் இரண்டின் உணரும் வளி எனவும் மூன்றின் உணரும் தீ எனவும் நான்கின் உணரும் நீர் எனவும் ஐந்துடன் முற்றிய நிலன் எனவும் திருமால் ஐம்பூதங்களாய் விளங்குவதைக் காட்டுகிறார். இதன் வாயிலாக, ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும் நாற்றமுமாகத் திருமால் திகழ்வது பெறப்படுகிறது. இவர் சமயத்தில் ஆழ்ந்த ஈடுபாடும் பரந்த புலமையும் கொண்டவர் என்பதை அப்பாடலின் அமைப்பும் பொருளும் உணர்த்துகின்றன. சா.உ.

**நல்வழி:** இந்நூல் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த,சைவ சமயத்தைச் சார்ந்த,அவ்வையாரால் பாடப்பெற்ற நீதி இலக்கியம் ஆகும்; 40 வெண்பாக்களைக் கொண்டது; எளிய சொறகளால அரிய கருத்துகளை விளக்குவது; சமய நீதிகளான ஆன்ம வொழுக்கத்தைக் கூறுவது.

**ஆசிரியர்:** தமிழ் இலக்கிய வரலாற்றில் அவ்வையார் என்ற பெயரில் அறுவர் இருந்துள்ளனர். சங்க கால அவ்வையார் (கி.பி. 2-ஆம் நூற்றாண்டுக்கு முன்), இடைக்கால அவ்வையார் (கி.பி. 10-ஆம் நூற்

றாண்டுக்கு முன்), சோழர் கால அவ்வையார் (கி.பி 12-ஆம் நூற்றாண்டுக்கு முன்) சமயப்புலவர் கால அவ்வையார் (கி.பி. 14-ஆம் நூற்றாண்டுக்கு முன்), பிற்கால அவ்வையார் I (கி.பி. 16-17), பிற்கால அவ்வையார் II (கி.பி. 17-18) என வகைப்படுத்துவர் மு. அருணாசலம். இந்நூலின் ஆசிரியர் கி.பி. 12-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த அவ்வையார் ஆவர். இந்நூலின் இறுதிப் பாடலில் திருவாசகம் பற்றி இவர் குறிப்பிடுவதால் அதற்குப் பிற்பட்ட காலத்தவர் என்ற செய்தி நன்கு தெளிவாகிறது. கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் பாடப்பெற்ற குலோத்துங்க சோழன் கோவை, நல்வழிப் பாடலொன்றைக் குறிப்பிடுகிறது. எனவே, இந்நூலாசிரியர் 12-ஆம் நூற்றாண்டினர் என்ற கருத்துக்கு ஆதரவு கிடைக்கிறது எனபர் அறிஞர்.

ஆத்தி சூடி, கொன்றைவேந்தன், மூதுரை என்பன இவர் பாடிய பிற நூல்கள் ஆகும். இவர் சைவர் என்பதைச் 'சிவாயநம' வென்று சிந்தித்திருப்போர்க்கு அபாயமொரு நாளு மில்லை' (பா. 15) 'நீறில்லா நெற்றி பாழ்' (பா. 24) முதலான தொடர்கள் காட்டுகின்றன.

**நூற்கருத்து:** நூலிலுள்ள 40 பாடல்களைப் புண்ணியபாவம் குறித்து 5 பாடல்கள், வினை குறித்து 3 பாடல்கள், ஊழ் பற்றி 6 பாடல்கள், இறைவனைக் குறித்து 6 பாடல்கள், ஒழுக்கம் பற்றி 5 பாடல்கள், நிலையாமை பற்றி 7 பாடல்கள், ஈகை குறித்து 7 பாடல்கள், பொருள்பற்றி 1 பாடல் எனப் பிரித்துக் காட்டலாம்.

**உவமைச் சிறப்பு:** ஆசிரியர் தேவையான இடங்களில் பொருத்தமான உவமைகளால் தம் கருத்தை வெளிப்படுத்தியுள்ளார். புண்ணியம் அல்லாத காலத்தில் செய்யும் காரியம் குருடன மாங்காயை வீழ்த்த வீசிய கோல் போலப் பயனற்றுப் போகும் (பா.4) என்கிறார். பரத்தையரைச் சேர்பவன் இம்மை மறுமை இன்பங்களை இழக்கிறான் என்பதை 'அம்மி துணையாக ஆறிழிந்த வாறொக்கும்' (பா.20) என்பதால் விளக்குகிறார். செல்வம் வளர்வதும் அழிவதுமாகிய தன்மையுடையது என்பதை 'ஆற்று வெள்ளத்தால் உருவாகும் மேடும் பள்ளமும் போல' (பா.32) எனக் குறிப்பிடுகிறார்.

**முதன்மை நோக்கம்:** அறன் வலியுறுத்தலே இவரது முதன்மை நோக்கமாகத் தெரிகிறது. தருமஞ் செய்ய வேண்டும் என மீண்டும் மீண்டும் (பா. 3, 9, 10, 18, 22, 29) வற்புறுத்துகிறார். குறிப்பாகப் பசிப்பிணி தீர்க்கவேண்டும் என்பதை 'இட்டு உண்டிரும்' (10) 'சோறிடும் தண்ணீரும் வாரும்' (32) என வழி காட்டுகிறார். மானம், குலம், கல்வி, ஈகை, அறிவு, தானம், தவம், உயர்வு, முயற்சி, காமம் ஆகிய பத்தும் பசிவந்திட அழியும் (26) எனப் பசிப்பிணியின் கொடுமையை விளக்குகிறார். எவ்வளவு வறுமை நிலை அடைந்தாலும் கொடுக்கவேண்டும் என்பதை, ஆறு வெள்ளம் வற்றிய வேனிற் காலத்திலும் ஊற்று நீரால் உலகுக்குப் பயன் கொடுக்கும். அதுபோலநல்ல குடியில் பிறந்தவர்கள் வறுமையுற்றாலும் இரப்பவர்களுக்கு இல்லை என்னாது கொடுப்பார்கள் என்பதால் விளக்குகிறார்(9). பாடுபட்டுத் தேடிய பணத்தைப் பலருக்கும் கொடுத்துப் பயன் நிறைக்கவேண்டும் என்கிறார் (22).

**பிற செய்திகள்:** உழவு தொழிலே ஒப்பற்ற தொழில் என்பதை 'உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர் பழுதுண்டு வேறோர் பணிக்கு' (12) என விளக்குவது போற்றத் தக்கதாகும். 'இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்' (பா.2) எனச் சாதி இரண்டே என்பது இவரது சமுதாயப் பார்வையைக் காட்டுகிறது எனலாம். வஞ்சனையாளர்களும், பொய்ச் சாட்சி சொல்பவர்களும், கூடா ஒழுக்கம் உடையவர்களும், பொருளைப் பதுக்கிவைக்கும் உலோபிகளும் இவர்காலச் சமுதாயத்தில் வாழ்ந்தனர் எனபதைப் பாடல்களால் அறிய முடிகிறது. அத்தகையோரை, விளைவுகளை விவரித்து அச்சுறுத்துகிறார் ஆசிரியர் (20, 21, 23, 36). இடைக்கால நீதி நூல்களுள் நடையாலும் கருத்தாலும் பெருமைக்குரிய நூல் நல்வழி ஆகும். பழ.மு.

**நல்வழுதியார்:** இவர் சங்ககாலப் புலவர். இவர் குறித்து வரலாற்றுக் குறிப்பு எதுவும் கிடைக்கவில்லை. வழுதி என்ற பெயரை நோக்கி, இவர் பாண்டிய மரபைச் சார்ந்தவர் எனக் கொள்ளலாம். பரிபாடலில் வையை குறித்துப் பாடிய புலவருள இவரும் ஒருவர். இவரது பாடல் அந்நூலில் 12-ஆம் பாடலாக இடம்பெற்றுள்ளது. மதுரை மக்கள் வையையில் புதுப்புனல் வரவுகண்டு மகிழ்ந்த நிலையை அப்பாடல் விளக்குகிறது. ஒரு பெருங்கடல் பொங்குவதைப் போல் விளங்கும் வையையின் இரு மருங்கும் மக்கள் கூட்டம் பெருகியது; வையை தன்னைக் காணவந்த மக்களின் ஆசை வெள்ளத்தையும் கலந்து கொண்டு பெருகியது போலப் பெருகிற்று என்கிறார் நல்வழுதியார். பாண்டிய நாட்டு மக்கள் மிகுந்த அழகும் இன்பமும் பற்பல நலனும் பெற வையை காரணமாக இருத்தலால் அதனுடைய புகழ் இவ்வுலகினும் பெரிது எனும் கருத்தில் 'நின் புகழ் கொள்ளாது இம்மலர்தலை உலகே' (பரி:12:102) என்று அந்த ஆற்றினைப் பாராட்டி மகிழ்கின்றனர். நந்நாகனார் இசையமைத்த அப்பாடலுக்குரிய பண் பாலை யாழ் ஆகும். சா.உ.

**நல் விளக்கனார்:** இவர் சங்கப்புலவர்களுள் ஒருவர். இவரை நல்விளக்கு என்னும் ஊரைச் சார்ந்தவர் என்று நற்றிணைப் பதிப்பாசிரியர் குறிப்பிடுகிறார். நப்பூதனார், நல்லந்துவனார், நப்பாலத்தனார், நற்சேந்தனார், நற்றமனார் என்ற பெயர்களில் காணப்படும் நல் எனும் அடைமொழி, இப்பெயரிலும் அமைவதாகக் கருதின் விளக்கனார் என்பது ஊரைக் குறித்ததா அல்லது விளக்கொளியைக் குறித்ததா என்று சிந்திக்க வேண்டும். நற்றிணையில் இவர் பாடல் ஒன்று காணப்படுகிறது. உள்ளுறை இறைச்சி அமைய இனிய கவிதை ஒன்றைத் தந்துள ளார். நற்றிணை 85 – ஆம் பாடல் இவர் பெயரில் உள்ளது. மழைக்கண நீர் சொரிய, பணைத் தோள் நெகிழ, மூதூர் அலர்தூற்ற வாட்டமுறறாள் தலைவி. எனினும் புலிக்கு அஞ்சி, தன் கன்றைக் காத்து மெதுவாக நினறு நின்று செல்லும் பிடியானை இயங்கும் காட்டின வழியே தலைவன் வாராது நீங்குக என எண்ணுகிறாள். மலைச சாரலில் கானவன் எய்த மானின் இறைச்சியைக்கொடிச்சியானவள சிறுகுடிசையைச் சார்ந்த அனைவருக்கும் பகிர்ந்தளிக்கும் ஓங்குமலை நாடன் நின்னை விரும்பி வருகின்றனன எனனும் பொருள் சங்க இலக்கியச்சாயலை நன்கு புலப்படுத்தும். தே.ஆ.

**நல்வெள்ளியார்:** இவர் சஙககாலப் பெண்பாற் புலவருள ஒருவர் ஆவர். இவர் மதுரை நல்வெளளியார் என்றும் சொல்லப்பெறுவர். நல்லொளியார் என்றும் இப்பெயர் சில ஏடுகளில் பாட வேறு பாட்டுடன் காணப்பெறுகிறது. நலவெளளியாரினும் மதுரை நலவெள்ளியார் வேறு என வையாபுரிப் பிளளை பதிப்பும மர்ரே பதிப்பும் கூறும். ஆனால், உ.வே.சா அவாகளும் பினனத்தூர் நாராயணசாமி ஐயரும், இருபெயரும் ஒருவரையே குறிக்கும் எனக் கருதுகின்றனர் இவர் பாடியனவாக நற்றிணையில் இரணடும் (7,47) குறுநதொகையில் ஒனறும் (365) அக நானூற்றில ஒன்றும் (32) ஆக நானகு உள்ளன. 'வெளளியார் என்னும் சுக்கிரனுககுரிய பெயர் இவருக்கு ஆயிற்றுப்போலும் என உ.வே.சா. குறுந்தொகைப் பாடினோா வரலாற்றில குறித்துள்ளாா. இவ்வியைபுடன் வெள்ளி வீதியா என்னும் பெயரையும் நோக்கலாம். நெடுவரையினின்றும் ஓடிவரும் அருவியொலிககு முரசின் இமிழிசையை இப்புலவர் உவமை காட்டுவர் (குறு.365); வெண்ணெல அருந்திய வரிநுதல் யானை தண்ணருஞ சிலம்பில் துஞ்சும் காட்சியைப் புனைநதுள்ளார் (நற்.7). தலைவன் சிறைப்புறமாகத் தோழி தலைவியை நோக்கி அவன் விரைந்து வரைந்துகொளள வேணடி, 'அன்னை யெடுத்த வெறியாட்டு நின் பசலையைத் தீர்த்திலதே; இதனைக் கானக நாடருக்குச் சொலவோமா' என்று களிற்றைப் புலி கொன்றதால் பிடி வருத்தத்தோடு தன்கன்றைத் தழுவிக்கொண்டு அரும் புண் உறுநரின் வருந்தி வைகுதலை உள்ளுறை உவமையாக்கிக் கூறும் பகுதி நயமாக உள்ளது. (நற்.47).

குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது என்னும் குறிஞ்சித் திணையில் இவர் பாடிய பாடல் (அகம்.32) மிகச் சிறந்த ஒனறாகும். புரவலன் போலும் தோற்றத்துடன, இரவன் மாக்கள் போலப் பணிமொழி கூறித் தலைவன் தலைவியைச் சிறுபுறம் தைவர, அவள் மழையை ஏற்ற மண்போல் உள்ளம் நெகிழ்ந்து, மான்பிணைபோல ஒதுங்கி நின்றதையும், அவள் கூறிய உள்ளத்தொடு படாத வன்சொல்கேட்டு யாதும் மறுமொழி கூறாது தலைவன் இல்லம் திரும்பியதையும் இப்புலவர் இயல்பாகப் புனைந்துள்ளார். 'நம்பணைத்தோள் அவனுக்குரிய தாதலை அறியானாய் வருந்தி, இரந்து பின் நிற்றற்கு முயலும் அத்தலைவனை எள்ளி நகையாடுவோம் வா' எனத் தோழி தலைவியிடம் கூறுவதாக இப்பாடலை முடிததிருப்பது சிறப்பினது. இரா.சா.

**நல்வேட்டனார்** சஙககாலப்புலவர்களுள ஒருவர். இப் பெயரில் இரு பாடல்கள் (நற்.53.292) நற்றிணையில் இடம் பெற்றுளளன. அப் பாடலகள இரண்டும் குறிஞ்சித் திணையில் தோழி கூற்றாக அமைந்துள்ளன. அவற்றுள் ஒன்று (53), தலைமகன வரைவு நீட்டித்த போது தோழி சிறைப்புறமாகக் கூறியதாகவும், மற்றொன்று (292), இரவுக்குறி மறுக்கும் பாங்கில், தலைவி கூற்றைத் தோழி கொண்டு கூறியதாகவும் உளளன. மேலும், நற்றிணையில மிளைகிழான் நல்வேட்டனார் எனனும்பெயரில் இரு பாடல்கள் (நற். 210,349) அமைநதுளளன. நறறிணைப் பதிப்பாசிரியர், நல்வேட்டனார், மிளைகிழான் நல்வேட்டனார் என்னுமஇருபெயர்களையும் ஒருவர் பெயராகவே கொணடு ஆசிரியர் வரலாறு குறிப்பிட்டுள்ளார். மேலுமவர், மிளைகிழான் நல்வேட்டன் என்னும் பெயரில குறுந்தொகையில் அமைந்துள்ள ஒருபாடலையும் (குறு 341), இவர் பாடலாகவே கொண்டு, சங்க நூல்களுள் நல்வேட்டனாா 5 பாடல்கள் பாடியுளளார் என்று தெரிவித்துள்ளார். மிளை எனபது புலவரின் ஊர்ப் பெயர் என்பது அவர் கருததாகும். 'மலைப் பக்கத்தில் பொழிந்த மழையால், சருகுகளையும் பூங்கொத்துகளையும் அடித்துக் கொண்டு வரும் ஆற்றின 'விருந்தில் தீநீர் மருந்து மாகும்'. அதனை உண்டு குடைந்து ஆடினால் தலைவியுற்ற நடுக்கம் தீரும்' என்று அன்னை கூறியதாகத் தோழி தலைவியிடம் கூறி, அதனால் சிறைப்புறத் திருந்த தலைவனை

வரைவு கடாவுவது சிறப்பாக உளளது. இரவுக்குறி மறுத்த பாடலில், தோழி, தலைவன வரும் வழி, முதலை வாழும் அச்சமுடைதது எனனும் அருமை யினை, அவ்வழி 'களிறுபொரக் கரைந்த கயவாய்க் குணடுகரை, ஒளிறு வான பளிங்கு கொடு செம்பொன் மின்னும், கருங்கல் கானயாற்று, அருஞ்சுழி வழங் கும் கராம் உடையது' எனக் காட்டியிருப்பது (292) நயமிக்குள்ளது. காணக: மிளைகிழான் நல்வேட்ட னார். அ.மா.ப.

*நல அரசு*: பெரும் எண்ணிக்கையிலான மக் களைக் கொண்டும், குறிப்பிட்ட நிலப்பகுதியில் அமைநதும் முறைப்பட்ட ஆட்சிககுழுவினைப் பெற் றும் காணப்படுவது அரசு (State) எனப்படும். நாட்டு மக்களிடையே ஒழுஙகு, அமைதி, கட்டுப்பாடு ஆகிய வற்றை நிலைநாட்டுதல் இதனுடைய முக்கிய பணி யாகும். அரசின்றி ஒரு நாடோ அதனுள்ளடங்கிய சமூகமோ முன்னேறவியலாது. அரசாங்கமே இல்லாத சமுதாயங்களே இல்லையெனலாம். இதில பொது நலனுக்கு அடிப்படைகளான சமூக நீதி, பொருளா தார நீதி, அரசியல் நீதி ஆகியவற்றைப் பாதுகாக்க முற்படும குடியாட்சி அரசு நல அரசு (welfare State) எனப்படும்.

ஓர் உண்மையான குடியாட்சியில சமூக நலனும் தனிப்பட்டோர் தம் நலன்களும் இணைந்து பேணப் படுகின்றன. ஒரு சாரரருடைய ஆதிக்கம, சுரணடல் ஆகியவையின்றி எல்லோருரும சமம் என்ற நோக் கத்தைச் சமூக நீதி செயற்படுத்துகிறது. மக்கள் அனைவருக்கும் உணவு, உடை, குடியிருப்பு, கல்வி முதலிய வசதிகள் கிடைக்கும் நிலை பொருளாதார நீதியாகும். மக்கள் யாவரும் வாக்குரிமை பெறறு அரசியல் அதிகாரத்தில் பங்குகொள்வது அரசியல நீதிக்கு வழிவகுக்கும். இமமூன்று நீதிகளையும் நல அரசு நடைமுறையில செயற்படுத்த முற்படுகிறது.

இத்தகைய அரசு, சமூக வாழ்வில் பல துறைகளில் பொறுப்பேற்க நேருவதால் பரவலான அதிகாரத் தைப் பெற்றிருககும். இதனால் தனிப்பட்டோர்தம் சுதந்திரமான நல்வாட்சிக்குத தடை ஏழாத வகை யில அவர்களுடைய அடிப்படை உரிமைகள் (Fundamental Rights) மதிக்கப்படுகின்றன. அதன விளை வாகப் பொது நலனும் தனிப்பட்டோாதம் நலன் களும் இணைந்து இயங்குகின்றன. பேச்சுரிமை, கருத்துக்களை வெளியிடும் உரிமை, சமய, வழிபாட்டு உரிமை, உழைத்துப் பொருளீட்டும் உரிமை, அதனை அனுபவிக்கும் உரிமை, தனனுடைய மொழியையும், பணபாட்டையும் காததுக்கொள்ளும் உரிமை, சட்டத் தின் அடிப்படையில் சுதந்திரத்துடன்இயங்கும் உரிமை போனறவை இத்தகைய அடிப்படை உரிமைகளாகும். இவை எக்காலத்திலும் எந் நாட்டவருக்கும் பொருந் துவனவாகும். இவ வுரிமைகளைப் பாதுகாக்க நாட் டின் நீதி மன்றஙகள் உதவுகின்றன.

நல அரசு, நாட்டிற்கான பலவேறு சமூகப் பொறுப்புகளைத் தானே நிறைவேற்ற முற்படுகிறது. முக்கிய தொழிற்றுறைகளை ஏறறு நடத்துகிறது. தனியார தொழில துறைகளின்மீது சமூகநலனுக்காகச சில கட்டுப்பாடுகளை விதிககிறது; நாட்டின் வளர்சசி; ஆக்கப் பூர்வமான திட்டங்களை உருவாக்கிச் செயற் படுத்த முறபடுகிறது. கலவி அமைப்பிலும் இது பெரும் பஙகு கொண்டு கல்வியின முன்னேற்றத்திற்கு ஆவன பலவும் செய்கிறது. மேலும், இது சமூகத்தில் நலிவுற்ற பிரிவினரின் முன்னேற்றத்தில மிகுதியான அக்கறைகாணபிக்கிறது. எடுத்துக கட்டாக இநதியா விலதாழத்தப்பட்ட பழங்குடி மககளின முன்னேற்றத் திறகு இந்திய நல அரசு தனிச்சலுகைகள பல அளிதது வருகிறது. பூ.த.

**நலங்கிள்ளி**: இவன கடைச்சஙக காலத்தில் சோழநாட்டை ஆண்ட சிறந்த அரசர்களுள் ஒரு வன. மாவளத்தான என்னும் அரசனின் தமையன. இவனைப் பற்றி உறையூர் முதுகணணன சாத்த னார், கோவூரகிழார், ஆலத்தூர்கிழார் என்னும் புலவர் மூவர் பாடியுளளனர். இவனுக்குத் தேர்வண் கிள்ளி, சேட்சென்னி, புட்பகை எனனும் வேறு பெயர்களும் உளளன. உறையூர் முதுகண்ணன் சாத தனார் புறம் 27, 28, 29-ஆம் பாடல்களில் நலங் கிள்ளிக்குக கூறும் அறிவுரைகள மிகச் சிறந்தன. வருந்தி வநதோர்க்கு அருள்வாயாக என்பதைப் பல வாறு எடுத்துக்கூறி அவனைத் திருத்தினார். அவன் பொதுமகளிரை விரும்பாதவன. 'இரவலர்க்கு வரை யாது கொடுக்கும் வள்ளல. கோவூர்கிழார் நலங் கிள்ளியைப் பற்றிப் பாடிய பாடல்களால் பல உண்மைகள் அறியமுடிகினறன. பாண்டிய நாட்டிலி ருந்த ஏழு அரண்களை அழித்து வெற்றிகொண்ட செய்தியைத் 'தென்னம்பொருப்பன நல் நாட்டுள்ளும் ஏழ்எயிற்கதவம் எறிந்துகைக் கொணடு' என்று புறம் 33-ஆம் பாடல் தெரிவிக்கிறது. நலஙகிள்ளியின் வீரச் சிறப்பைக் கோவூர்கிழார் புறம். 31, 382-ஆம பாடல் களிலும் கொடைச்சிறப்பைப் புறம். 32, 68, 400-ஆம் பாடல்களிலும் மிகச்சிறப்பாக விளக்கிக் கூறுகிறார். இவன் தன தாயாதியான நெடுங்கிளளி எனபவனி டம் பகைமை கொண்டான். அதனால் இருவருக்கும் போர் மூணடது. நெடுங்கிள்ளி நலங்கிளளியை எதிர்த்துப் போரிட இயலாது ஆவூரில் கோட்டை மதிலை அடைத்துக்கொண்டு உள்ளிருந்தான். நலங் கிள்ளி ஆவூர்க் கோட்டையை முற்றுகையிட்டான். நீண்டகாலமாகவே கோவூர்கிழார் மதிலுக்குள உள்ள வர்கள் பசியால் துன்புறுவதைக் கண்டு வருந்தி நெடுங்

கிள்ளிக்கு அறவுரை கூறினார். அவன் அம்மதிலைத் திறந்துவிட்டுத்தன் மற்றொரு தலைநகரான உறையூர்க்குச் சென்று மதிலைத் தாழிட்டுக் கொண்டு உள்ளிருந்தான். நலங்கிள்ளி அங்கும் சென்று முற்றுகையிட்டான். அப்போது கோவூர்கிழார் சினம் நலங்கிள்ளி மேற்சென்றது. உடனே கோவூர்கிழார் நலங்கிள்ளியிடம் சென்று 'உன்னை எதிர்ப்பவன் பாண்டியனோ சேரனோ அல்லன். அவனும் சோழனே. ஒருவர் தோற்பினும் தோற்பது உம் குடியே. இருவர் வேறல் இயற்கையும் அன்றே. உன்செயல் உங்கள் குடும்பப் பெருமைக்கு ஏற்றதன்று. அதே சமயத்தில் உங்கள் பகைவர்க்கு இச்செயல் மிக்க மகிழ்ச்சியைத் தரும்' என்று கூறி அறிவுறுத்தினார். நலங்கிள்ளியும் முற்றுகையைக் கைவிட்டுச் சென்றான். இச்செய்தியைப் புறம். 45-ஆம் பாட்டு விளக்குகிறது. இவ்வாறு கோவூர்கிழார் நெடுங்கிள்ளிக்கு அறிவுரை கூறி ஆவூர்க் கோட்டைக் கதவினைத் திறந்துவிடச் செய்தார். தன் மற்றொரு தலைநகரான உறையூருக்குச் சென்று அங்குக்கோட்டையை அடைத்துக்கொண்டு உள்ளிருந்தான. நலங்கிள்ளி அங்கும் நெடுங்கிள்ளியைப் பின்தொடர்ந்து சென்று கோட்டையை முற்றுகை இட்டான். புலவர் கோவூர்கிழார் இதனைப் பார்த்து மிகவும் வருந்தினார். இனி நெடுங்கிள்ளிக்கு அறிவுரை கூறிப் பலனில்லை. நலங்கிள்ளிக்குத்தான் கூறவேண்டும் என்று நினைத்தவராய்த் தாயாதிப்போர் வேண்டாம என்பதை மிதநயமாக எடுத்துக்கூறினார். அதுகேட்ட நலங்கிள்ளியும் புலவர் அறிவுரைப்படி உறையூர் முற்றுகையைக் கைவிட்டான். இருப்பினும் காரியாறு என்னுமிடத்தில் கிள்ளிவளவன் என்னும் அரசனோடு நேர்ந்த போரில் நெடுங்கிள்ளி மாண்டான். ஆதலின் அவனுக்குக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி என்ற பெயரேற்பட்டது. இரா.ச.

**நலப்பாதுகாப்புத் திட்டங்கள்:** நாடுகள் யாவும் சில செயல்முறைகளைக் கையாண்டு தனிப்பட்டவரின் குடும்ப, சமுதாயப் பொருளாதார நலப் பாதுகாப்பை முன்னேற்றுகின்றன. இச் செயல்முறைகளைத் தொகுத்து நலப்பாதுகாப்புத் திட்டங்கள (Welfare and Security Programmes) அல்லது சமுதாயப்பாதுகாப்பு (Social Security) என்றுகுறிப்பிடுகின்றனா. நலப் பாதுகாப்புத் திட்டங்கள் என்பது உலகில் முதன்முதலாக அமெரிக்க ஐக்கிய நாடுகளில கையாளப்பட்டுப் பின்னர் 1935-இல் சமுதாயப் பாதுகாப்புச் சட்டம் இயற்றப்பட்டபோது பொது வழக்கில் வந்தது. இப்போது இது உலகம் முழுவதும் வெகு விரைவில் பரந்து கிடக்கின்ற ஒன்றாகத் திகழ்கிறது. சில நாடுகளில் நலப் பாதுகாப்பு எனப்படுவது, அரசு ஏற்று நடத்துகின்ற சுகாதார நலப்பணிகளைக் குறிப்பதாக அமைகிறது.

உடல், மனம், ஒழுக்கம் போன்றவற்றை ஈடுபடுத்தும்வண்ணம் சமுதாய நலம் செயற்படுகிறது. சமுதாய நலக்கொள்கை மனிதனின் தனிப்பட்ட, குடும்ப, சமுதாயத்தைக் குறிப்பதாகும். இக்கொள்கை ஒன்றுக்கொன்று இணைந்து முத்தரப்பாகக் காணப்படுகிறது. சமுதாய நலக் கொள்கை காலத்தையும் இடத்தையும் சார்ந்து அமைகிறது. இது வளைந்து கொடுக்கக்கூடிய அமைப்பாதலால், காலத்துக்குக் காலம், இடத்துக்கு இடம், நாட்டுக்கு நாடு. மக்களின், கல்வி, சமுதாயப் பண்பாடுகள், பொருளாதார வளர்ச்சி ஆகியவற்றைப் பொறுத்து அமைந்துள்ளது. குடும்பம், தனி மனிதன் போன்றோருக்குத் தேவைப்படும் மருத்துவ, வீட்டு, பொருளாதார, பொதுச் சுகாதார வசதிகளை அரசுத் துறையும் தனியார் நிறுவனங்களும் மேற்கொண்டு வருகின்றன. மேலும் இச்சமுதாய நலக் கொள்கை, சட்டம், வசதிகள் போன்றவற்றின் மூலம் சமுதாயம் கொள்ளையிடப்படுவதைத் தவிர்க்கவும் பாதுகாக்கவும் முற்படுகிறது. கல்வி வசதிகளகூடப் பெரும்பாலும் சமுதாய நலனைச்சார்ந்தே செயலாற்றுகின்றன.

உலக நாடுகள் அனைத்துமே தொழிற்புரட்சியை ஏற்றுக் கொண்டு வேளாண்மையிலிருந்து தொழிலுக்குப் பொருளாதாரத்தை மாற்றியபொழுது சமுதாய நலப் பணிகளை ஏற்றுக்கொண்டன. தொழில்மயமாவதற்கு முனபிருநத அமைப்பில் குடும்பம் இளைஞர்களையும் முதியோரையும்பாதுகாத்து, ஊனமுறறவர்களுக்குப் புகலிடம் அளித்துச் சமுதாயச் சீர்கேடுகளை ஒழுங்குபடுத்தியது. புதிய பொருளாதார அமைப்பில் அவ்வகையான உத்தரவாதம் அமைவதற்கு வாய்ப்பிலலை. அதற்கு மூலகாரணம், மக்கள் செறிந்துளள நகரமைப்புகளும், மக்களின் இடப்பெயர்ச்சியுமாகும். அதனைச் சீர்செய்யச் சமுதாயம் சிலவகையான நலப் பணிகளை மேற்கொள்வது தேவையாயிற்று. அரசும் தனியார் துறை நிறுவனங்களும இவற்றை ஏற்று நடத்துகினறன.

மேலை நாடுகளில் சமுதாய நலப்பணிகளை இரவலர் சட்டம் (Poverty Law), தனியார் தரும நிறுவனங்கள, மதம் சார்ந்த அமைப்புகள போன்றவை செய்து வந்தன. கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டினமுற்பகுதியில் பெரும்பாலான சமுதாய நலப் பணிகள அரசின் பங்கு இல்லாத காரணத்தினால் எதிர் பார்த்தமுடிவுகளைக் கொண்டுவரவில்லை. அவற்றுள்முக்கியமாக வறுமை, பிணி, தொற்று நோய்கள், பிச்சையெடுத்தல், திருட்டு, இரவலர்கள, கலகங்கள் போன்றவை கவனம் செலுத்தப்பட்டன.

இங்கிலாந்தில் கி.பி. 1834-இல் நிறைவேற்றிய இரவலர் சட்டச் சீர்திருத்தம் (Poor Law Reform)

சட்ட அடிப்படையில் வறுமையின் தன்மை பற்றியும் அதனை ஒழிப்பதற்கு அரசு ஏற்கும் பங்கு பற்றியும் ஆய்வுசெய்தது. அதன்படி இரவலர் உதவித்தொகை உடல் நலம் வாய்ந்த ஏழைகளுக்கு அவர்கள் இல்லத்தில் கொடுப்பது நிறுத்தி வைக்கப்பட்டது. உதவித் தொகை வாங்குவோர் தொழிற்சாலைகளில் சேர்ந்து வேலை செய்யவேண்டும் என்று கூறப்பட்டது. 60வயதிற்கு மேற்பட்டவர்களுக்கும்,நோய்வாய்ப்பட்டவர்களுக்குமே புற உதவி (Outdoor Relief) கிடைக்க வழி வகுக்கப்பட்டது. ஆனால், இச்சட்டச் செயற்பாட்டில் ஏற்றுக்கொண்ட வழிமுறைகளின்படி செலவு குறைந்ததேயொழிய வறுமை நிலை குறையவில்லை

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கி.பி. 1824-ஆம் ஆண்டில் வெளிவந்த நியூயார்க்கு மாகாண ஏட்சு அறிக்கையும் (Yates Report), கி.பி. 1821-இல் மசாசுசெட்சு (Massachusetts) மாகாணத்தில் வெளிவந்த குவின்சி அறிக்கையும் (Quincy Report) இணைந்து இரவலர்களைப் பொது இரவலர் விடுதிகளில் வைத்துப் பாதுகாக்கவேண்டும் என்று கூறின.மேலும் இரவலர்களுக்குக் கொடுக்கப்பட்ட உதவித் தொகை, செலவு மிகுந்ததும், கெடுதல் நிறைந்ததுமாக உள்ளதென்றும், குடும்பங்களிலேயே கொண்டுபோய்த் தரும் உதவித்தொகையினால் மக்களின் சுறுசுறுப்புக் கெடுகின்றதென்றும் குவின்சி அறிக்கை குறிப்பிட்டது.

ஐரோப்பா முழுவதும் 20-ஆம் நூற்றாண்டில் முதலாம் உலகப்போருக்குப் பின் ஏதாவதொரு சுகாதாரக் காப்பீட்டு முறை (Social Health Insurance) செயலில் இருந்து வந்தது.ஐரோப்பாவிலுள்ள 27 நாடுகளுள் 23 நாடுகள், முதியோர் காப்பீட்டு முறை(Old Age Insurance) அல்லது முதியோர் உதவித்தொகை (Old Age Pension) அல்லது இரண்டையுமே செயற்படுத்தின.தேசிய வேலையற்றோர் காப்பீட்டை கி.பி. 1935-ஆம் ஆண்டில் 19 ஐரோப்பிய நாடுகள் கட்டாயமாகவோ தானியங்கும் முறையிலோ பின்பற்றின.

இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட மேம்பட்ட மருத்துவ வசதி, அறிவாற்றல் இரண்டும் சேர்ந்து குழந்தைகளின் இறப்பைக் குறைத்துச் சுகாதாரத்தை மேம்படுத்தி ஆயுள் காலத்தை நீட்டித்தன. இம்மாறுதல், நகர்மயமாதல் (Urbanisation), தொழில்மயமாகுதல் போன்ற வற்றிற்கு இருந்த முட்டுக்கட்டைகளை நீக்கியது. நகர, கிராமப்புறத திட்டங்களைப் பற்றிய புதிய நிருவாகப் பணி, வீட்டு வசதிக்குரிய தரம், ஓய்வு நேரங்களைப் பயன்படுத்தத் தேவையான வசதிகள் போன்றவை, தொழிலாளர் சமுதாயத்தின் சுகாதார, சமுதாய நலத்தை மாற்றுவதாக அமைந்தன.

மேலும் 1930-ஆம் ஆண்டில் ஏற்பட்ட உலகப் பெருமந்தம், இரண்டாம் உலகப்போர் ஆகியவற்றைத் தொடர்ந்து 1941-ஆம் ஆண்டில் அறிவிப்புச் செய்யப்பட்ட அட்லாண்டிக்குச் சாசனம், சனநாயக நாடுகளிடையே வறுமை ஒழிப்பு, இன்றியமையாத் தேவையை நிறைவு செய்தல் போன்றவற்றை நிலைநாட்டியது.

ஆங்கிலேய அரசாங்கம் 1942-இல் வெளியிட்ட பெவரிட்சு அறிக்கை (Beveridge Report) குறைந்த அளவு ஊதியம், முழு நிறை வேலை, வாய்ப்புப் போன்ற அரசுக் கொள்கையை அறிவித்தது இந்த அறிக்கை உலக நாடுகள் அனைத்தையுமே ஈர்ப்பதாக இருந்தது. அதைத் தொடர்ந்து பல மேற்கு நாடுகள மிகுதியான குடும்பச் சிறப்பூதியத் திட்டங்களை ஏற்றுக்கொண்டன. அவற்றுள் ஒன்று, பெற்றோரின் வருமானத்தைக் கணக்கில் கொள்ளாமல் குறிப்பிட்ட வயது வநத குழந்தைகளுக்குச் சிறப்பூதியம் வழஙகுவதாகும்.

பினனர் 1964-இல் ஐரோப்பியக் குழு (Council of Europe), சமுதாயப் பாதுகாப்புக் கொள்கைகளை முன்னேற்றித் தொழிலாளர் எளிதில இடப்பெயர்ச்சி செய்யத்தக்கதாக ஒரு சட்டம் இயற்றியது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பொது, தனியார் துறைகளில் பலதரப்பட்ட சமுதாயக் காப்பீட்டு முறைகள், மக்களை வறுமைப்பிடியிலிருந்து தப்புவிக்கக் கையாளப்பட்டன. முதியோருக்குக் குறைந்த அளவு மருத்துவ வசதிகள போன்றவற்றை வறுமை ஒழிப்புப் போரில் (War on Poverty) அரசு எல்லோருக்கும் கொடுத்தது. சமுதாய நலச் சீர்திருத்தங்கள் 1962-இல் சமுதாயப் பாதுகாப்புச் சட்டத்துடன் இணைக்கப்பட்டன. அரசு மாகாணங்களுக்குத் தேவையான நிதியைப் பொது உதவித் தொகை அளிக்கும் சேவைகளுக்கு ஒதுககியது. அரசு ஏற்று நடத்திய பொது மருத்துவ வசதி மிகவும் மெதுவாக நடைபெற்றதால் 1965-ஆம் ஆணடில மருத்துவ வசதி (Medicare) விரிவாக்கப்பட்டது. அதன் மூலம் 65 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு மருத்துமனையிலும் வீடுகளிலும் ஏற்படும் மருத்துவச் செலவின் ஒரு பகுதியை அரசே ஏற்றுக்கொண்டது.

தவிர அமெரிக்காவில் செஞ்சிலுவைச் சங்கம், தேசிய பயணிகள் உதவிச் சங்கம் போன்ற தனியார் அமைப்புகள், தங்கள் கிளைகளை நாட்டின் பல பாகங்களில் நிறுவிச் சமுதாய நலப்பணிகளைத் தொடர்ந்து நடத்தி வருகின்றன.

உலகச் சுகாதார அமைப்பு(World Health Organisation-W.H.O.) நோய்கள், தொற்று நோய்கள்

போன்றவற்றை உலகம் முழுவதும ஒழிக்க உதவுகிறது. ஐக்கிய நாடுகளின் பொருளாதார, சமுதாய, பண்பாட்டு அமைப்பு (UNESCO) உலக அரசுகளுடன இணைந்து கல்வியறிவின்மையைப் போக்கச் செயலாற்றுகிறது. ஐக்கிய நாடுகளின உணவு, வேளாண்மை அமைப்பு (FAO) உலகில நிலையாகத் காணப்படும உணவுப பறறாக்குறையைச சமாளிக்க முயற்சிகள் எடுத்து வருகிறது. ஐககிய நாடுகளின் அகதிகள உயர் ஆணையாளர் (UN High Commissioner for Refugee), பனனாட்டு வழக்கப்படி அகதிகளின் மனுக்களை ஆய்வு செய்து அதை மேறபார்வையிடுகிறார். மிகப் பழமையான ஐக்கிய நாடுகளின் அமைப்பாகிய அகில உலகத் தொழிலாளர் சஙகம் (I L.O.) தொழிலாளரின சமுதாயப் பாதுகாப்பு, தொழிலாளர் சட்டங்கள் போனற வற்றை மிக உனனிப்பாகக் கவனித்து வருகின்றது.

**இந்தியாவின் சமூகநலப் பாதுகாபபுத் திட்டங்கள்:** இநதியாவில சமூகநலப் பாதுகாப்புத திட்டஙகள நாடு சுதநதிரமடைநத பிறகே ஏறறுக்கொளளப பட்டன. இந்தியாவில் பெரும்பாலும தனிப்பட்ட சேவை நிலையங்கள், அரசுத் துறை நிறுவனஙகள் ஆகியவை சமுதாயத்தில வசதி குறைந்தவாகளுக்குச சேவை செயகினறன. காநதியடிகளின முயறசியால பல சமூகச் சேவை நிலையஙகள ஏற்பட்டன. அவைகள பொருளாதாரச சமூக நலததுறைகளில சேவை செய்கினறன. அவற்றுடன் உதவி மனப்பானமை படைத்தவாகள ஏற்படுத்தியுளள அற நிலையஙகள, பொது நிதிகள, கொடை முதலகள (Endowments) முதலியவை சமூகத் துறையில பெரிய அளவில் தொடாந்து நறபணி செய்து வருகினறன.

ஆதி குடிகள, பிற்பட்ட வகுப்பினர் போன்றவர்களின் நலததைப பேணுவதறகு அரசின் தனித் திட்டஙகள வழிவகை செய்கினறன. அதேபோனறு தொழிறசாலைத் தொழிலாளர்கள், தோட்டத தொழிலாளாகள, பெண தொழிலாளர்கள போன்ற தொழிலாளா சமூகத்தாரின் தனித தேவைகளைக கவனித்து அவர்களுடைய நலனைப் பேணவும தனித திட்டஙகள் உளளன.

இநதிய அரசு 1923-ஆம் ஆணடில தொழிலாளா இழபபீட்டுச சட்டம (Workmen's Compensation Act) ஒன்றைச் செயறபடுத்தி, அதனபடி தொழிலினால ஏறபடககூடிய இழப்புகளுக்கு இழப்பீட்டுப பணம் அளிக்க வறபுறுத்தியது. இபபோது உரு 1000 வரை கூலி வாஙகும் தொழிலாளர்கள, ஆபததான பணியில இருப்போா இச்சட்ட வரையறைக்குள கொணடு வரப்பட்டுளளனா. கொடுக்கபபட வேணடிய இழப் பீட்டுத் தொகையின அளவு தொழிலாளா சேதத்தைப பொறுத்தும், அவாகள வாங்கும் கூலியைப் பொறுத்தும் வேறுபடுகிறது. தொழிலில் ஏற்படுகிற இழப்புகளுக்கும், மகப்பேறு போனறவற்றிற்கும் இழப் பீட்டுத் தொகை சமமாக அமையவேணடும் எனறும் வற்புறுத்தப்பட்டது இசசட்டம் 1976-இலும் 1984-இலும திருத்தியமைக்கபபட்டது. அதனபடி இழப் பீட்டுத் தொகை நிருணயிப்பதற்கு உயர்நத அளவு ஊதியத்தைக் கணக்கிலெடுககத் தேவையில்லை எனறு கொண்டுவரப்பட்டது. பனனாட்டுத் தொழிலாளர் சஙகக் (International Labour Organisation) கொள்கையின்படி, தொழிலாளர்களின் வயதும், மாத வருவாயும் கணககிலெடுதது அவர்களுக்கு இழப் பீட்டுத் தொகை வழஙகவேணடும எனறு சட்டம் கூறியது.

மேலும் 1948-ஆம் ஆணடு உருவான மாகாணத் தொழிலாளர் காப்பீட்டுச் சட்டத்தின்படி(Employees State Insurance Act) தொழிலாளர் நலக் காப்பீட்டுச் சலுகைகள அளிககப்பட வேணடுமெனறு வற்புறுத்தப் பட்டது. இசசட்டம் 1985-ஆம ஆணடில் புதிய உருவில் கையாளப்பட்டது

அதனபடி இத திட்டம காப்பீடு செய்த தொழிலாளர்களுககும் அவர்கள் குடுமபங்களுக்கும் சில பயனகளைச் செய்தது. அவறறுள் முக்கியமானவை:

**1) மருத்துவ வசதி:** அஙகீகரிக்கப்பட்ட மருந்தகங்களில் (Dispensaries) அலலது மாகாணத் தொழிலாளா காப்பீட்டு நிறுவனம் பராமரிக்கும் மருத்துவ நிலையங்களில மருததுவர்களின் சாறறிதழ் பேரில தொடர்ச்சியாகப் பணியிலிருநது ஓராணடிற்கு உயர்ந்த அளவு 56 நாட்களுக்குரிய பணத் தொகையைத தொழிலாளரின மருததுவத்திற்காக அளிக்க இத்திட்டம் வகை செயகிறது. ஆனால, அவ்விதம பணத் தொகையைப் பெறுகின்ற தொழிலாளர்கள மருநதகம் அல்லது காபபீடு மருத்துவமனைகளில மருத்துவத்திறகாக அனுமதிக்கபபட்டிருத்தல் இனறியமையாதது என்று குறிப்பிடப்பட்டது.

**2) மகபபேறு உதவி:** காப்பீடு செய்த பெண் தொழிலாளி மகப்பேறு உதவி (Materntiry Benefit) பெறுவதற்கு இததிட்டம வசதி அளித்தது. சாதாரணமாகக் கொடுக்கப்படும உதவியைப் போல் இரணடு மடங்கு பெறுவதற்கு உரிமை கொடுக்கப்பட்டது. அதன்படி,12 வாரஙகளுக்கு முழுச் சம்பளம் பெறறுக் கொளளலாம் எனறும் சட்டம் குறிப்பிட்டது.

**3)ஊனமுற்றோர் உதவி:** தொழிலில்ஈடுபட்டிருக்கும் போது ஏறபடுகினற காயம், ஊனம் போன்ற சந்தர்ப் பஙகளில் இலவச சிகிச்சையும், தறகாலிக ஊனமுற் றோர் உதவித்தொகையும்(Disablement Benefit)அவரது சம்பளத்தில்70விழுக்காடு வரையும்கொடுப்பதற்கு வகை செய்தது. நிலையாகப் பாதி ஊன முற்றோ

ருக்குக் காப்பீடுசெய்த தொழிலாளர் ஆயுள் முழுவதும பெறும பணவுதவி முழு வீதததில், ஒரு குறிப்பிட்ட விழுக்காடு தரப்படுகிறது நிலையாக, ஊனம் அடைநத தொழிலாளர்களுக்கு முழு வீதத்தில் பண அளிபபு அவர்கள வாழநாள் முழுவதும் தரப்படுகிறது

**4) தொழிலாளர் சார்ந்தோருக்கு உதவி:** தொழிற கூடத்தில் ஏற்பட்ட விபத்து, ஊனம் இவற்றுக்காகச சம்பந்தப்பட்ட தொழிலாளரின மனைவி, குழந்தை களுககு அவர் ஊதியத்தில 40 விழுக்காடு வரை பணவுதவி தரப்படுகிறது. இவ்வகை உதவி, இறந தவர்களின உறவு பற்றி அமைகிறது.

மாகாணத் தொழிலாளர் காப்பீட்டுத் திட்டத் தின் கீழ 1985 முடிய நாட்டில 89 தொழிலாளர் காப பீட்டு மருத்துவ நிலையஙகள உள்ளன என்றும், 1216 மருந்தகங்கள, நோய், மகப்பேறு ஆகியவற்றிற்கும் தற்காலிக, நிலையான ஊனமுறறோர், அவர் களைச் சார்ந்திருப்போர் ஆகியோருக்குமான உதவித் தொகை உரு. 79 கோடி எனறும் புள்ளியியல் கூறு கிறது.

தொழிலாளர் வைப்பு நிதிச் சட்டம் (Employee's Provident Funds)1952-ஆம ஆணடு ஏற்படுத்தப் பட்டது. அதனபடி 50 தொழிலாளர்களுக்கு மேல ஈடு படுத்தப்படும் கனரகத் தொழில்கள (இரும்பு, எஃகு, நெசவாலைகள், தொழில நுட்பம் (Engineering), சிமிணடு, தாள், வெண்சுருட்டு) தங்கள தொழி லாளர்களுக்குக் கட்டாய வைப்பு நிதி தர வேண்டும் எனபது வறபுறுத்தப்பட்டது மேலும் குடும்ப உபகாரச் சம்பளம் (Family Pension), வைப்பு இணைககப் பட்ட காப்பீடு (Deposit Linked Insurance) போன்ற திட்டங்களும் ஏற்படுத்தப்பட்டன. மேறகூறிய திட் டம் 1985-ஆம் ஆணடில் 173 தொழிறசாலைகளுக்கு விரிவுபடுத்தப்பட்டது.

நிலக்கரிச் சுரங்கஙகளில வேலை பார்க்கும் தொழி லாளர்கள் தனிச் சட்டததின்கீழ் கொணடு வரப்பட்ட னர். அதனபடி நிலக்கரிச சுரங்க வைப்பு நிதி, ஊக் கத்தொகை (Bonus) அளித்தல போனறவை செய லாக்கபபட்டன. இத் திட்டத்தின்கீழ ஒவவொரு தொழிலாளரும் 8 விழுக்காடு தனது வருவாயிலிருநது அளிக்கவேணடும் எனவும, அதற்கு இணையாக (Matching Grants) வேலை தருவோர் பணம் அளிக்க வேண்டுமெனவும் குறிக்கப்பட்டது.

இந்திய அரசு 1972-ஆம் ஆண்டில் கொடைச சட்டத்தை (Payment of Gratuity Act, 1972) உரு வாக்கியது. அதன்படி தொழிற்சாலைகள, சுரஙகங் கள, எண்ணெய்க் கிணறுகள, தோட்டங்கள, கப்பல் தங்குமிடங்கள, இரயில்வே, கடைகள் போன்றவை கொடை (Gratuity) அளிப்பதற்கு உரியவை எனறு தீர்மானிக்கப்பட்டு ஒவவோர் ஆண்டுச் சேவைககும் 15 நாள ஊதியததைக கொடையாக அளிககலாம் எனறு குறிப்பிடப்பட்டது

உலக நாடுகளில் இந்தியா, சமுதாயக் காப்பீட் டுத் திட்டஙகளை ஏற்றுக்கொணடதில பின்னடைந் திருநதாலும், பெருமபானமையான ஒருஙகிணைக்கப் பட்ட சமுதாயக் காப்பீட்டுத திட்டஙகளை அமைத் துளளது. க.சொ.

**துணை நூல்கள:**


**Mamoua, C.B.**, Labour Problems and Social Welfare in India, Kitab Mahal, Allahabad, 1985.

**Mongia, J N.**, Readings in Indian Labour and Social Welfare, Atma Ram & Sons, Delhi, 1976.

**Sazana, A.M.**, Aspects of Labour Welfare and Social Security, Himalaya Publishing House, Bombay, 1985.

**Southgate George, W**, English Economic History J.M. Dent & Sons, Ltd, London, 1965.


**நலப் பொருளியல்:** பொருளியல் வல்லு நர்கள் பொருளியலுக்குப் பலவிதமான 'விளக்கங்கள' கூறியுள்ளனர். அவற்றுள் பெருமபாலானவை 'பொருள்வள நலத்திற்கான காரணங்களை ஆராய் வதே பொருளியல' எனனும் கருத்தினை ஒட்டிய தாக அமைந்துள்ளன. இத்தகைய பொருள்விளக்கம் பாரிட்டோ (Pareto), ஆல்பிரடு (Alfred), மார்சல் (Marshal), சே.பி கிளார்க்கு (J.B.Clark), கானன (Cannan) போனறோரின் கருததுகளில் அடஙகியுள ளன. பொருளியலின் நலப்பொருள அடிப்படையை வனமையாகக் கணடித்த இலயோனல் ராபின்சு (Lionel Robbins) அத்தகைய அணுகுமுறை தவறா னது; பொருளியலின தன்மையை முழுதும விவரிப் பதாக இலலை என்றும், மனிதனின பெருகிக் கொணடேவரும் தேவைகள் பறறாககுறைகள் ஆகிய வற்றின தொடர்பை ஆய்வதே பொருளியல என்றும் மாறுபட்ட கருத்தைத் தெரிவித்தார். எனினும், குறிப்பாக வறுமையிலிருந்து விடுபடுவதும மக்களுக் குப பொருளாதார முன்னேறறம் விளைவிப்பதும் முககிய நோக்கமாக அமைந்துளள இனறைய சூழ் நிலையில, 'சமுதாயத்தின பொருளவள நலனை இயன்ற அளவு உச்ச நிலைக்கு உயர்த்துவதே பொருளியலின் குறிக்கோள எனபதில் கருத்து வேற்று மைக்கு இடமில்லை.

பொருளியற் கோட்பாட்டிலிருந்து நலப்பொருளி யலைத் தனித்துறையாகப் பிரித்து உருவாக்கிய

பெருமை கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகப் பேராசிரி யரும் ஆல்பிரடு மார்சலின் வாரிசுமான ஏ.சி.பிகு (A.C Pigou) என்பாரைச் சாரும். 'செல்வமும் நல மும்'என்னும் அவரது நூல் பின்னர் நலப் பொருளியல் என்ற நூலாகப் பல பதிப்புகளில் வெளிவந்தது. நலப்பொருளியலில் அடங்கக்கூடிய பல கருத்துகளைத் தொன்மைப் பொருளியல்வாதிகள், தத்துவஞானி கள், சீர்திருத்த வாதிகள் ஆகியோர் ஏற்கெனவே எடுத்துரைத்துள்ளனர். நலப்பொருளியல் பொருளி யல் சிந்தனை ஓட்டத்தில் வாழ்க்கை வளத்தை மேம்படுத்தவும் உத்தமப்படுத்தவும் முக்கிய அங்கம் வகித்துள்ளது. குறிப்பாகச் செருமி பெந்தாம் (Jermy Bentham),சே.எசு.மில்(J.S.Mill)போன்றபயன்பாட்டுக் கொள்கை வாதிகள் நலப்பொருளியலைத் தங்களின் பொருளியல் கொள்கையின் இன்றியமையாத கூறு பாடாகக் கொண்டிருந்தார்கள். சமுதாயக்கொள்கை, சமூக நலம் ஆகியவைகளின் சிக்கல்களில் பொருளி யல் எப்பொழுதுமே கவனம் செலுத்தி வந்திருக் கின்றது என்று சமீபத்தில் நோபல் பரிசுபெற்ற பி.ஏ. சாமுவல்சன் (P A.Samuelson) கூறிய கருத்துக் கேற்ப, பிகு தம் முன்னோர்களை பொருள் நலக் கருத்துகளுக்குப் புது மெருகேற்றி விரித்து விளக்கி நலப்பொருளியலை உருவாக்கியிருக்கிறார்.

நலப் பொருளியலைத் தோற்றுவித்தவர் பிகு (Pigou) அல்லர் என்றும், இத்தாலியரான பாரிட்டோ வும் (Pareto) அவரைத் தொடர்ந்து ஆங்கிலேயர் களான பரோன் (Barone), எட்சு வொர்த்து (Edge worth) ஆகியோரும் ஆவர் என்றும் மற்றொரு கருத்தும் நிலவுகிறது. மேற் கூறியவர்களது கருத்து கள், புதிய நலப் பொருளியல் வடிவில் சம்பிரதாய மான பிகுவின் நலப்பொருளியலிலிருந்து தனியாகப் பிரிக்கப்பட்டுள்ளன.பொருள் நலத்தின் அளவை அடிப் படையில் இவ்விருதரப்பட்ட நலப்பொருளியல்களும் பழைய (அல்லது சம்பிரதாய) நலப்பொருளியல், புதிய (அல்லது நவீன) நலப்பொருளியல் என இரு கூறுகளாக வளர்ச்சி பெற்றுள்ளன. பின் வரும் குறிப்பு புதிய நலப் பொருளியல் அணுகுமுறை யில் அமைந்துள்ளது. அது பிகுவின் நலப் பொருளிய லிலிருந்து வேறுபடுவதையும் விளக்க முனைகின்றது.

பிகுவின் நலப்பொருளியற் சிந்தனை பல அமைப்புளைக் கொண்டது. அவை பகுப்பாய்வு (Analytical), பயன்முறை (apylied) என இரு பெரும் பிரிவுகளில் அடங்கும். முதற் பிரிவானது நலம், பொருள் நலம், தேசிய வருமானம் ஆகிய வற்றையும், தேசிய வருமானத்தில் ஏற்படும் மாறு தல்களை அளவிடுவதன் கோட்பாட்டின் முக்கியத்து வத்தையும் ஆராய்கிறது. பொருள்நலம் (Econmic Welfare) பொதுநலத்தில் (general Welfate) அடங்கி யிருந்தாலும் வேறுபட்டதென்பதைத் தெளிவுபடுத்தி, பொருள் நலத்தைக் காட்டத் தேசிய வருமானம் பொருத்தமான குறியீடாக அமையும் என்றும் அவர் கருதுகின்றார். எனவே, தேசிய வருமானம் பொருளா தாரத்தின் முக்கிய குறிக்கோளாகவும் பொருளியல் பகுப்பாய்வில் அடிப்படைக் கருத்தாகவும் அமைகிறது இன்றுவரை பொருளியல் முறையிலும் கருத்துகளி லும் கொள்கைகளில் பெரும் மாற்றங்களும் முன் னேற்றங்களும் அடைந்திருந்தும்,தேசிய வருமானத்தை யொட்டியே பொருளியலும்பொருளாதாரச் சிக்கல் களும் பின்னிப் பிணைந்துள்ளன என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

இன்றைய சமூகப் பொருளாதாரச் சிக்கல், மக்களி டையே அமைந்துள்ள ஏற்றத் தாழ்வுகளைக் குறைப் பதும் யாவரிடத்தும் சமத்துவப் பொருளாதார அமைப்பை உருவாக்குவதும் ஆகும் வறுமைப் பிரச் சினை எல்லாச் சமூகங்களிலும் நாடுகளிலும் வெவ் வேறு நிலைகளில் உள்ள தலையாய பிரச்சினையா கும். ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்து வறியவரைமேல் நிலைப்படுத்தவும் அதற்காகச் செல்வர்களின் நிலை யைக் குறைக்கவும் வேண்டியன செய்யலாம் என்பதற் குத் தத்துவபூர்வமாக அடிப்படைக் கோட்பாடுகளை ஆராய்ந்து,கொள்கை அளவிலும் செயற்பாட்டிலும் வழிவகுத்த பெருமை பிகுவைச் சாரும். குறைந்து செல் இறுதிநிலை பயன்பாடு (diminishing marginal utility)பற்றிய விரிவான விளக்கத்தை மனிதனின் வரு வாய்க்கும் செல்வாதாரங்களுக்கும் தெளிவுபடுத்தி, மிக்க வருமானம் உள்ளவனுக்குப் பணத்திடம் உள்ள பயன்பாடு, குறைந்த வருமானம் உள்ளவனின் பணத் தின் பயன்பாட்டைவிட மிக அதிகமானது என்று விளக்கம் தருகின்றார். எனவே, வறியவர்களுக்குச் சாதகமான மாற்று வழங்கீடுகளை (transferences) வலியுறுத்தி, வருமானத்தை மேலும் அதிக அளவில் சமப்பகிர்வு( Equitable distribution) செய்ய வேண்டி யதற்கான காரணங்களையும் கூறுகிறார். 'சமுதாயத் தில் பணவசதி படைத்தவர்களிடமிருந்து வறியவர் களுக்குப் பணவருவாயை மாற்றுவதைப் படிப்படி யான வரிகளின்மூலம் நன்கு செய்யலாம் என்று அவர் ஆலோசனை கூறுகிறார்.

பிகுவின் இரண்டாவதான பயன் முறைப் பிரிவில், தேசிய வருமானத் தொகையின் அளவு, பல்வேறு பயன்களுக்குச் செல்வாதாரங்களைப் பகிர்தல், பல் வேறு பயன்களில் தனி, மற்றும் சமூக விளைவுகளின் சமத்துவத்தின் அடிப்படையிலான உத்தம நலம் (Optimum Welfare)ஆகியன பற்றிய பொருள் விளக் கம் அமைந்துள்ளது.

பிகுவின் நலப்பொருளியலில் காணப்படும் முக்கியமான கருத்து இறுதிநிலை நிகர உற்பத்தியின்

இருவகைப் பாகுபாடுகளாகும். அவை இறுதி நிலைச் சமூக நிகர உறபத்தி (Marginal Social Net Product -MSNP), இறுதிநிலைத் தனியார் நிகர உற்பததி (Marginal Private Net Product) என்பனவாகும். இவவிரணடின ஒருங்கிணைப்பில சமூக நலம உச்ச வரம்பை அடைகிறது என்றும, இவற்றில் வேறுபாடு ஏற்படுமாயின் அதனைத் தகுந்த செயற்பாட்டின் மூலம் திருமபவும ஒத்ததாகச செய்ய வேண்டும் எனறும் கூறுகிறார். தொழிலில் ஏகபோக உரிமைகள், தேர்ந்தளித்தல் (discrimination), சொத்துரிமைகள் போனறன வேறுபாடுகள ஏற்படக் காரணமாயுள்ளன என்றும், தொழில்களை அரசு நிருவகித்தல், தொழில அமைதி, சமரசம், நடுவர் தீர்ப்பு, ஊதியம் வழங்கும் முறைகள், வேலைத் தகவல நிலையங்கள், ஊதியத்தை உயர்த்துவதற்கான தலையீடு, குறைந்த அளவுக்கூலி, உணவுப் பஙகீடு, உதவித் தொகைகள (subsidies) வருமான மறு பகிர்வு, குறைந்த அளவு தேசிய வருமானத் தரம் (National Minimum standard of income) போனறவை பொருள் நலத்தை மேம்படுத்த உதவும் வழி வகைகள எனறும் கருதினார்.

சமூக வருமானத்தின் உண்மையான மதிப்பை உச்ச நிலைக்கு உயர்த்துவதே பொருளியல் கொள்கையின் நோக்கமாக இருக்க வேணடுமென்ற அடிப்படைக் கொள்கையை வகுத்துக் கூறிய பிகுவின் முடிவுகளை நேர்காட்சி வாதிகளும் (Positivists) எளிதாக ஏறறுக் கொண்டார்கள். நலப் பொருளியலின் முன்னோடி (Pioneer) என்ற முறையிலும் அதை முறைப்படுத்தியவர் என்ற முறையிலும், பிகு நலப் பொருளியல் தெளிவிலக்கணத்தில முக்கியமான வராவர்.

பிகுவின் மரபுவழிப் பொருளியல் மற்றைய பொருளியல் நிபுணர்களின் உண்மையான கண்டனத்திற்கு உள்ளாகியது. பயன்பாடுகளின் அளபுடைத் தன்மை, பயன்பாடுகளின ஒப்பீட்டுத் தன்மை என்ற பிகுவின் பொருள் நலவியலின் அடிப்படைக் கருத்துகள ஆய்வுமுறைக்கு ஒவவாதனவாக அமைந்தபடியால் அவற்றை ஒதுக்கிவிட்டு, எத்தகைய ஆரக்கால் (Subjective) ஒப்பீடுகளையும் சாராத கருத்துகளையும் நலமுடிவுகளையும சாரநத புதிய நலப் பொருளியல் உருவாகத் தொடங்கியது. இப்புதிய நலப் பொருளியல் வாதிகளின் 'தநதையாக'ப் பாரிட்டோவைக் (Pareto) கொளளலாம்.

பாரிட்டோவின் நலப் பொருளியல் மூன்று குறிக்கோள்களைக் கொண்டது. அவை: 1. செலவங்கள் (riches) பற்றிய தெளிவற்ற கோட்பாடுகளைத் தெளிவுபடுத்தி அவற்றுக்கு அளவு அறுதி செய்தல் (quantity); 2. அரசியல், தேசிய, அறிவியல் காரணங்களினால் விரும்பத் தக்கவையெனக் கருதப்படுகின்ற அரசுக் கொள்கைகள் (Public policy) பற்றிய விவகாரஙகள குறித்துப் பொருளியல்வாதிகள் கூறுவதைத தெளிவுபடுததுதல்; 3. அறிவியல் அல்லது மதிப்புத்தீர்ப்புகளுக்கு (value judgements) அடிமைப்படாமல் அறிவியல்முறைப்படி அமைந்த கோட்பாடுகளை உருவாக்குதல்.

சமூக உத்தமம் அல்லது உச்சப் பயன்பாட்டு நிலை (social optimum) பாரிட்டோவின் முக்கியமான கருத்தாகும். அதனையடுத்துப் பாரிட்டோவின தெளிவிலக்கணம் அவருடைய பொருள் விளக்கத்தின் தொடர்சசியாகும். 'எவருக்கும் கேடு செய்யாத, சிலரை அவாகளுடைய சொந்த மதிப்பீட்டில் மேம்படுத்தக்கூடிய எநத மாற்றத்தையும் மேம்பாடு (improvement) என்று கருத வேண்டும்' என்று அவருடைய தெளிவிலக்கணம் கூறுகினறது. பின்வரும் வரைபடத்தில் இதனைக் காணலாம்.




X,Y என்னும் இருவருடைய ஒரு சமுதாயத்தை (Community) இவ்வரைபடம் குறிப்பிடுகினறது. X என்பவரின் பயன்பாட்டை X அச்சாகவும் Y-இன பயனபாட்டை Y அச்சாகவும் கொணடு A,B,C,D,E என்ற நிலைகளை ஒப்பிடுக. D,A—ஐ விட மேமபட்ட நிலை; ஏனெனில் X,Y இருவரும மிகுந்த பயன்பாட்டைப் பெறுகினறனர். B,C என்ற இரண்டும் A க்கு மேம்பட்டது. ஏனெனில் Y அல்லது X இவ்விரு சூழ்நிலைகளில் மிக்க பயன்பாடு அடையும் போது X அல்லது Y-இன் பயன்பாடு மாறாமலிருக்கின்றது. ஆனால் E எனனும் புள்ளி A க்கும் குறைந்தது. ஏனெனில் Y-இன பயன்பாடு மிகும்போது X -இன் பயன்பாடு குறைவுபடுகிறது. இத்தெளிவிலக்

கணம் குழப்பமற்றது; சிறிதும் மறுப்புக்கு இடந் தராதது.

பகிர்வின் திறமையை வேறுபடுத்துவதைத் தெள்ளத் தெளிவாக்குவதே பாரிட்டோவினுடைய பொருள விளக்கத்தின சிறப்பாகும். திறமை ஆய்வுகளின் அடிப்படையில மட்டுமே பொருளியல கொளகை பற்றிய முக்கியமான கருத்துகளை வகுக்க முடியும என்பது பாரிட்டோவின முடிவு ஆகும் ஆனால், சிட்டோ இலாசுகியின செம்மையான இரட்டைத் தெளிவிலக்கணம் (double criterion) பாரிட்டோவின் தெளிவிலக்கணத்தை ஐயுறுகிறது. ஏனெனில, அதன் படி ஒரு நிலை மற்றொன்றைவிடச் சிறநததெனத திட்டவட்டமாகக் கூற முடியவில்லை.எனவே, நிறைவு செய்ய வேணடிய சில நிபந்தனைகளை மட்டும் பாரிட்டோ வகுத்துள்ளாரேயனறிச் சமூக உத்தமத திற்குப் போதுமான நிபந்தனைகளை அவா வகுக்க வில்லை.

நலப் பொருளியல் வளர்ச்சியில் தொண்டாறறி யவாகளுள இலெர்னர் (A.P. Lerner), கான (R F. Khan) காட்டலிங்கு ஆகியோர் குறிப்பிடத்தககவா ஆவர். இலொனரின 'கட்டுப்பாட்டுப் பொருளியல்' எழுச்சியூட்டும கருதது நிறைநதது. விலையும் (price) இறுதிநிலை அடக்கவிலையும் (marginal cost) சமமாக இருப்பதே நலத்தை உச்ச நிலைககு உயர்த்து வதறகான மிக முககியமான வழியாகும. இதனை முழுமையான கூட்டாண்மைப் பொருளியல் (Collectivist Economy) எளிதாகச் சாதிக்க முடியும் என்று கூறினார்.

இலெர்னரைப் போலவே, அறிஞா காட்டலிங் கும் பிகுவின ஆய்வு முறையிலிருந்து மாறுபடுகிறார். பொது நலப் பகுப்பாய்வின அடிப்படையில், நுகர் வோரின ஒரு பகுதி நலமுறையினையும (consumer's surplus), உற்பத்தியாளாகள உபரியையும்(producer's surplus) நிலைநாட்ட முயனறவாகளுள் அவரும் ஒரு வர். ஓா உள நாட்டுச் சுங்கவரி (excise tax) அதே அளவு வருமானத்தைக கொடுக்கக் கூடிய வருமான வரிக்குப பதிலாகப் புகுத்தப்படுமானால், அதனால தனிப்பட்டவாகளின பொருளநலம் குறையும என பதை அவரது அடிப்படைக கோட்பாடு விளக்கு கின்றது.

ஒரு முதலீடு அல்லது செயறபாட்டைச் செய்யும் போது, ஏறபடும் நனமைகள் மிகுதியாகவும் பரவலா கவும் இருக்குமானால, ஒரு சிலருக்கு ஊறு நேர்ந் தாலும் அது ஏற்றுக் கொளளக் கூடியதே. அவவாறு ஏற்படும இடையூறு கடுமையானதாக இருக்கு மானால் அதறகான நட்ட ஈட்டுக்கு வழி செய்ய வேண்டும். காட்டலிங்கின் இக்கருத்து பினனர் இக்சு, கால்டார் என்பவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு நலப்பொருளியலில் நட்ட ஈட்டுத் தத்துவக் கோட் பாடு (Theory of compensation principle) எனபது உருவாகியது.

பாரிட்டோவின கோட்பாடுகளையும் முறைமை யியலையும் பினபற்றி, அளபுடைப் பயனபாடு, ஆரக கால பயனபாட்டு ஒப்பீட்டுத் தனமை ஆகிய இரண் டையும மதிப்புத் தீர்ப்புகள என விலககிவிட்டு, படி நிலைமைப் பயன்பாட்டு (Ordinal Utility) அடிப படையில புதிய பொருளியல் விளககஙகள அமைந துளளன. 'விரும்பிய வருமானப் பகிாவு இருக்கு மானால் அதை ஏற்படுத்துவதற்குரிய மிகவும் வசதி யான வழியைக் காட்டுவது தான் பொருளியல்வாதி செய்யக் கூடிய ஒரே பணி' என்று காலடார் கூறு கிறார். அதன்படி பொருளாதாரத்தில் ஏற்படும பொருள் நல உயர்வை உணமையான வருமானப் பகிாவுடன தொடர்பு படுத்தாமலே விளக்கிக் காட்ட லாம். ஆனால், பொருள் நலததில் உயர்வு என்பதே தார்மீகத்(ethical) தன்மையுடையது. எனவே, அதில் மதிப்புத் தீர்ப்பு உளளடங்கியுள்ளது என்பதை மறுக்க முடியாது. எந்த வருமானப பகிர்வு சிறநதது என் பதறகுக் கால்டாரிடமிருந்து தெளிவான முடிவு வெளி வரவில்லை. செல்வ, வருமானப் பகிர்வு சரிசமமாக இருக்கின்ற இரு நிலைமைகளில் ஒன்றைத் தோந் தெடுக்க வேணடியிருப்பின், 'திறமை பற்றிய தெளி விலக்கணங்களை மட்டும் கருத்திற் கொண்டே ஒரு பொருளியல்வாதி தனது முடிவைத் தெரிவிக்க முடி யும்' என்று கால்டார் கூறுகிறார். இக்சு, கால்டார், சைட்டோவ்சுகி ஆகிய மூவரும் ஒரு தனிச் சிந்தனைக் குழாமைச் சேர்ந்தவர்கள் அவர்கள பொருள நல முன்னேற்றத்திற்குத் தேவையான திறமையான தெளிவிலக்கணம் ஒனறை வகுத்திருக்கினறார்கள.

இக்சு – காலடாரின் நட்ட ஈட்டுத் தத்துவம இரு பொருளாதார நிலைகளில ஒனறைவிட ஒனறு விரும பத தககதா எனபதைத் தெளிவுபடுத்துகிறது. சைட் டோவ்சுகி மேற்கூறிய தத்துவத்திறகு இரு காரணங் களைக் காட்டி எதிர்ப்புத தெரிவிக்கிறாா.முதலாவது, கண்டனத்திற்குரிய நுகர்வோர் உபரிககோட்பாட்டை நட்ட ஈட்டுத் தத்துவம் பயனபடுத்துகிறது என்பது. இரணடாவது, சில சமயங்களில் மாற்று நிலைமைகள் இரணடில் எது திறமையானது என்பதைத் தீர்மானிக்க இயலாது எனபது. ஒவ்வொரு நிலையாலும் மற்றதை விடச் சிறந்ததாகத் தோனறக்கூடிய விேனாதமான நிலைமை ஏற்படும். ஒரு நிலை மற்றதைவிட மேம் பட்டது என்பதனை இக்சு-கால்டார் கோட்பாட்டின் படி தெளிவுபடுத்தலாம்.ஆனால், அவ்வாறு மாறுதல் ஏற்படும் போது வருமானப் பகிர்விலும் மாறுதல் ஏற்படுகிறது. எனவே, முந்திய நிலைமை பிநதிய

நிலைமையைவிடச் சிறந்ததில்லை என்றும் நிரூபிக்கப் பட வேண்டும். அதாவது A > B என்பதுடன் B⊁A என்றும் நிரூபிக்க வேண்டும் என்று சைட்டோவசுகி இரட்டை நிபந்தனைகளை விதிக்கின்றார். மேலும், நிலைமைகள் மாறும்போது ஏற்படும் வருமானப் பகிர்வும் நல்லதாக அமைய வேண்டும் என்று மூன்றாம் நிபந்தனையையும் ஐ.எம்.டி. லிட்டில (I.M D. Little) என்பார் விதித்துள்ளார்.

மரபுவழி நலப் பொருளியல், புதிய நலப் பொருளியல் இரண்டும் முறைமைகளில் வேறுபட்ட போதிலும், மொத்தநலம் பெருக வேண்டும் என்ற நோக்கத்தில வேறுபட்டன அல்ல. பிகுவின் நலப் பொருளியல் போன்று புதிய நலப் பொருளியல செயலுக்குரிய ஆக்க வழிகளைக் காட்டவில்லை. கொள்கைகள் பற்றிய நெறிமுறைகள யாவும் பிகுவின் நலப் பொருளியலிலேயே காணப்படுகின்றன. நலப் பொருளியலைத தொகுத்தமைத்த பெருமை பெர்க்சன் (Berkson) என்பாரைச் சாரும். சமூக நலச் சார்பினைத்(Social welfare functions) தெளிவாக்கியவர் பெர்க்சனாவர். அதிலிருந்து பொருள நலச் சார்பினையும் வகுத்துள்ளார். இச்சார்பினையொட்டிப் பல்வேறு கொள்கைகளையும் விளக்க முடிகிறது. சமூக நலச சார்பு, ஒரு குறிப்பிட கால வரம்பில், உற்பத்திக்காகப் பயன்படுத்தப் படுகின்ற உற்பத்திக் காரணிகளின அளவுகள, நுகரப்படும பலவேறு பொருளகளின் அளவுகள்,உற்பத்திக்காகச் சமூகத்தில ஒவ்வொரு தனிமனிதரும் செய்த பணியின அளவுகள் ஆகியவற்றுக்கும் நலத்திற்கும் இடையேயுள்ள தொடர்பு ஆகும்.இதனில பொருளியல் சார்பு அற்ற சமூகக் காரணிகளும் அடங்கும். இதனில நிறுவன அமைப்புகள், பண்பாடு,வரலாற்றுவழித் தொடர்புகள் என்ற சமூகத்தைப் பற்றிய எவையும் அடங்கும். இச் சமூகக் காரணிகளை மாறாதனவாக எடுத்துக் கொண்டு சார்பிலிருந்து நீக்கிவிட்டால பொருள்நலச் சார்பு அமைகின்றது. இதனைப் பயன்படுத்தி ஒருவர் தேர்ந்தெடுக்கும் எவ்வகை மதிப்பு யூகங்களையும் பிரயோகித்து உத்தம நிலைமைகள் மீது அவற்றின விளை பலனகளையும எளிதில் அறியலாம்.

பெர்க்சனின தெளிவிலக்கணம் பயனுள்ளதாக அமைந்தாலும் நலத் தீர்ப்புகளை (Welfare judgements) அளிப்பதில் தேவையான நெறிமுறைகளை அது முறைப்படுத்தவில்லை. ஏனென்றால்,சமூக நலச் சார்பினை எப்படி ஆக்குவது என்பதிலேயே சிக்கல் எழுகிறது. ஒவ்வொரு தனிமனிதரின் நலத்தையும் ஒன்றாகச் செய்து சமூகநலச் சார்பினை ஆக்கலாம். அவ்வாறு செயயும் ஒப்பு முக்கியத்துவங்களை நிருணயிக்க வேண்டியிருக்கின்றது. மேலும் மதிப்புத் தீர்ப்புகள் தவிர்க்கப் படமாட்டா. தனிமனிதர் விருப்பங்களிலிருந்து சமூக நலச் சார்பு குறிப்பிடப்படும்போது ஏற்படும பெரும் முரண்பாடுகளைஆர்ரோ (Arrow) என்பவர் தம் பொதுச் சாத்தியக் கோட்பாட்டின் (General Possibility) மூலமாக நிரூபித்துள்ளார். இந்த அடிப்படைக் குறைபாட்டினால் நலப்பொருளியல் தத்துவங்கள சமூகக் கொள்கையை வகுப்பதற்கும் வழி காட்டுவதற்கும் முற்றிலும் பயனற்றவையாகின்றன.'நலத்தை உயர்த்துகின்ற அல்லது குறைக்கின்ற கொள்கைகளைப் பாகுபடுத்தி அறிந்து கொள்ள உதவுவதற்குத் திறனற்றவையாகவும் அத் தத்துவங்கள் இருக்கின்றன என்று ஆர்ரோ திட்டவட்டமாகக் கூறுகிறார். ஆர்ரோவின் முடிவுகள் எதிர்ப்புகளுக்குள்ளாகியிருக்கின்றன. தரமான நலக் கோட்பாடுகளினால ஏற்கெனவே மறுக்கப்பட்ட அல்லது உறுதி செய்யப்படாத யூகங்களை அடிப்படையாகக் கொண்டதனால் அவர் முரணபாடுகளில் சிக்கிக் கொண்டார்.

பெர்க்சனைப் போலவே சமநோக்குக் கோடுகள் (Indifference Curves) தத்துவத்தின் அடிப்படையில், சாமுவலசன (P.A.Samuelson), சமூகநலச் சார்பினை வரைபட வடிவில் சமூகநலச் சமநோக்குக்கோடுகளின் மூலம் ஆய்வு செய்யலாம் என்று குறிப்பிடுகிறார். அரசியலில் தேர்வு முறை (Voting process) முக்கியமான அணுகுமுறையாக அமைந்தது போல், நலப் பொருளியல கோட்பாடுகளை வகுக்கவும் அத்தகைய முறையில அணுகலாம் என்று இலாங்கே, இலாங்கா சுட்ர் போன்றோரும் பற்பல கருத்துகளைத் தெரிவித்துள்ளனர்.

முரண்பாடுகள் இல்லாத யாவராலும் ஒப்புக் கொள்ளக் கூடிய நலப்பொருளியல் கருத்துகள் இன்னமும் உருவாகவில்லை. பொருள்நலம் உச்சமாக்கப்பட வேண்டும் என்பதில் கருத்து வேற்றுமை இல்லையென்றாலும் அதன அணுகு முறையில் பல்வேறு இடையூறுகள் அடங்கியுள்ளன. பிகுவின நலப் பொருளியல் அவரது யூகங்களுக்காகக் கண்டனத்துக் குரியதாயிற்று. பாரிட்டோவின் பயன்பாட்டு அளவு பற்றிய யூகங்கள் நடைமுறைக்கு ஏற்றுக் கொள்ளக் கூடியனவாக அமைந்து, பெர்க்சன இலெர்னர், இக்ஸ் கால்டார், சைட்டோவ்சுகி, சாமுவல்சன், லிட்டில் ஆகியோரினால் புதிய பொருளியல் என வளர்ச்சி பெற்றுள்ளன. பொருளாதார நடவடிக்கைகளினால் வருமானப் பகிர்வில் ஏற்படும் சாதகமான பாதகமான விளைவுகளைப் பற்றிப் பொருளியல் வாதிகள் யாவருமே திட்டவட்டமான முடிபு கூறாமல் அதனைத் தவிர்த்தே அவரவரது கருத்துகளையும் கோட்பாடுகளையும் அளித்துள்ளனர். நுகர்வோரின்சுவைகளில் மாற்றங்கள் இல்லைஎன்ற யூகத்தைப் போன்ற வருமான-செல்வப் பகிர்வு மாறாதிருக்

கின்ற அடிப்படையில் அமையும் தெளிவிலக்கணங்கள், கருத்துகள், கோட்பாடுகள் அதன் வாயிலாக வகுக்கப்படும் செயல்முறைகள் யாவும் குறைபாடுகள் உடையனவாகவே இருக்கும் என்பதில் ஐயமில்லை. பொருள் நலத்தை உச்சமாக்க நிபந்தனைகளைத் திட்டவட்டமாக வரையறுத்துக் கூறியது புதிய நலப் பொருளியலின் சாதனையாகும். ஆனால், உத்தம நிபந்தனைகளை நடைமுறையில் செயலாக்குவதும் அதன் மூலம் நலத்தில் உயர்வு ஏற்படுத்துவதும் நிச்சயம் என்று சொல்ல முடியாது. மதிப்புத் தீர்ப்புகள் ஏதுமில்லாத, மனநிறைவளிக்கத் தக்க, குறிக்கோள் சார்ந்த தெளிவிலக்கணம் எதையும் எவரும் இதுவரை வகுக்கவில்லை. நலப்பொருளியலின் முடிவுகள் யாவும் தவிர்க்க முடியாத வகையில் மதிப்புத் தீர்ப்புகளாகவே இருக்கின்றன. ஏனெனில், நலம் என்பதே அகமதிப்பீட்டில் அமைந்தது தானே! அகமும் புறமும் ஒன்றையொன்று சார்ந்திருப்பதே நலப்பொருளியலின் தத்துவம் ஆகும். ய.ச.சு.

**துணை நூல்கள்:**

Hicks, J.R., Foundations of welfare Economics, Economic Journal, December, 1939.

Lernr, A.P., Economics of control, Mcgraw Hill company Ltd., New York, 1944.

Little, I.M. D, Foundations of welfare Economics, Oxford Economics Papers N.S., June, 1949.

Pigou, A.C., Economics of welfare, The Macmillan Press Ltd., London, 1922.

**நலவாழ்வுக் காப்பீடு**: எதிர்பாராத நோய்கள் வந்தபோதும், உடல் நலத்தைப் பாதுகாக்கவும் நலவாழ்வுக் காப்பீடு (Health Insurance) திட்டம் உதவுகிறது. பொதுக் காப்பீட்டுக் கோட்பாடுகளின் அடிப்படையில்தான் இக் காப்பீடும் அமைந்துள்ளது. சில இன மக்களுக்கும், சில நோய்க்குண்டான செலவுக்கும் இதைப்பின் பற்றுவதில் சிக்கல்கள் உள்ளன. எனினும், அமெரிக்கா போன்ற நாட்டில் இத்திட்டம் மிகவும் முன்னேற்றமடைந்துள்ளது. அமெரிக்காவில் மருத்துவமனைக் காப்பீடும், அறுவைச் சிகிச்சைக் காப்பீடும் ஆதாய நோக்கமற்ற (non-profit) திட்டங்களாலும் வணிகக் காப்பீடு நிறுவனங்களாலும் நடத்தப்படுகின்றன.

இந்திய நாட்டிலும் மருத்துவ நலன், மருத்துவமனையில் தங்குதல் போன்ற திட்டங்கள் உள்ளன. தங்களின் சேவை நலனின் ஒரு பகுதியாக வேலைக்கு அமர்த்துவோர் (Employer) தங்கள் தொழிலாளர்களுக்கு அல்லது தங்கள் கீழ்ப் பணி புரிவோர்களுக்கு ஆகும் மருத்துவ சிகிச்சைச் செலவுகளை ஈடுகட்டுகின்றனர். இதற்கான திட்டங்களைக் காப்பீடு நிறுவனம் தீட்டுகிறது. வேலைக்கு அமர்த்துவோரும் தங்கள் நிதியிலிருந்து சிகிசசைச் செல்வுகளை ஈடுகட்டுவதற்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட கட்டணம் கட்டிக காப்பீடு திட்டத்தில சேர்த்துவிட்டால் காப்பீட்டு நிறுவனமே அச் செலவுகளை ஈடுகட்டுகிறது. மேலும், இதற்காக எழுத்தர் வேலையும் மீதமாகிறது. எனவே, மிகப் பலரை வேலைக்கு அமர்த்துவோர்கள் இத்திட்டத்திற்கு முன்னுரிமை அளிக்கின்றனர்.

இதைத்தவிரத் தனிப்பட்டோர்களும் தங்கள் மருத்துவச் செலவிற்காக ஒரு குறிப்பிட்ட கட்டணம் கட்டி, ஒரு மருததுவமனையில் தங்கி சிகிச்சை பெறும் நலன் திட்டம் (Hospitalisation Benefit Policy) என்ற திட்டத்தில சேர்ந்தால, அவர்களுக்காகும் மருத்துவச் செலவைக் காப்பீட்டு நிறுவனம் தருகிறது. அதாவது ஒருவா நோய்வாய்ப்பட்டு மருத்துவச் செலவிற்காக இத்திட்டத்தின்கீழ் பணம் கேட்டால் காப்பீட்டு நிறுவனம் அவருக்கான செலவில 80 விழுக்காடு வழங்குகிறது. ஆனால், மருத்துவம் இந்தியாவில் பார்க்கப்பட வேண்டும். திட்டத்தில் சேர்நதவருக்கு உணமையாகச் செலவழிக்கப்பட்ட தொகையில் 80 விழுக்காடு தரப்படும். அதுவும் நல அட்டவணையில் (Table of Benefits) கூறியுள்ள தொகைதான் கொடுக்கப்படும்.

மருத்துவ மனை, அறுவைச் சிகிச்சை, வீட்டிலிருந்தே மருத்துவம் பார்த்துக்கொள்ளுதல், பெரிய அறுவைச் சிகிச்சை, பெரிய நோய்கள் போன்ற சொற்களுக்குக் கீழ்வருமாறு இலக்கணம் கூறப்பட்டுளளது.

**மருத்துவமனை**: நோய்களுக்கும், காயங்களுக்கும் சிகிச்சையளித்திட இந்தியாவில் அமைக்கப்பட்டுள்ள நிறுவனந்தான் மருத்துவமனை (Hospital/Nursing home/Clinic). அதன் எல்லையிலுள்ள நகராட்சியிடம் அது பதிவு செய்ய வேண்டும். அது ஒரு தகுதி வாய்ந்த, பதிவு செய்யப்பட்ட மருத்துவரின் மேற்பார்வையில் இயங்கவேணடும். மருத்துவனை என்பது ஓய்வு எடுக்கும் இடமாகவோ, வயதானவர்களின் முதியோர் இல்லமாகவோ, மயக்கப் பொருளிலிருந்தோரின் சிகிச்சை இடமாகவோ, தங்கும் விடுதியாகவோ இருககக்கூடாது,

**அறுவைச் சிகிச்சை**, வெட்டியெடுத்துக் குணமாக்குதல், எலும்பு முறிவைச் சீர் செய்தற்காகச் செயயப்படும் நடவடிக்கை, எலும்பு இடம் மாறியிருப்பதைச் சரிப்படுத்தச் செய்யப்படும் சிகிச்சை, நரம்பு அறுவை சிகிச்சை, பிளாசுடிக்கு அறுவைச் சிகிச்சை போன்றவைகள் ஒரு தகுதிவாய்ந்த மருத்துவரால் செய்யப்படுவது 'அறுவைச் சிகிச்சை' எனப்படும்.

**வீட்டிலிருந்தே மருத்துவம் பார்த்துக்கொள்ளல்:** மருத்துவமனையில் சாதாரணமாக மூன்று நாட்களுக்குத் தங்கி நோய்களுக்கு மருத்துவம் பார்த்துக்கொள்வது வீட்டிலிருந்தே மருத்துவம் பார்த்துக்கொள்வதாகும் (Domicillary Hospitalisation). ஆனால், நோயாளியின் நிலைமை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்ல முடியாததாக இருக்கவேண்டும் அல்லது மருத்துவமனையில் படுக்கை வசதி இல்லாமலிருக்க வேண்டும் அல்லது மருத்துவரின் அனுமதிபெற்று வீட்டிலிருந்தே மருத்துவம்செய்துகொள்ள வேண்டும். ஈளை, மூச்சிரைப்பு, வயிற்றுப்போக்கு, சர்க்கரை நோய், உயர் இரத்த அழுத்தம், குளிர் சுரம், இருமல், சளி பிடித்தல், காக்காவலிப்பு, மன நோய், பத்து நாள்களுக்கு மேற்படாத நச்சுக்காய்ச்சல், உள் நாக்கு வளர்தல் போன்ற நோய்களில் ஏதாவது ஒரு நோய்க்காகும் செலவாகும்.

**பெரிய அறுவைச் சிகிச்சை, பெரிய நோய்கள்:** சிறு நீரக நோய், மூளையைத் தாக்குதல், இதய அறுவைச் சிகிச்சை, சிறுநீரகம் மாற்றியமைத்தல், காச நோய், நரம்பு அறுவைச் சிகிச்சை, மூட்டுகளைத் திருத்தியமைத்தல், மூளை வீக்கம் போன்ற நோய்களுக்கு மருத்துவமனையில் மருத்துவம் பார்த்துக் கொள்ளுதல் பெரிய நோய்கள் அல்லது பெரிய அறுவைச் சிகிச்சை எனப்படும்.

ஆனால், கீழ்க்காணும் நோய்களுக்குச் செலவழிக்கும் செலவுகளைக் காப்பீட்டு நிறுவனம் ஏற்காது. அவை: 1) காப்பீடு ஆவணம் (Policy) எடுத்ததுமுதல் 30 நாள்களுக்குள் செலவழிக்கப்படும் மருத்துவச் செலவுகள், 2) போர்க்காலங்களில் ஏற்படும் காயங்களுக்கு ஆகும் செலவுகள், 3) வழக்கமான கண் பரிசோதனைச் செலவுகள், கண்ணாடி விலை, கண்ணாடி வில்லை விலை, 4) பல் மருத்துவத்திற்கான செலவுகள், 5) நரம்புத் தளர்ச்சித் தொடர்பான செலவுகள், 6) இன்ன நோய் என்று அறிந்து கொள்ளவும் மருமக்கதிர்கள் (X-ray) எடுக்கவும் ஆகும் செலவுகள், 7) உடலுக்கு வலிமை தரும் சத்தான மருந்துப் பொருள்களுக்காகும் செலவுகள், 8) மின்னணுக்கள், அணு ஆகியவைகளால் பாதிக்கப்பட்ட நோய்க்காகும் செலவுகள், 9) கருப்பப் பரிசோதனை, குழந்தைப் பிறப்பு, கருவை அழித்தல் போன்றவைகளுக்காகும் செலவுகள்.

மேற்கூறியவை தவிரத் தனிப்பட்டோர் விபத்துக் காப்பீட்டு ஆவணம் எடுத்தோருக்குக் கீழ்க்காணும் செலவுகளை நலவாழ்வுக்காப்பீடு நிறுவனம் ஏற்காது. அவையாவன: சுரங்கம் வெட்டுதல் வெடித்தல், மின்சாரம் போன்றவைகளில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு ஏற்படும் விபத்துக்குள்ளான செலவுகள்; குதிரை ஓட்டுநர்கள், வித்தை காட்டுபவர்கள், குதிரைப் பந்தயத்தில் சவாரி செய்பவர்கள், வேட்டையாடுபவர்கள், மலையேறுபவர்கள் மழைக்காலத்தில் விளையாடுபவர்கள், பனிச்சருக்கில் ஈடுபடுபவர்கள், பலூன் விடுபவர்கள், போலோ விளையாடுபவர்கள் போன்றவர்களுக்கு விபத்தின் காரணமாக ஏற்படும் செலவுகள். ஆனால், மிகுதியான காப்பீட்டுக் கட்டணம் கட்டினால் மேற்கூறிய செலவுகளைக் காப்பீட்டு நிறுவனம் ஏற்கும்.

இந் நலவாழ்வுக் காப்பீட்டுத் திட்டம் 12 வயது முதல் 70 வயது வரையுள்ள ஆண், பெண்களுக்குச் செயற்படுத்தப்படும். காப்பீடு செய்பவரின் குடும்பத்தில் அவர் மனைவி அல்லது கணவன், சார்ந்துள்ள இரண்டு குழந்தைகள், சார்ந்துள்ள பெற்றோர்கள் இருந்தால் பிரிவு 'A' 'B'-இல் செலுத்தப்படும் கட்டணத்தில் 10 விழுக்காடு தள்ளுபடி செய்யப்படும்.

காப்பீட்டுப் பணம் பெறுவதற்கு முன்னேற்பாடு அறிக்கை (Preliminary Noticc) ஒன்று இறப்பு அல்லது காயம், மருத்துவமனையில் சேருதல் போன்றவைகள் ஏற்பட்டு ஏழு நாள்களுக்குள் காப்பீடு நிறுவனத்திற்குத் தரவேண்டும். அதில் காப்பீடு ஆவணத் திட்ட எண், காப்பீடு செய்தவரின் பெயர், நோய் அல்லது காரியத்தின் தன்மை, மருத்துவரின் பெயர், முகவரி, மருத்துவம் பார்த்திடும் மருத்துவமனை போன்ற விவரங்கள் எழுதப்படவேண்டும். நோய் குணமான 15 நாள்களுக்குள் மருத்துவமனைச் சீட்டு பணச்சீட்டு போன்றவைகளை அனுப்பவேண்டும். தகுந்தகாரணங்களால்மேற்கூறிய முன்னேற்பாடு அறிக்கை அனுப்பப் படாமலிருந்து பின்னர் அனுப்பினாலும் பணம் பெற்றிடலாம். காப்பீட்டு நிறுவனம் பணத்தை இந்திய நாணயம் மூலந்தான் தரவேண்டும். மேலும், காப்பீடு செய்தவர் இந்தியாவில்தான் மருத்துவம் பார்த்துக் கொள்ள வேண்டும். எந்தெந்த நோய்களுக்கு எவ்வளவு பணம் தரப்படுகிறது என்பதைக் காப்பீட்டு நிறுவனம் தன்னுடைய நல அட்டவணையில் (Table of Benefits) கூறியுள்ளது. அதன்படிதான் பணம் தரப்படும்.

இவ்வாறு நலவாழ்வுக் காப்பீடு மனித குலத்திற்குப் பேருதவி செய்வதாக விளங்குகிறது. ஆனால் இதுபற்றிய விவரம் நகரத்தில் இருப்பவர்களுக்கே நன்றாகத் தெரியவில்லை எனவே, இக்காப்பீடு பற்றி மக்கள் யாவரும் நன்கு அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும் கே.என்.இரா.

**துணை நூல்:**

Mishra M.N., Insurance, S. Chand And Co., New Dehi1982. Phamlet of United India Insurance Co. Ltd, Madras, 1987.

*நலிவுற்றோர் கல்வி*: கல்வியின் தரத்தைப் பொறுத்தே ஒரு நாட்டின் முன்னேற்றம் அமைகிறது. கல்வியின் தரத்தை உயர்த்துவதற்குப் பல்வேறு திட்டங்கள் செயற்படுத்தப்படுகின்றன. அனைவருக்கும் கல்வி அளிக்கப்பட வேண்டும், அனைவராலும் கல்வி கற்கப்பட வேண்டும் என்பதே இத்திட்டத்தின்நோக்கம். உடல் ஊனமுற்றோர், உடல்நலமற்றவர், உடல் நலிவடைந்தவர்கள், நலிந்த பிரிவினர் போன்றவர்களுக்குக் கல்வி அளிப்பதன் மூலம் கல்வியில் ஒரு மறுமலர்ச்சியை ஏற்படுத்தலாம். பல்வேறு காரணங்களாலும் செயல்களாலும் உடல் நலிவடைகிறது. பொதுவாக, நலிவடைந்தவர்களைச் சமுதாயத்தில் பின் தங்கியவர்கள் (Socially handicapped)), உடல் நலிவடைந்தவர் (Physically handicapped), மனநலம் குன்றியவர் (Mentally handicapped) என மூன்று வகையினர்களாகப் பிரிக்கலாம். இவ் வகையினர் ஒவ்வொருவருக்கும் ஏற்றவாறு கல்வியை அமைத்து அவர்களைப் பயிற்றுவிக்க வேண்டும்.

**சமுதாயத்தில் பின்தங்கியவர்களுக்கான கல்வி**: இந்தியச் சமுதாயத்தில் மக்கள் உயர்ந்த சாதியினர், பின்தங்கிய சாதியினர், தாழ்த்தப்பட்ட சாதியினர், பழங்குடியினர் எனப்பலவாறாக வகைப்படுகின்றனர். பின்தங்கியோர், தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர் போன்றவர்களைச் சமுதாயம் பின்தங்கியவர்களாகக் கருதுகிறது. கல்வி பெறுவதில் உயர்ந்த சாதியினரும் பொருளுள்ளோரும் பெரும்பாலும் உயர்ந்த இடத்தைப் பெற்று விடுகிறார்கள். எஞ்சியுள்ள பிற வசதிகளையும் இவர்களே தேடிக் கொள்கிறார்கள். குறிப்பாக, பழங்குடியினர் உயர்ந்த இடத்தைப் பரவலாகப் பெறுவதேயில்லை. அத்தகைய பதவிக்குரிய கல்வியை அவர்கள் கற்காததுதான் காரணம். ஏனெனில், அவர்களுக்கெனக் கல்வியை எளிய முறையில் கற்பிப்பது இல்லை. பொதுவாகப் பழங்குடியினருக்கு மிகமிக எளிய முறையில் கல்வி பயிற்ற வேண்டும்.

இதனைக் கருத்திற்கொண்டு அரசினர் பின்தங்கியவர்களுக்கெனச் சிறந்த கல்வி வசதி செய்து தர வேண்டுமென்று 'அனைவருக்கும் கல்வி வாய்ப்புத்' திட்டத்தை ஏற்படுத்தியது. சிறந்த முறையில் நடைமுறைப்படுத்தாததால் இத்திட்டம் வெற்றி பெறவில்லை.

மக்கள் நெருக்கமில்லாத இடங்களில் தொடக்கப் பள்ளிகளுக்கென ஆசிரமங்கள் நிறுவப்பட வேண்டும் என்றும். நடுநிலைப் பள்ளிகளுக்கென விடுதி வசதிகளை ஏற்படுத்த வேண்டும் என்றும் மலைப் பகுதிகளில் அலுவலகங்கள் அமைக்கப்பட வேண்டும் என்றும், பழங்குடிகளுக்கு அலுவலகப் பொறுப்பாளர் போன்ற உயர்ந்த பதவி அளிக்கப்பட வேண்டும் என்றும், பழங்குடிக் குழந்தைகளைத் தேர்நதெடுத்து அவர்களுக்கென எளிய முறையில் கல்வி பயிற்றுவிக்க வேண்டும் என்றும் கோத்தாரி கல்விக்குழு பரிந்துரை செய்திருந்தது. ஆனால், இப் பரிந்துரைகளை முழுமையாகச் செயற்படுத்த இயலவில்லை.

இப்போது மைய, மாநில அரசுகள் தாழ்த்தப் பட்ட, பின்தங்கிய மக்களுக்கும், பழங்குடியினருக்கும் வேலைவாய்ப்பிற்காகத் தனியாக இட ஒதுக்கீடு செய்துள்ளன. இதனால் நலிந்த பிரிவினர்கள் பலர் இப்பொழுது மேன்மை நிலையை அடைந்து கொண்டிருக்கிறார்கள். மேலும், பழங்குடி மக்களுக்கெனச் சிறப்புப் பள்ளிகளை நிறுவுவதில் அரசு தனிமுயற்சி எடுத்துள்ளது.

ஏறக்குறைய ஆண்களுக்குச் சமமாகப் பெண்களும் இக்காலத்தில் கல்வி கற்கின்றார்கள். இந்நூற்றாண்டில் பெண்கல்வி ஒரு பிரச்சனையாகத் தோன்றியது. பின்பு அவர்களுக்கென ஒருசில சலுகைகள் வழங்கப்பட்டன. அவர்களுடைய கல்வித் தரத்தையும் ஓரளவிற்கு உயர்த்தும் நிலை ஏற்பட்டுள்ளது. இதற்குக் காரணம், பெண்கல்வி பற்றிய பட்டிமன்றம், பேச்சுப் போட்டி, கருத்தரங்கு போன்ற போட்டிகள் பள்ளிகளிலும் பொது இடங்களிலும் நடத்தியமையே ஆகும். மேலும், பெண்களுக்கெனத் தையலகம், சுருக்கெழுத்து, தட்டெழுத்து, கைத்தொழில், முதியோர் கல்வி போன்றவைகளில் பயிற்சி அளிக்கப் பட்டதும் இதற்குக் காரணமாகும்.

**உடல் நலிவடைந்தவர்களுக்கான கல்வி**: குழந்தைகள், பொதுவாக உடல்நலத்தில் வேறுபட்டுக் காணப் படுகிறார்கள். சில குழந்தைகள் நெடுநாளாக உடல் நலமில்லாமல் இருப்பதால் அவர்களுடைய கல்வி பெரும்பாலும் பாதிக்கப்படுகிறது. மேலும் காது கேளாதவர்கள், கை, கால்கள் ஊனமுற்றவர்கள் பேசமுடியாதவர்கள், கண் தெரியாதவர்கள், பார்வையில் குறைபாடு உடையவர்கள் முதலியோர் இத்தகைய பிரிவினுள் அடங்குவர். இதயநோய், எலும்புருக்கி நோய் போன்ற பல்வேறு நோயினால் பாதிக்கப்பட்டவர்களும் உடல்நலிந்த பிரிவினராகக் கருதப் படுகின்றனர்.

உடல் நலிந்தவர்களிடையே கற்கும் திறன் மிக்க வேறுபாடு உடையதாக உள்ளது. அதாவது காது கேளாதவர்களுக்கெனக் கல்வி அளிக்கப்படும் போது ஒரு சிலர் விரைவில் கற்றுக் கொள்வார்கள். ஒரு சிலருக்கு நாள்கள் நீடிக்கும். ஒரு சிலருக்குப் புரியாமலேயே இருக்கும். உடல் நலிந்தவர்களுக்குக் காது கேட்கும் கருவி அளித்தல் போன்ற தக்க உதவி

செய்தால், அவர்களுள் பெரும்பான்மையோர் மற்றக் குழந்தைகளைப் போலக் கல்வி பெற முயல்வார்கள். சிறிதளவு காது கேளாதவர்களையும், பார்வை மங்கியவர்களையும் வகுப்பறையில் முன்னால் உட்கார வைப்பதன் மூலம் அவர்களுடைய குறைகள் சிறிது குறைக்கப்படும். இத்தகைய சலுகைகள் அளிக்கப்படுவதின் மூலம் அவர்களுடைய கல்வித் தரத்தை உயர்த்த முடியும்.

இத்தகைய குழந்தைகளுக்கு வகுப்பறையில் ஆசிரியர்கள் விரிவான விளக்கம் தருவதிலும், மெதுவாகப் பயிற்றுவிப்பதிலும், வீட்டுப் பாடம் செய்ய வைப்பதிலும் மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

காது கேளாதவர்களுக்குக் காது கேட்கும் கருவி பள்ளியிலிருந்து அளிக்கப்பட வேண்டும்; பார்வை குறைவாக உள்ளவர்களுக்குக் கண்ணாடியையும்,கை கால்கள் சரியில்லாதவர்களுக்கு அதற்குத் தகுந்த பொருள்களையும் பள்ளியிலிருந்து தரமுயல வேண்டும். அவர்களுடைய தேவைகளை அவர்களே நிறைவு செய்கின்ற அளவுக்குக் கல்வி கற்பிக்கப்பட வேண்டும்.

உடல் நலிந்துள்ளது என்கிற தாழ்வு மனப்பான்மையாலும், சரியாகத் தெளிவாகப் பேசும் திறமையின்மையாலும், தெளிவாகக் காது கேளாததாலும், பள்ளி விடுமுறையினாலும், பெற்றோர், கற்றோர் ஆகியோரின் பேச்சினாலும் அவர்களுடைய கல்வி பாதிக்கப்படுகிறது. இத்தகைய பாதிப்புகள் வகுப்பறையில் ஏற்படாதபடி ஆசிரியர் கவனித்துக் கொள்ள வேண்டும்.

இவ்வகை மாணவர்களுக்கு ஏனைய பள்ளிகளில் கற்பிப்பது போலக் கற்பிக்க வேண்டும். அவர்களுடைய ஆர்வத்தை முன்னிட்டுத் தனிவகையில் அதனை வளர்க்க வேண்டும்.

**மனநலம் குன்றியவர்களுக்கான கல்வி:** ஒவ்வொருவருடைய அறிவு வளர்ச்சியும் அவர்களுடைய நுண்ணறிவுத்திறன் (I.Q.) மதிப்பிலிருந்து மதிப்பிடப்படுபடுகிறது. சராசரி வளர்ச்சியுடைய குழந்தைகளின் செயல்களிலிருந்து மிகவும் பின்தங்கிய செயல்களைச் செய்வோர் மனநலம் குன்றியவர்கள் எனக் கருதப்படுகிறார்கள். பொதுவாக மனநலம் குன்றியவர்கள் பேதை, அறிவின்மை, மெல்லக் கற்போர் போன்றவர்களாகவும் கருதப்படுகின்றனர். மெதுவாகக் கற்போர்களிடையே ஆசிரியர் தனிக்கவனம் செலுத்தினால் அவர்கள் சில நேரங்களில் சராசரி மாணவர்களைப் போன்று கற்பார்கள். பேதையர், அறிவிலார் போன்றவர்களுக்கு அவர்களின் மனமறிந்து பாடப் பகுதிகளைச் சிறிது சிறிதாகப் பிரித்து மிக்க ஆர்வத்துடன் கற்பிக்க வேண்டும். அதாவது நுண்ணறிவுமிக்க குழந்தைகளுக்கு எதிர்மறையாக மெதுவாகக்கற்கும் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள வேண்டும். அவர்களுக்கு எனத் தனிப்பயிற்சியுடன் கல்வி அளிக்கப்பட வேண்டும். மெதுவாகக் கற்போரை மந்தநிலையில் (Dull) உள்ளவர்கள் என்றும், அசாதாரணமானவர்கள் என்றும் பிரிக்கலாம். அத்தகைய பிரிவில் உள்ளவர்களுக்குக் கல்வியைப் பகுதி பகுதியாகப் பிரித்துச் சரியான ஆசிரியரின் கவனிப்புடன் பயிற்றுவிக்க வேண்டும்.

சமுதாயப் பண்பாட்டுச் சூழ்நிலைக்கேற்ப மனிதனின் தேவைகளும் மிகுதியாகின்றன. எனவே, உற்பத்தியையும் பெருமளவில் பெருக்க வேண்டும். இதற்கு நாட்டில் கல்வித் தரத்தை உயர்த்த வேண்டும். அனைவருக்கும் பயிற்சி அளித்து அவரவர்களின் தேவையை அவரவரே நிறைவு செய்யும் அளவிற்குக் கல்வி பயிற்றுவிக்க வேண்டும்.

உடல் நலிந்தவர்களுக்கெனச் சமுதாய, பொருளாதாரத் தேவைகள், மனஎழுச்சி போன்ற உணர்ச்சிகள் தனியாக அமைவதில்லை. சராசரி மனிதர்களைப் போன்றே அவர்களுக்கும் அனைத்து உணர்ச்சிகளும் தூண்டப்படுகின்றன. அவர்களுக்கும் மற்றவர்களைப் போல வாழவேண்டும் மற்றவர்களோடு சேர்ந்து பழக வேண்டும், அனைத்து வேலைகளையும் செய்ய வேண்டும் என்கிற எண்ணம் தோன்றுகிறது. அவர்கள் சமுதாயத்தினின்று பிரிந்து வாழ யாரும் விரும்புவதில்லை. ஆகவே, அவர்கள் மற்றவர்களைப் போல் அனைத்து நிலையிலும் உயரச் சிறந்த பயிற்சியுடன் தகுந்த கல்வி அளிக்கப்படல் வேண்டும். அத்தகைய கொள்கை நாட்டு வளர்ச்சிக்கு உதவி செய்யும். கே.ஆ.

**நவ்ததோலி,** மத்திய பிரதேச மாநிலத்தில் நிமார் (Nimar) மாவட்டத்தில் உள்ளதோர் ஊர். தொல்லியல் சிறப்புப் பெற்ற இவ்வூர் நருமதை ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. நவ்ததோலியில் (Navdatoli) 1952-53-ஆம் ஆண்டுகளிலும், 1957-59-ஆம் ஆண்டுகளிலும் அகழாய்வுகளை டாக்டர் சங்காலியா என்பவர் மேற்கொண்டார். இவ்வகழாய்வுகளில் பண்டைக் கால மக்கள் 7 பண்பாட்டுக் காலங்களில் இங்கு வசித்துள்ளனர் என்பது கண்டறியப்பட்டது. இப்பண்பாட்டுக் காலங்களில் மூன்றாம் பண்பாட்டுக் காலத்தில் இப்பகுதியில் மக்கள் தொகை மிகுதியாக இருந்தது.

இங்கு வாழ்ந்த மக்கள் பல்வகை மட்கலன்களைப் பயன்படுத்தினர். அவை பல்வேறு வடிவமைப்பு

களும் வேலைப்பாடுகளும் பெற்றிருந்தன. இப்பகுதியில் கி.மு. 2,000த்திலேயே மக்கள் வாழ்ந்துள்ளனர். ஏழாம் பண்பாட்டுக்காலம் முசுலிம்களும் மராத்தியர்களும் வாழ்ந்த காலமாகும். இவ்வகழாய்வுகளில் சுடுமண் பொம்மைகளும் வளையல்களும் மணிகளும் அழிவுற்ற தூபி ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இத்தூபியின் செங்கற்கள் சிலவற்றில் எழுத்துப் பொறிப்புகள் இருந்தன. இதன் எழுத்தமைவு கி.மு. 3-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. சு.இரா.

**நவக்கிரகங்கள்**: ஒன்பது கோள்கள் எனப் பொருள்படும் 'நவக்கிரகங்கள்' என்னும் சொல்லாட்சி சோதிடத்துறையில் பயன்படுத்தப் பெறுகின்றது. இந்துமுறைச் சோதிடத்தில் ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது என்னும் ஒன்பது கோள்கள் உள்ளன வெனக் கொள்ளப் பெறுகின்றது.

இராசிச் சக்கர வட்டத்தில் 360 பாகைகளில், ஒவ்வொன்றும் முப்பது பாகை தூரமுடைய பன்னிரண்டு இராசிகளும், 13 பாகை 20 நுண்பிரிவு தொலைவுள்ள இருபத்தேழு நாள் மீன்களும், அவற்றின் உள்ளடங்கிய பல விண்மீன்களும், பாகை தூர அளவில் தமக்குரிய நிலையான இடத்தைப் பெற்றிருக்கின்றன. பூமி சுழல்வதால் இராசிச் சக்கர வட்டத்துடன் இராசிகளும் நட்சத்திரங்களும் விண்மீன்களும் கிழக்கிலிருந்து மேற்கே செல்லுவது போலத் தோன்றுகின்றன. இவை தவிரச் சூரியன் முதலான 'கோள்கள்' என்பன, இராசிச் சக்கர வட்டத்தில் கொஞ்சம் கொஞ்சமாக இடம் பெயர்ந்து, வட்டத்தின் 360 பாகையினையும் தமக்குரிய குறிப்பிட்ட கால அளவில் சுற்றிவரும். அப்படி இராசிச் சக்கரத்தில் இடம் பெயர்வதுடன் பூமியினையும் நாள்தோறும் சுற்றி வருகின்றன.

'விண்மீன்' (Star) என்பது தானே 'ஒளிவிடும்' என்றும், கிரகம் (Planet) என்பது ஒளியினைக் கொள்ளுகின்ற 'கோள்' என்றும் அறிவியலானது பாகுபடுத்தியுள்ளது. அறிவியற் கருத்தின்படி, தானே ஒளிவிடும் 'சூரியன்' ஒரு விண்மீன் ஆகும். ஒளிபெறும் பூமியினைச் சுற்றும் 'சந்திரன்' ஒரு துணைக்கோள் (Sub Planet) ஆகும். கிரகம், வடமொழியில் சஞ்சரிப்பது எனப்பொருள்படும். கிரகம் (Planet) என்னும் சொல்லுக்கு அலைந்து திரிவது (Wanderer) என்பது பொருள். இந்தப் பொருளின்படி, இராசிச் சக்கர வட்டத்தில் இடம் பெயர்ந்து சுற்றி வருகின்ற சூரியனும் சந்திரனும் 'கிரகங்கள்' என்றே சோதிடத்தில் பேசப்படுகின்றன.

இராசிச் சக்கர வட்டத்தில் பிரபஞ்ச நெடுக்குக் கோட்டின் தொலைவினை (Celestial Longitude) அளந்து, கிரகம் நின்ற துல்லியமான தொலைவிற்குக் 'கிரகசுபுடம்' அல்லது 'கிரகப்புடம்' என்று பெயர் கொடுத்துள்ளனர்.

**சூரியக் குடும்பத்தில் உள்ள கிரகங்கள்** (Planets in the Solar System): சூரியக் குடும்பத்தில் சூரியன், புதன், சுக்கிரன், சந்திரன், பூமி, செவ்வாய், வியாழன், சனி, யுரேனசு, நெப்டியூன், புளூட்டோ என்னும் கிரகங்கள் உள்ளன. இவற்றுள் சூரியன் தலைமைக் கிரகம் ஆகும். ஏனைய கிரகங்கள் அனைத்தும் தமக்குரிய வரையறுக்கப்பட்ட பாதையில் சூரியனைச் சுற்றி வருகின்றன. இராசிச் சக்கரத்திலும் இடம் பெயர்ந்து வருகின்றன.

சந்திரன் பூமியைச் சுற்றுவதுடன், (பூமி சூரியனைச் சுற்றி வருவதால்) சூரியனையும் சுற்றி வருகிறது; இராசிச் சக்கரத்திலும் சுற்றி வருகிறது. பூமி சூரியனைச் சுற்றி வருகிறது; தானே சுழலும் பூமியிலிருந்து சூரியனைப் பார்ப்பதால் பூமியைச் சூரியன் தினமும் சுற்றி வருவது போன்ற காட்சி தென்படுகின்றது. இந்தக் காட்சியில் உள்ள சூரியனது பாதை யாவது 'சூரியனது நாள்வழிப்பாதை' (Ecliptic) எனப்படுகிறது.

சூரியக் குடும்பத்தில் உள்ள கடைசிக் கிரகங்களான யுரேனசு, நெப்டியூன், புளூட்டோ என்னும் கிரகங்கள் இந்துமுறைச் சோதிடம் ஏற்பட்ட பிறகு பிற்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட புதிய கிரகங்களாகும். இவற்றுக்கு மேலைநாட்டுச் சோதிட முறையில் பலன் கூறுகின்றனர்; இந்து முறைச் சோதிடத்தில் இவை கொள்ளப் பெறவில்லை. 'எக்சு' என்னும் கிரகம் (Planet X) புளூட்டோவுக்கும் அப்பால் இருப்பதாக 1987-ஆம் ஆண்டுக் கண்டுபிடித்துள்ளனர்.

சூரிய மண்டலக் குடும்பத்தில் உள்ள கோள்கள், சூரியன்-புதன்-சுக்கிரன்-பூமியும், அதனைச் சுற்றும் சந்திரனும்- செவ்வாய் - வியாழன் -சனி - யுரேனசு - நெப்டியூன் - புளூட்டோ என்னும் வரிசையில் அடுத்தடுத்து அமைந்துள்ளன. சூரியனுக்கும் பூமிக்கும் நடுவில் புதனும் சுக்கிரனும் உள்ளன. பூமியைச் சந்திரன் சுற்றி வருகிறது. பூமிக்கு அப்பால் செவ்வாய், வியாழன், சனி, யுரேனசு, நெப்டியூன், புளூட்டோ ஆகியவை உள்ளன.

பூமியிலிருந்து கிரகங்களைச் சூரியன் வழியாக மேல் நோக்கிப் பார்த்தால், சந்திரன் நீங்கலாக, சூரியன்-புதன்- சுக்கிரன்-செவ்வாய்-வியாழன்-சனி என்னும் வரிசையில் அமைந்திருக்கக் காணலாம். பூமியிலிருந்து கோள்களைச் சந்திரன் வழியாக மேல் நோக்கிப் பார்த்தால், சூரியன் நீங்கலாக, சந்திரன்-புதன்-சுக்கிரன்-செவ்வாய் - வியாழன்-சனி என்னும் வரிசையில் அமைந்திருக்கக் காணலாம்.

இந்துமுறைச் சோதிடத்தில் உள்ள ஒன்பது கோள்களுக்கும் பெயரிடப் பெற்றுள்ளது. சூரியனும் சந்திரனும் 'மண்டலக் கிரகங்கள்' எனப்படும். செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பன ஐந்தும் 'தாராக் கிரகங்கள்' (தாரா-நட்சத்திரம்) எனப்படும். இராகு, கேது என்னும் இரண்டும் 'நிழற் கோள்கள்' அல்லது 'சாயாக் கிரகங்கள்' (Shadow Planets-Nodes, Umbra and Penumbra) எனப்படும்.

இராசிச் சக்கரத்தில் சூரியன் சுற்றிவருகின்றஆண்டு அடைவுப் பாதையும் (Ecliptic), சந்திரன் பூமியைச் சுற்றி வரும் திங்கள் அடைவுப் பாதையும் சிலமுறை வெட்டிக் கொள்கின்றன. இப்படி வெட்டிக் கொள்ளும் இடங்களுக்குக் 'கணுக்கள்' (Nodes) என்பது பெயர். இந்தக் 'கணு' என்பது சூரியனும் சந்திரனும் மோதிக் கொள்ளும்நிலை போன்ற ஒரே இடமன்று; இது ஒரு குறிப்பிட்ட பாகையில் அமைகின்றது. இந்தக் கணு அமைந்த பாகையில் உள்ள இடை வெளி இலட்சக் கணக்கான கல் தொலைவு இடை வெளி உள்ளது. இந்த இடை வெளியான நிழற் பகுதிக்கு 'நிழற்கோள்' அல்லது 'சாயாக்கிரகம்' என்பது பெயர். இந்த இடைவெளியில் சந்திரனோ பூமியோ வரும்போதுதான் முறையே 'சூரிய கிரகணமும்' 'சந்திர கிரகணமும்' (Solar Eclipse and Lunar Eclipse) ஏற்படுகின்றன. இவ்விரண்டு கணுக்களும் ஒன்றுக்கொன்று 180 பாகை சம தூரத்தில் உள்ளன. இவற்றுள் சூரியனை நோக்கியுள்ள மேற்கணுவுக்கு (Anterior Node) 'இராகு' என்பது பெயர். இராகுவின் எதிர்ப்புறம் உள்ள கீழ்க்கணுவுக்கு (Posterior Node)'கேது' என்பது பெயர். இராகுவும் கேதுவும் உருவக முறையில் 'கரும்பாம்பு' என்றும் 'செம்பாம்பு' என்றும் கூறப்படுகின்றன. சூரியனும் சந்திரனும் இராசிச் சக்கரத்தில் வலசாரியாகச் (Clockwise) சுற்றிவரும்போது இந்தக் கணுக்கள் இடசாரியாகச் (anticlockwise) சுற்றி வருகின்றன.

ஒவ்வொரு கோளும் தனது அச்சில் (Bhramana = Axis) தானே சுழல்வதற்குக் 'கிரகச் சுழற்சி (Spinning) என்பது பெயர். கிரகங்கள் தமக்குரிய நீள்வட்டப் பாதையில் (Elliptical orbit) சூரியனைச் சுற்றிச் சுழன்று வருகின்றன (Revolving). இப்படி நீள்வட்டப் பாதையில் சுற்றி வருவதுடன், இராசிச் சக்கரவட்டத்தில் 360 பாகையிலும் இடம் பெயர்ந்து வருகின்றன.

கிரகங்கள் சூரியனைச் சுற்றி வரும் காலம் என்பது வேறு. இராசிச் சக்கரவட்டத்தில் சுற்றிவரும் காலம் என்பது வேறு. இராசிச் சக்கரத்தில் கிரகங்கள் சுற்றிவரும் உத்தேச காலம் இங்கு தரப் பெறுகின்றது. சூரியன்-ஓர் ஆண்டு; சந்திரன்-ஓர் ஆண்டு; செவ்வாய்-ஒன்றரை ஆண்டு; புதன்-ஓர் ஆண்டு; வியாழன். பன்னிரண்டு ஆண்டு; சுக்கிரன்-ஓர் ஆண்டு; சனி-30 ஆண்டு; இராகு-பதினெட்டு ஆண்டு; கேது -18 ஆண்டு யுரேனசு-168 ஆண்டு; நெப்டியூன்-250 ஆண்டு; புளூட்டோ-336 ஆண்டு.

இந்துமுறைச் சோதிடத்தில் சூரியன் முதல் சனி வரையுள்ள ஏழு கிரகங்கட்குக் கீழ்க்காணுமாறு இராசிச் சக்கரத்தில் 'ஆட்சி இராசிகள்' அல்லது சொந்த வீடுகள்' நியமிக்கப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| மீனம் வியாழன் | மேடம் செவ்வாய் | இடபம் சுக்கிரன் | மிதுனம் புதன் |
| கும்பம் சனி | | | கடகம் சந்திரன் |
| மகரம் சனி | | | சிம்மம் சூரியன் |
| தனுசு வியாழன் | விருச்சிகம் செவ்வாய் | துலாம் சுக்கிரன் | கன்னி புதன் |

இராகு கேதுவுக்கு ஆட்சி வீடு தரப்படவில்லை. சிம்மம் முதல் மகரம் வரை வலசாரியாகப் பார்த்தால் பூமியிலிருந்து சூரியன் முதலாகச் சனி வரையிலுமுள்ள கிரக அமைப்பு வரிசை முறை அமைந்துள்ளது. இவற்றைப்'பகல் ஆட்சி வீடுகள்' என்று கூறுவர். கடகம் முதல் கும்பம் வரை இடசாரியாகப் பார்த்தால், பூமியிலிருந்து சந்திரன் முதலாகச் சனி வரையிலும் உள்ள கிரக அமைப்பு வரிசை முறை அமைந்துள்ளது. இவற்றை 'இரவு ஆட்சி வீடுகள்' என்பர்.

இந்த ஆட்சிக் கிரகங்கட்கு 'இராசி நாதன்' (Sing Lord) என்பது பெயர். இந்த ஆட்சி வீடுகள் கிரேக்கர்களால் நியமிக்கப்பட்டனவென்பது பிரித்தானியர் கலைக் களஞ்சியத்தால் அறியலாகும். இந்து முறைச் சோதிடத்தைக்கட்டமைத்துக்கொடுத்த வராகமிகிரரும்(கி.பி.6-ஆம் நூ.)ஏற்றுக் கொண்டுள்ளார். வராகமிகிரர்க்கு முற்பட்ட கிறித்துவுக்கு முந்தைய காலத்திய சோதிடவியலாரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். சூரியனுக்குச் சிம்மத்தையும் சந்திரனுக்குக் கட

கத்தையும் 'ஆட்சி வீடுகள்' என்று நியமித்ததற்கான அறிவியற் காரணம் தெரியவில்லை.

சூரியன் முதல் சனி வரையுள்ள ஏழு கிரகங்கட்கு 'உச்ச இராசி' என்றும் 'நீச இராசி' என்றும் சில இராசிகள் நியமிக்கப்பட்டுள்ளன. உச்ச இராசிக்கு எதிரில் நீச இராசி உள்ளது. உச்ச இராசியில் உள்ள கிரகமானது பூமிக்கு அருகிலிருந்து தனது முழு ஆற்றலையும் காட்டும்; நீச இராசியில் உள்ள கிரக மானது, பூமிக்குத் தொலைவிலிருந்து தன்னாற்றல் குன்றி இருக்கும் என்பது கருத்து. கிரகங்கள் உச்சம் நீசம் அடையும் இராசிகளும் பாகைகளும் இவண் தரப் பெறுகின்றன.

| கிரகம் | உச்ச இராசி | நீச இராசி | உச்சம் அல்லது நீசம் அடையும் பாகை |
|---|---|---|---|
| சூரியன் | மேடம் | துலாம் | 10 பாகை |
| சந்திரன் | இரிடபம் | விருச்சிகம் | 3 பாகை |
| செவ்வாய் | மகரம் | கடகம் | 28 பாகை |
| புதன் | கன்னி | மீனம் | 15 பாகை |
| வியாழன் | கடகம் | மகரம் | 5 பாகை |
| சுக்கிரன் | மீனம் | கன்னி | 27 பாகை |
| சனி | துலாம் | மேடம் | 20 பாகை |

இராசிச் சக்கரத்தில் கிரகங்கள் இடம் பெயர்ந்து செல்லும் நிலைக்குக் 'கிரக கதி' என்பது பெயர். இது எண்வகைப்படும். 1) கிரகங்கள் வலசாரியாகச் சுற்றி வருவதற்கு 'நேர்கதி' (Direct motion) என்பது பெயர். இராகுவும் கேதுவும் இடசாரியாகவே சுற்றி வரும். 2) கிரகங்கள் சூரியனைச் சுற்றிவரும் நீள் வட்டப் பாதையில் அவை சூரியனுக்குத் தொலைவில் (Perigi) சென்று விட்டால் மேலும் விலகி விடாமல் இருக்கும்படி பின்னோக்கி இழுக்கப்படும். இதற்கு 'வக்கிரகதி' (Retrograde motion) என்பது பெயர். பின்நோக்கிச் செல்வது என்பது தோற்றத்தில் தென் படும் நிலை; உண்மை நிலையன்று என்பது சில வானவியலார் கருத்து. வக்கிரகதி முடிந்து மீண்டும் நேர்கதியில் செல்வதற்கு 'வக்கிர நிவர்த்தி' என்பது பெயர். சூரியனுக்கும் சந்திரனுக்கும் வக்கிரகதி இல்லை. 3) சூரியனுக்கு அருகில் (Perigi) வருகின்ற கிரகம் - வழக்கமான வேகத்தைவிட அதிகமான வேகத்தில் நகர்வதற்கு 'அதிசாரக் கதி' (Acceleration) என்பது பெயர். 4) கிரகங்கள் ஓர் இராசியில் தங்கும் வழக்கமான காலத்தைவிட நீண்ட காலம் தங்கும் நிலைக்குத் 'தம்பனம்'(Stagnation) என்பது பெயர். 5) கிரகங்கள் நீச பாகத்திலிருந்து உச்ச பாகம் நோக்கிச் செல்லும் நிலைக்கு 'ஆரோகணம்' (Ascending) என்பது பெயர். 6) கிரகங்கள் உச்ச பாகத்திலிருந்து நீச பாகத்திற்குச் செல்லும் நிலைக்கு 'அவரோகணம்' (Descending) என்பது பெயர். 7) கிரகங்கள் சந்திரனை நெருங்கியுள்ள நிலைக்குச் 'சங்கமம்' (Combining) என்பது பெயர். 8) கிரகங்கள் சூரியன் நின்ற பாகையினை நெருங்கிவரும் நிலைக்கு 'அசுத்தாங்கம்' (Immersion)என்பது பெயர். அசுத் தாங்கம் அடையும் கிரகம் வலிமை இழந்துவிடும்.

இந்துமுறைச் சோதிடத்தில் வளர்பிறைச் சந்திரன், வியாழன், சுக்கிரன், புதன் ஆகியன சுபக் கிரகங்கள் எனவும்; சனி, ராகு, கேது, சனியுடன் கூடிய வியாழன்,செவ்வாய் என்னும் கிரகங்கள் அசுபக் கிரகங்கள் எனவும் பாகுபடுத்தப்பட்டுள்ளன.

பொன்.பா.

**நவக்கிரகங்கள் (சிற்பம்):** சூரியன் கிரகங் களுக்குத் தலைமைக் கிரகமாக விளங்குகிறது. சூரியன் வழிபாடு மிகவும் பழமையானது. தமிழகத் தில் சங்க காலம் முதல் இவ்வழிபாடு சிறந்திருந்தது என்பதை இலக்கியச் சான்றுகளால் அறியலாம். சூரியனுக்குப் பூம்புகாரில் கோயில் இருந்ததாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது. ஆனால், சிற்ப அமைப்பில் பல்லவர்கள் காலத்திலிருந்துதான் இதற்குச் சான்று கள் கிடைத்திருக்கின்றன. சூரியன் விமான தேவதை யாகவும் இருக்கும் அமைப்புகள் இக்காலத்தில் காணப்படுகின்றன. விமானத்தின் மேற்பகுதியில் கிழக்குப்புறத்தில் சூரியன் சிற்பம் காணப்படும். மாமல்லபுரத்தில் தர்மராச ரதத்தில் கிழக்குப் புறம்


நவக்கிரகங்கள்

சூரியன் சிற்பம் காணப்படுகிறது. இதே காலத்தைச் சேர்ந்த திருச்சி மலைக்கோட்டையில் உள்ள குடைவரைக் கோயிலில் சூரியனின் சிற்பம் காணப்படுகிறது. எனவே, இக்காலத்தில் பிற தெய்வங்களுடன் சேர்த்துச் சூரியனும் வழிபடப் பெற்றது என்பதை அறியலாம்.

**பரிவார தேவதை:** சோழர் காலத்தில் சூரியனும் சந்திரனும் பரிவார தெய்வங்களாக விளங்கியிருப்பதைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. ஆதித்த சோழன் காலத்தில் திருக்கட்டளை (புதுக்கோட்டை மாவட்டம்) என்ற ஊரில் அமைக்கப்பட்ட கோயிலில் சூரியனும் சந்திரனும் பரிவார தேவதைகளின் வரிசையில் உள்ளனர் குடந்தை நாகேசுவரசுவாமி கோயிலில் சூரியனுக்குத் தனிக்கோயில் சுற்றுப்பாதையில் உள்ளது. இதேபோன்று பல கோயில்களில் சூரியனுக்குச் சுற்றுப்பாதையில் தனிச் சந்நிதி இருந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

**நவக்கிரக சந்நிதியின் வளர்ச்சி:** தஞ்சை மாவட்டத்தில் சூரியனுக்கும் நவக்கிரகங்களுக்குமாகக் கட்டப்பட்ட சூரியனார்கோயில் ஆடுதுறை அருகே அமைந்துள்ளது. இது முதற்குலோத்துங்க சோழனால் அவனது 44-ஆம் ஆட்சி ஆண்டில் கட்டப்பட்டது. இது 'குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயம்' எனக் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளது. இங்குக் கோயிலின் கருவறையில் சூரியன் தேவியருடன் பிரதான தெய்வமாக விளங்குகிறான். சந்திரன், செவ்வாய். புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது ஆகியோருக்குத் தனித்தனிச் சந்நிதி அமைந்துள்ளன. கருவறை எதிரில் சூரியனின் வாகனமான குதிரை அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலே இன்று நவக்கிரகங்களின் சந்நிதிகள் தனியாக அமைவதற்கு முன்னோடியாக விளங்கியது என்று கொள்வதில் தவறில்லை. ஏனெனில், இதற்கு முன்பு நவக்கிரகங்களுக்குத் தனிக்கோயிலோ சந்நிதியோ அமைக்கப்படவில்லை.

**சிற்பங்களில் நவக்கிரகங்கள்:** சிதம்பரம் கோயிலில் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் விக்கிரமசோழன் காலத்தில் கட்டப்பட்ட மேற்குக் கோபுரத்தில் உள்ள கோட்டங்களில் தனித்தனி இடங்களில் நவக்கிரகங்களின் உருவங்களைக் காணலாம்.இச்சிற்பங்கள் உள்ள கோட்டத்தின் மேற்பகுதியில் சிற்பங்களின் பெயர்கள் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

இதற்குப் பின்னர் விசயநகர, நாயக்க மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்ட கோயில்களிலும், மேலும் பழமையான கோயில்களில் விரிவுபடுத்திக் கட்டப்பட்ட பகுதிகளிலும் நவக்கிரகங்களுக்காகத் தனிச் சந்நிதிகள் ஏற்படுத்தப்பட்டு வழிபாடு நடைபெற்று வருகிறது.

ஒவ்வொரு கிரகமும் சிற்ப அமைப்பில் தனிச் சிறப்புப் பெற்று விளங்குகிறது.

**சூரியன்** நின்ற நிலையில் இரு கைகளில் தாமரை மலரை ஏந்திய வண்ணம் இருப்பர். தலையின் பின்புறம் ஒளிவட்டம் இருக்கும். சூரியன் கல்வெட்டுக்களில் 'ஆதித்தேசுவரம் உடையார்','ஆதித்த பட்டாரகர்' என்றெல்லாம் சொல்லப்படுகிறார். கோனேரிராசபுரத்தில் உத்தமசோழனின் 6-ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயிலில் எழுந்தருளியுள்ள 'ஆதித்தேசுரம் உடையார்க்கு' அளிக்கப்பட்ட ஒரு நந்தா விளக்குத் தானத்தைக் குறிப்பிடுகிறது. இதுபோன்றே வழிபாட்டிற்காகத் தானமளித்ததைப் பற்றி விருத்தாசலம், உடையார்குடி, சக்கரப்பள்ளி முதலிய கோயில் கல்வெட்டுகள் கூறுகின்றன.

**ஆழியில் ஆதவன்:** குடந்தை நாகேசுவரசுவாமி கோயிலில் பிற்காலச் சோழர் காலத்தைச் சேர்ந்த ஒரு மண்டபம் உள்ளது. அம்மண்டபத்தின் இருபுறமும் கல்லால் ஆன இரு குதிரைகளும், தேர்ச் சக்கரமும், உள்ளன.சக்கரங்களின் ஆர்க்கால்களின் நடுவே 12 அழகிய சூரியர்களின் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இது ஆண்டில் உள்ள 12 மாதங்களைக் குறிப்பிடுவதாகும்.

**துவாதச ஆதித்தர்கள்:** கங்கைகொண்ட சோழபுரம் கோயிலிலிருந்து 12 சூரியர்களின் கற்சிலைகள் அகழ்ந்து எடுக்கப்பட்டன. சைவசமயத்துத் தெய்வங்களில் 12 சூரியர்கள் உள்ளனர். சைவசமய நூல்கள் அவர்களின் பெயர்களைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றன. 1) வைகர்த்தர்,2) விவசுதர், 3) மார்த்தாண்டர், 4) பாசுகரர், 5) இரவி, 6) உலகப் பிரகாசர் 7) உலகசாட்சி, 8) திரிவிக்கிரமர், 9) ஆதித்தர், 10) சூரியர், 11) அம்சுமாலி, 12) திவாகரர். இவர்கள் ஒவ்வொருவரும் 12 திசையில் இருக்கின்றனர். இவர்களுடைய வழிபாடு கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் இங்குச் சிறப்பாக நடைபெற்றது என்பதை உணரலாம்.

**கங்கை கொண்ட சோழபுரம்-சௌரபீடம்:** கங்கைகொண்ட சோழபுரத்தில் மகாமண்டபத்தில் 'கமலயந்திரம்' என்னும் அரிய சூரியன் சிற்பம் உள்ளது. இப்பீடம் இரண்டு தளம் உடையதாக உள்ளது.மேற்குப் பகுதியில் மலர்ந்த தாமரை மலரும், அதன் இரு பக்கங்களிலும் இரண்டு தேர்ச் சக்கரங்களும் உள்ளன. அதை ஏழு குதிரைகள் இழுக்கின்றன. அருணன் தேர் ஓட்டுகிறான். மேற்பகுதியில் எட்டுத் திசைகளில் நவக்கிரங்களின் உருவங்கள் உள்ளன. இது சாளுக்கிய நாட்டைச் சேர்ந்ததாகும். இதை இராசேந்திர சோழன் தன் வெற்றியின் நினைவாக அந்நாட்டிலிருந்து கொண்டு வந்தான். இதுபோன்ற

'சௌரபீடம்' ஒன்று தாராசுரம் கோயிலிலும் உள்ளது.

**சூரிய நாராயணன்:** சிதம்பரம் கோயிலில் மேற்குக் கோபுரத்தின் கீழ்ப்பகுதியில் தேவகோட்டத்தில் ஒரு சூரியன் சிற்பம் காணப்படுகிறது. இச்சூரியனுக்கு மூன்று தலைகளும் எட்டுக் கைகளும் உண்டு. இச் சூரியன் கைகளில் மலர்கள், கதை, அட்ச மாலை, பாசம் முதலியவற்றை ஏந்தியுள்ளார்; ஒற்றைச் சக்கரமுடைய தேரின்மீது நின்ற வண்ணம் உள்ளார். இத்தேர் நான்கு குதிரைகள் இழுத்துச் செல்லும் வண்ணம் உள்ளது. இவரைச் 'சூரிய நாராயணன்' எனக் கூறுகின்றனர்.

**பிற்காலச் சோழர் சிற்பம்-சிதம்பரம்:** சிதம்பரம் நகரில் அண்மையில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை சூரியன் சிற்பம் ஒன்றைக் கண்டுபிடித்துள்ளது. இதில் இவர் நின்ற நிலையில் தன் இரு தேவியருடன் காட்சி தருகிறார். ஒரு சக்கரம் உள்ள தேரில் ஏழு குதிரைகள் பூட்டி இழுப்பது போல அமைந்துள்ள சிற்பத்தின் பின்புறத்தை நன்கு மலர்ந்த தாமரை மலர் அலங்கரிக்கிறது. ஒவ்வோர் இதழிலும் மேடம், இடபம் என்ற 12 இராசிகளும் சித்திரிக்கப்பட்டுள்ளன. இச்சிற்பம் கி.பி. 12-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

**சந்திரன்:** இவர் சூரியனுக்குத் தென்கிழக்கில் கிழக்கு நோக்கி இருப்பார்; தலையின் பின்புறம் ஒளிவட்டம் கொண்டு கைகளில் மலரை ஏந்திய வண்ணம் இருப்பார். சிதம்பரத்தில் மேற்குக் கோபுரத்தில் சந்திரனுடைய சிற்ப உருவம் உள்ளது. அச் சிற்பத்தின் மேலே 'சந்திரன்' எனப் பொறிக்கப்பட்டுள்ளது.

**செவ்வாய்:** இவரை 'அங்காரகன்' என்றும் கூறுவர். இவர் தண்டம், சக்தி ஆகிய ஆயுதங்களுடன், அபய, வரத முத்திரைகளைக் கைகளில் தாங்கியிருப்பார்; சூரியனுக்கு எதிரில் தெற்கு நோக்கி இருப்பார். ஆடுவாகனம் ஆகும். வைத்தீசுவரன் கோயில், வட பழனி ஆகிய கோயில்களில் இவருக்கெனத் தனிச் சந்நிதி உள்ளது.

**புதன்** சூரியனுக்கு வடகிழக்கில் வடக்கு நோக்கி இருப்பார். இவர் கத்தி, கேடயம், கதை, வரத முத்திரை ஆகியவற்றைத் தம் நான்கு கைகளில் தாங்கியிருப்பார். சிதம்பரம் கோயிலில் மேற்குக் கோபுரத்தில் புதனுடைய சிற்பம் உள்ளது. இவருடைய வாகனம் பாம்பு ஆகும்.

**வியாழன்:** இவரைப் பிரகசுபதி என்றும் குரு என்றும் கூறுவர். இவர் தண்டம்,கமண்டலம், அக்க மாலை, வரதமுத்திரை ஆகியவற்றைத் தம் நானகு கைகளில் தாங்கியிருப்பார்; சூரியனுக்கு வடக்கில் வடக்கு முகம் பார்த்து இருப்பார். அன்னம் இவருக்கு வாகனம் ஆகும்.

**சுக்கிரன்:** சுக்கிரன் எனப்படும் இவர். தண்டம், கமண்டலம், அக்கமாலை, வரதமுத்திரை ஆகியவற்றைத் தாங்கியிருப்பார்; சூரியனுக்குக் கிழக்கில் கிழக்கு நோக்கி இருப்பார். சிதம்பரம் கோயிலில் மேற்குக் கோபுரத்தில் உள்ள சுக்கிரன் சிற்பத்தின் மேலே 'சுக்கிரன்' என்று பொறிக்கப்பட்டுள்ளது. பொருளுக்கு அதிபதி இவரே ஆவார்.

**சனி:** இவர் வில், அம்பு, கத்தி, அபய முத்திரை ஆகியவற்றைத் தாங்கியிருப்பார், சூரியனுக்கு மேற்கில் மேற்கு நோக்கி இருப்பார். சிதம்பரம் கோயில் மேற்குக் கோபுரத்தில் இவருடைய சிற்பம் உள்ளது. அச்சிற்பத்திற்கு மேலே 'சனிபகவான்' எனப் பொறிக்கப்பட்டுள்ளது. திருநள்ளாற்றில் சனீசுவரனுக்குத் தனிக்கோயில் உள்ளது. இவருக்குக் காக்கை வாகனம் ஆகும்.

**இராகு-கேது**, சூரியனுக்கு வடமேற்கில் தெற்கு முகம் நோக்கி இருப்பார்; மனித உடல் மேற்பாதியும் பாம்பு கீழ்ப்பகுதியும்ஆகிய உருவ அமைப்பில் இருப்பார். தலைக்கு மேல் பாம்பு படமெடுத்தாற்போல இருக்கும். இரு கைகளும் அஞ்சலி செய்த நிலையில் இருக்கும். சிதம்பரம் கோயிலில் இராகு-கேதுக்களின் திருவுருவங்கள் உள்ளன. அவ்வுருவங்களின் பெயர்கள் 'ராகு கேதுக்கள்' எனப் பொறிக்கப்பட்டுள்ளன.

தஞ்சை மாவட்டத்தில் நவக்கிரகங்களுக்குச் சிறந்த தலங்களாகச் சில உள்ளன. அவையாவன:

| | | |
|---|---|---|
| சூரியன் | ... | சூரியனார் கோயில் |
| சந்திரன் | ... | திருவாரூர் |
| செவ்வாய் | ... | வைத்தீசுவரன் கோயில் |
| புதன் | ... | திருவெண்காடு |
| குரு | ... | ஆலங்குடி |
| சுக்கிரன் | ... | கஞ்சனூர் |
| சனி | ... | திருநள்ளாறு |
| இராகு | ... | திருநாகேசுவரம் |
| கேது | ... | நாகநாதன்கோயில். |

திருச்சிக்கு அருகே பழூர் என்ற ஊரில் நவக்கிரகங்கள் தங்கள் தேவிமார்களுடன் வீற்றிருக்கின்ற உருவ அமைப்புடைய கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது.

மக்கள்தம் தீவினைகள் அகலுவதற்கும், நன்மைகள் பெருகுவதற்கும் நவக்கிரகங்களைச் சம்பந்தர் தம் திருப்பதிகத்தில் பாடியுள்ளார். கி.ஸ்ரீ.

**நவசோப் பழங்குடி** அமெரிக்க இந்தியப் பழங்குடிகளுள் ஒன்றாகும். இக்குடியினர் வடகிழக்கு அரிசோனா(Arisona), புதிய மெக்சிகோ, தென்கிழக்கு உத்தா (Utah) ஆகிய பகுதிகளில் வாழ்கின்றனர். இப்பகுதிகள் அமெரிக்க அரசால் இவர்களுக்கென்று ஒதுக்கப்பட்டவையாகும். இவ்வனைத்துப் பகுதிகளின் பரப்பளவு சற்றேறக்குறைய 14 மிலியன் ஏக்கர்களாகும். அமெரிக்க அரசு, பழங்குடிகளுக்கென்று ஒதுக்கியதில் இவர்கள் வாழும் பகுதிகளே மிகுதியாகும். இவர்களின் எண்ணிக்கை 1,40,000க்கும் மேலாகும். நவசோ (Navajo) என்னும் பெயர் நன்கு பராமரிக்கப்பட்ட வயல்களைக் குறிப்பிடுவதாக உள்ளது. வெளியார் இவர்களை நவசோ என்று குறிப்பிட்டாலும் இவர்கள் தங்களைத் ‘தினே’ (Dine) என்றே கூறிக் கொள்கின்றனர்.



நவசோ ஆண்

இவர்கள் வாழும் பகுதி கடல்மட்டத்திலிருந்து ஏறத்தாழ 2000 மீட்டருக்கும் மேலானது. குடிசைகள் மரக்கட்டைகள், குச்சிகளைக் கொண்டு கட்டப்படுகின்றன. வீட்டின் கூரை மரப்பட்டைகள், புல், மணல் கொண்டு மூடப்படுகின்றன. குடியிருக்கும் வீட்டில் எவரேனும் இறந்தால் அது பேய் வசிக்கும் இடமாகக் கருதப்பட்டு அழிக்கப்படுகிறது.

நவசோ சமூகம் 51 குலங்களாகப் (Clans) பிரிந்துள்ளது. இவர்கள் தாய்கால்வழி அமைப்பைச்(Matri lineage)சேர்ந்தவர்கள். ஒரு சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் இரத்த உறவுடையவர்கள் என்பதால் வேற்றுக் குலத்தவரையே மணந்துகொள்கின்றனர்.

நவசோவினர் வேளாண்மையை முழுமையாக நம்பியிருக்கவில்லை.கால்நடைகள் வளர்த்தலே இவர்களின் முதன்மையான தொழில். கால்நடைகள் இவர்களுக்குப் போதுமான மாமிசத்தைக் கொடுப்பதுடன், கம்பளம் நெய்வதற்குத் தேவையான உரோமத்தையும் கொடுக்கிறது. பெண்கள் பல்வேறு வண்ணங்களில் நுண்ணிய வேலைப்பாட்டுடன் கம்பளங்களை நெய்கின்றனர். இவர்கள் நெய்யும் அனைத்துவகை ஆடைகளும் வெளியாரால் விரும்பி வாங்கப்படுகின்றன. நவசோப் பெண்கள் பலவகையான கைவினைப் பொருள்களைச் செய்வதிலும் தேர்ச்சி பெற்றவர்கள். ஆடவருள் சிலர் மிகச்சிறந்த வெள்ளிக் கம்மியராகத் திகழ்கின்றனர்.



நவசோப் பெண்

நவசோவினர் கால்நடைகளை மிகுதியாக வளர்க்கின்றனர். பெண்கள் இதில் பெரும்பங்கு வகிக்கின்றனர். ஆண்கள் குதிரை வளர்ப்பு, கூலிக்கு வேலை செய்தல் போன்ற பணிகளைச் செய்கின்றனர்.

நவசோவினரின் சமய வாழ்க்கை மிக விரிவானதாகும். இவர்கள் நோய் தீர்க்கப் பல்வேறு சடங்குகளை மேற்கொள்கின்றனர். அவ்வாறே நடவு, அறுவடை செய்தல், கட்டடம் கட்டுதல், போரிடுதல், மணமுடித்தல், பயணம் மேற்கொள்ளுதல், மழை பெற வேண்டுதல் போன்ற செயல்களிலும் வெற்றியடையப் பல்வேறு சடங்குகளைச் செய்கின்றனர்.

• ம.ந.பு.

*நவநகர் (சாம்நகர்)*: இந்தியாவில் குசராத்து மாநிலத்தில் உள்ள ஒரு தொழில் நகரம். இதன் இக்காலப் பெயர் சாம்நகர் (Jamnagar). கட்சு வளைகுடாவில் உள்ள இத்துறைமுகத்தின் மக்கள்தொகை 317,000 (1981). இங்கு விமான நிலையமும் உண்டு. பம்பாய் நகருக்கும் இதற்கும் உள்ள தொலைவு 496 கி.மீ. விண் செலவு பற்றிப் போதிக்கும் பள்ளிகள் (aeronautical schools) இங்கு உள்ளன. கடற்செலவு (naval) பற்றியும் இங்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. சாம்நகர், பட்டுத்துணிகள், சித்திரப் பின்னல் வேலைப்பாடுடைய துணி வகைகள், சலவைக் கற்கள் முதலியவற்றிற்குப் பெயர் பெற்றது. பல பஞ்சு ஆலைகள் இங்கு உண்டு. உப்பெடுத்தல், சிமிண்டுத் தொழில் ஆகியனவும் நடைபெறுகின்றன. இதன் அருகே முத்துக் குளிக்கப்படுகிறது. உலோகச்சாமான்கள் மிகுதியாக இங்கு உள்ளன.

சாம்நகர், புதுமையுடன் பழமைப் பெருமையும் பெற்று விளங்குகிறது. முன்பு இது நவநகர் சிற்றரசு நாட்டுக்குத் தலைநகராகத் திகழ்ந்ததால், அக்காலத்திய கட்டடங்கள் இன்றும் மக்களின் கவனத்தைக் கவர்கின்ற வகையில் உள்ளன. இந்நகரில் உள்ள ஏரியின் நடுப்பகுதியில் இரண்டு பண்டைய கட்டடங்கள் இருக்கின்றன. ஒரு கட்டடத்தின் தரைப்பகுதியில்ஒரு சிறு துவாரமும், அருகில் ஒரு கிணறும் உள்ளன. துவாரத்தில் ஊதினால் கிணற்றிலிருந்து நீர் கிடைக்கும் வகையில் அது அமைக்கப் பெற்றுள்ளது காணத்தக்க காட்சியாகும். சிற்பச் சிறப்பு வாய்ந்த மற்றொரு கட்டடத்தில் இன்று பொருட் காட்சியகம் அமைந்துள்ளது. அன்று சிற்றரசன் வாழ்ந்த அரண்மனையில் விக்டோரியா பேரரசிக் கால ஓவியங்கள் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. சாம் இராவல் (Jam Ravel) என்பார் புதிய முறையில் இந்நகரை அமைத்ததால் அவர் பெயரால் இந்நகர் சாம்நகர் என்று கூறப்படுகிறது.

தெ.பா.

*நவநீத கிருட்டிண பாரதியார்*: இவர் சோழநாட்டுத் தமிழ்ப் புலவர். மணல்மேற் குடியின் அருகேயுள்ள கரவட்டங்குடியில் கி.பி. 1889-ஆம் ஆண்டு பிறந்தவர். இவர் சர்க்கரை இராமசாமிப் புலவர், அரசஞ் சண்முகனார் போன்ற தமிழறிஞர்களிடம் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களைப் பயின்று புலமைபெற்றார். இவர் பாலக்காடு விக்டோரியா கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். பின்னர் இலங்கையிலுள்ள பொன்னம்பலம் இராமநாதன் பெண்கள் கல்லூரியிலும் பரமேசுவரன் கல்லூரியிலும் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றினார். திருவாவடுதுறை ஆதீனத்தின் திருமுறையாராய்ச்சிப் பணியிலும் இவர் சில காலம் ஈடுபட்டிருந்தார்.

இளஞ்சிறுவர்களும் எளிதில் புரிந்துகொள்ளும் வண்ணம் 'பாரதீயம்' என்ற பெயருடைய இலக்கண நூலை 1947-ஆம் ஆண்டில் வெளியிட்டார். இவருடைய 'உலகியல் விளக்கம்' என்னும்செய்யுள் நூலை விபுலானந்த அடிகள் பதிப்பித்துள்ளார். இவர் புத்திளஞ் செங்கதிர், செழுங்கதிர்ச் செல்வம், பறம்புமலைப் பாரி முதலிய நூல்களின் ஆசிரியர். திருவாசகம் முழுமைக்கும் அகப்பொருள் தழுவி இவர் எழுதிய விரிவான உரை சிறப்பு வாய்ந்தது.

தமிழ்மொழியை வளர்க்கும் வகையில் 'ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் மன்றம்' என்ற அமைப்பை ஏற்படுத்திச் சிறப்பாக நடத்தி வந்தார். இம்மன்றம் இவரது தமிழ்ப் பணியைப் போற்றி இவருக்குப் 'பண்டிதமணி' என்னும் விருதை வழங்கியது. யாழ்ப்பாணம் ஆரிய-திராவிடமொழி வளர்ச்சிச் சங்கம் இவருக்குப் 'புலவர்மணி' என்ற பட்டத்தை வழங்கியது. இவர்1954-ஆம் ஆண்டு மறைந்தார். சா.உ.

*நவநீதப் பாட்டியல்*: நவநீத நடனார் என்பவரால் செய்யப்பட்ட பாட்டியல் நூல் நவநீதப் பாட்டியல் என வழங்கப்படுகின்றது. பேரிலக்கியங்கள் சிற்றிலக்கியங்கள் என்பவை தோன்றியபின் அவற்றைப் பற்றிய இலக்கணங்கள் தோன்றின. அவ் விலக்கண நூல்கள் பாட்டியல்கள் எனப்பட்டன பாட்டு என்பது பாடல், செய்யுள் என்பவற்றைக் குறியாமல் அவற்றால் ஆகிய நூல்களைக் குறிப்பதாக அமைந்தது.

நவநீதப் பாட்டியல் கட்டளைக் கலித்துறை என்னும் யாப்பில் அமைந்தது. அதனால் கலித்துறைப் பாட்டியல் என்னும் பெயரும் இதற்கு உண்டாயிற்று. பொருத்தவியல், செய்யுண் மொழியியல், பொது மொழியியல் என்னும் மூன்று இயல்புகளை உடையது நவநீதப்பாட்டியல். தற்சிறப்புப் பாயிரம்,அவையடக்கம், சிறப்புப்பாயிரம் என்பவை தனித்தனி ஒவ்வொரு

பாடலாலும், நூல் நூற்று ஐந்து பாடல்களாலும் அமைந்துள்ளன. இந்நூலில் அறுபத்து மூன்று இலக்கியங்களைப் பற்றிய இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன. பழையவுரை ஒன்றும், பின்னே தோன்றியவுரை ஒன்றுமாக இரண்டுஉரைகள் இதற்கு அமைந்துள்ளன. வேண்டும் குறிப்புரை ஆய்வுரை ஆகியவற்றுடன் இந் நூல் 'மகாமகோபாத்தியாய டாக்டர்உ.வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடாக 1944-இல் வெளிவந்துளது. 'கார் கொண்ட மேனிக் கறை கொண்ட நேமிக் கமலக்கண்ணன், பார் கொண்ட பாதத்தை ஏத்திப் பகருவன் பாட்டியலை' என்னும் தற்சிறப்புப் பாயிரத்தால் இந் நவநீத நடனார் திருமால் வழிபாட்டினர் என்பது விளங்கும். நவநீதன் என்னும் பெயரும் திருமால் பெயர்களுள் ஒன்று என்பதும் அறியத்தக்கது. மற்றோர் ஏட்டில் 'கரிமுகத் தண்ணல் கடவுளர் ஐங்கர கணபதி,என்று தொடங்கும் பாட்டு உள்ளமையால் பிறசமய வெறுப்பு அற்றவர் இந்நடனார் என்பது விளங்குகின்றது. இவர் நடனக்கலைத் தேர்ச்சியராகவும் இருந்திருக்கக் கூடும். 'நட்டுவனார்' என்னும் பெயரை எண்ணிப்பார்க்கலாம்.

கம்பர் விளங்கிய நாடு 'கம்பநாடு' என வழங்கப் பட்டமை போல இவர் விளங்கிய நாடு நவநீத நாடு என வழங்கப்பட்டமை அறிய வருகின்றது. ஆனால், அந்நாடு தமிழகத்தின் எப்பகுதி சார்ந்தது என்பது அறியக் கூடவில்லை.

அகத்திய மாமுனிவர் பாட்டியல் செய்தார் என்ற குறிப்பு அவையடக்கப் பாடலில் உள்ளது. அது பருணர் பாட்டியல் எனப்படும் என்பது உரையால் அறியப்படுகின்றது. இந்நடனார்க்கு முன்னரே பாட்டியல் நூல்கள் பல இருந்தன என்பது பாட்டியலானவை எல்லாம் தொகுத்துச் செய்ததாக இவர் கூறுவதால் தெளிவாகின்றது (தற்சிறப்புப்பாயிரம்).

முள்ளியார் கவித்தொகை, பொய்கையார் கலாவியல், கல்லாடனார் கலாவியல், அவிநயனார் கலாவியல், செய்யுள் வகைமை, திருப்பிரவாசிரியர் துாக்கியல் முதலிய நூல்களில் இருந்து உரையில் காட்டப்படும் மேற்கோள் நூற்பாக்களால் பாட்டியற் பரப்பு எத்துணை விரிவுடையதாக இருந்திருக்கிறது என்பது விளங்குகின்றது. அவற்றை நல்லவை, நிறையவை, தீயவை, குறையவை என்று பகுத்துக் காட்டுவதும், ஓலையிலக்கணம் (சீட்டுக்கவி) கூறுவதும் இந் நூற் சிறப்புப் பகுதிகளுள் குறிக்கத் தக்கவையாம்.

சில நூல்கள் மகளிரை முன்னிலைப் படுத்திக் கூறுவதாக அமையும். யாப்பருங்கலக்காரிகை என்பது அவ்வகை சார்ந்தது. இந்நூலும் அந்நூல் போலவே கட்டளைக் கலித்துறையால் அமைவதுடன் மகளிரைப் பல பாடல்களில் முன்னிலைப்படுத்திக் கூறுவதாகவும் அமைந்துள்ளது. ஆதலால் அந்நூற் பயிற்சியோ பற்றோ நவநீத நடனார்க்கு மிகுந்திருந்தது எனலாம். இரா.இ.

**நவமணிகள்**: காண்க: மணிகள்.

**நவமணிமாலை** என்பது தொண்ணூற்றாறு வகைச் சிறு பிரபந்தங்களுள் ஒன்றாகும். இதன் பெயரிலிருந்தே இந்நூலில் ஒன்பது பாக்களே இடம் பெறும் என்று தெரிந்து கொள்ளலாம். நவரத்தினங்களையும் ஒன்றன் பின் ஒன்றாய் வரிசையாகக் கோத்து மாலையாக அணியும் தன்மை போன்று வெண்பா முதலிய பாவாலோ பாவினத்தாலோ ஒன்பதுபாடல்கள் அந்தாதியாகப் பாடப்பெறும் நூல் ஆதலின் இதற்கு நவமணிமாலை என்னும் பெயர் ஏற்படலாயிற்று. இதற்குத் தொண்மணிமாலை, நவரத்தினமாலை என்னும் வேறு பெயர்களும் உள. 'வெண்பா முதலா வேறு ஓர் ஒன்பது நண்பாக் கூறல் நவமணிமாலை' என்பது இந்நூல் குறித்து இலக்கண விளக்கப் பாட்டியல் குறிப்பிடும் இலக்கணமாகும். 'பாவே இனமே என்றிவை இரண்டும் மேவிய வகையது நவமணிமாலை' என்பது பன்னிரு பாட்டியல் கூறும் இலக்கணமாகும். இம்முறையிலேயே செந்தமிழ் மொழியில் பல நவமணிமாலைகள் உள்ளன.

சிவப் பிரகாச சுவாமிகள் இயற்றிய பிச்சாடன நவமணி மாலை கட்டளைக் கலித்துறை யாப்பால் அமைந்த ஒன்பது பாக்களைக் கொண்ட நூலாகும். வை. கதிரைவேற்பிள்ளை இயற்றிய சிவபெருமான் நவமணிமாலை, முத்து வீர உபாத்தியாயர் இயற்றிய முருகக் கடவுள் நவமணிமாலை, மணிசுப்பிரமணிய ஐயர் இயற்றிய சிவஞான பாலயசுவாமிகள் நவமணி மாலை முதலியன இவ்வகையைச் சார்ந்தவை, இவ்வகையைத் தவிர இன்னும் இருவேறுவகைகளாகவும் இந்நவமணிமாலை காணப்பெறுகிறது: (1) மகாகவி பாரதியார் இயற்றிய பாரதமாதா நவரத்தின மாலை ஒன்பது பாடல்களைப் பெற்றுள்ளது. அப் பாடல்களில் ஒன்பது மணிகளின் பெயர்களும் ஒவ்வொரு பாடலில் ஒவ்வொன்றாக அமைந்து நவமணி மாலை என்பதற்கேற்பச் சிறந்து விளங்குகிறது.

2)இது தவிர இரண்டாம் வகையாக வெண்பா, கட்டளைக் கலித்துறை, கொச்சகக் கலி, கட்டளைக் கலி,வெண்டுறைஆசிரிய விருத்தம்,எண்சீர் த் தாழிசை, ஆசிரியப்பா, சந்தக்கவி ஆகிய ஒன்பது வகைப் பாக்கள் ஒன்பது மடங்கு பெற்று ($9\times9$) எண்பத்தொரு பாக்களைக்கொண்டு வருகிறது. இதுவும் அந்தாதித் தொடையாலேயே அமைந்துள்ளது. தண்டபாணி சுவாமிகள்இயற்றிய திருவரங்கத்திருவாயிரத்தில்இவ் வகை நவமணிமாலை ஒரு பகுதியாயுள்ளதைக் காண

லாம். இதைப் போன்றே பழநித் திருவாயிரத்திலும் ஒன்பது வகைப் பாக்களை யுடையதாய் ஒன்பது மடங்கு வந்துஎண்பத்தொருபாடல்களைக் கொண்ட நவமணி மாலையைக் காணலாம். இவ்வகை முன்ன தினும்சிறிது வளர்ச்சி பெற்ற வகையைச் சார்ந்தது. இவ்வாறு புலவர் பெருமக்கள் தமிழ்த்தாய்க்குப் பல நவமணிமாலைகளைச் சூட்டி மகிழ்ந்தனர். இரா.ச.

**நவமி:** நவமி என்றால் ஒன்பதாம் திதி என்று பொருள். பௌர்ணமி முடிந்து ஒரு நவமி தேய்பிறை யில் வரும். அமாவாசை முடிந்து ஒரு நவமி வளர் பிறையில் வரும். பொதுவாகப் பழங்காலத்தில் ஒரு செயலைக் குறிப்பிடும் போது, 'அத்தம் தோன்றிய ஆதி வாரத்தில் அட்டமி பக்கத்தில் நிகழ்ந்தது' என் பது போல எழுதிச் செல்வார்கள். அத்தம், நட்சத் திரத்தையும், ஆதிவாரம் ஞாயிற்றுக் கிழமையையும் அட்டமி திதியையும் உணர்த்தும். இது போல் பிற வற்றையும் கூறலாம். அட்டமி, நவமி ஆகிய திதியில் எவ்விதநல்ல காரியங்களையும் செய்வதில்லை. இருந் தாலும்கண்ணன் பிறந்த கோகுல அட்டமியும் இராமன்பிறந்த நவமியும்விழாவாகக் கொண்டாடப் படுகின்றன. திதியும் நாளும் சமமான கால அளவைப் பெறவில்லை. 64 திதிகள் 63.001412384 நாள்களுக் குச் சமம். பல ஆண்டுகள் செல்லும் போது இவ் வேறுபாட்டினைக் கணித்தறிந்து சோதிடநூல் குறிப் பிடும். முன்னர் ஆவணி முதல் நாள் ஆகசுட்டு முதல் நாள்; தை முதல் நாள் சனவரி முதல் நாளாக இருந் தது. ஆனால் மேற்கூறிய திதிநாள் வேறுபாட்டைக் கணித்த வராகமிகிரர் 15 நாள்களைக் குறைத்த தால் தை நீராடல் மார்கழிக்கு வந்துவிட்டது; ஆவணி அவிட்டம் ஆடிக்கு வந்துவிட்டது. பொது வாகத் திதி சந்திரனின் இயக்கத்தை அடிப்படை யாகக் கொண்டது. நாள் சூரியனின் இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டது. தே.ஆ.

**நவரத்தினங்கள்:** விக்கிரமாதித்தன் அரச சபை யில் இருந்த ஒன்பது கவிஞர்கள் நவரத்தினங்கள் என்று சொல்லப்பட்டனர். இவர்கள் தன்வந்திரி, சணபகர், அமரசிம்மர், சங்கு, வேதாலபட்டர், கட கர்ப்பரர், காளிதாசர், வராகமிகிரர், வரருசி என்ப வராவர். ஆராய்ச்சியாளர் பலர் இவ்வொன்பது கவி ஞர்களும் ஒரே அரசர் காலத்தில் வாழ்ந்தவர்கள் அல்லர் என்று கூறுகின்றனர்.

நவரத்தினங்கள் என்று சொல்லப்பட்ட கவிஞர் களுள் மிக முக்கியமானவர் காளிதாசர். இவர் குப்தப் பேரரசர் இரண்டாம் சந்திரகுப்தர் அவை யில் இருந்தவர். இரண்டாம் சந்திரகுப்தருக்கு விக்கிர மாதித்தன் என்ற பட்டப்பெயரும் உண்டு. ஆராய்ச்சி யாளர் சிலர் காளிதாசர் உச்சயினியை ஆண்ட விக்கிரமாதித்தன் (கி.மு.58) அவையில் வாழ்ந்த புல வர் எனக் கூறுகின்றனர். ஆனால், இக்கூற்றிற்குப் போதிய சான்றுகள் இல்லை.

தன்வந்திரி என்பவர் பரத்துவாசரிடம் ஆயுர் வேதம் கற்று, அதை எட்டு வகையாகப் பிரித்துத் தம் மாணவர்களுக்குக் கற்பித்தார் என்பர். இவர் மருத்துவ நூல் ஒன்றை எழுதியுள்ளார். இவர் வாழ்ந்த காலத்தில் இரணசிகிச்சைக்குரிய கூரிய, மெல்லிய கருவிகள் இருந்தனவென்றும், சில கருவிகள் உரோமத்தைப் பிளக்கும் அளவிற்குக் கூர்மையாக இருந்தனவென்றும் தெரிகிறது. தன்வந்திரி மருத்துவ அகராதி ஒன்றையும் எழுதியுள்ளார்.

வரருசி என்பது காத்தியாயனருக்கு ஒரு பெயர். இவர் பாணிணியின் இலக்கண நூலுக்கு அதிகரணம் வகுத்தவர்.

நவரத்தினங்கள் போன்ற அறிஞர்களினால் இந்திய வரலாற்றில் குப்தர் காலம் பொற்காலமெனப் போற்றிப் புகழப்படுகிறது. குப்த அரசர்கள் கவிஞர் களை ஆதரித்து இலக்கிய வளர்ச்சிக்கு உறுதுணை செய்துள்ளனர். குப்தர்கள் காலத்தில் இலக்கியத் துறை மட்டுமல்லாமல் அரசியல், தத்துவம், வான சாத்திரம், கட்டடக்கலை, மருத்துவம், இரசவாதம், இசை, ஓவியம் முதலிய பல துறைகளும் சிறப்புற் றிருந்தன. காண்க: மணிகள். அ.சி.

**நவராத்திரி:** நவராத்திரி இந்திய நாட்டில் கொண்டாடப்படும் சிறந்த கலை விழாவாகும். இமயம் முதல் குமரி வரை உள்ள எலலா இந்தியப் பகுதிகளிலும் இவ்விழா கொண்டாடப்படுகிறது. நோன்பு மேற்கொள்ளுதலும் சக்தி வழிபாடும் இவ் விழாவின் மைய நோக்கங்கள்.

பரத கண்டத்தில் வீரம், கல்வி, செல்வம் என் னும் மூன்றிற்கும் அதிதேவதைகளாக முறையே துர்க்கை, கலைமகள், திருமகள் என்னும் மூன்று தெய்வங்கள் போற்றப்படுகின்றன. பெண்மைக்குப் பெருமை தரும் பண்பை இது சுட்டுகிறது.

துர்க்கை எனப்படும் கொற்றவை, திருமகள், கலைமகள் ஆகிய மூவரையும் குறித்து வழிபாடு நிகழ்த்தும் விழா வாகிய நவராத்திரி, வலிமை, செல் வம், கலை ஆகியவற்றைப் போற்றுவதை நோக்க மாகக் கொண்டு ஏற்பட்டது இவ்விழா. வங்காளத் திலும், தமிழ்நாட்டிலும் வேறு வேறு விதமாகக் கொண்டாடப்படுகிறது. ஆயுதபூசை, குழந்தை களைப் படிக்க வைத்தல், புதுக் கணக்குத் தொடங்குதல் ஆகியவை இவ்விழாவில் தொடங்கப் படுகின்றன.

நவராத்திரி விழா ஒன்பது நாள் இரவிலும் வீடு களில் அழகாகக் கொலு வைப்பார்கள். வண்ணப் பொம்மைகளை வரிசை வரிசையாக அடுக்கி வைப் பார்கள். இரவில் இக்கொலுக்களுக்குப் பூசைகள் நடக்கும். இளஞ்சிறுமியர் கண்ணனைப் போலவும், இராதையைப் போலவும் வேடம் தரித்து வீடுவீடாகச் சென்று தங்கள் வீட்டுக் கொலுவிற்கு வரும்படி அழைப்பார்கள். கொலுவுக்கு வந்தவர்கள் இனிய தெய்வப் பாடல்களை இசையோடு பாடி மகிழ்விப் பர். கொலுவில் படைக்கப்பட்ட சுண்டல், வடை முதலிய நிவேதனப் பொருள்கள் அனைவருக்கும் வழங்கப்படும்.

இவ்விழாவின் அடிப்படைக் கருத்து தேவி வழி பாடு மட்டுமன்று. நாட்டின் சமுதாய வளர்ச்சியையும் ஒருமைப்பாட்டையும் தன்னகத்தே கொண்டுள்ளது இவ்விழா. கொலுவிற்குச் செல்வதைக் காரணமாகக் கொண்டு ஓர் ஊரிலுள்ள மகளிர் ஒருவரோடு ஒரு வர் கலந்துபேசி உறவாடுவதால் ஒருமைப்பாடு உண் கின்றது; நட்பு வளர்கின்றது; ஒருவருக்கொருவர் உதவிவரும் மனப்பான்மையும் ஏற்படுகின்றது.

எந்த ஒரு நாட்டிலும் கைத் தொழில் பெருகி வளர்ந்தால் தான் முன்னேற்றம் ஏற்படும். கைத் தொழில் வளர்ச்சிக்கு ஆதரவு தருவது நவராத்திரி விழா. கொலு வைக்கப் பொம்மைகள் செய்கிறார் கள். பொம்மை செய்யும் தொழிலில் ஏராளமான வர்கள் பிழைக்கின்றார்கள். ஒரு குடும்பத்திலுள்ள ஒரு குழந்தை முதல் கிழவர் வரை இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஒரு பொம்மையை ஒருவர் வாங்கி னால் பத்துக் கலைஞர்களின் பசி நீங்குகிறது.

நவராத்திரி விழா புரட்டாசித் திங்கள் பூர்வபட் சம் பிரதமை முதல் தொடங்கி நவமி வரையில் யில் நடைபெற்றுத் தசமியில் முடிவடைகிறது. பிர தமை முதல் திரிதியை வரை துர்க்கையையும், சதுர்த்தி முதல் சட்டி வரை திருமகளையும் சப்தமி முதல் தசமி வரை கலைமகளையும் பூசிப்பது வழி பாட்டு மரபு. குமாரி, திருமூர்த்தி, உரோகணி, காளிகா, சண்டிகா, சாம்பரா, துர்க்கா, சுபத்திரா என்னும் எட்டுக் கன்னிகைகளையும் தினம் ஒருவரா கப் பூசிப்பது மரபு என்னும் கருத்துமுண்டு.

உலகமாதாவான சக்தி ஒன்பது நாள் கொலுவி ருந்து தவ வலிமை பெற்று ஒன்பதாம் நாள் உலகிற் குப் பெருந்துன்பம் இழைத்து வந்த மகிடாசூரனை வதம் செய்தாள் என்பது புராண வழக்கு. இதன் காரணமாக ஒன்பதாம் நாள் ஆயுத பூசையாகக் கொண்டாடப்படுகிறது. ஒவ்வொருவரும் தத்தம் தொழிலுக்குரிய ஆயுதங்களைக் கொலுவில் வைத்துப் பூசிப்பர்.

நவராத்திரி விரதம் காக்கும் விழாவாக அமைந் துள்ளது ஒரு தனிச் சிறப்பு. ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கையிலுள்ள துன்பங்கள் நீங்குவதற்காக இவ் விழாவின் ஒன்பது நாளும் விரதமிருந்து இதனைக் கொண்டாடுகின்றனர்.

பூசைக்கு வேண்டியவற்றை அமாவாசை தினத்தி லேயே சேகரித்துக் கொள்வர். அன்று ஒருவேளை மட்டும் உணவருந்துவர். விரதம் அன்று முதல் தொடங்கும். மறுநாள் பிரதமை முதல் பூசை நடை பெறும். ஒன்பது நாளும் தேவியை வழிபாடு செய்வர். பிரதமையில் அத்த விண்மீன் கூடினால் மிகச் சிறப்பென்றும் அத்தினத்தில் தேவியைப் பூசித்தால் எல்லா நலங்களும் கிடைக்குமென்றும் நம்பிக்கை நிலவுகிறது. ஒருவன் நவராத்திரி முழுவதும் பூசை செய்யாவிட்டாலும், அட்டமியன்று அவசியம் பூசிக்கவேண்டும். அன்று தக்கனதுயாகத்தை அழித்த பத்திரகாளி பிறந்த தினமாகக் கருதப்படுவதால் தனிச் சிறப்புப் பெறுகிறது.

இருதுக்களில் வசந்த ருது, சரத்து ருது என்னும் இரண்டும் மக்களுக்கு நோய்களை விளைவித்துத் துன்பம் தருவதால் அவை எமனுடைய இருகோரைப் பற்களுக்குச் சமமாகக் கூறப்பட்டுள்ளன. ஆகையால் அவற்றால் உண்டாகும் துன்பங்களினின்றும் நீங்க வேண்டி மக்கள் இந் நவராத்திரி விரதத்தை மேற் கொள்வது இன்றியமையாத தொன்றாகும். அ.ஆ.

**நவவீரர்:** ஒரு சமயம் சிவபெருமான் நெற்றிக் கண்ணிலிருந்து வெளிப்பட்ட தீப்பொறிகளின் வெம் மைக்கு ஆற்றாது உமையம்மையார் ஓடினார். அவ் வமயம் அம்மையின் காற்சிலம்பிலிருந்துஒன்பது மணி கள் உதிர்ந்தன. இறைவன் திருவருளால் அம்மணிகள் நவசத்திகளாகத் தோன்றின. அந்நவசத்திகளுக்கும் நவமணிகளின் பெயர்களே ஏற்படலாயிற்று. அந் நவசத்திகளும் சிவ மூர்த்தியை விருப்புடன் நோக் கவே கருவுற்றனர். நவசத்திகளுள் மாணிக்கவல்லி யினிடத்து வீரவாகு தேவரும், முத்துவல்லியிடத்து வீரகேசரியும், புட்பராக வல்லியிடத்து வீரமகேந்திர ரும், கோமேதக வல்லியிடத்து வீரமகேச்சுரரும், வயிடு ரியவல்லியிடத்து வீரபுரந்தரரும், வயிரவல்லியிடத்து வீரராக்கதரும், மரகதவல்லியிடத்து வீரமாத்தண்ட ரும் பவளவல்லியிடத்து வீராந்தகரும், இந்திர நீல வல்லியிடத்து வீரதீரரும் பிறந்தனர். பெருமான் இவர்கள் நந்தி கணத்தவர் என உமையிடம் கூறி அவர்களை வாழ்த்துமாறு கூறினார். அம்மையும் அவர்களை வாழ்த்திக் கைவேல்(குந்தம்)அருளினாள். சிவபெருமானும் அவர்களை வாழ்த்தி வாள் அருளி னார். நவசத்திகளின் வியர்வையிலிருந்து இலக்க வீரர்கள் தோன்றினார்கள். அவ்விலக்க வீரர்களுக்

கும் நவவீரர்களைத் தலைவர்களாக இருக்கச் செய்தார். தேவாசுர யுத்தம் நிகழும்போது முருகப் பெருமானுக்குத் துணையாக இருக்கும்படி அவர்கள் அனைவரையும் அனுப்பினார் சிவபெருமான். அவர் ஆணைப்படியே நவவீரர்கள் சென்று சூரபதுமனோடு சண்டையிட்டு அசுரர்களை அழித்துத் தேவர்களின் துன்பத்தைப்போக்கினார்கள். இந்நவவீரர்களின் வழியினரே செங்குந்தர் என்பதுபுராண வரலாறு. இந் நவவீரர் வரலாறு கச்சியப்ப சிவாச்சாரியாரால் இயற்றப் பெற்ற கந்தபுராணத்தில் துணைவர் வருபடலத்தில் மிக விளக்கமாகக் காணப்பெறுகின்றது. இரா.ச.

**நவாபு இராசமாணிக்கம்**: இவர் தமிழகத்தில் தோன்றிய மிகச் சிறந்த நாடகக் கலைஞர்களுள் குறிப்பிடத்தக்கவர். இவர் நடிகராக மட்டுமல்லாமல் நாடக அமைப்பாளராகவும், நாடக இயக்குநராகவும் திகழ்ந்தார். தேசிய உணர்வுமிக்க இவர், நாடகத்தின் வாயிலாகத் தேசிய உணர்வினைப் பரப்ப முயன்றவருள் முன்னோடியாகத் திகழ்ந்தார்.

தஞ்சை சுப்பிரமணியப் பிள்ளை என்பாரின் மூன்றாம் மனைவியான குப்பம்மாவிற்கு மகனாக 1906-ஆம் ஆண்டு பிறந்தார். தஞ்சை சுப்பிரமணியப் பிள்ளையின் மகன் என்பதை இவர்தம் பெயருக்கு முன்னர் அமைந்த டி.எசு.என்னும் தலைப் பெழுத்துகள் உணர்த்தும். மூன்றாம் வகுப்புவரை படித்த பின் வறுமை காரணமாக, சகந்நாதையரின், 'மதுரை பாலமீன ரஞ்சனி சங்கீத சபை' யில் நடிகராகத்தமது 10-ஆம் வயதில் சேர்ந்தார். பின்னர்த் தஞ்சையில் கே.டி. நடராசபிள்ளை நடத்திய நாடகக் குழுவில் சேர்ந்தார். இவர் கே.டி. நடராசபிள்ளையை நாடகக் கலைக்குத் தம் குருவாகக் கொண்டார். இராசமாணிக்கம் பிள்ளை வேறு வேறு குழுக்களில் இருந்தபோதும் தம் நாடகக் குரு கே.டி. நடராசப் பிள்ளையையும் அவர்தம் குடும்பத்தாரையும் தம் இறுதிக்காலம் வரை காத்து வந்தது குறிப்பிடத்தக்கது. இவர் சென்னை, 'பாலமீன ரஞ்சனி சங்கீத சபை, யில் 1927-ஆம் ஆண்டு சேர்ந்தபோது கொழும்பு சென்று நடிக்கும் வாய்ப்புப் பெற்றார். தஞ்சை பக்கிரிராசா என்பவருடன் பங்குதாரராகச் சேர்ந்து 1932-ஆம் ஆண்டு, 'மதுரை தேவி பாலவிநோத சங்கீத சபை' யைத் தோற்றுவித்தார். பின்னர் அக்குழுவின் முழுஉரிமையாளரானார். இவரது நாடகக் குழுவில் இருநூறு சிறுவர்கள் பயிற்சி பெற்றது குறிப்பிடத்தக்கது.

தம் நாடகங்களில், அக்காலத்தில் சிறப்புற்று விளங்கிய நாடகக் கலைஞர் கன்னையா என்பவர் பின்பற்றிய மேடையமைப்பு,தந்திரக்காட்சி உத்திகள் முதலியவற்றைத் தாமும் கடைப் பிடித்தார்.

இருபத்து நான்கு நாடகங்களைச் சிறப்புற நடத்தி நடித்தாலும், 'பத்த ராமதாசு' என்னும் நாடகம் நவாபு இராச மாணிக்கத்திற்குப் பெரும் புகழைத் தந்தது. திருவாங்கூர் மன்னர் முன்னிலையில் பத்த இராமதாசு நாடகம் நடத்தியபோது அதில் நவாபுவாக நடித்து, உருது மொழியில் பேசிய நடிப்பைக் கண்டு மன்னர் 'நவாபு' என்ற பட்டத்தை இவருக்கு வழங்கினார். புதுக்கோட்டை தம்புடு பாகவதர் எழுதிய இந்த நாடகத்தைக் கோவை பரமேசுவரர் பேசும் படம் (Sound Picture) என்னும் நிறுவனம், பம்பாய் இரஞ்சித்துப் படப்பிடிப்பு நிலையத்தில் திரைபபடமாக எடுத்தது. அத்திரைப்படத்தில் நவாபு இராசமாணிக்கத்தின் நாடகக் குழுவினரே நடித்தனர். ஆடவரே பெண் வேடமிட்டு அப்படத்தில் நடித்தனர். படம் வெற்றியாக ஓடியது. இப்படம் நவாபு இராச மாணிக்கம்பிள்ளை நடித்த முதல் திரைப்படமாகும். கோவை அய்யா முத்துவின், 'இன்பசாகரன்', என்னும் நாடகத்தைச் செமினி நிறுவனம் திரைப்படமாக்கியது. நவாபு இராசமாணிக்கம் தம் குழுவினரோடு அதில் நடித்தார். படம் எரிந்து போனதால் வெளியிடப்பெறவில்லை. புராண இதிகாச நாடகங்களை நடத்தி வந்த நவாபு இராசமாணிக்கம் பிள்ளை, சதிலீலாவதி, இராசாபர்த்துருகரி போன்ற வரலாற்று நாடகங்களையும், சந்திரகாந்தா, இராசம்மாள், பதி பத்தி போன்ற சமூக நாடகங்களையும் வெற்றியுற நடத்தினார்.

தம நாடகங்களில் தவத்திரு சங்கரதாசு சுவாமிகளின் பாடல்களையே பயன்படுத்தியது சுவாமிகள் மீது இவா கொண்டிருந்த பற்றினை வெளிப்படுத்துகின்றது. இவர் நாடகப் பாடல்களை மட்டும் பாடும் அளவிற்கு இசைஞானம் பெற்றவராகத் திகழ்ந்தார். நாடகங்களைப் பயிற்றுவிக்குங்கால் ஒவ்வொரு பாத்திரமாக மாறி நவாபு இராசமாணிக்கம்,மற்ற நடிகர்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் பாங்கு சிறப்பானதாகும்.

இவர் சபரிமலை அய்யப்பன் மீது அளவிலாப் பற்றுக் கொண்டவர். அவ்வரலாற்றை நாடகமாக்கி ஆயிரத்து நானூறு தடவைக்கு மேல் நாடகமாக நடித்துக்காட்டித் தமிழகத்தில் அய்யப்ப வழிபாடு தோன்றுவதற்கு வழிகாட்டியாக விளங்கினார். ஏசுநாதரின் வரலாற்றை நாடகமாக்கி ஏசுநாதர் போன்று வேடம் புனையச்செய்து புதிய புரட்சியை உண்டு பண்ணினார். அந்த நாடகத்தில் போப்பாண்டவராக நவாபு இராசமாணிக்கம் நடித்தார்.

இரவு முழுவதுமாக நடத்தும் இராமாயண நாடகத்தை எழுபத்தோரு காட்சிகளில் அமைத்து மூன்றரை மணி நேரத்திற்குள் நடத்திக் காட்டியது இவ

ரது திறமைக்குச் சான்றாகும். இவர்தம் நாடகக் குழுவின் நாடகங்கள் கர்நாடகம், கேரளம் ஆகிய மாநிலங்களிலும் நடைபெற்றன.

அங்கயற்கண்ணி என்பவரை மணந்து மூன்று குழந்தைகளுக்குத் தந்தையான இவர், நாடக உலகில் நாடக கேசரி (1937), நாடக கலாநிதி (1940) நாடகக் கலை அரசு (1941), நாடகக் கலைக் காவலர் (1947), நாடகக் கலையோகி (1957) ஆகிய பட்டங்களைப் பெற்றார்.

சிறந்த தேசபத்தரான நவாபு இராசமாணிக்கம் மகாத்மா காந்தி அடிகளைக் கோவையில் தம் நாடகம் நடைபெற்றபோது மேடையில் தோன்றச் செய்து தம் கை மோதிரத்தை அன்பளிப்பாக அளித்துள்ளார். காரைக்குடியில் நாடகம் நடைபெற்ற போது சவகர்லால் நேருவை மேடையில் தோன்றச் செய்தார்.

எளிய குடும்பத்தில் பிறந்து முயற்சியாலும் திறமையாலும் முன்னேறிய நவாபு இராசமாணிக்கம் பிள்ளை ஏழை மக்களுக்கு அன்னதானம் செய்வதில் மகிழ்வு கொள்வார். பொதுமக்களுக்குப் பயன்படுமாறு அறச் செயல்கள் புரிந்துள்ளார். திரைப்பட இயக்குநர் கே.எசு.கோபால கிருட்டிணன், கவிஞர் எசு.டி. சுந்தரம் ஆகியோரை உருவாக்கிய பெருமை இவரைச்சாரும்.

குட்டையான உருவமும், மெல்லிய குரல்வளமும் உடைய நவாபு இராச மாணிக்கம்பிள்ளை பழகுவதற்கு இனியவராவார். இவர் தூணில்லா அரங்கம் அமைத்து, நாடகக் கலையின் தூணாக விளங்கியவர். இவர் 1974-ஆம் ஆண்டு நோய்வாய்ப்பட்டுக் காலமானார். இரா.குரு.




நவாரே மாநிலம்

**நவாரே:** வடக்கு இசுபெயினில் (Spain) பிரான்சு நாட்டின் தெற்கு எல்லையை ஒட்டியுள்ள ஒரு மாநிலம் நவாரே (Navarra). இது மேற்குப் பிரான்சு மலைத் தொடருக்கும் ஈபுரோ (Ebro) ஆற்றுக்கும் இடையே இருக்கிறது. இதன் தலைநகர் பாம்புலோனா (Pamplona). மலைச் சாரல் பகுதியில் ஆடு மாடுகள் மேயக் கூடிய புல்வெளிகள் உள்ளன. மேலும் உறுதியான மரங்களைக் கொண்ட காடுகளும் காணப்படுகின்றன. இவை இம்மாநிலத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவியுள்ளன. செழிப்பான பள்ளத்தாக்குப் பகுதியில், சர்க்கரைவள்ளிக் கிழங்கு, பருப்பு வகைகள், காய்கறி வகை முதலியன பயிராகின்றன. திராட்சைத் தோட்டங்களும் இங்கு உண்டு. நீர்மின் இயந்திரங்கள் மூலம் சில தொழில்கள் இங்கு வளர்ச்சியடைந்துள்ளன. இதன் பரப்பு 10421 ச.கி.மீ. மக்கள்தொகை 597,367 (1981).

நவாரே மக்கள் பெரும்பான்மையில் பாசுக்கியூ (Basque) இனத்தைச் சேர்ந்தவர்கள். இதன் நில அமைப்புக் காரணமாகப் பழங்கால வரலாற்றிலேயே இப்பகுதிக்குச் சிறப்பு ஏற்பட்டிருந்தது. இங்கு வாழ்ந்த பாசுக்கியூ மக்கள், தம்மை எதிர்த்து வந்த பிராங்கியரையும் (Franks), மூர்களையும் (Moors) தடுத்து வெற்றி கொண்டனர். பேரரசன் சார்லமேன் கி.பி. 778-இல் நவாரேயை வெற்றி கொண்டானென்றும், அவ்வெற்றி சிறிது காலம் தான் நீடித்தது என்றும் சொல்லப்படுகிறது. பாசுக்கியூ மன்னன் இனிகோ அரிட்டுசா (Inigo Aritza) என்பவன் கி.பி. 824-இல் பாம்புலோனாவில் முடிசூட்டப்பெற்றான். அவன் பின் வந்தோர் காலத்தில் அவ்வரசு விரிவடைந்து நவாரே அரசு (Kingdom of Navarra) என்று பெயர் பெற்றது. பின்னர் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் பிரான்சு நாட்டின் ஆட்சி இங்கு ஏற்பட்டது. இசுபெயின் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் இதைத் தன்னுடன் இணைத்துக் கொண்டது. தெ.பா.

**நவீனமயமாதல்:** ஒரு நாடு அல்லது சமூகம் தனது பண்டைய சமூக அமைப்பிலிருந்து விடுபட்டு, தொழில்நுட்பக் கூறுகளைக் கொண்டதும் புதிய மதிப்புக்கள், நடத்தைத்தரங்கள் போன்றவற்றைக் கொண்டதுமான ஒரு சமூக அமைப்ப[illegible]த் தோற்றுவிக்க மேற்கொள்ளும் முயற்சி நவீனமயமாதல்(Mo[illegible]rnization) எனப்படும். இந்த முயற்சியினால் சமூக அமைப்பு, மதிப்புக்கள், மனப்பான்மைகள், விருப்பங்கள் ஆகிய யாவற்றிலும் மாற்றம் ஏற்படும். நவீனமயமாதல் என்பது பொருளாதாரத் துறையில் மேம்பட்ட மேலை நாடுகளைப் பின்பற்றுவது மட்டுமன்று. நவீனமயமாதலுக்குத் தனி மனிதன் நிலையிலும் சமூக நிலையிலும் மாற்றங்கள் தோன்றவேண்டும். இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் இம்முயற்சியில் பல்

வேறு நாடுகளிடையே ஒரு புதிய வேகம் காணப் பட்டது. வளர்ச்சி பெற்ற நாடுகளைப் பின்பற்றுதல் நவீனமயமாக்கிக்கொள்ளலில் காணப்படுகிறதெனி னும், தன்னுடைய தனித் தன்மையைக் காத்துக் கொள்வதிலும், வளர்ச்சிபெற முயலும் நாடுகள் உறுதியோடு காணப்படுகின்றன. நாட்டில் நவீனமய மாதற் சிந்தனைகளை ஏற்றுக்கொண்ட புதிய சந்த தியினை உருவாக்குவது நவீனமயமாதலின் நோக்க மாகும்.

முழு வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளின் சில பண்பு களை மேலெழுந்தமுறையில் பின்பற்றுவது மட்டும் நவீனமயமாதலாகாது. இப்பண்புகளைத் தேர்ந் தெடுத்துத் தக்க முறைப்படி இவற்றை வரிசைப்படுத்தி, இவற்றை நாட்டின் பண்பாட்டு அமைப்போடு பின்னி இணைப்பது நவீனமயமாதலின் அடிப்படையாகும். நவீனமயமாதல் என்பது சிறிது காலம் முன்னர் வரை மேலைநாடுகளின் நாகரிகத்தைப் பின்பற்றுதல் என்ற பொருளிலேயே பொதுவாகப் பயன்படுத்தப்பட்டது. ஆனால், இப்பொழுது இச்சொற்றொடர் இப்பொரு ளில் பயன்படுத்தப்படுவதில்லை. முக்கியமாக ஆசிய- ஆப்பிரிக்க நாடுகளில் இப்பொருள் விரும்பப்படுவ தில்லை.

நவீனமயமாதல் எனப்படுவதில் தொழில்



இயந்திரம் மூலம் செயல்

வளர்ச்சியோடு பிற கூறுகளும் அடங்கியுள்ளன. மேலும், நவீனமயமாதல் படிப்படியாக நிகழக்கூடும் (அமெரிக்கா) அல்லது அரசின் கட்டுப்பாடான முயற்சியின் விளைவாகவும் எழக்கூடும் (உருசியா). இவ்விரண்டுக்கும் மாறான ஒரு முறையினைச் சப்பான் கையாண்டு வெற்றி கண்டுள்ளது. எனினும், இவை யாவற்றிற்குமிடையே பின்வரும் சில பொதுப்பண்பு கள் காணப்படும்.

**நவீனமயமாதற் பண்புகள்:** 1) அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சி ஆகியவை இதன் அடிப்படையாகும். 2) நவீன முறைப்பட்ட சமுதாயத்தினரிடையே மிகுதி யான அளவு ஒட்டுதல் உணர்வும் (Empathy), தடங் கலின்றிக் கருத்துப் பரிமாற்றமும், செயல்களில் மிகுதியான பங்கேற்றலும் காணப்படும். 3) இத்தகைய சமுதாயத்தில் மக்களிடையே நிலைப்பெயர்வு (Mobi-



நவீன முறையில் பருத்தி பயிரிடல்

lity) மிகுதியான அளவில் காணப்படும். இது மக்கட் சமுதாயத்தின் ஒரு பகுதியிலிருந்து அதுபோன்ற மற்றொரு பகுதிக்கோ (Horizontal), கீழ்நிலையினின் றும் அடுத்த மேல்நிலைக்கோ (Vertical) செல்லும் இயக்கமாக இருக்கும். 4) நவீன சமுதாய மக்கள் தங்களுடைய விருப்பங்களையும் ஆர்வங்களையும் ஒன்றுசேர்த்து வெளிப்படுத்துவர். 5) இங்கு அரசியல், கட்சிச் சார்புடையதாக இருக்கும். 6) மக்கள் இலக்கு களை அடைதலில் காரண-காரிய முறைப்படி செயற் படுவர்; சிறந்த சாதனையை அடைய முயலுவர். பணம், பணி, சேமிப்பு, துணிவுச் செயல்கள் ஆகியன பற்றிய புதிய மனப்பான்மை இம்மக்களிடம் காணப் படும். 7) மாற்றத்தின் தேவை, அதனைத் தோற்று விக்கமுடியும் என்ற நம்பிக்கை ஆகியன அவர்களிடம் காணப்படும். 8) பெரும்பான்மையினரின் கருத்துக் கேற்ற முறையில் சமுதாய அமைப்பை உருவாக்கு

தல், சகிப்புத்தன்மை, எதிர்கால உயர் இலக்குகளை அடைய உடனடியாகக் கவர்ச்சியாயுள்ள சிறு இலக்கு களைவிட்டுத்தள்ளல் போன்ற பண்பியல்புகள் இங்குக் காணப்படும். பூ.த.

**நவீனமயமாதலின் தோற்றமும் வளர்ச்சியும்:** வர லாற்று அடிப்படையில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டு முடிய மேற்கு ஐரோப் பாவிலும், வட அமெரிக்காவிலும் சமூகம், பொரு ளாதாரம், அரசியல் ஆகிய அமைப்புகளில் ஏற்பட்ட முன்னேற்றங்களின் செயற்பாங்குதான், நவீனமய மாக்கல் எனப்படுகிறது. இத்தகைய மாற்றங்கள் அதன்பிறகு ஐரோப்பாவின் மற்ற நாடுகளுக்கும் பரவின. இந்த முன்னேற்றங்கள் கி.பி. 19,20 ஆம் நூற்றாண்டிலும் தென் அமெரிக்கா, ஆசியா ஆப் பிரிக்கா ஆகிய கண்டங்களுக்குப் பரவின.

புகள் சில வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பண்பாட்டிலும், சமூக அமைப்பிலும் பல மாற்றங் களை ஏற்படுத்தின. ஆயினும், இந்த மாற்றங்கள் யாவும் நவீனமயமாக்கலாகா. இருந்தபோதிலும் ஆங்கிலேயரின் ஆட்சிநிறுவப்பட்ட பின்னரே இந்தியா வில் நவீன பண்பாட்டு நிறுவனங்களும் (Modern Cultura Institutions) நவீன சமூக அமைப்புகளும் அறிமுகம் செய்யப்பட்டன. அறிவியலிலும், தொழிற் கலையைப் பற்றி ஆராயும் அறிவியலிலும் தோன் றிய புதுமைகளே இந்த நவீனமயமாக்கும் செயற் பாங்குகளின் வலிமைக்கு அடிப்படையாகும்.

இந்த அடிப்படைச் சூழ்நிலைதான் ஆங்கிலேய ஆட்யசிாளர்களை இந்தியாவை நவீனமயமாக்க வேண்டுமென்ற எண்ணத்தை ஏற்படுத்தியது. தொடக்ககாலத்தில் ஆங்கிலேயரின் தொடர்பு





நவீனமயமாதல்

நவீனமயமாக்கலின் செயற்பாங்குகள் தொடக்க காலத்தில் வெளிநாட்டவர்களின் தாக்கத்தினாலும் பின்னர் ஒரு குறிப்பிட்ட அளவில் உள்நாட்டுத் தூண்டுகோலினாலும் வளர்ச்சியடைந்தன. முதலில் நவீனமயமாக்கலின் செயற்பாங்குகள் படிப்படியாக ஐரோப்பா, இங்கிலாந்து, நெதர்லாந்து, அமெரிக்கா போன்ற மேலை நாடுகளில் வளர்ச்சியடைந்தன. இந்த ஐரோப்பிய நாடுகளில்தான் உள்நாட்டுப் பலத்தாலும், சிறிதளவு வெளிநாட்டு நிகழ்ச்சிகளி னாலும் பல மாற்றங்கள் ஏற்பட்டு நவீனமயமாக்கும் செயற்பாங்குகள் வளர்ச்சியடைந்தன.

இந்தியாவில் முக்கியமாக நவீனமயமாதல், மேலை நாடுகளுடன் ஏற்பட்ட தொடர்புகளினாலும் குறிப்பாக ஆங்கிலேயரின் ஆட்சி இந்தியாவில், நிறுவப்பட்டதாலும் தொடங்கியது. இந்தத்தொடர்

துணைப் பண்பாட்டினை (Sub-Cultule) நவீனமய மாக்கப் பயன்பட்டது. குறிப்பாக கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் பம்பாய், கல்கத்தா, சென்னை போன்ற பெரு நகரங்களில் மொழி பெயர்ப்பாளர் களையும், நடுநிலைமையாளர்களையும் மேலை நாட்டுப் பண்பாட்டிற்கு மாற்ற வழிவகுக்கப்பட்டது. இதைப் பின்பற்றிச் சிலகுறிப்பிட்ட பிரிவினர் மேலை நாட்டுப் பண்பாட்டை முழுமையாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கூறி வந்தார்கள். இந்த இயக்கங் களும் ஆங்கிலேயரின் ஆட்சியும் கி.பி. 19-ஆட் நூற் றாண்டின் மத்தியில் இந்தியாவின் மரபுசார்ந்த சமூகத்தை நவீனமயமாக்கத் தொடங்கின. இவை களின் முக்கிய கூறுகளாகத் திகழ்ந்தவை 'அப்போது புகுத்தப்பட்ட புதிய சட்ட முறையும், மேலைநாட்டுக் கல்வி முறையும், நகரமயமாக்கலும், தொழில்மய மாக்கலுமாம்.

புதிய செய்தித்தொடர்பு, போக்குவரத்து, சமூகச் சீர்திருத்தங்கள் ஆகியவை இத்தகைய நவீன மயமாதலின் நெறிகளுடன் (Norms) சமூக அமைப்பிலும் நவீனமயமாதலை ஏற்படுத்தின. எடுத்துக் காட்டாக மையக்குவிமுக ஆட்சி நீதிபதிகள் இராணுவம், தொழிற்றுறையில் மையக்குவிமுக ஆட்சி, புதிய வணிகப பெருமக்களின் இனம், தொழிலதிபர்கள் ஆகியோர் தோன்றினார்கள். இவர்களுடன் அரசியலில் சிறப்பிடம் பெற்றவர்களும் நாட்டுப்பற்று மிக்க தலைவர்களும் கி.பி 19-ஆம் நூற்றாண்டின் மத்தியில் தோன்றினார்கள். புதிய தொழில் நிருவாகிகளின் (New Industrial Entrepreneurship) வளர்ச்சியினால் மேலை நாடுகளுக்கு இணையாகத் தொழிற்சாலைகளில் உழைக்கும் வருக்கமும் தொழிற்சங்கங்களும் அமைக்கப்பட்டன. இத்தகைய நவீன அமைப்புகள் நாடு முழுவதும் ஒரே தன்மையான பண்புகளுடன் விளங்கின.

ஆயினும், ஆங்கிலேயரின் ஆட்சியில் இந்தியாவில் நவீனமய மாக்கலில் ஒரு சிறப்புக் கூறு உண்டு. அதாவது இந்தச் செயற்பாங்கின் வளர்ச்சி குறிப்பிட்டதைத் தேர்ந்தெடுப்பதாகவும் பிரித்தெடுக்கப்பட்டபாகமாகவும் உள்ளது. இந்தியச் சமூக அமைப்பின் உள்ளமைப்புகளாகிய குடும்பம், சாதி, கிராம சமூகம் ஆகியவற்றுடன் இந்தச் செயற்பாங்குகள் ஒன்றோடொன்று இணையவில்லை. இந்நிலையில் ஆங்கிலேய அரசாங்கம் தங்களுடைய தலையீட்டைக் குறைத்துக் கொள்வது என்ற கொள்கையைப் பின்பற்றியது. நெடுங்காலமாகவே இராணுவத்திற்கும், மையக் குவிமுக ஆட்சிக்கும் தேவைப்பட்ட அதிகாரிகளைச் சாதி, இன அடிப்படையிலேயே நியமித்தார்கள். பின்னர் 20-ஆம் நூற்றாண்டில் நாட்டின் சுதந்திரப் போராட்டம் உச்சநிலையை அடைந்தபோது, சாதி அடிப்படையிலான தேர்தல் முறை புகுத்தப்பட்டது. இத்தகைய வரலாற்றுக்காரணிகள் நாடு சுதந்திரம் அடைந்தபிறகும் நாட்டில் நவீனமயமாதலின் செயற்பாங்குகளில் மிகுதியாகச் செல்வாக்குச் செலுத்தின.

நாடு சுதந்திரம் அடைந்தபின்னர் நவீனமயமாதலின் செயற்பாங்குகளில் சில அடிப்படை மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. நாட்டின் முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டு நவீனமயமாதல் சமூகத்தின் எல்லாப் பிரிவுகளிலும், பண்பாட்டிலும், அமைப்புகளிலும் புகுத்தப்பட்டன. அரசியல் அமைப்பில் வாக்குரிமை வழங்கப்பட்டதன் விளைவாகச் சமூக அமைப்பில் ஒவ்வொரு பகுதியினரும் அரசியல் மயமாக்கப்பட்டனர் (Politicization). இந்து திருமணச் சட்டங்களிலும், பரம்பரைச் சொத்துரிமைச் சட்டங்களிலும் சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டதன் காரணமாக மரபுவழி இந்து குடும்ப அமைப்பின் அடிப்படை மிகவும் பாதிக்கப்பட்டது. சமுதாய முன்னேற்றத் திட்டங்கள் (Community Development Project) ஒவ்வொரு கிராமத்திற்கும் கொண்டு வரப்பட்டன. இவைகளுடன் இணைத்துப் புகுத்தப்பட்ட நிலச் சீர்திருத்தங்களும் கிராமப் பஞ்சாயத்து முறையும், கிராம மக்களை மையக்குவிமுக ஆட்சிமுறையில் பங்குகொண்டு உள் நிருவாகத்திலும், நீதியை நிலைநாட்டுவதிலும் முழுப்பங்காற்ற உற்சாகப் படுத்தின. இவைபோன்ற செயற்பாங்குகளின் பலனாகச் சாதியில் பல குறிப்பிடத்தக்க அடிப்படை மாற்றங்கள் ஏற்பட்டன. இப்போது நவீனமயமாதலின் செயற்பாங்குகளில் சாதி முக்கியமான தொண்டாற்றுகிறது.

இந்தியாவில் நவீனமயமாதலின் செயற்பாங்குகளால் சில குறிப்பிட்ட நிறுவன வளர்ச்சிகள் ஏற்பட்டன. எடுத்துக்காட்டாக 1) பொதுச் சட்ட அமைப்பின் வளர்ச்சி (The Growth of a Universal Legal Superstructure), 2) கல்வியும் நவீனமயமாதலும் (Education and Modernization), 3) நகரமயமாதலும் நவீனமயமாதலும் (Urbanization and Modernization), 4) செய்தித் தொடர்பும் நவீனமயமாக்கலும் (Communication and Modernization), 5) நாட்டுப்பற்றும் அரசியல்மயமாதலும் நவீனமயமாதலும் (Nationalism, Politicization and Modernization) என்பனவாகும்.

**1) பொதுச் சட்ட அமைப்பின் வளர்ச்சி:** இந்தியச் சமூகத்துடன் ஆங்கிலேயரின் தொடர்பு ஏற்பட்ட நேரத்தில் இந்தியாவின் ஒவ்வொரு பகுதியிலும் தனித்தனியான சட்டமுறை நிலவியது. அவைகளுள் ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்குரியதாகவும், பாரபட்சமுடையதாகவும் விளங்கியது. ஆங்கிலேயரின் ஆட்சி அமைக்கப்பட்ட பின்னரே நாட்டின் சட்ட அமைப்பில் புதுமைகள் புகுத்தப்பட்டன. இவ்வாறாகச் சட்டம் நவீனமயமாதலுக்கு ஒரு கருவியாக உருவானது. இந்துக்களுடைய பல உணர்ச்சி வசப்படக்கூடிய பழக்கங்களின் பிரிவிற்குச் சட்டங்கள் மூலமாகச் சமூகச் சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. மக்களால் மறுக்கப்படக்கூடிய சட்டங்கள் இந்துக்களின் திருமணக் காரியங்களில் இயற்றப்பட்டன. எடுத்துக்காட்டாகத் திருமண வயது குறித்து இயற்றப்பட்ட சட்டம் பாலகங்காதர திலகர் போன்ற பெருந்தலைவர்களால் எதிர்க்கப்பட்டதுடன் இந்துக்களின் பண்பாட்டில் இது ஒரு தலையீடு என்றும் குற்றம் சாட்டவும் பட்டது.

இதுபோல கி.பி.19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் பொருளாதாரத்திலும் தொழிற்சாலையிலும் அரசியலிலும் வெவ்வேறு சட்டத் திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. இருந்தபோதிலும், தனிப்பட்டோர்

சட்டங்களையும், இந்துக்களின் வழக்கங்களில் சீர் திருத்தங்களைக் கொண்டுவரச் சிறப்புச் சட்டங்களை யும் கொண்டுவர நாடு சுதந்திரம் அடையும்வரை காத்திருக்க வேண்டியதாகிவிட்டது. இதனுடைய தொடக்கமாக நாட்டின் அரசியல் அடிப்படை அமைப் பில் (Constitution) எல்லாக் குடிமக்களுக்கும் மதம், சாதி, ஆண், பெண் போன்ற எந்தவித வேறுபாடுமின் றிச் சம உரிமை கிடைக்க உத்தரவாதம் வழங்கப்பட் டது. எந்த ஒரு வடிவிலும் தீண்டாமை என்ற தீய பழக்கத்தை அடியோடு நீக்கச் சட்டம் வகுக்கப்பட் டது. இதைத் தொடர்ந்து சிறப்புத் திருமணச் சட்டம், 1954 (Special Marriage Act -1954), இந்து திருமணச் சட்டம், 1955 (Hindu Marriage Act -1955), வரதட்சணை ஒழிப்புச் சட்டம், 1961 (Dowry Prohibition Act -1961) குழந்தைகளுக்கான சட்டங்கள், வேறுபல சமூகச் சீர்திருத்தச் சட்டங்கள், தாழ்த்தப்பட்டவர்கள், பழங்குடியினர்களுக்கான சட்டங்கள் ஆகியவை கொண்டு வரப்பட்டன. இந்தச் சட்டங்கள் சரியான முறையில் செயற்படுத்தப்பட் டால் இந்து சமூகத்தின் அடிப்படை அமைப்பில் மாறுதல் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. இத்தகைய சட்டங்களின் பயனாக இந்திய சமூகத்தில் நவீனமய மாதலின் பண்பாட்டு நெறிகள் படிப்படியாகப் பரவின என்பதை உணரலாம்.

**2) கல்வியும் நவீனமயமாதலும்:** பல்வேறு வடிவில் நவீனமயமாக்கலுக்குக் காரணமாக விளங்குகின்ற இக்காலக் கல்வியும், மேலை நாடுகளில் தோன்றி யதே. மரபுவழிக் கல்வி, உயர்ந்த சாதி மக்களுக்கு மட்டும் உரியதாக விளங்கியது. ஆனால், நவீனக்கல் முறை மாறுபட்ட குறிக்கோளுடனும், ஒழுங்குபடுத் தப்பட்டதாகவும் விளங்குகிறது. இந்தியாவை ஆட்சி புரிந்த ஆங்கிலேயர்களே புதிய கல்வியை இந்தியா வில் பரபபினார்கள். இன்று நாட்டின் நவீனமயமாக் கலுக்குக் கல்வி மிக முக்கிய காரணியாக விளங்கு கிறது. இக் கல்விமுறை நாட்டு மக்களிடையே நாட்டுப் பற்றையும், சுதந்திர வேட்கையையும் ஏற் படுத்தியது. இக் கல்வி முறை நாட்டின் சுதந்திரத் திற்கு மட்டுமன்றி நாட்டின் சமூக அமைப்பிலும் பண்பாட்டிலும் சீர்திருத்தங்களைக் கொண்டுவர வழிவகுத்து, நாடு நவீனமயமாக மிகவும் உறுதுணை யாக விளங்குகிறது.

**நகரமயமாதலும் நவீனமயமாதலும்:** நகரங்களைப் பற்றிய ஆராய்ச்சிகளிலும், சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்களிலும் நாட்டிலுள்ள நகரங்கள் யாவும் ஒரே தன்மையனவாக இல்லை என்பது தெரியவருகிறது. பல நகர ஆய்வுகள், நகரச்சமூக வாழ்க்கையும், பண் பாடும் மரபுவழி வாழ்க்கையிலிருந்து வேறுபட்டிருக் கின்றன என்பதை எடுத்துக்காட்டுகின்றன. நகரங் களில் ஒரே பண்பாடு பின்பற்றப்படவில்லை. அதற்குப் பதிலாக வெவ்வேறு பண்பாட்டைப் பின்பற்றக்கூடிய மக்கள் ஒன்றாக வாழ்வதைப் பார்க்கலாம். இவ்வாறு பல்வேறு இனத்தைச் சேர்ந்தவர்கள் கூடி வாழ்வ தால் ஒவ்வொருவருடைய பண்பாட்டிலும் வாழ்க்கை யிலும் பல மாற்றங்கள் ஏற்பட வாய்ப்புக் கிடைக் கிறது. நகர வெளிப்புறச் சூழ்நிலைகள், மரபுவழி வாழ்க்கையையும் பண்பாட்டையும் நவீனமயமாக்க உதவியாக இருக்கின்றன. புதிய போக்குவரத்து, வங்கிகள், புதிய மருந்துகள், அரசியல் பண்பாடு போன்றவைகளைப் பின்பற்றுவதால் தொழில்மய மான நகரங்களில் மக்கள் பெரிதும் புதுமைப்படுத்தப் பட்ட வாழ்க்கை முறையைப் பின்பற்றுகிறார்கள்.

**3) செய்தித்தொடர்பும் நவீனமயமாதலும்:** நவீன மயமாக்கும் பண்பாட்டைப் பரப்புவதிலும், வளர்ச்சி யடையச் செய்வதிலும் பெரும் பங்காற்றிய செய்தித் தொடர்புகள், மேலை நாடுகளுடன் ஏற்பட்ட தொடர்பு மூலமாகத்தான் இந்தியாவில் அறி முகப்படுத்தப்பட்டன. கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் மத்தியில்தான் போர்ச்சுகீசியர்கள் (Portuguese) அச்சு இயந்திரத்தைப் பயன்படுத்தக் கற்றுக் கொடுத் தார்கள். பின்னர் அது கிறித்தவ சபைகளினால் ஊக்குவிக்கப்பட்டது. ஆங்கிலேயர்கள் தபால், தந்தி தொடர்வண்டிப்போக்குவரத்துப் போன்றவைகளை அறிமுகப்படுத்தினர். இத்தகைய மாற்றங்களைச் செய்தித் தொடர்பு முறைகளில் புகுத்தியதன் விளை வாக நாட்டில் நவீனமயமாதல் மறைமுகமாகவும் உறுதியாகவும் ஏற்படுத்தப்பட்டது.

**4) அரசியல்மயமாதலும் நவீனமயமாதலும்:** இன் றைய குடியரசுப்பண்பாடு புதிய கண்டுபிடிப்பாகும். இது வெளியிலிருந்து கொண்டு வரப்பட்டது. இது இந்திய மரபுவழி அரசாட்சிச் சமூக அமைப்பிற்கு மாறுபட்டு உருவாகியது. இது மேலைநாட்டுப் பண்பாட்டின் இக்காலக் கண்டுபிடிப்பாகும்.

மேற்கூறிய முக்கிய பண்பாட்டுப் பரப்புகளுடன் வேறுசில முக்கிய துறைகளிலும், பழக்க வழக்கங்களி லும் நவீனமயமாதல் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. எடுத்துக்காட்டாக, மனிதனின் அன்றாட வாழ்க்கை யிலும் பழக்க வழக்கங்களிலும் இவ்விதமான மாற் றங்களைச் சமூகவியல் அறிஞர்களும், மானிடவியல் அறிஞர்களும் குறிப்பிட்டுக் கூறியுள்ளனர். இத் தகைய சமூக மாற்றங்கள் முக்கியமாக உடை, உணவுப் பழக்கங்கள், சடங்குகள், வாய்மொழிச் சொற்கள், போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவற் றில் தோன்றியுள்ளன. மரபுவழியில் வீட்டில் தயா ரிக்கப்பட்ட ஆடைகளையே மக்கள் பயன்படுத்தி னார்கள். இத்தகைய பழக்கம் இன்னும் நாட்டின்

சில பகுதிகளில் சில பிரிவினரிடம் காணப்படுகிறது. இப்போது பருத்தித்துணிகளுக்குப்பதிலாகத் தொழிற் சாலைகளில் உற்பத்தி செய்யப்பட்ட மெல்லிய துணி களையே (Tericotton, Nylon) மக்கள் அணிகின்ற னர். ஆடை அணியும் விதத்திலும் மாற்றங்கள் ஏற் பட்டுள்ளன. மரபு வழியில் மரங்களிலும் கொம்பு களிலும் செய்யப்பட்ட சீப்புகளுக்குப் பதிலாக இன்று செயற்கை முறையில் தயாரிக்கப்பட்ட சீப்புகளையே மக்கள் பயன்படுத்துகின்றனர். உணவுப் பழக்கங்களி லும் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. தேநீர்க் கடைகள் கிராமங்களிலும் பெரும் அளவில் காணப் படுகின்றன. இதைத்தான் பேராசிரியர் எம்.என். சீனிவாசு (Prof. M.N. Srinivas) குறிப்பிட்டுச் சொல் லும்போது 'பிரயாணம் செய்வதும், தேநீர்க் கடை களும் நகர வாழ்க்கையில் மட்டும் காணப்படுவதல்ல; கிராமங்களிலும் அவை முக்கியத்துவம் பெற்றுள்ளன' எனக் கூறுகிறார்.

ஆங்கில மொழிகளில் காணப்படுகின்ற பல சொற்களை மக்கள் சாதாரணமாகத் தங்கள் அன் றாட வாழ்க்கையில் அப்படியே பயன்படுத்துவதைக் காணலாம். கோ.இரா.

**துணை நூல்கள்:**


**Desai A.R.**, Rural India in Transition, Popular Publishers, Bombay, 1961.

**Srinivas M.N.**, Caste in Modern India and Other Essays, Asia Publishing House, London, 1962.

**Srinivas M.N.**, Social Change in Modern India, Orient Longmans, New Delhi, 1972.

**Yogendra Singh.**, Modernization of Indian Tradition, Thomson Press (India) Ltd., Delhi, 1973.


***நவோதயாப் பள்ளி***: காண்க: புதிய கல்விக் கொள்கை.

***நள்ளி***: இவன், சங்க இலக்கியங்களால் அறிய லாகும் குறுநிலத் தலைவர்களுள் ஒருவன்; கடைச் சங்க வள்ளல் எழுவருள் ஒருவராக எண்ணப் பெற் றுள்ளான். இவனை வன்பரணர் (புறம்.148, 149, 150), பெருஞ்சித்திரனார், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறு. 107) ஆகியோர் சிறப்பித்துப் பாடியுள்ளனர். மேலும், காக்கை பாடினியார், நச்செள்ளையார் (குறு.210), கபிலர் (அகம்.238), பர ணர் (அகம்.152) ஆகியோரும் தம் அகத்துறைப் பாடல்களில் இவனைக் குறிப்பிட்டுள்ளனர்.

காண்க: கண்டீரக் கோப்பெருநள்ளி. அ.மா.ப.

***நளவிலாசம்***: சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று விலாசம் என்பது. கதை, வருணிப்பு, விளக்கம் முதலிய பொருள்களில் விலாசம் என்பது வழங்கு கின்றது. விளையாட்டு, அடையாளம் முதலிய பொருளில்வழங்குவதும் உண்டு. அது இலக்கிய வழிப் பட்டது அன்று

கதை அல்லது வரலாற்று விளக்கமாக இரணிய விலாசம், இராமவிலாசம், குசேல விலாசம், சகுந் தலை விலாசம், சீவகவிலாசம், திருநீலகண்ட நாய னார் விலாசம், மார்க்கண்டேய விலாசம் முதலியன விளங்குகின்றன. இவ்வகையில் தோன்றிய ஒரு விலா சமே நளவிலாசம் ஆகும்.

நளன் என்னும் அரசன் மேல் நளவெண்பா, நைடதம் ஆகிய நூல்கள் இயற்றப்பட்டமை போல் நளச்சக்கரவர்த்தி அம்மானை, நளச்சக்கரவர்த்தி கதை,நளநாடகம் என்பனவும் நளவிலாசம் என்பதும் தோன்றின.

நளவிலாசம், தாமோதர முதலியார் என்பவரால் கி.பி. 1872-இல் இயற்றப்பட்டதென்பதை 'இலக்கிய அகராதி' வழியே அறிய முடிகின்றது. இதுசென்னைக் கையெழுத்து நூல்நிலையப் படிகளுள் ஒன்றாகவும் காணப்படுகிறது.

இனி, நளச்சக்கரவர்த்தி விலாசம் என்று அறியப் பெறும் நூலை இயற்றிவர் ஈழத்துச் சதுமலை இரா மலிங்கம் பிள்ளை. இவர் மாணிக்கவாசகர் விலா சமும் இயற்றியவர் என்று 'நூற்றாண்டுகளில் தமிழ்' என்னும் நூல் கூறுகின்றது (பக். 167).

நளன் பெயர் விளக்கும் இவ்விலாசங்களையன் றித் தமயந்தி விலாசமொன்றும் இருந்தது. இந்த இலக்கியப்பெருக்கம் நளதமயந்தி கதையில் பலர் ஈடு பட்டிருந்தமை புலப்படுத்தும். 'சூதுவிளையாடேல்' 'சூதும் வாதும் வேதனை செய்யும்' என்ற அறங் களை விளக்க நளதமயந்தி வரலாறு, பல்வகை இலக் கிய வடிவங்களில் பல்வேறு காலங்களில் புலவர்க ளால் பாடப்பட்டது.

நதிவிலாசம், கடல்விலாசம், சந்திரவிலாசம் என் பவை சொல்லணியும் பொருளணியும் மிக்க பாடல் களை யுடையனவாம். நளவிலாசம் போலும் விலாச நூல்கள், எளிமையும் பொதுமக்கள் படித்துணரும் அமைதியும்உடையனவாம். இரா.இ.

***நளவெண்பா***: நளன் வரலாற்றை வெண்பா யாப்பினால் கூறும்நூல் நளவெண்பா ஆகும். இதனை இயற்றியவர் புகழேந்திப்புலவர். 'வெண்பா வில் புகழேந்தி' என்னும் பெருமையைப் புகழேந்திப் புலவர்க்குத் தனிச்சிறப்பாக வழங்கியது இந்நூலேயா கும்.

வடமொழியில் அமைந்த மகாபாரதத்தில் ஆர ணிய பருவத்தில் நளன் கதை இடம் பெற்றுள்ளது.

நளனைப் பற்றிய கிளைக்கதையாகிய அது 'நளோ பாக்கியானம்' எனப்படும். அதனை முதல் நூலாகக் கொண்டு 'நளவெண்பா' என்னும் பெயரில் புகழேந் திப் புலவர் இயற்றினார்.

சுயம்வர காண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்னும் மூன்று காண்டங்களை யுடையது நளவெண்பா. பாயிரம் ஏழு பாடல்களை யும், நூல் 420 பாடல்களையும் ஆக 427 பாடல் களைக் கொண்டது நளவெண்பா.

பிள்ளையார், திருமால், சிவபெருமான், முருகன் ஆகியோரை வாழ்த்தும் இவர்தம் நல்லுள்ளம் பாயிரத் தில் விளங்குகிறது. இவர்தம் நன்றியுள்ளம் இவரை ஆதரித்த மள்ளுவநாட்டு வேந்தன் சந்திரன் சுவர்க்கி என்பானை நூலில் சிறப்பிக்கும் வகையால் புலப்படும்.

சந்திரன் சுவர்க்கியைப் பாடிய புலவன் பசிப் பிணி அகல்வது போல, நளனைப் பற்றியிருந்த கலி நீங்கியது என்று உவமைப் படுத்துவது சிறப்பான ஓரிடமாகும்.

'வலிமைமிக்க யானையைத் தாமரைத் தண்டில் உள்ள நூலால் கட்டுவதைப் போன்றது யான் நளன் கதையைப் பாடுவது' என்று புகழேந்திப் புலவர் கூறும் அவையடக்கம் அவர்தம் அடக்கத் தன்மையைக் குறிக்கும். இவர் பாண்டியன், சோழன் ஆகிய இரு பெருவேந்தர்களின் நட்பும் ஒருங்கு பெற்றவர் என் பது பாயிரத்தால் விளங்குகிறது (7).

நளன் நிடத நாட்டு வேந்தன்; ஒருநாள் சோலைக்குச் சென்றான்; ஆங்கோர் அன்னத்தைக் கண்டான்; அதன் அழகில் ஈடுபட்டு அன்பு கொண் டான். அன்னம் நளன்மேல் அன்புகொண்டு, 'உனக்கு நான் ஒரு நலம் செய்ய விரும்புகிறேன். ஒப்பற்ற அழகியாம் தமயந்தி என்பாளை உனக்கு மனையா ளாக்க விரும்புகிறேன். அவள் விதருப்ப நாட்டு வேந்தன் வீமன் மகள் ஆவள்' என்று கூறித் தமயந்தி யின் சிறப்புகளை விரித்துரைத்தது. பின்னர், ஆங் கிருந்த தமயந்தியிடம் சென்று நளன் சிறப்புகளை உரைத்து இருவரிடத்தும் அன்பைப் பெருக்கியது.

தமயந்திக்குச் 'சுயம்வரம்' நிகழ்ந்தது; அவளைத் திருமணம் செய்வதற்கு மண்ணகத்து வேந்தரை அன்றி விண்ணகத் தேவரும் விரும்பி வந்தனர். எனி னும், தமயந்தி நளனுக்கே மாலை சூட்டினாள். அத னைக் கண்ட தேவர்கள் பொருமினர். கலியன் நள னையும் தமயந்தியையும் பிரிப்பதற்குச் சூழ்ச்சி செய்தான். நளன், புட்கரன் என்பவனோடு சூதாடி நாடு நகரங்களை இழந்து, மக்களை (இந்திரசேனன், இந்திரசேனை) மாமன் ஊருக்கு அனுப்பிவிட்டு, மனைவியை அழைத்துக்கொண்டு காடு சென்றான். காட்டில் அவள் துன்புறுவாள் என்றெண்ணி இரவுப் போதில் அவளை விட்டுப் பிரிந்தான். தமயந்தி தன் தந்தையிடம் சேர்ந்தாள்.

காட்டில் ஒரு பாம்பு தீண்டுதலால் நளன் உரு மாற்றமடைந்தான். வாகுவன் என்னும் பெயரொடு அயோத்தி மன்னன் இருதுபன்னனுக்குச் சமையலா ளாகவும் தேரோட்டியாகவும் பணி மேற்கொண் டான். இந்நிலையில் நளனைக் கண்டுபிடித்தற்காகத் 'தமயந்திக்கு இரண்டாம் சுயம்வரம் நிகழு'மென இருதுபன்னனுக்கு ஆள்விடுக்க, அவன் வாகுவனொடு விதருப்ப நாட்டின் தலைநகர்க்கு வந்தான். வாகுவன் நளனே என்பதைக் கண்டு கொண்டாள் தமயந்தி. நளனைப் பற்றிய கலி நீங்கியது. மீண்டும் புட்கர னோடு சூதாடி இழந்த நாட்டைப் பெற்று ஆட்சி நடத்தினான் நளன். இது நளவெண்பாவின் கதைச் சுருக்கமாகும். இரா.இ.

**நளன்** முதல் ஏழு வள்ளல்களுள் ஒருவன்; மாமன்னர்கள் அறுவருள் சிறந்தவன்; மாவிந்த நக ரைத் தலைமையாகக் கொண்டு நிடத நாட்டை ஆண்ட சந்திர குலத்தவன்; வீரசேனன் மைந்தன்.

இவன் ஒரு நாள் சோலையில் உலாவிக் கொண் டிருக்கையில் அங்கு மேய்ந்து கொண்டிருந்த அன்னம் ஒன்றனைப் பிடித்து விளையாடிவிட்டு, அதற்கு எவ் வித தீங்கும் நேராவண்ணம் அதனைப் பறக்கவிட் டான். அதனால் மகிழ்ந்த அப்பறவை குண்டின புரத்து மன்னன் வீமன் மகளாகிய தமயந்தியின் அழகினையும் கற்பினையும் எடுத்துரைத்தது. இவன் அவ்வன்னத்தைத் தமயந்தியிடம் காதல் தூதாக விடுத்தான். அன்னத்தின்வழி அறிந்த தமயந்தி இவன்பால் காதல் கொண்டாள்.

தன் மகளின் காதல் வேட்கையை அறிந்த மன் னன் வீமன் அவள், தன்துணைவனைத் தேர்வு செய் யும் வகையில் சுயம்வர விழா எடுத்தான். தம யந்தியை மனைவியாகப் பெற வேட்கையுற்ற தேவேந்திரன், எமதருமன், வாயு, அக்கினி என்னும் தேவர்கள் தங்கள் காதலை எடுத்துரைக்குமாறு நளனை அவன்பால் தூது விடுத்தனர். இவன் வேற் றுருவில் சென்று எடுத்துரைக்க, அவளோ நளனைத் தவிர வேறு யாரையும் அடையேன் என்று மறுத்து விட்டாள். தன் காதலியிடம் பிறர் காதல் தூதாகச் சென்றஇவனது மனவுறுதியையும் பண்புநலன்களையும் பாராட்டி, தேவேந்திரன் ஆற்றல் மிக்க பல ஆயுதங் களும், எமதருமன் கதாயுதமும், வாயு குதிரையை வசப்படுத்துவதாகிய அசுவ இருதயம் என்னும் மந்திர மும், அக்கினி தீயின்றிச் சமைக்கும் ஆற்றலும் இவனுக்கு அருளி வாழ்த்தினர். பின்னர் நிகழ்ந்த சுயம்வரத்தின் போது இந்நான்கு தேவர்களும் இவன்

போல உருக்கொண்டு, இவன் அருகிலேயே அமர்ந் திருந்தனர். கண் இமைத்தல், கால் நிலந்தோய்தல், மலர் மாலை வாடுதல் போன்ற குறிகளாலும், தனக்குத் தோழியாகி உடன் வந்த கலைமகளின் துணையாலும் உண்மையை அறிந்த தமயந்தி, இவ னுக்கு மாலை சூட்டினாள்.

இவன் தமயந்தியுடன் மகிழ்வோடு இல்லறம் ஏற்று இந்திரசேனன் என்னும் புதல்வனையும், இந்திரசேனை (நளாயனி) என்னும் புதல்வியையும் பெற்றான். மனைவி மக்களோடும் பெரும் புக ழோடும்மேன்மையுற்றிருந்த இம்மன்னனைத்தமயந்தி யின்பால் காதலற்று அவளை அடைய விரும்பிய மற் றொரு தேவனாகிய கலி (சனி) பெரும் துன்பத்திற் குள்ளாக்கினான். கலியின் சூழ்ச்சிக்கு ஆளாகிய இம் மன்னன், புட்கரமன்னனோடு சூதாடித் தன் நாட்டை யும், பேரரச வாழ்வையும் இழந்தான். மக்கள் இரு வரையும் மனைவியின் தாய்வீடு அனுப்பிவிட்டு மனைவியோடு காட்டில் சென்று கொண்டிருக்கை யில், கலியின் சூழ்ச்சியால் அங்கு வந்த அன்னத் தினை, தம் காதலை ஊக்கிய அன்னம் எனத் தவ றாகக் கருதிய தமயந்தியின் விருப்பத்திற்கு இணங்கி இவன் அதனைப் பிடிக்க முயல, அப்பறவை இவனது மேலாடையைக் கவர்ந்துகொண்டு மறைந்தது. மேலாடை இழந்த இம்மன்னன் தொடர்ந்து தன் மனைவியைக் காட்டில் உடன் அழைத்துச் செல்ல மனம் ஒருப்படாதவனாகி, இரவுப் போதில் மண்டப மொன்றில் அவளுடன் துயிலும் வேளையில், தன் னுடலில் போர்த்தியிருந்த அவளது ஆடையைத் துணித்துவிட்டு அகன்றான். துயிலெழுந்த தமயந்தி பல இடங்களில் தேடியும் தன் கணவனைக் காணா மையால் அவ்வழியே சென்று கொண்டிருந்த பொதி மாட்டு வணிகர்களின் துணையோடு சேதி நாட்டு மன்னன் அரண்மனையை அடைய, அங்கிருந்து மன் னன் வீமன் தன்மகளை அழைத்துச் சென்றான்.

மனைவியைப் பிரிந்து காட்டில் சென்று கொண் டிருந்தபோது, கார்க்கோடகன் என்னும் பாம்பைத் தீயினின்றும் இவன் காப்பாற்ற, அது இவனுக்கு வேற்றுரு வழங்கக் கூடிய துகில் ஒன்றனை வழங்கி யது. அத்துகிலை உடுத்தி, வேற்றுருக் கொண்டு, வாகுகன் என்னும் பெயரில் இவன் அயோத்தி மன் னன் இருதுபன்னனிடம்தேரோட்டியாகவும், சமையற் காரனாவும் பணியிலமர்ந்தான். அயோத்தி மன்ன னிடம் பணியாளனாகத் தன் மருமகன் இருத்தலை ஒற்றர்வழி அறிந்த வீமன், அவனைத் தன்னிடம் வரவழைக்கும் வகையில் தமயந்திக்கு இரண்டாம் சுயம்வர விழா எடுத்தான். அதனை அறிந்த அயோத்தி மன்னன் சுயம்வரத்திற்குத் தன் தேரோட்டியாகிய இம்மன்னனோடு சென்று கொண்டிருக்கையில், குதிரைகளை வழிப்படுத்தும் இவன்தன் பேராற்றலை வியந்து, அதற்கான அசுவ இருதய மந்திரத்தை இவனிடம் கற்றுக்கொண்டு, கைம்மாறாகத் தான் கற்றிருந்த அட்சவித்தை யைக் கற்பித்தான். ஒரே அம்பினால் மரத்திலுள்ள இலைகள் அனைத்தையும் துளைக்கச் செய்யும் ஆற்றலுள்ள இவ்வித்தையைக் கற்றவரைக் கலி அணுகுதல் இல்லை.எனவே, கலி இவனை விட்டு நீங்கி வாழ்த்திச் சென்றது.

சுயம்வரத்திற்கு வந்திருந்த மன்னர்களிடையே தன் கணவனைக் காணாமையால் ஐயுற்ற தமயந்தி, தேரோட்டியாக நின்றிருந்த இவன்பால் தன் மக்களை அனுப்பி, இவனைத் தெரிந்து கொண்டாள். பின்னர் மன்னன் வீமனது வேண்டுதலை ஏற்றுத் துகில் உடுத்துத் தனது உண்மை உருவை வெளிப் படுத்தினான். மீண்டும் சூதாடிப் புட்கரமன்னனை வென்று இழந்த நாட்டையும் அரச வாழ்வையும் பெற்றுப் பெருவள்ளலாக விளங்கிய இவன், தன் இறுதிக் காலத்தில் மகனிடம் ஆட்சிப் பொறுப்பினை ஒப்படைத்துவிட்டுத் தவம் இயற்றி வீடு பெற்றான். சமையற்கலையின் தேர்ச்சியை 'நளபாகம்' என இம் மன்னன் பெயரால் சுட்டும் வழக்கு மக்களிடம் நிலவு கின்றது.

சூதாட்டத்தின் கொடுமையை விளக்க நளன் கதையைக் குறிப்பிடுவர். இவன் கதையைத் தனி நூலாக 'நைடதம்' என்னும் பெயரில் அர்ச கவி வடமொழியில் புனைந்தார். அதனைப் புகழேந்திப் புலவர் 424 நேரிசை வெண்பாக்களால் தமிழ் இயலபு மாறாவண்ணம் 'நளவெண்பா' என்னும் காவியம் ஆக்கினார். மன்னர் அதிவீரராம பாண்டியர் அர்ச ரின் காவியத்தை 'நைடதம்' என்னும் நூலாகத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இவை தவிர நளன் கதை என்னும் நூலும் உளது. சிலப்பதிகாரத் திலும் நளன் பற்றிய குறிப்பு ஒன்று இடம்பெற்றுள் ளது. பெ.சு.

**நளாயினி** தலைசிறந்த கற்பினள்; நள மன்னன் புதல்வி; மௌத்கல்ய முனிவரின் மனைவி; இவளுக்கு இந்திரசேனை என்னும் வேறு பெயரும் உண்டு.

இவளது கற்புச் செறிவையும் அன்பையும் பல வாறு சோதித்த மௌத்கல்யர், தம்மை ஒரு தொழு நோயாளியாக உருமாற்றிக் கொண்டார். இவள் தன் கணவனைக் கூடையொன்றில் இருத்தி, அவர் விரும் பிய இடந்தோறும் எடுத்துச்சென்று, விரும்பிய இன் பங்களை அவர் துய்த்திடச் செய்தாள். இவளை மேலும் சோதிக்கக் கருதிய முனிவர், ஆடலழகி ஒருத்தியோடு இன்பம் நுகர விரும்பினார். அவ்வழகி மனம் உவக்கும் வகையில் இவள் தொண்டு செய்து,

முனிவர் வேட்கைக்கு அவளை இணங்கச் செய்தாள். பின்னர் முனிவரைச் சுமந்து கொண்டு புனித நீராடச் சென்று கொண்டிருக்கையில் ஓர் இரவு, கழுவில் மாட்டப்பட்டுத் துன்புற்றுக் கொண்டிருந்த மாண் டேவிய முனிவரின் உடலில் கூடை தட்டுப்பட்டது. அதனால் வெகுண்ட மாண்டேவியர், 'பொழுது விடிந்ததும் நீ தாலியை இழப்பாயாக' என்று சாப மிட, இவள்,'பொழுது விடியாது இருப்பதாக' என்று மாற்றுச் சாபமிட்டாள். பொழுது விடியாமல் நீடித்த மையால் அஞ்சிய தேவர்களும் முனிவர்களும் மாண் டேவியரையும் இவளையும் அணுகி அமைதி கூறி, சாபத்தை விலக்கச் செய்தனர்.

கணவனின் இன்ப வாழ்வையே தலைமேற் கொண்டு, தன் இன்ப உணர்வுகளை எல்லாம் அவித் துக் கற்பில் சிறந்து விளங்கிய இவளைப் பாராட்டி, மௌத்கல்யர், 'நீ விரும்பும் வரம் யாது?' என்று வினவினார். இவள், 'ஐந்து உருவாயிருந்து இம்மை, மறுமை இன்பங்களை அருள்வீர்' என்று வேண்டி னாள். இவரும் பல்வேறு உயிரினங்களின் வடிவில் ஐந்தைந்து நிலைகளில் அமைந்து, அகமும் புறமும் தழுவி இன்பங்களை அளித்தார். பலகாலம் இன்பம் துய்த்தும் நிறைவு கொள்ளாது இவள் முனிவரைப் பற்றித் தொடர்ந்தாள். அவரோ பேரின்பத்தில் நாட்டமுற்றுத் தவ வாழ்வை விரும்பினார். எனவே, அவர், 'காம வேட்கையிலேயே நாட்டமுற்றவளாக இருக்கும் நீ மனிதப் பிறவியை அடைந்து ஐவருக்கு மனைவியாவாயாக, எனக் கூறி நீங்கினார்.

இவள் காசிமன்னன் மகளாகப் பிறந்து, தீராக் காம வேட்கை உடையவளாகிச் சிவனை நோக்கித் தவம் செய்தாள். சிவன் தோன்ற, இவள், 'கண வனை அருள்வீர்' என்று ஐந்து முறை வேண்டியதால், அவர், 'இப்பிறவி நீத்து மறு பிறவியில் ஐவரைக் கணவராகப் பெறுவாய்' என அருளினார். இவள் ஆற்றாதவளாகிக் கண்ணீர் வழியக் கங்கையில் மூழ்கினாள். இவள் கண்ணீர் கலந்த இடந்தோறும் தாமரைப் பூக்கள் தோன்றின. வெளியேறிய இவளை இந்திரன் தொடர்ந்தமையால்,இந்திரனும் அவனைப் பிரியாதவராகிய வாயு, யமன், அசுவினி, இரட்டையர் என்னும் நால்வரும் இவளுக்குக் கணவராகுமாறு சிவன் விதித்தார். மறுபிறவியில் இவள் பாஞ்சால மன்னன் துருபதன் மகளாகிய திரௌபதியாகப் பிறந்து, அருச்சுனனால் சுயம்வரத்தில் மணக்கப் பெற்று, அவன் தாய் குந்தியின் வாக்கினுக்கு ஏற்பத் தருமன், வீமன், நகுலன், சகாதேவன் என்னும் உடன் பிறந்தாருக்கும் மனைவியாகும் பேறு பெற்றாள். முன்பிறவியில் இவளோடு தொடர்புடைய யமன், வாயு, இந்திரன், அசுவினி, இரட்டையர்களே மறு பிறவியில் தருமன், வீமன், அருச்சுனன், நகுலன் சக தேவன் எனத் தோன்றினர்.

திரௌபதியை ஐவரும் மணப்போம் என்று பாண்டவர் கூறியதைக் கேட்டுத் துருபதன் கலங்கிய போது, வியாச முனிவர் அவனுக்குக் கூறுவதாக நளாயினி பற்றிய இக்கிளைக்கதை மகாபாரதத்தில் இடம் பெற்றுள்ளது. பெ.சு.

***நற்சேந்தனார்***: காண்க: கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்.

***நற்றங் கொற்றனார்***: இவர் சங்கப் புலவர். ஒரே பாடல் பாடிய சங்கப் புலவர்களுள் இவரும் ஒருவர். கொற்றனார் என்பது இவரின் இயற்பெயர். 'நற்றம்' என்னும் அடைமொழியின் காரணம் புலப் படவில்லை. தலைவன் சிறைப் புறமாகத் தலைவி தோழிக்கு உரைக்கும் துறையில் அமைந்த இவர்தம் குறிஞ்சித் திணைப் பாடல் நற்றிணையில் 136-ஆம் பாடலாக அமைந்துள்ளது. தீர்க்க இயலாத அரிய நோயினை உடையவர்க்கு அவர் விரும்பியதைத் தாராது அந்நோய் தீர்த்ததற்குரிய மருந்தினை ஆராய்ந்தறிந்து கொடுக்கும் மருத்துவ அறிஞனைப் போலப் பிரிவுத் துயரால் மெலியும் என் தோள் களுக்கு எக்காலத்தும் கழன்று விடாத தொடியைச் செய்து தந்துள்ள என தந்தை வாழ்க என்று தலைவி கூறும்பாங்கினை 'அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாஅது மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல' (நற். 136) என்னும் அடிகளால் உணரலாம். சா.உ.

***நற்றத்தம்***: இது தமிழில் தோன்றிய யாப் பிலக்கண நூல்களுள் ஒன்று. மறைந்துபோன தமிழ் நூல்களில் இதுவும் குறிப்பிடத் தக்கது. இதன் ஆசிரி யர் நற்றத்தனார். யாப்பருங்கலக் காரிகை உரையா சிரியர் குணசாகரரும், யாப்பருங்கல விருத்தியுரை காரரும் இந்நூலினை மேற்கோள் காட்டியுள்ளனர். குணசாகரர் இந்நூலைப் பற்றி, 'மாவாழ் சுரம், புலிவாழ் சுரம் என்னும் வஞ்சியுரிச்சீரிரண்டும் உள வாக வைத்து, ஒரு பயனோக்கித் தூஉமணி கெழூஉ மணி என்றளபெடுத்து நேர் நடுவாகிய வஞ்சியுரிச் சீர்க்கு உதாரணம் எடுத்துக்காட்டினார் நத்தத்த னார் முதலாகிய ஒரு சாராசிரியர்' (26-ஆம் காரிகை யுரை) என்று குறிப்பிட்டுள்ளார். இவர் நற்றத்தம் நூலிலிருந்து 'அளபெடைத் தொடைக்கே யளபெடை யொன்றும்', 'வெண்பா விரவினுங் கடிவரையின்றே' போன்ற நூற்பாக்கள் சிலவற்றை எடுத்துக்காட்டிச் செல்கின்றார். யாப்பருங்கல உரையாசிரியர் நற்றத் தம் நூற்பாக்களைப் பெரிதும் போற்றி அவற்றைத் தமது விருத்தியுரையில் மிகுந்த அளவில் பயன்படுத்தி யுள்ளார். 'ஒத்தாழிசைக் கலி, கலிவெண்பாட்டே, கொச்சகக் கலியொடு கலிமூன்றாகும், 'சீர்முழு தொன்றி னிரட்டை யாகும்' என்பன போன்ற 24

நூற்பாக்களை மேற்கோள் காட்டியுள்ளார். நற்றத் தம் நூல் கிடைக்காவிட்டாலும் அந்நூலின் இலக்கண வளத்தை இந்நூற்பாக்கள் காட்டவல்லனவாக அமைந்துள்ளன. சா.உ.

***நற்றமனார்***: இவர் சங்க காலத் தமிழ்ப் புலவர். வரைவிடை வைத்துப் பிரிவாற்றாளாய தலைவி வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது என்னும் துறையில் இவரால் இயற்றப்பட்ட குறிஞ்சித்திணைப் பாடல் ஒன்று நற்றிணையில் இடம்பெற்றுள்ளது. கொல்லன் உலையிற் காய்ச்சிய இரும்பு, பனை மடலைத் தோய்த்துத் தெளிக்கும் நீரால் சிறிது தணிவது போலப் பிரிவுத் துயரால் கொதிக்கும் என் நெஞ்சுக்கு உன் உரைகள் ஆறுதல் அளிக்கின்றன என்று தலைவி கூறுதல் சிறப்புடையது. உள்ளத்தின் வெப்பந்தணிந்து சிறிது ஆறுதல் பெறுதற்குக் கொல்லன் உலைக்களத்துத் தெளித்த நீரினை, உவமையாக்கி, இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த தோய்ம்மடற்சில்நீர் போல், (நற்.133) என்று விளக்கியிருப்பது நயமிக்கதாக உள்ளது. சா.உ.

***நற்றிணை***: சங்க இலக்கியம் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என இருவகையாகப் பாகுபடுத்தப் படும். எட்டுத்தொகை நூல்கள் எட்டினுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகியன முழுதும் அகப்பொருள் பற்றியன.

வாழ்க்கையின் எல்லா நிகழ்ச்சிகளும் உணர்ச்சிகளின் அடிப்படையிலேயே நிகழ்கின்றன. அதாவது, உணர்ச்சிகளே உலக நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையாக அமைகின்றன. ஆயின், பல்வேறு வகையாகப் பரந்து நிற்கும் உணர்ச்சிகள் எல்லாவற்றையும் கவிஞர்கள் பாடி விடுவதில்லை. எல்லாக் காலங்களுக்கும் இடங்களுக்கும் சூழ்நிலைகளுக்கும் பொதுவாக இருக்கும் உணர்ச்சிகளையே அவர்கள் அதிகம் பாடுகின்றனர். அத்தகைய உணர்ச்சிகளில் தலைமையிடம் பெறுவது காதல். இந்தக் காதலை உயிராகக் கொண்ட அகமும், அகத்தின் தொடர்பான புறமும் இல்லாத காலமும் இல்லை, இடமும் இல்லையென்னும் கருத்தில், 'இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும் அவையில் காலமின்மை யான' (பொருளியல். 52) என்று தொல்காப்பியனார் கூறியிருப்பது இங்குக் கருதத் தக்கது. இதனை மேலும் நுணுகி ஆராய்ந்தால் காதலே உலக இயக்கத்திற்கு அடிப்படையாவதை உணர முடியும். உண்மைக் காதலே ஆண்-பெண் தொடர்பிற்குக் காரணமாகி, குடும்பமாகி, ஊராகி, நாடாகி விரிகின்றது. எனவே, காதல் வாழ்க்கையை அகமெனக் கொண்டனர் சங்கப்புலவோர்.

இவ்வகைப் பொருள் ஒழுக்கத்தைக் குறிப்பது 'திணை' என்னும் சொல்லாகும். குறுந்தொகை, நெடுந்தொகை என்று தொகை நூல்கள் பாடல் அளவால் பெயர் பெற,இந்நூல் 'திணை'என்று பெயர் பெற்றிருப்பது இதனது சிறப்பை விளக்குவதாகும். அன்றியும் திணை என்னும் பெயருடன் வேறு சில நூல்களும் தமிழில் உள்ளன. திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது முதலியவை அவற்றுள் சில. இந்நூல்களெல்லாம் பாடலின் எண்ணிக்கையால் பெயர் பெற, நற்றிணை மட்டும் 'நல்ல திணை' என்று பெயர் பெற்றுள்ளது. இதனால், சான்றோர் இந்நூலுக்கு அளித்த சிறப்பும், அகத்திணைக்கு அளித்த ஒப்பற்ற சிறப்பும் தெளிவாகின்றன.

இந்நூலின் கடவுள் வாழ்த்தைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியுள்ளார். இக்கடவுள் வாழ்த்துப் பாடல் நீங்கலாக நானூறு பாடல்கள் இந்நூலில் அமைந்துள்ளதால் இந்நூல் நற்றிணை நானூறு எனவும் வழங்கப் படுகின்றது.

நற்றிணையில் தொகுக்கப்பட்டுள்ள பாடல்கள் யாவும் ஒன்பது அடிச் சிற்றெல்லையையும் பன்னிரண்டு அடிப்பேரெல்லையையும் கொண்டவை. இவற்றைத் தொகுப்பித்தவன் பன்னாடு தந்த மாறன் வழுதி.

நற்றிணைப் பாடல்களைப் பாடிய புலவர் 175 பேர்களாவர். டாக்டர் மா. இராசமாணிக்கனார் இவ்வெண்ணிகையை 187 என்று கருதுகின்றார். இயற்பெயர் கிடைக்காததால், பாடிய பாடலில் கிடைக்கும் சிறந்த தொடர் ஒன்றையே அவருடைய பெயராக்கி வழங்கும் வழக்கு நற்றிணையிலும் பின்பற்றப்பட்டுத் தனிமகனார், தேய்புரிப்பழங்கயிற்றினார் என்னும் இரு புலவர்கள் நற்றிணைப் புலவர் வரிசையில் தங்கள் பாடல் தொடர்களால் பெயர் பெற்றவர்களாகக் காணப்படுகின்றனர். இவ்விரு பாடல்களும்(346, 284)சொல்லாலும் பொருளாலும், அதை உணர்த்தும் முறையாலும் மிகச் சிறந்து விளங்குகின்றன. தேய்புரிப் பழங்கயிற்றினார் பாடல் (284) உணர்விற்கும் அறிவிற்கும் இடையில் என்றும் நடைபெறும் போராட்டத்தை, 'ஒளிறேந்து மருப்பின் களிறுமாறு பற்றிய தேய்புரிப் பழங்கயிறு போல வீவது கொல்லென் வருந்திய உடம்பே' என்ற அடிகளில் விளக்கிக் காட்டுகின்றது.

பல வரலாற்றுக் குறிப்புகளும் நற்றிணைப் பாடல்களில் காணப்படுகின்றன. அரசர், சிற்றரசர் ஆகியோரின் செய்திகளையும் அன்றைய அரசியல்

வாழ்க்கை முறை ஆகியவற்றையும் நற்றிணை விளக்கிக் காட்டுகின்றது.

நற்றிணையில் ஐந்து திணைகளுக்கும் உரிய பாடல்கள் விரவி வருகின்றன. எனவே, ஐந்நிலங்களிலும் வாழ்ந்த மக்களின் அன்றாட வாழ்க்கையின் நடைமுறைகள் எல்லாம் இப்பாடல்களில் அழகிய ஓவியங்கள் ஆகியுள்ளன. தை மாதத்தில் விடியற் காலையில் பெண்கள் நீராடி நோன்பிருப்பதை, 'இன்ழயணி ஆயமொடு தகுநாள் தடைஇத் தைஇத் திங்கள் தண்கயம் படியும், பெருந்தோள் குறு மகள்... (80) என்ற அடிகள் விளக்கிக் காட்டுகின்றன.

அரசியலிலும் அன்றாட வாழ்க்கை முறைகளிலும் சிறந்து விளங்கிய தமிழினம் வாணிகத்திலும் சிறந்து விளங்கியதை நற்றிணைப் பாடல்கள் நன்கு காட்டுகின்றன. பல நாடுகளிலிருந்தும் கப்பல்கள் வந்து துறைமுகங்களில் தங்கியிருந்ததையும், வணிகத் திற்காகக் கங்கையாற்றில் கலத்தில் சென்றதையும், உள்நாட்டுப் பண்டமாற்று முறையினையும் நற்றிணைப் பாடல்கள் கூறி நிற்கின்றன.

வாழ்க்கை செம்மையாக நடைபெறப் பொருள் பெரிதும் இன்றியமையாததென்பதை அவர்கள் ஐயமற உணர்ந்திருந்தாலும், செல்வமே வாழ்க்கைஎன அவர்கள் செல்வத்திற்காகவே வாழ்ந்துவிட வில்லை. செல்வத்தை விடவும் வாழ்க்கையில் சிறந்தவை எவ்வளவோ உண்டு என்பதை அவர்கள் நன்குணர்ந் திருந்தனர். உண்மையில் சொல்லப்போனால், தம்மை அடைந்தவரைக் காத்தலே உண்மையான செல்வம் என அவர்கள் கருதினர். 'சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர், புன்கண் அஞ்சும் பண்பின், மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே' (20)என்பது நற்றிணைப் பாடல் அடிகள். செல்வத்தைப் பற்றி இவ்வளவு தெளிவாக அறிந்திருந்த காரணத்தால், இல்லறத்தை அவர்கள் நல்லறமாகவே கருதி ஓம்பினர். விருந்தினர்களை வரவேற்று அவர்களைப் பேணுதலில் இல்வாழ்க்கையின் ஒரு தலையாய கடமையாகவே கொண்டனர்.

ஆணும் பெண்ணும் இணைந்து நடத்துவதே இல்லறம் எனினும், அதில் தலைவிக்குள்ள பொறுப்பு மிகப் பெரிது. அவள் இவ்வொரு பிறபபிலே மட்டும் தான் அவனோடு இணைந்தவளாகக் கருதுவதில்லை. அவர்கள் நட்புப் பல பிறவிகளாகத் தொடர் வதாகவே அவள் கருதுகின்றாள். எனவே, அடுத்த பிறவியிலும் அவனே தலைவனாக இருக்க வேண்டும் என வேண்டுகிறாள். அவ்வாறு நேராதோ எனக் கருதும்போது அஞ்சுகின்றாள். நற்றிணைத் தலைவி ஒருத்தி இவ்வச்சத்தை மிக அழகாகப் புலப்படுத்து கின்றாள். அவள் கூற்று வருமாறு: 'சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவின்; பிறப்புப் பிறிதா குவதாயின், மறக்குவென் கொல்லென் காதலர் எனவே. (397);

மற்றொரு தலைவி இளமையில் தாய்வீட்டில் செல்வாக்காக வளர்ந்தவள். மணந்த தலைவனோ ஏழை. அவளோ வறுமையில் வாடி வதங்கினாலும் மகிழ்ச்சியோடிருந்தாள். ஒருவேளை உண்டு ஒரு வேளை பட்டினி கிடந்தாலும், தந்தையின் செல்வம் மிக்க உணவை அவள் நினைக்கவே இல்லை. அதைப் 'பிரசங்கலந்த வெண்சுவைத் தீம்பால்' (110) என்று தொடங்கும் நற்றிணைப் பாடல் நன்கு விளக்கி நிற் கின்றது. இதுபோன்ற பல காட்சிகளைக் கொண்டு நற்றிணைப் பாடல்கள் நாடகச் சுவையுடன் விளங்கு கின்றன.

நற்றிணைப் பாடல்கள் அகத்திணைக்கேயுரிய உள்ளுறை, இறைச்சி நயங்களோடு மிளிர்கின்றன. சங்கப் புலவோர் உயர்ந்ததையே எண்ணி, உயர்ந்த நெறிகளையே வாழ்க்கையில் கடைப்பிடித்து வாழ்ந் தவர்கள். ஆகையால் தான் அவர்களுடைய பாடல் களும் மிகவுயர்ந்த நிலையிலேயே காணப்படு கின்றன. நற்றிணைப் பாடல்கள். அவர்களின் சிறப்புக்குச் சிறந்த சான்றுகளாக விளங்கிச் சிறந்து நிற்கின்றன. சி.பா.

*நறுந்தொகை*: நறுந்தொகை என்பது அதிவீர ராமபாண்டியர் என்னும் அரசரால் இயற்றப்பட்ட நீதிநூல் ஆகும். நல்ல பல நீதிகளின் தொகுப்பு என்பதே இதன் பொருளாம்.

இந்நூலுக்கு வெற்றிவேற்கை என்னும் பெயரும் உண்டு. நூற்பயன் கூறும் பாடல் 'வெற்றி வேற்கை என்று தொடங்குவதால் புலவர் இந்நூலுக்கு அப்பெயர் வழங்கினர். அதிவீரராம பாண்டியருக்குக் குலசேகரன் என்பதும் பெயராக வழங்கியது; அவர் கொற்கை என்னும் பழமையான நகரை ஆட்சி செய்தவர்; நூலுக்கு அவரிட்ட பெயர் நறுந்தொகை என்பதே; இவற்றை, 'வெற்றி வேற்கை வீரராமன் கொற்கையாளி குலசே கரன்புகல் நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னால் குற்றம் களைவோர் குறைவிலாதவரே' என்னும் பாடல் தெரிவிக்கின்றது.

நூலின் தொடக்கத்தில் விநாயகர் வாழ்த்து அமைந் துள்ளது. பாடல்கள் பெரும்பாலும் ஓரடியளவாக நடக்கின்றன (46). ஈரடிப் பாடல்களும் (3) அவற்றை அடுத்து அமைந்துள்ளன. மூவடி (3), நாலடி (1), ஐயடி (1), ஆறடிப் (1) பாடல்கள் அருகிவருகின்றன. இவ் வாறு இந்நூல் 82 பாடல்களால் அமைத்துள்ளது. எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்' எனத் தொடங் கும் நறுந்தொகை, 'வாழிய நலனே வாழியே நலனே' என்னும் வாழ்த்துடன் முடிகின்றது.

சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க் கினிமை, நன்மொழி புணர்த்தல் முதலாகச் சொல்லப்படும் நூலழகுகள் இந்நூலில் சிறந்து விளங்குகின்றன. உவமைகளையும் நடைமுறைக் காட்சிகளையும் எடுத்தாண்டுச் சிக்கலின்றிப் பொருள் காணுமாறு எளிமையாக அமைந்துள்ள நூல் நறுந்தொகையாகும்.

'கல்விக் கழகு கசடற மொழிதல்', அறிஞர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்', 'பெருமையும் சிறுமையும் தான்தர வருமே', 'பழியா வருவது மொழியா தொழிவது', 'வழியே ஏகுக வழியே மீளுக' ஆகியன நறுந்தொகையின் சிறப்பை வெளிப்படுத்தும் அறங்களுள் சிலவாகும். இரா.இ.

***நன்பலூர்ச் சிறுமேதாவியார்:*** இவர் சங்க காலப்புலவராவார். சிறுமேதாவியாரும் இவரும் வேறல்லர் எனப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் கூறுவர். (நற்றிணை உரை, பாடினோர் வரலாறு). ஆனால், அகநானூறு 94, 394 பாடிய நன்பலூர்ச் சிறு மேதாவியாரையும், நற்றிணை 282 பாடிய நல்லூர்ச் சிறுமேதாவியாரையும் வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பும் மர்ரே பதிப்பும் வெவ்வேறாகக் கொள்ளும். இப்புலவர் அகநானூற்றில் முல்லைத் திணையையும் நற்றிணையில் குறிஞ்சித் திணையையும் பாடியுள்ளார். இருபுலவரையும் ஒருவராகக் கருதின் சங்க இலக்கியத்தில் நன்பலூர்ச் சிறுமேதாவியார் பாடியனவாகக் கிடைப்பன மூன்று பாக்களாகும். நற்றிணையிலுள்ள குறிஞ்சித்திணைப் பாட்டு, சிறைப் புறமாகத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது என்னுந் துறையில் அமைந்துள்ளது. கானவன் அகில் சுடும் மணங்கமழ் புகைவிண்ணிடைத் தவழும் மேகம் போலத் தோன்றி மறைக்கும் என்னும் கருத்து இறைச்சிப் பொருள் தோன்றக் கூறப்பட்டுள்ளது. இவர் பாடிய அகப்பாடல் இரண்டும் (94,394) முல்லைத் திணையை நன்கு புனையும். காட்டில் ஆட்டுக் குட்டிகளை ஒரு சேரத் தொகுத்த ஆயன், நறுமுல்லை மலரோடு தோன்றிப் பூக்களையும் விரவித் தொடுத்த கண்ணி யணிந்து, கொள்ளிக் கட்டையில் குளிர் காய்கிறான். இருளில் அவ்வன் குறுநரியை அலைத்தோட்டும் நெடிய ஓசை,பன்றிக் கூட்டத்தைத் துரத்தத் தினைப் புனம் காப்போர் ஊதும் கொம்பின் ஓசையோடு சேர்ந்து ஒலிக்கிறது. (94). செம்மறியாட்டின் தயிராகிய உலையில் வரகரிசியோடு ஈயலைப் பெய்து சமைத்த இனிய புளிப்பு வாய்ந்த சோற்றில் பசு வெண்ணெய் இட்டு முல்லை நில மக்கள் உண்கின்றனர். காட்டில் வாழும் இடையன் ஆடுகளை ஒரு வழிக்கூட்ட எழுப்பும் சீழ்க்கை ஒலி கேட்டுக் குறுமுயல்கள் அடர்ந்த புதருக்குள் ஓடி ஒளிந்து கொள்கின்றன. களா பழுத்துப் புளிப்புச் சுவை எய்தியுள்ளது. விளா முதிர்ந்து பழுத்துள்ளது. இவ்வாறு முல்லை நிலம் புனையப் பெறுகின்றது. (394). மலை உச்சியின் பக்கத்தே முசுண்டையின் வெண்ணிறப் பூக்கள் மலர்ந்துள்ள அழகிய காட்சி, இரவில் வானகத்தே வெள்ளிய மீன்கள் நிறையப் பூத்துள்ளன போல் தோன்றும் என்று உவமை கூறியிருப்பது இப்புலவர்தம் இயற்கை நுண்ணறிவினைப் புலப்படுத்தும். இரா.சா.

***நன்னம்பிக்கை முனை மாநிலம்:*** நன்னம்பிக்கை முனை என்ற மாநிலம்தென் ஆப்பிரிக்கக் குடியரசில் உள்ள நான்கு மாநிலங்களில் மிகப் பெரியதாகும். அதன் பரப்பளவு 721,000 ச.கி.மீ. நன்னம்பிக்கை முனையின் (Cape of Good Hope) கடற்கரை,மேற்கிலும் தெற்கிலும் கிழக்கிலும் எல்லையாக அமைந்துள்ளது.

இம்மாநிலத்தின் தென் பகுதியில் பல மடிப்பு மலைகள் உள்ளன. இப்பகுதிகள் இக்கண்டத்தின் மிகச் சிறந்த இயற்கைக் காட்சிகளைக் கொண்டு அழகுடன் மிளிர்கின்றன. 'இலிட்டில் கூற்று' (Little Karroo) என்னும் ஆற்றின் பள்ளத்தாக்கில் தீவிர வேளாண்மை நடைபெறுகிறது. இம்மாநிலத்தின் வடபகுதியில் ஆரஞ்சு நதி பாய்கிறது. அதன் அகன்ற பள்ளத்தாக்குகளில் பெருமளவில் வேளாண்மை நடைபெறுகிறது.

ஐரோப்பியர்களின் வருகைக்கு முன்பு இப்பகுதியில் பெரிய கறுப்பு நிற மான்களும், வரிக் குதிரைகளும் எண்ணற்ற அளவில் சமவெளிகளில் திரிந்து கொண்டிருந்தன. புலால் உண்ணும் விலங்குகளும் அதிக அளவில் இருந்தன சிங்கங்கள் தெற்குக் கடற்கரையோரங்களைத் தவிர மற்றப் பகுதிகளில் காணப்பட்டன. யானைகளும், காண்டாமிருகங்களும், நீர் யானைகளும் இருந்தன. இப்போது இவ்விலங்குகளின் எண்ணிக்கை குறைந்துவிட்டது. சிறுத்தை, வாலில்லாக் குரங்குகள் ஆகியன மலைப்பகுதிகளிலும், மனிதர்கள் வசிக்காத இடங்களிலும் காணப்படுகின்றன.

'கேப் டவுன்' இம்மாநிலத்தின் தலைநகரமாகும். இங்குள்ள மற்ற முக்கிய நகரங்கள் எலிசபெத்து, கிழக்கு லண்டன், கிம்பர்லி, உட்டன் ஏகு (Uiten Hage) பார்ல் (Paarl), வொர்செசுடர் (Worcester) 'கிரகாம்சு டவுன்' (Grahamstown) முதலியனவாகும். இம்மாநிலம் 1960-ஆம் ஆண்டில் 108 நீதித்துறை மாவட்டங்களாகவும்,95 உள்ளாட்சிப் பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டது. மேலும், 155 நகராட்சிகள் ஏற்படுத்தப்பட்டன.

இம்மாநிலத்தில் 1960-ஆம் ஆண்டில் வெள்ளையர்கள் மட்டும் படிப்பதற்கு 1200 பள்ளிகள் இருந்

தன. ஆசியாவிலிருந்து வந்தவர்களுக்கும் மற்ற இன மக்களுக்கும் 1700 பள்ளிகளும், பாண்டு (நீக்ரோ) மக்களின் கல்விக்காக 2,800 பள்ளிகளுமிருந்தன. இங்கு ஆறு பல்கலைக் கழகங்கள் உள்ளன.

இம்மாநிலத்தில் பல்வகைத் 'திராட்சைகள்' 'எலுமிச்சை,, 'ஆரஞ்சு', 'ஆப்பிள்', 'பிளம்சு' (Plumbs) முதலியவை கிடைக்கின்றன. வர்சீனியாப் புகையிலை துருக்கியப் புகையிலை, சிக்கரி, பருத்தி முதலியவை பயிரிடப்படுகின்றன. மேற்குப் பகுதியில் பெருமளவில் கோதுமையும், ஓரளவு ஓட்சும், பார்லியும் சாகுபடி செய்யபடுகின்றன. கிழக்குப் பகுதியின் முக்கிய பயிராகச் சோளம் பயிரிடப்படுகிறது. தென்மேற்குப் பகுதியிலும், தெற்குக் கடற்கரை மற்றும் அதற்கு அருகில் உள்ள பகுதிகளிலும் அரசுக்குச் சொந்தமான இயற்கைக் காடுகள் உள்ளன. இங்குள்ள புல்வெளி களில் கால்நடைகள் சிறப்பாக வளர்க்கப்படுகின்றன. சில பண்ணைகளில் நெருப்புக் கோழிகளும் வளர்க்கப் படுகின்றன.

தென் ஆப்பிரிக்கச் சந்தைகளில் விற்கப்படும் மீன்களில் பத்தில் ஒன்பது பகுதி 'கேப்பு'க் கடற்கரை களிலும், உள்நாட்டிலுள்ள நதிகளிலும் பிடிக்கப்பட்ட வையாகும். ஓர் ஆண்டிற்கு ஏறத்தாழ 300,000 கண்டி எடையுள்ள மீன்களும், ஏறத்தாழ 1500 திமிங்கிலங்களும் பிடிக்கப்படுகின்றன. மீன், மீன்பொருள்கள் ஏற்றுமதி மூலம் அரசிற்கு நல்ல வருவாய் கிடைக்கிறது.

இங்குக் கிம்பர்லிப் பகுதியில் வைரமும், காமகார மலைப் பகுதியில் மங்கனமும் ஒகியப் (Okip) பகுதி யில் செம்பும்கிடைக்கின்றன. மற்றத் தாதுப் பொருள் கள் மிகக் குறைந்த அளவில் கிடைக்கின்றன. இங் குள்ள துறைமுகங்களிலிருந்து சோளம், பழவகைகள், எண்ணெய், மரம் மற்றும் தாதுப் பொருள்கள் முத லியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

தச்சுக்காரர்கள் கி.பி. 1652-ஆம் ஆண்டு கேப் டவுன் பகுதியில் குடியேறினர். பிரெஞ்சுக்காரர்கள் கி.பி. 1781-84-ஆம் ஆண்டுகளுக்கிடையிலும், ஆங்கிலே யர்கள் கி.பி. 1788-ஆம் ஆண்டிற்குப்பிறகும் செல் வாக்குப் பெற்றிருந்தனர். கேப் டவுனில் கி.பி. 1795-ஆம் ஆண்டு 500 ஐரோப்பியர்களும், 10,000 மற்ற இன மக்களும் இருந்தனர். இங்கிலாந்திலிருந்து பொருள் கள் தங்கு தடையின்றிஇறக்குமதி செய்யப்பட்டன. எலிசபெத்து துறைமுகத்தில் ஆங்கிலேயர் ஒரு படைப் பிரிவை ஏற்படுத்தியிருந்தனர். ஆங்கிலேயர்கள் கி பி. 1803-ஆம் ஆண்டு ஏற்பட்ட உடன் படிக்கையின் மூலம் 'கேப்' பகுதியை ஆலந்து நாட்டிற்குக் கொடுத் தனர். ஆங்கிலேயருக்கு கி.பி. 1814-ஆம் ஆண்டு ஏற் பட்ட உடன்படிக்கையினால் 'கேப்' பகுதி மீண்டும் கிடைத்தது. ஆங்கிலேயர்கள் இப்பகுதியின் பொருளா தார முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருந்தனர்; முறையாகக் குடியேறித் தங்களுடைய படை வலிமை யினால் அங்குள்ள எதிர்ப்புகளைச் சமாளித்துத் தங் கள் ஆட்சியை நிறுவினர். நன்னம்பிக்கைமுனை மாநி லம் 1910-ஆம் ஆண்டிலிருந்து ஐக்கிய தென் ஆப்பிரிக் காவின் ஒரு பகுதியாக இருந்தது; 1961-ஆம் ஆண்டி லிருந்து தென் ஆப்பிரிக்கக் குடியரசின் ஒரு பகுதி யாகவும் உள்ளது. அ.சி.

**நன்னயப்பட்டு**: தெலுங்கு மொழியின் ஆதி கவி எனப் போற்றப் படுபவர் நன்னயப்பட்டு ஆவார். இவர் இராசராச சோழனின் மகள் குந்தவையை மணமுடித்த, கீழைச் சாளுக்கிய மன்னர் மரபினனும், வேங்கி நாட்டை ஆண்டவனுமாகிய விமலாதித்த னின் மகனாகிய இராச ராச நரேந்திரனின் அவைக் களப்புலவராவார்.

இராசமகேந்திரவரத்தினைத் (Raja mundry) தலைநகராகக் கொண்ட வேங்கி நாட்டரசனான இராச ராச நரேந்திரன் (கி.பி. 1051-1061) ஆட்சிக் காலத்தில் பெரும்புலவராகத் திகழ்ந்த நன்னயர் வடமொழியிலும் தெலுங்கிலும் சிறந்த புலமை மிக்க வராகத் திகழ்ந்தார். இவர் முக்கலகோத்திரம், ஆபசுதம்ப சூத்திரத்தைச் சேர்ந்த பிராமணர்; வேள்விகள் செய்த வேதவித்தகர்; இலக்கணப் புலமை யாளர்; காவியங்கள் செய்தவர்; நல்லொழுக்க சீலர்.

இராச ராச நரேந்திரனின் அவைக்களத்திலிருந்த மற்றொரு பெரும்புலவர் நாராயணப்பட்டு என்ப வர். இவர் வடமொழி, தென்மொழிகளில் வல்லு னர். நன்னயரின் பெற்றோர், ஆசிரியர், பிறந்த இடம் முதலிய விவரங்கள் யாதும் கிட்டவில்லை. இராச ராச நரேந்திரன் இவரையழைத்து வடமொழி யிலுள்ள வியாச பாரதத்தைத் தெலுங்கில் மொழி பெயர்க்குமாறு பணித்ததாகவும், அதன்படி நாராய ணப் பட்டுவின் துணையோடு தான் மொழிபெயர்த்த தாகவும் நன்னய்யா கூறியுள்ளார். நன்னயப்பட்டு பாரதத்தின் ஆதி, சபா பருவங்களையும், ஆரணிய பருவத்தில் பாதியையும் தான் தெலுங்காக்கம் செய் துள்ளார். ஆரணிய பருவம் முழுதும் செய்து பின் பாதி ஏட்டுப் பிரதிகளில் அழிந்துபட, பின்வந்த எர் ராபிரகட என்பவர் பாதியை முழுமை செய்தார் என்றும் கருத இடமுண்டு.

இவரது பாரதம் ஆரணிய பருவம், அரைகுறை யாக மொழி பெயர்ப்புக் கிடைப்பதற்கு என்ன காரணம் என்பது புலப்படவில்லை. சிலர் முடித்தது கிடைக்காமல் போயிருக்கலாம் என்பர். அரசியல் சூழ் நிலையும் காரணமாகலாம். நன்னயர் தமக்கு முன்

னைச் சமணமதக் காவியங்களை அழித்து விட்டார் என்றும், அதன் காரணமாகச் சித்தப் பிரமை ஏற்பட்டுத் தமது காவியத்தை அரைகுறையாக எழுதி முடிக்காமலே விட்டு விட்டார் என்றும் ஒரு வழக்கு வழங்கி வருகிறது. உண்மையான காரணம் தெரியவில்லை. திக்கனர் விராடபருவம் முதல் முடிவுவரை பாரதத்தைத் தெலுங்காக்கம் செய்தார். தமது நூலில் நன்னயர் முதல் மூன்று பருவங்கள் செய்ததாகவும், தாம் தொடர்ந்து நான்காவதான விராட பருவ முதல் தொடங்குவதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

தெலுங்கில் இன்று கிடைக்கும் முதல் நூல். நன்னயப் பட்டுவின் ஆந்திர மகா பாரதமே யாகும் அதற்கு முன்பு கி.பி. 7,8-ஆம் நூற்றாண்டுச்சாசனங்களில் தெலுங்குச் செய்யுள்கள் கையாளப் பட்டுள்ளதால் அதற்கு முன்பே பல காவியங்கள் இருந்திருக்கலாம். எனினும், இன்று கிடைக்கவில்லை.

நன்னயர் தமிழ் நாட்டிலிருந்து இராச ராச சோழன் மகள் குந்தவையுடன் சென்ற பிராமணராக இருக்கலாம் என்றும், அதன் காரணமாக அவரது காவியத்தில் வழங்கும் சொற்றொடர்கள், செய்யுள் மரபுகளில் தமிழ் மொழியின் செல்வாக்கு இருப்பதாகவும் அறிஞர்கள் கருதுவர். இவர் தமக்கு முன்பிருந்த பெருந்தேவனார் பாரதம், கன்னட பம்ப பாரதம் பயின்றவராகலாம் என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர்.

நன்னயர், வியாசபாரதத்தை மொழி பெயர்த்தாலும் பல இடங்களில் பாத்திரப் படைப்புக் கேற்பவும், கதை ஓட்டம் குறைவுபடாமலிருக்கவும், கிளைக் கதைகளை நீக்கியும்,வருணனைகளைச் சுருக்க வேண்டிய இடத்தில் சுருக்கியும், விரிக்க வேண்டிய இடத்தில் விரித்தும் அழகான நடையில் தம் காவியத்தைப் படைத்துள்ளார். வடமொழிச் சொற்கள் மிகுதியாகப் பயின்றாலும், இனிய தெலுங்கு நடையில் கவிச் சிறப்பும் கருத்தாழமும் மிளிரத் தம் காவியத்தை உருவாக்கியுள்ளார்.

இவருக்கு 'வாகனு சாசனன்' என்ற விருது உண்டு. இவர் 'ஆந்திர சப்த சிந்தாமணி' என்னும் தெலுங்கு இலக்கணத்தைக் கூறும் வடமொழி நூல் ஒன்று இயற்றியதாகக் கூறப்படுகிறது. இந்நூல் இப்போது வழக்கில் உள்ளது. எனினும், இவ்விலக்கண நூல் நன்னயர் செய்ததன்று என்று ஆராய்ச்சி அறிஞர்கள் முடிவு கட்டியுள்ளனர்.

நன்னய பாரதம் பத்தாயிரம் செய்யுள்கள் கொண்ட காவியப் பாங்கான நூல் ஆகும். பல்வேறு சந்தங்களில், விருத்தம், கந்தபத்தியம், வசனம் ஆகியவை கலந்த சம்பு நடையில் அமைந்துள்ளது. கவிச் சுவை மிக்கதாகவும், பாத்திரப் படைப்பும், நாடகப் பாங்கான நிகழ்ச்சிகளில் வருணிக்கும் திறனும் அமைந்ததாகப் பாரதம் மிளிர்கிறது. ஆதலின், தெலுங்கிலக்கியத்தில் கிட்டும் முதல் நூலாக மட்டு மன்றி முதன்மைபெற்ற நூலாகவும் நன்னயப்பட்டுவின் பாரதம் திகழ்கின்றது. மு.கு ஜ.

**நன்னன் (கொண்கான நன்னன்):** இக் குறுநில மன்னன் கொண்கான நாட்டிற்குத் தலைவன் (நற்.391); ஏழிற்குன்றம் இவனது மலை (அகம்.152, 359: நற்.391); பாழி இவனது மலையரண் (அகம் 15, 142, 152, 208, 258, 396); பாரம் இவனது நகரம் (அகம்.152). இவனுடைய ஏழிற்குன்றம் நெடியது, வானளாவியது (அகம். 152, 173), பொன்விளையும் பக்கங்களை உடையது (அகம். 173; நற்.391). இவனுடைய பாழியரண்அரிய காவல் அமைந்தது (அகம். 15, 258); அதனிடத்தே வேளிர் பொன்னினை அருமையாக ஓம்பிவைத்திருந்தனர் (அகம். 258). அது யாழிசை ஒலிக்கும் தெருக்களை உடையது (அகம் 396). அதைச் சார்ந்த பக்கமலையில் வாழும் களி மயில்கள் கலாவச் சிறப்புடையன (அகம். 152).

இந்நன்னன், சுடர்விடும் பொற்பூண்களை அணிந்தவன் (அகம். 15, 396); பட்டமணிந்த யானையினையும், (அகம்.15) இயலும் தேரினையும் இனிய களிப்புத் தரும் கள்ளினையும் (அகம்.173) உடைய இவன், முறையின் வழாத அரசாட்சி அமைந்தவன் (அகம். 142); துலாக்கோலை ஒத்த, குற்றந்தீர்ந்த நடுவுநிலை அமைந்த செம்மொழியாளன், (அகம் 349); ஈகைப் பண்புடையவன், களிறுகளை வழங்கும் வண்மையன் (அகம். 152); பகை நாடுகளை வென்று கொண்ட பெருங் கலன்களைப் பாடுவோர்க்கு ஆராயாது கொடுப்பவன் (அகம். 349); அஞ்சத்தக்க போர்ச் செயல்கள் அமைந்தவன் (அகம். 208).

இவன் தன் நண்பனான மிஞிலியொடு கூடிப் புன்னாட்டின் மீது படையெடுத்தபோது, அந்நாட்டு மன்னனை, 'அஞ்சல்' என்று அமர்த்திய ஆஅய் எயினன் பாழிப் பறந்தலையில் (அகம். 396), நண்பகற் பொழுதில் (அகம். 208) மிஞிலியை எதிர்த்துப் பொருது, அப்போரிலேயே மிஞிலியால் கொல்லப்பட்டு வீழ்ந்தான் (அகம்.142, 208, 396). அவ்வாறு வீழ்ந்த எயினனது உடலின்மேல் வெயில் படாதவாறு, அவனால் முன்னர்க் கரக்கப்பட்ட பறவைகளெல்லாம் கூடித் தம் இறகுகளைக் கோலி நிழல் செய்து வருந்திய அந்நிலையில், பகைமறந்து அவனை அருளிக் காணவேண்டிய இந்நன்னன், அவனிடத்தே வைத்த பகையும் சினமும் மாறாதவனாய், 'அவனைக் காணேன்' என்று அருளாது மறைந்திருந்தான் (அகம், 208). மற்றொருபோது

இவன், பிண்டன் என்பானுடன் பொருத போரில் அவனைத் தோற்றோடச் செய்துவென்றான் (அகம் 152).

மற்றும், போரொழிய நீங்கிப் போன பகைவேந் தன் மீண்டும் பெருந்தானையொடுவந்து முற்றுகை யிட்டிருந்த நிலையில் நன்னனொருவன், தன்னைப் பற்றுக்கோடாகவுடைய நிலைபெற்ற மதிலமைந்த அரண் அப்பகை வேந்தனை எதிர்த்து நிற்றல் ஆற் றாமையால், தான் அவ்வேந்தனுடன் பொருது வென்று தன் பழம்புகழை மீட்டுப்பெற்ற செய்தி யொன்று மோசி கீரனாரால் பாராட்டிக் குறிக்கப் பெறுகின்றது (அகம். 392). அப்புலவர், சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை (புறம் 50), கொண்கானங்கிழான் (புறம். 154-156), ஆய் (குறு 84) ஆகியோரைப் பாடியவர். அவர் கொண்கானங் கிழானைப் பாடும்போது, அவன் மலை பகை வேந் தரிடத்தே திறை பெற்றுக்கொண்டு அவரை மீட்கும் தலைமை உடையதெனக் குறிப்பர். எனவே, அக் கொண்கானங்கிழான் வேந்தரோடே பெற்றிருந்த போர்த் தொடர்பு புலனாம். ஆகவே, வேந்தரை வென்ற வெற்றியாளனாய் அப்புலவர் குறிப்பிடும் இந்நன்னனும் கொண்கானங்கிழானாகிய பாரத்துத் தலைவன் நன்னனேயெனத் தெளியலாம்.

இன்னும், குதிரைப்படையையுடைய வேந்தரைத் தோற்றோடச் செய்து, அவருரிமை மகளிரின் கூந் தலைக் கொண்டு திரித்த கயிற்றினால் அவருடைய யானைகளைப் பிணித்தோட்டிய நன்னன் செய்தி யொன்றும் (நற். 270) பரணரால் பாடப் பெற்றுள் ளது. அவரால் கொண்கான நன்னன் பாடப் பெறு தலாலும் (அகம். 142, 152, 208, 258, 356, 396) அவன் வேந்தரை வென்றவனாதலாலும் இச்செய்திக் குரிய நன்னனும் அவனேயெனக் கொள்ளலாம்.

இனி, பெரும்புகழையுடைய நன்னனொருவனது பெயரைப் பெற்றதோர் பிறந்தநாள் விழாவொன்று மிக்க ஆரவாரத்தொடு நிகழ்ந்து வந்ததை மதுரைக் காஞ்சியில் (618, 619), மாங்குடி மருதனார் குறிப்பிடு வர். அதன்கண் அமைந்த, 'பேரிசை நன்னன்' என்ற குறிப்பினால் அவனும் கொண்கான நன்னனே யாவான் போலும்.

இக்கொண்கான நன்னன் ஓரிடத்தே (அகம். 258), 'நன்னன் உதியன்' என்று குறிக்கப் பெறுகின்றான். உதியனென்பது சேரன் குடிப்பெயர். எனவே, 'நன்ன னுக்குச் சேரமன்னன் சார்பினால் உதியனென்பதோர் பெயர் எய்திற்றுப் போலும்' என்று அதற்கு உரை விளக்கம் (வேங்கட விளக்கு) காணப்பட்டது. அம் முறையில் சேரர்க்குப் படைத்துணையாளனாய் இவனைக் கருதலாம். கருதவே, சேரன் படைத் தலை வனாய்த் தன்னையொத்த ஏற்றையென்பான் முதலிய ஏனை ஐவருடனும் கூடிச் சோழன் பெரும்பூட் சென்னியின் படைத் தலைவனான பழையனோடு போரிட்டு மாண்ட நன்னன் (அகம். 44) இவனே யென்பதும் போதரும்.

இவ்வாறாக ஏழிற்குன்றத்துப் பாழியோனும் பாரத்துத் தலைவனும் கொண்கானங்கிழானுமான இந்நன்னனைக் குறிப்பிட்டுப் பாடிய புலவர்கள்: குடவாயிற் கீரத்தனார் (அகம். 44), பரணர் (அகம். 142, 152, 208, 258, 356, 396; நற். 270); பாலை பாடிய பெருங்கடுங்கோ (நற். 391); மாங்குடி மருத னார் (மது. 618, 619), மாமூலனார் (அகம். 15,349), முள்ளியூர்ப் பூதியார் (அகம். 173), மோசி கீரனார் (அகம். 392) ஆகிய எழுவருமாவர்.

**நன்னன்[2] – (கடம்பின் பெருவாயில் நன்னன்):** நன்னன் வேண்மான். இவனூர் கடம்பின் பெரு வாயில். (பதி.ப. 4). இவன் காவல் மரம் வாகை (பதி. 40, ப. 4, பதி. 88). அவ்வாகை மரம் இருந்த பகுதி வாகைப் பெருந்துறை என்று குறிக்கப் பெறும். அது, நார்முடிச்சேரல் நாட்டிற்கு மேற்கிலுள்ளது (அகம். 199). பொன்னங்கண்ணியையும் பொற்றேரினையு முடைய இந்நன்னன் அந்நார்முடிச் சேரலின் பகை வன். ஒருகால் அவனுடைய நாட்டினைக் கவர்ந்து தன்னடிப் படுத்திக்கொண்ட இவன் (அகம். 199) அவனொடு நாள்தோறும் போருடற்றி வந்தான் (பதி ப. 4). பின்னர் அவன் வலியனாய் இவன் மேற்படை யெடுத்து வந்து, இவனது வாகைப் பெருந்துறை யிடத்தே போரிட்டு, இவனுடைய நிலைத்த பேராற் றலை அறுத்து, அக்களத்திலேயே இவனை மடியும் படி வென்று, இவனது வாகை மரத்தையும் அடியோடு வெட்டி, முன்னர் இவனிடத்தே தான் இழந்திருந்த நாட்டையும் மீட்டுக் கொண்டான் (பதி. 40, பதி. ப.4, பதி. 88; அகம்.199).

இனி, அகவன் மகளிரொடு அகவுநரையும் புரந்த நன்னன் வேண்மான் வியலூர்க்குரியவனாக மாமூல னாரால் குறிக்கப் பெறுகின்றான் (அகம். 97). கொண் கானங்கிழான் நன்னனைப் பாழியோடும் ஏழிற்குன்றத் தோடும் தொடர்புறுத்தி ஈரிடங்களில் பாடிய மாமூல னார் (அகம். 15, 349), இந்நன்னன் வேண்மானை வியலூரொடு தொடர்புறுத்தி வேறுபடுத்தியுள்ளது கருதத்தகும். மற்று, வியலூரென்பது சேரன் செங் குட்டுவனால் அழிக்கப்பட்டது (பதி. ப.5). எனவே, அவ்வூர் சேரர்க்குப் பகைவரூரென்பது புலனாம். ஆத லால், நார்முடிச்சேரலின் பகைவனாய் அவனால் வாகைப் பெருந்துறைப் போரிலே கொல்லப்பட்ட கடம்பின் பெருவாயில் நன்னனே, வியலூர்க்குமுரிய இந்நன்னன் வேண்மான் என்று கருதலாம்.

ஆகவே, கல்லாடனார் (அகம். 199), காப்பியாற் றுக் காப்பியனார் (பதி. 40, பதி.ப.4), பெருங்குன்றூர்

கிழார் (பதி. 88), மாமூலனார் (அகம். 97). என்ற நால்வரும் இவனைக் குறித்துப் பாடியோராவர்.

**நன்னன்**[3] – **(பெண்கொலை நன்னன்)**: விச்சிக்கோ. ஆற்றிலே நீராடச் சென்ற பெண்ணொருத்தி அந் நீரிலே அடித்து வரப்பட்ட மாங்காயொன்றை எடுத்துத் தின்ற தவற்றிற்காக அவள் தந்தை எண்பத் தொரு களிற்றி யானைகளுடனே அவளது நிறை யளவு பொன்னால் செய்த பாவையொன்றைக் கொடுப்பவும் கொள்ளானாய், அப்பெண்ணைக் கொலைபுரிந்த நன்னனொருவனை நரகிற் புகு வோனாய்த் தோழி கூற்றிலே வைத்துப் பழித்துக் கூறுவர் பரணர் (குறு. 292). மற்றும், ஏதோவோர் காரணம் பற்றிப் பகைமையுற்ற கோசர் தாம் கூறிய ஒன்றுமொழியாகிய வஞ்சினத்திற் கேற்ற வன்கட் சூழ்ச்சி புரிந்து நன்னனென்பானின் நறுமாமரத்தை வெட்டி அவன்நாட்டையும் கைப்பற்றி அதனுட் புகுந்தனரென்று அவரே வேறொரு தோழி கூற்றுப் பாடலில் குறிப்பிடுவதன் மூலம் அக்கோசரின் சூழ்ச் சியைப் பாராட்டுவர் (குறு. 73). இவ்விரண்டையும் ஒருங்கு நோக்கப் பெண்கொலை புரிந்த நன்னனே கோசரால் வெல்லப்பட்டவனுமாவன் என்று கருதுவது எளிதாகின்றது. இதனால், அப் பெண்கொலை காரண மாகவே, கோசர் இவனது மாமரத்தை வெட்டி இவன் நாட்டையும் கைப்பற்றினர் என்று கருதவும் வாய்ப்பாகின்றது. ஆகவே, இப்பெண்கொலை நன்னன் கோசரது ஆட்சிப் பகுதியை (துளு நாட்டினை அகம் 15) அடுத்த குறுநிலத்தை ஆண்டிருந்தவனென்பதும். மாமரம் இவனது காவல் மரமாகலா மென்பதும் விளங்கும். மற்றுக் கொண்கான நன்னனைப் பாடிய பரணரே (அகம். 142, 152, 208, 258, 356, 396, நற் 270), இவனையும் பாடியுள்ளாராயினும் அவரால் பலபடப் பாராட்டிக்குறிக்கப்பெற்ற அவனும், நரகிற் புகுவோனாய்ப் பழித்துப் கூறப்பெற்ற இவனும் தம் முள் வேறானவராதல் வேண்டும்.

இனி, இளங்கண்டீரக்கோவும், இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்த வழிச் சென்ற பெருந்தலைச் சாத்தனார், கண்டீரக்கோவைத் தழுவி விச்சிக்கோவைத் தழு வாது விட்டுக் காரணம் கூறுகையில், அவனை நன்னன் மரபினனாகச் சுட்டி, அதனையும் ஒரு காரணம் போல் குறிப்பிடுவர் (புறம். 151). 'பெண் கொலை புரிந்த நன்னன்' என்பதே இங்குக் கருது கோளாகின்றது (புறம்–பழையவுரை).

**நன்னன்**[4] **(நன்னன் சேய் நன்னன்)**: இவன் தொண்டை நாட்டுப் பல்குன்றக் கோட்டத்துச் செங் கண்மா என்னும் ஊரின் தலைவனான வேள் நன்னன் என்பானின் மகனாகிய நன்னனாவான். தந்தை, பெயரே மகனுக்கும் அமையும். அக்கால மரபுவழி இவன் தந்தை பெயரே இவனுக்கும் அமைந்தது. 'பகைமுனையைப் பாழ்படுத்தும் அரிய ஆற்றலும் அதற்கேற்ற விற்றொழிலே பயின்ற பெரிய கைகளும் பரிசிலர்க்கு வழங்கும் மென்மையும் தன்னறிவின் ஆக்கத்திற்கு மாறாகிய கேட்டினை நினையாத ஆக் கத்தையே நினையும் சூழ்ச்சியும் அமைந்த நன்னன் சேய் நன்னனை நினைந்த கோட்பாட்டுடனே நீவிர் அவன் தரும் பரிசில்களைக் கருதிச் செல்வீராயின்' என்று தொடங்கிக் கூத்தரை இவனிடத்தே ஆற்றுப் படுத்துவாராய், இரணிய முட்டத்துப் பெருங்குன் றூர்ப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாத்தைப் பாடியுள்ளார். அப்பாடலால் இவன் பண்புமேம் பாடுகள் பலவும் சிறக்க விளங்குகின்றன. இவன் தன் பகைவர் பலரையும் புறங்கண்டு அவரிடம் திறை பெற்ற பேரணிகலன்களைப் புலவோர்க்கு வழங்கும் ஈகையமைந்தவன்; இகழ்வோரைப் பிணிக்கும் ஆற்றலு முடையோன் புகழ்வோர்க்குத் தான்வென்ற பகையரசு களை முற்றும் கொடுத்தும் அமைதியுறாதவன் (மலை. 70 – 74); பகைவரைப் பொறாமல் பொரு கின்ற போரையும் வெற்றியுண்டாகும் வலிய முயற்சி யையும் மானத்தையும் வெற்றியையும் உடையவன். (மலை. 163, 164); தன்னை வணங்காத பகைவரை யழித்த பணிவில்லாத ஆண்மையன் (மலை. 423) நவிர மலையும் சேயாறும் இவனுக்குரியன. வ.கு.

***நன்னாகனார்***: இவர் சங்கத் தமிழ்ப் புலவர். வேங்கட மலை நாட்டைச் சேர்ந்த கரும்பனூர் கிழானின் கொடைப் பண்பை இவர் போற்றியுள் ளார். கரும்பனூர் கிழான் பெரியவராயினும் சிறிய வராயினும் அவரைக் கரை சேர்த்து உதவும் பட கினைப் போன்றவன் என்பதை 'உறுவரும் சிறுவரும் ஊழ்மாறு உய்க்கும் அறத்துறை அம்பியின் மான' (புறம். 381) என்று கூறும் பாங்கு நயமானது. இப் பாடல் பாடாண்திணையில் இயன்மொழித் துறையில் அமைந்தது. நன்னாகனாரும், புறத்திணை நன்னா கனாரும் ஒருவரே எனக் கொள்வாரும் உளர். புறத் திணை நன்னாகனார் பெயரில் நான்கு பாடல்கள் (புறம். 176, 376, 379, 384) புறநானூற்றில் இடம் பெற் றுள்ளன. சா.உ.

***நன்னாகையார்***: இவர் சங்க காலப் பெண் புலவர் இவருடைய இரண்டு பாடல்கள் குறுந் தொகையில் இடம் பெற்றுள்ளன (குறுந். 118, 325). அவையிரண்டும் நெய்தல் திணைப் பாடல்கள். அவை முறையே வரைவு நீட்டித்தவழித் தலைமகள் பொழுது கண்டு தோழிக்குச் சொல்லியது, பிரிவிடை ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்குக் கிழத்தி மெலிந்து உரைத்தது எனும் துறைகளைக் கொண்டவை. பற வைகளும், விலங்குகளும் தத்தஞ் சேக்கைகளில் உறை யும் மாலைப் பொழுதில் விருந்தினரை வினவியறி வோர் எத்தகைய விருந்தினரும் தடையின்றிப் புகு

தற்குத் திறந்து கிடந்த வாயிலை அடைத்தற் பொருட்டு இன்னும் விருந்தினர் யாரும் உள்ளே வர வேண்டியுள்ளதோ என்று ஆராயும் காட்சியை நன்னாகையார் காட்டுகின்றார் (குறுந்.118). தமிழர் விருந்தோம்பும் மாட்சியை இப்பாடல் தெளிவாகக் காட்டுகிறது. கச்சிப்பேட்டு நன்னாகையார் இவரின் வேறாவர். சா.உ.

**நன்னூல்:** இது பவணந்தி முனிவரால் செய்யப்பட்ட இலக்கண நூல். நன்னூல் என்பது நல்ல நூல் என்னும் பொருளதே.

நூல் என்பது இலக்கணத்தையே குறிப்பது முன்னைய வழக்கு. 'நூல்' என்றே ஓர் இலக்கண நூல் இருந்தமையும் பழைய உரைகளால் விளங்குகின்றது (சிலப்.அரங்.130. அடியார்க்கு நல்லாருரை; இறையனார் களவியலுரை). 'நன்னூல்' என்பது தன்மையால் பெற்ற பெயர் என நன்னூலில் வரும். 'முதனூல் கருத்தன்' என்னும் நூற்பாவுரையில் பலரும் கூறியுள்ளனர் (49).

தொல்காப்பியத்தின் வழிவந்தது நன்னூல். அதற்குப் பின்வந்த நூல்கள் பலவற்றிலும் சிறந்ததும் மிகு பயிற்சியுடையதும் நன்னூலே. இதனை, 'முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினுள் நன்னூலார் தமக்கு எந்நூலாரும் இணையோ என்னும் துணிவே மன்னுக' எனவரும் இலக்கணக் கொத்துரை (8) உறுதிப்படுத்தும்.

நன்னூலில் எழுத்திலக்கணமும், சொல்லிலக்கணமுமே உள்ளன. ஆனால் 'அரும் பொருள் ஐந்தையும் யாவரும் உணரத்' தருமாறு சீயகங்கன் வேண்டப் பவணந்தியார் நன்னூலை இயற்றினார் என்னும் செய்தி சிறப்புப் பாயிரத்தில் உள்ளதாலும், நூலிலும் உரையிலும் வரும் சில குறிப்புகளாலும் பொருள், யாப்பு, அணி இலக்கணங்களையும்நன்னூல் கொண்டிருந்தது என்று கருத வேண்டியுள்ளது.

நன்னூல் பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் என்பவற்றை முதற்பகுதியாகக் கொண்டுள்ளது. நூலினது வரலாறு, ஆசிரியனது வரலாறு, பாடஞ் சொல்வோனது வரலாறு, மாணாக்கனது வரலாறு, பாடங் கேட்டலின் வரலாறு என்பவை பொதுப் பாயிரத்திலும், இயற்றப்பட்ட , நூற் பெயர், நூல்யாப்பு, சிறப்புப் பாயிரம்செய்தற்கு உரியார், பாயிரத்தின் இன்றியமையாமை என்பவை சிறப்புப் பாயிரத்திலும் கூறப்பட்டுள்ளன. இவற்றிலுள்ள நூற்பாக்கள் பலவும் முன்னையோர் நூல்களிலும், உரைகளிலும் இருந்து மேற்கோளாகக் கொள்ளப்பட்டவை.

நன்னூல் முதலதிகாரம் எழுத்திலக்கணம் கூறுகின்றது. எழுத்தியல், பதவியல், உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபுபுணரியல் என்பவை அதிலுள்ளன.

இரண்டாம் அதிகாரமாம் சொல்லதிகாரத்தில் பெயரியல், வினையியல், பொதுவியல், இடையியல், உரியியல் என்பவை உள்ளன. மொத்தத்தில் 462 நூற்பாக்களையுடையது நன்னூல். தொல்காப்பிய நூற்பாக்கள் சிலவற்றையும் இளம்பூரணர், சேனாவரையர் கருத்துகளையும் பவணந்தியார் நன்னூலில் முழுமையாகத் தழுவியுள்ளார்.

நன்னூலை இயற்றிய பவணந்தி முனிவர் சமண சமயத்தவர். இதனை எழுத்ததிகார முகப்பிலும், சொல்லதிகார முகப்பிலும் உள்ள கடவுள் வணக்க நூற்பாக்கள் வெளிப்பட விளக்குகின்றன. பவணந்தி என்பது பவண நந்தி என்பதன் மரூஉவாகும். பவணம் என்பது நாக திலகம். நந்தி என்னும் பெயருடையார் சமணத் துறவிகள். 'அருந்தவத்தோனே' எனவரும் நூற் சிறப்புப் பாயிரமே இதற்குச் சான்றாம். பவணந்தியாரின் தந்தையார் சன்மதி முனிவர் என்றும், ஊர் சனகை என்றும், புரவலன் சீயகங்கன் என்றும் நூற் சிறப்புப்பாயிரம் கூறுகின்றது.

சனகை என்பதைச் 'சனநாதபுரம்' என்கிறார், நன்னூலின் முதலுரையாசிரியராகிய மயிலைநாதர். சனநாகபுரம், சனகபுரம் என்பனவும் அவருரைப் பாட வேறுபாடுகளாக உள்ளன. தொண்டை மண்டலத்திலுள்ள சோழ சிங்கபுரத்தை அடுத்துள்ள 'சனகபுரம்' என்னும் ஊரையும், கொங்கு மண்டலத்திலுள்ள குறும்பு நாட்டைச் சேர்ந்த சீனாபுரம் என்னும் ஊரையும் பவணந்தியார் ஊரெனக் கூறுவர். சீயகங்கன் இருந்து ஆட்சி நடாத்திய கங்கநாட்டில் உள்ள சனநாதபுரமே இவரூர் என்பது பொருந்தும் என்று உறுதிப்படுத்துவர்.

சீயகங்கன் மூன்றாங் குலோத்துங்கனுக்கு உட்பட்டுக் கங்க நாட்டை ஆண்டுவந்த குறுநில மன்னன் (கி.பி.1178–1218) என அறியப் படுதலாலும், அக்கங்கனே பவணந்தியாரைத் தூண்டி நன்னூல் இயற்றச் செய்தவன் ஆதலாலும், பவணந்தியார் 13–ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தவர் என்பது உறுதியாம்.

நன்னூலுக்கு மயிலைநாதர், சங்கர நமச்சிவாயர், இராமானுசக் கவிராயர், ஊற்றங்கால் ஆண்டிப்புலவர், கூழங்கைத் தம்பிரான், வேதகிரி முதலியார், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், ஆறுமுக நாவலர், கா. கோபாலாசாரியார், பவானந்தம் பிள்ளை, சடகோபராமானுசாரியார், இராமலிங்கத் தம்பிரான், சர். பொன்னம்பலம் இராமநாதன்,

கா. நமச்சிவாய முதலியார் முதலியோர் உரை இயற்றியுள்ளனர். இப்பொழுது புத்துரைகள் சிலவும் வெளிப்பட்டுள்ளன. இவ்வுரைப் பெருக்கம் நன்னூற் சிறப்புணர்த்தும். இரா.இ.

**நன்னெசோட:** தெலுங்கில் நன்னயப்பட்டு விற்குப் பிறகு வந்த மிகச் சிறந்த கவிஞர் நன்னெசோட ஆவார். இவரது காலம் கி.பி. 11-ஆம் நூற்றாண்டாகும். இவர் ஆந்திர நாட்டில் கிருட்டிணா நதிக்குத் தென் பகுதியான இரேநாடு, பொத்தபி நாடு, பாகநாடு முதலிய மண்டலங்களை ஆண்ட தெலுங்குச் சோழர்கள் மரபினர். இவர்கள் தம்மைக் கரிகால் சோழன் என்றும், உறையூர் அதிபதி என்றும் கூறிக்கொள்வர். அது போன்றே நன்னெசோட தம் சிறந்த காவியமான குமார சம்பவத்திலும் தாம் உறையூருக்கதிபதி என்று கூறியுள்ளார். கரிகாலனின் மரபினனாகவும் கூறியுள்ளார்.

இவர் தந்தை பெயர் சோடபல்லி. தாயார் பெயர் சிரீபதி. இவர் குரு சங்கம மல்லிகார்ச்சுனர். தம் காவியத்தைக் குருவுக்குப் படையல் செய்துள்ளார். இவருக்குத்தெங்கணாதித்தியர் என்று ஒரு விருது உண்டு. தென்னாட்டின் சூரியன் என்பது பொருள். ‘கவிராச சிகாமணி’ என்றும் பட்டம் உண்டு. இவர் தந்தை சோடபல்லி பாகநாட்டின் இருபதாயிரம் கிராமங்கட்கு அதிபதி என்றும், இவர் உறையூரை ஆட்சி செய்ததாகவும் கூறிக் கொண்டார். தமிழ் நாட்டிலிருந்து ஆண்டாரா? அல்லது மரபுவழிப்பட்டு உரிமையினால் கூறிக் கொள்கிறாரா? என்பது தெரியவில்லை. இவர் அறுபத்து நான்கு கலைகளில் நிறைந்த ஞானம் பெற்றவர் என்றும், வடமொழி வல்லுநர் என்றும் தெரிகிறது. இனிய தெலுங்குச் சொற்களை இடனறிந்து பயன்படுத்தும் நயமும் விரிவான வருணனைத்திறனும் இவர்தம் சிறப்பியல்புகளாகும்.

இவரது காவியமான குமார சம்பவம், முருகனின் பிறப்பும், தாரகாசுரவதமும் கூறும் கதையைப் பன்னிரண்டு அத்தியாயங்களில் 2000 பாடல்களில் இயற்றப்பட்டதாகும். வடமொழியில் காளிதாசன், உத்படர் ஆகிய கவிஞர்கள் குமார சம்பவக் காவியங்கள் படைத்துள்ளனர். இராமாயண, பாரதங்களிலும் இக்கதை உள்ளது. நன்னெசோட இவற்றைத் தழுவியதாகக் கதையை அமைத்தாலும் இந்நூல் மொழி பெயர்ப்பன்று; சொந்தப் படைப்பாகும். தமது காவியத்தில் கன்னடம், தமிழ்ச் சொற்களை ஆங்காங்கே பயன்படுத்தியுள்ளார். தமிழ் இலக்கிய மரபுகளையும் உணர்ந்து காந்தள் பூவைப் பாம்பின் படத்துக்கு உவமையாக்கிய நயமிக்க கவிதை மூலம் இவரது தமிழ்ப்புலமையை உணர முடிகிறது.

இவரது குமார சம்பவம், பிரபந்த நடையில மைந்த சிறந்த காவியம் ஆகும். இந்நூலின் ஏட்டுப் பிரதி ஒன்று மட்டுமே தஞ்சாவூர்ச் சரசுவதி மகாலில் கிடைத்துள்ளது. இந்நூலை மானவல்லி இராமகிருட்டிணகவி முதன் முதலில் பதிப்பித்து வெளியிட்டபோது ஆந்திர நாட்டறிஞர் பெருமக்கள் நன்னெசோட தமிழ் நாட்டினரா? ஆந்திரரா? நன்னய்யாவுக்கு முந்தியவரா? பிந்தியவரா? இந்நூல் நன்னெசோட எழுதியதா? அல்லது பதிப்பித்த மானவல்லி இராமகிருட்டிண கவியின் சுய படைப்பா? என்றெல்லாம் பல விவாதங்களை எழுப்பினர். இறுதியாக நன்னெசோட ஆந்திர நாட்டவர் என்றும், நன்னய்யாவிற்குப் பிற்பட்டவர் என்றும் அவரது சொந்தப் படைப்புதான் குமார சம்பவம் என்றும் அறிஞர் உலகம் முடிவாக ஏற்றுக் கொண்டது.

நன்னெசோட தமிழுக்கும் தெலுங்குக்கும் உறவுப் பாலமாகத் திகழும் முதற்பெருங்கவிஞராகத் திகழ்கின்றார். இவரது ‘குமார சம்பவம்’ மிகச் சிறந்த வருணனைத் திறனும், கற்பனை வளமும், கவிச்சுவையும் மிக்க காவியமாகத் திகழ்கின்றது.

மு.கு.ஜ.

**நன்னெறி:** இது துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் எழுதப்பெற்ற நீதிநூலாகும். சுவாமிகள் பொம்மபுரத்தில் எழுந்தருளியிருந்தபோது, ஒரு நாள் தனிமையாகக் கடற்கரையடைந்து அங்குள்ள மணற்பரப்பிலே நன்னெறி வெண்பாக்களை எழுதி விட்டு வந்து, அதனை ஏட்டில் எழுதி வருமாறு தன் தம்பி கருணைப் பிரகாசரிடம் கூற, அவரும் அவ்வாறே எழுதி வந்தனர் எனக் கூறுவர். இந்நூல் கடவுள் வாழ்த்து நீங்கலாக நாற்பது வெண்பாக்களைக் கொண்டது. ‘நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே’ என்னும் கடவுள் வாழ்த்துப் பகுதியால் இதனை அறியலாம். இந்நூல் வாழ்வுக்கு வலிமையூட்டும் அறக் கருத்துகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டது. ‘கணவனும் மனைவியும் ஒத்து இல்லறஞ் செய்க; கல்விச் செருக்கினையும், செல்வச் செருக்கினையும், கைவிடுக;இனங்காக்க;தன்னலங் கருதாது பிறர் நலம் பேணுக; ஒருகோடி துன்பம் ஓடோடி வந்தாலும் அஞ்சாது காலத்தில் அறஞ்செய்க; பிறர் துயரந் தாங்குக; பழியஞ்சி மெய்யுணர்ந்து உதவுக’ போன்ற கருத்துகள் சான்றுகளாய் அமைகின்றன.

இந்நூலின் ஒவ்வொரு பாவிலும் இடம் பெறும் அறக்கருத்து அழகிய உவமையுடன் இடம்பெறக் காணலாம். கண் முதலிய மக்களின் உடலுறுப்புகள், ஞாயிறு, திங்கள், கடல், காற்று முதலிய இயற்கைப் பொருள்கள், நெல், வாழை, பசு முதலிய பயிற்சி மிக்க பொருள்கள் ஆசிரியரால் உவமைகளாக எடுத்தாளப் பட்டுள்ள பாங்கு அறிந்து மகிழ்தற்குரியது. ‘கண்ணிரண்டும் நோக்கல் ஒன்றையே’ என்னும்

உவமையால் கணவனும் மனைவியும் ஒத்துச் செய்யும் நல்லறமே நிறைவேறும் என்னும் கருத்தை விளக்குவர். 'நின்று பயன்உதவி நில்லா அரம்பையின் கீழ்க் கன்றும் உதவும் கனி' என்னும் உவமையால் தந்தை கொடுத்து வறியவன் ஆனாலும்,அவன் மைந்தர் தம் ஈகைத் தன்மையைக் கைவிடார் என்னும் கருத்தை எடுத்துக் கூறுவர். அன்போடு கல்லெறிந்த சாச் கியர்க்குச் சிவபெருமான் அருள்செய்தார்;அன்பின்றிப் பூவெறிந்த மன்மதனை எரித்தழித்தார் என்னும் புராண உவமையால் குற்றமற்றார் கடுஞ் சொல்லும் இனியதாகும்; குற்றமுடையார் இன்சொல்லும் கொடியதாகும் என்னும் கருத்தினை விளக்கிச் செல்வர். இவைபோன்று இடம்பெறும் உவமைகள் யாவும் யாவராலும் அறியப்பட்டனவாகவும், உவமேயங்களுடன் பொருத்தமுள்ளனவாகவும் அமைந்து கற்பார்க்கு இன்பந் தருகின்றன. இக்காலத்தும் சிறுவர்கள் கற்கும் அறநூல்களின் இலக்கிய வரிசையில் நன்னெறியும் ஒன்றாக இடம்பெறுதல் காணலாம். இரா.செ.

**நனவடங்கு:** நனவிலி என்னும் கருதுகோளினைப் போன்ற, அதோடு தொடர்புடைய நனவடங்கு, நனவுநிலை என்னும் இரு சொற்களும் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் உளவியல் நூல்களில் காணப்பட்டன. நனவடங்கு என்னும் கருத்துப் பல வழிகளில் பயன்படுத்தப்படுகின்றது. பியர்சேனட் (Pierre Janet) என்பாரும், பிரெஞ்சு கல்வி மரபு எழுத்தாளர்களும் 'நனவடங்கு' (Sub Conscious) என்பதனை 'நனவிலி'க்குச் சமமானதாகக் கருதினர். வேறுசிலர், கவனத்தின் புறப்பகுதிகளில் காணப்படும் படிவநிலைகளுக்கு நனவடங்கு எனப் பெயரிட்டனர். இக்காலத்தில் நனவடங்கு என்னும் சொல் பிறழ்நிலை உளவியல் மற்றும் உளப்பிணி மருத்துவத்தில் அவ்வளவாகப் பயன்படுத்தப்படுவதில்லை. கி.இரா

**துணை நூல்:**

Kisker,G.W., The Disorganized Personality, Mc-Graw-Hill Kogakusha Ltd., New Delhi, 1972.

**நனவிலி:** மனிதனின் மனநிலையை மூன்று நிலைகளாகப் பிரிக்கலாம். அவையாவன: நனவு நிலை (Conscious), முன் நனவு நிலை(Pre-Conscious) நனவிலி (Unconscious). இவற்றில் நனவிலி நிலையிலுள்ள எண்ணங்கள். உணர்ச்சிகள், கற்பனைகள் ஆகியவற்றை மனிதனால் உணர்ந்துகொள்ள இயலாது. இது ஏனென்றால் இவ் வெண்ணங்களும், உணர்ச்சிகளும், கற்பனைகளும் சமூகத்தால் ஏற்றுக் கொள்ளத் தக்கவைகளாக இல்லாததால், அவை அடக்கி ஒடுக்கப்பட்டு, தடை செய்யப்பட்டு, நனவு நிலைக்கு அடியிலே நாடுகடத்தப்பட்டு 'அடிமனதிலே சிறை வைக்கப்பட்டுள்ளன. இவற்றுடன் மனிதன் நேரடித்தொடர்பு கொள்ளல் இயலாது, இவற்றை உணர்தல் இயலாது. இதையே நனவிலி (Unconscious) என்கிறோம். இதுகுறித்து ஆராய்ந்தறிந்த அறிஞர் பிராய்டு (Fraud) இந் நனவிலி நிலையே ஒருவன் நனவுநிலையின்மீது பெரிதும் மேலாண்மை செலுத்துகிறது என்று கூறினார். இந் நனவிலிநிலையில்ஒருவன் நினைவு தெரிந்த காலம் முதல் நடந்த பல நிகழ்ச்சிகளும், பட்டறிவுகளும், ஆசைகளும் புதைக்கப்பட்டுப் புதையுண்டுள்ளன. மனதின் இந்தப் பகுதியை 'இருண்ட பகுதி' எனலாம். மனிதனின் நேரடிமுயற்சியினால் இப்பகுதியில் உள்ளவற்றை அகழ்ந்து நனவு நிலைக்குக் கொண்டுவருதல் இயலாது. ஒரு பயிற்சி பெற்ற உளவியலாளர் துணையுடனே இவ்வாறு செய்தல் இயலும் எனப் பிராய்டு கூறினார். விலங்கு உணர்வுகளும்,மனதால்,சமூகத்தால்ஏற்கவொண்ணாச் சிக்கல்களும் இவ்வாறு புதையுண்டிருக்கும். இந் நனவிலியில்தான் கார்ல் கசுடாவ் யூங்கு (Carl Gustav Jung) கூறும் கலையார்வமும், கலைத்திறனும், ஆக்கத்திறனும் மறைந்துள்ளன. புதிய உளவியலின் தந்தையென்று கூறப்படும் வில்லியம் சேம்சு (William James) எனும் அறிஞருடைய கவனத்தைக் கவர்ந்தீர்த்த இந் நனவிலிநிலையை அறிவியல்சார் உளவியல் சில காலம் கவனிக்கத் தவறிவிட்டது. இப்போது இந் நிலையை கனவு, கற்பனை, ஆக்கத்திறன், ஊக்கம், மாற்றத்திற்குட்பட்ட நினைவு நிலைகள் ஆகியவை சார்ந்த ஆராய்ச்சிகளின்போது மிகுதியாக ஆராயத் தொடங்கியுள்ளனர்.

மனதின் நனவு நிலையும், முன் நனவு நிலையும் கடலில் மிதக்கும் பெரும் பனிமலையின் வெளியே தோன்றும் சிறிய பாகத்தைப் போன்றவையே. நீருக் கடியில் மறைந்திருக்கும் அதன் பெரும்பகுதியைப் போன்று நனவிலி நிலை மனதின் பெரும்பகுதியைத் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ளது. மறைந்திருக்கும் இம் மனப்பகுதி மனிதனின் நடத்தையை ஆட்டிப் படைக்கிறது. ஓர் இளைஞன் எப்போதும் தன்னிலும் மூத்த வயதுடைய மங்கையரோடு பழகுதலையே விரும்பிவந்தான். இவன் மனதை ஆராய்ந்தபோது இவன் தன் தாயின்பால் பாலுணர்வு கொண்டிருந்தது தெரியவந்தது. மனதாழத்தில் புதைக்கப்பட்ட ஏற்கவொண்ணா இவ் உணர்ச்சிகள், இவனுடைய நட்பு சார்ந்த செயல்கள்மூலம் வெளிப்படத் தொடங்கின. நனவிலி நிலையிலிருந்து எழும் ஊக்கங்கள் (Unconscious motivations) நமக்குப் பொருளற்றதாகவும், தொடர்பற்றும் தோன்றும் செயல்களுக்குக் காரணமாக அமைகின்றன. பிராய்டின் கூற்றுப்படி மனிதனின் எந்தச் செயலுக்கும் ஓர் உளவியல்சார் காரணம் உண்டு. வாய்தவறிச் சொல்லும் சொல்லுக்கும், கைதவறி எழுதும் எழுத்துக்கும்கூட காரணங்கள் உண்டு. 'இவ்வூரிலுள்ள சிறந்த அறிவுடையோரை

ஒரு விரல் விட்டு, மன்னிக்கவும், விரல்விட்டு எண்ணி விடலாம், என்று கூறும் ஒருவரது அடிமனதில் 'தன்னி லும் அறிவிற் சிறந்தோர் இவ்வூரில் எவருமிலர்' என்ற ஆணவ உணர்வு உள்ளது என்பதை அறிய லாம்.

வெளிநாடு சென்ற ஒருவர் தம் மனைவிக்குக் கடிதம் எழுதும் போது 'நீ' இங்கு வந்திருந்தால் நான் மிகவும் மகிழ்வுற்றிருப்பேன் என்று எழுதும் போது 'நீ' என்ற சொல்லுக்கு மாறாக 'அவள்' என்று எழுதினாராம். இது அவர்தம் மனைவியிடம் கொண்ட நாட்டமின்மையையும், வேறொருவரிடம் கொண்ட நாட்டத்தையும் வெளிப்படுத்தும் செயலா கும். மேற்கண்ட செயல்களைத் தவறிய சொல் (Slip of the Tongue) என்றும், தவறிய எழுத்தென்றும் (Slip of the Pen) கூறுவர். மனதின் ஆழத்தில் புதை யுண்ட எண்ணங்களும், உணர்ச்சிகளும் மனிதன் உறங்கும்போது அவற்றின் மீதுள்ள கட்டுப்பாடு தளர்ந்து கனவு வடிவில் வெளிப்படுகின்றன. அவ் வாறு வரும்போது கனவில் இவ் ஆசைகளும், உணர்ச்சிகளும் மாறுவேடங் கொண்டு தோன்றுகின் றன. எடுத்துக்காட்டாகப் பிறன்மனைபால் நாட்டங் கொண்ட ஒருவனது கனவில் அவன் பிறனொரு வனுடைய வாகனத்திலமர்ந்து ஓட்டி மகிழ்வது போன்ற காட்சிகளைக் காண்பான். இக்கனவில் பிறன் மனை வாகனமாகவும், புணர்தல் ஓட்டி மகிழ்தலா கவும் மாற்றுருக் கொண்டு கனவுலகில் தோன்றுகின் றன. கனவுகளைப் போன்றே ஒருவரது நகைச்சுவை யும் அவரது அடிமனத்தை அடையாளங்காட்ட வல்லது. இவ்வாறே மறத்தலும் அடிமனத்தால் ஏற் படுவதேயாகும். ஒருவருக்குப்பிடிக்காத, விரும் பாத ஒன்றோ, ஒரு பெயரோ மறந்துபோதலுக்கு அடிமனமே காரணமாகும். மக்கள் மகிழ்வுதரா நிகழ்ச்சிகளை மறந்துவிடுகின்றனர்.

குற்றவாளிகளாவதற்கும், சமூக விரோதிகளாவ தற்கும் ஒருவருக்குத் தம் குழந்தைப் பருவத்தில் ஏற்ப டும் கடுமையான உணர்ச்சிப் பஞ்சமே காரணமா கும். அடிமனதில் தோன்றும் அச்சங்களும், ஆசைகளும் மனிதன் ஈடுபடும் மாறுபட்ட செயல்களுக்கும், செயல்பிறழ்வுகளுக்கும், மனநோய்க்கும் காரண மாகும்.

நனவிலி எனும் ஆழ்மனத்தை ஆராய்ந்தறியப் பல முறைகள் உள்ளன. கனவுகளை ஆராயும் கன வாய்வு முறை போன்ற பல முறைகளைக் கொண்ட இத்துறைக்கு உளப்பகுப்பாய்வு முறை என்று பெயர். மன நோயுற்றோரின் ஆழ்மனத்தை ஆய்ந்து அதை அவர்களுக்கு உணர்த்தி, நனவிலி நிலையிலுள்ள சிக்கல்களையும் உணர்ச்சிகளையும், நனவு நிலைக்குக் கொண்டு வருதலால் அவர்களை மன நலமுறச் செய்ய இயலும். இவ் உள மருத்துவ முறை (Psycho theraphy) பிராய்டால் உருவாக்கப்பட்டது.

ஒரு சொல்லுக்குத் தொடர்பான மறுசொல் கூறச்செய்தும் ஒரு முடிவுறாச் சொற்றொடரை முடிவுறச் செய்தும் அவற்றின்மூலம் ஆழ்மனப் பொருள்களை வெளிப்படச் செய்து ஆராய இயலும். ஒருவரின் ஆழ்மன ஆசைகளையும், விருப்பு, வெறுப்பு அச்சங்களையும் அவர் உருவாக்கும் கவிதை மற்றும் கதைகளை ஆராய்ந்து அவரின் நனவிலிமன நிலையை அறியலாம். கதை உணர்வுச் சோதனை (Thematic Apperception Test) மூலம் ஒருவரைச் சில படங்களைப் பார்த்து அதில் தோன்றும் காட்சியில் நடப்பது, முன்பு நடந்தது, பின்பு நடக்க இருப்பது ஆகிய வற்றை இணைத்துக் கதைகள் உருவாக்கச் செய்வர். அவ்வாறு உருவாக்கப்படும் கதைகளை ஆய்ந்து அதில் வெளிப்பட்டிருக்கும் ஆழ்மனப் பொருளை உளவியலார் உணர்வர். மேலும், உரோர்சாக்கு. மையொற்றுப் படங்கள் சோதனை (Rorschach Ink-blot Test) மூலம் ஒருவருக்கு அப்படங்கள் எவ்வாறு தோன்றுகின்றனவோ அதைக்கொண்டு அவரது மனதை அறிவர்.

யூங் எனும் அறிஞர், ஆழ்மனம் மனித இனம் முழுவதற்கும் பொதுவான பல எண்ணங்களையும், உணர்ச்சிகளையும், நினைவுகளையும், ஆயிரக்கணக் கான ஆண்டுகளிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் தன் னுள் அடக்கிக்கொண்டுள்ளது என்று கூறினார். மிக உயரமான இடத்திலிருந்து மிகப் பள்ளமான இடத் தில் தாம் விழுவதாக ஒருவர் காணும் கனவுக்குக் காரணம் பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் மனிதனுக்கு ஏற்பட்ட ஆபத்துகளும், அச்சங்களும் மரபுவழியாக உடலிலும், உள்ளத்திலும் ஊறி வந்திருப்பதேயாகும். பல்வேறு, மாறுபட்ட பண்பாடுகளிலும்மக்கள்காணும் ஒரே வகையான எண்ணங்களும், அச்சங்களும் இவ ருடைய கருத்துக்கு அடிப்படையாக அமைந்தன. எடுத்துக்காட்டாக இருள், பாம்பு ஆகியவை சார்ந்த அச்சம்; கடவுள் எனும் எண்ணம், நீரைத் தூய்மைப் படுத்தும் பொருளாகக் கருதல், தீ எனும் சக்தி 'தான்' என்பதை உணர்த்தும் மாயவட்டம் அல்லது மந்திர மண்டலச் சக்கரங்கள், தன்னுடன் ஒன்றாகத் தான்கலத்தல் எனும் கருத்து ஆகியவையாம். இத னைக் கூட்டு நனவிலி அல்லது ஆழ்மனம் (Collective-Unconscious) என யூங்கு கூறிய இக்கருத்து அறி வியல் அடிப்படையில் நிறுவப்படாவிட்டாலும், இதை ஒதுக்கித்தள்ளல் இயலாது. வே.க.

**துணை நூல்கள்:**

Gazzaniga, M.S., Psychology, Harper & Row, San fransisco, 1980.

Gottesfeld H., Abnormal Psychology, Palo Alto Science Research Associates, Chicago, 1979.

Korchin, S.J., Modern Clinical Psychology, Basic Books, New York, 1976.

Zimbardo, P.G. & Ruch, F.L., Psychology and Life, X ed., Glenview, Scott Foresman, Illinois, 1979.

*நனவு மனம்*: ஒருவருக்கு ஒரு நேரத்தில் நிகழும் புலன் காட்சிகள், எண்ணங்கள், உணர்வுகள், நினைவு ஆகியவற்றின் கூட்டுச்சொல் நனவுமனம் (Conscious Mind) எனப்படும். இவ்வகையில் நனவு என்பது விழிப்புணர்வு என்பதனை ஒத்தமைகின்றது. எனினும், ஒருவரின் கவனம் முழுமையாக ஈர்க்கப்படும் வரையில் விழிப்புணர்வு மங்கிய நிலையிலிருக்கும் புலன்காட்சிகளும், எண்ணங்களும்கூட நனவு நிலையில் இருப்பதாகக் கருதப்படுகின்றன.

தொடக்கக்கால உளவியலாளர்கள் நனவினை மனதுடன் ஒப்பிட்டார்கள். உண்மையில் அவர்கள் உளவியலை 'நனவினையும் மனதினையும் ஆராய்தல்' என்று வரையறுத்தார்கள். அகவய முறையினைப் பயன்படுத்தி நனவினை ஆராயவும் .தலைப்பட்டனர். ஆனால், 1900-இல் சான் வாட்சனும், அவரது ஆதரவாளர்களும் தோற்றுவித்த 'நடத்தை உளவியல்' மேற்கண்ட கருத்துகளை வலுவிழக்கச் செய்துவிட்டது. மீண்டும் கடந்த இருபது ஆண்டுக் காலத்தில் உளவியலார் அறிதல்சார் உளவியல் பற்றி ஆர்வம் காட்ட ஆரம்பித்ததும் நனவுநிலை செல்வாக்குப் பெற்றிடலாயிற்று.

நனவு மனத்தில் இரு நிலைகள் உள்ளன. ஒன்று, சாதாரண விழிப்பு நிலையான சலனமற்ற நனவு மனம். இந்நிலையில், அக்கணத்தில் சுற்றுச் சூழலில் ஏற்படும் விளைவுகளை ஏற்றுக்கொள்ளும் மனப்பாங்கு இருக்கும். இரண்டாவது, செயற்படு நனவு மனம். இந்நிலையில் தானே வலிந்து தொடங்குதல், தேடிப் பெறுதல், திட்டமிடல், எதிர்கால நிகழ்வுகள் போன்றனவற்றில் நாட்டம் காணப்படும்.

சுற்றுச்சூழலிலிருந்து தகவல்களைப் பெறுவது புலனுணர்வுத் தொகுதியின் இன்றியமையாப் பணியாகும். புலனுணர்வு அனுபவம் நினைவுகள், கற்பனைகள், கனவுகள் ஆகியவற்றுடன் சிக்கலான வழிகளில் ஒன்று சேருகிறது. இவையெல்லாம் சலனமற்ற நனவு மனத்தில் காணப்படுகிறது. அறிவுச் செயல்களைக் கொடுப்பதுடன், புலனுணர்வுத் தூண்டல், அழகுணர்வு மன நிறைவிற்கும் அடிப்படையாக அமைகிறது. சலனமற்ற நனவுமனத்தினை 1960-ஆம் ஆண்டில் ஏற்பட்ட பண்பாட்டு மறுமலர்ச்சி வலியுறுத்துவதாக அமைந்தது. இதன்படி தற்கால நிகழ்வுகளின் புலனுணர்வுகளுக்கு அதிகச் சிறப்பளிக்கப்பட்டது. கடந்தகாலம் அல்லது எதிர்காலம் பற்றிய எண்ணங்களிலிருந்து முற்றிலும் விடுபட்டு இருக்கும் நிலை இதில் காணப்படுகிறது. இவற்றின் பல கருத்துகள் கீழைநாட்டு மத வழிமுறைகளான (யோகா) தவம் போன்றவற்றின் அடிப்படையில் எழுந்தனவாகும். இந்தத் தவநிலையில் ஒருவரின் தனித்துவம் விலக்கப்பட்டுத் தவத்தின் நோக்கத்துடன் ஒன்றிப்போய் முழு அமைதி அல்லது வாழ்வின் நிறைவு ஏற்படுகின்றது.

தகவல்களைப் பெறுவது அல்லது புலனுணர்வு, நனவுமனத்தின் ஒரு பகுதியே. இக்கடிதத்தை அஞ்சல் பெட்டியில் போடவேண்டும் என்று நினைத்திடுவது போன்ற உடன் நிறைவேற்றிடக்கூடியதும், சாதாரணமானது மான திட்டம் அல்லது, தான் வழக்கறிஞராகவேண்டும் என்ற நீண்டகாலத் திட்டம் போன்ற செயற்படு திட்டங்கள் மனவாழ்வில் பெரும்பகுதியானவையாகும். இன்னும், நிகழ்வுறாச் செயல்களும்கூட எதிர்காலத்தில் பெரிதும் நிகழக் கூடுமென்ற அடிப்படையில் நனவுமனத்தில் நிறுத்திடப்படும். எடுத்துக்காட்டாக, ஓர் ஆக்கச் சிந்தனைக் கலைஞன், அறிவியலாளன், அல்லது கண்டுபிடிப்பாளன் தனது ஆக்கப்பூர்வமான எண்ணம் ஒரு முழுமைப் பொருளாக மாறிடத் தேவைப்படும் கடின உழைப்பிற்குத் தனது செயற்படு நனவினைப் பயன்படுத்துகின்றான். ஒருவன் முன்னேறிட விழையும்போது, தனது பொருளினைச் சிறப்பான ஒன்றுடன் ஒத்திட்டுச் சோதித்திடும்போது, அல்லது ஊக்கமிழக்கச் செய்யும் செயலுக்கு எதிராகத் தனது திறன்களை ஒன்றுபடுத்துதல் போன்ற நேரங்களில் செயற்படு நனவு ஓர் இன்றியமையாப் பங்கினையாற்றுகிறது.

சலனமற்ற நனவிற்கும் செயற்படு நனவிற்கும் இடையே வேறுபடுத்துவது எளிதன்று. இரு நிலைகளிலும் சிந்தனை ஓட்டம் இருக்கிறது. இரண்டிலும் எண்ண ஓட்டம் ஒருவரின் உள்ளுக்குள்ளே நிகழ்கிறது. அல்லது விழிப்புணர்விற்கு மிக அருகிலுள்ளது.

கி.இரா.

**துணை நூல்:**

Atkinson R.L., Atkinson R.C., & Hilgard E.R., Introduction to Psychology, Harcourt Brace Jovanovich, Inc., New York, 1983.

**நா** நகரத்தின் நெடிலாகிய இவ்வெழுத்து நகரத்திற்கு உரிய முயற்சியோடு வாயை அங்காந்து நீட்டுவதால் இதன் ஒலியை எழுப்புகிறது.

**பொருள்:** ஓரெழுத்துச் சொல்லாக இது பல பொருளைக் கொடுக்கும் என்றா லும், அடிப்படைக் கருத்து நாக்கு என்ற பொருளைத் தழுவியது. வாயினுள் நாக்கு எப்படி நடுவில் இருக்கிறதோ அதைப்போல நடுநிலை என்ற பொருளும் உண்டு. பேசு வதற்கு நாக்கு இன்றியமையாதது.ஆகவே, பேச்சு என்ற பொருளையும் கொடுக்கும். கைம்மணியின் நடுவில் தொங்கும் நாக்குக்கும் நா என்ற பொருள் உண்டு. துலை (தராசு) யின் நடுவில் எடையைக் குறிக்கும் முள்ளுக்கும் நா என்று பெயர் உண்டு. தீயின் மேல் எழும்பிய கதிருக்கும் நா என்று பெயர். வாயிற் கதவின் உள்பக்கத்தில் இடப்படும் நீண்ட தாளுக்கும் பூட்டின் உள்பகுதியில் தட்டும் உறுப்புக்கும் நா என்று பெயர் உண்டு. நாதசுவரத்தின் ஊது வாயும் நா என்று கூறப்படும். யாழ்ப்பாணத் தில் அயல், பொலிவு என்ற பொருள்இருப்பதாகத் தெரிகிறது.

**வடிவம்:** நகரத்திற்கு வலப்புறம் தலைக்கட்டிலிருந்து இழுக்கப்படும் கோடு ஆகா ரத்தைக் குறிக்கும். மற்ற எழுத்துகளின் வரி வடிவத்தைப் போலவே இதுவும் அடுத்த வளர்ச்சிக் கட்டத்தில் ஆகாரக் குறி நடுவிலிருந்து இழுக்கப்பட்டது. இதற்குக் காரணம் என்னவென்றால் வழக்கம் போல வலப்புறம் கோடு இழுத்தால் ஙகாரத் தின் உருவத்தைக் காட்டும், குழப்பத்தைத் தவிர்க்க இடையில் இடப்பட்டது. செங் கம் நடுகற்களின் பழைய கல்வெட்டுகளிலும் (கி.பி. 4,5, நூ.) ஆண்டிப்பட்டி சேந்தன் நாணயத்திலும் இது காணப்படும். அதே சமயத்தில் பழைய 'ஊ' வின் வடிவமாக இருந்த இதனோடு இந்தக் காலத்து ஊகாரம் என்ற தலை வளைந்த வடிவத்தால் வேறுபட்டது. இதற்குப் பிறகு மறுபடியும் மேலிருந்தே இழுக்கப்பட்டு மற்ற எழுத்து களோடொப்ப வளர்ந்தது. ... ... ...

பிறகு கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் வலப்புறக் கோடு வளைந்து பிரிந்து விட்டது.

இது இரண்டாம் பல்லவ பரமேச்சுர வர்மனின் திருவதிகைக் கல்வெட்டில் காணப்படும். ... ... ...

அடுத்துப் பல்லவ நிருபதுங்கனின் இலால்குடிக் கல்வெட்டில் (கி.பி. 9-ஆம் நூ.) நகரத்தை அடுத்து ஒருபுறமாக வளர்ந்த கோடு தோன்றிற்று. ... ... ...

இதற்குப் பிறகு கி.பி. 14-ஆம் நூற்றாண்டிற்கு முன்பே இராசநாராயண நம்பு வரையனின் குன்றத்தூர்க் கல்வெட்டின்படி நகரத்தோடு ஒட்டி முழுவடிவம்பெற்றது.

விசய நகர காலத்தில் இன்றைய முழு வடிவம் தோன்றிற்று. ... ... ...

கே.ஜி.கி.

*நாக்சாசு*: கிரேக்க நாட்டில் சிக்ளடீசு என்ற தீவுக் கூட்டத்தில் உள்ள மிகப் பெரிய தீவு நாக்சாசு (Naxos) ஆகும். இது தெற்கு ஈசியன் கடலின் வட மேற்குக் கடற்கரையில் அமைந்துள்ளது. ஈசியன் கடலிலுள்ள பேராசு தீவுக்குக் கிழக்கில் உள்ளது. இத்தீவின் மிக அதிகமான நீளம் 35 கிலோ மீட்டர்; மிக அதிகமான அகலம் 25 கிலோ மீட்டர்; பரப்பளவு 430 கிலோ மீட்டர் ஆகும்.




நாக்சாசு தீவு

இத்தீவு கி.மு. 490-ஆம் ஆண்டில் பாரசீகர்களால் கைப்பற்றப்பட்டது. ஆதென்சு அரசு கி.மு. 478-ஆம் ஆண்டில் 'தீலியன் கூட்டணி' யைப் பாதுகாப்பிற்காக அழைத்தபோது, நாக்சாசு உட்பட சிக்ளடீசுவின் அனைத்துத் தீவுகளும் அக்கூட்டணியில் உறுப்புகளாகச் சேர்ந்தன. அக்கூட்டணிக்கு நாக்சாசு மட்டும் நான்கு கப்பல்களைக் கொடுத்தது. இதற்கிடையில் ஒரு சில உறுப்புத் தீவுகள் கூட்டணியிலிருந்து விலகி விட்டன. நாக்சாசும் கி.மு. 47-ஆம் ஆண்டில் இக் கூட்டணியிலிருந்து விலகி, தம் படைகளையும் திரும்பப் பெற்றுக் கொண்டது. எனவே, கூட்டணியின் உறுப்பு நாடுகளால் பல தொல்லைகளை ஏற்க வேண்டியதாயிற்று. இத்தகைய தொல்லைகள் பெலப் பனீசியப் போர்க்காலம் வரை நீடித்தன. இத்தீவு கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் வைனீசியா கோமகனு டைய ஆட்சிப்பகுதியில் இணைந்தது. இது கி.பி. 1566-ஆம் ஆண்டில் துருக்கியர் வசமாயிற்று; இன்று கிரீசு நாட்டுக்குச் சொந்தமாக விளங்குகிறது.

இத்தீவின் சமவெளிகளும், மேற்குக் கடற்கரை யின் மேட்டுப் பகுதிகளும் மிகுந்த வளத்துடன் இயற் கையிலேயே அமைந்துள்ளன. எனவே, அப்பகுதிகளில் ஏராளமான ஒலிவ மரங்கள் (Olive trees). உள்ளன. திராட்சை, நாரத்தை-எலுமிச்சை, உருளைக்கிழங்கு, புகையிலை, தானிய வகைகள் போன்றவை பயிராகின்றன.

இத்தீவில் சாணை பிடிப்பதற்குப் பயன்படும் சாணைக்கல், வெண்கலம், வெண்பளிங்குக்கல் ஆகியன வும் கிடைக்கின்றன. வெண்பளிங்குக் கல்லினால் சிற்பிகளால் அமைக்கப்பட்ட சிறகுடைய பெண் சிங்கமுக உருவச் சிலைகளை இன்றும் கிரேக்க நாட் டில் 'தெல்பி' என்ற இடத்தில் காணலாம். இத்தீவின் மக்கள்தொகை 1971-ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கெடுப்புப்படி 14,200 ஆகும். இத்தீவு தையானி சசு வழிபாட்டு மையமாகவும் விளங்குகிறது.

வடமேற்குக்கடற்கரையில்அமைந்துள்ள கிரேக்க, இலத்தீன் சமய வட்டாரத் தலைவரின் ஆட்சிக்குரிய இடமும் 'நாக்சாசு' என்றே வழங்கப்படுகிறது. யூபோவாவிலிருந்து கி.மு. 735-ஆம் ஆண்டில் பிரிக்கப் பட்டு, சிசிலியுடன் இணைக்கப்பட்ட முதல் கிரேக்கக் குடியேற்றத்திற்கும் 'நாக்சாசு' என்றே பெயரிடப் பட்டது. பொன்.சு.

**நாக்சுவில்**: நாக்சுவில் என்பது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஒன்றான தென்னசி மாநிலத்தின் (Tennessee) கிழக்குப் புறத்தில், பிரெஞ்சு பிராடு (French Broad) ஆறும் ஒல்சுடன் (Holston) ஆறும் கூடுமிடத்தில் அமைந்துள்ள ஒரு நகரமாகும். அவ்விரு ஆறுகளும் ஒன்று கூடித் தென்னசி நதி எனப் பெயர் பெறுகிறது.

ஆங்கிலேய-அமெரிக்கர்கள் சிலர் அப்பகுதியை முதன் முதலாகக் கி.பி. 1761-இல் பார்வையிட்டனர். செரோகிசு இந்தியர்களுடன் கி.பி. 1765-இல் ஏற் பட்ட ஒப்பந்தம் ஒன்று அப்பகுதியில் குடியேற விரும்பு வோருக்கு ஆங்கே குடியேறுவதற்கான வசதிகளை வகுத்துக் கொடுத்தது. சேம்சு ஒயிட்டு (Capt. James White) என்ற படைத் தலைவர் அங்கே நிரந்தர மாகக் குடியிருப்பதற்காக முதன் முதலாக வீடு ஒன்றைக் கட்டினார். சேம்சு ஒயிட்டின் அரண் நாளடைவில் நாக்சுவில் (Knoxville) எனப் பெயர் பெற்றது. குடியரசுத் தலைவர் சார்சு வாசிங்டன் அமைச்சரவையில் பாதுகாப்பு அமைச்சராக இருந்த நாக்சு (Knox) என்பவரின் பெயரையே இந்நகருக்குச் சூட்டப்பட்டது. அமெரிக்க உள்நாட்டுப் போரின் போது (கி.பி. 1861-65) கூட்டமைப்புப் (Confedrate) படைகள் நாக்சு வில்லினைக் கி.பி. 1863-இல் கைப் பற்றிக் கொண்டன. பின்னர் அது கூட்டரசு (Fede ratise) ஆதரவாளர்கள் வசமாயிற்று. ஆனால், அது வெற்றிகாணவில்லை.

அமெரிக்காவில் மறு சீரமைப்பு (Reconstruction) நடைபெற்றுக் கொண்டிருக்கையில் நாக்சுவில்

மிகுதியான வளர்ச்சியுற்றது. கி.பி.1860 - இல் 3.000 ஆக இருந்த அதன் மக்கள் தொகை 1980-இல் 1,75,030 ஆயிற்று. தென்னசிப் பள்ளத்தாக்குத் திட்டத்தின்தலைமை அலுவலகம் நாக்சுவில் பகுதியில் அமைந்துள்ளது. இருபத்தைந்து அணைகளைக் கொண்ட அந்த மாபெரும் அணைக்கட்டு நிலையத் தின்நான்கு அணைக்கட்டுகள் அந்நகரின் 40கி.மீ. பரப் பளவில் அமைந்துள்ளன. அத்திட்டத்தினால் உற்பத்தி யாகும் மின்சக்தி அவ்விடத்தில் தொழிற்சாலைகள் தோன்றுவதற்கு உதவியாயுள்ளது. அதன் நீர்ப்போக்கு வரத்துத் திட்டம் அந்நகரின் போக்குவரத்தின் மூலவாய்ப்பு வளத்தை மேலும் அதிகரித்துள்ளது.

அறிவு மற்றும் கல்வித் துறையில் அந்நகரம் மிக்க வளர்ச்சியடைந்துள்ளது. தென்னசிப் பல்கலைக் கழக மும் நாக்சுவில் கல்லூரியும் அந்நகரின் கல்வி மற்றும் பண்பாட்டு வளர்ச்சிக்கு உதவுகின்றன. நாக்சுவில் கூடு கொள் இன்னியம் (Knoxville Symphony orchestra) என்ற இசைக்குழு, மற்றும் இலாசன் மெக்கி நூல கம் (Lawson Meghee Library) ஆகியவை இங்கு அமைக்கப்பட்டுள்ளன.

நாக்சுவில் நிலக்கரித் தொழில் நகரம். இது தேசிய வனத்தின் மேற்கு வாயிலாக அமைந்துள்ளது: இப்போது உள் நாட்டுப் பகுதிகளோடும், வெளிநாடு களோடும், நெடுஞ்சாலைகள் மூலமாகவும், இருப்புப் பாதைகள் மூலமாகவும் விமானங்கள் மூலமாகவும் தொடர்பு கொண்டுள்ளது. அ.உ.

**நாககுமார காவியம்**: தமிழில் 'ஐம்பெருங் காப்பியம்' என்னும் வழக்கினை நன்னூல் மயிலை நாதர் உரையில் கண்டபின்னர், 'ஐஞ்சிறு காப்பியங் களும் இருத்தல் வேண்டும் என்ற கருத்தில் ஐந்து நூல்களைத் தொகுத்து அவ்வாறு கூறும் மரபு எழுந்தது. சி.வை.தாமோதரம்பிள்ளை தம் சூளா மணிப் பதிப்பில் (1889) தமிழில் சமணர்கள் எழுதி வைத்த, யசோதர காவியம், உதயண காவியம் நாககுமார காவியம்,சூளாமணி, நீலகேசி என்னும் பெயரில் ஐஞ்சிறு காப்பியங்கள் உள்ளன என்று குறிப்பிட்டுள்ளார் அண்மைககாலம் வரை 'நாக குமார காவியம்' என்னும் பெயரில் நூல் இருப்பதாகத் தெரியாமையால், அக்காவியம் இறந்த தமிழ் நூல் களுள் ஒன்றாகக் கருதப்பட்டது.

இந்நூலின் காகிதப் பிரதியினைச் சிரீபால் அவர் களிடமிருந்து வித்துவான் மு.சண்முகம் பிள்ளை பெற்றுச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைச்சார்பில் வெளிவரும் 'தமிழாய்வு' இரண்டாம் வெளியீட்டில் (1973) விரிவான முன்னுரை முதலிய வற்றோடு வெளியிட்டுள்ளார். இந்நூல் 170 செய் யுட்களைக் கொண்டுள்ளது. நூலின் புறம்பாக ஒரு காப்புச் செய்யுளும், சருக்கப் பாடல் எண்ணிக்கை கூறும் ஒரு செய்யுள்களும் உள்ளன.

மகத மன்னன் இரேணிகராசன், வரவீரநாதரை வணங்கிப் பஞ்சமி கதை கூற வேண்டியதற்கிணங்க அவர் கூறியதாகக் கதை அமைந்துள்ளது. இந்நூற் பெயர் நாககுமார காவியம் என்றமைந்திருந்தாலும் நூலுள் இதன் பெயர் நாகபஞ்சமி கதை. பஞ்சமி கதை என்றே குறிப்பிட்டுள்ளதாகக் காட்டியுள்ளார்.

இந்நூலின் ஆசிரியர் பெயர்தெரியவில்லை என்று பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார். எனினும், சமண சமயச் சார்புடையதாகஅமைந்துள்ள இந்நூல், சமணப் பெண்துறவியராகிய கந்தியார்களுள் ஒருவரால் எழுதப் பட்டிருக்கலாம் என்றும், நூலின் நடை, கருத் துப் புலப்பாடு போன்றவற்றை நோக்கினால், சிறந்த புலமை நிறைவு இல்லாத ஒருவரால் இந்நூல் இயற் றப்பட்டிருக்கலாமென்றும் ஆய்வாளர்கள் கருதுகின் றனர். சீவகசிந்தாமணிக் காப்பியத் தலைவனைப் போல இந்நூல் தலைவனும் பல ஊர்களில் பலரைத் திருமணம் செய்யுமுன் சைன ஆலயம் சென்று வணங் குவதனைத் தவறாது கொண்டுள்ளான் என்றும், இறு தியாய் வீடுபேறெய்துகின்றான் என்றும் கூறப் பெற் றுள்ளது.

இந்நூலிற் காணப்படும் சில கருத்துகள் யசோ தரகாவியப் பாடற்கருத்துகளோடு ஒத்திருப்பது கொண்டு இந்நூலின் காலம் உதயணகுமார காவிய காலத்திற்குப் பிற் பட்டதாய், கி-பி. 16-ஆம் நூற் றாண்டில் அமைந்ததாய் இருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது. இந்நூலின்பதிப்பாசிரியர், இந்நூலிற்குச் சமணர் எழுதிய உரையோடும், சிறப்புப் பெயர் விளக்கம் போன்ற சில விவரங்களோடும் இதனைப் பதிப்பித்துள்ளார். இக்கதை வடமொழி, பிரா கிருதம், கன்னடம்,இந்தி முதலிய மொழிகளிலும் கூறப்பட்டுள்ளது என்பதனையும் அவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ளார். அ.மா.ப.

**நாகசந்திரா**: இவர் கன்னட இலக்கியத்தில் புகழ்பெற்ற சமணக் கவிஞர். இவருடைய படைப்பு களில், கன்னடக் கவிஞர்களுள் 'இரத்தினத் திரை யங்கள்' (Ratnatrayas) என்று போற்றப்படும் பம்ப, பொன்ன, இரேன்ன எனும் முப்பெருங் கவிஞர்களின் சாயலைக் காணலாம். இவர் அப் பழம்பெரும் கவிதை மரபைச் சேர்ந்தவர் எனத் தம்மைக் கருதிக் கொண்டார். இவர் பம்ப கவியின் சீடராகத் தம்மைக் கருதி, 'அபிநவ பம்ப' (Abhinava Bampa) என்று தம்மைக்குறிப்பிட்டுக்கொண்டார். இவர் மல்லிநாத புராணம், இராமச்சந்திர சரித புராணம் எனப்படும் இரு புராணங்களை எழுதியுள்ளார். இவை இரண் டுமே சமயத் தொடர்பானவை. இவருடைய ஆசிரியர் பாலசந்திரகுரு.

இவர் எங்கு எப்போது பிறந்து வளர்ந்தார் என்பதற்குரிய தகுந்த சான்றுகள் இன்றுவரை கிடைக்கவில்லை. இவருடைய படைப்புகளிலும் இவரைப் பற்றிய எக்குறிப்பும் காணப்படவில்லை. மல்லிநாத புராணக்கவிதை ஒன்றின் வாயிலாக இவர் பீசப்பூர் (Bijapur) என்று இன்று வழங்கப் பெறும் 'விசயபுரா' வைச் சேர்ந்தவர் எனக் கருதுவர். இவரது காலம் குறித்துப் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. ஆனால், நரசிம்மாச்சாரியா, வேங்கட சுப்பையா, மஞ்சேசுவர கோவிந்தபை போன்ற பெருந்திறனாய்வாளர்களின் கருத்துப்படி இவர் கி.பி. 1040-க்கும் கி.பி. 1140-க்கும் இடைப்பட்ட காலத்தவர் எனக் கொள்ளலாம்.

இவர் பாரதி கர்ணபுரா, கவிதா மனோகரா, சாகித்திய வித்தியாதரா, சதுரகவிஞானசுதான இரத்தின பிரதிபா, சாகித்திய சர்வசனா, சாகித்திய முக்தவதம்சா என்று பல்வேறு பட்டப் பெயர்களால் போற்றப்படுகிறார்.

**மல்லிநாத புராணம்:** இது நாகசந்திராவின் முதல் நூலாகும். இந்நூல் மல்லிநாதர் என்னும் 19-ஆம் தீர்த்தங்கரர் (சமண முனிவர்) வரலாற்றைக் கூறுகிறது. இது சமண சமயப் பெருங் காப்பியமாகும். இக்காப்பியம் சம்பு யாப்பில் இயற்றப்பெற்று 14 படலங்களைக் கொண்டு அமைக்கப் பெற்றுள்ளது. இவர் இக்காப்பியம் எழுதக் காரணம் உலகப் பாவங்களிலிருந்து மீண்டு பேரின்ப வீடுபேறு அடைவதே என்கிறார். மாமரத்திற்கும் மல்லிகைக் கொடிக்கும் வசந்த காலத்தில் காமதேவனால் திருமணம் நிகழ்த்தப்படுவதைக் கவிஞர் முற்றுருவக அணியில் காப்பிய நலம் பொலியப் பாடியுள்ளார்.

**இராமச்சந்திர சரித புராணம்:** இது 'பம்ப இராமாயணம்' என்றும் சொல்லப்பெறுகிறது. இதுவும் சம்பு யாப்பில் அமைந்து, 16 படலங்களைக் கொண்டது. இதில் சமண சமயக் கோட்பாட்டின் அடிப்படையில் இராமனுடைய கதை கூறப்பட்டுள்ளது, இது உண்மையில் சமண இராமாயணமாகும். இக்காப்பியம் நிகழ்ச்சி, செயல், கதை ஆகியவற்றின் தொகுப்பாக விளங்குகிறது. இவர் பிராகிருத மொழியிலிருந்து மூலக்கதையை எடுத்துக் கொண்டுள்ளார். மூலக்கதையைச் சுருக்கமாகக் கூறுவதே இவருடைய நோக்கம். பழம் பெரும் சமண இராமாயணமான விமல சூரியின் 'பவும சரியா' (பத்ம சரிதம்) என்னும் நூலின் தாக்கத்தை இக்காப்பியத்தில் காணலாம். இந்நூலுக்கும் வால்மீகியின் இராமாயணத்திற்கும் பெரும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. இதில் இராமனுடைய தாயார் அபராசிதை; சத்ருக்கனனுடைய தாயார் சுப்பிரபை. சுமித்திரைக்கு இலக்குமணன் ஒரே மகன். விசுவாமித்திரர் பெயர் காணப்படவில்லை. சுக்ரீவன், வாலி போன்றவர்கள் குரங்குகளாகக் குறிக்கப்பெறாமல்குரங்குக்கொடியை உடையவர்களாகக் குறிக்கப்பெற்றுள்ளனர். இலக்குமணன் கரிய நிறமும், இராமன் வெண்மை நிறமும் உடையவர்களாகக் காட்டப் பெற்றுள்ளனர். இலக்குமணன், கிருட்டிணன், கேசவன், வாசுதேவன் போன்ற பெயர்களாலும் குறிக்கப் பெறுகின்றான். சீதையை நாரதர் காதலித்தார் எனவும், இராமனுக்குப் பல மனைவியர் இருந்தனர் எனவும், இராவணனை இலக்குமணன் கொன்றான் எனவும் கதைப்போக்கு அமைந்துள்ளது. இக் காப்பிய இராமன் வாலியையோ இராவணனையோ வேறு எந்த அரக்கனையோ கொன்றான் எனக் கூறாதது குறிப்பிடத்தக்கது.

நாகசந்திரருடைய நடை எளிமையானது. இவருடைய பாடல்கள் பாமர மக்களுக்காகப் பாடப் பெற்றவை. இவர் புலமை நல மிக்க கடினமான சொற்களைத் தவிர்த்துள்ளார். இவர் மிகவும் நயமாகக் கன்னடச் சொற்களையும் வடமொழிச் சொற்களையும் இணைத்துக் காப்பியம் செய்துள்ளார். இவர், கன்னட மொழி மீது அளவற்ற காதல் கொண்டிருந்தார். இவருடைய ஆழ்ந்த புலமையும் இயற்கையழகைப் பாடும் பாங்கும் கன்னடக் காப்பியக் கலைக்கு ஒரு புதிய ஒளியைத் தந்தன எனலாம். பி.வி.கு.

*நாகசாகி:* நாகசாகி என்ற நகரம் சப்பானில் கியூசுத் தீவின் தென்மேற்கில் உள்ள ஓர் இயற்கைத் துறைமுகமாகவும், நாகசாகி ஆட்சியாங்கத்தின் தலை நகராகவும் விளங்குகிறது. இது பண்டைக் காலத்தில் நிகிடாட்சு, தாமானோவுரா, நாகசாகி கொட்டாலுரோ என்ற பெயர்களாலும் கூறப்பட்டது.

இது மேற்குத் திசையில் திறந்தவெளியாகவும். மற்ற மூன்று திசைகளிலும் காடுகளைக் கொண்ட குன்றுகளால் சூழப்பட்டதாகவும் உள்ளது; ஏறத்தாழ 944 ச.கி.மீ. பரப்பளவுடையது. இந்நகரம் சீனாவுக்கு அருகிலுள்ளது.

முதன்முதலாகப் போர்ச்சுகீசியர்கள் கி.பி. 1571 – ஆம் ஆண்டில் கிறித்தவ சமய மையங்களை இந்நகரில் அமைத்தார்கள். சப்பானின் வெளிநாட்டு வாணிகத்திற்கு கி.பி. 1568–ஆம் ஆண்டிலிருந்து இது ஒன்றே வழியாக விளங்கியது. சப்பானின் ஏனைய 5 துறைமுகங்களிலும் அயல்நாட்டு வாணிகக் கப்பல்கள் தடுக்கப்பட்ட நிலையில் (கி.பி. 1641.) இத்துறைமுகத்தில் மட்டும் தச்சுக்காரர்களும், சீனர்களும் வாணிகத்தைத் தொடர்ந்தார்கள். கி.பி. 1854-ஆம் ஆண்டின் உடன்படிக்கையின்படி அமெரிக்க ஐக்கிய நாடுகளும் இந்தத் துறைமுகத்தில் வாணிகத்தைத்

தொடர்ந்த பின்னர், மற்ற மேலை நாடுகளும் வாணிகத் தொடர்பைப் பெற்றன.

இந்நகரத்தில் சப்பான் நாட்டின் கப்பல் கட்டும் தொழிற் சாலை உள்ளது. இங்கே முதலைப்பண்ணை, மின்கருவித்தொழிற் சாலைகள், நிலக்கரிச் சுரங்கங்கள், பருத்தி மற்றும் பட்டுத் தொழிற்சாலைகள், விமானப் பகுதிகள் செய்யும் கூடங்கள், தேயிலை பதனிடும் தொழிற்சாலைகள், எஃகு ஆலைகள் முதலியவை உள்ளன. இத் துறைமுகத்தைச் சுற்றிலும் மூன்று பக்கங்களில் குன்றுகள் அரணாக அமைந்திருத்தலாலும், வளைகுடா மிக அகன்று இருப்பதாலும் ஒரே சமயத்தில் அதிகமான கப்பல்கள் இங்கே தங்குவதற்கு வசதியாக இருக்கின்றது. இருப்பினும், இந்நகரின் வாணிக வேகத்தை அதிகப்படுத்தும் அளவுக்கு மலைப்பகுதிகளில் தேவையான நெடுஞ்சாலை, இருப்புப் பாதை வசதிகள் இல்லை.

இரண்டாம் உலகப் பெரும் போரின்போது, அமெரிக்க ஐக்கியநாடுகள் தமது இரண்டாம் அணுக்குண்டை, 1945 ஆம் ஆண்டு ஆகசுட்டுத் திங்கள் 9-ஆம் நாளன்று இந்நகரத்தின் மீது வீசியது. மலைக் குன்றுகளால் சூழப்பட்டிருந்த காரணத்தால் 50 விழுக்காடு பொருள்கள் நாசமாகாமல் தப்பின. அணுக்குண்டு வெடித்த மையத்திலிருந்து சுமார் ஒரு கிலோ மீட்டர் ஆரமுள்ள சுற்றளவுப் பகுதிகள் அனைத்தும் சாம்பல் காடாக மாறிவிட்டன. ஏறக்குறைய 35,000 பேர் மாண்டனர்; ஏராளமான மக்கள் காயம் அடைந்தனர்; இருப்பினும் போருக்குப் பின்னர், வெகு விரைவில் இந்நகரம் மீண்டும் பொலிவுடன் புதுப்பிக்கப்பட்டுள்ளது. இந்நகரில் அரசு அலுவலகங்களும், ஒரு பல்கலைக் கழகமும் அமைந்துள்ளன.

பொன்.சு.

**நாகசுரம்**, இது தமிழகத்து இசைக் கருவிகளில் முதன்மையானது. துளைக் கருவிகளுள் ஒன்றாகிய இக்கருவியை மங்கலச் சின்னமாகவும் இதன் ஓசையை மங்கல இசையாகவும் மக்கள் கருதுவர். கோவில் திருவிழாக்களின் போதும் பூசையின் போதும் இல்லங்களில் நடைபெறும் மங்கல நிகழ்ச்சியின் போதும் நாகசுரம் இசைக்கப்பெறும். செல்வர் தங்கள் வீட்டுச் சிறப்பு விழாக்களில் நாகசுர இசை நிகழ்ச்சி நிகழ்த்துவர்.




நாகசுரம்

தமிழகத்திற்குத் தனிச்சிறப்பு நல்கும் இசைக் கருவிகளுள் நாகசுரம் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கிறது. இக்கருவியை நாதசுரம் என்றும் மக்கள் கூறுவர். இக்கருவியின் ஓசை, ஒலிபெருக்கியின் துணையின்றி நீண்டதொலைவு கேட்கும் ஆற்றலுடையது. பழங்காலத்தில் இதனை நெடுவங்கியம் என்று குறிப்பிட்டனர்.

ஆச்சா என்னும் ஒருவகை மரத்தினைக் கடைந்து குழலாக்கிச் செய்யப்படும் துளைக் கருவியாக இக்கருவி விளங்குகின்றது. நாகசுரத்தின் மேல் பாகம் சிறுத்தும் அடிப்பாகம் வரவரச் சற்றுப் பெருத்தும் காணப்படும். இக்கருவியின் மேலும் கீழும் இரண்டு 'அணைசு' கள் பொருத்தப்பட்டிருக்கும். முன்பு அணைசுகள் வெண்கலத்தால் செய்யப்பட்டன. இப்பொழுது மரத்தால் செய்வது வழக்கில் உள்ளது.

நாகசுரக் கருவியின் மேல் அணைசு நான்கு அங்குலம் நீளமிருக்கும். அந்த அணைசில் செருகி, உதட்டில் வைத்து வாசிப்பதற்கு உதவியாக இருக்கும் துணை உறுப்பிற்குச் 'சீவாளி', என்று பெயர். சீவாளியை, 'நறுக்கு' என்று குறிப்பிடுவர். கொறுக்குத் தட்டையை ஐந்து செ.மீநல நீளத்திற்கு நறுக்கி நெல் வேகவைக்கும்போது அதனோடு போட்டு வேக வைத்துப் பதமாக்குவர். பிறகு கிட்டிப் பலகையில் கொடுத்து நெருக்கி, ஈரம் உலர்ந்தபின் முறுக்கிய நூலால் இறுகக் கட்டி அமைக்கப் பெறுவது சீவாளியாகும்.

பொய்க்கால் குதிரை, கரகாட்டம் போன்ற கலைகளுக்கு வாசிக்கப்படும் நாகசுரத்தின் ஓசை வேறுபாட்டிற்குக் காரணம் இந்தச் சீவாளியேயாகும். அந்த நாகசுரத்தின் சீவாளி, ஓலையினால் செய்யப்பட்டதாகும்.

வெறும் சீவாளி மட்டும் வாசிக்கப் போதாது. அணைசிற்கும் சீவாளிக்கும் இடையே 'கெண்டை' என்ற பகுதி அமைந்திருக்கும். செப்புத் தகட்டினால் ஓர் அங்குல நீளத்திற்கு மேல்பாகத்தைக் காட்டிலும் அடிப்பாகம் சற்று விரிந்திருக்கும்படி ஒரு சிறு குழாய் செய்து அதன் இரு நுனிகளிலும் தேங்காய் ஓட்டினால் செய்த இரு வளையங்களைக் கோத்து வரிந்து கட்டப்பட்டிருக்கும். இவ்வாறான கெண்டை என்னும் உறுப்பு அணைசோடு பொருத்தப்பட்டிருக்கும். அக் கெண்டையின் மேல் சீவாளியைச் செருகி வாசிக்க வேண்டும். புகழ்பெற்ற நாகசுரக் கலைஞர்கள் தமக்கு வேண்டிய சீவாளியைத் தாங்களே செய்து கொள்வர்.

வாசிக்கும்போது உதட்டின் அழுத்தத்தால் சீவாளியின் வாய்ப் பகுதி சில சமயங்களில் ஒட்டிக் கொள்ளும். அதனைத் திறக்க பத்து செ.மீ நீளமுள்ள தந்தத்தாற் செய்யப்பட்ட ஊசி போன்ற கருவியை வைத்திருப்பர். அதற்குக் 'குச்சில்', என்பது பெயர்.

நான்கு அங்குல இடைவெளி விட்டு நாகசுரத்து உடலின் மேற்பகுதியில் வரிசையாக ஏழு துளைகள் அமைக்கப்படும். அந்த ஏழு துளைகளின் மூலமாகவே ஏழு சுரங்கள் எழுப்பப்படுகின்றன. ஏழு துளைகளுக்குக் கீழே பத்து செ.மீ தள்ளி ஒரு துளையும் அதனை நடுவாகக் கொண்டு அதன் இரு பக்கங்களிலும் இரண்டிரண்டு துளைகளும் அமைக்கப்பட்டிருக்கும்.

நாகசுரத்தின் கீழ்ப் பகுதியில் அமைக்கப்பட்டிருக்கும், அணைசு கிண்ணம் போல 15 செ.மீ விட்டத்தில் அமைந்திருக்கும்.இதன் வாய் விரிந்திருப்பதால் நாகசுர ஒலி நெடுந்தூரம் கேட்கின்றது.

நாகசுரம், ஏமாகனே, பெரிய நாகசுரம், திமிரி, பாரி, என்று சிலவகைகளில் உருவாக்கப்படும். அவற்றுள் திமிரி, பாரி ஆகிய இருவகையே இக்கால வழக்கில் உள்ளன. திமிரி நாகசுரத்தில் மூன்று கட்டைச் சுருதி முதல் ஐந்துகட்டைச் சுருதி வரை வாசிக்கலாம் இச்சுருதிகளில் நாகசுரத்தை வாசிப்பது எளிதன்று என்பதால், திமிரி நாகசுரத்தில் வாசிப்பது இக்காலத்தில் அருகிய நிலையில் உள்ளது.

பாரி நாகசுரத்தில் இரண்டரைக் கட்டைச் சுருதிக்கு மேற்படாமல் வாசிக்கலாம். இதில் ஓசை கேட்க இனிமையாயிருக்கும். நாகசுரக் கருவியை வீணையைப் போன்று மூன்று தானங்களில் (தாயி) வாசிக்க முடியாது. காற்றினை அழுத்தமாகவும் மென்மையாகவும் செலுத்துதலால் குறைத்தும் கூட்டியும் இசையை எழுப்புவர். உதட்டின் பிடிப்பால் வெகு விரைவாகச் சுரங்களை எழுப்புதல் இயலும். மிகுதியாகச் சுரங்களை எழுப்புவதனைப் 'பிர்க்கா' என்று கூறுவர். நாகசுரக் கருவியில் எழுப்பப்படும் பிர்க்காக் களைப் போல் வேறு இசைக் கருவிகளால் எழுப்ப இயலாது என்பது நாகசுரக் கருவியின் சிறப்பைக் காட்டுகின்றது.

ஆச்சா மரத்தில் நாகசுரம் செய்வது மரபு என்றாலும், கருங்கல், வெள்ளி, தந்தம், தங்கம் ஆகியவற்றாலும் நாகசுரம் செய்திருப்பது குறிப்பிடத்தக்கது. மரத்தால் செய்த நாகசுரத்தைத் தவிர மற்ற நாகசுரக் கருவியை வாசிப்பது சற்றுக் கடினமானதாகும்.

இடக்கை மேலும், வலக்கை கீழும் வைத்து வாசிப்பது மரபாகக் கருதப்படுகிறது. வலக்கை

மேலும், இடக்கை கீழுமாக நாகசுரத்தை வாசிப்பவர்களும் உள்ளனர்.

திருவாவடுதுறை, திருவானைக்காவல், வாஞ்சியூர், நரசிங்கம்பேட்டை, தேரழுந்தூர் ஆகிய இடங்களில் நாகசுரம் செய்யப்படுகின்றது. முன்பெல்லாம் 10 உருபாயாக இருந்த இக்கருவியின் விலை முந்நூறு முதல் ஐந்நூறு உருபாய் வரை உயர்ந்துள்ளது.

நாகசுரக் கலையைக் குருகுல முறையில் கற்றுக் கொள்வர். இந்நாளில் மூன்றாண்டுச் சான்றிதழ்(Diploma) பாடத்திட்ட முறையில் திருவையாறு, மதுரை, சென்னை, பழனி ஆகிய இடங்களில் நாகசுரக் கலையைக் கற்றுத் தருகின்றனர்.

சரளி, செண்டை, அடுக்குசரளி, கீதம், வர்ணம், குத்துக்காலம், தன்னாகாரம், விரலடி ஆகிய முறைகளை மூன்றாண்டில் கற்றுத் தருவர்.

நாகசுரத்திற்குத் துணைக் கருவியாகத் தவில் என்னும் தோற்கருவியும், ஒத்து என்னும் நாகசுரம் போன்ற துளைக் கருவியும் அமையும். இக்காலத்தில் நாகசுர இசையைத் திரைப்படப் பாடல் இசையிலும் இணைத்திருப்பது குறிப்பிடத் தக்கது.

சில இடங்களில் பிற்படுத்தப்பட்ட மக்கள் இக்கருவியைக் கையாண்டதால் சட்டை அணியாது வாசிக்கும் நிலை முன்பு ஏற்பட்டது. இன்று அந்நிலை மாறிவிட்டது. இன்றும் நாகசுரக் கலைஞர்கள் தம் இசை நிகழ்ச்சியைச் 'சேவகம்' என்ற சொல்லால் குறிப்பது நினைக்கத் தக்கது. இறைவனுக்கான இசைத் தொண்டு என்ற கருத்தில் அப்படிக் குறிப்பிட்டிருக்கலாம். இந்நாளில் அந்தணர்களும், இசுலாமியர்களும் இக்கருவியைக் கற்றுக் கையாண்டு வருவது போற்றத்தக்கது. இரா.குரு.

**நாகசேனர்** என்பவர் இந்தியாவில் வாழ்ந்த ஒரு பௌத்த தத்துவ அறிஞர். இவர் துறவியாகவும் ஆழ்ந்த புலமை மிக்கவராகவுமிருந்தார். இந்தியாவுக்கு கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் வந்த தெமட்ரியசு (Demetrius) குல மன்னர் மெனாண்டருக்கும் நாகசேனருக்கும் (Nagasena) இடையே பௌத்த மதக் கொள்கைகளைப் பற்றிய கலந்துரையாடல்கள் நிகழ்ந்தன. அவ்வுரையாடல்களின் போது மினாண்டர் எழுப்பிய கேள்விகளும், நாகசேனர் அளித்த விடைகளும் 'மிலிந்தபானா' வில் (Milindapanha) குறிப்பிடப்பட்டுள்ளன. தெ.பா.

**நாகப்பட்டினம்**: இது தமிழ்நாட்டு வங்காள விரிகுடாக் கடற்கரையிலுள்ள ஒரு துறைமுக நகரம். இது தஞ்சாவூர் மாவட்டத்தின் கீழைப் பகுதியாகிய கீழைத் தஞ்சை மாவட்டத்தின் தலைநகரம். இது ஒரு வட்டம்; நகராட்சி நகரம். இந்நகராட்சி கி.பி. 1866-இல் தொடங்கப்பெற்று நூற்றாண்டு விழாக் கண்டதாகும். நகரத்தின் பரப்பளவு 9.4 ச.கி.மீ. மக்கள் தொகை 82,828 (1981).

இதன் முற்கால வரலாறு சிறப்பான குறிப்புகளை உடையது. இந்நகர வாலாற்றின் முதற்சுவடு கி.மு 3-ஆம் நூற்றாண்டளவில் புலப்படுகின்றது. புத்த மரபு கூறும் பர்மா நாட்டு விவரணச் சுவடியின் இறுதியில், இங்கு அசோகப் பெருமன்னன் எழுப்பிய புத்த விகாரை ஒன்று இருந்தது என்பது குறிப்பிடப் படுகிறது. இதனை 'ஆதி விகாரை' என்பர். சீன நாட்டுப் பயணி யுவான் சுவாங்கு தம் குறிப்பேட்டில் நாகப்பட்டினத்தில் அசோக மன்னன் கட்டிய புத்த விகாரை இருந்ததாகக் குறித்துள்ளார். இது இந்த ஆதிவிகாரையாகலாம். இவ்விகாரை பற்றிய குறிப்பு மார்க்கோபோலோவின் பயணக் குறிப்பிலும் உள்ளது. மேலே குறிப்பிட்ட சுவடி இதனைப் 'படரித்த விகாரை' என்கின்றது.

'படரிதித்த' என்னுமிடத்தில் இருந்த புத்ததுறவி ஒருவர் 'நெத்தி' என்னும் உரைநடை நூலிற்கு உரை எழுதினார், அது 'நெத்தி பகரண அட்ட கதா' எனப் பெற்றது என்னும் குறிப்பும் உள்ளது. இதுகொண்டு நாகப்பட்டினத்தின் முற்காலப் பெயராக அறியக் கிடப்பது 'படரிதித்த' என்பதாகும். இன்று 'அவுரித் திடல்' என வழங்குவது 'படரிதித்த' என்பதன் திரிபாகலாம். இப்போது இவ்வவுரித் திடலில் பேருந்து நிலையம் கட்டப்பெறுவதால் எதிர்காலத்தில் இவ்வடையாளமும் மறைந்துவிடும்.

பாலி மொழியில் 'படரி' என்றால் இலந்தை மரம். இலந்தை மரங்கள் நிறைந்த மேட்டு நிலத்தில் புத்த மதத் துறவியர் தங்கி நூல்களை ஆராய்ந்தனர். அதுபோது இப்பகுதி பொதுமக்கள் வாழ்ந்த ஊராகவோ நகராகவோ இல்லை.

சோழநாட்டுத் தலை நகராகவும் துறைமுகமாகவும் திகழ்ந்த புகார் நகரம் கடற்கொந்தளிப்பால் அழிவுற்றபின் 'ஒரு தனி போயினன் உலக மன்னவன்'–என்று மணிமேகலை குறிக்கின்றபடி சோழ மன்னன் உறையூர் ஏக, புகார் நகரிலிருந்த புத்த துறவியரும், கடல் வணிகரும், பொதுமக்களும் குடிபெயர்ந்தனர். அண்மையில் உகந்த கடற்கரையாகப் 'படரிதித்த' இருந்தமையாலும், புத்த தொடர்பாலும் புகாரில் குடிபெயர்ந்தோர் படரிதித்த என்னுமிடத்திற்கு வந்தனர். புத்த துறவியர் இருக்கையாக இருந்த இப்பகுதி ஊராகிப் பின் நகராயிற்று.

புத்தமதத்தில் தோய்ந்த நாகநாட்டார் புகார் நகரத்து இந்திர விழாவிற்கு வருங்கால் இப்பகுதியில்

இருந்த படரிதித்த விகாரைக்கு வந்து தொழுது சென்றிருப்பர். மணிமேகலையில் குறிக்கப் பெறும் நாகநாட்டு இளவரசி பீலிவளை சோழமன்னனுடன் கூடியிருந்து தன் நாடு மீண்டு ஓர் ஆண்மகவை ஈன்று அதனைக் கம்பளச் செட்டி என்னும் வணிகனிடம் ஒப்படைத்து,அம்மகவைச் சோழமன்னனிடம் சேர்க்கு மாறு கூறிவிடுக்க, அதுபோது நேர்ந்த கடற்கொந் தளிப்பால் கப்பல் நிலைகுலைய, கடற்கரைப் பகுதி யில் அதில் இருந்த தொட்டிற் பேழையுடன் குழந்தை ஒதுங்கி எவரிடமோ கிடைத்தது. இவனே பிற் காலத்துத் திரைதர வந்தமையால் இளந்திரையன் எனப் பெயர் பெற்றான்.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் இங்கிருந்த காசிப தேரர் என்னும் புத்த துறவியர் பழுதுபட்டிருந்த விகாரையை நாகர் உதவியால் புதுப்பித்த செய் தியை இலெய்டன் (சிறு) செப்பேடு அறிவிக்கிறது. அதன்பின் இவ்விகாரை நாகர் + அனனம்+விகாரை = நாகானனவிகாரை எனப்பெயர் பெற்றது. இந்நக ரின் வெளிப்பாளையம் என்னும் பகுதியில் கண் டெடுக்கப் பெற்ற 300 புத்த சிலைகளும், தூபிகளும் சென்னை அருங்காட்சியகத்தில் இடம்பெற்றுள்ளன. இவற்றிலுள்ள புத்தர் சிலையொன்றின் படத்தில் 'நெகமா', 'நாகானை' என்னும் சொற்கள் பொறிக் கப் பெற்றுள்ளன. 'நாகு' என்னும் வேர்ச்சொல் கொண்ட நெகமா' நாகர் தொடர்பைக் குறிப்பது. நாகானன விகாரைச் சிலை நாகர்குறிப்பைப் பெற்ற தாகும். இவையாவும் படரிதித்த என்பதனோடு நாகர் கொண்ட தொடர்பையும் தோய்வையும் ஈடு பாட்டையும் குறிப்பதுடன் 'நாகர்பட்டினம்' என்னும் பெயர் பெற்றமைக்குச் சான்றுமாகின்றன.

முன் குறித்தபடி புகார் அழிவிற்குப் பின் உரு வான இப்பகுதி புகார் நகர அமைப்பைப் போன்றே அமைந்துள்ளது. புகாரில் அரசனும் அரசுக் கணமும் அமைந்த பகுதி 'பட்டினப்பாக்கம்' என்றும், ஊர்ப் பொதுமக்கள் வாழ்ந்த பகுதி 'மருவூர்ப்பாக்கம்' என் றும் அமைந்தமை போன்றே இப்பகுதியும், 'நாகர் பட்டினம்' என்றும் 'நாகர்+ஊர் = நாகரூர்-நாகூர்' என்றும் அமைந்து இன்றுவரை அப்பெயர்களாலேயே ஓர் நகராட்சியின் கீழ் உள்ளது.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் 'நாகானனம்' என்ற பெயர்கொண்ட படரிதித்த, நாகர் தொடர்பாலும் பட்டின அமைப்பாலும் அடுத்த கி.பி. 7-ஆம் நூற் றாண்டளவில் நாகர்பட்டினம் என்னும் பெயர் பெற் றது. காலப்போக்கில் நாகப்பட்டினமாயிற்று. இன் றும் இங்கு நாகைக்கும் நாகூர்க்கும் இடையில் உள்ள நிலப்பகுதி நாகர்தோப்பு என்று வழங்கப் பெறுவதுடன் பதிவு ஆவணங்களிலும் இப்பெயர் காணப்படுகின்றது.

நாகப்பட்டினம் என்றும் இதன் பெயரை இந் நகர்க்கு வந்த வெளிநாட்டுப் பயணிகள் தத்தம் பலுக்கலுக்கேற்பப் பின்வருமாறு குறித்தனர். 'பட் டினம்' என்பதை மார்க்கபோலோ 'பட்டன்' (Pa-tan) என்றும், இரசிதுத்தீன் 'மலிபட்டன்' (Mali-fattan) என்றும் குறித்தனர். இட்சிங்கு 'நகவதனா' (Nagawadana) என்றும், தாலமி 'நிக்கவ்வா' (Nikawa) என்றும் குறித்தனர். தம்மசேத்தியில் கிடைத்த கலியாணி சாசனம் 'நவுட்டபட்டனா' என்கின்றது.

நாகர், கடாரத்தார், சீனர் முதலிய வெளிநாட்ட வருடன் புகாரில் வணிகம் செய்த உரோமாபுரியினர், யவனர் முதலிய மேனாட்டாரும் இத்துறைமுகத்தைச் சோழநாட்டுத் தொடர்பிற்குக் கொள்ளலாயினர். இவர்களில் மேலைநாட்டார் தவிரப் பெரும்பாலோர் புத்த மதத்தவராக இருந்ததால் புத்த விகாரை குறிப்பிடத்தக்க இடம்பெற்றது. கி.பி. 871 முதல் கி.பி. 1230 வரை கடாரத்து, சிரீவிசயநாட்டுச் சைலேந்திர மரபு மன்னர் தொடர்புடன் அந்நாட் டார் குடியேற்றமும் அமைந்தது. அன்னார் வழிபாடு கருதி மகரத்துவச சூடாமணி வர்மன் நாகப்பட்டி னத்தில் புத்த விகாரை எழுப்ப விரும்பி மாமன்னன் இராசராசன் இசைவுடன் செயற்பட்டான். இடை யில் அவன் இறக்கவே அவன் மகன் மாறவிசயோத் துங்க வர்மன் விகாரையை எழுப்பி முடித்துத் தன் தந்தை பெயரில் 'சூடாமணி விகாரை' எனப் பெய ரிட்டான். இதற்கு இராசராசப் பெருமன்னன் ஆனை மங்கலம் என்னும் ஊரைப் பள்ளிச்சந்தமாகக் கொடுத்தான். இக்கொடையைக் குறித்து அவன் எழுதிய செப்பேடு 'ஆனைமங்கலச் செப்பேடு' எனப் பெற்றது. இதனை இப்போது 'லெய்டன் செப்பேடு' என்பர். இவ்விகாரையில் இராசராசன் பெயராலும் அவன் மகன் இராசேந்திரன் பெயராலும் இராச ராசப் பெரும் பள்ளி, இராசேந்திரப் பெரும்பள்ளி என்னும் இரு பகுதிகள் அமைந்தன.

இவ்விகாரை மிகச் சிறந்ததாகப் பொன்வேயப் பெற்ற கவிகை மண்டபத்துடன் உயர்ந்து திகழ்ந்தது. இதனை ஆனைமங்கலச் செப்பேடு, 'சத்திரிய சிகா மணி வளநாட்டில், பட்டினக் கூற்றத்தில், உலகத்தின் திலகம் போன்றுள்ள நாகப்பட்டினத்தில்,தன் உயரத் தினால் கனகக் கிரியையும் சிறியதாகச் செய்து தன் னழகில் வியப்படையச் செய்கின்ற சூளாமணி விகாரை' என்று குறிக்கின்றது. இதனால் இவ் விகாரையின் பெருமையுடன் நாகப்பட்டினத்தின் சிறப்பையும் அறியமுடிகின்றது. இந்நாளில் இவ்விகாரை இருந்த இடமும் அறிய முடியாதவாறு சுவடற்றுப் போயிற்று.

இவ்வாறு கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் இப் பட்டினம் பெரும்பெயர் பெற்ற துறைமுகமாயிற்று.

இந்நகரின் வளங்கண்டு பல இனத்தார் இந்நகரைச் சூழக் குடியேறி நகரில் வணிகமும் தொழிலும் பணியும் செய்தனர். அவ்வவ்வினத்தார் சேர்ந்து வாழ்ந்த அவ்வப் பகுதிகள் தெற்கிலிருந்து வடக்குவரை நகவளைவாகச் செட்டிச்சேரி, வடுகர் சேரி, அந்தணப் பேட்டை, புறவர் சேரி, திட்டைச்சேரி, பார்ப்பனச் சேரி எனும் சிற்றூர்களாயின. இன்றும் அப்பெயர்கள் இவ்வரலாற்றைச் சொல்லி நிற்கின்றன.

இவற்றுடன் நகருக்குள் மேலக்கோட்டைவாயில், வடக்குக் கோட்டை வாயில், வெளிப்பாளையம், யானைகட்டி முடுக்கு,மருந்துக் கொத்தளம்,நாணயக் காரத் தெரு என்று வழங்கப்பெறும் பெயர்களும் இந் நகரம் அரசுத் தொடர்புடைய நகரமாக இருந்ததைப் புலப்படுத்துகின்றன. சோழ அரசன் ஆட்சியில் இந் நகரம் இயங்கினும் இங்கு அரசன் தங்கி ஆளுதற் குரிய அரண்மனை முதலியன அமைந்து இது தலை நகரமாக இருந்ததில்லை. தன் தலைநகரிலிருந்து நாடுகாவல் பொருட்டுச் சென்று தங்கும் அரண்மனை உள்ள வெளியூர் இடம் கொட்டாரம் எனப்படும் என்று கல்வெட்டறிஞர் சதாசிவபண்டாரத்தார் குறிக்கின்றார். இங்கு அவ்வகைக் கொட்டாரம் இருந்து அங்குப் பணியாற்றிய மக்கள் குடிகொண்ட இடம் கொட்டாரக்குடி எனப் பெயர்பெற்று இன்றும் அவ்வழக்கில் உள்ளது. இதுவும் நாகப்பட்டினம் அரசுத் துறைமுகமாக மட்டுமே இருந்தது என்பதைப் புலப்படுத்துகிறது.

இராசராசன் தன் சோழ நாட்டை மண்டலம், வளநாடு, கூற்றம், பேரூர் எனப் பிரித்த பாங்கில் இது சத்திரிய சிகாமணி வளநாட்டுப் பட்டினக் கூற்றம் என இந்நகர் ஒன்றே பட்டினமாகக் குறிக்கப் பெற்றமை இதன் துறைமுகச் சிறப்பைக் காட்டுவ தாகும். கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் ஆண்ட முதற் குலோத்துங்கன் இவ்விகாரையைப் பழுது பார்த்துச் சிறப்பித்தான். அவன் காலத்தில் அவன் பட்டத்து அரசியருள் ஒருத்தியின் பெயரால் இந்நகரம் சோழகுல வல்லிப் பட்டினம் எனவிளங்குவதாயிற்று. விக்கிரம சோழன் ஆட்சியில் அவன் அரசியல் தலைவருள் ஒருவனான காடவர்கோன் இங்குப் பாடி வீடமைத்து ஆளுகை அலுவலை மேற்கொண்டான். இப்பகுதி காடவர்கோன்பாடி எனப் பெயர்பெற்று இன்றும் காடம்பாடி எனும் பெயரில் உள்ளது.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டு வரை புத்த மதத்தின் கோட்டை எனக்கூறும் அளவில் திகழ்ந்த இந்நகரம் அடுத்த ஒரு நூற்றாண்டிற்குள் சைவ சமயப் பெருக் கத்தால் சைவப் பெருநகராகத் தொடங்கியது. கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் திருநாவுக்கரசர், திருஞானசம் பந்தர் வருகையும் அடுத்துச் சுந்தரர் வருகையும், வைணவ மதத்துத் திருமங்கையாழ்வார் வருகையும் அவர்தம் பாடல்களும் நாகையின் மதத்துறை மாற் றத்தைக் காட்டுகின்றன. சைவக் கோவில்கள் பெருகின. சைவ சமயத்தவரால் சிவராசதானி எனப் போற் றப்பெற்றது. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள் ளையால் நாகைக் காரோணப் புராணம் எழுதப்பட் டது.

வைணவத் திருமங்கையாழ்வார் பௌத்த சூடா மணி விகாரையிலிருந்த புத்தர் பொன்சிலையை எடுத்துச் சென்று திருவரங்கக் கோயில் மதிற் சுவரெடுத்தார் என வைணவக் குரு பரம்பரை கூறு கிறது.

வெளிநாட்டுப் பயணிகளின் வருகையினைப் பெற்றது போன்று பிற்காலத்திய கவி காளமேகம், உலகமாகவி பாரதியார் முதலியோர் வருகையையும் கண்டது இந்நகர். காத்தான் என்னும் வருணகுலாதித்தன் அரவணைப்பைப் பெற்றது. தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளை ஈன்றது. இவரது முழு உருவ வெண்கலச் சிலை நாகைப் புகை வண்டி நிலையம் முன்பு நாகைத் தமிழ்ச் சங்கத்தாரால் நிறு வப்பட்டு நகர்க்குப் பொலிவு தருகின்றது.

ஆட்சி வரலாற்றில் நாகப்பட்டினம் சோழர் ஆட்சியில் தொடங்கிப் பல்லவர், நாயக்கர், மராட்டியர் ஆட்சியில் தொடர்ந்து, கி.பி. 17-ஆம் நூற் றாண்டுத் தொடக்கத்தைச் சார்ந்த போர்ச்சுகீசியர் கைப்பட்டு, கி.பி. 1660-இல் தச்சுக்காரர் வயமாகி, கி.பி. 1781-இல் ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்டு, 1947 முதல் விடுதலை பெற்ற இந்திய ஆட்சியில் தமிழ் நாட்டரசின் ஒரு துறைமுகமாக உள்ளது. கோ.இ.

**நாகபட்டர்**: மேற்கு இந்தியாவில் பிரதிகாரப் பேரரசின் முக்கியமான பேரரசர் இவர். இவர் குர் சாரர் என்று சொல்லக்கூடிய அன்னிய நாடோடிக் கூட்டத்தைச் சேர்ந்தவர். இவர் வலிமையுள்ளவராக இருந்ததால் கி.பி.8-ஆம் நூற்றாண்டில் அரேபியர் களிடமிருந்து மேற்கிந்தியாவைப் பாதுகாத்தார். இவர் இந்தியாவில் அராபியர் ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகள் பலவற்றைத் தம்முடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தார்; பின்னர்க் குசராத்தை வென்றார்; சோத்பூரையும் கைப்பற்றித் தம்மாட்சியின்கீழ்க் கொண்டுவந்தார்.

**நாகபட்டர்**[2]: இவர் கி.பி.805 முதல் 839 வரை ஆட்சி புரிந்தார். தாம் பதவிக்கு வந்த பிறகு இழந்த தம் குடும்பத்தின் செல்வாக்கை மீண்டும் நிலைநாட்ட விரும்பினார். இந்நிலையில் மூன்றாம் கோவிந்தன் என்ற இராட்டிர கூட மன்னனுடன் இவர் போரிட் டார். இந்தப் போரில் தோல்விகண்டார். ஆனால் ஆந்திரம், கலிங்கம், விதர்ப்பம் போன்ற நாடுகளின் மன்னர்களை வென்று, இழந்த தம் குடும்பத்தின்

செல்வாக்கை நிலை நாட்டினார். இவர் கானுசுவை ஆண்டசக்கராயுதா என்ற மன்னனையும் வென்றார்.

பொ.க.

**நாகபந்தம்:** இது, குறிப்பிட்ட வடிவ வரையறைக்குள் பாடலை இயற்றும் சித்திர கவிகளுள் ஒன்றாகும். ஒன்று முதலான பாம்புகள் பின்னிப் பிணைந்துள்ளதைப் போல் சித்திரம் வரைந்து, அதில் கணக்கிட்ட அறைகள் வகுத்துச் சந்திகளில் வரும் எழுத்துகள் பொதுவாக அமையுமாறு இப்பா இயற்றப்படும். பாம்புகளின் எண்ணிக்கைக்கேற்பச் செய்யுள் பெயர் பெறும். இது ஏகநாக பந்தம், இரட்டை நாகபந்தம் (உபய நாகபந்தம்), சதுர் நாகபந்தம், அட்ட நாகபந்தம் என நால்வகைப்படும்.

**ஏகநாக பந்தம்:** ஒரு பாம்பு பலவாறு வளைந்து கிடப்பதாகச் சித்திரம் எழுதி அதனுள் தலைமுதல் வால்வரை குறிப்பிட்ட முறையில் எழுத்துகளை அமைத்து இயற்றப்பட்ட கவிதை இப்பெயர் பெறும். இலக்கண நூல்களில் இவ்வகை இடம் பெற்றதாகத் தெரியவில்லை. எனினும் இலக்கியங்களில் உள்ளன. 69 எழுத்துகளால் அமைந்த ஏதேனும் ஒரு பாவில் 2. 4, 6, 8, 10, 20, 22, 24, 26, 38, 40, 42, 52, 54, 56, 58 ஆகிய பதினாறு எழுத்துகளும் முறையே 68, 14, 16, 18, 12, 30, 32, 34, 28, 48, 50, 44, 62, 64, 66, 60 ஆக அமைத்தால் இச்சித்திர கவி உருவாகும். இதற்கு எழுத்தெண்ணும்போது மெய்யெழுத்துகளையும் சேர்த்து எண்ண வேண்டும். (இதனைப் புலவர்கள் 2-68, 4-14, 6-16, 8-18, 10-12, 20-30, 22-32,




ஏகநாக பந்தம்

24-34, 26-28, 38-48, 40-50, 42-44, 52-62, 54-64, 56-66, 58-60 எனக் குறிப்பர். (இக்குறியீடு சித்திர கவித்துருவம் எனப்படும்)

எடுத்துகாட்டு: நிலைமண்டில ஆசிரியப்பா.

சண்முக நம்பி சங்கக் கலைக
ளோம்பு சதுர னுளமே பத்தி
நீதி சேர வளம்பல நீள
நாடகம் பலபல நீடு நாற்கவி
காத்து மாநீ டூழி வாழி
வாகா வோது கோநீ மாண்பே.

(வாசிக்கும் முறை, நாகத்தின் தலையிலிருந்து வால் வரை வாசித்தால் பாட முடியும்)

**ஏகநாகபந்தம் பொழிப்புரை:** ஆடவரிற் சிறந்தவனும் அழகாக வசனங்களைப் பேசும் அரசன் போன்றவனும் சங்க நூல்களெல்லாம் காக்கும் உளத்தில் பத்தியும் நீதியும் உள்ள, சதுர்விதப் புருடார்த்தம் தங்கியுள்ளவனும் ஆகிய சண்முகம், நீ பல செல்வமும் உயரப் பல நாடகங்களையும் ஆசு, சித்திரம், மதுரம் வித்தாரமென்னும் நாலு கவிகளையும் காப்பாற்றி, பெருமையுடன் நீடூழி வாழ்க என்று வாழ்த்தியதாம்.

**2. அ. இரட்டை நாகபந்தம்:** இது இரண்டு பாம்புகளின் பின்னலாகக் காட்டப்படுகிறது. தண்டியலங்காரமும் (சொல்லணி 7. உரை) சுவாமிநாதமும் (201) இதில் ஒரு நேரிசை வெண்பாவும் ஓர் இன்னிசை வெண்பாவும் அமையவேண்டும் என்



இரட்டைநாக பந்தம்

கின்றன. ஒவ்வொரு வெண்பாவும் தனித்தனியே 59 எழுத்துகளைப் பெற்று 4-38, 8-50, 12-18, 20-54, 40-46 என்னும் துருவத்துடன் அமைய வேண்டும். மேலும், முதல் வெண்பாவின் 2, 6, 10, 22, 24, 26, 32, 34, 36, 48, 52, 56 ஆகிய எழுத்துகள் முறையே இரண்டாம் வெண்பாவின் 2, 34, 26, 22, 52, 10, 48, 6, 36, 32, 24, 56 ஆம் எழுத்துகளாக அமைதல் வேண்டும். பாடல்கள் ஒவ்வொரு பாம்பின் தலையிலும் தொடங்கி வாலில் நிறைவு பெறும். எடுத்துக்காட்டு:

**1) நேரிசை வெண்பா:**

*தண்டமிழ் நாடகத்தின் சற்குருவுச்சநிலை*
*எண்டிக்கும் போற்ற எழிலாகத்-தொண்டு*
*மிகவே புரிவோ னணிவேள் மணிகம்*
*முகிலைநே ரீகை மொழி.*

**2) இன்னிசை வெண்பா:**

*சண்முக வித்தக நம்பிதனிச் சங்கீத*
*மொண்மாண்பு முத்தி யுதவுமே மாமன*
*நாராண்மை கல்வி கொடை நாற்கவி மேலார்க*
*ணோக்குண்டே ரீதுவாழி.*

**இரட்டை நாகபந்த வுரைகள்:** வாசிக்கும் முறை இரண்டு நாகங்களிலும், தலைமுதல் வால்வரை வாசித்தால் இரண்டு வெண்பா வரும். இருநாகங்களிலும் நான்கு மூலையிலும் எழுத்து. 5, இரண்டு விலாவிலும் எழுத்து. 5, வாலில் எழுத்து. 3, வருவித்து, ஒன்றுநேரிசை வெண்பா. ஒன்று இன்னிசை வெண்பாவாக அமைத்துள்ளதறிந்து மகிழ்க.

**சதுர்நாகபந்தம்:** இது நான்கு பாம்புகள் தம்முள் பின்னிப் பிணைந்துள்ளதைப் போல் அமைந்த சித்திரத்தில் எழுத்துகளை அமைத்தலாம். இதுவும் இலக்கண நூல்களில் இடம்பெற்றதாகத் தெரியவில்லை. எந்த ஒரு பாம்பின் தலையிலிருந்து படித்தாலும் பாடல் அதன் வாலில் முடிவுறும். 47 எழுத்துகளாலான ஏதேனும் ஒருபாவில் 4-36, 6-32, 10-30, 12-38, 14-26, 16-42, 20- 44,22-24 என்னும் துருவத்தை அமைத்தால் இச்சித்திரகவி உருவாகும்.

எடுத்துக்காட்டு: **இன்னிசை வெண்பா:**

*சண்முக மாலே தமிழறி தாதாவே*
*விண்புவி யோதுவான் மேகமே மேவிசை*
*மேனெறி யாலே நீவாகு கவிதாரே*
*மேவு புயாவாழ்க வே.*

சதுர்நாக பந்தம்

**4. அட்டநாக பந்தம்:** இது எட்டுப் பாம்புகள் தம்முள் பின்னிப் பிணைந்த சித்திரம் ஆகும். பாடல் எந்தப் பாம்பின் தலையில் தொடங்கினாலும் அதன் வாலில் நிறைவுறும். 52 எழுத்துகளால் அமைந்து 4-31, 6-45, 8-20, 12-18, 22-47, 24-39, 33-51, 37-49 என்னும் துருவத்தையுடைய ஒருவகை குறிப்பிடப்படுகிறது. இதற்கான இலக்கியம் கிடைக்கவில்லை. ஐம்பது எழுத்துகளாலான பின்வரும் வெண்பாவும் அட்டநாக பந்தம் எனப்படுகிறது.

> ஆசை நெடிதா மதுதாழ லாகாது
> வாசமய மீது மதாசலமா- பூசுதரு
> தேகாம காதேசு தேடிசைவு தாமகலா
> வாகா கிருட்டிணபூ மா.

இதனுடைய சித்திரம் காணக் கிடைக்காமையின் துருவத்தை அறிய முடியவில்லை.

நாற்பத்தொன்பது எழுத்துகளால் அமைந்து 4-34, 6-38, 8-20, 12-18, 22-40, 24-32, 26-44, 30-42 என்னும் துருவத்தைப் பெற்ற அட்டநாக பந்தமே அதிகமாகக் காணப்படுகிறது.

எடுத்துக்காட்டு: **நேரிசை ஆசிரியப்பா:**

> ராமச் சந்திர நாமா பூமி
> வாழி கூற நீமா வாழி
> நாவு தவறா வாய்மை ஈகையே
> மாறா தேசம மாநீதி
> போத வாயே மெய்மை புகலவே.

(மேலே உள்ள பாடல் ஒன்றே. 8 நாகத்துக்கும் தலைமுதல் வால்வரை வாசித்தால் சரியாக வரும்)

**பொழிப்புரை:** நாவு தவறாத சத்தியநெறியும், ஈகையும் மாறாத சமநீதி போதிக்கும் வாயானது எஞ்ஞான்றும் உண்மையே புகலவும், உலகத்தார் உனக்கு வாழ்த்துக்கூற, நியமத்துடனே, ராமச்சந்திரன் என்னும் திருநாமம் பெற்ற நீவாழக என வாழ்த்தியதாம்.

இவையன்றி வேறுசில வகையான நாக பந்தங்கள் பொன்முடி, பொன்சுவாமி செட்டியார் இயற்றிய சித்திரக் கவிகள், வைண்வி சந்நிதி முறை (திருமுல்லை வாயில்) ஆகியவற்றுள் காணப்படினும் அவற்றைச் சித்திரக் கவிகளுக்குரிய சிறப்பான கட்டுக்கோப்புடனும் செறிவுடனும் அமைந்தனவாகக் கூற இயலவில்லை. ப.வெ.நா.

**நாகபுரி:** மகாராட்டிர மாநிலத்திலுள்ளமாவட்டத் தலைநகர்களுள் நாகபுரி ஒன்றாகும். இந்நகர் பம்பாயிலிருந்து 700 கி.மீ. வடகிழக்கில் உள்ளது. நாக்கு என்ற ஓடைக் கரையில் அமைந்துள்ளதால் இந்நகருக்கு நாக்பூர் என்று பெயர் வந்தது. இது



அட்டநாக பந்தம்

1956-ஆம் ஆண்டிற்கு முன்னர் இது மத்திய பிரதேசத்தின் தலைநகராக இருந்தது. இந்நகர் இந்தியாவின் மையப் பகுதியில் இருக்கிறது. இங்கு 1961-இல் மக்கள் தொகை 643,186. அது 1987-இல் 8,66,000 ஆக உயர்ந்துள்ளது. இந்நகர் 1952-இல் மாநகராட்சியாக உயர்வுற்றது.

நாகபுரியைச் சுற்றி மலைகள் இருக்கின்றன. மேற்குக் குன்றில் சீத்தா பால்டி என்ற கோட்டை அமைந்துள்ளது. இக்கோட்டையின் மதில்மீது நின்று பார்த்தால் நகரின் அழகும் அமைப்பும் நன்கு தெரியும். வடமேற்குப் பகுதியில் கோரிவாரா நீர்த்தேக்கமும், ஏறத்தாழ 780 மீ. உயரத்துக்கு மேல் ஓர் அணைக்கட்டும் இருக்கின்றன. இதைத் தவிரச் சீவாடலோ, அம்பாசுகேரி, தெலிங்கேரி போன்ற சிறந்த நீர்த்தேக்கங்களும், அழகிய பூங்காக்களும் இந்நகரை அழகுபடுத்துகின்றன. இங்கு, 1923-இல் தொடங்கப்பட்ட நாகபுரிப்பல்கலைக்கழகம் இயங்கி வருகிறது. அரபி மொழிப் பயிற்சிக் கூடமும், முகமதியப் பண்பாட்டு நிறுவனமும் இங்குச் செயற்படுகின்றன.

இந்நகர் ஒரு பெரிய தொழில் நகரமாகவும், வாணிகத்தலமாகவும், தொழிலாளர்களின் இருப்பிடமாகவும் அமைந்துள்ளது. போக்குவரத்தில் இந்தியாவின் பல பெரிய நகரங்களை இணைக்கும் நகரமாகவும் விளங்குகிறது. மேலும் பம்பாயிலிருந்து கல்கத்தா செல்லும் சாலையில் இந்நகர் அமைந்துள்ளதால், இங்கு விமானத்தளமும் இருக்கிறது. பருத்தி ஆலைகள் மிகுதியாக உள்ளன. மேலும் இது கைத்தறிகளின் இருப்பிடமாகவும் திகழ்கிறது. பானைத் தொழில், பீங்கான், சாயம் போடுதல், அச்சுக் கோத்தல், தோல் பதனிடுதல், இரும்புத் தொழில், பழச்சாறு தயாரித்தல், இரப்பர்த் தொழில், எண்ணெய்த் தொழில், மருந்து உற்பத்தி போன்ற சிறு தொழில்கள் இங்குச் சிறப்பாக நடந்து கொண்டிருக்கின்றன. செங்கல், ஓடு, பீடி, தாமிரம், பித்தளைப் பொருள்கள் முதலிய செய்யும் தொழில் மையமாகவும் நாகபுரி திகழ்கிறது. இங்கு ஆரஞ்சு, பருத்தி, பருப்பு வகைகள், சோளம், கோதுமை, நெல் ஆகியவை விளைகின்றன. இந்நகர் ஆரஞ்சுப் பழத்திற்குப் பெயர் பெற்றது.

**நகரின் வரலாறு**: பக்த புலாண்டு என்ற இளவரசனால் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் இந்நகர் நிருமாணிக்கப்பட்டது. தில்லி நகரின் அழகினால் கவரப்பட்ட இவர் அதைப்போலவே இதனை அமைக்க வேண்டும் என்று விரும்பி இந்நகரை அமைத்தார். இந்நகர் கி.பி.1743-இல் இராகுசிபான்சிலேயின் கட்டுப்பாட்டுக்குள் வந்தது. பின்னர் கி.பி. 1817-இல் ஆங்கிலப் படைக்கும் மகாராட்டிரர் படைக்கும் இடையே இங்குப் போர் நடந்தது. அப்போரின் இறுதியில் ஆங்கிலேயர்கள் இதனைத் தங்கள் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவந்தனர். மூன்றாம் இராகுசி கி.பி. 1853-இல் வாரிசின்றி இறந்தான். அதன்பிறகு ஆங்கிலேயரின் நேரடியான நிருவாகத்தின்கீழ் நாகபுரி கொண்டு வரப்பட்டது. பொ.க.

***நாகபுரிப் பல்கலைக் கழகம்***: அலகாபாது பல்கலைக் கழகம் 1922-இல் ஏற்படுத்தப்பட்டது. இப்பல்கலைக் கழகத்தின் கீழ்ச் செயல்புரிந்த எல்லாக் கல்லூரிகளும் நாகபுரிப் பல்கலைக் கழக ஆட்சியின் கீழ்க் கொண்டு வரப்பட்டன. இப்பல்கலைக் கழகம் இந்தியாவிலுள்ள பம்பாய் மாநிலத்தில் நாகபுரி என்னும் நகரில் 1923-இல் தொடங்கப்பட்டது.

அரசியல் அறிவியல், புவியியல், உயிர்பொருள், வேதியியல், பொது நிருவாகம், அரசியல், வரலாறு, ஆங்கிலம், மானிடவியல், சமூகவியல், மருத்துவம் போன்ற பலதுறைகள் செயற்படுகின்றன. இத்துறைகளில் முதுகலைப்படிப்பும், ஆராய்ச்சிப் படிப்பும் உள்ளன. பல்கலைக் கழகம் பாரசீகம் அல்லது அரபு, பாலி அல்லது பிராகிருதம், சமசுகிருதம் ஆகிய மூன்று துறைகளில் சான்றிதழ் வகுப்புகள் நடைபெறுகின்றன.

பெண்கள், கல்லூரியில் படிக்காமல் பல்கலைக் கழகத் தேர்வுகளில் கலந்து கொள்ளலாம். பல்கலைக் கழக நூல்நிலையத்தில் இலட்சக் கணக்கான அச்சு நூல்களும், 6 ஆயிரம் கையெழுத்துப் பிரதிகளும் உள்ளன. அறிவியல், கலைத் தொடர்பான மாத ஆண்டு இதழ்கள் 1923-ஆம் ஆண்டிலிருந்து அச்சுக் கட்டு(Binding)செய்து வைக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலகம் ஆராய்ச்சி செய்பவர்களுக்கும் செய்திகள் சேகரிப்பவர்களுக்கும் மிகவும் பயனுடையது. நாகபுரிப் பல்கலைக் கழகத்தில் நேப்பாளம், பர்மா போன்ற வெளிநாடுகளிலிருந்து மாணவர்கள் வந்து கல்வி கற்கின்றனர். நாகபுரிப் பல்கலைக் கழக இதழ் (Nagpur University Journal) என்ற ஆராய்ச்சி இதழ் வெளி வந்து கொண்டிருக்கிறது.

பல்கலைக் கழகத்தின் கல்வி மொழி இந்தியும், மராட்டியுமாகும். மாணவர்கள் விருப்பம் போல் தேர்வில் இந்தி அல்லது மராட்டிய மொழியினைக் கையாளலாம். இளங்கலைப் பட்டத்துக்கு வேண்டிய பாடப் புத்தகங்களை இந்தியிலும், மராட்டியிலும் இப்பல்கலைக் கழகம் வெளியிடுகின்றது. இப்பொழுது எல்லாத் துறைகளிலும் ஆய்வறிக்கைகள் (Project) அளிக்கப்படுகின்றன. அவை 1974-75-ஆம் ஆண்டில் ஆங்கிலத்தில் 2 வரலாற்றில் 6, அரசியலில் 1, சமூகவியலில் 2, மானிடவியலில் (Anthropology) 1 என்ற

எண்ணிக்கையில் அளிக்கப்பட்டன. இவ்வாய்வுகள் அனைத்தும் பல்கலைக் கழக நல்கைக்குழு நிதி உதவியால் முடிக்கப்பட்டன. பொ.க.

**நாகர்கள்** இந்தியாவின் வடகிழக்கு எல்லைப் புற மாநிலங்களில் வாழும் வரலாற்றுச் சிறப்புமிக்க பழங்குடியினர்; பிரமபுத்திராப் பள்ளத்தாக்கு முதல் பர்மாவின் சிண்டுவின் பள்ளத்தாக்கு(Chindwin valley) வரை பரந்து வாழ்கின்றனர். மிகக் குறைந்த எண்ணிக்கையினரே, பர்மா பகுதிக்குள் வாழ்கின்றனர். ஏனையோர் அசாம், நாகாலாந்து ஆகிய இந்தியப் பகுதிக்குள் வாழ்கின்றனர். இருப்பினும், நாக மலைகளில் (Naga Hills) இவர்கள் மிகுதியாக வாழ்கின்றனர். பர்மாவின் புத்தப் பண்பாட்டிற்கும் இந்தியாவின் இந்துப் பண்பாட்டிற்கும் இடையில் வாழ்ந்து வந்தாலும் பல நூற்றாண்டுகளாக அவர்களுக்கென்ற தனிப் பண்பாட்டைக் கொண்டு வாழ்கின்றனர்.


நாகர் சிறுவன்

நாகர்கள் (Nagas) மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர்கள். மஞ்சள் நிறம் முதல் செம்பழுப்பு நிறம் வரையிலான தோல், சொரசொரப்பான தலைமயிர், முகத்திலும் உடலிலும் மயிரின்மை, மேல் இரப்பை உள்நோக்கி மடிந்த கண் (Mongoloid eye) முதலான குறிப்பிடத்தக்க உடற்கூறுகள்; இவர்களை அடையாளங் காட்டும். ஒருசில இனவியல்லார் இவர்களைத் தொல் மங்கோலியர்கள்(Palaeo-Mongoloids), திபேத்திய மங்கோலியர்கள் (Tibeto-Mongoloids) என இருவகையாகப் பிரிப்பர்.

நாகர்கள் எனப் பொதுவாகக் குறிக்கப்படும் இவர்கள் அனைவரும் ஒரே பழங்குடி வகுப்பைச் சேர்ந்தவர்கள் அல்லர். இவர்களுள் பல பிரிவுகள் உள்ளன. ஒவ்வொருவரும் அவர்கள் பேசும் கிளை மொழியாலும் (Dialect), பழக்கவழக்கங்களாலும், வாழ்க்கை முறையாலும் வேறுபடுகின்றனர். இவர்கள் பேசும் கிளைமொழிகள் திபேத்திய பர்மிய மொழிப் பிரிவைச் சேர்ந்தவை. இவர்களுள் முதன்மையான பிரிவினர்கள் ஆவோ நாகர் (Ao Nagas), அங்காமி நாகர் (Angami Nagas), உலோக்தா நாகர் (Lohta Nagas), இரெங்மா நாகர் (Rengma Nagas), கொன்யக் நாகர் (Konyak Nagas), சீமா நாகர் (Sema Nagas), துக்கோமி நாகர் (Tukoami Nagas), வஞ்சு நாகர் (Wanchu Nagas), சங்கு நாகர் (Chang Nagas) சங்கதம் நாகர் (Sangtam Nagas), மெமி நாகர்(Memi Nagas) ஆகியோராவர். இவர்களிடையே வேற்றுமைகள் இருப்பினும் அனைத்துப் பிரிவினருக்கும் பொதுவான பண்புகள் மிகுதியாக உள்ளன.

நாகர் என்னும் சொல் மலை எனப் பொருள்படும். இச்சொல் நகம் என்னும் வடமொழிச் சொல்லின் மூலத்தினையுடையது எனக் கருதப்படுகிறது. நாகர்களின் எண்ணிக்கை ஏறக்குறைய ஐந்து இலட்சமாகும். இவர்கள் வாழும் பகுதி இலையுதிரா அடர்ந்த காடுகளையும் ஆண்டு முழுவதும் நீர் வற்றாத ஆறுகளையும் கொண்டது. இயற்கை வளம் நிறைந்த இப்பகுதியில் இவர்கள் மிகவும் செழிப்போடு வாழ்கின்றனர்.

நாகர்களின் குடியிருப்புகள் மலை உச்சிகளில் உள்ளன. ஒவ்வொரு குடியிருப்பும் மிகுந்த இடவசதியுடன் அமைக்கப்படுகின்றது. வீடுகள் வலுவான மரங்களால் கட்டப்படுகின்றன. வீட்டின் அடித்தளம் தரையிலிருந்து 1. மீட்டர் உயரத்தில் இருக்குமாறு அமைக்கப்படுகிறது. வீட்டுத் தூண்களில் காட்டெருமைக் கொம்புகள், பன்றித் தலைகள், பெண்ணின் மார்பகங்கள், தலை வேட்டையில் கொண்டு வந்த மண்டையோடுகள் முதலானவற்றின் உருவங்களைச் செதுக்கி அழகுபடுத்துவர்.

நாகர்களின் பொருளாதாரம் காட்டை அழித்து வேளாண்மை செய்வதைப் பெரிதும் நம்பியுள்ளது.

குடியிருப்பிற்கு அருகிலுள்ள காட்டுப் பகுதிகளை அழித்துச் சாம்பலாக்கி அங்கு இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பயிர் செய்வர். காட்டை எரிக்கும் சாம்பலே பயிர்களுக்குச் சிறந்த எரு எனக் கருதுவ தால் விளைச்சல் குறையும்போது புதிய இடங்களைத் தேர்ந்தெடுத்து மீண்டும் முன்போல் செய்வர். பழைய இடம் காடாக வளரும். இவ்வகை வேளாண் முறையை இவர்கள் 'ஜூம் வேளாண்மை' (Jhum Cultivation) எனக் குறிப்பிடுகின்றனர். அங்காமி நாகர்கள் மலைச் சரிவுகளில் சமநிலங்களை ஏற் படுத்தி நீர்ப்பாசன முறையோடு பயிர்செய்கின்றனர். நாகா மலைப் பகுதிகளுக்கேயுரிய பலவகையான நெல் வகைகளை இவர்கள் விளைவிக்கின்றனர். இது தவிரத் தினை வகைகள், கம்பு, சோளம், சேனை, மொச்சை, எண்ணெய் வித்துகள் முதலான பயிர் களையும் விரும்பிப் பயிரிடுகின்றனர். இவர்கள் நெசவுத் தொழிலில் ஈடுபாடுடையவர்கள் என்பதால் ஒரு வகைப் பருத்தியையும் விளைவிக்கின்றனர். அதி லிருந்து முரட்டு வகைத் துணிகளை நெய்கின்றனர்.



மலைச் சரிவுகளில் நெற்பயிர்

வேட்டையாடுதல் இவர்களின் முதன்மையான தொழில்களுள் ஒன்று. சிறுவர்கள் முதல் பெரியவர் கள் வரை அனைவரும் அவரவர் திறமைக்கேற்ப விலங்குகளை வேட்டையாடுகின்றனர். வேட்டையில் கிடைக்கும் இறைச்சியைக் குடியிருப்பிலுள்ள அனை வரும் பகிர்ந்து கொள்வது இவர்களிடையே உள்ள சிறப்பான வழக்கங்களுள் ஒன்றாகும். மீன்பிடித்தல் இவர்களின் துணைத் தொழில்களுள் ஒன்று. நாகர் கள் கைத்தொழில்களிலும் திறமையுடையவர்கள். குறிப்பாக மட்பாண்டம் செய்தல், கூடைமுடைதல், மரச்சிற்ப வேலை, கொல்லர் தொழில் ஆகியவற் றில் சிறப்பாக விளங்குகின்றனர்.

நாகர் சமுதாயம் குல அமைப்பினையும் (Clan-organisation), தந்தைவழி மரபுரிமையையும் அடிப் படையாகக் கொண்டது. திருமணம், பொருளாதாரம், சமூகக் கட்டுப்பாடு முதலான அனைத்தும் குல அமைப்பு அடிப்படையிலேயே செயற்படுகிறது. இவர் கள் புறமண (Exogamy) முறையைக் கொண்டவர் கள். ஒரு குலத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் இரத்த உறவுடையவர் என்று கருதுகின்றனர். ஆகவே ஒரு குலத்தைச் சேர்ந்தவர்கள் வேற்றுக் குலத்தைச் சேர்ந்தவர்களை மட்டுமே திருமணம் செய்து கொள் கின்றனர். ஒருதுணை மணம்(Monogamy), பலதுணை மணம் (Polygamy) இரண்டுமே வழக்கிலிருந்தாலும் ஆவோ நாகர் ஒரு துணை மணத்தையும், சீமா, சங்கு நாகர்கள் பலதுணை மணத்தையும் பெருவழக்காகக் கொண்டுள்ளனர்.

நாகர்களின் கிராம நிருவாக முறை பொதுப் படையாக அல்லாமல் சற்று வேறுபட்டுள்ளது. சீமா கொன்யக்கு நாகர்கள் மரபுவழியில் வரும் மூப்பனைக் கொண்டு நிருவாகம் செய்துகொள்கின்றனர். அங்கா மியரும் வேறு சிலரும் மரபு வழியில் வரும் மூப்பன் களைக் கொண்டிராமல் பொதுமக்களால் நடத்தப் படுகிற (Democratic) நிருவாக முறையைக் கொண்டுள்ளனர். ஆவோ நாகர்கள் வயது அடிப் படைக் குழுவினரால் (Age-sets) நிருவாகம் நடத்து கின்றனர். சம வயதுடையவர்களுள் சிலர் நிருவா கத்தைக் கவனிப்பர். இவர்களுக்குப் பின் இவர்களுக் கடுத்துள்ள வயதுக் குழுவினரிடம் நிருவாகத்தை ஒப்படைக்க வேண்டும்.

நாகர்களின் வாழ்வில் மணமாகாதவர்கள் தங்கும் இளையோர் கூடங்கள் மிகச் சிறப்பு மிக்கவை. இரு பாலாரும் தங்கும் கூடங்களும், தனித்தனியாகத் தங்கும்கூடங்களும் இவர்களிடம் உள்ளன. 'மொருங்கு' (morung) முதலிய வேறு சில பெயர்களாலும் வழங் கப்படும் இந்த இளையோர் கூடங்களின் நடவடிக் கைகள் ஒருசில இந்தியப் பழங்குடிகளிடம் மட்டுமே



நாகர் நடனம்

சிறப்பாக உள்ளன. காண்க: ஆதிக்குடிகளின் இளைய வர் கூடங்கள்.

பழங்காலத்தில் எதிரிகளின் தலைகளை வேட்டை யாடும் (Head Hunting) வழக்கத்தைக் கொண்டிருந் தனர். ஆங்கிலேய அரசின் முயற்சியால் இவர்கள் அக்கொடிய முறையை விட்டுவிட்டனர்.

நாகர்கள் வாழ்வில் பாடல்கள், இசை, நடனம் முதலானவை மிகுந்துள்ளன. ஆண், பெண் இருபாலா ரும் சேர்ந்து ஆடும் நடனங்கள் அனைவரின் கவனத் தையும் ஈர்க்கக்கூடியவை. திருமணம், பூப்புச் சடங்கு, அறுவடைச் சடங்குகள் முதலான சிறப்பு நிகழ்ச்சி களில் இரவு முழுவதும் ஆடும் இந்நடனங்கள் வெளி உலகத்தவரின் பாராட்டுதல்களைப் பெற்றவை.

நாகர்கள் வாழ்ந்து வரும் பகுதிகளை முதன் முதலில் ஆங்கிலேயர்கள் கி.பி. 1886-ஆம் ஆண்டு நிருவகிக்கத் தொடங்கினர். அதன் பின்னர் இரண் டாம் உலகப் போரின்போது சப்பானியர்கள் (Japanese) பர்மா வழியாக இப் பகுதிகளுக்கு வந்து நாகாலாந்தினைப் போர்க்களமாக மாற்றினர். இவர்களைத் தொடர்ந்து பல்வேறு இனத்தவர் களைக் கொண்ட படைவீரர்கள் இப்பகுதிகளில் வாழ்ந்தும் இவர்களோடு போரிட்டும் மடிந்தனர். புதிய மக்களின் வருகையினால், புதிய புதிய போர்க் கருவிகள், உணவு வகைகள், உடை வகைகள் முதலா னவற்றை அறியும் வாய்ப்பினைப் பெற்றனர். அன்



நாகர் பகுதியில் பழங்குடிப் பள்ளி

றிருந்து வெளியாரின் பண்பாட்டுக் கூறுகள் இவர்களுடன் கலக்கத் தொடங்கின. இன்று இவர்களுள் கிறித்தவர்களும் உள்ளனர். இந்திய அரசின் பழங்குடி நலத்திட்டங்கள் இவர்களைப் பெரிதும் மேம்பாடடையச் செய்துள்ளன.

நாகர் பகுதியில் பழங்குடிப் பள்ளியால் சிறப்பாக இவர்களிடையே கல்வியறிவு இன்று மேம்பட்டுள்ளது. சாலைப் போக்குவரத்திற்கு இந்திய அரசு சிறப்பிடம் கொடுத்து மேம்படுத்தியுள்ளதால் இவர்களின் பொருளாதாரம் அண்மைக் காலங்களில் உயர்ந்துள்ளது.

சீ.ப.

**நாகர்கோயில்:** இது தமிழ்நாட்டில் உள்ள மாவட்டங்களுள் ஒன்றாகிய கன்னியாகுமரியின் தலை நகர் ஆகும். பழையாற்றின் கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. இதன் பழைய பெயர் கோட்டாறு என்பதாகும். இந்த ஊர் திருநெல்வேலியிலிருந்து 80 கி.மீ. தொலைவிலும், திருவனந்தபுரத்திலிருந்து 68 கி.மீ. தொலைவிலும், கன்னியாகுமரியில் இருந்து 20 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. இது ஒரு நகராட்சியாகும். இந்நகராட்சி கி.பி. 1900–ஆம் ஆண்டில் அமைக்கப்பெற்றது. வடசேரி, வடிவீசுவரம், கோட்டாறு, ஒழுகினசேரி ஆகிய சிற்றூர்கள் நாகர் கோவில் நகராட்சியைச் சேர்ந்த பகுதிகளாகும். இங்கும் புகழ்பெற்ற தேவாலயங்கள் பல உள்ளன. அவற்றுள் முக்கியமானது பாம்புகளின் அரசனாகிய நாகர்க்கு அமைந்துள்ள கோயிலாகும். இக்கோயில் நாகர்கோயில் என்றே சொல்லப்படுகிறது. அக்கோயி லின் பெயராலேயே இந்நகருக்கு இப்பெயர் ஏற்பட்டது. நாகத்தின் சிலை தவிரப் பிறதெய்வச் சிலைகள் இங்கு அமைக்கப்படவில்லை.

நாகர் கோயிலின் ஒரு பகுதியான வடசேரியில் சோழராசா கோயில் எனப்படும் பழமையான சிவன் கோயில் உள்ளது. சோழர்காலக் கோயில் கட்டடப் பாணியில் இது அமைக்கப்பட்டுள்ளது. இங்குள்ள கல்வெட்டுகளால் சோழராசா கோயிலும், அதன் வட்டாரமும் சேரநாட்டு மன்னன் ஒருவனால் சோழப் பேரரசருக்குச் சமாதானப் பரிசாக அளிக்கப்பட்டன என அறிய முடிகிறது. இங்குள்ள கிருட்டிணன் கோயிலும் சிறப்பு வாய்ந்ததாகும். இங்கு வடமொழிக் கல்வெட்டு ஒன்று உண்டு. சேர மன்னன் ஆதித்தவர்மனைப் பற்றிய செய்திகள் இதில் உள்ளன. திருச்சபைகள் பல உள்ளன.

இங்குக் கலைக் கல்லூரிகளும், பல் தொழில் கல்லூரி ஒன்றும், ஆண்கள், பெண்கள் படிக்கும் மேல் நிலைப் பள்ளிகள் பலவும் அமைந்து இந்நகருக்குப் பெருமை அளிக்கின்றன. இவ்வூரில் அமைக்கப்பட்டுள்ள காந்தியடிகளின் நினைவுச் சின்னத் தூபி குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்த ஒன்றாகும்.

அரசு அலுவலகங்கள் பல இங்குள்ளன. இங்குள்ள மக்கள் கைத்தறி நெசவில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்கள். குறிப்பாகச் சித்திரச் சரிகைவேலைப்பாட்டில் தன்னிகரற்றவர்கள். இத்தொழில்கள் இந்நகரில் குடிசைத் தொழிலாகவே நடைபெறுகின்றன. மேலும் கன்னியாகுமரி மாவட்டத்தில் உற்பத்தியாகும் பொருள்கள் அனைத்தும் விற்பனைக்காக இங்கு வந்து குவிகின்றன. எனவே, இந்நகரம் வாணிகத்தில் சிறந்து விளங்குகின்றது. இங்கு ஒரு புகைவண்டி நிலையமும் உள்ளது. இங்கிருந்து புகைவண்டி மூலமாக இந்தியாவின் எல்லாப் பாகங்களுக்கும் செல்ல வசதிகள் செய்யப்பட்டுள்ளன. தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் நாகர்கோயிலிலிருந்து அரசாங்கப் பேருந்துப்போக்குவரத்து நடைபெறுகிறது. இந்தப் பகுதிக்கு அருகே, தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிய போக்குவரத்துத் தொழிற்கூடம் அமைக்கப் பட்டுள்ளது.

இங்கு வாழை, தென்னை, செந்நெல் ஆகியவை பயிரிடப்படுகின்றன. பல வகையான பழமரக்கன்றுகளும் வளர்க்கப்படுகின்றன.

சி.மு.

**நாகரிகம்:** மனிதப் பண்பாட்டு வளர்ச்சியே 'நாகரிகம்' என்று சொல்லப்படுகிறது. மனிதர்களின் வாழ்க்கை முறையில் படிப்படியாக ஏற்பட்ட மாற்றங்களின் விளைவாக மொழி, கலை, இலக்கியம், சமூகக் கட்டுக்கோப்பு, அரசியலமைப்பு முதலிய வற்றில் வளர்ச்சி தோன்றியுள்ளது. இவ்வளர்ச்சியே 'நாகரிகம்' எனப்படும். மக்களின் உணவு, உடை, உறையுள், பயிர்த்தொழில், கைத்தொழில், கல்வி, வாணிகம், கலையுணர்ச்சி, சமயத்துறை முதலியவற்றில் நல்லறிவு பெற்று விளங்குதலையும் பழகுதலையும் 'நாகரிகம்' என்பர். பழைய கற்கால மனிதன், அறிவாலும் ஆற்றலாலும் முன்னேறிப் புதிய கற்கால மனிதன் ஆனான். சக்கி முக்கிக் கற்களைக் கொண்டு தீ உண்டாக்கிய மனிதன், எண்ணெய் விளக்கைக் கண்டறிந்து பயன்படுத்தியதும், மரப் பட்டையில் எழுதிய மனிதன் பனையோலையில் எழுத்தாணி கொண்டு எழுதியதும் முன்னேற்றமாகும். வாழ்க்கைக்கு இன்றியமையாத இத்தகைய முன்னேற்றத் துறைகளின் தொகுப்பே நாகரிகம் எனப்படும்.

மனித வளர்ச்சி அல்லது முன்னேற்றத்தின் முழு விவரங்கள் தெரியவில்லை. எனினும், இவ்வுலகில் மனிதனின் மூதாதையர்கள் பத்து இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பே வாழ்ந்தார்கள் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. ஆதி மனிதன், மிருகங்களைப் பார்த்து நடக்கத் தெரிந்து கொண்டான். நாளடைவில் ஏற்பட்ட மாற்றத்தால் ஓடவும் தெரிந்துகொண்

டான். முதலில் வெட்டவெளியில் வசித்து வந்தவன், மலைக் குகைகளில் வசிக்கக் கற்றுக்கொண்டான். இதுவே நாகரிகத்தின் தோற்றமாகும். கூழாங்கல்லினால் கருவிகளைச் செய்துகொண்டு விலங்குகளிடமிருந்து தன்னைக் காத்துக்கொண்டான். கூழாங்கற்களைச் சேர்த்து மாலைகள் செய்து அணிந்துகொண்டான்.

ஏசு பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே எகிப்து, சுமேரியா, இந்தியா, சீனா முதலான பகுதிகளில் மக்கள் மிக உயர்ந்த நாகரிகத்தைப் பெற்றிருந்தனர். இவை முறையே நைல், தைகிரீசு, யூப்ரட்டீசு, சிந்து, மஞ்சள் ஆகிய ஆற்று வெளிகளில் தோன்றின. இந்த ஆற்றுப் பள்ளத்தாக்குகள் நீர்வளமும், நில வளமும் கொழித்தமையால் உழவுத் தொழில் செழித்தோங்கியது. கலை, கம்மியம் முதலிய தொழில்கள் தோன்றி வளர்ச்சியடைந்தன. வாணிகம் வளம் பெற்றதால் மக்கள் ஆங்காங்கே ஏராளமாகச் சேர்ந்து நகரங்களை நிறுவினர். நகர வாழ்வே நாகரிகத்தின் இன்றியமையாத இயல்பாகும். வெவ்வேறு பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் கொண்ட மக்கள் ஒன்று சேர்ந்து வாழும்போது அவர்களுடைய வேறுபாடுகள் மறைந்து அறிவு வளர்ச்சி பெருகுகிறது. புத்தமைப்புகள் (New Inventions) கண்டறியப்படுகின்றன. இப் புத்தமைப்புகளில் தானியங்கள், எருதுகளைக் கொண்டு ஏர் உழுதல்,வண்டிச் சக்கரம், குயவன் சக்கரம், விலங்கு வளர்ப்பு, நீர்ப் பாசனம் போன்றவை குறிப்பிடத்தக்கவை. உபரி உணவு உற்பத்தியும், தொழிற் பாகுபாடும் பெரிய நகரங்கள் தோன்றுவதற்கும், மக்கள் கூடி வாழ்வதற்கும் ஏதுவாயின; கோயில்கள் கட்டப்பட்டன. சமயங்கள் அரசாங்க முறைகளாக வளர்ந்தன; நுண்கலைகள் தோன்றின; செம்பு, வெண்கலம்,பொன், வெள்ளி முதலிய உலோக வேலைகள் நடைபெற்றன; நெசவுக் கலை வளர்ச்சியடைந்தது. சித்திர எழுத்துகளைக் களிமண் பலகை, காகிதம், கல் போன்றவற்றில் பொறித்தது பண்டைக்கால நாகரிகங்களின் சிறப்பியல்புகளில் ஒன்றாகும். இந் நாகரிகத்தில் சருவாதிகார ஆட்சியும், அடிமை முறையும் நிலவின.

புதிய உலகம் அல்லது மத்திய, தென் அமெரிக்க நாகரிகங்கள் கீழ்நாட்டு நாகரிகத்திற்கு இணையான முறையில் வளர்ந்தன. பல பொது இயல்புகளைப் பெற்று விளங்கின. அவற்றில் 1) ஆசுடெக்கு நாகரிகம், 2) மாயா நாகரிகம், 3) இன்கா நாகரிகம் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. மெக்சிகோ நாட்டு 'ஆசுடெக்கியர்' பல சிறப்பியல்புகள் பொருந்திய நாகரிகத்தை அமைத்தனர். அவர்கள் சிற்பம், கட்டடச் சிற்பம், நெசவு, உலோக வேலை, அலங்கார வேலை, இசை, பஞ்சாங்கம், சித்திர எழுத்து முறை முதலிய கலைகளைப் பயின்றிருந்தனர்; அரண்சூழ் நகரங்களில் வாழ்ந்தனர். யூக்கட்டனைச் சேர்ந்த மாயா நாகரிகம் கட்டடக் கலையிலும், சிற்பக் கலையிலும், நன்கு வளர்ச்சியடைந்திருந்தது. மாயாக்கள் இரு பஞ்சாங்கங்களை வகுத்திருந்தனர்; வானவியலிலும், கணிதத்திலும் வல்லவர்கள்; பூச்சியத்தின் மதிப்பை அறிந்திருந்தனர். வல்லரசன் ஒருவனே பேரரசை ஆண்டுவந்தது பெரு நாட்டு 'இன்கா' நாகரிகத்தின் தனி இயல்பாகும். அரசாங்கம் உழைப்பிற்காகவும், சேவைக்காகவும் வரி வசூலித்தது. சுரங்க, உலோகத் தொழில்கள் புகழ்பெற்றன. எழுத்துக்கலை, காகிதம், சக்கர வண்டி, இழுக்கும் விலங்கு முதலியன இல்லாதிருந்தபோதிலும் விரிவான சமூக, அரசாங்க முறையைத் தழுவி வந்தனர்.

பண்டைய நாகரிகங்கள் தனித்தனியாக வளரவில்லை. நாகரிக மக்கள் அண்டைவாழ் மக்களின் தொடர்பால் பலவற்றைக் கற்றுக் கொண்டனர். உயர்ந்த நாகரிகம் வளர்வதற்குத் தட்பவெப்பம், வரலாறு, பொருளாதாரம் போன்றனவே காரணமாக அமைகின்றன. நாகரிக மக்கள் வலிமை குறைந்து போகின்ற காலத்து அண்டையில் வாழும் முரடர்களால் தாக்கப்பட்டு அழிக்கப்படுகின்றனர். ஆசுவால்டு இசுபிங்களர் (Oswald Spengler) என்ற அறிஞர் 'நாகரிகங்கள் மாறி மாறி அழிவதையும், தோன்றுவதையும், உயிர்கள் தோன்றி வளர்ந்து முதிர்ந்து மறைவதுடன் ஒப்பிட்டுக் கூறுகின்றார். சர் பிளின்டர்சு பீட்ரி (Sir Flinders Petrie) என்ற அறிஞர் வளர்ச்சி, முதிர்ச்சி, வீழ்ச்சி ஆகிய நிலைகளைப் பண்டைய எகிப்து முதலிய நாகரிக நாடுகளில் சிற்பங்களில் காண்பதாக எடுத்துக் காட்டுகிறார். ஆனால், இந்தியா,சீனா போன்ற நாடுகளில் நிலையான, ஒருமைப்பாடான நாகரிகங்கள் இக் கருத்துக்கு மாறாக இருக்கின்றன. சுருங்கக் கூறுமிடத்து மனிதனைப் பிற உயிர்களிடத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டக் கூடியவற்றில் முக்கியமான பண்பாடே நாகரிகத்தின் அடிப்படையாகும். சீ.மூ.

**நாகலிங்க முனிவர், - காஞ்சி**: இவர் அண்மைக் காலத்தில் வாழ்ந்த பெரும் தமிழறிஞர். இவர் நூலாசிரியர், உரையாசிரியர், பதிப்பாசிரியர், போதகாசிரியர், இதழாசிரியர், சொற்பொழிவாளர் எனப்பல துறையிலும் சிறந்து விளங்கினார். இவர் கி.பி. 1865-ஆம் ஆண்டு காஞ்சீபுரத்தில் செங்குந்த மரபில் சரவணப்பெருமாள் முதலியார், மனோன்மணியம்மையார் என்னும் பெற்றோர்களுக்குப் பிறந்தார். இளமையிலேயே தந்தையை இழந்த இவர் தம் 12-ஆம் வயதில் நெசவுத் தொழிலை மேற்கொண்டார்; 14-ஆம் வயதிலிருந்து சென்னையில் தம் சிறிய தந்தையார் புசங்கராவ் முதலியாரின் பராமரிப்பில் வளர்ந்து வந்தார்.

இவர் கச்சபாலைய தேசிகர், வள்ளுவப்பாக்கம் சீனிவாச முதலியார், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், மயிலை. சண்முகம் பிள்ளை, குன்றக்குடி ஆறுமுகத் தம்பிரான் ஆகிய தமிழறிஞர்களிடம் கல்வி பயின்றார். தம் 25-ஆம் வயதில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளிடம் கல்வியும் கௌமார தீட்சையும் பெற்றார்; வண்ணச்சரபம் சுவாமிகள் சென்னை பெத்துநாயக்கன் பேட்டை காசி விசுவநாதர் கோயிலில் தம் தில்லைத் திருவாயிரத்தை அரங்கேற்றியபோது நாகலிங்க முனிவர் கையேடு படித்தார். இவரால் இயற்றப்பெற்ற திருத்தணிகை வண்ணமஞ்சரியைக் கண்ணுற்ற சுவாமிகள் வண்ணக் களஞ்சியம் என்ற பட்டத்தை வழங்கினார்.

சென்னைச்சிவனடியார் திருக்கூட்டத்துள் இவர் சிவஞான முனிவர் நூல் நிலையம் என ஒரு நூலகத்தை நிறுவினார். சென்னை அருணாசலேசுவரர் வசந்த மண்டபத்தில் நிறுவப் பெற்றிருந்த மெய்கண்ட சந்தான சபை, தேவாரப்பாடசாலை, மெய்கண்டான் கல்லூரி ஆகியவற்றின் பொறுப்புகளையும் நாகலிங்கனார் ஏற்றிருந்தார். அருணாசலேசுவரர் கோயிலிலுள்ள அணியண்ணாமலைக் கோயிலில் கோபுரத் திருப்பணி முதலியன இவர் முயற்சியாலேயே நிறைவேறின. சிவஞான போதம் முதலிய சைவ சித்தாந்த நூல்கள் பதினான்கினையும் உரையுடன் ஒரே தொகுதியாக மெய்கண்ட சாத்திரம் எனப் பெயர் தந்து வெளியிட்டார். இந்நூற்றொகுதிக்கு அன்று முதல் இப்பெயரே நிலைத்து விட்டது. 1907-இல் சைவ சித்தாந்த மகா சமாசம் தோன்றிய காலம் முதல் உடனிருந்து உழைத்து அது வளர்ச்சியடையப் பாடுபட்டார். இவர் தென்னாடு முழுவதும் முறையாக எட்டு முறை யாத்திரை செய்துள்ளார். இவருக்குத் திருவாவடுதுறை, திருப்பனந்தாள் ஆதீனங்களோடு நெருங்கிய தொடர்பு இருந்தது. தம் ஆசிரியர் பூவை. கலியாணசுந்தர முதலியாரைப் பின்பற்றிக் காஞ்சிபுரம் ஞானப்பிரகாச சுவாமிகள் ஆதீனத்தில் துறவறம் பெற்றார். அப்போதிருந்து இவர் 'நாகலிங்க முனிவர்', 'கச்சியடிகள்' என வழங்கப் பெற்றார். துறவறமேற்றபிறகு ஒருமுறை காசியாத்திரை செய்து வந்தார்.

இவர் தமது மரபாகிய செங்குந்த குலத்தில் மிகுந்த பற்றுடையவராதலால் தம் குல முன்னேற்றத்திற்காகப் பல்லாற்றானும் முயன்று தொண்டாற்றினார். இவர் 1927-ஆம் ஆண்டு செங்குந்த மித்திரன் என்னும் சமூகத் திங்கள் இதழைத் தொடங்கி அதன் ஆசிரியராகப் பணியாற்றினார். தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம், செங்குந்தர் விடுதி, செங்குந்தர் கல்விநிதி ஆகிய சமூக அமைப்புகளில் பெரும் பொறுப்பு வகித்தார்.

இவருடைய வாழ்க்கைத் துணைவியாரின் பெயர் காமாட்சியம்மையார் என்பதாம். இவருக்கு மயிலேறும்பெருமாள், தணிகைராயன், சரவணப்பெருமாள் என்ற மூன்று புதல்வர்களும், கசவல்லி என்னும் ஒரு மகளும் இருந்தனர். இவ்வாறு தம் குலம், மொழி, சமயம் ஆகிய மூன்றிற்காகவும் அயராது உழைத்த முனிவரவர்கள் 1950-ஆம் ஆண்டு காலமானார்.

இவர், திருத்தணிகை வண்ண மஞ்சரி, தென் கடம்பந்துறை பதிற்றுப்பத்தந்தாதி, வடபழனி, மயிலேறும் பெருமாள் மாலை, வடபழனி இரட்டைமணிமாலை, திருவாமாத்தூர் வண்ணங்கள், திருவெறும்பியூர்ப் புராணம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். இவரால் பதிப்பிக்கப் பெற்றவை: தாயுமானவர் பாடல்கள் (குறிப்புரையுடன்), பன்னிரு திருமுறை(பண் முறை), காஞ்சிப் புராணம், காஞ்சிக் கட்டளைக் கலித்துறைபுராணம், திருமுறைத்திரட்டு, மெய்கண்ட சாத்திரங்கள் (தனித்தனியாகவும், ஒன்றாகவும்), தணிகைப் பதிற்றுப் பத்தந்தாதி, கச்சியானந்த ருத்திரேசர் பதிற்றுப்பத்து, காஞ்சி சரவண தேசிகர் சாத்திரத் திரட்டு, சுந்தரர் தேவாரம், செங்குந்தர் பிரபந்தத் திரட்டு, காரனேசன் தமிழ் அகராதி முதலியன. ப.வெ.நா.

**நாகவர்மர்**: இவர் கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கன்னட மொழிக் கவிஞர்; வெங்கிபளு என்னும் பகுதியில் வாழ்ந்த வெண்ணமையார் என்பாரின் புதல்வர். வடமொழியில் பாணபட்டர் உரைநடையில் எழுதிய காதம்பரியை இவர் கன்னட மொழியில் கவிதையாக மொழிபெயர்த்துள்ளார். மூலநூலை வெல்லக்கூடிய முதல் நூலாகவே இந்நூல் அமைந்து சிறக்கிறது. இவருடைய இன்னுமொரு புகழ்பெற்ற நூல் சந்தோம்புதி என்பதாகும். இது கன்னட மொழியில் தோன்றிய 'சந்தசு' என்னும் இலக்கிய வகை நூல்களில் மிகத் தொன்மையானது. சிவபெருமான் உமாதேவிக்கு உரைத்த 'சந்தசு' பிங்களர்கள் வழியாக இவ்வுலகில் பரவியது என்றும் அதனை நாகவர்மர் அறிந்து தம் துணைவியாரிடம் கூறினார் என்றும் ஒரு செவிவழிச் செய்தி கருநாடகத்தில் நிலவி வருகிறது. இவருக்கு 'நெகிள்தகோசா', 'கவிராச அம்ச', 'கந்த கந்தர்ப்ப' போன்ற பட்டங்கள் வழங்கப் பெற்றிருந்தன. கன்னட மொழியின் கவிதை வரலாற்றில் பெருமைக்குரிய கவிஞராக இவர் போற்றப் பட்டு வருகிறார். சா.உ.

**நாகவர்மர்[2]**: இக்கவியினுடைய (கி.பி. 982-1042) நூலான 'வர்த்தமான புராணம்' வெளிவந்ததிலிருந்து இவரைப் பற்றிப் பல புதிய செய்திகள் கிடைத்திருக்

கின்றன. இவர் தந்தை தாமோதரர்; தாய் வீரகப்பே. இவருடைய ஆசிரியர் வீரபட்டாரகர் எனப் பெயர் பெறும் வீரனந்தி. இவர் மகன் பெயர் மது. இவருடைய சமகாலக் கவிவாதிராச பண்டிதர். இவர் சாளுக்கியப் பேரரசன் இரண்டாம் சயசிங்க சகதேக மல்லன் (கி.பி. 1015-42) என்ற அரசனின் அவைப் புலவர். இவர் இயற்றிய வர்த்தமான புராணத்தின் 16-ஆம் ஆச்சுவாசம் 47-ஆம் செய்யுளில் 'வசுவர்க் காங்க' என்ற சங்கேதத் தொடரால் சக ஆண்டு 964, சித்திரபானு, ஆச்பயுச பகுளபட்சத்து ஆறாம் நாள், வியாழக்கிழமை, புனர்வசு நாளில் இந்நூலை எழுதி முடித்தார் எனச் சொல்லுகிறார். இந்த நாள் கி.பி. 1042, அக்டோபர்த் திங்கள் ஏழாம் நாள் ஆகும் (7-10-1042). இரண்டாம் முறை விக்கிரம வருடத்தில் தான் வாழ்ந்ததாகச் சொல்லுவதால் இந்நூல் எழுதும்பொழுது அவருக்கு 63க்கும் மேற்பட்ட வயது ஆகிவிட்டது என்பது தெளிவாகிறது. இந்நூலிலிருந்து விசயகுமாரரின் இரகுவமிச மகாபுராணம், முதல் நாகவர்மரின் வத்சராச சரிதம், நாகதேவரின் சுலோசனாசரிதம் முதலான நூல்களின் பெருமை முதன்முதலில் அறியக் கிடக்கின்றது. மற்றும் அரிவமிச கதை எழுதிய குணவர்மர், 'ஆதிசீநநாதசரிதே' எழுதிய பம்ப, சாந்தீசுவர புராணம் எழுதிய ஒன்ன, அசிததீர்த்தங்கர புராண திலகம் என்ற நூலை எழுதிய இரன்னபோன்றகன்னடக் கவிகளைப் போற்றி எழுதியுள்ளார்.

இவர், 'காவியாவ லோகனம்' என்ற அணி இலக்கண நூலையும், 'அபிதான வத்து கோசம்' என்ற நிகண்டு நூலையும் இயற்றியிருக்கிறார். இவ்விரு நூல்களின் அடிக் குறிப்புகளிலிருந்து வேறு ஒரு நூலும் இவர் இயற்றியதாகத் தெரியவில்லை. கவிராச மார்க்கத்திற்குப் பிறகு சொல், அணி, சுவை, நடை முதலியவற்றைப் பற்றி விரிவாகச்சொல்லும் நூலே 'காவியாவலோகனம்'. இவர் நூல்களிலிருந்து இவருக்குச் 'சகசகவி', 'கவிகர்ணபூர', 'கவிதா குணோதய' 'சுகவிரத்னாகர', 'குரைத்த சாகர', 'சேம்யக்த்துவ ரத்னாகர' முதலான பட்டப் பெயர்கள் உண்டு என்று தெரிய வருகிறது. வர்த்தமான புராணம் என்பது 24ஆம் சமண தீர்த்தங்கரரின் வரலாறு ஆகும்.

விக்கிரம வருடத்தை இரண்டாம் முறையாகக் கண்டதாக இவர் வர்த்தமான புராணத்தில் சொல்வதால் சித்திர பானுவில் முடிக்கப்பட்ட அப்புராணத்தையும் 60-ஆம் வயதிற்குப் பின்னர் முடித்திருக்க வேண்டும் என்பது தெளிவு. எனவே, இவர் காலம் ஏறக்குறைய கி.பி. 982 க்கு முன்பிலிருந்து கி பி. 1042 க்குப் பின்வரை ஆகலாம். கே.ஜி.கி.

**நாகன் போத்தனார்** சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவர் பெயர் நாகன் போத்தன் என்றும், நாம் போத்தனம் என்றும் சில பதிப்புகளில் காணப்படுகிறது. போத்தன் என்பது இவர்தம் இயற்பெயராகலாம். நாகன் போத்தன் என்பதனை நோக்குங்கால், இப்புலவர் நாகனுக்கு மகன் என்றும் கொள்ளுதல் கூடும். இவரது ஒரே பாடல் குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளது (குறு. 282). பாலைத் திணையிலமைந்த அப்பாடல், வினைவயிற் பிரிந்தவிடத்துத் தோழி தலைவிக்குக் கூறும் கூற்றாயமைந்துள்ளது. உண்டு உயிர் வாழும் முயற்சியில் ஒரு பெண் மான் தன் பசியினைத் தணிக்க வரகின் பயிரில் தழைத்த இலையினைக் கடித்துண்பதனை 'நவ்வி நாள்மறி கவ்விக் கடன் கழிக்கும்' என்று குறிப்பிட்டிருப்பது நயமிக்கு விளங்குகிறது. பிரிவுத் துயரால் மெலியும் தலைவியின் கைவளை கழலுவதற்கு, வெண் கூதாளத்தின் புதுமலர் ஆர் கழன்று விடுவதனை உவமையாக்கி, 'நீர் திகழ் சிலம்பின் ஓராங்கு விரிந்த, வெண் கூதாளத்து அந்தூம்பு புதுமலர் ஆர் கழன்று உகுப போல' என்று காட்டியிருப்பது சிறப்பாக உள்ளது. அ.மா.ப.

**நாகார்ச்சுன கொண்டா**, ஆந்திர மாநிலத்திலுள்ள குண்டூர் மாவட்டத்தில் பல்நாடு வட்டத்தில் ஓடுகின்ற கிருட்டிணா நதிக்கரையில் அமைந்துள்ள ஊர். ஆந்திர மாநிலத்தின் தலைநகரான ஐதராபாதிலிருந்து 166 கி.மீ. தூரத்திலுள்ள இப்பள்ளத்தாக்கு வரலாற்றில் சிறப்பு வாய்ந்த இடத்தைப் பெற்றுள்ளது. இங்குக் கற்காலம் முதல் மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இப்போது நாகார்ச்சுன கொண்டா பள்ளத்தாக்கு நாகார்ச்சுனகொண்டா அணைநீரில் மூழ்கியுள்ளது.

நாகார்சுனகொண்டா பள்ளத்தாக்கின் மூன்று பகுதிகளில் நல்லிமலை எனப்படுகின்ற கருப்பு மலையும் நான்காம் பகுதியில் கிருட்டிணா நதியும்சூழ்ந்து, பாதுகாப்பு அரண் போன்று காணப்படுகின்றன. கி.பி. 3, 4 – ஆம் நூற்றாண்டில் இப்பகுதி 'விசயபுரி' என்று பெயர் பெற்றிருந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. ஆந்திரப் பகுதியை ஆண்ட சாதவாகன வமிசத்தாரைச் சார்ந்த விசயசதகருணி என்ற மன்னன் இங்கு ஒரு நகரை ஏற்படுத்தி அதற்கு விசயபுரி என்று பெயர் வைத்தானெனத் தெரியவருகிறது. நாகார்ச்சுனகொண்டா என்ற பெயர் இடைக்காலத்தில் வந்ததாகும். புத்த மதம் மிக்க அளவில் பரவியபோது கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புத்த சமயத் தத்துவ மேதையான நாகார்ச்சுனரின் பெயரில்இந்நகர்வழங்குவதாயிற்று இட்சுவாகு அரசவ்மிசத்தினர் இந்நகரைச் சிரீ பருவதம் என வழங்கி



நாகார்ச்சுனகொண்டா கோயில்

னர். இங்குள்ள நல்லி மலையின் பழைய பெயர் சிரீ பர்வதம் என்றும் கூறப்படுகிறது.

நாகார்ச்சுன கொண்டாவின் வரலாற்றுச் சிறப்பை மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறையைச் சார்ந்த ஏ.ஆர். சரசுவதி என்பவர் கண்டுபிடித்து வெளியிட்டார். பின்னர் மத்திய தொல்பொருள் ஆய்வுத் துறையைச் சார்ந்த ஏ.எச். இலாங்கசுட்டு (Longust) 1927-இல் முதன் முதலில் இங்கு அகழாய்வை மேற்கொண்டார். அதனைத் தொடர்ந்து தி. என். இராமச்சந்திரன், டாக்டர் ஆர்.சுப்பிரமணியன் ஆகியவர்களின் மேற்பார்வையில் அகழாய்வு மேற் கொள்ளப்பட்டது. நாகார்ச்சுனகொண்டா அணை கட்டியதால் ஆறு ஆண்டுகளில் சுமார் 100 மேல் இடங்களுக்கு அகழாய்வு செய்யப்பட்டுப் பழைய கற்காலம் முதல் வரலாற்றுக் காலம் வரை விளங்கிய பலதொல்பொருள்கள் வெளிக் கொண்டுவரப்பட்டன.

ஏறக்குறைய இரண்டு இலட்சம் ஆண்டுகளுக்கு முன் பழைய கற்கால மக்கள் நாகார்க்சுனகொண்டாவில் வாழ்ந்தார்கள் என்பதற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன. பழைய கற்கால மக்கள் பயன்படுத்திய கரடுமுரடான கல்லாயுதங்கள் அகழாய்வில் கிடைத்துள்ளன. கல்லால் செய்யப்பட்ட கைக் கோடரிகள், சுரண்டிகள் (Cleavers) போன்றவைகள் இவர்கள் பயன்படுத்திய கருவிகளாகும். பழைய கற்கால மக்களுக்குப் பின் இங்கு வாழ்ந்தவர்கள் இடைக் கற்கால மக்களாவர். இடைக் கற்காலத்தில் பயன்படுத்தப் பட்ட பட்டாக்கத்திகள் சுரண்டிகளும் (Blades, Scrapers) போன்ற கல்லாயுதங்கள் அகழாய்வில் வெளிக்கொண்டுவரப்பட்டன. இக் காலத்தில் வாழ்ந்த மக்கள் பழைய கற்கால மக்களை விடக் கல்லாயுதங்களைச் செய்வதில் முன்னேறியிருந்தனர். இதற்குப்பின் கடைக் கற்கால மக்கள் வாழ்ந்துள்ளனர். இவர்கள் பயன் படுத்திய ஆயுதங்கள் மிகவும் சிறியதாக இருப்பதால் இதை நுண் கற்காலம் என்பர். இப்பகுதியில் வாழ்ந்த கடைக் கற்கால மக்கள் பலவகையான கற்களைக் கொண்டு கருவிகள் செய்துள்ளனர்.

புதிய கற்கால மக்கள் நாகார்ச்சுன கொண்டாவில் ஏறக்குறைய கி.மு. 3000த்தில் வாழ்ந்தனர் என்பது இந்த அகழாய்விலிருந்து உறுதிப்படுத்தப் பட்டுள்ளது. புதிய கற்கால மக்கள் பயிர்த்தொழில், தச்சுவேலை, மட்பாண்டங்கள் செய்தல், மிருகங்களை வளர்த்தல் போன்றவைகளைத் தெரிந்திருந்தனர். இவர்களுடைய கற்கருவிகளின் தொழில்நுட்பத்தைக் கொண்டு இங்கு வாழ்ந்த புதிய கற்கால மக்களைப் 'பழைய புதிய கற்காலத்தினர்', 'புதிய கற்காலத்தினர்' என்று இரண்டாகப் பிரிக்கின்றனர். வழு

வழுப்பான கைக்கோடரி, உளி போன்றவைகள் இவர்களுடைய கல்லாயுதங்களாகும். சாம்பல், பழுப்பு, கருப்புப் போன்ற நிறங்களையுடையதும் சிவப்புச் சாயம் பூசப்பட்டதுமான மட்பாண்டங் களை இவர்கள் பயன்படுத்தியுள்ளனர், எருது, எருமை, வெள்ளாடு போன்ற மிருகங்களை வீட்டு விலங்குகளாகப் பழக்கியுள்ளனர், செம்பின் பயன் பாட்டைத் தெரிந்திருந்தனர், சங்கு, பணிக்கல் போன்றவைகளின் உதவியால் மணிகள் செய்யும் தொழிலைக் கண்டுபிடித்துள்ளனர். வீடுகளில் வசித் தல், இறந்தவர்களைப் புதைத்தல் போன்ற பழக்கங் களை இந்தப் புதிய கற்கால மக்கள் மேற்கொண் டிருந்தனர்.

நாகார்ச்சுன கொண்டாவில் புதிய கற்கால மக்க ளுக்குப் பின் பெருங்கற்கால மக்கள் கி.மு. 500 -இல் வாழ்ந்தனர். பெருங்கற்காலமக்கள் இறந்தவர் களைப் புதைக்கும் பழக்கம் மேற்கொண்டிருந்தனர். நாகார்ச்சுனகொண்டாவில் சவக்குழிகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இந்தக் கல்சுற்றின்மேல் (Stone-Circles) கற்குவியல் உள்ளது. இக்குழிகள் பல அக ழாய்வு செய்யப்பட்டன. குழி ஒன்று வெட்டி அதன் உட்பகுதியில் செதுக்கப்பட்ட கற்களைக்கொண்டு பெட்டி போன்று செய்து அதில் உடலைவைத்துப் புதைத்துள்ளனர். அகழாய்வு செய்யப்பட்ட எல்லாச் சவக்குழிகளிலும் எலும்பு கிடைக்கவில்லை. ஒரு குழி யில் நான்கு மண்டை ஓடுகள் கிடைத்துள்ளன. மற் றொரு குழியில் செப்பு மோதிரம் ஒன்று கிடைத்துள் ளது. மற்றொரு சவக்குழியில் தங்க நகை உடைந்த நிலையில் கண்டெடுக்கப்பட்டுள்ளது. இந்தச் சவக்குழி களில் சடங்குமுறைக்காகப் பலவகையான மட்பாண் டங்களும், இரும்புப் பொருள்களும் சேர்த்துப் புதைக் கப்பட்டுள்ளன. கருப்பு, சிவப்பு மட்பாண்டங்கள் பெரும் அளவில் கிடைக்கின்றன.

ஆந்திராவை ஆண்ட சாதவாகன வம்சத்தாரின் காலத்தில் நாகார்ச்சுனகொண்டா வரலாற்றுச்சிறப்பு வாய்ந்த நகரமாக இல்லாதிருந்த போதிலும், சாத வாகன மன்னர்களின் காசுகளும், கல்வெட்டுகளும் கிடைக்கின்றன. இட்சுவாகு வம்சத்தின் முதல் மன்ன னான வாசிசுதபுத்திர சாந்தமூலா கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் ஆட்சிக்கு வந்ததிலிருந்து நாகார்ச்சுன கொண்டா சிறப்பிடம் பெற்றது. இட்சுவாகு வம்சத் தினரின் காலத்தில் சிறப்புற்றுவிளங்கிய நாகார்ச்சுன கொண்டா அவர்களுக்குப் பின் இருண்ட நகரமாகி யது. பின்னர் வந்த சாளுக்கிய மன்னர்களின் காலத் திலும் இந் நகரில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின் றன. இங்குச்சருவதேவ கோயில், புட்பபத்தரசாமி கோயில், நோடகீசுவரசாமி கோயில் போன்றவை கள் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. இந்நகரம் இவர் களைத் தொடர்ந்து வாரங்கல்லை ஆண்ட காகதி யர், பாமினி, விசயநகர் ஆண்ட வம்சத்தினர்களின் கீழ் பல காலம் இருந்தது. இவர்களுக்குப் பின்னர் கொண்டவீடு (Kondavidu) இரெட்டி வம்சத்தினர், ஒரிசாவை ஆண்ட கசபதிகள்ஆகியோர் நாகார்ச்சுன கொண்டாவைக் கைப்பற்றினர். இரெட்டி வம்சத் தினரின் காலத்தில் மலைக்கோட்டை கட்டப்பட் டது. 'கோல்கொண்டா சாகி' (Shahi) வம்சத்தினரும் இக் கோட்டையைப் புதுப்பித்துள்ளனர்.

இட்சுவாகு வம்சத்தாரின் ஆட்சிக்காலத் தில் நாகார்ச்சுன கொண்டா தலைநகரமாக விளங்கியது. பாதுகாவலின்பொருட்டு இந்நகரைச் சுற்றிப் பெரிய மதிற்சுவர் எழுப்பப்பட்டுள்ளது. இதற்கு இரண்டு நுழைவாயில்கள் இருந்தன. மதிற்சுவர் முதலில் மண்ணாலும் பின்னர்ச் செங்கற்களாலும் கட்டப்பட்டுள்ளது. மதிற் சுவ ருக்கு வெளியில் அகழி இருந்தது என்பது அக ழாய்வில் கண்டுபிடிக்கப்பட்டது. இதன் உட்பகுதி யில் வீடுகள், படைகள் இருந்த பகுதி, கிணறுகள் போன்றவைகள் இருந்ததற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன. இப்பொழுது இதன் பல பகுதிகள் பழுதடைந்து காணப்படுகின்றன. இட்சுவாகு மன் னர்களின் அரண்மனை மதிற்சுவருக்கு உட்பகுதியில் இருந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது. இரண்டு கிணறுகள் அலங்கார வேலைப்பாடுகளுடன் காணப் படுகின்றன. இவற்றுடன் கழிவுநீர் வெளியேறு வதற்குப் பாதாளச் சாக்கடையும் சேர்த்துக் கட்டப் பட்டுள்ளது. சதுரக் கிணறு ஒன்றின் நான்கு பக்கங் களிலும் படிக்கட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன. இதி லும் கழிவுநீர் வெளியேறத் தனிப் பாதாளச் சாக் கடை உள்ளது.

பாமர மக்கள் கோட்டைக்கு வெளிப்பகுதியில் வாழ்ந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. இங்கு வீடுகளின் அடித்தளங்களும், சில வீடுகள் பல அறை களாகப் பிரிக்கப்பட்டிருப்பதும் தெரியவந்துள்ளன. கடைகளும் இருந்திருக்கின்றன. ஒரு வீட்டில் தங்க நகைகளும், உரோமானியக் காசுகளும் கிடைத்திருக் கின்றன. இங்குள்ள கல்வெட்டு இந்நகரில் வணிகர் கள், உருவச்சிலை வார்ப்பவர்கள், தச்சர் போன்ற கைவினைஞர்கள் வாழ்ந்தனர் என்று கூறுகிறது. இந்நகர் சங்கு அறுப்பதில் சிறப்பிடம் பெற்று விளங் கியது. இங்கு விளையாட்டு அரங்கம் ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அரங்கின் நான்கு பகுதிகளில் இருந்தும் பார்வையாளர்கள் அமர்ந்து காண ஏதுவாக அரங்கு கட்டப்பட்டுள்ளது. இருக்கைகள் முதலில் செங்கற்களால் கட்டப் பட்டு அதன்மேல் கற்பாறைகள் பாவப்பட்டுள் ளன. விளையாட்டு அரங்கம் செவ்வக அமைப்பில்

16.46×13.72மீ. நீளமும் அகலமும் கொண்டது. இந்த அரங்கில் நாடகங்களும் இசைக் கச்சேரிகளும் நடைபெற்றிருக்கலாம். மற்போர் செய்வது போன்ற சிற்பங்கள் இங்குக் காணப்படுகின்ற காரணத்தால் இத்தகைய போர்களும் நடைபெற்றிருக்கலாம். அரங்கு உரோமானிய விளையாட்டு அரங்கை முன்னோடியாகக் கொண்டு கட்டப்பட்டுள்ளது. இவைகளுடன் பொதுக் கூட்டங்களுக்காகத் தனியாகச் செங்கற்களால் கட்டப்பட்டமேடை, சதுரங்கமேடை,விளையாட்டுத் தனி மேடை போன்றவைகளும் உள்ளன.

நாகார்ச்சுனகொண்டாவிலுள்ள கோயில்கள் இரண்டு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை. 1) கருவறை மட்டும் தனித்திருக்கும் கோயில், 2) கருவறை, மண்டபம் சேர்ந்துள்ள கோயில்கள் என்பன. கோயில்கள், மண்டபங்கள் ஆகியவற்றைக் கட்டச் செங்கற்களும் கல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இட்சுவாகு வம்சத்தினரால் கட்டப்பட்ட ஒன்பது கோயில்கள் மதில்சுவரைச் சுற்றியும், கிருட்டிணா நதிக்கரையிலும் காணப்படுகின்றன. இவற்றுள் ஆறு கோயில்களில் கல்வெட்டுகள் உள்ளன. சிவனுக்கும் கார்த்திகேயனுக்கும் எடுக்கப்பட்ட கோயில்கள் ஐந்து. நாகார்ச்சுனகொண்டாவில் தாய் தெய்வத்திற்கு ஒரு கோயிலும் கட்டப்பட்டுள்ளது. அட்டபுய்சாமி கோயில் கி.பி. 278-இல் கட்டப்பட்டதாகும். இங்குள்ள கல்வெட்டு ஒன்றில் எட்டுத் தலைகளைக் கொண்ட திருமாலின் மரச் சிற்பம் ஒன்று இங்கு இருந்ததென்று கூறப்பட்டுள்ளது. இக்கோயிலில் கருவறை, மண்டபம், கொடிமரம் போன்றவைகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இக்கோயிலின் பெயர் பல சங்குகளில் வெட்டப்பட்டுள்ளது.

நோடகீசுவரசாமி கோயிலும் பழுதடைந்துள்ளது. இங்குள்ள கொடிமரத்தில் ஒரு கல்வெட்டுள்ளது. மண்டபத்தில் உள்ள சிற்பங்களில் உடன்கட்டை ஏறுதல், தாய் தெய்வங்கள் முதலியன' குறிப்பிடத்தக்கன. மலரால் அலங்கரிக்கப்பட்ட குடத்துடன் உள்ள பெண்ணின் உருவம் வளமைச் சடங்கை எடுத்துக்காட்டுகிறது. அளவற்ற சுடுமண் பொம்மைகள் அகழாய்வில் கிடைத்துள்ளன. இட்சுவாகு வம்சத்தாரின் காலத்தில் மேலும் பல சிறிய கோயில்கள் எடுக்கப்பட்டுள்ளன. புட்பபத்தரசாமி கோயில், கார்த்திகேயன் கோயில் ஆகியவை இருந்ததற்கான கல்வெட்டுச் சான்றுகளும் கிடைக்கின்றன. புட்பபத்தரசாமி கோயிலுக்கு அருகில் ஒரு பெரிய தெப்பக்குளம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஒரு பெரிய திருச்சுற்றின் உட்பகுதியில் எட்டுக் கோயில்கள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. இக்கோயில்களின் அடித்தளங்கள் வட்டம், சதுரம், செவ்வகம் போன்ற வடிவங்களில் காணப்படுகின்றன. கருவறை, மண்டபங்கள் ஆகியனவற்றின் அடித்தளங்களும் கிடைத்துள்ளன. இக் கோயிலின் அருகில் சத்திரம் போன்ற கட்டடங்களின் அடித்தளங்கள் அகழாய்வில் கிடைத்துள்ளன.

இட்சுவாகு மன்னர்களின் காலத்தில் இறந்தவர்களுக்கு நினைவுத் தூண்கள் எடுக்கப்பட்டுள்ளன. சுமார் 22 தூண்கள் கல்வெட்டுகளுடன் அகழாய்வில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இத்தகைய நினைவுத்தூண்கள் அரசர்கள், அவர்களுடைய குடும்பத்தினர் ஆகியோர்க்கு மட்டுமன்றிச்சமயப் பெரியார்கள், கைவினைஞர்கள் போன்றவர்களுக்கும் எடுக்கப்பட்டுள்ளன.

நாகார்ச்சுனகொண்டா மலையின் மேற்பகுதியில் பெரிய மதில் எழுப்பப்பட்டுள்ளது. இந்த மதில் கொண்டவீடுவை ஆண்ட இரெட்டி வமிசத்தினர் முதன்முதலில் கட்டியுள்ளனர். பின்னர் வந்த கசபதி வமிசத்தாரின் காலத்திலும் விசயநகர மன்னர்களின் காலத்திலும் இம்மதில் பல மாறுதல்கள் அடைந்துள்ளது என்பதை அவர்களுடைய கல்வெட்டுகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இப்போது பழுதடைந்துள்ள இந்த மதிலின் உயரம் 6 மீ., அகலம் 5.33 மீ. இதற்கு மொத்தம் ஆறு நுழைவாயில்கள் இருந்தன. பலமுறை புதுப்பிக்கப்பட்டதால் வாயில்கள் மாற்றப்பட்டுள்ளன. இதன் உட்பகுதியில் இப்போது மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறையின் அருங்காட்சியகம் உள்ளது. பழுதடைந்த இரண்டு கோயில்களும், ஒரு கிணறும், அரச குடும்பத்தினர் வாழ்ந்ததற்கான அரண்மனைப் பகுதிகளின் எச்சங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. நாகேசுவரலிங்கசாமி கோயில் கி.பி. 1413 -இல் கசபதி மன்னர்களால் கட்டப்பட்டது. திருமாலுக்கும் ஒரு கோயில் எடுக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில் கருவறை, இடைக்கழி ஆகியன உள்ளன. இது முதலில் சமணக் கோயிலாக இருந்து பின்னர் வைணவக்கோயிலாக மாற்றப்பட்டுள்ளது.

நாகார்ச்சுனகொண்டாவில் புத்தமதத்தில் உள்ள பல பிரிவுகளைச் சார்ந்தவர்களின் கட்டடங்கள் சுமார் 30 க்கு மேல் கிடைத்துள்ளன. இங்குக் கிடைத்த கல்வெட்டுகளின்மூலம் கீழ்க்காணும் பிரிவுகள் இருந்தன என்பது தெரியவருகிறது. அவை 1) அபர-மகாரினாசியா (Apara-Maharinashia), 2) பகுசுருட்டியா (Bahusrutiya), 3) மகிசாசகா (Mahisasaka), 4) மகாவிகார-வாசின் (Mahavihara-vasin) ஆகியன. இவற்றில் சில உட்பிரிவுகளும் இருந்தன. இக் கட்டடங்கள் வீர புருசதத்தாவின் காலத்தில் எடுக்கப்பட்டவைகள். மகாசைத்தியா இங்குக் கிடைத்தவற்றுள் காலத்தால் மிகவும் முற்பட்டது. இது வசிசுதபுத்திர சாமுண்டமூலாவின் சகோதரியினால் கட்டப்பட்டது. சக்கரம் போன்ற அமைப்புடைய இந்தத் தூபியின் விட்டம் 27.5 மீ. நான்கு

பக்கங்களில் ஆயகத் தூண்களும் (Ayaka Pillars) காணப்படுகின்றன. இத்துடன் நான்கு பகுதிகளைக் கொண்ட சத்திரம் (Monastery) ஒன்றும் அருகில் கட்டப்பட்டுள்ளது. ஆனால் இது பிற்காலத்தில் கட்டுப்பட்டது. இது செங்கற்களால் கட்டப்பட்டுள்ளது. இங்குள்ள ஒரு விகாரத்திற்குச் சிகால விகாரம் (Shihala Vihara) என்று பெயரிடப்பட்டுள்ளது. இலங்கையிலிருந்து வருகின்ற புத்த பிக்குகள் தங்குவதற்காக இது எடுக்கப்பட்டிருக்கிறது. போதி மரத்துடன் கூடிய கோயில் ஒன்றும் உள்ளது. அபர மகாவைனாசியா சத்திரத்தில் சாமுண்டமூலாவின் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. இதன்முன் எட்டு ஆரங்களைக் கொண்ட தூபி ஒன்றும், அதைப் போன்ற இரண்டு சிறிய தூபிகளும் காணப்படுகின்றன.

உருத்திரபுருடதத்தாவின் 11-ஆம் ஆட்சியாண்டில் கட்டப்பட்ட சத்திரம் நாகார்ச்சுனகொண்டாவில் கிடைத்தவற்றுள் காலத்தால் பிற்பட்டது. இதில் இரண்டு முறைகள் கையாளப்பட்டுள்ளன. நான்கு பகுதிகளில் கட்டப்பட்டுள்ள சத்திரத்தின் உட்பகுதியில் வட்டமான தூபியின் உட்பகுதி புத்தரின் சிலையுள்ளதாக எழுப்பப்பட்டுள்ளது. இதன் முன் உருத்திர புருடதத்தாவின் தாயின் நினைவாக ஒரு நினைவுத்தூண் எடுக்கப்பட்டுள்ளது. புத்த பிக்குகள் இங்குள்ள ஆரிடா (Harita) என்ற கோயிலுக்குத் தானம் கொடுத்தனர் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. ஆரிடா என்ற பெண் தெய்வத்தின் கோயில், பழுதடைந்துள்ள சதுரமான கோயிலாக இருக்கக் கூடும். இங்குச் சிதைந்த பெண் தெய்வத்தின் உருவம் ஒன்று உள்ளது. இக் கோயிலின் மண்டபமும் கருவறையும் இட்சுவாகு வமிசத்தாரின் கட்டடக் கலையை ஒத்துக் காணப்படுகின்றன. நாகார்ச்சுன கொண்டாவில் பொதுவாகப் புத்த தூபிகளும் பிக்குகள் தங்குவதற்கு விகாரங்களும் எழுப்பப் பட்டுள்ளன. இத்தகைய முறையே, இந்தியா முழுவதும் பின்பற்றப்பட்டுள்ளது.

நாகார்ச்சுனகொண்டா அகழாய்வில் கிடைத்த தொல்பொருள்கள் மற்றும் இப்பகுதியில் கிடைத்த முக்கியமான தொல்பொருள்கள் ஆகியவற்றைச் சேகரித்து மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறையினர் அருங்காட்சியகம் ஒன்றை அமைத்துள்ளனர். இங்கு மணிகள், உரோமானியக் காசுகள், விசயநகரக் காசுகள், சாதகச் சிற்பங்கள் போன்றவை குறிப்பிடத்தக்க பொருள்களாக உள்ளன. தொல்பழங்காலப் பிரிவில் கற்கால மக்களின் கல்லாயுதங்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. புத்தரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுகின்ற சிற்பங்களும் கார்த்திகேயன், அரிகரன் ஆகியோர் சிற்பங்களும் உள்ளன. இட்சுவாகு, கசபதி ஆகிய வமிசத்தாரின் கல்வெட்டுகள் சமசுகிருதம், தெலுங்கு ஆகிய மொழிகளில் கல்வெட்டுப் பிரிவில் சேகரிக்கப்பட்டுள்ளன. அகழாய்வு செய்யப்பட்ட பகுதிகளின் சில மாதிரி அமைப்புகள், புதிய கற்காலம், பெருங்கற்காலம் ஆகியவற்றின் ஈமக்குழிகள், மகா தூபி, கோயில்கள் ஆகியன புதுப்பித்துக் கட்டப்பட்டுள்ளன. சருவதேவகோயில், புட்ப பத்தரசாமி கோயில் இரண்டும் புதுப்பித்துக் கட்டப் பட்டுள்ளன. தி.சு.

**துணை நூல்:**

Longhuts A. H., The Buddhist Antiquities of Nagarjunakonda, Madras Presidency, Archaeological Survey of India, Calcutta, 1938.

*நாகார்ச்சுனர்*: இவர் கி.பி. 2-ஆம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் இந்தியாவில் புகழ்பெற்ற பௌத்த சமய தத்துவ ஞானியாக விளங்கினார். ஆந்திரப் பிரதேசத்தை ஆண்ட சாதவாகன வமிசத்தைச் சேர்ந்த கௌதமிபுத்ர சதகர்ணி (கி.பி. 166-196) என்ற மன்னருக்கு நாகார்ச்சுனர் சமகாலத்தவராகவும் நண்பராகவும் இருந்தார். இவர் அக்காலத்தில் வாழ்ந்த தத்துவ ஞானிகளுள் தலை சிறந்தவராகவும், ஒப்பற்ற பேரறிஞராகவும் உயர்ந்த கவிஞராகவும் திகழ்ந்தார். நாகார்ச்சுனர் தென்னிந்தியாவில் அந்தணர் குலத்தில் தோன்றினார் என்றும், பௌத்த மறையான திரிபிடகம் என்ற நூல் முழுவதையும் 90 நாள்களில் பயின்றார் என்றும் அறிப்படுகிறது. நாகார்ச்சுனர் மகாயான சூத்திரத்தை இமயமலையில் வயது முதிர்ந்த பௌத்த பிக்கு ஒருவரிடம் கற்றார்; இருப்பினும் தமது வாழ்க்கையின் பெரும் பகுதியைத் தென்னிந்தியாவில் ஆந்திரத்தில் உள்ள சிரீ சைலத்தில் கழித்தார்; அந்த இடத்தைப் பௌத்த சமயத்தைப் பரப்புவதற்கு ஏற்ற இடமாக அமைத்துக் கொண்டார். இவர் நாலந்தா நகரத்திலும் வாழ்ந்தார் என்று திபெத்து நூல்கள் கூறுகின்றன.

இந்தியாவிற்கு வந்திருந்த சீனப் பேரறிஞர் யுவான்சுவாங்கு நாகார்ச்சுனரைப் பற்றித் தம் பயண நூலில் விரிவாகக் கூறியுள்ளார். நாகார்ச்சுனர் 'உலகத்திற்கு ஒளியூட்டிய நான்கு கதிரவர்களுள் ஒருவர்' என்று அவர் குறிப்பிடுகிறார். சா-டோ-பா-ஆ (சாதவாகனர்) என்ற அரசன் நாகார்ச்சுனரிடத்தில் மிகுந்த மதிப்பு வைத்திருந்தான் என்றும் கூறுகிறார். சா-டோ-பா-ஆ என்றால் 'சரியான வழியில் செல்பவன்' (இன் செங்கு) என்பது பொருள். இந்த 'இன் செங்கு' மன்னன் பல நூற்றாண்டுகள் வாழ்வதற்கு நாகார்ச்சுனர் காரணமாய் இருந்தார்.

நாகார்ச்சுனர் பல நூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் தலைசிறந்தது 'மாத்யமிநகாரிகா' என்ற நூலாகும். இது 400 பாடல்களைக் கொண்ட பெரு நூல். இதில் நாகார்ச்சுனர் தம் 'மாத்தியமிகத்' (சூனியவாதம்) தத்துவத்தை விளக்குகின்றார். இவருடைய பேரறிவாற்றலைக் காட்ட இந்நூல் ஒன்றே போதும். 'சுரிலேகா' (நண்பருக்குக் கடிதம்) என்ற நூலும் குறிப்பிடத்தக்கதாகும். மேலும் 'காகரிகம்' என்ற நூல் ஒன்றினையும் எழுதினார். நாகார்ச்சுனரின் பேராற்றலைப்பாராட்டிஇவரைப்'பிற்காலப் பௌத்தத்தின் அதிசயங்களில் ஒன்று' என்று வாட்டர்சு என்ற அறிஞர் வியந்துள்ளார். சி.மு.

**துணை நூல்கள்:**

**Sathianathaier**, R., Politied and Cultural History of India, Vol. II, S. Viswanathan (p) Ltd., Madras, 1980.

**Srinivasachari**, C.S., & **Ramaswami**, M.S., A History of India, Vol. I. Srinivasan, Varadachari & Co., Madras, 1955.

**நாகார்ச்சுனா பல்கலைக் கழகம்** ஆந்திரப் பிரதேசத்தில் குண்டூர் மாவட்டத்தில் 1976-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இப்பல்கலைக் கழகம் குண்டூர், விசயவாடா நெடுஞ்சாலையிலுள்ள நாகார்ச்சுனா நகரில் அமைந்துள்ளது. நாகார்ச்சுனா பல்கலைக் கழகம் (Nagarjuna University) கற்பித்தல், இணைப்புரிமை (Affiliation) ஆகிய இரண்டு பணிகளை முதன்மையாகக் கொண்டுள்ளது. இதன் ஆளுகை (Jurisdiction) கிருட்டிணா, குண்டூர், பிரகாசம் முதலான மாவட்டங்கள் வரை பரவியுள்ளது. பரந்த ஆளுகையைக் கொண்டுள்ள இப்பல்கலைக் கழகம் மேற்கூறிய மூன்று மாவட்டங்களிலும் ஏறக்குறைய 104 இணைப்புரிமை பெற்ற கல்லூரிகளைக் கொண்டுள்ளது.

இப் பல்கலைக்கழகத்தில் பல்வேறு புலங்களும் அதன்கண் பல துறைகளும் செயற்படுகின்றன. இங்குள்ள புலங்கள், ஆயுர்வேதம், வணிகவியல், கல்வியியல், கவின்கலை (Fine arts), வாழ்வியல் (Humanities), சமுதாய அறிவியல், சட்டம், கீழ்த்திசை மொழிகள் பயிலுதல் (Oriental learning), இயற்கை அறிவியல், மருத்துவம், இயற்பியல்சார் அறிவியல் (Physical Science), பொறியியல் ஆகியன.

இப்புலங்களின் கீழ்ப் பல்வேறு துறைகள் செயற்படுகின்றன. புகுமுகப் படிப்பினை (PUC) இப்பல்கலைக்கழகம் நீக்கிவிட்டதால் இளம் பட்டப் படிப்பு முதல் மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர். ஆங்கிலம், தெலுங்கு கீழ்த்திசை மொழிகள், வணிகவியல், பொருளியல், சட்டம், மார்க்சியத் தத்துவம், கணிதவியல், அரசியல், பொது மேலாண்மை, வரலாறு, தொல்லியல், புத்த தத்துவம், விலங்கியல், தாவரவியல், வேதியியல், மண்ணியல், இயற்பியல், புள்ளியியல், மருத்துவம், பொறியியல் முதலான பாடங்களை மாணவர்கள் இளநிலைப் பட்டப் படிப்பிலும், முதுநிலைப் பட்டப் படிப்பிலும் பயிலலாம்.

இளநிலைப் பட்டப் படிப்பில் மாணவர்கள் தெலுங்கு, ஆங்கிலம், ஆகியவற்றைப் பயிற்றுமொழியாகக் கொள்ள வசதியுண்டு. முதுநிலைப் பட்டப் படிப்பில் ஆங்கிலம் மட்டுமே பயிற்று மொழி. இருப்பினும் அரசியல், பொது மேலாண்மை ஆகிய பாடங்களைத் தெலுங்கில் கற்க வசதியுண்டு. அனைத்துப் பாடங்களிலும் ஆராய்ச்சிப் பட்டங்கள் பெறலாம்.

நாகார்ச்சுனா பல்கலைக் கழகம் குறுகிய காலப் பட்டயப் (Diploma) படிப்பினை வழங்குகிறது. இசை, கணிப்பொறிப் பொறியியல் (Computor Engineering), சட்டஞ்சார்ந்த மருத்துவம் (Forensic Medicine), பொது மேலாண்மை, பொது மருத்துவம், பொது அறுவை மருத்துவம், அருங்காட்சியகவியல் முதலான படிப்புகளில் பட்டயத் தகுதியினை இங்குப் பயின்று பெறலாம். அவ்வாறே கீழ்த்திசை மொழிகளைப் பயின்று அவற்றிற்கான பட்டங்களைப் (Oriental titles) பெறலாம். பத்தாம் வகுப்புமுடிந்தவுடன் இவ்வகைப்படிப்பில் மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப் படுகின்றனர்.

முழுநேரப் படிப்பு முறையில் சேர்ந்து பயில இயலாத மாணவர்கள் பட்டங்கள் பெறுவதற்கும் இப் பல்கலைக் கழகம் வாய்ப்பினை ஏற்படுத்தியுள்ளது. தனிப்பட்ட முறையில் பயின்று தேர்வு எழுதி இளநிலைப் பட்டத்தையும் முது நிலைப் பட்டத்தையும் பெறலாம். மாணவர்கள் விளையாட்டு, நாட்டு நலப்பணித் திட்டம், தேசிய மாணவர் படை முதலானவற்றில் பங்கு பெறும் முறையில் அனைத்து வசதிகளையும் இப்பல்கலைக் கழகம் கொண்டுள்ளது. சிறந்த நூலகமொன்றும் தங்கிப் படிக்க விடுதியும் இங்கு உள்ளது. சீ,ப.

**நாகாலாந்து**: இந்தியாவின் மாநிலங்களுள் ஒன்று நாகாலாந்து. நாட்டின் வடகிழக்கு எல்லையில் இது அமைந்துள்ளது. இப்பகுதியில் வாழும் நாகர்கள் என்ற மலைசாதி மக்களின் விருப்பத்திற்கு இணங்க 1963-ஆம் ஆண்டு இம்மாநிலம் புதிதாக அமைக்கப்பட்டது. வடக்கிலும் மேற்கிலும் அசாம் மாநிலமும், வடகிழக்கில் அருணாசலபிரதேசமும் கிழக்கில் பர்மா நாடும், தெற்கில் மணிப்புரி மாநிலமும் இதன் எல்லைகளாக அமைந்துள்ளன. இம்

மாநிலத்தின் பரப்பளவு 16,527 ச.கி. மக்கள் தொகை 7,73,281. இம்மாநிலத்தின் தலைநகர் கோகிமா (Kohima). இம்மாநிலத்தில் ஏழு மாவட்டங்கள் அடங்கியுள்ளன. அவை 1) கோகிமா, 2) மோகோகசுங்கு, 3) மோன், 4) பெக்கு 5) யோன்சாங்கு, 6) வோகா, 7) சுனே போடோ. இந்த ஏழு மாவட்டங்களும் அந்தந்த மாவட்டங்களுடைய தலைநகர்களின் பெயர்களையே கொண்டுள்ளன.




நாகாலாந்து

கோகிமா மாவட்டம் 4,041 ச.கி.மீ பரப்புடையது. இங்கு 2,50,105 பேர் வசிக்கிறார்கள். இம்மாவட்டத்தின் தலைமையிடம் கோகிமா (Kohima). இதுவே நாகாலாந்து (Nagaland) மாநிலத்தின் தலைநகரும் ஆகும். அடுத்துமோகோசுங்கு மாவட்டம் 1,615 ச.கி.மீ. பரப்பும் 1,04,193 மக்கள் தொகையும் கொண்டதாகும். இம்மாவட்டத்தின் தலைமையிடம் மோகோசுங்கு என்னும் நகரம் ஆகும். மோன் என்னும் மாவட்டம் 1786 ச.கி.மீ. பரப்பும் 78,938 மக்கள் தொகையும் உடையது. பெக்கு மாவட்டம் 2,026 ச.கி.மீ. பரப்பளவும், 70,618 மக்கள் தொகையும், யோன்சாங்கு மாவட்டம் 4,228 ச.கி.மீ. பரப்பும், 1,52,332 மக்கள் தொகையும், வோகா மாவட்டம் 1,628 ச.கி.மீ. பரப்பும், 57,583 மக்கள் தொகையும், சுதொடோ மாவட்டம் 1,255 ச.கி.மீ. பரப்பும் 61,161 மக்கள் தொகையும் கொண்டவை.

நாகாலாந்து மக்கள் ஆங்கில ஆட்சியின் கீழ் வந்தது, கி.பி.1866-ஆம் ஆண்டில் ஆகும். அந்த ஆண்டிலேயே வடகிழக்கு எல்லைப்புற மாவட்டம் என்ற தனி மாவட்டம் உருவாக்கப்பட்டது. நாகர் தலைவர்களில் ஒரு பிரிவினர் சுதந்திரம் பெற சில ஆண்டுகளாக விரும்பினர். அதனால் நாகர்கள் பல கிளர்ச்சிகளைச் செய்தனர். அக்கிளர்ச்சிகளின் முடிவில் ஏற்பட்ட சமாதான உடன்படிக்கையின்படி ஒரு புதிய மாநிலம் அமைக்க முடிவு செய்யப்பட்டது.

இதன் எல்லைகள் 1962-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் மத்திய அரசினால் நிருணயிக்கப்பட்டன. அதன்படி பண்டைய நாகமலைகள் மாவட்டமும், முந்தைய வடகிழக்கு எல்லைப்புற மாநிலத்தின் யோன்சாங்குப் பிரிவும் இதில் அடங்கும். இப்பகுதிகள் முதலில் குடியரசுத் தலைவரின் ஆட்சியில் அசாம் மாநில ஆளுநரால் ஆளப்பட்டு வந்தது. இதன் பெயர் 1961-ஆம் ஆண்டு சனவரித் திங்களில் மாற்றியமைக்கப் பெற்று இந்திய இணைப்பு(Indian Union) மாநிலங்களில் ஒன்றாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. எனினும் இது, 1963-ஆம் ஆண்டுத் திசம்பர் திங்கள் 1-ஆம் நாள் அதிகார முறையில் தொடங்கப்பெற்றது. அதன் பின் இது முழு உரிமை பெற்ற பதினாறாம் மாநிலமாக விளங்குகிறது. நாகர்களின் தேசிய கழகம் (Nagas Nationalist Organisation) 1964-ஆம் ஆண்டு நடைபெற்ற முதல் சட்டசபைத் தேர்தலில் வெற்றி பெற்று அமைச்சரவையை அமைத்தது. இரண்டாம் சட்டசபைத் தேர்தல் 1969-ஆம் ஆண்டு நடைபெற்றது. இதில் மேற்கூறிய கழகத்தைச் சேர்ந்த கோகிசே சேமர் என்பவர் அமைச்சரவை அமைத்தார். நாகாலாந்தில் பல கட்சிகள் இருந்த போதிலும், கோகிசே சேமாவே மீண்டும் 1986-ஆம் ஆண்டு அக்டோபர் முதல், முதல் மந்திரியாக இருந்துவருகிறார். நாகாலாந்தில் ஒரு சபை கொண்ட சட்டசபை அமைப்புமுறை (Unicameral) நடைமுறையில் உள்ளது. மேலும், நாகாலாந்து கௌகாத்தி (Gauhati) உயர்நீதிமன்ற எல்லைக்குள் அடங்கியுள்ளது.

இம்மாநிலம் மலைப்பகுதியில் உள்ளது. இங்குக் காடுகள் அடர்ந்து வளர்ந்துள்ளன. இங்குள்ள காடுகளிலிருந்து மூங்கில், பிரம்பு, கட்டட வேலைகளுக்குத் தேவைப்படும் பலவகையான மரவகைகள் முதலியன கிடைக்கின்றன. இம்மாநிலத்தில் 17.56% பரப்பளவு உள்ள நிலத்தில் காடுகள் உள்ளன. இங்குள்ள நாக மலையில் தீசாங்கு (Disang), தீகிங்கு (Dihing) என்ற ஆறுகள் பாய்கின்றன. இங்கு இலை உதிராக் காடுகளும், காட்டாறுகளும் நிறைந்து காணப்படுகின்றன. நாகர் என்னும் சொல் 'மலை' என்று பொருள்படும்.

நாகாலாந்தில் சிறிய நீர் பாசனத் திட்டங்கள் நடைமுறையில் உள்ளன. மலையிலிருந்து ஓடிவரும் சிறிய ஓடை நீரினைத் தேக்கி உழவுத் தொழிலுக்குப் பயன்படுத்துகின்றனர். இது முக்கியமாக நெல் பயிரிடுவதற்குப் பயன்படுகிறது.

நாகாலாந்து மக்கள் பலவகையான தொழில்களைச் செய்கின்றனர். முக்கியதொழில் வேளாண்மை. மீன்பிடித்தல், கால்நடை வளர்த்தல், வேட்டையாடுதல் ஆகியவை துணைத் தொழில்களாகும். மேலும் நெசவுத் தொழில், சாய மேற்றுதல், மண்பாண்டம் செய்தல், கூடை முடைதல், மரச் செதுக்குவேலை முதலிய குடிசைத் தொழில்களில் இவர்கள் திறமையுள்ளவர்கள். இவ்வர்கள் வேட்டையாடுவதில் வல்லவர்கள். மீன் பிடிக்கச் செல்லும்போது இவர்கள் ஒருவகைப் போதைப் பொருள்களைப் பயன்படுத்துவது வழக்கம்.

நாகாலாந்து மக்களிடம் பலவிதமான உழவுக் கருவிகள் உள்ளன. அன்றியும் அருமையான வேலைப்பாடுகளையுடைய வேல், வில், ஒரே மரத்தில் குடைந்த பெரிய முழவு போன்றவற்றையும் பயன்படுத்துகின்றனர். நாகாலாந்தில் உள்ள திமாப்பூரில் சர்க்கரை ஆலை ஒன்று இயங்கி வருகிறது. அன்றியும் 'நாகாலாந்து காட்டு உற்பத்திக் கழகம்' (Nagaland Forest Products Ltd.,) என்ற கழகம் ஒன்று ஏற்படுத்தப்பட்டுக் காட்டிலிருந்து கிடைக்கும் மூலப் பொருள்களிலிருந்து பலவகையான பொருள்கள் தயாரிக்கப்படுகின்றன. இந்நிலையம் திசிட்டு (Tijit) என்ற ஊரில் உள்ளது. மேலும், திமாப்பூரில் உள்ள காகித ஆலையும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். கைத்தறி நெசவும், பட்டுப்புழு வளர்ப்பும் இங்கு நடைபெறும் முக்கிய குடிசைத் தொழில்களாகும். மேலும், இம்மாநிலத்தில் ஒரு மரப்பலகைத்(Plywood) தொழிற்சாலையும் உள்ளது. இதுவன்றி 32,00க்கும் மேற்பட்ட சிறு தொழில்கள் நாட்டின் பல பாகங்களிலும் நடைபெறுகின்றன. இவை தவிரப் பதினைந்து 'சிந்தர நெல்லா' புல்வெளிப் பண்ணைகள் (Cintronella Grass Farms) காணப்படுகின்றன. மேலும், இம்மாநிலத்தில் களிமண் (பீங்கான்), நிலக்கரி, கண்ணாடி, சுண்ணாம்பு, மணல் போன்ற மூலத் தாதுப் பொருள்களும் கிடைக்கின்றன.

நாகாலாந்து மக்கள் இயற்கைக்கு மீறிய சக்திகளில் உண்மையாகவே உறுதியான நம்பிக்கை உடையவர்கள். தேவதைகளைப் பற்றிய இவர்கள் கருத்துகள் தெளிவாக விளங்கவில்லை; தெய்வம் எங்கும் உள்ளது என்ற கொள்கை உடையவர்கள். இவர்கள் உருவ வழிபாடு செய்வதில்லை. இறந்தோர் ஆன்மாக்கள் உயிருடன் இருந்த வாழ்வுடன் தொடர்புடையன என்று நம்புகிறார்கள். மரணம் என்பது இனிமை தரும் வாழ்வைப் பாழாக்கும் ஒன்று என்று கருதுகிறார்கள். நாகாலாந்து மக்களின் அன்றாட வாழ்க்கை பல தடைக்கட்டுகள் (Taboos) நிறைந்ததாகும்.

நாகாலாந்து மக்கள் இசை, நடனம், கதைகள் ஆகியவற்றில் மிகுந்த விருப்பம் உடையவர்கள். நாகர்களின் இசையும் நடனமும் தனிச் சிறப்பு வாய்ந்தவை. நாகாலாந்து மக்கள் வாழ்க்கையை நன்கு சுவைக்கத் தெரிந்தவர்கள். இவர்கள் பேசும் மொழிகள் பல வேறாக உள்ளன. இவை திபெத்தோ-சீன மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்பது கிரியர்சன் (Grierson) என்ற அறிஞரின் கருத்தாகும். இங்குப் பேசப்படும் முக்கிய மொழிகள் ஆவோ, கோன்யாக்கு, அங்காமி, சேமம், உலோதா ஆகும்.

நாகாலாந்தின் முக்கியமான இரு நகரங்கள் கோகிமாவும் திமாப்பூரும் ஆகும். இதில் திமாப்பூர் நாகாலாந்தின் நுழை வாயிலாக உள்ளது. இது மலைமீது இயற்கைச் சூழ்நிலையில் அமைந்துள்ள அழகிய நகரம். இந்நகரத்திற்குக் கல்கத்தாவிலிருந்து விமானம் மூலமும், அசாமிலுள்ள சோர்கட்டு என்ற ஊரிலிருந்து சாலை வழியாகவும் செல்லலாம். நாகாலாந்து முழுவதும், பழங்குடி மக்களால் நிறைந்திருந்த போதிலும், வாணிகத்தால் செல்வ வளம் கொழிக்கும் பகுதியாக உள்ளது. திமாப்பூர் நகரைச் சுற்றிலும் கோயில்களின் அழிவுகளையும் பிற நினைவுச் சின்னங்களையும் காணலாம். திமாப்பூரில் உல்லாசப் பயணிகள் தங்கும் விடுதி ஒன்றும் உள்ளது.

கோகிமா என்னும் நகரம் திமாப்பூரிலிருந்து எழுபத்தைந்து கிலோமீட்டர் தூரத்திலும் கடல் மட்டத்திலிருந்து 1200 மீட்டர் உயரத்திலும் அமைந்துள்ளது. இரண்டாம் உலகப் போரின் போது இந்நகரம் உலக மக்களின் கவனத்தை ஈர்த்தது. அப்போரில் உயிர் துறந்த வீரர்களுக்காக எழுப்பப்பட்டுள்ள நினைவுச் சின்னம் கண்களுக்கு விருந்தாகவும், வீரத்தினை ஊட்டும் சிந்தனைக்கு வித்தாகவும் உள்ளது. சி.மு.

**நாகு காளிதாசு** (கி.பி.1892-1966) ஒரு சிறந்த கல்வியாளரும் இந்தியவியல் வல்லுநரும் (Indologist) ஆவார். ஆற்றல்மிகு எழுத்தாளரான இவர், பதினைந்திற்கும் மேற்பட்ட நூல்களை எழுதிப் புகழ்பெற்றுள்ளார். பல்வேறு கல்விக் கழகங்களில் உறுப்பினராக இருந்த காளிதாசு பன்மொழிப் புலவராகவும் விளங்கினார். அரசியலிலும் இவருக்குப் பங்குண்டு. கல்வி வளர்ச்சியில் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட இந்தியர்களுள் இவரும் ஒருவர்.

நாகுகாளிதாசு (Nag Kalidas) கி.பி. 1892-இல் பிறந்து கல்கத்தாவில் உள்ள தாகூர்ப் பல்கலைக் கழகத்தில் முதுகலைப் பட்டம் பெற்றார்; மாணவப் பருவத்திலேயே பொது அறிவு நூல்கள் பலவற்றை ஆர்வத்துடன் கற்றார்; பேச்சுக் கலையிலும் ஆர்வம் கொண்டிருந்தார்; மேல்படிப்பினை மேற்கொள்ளப் பாரிசு சென்று, அப்பல்கலைக் கழகத்தில் உயர்

ஆய்வுப்பட்டம் (D.Litt.) பட்டம் பெற்று இந்தியா திரும்பினார். கல்வியில் பேரார்வம் கொண்ட இவர் 1915-ஆம் ஆண்டில் கல்கத்தா இசுகாட்டிசு திருச் சபைக் கல்லூரியில் (Scottish Church College) வரலாற்றுப் பேராசிரியராக அமர்த்தப்பட்டார். இவர் 1919-ஆம் ஆண்டு வரையில் இக்கல்லூரியில் பணியாற்றியபின், 1919-1920இல் சிரீலங்காவில் உள்ள மகிந்திரா கல்லூரியில் முதல்வராகப் பொறுப்பேற் றார். இக்கால கட்டத்தில் இவர் பல ஆய்வுக் கட்டு ரைகளைத் தரமான இதழ்களில் வெளியிட்டார். வங்காளத்தில் 1942-முதல் 1946 முடிய மேன்மை பொருந்திய ஆசியக் கழகத்தின் (Royal Asiatic Society) பொதுச் செயலாளராகப் பணிபுரிந்து, ஆய்வுப் பணியில் பெரும்பங்கு ஏற்றார். இந்தியப் பாராளு மன்ற மேல்சபையின் (Raiya Sabha) அங்கத்தின ராக 1952-இல் நியமனம் பெற்றார். பிரெஞ்சுக் கழகத்தின் (French Academy) அதிகாரியாகவும், கல்கத்தாவிலுள்ள ஈரான் கழகத்தின் (Iran Society, Calcutta) தலைவராகவும், தாகூர் நூற்றாண்டுவிழாக் குழுத் தலைவராகவும், மக்களாட்சிக் கட்சியின் (Democratic Party) அங்கத்தினராகவும் இவர் சீரிய பணி யாற்றியுள்ளார்.

இவரது இலக்கியப் பணி பாராட்டுக்குரியது. தாகூரின் நூல்களை இவர் பிரெஞ்சு மொழியில் பெயர்த்தார். அயல்நாட்டுக் கலையும் தொல்லிய லும், இந்தியாவும் பசிபிக்கு உலகும், புதிய ஆசியா, இந்தியாவும் மத்திய கிழக்கு நாடுகளும், ஆசியா வின் கண்டுபிடிப்பு, தால்சுடாயும் காந்தியும் முதலான நூல்களை இவர் பதிப்பித்துள்ளார். பிரான்சு நாட்டின் நோபல்பரிசு பெற்ற கவி உரோமன் ரோலண் டுடன் இணைந்து காந்தியடிகள், இராமகிருட்டிணர், விவேகானந்தர் முதலானோரைப் பற்றி ஆய்வுகள் மேற்கொண்டுள்ளார். சர். டபில்யூ சோன்சின் (Sir W Jones) இருநூறாம் மலரையும் இவர் பதிப்பித் தார். போற்றத்தக்க கல்வியாளராகவும் எழுத்தா ளராகவும் விளங்கிய நாகு காளிதாசு 1966-ஆம் ஆண்டில் மண்ணுலக வாழ்வை நீத்தார். ம.இ.

**நாகூர்**: தமிழ்நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத் தில் உள்ள ஓர் இசுலாமியப் புனிததலம். நகராட்சி அமைப்பைப் பெற்றுள்ள நாகூர் கடலோரத்தில் நாகப்பட்டினத்திலிருந்து ஏறத்தாழ 5 கி.மீ. தொலை வில் உள்ளது. இதன் வரலாறு கி.பி. 1758-இலிருந்து நன்கு அறியப்படுகிறது. கி.பி.18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிரெஞ்சுக்காரர் தென்னிந்தியாவில் தமது ஆதிக்கத்தைப் பரப்ப முயன்றபோது பிரான் சுப்படைத்தலைவன் இலாலி (Lally) நாகூர் வழியா கச் சென்றான். அப்போது இப்பகுதியும் தாக்கப் பெற்றது. நாகூரில் கொள்ளைகள் நிகழ்ந்தன. பிறகு தஞ்சாவூர் மன்னன், தனது ஆட்சிக்குட்பட்டிருந்த நாகூரைத் தச்சுக்காரர்களுக்கு அன்பளிப்பாக வழங்கி னான். தஞ்சாவூர், ஆர்க்காட்டு நவாபின் வசமாகிய பிறகு, நவாபு, நாகூரை மீண்டும் தான் பெற விரும்பி, ஆங்கிலேயரின் உதவியை நாடினார். ஆனால் ஆங்கிலேயர், நாகூர்ப் பகுதியைத் தச்சுக் காரரிட மிருந்து பெற்றுக் கொண்டு, அதைத் தமது ஆட்சிக்கு உட்படுத்திக் கொண்டனர். 277 கிராமங்கள் அடங் கிய நாகூர்க்குடியேற்றம் என்ற நாகூர்ப் பகுதி ஆங்கி லேயரின் வசம் கி.பி.1781 வரை இருந்தது. இதற் கிடையில் மைசூரின் ஐதர்அலி, கி.பி.1781-இல் தஞ் சாவூர்ப் பகுதியைக் கைப்பற்றிக் கொள்ளவே, தச்சுக் காரர்கள், ஆங்கிலேயருக்கு எதிராக ஐதருடன் கூட்டு றவு ஒன்றை ஏற்படுத்திக் கொண்டனர். முன்னர்த் தம் மிடமிருந்து கைப்பற்றப்பட்ட நாகூர்க் குடியேற்றப் பகுதியை ஐதரின் உதவியால், மீண்டும் தச்சுக்காரர் பெற்றனர். இந்த மாற்றத்தைக் கண்டு சீற்றங் கொண்ட ஆங்கிலத் தலைவர் சர், எக்டர் மன்ரோ தச்சுக்காரருடன் போரிட்டு, நாகூர்ப் பகுதியை மீட் டுக் கொண்டார். நாகூர் சிறிது காலம் சிறப்பு மிக்க ஒரு துறைமுகமாக விளங்கியது. பிறகு 20 -ஆம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் அத்துறை முகம் அதன் சிறப்பை இழந்தது. அதற்கு அண்மை யில் உள்ள நாகப்பட்டினம் சிறப்புற்றோங்கியது.

நாகூரில் சாகுல் அமீது என்ற ஓர் இசுலாமியப் பெரியார் சமாதி அடைந்ததால், சமாதி 'அடைந்த இடத்தில் தர்க்கா ஒன்று எழுப்பப் பெற்றது. இந்தி யாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், மலேசியா, சிங்கப்பூர், தென்கிழக்கு ஆசிய நாடுகள் முதலியவற்றி லிருந்தும் இங்கு இலட்சக்கணக்கான மக்கள் ஆண்டு தோறும் நடக்கும் கந்தூரித் திருவிழாவில் பங்கு கொள்கின்றனர். இங்குச்சமாதி அடைந்த மகானின் பெயர் மீரான் சாகிபு; காதர் வலி என்றும் சொல் லப் பெறுகிறார். மக்கள் நாகூர் ஆண்டவர் என்றும் இவரை அன்பாக அழைத்து வழிபடுகின்றனர். இவர் தமது வாழ்நாளில் பல அற்புதங்களைப் புரிந்தார் என்றும், இப்பொழுதும் பல அற்புதங்கள் நாகூரில் நிகழ்வனவாகவும் சிலர் நம்புகின்றனர். மீரான் சாகிபு இசுலாமிய சமயத்தைப் பரப்பிக்கொண்டு இராச புதனத்திலிருந்து வந்தவர். இவர் சமாதிக்குத் தஞ் சாவூர் மன்னர்களும் பொருளுதவி புரிந்துள்ளனர் அ.உ.

**நாகோயா** சப்பான் நாட்டில் உள்ள நகரம்; ஆன்சு (Honshu) தீவில் ஐசி (Ise) வளைகுடாவில் உள் ளது. இதன் மக்கள் தொகை 2,058,000 (1983). இது முக்கிய துறைமுகமாகவும் பெரிய தொழில் நகரமாக வும் போக்குவரத்து மையமாகவும் விளங்குகிறது. இரும்பு, எஃகுத் தொழில்கள் இங்கு முக்கியமானவை.

மேலும், ஆடை வகைகள், வானவூர்திக்குரிய கருவிகள், உந்து வண்டிகள், இரசாயனப் பொருள்கள், நெகிழிப் பொருள்கள்(Plastic goods)உரவகைகள் முதலியவை செய்யப்படுகின்றன. நேர்த்தியான மட்பாண்டங்களும் தயாரிக்கப்படுகின்றன. நாகொயாவில்(Nagoya)ஒன்பதுபல்கலைக் கழகங்கள் உள்ளன. வரலாற்றுப் புகழ்பெற்ற இரண்டு கோயில்கள் இங்கு உள. 1) அத்சுதா(Atsuta)கோயில் கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் நிறுவப்பெற்றது. இங்குப் பேரரசுக்குரிய புனித வாள் ஒன்று நீண்ட காலமாகவே வைத்துப் போற்றப் பட்டு வந்துள்ளது. 2) இகாசி ஓங்கான்சி(Higashi Hon ganji) என்னும் மற்றொரு கோயில் கி.பி. 1692-இல் -கட்டப்பட்டது. இயேசு(Ieyasu) மன்னன் கி.பி.1612 இல் கட்டிய ஒரு கோட்டை 1959-இல் புதுப்பிக்கப் பெற்றது. இன்றும் அது உள்ளது. தெ.பா.

*நாச்சன சோமனா*: நாச்சன சோமனாகி.பி. 1300-1380-ஆம் ஆண்டுகளில் வாழ்ந்த மிகச் சிறந்த தெலுங்குப் புலவர்களுள் ஒருவர். இவர் பல விருதுகள் பெற்றவர்.அவற்றுள் ஒன்று 'சகல பாசா பூசணம் என்பது.எனவே, இவர் பன்மொழிப் புலவராக இருக்கலாம் என்று தெரிகிறது.

சோமனா உத்தர அரிவமிசம் என்னும் 6 காண்டங்கள் அடங்கிய காப்பியம் இயற்றி உள்ளார். இங்கு அரி என்பதற்குக் கண்ணன் என்பது பொருள். ஆகவே, இந்தக் காப்பியம் கண்ணனின் கதைகளைச் சுவைப்படக் கூறுகின்றது. அரிவமிசம் மகாபாரதத்திற்குத் தொடர்நூல் என்று கூறலாம். உத்தர அரிவமிசத்தில் நரகாசுரனின் கதை, மக்கட் பேறுக்காகக் கண்ணன் கைலாயம் சென்று சிவபெருமானைக் கண்ட கதை, உசாவின் திருமணம் முதலிய சுவை மிக்க கதைகளைச் சோமனா அருமையாகக் கூறியுள்ளார். இக்கதைகளையே கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எர்ரணா என்பவரும் இயற்றியுள்ளார். சில திறனாய்வாளர்கள் எர்ரணாவைவிடச் சோமனா மிகவும் திறம்பட இயற்றியுள்ளார் எனக் கருதுவர்.

சோமனா தம் காப்பியத்தை எந்த அரசருக்கும் அளிக்கவில்லை. அவர் வழக்கில் இருக்கும் சொற்களைக் கையாண்டார். அவர் படைத்த பாத்திரங்கள் உயிருள்ள பாத்திரங்களாகத் திகழ்கின்றன. சுவையில்லாத கதையைச் சுவை மிகுந்த எழுத்தோவியமாகப் படைப்பதில் இவர் வல்லுனர்.எனவே சோமனாவின் உத்தர அரிவமிசம் இன்றைக்கும் விரும்பிப் படிக்கத் தக்க காப்பியமாக இருப்பதில் விந்தையில்லை. சி.ஆர்.ச.

*நாச்சியார்*: காண்க: ஆண்டாள்.

*நாச்சியார் திருமொழி*: திருமாலின் அன்பில் ஆழ்ந்து ஆழங்கால் கொண்ட ஆழ்வார்களுள் பெரியாழ்வார் என்ற விட்டுணு சித்தர் பெண்கொடியும், மல்லி நாடாண்ட மலர்க் கொடியும், ஆடிப்பூரத்தே அவதரித்த அணங்கும் ஆகிய அன்னையே ஆண்டாள் நாச்சியார் ஆவர். இவர் பாடிய தேனூறும் செந்தமிழ்த் தீஞ்சுவைப் பாசுரங்களே நாலாயிரத் திவ்விய பிரபந்தத்துள் 'நாச்சியார் திருமொழி' என்னும் பெயர் பெற்றுள்ளன.

இவர் அருளிய நாச்சியார் திருமொழி 'கண்ணனை இணக்கு' எனக் காமனைத் தொழும் பத்தாகவும் 'நாமமாயிரம்' என்ற பகுதியில் சிறுமியர் கண்ணனைத் 'தம் சிற்றில் சிதையேல்' என வேண்டும் பத்தாகவும்,கன்னியரோடுகண்ணன்விளையாடலமைந்த, 'தெள்ளியார் பலர்' பகுதியில் கூடல் குறிப்பாகவும் 'மன்னு பெரும்புகழ்'பத்தில் குயிற்பத்தாகவும்,'வாரண மாயிரம்' பகுதியில் கண்ணன் தன்னை மணஞ் செய்யக் கண்ட தூய நற்கனவைத் தோழிக்குரைக்கும் பத்தாகவும், 'கருப்பூரம் நாறுமோ' என்ற பகுதியில் பாஞ்சசன்னியத்தைப் பதுமநாப னொடுஞ் சுற்றமாக்கும் பத்தாகவும், 'விண்ணின் மேலாப்பு' பகுதி மேக விடு தூதாகவும், 'சிந்துரச் செம்பொடிப்' பகுதி திருமாலிருஞ் சோலை எம்பெருமானை வழிபடும் பத்தாகவும், 'கார்க்கோடல் பூக்காள்' என்ற பகுதி மாற் செய் வகையொடு மாற்றம் இயம்பல் பத்தாகவும், 'தாமுகக்கும்' என்ற பகுதி திருவரங்கத்துச் செல்வனைக் காமுறும் பத்தாகவும், 'மற்றிருந்தீர்' என்ற பகுதி இறைவன் இருந்துழி என்னைச் செலுத்துவீர் எனக்கோதை தமர்க்குக்கூறும் பத்தாகவும்,'கண்ணன்' என்னும் பகுதியில் அச்சுதன் அணிபொருட் கொண்டு அவலந்தணிமின் என வேண்டும் பத்தாகவும், 'பட்டி மேய்ந்து' என்ற பகுதியில் பிருந்தாவனத்தே பரந்தாமனைக் கண்ட பத்தாகவும் இவ்வனைத்துப் பகுதிகளையும் கொண்டு விளங்கும் பகுதியே யாகும். இவ்வனைத்துப் பகுதியும் 'நாச்சியார் திருமொழி' என்ற தலைப்பில் அடங்கும் பாசுரத் தொகுதிகளாகும். ஆண்டாள் நாச்சியார் பாடிய திருப்பாவை முப்பது பாசுரங்களும் இப்பெயரில் அடங்காது, 'திருப்பாவை என்ற பெயரில் தனியாகப் பகுக்கப் பட்டுள்ளது.

'பைம்பொழில் வாழ்குயில்காள், மயில்காள்! ஒண் கருவிளைகாள், வம்பக் களங் கனிகாள்! வண்ணப் பூவை நறுமலர்காள்! ஐம்பெரும் பாதகர்காள்! அணி மாலிருஞ் சோலை நின்ற, எம்பெருமானுடைய நிற முகங்களுக்கென் செய்வதே' என்ற பாசுரமும், 'நாளை வதுவைமணமென்று நாளிட்டுப் பாளை கமுகு பரிசுடைப் பந்தர்க்கீழ்' எனவும்,'மத்தளம் கொட்ட வரிச் சங்கம் நின்றூத முத்துடைத்தாமம் நிரை தாழ்ந்த பந்தர்க்கீழ்'எனவும் வரும் பாசுரமும்திருமணக்கோலத்தினைப் புனைந்து உரைகரும் அழகையும் திருமாலின் நிறத்தில் தன்னுளத்தினை ஒன்று படுத்திய உணர்

வையும் சிறப்புற வெளிப்படுத்தி நிற்கின்றன.
காண்க: கோதை, ஆண்டாள். கி.கோ.

**நாசர் (1918-1970)** எகிப்தியப் புரட்சித்தலைவர் அரசியல்வாதி. அரேபியரின் ஒற்றுமைக்காக உழைத்த கமால் அப்தெல் நாசர் (Gamal Abdel Nasser) 1918-இல் அலெக்சாண்டிரியா நகரில் (எகிப்து) ஓர் அஞ்சல் நிலைய அதிகாரியின் மகனாகத் தோன்றினார். பேனி (Beni) என்னும் சிறுநகரில் வளர்ந்த இவருக்கு இளமையிலேயே தம் எகிப்து நாடு ஆங்கிலேயரின் மேலாண்மையின் கீழ் இருப்பது வெறுக்கத்தக்கதாயிருந்தது. கெய்ரோ பள்ளியில் இவர் தமது உயர் நிலைக் கல்வியைப் பெற்றார். இவர் தமது இருபதாம் வயதில் இராணுவப் பள்ளியில் தமது பயிற்சியை முடித்துக் கொண்டு பட்டம் பெற்றார். அரேபியருக்கும் இசுரேலுக்குமிடையே 1948-இல் நடைபெற்ற முதற் போரில் நாசர் பங்குகொண்டு காயமடைந்தார். அப்போரில் எகிப்து பெரிதுந் தோல்வியடைந்ததைக் கண்ணுற்ற நாசர், தம் நண்பர்கள் சிலருடன் கூடி, எகிப்திய அரசியல் அமைப்பை மாற்றுவதில் மிகுந்த அக்கறை காட்டினார். இவர் படைப்பகுதித் துணைத் தலைவராக (Lieutenout Colonel) இருக்கும் போது தான், எகிப்தில் முடியாட்சி கவிழ்க்கப்பெற்றது (1952). அப்புரட்சியில் நாசருக்கும் முக்கிய பங்கு உண்டு. எகிப்தில் நீண்ட காலமாக நீடித்திருந்த முடியாட்சியைக் கவிழ்த்து விட்டு அதை ஒரு குடியரசாகச் செய்து, 1953-இல் தளபதி நாகூபு (Naguib) தம்மையே புதிய குடியரசுத் தலைவராக அறிவித்துக் கொண்டார். இந்த நாகூபை, 1954-இல் பதவி நீக்கம் செய்து விட்டு, நாசர் தம்மையே புதிய பிரதம அமைச்சராகவும், பிறகு 1956-இல் குடியரசுத் தலைவராகவும் அறிவித்துவிட்டுத் தம் வல்லாட்சியைத்



நாசர்



தொடங்கினார். அரசுக் கட்டுப்பாட்டின்கீழ் நடைபெற்ற மக்கள் தேர்தலில், 99.9 விழுக்காட்டினர் நாசரையே புதிய தலைவராக ஆதரித்தனர். எகிப்தில் புதிய அரசியலமைப்பு உருவாகியது. அதன்படி அந்நாடு குடியாட்சி முறையைக் கொண்ட ஓர் இசுலாமிய-அராபிய அரசு என்று அறிவிக்கப்பெற்றது.

தமக்கு முன்னரே தொடங்கப்பெற்றிருந்த பொருளாதாரச் சீர்திருத்த முறைகளை நாசர் மிகவும் விரிவுபடுத்திப் பல புதிய சமூக, பொருளாதாரச் சீர்திருத்தங்களை நிறைவேற்றினார். குறிப்பாக வறுமை நிலையில் வாடிக்கொண்டிருந்த பொதுமக்களை முன்னேறச் செய்ய வேண்டுமென்பதே நாசரின் திட்டம். இந்நோக்குடன் இவர், 250,000 நிலமற்ற குடியானவர்களுக்கு 750,000 ஏக்கர் நிலங்களை வழங்கத் திட்டங்கள் தீட்டினார். எகிப்தின் பெருகிவரும் மக்கள் தொகைக்கு, அச்சீர்திருத்தம் போதுமானதன்று என்பதை உணர்ந்த நாசர் வேறு சில திட்டங்களையும் வகுத்தார். அவற்றுள் முக்கியமானது, அசுவான் உயர் அணைத்திட்டம் (Aswan High Dam) காண்க: அசுவான் அணைக்கட்டு த.க. இம்மிகப்பெரிய அணைத்திட்டத்தின்படி நீல நதியின் தண்ணீர் தேக்கம் செய்யப்பட்டு, 2 மிலியன் ஏக்கர் நிலங்களுக்கு வேளாண்மை செய்யத் தண்ணீர் கிடைக்கும்படி ஏற்பாடு நடைபெற்றது. இதற்கு ஆகக் கூடிய செலவு 1.3 பிலியன் (Billion) தாலர்கள் (Dollars) என்று கணக்கிடப்பெற்றது. எகிப்து நாட்டினால் இவ்வளவு பெரிய தொகை கொடுக்க இயலாது என்பதை அறிந்த நாசர் உலக வங்கியிடமும் அமெரிக்கா, பிரிட்டன் அரசுகளிடமும் கடன் வாங்க முனைந்தார். மேலும் இவர் நாட்டின் படைக் கருவிகள் தேவைக்குச் செக்கோசலோவாகியா என்னும் பொதுவுடைமை நாட்டை அணுகினார். பொதுவுடைமை நாட்டின் உதவி, நாசருக்குக் கிடைப்பது கண்டு அஞ்சிய அமெரிக்கா, தனது எகிப்தியக் கடன் உதவித் திட்டத்தை உடனே நீக்கிக் கொணடது. பிரிட்டனும் அமெரிக்காவின் செயலைப் பின்பற்றியது. இதைக் கண்டு மனத் தளர்ச்சியடையாமல் நாசர், சூயசுக் கால்வாயைத் (Suez Canal) தேசிய மயமாக்கத் திட்டமிட்டார். பிற நாடுகளுக்கு அக்கால்வாய் மூடப்பட்டது. இது சம்பந்தமாகப் பேச்சு வார்த்தைகள் பயனற்றவாயின. சூயசுக் கால்வாயின் ஆதிக்கத்தில் பெரும்பங்கு பெற்றிருந்த இங்கிலாந்தும் பிரான்சும். இசுரேல் குடியரசு நாட்டை எகிப்தைத் தாக்குமாறு தூண்டிவிட்டன. இசுரேலியத் தாக்குதல் 1956, அக்டோபரில் தொடங்கியது. பிறகு பிரிட்டனும் பிரான்சும் இதில் தலையிடலாயின. உலகில் ஒரு நெருக்கடி நிலை உருவாகியது. ஓர் உலகப்போர் வரக்கூடுமோ என்ற பதற்ற நிலை உலக மக்க

ளிடையே ஏற்பட்டது. சோவியத்து உருசியா, எகிப்துக்குத் துணையாக எழும் என்று அறிவிப்பும் செய்யப்பட்டது. ஐ.நா. சபை, ஓர் இடைக்காலப் போர் நிறுத்தத்துக்கு ஏற்பாடு செய்தது. நாசரின் அரசு 1957 மார்ச்சு மாதத்தில், சூயசுக் கால்வாயை உலகுக்குத் திறந்துவிட்டது. ஆனால், எகிப்து நாட்டின் தேசிய கட்டுப்பாட்டு விதிகளுக்கு உட்பட்டுத்தான் பிறநாடுகள் அக்கால்வாயைப்பயன்படுத்தலாம் என்றும், இசுரேலுக்கு அக்கால்வாயைப் பயன்படுத்த உரிமை கிடையாது என்றும் நாசர் அறிவித்தார்.



சூயசுக் கால்வாய்

நாசர், எகிப்தில் அயலவர் மேலாண்மை செலுத்துவதை அடியோடு அழிப்பதையே தமது முக்கிய குறிக்கோளாகக் கொண்டிருந்தார். இவர் தம் நாட்டில் இருந்த அனைத்து ஆங்கிலேய, பிரெஞ்சிய வங்கிகளை 1956-இல் தேசியமயமாக்கினார். ஆங்கிலேய-பிரெஞ்சுப் படைகள் கால்வாய்ப் பகுதியினின்று விலகின.

சூயசுக் கால்வாய்த் தொடர்பான செய்திகள், நாசருக்கு அரேபிய உலகில் புகழைத் தந்தன. இவர் மீண்டும் மீண்டும் அரேபிய ஒற்றுமையை வற்புறுத்தி வந்ததன் விளைவாக, 1958-இல் சிரியாவும் எகிப்தும் ஒரு கூட்டரசு அமைத்துக் கொண்டன. அதற்கு ஐக்கிய அரேபியக் குடியரசு என்று பெயர். சிரியா, 1961-இல் அக்கூட்டரசினின்று விலகிக் கொண்ட பிறகும் பல ஆண்டுகள் வரை, எகிப்து அந்தப் பெயரையே கொண்டிருந்தது.

நாசரின், இசுரேலியப் பகைமை உணர்ச்சியின் விளைவாக, 1967-இல் மூன்றாம் அரேபிய-இசுரேலியப் போர் ஏற்பட்டு, அதில் எகிப்துதோல்வியுற்றது. நாசர் நாட்டின் தலைமைப் பதவியினின்று விலகி




னார். ஆயினும் மக்கள் ஆதரவு இவரை மீண்டும் நாட்டின் தலைவராகச் செய்தது. இவர், தம் நாட்டுப் படைகளை வலிமையுறச் செய்யச் சோவியத்து உருசியாவின் உதவியை நாடினார். நாசர், மாரடைப்புக் காரணமாக 1970-இல் மரணமடைந்ததால், இவ்விழப்பு எகிப்திலும் அரேபிய உலகிலும் ஒரு வெறுமையை (Void) உண்டாக்கியது. இவர் தமது நாடு முழுச்சுதந்திரம் அடைய வழிவகுத்தது போற்றற்குரிய செயலாகும். இவரது குறிக்கோளான 'அரேபிய ஒற்றுமை' சாதிக்கப்பட முடியவில்லை எனினும், இவர் அரேபிய தேசியத்தின் ஒரு சின்னமாக விளங்குகிறார் என்று சொல்லலாம். தெ.பா.

***நாசர் ஏரி***: எகிப்து நாட்டின் தென்கிழக்கில் வடக்குச் சூடான் பகுதியில் உள்ளது நாசர் ஏரி(Nasser Lake). இதன்பரப்பு 4015 கி.மீ. இது நைல் நதிக்கரையில் உள்ளது. அசுவான் உயர் அணையின் பின்புறம், 565 கி.மீ. இது பரவியுள்ளது. இந்த ஏரியின் நீர் எழுச்சியின் காரணமாகப் பல வரலாற்றுச் சின்னங்கள் நீருக்குட்பட்டன. அதனால், 80,000 மக்களுக்கு அதிகமானோர் வேறு இடங்களுக்குக் குடிபுக நேர்ந்துள்ளது. தெ.பா.

***நாசரெத்து***: இசுரேல் நாட்டின் வடக்குப் பகுதியில் கலிலேயாவின் தாழ்வான பகுதியில் இந் நகரம் அமைந்துள்ளது. இயேசு கிறித்து தமது வாழ்க்கையின் தொடக்கக் காலத்தில் இங்கு வாழ்ந்தார். புனித குடும்பங்களின் (Holy Family) வாழ்விடங்களாக இருந்ததினால் இது கிறித்தவ மரபினில் புனித

நகரமாகக் கருதப்பட்டு வருகின்றது. வரலாற்றுக்கு முற்பட்ட காலங்களில்இங்குக் குடியிருப்புகள் காணப் பட்டதென்பதற்கு இங்குள்ள குகைகள், கல்லறைகள் சான்றாக உள்ளன. அவை நாசரெத்தைச் சுற்றி யுள்ள பகுதிகளில் பெருமளவு காணப்படுகின்றன.



நாசரெத்து

இந்நகரம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டு வரை ஒரு யூத கிராமமாகவே இருந்தது;ஆனால்,கி.பி. 630-இல் கிறித்தவர்களைப் பெரும்பான்மையாகக் கொண்டி ருந்தது. சிலுவைப் போர் வீரர்களால் (Crusaders) கி.பி. 1110-இல் இங்கு ஆயர் (Bishop) அதிகாரம் நிறுவப்பட்டது. கி.பி. 1128-இல் பேராயர் (Archbishop) ஆட்சிபெறத் தகுதியடைந்தது. முதலாம் சுல்தான் பேபார்சு (Sultan Baybars - I) கி.பி. 1263-இல் மேற்கொள்ளப்பட்ட போர்களினால் இந் நகரமும் கோயில்களும் அழிக்கப்பட்டன. இதற்குப் பின் எஞ்சியிருந்த கிறித்தவர்கள் கி.பி. 1517-இல் துருக்கியர்களினால் நாடுகடத்தப்பட்டனர். அவர்கள் கி.பி. 1620 வரை மீண்டும் திரும்பி வர அனுமதிக்கப் படவில்லை.

நீண்ட காலமாக இந்நகரம், உள்ளூர் முக்கியத்து வம் வாய்ந்த வாணிக மையமாக விளங்கி வந்தது. மக்களில் பெரும்பாலானோர் வேளாண்மையில் ஈடு பட்டுள்ளனர். சிறிதளவு கைத்தொழில் முயற்சிகளும் காணப்படுகின்றன.

**நாசரெத்து** [2] : இப்பெயர் உள்ள ஒரு நகரம் அமெரிக்காவில் பென்சில்வேனியா மாநிலத்தின் கிழக்குப் பகுதியில் உள்ளது. துணி, காகிதம், இசைக் கருவிகள், சிமிண்டு முதலியன இங்குச் செய்யப்படு கின்றன. மொரேவியர் (Muravians) ஏறத்தாழ கி.பி. 1740-இல் இங்குக் குடியேறினர். அவர்களுடைய கட்டடக் கலைத்திறனை உணர்த்தும் கட்டடங்கள் இன்றும் இங்குக் காணலாம்.இந்நகரம் சிறிதுசிறிதாக முன்னேற்றமடைந்துள்ளது. இதன் மக்கள்தொகை 5815 (1970).

**நாசரெத்து** [3] : தமிழ்நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில், சிரீவைகுண்டம் (Srivaikuntam) தாலுக்காவில் உள்ள கிராமம். பாளையங்கோட்டை யில் இருந்து 35 கி.மீ. தொலைவில் இக்கிராமம் அமைந்துள்ளது. இங்கு 1901-இல் எடுக்கப்பட்ட மதிப் பீட்டின்படி மக்கள்தொகை 4351 ஆக இருந்தது.இதில் 2690 பேர் கிறித்தவர்களாக இருந்தனர்.

இது,சமயம் பரப்புவோரைக் கொண்ட கிராம மாக (Missionary Village) விளங்கியது. பெண்களுக் கான உயர்நிலைப் பாடசாலை, அநாதைகளுக்கான புகலிடம் (Orphan Asylum), வைத்திய சாலை, கைத்தொழில் கைவினைப் பாடசாலை (Art Industrial School) ஆகியன இச்சமயம் பரப்புவோரின் மேற்பார்வையில் இக்கிராமத்தில் இயங்கி வந்தன. கிறித்தவ சமயப் பரப்புவோரின் தலைமை நிலைய மாக இக்கிராமம் அமைந்திருந்தது. இதில் 2000 பாடசாலைச்சிறுவர்களை உள்ளடக்கிய 12,000 சமய ஆதரவாளர்கள் (Adherents) சேர்ந்திருந்தனர். இங்குள்ள கைவினைக் கைத் தொழிற் பள்ளியில் சரிகை வேலைப்பாடு (Lace) கையினால் மிகச் சிறந்த முறையில் நடைபெற்றது. எஸ்.ஏ.நோ.

**நாசா** : ஐக்கிய அமெரிக்காவில், நாசா (Nasa) எனச்சொல்லப்படும் தேசிய விண்ணியல் மற்றும் விண் வெளி நிருவாகத் (National Aeronatics Space Administration) துறை ஊசுட்டனில் (Houston) அமைந்துள்ளது. இங்குத் தான் நாசாவினால் மேற் கொள்ளப்படும் விண்வெளிப் பயணங்களின் கட்டுப் பாட்டு நிலையம் அமைந்திருக்கின்றது. சோவியத்து அரசு 1957-ஆம் ஆண்டு அக்டோபர் 4-ஆம் நாள் உலகின் முதலாம் செயற்கைக் கோளை (Sputnik-1) விண்வெளிக்கு அனுப்பியது. இதிலிருந்து தொடங்கிய சோவியத்து நாட்டின்படிப்படியானமுன் னேற்றங்களைக் கண்டு அமெரிக்கர்கள் அதிர்ச்சி யடைந்தனர். விஞ்ஞான உபயோகத்திலும், தொழில் நுட்பத்திலும் உலகின் முன்னணி நாடு என்ற பெரு மையைக் கொண்டிருந்த அமெரிக்கா, அதை இழக்க விரும்பவில்லை. சோவியத்தின் விண்வெளிப் பரி சோதனைகள் சந்திரனுக்கு மனிதனை அனுப்பு வதையே நோக்கமாகக் கொண்டிருக்கின்றன என்ப தனை, அமெரிக்கர் அறிந்து கொண்டனர். இதனை ஈடுசெய்வதற்குத் தேவையான முயற்சிகளை மேற் கொள்வதற்குத் தேசிய விண்ணியல் மற்றும் விண்




வெளிச்(National Aeronautics Space Act)சட்டத்தின் மூலம் நாசா உருவாக்கப்பட்டது.

இந்நிறுவனத்தின் முதன்மை நோக்கம், ஐக்கிய அமெரிக்காவின் விண்வெளிப் பயணங்களைத் திட்ட மிடுவதும், வழிகாட்டுதலுமாகும். இது உள்நாட்டவர் களினாலேயே நிருவகிக்கப்படும் ஒரு சக்தி மிக்க நிறு வனமாக விளங்கியது. நாசா 1959 பிப்ரவரி 5-இல் சந்திரன் பற்றிய ஆராய்ச்சியை மேற் கொள்வதற்கு ஒரு குழுவை நியமித்தது. சந்திரனின் மேற்பரப்பு, சந்திர செயற்கைக் கோள்கள் (Lunar Satellites), மனி தனைத்தாங்கிச்செல்லும் மற்றும் தாங்கிச் செல்லாத வாகனங்களை வடிவமைத்தல் உள்ளிட்ட திட்டத்தை வரையறை செய்வதே அதன் நோக்கமாக இருந்தது.

ஐக்கிய அமெரிக்காவின் விண்வெளிப் பயணங் கள் மட்டுமன்றி, ஏனைய இயற்கை வளங்களை மதிப் பிடும் விண்வெளிக் கலங்கள், காலநிலைக் கணிப்புக் கலங்கள் ஆகியனவும் நாசா மூலமே செயற்படுத்தப் படுகின்றன. இயற்கை வளங்கள், கால நிலை மைகள் மட்டுமன்றிப் பல்வேறு தொலையுணர்வுத் (Remote Sensing)தொழில் நுட்பத்தகவல்களும்இங்குச் சேமித்து வைக்கப்பட்டுள்ளன. பல நாடுகளுக்குத் தேவையான இத்தகவல்களைச் சேகரித்து வைக்கும் தகவல் நிலையமாகவும் இது செயற்படுகின்றது. இதற்கெனப் பல இலட்சம் தாலர்களைச் செலவழித்து வருவது குறிப்பிடத்தக்கது. எஸ்.ஏ.நோ.

**நாசிக்கு**, மகாராட்டிர மாநிலத்தில் நாசிக்கு மாவட்டத்தின் தலைமை நகரம். மாவட்டமும் இந்தப் பெயர்கொண்டே வழங்குகிறது. இந்நகரம் பம்பாயிலிருந்து வடகிழக்கில் 160 கி.மீ. தொலை வில் அமைந்துள்ளது. நாசிக்கு நகரம் கோதாவரி ஆற்றின் கரையில் அமைந்துள்ளமையால் வளம் மிகுந்து காணப்படுகிறது. இந்துக்களின் புண்ணியத் தலங்களுள் ஒன்றாக விளங்கும் இந்நகரம் வீரகாவிய மான இராமாயணத்தின் தலைவனான இராமனுடன் தொடர்பு கொண்டு விளங்குகிறது. இராமன் இங்குத் தங்கியிருந்தனனென்ன கூறுவர். எனவே, இந்நகருக்கு நாள்தோறும் சமயப் பயணிகள் வருகின்றனர். இந் நகரில் பல இந்து கோயில்களும், சமண பௌத்தக் குடைவரைகளும் உள்ளன. இந்து கோயில்களுள் காலாராம், கோராராம் கோயில்கள் புகழ்பெற் றவை. நாசிக்கு நகரிலிருந்து 22 கி.மீ. தொலைவில் உள்ள சோதிர்லிங்கா கோயில் இந்துக்களின் புண் ணியத் தலமாக விளங்குகிறது.

நாசிக்கு நகரிலிருந்து 7 கி.மீ. தொலைவில் பல குடைவரைகள் உள்ளன. அவற்றுள் கௌதமிபுத்திரர் விகாரையும் சைத்தியமும் நாகபாணா விகாரையும் குறிப்பிடத்தக்கவை. இக் குடைவரைகள் மிக அழ கான முறையில் குடையப்பட்டுள்ளன. இவற்றின் தூண்கள் வனப்புடையவை. இவையாவும் கி.மு. 2 -ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இக்குடைவரை களில் பல கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் குறிப் பிடத்தக்கது சாதவாகன அரசர் கௌதமிபுத்திர சதகர்னியின் தாய் பாலசிரியின் (Balasri) கல் வெட்டாகும். இது கௌதமிபுத்திரர் விகாரையில் உள்ளது. இக்கல்வெட்டு சாதவாகனர் வரலாற்றை அறியப்பெரிதும் உதவி புரிகிறது. நாகபாணா குடை வரை 18 சிற்றறைகளைப் பெற்று விளங்குகிறது. இதனுள்ளும் கல்வெட்டுகள் பல உள்ளன.



கௌதமிபுத்திரர் மடாலயம்

இன்றைய நாசிக்கு நகரத்தில் பருத்தி ஆலை களும் எண்ணெய்வித்துகள் தயாரிப்புக் கூடங்கள், கரும்பு ஆலைகள் ஆகியவையும் உள்ளன. ஓசார் (Ozar) என்னும் பகுதி இந்நகரின் முக்கிய பகுதி யாகும். இந்நகரம் இருப்புப் பாதை நிலையத்தை யும் கொண்டுள்ளது. இந்திய அரசின் அச்சுக் கூடங் கள் இங்கு உள்ளன. இங்குத்தான் இந்தியாவின் தாள் நாணய அச்சுக் கூடம் இயங்கி வருகின்றது. இந்நகரில் 8 கல்லூரிகள் உள்ளன. இவை புனே பல் கலைக் கழகத்தைச் சார்ந்தவை. இந்நகரின் மக்கள் தொகை 262,428(1981).



நாகபாணர் மடாலயம்

நாசிக்கு மாவட்டம் 15,582 ச.கி.மீ. பரப்பள வுடையது. இம்மாவட்டத்தின் மேற்கில் சாக்யாத்ரி மலைகள் உள்ளன. இம்மாவட்டம் கிர்னா (Girna), கோதாவரி ஆறுகளால் நீர்ப் பாசன வசதியைப் பெறுகின்றது. இம்மாவட்டத்தில் கோதுமை, நிலக் கடலை, கரும்பு போன்றவை பயிரிடப்படுகின்றன. கரும்பு ஆலைகளும், உணவு எண்ணெய் உற்பத்தித் தொழிற் கூடங்களும், கைத்தறி நெசவாலைகளும் இம்மாவட்டத்தில் பரவலாக உள்ளன. இந்திய இராணுவத்திற்குச் சொந்தமான விமானத் தொழிற் கூடம் ஒன்று இம்மாவட்டத்தில் இயங்கி வருகிறது. இயோலா, மாலிகோன் (Malegaon) நாசிக்கு போன் றவை இம்மாவட்டத்தின் முக்கிய நகரங்களாகும். இம்மாவட்டத்தின் மக்கள்தொகை 2,991,739 (1981).

சு.இரா.

***நாசிக் கொள்கை*** என்பது செருமனி நாட் டில் 1933-ஆம் ஆண்டிலிருந்து 1945-ஆம் ஆண்டு வரை அடால்பு இட்லரால் (Adolf Hitler) நடத்தப் பெற்ற சருவாதிகார அரசாங்க அமைப்பையும் அவருடைய கோட்பாடுகளையும் குறிப்பிடும் தொடர் ஆகும். நாசிசக் கொள்கை என்பது (Nazism) செருமானிய தேசிய சம உடைமைத் தொழிலாளர் கட்சி (German National Socialist Workers Party) என்ற செருமன் பெயரின் சுருக்கமே ஆகும். இதன் கொள்கைகளெல்லாம் குடியாட்சிக்கு மாறாகவும், பாராளுமன்ற ஆட்சிமுறைக்கு நேர் மாறாகவும் இருந்தன.

**நாசிசக் கொள்கையின் கூறுகள்:** (i) அரசாங்கம் என்பது மனித வாழ்வின் எல்லாத்துறைகளின் மீதும் முழுக் கட்டுப்பாட்டு அதிகாரத்தையும் உடையதாகத் தான் இருத்தல் வேண்டும். செருமனிய அரசியல் சிந்தனையாளர் எகல் (Hegel) என்பார் கூறியது போல, அரசு என்பதே இறுதியான கொள்கை ஆகும். தனி ஆள் அரசின் கருவியே ஆவார். அரசின் குறிக் கோள்களை நிறைவேற்றுதலைத் தவிரத் தனியாளுக்கு வேறு கடமைகளோ ஆதார உரிமைகளோ இல்லை. இக் கொள்கைக்கு ஏற்ப நாசிச அரசாங்கம், தனது நோக்கங்களை நிறைவேற்றுதற்காகத் தனியாளைக் கட்டுப்படுத்துதற்குச் செய்தித்தாள்கள், நாடக அரங்குகள், திரைப்படங்கள், வானொலி, பள்ளிக் கூடங்கள், பல்கலைக்கழகங்கள் முதலியவற்றைக் கட்டுப்படுத்திற்று. நாசிசக் கருத்துகளைப் பரப்பவும் செயற்படுத்தவும் இளைஞர் அமைப்புகள், பண்பாட் டுக் கழகங்கள், விளையாட்டுக் கழகங்கள், கூட்டுறவு நிறுவனங்கள் முதலியன அமைக்கப்பட்டு இவையும் இசை, கலை, திரைப்படம் முதலியனவும் டாக்டர் பால் சோசப்பு கோயாபல்சு (Dr. Paul Joseph Goebbels) என்ற நாசிக் கொள்கை பரப்பு அமைச்ச ரின் கீழ் வைக்கப்பட்டன. இவை நாசிசக் கருத்து களை ஆராய்ந்து, தனியாளுக்குள்ள உரிமைகளை ஒழித்து, நாசிச அரசாங்கத்தின் கருத்தை மட்டுமே அவர்கள் ஏற்றுக் கொள்ளுமாறு செய்தன. செரும னிய தேசிய பொருளாதாரத்தைச் சீராக்குதற்கு எல்லா அதிகாரங்களையுமுடைய ஒரு பொருளா தார அமைச்சகமும் உருவாக்கப்பட்டது.

ii) நாசிச அரசு ஒரு கட்சி அரசாகத்தான் (One-party state) இருத்தல் வேண்டும்; மற்ற அரசி யற் கட்சிகளுக்கு அதில் இடம் இல்லை. நாசிசக் கட்சி ஒன்றே 1933-ஆம் ஆண்டின் அதிகாரம் வழங்கும் சட்டத்தின்படி, செருமனிய அரசு என்ற கருத்தை எடுத்துக்காட்டி, அதனோடு இரண்டறக் கலந்திருப்ப தாகையால், மற்றக் கட்சிகள் ஒழிக்கப்பட்டன. அதன் சின்னமாகிய சுவசுதிகா (Swastika) நாட்டின் சின்னம்;

அதன் தலைவராகிய இட்லரே நாட்டின் தலைவர். அதன் உறுப்பினர்களே நகராட்சி மன்றத்தாரையும், பள்ளிக் கூடக் கழகத்தவரையும், நீதித் துறைச்சான்றாளரையும் (jurors) அமர்த்தியும், அரசாங்கப் பதிவேடுகளைப் பரிசீலனை செய்தும் கட்டுப்படுத்தினர். அரசாங்க அலுவல்களிலும், புகை வண்டிக் கட்டணங்களிலும் அவர்களுக்குச் சலுகைகள் உண்டு.

iii) செருமனிய அரசு என்பது, உலக நாகரிகத்தின் சிறப்பான கூறுகளையெல்லாம் தோற்றுவித்த, அழகிலும் ஆற்றலிலும் அறிவிலும் உயர்ந்தவரான தூய ஆரிய இனமக்கள் மட்டுமே நிறைந்த ஓரின அரசு (Folk State அல்லது Volk) ஆகும்; தகுதி உடையதே வாழும்; ஆகையால் அவ்வினத்தவர் மட்டுமே வளரவும் பெருகவும், தாழ்ந்த மற்ற இனத்தவர் நிலவியலில் இடம் (Lebensraum) விடுதல் வேண்டும். இட்லருடைய 'எனது போராட்டம்' என்ற பொருளுடைய தலைப்பிட்ட நூலில் Mein Kampf) நாசிசத்தின் ஓரின அரசு பற்றிய கருத்துகள் விரிவாகக் கூறப்படுகின்றன. ஆரியராகிய செருமனியருக்கு உயரிய சுதந்திரத்தை அளித்து, அவர்களுடைய ஆன்மிகச் சிறப்புக் கூறுகளை வளர்க்க உதவுகின்ற ஓர் அரசு இருத்தல் வேண்டும். மற்ற இனமக்களுக்கு இவ்வுயரிய தகுதி இல்லை. சமூக முன்னேற்றத்தில் வாழத் தகுந்ததற்கும், தகுதி இல்லாததற்கும் இடையே போராட்டம் ஏற்படுகிறது; இறுதியில் தகுதி உடையதே நிலைபெறுகிறது. நாகரிகத்தைத் தோற்றுவித்த இனம் ஆரிய இனம்தான். உயர்ந்தவர் தாழ்ந்தவரோடு கலத்தல் கூடாது, யூதர்கள் நாகரிகத்தை அழிக்கும் இனத்தவர் ஆவர். தூய செருமனிய இனத்தவர் வளர்ந்து பரவுதற்கு நடுவண் ஐரோப்பாவிலும் கிழக்கு ஐரோப்பாவிலும் இடம் இருத்தல் வேண்டும். எண்ணிப் பார்ப்பதற்கே மிக்க அச்சத்தை விளைவிக்கின்ற இட்லருடைய இந்தக் கொடிய இனக் கொள்கையை அவருடைய அரசாங்கம் செயற்படுத்தி, யூதர்களுடைய சொத்துகளைப் பறித்து, நாட்டைவிட்டு விரட்டிற்று. (iv) செருமனி நாசிச அரசு ஒரு தலைவர் அரசு (Leader-State)ஆகும். எல்லா மக்களும் சமமானவர் அல்லர்; மக்களுள் சிலர் உழைக்கும் திறன் மட்டுமே உடையவர்; இவர்கள் சாதாரண மக்கள் (Folk) ஆவர். சிலர் ஆளும் அறிவும் திறமையும் உடையவர்; இவ்வல்லுநர் அல்லது உயர்ந்தோர் குழாம்தான் (Elite) ஆளுதல் வேண்டும். சாதாரண மக்களாலும் வல்லுநராலும் சூழப்பட்டு, அரசின் தலைவர் இருப்பார். ஒவ்வொரு குடி ஆளும் தலைவருக்குக் கட்டுப்பட்டுக் கீழ்ப்படிந்து பொறுப்பாக இருத்தல் வேண்டும். அவருடைய செயல்களை எவரும் மறுக்கவோ குறைகூறவோ கூடாது. அவருடைய விருப்பமே நாட்டின் சட்டம்; எல்லா அதிகாரங்களும் அவரிடத்தில் குவிக்கப்பட்டிருத்தல் வேண்டும். (v) தலைவரை எதிர்த்தோரெல்லாம் வல்லந்தமாக ஒடுக்கப்படுதல் வேண்டும்; அவர்கள் தொழிற் சிறைகளில் (Labour Camps) தள்ளப்படுதல் வேண்டும்.

**மதிப்பீடு**: இட்லர் வகுத்த நாசிசக் கொள்கை, அரசு பற்றிய தாராளக் கொள்கைக்கு முற்றிலும் மாறானது. அரசு மனிதனுக்காக இருக்கிறதே தவிர, மனிதன் அரசுக்காக வாழ்பவனல்லன் என்பதே தாராளஅரசுக் கொள்கையாகும். மேலும், தூய ஆரிய இனத்தவராகிய செருமனியரே வாழும் தகுதியைத்தம் அறிவாலும் ஆற்றலினாலும் பெற்றுள்ளனர் என்று இட்லர் கூறும் இடர்ப்பாடான கற்பனை, சுதந்திர விருப்பம் உடைய மனித இனத்துக்குப் பொருந்துவதன்று. தலைவர் ஆட்சியிலும் தவறு தோன்றுமாதலால், அதனைத் தடுத்து, மக்களைக் காத்தற்கு, அவரைத் தட்டிக் கேட்கும் உரிமை மக்களுக்கு இருத்தல் வேண்டும். இட்லர் தம் ஓரினக் கொள்கையையும், நிலவியற் கொள்கையையும் செயற்படுத்துதற்காக உருசியாவுடன் போரிட்டுத் தோற்று, அழிந்ததும், இன்றும் செருமனி நாடே பிளவுபட்டுக் கிடப்பதும், அவருடைய நாசிசக் கொள்கை தவறுடையதெனக் காட்டுகின்றன. பா.கு.

**துணை நூல்கள்:**

Bullock, Alan, Hitler: A Study in Tyranny, New York, 1952.

Roberts, R.H., The House That Hitler Built, Methuen, 1933.

*நாசிர் சங்கு*: இவர் தென்னிந்தியாவில் ஐதராபாதைத் தோற்றுவித்த ஆசுப் சா என்பாரின் இரண்டாம் மகனாவார். அவர் கி.பி.1748-இல் மரணமுற்றார். அதையடுத்து நாசிர்சங்குவிற்கும் (Nazir Jung)ஆசுப்சாவின் பேரன் முசாபர் சங்கு என்பவருக்குமிடையே கடும் வாரிசுரிமைப் போர் நிகழ்ந்தது. இந்தச் சூழ்நிலையை அந்நிய நாட்டினரான பிரெஞ்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள முற்பட்டனர். எனினும், ஆசப்சாவின் மகன் என்ற நிலையில் நாசிர் சங்கு தக்காணத்துச் சுபேதாராகப் பதவியேற்றார். ஆனாலும், தாம் சுபேதார் பதவிக்கு வருவதை தில்லியின் முகலாய அரசு அனுமதித்துவிட்டமையால் தாமே அப்பதவிக்கு வரவேண்டும் என்று முசாபர்சங்கு உரிமை கொண்டாடினார். அத்துடன் நிற்காது அவர், கருநாடகத்தில் தம் செல்வாக்கினை

வளர்த்துக்கொண்டிருந்தபிரெஞ்சுக்காரர்களையும்அவர் களுடைய தலைவரான தியூப்ளேயையும் அணுகி அவர்களுடைய உதவியை நாடி அவர்களுடன் இணைந்து கொண்டார். இந்தக் கூட்டுறவு தங்கள் பகைவர்களான பிரெஞ்சுக்காரர்களின் அதிகாரத் தையும் செல்வாக்கையும் மேலும் பெருக்கிவிடும் என்று அஞ்சிய ஆங்கிலேயர்கள் வாளாவிருக்க விரும் பவில்லை. அவர்கள் நாசிர் சங்குடன் சேர்ந்து கொண்டு அவருக்கு ஆதரவு காட்டி வந்தனர். இங்ஙனம் தக்காணத்தில் ஒரு வாரிசுரிமைப் போர் தொடங்கிவிட்டது.

தி ஆடுயில் (D'Auteuil) என்பவரின் தலைமை யில் பிரெஞ்சுப் படை ஒன்று ஆர்க்காட்டுக்கருகில் முசாபர் சங்குடன் இணைந்து, ஆங்கே நடைபெற்ற ஆம்பூர்ப் போரில் (கி.பி. 1749) கருநாடக நவாபு ஆக இருந்த அன்வருத்தீனைத் தோற்கடித்து, அவருடைய கடும் பகைவரான சந்தா சாகிப்பை ஆர்க்காட்டின் நவாபாகப் பதவியில் அமர்த்திற்று.

அதற்கிடையில் நாசிர்சங்கு ஒரு பெரும் படையு டன் தெற்கு நோக்கி விரைந்தார். அவருடைய அப் பெரும்படையில் மராட்டியர்களும் ஆங்கிலேயர் களும் அடங்கியிருந்தனர். அவருடைய பெரும் படையைக் கண்டு அதிர்ச்சியுற்ற முசாபர்சங்கு நாசிர் சங்கிடம் சரணடைந்தார். ஆனால், தியூப்ளே சிறிதும் அஞ்சாது, நிலைமையைச் சமாளிக்கத் தம் தளபதி யான புசி (Bussy) என்பவரை அனுப்பி வைத்தார். புசி, செஞ்சி மற்றும் மசூலிப்பட்டணம் ஆகியவற்றைக் கைப்பற்றிக் கொண்டார். இலா தௌசி (La Touche) என்பவரின் தலைமையில் பாசறை அமைத்திருந்த நாசிர்சங்கின் பாசறையை நெருங்கி அங்கு நடை பெற்ற கடுமையான மோதலில் நாசிர் சங்கைத் தோற்கடித்தார். அப்போரில் நாசிர்சங்கும் உயிரிழந் தார். அ.உ.

**நாசிருதீன் மகமது** வட இந்தியாவில் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த 'அடிமைகள் வமிசம்' எனக்கூறப்படும் அரச குலத்தைச் சேர்ந்த வர். துருக்கிய உயர் குடியினரின் ஆதரவினால் இவர் பட்டத்திற்கு வந்தமையால் இவர்தம் ஆட்சிக் காலத்தில் அவ்வுயர் குடியினரின் செல்வாக்குப் பெரு மளவு ஓங்கியிருந்தது. அவர்களுள் ஒருவரான பால்பன் தம் மகளைச் சுல்தானுக்கு மணமுடித்து வைத்திருந் தார். அக் காரணத்தினாலும், தாமே மிகவும் திறம் படைத்தவராகவும் தொலை நோக்குடையவராகவும் இருந்தமையாலும் அவர் தம் செல்வாக்கைப் பெருக் கிக் கொண்டிருந்தார்.

நாசிருதீன் இனிய குணமும் சமயப் பற்றும் கொண்டவர்; எழுத்துக் கலையில் பெரும் வல்லுநர். ஓய்வு நேரங்களில் தம் காலத்தை இவர் திருகுர் ஆனைப் பகர்ப்பு செய்வதில் கழித்தார். கற்றோருக் குப் பெரும் பரிசுகள் அளித்து வந்த இவருடைய ஆட்சியில் மிகப் பெரிய பதவி வகித்தவரான மின்ஆசு -உசு-சிராசு என்பவர் இவரிடமிருந்து விலை மதிப்பிட முடியாத பெரும் பரிசுகளைப் பெற்றுத் திகழ்ந்தார். தாம் எழுதிய தபகாத்-இ-நாசிரீ என்ற நூலை அவர் சுல்தானுக்குப் படைத்தார். எனினும், அரசர் என்ற நிலையில் இவர் அக்காலத்திய சிக்கல் மிகுந்த சூழ் நிலைகளைச் சமாளிக்கும் திறமையடைந்தவர் அல்லர். இவருடைய அமைச்சராகவும், பிறகு இவ்ருடைய உதவியாளராகவும் இருந்த பால்பன் உண்மையில் அனைத்து அதிகாரங்களையும் வகித்து வந்தார். சுல் தான் தம்மீது வைத்திருந்த நம்பிக்கைக்கு ஏற்ற வராகவே அவரும் நடந்து கொண்டார். உள்நாட்டில் ஏற்பட்ட கிளர்ச்சிகளையும் அந்நியப் படையெடுப்பு களையும் அவர் எதிர்த்து இவர் நாட்டில் அமைதியைப் பெரும்பாடுபட்டு உருவாக்கினார். மங்கோலியர் களின் தாக்குதல்களைத் தடுத்து நிறுத்தினார். இராசாக்கள் மற்றும் சமீன்தார்கள் போன்ற கிளர்ச்சி யாளர்களை அவர் ஒடுக்கினார். அவருடைய அதி காரப் பெருக்கினைக் கண்டு பொறாமை கொண்ட பிரபுக்கள் சிலர் சுல்தானைத் தூண்டி விட்டுப் பால் பனை கி.பி.1253-இல் நாடு கடத்தும்படி செய்தனர். ஆனால், அவர்களால் நாட்டின் நிலைமையைச் சமா ளிக்க இயலவில்லை. ஆகவே, பால்பன் நாட்டிற்குத் திரும்பி அழைக்கப்பட்டார். எல்லா அதிகாரங்களை யும் அவரிடமே சுல்தான் ஒப்படைத்து விட்டார் (கி.பி. 1255). அ.உ.

**நாசு ஓக்டன்** (1902-1971): இவர் 1902-ஆம் ஆண்டு தோன்றிய புகழ்பெற்ற அமெரிக்கப் பேர றிஞர். சிறந்த கவிதைகள் எழுதுவது இவரது பொழுது போக்கு. இவருடைய கவிதைகள் எளிய நடையில் நகைச்சுவை நிறைந்து எதிர் பாராத முடிவுகளைக் கொண்டு அமைந்துள்ளன. இவர் நியூபோர்டில் உள்ள செயிண்டு சார்சு பள்ளி யிலும் ஆர்வர்டு பல்கலைக் கழகத்திலும் பயின்றார்; ஆர்டுலைன்சு என்ற கவிதைகளை 1931-இல் வெளி யிட்டார்; கவிதைத் தொகுப்புகள் பல தொடர்ந்து வெளியிட்டுள்ளார். 'மகிழ்ச்சிகரமான நாள்கள்' (1933), 'நான் எனக்கே அந்நியன்' (1938) 'நல்ல எண்ணங்கள்' (1942) 'பற்பல ஆண்டுகளுக்கு முன்பு' (1945) 'இணைந்த குடும்பம்' போன்ற அருமையான பாடல் திரட்டுகளை வெளியிட்ட சிறந்த எழுத் தாளர் இவர்.

ஏராளமான பாடல்களைப் புகழ்பெற்ற திங்கள் ஏடுகளுக்கு-மலர்களுக்கு எழுதியுள்ளார். இவர்தம் பாடல்கள் நகைச் சுவையூட்டக் கூடியவை, உலகக்



நாசுஒக்டன்

கவலைகளையெல்லாம், இடர்களையெல்லாம் மறந்து, சிறிது பொழுதாவது சிறுவர்களை மகிழ்வுடன் அதிசய உலகத்தில் ஈடுபட வைக்கும் ஆற்றல் பெற்றவை. கவிதையின் மதிப்புக் குன்றிவிடாமல், கவிதை வாயிலாக உயர்ந்த மனநிறைவான நகைச்சுவையுடன் கூடிய கவிதைகளை இயற்றிப் பெருமை பெற்றவர் இவர். எடுத்துக்காட்டாக 'இசபெல்லின் வீரச்செயல்கள்' என்ற ஒரு கவிதை கேலிப் பேச்சு ஏதுமின்றி நகைச்சுவையுடன் எதிர்பாராத முடிவுகள் கொண்டதாக நெஞ்சம் நிறைந்த மகிழ்ச்சி உணர்வு ஏற்படும் வகையில் அமைந்துள்ளது. இசபெல் ஓர் இளம்பெண். படபடப்பு ஏதுமின்றி, எதையும் அச்சமின்றி அமைதியான முறையில் சிந்தித்துச் செயலாற்றக் கூடியவள் ஒருமுறை ஒரு முரட்டுக் கரடியைச் சந்திக்கிறாள். நாசு ஒக்டனின் இக்கரடி, மற்றக் கரடிகளைப் போல், புல் பூண்டு தின்று வாழும் சைவக் கரடி அன்று. அது அவளிடம் நலம் விசாரித்து விட்டு, 'உன்னை நான் தின்று பசியாறப் போகிறேன்' என்றது. அவளும் சரி என்று கூறிச் சாப்பிட்ட கைகளைக் கழுவி அதனருகே சென்று, கரடியையே சாப்பிட்டுவிட்டாள். எவ்வளவு மாறான எதிர்பாராத முடிவு.

மற்றொரு முறை மிகப் பயங்கரமான சூனியக்காரி ஒருத்தியை மையிருட்டில் இசபெல் சந்திக்கிறாள். மாயக்காரி பயங்கரமான உருவத்தைப் பெற்றிருந்தாலும் இசபெல் அஞ்சவில்லை. 'உன்னை ஓர் அசிங்கமான தேரையாக மாற்றப்போகிறேன்' என்று பயமுறுத்தும் அந்த மாயக்காரியை, இசபெல் பாலாக மாற்றிக் குடித்து விடுகிறாள். இப்படிப்பட்ட நகைச்சுவைகள் நிறைந்த நிகழ்ச்சிகள் இன்னும் பல உண்டு.

ஆர்.வெ.

**நாசுவில்**: அமெரிக்காவில் வளம்மிக்க பண்ணைகளைக் கொண்ட பகுதியில் தென்னசி (Tennessee) மாநிலத்தின் தலைநகரமாக நாசுவில் (Nashville) விளங்குகின்றது. இது கைத்தொழிலாக்கம் பெற்ற நகரம். இங்கு கி.பி. 1779-ஆம் ஆண்டு கிறித்துமசு நாளன்று முதன்முதலாகக் குடியிருப்பு அமைக்கப் பட்டது. தளபதி பிரான்சிசு நாசு (Francis Nash) என்பவரை மதிப்பளிக்கும் நோக்கமாக அவரின் பெயரால் 'நாசுபார்க்கு' (Nashborough) என்னும் கோட்டை சேம்சு உரோபேட்சன் என்பவரினால் இங்கு அமைக்கப்பட்டது. பிரான்சிசு நாசு வடக்குக் கரோலினாவின் புரட்சிகரப் போரில் தளபதியாக இருந்தார்.

பிறகு கி.பி.1784-இல் வடகரோலினாச் சட்டமன்றத்தினால் நாசுவில் பட்டினமாக இணைக்கப்பட்டது. இது கி.பி.1806-இல் நகரமாக மாற்றமடைந்தது. தென்னசி கி.பி.1796-இல் ஒரு மாநிலமாகத் தகுதி பெற்றபோதும், கி.பி.1843 வரை நாசுவில் அதன் நிலையான தலைநகரமாக வரமுடியவில்லை. பின்கி.பி.1852-இல் உள்நாட்டுப்போரின்போது இந்நகரம், கூட்டரசு ஆதரவு இராணுவத்தின் கட்டுப்பாட்டின்கீழ் இருந்தது. தளபதி ஊடு (General Hood) என்பவர் கி.பி.1964-இல் நகரத்தைக் கைப்பற்றுவதற்கு முயன்றபோது, நாசுவில் போரில் (Battle of Nashville) வெற்றிபெறவில்லை. நாசுவில் மற்றும் தேவிட்சன் வட்டம் (Country) 1963-இல் ஒருங்கிணைக்கப்பட்டு நகரத் தந்தையாலும் ஆலோசனைக் குழுவினராலும் நிருவாகம் செய்யப்பட்டது.

நாசுவிலிலும் அதனைச்சுற்றியும் பல வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களைக் காணலாம். நாசுபரோ துறைமுகம் (Nashborough Port) புகழ்மிக்கது.

இது தென்னசி மாநிலத்தில் மேற்கு உயர்நிலத் தொடருக்கும், கிழக்கு உயர்நிலத் தொடருக்குமிடையியே மத்தியில் அமைந்துள்ள வளமான மண் அமைப்பைக் கொண்டது. நாசுவில் வடிநிலம் என்று சொல்லப்படும். இத் தொடர்களின் பொதுவான மட்டத்திலிருந்து 120 மீ. தாழ்வாக இந்த வடிநிலம் காணப்படுகிறது.

நாசுவில் அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளின் கைத்தொழில், போக்குவரத்து மையமாக விளங்குகிறது. உணவு உற்பத்திகள், பாதஅணிகள், இயந்திர வகைகள், இரசாயனப் பொருள்கள், உலோக உற்பத்திகள், செயற்கை நாரிழைகள், காகித உற்பத்தி போன்றன தயாரிக்கப்படுகின்றன. சிறப்புவாய்ந்த பல்கலைக்கழகங்கள் இங்கு அமைந்துள்ளன. இசையைப் பதியவைக்கும் பிரதான மையமாக நாசுவில் விளங்குகின்றது. நாசுவில் நகரின் மக்கள்தொகை

455,651 (1980). புறநகர்ப் பகுதிகளைக் கணக்கிட்டால்இதன் மக்கள் தொகை அளவு 850,505 (1980).
எஸ்.ஏ.நோ.

***நாசோ வில்லியம் சீனியர்***: பொருளாதாரச் சிந்தனை வளர்ச்சி வரலாற்றில் வாணிகவாதிகள் (Mercantalists), இயற்கைவாதிகள் (Physiocrats)என்ற இரு பெரும் பொருளாதாரக் கோட்பாட்டினரைத் தொடர்ந்து, தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் (Classical Economists)குறிப்பிடப்படுகிறார்கள். ஆதம் சுமித்து, தாவீது இரிக்கார்டோ, இராபர்ட்டு மால்தசு, சே.எசு.மில். (J.S.Mill) போன்ற பெரும் தொன்மைப் பொருளாதார அறிஞர்களின் வரிசையில் நாசோ வில்லியம் சீனியர் (Nassau William Senior) இடம் பெறுகிறார்.

**வாழ்க்கை வரலாறு**: இசுபெயின் (Spain) நாட்டைத் தாயகமாகக் கொண்டதொரு குடும்பத்தில் 1790-ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் சீனியர் பிறந்தார். மாக்டொனால்டு கல்லூரியில் (Macdonald College) படித்து எம்.ஏ. பட்டத்தை கி.பி. 1815-ஆம் ஆண்டில் பெற்றார். பின்னர்ச் சட்டம் பயின்று 1819-இல் சட்டத் துறையில் புகுந்தார். ஆக்சுபோர்டு பல்கலைக்கழகத்தில் (Oxford University) கி.பி.1825-ஆம் ஆண்டில் பொருளாதாரத் துறையின் முதல் பேராசிரியராக நியமிக்கப்பட்டார்.இவர் கி.பி. 1836 முதல் 1855-ஆம் ஆண்டு முடிய உள்ள காலத்தில் ஐந்து அரச ஆணைக் குழுக்களில் (Royal Commissions) உறுப்பினராகப் பணியாற்றினார். தாவீது இரிக்கார்டோ தொடங்கிச் சான் இசுடுவர்ட்டு மில் (John Stuart Mill) முடிய உள்ள ஆங்கிலப் பெரும் பொருளாதார நிபுணர்களுள் மிகச் சிறப்பானவராக நாசோ வில்லியம் சீனியர் திகழ்ந்தார் என இவ்வறிஞரை இத்தாலியைச் சேர்ந்த கோசா (Cossa)என்னும் அறிஞர் புகழ்ந்தார். இவர் கி.பி. 1828-இல் தொழில் திறமையும் சமுதாயப் பொருளாதாரமும் (Industrial Efficiency and Social Economy) என்ற நூலையும், கி.பி. 1850-இல் 'அரசியல் பொருளாதார அறிவியலின் ஒரு சுற்றுக்கோடு' (An Outline of Science of Political Economy)என்ற நூலையும் எழுதி வெளியிட்டார்.

**பொருளாதாரக் கருத்துகள்**: சீனியரின் கருத்துப்படி பொருளாதார இயல், மனிதனின் மகிழ்ச்சியைப் பற்றியதன்று; மாறாகச் செல்வத்தைப் பற்றியது. அதாவது, செல்வத்தின் இயல்பு, செல்வத்தின் உற்பத்தி, செல்வத்தின் பகிர்வு ஆகியவை பற்றிய கல்வியே பொருளாதார இயல். இவ்வியலைக் கலையியல் (Art) அன்று என்றும்,தூய அறிவியல் என்றும் சீனியர் கருதினார். பொருளாதாரக் கருத்துகளுக்கு விளக்கம் தருவதோடு பொருளாதார அறிஞர்கள் நிறுத்திக் கொள்ளவேண்டுமே தவிர இதைச் செய்யலாம்; இதைச் செய்யக்கூடாது; இதைச் செய்ய வேண்டும் என்ற அறிவுரை எதையும் பொருளாதார அறிஞர்கள் கூறக்கூடாது என்றும் சீனியர் உறுதியாகக் குறிப்பிட்டார்.

1) எவ்வளவுக்கெவ்வளவு குறைவான தியாகத்தை மேற்கொள்ள முடியுமோ அவ்வளவுக்கவ்வளவு தியாகத்தை மேற்கொண்டு, எவ்வளவுக்கெவ்வளவு மிகுதியான செல்வத்தைப் பெறமுடியுமோ அவ்வளவுக்கவ்வளவு மிகுதியான செல்வத்தைப் பெறுவதையே ஒவ்வொருவரும் நோக்கமாகக் கொண்டு செயற்படுகின்றனர், 2) தாமசு இராபர்ட்டு மால்தசின் மக்கள் தொகைக் கோட்பாட்டின்படி, மக்கள் பெருக்கமும், பொருளாதார மாற்றங்களும் நிகழ்கின்றன, 3) தொழில்களில் வளர்ந்துசெல் இறுதிநிலை விளைவு விதி செயற்படுகிறது, 4) வேளாண்மைத் துறையில் குறைந்துசெல் இறுதிநிலை விளைவு விதி செயற்படுகிறது என்ற நான்கு கருத்துகளின் அடிப்படையில் பொருளாதாரம் அமையப்பெற்றிருக்கிறது என்பது சீனியரின் கருத்து.

**மதிப்பு**: பரிமாற்ற மதிப்பிற்குச் சிறப்பிடம் தந்தார் சீனியர்.ஏதாவது ஒன்றுக்குப் பதிலாக மற்றதொன்றில் எவ்வளவு கொடுக்கப்படுகிறதோ அதுவே முன்னதன் மதிப்பு என்ற விளக்கத்தைக் கொண்டிருந்த சீனியர், எந்தப் பொருள் பரிமாற்றப்படுகிறதோ அந்தப் பொருளின் தேவை,அளிப்பு ஆகியன ஒரு புறமும், எந்தப் பொருள் முதலில் குறிப்பிட்ட பொருளுக்காகப் பரிமாற்றப்படுகிறதோ அந்தப் பொருளின் தேவை, அளிப்பு ஆகியவை மறுபுறமும் மதிப்பை நிருணயிக்கின்றன என்று குறிப்பிட்டார்.

**துய்ப்புத் தவிர்ப்பும் மூலதன ஆக்கமும்**: உற்பத்திச் செலவில் 'துய்ப்புத் தவிர்ப்பு' என்றதொரு காரணியைச் சீனியர் புகுத்தினார். பொதுவாகப் பணத்தைத் தாம் விரும்பும் வழியில் பயன்படுத்தி மகிழ்ச்சியைப் பெற மக்கள் முனைவர்.இதற்கு மாறாகத் தம் மகிழ்ச்சியை விட்டுக்கொடுத்து துய்ப்பைத் தவிர்ப்பதன் மூலம் மூலதனத்தைத் திரட்டுதல் முடியும். எனவே, மூலதனத் திரட்சிக்கு அடிப்படையாக அமைவது துய்ப்புத் தவிர்ப்பே (Abstinence) என்னும் பொருள்படத் துய்ப்புத் தவிர்ப்பிற்குச் சீனியர் விளக்கம் தந்தார். தொழிலாளர்களுக்காகும் செலவும், துய்ப்புத் தவிர்ப்புக்காகக் கொடுக்கப்பட வேண்டியதும் ஆக இவ்விரண்டும் உற்பத்திச் செலவை நிருணயிக்கும் இரு காரணிகள் என்பது சீனியரின் கருத்து. தாவீது இரிக்கார்டோ (David Riccardo), சேம்சு மில் (James Mill), மக்கல்லாக்கு (Mccullock) போன்றோர்

தொழிலாளர்களின் உழைப்பே பண்டத்தின் அல்லது பணியின் மதிப்பை நிருணயிக்கிறது என்ற உழைப்பு மதிப்புக் கோட்பாட்டை (Labour Theory of Value) வலிந்து கூற, நாசோ வில்லியம் சீனியர் உழைப் போடு துய்ப்புத் தவிர்ப்பும் அளிப்புப் பக்கத்தில் மதிப்பை நிருணயிப்பதில் பயன்படுவதைத் தெளி வாக்கினார்.

உற்பத்திக் காரணிகளைப் பற்றிக் குறிப்பிடும் போது 'மூலதனம்' என்ற சொல்லைச் சீனியர் தவிர்த்திருக்கிறார். இவரது கருத்துப்படி உழைப்பும் (Labour), இயற்கைப் பதிலாண்மைகளும் (Natural Agents), துய்ப்புத் தவிர்ப்பும் உற்பத்திக் காரணி களாகும் (அதாவது உழைப்பு, நிலம், மூலதனம் ஆகிய மூன்றும் உற்பத்திக் காரணிகளாகும் என்பது கருத்து). இவ்வாறாக உற்பத்திச் செலவில் உளச் சார்பான காரணிகளையும் (Subjective factors) சீனியர் புகுத்தினார்.

**பயன்பாடும் தேவையும்:** தேவையானது பயன் பாட்டைப் பொறுத்து அமையும் என்ற கருத்தையும் சீனியர் தெளிவுபடுத்தினார். தெளிவாகக் குறிப்பிடா விட்டாலும் குறிப்பிட்ட எடுகோள்களின் அடிப்படை யில் பார்க்கும்போது பண்டங்களின், பணிகளின் இருப்பு மிகுதியாக மிகுதியாக அவற்றின் இறுதி நிலைப் பயன்பாடு குறைந்துகொண்டே செல்லும் என்று இன்றைய நாள்களில் குறிப்பிடப்படும் குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதியைச் (The Law of Diminishing Marginal Utility) சீனி யர் விளக்கிக் கூறாவிட்டாலும், இக்கருத்தை மேலெழுந்தவாறாகப் பயன்படுத்திப் பயன்பாட்டைப் பொறுத்துத் தேவையின் அளவு அமைகிறது என்ற விளக்கத்தைச் சீனியர் தந்திருக்கிறார். இருப்பினும், அளிப்பின் பற்றாக்குறையே மதிப்பு நிருணயித்தலில் மிகச் சிறப்பானதொரு காரணியாக விளங்குகிறது என்ற கருத்தையும் கொண்டிருந்தார்.

**கூலிக் கோட்பாடு:** கூலி நிதிக்கோட்பாட்டின் அடிப்படையிலான கருத்தைச் சீனியர் கொண்டி ருந்தார். தொழிலாளர்களின் பராமரிப்பிற்கான தொரு நிதி (Fund) உண்டு என்றும், ஒரு புறம் அதன் அளவைப் பொறுத்தும், மற்றொரு புறம் தொழிலாளர்களின் எண்ணிக்கையைப் பொறுத்தும் கூலியின் அளவு அமைகிறது என்றும் உள்ள விளக் கத்தைச் சீனியர் குறிப்பிட்டார்.

**வளர்ந்துசெல் விளைவு:** பொறிசெய் தொழில் களில் (Manufacturing Industries) தொழிலாளர் களின் எண்ணிக்கையை மிகுதியாக்கும் போது அவர் களினால் தோன்றத்தக்க விளைவு, வளர்ந்துசெல் இறுதிநிலை விளைவாக இருக்கும் என்ற நம்பிக்கை யைச் சீனியர் கொண்டிருந்தார்.

**முற்றுரிமைக் கோட்பாடு:** சமமான போட்டி (Equal Competition) இல்லாததொரு நிலையை முற்றுரிமை (Monopoly) என்று சீனியர் குறிப்பிட் டார். ஒப்பீட்டுப் பயன் முற்றுரிமை (Comparative Advantage Monopoly), முழு முற்றுரிமை (Absolute Monopoly), பதிப்பு உரிமை பெற்ற முற்றுரிமை (Copy-right Monopoly), நிலச்சார்பு முற்றுரிமை (Land Monopoly) என நான்கு வகைகளாக முற்று ரிமையைச் சீனியர் வகைப்படுத்தினார்.

குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதி, வளர்ந்துசெல் இறுதிநிலை விளைவு விதி போன்ற விதிகளை விளக்கிக் குறிப்பிடவில்லை என்றாலும், இவ் விதிகளின் கருத்துகளைச் சுட்டிக்காட்டி விளக்கிய பெருமை சீனியருக்கு உண்டு. என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

Hajela,T.N., History of Economic Thought, Shiva Lal Agarwala & Co., Agra, 1982.

Lewis H. Haney, History of Economic Thought, Surjeet Publications, New Delhi, 1979.

*நாசௌ*, மேற்குச் செருமனியின் நடுப்பகுதி யில் உள்ள ஒரு பழைய கோமக நாடு (Duchy). மெயின், உரைன் ஆறுகளின் வடக்கிலும் கிழக்கிலும் இது பரவியிருந்தது. எம்சுக்குக் (Ems) கிழக்கில் இலான் (Lahn) ஆற்றங்கரையில் உள்ள நாசௌ (Nassau) பட்டினத்தின் பெயரே அக்கோமக நாட் டுக்குச் சூட்டப்பட்டது. நாசௌ பட்டினம், கி.பி. 1806-இல் கோமக நாட்டு உயர்நிலையை எய்தியது. பிரசியா நாடு ஆசுத்திரியப் பிரசியப் போரின் (கி.பி. 1866) விளைவாக, நாசாவைக் கைப்பற்றிக் கொண் டது. நாசா பகுதியில் ஆட்சிபுரிந்து வந்த குலத்தின ரின் ஒரு பிரிவினர் ஆரஞ்சு குலத்தினராவர். (House of Orange) ஆரஞ்சுக் குலத்தினர், தச்சு நாடாகிய ஆலந்தின் (Holland) மன்னர்களாக அரசோச்சினர்.

**நாசௌ[2]** : நாசௌ என்று சொல்லப்படும் இந் நகரம் (Nassau) ஆங்கிலேய மேற்கு இந்தியத் தீவுக் கூட்டத்தைச் சேர்ந்த பகாமா (Bahama) தீவுகளின் தலைநகராகும். அத்தீவுக் கூட்டத்தின் வாணிக மையமாகவும் சமூக மையமாகவும் இந்நகர் விளங்குகிறது. 'நியூ பிராவிடன்சுத்' தீவில் (New Pro-vidence) உள்ள இந்நகரில் பெரியதொரு அழகிய துறைமுகம் இருக்கின்றது. இதன் தட்பவெப்ப நிலை மிகவும் இனிமையானதாகும். உடல் நலத்தின் பொருட்டுப் பலர் இங்கு வந்து தங்குகின்றனர்.

இயற்கை எழில் நிரம்பப் பெற்ற நாசாவில், நீக்கிரோக்கள் பெரும்பாலராக வாழ்கின்றனர். இங்குச் சர்க்கரை, பருத்தி, கரும்பு முதலியன உற்பத்தியாகின்றன. இந்நகர் அமைந்துள்ள 'நியூபிராவிடன்சு' தீவின் மக்கள் தொகை 1,35,437 (1980).

**வரலாறு:** ஐரோப்பியர், கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இங்குக் குடியேறினர். இதற்கு கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் கடற்கொள்ளைக்காரர்களால் அடிக்கடி தொந்தரவுகள் ஏற்பட்டு வந்தன. அமெரிக்கப் புரட்சியினர், கி.பி. 1776-இல் இதைக் கைப்பற்றிச் சிறிது காலம் தம் வசம் வைத்திருந்தனர்.

நாசௌ என்ற பெயரையுடைய வட்டங்கள் (Counties) அமெரிக்காவில் பிளாரிடா (Florida) மாநிலத்திலும், நியூயார்க்கு மாநிலத்திலும் உள்ளன. தெற்குப் பசிபிக்கு மாக் கடலில் உள்ள குக்குத் தீவுகளில் உள்ள ஒரு தீவுக்கு நாசௌ என்பது பெயர். வடபகுதித் தீவான இதன் பரப்பு 1.2.ச. கி.மீ. மக்கள் தொகை 134 (1981). தெ.பா.

**நாஞ்சில் நாடு:** எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய புறநானூற்றின் 137, 138, 139, 140, 380 ஆகிய ஐந்து பாடல்கள் ஒரூ சிறைப் பெரியனார், மருதனிள நாகனார், ஔவையார், கருவூர்க்கதப்பிள்ளை ஆகிய புலவர்களால் பாடப் பட்டுள்ளன. இவற்றில் நாஞ்சில் பொருநன் என்னும் குறுநில மன்னன் குறிப்பிடப்பட்டுச் சேரன், பாண்டியன் போன்ற பெருநில மன்னர்க்குப் போரின்கண் உதவும் பொருநனாகவும், புலவர் போன்றார்க்கு வள்ளியோனாகவும் தெரிவிக்கப்படுகின்றான். இப்பாடல்களின் அடிக்குறிப்பு, நாஞ்சில் வள்ளுவன் என்று இப்பொருநனைக் குறிப்பிடுகின்றது.

சிறு வெள்ளருவி, யானை, பலவு இவையுடைய நாஞ்சில் பொருநன் பெருங்கல் நாடன் என்பதனால் நாஞ்சில் என்பது ஓர் மலையைக் குறித்தவாறாயிற்று. எனவே, நாஞ்சில் என்னும் மலைக்கு, மலை நாட்டுக்குத் தலைவன் என்பது பட நாஞ்சில் பொருநன், நாஞ்சில் வள்ளுவன் எனப்பட்டான் என்க. இத்தகைய மலை, நாஞ்சில் நாட்டின் வடக்கு மலையாக, அருவியும் யானையும் பலவும் பிறவுமுடையதாகத் தெரிகின்றது. இதனைச் சார்ந்த பகுதியே பழமையில் நாஞ்சில் நாட்டின் சிறப்புடைப் பகுதியாக இருந்தது. இம்மலை, மேற்குமலைத் தொடர்ச்சியின் தென்பகுதியாகும். இந்தியாவின் மேற்குத் தொடர்ச்சி மலை தெற்கே நாஞ்சில் நாட்டில் முடிவடைகின்றது. அதன் சிதறல், கன்னியாகுமரியை அடுத்துள்ள மருந்து வாழ் மலையாக முடிகின்றது.

நாடக இலக்கியமாகிய மனோன்மணீயம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் இத்தகைய நாஞ்சில் நாட்டை அடியாகக் கொண்டே தொடங்குகின்றது. வளமான நாஞ்சில் நாட்டிற்காகச் சேர, பாண்டியப் போரையும் குறிப்பிடுகின்றது. இதனைப் பற்றிக் கொள்வதற்காகப் பேரரசர் மூவரும் பலகால் போர் புரிந்தனராக இலக்கியமும் வரலாறும் கல்வெட்டுகளும் கூறுகின்றன. மூவரசரும் போர் நீக்க உடன்பாடு செய்து கொண்டனர் என இன்று குறிப்பிடப்படும் பகுதி முப்பந்தல் (ஆரல்வாய் மொழியை யடுத்தது) என்பதும் கருதத் தக்கது. இந்தியாவின் தென் கோடிப்பகுதி நாஞ்சில் நாடு. அதன் தென்கோடி கன்னியாகுமரிப் பகுதியாகும்.

'தென்குமரி வட பெருங்கல், குமரியொடு வட இமயம், எனப் பாரதமும், 'வடவேங்கடம் தென்குமரி' 'வேங்கடம் குமரி தீம்புனற் பௌவம்' என்பன, போன்றன தமிழ்நாட்டின் தென்னெல்லை குமரி என்பதனைக் காட்டுகின்றன. பஃறுளியாறு, பன்மலையடுக்கத்துக் குமரிக்கோடு இவற்றையுடைய குமரிக் கண்டத்தைக் (இலெமூரியா) கடல் கொண்டது. இது இப்போதிருக்கும் குமரியின் தென்பகுதியேயாகும்.

கி.பி. 80- இல் பெரிப்புளூசு இத்தகையகுமரியைக் 'கொமர்' என்று குறிப்பிடும். தாலமி கி. பி. 130-இல் இதனைக்கொமரிய அக்ரன் என்று குறித்துளர். நாஞ்சில் நாட்டின் பழைய பெருநகராகிய, வாணிக மேம்பாடுடைய கோட்டாறு (நாகர் கோவிற் பகுதி) 'கொத்தியாரா' எனக் குறிப்பிடப்பட்டுத் தாலமி குறிப்பிடும் ஆய்நாட்டின், பெரிப்புளூசு, குறிப்பிடும் பரலிய நாட்டின் தலைநகராக வரையப்பட்டது. பியூட்டிஞ்சர் நிலப்படங்கள் இதனைக் 'கொத்தார என்றன. இத்தகைய வரலாற்றுச் சிறப்பினையுடைய குமரி, கோட்டாறு ஆகிய நகரங்களையுடையது நாஞ்சில் நாடு. இதனால், நாஞ்சில் நாட்டை உள்ளடக்கிய பகுதி ஆய்நாடு, பரலியநாடு எனவும் வழங்கப்பட்டிருந்ததனை அறியலாம்.

நாஞ்சில் நாட்டை உள்ளடக்கிய பகுதி வேணாடு (வேள்+நாடு) எனவும் வழங்கப்பட்டது. இன்றும் முருகன் கோவிலையுடைய குமாரகோவிலையடுத்த மலை, வேளிர்மலை எனக்குறிக்கப்படுகின்றது. திருவிசைப்பாப் பாடியோருள் ஒருவராகிய வேணாட்டடிகள் இப்பகுதியினரேயாவர்.

நாஞ்சில் மலையாகிய நாஞ்சில் நாட்டின் வடமலைப் பகுதியில் இருக்கும் ஓர் அகத்தியர் கோவிலும், அம்மலையையடுத்து ஔவையாருக்கு ஒரு கோவிலும் ஆய்வில் வரைபடங்களாகும். அகத்தீசுவரம் என ஊர்ப் பெயரும், அகத்தியலிங்கமென ஆட் பெயரும், ஔவையார் என ஆண், பெண் பெயரும் அமைந்து காணப்படும் மரபினையுடையது நாஞ்சில் நாடு.

அதியனூர், அதியனூரான அழகிய பாண்டி புரம், பூதப் பாண்டி எனும்பாண்டியர் தொடர்பான ஊர்ப்பெயர்களும், குலசேகரபுரம், சோழபுரம் போன்ற சேரர், சோழர் தொடர்பான ஊர்ப்பெயர் களும் நாஞ்சில் நாட்டில் உள்ளன.

நாஞ்சில் என்பது மதில், அரண் எனும் பொருள் பட்டு மலை, கடலாகிய அரணுடையது நாஞ்சில் நாடு என்றும், நாஞ்சில் என்பது ஏர், கலப்பை எனும் பொருள்பட்டு ஏர்த்தொழிலாகியபயிர்த்தொழிற்பரப் புடையது நாஞ்சில்நாடு என்றும் கூறினும், அரணால், பயிரால் ஏற்புடையதாயினும் அவை அப்பெயரின் உண்மைத் தோற்றுவாயாகத் தோன்றவில்லை. நன்செய் > நஞ்செய் > நஞ்சை > நாஞ்சி (ல்) நாடு என ஆயிற்று. எனினும், அதுவும் பெயரை உண்மையா கத் தோற்றுவாய் செய்ததாகத் தெரியவில்லை.

பிற்காலத்து நாஞ்சிக் குறவன் ஒருவனால் ஆளப் பட்ட நாடு ஆதலினால் அப்பெயர் பெற்றதாகக் கூறப்படும் ஓர் கதையை அடியாகக் கொண்டு, மெக் கன்சி என்பாரது குறிப்பைக் கொண்டு 'திருவிதாங் கூர் அரசு சிறுவிவரக்குறிப்பு' (Travancore State manual)கூறும்! இக்கதை நாஞ்சிற் பொருநன் அல்லது நாஞ்சில் வள்ளுவனை அடிக்கொண்டு, பிற்காலத் தெழுந்த நாஞ்சிக் குறவன்கதையாகத்தோன்றுகிறது.

நாஞ்சிற் பொருநன் அல்லது நாஞ்சில் வள்ளுவ னால் ஆளப்பட்ட நாடு நாஞ்சில் நாடு என்பதனி னும், அவன் 'பெருங்கல் நாடன்' (புற.137) எனப்படு வதனால், நாஞ்சில் என்பது மலையாக, அதனை யடுத்த நாடு, நாஞ்சில் (மலை) நாடு' (பெருங்கல் நாடு) எனும் பொருளில் நாஞ்சில் நாடாயிற்று என் பது ஏற்புடையதாகத் தெரிகின்றது. அவ்வாறாயின் இப்பெயர் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டிற்கு முன்பு தோன்றியமைந்த பெயராகின்றது.

வேணாட்டின் தென்பகுதி அல்லது இன்றைய கன்னியாகுமரி மாவட்டம் முன்பு புறத்தாயநாடு அல் லது முறத்தா நாடு, நாஞ்சில் நாடு, குறுநாடு படப்பா நாடு, தெங்க நாடு, முடால நாடு, வள்ளுவ நாடு முதலியவாகப் பாகுபடுத்தப்பட்டிருந்தது. இவற்றுள் ஒன்றாகிய நாஞ்சில் நாடு, இன்றைய குமரி மாவட் டத்தின் தோவாளை,அகத்தீசுவரம், கல்குளம், விள வங்கோடு ஆகிய நான்கு வட்டங்களுள் தோவாளை, அகத்தீசுவரம் ஆகிய இரு வட்டங்களை ஏறத்தாழ உள்ளடக்கியதாகும். இதன்கண் கன்னியாகுமரி முன் அடங்காதாயினும் அதனையடுத்துள்ள மணற் குடி அதன்கண் அடங்கியதாக இருந்தது. இன்று அத னையும் தழுவியதாகவே கருதப்படுகின்றது. இத னைச் சோழபாண்டியர், நாயக்க மன்னர், முகிலன் முதலியோர் படையெடுத்து வந்து தாக்கியுள்ளனர்.

குமரியிலிருந்து குரங்குகள் இராமனுக்காக இலங் கைக்கு அணை கட்டியதாக மணிமேகலை (5:37) கூறும். குமரித்தலபுராணமும் இவ்வாறே குறிப்பிடும்.

குமரிக்குச் செல்லும் வழியிலமைந்த மேற்குத் தொடர்ச்சி மலையின் தென்கோடிப் பகுதியாகிய மருந்து வாழ்மலையினைப், போரில் மயங்கி வீழ்ந்த இராம இலக்குவரை உய்விக்க, அநுமன் இமயமலை யின் ஒரு பகுதியைப் பெயர்த்து இலங்கை செல்லுங் கால் தவறி வீழ்ந்த ஓர் துண்டு என்றும் கதை யாய்க் கூறுவர். இதன்கண் குகைக் கோயில்களும் உள.

இந்தியா முழுமையும் பரவிய சக்தி, கேரள நாட்டிலும் குமரி மாவட்டத்தில் மண்டைக் காட்டி லும், கன்னியா குமரியிலும் பகவதியாகக் கோயில் கொண்டுள்ளாள். குமரிக்கோவிலில் பல பழைய கல்வெட்டுகளும் அதன் வரலாற்றையுணர்த்தும் வகையில் உள்ளன. இத்தகைய முக்கடலும் கூடும் கோயில் துறையில் அமைந்த பாறையிலேயே சுவ..மி விவேகானந்தர் தவமிருந்து தனிப்பேறடைந்தமையால் அப்பாறை மீது இன்று சுவாமி விவேகானந்தருக்கு ஓர் மண்டபம் கட்டப்பட்டுள்ளது. இத்தகைய குமரித் துறைக்கு ஒரு நாளைக்கு ஏறத்தாழ ஆறாயிரம் முதல் பன்னிரண்டு ஆயிரம் வரையிலான எண்ணிக்கை யில் பயணிகள் வந்து செல்கின்றனர்.

நாகர்கோவிலிலிருந்து கன்னியாகுமரிக்குச் செல் லும் வழியில் சுசீந்திரம் என்ற ஊரில், மிகவுயர்ந்த கோபுரமும், தெப்பக்குளமும், கல்வெட்டுகளும், சிற் பங்களும், இசைத்தூண்களுமுடைய இந்திரன் பூசித் தாகக் கூறப்படும் அயன், அரி, அரன் ஆகிய முப் பெயருங் கூடிய தாணுமாலயன் கோயிலாகிய சிவன் கோயிலும் உண்டு. குமரிக்குச் செல்வார் இக்கோயி லுக்கும் செல்வது வழக்கம். இக்கோயிலுக்கென இரு பெருந் தேர்களும் ஓர் சிறு தேரும் உள.

நாஞ்சில் நாட்டின் தலைமையிடம் பழைமையில் கோட்டாறாயினும், இன்று அதனையும் உள்ளடக்கி நாகர் கோயில் விளங்குகிறது. நாகர்கோவில் என்பது நாகருக்கு (பாம்பு) அமைந்த கோயிலின் பெயர். இது நாகருக்கு அமைந்த கோயிலாக உருவத்தால் கூறப் படினும், அதனைக் குடையாகக் கொண்ட பார்சுவ நாதராகிய சமண தீர்த்தங்கரர்க்கு அமைந்த கோயி லாகும். இதன்கண் மகாவீரர்க்கும் பத்மாவதிக்கும் உருவங்கள் உள்ளன. இத்தகைய கோயிலின் பெயரே ஊருக்காகிப் பின்தலைநகருக்காயிற்று.

நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளுள் ஒன்று திருவண்பரிசாரம், இது நம்மாழ்வாரின் தாயாரது பிறப்பிடம். இவ்வூர் நாகர்கோவிலிலிருந்து ஐந்து கி.மீ.தொலைவிலுள்ளது. இது போன்றே, எழினியாத

னால் ஆளப்பட்ட திருவாட்டாறு என்று புறநானூற்றில் கூறப்பட்டது, பின் திருமால் திருப்பதியாக அமைந்து குமரி மாவட்டத்திலுள்ளது. திவ்வியப்பிரபந்தத்தில் இவ்விரண்டினையும் குறித்துப் பாடல்கள் உள்ளன.

புனித சேவியர் இப்பகுதியில் வந்து தங்கிச் சமயத் தொண்டு செய்தமையால் கோட்டாற்றில் அவர் பெயரில் அமைந்த சவேரியார் கோயில் உண்டு. இது போன்று குமரி மாவட்டத்தில் ஞானி பீரப்பா அல்லது பீர்முகம்மது அவர்கள் வாழ்ந்த தக்கலைப் பகுதியில் பேர்பெற்ற பள்ளியுண்டு. இம்மாவட்டத்திலுள்ள திருநந்திக் கரை பழமையில் சமணர் குடியிருப்பாக இருந்தது.

மேற்கே கடலும், கிழக்கே மலையுமுடைய நாஞ்சில் நாடு நானிலங்கொண்டது.பாலை நிலம் இதன் கண் இல்லை. குடிநீர்க்காக ஒன்றும், பயிருக்காக இரண்டும் ஆக மூன்று அணைக்கட்டுக்கள் நிலத்திலும், இரண்டு அணைக்கட்டுகள் மலையிலும் உள்ளன. இவை தவிரப் பழையாறு (பஃறுளி, பறளியாறு) என ஒன்றும், கால்வாயும் ஏரியும் குளமும் கிணறும் பலவும் உள்ளன. இதனால் பயிர்த்தொழில் நாஞ்சில் நாட்டின் உயிர்த்தொழில், நெல்லும், வாழையும், தென்னையும், பனையும், கமுகும், கிழங்கும், மிளகும், ஏலமும், கிராம்பும், தேயிலையும், காபியும், இரப்பரும், மலரும், காயும், கனியும் வகை வகையாக உள்ளன. நாஞ்சில் நாட்டில் கடற்கரையோரத்தில் உப்பளங்கள் வெண்குன்றுகளோடு காணப்படும். கடல் துறைகள் மீனை வாரி வழங்கும்.

இந்து, இசுலாமியக், கிறித்தவ சமயங்கள் எங்கும் பரந்து காணப்படும். மலைக்கோயில்கள் முருகன் கோயிலாக, மற்றையவை சிவன், பார்வதி, மாலவன், கணபதி முதலியோர்க்கமைந்த பெருந் தெய்வக் கோயில்களாகக் காணப்படும்.

மாரியம்மன், இசக்கி (யட்சி) சாத்தன், மாடன் முதலிய சிறு தெய்வக்கோயில்கள் பலவுள்ளன. சங்க கால நடுகல் வழிவந்த உருவத்தோடுள்ள மாடன் கோயில்கள் தென்பாண்டி நாட்டிலும் நாஞ்சில் நாட்டிலுமே உள்ளன. இத்தகைய கோயில்கள் இவ்விரு பகுதிகளுக்கும் உரியதாகக் கருதப்படும். வில்லுப் பாட்டுக்கலை இந்நாஞ்சில் நாட்டில் சிறப்பாய்த் தோன்றி வளர்ந்தது.

மக்கள் கல்விக் கணக்கில் இந்தியாவில் நாகர் கோவில் இரண்டாம் இடத்தினைப் பெறுகின்றது. ஆடவரும் பெண்டிரும் கல்வி நிலையில் மிகுதியாகக் காணப்படுகின்றனர். வீதிதோறும் இரண்டொரு பள்ளி என்பது நாஞ்சில் நாட்டுக்குப் பொருந்துவதாகும்.

கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, சதாவதானி செய்குதம்பிப் பாவலர், கலைவாணர் என். எசு. கிருட்டிணன், அரசியலறிஞர் தியாகி சீவா, பேராசிரியர் கே.என். சிவராசபிள்ளை, பொருளாதார மேதை டாக்டர். நடராசன், டி.கே.எசு. சகோதரர்கள், முத்துக் குட்டி சுவாமிகள் முதலியோர் நாஞ்சில் நாட்டைச் சார்ந்தவர்கள். மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம்பிள்ளை, பேராசிரியர் வையாபுரி பிள்ளை என்ற இருவர்க்கும் நாஞ்சில் நாட்டோடு பெருந் தொடர்புண்டு. செண்பகராமன் பள்ளு, இரவிக்குட்டிபிள்ளை போர் முதலிய ஆசிரியர் பெயர் தெரியாத நூல்கள் நாஞ்சில் நாட்டில் தோன்றியனவே. சி.சு.

**துணை நூல்கள்:**


புறநானூறு, தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, தஞ்சாவூர், 1985.

**Caldwell, Rev. Robert**, Comparative Grammer of the Dravidian Languages, Gian Publication, 1984.


***நாஞ்சில் வள்ளுவன்*** சங்க காலத்தில் வாழ்ந்த ஒரு கொடையாளி; நாஞ்சில் நாட்டுத் தலைவன்; நாஞ்சிற் பொருநன் என்று குறிக்கப்பெறுவான். இவனைப் பற்றி ஒரு சிறைப் பெரியனார், ஔவையார், மருதனிள நாகனார். கருவூர்க் கதப்பிள்ளை ஆகியோர் பாடியுள்ளனர், கருவூர்க் கதப்பிள்ளை பாடிய புறநானூற்றுப் பாட்டில் (380)இவன் 'தென்னவர் வயமறவன்' எனச் சுட்டப் பெறுதலின் பாண்டிய மன்னர்க்குப் படைவீரனாகத் திகழ்ந்தமை அறியலாம். 'உயர்சிமைய உழாஅ நாஞ்சிற் பொருநன்' என்பதிலும் 'பொருநன்' என்ற சொல் மறவன் என்பதைக் காட்டும். 'ஈதல் ஆனான் வேந்தே; வேந்தற்குச் சாதல் அஞ்சாய் நீயே' (புறம். 139) என்ற விடத்துப் பழைய உரை, வேந்து என்றது சேரனை என்று குறிப்பிட்டுள்ளது.ஆனால், புறம் 380 'தென்னவர் துணை மறவன்' எனக் கூறுகிறது. எனவே, சேரனுக்கும் பாண்டியனுக்கும் ஒவ்வொருகால் துணைமறவனாக இருந்திருப்பானோ எனவும் நினைக்கத் தோன்றுகிறது.

ஔவையார் நாஞ்சில் வள்ளுவனின் கொடைமடத்தைப் புகழ்ந்தேத்துவர். அவர் அடகின் கண்ணுறையாகச் சில அரிசி வேண்டியதற்குப் பெருங்களிறு நல்கினான், 'அன்னதோர் தேற்றா ஈகையும் உளது கொல்'என்று பாடி அவன் ஈகையைப் பாராட்டுவர். ஒரு சிறைப் பெரியனார் தம் புறப்பாட்டில் (137) நாஞ்சில் நாட்டின் வளத்தைச் சித்திரித்து நாஞ்சில் வள்ளுவனின் பண்புச் சிறப்பு நோக்கி, 'நீ வாழியர் நின் தந்தை தாய் வாழியர் நிற் பயந்திசினோரே'

என வாழ்த்துகின்றார். இரவலர்க்கு இவன் பரிசில் தப்பாமல் தருவான் என்பதை மருதனிள நாகனார், 'கிளி மரீஇய வியன் புனத்து மரனணி பெருங்குரல் அனையன்' - கிளியீடு வாய்த்தாற் போல்வன் என் னும் வழக்குத் தொடரால் புலப்படுத்துவர். நாடு வறங்கூர்ந்தபோதும் வறுமைச் சுற்றத்தின் துன்பந் துடைப்பான். பகைவர் இவனை நெருங்கமுடியாது; ஆனால், நண்பர்க்கு மிக நெருக்கமாக இருப்பான் என்பதைக் கருவூர்க்கதப்பிள்ளை 'துப்பெதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையன்; நட்பெதிர்ந் தோர்க்கே அங்கை நன்மையன்'எனக் கூறிச் சிறப்பிப் பர். இரா.சா.

*நாஞ்சிற் பொருநன்:* காண்க: நாஞ்சில் வள்ளுவன்.

*நாட்டச் சோதனைகள்:* நாட்டம் என்பது தனித்திறன் ஆகும். ஒரு குறிப்பிட்ட துறையில் ஒரு வனுக்கு இருக்கும் உள்ளார்ந்த திறனே நாட்டம் (Aptitude) எனப்படும். அத் திறனைக் கொண்டு ஒரு வனது எதிர்கால வெற்றிகளையோ தோல்வி களையோ அத்துறையில் முன் கூட்டியே முடிவு செய் யலாம். எனவே, ஒரு துறையில் ஒருவனுக்கு ஆர்வமும் திறமையும் மிகுந்திருத்தலே நாட்டம் எனப்படும்.'ஒரு குறிப்பிட்ட ஒரு துறையில் கவர்ச்சியும்,அத்துறையில் திறமையுடன் செயலாற்ற ஆர்வமும் அதில் தேர்ச்சி பெறக்கூடிய தகுதியும் ஒருவனிடம் உள்ளதைக் குறிப்பதே நாட்டம்' என்பர் உளவியலார். ஒரு துறையில் அறிவையோ செய்திறனையோ அன்றி இவ்விரண்டையுமோ போதுமான பயிற்சியின் பின் னர் ஒருவன் பெறக்கூடிய தகுதியைக் குறிக்கும் பண்பு களின் தொகுதியே நாட்டம் அல்லது இயற்கைத் திறன் என்று அவர்கள் விளக்குகின்றனர். ஒரு குறிப் பிட்ட ஒரு தொழிலை அல்லது செய்திறனைக் கற்ப தற்கு ஒருவனிட.முள்ள திறமையை அளவிட்டுக் கூற முற்படுவதே நாட்டச் சோதனையாகும் (Aptitude Test) என்று உளவியலறிஞர் கூறுகின்றனர்.

நாட்டச் சோதனைகள் உண்மைத்திறனைச் சோதனை செய்வதில்லை. மாறாக, ஒருவனிடம் ஒரு குறிப்பிட்ட துறையில் காணப்படும் உள்ளார்ந்த திறனைச் சோதித்து எதிர்காலத்தில் அதே துறையில் அத்திறனை அவனுக்கு அளிக்க இருக்கும் வெற்றி தோல்வியினை முன் கூட்டியே முடிவு செய்வது ஆகும். (எ - டு) ஒரு மாணவன் இசை நாட்டச் சோதனையில் மிக்க மதிப்பெண்கள் பெற்று உள்ளான் என்றால் அம்மாணவன் எதிர் காலத்தில் இசைத் துறையில் திறமை பெற்றவனாக, இசை விற்பன்ன ராக மாறுவதற்கு வாய்ப்பு இருக்கின்றது என்பது பொருள். மாறாக, குறைவான மதிப்பெண்கள் பெற் றால் இசைக் கலைஞனாக அவரால் வர முடியாது என்று பொருள்.

நாட்டச் சோதனைகள் ஏராளமாக உள்ளன. ஒவ்வொரு நாட்டச் சோதனையும் ஒரு தனித்திறனை அளவீடு செய்கின்றது. (எ - டு) கல்வி நாட்டச் சோதனைகள் ஒருவனது கல்வித் திறனை முன்னறிவிக் கின்றன.பொறியியல் நாட்டச் சோதனை ஒருவனுக்கு இருக்கும் இயந்திரங்களை இயக்கும் திறனை முன் னறிவிக்கிறது. அவ்வாறே இசை, நாட்டச் சோதனை ஒருவருக்கு இசையில் இருக்கும் திறமையையும், எழுத் தர் தொழில் நாட்டச் சோதனை, ஒருவருக்கு அத் துறையில் உள்ள திறனையும், தொழில் நாட்டச் சோதனைகள் ஒருவனுக்கு ஒரு தொழிலில் 'இருக்கும் திறனையும் சோதனை செய்பவையாக உள்ளன.

**நாட்டங்களை அளவிடுதல்:** நாட்டம் என்பது வழக்கமாகப் பல சோதனைகளின் தொகுப்பின் மூல மாகத்தான் அளவிடப்படும்.இவ்வாறு பல சோதனை களை இணைத்து ஒரு திறனை முன்னறிவித்தல் முறைக்குச் சோதனைத் தொகுதி என்பது பெயர்.

நாட்டச் சோதனைகள் ஒருவனது குறிப்பிட்ட இயற்கைத் திறனை அளவிட முயல்கின்றன.பலதிறப் பட்ட நாட்டச் சோதனைத் தொகுதி என்பது ஒரு வனுக்குக் கல்வி, தொழில் ஆகிய இரண்டிலும் இருக் கும் திறனை அளவிடுவதாகும்.குறிப்பாக உயர்நிலைப் பள்ளிகளிலும் மேல் நிலைப் பள்ளிகளிலும் பயிலும் மாணவர்களுக்கு அறிவாலோசனை வழங்குவதற் காகவே இது உருவாக்கப்பட்டது. இச்சோதனைஅடுக் கில் ஏழு சோதனைகள் அடங்கியுள்ளன.

1) சொல் ஆய்வுத் திறன், 2) எண்ணாற்றல், 3) இடத் தொடர்பு, 4) கருத்து நுட்பத் திறன், 5) பொறியியல் ஆய்வுத் திறன், 6) எழுத்தர் தொழில், வேகமும் வழுவாமையும், 7) மொழிப் பயன்பாடு.

இந்த ஏழு சோதனைகளும் அச்சிட்ட சிற்றேடு வடிவில் கிடைக்கின்றன. ஒவ்வொரு சிற்றேடும் ஒரு குறிப்பிட்ட திறனை அளவிடச் சோதனை உருப்படி களைக் கொண்டுள்ளது. மேலும் அச்சிட்ட மதிப்பீடு கள் சரியான விடைகளுக்கும் தவறான விடைகளுக் கும் கிடைக்கின்றன.

பல திறப்பட்ட நாட்டங்களின் சோதனைகளைக் கையாள்வதற்கும் அளவிடுவதற்கும் மதிப்பீடுகளைப் பொருள் கொள்வதற்கும் ஒரு கையேடு கிடைக் கின்றது. இச் சோதனை முறை முதலில் அமெரிக்க உளவியல் கழகத்தால் (American Psychological Corporation) உருவாக்கப்பட்டது.

இந்திய மாணவர்களுக்காகவே மாற்றி அமைக் கப்பட்ட நாட்டச் சோதனைத் தொகுதி புதுதில்லி

யில் உள்ள மானசாயான் (Manasayan) என்னும் உளவியல் கழகத்தால் உருவாக்கப்பட்டுள்ளது.

பள்ளியில் பயிலும் மாணவர்கட்கு இக்காலத்தில் இச்சோதனை முடிவுகளின்படி மாணவர்கட்கு அவர்களது நாட்டத்தின் அடிப்படையில் கல்வி வழங்கப்பட்டால் தேவையற்ற பொருள், காலம், ஆற்றல் வீணாகுதல் தவிர்க்கப் படலாம். பல் நோக்குப் பள்ளிகள் அமைப்பதன் மூலம் மாணவர்கள் தமக்கிருக்கும் நாட்டத்தின் அடிப்படையில், வேண்டிய கல்வியைப் பெற்று, அத்துறையில் பெரிதும் முன்னேற்றம் பெற வாய்ப்புக் கிட்டும். மேலும், இச்சோதனைகள் மூலம் தொழில்துறையில் மாணவர்கட்கு வழிகாட்டவும், குறிப்பிட்ட தொழில்களுக்குத் தகுதியானவர்களைத் தேர்ந்தெடுக்கவும் வழிவகை ஏற்படுகின்றது. எஸ்.த.

***நாட்டம்***: 'ஒருவர் ஒரு மொழியைப் பேசுவதோ இசை வல்லுநர் ஆவதோ இயந்திரத் தொழில் நுட்பத்தை அறிவதோ போன்ற ஒரு குறிப்பிட்ட அறிவு, தேர்ச்சித்திறன் அல்லது விளக்க அறிவைப் பயிற்சியின் மூலம் பெறுகின்ற ஆற்றலைச் சுட்டி நிற்கிற தன்மைகளின் கூட்டு அல்லது ஒரு நிலைமையே நாட்டம் (Aptitude) என்பது. எனவே, நாட்டச் சோதனை என்பது, தனிச்சிறப்பு வாய்ந்த, நுண்மையான ஒரு குறிப்பிட்ட வகைச் செயலை, வரையறுத்த அளவுக்குள் செய்வதற்கு ஒருவருக்குள்ள உள்ளார்ந்த ஆற்றலை எடுத்துக்காட்ட வடிவமைக்கப்பட்ட ஒரு முறையாகும்' என்று பிரீமேன் என்னும் அறிஞர் விளக்கம் அளித்துள்ளார். நாட்டச் சோதனைகளும், அறிவுத் திறனறி சோதனைகளும் வேறுபடுத்திக் கண்டறியக் கூடியனவேயாகும். ஏனெனில் நாட்டச் சோதனை, பயிற்சி மற்றும் பட்டறிவு காரணமாகக் குறிப்பிட்ட வகைத் தேர்ச்சித் திறன் அல்லது செய்திறனை வளர்த்துக்கொள்ள ஒருவருக்கு இருக்கும் உள்ளார்ந்த ஆற்றலை மதிப்பிட வடிவமைக்கப்பட்டதாகும். மேலும், அவை கல்விச் சாதனைச் சோதனைகளில் இருந்தும் வேறுபட்டவையே ஆகும். ஏனெனில், கல்விச் சாதனைச் சோதனைகள் பெற்ற அறிவை அளந்தறிவன; நாட்டச் சோதனைகள் உள்ளார்ந்த ஆற்றலை அளந்தறிவன.

நடைமுறையில் பயனுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட சில நாட்டச் சோதனைகளை இங்கு விளக்குவது பொருத்தமாகும். அவையாவன:

1. **பார்க்கும் திறன் மற்றும் கேட்கும் திறன் அறி சோதனைகள்**: சில தொழில்களைச் செய்வதற்குப் பார்க்கும் திறனும், கேட்கும் திறனும் மிகச் சிறந்த அளவிற்கு இருக்க வேண்டியது தேவையாகும். வண்ணங்களைப் பார்த்தறியும் சோதனைகள், பார்க்கும் திறன் மற்றும் கேட்கும் திறனின் நுண்மை அல்லது கூர்மை அறியும் சோதனைகள் முதலியன ஒருவருடைய நரம்பு மண்டலம் மற்றும் மூளையின் திறனறிய உதவுவன என்பதால் அவை மிக இன்றியமையாதவையாகும்.

2. **கட்டளை நரம்பமைவு மற்றும் உடல்வலி சோதனைகள்**: சில தொழில்களைச் செய்வதற்கு வேலையின் தன்மைக்கேற்பத் தசைகளின் வலிவும், அவற்றின் ஒருமுகப்படுதலும் மிகவும் தேவையாகும். உள்ளங்கை இறுக்கிப் பிடிப்பு வலிமை (Tests of Strength of Grip), எதிர்வினை நேரம் (Reaction Time), கைத்திறன் (Manual Dexterity), இரு கை இணைந்து செயற்படு வலிமை (Two-hand Co-ordination), கை-கண் இணைந்து செயற்படு திறமை (Eye-hand Co-ordination) முதலான சோதனைகள் ஒருவருடைய உள ஆற்றலால் உடல் தசை இயக்கத்திறன் வெளிப்படப் பயன்படுகின்றன.

3. **இயந்திரம் சார்ந்த நாட்டம்**: இது ஒற்றையான அல்லது தனி முழுமையான பணியன்று. இயந்திரம் சார்ந்த நாட்டச் (Mechanical Aptitude) சோதனைகள் உயர் அளவு அமைப்பில் இயந்திரச் செயல் திறனையும், செயல் வினைமுறையையும் அளந்தறிவதற்கு ஏற்ற வகையில் திட்டமிடப்பட்டவை. இயந்திரப் பகுதி இணைப்பு, இயந்திர இடத் தொடர்புகள், இயந்திரத்தைப் புரிந்துகொள்ளும் திறன் முதலானவை இயந்திர நாட்ட மதிப்பீட்டின் சில குறிப்பிட்ட வடிவங்களாகும். ஒட்டுமொத்தமாக இச்சோதனைகள் புள்ளியியல் வகையில் நம்பத்தக்கவை என்பதுடன் அவற்றின் பெருந் தொகுதி ஆராய்ச்சிப் பணிகளுக்கும் கிடைக்கின்றன.

4. **எழுத்தர் தொழில் நாட்டம்**: இதுவும் ஒரு தனி முழுமையான பணியன்று. ஒத்த தன்மையுடைய மற்றும் வேறுபட்ட தன்மையுடையவற்றின புலனுணர்வுக் காட்சி, கையெழுத்தின் வேகமும் தரமும், சரிபார்த்தலின் வேகமும திட்ப நுட்பமும், எளிய கணக்கு முறைகள், வகைப்படுத்தலின் வேகமும் நுட்பமும், அகர வரிசையில் தொகுத்து வைத்தல் முதலான பணிகள் எழுத்தர் தொழில் நாட்டத்தை (Clerical Aptitude) அளக்க உதவுவன. இச்சோதனைகள் எழுத்தர் வேலையில் உயர்திறம் படைத்தவர்கள், மற்றும் குறைந்த அளவு திறம் படைத்தவர்களைக் கண்டறியப் பயன்படுகின்றன.

5. **வேறுபாட்டு நுட்ப நாட்டச் சோதனைகள்**: இவ்வகைச் சோதனையில் பல்வேறு சோதனைகள் இடம் பெற்றுள்ளன. இவை ஒரே தன்மைத்திறனுள்ளவர்களை ஒப்பிட்டு, தரவாரியாகக் கணக்கிட்டு

வரிசைப் படுத்துவதற்கென்று முறை செய்யப்பட்டவையாகும். இச் சோதனைத் தொகுதியில் எட்டு வகைச் சோதனைகள் இடம்பெற்றுள்ளன. அவை யாவன: 1) சொல் சார்ந்த காரணி, 2) எண் சார்ந்த திறன், 3) பொருள் பிழிவு (சுருக்க)க் காரணி, 4) இடைவெளித் தொடர்புகள், 5) இயந்திரம் சார்ந்த காரணி, 6) எழுத்தர் வேலை வேகம் மற்றும் திட்ப நுட்பம், 7) & 8) மொழியைக் கையாளுதல் (இரண்டு பாகங்கள்) முதலியனவாகும். சோதனைப் படிமங்கள் கொடுக்கப்பட்டிருந்த போதிலும் மேலும், ஆராய்ச்சி மேற்கொண்டு ஒப்பீட்டு அளவு வகைகளின் வருவதுரைத்தல் மற்றும் வேறுபாட்டு நுட்பச் சிறப்பை முடிவு செய்வது இன்றியமையாததாகும். வாழ்க்கைத் தொழில் சார்ந்த அறிவுரை விளக்கத்தில், வேறுபாட்டு நுட்ப நாட்டச் சோதனைகள் (Differential Aptitude Test) மிகவும் பயன் தருவனவாக உள்ளன.

நாட்டச் சோதனைகளுக்குப் பல்வேறு பிற துறைகளிலும் வாய்ப்புகள் உள்ளன. அவற்றுள் அழகுணர்ச்சியில் சுவை நலம் காணல், நுண்கலைத் திறன், மற்றும் கணக்கர்கள், வாணிகச் செயலாட்சியாளர்கள், வழக்குரைஞர்கள், மருத்துவர்கள், செவிலியர்கள், அறிவியலாளர்கள், ஆசிரியர்கள் முதலானோரின் குறிப்பிட்ட தொழில்களில் அமைந்துள்ள மரபு வழிச் செயற்படு முறைகள் முதலியன குறிப்பிடத் தக்கவை. வே.ந.

**நாட்டரசன் கோட்டை:** இது திருச்சி இராமேசுவரம் புகைவண்டிப் பாதையில் உள்ள ஓர் ஊர்; பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தைச் சேர்ந்தது. நாட்டரசன் என்ற நாட்டாண்மைக் காரன் இப்பகுதியை வளைத்துக் கோட்டை கட்டி ஆண்டமையான் இவ்வூர்க்கு நாட்டரசன் கோட்டை என்று பெயர் ஏற்பட்டது. இதனை 'நாட்டரசன் தன்னரசு நாடாளும் நாளில் அதிகாரங்கொண்டு/ சொந்த நாட்டினிற் கோவிற்குளம் குடிஆளும் கோட்டை தன் பேரிட்டுண்டாக்கி வந்த நாட்டரசன் கோட்டை' (18)என்று கண்ணுடையம்மன் பள்ளுகூறுகின்றது. இவ்வூரின் பெயர் 'பனசை' என்றும் 'தென் பனசை' என்றும் இதே நூல் சுட்டுகின்றது.

இவ்வூரில் சிவகாமியம்மை உடனாய கரிகால சோழீசுவரர் வீற்றிருக்கும் சிவன்கோயில் உள்ளது. இப்பழமையான கோயில், 1959-ஆம் ஆண்டில் திருப்பணி செய்யப் பெற்றுத் திருக்குட முழுக்குச் செய்யப் பெற்றது. சீநிவாசப் பெருமாள்கோயில், கண்ணுடையம்மன் கோயில் என்பனவும் இங்குள்ளன. கண்ணுடையம்மன்கோயிலில் உள்ள கண்ணாத்தாள் பேராற்றல் வாய்ந்த தெய்வம். இவ்வம்மை கண்ணகியின் உருவேயாம் என்பர். கொற்கைப் பாண்டியனான இளஞ்செழியன், கண்ணகிக்கு ஆயிரம் பொற்கொல்லரைப் பலியிட்டுக் களவேள்வியால் சாந்தி செய்து துயர் துடைத்த ஊர் நாட்டரசன் கோட்டையே என்பர் கம்பனடிப்பொடி சா. கணேசன்.

இத்திருக்கோயிலில் ஆண்டுதோறும் வைகாசி விசாகத் தன்று தேரோட்டம் நடைபெறும். இங்கு நடைபெறும் 'களியாட்ட விழா' வேறு திருக்கோயில்களில் காண முடியாத விழாவாகும்.இதுபன்னிரண்டு ஆண்டுக்கு ஒருமுறை நிகழும். இவ்வம்மை மீது முத்துநாயகம் என்னும் முத்துக்குட்டிப்புலவர் 'கண்ணுடையம்மன் பள்ளு' இயற்றியுள்ளார்.

நாட்டரசன் கோட்டையின் நகர அமைப்பு, காவிரிப் பூம்பட்டினத்தின் பண்டைய அமைப்பை அடியொற்றியது. இவ்வூரின் நடுவண் சதுக்கமும் அச் சதுக்கத்தில் பல திருக்கோயில்களும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. செட்டியார்கள் இவ்வூரில் வாழ்ந்தமையாலேயே நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் எனப் பெயர் பெற்றனர்.

இவ்வூரின் இன்னொரு சிறப்பு, கம்பன் தன் வாழ்நாளின் இறுதிக் காலத்தில் வந்து தங்கி இருந்தமை. இங்குள்ள 'கம்பன் சமாதி'யில் ஆண்டுதோறும் பங்குனி உத்திரத்தன்று கம்பன் விழா வழிபாட்டுடன் கொண்டாடப்படுகிறது. பேச்சு, படிப்பு வாராத பிள்ளைகளுக்குக் கம்பன் சமாதி மண்ணைச் சிறிது எடுத்துக் கரைத்துக் கொடுத்தால் பேச்சும் படிப்பும் வரும் என்னும் மரபுவழிச் செய்தி ஒன்று உள்ளது. இவ்வூர் மக்களின் முதன்மைத் தொழில் உழவு; பனை மரங்கள் நிறைந்த பகுதி; மழை பொய்ப்பின் புன் செய், நன்செய் வளம் இல்லை. தெ.சொ.

**நாட்டவர் சமூகம்:** பலவிதமான சமூகங்களைப் பாகுபடுத்தி அவ்வவற்றின் தன்மைகளை வரிசைப்படுத்தி ஆராய்வது சமூகவியல் அணுகுமுறைகளில் ஒன்றாகும். இவ்வகையில் நாட்டவர் சமூகம் (Folk Society), நகரச் சமூகம் என்ற பாகுபாடு பல காலமாக வழங்கி வருவதாகும். பழங்குடி இனங்கள் ஆராய்வோர், மூன்றாம் உலக நாடுகளை விவரிக்கும் வெள்ளையர்கள் ஆகியோருக்கு இப்பாகுபாடு மிகவும் பயன்பட்டது. இப்போது புதிய அணுகுமுறைகள் வளர்ந்துவிட்டதால் பாகுபடுத்தி முத்திரை குத்திவிடும்முறை நிராகரிக்கப்பட்டுள்ளது. எனினும், ஆங்காங்கே சிதறிக்கிடக்கும் பழங்குடிச் சமூகங்களை ஆராய இது பயன்படுத்தப்படுகிறது.

நாட்டவர் சமூகத்தைப் பல்வேறு கண்ணோட்டங்களில் பல சமூகவியல் அறிஞர்கள் ஆராய்ந்துள்ளார்கள்.இராபர்ட்டுரெட்பீல்டு (Robert Redfield)

என்பவர் நாட்டவர் சமூகத்தை 'அளவில் சிறியது, படிப்பறிவற்றது, ஒரே தன்மையுடைய மக்களை உடையது' என்றும் அது வாழ்க்கை, மதம், பாரம் பரியம், தொன்று தொட்ட பழக்கங்களை அடிப் படையாகக் கொண்டது' என்றும் விவரித்துள்ளார்.

தர்க்கைம் (Durkheim) என்ற அறிஞர் சமூகங் களை இயந்திரகதியில் ஒருங்கிணைந்தவை, இயற்கை யாக ஒருங்கிணைந்தவை என்று இரண்டுவிதமாகப் பிரித்துள்ளார். இதில் இயந்திரகதியில் ஒருங்கிணைந்த சமூகங்கள் என்பது நாட்டவர் சமூகத்தைக் குறிப்ப தாகும். இந்தச் சமூகத்தில் மக்கள், காலம் காலமாக ஒரே தொழிலைச் செய்துகொண்டு ஒரே இடத்தில் வாழ்ந்து கொண்டிருப்பதால் ஒரேமாதிரியான விருப்பு வெறுப்புக்கள், கருத்துகள், எண்ணங்கள், ஆசைகள் உடையவர்களாக இருப்பார்கள். சமூக உணர்வு மேலோங்கியிருக்கும். சமூகத்தையும், அதன் கட்டுப்பாடுகளையும் மீறுபவர்களுக்குக் கடுமையான தண்டனை வழங்கப்படும். மாறாக, இயற்கையாக ஒருங்கிணைந்த சமூகங்கள் வேறுபாடுகளும், பிரிவு களும் நிரம்பியவை. எனினும், சமூகம் ஒருங்கிணைந்து செயற்படுவதற்குக் காரணம், வேலைப் பாகுபாடு தான். ஒவ்வொரு பணியும் பிரிந்து பலரால் செய்யப் படுவதால் ஒருவர் பணி, மற்றவர் பணியைச் சார்ந் திருக்கும். இந்தச் சார்புடைமைதான், பல வேறுபாடு களும் முரண்பாடுகளும் நிரம்பிய சமூகத்தை இயற் கையாக ஒருங்கிணைக்கிறது என்பது தர்க்கைமுடைய கருத்து.

தன்னீசு என்ற அறிஞர் 'செமீன்சாப்ட்டு' (Gemeinschaft), 'செசல்சாப்ட்டு (Gesellschaft) என்ற செருமன் பெயர்களை வைத்துச்சமூகங்களை வகுத்துள்ளார். இதில் 'செமீன்சாப்ட்டு' நாட்டவர் சமூகத்தோடு பொருந்தும். இங்கு இயற்கையாக ஏற் படும் பாசம், அன்பு, மரியாதை போன்ற அடிப்படை மனித உணர்ச்சிகள் இன்றியமையாதவையாக இருக் கும். எனவே குடும்பம் வலுவான அமைப்பாக இருக் கும். 'செசல்சாப்ட்டு சமூகத்தில் பகுத்தறிவும் சுய நலமும் தனிமனிதன் சுதந்திரமும் முக்கியத்துவம் பெறும். எனவே, வேறுபாடுகள் மிகுந்திருக்கும் என்று தன்னீசு விவரித்துள்ளார்.

நாட்டவர் சமூகம் பலவிதமான கண்ணோட்டங் களில் ஆராயப்பட்டாலும் பொதுவான சில அடிப் படைத் தன்மைகள் யாவராலும் ஒப்புக் கொள்ளப் பட்டுள்ளன. முதலாவதாக, நகரம் மாநிலம் ஆகிய தற்காலச் சமூகங்களோடு ஒப்பிடுகையில் நாட்டவர் சமூகம் அளவில் சிறியதாகும். குடும்பங்கள் பெரிய தாக இருந்தாலும், மொத்தமாகக் குடும்பங்களின் எண்ணிக்கையும், சமூகத்தின் மக்கள்தொகையும் குறைவாக இருக்கும்.

இரண்டாவதாக நாட்டவர் சமூகத்தின் பொரு ளாதாரம் பெரும்பான்மையாக வேளாண்மை, குடிசைத்தொழில்கள், நெசவு, மீன்பிடித்தல் போன்ற தொழில்களின் அடிப்படையில் இயங்கும். உடல் வலிமையும் திறனும் கொண்டு பயன்படுத்த வேண் டிய மண்வெட்டி, கலப்பைபோன்ற கருவிகள் இருக்குமேயன்றி இயந்திர சக்தியால் இயங்கும் தொழில்நுட்பங்கள் காணப்படாது. உற்பத்தி பொது வாகச்சமூகத்தின் தன்னிறைவுக்காக இருக்குமேயன்றி விற்பனைக்காகவும் இலாபத்திற்காகவும் இராது. இதனால் பணம், முதலீடு, வட்டி, வாடகை போன்ற கூறுகள் நாட்டவர் சமூகத்தில் காணப்படாது. நாட்டவர் சமூகத்தின் பொருளாதாரம் எளிமை யான வழியில் தன்னிறைவை அடையும் தன்மையுடை யது.

மூன்றாவதாக, வேலைப் பாகுபாடுகள் மிகுதி யாக இராது. ஒவ்வொருவர் பணியும் முழுமையாக அவரே செய்யும் அமைப்பில் வேலைகளைப் பிரித்துப் பல பேர்கள் பகிர்ந்து செய்வதனால் ஏற்படும் சார் புடைமை இருக்காது.

நான்காவதாக, பல காலமாக ஒரே பாரம்பரி யத்தில் இருந்து வருவதால் மக்களைப் பிணைக்கும் கருத்துக்களும், நம்பிக்கைகளும் ஆழமாக இருக்கும். இவைமற்ற சமூகங்களிலிருந்து மாறுபட்ட, தனித் தன்மை வாய்ந்த 'பண்பாட்டுத் தீவுகளாய்' இருக் கின்றன.

ஐந்தாவதாக, நாட்டவர் சமூகங்களின் பாடல் கள், இலக்கியங்கள், கலைகள் யாவுமே எளிமையான வைகளாய், வாழ்க்கை முறையோடு பின்னிப்பிணைந் திருக்கும். அவர்களது பண்டிகைகள், சம்பிரதாயங் கள் யாவும் சமூக உணர்வை வலுப்படுத்துவனவாதக இருக்கும் இராபர்ட்மெர்ட்டன்(RobertMerton) அவர் கள் குறிப்பிட்ட 'மறைமுகமான பயன்' (Latent Function) இந்தச்சம்பிரதாயங்களுக்கு உண்டு. எடுத் துக்காட்டாகக் கோப்பிக் குழுவினர், மழையை வர வழைக்கச் சில சம்பிரதாயங்களைப் பின்பற்றுவர். இச்சம்பிரதாயங்களினால் மழை வாராவிட்டாலும் இவை தொடர்ந்து பின்பற்றப்படும். ஏனெனில் இத் தகைய சம்பிரதாயங்களும் பண்டிகைகளும் சமூகத்தி னர் ஒன்றுசேர்ந்து கூடியிருக்க வாய்ப்பளிக்கிறது. ஆகவே, அவை சமூக ஒறுமையை வலுப்படுத்தும் 'மறைமுகமான பயனை' உடையனவாய் உள்ளன. எனவேதான் சம்பிரதாயங்களின் 'வெளிப்படையான பயன்' கிடைக்காவிட்டாலும் மறைமுகமான பயன் அவற்றை நிலைநிறுத்தி வைக்கிறது.

ஆறாவதாக, நாட்டவர் சமூகத்தின் கட்டுப்பாடு கள் சட்டம், ஒழுங்கு என்ற தனிச் சாதனங்களன்றிப் பெரியோர்களாலும் பொதுமக்கள் கருத்தாலும்

விதிக்கப்படுகிறது. சமூகத்தின் பழிக்கு அஞ்சி மக்கள் விதிகளில் இருந்து பிறழ்வதைத் தவிர்ப்பர்.

இக்காலத்தில் மேற்கூறிய தன்மைகள் யாவும் கூடிய நாட்டவர் சமூகங்கள் மிகச்சில மட்டுமே உள்ளன. நகரத்தின் பாதிப்பும், தொழிற் சாலைகளின் வளர்ச்சியும் பல சமூகங்களின் தனித் தன்மைகளை அழித்துத் தொழில்மயமான நவீன நகர அமைப்பில் சேர்த்துவிட்டன. எனவே, சில தன்மைகளில் நாட்டவர் சமூகங்களாகவும் வேறுசில துறைகளில் நகர சமூகங்களைப் போலவும் இருக்கும் இடைப்பட்ட சமூகங்கள் இக்காலத்தில் மிகுந்துவிட்டன. வி.சு.

**நாட்டவர் வழக்குகள்:** சமூகத்திற்குப் பொதுவாக அமைந்து பரம்பரை பரம்பரையாய் நிகழ்ந்துவரும் செயற்பாட்டு வழிகளே நாட்டவர் வழக்குகள் (Folkways) எனப்படுகின்றன. இவை சமூகத்தால் ஒப்புதல் அளிக்கப்பட்ட அல்லது ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒழுகலாற்று வழிகளாகும். நாட்டவர் வழக்குகள் என்ற இச்சொல்லைச் சமூகவியலில் அறிமுகப்படுத்தியவர் வில்லியம் கிரகாம் சம்னர் (William Graham Sumner) என்ற அமெரிக்க அறிஞராவார். அவர் 1907-இல் இச் சொல்லை வழக்கத்திற்குக் கொண்டுவந்தார்.


வில்லியம் கிரகாம் சம்னர்

நாட்டவர் வழக்குகள் ஒரு குழுவில் நாளடைவில் தானாக ஏற்படுவது. இவை சட்டத்தைப்போல இயற்றப்படுபவையல்ல. இவற்றை இன்னார் ஏற்படுத்தினார் என்றும் சொல்வதற்கில்லை. இவை பொதுவாக எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்படும்போது நிலைத்து நிற்கின்றன. இவை எவரும் கீழ்ப்படிந்து நடக்குமாறும் அமைகின்றன. இவை கீழ்ப்படியும்படி எவரும் வலியுறுத்தவேண்டிய தேவை இல்லாது எல்லோரும் தம்மிச்சையாகவே ஒத்துக்கொள்ளும்படியும், பின்பற்றும்படியும் அமைகின்றன.

இவை தனி மனிதனிடமோ குழுவினரிடமோ பொதுவாகக் காணப்படுகின்ற வழக்கங்களாகும் (Habits). இந் நாட்டவர் வழக்குகளிலிருந்து குழுவினர் எளிதில் விலகி நடக்க இயலாது. இவையே அனைத்துப் பண்பாட்டிற்கும் அடித்தளமாக அமைகின்றன; அனைவரும் கட்டாயம் பின்பற்றும் அளவிற்கு மனத்தில் பின்னிப் பிணைந்துள்ளன. இவை மனிதனின் நடத்தைக்கு எடுத்துக்காட்டாக விளங்குவதால் அவனிடையே ஒரு பாதுகாப்பு உணர்வையும் வாழ்க்கையில் ஓர் ஒழுங்கையும் ஏற்படுத்துகின்றன. சிலர்நாட்டவர் வழக்குகளை வழக்கமாக மீற இயலும்; ஆனால், அனைத்து நாட்டவர் வழக்குகளையும் மீற இயலாது. ஒரு மனிதன் அவ்வாறான சில நாட்டவர் வழக்குகளைப் பின்பற்றாதபோது சமூகத்தில் அவன் தனிமைப்படுத்தப்படுகிறான். அச் சமூகத்தில் வாழுவதுகூட அவனுக்குக் கடினமாக அமையலாம்.

நாட்டவர் வழக்குகள் நிலையானவை அல்ல; மாறி வரும் சமூகச் சூழ்நிலைகளுக்கேற்ப மாறக் கூடியவை. இவை குடும்பம், சொத்து, திருமணம் போன்றவற்றின் நம்பிக்கைகளுடனும் நடைமுறைகளுடனும் தொடர்புடையனவாக இருக்கும்.

இவை மனிதர்களிடையே தன்னுணர்வின்றி அனுபவத்தின் அடிப்படையில் இயற்கையாக ஏற்படுகின்றன. மேலும், இவை அனைத்து மனித வாழ்க்கையிலும், அனைத்து வயதிலும், பண்பாட்டு நிலைகளிலும் தலைமுறை தலைமுறையாக நடந்து வருகின்றன. எடுத்துக்காட்டாக;மனிதன் நாள்தோறும் பல் துலக்குகிறான்; மூன்று வேளை உணவு உண்ணுகிறான்; தரையிலோ நாற்காலியிலோ உட்கார்ந்து உண்ணுகிறான்; உணவு உட்கொண்ட பின்னரே தண்ணீரைப் பருகுகிறான்; காலணிகளைக் கழற்றிவிட்டு வீட்டுக்குள் நுழைகிறான். பிறரை அறிமுகம் செய்துவைக்கும்போது அவரிடம் கைகளைக் குலுக்கிக் கொள்கிறான்; இவற்றை வழக்கமாகச் செய்து வருகிறான்; உணர்வின்றித் தானே செய்து வருகின்றான். இத்தகைய செயல்களே நாட்டவர் வழக்குகளாகும்.

இருப்பினும், நாட்டவர் வழக்குகள் கட்டாயமானவையல்ல. அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டுமென்ற கட்டுப்பாடும் இல்லை. அவை விருப்பத் தேர்வுக்குட்பட்டவை. மனிதன் விரும்பினால் கடைப்பிடிக்கலாம்; இல்லாவிடின் கடைப்பிடிக்காமலும் இருக்கலாம். எடுத்துக்காட்டாக; ஒருவன் தரையிலோ நாற்காலியிலோ உட்கார்ந்துதான் உணவு

உண்ண வேண்டுமென்ற கட்டாயமில்லை. நின்று கொண்டோ படுத்துக்கொண்டோ உணவை உண்ண லாம். இருப்பினும், பழக்கத்தின் காரணமாக உணர் வின்றி உட்கார்ந்தே உணவை உண்ணுகிறான்.

வாழ்க்கை என்பது எவ்வாறு வாழுவது, எவ் வாறு உடை அணிவது, எவ்வாறு பேசுவது, எவ்வாறு நம்பிறருடன் தொடர்புபடுத்திக் கொள்ளுவது என்பன போன்ற பல சிக்கல்களை உடையது. மனிதன் தன் னால் இயன்ற அளவு இவைபோன்ற சிக்கல்களைச் சந்திக்க முற்படுகிறான். வேறுபட்ட சமூகங்கள் வேறுபட்ட செயல்முறைகளைக் கொண்டிருப்பதால் மனிதன் அதற்கேற்ப வாழுகிறான்.

ஒரு குறிப்பிட்ட மக்கள் குழுவினர் ஒரு நாளைக்கு ஒன்று அல்லது இரண்டு அல்லது பல தடவை உணவு உண்ணலாம்; நின்றுகொண்டோ தரையில் அமர்ந்தோ நாற்காலியில் அமர்ந்தோ உண்ணலாம்; பிறருடன் ஒன்றாக அமர்ந்து கூட்டாக உண்ணலாம் அல்லது தனியாக உண்ணலாம்; கையாலோ கரண்டியாலோ சாப்பிடலாம். இவ்வாறான வழக்கங்களில் அவரவர் விருப்பத் தேர்வைப் பொறுத்து ஏதேனும் ஒரு வழக் கத்தைப் பின்பற்றுகின்றனர்.

இவற்றில் ஏதேனுமொரு வழக்கத்தைக் குழு வினர் தெரிந்தோ தெரியாமலோ பின்பற்றுகிற சூழ் நிலை ஏற்பட்டிருக்கலாம். பின்னர், அதையே மீண் டும் மீண்டும் செய்வது அதை ஒரு சாதாரண நடத்தை முறையாக ஒத்துக் கொண்டிருக்கலாம். மேலும், அதைத் தொடர்ந்து அடுத்தடுத்த தலை முறையினர் பின்பற்றும்போது அது குழுவின் ஒரு செயல்முறையாகிறது. அதுவே, அக்குழுவினருக்கு நாட்டவர் வழக்காகிறது. பூ.த.

**நாட்டிங்காம்**: இங்கிலாந்தில் உள்ள இந்நகரம் இலண்டனில் இருந்து வடக்காக 200 கிலோ மீ. தூரத்தில் திரென்ட்டு (Trent) அருகில் அமைந்துள் ளது. மத்திய இங்கிலாந்தில் நாட்டிங்காம்சயரில் உள்ள ஒரு நகரம். இருப்புப்பாதை மையமாக விளங் குவதுடன் நான்கு கால்வாய்கள் சந்திக்குமிடமாக வும் உள்ளது. நாட்டிங்காம் (Nottingham) அரண் மனை, வெற்றியாளர் வில்லியத்தினால் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் இங்கு அமைக்கப்பட்டது. ஆனால், கி.பி. 1644-இல் கிராம்வெல் (Cromwell) என்பவ ரால் அழிக்கப்பட்டு மீண்டும் கட்டப்பட்டது. இது கி.பி. 1831-இல் ஏற்பட்ட கலவரங்களின்போது தீயி னால் மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டது.

இரண்டாம் உலகப்போரின் போது இந்நகரம் பெரிதும் பாதிக்கப்பட்டது. இந்நகரில் 1924-இல் வொலாட்டன் மாளிகை (Wollaton Hall) என்ற இடத்தில், 744 ஏக்கர் நிலத்தினைக் கொண்ட பூங்கா மிடில்டன் பிரபுவிடம் (Lord Middleton) இருந்து வாங்கப்பட்டது. அது 1926-இல் தேசிய வர லாற்றுக் கண்காட்சிச்சாலையாக (National History Museum) மாற்றப்பட்டது.

இங்கு அமைந்திருக்கும் நாட்டிங்காம் பல்கலைக் கழகம் கி.பி. 1881-இல் தொடங்கப்பட்டது. காலுறை மற்றும் சரிகை வேலைப்பாடுகள் இந்நகரத்தின் புகழ் பெற்ற கைத்தொழில்கள். நிலக்கரிச் சுரங்கவேலை கள், இரும்பு உருக்கு, சுண்ணக்கல் அகழ்தல் என்பன முக்கிய தொழில்களாக உள்ளன. இவற்றைவிடத் துணி வகைகள், மிதி வண்டிகள், பாதஅணிகள், இரசாயனப் பொருள்கள் ஆகியவற்றின் தயாரிப்பு களும் இடம் பெறுகின்றன. நாட்டிங்காம் சுருட்டு, வெண்சுருட்டு வகைகள் இங்கிலாந்தின் சந்தைகளில் பெருமளவு விற்பனையாகின்றன. நாட்டிங்காம் நகரின் மக்கள்தொகை 277.100 (1983). எஸ்.ஏ.நோ.

**நாட்டிடை ஆறுகள்**: பல நாடுகள் வழியே செல்லும் ஆறுகள் நாட்டிடை ஆறுகள் எனப்படும். இவற்றைப் பன்னாட்டு ஆறுகள் என்று கூறுவோரும் உளர். தான்யூபு, நைல் போன்ற ஆறுகளை நாட்டிடை ஆற்றிற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

**நாட்டிடை நீர்வழி உரிமை:** ஓர் ஆறு ஒரு நாட் டின் ஆள் நிலப்பரப்பின் உள்ளே தனது தொடக்கத் தையும் முடிவையும் கொண்டு விளங்குமாயின் அது எந்த நாட்டில் ஓடுகிறதோ அதற்கே முழுமையும் சொந்தமாகிறது. எனவே, இதில் பெரிய சட்டச் சிக் கல் ஏற்படுவது கிடையாது. ஆனால், பல நாடுகள் வழியே செல்லுகின்ற ஆற்றில் அதன் நீர்மீதும், நீர் வழி மீதும் வெவ்வேறு நாடுகள், வெவ்வேறு வித மான உரிமையைப் பெற்று விளங்குவதால், அவை தொடர்பான பன்னாட்டுச் சட்ட விதிகளே, நாடு களுக்கு இடையிலான சட்டச் சிக்கல்களைத் தீர்வு செய்யப் பயன்படுத்தப்படுகின்றன.

ஐரோப்பிய நாடுகளில் ஆற்று வழியாகக் கப்பற் போக்குவரத்து மிகுதியாக நடக்கின்ற காரணத்தால் எந்தெந்த நாடுகள், ஒரு பன்னாட்டு ஆற்றினை நீர் வழியாகப் பயன்படுத்தலாம் என்பது குறித்துக் குரோசியசு தொடங்கிப் பல நாட்டுச் சட்ட வல்லுநர்கள் பல கருத்துகளைக் கூறியுள்ள னர். அவர்களது கருத்துப்படி ஒரு நாட் டிடை ஆற்றில் கரையோர நாடுகள் அத் தனையும் அந்த ஆற்றின் மீது நீர்வழிப் போக்கு வரத்தை நடத்தலாம். இவ்வகை உரிமையினை நீர் வழிச் சுதந்திரம் என்பர் (Freedom of Navigation). இந்த நீர் வழிச் சுதந்திரம் இன்னும் சட்ட வழக் காறாக ஏற்றுக் கொள்ளப்படாத காரணத்தால்,

நீர் வழி உரிமை குறித்த, எல்லோராலும் ஒத்துக் கொள்ளப்பட்ட பன்னாட்டுச் சட்ட விதி எதுவும் இல்லை என்றே கூற வேண்டும். இருப்பினும், இவ் வுரிமை குறித்து மூன்று வகையான கருத்துகள் நிலவு கின்றன. அ) பன்னாட்டு ஆறுகள் மீதான நீர்வழி உரிமை (Right of Passage) சமாதான காலங்களில் மட்டுமே உண்டு (போர்க் காலங்களில் இவ்வுரிமை கிடையாது). ஆ) பன்னாட்டு ஆறுகள் மீதான நீர் வழி உரிமையினை எந்த நாட்டின் மீது அந்த ஆறு ஓடுகின்றதோ அந்த நாடு மட்டுமே கொள்ள முடி யும். ஏனைய நாடுகளுக்கு அவ்வுரிமை கிடையாது.

இ) பன்னாட்டு ஆறுகள் மீது எல்லா நாடுகளுக் கும் நீர்வழி உரிமை உண்டு. எனினும், இந்த உரிமை யானது, கரையோர நாடுகளின் தேவையை உத்தே சித்து முறைப்படி உருவாக்கப்பட்டு அதனதன் எல் லைக்குள் நிருவகிக்கப்படும் கட்டுப்பாட்டு விதிகளுக்கு உட்பட்டதாகும். இந்த மூன்று வகைக் கருத்து களில் ஏதாவது ஒரு கருத்தைச் சில நாடுகள் பின்பற்று கின்ற காரணத்தால் எல்லோருக்கும் பொதுவான ஒரு விதி ஏற்படுவதில் தாமதம் ஏற்படுகிறது.

இக்காலத்தில் ஒரு பன்னாட்டு ஆற்றின் மீது நீர் வழி உரிமை கொண்ட கரையோர நாடுகள் அனைத் தும், ஓர் ஒப்பந்தத்தை ஏற்படுத்தி, அதனால் இயற்றப் பட்ட விதிகளைப் பொது விதிகளாகக் கருதி, அதன் படி நீர்வழி உரிமையை ஒரு கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வருகின்றன. ம.கா.

**நாட்டியம்:** நாட்டியம் என்னும் சொல் பண் டையதமிழ் மரபில் 'கூத்து' என்று வழங்கி வந்தது. தொல்காப்பியர் காலத்துத் தமிழில் வழக்கில் இருந்த சில சொற்களும் பிறகு அவற்றின் மாறுதல்களும் பின் வருவனவாம்.

| | | |
|---|---|---|
| கூத்து | – | நாட்டியம் |
| ஆடல் | – | நிருத்தம், நடனம், நிருத்தியம் |
| புலன் | – | அபிநயம்,மற்றும் கருத்துகளைப் புலப்படுத்தும் நாட்டியம் |
| ஆடுகளம் | – | அரங்கம் |
| விறலி (விறல் பட ஆடுபவள்) | – | நாடக மகளிர் |
| கூத்தர், கூத்தி | – | நடிகர், நடிகை |

உயரிய தத்துவங்களும் கருத்துகளும் எங்கிருந்தாலும் அவற்றைத் தன்னுள்ளே ஈர்த்துக் கொள்வது மொழி யின் சிறப்பு இயல்பு. இதே முறையில் வடமொழி, தமிழ் இவ்விரு பெரும் மொழிகளுக்கிடையே ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகச் சொற்கள் பரிமாறப் பட்டுள்ளன.

நாட்டிய சாத்திரம் என்னும் சமசுகிருத நூலைப் பரதமுனிவர் எழுதியுள்ளார். உலகில் கிடைத்துள்ள நாடகத் தொடர்பான நூல்களுள் மிகத் தொன்மை வாய்ந்தது இதுவேயாகும். தொல்காப்பியம் புலன் என்று கூறும் கூத்தை, நாட்டிய சாத்திரம் 'ரூபகம்' என்றும் குறிக்கிறது. இதைப் பத்து விதமாகப் பரத முனிவர் பாகுபாடு செய்துள்ளார். அவை நாடக, பிரகரண, அங்க, வியாயோக, பாண, சமவகார, வீதி, பிரகசன, திம, இகாம்ருக ஆகியவை ஆகும். இவைகளுள் ஐந்து புராண இதிகாசங்களைத் தழுவி யவை. மற்ற ஐந்தும் சமூகக் கதைகளை மையமாகக் கொண்டவை. பரதர் கூறியமுதல் 'ரூபக' மான நாடகம் புராண இதிகாசங்களைத் தழுவியதாகும். நாட்டியக் கலை எல்லா அமிசங்களையும் கொண்ட பூரணக் கலையாகும். தமிழ் இலக்கியம் இயல்,இசை, நாடகம் என்று மூன்றாகப் பிரிக்கப்பட்டபோது கூத்து என்னும் சொல்லுக்குப் பதிலாக 'நாடகம்' என்பது பயன்படுத்தப்பட்டது. நாட்டிய சாத்திரத் திற்கும் தமிழுக்கும் உள்ள பிரிக்க முடியாத நெருக் கத்தை இது காட்டுகிறது.

பரதரின் நாட்டிய சாத்திரம் 36 அத்தியாயங் களைக் கொண்டது. இந்நூல் கி.மு. 5-ஆம் நூற் றாண்டில் எழுதப்பட்டது என்று கருதுவர்; பிற்காலத்தில் எழுதப்பட்டது என்று கருதுவோரும் உளர். நாட்டிய சாத்திரத்தை 'நாட்டிய வேதம்' என்றும், ஐந்தாம் வேதம் என்றும் குறிப்பிடுவர்' திரேதாயுகத் தொடக்கத்தில் இந்திரன் முதலிய தேவர்கள் வேண்ட,சம்புத் தீவில் (ஏறத்தாழ ஆசிய, ஐரோப்பாக் கண்டம்) அறம் தளர்ந்ததால் அதனை மீண்டும் பரப்பப் புதிய வேதமாக நாட்டிய வேதத்தை அயன் படைத்தார். நான்கு வேதங்களி லிருந்து இதற்கான கருப் பொருள்களைத் தொகுத்து ஐந்தாம் வேதமாகப் பரத முனிவரிடம் கொடுத்தார் என்று அந்த சாத்திரம் கூறுகிறது. 'இருக்கு' வேதத்தி லிருந்து 'பாட்டியம்' எனப்படும் இலக்கியமும், கிரியை யின் விளக்கங்களைக் கொடுக்கும் 'யசுர்' வேதத் திலிருந்து நாட்டியக் கிரியையான அவிநயமும்', ஏழிசையின் வடிவமான 'சாம' வேதத்திலிருந்து 'இசை'யும், மனத்தை ஒரு முனைப்படுத்திச் செயற்பட் வேண்டிய 'அதர்வ' வேதத்திலிருந்து 'இரசம்' எனப்படும் சுவையையும் இணைத்து நாட் டிய வேதத்தைப் படைத்தார் பிரமன். நாட்டிய சாத்திரத்தின் படி 'நாட்டியம்' என்பது, சுவை மலரக் காரணமாக இருத்தல் வேண்டும். புலப்படுத்தும் கலையான அவிநயம் நான்கு பாகுபாடுகள் கொண்ட தாக அமைந்துள்ளது. இதில், அங்கச் செய்கையால்

உண்டாகும் ஆங்கிக அபிநயமும், வசனத்தை மூல மாகக் கொண்ட வாசிக அபிநயமும், புறப் பொருள் களை, அதாவது ஒப்பனை, உடை முதலியவற்றை மையமாகக் கொண்ட ஆகாரிய அபிநயமும், அகத்தே மலரும் மெய்ப்பாடுகள் – அதாவது, சத்துவ நிலை களை மையமாகக் கொண்ட சாத்துவிக அபிநயமும் உள்ளன. இதனோடு நாடக வழக்கு, உலக வழக்கு, இசை மற்றும் நடனக் கலை ஆகியவற்றை ஒருங்கே கொண்டதாக விளங்குவதே நாட்டியமாகும். இந்த நாட்டியத்தில் பங்கு பெறுவோர் தாமே வசனங் களைப் பேசித் தம் சொந்தக் குரலில் பாடி, சீரான அங்க அசைவுகளைக் கொண்ட ஆங்கிக அபிநயத்தை ஆடி, கதையையும் கதாபாத்திரங்களையும் அவர் களின் மனோநிலைகளையும் சூழல்களையும் நடிப் பின் மூலம் புலப்படுத்திச் சுவை மலரச் செய்ய வேண் டும். இந்தச் சாத்திரிய நாட்டியத்தின் மரபினை, இன்றும் தஞ்சை மாவட்டத்தில் நடிக்கப்பட்டு வரும் பாகவத மேளாவிலும், தமிழகத்தில் ஆங்காங்கே விளங்கும் தெருக் கூத்திலும், பண்டைய மரபை ஒட்டி விளங்கிவரும் தமிழ் நாடகங்களிலும் காண லாம்.

**பரத நாட்டியம்:** 'சதிர்' என்று பரவலாக விளங்கி வந்த தமிழகச் சாத்திரிய நடனத்தின் பெயர் 1937 -ஆம் ஆண்டு சென்னை சங்கீதக் கழகத்தின் (Music Academy) நடன விளம்பரத்தில் முதன் முறையாகப் 'பரத நாட்டியம்' என்று விளம்பரப்படுத்தப்பட்டது. 'பரதம்' என்னும் சொல் நிலவி வந்திருந்தாலும் 'பரத நாட்டியம்'என்ற தொடரை ஈ. கிருட்டிணய்யர் முதன் முறையாகச் சதிருக்குப் பதிலாகப் பயன் படுத்தினார். இந்தப் புதிய தொடர், சமூகத்தில் சதிருக்கு ஒரு புதிய மரியாதை அளிக்கப்பட வேண் டும் என்பதற்காக உருவாக்கப்பட்டது. 'சதிரி'ன் இந்தப் பெயர் மாற்றம், இந்நடனத்தின் மறுமலர்ச் சிக்குப் பெருந்துணையாக இருந்தது. இன்று இந்த நடனம் அகில இந்திய அளவில் மட்டுமன்றி, உலக அளவிலும் மிகவும் விரும்பப்பட்டும் கற்கப்பட்டும் ஆடப்பட்டும் வருகிறது. இது, அநேகமாக ஒரு பெண்ணால் தனித்து ஆடப்படும் கலையாகவே ஏறத்தாழ 250 ஆண்டுகளாக நிலவி வந்துள்ளது. இதில் ஆடப்படும் நடன உருப்படிகளாவன: அலா ரிப்பு, சதிசுரம், சப்தம், வர்ணம்,பதங்கள், தில்லானா ஆகியவையாகும். இதில் வசனம் இல்லாததாலும், நாடக முறை இல்லாததாலும் இலக்கண முறைப் படிப் பார்க்கும்போது 'நாட்டியம்' என்னும் பெயர் மரபுவழி வரும் 'சதிருக்கு' அவ்வளவு பொருத்தமாக இல்லை. சதிர் ஆடல் என்றோ, நடனம் என்றோ, நிருத்தியம் என்றோ இதைக் குறிப்பிடலாம.

பரதருக்குப் பிற்காலத்தில் எழுந்த சங்கீத நூல் களும் 'நிருத்தம்' என்பதைச் 'சுத்த ஆடல்' என்றும், 'நாட்டியம்' என்பதை 'நாடகம்' என்றும். 'நிருத்தி யம்' என்பதை 'அபிநயம் கலந்தஆடல்' என்றும் பாகுபாடு செய்துள்ளனர் இம் முறையில் காணும்போது இன்றைய பரத நாட்டியம் என்னும் 'சதிர் நடனத்தை'ப் 'பரத நிருத்தியம்' என்று குறிப் பிடலாம்.

**அடவு:** பரத நாட்டியம் என்னும் சதிருக்கு அடவு என்பது ஆதார அங்கமாகும். ஓர் அடவில் கால்களுக்கான அசைவும், உடலுக்கான நிலையும், கைகளுக்கான நிலையும் அசைவும் ஒருங்கே அமைந் திருக்கும். 'அடவு'என்பது 'கரணம்' எனப்படும். அடவு என்னும் சொல் தமிழ் நாடு மட்டுமன்றித் தென்னிந் தியா முழுவதும் வழக்கில் இருந்து வரும் சொல்லாகும். இது ஆடுதல், அடி வைத்து நடத்தல், அடிதூக்கித் தட்டுதல்போன்ற கருத்துகளிலிருந்து உருவான சொல் லாகும். அடவுகளைத் தட்டடவு, மெட்டடவு, குத் தடவு, நாட்டடவு, மண்டி அடவு,தேய்க்கும் அடவு, சரிசை அடவு,சறுக்கல் அடவு, வீசுக்கால் அடவு, சுற் றடவு, மக்டிஅடவு என்றெல்லாம் பாகுபாடு செய்து, ஒவ்வொன்றிலும் உள்ள வேற்றுமையினால் நூற்றுக் கும் மேலான ஆதாரமான அடவுகளைப் பயிற்றுவிப் பது மரபாகும். அடவுகளே இப்போதைய பரதநாட்டி யத்தின் அடிப்படையாகும். இப்போது வழக்கில்உள்ள அடவுகள் ஏறத்தாழ 300 ஆண்டுகளாக நிலவி வந் துள்ளன. ஓரிரு அடவுகளின் சேர்க்கையைக் கோவை என்றும் கூறுவர். இந்த அடவுகளுக்கான தாளச் சொற்கட்டுகளை, வகுப்பிற்கான 'தத்தகாரம்' என்றும், மேடை நிகழ்ச்சிக்கான 'சதி' என்றும் குறிப் பிடுவர். அடவு சதிக் கோவைகளைத் 'தீர்மானம்' என்று சிலர் குறிப்பிடுவர். ஆனால், இந்தச் சொல்லை அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் கூறி யுள்ள தீர்வு என்பதோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது பல கோவைகளின் இறுதியில் காணப்படுவது தீர்மானம் எனக் கொள்ளலாம். இது தாள அமைப் பின் கட்டுப்பாட்டிற்குள், தாள வேறுபாட்டில் குறைப் புக்குப் பிறகு ஒரே மாதிரியாக மூன்று சொற்றொ டர்கள் வரும் பொழுது அதைத் தீர்மானம் என்று கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக, 'ததிங்கிண தொம்' என்பதை மூன்று முறை உச்சரிக்கும்போது அந்தக் கோவையின் தீர்வாக அது அமைகிறது. இதற்கு ஏற்ப மகுட அடவுகளை ஆடி முடித்தல் வேண்டும்.

**யதி:** (கொச்சைத் தமிழில் 'சதி') இது நடனத் திற்கு மிகவும் முக்கியமானது. 'யதி' என்பதே 'சதிர்' என்று மருவியிருக்கலாம். 'சமயதி'என்பது ஒரே அள வில் சொற்கட்டுகளைக் கொண்டிருக்கும். எடுத்துக் காட்டு 'ததிங்கிணதொம்', ததிங்கிணதொம்', 'ததிங்

கிணதொம்' சொற்கட்டுகள் முறையே குறைந்தால் கோபுச்ச யதி; முறையே மிகுந்தால் சுரோத்தவாக யதி; குறைந்து பிறகு மிகுந்தால் அது இட மருக யதியாகும். மிகுந்து, பிறகு குறைந்தால், மிருதங்க யதியாகும் எடுத்துக்காட்டு:

கிண தொம்

திங்கிண தொம்

ததிங்கிண தொம்

—மிருதங்க யதி

ததிங்கிணதொம்

திங்கிணதொம்

கிணதொம்

தகததிங்கிணதொம்

ததிங்கிணதொம்

திங்கிணதொம்

– 'தமருக' யதி

கிணதொம்

தங்கிணதொம்

ததிங்கிணதொம்

தகததிங்கிணதொம்

இது போன்ற சொற்கட்டுகளைக் கோவையாகச் சேர்த்து ஆடுவதற்கு வகுப்பில் தத்தகாரத்தை மட்டும் பயன்படுத்துவர். நிகழ்ச்சிக்கு மிருதங்கச் சொற்கட்டுகளைப் பயன்படுத்துவர்.

**தாளம்:** இப்போது தமிழகத்தில் கையாளப்படும் தாளங்கள் சூளாதி சப்த தாளங்களாகும். திருப்புகழில் காணப்படும் 108 தாளங்கள் அதிகமாக நடைமுறையில் இல்லை.

சூளாதி சப்த தாளங்களாவன:

1. துருவ தாளம் — ஒரு 'லகு', ஒருதிருதம், இரண்டு 'லகு'
2. மட்டிய தாளம் — ஒரு 'லகு', ஒரு திருதம், ஒரு 'லகு'
3. உரூபகதாளம் — ஒரு திருதம், ஒரு 'லகு'
4. சம்ப தாளம் — ஒரு 'லகு' ஒரு அனுதிருதம், ஒரு திருதம்
5. திரிபுடை தாளம் — ஒரு 'லகு', இரண்டு திருதம்
6. அடதாளம் — இரண்டு 'லகு', இரண்டு திருதம்
7. ஏக தாளம் — ஒரு 'லகு'

'சாதி' என்பது 'லகு' எனப்படும் தாள அங்கத்தின் எண்ணிக்கையைப் பொறுத்தது. தட்டி, விரலால் எண்ணுவது 'லகு'. தட்டி, இரண்டு எண்ணுவது மூன்று அட்சரங்களைக் கொண்ட திசுர 'சாதி' யாகும். 'லகுவைக்' கோடிட்டு அதன் பக்கத்தில் எண்ணை எழுதிச் 'சாதி'யைக் குறிப்பிடுவர். திசுர சாதி-3, சதுரசுரு சாதி-4, கண்ட சாதி-5, மிசுர சாதி-7, சங்கீரண சாதி-9. இவை தவிர, இப்போது நடைமுறையிலுள்ள தாளங்களுக்குத் 'திருதம்'என்னும் தட்டித் திருப்பும் முறையும், 'அனுதிருதம்' என்னும் தட்டும் முறையும் அங்கங்களாக விளங்குகின்றன.

**அடைவு:** அடைவு என்பது சதிரின் அசைவுக்கு அடிப்படையாகும். அடைவு என்ற சொல்லை அடவுகளின் சேர்க்கை என்று கொள்ள வேண்டும். அடவுகளை அடைத்தல் அடைவு. இதற்குச் சான்றாகத் திருப்பாட்டடைவு, மெய்காட்டடைவு என்று இரு விதமான நடன உருப்படிகளைக் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டொன்று குறிப்பிட்டுள்ளது.

**நடனக் கச்சேரி முறை:** 'கச்சேரி' என்ற சொல் மராட்டிய மன்னர்கள் காலத்தில் தமிழகத்தில் வழக்குக்கு வந்த சொல்லாகும். இது கூடத்தையோ அரச அவையையோ வழக்காடும் அவையையோ குறிக்கும். மராட்டிய மன்னர்களின் அவையில் நிகழ்த்தப்பட்ட நிகழ்ச்சிகளைச் 'சதிர்க் கச்சேரி' என்றும் 'இசைக் கச்சேரி' என்றும் வழங்கினர். இப்போதைய நிகழ்ச்சி முறை ஏறத்தாழ 250 ஆண்டுகளாக வழக்கிலிருந்து வருவதாகும். இது தேவாலயங்களில் ஆடி வந்த நிகழ்ச்சியைக் காட்டிலும் அரசவையில் ஆடி வந்த நிகழ்ச்சியையே பின்பற்றி வருகிறது. ஆலயங்களில் ஆடப்பட்டு வந்த அகமார்க்கம் என்னும் வகைப்பட்ட ஆடல் உருப்படிகள் இன்று நிகழ்ச்சிகளில் பெரும்பாலும் இல்லை. அண்மையில் புட்பாஞ்சலியும் சில கவித்துவங்களும் மட்டும் மறுமலர்ச்சி பெற்றுள்ளன. தெலுங்கு மன்னர்களும், மராட்டிய மன்னர்களும் மதுரையையும் தஞ்சையையும் ஆண்ட காலத்தில்எழுதப்பட்ட பல தமிழ் மற்றும் தெலுங்கு உருப்படிகள் இன்றும் ஆடப்பட்டு வருகின்றன. சதிர்க் கச்சேரிகளுக்கான எல்லா உருப்படிகளுக்கும் மராட்டிய மொழியிலும் பல பாடல்கள் தஞ்சை மன்னர்களால் இயற்றப் பெற்றன. இவற்றையும் மகாராட்டிராவில் இப்போது சிலர் ஆடி வருகின்றனர். ஆலயங்களில் தொன்று தொட்டு ஆடப்பட்டு வந்த

திருமுறைப் பாக்களை ஒரு சிலர் இன்று மீண்டும் செயல் முறைக்குக் கொண்டு வந்துள்ளனர்.

**அபிநயம்:** நாட்டியத்தின் இன்றியமையாத கூறு அபிநயமாகும். 'அபிநயம்' என்னும் சொல் முன்னால் (பார்ப்பவரிடம் சுவையை) 'இழுத்துச் செல்லுதல்' என்று பொருள்படும். அங்க அசைவுகளைக் கொண்ட ஆங்கிக அபிநயமும், பாடல்களாக அமைந்த வாசிக அபிநயமும், உணர்ச்சி வயமான சாத்துவிக அபிநயமும் இப்போதைய பரதநாட்டியத்தில் காணப்படுகின்றன. நிருத்திய நாடகமாக இல்லாமல் தனியே ஒருவர் ஆடும்போது, பொதுவாக அழகான ஆடை அணிகலன்களை அணிவர். நிருத்திய நாடகங்களில் அந்தந்தப் பாத்திரங்களுக் கேற்றாற்போல் ஆடை அணிவர். ஆங்கிக அபிநயத்தை இரண்டாகப் பிரிக்கலாம். முகத்தால் புலப்படுத்துவது என்றும், அங்க அசைவுகளால் புலப்படுத்துவது என்றும் இது விரியும்.

உடலுக்கான அங்கங்களை, அங்கங்கள் என்றும் உபாங்கங்கள் என்றும் பிரித்துப்பரதர் கூறும் முறையில் பயிற்சிகளைக் கொடுக்கும் வழக்கம் கடந்த 500 ஆண்டுகளாக நடைமுறையில் இல்லை. சோழர் காலத்திற்குப் பிறகு, மாலிக்காபூரின் படையெடுப்புக் காலந் தொட்டு மீண்டும் விசயநகர மன்னர்களின் வருகை வரை தமிழகத்தில் கலைகளுக்கு எந்த ஆதரவும் இல்லாமல், மரபுகள் மறைந்து விட்டமையைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. இன்று ஆங்கிக அபிநயம் என்ற பெயரில் பரதர் காலம் தொட்டு மரபு மாறாமல் வந்த ஒரே கூறு, தமிழக சாத்திரிய நடனத்தைப் பொறுத்தவரை அபிநயக் கைகள் என்று கூறலாம். ஒற்றைக் கையால் செய்யப்படுவன இரட்டைக் கைகளால் செய்யப்படுவன என்று அபிநயக் கைகள் இரண்டாக விரியும். 'நிருத்தக் கை' என்று பரதர் கூறும் கைகளைச் சிலப்பதிகாரம் 'எழிற்கை' என்று குறிப்பிடுகிறது. இவை இன்றுநடைமுறையில் இல்லை. ஆனால், சிலப்பதிகாரம் 'தொழிற் கை' என்று குறிப்பிடும் அபிநயக் கைகள் மட்டும் இன்றும் நடைமுறையில் உள்ளன. சிலப்பதிகாரம் குறிப்பிடும் தொழிற்கை விளக்கத்தைப் பரதரின் நூலிலிருந்துதான் புரிந்து கொள்ள முடியும். இளங்கோ அடிகளே மாதவியின் நடனத்தைப் பற்றிக் கூறுங்கால், 'நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்துக் காட்டினள்' என்றார். நாட்டிய நன்னூல் என்பது பரதரின் நாட்டிய சாத்திரத்தையே குறிப்பிடும். இன்று சதிருக்குப் பயன்படுத்தும் கைகள் நந்திகேசுவரர் ஏறத்தாழ கி.பி. 15-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு எழுதிய 'அபிநயதர்ப்பணம்' என்னும் நூலின் அடிப்படையிலேயே பெரிதும் கையாளப்படுகின்றன. இந்நூல் பெரும்பாலும் பரதர் கூறிய அபிநயக் கைகளைப் பின்பற்றினாலும் சில வேற்றுமைகளைக் கொண்டுள்ளது. அபிநய தர்ப்பணம் கூறும் ஒற்றைக் கைகளாவன:பதாகம் திரிபதாகம், அர்த்த பதாகம், கர்தரி முகம், மயூரம், அர்த்த சந்திரன், அராளம், சுகதுண்டம், முட்டி, சிகரம், கபித்தம், கடகாமுகம், சூசி, சந்திர கலா, பத்மகோசம், சர்ப்ப சீரிடம், மிருக சீரிடம், சிம்ம முகம், காங்குலம், அலபத்மம், சதுரம், பிரமனம், அம்சாசியம், அம்ச பட்சம், சம்தம்சம், முகுலம், தாமிர சூடம், திரிசூலம.

**இரட்டைக் கைகளாவன:** அஞ்சலி, கபோதம் கற்கடகம், சுவத்திகம், தோலம், புட்பபுடம், உத்சங்கம், சிவலிங்கம், கடகா வர்த்தனம், கர்த்தரீசுவத்திகம், சகடம், சங்கம், சக்கரம், சம்புடம், பாசம், கீலகம், மத்சியம், கூர்மம், வராகம், கருடன், நாக பந்தம், கட்வா, பேருண்டம், கைகளும், கால்களும் அங்க அசைவுகளும் கண்களின் அசைவுடனும் ஒரு முனைப்படுத்திய மனத்துடனும் சேர்ந்தால்தான் ஆடல் பரிமளிக்கும். உள் அனுபவம் ஒவ்வொரு கலைஞருக்கும் இன்றியமையாததாகும்.

**சிற்பங்கள்:** நடனக் கலையும் சிற்பக் கலையும் இரட்டைக் குழந்தைகளாக வளர்ந்தவை. இதற்கு ஆகம சாத்திரங்களே ஆதாரமாகும். நாட்டிய சாத்திரம் 108 கரணங்கள் என்று விவரித்துள்ளதை ஆகம சிற்ப சாத்திரங்கள் சிவபெருமான் ஆடிய 108 தாண்டவமாகக் குறிப்பிட்டுள்ளன. இவ்வாகமங்கள் ஏழு தாண்டவங்களைக் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் சிவபெருமான் ஆடியனவாக வருணிக்கின்றன. இவை அகில உலகிலும் ஆனந்தத் தாண்டவம் என்ற பெயரில் புகழ் பெற்றுள்ள புசங்கத்ராசித நிருத்தம்,சம்கார தாண்டவம் என்ற பெயரில் விளங்கும் கால சம்கார நிருத்தம், மற்றும் கசசம்கார நிருத்தம், காளிகா தாண்டவம், கௌரி தாண்டவம், ஊர்த்துவ தாண்டவம், சந்தியா தாண்டவம், திரிபுர தாண்டவம் ஆகியவையாகும். இவை தவிரப்பாரத நாடெங்கும் சிவபெருமானோ உமையம்மையோ ஆடும் நடனக் கோலங்களைச் சிற்பங்களாகப் பல ஆலயங்களிலும் காணலாம். ஆயினும், நாட்டிய சாத்திரக் கரணங்களின் வடிவங்களைப் பரதர் கூறிய முறையில் சிற்ப வடிவில் தமிழகத்தில் ஐந்து ஆலயங்களில் காண்பது தமிழகத்தின் தனிச்சிறப்பு. தஞ்சை பிரகதீசுவரர் ஆலயத்திலும் (கி.பி. 11-ஆம் நூ.), குடந்தை சாரங்கபாணி என்னும் ஆராவமுதன் ஆலயத்திலும் (கி.பி. 12-ஆம் நூ.), தில்லை நடராசர் ஆலயத்திலும் (கி.பி. 13-ஆம் நூ.), திருவண்ணாமலை அருணாசலேசுவரர் ஆலயத்திலும் (கி.பி. 15-ஆம் நூ.), விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் ஆலயத்திலும் (கி.பி. 16-ஆம் நூ.) நாட்டிய சாத்திர கரணங்களைச் சிற்ப வடிவில் ஆடற்கலை இலக்கணத்திற்காகவே செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

**கல்வெட்டு:** ஆலயங்களில் காணப்படும் பல கல்வெட்டுகள் நடனக் கலையின் சரித்திரத்திற்கு ஆதார



சிற்பமும் நடனமும்



புங்சோலம்



மோகினி ஆட்டம்



மேலைநாட்டு நடனம்

மாய் விளங்குகின்றன. ஆலய வழிபாட்டில் முக்கிய கூறாக இக்கலை விளங்கியதால் அன்றாட வழிபாட்டுக்கு ஆடிவந்த தேவர் அடியார்கள் பற்றியும், அவர்களுக்கு அளித்த மானியங்கள் பற்றியும், பக்க மேளக் கலைஞர்கள் பற்றியும், ஆடிய ஆண் கலைஞர்கள் பற்றியும், கலைஞர்களுக்கு அளிக்கப்பட்ட பட்டங்கள் பற்றியும், இக் கலைஞர்களே தேவாலயங்களுக்கு அளித்த மானியங்கள் பற்றியும், ஆங்காங்கே ஆலயங்களில் நடந்த நாடகங்கள் பற்றியும், வியக்கத்தக்க வகையில் கல்வெட்டுகள் விவரிக்கின்றன. நடன சாத்திரத்தின் இலக்கண அடிப்படையில் குடந்தை சாரங்கபாணி ஆலயத்தில் உள்ள கரண சிற்பங்களின் அடியில் அவற்றின் பெயர்களும், பரதர் கூறும் வரிசையில் அவற்றின் எண்ணும் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளன. சிதம்பர ஆலயத்தில் கிழக்கு, மேற்குக் கோபுரங்களில் உள்ள சிற்பங்களுக்கு மேலே நாட்டியசாத்திரத்தில் அந்தந்தக் கரணத்தின்வடிவத்தை விவரிக்கும் சூத்திரத்தை இரண்டுவரிக் கல்வெட்டுகளாகக் காணலாம்.

**நாட்டியமும் நாட்டின் ஒருமைப்பாடும்:** நாட்டிய சாத்திர கரணங்களைப் பின்பற்றும் ஆயிரக்கணக்கான சிற்பங்களும், சித்திரங்களும் இமயம் முதல் குமரி வரை பரவிக் கிடக்கின்றன. மேலும், கி.பி. 12-ஆம் நூற்றாண்டிற்கு முந்திய இராசபுதனச் சித்திரங்களைக் காணும்போது சோழர் கால நடனச் சிற்பங்கள் சிந்தனைக்கு வரும். திபெத்தில் காணப்படும் சித்திரங்கள் சில, குடந்தையில் காணும் கரணச் சிற்பங்களுக்கு ஒப்பாகும். நாட்டிய சாத்திரமே கி.பி. 12-ஆம் நூற்றாண்டு வரை வடக்கிலும், கி.பி. 14-ஆம் நூற்றாண்டு வரை தெற்கிலும் பாரதீய சாத்திரீய நாட்டியத்திற்கு ஆதாரமாக விளங்கியது. நாட்டிய சாத்திர மரபு, பாரதம் எங்கும் 'மார்கி' என்ற பெயரில் ஆங்காங்கே உள்ள மாநிலக் கலைகளான 'தேசி'யுடன் இணைந்தே நடைமுறையில் விளங்கியது. இன்று 'மார்கி' இலக்கண முறையில் பயிற்சி அளிக்கப்படவில்லை என்றாலும், ஆங்காங்கே உள்ள எல்லாச் செய்முறையிலும் இழையோடி உயிரோட்டமுள்ள இணைப்பு நாடியாகப் பாரதத்தில் நிலவி வருகிறது.

**அவ்வாறு விளங்கும் பாரதீய நாட்டியங்களில் சில:**

| | | |
|---|---|---|
| அசாம் | — | ஆங்கியா நாட்டியம் |
| மணிப்பூர் | — | இராசு |
| வங்காளம் | — | இராம் லீலா |
| ஒரிசா | — | ஒரிசி நிருத்தியம், சௌ நாட்டியம் |
| மத்திய பிரதேசம், உத்தரப்பிரதேசம், பீகார் | — | கதக் நிருத்தியம், நௌடங்கி நாடகம் |
| காசுமீரம் | — | 'பண்ட்' நாட்டியம் |
| குசராத்து | — | பவாய் |
| ஆந்திரம் | — | கூச்சுபுடி பாகவதமேளா |
| கேரளம் | — | கூடியாட்டம், கதைகளி, மோகினி ஆட்டம் |

ஆகியனவும் நாடெங்கிலும் பலவிதமான நாட்டியங்களும், நடனங்களும் தமிழகத்தைப் போலவே நாட்டிய சாத்திரத்தின் வெவ்வேறு கூறுகளை இன்றுவரை தழுவி நிலைத்த கலைகளாக விளங்குகின்றன.

**கிராமிய நாட்டியங்கள்:** பாரதமெங்கும் பல்வேறு விதமான கிராமிய நாட்டியங்களும், கிராமிய நடனங்களும் இயற்கையின் இணைப்பில் சமயத் தொடர்போடு நிகழ்ந்து வருவதால், பல பொதுத் தன்மையுடன் உயிரோட்டமுள்ளனவாகவிளங்கி வருகின்றன எடுத்துக்காட்டாக, சூரியன் திசை திரும்பும் போது மகர சங்கராந்தி காலத்தில்நாடெங்கும் மக்கள் சிறப்பான நடனங்களை ஆடி மகிழ்ந்து அகிலாண்டத்திற்கும் தமக்கும் உள்ள இணைப்பைக் கொண்டாடுவர். இதுவே, தமிழகத்தில் பொங்கல் திருவிழாவாக நடக்கிறது. இதுபோல், பாரதீய பாமர நாட்டியங்களும் நடனங்களும், காரண காரிய இணைப்போடும் ஆன்மிக தத்துவம் என்னும் அடிப்படையோடும் சாத்திரியத்திற்கும் பாமரத்திற்கும் இடையே உள்ள பாலமாக விளங்கி வருகின்றன. தொல்காப்பியத்தில் கூறப்படும் வெறியாடல்கள் இன்றும் பல மாநிலங்களிலும் வெவ்வேறு பெயர்களுடன் விளங்குகின்றன. எடுத்துக்காட்டாகத் தென் கருநாடகம் மற்றும் கேரளப் பிரதேசங்களில் பூதஆட்டம் என்றும் தெய்யம் (தெய்வம்) என்றும் விளங்கி வரும் வெறியாடல்கள், இன்று வரை வெறும் பொழுது போக்குக்காக அன்றி, இறந்தவர் ஆன்மா ஆடுவோரிடம் புகுந்து, ஆடுவோர்கள் வாயிலாகக் குறி சொல்லும் தன்மையோடு விளங்குகின்றன.

**பாரதிய நாட்டியமும் கீழை நாடுகளும்:** பழம் பெரும் ஆன்மிக, சமய மரபுகள் பாரதத்திலிருந்து கீழை நாடுகளில் பரவிய காலந் தொட்டு, பாரதீய நாட்டியமும் அந்நாட்டுப் பண்பாட்டில் இழையோடியது. பரதர் தம் நாட்டிய சாத்திரத்தை ஆசிய ஐரோப்பியக் கண்டங்களின் சேர்க்கையான சம்புத்தீவத்திற்குப் பொதுவாக எழுதியதாகச் சொல்கிறார். ஆகையால், இந்த நூலின் சாயலைப் பிற நாடுகளின் நாட்டியங்களில் காண்பதில் வியப்பில்லை. சப்பானிய கபூகி (Kabuki) நாட்டியத்திலும், சீன நாடகத்திலும், இந்தோனேசிய இராமாயண நாட்டியத்திலும், சாவா, பாலி, சுமத்திரா, மற்றும்பர்மா, சிரீலங்கா ஆகிய நாடுகள் அனைத்திலும் பாரதப் பண்பாட்டின் தொடர்பை



நடராசர் நடனம்



மேலைநாட்டு நடனம்



சீன நடனம்

அவர்களின் மேடைக்கலைகளில் காணலாம். 'அப்சரசு' என்று அரம்பையர்களைச் சமசுகிருதமொழியில் கூறு வதை நடன சித்திரமாகச் சீனாவின் குகைகளிற்காண லாம். வேத சமயத்தின் அங்கமான 'சௌரம்' எனப் படும் சூரிய வழிபாடே சப்பானிய 'சிண்டோ' (Shinto) சமயமாகும். அவர்கள் ஆலயங்களில் பிறந்த கலையே 'நோ' (Noh) என்னும் நாடகக் கலை. பாரதீய நாட்டிய சாத்திரத்தின் சாயலைக் கீழை நாட்டுக் கலை களில் காண்பதைப் பற்றித் தனி ஆய்வு நூல்கள் எழு தலாம். கருநாடக மாநிலத்தில் இன்றும் நிலவி வரும் யட்சகானம் என்ற நாட்டிய வடிவம் தமிழகத்திலும் இரகுநாத நாயக்கர் காலத்தில் இருந்து வந்துள்ளது. 'யட்ச' என்ற சொல் சப்பானிய மொழியில் 'நடிகன்' என்று பொருள்படுகிறது. இது போன்ற பல தொடர்பு களைக் காணும்போது, பாரதத்தின் பல பண்டைய இசைக் கருவிகளை இன்றும் கீழை நாடுகளில் மேடை களிலும் ஆலயங்களிலும் பயன்படுத்துவதைப் புரிந்து கொள்ள முடியும். சிங்கள நாட்டின் 'கண்டி நடன' சரித்திரமும், நாட்டிய சாத்திரத்தை அங்கீ காரம் செய்துள்ளது. இதற்கு இலக்கியச் சான்றுகள் சிங்கள மொழியிலும் உள்ளன.

**மேலை நாட்டு நாட்டியம்**: மேலை நாட்டு நாட்டி யத்தை இன்று பொதுவாக இரண்டாகப் பிரிக்கலாம். இவை சாத்திரிய பாலே (Classical Ballet) என்றும் நவீன நடனம் (Modern Dance) என்றும் கூறப்படுகின் றன. சாத்திரிய பாலே கி.பி.1400-இலிருந்து அரண் மனை நிகழ்ச்சியாக வளர்ந்தது. முதலில் இது இத் தாலியில் பிறந்து, பின்னர், பிரான்சில் வளர்ந்து இன்று சோவியத்து நாட்டில் மலர்ந்து விரிந்துளளது எனலாம். பிரான்சின் அரசன் 14-ஆம் உலூயி தானே நடனம் கற்றான். கால்களில் சிறப்புக் காலணிகள் (Ballet shoes) அணிந்து ஆண்களும் பெண்களும் ஆடு வர். ஆங்கிகாபிநயமே இதற்கு ஆதாரம். வசனமோ பாடல்களோ இருப்பதில்லை. கைகளைக் கொண்டு முத்திரைகள் காட்டுவதும், முகபாவத்திற்கு முக்கியத் துவம் கொடுப்பதும் இல்லை. இசைக் கருவி களையே மையமாகக் கொண்ட இசையுடன், அங்க அசைவாலும் அபிநயத்தாலும் கதைகளைப் புலப் படுத்துவர். இதைக் கற்கப் பத்து ஆண்டுப் பயிற்சி தேவை.

நவீன நடனம் (Modern dance) இந்த நூற் றாண்டின் தொடக்கத்தில் பிறந்த நடனக்கலையாகும். அமெரிக்காவில் இசடோரா-டன்கன் என்னும் (Isadora Duncan) பெண்மணி கிரேக்கக் கலையைத்தழுவித் தம் நடனத்தை அமைத்தார். உரூத்து புனித தெனிசு (Ruth St. Denis) என்னும் பெண்மணி இந்தியா உட்படக் கிழக்கு நாடுகளில் விளங்கும் ஆன் மிகக் கலைகளைத் தழுவத் தொடங்கினார். ஏறத் தாழ 1920 முதல் புதிய நடனம், புதிய சித்திரம் புதிய கவிதை போன்ற பல புதிய கூறுகளின் பாதிப் பில் பல புதிய திருப்பங்களை மேற்கொண்டது.

மார்த்தா கிரகாம் (Martha Graham), தோரிசு அம்பெரி (Doris Humphrey) ஆகியோர் இக்கலையின் நட்சத்திரங்களாக வளர்ந்தனர். புதிய நடனத்திற்குச் சமசீர் போன்ற பிரமாணங்கள் இல்லை. உடலை எப் படி எல்லாம் வளைக்க முடியும் என்பதே அவர் களுடைய குறிக்கோளாகும். பார்ப்பதற்குக் கோணல் என்று பலர் கருதினாலும், அதைப் பொருட்படுத்து வதில்லை. மார்த்தா கிரகாம் போன்றோர் இதற்கு ஒரு சீரான செய்முறைத் திட்டத்தை வகுத்துள்ள னர். ஆனால், பொதுவாக இன்று உலகில் பல்வேறு நாடுகளில் தனிப்பட்ட கலைஞர்களின் தனிப்பட்ட உள்ளனுபவமாக இக்கலை உருவாகி வருகிறது.

ப.சு.

**துணை நூல்:**

Srinivasan, E.S. Inscriptions in the Pudukkottai State, Part II, Pudukkottai Durbar, 1946.

## நாட்டு, ஊரக வேலைவாய்ப்புத் திட்டம்:

இராபர்ட்டு மக்நமாரா (Robert S. McNamara) வேலையின்மையைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'வேலையின்மை தனி மனிதனின் குறைந்தஅளவுவாழ்க் கைத்தரத்தையும் பறித்து விடுகிறது. தனி மனிதனின் மதிப்பு, குறிக்கோள் யாவற்றையும் நொறுக்கிவிடு கிறது' என்று குறிப்பிடுகிறார். வேலையின்மை தொடர்ந்திருக்குமானால் முதலில் தனி மனிதனை யும், பிறகு சமுதாயத்தையும் பாதிப்புக்குள்ளாக்கு கிறது. வறுமையும், ஆதரவற்ற நிலையும் தொடர்ந்து சமுதாயத்தை மாற்றியமைக்க வேண்டிய கட்டா யத்தை அது ஏற்படுத்திவிடுகிறது. இவ்வகைப்பட்ட வேலையின்மை அதாவது ஊரக வேலையின்மை, வளர்ச்சி குறைந்த நாடுகளில் காணப்படுகிறது.

ஊரக வேலையின்மையைப் போக்குவதற்கும், நாட்டின் முதலாக்கத்தை மிகுதியாக்குதற்கும், மறை முக வேலையின்மையைக் குறைப்பதற்கும் ஏற்ற வழிமுறைகளையும், கொள்கைகளையும் அரசு ஏற்று நடத்துகிறது. ஊரகவேலைத்திட்டம் (Rural Employment Programme) 1962-இல்நடைமுறைப்படுத்தப்பட் டது.கிராமத் தொழில்களைச் சிறு நகர மையங்களுக் கும் ஊரக அமைப்புகளுக்கும் விரிவாக்குவதன் மூலம், கிராமங்களிலுள்ள சிறு தொழில் நிறுவனங்களும், கைவினைஞர்களும் தமக்குத் தேவையான சேவை களைக் கூட்டுறவு வேளாண்மை-தொழில் பொருளா தார அமைப்புகளில் (Co-operative Agro-Industrial

Economy) பெற்றுக் கொள்ளலாம் என்ற எண்ணத்து டன் இத்திட்டம் உருவாக்கப்பட்டது.

மைய அரசு 1971-72-இல் ஊரக வேலைவாய்ப்பை ஏற்படுத்தப் புதிய குறுகிய காலத் திட்டம் ஒன்றை அறிமுகம் செய்து, கிராமங்களில் காணப்படும் வேலை யின்மையைப் போக்க முயற்சியெடுத்தது. சிறு உழவர் கள், நடுத்தர உழவர்கள், ஊரகத் தொழிலாளர்கள் போன்றவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் நோக்கத்துடன் ஆண்டிற்கு உரூ.50 கோடி செலவில் இது தொடங்கப்பட்டது. இதற்கு இரண்டு காரணங் கள் உள்ளன. அவை: 1) ஒவ்வொரு தனித் திட்டமும் 1,000 பேருக்கு 10 மாத வேலைவாய்ப்பை ஏற்படுத்தி யுள்ளது. 2) ஒவ்வோர் அமைப்பும் நீடித்து நிற்கக் கூடிய தொழிலாளர் செறிந்த தொழில்முறையைப் பயன்படுத்திப் பல பணிகளைச் செய்ய முற்பட்டது. ஆனால், அத்திட்டம் எதிர்பார்த்த பலனைத் தர வில்லை. அத்திட்டம் கிராமங்களிலுள்ள வேலையற் றோரைக் கூட்டிச் சேர்த்து அவர்களுக்குப் பயிற்சி யளித்துத் தேவைப்பட்ட இடங்களுக்கு அனுப்பும் முயற்சிகளை எடுக்கவில்லை.

சிறு உழவர்களின் முன்னேற்ற அமைப்புகள்(Small Farmers Development Agency), நடுத்தர உழவர்கள் வேளாண்மைத் தொழிலாளர் அமைப்புகள் (Marginal Farmers and Agricultural Labourers Agency), வறட் சிக்குட்பட்ட பகுதிகளுக்கான திட்டம் (Drought Prime Areas Programme) போன்றவை, வேலையற் றோர், குறைவான வருவாயுடைய சிறு உழவர்கள், நடுத்தர உழவர்கள் ஆகியோருக்கு வருவாய் தரும் பணிகளை ஏற்கத் தேவையான பணஉதவி அளித்து, வறட்சிப் பகுதிகளில் ஏற்படும் பலவகையான ஒருங் கிணைக்கப்பட்ட திட்டங்கள்-மண்வளப் பாதுகாப்பு, பாசன வசதி, காடு வளர்த்தல், கால்நடை வளர்த் தல் போன்றவைகளால் வேலைவாய்ப்பை ஏற்படுத் தின. ஒருங்கிணைக்கப்பட்ட ஊரக வளர்ச்சி (The Programme for Integrated Rural Development), வேளாண்மைத்துறையில் வேலைக்கேற்ற உணவு என்ற திட்டத்தையும் எச்சமாக இருக்கும் வேலை யில்லாத் திண்டாட்டத்தோடு இணைத்துள்ளது.

ஆறாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒருங்கிணைக் கப்பட்ட ஊரக வளர்ச்சித் திட்டம் (IRDP) வறுமையை நீக்கவும் சுய வேலை வாய்ப்புக்கான வழிமுறைகளை எடுத்துச் செயற்படுத்தவும் ஏறக் குறைய 1.5 மிலியன் குடும்பங்களை இத்திட்டத்தில் ஈடுபடுத்தியுள்ளது. ஊரக இளைஞர் சுய வேலை வாய்ப்புப் பயிற்சித் திட்டம்(The Scheme for Training Rural Growth for-Self-employment-TRYSEM) ஒன்றைப் புதிதாக ஏற்படுத்தி வேலையின்மையைப் போக்க முயற்சி செய்தது. அது ஊரக நிலமற்றோர் வேலைவாய்ப்பு உத்தரவாதத் திட்டத்தை (Rural Landless Employment Guarantee Programme) 1983-ஆம் ஆண்டில் நிறைவேற்றியது. அதன்படி நிலமற்றோருக்கு வேலை வாய்ப்புத் தருவது பற்றி மத்திய குழு ஒன்று அமைக்கப்பட்டது.

**நாட்டு, ஊரக வேலைவாய்ப்புத் திட்டம்:** மேற்கூறிய வேலைவாய்ப்புத் திட்டங்களைப் போலவே இதுவும் சீரிய குறிக்கோள்களுடன் செயற்பட்டு வருகிறது. வேலைக்கு உணவளிக்கும் திட்டத்தைச் சீர்படுத்திச் செயலாக்கியதன் வடிவமே நாட்டு ஊரக வேலை வாய்ப்புத் திட்டம் (National Rural Employment Programme) ஆகும். ஆனால் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 1980-ஆம் ஆண்டு ஏற்றுக்கொள்ளப்பட்டு 7-ஆம் ஐந்தாண்டுத் திட்டத்திலும் தொடருவது குறிப்பிடத்தக்கது. இது மத்திய அரசால் ஏற்று நடத் தப்படும் திட்டமானாலும், மாநில, மத்திய அரசு களால் இணைந்து ஏற்கப்பட்டுச் செயற்படுகிறது.

இத்திட்டத்தின்கீழ் மாவட்ட அளவில் வேலை வாய்ப்புத் திட்டம் ஒன்றை வகுத்து அதனைக் கீழ் மட்ட அளவு(ஊராட்சிமன்றங்கள்)வரை விரிவுபடுத்தி யுள்ளது. மொத்த வேலையற்றோரில் எத்தனைபேர் இத்திட்டத்தில் வேலை செய்யமுடியும் என்பதனை யும் அவர்களை எவ்வகைப் பணிகளில் வேலைக்கு அமர்த்தலாம் என்பது போன்ற விவரங்களையும் கணக்கெடுத்துள்ளது. ஆண்டிற்கு 300 முதல் 400 மிலியன் மனித நாள்கள் கூடுதலாகக் கொடுக்கவேண் டும் என்றெல்லாம் குறிப்பிட்டுள்ளது. ஊரக மேல் எழு நிலைகளைச் சீர்தூக்கி அமைப்பதற்குச் சமுதாய முதல் ஏற்படுத்திச் செயற்படுத்துவது முக்கிய நோக்கமாக உள்ளது. இதன்படி குடி தண்ணீர்க் கிணறுகள், சமுதாய நீர்ப்பாசனக் கிணறு கள், கிராமத்திலுள்ள குளங்கள், சிறுபான்மை நீர்ப் பாசன வேலைகள், ஊரகச் சாலைகள், பள்ளிக்கூடங் கள், பால்வாடிக் கட்டடங்கள், ஊராட்சிக் கட்டடங்கள் போன்றவைகளைக் கட்டுவதற்குத் திட்டமிடப் பட்டுள்ளது.

மத்திய அரசு, மாநில அரசுகளுக்கு 75 விழுக்காடு வேளாண்மைத் தொழிலாளர்களுக்கும், நடுத்தர உழவர்களுக்கும், 25 விழுக்காடு மாநிலங்களில் காணப் படுகின்ற வறுமைப் பிணியை நீக்குதற்கும் 6-ஆம் ஐந் தாண்டுத் திட்டக்காலத்தில் நிதி ஒதுக்கியுள்ளது. இத் திட்டத்தின் கீழ்க்கொண்டு வரப்பட்டுள்ள தொழிலா ளருக்கு அளிக்கும் ஊதிய விகிதம் அந்தப் பகுதியில் நிலவிவரும் குறைந்த அளவு ஊதிய விகிதத்திற்கு இணையாக அமைய வேண்டும் என்று கூறியுள்ளது. உணவுத் தானியமாக உயர்ந்த அளவு ஒருவருக்கு 2

கிலோ கிராம் எனக் குறிக்கப்பட்டிருந்தது 1 கிலோ கிராம் எனக் குறைக்கப்பட்டுள்ளது. இத்திட்டம் வேலை வாய்ப்பு அளிப்பதற்காகவும், கிராமங்களில் வறுமை நீக்கும் நோக்கத்திற்காகவும் செயற்படும் ஒன்றாக இருப்பதால் கூலி, உணவுத் தானியம் இவ்விரண்டுக்கும் 60:40 என்ற விகிதத்தில் குறிக்கப்பட்டு எந்த ஒரு பணியை அந்த மாவட்டத்தில் எடுத்துச் செய்தாலும் அந்த அடிப்படையில் ஊதியம் அளிக்கப்பட வேண்டும் என்று கூறுகிறது. இத்திட்டம் குடும்பங்களின் தேவைக்கேற்பச் செயற்பட வேண்டும் என்று வற்புறுத்தி, மொத்த ஒதுக்கீட்டில் 10 விழுக்காடு வரையறுக்கப்பட்ட பின்தங்கிய வகுப்பினர், மலைச் சாதியினர் (Scheduled Castes and Scheduled Tribes) ஆகியவர்களுக்கு வரையறுக்கப்பட்ட பணிகளுக்காகவும், அடுத்த10 விழுக்காடு சமூகக் காடு வளர்ப்பு, விறகுக்காகப் பயன்படும் மரங்கள் வளர்த்தல் போன்றவற்றிற்காகவும் செலவிடப்பட வேண்டும் என்று பகுத்துள்ளது.

நாட்டு ஊரக வேலைவாய்ப்புத் திட்டம் ஏற்று நடத்தி வரும் பணிகளைப் பற்றிய நுட்பமானஇடைக் கால மதிப்பீடு செய்தபொழுது பின்வரும் குறைபாடுகள் கண்டறியப்பட்டன. 1) பெரும்பாலான சமயங்களில் இத்திட்டத்தின் மூலம் புகுத்தப்பட்ட பணிகளைச் செய்யும் குடும்பங்களின் தேவைகள் ஒருங்கிணைக்கப்பட்ட ஊரகவளர்ச்சி அளிக்கும் உதவியுடன் இணைக்கப் படவில்லை. மேலும் புதிதாக விடுதலை பெற்ற கொத்தடிமைகள், குறைந்த அளவு ஊதியம் பெற எண்ணும் வேளாண்மைத் தொழிலாளர்கள் போன்றவர்களுக்குத்தேவையான வழியில் இத்திட்டம் உதவி செய்யவில்லை. 2) அரசு, நாட்டு ஊரக வேலை வாய்ப்புத் திட்டத்தைப் பொது முன்னேற்றத்தின் ஒரு பகுதியாகக் கருதி, அதனைக் கையாளுவதால், அதனை அன்றாடப் பணியில் ஈடுபட்டுள்ள அரசுத் துறை நிறுவனங்களுள் ஒன்றாகக் கருதுகின்றனர். ஆனால் நாட்டின் திட்டமிடுவோர் இதனை வேலை உருவாக்குவதற்காக ஏற்பட்ட திட்டங்களுள் ஒன்று என்று கருதுகின்றனர். சில சமயங்களில் மாநில அரசுகளின் பொதுப்பணித் துறை, நீர்ப்பாசனம் போன்ற துறைகளின் நிதிகள் இணை நிதியளிப்புப் போல் காட்டப்படுகின்றன. இவ்வித செயல் அடிப்படையிலேயே தவறு என்று கூறி, அதனால் 6-ஆம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் காணப்படும் வேலை உருவாக்கும் நோக்கம் படிப்படியாகக் குறைந்து விட்டது என்று கூறுகிறார்கள். 3) ஆங்காங்கே கிடைக்கும் சாதனங்களைப் (ஆள்பலம், பண்டங்கள்) பயன்படுத்தி வேலைவாய்ப்பு உருவாக்குவதே இத்திட்டத்தின் முக்கிய நோக்கமாகும். அதற்கு மாறாக விலை உயர்வான சாதனங்களை வைத்துப் பெரிய கட்டடங்கள் கட்டுவதில் மிக்க ஆர்வம் காட்டப்பட்டது.

ஆறாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்கென உரூ. 1620 கோடி நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டது. மத்திய, மாநில அரசுகள் உரூ.1834 கோடி வரை செலவு செய்துள்ளன. ஆனால் உணவுப் பண்டங்கள் மிகுதியாகப் பயன் படாமல் அவற்றின் தேவை மிகவும் குறையத் தொடங்கியது. அதற்குக் காரணம் சரியான முறையில் உணவுப் பண்டங்கள் பங்கீடு செய்யப்பட வில்லை. வெளிஅங்காடியில் உணவுப்பண்டங்களின் விலை அரசு குறிப்பிடும் விலையைவிடக் குறைவாக இருந்தது, தொழிலாளர்கள் கோதுமை, நெல் தவிரப் பருமனான தானியங்களையே (Coarse Grains) விரும்பினர். அதனைக்கருத்திற் கொண்டு சனவரி, 1984-ஆம் ஆண்டு முதல் உணவுத் தானியங்களைக் குறைந்த விலையில் அளிக்க அரசு தீர்மானித்தது. அந்த ஏற்பாட்டிற்குப் பிறகும்கூட 1984-85-இல் உணவு தானியங்களைப் பயன்படுத்துவதில் மிகக் குறைந்த அளவு முன்னேற்றமே காணப்பட்டது.

**ஆறாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் நாட்டு ஊரக வேலைவாய்ப்புத் திட்டம்:** ஆறாம் திட்டத்தில் வேலை

**ஆறாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் நாட்டு ஊரக வேலைவாய்ப்புத் திட்டத்தின் வளர்ச்சி**

| ஆண்டு | பண ஒதுக்கீடு (உரூ.கோடி) | உணவுப் பண்டங்கள் (இலட்சம் கண்டிகள்) | உருவாக்கிய வேலைவாய்ப்பு (மிலியன் மனித நாள்கள்) |
|---|---|---|---|
| 1980-'81 | 225 | 13.34 | 414 |
| 1981-'82 | 319 | 2.33 | 354 |
| 1982-'83 | 396 | 1.72 | 351 |
| 1983-'84 | 393 | 1.47 | 303 |
| 1984-'85 | 501 | 1.71 | 353 |
| | 1834 | 20.57 | 1775 |

வாய்ப்புக்காகப் பல ஆதாரத் திட்டங்கள் மேற் கொள்ளப்பட்டன. வேலைவாய்ப்பு, உணவுப் பண்டங் களின் அளவு, நிதி ஒதுக்கீடு போன்றவை பின்வரும் அட்டவணையில் காணப்படுகின்றன.

ஆறாம் திட்டத்தில் நாட்டு ஊரக வேலைவாய்ப் புத் திட்டத்தின்கீழ் 1775 மில்லியன் மனித நாள்கள் வேலைவாய்ப்பு உருவாக்கப்பட்டுள்ளது. இத்திட்டத் தின் இலக்கு 1500-2000 மில்லியன் மனித நாள்களை உருவாக்குவதாகும்.

ஏழாம் திட்டத்தில் இத்திட்டத்திற்காக உரூ. 2487 கோடி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. இதில் உரூ. 1251 கோடி மத்திய அரசுக்கும், உரூ. 1236 கோடி மாநில அரசுகளுக்கும் ஒதுக்கப்பட்டுள்ளது. முதல் குறிக்கோளாகிய ஊரக வேலைவாய்ப்பை ஏற்படுத்துவதுடன் சமூகக் காடுகள் வளர்ப்பையும் இத் திட்டத்துடன் செயற்படுத்தி ஊரக வளர்ச்சியில் சமநிலை ஏற்படுத்த முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன. நாட்டின் மிக முக்கிய சிக்கல்களான வேலையில்லாத் திண்டாட்டம், வறுமை போன்றவற்றைத் தக்க முறையில் சமாளிக்க இத்திட்டம் ஓர் அறைகூவலாக அமைந்துள்ளது. நாட்டு ஊரக வேலைவாய்ப்புத் திட்டம், ஊரக நிலமற்றோர் வேலைவாய்ப்பு உத்தர வாதத் திட்டம் (RLEGP) ஆகிய இரண்டு முக்கிய திட்டங்களுக்காக மத்திய, மாநில அரசுகள், தங்க ளின் 1987–'88 வரவு-செலவுத் திட்டங்களில் உரூ. 1685 கோடி ஒதுக்கியுள்ளன. இதுதவிர, இயற்கைச் சேதங்களைச் சமாளிக்க மத்திய வரவு-செலவுத் திட் டத்தில் உரூ.500 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இதன் படி 290 இலட்சம் குடும்பங்களுக்கு நாடோறும் 1கிலோ தானியம் உரூ.2.50 வீதம் அடுத்த ஆறு மாதங்களுக்குக் கொடுக்கமுடியும். 5பேரைக் கொண்ட ஒரு குடும்பத்துக்கு நாடோறும் ஒருவேளை சாப் பாடாவது கிடைக்கும். மொத்தமாக இருப்பு வைத் துள்ள 230 இலட்சம் கண்டி (Tons) தானியத்தில் 60இலட்சம்கண்டிதான் இத்திட்டங்களுக்குத்தேவைப் படும். வேலையின்றித் தவிப்போருக்கும் தானியம் வழங்கும் சமூகப் பாதுகாப்பு ஏற்பாடு மிக முக்கிய ஒன்றாகும். உணவுத் தானியத் தட்டுப்பாடு இல்லா விட்டாலும் அவற்றை வாங்குவதற்கு ஏழைகளிடம் பணமில்லை. அமார்த்தியா சென் என்ற பொருளியல் அறிஞர் கூறுவதுபோல் உணவு அளிப்பு, தேவையான அளவு இருந்தால் மட்டும் போதாது. அதனை வாங்கு வதற்குப் போதுமான பணம் கிடைக்க அரசு வேலை வாய்ப்பு ஏற்பாடுகளையும் செய்ய வேண்டும். க.சொ.

**துணைநூல்கள்:**


**Guhan, S.**, Drought Relief: Food for work is better (தமிழாக்கம்), தினமணி நாளிதழ், மலர் 54, இதழ் 4, செப்டம்பர் 14,1987.

**Guhan, S.**, Sixth Five Year Plan (1980-85) Mid-Term Appraisal (1983), Planning Commission, New Delhi, 1983.

**Mamoria, C.B.**, Agricultural Problems of India, Kitab Mahal, Allahabad, 1985.

**Misra, S.K & Puni V.K.**, Indian Economy, Himalaya Publishing House, New Delhi, 1986.


***நாட்டுக் கடன்:*** காண்க:பொதுக்கடன்.

***நாட்டுடைமையாக்கல்*** என்ற கொள்கை இரண்டாம் உலகப்போருக்குப்பின் பெருமளவில் பேசப்பட்டுச் செயற்பட்டு வருகிறது. உற்பத்தியில் ஈடுபடும் பெரும் உற்பத்திச் சாதனங்களை நாட்டின் நன்மைக்காக அரசே ஏற்றுக் கொள்ளும் கொள் கையை நாட்டுடைமையாக்கல்(Nationalisation)என்று கூறுகின்றனர். பொருளாதார வளர்ச்சியில் தனியார் நிறுவனங்களும், பொது நிறுவனங்களும் ஈடுபடும் செயல்முறை கி.பி. 20-ஆம் நூற்றாண்டில் எல்லா நாடுகளிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. குறிப்பாகத் தனியார் முயற்சியிலும், முதலீடுகளிலும் நம்பிச் செயற்படும் முதலாளித்துவ நாடுகளில் இக் கொள்கை முதலில் செயற்படத் தொடங்கியது. தொழிற்றுறை, பகிர்வு முறை ஆகிய பொருளாதார நடவடிக்கை களை அரசே தனியாரிடமிருந்து எடுத்துக்கொண்டு செயற்படத் தொடங்கியது.

இங்கிலாந்து நாட்டில் தொழிலாளர் ஆட்சி (Labour Party) இக் கொள்கையை நீண்ட காலமாக வலியுறுத்தி வந்தது. இக்கட்சி 1945-ஆம் ஆண்டு நாடாளுமன்றத்தில் பெரும் வெற்றி பெற்றவுடன் நாட்டுடைமையாக்கல் கொள்கையை நடைமுறைப் படுத்தியது. ஐரோப்பிய நாடுகளில் அஞ்சல் துறை (Postal Services), விமானப் போக்குவரத்துப் போன்ற துறைகள் அரசால் ஏற்று நடத்தப்பட்டு வந்தன. இங்கிலாந்து வங்கி (Bank of England)1946 -ஆம் ஆண்டு நாட்டுடைமையாக்கப்பட்டது. இதற்குப் பின் 1947-ஆம் ஆண்டில் நிலக்கரித் தொழிலும்(Coal Industry), 1948-ஆம் ஆண்டு உள்நாட்டுப் போக்கு வரத்தும், மின் உற்பத்தியும், 1949-ஆம் ஆண்டு பெட் ரோலியத் தொழிலும், 1951-ஆம் ஆண்டு இரும்பு எஃகுத் தொழில்களும் நாட்டுடைமையாக்கப்பட்டன. இவ்வாறாக நாட்டுடைமையாக்கல் கொள்கை முதலாளித்துவ நாடுகளிலும் நடைமுறையாகி விட்டது.

பிரான்சு நாட்டிலும் நாட்டுடைமையாக்கற் கொள்கை இம்முறையிலே நடைமுறைப்படுத்தப் பட்டது. நாட்டுடைமையாக்கற் கொள்கை அரசியல் பொருளாதார அடிப்படையில் அமைவதாகும்.

மார்க்சின் பொருளியல் சிந்தனைப்படி மூலதனமும், தனியார் தொழில் அமைப்பும் முதலாளித்துவத்தின் இரு கூறுகளாகக் கருதப்பட்டன. மார்க்சின் உழைப்புக் கோட்பாடு ஐரோப்பிய நாடுகளில் பரவத் தொடங்கியவுடன், தனியார் தொழில்கள், சமூக அமைப்பையும் தொழிலாளர்களையும் சுரண்டு கின்றன என்ற எண்ணம் எழுச்சிபெறத் தொடங்கியது. மேலும், பொருளாதாரத்தின் அடிப்படை உற்பத்திச் சாதனங்கள் சிலரின் கையிலிருப்பது ஒட்டுமொத்த மான நாட்டின் நலனுக்குப் புறம்பானது என வாதிட வும் செய்தனர். அக் காரணங்களால் நாட்டுடைமை யாக்கும் கொள்கை வலுப்பெற்றது.

எல்லா நாடுகளிலும் எல்லா வளங்களும் ஒரே சீராக அமைவதில்லை. 20-ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் நலப் பொருளாதாரத்தின் (Welfare Economics) தாக்கம் மிகுதியாகப் பொருளியல் சிந்தனையிலும், நாட்டின் நடைமுறையிலும் எதிரொ லிக்கத் தொடங்கியது. எனவே, வளங்களைப் பெருக்கிச் சீரான பகிர்வுமுறையைச் செய்தல் நல அரசின் தலையாய கொள்கையாக வலியுறுத்தப் பட்டது. தனியார் பொருளாதாரத்தில் ஆதாய நோக்கே முதலிடம் வகித்தமையால் பொதுநோக்கு விலக்கப்பட்டது. மேலும், கட்டுப்படுத்தப்படாத தனியார் பொருளாதாரச் சுதந்திரம் நாட்டின் வளங் களைச் சீரான முறையில் பயன்படுத்தவும் தவறி விட்டது. தேவையற்ற போட்டிகள் மூலம் பொருளா தாரச் சீர்கேட்டையும் உருவாக்கியது. எனவே, நாட்டுடைமையாக்கும் கொள்கை பல நாடுகளில் ஏற்புடையதாயிற்று.

பொதுவுடைமை நாடுகளில் எல்லாத் தொழில் களும் பொருளாதார அமைப்புகளும், அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டுச் சமுதாய நன்மைக்காகப் பயன்படுத்தப்படுகின்றன. இக் கொள்கை சமூக மயமாக்கற் கொள்கை (Socialisation) எனப்படும். நிலங்களைச் சமூகமயமாக்கும் கொள்கையை முதலில் இலெனின் (Lenin) சோவியத்து நாட்டில் அறிமுகப்படுத் தினார். புரட்சிக்குப்பின் உருசிய நாட்டில் 1922 -ஆம் ஆண்டு சொத்துரிமை நீக்கப்படுவதாக அறிவிக்கப்பட்டது. இச்சட்டத்தின்படி நிலம், நீர், காடு போன்ற சொத்துகள் சமுதாயச் சொத்துகளாக அறிவிக்கப்பட்டன. பிறகு உற்பத்தியைப் பெருக்க வும், உற்பத்தித் திறனை வளர்க்கவும், கூட்டுறவு வேளாண்மைப் பண்ணை முறை நடைமுறைப்படுத்தப் பட்டது. பெருந் தொழில்கள் எல்லாம் அரசால் மேற்கொள்ளப்பட்டன. எனவே, பொதுவுடைமைப் பொருளாதார அமைப்பில் பொருளாதாரச் சாதனங் களைச் சமூகமயமாக்குதல் என்பது நாட்டுடைமைக் கொள்கையின் கூறோடு ஒன்றிவிடுகிறது. மற்ற நாடு களில் நிலங்களும் பிற சொத்துகளும் தனியாரிடம் உள்ளதால், சில பொருளாதார அமைப்புகளை அரசு எடுத்துக்கொள்ள முற்படும்போது அச்செயல் நாட்டு டைமையாக்கல் எனப்படுகிறது.

சோவியத்து நாட்டைப் போன்றே 1949-ஆம் ஆண்டில் விடுதலைப்பெற்ற பொதுவுடைமைச் சீனா விலும் வீடு போன்ற சொத்துகளைத் தவிர எல்லா உடைமைகளையும் பொதுவுடைமையாக்கிவிட்டனர். எனவே, நாட்டுடைமையாக்கும் கொள்கை முதலா ளித்துவ நாடுகளிலும், வளர்ச்சி பெறுகின்ற நாடுகளி லும் மிக்க செல்வாக்குப்பெறத் தொடங்கியது.

நாட்டுடைமையாக்கும்கொள்கை தனியார் பொரு ளாதார ஆதிக்கத்திற்கு எதிராகப் பயன்படுத்தும் ஒரு கருவியாக இந்நாடுகளில் உள்ளது. மேலும், தொழில் தகராறுகள்பெருகி ஆயிரக்கணக்கான தொழிலாளர் கள் வேலையிழக்கும் நிலையிலும் இக் கொள்கை கடைப்பிடிக்கப்படுகிறது. இயற்கையிலேயே சில வளங் கள் குறிப்பிட்ட இடங்களில் மட்டும் இருக்கின்றன. இவ் வளங்களைப் பயன்படுத்தித் தனியார் மிகுந்த இலா பங்களைப் பெறுவதைத் தடுப்பதற்கும் நாட்டுடைமை யாக்கும்கொள்கைபயன்படுகிறது. வேலைவாய்ப்பைப் பெருக்குவதற்கும், சமமான ஊதியக் கொள்கையைக் கடைப்பிடிப்பதற்கும் நாட்டுடைமைக் கொள்கை பயன்படுவதாயுள்ளது. நாட்டுடைமையாக்கப்பட்ட நிறுவனங்களில் போதிய உற்பத்தித்திறன் பெருகுவ தில்லை என்றும், தொழிலாளர்கள் பொறுப்பான முறையில் பணியில் ஈடுபடுவதில்லை என்றும், மேலாண்மை செய்யும் உயர் அலுவலர்கள் போதிய ஆர்வம் காட்டுவதில்லை என்றும் குற்றச்சாட்டுகள் கூறப்படுகின்றன. மேலும், தனியார் நிறுவனங்களில் காட்டப்படும் அக்கறையும் தொழில் திறமையும் பொது நிறுவனங்களில் காட்டப்படுவதில்லை என்றும் கூறப்படுகிறது.

இந்தியாவில் நாட்டுடைமையாக்கும் கொள்கை 1947-ஆம் ஆண்டு விடுதலைக்குப்பின் பெருமளவில் விவாதிக்கப்பட்டது. இந்தியப் பொருளாதார வளர்ச் சிக்காக அரசியல், சமூக, தட்பவெப்ப நிலைகளுக்கேற் பத்தொழிற் கொள்கை (Industrial Policy) உருவாக்கப் பட வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது. அதைத் தொடர்ந்து தொழிற்கொள்கை 1948-ஆம் ஆண்டு முதல் வெளியிடப்பட்டது. அத் தொழிற்கொள்கை யில் அரசு விரும்பினால் தொழில்களை நாட்டுடைமை யாக்கலாம் என்று அறிவிக்கப்பட்டது. பல பெரும் முதலாளிகள் இத் தொழில் கொள்கையைக் கடுமை யாக எதிர்த்துப் பேசினர். எனவே, 1956-ஆம் ஆண்டு அறிவிக்கப்பட்ட தொழிற்கொள்கையில், அரசு ஏற்று நடத்தும்தொழில்கள், தனியார் ஏற்று நடத்தும் தொழில்கள் எனத் தொழில்கள் வரையறுக்கப்

பட்டன. இத்தொழிற் கொள்கையே கலப்புப் பொருளாதாரத்திற்கு அடிப்படையாக அமைந்தது.

இந்திய அரசின் கொள்கைக்கேற்ப 1948-ஆம் ஆண்டு இந்திய மைய வங்கி(Reserve Bank of India) நாட்டுடைமையாக்கப்பட்டது. இந்தியப் பேரரசு வங்கி (Imperial Bank of India) எனப்பட்ட வங்கியும் 1955-ஆம் ஆண்டு நாட்டுடைமையாக்கப்பட்டது. அவ் வங்கி இப்போது பாரத அரசு வங்கி (State Bank of India) என்றுசொல்லப்படுகிறது. ஆயுள் காப்பீட்டுக் கழகங்கள் 1956-ஆம் ஆண்டு நாட்டுடைமையாக்கப் பட்டன. இக் கழகங்கள் ஒருங்கிணைக்கப்பட்டுத் தேசிய ஆயுள் காப்பீட்டுக் கழகம் (Life Iusurance Corporation of India) என்னும் பெயரில் வழங்கப்படுகிறது. இக் கழகத்தை அரசு ஏற்றுக்கொண்டபோது சில விளக்கங்கள் அரசின் சார்பில் அளிக்கப்பட்டன. பங்குதாரர்களின் பணம் வெளிநாட்டு நிறுவனங்களில் போடப்பட்டுப் பெரும் ஆதாயம் ஈட்டப்பட்டது எனவும், இவ்வகையான ஆதாயம் சமுதாயத்திற்குத் தேவையான முதலீடுகளில் வைக்கப்படவில்லை எனவும் கூறப்பட்டது. வணிக வங்கிகள் (Commercial Banks) 1969-ஆம் ஆண்டு பிரதமர் இந்திராகாந்தி அம்மையாரால் நாட்டுடைமையாக்கப்பட்டன. அப்போது மைய அரசின் நிதியமைச்சராகப் பணியாற்றிய மொரார்சி தேசாய் சமூக வங்கிக் கட்டுப்பாடு என்ற கொள்கையை வலியுறுத்தினார். வணிக வங்கிகளின் போக்கை நாட்டின் பொருளாதாரப் பயனுக்கேற்பக் கட்டுப்படுத்தி ஒழுங்கு செய்யலாம் (Social Control of Banks) என்ற கொள்கையை மொரார்சி தேசாய் வலியுறுத்தினார். இந்திராகாந்தி அம்மையார் அக் கொள்கையை ஏற்கவில்லை. எனவே, 14 பெரிய வணிக வங்கிகள் நாட்டுடைமையாக்கப்பட்டன.

மேலும்,6 வணிக வங்கிகள் 1980-ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கப்பட்டன.நாட்டின் பொருளாதாரத் தேவைக்கேற்ப வங்கிகளின் முதலீட்டை ஒழுங்கு படுத்துவதற்கும், தனியாரின் பொருளாதார ஆதிக்கத்தைத் தகர்ப்பதற்கும் இக்கொள்கை கடைப்பிடிக்கப்பட்டதாகக் கூறப்பட்டது. நிலக்கரிச் சுரங்கங்கள், இந்திய இரும்பு எஃகு நிறுவனம், பெட்ரோலியப் பொருள்களைப் பகிர்வுசெய்த வெளிநாட்டு நிறுவனங்கள் ஆகியன1972-73-ஆம் ஆண்டுகளில் நாட்டுடைமை யாக்கப்பட்டன. நலிந்த 111 பஞ்சாலைகள் 1977-ஆம் ஆண்டு நாட்டுடைமையாக்கப்பட்டன.

இந்தியாவில் மாநிலங்கள் அளவிலும் நாட்டுடைமை யாக்கும் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. தமிழ்நாட்டில் போக்குவரத்துத் துறையில் 1967க்குப் பின் பெரும்பாலான வழித்தடங்களில் விடும் பேருந்துகள் நாட்டுடைமையாக்கப்பட்டன. பேருந்துகள் நாட்டுடைமையாக்கும் கொள்கையை எதிர்த்துத் தனியார் பேருந்து முதலாளிகள் தலைமை நீதிமன்றத்தில் வழக்குகள் தொடுத்தனர். நீதிமன்றம் 1985-ஆம் ஆண்டு தமிழ்நாடு அரசின் நாட்டுடைமைக் கொள்கை சரியென்று தீர்ப்பளித்தது.

பொருளாதாரத்தில் அடிப்படைச் சாதனங்கள், பல பொருள் உற்பத்தியில் ஈடுபடும் நிறுவனங்கள், பணித்தொழில்கள் (Services) நிறுவனங்கள் எனப் பலவகைப்படும். கனரகத்தொழில், தாதுப்பொருள்கள் உற்பத்தி செய்யும் நிறுவனங்கள், இரசாயன மருந்து உற்பத்தி செய்யும் நிறுவனங்கள், பொறியியல் தொழில் நிறுவனங்கள், போக்குவரத்துக் கருவிகள் உற்பத்தி செய்யும் நிறுவனங்கள், நிலக்கரிச் சுரங்கங்கள் நுகர்வோர் உற்பத்தி செய்யும் நிறுவனங்கள், தேசிய நெசவுத்தொழில் நிறுவனங்கள், வேளாண்மை சார்ந்த தொழில் நிறுவனங்கள் ஆகியன உற்பத்தியில் ஈடுபடும் நிறுவனங்களாகும். உற்பத்தியிலீடுபட்டுள்ள நிறுவனங்கள் பல நாட்டுடைமையாக்கப்பட்டன. இந்த வகையில், இந்தியாவில் 200 பொதுத் துறை நிறுவனங்கள் இயங்கி வருகின்றன.

கடந்த சில ஆண்டுகளாக இங்கிலாந்து நாட்டிலும், பல மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் தனியார் மயமாக்கும் கொள்கை (De Nationalisation) கடைப்பிடிக்கப்படுகிறது. இக்கொள்கையின்படி நாட்டுடைமையாக்கப்பட்ட நிறுவனங்கள் மீண்டும் தனியாரிடமே ஒப்படைக்கப்படுகின்றன. மு.நா.

**துணை நூல்கள்:**

Hansan, J.L., Nationallsation, Distionary of Economics and Commerce, ELBS and Macdonald- and Evans Ltd, London, 1977.

Hansan,Albert, Nationalisation: A Book of Readings, Geroge Allen Unwin Ltd, London, 1963,

***நாட்டு நலப்பணித் திட்டம்:*** கல்லூரி மாணவர்களின் ஓய்வுநேரத்தைத் தேசிய மேம்பாட்டிற்காகச் சமூகநலப் பணியில் ஈடுபடுத்துவதே நாட்டு நலப்பணித் திட்டத்தின் (National Service Scheme) நோக்கமாகும். இத்திட்டம் முதன்முதலாக 1969-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. ஏறக்குறைய 40,000 மாணவர்களுடன் தொடங்கப்பட்ட இத்திட்டம் படிப்படியாக உயர்ந்து இப்பொழுது (1986-87) ஏறக்குறைய 7.70 இலட்சம் மாணவர்களைத் தன் உறுப்பினர்களாகக் கொண்டுள்ளது. இதில் தமிழ்நாடு இந்தியாவிலேயே மிகப்பெரிய நாட்டு நலப்பணித் திட்ட அமைப்பினை (1.4 இலட்சம் மாணவர்கள்) உடையதாகத் திகழுகிறது.

இத்திட்டம் அனைத்து மாநிலங்களிலும் உள்ள 3,500க்கும் மேற்பட்ட கல்லூரிகளில் செயற்படுத்தப்படுகிறது. கல்லூரிகளில் மாணவர்களும் ஆசிரியர்களும் தாமாகவே முன்வந்து இப்பணியில் ஈடுபடுகின்றனர். இப்பொழுது சோதனை அடிப்படையில் 4 மாநிலங்களிலுள்ள மேல்நிலைக் கல்வி பயிலும் (Plus 2 Stage) மாணவர்களுக்கும் இத்திட்டம் விரிவாக்கப்பட்டுள்ளது. இதில் தமிழ் நாடும் ஒன்று என்ற சிறப்பு உண்டு. தமிழ்நாட்டில் மட்டும் இப்பொழுது (198-687) மேல்நிலைக் கல்வி பயிலும் மாணவர்கள் 50,000 பேர் இத்திட்டத்தில் உறுப்பினராக உள்ளனர்.

நோக்கிலான செயற்பாடுகளுக்கும் முக்கியத்துவம் அளித்து வருகின்றனர். புதிய சாலைகள் அமைத்தல்; பழைய சாலைகள், பள்ளிக்கூடங்கள், கிராமங்களிலுள்ள குளங்கள், தண்ணீர்த் தொட்டிகள் ஆகியவற்றைப் பழுதுபார்த்தல்; மரம் நடுதல் போன்ற திட்டங்களைச் செயற்படுத்துகின்றனர். மேலும் 1) சுற்றுப்புறச்சூழலை அழகுபடுத்துதல், 2) உடல்நலம், குடும்ப நலம், சத்துணவு ஆகிய திட்டங்கள், 3)பெண்களின் தகுநிலையைஉயர்த்துதல், 4) தொண்டு நிறுவனங்களில் சமூகநலப் பணி, 5) வேளாண்மைஉற்பத்தி உயருவதற்கான திட்டங்கள், 6)அவசரக் காலங்களில் உதவிசெய்தல், 7) வயதுவந்தோர் கல்வி போன்ற பல


நாட்டு நலப்பணித் திட்ட மாணவர்கள்

திட்டங்களிலும் நாட்டு நலப்பணித் திட்ட மாணவர்கள் பங்கு கொள்கின்றனர். இதனுடன் பலவகையான மறுவாழ்வுத் திட்டங்களை அதிகாரிகள் செயற்படுத்துவதற்கு இத் திட்ட மாணவர்கள் உதவி செய்து வருகின்றனர்.

தொடக்கத்தில் சில ஆண்டுகள் இம் மாணவர் படை கிராமங்களைத் தேர்ந்தெடுத்துச் சாலைகள் அமைத்தல், மரங்களை நடுதல் போன்றவற்றைச் செய்கின்ற சமூகநலப் பணிக் குழுவாக மட்டுமே திகழ்ந்தது. ஆனால், இப்பொழுது நாட்டு நலப்பணித் திட்டம், தன் நிலையை உறுதிப்படுத்திக்கொண்டதோடு மட்டுமன்றித் தன் செயல்களைப் பலவகைப் படுத்தியுமுள்ளது. மேலும் அதனுடைய உறுப்பினர்களின் ஆளுமை வளர்ச்சியிலும் கவனம் செலுத்தி வருகிறது.

இத் திட்டத்தினர் 1976-77-ஆம் ஆண்டு முதல் ஊரகப் புனரமைப்புத் திட்டங்களுக்கும் சமூகம், பொருளாதாரம் ஆகியவற்றில் மிகவும் நலிந்த பிரிவினரின் வாழ்க்கை நிலையை முன்னேற்றுகின்ற

இத் திட்டத்தின் ஒரு பகுதியாக, மாணவர்கள் விடுமுறைக் காலங்களில் ஏதேனும் ஓர் ஊரில் பெரிய அளவில் முகாமிட்டு நிறைவேற்றுகின்ற திட்டங்களும் உண்டு. அவை கிராம மக்களின் அடிப்படைத் தேவைகளில் சிலவற்றை நிறைவு செய்வதாய் அமையும். அதாவது 'ஊரக முன்னேற்றத்தில் இளைஞர்கள்' (Youth for Rural Development) என்ற கருத்தின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட கிராமங்களில் சிறப்பு முகாம்கள் அமைக்கப்படுகின்றன. அச் சிறப்பு

முகாம்களில் நாட்டு நலப்பணித் திட்ட மாணவர்களுள் பெரும்பாலானோர் கலந்துகொண்டு நலப்பணியில் ஈடுபடுகின்றனர். மேலும், சீர்மிகு சுற்றுப்புறச் சூழலுக்கு இளைஞர்கள் (Youth for Better Environment) என்ற நோக்கில் பின்வரும் நலப்பணித் திட்டங்களையும் செய்து வருகின்றனர்.

1) குளங்களிலுள்ள பாசிகளையும் அழுக்குகளையும் நீக்குதல், 2) தூய்மைப்படுத்துதல், அகழிகளைப் பாதுகாத்தல், வேலியிடல், குழிகளை வெட்டுதல், உரமிடுதல் போன்ற பயிரிடுவதற்கு முந்திய பணிகள், 3) மலை உச்சிகளிலும், மக்கள் வாழுகின்ற இடங்களிலும் மரங்களை நடுதல், 4) உரக் குழிகள் அமைத்தல், 5) பூங்காக்கள் அமைத்தல், 6) சுற்றுப்புறத்தைத் தூய்மையாக்குதல், 7) மக்களிடையே சுற்றுப்புறச் சூழலால் ஏற்படும் சிக்கல்களை அறிந்துகொள்வதற்கான ஆவலை ஏற்படுத்துதல் போன்ற பணிகள் செயற்படுத்தப்படுகின்றன.

இப்பொழுது அன்றாட நாட்டு நலப்பணித் திட்ட முறையின் மூலமும் சிறப்பு முகாம்களின் மூலமும் குடும்ப நலத் திட்டம், இருபது அமிசத் திட்டம் போன்றவற்றிற்குப் பெருஞ் சிறப்பிடம் அளிக்கப்படுகிறது. மேலும் 1) மக்களிடையே நல்ல ஒழுக்கத்தை உருவாக்குதல், 2) சுற்றுப்புறச் சூழலின் முன்னேற்றம், 3) தேசிய ஒற்றுமைக்கு உறுதிமொழி எடுத்துக் கொள்ளுதல், 4) சமுதாய உணர்ச்சி பெறுதல், பண்பாட்டு வளர்ச்சி, 6) உடல்நலம், 7) தாழ்த்தப்பட்ட-மலை சாதியின மாணவர்களுடன் இணைந்து பழகுதல் போன்றவற்றிலும் மிகுதியான கவனம் செலுத்தப்படுகிறது.

நாட்டு நலப்பணித் திட்டத்திற்கான செலவினை மத்திய அரசும் மாநில அரசும் 7:5 என்ற விகிதத்தில் பகிர்ந்துகொள்கின்றன. நாட்டிலுள்ள பல்வேறு நாட்டு நலப்பணித் திட்டப் பிரிவுகளை ஒருங்கிணைக்கவும், மாநில அளவில் தொடர்பு ஏற்படுத்தவும் 15 பிரதேச நாட்டு நலப்பணித் திட்ட மையங்கள் செயற்பட்டு வருகின்றன. இத்திட்ட உறுப்பினர்களின் நலப்பணி தொடருவதற்கும், பழைய உறுப்பினர்களுக்கும் இன்றைய உறுப்பினர்களுக்கும் தொடர்பு ஏற்படுதற்கும் 'முன்னாள் நாட்டு நலப்பணித் திட்ட உறுப்பினர் சங்கம்' என்ற அமைப்புகளும் இப்பொழுது நிறுவப்பட்டுள்ளன. பூ.த.

**நாட்டுப்புறச் சொற்பிறப்பியல்**: ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் உண்டு. ஒரு சொல்லுக்குரிய அப்பொருள் எவ்வாறு உண்டாயிற்று என்ற வினாவை மொழி பேசும் ஒவ்வொருவனும் எழுப்புகின்றான். எனவே, சொற்பொருளுக்குரிய காரணத்தைப் பற்றிய ஆராய்ச்சியை அறிஞர்கள் மேற்கொள்வதில் வியப்பில்லை. இத்தகைய ஆராய்ச்சி சொற்பிறப்பியலில் ஒரு பகுதியாகக் கருதப்படும். எல்லாச் சொற்களுக்கும் சொற்பிறப்புக் காரணம் புலப்படுவதில்லை. இவ்வாறு காரணம் புலப்படாத சொற்களை இடுகுறிச்சொற்கள் என்றும், காரணம் தெரிந்த சொற்களைக் காரணச் சொற்கள் என்றும் தமிழ் இலக்கண நூலார் இரு வகையாகப் பகுத்தனர். கல், மண் போன்ற சொற்பிறப்புக் காரணம் புலப்படாத சொற்கள் இடுகுறிச் சொற்கள் ஆகும். நாற்காலி, மண்வெட்டி போன்ற சொற்களுக்கு முறையே 'நான்கு கால்களையுடைய இருக்கை', 'மண் வெட்டும் கருவி' என்று சொற்பிறப்புக் காரணம் கூறலாம். எனவே, இவை காரணச் சொற்கள் ஆகும். தொகைச் சொற்களுக்கெல்லாம் பெரும்பாலும் காரணம் காட்டிவிடலாம். வற்றல், அலி போன்ற சொற்கள் தொகைச் சொற்கள் அல்ல. இவற்றில் முதற்சொல்லான வற்றல் என்பது வற்று என்ற வினையடியாகத் தோன்றியது. எனவே, வற்றல் என்ற சொல்லுக்குக் காரணம் 'வற்றுதல்', அலி என்பதோ ஆணும் அல்லாதது; பெண்ணும் அல்லாதது. எனவே, இச்சொல் 'அன்மை'ப் பொருளுடைய அல் என்னும் குறிப்புவினையடியாகத் தோன்றியது. 'என்னைப் பற்றிப் பேசினான்' என்ற தொடரில் உள்ள பற்றி என்பது பின்னுருபு. இந்தப் பின்னுருபு பற்று என்ற வினைச் சொல்லோடு தொடர்புடையது. எனவே, இது இடுகுறியன்று. இது போலவே மிக என்ற அடைச்சொல் மிகு என்ற வினைச் சொல்லோடு தொடர்புடையது என்று கூறலாம். இதுவும் காரணச் சொல்லே.

நாட்டுப்புறச் சொற்பிறப்பியல் (Folk Etymology) ஆராய்ச்சி என்பது சொற்களின் பகுதிகளைச் சரியான முறையில் பிரித்துக் காட்டி அப்பகுதிகளை அவற்றுக்கிணையான தனிச் சொற்களுடன் (முடிந்த அளவுக்குத்) தொடர்புபடுத்திக் காட்டுவதேயாகும். கண்ணீர் என்ற சொல்லைக் கண், நீர் என்ற இரு பகுதிகளாகப் பிரித்துக் காட்டலாம். கண்ணிலிருந்து வரும் நீரே கண்ணீர் ஆகும். எண்ணெய் என்ற சொல்லை எள், நெய் என்ற இரு பகுதிகளாகப் பிரித்துக் காட்டி இவற்றை எள் என்ற தானியத்தைக் குறிக்கும் தனிச்சொல்லுடனும், 'பிழிவு' என்ற பொருளில் வரும் நெய் என்ற தனிச் சொல்லுடனும் தொடர்புபடுத்திக் காட்டினால் எண்ணெய் என்ற சொல்லின் சொற்பிறப்பியல் நன்கு தெளிவுறுத்தப்படும். தமிழ் எண்ணெய்க்கு இணையான தெலுங்குச் சொல் நூனெ என்பது. இதனை நூ, னெ எனப் பிரிக்கலாம். இதில் முதற் பகுதி நுவ்வு 'எள்' (காண்க: தமிழ் நுவணை) என்ற தனிச்சொல்லோடு தொடர்புடையது. இரண்டாம் பகுதி நெ(ய்) 'பிழிவு' என்ற

சொல்லின் முறையில் அமைந்தது. எனவே, தெலுங்கு நூனெ தமிழ் எண்ணெய் போல எள்ளின் பிழிவைக் குறிக்கும்.

மொழியாராய்ச்சியாளர் செய்யும் சொற்பிறப்பியல் ஆராய்ச்சி நெறி முறைப்படி அமைந்தது. ஒரு மொழி பேசுவோர் ஆராய்ச்சி நெறிமுறைக்கு மாறாகச் சொற்பொருட்காரணம் காண முயலுதலும் உண்டு. முழுச் சொல்லின் பகுதிகளை அவற்றுக்கிணையான தனிச் சொற்களுடன் தொடர்புபடுத்திக் காட்டுதல் நெறிமுறைக்கு மாறாக நடைபெற்றால், அச்சொற்பிறப்பியல் முறையற்ற சொற்பிறப்பியல் ஆகிவிடும்.

முறையற்ற சொற்பிறப்பியல் இருவகைப்படும். ஒன்று நாட்டுப்புறச் சொற்பிறப்பியல்; மற்றொன்று பண்டிதர் சொற்பிறப்பியல். குறிஞ்சிப்பாடி, காட்பாடி போன்ற ஊர்ப் பெயர்களில் ஊரைக் குறிக்கும் பாடி என்ற சொல் அமைந்திருக்கக் காணலாம். தரங்கம்பாடி என்ற ஊர்ப் பெயரிலும் பாடி என்ற பகுதியைக் காணலாம். பேச்சுத் தமிழில் னகர மெய்க்குப்பின் வல்லெழுத்து வரும்பொழுது னகரம் அந்த வல்லெழுத்துக்கு இணையாக மெல்லெழுத்தாக மாறிவிடுவதைக் காணலாம். எனவே குள்ளன் + சாவடி என்பது குள்ளஞ் சாவடி என்று மாறிவிடும். இந்த முறையில் தரங்கன்+பாடி என்பது தரங்கம் பாடி எனத் திரிந்திருக்கலாம். தரங்கன் என்பது ஒரு தலைவனின் பெயராக இருந்திருக்கக் கூடும். இது உண்மையானால், பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளையவர்கள் தரங்கம்பாடி என்ற ஊரைத் தரங்கம்'அலை' என்ற அருந்தமிழ்ச் சொல்லுடன் தொடர்புபடுத்தி அந்த ஊரில் அலைபாடுகின்றது என்று கவிதை நயம் தோன்றச் சொற்பிறப்புக் கற்பித்துள்ளார் என்று கூற வேண்டும். தரங்கம்பாடி கடல் அருகே உள்ள ஊராதலால் இந்தச் சொற்பிறப்பியல் படிப்போரைக் கவர்வதாக உள்ளது. தரங்கன் என்ற பெயர் திரிந்து தரங்கம் என ஆயிருக்குமானால், அதனைப் புலமை நயத்துடன் பழந்தமிழ்ச் சொல்லான தரங்கம் 'அலை' என்பதுடன் இணைத்துச் சொற்பிறப்புக் கற்பித்ததைப் 'பண்டிதர் சொற்பிறப்பியல்' என்பர். இது முறையற்ற சொற்பிறப்பியலில் ஒரு வகை.

முறையற்ற சொற்பிறப்பியலில் இன்னொரு வகை நாட்டுப்புறச் சொற்பிறப்பியல், வண்ணத்துப் பூச்சி என்பதில் வண்ணம், பூச்சி என்ற இரு பகுதிகள் உள்ளன. நிறத்தைக் குறிக்கும் வண்ணம் என்ற சொல்லை அறியாதவர்கள் அதன் வேற்றுமையேற்கும் வடிவமாகிய வண்ணத்து என்பதைத் தாம் அறிந்த வண்ணாத்தி என்ற சொல்லுடன் தொடர்புபடுத்தி முழுச் சொல்லை வண்ணாத்திப் பூச்சி என்று மாற்றி ஒலிக்கின்றனர். இப்பூச்சியை வண்ணாத்தியோடு தொடர்புபடுத்தியது நாட்டுப்புறச் சொற்பிறப்பியல் ஆகும். நாட்டுப்புறச் சொற்பிறப்பியலின் விளைவாகச் சொல்லின் வடிவத்தில் மாறுபாடு ஏற்படுதல் உண்டு. அரணை என்ற உயிரினம் பாம்பு போல் இருப்பதால் அதனைப் பாம்பரணை என்று கூறுவதும் உண்டு. பேச்சுத்தமிழில் இது'பாம்பரெண' என வழங்கவேண்டும். தென்தமிழ் நாட்டில் அரணெ என்ற பகுதி புதுமையாக இருந்ததால் முழுச் சொல்லைப் பாம்புராணி என மாற்றி ஒலித்தனர். பாம்புக்கு இது ராணி என்ற நாட்டுப்புறச் சொற்பிறப்பு கற்பிக்கப்பட்டது.

சென்னை நகரில் உள்ள திருவல்லிக்கேணிப் பகுதியில் 'ஆமில்டன் பாலம்' என்னும் பெயரில் (Hamilton bridge) ஒரு பாலம் இருந்தது. தமிழில் இது ஆமில்டன் வாராவதி என்று ஒலிக்கப் பட்டிருக்க வேண்டும். ஆமில்டன் என்ற சொல் புதிதாக இருந்ததால் அதனோடு ஓரளவு ஒலித் தொடர்புடைய அம்பட்டன்–'நாவிதன்'–என்ற சொல்லுடன் அதனைத் தொடர்புபடுத்தி அம்பட்டன் வாராவதி என்று அப்பாலத்தைக் குறித்தனர். பின்னர் இதே சொல் ஆங்கிலத்தில் மேற்குறித்த பொருள்படவே மொழி பெயர்க்கப்பட்டு என வழங்கப்பட்டது.

நாட்டுப்புறச் சொற்பிறப்பியலின் விளைவாகச் சொல்லின் வடிவத்தில் மாற்றம் நிகழ்தல் உண்டு என்பது கூறப்பட்டது. வண்ணத்துப் பூச்சி என்பது வண்ணாத்திப் பூச்சியாகவும், பாம்பரணை என்பது பாம்பு ராணியாகவும், ஆமில்டன் வாராவதி என்பது அம்பட்டன் வாராவதி யாகவும் மாறியது நாட்டுப்புறச் சொற்பிறப்பின் விளைவு. வண்ணத்து, அரணை, ஆமில்டன் போன்ற பகுதிகளின் பொருள் விளங்காத பொழுது அவற்றோடு ஒலியொற்றுமையுடைய பொருள் விளங்கும் சொற்களுடன் அவற்றைத் தொடர்புபடுத்திக் கொள்வதே நாட்டுப்புறச் சொற்பிறப்பியல் ஆகும். இதன் பயனாகச் சொற்களில் வடிவ மாற்றமும் நிகழ்கிறது.

சொல்லின் வடிவத்தில் மாற்றம் நிகழ்ந்தபின் நாட்டுப்புறச் சொற்பிறப்புக் கற்பிக்கப்படுதலும் உண்டு. ஒப்பிலியப்பன் என்பது தனக்கு ஒப்பில்லாத இறைவனைக் குறிக்கும். இவ்விறைவன் பெயரில் ஒப்பிலியப்பன் கோயில் என்று தஞ்சை மாவட்டத்தில் ஒரு கோயில் உண்டு. பேச்சுத் தமிழில் கொடு என்பது குடு எனவும், பித்துக்கொளி என்பது பித்துக்குளி எனவும் திரிந்தது போல் ஒப்பிலியப்பன் என்பது உப்பிலியப்பன் எனத் திரிந்தது. இதில் உள்ள உப்பு என்ற பகுதி ஒப்பு என்ற சொல்லின் திரிபு என்பதை அறியாத மக்கள் அப்பகுதியை உவர்ப்புச் சுவையுடைய கடல் படு பொருளான 'உப்பு' என்ற பொருளுடன்

தொடர்புபடுத்தி, நாட்டுப்புறச் சொற்பிறப்புப் படைத்தனர். இதன் விளைவாக உப்பிலியப்பன் கோயிலில் நைவேத்தியத்திற்கு உப்பு இடுவதில்லை. ஒப்பு என்ற சொல் திரிந்து உப்பு ஆயினபோது திரிந்த வடிவத்தின் பொதுவான பொருளோடு அதனைத் தொடர்புபடுத்திக் கொள்வதும் நாட்டுப்புறச் சொற் பிறப்பியலின் பாற்படும். ந.கு.

**நாட்டுப்புறவியல்:** மனித இனம் தோன்றிய காலத்திலேயே நாட்டுப்புற இலக்கியங் களும் தோன்றிவிட்டன எனக் கருதலாம். மொழி யின் தோற்றம் உருவானபோது மனித இனம் தன் சிந்தனைத் திறனை வளர்க்க முற்பட்டது. அவ்வாறு வளர்க்க முற்பட்டபோது வாய்மொழி இலக்கிய வகை கருக்கொண்டது எனலாம். உலகிலுள்ள அனைத்து இனங்களிலும் வாய்மொழி இலக்கியங் களைக் காணலாம். எனவே,மனித இன வரலாற்றை நோக்கும் போது முதலில் மொழியும் அடுத்து வாய் மொழி இலக்கியங்களும் அதனைத் தொடர்ந்து எழுதப்பட்ட இலக்கியங்களும் முகிழ்த்தன எனக் கூறலாம்.

நாட்டுப்புற வழக்குகள் பற்றி அறிவியல் அடிப் படையில் ஆராயும் இயலே நாட்டுப்புறவியல். நாட் டுப்புற மக்களின் பழக்க வழக்கங்களையும் பண்பாடு களையும் இலக்கியங்களையும் ஆராயும் இயலே நாட்டுப்புறவியலாகும். ஒரு நாட்டின் வாழ்வையும், வரலாற்றையும் குறையையும் நிறையையும் தெளி வாகக் காட்டுவன நாட்டுப்புற இலக்கியங்கள். எழுத்திலக்கியங்களைக் காலத்தைக் காட்டும் கண் ணாடி என்றால், நாட்டுப்புற இலக்கியங்கள் சமு தாயத்தைக் காட்டும் கண்ணாடியாகும். நாட்டுப்புற மக்களின் உணர்வுகளையும் கவிதை புனையும் ஆற்ற லையும் கற்பனை வளத்தையும் அவர்களின் பாடல் களிலே காணலாம். அவை ஏட்டில் ஏறாவிடினும், எழுத்தில் வாராவிடினும், பாட்டில் இடம்பெறாவிடி னும், மக்கள் நெஞ்சிலிருந்து நீங்காது நிற்கும்.

பொதுமக்களைச் சார்ந்த மரபுமுறைகள் (Popular Antiquities) என்ற பெயரிலும், பொதுமக்கள் இலக்கியம் (Popular Literature) என்ற பெயரிலும், பொதுப் புராணவியல் (Common Mythology) என்ற பெயரிலும், எஞ்சியிருத்தல் (Remains) என்ற பெய ரிலும் நாட்டுப்புறவியல் வழங்கப்பட்டது. பின்னர், நாட்டுப்புறவியலைக் குறிக்கும் நாட்டுப்பாடல் எனப் பொருள்படும் ஆங்கிலச் சொல்லினை (Folklore) கி.பி. 1846-இல் வில்லியம் சான் தாமசு (William John Thomas) என்பவர் உருவாக்கினார். அவர் கி.பி. 1846-இல் எத்தீனியம் பத்திரிகைக்கு எழுதிய கடிதத்தில் நாட்டுப்புற இயல் (Folklore) என்ற தலைப்பிட்டு எழுதினார். ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர் அச்சொல்லைத் தலைப்பாகக் கொண்ட (The Dialect and Folklore of Northamptanshire, John Steinbug) முதல் நூல் வெளிவந்தது. இச் சொல்லே நிலைபெற்று இன்று பெரும்பாலோரால் வழங்கப்படும் சொல்லாக நிலைபேறு அடைந்தது. உரோமான்சு மொழியினர் அச்சொல்லை அப்படியே ஏற்றுக்கொண்டபோதிலும் தூட்டானிக்கு (Tutonic) மொழியினர் வேறு சொல்லை (Volkskunde)விரும்பிப் பயன்படுத்துகின்றனர். அச்சொல் அவர்களின் பண் பாட்டையும் பாரம்பரியத்தையும் வரலாற்றையும் விளக்குவதாகக் கூறுகின்றனர். வில்லியம் சான் தாமசு நாட்டுப்புறவியல் (Folklore) என்ற சொல், மனிதனின் சடங்கு முறைகள், நம்பிக்கைகள், கதைப் பாடல்கள், பழமொழி, நாட்டுப்பாடல் முதலிய வற்றைக் குறிப்பதென்றும் பழங்காலப் பண் பாட்டின் எச்சமே நாட்டுப்புறவியல் என்றும் கூறு கிறார்.

ஐரோப்பிய நாடுகளில் 'போக்' (folk) என்ற சொல் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வேளாண் மக்க ளைக் குறித்து, பின்னர்ப் படிப்பறிவில்லா நாட்டுப் புற மக்களைக் குறித்தது. இன்று படித்த நகர்ப்புற மக்களையும் குறிக்கின்றது. 'உலோர்' (Lore) என் னும் ஆங்கிலச் சொல்லிற்கு'மரபுச் செய்தித் தொகுதி' என்றும் 'வழக்காறு' என்றும் பொருள் கொள்ளலாம். எல்லா ஐரோப்பிய மொழிகளிலும் இச் சொல்லின் ஆதிக்கத்தைக் காணலாம். செருமன் மொழியில் 'Die folklore' என்றும் பிரெஞ்சு மொழியில் 'Le folklore' என்றும் உருசிய மொழியில் 'Folklor' என்றும் இத் தாலியில், 'Il folklore' என்றும் இசுபானிசு மொழி யில் 'El folklore' என்றும் வழங்கி வருதலைக் காண லாம். இது நாட்டுப்புற வழக்காறுகளைக் குறிக்கும் சொல்லாகவே முதன்முதலில் பயன்படுத்தப்பட்டது. உருசியப்பேரறிஞர் செக்கலோவு 'இது ஒரு காலத்தில் வழக்காறுகளை மட்டும் குறிப்பதாக இருந்தது; ஆனால், காலப்போக்கில் வழக்காறுகளைப் பற்றிப் படிக்கும் படிப்பையும் காட்டுவதாயிற்று' என்று கூறு வர். அதனால்தான் கிராப்பு (Krappe) போன்ற அறிஞர்கள் இதனை ஓர் அறிவியல் (Folklore is an Historical Science) என்றும் குறிப்பிட்டுச் சென்றுள் ளனர்.

வில்லியம் பாசுகம் (William Bascom) என்ற மானிடவியல் பேரறிஞர் 'வாய் மொழிக் கலை' எனப் படும் 'Verbal Art' என்ற சொல்லை உருவாக்கி னார். அதனை வாய்மொழிக் கலை என்றும் வாய் மொழி சாராத கலை (Non-Verbal Art) என்றும் வகைப்படுத்திக் கூறலாம்.

நாட்டுப்புறவியலை இலக்கியம், கலை என்ற இரண்டு பெரும் பிரிவாகப் பிரிக்கின்றனர். நாட்டுப்புற இயல் அவற்றுடன் நின்றுவிடாமல் நாட்டுப்புற நம்பிக்கை, ஆடல், ஓவியம், புழங்கும் பொருளால் அறியும் பண்பாடு (Material Culture) ஆகியவற்றையும் ஆராய்கிறது. எனவேதான், அயர்வொர்த் பீட்டு (Iorwerth Peate), தான் யோடர் (Don Yoder) போன்றோர் நாட்டுப்புற வாழ்வியல் (Folk Life) என்ற தொடரைப் பயன்படுத்துகின்றனர். நாட்டுப்புற வாழ்வியல் என்ற தொடர் நாட்டுப்புறப் பண்பாட்டின் அனைத்துக் கூறுகளையும் உள்ளடக்கியதொன்றாகும். நாட்டுப்புற வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு நடத்தப்பெறும் ஆய்வுமுறையே நாட்டுப்புறப் பண்பாட்டுக் கோட்பாடு ஆகும் உலகியல் சார்ந்த பண்புகளெல்லாம் கலந்த இப்பண்பாட்டு ஆய்வை 'நாட்டுப்புற வாழ்வியல்' (Folk Life) எனத் தான் யோடர் குறிப்பிடுகிறார். ஆனால், இத்தொடரும் நீண்ட நாள்கள் வழக்கில் பயிலவில்லை. நாட்டுப்புறவியல் (Folklore) என்ற சொல்லே நின்று நிலைத்துள்ளது.

இச்சொல் மிகப் பழமை வாய்ந்ததெனினும் அதன் பொருள் குறித்து நாட்டுப்புறவியல் அறிஞர்களிடையே கருத்தொற்றுமை ஏற்படவில்லை. பல நாட்டுப்புறவியல் அறிஞர்கள் விளக்கம் அளித்துள்ளனர். அவ்விளக்கங்களைத் தொகுத்துப் பிரான்சிசு லீ உட்டீ என்பார் 'வாய்மொழியாகப் பரப்பப்படும் இலக்கியமே நாட்டுப்புறப்பாடல் (Folklore) என வரையறை செய்துள்ளார். மரபு சார்ந்தது என்பது அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். நாட்டுப்புறவியல் (Folklore) என்பது மக்களால் பரம்பரை பரம்பரையாக மரபுவழி உண்டாக்கப்பட்ட ஆக்கங்கள் எனவும், எழுத்துருவம் இல்லாத மொழிகளைக் கொண்ட மக்களிடையே காணப்படுவன எல்லாம் இதில் அடங்கும் எனவும், புராணம், நாட்டுப்பாடல்கள், கதைகள், விடுகதைகள் போன்றவையும் அடங்கும் எனவும் மக்களிடையே காணப்படும் பண்பாட்டின் ஒரு பகுதி எனவும், பழமையான நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், பண்பாட்டுச் சின்னங்கள் என்றெல்லாம் பல்வேறு அறிஞர்கள் விளக்கம் அளிக்கின்றனர். இயற்கையோடு இணைந்து வாழும் சமூகத்தின் ஒட்டுமொத்தமான உணர்வுகளை வெளிப்படுத்தி நிற்பது இவ்வியல் எனச் சங்கர் சென் குப்தா கூறுகிறார். எழுத்து வழக்கற்ற வாய்மொழி சார்ந்த பண்பாடு அனைத்தும் நாட்டுப்புறவியல் எனப் போட்கின் கூறுகிறார். இரிச்சர்டு எம். தார்சன் நாட்டுப்புற வழக்காற்றியல் என்பது மக்களின் வாய்வழியே பல தலைமுறைகள் வாழ்ந்ததாக இருக்கவேண்டும் என்கிறார். வில்லியம் பாசுகம் என்பவரும் நாட்டுப்புற வழக்காறுகள் எல்லாம் வாய்வழி வெளிப்படுத்தப்படுபவை என்கிறார். நாகரிக வளர்ச்சி பெற்ற மக்களிடையே எச்சங்களாக நிலவும் பண்டைய நம்பிக்கைகள், வழக்கங்கள் பற்றிய அறிவியலே நாட்டுப்புறவியல் என இசுரீபன் கூறுகிறார். மரபுவழியாக வழங்கப்படும் வழக்காறுகள் ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவுவதைப்பற்றி ஆராய்வதே நாட்டுப்புறவியல் என ஆர்ச்சர் தெய்லர் (Archer Taylor) கூறுகிறார். நாட்டுப்புறப் பாடல்கள், பழமொழி, விடுகதைகள் போன்றவை மக்கள் பேசும் மொழியிலே அமைந்திருப்பது நாட்டுப்புற இலக்கியத்தின் சிறப்புக்கூறு என இரிச்சர்டு வாட்டர்மேன் (Richard A. Waterman) குறிப்பிடுகிறார். மக்களின் நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், புராணக் கதைகள், மரபுக் கதைகள் முதலியன மக்களின் பண்பாட்டை நேரடியாக அல்லது மறைமுகமாக எடுத்தியம்புகின்றது. எனவே, நாட்டுப்புறவியல் என்பது மக்களது பண்பாட்டை ஆராயும் ஆய்வு எனத் தியோடர் கசுட்டெர் (Theodor H. Gaster) குறிப்பிடுகின்றார். குராத்து (Gertrude P. Kurath) என்பார் மரபுவழி வரும் பொதுமையான நம்பிக்கைகள், கதைகள், மூட நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், விளையாட்டுகள் போன்ற இன்னோரன்னவற்றைப் பற்றி ஆராயும் அறிவியல் எனக் குறிப்பிடுகின்றார். இவரைப் போன்றே சேய்சன் என்பாரும் இச்சொல் பண்பாட்டு இனவியல் எனப் பொருள்படுவது என்றும், இவ்வியலுக்கு வேண்டிய மூலப் பொருள்களே பண்டைய புராணங்கள், பழைய மரபுக் கதைகள், நாட்டுப்பாடல்கள், கதைகள் போன்றவை என்றும் குறிப்பிடுவார்.

புராண மரபுக்கதைகள், நாட்டுப்புறக் கதைகள், நாட்டுப் பாடல்கள், பழமொழி, விடுகதை, நாட்டுப்புறக் கலைகள் ஆகியவற்றின் அனைத்து அறிவையும் நாட்டுப்புறவியல் என்ற சொல் உணர்த்துவதாக வில்லியம் பாசுகம் (William Bascom) குறிப்பிடுகிறார். மக்களின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள் ஆகியவற்றில் காணப்படும் பதிவுபெறா மரபுகளை (Unrecorded Tradition) ஆராயும் அறிவியலே நாட்டுப்புறவியல் எனக் குரோகன் டை (K. Krohen Die) குறிப்பிடுகின்றார். 'நாட்டுப்புறவியல்' (Folklore) என்ற சொல் நாட்டுப்புற மக்களின் வழக்கங்கள், நம்பிக்கைகள், மரபுகள், கதைகள், பழமொழி, விடுகதை ஆகியவற்றைக் குறிப்பதோடு தனி மனிதர்களின் முயற்சி கூட்டு முயற்சியாகப் பரிணமிப்பதோடு மாற்று வடிவங்களும் மீண்டும் மீண்டும் வருதலுமாகிய பண்புகளையும் குறிப்பதாகும் என மரியா லீச்சு (Maria Leach) கூறுகிறார். இச் சொல் ஒரு நூற்றாண்டுப்

பழமை வாய்ந்ததெனினும் அதன் பொருள் குறித்துக் கருத்தொற்றுமை ஏற்படவில்லை என்றும், மரபுகள் தலைமுறை தலைமுறையாக நினைவு கூர்தல் மூலம் பாதுகாக்கப் படுகின்றன என்றும், வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், நாட்டுப்புற இலக்கியங்கள் ஆகியவை பற்றி ஆராய்வது இவ்வியல் என்றும், இவ் வழக்காறுகள் நாட்டுப்புற மக்களிடையே மட்டுமன்றி நகர்ப்புற மக்களிடையேயும் நிலவுகின்றன என்ப தால் அவைபற்றியும் ஆராய்வது நாட்டுப்புறவியலா கும் என்றும் இசுடித்தாம்சன் (Stith Thompson) கூறுகிறார். சுருங்கக்கூறின் நாட்டுப்புறவியல் என்பது நாட்டுப்புற மக்களின் மரபுவழிப்பட்ட படைப்பு களை அறியும் துறை என்றும் கூறலாம்.

நாட்டுப்புறவியலுக்கு ஐந்து முக்கிய பண்புகள் உள்ளனவாகச் சான் எரால்டு பிருண்வார்டு (John Harold Brunward) குறிப்பிடுகிறார். அவை 1) வாய்மொழியாகப் பரவல் (Oral), 2) மரபு வழிப் படுதல் (Traditional), 3) பல்வேறு வடிவங்களாகத் திரிபடைதல் (Existing in different versions), 4) ஆசிரியர் இல்லாமை (Usually Anonymous), 5) ஒரு வித வாய்ப்பாட்டுக்குள் அடங்குதல் (Tends to become formalized) முதலியனவாகும். நாட்டுப்புறவிய லில் பல்வேறு வகைகள் உள.

**நாட்டுப்புறப் பாடல்கள்:** நாட்டுப்புறப் பாடல் கள் முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்குகின்றன. நாட்டுப் புறப்பாடல்களை இயற்கைப் பாடல்கள் எனலாம். இப்பாடலின் படைப்பாளிகள் இம்மண்ணின் மைந் தர்கள். நாட்டுப்புற மக்கள் எந்த மண்ணில் வாழ்ந் தனரோ, எந்த வேலையைச் செய்தனரோ, எதை உணர்ந்தனரோ, எதை மதித்துப் போற்றினரோ, அவை எல்லாவற்றையும் கற்பனை நிறைந்த கவிதை களாகப் பொழிகின்றனர். நாட்டுப்புறப்பாடல்கள் எளியவை, இனியவை, எழுதப் படாதவை. நாவில் பிறந்து, செவிகளில் உலவி, காற்றில் மிதந்து கருத் தில் இனிப்பவை. நாட்டுப்புறப் பாடல்கள் என்னும் பறவைகள் இசைச் சிறகால் காலவானில் கட்டின்றிக் கவலையின்றிப் பறந்து மகிழ்கின்றன. நாட்டுப்புறப் பாடலில் உணர்ச்சி இருக்கும்; ஓசை இன்பம் இருக் கும்; தாளக்கட்டு இருக்கும்; சொல் தொடை அழ கிருக்கும். எனினும், இலக்கண வரம்பிற்கு உட்படா மலும் இருக்கும். அதனால்தான் நாட்டுப்புறப் பாடல்களைத் தாமாக மலர்ந்து மணம்வீசும் காட்டு மலருக்கும், மலையினின்றும் வீழும் மலையருவிக்கும் ஒப்பிடுகின்றனர். நாட்டுப்புறப் பாடல்கள் மனித உணர்வின் வடிகாலாகவும், கட்டுப்பாடற்ற கற்பனை நிறைந்த களஞ்சியங்களாகவும் திகழ்கின்றன. ஒரு நாட்டு மக்களின் நாகரிகத்தை, பண்பாட்டை, பழக்கவழக்கங்களை, வரலாற்றை, நாட்டு நடப்பை உண்மையான முறையில் படம்பிடித்துக்காட்டுவன நாட்டுப்புறப் பாடல்களே. நாட்டுப்புறப் பாடல்கள் ஒருசிலரால் நாடோடிப் பாடல்கள் என்றும் வழங்கப் பெறும். தொல்காப்பியர் நாட்டுப்புறப் பாடலைப் 'பண்ணத்தி' என்று குறிப்பிடுகிறார்.

நாட்டுப்புறப் பாடல்களைச் சேகரிக்கவேண்டும், வகைப்படுத்த வேண்டும், ஆராயவேண்டும் என்ற எண்ணம் முதலில் மேலைநாட்டு அறிஞரிடையே தோன்றியது. நாட்டுப்புறப் பாடல்களைச் சூழல் அடிப்படையில் வகைப்படுத்தலாம். அதன்படி நாட்டுப் புறப் பாடல்களை எட்டு வகையாகப் பிரிக்க லாம். அவை: 1) தாலாட்டுப்பாடல்கள், 2) குழந்தைப் பாடல்கள், 3) காதல் பாடல்கள், 4) தொழிற் பாடல்கள், 5) கொண்டாட்டப் பாடல்கள் 6) பக்திப் பாடல்கள், 7) ஒப்பாரிப் பாடல்கள், 8) பன்மலர்ப் பாடல்கள் முதலியன.

தாலாட்டுப் பாடல்கள் குழந்தையைப் பற்றி யன, குழந்தைக்குரிய கருவி பற்றியன, குழந்தை களின் உறவினரின் பெருமை, சிறுமை பற்றியன என்ற நிலையில் வகுத்துத் தொகுத்து ஆராயலாம். குழந்தைப் பாடல்களை இருவகையாகப் பிரிப்பர். குழந்தைகளுக்காகத் தாய், தந்தை, சகோதரி, பாட்டி முதலியோர் பாடுவது. குழந்தைகள் வளர்ச்சியடைந்த பிறகு குழந்தைகளே பாடுவது. அப்படிப் பாடும் பாடல்களை நாப்பயிற்சிப் பாடல்கள், எண்ணுப் பயிற்சிப் பாடல்கள், அறிவு வளர்ச்சிப் பாடல்கள், நீதிப் பாடல்கள், பக்திப் பாடல்கள், பறவை, மிருகங் களைப் பற்றிய பாடல்கள், விழாக்காலப் பாடல்கள், வேடிக்கைப் பாடல்கள், வினா-விடைப்பாடல்கள், விளையாட்டுப் பாடல்கள் எனப் பத்துவகையாகப் பகுக்கலாம். நாட்டுப்புறக் காதலும் இலக்கியக் காத லும் சிலவகையில் ஒன்றுபட்டும் சிலவகையில் வேறு பட்டும் நிற்கின்றன. காதற் பாடல்களை இருவகை யாகப் பிரிக்கலாம். காதலர்களே பாடுவது, மற் றொன்று தொழில் செய்யும்போது காதலர் அல்லா தவர்கள் பாடுவது. பெரும்பாலும் தொழில் செய் யும் இடங்களில்தான் நாட்டுப்புறப் பாடல் பிறக் கின்றது. உறவில் இன்பம் காண்பதும் பிரிவில் வேதனையடைவதும் இவர்களது பாடற்பொருளா கும். தொழில் புரியும்போது பாடும் பாடல்கள் தொழிற் பாடல்கள் எனப்படும். தொழிலின் சுமை யும், உழைப்பின் களைப்பும் தெரியாமலிருக்கப் பாடு கின்றனர். தொழிற் பாடல்களிலே அன்பு மலர்வதை யும் பாசம் பொங்குவதையும் உழைப்பின் ஆர்வத் தையும் இன்பதுன்பங்களையும் ஆசாபாசங்களையும் விருப்பு வெறுப்புகளையும் காணலாம். தொழிற் பாடல்களை ஏலேலங்கிடிப் பாட்டு, தில்லாலங்கிடிப்

பாட்டு, தெம்மாங்குப் பாட்டு, ஏற்றப்பாட்டு என்றெல்லாம் கூறுவர். தொழிற் பாடல்களை வேளாண்மைத் தொழிற் பாடல்கள், வேளாண் மையல்லாத தொழிற் பாடல்கள் என இருவகை யாகப் பிரிப்பர்.

மனித உழைப்பிற்குப் பின் மனிதனுடைய மன மானது ஆடல் பாடல்களில் ஈடுபட விழைவது இயற்கையாகும். பலர் இணைந்து ஆடும் கும்மி, கோலாட்டம் போன்ற பாடல்களும், பெரும்பாலும் குடும்ப உறவினரே பங்கு கொள்ளும் பூப்புச்சடங்கு, திருமணம் போன்றவற்றில் பாடப்படும் பாடல்களும் கொண்டாட்டப் பாடல்கள் எனப்படும். கும்மி, கோலாட்டம் போன்றவற்றைப் புறப்பாடல்கள் என்றும், திருமணம், பரிகாசம், நலுங்கு, ஊஞ்சல், வளைகாப்புப் பாடல்களை அகப்பாடல்கள் என்றும் கூறுவர்.

இயற்கையின் ஆற்றலைக் கண்டு அஞ்சிய மனிதன் வழிபடுவதன் மூலம் அதன் சீற்றத்திற்கு ஆளாகாமல் இருக்கலாம் என நம்பினான். அதன் அடிப்படையில் விழாக்களும் வழிபாடுகளும் தோற்றம் பெற்றன. ஆதிகாலத்தில் மனிதன் இயற்கையோடியைந்த வாழ்வு நடத்தினான். இயற்கை வழிபாடே உலகில் தொன்மையான வழிபாடாகும். குல தெய்வ வழிபாடும் ஊர்த்தெய்வ வழிபாடும் சிறு தெய்வ வழிபாட்டில் அடங்கும். சிறு தெய்வ வழி பாட்டை ஆராய்வதே நாட்டுப்புறவியலாகும். வேதக் கடவுளோடு தொடர்பு கொண்டதாகக் கருதப் படுவது பெருந் தெய்வங்களாகும். பெருந்தெய்வங் களுக்கு வழிபாட்டில் பிராமணிய முறை பின்பற்றப் படுவதோடு பெருந்திருவிழாக்களும் நடைபெறுகின் றன. தமிழகத்துக் கோயில்கள் தமிழர்களின் பெரும் பாரம்பரியத்தைப் (Great Tradition) எதி ரொலித்து நிற்கக் காணலாம். கிராமங்களில் காணப்படும் சிறு தெய்வங்கள் சிறு பாரம்பரியத்தை (Little Tradition) எதிரொலித்து நிற்கக் காண லாம். இயற்கை வழிபாட்டுப் பாடல்கள், சிறு தெய்வ வழிபாட்டுப் பாடல்கள், பெருந்தெய்வ வழிபாட்டுப் பாடல்கள் ஆகியவற்றை மக்களிடையே காணலாம்.

இறந்தவர்களை நினைத்துப் பாடப்படும் பாடல் கள் ஒப்பாரி எனப்படும். வாழ்வின் முன்னுரை தாலாட்டு என்றால் முடிவுரை ஒப்பாரியாகும். தாலாட்டு கலங்கரை விளக்கமானால் ஒப்பாரி நினைவுச் சின்னமாகும். தாலாட்டும் ஒப்பாரியும் பெண்குலத்தின் படைப்பாகும். ஒப்பாரியை ஒப்பு+ ஆரி எனப் பிரித்துப் பொருள்கொள்வர். தமிழில் ஒப்பாரியைப் பிலாக்கணம், பிணக்கானம், கையறு நிலை, புலம்பல், சாவுப்பாட்டு, இழவுப் பாட்டெனப் பல்வகையாகக்கூறுவர். பாதுகாப்பை இழந்தபோதும் பாதுகாக்கப்பட வேண்டியதை இழந்தபோதும் பெண் களின் ஒப்பாரியில் சோகம் கொப்பளிக்கின்றது. காலனது கொடுமையும் விதியின் வலிமையும் விதவையின் வேதனையும் இறந்தவரால் அடைந்த இழப்பும் ஒப் பாரியின் பொருளாகின்றன. கணவன் இறந்துவிட் டால், கனவுகளில் மிதக்கவேண்டிய மனைவி கண்ணீரில் மிதக்கவேண்டும். பூவும் பொட்டும் சொந்தமில்லை. அணிகலன்களால் அழகு செய்யமுடியாது. கணவனை இழந்த இழப்பைக் காட்டிலும் கைம்மை நோன்பின் கொடுமை வேதனைக்குள்ளாக்குகிறது. சுருங்கக் கூறின், பெண்களின் சோக உணர்ச்சி முழுவதையும் ஒப்பாரிப் பாடல்கள் எதிரொலித்து நிற்பதைக் காணலாம்.

**நாட்டுப்புறக் கதைகள்:** நாட்டுப்புற இலக்கிய வகைகளுள் நாட்டுப்புறக் கதையும் ஒன்றாகும். தொல்காப்பியர் கதைகளைப் பற்றிக் கூறும்போது 'பொருள் மரபில்லாப் பொய்ம் மொழியானும் பொரு ளொடு புணர்ந்த நகைமொழியானும்' எனக் கூறு கிறார். ஆதிமனிதன் தன் அனுபவங்களை மற்றவர் களுக்குச் சொன்னதுதான் கதையின் தொடக்கம் என்பர். நாட்டுப் புறக் கதைகளை நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றனர். அவை: 1. மனிதக் கதை கள், 2. மிருகக் கதைகள், 3. மந்திரக் கதைகள் 4. தெய்வக் கதைகள் என்பன. நாட்டுப்புறக் கதை கள் ஓர் அமைப்புக் குட்பட்டனவாகும். விளாடிமிர் பிராப்பு (Vladimir Propp) உருசியக் கதையை ஆராய்ந்து அவற்றில் முப்பத்தொன்று செயல்கள் உள்ளன வெனச் சுட்டிக்காட்டுகிறார். நாட்டுப்புறக் கதைகள் மூலம் அக்காலச் சமுதாயத்தையும் பழக்க வழக்கங்களையும் அறிந்துகொள்ளலாம்.

**நாட்டுப்புறக் கதைப்பாடல்கள்:** கதையைப் பாட லாகக் கூறுவதைக் கதைப்பாடல் என்பர். கதைப் பாடலுக்குப் பல்வேறு பெயர்கள் தமிழில் உண்டு. அம்மானை கதை தழுவிய காரணத்தால் 'கதை' (நல்லதங்காள் கதை) என்றும் 'பாட்டு' (காமன் பாட்டு) என்றும், கதையானது பாட்டு வடிவிலிருப்ப தால் 'கதைப்பாடல்' (வீரபாண்டியக் கட்டபொம்மு கதைப்பாடல்) என்றும், 'மாலை' (பவளக்கொடி மாலை) என்றும், சொல்லப்படுவது என்ற பொருளில் 'வாக்கியம்' (சுபோத வாக்கியம்) என்றும், கதையை இசை கலந்து பாடுவதால் கபில சரித்திரக் கீர்த்தனை என்றும், கதையின் மையப் பொருளை அடிப்படை யாகக் கொண்டு 'சண்டை' (கான்சாகிபு சண்டை) என்றும், 'யாகம்' (அசுவமேத யாகம்) என்றும், தூது (புலந்திரன் தூது) என்றும் வழங்கப்படுகின்றன. பல் வேறு பெயர்கள் அதன் தன்மையை விளக்குவனவாக அமைந்துள்ளன. 'அம்மானை', 'கதைப்பாடல்' பெயர் களே மிகுதியாகத் தமிழில் வழங்குகின்றன. கதைப்

பாடல் காப்பு அல்லது வழிபாடு, வணக்கம்,வரலாறு, வாழ்த்து என நான்கு பிரிவுகளைக் கொண்டிருக்கும். கதைப் பாடலைத் தொடங்கும்முன் தெய்வத்தின் மீது காப்புப் பாடுவர். அவையடக்கம் கூறிக் கதையைக் கூறத் தொடங்குவர். கதையின் இறுதியில் அனைவரும் வாழ்க என வாழ்த்துவர். கதைப்பாடல் பாட்டாகப் பாடப்படும். அது நடையாலும் பொருளாலும் மக்களுக்கே உரியது. சிறுகதைகளில் காணப்படுவதைப் போன்று தனி நிகழ்ச்சியை எதிரொலிப்பது, நாடக உத்தி காணப்படுவது முதலியவற்றைக் கதைப்பாடலின் இயல்புகள் என்பர். தமிழ்நாட்டுக் கதைப்பாடல்களைப்1) புராணக் கதைப்பாடல்கள் (Mythical Ballads), 2) வரலாற்றுக் ' கதைப்பாடல்கள் (Historical Ballads), 3) சமூகக் கதைப்பாடல்கள் (Social Ballads) எனப் பிரிக்கலாம். கதைப் பாடல்கள் வீர காவியங்களாகும். அவை சமுதாய அமைப்பை அறிந்து கொள்ளப் பயன்படுவதோடு தமிழக வரலாற்றைப் பற்றி அறியவும் பயன்படுகின்றன.

**பழமொழிகள்:** இது மூதறிவிலிருந்து தோன்றிய மொழியாகும். பழமொழி என்ற சொல் மூதுரை, முதுமை, மொழிமை, முன்சொல், முதுசொல், பழஞ்சொல் என்ற ஆறு பொருளைத் தருவதாகச் சேந்தன் திவாகரம் கூறுகிறது. பழமொழிகள் சமுதாயத்தின் அனுபவ முதிர்ச்சியையும் அறிவுக் கூறுகளையும் விளக்கும் சான்றாகத் திகழ்கின்றன. அனுபவ முதிர்ச்சியிலே பிறந்த பழமொழிகள் சுருக்கம், தெளிவு, பொருத்தம் ஆகிய இயல்புகளால் மாறாத அமைப்புடன் (Fixed Phrase Genre) பயின்று வருகின்றன. நாட்டுப்புற இலக்கியங்களிலே குறுகிய அமைப்புக் கொண்ட பழமொழிகளும் விடுகதைகளும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடையனவாகும். அவை சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் ஆற்றல் வாய்ந்தன, மக்கள் மனத்திலே ஆழமாகப் பதிந்து நற்செயலைத் தூண்டச் செய்வன. மக்கள் வாழ்வில் காணப்படும் அனுபவ வெளிப்பாடுகளும்,பட்டறிவின் திரண்ட சாரமுமே பழமொழிகளாகும். தொல்காப்பியர் 'முதுசொல்' என்றும் 'முதுமொழி' என்றும் குறிப்பிடுகிறார். பழமொழிகளை அளவு, பொருள், அகரவரிசை, அமைப்பியல், பயன் ஆகிய ஐந்து வகையாக வகைப்படுத்தலாம்.

**விடுகதைகள்:** மறைபொருளினின்றும் விடுவிக்கப்பட வேண்டிய கதையே விடுகதையாகும். விடுகதை என்னும் சொல்லுக்குப் புதிர்மைப் பண்புடையது என்றும்,விடுவிக்கப்பட வேண்டிய பொருள் கதையாக அமைந்துள்ளது என்றும் பொருள் கொள்ளலாம். அறிவூட்டுவதும் சிந்தனையைத் தூண்டுவதும் விடுகதையின் குறிக்கோளாகும். விடுகதையின் அடிப்படைப் பண்பு உருவகமாகும். விடுகதைக்கும் உருவகங்களுக்கும் உள்ள தொடர்பினை உலகுக்கு உணர்த்தியவர் கிரேக்கப் பேரறிஞர் அரிசுடாட்டில் ஆவார். இவை பெரியோருக்கும் சிறியோருக்குமிடையே தொடர்பை ஏற்படுத்துகின்றன. விடுகதைகள் குறுகிய அமைப்புக் கொண்ட இலக்கிய வகையாகும்; தமிழில் பிசி, நொடி, புதிர், விடுகதை என்று வழங்கப்படுகின்றன. விடுகதை என்ற சொல்லாட்சி பண்டைத் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் காணப்படவில்லை. சில இடங்களில் 'வெடி' என்றும் திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில், 'அழிப்பான் கதை' என்றும் வழங்கப்படுகிறது. தொல்காப்பியர் 'பிசி' எனக் குறிப்பிடுகிறார். விடுகதைகளை நாட்டுப்புற விடுகதை,இலக்கிய விடுகதை என இரண்டாகப் பிரிப்பர். விடுகதையின் பயனையே விடுகதையாகக் கூறுவதுண்டு. எடுத்துக்காட்டாக 'சிந்தனையைத் தூண்டுவது சிறுவர்கள் வேண்டுவது' என்பதைக் கூறலாம்.

**நாட்டுப்புறக் கலைகள்:** நாட்டுப்புறக் கலைகள் நாட்டுப்புற மக்களுக்கு ஊற்றுப் போன்றதாகும்; அவை அவர் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்துள்ளன. தொன்மைக் கலையைப் பழங்குடி மக்களிடமும், நாட்டுப்புறக் கலையை நாட்டுப்புற மக்களிடமும், திருந்திய கலையைச் சற்று முன்னேறிய மக்களிடமும் காணலாம். இயற்கைச் சூழலில் எழுந்த கலைகள் இன்பத்தை அடிப்படையாகக் கொண்டு தோன்றியிருக்க வேண்டும். புனிதத்தையும் பேராற்றலையும் கொண்டு பல நாட்டுப்புறக் கலைகள் தோன்றியுள்ளன. பூதங்களினின்றும் கெட்ட ஆவிகளினின்றும் காப்பாற்றுமாறு தெய்வங்களை வேண்டிப் பல கலைகள் தோன்றின. எனவே, கலைகளைச் சமூகச்சார்புக் கலைகள், சமயச் சார்புக் கலைகள் என இரு பெரும் பிரிவாகப் பிரிக்கலாம். தமிழகத்தில் கலைகளின் வளர்ச்சியே சமயத்தின் அடிப்படையிலாகும். சமயத்தின் அடிப்படையில் விழாக்களும் விழாக்கள் மூலம் கலைகளும் செழித்தோங்குகின்றன. விழாக்களையும் கலைகளையும் தனியே பிரித்தறியமுடியாத அளவிற்கு அவை பின்னிப் பிணைந்து ஒன்றின் வளர்ச்சி மற்றதற்கு அடிப்படையாக அமைந்து, இரண்டும் வளர்ந்து வருகின்றன. வீரக்கலைகளைச் சமூகச் சார்புக் கலைகள் எனலாம். சிலம்பாட்டம், சல்லிக்கட்டு முதலியவற்றைச் சமூகச் சார்புக் கலைகள் எனலாம். காவடியாட்டம், கரக ஆட்டம், கோலாட்டம், கும்மியாட்டம், ஒயிற்கும்மி, தீமிதி, பொய்க்கால் குதிரையாட்டம், மயிலாட்டம், தேவராட்டம், சக்கையாட்டம், கணியன் ஆட்டம் போன்றவற்றைச் சமயச் சார்புக் கலைகள் என்பர். இவ்வாட்டங்களைச் சேர்ந்த நடனங்கள் ஒருசிலரால் நாடோடி நடனங்கள் என்றும் கூறப்பெறும். வில்லுப் பாட்டு, தெருக்கூத்து, நாட்டுப்புற நாடகங்கள் போன்றவையும், கரடி ஆட்டம், புலி ஆட்டம், பூத

ஆட்டம் போன்றவையும் காணப்படுகின்றன. பழந்தமிழர் பண்பாட்டை விளக்க நாட்டுப்புறக் கலைகள் பெரிதும் துணைபுரியும்.

**நாட்டுப்புறத் தெய்வங்கள்**: பழங்காலத்தில் மக்கள் இயற்கையோடியைந்த வாழ்வு நடத்தியதால் இயற்கையைத் தெய்வங்களாக வழிபட்டனர். இயற்கை வழிபாடே உலகில் தொன்மையான வழிபாடாகும். ஆயிரக்கணக்கான கிராமங்களில் வாழும் விவசாயப் பெருங்குடி மக்களின் இதயங்களில் வாழும் கோயில்கள் மிகப் பலவாகும். அக் கோயில்களில் குடி கொண்டிருக்கும் சிறு தெய்வங்களின் வழிபாட்டு முறைகள் தமிழனின் உண்மையான பண்பாட்டைப் படம்பிடித்துக் காட்டுவனவாகும். நாட்டுப்புறவியல் நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டைப் போற்றுகின்றது. வழிபாட்டிலும் படைக்கின்ற பொருளிலும் வேறுபாடு உண்டு. நாட்டுப்புறத் தெய்வங்களுக்குக் காணிக்கை அளித்தல், மொட்டையடித்தல், தீமிதித்தல், தீச்சட்டி எடுத்தல் போன்றவை நடைபெறும். பெரும்பாலான சிறு தெய்வங்களுக்குப் பலியிடல் நடைபெறும். நோய் நீங்கவும், பிள்ளைவரம் கிடைக்கவும், மழை பெய்யவும், எடுத்த காரியம் சுலபமாக முடியவும், ஊருக்கு நல்லது நடக்கவும் மக்கள் நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபடுகின்றனர்.

**நாட்டுப்புற நம்பிக்கைகள்**: நாட்டுப்புற நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்சவுணர்வின் அடிப்படையாகத் தோன்றியதாகக் காட்சியளித்தாலும், இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராதபொழுதும் மனித வாழ்வில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாதபொழுதும் மனித மனமானது சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக்கொள்கிறது. அவையே நம்பிக்கைகளாக உருவாகின்றன. நம்பிக்கைகளே மனித வாழ்வினை இயக்குகின்றன என்று கூறுமளவிற்கு அவன் வாழ்வில் பெரும்பங்கு வகிப்பதையும் காணமுடிகிறது. மனித வாழ்வில் நம்பிக்கைகள் என்று தோன்றின என்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. எனினும் மக்களின் நடைமுறை வாழ்வில் இந்நம்பிக்கைகள் தொடர்ந்து வருவதைக் கூர்ந்துநோக்கின் இதனைச் சமுதாயப் பண்பாட்டின் உணர்ச்சிக் கூறுகளின் தொகுதி எனக் கூறலாம். மனிதனின் வாழ்வே நம்பிக்கையின் அடிப்படையில்தான் இயங்குகிறது எனக் கூறின் அது மிகையாகாது. சில நாட்டுப்புற நம்பிக்கைகளுக்குத் தான் காரண காரியங்களை ஆராயமுடியும். சில நேரங்களில் அத்தகைய ஆய்வும் ஊகமாகத்தான் முடியும்.

**நாட்டுப்புறவியலும் பிறவியலும்**: மனித சமுதாயத்தில் காணப்படும் அனைத்து வழக்காறுகளையும் நாட்டுப் புறவியல் பேரறிஞன் ஆராய்வதால் நாட்டுப்புறவியல் துறை மானிடவியல், சமூகவியல், உளவியல், தத்துவயியல், மொழியியல், வரலாறு முதலிய பல துறைகளோடும் தொடர்பு கொண்டுள்ளது. நாட்டுப்புற வழக்காறுகளை ஆராய்பவனைச் 'சமூக விஞ்ஞானி' என்றேகூறுவர். நாட்டுப்புற மக்களின் வழக்காற்றின் மூலம் சமூக-பண்பாட்டுக் கூறுகள் ஆராயப்படுகின்றன. மானிடவியலாரும் சமூகவியலாரும் நாட்டுப்புறப் பண்பாட்டைப் பல கோணங்களில் ஆராய்கின்றனர். மானிடவியலார்களே தொடக்ககாலத்தில் நாட்டுப்புறவியலை வளர்த்தனர். நாட்டுப்புறவியலுக்கும், மானிடவியலுக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. இவ்விரண்டு துறைகளும் மனிதப் பண்பாட்டை ஆராய்வனவாகும். மானிடவியல் துறைபதிவுபெற்ற மரபுகளை ஆராய்ந்தால் நாட்டுப் புறவியல் பதிவுபெறா மரபுகளை ஆராய்கிறது. மானிடவியலை முழுமையானதாகக் கருதினால், நாட்டுப்புறவியலை அதன் பகுதியாகக் கருதலாம். நாட்டுப்புறவியலுக்கும் மானிடவியலுக்கும் உள்ள தொடர்பினால் மானிடவியற்கோட்பாடே உருவாகியுள்ளது. இதேபோன்று நாட்டுப்புறவியலுக்கும் சமூகவியலுக்கும் தொடர்புள்ளது. இன்றைய சமுதாயத்தில் குடும்பம், ஒழுக்கம், மதம், பண்பாடு, பழக்க வழக்கள் ஆகியவைபற்றி அறிதல் மிகமிக இன்றியமையாததாகும். தாலாட்டின் மூலம் குடும்ப உறவுமுறைகளையும் மற்றப் பாடல்கள் மூலம் வாழ்வுத் தொடர்பான பழக்கவழக்கங்களையும் ஒப்பாரிப் பாடல்கள் மூலம் சாவுத் தொடர்பான பழக்க வழக்கங்களையும் அறியலாம். சின்னத்தம்பி புகழைக் கண்டு மேல் சாதிக்காரர்கள் கொன்ற சாதிப் பிரச்சினையும் வாரிசுரிமையைக் காக்க மகனைக் கொன்ற சின்ன நாடான் கதையும் சமூகத்தில் காணப்படுகின்றன. நாட்டுப்புறப் பாடல்கள் சமுதாயத்தைப் படம் பிடித்துக் காட்டுவனவாக உள்ளன.

நாட்டுப்புறவியலுக்கும் வரலாற்றிற்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. மனிதனுடைய கடந்த கால நிகழ்ச்சியைக் கூறுவதால் நாட்டுப்புறவியலை வரலாற்று அறிவியல் (Historical Science) என்பர். நாட்டுப்புற வியலாரும் வரலாற்றறிஞர்களும் வரலாற்று மீட்டுருவாக்கத்தில் ஈடுபாடு கொள்கின்றனர். வரலாற்றுக் கதைப்பாடல்கள், வரலாற்றில் இல்லாத பல செய்திகளைத் தந்து நிற்றலைக் காண முடிகிறது. சிக்மண்டு பிராய்டு (Sigmund Freud) ஒடிப்பசு மனப்பாங்கினைக் காட்டுவதற்காகப் புராணங்களையும் நாட்டுப்புறக் கதைகளையும் ஆராய்ந்தார். உளப் பகுப்பாய்வாளர்கள் நாட்டுப் புற இலக்கியத்தை மக்கள்தம் உணர்வுகளை வெளிப் படுத்தும் களமாகக் கருதுகின்றனர். நாட்டுப்புற

வியலுக்கும் உளவியலுக்கும் உள்ள தொடர்பினால் உளப்பகுப்பியல் கோட்பாடே எழுந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

புராணங்கள் தொல் சமயத்திற்கும் நாட்டுப்புறவியலுக்குமுள்ள உறவை எடுத்துக்காட்டுகின்றன. பக்திப்பாடல்கள் கிராமப்புற மக்களின் இறையுணர்வை மட்டுமன்றி, அவர்களின் விருப்பங்களையும் வெளிப்படுத்தி நிற்கின்றன. வாழ்க்கைத் தத்துவங்கள், நிலையாமை, பிறப்பு, இறப்புத் தத்துவங்கள் பற்றியெல்லாம் நாட்டுப்புறப் பாடல்கள் மூலம் அறியலாம். மற்றத் துறைகளோடு ஒப்பிடுமிடத்து மொழியியலுக்கும் நாட்டுப்புறவியலுக்குமுள்ள தொடர்பு குறைவே. நாட்டுப்புற இலக்கியங்கள் அனைத்தும் பேச்சுவழக்கில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. ஒப்புமுறை, மொழியியலில் தொடங்கி நாட்டுப்புறவியலுக்கும் பயன்படுத்தப்பட்டது. இன்று அமைப்பியல் ஆய்வு இத்துறையில் மிகுந்த செல்வாக்குப் பெற்று விளங்குகிறது. அமைப்பியல் ஆய்வு மொழியியலின் கொடையாகும்.

இவ்வாறு நாட்டுப்புறவியல் மானிடவியல், சமூகவியல், உளவியல், தத்துவவியல், வரலாறு, மொழியியல் ஆகிய துறைகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. எனவே, நாட்டுப்புறவியல் ஆய்வு என்பது பல்துறை இணைந்த ஆய்வாகப் பரிணமித்துள்ளது.

**நாட்டுப்புறவியல் பள்ளிகள்**: அறிவியல் துறையாக வளர்ச்சி பெறும் போது கோட்பாடுகளும் ஆய்வு நெறிமுறைகளும் பெருகுவது இயற்கையாகும். கோட்பாடுகள் பெருகும்போது அதன் அடிப்படையில் பள்ளிகள் எழுவது இயல்பாகும். ஒவ்வொரு பள்ளியும் ஒவ்வொரு கோட்பாட்டின் அடிப்படையில் இயங்குகிறது. பல பள்ளிகள் (Schools) எழுந்ததனால் இத்துறை பல்வேறு நோக்கில் ஆராயப்படுகிறது.

**புராணவியல் பள்ளி**: இதை ஒப்பியல் பள்ளி (Comparative School) என்றும் கூறுவர். சேக்கப் கிரீமன் கோட்பாடுகளை மாக்சு முல்லர் என்பவர் ஒரு பள்ளியாகவே உருவாக்கி விட்டார். சேக்கப் கிரீம் என்பவர் செருமானியப் புராணங்களின் தொல் வடிவங்களை (Proto Forms) ஆராய்ந்ததோடு புராணவியல் படைப்புகளையும் ஆராய்ந்தார் அறிவியல் காலத்திற்கு முற்பட்ட மக்களின் மனநிலையை அறியப் புராணங்கள் பெரிதும் துணைபுரிகின்றன. இப்பள்ளியினால் புராணவியல் கோட்பாடு ஒன்று உருவாகியது.

**பென்பே பள்ளி**: தியோடர் பென்பே எனும் செருமானிய அறிஞர் பஞ்சதந்திரத்தைமொழிபெயர்ப்புச் செய்து கடன்வாங்கல் கோட்பாட்டின்படி ஆராய்ந்தார். இப்பள்ளி புலம்பெயர்வுக் கோட்பாட்டினை (Migration Theory) அடிப்படையாகக் கொண்டு ஆராய்கிறது. கதையின் தோற்றம், வரலாறு, பரவிய நாடுகள் முதலியவற்றை ஆராய்கின்றது. பஞ்சதந்திரத்தையும் ஆய்ந்து முதலில் அது மத்தியதரைக்கடல் நாடுகளுக்கும் இசுபெயினுக்கும் கிரேக்கத்திற்கும் பரவி, இறுதியில் ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்றது என்ற முடிவுக்கு வந்தனர். பென்பே பள்ளியைப் பின்னிசுப்பள்ளி (Finnish School) என்றும் கூறுவர்.

**மானிடவியல் பள்ளி**: பண்பாட்டு ஒற்றுமையைப் புலம்பெயர்வுக் கோட்பாட்டின் மூலமோ கடன்வாங்கல்மூலமோ மரபுரிமையாக அடைதல் மூலமோவிளக்கலாம் என்பது இப்பள்ளியின் கோட்பாடு ஆகும். பண்பாட்டினை ஆராய்வதில் இதுமுக்கிய பங்கு வகிக்கின்றது. தைலர், ஆண்டுரூசு லாங்க்கு போன்றோர் இப்பள்ளியைச் சேர்ந்தவர்கள். மனித இன வரலாற்றை நோக்கின் மனிதன் நாகரிகமற்ற நிலை, காட்டுமிராண்டி நிலை முதலியவற்றிலிருந்து நாகரிக நிலைக்கு உயர்ந்தான் என்பது புலனாகும். நாகரிகமற்ற நிலைக்குக் குழுமண முறையையும் நாகரிக நிலைக்கு ஒருதார மணமுறையையும் எடுத்துக்காட்டாகக் கூறுவர். நாட்டுப்புறவியலை வளர்த்தவர்களுள் பெரும்பாலோர் மானிடவியல் அறிஞர்களே.

**பின்னிசுப் பள்ளி**: பின்லாந்தியர்கள் உருவாக்கிய பள்ளியாதலால் இது பின்னிசுப் பள்ளி (Finnish School) எனப் பெயர் பெற்றது. வரலாறு, நிலவியல் கோட்பாட்டை அடிப்படையாக வைத்து ஆராய்ந்தனர். கதைகளின் தோற்றம், பரவும் விகிதம், அவற்றிற்குரிய காரணங்கள் பற்றி ஆராய்கின்றனர். வரலாற்று நாட்டுப்புறவியலில் பின்னிசு முறை மிக முக்கியமானதொன்றாகக் கருதப்படுகின்றது.

**உளப்பகுப்பியல்பள்ளி**: உளவியல் கோட்பாட்டினர் புராணக் கதைக்கும் நாட்டுப்புறக் கதைக்கும் பாலியல் குறியீட்டு விளக்கம் அளிக்கின்றனர். சிக்மண்டு பிராய்டு என்பவர் ஒடிப்பசு மனப்பாங்கினை ஆராயப் புராணக் கதைகளையும் நாட்டுப்புறக் கதைகளையும் எடுத்துக்கொண்டார்; அடிமனத்தை ஆராயவும் இவற்றைப் பயன்படுத்தினார். இவற்றைக் கனவுகளுடன் தொடர்புபடுத்தி ஆய்ந்தார். தனிமனிதனின் நிறைவேறாத ஆசையைப் புராணங்கள் என்றும் கூறுவர். புராணங்கள் பாலியல் வேட்கையும் குற்ற உணர்வும் வெட்கப்படத்தக்க தன்மையும் கொண்டனவயாகும். உளப் பகுப்பாய்வாளர்கள் நாட்டுப்புற இலக்கியத்தை மக்களின் உணர்வுகளை வெளிப்படுத்தும் களமாகக் கருதுகின்றனர். வளமைச் சடங்கு முதலியவற்றை ஆராய்வதில் இவர்கள் முனைந்து நிற்கின்றனர்.

**அமைப்பியல் கோட்பாடு:** அமைப்பியல் கோட்பாடு (Structuralism) உருவாகியபோது (1960) நாட்டுப் புறவியலில் பெரும் மாற்றமே ஏற்பட்டது. விளாடிமிர் பிராப்பைத்தான் இக்கோட்பாட்டின் தந்தை என்பர். ஆர்னே தாம்சனின் ஆய்வுமுறை அறிவியல் அடிப் படையில் அமையவில்லை என்று இக்கோட்பாட்டை உருவாக்கினார். பிராப்பு நாட்டுப்புறக் கதையில் சொல் வடிவ அமைப்பியல் (Morphology of the Folk-tale) என்னும் நூலை 1928-இல் வெளியிட்டார். அதன் ஆங்கில மொழிபெயர்ப்பு 1958-இல் வெளி யிடப்பட்டது. அதன்பின்னர் நாட்டுப்புறத் துறை யில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. பிராப்பின் ஆய்வு முறையைத் தொடர் ஆய்வுமுறை (Syntagmatic Analysis) என்றும், இலெவி இசு டிராசின் (Levi-Strauss) ஆய்வுமுறையை வாய் பாட்டு ஆய்வுமுறை (Paradigmatic Analysis) என்றும் கூறுவர். பிராப்பின் ஆய்வை விரிவுபடுத்தி ஆலன் தாண்டசு பிராப்பின் செயல்களைக் கதைக்கூறன்கள் (Motifeme) எனப் பெயரிட்டார். கதைக்கூறனில் வரும் பல செயல்களை மாற்றுக் கதைக் கூறுகள் (Allomotif) எனக் குறிப்பிட்டார். இக்கோட்பாட்டு முறையால் வகைப்படுத்துதல் எளிதாகிறது. இன் றைய நாட்டுப்புறவியல் முறையில் இக்கோட்பாடே மிகச்சிறந்த ஒன்றாகக் கருதப்படுகிறது.

**நாட்டுப்புறவியல் ஆய்வுக் கோட்பாடுகள்:** நாட்டுப் புறவியலில் பல்வேறு கூறுகள் ஆராயப்படுகின்றன. பல்வேறு கூறுகளை ஆராயப்பல்வேறு கோட்பாடுகள் உருவாகின்றன. அமெரிக்க நாட்டு நாட்டுப்புறவியல் பேரறிஞர் இரிச்சார்ட் எம்.தார்சன் (Richard M.Dorson) தம் நூலில் (Folklore and Folklife-An Inrodnction) பன்னிரண்டு ஆய்வுச் கோட்பாடுகளைப் பற்றி விளக்கமாக எழுதியுள்ளார். அவை: 1) வரலாறு -புவியியல் கோட்பாடு (Histoical Geographical) 2) வரலாற்று மீட்டுருவாக்கக் கோட்பாடு (Historical Reconstruction), 3) இலட்சியக் கோட்பாடு (Ideological), 4) செயல்திறன் கோட்பாடு (Functional), 5) உளவியல் ஆய்வுக் கோட்பாடு (Psycho Analytical), 6) அமைப்பியல் கோட்பாடு (Structural), 7) வாய் மொழி வாய்பாட்டுக் கோட்பாடு (Oral Formulaic), 8) கலப்புப் பண்பாட்டுக் கோட்பாடு (Cross Cultural), 9) நாட்டுப்புறப் பண்பாட்டுக் கோட்பாடு (Folk Cultural), 10) மக்கள் பண்பாட்டுக் கோட் பாடு (Mass Cultural), 11) அரைநிலைக் கோட்பாடு (Hemispheric), 12) சூழ்நிலைக் கோட்பாடு (Contextual) என்பனவாம்.

**வரலாற்று-புவியியல் கோட்பாடு:** கதைகளின் தோற்றம், பரவிய விதம், அதற்குரிய காரணங்கள் ஆகியவற்றை அறிய இக்கோட்பாடு உதவுகிறது. இக்கோட்பாட்டின்படி மீட்டுருவாக்கம் செய்கின்ற னர். கதையானது பரவும்போது சில பகுதிகள் விடு பட்டு, உருத்திரிதல் (Compression), சில பகுதிகள் சேர்ந்து விரிவடைவதால் (Elaboration) ஒன்றிற்கு வேறாக மற்றொன்று புகுதல் (Substitution) போன்ற மாற்றங்கள் இம்முடிவுக்கு வரத் துணைபுரிகின்றன.

**வரலாற்று மீட்டுருவாக்கக் கோட்பாடு:** ஆதாரம் கிடைக்காத ஒரு காலகட்ட வரலாற்றை நாட்டுப்புற வியல் சான்றுகொண்டு உருவாக்குவதற்கு வரலாற்று மீட்டுருவாக்கக் கோட்பாடு என்பது பெயர். சப்பானி யர்களின் பழங்கால ஆவியுலகக் கோட்பாட்டுச் சம யத்தை (Animistic Religion) மீட்டுருவாக்கம் செய்ய இக்கோட்பாடு பயன்பட்டது. மரபுவழி வரலாற்றுச் செய்திகளில் எந்த அளவு வரலாற்று உண்மைகள் பொதிந்துள்ளன என ஆராய்கின்றனர்.

**இலட்சியக் கோட்பாடு:** நாட்டுப்புறவியலை இருப தாம் நூற்றாண்டில் அரசியல் நோக்கங்களுக்குப் பயன்படுத்தும் எண்ணம் எழுந்தது. இதனைச் செரு மனியிலும் உருசியாவிலும் தேசிய உணர்வைத் தட்டி யெழுப்பப் பயன்படுத்தினர். அயர்லாந்து, பிலிப் பைன்சு,கியூபாஆகிய நாட்டு மக்களின்விடுதலைஎழுச்சி இயக்கங்களில் நாட்டுப்புறப் பாடல்கள் பயன்பட்டன. தமிழகத்திலும் கட்டபொம்மன் கதையைக் கூறிச் சுதந்திர உணர்ச்சியைத் தட்டியெழுப்பினர். சோகோ லாவு இக்கோட்பாட்டை 'வருக்கப் போராட்டத்தின் எதிரொலியாக உள்ளதெனக்' கூறுகிறார்.

**செயல்திறன் கோட்பாடு:** ஓரின மக்களின் பண் பாட்டில் நாட்டுப்புறவியலின் பயனையும் அது ஏற் கும் பங்கினையும் ஆராய்வதே இக்கோட்பாட்டின் நோக்கமாகும். இதுமுறைசாராக் கல்வி (Non-formal Education) போன்றுள்ளது. பழமொழி மூலம் நல் லொழுக்கம் வற்புறுத்தப்படுகிறது. இதுமக்களிடையே நம்பிக்கையை ஊட்டவும் ஒழுக்கத்தைப் பாதுகாக்க வும் பயன்படுகிறது. நைசீரியாவில் வாழும் ஆனாங்கு என்னும் இனத்தாரிடையே வழக்கு மன்றத்தில் பழ மொழிகள் பயன்படுத்தப்படுகின்றன.

**உளவியல் ஆய்வுக் கோட்பாடு:** புராணக் கதை களுக்கும் நாட்டுப்புறக் கதைகளுக்கும் பாலியல் குறி யீட்டு விளக்கமளிக்கின்றனர்.சிக்மண்டு பிராய்டு என்ப வர் அடிமனத்தை அறிய நாட்டுப்புறக் கதைகள்,புரா ணக் கதைகள் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண் டார். வளமைச் சடங்கு பற்றி ஆராய்வோரும் உளவியல் ஆய்வுக் கோட்பாட்டைப் பின்பற்றி ஆராய்கின்றனர்.

**அமைப்பியல் கோட்பாடு:** அமெரிக்க நாட்டுப்புற அறிஞர்களிடையே 1960-ஆம் ஆண்டளவில் மிகுந்த

செல்வாக்குப் பெற்ற கோட்பாடு, அமைப்பியல் கோட்பாடாகும். விளாடிமிர் பிராப்புவின் நூல் 1958-ஆம் ஆண்டு ஆங்கிலத்தில் வெளியானது. அந் நூல் வெளிவந்தவுடன் நாட்டுப்புறவியலில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. இலெவிசுடிராசு, பிராப்பின் முறையினின்றும் சிறிது விலகிச் சென்றாலும் அமைப்பியல் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு ஆராய்கிறார். ஆலன் தாண்டசு என்பவரும் பிராப்பின் கொள்கையைப் பின்பற்றினாலும் இக்கோட்பாட்டில் சில மாற்றங்களையும் செய்தார். அமைப்பியல் கோட்பாடு அனைத்து நாட்டுப்புறக் கதைகளும் ஓர் அமைப்புக்குட்பட்டவை என்றும், இக்கோட்பாட்டினால் வகைப்படுத்தல் என்னும் முறை எளிமையாகின்றது என்றும், பண்பாட்டுக் கூறுகளைப் பிரித்தறியப் பயன்படுகிறது என்றும் நாட்டுப்புறவியல் அறிஞர்கள் கருதுகின்றனர். தமிழில் முதன்முதலில் அமைப்பியல் கோட்பாட்டைத் தாலாட்டிற்கும், ஒப்பாரிக்கும் பயன்படுத்தி ஆய்வு செய்தவர் டாக்டர் பா.ரா. சுப்பிரமணியம் ஆவர்.

**வாய்மொழி வாய்பாட்டுக் கோட்பாடு:** நாட்டுப்புற இலக்கியங்களின் படைப்பும் அமைப்பும், சொல்லுவோனின் முறையையும் சொல்லுவோன் செயற்படும் முறையையும் சார்ந்தமைகின்றன என்பதே இக் கோட்பாடாகும். ஆல்பர்ட்டுலார்டும், தாவீதுபைனமும் இக்கொள்கையை வளர்த்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள்.

**கலப்புப் பண்பாட்டுக் கோட்பாடு:** ஆண்ட்ரு லாங்க்கு, எட்வின் சிட்னி, சார்ட்லாண்டு போன்ற மானிடவியலாளர்கள் மனிதப் பண்பாடானது காட்டுமிராண்டி நிலையிலிருந்து படிப்படியாக வளர்ச்சியுற்று நாகரிக நிலை அடைந்தது என்ற அடிப்படையில் ஆராய்கின்றனர். மானிடவியலாளர்கள் 20-ஆம் நூற்றாண்டில் ஒவ்வொரு பண்பாட்டையும் தனித்தனியே ஆராயத் தொடங்கினர். கலப்புப் பண்பாட்டுக் கோட்பாடு 1960-ஆம் ஆண்டளவில் வளர்ச்சி பெறத் தொடங்கியது. உலோமா அவர்கள் உலகப் பண்பாட்டு இனங்களை ஆறு பிரிவுகளாகப் பகுக்கின்றார்.

**நாட்டுப்புறப் பண்பாட்டுக் கோட்பாடு:** நாட்டுப்புற மக்களின் வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு நடத்தப்பெறும் ஆய்வுமுறையே நாட்டுப்புறப் பண்பாட்டுக் கோட்பாடு ஆகும். அயர்வோர்த் பீட்டு, தான் யோடர் போன்றோர் இக்கொள்கையில் ஆர்வமுடையவர்கள். இது நாட்டுப்புற வழக்காறுகளைக் கொண்டு நாட்டுப்புற மக்களின வாழ்வை அலசி ஆராய்வதாகும். நாட்டுப்புற மக்கள் பயன்படுத்தும் புழக்கப் பொருள்களைக் கொண்டு அவர்களின் புறப் பண்பாடுகளை இக்கோட்பாட்டினர் ஆராய்கின்றனர்.

**மக்கள் பண்பாட்டுக் கோட்பாடு:** நாட்டுப்புறப் பண்பாட்டிற்கும் நகர்ப்புறத் தொழில்துறைக்கும் இடையே போராட்டமே நிகழ்கின்றது. நாட்டுப்புறப் பண்பாட்டையும் நகர்ப்புறப் பண்பாட்டையும் ஒப்பிட்டு ஆராய்ந்தால்,நகர்ப்புறப் பண்பாட்டில் தேய்ந்து வரும் நாட்டுப்புறப் பண்பாடு கலந்து ஊருருவி வருவதைக் காணலாம். நகர்ப்புறப் பகுதிகளில் நாட்டுப்புற வழக்காறுகள் அழிந்துவிட்டன எனக் கருதுவதைவிட அப்பகுதிகளில் அடைந்துவரும் மாற்றங்களையும் வளர்ச்சிகளையும் ஆராய்வதே சிறப்பாகும்.

**அரை உலகக் கோட்பாடு:** நாட்டுப்புறவியல் பேரறிஞர் இரிச்சார்ட்டு தார்சனால் உருவாக்கப்பட்டது. இக்கோட்பாடு குடியேற்ற நாடுகளுக்கே பொருந்தும். குடியேறிவர்களுடைய பண்பாடு அந்நாட்டுப் பண்பாட்டுடன் இணைகிறது. பழைய உலகம், புதிய உலகம் எனப் பிரித்து ஆராய்கின்றனர். பழைய உலகின் நாட்டுப்புற வழக்காறுகள் புதிய உலகின் நாட்டுப்புற வழக்காற்றோடு எவ்வாறு இணைகின்றன, மாறுகின்றன, தன்வயமாகின்றன, நிலைத்துநிற்கின்றன, மீண்டும் வளர்கின்றன. மறைகின்றன என்பன போன்றவற்றை ஆராய வேண்டும்.

**சூழ்நிலைக் கோட்பாடு:** இக்கோட்பாட்டினர் நாட்டுப்புற வழக்காற்றைச் சூழல், வெளிப்படுத்தும் முறை, செயற்படும் முறை ஆகியவற்றுடன் இணைத்துக் காண முற்படுகின்றனர். வெளிப்பாட்டு முறையை (Verbal Behaviour) மொழியியலாளரிடமிருந்தும், செயற்பாட்டு முறையை (Functionalism) மானிடவியலாளரிடமிருந்தும், தனி மனிதனின் உள்மனச் செயற்பாட்டு முறையை உளவியலாளரிடமிருந்தும் பெற்று, இவ்வாய்வில் பயன்படுத்த முனைகின்றனர். பல்துறை அணுகுமுறை வளரவும் வாய்ப்புகள் உண்டாகின்றன. நிகழ்ச்சி முழுவதையும் தொகுக்கும்போது சூழலையும் தொகுத்து ஆர்ாயவேண்டியது இன்றியமையாததாகும்.

நாட்டுப்புறவியல் ஆய்வில் சார்லசு கோவர், மாக்கியூன் போன்றோரின் தொகுப்புகளே சிறந்தவை. நாட்டுப்புறவியல் வளர்ச்சி விரைந்து முன்னேறி வருகிறது. நாட்டுப்புறவியல் தொடர்பான நூல்களும் வெளிவந்து கொண்டே இருக்கின்றன. சு.ச.

**துணை நூல்கள்:**

**சக்திவேல், சு.** நாட்டுப்புறவியல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983.

**Dorsen, Richard,** M. Folklore and Folk Life: An Introduction. The University of Chicago press, Chicago, 1972.

**Dundes. Alan** (Ed.) The Study of Folklore, Prentice Hall, Inc., Englewood Cliffs, N.J., 1965.

**Sakthivel, S.** Folklore Literature in India, Meena Pathippagam, Madurai, 1976.

**Vanamamalai, N**, Studies in Tamil Folk Literature, New Century Book House Private Ltd., Madras, 1970.

**நாட்டு மூலதனம்**: பண்டங்களையும், பணிகளையும் உற்பத்தி செய்வதில் பயன்படும் நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு என்ற நான்கு உற்பத்திக் காரணிகளுள் இக்காலச் சுழல் உற்பத்தி முறையில் (Round About process of production) மிகுந்த சிறப்பிடத்தைப் பெறும் காரணி மூலதனம். மனிதனால் ஆக்கப்பெறும் பணம், சாதனங்கள் போன்றவற்றையும் இது குறிக்கும் என்பதால் இதனை உற்பத்தி செய்யப்பட்ட உற்பத்திக் காரணி என்பர். பணம், பண்டங்கள், சாதனங்கள் போன்ற பல வடிவங்களில் மூலதனம் காணப்படுகிறது.

மூலதனத்தைப் பல அடிப்படைகளில் வகைப் படுத்துவர். அதில் தனியார் மூலதனம், நாட்டு மூலதனம் (National Capital) என்ற வகைப்பாடுகள் அடங்கும். தனிப்பட்டவர்களும், வாணிக நிறுவனங்களும்பெற்றிருக்கும் மூலதனத்தைத் தனியார்மூலதனம் என்பர். இத் தனியார் மூலதனத்தையும், நாட்டில் உள்ள உற்பத்தியில் பயன்படத்தக்க இயற்கைச் செல்வங்கள், மக்கள் செல்வம் ஆகியவற்றையும் உள்ளடக்கியது நாட்டு மூலதனம்.

ஒரு நாட்டின் மூலதனச் சாதனங்கள் பயன் படுத்தப்பட்டுக் கொண்டே இருப்பதால் அவற்றின் உற்பத்தித் திறனும், வாழ்நாள் அளவும் மாறிக் கொண்டே இருக்கும் என்பதால், நாட்டு மூலதனத்தைத் துல்லியமாக அளந்தறிதல் எளிதன்று. ஆனால், பருப்பொருள்சார் மூலதனத்தையும் (Physical Capital), மக்கள் மூலதனத்தையும் (Human Capital) மிகுதியான அளவிலும், உற்பத்தித் திறன் மிக்க தன்மையிலும் எந்த ஒரு நாடு பயன் படுத்துகிறதோ அந்த நாடு மிகுதியான அளவில் பண்டங்களையும், பணிகளையும் எளிதாக உற்பத்தி செய்யமுடியும். நாட்டு மூலதனத்தின் தேவையோடு ஒப்பிடுகையில் அதன் அளிப்புக் குறைவாக இருக்கலாம். பின்தங்கிய நிலையிலுள்ள வளரும் பொருளாதாரங்களில் இந் நிலை காணப்படுகிறது. இக் குறையைத் தவிர்த்து விரைவான வளர்ச்சியைப் பெற இந் நாடுகள் அயல் மூலதனத்தின் (Foreign Capital) உதவியை நாடுவது இயல்பு. என்.எஸ்.பா.

**நாட்டுவருமானக் கணக்கீடு** என்பதைச் சமுதாயக் கணக்கீடு என்றும் குறிப்பிடுவர். பொருளாதாரத் துறையில் தலைசிறந்த வல்லுநர்களுள் ஒருவரான பேராசிரியர் கீன்சு (Prof J.M. Keynes) அவர்தம் வேலைக் கோட்பாட்டை விளக்கிப்பொதுக் கோட்பாடு (General Theory) என்னும் நூலை வெளியிட்டபின்னர், நாட்டு வருமானம் என்றும் தேசிய வருமானம் என்றும் குறிப்பிடப்படும் கருத்து மிகவும் புகழடையத் தொடங்கியது. பொதுவாக நோக்குமிடத்து நாட்டு வருமானம் (National Income)=வேலை (Employment)+உற்பத்தி (Output) என்று குறிப்பிடலாம். பேராசிரியர்களான மார்சல் (Marshall), பிகு (Pigou), பிசர் (Fisher) போன்றோர் நாட்டு வருமானம் என்ற கருத்துக்குப் பலவிதமான இலக்கண விளக்கங்களைத் தந்துள்ளனர். ஆயினும் வருமானம், வேலை, விளைவு ஆகியவற்றைப் பகுத்தாராய்வதற்கும், வேலையின் அளவை நிருணயிக்கும் காரணிகள் எவை என்பதை அறிந்து கொள்ளுவதற்கும் பேராசிரியர் கீன்சின் விளக்கமே பயன்படுகிறது என்ற கருத்துப் பரவலாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

நாட்டு வருமானத்தை உற்பத்தி முறை (Product Method), வருமான முறை (Income Method), செலவு முறை (Expenditure Method) என்னும் மூன்று வழிகளில் கணக்கிடலாம். அண்மையில் மதிப்பைச் சேர்த்துக் கணக்கிடும் முறை (Value Added Method) மிகவும் சிறப்படைந்து வருகிறது.

பொருளாதாரக் கொள்கைகள் (Economic Policies), பொருளாரத் திட்டமிடுதல் (Economic Planning), வரவு செலவுத் திட்டக் கொள்கை (Budgetary Policy), வாழ்க்கைத் தரம் (Standard of Living) போன்ற பல கருத்துகளில் மிகவும் பயன்படத்தக்கதொன்றாக அமைந்திருப்பதால் இக்காலத்தில் நாட்டு வருமானத்தைப் பற்றிய கல்வி மிகவும் சிறப்புப் பெற்றதாக எல்லோராலும் கருதப் படுகிறது. இவற்றோடு வேலை, விளைவு ஆகியவைகளைப் பற்றிய பகுத்தாய்வுகளிலும் நாட்டு வருமானம் மிகவும் சிறப்பான அங்கம் வகிக்கிறது. இவ் வளவு சிறப்புடைய நாட்டு வருமானத்தைக் கணக்கிடுவதில் (National Income Accounting) கருத்தளவிலும் (Conceptual), புள்ளியியல் அளவிலும் (Statistical) பல இடையூறுகள் உண்டு. குறிப்பாக வளரும் நாடுகளில் நாட்டு வருமானத்தைக் கணக்கிடுவதில் இத்தகைய குறைகள் பல காணப்படுகின்றன. கணக்கிடுவதில் பல்வகைப் பண்டங்களைச் சேர்த்தல், பல்வகைப் பண்டங்களை நீக்குதல் ஆகியவற்றினால், இருமுறை அல்லது பலமுறை கணக்கிடுதல் என்பதைத் தவிர்க்க முடியாததனாலும், அங்காடிக்குப் பண்டங்கள், பணிகள் வாராமலிருக்கும் பல

நிலைகளாலும், தேய்மானங்கள், பிறவகைக் கழிவு களைக் கணக்கிடுவதினாலும் இன்ன பிற காரணங் களாலும் இடர்கள் பல தோன்றுகின்றன. புள்ளி விவரங்கள் போதுமான அளவிலும், நம்பிக்கையான அளவிலும் கிடைக்காமலிருத்தல், புள்ளி விவரங் களைப் பயன்படுத்தும் முறைகள் பலவற்றை அறியா திருத்தல், பணப் பற்று வரவுகளுக்கு உட்படாத அள வில் பல பற்று வரவுகள் பெருமளவில் நிகழ்தல், நன் கமையப்பெறாத துறை பேரளவில் செயற்படுதல் போன்ற பல இடையூறுகள் வளரும் நாடுகளில் காணப்படுகின்றன. இவ்வளவு இடர்கள் இருந்தாலும் நாட்டு வருமானக் கணக்கீடு இக்காலத்தில் மிகவும் இன்றியமையாத ஒன்றாகத் திகழ்கிறது.

தனிப்பட்டவர்களின் கணக்குகளை வைத்துக் கொள்வதைத் தனியார் கணக்கீடு (Private Accounting) என்று குறிப்பிடுவதைப் போன்று பொருளா தாரம் முழுமைக்கும் கணக்குகளை வைத்துக்கொள் வதை நாட்டு வருமானக் கணக்கீடு அல்லது சமு தாயக் கணக்கீடு (Social Accounting) என்று குறிப் பிடுவர். அதாவது சமுதாயக் கணக்கீடு, தனிப்பட்ட வர்களும், நிலையங்களும் (Institutions) எவ்வாறு செயற்படுகின்றன என்பதையும், மொத்தமாகப் பொருளாதாரம் முழுவதும் எவ்வாறு செயற்படு கிறது என்பதையும் காட்டுகிறது. உண்மையான அல்லது நிதி சம்பந்தமான, நாட்டு அளவிலான அல்லது பன்னாட்டு அளவிலான, சிறிய அல்லது பெரிய என்று பல அடிப்படைகளில் ஒரு நாட்டில் நிகழும் வரவு செலவுகள் அனைத்தையும் நாட்டு வருமானக்கணக்கீடுஉள்ளடக்கியிருக்கிறது. இக் கணக் கீட்டிலிருந்து மொத்த வருமானம், மொத்தச் சேமிப்பு மொத்த முதலீடு, மொத்த இறக்குமதி, மொத்த ஏற்றுமதி, வரிகள், அரசுச் செலவுகள் போன்ற பல் வேறு தேசிய அளவிலான கருத்துகளை அறிந்து செயற்படுதல் இயலும். சுருக்கமாகக் குறிப்பிட்டால் நாட்டு வருமானக் கணக்கீடு, பொருளாதாரத்தின் அமைப்பையும், பொருளாதாரம் செயற்படும் விதத் தையும் அறிந்து செயற்பட உதவும் இன்றியமையாத தொரு கணக்கீடு ஆகும்.

சமுதாயக் கணக்கீட்டைப் பற்றிய கருத்து வளர்ச்சி இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் ஆதி காலந்தொட்டே இருந்திருக்கலாம் என்றாலும்கூட, உலகப் பெருமந்தம் தோன்றிய காலத்தில்தான் இக் கருத்து மிகுந்த அளவில் அறிஞர்களின் கவனத்திற்கு வந்தது. உலகப் பெருமந்தக் காலத்தில் பேரளவிலான இழப்புக்களும், வாங்கும் திறனில் வீழ்ச்சியும், வேலை யின்மைப் பெருக்கமும், மூலதனத்தின் வேலையின்மை நிலைப் பெருக்கமும் மிகுந்த அளவில் இருந்தன. இந் நிலைகளை மாற்றப் பொருளாதாரத்தின் அமைப்புகளில் அடிப்படையான மாற்றங்களைக் கொண்டுவர வேண்டியது தேவையாயிற்று. வரி விதித் தல், பொதுக் கடன் வாங்குதல் அல்லது திருப்பிச் செலுத்துதல், பொதுச் செலவுகளை மிகுதிப்படுத்து தல் அல்லது குறைத்தல், வங்கி வீதத்தை (Bank Rate) மாற்றியமைப்பதன்மூலம் பண அளவைக் குறைத்தல் அல்லது மிகுதிப்படுத்துதல் போன்ற பல நடவடிக்கைகள் மூலம் பொருளாதாரத்தைச் சீர்படுத்தும் முயற்சிகளை மேற்கொள்ளச் சமு தாயக் கணக்கீடு மிகவும் இன்றியமையாததாகக் கரு தப்பட்டது. இரண்டாம் உலகப் பெரும் போர் இந் நிலையை விரைவாக முடுக்கிவிட்டதெனக் குறிப்பிட லாம். பொதுவாகப் போர்க்காலங்களில் ஒவ்வொரு நாடும் அதனால் இயன்ற அளவுக்கு மூல வளங் களைத் தொகுத்துப் போரில் வெற்றிகாண முயல் வது இயல்பு.

இந்தியாவில் 1962-ஆம் ஆண்டில் சீனப் படை யெடுப்பின்போது இவ்வுணர்வு பெருக்கெடுத் தது. பாதுகாப்பா வளர்ச்சியா (Defence or Development) என்ற வினாக்குறி தோன்றினாலும் பாதுகாப் பின்றி வளர்ச்சியில்லை; வளர்ச்சியின்றிப் பாதுகாப் பில்லை; வளர்ச்சியையும் பாதுகாப்பையும் ஒரேநேரத் தில் பெறுவதற்குச் சமுதாயக் கணக்கீடு தேவை என்ற கருத்துகள் வலுப்பெற்றன.

**சமுதாயக் கணக்கீட்டு முறை:** நாட்டு வருமானக் கணக்கீட்டில் மொத்தப் பொருளாதாரம் பல துறை களாகப் பிரிக்கப்படுவது இயல்பு. ஒரு வாணிக நிறு வனத்தின் ஐந்துவகைக் கணக்கைப் (Balance Sheet) போன்று ஒவ்வொரு துறைக்கும் கணக்குகள் அமைக் கப்படுகின்றன. இக் கணக்குகளிலுள்ள எல்லாப் பதிவு களையும் ஒன்றுக்குப் பலமுறை சரிபார்த்துக் தவறு களுக்கும் விடுதல்களுக்கும் சமன்செய்து இறுதியாகத் தொகுத்து, நாடு முழுவதிற்குமான ஒரு நாட்டு வரு மானக் கணக்கீடு அமைக்கப்படுகிறது.

இந்திய தேசிய வருமானக் குழு (Indian National Income Committee) கடைப்பிடித்த முறைப்படி சமுதாயக் கணக்கீட்டு முறையில் முழுப் பொருளா தாரத்தையும் 1) தனியார் துறை (Personal Sector), அல்லது இல்லத் துறை (Household Sector), 2) வாணிகத் துறை (Business Sector or Enterprise), 3) அரசுத் துறை (Govt. Sector) என மூன்று துறை களாகப் பிரித்துக் கணக்கிடுதல் மரபு. இம் மூன்று துறைகளையும் தனித்தனியாக 1) உற்பத்தி, 2) நுகர்வு. 3) செல்வ அதிகரிப்பு (addition to wealth), 4) புறத் துறை (external accounts) என நான்கு உட்பிரிகளாகப் பிரித்துக் கணக்கிடுதல் மரபு. இவ்வாறாகஇந்தியாவில் நாட்டு வருமானக் கணக்கீடு பன்னிரண்டு கணக்குகளில் அடங்கியிருக்கிறது.

நுகர்வுச் செலவுகள், சேமிப்புகள், முதலீட்டுச் செலவுகள், மூலதன ஆக்கம், தேய்மானம் போன்ற பல்வேறு பொருளாதார மாறிகளுக்கான நம்பிக்கையான, முழு அளவிலான புள்ளிவிவரங்கள் கிடைப்பதிலுள்ள இடையூறுகளும், புள்ளிவிவரங்கள் முழு அளவில் கிடைக்காத சூழ்நிலைகளில் தாங்களாகவே தங்களின் அனுமானத்தின் அடிப்படையில் புள்ளிவிவரங்களை நிறைவு செய்துகொள்ளும் ஒருசில புள்ளிவிவரச் சேகரிப்பாளர்களின் தவறான போக்குகளும், சரியான புள்ளிவிவரங்களைத் தாராமல் மாறுபட்ட புள்ளிவிவரங்களைத் தரும் ஒருசில தனிப்பட்டோர் நிறுவனங்கள் ஆகியவற்றின் போக்குகளும், இந்தியாவில் நாட்டு வருமானக் கணக்கீடுகள் முழு அளவிலான பயன்களைத் தாராமற் செய்கின்றன என்று குறை சொல்லப்பட்டாலும், மேற்குறிப்பிட்ட அடிப்படையில், நாட்டு வருமானக் கணக்கீடு தொடர்ந்து நிகழுகிறது.

அமெரிக்காவில் நாட்டு வருமானக் கணக்கீட்டில் மொத்தப் பொருளாதாரம் 1) தனியார் துறை அல்லது இல்லத்துறை, 2) வாணிகத் துறை, 3) அரசுத் துறை, 4) பன்னாட்டுத் துறை அல்லது உலகின் பிற பகுதிகள் துறை, (International Sector or rest-of-the World Sector). 5) சேமிப்பு-முதலீட்டுத் துறை (Savings and Investment Sector) என ஐந்து துறைகளாகப் பிரிக்கப்படுகிறது.

**தனியார் துறை அல்லது இல்லத் துறை:** ஒரு நாட்டிலுள்ள (தனிப்பட்ட நுகர்வோர்கள், குடும்பங்கள் உள்ளிட்ட) இல்லங்கள், ஆதாயம் கருதா நிலையங்கள் (Non profit Institutions) ஆகியவற்றின் வரவுகள், செலவுகள் ஆகியவற்றை இத்துறை உள்ளடக்கியுள்ளது. வாணிகத் துறையில் உற்பத்தியாகும் பண்டங்களுக்கான மிகப் பெரியதொரு அங்காடியாகவும், வாணிகத் துறையில் மேற்கொள்

**தனியார் வரவு செலவுக் கணக்கு (உரு. கோடியில்)**

| செலவுகள் | | வரவுகள் | | |
|---|---|---|---|---|
| 1) தனி நுகர்வோர் வாணிகத்திலிருந்து வாங்குதல் | 225.0 | 1) கூலி, சம்பளம், பிற பணி வருவாய்கள் | | 112.0 |
| 2) இல்லப் பணிகளை வாங்குதல் | 25.0 | 2) இல்ல வருவாயிலிருந்து (By Households) | | 10.2 |
| 3) வெளி நாடுகளிலிருந்து வாங்கும் நிகர அளவு | 2.5 | 3) அரசு வருவாயிலிருந்து | | 59.6 |
| 4) வரிகளாகவும் கட்டணங்களாகவும் பிற வடிவங்களிலும் செலுத்துதல் | 6.5 | 4) அயல் நாட்டினரிடமிருந்து | | 1.8 |
| 5) வட்டி செலுத்துதல் | 2.0 | 5) வாரம்/வாடகை வருவாய்கள் | | 12.4 |
| 6) சமுதாயக் காப்பீட்டுச் செலுத்துதல்கள் | 20 0 | 6) ஆதாய ஈவுகள் (Dividents) | | 18.0 |
| 7) தனியார் சேமிப்புகள் | 10.0 | 7) தனியார் வட்டி வருமானம் | | 24.0 |
| | | a) தனியாரிடமிருந்து | 3.5 | |
| | | b) வாணிகத்திலிருந்து | 12.6 | |
| | | c) அரசிடமிருந்து | 6.9 | |
| | | d) வெளிநாட்டிலிருந்து | 1.0 | |
| | | | 24.0 | |
| | | 8) பலவகை வருவாய் வரவுகள் | | 35.0 |
| | | 9) மாற்றுச் செலுத்துதல்கள் (Transfer Payments) | | 18.0 |
| | | a) வாணிகத்திலிருந்து | 14.0 | |
| | | b) அரசிடமிருந்து | 4 0 | |
| | | | 18.0 | |
| தனியார் செலவுகளின் சேமிப்புகளின் மொத்தம் | 291.0 | மொத்த தனியார் வருமானம் | | 291.0 |

ளப்படும் செலவுகளில் மிகப் பெரியதொரு தொகையைப் பெறும் துறையாகவும் இல்லத் துறை அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது. தனியார் வரிகள், வாணிகத் துறையிலும் அயல் துறையிலும் (Foreign Sector) மேற்கொள்ளப்படும். தனியார் நுகர்வுச் செலவுகள், நுகர்வோரால் செலுத்தப்படும் வட்டிச் செலவுகள் போன்றவைகள் தனியார் துறையில் மேற்கொள்ளப்படும் இன்றியமையாத செலவினங்கள் ஆகும். தனியார் வரவுகளிலிருந்து இச் செலவுகளைக் கழித்துப் பெறுவது தனியார் சேமிப்புகளாகும். கீழ்வரும் கற்பனைப் பட்டியல் தனியார் துறை அல்லது இல்லத் துறையின் வரவு செலவு இனங்களைக் காட்டுகிறது

**வாணிகத் துறை:** கடன் பொறுப்பு வரையறை செய்யப்பட்ட தனியார் நிறுவனங்கள் (Private Limited Companies), கடன் பொறுப்பு வரையறை செய்யப்பட்ட பொது நிறுவனங்கள் (Public Limited Companies) ஆகியவற்றை உள்ளிட்ட நிறுவனத் துறை (Corporate Sector), தனியார் வாணிக நிறு-

**வாணிகத் துறையின் வரவுகள், செலவுகள் கணக்கு**
**(உரு. கோடிக்கணக்கில்)**

| செலவுகள் | | | வரவுகள் | |
|---|---|---|---|---|
| 1) கூலிகளும் சம்பளமும் | | 245.0 | 1) நிகர விற்று வரவுகள் | |
| 2) சமுதாயப் பாதுகாப்புச் செலவுகள் | | 15.0 | a) நுகர்வோருக்கு | 225.0 |
| 3) நிறுவனம் அல்லாத வாணிக நிகர வருவாயும், சரக்குத் தொகுதிகள் (Inventory) மதிப்பீடுகளைச் சமன் செய்து கொள்ளுவதும் | | 55.0 | b) அரசுக்கு | 110.0 |
| | | | c) வெளிநாடுகளுக்கு | 40.0 |
| 4) வாரம்/வாடகை தனிப்பட்டோர் வருமானங்கள் | | 5.0 | 2) மூலதனப் பண்டங்களின் வாணிகம் | 65.0 |
| 5) நிறுவனத்துறை ஆதாயமும் சரக்குத் தொகுதிகள் மதிப்பீடுகளைச் சமன் செய்துகொள்ளுவதும் | | 60.00 | 3) சரக்குத் தொகுதிகளின் நிகர மாற்றம் | 30.0 |
| a) நிறுவன வரிகள் | 35.0 | | | |
| b) ஆதாய ஈவுகள் | 15.0 | | | |
| c) பகிர்ந்தளிக்கப்படாத ஆதாயம் | 9.0 | | | |
| d) சமன் செய்துகொள்ளுதல் (adjustment) | 1.0 | | | |
| | 60.0 | | | |
| 6) நிகர வட்டி | | 10.0 | | |
| 7) மொத்தம் தோற்றுவிக்கப்பட்ட வருவாய் | | 390.0 | | |
| 8) மறைமுக வாணிக வரிகள் | | 50.0 | | |
| 9) வாணிக நிகர இலாபப் பற்றுகள் | | 440.0 | | |
| 10) தேய்மானம் (CCA) | | 30.0 | | |
| வாணிக மொத்த இலாபப் பற்றுகள் | | 470.0 | வாணிக மொத்த வருமானம் | 470.0 |

வனங்கள், கூட்டுப் பங்கு நிறுவனங்கள் உள்ளிட்ட நிறுவனம் அல்லாத துறை (Non-Corporate Sector) அரசுத் துறை நிறுவனங்கள், நிதி நிறுவனங்கள், காப்பீட்டுக் கழகங்கள் ஆகியவை. உள்ளிட்ட துறையை வாணிகத் துறை என்பர். அதாவது, ஒரு நாட்டிலுள்ள உற்பத்தித் துறைகள், வாணிகத் துறை ஆகியவைகளின் மொத்த வரவுகளையும், செலவுகளையும் இத்துறை உள்ளடக்கி உள்ளது. கீழ்வரும் கற்பனைப் பட்டியல் வாணிகத் துறையின் வரவுகள், செலவுகள் இனங்களைக் காட்டுகிறது.

**அரசுத் துறை:** அரசுகளின் வருமானங்கள், செலவுகள் ஆகியவற்றை அரசுத் துறை காட்டுகிறது. அரசுகளின் மூன்று வகைகளான மைய அரசு, மாநில அரசுகள், உள்ளூர் அரசுகள் (Local Governments) ஆகிய மூன்றுவகை அரசுகளின் வருமானமும், செலவுகளும் இங்குக் குறிப்பிடப்படுகின்றன. வாணிகத் துறையிலிருந்தும், அயல் நாடுகளிலிருந்தும் பணிகளையும் பண்டங்களையும் பெறுவதற்காக மேற்கொள்ளப்படும் செலவுகள், பொதுக் கடன் பத்திரங்களை வைத்திருக்கும் தனிப்பட்டோருக்கும், நிலையங்களுக்கும் வட்டியைச் செலுத்துவதற்கான செலவுகள், மாற்றுச் செலுத்துதல்களுக்கான (Transfer Payments) செலவுகள் போன்றவை அரசுத் துறையின் செலவினங்களுக்கான ஒரு சில எடுத்துக்காட்டுகளாகும். கீழ்வரும் கற்பனைப் பட்டியல் அரசுத் துறையின் வரவு, செலவு இனங்களைக் குறிப்பிடுகிறது.

**அயல் துறை:** இன்றைய உலக நாடுகள் யாவும் தனித்தியங்கும் இயல்புடையவை அல்ல. அயல் வாணிகமும், அயல் நாடுகளிலிருந்து பணிகளைப் பெறுதல் என்ற நிலையும், அயல்நாடுகளுக்குப் பணியாற்றுதல் என்ற நிலையும் பரவலாக எல்லா நாடுகளிலும் காணப்படும் இயல்பாகும். எனவே, அயல்நாடுகளுக்குப் பல காரணங்களுக்காகப் பணத்தைச் செலுத்துவதும் அயல்நாடுகளிலிருந்து பல காரணங்களுக்காகப் பணத்தைப் பெறுவதும் இன்றைய நாள்களில் மிகவும் இயல்பாகிவிட்டன. கீழ்வரும் கற்பனைப் பட்டியல் அயல் துறையின் வரவு, செலவு ஆகியவைகளைக் காட்டுகின்றன.

**அரசுத்துறை வரவுகள், செலவுகள் கணக்கு**

| செலவுகள் | | | வரவுகள் | | |
|---|---|---|---|---|---|
| 1) பண்டங்கள், பணிகளின் நேரடிக் கொள்முதல்கள் | | 75.0 | 1) வரி வருமானங்கள் | | 70.0 |
| a) கூலிகளும், சம்பளங்களும் பிறவும் | 60.0 | | a) தனிப்பட்டோர் வரிகள் | 40.00 | |
| b) சமுதாயப் பாதுகாப்புச் செலுத்துதல் | 4.0 | | b) நிறுவன வரிகள் | 10.00 | |
| c) வாணிகத்திலிருந்து கொள்முதல் | 6.0 | | c) மறைமுக வரிகள் | 20.0 | |
| d) வெளிநாடுகளிலிருந்து கொள்முதல் | 5.0 | | | 70.0 | |
| | 75.0 | | 2) சமுதாயப் பாதுகாப்பிற்கான செலுத்துதல்கள் | | 30.0 |
| 2) மாற்றுச் செலுத்துதல் (Transfer Payments) | | 5.5 | a) வாணிகத்திலிருந்து | 12.0 | |
| 3) செலுத்தப்பட்ட நிகர வட்டி | | 1.0 | b) தனிப்பட்டவரிடமிருந்து | 15.0 | |
| 4) அதிகம் (Surplus) அல்லது பற்றாக்குறை | | +18.5 | c) அரசிடமிருந்து | 3.0 | |
| | | | | 30.0 | |
| அரசுச் செலவுகளும் அல்லது பற்றாக்குறையும் | | 100.0 | மொத்த அரசு வருமானம் | | 100.0 |

**அயல் துறையின் வரவு செலவுக் கணக்கு**

**(உரூ. கோடிக்கணக்கில்)**

| செலவுகள் | | | வரவுகள் | |
|---|---|---|---|---|
| 1) நாட்டிலிருந்து நிகர கொள்முதல்கள் | | 38.0 | நிகர அயல் முதலீடுகள் | 42.0 |
| a) வாணிகத்திலிருந்து | + 41.00 | | | |
| b) அரசிடமிருந்து | -1.50 | | | |
| c) தனிப்பட்டோரிடமிருந்து | -1.50 | | | |
| | 38.00 | | | |
| 2) கூலிகளும் பிற இனங்களும் | | 2.0 | | |
| 3) வட்டி | | 1.0 | | |
| 4) ஆதாய ஈவுகள் | | -1.0 | | |
| 5) கிளை ஆதாயங்கள் | | 2.0 | | |
| நிகர செலுத்துதல்கள் | | 42.0 | நிகர அயல் முதலீடுகள் | 42.0 |

5) **சேமிப்பு, முதலீட்டுத் துறை:** தனிப்பட்டோர் சேமிப்புகள், வாணிகத்துறைச் சேமிப்புகள், பகிர்ந்தளிக்கப்படாத நிறுவன ஆதாயங்கள், சரக்குத் தொகுதிகள் சமன் செய்தல்கள் (Inventory adjustments), கிளைகளில் கிடைக்கும் ஆதாயங்கள், அரசுச் சேமிப்புகள் என்று பல வழிகளில் பொருளாதாரம் முழுவதிலும் மேற்கொள்ளப்படும் சேமிப்புகள் எல்லாம் இத்துறையின் சேமிப்புக் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. கீழ்வரும் கற்பனைப் பட்டியல் சேமிப்பு, முதலீட்டுக் கணக்கைக் காட்டுகிறது.

**நாட்டு வருமானக் கணக்கீட்டின் சிறப்புகள்:** ஒரு நாட்டின் பல்வேறு துறைகளிலும் செலவுகள், வரவுகள் ஆகியவற்றைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள இக் கணக்கீடு உதவுகிறது. பொருளாதாரம் பல துறைகளிலும் வளர்ச்சியடைந்து செல்லும் நிலையில் ஒவ்வொரு துறையிலும் நிகழும் வரவு செலவுகளைத் துல்லியமாக அறிந்து கொள்ள இக் கணக்கீடு உதவுகிறது. அயல் துறையின் வரவுகளையும், செலவுகளையும் காட்டுவதால் ஒரு நாட்டின் அயல்நாட்டு வாணிகக் கொடுத்தல் நிலை (Balance of Trade)அயல்நாட்டுச் செலுத்துநிலைகளையும் (Balance of Payments) அவற்றோடு தொடர்புடைய சிக்கல்களையும் தெளிவாக அறிந்துகொள்ள இக் கணக்கீடு பயன்படுகிறது மிக வேகமாக மாறிவரும் பொருளாதாரத்தின் அடிப்படை இயல்புகளைப் பற்றி இக்கணக்கீடு தெரிவிப்பதன் மூலம் எதிர்கால மாற்றங்கள் எவ்வாறு நிகழும் என்பதை ஓரளவுக்கு ஊகித்து உணருவதற்கும் இக் கணக்கீடு பயன்படுகிறது. வாணிகக் கொள்கை (Trade Policy), வருமானக் கொள்கை (Income Policy), கூலிக் கொள்கை (Wage Policy), பணக் கொள்கை (Monetary Policy), நிதிக் கொள்கை (Fiscal Policy) என்ற பல்வேறு கொள்கைகளை வகுத்து அரசுகள் செயற்படுவது இயல்பு. இக் கொள்கைகளை அரசுகள் சீரான முறையில் வகுப்பதற்கு இக் கணக்கீடு மிகவும் பயன்படுகிறது. இவ்வளவு சிறப்புமிக்க நாட்டு வருமானக் கணக்கீட்டை இன்னும் மேம்பாடு அடையச்செய்யப் பல முயற்சிகள் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

வளரும் நாடுகளில் இக் கணக்கீடுகளில் பல குறைகள் காணப்படுகின்றன. எனவே, இக் கணக்கீடுகளை வளரும் நாடுகளில் மிகுந்த விழிப்புணர்ச்சியுடனும், கவனத்துடனும் பயன்படுத்த வேண்டும்.

என்.எஸ்.பா.

**மொத்தச் சேமிப்புகள், முதலீடுகள் கணக்கு**
**(உரு. கோடிக்கணக்கில்)**

| செலவுகள் | | வரவுகள் | | |
|---|---|---|---|---|
| 1) மூலதனப் பண்டங்களுக்கான வாணிகக் கொள்முதல்கள் | 70.0 | 1) தனிப்பட்டோர் சேமிப்புகள் | | 70.0 |
| 2) சரக்குத் தொகுதிகளில் நிகர மாற்றங்கள் | 25.0 | 2) மொத்த வாணிகச் சேமிப்புகள் | | 40.0 |
| 3) நிகர அயல் முதலீடுகள் | 40.0 | a) மூலதன நுகர்வு உதவித் தொகை (Capital Consump-tionAllowance) | 20.0 | |
| | | b) பகிர்ந்தளிக்கப்படாத நிறுவன ஆதாயங்கள் | 10.0 | |
| | | c) சரக்குத்தொகுதி மதிப்பீடு சமன் செய்தல்கள் | 4.0 | |
| | | d) அயல் கிளைகளில் ஆதாயங்கள் | 6.0 | |
| | | | 40.0 | |
| | | 3) அரசுக்குக் கிடைக்கும் உபரி அல்லது ஏற்படும் பற்றாக்குறை | | 25.0 |
| மொத்த முதலீடுகள் | 135.0 | மொத்தச் சேமிப்புகள் | | 135.0 |

**துணை நூல்கள்:**

Gupta, R.D., Keynes and Post Keynesian Economics Kalyani Publishers, Ludhiana, 1977.

Rana, K.C., & Varma, K.N., Macro Economic Analysis, S. Nagin & Co, Jullundur, 1976.

**நாட்டு வேளாண்மை ஊரக வளர்ச்சி வங்கி**: வேளாண்மை முன்னேற்றத்திலிருந்து ஊரக முன்னேற்றத்தில் வங்கிக்கடன் விரிவான பங்கேற்ற பொழுது, விரிவான பணிகளை ஏற்று வணிக வங்கி நிறுவனங்களுக்கு அவ்வப்பொழுது ஊரக வளர்ச்சி பற்றிய திட்டங்களை உருவாக்கி, அவற்றைச் செயல் முறைப்படுத்தத் தேவையான உதவிகளை அளிப்ப தற்கு ஓர் உயர் நிறுவனம் ஏற்படுத்துவது உறுதி யான தேவையாயிற்று. அதன்படி மத்திய வங்கியும், வேளாண்மை மறுகடன் வளர்ச்சிக் கழகமும் செய்து வருகின்ற மறுகடன் பணிகளையும் ஏற்று ஒருங் கிணைத்து ஒரே அமைப்பில் செய்வதற்கு நாட்டு வேளாண்மை ஊரக வளர்ச்சி வங்கி (NABARD) ஏற்படுத்தப்பட்டது.

**வங்கியின் அமைப்பு**: பாராளுமன்றச் சட்டப்படி சூலைத் திங்கள் 1982-ஆம் ஆண்டு நாட்டுவேளாண்மை ஊரக வளர்ச்சி வங்கி ஏற்படுத்தப்பட்டது. இவ்வங்கி மண்டல ஊரக வங்கிகள் (Regional Rural Banks-RRB), கூட்டுறவு வங்கிகள் (Co-operative Banks) போன்றவற்றிற்கு மத்திய வங்கி வழங்கும் மறுகடன் அளிக்கும் பணியையும், வேளாண்மை மறுகடன் வளர்ச்சிக் கழகத்தின் பணியையும் ஏற்றுக்கொண்டுள் ளது. மத்திய வங்கியுடன் மேற்குறிப்பிட்ட வங்கி நெருங்கிய தொடர்பைப் பெற்றுள்ளது. மேலும் மைய நிருவாகக் குழுவின் 3 அங்கத்தினர்களை இவ் வங்கியின் ஆட்சிக் குழுவிலும், மத்திய வங்கியின் உதவி ஆளுநரை (Deputy Governor) வங்கியின் ஆட் சித் தலைவராகவும் (Chairman)கொண்டுள்ளது.

**வங்கியின் நிதிநிலை:** வங்கியின் ஏற்றுக்கொள்ளப் பட்ட மூலதனம் உரு.500 கோடியாகும். செலுத்தப்

பட்ட மூலதனமாகிய உரூ.100 கோடியை 50 விழுக்காடு மத்திய அரசும், 50 விழுக்காடு மைய வங்கியும் செலுத்தியுள்ளன. நாட்டுவேளாண்மை ஊரக வளர்ச்சி வங்கி, இந்திய அரசு, உலக வங்கி இன்னும் பிற நிறுவனங்களிடமிருந்தும் நிதிபெறுகிறது. வெளி அங்காடியில் நிதி சேகரிப்பதன் மூலமும், தேசிய வேளாண்மை நீண்ட காலப் பணிகள் உறுதிப்பாடு நிதி (National Agricultural Credit for Long Term Operations and Stabilisation Fund) இவ் வங்கிக்கு மாற்றப்படுவதன்மூலமும் தனக்கு அவ்வப்பொழுது ஏற்படுகின்ற நிதித் தேவைகளைச் சமாளிக்கிறது. குறுகிய கால, சுழல் முதலுக்கான தேவைகளுக்கு முற்றிலுமாக மைய வங்கியையே சார்ந்திருக்கிறது. தேசிய வேளாண்மைக் கடன் (நீண்டகாலப் பணிகளுக்கு) நிதியாகிய உரு. 1205கோடியும், மைய வங்கியின் தேசிய வேளாண்மைக் கடன் (உறுதிப்பாடு) நிதியாகிய உரு.440 கோடியும், தேசிய ஊரகக் கடன்(நீண்டகாலப்பணிகளுக்கு), நிதிஅனைத்தும் இந்த வங்கிக்கு மாற்றப்பட்டுள்ளன. மேலே கூறிய இரண்டு நிதிகள் தவிர மைய வங்கி 1982-83-இல் தனக்குக் கிடைத்த ஆதாயத்தின் ஒரு பகுதியாகிய உரூ.300 கோடியை இவ்வங்கிக்கு மாற்றியுள்ளது. இவைதவிர இந்த வங்கிப்பத்திரங்கள், கடன் பத்திரங்கள் போன்றவற்றை வெளி அங்காடியில் விற்று நிதி சேகரிக்கிறது. பிரிட்டன், அமெரிக்கா, நெதர்லாந்து, சுவிட்சர்லாந்து, மேற்குச் செருமனி போன்ற நாடுகளிலிருந்து கடனாகவும் நிதியை இவ்வங்கி பெறுகிறது.

வங்கி தொடங்கியபோது மைய வங்கி அளித்துள்ள முன்பணம் போன்றனவும், மாநிலக் கூட்டுறவு வங்கிகள், மண்டல ஊரக வங்கிகளுக்குக் கொடுத்துள்ள உரூ. 760 கோடியும் இவ்வங்கிக்கு மாற்றம் செய்யப்பட்டன. இவைதவிர இவ்வங்கிக்கு உரூ. 1200 கோடி கடன்தொகை அளிக்க அனுமதியளித்து அதன் மூலம் மாநிலக் கூட்டுறவு வங்கி, மண்டல ஊரக வங்கிகள் போன்றவற்றிற்குக் குறுகிய காலக் கடன் அளிப்பதற்கு வழி செய்துள்ளது. இவ்வங்கி 1980-84,1984-85-ஆம் ஆண்டுகளில் கூடுதல் நிதிஉரூ. 774 கோடி, உரூ .541 கோடி திரட்டி வேளாண்மை ஊரக வளர்ச்சி நடவடிக்கைகளுக்கு அளித்துள்ளது.

**இவ்வங்கியின் பணிகள்:** இந்த வங்கி உயர் (Apex) நிறுவனமாகவும், மறுகடன் வழங்கும் நிறுவனமாகவும் இருவகைப் பணிகளை ஏற்று நடத்துகிறது. இதனுடைய உயர் நிருவாகப் பொறுப்பு மைய வங்கியிடமிருந்து பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக,வேளாண்மைக் கடனுக்கு மைய வங்கி ஏற்று நடத்திய பணிகளையெல்லாம் இப்போது இவ் வங்கி செய்துவருகிறது. அதேசமயத்தில்வேளாண்மை மறுகடன் வளர்ச்சிக் கழகம் (ARDC) செய்து வந்த பணிகளை இவ்வங்கி ஏற்று, வேளாண்மை, ஊரக வளர்ச்சிக்கு எவ்வகையான வங்கிகள், நிதி நிறுவனங்கள் கடன் வழங்குகின்றனவோ அவற்றிற்கு மறுகடன் வசதிகள் அளிக்கின்றது.

1) இந்தவங்கி (NABARD) வேளாண்மை, சிறு தொழில், குடிசை, கிராமத் தொழில்கள், கைவினைத் தொழில்கள், ஊரகத்தொழில்கள், ஊரகக் கைவினைஞர்கள் இவற்றோடு இணைந்த பொருளாதார நடவடிக்கைகளுக்கு மறுகடன் வசதி அளிப்பதன் மூலம் ஒருங்கிணைக்கப்பட்ட ஊரக வளர்ச்சியை ஊக்குவிக்க வழி செய்கிறது.

2) மாநிலக் கூட்டுறவு வங்கிகள், மண்டல ஊரக வங்கிகள், நில வளர்ச்சி வங்கிகள், மைய வங்கியால் அங்கீகாரம் பெற்ற நிதி நிறுவனங்கள் முதலானவற்றுக்குக் குறுகிய, நடுத்தர, நீண்டகாலக் கடன்களை இவ் வங்கி அளிக்கிறது.

3) இவ்வங்கி கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கங்களுக்கு மாநில அரசுகள் பங்கு மூலதனம் அளிப்பதற்கு நீண்டகாலக் கடன் அளிக்கிறது (20 ஆண்டுக் காலம்).

4) மத்திய அரசு அங்கீகாரம் பெற்ற எந்த நிறுவனத்துக்கும் அல்லது பங்கீடு முதலீடு செய்வதற்கும். வேளாண்மை, ஊரக வளர்ச்சியில் ஈடுபட்டுள்ள எந்த ஒரு நிறுவனத்தின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்வதற்கும் இவ்வங்கி நீண்டகாலக் கடன்களை அளிக்கிறது.

5) மத்திய, மாநில அரசுகள் திட்டக்குழு, சிறு தொழில் வளர்ச்சி, கிராமியக்குடிசைத் தொழில்கள், ஊரகத் தொழில்கள், மிகச்சிறிய (Tiny), பரவலான (Decentralised)துறைகளில் ஈடுபட்டுள்ள பல்வேறான அனைத்திந்திய, மாநில அரசு நிறுவனங்கள் ஆற்றி வரும் பணிகள் ஆகியவற்றை இவ்வங்கி ஒருங்கிணைப்புச் செய்து வருகின்றது.

6) மண்டல ஊரக வங்கிகள், கூட்டுறவு வங்கிகளில் தொடக்கக்கூட்டுறவு வங்கிகள் தவிரப் (Primary Co-operative Banks) பிறவற்றின் வேலைகளைச் சோதிக்கும் ஆற்றலுடையதாய் இவ்வங்கி உள்ளது.

7) வேளாண்மை, ஊரக வளர்ச்சியில் ஆராய்ச்சி ஆகியவற்றை மேற்கொள்ளவும், தனிப்பட்ட, நடவடிக்கைகளுக்கும் பலதரப்பட்ட இடங்களுக்கும் தக்க திட்டங்களை வகுக்கவும் செயற்படுத்தவும் ஆராய்ச்சி வளர்ச்சி நிதியை இவ்வங்கி ஏற்படுத்தியுள்ளது.

இவ்வங்கி (NABARD)தொடங்கப்பட்ட காலத்திலிருந்தே தனக்கெனக் கொடுக்கப்பட்ட பணிகளைச்

சிரமமின்றி நல்லமுறையில் ஏற்று நடத்திவருகிறது. 20 அமிசத் திட்டத்தின்கீழ் நலிவடைந்த பிரிவினருக்குக் கடன் கிடைக்கும்படி செய்யவும் சிறு, நடுத்தர உழவர்களுக்குக் குறுகிய காலக் கடன் அளிப்பதை வங்கிகள் கட்டாயமாக ஏற்றுக்கொள்ளச் செய்வதோடு வங்கி வட்டி விகிதத்தில் சலுகை கிடைக்கச் செய்யவும் உதவுகிறது.

குறிப்பிட்ட சில வேளாண்மைப் பணிகளுக்கு நடுத்தரக் காலக் கடன் கொடுப்பதோடு இயற்கைச் சேதங்களினால் அல்லல் படுவோருக்கு மத்திய, மாநிலக் கூட்டுறவு வங்கிகள் மூலம் குறுகிய காலக் கடன் அளிக்க அவ்வங்கிகளுக்கு உதவித்தொகையும் கொடுக்கிறது. மேலும் நீர்ப்பாசனத் திட்டங்களையும், வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்குத்தேவையான திட்டங்களையும் இவ்வங்கி(NABARD)செயற்படுத்தியுள்ளது.

கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கங்களுக்கு மாநில அரசுகள் பங்கு மூலதனம் செய்வதற்கு 1984-85-இல் உரூ.7 கோடி அனுமதித்துள்ளது. வேளாண்மை மறுகடன் வளர்ச்சிக் கழகத்தினிடம் வணிக வங்கிகள் தொடர்ந்து 60 விழுக்காடு மறுகடன் வசதியைப் பயன்படுத்தின. அதனைத் தொடர்ந்து மாநில வள வங்கிகள் 54 விழுக்காடும், மாநிலக் கூட்டுறவு வங்கிகள் 6 விழுக்காடும் கடன் வழங்கின. வேளாண்மை மறுகடன் வளர்ச்சிக் கழகத்தைப் போலவே இவ்வங்கியும்(NABARD)வேளாண்மைத் துறையிலும், நலிவுற்ற பகுதிகளிலும், வங்கி வளர்ச்சி குறைவான பகுதிகளிலும் முதலீடு வளர்ச்சி ஏற்படுவதற்கு உத்தரப்பிரதேசம், பீகார், மத்தியபிரதேசம், இராசசுத்தான். ஒரிசா போன்ற மாநிலங்களிலும் பெரும்பான்மையான நன்மைகள் உண்டாவதற்குத் தொடர்ந்து முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இவ்வங்கி (NABARD), நாட்டின் கூட்டுறவுத் துறையை மாற்றியமைத்துச் சீரடையச் செய்வதில் தீவிரமான முயற்சியில் ஈடுபட்டுள்ளது. தொடக்க வேளாண்மைக் கடன் வழங்கும் சங்கங்களைச் சீர்திருத்திக் கூட்டுறவு அமைப்பில் உறுதியினைச் செயற்படுத்தத் திட்டம் மேற்கொண்டுள்ளது. அதன்படி சில மாநிலங்கள் தவிரப் (குசராத்து, மகாராட்டிரம், சம்மு, காசுமீரம்) பிற மாநிலங்களில் வெற்றி கண்டுள்ளது. படிப்படியாகக் கூட்டுறவுக் கடன் வங்கிகளின் செயல்களை நெறிப்படுத்த வழிமுறைகளைக் குறிப்பிட்டுள்ளது. கூட்டுறவுக் கடன் வங்கிகளில் காணப்படும் உயர்பட்ச நீண்டகாலக் கடனைத் திரும்பச் செலுத்தாமை, தேவையான நிதிப் பற்றாக்குறை, பயிற்சி பெறாத ஊழியர்கள், தகுதியற்ற நிருவாகம் போன்ற சீர்கேடுகளை நெறிப்படுத்த இவ்வங்கி திட்டமிட்டுள்ளது. மாநில நிலவள வங்கிகளின் நிருவாகம், அமைப்புப் போன்றவற்றைத் திறமையுடன் செயற்படுத்த உதவியும் பீகார், குசராத்து, கருநாடகம், மத்தியபிரதேசம், மகாராட்டிரம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களிலுள்ள நில வளர்ச்சி வங்கிகளை மறுவாழ்வுத் திட்டங்களுக்குள் கொண்டுவரவும் இவ் வங்கி முயற்சிகள் எடுத்துள்ளது.

வேளாண்மை, வேளாண்மையைச் சார்ந்த பணிகள் ஆகியவற்றிற்குக் கடன் வழங்குவதோடு பிற வகைப் பணிகளுக்காகச் சுழல் முதல், மொத்த முதல் போன்ற தேவைகளையும் இவ்வங்கி நிறைவு செய்கிறது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள், கைத்தறி நெசவாளர் சங்கங்கள், ஒப்புதல் பெற்ற 22 விரிவான அமைப்பைக்கொண்ட குடிசைச் சிறு தொழில்கள், தொழில் கூட்டுறவுச் சங்கங்கள், நெசவாளர்கள், கைவினைஞர்கள் போன்றவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட கிராமக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அவற்றின் உற்பத்தி, விநியோகம் போன்ற பணிகளை ஏற்று நடத்தக் குறுகிய காலக் கடனாக வழங்கியுள்ளது.

இவ்வங்கி (NABARD) 1985-சூன்திங்களில் மண்டல ஊரக வளர்ச்சி வங்கிகளின் (Regional Rural Banks RRB's) நுட்ப, வழிகாட்டும், மதிப்பிடும் குழுக்கள் (Technical Monitoring and Evaluation Cells-TME) அமைப்பதற்கும், அவற்றின் பணிகளை உறுதிப்படுத்தவும் தேவையான பணஉதவி அளித்துள்ளது. வங்கியின் ஆராய்ச்சி வளர்ச்சி நிதி, 1985-இல் 11மாகாண நில வளர்ச்சி வங்கிகளுக்கும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கும் தேவையான அளவு ஒதுக்கப்பட்டுள்ளது. பலவகையான நிறுவனங்களும் ஆராய்ச்சியை மேற்கொள்ளவும், நுட்ப, வழிகாட்டும், மதிப்பிடும் குழுக்களை மாநில நிலவள வங்கிகளிலும் மண்டல ஊரக வங்கிகளிலும் ஏற்படுத்தி அவற்றை உறுதிப்படுத்துவதுபற்றிய விவாதங்களை நடத்தவும் 1984-85-இல் உரூ. 22.1 இலட்சம் பட்டுவாடா செய்துள்ளது. இது 1985 முதல் 34 ஆராய்ச்சித் திட்டங்களுக்கு ஒப்புதல் அளித்துள்ளது.

**வைப்புக்கடன் போன்றவற்றில் இவ்வங்கி கையாளும் முறைகள்:** கூட்டுறவு வங்கிகளின் பொதுவைப்பு வட்டி வீதத்தில் மாற்றம் கொண்டு வாராமல், புதிய ஐந்து ஆண்டு அல்லது அதற்கு மேற்பட்ட காலவைப்பைப் புதிதாக அக்டோபர், 1982-இல் ஏற்படுத்தி ஆண்டிற்கு 11 விழுக்காடு வட்டி அளிப்பதற்கு முயற்சி மேற்கொண்டுள்ளது. மாநில, மத்திய கூட்டுறவு வங்கிகளின் வைப்புத் தொகைகளுக்கு $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$

விழுக்காடு குறிப்பிட்ட வட்டிக்குமேல் கூடுதலாக வட்டியளிக்க அனுமதிக்கப்பட்டுள்ளது.

வணிக வங்கிகளின் கடன்மீது சுமத்துகின்ற வட்டி விதத்தில் 1985 ஏப்பிரலில்மாற்றம் ஏற்பட்டபொழுது மாநில, மத்திய கூட்டுறவு வங்கிகள் அளித்த கடன் மீது சுமத்தும் உயர்ந்த அளவு வட்டிவீதம் 20 விழுக்காட்டிலிருந்து 18 விழுக்காடாகக் குறைக்கப்பட்டது. மறுகடன்மீது 7 விழுக்காடும் கடைசியாகக் கடன் ஏற்போரிடமிருந்து 10 விழுக்காடும் வசூலிக்கப்பட்டது. இன்னும் சிலவகை மறுகடன்கள்மீது 8 விழுக்காடும், கடைசியில் கடனை ஏற்போர்மீது 13 விழுக்காடு வட்டியும் குறிக்கப் படவேண்டும் என்று வரையறை செய்தது. வெவ்வேறான பணிகளுக்கு வெவ்வேறான கடன் வட்டிவீதங்கள் குறிக்கப்பட்டன. 10 முதல் 17 விழுக்காடு வரை உயர்ந்த அளவு வட்டியாகவும், 18 விழுக்காடு வட்டி வேளாண்மையற்ற பணிகளுக்காக வாங்கும் கடன்மீதும் விதிக்கப்பட்டது.

வேளாண்மை நடவடிக்கைகளை ஊக்குவிப்பதற்காக இவ்வங்கியிலிருந்து (NABARD) பெற்ற கடன் மறுகடன் பெறும் சலுகையை 80 விழுக்காட்டிலிருந்து 95 விழுக்காடு வரை உயர்த்தியுள்ளது. இறுதிப்பயன் பெறுவோர் மறுகடன்மீது செலுத்தவேண்டிய வட்டி வீதம் 10 விழுக்காடு சிறு உழவர்களுக்கும் 13 விழுக்காடு பிற உழவர்களுக்கும் குறிக்கப் படவேண்டும் என்றும், முதலில் மறுகடன் 7 விழுக்காடுடின், 8 விழுக்காடு என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

இவ்வங்கி, மைய வங்கியின் உத்தரவாதம், வேளாண்மை மறுகடன் வளர்ச்சிக் கழகத்தின் (ARDC) பணிகள் ஆகியவற்றை ஏற்று மொத்த ஊரகக் கடன் திட்டத்தை மேற்பார்வையிடும் பணியில் ஈடுபட்டுள்ளது. இவ் வங்கியிடமிருந்து வேளாண்மைக் கடன், வேளாண்மை முன்னேற்றம், ஊரக வளர்ச்சி போன்ற துறைகளை மேம்படுத்தும் பணியினை மிகுதியாக நாடு எதிர்பார்க்கிறது. க.சொ.

**துணை நூல்கள்:**

Misra,S. K ,Puri,V.K., Indian Economy, Himalayan Publishing House, Delhi, 1986.

Reserve Bank of India Report on Trend and Progress of Banking in India, 1884-85, PP. 156-188.

**நாடகக் கணிகை:** கணிகை என்னுஞ் சொல் பொது மகள் எனப் பொருள்படும். நாடகக் கணிகை என்பதற்கு, நாட்டியப் பெண், நடிகை எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. அவர்கள் நாட்டியக் கலையைப் பயின்று அக்கலைத் தொண்டிற்காகத் தம்மை ஆட்படுத்திக் கொண்டவராவர். அதனால் மணம் புரிந்து இல் வாழ்க்கை மேற் கொள்ளாதவர்களாகவும் அவர்கள் இருந்துள்ளனர். அரசர்களால் ஆதரிக்கப் பெற்ற அவர்கள், இசை, நாட்டியம் முதலிய நுண் கலைகளைப் போற்றும் ஒரு குலமாகவே வந்துள்ளனர். சமய மறுமலர்ச்சி தோன்றி, அவர்களின் தொண்டு திருக்கோயில்களில் இடம் பெற்ற பின்னர், அவர் பதியிலார் எனவும் குறிப்பிடப் பெற்றனர்.

நாடகக் கணிகை பற்றிய செய்திகளைச் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்கள் நன்கு விளக்கியுள்ளன. சிலப்பதிகாரக் காப்பியத் தலைமாந்தர்களுள் ஒருத்தியாகவும், மணிமேகலைக் காப்பியத்தின் காப்பியத் தலைவியாகவும் நாடகக் கணிகையர் அமைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

நாடகக் கணிகை, ஆடல், பாடல், அழகு என்னும் மூன்றிலும் குறைவுபடாது விளங்குதல் வேண்டும் என்பதனை, 'ஆடலும் பாடலும் அழகும் என்றிக் கூறிய மூன்றின் ஒன்று குறைபடாமல்' என்று (சிலப். அரங். 3,8,9) இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். இம் மூன்றிலும் சிறந்து விளங்குதற்கு வாய்ப்பாய்க் கணிகையர் குலத்துத் தோன்றி ஐந்து வயது நிரம்பிய சிறுமிக்கு, ஆடல் இசை முதலிய கலைப் பயிற்சி அளிப்பர். ஏழாண்டுப் பயிற்சியால் அக்கலைகளில் தேர்ச்சி மிகுந்து விளங்கும் பன்னிரு வயதுடைய அப்பருவ மங்கையின் கலைச் சிறப்பினை உலகிற்கறிவித்தல் வேண்டி அரசன் முன்னிலையில் அரங்கேற்றம் நடைபெறச் செய்வர். ஆடல் பாடல் கலை வல்ல அவளுக்கு அரசன் தலைக்கோல் பட்டமும் மாலையும் அளித்துச் சிறப்புச் செய்வான். சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் மாதவி இவ்வாறு சிறப்புப் பெற்ற நாடகக் கணிகையாவாள். ஆனால், அவள் மாலை வாங்கியதன் மூலம் தன்னை அடையும் உரிமை பெற்ற கோவலனைக் கணவனைப் போலவே கொண்டு ஒருமை மகளாக மணிமேகலையின் தாயாக விளங்கினாள்.

தலைக்கோல் சிறப்புப் பெற்று ஆடி முதிர்ந்த பெண்கள் 'தோரிய மடந்தையர்' எனப் பெற்று, ஆடுவோருக்குப் பாட்டிசைக்கும் பணி மேற்கொள்வர். அவரை 'வாரம்பாடும் தோரிய மடந்தையர்' என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. பூம்புகார் நகரில் நாடகக் கணிகையர் வாழும் ஒரு தெரு இருந்தமை, பலவகைப் பட்ட கணிகையரின் தன்மை போன்ற கணிகையர் தொடர்பான செய்திகளைச் சிலம்பும் மேகலையும் குறிப்பிடுகின்றன.

நாடகக் கணிகையர் மரபில் தோன்றிய சித்திராபதி அவள் மகள் மாதவி, அவள் மகள் மணிமேகலை

ஆகிய மூவரைப் பற்றியும் மணிமேகலைக் காப்பியம் கூறுகிறது. சித்திராபதியின் கூற்றிலிருந்து கணிகையரின் வாழ்க்கை பொருள் விரும்பும் பொருட் பெண்டிர் வாழ்வாக-பொது மகள் வாழ்வாக இருந்தமை அறியப்படுகிறது. அந்தச் சமுதாயச் சூழலை மாற்றிக் காட்ட விரும்பிய சாத்தனாரும் இளங்கோவடிகளும் தத்தம் காப்பியங்களில் நாடகக் கணிகையரைக் காப்பியத் தலைமாந்தராகப் படைத்துள்ளனர்.

அ.மா.ப.

*நாடகக்காப்பியம்*: காண்க: சிலப்பதிகாரம்.

**நாடகப் பாங்கு** என்பது ஒருவர் அவர் இடம் பெறும் எந்த ஓர் அமைப்பிலும் ஒரு பங்கினை ஏற்றுச் செயற்படுவதாகும். எந்தப் பங்கினை ஏற்றுச் செயற்படுகின்றாரோ அப்பங்கின் தன்மைக்கேற்பத் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்வதாகும். நாடகப்பாங்கு (Role Play). என்பதனை முதன்முதலில் அறிமுகப்படுத்தியவர் மீடு (G.H.Mead) ஆவார். பல துறைகளில் இன்று ஆளுமையையும் சமூகத்தையும் தத்துவ அடிப்படையில் பகுத்தறிய இதனைக் கருவியாகப் பயன்படுத்துகின்றனர்.

இது குழுவில் அல்லது நிறுவனத்தில் தனிப்பட்டவருடைய பங்கு அல்லது செயலைக் குறிப்பதாகும். இச் செயல்மூலம் அல்லது இந்நடத்தையின் மூலம் ஒருவனுடைய பண்பினை அல்லது எதிர்பார்க்கும் நடத்தையை அறியலாம். இச் செயல்களோ நடத்தைகளோ காரண காரியத் தொடர்பு உடையனவாக இருக்கும். மேலும் இறந்தகால நிகழ்ச்சி பெரிதும் நடத்தையில் பங்கு கொள்ளும். இவ்வடிப் படையில் நிகழ்கால நடத்தைக்குரிய காரணம் அறியலாம். உள மருத்துவத் துறையில் தனிப்பட்டவருக்கு ஏற்பட்ட உளப்பிறழ் நிலையை அறிவதற்கு நாடகப்பாங்கு மிகச்சாதாரணமாகப் பயன்படுகிறது. இது உளவியல் கோட்பாடுகளின் அடிப்படையிலும், உளவியல் செயல் முறையின் பிரதிபலிப்பு என்ற முறையிலும் அமைந்துள்ளது.

நாடகப்பாங்கு மருத்துவத்துறையில் மனநோய் மருத்துவர், பேச்சு மூலம் மனநோயாளியைத் தன்னுடைய மனவெழுச்சி, உணர்ச்சி ஆகியவைகளை வெளியிடச் செய்து மனஇறுக்கத்தைக் குறைக்கிறார். மனநோய் மருத்துவர் மனநோய் உடையவர்களை அவர்களுக்கேற்ற பாத்திரங்களைச் சோதனைமூலம் நிருணயம்செய்து அதனை அளித்துச் சிறு குழு விவாதமாகவோ, கலந்துரையாடலாகவோ, நாடகமாகவோ அமைத்துத் தங்கள் உள்ளக் கிடக்கைகளை வெளியிட ஏற்பாடு செய்கிறார். அதனால் மனநோய் உடையவர்களிடம் பொருத்தப்பாடு இன்மை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைக்கப் படுகிறது. மேலும், மனநலம் பெறப் பெரிதும் பயன் படுகிறது. இயல்பான நிலையிலுள்ள குழந்தைகளின் வாழ்க்கைச் சிக்கல்களையறிய இம்முறை பெரிதும் பயன்படுகிறது.

அடுத்து இந்த நாடகப்பாங்கு, ஒழுக்க மேம்பாட்டிற்காக ஆள்மாறாட்டம் செய்து, ஒருவர் உயர்ந்த பண்பாளரைப் போல் அல்லது மக்கள் மிக்க ஈடுபாடு கொண்டுள்ள பண்பாளரைப்போல் வேடம்தாங்கிச் சிறந்த பண்புகளை வெளியிடுவதன்மூலம் மாணவர்களிடமும், மக்களிடமும் நற்பண்புகளைத் தோற்றுவிக்கிறது. கல்வித்துறையில் மாணவர்களைப் பண்பாளராக ஆக்க ஆசிரியருக்கு இது மிகவும் பயன்படுகிறது.

வணிகத்துறையில் இம்முறை மூலம்தான் பொருள் விற்பவருக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. ஒரு பொருள் விற்பவர் வாங்குபவரிடம் எவ்வாறு பேசவேண்டும், பழகவேண்டும், பொருளைப் பற்றிய கருத்துகளைச் செம்மையாகத் தெரிவித்துப் பொருளை வாங்க எவ்வாறு இணங்கச் செய்யவேண்டும் என்பவற்றிற்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இம்முறை மூலம் நல்ல விற்பனையாளரை உருவாக்க முடிகிறது.

தொழிற்சாலையில் தலைமைப் பொறுப்பு ஏற்பவர்களுக்கு நாடகப்பாங்கு மூலம்தான் பயிற்சி அளிக்கப்படுகிறது. 'ஒரு தலைவர், தம்கீழ்ப் பணிபுரியும் தொழிலாளரிடமும், மேற்பார்வையாளரிடமும், உயர் அதிகாரியிடமும் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்' என்பதற்கு மூத்த அனுபவம் வாய்ந்த தலைவர்கள் நாடகப்பாங்கு மூலம் பொறுப்பேற்கும் தலைவர்களுக்குப் பயிற்சி கொடுக்கின்றனர். இம்முறையால் நிரம்ப எழுத்தறிவு இல்லாதவர்கள்கூட கருத்துகளை எளிதில் அறிந்துகொள்ள முடியும்.

தேர்தல் நடத்தும் காலங்களில் தேர்தல் நடத்தும் பல அலுவலர்களும் வாக்கு அளிப்பவர்களும் உண்மை நிலையில் எவ்வாறு செயற்பட வேண்டும் என்பதைத் தேர்தல் பொறுப்பாளர்கள் நாடகப்பாஙகு மூலம் தான் அறிவிக்கிறார்கள். எளிதில் புரியாத கருத்துகளைக்கூட அனைவருக்கும் இம்முறை மூலம் எளிதில் புரியச்செய்யலாம்.

அறிவியல் துறைகளில் பயிற்றுநர் மாணவர்களுக்குச் சோதனைகள் அனைத்தையும் நாடகப் பாங்கு முறையில்தான் செய்துகாட்டுகின்றனர். அறிவியல் பரிசோதனை ஒன்றினை மாணவர்கள் எவ்வாறு செய்யவேண்டுமென்பதை மாணவர் செய்ய வேண்டிய முறையில் அவர்கள் செய்வதுபோலவேய

பயிற்றுநர் செய்துகாட்டுவது நாடகப்பாங்குக்கு எடுத்துக்காட்டாகும்.

பொதுவாகக் கூறுமிடத்தில் எதனை ஒருவர் கற்றுக்கொள்ள வேண்டுமானாலும் அவர் செய்கிறது போல் அல்லது அவர் செய்யவேண்டியதுபோல் மற்றொருவர் செய்துகாட்டிக் கற்பிப்பது நாடகப்பாங்கு எனப் படும்.

ஒருவருடைய ஆளுமையை அறியவும், ஆளுமை வளர்ச்சியை அறியவும் நாடகப்பாங்கு பெரிதும் பயன் படும். உளவியல் துறை, நடத்தை ஆய்வில் நாடகப் பாங்கு உற்றுநோக்கும் ஆய்வுக் கருவியாகவும், பரிசோதனை முறையாகவும் பயன்படுத்தப்படுகிறது. இது இரண்டு அல்லது மூன்று பேர்கள் குறிப்பிட்ட தன் சார்ந்த அல்லது சமூகம் சார்ந்த பாத்திரம் ஏற்றுச் சுருக்கமாக 3 முதல் 20 நிமிடத்திற்குள் நடிப்பதுமூலம் தங்கள் கருத்துகளை அல்லது பாத்திரத்திற்கேற்ற கருத்துகளை வெளியிடுவதாகும். இத்தகைய குழுவில் இடைவினை புரிவதைக் கொண்டு ஒருவருடைய நடத்தையை நன்கு அறியப் பயன் படுத்தப்பட்டது. சாதாரணச் சூழ்நிலையில் நாடகப் பாங்கினை ஏற்று நடிப்பவருடைய மனப்பான்மை, மன வருத்தம், விருப்பு, வெறுப்பு, தேவை, ஊக்கிகள் போன்றவற்றைச் சமூகச் சூழ்நிலையில் ஏற்படும் சக்தியினைக் கொண்டு கண்டறிய ஏதுவாக உள்ளது.

பள்ளியில் ஆசிரியர்-மாணாக்கர் போல் இரு மாணவர்களை வேடம் தாங்கச் செய்து பயிற்சியளித்து மாணவர்களுக்கு அளிக்கவேண்டிய நற்கருத்துகளை இவர்கள் வாயிலாக அளிப்பதும் நாடகப்பாங்கினை விளக்கும் கருத்தாகும். இதில் நடிக்கும் மாணவர்கள் எதனைப் பேசவேண்டும், எப்படிப் பேசவேண்டும் என்பதற்குரிய சிறப்பு அறிவுரைகள் வழங்கப்படும். இதில் கட்டுப்படுத்தப்பட்ட நடைமுறைகளும் அமைப்பு முறைகளும் உள்ளன. வை.ந.

***நாடகம்***: நாடகம் ஒரு சிறந்த கலை; நாட்டின் அறிவுச் செல்வம்; பொதுமக்களின் பல்கலைக் கழகம்; உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்தி அன்பையும் அறிவையும் புகட்டி மக்களைப் பண்படுத்தும் உயர் கலை. அவ்வக் கால நிலையை எதிரொலிக்கும் காலக் கண்ணாடி.

நாடகம் என்ற சொல்லின் பொருள் பலவாறு உணர்த்தப்படுகிறது. நாடகம்: நாடு + அகம் -நாட்டை அகத்தில் கொண்டது. நாட்டின் சென்ற காலத்தையும், நிகழ் காலத்தையும், வருங்காலத்தையும் தன்னகத்தே காட்டுவது நாடகம். இத்தொடர் அகம் - நாடு என்றாகி ‘உன்னுள் நோக்கு; உன்னை உணர்’ என்ற கருத்தினை உணர்த்தும். ‘நாடு அகம் -அதாவது அகம் நாடும்-உள்ளம் நாடும் கலை நாடகம். காண்போர் உள்ளத்தைக் கவர்ந்து கொள்ளும் ஆற்றல்வாய்ந்தது நாடகம் ‘நடம்’ என்பதே நடனம். அதுவே நாடகம் என்று கொள்ளப்பட்டிருக்க வேண்டும். நடனம் என்பது அசைதல் எனப் பொருள்படும். நட்டு என்ற அடிச்சொல்லிலிருந்தே நாடகம் தோன்றியது என்பர்.

**நாடகங்களின் தோற்றம்:** தமிழில் நாடகம் தோன்றிய காலம் பற்றித் தெளிவாக அறியப்படவில்லை. அதன் வளர்ச்சி பற்றிய செய்திகளே அறியப் படுகின்றன. உலகமெங்கிலும் நடனத்திலிருந்தே நாடகம் தோன்றியிருக்க வேண்டுமென என்றி வெல்சு என்னும் மேனாட்டறிஞர் கருதுகின்றார்.

சமயத் தொடர்பாக நிகழ்த்தப்பட்ட ஆடல் பாடல்களே நாடகத்தின் அடிப்படைகளாகும். அவை காலப் போக்கில் கதை தழுவிய கூத்தாக முகிழ்த்துப் பிற்காலத்தில் முழுமையான நாடகமாக மலர்ந்தன. கூத்தின் மறுமலர்ச்சியே நாடகம். கால ஓட்டமும், அறிவுப் பெருக்கமும் கலை உணர்வின் வளர்ச்சியும் பல மாற்றங்களையும் ஏற்றங்களையும் கொடுக்கவே நாடகக்கலை நல்ல முறையில் வளர்ந்தது.

ஒரு பொருளின் செய்கை போலச் செய்யப்படும் பிறிதொரு செய்கையும் ஒருவகை நாடகமே.

தமிழில் நாடக நூல்கள் கி.மு.3-ஆம் நூற்றாண்டிலாதல், அதற்கு முற்பட்டாதல் தோன்றியிருக்க வேண்டும் என்பர் நாடக இயல் அறிஞர் வி.கோ.சூரிய நாராயண சாத்திரியார். தமிழ் நாடகத்தின் தொடக்கம் கி.பி.5-ஆம் நூற்றாண்டு என்பர் வையாபுரிப் பிள்ளை.

நாடகம் என்ற சொல்லை முதன் முதலில் வழங்கியவர் தொல்காப்பியர். ‘நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும், பாடல் சான்ற புலனெறி வழக்கம்’ என்பது தொல்காப்பியம். ‘நாடக வழக்கு’ எனக் குறித்த தொல்காப்பியர் அது பற்றிய எவ்வித விளக்கமும் தரவில்லை. நாடகம் என்பது பழங்காலத்தில் ‘நடனம்’ என்ற பொருளில் வழங்கியது. பழங்கால ஆடல்கள் ‘கூத்து’ என்ற சொல்லால் குறிக்கப்பட்டன. தொடக்கக்காலக் கூத்துகள் கதை தழுவிய நாடகமாக வளர்ச்சியுற்றன. கம்பராமாயணத்தில், ‘பரத நூன்முறை நாடகம் பயனுறப் பகுப்பன்’ என வருவதால் அக்காலத்தில் பரத முனிவரின் நாட்டிய நூல் முறையில் நாடகங்கள் இருந்தன எனத் தெரிகிறது. எனவே, நடனங்களின் மறுமலர்ச்சியே நாடகம் என்பது திண்ணம்.

**கூத்த நூல்:** சென்னை இசை நாடக மன்றம் 1967-இல் யோகியாரின் விளக்கவுரையுடன் கூத்த

நூல் ஒன்றை வெளியிட்டுள்ளது. சாத்தனார் என்பவரால் எழுதப்பட்டு மறைந்து போன கூத்த நூலுடன் இதனைத் தொடர்புபடுத்திப் பேசுகின்றனர். நடனம், இசை, நாடகம் ஆகிய முத்தொகுதியான கலைகளை விளக்கும் தனித் தன்மை பெற்றது கூத்த நூல். இது ஒன்பது பகுதிகளாக அமைந்துள்ளது; நடனம், இசை, நாடகம் ஆகிய வற்றின் தொடக்கம், அரங்கக் கலை ஆகியவை பற்றி ஆய்கின்றது.

**பண்டைக் கூத்துகள்:** பண்டைக் காலத்தில் தெய்வ வழிபாடு காரணமாகவும், வீரர்களின் வெற்றியைக் கொண்டாடவும் பலவகைக் கூத்துகள் நிகழ்த்தப்பட்டன. குரவைக் கூத்து, வெறியாடல், துணங்கைக் கூத்து, வள்ளிக் கூத்து, கயிற்றாடல், சாக்கைக் கூத்து, சாந்திக் கூத்து, விநோதக் கூத்து, தோற்பாவைக் கூத்து, வென்றிக் கூத்து, வசைக் கூத்து முதலியன குறிப்பிடத் தக்கவை.

குரவை, வெறி, துணங்கை, வள்ளி, சாக்கை முதலிய கூத்துகள் தெய்வ வழிபாட்டுத் தொடர்பானவை. போர் நடனம், வென்றிக் கூத்து, விநோதக் கூத்து போன்றவை போர் வெற்றியையும், மகிழ்ச்சியையும் கொண்டாடுவதற்கு ஆடப்பட்டவை.

தோற்பாவைக் கூத்து, நிழற்பாவைக் கூத்துப் போன்றவை கதை தழுவியன. வள்ளுவர் காலத்தில் கூத்தாட்டம் சிறப்புற்றிருந்தது. 'கூத்தாட்டவை' பற்றித் திருக்குறள் கூறுகின்றது. சமூகத்தை எள்ளி ஆடும் ஒருவகைக் கூத்து 'வசைக் கூத்து' எனப்பட்டது. பலவகைக் கூத்துகள் பற்றிகி.பி. 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அடியார்க்கு நல்லார் உரையால் அறியமுடிகின்றது.

**தெருக்கூத்து:** தெருக்களில் அல்லது திறந்த வெளிகளில் ஆடப்படும் கூத்து தெருக்கூத்து. பண்டைக் கால ஆட்டங்களின் வளர்ச்சி நிலையே தெருக்கூத்து. 'கூத்தர்' என்னும் பிரிவினர் பண்டைக் காலத்தில் வாழ்ந்தனர். கூத்துக் கலையில் வல்ல முது கூத்தனார், மதுரைத் தமிழ்க் கூத்தனார் போன்ற புலவர்கள் பண்டு வாழ்ந்தனர்.

மேடை அலங்காரங்கள் இன்றித் தெருக்கூத்துகள் வயல் வெளிகளில் ஆடலும் பாடலுமாய் நடந்து வந்தன. அவை இரவு பத்து மணிக்குத் தொடங்கி விடிய விடிய நடக்கும். தொடர்ந்து நாலைந்து நாள்களுக்கு நடக்கும் கூத்துகளும் உண்டு. நடிகர்கள் தாங்களே தங்கள் செயல்களை விளக்கிப் பேசிக் கொள்வர். இசைப்பெட்டி (Harmonium) போன்ற பக்க வாத்தியங்கள் மேடையிலேயே இருக்கும். நடிகன் பாடுவதைப் பக்க வாத்தியப் பாடகர் திருப்பிப் பாடுவார். நடிப்பை விட இசையே முதன்மை பெற்றிருக்கும். தெருக்கூத்துகள் வரவர மறைந்து நாடகங்களாக மாறிவிட்டன.

**நாடக இயல்:** பழந் தமிழ் நாடக நூல்களோ, நாடக இலக்கணம் கூறும் நூல்களோ கிடைத்தில. ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் நாடகத் துறை பற்றிக் கூறும் முறுவல், சயந்தம், செயிற்றியம், குணநூல், பரதம் போன்ற பல நூல்கள் இருந்தன என அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் சுட்டுகின்றார்.

தமிழில் நாடக இலக்கணம் கூறும் நூல் இல்லாக் குறையைப் போக்குவதற்காகப் பரிதிமாற் கலைஞன் என்னும் வி.கோ.சூரியநாராயண சாத்திரியார் 'நாடக இயல்' எனும் ஒரு சிறந்த நூலை கி.பி 1897-இல் எழுதி வெளியிட்டார். அது நாடகத் துறையின் பல்வேறு இலக்கணங்களை வகுத்துரைக்கின்றது. நடிகர் இயல்பு, நடிப்பின் தன்மை, அரங்க அமைப்புப் போன்றவற்றின் இலக்கணங்களை நூற்பா வடிவில் கூறுகின்றது. தமிழுக்கு இன்றைய நிலையில் அதுவே சிறந்த நாடக இலக்கண நூல் என்பது அறிஞரின் கணிப்பு.

**மதங்க சூளாமணி:** தவத்திரு விபுலானந்த அடிகள் மதங்க சூளாமணி என்னும் தமிழ் நாடக இலக்கண நூலை இயற்றினார். நாடகத்தைப் பற்றி எளிதாக அறிவதற்கு இந்நூல் உதவுகிறது. அடியார்க்கு நல்லார் உரைபோன்ற அமைப்பிலும், வடமொழி நாடக இலக்கண முறையிலும் அமைந்துள்ளது மதங்க சூளாமணி.

**சாகுந்தல நாடக ஆராய்ச்சி:** மறைமலை அடிகளார் தாம் மொழிபெயர்த்த சாகுந்தல நாடகத்தின் முன்னுரையாக எழுதியுள்ள பகுதி சாகுந்தல நாடக ஆராய்ச்சி. இது தமிழ் நாடக உலகுக்குப் பயன் தரும் நூல். நாடகம் எழுதும்போதும் நடிக்கும் போதும் ஏற்படும் பல சிக்கல்களுக்கு இந்நூல் தீர்வு காணுகிறது.

**நாடகத் தமிழ்:** நாடகப் பேராசிரியர் பம்மல் சம்பந்தனார் எழுதிய சிறந்த நூல் 'நாடகத் தமிழ்'. இது பழந்தமிழ் நூல்களை ஆராய்ந்து எழுதப்பட்டது. நாடகத் தமிழ் பற்றிய நுணுக்கங்கள் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளன. இப்போது கிடைக்கும் நாடக இலக்கண நூல்கள் இந்நான்குமேயாம்.

**நாடக வகைகள்:** நாடகம் பலவகைப்படும். எனினும் அவற்றை மூன்று வகையுள் அடக்கலாம் என அறிஞர் வரையறுப்பர். அவை படிப்பதற்குரிய நாடகம், நடிப்பதற்குரிய நாடகம், படிப்பதற்கும் நடிப்பதற்கும் உரிய நாடகம் என்பன. இவையன்றிப் பாடுவதற்கான நாடகமும் உண்டு என்பர் கு.அழகிரி

சாமி. சீர்காழி அருணாசலக்கவிராயர் எழுதிய இராம நாடகம்,கோபால கிருட்டிண பாரதியாரின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை போன்றவை பாடும் நாடகங்கள்.

அன்று முதல் இன்று வரை தோன்றியுள்ள நாடகங்களைப் பின்வரும் பத்து வகைகளில் அடக்கலாம். 1) தெருக் கூத்து, 2) மேடை நாடகம், 3) சிறப்பு நாடகம், 4) செய்யுள் நாடகம், 5) நாட்டிய நாடகம், 6) இசை நாடகம், 7) உரை நடை நாடகம், 8) ஓரங்க நாடகம், 9) வானொலி நாடகம், 10) தொலைக் காட்சி நாடகம்.

**தொடக்கக்கால நாடகங்கள்:** தமிழக வரலாற்றாசிரியர்கள் களப்பிரரின் ஆட்சிக் காலத்தை இருண்ட காலம் எனக் குறிப்பர். தமிழ் நாடகக் கலையின் கால வரலாற்றில் சிலப்பதிகாரத்திற்குப் பின் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு முடிய 'இருட்காலம்' என்றே கூறலாம். ஓரளவு முழுமை பெற்ற நாடகங்களைக் கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தான் காண முடிகிறது. அகத்தியம் முதல் சிலப்பதிகாரம் வரை நாடகக் கலையின் முதற் காலக்கட்டம். நொண்டி நாடகம், பள்ளு, குறவஞ்சி நாடகங்கள் தோன்றிய காலம் இடைக்கால கட்டம். மனோன்மணீயம் இயற்றிய சுந்தரம் பிள்ளை முதல் மானவிசயம் இயற்றிய பரிதிமாற்கலைஞர், பம்மல் சம்பந்தனார், சங்கரதாசர், சதாவதானம் கிருட்டிண சாமிப் பாவலர் வரை தோன்றியுள்ள நாடகங்களும் இக் காலத்தே தோன்றிய மறுமலர்ச்சி நாடகங்களும் கொண்ட காலக்கட்டம் வரை நாடகக் கலையின் இறுதிக்காலக்கட்டம் என ஆய்வாளர் பகுப்பர்.

இவ்வகையில் இடைக்காலத்தனவாகிய நொண்டி நாடகம், பள்ளு நாடகம், குறவஞ்சி நாடகம் என்பனவே தமிழில் முதன் முதல் தோன்றிய நாடக வகைகள் ஆம். நொண்டி நாடகம்: நொண்டி ஒருவன் மேடையில் தோன்றித் தன் வரலாற்றைத் தானே கூறி நடிப்பது. பள்ளு நாடகம்: பள்ளர்களாகிய உழவர்களின் வாழ்க்கையைச் சுவைபடக் கூறுவது. குறவஞ்சி நாடகம்: மலைவாணராகிய சிங்கன்-சிங்கி ஊடலையும்,குறி கேட்கும் அழகி ஒருத்தியின் காதல் உணர்வையும் சித்திரிப்பது. கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் இவை மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தன.

**நாடகக் கலை புத்துயிர் பெற்ற காலம்:** இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் அரை நூற்றாண்டுக் காலம் நாடகக்கலை புத்துயிர் பெற்ற காலம் எனலாம். வடநாட்டிலிருந்து தமிழகத்திற்கு வந்து உயர்ந்த காட்சி அமைப்புகளோடுநாடகங்களை நடத்தி வெற்றி கண்ட பார்சி நாடகக் குழு (Parsy Company)கிருட்டிணமாச்சார்லுவின் தெலுங்கு நாடகக்குழுஆகியவற்றின் தாக்கங்கள்தமிழ் நாடகஅமைப்புக்குப்புத்துணர்ச்சி தந்தன.தமிழ்நாடகக்கலைஞர்கள் ஆர்வம் தூண்டப் பெற்றுப் பல்வேறு நாடகக் குழுக்களை நிறுவினர். பெரிய நகரங்களிலிருந்து சிற்றூர் வரை மேடை நாடகங்கள் நடக்கத் தொடங்கின. ஆண்களும் பெண்களும் போட்டியிட்டு நடிப்பில் முன்னேறிப்புகழ் பெறலாயினர்.இக்காலத் தொடக்கத்தில் பல நாடகக் குழுக்கள் தோன்றின எனினும், மிகப் பெரியமுதலீடு செய்து விரிவான அமைப்புடன் விளங்கியநாடக சபைகள் இரண்டு. சி.வேங்கடாசல முதலியார் நடத்திய ஆலந்தூர் நாடகக்குழு ஒன்று; மற்றது, தி. நாராயண சாமிப் பிள்ளை நடத்திய நாடகக் குழு. தமிழ் நாட்டில் மட்டுமன்றி இலங்கை போன்ற அயல்நாடுகளுக்கும் சென்று இக்குழுக்கள் நாடகங்களை நடத்திப் பெரும் புகழைப்பெற்றன.

**நாடகக் கலை வளர்ச்சி:** இருபதாம் நூற்றாண்டின் இடைக் காலத்தில் நாடகத்துறையில் ஒரு புத்துணர்வும் ஈடுபாடும் தோன்றின. மக்கள் ஆதரவு பெருகப் பெருக ஆங்காங்குப் பல்வேறு நாடகக் குழுக்கள் தோன்றத் தொடங்கின.

அவற்றுள், நாவல் கோவிந்த சாமி ராவு, மனமோகன நாடகக் குழு, சித்திரக்கவி சுப்பராய நாயுடுவின் ஆலந்தூர் நாடகக் குழு, சுப்பராய ஆசாரியின் இந்து வினோத நாடக சபா, பி.கோவிந்த நாயுடுவின் 'கோல்டன்' நாடகக்குழு,சி. எசு,முனுசாமி நாயுடுவின் சுதேச நாடக சபா, கோபன் நாயுடுவின் இந்து சூலி அரங்கு. கே. எசு. செல்லப்பா அனந்த நாராயண அய்யரின் ஆரிய கான சபா, பி.எசு. வேலுநாயரின் சண்முகானந்த சபா, சி. கன்னையாவின் சென்னை இந்து வினோத நாடக சபா, மனமோகன அரங்கசாமி நாயுடுவின் ஆலந்தூர் அரங்க விலாச நாடகக் குழு, அல்லி பரமேசுர அய்யரின் கிருட்டிண கான சபா, ஆஞ்சனேய கோவிந்த சாமி நாயுடுவின் சிரீகிருட்டிண மனோரஞ்சனி நாடக சபா, குடந்தை பாலாமணி நாடகக்குழு முதலியவை குறிப்பிடத்தக்கவை. இக்குழுக்கள் அனைத்தும் புராண, இதிகாச நாடகங்களையே நடத்தி வந்தன.

தமிழ் நாடகத் தலைமையாசிரியர் எனப் போற்றப்படும் சங்கரதாசர் மேடை நாடகங்களைத் திருத்தியமைத்தார். நடிகரிடையே ஓர் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் ஏற்படுத்தினார். மேடையில் நடிகர்கள் வரையறையின்றி மனம் போனவாறு வசனங்கள் பேசி வந்த நிலையை மாற்றித் தாமேஉரையாடல் - பாடல் கலந்த 40 நாடகங்களை எழுதி நடிக்கச் செய்தார். இவரால் கி.பி. 1885 முதல் 1922 வரை நாடகக் கலை மறுமலர்ச்சி பெற்றது.

பம்மல் சம்பந்தனாரின் காலத்தில் தொழில் முறைசாரா (Amateur) நாடக சபைகள் தோன்றின. அலுவலில் உள்ளவர்களும், குடும்பப் பெண்களும் கூட நாடக மேடை ஏறி நடித்தனர். நடிகர்களைக் 'கூத்தாடிகள்' என இழிவாகக் கருதிவந்த நிலை இவர் காலத்தில் மாறியது. நாளடைவில் பகுத்தறிவு இயக்கத் தாக்கத்தால் பல சமூக நாடகங்களும், சமூகச் சீர்திருத்த நாடகங்களும் தோன்றின. விடுதலை வேட்கைத் தீ நாடெங்கும் மூண்டு கொண்டிருந்த காலத்தில் தேசிய நாடகங்கள் பல நாடக மேடை ஏறி வீர முழக்கம் செய்தன. நடிகர் விசுவநாத தாசு வள்ளி திருமணத்தில் வேலனாக நடிக்கும் போது மயில் மீது அமர்ந்த வண்ணமே தேசிய பாடலை வீர முழக்கத்துடன் பாடி உயிர் நீத்த செய்தி நாடக வரலாற்றின் பொன்னேட்டில் பதிக்கப்பட்டுள்ளது.

அறிஞர் அண்ணாவின் வேலைக்காரி, ஓர்இரவு, சந்திரோதயம், கலைஞர் கருணாநிதியின் தூக்கு மேடை, நச்சுக் கோப்பை முதலிய சீர்திருத்த நாடகங்கள் சமூகத்தில் பெரும் புரட்சியைத் தோற்றுவித்தன. திரைப்படங்கள் மக்களிடையே செல்வாக்குப் பெறத் தொடங்கிய காலம் வரை இந்நாடகங்கள் புகழ் பெற்று விளங்கி வந்தன.

**நாடகக் கலை வளர்ந்தத நல்லோர்: தவத்திரு சங்கரதாசர்:** சங்கரதாசர் நாற்பதுக்கு மேற்பட்ட நாடக நூல்களை இயற்றி மேடை நாடகத்தை ஒரு கட்டுப்பாட்டில் அமைத்து ஒழுங்கு படுத்தியவர்; புலமை நிரம்பப் பெற்றவர்; திருமணம் செய்து கொள்ளாமல் தம் வாழ்நாள் முழுவதும் நாடகக் கலையில் ஈடுபட்டவர்; இராமுடு அய்யர், நடேச தீட்சிதர், கலியாண ராமையர், சாமி நாயுடு ஆகியவர்களின் நாடக சபைகளில் நடிகராகவும், நாடகாசிரியராகவும் பெரும் புகழ் பெற்றவர். தாறுமாறாக அவரவர் நினைத்தபடி எல்லாம் நடத்தி வந்த புராண-இதிகாச கற்பனைக் கதை நாடகங்களுக் கெல்லாம் ஒழுங்கான வடிவமைப்புத் தந்து, அவற்றிற்கான பாடல்-உரையாடல்களை எழுதி நாடகக் கலையின் தரத்தை உயர்த்திய பெருமை இவருக்குரியது. இவர்தம் நாடகங்கள் சொற்சுவை பொருட்சுவை மிக்கவை; இலக்கணக் கட்டுக்கோப்பு அமைந்தவை; பாத்திரங்களுக் கேற்ற மெட்டுகளில் பல்வேறு இராகங்களும், தாளங்களும் பொருந்தியவை.

**பம்மல் சம்பந்தனார்:** பம்மல் சம்பந்தனார் மறுமலர்ச்சி நாடகத் தந்தைஎனப் போற்றபட்டவர். நீதிபதியாகப் பதவி வகித்த இவர் கி.பி.1891-இல் சுகுண விலாச நாடக சபையை அமைத்து நூற்றுக்கு மேற்பட்ட நாடகங்களை அரங்கேற்றியவர். இவரதுமனோகரா நாடகம் பெரும்புகழ் பெற்றது. இவர் சிறந்த நாடகங்களை எழுதியவர்; சிறந்த நடிகர்களை உருவாக்கியவர். இவர் பட்டதாரிகள், மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், செல்வச் சீமான்கள் முதலிய பலரையும் நடிக்கச் செய்து அதன் வாயிலாக நடிகர்களைப் 'பெருமைக்குரிய கலைஞர்கள்' என உயர்நிலை பெறச் செய்தார். இவர் எழுதிய 'நாடக மேடை நினைவுகள்' நாடக வரலாற்றைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது.

**எம்.கந்தசாமி முதலியார்:** இவர் இருபதாம் நூற்றாண்டில் மேனாட்டு நாடக முறைகளைத் தமிழ் நாடகங்களில் புகுத்திப் 'புதிய நடிப்புக்கலை ஆசிரியர் என்ற பாராட்டைப் பெற்றவர். சேக்சுபியர், இப்சன், மோலியர் போன்ற மேனாட்டு ஆசிரியர்களின் நாடக அமைப்பு, பாத்திரப் படைப்பு ஆகியவற்றின் நுட்பங்களை ஆராய்ந்து, தமிழ் நாடகக் கலைஞர்களையும் அவற்றிற்கிணையாகக் கொண்டுவர இவர் அரும் பாடுபட்டார். அக்கால நாடக சபைகள் பலவற்றில் ஆசிரியப் பொறுப்பேற்றுப்புதிய புதின நாடகங்களை இயற்றி,மேடையேற்றி, ஆங்கிலப் பாணியில் நடிக்கும் முறையைப்புகுத்தினார். நாடகஅமைப்பிலும், நடிப்பு முறையிலும் இவர் முயற்சியால் புதுமைகள் பல புகுந்தன.

**சதாவதானம் கிருட்டிணசாமிப் பாவலர்:** சம்பந்தனார், கந்தசாமி முதலியார் இருவருக்கும் அடுத்தபடி மறுமலர்ச்சி நாடகங்களை எழுதி, அரங்கேற்றித் தேசிய உணர்வைப் பரப்பியவர் தெ.பொ. கிருட்டிணசாமிப் பாவலர். காந்தியடிகளின் சுதந்திர இயக்கம் பரவியிருந்த அக்காலத்தில் மதுவிலக்கை மையக் கருத்தாக வைத்துப் 'பதிபக்தி' என்னும் நாடகத்தை எழுதினார். கதர் இயக்கத்தை ஆதரித்துக் கதரின் வெற்றி என்ற நாடகத்தையும் நாகபுரிக் கொடிப் போராட்டத்தை மையமாக வைத்துத்'தேசியக்கொடி' என்னும் நாடகத்தையும் எழுதினார். குதிரைப் பந்தயத்தால்எண்ணற்ற குடும்பங்கள் சீரழிவதை விளக்கும் ஒருநாடகத்தையும் 'பம்பாய் மெயில்,' இராசா பருத்ருகரி போன்ற நாடகங்களையும் நடத்தி அரசாங்க அடக்கு முறைகட்கு ஆளாகி, அவற்றிற்கெல்லாம் ஈடு கொடுத்து எதிர் நீச்சல் போட்ட தேச பக்தர் என்ற பெருமையைப் பெற்றவர் இப்பாவலராவர்.

**கன்னையாவின் கலைப்புரட்சி:** தமிழ் நாடக உலகில் 1915 முதல் 1930 வரை மாவேந்தராக விளங்கியவர் திருச்சி கன்னையா. இவரது இந்து வினோத சபா எண்ணற்ற நாடகங்களை நடத்திப்பணிபுரிந்தது. அதுவரை தமிழகம் கண்டிராத புதுமைக் காட்சிகள், அற்புதமான மின்சார விந்தைகள், கண்ணைப் பறிக்

கும் உன்னதமான தங்கம், வெள்ளிச் சம்கி ஆடைகள், வெள்ளிரதம், யானை குதிரை மாடு மயில் போன்ற உயிர்ப்பிராணிகள் போன்றமைந்த மாபெரும் நாடகத் திரைகள் இவர்நாடகங்களில்தான் மேடையேறின. தெய்விக நாடகங்கட்கு உயிரூட்டி மக்கள் ஆதரவுடன் நடத்தி வெற்றி கண்டவர் இவர்.

**நாடகக் கலைமணிநால்வர்:** இருபதாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் நாடகக் கலை வளர்ச்சிக்குப் பெரும்பணியாற்றியவர்கள் டி.கே.எசு. சகோதரர்கள் நால்வராவர்; டி.கே. சங்கரன், முத்துசாமி, சண்முகம், பகவதி என்ற நால்வரும் உடன் பிறந்தவர்கள்; நாடகக்கலைவளர்ச்சியிலும் இவர்கள் ' உடன் பிறப்பாக நின்று தொண்டாற்றியவர்கள்.

இளம் வயதில் பல நாடக சபைகளில் நடித்து 1925-இல் தங்களுக்குச் சொந்தமாக மதுரை சிரீ பால சண்முகானந்த சபை என்ற அமைப்பைத் தொடங்கினர். நாடக உலகில் இச்சபை மூலம் அரிய சாதனைகளை நிகழ்த்தினர். நாடகக் கலையைப் பொறுத்த வரை 1950வரை உள்ள ஆண்டுகள் டி.கே.எசு. காலம் என்றே கூறலாம்.

குமாசுதாவின் பெண், மனிதன், இன்சுபெக்டர், அந்தமான் கைதி, முள்ளில் ரோசா முதலியவை இவர்கள் நடத்திய சிறப்புப் பெற்ற சமூக நாடகங்கள். டி.கே. சண்முகம் நடித்த ஔவையார் பாரத நாடு முழுவதிலும் பாராட்டப் பெற்றது. இதற்காக 'ஔவை சண்முகம்' என்ற சிறப்புப் பட்டத்தை இவர் பெற்றார். இக்குழு சிங்கப்பூர், இலங்கை, மலேசியா போன்ற நாடுகட்கும் சென்று தமிழ் நாடகங்களை நடத்திப் புகழ் பெற்றது.

இவர்கள் காலத்தை அடுத்து, திருச்சி பால பாரதி சபா, எதார்த்தம் பொன்னுசாமிப் பிள்ளையின் தந்தி முகானந்த சபா, என். எசு. கிருட்டிணன் நாடக சபா, நவாபு இராசமாணிக்கத்தின் சக்திநாடக சபா, எசு.வி. சகசரநாமத்தின் சேவா நாடக மேடை (Stage) திரு ஆர். மனோகரின் 'நேசனல் தியேட்டர்சு' என்பன போன்ற நூற்றுக் கணக்கான நாடகக் குழுக்கள் அமைந்து நாடகக் கலைக்கு அரும்பணி புரிந்தன.

**சமூகச் சீர்திருத்த நாடகங்கள்:** சமூக நாடகங்களின் வளர்ச்சியாகச் சமூகச்சீர்திருத்த நாடகங்கள் பல தோன்றின. இவற்றின் காலம் 1925-க்குப் பின்னர் எனலாம். தந்தை பெரியாரின் பகுத்தறிவு இயக்கத்தின் தாக்கம் இந்நாடகங்களில் எதிரொலித்தது. கலப்புமணம், தீண்டாமை ஒழிப்பு, வரதட்சணைக் கொடுமை போன்ற பல சமுதாயச்சீர்திருத்தக் கருத்துகள் நாடகங்களின் கருப்பொருள்களாயின. அவை மக்கள் மனத்தில் புரட்சியான மாற்றத்தை விளைவித்தன.

அரங்கராசுவின் இராசேந்திரா-இளையோர் மணத்தின் கொடுமையை விளக்குவது. சந்திரகாந்தா-மடாதிபதிகளின் ஒழுக்கக் கேடுகளைக் கண்டிப்பது. குமாசுதாவின் பெண்- வரதட்சணைக் கொடுமையை எடுத்துரைப்பது. முத்துச்சிப்பி-வேலைகள் நடக்கத் தடையாக இருக்கும் அலுவலர்களின் வெட்டிப் பேச்சுகளைக் கண்டிப்பது. ஓர் இரவு-குடி, காமம் சமூகத்தின் இழிவாழ்க்கை முதலியவற்றைக் கண்டிப்பது. வேலைக்காரி-சமுதாய ஏற்றத்தாழ்வுகளை நீக்க வேண்டுமென வற்புறுத்துவது. விதியும் மதியும்-விதவை மணம் சமுதாயத் தேவை என்பதை எடுத்துரைப்பது. முள்ளில் ரோசா- தாசி குலத்திலும் கற்புடைய மகளிர் தோன்றக் கூடும் என்பதை எடுத்துக் காட்டுவது.

**தமிழில் இசைநாடகங்கள்:** தமிழில் சில இசை நாடகங்கள் கி.பி.18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றின. அவை கீர்த்தனங்களால் ஆனவை. இது வரை கதை தழுவிய கீர்த்தனை நாடகங்கள் 13 கிடைத்துள்ளன. அவற்றுள் சீர்காழி அருணாசலக் கவிராயரின் இராமநாடகம், கோபால கிருட்டிண பாரதியின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை என்னும் இரண்டும் குறிப்பிடத் தக்கவை. மாற்றமும் வளர்ச்சியும் பெற்றுள்ள இசை நாடகங்கள் 20 - ஆம் நூற்றாண்டில் நடத்தப்பட்டன.

**குழந்தை நாடகங்கள்:** வருங்காலச் சமூகத்தின் ஆணிவேராக விளங்குவன குழந்தைகள். அக்குழந்தைகளின் நல்வாழ்வுக்காகநாடகக்கலை செய்துள்ள பணி குறிப்பிடத் தக்கது. அன்போடும் அறிவோடும் பண்போடும் பணிவோடும் அவர்கள் வளர்ந்து உருப்பெறுதற்கான முறைகளை விளக்கும் வகையில் பல நாடகங்கள் தோன்றின. திருச்சி பாரதன் எழுதிய 'அப்பாவின் ஆசை', புலவர் தணிகை உலக நாதனின் 'சிறுவர் நாடக விருந்து', தம்பி சீனிவாசனின் 'தங்கக் குழந்தைகள்' முதலியன இவ்வகையில் குறிப்பிடத் தக்கவை.

**நாடகத்தின் பயன்:** நாடகம் சமுதாயத்தோடு தொடர்புடைய ஒரு பண்பாட்டுக் கலை; நல்ல கூர்மையான கத்தியைப் போன்றது அது. கத்தியைக் கனி நறுக்கவும் பயன்படுத்தலாம்; கழுத்தை அறுக்கவும் பயன் படுத்தலாம்.

பகுத்தறிவு இயக்கத்தினர் 20-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் நாடகக் கலையை வன்மை மிக்க விளம்பரக் கருவியாகப் பயன்படுத்தினர். அதனால், பெருவெற்றி பெற்றனர். மக்களிடையே

செல்வாக்கை வளர்த்துக் கொண்டு ஆட்சியையும் கைப்பற்றினர்.

பல நூல்களைக் கற்பதைக் காட்டிலும் ஒரு நாடகத்தைப் பார்ப்பதால் அடையும் அறிவு மிகுதியானது. பார்ப்பவர் உள்ளத்தில் பசுமரத்தாணி போலக் கருத்துகளைப் பதியவைக்கும் ஆற்றல் மிக்கது நாடகக் கலை.'நூறு புத்தகங்களைப் படிப்பதால் கிடைக்கும் பயன்களை ஒரு நல்ல சொற்பொழிவைக் கேட்பதினால் பெறலாம். ஐம்பது சொற்பொழிவுகளின் பயனை ஒரு மாநாட்டினால் பெறலாம். இருபது மாநாடுகள் நடத்துவதின் பயனை ஒரே ஒரு நாடகத்தால் பெறலாம்' என்பது பேரறிஞர் அண்ணாவின் பொன்னுரை.

**நாடகக் கலை வளர:** நசித்து வரும் நாடகக் கலை மீண்டும் புத்துயிர் பெற்று வளரவேண்டுமானால், அவ்வை தி.க. சண்முகம் கூறும் பின்வரும் கருத்துகள் நிறைவேற்றப்பட வேண்டும்.

நாடகத்தின் பல்வேறு துறைகளிலும் பயிற்சி கொடுக்கும் வகையில் கல்லூரிப் பாடத்திட்டம் அமையவேண்டும். கலைஞர்கள் தம் வளர்ச்சிக்குத் தூண்டுகோலாகப் பயிற்சி தந்த ஆசிரியர்களையும் வழிகாட்டிய பெரியோர்களையும் என்றும் நன்றி உணர்வோடு போற்ற வேண்டும். கருத்து வேற்றுமைகளுக்கும் மதிப்புக் கொடுத்து, மாசில்லாப் பாசத்துடன் கலந்து பழகி ஒற்றுமை காக்கும் மனப்பண்பு கலைஞர்களிடையே வளரவேண்டும். 'அனைத்துலகிலும் தமிழ் நாடகத்திற்கு ஈடில்லை' என்று தமிழன் தலைநிமிர்ந்து நிற்கும் நிலை வருவதற்கான வழிவகைகளை அரசும் கலைஞர்களும் இணைந்து காண வேண்டும்.

திரைப்படங்களின் செல்வாக்கினால் நாடகக் கலை நலிந்து வருகின்றது. சுறுசுறுப்பான வாழ்க்கை ஓட்டத்தில் சுருங்கிய நேரத் திரைப்படங்களைப் பார்ப்பதிலேயே மக்கள் ஈடுபாடு கொண்டுள்ளனர். பண்டைப் பாரம்பரியம் மிக்க நாடகக்கலையைக் காப்பது தமிழ் மக்களின் இன்றியமையாத கடமையாகும்.

ஆறு.அழ.

**நாடகவகைகளும்-உத்திகளும்:** கலைகள் தொடர்பான செய்திகளுக்கு முற்றிலும் சரியான, பொருத்தமான விளக்கம் கொடுத்து விடுதல் என்பது இயலாத காரியமாக உள்ளது. துன்பியல் நாடகமாக அமையும் ஒரு நாடகத்தில் இன்பியல் கூறுகள் இல்லாமல் இல்லை. சோபாக்ளிசு எழுதிய ஆன்டிகனி என்னும் துன்பியல் நாடகத்தில் வரும் ஒரு காவலாளி நகைச்சுவைப் பாத்திரமாகக் காட்டப்படலாம். ஒன்றில் ஒன்று கலந்தே காணப்படுகின்றது. எனினும், நாடகங்களை ஏறத்தாழ ஏற்கவல்ல சில பகுப்புகளில் அடக்கி ஆய்வது மிகவும் பயன்படக் கூடியதாகும்.

நாடகங்களை மூன்று அடிப்படைகளில் பிரிக்கலாம். அவையாவன: 1) நாடகத்தின் **உள்ளீடான** பாவத்தை அடிப்படையாகக் கொண்டவை. 2) நாடகம் கையாளுகின்ற பொருளின் அடிப்படையில் அமைந்தவை. 3) நாடகக் கட்டுக் கோப்பின் அடிப்படையில் அமைந்தவை. இப்பகுப்புகள் மேலைநாட்டு நாடகப் பகுப்பாய்வின் அடிப்படையில் அமைந்தவை.

**முதல் வகை நாடகங்கள்:** நாடகத்தின் **உள்ளீடான** பாவத்தை அடிப்படையாகக் கொண்டவை. இதில் 1) துன்பியல் நாடகம், 2) இன்பியல் நாடகம், 3) உணர்ச்சி முனைப்புடைய இன்பியல் நாடகம், 4) கிண்டல் நாடகம், 5) எள்ளல் நாடகம், 6) நகைச்சுவை நாடகம், 7) துன்ப-இன்பியல் நாடகம், 8) குறியீட்டுருவான-அகத்திறப்பாங்கமைந்த நாடகம், 9) நாட்டிய நாடகம், 10) அபிநயக்கூத்து நாடகம்.

**துன்பியல் நாடகம்:** துன்பமான முடிவைக் கொண்ட நாடகம் துன்பியல் நாடகம் என்று சொல்லப் பெறுகிறது. துன்பியல் நாடகம் மிகவும் உயரிய வினைத்திட்பம் கொண்டதாகவும் கழிபேரவலத்தை உண்டு பண்ணும் சிறப்புகள் அல்லது அழிவுகளைக் கொண்ட முடிவைக் கொண்டதாகவும் அமையும். இந்நாடகத்தின் இறுதியில் தலைமைப் பாத்திரம் பெரும்பாலும் இறந்து விடுவதாக அமையும். அரிசுடாட்டிலின் துன்பியல் கொள்கைப்படி ஒரு நாட்டின் அரசன் போன்ற மிகப்பெரிய பொறுப்பை வகிப்பவனும், மிக வியந்து பாராட்டும்படியான சிறந்த பண்புகளைக் கொண்டவனுமாக விளங்கும் ஒரு தலைமைப் பாத்திரம்,தான் செய்யும் ஒரு சிறிய தவற்றினால் அழிவை எய்தும் போது இத்தகைய சிறந்த வீரனும், பண்பாளனும் இச்சிறு பிழையால் அழிய நேரிட்டு விட்டதே எனப் பார்வையாளர்கள் அப்பாத்திர நிலைக்காக இரங்கி வருந்தும் நிலையே துன்பியல் நாடகத்தின் இலக்கணமாகும். இரக்கமற்ற தன்மையால் அழிவை எய்திய ஓடிபசு, பேராவல் கொண்டதால் வீழ்ச்சிக்கு ஆளான மாக்பத்து கதையும், எளிதில் நம்பிவிடும் ஏமாளித்தனத்தால் அழிவை எய்திய ஒதல்லோ போன்றவர்கள் கதையும் சிறந்த துன்பியல் நாடகங்கள் எனக் கருதப்படுகின்றன. மனிதனின் மிக உயர்ந்த ஆற்றல்களை வியந்து உணரும் நிலையையும் அதே போழ்து மனித வாழ்வில் காணப்படும் துயரங்களையும் உணரும் வண்ணம் அமைவதே உண்மையான துன்பியல் நாடகத்தின் இன்றியமையாத முதன்மையான கூறாகக் கருதப்படுகிறது. துன்பியல் நாடகங்களில் எளிதில் உணர்ச்சிவயப்படுபவர்களும் தங்களின் விதியோடு

போராடிக் கொண்டிருப்பவர்களுமாகிய தனிப்பட்ட எளிய மனிதர்கள் இடம் பெறுவர். இவர்கள் அறி வார்வம் மிக்கவர்களாகவும் விளங்குகின்றனர்.

இவர்கள் துன்பியல் நாடகங்களில் காணப்படும் சிக்கலினால் ஏற்படும் மனித மனப் போராட்டத்திற் குத் தீர்வு காணப்படுதல் இல்லை; ஒரு மகிழ்ச்சியான முடிவிற்காகத் திரும்பச் செல்லுதலோ, எளிதான முடிவை நோக்கிச் செல்லும் போக்கோ இதில் காணப் படுவது இல்லை. இச்சிக்கலினால் எழும் உணர்ச்சிப் போராட்டங்கள் ஆழமானவையாகவும் தாங்கவொண் ணாதனவாகவும் அமையும். ஆனால், இத்துயரங்களை அனுபவிக்கக் கூடிய பாத்திரங்கள் காண்போரின் மதிப்பை, இரக்கத்தைப் பெறத் தகுதி வாய்ந்த பாத் திரங்களாக அமைவர். அச்சமும் கடுந்துயரமும் ஊடுருவி நிற்கும் சூழல் மிகுந்ததாகத் துன்பியல் நாடகம் அமையும். துன்பியல் நாடகத்தில் பொது வாகக் கொடுமையான செயல்கள் நிறைந்து காணப் படும். நாடகத் துயரம் இறுக்கமிக்கதாக்கப்படும். நாடகச் செயல்கள் வாயிலாக ஆற்றல் மிக்க அவலத் தையும் கழிவிரக்கத்தையும் ஏற்படுத்துகின்றனர். துன்ப முடிவு மிகப் பெரிய இரண்டு ஆற்றல்களுக்கி டையே நடைபெறும் போராட்டத்தின் விளைவாக ஏற்படுவதாக அமையும். இவ்விரு பேராற்றல்களும் ஒன்றற்கொன்று முரண்பட்ட கோரிக்கைகளைக் கொண்டதாக விளங்கும்.

அரிசுடாட்டில் கொள்கைப்படி அவலமே தலை யாய சுவையாகும். அவர் துன்பியல் நாடகத்தையே பெரிதும் போற்றுகிறார். துன்பியல் நாடகம் தீவிர மும் முழுமையும் பெருமையும் வாய்ந்த செயலைக் கொண்டதாகும். இத்தகைய செயலைக் கொண்ட துன்பியல் நாடகம் இரக்க உணர்ச்சியையும் அச்ச உணர்ச்சியையும் மிகுவித்து அவற்றின் வாயிலாகக் காண்போரிடம் உள்ள அவ்வுணர்ச்சிகளைத் தூய்மைப் படுத்துவதாக அமையும் என்று கூறுகிறார் அரிசுடாட் டில். இவ்வாறு இவ்வுணர்ச்சிகளைத் தூய்மைப்படுத்து தலை அவர் கிரேக்க மொழியில் ‘கெதார்சிசு’(cathar-sis) என்ற சொல்லால் குறிப்பிடுகிறார். உலூகாசு என்பவர் கெதார்சிசு என்னும் சொல் தூய்மைப்படுத் தல் என்னும் பொருளுடையது என்றும், பெர்னேசு என்பவர் இச்சொல் ‘மாசகற்றல்’(purgation) என்னும் பொருள் கொண்டது என்றும் குறிப்பிடுகின்றனர்.

அரிசுடாட்டிலின் கருத்தை ஏற்றுக் கொள்ளும் மில்டன், அவல நாடகம் இரக்கம், அச்சம் ஆகிய உணர்ச்சிகளை எழுப்புதல் வாயிலாக அவ்வுணர்ச்சி களையேயன்றி அவை போன்ற ஏனைய உணர்ச்சி களையும் தூய்மையாக்கும் ஆற்றலுடையது என்று கூறுகிறார். அதாவது, அவ்வுணர்ச்சிகளைப் பக்குவப் படுத்தி அவற்றின் வேகத்தைச் சரியான அளவிற்குக் குறைக்கிறது என்பதாகும்.

**துன்பியல் நாடக நோக்கம்:** தற்பெருமையும் இரக்கமின்மையும் மனித இனத்தில் மேலோங்கியிருக் கும் தீய பண்புகள் என்றும், இவ்விரண்டு தீய பண்பு களை மக்களிடமிருந்து அகற்றுவதற்காகவே அச்சம், இரக்கம் ஆகிய வேறு இரண்டு உணர்ச்சிகளை எழுப் பும் துன்பியல் நாடகம் படைக்கப்பட்டுள்ளதுஎன்றும் இராப்பின் என்ற திறனாய்வாளர் குறிப்பிடுகிறார். சேக்சுபியரின் ‘ஆண்டனியும் கிளியோபாத்ரா’வும், ‘ஒதல்லோ’ போன்ற நாடகங்கள் துன்பியல் நாடகங் களாகும். பம்மல் சம்மந்தமுதலியார் மேனாட்டுத் துன்பியல் நாடகங்களின் தாக்கத்தால் தமிழில் இரு நண்பர்கள், உண்மையான சகோதரன், கள்வர் தலை வன் போன்ற துன்பியல் நாடகங்களை எழுதி மேடை யில் நடிக்கும் தகுதியுடையனவாக்கினர்.

**உணர்ச்சி முனைப்புடைய இன்பியல் நாடகம்:** இது துன்பியல் நாடகத்தோடு ஓரளவு தொடர்புகொண் டது. இவ்வகை நாடகங்கள் துயரம் அல்லது மகிழ்ச்சி தரக்கூடிய முடிவுகளைக் கொண்டதாக அமையலாம். வரிசையான பிணங்களையும் பீறிட்டுக் கொண்டு இருக்கும் பயித்தியக்காரனையும் காட்டும் உணர்ச்சி முனைப்புடைய முடிவினதாக அமையலாம். மிகுதி யும் வன்முறையாகவும் இயல்புக்கு மாறாக நம்புதற் குரிய நல்லவனாகவும் தீயவனாகவும் படைக்கப் படும் பாத்திரங்களை விளக்கமாக வருணிக்கும் இயல் பால் இந்நாடகம் துன்பியல் நாடகத்திலிருந்துவேறான தாகப் பிரித்தறியப்படுகிறது. உண்மையான உளவி யல் உள்நோக்கு இல்லாத் தன்மையால் வலிந்து பெறப்பட்ட நாடகக் கதைக் கோப்பின் விளைவு களான பேரச்சங்களும், உணர்வுக் கிளர்ச்சிகளும் எளிதாக நகைப்புக் கிடமான சூழலில் தலை கால் அறியாமல் தடுமாறி விழுவனவாக அமைகின்றன. பொது மக்களின் விருப்பமான உணர்வு கிளர்ச்சி பெறச் செய்தலும், மன எழுச்சி பெறச் செய்தலும் ஆகிய இழிந்த உணர்ச்சிகளுக்கு இடம் தேடிக் கொடுப்பதான பணியை இந்நாடகம் தொடர்ந்து செய்கிறது. இவ்வகை நாடகம் மென்மையான அல்லது உயர்ந்த உணர்ச்சிகளை விளக்க வருணனை செய்யத் தலைப்படுமிடத்து மிகவும் உணர்ச்சி வயப் படுகிற. தன்மை கொண்டதாக அமைந்துள்ளது. அண்மைக்கால நாடகங்களில் பெரும்பாலானவை களில் உணர்ச்சி முனைப்புடைய இன்பியல் நாடகக் கூறுகள் இடம் பெற்றுள்ளன. அவைகளில் இலக்கியத் தரம் என்பது அருகியே காணப்படுகிறது. துன்பியல் நாடகங்களிலிருந்து உணர்ச்சி முனைப்புடைய இன் பியல் நாடகங்களைப் பிரித்தறிய ஒன்றை நினை விற் கொள்ள வேண்டும். அது உணர்ச்சி முனைப்

புடைய இன்பியல் நாடகக் கதைக் கோப்பு நிகழக் கூடிய உளவியல் சார்ந்ததாக அமைந்து உள்ளமை தான். சுருங்கச் சொல்லின் இது மிகை நடிப்புக் கொண்ட நாடகமாகும்.

உணர்ச்சி முனைப்புடைய இன்பியல் நாடகங்கள் அஞ்சத் தக்க செயல்களில் நாட்டம் செலுத்துவதாய் அமைந்து தீவிரமான உணர்ச்சிகளை எழுப்புகின்றன.அடக்கி வைக்கப்பட்ட உணர்ச்சிகளைப் பெருமளவில் எழுப்பி விடுகிறது. பொதுவாக, இந்நாடக நிகழ்ச்சிகள் மிக வேகமாக இயங்கி உணர்ச்சிகளை இறுக்கமாக்குகிறது. இவ்வகை நாடகங்களில் பொதுவாகப் பழி வாங்கும் தன்மை கொண்ட செயல்கள் மிகுதியாக இடம் பெறுகின்றன.இரத்தம் சிந்துதல் இந்நாடகங்களில் பெருமளவில் இடம் பெறுகின்றது. தமிழில் இத்தகைய நாடகங்கள் சில உள்ளன. பி.எசு இராமையா எழுதிய போலிசுக்காரன் மகள், பூ விலங்கு போன்ற நாடகங்கள் இவ்வகையில் அடங்கும்.

**இன்பியல் நாடகம்:** மக்களை ஆழமாகச் சிந்திக்கவும் உணரவும் செய்வது துன்பியல் நாடகத்தின் தலையாய கடமையாகும். இன்பியல் நாடகம் நகைச்சுவையை உண்டாக்குவதைச் சிறப்பான கடமையாகக் கொண்டுள்ளது. இந்த நகைப்பு, புன்முறுவலிலிருந்து வாய் விட்டுச் சிரிப்பதான பெருஞ்சிரிப்புவரை உண்டாக்குவதாக இருக்கலாம். இன்பியல் நாடகம் மிகவும் மேம்பட்ட நிலையினை உடையதாகவோ, மிக எளிமையானதாகவோ அமையலாம்.

தமிழில் காணப்படும் நாடகங்கள் பெரும்பாலும் மகிழ்ச்சியான முடிவுகளைக் கொண்ட இன்பியல் நாடகங்களாகவே விளங்குகின்றன. வடமொழி நாடக இலக்கணங்கள் இன்பியல் முடிவுகளையே விதிகளாகக் கூறியுள்ளன. இன்பியல் நாடகம் பின் வரும் நிலைகளில் பகுத்தறியப் படுவதுண்டு.

**தவறாகப் புரிந்து கொள்ளும் நிலையில் உருவாகும் இன்பியல் நாடகம்:** இவ்வகை இன்பியல் நாடகங்களின் கதைக்கோப்பு, செய்திகளைத் தவறுதலாக அடையாளம் காணுதல் அல்லது உண்மைகளைத் தவறாகப் புரிந்து கொள்ளுதல், நாடகச் செயல் அல்லது கதா பாத்திரங்களைப் பற்றிய தவறுதலான விளக்கங்களைத் தருதல் என்னும் இவைகளால் நாடகத்தின் இடையிடையே காணப்படும் மிகுதியான உரையாடல்களைக் கொண்டதாக அமையும்.

உண்மை வாழ்க்கையில் காணப்படும் நிகழ்ச்சிகளை விட நாடகத்தில் இத்தகைய தவறுகள் இன்பியலுக்காக எளிதாக உருவாக்குதல் ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு மரபாகக் காணப்படுகிறது. இவ்வகை நாடகத்தில் வரும் பாத்திரங்களில் கணவன் மனைவி, பெற்றோர் பிள்ளைகள், நண்பர்கள், காதலர்கள் என்னும் இவர்கள் கூட ஒருவரை யொருவர் அறியாதவர்களாக மாறு வேடங்கள் பூண்டு, முகமூடிகள் அல்லது மாறுபட்ட உடைகளை அணிந்து, நாடகத்தில் உலவ விடப்படுதல் உண்டு. இவ்வகை நாடகங்களில் காணப்படும் இப்போக்கை ஏற்றுக் கொள்வதில் எத்தகைய தடையும் இல்லை.சேக்சுபியரின் 'நகைச்சுவைக் குழப்பம்' என்னும் நாடகமும்,'பன்னிரண்டாம் இரவு' என்னும் நாடகமும் இவ்வகையில் அடங்கும். தமிழில் பம்மல் சம்பந்த முதலியாரின் 'சபாபதி' என்னும் நாடகத்தை இவ்வகையில் அடக்கலாம்.

**பழக்க வழக்க-நடைமுறை சார்ந்த இன்பியல் நாடகம்:** இத்தகைய இன்பியல் நாடகங்களில் சிரிப்பு நடைமுறையில் உள்ள குறைபாடுகள், சமுதாய ஏசல்கள், கொச்சையான சொற்கள், தன்னலம் கொள்ளுதல், வதந்தி, போலிப்பகட்டு முதலியவைகளைப் படம் பிடித்துக் காட்டுவதன் வாயிலாகச் சிரிப்பை உண்டாக்கும் நாடகங்கள் இவ்வகையில் அடங்கும். இந்நாடகங்களில் அமையும் பாத்திரப்படைப்பு ஏறத்தாழ உயர்ந்ததாகவும் அமையும். நாடகக் கதைக் கோப்பு ஆர்வ மூட்டுவதாக அமையும். ஆனால், இந்நாடகத்தில் பெறப்படும் முதன்மையான மகிழ்ச்சி நாடகத்தில் பயன்படுத்தும் மொழியிலிருந்தும், பழக்க வழக்கங்களிலிருந்தும் பெறக் கூடியதாகவே அமையும். சேக்சுபியரின்'காதலின் உழைப்பு இழப்பு'(Love's Labour Lost), மோலியரின் 'லெசு பெம்மசு சவன்டசு' (Less Femmes Saventes) என்னும் நாடகங்கள் இவ்வகையில் அடங்கும்.

**உணர்ச்சி சார்ந்த இன்பியல் நாடகம்:** இந்நாடக வகையின் பெயர் குறிப்பிடுவது போல இவ்வகை நாடகங்கள் காண்போரின்இரக்க உணர்ச்சிகளைத் தூண்டுவதாகவும் அதே சமயத்தில் சிரிக்கச் செய்வதாகவும் அமையும்; எளிதில் கண்ணீரை வரவழைக்கக் கூடியதாகவும் அமையும். அண்மைக்கால நாடகாசிரியராகிய தாடிசுமித்,(DodieSmith)எழுதிய'அன்பார்ந்த அக்டோபசு' (Dear Octopus)என்ற நாடகத்தை இவ்வகைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகக் கூறுவர்.

**பாத்திர இன்பியல் அல்லது நகைப்பு இன்பியல்:** இவ்வகை நாடகங்களில் காணப்படும் நகைச்சுவை பெரும்பாலும், பாத்திரங்கள் தங்களுக்குள்ளாகவே உண்டாக்கிக் கொள்வதாக அமைந்துள்ளது. இவைகள் செயற்கை மரபுகள், குறைபாடுகள் என்னும் இவைகளைக் காட்டிலும் ஆழமானதாகவும் வெளியிட முடியாதவைகளாகவும் உள்ளன. சேக்சுபியரின் அனைத்து இன்பியல் நாடகங்களும் ஏறத்தாழப் பாத்திர இன்பியல் நாடகங்களாகவே விளங்குகின்றன. இவ்வகை நாடகம் முற்கால உடல் மற்றும் உளவியல் தொடர்பான கொள்கைகளின் அடிப்படையில்

படைக்கப்பட்டன. இக்கொள்கைகள் தவறானவை எனப் பின்னர் நிரூபிக்கப்பட்டுள்ளன. ஆனால், அவை தோன்றிய காலத்தில் தாழ்மையாகக் கருதப் படவில்லை. துன்பியல் நாடகங்களில் பாத்திரங்கள் அவரவர்களின் இயல்புகளால் துன்பம் எய்துவதாகக் காணலாம். ஆனால், இன்பியல் நாடகங்களில் நாடகப் பாத்திரங்கள் நகைப்புத் தரும் சூழ்நிலை களில் தாங்களாகவே தங்களிடத்தில் பல விளைவு களை உண்டாக்கிக் கொள்வதன் வாயிலாகத் தங்களைத் தாங்களே முட்டாள்களாக்கிக் கொள் கின்றனர். இன்பியல் நாடகத்தின் தவிர்க்க முடியாத முடிவு பாத்திரங்களின் நகைத்திறம் நிரம்பிய பக்கத் தாலேயே வெளிக் கொணரப்படுகிறது. சேக்சுபியரின் 'நீ விரும்பிய வண்ணம்' (As you like it) என்ற நாட கம் இவ்வகையில் அடங்கும்.

**நையாண்டி அல்லது கிண்டல் நாடகம்:** நையாண்டி நாடகம் எள்ளல் நாடகத்திலிருந்து சற்று வேறு பட்டது. இந்த வேறுபாடு ஒரு கோமாளி தன் சக கோமாளியை ஒரு காற்று நிரப்பப்பட்ட தோற்பை யால் அடிப்பதற்கும், சிலம்பம் வீசும் ஒருவன் தன் எதிரியைக் குத்து வாளால் தாக்குவதற்கும் உள்ள வேறுபாட்டைக் கொண்டது. நையாண்டி நாடகம் கருத்தார்ந்த நாடகமன்று. அவைகளுள் பெரும்பா லானவை அவைகளில் காணப்படும் கிண்டல் தன்மை களினாலேயே வாழ்ந்து கொண்டிருக்கின்றன. அதில் காணப்படும் நையாண்டிப் போலியைப் பார்வை யாளர்கள் தம் மனக்கண்ணில் காட்சியாகக் கண்டு வெடிச்சிரிப்பை நல்குகின்றனர். மக்கள் நாடக உரை யாடல்களில் காணப்படும் நகைத் துணுக்குகளிலும் ஆரவாரப் பேச்சுக்களிலும் ஈடுபட்டுச் சிரிக்கச் செய் கின்றனர். இது சிரிப்பினை ஊட்டுவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டது. செரிடனின் (Sheriden) நாடகமும் எம்.ஆர். இராதாவின் இராமாயணமும் இவ் வகையில் அடங்கும்.

**எள்ளல் நாடகம்:** போதுமான முறையில் வெளிப் படுத்தப்படும் நகையுணர்வு அல்லது அருவருப்பு ஏள னத்தினால் எழுச்சியூட்டப்படும்பொழுது அது எள்ளல் தன்மை பெறுகிறது. இத்தன்மை நிறைந்த நாடகம் எள்ளல் நாடகம் எனப்படுகிறது. இத்தகைய நாடகங் களில் நகையுணர்வு இனங்கண்டு கொள்ளக்கூடிய தாகவும் இலக்கிய வடிவம் போர்த்தியதாகவும் இருக் கும். நகைச்சுவை இல்லாவிடில் எள்ளல் வெறும் வசை மொழிகளாகிவிடும். அதுபோலவே இலக்கிய வடிவத்தில் அமையாது போனால் அது ஒரு கோமா ளித்தனமான பேச்சாகவே அமைந்துவிடும். சுருங்கக் கூறின், எள்ளல் நாடகம் உரை நடையாகவோ கவிதை நடையாகவோ மனிதத் தவறுகளைக் கேலி செய்வதாகவோ அமையும் ஓர் இலக்கிய வடிவமாகும். எள்ளல் நாடகத்தில் நகைப்புணர்ச்சியை விளை விப்பதுடன் வேறு வகையான விளைவுகளையும் உண்டாக்க வல்ல சிறு கூறுகள் இடம் பெற்றுள்ளன. இவை மனிதர்கள் தங்கள் தவறுகளையும் முட்டாள் தனங்களையும் புரிந்துகொள்ளச் செய்யும்பணியைச் செய்கின்றன. இவையே அன்றி அவர்கள் தங்கள் தவறு களை உணர்ந்துதிருந்தவும்செய்கின்றன. எள்ளல் நாட கம் தனக்குரிய செய்திகளை நடைமுறை வாழ்க்கைக் யில் காணப்படும் முக்கியமான மனிதர்களின் வாழ்க் கையிலிருந்து எடுத்துக் கொள்கிறது. இத்தகையமனி தர்களிடம் காணப்படும் தவறுகளை நினைப் பூட்ட வல்லதான நாடகக் கூறுகளை உள்ளடக்கி இருக்கும். எள்ளல் நாடக ஆசிரியன் பார்வையாளரைச் சிந்திக் கத் தூண்டாமல் இருந்தால் அவன் தன் பணியைச்சரி யாகச் செய்தவனாக மாட்டான். இந்நாடகாசிரியன் வாழ்க்கையின் முக்கிய கூறுகளை மனிதர்கள் உண ரும்படி வெளிப்படுத்த வேண்டும். சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் எள்ளல் நாடக ஆசிரியனின் தலை யானநோக்கம் சிரிப்பை மட்டும் வரவழைப்பதன்று; சிந்தனையைத்தூண்டுவதுமாகும். சம்பந்த முதலியா ரின் 'சபாபதி எனப்படும் நாடகமும், சோ. இராம சாமியின் 'யாருக்கும் வெட்கமில்லை', 'மனமொரு குரங்கு' 'முகமது-பின் துக்ளக்', போன்ற நாடகங்களும் இவ்வகையில் அடங்கும்.

**நகைச்சுவை நாடகம்:** இது இன்பியல் நாட கத்தைச் சார்ந்தது. பல வகைகளிலும் மிகையாகப் பயன்படுத்தப்பட்ட விளைவுகளைக்கொண்டு சிரிப்பை உண்டாக்குவது இதன் நோக்கமாகும். ஆனால், இது உளவியலடிப்படையான ஆழமற்றதாக இருக்கும். பாத்திரப் படைப்பிலும் கூரறிவிலும் பெரிதாகக் கவ னம் செலுத்தப்படாமல் நகைப்பூட்டும் சூழல்களுக்கு முன்னுரிமை கொடுக்கப்படுகிறது. இந்நாடகத்தில் வரும் நகைப்பூட்டுஞ் சூழல்கள் பண்பற்ற முறையில் அமைந்திருக்கும். வியப்புகள், தற்செயல் மிகைப் படுத்தல்கள் போன்றவை இந்நாடக வகையில் மேம் பட்டுத் தோன்றும். நடக்கக் கூடியவை இந்நாட கத்தில் மிகவும் குறைவாகஇருக்கும். இந்நாடகத்தில் கலைத்தன்மை குறைந்திருப்பினும் கலைஞனின் கைவண்ணத்தால் ஒரு சிறந்த நகைச்சுவை நாடக மாக மலர முடியும். இவ்வகைச்சிறந்த நகைச்சுவை நாடகம் தவறாகப்புரிந்துகொள்ளப்படும் இன்பியல் நாடகத்தோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்கதாக உள்ளது. திரைடன் இந்நாடக வகையை வலிந்து கூறப்பட்ட நகைச்சுவைகளையும் இயற்கைக்குப் புறம்பான நிகழ்ச்சிகளையும் உள்ளடக்கியிருப்பதாகக் கருதுகிறார். தமிழில் சாவி எழுதிய 'வாசிங்டனில் திருமணம்' என்ற நாடகம் இவ்வகையில் அடங்கும்

**துன்ப-இன்பியல் நாடகம்:** துன்பியலும் இன்பியலும் கலந்த நாடகம், துன்ப-இன்பியல் நாடகம் என்று சொல்லப்படுகிறது. நாடக வகைகள் ஒன்றில் ஒன்று கலந்தே காணப்படும் இயல்பு முன்பே சுட்டப்பட்டது. துன்ப-இன்பியல் கலவை சில சமயம் பொருத்த மற்றதாக அமைந்து விடுவதுண்டு. சதர்ன் (Southern) எழுதிய 'இசபெல்லா' (Isabella) அல்லது 'கேடுசார் திருமணம்' (Fatal Marriage) என்ற நாடகத்தில் மிக நன்றாக அமைந்திருந்த துன்பியல் கதைப்கோப்பின் வலுவை இன்பியல் கூறுகள் பலமிழக்கச் செய்து விடுகின்றன. துன்பியல், இன்பியல் நாடகங்களை விட, துன்பமும் இன்பமும் கலந்த வாழ்க்கையோடுபெரிதும் ஒத்துப்போகும் துன்ப-இன்பியல் நாடகங்களையே பெரும்பாலான மக்கள் ஏற்கின்றனர். புதிய நாடகம் உண்மைத் தன்மையில் அழுத்தம் கொடுக்க விரும்புவதால் இத்தகைய கலவை நாடகங்களையே பெரிதும் பயன்படுத்திக் கொள்கிறார்கள். கருத்தார்ந்த கருப்பொருளைக் கொண்ட நாடகம் மகிழ்ச்சியான முடிவைப் பெற்று முடியுமானால் அதனையும் துன்ப-இன்பியல் என்ற இந்நாடக வகையில் அடக்கலாம். இப்சன், செக்கா போன்ற நாடக ஆசிரியர்கள் துன்பியலும் இன்பியலும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை எனக் கண்டு பிடித்தார்கள். இயற்பண்புக்குகந்த நாடகம், நாடகத்திலிருந்து துன்பியலையும் இன்பியலையும் தனித்தனியாகப் பிரித்துக் காண முடியாத அளவிற்கு வலுவுடன் இணைத்துப் புகுத்துவதையே நோக்கமாகக் கொண்டிருந்தது.

**குறியீட்டுருவான அகத்திறப்பாங்கமைந்த நாடகம்:** வெளித்தோற்றத்தில் காணப்படுவதை விட மிகுதியான நாடகத்தன்மை கொண்டு விளங்கும் இவ்வகை நாடகத்தில் இடம்பெறும் பாத்திரங்கள் பொதுவாகப் பார்க்கும் பொழுது மனிதர் அல்லர்; அவர்கள் தற்குறிப்பேற்ற வகையில் கருத்தளவான ஒருபொருள் அல்லது மனிதப் பண்புகளின் எடுத்துக்காட்டுகளாகக் கருதப்படுபவர்களாவர். இது பண்பைப் பண்பியாக உருவகஞ் செய்தலுக்கு ஒக்கும். இந்த அகத்திறப்பாங்கு (Expressionism) மனிதர்களின் அகச்சார்பான வாழ்க்கையைப் பலவகைக் குறியீடுகளாகவும் சிறப்பான மரபொழுங்குகளாகவும் சுட்டிக்காட்ட விரும்புகிறது. இந்த நாடக வகைக்கு வரையறை உண்டென்பது வெளிப்படை. ஆனால், இந்நாடக வகை இயங்கிக் கொண்டிருக்கிறது. முற்காலப் பண்பியல் நாடகங்களுள் ஒன்றான 'ஒவ்வொரு மனிதனும்' (Every man) என்ற நாடகம் இவ்வகைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு நாடகமாகும். இந் நாடகத்தில் மனிதப் பாத்திரங்கள் சிறப்பு, அறிவுக்குற்றத்தை ஒப்புக்கொள்ளுகை, நற்செயல்கள் போன்ற கருத்துப் பொருள்களின் குறியீடுகளாக அமைந்து காணப்படுகின்றனர். இத்தகைய தொடக்கக் கால நாடகங்கள் சூதுவாதற்றவைகளாக இருப்பினும் இன்றும் அவை தம் நேர்மை, உண்மைத் தன்மை ஆகியவைகளால் பார்வையாளர்களைக் கவரும் ஆற்றலைப் பெற்றுள்ளன. புதிய அகத்திறப்பாங்கு சோதனைகளில் பயன்படுத்தப்படுவனவாகவும் அடிமன உணர்வு சார்ந்தனவாகவும் (Subconscious) செயற்படுகின்றன. டபிள்யூ.பி.ஈட்சின் (W. B. Yeats) கவிதை நாடகங்கள் ஏறத்தாழக் குறியீட்டுருவான நாடகங்களாகவே காணப்படுகின்றன.

குறியீட்டுருவான கூறுகள் இன்று பல புதிய நாடகங்களில் புகுந்துள்ளன. இவ்வகை நாடகங்களில் திரைக்காட்சித் தொகுதி, நாடகச் செயலோடு இணைந்த இசை, சிறப்பான உடை, (சிலநேரம் முகமூடிகள்) சிறப்பான ஒளியமைப்புவிளைவுகள் என்னும் இவற்றுடன் மற்றைப் படைப்பு உத்திகளும் சாதாரணமாகப் பார்க்கும்போது இலக்கியத் தரமற்றனவாகத் தோன்றினும் அவை மிகப் பெரிய ஆற்றல் மிக்க முக்கிய விளைவை உண்டாக்கப் பயன்படலாம்.

**சோதனை நாடகங்கள்:** நாடகம் ஓர் ஆற்றல் வாய்ந்த பொதுமக்கள் தொடர்பு சாதனமாக விளங்கவல்லது. அதனை நன்குணர்ந்தவர்கள் தாங்கள் விரும்பும் விழிப்புணர்ச்சியைப் பொதுமக்கள் பெறுதற்கு நாடகத்தின் வாயிலாகச் சில சோதனை முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர். அவர்களின் இந் நாடக முயற்சி பார்வையாளர்கள் மத்தியில் நல்ல விளைவை உண்டாக்கியிருக்கிறது. இந்தச் சோதனை நாடக முயற்சியை ஓர் இயக்க முயற்சியாக அவர்கள் மேற்கொண்டு சமூக மெய்யியல்புகளை மக்களுக்குக் கற்பிக்கிறார்கள். மக்கள் நிறைந்து நடமாடும் தெருமுனை, பூங்கா போன்ற இடங்களைத் தேர்ந்து அவ்விடங்களில் எந்தவிதக்கூச்சமும் இன்றி மக்கள் கவனத்தை ஈர்க்கும்வண்ணம் நாடகச் சூழலை உண்டாக்கிவிட்டுத்தனியான உடை, ஒப்பனை இன்றிச் சிறு சிறு சமூகச் சிக்கல்களைச் சுட்டும் சிறு நாடகங்களை நடத்துகின்றனர். அந்நாடகங்களில் இடம் பெறும் செய்திகள் மக்கள் இரசிப்பதற்காக அல்ல;சிந்திப்பதற்காக. சமூகச் சிக்கல்கள் வெளிப்படையாக இந்நாடகங்கள் வாயிலாகச் சுட்டிக் காட்டப்படுகின்றன. இதற்கான தீர்வுகளைப் பார்வையாளர்களாகிய பொதுமக்களே தீர்மானித்துக் கொள்ள விட்டுவிடுகிறார்கள். சோதனை நாடகங்கள் பெரும்பாலும் சமூகத்தில் நடைபெறும் உண்மை நிகழ்ச்சிகளை வெளிப்படுத்துவனவாகும். இந்நாடகங்கள் பெரும்பாலும் மனோதரும அடிப்படையில் உருவான நாடகங்களாக இருக்கின்றன.

இந்நாடக முயற்சியாளர்கள் இந்நாடங்கள் மக்கள் மனத்தில் ஏற்படுத்தும் சலனங்களையே தங்கள்

நாடக வெற்றிகளாகக் கருதுகிறார்கள். சமூகச் சிக்கல்கள் பற்றி மக்களுக்குஅறிவுறுத்தி அவைகளை எதிர்த்துப் போராட மக்களைத் தயார் செய்வதும், ஏமாற்றுக்காரர்களின் வஞ்சகத்திலிருந்து சமூகத்தைக் காப்பதும் அவர்களின் நோக்கமாக இருக்கிறது.

மேடைக்காட்சியமைப்பு, உடை, ஒப்பனைபோன்றவைகள் தாங்கள் சொல்ல வரும் கருத்துகள் மக்களைச் சென்றடைவதில் தடையாக அமையக் கூடாதெனக் கருதும் அவர்கள் இவைகளில் பெரிதாகக் கவனம் செலுத்துவதில்லை. நாடக அரங்கு முழுவதுமோ, தெரு முனைகளோ அவர்களின் நாடகம் நடைபெறுவதற்கு ஏற்ற இடங்களாக உள்ளன.

இந்நாடகங்களில் நடிகர்களுக்கும் பார்வையாளர்களுக்கும் இடையே எந்த வித்தியாசமும் இருப்பதில்லை. எந்தக் குறிப்பிட்ட வரையறைகளுக்கும் கட்டுப்படாமல் நாடக நிகழ்ச்சிகள் அதன் போக்கில் இயல்பாக நடைபெறும். மக்கள் மனத்தில் ஆழமான பாதிப்புக்களை உண்டாக்கிச் செல்லும். சில சமயங்களில் இவர்கள்எடுத்துக்கொள்ளும் சமூகச் சிக்கல்கள் சொல்லப்படும் முறை குறியீட்டுருவிலும், எள்ளல் முறையிலும் அமையும். சிரிப்பை உண்டாக்கும் செயல்கள் உள்ளுக்குள் ஆழமாகச் சிந்திக்கத் தூண்டுவதாக இருக்கும்.

இந்நாடக நடிகர்கள் தமிழகத்தின் தெருக் கூத்து ஆந்திராவின் வீதிநாடகம் என்னும் இவைகளின் தாக்கம் நிறைந்தவர்களாகக் காணப்படுகின்றனர். அவர்கள் திறந்த வெளிகளே தங்கள் நாடகங்களை நடத்தச் சிறந்த இடமாகக் கருதுகிறார்கள்.

உலகம் முழுதும் இச்சோதனை நாடக முயற்சி நடைபெற்று வருகிறது. இந்தியாவில் தில்லி, பம்பாய், கல்கத்தா, கர்நாடகா, கேரளா, தமிழ்நாடு, காசுமீர், அசாம் போன்ற மாநிலங்களில் இத்தகைய முயற்சிகள் நடைபெறுகின்றன.

தமிழில் பரிக்சா, கூத்துப்பட்டறை, நிசநாடக இயக்கம் என்னும் அமைப்புகள் இம்முயற்சிகளில்ஈடுபட்டுள்ளன. ந. முத்துசாமியின் நாற்காலிக்காரர், கட்டியங்காரர் போன்ற நாடகங்களும் பிரபஞ்சனின் 'முட்டை' முதலிய நாடகங்களும் இவ்வகையில் குறிப்பிடத்தக்க நாடகங்களாகும்.

**புராண நாடகம்:** புராணம் என்பது பழமையான கதை என்னும் பொருளில் வழங்கப்படுகிறது. பழமையின் சிறப்புக் கூறுகளைப் பாதுகாத்துப் போற்றுதலே புராண நாடகங்களின் முதன்மையான நோக்கம் ஆகும். இவை இராமாயணம், மகாபாரதம் போன்று பிற்காலத்தவருக்குப் பயன்படும் பல கூறுகளை உள்ளடக்கியனவாக உள்ளன. இவை எல்லோருக்கும் அறிமுகமாகப் பல தரப்பினருக்கும் உரிய வெவ்வேறு காலகட்டங்களுக்குரிய பழங்கதை, தத்துவம், வரலாறு, புவியியல் மற்றும் புனிதச் சட்டங்களை உள்ளடக்கியதாக விளங்குகின்றன. மேனாட்டு நாடகங்களிலும் புராணக் கூறுகளைக் கொண்ட நாடகங்கள் உள்ளன. புராண நாடகங்களை மேடையேற்றும் நாடகாசிரியர்கள் நடைமுறைச் செய்திகளையும் இந்நாடகங்களில் இணைத்தே மேடையேற்றுகின்றனர். சங்கரதாசு சுவாமிகளின் புராண நாடகங்களில் இப்போக்குக் காணப்படுகிறது. இந்நாடகப் பாத்திரங்கள் தங்கள் இயல்புகளுடன் புராணப் பாத்திரத் தன்மைகளின் சில முக்கிய கூறுகளையும் இணைத்துப் பிரதிபலிப்பவர்களாக மேடையில் உலவுவர். பெருவீரத்திற்கு அருச்சுனன், அரசியல் செயல் திறனுக்குக் கிருட்டிணன், உண்மை பேசுதலுக்கு அரிச்சந்திரன், பக்திக்குச் சிறுத்தொண்டன், உண்மைக் காதலுக்கு வள்ளி என்போர் உரியர் எனப் புராணப்பாத்திரங்களாக மக்களால் மதிக்கப்படுகின்றனர். முனிவர்கள் மற்றும் கடவுளர்களின் பேராற்றல்கள் இந்நாடகங்களில் மிகுதியாக இடம்பெறும். மக்கள் இத்தகைய நிகழ்ச்சிகளை விரும்பிப் பார்ப்பதுடன் இவைகள் இயற்கைக்கப்பாற்பட்ட நிகழ்ச்சிகள் எனக் கருதி ஒதுக்குகின்ற நிலை இல்லை.

தரம்வீர் எழுதிய 'கந்தாயுக்கு' (இருண்டகாலம்) என்ற இந்தி நாடகமும், சூலமங்கலம் வைத்தியநாத பாகவதர் எழுதிய சிவலீலா நாடகமும் சங்கரதாசு சுவாமிகளின் சதி அனுசூயா, சீமந்தனி நாடகங்களும் குறிப்பிடத்தக்க புராண நாடகங்களாகும்.

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் மிகுதியான புனைவியல்நாடகங்கள் மேடையேற்றப்பட்டன. தமிழ்ப் பார்வையாளர்கள் அவைகளை விரும்பிப் பார்த்தனர். சமூக நாடகங்கள் வரத் தொடங்கியதும் புராண நாடகங்கள் படிப்படியாகச் செல்வாக்கிழக்கத் தொடங்கின. ஆனால், 20-ஆம் நூற்றாண்டின் எழுபதுகளில் புராண நாடகங்கள் மீண்டும் ஓரளவு செல்வாக்குப் பெறத் தொடங்கின. நாடக நடிகர் ஆர். எசு. மனோகரும் அவர் குழுவினரும் இந்நாடக வகையை உயிர்ப்பிக்கச் செய்தவர்களில் குறிப்பிட்டுச் சொல்லத் தக்கவர்களாவர். மனோகர் நிறையப் புராண நாடகங்களை மேடையேற்றினார். நவீன நாடக ஆர்வலர்களையும் கவரத்தக்க வகையில் நிறைய நவீன உத்திகளைப் பயன்படுத்தி அந்நாடகங்களை நடத்தினார். நவீன விஞ்ஞானப் பயன்பாடுகளைக் கொண்டு சில உத்திமுறைகளை அத்தகைய நாடகங்களில் புகுத்தினர்.

**சமூக நாடகம்:** நடைமுறை வாழ்க்கையில் உள்ள அன்றாடச் சிக்கல்களை உள்ளடக்கிய நாடகம் சமூக நாடகம் எனப்படும். நாடகமேடை சமுதாயத்திற்

குப் பயன்படக்கூடிய செய்திகளைச் சொல்லுவதற் குச் சிறந்த இடமாக அமைந்துள்ளது. மக்கள் தங்கள் அன்றாட வாழ்க்கையில் கணக்கற்ற சிக்கல்களை எதிர்நோக்க வேண்டியுள்ளது. சமூகநம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், நடைமுறைச் சம்பவங்கள் போன் றவை இவ்வகை நாடக ஆசிரியர்களால் கவனிக்கப் பட்டு நாடகமாக்கப்படுகின்றன. சமுதாயம் எல்லாச் சிக்கல்களையும் வளர்க்கும் இடமாக அமைந் துள்ளது. மக்களிடையே காணப்படும் நன்மை, தீமை கள் முளைக்கும் இடமாகவும் இச்சமூகம் அமைந்துள் ளது. இவ்வகை, மக்கள் பலரும் ஒன்று சேரும் இடமாக இது அமைவதால் இங்கே தோன்றும் பலவகையான சிக்கல்கள் இத்தகைய நாடகங்களுக்குச் சிறந்த கருவாக அமைகின்றன. இந்நாடகப் பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் தங்களுக்குப் பழக்கப்பட்டனவாக இருப்பதால் இவ்வகை நாடகங்களில் மக்கள் பெரி தும் ஒன்றி விடுகிறார்கள். பார்வையாளர்களிடம் காணப்படும் இத்தகைய ஈடுபாட்டால் நாடக ஆசிரி யர் மக்களுக்கான பல புதியசெய்திகளை இந்நாடகங் களில் சொல்ல முடிகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி யில் தோற்றம் கண்ட இவ்வகை நாடகம் இக்காலத் தில் மிகுந்த செல்வாக்குடன் விளங்குகிறது. கி.பி. 1860-இல் வங்க மொழியில் தீனபந்துமித்திரா என்பவ ரால் 'நீல தருபுபணம்' என்னும் முதல் சமுதாய நாடகம் எழுதி மேடையேற்றப்பட்டது. ஆங்கிலத் தோட்ட முதலாளிகள், தொழிலாளர்களை ஈவு இரக்கமின்றி நடத்திய நிலையை இந்நாடகம் உணர்த் தியது. தமிழகத்தில் கிருட்டிணசாமிப் பாவலர் எழு திய பதிபக்தி, கதரின்வெற்றி போன்றவை இவ் வகையில் அடங்கும். சம்பந்த முதலியாரின் 'பொன் விலங்கு', அண்ணாவின் 'வேலைக்காரி', ப. நீலகண்ட னின் 'முள்ளில் ரோசா', தா.ஏ. ஞானமூர்த்தியின் 'பொன்மலர்' போன்ற நாடகங்கள் சிறந்த சமூக நாடகங்களாகும்.

**சிக்கல் நாடகம்:** ஒரு குறிப்பிட்ட சமுதாயச் சிக் கல் அல்லது நீதிமுறைச் சிக்கலை அடிப்படையாகக் கொண்டு அமையும் நாடகம் சிக்கல் நாடகம் எனப் படும். இது மக்களைச் சிக்கல் பற்றி அறிவு பூர்வ மாகச் சிந்திக்கத் தூண்டுகிறது. இது ஓரளவு துன்ப வியல் நாடகச் சாயல் கொண்டது. இது துன்பமிக்க மனிதரின் இருதலைப்பட்ட மனப் போராட்டங்களைப் பற்றியதாக அமைந்துள்ளது. உய்த்துணரும்படி சொல்வதாக அமையும் இந்நாடகத்தில் ஒரு திட்ட வட்டமான கேள்வியைக் கேட்டு அந்தக் கேள்விக்கு விடையை அளிப்பது அல்லது ஒரு விடையைத் தேடிக் கொள்ளச் செய்வது என்னும் நிலை காணப் படுகிறது. இது கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியிலும் இருபதாம் நூற்றாண்டிலும் பொது மக்களால் பெரிதும் விரும்பிப் பார்க்கப்பட்ட நாடக வகையாகும்.

சிக்கல் நாடகத்திற்கு இப்பொழுது நல்ல வர வேற்பு இருக்கிறது. கருத்துகளும், சமுதாய நிலை யும் வேகமாக மாறிக்கொண்டே இருப்பதால் இவ் வகை நாடகம் எந்தக் காலத்திற்கும் ஏற்றதாக அமைந்து போற்றப்படும். இது நெஞ்சுரம் வாய்ந்த வர்களாகவும், சிந்திக்கும் ஆற்றல் பெற்றவர்களாக வும் உள்ள மக்களைக் கவரும் வகையில் அமைந்திருக் கிறது.

இப்சன், பெர்னாட்சா ஆகியோரின் பெரும் பான்மையான நாடகங்கள் இவ்வகையைச் சார்ந்த தாக உள்ளன. தமிழில் இந்திராபார்த்தசாரதி எழுதிய நந்தன் கதை என்னும் நாடகம் இவ்வகையைச் சார்ந்த நாடகமாகும். இந்நாடக வகையின் சிறந்த இப்போக்கு மனித இன வளர்ச்சிக்குப் பயன்படுவ தாக அமைகிறது. இதற்காகப் சிக்கல்களை எளி மையாக்கி இதனை நாடகத்தன்மை நிறைந்த நாடக வகையாக மிளிரச் செய்யலாம்.

**வரலாற்று நாடகம்:** வரலாறு இயல்பாகவே நாடகத்திற்குத் தேவையான செய்திகளை உள்ளடக் கியதாக உள்ளது. சேக்சுபியரின் துன்பியல் நாடகங் களாகிய 'சூலியசு சீசர்' (Julius Ceaser) 'அந்தோணி யும் கிளியோபாத்ராவும்' போன்ற நாடகங்கள் வர லாற்றை உள்ளடக்கிய துன்பியல் நாடகங்களாகும். வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட இன்பியல் நாடகங்களும் தோன்றியுள்ளன. பெர்னாட்சாவின் 'செங்கோல் வேந்தன் சார்லசின் பொற்காலத்தில்(In good King Charles Golden days) என்ற நாடகமும் ஆர்.இ. எர்வுட்டின் 'உரோமாபுரிச் செலவு' (March to Rome) என்ற நாடகமும் இவ்வகையைச் சார்ந் தவை.

வரலாற்றிலிருந்து ஒரு பாடு பொருளைத்தேர்ந் தெடுத்து நிகழ்காலத்தில் காணப்படும் ஒரு சிக் கலை வெளிச்சத்திற்குக் கொண்டு வருவதற்குப் பயன்படுத்தும் போக்கு இருந்தது. இத்தகையபோக்கு உருசியத் திரைப்படங்களில் காணப்படுகிறது. இம் முறை வல்லாண்மை ஆட்சிமுறை நடைபெற்ற நாடுகளின் நிகழ்கால நிகழ்ச்சிகளை விமரிசனம் செய்யப் பெரிதும் பயன்பட்டது. வரலாற்றுப் பாடு பொருளைத் தேர்வது நிகழ்காலச் சிக்கலாகிய பாடுபொருளிலிருந்து அதனைப் போதுமான அள விற்குத் தனியாகப் பிரித்தெடுத்து உயர்தரமான உணர்ச்சியைக் கொடுக்கவும், உலகளாவிய தன்மை யைக் கொடுக்கவும் பயன்படுத்தினர். வரலாற்றில் காணப்படும் பொதுவான உண்மை மற்றும் மெய்

யியல்பைக் காட்டிலும் வரலாற்று நாடகத்தில் காணப்படும் மாயக் கவர்ச்சியை உணர்ந்து நாடகப் படைப்பாளர்கள் இவ்வகை நாடகங்களைப் பயன் படுத்தினர். வரலாற்று நாடகம், பழமையின் சிறப்பு களை நிகழ்காலத்திற்கு ஏதாவது ஒரு வகையில் பயன்படுத்துவதற்கு உரிய வாய்ப்பை நல்குகிறது. இது கற்பனையான மெய்யியல்பிற்கும் வரலாற்று உண்மைக்கும் இடையே காணப்படும் இறுக்கத்தின் குறியீடாகக் காணப்படுகிறது.

இராசராசசோழன் காலத்தில் நடத்தப்பட்ட 'இராசராசேசுவர நாடகம்' முதன்முதலில் தோன்றிய தமிழ் வரலாற்று நாடகமாகும். அரு. இராமநாதன் எழுதிய 'இராசராச சோழன்', எஸ்.பி. மணி எழுதிய 'முடிந்த கோயில்', ந.மு. கோவிந்தராய நாட்டார் எழுதிய'இராசேந்திரன்',ஆறு அழகப்பன் எழுதிய 'திரு மலை நாயக்கர்', நெடுமாறன் எழுதிய 'சாணக்கிய சபதம்' போன்றவை தமிழில் காணப்படும் வரலாற்று நாடகங்களாகும்.

**வாழ்க்கை வரலாற்று நாடகம்:** வரலாற்று நாட கங்களில் சில நாடகங்கள், சரித்திரத்தில் இடம்பெற்ற சிலரின் வாழ்க்கை வரலாற்றை, அவர்களின் பிறப்பி லிருந்து இறப்பு வரை விவரிப்பதாக அமைந்துள்ளன. இவை வாழ்க்கை வரலாற்று நாடகங்களாக விளங்கு கின்றன. சம்பந்த முதலியார் எழுதிய 'புத்த அவதாரம்', மு.வரதராசனார் எழுதிய 'பச்சை யப்பர்', வழித்துணைவன் எழுதிய 'திருவள்ளுவர்' என்ற நாடகமும் இவ்வகையைச் சார்ந்த நாட கங்களாகும்.

**கொள்கை விளக்க நாடகம்:** நாடகத்தை நேரடி யான கொள்கைப் பரப்பலுக்குப் பயன்படுத்துவது என்பது புதிதான செயல் அன்று. இங்கிலாந்து, ஐரோப்பா நகரங்களின் அதிசய நாடகங்களும் நீதிநெறி நாடகங்களும் தேவாலயக் கோட்பாடு களைக் கற்பிக்கும் நாடகங்களாகவே இருந்தன.

கொள்கைப்பரப்பு நாடகத்தின் முதன்மையான நோக்கம் பார்வையாளர் மனதில் ஒரு கருத்தைப் பதியச் செய்வதாகும். இக்கருத்துப் பொதுவாக மதச் சார்புடையதாகவோ, அரசியல் கருத்தாகவோ, சமூகக் கருத்தாகவோ இருக்கலாம்.

பிரிசிட்லியின் 'அவர்கள் ஒரு நகரத்திற்கு வந் தார்கள்' (They came to a city) என்ற நாடகம் இத்தகு நாடகத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இந்நாடகத்தில் படைப்பாக்கம் மனித நேயப் பொது வுடைமைக் கொள்கை விளம்பரமாக அமைந்துள் ளது. கால்சுவொர்தியினுடைய 'நீதி' (Justice) என்ற நாடகம், சட்ட நீதி முற்றிலும் போதுமானதாக இல்லை என்று அறிவித்தது. இந்நாடகத்தின் விளை வாகச் சிறைச்சாலைகளில் மிகுதியான சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன.

பொதுவுடைமை வளர்ச்சியுற்ற போது இதன் பங் களிப்பாகக்கொள்கைப்பரப்புநாடகம் ஒரு கருத்தூன் றிய கலை வடிவமாக வளர்ச்சி பெற்றது. உருசியா வில் நாடகம் பொதுமக்களுக்கான பொதுவுடைமைக் கொள்கைக் கல்வி பயிற்றுவிக்கும் கருவியாகப் பயன் படுத்தப்பட்டது. இந்த இயக்கத்தின் பயனாய் நல்ல மனிதத்தன்மை கொண்ட நாடகங்கள் தோன்றின. ஆமினோசெனெவ என்பவரால் எழுதப்பட்ட 'தொலை தூரப் புள்ளி' (Distant point) என்ற நாடகம் இவ் வகையில் சிறந்த நாடகம் ஆகும். இவ்வகை நாடகங் கள் சூதுவாதற்ற இயல்பையும், மிகவும் எளிமையாக் கப்பட்ட தன்மையையும் கொண்டிருந்தன. இவை இலக்கியத் தரமற்றதாக விளங்கின. சீனாவிலும் இந்நாடக வகை இவ்வாறே செயற்படுகிறது.ஆனால், படைக்கப்படும் அனைத்து நாடகங்களும் இலக்கியத் தரமற்ற நாடகங்கள் என்று ஒதுக்கிவிட முடியாது.

தமிழில் தெ.பொ. கிருட்டிணசாமியின் 'கதரின் வெற்றி', 'தேசக்கொடி' போன்ற நாடகங்கள் சுதந் திரப் போராட்ட உணர்வை ஊட்டிய நாடகங்களா கும். சுவாமிநாத சர்மாவின் 'பாணபுரத்து வீரன்' என்ற நாடகமும் சுதந்திர உணர்வை ஊட்டிய நாடகம் ஆகும்.

**அபிநயக்கூத்து:** இது முழுத்தன்மை கொண்ட நாடக வகையாக இருப்பதால் குறிப்பிடத் தக்கதா கிறது. இது பிரான்சு நாட்டைக் காட்டிலும் இங்கி லாந்தில் கருத்தார்ந்த நாடக வகையாக விளங்கி வருகிறது. அபிநயக்கூத்து அமைதியாக நடைபெறும் நடிப்பை உள்ளடக்கியது. இது ஏறத்தாழ இரு பிரிவு களைக் கொண்ட நாடக வடிவமாகும். அப்பிரிவு களாவன: 1) செவ்வியல் சார்ந்த அபிநயக்கூத்து: இது இத்தாலியில் உள்ளது போன்ற ஒரே தன்மை வாய்ந்த ஒரு நாடகக் குழுவினரால் நடத்தப்படும் நாடகம் ஆகும். அன்றியும், இது பிரெஞ்சு மற்றும் ஆங்கில நாடக வகைபோல் முயற்சியின்றி அவ்வப் போது முறைப்படி கோக்கப்பட்ட வார்த்தைகளி னால் உருவாகும் நாடகமாக அமையும். 2) புற வாய்மை வழாத அபிநயக்கூத்து. இவ்வகை நாடகத் திற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. இந்நாடக வகைக் குச் சிறந்த எடுத்துக் காட்டாக 'மகிழ்ச்சிப் பயணம்' (The Happy Journey) என்ற நாடகமும், 'நீண்ட கிறித்துமசு விருந்து' (The Long Christmas Dinner) என்ற நாடகமும் ஆகும். இந்நாடகங்களின் பாத்தி ரங்கள் நாடகத்தில் கற்பனையாகக் கற்பிக்கப்பட்ட பொருள்களைக் கொண்டு இந்நாடகத்தை நிகழ்த்து

கிறார்கள். இந்நாடக வடிவம் கூர்மையான கவனத்தை நடிகர்கள், பார்வையாளர்கள் என்ற இரு தரப்பினரிடமும் எதிர்பார்க்கும் நாடகவடிவமாக உள்ளது. இந்நாடக வகை ஓரளவு நன்றாக நடைபெறும் நாடகமாயினும், இன்னும் இங்கிலாந்தில் சிறந்த சோதனைப் பயணம் செய்யும் நாடகவகையாக வளரவில்லை. இக்கால அபிநயக்கூத்து முழுதும் அமைதி மொழியைக் கொண்ட நாடகம் ஆகும். அதனால், இது இலக்கியமாகக் கருதப்படுவதில்லை. இந்நாடக வகை கல்வி மற்றும் உளவியல் துறைகளில் மிகத் தேவையான ஒரு நாடக வடிவமாக உள்ளது. இத்துறைகளில் இந்நாடக வகையின் பயன்பாடு வளர்ந்து கொண்டு இருக்கிறது. குழந்தைகளிடத்து நல்ல கற்பனையாற்றல் மற்றும் நாடகத் திறனை வளர்க்க இந்நாடக வகையால் முடியும்.

**கிளைக்கதை சார்ந்த நாடகம்:** காரண காரிய முறைப்படி பல கிளைக்கதைகளை உள்ளடக்கிய நாடகவகை ஒன்று உண்டு. அது கிளைக்கதைகள் சார்ந்த (Episodic) நாடகம் எனப்படும். வாழ்க்கையை உள்ளது போல் பிரதிபலிப்பதற்கு ஏதுவாகத் துன்பியல், இன்பியல் என்ற இருவகை கிளைக்கதைகளையும் உள்ளடக்கிய நாடக வடிவமாக இது அமைந்துள்ளது. பல பாடுபொருள்கள் ஒன்றோடொன்று கலந்து பின்னப்பட்டதாக அமையலாம். இந்நாடக வகையின் நிகழ்ச்சிகள் வாழ்க்கை முழுதும் அல்லது வாழ்க்கைக்குப் பின்னரும் இடம்பெறும் செயல்களை உள்ளடக்கியதாக இருக்கலாம். இவ்வகை நாடகத்திற்குக் காலவரன் முறையாக எழுதப்பட்ட நாடகம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. சேக்சுபியரின் 'நான்காம் என்றி' (Henry IV) இந்த வகைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். வரலாற்றுக்கு மிகுதியான வாய்ப்புக் கொடுக்காத கிளைக்கதை சார்ந்த நாடகமும் இருக்கிறது. ஆர்னால்டு பென்னட்டு எழுதிய 'மைல்கல்' (Mile stone) என்ற நாடகம் இதற்குச் சிறந்த காட்டு ஆகும்.

**நாடக உத்திகள்:** அரிசுடாட்டில் பாடுபொருள், கதைக்கோப்பு, பாத்திரம், சொல்தேர்வு, கருத்து, காட்சியமைப்பு என்னும் இவற்றைத் துன்பியல் நாடகக் கூறுகளாகக் கொடுக்கிறார். இவை அனைத்து நாடகங்களுக்கும் பொருந்தும்.

**கதைக்கோப்பு:** நாடகத்தின் கூறுகளின் முதன்மையானது கதைக்கோப்பு ஆகும். கதைக்கோப்பு என்பது நிகழ்ச்சிகளின் தொடர்ச்சியைக் குறிப்பதாகும். நிகழ்ச்சிகள் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக அமைவதோடு அடுத்து வரும் நிகழ்ச்சி முன் நிகழ்ச்சிகளின் விளைவாகவும் இருத்தல் வேண்டும். நிகழ்ச்சிகளை ஒன்றுக்கொன்று தொடர்பு படுத்தியும் அவற்றைக் காரண காரிய முறையில் அமைக்கும் திறத்திலும் கதைக்கோப்பு உருவாகிறது.

கதையில் ஒரு முரணைத் தோற்றுவித்து அதைச் சிக்கலுடையதாகவும் அச்சிக்கல் முடிவுறும்படியும் நிகழ்ச்சிகளைக் காரணக் காரியத் தொடர்புடன் விளக்குவது கதைக் கோப்பாகும். செருமனி நாட்டுத் திறனாய்வாளராகிய குசுடாவு பிரேடாகு (Gustav Freytag) நாடகக் கதைக்கோப்பை ஐந்து வகையாகப் பிரிக்கிறார். அவையாவன: 1) அறிமுகம் அல்லது விளக்கம் (Introduction or Exposition) 2) வளர்ச்சி (Rising action) 3) உச்சம் (Crisis or climax) 4) வீழ்ச்சி (Falling action) 5) விளைவு அல்லது முடிவு (Catastrophe) என்பனவாகும்.

**அறிமுகம் அல்லது விளக்கம்:** இப்பகுதியில் கதைமாந்தர்கள் அறிமுகப் படுத்தப்படுவர்; நிகழ்ச்சிகளும் அறிமுகப்படுத்தப்படும். முரண் (Conflict) தொடக்கமும் இதன்கண் இடம்பெறும்.

நாடகத்தில் கதை மாந்தரையும் நிகழ்ச்சியையும் அறிமுகப் படுத்துதற்கு மிகவும் திறமை வேண்டும். பழங்கால நாடகங்களில் கதை மாந்தரைப்பற்றி முன்னுரையாகக் கூறுவதற்கென்றே கட்டியங் கூறுவோன் என்ற பாத்திரத்தைப் படைப்பதுண்டு. இப்பொழுது கதாபாத்திரத்தோடு தொடர்புடைய பணியாள்கள் வாயிலாகக் கூடப் பாத்திர அறிமுகம் நடைபெறுவதுண்டு. அறிமுகம் சுருக்கமாகவும், தெளிவாகவும், நாடகப் பாங்குடையதாகவும், கதை முற்பகுதியோடு தொடர்புடையதாகவும் அமைதல் வேண்டும்.

முரண் இரண்டு மாறுபட்ட கருத்துகள் அல்லது உணர்ச்சிகளிடையே ஏற்படுகின்ற மோதல் காரணமாகத் தோன்றுகிறது. நன்மைக்கும் தீமைக்கும் இடையே ஏற்படுகின்ற மோதல் காரணமாகத் தோன்றும் முரணைப் பெரும்பாலும் பழைய நாடகங்களில் காணலாம்.

**வளர்ச்சி:** முரணைத் தொடக்கத்திலிருந்து படிப்படியாக வளர்த்தல் வேண்டும். இடையிடையே சிக்கல்களைப் படைத்து நிகழ்ச்சிகள் கோவையாகவும் இயல்பாகவும் அமையுமாறு செய்தல் வேண்டும். தொடர்பில்லாத நிகழ்ச்சிகள் எத்துணை சுவை பயப்பதாயினும் அவற்றைப் புகுத்திக் கதையின் முக்கிய நிகழ்ச்சியை மறைத்து விடுதல் கூடாது. காட்சி ஒவ்வொன்றும் கதைப்கோப்பின் வளர்ச்சிக்குத் துணை செய்யும்படியாகவோ முதன்மைக் கதை மாந்தரைப் பற்றி முக்கியமான செய்தியைத் தருவதாகவோ அமைதல் வேண்டும்.

**உச்சம்:** முரண்பட்ட இரண்டு ஆற்றல்களும் தத்தம் வன்மையைத் தொடர்ந்து சமநிலையில் செலுத்த

முடியாது. ஒன்றன் ஆற்றல் இன்னொன்றனை மீறு வது கதைவளர்ச்சியில் முன்போ பின்போ ஏற்படும். இதனைத் திருப்பு மையம் அல்லது உச்சம் என்பர். உச்சம் இயற்கையாகவும் முன் நிகழ்ச்சிகளின் விளை வாகவும் தோன்றுதல் வேண்டும்.

**வீழ்ச்சி:** உச்சத்தைக் கடந்ததும் நிகழ்ச்சிப் போக்கு முடிவை நோக்கிச் செல்லும். இப்பகுதி, வீழ்ச்சி (Denoument or falling action) எனப்படும். நாடகத்தில் முடிவை - அதாவது, இன்ப முடிவு அல்லது துன்ப முடிவையொட்டி வீழ்ச்சிப் பகுதி அமையும். இன்பமுடிவாயின் தலைவன் தலைவி யருக்கு ஏற்பட்ட இன்னல்கள், இடர்ப்பாடுகள், தவறான எண்ணங்கள் முதலானவை ஒவ்வொன் றாக நீங்கும். துன்ப முடிவாயின் தீமையை எதிர்த்து நின்ற சக்திகள் ஆற்றலற்றவையாகி, தீமை பேராற்ற லுடையதாகிவிடும்.

**முடிவு:** முடிவையொட்டியே நாடகங்களை இன்ப வியல், துன்பவியல் என இரு பகுதிகளாகப் பகுத்துக் காண்பர். இன்ப முடிவை எய்துவது இன்பியல்; துன்ப முடிவை எய்துவது துன்பவியல். பழங்காலத் தில் துன்ப-இன்பவியல் நாடகங்கள் பல இருந்தன போல் இக்காலத்தில் உணர்ச்சி முனைப்புடைய இன் பியல நாடகங்கள் உள்ளன. இவற்றில் கதைக்கோப் பப் பெரும்பாலும் துன்பவியல் நிறைந்ததாகவும், இறுதியில் சிறந்த பாத்திரங்கள் இன்பம் எய்துவதாக வும் அமையும். உச்சத்தின் தோற்றம் முன் நிகழ்ச்சி களின் விளைவாக அமைய வேண்டும். அதுபோலவே முடிவும் முன் நிகழ்ச்சிகளின் பொருந்திய விளைவாக இருத்தல் வேண்டும். நாடக நிகழ்ச்சிகளைக் கோத் துச் சிக்கல்களைப் புகுத்தி, அவற்றைத் தகுந்த முடி வுக்குக் கொண்டு வருவதற்காக, ஆசிரியர்கள் பல உத்திகளைக் கையாளுகிறார்கள். சீரான கட்டுக் கோப்பு அமைவதற்கு அவை பெரிதும் துணைபுரி கின்றன.

நாடகம், களம், காலம், உள்நிகழ்வு என்னும் இவற்றின் ஒருமைப்பாட்டால் அமைந்திருக்க வேண் டும் என்பது கிரேக்க நாடகத்தார் வலியுறுத் தும் உத்தியாகும். சேக்சுபியர் நாடகங்களில் கால மும் களமும் இறுக்கமாகப் பின்பற்றப் படவில்லை. சேக்சுபியரின் நாடகங்களில் முக்கிய கதையோடு கிளைக் கதைகளும் இணைந்து போகும். ஆனால் கிரேக்க நாடகப்போக்கில் அது இல்லை.

கொலை செய்தல், வாள் போரிடுதல் போன்ற கொடுமை மிகுந்த காட்சிகளை நாடக மேடையில் காட்டுவதில்லை. இதனை அவர்கள் ஓர் உத்தி யாகப் பின்பற்றி வந்தனர். ஆனால், சேக்சுபியர் நாடகங்களில் இவை மேடையில் வெளிப்படை யாகக் காட்டப்பட்டன. இதனையே இவர்கள் ஒரு நாடக உத்தியாகப் போற்றினர்.

**குழுப்பாடல்:** இது கிரேக்க நாடகங்களில் இடம் பெறுவது. இப்பாடற் குழுவினர் எலிசபெத்து அரசி கால ஆங்கில நாடகங்களில் முகப்புரையும் இடை நிகழ்வுரையும் நடத்தியவர்கள். நவீன நாடகத்தில் 'கோரசு' எனும்குழுவினர்சிறப்பானதலிநாடகக்கூறாக அமைந்து நாடக நிகழ்வுகளைப் பற்றி விமரிசனம் செய்யவும், முன் கதைகளை எடுத்துக் கூறவும், பின் நிகழ்வைச் சூசகமாகத் தெரிவிக்கவும், சில கதாபாத் திரங்களாக மாறிக் கொள்ளவும், பார்வையாளர் களுக்கும் நாடகத்திற்கும் ஒரு பாலமாகப்பயன்படும் ஓர் உத்தியாகப் பயனபடுத்தப் படுகின்றனர்.

**நாடக அறிமுகக்காட்சி:** ஒரு நாடகத் தொடக்கத் தின்போது அந் நாடகத்தைப் பற்றி நாடகப் பாத்தி ரங்களில் ஒன்றோ நாடகாசிரியனின் பிரதிநிதியோ நாடகத்தை அறிமுகப்படுத்தி வைப்பார். நாடகத் தின் போக்கை முன்கூட்டியே சொல்லி விளங்க வைப்பதற்கு நாடக ஆசிரியர்கள் இதனை ஓர் உத்தி யாகப் பயன்படுத்துவதுண்டு.

**நாடக முடிவுரை:** ஒரு நாடகத்தின் இறுதியில் அந்நாடக முரண் வளர்ச்சி குறித்தும்,முடிவு குறித் தும் இந் நாடகக் கதைப் பாத்திரங்களில் ஒன்றோ நாடகாசிரியரின் பிரதிநிதியோ பார்வையாளர் களுக்கு எடுத்துச் சொல்லப் பயன்படும் ஓர் உத் தியாக இது பயன்படுத்தப்படுகின்றனர்.

**நாடகத்தனிமொழி:** நாடகத்தில் நேரடியாகத் தான எதுவும் கூற முடியாத நிலையில் உள்ள ஆசிரியன் தன் பாத்திரங்களின் உள்ளக் கருத்தையும் மனவெண் ணத்தையும் வெளிப்படையாக வெளியிடாவிட்டால் நாடகக் கட்டுக்கோப்பின் போக்கில் இடைக்குறை ஏற்பட்டு விடும் என்ற நிலை ஏற்படும்பொழுது தனது பாத்திரங்களைத் தனிமையில் தனக்குத்தானே பேசிக் கொள்வதாக அமைக்கிறார். நாடகத்தில் இடம்பெறும் இத்தனிமொழி நாடகத்தனிமொழி எனப்படுகிறது.

நாடக ஆசிரியர்கள், பிற பாத்திரங்கள் அறியக் கூடாத ஒரு பாத்திர எண்ண அலைகளை, நாடகங் காண்போர் அறியும் பொருட்டு மேடையில் பாத்தி ரங்கள் பேசுவதாக அமைக்கின்றனர்.

நாடக ஆசிரியர்கள் பாத்திரங்களின் தனிமொழி கள் மூலம் அப்பாத்திரங்களின் சில மறை செய்தி களையும் அவர்களுடைய அகப்பண்புகளையும் விளங் கச் செய்கிறார்கள். மேடையில் பாத்திரங்கள் தனி யாக நின்று வாய் திறந்து பேசுவது மனித இயல்

பிற்கு உகந்ததாக இல்லை எனினும் நாடகத்தின் தேவை கருதி உலகப் பெரும் நாடக ஆசிரியர்கள் இந்த உத்தியைக் கையாண்டுள்ளனர். இக்கால நாடகாசிரியர்கள் நாடகத் தனிமொழியை மிகக் குறைவாகவே பயன்படுத்துகிறார்கள். சுருங்கச் சொல்லின் பாத்திர உள்ளச் சிக்கலை வெளிக்காட்டும் உத்தியாக நாடகத்தில் தனிமொழி பயன்படுத்தப்படுகிறது.

சேக்சுபியர் தம் நாடகங்களில் தனிமொழிகளை நாடக உத்தியாகப் பயன்படுத்தியுள்ளார். தமிழில் சம்பந்த முதலியாரின் 'இரண்டு நண்பர்கள்' என்ற நாடகத்திலும் 'மனோகரா'விலும் தனிமொழிகள் இடம்பெறுகின்றன.

**மெல்லிய குரலில் பேசப்படும் சொல்:** இது மற்றைக் கதாபாத்திரங்களுக்குக் கேட்காமல் இருக்கும்படி நின்று பார்வையாளர்களுக்கு மட்டும் கேட்கும்படியாக மெல்லியகுரலில் சொல்லுதல். நாடக ஆசிரியர்கள் நாடகச் செயல் வளர்ச்சிக்கு இதனையும் ஓர் உத்தியாகப் பயன்படுத்துகின்றனர்.

**வான்கூற்று:** நாடகத்தில் பாத்திரம் மேடையில் தோன்றாமல் குரல் மட்டும் பேசுவதாக அமைப்பது வான்கூற்று எனப்படும். பாத்திர மனச்சாட்சி பேசுவதாய் அமையும்போதும், தெய்வம் அருள் கொடுப்பதாக அமையும்போதும் இவ்வுத்திப் பயன்படுத்தப்படுகிறது. வான் கூற்று (அசரீரி) நாடகக்கட்டுக் கோப்பு உத்தியாகப் பயன்படுத்தப்படுகிறது. 'கர்ண மோட்ச'நாடகத்தில் வான்கூற்று இடம்பெற்றுள்ளது.

**இடைக்காட்சிகள்:** ஒரு பெரிய நாடக உள்நிகழ்வுப் போக்கைத் தடையின்றிச் செலுத்துவதற்காகச் சில குறிப்பிட்ட கருத்துகளையும் சில விமரிசனங்களையும் ஆசிரியர் பாத்திரம் வாயிலாகக் கூறுவதற்குச் சில இடைக்காட்சிகளைப் புகுத்தி இருப்பர். சமசுகிருத நாடகத்தில் இவ்வுத்தி மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டது.

**கடந்த கால நிகழ்ச்சிகளை நினைவுகூர்தல்:** இது நாடகத்தின் உள் நிகழ்ச்சிப் போக்கை முன்னோக்கி எடுத்துச்செல்லக் கடந்த கால நிகழ்ச்சிகளை நினைவு கூர்தலாகக் காட்டுகின்ற உத்தியாகும். நாடகத்தின் முற்பகுதியில் நடைபெறும் ஒரு செயலை நாடகத்தில் மறைநவில் தன்மை தோன்றப் படைக்கும் பொருட்டும், ஒரு பாத்திரம் தனது கடந்த கால வாழ்வில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியை நினைவு கூர்தற்பொருட்டும் இவ்வுத்தி பயன்படுத்தப்படுகிறது.

**கனவு:** நாடகக்கதை வளர்ச்சிக்குக்'கனவு' ஒரு சிறந்த உத்தியாகப் பயன்படுத்தப்படுகிறது. 'புலந்தரன் கனவு' நாடகத்தில் அல்லிக்கு வரும் கனவே நாடக வளர்ச்சிக்குக் காரணமாக அமைகிறது.

**இயற்கை இறந்த நிகழ்ச்சிகள்:** மனித ஆற்றலால் வெளிப்படுத்த இயலாத ஒன்றை மீயாற்றலால் நாடக ஆசிரியர்கள் வெளிப்படுத்தி, அதன் மூலம் நாடகத்தின் செயலோட்டத்தை விரைவுபடுத்தும் நிலையைக் காணலாம்.

சேக்சுபியரின் 'ஏம்லட்டில் பெரிய ஏம்லட்டின் அருவம் செய்கிற பணியை இங்கு நினைவு கூரலாம். பம்மல் சம்பந்த முதலியாரின் 'மனோகரா' வில் கேசரிவர்மனின் அருவம் வசந்த சேனையின் கொலைச் செயலை வெளிப்படுத்துவது நினைதற்குரியது.

கு.மு.

**இன்பியல் நாடகங்கள்:** நாடக வகையுள் இன்றியமையாத ஒரு பெரும் பிரிவே இன்பியல் நாடகங்கள். இவற்றின் தோற்றம் கிறித்துவுக்கு முற்பட்ட கிரேக்க இலக்கியங்களில் காணக் கிடக்கிறது. கடவுளர்க்கு எடுக்கும் விழாக்களில் மகிழ்ச்சியினை வெளிப்படுத்துவதோடன்றிப் பிறரையும் களிப்பூட்டுவதற்கென்றே அக்காலங்களில் இன்பியல் நாடகங்கள் எழுதி நடத்தப்பெற்றன. கி.மு.4-ஆம் நூற்றாண்டினராகக் கருதப்படும் அரிசுட்டோபேனசு ஒரு நாடக ஆசிரியர். இவரெழுதியதாக இப்போது கிடைக்கும் பதினொரு நாடகங்களில் நகைச்சுவையின் கூறுகளாகிய அங்கதமும், கேலியும், பரிகசிப்பும், நையாண்டியும் விரவி வருகின்றன.

இன்பியல் நாடகத்தைக் குறிக்கும் 'காமெடி' என்னும் சொல் ஒருகாலத்தில் பாடலாக வரும் கதைத் தொடரையும் குறித்தது. தாந்தே (கி.பி. 2-ஆம் நூற்றாண்டு) எழுதிய 'இறைமைசார் இன்பியல் நாடகம்' (Divine Comedy)இதற்கு ஒரு சான்று. ஆனால், இற்றை நாட்களில் இச்சொல் இன்பியல் நாடகங்களையும், அவற்றின் சிற்சில பிரிவுகளையும் குறித்து நிற்கிறது. சமுதாயத்திலும், தனிமனித அளவிலும் காணப்படும் முரண்பாடுகளையும், அசட்டுத் தன்மைகளையும் குற்றங் குறைகளையும், கேலியோடும் கிண்டல் கலந்தும், நயமாக இடித்துரைத்தும் போக்குவதே இவற்றின் குறிக்கோள் ஆகும்.

அரசியலறிஞன் பிளேட்டோ இன்பியல் நாடகம் பற்றி ஏதும் உயர்ந்த கருத்தைக் கொண்டிலர் என்பது அவரது 'உரைக்கோவை' (Symposium) என்னும் நூலில் தெளிவாகிறது. ஆனால் அவருக்குப் பின்னர் வந்த அரிசுடாட்டிலோ தமது 'பாட்டியல்' (Poetics) என்னும் நூலின் 4, 5-ஆம் இயல்களில் இது பற்றி விரிவாகப் பேசுகிறார். துன்பியலை உயர்த்திப் பேசும் அவர் பரிகாசத்துக்கும் கேலிக்கும் இடந்தரும் இழிசினரை மையமாகக் கொண்ட இன்பியல் நாடகங்கள் போற்றத் தகுந்தன அல்ல என்கிறார்.

இருப்பினும் அவர் காலத்துக்கு முன்னமேயே இத்தகு நாடகங்கள் இருந்தமையை மனத்திற் கொண்டு அவற்றுள் வரும் தலைமைப் பாத்திரங்களைத் தற்பெருமை பேசுவோர், கூச்சப்படுவோர், கோமாளிகள் என்று மூவகைப் படுத்துவார்.

கிரேக்கக் கவிஞராகிய மெனாண்டர் கி.பி.3-ஆம் நூற்றாண்டில் எழுதிய இன்பியல் நாடகங்களே தெரன்சு, பிளாட்டசு போன்ற உரோமானிய நாடக ஆசிரியர்க்கு முன்னோடியாக இருந்தன. உரோம் நாட்டில் அறுவடை விழாக்களிலும் திருமணங்களிலும் இன்பியல் நாடகத்தின் அங்கங்களாகிய பண்ணும் கூத்தும் உரைநடை கலந்து அரங்கேற்றப்பட்டன என்று இலிவி என்னும் வரலாற்றாசிரியர் கூறுகிறார். எனினும், இலிவியசு அன்டரானிக்கசு என்பாரே ஒரு கிரேக்க இன்பியல் நாடகத்தை இலத்தீன் மொழியில் எழுதி உரோம் நகரில் நடிக்கச் செய்தார் என்றும், அதனை அடியொற்றியே பிற நாடகங்கள் அங்கு எழுதப்பட்டன என்றும் கூறுவர்.

இங்கிலாந்தில் இன்பியல் நாடகங்கள் விவிலிய நூற்கதைகளைப் பின்பற்றியவையாம். மறைபொருள் நாடகங்கள் (Miracle plays) என்றும் நெறியுணர் நாடகங்கள் (Morality plays) என்றும் அவற்றை இருவகைப்படுத்துவர்.முன்னவைமதம்சார்ந்தவையாகவும்,பின்னவை உலகியல் சார்ந்தவை யாகவும்,விளங்கின.காலப்போக்கில் மதத் தொடர்போடு உலகியற் செய்திகளும் இணைந்தபோது நகைச்சுவையின் பரிமாணங்கள் அதிகரித்தன. வேக்பீல்டு வரிசையினைச் சார்ந்த ஆட்டிடையன் நாடகங்களே (1400) இதற்குச் சான்று.

உரோமானிய நாடகத்தினைப் பின்பற்றி கி.பி. 16 -ஆம் நூற்றாண்டில் நிக்கோலசு உதால் என்பவர் (1553) ஆங்கிலத்தில் முதல் இன்பியல் நாடகம் எழுதினார்.எலிசபெத்துக்காலத்துச் சான் லில்லி என்பவர் அரசவைக் கேற்ற நகைச்சுவை நாடகங்களை எழுதினார். திறம்பட நடிப்பதிலும் கருத்தாழம் மிக்க நாடகம் எழுதுவதிலும் வல்லுநராக இருந்த பென் சான்சன் (1572-1637)'வால்பொனி', 'எபிசீனி' முதலிவற்றைப் படைத்துள்ளார். இந்நாடகங்களில் வருவோர், அறிவுள்ள தனி மனிதர்களாக அன்றி, ஏதேனும் ஒரு பண்பின் முனைப்புடையோராக இருப்பதனால் ஏற்படும் பின்விளைவுகளை இவர் கேலியாகச் சித்திரிக்கிறார். எனவே, இவற்றைத் தனிப் பண்பியல் நாடகங்கள் (Comedy of humours) என்று வகைப்படுத்துவர்.

வில்லியம் சேக்சுபியரின் தனிச்சிறப்பே அவர்தம் நாடகங்கள் பல்சுவையின் கொள்கலமாக இருப்பது தான். அவர் எழுதியவற்றுள் மிகச் சிறந்த இன்பியல் நாடகங்களாக 'வெரோனா நகரத்துப் பிரபுக்கள்', 'பன்னிரண்டாம் இரவு', 'ஒன்றுமில்லா அமளி', 'வெனிசு வணிகன்', 'விரும்பிய வண்ணமே' ஆகியவற்றைக் குறிப்பிடலாம். ஆண் பெண்ணாகவும், பெண் ஆணாகவும் வேடமணிந்து வருவதாலும், மூவேறு பாத்திரங்களிடையே காதல் படும்பாடும் அவர்தம் படைப்புகளில் நகைச்சுவைக்கு இடமளிக்கும் நாடக உத்திகளாகும். இன்பியல் மட்டுமன்றி, ஏனைய நாடகங்களிலும் ஆங்காங்கே நகைப்புக்கிடமான காட்சிகளும் பாத்திரங்களும் காணப்படுகின்றன. வரலாற்று நாடகங்களில் வரும் 'பால்சுடாபு' என்னும் பெருந்தீனிக்காரன் இதற்கு ஒரு சான்று. சேக்சுபியரின் இன்பியல் நாடகங்களில் பெண் பாத்திரங்களே நுண்ணிய அறிவும்முன்யோசனையும் உடையோராய்த் திகழ்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இசுபெயின் (Spain), பிரான்சு போன்ற நாடுகளில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இன்பியல் நாடக வளர்ச்சிக்குப் பெட்ரோ கால்தெரான், மோலினா போன்றோர் உறுதுணையாக இருந்துள்ளனர். நாடக ஆசிரியராகவும், நடிகராகவும் இருந்து இன்பியல் வளர்ச்சிக்கு அரும்பணி ஆற்றியவர் மோலியர். பிரெஞ்சு நாட்டின் சேக்சுபியர் எனப்படும் இவர் இருபதுக்கு மேற்பட்ட சமூக இன்பியல்நாடகங்களை எழுதியுள்ளார். 'வெறுத்தொதுக்குவோன்', 'கஞ்சன்' போன்றவை அவர்தம் அரிய படைப்புகள். அவரை முன்மாதிரியாகக் கொண்டே தேனிசு நாடக ஆசிரியன் இலட்விக்கு, கோல்பர்கு போன்றோர் தம்கலைப் படைப்புகளை உருவாக்கினர். ஈதர்சு, விச்சர்லி, கான்கிரீவு போன்ற நாடக ஆசிரியர்கள் இன்பியல் நாடகங்களில் பாலுணர்வையும், விரசமான காட்சிகளையும் மிகுத்துக் காட்டியவர்கள். அந்நாளைய நடப்பு நிலையினைத் தெளிவுறுத்திய இவையெலாம் இற்றை நாட்களில் போற்றப்படுவனவாக இல்லை.

இன்பியல் நாடக வளர்ச்சிக்கு இத்தாலியில் கார்லோ கோல்டானியும்,செருமனியில் இலெச்சிங்கு என்பாரும் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் பெருந்தொண்டாற்றினர். இங்கிலாந்தில் கோல்டுசுமித்து, செரிடன், காங்கிரிவு போன்றோரின் கலைப்படைப்புகள் எண்ணிக்கையில் குறைவு என்றாலும், நகைச்சுவை வரலாற்றில் அவை இடம்பெறத் தக்கன. இந்நாடகங்களில் வாழ்வும் கலையும் இரண்டறப் பிணிக்கப்பட்டுள்ளன. ஒரு சமுதாயத்தின் உயர் நாகரிகப் போக்கும், அறிவுடைமையும் கொண்டு உல்லாசமாக வாழும் சதிகளையே கதைப் பொருளாகக் கொண்ட இவற்றை மேட்டுக்குடி இன்பியல்

(Comedy of manners) என்று பகுக்கலாம். இந்தப் பிரிவில் சேர்க்கத் தகும் நாடகங்களை எழுதிய ஆண்டன் செகாவ், உருசியாவின் மேலாண்மை வகுப்பு வீழ்ந்து படுவதைத் தமது படைப்புகளில் வெளிப் படுத்துகிறார்.

நகைச்சுவை நாடகங்களே நார்வே நாட்டில் இல்லை என்னும் குறையினைப் போக்கிய மாபெரும் சிந்தனையாளர் என்றிக் இப்சனின் (1828-1906)அரிய படைப்புகள் ஏறத்தாழ உலகம் முழுவதும் படிக்கப் படுகின்றன. வரலாறு புராணம் பற்றிய செய்திகளை ஒதுக்கி, சமுதாயத்தின் அன்றாடச் சிக்கல்களை நகைச்சுவை மிளிர வெளிப்படுத்தியவர் இப்சன். பொம்மை வீடு, பிசாசுகள் என்னும்நாடகங்கள் பெண்டிரது உரிமைக்குக் கட்டியம் கூறுவன. வேண்டாத கணவனை வெறுத்து விலகுவாளின் சுதந்திரமும் எந்நிலையிலும் அவனுடன் இணைந்திருப்பவள் படும் தொல்லையும் இந்நாடகங்களில் விளக்கப்பட்டபோது நார்வே நாட்டின் மரபு வழிச் சமுதாயம் இப்சனைக் கண்டனம் செய்தது. அதுவே அவரது புகழுக்கும் காரணமாக இருந்தது. குறியீடுகளை இலக்கிய உத்தியாகக் கொண்டே தமது கருத்தினை வெளியிடுவது இப்சனின் தனிச் சிறப்பு. பொம்மை வீடு, காட்டு வாத்து ஆகிய இவருடைய படைப்புகள் தமிழில் பெயர்க்கப்பட்டுள்ளன.

ஆசுக்கார் ஓயில்டு (கி.பி.1854-1900) கவிஞராயினும், அவர்தம் நாடகங்களினாலேதான் அவருக்குப் பெருமை. நடுத்தரக் குடும்பங்களின் பல்வேறு சிக்கல்களுக்குக் காணப்படும் தீர்வும் முடிவும் அவரது நாடகக் கருவாகும். விண்டர்மேர்சீமாட்டியின் விசிறி (1892) இவரை அறிமுகப்படுத்தியது. சமூகத்தை அங்கதப் பொருளாக ஆக்கியுள்ள 'இலட்சியக் கணவன்' (1895) இவரது பிறிதோர் புகழ்பெற்ற படைப்பாகும்.

திறனாய்வாளரும், ஆங்கில நாடகாசிரியருமாகிய சார்சு பெர்னாட்சா (கி.பி.1856-1950) புரட்சிகரமான எண்ணங்களும்,நாத்திகக்கொள்கையும் கொண்டவர்; மது, மாமிசம் தொடாதவர். கலை கலைக்காகவே என்னும் கருத்து இவருக்கு ஒவ்வாதது. குறிக்கோளும் கொள்கையும் பரப்புதற்கே கலையினைப் பயன்படுத்த வேண்டும் என்பதே இவரது நோக்கம். இவர்தம் அங்கத நாடகங்கள் அனைத்தும் சமூக, பொருளாதார, அரசியலை மையமாகக்கொண்டவை. 'மனிதனும் போர்க்கருவிகளும்'(1894)என்னும் நாடகத்தில் ஆண்மையினையும், வீரத்தையும் காட்டுவதாகக் கருதப்படும் போரினையும், போரிடுவோரையும் இவர் நையாண்டி செய்கிறார். ஏழ்மையினையும் போலியான மருத்துவத் தொழிலையும் கருவாகக் கொண்ட 'மேசர் பார்பரா', 'டாக்டரின் திண்டாட்டம்' என்பவையும் சிறந்த நாடகங்களே. குடியாட்சியினும் முடியாட்சி மேல் என்பதைத் துணிவுடன் வெளிப்படுத்துவதே 'நினைவும் விளைவும்' (Apple Cart). பரிகாசமும் ஏளனமும் கேலியும் கலந்த அவரது சமூக நாடகங்கள் அனைத்தும் ஆங்கிலச் சிந்தனையில் பின்விளைவுகளையும், பெரும் மாற்றத்தையும் ஏற்படுத்தியவை. ஆனால், உருசியாவின் ஆண்டன் செகாவும், நார்வேயின் இப்சனும் இவரது சிந்தனையில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியவர்கள்.

உளம் நிறைந்த மகிழ்ச்சியின் புறவெளிப்பாடே நகைச்சுவை என்பதும், அது திருமணங்களிலோ அரசனின் முடிசூட்டு விழாவிலோ நிறைவுபெறும் என்பதும், இன்பியல் நாடகங்களின் மரபு வழிபட்ட நியதிகள். அந்தச்சூழ்நிலைக்கு இன்றைய இன்பியல் நாடகங்களில் இடமில்லை. தன்னலத்தோடு பெருமை பேசித் திரிவாரை மேலும் அவ்வாறு போகாது தடுத்து நிறுத்தவும்,போலியும் செயற்கை மதிப்பும் நிலைக்கா என்பதைச் சுட்டிக்காட்டவும் அவை பயன்படுகின்றன. அங்கதமும், கேலியும், கிண்டலும் வாய்மொழியால் வெளிவருவதினும் குறியீடுகள் வழியே உணர்த்தப் பெறுவது இற்றை நாள் நாடக உத்தியாகும்.

இன்பியல் நாடகத்தின் குறிக்கோள் இவ்வாறு மாறுபட்டுத் திகழும் இக்காலத்தில் புகழ் பெற்று விளங்குவோர் நோயல் கவார்டு, சீனோ கேசி, யூசின் அயனசுக்கோ போன்றோர். இவருள் நோயல் கவார்டு எழுதிய நாடகங்கள் உருசியா உள்ளிட்ட ஐரோப்பிய நாடுகள் அனைத்திலும் படிக்கப்படுகின்றன. மனப் போராட்டத்தை வெளிப்படுத்தும் எலிப்பொறி, வீழ்ந்துபட்ட தேவதைகள் போன்றவை எள்ளல் வகையினைச் சார்ந்தவை. பெரும்பாலும் பொழுதுபோக்குக்கு உரியனவாகக் கருதப்படும் இவர்தம் நாடகங்கள் இசையும் கூத்தும் மலிந்தவையாகும். அயர்லாந்து நாட்டுக்காரரான சீனோ கேசியின் நாடகங்களில் சொல் விளையாட்டும், இரட்டுற மொழிதலும் நகைச்சுவைக்கு இன்றியமையாத அங்கங்களாகும். இவர்தம் இளமைக்கால நாடகங்கள் இவர் பட்ட வறுமையினையும் துன்பத்தினையும் வெளிப்படுத்துவன. இவர்தம்பெரும்பாலான நாடகங்களைத் துன்பியலென்றோ, இன்பியலென்றோ பிரித்துப் பார்க்க இயலாது எனினும், 'சிகப்புத்தூசி', 'பச்சைத் திரைக்குப் பின்னால்' என்னும் இரண்டு படைப்புகளும் நகைச்சுவை மிகுந்தனவாகும்.

யூசின் அயனசுக்கோஉருமேனியர். பாரிசில் தங்கி இரண்டாம் உலகப் பெரும்போருக்குப்பின் நாடகம் எழுதியவர். மேலோட்டமாகப்பார்ப்பின்,கோமாளித்தனமாகத்தோன்றினும், ஆழ்ந்து சிந்திக்கத் தூண்டும் காட்சிகள் இவர்தம் நாடகங்களில் நிறைய உண்டு.

நாற்காலிகள் (1951) என்னும் நாடகத்தில் தொண்ணூறு வயது முதியவர் வாழ்க்கையின் விரக்தி பற்றி வெறும் நாற்காலிகளைப் பார்த்துப் பேசுவார். பேச்சு என்பது வெறும் முனகலும் உறுமலுமே. இப்படிக் காட்சி அளவையாலும் கருத்தை வெளிப்படுத்தும் உத்தி இவருக்கே உரியதாகும்.

தரமான நகைச்சுவை நாடகங்களை எழுதும் பாரி பிலிப்பு ஓர் அமெரிக்கர். திருமணம் சட்ட முறையிலோ சமூகச் சடங்காகவோ இருப்பதை விட, தூய அன்பின் அடிப்படையில் அமைதல் வேண்டும் என்பதும், பணி யாதெனில் சமூகத்தால் விதிக்கப் பட்ட சுமை என்பதை விட மனச்சான்றுக்கு அஞ்சிச் செய்யவேண்டிய கடமை என்பதும் இவர் வலியுறுத்து கின்ற கருத்துகளுள் ஒருசிலவாகும். 'விடுமுறை' என்பது இவரெழுதிய மிகச் சிறந்த நகைச்சுவைப் படைப்பாகும்.

பாரம்பரியத்தையும் மரபினையும் ஒரு விதமான வெறுப்புணர்ச்சியோடு பார்க்கின்ற இயல்பு இன்றைய இன்பியல் நாடகங்களில் காணப்படுகிறது. எதுவுமே செய்ய முடியாத இக்கட்டான சூழ்நிலையில் மனித இனம் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுகின்ற இற்றை நாள்களில் நகைப்பும் சிரிப்புமாவது மனிதனை வாழ வைக்கட்டும் என்பது போன்று இப்படைப்பு களை உருவாக்கியுள்ளனர். எனவே, இவற்றில் நகைச் சுவை மனம் விட்டுச் சிரிக்கின்ற மகிழ்ச்சியின்றி, உணர்வு மயமாகவும் இயற்கை மீறியதாகவும் உள்ளது. எனவேதான், இந்த வகையினைக் 'கொடூர மான இன்பியல்' (Black Comedy) என்று கூறுவர்.

சூல்சு பீபர், சோ ஆர்ட்டன், பிரைடுமான் ஆகியோர் குறிப்பிடத் தகுந்தோர். இவருள் பீபர் எழுதிய 'வெள்ளை மாளிகைக் கொலை வழக்கு' (1970) என்னும் சிறிய நாடகம் வல்லரசுகளின் கெடுபிடிச் சண்டையினைக் கேலி செய்கிறது. கறுப்ப னாக இருந்தாலும் கவிஞனாக இருப்பதனாலே அவனையே விரும்புகின்ற அமெரிக்கப் பெண்மணி யைப் பற்றிய ஒரு கதையினை, 'பிலடல்பியா கதை' என்னும் தலைப்பில் பிரைடுமான் நாடகம் ஆக்கி யுள்ளார். பரந்துபட்ட இன்பியல் நாடக வளர்ச்சி யினைத் தொடக்க நிலையிலிருந்து காணும்போது, அது அடைந்த மாற்றங்களும், திருப்பங்களும் நன்கு புலனாகின்றன. ப.அ.

**துன்பியல் நாடகம்:** நாடகத்தில் பகுத்துரைக்கப் பெறும் துன்பியல், இன்பியல் என்னும் இருவகையும் ஐரோப்பிய நாடகங்களில் காணப்படுவன. மனிதனை மனிதன் அடுதலும் தொலைதலும் உலகத்தின் இயற்கை என்பதை உணர்ந்தே மேலை இலக்கியத்தில் குறிப்பாகக் கிரேக்க மொழியில் துன்பியல் நாடகப் பகுப்பும் கிறித்துவுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே பயிலப்பட்டு வருகிறது. கிரேக்க நாட்டில் விழாக் காலங்களில் இந்நாடக வகை தோற்றுவிக்கப்பட்டதா கும். 'திராசடி' (Tragedy) என்னும் ஆங்கிலச் சொல் துன்பியல்நாடகம் என்று தமிழில் பெயர்க்கப்படுகிறது. கிரேக்க மொழியிலோ இச்சொல்லுக்கு வெள்ளாட்டுப் பாடல் என்பது பொருள். அந்நாட்டில் தயோனிசியக் கடவுளர்க்கு விழா எடுக்கும் காலங்களில் வெள்ளாடு களைப் பலி கொடுத்துவிட்டுப் பின்னர் பாடலும் கூத்துமாய் இறைவனை வழிபடுவர். அதனை யொட்டியே இப்பெயர் வந்தது. கட்டியங் கூறுவோனைப் போல மேடையில் தோன்றி நாடக நிகழ்ச்சிகளை அவ்வப்போது கூறும் கோரசு என்னும் பாத்திரமாக வருவோர் தயோனிசியக் கடவுளரை வழிபடும்போது ஒரு பாதி மனித உருவிலும் ஒரு பாதி ஆடு உருவமாகவும் தோன்றுவர். அதனாலும் அப்போது நிகழ்த்தப் பெறும் கூத்திற்கு 'திராசடி' என்னும் பெயர் வந்திருக்கலாம். பெயர்க் காரணம் எதுவாயினும் கிறித்துவுக்குப் பல நூறாண்டுகள் முன்னரேயே தோன்றிய இந்த நாடகவகை காலங் காலமாய்ப் பல்வேறு மாற்றங்களையும் வேறுபாடு களையும் பெற்று வளர்ந்து வருகிறது.

கிரேக்க நாட்டில் வாழ்ந்த அரசியலறிஞர் பிளேட்டோ கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் தாம் எழுதிய குடியரசு என்னும் நூலில் நாடகங்களையும் பாடல் களையும் புறக்கணித்துவிட்டார். மானுடத்தின் சபலங்களையும், இயலாமையினையும் வெளிப்படுத்து கின்ற நாடகங்களாலும் பாடல்களாலும் சமுதாயத் திற்கு எந்த நன்மையும் இல்லை என்பதே அவரது கருத்து. அவரால் கண்டனம் செய்யப்பட்டனவற்றுள் துன்பியல் நாடக வகையும் ஒன்றெனக் கொள்ளலாம்.

பிளேட்டோவின் தாக்குதலுக்கு ஆட்பட்டுக் கிடந்த நாடகங்களுக்கு மீண்டும் புத்துயிரளித்த பெருமை அரிசுடாட்டிலைச் சாரும். பிளேட்டோ தமது இலட்சியக் குடியரசிலிருந்து நாடகங்களை ஒதுக்கித் தள்ளியதற்கு மாறாக அவற்றை மீண்டும் அரியணையேற்றினார் அரிசுடாட்டில். அவர் எழுதிய 'பாட்டியல்' (The Poetics) என்னும் நூலில் பாடலின் இயல்புகளோடு, பெருங்காப்பிய, நாடக இலக்கணங் கள் பற்றியும், கதைக்கரு குறித்தும், துன்பியல் நாடகத்தலைவன் எப்படிச் சித்திரிக்கப்படவேண்டும் என்பது பற்றியும் விளக்கிக் கூறுகிறார். தவறான முடிவு, தீவினை, அகம்பாவம் ஆகியவற்றினால் தன் நிலையினின்று தலைவன் வீழ்ச்சி அடைவான் என்றும் குறிப்பிடுகிறார். மேலும் காலம், இடம், செயல் ஆகியவற்றால் ஏற்படும் வழுவினைக் களைந்து நாட கங்கள் எழுதப்பெறல் வேண்டும் என்பதாக அவர் மேல் சிற்சில கருத்துகள் ஏற்றிச் சொல்லப்பட்டன.

ஆயினும், இந்த விதிமுறைகள் நாடக இயல்புக்கும் நடைமுறைக்கும் முற்றிலும் பொருந்தாதவை என்றும், அரிசுடாட்டில் எழுதிய கிரேக்க மூலநூலைத் தெளிவாகப் புரிந்துகொள்ளாத இத்தாலியத் திறனாய்வாளர் கேசில் வெட்ரோ (கி.பி. 1505-1571) போன்றோர் செய்த தவறு என்றும் இற்றையநாள் ஆய்வாளர் கருதுகின்றனர். தமது காலத்தில் வாழ்ந்த ஏசுகிலசு, சோபகிளிசு, யூரிபீடிசு ஆகியோர் எழுதிய துன்பியல் நாடகங்களை மனத்திற்கொண்டே அவர் தமது நூலை இயற்றியுள்ளார். மனிதனிடம் இயல்பாகவே குடிகொண்டுள்ள இரக்கம், அச்சம் போன்ற, மெலிந்த இயல்புகளை நீக்கி அவனை வீரமும், நெஞ்சுறுதியும் ஆண்மையும் மிக்கவனாக்குவதற்குத் துன்பியல் நாடகங்கள் இன்றியமையாதன என்றும் அவர் வலியுறுத்தினார்.

கிரேக்க நாட்டில் பலபடப் பாராட்டப்பெற்ற துன்பியல் நாடகங்களில் சிலவற்றை கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் உரோமானிய மொழியில் பெயர்த்தெழுதினர். அதற்கு முன்னமேயே செனகா என்னும் நாடக ஆசிரியர் கொலையும், இரத்தக்களரியும் பழிக்குப் பழியான செயல்களும் மிகுந்த நாடகங்களை அம்மொழியில் எழுதியுள்ளார். உரோமன் மொழியில் மிகச்சிறந்த கவிஞராகவும் திறனாய்வாளராகவும் கருதப்படும் கோரசு துன்பியல் நாடகம் எழுத விரும்புவோர் கிரேக்க நாடகங்களையே முன்னோடியாகக் கொள்ளவேண்டும் என்று தமது 'கவிதைக்கலை' என்னும் நூலில் குறிப்பிடுகிறார். கிரேக்க மரபுப்படி துன்பியல் நாடகங்களில் நகைச்சுவைக் காட்சிகள் இடம்பெறக் கூடாதென்றும், நடிகர்களின் தரத்துக்கேற்ப அவர்களது உரையாடல் அமைந்திருக்க வேண்டும் என்றும் வற்புறுத்துகின்றார்.

கிறித்துவுக்குப் பின்னர் ஏறத்தாழ ஆயிரத்து முந்நூறு ஆண்டுகள் உலகின் எந்த மொழியிலும் துன்பியல் நாடகங்கள் எழுதப்படவில்லை என்பது வியத்தகு செய்தியாகும். தொன்மையும் பண்பாட்டுப் பெருமையும் வாய்ந்த கிரேக்க, உரோமானிய எகிப்தியச் சமுதாயத்தினர் தத்தம் நாட்டுத் தத்துவம், கடவுட்பெருமை ஆகியவை பற்றிய பாடல்களை யாப்பதிலும், கவிதைகளை இயற்றுவதிலும் ஈடுபட்டிருந்தமையே அதற்குக் காரணம் என்று வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர்.

ஆங்கில இலக்கியத்தில் கி.பி.14-ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் சியாப்ரே சாசர் (கி.பி 1341-1400) தாம் இயற்றிய 'காண்டர்பரிக் கதைகள்' என்னும் கவிதைத் தொகுதியில் சந்நியாசியின் கதையாக வரும் பகுதியில் 'துன்பியல்' (Tragedy) என்னும் சொல்லை முதன் முறையாகக் கையாண்டுள்ளார். தனிப்பெரும் செல்வாக்குடைய ஒரு மனிதன் தனது உயர்ந்த நிலையிலிருந்து தாழ்ந்துபோய்ப் பரிதாபகரமான கீழ்நிலைக்குத் தள்ளப்படுவது என்பதே அதில் வரும் விளக்கம்.

தலைசிறந்த ஒரு பாத்திரத்தின் இத்தகு வீழ்ச்சி, எந்த ஒரு மனிதனும் பேராசையின் வயப்பட்டால் பெறக்கூடிய பின் விளைவினைச் சுட்டிக் காட்டுவதாகவும் கொள்ளலாம். எலிசபெத்து காலத்திற்கு முன்னர் சர் பிலிப்பு சிட்னி 'கவிதைப் பாதுகாப்பு' என்னும் நூலை ஆங்கிலத்தில் எழுதினார். அவரது காலத்தியதும், ஆங்கில மொழியின் முதல் துன்பியல் என்று கொள்ளத் தகுவதும் ஆகிய 'கார்படக்ந' என்னும் நாடகத்தில் கால, இட வழக்குகள் இருப்பதாகத் தமது நூலில் அவர் சுட்டிக் காட்டுகிறார். தாமசு சாக்வில், நார்ட்டன் ஆகியோர் இந்த முதல் துன்பியலை எழுதினர்.

பிலிப்பு சிட்னியின் துன்பியல் நாடகம் பற்றிய கருத்து கி.பி.17-ஆம் நூற்றாண்டின்தொடக்கக்காலம் முதல் ஆங்கில நாடக ஆசிரியர் பலரிடையே பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. இங்கிலாந்தில் கிறிசுடர் மார்லோ, சாப்மன், பென்சான்சன், சேக்சுபியர் போன்றோர் சிட்னியின் காலத்திற்குப் பின் வாழ்ந்தவர்கள். இவருள் மார்லோ தாம் எழுதிய ஏழு நாடகங்களையுமே துன்பியலாக எழுதியபோது அரிசுடாட்டிலின் நியதிகளாகக் கூறப்பட்டனவற்றைப் பின்பற்றவில்லை. ஆனால் இவற்றை மிகுந்த கவனமுடன் மனத்திற் கொண்டு 'இரசவாதி' (Alchemist) போன்ற நாடகங்களை எழுதிய பென்சான்சனுக்கோ நீடித்த புகழ் இல்லை. இக்காலக்கட்டத்தில் செனகாவின் துன்பியல் நாடகங்களை முன்னோடியாகக் கொண்டு எழுதியோருள் தாமசுகிட்டு குறிப்பிடத் தகுந்தவர். எனினும், இவர்கள் அரங்கேற்றிய அனைத்தும் சேக்சுபியர் நாடகங்கள் பெற்ற பெருமையினையும் சிறப்பினையும் அடைய முடியவில்லை.

துன்பியல் பற்றிய நியதிகளைத் தெரிந்து கொண்டோ, தெரியாமலோ வில்லியம் சேக்சுபியர் (கி.பி. 1564-1616) இருபத்தாறு ஆண்டுகளில் முப்பத்தேழு நாடகங்களை எழுதிக் குவித்தார். ஆயினும், கிரேக்க நாடக நியதிகள் என்று தாம் கருதியவற்றை மையமாகக் கொண்டு சேக்சுபியரின் நாடகங்களை அணுகிய திறனாய்வாளர் அந்நாள்களில் அவரது நாடகப் புலமையினையும், கவிதை மாண்பினையும் புறக்கணித்தனர். கால, இட வழக்குகள் அவர்தம் நாடகங்களில் மலிந்து கிடக்கின்றன என்று குற்றம் சாட்டினர். இந்தப் புறக்கணிப்பின் உச்சக் கட்டத்தில் கால, இட,வழக்குகளேயன்றி மிகைப்பட்ட, இயற்கை மீறிய செயல்களும் அவர்தம் நாடகங்களில் உள்ளன

வாதலின், அவற்றில் பங்கு கொள்ள மறுத்த நடிகர்களும் உண்டு. சில எளிய கவிஞர்கள் சேக்சுபியரது நாடகத்தைத் திருத்தி எழுதினர். ஏறத்தாழ 18-ஆம் நூற்றாண்டின் இடைக்காலம் வரை இப்படிச் சீர் குலைக்கப்பட்டும் மூலையில் தள்ளப்பட்டும் கிடந்த சேக்சுபியரை முற்றத்துக்குக் கொண்டு வந்து, அவரது நாடகச் சிறப்புக்கும் புலமைக்கும் புத்துயிரளித்த பெருமை சாமுவேல் சான்சனைச் (கி.பி.1709-1784) சாரும். சேக்சுபியர் எழுதிய அனைத்துள்ளும் இலீயர் மன்னன் (King Lear), ஒதெல்லோ (Othello), மாக்பெத்து (Macbeth), 'ஏம்லெட்டு' (Hamlet) ஆகிய நான்குமே மிகச் சிறந்த துன்பியல் நாடகங்களாகும்.

இசுபெயின் (Spain) நாட்டில் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் துன்பியல் நாடகங்கள் உலோபே வேகா, (கி.பி.1526-1635), திரிசா மோலினா (கி.பி.1584-1648), கால்தெரான் (கி.பி. 1600-1681) போன்றோரால் எழுதப்பட்டன. இவருள் இசுபானிய நாடக அரங்கின் வளர்ச்சிக்கு வேகா உறுதுணையாக இருந்தவர். இவரது பெயரால் ஐந்நூறுக்கு மேற்பட்ட நாடகங்கள் இசுபானிய மொழியில் உள்ளன. படை வீரனாக, துறவியாக, காதலனாக, எழுத்தாளனாக இருந்த இவர் வாழ்க்கையின் மேடு பள்ளங்களை அனுபவித்து உணர்ந்தவர் என்று பாராட்டப் பெறுகிறார். இவர் மிகச்சிறு வயதிலிருந்தே எழுத்துப் பணியில் ஈடுபட்டவர். வேகாவிற்குப் பின்னர் மிகச்சிறந்த நாடகப்பேரா சானாகப் புகழெய்தியவர் கால்தெரான். கிறித்தவ மதத் துறவியராக வாழ்ந்த இவர், நான்காம் பிலிப்பு என்னும் இசுபானிய மன்னரால் பெரிதும் ஆதரிக்கப் பெற்றவர். இவரது இன்பியல், துன்பியல் நாடகங்கள் மதச் சார்புடையன எனினும், 'வாழ்க்கை ஒரு கனவு', 'மந்திரவாதி' ஆகியவை யாவரும் படிக்கத் தகுவன. 'மோலினா' என்னும் புனைபெயரைக்கொண்ட காபிரியேல் தெலாசு முந்நூறுக்கு மேற்பட்ட நாடகங்களை எழுதியவர். பற்பல பெண்களிடம் மையல் கொண்டு களியாட்டம் நடத்திய தான்சுவான் பற்றிய நாடகமும் அவற்றுள்ஒன்று. இவர்கள் அனைவரும் கிரேக்க நாடகங்களையே முன்னோடியாகக் கொண்டிருந்தாலும், தத்தமது போக்கின்படியும் சமுதாயச் சூழ்நிலைக்கேற்பவும் தாம் எழுதியவற்றுள் விரும்பிய மாற்றங்களைச் செய்து கொண்டனர்.

ஏறத்தாழ இதே காலத்தில் பிரெஞ்சு மொழியில் முற்காலத்திய கிரேக்க நாடக நியதிகளை மீறாமல் துன்பியல் நாடகங்களை எழுதியோருள் பியரி கார்னீல் (கி.பி.1606-1684) போன்றோர் குறிப்பிடத் தகுந்தோராவர். இவருள் இரேசின் எழுதிய 'தீபசின் கதை' 'சீன் நதிக்கன்னி' உள்ளிட்ட பதினொரு துன்பியல் நாடகங்கள் கருத்தோட்டத்திலும், செழுமையான நடையிலும் அம்மொழியின் சிறந்த படைப்புகளாகப் போற்றப் பெறுகின்றன. மனிதன் தன் விதியினை எதிர்த்துப் போராடுவதை அவை மையமாகக் கொண்டவை. கார்னீலைப்பிரெஞ்சு மொழியின் சேக்சுபியர் என்றும், அம்மொழியின் துன்பியல் நாடகத் தந்தை என்றும் குறிக்கின்றனர். செருமனியில் இலெசிங்கு (கி.பி.1729-1781) என்னும் நாடக ஆசிரியர் தமது நாடக இலக்கணத்துள் அரிசுடாட்டிலைப் பலர் தவறாகப் புரிந்து கொண்டமையினை விவரித்துப் பேசுகிறார். நாடகக் கட்டமைப்புப் பற்றிய குழப்பத்தில் சிக்காமல் செருமன் மொழியில் துன்பியல் நாடகங்களை இவர் எழுதியுள்ளார்.

கிரேக்க இலக்கியத் துன்பியல் நாடகங்களையே முன்மாதிரியாகக் கொண்டவர் சான் மில்டன் (John Milton). நகைச்சுவைக் காட்சிகள் அவற்றில் இடம் பெறக் கூடாது என்று கருதிய அவர், சாம்சன் வரலாற்றினை அவ்வாறு நாடகமாகவே எழுதியுள்ளார். 'இந்தியராணி', 'அவுரங்கசீபு', 'அனைத்தும் காதலுக்கே' ஆகிய துன்பியல் நாடகங்களைச் சான் திரைடன் (John Dryden) (கி.பி.1631-1700) எழுதியுள்ளார். இவர் ஒரு கவிஞரும் நாடக ஆசிரியரும் ஆவர்.

இவர்களுக்குப் பின் வந்த சாமுவேல் சான்சன் (Samuel Johnson) தாம்வெளியிட்ட சேக்சுபியர் நாடகப் பதிப்பின் முன்னுரையில் கிரேக்க இலக்கிய நியதிகளாக ஆங்கில இலக்கியத்தில் நிலவிய பற்பல தவறான கருத்துகளைத் திருத்தினார். துன்பமும் இன்பமும் கலந்த வாழ்க்கையினைப் பிரதிபலிக்கும் இலக்கியத்தில் அவையிரண்டும் கலந்து வருவதில் தவறில்லை என்று விளக்கினார். சேக்சுபியர் நாடகங்களில் கால, இட, செயல் வழக்குகளாகப் பற்பலர் குறை கூறியதையும் சான்சன் வன்மையாக மறுத்துள்ளார். கற்பனைக் கலையான நாடகத்தை உண்மையெனக் கொண்டு குழம்பியவர்களே இம்மூன்று வழுக்களை மிகைப்படுத்தி விட்டனர் என்றும் சுட்டிக் காட்டினார்.

இங்கிலாந்திலே மட்டுமன்றி, ஏனை ஐரோப்பிய நாடுகளிலும் கி.பி.18, 19-ஆம் நூற்றாண்டின் இடைக் காலம் வரை துன்பியல் நாடகங்களை மிகுதியும் காண முடியவில்லை. தனிப்பாடல்களும் அங்கத நாடகங்களும் உரைநடைப் பாங்கும் பெருகி வளர்ந்தமையே இதற்குக் காரணம் எனலாம். கி.பி.19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பாவின் பற்பல நாடுகளில் எழுதப்பட்ட துன்பியல் நாடகங்கள், சமுதாயத்தின் புரையோடிப்போன பழக்க வழக்கங்களையும், வீணான பகட்டுகளையும், அதனால் விளைந்த வீழ்ச்சியினையும், குடும்ப உறவுகள் பாசமும் பற்றும் இன்றிக் குலைந்து போனதையும் வெளிப்படுத்துகின்றன. இவற்றில் வரும் நாடகத் தலைமக்கள், சமுதாயத்தின் மரபோடும் பாரம்பரியத்தோடும் நீதியோடும்

மோதுவதால் விளையும் துன்பமே நாடகக் கருவாய் அமைகின்றது.

காலத்தின் தேவைக்கேற்பவும், சமுதாயத்தைப் பிரதிபலிக்கவும் எழுதப்படுகின்ற இந்நாளைய நாடகங்கள், முற்காலத்தில் எழுதப்பட்ட துன்பியல் நாடகங்களினின்றும் பெரிதும் மாறுபட்டவை. அரசன், இளவரசன், மாவீரன் போன்ற தன்னிகரில்லாத் தலைவனின் வீழ்ச்சியைக் காட்டியது போலன்றி, இன்றைய துன்பியல் நாடகங்களில் தலைமையிடம் பெறுவோர் அன்றாட வாழ்வில் காணும் சாதாரண மக்களே. என்றிக்கு இப்சன், சுட்ரின்பெர்க்கு, யூசின் ஒநீல் போன்றோர் இற்றைநாளைய துன்பியல் நாடகங்களை எழுதியோராவர்.

தனிமனிதனின் ஆசையும் விருப்பமும் நிறைவேறாமல், அவன் அடையும் ஏமாற்றமும் வருத்தமுமே அவனது ஆழ்ந்த துன்பத்திற்குக் காரணம் என்கிற பெர்தினாந்து புருனேதியர்(கி.பி. 1849-1906) என்னும் பிரெஞ்சுத் திறனாய்வாளரின் துன்பியல் நாடக விளக்கத்தினை அடியொற்றியே, ஆண்டன் செகாவ் போன்றோர் உருசியாவில் நாடகங்கள் எழுதினர்.

சமுதாயத்தின் மரபுகளாக ஒத்துக் கொள்ளப்பட்ட நியாயங்களைச் சீர்தூக்கி ஆய்வதும், நியதிகளை அலசுவதும் இன்றைய துன்பியல் நாடகங்களின் நோக்கமாக இருக்கிறது. இந்த உலகம் குழப்பம் நிறைந்ததும் பொருளற்றதுமாக உள்ளது என்பதைச் சுட்டிக் காட்டுவதே பெக்கட்டு, எரால்டு பிண்டர் போன்றோரின் நோக்கம். சான் ஆர்டன் அர்னால்டு வெக்கர், கோவார்டு போன்றோர் இற்றை நாள்களில் குறிப்பிடத் தகுந்தோர். பாண்டு எழுதிய 'காப்பாற்றப்பட்டது' (1965) போன்ற மேடை நாடகங்கள், உலகத்தை ஒரு குழப்பம் நிறைந்த கோளமாகவே சித்திரிக்கின்றன. பொருளற்றதும் பயனற்றுத் தோன்றுவதும் ஆகிய இன்றைய உலக வாழ்க்கையினை இடித்துரைப்பதன் வழி வருங்கால உலகம் பயனுற வேண்டும் என்பதை எதிர்மறை முகத்தான் இத்துன்பியல் நாடகங்கள் வெளிப்படுத்துகின்றன என்று கூறலாம். ப.அ.

**ஓரங்க நாடகம்:** ஆங்கில மொழித் தொடர்பால் வளம் பெற்ற கலை வடிவங்களில் ஓரங்க நாடகமும் அடங்கும். இந்நாடக வகையின் பெயரே சுட்டுவது போல் இந்நாடக வகை ஓர் அங்கத்தில் முடிந்து விடக்கூடிய நாடகமாக இருக்க வேண்டும். வழக்கமான முழு நீள நாடகங்கள், பெரும்பாலும் ஐந்து அங்கங்களைக் கொண்டு விளங்குகின்றன. சேக்சுபியரின் நாடகங்கள் பெரும்பாலும் ஐந்து அங்கங்களில் நடைபெறுவனவாக அமைந்துள்ளன.

**வானொலியில் ஓரங்க நாடகம்:** ஓரங்க நாடகம் வானொலி வந்த பிறகு நன்கு வளரத் தொடங்கியது. வானொலியின் நாடகத் தேவைக்கு முதலில் பழக்கத்தில் இருந்த மேடை நாடகங்களின் சுருக்கமான பகுதிகள் பயன்பட்டன. மேடை நாடக அமைப்பு வானொலி நாடகத்திற்குப் பொருத்தமானதாக இல்லாததால், வானொலிக்கென்றே ஓரங்க நாடகங்கள் தோன்றத் தலைப்பட்டன. சென்னை, திருச்சி, திருவனந்தபுர வானொலி நிலையங்கள் ஓரங்க நாடகத் தேவையை வளர்த்தன.

இலக்கியங்களில் இடம் பெற்ற பாத்திரங்கள், இராமாயணத்திலும் மகாபாரதத்திலும் இடம் பெறும் நிகழ்ச்சிகள், புராணங்களில் வரும் நிகழ்ச்சிகள், வானொலிக்காக ஓரங்க நாடக வடிவம் பெற்றன. சரித்திரப் பாத்திரங்களைச் சுற்றியும் ஓரங்க நாடகங்கள் எழுதப்பட்டன. சமூக நாடக வகையிலும் சீர்திருத்த நாடக வகையிலும், எள்ளல் நாடக வகையிலும் ஓரங்க நாடகங்கள் தோன்றத் தலைப்பட்டன. வானொலி ஒலிபரப்பிற்காக எழுதப்பட்ட ஆயிரக்கணக்கான ஓரங்க நாடகங்களில் ஐம்பதுக்கும் மேற்பட்ட நாடகங்கள் அச்சில் வந்துள்ளன.

**இதழ்களில் ஓரங்க நாடகம்:** ஓரங்க நாடகம் ஓரளவு வளரத் தொடங்கிய காலத்தில் குமுதம் வார இதழ் தொடர்ந்து ஓரங்க நாடகங்களை வெளியிட்டு வந்தது. மற்றைப் பத்திரிகைகளின் பொங்கல், தீபாவளி மலர்களிலும், கலைக்கதிர் இதழிலும் ஓரங்க நாடகங்கள் வெளியிடப்பட்டன.

**நிறுவனங்களில் ஓரங்க நாடகம்:** ஆண்டுக்கொரு முறை சிறப்பாக நடத்தப்பெறும் நிறுவனங்களின் ஆண்டு விழாக்களின் போதும், பள்ளி, கல்லூரி ஆண்டு விழாக்களின்போதும் குறுகிய நேரத்தில் ஒரு கலை நிகழ்ச்சியைக் கொடுக்க விரும்பி ஓரங்க நாடகங்களை நடத்தும் வழக்கம் ஏற்பட்டது.

தமிழில் நீண்ட நாடகங்களைவிட ஓரங்க நாடகங்களே சிறப்பாக வளர்ந்து வந்துள்ளன. தமிழில் பிறந்த சிறுகதை மனித மனத்தின் அந்தரங்கங்களைச் சொல்ல எந்த அளவிற்குச் சிறந்த வடிவமாகக் கருதப்படுகிறதோ, அந்த அளவிற்கு ஓரங்க நாடகமான சிறு நாடகங்களும் கருதப்படுகின்றன.

**ஒரே கருத்து ஒரே சுவை:** ஓரங்க நாடகம் குறுகிய வடிவம் கொண்டதால் இந்நாடகத்திற்காக ஒரே ஒரு சிறிய, எளிய மையக் கருவைச் சுற்றிப் பின்னப்பட்டதாக இந்நாடகம் அமைய வேண்டும். பல கதைக் கருக்களை உள்ளடக்கிக் கதை பின்ன இந்நாடக வடிவம் இடந்தராது. ஓரங்க நாடகத்தில் ஒரு சுவையே இடம் பெற வேண்டும். பல்சுவைக்கும் இடமளிக்க இந்நாடக வடிவம் இடந்தராது. இந்நாட

கத்தில் பெரிய அளவிலான காட்சியமைப்புகளைத் தவிர்த்து, சுருக்கமான இடத்தில் கருங்கக் கூறி விளங்க வைப்பதாக நாடகப் போக்கு அமைய வேண்டும். நாடகக் கதைக்கோப்பு மறைநவில் போக்குடையதாகவும், வேகமாக நகரக் கூடியதாகவும் அமையவேண்டும். அடுத்து என்ன, அடுத்து என்ன என்ற மன ஆவலைத் தூண்டுவதாக இருக்கவேண்டும்.

**பாத்திரங்கள்:** ஓரங்க நாடகங்களில் பாத்திரங்களின் எண்ணிக்கை குறைவாக இருக்க வேண்டும். இப்பாத்திரங்களும் குறிக்கோள் உடைய பாத்திரங்களாக இருக்கவேண்டும். மையக் கருவைத் தாங்கியுள்ள தலைமைப் பாத்திர வளர்ச்சிக்கு உதவுகின்ற வகையில் மற்றைப் பாத்திரங்கள் அமைக்கப்பட வேண்டும்.

**கதைக்கோப்பு:** ஓரங்க நாடகம் குறுகிய வடிவம் உடையது; ஆனால், முழு வடிவம் கொண்டது. முழு நீள நாடகக்கதைக் கோப்பில் காணப்படும் தொடக்கம், முரண், வளர்ச்சி, உச்சம், வீழ்ச்சி, முடிவு என்னும் கூறுகள் இந்த நாடக வகையிலும் ஓரளவு பின் பற்றப்படுகின்றன. முரண் எளியதாக அமைக்கப்படுகிறது. ஓரங்க நாடகத்தில் தனி மொழிகள் இடம் பெறுதல் இல்லை. இதில் இணைக்கதைகளும் கிளைக்கதைகளும் இடம் பெறுதல் இல்லை. பொதுவாக ஓரங்க நாடகம் ஏறத்தாழ அரைமணி நேரத்தில் முடிந்து விடக் கூடியதாக உள்ளது.

சுகி சுப்பிரமணியனின் 'சமூகசேவகி', சாமிநாத சர்மாவின் 'கடவுளும் வாழ்க்கையும்', மு.வரதராசனின் 'மனச்சான்று', பெ.தூரனின் 'கணவன்'முதலிய ஓரங்க நாடகங்கள் சிறந்த ஓரங்க நாடகங்களுக்குச் சான்றாக அமைந்துள்ளன.

ப.சம்பந்த முதலியார், வி.சி. கோபால்ரத்தினம், வி.வி. சீனிவாச ஐயங்கார், தே.ப. பெருமாள், அ. சீனிவாசராகவன், சி.என். அண்ணாதுரை முதலியோர் ஓரங்க நாடகம் எழுதியவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள். கு.மு.

**வானொலி நாடகம்:** வானொலி நாடகம் பல்லாயிரக்கணக்கான மக்களைஒரே நேரத்தில் சென்றடையும்ஆற்றல் பெற்றது. இது பெரும்பாலும் சிறியதாக இருக்கும். இது பெரும்பாலும் ஓரங்க நாடகமாகவே உள்ளது. அதனால் ஒரு சில நிமிடங்களில் கேட்டனுபவிக்க முடிகிறது. வானொலி நாடகம், மேடை நாடகங்கள், தொலைக்காட்சிநாடகங்கள் ஆகியவற்றிலிருந்து வேறுபட்டதாக அமைகின்றது. வானொலி நாடகத்தைக் கேட்க மட்டுமே செய்ய முடியும்; பார்க்க வாய்ப்பில்லை. எனவே, இந்நாடகத்தின் விளைவுகள் பேச்சில்தான் அமைகின்றன; செயல்களால் அல்ல. எனவே, இதற்கு உரையாடல் எழுதுவோர் இதனை மனத்திற் கொள்ளவேண்டும். இதில் பங்கு பெறும் கலைஞர்கள் வார்த்தைகளைத் தேவையான வகையில் அழுத்தம் கொடுத்துப் பேசும் ஆற்றல் பெற்றவர்களாக இருக்கவேண்டும்.அப்பொழுதுதான் நாடகத்தின் உயிரோட்டத்தை வெளிக்கொணர இயலும். கண்ணுக்குத் தெரியாமல் காதால் மட்டும் கேட்கும்படியான வானொலி நாடகம், கவிதை நாடகம் போல் அமைந்துள்ளது. இதில் இடம்பெறும் இசை ஒலிகள், குரல்கள், வார்த்தைகள் என்னும் இவை கேட்போரின் கற்பனைகளை வளர்த்து நாடகத்தைப் புரிந்துகொள்ள வழியமைக்கின்றன. நாடகத்தில் இடம்பெறும் தனிமொழியைப் போல் அமையும் வானொலி நாடகம் கேட்போர் மனத்தில் அவர்களுக்கென்று மட்டும் இரகசியமாகச் சொல்லப்படும் ஒரு செய்தியைப் போல் ஒரு நெருக்க பாவத்தை உண்டு பண்ணி, நாடகத்தை உள்வாங்கிக் கொள்ள வழி கோலுகிறது. ஒரே நேரத்தில் ஒரு சில குணங்களையே இனங்கண்டு உணரத்தக்கதாக அமைவதால், வானொலி நாடகத்தில் முடிந்தவரை குறைந்த எண்ணிக்கை கொண்ட நடிகர்களையே பயன்படுத்த முடியும்.

வானொலி நாடகத்தில் விசை வேகம் ஒரு ஆற்றல் மிக்க கருவியாக அமைகிறது. பேச்சுக்களுக்கிடையே விடப்பெறும் இடைவெளிகள் வாயிலாகப் பல்வேறு வகையான கருத்துப் பதிவுகளை உண்டாக்க ஏதுவாகிறது.

குரலில் உண்டாக்கப்படும் வேறுபாடுகளினாலும், வண்ணங்களினாலும், நுட்பமான மற்றும் வேகமான குரல் மாற்றங்களினாலும் நகைப்பு மற்றும் அவல மன நிலையைக் கொண்டு வர முடிகிறது. வார்த்தைகளைப் பேசும் விதத்திலும், அமைக்கும் விதத்திலும் ஒரு கவிதை நாடகம் போல் அமைக்க வாய்ப்பேற்படுகிறது.

கதை – காட்சியமைபபு – இடம் – காலம் – நிகழ்ச்சி – காட்சிகளுக்குத் தேவையான ஒலி – குறிப்புகள் – உணர்ச்சிக் குறிப்புகள் என்னும் இவற்றில் வானொலி நாடகம் கவனம் செலுத்தியது.

**காட்சி மாற்றம்:** இசை அமைப்பின் மூலம் காட்சி மாற்றங்களைக் கேட்போர் உணரும்படி செய்தார்கள். பின்னர், பித்தளைத் தாளங்களின் ஒலிகளை மட்டுமே பயன்படுத்திக் காட்சி மாற்றங்களை மக்கள் புரிந்து கொள்ளும்படி செய்தார்கள். ஆனால், 'இன்று காட்சிக்குக் காட்சி இடைவெளி கொடுத்தாலே அடுத்தகாட்சி தொடங்குகிறது என்று வானொலி நாடகங்கள் கேட்கும் மக்கள் புரிந்து கொள்ளும்

**அளவிற்கு** வானொலி நாடகத்தின் தரம் உயர்ந்துள்ளது.

**செயற்கை ஒலிகள்:** ஒலிபெருக்கியின் முன் நடிகர்கள் நடிக்கும்பொழுதே வானொலி நாடகக் காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும், பின்னணி இசை வாயிலாகவும், செயற்கை ஒலிக் குறிகள் வாயிலாகவும் இட்டு நிரப்பி, ஒலி பரப்பிய முறை இருந்து வந்தது. இதற்காகப் பறை தட்டும் கருவியின் உட்புறத்தில் சிறிது ஆற்று மணலைப் பரப்பி, மேலும் கீழும் அசைத்து, கடலலையின் ஒலியைக் கொண்டு வந்தனர். பளிங்குநிறத் தாளை (Callophane) ஒலி வாங்கியின் முன் அசைத்து, கூரை பற்றி எரியும்போது கிடைக்கும் ஒலியைக் கொடுத்தார்கள். தடித்த புத்தகத்தைச் செம்பாதியாகத் திறந்து, வேகமாக மூடி, துப்பாக்கி வெடிக்கும் ஒலியை உண்டாக்கினர். இரண்டு கொட்டாங்கச்சிகளை மர மேசையில் தாளத்தோடு தட்டி, குதிரையின் குளம்பொலியை உண்டாக்கினர். வாள் வீச்சு ஒலியை மெல்லிய குச்சிகளை ஒலிபெருக்கியின் முன்னர் வீசி உண்டாக்கினர். மின்னல், மழை, இடி என்னும் இவற்றை உண்டாக்கத் துத்தநாகத் தகடுகளை ஒலிபெருக்கியின் முன் ஆட்டினர்.

இப்போது நாடக உரையாடல்களை மட்டும் தனியாக ஒலிப்பதிவு செய்துவிட்டு, அதன்பிறகு ஒலிக் குறிகளை இணைப்பதற்கு ஏற்ற அனைத்து வகையான ஒலிக்குறிகளும் வந்துவிட்டன. இயற்கையான ஒலிகளை ஒலிப்பதிவு செய்து கொள்ளும் வாய்ப்புகள் இப்பொழுது உள்ளன. திரைப்படங்களைப் போலவே ஒலிக்குறிகளை நாடகங்களோடு இணைக்கும் வசதி வானொலிக்கு வந்துவிட்டது.

வானொலி நாடகக் கலை இன்று முழுமையான ஒரு கலையாக வடிவெடுத்துள்ளது. எல்லா வானொலி நிலையங்களிலிருந்தும் பெருமளவில் நாடகங்கள் ஒலிப்பரப்பாகிக் கொண்டிருக்கின்றன. இவை நாடக இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிவனவாய் அமைந்துள்ளன.

**வானொலி நாடகத்தின் பொதுவான பண்புகள்:** எளிய மக்களும் புரிந்து கொள்ளும்படி சொல்லும் ஆற்றல் நாடகக் கலைக்கு உண்டு. வானொலி நாடகத்திற்கும் இவ்வாற்றல் உண்டு. வானொலி நாடக ஆசிரியர் நாடகக் காட்சியை வார்த்தைகளால் கொண்டு வந்து நிறுத்தி, அந்தக் காட்சியை ஒலி வடிவில் மக்களைச் சென்றடையச் செய்யும் ஆற்றல் படைத்தவராக இருக்க வேண்டும்.

முற்றிலும் ஒலியை, உரையாடலை நம்பியுள்ளது வானொலி நாடகம். அதனால், வானொலி நாடகங்கள் கேட்பவர்களின் கற்பனைக்கு மிகுதியான தொல்லை தருவனவாக அமைவதில்லை.

வானொலி, குறிப்பிட்ட சமூகத்தினரையோ குறிப்பிட்ட அரசியல தலைவர்களையோ, மனிதர்களின் உடல் ஊனங்களையோ குறிப்பிட்டுச் சொல்லி, அவர்கள் புண்படாதபடி பார்த்துக் கொள்ளப்படுகிறது. மேடை நாடகத்தில் பார்வையாளர் கவனம் உரையாடலில் மட்டுமன்றிக் காட்சியைக் காண்பதிலும் செலவிடப்படுகின்றது. காட்சியும் நடிப்பும் வார்த்தைகளுக்கு உயிர் கொடுத்துவிடுகின்றன. இவ்வாய்ப்பு வானொலி நாடகத்திற்கு இல்லை. அனைத்தையும் உரையாடல் வாயிலாகவே-ஒலி வாயிலாகவே கொடுத்தாக வேண்டும். எனவே, வானொலி நாடக ஆசிரியர் கதை நடக்கும் இடம், காலம், பொருள் இவற்றையெல்லாம் வெறும் வார்த்தைகளாலேயே காட்டும் ஆற்றல் பெற்றவராக இருக்கிறார். வானொலி நாடக ஆசிரியர் ஒலி வடிவில் கதை சொல்லும் ஆற்றல் மிக்கவராக உள்ளார்.

நாடக நிகழ்ச்சிகள் எளிதில் நம்பக் கூடியவைகளாக, மக்களின் வாழ்க்கையில் இடம்பெறக் கூடியவைகளாக இருப்பின், கேட்டவர்கள் ஒன்றிப் போக வாய்ப்பு உண்டாகும். வானொலி நாடகங்கள் அன்பு, கருணை, தயை, வீரம், பிறருக்கு உதவும் மனப்பான்மை, எண்ணியதை முடிக்கும்திண்மை, தேசபக்தி, பகுத்தறிவு போன்றவற்றை மையக் கருப்பொருள்களாகக் கொண்டு விளங்குகின்றன.

வானொலி நாடகங்களில் கொடுமை, கொலை, கற்பழிப்பு, தற்கொலை, காதல் முதலியவற்றை இலைமறைகாய் போல் வார்த்தைகளால் சொல்லலாம். இவற்றைப் பற்றிய உரையாடல்கள் உணர்ச்சிகளைத் தூண்டும் வண்ணம் அமைதல் கூடாது. கேட்பவர்களைச் சிரிக்கவும், சிந்திக்கவும் வைக்கும் வார்த்தைகளில் காட்சிகளைக் கொண்டு வரவேண்டும்.

வானொலியில் நாடகம் 1) அகில பாரத நாடகங்கள், 2) நகைச்சுவை நாடகங்கள், 3) துப்பறியும் நாடகங்கள், 4) தொடர் நாடகங்கள், 5) தொடர் இசை நாடகங்கள், 6), குணச்சித்திர நாடகங்கள், 7) சரித்திர நாடகங்கள், 8) புராண, இதிகாச நாடகங்கள், 9) இலக்கிய நாடகங்கள், 10) நாடக விழா நாடகங்கள் என்னும் பத்து நிகழ்ச்சித் தலைப்புகளில் ஒலி பரப்பப்படுகின்றன.

துறைவன் எனப்படும் கந்தசாமி, எம்.எசு. கோபால், சுகி. சுப்பிரமணியம், குற்றாலம் பிள்ளை, பட்டுக்கோட்டை குமாரவேல் போன்றவர்கள் மிகுதியான வானொலி நாடகங்களை எழுதி ஒலி பரப்பியுள்ளனர்.

கு.மு

**தொலைக்காட்சி நாடகம்:** தொலைக்காட்சியில் ஒலி-ஒளி பரப்பப்படும் நாடகங்கள் பெரும்பாலும் ஓரங்க நாடகங்களாகவே உள்ளன. இத்தகைய நாடகங்கள் ஒருசில நிமிடங்களில் பார்வையாளர்களால் அனுபவிக்கப்படும் நாடகங்களாக விளங்குகின்றன. தொலைக்காட்சியில் ஒலி-ஒளிபரப்ப நிறைய நாடகங்கள் தேவைப்படுகின்றன.

தொலைக்காட்சி நாடக நடிகர்கள் செயற்கையாகச் செய்யப்பட்ட ஒரு காட்சியமைவிலிருந்து மறு காட்சி அமைவிற்கு விரைவாகச் செல்ல வேண்டியுள்ளனர். தொலைக்காட்சி நாடக நடிகன் தன்னுடைய ஒவ்வொரு தசையையும் துல்லியமாகக் 'கேமரா'வின் முன் அசைத்துக் காட்ட வேண்டியுள்ளது. உயிரோட்டம் இல்லாத புகைப்படக் கருவியின் கண்களுக்கு முன்நின்று உணர்ச்சி பூர்வமாகப் பேச வேண்டியுள்ளது.

நாடகத்தில் பயன்படுத்தப்படும் பல விதிகள் தொலைக்காட்சி நாடகத்திலும் பயன்படுத்தப்படுகின்றன. எனினும், இவ்விரு சாதன நாடக உருவாக்கத்தில் பல நுட்பமான பெரிய வேறுபாடுகள் காணப்படுகின்றன. காட்டாக, நாடகமேடையில் ஒரு பாத்திரம் புகும் நிலைக்கும் தொலைக் காட்சி நாடகத்தில் ஒரு பாத்திரம் மேடையில் நுழைவதற்கும் வேறுபாடு உள்ளது. தொலைக்காட்சிச் சட்டகத்தில் (Frame) உண்மை நாடக மேடை போலப் பெரிய நடிப்பிடம் இடம்பெற வாய்ப்பில்லை. அதனால் தொலைக் காட்சி நாடகம் நடிப்பிடத்தைஇழக்கும் நிலைகாணப்படுகிறது. தொலைக்காட்சி ஒலிப்படக்கருவியின் கண்களால் ஒரு நேரத்தில் பார்வையாளர்களின் கண்கள் ஒரே நேரத்தில் பலவகையான நாடகச் செயல்களைக் கண்டுவிட முடியும். சேக்சுபியரின் நாடகங்களில் வரும் மிகுதியான கூட்டமாக அமையும் போர்க் காட்சிகள், நீதி மன்றக்காட்சிகள் போன்றவை தொலைக்காட்சியில் நல்ல விளைவைக் கொடுக்க இயலாமற் போகின்றன.

திரைப்படத்தைப் போலவே தோன்றச் செய்யும் தொலைக்காட்சியின் முயற்சிகள் தவறான விளைவுகளைக் கொடுப்பதாக உள்ளன. பார்வையாளர்களின் விகிதத்தைப் பொறுத்தமட்டில் திரைப்படத்திரையும், தொலைக்காட்சித் திரையும் ஒரே அளவினதாகத் தோன்றினும் குறுகிய தூரத்தில் காட்சிகளைக் காட்டுவதில் திரைப்படத்தில் உள்ள வாய்ப்பு, வசதி அளவிற்குத் தொலைக்காட்சியில் இல்லை. தொலைக்காட்சியில் இத்தகு அண்மை தூரக்காட்சிகளை அடிக்கடி காட்டுவதால் திரையினூடான காட்சி இயக்க வேகம் தடைபடுகிறது. கூட்டம் கூட்டமாக நடிகர்களைத் தொலைக்காட்சித் திரையில் நிறைப்பது நாடகத்திற்கு மிகவும் இன்றியமையாத நாடக இயக்கமும், மெய்ப்பாட்டசைவுகளும் நன்றாக வெளிப்பட்டுத் தோன்றத் தடையாக உள்ளது. திரைப்படத்தில் எளிதாக அமையும் வெட்டி, ஒட்டும் (Editing) வாய்ப்பைத் தொலைக் காட்சி நாடகத்தில் பயன்படுத்த வாய்ப்புக் குறைவாகவே உள்ளது. இரண்டிற்கும் இடையே உள்ள இதன் வாய்ப்பு விகிதம் பத்திற்கு ஒன்றாகவே உள்ளது.

தொலைக்காட்சி நாடகம் வானொலி நாடகத்தைப் போலவே ஒரு நெருக்கமான தொடர்பிற்கு வாய்ப்பாக உள்ளது. ஆனால் பார்வையாளர்களின் கற்பனையைப் பொறுத்தவரை தொலைக்காட்சி நாடகம் சற்று விலகி நிற்பதாக இருக்கிறது. தொலைக்காட்சி நாடகத்தின் இடம் புகைப்படத்திற்குரிய இடம்போல் சிறுத்ததாக உள்ளது. உண்மையான நாடகக் காட்சியமைப்பு இடத்தைக் காட்டிலும் சிறுத்துக் காணப்படுவதாகவே உள்ளது. தொலைக்காட்சி நாடக நிகழ்ச்சி நேரம், உண்மை நிகழ்ச்சி நேரத்துடன் பெரிதும் ஒத்துப் போவதாகத் தோன்றுகிறது. ஆனால், உண்மையில் அவ்வாறு இல்லை. அதனால் பார்வையாளர்களின் கற்பனை வீச்சுத் தொலைக்காட்சி நாடகம் அனுமதிக்கும் நேரத்திற்குள் தன்னைச் சுருக்கிக்கொள்ள வேண்டியுள்ளது. எனவே, உண்மை நிலையிலிருந்து மாற்றம் கண்டுள்ள கனவுப் புனைவாற்றல் வகை நாடகங்களும், நகைச்சுவை நாடகங்களும் இந்தத் தொடர்பு சாதனத்தின் வழியாக வெளியிடப்படுவதில் சிக்கல் உள்ளது.

வானொலி நாடகம் போலவே தொலைக்காட்சி நாடகமும் ஒரு நெருக்கமான தொடர்பு சாதனமாக விளங்குகிறது. தொலைக்காட்சி நாடக நடிகர் ஒவ்வொரு பார்வையாளரின் அருகில் இருந்து பேசும் வசதி உள்ளது. வானொலியைப் போன்றே தொலைக் காட்சி நாடக நிகழ்ச்சியிலும் திரும்பத்திரும்பக் குடும்பக் கதைகளைக் கொண்ட நாடகங்களே இடம் பெறுகின்றன. மிகச் சிறிய குடும்பச் சிக்கல்களைக் கொண்டதிரைப்படத்திற்கு ஒவ்வாத ஓரங்க நாடகங்கள் தொலைக்காட்சிக்கு மிகவும் பொருத்தமான நாடகங்களாக விளங்குகின்றன. இந்த வாய்ப்பால் தொலைக்காட்சி நாடகத்தில் துல்லியமான, சுருக்கமான உரையாடல்களையும் நாடக நிகழ்ச்சிப் போக்கில் விரைவான வளர்ச்சியையும் ஊக்குவிக்க முடிகிறது உடனடியாகத் தயாரிக்கப்பட்டு விடக் கூடிய வாய்ப்பு உள்ளதால் வாழ்க்கையின் சிறுசிறு சிக்கல்களுக்குரிய விடையை நாடகத் தன்மையுடன் துருவித்துருவிக் கண்டு பிடித்து வாழ்க்கையின் சிறுசிறு பகுதிகள் போல நாடகமாக உடனுக்குடன் தயாரித்தளிக்கும் வாய்ப்புத் தொலைக்காட்சி நாடகத்திற்கு உள்ளது.

குறைந்த எண்ணிக்கை கொண்ட பாத்திரங்களைக் கொண்டு கூட்டமாகத் தோன்றும் காட்சிகளைத் தவிர்த்து இயல்பாக அமையும் உரையாடல்களுடன் ஐயத்திற்கிடந்தராத அளவிற்கு வாழ்க்கையை இயல்பான போக்கில் பார்க்கும் பார்வையுடன் கூடிய நாடகங்கள் தொலைக் காட்சிக்குரிய சிறந்த நாடகங்களாகும். குறிப்பிட்ட சில சூழ்நிலைகளில் மனிதன் நடத்தை பற்றிய முழு விவரணங்களுடன் தயாரிக்கப்பட்ட நாடகங்களும், குடும்பத்தில் கணவன்-மனைவி, தாய்-மகன், தங்கை அண்ணன், உறவுமுறைகள், பள்ளி அலுவலகச் சூழலில் காணப்படும் உறவுகள், தெருவோரங்களில் காணப்படும் வாழ்க்கை நிகழ்ச்சிகள் என்னும் இவைகளை உள்ளடக்கிய நாடகங்களும் தொலைக்காட்சி நாடகங்களாக அமைவது சிறப்பான பயனைக் கொடுக்க உதவும். கு.மு.

**வீதி நாடகம்:** தமிழ்நாட்டில் வழங்கும் 'தெருக் கூத்து' கிராம மக்களின் மன மகிழ்ச்சிக்காக ஆடப்படும் ஒரு கலை வடிவம் ஆகும். வீதி நாடகம் என்பது பெயருக்கேற்பத் தெருவின் ஓரங்களில் அல்லது தெரு முனைகளில் நடத்தப்படும் ஒரு வகை நாடகம் ஆகும்.

ஆந்திராவின் வீதி நாடகமும், தமிழ் நாட்டின் தெருக்கூத்தும் இன்று வீதி நாடக வடிவங்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. கி.பி.17, 18-ஆம் நூற்றாண்டுகளில் பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கிய குழுக்களால் நடைபெற்ற வீதி நாடகமும், தெருக் கூத்தும் பண்படிப்படையில் நாட்டுப்புற வடிவங்களாக விளங்குவதுடன் பெரும்பாலும் பிராமணர் அல்லாத சமூகத்தின் பல இன மக்களால் குறிப்பாக ஒரு குறிப்பிட்ட மலையின மக்களால் ஆடப்பட்டு வரும் கலையாகவும்விளங்குகின்றன. இவ்விரு கலைகளின் உள்ளமைப்பைக் கூர்ந்து கவனித்தால் இவைகள் யட்சகானம் அல்லது பாகவதமேளா நாட்டிய நாடகங்களின் வழித்தோன்றல்களாகத்தான் காணப்படுகின்றன. இந்த வடிவங்களைப் பாரம்பரியக் கலை, நாட்டுப் புறக் `கலை என்ற வகையிலே நாட்டுப் புறக்கலை அல்லது மலையின மக்களின் கலை என்று இனம் பார்த்து எளிதாகப் பிரித்துவிட முடியாது.

வீதி நாடகங்கள் பெரும்பாலும் பொழுதுபோக்குத் தன்மை வாய்ந்தவைகளாக உள்ளன. இந் நாடக நிகழ்ச்சியின்போது நடிகர்கள், பார்வையாளர்கள் என இனம் பிரித்துப் பார்க்க முடியாத அளவிற்கு இரு தரப்பினரும் இணைந்து செயற்படுகிறார்கள்.இந்நாடகங்களை எழுதித்தருபவர் கிராமப்புலவர் என்று சொல்லப்படுகிறார். கிராமத்தில் உள்ள வண்ணான் சுத்தம் செய்து கொடுக்கும் ஆடைகளை தலைமைப் பாத்திர நுழைவுக்குத் திரையாகப் பிடிப்பார்கள். இந்நிகழ்ச்சிகளுக்குப் பயன்படும் விளக்குகளுக்கு எண்ணெய் வழங்குதல் முதலான உதவிகளைக் கிராம மக்களே செய்து கொடுக்கின்றனர். இதுபோன்ற நிகழ்ச்சிகளில் இணைந்து மிகுந்த ஈடுபாட்டுடன் கலந்து கொள்கிறார்கள்.

தமிழகத்தின் மரபுக்கலை வடிவமான தெருக் கூத்து திரௌபதி அம்மன் வழிபாட்டின் பின்னணியில் பாரதக்கூத்து என்ற பெயரில் நடைபெறுகிறது. இது வடார்க்காடு, தென்னார்க்காடு, சேலம், தருமபுரி மாவட்டங்களில் சடங்கு சார்ந்த நிலையில் நிகழ்த்தப்படுகிறது. பகலில் திரௌபதியம்மன் கோயிலில் படிக்கப்பட்ட பாரதக் கதை அன்று இரவு கூத்தாக நடித்துக்காட்டப்படும். தற்காலிகமாகக் கட்டப்பட்ட கீற்றுக் கொட்டகையின் முன்புறத்திலும் இரவுக் கூத்துகள் நடைபெறும்.

அருச்சுனன் தபசு, படுகளம் போன்ற இக்கூத்தின் நிகழ்ச்சிகள் காலை, பகல், மாலை வேளைகளில் கூத்தின் மேடைக்கு வெளியே நடைபெறும். வில் வளைப்பு, சுபத்திரை கல்யாணம், துகில் உரிதல், அருச்சுனன் தபசு, கீசகவதம், கிருட்டிணன் தூது, கருடமோட்சம், 18-ஆம் நாள் போர், படுகளம் போன்றவை கூத்து நாடகங்களாகும்.

மூன்று பக்கம் ஆட்கள் அமர்வர். 'ஆர்மோனியம்' தோலக்கு, மிருதங்கம், முகவீணை, கைத்தாளம் போன்ற கருவிகள் இசைக்கப்படும். மேடையின் பின் தளத்தில் இசைக்கலைஞர்கள் அமர்ந்திருப்பர். அவர்களுக்கு முன் ஓர் இருக்கை போடப்பட்டிருக்கும். அது விசுப்பலகை என்று சொல்லப்படுகிறது. கரு நாடக இசையில் அமைந்த இசை இடம் பெறும். கிரீடம், புலக்கட்டை, மார்பணிகள் அணிந்து இருப்பர். வைக்கோலினால் வரிந்து நிற்கும் மேல் துணிப் பாவாடை, சிவப்பு, கருப்பு, வெண்மை, மஞ்சள் சார்ந்த வண்ணக்கலவையால் முகத்தில் எழுதி ஒப்பனை செய்திருப்பர். ஆண்களே பெண் வேடம் தாங்கி நடிப்பர். அடவுகளும் அபிநயங்களும் சிறப்பு வாய்ந்தவையாக இருக்கும். நடிகர், பார்வையாளர் இணைந்து செயற்படுகின்றனர். உரையாடல்கள் விரவிய பாட்டுகள், நாடக உத்திகள் ஆகியவை கொண்டது இக்கூத்து. முன்பு எண்ணெய் விளக்குகள் பயன்படுத்தப்பட்டன; இப்பொழுது மின் விளக்குகள் பயன்படுத்தப்படுகின்றன. கு.மு.

**நாட்டிய நாடகம்:** மற்றைய நாடக வகைகளில் இருந்து முற்றிலும் வேறுபட்டதாக அமைவது நாட்டிய நாடகம் ஆகும். வார்த்தைகள் இந்நாடக வகையில் மிகச் சிறிய அளவிலேயே இடம் பெற்றுள்ளன. இருந்தபோதிலும், நடனம் முக்கிய இடத்தை

வகிக்கும்; இலக்கியம் இடையிடையே உரைநடைப் பகுதிகள் கலந்த இசைப் பாடல்களாக இருக்கும். இவை இசைக்குழுவினரால் பக்க வாத்தியக் கருவிகளுடன் இசைக்கப்பட, இப்பாடல்கள் உணர்த்தும் பொருள்கள் நாடகத்தில் அபிநயித்தும் ஆடியும் காட்டுவதாக அமையும். இரவீந்திரநாத தாகூரின் பெரும்பான்மையான நாடகங்களில் ஆற்றல்மிக்க செயல்களின் ஒரு பகுதியாக நடனம் விளங்குகிறது. இவர்தம் நாட்டிய நாடகங்களில் பெரும்பாலானவை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. அவருடைய மிக அழகியதும் எளிமை வாய்ந்ததுமாகிய 'நடிர் பூசை' என்ற நாட்டிய நாடகத்தில் நடனம் ஒரு மதச் சடங்காகவும் படையற்பொருளாகவும் காட்டப் பெற்றுள்ளது. இது இந்தியக்கூட்டு நடனத்தில் பொதுவாகக் காணப்படும் ஓர் இயல்பான பண்பாகும். சப்பானின் 'நோ' நாடகங்கள் சடங்கு நடனங்களிலிருந்தே தோற்றம் கண்டவைகளாகும். இவற்றில் நடனம் இன்றும் முக்கிய இடத்தைப்பெறுகிறது சாவானிய, சீன, மலயா நாட்டு நாடகங்களில் நாட்டிய நாடகங்கள் மிக முக்கியமான நிகழ்ச்சிகளாக விளங்குகின்றன. உலகப் புகழ்பெற்ற பெரிய நாடகங்கள் மதச் சடங்கிலிருந்தே தோற்றம் பெற்றவைகளாக விளங்குகின்றன என்பதை மனங்கொள்ள வேண்டும். மற்றொரு வகை பெரிய நாடக மரபு தொடக்கக்காலத்ததாகவும், சடங்குகளிலிருந்தே தோற்றம் பெற்று வளர்ந்து வந்ததாகவும் எண்ணுதற்குரிய சாத்தியக் கூறுகள் காணப்படுகின்றன.

நாட்டிய நாடகங்கள் மிகவும் புகழ் வாய்ந்தவையாகும். இவை கலையார்வலர்களால் பெருவியப்போடு, வரவேற்கப்படும் கலையாகும். பாடகர்களின் ஒரு தொகுதி பாடல்களின் வாயிலாக ஒரு கதையை வளர்த்துச் சொல்கிறார்கள். இவற்றில் நடனக் கலைஞர்கள் பாடல்களில் காணப்படும் உணர்ச்சிகளை வெளிப்படுத்திக் காட்டும் வகையில் நடிக்கிறார்கள். இந்த நாட்டிய நாடக நிகழ்ச்சி அழகானதாகவும் மற்றவர்களைக் கவரும் தன்மை பெற்றதாகவும் அமைகிறது. சென்னை அடையாறில் அமைந்துள்ள கலாச்சேத்திராவில் பயிற்சி பெற்றவர்கள் நாட்டிய நாடகம் நடத்துவதில் ஆற்றல் பெற்றவர்களாக விளங்குகின்றனர். இந்நாட்டிய நாடகங்களுக்கு உரிய கதையைப் பாடல் வடிவில் வழங்குவதில் புத்தனேரி சுப்பிரமணியம் தலைசிறந்தவராகக் காணப்படுகிறார். இவரின் 'சிவகாமியின் சபதம்', 'காவிரி தந்த கலைச் செல்வி' என்ற நாட்டிய நாடகங்கள் மக்களின் பாராட்டுதல்களைப் பெற்றன. 'சித்திரப்பாவை' 'பத்மாசூரன்', 'மோகினி' என்னும் நாட்டிய நாடகங்கள் முறையே இராசசுலோசனா, ஊர்மிளா, பஞ்சுளா விசயகுமார் போன்றவர்களால் நடிக்கப் பெற்ற நாட்டிய நாடகங்களாகும். பத்மா சுப்பிரமணியம் கம்ப இராமாயணத்தை நாட்டிய நாடகமாகத் தயாரித்து அனைத்துப் பாத்திரங்களையும் தாமே ஏற்று நடித்து வருகிறார். இந்நாட்டிய நாடகங்கள் மிகவும் தேர்ந்த உத்திகளை உள்ளடக்கியதாகவும் விரும்பத்தக்க புதிய கூறுகளை இணைத்துக் கொண்டதுமாக விளங்குவதுடன் இவை தமிழர்களின் பழம் மரபு போற்றும் கலைப் படைப்புகளாகவும் விளங்குகின்றன. கு.மு.

**கிரேக்க, உரோமானிய நாடகங்கள்:** நாடகம் என்பதற்குரிய ஆங்கிலச் சொல் கிரேக்க மொழியிலிருந்து எடுக்கப்பட்டது. 'நாடகம்' என்பது 'செய்யப்படும் செயல் என்றபொருளில் கிரேக்க மொழியில்பண்டைக் காலத்தில் பயன் படுத்தப்பட்டது. இக்கால நாடகங்களுக்கும், பழங்காலநாடகங்களுக்கும் மிகுந்தவேறுபாடு உண்டு. நாடக அமைப்பு, அரங்கம், நடிகர்குழு உரையாடல், பார்வையாளர்கள் அரங்கேற்றும் நேரம் போன்றபல நிலைகளில் நாடகம் சக்தி வாய்ந்தகருவியாகப்பயன்படுத்தப்படுகிறது. தொலைக்காட்சி நாடகம், வானொலி நாடகம்,படிப்பதற்காக எழுதப்படும் நாடகம், நடிப்பதற்காக எழுதப்படும் நாடகம் என்று பலவகைநாடகங்கள் இக்காலத்தில் தயாரிக்கப்படுகின்றன. இங்கிலாந்து, பிரான்சு, இசுபெயின், செருமனி போன்ற ஐரோப்பிய நாடுகளிலும் இந்தியா போன்ற கீழை நாடுகளிலும் அமெரிக்காவிலும் நாடகம் ஒரு சிறந்த கலையாகவும், கருத்தைப் பரப்பும் கருவியாகவும் தொன்று தொட்டுப்பயன்பட்டு வருகிறது. என்றாலும், பண்டைக்காலத்துக் கிரேக்க நாட்டிலும், உரோமாபுரியிலும்தான் நாடகக் கலை தொடங்கப்பட்டது.

பொழுது போக்கிற்காகவும், மனமகிழ்வுக்காகவும் பழங்காலம் முதல் இக்காலம்வரை நாடகங்கள் அரங்கேற்றப்பட்டு வருகின்றன. பண்டைக் காலத்தில் கிரேக்க நாடகம் சமய நோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட ஒருகாட்சியாகவோ, சடங்காகவோ கருதப்பட்டது. சமுதாயத்தின் நன்மை கருதி இறைவனிடம் ஆசி பெறுவதற்காக நாடகங்கள் தயாரிக்கப்பட்டன; அரங்கேற்றப்பட்டன. உள்ளத்தை மகிழ்விப்பது முக்கிய குறிக்கோளாக இல்லை. துன்பியல் நாடகம் ஒரு தலைவனின் இறப்பை நடிப்பின் மூலம் காட்டுவதாக இருந்தது. கதை வரையறைக்கு உட்பட்டதாக அமைந்தது. இன்பியல் நாடகம் கற்பனைக் கதாபாத்திரங்களைக் கொண்டிருந்தாலும், சில குறிப்பிட்ட மதச்சடங்கு முறைகளைப் பின்பற்றியது.

உரோமாபுரியில் கி.மு.4-ஆம் நூற்றாண்டில் நாடகங்கள் நடத்தப்பட்டன; கொள்ளைநோய்(Plague)என்ற தொற்றுநோயைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துக்காகப் பயன்படுத்தப்பட்டது. துன்பியல் நாடகம், இன்பியல் நாடகம் இரண்டுமே தயோனிசசு (Dionysus) என்ற பெயருடைய கிரேக்கத் தெய்வத்திற்கு நடைபெற்ற திருவிழா சம்பந்தப்பட்டவைகளாகஇருந்தன. அரிசுடோபேன்சு (Aristophanes) என்ற நாடக ஆசிரியரின் படைப்புகளில் தயனோசியசே கதாநாயகனாகச் சித்திரிக்கப்பட்டார். நாடகம் என்பது 'ஒரு நடைபெறும் செயல்' என்று கருதப்பட்டது. மத்திய காலத்தில் மதத்தைப் பற்றி மட்டும் அன்றிப் பிற நிகழ்ச்சிகளைக் குறித்தும் நகரத்தில் முதலில் நாடகங்கள் எழுதப்பட்டன. இத்தகைய மாற்றங்கள் ஏதென்சு நகரத்தில் முதலில் ஏற்பட்டன. அரிசுடாட்டில் என்ற கிரேக்க அறிஞர் நாடகம் என்பது 'இயற்கையைப் போலச் செய்தல்' (Imitation of Nature) என்று குறிப் பிடுகிறார். பிளாட்டோ (Plato) துன்பியல் நாடகம் ஏதென்சின் பழமைச் சிறப்புடையது என்று குறிப்பிடுகிறார். இவ்வாறாகப் பண்டைக் கிரேக்கர்கள் வாழ்க்கையில் நாடகம் என்ற கலை தயோனிசசை அடிப்படையாகக் கொண்டதாகவே இருந்தது.

துன்பியல் நாடகம் இன்பியல் நாடகம் இவை இரண்டும் மாறுபட்ட நாடக வடிவங்கள். மகிழ்ச்சிக் கூத்துக்கள், களியாட்டங்கள் இவை இன்பியலோடு தொடர்புடையவை இன்பியல் நாடக ஆசிரியர்களுள் அரிசுடோபேன்சு (Aristophanes) குறிப்பிடத்தக்கவர். அவர் பதினொரு நாடகங்கள் எழுதினார். திருமணத்தில் முடியும் இந்நாடகங்கள் தலைவன், தலைவியின் வெற்றியைக்குறிப்பிடுகின்றன. இன்பியல் நாடகத்தின் தொனிக்கு மெருகூட்டியவர் அரிசுடோபேன்சு என்று புகழப்படுகிறார். தொடக்கத்தில் பால் இணைப்பை (Union of Sexes) அடிப்படையாகக் கொண்ட இன்பியல் நாடகம் காலப்போக்கில் அறிவுப் பூர்வமாக கண்ணியம் மிகுந்த இலக்கிய அமைப்பாக மாறியது.

துன்பியல் நாடகத்தின் அடிப்படை பெரும்பாலும் சாவு. (Death) புதைகுழியில் புதைக்கப்பட்ட நாயகனைப் பிறர் வழிபடும் காரணத்தை விளக்குவதாக இருந்தது. சவக்குழி புனிதமாகக் கருதப்பட்டுப் போற்றப்படும் காட்சிகள் துன்பியல் நாடகத்தில் மிகுதியாக இருந்தன. விதூடகன் (Buttoon) என்ற ஒரு பாத்திரம் நாடகத்தின் போக்கை அறிமுகப்படுத்தி விளக்கும் தன்மை கொண்டது. நாடகத் தலைவன் அல்லது தலைவியின் சாவு இன்னொரு நாடக மாந்தரால் குறிப்பாகத் தூதுவனால் சொல்லப்பட்டதேயன்றி நாடகத்தின் ஒரு காட்சியாக அமையவில்லை. சாவின் பயங்கரம், சோகம் ஆகியவை மிகுந்து காணப்பட்டன. இறந்த தலைவனோ, தலைவியோ புத்துயிர் பெற்று வருவதாகச் சில நாடகங்கள் பிற்காலத்தில் எழுதப்பட்டன. இத்தகைய நாடகங்களில் பிறப்பு, வளர்ச்சி, திருமணம், சாவு, மீண்டும் உயிர்பெறுதல் ஆகியன மையக்கருத்துகளாக அமைந்தன. கதாநாயகன் தயோனிசசின் குணங்களைப் பெற்றவனாகச் சித்திரிக்கப்பட்டான்.

வெள்ளாட்டுப்பாடல் (Goat-Song) என்ற நாடகப் பிரிவு தயோனிசசை வழிபடும் மக்கள் வெள்ளாட்டுப் பலியில் நம்பிக்கை கொண்டிருந்தார்கள் என்றும் பலிக்கு இரையான ஆடு கடவுளின் கூறாகக் கருதப்பட்டது என்றும் உணர்த்துகிறது.

எரோடாட்டசு (Herodatus) என்ற நாடக ஆசிரியர் தயோனிசசு வழிபாடும் ஓசிரிசுக்கு (Osirisc) என்ற கடவுள் வழிபாடும் ஒன்றே என்று கருதுகிறார். அரிசுடாட்டில் (Aristotle) என்ற அறிஞர் சாவின் சோகத்தை அடிப்படையாகக் கொண்டது துன்பியல் நாடகம் எனவும் பாடலை அடிப்படையாகக் கொண்டது இன்பியல் நாடகம் எனவும் விளக்குகிறார். ஏசுசிலசு (Aeschylus), யூரிபிடிசு (Euripides) என்ற நாடக ஆசிரியர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். பிறருக்காக இன்னலை அனுபவித்துச் சாவைச் சந்திக்கும் தன்மை நாடக நாயகர்களுக்கு இருந்தது. கிரேக்க நாடகத்தின் வளர்ச்சி ஒருவகையில் மதத்தோடு தொடர்பு உடையதாகவும் இருந்தது. கிரேக்க நாடகத்தில் கி.பி. 5-ஆம் நூற்றாண்டு முதல் பிற கருத்துகளும் எடுத்தாளப்பட்டன. பேரா.இரிட்சுவே (Ridgeway) துன்பியல் நாடகம் என்பது இறந்த வீரனின் இறுதிச் சடங்கு நிகழ்ச்சியே ஆகும் என்று கூறுகிறார். ஆர்கிலோக்கசு (Orchilocus), கொரிலியசு (Corelius) பிரினிசசு (Frinisus) போன்ற நாடக ஆசிரியர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். பெண் கதாபாத்திரங்களை அறிமுகப்படுத்தியவர் பிரினிசசு ஆவார். புதிய கண்டுபிடிப்புகளை நாடகத்தில் புகுத்தி நாடக வளர்ச்சிக்கு வித்திட்டவர் ஏசுசிலசு (Aeschylus) என்பவர் ஆவார். அக்காலத்தில் அடிமைகள், பெண்கள், குழந்தைகள், பொது மக்கள், பிற பார்வையாளர்கள் முதலியோர் அடங்கிய கூட்டத்தில் நாடகங்கள் அரங்கேற்றப்பட்டன. ஏசுசிலசு ஓமருடைய (Homer) கவிதைகளில் உள்ள புராண உண்மைகளைத் தமது நாடகத்தில் கையாண்டார். பண்பட்ட இரசனையை மக்களுக்குக் கொடுத்துக் கிரேக்க நாடக வளர்ச்சியில் முக்கிய பங்காற்றியவர்கள் சோபாக்ளிசு (Sophocles), பெரிக்ளிசு (Pericles) ஆவார்கள். அவர்கள் காட்சியமைப்புக்கும், மக்கள் பேசும் மொழியை நாடகத்தில் பயன்படுத்துவதற்கும் சிறப்பிடம் கொடுத்தார்கள். யூரிபிடிசு (Euripides), ஐயான் (Ion), அகதான் (Agathon) ஆகிய மூவரும் சிறந்த நாடக

ஆசிரியர்கள். மாமன்னர் அலெக்சாண்டருடைய வெற்றி கீழை நாடுகளில் நாடக அரங்குகளைப் பரப்பியது. உரோமப் பேரரசு ஏற்படும் வரை அலெக்சாண்டர் காலத்து அரங்குகள் சிறப்பு மிக்கவையாகக் கருதப்பட்டன.

உரோமாபுரியில் பியூனிக்குப் போர்கள் (Punic Wars) காலம் வரை முறையான நாடகம் எழுதப்படவில்லை. கிரேக்க நாடகங்கள் கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் இலத்தீன் மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன. இலிவியசு (Livius), அண்டிரானிகசு (Andronicus), மேவியசு (Maevius) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இலிவி (Livy) என்பவர் தேவதைகளின் கோபத்தைத் தடுக்க நடனம் பயன்படுத்தப்பட்டதாகவும், இதுவே நாடகத்தின் முதல் தோற்றமெனவும் கருதுகிறார். கிரேக்கர்கள் கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் அடிமைகளாக உரோமாபுரிக்குக் கொண்டுவரப் பட்டார்கள். இலத்தீன் மொழி உரையாடல் கிரேக்க நாடகங்களைத் தழுவி எழுதப்பட்டது. இலத்தீன் பேச்சு மொழி உரோமானிய நாடகங்களில் பயன் படுத்தப்பட்டது. பிளாவிலசு (Plauvilus), தெரன்சு (Terence), தெரன்சு ஆபர் (Terence Afer), சிப்பியோ (Scipio) ஆகிய நாடக ஆசிரியர்கள் பெயர் பெற்றவர்கள். என்னியசு (Ennius), பக்குவியசு (Pacuvius), குவிண்டிலியன் (Quintilian), சிசரோ (Cicero) ஆகியோர் கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகளில் துன்பியல் நாடகம் எழுதினார்கள். நாடக வளர்ச்சியின் தொடக்கக்கட்டத்தில் பல இடையூறுகள் இருந்தன. கிரேக்க அடிமைகள் நடிகர்களாகப் பயன்படுத்தப்பட்ட நாடகங்கள் பொது விழாக்களிலும், கோயில் திருவிழாக்களிலும், தற்காலிக அரங்கத்தில் அரங்கேற்றப்பட்டன. பாட்டும் நடனமும் நாடகத்தின் அங்கமாகக் கருதப்பட்டன. பெண்கள் பங்கு கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் முக்கியமாகக்கருதப்பட்டது. புராணக் கதைகளும், சரித்திரக் கதைகளும் நாடகமாக ஆக்கப்பட்டுப் பணக்காரர்களுக்கு மட்டும் அரங்கேற்றப்பட்டன. மக்களின் பொதுவாழ்க்கையில் நாடகத்தின் பங்கு கி.பி. 7-ஆம் நூற்றாண்டு வரை குறிப்பிடத்தக்கதாக இல்லை.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் 11-ஆம் நூற்றாண்டு வரை மக்களின் இரசனையில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. இசுபெயின், இத்தாலி ஆகிய நாடுகளோடு இலக்கியப் பரிமாற்றம் நடைபெற்றது. கிறித்தவ மத வளர்ச்சியும், பரவலும் காரணமாகச் திருச்சபை அதிகாரங்கள் மிகுதியாயின. இலத்தீன் மொழியில் எழுதப்பட்ட நாடகங்கள் மூன்று வகைப்பட்டன. அவை மர்ம நாடகங்கள் (Mystery Plays), அதிசய நாடகங்கள் (Miracle Plays), 'நீதி நாடகங்கள்' (Morality Plays) எனப்படும். ஐரோப்பிய மறுமலர்ச்சிக்குப் பின்னர்க் கிரேக்க நாடகங்களைப் போலப்பழைய முறைகளைக் கையாண்டு உரோம நாடகங்களும் வளர்ச்சியடைந்தன. நீதிக் கருத்தை அடிப்படையாகக் கொண்ட நாடகங்களில் நாடக மாந்தரின் பெயர்களே அவர்களது தன்மையைக் குறிப்பதாக அமைந்தன. எடுத்துக்காட்டாக அன்பு, நீதி, கொடுமை, பாசம், பயங்கரம் என்று நாடக மாந்தரின் பெயர்கள் அமைக்கப்பட்டன. இத்தாலிய மறுமலர்ச்சிக்குப் பின்னர் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் உரோமானிய நாடகங்கள் கிரேக்க மொழியைப் போல முறையான வளர்ச்சி பெற்றன. நாடகம் இயற்கையை நடித்துக் காட்டுவதாகும் என்று அரிசுடாட்டில் கருதினார். இயற்கையைப் பிரதிபலிப்பது நாடகம் என்று சேக்சுபியர் நினைத்தார். என்றாலும், நாடகம் பொது மக்களுடைய கருத்தை வடிவமைப்பதில் அன்றும் இன்றும் ஒரு சக்தி வாய்ந்த கருவியாகவே இருந்து வருகிறது. பழங்காலக் கிரேக்கர்களும், உரோமானியர்களும் துன்பியல் நாடகம், இன்பியல் நாடகம் என்ற இரு வகை நாடகங்களின் வளர்ச்சிக்குப்பெரிதும் உதவியிருக்கிறார்கள். பிற நாடக வடிவங்கள் பலவும் இவற்றை அடிப்படையாகச் கொண்ட வளர்ச்சியேயாகும்.

வி.எச்.பா.

**ஐரோப்பிய நாடகங்கள்:** கிறித்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே ஐரோப்பியப் பெருநிலப்பரப்பில் கிரேக்க நாட்டில் ஏதன்சு, இசுபார்ட்டா(Sparta)போன்ற நகரங்களில் நாடகம் வழக்கத்தில் இருந்து வந்துள்ளது. நாடகத் தோற்றத்துக்கே அடிப்படையாக இருந்த கிரேக்க நாட்டுத்தெசுபிசு என்பார் ஒரு நடிகரும் ஆவார். இவரைப் பற்றிய சிற்சில குறிப்புகளே கிடைத்துள்ளன. கிரேக்க மொழியில் எழுதப்பட்டனவாகக் கருதப்படும் நூற்றுக் கணக்கான நாடகங்களுள் ஏசுகைலசு, சோபகிளிசு, யூரிபிடிசு ஆகிய மூவரின் முப்பத்திரண்டு நாடகங்களே இப்போது எஞ்சியுள்ளன. அக்காலத்தேயே கிரேக்க நாடகங்களுள் துன்பியல், இன்பியல் என்னும் இரு பிரிவுகள் இருந்தன. இன்பியல் நாடகங்களை எழுதியோருள் தொன்மையானவரான அரிசுடபேனசு படைப்புகளில் பாட்டும், கூத்தும், சிரிப்பும் நிறைந்திருந்தன. நாடகத்தாலும், பாடலாலும் மனிதனுக்கு எந்த நன்மையும் இல்லை எனக்கூறிப் பிளேட்டோ என்னும் கிரேக்க அரசியலறிஞர் அவை இரண்டனையும் தமது இலட்சியக் குடியரசிலிருந்து ஒதுக்கி விட்டார். பாட்டியல் நூலை வகுத்த அவர் மாணவர் அரிசுடாட்டிலோ, தம் ஆசிரியரின் கருத்தினின்றும் மாறுபட்டதோடன்றி, துன்பியல் நாடகத்துக்கு இலக்கணமும் வகுத்துள்ளார்.

கிரேக்க நாடகத்தை அடியொற்றியே உரோம் நாட்டில் கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் இலிவியசு

அன்ட்ரானிக்கசு போன்றவர்களால் மேடை நாடகங்கள் எழுதப்பட்டன. செனகாவின் (கி.மு.4-கி.பி. 65) படைப்புகள் அனைத்தும் பழிக்குப்பழி, கொலை, வஞ்சகச் செயல், சூது ஆகிய வரம்பு மீறிய காட்சிகள் நிறைந்தவையாகும். ஆயினும்,அவை தொடர்ந்து அரங்கேற்றப்பட்டதற்கான சான்றுகள் இல்லை.

இத்தாலி போன்ற நாடுகளில் நையாண்டி நாடகம், பொம்மலாட்டம், எள்ளல் நாடகம் போன்றவற்றுக்கு மக்களிடையே செல்வாக்கு வளர்ந்த காலத்தில் முழு நாடகங்களுக்கு மதிப்பில்லாமல் போய்விட்டது. அப்போது உரோம் நாட்டில் நிலை கொண்டிருந்த கத்தோலிக்கத் துறவியரும் நாடகங்கள் புறக்கணிக்கப்படுவதற்குக் காரணமாக இருந்தனர். கி.பி. 6-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர், பன்னூறு ஆண்டுகள் ஐரோப்பிய நாடுகளில் நாடக வளர்ச்சி காணப்பட்டிலது. ஆயினும், கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் கிரேக்க நாட்டைப் போலன்றி இங்கிலாந்தில் மாதாகோயிலின் உட்புறத்திலேயே விவிலியத்தைப் பின்பற்றி இறைநெறியினைப் பரப்புதற்கென்றே நாடகம் பிறப்பெடுத்தது. அவற்றில் பரிசுத்த ஆவியாகவும்,அன்னை மரியாளாகவும் மதகுருமார்களே மேடையில் தோன்றிப் பேசினர். இப்படித் தெய்வ நெறியில் தோற்றுவிக்கப்பட்ட நாடகம் மக்கள் கூடும் சந்தைப் பேட்டைகளுக்கும், வெளியிடங்களுக்கும் வந்தபோது, சிறுகச் சிறுகப் பொழுதுபோக்குக் காட்சிகளும் அதில் சேர்க்கப்பட்டன. பைபிளில் பயின்று வரும் ஞானிகளைப் பற்றிய கதைகளும் நாடகமாயின. ஒட்டு மொத்தமாகத் தொகுக்கப் பெற்ற ஆட்டிடையர் நாடகங்களும், வேக்பீல்டு நாடகங்களும் இவ்வகையினவாகும்.

இத்தாலியில் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் பிளாட்டசு, செனகா ஆகியோரின் நாடகங்கள் திருத்தியும் புதுக்கியும் எழுதப்பட்டன. அரிசுடோ, பியட்ரோ ஆர்தினோ, நிக்கோலோ, மாக்கிய வெல்லி போன்றோர் இன்பியல் நாடகங்களைத் தமது நாட்டுச் சூழலுக்கேற்ப எழுதினர். ஆயினும், இசையும் நடனமும் கலந்த இசை நாடகங்களுக்குச் சில காலம் மதிப்பிருந்தபோது, சிந்தனைக்குரிய நாடகங்கள் செல்வாக்குப் பெற முடியவில்லை. கத்தோலிக்கரின் பிடிப்பிலிருந்த இசுபெயின் நாட்டில், இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் மதத் தொடர்பான நாடகங்களோடு பொதுமக்களுக்கும் ஏற்ற பொழுதுபோக்குப் படைப்புகளும் சமமாகவே வளர்ந்தன. உலோபா வேகா, கால்தெரான் போன்றோர் புராண நாடகங்களை உருவக முறையில் எழுதினர்.

கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் எதிலும் ஒழுங்கையும், நெறிமுறைகளையும் வரம்பு மீறி வலியுறுத்தும் தூய்மையர் (Puritans) ஆளுகையில் ஆங்கில நாட்டில் இலண்டன் உள்ளிட்ட பெரு நகரங்களில் நாடக அரங்குகள் பன்னெடுங்காலம் மூடிக்கிடக்க நேரிட்டது.

பிரெஞ்சு நாட்டின் மிகச்சிறந்த நாடக வளர்ச்சியினை கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் பியரி கார்னீல், மோலியர், சீன்ரேசின் ஆகியோரின் படைப்புகளில் காணலாம். பிரெஞ்சு நாட்டுத் துன்பியல் நாடக வளர்ச்சிக்கு ஒரு வகையில் கார்னீல் முன்னோடி ஆவர். வழக்கறிஞராக இருந்தாலும், இவரது திறமை நாடக அரங்கிலேயே வெளிப்பட்டது. இத்தாலிய நையாண்டி நாடகங்களைப் பின்பற்றி இன்பியல் அங்கதமாகத் தம் படைப்புகளைப் பிரெஞ்சு மொழியில் எழுதியவர் மோலியர். மிகச்சிறந்த துன்பியல் நாடகங்களையும் எழுதியதோடன்றி, இவர் நடிகராகவும் இயக்குநராகவும் இருந்துள்ளார். எந்த நாடகாசிரியனும் மோலியரின் அளவுக்குப் பல்துறையிலும் இத்தகு பெருமை பெறவில்லை. பிரெஞ்சு நாடகங்களில் மேடை அலங்காரமும், ஒப்பனையும், உடையும் உயர்வு பெற்றனவே தவிர, நாடக இலக்கியம் வளர்ந்ததாகக் கூற இயலாது. வால்டேர் போன்றோர் சிற்சில நாடகங்களை எழுதியிருந்தாலும், சிறந்த சிந்தனையாளர்களாகவே போற்றப்படுகின்றனர். மேரிவாக்சு (கி.பி.1688-1763), போமார்கைசு (கி.பி.1732-1799) ஆகியோர் நகைச்சுவை ததும்பும் இன்பியல் நாடகங்களை எழுதி அரங்கேற்றினர்.

செருமனியில் கி.பி.18-ஆம் நூற்றாண்டில் உல்பு காங்குகதே(கி.பி.1749-1832),பிரடெரிக் சில்லர் (கி.பி. 1759-1805) ஆகியோர் வரலாறு, புராண அடிப்படையில் நாடகங்களை எழுதினர். இவர்களுக்குச் சற்று முன்னதாக வாழ்ந்திருந்த நாடகாசிரியர் பலர் சேக்சுபியர் நாடகங்களைப் பின்பற்றியே தம் நாடகங்களையும் எழுதினர். எனினும், முற்றிலும் புதிய கோணத்தில் படைப்பிலக்கியம் செய்யும் ஆர்வத்தால் தூண்டப்பட்ட என்ரிக்வான் கிளீசுடு (கி.பி.1777-1811), பிரான்சு கிரில் பார்சர்(கி.பி.1791-1872),சார்சு புயூக்னர் (கி.பி.1813-1837) போன்றோரின் படைப்புகள்இற்றை நாளைய நாடகங்களுக்கும் முன்னோடியாக இருக்கின்றன எனலாம்.

மரபு வழிப்பட்ட நாடக உலகில் மிகவும் துணிச்சலாகப் புதுமையினைப் புகுத்தியவர் விக்டர் கியூகோ (கி.பி.1802-1885) எனலாம். அரிசுடாட்டிலின் விதிமுறைகளை முற்றுமாகப் புறக்கணித்து, வரம்பு மீறிய யாப்பினையும் புகுத்திப் பாடல் எழுதிப் பிரெஞ்சு நாட்டிலேயே தம் படைப்புக்குப் பலமான எதிர்ப்பினைத் தேடிக் கொண்ட இவரது நாடகம்

'கெர்னானி' என்பதாகும். பழைய முறையினையே பின்பற்றி நாடகம் எழுதிய அலெக்சாந்தர் தாமாசு (கி.பி.1824-1895) என்பாரும் இக்காலத்தவரே ஆவர். இவரெழுதிய நாடகம் ஒன்று பரத்தமையை அனுதாப உணர்வோடு அணுகியதால் அந்நாளில் மக்களிடையே பெரும் பரபரப்பை உண்டுபண்ணியது. கவிநயமும் மெய்ப்பொருளுணர்வும் கலந்து சிந்தனையைத் தூண்டும் நாடகங்களை ஒதுக்கி, காட்சிச் சோடனைகளும், எல்லைமீறிய கற்பனையும், ஆடல், பாடலும் கலந்த இன்ப உணர்வு (Melodrama) நாடகங்களைப் படைத்தோருள் அககட்டுகோட்சபூ(கி.பி. 1761-1819), சால்சு பிக்சரேகூர் (கி.பி.1773-1844) போன்றோர் குறிப்பிடத் தகுந்தோர். அமெரிக்க நீக்கிரோக்களின்பெருந்துயரை விளக்கும் புகழ்பெற்ற புதினத்தை நாடகமாக எழுதியவரும் இவரே. நடப்பு நிலையினை மையமாகக் கொண்டு நாடக அரங்கினை அணி செய்தோருள் யூசின் சுகிரிபு (கி.பி.1791-1861) குறிப்பிடத் தகுந்தவர். பதட்டம், உணர்ச்சி, கோப தாபங்களுக்கு மிகுந்த இடம் கொடுக்கும் ஒரிரு நாடகங்களைப் படைத்த விக்டோரியசர்தவு (கி.பி. 1831-1908) 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மிகச்சிறந்த நாடகாசிரியராகக் கருதப்பட்டார்.

சமூகப் போக்கினையும் அன்றாட வாழ்க்கையினையும் அடிக்கருவாகக் கொண்ட 20-ஆம் நூற்றாண்டின் நடப்பு நிலை நாடகங்களுக்கு (Realistic Plays) நார்வே நாட்டு என்றிக்கு இப்சன் (கி.பி.1828-1906) ஒரு முன்னோடி ஆவார். இலண்டன், பாரிசு, பெர்லின் போன்ற வெளிநாட்டுத் தலைநகரங்களில் அரங்கேற்றப்பட்ட பிறமொழி நாடகங்களிலும் இப்சனது தாக்கம் வெளிப்பட்டது. பெர்னாட்சா, கால்சுவொர்த்தி ஆகியோரும் இப்சனது கலை உணர்வால் ஈர்க்கப்பட்டவர்கள். இது போன்றே இவான் தர்சினவு (கி.பி.1818-1883), ஆண்டன் செகாவு(கி.பி.1860-1904) போன்ற உருசியப் படைப்பாளர்களும் நடப்பு நிலை நாடகத்துள் உட்படுவோர் ஆவர். ஆயினும், சுவீடனைச் சார்ந்த அகசுட்டு சுடிரின்பர்க்கு (கி.பி.1849-1912), இப்சனைப் போலன்றிச்சமூகச் சிக்கல்களை ஒதுக்கி, உள்மனப் போராட்டங்களுக்கு எழுத்துருவம் கொடுத்தார். இவரது நாடக உத்திகள் அகப்புற வெளிப்பாடு (Expressionistic) என்று குறிக்கபபடுகின்றன.

பாரம்பரிய ஐரிசு நாடக மரபினையும், பழக்க வழக்கத்தினையும் தழுவியதோடன்றி, குறியீடுகளின் (Symbolistic way)வழியே தமது கருத்தினைத் தெளிவு படுத்திய வில்லியம் பட்லர் ஏட்சு (கி.பி.1865-1939) ஐரிசுநாடகத்திற்குத் தந்தையாவர். இவரோடுஒருங்கு வைத்து எண்ணத் தகுவோர் சிஞ்சு(கி.பி.1871-1909), சீனோகேசி (கி.பி.1880-1964), பிரண்டன் பெகான் (1923-1964) ஆகியோர். தனியொரு மனிதனே சில சமயங்களில் இரு வேறு மனிதர்களாகச் செயற்படும் மனப் போராட்டத்தை விளக்க முற்பட்டவர் இத்தாலிய நாடகாசிரியர் உலூகி பிரென்டெல்லோ (கி.பி.1867-1936).

நடப்பு நிலையினையும் உலக இயல்பினையும் மேடையேற்றுகின்ற பழக்கம் இப்சனால் தோற்றுவிக்கப்பட்டது. அகப்புற வெளிப்பாட்டுக்கு முக்கியத்துவம் கொடுத்தவர்கள் நடப்பு நிலை நாடகத்தை எதிர்த்தனர். நடப்பு நிலையைத்தான் நாடகமாக்கி மேடையேற்ற வேண்டுமானால், கலையுணர்வுக்கும் கற்பனைக்கும் நாடகத்தில் இடமில்லையா என்னும் வினா எழுப்பியவர் இந்நாளைய ஆசுத்திரிய நாடகாசிரியர் பீட்டர் கென்ட்கே ஆவார்.

பாரிசு மாநகரில் 1950-இல் தனிப்பட்டோரால் எழுதப்பட்டு அரங்கேறியனவும், முரண்பாடாகத் தோன்றியனவும், தெளிவற்றனவும், பரிகசிப்பை உள்ளடக்கியனவுமான பற்பல நாடகங்களை அசட்டு நாடகங்கள் (Absurd Plays) என்று கூறுகின்றனர். மரபு வழி, மொழிநடை, கரு, உத்தி ஆகிய நாடக இயல்புகள் அனைத்திலுமே தலைகீழான மாற்றங்களுடன் எழுதப்பட்டுள்ள இவற்றில் குறிப்பிடத் தகுவன அயன்சுகோ என்பாரின் நாடகங்களாகும். இந்தக் காலக்கட்டத்திலும் கலையுணர்ச்சிக்கு ஏடங்கொடுத்த படைப்பாளருள் சாமுவேல் பெக்கட்டு நினைவிற் கொள்ளத் தகுவர்.

நடப்பு நிலை நாடகமும், தன் நிலையினை முற்றுமாக இழந்து விடவில்லை. ஆர்தர் மில்லர், தென்னிசி வில்லியம்சு போன்றோர் அமெரிக்காவில் அந்தப் பாரம்பரியத்தை விட்டுக் கொடுக்காதது போன்று, இங்கிலாந்தில் எரால்டு பிண்டர், சான் ஆசுபார்ன் போன்றோர் சமூக நிலை மட்டுமேயன்றி, பொருளாதார, அரசியல் நடப்புச் செய்திகளையும் நாடக மேடைக்குக் கொண்டு வந்துள்ளனர். செருமனியில் மாக்சு பிரிசு, பிரெடிரிக்கு தியூரன் ஆகிய இருவரும் பெர்டோல்டு பிரெக்டின் தாக்கத்துக்கு உட்பட்டோர் எனலாம். ஐரோப்பிய நாடகங்கள் பற்றிச் சுருக்கமாக ஒன்றை மட்டும் உறுதியாகச் சொல்லலாம். மக்கள் வாழும் புற உலகமும், சுற்றுச் சூழல்களும், வாழ்க்கை முறைகளும் மாறி வருதல் போன்று நாடகங்களின் உட்பொருளும், அவற்றின் உத்திகளும், பொருண்மையும், மொழி நடையும், போக்கும் அவ்வப்போது மாறுபட்டும், திரிந்தும் வருகின்ற பேருண்மை ஐரோப்பியப் படைப்புகளுக்கு மட்டுமேயன்றி, ஆசிய, ஆங்கில, அமெரிக்க நாடகங்களுக்கும் பொருந்துவனவாகும்.

ப.அ.

**பிரெஞ்சு நாடகங்கள்:** பிரெஞ்சு மொழியின் நாடகவரலாறும் பழமை வாய்ந்தது. இது சமய

நாடகங்களோடு தொடங்குகிறது. விழாக் காலங்களில் கன்னி மரியாளைப் பற்றியும் இயேசுநாதர் பற்றியும் சமய நாடகங்கள் விவிலியக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு நடிக்கப் பெற்று வந்தன.

கிறித்தவ மதப் பெரியார் ஒருவரைப் பற்றிய நாடகம் 40 ஆயிரம் வரிகளை உடையது என்றும், அதுவே உலகின் நீண்ட நாடகம் என்றும் கூறுவர். இத்தகைய சமய நாடகங்கள், கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் எழுத்து வடிவம் பெற்றன.

பிரெஞ்சு மொழியில் கி.பி. 14-ஆம் நூற்றாண்டளவில் சமயத் தொடர்பற்ற நாடகங்கள் தோன்றத் தொடங்கின. இவை அன்பு, அறம், வீரம் போன்ற பண்புகளை மையமாகக் கொண்டவை. இவ்வகையான தொடக்க நிலை நாடகங்கள் இன்பியல் என்றோ துன்பியல் என்றோ பகுத்துக்கூற இயலா வண்ணம் அமைந்திருந்தன.இக்காலக்கட்டத்தில்'பிரகசனம்' என்னும் புதிய நாடகவகையும் தோன்றியது. இவ்வகையுள் 'பியர் பாதெலின்' (Pierre Pathelin) என்னும் நாடகம் புகழ் வாய்ந்தது பிரெஞ்சு நாட்டின் சிக்கல்களை இவ்வகை நாடகங்கள் சித்திரித்தன.

இடைவேளை நாடகம் என்பது விருந்து நடைபெறும் நேரங்களில் நடிக்கப் பெறும் ஒருவகை நகைச்சுவை நாடக வகையாகும். பிரெஞ்சு நாடக வரலாற்றின் திருப்பு முனையாக விளங்கும் 'கிளியோபாத்திரா' (Cleopatre) என்னும் நாடகம் சொதேல் என்பார் இயற்றியது. இயற்றியவர் பெயர் தெரியாத 'வழக்குரைஞர் பத்தலேன்' (Advocat Pathelin)என்ற நகைச்சுவை நாடகமும் சிறப்பானது.

பிரெஞ்சு நாடகத்தில் கி.பி. 15-ஆம் நூற்றாண்டளவில் சமயத்தின் செல்வாக்குப் பெரிதும் குறைந்தது. பிரெஞ்சு நாடக ஆசிரியர்கள் உரோமானிய நாடக ஆசிரியர்களைப் பின்பற்றி வீர சாகச நாடகங்களை மிகுதியாக எழுதினர்.தொடக்கக்காலத்தில் இந்நாடகங்கள் உரையாடலுக்குச் சிறப்பிடமும் நடிப்புக்குக் குறைந்த இடமும் தந்தன. அலெக்சாண்டர் ஆர்டி என்பவர் கிரேக்க முறைகளிலிருந்து முற்றிலும் விலகிப் பிரெஞ்சு மக்களின் கருத்தோட்டங்களுக்கு ஏற்றவாறு நாடகங்கள் இயற்றினார். அவை பாலியல் உணர்வுகளுக்கு மிகுந்த இடம் தாராமையால் மகளிர் நடுவே பெருஞ்செல்வாக்கு அடைந்தன.

வீரச்சுவை நாடகங்களுடன் அவலச்சுவை நாடகங்களும் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இயற்றப் பெற்றன. இந்நூற்றாண்டில் தோன்றிய கொர்னெய் (Corneille) என்ற தலைசிறந்த நாடக ஆசிரியர் பிரெஞ்சு நாடக வரலாற்றில் மிகச் சிறந்த இடத்தைப் பெற்றவர். இவருடைய நாடகங்களுள் 'சிடு' (The Cid), மெதே (medee) சின்னா (cinna), ஒரசு (Horace) போன்றவை குறிப்பிடத் தக்கவை. இவர் சிக்கல் நிறைந்த கதையைச் சிறிது சிறிதாக நேர்த்தியுடன் விளக்குவதில் வல்லவர். இவருடைய 'பொய்யன்' (Le menteur) என்ற இன்பியல் நாடகமும் சிறப்பானது.

பிரெஞ்சு நாடக ஆசிரியர்களுள் இரசீன் (Racine) என்பாருடைய துன்பியல் நாடகங்கள் குறிப்பிடத் தக்கவை. அவற்றுள் ஆண்ட்ரொமாக்கு (Andromaque), பெட்ரு (Phedre) போன்ற நாடகங்கள் புகழ்பெற்றவை. இவர் மனிதப் பண்புநலன்களை நாடகமாந்தர் வாயிலாக வெளிக்கொணர்வதில் திறன் வாய்ந்தவர்.

உலக இன்பியல் நாடக வரலாற்றில் மோலியர் (moliere) என்பாருடைய நாடகங்கள் தலைமை வகிப்பனவாகும். காலத்தின் எதிரொலியாக இவர் நாடகங்களை அமைத்துக் காட்டினார். இவருக்குப் பின் தோன்றிய நாடக ஆசிரியர்கள் ஏறத்தாழ அனைவருமே இவர் வழியைப் பின்பற்றி நாடகம் செய்தனர். மோலியருடைய நாடகங்களைச் சிறிதும் மாற்றாமல் இன்றும் நடிக்கலாம் என்பதே இந்நாடகங்களின் தனித்தன்மையை விளக்கும். இவருடைய நாடகங்களுள் 'மானுடவெறுப்பாளர்' (misanthrope), அவார் (Avare), கற்பனை நோயாளி (malade inaginaire) போன்றவை நகைச்சுவையாகச் சமூக அவலங்களைச் சித்திரித்துள்ளன. அக்காலத்தில் புவாலோ (Boileau) என்பார் அதிகார வர்க்கத்தினரைக் கிண்டல் செய்வதற்கு இலே சதீர் (Le Satire), துய் லுத்ரேன் (Dulutrin) போன்ற நையாண்டி நாடகங்களைப் புதிய கோணத்தில் படைத்தளித்தார்.

திதரோ (Diderot)என்பார் 'இயற்கை மைந்தன்' (fils natural), 'குடும்பத் தந்தை' (le Peire de Fammille) போன்ற தத்துவ நாடகங்களை எழுதினார். கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் நாடகத்தில் நடனமும் இசையும் சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கி முடிவில் மறைந்தன எனலாம்.

பிரெஞ்சு இலக்கிய வரலாற்றாளர் கி.பி. 18-ஆம் நூற்றாண்டை ஒளிமயமான நூற்றாண்டு எனக் குறிப்பர். மன்னராட்சியை எதிர்த்து மக்களாட்சி பரவத் தொடங்கிய சூழல் இலக்கிய வடிவத்திலும் மாற்றம் ஏற்படுத்தியது. சமுதாய விழிப்புணர்வுக்குக் கவிதையைவிட உரைநடை சிறந்தது என்ற எண்ணம் உருவானது. இதனால், மிகுந்த எண்ணிக்கையில் நாடகங்கள் எழுதப்பெற்றன; நாட்டில் நிலையான நாடக அரங்குகள் தோன்றின; புதுவகை நாடகங்கள் தோன்றின. இக்காலக்கட்டத்தில்தான் உலகப் புகழ்

பெற்ற அறிஞர் வால்டேர் (Voltaire) பல சிறந்த நாடகங்களை உருவாக்கினார். இவருடைய நாடகங்களுள் எதிபு (Eudipe), எமியாத்து(Hemiade), செயர் (Zaire), இரேன் (Irene), மகோமா (Mahomet), மெரோபு (Merope)போன்றவை குறிப்பிடத்தக்கவை.

புதிய நாடகபாணி இசை நாடகம் (melodrame) மரபு வழிகளை உடைத்தெறிந்து உருவானது. செதேன் என்பார் எழுதிய 'இராணுவத்திலிருந்து ஓடியவன்' (deserteur), 'செவிநகர நாவிதன்'(Barbier de Seville), 'பிகாரோவின் மணவிழா' (marriage de Figaro) போன்ற நாடகங்கள் மேற்கூறிய வகையில் அமைந்தவை. 'குதிரை வீரன் விருப்பம்'(le Chevalier ala mode) என்ற நாடகத்தை எழுதிய தான்கூர் என்பாரும் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு நாடக வரலாற்றில் தனி முத்திரை பதித்தவராவார்.

புனைவியற்பாணி (Romanticism) கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய நாடுகளில் பெருஞ்செல்வாக்கு அடைந்தது. இதன்வழித் தோன்றிய நாடகங்கள், இயற்கை மனிதனுக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிக்கவல்லது என்ற கோட்பாட்டை விளக்கின. இவ்வகை நாடகங்கள் படிக்கவும் நடிக்கவும் ஏற்றன. இந்நூற்றாண்டின் தன்னிகர் இல்லாத படைப்பாளராகப் போற்றப் பெறும் விக்டர் யூகோ (Victor Hugou) என்பார் 'எர்னானீ' (Hernani), 'மரியோன்' 'தெலோர்ம்' (marion delorme), 'இலே புர்கிராவு' (leo Burgraves) போன்ற தலைசிறந்த நாடகங்களை எழுதினார். நாடகத்தில் நடிப்பே முதன்மை பெற வேண்டும் என்பதையும் நடையமைப்பு இயற்கையாக இருக்கவேண்டும் என்பதையும் இவர் வலியுறுத்தினார்.

சமூக நாடகங்கள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் பெருமளவில் தோன்றத் தொடங்கின. 'ஒழியே' (Augier) என்பார் காமச்சுவையற்ற சிறந்த சமூக நாடகங்களை எழுதினார். இவருடைய நாடகங்கள் 20-ஆம் நூற்றாண்டு நாடக வளர்ச்சிக்கு நல்வழி காட்டின என்பர். அலெக்சாந்தர் துமாசு (Alexander Dumas) என்பாரின் 'பாதி உலகம்' என்ற நாடகம் இன்பியல் நாடக வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுள்ளது.

சர்து (Sardou) என்ற நாடக ஆசிரியர் நகைச்சுவை நாடகங்களை எழுதியதுடன், பொதுவாக அவை எந்த நாட்டிலும், எந்தச் சூழலிலும் நடிக்கத் தக்கவையாக அமைத்த பாங்கு போற்றத்தக்கது.

இருபதாம் நூற்றாண்டில் பிரெஞ்சு நாடகம் வேகமாக வளர்ந்து வருகிறது. பழைய இலக்கண இலக்கிய நெறிமுறைகள் வலுவிழந்து, புதிய நாடகங்கள் தோன்றிப் புதிய திறனாய்வுச் சிந்தனைகளை வளர்த்து வருகின்றன. சா.உ.

**ஆங்கில நாடகங்கள்:** ஆங்கில மொழியின் தோற்றம் வரலாற்றாசிரியர்களின் கருத்துப்படி, கி.பி. 10-ஆம் நூற்றாண்டிலிருந்தே தொடங்குவதாயினும் புதிய கால ஆங்கில இலக்கியம் கி.பி. 15-ஆம் நூற்றாண்டிலிருந்தே கணக்கிடப்படுகிறது. அக்காலத்தே ஆங்கில நாடகங்கள் அனைத்தும் இறை வழிபாடு, ஏசு கிறித்துவின் பிறப்பு, ஞானிகளின் வரலாறு, ஏசு உயிர்த்தெழுதல் போன்ற செய்திகளை மையமாகக் கொண்டிருந்தன. நாடக மேடைகளை மாதாகோயிலின் உட்புறத்திலேயே அமைத்துக் கொண்டனர். சமயகுருக்களே பல்வேறு காட்சிகளிலும் தோன்றி நடித்தனர். புத்தாண்டு, புனித வெள்ளி, ஈசுட்டர் போன்ற விழா நாள்களிலேதான் அவை அரங்கேற்றப்பட்டன.

ஒலி, ஒளி, காட்சி வேறுபாடு போன்ற மேடை உத்திகளோ சொல்லாட்சி, பொருளாழம் குறியீடு போன்ற இலக்கிய உத்திகளோ இல்லாத காலம் அது. கூத்து, பண், பாடல் ஆகிய நாடகக் கூறுகள் ஒன்றிரண்டாகவோ, ஒட்டுமொத்தமாகவோ இருந்த இந்தத் தொடக்கக்கால இலத்தீன் மற்றும் ஆங்கில நாடகங்களிடையே, இடையீட்டுக் காட்சியாக(Interlude) நீதிபோதனைகளும் அங்குமிங்குமாகச் சேர்க்கப்பட்டிருந்தன. கோயிலின் உட்புறத்தே நடித்த நிலை மாறிக் காலப்போக்கில் பொதுமக்களின் முன்னிலையில் வெளியிடங்களுக்கு இந்நாடகங்கள் வந்தபோது புனித ஆவிமற்றும் மரியாள், நோவா, மோசசு ஆகிய பல்வேறு சமய ஞானிகளைப் பற்றிய வாழ்க்கையும் அரங்கேறியது. இசை, மேடை அமைப்பு ஆகியவற்றிலும் சிறுகச் சிறுக மாறுதல்கள் ஏற்பட்டன.

மானுடத் தோற்றம், கிறித்துவின் பிறப்பு, வளர்ப்பு, சிலுவையில் அறைதல், உயிர்த்தெழல் ஆகிய செய்திகளை உள்ளடக்கி ஆங்கிலத்தில் எழுதப்பட்ட சிறு சிறு நாடகங்களைப் பல்வேறு தலைப்புகளில் பின்னர்த் தொகுத்தனர். அவற்றைச் செசுடர், யார்க்கு, வேக்பீல்டு நாடகங்கள் மற்றும் தவுன்லி ஆட்டிடையர் நாடகங்கள் என்று இலக்கிய வரலாறு குறிப்பிடுகிறது.

அவற்றை கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நீதி போதனைக்காக எழுதப்பட்ட நெறியுணர் நாடகம் (Moralities), ஞானிகளின் தெய்வீக வரலாற்றையும் அருளையும் வெளிப்படுத்திய மறைபொருள் நாடகம் (Mysteries) என்று இரு பிரிவாக அமைத்தனர். சான், ஏவுடு, சான் இசுகெலிடன் போன்றோர் இத்தகு நாடகங்களை எழுதியோருள் குறிப்பிடத் தகுந்தோராவர். இவரெல்லாம்

உருவகக் கதையில் வருவதே போன்று அன்பு, பாசம், இரக்கம், கொடுமை, பாபம் போன்ற குணங்களையே நாடகப் பாத்திரங்களாக்கி உரையாடச் செய்தனர். ஆயினும் இரால்பு, இராய்சுடர், தடாய்சுடர், கார் படக்கு என்னும் முழு நிறைவான இன்பியல், துன்பியல் நாடகங்களை முறையே நிக்கோலசு உதால் என்பாரும், சாக்வில் நார்ட்டனும் எழுதினர்.

எலிசபெத்து இராணியின் ஆட்சிக்காலத்தை ஆங்கில இலக்கியத்தின் மறுமலர்ச்சிக் காலம் என்பர். கிறித்துபர் மார்லோ, பென் சான்சன், இராபர்ட்டு கிரீன், தாமசு நாசு, சார்சு பீல் போன்ற நாடகாசிரியர்கள் வாழ்ந்த காலம் அது. ஆங்கில நாட்டின் ஆக்சுபர்டு, கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகங்களில் அவர்கள் பயின்றவர்கள். அவர்களின் காழ்ப்புணர்ச் சிக்கு ஆட்பட்ட சேக்சுபியர், நாடக உலகின் மாமேதையாகத் திகழ்கிறார். நிறைவான பள்ளிப் படிப்பே இல்லாத அவர் இருபத்தாறு ஆண்டுகளில் இன்பியல், துன்பியல், வரலாறு என்று பிரிக்கத் தகுவனவாகிய முப்பத்தேழு நாடகங்களை எழுதியவர். இவருக்கு அடுத்த நிலையில் தாமசுகிட்டு, சார்சு சாப்மன் போன்றோர் பழிக்குப் பழியும் கொலையும் நிறைந்த துன்பியல் நாடகங்களை எழுதினர். இன்பியல் நாடகங்களை எழுதிய தாமசு மிடில்டனும் இக்காலத்தவரே ஆவர்.

பிலிப்பு மாசிங்கர், தெக்கர், சான் போர்டு போன்றோரின் படைப்புகள் இன்பியலாக கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இருந்தன. அக்காலத்தே, இசையும் நடனமும் நிறைந்த 'முகமூடி' நாடகங்களே சிறப்புற்றிருந்தமையான், காலத்தை வெல்லும் கலைப்படைப்பாக எந்த நாடகமும் அமைந்திலது. சான் டன், மில்டன் போன்றோரின் ஆற்றல் மிகு கவிதைகள் மக்கட் சமுதாயத்தினை ஈர்த்துக் கொண்டமையே, நாடகங்கள் தலை தூக்க இயலாமைக்கு ஒரு காரணம் ஆகும்.

ஆயினும், இக்காலத்தவரான சான் திரைடன் ஈரடிச் சந்தப்பாவினால் (Heroic couplet) அமைந்த நாடகங்களை எழுதினார். இப்பாவினத்தோடு ஒப்பிடுங்கால், கற்பனையோடு இயைந்து இயல் பாகவே வரும் ஆசிரியப்பா (Blank verse) சிறந்ததா அல்லது ஈரடிப்பா சிறந்ததா என்னும் கருத்து வேறுபாடு இருந்தது. தொடக்கத்தில் சந்தப்பாவினை ஆதரித்த திரைடன், கிளியோபாத்ராவின் கதையை நாடகம் ஆக்கும்போது அதனை ஒதுக்கிவிட்டார். இதுவே அவருக்குப் பெருமை சேர்த்த நாடகம் ஆகும். பழைய கதை எனினும், பாத்திரப் படைப்பிலும் இலக்கிய நடையிலும் ஒரு நாடகாசிரியன் பெருமை அடையலாம் என்பதற்கு இது சான்று. சார்சு ஈதரசு, விச்சர்லி வான்புரூக்கு போன்றோரும் இவரது சமகாலத்தவரே எனினும் திரைடனோடு ஒத்த புகழை அடைய முடியவில்லை.

நாடகம் கி.பி.18-ஆம்நூற்றாண்டின் முற்பகுதியில் தாழ்ந்து உரைநடையும் பாடலுமே புகழ்பெற்றிருந்தன. ஆயினும், இரிச்சர்டு செரிடன் சிற்சில நாடகங்களைப் படைத்துள்ளார். ஆலிவர் கோல்டு சுமித்து எழுதியது ஒரே ஒரு நகைச்சுவை நாடகமாயினும், நினைவிற்கொள்ளத் தகுவது. உரைநடையும் இயற்கை நலஞ்சார்ந்த கவிதையுமே, கி.பி. 19-ஆம் நூற்றாண்டிலும்கூடத் திறனாய்வில், மேலோங்கி யிருந்தன. அயர்லாந்து நாட்டைச் சார்ந்த சார்சு பெர்னாட்சா ஒரு விதி விலக்கு. பொழுது போக்குக் காக இல்லாமல் நாடகக் கலையினை விளம்பரத் திற்கே பயன்படுத்தியவர் இவர். இப்சன் போன்ற நாடகாசிரியர்களின் தாக்கத்துக்கு உட்பட்ட இவரது பார்வையிலிருந்து அரசியல், சமூகம், மொழி, பொருளியல், இலக்கியம் ஆகிய எந்தப் பொருளும் தப்ப வில்லை.

எளிதில் விளங்காத ஆங்கிலக் கவிதைகளை எழுதியவரும்20-ஆம் நூற்றாண்டின் சிறந்த திறனாய் வரும் ஆகிய டி.எஸ். எலியட்டு நடிப்பதற்காக அன்றி படிப்பதற்காகவே கவிதை நாடகங்கள் எழுதியுள்ளார். டபிள்யூ.எச். ஆடென், நார்மன் நிக்கல் சன், அய்சர்வுட்டு போன்ற எழுத்தாளர்கள் எலியட்டைப் பின்பற்றிக் கவிதை நாடகம் படைத்தனர். இன்றைய உலகின் அன்றாடச் சிக்கல் களையே கருவாகக் கொண்டு நாடகம் எழுதுவோ ராகிய சான் ஆசுபார்ன் அர்னால்டு வெங்கர், சான் ஆர்டன், எரால்டு பின்டர் ஆகியோர் அமெரிக்க நாட்டிலும், ஏனைய ஐரோப்பிய நாடுகளிலும் அறி முகமாயினர். இரட்டுற மொழிந்தும், குறியீடுகளின் வழியும் கருத்துகளை வெளிப்படுத்தும் திவான் தாமசு, இராபர்ட்டு போல்ட்டு, தென்னிசு பாட்டர் போன்ற இற்றை நாள் நாடகாசிரியர் சிந்தனையைத் தூண்டும் புதிய உத்திகளைப் புகுத்துவதோடு பொழுது போக்காகவும் நாடகம் படைக்கும் ஆற்றல் உடையோராய் விளங்குகின்றனர். ப.அ.

**உருசிய நாடகங்கள்:** உருசியாவில் எழுத்து வடிவிலான இலக்கியத் தோற்றம் பொதுவாக கி.பி. 11-ஆம் நூற்றாண்டிலேயே அமைந்திருந்தது. அதற்கு முந்தைய காலக்கட்டத்தில்கடவுளர் புகழ் பாடும் வாய்மொழிப் பாடல்களும், வீரர்களைப் போற்றும் வீர வரலாற்றுப் பாடல்களுமே செல்வாக்குப் பெற்று விளங்கின. நாடகக்கலை, பொதுவாகச்சமய அடிப் படையில் அமைந்து வளர்ந்தது என்னும் கருத்திற் கேற்ப உருசிய நாடகங்களும் தொடக்கக் காலத்தில்

சமய அடிப்படையிலேயே அமைந்து விளங்கின. அவற்றில் பெரும்பாலானவை போலந்து நாட்டிலிருந்து கி.பி. 12-ஆம் நூற்றாண்டளவில் பெறப்பட்டவையாகும். எனினும், இவை மக்களிடையே பெரிய தாக்கம் எதையும் ஏற்படுத்திடவில்லை. இதற்கு முதன்மையான காரணமாக அமைந்திருந்தது 'பொம்மலாட்ட நாடகக்கலையே' ஆகும். அக்கலை கி.பி. 17-ஆம் நூற்றாண்டு வரையிலும் வளமான செயற்பாட்டில் இருந்தது. பொம்மலாட்ட நாடகங்கள் இருநிலைகளில் செயற்பாட்டில் இருந்தன. சமயம் சார்ந்த நிலையிலும் சமயம், இனம் சாராத நிலையிலும் அதன் செயற்பாடு அமைந்திருந்தது.

உருசியாவின் முதல் நாடகமேடை கி.பி. 1756 -இல் செயின்ட்டு பீட்டர்சுபர்கு(St.Petersbergh)என்னுமிடத்தில் தோற்றம் கொண்டது. இது சமய அடிப்படை நாடகங்களை மேடையேற்றம் செய்தது. தொடர்ந்து 'விசின்' என்ற கவிஞர் 'நிட்ரோல்' (Nidrosl) என்னும் நகைச்சுவை நாடகத்தை எழுதினார். அந்நாடகம் உருசிய சமுதாயத்தில் நிலவி வந்த மோசமான நடைமுறைகள், அடிமைத் தன்மை ஆகியவற்றைப் படம்பிடித்துக் காட்டுவதாய் அமைந்தது. ஓசரப்பு (Ozereft) என்னும் கவிஞர் பல துன்பியல் நாடகங்களை எழுதினார். அவை, கி.பி. 18 -ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த இரண்டாம்காதரின் (Catherine II) மற்றும் அலெக்சாண்டர் ஆகியோரின் காலக்கட்டத்தில்உருவானவையாகும். மேலும்,இரண்டாம் காதரின் அரசியார் தாமே மிகப்பல நகைச்சுவை நாடகங்களை எழுதி வெற்றிகண்டார். புசுகின் (Pushkin) கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் மிகச்சிறந்த நாடகாசிரியராக விளங்கினார். அவருடைய 'போரிசு கோடுனோ'(BorisGodunov)குறிப்பிடத்தக்கதாகும்.உருசியாவில் கி.பி.19-ஆம் நூற்றாண்டுபல சமுதாய நாடகங்களை உருவாக்கியது. குடும்பச் சிக்கல்களும் நாடகக் கருவாக உருமாற்றம் பெற்றன. கோகர் என்பாரின் 'இரிவிசர்' (Revisor) என்னும் நாடகத்தின் கரு 'புசுகின்' என்பவரால் உருவாக்கப்பட்டது. அது மிகச் சிறந்த நாடகமாக, நடப்பியல் தன்மையுடன் புதிய உத்திமுறை கொண்டு உருவாக்கப்பட்டது. உருசிய எழுத்தாளர்கள் மக்களின் வாழ்க்கை நிலைகளை ஏற்கத் தொடங்கினார்கள். எனவே, சமுதாயத்தின் கூறுகளையே நாடகமாக்கத் துணிந்தனர். ஆசுட்ரோவ்சுகி (Ostrovski)என்பவரின் இத்தகைய தன்மை வாய்ந்த நாடகங்கள் குறிப்பிடத் தக்கனவாய் அமைந்தன. அவர் கி.பி. 1846-இல் தம் நாடக வாழ்க்கையைத் தொடங்கினார். அவர் தம் நாடகங்கள் மூலம் மாசுக்கோ நகர மக்களைப் படம்பிடித்தார். அவருடைய 'அது ஒரு குடும்ப நிகழ்ச்சி'(It's a family affair)மற்றும் புதியவனின் பனிச்சருக்கு வண்டியிலிருந்து விலகிநில் (Keep out of a Stranger's sleigh) ஆகியன புகழ்பெற்ற நாடகங்களாக விளங்கின, அவருடைய நாடகங்களில் கதைக்கரு, பாத்திரப்படைப்பு போன்றன இரண்டாம் நிலையிலேயே எண்ணப்பட்டன. பார்வையாளரை மனத்தில் கொண்ட படைப்பாக மட்டுமே அவர்தம் படைப்புகள் விளங்கியமை அதற்குக் காரணமாயிற்று. எந்த நிலையிலும் இவர் அனுதாபம் பெறக்கூடிய ஒரு கதாநாயகனையோ எதிரியாகக் கருதப்படக்கூடிய ஒரு முரணான கதைமாந்தரையோ, படைப்பதில்லை. இரக்கப்படக் கூடிய கதைமாந்தரைப் படைக்காத நிலையில் இவர் 'கோகல்' என்பவரின் பாதையை அடியொற்றியதாக எண்ண இயலுகிறது.

மாசுகோ கலை மேடை (Moscow Art Theatre) உண்மைத் தன்மையை வெளிப்படுத்தும் நோக்கில் இருந்தாலும் சுடானிசுலாவ்சு உண்மைத் தன்மையிலும் இயல்புத் தன்மையை ஈடுபடுத்திக்காட்டினார். இதை அவர் பல வேளைகளில் தெளிவு படுத்தியுமுள்ளார். ஆனால், செக்கோவு காட்சித்திரைகள் மற்றும் நடிகர்களின் இயல்புத்தன்மை ஆகியவற்றைக் காண முற்பட்டார். அவருடைய உரையாடல்கள், உரையாடல்களுக்கு இடையே ஏற்படுத்தப்படும் இடைவெளிகள், பேசாமல் விட்டுவிடுகின்ற சொற்கள் போன்ற அனைத்து நிலையிலும் அவர் மக்களின் உணர்ச்சிகளையே எதிரொலித்தார். பொதுவாக அவர் நாடகங்கள் ஆசுட்ராவ்சுகி, துர்சினிவு ஆகியோரின் நாடகங்களை அமைப்பு முறையில் ஒத்திருந்தன.

உருசிய நாடக ஆசிரியர்கள் நாடகக்கலையின் துணைக் கூறுகளான அரங்க அமைப்பு, காட்சித்திரைகள், உடைகள் போன்றன பாத்திரங்களோடு ஒன்றியிருக்கவேண்டும் என்பதனையும் உணரத் தொடங்கினர். கோர்க்கு, செச்கோவு ஆகியோர் இணைந்து இம்முயற்சியில் ஈடுபடலாயினர்.

சுடேனிசுலாவ்சுகிதான் (Stanislavsky) செயற்கைத் தன்மைகள் நாடகக்கலையில் இடம்பெறுவதை எதிர்த்துக்குரல் எழுப்பியவருள் முதன்மையானவராவார். இவரோடு நெமிரோவிச் தேன்சென்கோ (Nemirovitch-Danchenko) இணைந்து செயலாற்றினார். மேடையில் உண்மைத் தன்மையை உருவாக்கும் முயற்சி விரைவாக நடைபெற்றது. காடுகளைக் காட்சிப்படுத்த உண்மையான மரங்களைக் கூட வெட்டி மேடைக்குக் கொணர்ந்தனர். நடிகர்களும் இயல்பாகத் தங்கள் பாத்திரங்களை ஏற்றுக் கொள்ள இத்தகைய சூழல் மிகவும் பயன்பட்டது.

செக்கோவு உருசிய நாடக அரங்கில் சில செயற்பாடுகளை நிகழ்த்திக்காட்டினார். நாடகங்கள் ஒரே

மாதிரியான இலக்கிய உரைகளாக இருந்த தன்மையை மாற்றினார்; எளிய உரையாடல்களுடன் மனோதத்துவார்த்தங்களை நாடகமாக்கினார்; அன்றாட வாழ்க்கையிலிருந்து நாடகக் கருவைப்பெற்றுக் கொண்டார்; பொதுவாகச் செக்கோவின் கலைத்தன்மை கலைச் சுதந்திரத்தையும் கலை உண்மையையும் விளக்குவதாக அமைந்தது. நாடகம் என்பது கலைஞர்களால் மக்கள் காட்சிப்படுத்தப்படும் நிலையில் அமையவேண்டும் என்பது உருசியாவில் வலுப்பெற்றுள்ளது. இதற்கெனத்தனி நியதியோ வரையறையோ இல்லை எனக் கருதப்படுகிறது.
க.இ.

**சீன நாடகங்கள்:** பழமை வாய்ந்த இலக்கிய வளம் கொண்ட மொழிகளுள் சீனமொழி குறிப்பிடத்தக்கது. சீன இலக்கியத்தைப் பண்டை நூல்கள், வரலாற்று நூல்கள், தத்துவ நூல்கள், இலக்கிய நூல்கள் என நால்வகைப் பாகுபாட்டில் அடக்குவர். நான்காம் வகை இலக்கிய நூல்களில் சீனநாடகங்கள் அடங்கும்.

நாடகத்தைச் சீனர்கள் 'இசி-சு' என்று குறிப்பிடுவர். 'இசி' என்பது நாடகம்; 'சு' என்பது பாட்டு. சீனாவில் கி.பி. 13-ஆம் நூற்றாண்டுக்கு முன் நாடகக் கலை தோற்றம் பெறவில்லை. அதற்குமுன் 'பொம்மலாட்டம்' மக்களிடம் பெருஞ்செல்வாக்கில் இருந்து வந்தது என்பர். மங்கோலிய மன்னர்களான கான்கள் (Khans) கி.பி. 1277-ஆம் ஆண்டளவில் நாடகக் கலையைத் தோற்றுவித்து வளர்த்தனர். அம் மன்னர்களின் பேராதரவால் 50 ஆண்டுகளுக்குள் ஏறத்தாழ 500 நாடகங்கள் சீன மொழியில் எழுதப்பெற்று நடிக்கப்பெற்றன.

சீன நாடகங்கள் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு வரை பெரிதும் மக்களால் போற்றப்பட்டு வளர்க்கப்பட்டன. அக்கால எல்லையில் தோன்றிய நாடகங்களைத் தென்முறை நாடகங்கள், வடமுறை நாடகங்கள் என்ற இருபெரும் பிரிவுகளாகப் பாகுபடுத்துவர். தென்முறை நாடகங்கள் காதலைக் கருப்பொருளாகக் கொண்டவை. இதில் 'குவோ-ட்செ-செங்கு' என்பார் எழுதிய 'யாழ்க்கதை' என்ற நாடகம் புகழ் வாய்ந்தது. வடமுறை நாடகங்கள் வரலாற்றுச் செய்திகளையும் இயற்கையிறந்த நிகழ்ச்சிகளையும் அடிப்படையாகக் கொண்டவை. இதில் 'வங்-சிக்-பு' என்பார் எழுதிய 'மேற்கு மாளிகைக் கதை' என்ற நாடகம் சிறப்பானது.

சியாங்சிக் சுவான் (Chiang Shih-Chuan, கி.பி. 18-ஆம் நூ.) என்பவர் தலைசிறந்த நாடக ஆசிரியராவார். இவர் எழுதிய நாடகங்களுள் ஒன்பது நாடகங்கள் புகழ்பெற்றவை.

சீன இலக்கியத்தின் மறுமலர்ச்சிக் காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டாகும். குவோ மோ-சோ (Kuo mo-jo) என்பார் எழுதிய நாடகங்கள் மக்களின் பேராதரவைப் பெற்றன. இலவோ சிக்கு (Lao Sheh), புகழ்பெற்ற எள்ளல் நாடகங்களை ஆக்கியவர்.

பொதுவாக மேலை நாட்டு நாடகவியலைக் கொண்டு சீன நாடகங்களை ஆய்வுசெய்வோர் அந் நாடகங்களில் காணப்படும் உத்தி வகையிலான குறைபாடுகளைக் கூறுவர். சேக்சுபியர் நாடகங்களில் காணப்படும் உச்சக் கட்டம் (Climax), எதிர் உச்சக் கட்டம் (Anti Climax) முதலியன சீன நாடகங்களில் இல்லை என்பது ஆய்வாளர்கள் குறிப்பிடும் குறைபாடாகும். ஆயினும், சீன நாடகங்கள் மொழி நடையாலும் இசை வளத்தாலும் சிறந்து நிற்பன. சீன நாடகங்கள் ஐரோப்பியமொழிகள் பலவற்றில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. அவற்றுள் 'மேலை மனைக் காதல்' (The Romauce of the West Chamber) என்ற நாடகம் புகழ்பெற்றது.

உலகத்தில் பல மொழிகளிலும் கவிதை நாடகம் குறைந்து உரைநடை நாடகம் பெருகியது போலவே சீன மொழியிலும் இன்று உரைநடை நாடகங்கள் பெருகியுள்ளன. உரைநடை நாடகத்துள்ளும் 'பேச்சு நடை' நாடகமே பெருஞ் செல்வாக்குப் பெற்று, இந் நூற்றாண்டில் அரங்கேறி வருகின்றது. குடியரசு ஏற்பட்டதும் எழுத்துச் சீர்திருத்த இயக்கமும் புதிய பண்பாட்டு இயக்கமும் தோன்றின. அதன் விளைவாகப் புதிய இலக்கிய இயக்கமும் தோன்றியது. இம்மாற்றங்களால் பழைய மூடக் கொள்கைகள் மறைந்து புதிய கருத்துகள் தோன்றின. அக்கருத்துகளைப்பேச்சுநடை' நாடகங்கள் இன்று எதிரொலித்து வருகின்றன.
சா.உ.

**சப்பான் நாடகங்கள்:** சீன எழுத்து முறை தோன்றுமுன் சப்பானிய மொழிக்கு எவ்வித எழுத்து முறையும் இல்லாதிருந்ததால் சப்பானிய மொழியில் ஆக்கப்பெற்ற பாடல்களும் கதைகளும் செவிவழியாகவே வழங்கி வந்தன. சீன எழுத்து முறையும் பௌத்த சமயமும் கி.பி.5,6-ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய பின்னரே சப்பானிய இலக்கியம் அவற்றை ஏற்றுச் சிறக்கத் தொடங்கியது. சப்பானிய இலக்கியத்தை 1) நாராகாலம் (கி.பி.700-794), 2) ஊயன் காலம் (கி.பி.794-11923), காமாக்காலம் (கி.பி.1192-1332), 4) நான்போகுச் சோக்காலம்(கி.பி. 1332-1603), 5) எடோ காலம் (கி.பி.1503-1863), 6)இக்காலம் (கி.பி. 1863 முதல்)என்று அறுவகையாகப் பகுப்பர். அவற்றில் நான்போகுச் சோக்காலத்தில் தான் சப்பானிய நாடக வரலாறு தொடங்குகிறது.

பண்டைய சப்பானில் விழாக் காலங்களில் ககுரோ (Kagura) என்னும் பொம்மலாட்டம் நடை

பெற்று வந்தது. அவ்வாட்டத்திலிருந்துதான் முதன் முதலாக கி.பி. 14-ஆம் நூற்றாண்டளவில் நோ(No) என்னும் நாடக வகை தோன்றியது. அவ்வகை நாடகங்கள் முதலில் சமயத் தொடர்புடையனவாகவும் பின்னர் உலகியலை விளக்குவனவாகவும் தோற்றம் கொண்டன. இதில் பாடலும் உரைநடையும் கலந்திருக்கும்; குறுகிய காலத்திற்குள் முடிந்துவிடும்; குறைந்த எண்ணிக்கையில்தான் கதைமாந்தர் இடம் பெறுவர்; நடிப்புக்கும் சிறிய அளவிலேயே வாய்ப்பிருக்கும். இவ்வகை நாடகங்களில் உடைகள் மட்டுமே பகட்டாயிருக்கும்; காட்சியமைப்புகள் எளிமையாகவே அமைக்கப்பட்டிருக்கும். நோ நாடகங்களை உயர்ந்த நிலைக்குக் கொண்டு சென்றவர்களுள் கனாமி என்பாரும் அவர் மகன் சியாமி என்பாரும் குறிப்பிடத்தக்கவர்கள். மோடோகியா என்பவர் எழுதிய தாகசாகோ(Takasago) என்ற நோ நாடகம் புகழ் வாய்ந்தது. இந் நோ நாடக வகையைச் சப்பானியர்கள் உலக நாடக இலக்கியத்துக்குத் தந்த பெருங்கொடையாக மேலை நாட்டுத் திறனாய்வாளர்கள் மதிப்பிடுவர். ஒரு கதையை நாடகம் போலக் கூறும் 'தாய்கீக்கி' (Taikeiki) என்ற இலக்கிய வடிவமும் சப்பானில் நாடகம் தோன்றக் காரணமாக அமைந்தது என்பர். சப்பான் நாட்டில் எரிமலை வெடிப்பு நிகழா வண்ணம் சாம்பசோ (Samboso) என்ற நடனத்தை அரங்கேற்றுவர்; இந் நடனமே சப்பான் நாடகத்திற்கு மூலமென்றும் சிலர் குறிப்பிடுவர்.

எடோ காலத்தில் 'காபுகி' (Kabuki) என்னும் நாடகவகை தோன்றியது. இவ்வகை நாடகங்கள் கருத்தைப் புறக்கணித்து விட்டு நடிப்புக்கே முதன்மை தந்தன. நாடகத்திறனை வெளிக்காட்டாமல் நடிகரின் திறமையையே இவை வெளிப்படுத்தின. எனவே, இந்நாடகங்களில் பொதுவாக இலக்கியச் சுவை குறைந்தேயிருந்தது. இக் காபுகி நாடகம் எழுதுவதில் தலைசிறந்தவர் சிக்கமாட்சு என்பவர் ஆவார். அவர் பொழுதுபோக்கே நாடகத்தின் முதன்மை நோக்கம் என்ற கொள்கையாளர். அவருடைய நாடகங்கள் இருவகைப்படும். அவற்றுள் வரலாற்றுச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டவை சி-தை மானோ (Ji-dai mano) என்றும், வாழ்க்கை நடைமுறைகளைச் சித்திரிப்பவை சேவமானோ (Sewa mano) என்றும் வழங்கப்பெறும். இவர் 51 நாடகங்கள் எழுதியுள்ளார். அவற்றுள் கோகுசேன்யா காசென் (Koku Senya Kassen) என்பது சிறப்பு வாய்ந்தது. அவருடைய நாடகத்தில் உரையாடல் அமைந்த பாங்கும் கால அமைப்பும் போற்றற்குரியன. பொதுமக்களைச் சலிப்பின்றி நாடகம் காணத் தூண்டும் திறனில் இவர் வல்லவர். இவருடைய நாடகங்கள் 20-ஆம் நூற்றாண்டிலும் நடிக்கப் பெற்று வருகின்றன.

சப்பான் நாடக இலக்கிய வரலாற்றில் இட்சுமோ (Idzumo) என்பார் எழுதிய சுகவாரா (Sugawara) என்னும் வரலாற்று நாடகம் சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளது. நாடகத்தில் பாடல்களைக் குறைத்து உரையாடல்களுக்குச் சிறப்பிடம் தந்தவருள் சிகமாட்சு ஆனி (Chikamatsu Hanni)என்பவர் குறிப்பிடத் தக்கவர். பாடல்களே இல்லாமல் நாடகம் இயற்றியவர்களுள் இட்சுபோச்சி (Tsubouchi) என்பவர் முதன்மையானவர். இவருடைய மாகிநோ காட்டா (Makino kata) என்ற நாடகமும். கிகுதோ கிரி (Kikuto kiri) என்ற நாடகமும் புகழ் பெற்றவை.

பழைய பிரபுத்துவ ஆட்சி மறைந்த பின்னர் இக்கால நாடக இலக்கியம் மறுமலர்ச்சி அடைந்தது எனலாம். சிங்கெக்கி (Shingeki) என்ற நாடக இயக்கம் இக்காலத்தில் தோன்றி வளர ஆசனை காவோரு (Osanai kaoru) என்பாரின் பணி குறிப்பிடத்தக்கது. இக்கால இளைஞர் மனம் அறிவியல், சமத்துவம், சுதந்திரம் முதலியவற்றில் பெரிதும் நாட்டங் கொண்டுள்ளதால் கவிதை, புதினம், சிறுகதை போன்ற இலக்கிய வடிவங்களைப் போலவே நாடகமும் செழித்து வளர்ந்து வருகிறது. சா.உ.

**வடமொழி நாடகங்கள்:** வடமொழியில் நாடகத்தின் தோற்றம் பலவிதமாகக் கூறப்படுகிறது. பரதமுனிவர் தம்முடைய நாட்டிய சாத்திரத்தில் ஒரு தெய்விகத் தோற்றத்தைக் கூறுகின்றார். தெய்விகத் தோற்றத்தைப் போன்று மதப் பற்றுள்ளதும் (Religious), மதச்சார்பற்றதுமான தோற்றமும் வடமொழி நாடகங்களுக்குச் சொல்லப்படுகின்றது. நாடகத்திற்குச் சிறப்பாகக் கருதப்படும், உரையாடல், பாவனை, சங்கீதம், நாட்டியம் போன்றவை வேதகாலத்திலிருந்தே காணப்படுகின்றன. ஆனால், அவை அனைத்தும் தனித்தனியே இருந்தன. அவை எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துத் தெய்வங்களின் திருவிளையாடல்களையோ சிறப்புமிக்க வீரபுருடர்களின் சரித்திரத்தையோ முக்கிய கதைப் பொருளாக வைத்து நாடகங்கள் தோன்றியிருக்கலாம் என்று கூறுகின்றனர்.

இந்திய நாட்டில் பழைய காலத்திலிருந்தே நாடகங்கள் இருந்திருக்க வேண்டும். ஆனால், அவை கிரேக்க நாடகங்களின் தொடர்பினால் ஏற்பட்டிருக்க வேண்டும். அதற்கு முக்கிய காரணமாகக் கூறுவது வடமொழி நாடகங்களில் பயன்படுத்தப்படும் 'யவனிகா' என்ற 'நாடகத்திரை' யைக் குறிக்

கும் சொல். 'யவன' என்ற சொல் 'கிரேக்கர்' என்ற பொருளிலும் கூறப்படுவதனால் இவ்வாறு அவர்கள் கூறுகின்றனர். ஆனால், நடுநிலை நோக்குடன் ஆராய்ந்த கீத்து (A.B. Keeth) முதலிய மேனாட்டு அறிஞர்கள் இதை ஏற்பதில்லை. கிரேக்க நாடகத்தில் தலைசிறந்தது தலைவன் அல்லது தலைவியின் சாவில் முடியும் துன்பியல் (Tragedy) என்ற வகை. இவ்வகை வடமொழி நாடகங்களில் முற்றிலும் இல்லை. இடம், காலம் இரண்டும் மாறாமல் ஒன்றாகவே கிரேக்க நாடகத்தில் இருக்கவேண்டும். இதுவும் வடமொழி நாடகங்களில் இல்லை. இடம் மாறினாலும் அங்கங்கள் மாறா. அங்கத்திற்குள் களம் என்ற சிறு பிரிவு இல்லை. ஆங்கில நாடகங்களுக்கும் வடமொழி நாடகங்களுக்குமிடையே சில ஒற்றுமைகள் காணப்பட்டாலும் கிரேக்க நாடகங்களின் தொடர்பினால் வடமொழி நாடகங்கள் தோன்றின என்பதை ஏற்றுக் கொள்ளவில்லை.

வடமொழி நாடகங்களில் காணப்படுகின்ற முதல் கதாபாத்திரமான 'சூத்திரதாரன்' என்ற பதத்தைக்கொண்டு நாடகங்கள் 'பொம்மலாட்டத்திலிருந்து தோன்றியிருக்கலாம் என்றும் சிலர் கூறுவர். பொம்மலாட்டத்தைப் பற்றிய குறிப்புகள் மகாபாரதத்திலும் பிற நூல்களிலும் காணப்படுகின்றன. 'சூத்திரதாரன்' என்ற பதத்திற்கு நூலைப் (சூத்திரத்தை) பிடித்துக் கொண்டிருப்பவன் என்று பொருள் கொண்டு, முதன் முதலில் நூலில் இணைக்கப்பட்ட பொம்மைகளைக் கொண்டு நாடகங்கள் நடத்தப்பட்டன என்றும், பிறகு மனிதர்களே வேடம் தரித்து நாடகமேடையில் நடிக்கத் தொடங்கினர் என்றும் கீத்து போன்ற ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். பொம்மைகளை நூலில் இணைத்து நாடகமாகக் காண்பிப்பது என்பதே, நாடகம், பொம்மலாட்டம் தோன்றுவதற்கு முன்பாகவே இருந்திருக்க வேண்டும் என்பதைக் குறிப்பிடுகின்றது என்று கூறி இக் கொள்கையையும் ஏற்றுக்கொள்ளவில்லை.

மேலும், சில அறிஞர்கள் பதஞ்சலியின் மகாபாசியத்தில் காணப்படும் சில குறிப்புகளைச் சான்றாகக் கொண்டு 'நிழல் நாடகம்' (Shadow play) மூலம் நாடகங்கள் தோன்றியிருக்கலாம் என்று கூறுவர். ஆனால், பொம்மலாட்டம் போன்று நிழல் நாடகமும், வடமொழி நாடகங்கள் தோன்றுவதற்கு முன்பாகவே இருந்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது.

பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களின் கூற்றின்படி வடமொழி நாடகங்களுக்கு வேண்டிய அவயவங்களான உரையாடல், சங்கீதம், பாவனை போன்றவை யாவும் வேதகாலங்களிலேயே வேள்விகள் செய்யும் சமயத்திலும் தெய்விகச் சடங்குகள் ஆற்றும் சமயங்களிலும் காணப்பட்டன. ஆனால், அவை தனித் தனியாகவே இருந்தன. பிறகு எல்லாம் ஒன்று சேர்ந்து நாடக வடிவத்தில் நாடகமாகத் தோன்றின என்பது தெரிய வருகிறது.

**வடமொழி நாடகங்களின் தன்மைகள்:** 1. உலக வாழ்க்கையை நாடகங்கள் எடுத்துக் காட்டுகின்றபடியினால் நாடகங்கள் மக்களுக்குப் பொதுவாக நல் அறிவுரைகளையும் மகிழ்ச்சியையும் கொடுக்கின்ற ஒரு சிறந்த பொழுதுபோக்காக இருக்கவேண்டும். ஆகவே வடமொழி நாடகங்களில் துன்பியல் என்பது கிடையாது. மகிழ்ச்சியான முடிவோடு கூடியதாகவே இருக்கவேண்டும்.

2. எல்லா நாடகங்களும் 'நாந்தி' என்று குறிப்பிடப்படும் கடவுள் வாழ்த்துடன் தொடங்கவேண்டும். இது முதல் திரை விலகுவதற்கு முன்போ முதல் திரை விலகியவுடனோ அரங்கத்தில் இருந்து சொல்லப்படவேண்டும். இந்த 'நாந்திச் செய்யுளில்' நாடக ஆசிரியர் தம் விருப்பமான தெய்வத்திற்கு வணக்கத்தைச் செலுத்துவதுடன் மறைமுகமாக 'முத்ரா அலங்காரம்' என்று கூறப்படும் அணியினைப் பயன்படுத்தி நாடகத்தில் வருகின்ற முதன்மைக் கதாபாத்திரங்களின் பெயர்களைக் குறிப்பிடுவதும் வழக்கம்.

3. 'நாந்தி' முடிந்தவுடன் முதல் முதலில் மேடையில் தோனறுபவன் 'சூத்ரதாரன்' என்பவன். இவனை 'அரங்கத் தலைவன்' (Stage Manager) என்று கூறுவர். இவன் தனிமையிலோ மற்றொரு துணைநடிகன் அல்லது நடிகையுடன் நடத்துகின்ற சிறு உரையாடலிலோ எந்த நாடகம் எதற்காக எப்பொழுது நடிக்கப்படுகின்றது என்பதை அறிவிப்பான். நாடக ஆசிரியரைப் பற்றிய சில செய்திகளும் நாடகத்தின் காலமும் சொல்லப்படும். இந்தச்சிறுஉரையாடலுக்குச் 'சுதாபன' அல்லது 'ஆமுகம்' என்பதுபெயர். ஆசிரியரைப் பற்றிக் குறிப்புகள் கூறாவிடினும் 'சுதாபனா' எல்லா நாடகங்களிலும் தவறாது இருக்கவேண்டும். இதைப் 'பூர்வரங்கம்' என்றும் கூறுவர். முதல் காட்சியின் முதலில் வரும் இச்சிறு உரையாடல் முடிவில் கதைப் பகுதியுடன் இணைக்கப்பட்டு விடும்.

4. நாடகக் கதாபாத்திரங்கள் உத்தம, (உயர்ந்தவர்) மத்திம, அதம என்ற மூன்று பிரிவுகளில் அடங்குவர். 'உத்தம'வகுப்பைச் சேர்ந்தவரும், இடைநிலையில் சிலரும் எப்பொழுதும் தூய்மையான வடமொழியையே பேசுவர். இடைநிலையில் சிலரும் கீழ்த்தர

நாடகக் கதாபாத்திரங்களும், பெண் கதா பாத்திரங்களும் 'கொச்சை வடமொழி' என்று சொல்லப்படும் 'பிராகிருத' மொழியையே பேசுவர்.

5. நகைச் சுவையை ஏற்படுத்தும் பொருட்டு 'விதூடகன்' என்ற பெயரில் ஒருவன் சில நாடகங்களில் தோன்றுவான். இவனும் 'பிராகிருத' மொழியையே பேசுபவன். அரசனுக்கு அல்லது கதாநாயகனுக்குக் காதல் நண்பனாக இருந்துகொண்டு சில நாடக வளர்ச்சிக்கு முக்கிய காரணமாகவும் இருப்பான். காதல் சுவை, வீரச்சுவை-ஆகிய இரண்டுமே நாடகங்களின் சிறந்த சுவைகள்.

6. இரண்டு காட்சிகளுக்குமிடையே மத்திம அல்லது அதம கதாபாத்திரங்களைக் கொண்டு 'பிரவேசக' என்ற பெயரில் ஒரு சிறு உரையாடல் நிகழும். இதில் மேடைகளில் நடித்துக் காண்பிக்க முடியாததும், கதையின்நடந்த பாகங்களும் நடக்கப் போகின்ற சில பாகங்களும், நாடகத்தின் வளர்ச்சிக்காக முக்கியமென்று கருதப்படும் 'கதைப்பகுதி'யும் நாடகத்தைப் பார்ப்பவர்களுக்கு அறிமுகம் செய்துவைக்கப்படும். இவ்வுரையாடல் முதல் காட்சியிலும் 'சுதாபன'த்திற்குப் பிறகும் நாடகக் கதையின் முன்னுரையாகக் கொண்டுவருவதும் உண்டு. இச்சிறு உரையாடல் 'பிராகிருத' மொழியைக் கொண்டு 'அதம கதாபாத்திரங்களினால்' அமைக்கப்படுகிறது. தூய்மையான வடமொழியைக் கொண்டு இடைநிலைக் கதர்பாத்திரங்களினால் அமைக்கப்படும் உரையாடல், 'சுத்த விசுகம்பகம்' (interlude) எனப்படும்.

7. மற்ற மொழியில் காணப்படும் நாடகங்களைப் போன்று நாடகத்தின் வளர்ச்சிக்குப் பறவைகள், விலங்குகள், உயிரற்ற சில பொருள்கள் தேவைப்படின், அவை பயன்படுத்தப்படும். நாடகத்தின் வளர்ச்சிக்கு அவை மிகவும் முக்கியமாக இருப்பின் அவைகளைக் கொண்டே நாடகத்தின் பெயரும் காணப்படுகின்றது. (எ-டு): சூத்ரக கவியின் 'மிருச்சகடிகம்' (மண்ணியல் சிறுதேர்), அர்சனின் 'இரத்னாவளி' (முத்துமாலை), சக்திபத்ரனின் 'ஆச்சர்யசூடாமணி' மற்றும் பல.

8. பொதுவாக நாடகங்களின் தலைப்பு, தலைவன் தலைவி பெயரைக் கொண்டதாகவோ அவர்களில் யாராவது ஒருவரின் பெயரைக் கொண்டதாகவோ அமையும்.

9. எல்லா நாடகங்களும் 'பரதவாக்யம்' என்று கூறப்படும் நாட்டின் நலனைவேண்டிப் பாடப்படுகின்ற ஒரு பாடலுடன் முடிவு பெறும். இது முக்கிய கதாபாத்திரங்களினாலோ தலைவனாலோ பாடப்படும்.

10. ஒரே கதாபாத்திரத்தைக் கொண்ட சிறு நாடகங்களும் காணப்படுகின்றன. இதில் ஒருவனே மேடையில் காணப்படுவான். ஆனால், பலர் பேசும் பேச்சுகளையும் அவர்கள் பேசுவதாகக் கூறிக் கொண்டே தானும் பதிலைக் கூறுவான். இது 'ஆகாச பாசை' என்று சொல்லப்படுகின்றது. பெரிய நாடகங்களிலும் 'விசுகம்பகங்களில்' 'ஆகாச பாசை' யானது அமைக்கப்படுகின்றது.

11. சண்டைபோடும் காட்சியையோ, இறக்கும் காட்சியையோ ,ஒருவன் கொல்லப் படுவதையோ, தூங்கும் காட்சியையோ நாடக மேடையில் காண்பிக்கக் கூடாது.

12. நாடகத்தை, இதிகாச புராணங்களை அல்லது புகழ் வாய்ந்த கதையைத் தழுவி, நாடக ஆசிரியரின் கற்பனைகளுடன் அமைத்தல் வேண்டும்.

13. நாடகங்கள் மகிழ்ச்சியைத் தரக்கூடிய முடிவினையே பெற்றிருத்தல் வேண்டும். துன்பியலில் முடிதல் கூடாது.

14. ஒவ்வொரு நாடகத்திலும் 5 நிலைகள் காணப்படுகின்றன. அவை 'சந்திகள்' என்று சொல்லப்படுகின்றன. ஐந்து நிலைகளும் முகசந்தி, பிரதிமுகசந்தி, கர்பசந்தி, அவமர்சசந்தி, உபசம்கர சந்தி எனப்படும்.

15. ஒவ்வொரு நாடகத்தின் தலைவனும் தீரோதத்தன், தீரலலிதன், தீரோத்ததன், தீரசாந்தன், என்று சொல்லப்படும் நான்கு வகைத் தலைவருள் ஒருவகையைச் சேர்ந்தவனாக இருக்கவேண்டும்.

மேற்கூறியவை யாவும் வடமொழி நாடகங்களின் பொது விதிகளாகும். இவற்றில் ஓரிரண்டு சில நாடகங்களில் மீறப்பட்டும் காணப்படுகின்றன.

மேற்கூறிய பொதுவிதிகளுக்குட்பட்ட வடமொழி நாடகம் எல்லோருடைய கவலைகளையும், துன்பங்களையும் நீக்க ஒரு மகிழ்ச்சியான பொழுதுபோக்கு என்று பரதரால் சொல்லப்படுகின்றது.

**நாடகங்களின் வகைகள்:** நாடகங்கள் பொதுவாக 'ரூபகங்கள்' (உருவகங்கள்) என்று குறிக்கப்படுகின்றன. நாடகக் கதை, சுவை, காட்சிகளின் எண்ணிக்கை ஆகியவற்றைப் பொறுத்து நாடகங்கள் 10 வகைகளாகப்பிரிக்கப் படுகின்றன. இவை 'தசரூபகங்கள்' என்று சொல்லப்படுகின்றன. இவை 1. நாடகம் 2. பிரகரணம், 3. பாணம், 4. பிரகசனம், 2. திமம், 6. வியாயோகம் 7. சமவாகாரம், 8. வீதி 9. அங்கம் 10. இகாமிருகம்.

**பிரகரணம்:** பத்துக் காட்சிகளில், சமூகக் கதையைக் கொண்டு, காதல் சுவையையே முக்கிய சுவை

யாகக் கொண்டு அமைக்கப்படும் நாடகம். (எ-டு). சூத்ரகனின் மிருச்சகடிகம், பவபூதியின் மாலதிமாதவம்.

**பாணம்:** ஒரு காட்சியை மட்டும் கொண்டு, காதல் அல்லது வீரச் சுவையை முக்கியமாகக் கொண்டது. மோசக்காரனாகிய (Rogue) ஒரே ஒரு கதாபாத்திரத்தில் 'ஆகாசபாசையில்' அமைக்கப்படுவது.

**பிரகசனம்:** ஒரு காட்சியை மட்டும் கொண்டு, பல கதாபாத்திரங்களுடன் நகைச்சுவை கலந்த கற்பனைக்கதையில் அமைக்கப்படுவது. (எ-டு). மகேந்திரவர்மனின் மத்தவிலாச பிரகசனம், பகவதச்சீரகம் போன்றவை.

**திமம்:** நான்கு காட்சிகளில் காதல், நகைச்சுவை ஆகிய இவ்விரண்டு சுவைகளைக் காட்டிலும் வேறு சுவைகளில், ஏதேனும் ஒன்றை முக்கிய சுவையாகக் கொண்டதும், தேவர்களையும், அசுரர்களையும் கதாபாத்திரமாகக் கொண்டு புகழ்வாய்ந்த அதிசயங்களுடன் கூடியதுமாகிய புராணக் கதையில் அமைக்கப்படுவது. (எ-டு) திரி புரபத்த, 'மன்மரீதான் மதன' போன்றவை.

**வியாயோகம்:** புகழ்வாய்ந்த இதிகாச புராணக் கதையில் ஒரே காட்சியில், அரசனையோ, அரச முனிவரையோ, தலைவனாகக் கொண்டு சண்டைக் காட்சிகளுடன் அமைக்கப்படுவது. காதல் அல்லது நகைச்சுவை இதில் இருக்கக் கூடாது. (எ-டு) பாசனின் மத்யமவ்யாயோகம்.

**சமவாகாரம்:** தேவ அசுரர்களின் கதையைக் கொண்டு, தெய்விகத் தன்மை கலந்த பல தலைவர்களைக் கொண்டு வீரச் சுவை மிளிர அமைக்கப்படுவது. (எ-டு) அமிருதமதனம், பாஞ்சராத்ரம் போன்றவை.

**வீதி:** ஒரே கதாபாத்திரத்தைக் கொண்டு, முழுமையும் காதல் சுவையை மட்டும் கொண்டோ, காதல் சுவையை முக்கியமாகக் கொண்டோ கற்பனைக் கதையில் அமைக்கப்படுவது. இந்நாடகமும் 'ஆகாசபாசையில்' அமையவேண்டும்.

**அங்கம்:** கருணைச் சுவையில், ஒரே காட்சியில், சாதாரண மனிதனைத் தலைவனாகக் கொண்டு, புகழ்பெற்ற புராணக் கதையில் கவியின் கற்பனைத் திறனுடன் அமைக்கப்படுவது. (எ-டு) பாலராமாயணம், 'சர்மிட்டாயாயாதி' ஆகியவை.

**இகாமிருகம்:** ஒன்று முதல் ஐந்து காட்சிகளில் புராணக் கதையுடன் கவியின் கற்பனையுடன் நற்குணம் வாய்ந்த தலைவனையும் கோபக்குணம் படைத்த எதிரியையும் கொண்டது. (எ-டு) உருக்மணி கரணம், வத்சராச சரித்திரம் போன்றவை.

மேற்கூறிய பலவித ரூபகங்களுடன் பலவிதமான உபரூபகங்களும் சொல்லப்படுகின்றன. பலவிதமான நாடகங்கள் கூறப்பட்டாலும், நாடகமும், பிரகரணமுமே மிகுதியாக வடமொழி இலக்கியத்தில் காணப்படுகின்றன.

**சில முக்கியமான வடமொழி நாடகங்கள்: பாசன்:** காளிதாசனுக்கு முன்பு இருந்த பாசன் 13 நாடகங்களை எழுதியுள்ளான். பிரதிமா நாடகம், அபிசேக நாடகம் என்ற 2 நாடகங்கள் இராமாயணக் கதையைத் தழுவியும், மத்யமவ்யாயோகம், பாஞ்சராத்ரம், தூதவாக்யம், தூதகடோத்கசம், கர்ணபாரம், ஊருபங்கம் என்ற 6 நாடகங்கள் மகாபாரதக் கதையைப் பின்பற்றியும், 'பாலசரிதம்' என்ற நாடகம் 'சிரீமத் பாகவத புராணத்தைத் தழுவியும், சுவப்ன வாசவதத்தம், தரித்ர சாருதத்தம், பிரதிக்ஞாயௌகந்தராயணம், அவிமார்கசரிதம், என்ற4 நாடகங்கள் புகழ்பெற்ற உதயணனின் கதையைப் பின்பற்றியும் எழுதப்பட்டவை. இவன் காலம் கி.மு. 2-ஆம் நூற்றாண்டு என்று சொல்லப்படுகிறது.

**காளிதாசர்:** இந்திய அறிஞர்களினால் கி.மு. முதல் நூற்றாண்டிலும், மேல் நாட்டு அறிஞர்களினால் கி.பி. 4-வது நூற்றாண்டிலும் இருந்தவன் என்று சொல்லப்படும், வடமொழியிலேயே சிறந்த கவிஞன் என்று புகழப்படும் காளிதாசர் சுங்க வம்சத்தைச் சேர்ந்த அக்னிமித்ரனுக்கும், மாளவிகா என்ற அரசகுமாரிக்கும் உள்ள காதலை வருணிக்கும் 'மாளவிகாக்னிமித்ரம்' என்ற சமூக நாடகத்தையும், தேவலோக அப்சரசப்பெண் ஊர்வசிக்கும், புரூரவசு என்ற மானிட உலக அரசனுக்குமுள்ள காதலை வருணிக்கும் 'விக்ரமூர் வசீயம்' என்ற நாடகத்தையும், உலகப்பிரசித்தி பெற்ற 'அபிக்ஞான சாகுந்தலம்' என்ற நாடகத்தையும் எழுதியுள்ளார்.

**சிரீகர்டின்** என்பவர் கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அர்சவர்த்தனன் என்ற அரசன் உதயணனின் கதையைப் பின்பற்றி 'இரத்னாவளி', 'பிரியதர்சிகா' என்ற இரண்டு நாடகங்களையும், புத்தமதத்தைத் தழுவிய பிறகு 'சிரீமுதவாயுணன்' என்ற வித்யாதர அரசனின் உயிர்த் தியாகத்தைக் கூறும் 'நாகானந்தம்' என்ற நாடகத்தையும் எழுதியுள்ளார்.

**சூத்ரகன்** 'சாருதத்தன்' என்பவனின் வறுமையை வருணிக்கும் 'மிருச்சகடிகம்' என்ற சமூக நாடகத்தை எழுதியுள்ளார்.

**விசாகதத்தன்** திறமைமிக்க நந்தவமிசத்தின் மந்திரி. இராட்சசன், சந்திரகுப்தனின் மந்திரி சாணக்கியன் ஆகியோரின் மதிநுட்பங்களையும், அரசியல் தந்திரங்களையும் விவரிக்கும் 'முத்ரா ராட்சசம்' என்ற அரசியல் நாடகத்தை இவன் எழுதியுள்ளான்.

**புவபூதி**: 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பவபூதி இராமாயணக் கதையைத் தழுவி 'உத்தர ராமசரிதம் 'மகாவீர சரிதம்' என்ற இரண்டு நாடகங்களையும், 'மாலதி மாதவம்' என்ற சமூக நாடகத்தையும் எழுதியுள்ளார்.

**பட்டநாராயணன்** மகாபாரதக் கதையைத் தழுவி, வீரச்சுவை பொருந்திய 'வேணிசம்காரம்' என்ற நாடகத்தை எழுதியுள்ளார்.

**இராசசேகரன்** இராமாயணக் கதையைத் தழுவி 'பாலராமாயணம்' என்ற நாடகத்தையும், மகா பாரதக் கதையைப் பின்பற்றிப்பாலபாரதம்' என்ற நாடகத்தையும், 'வித்தசாலபஞ்சிகா''கர்ப்பூரமஞ்சரி' என்ற இரு காதல் சுவையை முக்கியமாகக் கொண்ட நாடகங்களையும் எழுதியுள்ளார்.

**முராரி** இராமாயணக் கதையைத் தவிர 'அனர் கராகவம்' என்ற நாடகத்தையும் எழுதியிருக்கிறார்.

ஒருவரின் தனிப்பட்ட கொள்கையினையோ வேதாந்தக் கருத்துகளையோ நிலை நாட்ட நாடக வடிவம் பயன்படுத்தப்பட்டது.இவ்வாறு வேதாந்தக் கருத்துகளையோ கொள்கைகளையோ நாடகக் கதாபாத்திரங்களின் உதவியைக் கொண்டு நிலை நாட்டுவதற்காக எழுதப்பட்ட நாடகங்கள் தொடர் உருவக நாடகங்கள்(Allegorical Dramas) ஆகும். கிருட்டிண மிசுனர் என்பவர் (கி.பி,11-ஆம் நூற்.) அத்வைத வேதாந்தத்தைப் பரப்புவதற்காகப் 'பிரபோத சந்திரோதயம்' என்ற நாடகத்தை எழுதியுள்ளார். இதேபோல் விசிட்டாத்வைத வேதாந்தத்தைப் பரப்புவதற்காக கி.பி.14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வேதாந்த தேசிகர் சங்கல்ப சூர்யோதயம்' என்னும் நாடகத்தையும் எழுதியுள்ளார். எஸ்.ஜெ.

**நாடக அரங்கும் நாடக மாந்தரும்**: நாடக வளர்ச்சியில் நாடக அரங்கும் அதன் அமைப்பும் முக்கியமானவை. நாடக மாந்தர் படைப்பு மற்றொரு முக்கிய அமிசமாகும். 'நாடக அரங்கு' என்ற சொல்லிற்குப் பண்டைக் கிரேக்க மக்கள் 'பார்க்கும் இடம்' என்று பொருள் கொண்டனர். நடனம், உரையாடல் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட பண்டைய கிரேக்க, இலத்தீன் நாடகங்களில் ஒரு நிகழ்ச்சியைப் பார்ப்பவர்கள் 'பார்வையாளர்கள்' என்று கருதப்பட்டனர். ஆனால், இக்காலத்தில் நாடகம் என்பது இலக்கிய வடிவம் என்றும், நாடக அரங்கு என்பது நாடகத்தைப் பார்ப்போருக்கு நடித்துக் காட்டுகின்ற இடம் என்றும், நாடக மாந்தர் என்போர் நாடகத்தில் நடிக்கும் மாந்தர்கள் என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.

பண்டைய கிரேக்க நாட்டில் முதன் முதலில் நாடக மாந்தர் தயோனிசசு (Dionysus) என்ற பெயருடைய வழிபடும் தெய்வத்தின் குணாதிசயங்களைக் கொண்ட மாந்தராகச் சித்திரிக்கப்பட்டனர். துன்பியல் நாடகத்திலும், இன்பியல் நாடகத்திலும் நாடக நாயகன் தயோனிசசைப் போன்றவனாகக் காண்பிக்கப்பட்டான். நாடக அரங்கு வளர்ச்சி பெறவில்லை. திருவிழாக்களிலும், சமய விழாக்களிலும் மக்கள் கூட்டமாக நின்று நடித்துக் காட்டுகின்ற ஒரு நிகழ்ச்சியைப் பார்த்து வந்தனர். பின்னர் உரோமாபுரிக்கும் 'நாடகம்' பரவியது. காலப்போக்கில், நாடக அரங்கு-தயோனிசசு என்ற இறைவனுக்கு அமைக்கப்பட்ட கோயில் போன்ற அமைப்பைக் கொண்டதாக இருந்தது. பெரும்பாலும் இப்படிப்பட்ட நாடக அரங்குகள் மலைப்பகுதியில் அமைக்கப்பட்டன. அரங்கின் மூன்றின் இருபகுதியை மறைத்து வைத்திருந்தார்கள். முன் பகுதியில் திறந்தவெளி காணப்பட்டது. காலம் செல்லச் செல்ல அரங்கின் முன்பகுதியில் 'முன்வாயில்' (Portico) போன்ற அமைப்புச் சேர்த்துக்கொள்ளப்பட்டது. உரோமாபுரியில் வளைவு போன்ற கட்டடத்தை அமைத்து நடிப்பதற்கு மேடையை ஏற்படுத்தி மர மேடைகளை வைத்தார்கள். காட்சிகள் மாற்றத்துக்கான வசதியோ, காட்சிகளைச் சித்திரிக்கும் வரைபடங்களோ, இடமாற்றத்திற்கான வசதியோ இல்லை. ஆவி, பிசாசு ஆகியன போன்ற தந்திர உத்திகளைக் கையாளுவதற்கு இயலாது. பிளைனி (Pliny) என்பவருடைய புத்தகத்தில் உரோமாபுரி மக்கள் கிரேக்கர்களை விடச் சிறந்த உத்திகளை நாடக அரங்கில் கையாண்டார்கள் என்பது கூறப்பட்டுள்ளது. எண்பதாயிரம் பேர் அமர்வதற்கு வசதியான கட்டடத்தை கி.மு. முதல் நூற்றாண்டில் உரோமானியர்கள் கட்டினர் என்று பிளைனியினுடைய குறிப்புத் தெரிவிக்கிறது.

ஐரோப்பிய மறுமலர்ச்சிக் காலத்தில் இக்கால நாடக அரங்கின் வடிவமைப்பு இல்லை. நாடக அரங்கு வசதிகள் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் தொடக்கக்காலத்தில்தான்மிகுதியாக்கப்பட்டன.மேல்மாடம் (Balcony) அமைப்புக் காட்சிகள், திரைச்சீலை வசதி இருக்கை அமைப்புகள், புதிய வசதிகள் ஆகிய அனைத்தும் ஆங்கில நாடகாசிரியர் சேக்சுபியர் காலத்துக்குப் பின்னரே தோன்றின. எலிசபெத்து அரசி (Queen Elizabeth) இங்கிலாந்தை ஆண்ட கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சேக்ஸ்பியர் காலத்தில், நாடக அரங்கு முழுமையாக வளர்ச்சி பெறவில்லை. பகல் நேரங்களில் நாடகங்கள் அரங்கேற்றப்பட்டன. காட்சி மாற்றத்திற்கான வசதி இல்லாத காரணத்தால் மக்கள் தங்கள் கற்பனைச் சக்தியைப் பயன்படுத்தி அரங்கில் நடிக்கப்படும் காட்சியைச் சுவைக்க வேண்டி இருந்தது. பெண்களுடைய பங்கை இளம் சிறுவர்களே நடித்தனர்.

நாடக அரங்கின் மூன்று பக்கங்களிலும் பார்வையாளர்கள் இருப்பதற்கு இருக்கைகள் அமைக்கப்பட்டன. முன் வரிசைகளில் செல்வர்களும், பிரபுக்களும் அமர்ந்து நாடகத்தைப் பார்த்தார்கள். அரங்கில் இவை சிறந்த அமிசமாகக் கையாளப்பட்டன.

இந்திய நாடகத்தில் கிரேக்கச் செல்வாக்கினைக் காண முடியவில்லை. பரத மன்னர் காலத்தில், இந்து எழுத்தாளர்களால் பிரம்மாவினால் வேதங்களைப் பற்றிச் சொன்ன கதைகள் நாடகமாகக் கருதப்பட்டன. நாட்டியக் கலை நாடகத்தின் முக்கிய அமிசமாகக் கருதப்பட்டது. இந்து நாடக வளர்ச்சியில் கி.பி. 11-ஆம் நூற்றாண்டு குறிப்பிடத்தக்கநூற்றாண்டாகும்.ஐந்நூறுக்கும் மேற்பட்ட சமசுகிருத நாடகங்கள் இருந்தனவென்று சூய்லர்சு (Schuylers) என்ற ஆய்வடங்கல் தொகுப்பாளர் குறிப்பிடுகிறார். இந்திய நாடகத்தில் ஓரளவிற்கு நாடக அரங்கவளர்ச்சி இருந்தது என்பதனைச் சரித்திரச் சான்றுகள் கூறுகின்றன. இக்காலநாடக அரங்கு பல புதிய வசதிகளைக் கொண்டிருக்கின்றது. சரித்திர நாடகம், தத்துவ நாடகம், விஞ்ஞான நாடகம் போன்ற எத்தகைய நாடகத்தையும் அரங்கேற்றக்கூடிய வசதிகளைக் கொண்டது இக்கால நாடக அரங்கு. மேலைநாட்டு முறைகளைக் கையாண்டு இந்திய நாடக அரங்கும் சிறந்த ஒலி, ஒளி அமைப்பை இக்காலத்தில் ஏற்படுத்தியுள்ளது. நாடக அரங்கு என்பது வாடகைக் கட்டடமாக மட்டும் இல்லாமல் நாடக அரங்கேற்றத்திற்காகவே ஏற்படுத்தப்பட்டு வரும் நிலை குறிப்பிடத்தக்க முன்னேற்றமாகும்.

'நாடக மாந்தர்' என்பவர் நாடகத்தில் வரும் பாத்திரங்களாவர். பழங்காலத்தில் கிரேக்க, இலத்தீன் மொழி நாடகங்களில் நாடக மாந்தர், வழிபடும் இறைவனின் குணங்களைக் கொண்டவராகப் படைக்கப்பட்டனர். ஒரே மாதிரியான நாடக மாந்தர்கள் காணப்பட்டனர். காலப்போக்கில் நாடக மாந்தர் படைப்பிலும் மாற்றம் ஏற்பட்டது. இடைக் காலத்தில் ஐரோப்பிய நாடகங்களில் குறிப்பாக ஆங்கில நாடகங்களில் வரும் நாடக மாந்தர்கள் குணங்களின் உருவகமாகக் காட்டப்பட்டார்கள். கொடூரம்,அன்பு, காதல் போன்றவை நாடக மாந்தரின் பெயர்களாக எடுத்தாளப்பட்டன. இத்தகைய நாடகங்கள் நீதிநெறி நாடகங்கள் (Morality Plays)என்று குறிப்பிடப்பட்டன. சமயத்தை அடிப்படையாகக் கொண்ட இத்தகைய நாடகங்களில் நல்லொழுக்கம் போதிக்கப்படுவதைக் குறிக்கோளாகக் கொண்டார்கள்.பின்னர் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் சேக்சுபியர் எழுதிய நாடகங்களில் உலகிற்குப் பொதுவான 'நாடக மாந்தர்கள்' படைக்கப்பட்டார்கள். நாடக மாந்தரின் நற்பண்பிற்கும், தீயபண்பிற்கும் அவர்களின் பெயருக்கும் தொடர்பில்லை.இத்தகைய நாடகங்கள் அழியாப் புகழ்பெற்றவை. ஒத்தெல்லோ (Othello),இலியர் மன்னர்(King Lear), இளவரசன் ஆம்லட்டு (Prince Hamlet), மாவீரன் ஆன்டனி (Mark Anony) எகிப்து அரசி கிளியோபாட்ரா (Cleopatra) போன்ற நாடக மாந்தரின் படைப்பு, விஞ்ஞான வளர்ச்சி, மக்கள் நாகரிக வளர்ச்சி, நாடக அரங்கின் வளர்ச்சி முதலியவற்றைப் பொறுத்து மாறுபட்டு வந்துள்ளது

இந்திய நாடகத்தில், மாந்தரின் படைப்பில் உரையாடல் முக்கிய அமிசமாகக் கருதப்பட்டது. நாடக மாந்தர் வளர்ச்சியின் வரலாறு கி.பி. 2-ஆம் நூற்றாண்டுக்கு முன்பாக உறுதியாகத் தெரியவில்லை. ஒவ்வொரு வகையான நாடகமும் நாடகத்திற்குப் பொருத்தமான நாயகனையோ, நாயகியையோ கொண்டிருந்தது. இந்திய நாடகவளர்ச்சியில் 384 வகைப்பட்ட நாடக நாயகிகளை வகைப் படுத்திக் காண்பிக்கின்ற நிலையைக் காணலாம். நாடக நாயகர்கள் நினைவுகூறும் அளவில் சித்திரிக்கப்பட்டார்கள். இன்பியல் நாடகத்தில் வரும் கோமாளி' (The Buffoon) போன்ற நாடக மாந்தர், ஆங்கில நாடகத்தில் வரும் 'கோமாளியின்' (The fool) சித்திரிப்பை ஒட்டி இருப்பதைக் காணலாம். அறிவுமுறையாகப் பேசுகின்றதன்மை 'கோமாளியின்' பொதுவான குணம். துன்பியல் நாடகத்தில் நாயகர்கள் சிறந்த குணங்களைக் கொண்ட வீரனாகவோ அரசனாகவோ உயர்ந்த மனிதனாகவோ சித்திரிக்கப்படுகின்ற நிலை ஆங்கில மொழி நாடகங்களிலும், இந்திய மொழி நாடகங்களிலும் காணப்படுகின்றது. நாடக நாயகனின் சாவில் சோகம் படருவதையும் அந்தச் சோகம் பார்ப்போர் உள்ளத்தைத் தொடும் அளவிற்குப் பாதிப்பை ஏற்படுத்துவதையும் பழங்கால நாடகங்களிலும், இக்கால நாடகங்களிலும் காணலாம். மனித ஆத்மாவைத் தூய்மைப்படுத்திப் புடம்போட்ட நல்ல உள்ளமாக மாற்றுகின்ற செயலைத்.துன்பியல் நாடகம் செய்கிறது என்று அரிசுடாட்டில் (Aristotle) கூறுகிறார். இன்பியல நாடகங்களில் வரும் நாடக மாந்தர்கள் இனிய கற்பனை உலகில் வாழ்ந்து, சூழ்நிலையையும் வாழ்வையும் சுவைத்து அதன்மூலம் அவர்கள் பெறும் இன்பத்தை இரசனையை அவர்கள் வாழ்க்கையின் வெற்றியின் மூலமாக நாடகத்தில் வரும்இனிய முடிவின்மூலமாகப் பார்ப்போர் உள்ளத்தில் பதியவைக்கிறார்கள்.

நாடக மாந்தரின் சிறந்த படைப்பும், நாடக அரங்கின் இக்கால வளர்ச்சியும் ஏற்ற முறையில் நாடக ஆசிரியர்களால் கையாளப்பட்டால் நாடகக் கலை மனித வாழ்க்கையின் சிந்தனையைக் கூர்மைப் படுத்தி, எண்ணத்தை வளர்த்துக்கருத்துச் செறிவை ஏற்படுத்திப்பண்பட்ட மனிதர்களை உருவாக்க உதவும் என்பது தெளிவு. வி.எச்.பா.

**நாடகத்தில் இசை:** பண்டைத் தமிழர் இசைக் கலையையும், கூத்துக் கலையையும் வாழ்வியலோடு ஒன்றியனவாகவே வளர்த்துள்ளனர். உயிரில்லாமல் உடம்பு இயங்காததைப் போன்று, இசை இல்லாமல் கூத்தோ நாடகமோ நிகழாது என்ற அளவில் இசைக் கலையின் சிறப்பு அக்காலத்தில் இருந்துள்ளது.

இசை இரண்டு வகைப்படும். ஒன்று மனிதன் வாயால் வெளியிடும் குரலிசை. மற்றொன்று, தோல் கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி முதலிய கருவி வகைகளால் இசைக்கும் இன்னிசை.

இசைக் கருவிகளின் இசைப்பொலிகளுக்கு ஏற்ற படி, கை கால்களின் அசைவுகளுடன், உடம்பினை யும் நளினமாக அசைவுறச் செய்வது கூத்து எனப் பட்டது. கூத்தின் செய்கைகளால் மனக்குறிப்பை வெளிப்படுத்துவது அபிநயமாகும். அபிநயம் காட்டிப் பாடல் கருத்து காண்பவர் மனத்தில் பதியுமாறு ஆடும் கூத்து நாட்டியம் எனப்பட்டது. ஒருவரின் வரலாற்றினையோ, இதிகாச புராணங்களின் தொடர்பான நிகழ்ச்சிகளையோ கதையாகத் தழுவி இயல், இசை, கூத்து மூன்றும் பொருந்திய நடிப்புத் திறனால் வேடம் புனைந்து ஆடுவது அக்கால நாட கத் திறனாகும்.

நாடகங்கள் கூத்துகளின் வளர்ச்சியாகவே இருந்துள்ளன. இதனை, 'நாடக மேத்தும் நாடகக் கணிகை' என்று சிலப்பதிகாரம் மாதவியைக் குறிப் பிடுவதால் அறிய முடிகின்றது. இன்றும் கிராமப் பகுதியில் வாழ்கின்ற பாமரமக்கள் 'நாடகம் ஆடி னார்கள்' என்று கூறும் வழக்கும் இதற்குச் சான்றா கும்.

கூத்து என்பது நாட்டியத்தின் உயிர்ப்பாகவும், நாடகத்தின் அங்கமாகவும் விரவி வந்துள்ளதனை நாட்டிய நாடக உருவாக்கம் அறிமுகம் செய்கின்றது.

பழந்தமிழகத்தில் கூத்துகள், அரசர்கட்கென்றும், பொதுமக்கட்கென்றும் வகைபெற்றிருந்தன. அரசர் களுக்கு ஆடிய கூத்து தனியரங்கில் நிகழ்ந்தது. மக்கள் காண ஆடிய கூத்து ஊர்ப்பொதுவிடத்தில் நிகழ்ந் துள்ளது. மக்களுக்குரியதாக ஆடிய பொதுக்கூத்தே, கால வழக்கில் தெருக்கூத்தாகவும் நாடகமாகவும் வந்துள்ளதனை அறியமுடிகின்றது.

பண்டைக்கால இசைக்கலைஞர் இன்னிசையாக எழுப்பிய நாதவொலியைப் பண் என்றனர். அதனை இலக்கியங்கள் யாழ் என்று குறிப்பிடுகின்றன. யாழ் என்பதே பிற்காலத்தில் இராகம் என்ற பெயரால் வழங்கப்பட்டுள்ளது. பண்ணோடு பொருந்திய பாட்டு பாணி எனப்பட்டது.

சங்ககாலத் தமிழிசை வாணர்கள் யாழ் என்ற சுர அமைப்பினைப் பாலை என்று வடிவகம் செய்து, பாலைப் பண்கள் ஏழுஎன்றும் அதன் கிளைப்பண் கள் நூற்றுமூன்று என்றும் கணித்துள்ளனர். அவற் றுள் பெரும் பண்கள் (இராகம்)' 16, திறங்கள்84, சார்பு 3 என்று பாகுபடுத்தியும் காட்டியுள்ளனர்.

நாடகங்களில் பாடப்பெறும் பாடல்கள் தரு, பதம், பத்தியம், கீதம், கைவாரம், பணிப்பு, தண்ட கம், சூர்ணிகை, திவிபதை, கண்ணிகள், எச்சரிக்கைத் தரு முதலியன ஏற்புடைய இராகங்களால் அமைக் கப்பட்ட பாடல்களாகவே இருப்பது கலையமைப் பாகும்.

நாடகக் கலையில் ஆடல், பாடல், உரையாடல், நடித்தல் என்ற வகைத் திறங்கள் அங்கங்களாக இருந்தன. மானுட மனக் கிளர்ச்சிகளை(மெய்ப்பாடு கள்) வேடத்திற்கும், கதையின் நிகழ்ச்சிகட்கும் ஏற்ப நடித்தும் பாடியும், பாடிக்கொண்டே நடித்தும் நாட கத் திறன் வளர்ந்துள்ளது. அதற்குரியதாக நாடக ஆசிரியர்களும், கவிகளும் இசைப் பாடல்களை உரு வாக்கி நாடகங்களில் இடம்பெறச் செய்துள்ளனர். கதையமைப்பிற்கேற்ப வேடமிட்டுக் கொண்ட நடிகர் கள் சிரிப்பு, அழுகை, சினம், வெற்றி போன்ற நிகழ்ச்சிகளைப் பாடல்களாகவே பாடி நடித்து மக் களைக் கவர்ந்துள்ளனர்.

இசைப் பாடல்களாக இலக்கண அமைதியுடன் செய்யப்பட்டு நாடகங்களில் இடம்பெற்ற பாடல்கள் வெண்பா, அகவல், கலிப்பா, கலித்துறை, தாழிசை ஆகியனவாகும். அவற்றிற்கமைந்த இராகங்களை முறையே சங்கராபரணம், தோடி, பந்துவராளி, பைரவி, தோடி அல்லது கலியாணி என்ற வகையில் அமைத்துள்ளனர்.

இம்முறையினைப் பிற்காலத்தில் தெருக்கூத்து நாடகங்களுக்கு ஓர் ஒழுங்கான அமைப்பில் உரு வாக்கித் தந்த நாடக ஆசிரியர் சங்கரதாசு சுவாமி கள் ஆவார். அம்முறையின் தொடர்பாக, விருத்தப் பாக்கள் நாடகங்களில் கல்யாணி, காம்போதி, மத்ய மாவதி, கேதார கௌளம் ஆகிய இராகங்களில் நடிகனின் குரல் வளத்திற்கேற்பப் பாடும் வழக்கி னைச் சுவாமிகள் பெருகச் செய்துள்ளார்கள்.

நாடகத்திற்குரிய கதை நிகழ்ச்சிகள் மனித னுடைய வாழ்வியல் அங்கங்களாகவும் செயல்களாக வும் உணர்ச்சி கிளர்ச்சி போன்ற இயல்புகளைக் கொண்டனவாகவும் அமைதலினால், வேடம்புனைந் தோர் நிகழ்ச்சிக்கேற்ற பொருள் பொதிந்த பாடல் களை மக்களின் மனத்தைக் கவரும்படியாகப் பொருந்

தியஇராகங்களைக் கொண்டு நயம்பெறப்பாடி உயர்வு பெற்றுள்ளனர்.

பண்டைக் காலக்கூத்து நாடகங்களில் முழவு என்னும் தோல்கருவியொன்றே தொடக்கத்தில் இருந்துள்ளது. பின்னர்க்குழல், யாழ், மத்தளம் ஆகிய மூன்று இசைக்கருவிகள் இடம் பெற்றன. அடுத்து அவற்றுடன் இடக்கை என்ற தோற்கருவியும், சல்லிகை என்ற கஞ்சக்கருவியும், கரடிகை என்ற நயப்பிசைத் தோற்கருவியும் கையாளப்பட்டுள்ளன.

பல்லவர் காலத்தில் தாளம், மத்தளம், வீணை ஆகியவை இருந்துள்ளன. சோழர் காலத்தில் தாளம், மத்தளம், கொட்டி மத்தளம், உடுக்கை,* கரடிகை, சல்லரி, இடக்கை, குழல், முத்திரைச்சங்கு ஆகிய வாத்தியங்கள் கையாளப்பட்டுள்ளதனைக்கல்வெட்டுச் செய்திகளாலும் சிற்பங்களாலும் அறிய முடிகின்றது.

நாயக்கர் காலத்தில் நிகழ்ந்த நாடகப் பாடல்களுக்கு குழல், வீணை, மத்தளம், ஒத்து வாத்தியம், தாளம், தடாரி, முழவு ஆகிய வாத்தியங்கள் கையாளப்பட்டுள்ளன.

மராட்டியர் ஆட்சியில் நிகழ்ந்தநாடகங்களிலும், சதுராட்டங்களிலும், நாட்டிய நாடகங்களிலும், தாளம், துந்தனா (தும்புரு), மத்தளம், தோலக்கு, வீணை, முழவு, சால்ரா ஆகிய இசைக்கருவிகள் இசைக்கப்பட்டுள்ளன. இரண்டாம் சரபோசி மன்னர் 'கிளாரிநெட்' என்ற குழல் வாத்தியத்தினையும் திரம்பா என்ற தட்டொலி முழவினையும் நாடக இசையில் இடம்பெறச் செய்துள்ளார்.

பிற்கால நாடகங்களில் 'இசைப்பெட்டி, 'கிளாரிநெட்' (குழல்வாத்தியம்), தபெலா, திரம்பா, சுருதிப் பெட்டி, 'பிடில்', மிருதங்கம், தாளம் ஆகிய வாத்தியங்களும் பிற புதிய மேனாட்டு வாத்தியங்ளும் இடம் பெற்றுள்ளன.

நாடகஆசிரியர்கள், நாடக நிகழ்ச்சிக் கமைந்த மாந்தரின் உணர்வுகளை வெளிப்படுத்துதற்கேற்புடைய அமைப்பில் பாடல்களை இயற்றிக்கொள்வதுடன், காணும் மக்களின் மனத்தில் நிகழ்ச்சியின் பொருள் பதியுமாறும், கவர்ச்சி பெறுமாறும் பொருந்திய இராகங்களையே அந்த அந்தப் பாடல்களில் அமைத்துப் பாடவும் செய்வர்.

சிலப்பதிகாரக்காலத்தில் நாடகத்திற்குரியதாகப் பாடப்பெற்ற கடவுள் வணக்கமாகும் முதற்பாடல் தேவபாணி என்று கூறப்பட்டுள்ளது.

பின்னர், நாட்டு வழக்கில் வளர்ச்சி பெற்ற நாட்டிய நாடகங்களில், கணபதி வருகை முதற் காட்சியாகும். இதற்கமைந்த பாடல் கணபதி கௌத்தவம் என்ற இராகத்தால் பாடப் பெற்றுள்ளது.

நாட்டிய நாடகங்களிலும் குறவஞ்சி நாடகங்களிலும் முதல் பாடலாகும் கடவுள் வாழ்த்து'நாட்டை' இராகத்தில் பாடப்பெற்றுளது. இந்நாடகங்களில் கட்டியங்காரன் வருகை முதல் காட்சியாகும். அக்காலத்தில் பாடிக்கொண்டு ஆடுவதும் பாடிக் கொண்டே நடிப்பதும் நாடகக் கலைத்திறமாதலின் கட்டியங்காரன் தனது வருகைப் பாடலை, 'பரசு' அல்லது 'நாத நாமக்கிரியை' இராகத்தில் ஆதிதாளத்தில் பாடிவருவது வழக்கமாக இருந்தது.

நாடகத்தில் நடிகர் தாம்கொண்ட வேடத்தையும் அதன் சிறப்பு இயல்புகளையும் விளக்கம் செய்யும் முகத்தான், பாடிவரும் பாட்டு 'ஆகிரி' அல்லது 'பிலகிரி' இராகமாகவே இருந்துள்ளது. தலைமையான வேடம் தாங்கும் அரசன் அரசிபோன்றவேடம்புனைந்தோர்வருகைக்குரிய பாடல் பெரும்பான்மையும்'சௌராட்டிரம்' என்னும் இராகத்தில் மிச்ர தாளத்தில் பாடப்பட்டுள்ளது. மிச்ர தாளம் சதிநடை போட்டுப் பெருமிதமாகவும், மென்மையாகவும் நடிகர்கள் வருவதற்கு ஏற்புடைய தாளமாகும். வீரன், அசுரன் வருகைக்கு 'அடாணா இராகம்' சாபு தாளத்தில் பாடப்பெற்றது.

இவற்றைப் போன்றே நாடக மாந்தர்களின் செயல்களுக்கும் நிகழ்ச்சிகட்கும் பொருந்தியனவாகப் பாடப்பட்ட நாடகப் பாடல்கட்கு ஏற்புடைய கவர்ச்சியான இராகங்கள் அமைக்கப்பட்டு, நடிகர்கள் தங்கள் குரல் வளத்தாலும் இசை வன்மையாலும் பாடி, மக்கள் உள்ளத்தைக்கவர்ந்துள்ளனர். இவ்வாறு, அரங்கில் கேட்போர் நெஞ்சைத் தொடும் அளவில் இயலும் இசையும் பொருந்தப் பாடப்பெறும் இராகங்களை நாட்டிய நாடக ஆசிரியர்களும் குறவஞ்சி நாடக ஆசிரியர்களும் தேர்ந்து தெளிந்து தந்துள்ளனர். அவை வருமாறு:

ஆசை, காமம், களியாட்டுக்கு மோகனமும் ஆனந்தபைரவியும்; மகிழ்ச்சிக்குக் கலியாணியும் மோகனமும்; முறையிடலுக்குப் பிலகரியும் நாத நாமக்கிரியையும்; வெறுப்புக்குக் காம்போதியும்; புலம்பலுக்கு முகாரியும் சங்கராபரணமும்; தூதுவிடலுக்குக் கலியாணியும் காம்போதியும்; அதிகாரத்திற்கும் ஆணவத்திற்கும் அடாணாவும்; உரையாடலுக்கு எதுகுல காம்போதியும்; பாராட்டுக்குத் தர்பாரும்; விசாரணைக்கும் எதிர்வாதத்திற்கும் தன்யாசியும்; பெருமைக்குச்சாவேரியும்; தாலாட்டுக்கும் பக்திக்கும் நீலாம்பரியும்; நீதி, வறுமை, துறவு ஆகியவற்றுக்குப் புன்னாகவராளியும் பொருத்தமான இராகங்களாக அமைந்துள்ளன.

இசைமேதை எசு.சி. கிட்டப்பா, நாடகத்தில் வேடம் புனைந்து மேடைக்கு வரும்போது பாடும் முதற்பாட்டு தேவகாந்தாரி என்ற இராகத்தில்தான் இருக்கும். சில சமயங்களில் கம்பீர நாட்டை இராகத்திலும் அமையும்.

நாடகக் கலை நிகழ்ச்சிகளில் நகைச்சுவை நிகழ்ச்சிகள் இடம் பெறுதல் கலைவழக்கு. ஆண், பெண் இருபாலரும் இதில் இடம் பெறுவர். இவர்களின் பாடல்கள் தெம்மாங்கு, நொண்டிச்சிந்து, நீலாம்பரி ஆகிய இராகங்களிலேயே பெரும்பான்மையும் அமையும். இத்தகைய பாடல்களைப் பண்டைய கூத்துக் கலைஞர் குறும்பாட்டு, குறும்போக்கு என்றனர்.

இக்கால நாடகங்களில் உரையாடல்களும் வசனங்களும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. பாடல்கள் அருகிய நிலையில் பாடப் பெறுகின்றன. பாடல்கள் பழைய மரபினைத் தழுவிய நிலையில் பாடப்பெறுவது குறைந்து, புதிய திரைப்பட மெட்டுகளிலும் இந்தி மெட்டுகளிலும் பாடப் பெறுகின்றன. அன்று நடிகர்கள் தாமே பாடினர். இன்று குரல் இரவல், ஒலிப்பதிவு நாடாவின் உதவி இவற்றிற்கேற்ப வாயசைக்கும் நிலை தோன்றியுள்ளது.

தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன்பே தமிழர் வளர்த்த நாடகக்கலைக்கமைந்த இசைக் கலை தோன்றி, பெருகி, வளமாகச் செழித்து, நிலை மாறிக்கருநாடக சங்கீதமாக உருப்பெற்று, அதுவும் செயலாக்கம் பெறாமல், புதியகால புதுமைப் படைப்பாகும் நாடகங்களில் புதிய வடிவில் இன்று இருந்து வருகின்றது. சி.கோ.

**துணை நூல்கள்:**

**கிருட்டிணமூர்த்தி, கு.சா.,** தமிழ் நாடக வரலாறு வானதி பதிப்பகம், சென்னை, 1979.

**சண்முகம், தி.க.,** நாடகக் கலை, அண்ணாமலைப் பல் கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1967.

**பெருமாள், ஏ.என்.,** தமிழ்நாடகம்-ஓர் ஆய்வு, தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1979.

**Ramarao, P.S.,** Makers of the modern theatre, Lalitha Publishers, Masullipatnam, 1975.

**Styan, JC.,** The Dramatic Experience-A Guide to the Reading of plays, Cambridge University Press, London, 1975.

**Varadpande, M.L., Sunil Subhedar,** The Critique of Indian Theatre, Unique Publishers, Delhi, 1981.

**நாடற்ற தன்மை:** ஒரு நாட்டின் உள் நாட்டுச் சட்டங்களும் நாட்டிடைச் சட்ட விதிகளும் ஒருவரைக் கட்டுப்படுத்துமா? கட்டுப்படுத்தாவா? என்பதனை அவர் எந்த நாட்டினைச் சார்ந்தவர் என்பதனைக் கொண்டே தீர்மானிக்க முடியும்

ஒருவர் எந்த இடத்தில் பிறந்தார் அல்லது அவரின் பெற்றோர் எந்த நாட்டில் பிறந்தார் என்பதும் அல்லது அவர் பிறந்தபோது அவர் பெற்றோர்கள் எந்த நாட்டைச் சார்ந்தவர்களாக இருந்தார்கள் என்பதும் ஒருவரின் தேசிய இனத்தினைத் (Nationality) தீர்மானிக்கிறது.

வெவ்வேறு நாட்டினைச் சேர்ந்தவர்கள் திருமண உறவில் இணையும்போது அந்தந்த நாடுகளின் உள் நாட்டுச் சட்டங்களுக்கு ஏற்ப மணமுறை உறவு கொண்டவர்களின் தேசிய இனம் தீர்மானிக்கப்படுகிறது.

தேசிய இனம் என்னவென்று கண்டு கொள்ள முடியாதவர்களை நாடற்றவர்கள் (Stateless persons) என்று கூறுவர். இந்த நாடற்ற தன்மையானது உள்நாட்டுச் சட்டத்தாலும் நாட்டிடைச் சட்டத்தாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். அனைத்துலக மனித உரிமைகள் அறிவிப்பின் (Universal Declaration of Human Rights) 15-ஆம் பிரிவு, ஒவ்வொருவரும் தேசிய இன உரிமையைப் பெற்றிருக்கிறார்கள் என்றும், இந்த உரிமையை விதிக்கட்டின்றி எவரிடமிருந்தும் பறிக்கலாகாது என்றும் கூறுகிறது.

நாடற்ற தன்மையானது ஒருவர் எந்தத்தேசிய இனத்தைச் சார்ந்தவர் என்பதைக் கண்டு கொள்ள முடியாத நிலையில் உருவாகிறது. உள்நாட்டுச் சட்டங்களின் முரண்பாடுகளினாலும், ஒரு நிலப்பரப்பின் இறைமையானது வேறு ஒரு நாட்டிற்கு மாறுகின்ற போதும், சட்டத்தின் மூலம் ஒருவரின் தேசிய இன உரிமை பறிக்கப்படும் போதும் ஒருவர் நாடற்றுப் போகலாம்.

ஒருவரது தேசிய இன உரிமையானது, அவர் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் வசிக்கும்போது அவருக்கு உள்நாட்டுச் சட்டத்தின் கீழும் நாட்டிடைச் சட்டத்தின் கீழும் பாதுகாப்பினை நல்குவதால் நாடற்ற ஒருவர் இத்தகைய பாதுகாப்பினைப் பெற இயலாது. ஒருவரது தேசிய இனத்தினை வைத்தே சில நாட்டிடைச் சட்ட விதிகள் அவரைக் கட்டுப்படுத்துமா? கட்டுப்படுத்தாவா? என்பதைத் தீர்மானிக்க இயலும். எனவேதான், நாடற்ற தன்மையைக்குறைப்பதற்காக 1961-ஆம் ஆண்டு நியூயார்க்கு ஏற்பு விதிகள் உருவாக்கப்பட்டன. இதன்படி ஒருவரது தேசிய இனம் சில சிறப்பு விதிகளின்படி அனுமானிக்கப்படுகிறது. மேலும் இவ்விதிகள் சரியான காரணமின்றி ஒருவரின் தேசிய இன உரிமை பறிக்கப்

படுவதைத் தடுக்கின்றன. ஒரு நாடு, நாடற்ற ஒருவரைத் தனது தேசிய இனத்தைச் சார்ந்தவர் என்று அறிவிப்புச் செய்வதை வரவேற்கிறது.

1951-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட செனீவா நாடற்றோர் தகுநிலை ஏற்பு விதிகளும் 1954-ஆம் ஆண்டு உருவாக்கிய நியூயார்க்கு ஏற்பு விதிகளும் நாடற்றவர்கள் வேறுநாடுகளில் வாழவும், அங்குத் தங்களது தொழிலை நடத்தவும் உரிமைகளைவழங்குகின்றன.

சில ஆண்டுகளுக்கு முன்பு பன்னாட்டுச் சட்ட ஆணையம் நாடற்ற தன்மை குறித்து ஆய்வு செய்தது. ஐ.நா.வின் பொதுச்சபையும் நாடற்ற தன்மையால் வரும் சிக்கல்களை ஆய்ந்து அவற்றை நீக்கத் தொடர்ந்து பாடுபட்டு வருகிறது. ம.கா.

**நாடாளுமன்றம்**: ஒரு நாட்டின் சட்டங்களை இயற்றும் சபை நாடாளுமன்றம் எனப்படும். ஒரு மாநிலத்தின் சட்டங்களை இயற்றும் சபை சட்ட சபை எனப்படும். நாடாளுமன்றத்திற்கு (Parliament) வழங்கப்படும் பெயர் நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றது. இந்தியாவிலும் இங்கிலாந்திலும் இது நாடாளுமன்றம் அல்லது பாராளுமன்றம் என்று வழங்கப் படுகிறது. ஐக்கிய அமெரிக்க நாட்டில் (United States of America) இதைக் 'காங்கிரசு' (Congress) என்று வழங்குவர். சப்பானிலோ இதற்குத் 'தியட்டு' (Diet) என்று பெயர். எனினும், நாடாளுமன்றத்தின் தோற்றமும் வளர்ச்சியும் பிரிட்டனுக்கே உரிய பெருமைகளாகும். பிரிட்டன் நாடாளுமன்றமே உலகில் உள்ள மற்ற நாடாளுமன்றங்களுக்குத் தாய் எனக் கொள்ளலாம்.

**இங்கிலாந்து நாடாளுமன்றத்தின் வரலாறு**: இங்கிலாந்து நாடாளுமன்றம் எப்போது எவ்வாறு தோன்றியது என்பதற்குச் சரியான விளக்கங்கள் இல்லை. ஆனால் இங்கிலாந்து நாடாளுமன்றத்தின் தோற்றம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டது என்று உறுதியாகக் கூறலாம். அரசரால் கூட்டப்பட்ட அரசவையே (King's council)அக்காலத்தில் நாடாளுமன்றமாகச் செயற்பட்டது. அந்நாடாளுமன்றத்தில் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், வீரத்திருத்தகைகள் (Knights), பெருமக்கள் (Lords), மதகுருமார்கள் (Bishops) மற்றும் நகர மக்கள் சிலரும் இடம் பெற்றிருந்தனர். ஆனால், அதிகாரங்கள் அனைத்தும் நாடாளுமன்றத்திடம் இன்றி அரசரிடமே இருந்தன. மேலும், பொதுமக்களுக்கு அந்நாடாளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை. காலப்போக்கில் நாடாளுமன்றம் வளர்ச்சியுற்று அரசரிடமிருந்து பல அதிகாரங்களைப் பறித்துக் கொண்டது. கி.பி. 1688-ஆம் ஆண்டு நடைபெற்ற 'புகழ்ப்புரட்சி'க்குப் (Glorious Revolution) பிறகு நாடாளுமன்றமே முதன்மையுடன் (Supremacy) விளங்குகிறது. காலப் போக்கில் நாடாளுமன்றம் பொது மக்கள் அவை (House of Commons), பெருமக்கள் அவை (House of Lords) என இரண்டு அவைகளாகப் பிரிந்தது. பின்னர், கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் அமைச்சர் குழு முறை ஏற்பட்டது. பொதுமக்கள் அவைக்கான பேராளர்களை மக்கள் தேர்ந்தெடுக்கும் முறையும் பின்னர் ஏற்பட்டது. ஆங்கிலேய ஆட்சிக்குக் கீழ் இருந்த நாடுகளிலும் மற்றப் பல நாடுகளிலும் இங்கிலாந்து நாடாளுமன்றத்தை அடிப்படையாகக் கொண்டே நாடாளுமன்றங்கள் அமைக்கப்பட்டன.

**நாடாளுமன்றத்தின் அமைப்பு**: நாடாளுமன்றம் ஓர் அவையோ (Unicameral) இரு அவைகளோ (Bicameral) உடையதாக உள்ளது. இங்கிலாந்து அரசர் முதலாம் எட்வர்டு கி.பி. 1295-ஆம் ஆண்டு கூட்டிய மாதிரி நாடாளுமன்றம் ஓர் அவையை மட்டுமே உடையதாக இருந்தது. பின்னர்ப் பெருமக்களும் தலைமை மதகுருமார்களும் பெருமக்களவையாகப் பிரிந்தனர். வீரத்திருத்தகைகளும், நகர மக்களும் பொது மக்களவையாகப் பிரிந்தனர். பெருமக்களவையே மேலவை என்றும் பொதுமக்களவையே கீழவை என்றும் வழங்குவனவாயின. இங்கிலாந்து நாடாளுமன்றத்தைப் போன்றே இந்திய நாடாளுமன்றம், அமெரிக்கக் காங்கிரசு, சப்பானியத் தியட்டுப் போன்ற நாடாளுமன்றங்களும் இரு அவைகளைப் பெற்றிருக்கின்றன. ஒரு கூட்டாட்சி (Federal)நாட்டின் நாடாளுமன்றத்தில் கீழவை மக்களையும், மேலவை நாட்டில் உள்ள மாநிலங்களையும் குறிக்கின்றன. மேலவை மூத்த அவை (House of Elders) எனவும் வழங்கப் படுகிறது. சாதாரணமாக மேலவையை விடக் கீழவைக்கே அதிக அதிகாரங்கள் உண்டு. ஆனால், அமெரிக்கக் காங்கிரசின் மேலவையான ஆட்சிப்பேரவை (Senate), கீழவையான பேராளர்கள் சபையை (House of Representatives) விட மிகுந்த அதிகாரங்கள் பெற்றுள்ளது. மேலவை ஆலோசனைகள் வழங்கவும், கீழவை இயற்றும் சட்டங்களில் உள்ள குறைகளை எடுத்துக்காட்டவும் செய்கிறது. ஓரவையை மட்டுமே உடைய நாடாளுமன்றங்கள் விரைவாகச் சட்டம் இயற்ற இயலும் என்றாலும் இத்தகைய நாடாளுமன்றங்கள் எதேச்சாதிகாரப் போக்குடன் செயற்படுகின்றன என்றும், இவை செய்யும் தவறுகளைத் திருத்தவோ சுட்டிக்காட்டவோ யாரும் இல்லை என்றும் குறை கூறப்படுகிறது.

**நாடாளுமன்றத்தின் அலுவல்கள்**: நாடாளுமன்றத்தின் அலுவல்களும் அதிகாரங்களும் நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றன. இந்தியா, பிரிட்டன் போன்ற நாடாளுமன்ற முறை ஆட்சி (Parliamentary form of

Government) நடைபெறும் நாடுகளில் நிருவாகத் துறையும் (பிரதமர் உள்ளிட்ட அமைச்சரவை) நாடாளுமன்றத்தில் அடங்குவதால் நாடாளுமன்றமே முதன்மை பெற்று விளங்குகிறது. ஆனால் அமெரிக்கா போன்ற குடியரசுத் தலைவர் முறை ஆட்சியில், நிருவாகத்துறை சட்டமியற்றும் துறையிலிருந்து பிரிக்கப் பட்டுள்ளதால், நிருவாகமும் (குடியரசுத் தலைவரும் அமைச்சர் குழுவும்), நாடாளுமன்றமும் அதிகாரத் தைப் பங்கு போட்டுக் கொள்கின்றன.

பொதுவாகச் சட்டமியற்றும் அதிகாரம் நாடாளு மன்றத்திடமே உள்ளது. நாடாளுமன்றத்தின் இசை வைப் பெறாமல் எந்த ஒரு சட்டமுன்வரைவும் (மசோதாவும்) சட்டமாக இயலாது. நிதித்துறையை யும் நாடாளுமன்றமே கட்டுப்படுத்துகிறது. புதியவரி களை விதிக்கவும் பொதுக் கருவூலத்தில் இருந்து பணத்தைச் செலவு செய்யவும் நாடாளுமன்றத்தின் இசைவு தேவையாகும். நிருவாகத் துறையைக் கட்டுப் படுத்துவதும் நாடாளுமன்றத்தின் அலுவல்களில் ஒன்றாகும். நாடாளுமன்ற முறை ஆட்சியில் நிருவா கம் நாடாளுமன்றத்திற்கு நேரடியாகக் கட்டுப்பட்டே ஆக வேண்டும். குடியரசுத் தலைவர் முறை ஆட்சியில் நிருவாகம் நாடாளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டதன்று என்றபோதும் 'தடைகளும் சமன் படுத்துதலும்' (Checks and Balance) என்ற கோட்பாட்டின்படி நாடாளுமன்றம் சில நிருவாக அதிகாரங்களைக் குடி யரசுத் தலைவருடன் பகிர்ந்து கொள்கிறது. இது மட்டுமன்றி அரசியல் அமைப்புச் சட்டத்தை மாற்று வதிலும் (Constitutional Amendment) நாடாளுமன் றம் பெரும் பங்கு வகிக்கிறது. மேலும், குடியரசுத் தலைவர், நீதிபதிகள் ஆகியோரை கடுங் குற்ற விசா ரணை (Impeachment) மூலம் பதவி நீக்கம் செய்ய வும் நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு.

**இந்திய நாடாளுமன்றம்:** இந்திய நாடாளுமன்றம் ஆங்கிலேய நாடாளுமன்றத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆயினும், இவ்விரு பாராளுமன்றங்களுக் கும் இடையில் சில வேறுபாடுகளும் உள்ளன. இந்திய நாடாளுமன்றம் குடியரசுத் தலைவரையும் மேலவை, கீழவை என ஈர் அவைகளையும் கொண்டதாகும். மேலவை மாநிலங்களவை (இராச்சிய சபை) என்றும், கீழவை மக்களவை (லோக் சபை) என்றும் வழங்கப் படுகின்றன. குடியரசுத் தலைவர் நாடாளுமன்ற நட வடிக்கைகளில் கலந்து கொள்ளாவிடினும், இரு அவை களையும் கூட்டவும் ஒத்திவைக்கவும், கீழவையைக் கலைக்கவும், நாடாளுமன்றத்தில் தொடக்கப் பேருரை நிகழ்த்தவும், இரு அவைகளின் இணைப்புக் கூட்டத்தைக் கூட்டவும் அதிகாரம் பெற்றிருக்கிறார். மேலும், நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட எந்த ஒரு சட்டமுன்வரைவும் அவருடைய ஒப்புதல் பெற்ற பின்னரே சட்டமாகும். இவ்வாறாகக் குடியர சுத் தலைவர் நாடாளுமன்றத்தின் ஒரு முக்கிய பகுதியாக விளங்குகிறார்.

**மக்களவை:** இந்திய மக்களவை மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட 525 உறுப்பினர்களையும், நடுவண் நேராட்சிப் பிரதேசங்களின் (Union territories) பேராளர்கள் 20 பேரையும் கொண்டுள்ளது. இது மட்டுமன்றி ஆங்கிலோ-இந்திய சமூகத்தைச் சார்ந்த இருவரைக் குடியரசுத் தலைவர் நியமனம் செய்ய லாம். மக்களவையின் ஆயுட்காலம் 5 ஆண்டுகளாகும். ஆயினும், அக்காலத்திற்கு முன்னரே பிரதமரின் ஆலோசனையின் பேரில் சபையைக் கலைக்கும் அதி காரம் குடியரசுத் தலைவருக்கு உண்டு. அது மட்டு மன்றி நெருக்கடிக்காலங்களில் அவையின் ஆயுளை மேலும் ஓராண்டு நீட்டிக்கவும் அவர் அதிகாரம் பெற்றிருக்கிறார். மக்களவை ஆண்டிற்குக்குறைந்த அளவு 2 முறையாவது கூட்டப்பட வேண்டும். மேலும், இரு கூட்டத் தொடர்களுக்கு இடையிலான காலம் 6 மாதத்திற்கு மேல் போகக் கூடாது. மக்க ளவை, சாதாரணமாக, ஆண்டிற்கு 3 முறை கூட்டப் படுகிறது. மாநிலங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் 525 உறுப்பினர்களும், மக்களால் நேரடியாகத்தேர்ந் தெடுக்கப்படுகின்றனர். 21 வயதிற்கு மேற்பட்ட ஒவ் வோர் இந்தியக் குடிமகனும் ஓட்டுரிமை பெற்றவரா கிறார். மக்களவையில் உறுப்பினராவதற்கு ஒருவர் 25 வயது நிரம்பிய இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும். மேலும், அவர் அரசிடமிருந்து எவ்வகையி லும் ஊதியம் பெறுபவராக இருக்கக்கூடாது. மன நிலை சரியில்லாதவர்கள் வாக்களிக்கவோ தேர்தலில் போட்டியிடவோ இயலாது. மேலும், தாழ்த்தப்பட் டோர் (Scheduled castes) மற்றும் பழங்குடி இனத் தவர் (Scheduled tribes) ஆகியோருக்கெனத் தனி இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன.

**மக்களவைத் தலைவர்:** மக்களவையின் நடவடிக் கைகளை ஒழுங்குபடுத்தும் பொருட்டு, அவை அமைக் கப்பட்டவுடன் உறுப்பினர்கள் தமக்குள் ஒருவரை அவைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கின்றனர். அவைத் தலைவர் இல்லாதபோது அவை நடவடிக்கைகளைக் கண்காணிக்கத் துணைத் தலைவர் ஒருவரும் தேர்ந் தெடுக்கப்படுகிறார். அவையின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதும், அவையின் பண்பையும், மேன் மையையும் கட்டிக் காப்பதும் அவைத் தலைவரின் கடமையாகும்.

**மாநிலங்களவை:** நாடாளுமன்றத்தில் மேலவை யாக விளங்கும் மாநிலங்களவை மிகுந்த அளவில் 250 உறுப்பினர்களைக் கொண்டதாகும். இவர்களுள் அறிவியல், கலை, இலக்கியம், சமூக சேவை ஆகிய துறைகளில் தலை சிறந்த 12 உறுப்பினர்களைக் குடி

யரசுத் தலைவர் நியமனம் செய்கிறார். மீதமுள்ள 238 உறுப்பினர்களும் மாநில மற்றும் நடுவண் நேராட்சிப் பிரதேசச் சட்டமன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அமெரிக்க ஆட்சிப் பேரவை (Senate) போலன்றி, பரப்பளவு மற்றும் மக்கள் தொகையின் அடிப்படையில் மாநிலங்களுக்கு மேலவையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுவதால், மாநிலங்களவை உறுப்பினர்களின் எண்ணிக்கை மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகின்றது. இதனால் மேலவையில் எல்லா மாநிலங்களுக்கும் சமசார்பு அளிக்கப்படவில்லை.

மேலவை உறுப்பினர் பதவிக்கான ஆயுட்காலம் 6 ஆண்டுகளாகும். அவை உறுப்பினர்களுள் மூன்றில் ஒரு பகுதியினர் இரு ஆண்டுகளுக்கொருமுறை ஓய்வு பெறுகிறார்கள். இதனால், மாநிலங்களவை எப்போதும் கலைக்கப் படுவதில்லை. அவை உறுப்பினராவதற்கு 30 வயதைத் தாண்டிய இந்தியக் குடிமகன் எவரும் போட்டியிடலாம். ஆனால், மக்களவையைப் போலன்றி, அவர் எம்மாநிலத்திலிருந்து போட்டியிடுகிறாரோ அம்மாநிலத்தைச் சேர்ந்த ஏதாவது ஒரு நாடாளுமன்றத் தொகுதியில் வாக்காளராக இருத்தல் வேண்டும். மேலவையின் தலைவராகத் துணைக் குடியரசுத் தலைவர் விளங்குகிறார். அவர் இல்லாதபோது அவை நடவடிக்கைகளைக் கண்காணிக்கும் பொருட்டு அவை உறுப்பினர்கள் ஒரு துணைத் தலைவரைத் தம்முள் இருந்து தேர்ந்தெடுக்கின்றனர்.

**அதிகாரங்கள்:** மக்களவையில் பெரும்பான்மை உறுப்பினர்கள் எக்கட்சியைச் சார்ந்தவர்களாக இருக்கிறார்களோ அக்கட்சியே அரசை அமைக்கிறது. ஆகவே, ஓர் அரசை உருவாக்கவும், நம்பிக்கையில்லாத் தீர்மானம் மூலம் அவ்வரசைப் பதவி நீக்கம் செய்யவும் மக்களவைக்கு அதிகாரம் உண்டு. அதைவிட முக்கியமானது மக்களவை ஒரு சட்டமியற்றும் நிறுவனமாக இருத்தலேயாகும். சாதாரண சட்ட முன்வரைவுகள் இரு அவைகளில் எதில் வேண்டுமானாலும் தாக்கல் செய்யப்படலாம். சட்ட முன்வரைவுகளை அரசின் சார்பில் அமைச்சர்கள் மட்டுமன்றித் தம் சார்பில் தனி ஒருவரும் தாக்கல் செய்யலாம். ஆனால், ஓர் அவையின் இசைவைப் பெற்றபின் சட்ட முன்வரைவு மற்ற அவையின் இசைவையும் பெற்றாக வேண்டும். சாதாரண சட்டமுன்வரைவுகளின் மீது இரு அவைகளுக்கும் இடையில் கருத்து வேறுபாடு ஏற்பட்டால் இரு அவைகளின் இணைப்புக் கூட்டத்தில் பெரும்பான்மை வாக்குகளின் அடிப்படையில் முடிவு காணப்படும். மக்களவையின் உறுப்பினர் எண்ணிக்கை மாநிலங்களவையின் உறுப்பினர் எண்ணிக்கையைவிடக் கூடுதலாக உள்ளதால் இணைப்புக் கூட்டங்களில் மக்களவைக்கு மிக்க சக்தி உண்டு. பணச்சட்ட முன் வரைவுகள்(பணமசோதா)மீது மக்களவைக்கே முழு அதிகாரம் உள்ளது. பணச் சட்ட முன்வரைவுகள் மக்களவையில் மட்டுமே தாக்கல் செய்யப்பட வேண்டும். கீழவையின் இசைவைப் பெற்ற பண மசோதா, மேலவை ஏற்க மறுத்தாலும் கூடப் பதினான்கு நாள்கள் கழித்துக் குடியரசுத்தலைவரின் ஒப்புதலைப் பெற்றுச் சட்டமாகிவிடும். பண மசோதாவை மறுக்கவோ மறுபரிசீலனைக்குத் திருப்பி அனுப்பவோ குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் கிடையாது. மேலும், புதிய வரிகள் விதிக்கவும், அரசின் திரண்ட நிதியில் (Consolidated fund) இருந்து பணத்தைச் செலவு செய்யவும் மக்களவையின்இசைவு தேவையாகும். இவ்வாறு நாட்டின் நிதித்துறையை மக்களவையே கட்டுப்படுத்துகிறது.

இந்திய நாட்டின் தலைமை அமைச்சரும் (Prime Minister) பெரும்பான்மை அமைச்சர்களும் மக்களவையைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். மேலும், அமைச்சர்குழு மக்களவைக்குக் கூட்டுப் பொறுப்பு உடையதாக உள்ளது. நாட்டின் நிருவாகம் அமைச்சரவையின் கட்டுப்பாட்டில் உள்ளது. அமைச்சரவையைக் கட்டுப்படுத்துவதன் மூலம் மக்களவை நாட்டின் நிருவாகத்தைக் கட்டுப்படுத்துகிறது.

**மாநிலங்களவை:** சாதாரணச் சட்டமுன் வரைவுகளைப் பொறுத்த வரை மக்களவைக்கு இணையான அதிகாரங்களை மாநிலங்களவை பெற்றுள்ளது. சாதாரணச் சட்டமுன்வரைவுகள் மேலவையில் தாக்கல் செய்யப்படலாம். அதுமட்டுமன்றிக் கீழவையின் இசைவைப்பெற்ற சட்டமுன் வரைவுகளும் மேலவையின் இசைவைப்பெற்ற பிறகே குடியரசுத் தலைவர் மாளிகையை அடையும். பணச்சட்ட முன்வரைவுகளைப் பொறுத்தவரையில் மாநிலங்களவைக்குப் பதினான்கு நாள்களுக்குத் தடுக்கும் அதிகாரம் மட்டுமே உண்டு.

இவைமட்டுமன்றி இரு அவைகளுக்கும் பொதுவான அதிகாரங்கள் சில உண்டு. குடியரசுத் தலைவரைப் பதவி நீக்கம் செய்யும் அதிகாரத்தை இரு அவைகளும் சமமாகப் பகிர்ந்து கொள்ளுகின்றன. அவ்வாறே உச்ச நீதிமன்ற நீதிபதிகளையும் உயர்நீதிமன்ற நீதிபதிகளையும் பதவி நீக்கம் செய்யும் அதிகாரத்தையும் இரு அவைகளும் சமமாகப் பகிர்ந்து கொள்ளுகின்றன. அரசிடமிருந்து உண்மைகளையும் விவரங்களையும் வரவழைக்க இரு அவைகளிலும் கேள்வி நேரம் பயன்படுகிறது. திணறடிக்கும் கேள்விகள் மூலமாக இரு அவைகளும் அரசின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துகின்றன. மேலும், நாடாளுமன்ற உறுப்பினர் எவரையும் குற்றவியல்

மற்றும் தடுப்புக்காவல் சட்டத்தின் கீழன்றி, வேறு காரணங்களுக்காகக் கைது செய்ய இயலாது.எஸ்.சுத.

நாடிசாத்திரம்: மனித உடலில் ஓடும் நாடிகளுள் நாடி,சுழிமுனை, இடை பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குரு, சங்கினி முக்கியமானவை. அவற்றுள் சுழிமுனை ஆதாரம் என்பது ஆறிலும் நிற்பது.இடைபிங்கலைகத்திரிகைக் காற்போல் உடல் முழுதும் பின்னி நிற்பது. காந்தாரி நாபியிலும், அத்தி, சிகுவை கண்களிலும், அலம்புடை, புருடன் ஆகியன காதுகள் இரண்டிலும், குரு நாபியிலும், சங்கினி உபத்தத்திலும் உறையும் எனவிளக்கம் தரப்பட்டுள்ளது. சென்னைப்பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி இச்சொல்லுக்கு வாதபித்த சிலேட்டுமங்களைக் குறிக்கும் தாது நரம்பு; இரத்தக் குழாய் முதலியன; இடை, பிங்கலை, சுழிமுனை என்ற சுவாசக் குழாய்கள்; யாழ்நரம்பு; உள்துளையுடையது; பூவீன்தாள், சோதிட நூல்; நாழிகை; மயிர் என்னும் பொருள்களைத் தந்துள்ளது.

எனவே, நாடிகள் பற்றிக்கூறும் நாடி சாத்திர நூல்களைச் சோதிடம், மருத்துவம் என இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். சோதிடம் பற்றிய செய்திகளைக் கூறும் சோதிட நாடி நூல்கள் பல உள்ளன. அவையாவன சூரிய நாடி, சந்திர நாடி, குசநாடி, புத நாடி, சுக்கிரநாடி, குருநாடி, சனிநாடி, இராகு நாடி, கேதுநாடி, சர்வ சங்கிரகநாடி, பாவநாடி, துருவநாடி, சருவநாடி, சகநாடி, தேவிநாடி, மத்திய சங்கிதை நாடி, தேவகோள நாடி, நவநாடி, சப்தரிசிநாடி அல்லது வாக்கியம், சுகர்நாடி அல்லது வாக்கியம், நந்தி நாடி, வசிட்டர் நாடி, கௌசிக நாடி, அத்திரிநாடி, உமா மகேசுவர நாடி, ஈசுரநாடி, பீமநாடி, இடும்பி நாடி, மும்மலக்கன்னி நாடி, பாலகௌமார நாடி, மார்க்கண்டேயர் நாடி, சகாதேவர் நாடி, சந்திரகலா நாடி, பிருகு சங்கிதை நாடி, பார்க்கவநாடி, காகபுசுண்டர் நாடி,அகத்தியர் நாடி முதலியனவாம்.

இந்நாடி நூல்கள் பெரும்பாலும் தெய்விகமான சக்தியை உடைய முனிவர்களால் எழுதப்பட்டதென்பர். இதில் மிகவும் வியக்கத்தக்க நுண்ணிய பலாபலன்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. சாதாரண சோதிடர்களால் சொல்லக் கூடியவை அல்லது சாதகருக்கே நினைவிலில்லாத சில சூக்குமமான விவரங்கள் கூட நாடிநூலில் சொல்லப் பட்டிருக்கின்றன. சத்தியாசாரியார் தம்முடைய துருவ நாடிநூலில் முதலில் தம்முடைய சோதிட வித்தையின் உதவியாலும் தம்முடைய ஞான திருட்டியின் உதவியாலும் மானிடர்களின் சோதிடப் பலாபலன்களைச் சொல்லப் போவதாகத் தெரிவிக்கின்றார். நாடி நூலில் பொதுவாக ஒரு சாதகருடைய முன்பின் பிறப்புகள், இந்தப் பிறப்பு ஆகியவற்றின் பலன்களும், முற்பிறப்பில் ஏற்பட்ட வினை அல்லது பாபம் அல்லது சாபம், இந்தப் பிறப்பில் இவற்றுக்குச் செய்யவேண்டிய சாந்தி அல்லது பரிகாரம் ஆகியவை சொல்லப்படுகின்றன. இந்தச் சாத்திரத்தை வாசிப்பவர் நன்மார்க்கத்தில் தம் வாணாளைக் கழிக்கவேண்டும் என்றும் தெய்வ பக்தியுடனும் தெய்வ சேவையுடனும் வாழ வேண்டியதவசியம் என்றும் அறிந்து கொள்ளுவர். ஆகையால் நாடி நூலில் கொடுக்கப்பட்டுள்ள சாதகங்கள் தம்முடைய பயிற்சிக்கும் வளர்ச்சிக்கும் உதவியாயுள்ள எடுத்துக் காட்டுச் சாதகங்கள் ஆகும். இந்நூலில் கண்டுள்ள சாதகங்களை உடையவர்களுக்கு இதில் கொடுக்கப் பட்டுள்ள பலாபலன்கள் தங்களுடைய சாதக பலா பலன்களாகப் பயன்படும்.

சோதிட சாத்திரம் பலவிதமான பாகங்களாகப் பிரிக்கப்படும். இவற்றில் பலபாக சோதிடம் (Judicial Astrology) ஒன்றாகும். இந்தப் பலபாக சோதிடத்தில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று சாதாரண சோதிடம் அல்லது ஓரா சாத்திரம் எனப்படும். மற்றொன்று நாடி சோதிடம் என்ற நாடி சாத்திரம். இச்சோதிட நூலில் ஒரு பிரிவு தமிழில் நாடி நூலாக இருந்து வருகிறது. இவை மும்மூர்த்திகளின் நாயகிகளாகிய இலக்குமி, பார்வதி, சரசுவதி இவர்களின் முன்னிலையில் முனிவர்கள் கூறுவதாக எழுதப்பட்டுள்ளன.

அடுத்து நாடிசாத்திரம் என்னும் நூல் 1901-ஆம் ஆண்டு மயிலம் சுப்பிரமணிய சுவாமிகளால் பார்வையிடப்பட்டுச் சென்னை இட்டா பார்த்தசாரதி நாயுடு அவர்களால் பத்மநாபவிலாச அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலில் பதினெண்மர் திருவாய் மலர்ந்தருளிய பின்வரும் நாடிநூல் இடம் பெற்றுள்ளன. அவையாவன: அகத்தியர் இரத்தினச் சுருக்க நாடி, பரிபூரண நாடி, இரத்தின கிரிகிட நாடி, குணவாகடத்தின் வயித்தியசாரம், குணவாகடத்திலுள்ள நோயின் சாரம், காவியத்தின் நாடி, வல்லாதியின் நாடி, வைத்திய சதநாடி, குறியடையாள நாடி, குருநாடி, சூடாமணி கயிறு சூத்திரம், திருமூலநாயனார் நாடி, தன்வந்திரி பகவான் நாடி, தன்வந்திரி காவிய நாடி, சிவவாக்கியர் நாடி, வியாச பகவான் நாடி, வியாசபகவான் சரீர சூத்திரம், யூகிமுனி நாடி, யூகிமுனி தத்துவம், தேரையர் நாடி, புண்ணாக்கீசர் நாடி, சூதமுனி நாடி, வால்மீகர் பூத நாடி, மச்சமுனி நாடி, புலிப்பாணி நாடி, சட்டமுனி நாடி, போகர் நாடி, வரரிசி நாடி, இராமதேவர் நாடி, இடைக்காடர் நாடி, கொங்கணர் நாடி முதலியன.

இந்நூலை அச்சிட்டவர், தெய்விகத் தன்மை பொருந்திய நாற்பத்தெண் பெயர் முனிவர்களும் நவ கோடி பதினெண் பெயர் சித்தர்களும் சீவகாருண் ணியத்தினால் திருவாய் மலர்ந்தருளிய மூன்று இலட்ச நூல்களில் தம்மால்முடிந்தவரை ஆராய்ந்து நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகளுக் குச் சாத்திய அசாத்தியங்களை எளிதிலுணரும் பொருட்டுஇந்நாடி நூல்களைஇக்கால மாணிடர்க்குப் பயன்படும்படி அச்சிட்டுள்ளதாகக் கூறியுள்ளார். முற் காலத்துத் தபோதனர்களாலியற்றப்பட்ட சில நாடி நூல்களென்றும்அதைச்சார்ந்த வைத்திய நூல்கள் இரண்டு இலட்சமென்றும், வாத,கிரந்தங்கள் ஓர் இலட்ச மென்றும் கூறப்படும். அவற்றை மகாமகத் துவம் பொருந்திய தன்வந்திரி, அகத்தியர் இன்னும் அனேக முனிவர்கள் அச்சாத்திரக் கோவைகளைப் பொதிகையிலிருந்து திருப்பாற் கடலென்னும் தீவாந் திரத்தில் அலைகடலில் ஏடுருவி சமுத்திரப் பிரவேச மாக்கி விட்டார். அதில் சில நூல்கள் தப்பிக் கோவை யாகவே மிதந்துங் கிழிந்துஞ் சிதறியும் கையிற் கிட் டின. சில சாத்திரம் மாத்திரம் பெரியோர்கள் கையில் கிடைத்ததென்றும் கூறுவர்.

எவ்வாறாயினும் இந்நூல்கள் யாவும் இவ்வுலகில் உள்ள அனைவரின் நன்மைக்காக எழுதப்பட்டுள்ளன.

எம்.சீ.

**நாடுகளின் அங்கீகாரம்**: பன்னெடுங்கால மாக ஒரு நிலப்பரப்பில் இருந்த நாடுகள் மறைவதும் அந்நிலப் பரப்பில் வேறுநாடுகள் தோன்றுவதும் அனைவரும் அறிந்த நிகழ்ச்சிகளாகும். இந்தியத் துணைக் கண்டத்தின் ஒரு பகுதி பாகிசுத்தானாக உருவெடுத்ததும், பாகிசுத்தானின் நிலப்பரப்பில் வங் காள தேசம் என்ற புதிய நாடு ஒன்று தோன்றியதும் அண்மைக் காலத்திய நிகழ்வுகள் ஆகும்.

புதிதாகத் தோன்றிய நாடுகள் ஏற்கெனவே இருக்கின்ற நாடுகளுடன் தொடர்பு கொள்வது மிக வும் இன்றியமையாததாகும். ஏனெனில், உலகில் உள்ள எந்த நாடும் எல்லா வகையிலும் சுயசார்பு பெற்ற நாடு அன்று. ஏதாவது ஒரு வகையில் ஒரு நாடு மற்றொரு நாட்டைச் சார்ந்தே வளர முடி யும். எனவே தான், புதிய நாடுகள் ஏற்கெனவே பன்னாட்டு உறவில் ஈடுபட்டிருக்கின்ற நாடுகளினால் அங்கீகரிக்கப் பட வேண்டியது இன்றியமையாத தாகும்.

நாடுகளின் அங்கீகாரம் குறித்து இரண்டு வகை யான கோட்பாடுகள் நிலவுகின்றன. அவையாவன: அ. உருவாக்கக் கோட்பாடு (Constitutive Theory), ஆ.-அறிவிப்புக் கோட்பாடு (Declaratory Theory). பழைய நாடுகள் அதாவது ஏற்கெனவே பன்னாட்டு உறவில் ஈடுபட்டிருக்கின்ற நாடுகள், புதிய நாட் டினை அங்கீகரிக்கும் பொழுதே புதிதாகத் தோன்றிய நாடு, நாடு என்ற தகுநிலையைப் பெறுகின்றது என்று உருவாக்கக் கோட்பாட்டினர் கூறுவர். ஆனால், அறிவிப்புக் கோட்பாட்டினர், ஒரு நாடு அது உருவான உடனே நாட்டிற்கான எல்லாத் தகுநிலை யைப் பெற்றுவிடுவதாகவும் அந்தத் தகுநிலைக்கு மற்ற நாடுகள் தரும ஒப்புகை (Acknowledgement) அங்கீகாரம் குறிப்பதாகவும கூறுவர்.

இக்காலத்தில், பன்னாட்டு உறவில் ஈடுபட்டிருக் கின்ற நாடுகள் பெருமபான்மையும் அறிவிப்புக் கோட் பாட்டினையே பின்பற்றுகின்றன. இதன் அடிப்படை யிலேயே நாடுகளின் அங்கீகாரம் என்பதன் இலக்கண மும் வரையறுக்கப்பட்டுள்ளது.

அங்கீகாரம் எனப்படுவது, ஒரு தீர்க்கமான நிலப் பரப்பில் அமைந்த அரசியல் அமைவிலான, சுதந்திர மான, எந்த நாட்டையும் சார்ந்து வாழாத, பன் னாட்டுச் சட்டத்தின்படி ஒழுக வல்ல, ஒரு மக்கட் சமுதாயத்தின் தோற்றத்தினையும், உலகச்சமூகத்தில் தான் ஓர் உறுப்பினர் ஆக வேண்டும் என்ற அதன் எண்ணத்தையும் ஏனைய நாடுகள் ஒத்துக் கொள்ளு கின்ற ஒப்புகையைக் குறிப்பதாகும்.

சில நேரங்களில் தீர்க்கமான நிலப்பரப்பு இல் லாத மக்கள் சமுதாயம் ஓர் அரசியல் அமைவினைக் கொண்டு விளங்குமானால் அதற்குக் கூட அங்கீகாரம் தரப்படுவதும் உண்டு. அமெரிக்க ஐக்கிய நாடுகள், இசுரேல் என்ற நாடு தோன்றிய 24 மணி நேரத்தில், அந்நாடு தீர்க்கமானதொரு நிலப்பரப்பு இல்லாத வேளையிலுங்கூட அதனை அங்கீகரித்ததை எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

புதிதாகத் தோன்றிய நாடு, ஏனைய நாடுகள் விடும் அறிக்கையின் மூலமாகவோ, வேறு வகையில் அமைந்த வாசகங்கள் மூலமாகவோ அங்கீகரிக்கப்பட லாம். சில நேரங்களில் அங்கீகாரம் தரும் மற்றும் பெறும் நாடுகளிடையே நிலவும் உறவுகள், தொடர்பு கள் மற்றும் நடவடிக்கைகளைக் கொண்டு அங்கீ காரம் தரப்பட்டதாகவும் கொள்ளலாம்.

சில நேரங்களில் புதிய நாடுகள், ஏனைய நாடு களால், ஒரே நேரத்தில், உலகளாவிய மாநாடுகளில் அங்கீகாரம் பெறுவதும் உண்டு. ஐ.நா.சபையில் உறுப்பினராகின்ற புதிய நாடுகள் இவ்வகையில் ஏனைய உறுப்பு நாடுகளின் அங்கீகாரத்தைப் பெறுவ தாகக் கொள்ளலாம்.

அங்கீகாரம் என்பது சட்டப்படியான ஒரு நிகழ்வு அன்று. இது அரசியல் முறையில் நடக்கின்ற ஒரு நிகழ்ச்சி. எனவே, வணிகம், இராணுவ நோக்கம்,

அரசியற் கோட்பாடு போன்ற நலன்களைக் கருத்திற் கொண்டே அங்கீகரிக்கின்ற நாடுகள் புதிய நாடுகளுக்கு அங்கீகாரம் வழங்கும்.

**அங்கீகாரத்தின் சட்டப்படியான விளைவுகள்:** அங்கீகாரம் பெற்ற நாடு உள்நாட்டுச் சட்டத்தின் கீழும் பன்னாட்டுச் சட்டத்தின் கீழும் நாடு என்ற தகுநிலை பெற்று விளங்குகிறது.

புதிதாக அங்கீகாரம் பெற்ற நாடானது அதற்கு எந்த நாடு அங்கீகாரம் அளித்ததோ அந்த நாட்டின் நீதிமன்றத்தில் வழக்காடுகின்ற உரிமையைப் பெறுகிறது. அங்கீகாரத்திற்கு முன்பும், பின்பும் இரு நாடுகளுக்கும் இடையே நிகழ்ந்த எந்தச் சட்டச் சிக்கல்களையும் மேற்கண்ட நீதிமன்றத்தில் வாதாடித் தீர்வு காண இயலும்.

அங்கீகாரம் பெற்ற நாடு அங்கீகாரம் தரும் நாட்டின் நீதிமன்றங்களில் சிறப்புரிமை பெற்று விளங்கும். அங்கீகாரம் தரும் நாட்டில் இருக்கும் அங்கீகரிக்கப்பட்ட நாட்டின் சொத்துகளும் சிறப்புரிமை பெற்றுத் திகழும்.

ஒரு முறை சட்ட முறையில் தரப்பட்ட அங்கீகாரத்தைத் திரும்பிப் பெற இயலாது. இருப்பினும் அங்கீகாரம் வழங்கிய நாடு அங்கீகாரம் பெற்ற நாட்டின் போக்குப் பிடிக்காத போது அதனுடன் தன்னுடைய உறவுகளை முறித்துக் கொள்ளலாம். ம.கா.

**நாடுகளின் செல்வம்:** இந்நூலைத் தொன்மைப் பொருளியல் பள்ளியைச்சார்ந்த ஆதம் சுமித்து கி.பி. 1776-இல் எழுதி வெளியிட்டார். இந்நூலை 'நாடுகளின் செல்வத்தின் தன்மையையும், அதனை நிருணயிக்கும் காரணிகளையும் பற்றிய ஆய்வு' (An Inquiry into the Nature and Causes of Wealth of Nations) எனவும் விரித்துக் கூறுவதுமுண்டு.

பொருளியற் சிந்தனை வரலாற்றில் முதன் முதலில் தெளிவான விளக்கங்களுடன் வெளியிடப்பட்ட 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations) என்ற இந்நூலிற்குச் சிறப்பான இடமுண்டு. இந்நூல் பொருளியல் விதிகளை விளக்குகிறது; பொருளியல் கொள்கைகளையும் தெளிவாக்குகிறது. ஆதம் சுமித்து. தமக்கு முன்னர் ஏற்றுக்கொள்ளப்பட்ட பொருளியல் கொள்கைகளைக் குறிப்பாக வணிகவாதிகளின் (Mercantalists) பொருளியல் திட்டங்களை இந்நூலில் திறனாய்வு செய்துள்ளார். அவற்றின் குறைகளையும் வன்மையாகக் கண்டித்திருக்கிறார். 'நாட்டின் செல்வத்தை நிருணயிக்கும் காரணிகளைத் தெளிவாகச் சுட்டிக் காட்டி, நாட்டின் செல்வ வளத்தை மேன் மேலும் பெருக்கும் வழி வகையையும் திட்டங்களையும் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கியுள்ளார். இயற்கைவாதிகளின் (Physiocrats) இயல்பான அணுகுமுறையை ஆதம் சுமித்தும் ஏற்றுக்கொண்டார் என்பது இந்நூலிலிருந்து நன்கு புலனாகிறது.

32 அதிகாரங்களைக் கொண்டுள்ள இந்நூல் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியிலும் ஒரு குறிப்பிட்ட கருத்தை விளக்கும்வகையில் தெளிவான சிந்தனையுடன் இந்நூல்வடிவமைக்கப் பட்டுள்ளது. இந்நூலின் முதற்பகுதியில் பொருளியற் கலைச் சொற்களுக்கான தெளிவான விளக்கங்களை ஆதம் சுமித்து அளித்துள்ளார். அவரால் கூறப்பட்டுள்ள விளக்கங்கள் பின்னர் வளர்ந்த பொருளியற் கோட்பாடுகளுக்கு அடிப்படையாக அமைந்தன. 'செயற்றிறனுடன் கூடிய உறுதித்தேவை' (Effectual Demand) என்ற கருத்தை இந்நூலின் முதற்பகுதியில் விளக்கியுள்ளார். வெறும் அவாவினை (Mere Desire) உறுதித் தேவை என்று கருதமுடியாது. ஒரு ஏழை, பெரிய மாளிகை ஒன்றைவாங்கவிரும்புகிறான் என வைத்துக்கொண்டால் அவனிடம் அந்த மாளிகையை வாங்குவதற்குரிய முதலாகிய 'பணம்' இல்லாதநிலையில் அந்த ஏழையின் விருப்பம் நிறைவேறுவதற்கு வாய்ப்பில்லை. எனவே, ஏழையின் விருப்பம் வெறும் அவாதான் என்று ஆதம் சுமித்து விளக்கியுள்ளார். எனவே, ஏதோ ஒருவகையில் மக்களின் தேவையை நிறைவு செய்யும் பண்டங்களை உற்பத்தி செய்கின்றவர்களை உறுதித் தேவையைப் பெற்றவர்களாவர் (Effectual demanders) என்று கூறியுள்ளார். அதாவது, பண்ட உற்பத்தியில் ஈடுபட்டுள்ளவர்கள் வருமானத்தைப் பெறுகின்றனர். எனவே, அவர்களுடைய தேவையைச் சமாளிக்கும் வகையில் தமது வருமானத்தைச் செலவிட முடிகிறது. வாங்கும் திறனைப் பெற்றுள்ளவர்களின் அவாவினை அல்லது விருப்பத்தை உறுதித் தேவை என்று கூறியுள்ளார்.

'மதிப்பு' (Value) என்பது இரண்டு வகைப்படும். அவை: 1) பயன்வழி மதிப்பு (Value in use), 2) பரிவர்த்தனை மதிப்பு (Value in exchange) எனப்படும். பயன் வழி மதிப்பு, பண்டத்தின் பயன்பாட்டிலிருந்து (utility) தோன்றுகிறது என்று ஆதம் சுமித்து கூறியுள்ளார். எடுத்துக்காட்டாக, நீரின்றி மனிதன் வாழ முடியாது. எனவே, நீர் பயன்வழி மதிப்பைப் பெற்றுள்ளது. பரிவர்த்தனை மதிப்பு என்பதை வாங்கும் திறன் (purchasing power) என்று குறித்துள்ளார். ஒரு பேனாவை ஐந்து உருபாய்க்கு விற்றால் பேனாவின் பரிவர்த்தனை மதிப்பு ஐந்து உருபாய் எனக் கருதப்படுகிறது. பண்டங்கள் அரிதாகக் (Scarce) கிடைக்கும்பொழுது அவற்றிற்குப் பரிவர்த்தனை

மதிப்புத்தோன்றுகிறது. மாறாகப் பண்டங்கள் அளவின்றிக் கிடைக்கும் பொழுது அவற்றிற்குப் பரிவர்த்தனை மதிப்புத்தோன்றுவதில்லை. நீர் தடையின்றிக் கிடைக்கும்பொழுது அதற்குப் பணம் செலுத்த வேண்டியதில்லை; ஏனென்றால் அது இலவசமாகக் கிடைக்கிறது. எனவே, நீர், நிறைந்த பயனைப் பெற்றிருந்தாலும் அதற்குப் பரிவர்த்தனை மதிப்பு இல்லை என்று ஆதம்சுமித்து கூறியுள்ளார்.

ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதற்கு எடுத்துக் கொள்ளப்படும் உழைப்பு (Labour used to produce) அதன் உற்பத்திச் செலவாகும் (Cost of production) என்று கூறுகிறார். ஒரு பண்டத்தை முழுமையாகச் செய்து முடிக்க எடுத்துக்கொள்ளப்படும் காலத்தை உழைப்புச் செலவு எனக் குறிப்பிட்டு இத்தகைய உழைப்பின் மதிப்பை மிகவும் துல்லியமாகக் கண்டறிவது கடினம் என்பதும் ஆதம் சுமித்தின் கருத்தாகும். இயல்பாக நிலம் பெற்றுள்ள வளத் தன்மையால் மனிதன் பயன் அடைகின்ற காரணத்தால் நிலத்திற்கான வாரம் (Rent) தோன்றுகிறது. நிலத்தை வேளாண்மைக்குப் பயன்படுத்தும்பொழுது கிடைக்கின்ற உற்பத்தியில் ஒரு பகுதி வாரமாக நிலவுடைமையாளர்களுக்கும் கொடுக்கப்படுகிறது என்று ஆதம் சுமித்து குறிப்பிட்டுள்ளார்.

மூலதனம் (Capital) என்ற காரணிக்கு வழங்கப்படும் ஊதியம் வட்டியாகும். மூலதனத்தைப் பெற்றிருப்பவர்கள் உற்பத்தியாளர்களுக்குக் கடன் வழங்குகின்றனர். அவ்வாறு பெறப்பட்ட கடனின் துணை கொண்டு உற்பத்தி பெருகுகிறது; ஆதாயம் கிடைக்கிறது. எனவே, உற்பத்திப் பெருக்கத்திற்கு உதவியாக விளங்கிய மூலதனத்துக்கு ஊதியமாக வட்டி (Interest) வழங்கப்படுகிறது. ஆனால், 'ஆதாயம்' (Profit) என்பது மூலதனத்தை வைத்துத் தன்னம்பிக்கையோடு தொழில் முனைவோருக்கு(Entreprenur) வழங்கப்படும் ஊதியமாகும் என்று ஆதம் சுமித்துக் கூறியுள்ளார்.

நாடு என்பது பல்வேறுவகையான தொழிலாளர்களைக் கொண்டுள்ள தொழிற்கூடம் (Workshop) என்றும், நாட்டின் செல்வம் அது கொண்டுள்ள தங்கம், வெள்ளி முதலிய உலோகங்களால் நிருணயிக்கப்படவில்லை என்றும், நாட்டிலுள்ள வளமான நிலம், தொழிற்கூடங்கள், உழைக்கும் சக்தியின் தரம் இவற்றால் உற்பத்தி செய்யப்பட்ட பல்வேறு வகையான பண்டங்கள்ஆகியவற்றைக்கொண்டு நாட்டின் செல்வம் நிருணயிக்கப்படுகிறது என்றும் ஆதம் சுமித்துக்கூறியுள்ளார். இந்நூலின் முதற் பகுதியில் 'வேலைப் பகுப்புத் திட்டத்தை'(Division of Labour) விளக்கியுள்ளார்.

உற்பத்தி நடவடிக்கைகளைப் பல்வேறு கட்டங்களாகப் பகுத்துக்கொண்டு, ஒவ்வொரு நடவடிக்கையையும் ஒரு குறிப்பிட்ட தொழிலாளி மேற்கொள்வது வேலைப் பகுப்புத் திட்டமாகும். இத்திட்டத்தின்படி, ஒரு குறிப்பிட்ட வேலையைத் திரும்பத் திரும்பச் செய்கின்ற காரணத்தினால் தொழிலாளர்களின் திறமை வளர்கிறது; உற்பத்தித் திறனும் பெருகுகிறது.

ஆதம் சுமித்து வருக்கப் போராட்டத்தின் தன்மைகளையும் மிகத்தெளிவாகச் சுட்டிக்காட்டியுள்ளார். நிலவுடைமையாளர்களும், தொழிலதிபர்களும், தங்களுடைய வருமானத்தைப் பெருக்கிக்கொள்வதில் குறியாயிருப்பர். அந்தவகையில் நிலவுடைமையாளர்கள் மிகுதியான வாரம் வசூலிப்பதில் குறியாக இருப்பர். முதலாளிகள் கூலியின் அளவைக் குறைத்து நிருணயித்து, மிக்க ஆதாயம் ஈட்டுவதில் குறியாக இருப்பர். தொழிலாளர்கள் கூலியை உயர்த்திக்கொள்வதற்காகப் போராடுவார்கள் என்றும் ஆதம் சுமித்து குறிப்பிட்டுள்ளார். நிலவுடைமையாளர்கள், விதைக்காமலேயே அறுவடை செய்ய விரும்பும் இயல்பினராவர் என்பது இவர் கருத்து. முதலாளிகளும், நிலவுடைமையாளர்களும் தங்களுடைய எண்ணங்களையும், விருப்பங்களையும் நிறைவேற்றிக்கொள்வதில் வெற்றி அடையும் வாய்ப்பைப் பெற்றுள்ளனர். ஏனெனில், அவர்கள் போதிய அளவு வருமானமும், நிலையான வாழ்க்கைத் தரமும் பெற்றுள்ளனர். அவர்களுடைய சிக்கல்களெல்லாம் பெறுகின்ற வருவாயை மென்மேலும் மிகுதிப்படுத்த வேண்டும் என்பதேயாகும். ஆனால், தொழிலாளர்கள் குறைந்த வருமானத்துடன், தாழ்ந்த வாழ்க்கைத் தரத்தைப் பெற்று அன்றாடத் தேவைகளைக்கூடப் பெறுவதற்குப் போராடும் நிலையிலுள்ளனர். எனவே, அரசின் சட்டங்களும், திட்டங்களும் தொழிலாளர்களின் நலனைப் பேணும் வகையில் அமைவதுதான் முறை என்றும், நியாயம் என்றும் ஆதம் சுமித்து கூறியுள்ளார்.

இவ்வாறு பொருளியல் கருத்துகளைத் தெளிவானவிளக்கத்துடன், தகுந்த எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக இந்நூலில் ஆதம் சுமித்து விளக்கியுள்ளார். எனவேதான் ஆதம் சுமித்தைப் 'பொருளாதார இயலின் தந்தை' என்று சிறப்பித்துக் கூறுகின்றனர்.

சு.வே.பா.

**துணை நூல்கள்:**

**Cannon, E., (Ed.)** Wealth of Nation, W. R. Scott, London, 1930.

**Overton H.Taylor.,** A History of Economic Thought, McGraw-Hill Book Company, Inc., Kogakusha Company Ltd, Japan, 1956.

Schumpeter, J.A., Ten Great Economists, Oxford University, 1951.

**நாடோடி இலக்கியம்**: காண்க: நாட்டுப்புற வியல்.

**நாடோடிகள்**:ஒரு குறிப்பிட்ட வாழிடத்தைக் கொண்டு நிலையாக வாழாமல் பருவக் காலத்திற் கேற்பத் தொடர்ச்சியாக இடம்விட்டு இடம் சென்று வாழும் மக்களே நாடோடிகள் (Nomads) ஆவர். இவர்கள் இடம் பெயர்ந்து வாழும் முறை ஒரு முறைப் படுத்தப்பட்ட சுழற்சியாக இருக்கும். அதனாலேயே இவர்களை இடம்பெயர்ந்து வாழ்பவர்கள் (Migrated People) என்று குறிப்பிடுவதில்லை. இடப் பெயர்ச்சி என்பது வாழிடத்தை முற்றிலுமாக மாற்றிக் கொள்வதைக் குறிக்கும். ஆனால், நாடோடித் தன்மையானது ஓர் இடத்தில் தொடங்கித் தொடர்ச்சியாகப் பல இடங்களுக்குச் சுற்றித்திரிந்து மீண்டும் அதே இடத்திற்கு வந்து சேருவதாகும்.

நாடோடிகள் என்னும் சொல் வேட்டையாடி உணவு சேகரிக்கும் நாடோடிகளையும், ஆயர் வாழ்க்கை நடத்தும் நாடோடிகளையும், தட்டு முட்டுச் சாமான்கள் செப்பனிடும் நாடோடிகளையும், வாணிகம் செய்யும் நாடோடிகளையும் குறிக்கும். சில நாடோடி இனத்தவர்கள் அவர்கள் செய்யும் தொழிலாலும் குறிக்கப் பெறுகின்றனர். பிச்சையெடுக்கும் நாடோடிகள், குற்றவாளி நாடோடிகள், வித்தை காட்டும் நாடோடிகள், குறி சொல்லும் நாடோடிகள் போன்றோர் அவர்களுள் சிலர்.

வேட்டையாடி உணவு சேகரிக்கும் நாடோடிகளின் வாழ்க்கை பலவாறு வேறுபட்டுக் காணப்படுகிறது. ஆப்பிரிக்காவிலுள்ள கலகாரிப் பாலைவனத்தில் வாழும் புசுமன் (Bushmen) மக்களைப் போன்று தினந்தோறும் இடம்விட்டு இடம் சென்று வாழ்பவர்களாகப் பல நாடோடி இனத்தவர்கள் உள்ளனர். தென்னிந்தியப் பகுதிகளில் வாழும் நரிக்குறவர்கள் தினந்தோறும் இடம்விட்டு இடம்பெயர்ந்து வாழ்பவர்களாக உள்ளனர். கருநாடகத்தில் வாழும் கிழைக்கயத்தார், தமிழ் நாட்டில் வாழும் கம்பளத்த நாயக்கர்களுள் ஒரு பிரிவினர். வடநாட்டில் வாழும் உலோகார்கள் போன்ற எண்ணற்ற பிரிவினர் நாடோடி வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர். வேறு சிலர் பருவக்காலத்திற்கேற்ப இடம்பெயர்ந்து வாழுகின்றனர். இவர்கள் அனைவருமே பல்வேறு இடங்களுக்குச் சென்றுவந்தாலும் இவர்கள் மீண்டும் பழைய இடத்திற்கு வந்து சேருவர். அதோடு அடுத்தடுத்த ஆண்டுகளிலும் ஏறக்குறைய பழைய முறையிலேயே பல இடங்களுக்கும் சுற்றித்திரிந்து மீண்டும் தொடங்கிய இடத்திற்கே வந்து சேருவர்.

ஆயர் வாழ்க்கை மேற்கொள்ளும் நாடோடிகள் பருவக்காலங்களுக்கேற்பவோ சீரான இடைவெளி கொண்டோ இடம்விட்டு இடம் பெயர்ந்து கால் நடைகளை வளர்க்கின்றனர். தென்மேற்கு ஆசியப் பகுதிகளிலும் வடக்கு ஆப்பிரிக்காவிலும் வாழும் சில நாடோடிகள் கா.்நடை வளர்க்கும் தொழிலோடு பிற தொழில்களையும் செய்கின்றனர்.

சில நாடோடிகள் மேற்கூறிய தொழில்களுள் ஏதோ ஒன்றை முதன்மையாகக் கொண்டுள்ளதுடன் சில துணைத் தொழில்களையும் செய்கின்றனர். குறிப்பாகச் சில பருவங்களில் குறைந்த அளவில் வேளாண்மையில் ஈடுபட்டுப் பின்னர் நாடோடி வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். இவ்வகையான மக்கள் நாடோடி வாழ்வில் முழுமையாக ஈடுபடாததால் இவர்கள் அரை நாடோடியினர் (Semi nomads) எனக் கூறப்படுவர். நாடோடித் தன்மை 20-ஆம் நூற்றாண்டிலிருந்தே பெரிதும் குறைந்துவருகிறது. இதற்குப் பொருளாதார, அரசியல் மாற்றங்களும் தொழில்துறை, வேளாண்துறை வளர்ச்சிகளும் காரணமாகும். சீ.ப.

**நாண் மங்கலம்**: பாடாண் படலத்தில் ஒரு துறையாகப்புறப்பொருள் வெண்பாமாலை இதனைக் குறிக்கிறது. 'அறந்தரு செங்கோல் அருள் வெய்யோன், பிறந்த நாட் சிறப்புரைத்தன்று' என்பது இதன் இலக்கணமாகும். அதாவது, அரசன் பிறந்த நாள் விழாவைப் பற்றிப் பேசுவது. இது வெள்ளணி நாள் என்றும் வழங்கப்பெறும். இந்நாளில் இரவலர்களிறும் பொன்னும் மன்னரிடமிருந்து பரிசாகப் பெறுவர். பகை மன்னரும் சிறை வீடு செய்யப் பெறுவர். தொல்காப்பியர் நாண்மங்கலத்தைச் 'சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப் பிறந்த நாள் வயின் பெருமங்கலம்' என விளக்குவர். சோழன் பிறந்த நாளான இரேவதி நாளின் சிறப்பை முத்தொள்ளாயிரம் 'அந்தணர் ஆவொடு பொன்பெற்றார்' எனத் தொடங்கும் பாடலில் பாராட்டுகிறது. தான் பிறந்தநாளன்று அரசன் சிறை செய்தல், கொலை புரிதல், போர்புரிதல் முதலிய கொடுந் தொழில்களைச் செய்யமாட்டான் என்றும் சிறை விடுதல், செருவொழிதல், கொலை தவிர்தல், இறை நீக்குதல், தானஞ்செய்தல், பிறர் வேண்டியன கொடுத்தல் முதலிய சிறந்த தொழில்களைச் செய்வான் என்றும் நச்சினார்க்கினியர் தம் உரையில் குறிப்பிட்டுள்ளார். மேலும், அவர் மங்கல வண்ணமாகிய வெள்ளணியும் அணிந்து எவ்வுயிர்க் கண்ணும்அருளே நிகழ்தலின் பிறந்தநாள் விழாவை வெள்ளணி என்ப என விளக்கம் தந்துள்ளார். நச்சினார்க்கினியர்தம் உரைக் குறிப்பால் அரசற்கு யாண்டு இத்துணைச் சென்றது என்று எழுதும் மங்கலமும் நாண்மங்கலமாகும் என்பது பெறப்படும். இப்பொழுது அரசர்க்கு மட்டுமன்றி அரசியல் தலைவர்கட்கும் சமயத்தலைவர்கட்கும் அறிஞர் பெருமக்கட்கும்சான்றோர்க்கும்

பிறந்த நாள் விழா என்று நாண்மங்கலம் நடை பெற்று வருகிறது. இரா.சா.

*நாணயச் சாலை:* நாணயங்கள் உற்பத்தி செய்யப்படும் இடம் நாணயச் சாலை (Mint) எனப் படும். நாகரிகத்தின் தொடக்கக்காலத்தில் நாணய உற்பத்திக்கு இரண்டு முறைகள் பின்பற்றப்பட்டன. ஒன்று நாணயங்களை வார்ப்புச் செய்தல்; மற்றொன்று நாணயங்களை முத்திரை இடுதல்( Min -ting). நாணயங்களை வார்ப்புச் செய்யும் முறை முதலில் உரோமாபுரியில் கையாளப்பட்டது. நாண யங்களை முத்திரையிட்டு அச்சடிக்கும் முறை முதலில் கிரேக்க நாட்டில் கையாளப்பட்டது. பின்னர் அதுவே உரோமாபுரிக்கும் பரவியது.

நாணய வார்ப்பு முறையில் நாணயத்தின்தலைப் பக்கத்திற்கு ஒருவார்ப்பும், பூப்பக்கத்திற்கு ஒரு வார்ப்பும் தனித்தனியாகச் செய்யப்பட்டுப் பிறகு இரண்டையும் சேர்த்து வைத்து அவற்றினிடையே காய்ச்சிய உலோகப் பாகானது (தங்கம், வெள்ளி போன்றவை)ஊற்றப்படும். பிறகு உலோகம் குளிர்ந் தவுடன் நாணயமானது வார்ப்பிலிருந்து பிரித்து எடுக்கப்படும்.

நாணய அச்சடிப்பு முறையில், வார்ப்புச் செய்து முதலில் சிறுசிறு உலோக வில்லைகள் தயாரித்துக் கொள்ளப்படும். அதில் நாணயத்தின் தலை (head) உருவமோ பூ(tail) உருவமோ இருக்காது. பின்னர் இந் நாணய வில்லைகளை ஒரு தலை, பூ உருவம் கொண்ட அச்சுக்குள் (die) வைத்துச் சம்மட்டியால் அடித்தால் உருவம் படிந்த நாணயம் கிடைத்து விடும் இம்முறையைப் பின்பற்றி கி.பி. 15-ஆம் நூற்றாண்டு முடியும் வரை கையினாலேயே நாணயங்கள் உரு வாக்கப்பட்டன.

முதல் முறையாகச் செருமனியிலுள்ள 'நுரம்பர்கு' (Nuremberg) என்ற இடத்தில் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இயந்திரத்தைக் கொண்டு நாணயம் அச்சடிக்கும் முறை கண்டு பிடிக்கப்பட்டு நாணயம்'அச்சடிக்கப்பட்டது. இயந்திர நாணய அச்சடிப்பு முறை பாரிசில் கி.பி. 1552-ஆம் ஆண்டிலும், இலண்டனில் கி.பி. 1662-இலும் மேற் கொள்ளப்பட்டது. இப்போது நடைமுறையிலுள்ள மிகப்புதிய நாணய அச்சடிப்புமுறை கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் புலநாடுகளிலும் வழக்கத்திற்கு வந்தது.

பல நூற்றாண்டுகளாக இங்கிலாந்தின் அரசு நாணயச் சாலையானது இலண்டன் கோபுரம்(Towe rofLondon)என்ற இடத்தில் செயற்பட்டு வந்தது. பின்னர் அது வேறு இடங்களுக்கு மாற்றப்பட்டது. அமெரிக்காவில் கி.பி. 1792-இல் பிலடெல்பியாவில் (Philadelphia) முதல் நாணயச் சாலை தொடங்கப் பட்டது. பின்னர்ப் பல முக்கிய நகரங்களிலும் அது அமைக்கப்பட்டது.

இப்போது புதிய நாணயச் சாலைகளில் நாண யங்களின் ஓரங்கள் ஒழுங்கானவையாகவும், ஒவ் வொரு மதிப்புடைய நாணயமும் ஒரே சீரான எடையுடையதாகவும் இருக்க இன்றியமையாத இயந் திரங்கள் கண்டு பிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப்படு கின்றன. நாணயங்களின் மேல் அரசாங்க முத்திரை யும் பதிக்கப்பட்டு மத்திய வங்கி வழியாகப் புழக்கத் திற்கு விடப்படுகிறது. தொடக்கத்தில் அசல் பொன் நாணயங்கள் பல நாடுகளில் அச்சிடப்பட்டுப்புழக்கத் தில் இருந்தன. காலப் போக்கில் பொன் போதுமான அளவு கிடைக்காததாலும், புழக்கத்திற்கு அதிக அளவு நாணயங்கள் தேவைப்படுவதாலும், இப் போது அசல்வெள்ளி நாணயங்கள் கூடப்புழக்கத்தில் இல்லாமல் போய்ப் பல நாடுகளில் செம்பு-நிக்கல் கலந்த உலோகத்தினாலேயே நாணயங்கள் செய்யப் படுகின்றன.

இங்கிலாந்தில் முதல் உலகப் போருக்கு முன்பு தனிப்பட்டவர்கள் பொன்னைக் கொண்டு வந்து அரசாங்க நாணயச் சாலையில் நாணயமாக அச் சடித்து வாங்கிக் கொள்ளலாம். பின்னர், நாணய அச்சடிப்பு தனிப்பட்டோர்க்கு மறுக்கப்பட்டு அது அரசாங்கத்தின் தனியுரிமை (Monopoly Power) ஆகியது. அமெரிக்காவில் உள்ள பிலடெல்பியா (Phil dalphia) விலுள்ள நாணயச்சாலை மிகப்பெரியதும் சிறந்ததும் ஆகும்.அது பல பழங்காலத் தங்க வெள்ளி நாணயங்களின் அருங்காட்சிச் சாலையையும் கொண் டிருக்கிறது. இந்த நாணயச் சாலையின் ஒரு பகுதி யில் நாணயம் செய்வதற்கான அச்சுகள் தயாரிக்கப் படுகின்றன. இந்த நாணயச்சாலை 483 ச.மீ. பரப்பளவு கொண்டதாகவும் 112,000,000 நாணயங் களைப் பாதுகாக்கக் கூடிய பெட்டகங்களைக் கொண்டதாகவும் உள்ளது. இப்பெட்டகங்கள் பெருங் காப்பு வசதியும் பெற்றுள்ளன.

முதலில் நாணயச்சாலைக்குப் பொற்கட்டி அல்லது மற்ற உயர்ந்த உலோகங்கள் வந்து சேரு கின்றன. பின்னர் இவை செம்புப் போன்ற உலோகத்தோடு உரிய விகிதத்தில் கலக்கப்பட்டு உறுதியாக்கப்படுகிறது. பின்னர்க் காய்ச்சி ஊற்றிய உலோகம் இயந்திரத்தினால் தகடாக்கப்படுகிறது. பின்னர் அந்தக் கட்டியிலிருந்து சீரான எடை யுள்ள உலோக வில்லைகள் வெட்டப்படுகின்றன. அதற்குப் பிறகு அவ் வில்லைகள் நன்றாகப் பழுக்கக் காய்ச்சப்பட்டு அதிலுள்ள அழுக்குகள்

அகற்றப்படுகின்றன. அழுக்கு நீக்கப்பட்ட உலோக (பொன் அல்லது வேறு உலோகம்) வில்லை அரசாங்க முத்திரை அச்சிடத் தயாராக இருக்கிறது. பின்னர் அந்த நாணய உலோக வில்லைகள் இயந்திரங்களின் உதவியால் இரு அச்சுகளுக்கு இடையே கொடுக்கப் பட்டு நாணயத்தின் தலைப் (மேல் பக்கம்) பக்கமும் பின்பக்கமும் அச்சிடப்படுகின்றன.

இக்காலத்தில் அசல் பொன், வெள்ளி நாணய அச்சடிப்புப்புழக்கத்தில் இல்லாததால் பல்வேறு மற்ற உலோகங்களே பயன்படுத்தப்பட்டு வருகின் றன. ஒவ்வொரு நாட்டு அரசும் நாணய அச்சடிப்பு முறைகளை இரகசியமாகப் பாதுகாத்து வருகின்றது.

வி.எ.

**துணை நூல்**

**Gordonstowell Edward** Meeson, J., The Book of Knowledge, The Waverlay Book Company Ltd., London, 1983.

**நாணய மதிப்புக் குறைப்பு**: காண்க: செலாவணி மதிப்புக் குறைப்பு.

**நாணயமாக்கம்**: ஒவ்வொரு நாட்டின் செலா வணியிலும் (Exchange) காகிதப்பணமும், உலோக அடையாள நாணயங்களும் உள்ளன. இவற்றை ஒரு நாட்டின் அரசு அல்லது மையவங்கிஅல்லது இரண்டும் வெளியிடுகின்றன. மாதிரி, எடை, உருவம், மதிப்பு ஆகிய எல்லாவற்றிலும் ஒரே மாதிரியான இயல்பு களைக் கொண்ட உலோகக் காசுகள் அல்லது நாண யங்களை வெளியிடுவதே நாணயமாக்கம் (Coinage) எனப்படும்.

பணத்தை வெளியிடுவதற்கான முதல் நாணயச் சாலை கி.மு.7-ஆம் நூற்றாண்டில் இலிடியாவில் (Lydia) தோன்றியது என்பர் வரலாற்று ஆசிரியர்கள். அதன் பிறகு அரசின் நாணயச் சாலைகளைப் பல நாடுகளும் அமைத்துச் செயற்பட்டன. கி.பி.3-ஆம் நூற்றாண்டில் இலண்டன் நகரத்தில் ஒன்று, பிற இடங்களில் இரண்டு என மூன்று அரசு நாணயச் சாலைகளைப் பேரரசர் மார்க்கசு அரேலியசு கராசியசு (Emperor Marcus Aurelius Carausius) தோற்றுவித்தார்.

ஏறத்தாழ கி.பி. 15-ஆம் நூற்றாண்டு வரை நாணயங்களைச் சுத்தியால் (Hammer) அடித்து உரு வாக்கும் முறை இருந்தது. அதன் பிறகு படிப்படி யாகப்பல மாற்றங்கள் ஏற்பட்டு இப்பொழுது இயந் திரங்களின் உதவியால் நாணயங்கள் உருவாக்கப்படு கின்றன.

எந்த உலோகத்தின் நாணயத்தை வெளியிட வேண்டுமோ அந்த உலோகத்தை உருக்கித் தகடுக ளாக்கி ஜிப்சம், பிளாசுடர்(Gypsum, Plaster), சலித்த மண் (Pulverized Earth) சிமெண்டு, இரும்பு, மரம் போன்றவைகளில் ஏதாவதொன்றிலான வார்ப்பில் (Mould) அத்தகடுகளை அடித்து நாணயங்களை வார்த்தெடுப்பர்.

பணத்தை வெளியிடும் உரிமை இக்காலத்தில் அரசுக்கே இருக்கின்றது. இருப்பினும், பேராசையால் உந்தப்படும் ஒரு சிலர் போலி நாணயங்களை வெளி யிடுவதற்கான வாய்ப்புகளும் இருக்கின்றன. இத் தகைய போலி நாணயங்களை வெளியிடுபவர்கள் அந் தந்த நாட்டுச் சட்டங்கள் அடிப்படையில் பெருந் தண்டனைக்குள்ளாவார்கள்.

நாணயங்களின் மதிப்பை உள்ளுறு மதிப்பு (Intrinsic Value) என்றும், தோற்ற மதிப்பு (Face Value) என்றும் இருவகைப் படுத்தலாம். உள்ளுறு மதிப்பு என்பது நாணயம் அமைக்கப்பட்டிருக்கும் உலோகத்தின் அங்காடி மதிப்பைக் குறிப்பது. தோற்ற மதிப்பு அல்லது முக மதிப்பு என்பது அந்த நாணயத்திற்கு அரசு அறிவித்திருக்கும் பரிமாற்ற மதிப்பைக் (Exchange Value) குறிப்பது.

இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடு (U.S.A) மற்றும் சில நாடுகளில் வழக்கில் இருந்துவந்த பொன் நாணயத் திட்டத்தில் (Gold Currency Standard) வழக்கில் இருந்த பொற்காசுகளின் உள்ளுறு மதிப்பும் தோற்ற மதிப்பும் 1914-ஆம்ஆண்டுக்கு முன்பு ஒன்றுக் கொன்று சமமாக இருந்தன. ஆனால், அதன் பிறகு நடைமுறைக்கு வந்த பல்வேறு நாணயத் திட்டங்களி லும் உள்ளுறு மதிப்பைக் காட்டிலும் அதிகமான தோற்ற மதிப்புடைய அடையாளப் பணமே புழக்கத் தில் இருந்து வருகிறது. பொற்காசுத் திட்டத்தில் மக் கள் அவர்தம் வசமிருந்த தங்கத்தையும் தங்க நகை களையும் எவ்விதக் கட்டணமுமின்றிப் பொற்காசு களாக மாற்றிக்கொள்வதற்கும், தங்க நாணயங்களை எவ்விதத்தடையுமின்றி உருக்கிப் பயன்படுத்திக்கொள் வதற்கும் வாய்ப்புகள் இருந்தன. இப்போது நாணயங் களை வெளியிடும் உரிமை பணவாக்க அதிகாரியிடம் (Monetary Authority) இருப்பதால் நாணயமாக்கம் முழுவதும் அரசின் கட்டுப்பாட்டிலுள்ளது.

உள்ளுறு மதிப்பைக்காட்டிலும் தோற்ற மதிப்புக் குறைவாக இருந்தால் நாணயங்கள் உலோகங்களாகப் பயன்படுத்தப்பட்டுவிடும் என்பதால் உள்ளுறு மதிப் பைக் காட்டிலும் தோற்ற மதிப்பு மிகுதியாக உள்ள அடையாள நாணயங்களையே அரசுகள் வெளியிடு கின்றன. உலோகங்களின் விலைகள் மிகுதியாகும்

போது அவ்வப்போதுள்ள உள்ளுறு மதிப்பைக் காட்டிலும் மிகுதியான தோற்ற மதிப்புள்ள நாணயங்களை அரசுகள் வெளியிடுதல் மரபு. இந்தியாவில் ஒரு உரூபாய் நாணயமும் பிறவகை உலோக நாணயங்களும் இந்த அடிப்படையில் புதிதுபுதிதாக அவ்வப்போது வெளியிடப்படுகின்றன. என்.எஸ்.பா.

**துணை நூல்:**

David W.Pearce (Ed.)., Dictionary of Modern Economics, Macmillan Press, London, 1983.

*நாணய மாற்றுக் கட்டுப்பாடு:* ஒருநாட்டின் அரசாங்கம்,அந்நாட்டு அந்நியச் செலாவணியின் அளிப்பையும், தேவையையும் கட்டுப்படுத்தும் முறைதான் நாணயமாற்றுக் கட்டுப்பாடாகும் (Exchange Control).இம்முறை கீழ்க்காணும் நோக்கங்களுக்காகச் செயற்படுத்தப்படுகிறது. அவையாவன:

1) குறைந்த அளவு உள்ள அந்நியச் செலாவணியை நல்லமுறையில் பயன்படுத்துவதற்காகத் தேவையான பொருள்களை உரிம முறையில் இறக்குமதி செய்கிறது. ஏற்றுமதி மூலம் வரும் வருவாயை ஆடம்பர, அவசியமற்ற பொருள்களை இறக்குமதி செய்யாமலிருப்பதின் மூலம் பாதுகாத்து வைத்துக் கொள்ளுகிறது.

2) இறக்குமதியைத் தவிர்த்து ஏற்றுமதியை ஊக்குவித்துச் செலுத்துநிலையில்காணும் சமமின்மை சரி செய்யப்படுகிறது.

3) நாட்டின் மூலதனம் வெளியில் செல்லாமல் இது தடுக்கிறது. அதாவது அந்தந்த நாட்டுக் கட்டுப்பாட்டு அதிகாரிகளின் அனுமதியில்லாமல் ஏற்றுமதிக்கான பணத்தையோ சொத்துகளையோ திடீரெனத் திரும்பப் பெற்றிட முடியாது.

4) மந்தம், பணவீக்கம் போன்ற சூழ்நிலைகளில் ஒரு நாட்டின் பொருளாதாரத்தை நாணயக் கட்டுப்பாடு பாதுகாக்கிறது.

5) இறக்குமதித் தடையின் மூலம் உள் நாட்டுத் தொழில்களை இது வளர்க்கிறது.

6) கடன் தந்துள்ள நாடுகளுக்கு மூலதனமும், வட்டியும் செலுத்திடப் போதுமான அந்நியச் செலாவணிக் காப்பை நாணயக் கட்டுப்பாடு வலியுறுத்துகிறது. பல நாடுகள் 1930-ஆம் ஆண்டில் தங்களின் அயல்நாட்டுக் கடன்களைத் திருப்பிச் செலுத்துதற்காகப் புதிய கடன்கள் வாங்கமுடியாத நிலையில் நாணய மாற்றுக் கட்டுப்பாட்டைக் கையாண்டன.

7) போர்க்காலங்களில் அயல்நாட்டு எதிரிகளும், முகவர்களும் சொத்துக்கள் வாங்கும் திறனை இழந்துவிடுகின்றனர். மேலும், நாட்டின் முக்கிய செல்வ வளங்கள் போருக்காகப் பயன்படுத்தப்பட்டு மிகுதியானவைதான் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. தேவையற்ற செலவுகள் துண்டிக்கப்பட்டு அந்நியச் செலாவணிக் காப்புப் பாதுகாக்கப்படுகிறது. எந்த நாடுகளிலிருந்து தேவையான பொருள்கள் வருகின்றனவோ அந்த நாடுகளுக்குத்தான் ஏற்றுமதி செய்யப்படுகிறது. இவை எல்லாம் தீவிர நாணய மாற்றுக் கட்டுப்பாட்டினால்தான் முடியும்.

8) மற்ற நாடுகளோடு வணிகத் தொடர்பு இருக்கிற பொழுது நாணயக் கட்டுப்பாடு, அயல் நாட்டுச் செலாவணி நாணயங்களோடுஒருதொடர்பு ஏற்பட வகை செய்கிறது. எடுத்துக்காட்டாக, இசுடெர்லிங்கு (Sterling) மதிப்பைக் குறைத்தபோது உரூபாயின் மதிப்பும் குறைக்கப்பட்டது.

9) திட்டமிட்ட பொருளாதாரத்தின் நோக்கங்களை நிறைவேற்றிட நாணய மாற்றுக் கட்டுப்பாடு ஒரு கருவியாகத் திகழ்கிறது; தொழில் முன்னேற்றத்திற்கு உதவுகிறது. இறக்குமதி ஈடு கட்டுதல், ஏற்றுமதி அதிகரிப்புப் போன்றவற்றை வேண்டும் தொழில்களுக்கு முன்னுரிமை தரப்படுகிறது. மேலும், நாணய மாற்று விகிதம் நிலையாக இருந்தால் அயல்நாட்டு முதலீடுகளைக் கவரலாம்.

10) இறக்குமதியின்மீது தடை விதிக்கவும், செலாவணிப் பங்கு போன்றவைகளைக் கையாளும் நாடுகளுக்கெதிரான நடவடிக்கைகள் எடுக்கவும் நாணய மாற்றுக் கட்டுப்பாடு உதவுகிறது.

11) அதிக மதிப்பீடு செய்யப்பட்ட நாணயங்களுக்கு நாணய மாற்றுக் கட்டுப்பாடு மிகவும் உதவுகிறது. காரணம், அத்தகைய பணத்தின் மதிப்பு அல்லது நாணய மாற்று விகிதம், அதன் அளிப்பு, தேவை போன்றவற்றைவிட மிகுதியாக இருக்கும். மற்ற நாடுகளுக்கு மிகுதியான பணம் செலுத்தவேண்டிய நிலையிலுள்ளபோதும், பாதகமான வணிக நிலையுள்ளபோதும், போர் எழுந்தபோதும் நாணயத்தின் மிகுந்த மதிப்பீடு தேவைப்படுகிறது.

12) நாணய மாற்றுக் கட்டுப்பாடு, மதிப்புக் குறைப்புச் செய்யப்பட்ட பணத்திற்கும் உதவுகிறது. மதிப்புக் குறைப்புச் செய்யப்பட்டுள்ள நாணயத்தின் மதிப்பு சாதாரணமாகப் பண அங்காடியில் அதற்குள்ள மதிப்பைவிடக் குறைவாக உள்ளது. இறக்குமதியைக் குறைக்கவும், ஏற்றுமதியை மிகுக்கவும் இது செய்யப்படுகிறது. அயல்நாட்டு வணிகம் தேவைப்படும் நாடுகளுக்கு இது நன்மை பயக்கும். ஆனால், உலக அங்காடிக்கு இது தேவையில்லை.

13) நாணயமாற்றுவிகிதத்தில் ஏற்படும் மாற்றங்கள் நன்மை பயக்காததால்அதைத் தவிர்ப்பதுநாணய

மாற்றுக் கட்டுப்பாட்டின் நோக்கமாகிறது. அதே சமயம் நாணய மதிப்பைக் கூட்டவோ குறைக்கவோ இது பயன்படுத்தப்படவில்லை. ஆனால், அப்போதைக்கு ஏற்படும் நாணய விகிதத்தின் ஏற்ற இறக்கங்களை இது தடுக்கிறது.

**நாணய மாற்றுக் கட்டுப்பாடு முறைகள்:** நேர்முக முறைகள் (Direct Methods), மறைமுக முறைகள் (Indirect Methods) என நாணய மாற்றுக் கட்டுப்பாட்டின் வகைகள் இருவகைப்படும். நேர்முக முறையில் தலையீடு, மாற்றுத்தடை, பல்வித மாற்று விகிதங்கள், மாற்றுத் தீர்வக உடன்பாடுகள், அசையா நிலை ஒப்பந்தங்கள், தடை செய்யப்பட்ட கணக்குகள், கடன் தவணை உரிமை மாற்றம் எனப் பல வகை உள்ளன.

**1. தலையீடு:** மேல்நிலைப்படுத்துதல்(Pegging up), கீழ்நிலைப்படுத்துதல் போன்றவற்றைக் குறிப்பது தலையீடு (Interaction) ஆகும். தேவை-அளிப்பு ஆகியவற்றால் நிருணயிக்கப்படும் விகிதத்தை, மிகுதியாக இருக்கும் விகிதத்தைக் குறிப்பதுதான் நிலைப்படுத்துதலாகும். சமநிலை விகிதத்திற்குக் கீழுள்ள விகிதம்தான் கீழ் நிலைப்படுத்துதலைக் குறிக்கும். மேல் நிலைப்படுத்தலின்போது அரசாங்கங்கள், அந்நியப் பணத் தாள்களைச் செலுத்திவிட்டுத் தம் பணத் தாளைப் பெற்றிடும். கீழ்நிலைப்படுத்தலின்போது தம் பணத்தாளைச் செலுத்திவிட்டு அயல்நாட்டுப் பணத்தைப் பெற்றிடும். மேல்நிலைப் படுத்துதல் மூலமாக இறக்குமதி மிகுதியாகி அயல்நாட்டுப் பணத் தேவை மிகுதியாகும். ஒரு நாட்டிலுள்ள அந்நியச் செலாவணிக்காப்பின் அளவைப் பொறுத்துத்தான் நிலைப்படுத்தலின் வெற்றி உள்ளது.

**2. மாற்றுத் தடை:** அந்நியச் செலாவணி அங்காடி நிலைக்கேற்ப உள்நாட்டுப் பணத்தைக் குறைத்திடும் அரசாங்கக் கோட்பாட்டை மாற்றுத் தடை (Exchange Restriction) குறிக்கிறது. சில தடைகள் பின்வருமாறு உள்ளன. 1) அரசு முகவர் செய்திடும் அந்நியச் செலாவணி வாணிகம் மையப்படுத்தப் படுகிறது. 2) ஒரு நாட்டின் பணத்தை மற்றொரு நாட்டின் பணத்திற்கு மாற்றிட அரசு அனுமதி தேவை. 3) அதிகாரமற்ற மாற்று நடவடிக்கையில் ஈடுபடுவது குற்றப்பிரிவுக் (Criminal) குற்றமாகும். 4) சுங்க வரி விகிதப் பட்டியல், இறக்குமதி அளவு நிருணயித்தல் போன்றவைகள் இறக்குமதியைக் குறைத்து அந்நியச் செலாவணி அங்காடியில் புழங்கும் பண அளவையும் குறைக்கின்றன.

**3. பலவித மாற்று விகிதங்கள்:** சரக்குகளின் ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் பல்வித மாற்று விகிதங்கள் குறிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, ஏற்றுமதியை ஊக்குவிக்கக் குறைந்த விகிதமும், இறக்குமதியைத் தடுக்க மிகுந்த விகிதமும் கையாளப்படுகின்றன. பல்வித மாற்று விகிதங்களின் (Multiple Exchange Rare) நோக்கமே எவ்வளவு அந்நியச் செலாவணியை ஈட்டமுடியுமோ அந்த அளவு ஈட்டுவதாகும். ஒரு குறிப்பிட்ட பொருளின் ஏற்றுமதி அல்லது இறக்குமதியை அப் பொருளின் மாற்று விகிதத்தை மாற்றி ஒழுங்குபடுத்திடலாம். ஏற்றுமதியை ஊக்குவித்து இறக்குமதியைத் தடுத்துப் பாதகமான செலுத்துநிலையைச் சரி செய்திடலாம்.

**4. மாற்றுத் தீர்வக உடன்பாடுகள்:** இது இரு நாடுகளின் அரசுகளிடையே ஏற்படும் ஓர் ஒப்பந்தம் ஆகும். இதன்படி ஒவ்வொரு நாடும் இறக்குமதிக்குச் செலுத்தவேண்டிய பணத்தை ஏற்றுமதியாளருக்கு நேரடியாகச் செலுத்தாமல் அந்நாட்டு மத்திய வங்கிக்குச் செலுத்தவேண்டும். அதேபோல் ஏற்றுமதியாளர்களும் நேரடியாக இறக்குமதியாளர்களிடம் பணத்தைப் பெறாமல் மத்திய வங்கிகளிடமிருந்து பணத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

**5. அசையாநிலை உடன்பாடுகள்:** இந்த முறையில் குறுகியகாலக் கடன்கள் நீண்டகாலக் கடன்களாக மாற்றப்படுகின்றன அல்லது அவைகளைச் சிறிது சிறிதாகச் செலுத்திட ஏற்பாடு செய்யப்படுகிறது. இது கடன் தவணைச் செலுத்தலுக்கு ஒப்பாகும்.

**6. தவணை முறைக் கடன் மாற்றம்:** இம் முறையில் தவணை முறையில் கடனைச் செலுத்தும் காலத்தில் அயல் நாட்டுக் கடனீந்தோருக்கும், ஏற்றுமதியாளருக்கும் செலுத்தவேண்டிய தொகையைச் சில நாட்களுக்குத் தள்ளிவைப்பதாகும். இக்காலத்தில் இறக்குமதி செய்பவர்களும் கடனாளிகளும் அதிகாரம் பெற்ற வங்கிகளிடம் பணத்தைச் செலுத்த வேண்டப் படுகின்றனர்.

**7. தடை செய்யப்பட்ட கணக்குகள்:** இது அசையா உடன்பாடும், தவணைமுறைக் கடன் மாற்றமும் சேர்ந்து உள்ளதாகும். பொருள்களை விற்பதின் மூலம் கிடைத்த பணத்தை அயல்நாட்டுக்காரர்கள் எடுக்கமுடியாதபடி அவர்களின் வங்கிக் கணக்குகள் தடை செய்யப்படுகின்றன. அயல்நாட்டுக் கடனீந்தோருக்கு செலுத்தவேண்டிய பணம் உள்நாட்டு வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது. அரசு சொல்லும் விதத்தில் அந்த இருப்புகள் பயன்படுத்தப் பட வேண்டும். அயல்நாட்டுக் கடனீந்தோர்கள் அவர்களின் அந்நியப் பணத்தை விற்றிட அனுமதிக்கப்படுகின்றனர். அவர்களும் மிகுதியான தள்ளுபடி செய்து அதை விற்கின்றனர்.

**மறைமுக முறைகள்:** இம்முறையில் வட்டி விகிதத்தில் மாற்றம் (Changes in Interest Rate), இறக்குமதி வரியும் அளவும் (Import Tariffs and Quotas), ஏற்றுமதி உதவித்தொகை (Export Subsidy) போன்றவைகள் முக்கியமாகும்.

1. **வட்டி விகிதத்தில் மாற்றம்:** ஒரு நாட்டின் நாணய மாற்று விகிதத்தை வட்டி விகித மாற்றம் மறைமுகமாகப் பாதிக்கிறது. வங்கி வட்டி விகிதம் உயர்ந்தால் அயல் நாட்டுக்காரர்களின் நிதியை மிகவும் கவரலாம். முதல் வெளியில் செல்வதைத் தடுத்திடலாம். அதன் பயனாக நாணய மாற்று விகிதம் உள்நாட்டுப் பணத்திற்குச் சாதகமாகிறது. செருமனி 1924-இலிருந்து 1930 வரை இம்முறையைப் பின்பற்றியது.

2. **இறக்குமதி வரி-அளவு:** மிக்க அளவு இறக்குமதி வரி விதிப்பதால் பொருள்களின் விலை கூடும். எனவே, உள்நாட்டுப் பொருளை மக்கள் வாங்குவார்கள். இவ்விதம் இறக்குமதி தடை செய்யப்படுகிறது. இறக்குமதி அளவையும் கட்டுப்படுத்திட அதற்கு ஓர் அளவு குறிக்கப்படுகிறது. இதனால், அந்நியச் செலாவணி அங்காடியில் பணப் புழக்கம் குறைகிறது.

3. **ஏற்றுமதி ஊக்கத்தொகை:** ஏற்றுமதி வரி குறைக்கப்பட்டு ஏற்றுமதி ஊக்கத்தொகை வழங்கப்படுகிறது. ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களின் உற்பத்தி விலையில் ஒரு பகுதியை ஊக்கத் தொகையாக அரசு வழங்குகிறது. வெளிநாட்டில்இந்தியப்பொருள்களைக் குறைந்த விலையில் விற்பதற்குத்தான் இவ்வூக்கத் தொகை' வழங்கப்படுகிறது. இது ஏற்றுமதி செய்வோர்களுக்கு ஓர் உற்சாகத்தைத் தருகிறது. அதேசமயத்தில் நாணய மாற்று விகிதத்தையும் மறைமுகமாக ஆதிக்கம் செய்கிறது.

இந்தியாவில் நாணய மாற்றுக் கட்டுப்பாட்டிற்காக அந்நியச் செலாவணி ஒழுங்குமுறைச் சட்டம் (Foreign Exchange Regulation Act) 1947-ஆம் ஆண்டில் இயற்றப்பட்டது. அது நாணய மாற்றுக் கட்டுப்பாடுகள் பற்றிய முறையையும் ஏனைய செய்திகளையும் தெரிவிக்கிறது. ஒருநாடு, அந்நிய செலாவணியை மிகுதியும் பெற்றிருக்க வேண்டும். அதற்கு நாணய மாற்றுக் கட்டுப்பாடு மிகவும் தேவை.

கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Kindleberger, C.P.**, International Eonomics,Richard D. Irwin INC, Homewood, 1973.

**Mundell, R.A.**, International Economics, Macmillan Company Ltd., New York, 1968.

**Vaish, M.C., &Sudama Singh**, International Economics, Oxford & IBH Publishing Co.,New Delhi, 1978.

*நாணய மாற்றுச் சமன்பாடு:* சான் மேனார்டு கீன்சு என்பவரின், வேலை, வட்டி, பணம் ஆகியவற்றின் பொதுக் கோட்பாடு என்ற நூல் 1936-இல் வெளிவருவதற்கு முன் பேரியல் பொருளாதாரப் பகுத்தாய்வில் பண அளவுக் கோட்பாடு பணத்திற்கான தேவை பற்றிய கோட்பாடாக வழக்கிலிருந்தது. அமெரிக்கப் பொருளாதார நிபுணர்களுள் ஒருவரான இர்விங் பிசர் (Irving Fisher) என்பாரின் பண அளவுக் கோட்பாடும், கேம்பிரிட்சு பல்கலைக் கழகப் பொருளாதார நிபுணர்கள் சிலரின் சமன்பாடுகளும் சிறப்பானவையாகக் கருதப்பட்டன. இர்விங் பிசரின் பண அளவுக் கோட்பாட்டினை நாணய மாற்றுச் சமன்பாடு(Equation of Exchange) என்பர்.

இர்விங் பிசரின் நாணய மாற்றுச் சமன்பாடு, கேம்பிரிட்சு அறிஞர்களின் சமன்பாடுகள், இக்காலத்தில் பண அளவுக் கோட்பாட்டிற்கு மில்டன் பிரீட்மேன் (Milton Friedman) கொடுத்திருக்கும் விளக்கம் பற்றிய குறிப்புகள் ஆகியவை கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**இர்விங் பிசரின் நாணய மாற்றுச் சமன்பாடு:** இவர் 1911-ஆம் ஆண்டில் வெளியிட்ட தனது 'பணத்தின் வாங்கும் திறன்' (Purchasing Power of Money) என்ற நூலில், பண மதிப்பைக் கீழ்வரும் சமன்பாட்டின் மூலம் அறியலாம் எனக் குறிப்பிட்டார்.

$$PT=MV$$

இச்சமன்பாட்டில் பணத்தின் அளவை M என்ற எழுத்தும், பணத்தின் ஒவ்வொரு அலகின் சுழற்சியை (Velocity of circulation of each unit of money) V என்ற எழுத்தும், விலை நிலையை (Price level) P என்ற எழுத்தும், பேரங்களின் அளவை T என்ற எழுத்தும் குறிப்பதாக அமைத்தார். பின்னர் இச்சமன்பாடு

$$PT=MV+M'V'$$

என மாற்றியமைக்கப்பட்டது.

அதாவது, பாங்குப் பணத்தின்(Bank Money)அளவை M' என்ற குறியீடும், அதன் சுழற்சி வேகத்தை V' என்ற குறியீடும் குறிப்பதாகச் சமன்பாடு மாற்றியமைக்கப்பட்டது.

பண்டமாற்று முறை வழக்கில் இல்லை; பணம் இடையீட்டுக் கருவியாக (Medium of exchange) மட்டுமே பயன்படுகிறது. பணத்தின் எந்தப் பகுதியும்

முடக்கப்பட்டுவிடாமல் சுழன்றுகொண்டே வருகிறது; பண அளவு மாற்றமடையும்போது T,V,V' ஆகிய மாறிகளில் எவ்வித மாற்றமும் இல்லை; அரசு வெளியிடும் பண அளவிற்கும் (Mக்கும்) பாங்குப்பண அளவிற்கும் (M'க்கும்) இடையேயுள்ள விகித அளவு மாறாமல் நிலையாக இருக்கிறது என்ற பல எடு கோள்களில் (Assumptions) இக்கோட்பாடு அமைந்தது. இச்சமன்பாட்டை மாற்றியமைக்கும்போது $P = \frac{MV + M'V'}{T}$ என்றமைவதாலும் T, V, V' ஆகியவைகளில் எவ்விதமான மாற்றமும் இல்லை என்ற எடுகோள் இருப்பதாலும், Mக்கும் M'க்கும் இடையே உள்ள விகித அளவு மாறாமல் நிலையானதாக இருப்பதாலும், பணத்தின் அளவே விலையை நிருணயிக்கிறது என்றார். பணத்தின் அளவு இரட்டித்தால் விலை சரிபாதியாகக் குறையும்; சரிபாதியாகக் குறைந்தால் விலை இரட்டிக்கும். எனவே, பண அளவு மாற்றமும் விலை மாற்றமும் நேரடியான, விகிதாச் சாரத்(Directly proportional) தொடர்புடையன என்பது கருத்து.

**கேம்பிரிட்சு (Cambridge) அறிஞர்கள் கருத்து:** பரிமாற்றக் கருவியாக மட்டுமே பணம் பயன்படுகிறது என்ற கருத்து பிசரின் சமன்பாட்டில் உள்ளார்ந்திருப்பதை அறிந்து இக்குறையைத் தவிர்க்க, மக்கள் ரொக்கமாகப் பணத்தைத் தங்கள் வசம் வைத்துக்கொள்ள விரும்பும் அளவே பணத்திற்கான தேவை என்ற கருத்தைக் கேம்பிரிட்சு அறிஞர்கள் வலியுறுத்தினர். பணத்தின் அளிப்பு வங்கி அமைப்பினால் நிருணயிக்கப்படுவதால் பணத்தின் சுழற்சி என்ற கருத்தை இவ்வறிஞர்கள் வலியுறுத்தவில்லை. பணத்திற்கான மதிப்பை நிருணயிப்பதில் பணத்திற்கான தேவை இன்றியமையாத பங்காற்றுகிறது என்றும் இவர்கள் கருதினார்கள். பேர நாட்டத்திற்காகவும் (Transaction Motive), முன்னெச்சரிக்கை நாட்டத்திற்காகவும் (Precautionary Motive), ஊக வாணிக நாட்டத்திற்காகவும் (Speculative Motive) மக்கள் பணத்தை ரொக்கமாக வைத்திருக்க விரும்புவதைப் பணத் தேவை எனக் குறிப்பிட்டு இவ்வறிஞர்கள் அவர்தம் சமன்பாடுகளைக் குறிப்பிட்டனர்.

**மார்சலின் (Marshall)சமன்பாடு:**

$$M = Kpy$$

M – தன்னிச்சையாகத் தீர்மானிக்கப்படும் பண அளிப்பின் அளவு

PY – உண்மை வருமானம் (Real Income)

K – உண்மை வருமானத்தில் இருப்பாக மக்கள் வைத்திருக்க விரும்பும் பகுதி

Y – சமுதாயத்தின் மொத்த உண்மை வருமானம்

P – விலை நிலை

**பிகு (Pigou) வின் சமன்பாடு:** $P = \frac{KR}{M}$

P – பணத்தின் வாங்கும் திறன் எனப்படும் பணத்தின் மதிப்பு

R – சமுதாயத்தின் உண்மை மொத்த வருமானம்

M – சட்டமுறைப் பண அலகுகளின் எண்ணிக்கையான பண அளிப்பு

K – மொத்த உண்மை வருமானத்தில் மக்கள் ரொக்க இருப்பாக வைத்துக்கொள்ள விரும்பும் பகுதி.

**இராபர்ட்சனின் (Robertson) சமன்பாடு:** $M = PKT$

M – பணத்தின் அளிப்பு

P – விலை நிலை

T – சமுதாயத்தால் ஓராண்டுக் காலத்தில் வாங்கப்படும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் மொத்த அளவு

K – T யில் மக்கள் ரொக்கமாக வைத்திருக்க விரும்பும் பகுதி

**கீன்சின் (Keynes) சமன்பாடு:** (i) $n = pk$ (ii) $n = p(k + rk')$ மக்களின் அன்றாடப் பேரங்களுக்காக மக்கள் வாங்கும் திறனில் ஒரு பகுதியைத் தம் வசம் வைத்திருக்க விரும்புகின்றனர். அவர்தம் விருப்பு, வெறுப்புகள், வைத்திருக்கும் சொத்துகள் ஆகியவைகளின் அடிப்படையில் இவ்வாங்கும் திறனின் அளவு அமைகிறது. இவை மாறாதிருக்கும் நிலையில் மக்கள் தம் வசம் வைத்திருக்க விரும்பும் ரொக்க இருப்பின் அளவும் மாறாதிருக்கிறது. பணத்திற்கான இத்தேவையை நுகர்வின் அலகுகளால்(Consumption units) அளவிடலாம்.

n – சுழற்சியில் உள்ள மொத்தப்பணம்

p – நுகர்வு அலகிற்கான விலை

k – ரொக்கத்தின் வடிவத்தில் உள்ள நுகர்வு அலகுகளின் எண்ணிக்கை

$k^1$ – பாங்கு வைப்புகளின் வடிவத்தில் உள்ள நுகர்வு அலகுகளின் எண்ணிக்கை

r – பாங்குகளின் ரொக்க இருப்பு விகிதம் (cash reserve ratio)

ரொக்க இருப்பு அணுகுமுறையில்(Cash Balance Approach) உள்ள குறைகளைச் சுட்டிக்காட்டுபோது

தான் பாட்டின் கின் (Don Patinkin) என்பார், கேம் பிரிட்சு பொருளாதாரப் பள்ளியினர் உண்மை இருப்பு விளைவைக் (Real Balance Effect) கருத்தில் கொள்ளத் தவறிவிட்டனர் என்பதைச் சுட்டிக் காட்டியுள்ளார். விலை மாற்றம் பண்டங்களின், பணிகளின் தேவையிலும், அளிப்பிலும் ஏற்படுத்தும் பல மாற்றங்களை உண்மை இருப்பு விளைவு காட்டுகிறது.

பண அளவுக் கோட்பாட்டைப் பற்றிய ஆய்வுகளில் (Milton Friedman (ad.) Studies in the Quantity of Money, 1956) மில்டன் பிரீட்மேன் என்பார் கேம்பிரிட்சு பள்ளியினரின் கருத்தையொட்டி மக்கள் தம் வசம் ரொக்கமாக ஓரளவு பணத்தை வைத்துக் கொள்ள விரும்புகின்றனர் என்ற கருத்தைக் குறிப்பிட்டார். இப்பணத் தேவையை நிருணயிக்கும் காரணிகளைப் பற்றிக் குறிப்பிடும்போது,

$$M_d = f\left(w, r^e, p^e, \frac{W_H}{W}\right) P$$

என்ற சமன்பாட்டை அமைத்தார்.

$M_d$ — பணத்திற்கான தேவை

w — மொத்தச் சொத்துகள் (Total wealth)

$w_H$ — மனித செல்வம் (Human wealth)

$r^e$ — எதிர்பார்க்கப்படும் (Expected) வட்டி விகிதம்

$p^e$ — எதிர்பார்க்கப்படும் விலை

பிரீட்மேனின் கருத்தின்படி பண அளிப்பு பணத் தேவையைச் சார்ந்திருப்பதில்லை. பணவாக்க அதிகாரிகளின் நடவடிக்கைகளுக்கேற்பப் பண அளிப்பு நிலையற்றதாக (Unstable) இருக்கிறது. இதற்கு மாறாக, பணத் தேவை நிலையானதாக (Stable) இருக்கிறது. மக்களின் நிலையான வருமானத்திற்கேற்ப நிலையானதொரு விதத்தில் தொடர்புடையதாக மக்கள் ரொக்கமாகவும் பாங்கு வைப்புகளாகவும் (Bank Deposits) வைத்திருக்க விரும்பும் பணத்தின் அளவு அமைந்திருக்கிறது. கடன் பத்திரங்களை வாங்குவதன் மூலம் நாட்டின் மையப் பாங்கு பண அளிப்பை அதிகரிக்கும்போது, மக்கள் தம் வசமிருக்கும் மிகுந்த பணத்தைச் சொத்துகளின் மீதும், நுகர்வோர் பண்டங்களின் பணிகளின் மீதும், செலவழிப்பர். இதன்மூலம் நாட்டு வருமானம் மிகும். இதைப் போன்று கடன் பத்திரங்களை விற்பதன் மூலம் பண அளிப்பைக் குறைக்கும்போது நாட்டுவருமானம் குறையும் என்பது கருத்து. என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**Balasubramanian, N.S.**, Money, Banking, International Trade (Tamil Medium), Uma Publications, Madurai, 1986.

**David, W. Pearce**, The Dictionary of Modern Economics, Macmillan Press, London, 1983.

**Thingan, M.L.**, Macro Economic Theory, Konark Publications, New Delhl, 1986.

**Thingan, M.L.**, Monetary Theory Konark Publications, New Delhi, 1986

*நாத்திகம்*: நாத்திகம் என்னும் சொல்லுக்குப் பல கருத்துகளையும், பல நடைமுறைகளையும் உள்ளடக்கிய மூன்று பொருள்கள் உண்டு. அவை, 1. கடவுள் இல்லையெனக் கொள்ளுவது, 2. மறுபிறப்பும் மறுமைப் பயனும் இல்லையெனக் கொள்ளுவது, 3. சுருதிஇசுமிருதிகளின்பிரமாணங்களைஏற்றுக்கொள்ள மறுப்பது என்பனவாகும். 'சுருதிவேதங்கள்,இசுமிருதி, மனு முதலான நீதி நூல்களைப்பிரமாணங்களாகஏற்றுக் கொள்ளுதல் என்பதுசுருதிஇசுமிருதிகளில் சொல்லப்பட்டுள்ள எல்லாவற்றையும் அவற்றுள் சொல்லப்பட்டுள்ள ஒரு காரணத்தைக் கொண்டே ஆணையாக ஏற்றுக் கொள்ளுதலாகும்.'இதனை நாத்திகம் ஏற்றுக் கொள்ள மறுக்கின்றது. இந்தியப் பெரு நிலப்பரப்பில் பன்னிரண்டு மதங்கள் தோன்றின என்பர். அவற்றுள் சாருவாகம் என்பது ஒன்று. இது சாருவாகரால் நிறுவப்பட்டது என்பர். இந்தச் சாருவாகம் என்னும் நெறியினை, நாத்திகம் என்ற சொல்லுக்கு மேலே குறித்துள்ள கருத்துகளையும் நடைமுறைகளையும் அப்படியே முழுவதுமாக ஏற்றுக்கொண்ட மதம் என விளக்குவர். இதனையே உலகாயதம் (Materialism) என்றும் சொல்லுவார்கள். 'மனிதர்க்கு அமைந்துள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து பொறிகளாலும் உணரப்படும் புலன்களையே அல்லது அறிவையே அடிப்படையாகக் கொண்டு வாழும் வாழ்க்கை நெறி' என்று நாத்திகத்தைச் சுருக்கமாகக் குறிப்பிடலாம்.

முதலாவதாகக் கடவுளைப் பற்றிய செய்தியை ஆராயலாம், மனிதர்க்கு இயல்பாய் அமைந்துள்ள ஐம்பொறிகளாலும் கடவுளை அறிந்து கொள்ள அல்லது உணர்ந்து கொள்ள முடியாது. ஆகவே, நாத்திகர் கடவுளை இல்லையெனக் கூறுகின்றனர். தமிழகத்தில் பல ஆண்டுகள் வாழ்ந்து மறைந்த பிறவி நாத்திகரான ஈ.வே.ரா. பெரியார் கடவுளை ஒத்துக் கொள்ள இயலாது என்பதற்கு இரண்டு விளக்கங்களைக் கூறியுள்ளார்.மக்களால் கண்டு,கேட்டு, உற்று, உணர்ந்து அனுபவிக்கப்படும் நிலம், நீர், காற்று, நெருப்பு போலக் கடவுள் என்பது உள்ள பொருளாக இல்லை என்பது ஒரு காரணம். இரண்டாவதாக

அவர் சொல்லுவது மிகவும் நுட்பமான காரணமாக அமைந்திருக்கின்றது.

கடவுள் உணர்ச்சி என்பது மனிதருக்கு இயற்கை உணர்ச்சியாக இல்லை. மனிதருக்குப் பசி உணர்ச்சி என்பது இயற்கையாக அமைந்துள்ள உணர்ச்சி. உறக்கம் அல்லது தூக்கம் வருவதென்பது மனிதருக்கு இயற்கையாக அமைந்துள்ள உணர்ச்சி. மூச்சுவிடுதல் என்பதும், கண் சிமிட்டுதல் என்பதும் மனிதர்க்கமைந்த இயற்கை உணர்ச்சியின்பாற்பட்ட செயல்களாகும். இவற்றை எந்த மனிதரும் விலக்கிவிட முடியாது. அப்படியே விலக்கிவிட்டால் வாழவும் முடியாது. அவர்கள் இறந்துவிடுவார்கள். கடவுள் உணர்ச்சி என்பது இவற்றைப் போல இயற்கை உணர்ச்சியாக இல்லை. இது முற்றிலும் செயற்கை உணர்ச்சி ஆகும். இயற்கை உணர்ச்சிகளை மனிதர் தவிர்க்க முடியாது. செயற்கை உணர்க்சிகளை மனிதர் தவிர்த்துவிட்டு வாழலாம். வேண்டுமானால் மேற்கொள்ளலாம். உலகில் நிகழும் இன்ப துன்ப நிகழ்வுகள் கடவுள் உணர்ச்சி உள்ளவர்கள், கடவுள் உணர்ச்சி இல்லாதவர்கள் யாவருக்கும் ஒக்கவே நிகழ்கின்றன. உயிரினங்களுக்குப் பொதுவாய் அமைந்துள்ள சாக்காடு என்பதும் கடவுள் உணர்ச்சி உள்ளவர்கட்கும் அது இல்லாதவர்கட்கும் ஒரே தன்மையில் நிகழ்கின்றது. உலக வாழ்விலும் கடவுள் உணர்ச்சி உள்ளவர்கள் கடவுள் உணர்ச்சி இல்லாதவர்களை விடச் சிறக்க வாழ்ந்தார்கள் அல்லது வாழுகின்றார்கள் என்றும் சொல்ல நடைமுறைச் சான்றுகள் இல்லை. ஆகவே, கடவுள் இல்லையென்பது ஒருபுறம் இருந்தாலும், கடவுளை நினைத்துக் கொண்டு மனிதர் செய்யும் செயல்கள் அவ்வளவும் வீணானவை என்பது பெரியார் கருத்து.

உலகுக்கு முதலாக உள்ள நிலம், நீர், காற்று, நெருப்பு என்னும் பூதங்கள் நான்கு என்பது நாத்திகக் கொள்கை. ஆத்திகர் வானத்தையும் சேர்த்துப் பூதங்கள் ஐந்து என்று சொல்லுவார்கள். காணும் இந்த உலகமும் உலகைச் சார்ந்துள்ள உயிருள்ளவையும் உயிரில்லாதவையுமான அவ்வளவும் நிலம், நீர், காற்று, நெருப்பு என்னும் நான்கு பூதங்களாலும் உருவானவையேயாகும். இந்த நான்கைத் தவிர ஐந்தாவதாக ஒன்றைச் சொல்லுவதற்கு வேறு ஒரு பொருளும் இல்லை. காற்று கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் காற்றின் இயக்கத்தை ஐம்பொறிகளாலும் வேறு பிற வகையாலும் உணரலாம். வானம் என்பது இவ்வாறு இல்லை. அது இல்லாதது. இது தான் என்று குறித்து உணரவோ சொல்லவோ முடியாதது. ஆகவே, வானத்தை நாத்திகர் ஏற்றுக்கொள்ளுவதில்லை.

இரண்டாவதாக உள்ள மறுபிறப்புப் பற்றிய செய்திகள் ஆராயத்தக்கன. உயிர் அல்லது ஆன்மா என்ற ஒன்றை நாத்திகர் ஏற்றுக் கொள்ளுவதில்லை. ஆகவே, அவர்கள் மறுபிறப்பையும் மறுமைப் பயன்களையும் ஏற்றுக் கொள்ளுவதில்லை. அதற்குக் காரணம் ஆன்மா அல்லது உயிர் தான் ஒரு பொருள் என்று சொல்லுவதற்குப் பொருத்தமாகத் தனியே ஒரு பொருளாக இல்லாமையாகும். உடம்பில் உயிர் இருக்கின்றது என்றால் அதனைத் தொட்டுக் காட்ட இயலாது. உடம்பைத் தொட்டால் தொட்ட இடம் கையாக - மார்பாக – முதுகாக – காலாக - முகமாக - தலையாக இன்னும் பிறவாகத் தான் இருக்கும். உடம்பின் வெளிப்புறத்திலும் உட்புறத்திலும் உயிர் அல்லது ஆன்மாவுக்குத் தொட்டுக் காட்ட இடமில்லை. இறந்தவர் உடலை எரிக்கிறார்கள். எரித்த பிறகு இருந்தவர் சாயலில் ஓர் உருவம் எழுந்து வரக் கண்டால் ஆன்மா அல்லது உயிர் உண்டு என்று நம்ப இடமுண்டு. உண்மை அப்படி இல்லை. ஆகவே, நாத்திகர் ஆன்மாவோ உயிரோ இல்லை என்று கூறுகின்றனர். எனவே, நாத்திகர்க்கு மறுபிறப்பைப் பற்றியும், மறுமைப் பயன்களைப் பற்றியும் நம்பிக்கை இல்லை.

ஆன்மா அல்லது உயிர் இல்லையென்றால் உடம்பு எப்படி இயங்குகின்றது? என்று கேட்கப்படுகின்றது. இக்கேள்விக்குப் பெரியார் சொல்லும் விடையை எண்ணிப் பார்க்க வேண்டும். உடம்பு இயங்குகின்றது என்றால் அந்த உடம்பின் இயக்கத்திற்கு உடம்பின் அமைப்புத்தான் காரணமாகும். உடம்பின் அமைப்பிற்கு வேறாக ஒரு பொருள் இருந்து கொண்டு இயக்குகின்றது என்பது பொருந்தாது. கடிகாரம் தானே ஓடுகின்றது. காலத்தைத் தவறாமல் காட்டுகின்றது. நேரத்திற்குத் தக்கவாறு மணியொலி செய்கின்றது. இன்னும் வியக்கத்தக்க அளவில் கணிப்பொறியின் (Computer) செயற்பாடுகள் அமைந்துள்ளன. இவற்றிற்கெல்லாம் அந்தப் பொறிகளின் அமைப்புத்தான் காரணமேயொழிய, அந்தப் பொறிகளின் அமைப்பிற்கு வேறாக ஓர் ஆன்மா – அல்லது உயிர் இருந்து கொண்டு இயக்குகின்றது என்று சொல்ல முடியாது. உடம்பு இயங்குவதற்கு ஏற்ற நிலைமை உள்ள அளவும் இயங்குகின்றது. இயக்கத்திற்கு ஏலாத நிலையை உடம்பு அடைந்தபொழுது தானே நின்று விடுகின்றது. இது இறப்பு என்று சொல்லப்படுகிறது. இயங்கும் ஆற்றல் அல்லது 'சத்து'ப் போய்விட்டது என்பதைச் 'செத்துப் போச்சு என்று கூறுகின்றனர்.

மூன்றாவதாக உள்ள சுருதி, இசுமிருதிகளைப் பிரமாணங்களாக ஏற்றுக் கொள்ளாமை பற்றி ஆராயலாம். உண்மைகளை உலகில் கண்டு ஆராய்ந்து நிறுவுவதற்கு உரிய அளவைகளை மூன்றாகக் கூறுவார்கள்.

அவை 1) காண்டல் அளவை, 2) கருதல் அளவை - அல்லது அனுமான அளவை, 3) ஆகம அளவை என்பனவாகும். நாத்திகர் காண்டல் அளவை ஒன்றை மட்டும் ஏற்றுக் கொள்வர் என்று சிவஞான சித்தியார் பரபக்கத்தில் அருள்நந்தி சிவம் கூறுகிறார்.

காண்டல் என்பது கண்களாற் காண்டல் என்பதை மட்டும் குறிக்காது. ஐம்பொறிகளாலும் உணரப்படும் அல்லது அறியப்படும் எல்லாமும் காண்டல் என்ற அளவையில் அடங்கும்.

கண்ட ஒன்றைக் காணாத போது அனுமானிப்பது அல்லது கருதுவது நிகழ்கின்றது. அதனையே அனுமான அளவை அல்லது கருதலளவை என்று சொல்லுகின்றார்கள். நெருப்பு உள்ள இடத்தில் புகையிருத்தலைக் கண்டு அறிந்த ஒருவன், நெருப்பைக் காணாமல் புகையை மட்டும் தூரத்தில் கண்டபோது அங்கே நெருப்பு உண்டு என்று முடிவு செய்கின்றான். காண்டல் இல்லாதபோது அனுமானம் நிகழ இடமில்லை. கருதலும் நிகழ இடமில்லை. ஆகவே, அனுமானம் அல்லது கருதலளவை தேவையில்லை என்று நாத்திகம் கூறுகின்றது.

சுருதி, இசுமிருதிகளை உருவாக்கியவர்கள் விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ப உருவாக்கியுள்ளார்கள். உண்மைகளைக் கண்டு நடுவு நிலையோடு கூறுதல் என்பது அவர்கட்கு நோக்கமாக இல்லை. வேள்வி முதலான பொருளற்ற சடங்குகளைக் கூறுகின்றார்கள். ஆகவே, அவற்றைப் பிரமாணங்களாக ஏற்றுக் கொள்ளுவதற்கு நாத்திகம் மறுக்கின்றது.

மக்கள் அடைய வேண்டிய உறுதிப் பொருள்களை அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்காக எல்லா மதத்தவரும் கூறுவார்கள். வடமொழியாளர் உறுதிப் பொருள்களைத் தருமம், அர்த்தம், காமம், மோட்சம் என்று கூறுவார்கள். இந்த நான்கனுள் நாத்திகம் பொருள், இன்பம் இரண்டை மட்டுமே கூறும்.

அறம் உயர்ந்தது; இன்பமளிப்பது. துன்பமளிப்பது அறமாகாது. ஆகவே, இன்பத்திற்கு முதலான உறுதிப் பொருளாகிய பொருளில் அறமும் அடங்கும். அறத்தைப் பிரித்துத் தனியே கூற வேண்டுவதில்லை. மக்களுக்கு வேண்டிய உறுதிப் பொருளாக எல்லா மதத்தவரும் கூறும் வீட்டைப் பற்றித் திருவள்ளுவர் தனியே ஒன்றும் கூறவில்லை. உரை கூற வந்த பரிமேலழகர் வீட்டைப் பற்றிக் கூறும்போது வீடு,சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து, அதனை இலக்கண வகையால் வரையறுப்போடு சொல்ல இயலாது என்று கூறுகின்றார். உள்ளத்தால் எண்ணவும் உரையால் சொல்லவும் இயலாத வீட்டை அல்லது மோட்சத்தை நாத்திகம் ஏற்க மறுக்கின்றது. மனிதர்க்கமைந்த ஐம்பொறிகளின் அடிப்படையில் உருவான அறிவைக்கொண்டு வாழ்வாங்கு வாழும் வாழ்வால் பொருளைப் பெருக்கி இன்பமடைந்து வாழ்தலை மனித வாழ்வின் குறிக்கோளாக நாத்திகம் கருதுகின்றது. ந.இரா.

**நாதகுத்தனார்:** இவர் ஐம்பெருங்காப்பியங்கள் எனக் கூறப்படும் நூல்களுள் ஒன்றான 'குண்டலகேசி' என்னும் காப்பியத்தினைத் தமிழில் இயற்றியவராவார். நீலகேசி நூலின் உரையாசிரியர், 'எனதெனச் சிந்தித்தலால்' என்று தொடங்கும் குண்டலகேசிச் செய்யுளில் இடம் பெறும், 'புழுக்குலம் தம்மால் நுகரவும் வாழவும் பட்ட வினைய உடம்பு' என்னும் பகுதியை எடுத்துக்காட்டி (நீல. செய். உரை. 344) அது நாதகுத்தனார் வாக்கு என்று குறிப்பிடுவதால் இதனை உணரலாம். இவர் பெயர், நாதகுப்தனார் என்ற பெயரின் திரிந்த வடிவமாகலாம் என்று ஆய்வாளர் கருதுகின்றனர். இவர், சமண நூலான நீலகேசியை மறுத்துத் தம் சமயக் கொள்கைகளை நிறுவும் கருத்தில் இந்நூலை இயற்றினார் என்று கூறப்படுகிறது. நீலகேசிக் காப்பியத்தின் காலம் கி.பி.10-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகும் என்பதனால், இவர் காலம் நீலகேசி தோன்றிய காலத்திற்கு முற்பட்டதாகும்.

இவர் புத்த சமயக் கோட்பாடுகளை நன்குணர்ந்து அவற்றொடு மாறுபடும் ஏனைய சமயக் கோட்பாடுகளை மறுத்து நிறுவும் திறனும், அளவை நூலுணர்வும் மிக்க கவிஞராவார். வீர சோழிய உரையாசிரியர் இவரை 'அகலக்கவிசெய்வான்' என்பர் (வீரசோழிய உரையாசிரியர் 4-உரை). புறத்திரட்டு என்னும் தொகை நூலாலும், சில உரைகளாலும் அறியப் பெறும் 19 விருத்தப் பாடல்களை இன்று, 'குண்டலகேசி' எனப் பதிப்பித்துள்ளனர்.

இவர் ஆருகத சமயத்தைச் சார்ந்தவர். குண்டலகேசி என்னும் புத்தசமய பிக்குணி ஒருத்தி, வடநாட்டில் விளங்கிய வைணம் என்னும் ஊரில் இவரோடு வாதஞ் செய்து வென்றாள். இவரும், தமிழிலுள்ள குண்டலகேசியின் ஆசிரியரும் புத்த சமயத்தவருமான நாதகுத்தனாரும் வேறுவேறானவராவர். அ.மா.ப.

**நாதமுனிகள்:** வைணவ ஆசாரியர்களுள் முதல்வரான நாதமுனிகள் வீர நாராயணபுரம் என்ற காட்டு மன்னார் கோயிலில் ஈசுவர பட்டாழ்வாருக்குக் குமாரராக ஆனி அனுசத்தில் தோன்றினார். இவரது இயற்பெயர் சிரீரங்கநாதன் என்பதாகும். இவர் யோகப்பயிற்சி கைவந்தவராகையாலே சிரீரங்க நாதமுனிகள் என்றும், சுருக்கமாக நாதமுனிகள் என்றும் வழங்கப்பட்டார். இவர் ஒருசமயம் வடநாட்டுப் பயணம் புறப்பட்டு, திவ்விய தேசங்களை

வணங்கிவிட்டு யமுனைக் கரையிலே கோவர்த்தன புரம் என்ற கிராமத்தில் 'தூயபெருநீர் யமுனைத் துறைவன்' என்ற எம்பெருமானுக்குத் தொண்டு செய்துகொண்டு அங்கேயே வாழ்ந்து வந்தார். ஒரு நாள் காட்டுமன்னார் நாதமுனிகள் கனவில் எழுந்தருளி 'வீர நாராயணபுரத்திற்கு வருவீர்' என்று நியமிக்க, அவரும் யமுனைத் துறைவரிடம் விடை பெற்றுக் கொண்டு வீரநாராயணபுரம் எழுந்தருளினார்.

அங்கு வந்த சிரீவைணவர்கள் சிலர் 'ஆராவமுதே' என்ற திருவாய்மொழியை எம்பெருமான் திருமுன்பே விண்ணப்பிக்க, அதைக் கேட்ட நாதமுனிகள் 'இத் திருவாய்மொழியின் திருநாமப் பாட்டிலே (கடைசிப் பாட்டிலே) 'ஓராயிரத்துள் இப்பத்தும்' என்று அருளிச் செய்யப்பட்ட ஆயிரம் பாட்டுகளும் உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார். 'இப்பத்துப் பாட்டுகள் தவிர மற்றவை கிடைக்கவில்லை' என்று கூறி அவர்கள் சென்றுவிட்டார்கள். உடனே நாதமுனிகள் 'குருகூர்ச்சடகோபன்' என்று ஆழ்வாரால் அருளிச் செய்யப்பட்ட திருக்குருகூருக்குச் சென்று மதுர கவியாழ்வாரின் சீடரான பராங்குசதாசரை வினவினார். அவரும் 'திருவாய்மொழியும், மற்றத் திவ்வியப் பிரபந்தங்களும் முன்பே மறைந்து விட்டன. மதுரகவிகள் நம்மாழ்வார் விடயமாக அருளிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற திவ்வியப்பிரபந்தத்தை எங்களிடம் அளித்து 'இதை ஆழ்வார் திருமுன்பே நியமத்துடன் பன்னீராயிரம் உருகூறினால் ஆழ்வார் சேவை நல்கி அருளுவார்' என்று அருளிச் செய்தார்' என்று நாதமுனிகளிடம் கூறினார்.

நாதமுனிகளும் அவ்வாறே நியமத்தோடு உரைக்க, ஆழ்வாரும் அவர் நெஞ்சிலே தோன்றி 'உமக்கு என்ன வேணும்?' என்று கேட்க, 'தேவரீர் அருளிய திருவாய்மொழியை அடியேனுக்கு இரங்கியருள வேணும்' என்று நாதமுனிகள் கூற, ஆழ்வாரும் அவருக்குத் திருவாய் மொழி முதலான நாலாயிர திவ்வியப்பிரந்தங்களையும், அவற்றின் பொருளையும் அருளி மறைந்தார். சிலகாலம் திருக்குருகூரில் எழுந்தருளியிருந்த நாதமுனிகள் வீரநாராயணபுரம் சென்று, தமது மருமக்களான மேலையகத்தாழ்வானையும், கீழையகத்தாழ்வானையும் கூட்டிக்கொண்டு நாலாயிரத் திவ்வியப்பிரபந்தங்களுக்கும் இராகம், தாளம் முதலானவற்றை அமைத்து, இயலும் இசையும் ஆக்கிப் பாடச்செய்து பரப்பி வந்தார். இவர்தம் முக்கிய சீடர்களான உய்யக்கொண்டார், குருகைக் காவலப்பன் ஆகிய இருவருக்கும் முறையே திவ்வியப் பிரபந்தத்தையும் யோக இரகசியத்தையும் அருளி, பிறக்க இருக்கும் தமது பேரனான யமுனைத்துறைவனுக்கு இவற்றை அளிக்கும்படி நியமித்து விட்டு குருகைக் காவலப்பன் கோயிலில் காலமானார்.

எஸ். கி.

**நாதிர்சா (கி.பி. 1688-1747):** இந்தியாவின் மீது படையெடுத்த ஒரு பாரசீக மன்னர். இவர் பாரசீகம் முன்பு இழந்த பகுதிகளை மீட்ட பெருமை மிகு மன்னர்; திறமைசான்ற படைத்தலைவர்; வெளிநாட்டுப் படையெடுப்பில் ஈடுபட்டு, வெற்றி கண்ட வீரர்; பல கோடி உருபாய் மதிப்புள்ள பெரும் பொருள்களை இந்தியாவினின்றும் கொள்ளை அடித்துச் சென்றவர். இவரது இயற்பெயர் நாதிர் குலி (Nadir Quli) ஆகும். நாதிர்சா (Nadir Shah) என்று இவர் வழங்கப்படுகிறார்.



நாதிர்சா

நாதிர் குலி கி.பி.1688-இல் கொரசானில் இமாம் குலி என்னும் ஏழைத் துருக்கியனின் மகனாகத் தோன்றி இளமைக் காலத்திலேயே போர்ப் பயிற்சி பெற்றார். பாரசீகத்தின் சபாவி வமிசம் (Safavi dynasty) கி.பி. 1722-இல் காந்தகாரின் கில்சைசுகளால் (Ghilzais) அகற்றப்பட்டபின், வட பாரசீகத்தின் ஒரு மூலையில் அடைந்துகிடந்த சபா வமிச இரண்டாம் தாமசுபு சாவினுக்கு (Shah Tahmasp II) ஆதரவாகப் பல போர் நடவடிக்கைகளை மேற்கொண்டு, ஆப்கானியக் கல்சையை முறியடிப்பதில் வெற்றி கண்டார். இவரது சேவையைப் பாராட்டித் தாமசுபுசா இவருக்குத் தாமசுபு குலி கான் (Tahmasp Qulikhan) எனும் விருதை அளித்தான். இவர் பாரசீகப் படையைச் சீர்திருத்தி வலுவுள்ளதாக ஆக்கினார்; கொரசானை கி.பி.1727-இல் கைப்பற்றியதுடன், கி.பி. 1730-ஆம் ஆண்டளவில் பாரசீகத்தை ஆப்கானியரின் மேலாண்மையினின்றும் விடுவித்தார். தமாசுபுசாவின் வீழ்ச்சிக்குப்பின், கி.பி.1732-இல் நாதிர் குலி முன்னவரின் மகனான மூன்றாம் சாஅப்

பாசு (Shah Abbas III) என்னும் இளைஞனை அரியணையில் ஏற்றினார்; அப்பாசின் அரசப் பகர ஆளுனராக (Regent) இருந்து சேவை புரிந்தார். பாரசீகம் முன்பு இழந்த பகுதிகளை ஆட்டமான் துருக்கியிடமிருந்தும், உருசியாவிடமிருந்தும், மீட்டுப் பாரசீகத்தை வலுப்படுத்திய நாதிர் குலி, பாரசீகத்தின் ஆற்றல்மிகு படைத்தலைவராகப் போற்றப்பட்டார்.

சா அப்பாசை கி.பி.1736-இல் பதவியினின்றும் நீக்கிவிட்டு நாதிர்குலி நாதிர் சா என்னும் பட்டப் பெயருடன் பாரசீகத்தின் மன்னனாக மணிமுடி சூடினார். சன்னி சமயப் பிரிவை (Sunni faith) அரசாங்க மதமாக்கினார். காந்தகாரை கி.பி.1738-இல் முற்றுகையிட்டு, அதனைக் கைப்பற்றிக் கொண்டார். இச்சமயத்தில் தில்லி அரசு மொகலாய மன்னனான முகம்மது சா என்பவனால் ஆளப்பட்டு வந்தது. காந்தகாரைச் சேர்ந்த பலர் தில்லி அரசின் ஆணைக் குட்பட்டுக் காபூல் மாநிலத்தில் அடைக்கலம் புகுந்தனர். இந்நிலையில் பாரசீக நாதிர்சா தில்லிக்கு ஒன்றன்பின் ஒன்றாக மூன்று தூதுக்குழுக்களை அனுப்பி, அவர்களுக்கு அடைக்கலம் தரக்கூடாது என்று முகம்மதுசாவிற்கு அறிவுறுத்தினார். உரிய பயன் கிட்டவில்லை. எனவே, சினம் கொண்ட, நாதிர்சா இந்தியாவின்மீது படையெடுத்தார். காபூல் பெசாவர் மாநிலங்களை கி.பி.1738-இல் கைப்பற்றினார். இலாகூர் கி.பி.1739-இல் கைப்பற்றப் பட்டது. இந்நிலையில் மொகலாய பிரபுக்கள் சிலர் பாரசீகரை இந்தியாவின்மீது படையெடுக்கத் தூண்டினர்.

பெரும்படையுடன் கி.பி.1739-இல் இந்தியாவில் நுழைந்த நாதிர்சா, பானிப்பட்டிற்கும் தானேசுவரத்திற்கும் இடையில் உள்ள கர்னல் என்னுமிடத்தில் பாசறை அமைத்தார். அங்கு 55,000, படைவீரர்களைக் கொண்ட பாரசீகப் படையினை 75,000 வீரர்களைக் கொண்ட இந்தியப் படை எதிர்த்தது. கர்னல் (Karnal) போர்க்களத்தில் நடைபெற்ற போரில் மூன்று மணி நேரத்திற்குள் 8000 மொகலாயர் கொல்லப்பட்டனர். முகம்மது சா, ஆசப் சாவை (Asaf Jah) பாரசீக மன்னனிடம் அமைதி உடன்பாட்டிற்கு அனுப்பினார். அமைதிப் பேச்சு தோல்வியில் முடிந்தது. முகம்மதுசா கைது செய்யப்பட்டார்; பாரசீகப் படை தில்லியை நோக்கி விரைந்தது.

**தில்லியில் கொள்ளை:** தில்லியில் நாதிர்சா இறந்துவிட்டாரெனப் பொய்யான செய்தி கிளப்பி விடப்பட்டதால், பாரசீக வீரர் 900 பேர் கொல்லப் பட்டனர். அதனால் சினங்கொண்ட நாதிர்சா தில்லியைத் தீக்கிரையாக்கினார். ஏறத்தாழ 30000 இந்தியர் கொல்லப்பட்டனர். பின்னர் முகம்மது சாவின் தலையீட்டால் அழிவுகள் நிறுத்தப்பட்டன. அரசாங்க நிதியகம் கைப்பற்றப்பட்டது. மயிலாசனமும், கோகினூர் வைரமும் கைப்பற்றப்பட்டன; ஏறத்தாழ 15 கோடி பணமும் கைப்பற்றப்பட்டது; மேலும், 1000 யானைகளும், 7000 குதிரைகளும், 10000 ஒட்டகங்களும், 130 எழுத்தாளர்களும், 200 சிற்பிகளும், 100 கொத்தனார்களும் பாரசீகரின் உடைமைகள் ஆயினர். சிந்து நதிப்பகுதியில் இருந்த மொகலாய அரசுகள் பாரசீகர் வசமாயின. ஆப்கானிசுத்தானத்தைப் பெற்ற பாரசீகர், இலாகூரை ஆண்ட மொகலாய ஆளுநர் ஆண்டு தோறும் 20 இலட்ச உருபாய் கப்பம் கட்ட வேண்டுமென்றும் விதித்தார்.

இரண்டு மாதங்கள் தில்லியில் தங்கியிருந்த நாதிர்சா தம் பெயரில் நாணயங்களை வெளியிட்டார்; பள்ளிவாசலில் தம் பெயரில் குத்பாவை (Khutba) ஓதச் செய்தார். தில்லியை விட்டு கி.பி.1739-இல் பயணமான நாதிர்சா, கி.பி.1740-இல் பொக்காராவையும் கீவையும் (Bokhara & Khiv) வென்று புகழ்க் கொடி நாட்டினார். இவரது புகழ் எங்கணும் பரவியது; இருப்பினும் இவர் ஒரு பண ஆசைபிடித்தவர்; பாரசீகத்தில் கொடுங்கோல் ஆட்சியை நடத்தினார்; எனவே, கி.பி.1747-இல் கொரசானில் ஏற்பட்ட கலகத்தில் கொல்லப்பட்டார்.

கடற்படையின் சிறப்பை உணர்ந்த முதல் பாரசீகர் இவரே. ஆட்டிடையரான இவர் மக்களை ஆட்டுவித்துக் கொடுங்கோலராகவே ஆட்சிபுரிந்து மாண்டார். ம.இ.

**துணை நூல்:**

Sathianathaier, R., The Political and Cultural History of India' - Vol. III, S. Viswanathan, Madras. 1980.

***நாதுலாக் கணவாய்***: இரு மலைத் தொடர்களுக்கு இடையில் அமைந்துள்ள தாழ்நிலப் பகுதி கணவாய் எனப்படும் நாதுலாக் (Natulal) கணவாய் சிக்கிம்-இமயமலை எல்லையில் அமைந்துள்ளது. இரு நிலப்பகுதிகளுக்கும் போக்குவரத்துத் தொடர்பினை ஏற்படுத்தும் நுழைவாயிலாக இது விளங்குகிறது. திபெத்தையும் சிக்கிமையும் தொடர்புபடுத்தும் முக்கிய கணவாயாக இது விளங்குவதுடன் சியாங்கிசி (Gyangtse) மேட்டு நிலத்துடன் தொடர்புற்றும் உள்ளது. இக்கணவாயின் வடமேற்கே கஞ்சன்சங்கா (Kanchenjunga) என்னும் உயர்ந்த மலைத் தொடர் இருக்கிறது. எஸ்.ஏ.நோ.

***நாநார்த்த தீபிகை***: நிகண்டு நூல்களுள் காலத்தால் பிற்பட்டது இந்நூல்; கவிராயர் முத்துசாமிப்பிள்ளையவர்களால் இயற்றப்பட்டது. திவாகர நிகண்டு காலத்தால் முற்பட்டது. இதன் பதினொன்

நாம் தொகுதி, 'ஒரு சொல் பல பொருளுரைப் பது'. இதிலடங்கிய சொற்கள் 377; பிங்கலந்தையில் பத்தாம் தொகுதியாகக் காணப்படும். 'ஒரு சொல் பலபொருள்' எனும் தலைப்பில் 1091 சொற்கள் உள்ளன. சூடாமணி நிகண்டில் இத்தலைப்பில் ககர எதுகை முதல் னகர எதுகை ஈறாக 1575 சொற்கள் 310 விருத்தங்களில் காணப்படுகின்றன.

பின்னெழுந்த அகராதி நிகண்டு, 3368 சொற்களை அகர முதலியில் கூறியது. அரும்பொருள் விளக்க நிகண்டு, 3200 சொற்களை 700 விருத்தங்களில் கூறியது. பொதிகை நிகண்டு முதற்பகுதி 2526 சொற்களை 583 விருத்தங்களில் கூறியது. அதன், இரண்டாம் பகுதி 2228 சொற்களை 140 விருத்தங்களில் கூறியது. இவ்வாறு வளர்ச்சியினையுடைய நிகண்டு வரிசையில் 5452 சொற்களை 1102 விருத்தங்களில், சூடாமணி நிகண்டின் பதினோராம் தொகுதியின் முறையைப் பின்பற்றிக் ககர முதல் னகர ஈறாக எதுகை அமைப்பில் இயற்றப்பட்டது நாநார்த்த தீபிகை.

இதில், தற்சிறப்புப் பாயிரம், ஓரெழுத்துப் பல பொருள், ககர முதல் னகரம் வரையுள்ள பதினெட்டு எதுகைகள் ஆகியவை இடம் பெற்றுள்ளன. வடமொழிச் சொற்கள் மிகுதியும் இடம் பெற்றுள்ளன.

தற்சிறப்புப் பாயிரம் மூலம் இந்நூலாசிரியர் செண்பகக் கவிஞனின் பேரன் என்பதும், எழுதாயுதப் பெருமாள் மைந்தன் என்பதும் புலனாகின்றன. இவரது வழிபடு தெய்வம் திரிபுரசுந்தரி. இவர், பழனிக்கடுத்த உடுமலைப்பேட்டை என்னும் ஊரினர்; சைவ வேளாள மரபினர்; திருநெல்வேலியை அடுத்த பாவூர்சென்று குடியேறியவர். இவர் தம் குடும்பத்தில் பெற்றோர்கட்கு ஒரு பிள்ளையே பிறப்பது வழக்கம். அப்பிள்ளை சிறுவயதில், பழனிப் பதிக் குமாரக் கடவுள் சந்நிதியடைந்ததும், கவிபாடும் ஆற்றல்பெறும் வழக்கம் உடையது. எனவே இவர் பரம்பரைக் கவிராயர்.

நூலாசிரியரின் மகளை மணந்தவரும், மருமகனுமாகிய சுவாமிநாத பிள்ளையவர்கள் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார். ஆயினும் நூலாசிரியர் கைப்படஎழுதிய ஓலைச் சுவடி கிடைக்கவில்லை. இவர்தம் மகனார் தமிழறிஞர், சோமசுந்தரம் பிள்ளையவர்கள் எழுதி வைத்திருந்த காகிதக் கையெழுத்துப் பிரதி கொண்டே இந்நூல் அச்சிடப் பட்டது. இதற்கு முன்கூறிய சுவாமிநாத பிள்ளை உரையெழுத முயன்றும் முடியாமற்போயிற்று. பின்னர்ச் சோமசுந்தரம்பிள்ளையவர்களும் முயன்று நிறைவேறவில்லை.

இந்நூலாசிரியரின் வழித் தோன்றலான அறிஞர் க.அனவரத விநாயகம்பிள்ளை எம்.ஏ, எல்.டி., பெரிதும் முயன்று, இதற்காகவே வடமொழியும் கற்று உரையெழுதிப் பதிப்பித்துள்ளார். இதனை, சென்னைப்பல்கலைக்கழகம் 1936-இல் வெளியிட்டுள்ளது. வீ.சொ.

**நாபோப்போலாசார்:** இவர் பண்டைய பாபிலோனியப் பேரரசன் நெபுகாத்நேசரின் தந்தை. நாபோப்போலாசார் (Nabopolasser) ஆதியில் பாபிலோனியாவின் ஆளுநராக இருந்தார். சால்திய (Chalean) வீரரான இவர், அந்நாட்டில் ஏற்பட்ட கலகத்தை அடக்கிப் பெருமை பெற்றார். அப்பகுதியில் மேலாண்மை செலுத்திய அசிரியப் பேரரசு வலிமை குன்றி வந்ததைப் பயன்படுத்திக் கொண்டு, தம் ஆட்சியை விரிவுபடுத்தி கி.மு.625-இல் பாபிலோனியாவில் தனித்த அரசை நிறுவினார். அசிரியர்களின் வலிமை குன்றுவதற்குக் காரணமாக இருந்த மீதியர் (Medes) என்னும் வமிசத்தவருடன், இவர் நட்புறவு கொண்டதுடன், மீதிய அரசிளங் குமரியைத் தம் மகனுக்கு மணம் செய்துவைத்தார். இந்த நட்புறவின் விளைவாக, அசிரியத் தலைநகர் நினிவே (Ninevah) இவர் வசம் வந்தது. மேலும், பல வெற்றிகளைப் பெற்ற நாபோப்போலாசார் கி.மு. 604-இல் உயிர்நீத்தார். தெ.பா.

**நாம் உணர்வு:** ஒரு வட்டாரத்தில் மக்கள் குழுமிக் கூடி வாழும்போது அந்த வட்டாரத்துக் குள்ளேயே அவர்களுடைய வாழ்க்கை நிலைபெற்று அமைந்துவிடுகிறபோது அந்த வட்டாரத்துடன் அவர்கள் ஒன்றுபட்டு விடுகிறார்கள். இந்த வட்டாரமும், சமுதாயமும் தமக்குரியவை என்ற ஓர் உணர்வை அவர்கள் அடைகிறார்கள். இந்தஉணர்வு 1) நாம் உணர்வு (We Feeling), 2) பங்கு உணர்வு (Role Feeling), 3) சார்பு உணர்வு (Dependency Feeling) என்ற மூன்று வகையான உணர்வுகளை உள்ளடக்கியிருக் கிறதென மெக் ஈவர் (Mac Iver) என்ற அறிஞர் குறிப்பிடுகிறார்.

'ஒரே வட்டாரத்தில் வாழும் நாம் அனைவரும் ஒன்று' என்ற உணர்வு மக்களுக்கு ஏற்படுவது நாம் உணர்வு எனப்படுகிறது. இந்த உணர்வு அவர்களுள் ஒற்றுமையை வளர்க்கிறது. மேலும் அவர்கள் வேறுபாடின்றி ஒன்றாகக் கூடிவாழ வழி வகுக்கிறது. தன்னைப் போன்றோருடன் சேரத் தூண்டும் இந்த 'நாம்' என்னும் உணர்வுதான், கூட்டு வாழ்க்கைச் சமுதாயத்தில் ஏற்பட அடிப்படைக் காரணமாக இருக்கிறது.

பொதுவாக ஒவ்வொரு குழந்தையும் குழுக்களின் தொடர்பினாலும் செல்வாக்கினாலும் 'நாம்' என்ற உணர்வைப் பெறுகிறது. அதாவது, ஒவ்வொரு குழந்

தையும் முதல்நிலைக் குழுக்கள், குடும்பம், உற்றார் உறவினரை உள்ளடக்கிய விரிந்த குடும்பம் (Wider Family), விளையாட்டுக் குழு (Play-Group), அண்டையங்கள் (Neighbourhood) முதலிய குழுக்களின் தொடர்பினாலும், செல்வாக்கினாலும் 'தான்' என்ற உணர்வினோடு 'நாம்' என்ற உணர்வையும் பெற்றுச் சமூக இயல்புடையதாகிறது.

முதல்நிலைக் குழுக்களுடன் முதலாவதாகத் தொடர்புகொண்ட குழந்தை, மேலும் வளர்ச்சி பெறப் பெற இடைநிலை, வழிநிலைக் குழுக்களிலும் (Secondary Groups) அங்கம் வகிக்கத் தொடங்குகிறது. குழந்தையின் வளர்ச்சிநிலை பெருகப் பெருக இத் தொடர்புகளும் மேன்மேலும் பெருகுகின்றன. ஒரு குழந்தையின் 'நாம்' என்னும் உணர்ச்சி, இளமையில் அதன் குடும்ப உறுப்பினர்களை மட்டுமே உள்ளடக்கியதாயிருக்கும். ஆனால், அக் குழந்தை தொடர்ந்து வளர்ச்சி அடையும்போது அவ்வுணர்ச்சி மேலும் பெருகிப் பலரை உள்ளடக்கி வளரும். இவ் வளர்ச்சியைப் பின்வரும் விரிவடையும் சுருள் (Expanding Spiral) வடிவத்தில் அமைத்து இரட்கிளிபு பிரவுன் (Redcliff Brown) என்ற அறிஞர் விளக்குகிறார். இதனைச் சமூக இடைவினைச் சுழல் (Cycle of Social Interaction) என அவர் குறிப்பிடுகிறார்.

மும், வளமான வாழ்வும் அமையும். அதாவது ஓர் அனைத்துலக நோக்கம் (International Look) எல்லோரிடத்திலும் உருவாகுதல் நன்மைபயப்பதாகும்.
பூ.த.

**நாம்பென்**: இதுகம்போடியாவின் தலைநகர். கம்போடியாவின் தென்மேற்குப் பகுதியில் மேக்காங்கு ஆறும் தான்லே சாப்பு (Tonle Sap) ஆறும் கூடுமிடத்தில் உள்ள நாம்பென் (Phnompenh) ஒரு சிறந்த வாணிக மையமாக வளர்ந்துள்ளது. அகதிகள் இங்கு வந்து கொண்டும்போய்க் கொண்டுமிருந்ததால் இதனுடைய மக்கள் தொகைமாறிக்கொண்டே வந்துள்ளது. முன்பு 2.5 மிலியனாக இருந்த இதன் மக்கள் தொகை, 1983-ஆம் ஆண்டு மதிப்புப்படி 500,000 ஆகிவிட்டது. கம்போடியாவில் 1975-ஆம் ஆண்டில் நடந்த உள்நாட்டுப் போரில் பொதுவுடைமைக் கட்சி வெற்றிபெற்றவுடன், நாம்பென் நகர மக்கள், கட்டாயமாகச் சுற்றுப்புறக் கிராமங்களுக்கு இடம்பெயர நேர்ந்தது. அங்கே நிலத்தில் உழுது பணிசெய்யும் பொறுப்பு அவர்களுக்குக் கட்டாயமாக வழங்கப்பெற்றது.

இது, கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் நிறுவப்பெற்றது. இந்நகரம் கி.பி. 1432-ஆம் ஆண்டில் கெமெர் அரசின் தலைநகராகியது. பிறகு கி.பி. 1867-இல் கம்

**சமூக இடைவினைச் சுழல்**

| குழந்தை | நாம் | நாம் | நாம் | நாம் | நாம் | நாம் |
|---|---|---|---|---|---|---|
| | பெற்றோர்களும் குடும்ப உறுப்பினர்களும் | சுற்றுப்புறச் சமுதாயம் | விளையாட்டுக் குழுவினரும் பள்ளித் தோழர்களும் | தன்மொழியினரும் சமயத்தினரும் | தன் நாட்டவர் | உலகெங்கும் பரவியுள்ள மனித குலம் |

அறிவு முதிர்ச்சி பெற்ற முழு வளர்ச்சியடைந்த (Well Educated and Mature Individual)மனிதனிடம் உள்ள 'நாம்' என்னும் உணர்வு, மனித சமுதாயத்தையே உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். இத் தகையமனிதன் 'யாதும்ஊரே, யாவரும்கேளிர்' என்னும் விரிந்த பொது நோக்குடையவனாக இருப்பான். இத்தகையோரை உருவாக்குதலில் சமுதாயத்துடன் கல்விக்கும் முக்கிய பங்குண்டு. முழுமையான சமூக இயல்பினை (Sociability) அடைதல் எனப்படுவது இத்தகைய பரந்த மனப்பான்மையைப் பெறுவதையே குறிப்பதாகும். இம் மனப்பான்மை வளர்ச்சி பெறுவதைப் பொறுத்தே மனித இனத்தின் முன்னேற்ற

போடியாவின் தலைநகராயிற்று. இரண்டாம் உலகப் போர்க் காலத்தில் இது சப்பானியர் கட்டுப்பாட்டின் கீழ் வந்தது. அக்காலத்திலும் பிறகு ஏற்பட்ட பொதுவுடைமைக் கிளர்ச்சிகளினாலும் இந்நகர் பல அழிபாடுகளுக்கு உட்பட்டது. அழிவுற்ற பல இடங்களில், சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. தேசிய பல்கலைக் கழகம், கலை, பொறியியல் கல்லூரிகள், பௌத்தப் பல்கலைக் கழகம், தேசிய இராணுவநிறுவனம்முதலியனவாம்.
தெ.பா.

**நாமக்கல்**, தமிழ்நாட்டில் சேலம் மாவட்டத்திலுள்ள செழிப்பு மிக்க வட்டம். புகழ்மிக்க கொல்லி

மலை, மோகனூர், பரமத்தி ஆகியவை இவ்வட்டத்தில் தான் உள்ளன. சிறந்த கவிஞரும், சுதந்திரப் போராட்ட வீரருமான நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை நாமக்கல்லைச் சார்ந்தவரே.

இவ்வட்டத்தின் தென்கோடியில் காவிரி ஆறு பாய்ந்து, திருச்சி மாவட்டத்தினின்றும் சேலம் மாவட்டத்தைப் பிரிக்கின்றது. வரலாற்றுப் புகழ் மிக்க சேந்தமங்கலம் இவ்வட்டத்தில் உள்ளது. வல்வில் ஓரி ஆண்ட கொல்லிமலை இவ்வட்டத்திற்குப் புகழ் சேர்க்கிறது. கொல்லிமலை அறப்பளீசுவரர் கோயில், மோகனூர் சர்க்கரை ஆலை, மோகனூர் தொழில்நுட்பக் கல்லூரி, இராசவாய்க்கால், கபிலர் மலை ஆகியன இவ்வட்டத்திற்குப் பெருமை அளிக்கின்றன.

**நாமக்கல் நகரம்:** இது ஒரு நகராட்சி. ஏறத்தாழ 18 ச.கி.மீ. பரப்பளவுள்ள இந்நகரின் நடுவில் நாமக்கல் என்ற ஒரே கல்லால் ஆன குன்றுள்ளது. இக் குன்று, நகரத்தைக் கோட்டை என்றும் பேட்டை என்றும் இரண்டாகப் பிரிக்கிறது. மேல்பகுதி கோட்டை, கீழ்ப் பகுதி பேட்டை. புண்ணிய நகரமான நாமக்கல் சமயத்துறையிலும் கலைத்துறையிலும் பெரும் புகழ் பெற்றுள்ளது.

நாமக்கல் மலையின் மீது கோட்டை ஒன்று உள்ளது. இதனைச் சேந்தமங்கலம், நாமக்கல் பகுதிகளின் பாளையக்காரரான இராமச்சந்திர நாயக்கர் கட்டினார் எனக் கூறுவர். மைசூர் அரசனின் கீழ்ப்பணியாளாக இருந்த இலட்சுமி நரசிம்மையாவே இதனைக் கட்டினார் என்பாரும் உளர். கர்னல் உடு (Colwood) கி.பி. 1768-இல் இக்கோட்டையை ஐதரிடமிருந்து கைப்பற்றி, அதே ஆண்டில் ஐதரிடம் இழந்தார். ஐதர் அலி, திப்பு சுல்தான் ஆட்சிக் காலத்தில் மைசூர் அரசின் சார்பில் ஒருவர் இக்கோட்டையில் அமர்த்தப்பட்டார். பின்னர் இது ஆங்கிலேயர் வசமானது. காந்தியடிகள் நாமக்கல்லிற்கு 1933-இல் வந்துள்ளார்.

சாளக்கிராம மலை எனவும் வழங்கப்பெறும் நாமகிரியின் அடிவாரத்தில் கமலாலயம் என்னும் புராணப் புகழ் பெற்ற குளம்உள்ளது.

கருநாடக இசையில் வல்லுநரான ‘பல்லவி நரசிம்ம ஐயங்கார், காந்தியடிகளுடன் விடுதலைப் பேராட்டத்தில் பங்குகொண்ட நாகராச ஐயங்கார் ஆகியோர் நாமக்கல்லிற்குப் பெருமை உண்டாக்கினர். இங்குக் கால்நடை மருத்துவ ஆராய்ச்சிக் கல்லூரியும், ஆடவர் அரசு கலைக் கல்லூரி ஒன்றும், மகளிர் அரசு கலைக் கல்லூரி ஒன்றும், நகராட்சிப் பெண்கள் மேனிலைப் பள்ளி ஒன்றும், ஆண்கள் மேனிலைப் பள்ளி இரண்டும் உள்ளன. மாவட்டக் கல்வி அதிகாரி அலுவலகம், மாவட்டப் பொதுநலமையம், நீதிமன்றங்கள், மாவட்டப் பதிவுஅலுவலகம் முதலியன உள்ளன. கோழிவளர்ப்புக்கு இந்நகர்பெயர்பெற்றது. இது 1970-இல் நகராட்சியாயிற்று. இதற்கு அனைத்து நகரங்களுடன் பேருந்துவசதித் தொடர்பு உண்டு. ம.இ.

**தொல்லியல்:** நாமக்கல் மலையில் இரண்டு குடைவரைகள் உள்ளன. இவை அதியமான் மரபில் தோன்றிய குணசீலன் என்பவரால் அமைக்கப்பட்டவை. தகடூரைத் தலைநகராகக் கொண்டு கொங்கு நாட்டுப் பகுதியை ஆண்டவர்கள் அதியமான் வமிசத்தினர்.

நாமக்கல் மலையிலுள்ள இரண்டு குடைவரைகளும் திருமாலுக்காக எடுக்கப்பட்டவை. நரசிம்மர் குகைக் கோயில் நாமக்கல் மலையின் மேற்குப் பகுதியின் அடிவாரத்திலும், பள்ளிகொண்ட பெருமாள் குகைக் கோயில் கிழக்குப் பகுதியிலும் அமைக்கப்பட்டுள்ளன. இரண்டாம் கோயில் மலையின் மேல் பகுதியில் எடுக்கப்பட்டுள்ளதால் அங்குச் செல்லப் படிக்கட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன.

நரசிம்மர்குகைக்கோயில் செவ்வக வடிவ அமைப்புடையது. இக் குடைவரைக் கோயில் அதிட்டானத்தில் உபானம், சகதி, திரிபட்ட குமுதம், கண்டம், பட்டி ஆகியன காணப்படுகின்றன. கருவறையின் முன்பகுதியில் அர்த்த மண்டபம் ஒன்றும் உள்ளது. இந்த மண்டபத்தில் நான்கு தூண்களும் இரண்டு அரைத் தூண்களும் வடிக்கப்பட்டுள்ளன. இத் தூண்கள் பல்லவர்களின் குடைவரைத் தூண்களைப் போலல்லாமல் தனித்தன்மை பெற்றுக் காணப்படுகின்றன. தூண்களுக்கு மேல் கூடு அமைப்புகள் உள்ளன. இக் கூடுகள் அரைவட்ட அமைப்புடையன. அவற்றின் மத்திய பகுதியில் மனித உருவங்களின் தலைப் பாகங்கள் மட்டும் செதுக்கப்பட்டுள்ளன.

நரசிம்மர்குகைக் கோயிலில் திருமாலின் அவதாரங்கள் புடைப்புச் சிற்பங்களாகக் காணப்படுகின்றன. வைகுண்ட நாராயணன் புடைப்புச் சிற்பம் அர்த்த மண்டபத்தின் இடச் சுவரில் உள்ளது. சுற்றிப் படுத்திருக்கும் பாம்பின்மேல் திருமால் அமர்ந்துள்ளார். பாம்பின் ஐந்து தலை திருமாலுக்குக் குடையாக உள்ளது. நான்கு கரங்களுடன் உள்ள திருமாலின் பின்னிரு கரங்களில் சங்கும் சக்கரமும்முன் வலக்கரத்தில் கடக முத்திரையும் இடக் கரம் தொடைமேல் வைத்திருக்குமாறும் செதுக்கப்பட்டுள்ளன. கீர்த்தி மகுடமும் மகர குண்டலமும் உள்ளன. திருமாலுக்குக் கீழ்ப் பாலநரசிம்மர் சிங்க முகத்துடனும் நான்கு கரங்களுடனும் காணப்படுகின்றார். இவருக்கருகில் பிரமன் மூன்று தலையுடனும் நான்கு கரங்களுடனும் காட்சியளிக்கின்றார்; அக்க மாலை, கமண்டலம், கடக

முத்திரை போன்றவற்றுடன் உள்ளார். பிரமனுக்கு மேல் சந்திரன் கூப்பிய கரங்களுடன் நிற்கின்றார். திருமாலின் வலப்புறம் சிவன் நின்றநிலையில் உள் ளார்; சடாமகுடத்துடனும், நான்கு கரங்களுடனும் காட்டப்பட்டுள்ளார். மான், பாம்பு ஆகியன இரு கைகளிலும், கடகமுத்திரை ஒரு கையிலும் உள்ளன. மற்றொரு கை கட்டியவலம்பித நிலையில் உள்ளது. காதுகளில் பாம்புக் குண்டலங்கள் உள்ளன. சிவனுக்கு மேல் சூரியன் கூப்பிய கரங்களுடன் நிற்கின்றார். சிவனுக்குக்கீழ் இரண்டு கரங்களுடன் முட்டியிட்டிருக் கும் நிலையில் மார்க்கண்டேயன் மலருடனும், விசுமய முத்திரையுடனும் காட்டப்பட்டுள்ளான். மார்க்கண் டேயனுக்கு முன் முட்டியிட்டிருக்கும் பெண் பூதேவி யாக இருக்கக்கூடும் என்பது கருதப்படுகின்றது. எல் லாச் சிற்பங்களிலும் பூணூல் கைகளின் மேல் ஏறிச் செல்வது போல் காட்டப்பட்டுள்ளது.

மண்டபத்தின் மற்றொரு பகுதியில் உக்கிர நர சிம்ம மூர்த்தி புடைப்புச் சிற்பமாக உள்ளது. இரணி யனை அழிப்பதுபோன்றுள்ள நரசிம்ம அவதாரத்தில் எட்டுக்கரங்கள் உள்ளன. முன்னிரு கரங்கள் தம் தொடைமேல் படுத்திருக்கும் இரணியனின் வயிற் றைக் கிழிப்பது போன்றும், மற்ற இரு கரங்களில் இரணியனின் தலையும் காலும் உள்ளனவாகவும் உள்ளன. பின்னிரு கரங்களில் சங்கும், சக்கரமும் உள்ளன. நரசிம்மாவதாரத்தில் காணப்படுகின்ற சிங்கத்தின் முகம் சாளுக்கிய கலைப்பாணியை ஒத்துக் காணப்படுகின்றது.

குடைவரையின் மையப்பகுதியில் கேவல நரசிம்ம மூர்த்தி புடைப்புச் சிற்பமுள்ளது. சூரியனும் சந்திர னும் சாமரம் வீசுபவர்களாகக் காணப்படுகின்றனர். இடப் பக்கத்தில் சிவனும் வலப் பக்கத்தில் பிரம னும் செதுக்கப்பட்டுள்ளனர். முனிவர்கள் இரண்டு வரிசையில் முன்னர் நிற்பவர்கள் போல் காட்டப்பட் டுள்ளனர்.

மண்டபத்தின் வலப் பாகத்தில் வராகாவதாரம் உள்ளது. திருமால் இரண்டு கரங்களுடன், கம்பீர மாக வராக அவதாரத்தில் காட்டப்பட்டுள்ளார். ஒரு கையின்மேல் பூதேவி கூப்பிய கரங்களுடன் அமர்ந்துள்ளார். வராகாவதாரத்தின் கால்களின் கீழ்ப் பகுதி காட்டப்படவில்லை. ஆதிசேடன் பாம்பு விசுமய முத்திரையுடன் காணப்படுகின்றது. வராகாவதாரத் தின் தலைக்கு மேல் நான்கு உருவங்கள் காட்டப் பட்டுள்ளன. இவை முனிவர்களாக இருக்கலாம் என்று கருதுகின்றனர்.

நான்காம் புடைப்புச் சிற்பமாக வலச் சுவரில் வாமனாவதாரம்உள்ளது. இதில் இரண்டு கருத்துகள் ஒன்றாகச் செதுக்கப்பட்டுள்ளன. திருமால்வாமனாவ தாரமாகச்சிறிய உருவத்தில் கையில் குடையுடன் காட்டப்பட்டுள்ளார். ஒரு கையில்மாபலிச் சக்கர வர்த்தியிடமிருந்து கொடையை வாங்குவது போன்று உள்ளது. மாபலிச் சக்கரவர்த்தி நின்றநிலையில் கையில் உள்ள கெண்டியில் தண்ணீரைத் தாரை வார்த்துக் கொடுப்பது போன்று காட்டப்பட்டுள்ளது. பலிக்குப் பின்னிருந்து வாமனாவதாரத்தின் உண்மை நிலையை மெதுவாக எடுத்துக்கூறுகின்ற நிலையில் சுக்கிராச்சாரியார் காட்டப்பட்டுள்ளார். இதற்குமேல் குதிரையின் தலைப்பாகம் மட்டும் உள்ளது. இது அசுவமேத யாகத்தைக் குறிப்பதாகும்.

இரண்டாம் பகுதியாக மாபலிச் சக்கரவர்த்தி யிடம் வரம்பெற்று இரண்டாம் அடியாக வானை அளக்கும் காட்சி காட்டப்பட்டுள்ளது. மூன்றடி மண் கேட்ட திருமால் திரு விக்கிரம அவதாரமாக வலக் காலைத் தூக்கிய நிலையில் காணப்படுகின்றார். கீர்த்தி மகுடமும் அதற்குமேல் குடையும் உள்ளன. நான்கு கரங்களில் இரண்டில் சங்கும் சக்கரமும் உள் ளன. கீழ்ப்பகுதியில் திருமாலின் வாகனமான கருடன் காட்டப்பட்டுள்ளது.

பள்ளி கொண்டுள்ள பெருமாளின் குடைவரைக் கோயில் செவ்வகமாக வடிக்கப்பட்டுள்ளது. இதிலும் கருவறை, மண்டபம் ஆகிய இரு பகுதிகள் உள்ளன. அர்த்தமண்டபத்தில் இரண்டு தூண்கள் உள்ளன. மண்டபத்தின் முன்பகுதி இப்போது அடைக்கப்பட்டு நுழைவாயிலில் இரண்டு படிக்கட்டுகள் காணப் படுகின்றன. திருமால் கார்க்கோடன் என்னும் ஐந்து தலைப் பாம்பின்மேல் பள்ளி கொண்டுள் ளார். இரண்டு கரங்களில் ஒன்று கடக முத்திரை யொடும் மற்றொன்று நீட்டிய நிலையிலும் உள்ளன. இங்குள்ள தூண்களில் கல்வெட்டுகள் உள்ளன. இந்தக் கல்வெட்டில் இக் குடைவரை 'சயன கிரகம்' என்று பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. பள்ளி கொண் டுள்ள திருமாலுக்கருகில் சந்திரன், சூரியன் ஆகி யோர் உள்ளனர். திருமாலின் மேல்பாகத்தில் பிரமன் தாமரையில் அமர்ந்துள்ளார். நாரதர், தும்புரு ஆகியோருடன் மார்க்கண்டேயன், கருடன், வருணன், சிவன் போன்றவர்களும் காணப்படுகின்ற னர்.

மண்டபத்தின் வடபகுதியில் வாமனாவதாரம் உள்ளது. இதுவும் நரசிம்மர்குடைவரையில் உள்ள வாமனாவதாரம் போன்று காணப்படுகிறது. ஆனால், வாமனாவதாரத் தோற்றத்தில் சிறிய பிள்ளையாக இல்லாமல் முதிர்ந்த பிராமணனாகக் காட்சியளிக்கின்றார்.மாபலிச்சக்கரவர்த்தியின் அருகில் காட்டப்பட்ட அவருடைய குரு சுக்கிராச்சாரியார்

இல்லை. நரசிம்மர்குடைவரையில் உள்ளது போலவே திரு விக்கிரம அவதாரம் உள்ளது. சங்கர நாரா யணன் சிற்பமும் மண்டபத்தில் உள்ளது. இந்த உரு வத்தில் வலப்புறம் சிவனும் இடப்புறம் திருமாலும் காணப்படுகின்றனர். சிவனுக்குரிய பகுதியில் மான், பாம்பு ஆகியன உள்ளன. திருமாலுக்குரிய பகுதியில் சங்குகொண்டும், கட்டிய வலம்பித முத்திரையிலும் கைகள் உள்ளன. மகர குண்டலம் திருமாலுக்கும் பாம்புக் குண்டலம் சிவனுக்கும் உள்ளன. நின்றநிலை யில் உள்ள சங்கரநாராயணனைச் சுற்றி ஏழு கந்தருவ உருவங்கள் வடிக்கப்பட்டிருக்கின்றன.

பாலநரசிம்மர்புடைப்புச் சிற்பம் சங்கரநாரா யணன் சிற்பத்திற்கு அருகில் உள்ளது. நான்கு கரங் களுள் இரண்டில் சங்கு, சக்கரம் உள்ளன. மலரினால் செய்யப்பட்ட முப்புரிநூல் காணப்படுகிறது.

பள்ளிகொண்ட பெருமாள் குடைவரையில் நான்கு கல்வெட்டுகள் உள்ளன. தூணில் உள்ள இந்தக் கல்வெட்டுகளில் கிரந்த எழுத்துகளும், வட மொழியும் பயன்படுத்தப்பட்டுள்ளன.ஒருகல்வெட்டில் இக் குகை 'அதியந்த விட்டுணுகிரகம்' என்றுள்ளது. அதியமான் வமிசத்து அரசனால் எடுக்கப்பட்ட திரு மால் கோயில் என்பது இதற்குப் பொருள். இரண் டாம் கல்வெட்டு 'அதியந்தர விட்டுணுகிரகம்' என்று குறிப்பிடுகின்றது. மூன்றாம் கல்வெட்டு சிதைந்துள் ளது. எனினும்,அதியர் வமிசத்தைச் சார்ந்த'சோமா' என்பவரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. 'சோமா' என்பது இக் குகைக் கோயிலை எடுத்த குணசீலனின் மற்றொரு பெயர். நான்காம் கல்வெட்டில் 'சயன கிரகம்' என்று பொறிக்கப்பட்டுள்ளது. இவற்றுடன் இக் கோயிலை எடுத்த அதியமான் வமிசத்து அரச னான குணசீலனின் ஒன்பது பட்டப்பெயர்கள் வெட்டப்பட்டுள்ளன.

இக் கல்வெட்டுகளின் எழுத்தமைதியைக் கொண்டு இக் குகையின் காலத்தைக் கணிக்க முடிய வில்லை. எனினும், இந்தக்கல்வெட்டுகள் ஆனைமலை (கி.பி. 770), திருப்பரங்குன்றம் (கி.பி. 773) ஆகிய இரு கல்வெட்டுகளுக்கு முற்பட்டது என்பது தெரிய வருகிறது. பாண்டிய மன்னன் மாறவர்மன்,அதியர் களை வென்று (கி.பி. 730-765) கொங்கு நாட்டைப் பாண்டியர்களின்கீழ்க்கொண்டு வந்தானெனக் கூறப் படுகின்றது. எனவே, இக் குகை அதற்குமுன் எடுக்கப் பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது. இக் கல்வெட்டுகள் பல்லவ மன்னன் இரண்டாம் நரசிம்ம வர்மனின் (கி.பி. 695-722) கல்வெட்டுகளை ஒத்துக் காணப்படுகின்றன. மேலும், இக் குகையிலுள்ள புடைப்புச் சிற்பங்கள் பல்லவர், சாளுக்கியர்களின் சிற்பக்கலையை ஒத்துக் காணப்படுகின்றன. மேற் கண்டவற்றைக் கொண்டு இக் குடைவரைகள் கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அமைக்கப்பட் டிருக்க வேண்டும் என்று கணிக்கப்படுகின்றது. தி.சு.

*நாமதீப நிகண்டு*: நாமதீப நிகண்டு என்னும் நூலை இயற்றியவர் திருநெல்வேலி மாவட்டம் கல்லிடைக் குறிச்சியிலிருந்த சிவசுப்பிரமணியக் கவிராயர் ஆவார். இந்நூல் பாயிரம் 8, நூல் 800 ஆக மொத்தம் 808 வெண்பாக்களைக் கொண்டது. இந்நூல்ஆசிரியர் காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு. இந்நூலில் சங்க காலம் தொடங்கி ஆசிரியர் காலம் வரையுள்ள பொருள் பெயர்கள் பன்னிரண்டாயிர முள்ளன. இவர் தந்தை சாமிநாதம் என்னும் இலக் கண நூலை இயற்றிய சாமிகவிராயர் எனத் தெரி கிறது. நிகண்டு என்பது சொற் பொருளுணர்த்தும் கருவி நூலாகும். அதிலும் இந்நூல் ஒருபொருள் பல் பெயர்த் தொகுதிகளைக் கூறுவது. இதனைத் தவிர, இவ்வாசிரியரே தொகை நிகண்டு என ஒரு நூல் இயற்றியிருப்பதாகவும் இந்நூலாசிரியரின் தந்தை யார் பொதிகை நிகண்டு என மற்றொரு நிகண்டு இயற்றியிருப்பதாகவும் இந்நூலின் பாயிரச் செய்யுள் தெரிவிக்கும்.

இந்நூல் பாயிரம் தவிர்த்து உயர்திணைப்படலம், அஃறிணை உயிர்ப் பொருள்படலம், அஃறிணை உயிரில் பொருள்படலம், குணநாமப் படலம் எனப் பெரும் பிரிவுகள் நான்கினைக் கொண்டது.ஒவ்வொருபடலத் திலும் சிறு பிரிவுகளும் பல உள்ளன. அவை மொத்தம் 16 ஆகும். இந்நூலாசிரியர் தந்தையார் திருவாவடுதுறை ஆதீனத் தொடர்புடையவர் எனத் தெரிவதால் இவருக்கும் அவ்வாதீனத் தொடர் புண்டு என்பது புலனாகிறது. இந்நூலாசிரியர் இந் நாமதீப நிகண்டு இயற்றக் காரணம் 'பல்லாயிர நிகண்டிற் பண்டிதர்கள் சொன்ன பொருள் எல்லாம் எளிதாய் இனிதுணர' என்று விளக்கியுள்ளார். நாமம் என்பது பெயர். தீபம் என்பது விளக்கம். நாமதீபம் என்றால் பெயர் விளக்கம் என்பதாம்.ஆகவே, இந்நிகண்டு முன் னோர்இயற்றிய பல நிகண்டுநூல்களையும்ஆராய்ந்து அவற்றையெல்லாம் சேர்த்து ஒருமிக்கக் கூறுவதால் காலத்தால் பிற்பட்ட சிறந்த நூல் ஆகும். எளிதாக மனப்பாடம் செய்வதற்கேற்றவாறு ஆசிரியர் வெண்பாயாப்பிலேயே இந்நூலிலுள்ள செய்யுள்களை யாத்திருக்கிறார். இந்நூலின் 425-ஆம் செய்யுள் அம்பின்பெயரைப் பற்றிக் குறிப்பிடுகிறது. 'தோணி சர மாசுகமு ரோபந் தொடை கதிரம், பாணம் விசி கஞ்சாய கம் பகழி-காண்வாளி, பத்திரமேப் பூதை புங்கம்பல்லங்கோ மாற்கணங்கோ,லத்திரஞ்சிலீமுகம் வண்டம்பு' என்பது நூலிற்காணப் பெறுஞ் செய்யுள். இதற்குக் குறிப்பாகத் தோணி, சரம், ஆசுகம், உரோபம், தொடை, கதிரம், பாணம், விசிகம்,

சாயகம், பகழி, வாளி, பத்திரம், ஏ, பூதை, புங்கம், பல்லம், கோ, மாற்கணம், கோல், அத்திரம், சிலீ முகம், வண்டு, அம்பு,ஆக 23 என்று விளக்கந் தந்திருப் பது மிகவும் சிறப்பாயமைந்துள்ளது. இவ்வாறே இந் நூல் முழுவதும் காணப் பெறுகின்றது. இதை நன் முறையில் வெளிக் கொணர்ந்த பெருமை பேராசிரி யர் வையாபுரிப் பிள்ளையைச் சாரும். அண்மையில் தமிழ்ப் பல்கலைக் கழகம் இந்நூலை வெளியிட் டுள்ளது. தன் பெயருக்கு ஏற்ப இந்நூல், பொரு ளுணர்ந்து யாவரும் படிக்கச்சிறந்த விளக்கமாயமைந் துள்ளது. இரா.ச.

**நாமதேவர்**: இவர் இந்திய இலக்கிய வரலாற் றில் ஓர் உன்னதமான இடத்தைப் பெற்றவர். குறிப் பாக மராட்டிய மாநிலத்திலும், பஞ்சாபு மாநிலத் திலும் இவரைக் 'குரு'வாகக் கொண்டாடிப் போற்று கின்றனர். இவர் பாடிய பாடல்கள் 'அபங்கம்' (அழிவற்றது) என்று சொல்லப்படுகின்றன. அபங்கம் என்பது ஒரு 'பா' வகை.

இவர் தந்தையின் பெயர் இராமாசேட்சிம்பி. சில நூல்களில் தாமாசேட்டு என்றும் காணப்படுகிறது. தாயின் பெயர் கோணாபாயி. இவர்கள் மராட்டிய மாநிலத்திலுள்ள பரபணி மாவட்டம், நாசீ-பாமணி என்னும் கிராமத்தில் வாழ்ந்தனர். இராமாசேட்டு இறைவன் பாண்டுரங்கனிடம் பக்தி கொண்டவர். அதனால்,பண்டரிபுரத்திலேயே அவர் குடியேறினார். சக ஆண்டு 1192 கார்த்திகை மாதம் 11-ஆம் நாள் (கி.பி.1270) நாமதேவர் பண்டரிபுரத்தில் பிறந்தார்.

இவர் 'தையல் தொழிலாளி' யாகப் பணியாற்றி அதனால் கிடைக்கும் வருமானத்தில் வாழ்க்கையைச் செம்மையாக நடத்தினார்,இவர் மனைவியின் பெயர் 'இராசாயி' என்று சில நூல்களில் காணப்படுகிறது. இராமாசேட்டைப் போலவே நாமதேவரும் பாண்டு ரங்கனிடம் பக்தி பூண்டவர். அதனால் பாண்டுரங்கன் மீது பல அபங்கங்களை இயற்றியுள்ளார்.இவருடைய இல்லத்தில் பணிப் பெண்ணாகப் பணிவிடை செய்து வாழ்ந்தவள் 'சனாபாயி' என்னும் பெண். இவளும் நாமதேவரைத் தன் குருவாகக் கொண்டவள்.நாம தேவருடைய வரலாற்றுச் செய்திகள் இந்த அம்மை யாரின் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

மேலும், இவர் இந்தி-மராட்டி ஆகிய மொழி களில் பல அபங்கங்களைப் பாடியுள்ளார். இவற்றுள் 61 பக்திப்பாடல்கள் சீக்கியர்களின் 'குருகிரந்த சாகப்' என்னும் ஆதிகிரந்தத்தில் காணப்படுகின்றன. இவர் பஞ்சாபு மாநிலத்தில் குருதாசபூர் மாவட்டத்தில் பல பகுதிகளில் வாழ்ந்தனரெனவும், அங்கு இவரு டைய சமாதி உள்ளதெனவும் அறிய முடிகிறது. மராட்டியர்களில் பலர் பஞ்சாபு பகுதியில் வாழ்ந் துள்ளனர் என்பதற்கு இவருடைய வரலாறும் சமா தியும் சான்றுகளாகத் திகழ்கின்றன.

மராட்டிய மாநிலத்தில் பக்திக்கு வித்தாக விளங் கியவர்கள் ஞானதேவர், நாமதேவர், ஏகநாத்து, துக்காராம் ஆகியோர். இவர்கள் நால்வரையும்(தமிழ கத்தின் சமயகுரவர் நால்வரைப் போல்) அங்குப் போற்றுகின்றனர். நாமதேவருடைய வரலாற்றுக் குச் சான்றுகளாக உள்ள நூல்கள் மகீபதி இயற்றிய 'மகாபக்தவிசயம்', மோரோபந்து இயற்றிய 'சந்த் மணிமாலா' கிவாலியர் மொழியில் இயற்றப்பட்ட 'பக்தமாலா' மற்றும் அவர் காலத்தில் வாழ்ந்த பக்தர்களின் பாடல்களில் காணும் அகச் சான்றுகள் ஆகியவையாகும். இராம தேவரைப் பற்றிப் பல செவி வழிக் கதைகளும் மக்களிடையே பரவியுள்ளன. இவர் பாடியுள்ள பாடல்களில் காணப்படும் உபதேசங் களாக உள்ள கருத்துகளை உள்ளத்தூய்மை, பணிவு, இறைபக்தி, பொறுமை, இறைவனிடம் அடைக்கலம் புகுதல் ஆகிய ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம்.

**இவர் பாடல்களில் காணும் இடைச்செருகல்:** இவர் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவருடைய சமகாலத்தவர் ஞானேசுவரர். இவ ருடைய பாடல்களில் காணப்படும் மொழி நடை ஞானதேவருடைய மொழிநடைக்கு ஒப்பாகக்காணப் படுகிறது. இவரது இந்தி மொழிப் பாடல்களும் கி.பி. 13-ஆம் நூற்றாண்டு நடையை ஒத்துள்ளன. ஆயின், 'விட்டுணுதாசநாமா' என்ற கி.பி. 14-ஆம் நூற் றாண்டில் வாழ்ந்த ஒரு புலவருடைய பாடல்களை யும் நாமதேவருடைய பாடல்களுடன் இணைத்து அச்சில் பதிப்பித்துள்ளனர். இருவருடைய பெயர்களி லும் காணப்படும் 'நாமா' என்ற பெயரே இக் குழப் பத்திற்குக்காரணம். விட்டுணுதாசநாமாவின் பாடல் கள் (அபங்கங்கள்) கி.பி. 15-ஆம் நூற்றாண்டின் நடையை ஒத்துள்ளன என்று மராட்டிய மொழி வல்லுநர்கள் கூறுவர். என்.சீ.

**நாமமாலை** தொண்ணூற்றாறு வகை எனக் கூறப்படும் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. இது ஆட வர்களைப் புகழ்ந்து ஏத்தும் பிரபந்தமாகும்.இவ்வகை யில் பெண்களைப் புகழ்ந்து ஏத்தும் சிற்றிலக்கிய மாகிய புகழ்ச்சி மாலைக்கு இணையாக அமைந்தது. அகவலடியும் கலியடியும் மயங்கி வரும் வஞ்சிப்பாவி னால் இப்பிரபந்தம் அமையும். ஒரே வகையான இலக்கியம், பாடப்பெறும் ஆடவர் பெண்டிர் என் னும் பால் வேறுபாட்டினால் வெவ்வேறு பெயர் களில் அமைவதற்கு நாமமாலையும், புகழ்ச்சி மாலை யும் எடுத்துக் காட்டுகளாகும். இதன் இலக்கணம் பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல்,நவநீதப் பாட்டியல், இலக்கண விளக்கப்பாட்டியல், பிர

பந்த தீபிகை முதலான பல பாட்டியல் நூல்களிலும் இடம் பெற்றுள்ளது. 'மைந்தர்க்கு ஆயின் வஞ்சிப் பல்வகை, நேர்ந்த அடிமயக்கம் நாமமாலை' என்பது பன்னிரு பாட்டியல் கூறும் இலக்கணம். பலபாட்டியல் நூல்களிலும் இதற்கு இலக்கணம் கூறப்பட்டிருந்தாலும், இம்மாலை எத்தனை பாடல் கொண்டு அமையும் என்பதனை ஒரு நூலும் குறிப்பிடவில்லை. இப்பெயரிலமைந்த இலக்கியம் இக்காலத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. அ.மா.ப.

**நாமலார் மகன் இளங்கண்ணன்**: இவர் சங்கத் தமிழ்ப் புலவர். சங்க நூல்களில் ஒரு பாடல் மட்டுமே இடம் பெற்றுள்ளவர்களுள் இவரும் ஒருவர். கண்ணன் என்னும் பெயரில் சங்கப் புலவர்கள் பலர் உள்ளனர். எனவே, பிறரிடமிருந்து பிரித்துணர ஏற்றவாறு தந்தை நாமலார் பெயரையும் இணைத்து நாமலார் மகன் இளங்கண்ணன் என இவர் வழங்கப் படுகிறார். குறுந்தொகையில் பாலைத் திணைப் பாடல் (குறுந். 250) ஒன்றை இவர் பாடியுள்ளார். அப்பாடல் தலைமகன் தன் தேர்ப்பாகனுக்கு உரைக்கும் வகையில் அமைந்துள்ளது. பரல் கற்களையுடைய பள்ளத்தில் தேங்கியிருக்கும் நீரையுண்டு, ஆண்மான் தன் துணையோடு துள்ளி விளையாடுகின்ற மாலைக் காலம் வருவதற்கு முன்பு தலைவியின் துன்பம் நீக்கிடக் காற்றைப் போலக் கடுகிச் செல்லும் குதிரையைச் செலுத்துமாறு தேர்ப்பாகனிடம் தலைவன் கூறும் வண்ணம் பாடல் அமைந்து சிறக்கிறது. சா.உ.

**நாமூர்** பெல்சியத்தின் ஒரு மாநிலம். இது தினன்டு, நாமூர். பிலிப்பெவில்லி என்ற மூன்று (பிரஞ்சு ஆட்சித்துறையின்) உட்பிரிவுகளைக் கொண்டது. இதனை ஆறு நிலவியல் சார்ந்த பகுதிகளாகப் பிரிக்கலாம். நிலப்பரப்பு 366.501 எக்டேர்கள் (Hectares)ஆகும். இதன் மக்கள்தொகை 410251 (1983). பெரும்பான்மையினர் பிரஞ்சு மொழி பேசுபவர்களாவர். வடக்கில் பிரபான்டு, கிழக்கில் இலீசு மற்றும் இலக்சம்பர்கு மாகாணங்கள், மேற்கில் எய்னாடு, தெற்கில் பிரான்சு ஆகியவை இதன் எல்லைகள் ஆகும். மியூசு, சாம்புரே, இலெசி முதலிய நதிகள் இங்குப் பாய்கின்றன.

**இயற்கை வளம்**: நிலக்கரிச் சுரங்கங்கள் தவிரச் சலவைக் கல், பலகைக் கல், மணற் பாறை, சுண்ணாம்புக் கல் ஆகியவற்றின் கற் சுரங்கங்களுக்கு முக்கியத்துவம் பெற்றது நாமூர். எஃகு, இரும்புத் தொழிற்சாலைகள், சுரங்கத்திலிருந்து கிடைக்கும் பொருள்களை உருக்கி உலோகத்தைப் பிரித்தெடுக்கும் தொழிற்சாலை, கண்ணாடி மற்றும் இரசாயனப் பொருள்களின் தொழிற்சாலைகள் ஆகியவையனைத்தும் நாமூர் மாநகரத்தின் சுற்று வட்டாரங்களிலும், சாம்புரே (Sambre) பள்ளத்தாக்கிலும் காணப்படுகின்றன. நாமூர் மாநிலத்திலுள்ள ஆண்டென்னே (Andenne) என்னுமிடம் மண் பாண்டங்கள் செய்யும் தொழிலுக்குப் பெயர்பெற்ற இடமாகும்.

கீழ்ப் பேலியோசோய்க்குப் பாறைப் பகுதியில் கோன்ட்ரோசு (Condroz) என்ற மேட்டு நிலம் உள்ளது. பிரபான்டு (Brabant) என்பது வடக்குப் பகுதியிலுள்ள மேட்டு நிலமாகும். நாட்டின் உட்பகுதியைச் சேர்ந்த ஆர்டென்னெசு(Ardennes), எப்பொழுதும் புல் மூடிய மேய்ச்சல் நிலமாகவே காணப்படுகிறது. இறைச்சிக்கான மாடுகளை, இனப்பெருக்கம் செய்து பின்னர் அவைகளை நன்றாக வளர்க்கும் பொருட்டுத் தாழ்நிலப் பகுதிகளுக்கு அனுப்புகின்றனர். உழுது பயிரிடத்தக்க நிலங்களைக் (புல்லரிசிப் பயிர்வகை, கம்பு, மூவிலைச்செடி, கொடிவகை, உருளைக்கிழங்கு போன்றவை பயிரிடப்படும்) குத்தகைக்கு விடும் பழக்கம் பள்ளத்தாக்குப் பகுதிகளில் இருந்துவருகிறது. தொழில் நகரங்களுக்குத் தேவையான பால் உற்பத்திக்கென நிலையான மேய்ச்சல் பசும்புல் நிலங்களும், பால் பண்ணைகளும் இங்கு மிகுதியாகக் காணப்படுகின்றன. குதிரை வளர்ப்பு மற்றும் ஆடு, மாடுகள் வளர்ப்பு (இறைச்சிக்காக)இங்கு முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. சாம்புரே-மியூசு (Meuse) ஆகியவற்றிற்கு இடையே அமைந்துள்ள பிலிப்பெவில்லியில் (Philippeville)மரத் தொட்டிகள்(மரப் பட்டிகைகள் இணைத்து இரும்புப் பட்டைகளால் இறுக்கப்பட்ட). தேறல் பேழைகள், மரக் கட்டையாலான மிதியடிகள் மற்றும் இதரமரச் சாமான்கள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. கெம்புலௌக்சு (Gembloux) என்பது தென் பீடபூமியின் அங்காடியாகும். நாமூர் மாகாணத்தின் தலைநகரமும் நாமூர் என்று சொல்லப்படுகிறது.

**வரலாறு**: பழைய குடியேற்ற நாடான நாமூர், கி.பி. 1188-ஆம் ஆண்டு எய்நாட்டு(Hainaut)ஆதிக்கத்தின் கீழும், பிறகு கி.பி. 1263-இல் பிளாண்டர்சு (Flanders) நாட்டின் கீழும் இருந்து, கி.பி. 1421-இல் பர்கண்டியோடு (Burgundy) இணைக்கப்பட்டது. தென்நெதர் லாண்டோடு கி.பி. 16,17-ஆம் நூற்றாண்டுகளில் இருந்த நாமூர், கி.பி. 1792-இல் பிரான்சின் ஆதிக்கத்தின்கீழ் வந்தது. பின்னர் கி.பி. 1815-இல் ஆலந்து நாட்டுடன் சேர்க்கப்பட்டு மீண்டும் கி.பி. 1830-இல் பெல்சியத்தின் ஒரு மாகாணமாகியது.

**நாமூர்(தலைநகரம்)**: பெல்சியத்தின் மாநிலமாகிய நாமூரின் தலைநகரம் இதுவாகும். சாம்புரே, மியூசு என்ற இரு நதிகள் சங்கமமாகுமிடத்தில், பாறைப் பாங்கான நிலக்கூம்பின்மேல் இந்நகரம் உள்ளது. பிரசல்சிலிருந்து இலக்சம்பர்கிற்குச் செல்லும் இருப்புப்பாதையில் இது அமைந்துள்ளது. எஃகு பயன்

படுத்தும் தொழிற்சாலைகள் இங்குள்ளன. வச்சிரப் பசை, சோப்பு, பீங்கான், மண்பாண்டம், கண்ணாடி பசைமண், சீமைச் சுண்ணாம்பு, இருப்புக் கருவிகள் ஆகியவை இங்கு மிகுதியாகத் தயாரிக்கப்படுகின்றன. தோல் பதனிடல், இரும்பு, பித்தளை வார்ப்படச் சாலைகள் முதலிய வற்றிற்குப் பெயர்பெற்று விளங்கு கிறது. இங்கு வரும் சுற்றுலாப் பயணிகளின் வாணி கம் மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

இதன் கோட்டை, தொடக்கத்தில் இடைக்காலக் கோமான்களின் மாளிகையாக இருந்தது. செபா சுதியன் லி பிரெசுடி தி வாபன் என்ற பிரஞ்சுப் படைத்துறைப் பொறியமைப்பாளரால் கி.பி. 15-ஆம் நூற்றாண்டிலும் அதன்பின் கி.பி.1692-ஆம் ஆண்டி லும் திருத்தங்கள் பல செய்யப்பட்டுக் காப்பரணாக மேம்படுத்தப்பட்டது. இக் கோட்டை கி.பி. 1862-இல் தகுதியற்றதாகக் கருதப்பட்டு இப்போது பொது மக்கள் பார்வைக்காகத் திறந்துவிடப்பட்டுள்ளது. கோட்டை கொத்தளங்களை அரணாகக் கொண்ட நாமூர், போர்த்திற முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்த காரணத்தால் மிகுந்த அளவில் போர்களின் நிலைக்களனாக இருந்து வந்திருக்கிறது. பிரான்சு, நேச நாடுகள் என்று மாறி மாறி, கி.பி. 1692-இலிருந்து 1974 வரையிலான இடைப்பட்ட ஆண்டு களில் ஏழுமுறை கைமாறி உள்ளது. முதல் உலகப் போரின்போது, கி.பி. 1893-இல் எழுப்பப்பட்ட இதன் எல்லை அரண்களாகிய ஒன்பது கோட்டைகளும் செருமானியர்களால் அழிக்கப்பட்டன. இரண்டாம் உலகப்போரின்போதும் இந்நகரம் மிகுந்த அளவில் சேதமடைந்தது.

பல போர்கள், முற்றுகைகளுக்குப் பிறகும்கூட நேர்த்தி வாய்ந்த அழகிய பழைய கட்டடங்கள் பல இன்னும் அழியாமல் இருக்கின்றன. அவற்றுள் இறைச் சிக் கூடம் (1588) (Meat Hall) என்பதும் ஒன்றாகும். முன்பு இறைச்சி மற்றும் மீன் அங்காடியாக இருந்த இது, இப்போது நகரத்திலுள்ள அரும்பொருள் காட்சிச் சாலைகளுள் ஒன்றாக விளங்குகிறது. தொல் பொருள்கள் பல இங்குள்ளன. நாமூர் கோமான்களின் தங்க மகுடமும், எடுத்துச்செல்லத்தக்க வகையில் அமைந்துள்ள வணங்குதற்குரிய பலிபீடமும் (Altar) மாவட்டத் திருச்சபை அரும் பொருள்காட்சியகத்தில் உள்ளன. மாவட்டத் தலைமைக் கிறித்தவக் கோயி லான புனித ஔபெயின் (St. Aubain)(கி.பி. 1751-63) நேர்த்திவாய்ந்த அழகிய ஓவியங்களையும் இரும்பு மற்றும் பித்தளையினால்செய்யப்பட்டவேலைப்பாட மைந்த பொருள்களையுங் கொண்டதாகும். புனித உலூப்பு (St. Loup) கிறித்தவக் கோயில், சிவப்புக் சலவைக் கல்லினால் செய்யப்பட்ட தூபிகள் பல கொண்டதாகும்.

ஐந்து முக்கிய இருப்புப் பாதைகள் சேருமிடத்தி லும், இலீசிலிருந்து சார்லெரோய் செல்லும் நீர்வழிப் பாதையிலும் பிரான்சு நாட்டின் எல்லைப்புறப் பகுதி யிலும் நாமூர் இருக்கும் காரணத்தால் இயந்திரப் பொறி அமைப்பு, உலோகத்தொழில் மற்றும் உணவுப் பொருள்கள் தயாரிப்பு ஆகியவற்றில் பெருமளவில் வளர்ச்சியடைந்து வருவதோடு பல்வேறு இடங்களுக் கான அங்காடியாகவும், சுற்றுலா மையமாவும் திகழ் கிறது. மு.அ.

## நாயக்கர்கள்

**நாயக்கர்கள்:** தென்னிந்தியாவில், கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் விசயநகரப் பேரரசு சிறப்புற்று விளங்கியது (காண்க: விசயநகரப் பேரரசு). பரந்து விரிந்திருந்த அப்பேரரசில் அரசு அலுவல்கள் மிகுதியா யிருந்ததால் மாமன்னர் கிருட்டிண தேவராயர் (காண்க: கிருட்டிண தேவராயர்) தம் பகுதிகளைத் தஞ்சை, செஞ்சி, நகரங்களைத் தலைமையிடமாகக் கொண்ட மூன்று நாயக்க அரசுகளாகப் (மண்டலம்) பிரித்து மாநில ஆளுநர்களைப் போன்று நாயக்கர் களை அமர்த்தினார். இவர்கள் தமது ஆட்சிப் பகுதி யின் அதிகாரங்கள் அனைத்தையும் கொணடிருந்தனர். அவ்வாறே கருநாடக மாநிலத்தில் இக்கேரி என்ற இடத்தைத் தலைநகராகக் கொண்ட இக்கேரி நாயக் கர் ஆட்சி, கி.பி. 16-ஆம்நூற்றாண்டிலிருந்து கி.பி.18-ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை நீடித்திருந்தது. (காண்க: இக்கேரி நாயக்கர்கள் - தொகுதி 2).

நாயக்கர் என்னும் சொல் 'நாயக' என்னும் வட சொல்லின் திரிபாகும். இச்சொல் முதலில் 'தலைவன்' என்னும் பொருளில் வழங்கி, பின்பு படைத்தலை வனைக் குறிப்பதாயிற்று. இப்பொழுது தெலுங்கர் களில் ஓர் இனத்தைக் குறிக்கும் சொல்லாய் வழங்கு கிறது.

**செஞ்சி நாயக்கர்கள் (கி.பி. 1516 - 1671)** விசய நகரப் பேரரசின் மேலாண்மையின்கீழ்த், தென்னார்க் காடு மாவட்டத்திலுள்ள செஞ்சியைத் தலைநகராகக் கொண்ட தொண்டைமண்டலப் பகுதிகளை கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலிருந்து 17-ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரையில் ஆட்சிபுரிந்தனர். இவர்களது அரசின் ஆட்சி எல்லை, கடற்கரைப் பகுதியில் வடக்கே பாலாறு முதல் தெற்கே கொள்ளிடம் வரையில் பரவியிருந்தது. தமிழகத்தின்கண் ஏறத்தாழ ஒன்றரை நூற்றாண்டுக் காலம் நிலைபெற்றிருந்த செஞ்சி நாயக்கர் அரசு, விசயநகரப் பேரரசு அழிந்த போது அழிவுற்றது.

**வையப்பர் (கி.பி. 1526-1541):** துபாக்கி கிருட்டிணப்ப நாயக்கரே செஞ்சி நாயக்க மரபினைத் தோற்றுவித்தவராக இதுகாறும் கருதப்பட்டது. ஆனால், அண்மைக்கால ஆய்வுகள் வையப்பரே இம்

மரபினைத் தோற்றுவித்தார் எனச் செப்புகின்றன. வையப்பர், விசயநகரப் பேரரசர்களான கிருட்டிண தேவராயர், அச்சுதராயர் ஆகியோரின் சமகாலத்தவர் ஆவார். இவரது முன்னோர் வடஇந்தியாவிலுள்ள மணி நாகபுரத்திலிருந்து குடிபெயர்ந்தனர். சின்ன திம்மய்ய நாயக்கர் வையப்பரின் தந்தையாவார். வையப்பர் கொண்டசாம்மாவை (Kondajamma) மணந்தார். வையப்பர் கிருட்டிண தேவராயரின் படைத்தலைவ ராக இருந்தபோது, பேரரசால் வெல்லப்பட்ட தமிழகப் பகுதிகளில், திறைப் பணத்தை நிருணயித்து, வசூல் செய்யும் பொறுப்பு அவருக்கு விடப்பட்டது. அவர், அச்சுதராயரின் நலங்கருதி, பல தானங்களைச் செய் தார். தென்னார்க்காடு மாவட்டத்தில் சிரீமுட்ணம், திருக்கோயிலூர் ஆகிய இடங்களில் இவர் கோயில் களைக் கட்டினார். அப்போது முகலாயப் பேரரசும் தொடங்கப்பட்டது என்பது நினைவு கூரத்தக்கது.

**கிருட்டிணப்பர்:** வையப்பருக்குப் பிறகு பெத்த கிருட்டிணப்பர் பதவியேற்றார். இவர் துபாக்கி எனும் முன்னடையையும் பெற்றிருந்தார். காண்க: கிருட்டிணப்பர் (துபாக்கி).

துபாக்கி கிருட்டிணப்பரை அடுத்து அச்சுத விசய ராமபத்திர நாயக்கர், செஞ்சியில் விசயநகர ஆளுந ராக (Governor) அமர்த்தப்பட்டார். இவர் சந்திர கிரியைத் தம் இருப்பிடமாகக் கொண்டார். இவர் செஞ்சியின் வேங்கடரமணசாமி கோயில், சந்திரகிரி சிதம்பரேசுவரர் கோயில் ஆகியவற்றிற்கு நன் கொடைகள் வழங்கியமை கல்வெட்டுகளால் அறியப் படுகின்றது. முத்தியால் நாயக்கரும் சில காலம் செஞ்சியின் ஆளுநராகப் பணிபுரிந்தார். விசயராம பத்திரர் திருவண்ணாமலை, திண்டிவனம் கோயில் களைக் கட்டினார்.

**சூரப்ப நாயக்கர்:** பின்னர், துபாக்கி கிருட்டிணப்ப ருக்கும் வெங்கலாம்பாவிற்கும் பிறந்த சூரப்ப நாயககர் (கி.பி. 1544-1567), செஞ்சி நாயக்கராகப் பதவியேற் றார் இவர் சதாசிவராயர், இராமராயர் ஆகிய பேரரசர்களின் சமகாலத்தவர் ஆவார். சதாசிவராய ரின் பெயரால் இவர் பல திருக்கோயில்களுக்குத் தானமளித்துள்ளார். சூரப்பரின் அரசவைப் புலவர் இரத்தினகீத சீனிவாசதீட்சிதர் என்பார் பவன புருடோத்தமா என்ற நாடகத்தைச் சூரப்பருக்கு உரிமைப் படுத்தியுள்ளார். இவருக்குக் கர்நாடக சிம்ம பரதிசுட்ட பாணாச்சாரியா-எனும் விருதுப் பெய ருண்டு. தலைக்கோட்டைப் போரில், பேரரசர் இராம ராயருக்கு ஆதரவாக, இவர் தம் படையை அனுப்பி னார் போலும்.

**முதலாம் கிருட்டிணப்பர்:** (ஏறத்தாழ கி.பி. 1567-1575) சூரப்ப நாயக்கரை அடுத்து அவர் ஒன்று விட்ட சகோதரரான முதலாம் கிருட்டிணப்ப நாயக் கர், செஞ்சியின் ஆட்சியாளர் ஆனார். இவர் துபாக்கி கிருட்டிணப்பருக்கு இலட்சுமாம்பா எனும் மனைவி யிடம் தோன்றியவர். சூரப்பரின் இறப்பிற்குப்பின் கிருட்டிணப்பர் செஞ்சி நாயக்க அரசின் அனைத்து அதிகாரங்களையும் பெற்றார்.

**இரண்டாம் கிருட்டிணப்பர்:** இரண்டாம் கிருட்டி ணப்பர் பேரரசர் முதலாம் வேங்கடர், தஞ்சை இரகுநாத நாயக்கர் ஆகியோரின் சமகாலத்தவரா வர். கி.பி. 1586-இல் தம் தலைவரான வேங்கட ராய ருக்கு எதிராகக் கலகம் செய்த காரணத்தால், கிருட்டிணப்பர் கைது செய்யப்பட்டார். ஆனால், தஞ்சை இரகுநாத நாயக்கரின் தலையீட்டால், இவர் விடுவிக்கப்பட்டார். நன்றியறிதலுள்ள கிருட்டிணப் பர், தம் மகளை இரகுநாதருக்கு மணம் செய்வித் தார்.

செஞ்சிக்கு கி.பி. 1597-இல் வருகை புரிந்த பிமண்டா அடிகள் (Father Pimento) செஞ்சி நகரின் சிறப்பையும், கிருட்டிணப்பரின் பெருமைகளையும் சிறப்பித்துப் பேசுகிறார். இவர் போர்ச்சுகீசியருட னும், தச்சுக்காரருடனும் நட்புறவு கொண்டிருந்தார். தச்சுக்காரர்கள் தேவனாம்பட்டினத்தில் கோட்டை கட்டிக்கொள்ள 30.11.1608-இல் எழுத்து மூலமாக இவர் அனுமதி வழங்கினார். சமயத்துறையில் சமரச மதக் கொள்கையை இவர் பின்பற்றினார். கிறித்தவ போதகர்கள் திருச்சபை கட்டவும், சமணர்கள் சித்த லூரில் பள்ளி எழுப்பவும், சைவர்கள் திண்டிவனத்தில் கோயில் கட்டவும் இவர் அனுமதி தந்தார். பிமெண்டா அடிகளாருக்கு மாபெரும் வரவேற்பு ஒன்று அளித் தமை, இவரது சமயப் பொறையை எடுத்துக்காட்டு கிறது. மகாவிட்டுணுவின் பக்தரான இவர் வைணவத் தெய்வத்தைக் குடும்பத் தெய்வமாகக் கொண்டாடி னார். சிதம்பரத்தில் வைணவக் கோயில் ஒன்று எழுப்பப்பட முழு முதற்காரணமாக இருந்ததுடன், பல கோயில்களுக்கு நன்கொடைகளும் வழங்கினார். பல புதிய குடியேற்றங்களை நிறுவினார். அவற்றுள் வெள்ளாற்றங்கரையில் புதிய கிருட்டிணாபுரத்தை உருவாக்கி ஆங்குக் குடியேற்றங்களை நிறுவியமை குறிப்பிடத்தக்கது. இவர் வேளாண்மை உற்பத்தி யைப் பெருக்கினார்.

**மீண்டும் கிளர்ச்சி:** தலைக்கோட்டைப் போருக் குப் பின்னர் விசயநகரப் பேரரசின் அதிகாரம் மங்கி யது. கிருட்டிணப்பரும் பேரரசுக்குச் செலுத்த வேண் டிய திறைப்பணத்தை நிறுத்திவிட்டுச் சுதந்திரமாக இயங்கத் தொடங்கினார். இத்தருணத்தில் பேரர சின் வடபகுதியில் வேங்கடராயருக்குப் பல சிக்கல் கள் தோன்றின; இது கிருட்டிணப்பருக்குத் துணை யாகவும் அமைந்தது. செஞ்சி நாயக்கர் பேரரசுக்கு

எதிராகக் கலகம் செய்தார். இவர் கி.பி. 1604-இல் வேலூரைக் கைப்பற்றித் தம் சுய அதிகாரத்தைப் பறை சாற்றினார். கோபமுற்ற பேரரசர், தளபதி வேலுகோட்டியாச்சமரை அனுப்பிக் கிருட்டிணப் பரைத் தோற்கடித்துக் சிறையிலடைத்தார். பேரரசர் வேலூரைக் கைப்பற்றித் தம் அதிகாரத்தை ஆங்கு நிலைநாட்டினார். கிருட்டிணப்பர், குடும்பத்துடன் பேரரசரிடம் அடிபணிந்தார். மதுரை, தஞ்சை நாயக்கர்களின் தலையீட்டால், மீண்டும் செஞ்சியை அடைய அனுமதிக்கப்பட்டார். இவர் பதவியைத் துறந்து, திருவரங்கத்தில் அமைதியாக வாழ முடிவு செய்தார். இந்நிலையில் விசயநகரப் பேரரசில் வெடித்த அரசுரிமைப் போரில் புரட்சியாளரான சக்கதேவருக்கு ஆதரவாகச் செஞ்சி நாயக்கர் இறங்கினார். இவர் கி.பி. 1616-17-இல் தோப்பூரில் (தோகூரில்) நடைபெற்ற போரில் போர்க்களத்திலிருந்து பயந்து ஓடினார். அதன் தொடர்பாக அடுத்து நடைபெற்ற வெள்ளாற்றங்கரைப் போரிலும் படு தோல்வி அடைந்தார். பின்னர் விசயநகரப் பேரரசிடம் அடிபணிந்து, திறையும் செலுத்தினார். செஞ்சி நாயக்க அரசர்களுள் இரண்டாம் கிருட்டிணப்பரே தலைசிறந்த அரசர் என்பதில் ஐயமில்லை. இவரை அடுத்து வையப்ப கிருட்டிணப்ப கொண்டம நாயக்கர் ஆட்சி புரிந்தார்.

வையப்ப கிருட்டிணப்பரின் வழித்தோன்றல்கள் வரதப்ப நாயக்கரும் அப்ப நாயக்கரும் ஆவார். இவர்கள் இருவருமே திறமையற்றவர்கள். அப்ப நாயக்கர் முதலில் பீசப்பூர் படைத் தலைவன் முசுத பாகான் என்பவனாலும், பின்னர் கான்-கானன் (Khan-khanan) என்பவனாலும் தோற்கடிக்கப்பட்டார். செஞ்சி அரசு கி.பி. 1648-1671 ஆண்டளவிலேயே தனது சுதந்திரத்தை இழந்துவிட்டது. இவர்களுக்குப் பின் செஞ்சிப் பகுதி முகமதியர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டது.

**சிற்றரசுகள்:** திருவதியின் இளவரசர் (கெடிலம் ஆற்றங்கரையில்), வேலூர் நாயக்கர்கள், கொள்ளிடத்தின் முகத்துவாரத்திலிருந்த சாலவாச்சா அல்லது சோழகர் மன்னர் (தேவகோட்டை) ஆகியோர் செஞ்சி நாயக்கரது குறுநில மன்னர்களாகத் திகழ்ந்தனர். இவர்களுள் தேவகோட்டையின் தலைவர் வலிமை மிக்கவராகத் திகழ்ந்தார். இவர் விசயநகரப் படைத்தலைவரான வித்தலராயரையே வெற்றிகண்ட பெருமைக்குரியவர் ஆவார்.

தென்னகத்தின் மாபெரும் பேரரசாகத் திகழ்ந்த விசயநகரப் பேரரசின் மேலாண்மைக்குட்பட்ட செஞ்சி நாயக்க அரசு ஏறத்தாழ 150 ஆண்டுகள் ஆட்சிபுரிந்து, கலைத் துறையில் தனது முத்திரையைப் பொறித்துச் சென்றுள்ளது. இவர்கள் காலத்தில் இந்து சமயம் வளர்ச்சி பெற்றது. **ம.இ.**

மதுரை நாயக்கர் ஆட்சி கி.பி.1529-இல் விசய நகரப் பேரரசுக்குட்பட்டுத் தொடங்கி கி.பி.1736-இல் முடிவடைந்தது. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பாண்டியப் பேரரசின் வீழ்ச்சியின் முடிவில் மதுரையில் தெலுங்கர் பரம்பரையான விசுவநாத நாயக்கர் ஆட்சி தொடங்கியது. இவ்வாட்சி கி.பி. 1736-இல் மீனாட்சி என்ற அரசியோடு முடிவடைந்தது.

**விசுவநாத நாயக்கர் (கி.பி. 1529-1564)** விசயநகர வேந்தனான கிருட்டிண தேவராயரின் காலத்தில் நாகம நாயக்கர் என்பர் தமிழ்நாட்டைக் கண்காணிக்கும் பொறுப்பில் இருந்தார். இவர் இராயரின் படைத்தலைவராகவும், பண்டசாலைப் பொறுப்பாளர் போன்ற பல பதவிகளை வகித்தவராகவும் புகழ் பெற்றுத் திகழ்ந்தார். இவருடைய மகன் தான் விசுவநாத நாயக்கர். கிருட்டிணதேவராயரிடம் தம் 19-ஆம் வயதில் பணியில் அமர்ந்த விசுவநாத நாயக்கர் மதுரை நாட்டுக்கு ஆளுநராக கி.பி. 1529-இல் நியமிக்கப்பட்டார். அந்நாட்டின் ஆட்சிப் பொறுப்பை நேரடியாக மேற்கொண்டார். இவருடைய தளவாயாக அரியநாதர் பணியாற்றினார். படைத்தலைமை, தலைமை அமைச்சர் ஆகிய இரு பணிகளையும் இணைந்து பொறுப்பேற்றவர் தளவாய் எனப்பட்டார். கிருட்டிணதேவராயர் கி.பி. 1530-இல் இறந்தவுடன் அவர் இளவலான அச்சுதராயர் விசயநகரப் பேரரசரானார்.

அச்சுதராயர் காலத்தில் விசுவாத நாயக்கரே தொடர்ந்து மதுரை நாட்டின் ஆளுநராகத் திகழ்ந்தார். பாண்டி நாட்டுக்குஉரிய வல்லம் பகுதியைத் தஞ்சை நாட்டுடன் இணைத்தார். தஞ்சைக்குச் சொந்த மாயிருந்த திருச்சிராப்பள்ளியை மதுரையுடன் இணைத்துத் தஞ்சை நாட்டிற்கும், மதுரை நாட்டிற்கும் திட்டவட்டமான எல்லையை இவர் காலத்தில் வகுத்தார்.

திருச்சிராப்பள்ளி மதுரை நாட்டின் எல்லைநகரமாய் மாறியவுடன் அப்பகுதியில் சில சீர்திருத்தங்களைச் செய்தார். இப்போதுள்ள தெப்பக்குளம் இவர் காலத்தில் வெட்டப்பட்டது. தாயுமானவர் கோயிலும், திருவரங்கக் கோயிலும் சீர்திருத்திச் செப்பனிடப்பட்டன. தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலிப் பகுதியில் நடைபெற்றுக் கொண்டிருந்த உள்நாட்டுக் கலகத்தை அடக்கத் தளவாய் அரியநாதர் அனுப்பி வைக்கப்பட்டார். கயத்தாறு என்னுமிடத்தைச் சுற்றிச் சிற்றரசர்களாய் ஆட்சி புரிந்து வந்த

## மதுரை நாயக்கர்கள்:

### மதுரை நாயக்கர் மரபு:



பஞ்ச பாண்டியர்கள் கலகம் விசுவநாதரால் அடக்கப் பட்டு அப்பகுதியில் அமைதி நிலைநாட்டப்பட்டது. அமைதி நிலவியவுடன் அப்பகுதியில் சீர்திருத்தங் கள் மேற்கொள்ளப்பட்டன. நெல்லையப்பர் கோயில் பழுது பார்க்கப்பட்டது. நீர்ப்பாசன வசதிகள் செய்யப்பட்டுப் பயிர்த்தொழில் வளர்ச்சியுற்றது.

கம்பம்-கூடலூர்ப் பகுதிகளுக்குப் படை அனுப்பப் பட்டுக் கம்பம் கோட்டை கைப்பற்றப்பட்டது.

விசுவநாத நாயக்கர் தனது ஆட்சிக்குட்பட்ட பகுதியில் கி.பி. 1535-இல் பாளையப்பட்டு முறையை ஏற்படுத்தினார். பாளையங்களுக்குரியவர் பாளையக் காரர் எனப் பெயர் பெற்றனர். இவர்கள் பொறுப் பிலிருந்த பாளையங்களிலிருந்து கிடைக்கும் வருவா யில் மூன்றில் ஒரு பகுதியை மதுரை நாயக்கருக்குக் கொடுக்க வேண்டும். மற்றொரு பகுதியைப் படை வீரர்களுக்குச் செலவிட வேண்டும். பிறிதொரு பகுதியைச் சொந்தச் செலவுக்கு எடுத்துக்கொள்ள வேண்டும். இதிலிருந்து தங்கள் பகுதியின் பாது காப்பை மேற்கொள்ள வேண்டும். போர்க் காலங் களில் மதுரை நாயக்கருக்குப் படைத்துணை அளிக்க வேண்டும்.

இவர் மதுரையில் மீனாட்சி சுந்தரேசுவரர் திருக் கோயிலைச் செப்பனிட்டார். இவரது சீரிய ஆட்சியி னால் மதுரை நாட்டில் அமைதி நிலவியது. இவர் விசயநகரப் பேரரசர்களாயிருந்த அச்சுதராயருக்கும், சதாசிவராயருக்கும் கீழ்ப்படிந்து நேர்மை குறையா மல் ஆட்சி நடத்தியவராவார். இவர் 1564-இல் இறந்தார். நாயக்கர் ஆட்சி மதுரை நாட்டில் வேரூன்றி நிலைக்கக் காரணமாக இருந்தவர் இவரே.

**முதலாம் கிருட்டிணப்ப நாயக்கர்** (கி.பி. 1564-1572): (காண்க: கிருட்டிணப்ப நாயக்கர்)

**வீரப்ப நாயக்கர் (கி.பி. 1572-1595)** கிருட்டிணப்ப ரின் மூத்தமகன் வீரப்ப நாயக்கர் கி.பி. 1572-இல் மதுரையின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார்.

இவர் ஆட்சிக் காலத்தில் மாவலி வாணாதிராயன் என்ற பாளையக்காரர் மானாமதுரை, காளையார் கோயில் பகுதியில் கிளர்ச்சி செய்தனர். அவருடைய கிளர்ச்சி அடக்கப்பட்டது. நாட்டில் அமைதி ஏற்பட வழி வகுத்தார்.

தாழ்வடைந்த விசயநகரப் பேரரசுக்குத் தொடர்ந்து திறை செலுத்தி வந்தார். இவர்தம் ஆட்சிக் காலத்தில் சமயப் பணியில் மிக்க நேரத் தைச் செலவிட்டார்; திருச்சிராப்பள்ளிக் கோட்டை யைச் சீர்திருத்தினார். அருப்புக்கோட்டையில் ஒரு புதிய கோட்டை எழுப்பப்பட்டது. இவர் சிதம்பரத்தில் திருக்கோயிலைச் சுற்றி வலிமைமிக்க மதில் கட்டி னார்; மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் திருப்பணி யும் செய்தார்.

இவர் ஆட்சிக் காலத்தில் மதுரை நாட்டில் கிறித் தவ சமயப் பிரச்சாரம் புகுந்தது. ஏசு கழகத்துப் பாதிரிமார்கள் (Jesuit Society) கி.பி 1592-இல் நாயக்கரிடம் அனுமதி பெற்று, மதுரைச் சமயப் பணிக் கழகத்தைப் (Madura Mission) பெர்னாண்டசு என்ற போர்ச்சுகீசிய பாதிரியார் தலைமையில் ஏற் படுத்தினர். மதுரையில் மாதா கோயில் ஒன்றும் கட்டப்பட்டது. வீரப்பர் கிறித்தவ சமயப் பிரசாரத் துக்கு அனுமதி கொடுத்ததின் மூலம் சமயப் பொறை உடையவர் என்பது புலனாகிறது. இவர் கி.பி. 1595 -இல் இறந்தார்.

**இரண்டாம் கிருட்டிணப்பர்** (கி.பி. 1595-1601) (காண்க: கிருட்டிணப்ப நாயக்கர், இரண்டாம்)

**முத்துக்கிருட்டிணப்பர்** (கி.பி.1601-09) இரண்டாம் கிருட்டிணப்பர் வாரிசின்றி இறந்தார். இளவலான விசுவப்பர், கிருட்டிணப்பருக்கு முன்பே இறந்துவிட்ட தால் கடைசித் தம்பியான கத்தூரிரங்கப்பநாயக்கர் பதவியேற்றார். ஆனால், முறைப்படி ஆட்சிக்கு வர வேண்டிய விசுவப்பரின் மகன் முத்துக்கிருட்டிணப் பரை மக்கள் ஆதரித்ததால், பதவியேற்ற சில தினங்களிலேயே கத்தூரிரங்கப்பர் கொலையுண்டார். எனவே, முத்துக்கிருட்டிணப்பர் மதுரை நாட்டின் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டார்.

இவர் மறவர் நாடாகிய இராமநாதபுரத்தில் நல்லாட்சியை ஏற்படுத்தினார். போர்ச்சுகீசியர்கள் கிழக்குக் கடற்கரையோரங்களில் செல்வாக்குப் பெறத் தொடங்கியது மதுரை நாட்டுக்குத் தீமை செய்யக்கூடும் என்று கருதிய நாயக்கர், போகலூர் என்னும் சிற்றூரின் தலைவனான சடையத்தேவன் உடையானை மறவர் நாட்டிற்குத் தலைவராக்கினார். இவரே சேதுபதி என்று சொல்லப்பட்டார். போக லூரிலும், இராமநாதபுரத்திலும் அரண்களை அமைத்து அமைதி ஏற்படுத்தினார். மக்கள் தொல் லையின்றி இராமமேசுவரம் செல்ல வழி வகைகள் செய்யப்பட்டன.

இவருடைய ஆட்சிக் காலத்தில் இராபர்ட்-டி-நொபிலி என்ற உரோமன் கத்தோலிக்கப் பாதிரி யார் மதுரைக் கிறித்தவ சங்கத்தின் சார்பில் கிறித் தவ சமயத்தை இந்திய மயமாக்கி, உயர்குடி இந்துக் கள் சிலரைக் கிறித்தவராக்கினார். முத்துக்கிருட்டி ணப்பர் இதனை ஆதரிக்கவுமில்லை, எதிர்ப்புக் காட்டவும் இல்லை.

தம் முன்னோர்களைப் போலவே விசயநகரப் பேரரசுக்குட்பட்ட மன்னராக இவர் திகழ்ந்தார். மதுரைக்கு அருகில் கிருட்டிணாபுரம் என்னும் ஊரை ஏற்படுத்தினார். கன்னியாகுமரியிலிருக்கும் பகவதி அம்மன் கோவிலுக்கு நிலம் அளித்தார். இவர் கி.பி. 1609-இல் இறந்தார்.

**முதலாம் முத்து வீரப்ப நாயக்கர் (கி.பி. 1609-1623)** முத்துக் கிருட்டிணப்ப நாயக்கருக்குப் பின் அவரது மூத்த மகனான மூத்துவீரப்ப நாயக்கர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார்.

இவர் காலத்தில் விசயநகருடனான உறவில் மாற்றம் ஏற்பட்டது. விசயநகர மன்னர் இரண்டாம் வேங்கடர் கி.பி. 1614-இல் இறந்தவுடன் அரியணைக்கு உரியவராக அறிவிக்கப்பட்ட சிரீரங்கர் சில மாதங்களில் உட்கட்சிக் கலகத்தால் கொல்லப்பட்டார். இதனையடுத்து ஏற்பட்ட பட்டத்தகராறு தோப்பூர் போரினால் (கி.பி. 1616) முடிவுக்குக் கொண்டு வரப் பட்டது. இராம தேவர் விசயநகர வேந்தரானார். முத்து வீரப்ப நாயக்கர் போரின்போது தஞ்சை நாயக்கரோடு போர் புரிய வேண்டி இருந்த நிலையைப் பயன்படுத்தி, மைசூர் மன்னர் இராச உடையார், படை அனுப்பித் திண்டுக்கல்லைத் தாக்கினார். விருப்பாட்சிப் பாளையப்பட்டுத் தலைவரும் கன்னிவாடிப் பாளையப்பட்டுத் தலைவரும் போராடிப் பகைவர்களை வென்று திண்டுக்கல்லைப் பாது காத்தனர்.

**திருமலை நாயக்கர் (கி.பி. 1623–1659)** திருமலை சவுரி நாயினு அய்யனுகாரு என்று சொல்லப்பட்ட திருமலை நாயக்கர் மதுரை நாயக்க மன்னர்களுள் தலை சிறந்தவர்.

பல்லவ அரசர்களுள் மகேந்திரவர்மப் பல்லவனைப் போன்றும், பிற்காலச் சோழர்களுள் இராச ராசனைப் போன்றும், நாயக்க அரசர்களுள் திருமலை நாயக்கர் தலை சிறந்து விளங்குகின்றார். இவர் காலத்தில் மதுரைப் பெருநாடு, திண்டுக்கல், மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம், சிவகங்கை, திருவனந்தபுரத்தின் ஒரு பகுதி, புதுக்கோட்டை, திருச்சிராப்பள்ளி, சேலம், கோயம்புத்தூர் ஆகிய பகுதிகளைக் கொண்ட பெருநாடாக இருந்தது.

தலைநகரைத் திரிசிரபுரத்திலிருந்து இவர் கி.பி. 1634-இல் மதுரைக்கு மாற்றி விட்டார். இவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றவுடன் ஐந்து பெரும் போர்களை நடத்த வேண்டியவரானார்.

விசயநகர அரசு வீழ்ச்சி பெற்றவுடன் மைசூர் வலிமை பெற்றது. ஆனால், நலிவுற்ற விசயநகர அரசுக்குத்துணை நின்றது. பேரரசுக்கு எதிராக மதுரை இயங்கியதையும், தஞ்சை நாயக்கர்களுக்கு எதிராக மதுரை நாயக்கர் போர் தொடுத்ததையும் மறக்க வில்லை. மேலும், மதுரை நாட்டின் செழிப்பு அப்போது மன்னராக இருந்த சாமராச உடையார் மனத்தைக் கவர்ந்திருந்தது. ஆதலால், உடையார் மதுரை நாட்டைக் கைப்பற்ற எண்ணிப் பெரும் படையை அரிகரநந்திராசா என்ற படைத்தலைவரின் கீழ் அனுப்பி வைத்தார். திண்டுக்கல்லை மைசூர்ப் படை முற்றுகையிட்டது. இராமப்பையர் தலைமையில் அனுப்பப்பட்ட மதுரைப்படை எதிரிகளை விரட்டியது.

அடுத்து இவர் திருவாங்கூர் மன்னர் நாட்டின் மீது படையெடுத்தார். திருவாங்கூர் மன்னர் உன்னி கேரளவர்மா வழக்கம்போல் மதுரை நாட்டிற்குக் கட்டி வந்த கப்பத்தைக்கட்ட மறுத்துவிட்டார். எனவே, நாயக்கர் திருவாங்கூர் நாட்டுக்கு அருகில் திருவாங்கூர் மன்னர் உன்னிகேரள வர்மனின் படையெழுச்சியையும் திருமலை நாயக்கர் சந்திக்க வேண்டியதாயிற்று. இராமநாதபுரத்துச் சேதுபதியின் நாட்டில் அரசுரிமைப் போர் ஏற்பட்ட போது, நாயக்கர் படை இதில் தலையிட்டுத் தம்பி என்பானைச் சேதுபதி பதவியில் அமர்த்தியது. எனினும், மறவர் நாட்டில் அரசுரிமைப் போராட்டம் தொடர்ந்து நடைபெற்றது. திருமலை நாயக்கர் கி.பி. 1645–இல் மறவர் நாட்டை மூன்று பகுதிகளாகப் பிரித்து இராமநாதபுரத்தை இரகுநாததேவருக்கும், சிவகங்கையைத் தம்பிக்கும், திருவாடானையை இரகுநாதர் தம்பியான தணக்கத் தேவருக்கும் அளித்தார். இவ்வாறு இவர் மறவர் நாட்டில் அமைதியை நிலை நாட்டியதோடு, எட்டயபுரத்துப் பாளையக்காரர் தம்மை எதிர்த்தபோது அவரை எதிர்த்துப் போர் புரிந்தும் வென்றார். அதனால், இவர் 'நாட்டுக் காவலர்' என்ற சிறப்புப்பட்டத்தைப் பெற்றார்.

விசயநகர அரசர் மூன்றாம் வேங்கடருடன் இராமதேவரின் சிற்றப்பனான திம்மராசன் என்பவன் அரசபதவிக்குப் போட்டியிட்டபோது தஞ்சை செஞ்சி நாயக்கர்களுடன் சேர்ந்து திருமலை மன்னனும் வேங்கடருக்குத் துணை நின்றார். மூன்றாம் வேங்கடருக்கு ஆதரவாக அவர் தம்பி மைந்தன் சிரீரங்கன் பழவேற் காட்டிலிருந்த தச்சுக்காரர்களின் உதவி பெற்றுத் திம்மராசனுடன் போர்புரிந்து அவனை அடக்கினான். ஆனால், திம்மராசன் தொடர்ந்து கலகத்தில் ஈடுபட்டதால் கி.பி.1635-இல் செஞ்சி நாயக்கருடன் நடந்த போரில் கொலையுண்டான்.

சிரீரங்கன் விசயநகர அரசரான பின், கி.பி. 1642 –இல் திருமலை நாயக்கருக்கு எதிராக மதுரைமீது படையெடுத்தார். தஞ்சை, செஞ்சி நாயக்கர்களின் உதவி திருமலைக்குக் கிடைக்காததால், வேலூர் மீது

படையெடுக்குமாறு பீசப்பூர் கோல்கொண்டா படைகளைத் திருமலை வேண்டினார். முசுலிம் படை வேலூரைத் தாக்கியதால், சிரீரங்கன் தனது தலைநகரைக் காப்பாற்றத் திரும்பிச் செல்ல வேண்டியதாயிற்று. முசுலிம் படை செஞ்சியை முற்றுகையிட்டுக் கடுமையாகத் தாக்கியது. செஞ்சியை முசுலிம் படைகள் கைப்பற்றின. அதன் பின்னர் அப்படைகள் தஞ்சைக்கும் மதுரைக்கும் முன்னேறின. தஞ்சாவூர் நாட்டைக் கொள்ளையடித்துவிட்டு மதுரையின் மீது தாக்க முன்னேறியபோது கள்ளர்களைக் கொண்ட புதிய படையைத் திரட்டித்திருமலை பீசப்பூர் படையெடுப்பை முறியடித்தார்.

பீசப்பூர் சுல்தானுக்கு உதவிய திருமலை நாயக்கரைத் தண்டிக்க விழைந்தார் மைசூர் உடையார். எனவே, பெரும்படையை மதுரைக்கு அனுப்பினார். மைசூர்ப்படை கி.பி. 1656-இல் சத்திய மங்கலத்தைக் கொள்ளையிட்டது. மக்களின் மூக்குகளையும் அறுத்தது. எனவே, இது மூக்கறுப்புப் போர் எனச் சொல்லப்படுகிறது. இரகுநாத சேதுபதி உதவியுடன் படையெடுப்பைத் திருமலை தடுத்து நிறுத்தினார். கடும் போருக்குப் பின் மதுரை காப்பாற்றப்பட்டது. பாளையக்காரர்களின் துணையுடன் நஞ்சன்கூடு வரை மைசூர்ப் படைகளை விரட்டிச் சென்று எதிரில் கண்டவர்களின் மூக்கை அறுத்துப் பழி தீர்த்துக் கொண்டது நாயக்கர் படை.

இவருடைய ஆட்சிக் காலத்தில் தூத்துக்குடிக் கடற்கரைப் பகுதியில் தச்சுக்காரர்களும், போர்ச்சுகீசியரும் முத்துக்குளிக்கும் கரையைத் (Pearl Fishery Coast) தம் ஆதிக்கத்தின்கீழ்க்கொண்டுவரப் போட்டியிட்டனர்.

அவர் வெற்றிகளும், அவர் செய்த அறப்பணிகளும், கலைப்பணிகளும் அவர் புகழுக்குச் சான்றாக உள்ளன.

இவர் மதுரைக் கோயிலைச் செப்பனிட்டு அதை விழா நகரமாக்கினார்; கோயில் பட்டர்கள் நிருவாகத்தைச் சீர்படுத்தினார்; மதுரையில் அழகிய தெப்பக் குளம், புதுமண்டபம், ஆவணி மூலை, இராயர் கோபுரம் ஆகியவை இவருடைய பிற பணிகளாகும். மதுரையை அழகுபடுத்தும் கட்டடங்களுள் ஒன்றான நாயக்கர் மகால் இவரால் கட்டப்பட்டது. ஊட்டத்தூர் முதல் கன்னியாகுமரி வரை அமைத்த சாலை இவர்தம் பொதுப்பணிக்கு உரைகல்லாகும்.

திருமலை கி.பி. 1659-இல் இறந்தவுடன் அவர் தம் இரண்டாம் புதல்வர் இரண்டாம் முத்துவீரப்பர் அரியணையேறினார்.

இவர் அரியணையேறிய போது பீசப்பூர் இடையீட்டைத் தமிழகம் பெரிதும் எதிர்நோக்கியிருந்தது. திருச்சிக் கோட்டையில் படைவலிமை பெருக்கப்பட்டிருந்ததால் பீசப்பூர்சுல்தானின் தாக்குதலிலிருந்து பிழைத்தது. ஆனால், தஞ்சையும் மன்னார்குடியும் வல்லமும் எதிரிகளிடம் சென்றன. இதைத் தொடர்ந்து கொள்ளை, பஞ்சம், பட்டினி ஆகியவை நிலவின. இரண்டாம் முத்துவீரப்பர் நான்கு மாதங்களே ஆட்சி செய்தபோதிலும் இடைவிடாது முசுலிம் படையெடுப்பை எதிர்த்து நின்று போராடினார்.

**சொக்கநாத நாயக்கர் (கி.பி. 1659-1682)** இவருடைய ஆட்சிக்காலத்தில் முசுலிம் படையெடுப்பினால் நாடு அல்லலுற்றது. இவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபோது இளைஞராய் இருந்ததால் தளவாயாக இருந்த இலிங்கம் நாயக்கனும், பிரதானியும், இராயசமாகப் பணி செய்தவனும் ஆகிய மூவரும் ஒன்று சேர்ந்து பெயரளவில் அரசரை ஆட்சிப் பொறுப்பில் வைத்து நடைமுறையில் அதிகாரத்தைக் கைப்பற்றிவிட்டார்கள். அதனால் நாட்டில் குழப்பம் ஏற்பட்டது. சொக்கநாதர் முழு உரிமையுடன் ஆட்சியைத் தொடங்கியபின் வலுவான ஆட்சியை ஏற்படுத்தினார். பீசப்பூர் தளபதியின் படையெடுப்பினை முறியடித்தார். தஞ்சை நாயக்கரையும் அடிபணியச் செய்தார்.

பீசப்பூர் தளபதி வனமியான் கி.பி. 1663-இல் மீண்டும் திருச்சியை முற்றுகையிட்டார். கோட்டையை வீரத்துடன் பாதுகாத்ததால் வெற்றி வாய்ப்பு இழந்த வனமியான் நகரத்தின் சுற்றிலுமிருந்த சிறிய ஊர்களை அழித்தான். பேரழிவு உண்டாக்கியதோடு நாட்டைவிட்டுச் செல்ல பெரும்பொருள் வேண்டினான். வலிமை, அரண் வலிமை இருந்தும் சுற்றுப்புற மக்களுக்குத் துன்பம் ஏற்படாதவாறு இருக்கும் பொருட்டு மன்னர் அவன் கேட்டபொருளைக் கொடுத்து நாட்டைவிட்டு அனுப்பினார்.

வனமியான் படையெடுத்தபோது தமக்கு உதவி புரியாமல் எதிரிகளுடன் சேர்ந்து கொண்டதற்குப் பழி வாங்கத் தஞ்சைமீது படையெடுத்துச் சென்று வல்லம் கோட்டையைக் கைப்பற்றினார். அடுத்துச் சேது மன்னருடன் போர் தொடுத்து மறவர் நாட்டில் புகுந்து திருப்பத்தூர், புதுக்கோட்டை, மானாமதுரை, காளையார்கோயில் ஆகிய இடங்களைக் கைப்பற்றினார். தொடர்ந்து போரை நடத்தும் பொறுப்பைப் படைவீரர்களிடம் ஒப்படைத்து நாடு திரும்பினார். படைவீரர்கள் மறவர் நாட்டில் தொடர்ந்து தாக்குதல் நடத்த முடியாது உடனடியாக நாடு திரும்பினர். மீண்டும் திருச்சி கி.பி. 1665-இல் தலைநகராயிற்று. மைசூர்ப் படையினர்

கி.பி. 1667-இல் சேலம், கோயம்புத்தூர் மாவட்டங்களைக் கைப்பற்றினர். தஞ்சையை எகோசி கைப்பற்றினார். திருச்சிக்கு வடக்கிலிருந்த பகுதியைச் செர்கான் லோடி கைப்பற்றியிருந்தார். செஞ்சி, வேலூர் போன்ற இடங்களைக் கைப்பற்றிய பிறகு சிவாசி கி.பி. 1667-இல் நாயக்கர் நாட்டை நோக்கி முன்னேறினார். அவர் திருமழபாடியில் தங்கியிருந்தபோது பெரும் பொருள் கொடுக்கப்பட்டு மராட்டியர் படையெடுப்புத் தவிர்க்கப்பட்டது. திருச்சியில் உட்பூசல் மிகுந்தது. நாடு மேலும் வலுக்குறைவடைந்தது. மைசூர்ப் படை மதுரையைக் கி.பி. 1680-இல் முற்றுகையிட்டது. பாளையக் காரர்கள் உதவியுடனும், தஞ்சையை ஆண்டமராட்டியமன்னர் உதவியுடனும், மைசூர்ப் படையெடுப்பு முறியடிக்கப்பட்டது. திருச்சி மீட்கப்பட்டது. சொக்கநாதர் இறுதிக்காலம் வேதனை மிகுந்ததாக இருந்தது. இவர் கி.பி. 1682-இல் இறந்தார்.

**மூன்றாம் முத்துவீரப்பன் (கி.பி. 1682-89):** நாயக்கராட்சி வலிமைகுன்றத் தொடங்கியது. மதுரை மீது ஆதிக்கம் செலுத்த மைசூர் மன்னனும் மராட்டிய மன்னனும் போட்டியிட்டனர். இதற்கிடையில் இராமநாதபுரத்தை ஆண்ட இரகுநாததேவர் என்ற கிழவன் சேதுபதி மதுரையைக் கைப்பற்றத் திட்டமிட்டார். ஆனால், அவருடைய திட்டம் முறியடிக்கப்பட்டது. திறமை மிக்க இவருடைய ஆட்சி குறுகிய காலத்திலேயே முடிவடைந்தது. இவருக்குப்பின் புதல்வன் விசயரங்க சொக்க நாதன் கி.பி. 1689-இல் அரசனானார்.

விசயரங்க சொக்கநாதன் சார்பாக அவருடைய பாட்டியும், சொக்கநாதரின் மனைவியுமான மங்கம்மாள் ஆட்சி நடத்தினாள்.

**இராணி மங்கம்மாள் (கி.பி.1689-1706):** இராணி மங்கம்மாள் திறமையாக ஆட்சி நடத்தியபோதிலும் நாயக்கர் ஆட்சியின் வீழ்ச்சியை அவரால் தடுத்து நிறுத்த இயலவில்லை. இவருடைய காலத்தில் தில்லி முகலாயப் பேரரசர் ஔரங்கசீபு தக்காண வெற்றிக்குப் பின்னர் தம் சார்பாகச் சுல்பிக்கர் கானைத் தமிழ்நாடு அனுப்பினார். இவன் செஞ்சியிலும் தஞ்சையிலும் இருந்த மராட்டியர்களை வென்று முன்னேறினான். முகலாயர்களின் பலத்தையும் நாயக்கர்களின் வலிமைக்குறைவையும் உணர்ந்த மங்கமாள் முகலாய மன்னனுக்குத் திறைசெலுத்தஇணங்கி முசுலிம் படையெடுப்பைத் தவிர்த்தாள். மராட்டியர் தொல்லை யாவும் பணத்தின் துணை கொண்டு தவிர்க்கப்பட்டன. மைசூர்ப் படையினரின் தாக்குதல்களும் முடிவடைந்தன.

திருவாங்கூர் மன்னராயிருந்த இரவிவர்மா கப்பம் செலுத்த மறுத்தபோது மங்கம்மாள் தம் தளபதி அரசப்பய்யா தலைமையில் படை அனுப்பி இரவிவர்மாவை வென்று திறைப் பொருள் பெற்றாள்.

மங்கம்மாளின் ஆட்சிக் காலத்தின் இறுதிப்பகுதியில் இராமநாதபுரத்தை ஆண்ட கிழவன் சேதுபதி நாயக்கர்களுக்குத் தொல்லை கொடுத்தார். இதனை மங்கம்மாள் ஒடுக்கமுடியவில்லை. இராமநாதபுரம் சுதந்திரம் பெற்றது. மங்கம்மாள் கி.பி. 1706-இல்இறந்தாள். மங்கம்மாள் தம் ஆட்சிக்காலத்தைப் பொதுத் தொண்டுகளிலும், நீர்நிலைகள், சாலைகள் ஆகியவற்றைஅமைப்பதிலும், நிழல் தரும் மரங்கள் நடுவதிலும், சத்திரங்கள் அமைப்பதிலும், தண்ணீர்ப்பந்தல்கள் அமைப்பதிலும் செலவிட்டார். இத்தகைய தொண்டுகள் அவருக்கு நிலைத்த புகழைத் தந்தன.

**விசயரங்க சொக்கநாதர்:** (கி.பி. 1706-32): விசயரங்க சொக்கநாதர் அளவுக்கு மிஞ்சிய சமயப் பணிகளில் ஈடுபட்டதால் நிருவாகம் சீர்குலைந்தது. நாட்டு வருவாயைக் கோயில்களுக்கும் மடங்களுக்கும் வாரி வழங்கினார்.

மறவர் நாட்டில் கிழவன் சேதுபதி இறந்தார். இராமநாதபுரத்தில் வாரிசுரிமைப் போட்டிகளும் உட்பூசல்களும் தோன்றின.

விசயரங்க சொக்கநாதர் வாரிசின்றி கி.பி.1732-இல் இறந்தார். எனவே, அவர் மனைவி மீனாட்சி ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டார்.

**மீனாட்சி** (கி.பி.1732-36): இவருடைய ஆட்சிக் காலத்தில் உறவினர்களுள் ஒருவனான பங்காரு திருமலை அரசுரிமையைப் பெறும் முயற்சிகளில்ஈடுபட்டார். ஆர்க்காடு நவாபான தோசுதுஅலி தஞ்சையையும் மதுரையையும் தம் மேலாதிக்கத்தில்கொண்டு வர மகன் சப்தர் அலியையும், மருமகன் சந்தாசாகிபையும் அனுப்பினார். சப்தர் அலியுடன் சந்தாசாகிபு சேர்ந்து கொண்டார். மீனாட்சிக்குப் பதிலாகப் பங்காருவை அரசராக்குமாறு சந்தா சாகிபிடம் கூறி விட்டுச் சப்தர்அலி சென்று விட்டார். பங்காருவும் அவர் மகனும் மதுரை நாட்டை ஆளத் தொடங்கினர். மீனாட்சி சிறையிலடைக்கப்பட்டார். திருச்சியை கி.பி.1736-இல் கைப்பற்றிய சந்தாசாகிபு பின்னர்த்திண்டுக்கல்லையும், மதுரையையும் கைப்பற்றினார். தோல்வியுற்ற பங்காரு தப்பியோடினார். காவலில் வைக்கப்பட்ட மீனாட்சி நஞ்சுண்டு இறந்தார். இவருடைய மறைவுடன் நாயக்கர் ஆட்சி மதுரையில் முடிவடைந்தது. எஸ்.அ.

**தஞ்சை நாயக்கர்கள்:** தமிழகம் வியசநகரப் பேரரசின் ஆட்சியின்கீழ் வந்தபொழுது அதன் நிருவாகம் 'நாயக்கர்' என்ற விருதினைப் பெற்றிருந்த படைத்

தலைவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. அத்தகைய ஆணையர்கள் செஞ்சி, மதுரை, தஞ்சை ஆகியவிடங்களில் நியமிக்கப்பட்டதால் தஞ்சை நாயக்கர்கள் கி.பி.1532-இல் தொடங்கிகி.பி.1675 வரை 143ஆண்டுகள் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். இவர்கள் அனைவரும் விசய நகரப் பேரரசர்களுக்கு விசுவாசம் உள்ளவர்களாக நடந்து கொண்டனர்.

**அச்சுதப்ப நாயக்கர்** (கி.பி.1580-1600): செவப்ப நாயக்கருக்குப் பின் அவர் மகன் அச்சுதப்பர் கி.பி. 1580-இல் தஞ்சை அரியணையேறினார். இவர் காலத்தில்தான் கிருட்டிணதேவராயர் காலத்தில் தொடங்கப்பட்ட திருவண்ணாமலை அருணாசலேசுவரர் கோயில் கோபுரம் கட்டி முடிக்கப்பட்டது. இவர் அதன் உச்சியில் தங்கக் கலசங்களை அமைத்துக் கொடுத்தார். அந்தணருக்கு இவர் பல குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொடுத்ததுடன் பல கோயில்களுக்கு மண்டபங்களையும் கட்டினார். இவர் அமைச்சரும் வடமொழி அறிஞருமான கோவிந்த தீட்சிதர் கும்பகோணத்திலுள்ள மகாமகக் குளத்திற்குப் படித்துறைகளையும், மண்டபங்களையும் கட்டி அழகு பெறச் செய்தார். இவர் தம் மகன் இரகுநாதருக்குஇளவரசுப் பட்டம் சூட்டி, ஆட்சிப்பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தார். இவர் கி.பி.1614-இல் இறந்தபொழுது இவருடைய மனைவியர் 370 பேரும் உடன்கட்டையேறினர்.

**விசயராகவ நாயக்கர் (கி.பி.** 1634-1673): இரகுநாத நாயக்கர் 1634 – இல் இறந்ததும் அவர் புதல்வர் விசயராகவர் தம் 40-ஆம் வயதில் அரியணையேறி 40 ஆண்டுகள் ஆட்சிசெய்தார். சிறந்த கல்வியாளரான இவர் 'இரகுநாதப் பியூதயம்' என்னும் நாடக நூலைத் தெலுங்கில் இயற்றினார். அதில் இவர் தம்முடைய வரலாற்றுச் செய்திகளைச் சேர்த்திருப்பதால் அது ஒரு நல்ல வரலாற்றுச் சான்றாகப் பயன்படுகிறது. இவர் விசயநகரப் பேரரசர் மூன்றாம் சீரங்கராயரை ஆதரித்ததால் செஞ்சி, மதுரை நாயக்கர்களின் பகையைப்பெற்றார்.கோல்கொண்டா பீசப்பூர் சுல்தான்கள் படையெடுத்த பொழுது அவர்களை எதிர்த்துப் போரிடமுடியாமல் சரணடைந்தார். மதுரை சொக்கநாத நாயக்கரின் படையிடம் தோல்வியுற்றார். இவருடைய ஆட்சிக்காலத்தில் நாட்டின் பொருளாதார நிலை சீர்கெட்டுப் பஞ்சமும் நோய்களும் பெருகி, மக்கள் துன்பத்திற்கு உள்ளாயினர். சொக்கநாத நாயக்கருடன் கி.பி. 1673-இல் செய்த போரில் இவரும், இவர் மகன் மன்னார்தாசும் மடிந்தனர். தஞ்சை நாயக்க அரசு மதுரை நாயக்க அரசுடன் இணைக்கப்பட்டது.

சொக்கநாத நாயக்கர் தஞ்சையை ஆட்சி செய்யத் தம் ஆளுநராக அழகிரியை கி.பி. 1674-இல் நியமித்தார். அப்பொழுது தஞ்சையில் இராயசமாக விருந்த வெங்கண்ணா விசயராகவ நாயக்கரின் பெயரனான செங்கமலதாசுவைத் தஞ்சை அரியணையில் ஏற்றப் பீசப்பூர் சுல்தானின் உதவியை நாடினார். அவரும் எகோசி என்ற வெங்காசி தலைமையில் ஒரு படையை அனுப்பிவைத்தார். அப்படையைக் கண்டு அழகிரி ஓடிவிடவே கி.பி. 1675-இல் செங்கமலதாசு தஞ்சை நாயக்கரானார். ஆனால், அவர் வெங்கண்ணாவின் சொற்படி நடக்காததால் அவர் வெங்காசியுடன் சேர்ந்துகொண்டு சூழ்ச்சி செய்தார். வெங்காசி எளிதில் தஞ்சையைக் கைப்பற்றித் தாமே மன்னரானார். எனவே, இவரது ஆட்சிக்காலத்தின் இறுதியில் தஞ்சையில் நாயக்கர் ஆட்சி முடிந்து மராத்தியர் ஆட்சி தொடங்கியது. சி.இரெ.

**சமூக வாழ்க்கை:** மன்னனும் அவன் உறவினர்களும் சமுதாயத்தில் உயர்ந்த இடத்தைப் பெற்றனர். தெலுங்கு மொழி பேசிய நாயுடுகள், இரெட்டிகள் இராசுக்கள் (Rajus) ஆகும் வருக்கத்தினராகக் கருதப்பட்டுப் பல வசதிகளைப் பெற்று, ஆடம்பரமாக வாழ்ந்தனர். கம்மாளரிடையே ஐந்து பிரிவுச் சாதிகள் இருந்தன. கொல்லன், பொற்கொல்லன், செப்புக்கொல்லன், தச்சன். கைவினைஞர் ஆகியோரே இவர்கள். மதுரையில் வசித்து வந்த பட்டுநூல்காரர்களும் உபகர்ணம் செய்யும் உரிமையை அரசி மங்கம்மாளிடமிருந்து பெற்றனர் (கி.பி.1705). எனவே,பட்டுநூல் காரர்களும் சமுதாயத்தில் உயர்வு பெற்றனர். கலப்புத் திருமணங்களும் சாதிக்கலப்புகளும் நிகழ்ந்ததால், சாதிகள் எண்ணிக்கையில் உயர்ந்தன. குழந்தைத் திருமணமும், திருமணத்தின்போது சீதனமாக நகையும் சொத்தும் வழங்குதலும் நிலவின. வரதட்சணை வாங்குவதும் கொடுப்பதுவும் கூட நடைமுறையில் இருந்தன. உடன்கட்டை ஏறும் வழக்கமும் பின்பற்றப்பட்டது.

உயர்சாதியினரிடையே பலதாரமணம் ஒப்புக்கொள்ளப்பட்டது. நாட்டில் விபச்சாரம் தடை செய்யப்படவில்லை. கோயிலில் திருப்பணி புரிந்து வந்த தேவதாசிகளும் நாளடைவில் வறுமையின் காரணமாகச்சேரிப் பரத்தையருடன் சேர்ந்து கொண்டனர். பெண்களுள் சிலரே கல்வி கற்றனர். ஆயினும் பெண்கள் மதிக்கப்பட்டனர். உணவு முறைகளில் மிகுதியான கட்டுப்பாடுகள் இருந்ததாகத் தெரியவில்லை.

நாயக்கர் ஆடை அணிகலன்களுக்குப் பெரும் பொருளைச் செலவிட்டனர். அரச குடும்பத்தினருக்குப் பட்டாடை நெய்யச் சௌராட்டிரர் மதுரையில் குடியேற்றப்பட்டனர். கிறித்தவப் போதகர்கள்

மதப் பிரச்சாரத்திலும் மதமாற்றம் செய்வதிலும் முனைந்து செயற்பட்டனர். வலங்கை-இடங்கைப் பிரிவினரிடையே ஒற்றுமை நிலவவில்லை. மக்கள் பலர் வறுமையில் வாடினர்.

**இலக்கிய வளர்ச்சி:** நாயக்க மன்னர்கள் தெலுங்கு மொழி இலக்கிய வளர்ச்சியில் பேரார்வம் காட்டினர். அதனை அடுத்து வடமொழி, கன்னடம், தமிழ் இலக்கியங்களும் வளர்ந்தன. அவை பெரும்பாலும், சமயச்சார்புடையவையே. நாயக்க மன்னர்கள் பொதுவாகக் கவிஞர்கள், அறிஞர்கள், வேதாந்திகள், சித்தாந்திகள் ஆகியோரையும், அயல்நாட்டுக் கிறித்தவ சமயப் போதகர்கள் போன்றோரையும் போற்றி ஆதரித்தனர். காஞ்சியும், மதுரையும் முறையே வடமொழி, தமிழ்மொழிக் கல்வியின் மையங்களாகத் தொடர்ந்திருந்தன. சிதம்பரபுராணம், மதுரைச் சொக்க நாதர் உலா ஆகியவற்றை இயற்றிய திருமலைநாதர், சிதம்பரப்பாட்டியலை இயற்றிய பரஞ்சோதியார், தத்துவப் பிரகாசம் என்னும் நூலை எழுதிய தத்துவப் பிரகாச சுவாமிகள், வைவல்ய நவநீதத்தை இயற்றிய தாண்டவராய சுவாமிகள், காஞ்சிக் கலம்பகம் இயற்றிய ஞானப்பிரகாச தேசிகர், மண்டல புருடர் முதலான பெரும்புலவர்கள் நாயக்கர் அவையை அலங்கரித்தனர். மதுரைக் கலம்பகம் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், சகல கலாவல்லி மாலை முதலான நூல்களை இயற்றிய புகழ்மிக்க குமரகுருபரர், பிரபோதசந்திரோதயத்தை இயற்றிய மாதை திருவேங்கடநாதர், தமிழிசைக் கவிஞரும் தத்துவ போதகருமான தாயுமானசுவாமிகள் ஆகியோர் திருமலை நாயக்கர் காலத்தில் இலக்கியத்திற்கு மெருகூட்டினர். புகழ்மிக்க அதிவீரராம பாண்டியன், எல்லப்ப நாவலர், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், பிள்ளைப்பெருமாள் ஐயங்கார், உமறுப்புலவர், வீரமாமுனிவர், இராபர்ட்டி-நொபிலி போன்றோர் இக்காலத்தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் துணை புரிந்தனர்.

தஞ்சை நாயக்கர் காலத்தில் பெரும் அளவில் இலக்கியங்கள் மலர்ந்தன. இரகுநாத நாயக்கர் இலக்கியம், இசை ஆகிய துறைகளில் ஆற்றல் மிக்கவர். இவர் சானகிபரிணயம், அச்சுதாப்பியூதயம் யட்சகானம், நளசரித்திரம், இரகுநாதராமாயணம், வான்மீகிசரிதம் முதலானபல தெலுங்கு இலக்கியங்களைப் படைத்துள்ளார். இவ்வேந்தன் மனைவி இராமபத்திராம்பா புலமை மிக்கவர்; இரகுநாத நாயகாப்யூதயம் என்னும் நூலை இயற்றியவர். இரகுநாதரின் அவையில் மதுர வாணி (சுகவாணி) என்னும் புகழ்மிக்க வடமொழிப் பெண் புலவரும், சேமகூரிவேங்கடகவி, கிருட்டிணாத்வரி முதலான பெரும் புலவர்களும் இருந்து இலக்கியங்களைப்படைத்தனர். இக்காலத்தில்தான் 'பாகவதமேளா' என்னும் புது வகை இசைப்படைப்புத் தோன்றிற்று. பன்மொழிப்புலவரான கோவிந்த தீட்சிதர், செவப்பர், அச்சுதப்பர் இரகுநாதர் ஆட்சிக்காலங்களில் இலக்கியப் பணி புரிந்தார். இவர்மகனான யக்ஞ நாராயண தீட்சிதர் 'சாகித்ய ரத்னாகரம்' 'இரகுநாதவிலாசம்' முதலான காவியங்களை யாத்துள்ளார். அச்சுதப்பரின் மனைவி திருமலாம்பா, 'வரதாம்பிகா பரிணயம்' என்னும் நாடகத்தை இயற்றினார். புலமைமிக்க விசயராகவ நாயக்கரின் (கி.பி. 1638-1673) காலத்தில் இசை, நாட்டியம், நாடகம் ஆகியவை வளர்ச்சி பெற்றன. இவர் இரகுநாதநாயகாப்யுதயம், கிருட்டிணவிலாசம், காளிய மர்தனமு முதலான இருபதிற்கும் மேற்பட்ட நூல்களை இயற்றியவர். இவரது அவையை அரங்க சம்மா கிருட்டிணாசீ, லீலாவதி முதலான புகழ்மிகு பெண் கவிஞர்களும், 'இராசகோபால விலாசம்' இயற்றிய செல்கல்வகாள கவி, 'சதுர்த்தண்டிப் பிரகாசிகா' என்னும் இசை இலக்கண நூலைப் படைத்த வேங்கடமகி, 'விசயராகவ கலியாணம்' இயற்றிய கோனேட்டிராசதீட்சிதர் முதலான கீர்த்தி மிகு புலவர்களும் இலக்கியங்களை வளர்த்தனர். பிரபந்த இலக்கியங்கள், இக்காலத்தில்தான் தூய்மை பெற்றன. இவர்களது ஆதரவால் தெற்குத்தெலுங்குக் கவிதை அமைப்புஒன்று வளர்க்கப்பட்டு வந்தது. இந்து மடங்களும் கோயில்களும் கல்வி மையங்களாகத் திகழ்ந்து, கல்வியை வளர்த்தன.

**கட்டடக் கலை:** மதுரை, தஞ்சை, செஞ்சி நாயக்கரது ஆட்சிக் காலத்தில் தமிழகத்தின் பல பகுதிகளில் கோயில்கள் திருப்பணி செய்யப்பட்டன; பல கோயில்களில் உயரமான கோபுரங்களும், மண்டபங்களும், சுற்றுமதில்களும் கட்டப்பட்டன. இவர்கள் புதிய கோயில்களைக் கட்டுவதைக் காட்டிலும், பழைய கோயில்களை விரிவுபடுத்துவதிலும் அழகுபடுத்துவதிலும் ஆர்வம் கொண்டனர். மதுரை, திருவரங்கம், சிரீவில்லிபுத்தூர் ஆகிய கோயில்களின் பகுதிகளை இவர்கள் கட்டிப் பல கண்ணைக் கவரும் சிற்பங்களையும் வடித்தனர். திருவரங்கம் கோயிலில் சுற்றாலைகளும் (பிரகாரங்கள்) கோபுரங்களும் மண்டபங்களும் எழுப்பப்பட்டன. சிதம்பரம் கோயிலில் புதிய கோபுரமும், ஆயிரக்கால் மண்டபமும் கட்டப்பட்டன. திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலிலும், திருவண்ணாமலைக் கோயிலிலும் திருப்பணிகள் செய்யப்பட்டன. வேலூர், பேரூர்க் கோயில் கலியாண மண்டபங்கள் அழகுற அமைக்கப்பட்டன. மதுரை, திருச்சிராப்பள்ளி, இராமேசுவரம், சிரீவில்லிபுத்தூர், கிருட்டிணாபுரம், தாடிக்கொம்பு, சுசீந்திரம் கோயில்கள் நாயக்கர் காலத்தில் திருப்பணி செய்யப்பட்டன. மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயிலில் பல சோடனை உறுப்புகளைச் சேர்த்தவர் நாயக்கர். திரு

மலை நாயக்கரின் ஆட்சிக் காலத்தில், மதுரையில் பல திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன. இவர் கட்டிய அரண்மனையும் (திருமலைநாயக்கர் மகால்), இவர் வெட்டிய வண்டியூர்த் தெப்பக்குளமும் நாயக்கர்களின் கட்டடக் கலை மேன்மையை உலகிற்கு எடுத்தியம்புகின்றன. புதுமண்டபமும் தமுக்கம் விடுதியும் கூட இவர்களது பணியேயாகும். கோயில்களை விரிவுபடுத்திய நாயக்கர் கோட்டை கொத்தளம் அமைப்பதிலும், அரண்களை வலுப்படுத்துவதிலும் ஆர்வம் காட்டினர். எடுத்துக்காட்டாக வேலூர்க் கோட்டை, திருச்சிக் கோட்டை ஆகியவற்றைச் சுட்டலாம். மதுரை நாயக்கரது கட்டடக் கலை பாண்டியர் பாணியைப் பின்பற்றியவையே ஆகும். இருப்பினும் சில வளர்ச்சிகளை அவற்றில் காணலாம்.

தஞ்சைப் பெருவுடையார் கோயில், மன்னார்குடி இராசகோபால சுவாமிகோயில், திருவாரூர் தியாகேசர் கோயில், கும்பகோணம் இராமசாமி கோயில் ஆகியவற்றில் தஞ்சை நாயக்க வேந்தரது கட்டடக் கலைப் பாணியைக் காணலாம். இராசகோபால சுவாமி கோயிலில் விசயராகவர் இராச கோபுரங்களைக் கட்டுவித்ததுடன் ஆயிரக்கால் மண்டபம், கருடவாகன மண்டபம் முதலான மண்டபங்களையும் கட்டிக் கோயில் திருச்சுற்று மதிலையும் எடுப்பித்துக் கலைப்பணி புரிந்துள்ளார். இவர்கள் காலத்திய கட்டடங்கள் கலையழகு மிக்கவை. திருவண்ணாமலை, திண்டிவனம், நெடுங்குன்றம், சேத்துப்பட்டு, விருத்தாசலம் முதலான திருக்கோயில்கள் செஞ்சி நாயக்கரின் கட்டடக் கலைச் சிறப்பைக் காட்டுகின்றன. செஞ்சிக்கோட்டையும், கலியாணமகாலும் இவர்கள் படைப்புகளேயாகும்.

**சிற்பக்கலை:** நாயக்கர்கள் சிற்பக்கலையைப் போற்றிப் பாதுகாத்தனர். மதுரை நாயக்கர் கிருட்டிணாபுரம் (திருநெல்வேலி மாவட்டம்) தாடிக்கொம்பு (அண்ணா மாவட்டம்) மதுரை அங்கயற்கண்ணி ஆலயம், சிரீவல்லிபுத்தூர், அழகர்மலை, தென்காசி, திருப்பரங்குன்றம், குற்றாலம் முதலான இடங்களில் கலையெழில்மிக்கதும்கவர்ச்சியானதும்உயிரோட்டமான சிற்பங்கள் பலவற்றை வடித்துப் புகழ் கொண்டனர். இவர்களால் வடிக்கப்பட்ட மண்டபத் தூண்கள் சிறந்த ஒப்பனையுடன் விளங்குகின்றன. இத்தூண்கள் பொதுவாக யாளிகளை அல்லது ஓடும் நிலையில் உள்ள குதிரைமீது அமர்ந்திருக்கும் வீரர்களைத் தம்மகத்தே கொண்டுள்ளன. சில தூண்களில் மதுரை நாயக்க வேந்தனின் முழு உருவச் சிலைகள் தம தேவியர் புடைசூழச் செம்மாந்து நிற்கும் பாணியில் மிகச் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன. திருவரங்கம் திருக்கோயிலிலும், மதுரைப் புது மண்டபம், மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத் திருச்சுற்றுகளிலும் இவர் காலத்திய கவின்மிகு சிற்பங்கள் இன்றும் காணப்படுகின்றன. வீரப்ப நாயக்கரும் திருமலை நாயக்கரும் மதுரை நாயக்க மரபினருள் சிற்பக்கலையை ஆதரிப்பதில் முன்னணியில் நின்றனர். மதுரை ஆயிரக்கால் மண்டபத்தில் உள்ள யாழ் ஏந்தி இசைவழங்கும் பாணனின் மகளது உருவமும், கிருட்டிணாபுரத்தில் வடிக்கப்பட்டுள்ள குறவன், குறத்தி இளவரசி சிற்பங்களும், தாடிக்கொம்பில் வடிக்கப்பட்டுள்ள இரதி, மன்மதன், அகோர வீரபத்திரர் முதலான சிற்பங்களும் வைத்தகண் வாங்காமல் பார்த்துச் சுவைக்கத் தக்கனவாகும். மீனாட்சியம்மன் கோயில் சிற்பங்கள் உலகப் புகழ் பெற்றவை.

தஞ்சையின் இரகுநாதர் சிற்பக்கலையின் செழுமைக்குப் பேராதரவு நல்கினார். கும்பகோணம் இராமசாமி கோயில், திருக்கண்ண மங்கைத் திருக்கோயில், மன்னார்குடி இராசகோபால சுவாமி கோயில் ஆகியவற்றில் தஞ்சை நாயக்கரின் சிற்பப் பெருமையையும், நாயக்க மன்னரின் உருவச் சிலைகளையும் கண்டு களிக்கலாம். திருச்சேறை, தஞ்சை இராசகோபாலசுவாமி கோயில் ஆகிய இடங்களில் வடிக்கப்பட்டுள்ள இரகுநாதர் விசயராகவர் உருவங்கள் கலையழகு மிக்கவை.

கருங்கல்லில் சிற்பங்களைச் செதுக்கிய நாயக்கர்கள் மரத்திலும் தந்தத்திலும் செம்பிலும் பல கவின்மிகு உருவங்களை வடித்துள்ளனர். தஞ்சைக் கலைக்கூடத்தில் 108 செ.மீ. உயரமுள்ள இரகுநாதரின் செப்புத் திருமேனி அரிய வேலைப்பாடும் கலையழகும் கொண்டது.

**ஓவியங்கள்:** தமிழகத்தை ஆண்டு வந்த மதுரை, தஞ்சை, நாயக்கர்கள் ஓவியக்கலையைப் பேணிப் பாதுகாத்தனர். விசய நகர வேந்தர்களைப் பின்பற்றி அவர்கள் பேராளர்களாக வந்த நாயக்கர், தமிழகத்திலுள்ள பல திருக்கோயில்களில் கவர்ச்சி மிக்க வண்ண ஓவியங்களைத் தீட்டினர். இவர்களது ஓவியப் பாணி, ஏறத்தாழ விசய நகரப் பேரரசர்களின் பாணியை ஒத்ததாகும். திருப்பருத்திக்குன்றம், தஞ்சை, புன்னைநல்லூர், திருப்பெருந்துறை, புதுக்கோட்டை, திருவாரூர், காஞ்சி, திருவண்ணாமலை, திருவொற்றியூர், திருவரங்கம், திருவெள்ளறை, திருவலஞ்சுழி, சிதம்பரம், கும்பகோணம், பட்டீசுவரம், செங்கம், மதுரை, குற்றாலம், அழகர் கோயில் முதலான இடங்களில் நாயக்கர்கள் கவின்மிகு ஓவியங்களைத் தீட்டியுள்ளனர். நாயக்கரின் கலை ஆர்வத்தைக் கி.பி. 17-18-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இவை படம் பிடித்துக் காட்டுகின்றன.

திருக்குற்றாலத்துச் சித்திரசபையிலும் புதுக்கோட்டைத் திருக்கோகர்ணத்துக் கோயில் மண்டபத்து

விதானத்திலும் உள்ள ஓவியங்கள் நாயக்கர் காலத்து ஓவியங்களேயாகும்.

மேற்கூறியவற்றால் நாயக்கர் ஓவியக்கலையைப் பெரிதும் போற்றினர் என்பதும், விசயரங்க சொக்க நாதர், திருமலை நாயக்கர், இராணி மங்கம்மாள் முதலானோர் ஓவியக் கலையின் உயர்ச்சிக்குப் பாடு பட்டுள்ளனர் என்பதும் புலனாகும். இந்த ஓவியத் தொகுதிகளைக் கொண்டு நாயக்கர் கால மக்களின் உடை, ஒப்பனை, கூந்தல், அணிகலன்கள், பெண்கள் நிலை, வணங்கிய தெய்வங்கள், முக அமைப்பு முத லானவற்றை அறிந்து கொள்ளலாம்.

**சமயம்:** நாயக்கர்கள் இந்து சமயத்தின் காவலர்க ளாக விளங்கியபோதிலும் நாட்டில் சமயப் பொறை இருந்தது. அவர்கள் பெரும்பாலும் வைணவ சமயத் திற்குப் பேராதரவு அளித்த போதிலும், பிற சமயத் தாரை ஒடுக்க வில்லை. சைவ-வைணவ சமயங்களி டையே ஒற்றுமை காணப்பட்டது. முசுலிம்களின் ஆதிக் கத்தினின்றும் மதுரையை மீட்ட நாயக்கர்கள், பள்ளி வாசல்களுக்கும், மாதாகோயில்களுக்கும் கொடை கள் வழங்கினர். சமயத்தின் அடிப்படையில் எவரும் தரக்குறைவாக நடத்தப்படவில்லை. சமயப்பொறை யுடைய, தஞ்சை நாயக்கர்கள், தேனியரையும், ஆலந் தியரையும் பிரெஞ்சுக் காரரையும் மதிப்புடன் நடத்தியதுடன் அவர்கள் திருக்கோயில் கட்டவும் தக்க உதவிகள் புரிந்தனர். தரங்கம்பாடியில் தேனிய சபை ஏற்படத் தஞ்சைநாயக்கர் துணை புரிந்தனர். இவர்களது ஆட்சியின்போதுதான் கிறித்தவம் தென் மாவட்டங்களில் வேரூன்றத் தொடங்கியது. இராபர்ட்-டி-நொபிலி, சான்-டி-பிரிட்டோ ஆகியோர் கிறித்தவ சமயத்தைப் பரப்பத் தடையேதும் விதிக்கப்படவில்லை. திருமலை நாயக் கர் கிறித்தவ சமய போதகருக்குப் பேராதரவு நல்கினார். சிலசமயங்களில் சமயப் பூசல்கள் நிகழ்ந்த தாகவும் தெரிகிறது. இக் காலத்தில் வீரசைவம் (லிங்காயத்து) தமிழகத்தில் பரவியது. ம.இ.

**துணை நூல்கள்:**

**இராசையன்,கு.,** தமிழக வரலாறு(1565-1967), மதுரை தமிழரசி பப்ளிசர்சு, மதுரை, 1980.

**சுப்பிரமணியன்,ந.,** தமிழக வரலாறு (1565-1982) என் னெசு பப்ளிகேசன், மதுரை. 1987.

**நாகசாமி,இரா.,** ஓவியப் பாவை-தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை, 1979.

**வேதாசலம்,வெ.,** திருவெள்ளறை-தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை, 1977.

**Krishnaswami, A.,** The Tamil Country Under Vijay-anagar, Annamalai nagar, 1946.

**Srinivasachari, C.S.,** A History of Gingee and its rulers, Annamalainagar, 1943.

**நாயர்**, கேரளத்தில் வாழும் ஒரு சாதியினர். இந்து சமயத்தைச் சேர்ந்தவர்களாயினும் இவர்களின் சமூக அமைப்பு, வாழ்க்கை முறை, பழக்கவழக்கங்கள் முதலானவை சற்று வேறுபட்டுள்ளன. நாயர்களைப் பற்றி கி.பி. 77-இல் பிளினி (Pliny) என்பவர் இயற்கை வரலாறு (Natural History) என்னும் நூல் வரிசையில் எழுதியுள்ளதன் மூலமே வெளி உலகத் தார் இவர்களைப்பற்றி முதன்முதலில் அறியமுடிந் தது. இதன் பின்னர், கி.பி. 1325 முதல் 1354 வரை கேரளப் பகுதியில் வாழ்ந்த இபின் பாடுடா (Ibn Batuta) என்பவர் எழுதிய செய்திகள் மூலமும் தொடக்கக்காலஇனக்குழுவியலார் (Ethnographers) மூலமும் இவர்களைப் பற்றிப் பெருமளவு அறிய முடிந்தது.

ஆங்கிலேயர்கள் கி.பி. 1792-இல் ஆட்சியை ஏற் படுத்தியதற்கு முன்னர்க் கேரளப் பகுதிகளில் குறுநில மன்னர்கள் ஆண்டுவந்தனர். அப்போது நாயர் மக்கள் போர் வீரர்களாகவும் நிலமானியப் பெருநிலக்கிழார் களிடம் மேலாண்மைப் பணியாளர்களாகவும் பணி யாற்றி வந்தனர். அப்போது அவர்கள் கொண்டிருந்த குடும்ப முறை, திருமண முறை, படைத்துறை வாழ்க்கை அனைத்தும் இவர்களை மற்றவர்களிட மிருந்து வேறுபடுத்திவிட்டன.

நாயர்களின் குடும்பம் ‘தரவாடு’ (Taravad) என்று கூறப்படும். இது தாய்கால்வழி (Matrilineal) முறையைக் கொண்ட ஒரு கூட்டுக் குடும்பமாகும். இதில் தாய்வழியில் வரும் உறவினர்களே மிகுந்திருப் பர். ஒரு தரவாட்டில் தாய், பெண்மக்கள் அவர்களின் கணவர்கள், அவர்களுக்குப் பிறக்கும் மக்கள் ஆகி யோர் கூட்டமாக வாழ்வர். இவ்வாறாக 20 அல்லது 30க்கும் மேற்பட்டோர் ஒனறு சேர்ந்து ஒரே பெரிய வீட்டில் வாழ்வர். சொத்துரிமை தாய்வழியில் மட் டுமே வரும். இம்முறை, ‘மருமக்கள் தாயம்’ எனச் சிறப்பாகக் கூறப்படும். குடும்ப அதிகார முறையும் தாய்வழியிலேயே செல்லும்.

**திருமண முறை:** நாயர்களின் திருமண முறை யைப் பற்றி முதன்முதலில் விரிவாக எழுதியவர் போர்ச்சுகீசியப் பயணியான தூரேட்டு பார்போசா (Durate Barbosa) ஆவார். இவர் கி.பி. 1500-ஆம் ஆண்டிலேயே இவர்களைப் பற்றிய இச்செய்திகளைத் தொகுத்தார். நாயர் பெண்கள் பருவம் அடையும் முன் தாலிகட்டும் சடங்கினைச் செய்து கொள்கின் றனர். இச்சடங்கின்போது அவ்வூரைச் சேர்ந்த இளைஞர்கள் பூப்படையாப் பெண்களுக்குக் கணவன் மார்களாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். திரு

மணம் முடிந்தபின் அவர்கள் அப்பெண்களுடன் கூடி வாழ்வதில்லை. அதன் பின்னர்ப பருவம் அடைந்த வுடன் அவள் விரும்பும் ஆடவர்களுடன் வாழ முற் படுகிறாள். ஒருத்தி இவருடன்தான் வாழ வேண்டு மென்பதில்லை. பல காதலர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறாள். இவர்கள் அனைவரும் பார்வைக் கணவர்களாகவே (Visiting Husband) உள்ளனர். பெண், பார்வைக் கணவர்களை அவள் சாதியிலிருந் தும் உயர்சாதியிலிருந்தும் அனுமதிக்கிறாள். கீழ்ச் சாதியினரை அனுமதிப்பதில்லை. அவ்வாறு கீழ்ச்சாதி யினருடன் ஒருத்தி உறவு கொண்டால் அவள் புறச் சாதியினளாக (Out caste) மாற்றப்படுவாள்.

ஒரு நாயர் பெண் எத்தனை காதலர்களுடன் சேர்ந்து வாழ்கிறாளோ அந்த அளவிற்கு அவளுக்குப் புகழும் பெருமையும் ஏற்படும். பார்போசா (Barbosa) இதைக் குறித்து எழுதும்போது, 'இம்முறை ஓர் இழிந்த செயல்' எனக் கருதாமல் உயர்ந்த சாதியின ரையும், உயர்ந்த பணியிலுள்ளவர்களையும், பிராம ணர்களையும், அரசர்களையும், வசீகரிக்கக் கூடிய நிலை குறித்துப் பெருமை அடைகிறார்கள்' என்று கூறுகிறார். இவர்களைப் பற்றி விரிவாக ஆராய்ந்த மானிடவியலறிஞர் காதலீன் கபு (Kathleen Gough) இவர்களின் திருமணத்தின் குறிக்கோளைப் பின்வரு மாறு விவரிக்கிறார். 'ஒவ்வொரு மகளுக்கும் குறிப் பிட்ட எண்ணிக்கையில் ஒழுங்காக வரும் இடைக் காலக் கணவன்மார் இருந்தபோதிலும், தனது பணி யின் காரணமாகப் போர்க்களத்திற்குஒருவன் சென்றி ருக்கும்போது வேறு ஒருவன் எளிதாகத் தான் அறி யாத பெண்ணுடன் உறவு கொள்ள இம்முறை உதவுகிறது'.

பார்வைக் கணவர்கள் ஒரு பெண்ணின் வீட்டிற் குச் செல்லும்போது அவன் கொண்டு செல்லும் பொருளை வீட்டு வாசலில் வைத்துவிட்டுச் செல்ல வேண்டும். பிறக்கும் குழந்தைகள் தாயிடம் வளர்கின்றனர். குழந்தை, உருவத்தில் எந்த ஆணை ஒத்திருந்தாலும் அந்த ஆணைத் தகப்பன் என்று கூற முடியாது.

இவ்வகைத் திருமண முறையை வலுவிழக்கச் செய்யும் பொருட்டு அப்போதைய இந்திய அரசு1930 -இல் ஒரு சட்டம் இயற்றியது. இரண்டு தலைமுறை களாகவே இம்முறை முழுவதுமாகக் கைவிடப் பட்டு விட்டது. இன்று பெரும்பாலான பகுதிகளில் ஒரு துணைமணமுறையும்தனிக்குடும்ப (Nuclear Family) முறையும் மட்டுமே உள்ளன.

**போர்முறை:** நாயர்கள் வீரமிக்கவர்கள். ஆங்கி லேயர்களின் வருகைக்கு முன்னர்ப் பெரும்பாலா னோர் போர் வீரர்களாக இருந்தனர். கியோவானி மேபியி (Giowani Maffei) என்பவர் கள்ளிக் கோட் டையைப் பற்றிய விவரங்களை எழுதும் போது, நாயர்களின் போர்க்கலையைப் பற்றி விரிவாக எழுதுகிறார். ஏழாம் வயது முதற்கொண்டே நாயர் சிறுவர்கள் உடற்பயிற்சியைத் தொடங்குகின்றனர். இப் பயிற்சியின் போது எண்ணெயை உடல் மீது நன்றா கத் தடவி உடலை வளைத்துப் பயிற்சி பெறுகின்ற னர். பயிற்சி பெற்ற நாயர்கள் மல்யுத்தத்தில் வல்ல வர்களாக இருப்பர். போர்க்கருவிகளைக் கொண்டு போரிடுவதிலும் சிறந்தவர்கள். தொடக்கக் காலத் தில் ஈட்டி, அம்பு, பட்டாக் கத்தி, கேடயம் ஆகி யவைகளைப் பயன்படுத்தினர். நாளடைவில் ஏற் பட்ட முன்னேற்றத்தின் பயனாகத் துப்பாக்கி, பீரங் கிகளை உபயோகிப்பதில் வல்லவராயினர். மறைந் தும் பதுங்கியும் வேகமாகத் தாக்குவதில் இவர்கள் கைதேர்ந்தவர்கள். தங்களின் எறி ஈட்டிகளை முன் புறமும், பின்புறமும் சுழற்றி எறிவதிலும் சிறந்தவர் கள். சண்டைகளில் எதிரிகளைக் கொலைச் செய்து வீழ்த்துதலில் இவர்கள் பெரும்புகழ் பெற்றவர் கள். பைரார்ட்-டி-லாவல் என்பவர் (Pyrard de Laval)நாயர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'இவர்களே உலகில் தலைசிறந்த போர்வீரர்கள்' என்று கூறுகிறார். தெல்லோன் (Dellon) நாயர் களைப் பற்றி எழுதும்போது, 'இவர்கள் போரில் ஒழுங்கற்ற முறையில் ஈடுபட்டு, ஒழுங்கற்ற முறையில் சண்டை யிடுவர்' என்றும், 'எப்பொழு தும் சரணடைய இடம் கொடுப்பதில்லை' என்றும் குறிப்பிடுகிறார். நாயர்களை எதிர்த்துப் போரிட்ட (கி.பி.1761- ஆம் ஆண்டு) எக்டர் முன்ரோ (Sir Hector Munro) என்ற ஆங்கிலேயத் தளபதி, 'நாயர்கள்நேராகத் துப்பாக்கிகளை ஏந்திக் குறிதவறாமல் சுடும் திறமை பெற்றவர்கள்' என்று குறிப்பிடுகிறார். பரிட்டோ (Parito) என்பவர் அக் கால மலபார் மன்னர்களைப் பற்றிக் குறிப்பிடும் போது 'இந்த அரசர்கள் 160,000 நாயர்கள் கொண்ட படையையும், கொச்சி அரசர் 140,000 நாயர்கள் கொண்ட படையையும் வைத்திருந்தனர்' எனக் கூறு வார். செல்வாக்குடன் இருந்த நாயர்கள்படை கி.பி. 19-ஆம் நூற்றாண்டு முதற் பகுதியில் சீர்குலைந்தது. இதற்கு ஆங்கிலேயர்களின் அடக்கு முறையே காரண மாகும். திருவாங்கூர், கொச்சி அரசுகள் 1947-ஆம் ஆண்டு வரை நாயர்கள் அடங்கிய படைகளை வைத் திருந்தன. கால வேகத்தில் நாயர்கள் போர்த் தன்மைகளை இழந்து இன்றுவேளாண் பணிகளிலும், அரசுப் பணிகளிலும் ஈடுபட்டுள்ளனர். நே.தே.

**நாயன்மார்கள்:** தமிழகத்துத் தொன்மைச் சமயங்களான சைவமும் வைணவமும், இடைக் காலத்தில் மறுமலர்ச்சி பெற்று, வீறெய்தி விளங்கிய

மைக்குக் காரணமாக அமைந்தவர்கள் அச்சமயத்தைச் சார்ந்த அடியார்களேயாவர். வைணவ அடியார்களாகிய ஆழ்வார்களும், சைவ அடியார்களாகிய நாயன்மார்களும் தத்தம் சமயங்களின் குரவர்களாய், காவலர்களாய் விளங்கினர். அவர்கள் தம் வாக்கையும் வாழ்வையும் தங்கள் ஆன்மிக முறையாகவும், வாழ்க்கை நெறியாகவும் கொண்டு இக்கால வைணவர்களும் சைவர்களும் பயன் எய்தி வருகின்றனர்.

'நாயன்' என்னும் சொல் கடவுள், அரசன், தலைவன் என்னும் பொருள் கொண்டதாகும்.அதன் அடிப்படையில் அமைந்த நாயன்மார் என்னும் சொல், பொதுவாகத் தலைவர்களையும் தெய்வங்களையும், குறிக்குமாயினும் சிறப்பாகத் திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் போற்றிப் பரவியுள்ள தனியடியார் அறுபத்து மூவரையும், தொகை அடியார் ஒன்பது வகையினரையுமேகுறிப்பதாக உள்ளது. நாயன்மார்களின் பெயர்கள், வாழ்வுக் குறிப்புகள், அவற்றைக் கொண்டு அமைத்துக் கொண்ட தம் நூலின், வகை தொகைகள் ஆகியவற்றிற்குச் சேக்கிழார் காலத்திற்கு முன்னர்த் தோன்றிய நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியும், அவருக்கு முற்பட்ட சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருத்தொண்டத் தொகையும் நேர் மூலங்களாகும். சேக்கிழார் தம் காலத்தில் தமிழகத் திருக்கோயில்களில் விளங்கிய கல்வெட்டுகள்,வரலாற்றுச்சான்றுகள் முதலியவற்றையும் திறம்படப் பயன்படுத்தியுள்ளார்.

திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பி, நாயன்மார்களுடைய வரலாறுகளைப் பொதுவாக ஒவ்வொரு செய்யுளிலும், சில அடியார்களின் வரலாறுகளை ஒன்றுக்கு மேற்பட்ட செய்யுள்களிலும் குறிப்பிட்டுள்ளார். சுந்தரமூர்த்திசுவாமிகள், அத்துணை நாயன்மார்களையும் பதினொரு பாடல்களைக் கொண்ட ஒரு பதிகத்தில் அடக்கிப் பாடியுள்ளார். திருத்தொண்டத் தொகை எனப் பெயரிய அந்தப் பதிகத்தில் அமைந்துள்ள நாயன்மார் வைப்பு முறையினையே பின்வந்த இருவரும், பிறரும் பின்பற்றியுள்ளனர்.

சுந்தரர் தம் காலத்திற்கு முன்பு விளங்கிய நாயன்மார்களைத் தனித்தனியாகவும், தொகையாகவும் பெயர் கூறி, அந்த 'அடியார்க்கும் அடியேன்' என்று கூறிப் பரவித் திருத்தொண்டத்தொகை பாடியதற்கான காரணத்தைச் சேக்கிழார் விளக்கியுள்ளார். சுந்தரர், திருவாரூர்த் திருக்கோயிலுக்குச் சென்று வழிபடுமுன், அங்குள்ள தேவாசிரிய மண்டபத்தில் வீற்றிருந்த அடியார்களை மனத்தில் எண்ணி, அவர்க்கெல்லாம் அடியனாவது என்றோ என ஏங்கிச் செல்கின்றார். அவர் கருத்துணர்ந்த விறன்மிண்டர், 'சுந்தரனும் அவர்க்குதவும் பெருமானும் புறம்பு' என்று வெகுண்டு கூறுகின்றார். இருவர் கருத்துமுணர்ந்த இறைவன், சுந்தரரை அடியார்க்கும் அடியனாக்கி உய்விக்கும் வகையில், அங்குள்ள அடியார்களைப் பாடப்பணித்ததோடு, சுந்தரரின் வேண்டுகோளினைஏற்றுத் 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும்அடியேன்' என்று பதிகத்தின்முதலடியினையும் எடுத்துக் கூறியருளினார். சுந்தரர் அதனையே முதலாகக் கொண்டு திருத்தொண்டத்தொகையினை நிறைவு செய்துள்ளார்.

நம்பியாண்டார் நம்பியும்சேக்கிழாரும் பாடியுள்ள நாயன்மார்களுள் சுந்தரரோடு, அவர் பெற்றோராகிய சடையனாரும் இசை. ஞானியாரும் இடம பெற்றுள்ளனர். சுந்தரர் தம் பதிகத்தினிறுதியில் தம்மைக் குறிப்பிடும்போது, தம் பெற்றோர் பெயர் குறிப்பிட்டமையால் அவர்களையும் அறுபத்து மூவருள் இருவராக ஏற்றிப் போற்றியுள்ளனர். திருத்தொண்டத் தொகையில் சுட்டப் பெறாமையால் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோரின பெற்றோர்களும், நாவுக்கரசரின் தமக்கை திலகவதி போன்றாரும் நாயன்மார் வரிசையில் இடம் பெறவில்லை.

சுந்தரர் காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் சைவ நெறி தவறாத அடியார் பலர் இருந்துள்ளார். எனினும்,அவர்களைப் பின்வந்தவர்கள் சேர்க்காமைக்கும் அதுவே காரணமாகும். காலத்தாலும் இடத்தாலும் வேறுபட்டுத் தோன்றிய அடியார்களும், தோன்றவிருக்கும் அடியார்களும், தனி நாயன்மார்களைப் போலவே தனித்தனியாகப் போற்றப்பெறும் தகுதி வாய்ந்தவர்கள் என்பதைக் குறிப்பால் உணர்த்தும் வகையில் தொகையடியாரகளின் இயல்புகள் அமைந்துள்ளமை கருதத்தக்கதாகும்.

நாயன்மார்களின் திருவுருவங்களைக் கல்லிலும், உலோகத்திலும் அமைத்து அவற்றைச் சுந்தரர் கூறிய வரிசையில் சைவத்திருக்கோயிலின் திருச்சுற்றில் நிறுவி வழிபடும் மரபு வளர்ந்தது. நாயன்மார்கள் வீடுபேறெய்திய திருநாள்களைக் கண்டறிந்து, அவற்றைக் கோவைப்படுத்திச் செய்யுளாக்கி நினைவுகூர்ந்து, உரிய நாளில் உரிய நாயனாரைப் போற்றி வழிபடும் மரபும் இருந்து வருகிறது. 'கைத்திருத்தொண்டு செய் கடப்பாட்டினார்' என்றும் 'பூசும் நீறு போல் உள்ளும் புனிதர்கள்' என்றும், 'கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார், ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார், கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கினார்' என்றும், 'பாரம் ஈசன் பணி அலது ஒன்றிலார், ஈர அன்பினர்' என்றும் பிறவாறும் சேக்கிழார் கூறியுள்ள

அடியார் திருக்கூட்ட இலக்கணத்திற்கு இலக்கியங்களாகத் திகழ்பவர்கள் இந்த நாயன்மார்கள் ஆவர். ஒவ்வொரு நாயன்மார் வரலாற்றிற்கும் தனித்தனிக் கட்டுரை காண்க. அ.மா.ப.

*நாயாடிகள்* கேரள மாநிலத்தில் வாழும் பழங்குடியினர். நாய்களின் துணையோடு வேட்டையாடும் பழக்கம் காரணமாக இவர்களுக்கு நாயாடிகள் என்ற பெயர் ஏற்பட்டிருக்கக் கூடும். பண்டைய முறைகளில் வேட்டையாடுவதிலும், புதிய முறையில் குறிதவறாது சுடுவதிலும் இவர்கள் மிக வல்லவர்கள். மலைகளிலுள்ள சுனைகளிலும் ஓடைகளிலும் வாழும் நீர் நாய்களை உண்டதாலும் இவர்களுக்கு நாயாடிகள் எனப் பெயர் ஏற்பட்டிருக்கலாம் எனச் சிலர் கருதுவர்.

இவர்கள் இந்துக்களுக்கிடையே மிகவும் தாழ்ந்த இனத்தவர்களாகக் கருதப்படுகின்றனர். பொருளாதாரத்திலும் இவர்களின் நிலை மிகவும் வருந்தத்தக்க கீழ்நிலையில் உள்ளது. ஒரு நாயாடியை 92 மீ. தூரத்திற்குள் சந்திப்பது பிராமணர்களுக்குத் தீட்டு என்று கருதப்படும். இதனைப் போக்கிக் கொள்ள நீராடிப் புதிய பூணூல் இட்டுக் கொள்ள வேண்டும். நாயாடிகளின் தோற்றமோ, கந்தை சுற்றிய உடலோடும் கலைந்த தலையோடும் மெலிந்து இரக்கத்திற்குரியதாக விளங்கும். பெரும்பாலோர் பிச்சையெடுப்பதைப் பிழைப்பாகக் கொண்டுள்ளனர். மலையுச்சிகளில் நீர் நிலைகளையடுத்துத் தனித் தனியே அமைக்கப்பட்ட பனை ஓலைக் குடிசைகளில் நாயாடிகள் வாழ்கிறார்கள். நிலவுடைமையாளர்களின் பயிர்களைக் காட்டு விலங்குகள் அழித்துவிடாமல் காவல் புரியும் பணியை இவர்கள் பல பகுதிகளில் மேற்கொள்கின்றனர். சில பகுதிகளில் பயிர்த் தொழில் சார்ந்த பணிகளையும் இவர்கள் மேற்கொள்வதுண்டு.

ஆண்கள் நாயாடிகள் எனவும், பெண்கள் நாயாடிச்சிகள் எனவும், இளைஞர்கள் மோழையர் எனவும், இளம்பெண்டிர் மனிசிகள் எனவும் கூறப்படுவர். இவர்கள் மருமக்கள் தாயமுறையைப் பின்பற்றுகின்றனர். நாயாடிகள் காடுகளிலிருந்து தேன், தேன் மெழுகு, சாம்பிராணி, மட்டிப்பால் முதலியவற்றைச் சேகரித்து விற்பர். இவர்களின் உணவு எலி, சீரிப்பிள்ளை, பன்றி, மான், கிளி, குயில், புறா, காடை, முயல், மாடு ஆகியவற்றின் இறைச்சியும், கிழங்குகளும் ஆகும். தீக்கடை கோலைக் கொண்டு தீ மூட்டும் பழக்கம் இவர்களிடையே காணப்படுகிறது. கற்றாழை முதலியவற்றிலிருந்து நார் எடுத்துக் கயிறு திரித்தல் இவர்களின் முக்கிய தொழில்களுள் ஒன்றாகும். ஓணம், பிற முக்கியமான பண்டிகைகள் நிகழும் காலத்தில் நான்கு முழ நீளமுள்ள நான்கு கயிறுகளைத் தம் இருப்பிடத்திற்கு



நாயாடிகள்

அருகில் வாழும் ஒவ்வொரு நம்பூதிரியின் இல்லத்திற்கும், இரண்டு கயிறுகளை ஒவ்வொரு நாயர் இல்லத்திற்கும் நாயாடிகள் கொடுப்பது வழக்கம். இதற்கு மாறாக இவர்களுக்கு ஒரு படி அரிசி வழங்கப்படும். இக்கயிறுகள் ஆடு, மாடுகளைத் தறிகளில் கட்டுவதற்கும், கிணறுகளிலிருந்து நீர் இறைப்பதற்கும் பயன்படுத்தப்படும்.

கருவுற்ற பெண்ணுக்குப் பேய், பிசாசு பிடித்து விடாமல் விரட்டுவதற்காக ஏழாம் மாதத்தில் 'ஒழிந்து களைதல்' என்னும் சடங்கு செய்யப்படும். கருச்சிதைவு தீய ஆவிகளின் தாக்குதலால் நேரிடுகிறது எனக் கருதப்படுகிறது. இதனைத் தடுப்பதற்குக்கழுத்தில் காப்பு நாண் அணிதல் உண்டு. குழந்தைப் பேறு காலத்தில் தாய்க்குத் தனிக் குடில் அமைக்கப்படும். மனைவியின் பேறு காலத்தில் கணவன், தன் அடிவயிற்றில் எண்ணெய் தடவிக்கொண்டு தெய்வங்களை வேண்டிக் கொள்வான். பேறு காலத்தில் பத்து நாளைக்குத் தீட்டுக் காக்கப்படும். இக்காலத்தில் கணவன் மனைவியைப் பார்க்கக்கூடாது. பிறந்த இருபத்தெட்டாம் நாள் குழந்தைக்குப் பெயரிடும் சடங்கு நிகழும். முதல் ஆணுக்குத் தந்தைவழிப் பாட்டனின் பெயரும், முதல் பெண்ணுக்குத் தாய்வழிப் பாட்டியின் பெயரும் இடப்படுதல் மரபு. ஐந்தாம் ஆண்டில் தாய் மாமனால் காதுகுத்துச் சடங்கு செய்யப்படும்.

பருவம் எய்திய பெண்பாத்திரங்களைத் தொடக்கூடாது. தமிழ்நாட்டின் 'கலந்தொடா மகளிர்' என்னும் வழக்கு இங்கு நினைவுகூரத் தக்கது. மணம் முடிக்கக் கருதியவுடன் பெண்ணின் தந்தை தன் பெண்ணை இலைகளால் வேயப்பட்ட ஒரு குடிசையினுள் அமரவைப்பார். அதற்கு அருகில் தான் அமர்ந்துகொண்டு ஒரு பறையை முழக்கிப் பாடுவார். திருமண நிலை எய்திய இளைஞர்கள் அனைவரும் அக்குடிசையைச் சுற்றிப் பாடி ஆடுவர். முடிவில் ஒவ்வொருவரும் ஒரு கழியை இலைக் குடிசையினுள் செலுத்துவார்கள். மணப்பெண் ஏதாகிலும் ஒரு கழியைப் பிடித்துக்கொள்ள வேண்டும். அக்கழிக்கு உரியவனே அவளுக்கு மணமகன் ஆவான்.

இறந்தவரைப் புதைத்தலும், எரித்தலும் உண்டு. பத்து நாள்களுக்குத் தீட்டுக் காக்கப்படும். நாயாடிகளின் மத குருக்கள் மூப்பனார்கள் என வழங்கப்படுவார்கள். மல்லன், மலைவாழி, பறக்குத்தி ஆகியோர் நாயாடிகளின் முக்கிய தெய்வங்கள். கள், சோறு, குரங்கின் இறைச்சி ஆகியவற்றை இத் தெய்வங்களுக்குப் படைத்து வழிபடுவார்கள். பறக்குத்தி என்னும் தெய்வம் வேட்டைத் தொழிலில் உதவி புரிவதாகவும் காட்டு விலங்குகளிடத்திலிருந்து காப்பதாகவும் இவர்கள் நம்புகிறார்கள். தங்கள்முன்னோர்களையும் இவர்கள் வழிபடுகிறார்கள் பாம்புக்



நாயாடிகள் நெருப்பு உண்டாக்குதல்

கடியிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்காக நாயாடிகள் பித்தளையிலான கால் மிஞ்சிகளை அணிகிறார்கள். வளைகளிலிருந்து எலிகளைப்பிடிக்கும் காலத்தில் அவ்வளைகளில் ஒளிந்திருக்கும் பாம்பு களிடத்திலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற் காகப் பாம்பு வடிவமான ஓர் உலோகக் காப்பை இவர்கள் அணிவதுண்டு.

தொற்று நோய்களோ வேறு தீங்குகளோ நேரும் காலத்தில் பறையர் குலத்து நிமித்திகரை அழைத் துக் குறிகேட்டல் இவர்களின் வழக்கம். பேய்பிடித்த பெண்ணுக்குப் பேய் விரட்டுவதற்கும் பறையரை அழைப்பதுண்டு. பேய் பிடித்தாலோ பார்வைக் கோளாறு நேர்ந்தாலோ உப்பு, மிளகாய், புளி, எண்ணெய், கடுகு, தேங்காய், செப்புக்காசுகள் ஆகிய வற்றை ஒரு கலத்தில் இட்டுத் தாக்கப்பட்டவர்களின் தலையை மூன்று முறை சுற்றி இப்பொருள்களை நாயாடிக்கு வழங்குவதுண்டு. நாயாடிகளால் சபிக் கப்பட்டால் அதற்கு மாறான நற்பலன்கள் நிகழும் என்பது ஒருசாராரின் நம்பிக்கை.

இம்மக்களின் முன்னேற்றத்திற்காகக் குறிப்பாகக் கல்வியறிவு, மருத்துவ வசதி பெற பல மையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பொருளாதார நலனுக் காகப் பல்நோக்குக் கூட்டுறவுச் சங்கங்கள் தொடங் கப்பட்டுள்ளன. கோ.ச.

**நாயிசு ஆல்பிரடு(கி.பி.1880-1958):** ஆக்சு போர்டு பல்கலைக் கழகத்தைச் சார்ந்த எக்சுபெர் கல்லூரியில் படித்த ஆங்கிலக் கவிஞர் நாயிசு. நாயிசு 1914 முதல் 1923 வரை பிரின்சுடன் பல்கலைக் கழ கத்தில் இக்கால ஆங்கில இலக்கியப் பேராசிரியரா கப் பணியாற்றினார்.

சிறந்த படைப்பாற்றல் கொண்ட நாயிசின் தொடக்ககாலக் கவிதைகள் நாட்டுப்பற்று மிக்க னவாயும், தம் வட்டார உணர்வு மிக்கனவாயும், வலுவான ஓசை நயம் கொண்டனவாயும் அமைந்து இவர்க்கென வாசகர் வட்டம் ஒன்றை உருவாக்கின.

இவருடைய நெடும் பாடல்கள் ஒரே தன்மை கொண்ட ஓசைநயத்துடனும், எளிய எதுகை நயத்து டனும் அமைந்தன. இவருடைய மிக விருப்பத்திற் குரிய படைப்பு கடற்காவியம் எனப் போற்றப்படும் 'திரேக்கு' ஆகும். நீண்ட கவிதை ஒன்றும் இவர் படைத்துள்ளார்.

'ஆங்கிலக் கவிதைகளில் கடல்' என்பது பற்றி உலோவல் சொற்பொழிவுகளை 1913-ஆம் ஆண்டு அமெரிக்காவில் நிகழ்த்தினார் இவர். கிரேக்கர்களி லிருந்து 20-ஆம் நூற்றாண்டு வரை அறிவியல் முன்னேற்ற வளர்ச்சி என்பது பற்றி மூன்று தொகுதி களாக நூல் (The torch beares) வெளியிட்டார்.

இவருடைய கவிதைகள் ஒரே தொகுதியாக 1950-இல் வெளிவந்தன. மகிழ்ச்சியும் துடிப்பும் கொண்ட நடையில் இவர் வெளியிட்ட கவிதைகள் இவருக்குப் பெரும் புகழுண்டாக்கின.

**இவருடைய வேறு வெளியீடுகள்:** 1936 – இல் வெளியிடப்பட்ட வால்டேர் பற்றிய ஓர் ஆய்வு (A Study of Voltaire),இக்காலக் கவிதையின் பல்திறப் பாங்குகள் (Aspects of modern Poetry), புதினங்கள், தன் வரலாறு,1957-இல் வெளியிடப்பட்ட நினைவு களின் இரண்டு உலகங்கள் (Two Worlds of Memory) என்ற கவிதை நாடகம் ஆகியனவாகும். நாயிசு ஆல்பிரடு தம் கடல் பற்றிய கவிதைக்காகவும், தேவ தைகள் கவிதைக்காகவும் என்றும் போற்றப்பெறு வார். பி.எஸ்.வே.

**நாயோட்டும் மந்திரம்** என்பது 'சி' என்னு மெழுத்தாகும். மந்திரம் என்பதற்கு நிறைமொழி என வேறு ஒரு பெயருமுண்டு. நிறைமொழி என்பது அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன் களைப் பயந்தே விடும் மொழி என்பது பரிமேலழ கருரை. ஆகவே, மந்திரத்திற்குச் சிறந்த ஆற்றல் உண்டு என்பது வழிவழியாக நம்மிடையுள்ள நம் பிக்கை. இம்மந்திரம் என்னும் சொல் தொல்காப்பி யர் காலத்திருந்தே வழக்கிலுள்ளது. தமிழ் நாட் டில் அருளாளர்கள் பலரால் அவ்வப்பொழுது தம் மாணவர்களுக்குப் பல மந்திரங்கள் உபதேசிக்கப் பெற்றன. அம்மந்திரங்களுள் தலையாயது ஐந் தெழுத்து மந்திரம். துறை மங்கலம் சிவப்பிரகாசர் 'மந்திர வேந்து' என்று பஞ்சாக்கரத்தைக் கூறுவார். அந்த ஐந்தெழுத்து மந்திரத்தை இருவகையாகக் கூறு வர். 'நமசிவாய' என்பது தூல பஞ்சாக்கரம் எனப் பெறும். 'சிவாய நம' என்பது சூக்கும பஞ்சாக்கரம் என்று கூறப்படும். இச்சூக்கும பஞ்சாக்கரத்தையே இன்னும் சுருக்கி சிவாய' என்று கூறியும் சிலர் உரு வேற்றுவர். 'மண்ணினார் மறவாது சிவாய என்று எண்ணினார்' என்பது திருப்பாலைத்துறையில் அப் பர் பெருமான் அருளிய அருந்தமிழாகும் (தேவா. 5,51, 6). மேலும், இம்மூன்றெழுத்தைச் சுருக்கிச் 'சிவ' என்று கூறும் வழக்குமுண்டு. 'சிவ சிவ என்கிலர் தீவினையாளர், சிவ சிவ என்றிடத் தீவினை மாளும், சிவ சிவ எனறிடத் தேவரும் ஆவர், சிவ சிவ என்னச் சிவகதி தானே' என்பது திருமந்திரம் (2716). இதனைச் சுருக்கி 'சி' என்று பலருக்கும் அறி முகப் படுத்துமுகத்தால் நன்றாய் ஞாபகத்திலிருக்கு மாறு பாமரனுக்கும் தெரியக்கூடிய முறையில் கற் பிக்கத் திருமூலர் எண்ணினார். மந்திரங்களை எப்

பொழுதும் சிறிது மறைவாகவே உருவேற்ற வேண்டும். பலரறியக் கூறக்கூடாது. 'மூட மூடமந்திரம்' என்பது பழமொழி. நாய் வீட்டுக்குள் நுழைந்தால் அதை விரட்டுவதற்காக எல்லோரும் பயன்படுத்தும் சொல் 'சி' என்பது. ஆகவே 'சி' என்று தொடங்கும் மந்திரத்தை வெளிப்படையாகக் கூறக்கூடாது என்று எண்ணிக் குறிப்பாக நாயோட்டும் மந்திரம் என்று திருமூலர் கூறிப் போந்தார். எழுத்தே பொருள்தருமானால் பதமெனப்படும் என்பது இலக்கணநெறி. ஐந்தெழுத்துக்கும் ஐந்து பொருள்கள் உள்ளன. ஆதலின் சுந்தரர் பெருமான் அஞ்சுபதம் என்றே ஐந்தெழுத்தைக் குறிப்பிடுவார். 'சி' என்பது சிவன் அல்லது இறைவனைக் குறிக்கும். 'வ' என்பது சத்தி அல்லது அருளைக் குறிக்கும்.'ய' என்பது உயிர் எனப் பொருள்படும். 'ந' மறைப்பு எனப்படும். 'ம' என்பது மலம் அல்லது ஆணவத்தைக் குறிக்கும். ஆகவே, அஞ்ஞானத்தால் மறைப்புண்ட உயிர் அருள் துணையாக இறைவனை அடைய வேண்டும் என்பதே பஞ்சாக்கரத்தின் உட்கிடையாகும். உயிர் வேண்டுவது இறையருள் ஆதலின் 'சிவ' என்று கூட உருவேற்றினால் போதும் என முன்னோர் அருளிப் போந்தனர். ஆதலின் இப்பஞ்சாக்கரத்தைக் குறிப்பாய்க் குறிப்பிடவே நாயோட்டுமந்திரம் என்ற தொடரைத் திருமூலர் எடுத்தாண்டார்.இம்மந்திரமே வேதத்தாலும் சிறப்பாகக் கூறப்பெறுவது. இறைவன் உறைவிடம் அம்மந்திரமேயாகும். அதுவே உலகிற்கு விளக்கும் தரவல்லது. அதனை உருவேற்றி அவனை வழிபட்டு அவனருளைப் பெற முனையாது மக்கள் அல்லலில் அழுந்திக் கொண்டிருக்கின்றார்களே எனத் திருமூலர் மக்கள் பொருட்டுத் துன்புறுகிறார். 'நாயோட்டும் மந்திரம் நான்மறை வேதம், நாயோட்டும் மந்திரம் நாதனிருப்பிடம், நாயோட்டும் மந்திரம் நாதாந்த சோதி, நாயோட்டும் மந்திரம் நாமறியோமே' (சமாசப் பதிப்பு திருமந்திரம் 3051) என்பதே அவ்வருமைத் திருப்பாடலாகும்.
இரா.ச.

**நார்டன்சுகியோல்டு, ஏர்லண்டு: (கி.பி. 1877–1932)** சுவீடன் நாட்டு மானிடவியலார்; இனக்குழு ஒப்பாய்வில் (Ethnology) மானிடவியல்சார் தொல்லியல் முதலான பிரிவுகளில் குறிப்பிடத்தக்க ஆய்வுகளைச் செய்தவர்; அமெரிக்க இந்தியர்களைப் பற்றிய வல்லுநர்களுள் ஒருவர். நார்டன்சுகியோல்டு (Erland Nordenskiold) கி.பி. 1877-இல் சுவீடனில் பிறந்தார்.

இவர் தந்தை அடால்பு எரிக்கு நார்டன்சுகியோல்டு அறிவியல் அறிஞரும் புத்தாய்வாளருமாவார் (Scientist-explorer). இவர் உடன்பிறந்தார் ஆட்டோ நார்டன்சுகியோல்டு (Otto Nordenskiold) புவியியலாரும் புத்தாய்வியலாரும் ஆவர். இவ்விருவரின் ஊக்கத்தினாலேயே ஏர்லண்டு நார்டன்சுகியோல்டு முதலில் விலங்கியல் துறையில் நாட்டங் கொண்டு பல்வேறு புதிய நிலப்பகுதிகளுக்குச் சென்று புதியபுதிய விலங்குகளைக் கண்டு குறிப்பெடுத்தார். இக்காலங்களில் ஏற்பட்ட நாட்டத்தினால் பல்வேறு இனமக்களைப் பற்றி அறிய வேண்டுமென ஆர்வங் கொண்டார். இவர், 1901 முதல் பல்வேறு ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டதன் மூலம் ஏராளமான இனக்குழுவியல் செய்திகளைச் சேகரித்தார். கோட்பார்கு (Goteborg) அருங்காட்சியகத்தின் முதன்மைக் காப்பாளராக 1913-இல் பொறுப்பேற்றார்.

காப்பாட்சியராகப் பொறுப்பேற்ற பின், மேற்கொண்ட களப்பணி மூலம் பெருமளவில் இனக்குழுவியல் செய்திகள் கிடைத்ததால் அவற்றைப் பகுத்தாய்வதில் புதிய முறைகளைக் கண்டறிய வேண்டிய சூழல் ஏற்பட்டது. பண்பாட்டுப்பேற்றின் அளவை மதிப்பிடுதல், பண்பாட்டு வரலாற்றைக் கணித்தல் முதலான ஆய்வுகளில் குறிப்பிடத்தக்க வெற்றிகளைக் கண்டார்.

களப்பணி மூலம் இனக்குழுவியல் தரவுகளைச் சேகரிப்பது மட்டுமல்லாது அவற்றை அறிவியல் முறையில் ஆராய்ந்து நூல்களாகவும் கட்டுரைகளாகவும் வெளியிட்டார். இவர் வெளியிட்ட நூல்களுள் குறிப்பிடத்தக்கது ஒப்பீட்டு இனக்குழுவியல் ஆய்வுகள் (Comparative Ethnographical Studies, 1918) ஆகும். இது 10 தொகுதிகளைக் கொண்டது.

இந்நூலில் பொலிவிய மக்களின் பண்பாட்டை விவரிக்கும்போது சுற்றுச்சூழல், இயற்கையின் பிற கூறுகள் முதலானவை பண்பாட்டில் எவ்வாறு தாக்கத்தை ஏற்படுத்துகின்றன என்பதை விளக்குகிறார். தொல்லியல் ஆய்வுகளிலும் இவர் ஈடுபாடு கொண்டிருந்தார். இவரது கருத்துப்படி தென் அமெரிக்காவில் செப்புக்காலம் தோன்றிய அதே காலத்தில், பழைய உலகத்திலும் அக்காலம் நிலைபெற்றிருந்தது. இந்தியர்களின் கண்டுபிடிப்புகள், கூனா (Cuna) இந்தியர்களின் சித்திர எழுத்துகள்,பெருநாட்டுவானியல் கருத்துகள் முதலானவற்றைக் கொண்டு பண்பாடு எந்தெந்தத் திசைகளில் வளர்ச்சி பெற்று வந்தது என்ற வழியைக் கண்டறிந்தார். இவர் கி.பி. 1932-இல் காலமானார்.
சீ.ப.

**நார்டிக்கு இனம்:** மனித இனங்கள் மானிடவியல் அறிஞர்கள் பலரால் பலவாறு பகுக்கப்பட்டுள்ளன. அனைத்து மானிடவியல் அறிஞர்களாலும் ஒப்புக் கொள்ளப்பட்ட தலையாய இனங்கள் மங்கோலியர் என்னும் மஞ்சள் இனம்,நீக்கிரோ என்னும் கறுப்பு

இனம், காக்கேசியர் என்னும் வெள்ளை இனம் ஆகிய மூன்று இனங்களேயாகும். காக்கேசியர் எனப்படும் வெள்ளை இனத்தின் பல உட்பிரிவுகளில் நார்டிக்கு இனமும் ஒன்று.

ஐரோப்பாவைச் சுற்றியுள்ள பகுதிகளில் பழைய கற்காலத்தின் இடைக்காலத்தில் நியாண்டர்தால் மனிதர்கள் இருந்தனர். பழைய கற்காலத்தின் இறுதிப் பகுதியில் இன்றைய மனித இனங்களைச் சேர்ந்தவர்கள் வாழ்ந்துள்ளனர். குரோமேக்னான் (Cro-magnon) பிரிவிலிருந்து கானரித் தீவு மக்களும், சான்சிலேடு (Chancelade), கிரிமால்டி (Crimaldi) பிரிவுகளிலிருந்து நீக்கிரோ இன மக்களும் வந்தனர் என்பது கருதப்படுகிறது. இடைக் கற்காலத்தில் இப்பகுதிகளில் பல இன மக்கள் கலந்து வாழ்ந்த ஒரு நிலை இருந்தது. அவ்வாறான இனக் கலப்பிலிருந்தே ஆல்பைன் இனத்தவர் மத்தியதரைக் கடல் இனத்தவர், நார்டிக்கு இனத்தவர், போன்ற ஐரோப்பிய இனமக்கள் தோன்றியிருக்க வேண்டும் என்று இனவியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

**நார்டிக்கு இனத்தவரின் பண்புகள்:** இவ்வினத்தவரின் மயிரின் நிறம்,பொன் நிறம், சாம்பல் பொன் நிறம், சாம்பல் பழுப்பு நிறம், வெளிரிய இளஞ்சாம்பல் பழுப்பு நிறம் முதலான பல வகைகளாக உள்ளது. தலைமயிரின் அடர்த்தி குறைவானது. ஆடவர்களுள் வழுக்கைத் தலை மிகுதி. நேரான அல்லது அலை பாயும் மயிரே மிகுதி. சுருட்டை முடி மிக அரிது. கண்ணின் நிறம் நீலம், வெளிர் கறுப்பு, நீல வெளிர் கறுப்பு முதலான நிறங்களில் காணப்படுகிறது. தலை நடுத்தரமானது. தலைக் குறியீட்டு எண் (Head Index Number) 80க்கும் குறைவு. சராசரி அளவு 77 ஆகும். முகம் குறுகலானது; நீண்டது. உதடுகள் மேல் உதடு குவிந்த தோல் அமைப்பைக் கொண்டது, கீழ் உதடு மெல்லிய தோல் அமைப்பைக் கொண்டது. கண் மடிப்பு இளைஞர்கள் இமைகளில் மைய மடிப்பும், முதியவர்கள் இமைகளில் வெளிப்போக்கு (External fold) மடிப்பும் ஆடவர்களில் காணப்படுகின்றன.வளர்ந்து உயரமாகக் காணப்படுகின்றனர். சராசரி வளர்ச்சி 172 செ.மீ. உடற்கட்டமைப்பு தடிப்பற்ற, சீரான கட்டமைப்பு உடையது.

செருமானிய, இசுகாண்டிநேவிய அறிஞர்கள் நார்டிக்குகள் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் இருந்தே பால்டிக்குப் பகுதிகளில் வாழ்ந்து வந்தனர் என்று கருதுகின்றனர். இரெட்சியசு (Retzius) எனும் இசுவீடன் நாட்டு மானிட.வியலறிஞர் இசுகாண்டிநேவியாவில் உள்ளவர்கள் பெரும்பாலும் நார்டிக்குகள் என்றும், இடைக்கற்காலம் முதல் இங்கு அவர்கள் வாழ்கிறார்கள் என்றும் குறிப்பிட்டார். மேலும், பனி மூடியிருந்த காலம் முடிந்தபோது இசுகாண்டிநேவியாவில் முதலில் குடியேறியவர்கள் நார்டிக்குகளே என்றும் தெரிவித்தார்.

மத்திய தரைக்கடல் இன மக்களையும், நார்டிக்குகளையும் வேறுபடுத்துவது உடல்நிறமும் தோற்றமும் தான்; நீலக்கண், சிவந்த மேனி, பொன்னிற முடி, உயர்ந்த மூக்கு ஆகிய தோற்றங்களில் மட்டும் தான்; மத்தியதரைக்கடல் இனத்தவரிடமிருந்து நார்டிக்குகள் வேறுபடுகின்றனர். ஒரு குள்ளமான நார்டிக்கின் எலும்புகளை ஒரு வளர்ந்த மத்திய தரைக்கடல் இனத்தவனின் எலும்புகளிலிருந்து வேறுபடுத்துவது இயலாததாக உள்ளது. எனவே, புதை பொருளாகக் கிடைக்கும் எலும்புகளை நார்டிக்குகளின் பழங்காலப் பண்புகளின் சான்றுகளாகக் கொள்வது பொருத்தமாகாது.

தென்மார்கில் கிடைத்த செம்புக் காலப் புதை பொருள்களில் ஓக்கு மரச் சவப் பெட்டி ஒன்றில் துணியால் சுற்றப்பட்ட சடலம், கெட்டுப் போகாத நிலையில் கிடைத்தது. ஓக்குமரக் கட்டையில் உள்ள தானிக்கு (Tannic) அமிலந்தான் சடலத்தின் தோல், முடி ஆகியவற்றையும், துணிகளையும் பாதுகாத்திருக்க வேண்டும் எனக் கருதப்பட்டது. அதனை அடுத்து அதேபோல் பல சடலங்கள் கிடைத்தன. அவற்றின் உடற்கூறுப் பண்புகளின் அமைப்பு பெரும்பாலும் நார்டிக்குப் பண்புகளை ஒத்திருந்தது. இந்தச் சான்று அப்பகுதியில் நார்டிக்குகள் செம்புக் காலத்திற்கு முன்னரே இருந்தனர் என்பதை உறுதிப்படுத்துகிறது. இருப்பினும், அது, பனிக்காலம் (Ice Age) முதலே நார்டிக்குகள் இருந்தார்கள் என்பதை உறுதிப்படுத்தப் போதுமானது அன்று என்று மானிடவியலறிஞர் ஊட்டன் (Hooton) தெரிவிக்கிறார்.

இசுகாண்டிநேவிய மானிடவியல் அறிஞர்கள் நார்வே, இசுவீடன், தென்மார்க்கு ஆகிய நாடுகளில் ஆய்வுகள் மேற்கொண்டு பல நார்டிக்குச் சிற்றினங்களைக் கண்டறிந்தனர். அவற்றுள் மிகுந்த வேறுபாடுகளைக் கொண்ட இரண்டு சிற்றினங்களில் ஒன்றைச்சேர்ந்த மக்கள் சீரான வளர்ச்சி, மிகநீண்ட தலை, சரிவான நெற்றி, மெல்லிய புருவக் கூட்டு, உயர்ந்த குறுகலான மூக்கு, அகன்ற தாடைகள், இளம் பழுப்பு நிற மயிர், வெளிர் சிவப்புத் தோல், வெளிரிய கண்கள் ஆகிய பண்புகளைப் பெற்றிருந்தனர். இரண்டாம் சிற்றினத்தைச் சேர்ந்த மக்கள் வலுவான எலும்புகளுடன் கரடு முரடான உடற்கட்டமைப்பு தடித்த தோல், தங்க நிற அல்லது பழுப்புத் தங்க நிற முடி, தூய நீல வண்ணமற்ற கண்கள், அகன்ற நடுத்தர வகைத் தலை, சரிவு குறைவான நெற்றி, அழகற்ற மூக்கு, தூக்கலான

தாடைக் கோணங்கள் போன்ற பண்புகளைப் பெற்றிருந்தனர். கூன் (Coon) என்பார் முதல் வகைச் சிற்றினம் இரும்புக் காலத்தில் தோன்றியது என்றும், இரண்டாம் வகை பழைய கற்காலம், இடைக் கற்காலம், புதிய கற்காலம் ஆகிய காலங்களைச் சேர்ந்த பழைய இன மூலங்களின் கலப்பு என்றும் கூறுகிறார். நார்டிக்கு இனத்தில் பலவகையான சிற்றினமாறுபாடுகளுக்கு, வெள்ளை மனித இனங்கள் பலவும் ஒன்றோடொன்று கலப்புற்றபோது மரபணுக்களில் ஏற்பட்ட திடீர் மாற்றங்களே (Mutations) காரணம் எனக் கருதுகின்றனர்.

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே நார்டிக்குகள் கிழக்கு நோக்கிப் பரவி வந்துள்ளனர். சீனக் குறிப்புகளில் நீலக் கண்களும், சிவந்த முடியும் கொண்ட பழங்குடி மக்கள் நடு ஆசியாவில் வாழ்ந்தனர் எனவும், உசுன் இனத்தவர்கள் (Wusuns) அவர்களுள் ஓர் இனத்தவர் எனவும் ஆடன் (Haddon) தெரிவித்துள்ளார். ஆசியாவின் பல தாழ்ந்த வடக்குப் பகுதிகளில் முற்காலத்திலேயே பரவியிருந்த இம் மக்கள் கிழக்குப் பீடபூமிகளைத் தாண்டி இந்தியாவிலும், கிழக்குக் கடற்கரையிலும் பரவினர் என்று திக்சன் (Dixon) கூறுகிறார். மேலும் நார்டிக்கு இனத்தின் மற்றொரு கிளை சுங்கேரியா வழியாகச் சீனா, மஞ்சூரியா போன்ற பகுதிகளில் நுழைந்து பின்னர்க் கொரியா வழியாகச் சப்பானை (Japan) அடைந்திருக்க வேண்டுமென்றும் அவர் கருதுகிறார்.

நார்டிக்கு இனப் பண்புகளைக் கொண்ட மக்கள் வடமேற்கு இமயமலைப் பகுதிகளில் உள்ளனர் எனக் குகா (B.S. Guha) கூறுகிறார். மொகஞ்சோதாரோவில் கிடைத்த நீண்டதலை, குறுகலான மூக்கு, வகையைச் சேர்ந்த எலும்புகளைச் சம காலத்தில் வடமேற்கு இமயமலைப் பகுதியில் வாழ்ந்த மக்களுடன் ஒப்பிடும் அவர் இம்மக்கள் மத்தியதரைக்கடல் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், கி.மு. 4-ஆம் நூற்றாண்டிலிருந்து இம்மக்கள் வடமேற்கு இந்தியாவில் வந்து தங்கியிருக்க வேண்டும் என்றும் கூறுகிறார். இந்த மொகஞ்சோதாரோ கண்டுபிடிப்புகள் ஆரியர் வருகையுடன் ஒப்பிடத்தக்கனவென்றும் குகா தெரிவிக்கிறார். நார்டிக்கு இனப் பண்புகளைக் கொண்ட மக்கள் இந்தியாவில் பஞ்சாபு, இராசபுதனம் ஆகிய பகுதிகளில் காணப்படுகின்றனர். கோ, கபிர், காட்டா (Kho, Kaffirs, Khata) ஆகிய மக்கள் இப்பண்புகளைப் பெற்றுள்ளனர் என்பார் குகா.

கி.மு. 1500-இல் ஆரிய மொழி நார்டிக்குகளால் இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டதென்று சிலர் கருதுகின்றனர். செருமானியர்களும், ஆங்கில மானிடவியலறிஞர்களும் நார்டிக்குகளே மூல ஆரியர்கள் என மதிக்கின்றனர். ப.இரா.

**நார்டிக்குக் குழு** என்பது, தென்மார்க்கு (Denmark), பின்லாந்து (Finland), நார்வே, சுவீடன், ஐசுலாந்து முதலிய நாடுகளின் பேராளர்களை உறுப்பினர்களாகக் கொண்டு, இந்நாடுகளுக்கிடையே ஒத்துழைப்பை ஏற்படுத்தும் பொருட்டு, இவ்வைந்து நாடுகளின் அரசாங்கங்களுக்கு ஆலோசனை வழங்கும் ஒரு சிறு நிறுவனம் ஆகும். இந்நாடுகளின் பெரும்பாலான நிலப்பகுதிக்கு இசுகாண்டிநேவியன் முந்நீரகம் (Scandinavian peninsula) என்று பெயர். ஐசுலாந்து ஒரு தீவு. தென்மார்க்கை இசுகாண்டிநேவியாவிலிருந்து பால்டிக்குக் கடல் பிரிக்கிறது.

இதற்கு நார்டிக்குக் குழு (Nordic Council) என்று பெயர் வருவதற்குக் காரணம், இதில் சேர்ந்துள்ள 5 நாடுகளின் மக்களும் தூய ஆரிய அல்லது நார்டிக்கு இனத்தைச் சேர்ந்தவராகக் கருதப்படுதல் ஆகும். ஆயினும் இது, இன அடிப்படையில் இவற்றின் மக்கள் மற்றையோரினும் உயர்ந்தோர் என்றோ, அவர்களே உலகில் பரவிப் பெருகி வாழத்தக்க உரிமைகளை உடையவர்களென்றோ கூறவில்லை. மாறாக இது இந்நாடுகளுக்காக ஒரு சுங்க இணைப்பை (Customs union) ஏற்படுத்தும் நோக்கத்துடன் சில பொருள்களைப் பொறுத்தவரையில் ஒரு பொதுச் சந்தையை நிறுவுவதற்கு ஆவன செய்தது. இதன் பொருட்டு இது இவ்வைந்து அரசாங்கங்களையும் ஒருமித்த நடவடிக்கைஎடுக்குமாறு வற்புறுத்திற்று. இது திட்டம் செய்து உருவாக்கிய பொதுச் சந்தையில் கொண்டுவரப்படுதற்குரிய பொருள்கள் வேளாண் தொழிலுக்குரிய இயந்திரங்கள், இரசாயனப் பொருள்கள், மரச் சாமான்கள், தோல் பொருள்கள், வண்ணங்கள், வானொலிப் பெட்டிகள், காலணிகள், துணிகள் முதலியவை ஆகும். இவற்றின் மீது இவ்வைந்து நாடுகளும் ஒரே சீரான சுங்கவரி விகிதங்களைப் பின்பற்றுவதென்று முடிவு செய்துள்ளன. மேலும் இசுகாண்டிநேவியர்கள் (Scandinavians) எனப்படும் இந்நாடுகளின் மக்களெல்லாம் தங்களுடைய நாட்டிலிருந்து மற்ற இசுகாண்டிநேவிய நாட்டுக்குச் செல்லுதற்குக் கடவுச்சீட்டு (Passport) பெறுதல் வேண்டியதில்லை என்றும் நார்டிக்குக் குழு தீர்மானித்துள்ளது. ஆகையால், இவற்றுக்கிடையே நெருக்கமான ஒத்துழைப்பை ஆக்க வழியிலே ஏற்படுத்துவதற்கு இக்குழு முயற்சி செய்கிறது என்று பாராட்டப்படுகிறது. நாட்டின் முழுவளர்ச்சிக்கு ஆதாரமான பொருளாதார வளர்ச்சியிலே இவ்வைந்து நாடுகளுக்குமிடையே ஒத்துழைப்பை ஏற்படுத்துதற்கு இக்குழு பணி செய்வதால், இது

மற்றப் பிளவுண்டு கிடக்கும் நாடுகளுக்கிடையே ஒத்துழைப்பையும் ஒற்றுமையையும் ஏற்படுத்துவதில் ஒரு வழிகாட்டியாக இருக்கிறது என்று சொல்லலாம்.

பா.கு.

*நார்த்தம்பர்லாந்து*: இது இங்கிலாந்து நாட்டின் வடபகுதியில்அமைந்த ஒருபகுதியாகவும்,அந்நாட்டின் ஐந்தாம் பெரிய நிலப்பரப்புக் கொண்ட மாநிலமாகவும் விளங்குகிறது. இதன் பரப்பளவு 5033 ச.கி.மீ. ஆகும். 1983-ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்குப்படி இதன் மக்கள் தொகை 300,200. இப்பகுதியின் நிலப்பகுதி கடலை நோக்கிக் கிழக்கு முகமாகவும், தென்கிழக்கு முகமாகவும் சரிவடைந்துள்ளது.

**வரலாறு**: புதிய கற்காலத்தைச் சேர்ந்த மனிதக் குடியிருப்பிற்கான தடயங்கள் இப்பகுதியில் கிட்டியுள்ளன. உரோமானியர்கள் கி.பி. 122 முதல் இப்பகுதியைக் கைப்பற்றி வைத்திருந்தனர். இடா (Ida) என்பவர், கி.பி. 547-இல் பெர்னிசியா என்ற அரசிற்கு இங்கு அடித்தளமிட்டார். இசுகாட்லாந்தைச் சேர்ந்த முதலாம் தாவீது என்பவர் நார்த்தம்பர்லாந்தின் மீது உரிமை கொண்டாடி கி.பி. 1136, 1137, 1138-ஆம் ஆண்டுகளில் இப்பகுதி மீது படையெடுத்தார். இரண்டாம் என்றி என்பவர் கி.பி. 1157-இல் ஏற்பட்ட 'செசுடர் உடன்படிக்கை'யின்படி இப்பகுதியை மீட்டுக் கொண்டார் என்றாலும் கி.பி. 1244-ஆம் ஆண்டில் 'நியூகாசில் உடன்படிக்கை' ஏற்படும்வரை இசுகாட்லாந்து நாட்டவர்கள் இப்பகுதிக்குத் தொல்லைகள் கொடுத்துக்கொண்டே இருந்தார்கள். இப்பகுதியில் 226 பண்டைய கால நினைவுச் சின்னங்களும், உரோமானியர்களின் 17 கோட்டைகளும், அவர்கள் கட்டிய நீண்ட சுவர்களும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

**வேளாண்மையும் பிற தொழில்களும்**: மத்திய காலத்தில் இப்பகுதியில் கால்நடைகள் குறிப்பாக ஆட்டு மந்தைகளின் பெருக்கம் மிகுதியாக இருந்தது. கம்பளி இன்றும் ஏற்றுமதி செய்யப்படுகிறது. நெப்போலியன் காலத்திலிருந்து காடுகளைக் கழனிகளாக மாற்றும் வேலை நடந்து வந்ததனால் இன்று தானிய உற்பத்தியில் நிறைவு எய்தி மிஞ்சுவது வெளிப் பகுதிகளுக்கு அனுப்பப்பட்டு வருகிறது. இங்குக் கோதுமை, பார்லி, ஓட்சு ஆகியன விளைகின்றன. முக்கால் பங்குப் பகுதி புல்வெளிகளாக மேய்ச்சலுக்குப் பயன்படுகிறது.

இப்பகுதியின் முக்கியமான கனிவளமாகக்கரி விளங்குகிறது. உரோமானியர்களின் காலத்திலிருந்தே கரிச் சுரங்க வேலை நடைபெற்று வருகிறது. கி.பி. 13-ஆம் நூற்றாண்டிலிருந்து இத்தொழில் மேலும் விரிவடைந்துள்ளது. கனிமங்களை ஏற்றிச் செல்ல வேண்டிய தேவையினால் கப்பல் கட்டும் தொழிலும் இங்கு விரிவடைந்துள்ளது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டிலிருந்து ஈயம், வெள்ளி, இரும்பு ஆகிய கனிவளங்களும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. கண்ணாடித் தொழிற்சாலை, தோல் பதனிடும் தொழில்,கம்பளித் தொழில் ஆகியன தொன்மைதொட்டு நடைபெற்று வருகின்றன. இரும்புத் தொழில், கொதிகலன், இரசாயனத் தொழில், மின் சாதன உற்பத்தி, மருந்துப் பொருள்கள் ஆகியன புதிய காலத் தொழில்களாக நடைபெற்று வருகின்றன. அ.க.

*நார்த்தம்பிரியா*: இங்கிலாந்தின் புகழ்பெற்ற ஆங்கிலோ-சாக்சானியர் அரசு. தனித்தனியாக இருந்த பெர்னிசியாவும் தெய்ராவும் இணைக்கப்பட்டு இது ஏற்படுத்தப்பட்டுள்ளது. இப் பகுதியில் வரலாற்றிற்கு முந்திய புதைகுழிகள் காணக் கிடைத்துள்ளன. கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அல்லி (Aelle) என்னும் மன்னர் இப் பகுதியை ஆட்சி செய்தார். எதெல்பிரித்து (Aethelfrith-கி.பி. 593-616)என்னும் மன்னரின் காலத்தில் இந்த அரசு வேகமாக விரிவடைந்தது. தெய்ரான் அரச வமிசத்தைச் சார்ந்த எட்வின் என்பவர் கி.பி. 616-இல் எதெல்பிரித்தைத் தோற்கடித்துக் கொன்றுவிட்டு, இந்த அரசைக் கைப்பற்றிக் கொண்டார். எட்வின் கி.பி. 627-ஆம் ஆண்டில் கிறித்தவ சமயத்தில் சேர்ந்ததினால் இந்த அரசின் முதல் கிறித்தவ சமய மன்னர் என்ற பெயரை எட்வின் பெற்றார். காட்வாலன் என்பவர் கி.பி. 632-ஆம் ஆண்டு எட்வினைக் கொன்றுவிட்டு அரசைக் கைப்பற்றிக் கொண்டார். ஆசுவால்டு என்பவர் கி.பி. 633-இல் காட்வாலனைத் தோற்கடித்து அரசை மீட்டுக்கொண்டார். ஆசுவால்டு (கி.பி. 633-641) காலத்திலும், அவருக்குப் பின்வந்த ஆசுவீ (கி.பி. 641-670) காலத்திலும் நார்த்தம்பிரியா அரசு விரைவாக விரிவடைந்தது. என்றாலும் இந்த அரசிற்குத் தெற்கேயுள்ள மெர்சியா என்ற அரசும், அதன் மன்னர் பெண்டா என்பவரும் நார்த்தம்பிரியா அரசிற்குத் தொல்லைகளைத் தந்து கொண்டிருந்தனர். ஆசுவால்டு மன்னரை கி.பி. 641-இல் கொன்றது இந்த பெண்டா என்பவரே ஆவார். என்றாலும் கி.பி. 654-ஆம் ஆண்டு ஆசுவீ மன்னர் பெண்டாவைப் போர்க்களத்தில் கொன்று ஒழித்தார். கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் எட்வின், ஆசுவால்டு, ஆசுவீ இவர்களின் ஆட்சிக்காலத்தில் நார்த்தம்பிரியாவின் படைவலிமை சிறந்து விளங்கியது. அதன்பிறகு உள்நாட்டுப் போர்களால் இந்த அரசின் வலிமை குன்றியது. அதனோடு, கிறித்தவ மடாலயங்களின் பெரு வளர்ச்சியும் இந்த அரசின் வலிமையைக் குன்றச் செய்தது. நாட்டின் நிலங்கள் அனைத்தும் பிரபுக்கள் கையிலிருந்து திருச்

சபைக்கு மாறின. கி.பி. 10–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இசுகாண்டிநேவியா நாட்டினர் நார்த்தம்பிரியாவின் தென் பகுதியைத் தாக்கினார் கள். நார்த்தம்பிரியா அரசு கி.பி. 920 முதல் 954 -ஆம் ஆண்டுகளுக்கிடையில் சிதறுண்டு போகலா யிற்று. அ.க.

*நார்த்தா மலை*: மேல் மலை, கோட்டை மலை, கடம்பர் மலை, பறையன் மலை, உவச்ச மலை, ஆளுருட்டி மலை, மான் மலை, பொன் மலை என்ற எட்டுக் குன்றுகளைக் கொண்டது நார்த்தா மலை. இது திருச்சிராப்பள்ளி புதுக்கோட்டை நெடுஞ் சாலையில் அமைந்துள்ள ஊர். இது புதுக் கோட்டை யிலிருந்து 18 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இக்குன்றுகளுள் ஒன்றான மேல் மலையில் கிழக்கு நோக்கி இரண்டு குடைவரைக் கோயில்களும் அவற் றிற்கு எதிரே ஒரு கற்றளியும் அமைந்துள்ளன.

இக்குடைவரைகளுள் வடபுறத்திலுள்ளது சமண குடகு என்று சொல்லப்படுகிறது. இது கரு வறை, உள்மண்டபம் என்ற இருபகுதிகளைக் கொண்டு அமைந்துள்ளது. கருவறையின் உள்ளே பாறையின் பகுதியே இலிங்கத்திருவுருவாய் அமைக் கப்பட்டுள்ளது. ஆவுடையார் எனும் இலிங்கத் திரு மேனி சதுரமாக அமைந்துள்ளது. கருவறையின் வலப் புறம் ஐந்து, இடப்புறம் ஐந்து, உள் மண்டபத்தின் இரு பக்கங்களிலும் பக்கத்திற்கு ஒன்று என்று பன்னி ரண்டு திருமால் வடிவங்கள் புடைப்புச் சிற்பங்களா கக் காணப்படுகின்றன. பின்னங்கைகளில் சங்கும் சக்கரமும் ஏந்தி, வல முன்கை காப்பு முத்திரையில் அமைய, இட முன்கை கட்டியவலம்பிதம் காட்ட, அழகே வடிவாய் இச்சிற்பத் திருமேனிகள் காட்சி யளிக்கின்றன. இங்கு எழுவர் அன்னையர் சிற்பங்கள் தனித்துக் காணப்படுகின்றன.

இதற்குத் தெற்கில் உள்ள குடைவரைக் கோயில் சிறிய கருவறை மட்டும் கொண்டது. வட்ட ஆவுடை யாரில் இறைவன் இலிங்கத் திருமேனியராய் எழுந் தருளியுள்ளார். குடைவரையின் முகப்பில் நல்ல முறையில் உருவாக்கப்படாத அரைத் தூண்களும் புரைகளும் உள்ளன. வாயிற்காப்போர் இருவர் கதை யின் மீது சாய்ந்த நிலையில் காணப்படுகின்றனர். இக்குடைவரையின் முன்புள்ள சிதைந்த மண்டபத்தில் உள்ள கல்வெட்டு, பல்லவ மன்னன் நிருபதுங்கவர் மனுடைய ஏழாம் ஆட்சியாண்டில், விடேல் விடுகு முத்தரையன் மகன் சாத்தன் பழியிலி இக்கோயி லைக் குடைவித்தான் என்றும், இக்கோயிலுக்கு முன் மண்டபமும் நந்தியும் நந்தி மண்டபமும் பலிபீடமும் சாத்தன் பழியிலியின் மகன் மீனவன் தமிழவரைய னான வாலன் அனந்தன் என்பான் செய்வித்தான்



நார்த்தா மலை

என்றும் குறிப்பிடுவதுடன் இவன் மனையாள் சிறிய நங்கை இக்கோயில் பட்டுடையாருக்குக் கொடை யளித்த செயதியையும் குறிப்பிடுகிறது. சாத்தன் பழி யிலியால் அமைக்கப்பெற்ற குடைவரை என்பதால் இது பழியிலி ஈசுவரம் என்று கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ளது.

இராசராசன் கல்வெட்டுகளிலும் இராசேந்திர னின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும், நார்த்தாமலை,கேரளாந்தகவளநாடான கோனாட்டு அண்ணல்வாயில் கூற்றத்துத் தெலுங்ககுலகாலபுரத் தில் அமைந்துள்ளதெனக் குறிப்பிடப்படுகிறது. இரா சேந்திரனின் ஐந்தாம் ஆட்சியாண்டு தொட்டு நார்த் தாமலை இரட்டபாடி கொண்ட சோழ வளநாட் டில் அமைந்துள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. மூன்றாம் குலோத்துங்கன், முதலாம் சுந்தர பாண்டியன், குல சேகர பாண்டியன் ஆகியோர் கல்வெட்டுகளில் நார்த்தாமலை, குலோத்துங்க சோழபட்டினம் என்று குறிக்கப்படுகிறது. குலசேகர பாண்டியனின் கல்வெட் டில் நார்த்தாமலை கடலடையாதிலங்கை கொண்ட சோழ வளநாடு என்று பெயர் மாற்றம் பெற்றுள்ளது.

இக்குடைவரைக் கோயிலுக்கு எதிரில் மேற்கு நோக்கிய நிலையில் அழகிய, சிறிய கற்றளியொன்று உள்ளது. இப்போது கருவறையும் உள் மண்டபமும், அதைச் சுற்றிச் சிதைந்துள்ள, ஒரு தளமாக அமைந்த சுற்றாலைகளும் மட்டுமே காணப்படுகின்றன.

சமணர் குடைவரையை அடுத்துக் காணப்படும் கோமாறவர்மன் திரிபுவன சக்கரவர்த்தியான சோணாடு வழங்கிய சுந்தர பாண்டிய தேவரின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, இவ்வூரி லுள்ள விசயாலய சோழீசுவரமுடைய நாயனார்க்குச் செய்த கொடையைக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டு கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாயினும், இக்கோயில் விசயாலயன் பெயரால் கட்டப் பட்டுப் பல நூற்றாண்டுகளாக அப்பெயராலேயே வழங்கப்பட்டு வந்த பெருமைக்குரிய செய்தியை வெளிப்படுத்துவதால் முக்கியத்துவம் பெறுகிறது.

நான்கு மூலைகளிலும் நான்கு தூண்கள் நிறுவப் பட்ட கருவறையில் உருண்டை வடிவமான அமைப் பில் இலிங்கத்திருமேனி உள்ளது.கருவறையைச் சுற்றி வரக் குறுகலான உள் சுற்றுப் பாதை அமைக்கப்பட் டுள்ளது. கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் அரைத் தூண்கள் மட்டுமே உள்ளன. சுவர்களில் தேவ கோட்டங்களோ தெய்வத்திருமேனிகளோ காணப்படவில்லை.

நான்கு தளங்களையுடைய இக்கோயிலின் கரு வறைக்கு மேலுள்ள மூன்று தளங்களும் சாலைகளா லும், கூடங்களாலும், பூதகண வரிசைகளாலும் அழகு செய்யப்பட்டுள்ளன. மூன்றுதளங்கள் சதுர அமைப்பில் இருக்க நான்காம் தளம் வட்ட வடிவமா யுள்ளது. இதன் மேற்பாகமான கழுத்துப் பகுதியின் நான்கு திசைகளிலும் விமான கோட்டங்களும் விமான தேவதைகளும் திகழ்கின்றன. இவைகளில் இருந்த உமாசிவன், வீணை ஏந்திய ஆலமர் அண்ணல் ஆகிய இரண்டு சிற்பங்களும் இப்போது புதுக்கோட்டை அருங்காட்சியகத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டுள் ளன. இக்கருவறையின் சிகரம் வட்டவடிவமானது.

உள் மண்டபத்தின் கூரை சமதளமானது. தூண் கள் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டையாகவும் பகுக்கப்பட்டுள்ளன. அவற்றின் போதிகைகள் கீழ் நோக்கிச் சுருளாக வருவது போல் அமைந்துள்ளன. நாற்புறங்களிலும் கொடுங்கைகள் காணப்படுகின்றன. கொடுங்கைகளுக்கு மேல் உள்ள கைப்பிடிச் சுவர்கள் பஞ்சரங்கள் என்ற சிறு கோயில் களால் அணி செய்யப்பட்டுள்ளன. ஓரங்களில் கூடங் களும் நடுவில் சாலைகளும் இடைப்பட்ட பகுதிகளில் யாளிவரிசை, பூதகண வரிசை ஆகியவற்றுடன் ஆடற் பெண்களும் அழகு செய்கின்றனர். கருவறை, உள் மண்டபம் ஆகியவற்றின் கூரைகள் இரண்டாம் தளத்தோடு இணைந்துள்ளன. அதற்கு மேலுள்ள 'மூன்றாம் தளம் அதே அமைப்போடு சற்றுச் சிறிய தாக அமைந்துள்ளது. உள் மண்டபத்தின் வடபுறத் தில் பைரவர், ஆடவல்லான் ஆகிய வடிவங்கள் ஓவிய மாகத் தீட்டப்பட்டுள்ளன.

இக்கோயிலின் உள் மண்டபத்தின் முகப்பிலேயே வாயிற்காப்போர் காணப்படுகின்றனர். 1.5 மீ. உயர முள்ள இவர்களின் ஒரு கையில் கதை உள்ளது. மற் றொரு கை வியப்புக்குறிப்புக் காட்டுகிறது. தலையில் சடாமகுடமும்கொம்பு போன்ற வளைவுகளும்காணப் படுகின்றன. பனையோலைக் குண்டலம், கடி பந்தம், உகர பந்தம், சிறுமணிகளாலான முப்புரி நூல், காப் புப் போன்றவை எழிலுடன் அமைக்கப்பட்டுள்ளன.

முற்காலச் சோழர்களின் மரபுப்படி, கருவறை யைச் சுற்றி அமைக்கப்பட்ட சிற்றாலயங்கள் எட்டில் ஆறு கோயில்கள் மட்டுமே இப்போதுஉள்ளன. அவை சதுரமான கருவறை, நீண்ட சதுரமான உள் மண்ட பம் ஆகியவற்றுடன் அமைந்திருத்தல் வேண்டும். இக்கோயிலின்வடபுறத்தில் உள்ள வாயிற்காப்போரின் காலடியில் உள்ள கல்வெட்டு, சாத்தன் பூதியான விடேல் விடுகு இளங்கோவடி அரையன் எடுப்பித்த இக்கோயில் மழையால் சிதைந்தமையால் மல்லன் வீடுமனான தென்னவன் தமிழவரையன் இதைப் புதுப்பித்தான் என்று கூறுகிறது.

இன்று இக்கோயில் தொல்பொருள் துறையின ரால் பாதுகாக்கப்படும் கலைச் சின்னமாக மாறியுள் ளது. மு.ந.

**நார்த்து சர் தாமசு:** இவர் வாலாற்றுச் சிறப்பு வாய்ந்தமொழிபெயர்ப்புகளை கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் செய்தவர். உரைநடைக்குப் பெரிதும் உதவிய இவரது ஈடுஇணையில்லாத மொழி பெயர்ப்பு கள் இன்னும் சிறந்த உரைநடைப் பகுதிகளாகக் கரு தப்பட்டுப் பயன் படுத்தப்படுகின்றன. மொழிபெயர்ப் பாளர்கள் கிடைத்த பழங்கால உண்மைகளை அப் படியே மொழிபெயர்த்துப் பயன்படும் வகையில் கொடுத்துள்ளார்கள். வரலாற்று வல்லுநர்கள் இங்கி லாந்து நாட்டின் பழைய புகழ்பெற்ற பழைய வர லாற்றையும், வீரச் செயல்களையும் வறிதே விட்டுவிட்டார்கள். உலகப்புகழ் பெற்ற நாடகா சிரியர் சேக்சுபியர், சர் தாமசு நார்த்தின் மொழி பெயர்ப்புகளில் உள்ளவற்றைக் கையாண்டு, வர லாற்று நாடகங்களைப் படைத்தார்.

சர் தாமசு நார்த்தின் குடும்பத்தினர் குறிப்பிடத் தக்க புகழ் பெற்றவர்களாகப் பிற்காலத்தில் கருதப் பட்டனர். நார்த்து பிரபுவின் இரண்டாம் மகன் இவர். இவரைப்பற்றி மிகுதியாக ஏதும் தெரிய வில்லை. இவர் கி.பி. 1579-இல் புகழ் பெற்ற உயர்ந்த பெருமைமிக்க, கிரேக்க, உரோமானியப் பெரி யோர்களின் வாழ்க்கை வரலாற்றை மொழி பெயர்த் தார். சேக்சுபியர் தம் கரியோலனசு, அந்தோணி யோவும் கிளியோபாத்ராவும் என்ற உரோமானிய வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த புகழ் பெற்ற நாடகங் களில், நார்த்தின் மொழிபெயர்ப்பில் கண்ட உண்மை களை அப்படியே கையாண்டு சிறப்பித்தார்.

எலிசபெத்துக் காலத்து மொழிபெயர்ப்பாளர் கள், அக்கால உலகம் சுற்றிப் பயணம் செய்து வந்த சில மாலுமிகளைப் போல, மிகவும் சுதந்திரமாகத் தம்மிச்சைப்படி செயலாற்றியதுபோல, மொழி பெயர்ப்புப் பணியினைச் செய்தார்கள். மூல நூல் களிலிருந்து மொழிபெயர்க்காமல், சேக்சு அம்யோடு என்பவரின் பிரஞ்சு மொழிப் புத்தகத்திலிருந்து நார்த்து மொழி பெயர்த்தார். அவருக்கே உரித்தான தனித்தன்மையைப் பயன்படுத்திச் சரியான சொற் களைக் கையாண்டு மூல நூலின் சுவை, தரம் குன்றா மல் இது ஒரு மொழிபெயர்ப்பு என்ற உணர்வு ஏற் படாதவாறு அப்பணியைச் செய்த பெருமை, சர் தாமசு நார்த்துஎன்பவரையேசாரும். அன்னாருடைய மொழிபெயர்ப்பான புளூடார்க்கின் வாழ்க்கை வர லாறு, ஒரு நூற்றாண்டிற்கும் மேல் மிகுந்த கவனத் துடன், கிறித்தவ வேதநூலுக்கு அடுத்த படியாக விரும்பிப்படித்து வரப்பட்டது.

சர் தாமசு நார்த்தின் நடையழகு, பெருமிதம் போன்றவை, வேறுயாராலும் பின்பற்ற முடியாதபடி அமைந்துள்ளது ஒரு சிறப்பு ஆகும். உரைநடை, வளம் குன்றியிருந்த கி.பி. 16-ஆம் நூற்றாண்டில், சர்தாமசு நார்த்தின் சிறந்த உலகம் போற்றும் மொழிபெயர்ப்பு இலக்கிய உலகில் ஒரு பெரும் மாறுதலை ஏற்படுத்தி யது. ஒளிமயமான சிறந்த ஓர் எதிர்காலத்தைக் காட்டியது என்று கூறினால் அது மிகையாகாது. பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தாய்மொழியில் பெயர்த்திடல் வேண்டும் என்ற இலக்கணத்திற்கு எடுத்துக் காட்டாக, முதன்மை இடம் பெற்றவராக விளங்குகிறார் சர் தாமசு நார்த்து. ஆர்.வெ.

**நார்த்து பிரபு** கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு பிரித்தானிய அரசியலறிஞர். கில்போர்டு பிரபு என்றும் (Earl of Guildford) நார்த்து பிரபு என்றும் (Lord North) சொல்லப்படும் பிரடரிக் நார்த்துஎன்பவர் கி.பி.1732-இல் இலண்டனில் பிறந்து ஈட்டன் கல்லூரியிலும், ஆக்சுபோர்டு திரினிட்டி கல்லூரியிலும் பயின்றபின் வெளிநாடுகளில் 3 ஆண்டு கள் பயணம் செய்தார். நார்த்து தம் தகப்பனா ருடைய கைவசத் தொகுதியாகிய பான்பரியிலிருந்து (Pocket borough), கி.பி.1754-இல் பாராளுமன்றத் திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு உறுப்பினரானார். இவர் பழமைக் கட்சியைச் (Tory party) சேர்ந்தவர். இவர் கருவூலத் துணை அமைச்சராக கி.பி.1759 முதல் கி.பி. 1766 வரை இருந்தார்; கி.பி.1767-இலி ருந்து கி.பி.1770-வரை நிதி அமைச்சராகவும், கி.பி. 1770 முதல் கி.பி.1782 வரை தலைமை அமைச்சராக வும் பல பதவிகளிலிருந்தார். ஆயினும் இவர் அரசர் மூன்றாம் சார்சின் (George III) கைப்பாவையாகச் செயற்பட்டார். இவர் கி.பி.1792-இல் மறைந்தார்.



நார்த்து பிரபு

**அரசியற் செயல்கள்:** நார்த்து பிரபுவின் ஆட்சிக் காலம், ஆங்கில அரசர் மூன்றாம் சார்சின் நேர்முக ஆட்சிக்காலமாகும். அது அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் சுதந்திரப் போர் நடைபெற்ற காலம். அமெரிக்காவிலிருந்த பிரித்தானியக் குடியேற்ற நாடுகள் பிரித்தானியரின் சுய ஆட்சி மரபில் வளர்ந்தவையாகையால், அமெரிக்கருக்குப் பிரதிநிதித்துவம் இல்லாத போது பிரித்தானிய அரசாங்கம் அவர்கள் மீது முத்திரைவரியையோ காகிதம், கண்ணாடி, தேயிலை முதலிய பொருள்கள் மீது சுங்கத் தீர்வைகளோ விதித்தலாகாது என்று அமெரிக்கர்கள் கடுமையாக எதிர்த்தனர். முத்திரைக்காகித வரி நீக்கப்பட்டு, பின் தேயிலைமீதுள்ள சுங்கம் மட்டும் பிரிட்டன் விதிப்பதற்கு வழி செய்யப்பட்டது. பாசுட்டன் (Boston) துறைமுக நகரிலுள்ள வழக்கறிஞர்கள் இத்தீர்வையும் வருமானமாகவே ஆகுமென்று எதிர்த்தனர். ஆங்கில அரசர், அரசாங்கத்துக்கு இத்தீர்வை விதிப்பதற்கு உரிமை உண்டு என்ற பொதுவான கொள்கை நிலைநிறுத்தப்படுதல் வேண்டுமென்று பிடிவாதமாகக் கூறவே, நார்த்துபிரபு தேயிலை வரியை மட்டும் வைத்துக் கொண்டு மற்றவைகளை நீக்கினார். அவருடைய ஆணையின்பேரில் ஆங்கிலக் கிழக்கிந்திய வாணிகக் கழகம் ஒரு கப்பலில் நிறையத் தேயிலையை ஏற்றிக் கொண்டு போய்ப்பாசுட்டன் துறைமுகத்தில் இறக்க முயன்றது. சில அமெரிக்கர் செவ்விந்தியர் போல் உடை அணிந்து கப்பலிலிருந்து தேயிலையை எடுத்துக் கடலினுள் எறிந்து விட்டனர். நார்த்து பிரபு கி.பி.1775-இல் சில தண்டிக்கும் சட்டங்களை (Punitive Acts or Intolerable Acts) நிறைவேற்றி, ஆங்கில வாணிகக் கழகத்துக்குப் பாசுட்டன் இழப்பீடு அளிக்கும் வரை அதனை மூடியும், மசாசு செட்சுக்கு அளிக்கப்பட்டிருந்த தன்னாட்சிப் பட்டயத்தைத் தள்ளுபடி செய்தும் அடக்கினார். இச்செயல் காரணமாக மசாசுசெட்சு தன் சுதந்திரத்தை அரசர் சார்சு அழிக்கத் திட்டமிடுவதாகக் கூறி, குடியேற்ற நாடுகளெல்லாம் தம் உரிமைகளையும் சுதந்திரத்தையும் பாதுகாக்கும் பொருட்டு கி.பி.1774-இல் பிலடெல்பியாவில் ஒரு மாநாட்டுக்குப் பேராளர்களை அனுப்பும்படி வேண்டுகோள் விடுத்தது. இம்மாநாடு குடியேற்ற நாடுகளின் கருத்துகளைத் தெரிவித்து ஒரு விண்ணப்பத்தை அரசருக்கு அனுப்ப, அரசர் அந்த மாநாடு தம் அதிகாரத்தை மதிக்காமல் கூடியதாகையால் அதன் விண்ணப்பத்தை ஏற்க மறுத்தார். குடியேற்ற நாடுகள் கி.பி.1775-இல் தங்கள் மீது தாங்களே வரி விதித்துக் கொண்டதனால், அவற்றின் மீது வரி விதித்தற்கு ஆங்கிலப் பாராளுமன்றத்துக்கு உரிமை இல்லையென்று நார்த்து பிரபு அரசரிடம் வற்புறுத்திக் கூறியிருந்தார். பாராளுமன்றத்தில் நார்த்து பிரபுவின் அரசாங்கத்தை எதிர்க்கும் நோக்கத்துடன் விக்குக் கட்சியார் (Whigs) அமெரிக்கருக்கு ஆதரவளித்துப் பேசினர்.

அரசருடைய விட்டுக் கொடுக்காத பிடிவாதத் தன்மையும், அமெரிக்கரின் எதிர்ப்பும் வளர்ந்தன. நார்த்து பிரபு நிலைமையை நன்கு உணர்ந்தாரெனினும், அவர் தொடர்ந்து அரசருடைய பிடிவாதக் கொள்கையை ஆதரித்தார். அதனால் அவர் தொடர்ந்து பதவியில் இருந்தார். அமெரிக்கருக்குப் பிரஞ்சு, இசுபானிய, பிரசிய அரசாங்கங்கள் உதவி செய்ய, அவர்கள் வெற்றியாகப் போரை நடத்தினர். அவர்கள் கி.பி. 1777-இல் சாரடோகாவில்ஒருவெற்றியைப் பெற்றனர். எனவே, தம் கருத்துக்கு மாறாக அமெரிக்கப் போரை அரசர் தோற்றுவித்ததையும், அதில் தோல்வி ஏற்பட்டதையும்கண்டு நார்த்து பிரபு பதவிவிலக விரும்பினார். அரசரே போரை முன்னின்று நடத்தியதால் நார்த்து பெயரளவுக்குத் தலைமை அமைச்சராக இருந்தார். இப்போரும் கி.பி.1781-இல் யார்க் டவுனில் அமெரிக்கர் பெற்ற மற்றொரு வெற்றியின் விளைவாக முடிவுக்கு வந்தது. இவரது அமைச்சரவையைப் பதவி நீக்கம் செய்தற்காக கி.பி.1782-இல் ஒரு தீர்மானம் கொண்டுவரப்படுமென்று இவர் உணர்ந்து அவ்வாண்டு மார்ச்சு மாதம் பதவியிலிருந்து விலகினார். இவர் பதவியிலிருந்த காலத்தில் இவருடைய ஆதரவாளர்கள் பலர் இவரைவிட்டுக் கட்சி மாறவே, இவருடைய அரசாங்கம் வலுவற்றதாக இருந்தது. இவருடைய அரசியல் எதிரியான விக்குக் கட்சித் தலைவராகிய சார்லசு சேம்சு பாக்சு என்பவருடன் நார்த்து பிரபு கூட்டுச் சேர்ந்து, அரசரால் அமர்த்தப்பட்ட செல்பர்ன் (Shelburne) என்பவரைப்பதவி விலகச் செய்தனர். இவர்களுடைய கூட்டுக்கு எதிராக அரசருடைய ஆதரவாளரால் (King's Friends) யாதொன்றும் செய்ய இயலவில்லை. இருவரும் அமைத்த கூட்டமைச்சரவையை அரசர் ஒரு சூழ்ச்சியினால் பதவி விலகச் செய்துவிட்டார். நார்த்து பிரபு பின்னர் அரசருடைய ஆதரவோடு தலைமை அமைச்சராகப் பதவி ஏற்ற இளைய வில்லியம் பிட்டிற்கு எதிராக எதிர்க்கட்சியிற் செயற்பட்டார். இவர் கி.பி.1790-இல் தம் தகப்பனார் இறந்ததும் பிரபுக்கள் சபையில் உறுப்பினராயினார்.

நார்த்து பிரபு, இந்தியாவில் அப்போது நிறுவப்பட்ட கிழக்கிந்திய வாணிகக் கழகத்தினர் ஆங்கிலப் பேரரசின் ஆட்சியைஒழுங்குபடுத்துவதற்காக ஒழுங்குமுறைச் சட்டத்தை (Regulating Act) கி.பி.1773-இல் நிறைவேற்றினார்.

**மதிப்பீடு:** நார்த்து பிரபு உண்மையை உணர்ந்தவரேனும் அதன்படி செயலாற்றும் திறமையற்ற

ஆட்சியாளராக இருந்தார். வழக்கத்தினடிப்படையில் அரசாங்க அதிகாரமும் பொறுப்பும், பாராளுமன்றத்துக்குப் பொறுப்பான தலைமை அமைச்சரிடமும், அவருடைய உடனமைச்சர்களிடமும் இருந்தன அதை ஏற்றுச்செயற்படாமல், அரசர் தாமே தலைமை அமைச்சரை அமர்த்திக் கொள்கைகளை வகுத்து அவற்றைப் பாராளுமன்ற ஆதரவோடு செயற்படுத்துமாறு அமைச்சர்களை ஏவியது பெருந்தவறே ஆகும். அரசரால் அமர்த்தப்பட்ட அமைச்சர் அரசருக்கே பொறுப்புடையவராவார், ஆதலால் அதை உணராமல் பல தவறுகளைச் செய்த பிடிவாதமான அரசருடைய போக்கினால் அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் சுதந்திரமடைந்தன. அரசருடைய தவறுகளுக்கு நார்த்து பிரபு ஒரு கருவி ஆனார். இவர் பாராளுமன்ற ஆதரவைச் சார்ந்து செயற்படாமல், அரசருடைய கருத்துகளை நிறைவேற்றுதலே தம் அரசியல் வாழ்வின் குறிக்கோள் என்று எண்ணினார். இவர் சிறிது நகைச்சுவை உடையவரேயாயினும், ஒரு புகழ்மிக்க அறிஞரோ பேச்சாளரோ அல்லர். பா.சு.

**நார்த்துபுருக்கு** என்ற கிராமம் ஐக்கிய அமெரிக்க நாட்டில் கூக்கு வட்டத்தில் (Cook Country உள்ள இல்லினாய்சினை (Illinois) அடுத்த ஒரு சிற்றூர். இது இவான்சுடன் நகரத்துக்கு (Evanston) 13 கி.மீ. தொலைவில் வடமேற்கிலிருக்கிறது. இது சிகாகோ நகரத்து மக்களுடைய குடியிருப்புக்காக உள்ள ஒரு நகரடுத்த ஊர். இதில் பால் பண்ணைகளும், சரக்குப் பேருந்துப் பேட்டைகளும் இருக்கின்றன. சரக்குப் பேருந்தின் பாகங்களையும், எண்ணெய் விளக்குகளையும் செய்யும் தொழிற்சாலைகள் இங்கு இருக்கின்றன. இவ்வூர் 1923-இல் ஒரு நகராட்சியாக அமைக்கப்பட்டது. இது ஒரு பொறுப்பாண்மைக் குழுவினாலும், அதன் தலைவராலும் ஆளப்படுகிறது. பா.சு.

**நார்த்து புருக்கு பிரபு, பாரிங்கு** என்பவர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆங்கில அரசியலறிஞருள் ஒருவராவர். இவர் இந்தியாவை ஆண்ட அரசப் பிரதிநிதிகளுள் (Viceroys) ஒருவருமாவர். தாமசு சார்சு (Thomas George) என்னும் நார்த்துபுருக்கு பிரபு (Lord Northbrook) சர் பிரான்சிசு தார்ன்கில் பாரிங் (Sir Francis Thornhil) Baring) என்னும் நார்த்துபுருக்கு பிரபுவின் மகன் ஆவர். இவர் கி.பி. 1826-இல் இலண்டனில் பிறந்தார். இவர் ஆக்சுபோர்டில் கிறித்து கல்லூரியில் கல்விப்பயிற்சிபெற்றபின் பிரித்தானியத் தாராளக் கட்சியில் உறுப்பினராகச் சேர்ந்து அரசியலில் பங்கு கொண்டார். இவர் கி.பி. 1857 முதல் 1866-ஆம் ஆண்டு வரை பிரித்தானியப் பாராளுமன்றத்தின் பொதுமக்கள் மன்றத்தில் உறுப்பினராக இருந்தார். இவர் கி.பி 1866-இல் தம் தகப்பனாருடைய பிரபுப் பட்டத்துக்கு உரியவரானார். இவர் தாராளக் கட்சியின் தலைவர் வில்லியம் இவார்ட்டு கிளாட்சுடனின் (W.E. Gladstone) அரசாங்கத்தில் போர்த்துறை அமைச்சகக் கீழ்நிலைச் செயலராக கி.பி. 1868-இல் பணியில் சேர்ந்தார். கிளாட்சுடன் இவரை இந்தியாவின் தலைமை ஆளுநராகவும், அரசப் பிரதிநிதியாகவும் அமர்த்தினார். இவர் அப்பதவியில் கி.பி. 1872-முதல் இருந்த போது, இங்கிலாந்தில் புதிதாக ஆட்சிக்கு வந்த பழைமைக் கட்சி அரசாங்கத்தின் தலைமை அமைச்சர் திசுரேலி (Disraeli) பின்பற்றிய புதிய ஆப்கானிசுத்தான் கொள்கையை நார்த்து புருக்கு செயற்படுத்த மறுத்து கி.பி. 1876-இல் பதவியைத் துறந்தார். மீண்டும் ஆட்சிக்கு வந்த கிளாட்சுடனின் தாராளக்கட்சி அமைச்சரவையில் நார்த்து புருக்கு பிரபு கடற்படையின் முதல் பிரபுவாக (First Lord of the Admiralty) கி.பி. 1880 முதல் கி.பி. 1885 வரை பணி செய்தபின், 1904-இல் மறைந்தார்.

**இந்தியாவில் நார்த்துபுருக்கின் பணிகள்:** நார்த்து புருக்கு இந்தியாவின் வடமேற்கெல்லையாக இருந்த ஆப்கானிசுத்தான் நாட்டில் பின்பற்றிய கொள்கை இவரை ஒரு தாராளப் போக்குடையவரென்று காட்டுகிறது. சுதந்திர நாடாகிய ஆப்கானிசுத்தானின் நாட்டினெல்லையை நோக்கி உருசிய அரசாங்கம் ஆப்கானிய அரசர் (அமீர்) மீது தன் கட்டுப்பாட்டை நிறுவமுயன்றதும் அம்முயற்சியை அமீர் வெறுத்து எதிர்த்ததும் தான் ஆங்கிலேய இந்திய அரசாங்கம் பின்பற்றிய ஆப்கன் கொள்கையிலடங்கிய சிக்கல்களாகும். அதனால், கி.பி. 1833 முதல் 1842 வரை முதல் ஆப்கானியப் போர் நடந்தது; அதன் இறுதியில் ஆங்கிலேயர் வெற்றி பெற்றாலும் அவர்களுக்குப் பெரும் உயிர்ச் சேதமும் பொருள் இழப்பும் ஏற்பட்டன. ஆங்கிலேயரின் வெளிநாட்டு உறவுக் கொள்கை ஆப்கன் அமீர் செர்அலியைப் பாதித்தது. எனவே, ஆப்கன் அமீர் செர் அலி நார்த்துபுருக்கை வெறுத்தார். ஆனால், உருசியா நடு ஆசியாவில் கி.பி. 1873-இல் கிவாவைக் (Khiva) கைப்பற்றிக் கொண்டு, ஆப்கானிய எல்லையை நோக்கி முன்னேறிவரவும், செர் அலி அச்சமடைந்து, ஆங்கிலேயரோடு நெருங்கிய உடன்படிக்கை செய்துகொள்ளும் பொருட்டு ஒரு தூதுக்குழுவை சிம்லாவுக்குவிடுத்தார். நார்த்துபுருக்கு அமீரின் இரங்கத்தக்க நிலையைக் கண்டு வருந்தினாராயினும், உருசுயாவின் தாக்குதலுக்கு அவர் ஆளானால், அவருக்கு முந்திய கால அரசப் பிரதிநிதி மேயோ பிரபு பின்பற்றிய நட்புக்கொள்கையை விடுத்து முன்னேறும் கொள்கையை (Forward Policy) ஆப்கானிசுத்தானில் கையாளலாகாது என்று ஆங்கிலேய அரசாங்கம் இந்திய அரசாங்கத்துக்குக் கூறியதால் நார்த்துபுருக்கு அமீருக்கு வாக்குறுதி ஏதும்

அளிக்கவில்லை. ஏமாற்றமடைந்த அமீர் தமக்கு எதிராகக் கலகம் செய்த யாகூப்கான் என்னும் தம் மகனைத் தமக்குப்பின் உரிமையாளராகவும் ஆக்கினார். அமீரின் இச்செயலை நார்த்துபுருக்கு எதிர்த்தார். அமீரும் இந்நிலையில் உருசியாவுடன் நட்புறவு கொள்ள விரும்பினார். இந்தச் சூழ்நிலையில் கிளாட்சுடன் அரசாங்கம் பதவிவிலகித் திசுரேலியின் பழைமைக் கட்சி அரசாங்கம் பதவியேற்றது. திசுரேலியும், இந்தியச் செயலர் சாலிசுபரி பிரபுவும் உருசியாமீது வெறுப்புடைய வராதலினால் அவர்கள் உருசியாவுடன் நேராகத் தொடர்பு கொள்ளுதலை விடுத்து, ஆப்கனிய அமீரின் மீது பிரித்தானியக் கட்டுப்பாட்டை நிறுவ விரும்பினர். அமீர் உருசியாவின் நண்பரென அவர்கள் எண்ணினர். அமீரின் நாட்டில் ஒரு பிரிட்டன் தூதர் அமர்த்தப்படுதற்கு அவரே இணங்கச் செய்தற்காக அவருடன் பேச்சுவார்த்தை நடத்துமாறு அரசப் பிரதிநிதிக்குச் சாலிசுபரிபிரபு ஆணைவிடுத்தார். அமீர் ஆங்கிலேயருடன் உடன்படிக்கை செய்துகொள்ளுதற்கு கி.பி. 1869-இலும், கி.பி. 1873-இலும், விடுத்த வேண்டுகோளை ஆங்கிலேயர் ஏற்றுக் கொள்ள மறுத்தகாரணத்தினாலும், அமீர் எப்போதுமே எதிர்த்து வந்த 'பிரிட்டன் தூதுவரைக் காபூலில் அமர்த்துதல்' என்ற வேண்டுகோளினை இப்பொழுது வலியுறுத்துதற்குக் காரணம் எதுவும் இல்லாத சூழ்நிலையில் அதனை இப்போது வற்புறுத்துதல் நியாயத்துக்குப் புறம்பானது என்ற காரணத்தினாலும், நார்த்துபுருக்கும். அவருடைய நிருவாகக் குழுவும், ஆங்கிலேய அரசாங்கத்தின் ஆப்கன் கொள்கையில் எந்த மாற்றத்தையும் செய்ய உடன்படவில்லை. ஆங்கிலேய அரசாங்கம் ஆப்கானிசுத்தானுக்கு ஒரு தூதுக் குழுவை விடுக்குமாறு கேட்டு இந்திய அரசாங்கத்துக்கு விடுத்த ஆணையைச் செயற்படுத்த நார்த்துபுருக்கு மறுத்துப் பதவியைத் துறந்தார். தமக்குத் தவறு என்று தோன்றியதை அவர் செய்ய மறுத்தார்.

பரோடாவின் அரசர் மல்கரிராவ் கெய்க்வார் ஆங்கிலேய அரசாங்க ஆணைக்கு மாறாகத் தம் ஆட்சியைச் சீர்திருத்தத் தவறியதால் அவரைப் பதவியிலிருந்து நார்த்துபுருக்கு நீக்கினார்.

நிதித்துறையிலும் பல நல்ல சீர்திருத்தங்களை நார்த்துபுருக்கு செய்தார். சூயசுக் கால்வாய் கி.பி. 1896 இல் இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்குமிடையே நேரடிக் கப்பற்போக்குவரத்துக்குத் திறந்துவிடப்பட்டது. இங்கிலாந்தில் தடையற்ற வாணிகக் கொள்கை (Free trade) பின்பற்றப்பட்டது. இந்திய அரசாங்கமும் இக்கொள்கையைப் பின்பற்றி இறக்குமதித் தீர்வையை கி.பி. 1864-இல் 10 விழுக்காட்டிலிருந்து $7\frac{1}{2}$ விழுக்காடாகக் குறைத்தது. இத்தீர்வையை நார்த்துபுருக்கு பிரபு மேலும் 5 விழுக்காடாக கி.பி. 1875-இல் குறைத்தார். மேலும் பல பொருள்களின் மீதான 3 விழுக்காடு ஏற்றுமதித் தீர்வைகளை நீக்கிவிட்டார். இங்கிலாந்திலிருந்து இந்தியாவில் இறக்குமதி செய்யப்படும் மான்செசுட்டர் பருத்தித்துணிகளின் மீதான 5 விழுக்காடுத் தீர்வையை நீக்கிவிடுமாறு இங்கிலாந்தின் பழைமைக் கட்சி அரசாங்கம் இவரை வற்புறுத்திய போது, இவர் இந்திய நிதிநிலையைச்சீர்ப்படுத்துவதன் காரணத்தைச் சுட்டிக்காட்டி, ஆங்கில அரசாங்க ஆணையைச் செயற்படுத்த மறுத்தார். இவ்வாறு இவர் செய்தாலும், உப்பின் மீதான வரியைக் குறைக்கவில்லை. அதற்கு மாறாக ஐரோப்பிய, இந்தியச் செல்வர்களுக்கு உதவியாக வருமான வரியை நீக்கினார். பிரித்தானியர் ஆட்சித் தொடர்பின்மீது இந்தியா பற்றுறுதியோடு இருத்தல் வேண்டுமாயின் வரிகள் உயர்த்தப் படுதல் கூடாது என்ற கொள்கையை நார்த்துபுருக்கு உறுதியாகக் கடைப்பிடித்தார். பீகாரில் கி.பி.1873-74-இல் இரு மாவட்டங்கள் பஞ்சத்துக்கு உள்ளான போது, $6\frac{1}{2}$ கோடி உருபாய் செலவில் உதவிகளளிக்கப்படவும், பலர் காப்பாற்றப் படவும் இவர் உதவி செய்தார்.

**மதிப்பீடு:** நார்த்துபுருக்கு குடிகள் நலம்பேணும் இயல்பும், தவறு நேராதபடி தற்காத்துக்கொள்ளும் இயல்புமுடையதாய ஓர் ஆட்சியாளராவர். ஆப்கானிசுத்தானத்தில் ஆங்கிலேயர் தலையிடுதலும், அங்கு அவர் தம் அரசியலாதிக்கத்தை நிலைநாட்ட முயலுதலும் தவறு என்றும், அது ஒரு போரையே விளைவிக்கும் என்றும், ஆங்கிலப் பொருளாதார வளர்ச்சிக்காக இந்தியரின் நிதிநலனைப் புறக்கணித்தல் தவறு என்றும் அவர் துணிவாக இந்தியச் செயலரிடம் எடுத்துரைத்து, அதற்காக அவர் தம் பதவியைத் துறக்கவும் செய்தார். இவருடைய ஆட்சிக்குப் பிந்திய காலத்திய நிகழ்ச்சிகள் இவர் கொள்கைகள் சிறந்தன என்பதை எடுத்துக்காட்டின. பா.சு.

***நார்த்தேம்டன்*** இங்கிலாந்து நாட்டின் தலைநகராகிய இலண்டனிலிருந்து வடமேற்கே 105 கி.மீ. தொலைவில் உள்ள பகுதியாகும். இது ஒரு நகராட்சிப் பகுதியாகவும் நாடாளுமன்றத் தொகுதியாகவும் விளங்குகிறது. இதன் மக்கள் தொகை 164,000 (1983). இப்பகுதி பற்றிய முதல் வரலாற்றுவிவரம் கி.பி. 914-இல் கிடைத்துள்ளது. கி.பி. 1675-ஆம் ஆண்டு முதல், தோல்பதனிடும் தொழில் இப்பகுதியில் வளர்ந்தோங்கியுள்ளது. அதன் மூலம், காலணி, காலுறைகள் ஆகியவற்றின் உற்பத்தித் தொழில்களும் இப்பகுதியில் வளர்ந்துள்ளன.

இங்கிலாந்து நாட்டு வரலாற்றில் உரோசாப் பூச் சின்னச் சண்டை (Wars of the Roses) என்பது

முக்கியமான போராட்ட நிகழ்ச்சியாகும். இந்தப் பகுதியில் தான் அப்போர்கள் மையம் கொண்டிருந்தன. கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த உள்நாட்டுப் போரிலும் இப்பகுதி முக்கிய பங்கை ஆற்றியது. இந்த நகர் நேனி (Nene) என்னும் ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. நார்த்தேம்ட்டன்சயர் என்ற மாநிலத்திற்கு இதுவே ஆட்சி மையம்.

**நார்த்தேம்டன்சயர்**, இங்கிலாந்தின் நடுப்பகுதியில் உள்ள மாநிலம். இதன் பரப்பு 2,367.3 ச.கி.மீ. இதன் தலைநகர் நார்த்தேம்ட்டன் நகரம். இப்பகுதி புல் தரைகளும் காடுகளும் நிறைந்தது. இங்கு வேளாண்மை சிறப்புப் பெற்றுள்ளது. ஆங்கிலோ சாக்சானியர் ஆட்சிபுரிந்த பழங்காலத்தில், இப்பகுதி மெர்சியா (Mercia) அரசுடன் சேர்ந்திருந்தது. பின்னர்த் தேனியர்கள் (Danes) ஆட்சிக்காலத்தில் தனித்த, ஒரு மாவட்டமாக அமைக்கப்பெற்றது. இதன் பரப்பு 2,367 ச.கி.மீ. மக்கள் தொகை 538,500 (1983).

இதே நார்தேம்ட்டன் பெயரில் அமெரிக்க நாட்டில் மசாசுசெட்டுப் பகுதியில் இசுபிரிங்பீல்டு என்ற நகருக்கு வடக்கே 28 கி.மீ. தொலைவில் ஒரு நகரம் உள்ளது. அந்நகரின் மக்கள்தொகை 30,300 (1978). அந்நகர் 1654-இல் உருவாகியது. காதுகேளாதவர்களுக்காக நடத்தப்பெறும் இசுமித்துக் கல்லூரி இங்கே இயங்கி வருகிறது. அ.க.

**நார்பக்கு**: இது, இங்கிலாந்து நாட்டின் கிழக்குப் பாகத்திலுள்ள பகுதியாகும். இந் நாட்டின் நான்காம் பெரிய பகுதியாகிய நார்பக்கு (Norfolk) 5355 ச.கி.மீ. பரப்பளவுடையது. இதன் மக்கள்தொகை 711,300 (1983). இது மிகவும் தாழ்வான பகுதியாகும். கழிவுநீர் வடிகால் திட்டங்களின் மூலமே இப்பகுதியில் வேளாண்மை செய்ய முடிகிறது.

**தொல்பொருளும், வரலாறும்**: கற்காலத்தைச் சேர்ந்த பல தொன்மையான கூழாங்கற் கருவிகள் இப்பகுதியில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. பெருங் கற்குவியல் காலத்தைச் சேர்ந்த (megalithic) கற்கருவிகளும் இங்குக் கிடைத்துள்ளன. உலோக காலத்தின் பின்பகுதியில் பல உலோகத் தொழிற்சாலைகள் இப்பகுதியில் அமைக்கப்பட்டன. இரும்புத்தொழில் கி.மு. 450-ஆம் ஆண்டளவில் மேன்மையடையும் பொழுது வெளியிலிருந்து மக்கள் இப்பகுதிக்கு வரத் தொடங்கினர். பிரான்சு நாட்டிலிருந்து கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் வந்த அரச மரபினர் இப்பகுதியை ஆளத் தொடங்கினர். ஆங்கிலேயர், பிரிசியன்கள், சாக்சன்கள் போன்ற இனத்தவர்கள் கி.பி. 450-ஆம் ஆண்டிலிருந்து இப்பகுதியில் குடியேறினர். இப்பகுதி கி.பி. 9ஆம் நூற்றாண்டின் மத்திய காலத்திலிருந்து தேனியர்களின் ஆக்கிரமிப்பிற்கு ஆளாகியது. மத்திய காலத்தில் கம்பளி உற்பத்தியினாலும் வேளாண்மை உற்பத்தியினாலும் இப்பகுதியின் செல்வம் பெருகியது. இக்காலத்தில் பல தனியார் கட்டடங்களும், மடங்களும் கட்டப்பட்டன. ஆனால், இந்த மடங்கள் எல்லாம் சமயச் சீர்திருத்தத்திற்குப் பிறகு பாதிப்பிற்குள்ளாயின.

**வேளாண்மை, தொழில், நிருவாகம்**: வேளாண்மையே இப்பகுதியின் முக்கிய தொழிலாகும். ஏறத்தாழ 1,000,000 ஏக்கர்கள் விளைநிலங்களாக 1950-ஆம் ஆண்டில் இருந்துவந்தன. இவற்றுள் 132,673 ஏக்கரில் கோதுமையும், 238,960 ஏக்கரில் பார்லியும் 99,706 ஏக்கரில் சர்க்கரைக் கிழங்கும் பயிரிடப்பட்டன. வான் கோழி, இப்பகுதியின் முக்கிய செல்வமாகும். சுற்றுலாப் பயணிகள் வருகை இப்பகுதியின் செல்வச் சிறப்பிற்கு மற்றொரு காரணமாகும். பட்டுத் துணி உற்பத்திக்கும் இப்பகுதி புகழ்பெற்றது. மீன்பிடித்தல் தொழிலும் இப்பகுதியில் சிறந்துள்ளது.

**நார்பக்கு**[2]: இப்பெயரில் அமெரிக்க நாட்டில் நெப்ராசுகா மாநிலத்தில் எல்கார்ன் (Elkhorn) ஆற்றங்கரையில் ஒரு நகரம் அமைந்துள்ளது. இந்நகரம் கி.பி. 1866-இல் அமைக்கப்பட்டது. உணவு பதப்படுத்தப்படும் தொழிலில் சிறந்து விளங்கும் இந்நகரத்தின் மக்கள்தொகை 19,449 (1980) ஆகும்.

**நார்பக்கு**[3]: இப்பெயரில், மற்றொரு துறைமுகப் பட்டினம், அமெரிக்க நாட்டில் வெர்சினியா மாநிலத்திலுள்ளது. இத் துறைமுகம் முதல் உலகப்போரிலும் இரண்டாம் உலகப்போரிலும் பெரும் பங்காற்றியது. இதன் மக்கள்தொகை 266, 979 (1980). இங்குள்ள பழைய தொமினியன் பல்கலைக்கழகம் (Old Dominion University) மிகவும் புகழ்பெற்றுள்ளது. அ.க.

***நார்பக்குத் தீவு*** தென் பசிபிக்கு மாக்கடலில் ஆசுத்திரேலிய கண்டத்தைச் சேர்ந்த ஒரு தீவு. இது சிட்னிக்கு வடகிழக்கில் 1665 கி.மீ. தொலைவில் உள்ளது. இதன் பரப்பு 33.7 ச.கி.மீ. ஆகும். இதன் மக்கள்தொகை ஏறத்தாழ 1800. செழிப்பான தாவர வளர்ச்சியை இங்குக் காணலாம். தேவதாரு மரங்கள் இங்கு மிகுதியாக உண்டு. அவரையும், பனை விதைகளும் இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றன. வீட்டு விலங்குகளும் இங்கு வளர்க்கப்படுகின்றன.

**வரலாறு**: சேம்சு குக்கு என்னும் கப்பல் தலைவன் கி.பி.1774-இல் இத் தீவைக் கண்டுபிடித்தான். பிரிட்டன் இங்கு விளையும் தேவதாரு மரங்கள், கப்பல்கள் தயாரிக்க உதவுமென்று எண்ணி இத்தீவின் மீது உரிமை கொண்டாடியது. ஆனால், இங்குள்ள மரங்கள் எதிர்பார்த்தபடி பயன்தரத் தக்கதாக இல்லாததால் இத் தீவைப் பிரிட்டன் கைதிகள் வாழும் இட




நார்பக்கு அமைவிடம்




நார்மண்டி

மாகச் செய்தது. இந்த நிலையில் இத் தீவு கி.பி. 1788 முதல் 1855 வரையிலிருந்தது. அரசு கைதிகளைக் கி.பி.1856-இல் வெளியேற்றிவிட்டு வேறு மக்களை அங்குக் குடியேற்றியது. இத் தீவு கி.பி. 1844-இல் தாசுமேனியாவுடன் இணைக்கப்பட்டது. பிறகு கி.பி.1896-இல் இது நியூசௌத்வேல்சின் ஆதிக்கத்தின்கீழ் வந்தது. ஆசுத்திரேலியா கி.பி. 1913-இல் இதைப் பெற்றது. தெ.பா.

**நார்மண்டி:** இது, பிரான்சு நாட்டைச் சேர்ந்த பழைய அரசு ஆகும். இப்பகுதி கடற்கரையில் அமைந்திருந்ததால் இங்குக் கடல் வாணிகம் சிறப்பாக நடைபெற்றது. மேலும் வேளாண்மையும் கால்நடை வளர்ப்பும் இப்பகுதியில் சிறந்திருந்தன. கி.பி. 10-ஆம் நூற்றாண்டுவரை உரோமானியப் பேரரசின் தன்மைகளை விட்டுவிடாமல் இப்பகுதி கைக்கொண்டிருந்தது. இம் மக்கள் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டையும், தென் இத்தாலியையும் வெற்றி கொண்டார்கள். கரோலிஞ்சிய அரச மரபினரின் ஆட்சிக் காலத்திலும், அக்காலத்தில் ஏற்பட்ட பிரபுக்கள் கலவரத்திலும் இப்பகுதி மக்கள் பெரும் பங்கு கொண்டார்கள். நார்மண்டியின் முதல் இரண்டு பிரபுக்களான உரோல் என்பவரும், அவர் மகன் முதலாம் வில்லியம் என்பவரும் கரோலிஞ்சிய அரச மரபினருக்கு உண்மையுடன் ஊழியம் செய்தனர். வில்லியம் கி.பி. 936-இல் பிரான்சு மன்னர் நான்காம் உலூயியைச் சந்தித்துத் தமது விசுவாசத்தைத் தெரிவித்துக் கொண்டார்.

'நூறாண்டுப் போர்' காலத்தில் நார்மண்டி அரசிற்குச் சோதனைகள் வரத் தொடங்கின. நார்மண்டி அமைந்த நிலக்கூறு, போர் நடவடிக்கைகளுக்கு ஏற்றதாக இருந்தது. இங்கிலாந்து நாட்டு மன்னர்கள், பிரான்சு நாட்டு அரியணைக்கு ஆசைப்பட்டது நார்மண்டிப் பகுதிக்குத் தொல்லையாக அமைந்தது. சில காலங்களில் நார்மண்டிப் பகுதி இங்கிலாந்து நாட்டோடும் இணைக்கப்பட்டிருந்தது. மூன்றாம் எட்வர்டு மன்னர் கி.பி. 1346 - இல் இப்பகுதிமீது படையெடுத்தார். நார்மண்டி,கி.பி.1359-இல்ஏற்பட்ட 'இலண்டன் உடன்படிக்கை' யின்படி இங்கிலாந்து நாட்டிற்கு விட்டுக் கொடுக்கப்பட்டது. இருப்பினும் பிரான்சு நாட்டு மன்னர் இப் பகுதியைப் பின்னர் மீட்டுக்கொண்டார். அதன்பிறகு இப்பகுதி பிரான்சு நாட்டின் முழு அங்கமாக மாறித் தனித்தன்மை இழந்தது. இப்பகுதி மக்கள் முனைப்பும் ஆர்வமும் தன் முயற்சியும் கொண்டவர்கள். இவர்கள் கட்டடக் கலையில் சிறந்து விளங்குபவர்கள். இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் இப்பகுதி பெருந் தாக்குதலுக்குள்ளாயிற்று. அ.க.

**நார்மன் ஒயில்டு** என்பவர் உரிமைகள் பற்றிய சட்டஇயலான கொள்கையையும், சமூக நலன் கொள்கையையும் மறுத்து, உரிமைகள் பற்றிய குறிக்கோள் கொள்கையைப் (The Idealistic Theory of Rights) பின்பற்றிச் சில கருத்துகளைக் கூறிய ஓர் அரசியற் சிந்தனையாளராவர்.

இவர் 'அரசு பற்றிய ஒழுக்க இயலான ஆதாரம்' (Ethical Basis of the State) என்ற நூலில் உரிமைகளைப் பற்றிச் (Rights) சில கருத்துகளைக் கூறுகிறார்.

**உரிமைகள் பற்றிய சட்ட இயலான கொள்கை:** சட்ட இயலான கொள்கையின்படி (The Legal Theory of Rights) உரிமைகளெல்லாம் அரசினால் தோற்று

விக்கப்படுகின்றன. அரசின் சட்டம் ஒருவருக்கு எவற்றை வழங்குகிறதோ, அவையே அவருக்கு உரிமைகளாகின்றன. ஆகையால் சட்டத்தினால் தோற்றுவிக்கப்படுகிற உரிமைகள் வரம்பற்றவைகளாக இருத்தல் இயலாது. ஒருவருடைய உயிர்வாழும் உரிமை, சுதந்திர உரிமை, சொத்துரிமை போன்றவையெல்லாம் அரசினால் சட்டத்தின் வாயிலாகத் தீர்மானிக்கப்படுகிறபடியால், அவையெல்லாம் இயற்கையில் தோன்றியவையல்ல. அவை அரசின் சட்டத்தினால் செயற்கையாக உருவாக்கப்பட்டவை. சமூக ஒப்பந்தக் கோட்பாட்டை விளக்கிய தாமசு ஆப்சு (Thomas Hobbes) சட்ட இயலான உரிமைகள் கொள்கையை ஒத்துக் கொள்ளுகிறார்.

அரசாங்கத்தின் ஆணை அல்லது சட்டம் ஒன்றே எதனையும் உரிமையாக ஆக்குதல் கூடுமெனில், ஒழுக்க அடிப்படையில் ஒப்புக் கொள்ளப்பட இயலாத கையூட்டு, உடன்கட்டை ஏறுதல் முதலியவை எல்லாம் சட்டத்தினால் ஒப்புக்கொள்ளப்படத்தக்கவையாக ஆதல்கூடும். நாட்டின் சட்டம் உரிமைகளைத் தோற்றுவிக்கவில்லை. அது அவற்றை உரிமைகளென்று ஒப்புக்கொண்டு, அவை எவராலும் மீறி, அழிக்கப்படாதவாறு பாதுகாக்கிறது. உரிமைகள் சட்டத்தினால் ஒப்புக் கொள்ளப்பட்டாலும், ஒப்புக் கொள்ளப்படாவிட்டாலும், அவைகள் உரிமைகளுக்கு உரிய இயல்புகளோடு தொடர்ந்து இருக்கின்றன. 'அவைகள் உரிமைகளாக இருக்கின்ற காரணத்தினால்தான், அவை அரசினால் செயற்படுத்தப்படுகின்றன, அவை அரசினால் செயற்படுத்தப்படுகின்ற காரணத்தால் அவை உரிமைகளாகிவிடவில்லை. ஒரு செயலை உரிமையாக ஆக்குவது எது என்றால், ஒரு செயல் ஒழுக்க அடிப்படையில் சரியானதாக அல்லது நியாயமாக இருக்கின்ற காரணமேயாகும். ஏதேனும் ஒரு செயல் உரிமையாகக் சட்டத்தினாலும், ஒழுக்கக் கருத்துகளினாலும் ஒப்புக்கொள்ளப்படத்தக்கதாக இருத்தல்வேண்டும்'. மேலும் அரசையே உரிமைமைகளின் தோற்றுவாயாகக் கூறுதல், அதை வரம்பற்ற அதிகாரமுடையதாகக் கூறுதலுக்கு ஒப்பாகும். ஆனால், சட்டப்படி அரசினுடைய அதிகாரம் வரம்பற்றதெனினும், அதற்கு நடைமுறையில் பல வரம்புகளிருக்கின்றன.

உரிமைகள் பற்றிய சமூகநலன் கொள்கையையும் (The Social Welfare Theory of Rights) நார்மன் ஒயில்டு மறுக்கிறார். சமூக நலனைத் தோற்றுவிக்கும் சூழ்நிலைகளே உரிமைகளாகுமென்றும், சமூக நலன்கள் ஒன்றையொன்று மீறாமல் அவைகளைச் சமநிலையில் நிறுத்துவன உரிமைகளாகுமென்றும் பெந்தம் (Bentham), சான் இசுடுவர்ட்டு மில் (John Stuart Mill), உரோசுகோ பவுண்டு (Roscoe Pound), பேராசிரியர் சாபி (Professor Chafee) முதலியோர் கூறுகின்றனர். உரிமைகள் சமூகத்தினின்றும் தனித்தவை அல்ல என்பதும், அவை சமூக நலனோடு தொடர்புடையவை என்பதும் ஓரளவு உண்மையே; ஆயினும் 'சமூக நலன்' (அல்லது 'பொதுநலன்') என்பது என்ன என்று தீர்மானித்தல் எளிதன்று. மேலும் சமூக நலன் என்பது, தனியார் உரிமைகளை (Individual Rights) அழித்தல் கூடுமென்ற ஒரு பெரிய இடர்ப்பாடான நிலைக்கும் இடந்தருகிறது. இதனை நார்மன் ஒயில்டு சுட்டிக்காட்டி, 'உரிமைகள் சமூகத்தினால் வழங்கப்படுகின்றன என்று ஒப்புக்கொள்ளுவோமாயின், தனியாள் எவருக்கும் சமூகத்தின் தீர்ப்புக்கெதிராக மேல்முறையீடு செய்தற்கு வழியே இல்லாமற் போய்விடும்; தனியாள் சமூகத்தினுடைய ஏதேச்சாதிகாரமான விருப்பத்தையே சார்ந்திருக்க வேண்டிய அவல நிலைக்குத் தள்ளப்படுகிறார்' என்று கூறுகிறார். ஓர் உரிமை என்பது சில செயல்களைச் செய்தலில் ஒருவருக்குச் சுதந்திரம் இருத்தல் வேண்டுமென்று வேண்டும் ஒரு கேட்பு (Claim) ஆகும் என்று உரிமைக்கு நார்மன் ஒயில்டு இலக்கணம் வகுக்கிறார்.

**மதிப்பீடு**: உரிமைகள் பற்றிய சட்ட வகையான கொள்கையையும், சமூக நலக் கொள்கையையும் மறுத்து, உரிமைகளின் இயல்பைச் சுட்டிக்காட்டும் நார்மன் ஒயில்டின் கருத்து உரிமைகள் பற்றிய குறிக்கோள் கொள்கையை (The Idealistic Theory of Rights) ஒட்டியதாகும். உரிமைகளுக்கு ஆதாரம் சட்டத்திலோ வழக்கத்திலோ வரலாற்றிலோ இருந்தாலும், அவைகளுக்கு ஒழுக்க ஆதாரம் (Moral Basis) இருந்தால்தான் அவை உரிமை என்ற தகுதி பெறும். உரிமை என்பது ஒருவருடைய தன் வளர்ச்சிக்கு (Self Development) மிகவும் இன்றியமையாத ஒரு கேட்பு (Claim) ஆகும். 'ஒருவர் சமூக அமைப்பிலே ஒரு குறிப்பிட்ட நிலையைப் பெற்றுச் சில குறிப்பிட்ட பணிகளை நிறைவேற்றுகிற காரணத்தால் அவருக்கு இருக்கும் செயற் சுதந்திரமே உரிமை ஆகும்' என்னும் நார்மன் ஒயில்டின் கருத்து, உரிமை பற்றிய இக்காலக் கருத்து ஆகும். பேராசிரியர் இலாசுக்கி (Professor Laski) உரிமை என்பது தனியாளின் நலனையும், சமூகத்திலுள்ள பல்வேறு குழுக்களின் நலனையும், சமூக அல்லது தேசிய நலனையும் எடுத்துக் காட்டுதல் வேண்டும் என்று கூறும் கருத்தும் நார்மன் ஒயில்டு கூறும் உரிமைகள் பற்றிய கருத்தோடு ஒட்டி வருகிறது. பா.சு.

***நார்வீய மொழி***: நார்வீய மொழி (Nor-wegian Language) நார்வே நாட்டில் வழங்கும் மொழியாகும். இது செருமானிய மொழிகளுள் வட செருமானியப் பிரிவைச் சேர்ந்தது. இம்மொழியை நார்வேயில் 4,000,000 மக்களும், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 7,00,00 மக்களும் பேசுகின்றனர்.

நார்வீய மொழி இசுகாண்டிநேவிய மொழிகளுள் (Scandinavian) ஒன்று. இது ஒரே மொழியாகக் கருதப்படினும், புத்தக மொழி,புதிய நார்வீய மொழி என இரு பிரிவுகள் இதில் உள்ளன. இவ்விரண்டு மொழிகளையும் பேசுவோர் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்துகொள்ள முடியுமாயினும், இவற்றிடையே சில வேற்றுமைகள் உண்டு. புத்தக மொழி அரசுமொழி என்றும், புதிய நார்வீய மொழி நாட்டுமொழி என்றும் குறிப்பிடப்படுகின்றன. புத்தக மொழி அல்லது அரசுமொழி தென்மார்க்கும் நார்வேயும் இணைந்திருந்த காலப்பகுதியில் (கி.பி.1380-1814) தேனிசு எழுத்து முறையிலிருந்து உருவானது.ஆகவே, இதனை தேனோ-நார்வீய மொழி என்றும் குறிப்பிடுவர். இது மூன்று முறை (1907,1917,1938) நார்வீயப் பேச்சுமொழிக்கேற்பத் திருத்தி அமைக்கப்பட்டது. மற்றொரு பிரிவான நாட்டுமொழி என்பது பழைய நோர்சு மொழியின் மரபினைக் காக்கும் நோக்கத்தில் ஐவர் ஆசன் (கி.பி.1813-1896) என்பவரால் உருவாக்கப்பட்டது. ஆகவே, இதனைப் புதிய நோர்சு என்றும் குறிப்பிடுவர்.

பிற ஐரோப்பியநாடுகள் கி.பி. 14-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு வரையிலான நான்கு நூற்றாண்டுகளில் அவற்றின் தலைநகரங்களில் வழங்கி வந்த கிளைமொழிகளின் அடிப்படையில் ஒரு பொது மொழியை உருவாக்கிச் சிறந்த மொழிநிலையை எட்டிப் பிடித்தன. ஆனால், நார்வீய மொழி எவ்வித முன்னேற்றமுமின்றித் தேனிசு மொழியின் செல்வாக்குக்குட்பட்டு ஒரு பொதுமொழியை உருவாக்கும் திறனின்றி இருந்தது. நார்வே கி.பி. 1814-இல் விடுதலை பெற்றபோது அந்நாட்டின் மொழிநிலையை அறிஞர்கள் மாற்ற எண்ணம் கொண்டனர். என்ரிக்கு வெர்சுலேன்கு என்ற கவிஞரின் தலைமையில் கி.பி. 1845-இல் ஒரு பெரிய போராட்டமே உருவாயிற்று. நார்வே நாட்டிற்கு எனத் தனியான மொழி ஒன்று வேண்டும் என்பதில் மக்களிடையே கருத்து ஒற்றுமை உண்டாயிற்று. எனினும், அதனை எவ்வாறு பெறுவது என்பதில் அறிஞர்களிடையே ஒற்றுமை ஏற்படவில்லை. நார்வேயின் தலைநகரான ஆசுலோவில் படித்த மக்களிடையே வழங்கிய கிளைமொழி பொது மொழியாக மாறத் தலைப்பட்டது. அதுவே, தேனோ-நார்வீய மொழி என்றும், புத்தக மொழி என்றும், அரசு மொழி என்றும் வழங்கப்படலாயிற்று. நாட்டுப்புற மக்களின் மொழியினின்றும் இது பலவகையிலும் வேறுபட்டது. எனவே, கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் ஐவர் ஆசன், நாட்டுப்புறங்களில் வழங்கிய மொழியைப் பயன்படுத்திப் புதியமொழி ஒன்றை உருவாக்கி மக்களிடையே பரப்பினார். அதுவே, புதிய நார்வீய மொழி, புதிய நோர்சு நாட்டு மொழி என்ற பெயர்களால் வழங்கப்படலாயிற்று.

இன்று நார்வே நாட்டில் புத்தக மொழி, நாட்டு மொழி இரண்டுமே அரசியல் மொழிகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. பள்ளிகளிலும், வானொலிகளிலும், இரு கிளைமொழிகளும் பயன்படுகின்றன. இவ்விரண்டிற்கும் பொதுவான ஒரு மொழியை உருவாக்க நார்வே அரசு முயன்று வருகிறது. எனினும் புத்தக மொழியே இன்று சிறப்படைந்து நிலைமொழியாக உருவாகிக் கொண்டிருக்கிறது. அதுவே, ஆழமாக வேரூன்றிப் பரந்து நிற்கும் மொழியாக உள்ளது.நாளேடுகள் அனைத்தும் அம்மொழியிலேயே வெளிவருகின்றன. வேற்று மொழிகளிலிருந்து மொழிபெயர்ப்பு நூல்கள் அம்மொழியிலேயே மொழிபெயர்க்கப்படுகின்றன. வேற்று மொழிகளில் மொழிபெயர்க்கப்படும் நூல்களில் 90% நூல்கள் அம்மொழியில் எழுதப்பட்டவையே. குழந்தைகளுள் 75 விழுக்காட்டினர் அம்மொழியையே முதன்மையான மொழியாகக் கற்கின்றனர்.நார்வீய எழுத்து மொழியில் பல்வேறு நடைகளைக் காண முடிகிறது. நார்வீய எழுத்தாளர்கள் நகர்ப்புறக் கிளைமொழிகள், நாட்டுப்புறக் கிளைமொழிகள் ஆகியவற்றையும் பயன்படுத்துகின்றனர்.

நார்வீயப் பேச்சுமொழியில் நகர்ப்புறக் கிளைமொழிகள் என்றும், நாட்டுப்புறக் கிளைமொழிகள் என்றும் இரு பிரிவுகள் உள்ளன. அவற்றில் நகர்ப்புறக் கிளைமொழிகளே செல்வாக்குப் பெற்றுப் பரவியுள்ளன. நகர்ப்புறக் கிளைமொழிகளிலும் நிலைமொழி என்றும், துணைநிலைமொழிகள் என்றும் இரு சமுதாய மொழிப் பிரிவுகள் உள்ளன. நிலைமொழி நார்வே முழுதும் பொதுமொழியாகப் பொதுமையான வடிவம் பெற்றுள்ளது. அது பழைமையான நார்வீயப் பேச்சு முறைகளையும், தேனோ-நார்வீய எழுத்து மொழிக் கூறுகளையும் உள்ளடக்கி, இரண்டிற்கும் பொதுவாக உள்ளது. துணைநிலை மொழிகள் ஒவ்வொரு நகரத்தைச் சுற்றிலும் வழங்கும் நாட்டுப்புறக் கிளைமொழிகளுடன் நெருங்கிய தொடர்புடையவை.

பொதுவாக நார்வீய மொழி இனிமையான ஒலிகளையும், மிக எளிமையான இலக்கணத்தையும் கொண்டது. இம்மொழி அடிப்படையில் நார்வீயச் சொற்களையே மிகுதியாகக் கொண்டிருப்பினும், நகர்ப்புறப் பண்பாட்டுக் கூறுகளைக் குறிக்கும் பெரும்பான்மையான தாழ்ந்த செருமன் மொழிச் சொற்களையும்இம்மொழியிற் காணலாம். இக்கால அறிவியல் மற்றும் தொழில் வளர்ச்சியின் விளைவாகத் தோன்றியுள்ள புதிய புதிய சொற்களை இம்மொழி தயக்க

மின்றிக் கடன் வாங்கியுள்ளது. புதிய நார்வீய மொழி, தேனோ-நார்வீய மொழியைக் காட்டிலும் தூய்மையானது. செருமன், தேனிசு, மொழிச் சொற்களைக் கூடியவரை இம்மொழி விலக்கியுள்ளது.

நார்வீய மொழியில் இருபத்தொன்பது எழுத்துகள் உள்ளன. உயிர் எழுத்துகளில் குறில், நெடில் வேற்றுமை காணப்படுவதுடன், இம்மொழி எழுத்துகள் ஓரளவு உச்சரிப்பை ஒட்டியே அமைந்துள்ளன.

இதன்கண் பொது, சிறப்புச் சுட்டுகள் காணப்படுகின்றன. இவை ஆண், பெண், அஃறிணைகளுக்கேற்ப மாறும் தன்மையன. இவற்றுள் ஆண்பால் சொற்களும், பெண்பால் சொற்களும் பொதுச் சுட்டாக 'என்' என்ற சொல்லையும், அஃறிணைச் சொற்கள் 'எத்' என்பதையும் பெற்று வரும். பெண்பால் சொற்கள் 'என்' என்பதுடன் 'எய்' என்பதையும் பெற்று வரும்.

| | | |
|---|---|---|
| **ஆண்பால்:** | என் இசுடெய்ன் | ஒரு கல் |
| | என் ஏர் | ஒரு முயல் |
| **பெண்பால்:** | எய் மார்க்கு | ஒரு வயல் |
| | எய் கு | ஒரு பசு |
| **அஃறிணை:** | எத் டைர் | ஒரு விலங்கு |
| | எத் ஏபிள் | ஒரு ஆப்பிள் |

மூவிடப்பெயர்களில் தன்மை, முன்னிலையில் ஒருமை, பன்மை வேற்றுமைகளையும், படர்க்கையில் ஒருமை, பன்மை, ஆண், பெண், அஃறிணை வேற்றுமைகளையும் இம்மொழி கொண்டுள்ளது. மேலும் உடைமைப் பொருள் தரும் மூவிடப்பெயர்களைக் குறிக்க வேறு வேறு சொற்களையும்இதில் காணலாம்.

**நார்வீய இலக்கியம்:** இன்றைய ஐரோப்பிய மொழி இலக்கியங்களில் மிகத் தாமதமாக மலர்ந்து, மிகக் குறுகிய காலத்தில் ஆழமாக வேரூன்றி வளர்ந்த இலக்கியம் என்ற வகையில் நார்வீய இலக்கியம் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தது. நார்வே கி.பி. 1814-இல் விடுதலை அடையுமு வரை நார்வீய இலக்கியம் என்று குறிப்பிட்டுச் சொல்லத்தக்க இலக்கியம் எதுவும் இம்மொழியில் இல்லை. ஆயினும், அதன்பிறகு இம்மொழியில் வியக்கத்தக்கதொரு விரைவான இலக்கிய வளர்ச்சி தோன்றியது. பிற நாட்டு இலக்கியங்களின் மீது செல்வாக்குச் செலுத்தும் அளவுக்கு கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இம்மொழி இலக்கியம் வளர்ச்சி பெற்றது

**பழைய நார்வீய இலக்கியம்:** கிறித்து (Christ) பிறப்பதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பழைய நார்வீய இலக்கியத்தைக் காண முடிகிறது. இக்காலப் பகுதியில் இது பழைய ஐசுலாந்து இலக்கியத்துடன் இணைந்த நிலையிலேயே காணப்படுகிறது. இந்தப் பழைமையான இலக்கியத்தின் பெரும்பகுதி அயர்லாந்திலோ இசுகாண்டிநேவியாவின் பிற பகுதிகளிலோ தோன்றியவையே. ஆயினும் இவற்றில் குறிப்பிடத் தக்க அளவு நார்வீய இலக்கியப் பண்பைக் காணமுடிகிறது. எத்தா (Edda) எனப்படும் பழைய ஐசுலாந்து நாட்டு இலக்கியத் திரட்டில் காணும் புராண, நாட்டுப்பாடல்களும், வீர, தீரச் சிறுகதைப் பாடல்களும், பாணர்களின் பாடல்களும் முனிவர்களின் கதைகளும் அடங்கிய இப் பழைமையான இலக்கிய மரபு இருந்திராவிடில் நார்வீய இலக்கியத்தின் இக்கால வியக்கதக்க வளர்ச்சி இயலாத ஒன்றாகவே போயிருக்கும்.

இங்கு கி.பி.12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வரலாற்று நூல்கள் எழுதப்பட்டன. இந்நூல்கள் மன்னர்களின் வரலாறு, சிலுவைப் போர், மக்களின் பழக்கவழக்கங்கள் முதலியவற்றை விவரிக்கின்றன. கதைப்பாடல்கள் கி.பி.13-ஆம் நூற்றாண்டில் வாய்மொழி இலக்கியமாகச் செழித்து வளர்ந்தன. இக்கதைப் பாடல்கள் இன்றும் சிறப்பான இலக்கியப் படைப்பாகத் திகழ்கின்றன. கனவுக் கதைப்பாடல் என்று பொருள்படும் ஒருநூல் மன்னனின் கனவை விவரிக்கும் இலக்கியம். ஐந்தாம் காகோன் என்ற மன்னன் மொழிபெயர்ப்பு இலக்கியங்களை மிகவும் ஊக்குவித்தான். விவிலிய மொழிபெயர்ப்பு ஒன்று உரையுடன் தொடங்கப்பட்டது. ஆனால், எகிப்திலிருந்து இசுரேலியர்கள் வெளியேறும் பகுதிவரை மட்டுமே மொழிபெயர்க்கப்பட்டுப் பின்னர் அம் முயற்சி கைவிடப்பட்டுவிட்டது.

**கி.பி.14 முதல் 18ஆம் நூற்றாண்டு வரை:** நார்வேயின் பண்பாடும், அரசும் கி.பி.14-ஆம் நூற்றாண்டு முதல் தென்மார்க்குடன் இணையத் தொடங்கின. தேனிசு மொழி அரசியல் மொழியாகவும், இலக்கிய மொழியாகவும் ஆயிற்று. பல நூற்றாண்டுக் கால அமைதிக்குப் பின்னர் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் தோன்றிய உரோமன் கத்தோலிக்கச் சீர்திருத்தத்திற்குப் பின்னரே நார்வேயில் இலக்கியம் மிக மெதுவாகத் தோன்றத் தொடங்கியது. இக்காலத்தில் குறிப்பிடத்தக்க எழுத்தாளர் பீட்டர்தாசு என்பவர். இவருடைய படைப்பான 'நார்வேயின் முரசு' என்ற நூல் நார்வேயின் வடபகுதியில் வாழும்மதகுரு ஒருவரின் வாழ்க்கையை உயிரோட்டத்துடன் சித்திரிக்கிறது. இவருடைய காலத்தில் வாழ்ந்த தோரதே ஈங்கிள்பெரெட்சு டேட்டர் (கி.பி.1634.1716) என்னும் கவிஞரின் சமயப் பாடல்கள் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவை. இந்த தேனோ - நார்வீய இலக்கியப் பரம்பரையில்

மிகப் புகழ் வாய்ந்தவர் உலும்இவிக்கு ஓல்பெர்க்கு என்பவர். அவருடைய முதல் இலக்கியப் படைப்புத் தொடங்கி கி.பி.1719-இல் தம்முடைய இறுதிக்காலம் வரை இவரே இசுகாண்டிநேவிய இலக்கியத்தின் முடிசூடா மன்னராகத் திகழ்ந்தார். அவருடைய நகைச்சுவைப் படைப்புகள் (கி.பி.1720), கட்டுரைத் தொகுதிகள் (கி.பி. 1744,கி.பி.1748-54), புதினம் (கி.பி.1741)அவருடைய அறிவியல் மற்றும் வரலாற்றுப் படைப்புகளின் காரணமாக இன்றைய இசுகாண்டிநேவிய இலக்கியத்திற்கு அடிக்கல் நாட்டியவர் என்றும், இன்றைய தேனோ-நார்வீய இலக்கிய மொழியைத் தோற்றுவித்தவர் என்றும் இவர் போற்றப்படுகிறார்.

நார்வேயில் கி.பி.18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இலக்கியப் படைப்புகள் மிகவும் மங்கிய நிலையில் இருந்தன. கிறிசுதியன் துலின் (கி.பி.1728-65) என்பவரின் இயற்கையைச் சித்திரிக்கும் கவிதைகளே இக்காலத்தில் குறிப்பிடத் தக்கவை. எனினும், நார்வேயின் பண்பாடு புத்துயிர் பெற்று மலர்வதற்கான அறிகுறிகளும் இக்காலத்தில் தோன்றின. அரசு கி.பி.1760-இல் நார்வீயக் கல்விக் கழகத்தைத் தோற்றுவித்தது. மேலும், சில இளம் நார்வீயர்களால் நார்வீயக் கழகம் ஒன்று கி.பி. 1772-இல் தொடங்கப் பெற்றது.

**வெர்சுலேண்ட்டுக் காலம்:** நார்வேயில் கி.பி. 1814-க்குப் பின்னர்ப் புதுமலர்ச்சியும், உணர்ச்சிக் கொந்தளிப்பும் தோன்றின. சே.சு.சி. வெல்லெவனின் 'நார்வேயின் விடிவு', என்ற நூல் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தது. இக்காலக் கட்டத்தில் வெர்சுலேண்ட்டு என்னும் கவிஞர் தனித்தன்மையினாலும், கவிதைகளாலும் சமூகச் சீர்திருத்தங்களினாலும் இலக்கிய உலகில் சிறப்புற்றுத் திகழ்ந்தார். அவருடைய மிகப் பெரிய காவியமான படைப்பு 'மனிதத் தன்மை மேசியா' என்ற நூல். அதுஇளமை உணர்வு மிக்க, குறிப்பிடத்தக்க படைப்பாகும். அது கி.பி. 1830-இல் வெளியாயிற்று.

**வீரகாவியக்காலம்:** நார்வேயின் வீரகாவியக்காலமாக கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி கருதப்படுகிறது. இக்கால இலக்கியங்கள் நாட்டு உணர்வைப் பெரிதும் எதிரொலிக்கின்றன. கவிஞர்களின் பார்வை பெருமை மிக்க கடந்த காலத்தை நோக்கித் திரும்பியது. இதனை கி.பி. 1841, 1844-இல் வெளியிடப்பட்ட நார்வே நாட்டுப்புறக் கதைகளின் தொகுப்புகளில் காணலாம். நார்வே கதைப் பாடல்கள் கி.பி. 1853-இல் வெளியிடப்பட்டன. பி.ஏ.மன்சு என்பவர் நார்வே மக்களின் வரலாற்றை எட்டுத் தொகுதிகளாக வெளியிட்டு (கி.பி. 1851-63) நாட்டின் மகத்தான வரலாற்று மரபினைக் குறித்த பெருமித உணர்வை மக்கள் மனத்தில் தட்டியெழுப்பினார். இக்கால இலக்கியப் படைப்புகளில் பல, நார்வேயின் வீர, ஆற்றல்கள் நிறைந்த கடந்த காலத்தைச் சித்திரிப்பனவாகவே விளங்கின.

**சமூக காவியக்காலம்:** வெர்சுலேண்டின் சகோதரியான கேமில்லா கொல்லெட்டு கி.பி. 1855-இல் 'கவர்னரின் மக்கள்' என்ற புதினத்தை வெளியிட்டார். இது சமூகத்தில் பெண்களின் நிலை குறித்து விவரிக்கும் நூல். நார்வீய இலக்கியத்தில் சமூக உணர்வுகளை எதிரொலிக்கும் இலக்கியப் படைப்புகளின் தொடக்கமாக இதனைக் கருதலாம்.

இப்சன், பியர்சன், சோனாசு லீ, அலெக்சாண்டர் கில்லண்ட்டு ஆகிய நால்வரும் நார்வே இலக்கியத்தின் நான்கு தூண்களாகக் கருதப்படுபவர்கள். இவர்கள் இலக்கியப் படைப்புகளை கி.பி. 1879-இலிருந்து கி.பி. 1884 வரையிலான காலப்பகுதியில் வெளியிடுவதில் ஓர் அரிய சாதனையை நிகழ்த்தினர். ஆமலீ சுகரம், ஆமெ கர்போர்க்கு ஆகிய இருவரும் இக்காலத்தைச் சேர்ந்த மற்றும் இரு புகழ்பெற்ற எழுத்தாளர்கள் ஆவர். சமூக சீர்திருத்த நோக்கில் தோன்றியவை கி.பி. 1870-களில் தோன்றிய இலக்கியங்கள் ஆகும்.

**புதிய தனிமனிதத்துவ காலம்:** சமூகச் சிக்கல்களை அடிப்படையாகக் கொண்ட இலக்கியங்களில் கி.பி. 1890-களில் மாறுதல் தோன்றியது.இளம் நார்வீய எழுத்தாளர்களின் புதிய தலைமுறை புகழ்பெற்ற பழைய தலைமுறையைப் புறக்கணித்து எழுந்தது. புதிய தலைமுறை தனிமனித வாழ்க்கையைச் சித்திரிப்பதைக் குறிக்கோளாகக் கொண்டது. ஆம்சன் என்னும் எழுத்தாளரின் புதினங்கள் இப்புதிய தலைமுறையின் கொள்கைகளை எதிரொலிப்பன. அவர் கி.பி. 1820-இல் இலக்கியத்திற்கான நோபெல் பரிசைப் பெற்றார். அவருடைய இருபது புதினங்கள் ஆங்கில மொழியில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன.

இக்காலக்கட்டத்தில் கவிதைகளும் புதிய மலர்ச்சி பெற்றுத் தழைத்தன. சிக்பியர்ன் ஆப்சட்டு வெல்டர் (கி.பி. 1866-1900) என்பவர் இக்காலப் புகழ்பெற்ற கவிஞர். குன்னர் ஐபெர்க்கு (கி.பி. 1857-1929) என்பவரின் நாடகங்களின் மூலம் நாடக இலக்கியம் புத்துயிர் பெற்றது. ஆன்சு கின்க்கு(கி.பி. 1865-1926)என்பவர் இக்காலத்தில் மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்கிய மற்றொரு எழுத்தாளர் ஆவார்.

**இருபதாம் நூற்றாண்டு:** இக்காலத்தில் கிளைமொழி இலக்கியங்கள் மிகுதியாகத் தோன்றத் தொடங்கின. தொழிற்புரட்சியின் விளைவாக நார்

வியச் சமூகத்தில் தோன்றிய சிக்கல்களை அவை கரு வாகக் கொண்டிருந்தன. ஆசுகார் பிராட்டன் (கி.பி. 1881-1939), சோகன் பாக்பெர்கெட்டு (கி.பி. 1879-1967) ஆகியோர் இக்காலத்தின் தலைசிறந்த எழுத்தாளர்கள் ஆவர்.

இலக்கியத்திற்கான நோபெல் பரிசை கி.பி. 1929 -இல் பெற்ற சிக்ரிட்டு ஆண்ட்டுசெட்டு, ஏலாவ்துன் ஆகிய இருவரும் புகழ்பெற்ற எழுத்தாளர்களாவர். சிக்ரிட்டு ஆண்ட்டுசெட்டின் புதினங்கள் சமூகத்தில் பெண்களின் நிலையைச் சித்திரிப்பவை.

முதல் உலகப்போருக்குப் பின்னர் மிகுதியான கவிஞர்கள் தோன்றினர். எர்மன் வைல்டென்வி, ஒலாவ் புல், ஒலாவ் அக்ரெசுடு ஆர்நல் ஓவர்லேண்டு ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். சிகர்ட்டு ஓயல் என்னும் புதின எழுத்தாளர், எல்க்கு குரோக்கு என்னும் நாடக எழுத்தாளர், நார்டால் கிர்க்கு என்னும் எழுத்தாளர் ஆகியோரும் இக்காலத்தில் குறிப்பிடத்தக்கவர்கள்.

நார்வீய எழுத்துலகம் 1940 க்குப் பின்னர்ப் புதிய திடத்துடன் வளரத் தலைப்பட்டது. தார்செய் வெசுசாத என்னும் எழுத்தாளர் பல புதினங்களை எழுதிக் குவித்தார். பாரா சான்டெல், அக்செல் சான்டெமோசு, சோகன் போர்கன் ஆகியோர் இக்காலத்தின் புகழ்பெற்ற எழுத்தாளர்கள் ஆவர். இவர்களின் தலைமையில் நார்வீய இலக்கியம் மேலும் மேலும் ஒளிவீசித் திகழலாயிற்று. எம்.சு.

**துணை நூல்:**

**அகத்தியலிங்கம் ச.,** உலகமொழிகள்-முதல் பகுதி, அண்ணாமலை நகர், 1968.

**நார்வே:** ஐரோப்பாவின் வடமேற்கில் அமைந்துள்ள இசுகாண்டிநேவியமுந்நீரகத்தின் (Scaudinavian Peninsula) மேற்கு, வடக்குப் பகுதியில் நார்வே (Norway) நாடு இருக்கின்றது. இது சோவியத்து நாடு நீங்கலாக, ஐரோப்பாவின் ஐந்தாம் பெரிய நாடாகும். மக்கள்தொகை நெருக்கம் மிகவும் குறைந்த இந்நாட்டில், வாழ்க்கைத் தரம் மிகவும் உயர்ந்துள்ளது. இங்குக் கோடைக்காலத்தில் ஆண்டுதோறும் 10 வாரத்திற்கு இரவு, பகல் முழுவதும் சூரிய ஒளி வீசிக்கொண்டேயிருப்பதால் இதற்கு 'நள்ளிரவு சூரிய நாடு' (Land of the Midnight Sun) என்று பெயர். இதன் தலைநகர் ஆசுலோ (Oslo) வாகும். இந்நாட்டுடன் ஆர்ட்டிக்குப் பெருங்கடலில் உள்ள தீவுக்கூட்டமான சுவல்பார்டு (Svalbard), ஐசுலாந்திற்கு வடக்கிலுள்ள எரிமலைத் தீவான சன் மெயின் (Jan Mayen), தெற்கு அட்லாண்டிக்குப் பெருங்கடலில் உள்ள மக்களற்ற புவது தீவு (Bouvet Island) ஆகியவை சேரும்.

மேலும் இந்நாடு, அண்டார்டிகாவின் அருகிலுள்ளமுதலாம்பீட்டர் தீவு, அண்டார்டிகா கண்டத்தின் ஒரு பகுதி ஆகியவற்றின் மீதும் உரிமை கொண்டாடுகிறது.




நார்வே (அமைவிடம்)

**புவியியல் அமைப்பு: தட்பவெப்பம்:** இந்நாட்டின் தட்பவெப்ப நிலை, குறிப்பாக மேற்குக் கடற்கரையில், மற்ற நாடுகளை நோக்க மிதமாகவே உள்ளது. எடுத்துக்காட்டாக, இலாபோதன் தீவுகளில் (Lofoten Islands) சனவரி மாத வெப்பநிலையானது அதே கோட்டிலுள்ள பிற இடங்களில் நிலவும் உலக சராசரியை விட 25°C (45°F) அதிகம். எனவே, கடற்கரையில் விழும் பனி உருகிவிடுகிறது. இப்பகுதியில் ஆண்டில் குறைந்தது மூன்று மாதங்களுக்குத் தரை பனியால் மூடப்பட்டிருக்கும். கோடைக்கால உள்நாட்டுப் பகுதியைவிடக் கடற்கரைப் பகுதி குளிர்ந்த மேலைக் காற்று வீசுவதால் குளிர்ச்சியாக உள்ளது. கடற்கரைப் பகுதியைவிட உள்நாட்டுப் பகுதியில் மழை குறைவு.

**இயற்கை அமைப்பு:** இந்நாட்டின் பெரும்பகுதி மிக உயர்ந்த, மலைகள் நிறைந்த மேட்டு நிலப்பகுதியாகும். இதன் சராசரி உயரம் கடல் மட்டத்திலிருந்து 457 மீ. இதன் ஐந்தில் ஒரு பகுதி மட்டும் இரு முக்கிய தாழ் நிலப்பகுதிகள் உட்பட, 150 மீ. உயரத்தில் உள்ளது. இயற்கை அமைப்பின்படி இதனை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

**மலைகள் நிறைந்த உயர்நிலப்பகுதி:** பண்டைக் காலத்தில்பனிப்பாறைகள் ஓடியதால் இங்குள்ள மலைகள்மொட்டையாக, உருண்டையாக, வழுவழுப்பாக உள்ளன. அவை பல ஏரிகளையும், பள்ளத்தாக்குகளையும் உண்டாக்கி உள்ளன. இங்குள்ள கார்தஞ்சர் மேட்டுநிலம் (Hardanger Plateau) 11,700

ச.கி.மீ. பரப்பளவுள்ளது. இது ஐரோப்பாவிலேயே பெரிய மேட்டுநிலமாகும். இங்கு 1980 மீ. உயரத்திற்குமேலுள்ள பகுதிகளில் 3110 ச.கி.மீ. பரப்பளவுள்ள நிலம் நிலையாகவே பனியால் மூடப்பட்டுள்ளது.

இதன் தெற்கிலுள்ள அகன்ற நிலப்பகுதியில் உயர்ந்த மலைகள் உள்ளன. தோவர் மலைகள் (The Dovre Mountains) கிழக்கு மேற்காக அமைந்துள்ளன. தெற்கில் இலாங்கு மலைகள் (Long Mountains) இருக்கின்றன. இதிலுள்ள மலைத்தொடரில் நார்வேயின் உயர்ந்த மலை உள்ளது. வட ஐரோப்பாவிலேயே மிக உயர்ந்த மலையான கிளிட்டர்டின்டன் (Glittertinden) (உயரம் 2470 மீ.) இங்கு உள்ளது.

**தென்கிழக்குத் தாழ்நிலங்கள்:** இப்பகுதியில் ஆறுகள் பல ஓடுகின்றன. அவற்றுள் முக்கியமானது 612 கி.மீ. நீளமுள்ள கிளாமா ஆறாகும். இங்குப் பல குறுகலான ஏரிகளும் அமைந்துள்ளன. இம்மலைச்சரிவுகள் சீராக அமைந்துள்ளதால் வேளாண்மைக்கும், மரங்கள் வளர்க்கவும் ஏற்றதாக உள்ளன. இப்பகுதியில் தான் மக்கள் நெருக்கம் அதிகம். இந்நாட்டின் தலைநகரான ஆசுலோ இங்கு அமைந்துள்ளது.

இப்பகுதியில் அமைந்துள்ள துரன்தீம் தாழ்நிலங்களில் பல அகன்ற, ஆழமற்ற பள்ளத்தாக்குகள் உள்ளன. அவை வேளாண்மைக்கு ஏற்றதாக இருக்கின்றன. நார்வேயின் பிற பகுதிகளுக்கும், சுவீடனுக்கும் செல்லும் இருப்புப்பாதைகள் இங்கு அமைந்துள்ளன.

**கடற்கரையும் தீவுகளும்:** பாறைகள் நிறைந்த இக்கடற்கரையில் பல இடங்களில் கடல்நீர் உள்நாட்டிற்குள் சென்றுள்ளது (Fiord or Fjord)., அவற்றுள் பெரியதான 'சாங்னீ' (Songne Fiord) யின் நீளம் 160 கி.மீ. இதன் கடற்கரை 2655 கி.மீ. நீளமுள்ளது. ஆனால், இங்குள்ள கடல் உள்ளே சென்றுள்ள பகுதி (Fiords), தீவக்குறைவங்கள் ஆகியவற்றையும் கணக்கில் எடுத்துக் கொண்டால் கடற்கரை 20,120 கி.மீ. நீளம் இருக்கின்றது. இக்கடற்கரையை ஒட்டி 150,000 தீவுகள் உள்ளன. இத்தீவுகளில் பெரியவை இலாபோதன் (Lofoten) தீவுகளாகும். நீண்ட கடற்கரை உள்ளதால் இந்நாட்டில் கப்பல் கட்டுதலும் மீன்பிடித்தலும் முக்கியத் தொழில்களாகும்.

**பரப்பளவு:** இந்நாட்டின் பரப்பளவு 323,877 ச.கி.மீ. ஆகும். சுவல்பார்டு (Svalbard), சன்மெயின் (Jan. Mayen) ஆகியவற்றின் பரப்பளவு, 63,080 ச.கி.மீ.

**எல்லைகள்:** இந்நாட்டின் வடக்கில் பாரன்சு கடலும் (Barents Sea), வடகிழக்கில் பின்லாந்தும் சோவியத்து உருசியாவும், தெற்கில் வடகடலும் (North Sea) சாகெர்க்கும் (Skagerrak), கிழக்கில் சுவீடனும் மேற்கில் அட்லாண்டிக்குப் பெருங்கடலும் எல்லைகளாம்.

**மக்கள்தொகை:** இந்நாட்டின் மக்கள்தொகை 1985 சனவரி 1-இல் 4,145,845. இந்நாட்டு மக்கள் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள். வடக்கு நார்வேயில் மட்டும் சில ஆயிரம் இலாப்புகளும் (Lapps), பின்லாந்தியர் வழிவந்தோரும் (Finnish) உள்ளனர். இந்நாட்டில் ஒரு ச.கி.மீ.க்கு 13 பேர் வாழ்வதால் ஐரோப்பாக் கண்டத்திலேயே மக்கள் நெருக்கம் குறைந்த நாடாகும். மக்கள் பிறப்பு விகிதமும் மிகக் குறைவாகையால் இவர்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்துள்ளது. இவர்களின் வாழ்நாளும் அதிகமாகும். மக்கள்தொகையில் பாதிப்பேர் தென்கிழக்குப் பகுதியில் வாழ்கின்றனர். நான்கில் மூன்று பங்கினர் கடற்கரையிலிருந்து 16 கி.மீ. தொலைவிற்குள்ளேயே வசிக்கின்றனர். இந்நாட்டு மக்களில் 70 விழுக்காட்டினர் நகரங்களில் வாழ்கின்றனர்.

**சமயம்:** இந்நாட்டு அரசியல் அமைப்பின்படி உலூதரன் திருச்சபை (Evangelical Luthern Church) இந்நாட்டின் சமயமாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. எனினும், இங்கு முழு சமய சுதந்திரம் உண்டு. இந்நாட்டு மக்களில் 98 விழுக்காட்டினர் இதனைப் பின்பற்றுகின்றனர். பிற கிறித்தவப் பிரிவுகளைச் சேர்ந்த 140,202 பேர்கள் 'பேப்டிசுடு' (Baptist), சுதந்திர உலூதரன் '(FreeLutheran)', 'மெதாடிசுட்டு' (Methodist), 'பெந்தகொசுதே' (Pentecoastal) உரோமன் கத்தோலிக்கத்திருச்சபைகளைப் பின்பற்றினர். உலூதரன், திருச்சபையானது அரசாங்கக் கட்டுப்பாட்டின் கீழ் உள்ளது.

**வேளாண்மை:** இந்நாடு முழுவதும், சுவல்பார்டு சன் மெயின் உட்பட, மொட்டையான மலைகள் நிறைந்த பகுதி. இங்குள்ள நிலப் பகுதியில் 79.3 விழுக்காடு பயனற்ற நிலமாகும். 18 விழுக்காடு காடுகள் போக மீதமுள்ள 2.7 விழுக்காடு நிலப்பகுதியே வேளாண்மைக்கு ஏற்றதாக உள்ளது. உள்நாட்டிலுள்ள பள்ளத்தாக்குகளிலும், கடற்கரைப் பகுதியிலும் உள்ள குறுகலான சிறு சிறு இடங்களிலேயே வேளாண்மை நடைபெறுவதால் பெரும் பண்ணைகள் இவில்லை. 90 விழுக்காடு நிலங்கள் 10 எக்டர் அளவிற்குக் குறைந்தவையே. இந்நாட்டின் முக்கிய விளைபொருள்கள் கோதுமை, பார்லி, ஓட்சு, உருளைக் கிழங்கு, பழங்கள், காய்கறிகள் ஆகியனவாம்.

பால் பண்ணையும், கால்நடை வளர்த்தலும், இங்கு முக்கிய தொழில்களாகும். அவை இம்மக்களுக்கு மூன்றில் இரண்டுமடங்கு வருமானத்தைக்

கொடுக்கின்றன. கால்நடைகளுக்குத் தேவையான பயிர்களையும் விளைவிக்கின்றனர்.

பல நூற்றாண்டுகளாகக் காடுகளைச் சார்ந்த தொழில்கள் இந்நாட்டில் சிறந்து உள்ளன. காடுகளின் பரப்பளவு 66,600 ச.கி.மீ. அதில் 81 விழுக்காடு ஊசியிலைக் காடுகள், மீதி 19 விழுக்காடு அகன்ற இலைக்காடுகள். மரம் வெட்டுதல், மரக்கூழ், காகிதம் செய்தல் ஆகியவை முக்கிய தொழில்கள்.

உலகில் மீன்பிடிப்பதில் குறிப்பிடத்தக்க நாடுகளில் நார்வேயும் ஒன்றாகும். இங்குப் பல வகை மீன்கள் கிடைக்கின்றன. அவை பக்குவப் படுத்தப்பட்டு வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. 1984-இல் இந்நாட்டில் 29[illegible] மீன்பிடிப்பவர்களும் 25,564 மோட்டார் படகுகளும் இருந்தன.

**கனிமங்கள்:** இது கனிமங்கள் நிறைந்த நாடு அன்று. 1966-இல் இங்கு மண்ணெண்ணெய் எடுக்கத் தொடங்கியதிலிருந்து எண்ணெயும் எரிவாயும் கிடைக்கின்றன. இந்நாடு 1984-இல் தன் தேவையைப்போல் 6 மடங்கு பெட்ரோலியத்தை உற்பத்தி செய்தது. இங்கு இரும்புத்தாது, ஈயம், துத்தநாகம், தாமிரம், நிக்கல், அலுமினியம் ஆகியவை கிடைக்கின்றன. சுவல்பர்ட்டுத் தீவுகளில் மட்டும் நிலக்கரி உள்ளது. எனவே, இங்குத் தன்னுடைய தேவைக்கு நிலக்கரியை இறக்குமதி செய்யவேண்டியுள்ளது. மின்சார உற்பத்தியில் உலகில் 7ஆம் இடத்தை இந்நாடு பெற்றுள்ளது.

**தொழிற்சாலைகள்:** இந்நாட்டில் 1900 வரை தொழிற்சாலைகள் வளரவில்லை. ஏனெனில், இங்கு நிலக்கரி அதிகம் இல்லாததால் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியிருந்தது. எனவே உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் விலை அதிகமாகவிருந்தது. நீர் மின்சக்தி நிலையங்கள் ஏற்படுத்தப்பட்ட பின்னரே தொழிற்சாலைகள் பெருக ஆரம்பித்தன. இந்நாட்டிலுள்ள தொழிற்சாலைகளில் பாதிக்குமேல் ஆசுலோவில் அமைந்துள்ளன. வேதியல் பொருள்கள், அலுமினியம், மக்னீசியம் போன்ற உலோகங்கள், பக்குவப்படுத்தப்பட்ட உணவுப் பொருள்கள், மரக்கூழ், காகிதம் ஆகியவை தயாரிக்கப்படுகின்றன. உலகில் அதிக அலுமினியத்தை உற்பத்தி செய்யும் நாடுகளில் இது ஒன்றாகும். அதற்குத் தேவையான பாக்சைட்டு இங்குக் கிடைக்கிறது. மேலும், துணிகள், மின் கருவிகள், அறைகலன்கள், சிறிய கப்பல்கள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன.

**அயல்நாட்டு வாணிகம்:** இந்நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்திருப்பதற்கு அவர்களுடைய அயல்நாட்டு வாணிகமே காரணமாகும். இந்நாட்டுக் கப்பல்களை உலகம் முழுவதிலும் காணலாம். கப்பல் போக்குவரத்தில் இது உலகில் நான்காம் இடத்தைப் பெற்று, அதனால் அதிக வருவாயை ஈட்டுகின்றது. இந்நாட்டுடன் வாணிகத்தில் ஈடுபட்டுள்ள முக்கிய நாடுகள் இங்கிலாந்து, சுவீடன், மேற்குச்செருமனி. இங்கிலாந்து மட்டும் ஏற்றுமதியில் ஐந்தில் இரண்டு பங்கைப் பெற்றுக் கொள்கிறது. இந்நாட்டுடன் வாணிகத் தொடர்புள்ள பிற நாடுகள் தென்மார்க்கு, பின்லாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகியவை.

**ஏற்றுமதி:** பெட்ரோலியம், இயற்கைவாயு, கப்பல்கள், அலுமினியம் மீன், வேதியல் பொருள்கள், இயந்திரங்கள், போக்குவரத்துச் சாதனங்கள், உலோகங்கள், உணவு வகைகள், மரம், காகிதக்கூழ் ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

**இறக்குமதி:** இயந்திரங்கள், போக்குவரத்துக் கருவிகள், துணிகள், உணவு வகைகள், உற்பத்தி செய்யப்பட்ட சில பொருள்கள் இந்நாட்டில் இறக்குமதி செய்யப்படுகின்றன.

**போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்:** இந்நாட்டில் காடுகளும் மலைகளும் அதிகமுள்ளதால் சாலை, புகைவண்டிப் போக்குவரத்துக் குறைவு. நீண்ட கடற்கரையும் தீவுகளும் உள்ளதால் கப்பல் போக்குவரத்து அதிகம்.

**சாலைகள்:** சாலைகள் 1984 திசம்பர் 31-இல் 84,563 கி.மீ. ஆகும்.

**புகைவண்டிகள்:** அரசு நிருவாகத்தில் 1984திசம்பர் 31-இல் 4242 கிலோ மீட்டர் நீளமும், தனியார் துறையில் 16கி.மீ. நீளமும் இருப்புப்பாதைகள் இருந்தன. அவற்றுள் முறையே 2443கி.மீ.நீளமும்16 கி.மீ. நீளமும் இருப்புப் பாதைகள் இருந்தன

**விமானங்கள்:** இந்நாட்டில் விமானப் போக்குவரத்தை இசுகாண்டிநேவியன் விமான நிறுவனம் (Scandinavian Airlines System-SAS)நடத்துகின்றது. இதில் தென்மார்க்கு, நார்வே ஒவ்வொன்றும் ஏழில் இரு பங்குகளைப் பெற்றுள்ளது. சுவீடன் மீதமுள்ள ஏழில் மூன்று பங்குகளையும் பெற்றுள்ளது.

**செய்தித் தொடர்பு:** இந்நாட்டில் 1984 திசம்பர் 1-இல் தொலைபேசிகள் 2,578,812 இருந்தன. மக்கள் தொகையில் 62 விழுக்காட்டினர் தொலைபேசி பெற்றிருந்தனர். வானொலி அரசின் கட்டுப்பாட்டில் இருந்தாலும், அரசு தலையீடு இன்றிச் சுதந்திரமாகப் பணிபுரிகின்றது. வானொலிப்பெட்டிகள் 1980-இல் 1.3 மிலியனும், 1.3 மிலியன் தொலைக்காட்சிப்

பெட்டிகளும் இருந்தன. இங்கு 1983-இல் 143, 388 இருக்கைகளைக் கொண்டு 467 திரைப்பட அரங்குகள் இருந்தன. நாளேடுகள் 64, மொத்தம் 1,882,000 பிரதிகளை 1984-இல் வெளியிட்டன.

**கல்வி:** இந்நாட்டில் எழுத்தறிவின்மை என்பது இல்லை. உலகில் முதன்முதலில் கல்வி அறிவின்மையைப் போக்கிய நாடுகளில் இது ஒன்றாகும். கல்வி நிலையங்கள் அரசாங்கத்தால் நடத்தப்பட்டு, எல்லாக் கட்டங்களிலும் இலவசமாக மக்களுக்கு அளிக்கப்படுகிறது. குழந்தைகளுக்கு 7 வயது முதல் 16 வயது வரை உயர்நிலைப் பள்ளிக் கல்வி அளிக்கப்படுகிறது. பின்னர் 3 ஆண்டுகளுக்கு மேல்நிலைக கல்வி, தொழில், தொழில்நுணுக்க, வாணிகப் பள்ளிக் கல்வி ஆகியவை வழங்கப்படுகின்றன.

இங்கு ஆசுலோ பல்கலைக்கழகம், தூரன்தீம் பல்கலைக் கழகம் போன்ற பல்கலைக் கழகங்களும், தொழில் நுணுக்கக் கல்லூரிகளும், கலை, அறிவியல் கல்லூரிகளும் கல்விப்பணி ஆற்றி வருகின்றன.

**நகரங்கள்: ஆசுலோ:** நார்வேயின் தலைநகரான ஆசுலோ (Oslo) சிறந்த துறைமுகமாகவும், தொழில், வாணிகப் பண்பாட்டு மையமாகவும், அழகிய நகரமாகவும் அமைந்துள்ளது. இதன் பரப்பளவு 454 ச. கி.மீ. மக்கள்தொகை 447,351 (1985). இந்நகரில் உலூதரன் திருச்சபை நாடாளுமன்றம், தேசிய அரங்கம், தேசிய கலைக்கூடம்(National Gallery of Arts), வரலாற்று அரும்பொருள்காட்சியகம், பல்கலைக் கழகத்தின் பழைய கட்டடங்கள், பல அரும்பொருட் காட்சியகங்கள், அரசு அலுவலகக் கட்டடங்கள், உச்ச நீதி மன்றம் ஆகியவை உள்ளன. புதிய பல்கலைக் கழகம் நகரத்திற்கு வெளியே அமைக்கப்பட்டுள்ளது.

**பெர்கன்:** மேற்குக் கடற்கரையில், ஆசுலோவிலிருந்து 300 கி.மீ. தொலைவில் பெர்கன் (Bergen) நகரம் அமைந்துள்ளது. 1000 ஆண்டுகளாக இது இந்நாட்டின் வாணிக மையமாக இருந்து வருகின்றது. ஏழு பனிமூடிய மலைகளால் சூழப்பட்டுள்ள இந்நகர் மிகவும் அழகாகக் காட்சியளிக்கின்றது. இங்கு இரண்டாம் பெரிய பல்கலைக் கழகமும், வாணிக நிருவாகக் கல்லூரியும், உலகிலேயே முக்கியமான கடல் ஆராய்ச்சி மையமும் (Oceanographic Research centre) உள்ளன.

**தூரன்தீம்:** மத்திய நார்வேயில் பெரிய நகரமாகவும், சிறந்த துறைமுகமாகவும், முக்கிய வாணிக மையமாகவும் துரன்தீம் (Trondheim) உள்ளது. இடைக்காலத்தில் இது இந்நாட்டின் சிறந்த சமய மையமாக் விளங்கிற்று. இசுகாண்டிநேவியாவில் கோதிக்கு (Gothic) முறையில் கட்டப்பட்ட மிக அழகிய நிடாரசு தேவாலயம் (Nidaros Cathedral) இங்கு உள்ளது. கி.பி.1380 வரை நார்வேயின் தலைநகரமாகத் திகழ்ந்த இது கி.பி. 997-இல் நிடாரசு (Nidaros) எனப் பெயரிடப்பட்டது. இங்கு ஒரு பல்கலைக் கழகமும், தொழில் நுணுக்கக் கல்லூரியும் இருக்கின்றன.

**சுடேவஞ்சர்:** நார்வேயின் தென்மேற்குப் பகுதியில் உள்ள சுடேவஞ்சர்(Stavanger)இந்நாட்டின் முக்கியத் துறைமுகமாகவும் தொழில் மையமாகவும் இருக்கின்றது. கி.பி. 8-ஆம்நூற்றாண்டில் நிறுவப்பட்ட இந்நகரில் பழைய, புதிய கட்டடங்கள் பல உள்ளன.

**அரசு:** அரசியலமைப்புக்குட்பட்ட பரம்பரையான முடியாட்சி இங்கு நடைபெறுகின்றது. கி.பி. 1814 மே 17-இல் இயற்றப்பட்ட அரசியல் அமைப்பு, அவ்வப்போது செய்யப்பட்ட பல மாறுதல்களுடன், பின்பற்றப்படுகிறது. இது, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியல் அமைப்பைப் போல், அரசை நிருவாகம், சட்டம், நீதி என்ற மூன்று துறைகளாகப் பிரிக்கின்றது.

**அரசர்:** இந்நாட்டில் அரசுரிமை பரம்பரையாக உள்ளது. அரசர் ஒருவர் இறந்துவிட்டால் அவருடைய மூத்தமகன் அரசுகட்டில் ஏற வேண்டும். அவருக்கு வாரிசு இல்லையெனில் அவர், பாராளுமன்ற அனுமதியுடன், ஒரு வாரிசை நியமிக்கலாம். அதைப் பாராளுமன்றம் ஏற்றுக் கொள்ளாது வேறு ஒருவரையும் நியமிக்கலாம். அரசர் நாட்டின் சமயத் தலைவரும், முப்படைகளின் தலைவரும் ஆவார். அரசி எவரும் அந்நாட்டின் தலைவராக ஆக முடியாது. பாராளுமன்றத்தில் பெரும்பான்மை இடங்களைப் பெற்றுள்ள கட்சியின் தலைவரை அரசர் முதலமைச்சராக நியமிக்க வேண்டும். பிற அரசு அலுவலர்கள், நீதிபதிகள், மாவட்டங்களுக்கான ஆளுநர்கள் உட்பட அனைவரையும் அரசர் அமைச்சரவையின் அறிவுரைப்படி நியமிக்க வேண்டும். அவர்கள் 70 வயது வரை பணிபுரியலாம். எனினும், அமைச்சரவையின் அறிவுரையின் பேரில், அரசர் அவர்களைப் பதவியிலிருந்து நீக்கலாம்.

**அமைச்சரவை:** முதலமைச்சர் நிருவாகத்திற்காக ஓர் அமைச்சரவையை (Council of State) ஏற்படுத்த வேண்டும். அதில் முதலமைச்சர் உட்பட, 15 உறுப்பினர்கள் இருக்க வேண்டும். பாராளுமன்றம் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை நிறைவேற்றினால் அவர்கள் பதவிவிலக வேண்டும். இந்நாட்டு அமைச்சரவை இந்தியா, இங்கிலாந்து, கனடா ஆகியவற்றிலுள்ள அமைச்சரவையிலிருந்து வேறுபடுகிறது. அந்நாடுகளில் அமைச்சர்கள் பாராளுமன்றத்திலும் உறுப்பினராக இருக்கவேண்டும். ஆனால், நார்வேயில் அவர்கள் அவ்வாறு இருக்கமுடியாது. அவர்கள் பாராளுமன்றக்

கூட்டங்களிலும், விவாதங்களிலும் கலந்து கொள்ள லாம் என்றாலும் அவர்களுக்கு வாக்களிக்கும் உரிமை கிடையாது.

**நாடாளுமன்றம்** இசுடார்டிங்கு (Storting) எனப் படும் இந்நாட்டு நாடாளுமன்றத்திற்கு 150 உறுப் பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அவர்கள் இந் நாட்டிலுள்ள 20 மாவட்டங்களிலிருந்து, அதனதன் மக்கள்தொகைக்கு ஏற்ப 4 முதல் 13 உறுப்பினர்கள் வரை தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பாராளுமன்றத் திற்கு ஓர் அவை மட்டுமே உண்டு என்றாலும், மசோதாக்களின் மீது விவாதங்கள் நடத்தி, வாக் களிக்க அது இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இலேக்டிங்கு(Lagting) எனப்படும் மேல் அவையில் 38 உறுப்பினர்களும், ஓடல்சுடிங்கு (Odelsting) என்னும் கீழ்அவையில் 112 உறுப்பினர்களும் இருக்கவேண்டும். இம்மூன்று அவைகளுக்கும் தனித்தனித் தலைவர்கள் இருப்பர்.

**வரலாறு:** இன்று நார்வே என்று கூறப்படும் நிலப்பகுதியில் 14,000 ஆண்டுகளுக்கு முன்னரே மக் கள் வாழத் தொடங்கினர். இப்பகுதி முழுதும் பனி யால் மூடப்பட்டு, அது உருகுவதற்குப் பல ஆயிரக் கணக்கான ஆண்டுகள் ஆயின. கி.மு. 2000-இல் செருமானியக் குடும்பினர் பலர் இப்பகுதியில் குடியேறி, பெரிய ஏரிகளின் கரைகளிலும், கடற்கரை யிலும் நிலையாக வாழத் தொடங்கினர். அவர்கள் பேசிய செருமானிய மொழி இசுகாண்டி நேவியால் பேசப்படும் மொழிகளின் தாய்மொழியாக ஆனது. அவர்கள் பல கூட்டங்களாக அடுத்தடுத்துத் தங்களு டைய தலைவன் அல்லது அரசனின் கீழ் வந்து குடி யேறினர். கி.பி.8-ஆம் நூற்றாண்டில் இங்கு 29 சிற்றரசுகள் இருந்தன.

**வைக்கிங்குகளின் காலம்:** இப்பகுதியில் வாழ்ந்து வந்த வைக்கிங்குகள் (Vikings) 300 ஆண்டுக் காலம் மேற்கு ஐரோப்பாவில் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். அவர்கள் கப்பல்களைக் கட்டிக் கொண்டு வாணி கத்திலும் கடற்கொள்ளையிலும் குடியேற்றங்களை அமைப்பதிலும் ஈடுபட்டனர். பல கடற்கரைப் பட்ட ணங்களைத் தாக்கிக் கொள்ளையடித்துப் பெருஞ் செல்வத்தைக் கொண்டு வந்ததுடன், அம்மக்களை அடிமைகளாகவும்ஆக்கினர்அவர்கள்வடக்குஅட்லாண் டிக்குத் தீவுகளில் குடியேறினர்; கி.பி.9-ஆம் நூற் றாண்டில் இங்கிலாந்திலும் அயர்லாந்திலும் குடி யேறினர்; எரிக்கு (Eric, The Red) தலைமையில் 985-இல் கிரீன்லாந்து சென்று அங்கு வாழத் தொடங்கினர்; பிரான்சில் குடியேறி நார்மண்டியி லுள்ள நார்மானியரின் மூதாதையர் ஆயினர். அவரு டைய மகனான இலாயிப்பு எரிக்சன் (Leif Ericson) ஏறத்தாழ கி.பி. 1000-இல் அமெரிக்காவிற்குமுதலாம் பயணத்தைத் தொடங்கி வைத்தார். இவ்வாறு வைகிங்குகள் நார்வேயிலிருந்து பல நாடுகளிலும் குடியேறித் தங்களுடைய ஆதிக்கத்தை ஏற்படுத்தி னர்.

இந்நாட்டின் முதலாம் அரசனான முதலாம் கெரால்டு (Harold or Harald I, Called Fairhaired) கி.பி.900 -இல் பல சிற்றரசர்களையும் தலைவர் களையும் வென்று இந்நாட்டை ஒருங்கிணைத்தார். அது சிறிது காலத்திற்கே நீடித்தது. அவர் கி.பி. 933-இல்மரணமடைந்ததும் அவருடையமக்களால் நாடு பிரித்துக்கொள்ளப்பட்டது. இந்நாட்டு அரசனான முதலாம்ஆலாப்பு(Alafoolav I)990-இல் இந்நாட்டில் கிறித்தவ சமயத்தைப் பரப்பினார். அவர் இங்கிலாந் திலிருந்த பொழுது கிறித்தவராக மாற்றப்பட்டிருந் தார். பின்னர் ஆட்சிக்கு வந்த இரண்டாம் ஆலாப்பு கி.பி. 1015-இல் அந்நியரை நாட்டைவிட்டு விரட்டி நாடுமுழுவதும் ஒன்று சேர்த்துக் கிறித்தவசமயத்தை வலிமைபெறச் செய்தார். எனவே, அவர் கி.பி.1031-இல் அந்நாட்டின் புனிதராக (Patron Saint) அறிவிக்கப் பட்டார். அப்பொழுது திருச்சபையின் ஆதிக்கம் பெருகி, அயல்நாட்டு வாணிகம் வளர்ந்தது. நகரங் கள் பல தோன்றின. பின்னர் அரியணைக்குப் பல தலைவர்கள் போட்டியிட்டதால் கி.பி.1130 முதல் 1240 வரை பல உள்நாட்டுப் போர்கள் ஏற்பட்டுக் குழப்பமே நிலவியது. இறுதியில் அரசர் நான்காம் காக்கனால் (Haakon IV) அமைதி ஏற்படுத்தப் பட்டது.

**தென்மார்க்கின் ஆதிக்கத்தில்:** நார்வேயின் அர சர் நான்காம் காக்கனின் மனைவி மார்கரெட்டு தென்மார்க்கு அரசரின் மகளாவார். அவ்வரசியின் தந்தை கி.பி. 1375-இல் மறைந்ததால் மார்கரெட்டு தென்மார்கில் அரசியாக அறிவிக்கப்பட்டார். நான் காம் காக்கன் கி.பி.1380-இல் மரணமடைந்ததும் மார்க்கரெட்டு நார்வேயின் அரசியானார். சுவீடன் நாட்டில் கி.பி.1388-இல் அரசியல் குழப்பம் ஏற்பட்ட பொழுது அந்நாட்டுப் பிரபுக்கள் மார்கரெட்டைத் தங்கள் நாட்டின் அரசியாகத் தேர்ந்தெடுத்தனர். எனவே, நார்வே, தென்மார்க்கு, சுவீடன் ஆகிய மூன்று நாடுகளும் கி.பி.1397 – இல் கால்மர் ஐக்கியம் (Union of Kalmar)என்னும் பெயரில் ஒருங்கிணைக்கப்பட்டுத் தென்மார்க்கின் ஆதிக்கத்தின்கீழ் வைக்கப்பட்டன. அதனை எதிர்த்துச் சுவீடன் பல கிளர்ச்சிகளில் ஈடு பட்டு இறுதியில் கி.பி. 1523-இல் அதிலிருந்து வெளி யேறியது. தென்மார்க்கின் வலிமை பெருகப் பெருக, நார்வேயின் வலிமைகுறையலாயிற்று. நார்வே கி.பி. 1536-இல் தென்மார்க்கின் ஒரு மாநிலமாக அறிவிக் கப்பட்டது.

**நார்வே-சுவீடன் ஐக்கியம்**: முதலாம் நெப்போலியன் இங்கிலாந்திற்கு எதிராகப் போர்களை நடத்திக் கொண்டிருந்தபோது கி.பி.1807-இல் தென்மார்க்கு பிரான்சுடன் நட்புக்கொண்டது. எனவே, இங்கிலாந்து நார்வேயுடன் தான் கொண்டிருந்த வாணிகத் தொடர்பை நிறுத்திக் கொண்டு, அது வேறு எந்த நாடுகளுடனும் வாணிகம் செய்ய முடியாத வகையில் முற்றுகையிட்டது. அதனால் நார்வே தென்மார்க்குடன் இரகசியமாக வாணிகத் தொடர்பு கொண்டது. இங்கிலாந்தின் நட்பு நாடான சுவீடன் கி.பி 1813-இல் தென்மார்க்கைத் தோற்கடித்தது. அதன் விளைவாக கி.பி.1814-இல் ஏற்பட்டகீல் உடன்படிக்கையின்படி (Treaty of Kiel) தென்மார்க்கிடமிருந்து நார்வேயைச் சுவீடன் பெற்றது. தென்மார்க்கு நார்வேக்குச் சொந்தமான கிரீன்லாந்து, ஐசுலாந்து, பெரோ தீவுகள் (Faeroe Islands) ஆகியவற்றை வைத்துக் கொண்டது. நார்வே இவ்வுடன்படிக்கையை ஏற்றுக் கொள்ளாதுகி.பி.1814 மே 17-ஆம் நாள் ஓர் அரசியல் அமைப்பைத் திட்டியது. சுவீடன் நார்வே மீது போர் தொடுத்து, அதனைத் தோற்கடித்தது. எனவே, நார்வேயின் நாடாளுமன்றம் கி.பி. 1814 நவம்பரில் சுவீடனின் அரசரான பதின்மூன்றாம் சார்லசை நார்வேயின் அரசராக ஏற்றுக் கொண்டது.

**விடுதலை**: நார்வே 1905 சூன் 7 - இல் சுவீடனிடமிருந்து விடுதலை பெற்றதாக அறிவித்தது, சுவீடன் அதனை 1905 செப்டம்பரில் ஏற்றுக் கொண்டது. நார்வே மக்கள் சுவீடனின் மன்னரைத் தங்கள் அரசராக ஏற்றுக் கொண்டதால் அவர் ஏழாம் காக்கன் (Kaakon VII) என்ற பட்டத்துடன் அரசரானார்.

**உலகப் போரின் பொழுது**: முதல் உலகப் போர் 1914-இல் தொடங்கிய பொழுது மூன்று இசுகாண்டிநேவியன் நாடுகளும் நடுநிலை வகிப்பதாக முடிவு செய்து ஒற்றுமையுடன் செயற்பட்டன. இவ்வொற்றுமை அப்போருக்குப் பின்னரும் நீடித்தது. முதல் உலகப் போரின் பொழுது நார்வே நட்பு நாடுகளுக்குப் பொருள்களைத் தன்னாட்டுக் கப்பல்களில் ஏற்றிச் சென்று பெரும்பொருள் பெற்றது. அந்நாட்டின் கப்பல்களில் பாதியைச் செருமானியர் மூழ்கடித்தனர். உலகப் பொருளாதார மந்தம் 1930-இல் ஏற்பட்ட பொழுது இந்நாடு பெரிதும் பாதிக்கப்பட்டது. இரண்டாம் உலகப் போர் தொடங்கியபொழுது நார்வே நடுநிலை வகிக்க முடிவு செய்தது. இங்கிலாந்தும் பிரான்சும், 1940ஏப்பிரல்8-இல்செருமானியப்போர்க்கப்பல்கள் நார்வே பகுதியைப்பயன்படுத்துவதைத் தடுக்க முடிவு செய்தன. ஆனால், அடுத்த நாளே செருமனி நார்வே மீது படையெடுத்து, அதனுடைய துறைமுகங்களையெல்லாம் ஒரே சமயத்தில் தாக்கியது. நார்வே மிக வீரத்துடன் போராடினாலும் 1940 சூன் 10-இல் சரணடைந்தது. மன்னர் ஏழாம் காக்கனும், அவருடைய அமைச்சர்களும் இங்கிலாந்திற்குச் சென்று அங்கு அரசை (exile government) ஏற்படுத்தினர். செருமானியர் அந்நாட்டில் ஒரு பொம்மை அரசை 1940-இலிருந்து 1945 வரை வைத்திருந்தனர். ஆனால், மக்கள் ஒத்துழைக்காது தொடர்ந்து போராடி வந்தனர். செருமானியப் படை வீரர்கள் 350,000 பேர் 1945 மே 8-இல் சரணடைந்ததால் சூன் 7-இல் ஏழாம் காக்கன் அந்நாட்டில் தன்னாட்சியை மீண்டும் ஏற்படுத்தினார்.

**போருக்குப் பின்னர்**: இந்நாட்டில் 1945-இல் நடைபெற்ற தேர்தலில் தொழிலாளர் கட்சி வெற்றி பெற்று ஆட்சியை அமைத்தது. இந்நாடு 1945-இல் ஐ.நா. சபையில் சேர்ந்தது. இந்நாட்டைச் சேர்ந்த திரைகேவ் லீ (Trygve Lie) அச்சபையின் முதலாம் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஏழாம் காக்கன் 1917-இல் மறைந்த பின்னர் ஐந்தாம் ஆலாப்பு (Olaf V) அரசரானார். இந்நாடு 1959-இல் வடக்கு அட்லாண்டிக்கு ஒப்பந்த நிறுவனத்தில் உறுப்பினராகச் சேர்ந்தது.

இந்நாடு 1960-இல் ஐரோப்பியத் தடையற்ற வணிக சங்கத்தை (European Free Trade Association) ஏற்படுத்தியது. ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகத்தில் (European Economic Community) இன்றைய ஐரோப்பிய சமூகத்தில் சேர 1967-இல் விண்ணப்பம் செய்து 1972-இல் சேர்த்துக்கொள்ளப்பட்டது. இந்நாட்டில் 1960-இல் எண்ணெய், எரிவாயு கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து இதன் பொருளாதாரம் வேகமாக வளரத் தொடங்கியது. ஏற்றுமதிப் பொருள்களின் மதிப்பில் 30 விழுக்காடு (1980-இல்) இப்பொருள்களாகும். சமஉடைமை அல்லாத கட்சிகள் 1981 செப்டம்பர் தேர்தலில் வெற்றி பெற்றுக் கூட்டு அமைச்சரவையை ஏற்படுத்தின. சி.இரெ.

**துணை நூல்கள்:**

**Land and Peoples**, Grolier Inc., New York, 1976.

**Scanidnavia**, Library of Nations, Time-Life Books, Amsterdam. U.S.A., 1985.

***நாரத சரிதை***: இது புறத்திரட்டு என்னும் தொகை நூலால் அறியப் பெறும் ஒரு தமிழ் நூலாகும். இந்த நூலிலிருந்து எட்டுச் செய்யுள்களைப் புறத்திரட்டின் ஆசிரியர் அந்நூலுள் இணைத்துள்ளார். இந்நூலினைச் சேர்ந்த அந்த எட்டுப் பாடல்களைத் தவிர, வேறெந்தப் பாடலும் இக்காலத்தில் கிடைக்க

வில்லை. அதனால், இந்நூலின் ஆசிரியர் பெயர் முதலிய எதனையும் இன்று அறியக் கூடவில்லை.

புறத்திரட்டிலுள்ள எட்டுப் பாடல்களையும் ஆராய்ந்த ஆய்வாளர்கள் இந்நூல் பற்றிச் சில கருத்துகளை உய்த்துணர்ந்து சுட்டியுள்ளனர். இந்நூல் நாரதன் என்பானின் வரலாறு கூறுவதாகல் வேண்டும். இந்து சமயப் புராணங்களில் கூறப்படும் நாரதமுனிவரைப் பற்றி அல்லாமல் நாரதன் எனப் பெயரிய ஓர் அரசன் பற்றி இந்த நூல் இயற்றப் பட்டிருத்தல் வேண்டும். சமண சமய நூலாகிய சிரீபுராணத்தில் கூறப் பெறும் நாரதன் பற்றிய வரலாறாக இந்நூலினைக் கொள்ளலாம்.

புறத்திரட்டு நூலில் இடம் பெற்றுள்ள 8 செய்யுள்களில் (புறத். 304, 356, 414, 425, 426, 496, 861, 1060) முன்னவை ஐந்தும் அறத்துப் பாலிலும், பின்னவை மூன்றும் பொருட்பாலிலும் உள்ளன. புணர்ச்சி விழையாமை (304), செல்வ நிலையாமை (356), (உடலின்) தூயதுஅன்மை (414), துறவு (425, 426) ஆகிய அதிகாரத்துப் பாடல்களை நோக்குங்கால் இந்நூல் சமண சமயச் சார்புடையதாகும் என்பது புலனாகிறது. மன்னன், 'கொல்லென்று சொல்லும் உரை கூற்றிலான' என்பதனால் (496) அவன் கொல்லாமையை மிகவும் வலியுறுத்தும் சமண சமயத்தவன் என்பது புலனாகிறது. சமணக்காப்பியங்களின் தலைவர்கள் இறுதியில் துறவு பூண்டு, நோற்று வீடு பேறடைவதாகக் கூறப்படுவது இயல்பு. இந்த நூலின் தலைவன் அவ்வாறு அடைந்தவன் என்பதனைக் கிடைத்துள்ள பாடல்கள் குறிப்பில் உணர்த்துவனவாக உள்ளன.

'ஆசை அல்குல் பெரியாரை' எனத் தொடங்கும் பாடல் யாப்பருங்கல விருத்தி உரையில் 'மிசை எண் நிரல் நிரைக்கு எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது. அதனால் இந்நூல், யாப்பருங்கல உரைநூலின் காலமாகிய கி.பி. 11-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்றும், அவ்வுரை தோன்றிய காலத்தில் இந்நூல் அழியாமல் முழுதும் கிடைத்திருக்கக் கூடும் என்றும் உய்த்துணர முடிகிறது. கிடைத்துள்ள எட்டுப் பாடல்களும் பல்வேறு விருத்தங்களாக உள்ளமையால் இந்நூல் விருத்த யாப்பில் அமைந்த ஒன்றாகும்.

அ.மா.ப.

**நாரதர்:** வேதங்களை ஓதியுணர்ந்தவர்கள், பிரமவிருடிகள், வேத விருடிகள், இராச விருடிகள் என மூவகைப்படுவர். அவருள், தேவவிருடியர் வரிசையில் நாரதர் முதன்மையானவர். இவர், அத்திரி முதலான முப்பத்தெட்டு நவருள் ஒருவர் என்றும், விட்டுணு முதலான நூற்று நாற்பத்தொருவருள் ஒருவர் என்றும் கூறுவர். இவர், பிரமனுடைய தொடையிலிருந்து தோன்றியதாகப் புராணங்கள் கூறுகின்றன. முனிவர்கட்குத் தொண்டுசெய்து வந்த ஒரு பணிப்பெண்ணின் மகனாக முன் பிறவியில் பிறந்த இவரும், முனிவர்கட்குத் தொண்டு செய்து வந்தார். அதனால், தெய்வ பத்தியில் சிறந்து விளங்கியமையின், கடவுள் இவர்முன் தோன்றித் திருவருள் செய்தார். அதன்காரணமாகவே இவர் பிரமனிடத்தில் தோன்றினார் என்று பாகவத புராணம் கூறுகின்றது.

உபபர்கணன் என்பாரின் தேவியாகளுள் ஒருத்தியான மாலாவதி பிறந்த நாள்தொட்டு மழையில்லா திருந்தது. இவர் பிறந்தவுடன் நாரமாகிய மழை பொழிந்ததால், இவர் 'நாரதர்' எனப்பட்டார். பிரம்ம கைவர்த்த புராணத்தின்படி காசியப முனிவருக்கு நாரதன் என்ற ஒரு பெயர் உண்டு. அவர்தம் வரத்தினால் பிறந்தமையின் இவர், 'நாரதர்' எனப்பட்டார். ஒருகால், பிரம்மாவினுடைய கழுத்திலிருந்து (கண்டத்திலிருந்து) அநேக நரர்கள் பிறந்தனர். அதனால் அவரது கண்டத்திற்கு 'நரதம்' என்று பெயர்வந்தது. அக்கண்டத்தினின்றும் இவர் பிறந்ததால் 'நாரதர்' எனப்பட்டார் என்பர். இவர், சிறுவர்களாகியதம் நண்பர்கட்கு இளவயதில் 'நாரம்' எனும்மெய்யறிவுணர்த்தினமையின் இப்பெயர் பெற்றார் என்பாருமுளர். இவ்வாறு இவருக்குப் பெயர்க் காரணங்கள் பல உள. இவர் நாராயண முனிவரிடம் தத்துவோபதேசம் பெற்றார். அதனை, வியாச முனிவருக்கு உபதேசித்தார். இவர் பாகவதபுராணத்தைத் தந்தையிடம் கேட்டு, அதனை வியாசருக்கு உரைத்தார்; விநாயகரிடம் கார்த்திகை நோன்பின் பெருமை கேட்டுணர்ந்தார்; அதனால், சப்த (ஏழு) இருடியரைவிட மேலான நிலையடைந்தார்; இந்திரனுக்கும் சுகருக்கும் சூரசேன நாட்டரசனாகிய சித்திரகேதுவுக்கும் மெய்யறிவுணர்த்தினார். பிரகலாதன் கருவிலிருக் கையில் மந்திரோபதேசம் செய்தார்; துருவனுக்கு நாராயண மந்திரமுபதேசித்தார்; யாழிசை கற்க வேண்டித் திருமாலை நோக்கித் தவமியற்றினார். திருமால், கானவிந்துவிடம் யாழ் கற்கக் குறிப்பாலுணர்த்தினார். அவ்வாறே, அவரிடம் கற்றும் நிறைவெய்தாது, தும்புருவிடம் கற்றும் நிறைவுறாமல் இவர் சாம்பவதியிடம யாழ்கற்று நிறைவெய்தினார்; 'மகதி' எனும் யாழினைப் பெற்று, யாழ் வாசிக்கும் பணியோடு பாடி, மண்ணுலகத்திற்கும் விண்ணுலகத்திற்கும் சென்று வரும் ஆற்றல் பெற்றார்; 'பஞ்சபாரதீயம்' எனும் இசைத்தமிழ் நூல் செய்துள்ளார். இருக்கு வேதத்தில் சில பகுதிகளையும், சுமிருதியில் சில பகுதிகளையும் இவர் எழுதினாரென்பர். இவர் அகத்தியர் கமண்டலத்திலிருந்த காவிரியை விநாயகப் பெருமானால் விரிவடையச் செய்தார்; இராமாயணத்தை வால்மீகி முனிவருக்கு உபதேசம் செய்தார். இவர், ஒரு வேள்வி செய்தார்.

அதில், ஓர் ஆடு தோன்றிற்று. அதனை முருகப்பெருமான் ஊர்தியாகக்கொண்டார். மகப்பேறில்லாத அரிச்சந்திரனுக்குக்குழந்தை பிறக்க வருண தேவனை வழிபடும் வழியையும், சித்திர கேதுவுக்கு ஆன்மா அழியாமை, உடலழியக்கூடியது ஆகிய உண்மையினையும், தருமருக்குத் தலங்களின் தீர்த்தச் சிறப்பினையும் உபதேசித்தார். மேருமலையிடம் சென்று, 'நீயே உலகத்தில் உயர்ந்த மலை; உன்னைவிடச் சிறந்த சிகரம் ஏதுமில்லை' என்று கூறினார். கண்ணன் பிறக்கப் போவதைக் கம்சனுக்கு அறிவித்தார். பின்னர், யசோதையிடம்வளரும்குழந்தையே, வசுதேவருக்கும், தேவகிக்கும் பிறந்த கண்ணன் என்று கம்சனுக்குக் கூறினார். அழகிய பெண்ணாக வடிவெடுத்துக் கண்ணனை மணந்து 'பிரபவ' முதலான அறுபது ஆண்டுகளைப் பெற்றார். இவர் பாரிசாத மலரினைக் கண்ணனிடம் கொடுக்க, அதனை அவர் உருக்குமணியிடம் தர, அதனால் சத்தியபாமைக்கும் கண்ணனுக்கும் பிணக்கு ஏற்பட்டது. பாரதத்தில் தருமபுத்திரனை, இராசசூய வேள்வி செய்யச் சொல்லி, அதனால்கலகம் விளைவித்தார். பாண்டவர்கள் காடடைந்ததும், திருதராட்டிரனிடம் சென்று, 'உனது வமிசம் அழியப் போகிறது' என்று கூறினார். மாங்கனியினைக் கைலாயக் கடவுளிடம் தந்து, முருகனைக் கோவணாண்டியாக்கினார். 'தமயந்திக்குச் சுயம்வரம்' என்று தேவேந்திரனுக்குத் தெரியப்படுத்தி நளன் வடிவில் அவனை வரச் செய்து அவமானம் உண்டாக்கினார். ஒருசமயம், பிரமனுடைய மக்களைத் தவம்புரியப் பணித்தமையால், பிரமன் கோபம் கொண்டு, பிரமசாரியான இவரைக் காமுகனாகுமாறு சாபமிட்டார். அதனால், இவர் கோபமடைந்து, 'குற்றம் புரியாத எனக்குச் சாபமிட்டதால், உலகில் நீ, மூன்று கற்பங்கள் வரையில், வழிபாட்டுக்குரியனல்லாது போவாய்' என்றும் 'உனது மந்திரங்கள் பலியாது போகட்டும்' என்றும் பிரமனுவுக்கே சாபம் கொடுத்தார். பின்னர்க் கந்தருவனாய்ப் பிறந்து தவஞ் செய்தார். ஆயிரம் ஆண்டுகள், பிரம சபையைக் காணவேண்டித் தவமிருந்தார். பின்னர்ப் பிரம சபையினைக் கண்டார். அங்கு அரம்பை எனும் நடனமாதினைக் கண்டு. காதல் கொண்டு, தன் வீரியத்தினை வெளியிட்டார். அதனை அறிந்த பிரமன், இவரை, மனிதனாகப் பிறக்கச்சாபம் கொடுத்தார் என்று பிரம வைவர்த்த புராணம் கூறுகிறது. தக்கனுடைய மக்களுக்கு, உபதேசம் செய்து, அவர்களை ஞானிகளாக்கினமையின், கோபமடைந்த தக்கன், இவரை, ஓரிடத்தில் நிலைபெறாமல் திரியுமாறு சபித்தான். அதனால் தக்கன் செய்த வேள்வியினைத் தாட்சாயிணிக்கு அறிவித்தார். அதனால் தக்கன் அழிந்தான். பாகவதம், விட்டுணுபுராணம், மச்சபுராணம், முதலான புராண நூல்களில் இவர் நன்மை தரக்கூடிய காரியங்கள் பலவற்றைக் கடவுளுக்கும் மனிதருக்கும் இடையில் தொடர்பு கொண்டு செய்தார் என்பர். நாரதர் கலகம்செய்பவர், நாரதர் கலகம் நன்மையில் முடியும் என்றெல்லாம் சொல்வர். இவரைப் பற்றிய கதைகள் எண்ணிறந்தன. வீ.சொ.

***நாரதீயம்***: இச்சொல் நாரதர் தொடர்பானது அல்லது நாரதரால் இயற்றப்பெற்றது எனப்பொருள்படும். இப்பெயரால் நான்கு நூல்கள் அறியப்பெறுகின்றன. அவை வருமாறு:

1. வேதவியாசரால் இயற்றப்பெற்ற பதினெண் புராணங்களுள் ஒன்று. இது திருமாலுக்குரிய நான்கு புராணங்களுள் ஒன்று. பிரமன் நாரதருக்குக் கூறியதாக அமைந்துள்ள இந்த வடமொழி நூல் 25,000 கிரந்தங்களை உடையது. இதில் திருமாலை வழிபடும் முறைகள், துருவன், பிரகலாதன் வரலாறு, மோகினி அவதாரம் ஆகியன விவரிக்கப்பட்டுள்ளன. இப்புராணம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதாகத் தெரியவில்லை.

2. பதினெண் உபபுராணங்களுள் ஒன்று. முற்கூறப்பட்ட நாரதீயத்திற்கு உபபுராணமாகிய இந்நூல் பிருகந்நாரதீயம் எனவும் வழங்கப்படுகிறது. இது நாரதரால் இயற்றப் பெற்றது. இதுவும் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளதாகத் தெரியவில்லை.

3. நாரத சுமிருதி என்னும் தரும சாத்திரமும் நாரதீயம் எனப்படும். இரு பாகங்களையும் இருபத்தாறு அத்தியாயங்களையும் கொண்ட இந்நூல் 884 செய்யுள்களாலானது. இந்நூலில் நீதிமுறைகள் விளக்கப் படுகின்றன. இவ்வடமொழி நூல் முனைவர். சூலியசு சாலி என்பவரால் கி.பி. 1875-இல் சிறப்பாக் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

4. இராக, தாள இலட்சணங்களைக் குறித்து நாரதர் செய்த இசைத்தமிழ் நூல். இதனை அடியார்க்குநல்லார் 'பஞ்ச பாரதீயம்' என்பார். (சிலப். உரைப்பாயிரம்) இவ்வுரையால் இந்நூல் அவர் காலத்திலேயே மறைந்து விட்டது என்பதும் அறியப்படுகிறது. ப.வெ.நா.

***நாராயணகஞ்சு*** பங்களாதேசத்தில் உள்ள ஆற்றங்கரைத் துறைமுகப் பட்டினம். பங்களாதேசத்தின் தலைநகரமான தாக்கா (Dhaka) நகருக்குத் தென்கிழக்கில் 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள முக்கிய நகரம். முன்னொரு காலத்தில் நாராயணகஞ்சு (Narayanganj) வங்காளத்திலேயே மாதிரி நகராட்சியாகப் பெயர் பெற்றிருந்தது. இலாக்கிய (Lakhya) ஆற்றின் மேல் கரையில் தாளேசுவரி (Dhaleswari) ஆறு கலக்கும் கூடலில் அமைந்துள்ள இந்நகரம், தாக்கா மாநகரத்தின் துறைமுகமாக விளங்குகிறது. சணல் வாணிகப் பெருக்கமும், இருப்

புப் பாதை - கப்பற் போக்குவரத்து இணைப்புகளும் ஏற்பட்டுள்ளதால் சுறுசுறுப்பான வாணிகமையமாகப் பங்களாதேசம் கிழக்குப் பாகிசுத்தானாக விளங்கிய காலத்தில், நாராயணகஞ்சு வளர்ச்சி பெற்றிருந்தது. இக்காலத்தில் பெருமளவு சணல் உற்பத்தியாகும் பகுதிகளை அடுத்துள்ளமையால், நாராயணகஞ்சு சிறப்பானதொரு சந்தைக்கடை மையமாகவும், கல்கத்தாவிற்கு ஏற்றுமதி இறக்குமதிகளின் வாயிலாகவும் அமைந்துள்ளது. இங்கு மிகப்பெரிய சணல் ஆலை, பருத்தி மற்றும் நூற்பாலை போன்றவற்றை அமைப்பதற்கான இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. சணல் உற்பத்திப் பொருள் தொடர்பான பல துணைத் தொழிற்சாலைகள் இங்கு இயங்கிவருகின்றன.

நாராயணகஞ்சின் அருகில்தான் கி.பி.17-ஆம் நூற்றாண்டில் மிர் சும்லா (Mir Jumla) என்பார் பல கோட்டைகளைக் கட்டினார் (மிர்சும்லா மொகலாய அரசுப் பணியில் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப் பட்டவர்). பர்மா நாட்டுக் கடற்கரையையொட்டி அரகாளியப் படையெடுப்பை முறியடிக்க மிர்சும்லா நியமிக்கப்பெற்றிருந்தார். இந்நகரில் எதிர்ப்புறத்தில் இலாக்கிய ஆற்றங்கரையின் கிழக்குக் கடற்கரையில் கதம் இராசுல் மசூதி (Kadam Rasul Mosque) கட்டப்பெற்றுள்ளது. நாராயணகஞ்சின் மக்கள் தொகை ஏறத்தாழ 2,00,000 ஆகும். இரா.அ.

***நாராயணகவி உடுமலை***: இவர் தமிழ கத்துத்திரைப்படக் கவிஞர்களுள் ஒருவர். இவர் கி.பி. 1897-ஆம் ஆண்டு கோவை மாவட்ட உடுமலை வட்டத்திலுள்ள பூளவாடி என்னும் சிற்றூரில் பிறந்தார். இவர் தந்தையார் பெயர் ஆர்.கே. கிருட்டிணசாமிச் செட்டியார். இருபத்துநாலு தெலுங்குச் செட்டியார் மரபில் தோன்றிய இக்கவிஞர் தம் ஐந்தாம் வயதில் திருப்புகழை மனப்பாடம் செய்தார். பள்ளியில் படிக்கும்போதே இவர், சந்தக்கவி முத்துசாமிக் கவிராயரிடம் தமிழ் பயின்றார்.

இவர் தொடக்கக்காலத்தில் கி. நாராயணன் என்ற பெயரில் நாடகங்களுக்குப் பாட்டெழுதி வந்தார். முத்தமிழ்க் கலைகளில் தேர்ச்சி பெற்ற இவர் நாடக நடிகராகவும் இருந்துள்ளார். இவர்தம் இசைப் புலமைக்கு, அண்ணார் மருமகன் ஆனைமலை கந்தசாமி என்பவர் காரணமாவார். ஆனைமலைக் கந்தசாமி 'இசைப்பெட்டி' (Harmonium) என்னும் இசைக் கருவியினை இசைப்பதில் வல்லவர்.

இவர் தனித் தமிழில் பாடல் எழுதித் திரைப்பட உலகிற்குப் புதுப்பாதை காட்டினார். எளிய ஆடையும், இனிய பண்பும் உடையவராகக் கவிஞர் விளங்கினார். இவரது பாடலைத், தம் படங்களில் அமைக்க வேண்டித் தயாரிப்பாளர்கள் இவரைத் தேடிவந்த வண்ணமிருப்பர். எந்தச் சூழலையும் சுவையாகச்சொல்லக்கூடிய கவியுணர்வு பெற்றவராக இவர் விளங்கினார்.

இவர் 1931-ஆம் ஆண்டு முதல் 1972-ஆம் ஆண்டு வரை திரைப்பட உலகில் தனியிடம்பெற்று விளங்கி வந்தார். இவர் 1939-ஆம் ஆண்டு, 'திருநீலகண்டர்' எனும் திரைப்படத்திற்குப் பாடலாசிரியராக அமைந்தார்; ஞான சவுந்திரி என்னும் திரைப்படத்திற்குக் கதை-வசனம்- பாடல்கள் எழுதியுள்ளார்; 1972-ஆம் ஆண்டு வெளிவந்த குறத்திமகன் என்னும் திரைப்படம்வரை பல படங்களுக்கு ஐந்நூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள் இயற்றியுள்ளார். இவருடைய பாடல்களில் தமிழ்ப்புலமையும், சீர்திருத்தக் கருத்துகளும், கிராமிய மணமும் நிறைந்திருக்கும். பாமர மக்களின் உள்ளத்தில் தமிழை இனிமை தவழச் செய்த முதல் திரைப்படக் கவிஞராகத் திகழ்ந்தார். திரைப்படங்களில் தம் பெயரை,'உடுமலை நாராயண கவி' என்று வெளியிடும்படி செய்தார்.

இவர் ஏராளமான தனிப்பாடல்கள் எழுதியுள்ளார். குடியரசு, திராவிட நாடு முதலிய இதழ்கள் அவற்றை வெளியிட்டுள்ளன. இவர் எழுதிய 'கிந்தனார்', என்னும் அரிகதை அமைப்புத் தனிச்சிறப்புற்றது. அக்கதையை, கலைவாணர் என்.எசு. கிருட்டிணன் அரிகதையாக நிகழ்த்தி வந்தார்.

இவருக்கு அண்ணா அவர்களால்,'கலைமாமணி', பட்டயம் வழங்கப்பட்டது. கவிராயராக விளங்கிய கவிஞர் பகுத்தறிவுவாதியாகவும் திகழ்ந்ததால் இவருக்குப் 'பெரியார் தொண்டர்' என்னும்பட்டயமும் வழங்கப்பட்டது. இவர் தம் எண்பத்து நான்காம் வயதில், 1981-ஆம் ஆண்டுக்காலமானார். இரா.குரு.

***நாராயண குரு***: தென்னிந்தியச் சமுதாய மறுமலர்ச்சி இயக்கத்தின் சிற்பி. திரு. நாராயணகுரு, மதன் ஆசான், குட்டி அம்மா ஆகியோரின் மகனாக கி.பி. 1854-ஆம் ஆண்டு, ஆகசுட்டு 26 இல் திருவனந்தபுரத்திலுள்ள செம்பலாண்டிக் (Chempalanty) கிராமத்தில் பிறந்தார். இவர் பிறந்த வீட்டின் குடும்பப் பெயர் வயல்வாரமாகும் (Vayalvaram). இவரது இயற்பெயர் நாராயணா. ஆனால், இவரது பெற்றோர் இவரை 'நாணு' என்று செல்லமாக அழைத்தனர். இவரது தந்தை ஓர் பன்மொழிப் புலவராவர். இவர் சமசுகிருதம், தமிழ், மலையாளம் ஆகிய மொழிகளில் வல்லமை பெற்றிருந்தார். ஆயுர்வேத மருத்துவமும் இவருக்குத் தெரியும். இவருடன் பிறந்த சகோதரிகள் இருவர். இவர் பிறப்பிலிருந்தே சிறந்த அறிவுடையவராகத் திகழ்ந்தார்; தீண்டாமை, அர்த்த மற்ற சடங்குகள் அனைத்தையும் சிறுவயதிலிருந்தே வெறுத்தார்; சமுதாயத்தில் இருந்து எளிதில் அவற்றைக் களைய உறுதிபூண்டார். இவர் தமது பத்

தாம் வயது வரை செம்பலாண்டி பிள்ளை என்பவரிடம் கல்வி பயின்றார். கல்வி கேள்விகளில் வல்லவராக இருந்தார். திருவிதாங்கூரில் இருந்த வாரணப்பள்ளி என்ற வீட்டில் கல்வி பயின்றார். நான்கு ஆண்டுகட்குள்கும்மாம்பில்லிஇராமன் பிள்ளைஆசிரியனிடம் சமசுகிருத மொழியையும் வேதாந்தத் தத்துவத்தையும் கற்றுத் தேர்ந்தார். இவர் சிறுவயதிலிருந்தே யோக சாத்திரத்திலும் இராமாயண, மகாபாரதக் கதைகளிலும் அதிக ஆர்வம் காட்டினார், நாளடைவில் அஞ்சங்கோ (Anjengo) என்னுமிடத்தில் தாமே ஓர் பள்ளியை நடத்திச் சமசுகிருதத்தை மாணவர்களுக்குப் பயிற்றுவித்தார். அன்று முதல் இவர் நாணு ஆசான் (ஆசிரியர்) என வழங்கப்பட்டார். இவர் நாளடைவில் தனித்து வாழக் கற்றுக் கொண்டார்.

இவர் சில நாட்கள் தமிழ் நூல்கள் விற்கும் நூல் கடையில் தமது நேரத்தைச் செலவழித்தார். அது இவருக்குத் தமிழை நன்கு பயில ஒரு வாய்ப்பை ஏற்படுத்தியது. திருக்குறள், திருமந்திரம், திருப்புகழ், திருப்பாவை வேதாந்தஞானவாசிட்டம், ஒழிவில் ஒடுக்கம், சிவபுராணம், ஆகிய நூல்களைக் கற்கும் வாய்ப்பும் இவருக்குக் கிடைத்தது. நாளடைவில் இவர் குஞ்சன்பிள்ளை சட்டாம்பி என்பவருடன் நெருங்கிப் பழகி யோகாசனத்தைப் பயின்றார். பிறகு மருதவன் குன்றுகளில் (Marudavan Hills) தங்கி யோக நித்திரையில் ஆழ்ந்தார். அங்கே கௌதம புத்தரைப் போல் இவருக்கு அறிவொளி பிறந்தது. பிறகு இவர் நாராயண குருவானார்.

இவர் அவ்வறிவொளியை ஆத்மோபதேச சதகம் என்ற நூறு கவிதைத் தொகுப்பில் விளக்குகிறார். இவர் சில நாட்கள் நெய்யாற்றங்கரையில் தங்கியிருந்தார். அப்போது பரமேசுவரன் பிள்ளை இவர்தம் முதல் சீடரானார். டாக்டர் பால்பு (Dr.Palpu) என்பவர் திருநாராயண தருமபரிபாலன யோகம் என்ற அமைப்பை 1903-இல் ஏற்படுத்தினார். நாராயணகுருகுலம் 1923-இல் தோன்றியது. திருநாராயண தருமசங்கம் 1927-இல் தோன்றியது. இது குருவினால் ஏற்படுத்தப்பட்ட சமய நிறுவனங்களை மேற்பார்க்கிறது. சிவகிரிமடம்தான் இதன் தலைமைப் பீடமாகும். இங்கு நாராயண குரு ஒரு தனிப் பாணியான கோவிலை உருவாக்கினார். இங்கிருந்து முதலில் தமிழகத்திற்கு இவர் வந்தார். பிறகு ஆலப்புழைக் (Alwaye) சென்றார்.

இவர் பிறப்பால் மலையாளியாக இருந்தபோதிலும் ஓர் சிறந்த தமிழறிஞராகவும் திகழ்ந்தார். கும்பகோணம், காரைக்கால், புதுக்கோட்டை, காரைக்குடி, சென்னை ஆகிய இடங்களில் உள்ள சைவ ஆதினங்கள் இவரை இன்றுகூட மரியாதையுடன்நினைவு கூருகின்றன. இவர் வர்க்கலா (Varkala) வில் உள்ள சிவகிரி மடத்தில் தங்கியிருந்து தாழ்த்தப்பட்டவர்களுக்கு அரிய தொண்டாற்றினார். தமது மடத்தில் சாதிசமயமற்ற ஒரு சமுதாயத்தை உருவாக்கினார். இவருக்கும் மகாத்மா காந்திக்குமிடையே நெருங்கிய நட்பு இருந்தது. இவர் தம் ஆலோசனையின் பேரில் 'நவசீவன்' என்ற தம் பத்திரிகையின் பெயரை 'அரிசன்' என்று மாற்றினார் காந்தியடிகள்; பிறகு தமது வாழ்நாள் முழுவதும் அரிசனங்களின் நல்வாழ்வுக்காகப் பாடுபட்டார்.

நாராயணகுரு பல சீர்திருத்தக் கோயில்களை உருவாக்கி அங்கேயெல்லாம் ஒரே சாதி, ஒரேசமயம், ஒரே கடவுள் எனும் சித்தாந்தத்தை மக்களுக்குப் போதித்தார். வினாயக அட்டகம், வாசுதேவசதகம் போன்ற பல நூல்களின் மூலம் தமது தத்துவத்தைப் பறை சாற்றினார். சீவகாருண்ய பஞ்சகம், அனுகபோதசகம், சாதி நிருணயம், சாதிமிமரம்சம், தத்தாபகாரம்,ஆசிரமம் ஆகியவை இவர் எழுதிய சீர்திருத்த நூல்களாகும். இவர் பல தத்துவ நூல்களையும் எழுதியுள்ளார். உபநிடதத்தைச் சமசுகிருதத்திலிருந்து மலையாளத்தில் மொழி பெயர்த்தார். திருக்குறளைத் தமிழிலிருந்து மலையாளத்தில் மொழி பெயர்த்தார். இவர்தம் நூல்களில் பெரும்பாலானவை இப்போது ஆங்கிலத்தில் உள்ளன. இவற்றில் சில இந்தி, செருமன், தச்சு, பிரெஞ்சு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

சுருங்கக்கூறின் இவர் திருமூலரைப் போல் ஒன்றே குலம் ஒருவனே தேவன் எனும் தத்துவத்தை உலகிற்குப் போதித்தார். இவர் 1928-ஆம் ஆண்டு, செப்டம்பர் 28-ஆம் நாள் தமது 73-வது வயதில் சமாதி அடைந்தார். இவரது வாழ்க்கை வரலாறு ஆங்கிலம், செருமன், பிரெஞ்சு, தமிழ் ஆகிய மொழிகளில் எழுதப்பட்டு வருகின்றன. கே.சே.

***நாராயண சதகம்***: மணவாள நாராயணன் என்னும் வள்ளலை முன்னிலைப் படுத்திப் பாடப்பட்ட சதகம் நாராயண சதகம் எனப்பட்டது. இதனைத் திருவேங்கட நாராயண சதகம் என்றும் கூறுவர். பாட்டுடைத் தலைவர் பெயரால் சதகங்கள் பெரிதும் பெயர் பெறும். எ-டு: குமரேச சதகம், தண்டலையார் சதகம்.

சதகம் என்பது நூறு பாடல்களையுடையதொரு நூல் வகை. நூறு என்றும், பதிற்றுப்பத்து என்றும் வழங்கப்பட்ட நூற் பெயர்கள் சதகப் பெயர்க்கு முன்னோடிகள்.

இந்நாரயண பாரதி திவ்வியகவி நாராயண பாரதி என்றும்,திவ்விய கவி நாராயணதாசர் என்றும்

வழங்கப்படுவார். இவர் தந்தையார் முத்தரைய னார் என்றும், இவரூர் தொண்டை நாட்டைச் சேர்ந்த வெண்மணி என்றும் கூறுவர். இவ்வூரை 'வெண்ணெய்' என்றும் சுட்டுவர். இனி நாராயண பாரதியும், நாராயண தாசரும் வேறு வேறானவர் என்றும் கூறுவர். இந்நாராயண பாரதி கோவிந்த சதகம் என ஒரு சதகம் பாடினார் என்றும், திருஎவ் வளூர் அந்தாதியும் இவர் பாடியதே என்றும் அறிய முடிகிறது. இவர்தம் பெயர், இவரைப் புரந்த வள்ளல் பெயர், இவர் இயற்றிய நூல்களின் பெயர் ஆகிய வற்றை நோக்க இவர் வைணவ சமயம் சார்ந்தவர் என்பது வெளிப்படை. இவர் காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு என்பர். இரா.இ.

*நாராயணசாமி அய்யர், பின்னத்தூர்:* இவர் சங்க நூல்களுள் எட்டுத்தொகைஎனப்படுபவற் றுள் முதலாவதாக வைத்து எண்ணப்படும் நற்றிணை என்னும் அகப்பொருட்சுவை மிக்க நூலையும், அதன் நயத்தையும் முதன் முதலில் பழைய பனையோலைச் சுவடிகளை ஆராய்ந்து வெளியிட்டவர். இவ்வுரை யினைப் போற்றியும் தழுவியும் பின்னர்ச் சைவசித் தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப்பிள்ளை யும் புலியூர்க் கேசிகனும் உரைகளை இயற்றினர். இவர் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த திருத்துறைப் பூண்டிக்கு அருகிலுள்ள பின்னத்தூரில் பிறந்தவர். இவர் கி.பி. 1862-ஆம் ஆண்டு அப்பாசாமி ஐயர் என்னும் வேங்கடகிருட்டிண அவதானிக்கும் சீதா லட்சுமி அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தவர்.

இவர் இளமையிலேயே தமிழிலும் வடமொழி யிலும் புலமையடைந்தார். இவர் பதின்மூன்று வயது வரை கிருட்டிணபுரம் முத்துராம பாரதியாரிடம் தமிழ் கற்றார். பின்னர் மன்னார்குடியிலுள்ள ஆங்கிலப் பள்ளி ஒன்றின் தமிழாசிரியர் இராமாயணப் பாடல் களுக்குக்கூறிய பொருள் சிறப்பைக் கேட்டுத் தமிழ்மீது மிகுந்த ஈடுபாடு கொண்டார். தமிழறிவை மேலும் வளர்த்துக்கொள்ள திருமறைக் காட்டிலிருந்த யாழ்ப் பாணம் ஆறுமுக நாவலரின் மருமகனான பொன்னம் பலம் பிள்ளையிடம் தமிழ் இலக்கண, இலக்கியங் களைக் கற்றுத் தேர்ந்தார். இவர் கி.பி. 1899-ஆம் ஆண்டிலிருந்து பல ஆண்டுகள் கும்பகோணம் நகர உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். இவர் நற்றிணைக்கு உரை யெழுதிய தோடு மட்டுமன்றி மாணாக்கராற்றுப்படை, இயல் மொழி வாழ்த்து, தென்தில்லை உலா, தென் தில் லைக் கலம்பகம், களப்பாழ்ப்புராணம், இராமாயண அகவல் முதலிய நூல்களையும் எழுதியுள்ளார். இவர் எழுதிய இறையனார் ஆற்றுப்படை, பிரகசன நாட கம், இடும்பாவன புராணம், நீலகண்டேச்சரக்கோவை, சிவகீதை, சிவபுராணம், நரிவிருத்தம், பழையது விடு தூது, மருதப்பாட்டு, தமிழ் நாயகமாலை, செருப்பு விடுதூது ஆகிய நூல்கள் இன்னும் அச்சேறாதவை யாக உள்ளன. நீரிழிவு நோயினால் உடல்நலம் குன் றிய இவர் கி.பி. 1914-ஆம் ஆண்டு மறைந்தார்.

ஆர்.கி.

*நாராயணதாசு, ஆதிபட்ல:* சிறந்த அரி கதைப் புலவரும் இசை அறிஞருமான ஆதிபட்ல நாராயணதாசு கி.பி. 1864-ஆம் ஆண்டு அச்சாடா என்னும் சிற்றூரில் பிறந்தார். இந்த ஊர் ஆந்திர மாநிலத்தில் சிரீகாகுளம் மாவட்டத்தைச் சேர்ந்த பொப்பிலி தாலுகாவில் இருக்கிறது. தந்தையின் பெயர் வேங்கட செயனுலு. அன்னையின் பெயர் நரசம்மா. அந்த அம்மையார் புராணம் சொல்லு வதில் மிகவும் தேர்ச்சி பெற்றவர். ஆகையால் அந்த அம்மையாரைப் புராண நரசம்மா என்றும் குறிப் பிட்டனர்.

நாராயண தாசு தெலுங்கிலும் வடமொழியிலும் சிறந்த புலவர் எனலாம். இவர் இவ்விரண்டு மொழிகளில் புத்தகங்கள் எழுதியுள்ளார். உலகப் புகழ் பெற்ற 'உமர்கய்யாம் இயற்றிய 'உரூபாயத்து' என் னும் நூலினை இவர் வடமொழியிலும் தூய தெலுங் கிலும் (அச்ச தெலுகு) மொழி பெயர்த்தார். வட மொழிக் கலப்பில்லாத தெலுங்கினைத் தூய தெலுங்கு என்பர்.

அரிகதைத் தந்தையாகப் போற்றப்படும் நாரா யண தாசுக்குத் தெலுங்கு நாட்டில் எத்தனையோ சீடர்கள் இருக்கின்றனர். அவர் சொல்லும் அரிகதை யில் இலக்கியம் இருக்கும்; இசை இருக்கும்; அவற் றோடு நாட்டியமும் இருக்கும். அவரே மேடையின் மேல் பாடிக் கொண்டே நாட்டியம் ஆடுவார். எனவே, அவரது அரிகதைகளையும், இசைப் பேருரைகளை யும் மக்கள் ஆவலுடன் கேட்டு மகிழ்ந்தனர். அவரைப் பற்றிய சில கதைகள் வழக்கில் உண்டு. சி.ஆர்.ச.

*நாராயண தீட்சிதர்:* நம்மாழ்வார் மீது பேரீடுபாடு கொண்ட இவர் கி.பி. 18-ஆம் நூற்றாண் டைச் சேர்ந்த வைணவப் புலவர்; திருநெல்வேலிப் புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கே 30 கி.மீ. தொலைவில் உள்ள தென்திருப்பேரை என்ற ஊரில் பிள்ளை மங்கலத்தார் குடும்பத்தில் பிறந்தவர். தென் திருப்பேரைத்திருமால் மகர நெடுங்குழைக்காதர் மீது பாமாலை, வைணவ இலக்கியத்தின் அருச்சனைப் பாட்டாகப் பெரிதும் போற்றப் பெறுகின்றது.

வறுமையில் உழன்ற இப்புலவர் நாயக்க அரசுக்கு வரி செலுத்தத் தவறியதால் ஆட்சிச் சார்பாளராய வடமலையப்பப் பிள்ளையினால் சிறை வைக்கப் பெற் றார். சிறையில் இவர் நாள்தோறும் திருமால் பூசை

செய்து அர்ச்சனைப்பாடல்களை உச்சரித்து வந்தார். இவரது பக்தியின் பெருமையை உணர்ந்தஆட்சியாளர்கள் இவரைச் சிறைவீடு செய்ததுடன், பக்தி மணம் பரப்புதற்கு, வரி செலுத்த வேண்டாத நிலங்களை முற்றூட்டாக வழங்கினர். இந்நிகழ்ச்சி இவரது வைணவப் பற்றினை வெளிக்காட்டுவதாம். பி.தெ.

*நாராயண தீர்த்தர்*: நாராயண தீர்த்தர் ஆந்திர நாட்டில் அந்தண மரபில் பிறந்தவர். இவர் பிறந்த ஊர் தெரியவில்லை. இப்பெரியார் தெலுங்கு மொழியும் வடமொழியும் பயின்றார். அவற்றுடன் இசையையும் நன்கு தெளிந்தார். இவர் தமிழ் நாட்டிற்கு வந்தது பற்றிச் சுவையான 'பௌராணிக வரலாறு' பலரால் பேசப்படுகிறது.

நாராயண தீர்த்தர் திருவேங்கட முடையானைப் பணியத் திருப்பதி சென்றார்; பெருமானைப் பணிந்தார்; அங்குக் கோவிலில் வழங்கிய பிரசாதத்தைப் பசியின் மிகுதியால் வேகமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அப்போது அங்கே வந்த ஒரு கிழவர் அந்தப் பிரசாதத்தைப் பெற விரும்பினார். அவர் பசிக்கிறது பசிக்கிறது என்று தீர்த்தர்பால் முறையிட்டார். தீர்த்தர் பசியின் மிகுதியால் அவர் குரலை அறியவில்லை. அதனால் ஏமாற்றமடைந்தவர் பெருங்குரலில் 'எனக்குப் பிரசாதம் தாராத உனக்கு வயிற்று வலி உண்டாகட்டும்' என்றார்.

பெரியவரின் சாபத்தால் உலகுணர்வு பெற்ற தீர்த்தர் 'ஐயா! அடியேன் பசியால் தங்கள் குரலைக் கேட்கவில்லை மன்னியுங்கள்' என்றார். அவர், என் மொழி பொய்க்காது; உனக்கு வயிற்றுவலி வரும். நீ மலையை விட்டு இறங்கியதும் ஒரு பன்றி உனக்கு முன்னே போகும். அப்பன்றி எங்கே மறைகிறதோ அங்கு உன் நோய் நீங்கும் என்றார். அவர் கூறியபடி தீர்த்தருக்கு வயிற்றுவலி வந்தது. அவர் மலையை விட்டுக் கீழே இறங்கியதும் ஒரு பன்றி முன்னே சென்றது. தீர்த்தர் அதைப் பின்பற்றிச் சென்றார். அப்பன்றி, திருப்பூந்துருத்தியை அடுத்த வரகூரில் மறைந்தது. அங்கே தீர்த்தரின் வயிற்று வலியும் மறைந்தது. அங்கே எழுந்தருளியுள்ள வேங்கடேசப் பெருமானே வராக வடிவுடன் வந்தான் என்று தீர்த்தர் உணர்ந்தார்.

தீர்த்தர் வரகூர் வேங்கடேசப் பெருமானுக்குச் சேவை செய்து அங்கேயே வாழ்ந்து வந்தார். அங்கு வாழ்ந்தபோது வேங்கடேசப் பெருமானின் திருவருளால் கவிபுனையும் திறன் பெற்றார். தீர்த்தர் இயற்றிய நூல்கள் பல. அவை, சிரீ கிருட்டிண லீலாதரங்கிணி, சாண்டிலிய பத்தி, சூத்திர வியாக்கியானம், அரிபக்தி சுதார்ணவம், பாரிசாதாபகரணம் என்பனவாம்.

இந்நூல்களுள், தீர்த்தருக்குப் புகழ் தருவது இலீலா தரங்கிணி என்னும் நூலாகும். இது பன்னிரண்டு அத்தியாயங்களைக் கொண்டது. இதில் நூற்றுக்கு மேற்பட்ட தரங்கப் பாடல்களும், பல தருக்களும் உள்ளன. இது கண்ணபிரானின் வரலாற்றைக் கீர்த்தனை வடிவாகக் கூறுகின்றது. இந்நூல் தேவகி, வசுதேவர் திருமணத்தில் தொடங்குகின்றது; உருக்குமணி திருமணத்துடன் நிறைவு பெறுகிறது. இந்நூலில் மிகுதியாகப் பேசப்படுவது கண்ணபிரானின் திருவிளையாடல்களே.

கண்ணன் விளையாட்டில் தலையாய இடம் பெறுவது 'இரசக்கிரீடை'யே (சிலப்பதிகாரம் இதனை இசையுடன் இசைத்துக் கூறுகின்றது. சிலம்பு ஒவ்வொரு பாத்திரத்தையும் ஒவ்வொரு சுரமாகக் கூறுகின்றது).

'இரசக்கிரீடை'யின் முடிவில் கண்ணன் மறைந்து விடுகிறான். அப்போது கோபியர் பெற்ற பேருணர்வைப் பாகவதம் பத்தியும் காதலும் கலந்து நயமாகப் பேசும்.

தரங்கிணி, மறைந்த கண்ணனைத் தங்களுக்குள்ளேயும் வெளியேயும் காண்கின்றதாகத் தெரிவிக்கிறது. அடாணா இராகத்தில் அமைந்த 'நந்த நந்த கோபாலா' என்னும் கீர்த்தனை நயம் மிக்கது. இக்கீர்த்தனை கண்ணனை 'நவநீதசோரன்' என்றும், 'கந்தர்ப்ப சதகோடி சுந்தரன்' என்றும் (கந்தர்ப்பன் -மன்மதன்)மந்தகாச கோபாலன் என்றும் கூறுகிறது.

இவர் ஒவ்வொரு கீர்த்தனை முடிவிலும் தம் பெயரை முத்திரையாக அமைத்துள்ளார். சில கீர்த்தனைகளில் 'சிவநாராயண தீர்த்த' என்று குறிப்பிடுகின்றார். அதனால் இவரது சமரச உணர்வு புலனாகின்றது. இப்பெரியாருடைய பிருந்தாவனம் (சமாதி) திருப்பூந்துருத்தியில் உள்ளது. இவருடைய ஆராதனை மகோற்சவம் ஆண்டுதோறும் மாசிமாதம் நடைபெறுகிறது.

புராணவரலாற்றைக் கீர்த்தனை வடிவில் முதலில் பாடியவர் தீர்த்தரே. இவரைப் பின்பற்றித் தியாகையர் பிரகலாத பத்த விசயத்தையும், நௌகா சரிதத்தையும் பாடினார். இவர் காலம் இற்றைக்கு இருநூறு ஆண்டுகட்கு முற்பட்டது என்றுகருதலாம். எஸ்.கே.ரா.

*நாராயணதேசிகர், சாது*: இவர் வடார்க்காடு மாவட்டத்தின் தலைநகராகிய வேலூரில் வாழ்ந்த தமிழறிஞர். இவர் கி.பி. 1851-ஆம் ஆண்டு இலட்சுமைய நாயகருக்கும் சேடம்மாளுக்கும் மகனாகத்தோன்றினார்; தமிழுடன் தெலுங்கிலும்புலமையடைந்து இருமொழிப் புலமையாளராக விளங்

கினார். இராமசாமி நாயுடு என்பாரிடம் தமிழ் பயின்ற இவர் சுப்பையாரெட்டி என்பாரிடம் தெலுங்கு கற்றார். திருவள்ளூர் உயர்நிலைப் பள்ளியில் இவர் நீண்டகாலம் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார் இவர் வேதாந்தப் புலவராகவும் விளங்கினார்; ஞானானந்த நாதமுனி என்ற வேதாந்தியிடம் வேதாந்த நூல்களைக் கற்றுப் புலமைநலம் அடைந்தார். இவருடைய அனுபவானந்த தீபிகை என்னும் நூல் வேதாந்தத்தை விளக்குதற்குரிய அரிய நூலாகும். இதன் விளைவாக இளமையிலேயே இவர் துறவு மேற்கொள்ளத் துணிந்தார். கேளிர், கிளைஞர் வற்புறுத்தலுக்குப் பின் மணம் புரிந்து இல்லற வாழ்வில் ஈடுபடலாயினார். இசுலாமியர்களுடனும் கிறித்தவர்களுடனும் சமயத் தொடர்பான கருத்துப் போரிட்டமை இவருடைய பணிகளில் குறிப்பிடத் தக்கதாகும். இவர் 1911-ஆம் ஆண்டு மறைந்தார்.

சா.உ.

***நாராயணப் பட்டதிரி* (கி.பி. 1560-1666):** மேப்புத்தூர் நாராயணப் பட்டதிரி கேரளத்தில் வாழ்ந்த புகழ்பெற்ற சமசுகிருதக் கவிஞராவார். இவர் கி.பி.1560-இல் பிறந்தார். இவர் மறைந்த காலத்தைக் குறித்த தெளிவான செய்திகள் கிடைக்கவில்லை. இவர் கி.பி. 1666-இல் மறைந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது. இவர் இறைவன் மீது பாடிய துதிப்பாடல்கள், மன்னர்களைப் போற்றிப் பாடிய பாடல்கள், சம்புநூல்கள், இலக்கணம் என்று பலவகைகளில் அடக்கிக் கூறத்தக்கனவாக ஏறத்தாழ நாற்பது நூல்களைப் படைத்திருக்கின்றார். 'நாராயணீயம்', 'சிரீபாத சப்ததி', 'குருவாயூர் புரேச தோத்திரம்' என்பன இவருடைய துதிப் பாடல்கள். மன்னர்களைப் புகழ்ந்து பாடியனவாகக் 'கோசிரீநகரவர்ணனை', 'மாட மகீசப் பிரசத்தி', 'சைலாப்தீசுவர பிரசத்தி', 'தூதவாக்கியம்', 'பாஞ்சாலி சுயம்வரம்', 'சுபத்திரா கரணம்' முதலிய நூல்களையும், இலக்கண நூல்களாகப் 'பிரக்கிரியா சர்வசுவம்', 'தாது காவியம்' முதலிய நூல்களையும் நாராயணப் பட்டதிரி இயற்றியிருக்கிறார். இவை தவிரக் 'கசேந்திர மோட்சம்', 'உருக்மாங்கத சரிதம்', 'செமந்தகம்', 'குசேல விருத்தம்' முதலிய நூல்களையும் இவர் படைத்திருக்கிறார். மேப்புத்தூர் நாராயண பட்டதிரி இன்றைய மலைப்புறம் மாவட்டத்தில் பாரதப்புது ஆற்றின் வடகரையில் திருநாவாய் என்னும் ஊரையடுத்திருக்கும் குறும்பத்தூரில் மேப்புத்தூர் குடும்பத்தில் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் மாத்ருதத்தன் பட்டதிரிஎன்பதாகும். 'பிரக்கிரியா சர்வசுவம்' என்ற இலக்கண நூலில் இவர் தமது ஆசிரியர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கின்றார். மாதவன் நம்பூதிரி தாமோதரச் சாக்கியார், திருக்கண்டியூர் அச்சுதப் பிசாரடி முதலியோர் இவருடைய ஆசிரியர்களாவர். நாராயணப் பட்டதிரி வேதங்கள், அளவை நூல், இலக்கணம் முதலியவற்றை மேற்குறிப்பிடப்பட்ட ஆசிரியர்களிடம் பயின்றார். நாராயணப் பட்டதிரி தம் ஆசிரியரான அச்சுதப்பிசாரடிக்கு ஏற்பட்டிருந்த வாதநோயைத் தாம் பெற்றுக்கொண்டு, பின்னர் அது நீங்குமாறு இறைவனிடம் வேண்டினார். அதற்காகக் குருவாயூர் சிரீகிருட்டிணன் ஆலயத்திற்குச் சென்று அங்குத் தங்கியிருந்து ஒரு நாளைக்கு ஒரு பாடல் வீதம் நூறு நாளில் நூறு பாடல்கள் பாடி 'நாராயணீயம்' என்ற நூலினைப் படைத்தார். இறைவன் இவருடைய புலமைத் திறத்தையும் பத்தித் திறத்தையும் கண்டு, வாதநோயைக் குணப்படுத்தினார் என்று பத்தர்கள் இன்றளவும் நம்புகின்றனர். இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் நாராயணப் பட்டதிரியின் புகழ் கேரள நாடெங்கும் பரவியது. நாராயணப் பட்டதிரியின் காலத்தில் கேரள நாட்டில் வாழ்ந்திருந்த மற்றொரு கவிஞரான பூந்தானம் என்பாருக்கும் இவருக்கும் இடையிலான தொடர்பினைக் குறித்தும் ஒரு கதை வழங்குகிறது. நாராயணப் பட்டதிரி குருவாயூர் சிரீகிருட்டிணன் ஆலயத்தில் தங்கியிருந்த போது, பூந்தானம் அந்த ஆலயத்திற்கு வந்தார். பூந்தானத்திற்குப் பிறந்த குழந்தைகள் இறந்துவிட, அதனால், மனம் சோர்வடைந்த நிலையில பூந்தானம் குருவாயூர் ஆலயத்திற்கு வந்து 'சந்தான கோபாலம்' என்ற நூலை இயற்றினார். தாம் இயற்றிய அந்நூலைப் பூந்தானம் நாராயணப் பட்டதிரியிடம் கொடுத்துச் செம்மை செய்து தருமாறு வேண்டினார். மலையாளத்தில் எழுதப்பட்ட நூலில் சிறப்பு எங்கே இருக்கும் என்று சமசுகிருதத்தில் வல்லுநரான நாராயணப் பட்டதிரி பலர் முன்னிலையில் பூந்தானத்தை இடித்துரைத்தார்; அதனால் மனம் நொந்த பூந்தானம் அவ்விடத்தை விட்டகன்று ஆலயத்தின் வேறொருபகுதியில் மனம் வருந்திக் கொண்டிருந்தார். இச்சூழலில் 'நாராயணப்பட்டதிரியின் புலமையை விட, பூந்தானத்தின் பக்தியே சிறந்தது' என்று ஒரு வான்குரல் ஆலயத்தின் கருவறைக்குள்ளிருந்து நாராயணப் பட்டதிரியின் காதுகளில் வந்து விழுந்தது. அதனால் உண்மை நிலையுணர்ந்த நாராயணப் பட்டதிரி பூந்தானத்தைத்தேடிக் கண்டு, அவரைத் தேற்றினார்; பூந்தானத்தின் 'சந்தான கோபாலம்' என்ற நூலினையும் படித்துச் செம்மைப்படுத்தித் தந்தார். பூந்தானத்திற்கும் நாராயணப் பட்டதிரிக்கும் இடையிலான தொடர்பினைக் குறித்து வழங்குவதாக இக் கதை திகழ்கின்றது.

நாராயணப் பட்டதிரி வாதநோய் நீங்கப்பெற்ற பின்னர் மிகவும் புகழடைந்தார், கேரள நாட்டில் இருந்த பல்வேறு அரசவைகளிலும் இவர் இடம்பெற்றார். கோழிக்கோடு, கொச்சி, வடகுற்கூர், செம்பகச் சேரி முதலான நாட்டு மன்னர்களின் அவையில்தங்கி

இருந்து கவிதைகள் புனைந்து வந்தார்; அம்மன்னர் களின் பாராட்டுகளையும் பரிசுகளையும் இவர் பெற்றார். இவ்வகையில் செம்பகச்சேரி மன்னரின் அவையில் தங்கியிருந்தபோதுதான் 'பிரக்கிரியா சர்வசுவம்', 'பாஞ்சாலி சுயம்வரம்', 'மானமேயோதயம்' முதலிய சிறந்த நூல்களைப் படைத்தார். செம்பகச்சேரி அரண்மனையை விட்டு இவர் எப்போது வெளியேறினார் என்பது தெரியவில்லை. நாராயணப் பட்டதிரி தமது இறுதிக் காலத்தில் சொந்த ஊரில் இறைவனை வழிபடச் சென்றபோது உயிர் துறந்தார் என்று கூறுகின்றனர். மு.தி.

***நாராயண பாரதியார்*** வைணவ அந்தணர்; தொண்டை நாட்டுப் புலவர்; வெண்மணி என்ற ஊரில் பிறந்தவர். வயல் வளம் செறிந்த இவ்வூரில் முத்தாரையனார் என்ற முதியவரின் புத்திரரான நாராயணன் பாடல்கள் பாடுவதில் வல்லவராய் இருந்தமையால் பாரதியானார். கி.பி. 18-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இவர் நீதிநெறிகள் பல உள்ளடக்கிய திருவேங்கட சதகம் எனுஞ் சிற்றிலக்கிய நூலை இயற்றித் தமிழ்ப் புற இலக்கியத்தை வளப்படுத்தினார். இந்நீதிநூலை மணவாள நாராயண சதகம், திருவேங்கடநாராயண சதகம், நாராயண சதகம் என்ற பெயர்களாலும் குறிப்பர். காப்புச் செய்யுள், தனியன் தவிர்த்து நூறு செய்யுட்களைக் கொண்ட இந்நூலில் சொல் நயம், பொருள் நயம் போன்ற பல்வகை நயங்களும் உள்ளன. ஆழ்வார், பன்னிருவரையும் இவர் போற்றியுள்ளார். கேரளம் கன்னடம், சிங்களம், கொங்கணம், கூர்ச்சரம், காசுமீரம் போன்ற பல நாடுகளின் பெயர்களைப் பாடல்களில் குறித்துள்ளார். இவர், நாடகம், கதாபிரசங்கம் ஆகியவற்றில் ஆர்வம் உடையவர்; இராமாயணம், பாரதம் பயின்றவர்; களஷர் மணவாள நாராயணன் வேண்டுகோளின்படி இந்நூலை இயற்றியதாகக் குறிப்பிட்டுள்ளார். பி.தெ.

***நாராயணன், வேம்பையர்கோன்***: இவர் கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தமிழ்ப் புலவர். இவர் மணியன்மகன் நாராயணன் எனக் குறிக்கப் பெறுவதால் இவருடைய தந்தை மணியன் எனத் தெளியலாம். இவர் வாணிக மரபினர். திருச்சிராப்பள்ளிக் குன்றின்மேல் பல்லவர் காலத்தைச் சேர்ந்த குடைவரை மதில்களில் பாயிரமுட்பட 104 கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களாலான 'சிராமலைஅந்தாதி' என்னும் இவருடையநூல் பொறிக்கப் பெற்றுள்ளது. இந்நூல் இவரது புலமை நலத்தையும் சைவப் பற்றையும் வெளிக்காட்டுகிறது. இவ்வந்தாதிக் கலித்துறைகள், பொன்வண்ணத்தந்தாதி முதலியன போலத் துதிகளாகவும் அகத்துறைப் பொருளுடையனவாகவும் அமைந்துள்ளன. இவர் மதுரை, மணலூர், வேம்பை, சேய்ஞ்ஞலூர், குண்டூர் என்ற ஊர்களில் வாழ்ந்தவர் என்பதை 'மாட மதுரை மணலூர் மதில் வேம்பை' எனத் தொடங்கும் இந்நூல் பாடலொன்று விளக்குகிறது. இந்நூல் பாடல்களில் பல, சிதைந்த வடிவில் காணப்படுகின்றன. தேவாரம் பாடிய மூவர்களைப் பற்றி இவர் குறித்திலாமையால் அவர்தம் திருப்பதிகங்களும் வரலாறுகளும் தமிழகமெங்கும் பரவுமுன் இவர் வாழ்ந்தவராக இருக்கக் கூடும் என்பர். சா.உ.

***நாராயணீயம்***: இது, வடமொழி தென்மொழியில் வல்லவரான நாராயண பட்டபாதர் எனும் நம்பூதிரிபட்டசிரீ என்பவரால் வடமொழியில் செய்யப்பட்டது, இவருக்கு வாயுத் தொல்லையால் உடல் வருத்தம் ஏற்படவே, சோதிடர்கள், 'இது, கோள்களால் ஏற்பட்ட விளைவு; அதனால் துன்பப் பட்டே தீரவேண்டும்; ஆனால், பாகவதத்தைப் படித்துச் பாகவதச் சொற் பொழிவுகளைக் கேட்டு வந்தால் இந்நோய் நீங்கும்' என்றனர். வேறு சிலர், 'இது முன்வினைப்பயன்; அதனால் குருவாயூரப்பனை வணங்கினால் இந்நோய் நீங்கும்' என்றனர்.

அதனால், இவர், குருவாயூரப்பனைத் தலைவனாகக் கொண்டு ஆயிரம் செய்யுள்(சுலோகங்) களால் இந்நாராயணீயத்தை இயற்றினார். திருவாய்மொழி, தேவாரம் முதலியன பத்துப்பத்துச் செய்யுட்களைக் கொண்டது போல, இவரும், இதைப்(தசகம்) பத்துப்பத்துச் செய்யுட்களாகப் பாடினார்.

இதனை, இவர், குருவாயூரப்பன் திருமுன் இருந்து பாடும்போது ஒவ்வொரு 9-ஆம் செய்யுளிலும், 'நீ இங்வாறு திருவிளையாடல் செய்தது உண்மையா?' என்று கேட்பார். குருவாயூரப்பன் 'ஆம்' என்று தலையசைப்பார் என்பது பேசப்படுகிறது.

சான்றாக, குசேலர் வரலாற்றினைக் கூறும் போது, ஒன்பதாம் செய்யுளில், கண்ணனிடம் விடை பெற்றுத் தம் வீடடைந்த குசேலர், தம் வீடு மாளிகையாக இருப்பதுகண்டு, வழிதவறி வந்து விட்டதாகச் சற்று நேரம் திகைத்து வீட்டிற்குள் நுழைந்தபோது, தோழிகளால் சூழப்பட்டு, விலைமதிப்பில்லாத மணிகளால் அணி செய்யப்பட்டு விளங்கிய தம் துணைவியைக் கண்டார். (என்று கூறிவிட்டு) மிகவும் வியக்கத்தக்க உனது கருணையினை அவர் உணர்ந்தார் அல்லவா?' என்று பட்டசிரீ கேட்டார். அதற்குக் குருவாயூரப்பனும் 'ஆம்' என்று தலையசைத்தார்.

பத்தாம் செய்யுளில், 'ஏ குருவாயூரப்பனே! விலைமதிப்பற்ற அம் மனையில் இருந்த குசேலரும் உன்னைப் போற்றி வீடுற்றார். இப்படிப்பட்ட அடியவர்களின் மதிப்பைப் பெற்ற நீ, எனது நோயைப்போக்க

வேண்டும்' என்று வேண்டினார். இப்படிக் கண்ணன் யசோதையின் திருமுலைப்பாலுண்டது, கசேந்திர மோட்சம் முதலானவற்றைக் கொண்டபாகவதத்தை எளிமையாக்கித் தந்துள்ளார். இவர், பாகவதத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்த காரணத்தால், இதனைப் புராணச் சிறப்போடும், இலக்கியச் சுவையோடும், கரும்பினைப் பிழிந்து சாறாகத் தருவதுபோல இந்நூலைத் தந்துள்ளார். பாடல்கள் பலவிதமான சந்தங்களையுடையவை.

இவர், வைணவ நெறியில் நின்றவராயினும், இந்நூலில் சிவபெருமானைப் பல இடங்களில் சிறப்பித்துக் கூறியுள்ளார். வாயுவாகிய காற்றுக்குரிய எல்லாப் பெயர்களையும் வைத்துப் போற்றி, அதனுடன் 'புரி' என்ற சொல்லைச் சேர்த்துப் பாடியுள்ளார்.

பாணினியால் பாடப்பட்டது பாணினீயம் போல நாராயணரால் இயற்றப்பட்டது நாராயணீயம். கிருட்டிணவாரியர் என்பவர், இதற்குப் 'பாலபோதினீ' என்னும் விருத்தியுரை செய்துள்ளார். இதற்குச் சேங்காலிபுரம் அனந்தராம தீட்சிதரின் தமிழுரையும், மு.கோ. இராமன் எழுதிய தமிழாக்கமும் உள்ளன.

ஆயிரம் படி பாலை நூறு படியாகக் காய்ச்சினால் எவ்வளவு சுவையுடையதாகுமோ அவ்வளவு சுவையுடையதாகும் இது என்று அறிஞர்கள் கூறுகின்றனர். கேரளத்தில் இது மிகவும் சிறப்புப் பெற்றுள்ளது; குருவாயூர்த் திருக்கோயிலில் நாடோறும் பாடப்படுவது.

வீ.சொ.

**நால்வர்:** இத்தொகைப்பெயர், சித்தாந்த சைவம், தன் சமய குரவர்களாகப் போற்றும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரையும் குறிக்கும். இந்நால்வரும் சைவ சமயாசாரியர் எனவும் போற்றப்படுகின்றனர்.

திருஞானசம்பந்தர் முதலிய மூவரும் பாடிய பதிகங்கள் பின்னர்த் திருமுறைகளாகப் பகுத்துத் தொகுக்கப்பெற்றன. ஒன்று முதல் ஏழு திருமுறைகளாகப் பகுக்கப்பட்ட அப்பதிகத் தொகுப்பு 'அடங்கன் முறை' எனப்பட்டது. அதனை இயற்றிய மூவரும், 'தேவார மூவர்' என்றும் 'மூவர் முதலிகள்' என்றும் போற்றிக் கொள்ளப்பட்டனர்.

பின்னர் வந்தவர்கள் மாணிக்கவாசகரின் திருவாசகத்தையும், திருக்கோவையாரையும் எட்டாம் திருமுறையாக அமைத்தனர். அந்நிலையில் 'நால்வர், என்னும் பெயர் வழக்குத் தொடர்ந்தது. எட்டாம் திருமுறைக்கு மேலும் நான்கு திருமுறைகளாகச் சைவப்பனுவல்கள் வகுத்துத் தொகுக்கப் பெற்ற



நால்வர்

போதிலும், அவற்றின் ஆசிரியர் பெயர்களையும் சேர்த்து ஐவர், அறுவர் என்று தொகைப் பெயர் கூறும் மரபு தோன்றவில்லை. திருஞானசம்பந்தர் முதல், மாணிக்கவாசகர் முடிய உள்ள நால்வரையும் 'நால்வர்', 'சைவ சமயாசாரியர் நால்வர்' என்று குறிப்பிடும் வழக்கு ஒன்றே சைவ உலகில் நிலைத்து, அந்நால்வர்களைச் சிறப்பாக வழிபடும் மரபு உருவாகியது.

பெரியபுராணம் போற்றும் நாயன்மார்களின் திருமேனிகளைக் கல்லிலும், உலோகங்களிலும் அமைத்துத் திருக்கோயில்களில் அவற்றை நிறுவி வழிபடும் வழக்கம் தோன்றியநிலையில் செல்வ வளம் மிக்க சைவத் திருக்கோயில் பலவற்றில் அவ்வமைப்பு இடம் பெற்றது. சில திருக்கோயில்களில் கல், செம்பு ஆகிய இருவகைத் திருமேனி நிரல்களும் அமைக்கப்பட்டுள்ளன. செல்வவளம் குறைவாக விளங்கிய திருக்கோயில்கள், நால்வர் திருமேனிகளை மட்டும் அமைத்துப் போற்றலாயின. இந்நிலை மிகப் பலவான சைவத் திருக்கோயில்களில் பின்பற்றப்பட்டது. அங்கெல்லாம் நால்வர் தம் திருநாள்கள் சிறப்பாகக் கொண்டாடப் பெற்று வருகின்றன.

நால்வர் வணக்க மரபு பரவியபோது, தலபுராணங்கள் போன்ற நூல் இயற்ற முற்பட்ட புலவர்கள், தங்கள் நூல்களின் தொடக்கத்தில் சிவன் உமை, விநாயகர் முதலிய தெய்வங்களுக்கு வணக்கம் கூறிய பின்னர், நால்வரைப் போற்றி வணங்கும் முறையினை மேற்கொண்டனர். அவ்வகையில் நால்வருக்கும் தனித்தனிப் பாடல் அமைத்துப் போற்றியவர்களும், ஒரே பாடலில் நால்வரையும் குறித்துப் போற்றியவர்களும் உள்ளனர்.

பின்வந்த புலவர்களுள் சிலர் இந்நால்வர் மீதும் தனித்தனியாக மாலைகள் பாடலாயினர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசர் ஆகிய நால்வரையும் முறையே ஆளுடையபிள்ளை, ஆளுடையஅரசு, ஆளுடைய நம்பி, ஆளுடைய அடிகள் என்னும் பெயர்களால் குறிப்பிட்டு அப்பெயர்களில் மாலைகள் இயற்றிப் பரவியுள்ளார் இராமலிங்க அடிகளார். இந்தநால்வரையும் 'நால்வர் நான்மணிமாலை' என்னும் பெயரில் நாற்பது பாடல்கள் கொண்ட பாமாலையால் சிவப்பிரகாச சுவாமிகள் போற்றியுள்ளார்.

நால்வர் பெயர் நிரலில் மாணிக்கவாசகர் பெயர் இறுதியில் இடம் பெற்றுள்ளமை, அவர் காலத்தை ஆராய்வோருக்குக் கிடைத்த சான்றுகளுள் ஒன்றாக உள்ளது. நால்வர்தம் வாழ்வு, சைவசித்தாந்தம் கூறும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நெறிகளோடு முறையே இயைந்து விளங்குவதனைச் சைவ அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். நால்வர்தம் வாக்குகளாகிய தேவார, திருவாசகங்களைத் தமிழ் மறைகளாக-திரு நான்மறைகளாகச் சைவ உலகு போற்றுகிறது. காண்க: நால்வர் பெயரில மைந்துள்ள தனித் தனிக் கட்டுரைகள். அ.மா.ப.

**நால்வர்கூட்டு**: வாட்டர்லூ போரில் நெப்போலியன் தோற்கடிக்கப்பட்ட பின், ஐரோப்பிய வல்லரசுகள் கி.பி. 1815 – இல் வியன்னா மாநாட்டில் ஐரோப்பிய நாடுகளின் நிலைமையையும், பிரான்சின் எதிர்காலத்தையும் நிருணயித்தன. ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டுவது முக்கிய நோக்கமாக இருந்தது. உருசிய அரசரான முதலாம் அலெக்சாண்டர் புனிதக் கூட்டு (Holy Alliance) என்ற அமைப்பை ஏற்படுத்தினார், அதில் ஆசுத்திரியா, பிரசியா, உருசியா ஆகிய 3 நாடுகளும் இணைந்தன. ஆனால், அது வெற்றிகரமாகச் செயற்படவில்லை.

இங்கிலாந்து, உருசியா, பிரசியா, ஆசுத்திரியா ஆகிய நான்கு நாடுகளும் இணைந்து கி.பி. 1815-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 20 – ஆம் நாள் 'நால்வர் கூட்டு' (Quadruple Alliance) என்ற அமைப்பைத் தோற்றுவித்தன. இதன் முக்கிய நோக்கம் ஐரோப்பாவின் அமைதியைக் காப்பதேயாகும். ஆசுத்திரிய இளவரசரான 'கௌனிட்சு' (Kaunitz) கி.பி. 1791 – ஆம் ஆண்டிலேயே இம்மாதிரி ஓர் அமைதிகாக்கும் அமைப்பைத் தோற்றுவிக்க விரும்பினார். பின் இரகசியமாகச் செய்து கொள்ளப்பட்ட சௌமாண்ட்டு ஒப்பந்தத்தில் (Treaty of Chaumont) கையெழுத்திட்ட இங்கிலாந்து, உருசியா, பிரசியா, ஆசுத்திரியா ஆகிய நாடுகள், வியன்னா மாநாடு நடைபெற முக்கிய காரணமாயிருந்தன. இவ்வாறு தொடங்கப்பட்ட இவ்வமைப்பு பின் நால்வர் கூட்டாகப் பரிணமித்தது. இதற்குத் தலைமை தாங்கியவர் 'மெட்டர்னிக்கு' (Metternich) என்ற ஆசுத்திரியப் பிரதம மந்திரியாவார். ஐரோப்பா முழுவதுமே தமது அறிவுரைக்குச் செவிசாய்க்குமாறு செய்தார் இவர்.

**முக்கிய நோக்கங்கள்**:

1. நெப்போலியனைப் போன்ற எந்த ஒரு தனி மனிதனும் பிரான்சின் அரியாசனத்தைப் பறித்துக் கொள்ளாது பாதுகாத்தல்.
2. இரண்டாம் பாரிசு (Paris) உடன்படிக்கையை நிறைவேற்றுவதில் முனைதல்.
3. ஐரோப்பாவின் அமைதியைப் பாதுகாத்தல்.
4. தங்கள் நான்கு நாடுகள் மட்டுமல்லாமல், ஐரோப்பிய நாடுகள் அனைத்துமே வியன்னா மாநாட்டின் தீர்மானங்களைக் கடைப்பிடித்தல்.

5. ஐரோப்பியக் கண்டத்தில் எவ்வித தேசிய, சனநாய கப் புரட்சி எண்ணங்களும் செயல்களும் செயற் படுத்தப்படாமல் தடுத்தல்.

6. எதேச்சாதிகார அரசர்களின் உரிமைகளைப் பாது காத்தல்.

இந் நால்வர் கூட்டு அமைப்பின்படி கி.பி. 1818 -ஆம் ஆண்டு ஒரு மாநாடு ஐலசேப்பல் (Aix La Chap-pelle) என்னுமிடத்தில் நடைபெற்றது. ஆயினும், சிறு நாடுகள் மதிக்கப்படாமையாலும், ஒற்றுமையில் லாமையாலும், சுயநலத்தினாலும் இக்கூட்டானது வெற்றிகரமாகச் செயற்பட முடியவில்லை. வெ.பா.

**நால்வர் நான்மணிமாலை** என்பது துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் சைவசமய குரவர்களாய சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக் கவாசகர் பற்றி முறையே வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், அகவற்பாக்களால் அந்தாதித்தொடை அமைய நாற்பது பாடல்கள் கொண்டு இயற்றப் பெற்ற ஒரு நூலாகும். முதற் பாடலின் முதலில் 'பூவால் மலிமணிநீர்' என்று தொடங்கி ஈற்றுப் பாடலினிறுதியில் 'பூவெனப் படு வது பொறி வாழ்பூவே' என்று முடிந்து வரும் நிலை யில் மண்டலித்து இந்நூல் வந்துள்ளது. முத்து, பவழம், மரகதம், வைடூரியம் போன்ற நான்கு மணி களை ஒன்றன்பின் ஒன்றாய்க்கோத்துக் காணப்பெறும் அரதனமாலை போன்று நால்வர் பெருமக்களைப் பற்றி நான்கு வகைப் பாக்கள் கொண்டு சிறநது விளங்கும் இந்நூலுக்கு நால்வர் நான்மணிமாலை என்னும் பெயர் ஏற்படலாயிற்று. நான்மணிமாலை என்பது 96 சிறு பிரபந்த வகைகளுள் ஒன்றாகும். 'வெண்பா கலித்துறை, விருத்தம், அகவல், பின் பேசும் அந்தாதியின் நாற்பது பெறின், நான்மணி மாலை ஆம் என நவில்வர்' என்பது இலக்கண விளக் கப் பாட்டியல் கூறும் இதன் இலக்கணமாகும். கோயில் நான்மணிமாலை, திருவாரூர் நான்மணி மாலை போன்ற பல நூல்களிருப்பினும் அவற்றுள் எல்லாம் முதன்மையிடத்தைச் சொல்லாலும் பொரு ளாலும் பெற்றுச் சிறந்து விளங்குவது இந்நூலே யாகும். இந்நூலிலுள்ள பாக்களில் ஒவ்வொரு பாட லும் ஒன்றின் ஒன்று விஞ்சிய நிலையில் பொருள் பயந்து அவ்வவ்வடியார் பெருமக்களின் பெருமையை மேம்பட எடுத்துரைப்பதாய் விளங்குகிறது. சம்பந்தர் பாடலின் பெருமையை விளக்கப் போந்த சிவப்பிரகா சர், 'அப்பாடல் ஆண்பனையைப் பழந்தரச் செய்யும், விடந்தீர்க்க மயில் போன்று உதவும், நோய் தீர்க்க மருந்தாயிருக்கும், எலும்புக்கூட்டுக்கு உயிர் கொடுத்து எழுப்பும்' என்று முறையே ஆண்பனையைப் பெண் பனையாக்கியது, திருமருகலில் வணிகனை உயிர்ப்பித் தது, கூன்பாண்டியன் வெப்பு நோயைப் போக்கியது, பூம்பாவையைத் திருமயிலையில் எழுப்பியது என்னும் அற்புத நிகழ்ச்சிகளை மனத்துட்கொண்டு பாடி யுள்ளமை நினைந்து மகிழத்தக்கது. இதனைப் போன்றே திருநாவுக்கரசர் பெயரை எழுதியும் கூறி யுமே அப்பூதியடிகள் முத்தி பெற்ற சிறப்பையும் ஆசிரியர் நயம்பெறக் கூறுகிறார். 'அப்பூதியடிகள் தவம் செய்யவில்லை. தீயை வளர்த்து அதன் நடுவில் நின்று இறைவனை நினைக்கவில்லை. இவ்வாறு எவ் விதத் துன்பமும் தன் உடலுக்குக் கொடுக்காது எளிமையாகவே அவர் திருநாவுக்கரசர் பெயரைக் கூறியும் எழுதியுமே நன்முத்தி பெற்றார்' என்று அப்பர் திருநாமச் சிறப்பினை எடுத்துக் கூறுவது மிக வும் பாராட்டத் தக்கதாயுள்ளது. 'போதமுண்ட பிள்ளை என்பு பொருகண் மாது செய்ததோ, காதல் கொண்டு சொல்லின் மன்னர் கல் மிதப்ப உய்த் ததோ, வாய்திறந்து முதலை கக்க மகனை நீ அழைத் ததோ, யாது நம்பி அரிது நன்று எனக்கு இயம்ப வேண்டுமே?' என்று விடுகதை மூலம் பதில் வேண்டு வது போன்று சுந்தரரின் செயற்கருஞ் செயலைப் புகழும் திறம் மிகவும் இன்பம் தருவதாயுள்ளது. மாணிக்க வாசகரையும் அவர் இயற்றிய திருவாசகத் தையும் புகழும் நிலை மிகவும் உச்சக் கட்டத்திலுள் ளது. அகவல் பாத்துணை கொணடு பலவாறு போற் றவும் வாய்ப்பேற்படுத்தியதுடன் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்னும் உத்தியான், 'வாதவூரன்ப பாவெனப் படுவதுன் பாட்டு, பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என உறுதியாய் உரைத்த திறம் மிக நினைவிலிருத்தத் தக்கது. நால்வர் நான்மணி மாலையின் ஒவ்வொரு பாடலும் ஒன்றை யொன்று விஞ்சி எது சிறந்தது என்றே கூற இயலா நிலையில் நயம், செறிவு, ஆழம், பத்தி முதலிய எல்லா நன்ன லங்களும் மிளிரப் பெற்றுத் திகழ்ந்துள்ளது என்பதை உறுதியாய்க் கூறலாம். யாவரும் அதைப் படித்துச் சுவைத்து மகிழ்வார்களாக. இரா.ச.

**நாலடியார்:** உலகப் புகழ்பெற்று விளங்கும் திருக்குறளுக்கு அடுத்தபடியாகத் தமிழில் உள்ள அறநூல்களில் சிறப்புப் பெற்று இருப்பது நாலடி யார். நான்கு அடிகளை உடைய வெண்பாக்களால் ஆன நூலுக்கு 'நாலடி' என்று பெயரிட்டு, அதன் பெருமை கருதி 'ஆர்' என்னும் விகுதி சேர்த்து நாலடியார் என்று சிறப்பித்துத் தமிழறிஞர்கள் போற்றி வருகின்றனர். நாலடியார் ஒரு தொகுப்பு நூல். அதில் நானூறு வெண்பாக்கள் உள்ளன. அவையே அன்றி, நூலின் தொடக்கத்தில் சமணச் சமயச் சார்பான கடவுள் வாழ்த்தும் உள்ளது.

பாண்டிய நாட்டின் பல்வேறு இடங்களில் கி.பி. 6,7-ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்து வந்த சமண முனிவர் பலர், தனித் தனியாக நீதி வெண்பாக்

களை இயற்றி இருந்தனர். அவற்றில் நானூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்து நூலாக்கி யுள்ளனர்.

நாலடியார் பாடல்கள் இரண்டில் 'முத்தரையர்' சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளனர். அவர்கள் சிறந்து விளங்கிய காலம், கி.பி.7-ஆம் நூற்றாண்டு ஆகும். அக்காலப்பகுதியில்தான் நாலடியாரில் உள்ள பாடல் களைச் சமண முனிவர்கள் இயற்றியுள்ளனர்.

நாலடியாரைத் தொகுத்து நூலாக்கியவரோ, அவருக்குப் பின் வந்த உரையாசிரியரோ திருக் குறளைப் பின்பற்றி நாலடியாரை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று மூன்றாகப் பகுத்துள்ளார். மேலும், பால்தோறும் அதிகாரம் என்ற உட்பிரிவை அமைத்து ஒவ்வோர் அதிகாரத் திலும் பத்து வெண்பாக்களை அடக்கியுள்ளார். திருக்குறளில் உள்ள அதிகாரங்களின் பெயரையே அவற்றிற்கு இட்டுள்ளார்.

திருக்குறளையும் நாலடியாரையும் ஒப்பிட்டு நோக்கினால் எத்தனையோ ஒப்புமைக் கருத்துகள் புலப்படும்; நாலடியாரில் உள்ள சொல், தொடர் உவமை ஆகியவற்றில் திருவள்ளுவர் குரல் எதி ரொலிக்கும். நாலடியாரில் உள்ள பாடல்களில் சில, திருக்குறளைச் செய்யுள் வடிவத்தில் விளக்கும் உரை போல அமைந்துள்ளன.

நாலடியாரின் பெருமைக்குக் காரணங்கள் பல. அனைவரும் போற்றும் எளிமை, கேட்டவர்மனத் தில் ஆழமாகப் பதியும் கருத்து வளம், உணர்ச்சி நிரம்பிய சொற்கள், எண்ணுந்தோறும் இனிமை பயக்கும் இலக்கிய நயம் ஆகியவையாவும் நாலடி யாரின் வெற்றிக்கும் பெருமைக்கும் காரணமாய் உள்ளன.

நாலடியார் அறிவுக் களஞ்சியமாய்க் காட்சி அளிக்கின்றது. அதில் உள்ள பல பாடல்களில் உள் ளங்கவரும் பொன்மொழிகள் உள்ளன. நீதிக் கருத் துகளை நெஞ்சில் பதியும் வண்ணம் வெளியிடுகின்ற நடைநலம் உள்ளது. கல்வி,ஒழுக்கம், செல்வம், அறம் முதலியவற்றின் சிறப்பை உலக மக்களுக்கு அறிவிக் கின்ற தமிழ் முரசாய் அது விளங்குகிறது.

கல்வியின் சிறப்பை வற்புறுத்தவும், நண்பர்களின் இயல்புகளை அடையாளம் காட்டவும், நிலையா மையை உணர்த்தவும் நாலடியாரில் கூறப்பட்டுள்ள உவமைகளும் கதைகளும் கற்பவர் உள்ளத்தைக் கவரும் இயல்பு உடையவை.

நாலடியாரில் உள்ள சில பாடல்கள் ஒழுக்க நெறி பிறழ்ந்த மக்களையும்,பிறர்க்கு எந்த உதவி யும் செய்யாதவரையும், கல்லாத மக்களையும் மிகுதி யாகக் கேலி செய்கின்றன; கடிந்து உரைக்கின்றன; தாழ்வுபடுத்துகின்றன. அத்தகைய பாடல்கள், அவை தோன்றிய சூழலையும் முற்காலச் சமுதாய அமைப் பையும் தெளிவாக உணர்த்தும் காலக் கண்ணாடி யாக உள்ளன; ஒழுக்க நெறிக்கு வரம்பு கட்டிய இலட்சிய வாதிகளின் கொள்கைக் குரல்களாக உள்ளன. அவை எக் காலத்திற்கும் ஏற்றவையே!

நாலடியார், தோன்றிய நாள் முதல் இன்று வரை செல்வாக்குடனேயே இருந்து மக்களிடையே பரவியுள்ளது.

ஆங்கிலேயர் நம்நாட்டுக் கல்வி முறையை ஒழுங்கு படுத்தி நாடெங்கும் கல்வி நிலையங்களை அமைத் துப் பாடத்திட்டம் வகுத்தபோது, மாணவர்களுக்கு ஏற்ற நீதி நூலாகும் வாய்ப்பை நூறு ஆண்டுகளுக்கு முன்னரே பெற்று விட்டது. அதனால், நாலடியார்க்கு உரைகள் பல தோன்றின; பல பதிப்புகள் வெளி வந்தன. அவையே அன்றிப் பழங்காலத்திலேயே தோன்றிய உரைகளும் அந்த நூலுக்கு உள்ளன. ஆங்கில மேதை போப்பு ஐயர், நாலடியாரை ஆங்கி லத்தில் மொழிபெயர்த்துள்ளார். அவருக்குப் பின் குப்புசாமி முதலியார், அனவரத விநாயகம்பிள்ளை ஆகிய இருவரும் இதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர்

இத்தகைய சிறப்புகளை உடைய நாலடியார் காலத்தை வென்று பெருவாழ்வு வாழ்ந்து எக்காலத் திலும் நின்று நிலவும். மக்கள் நெஞ்சில் குடிகொண்டு வாழும். ச.மெ.

**நாலந்தா** பீகார் மாநிலத்தில் கங்கை நதி அருகில் அமைந்துள்ள சிறு நகரம். பண்டைக் காலத் திலேயே வரலாற்றுப் புகழ் பெற்றுவிட்ட இந்நகரத் தின்கண் அருங்காட்சியகம் ஒன்றும், 1956-இல் நிறு வப்பட்ட புத்த சமய ஆராய்ச்சி மையம் ஒன்றும் அமைந்துள்ளன. இங்குத்தான் ஆசியாவிலேயேசிறந்த தான, புகழ்மிக்க நாலந்தாப்பல்கலைக்கழகம் விளங் கியது. இந்நகரம் புத்தரின் காலத்திலிருந்தே சிறப்புப் பெறலாயிற்று.

**அகழாய்வு:** தொன்மைச் சிறப்பும், வரலாற்றுப் பெருமையும் கொண்ட நாலந்தாவில் பல அகழாய் வுகள் மேற்கொள்ளப்பட்டன. அதன்விளைவாக நாலந்தாவின் பெருமையும் கலைச்சிறப்பும் உலகிற் குத் தெரிய வந்தன. இங்கு மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளுள் கி.பி.1862-82-ஆம் ஆண்டுகளில் அலெக்சாண்டர் கன்னிங்காம் (Alexander Cunn- ingham) என்பவரது தலைமையில் மேற்கொள்ளப் பட்ட அகழாய்வும், 1916-இல் டி.பி,இசுபூனர்

(D.P.Spooner) என்பவராலும், 1922-இல் சே.ஏ.பேசு (J.A.Page) என்பாராலும் நடத்தப்பட்ட அகழாய்வு களும் சிறப்பு வாய்ந்தவை.



நாலந்தா அழிவு

குப்தர் காலத்தில் கட்டப்பட்ட பெரிய புத்த மடாலயமும் (Mahavihara) மற்றும் பிற மடா லயங்களும் (விகாரைகள்), தூபிகளும் (Sthupas) அகழாய்வுகளின்மூலம் வெளிப்பட்டன. நூற்றுக்கணக் கான அழகான புடைப்புச் சிற்பங்களைத் தன்னகத்தே கொண்ட கற்றளிகளும் இங்குக் கண்டுபிடிக்கப்பட்டன. நாலாந்தாவில் உள்ள கலைச் செல்வங்களுள் உன்னதமானவையாக விளங்குவது பாலர் (Palas) காலத்திய கலைப் படைப்புகளே ஆகும். அவை பெரும்பாலும் குப்தரின் கட்டடங்களின்மீது கட்டப் பட்டுள்ளன. இங்குள்ள மடாலயங்களும், தூபிகளும் தனித்தனியே நன்கு திட்டமிட்டுக் கட்டப்பட்டுள்ளன.

அகழாய்வில், அழிந்த கட்டடங்களின் பகுதிகள் மிக்க அளவில் கண்டுபிடிக்கப்பட்டன. அவை குப்தர் காலத்திற்குப் பிற்பட்டவை. அவற்றுள் ஏழு பண்பாட்டுக் காலங்களில் சிறந்து விளங்கிய தூபி குறிப்பிடத்தக்கது. அதன் நான்கு மூலை களிலும் தோரணவாயில்கள் உள்ளன. அவ்வாயில் களில் உள்ள தேவ கோட்டங்களில் அழகே உரு வான போதிசத்துவர் மற்றும் புத்தருடைய திரு வுருவங்கள் இடம் பெற்றுள்ளன. இங்கே கண்டெ டுக்கப்பட்டுள்ள செங்கற்களால் ஆன மேடையில் காணப்படும் கல்வெட்டொன்றினைக் கொண்டு இக் கட்டடங்கள் கி.பி. 516-17-இல் கட்டப்பட்டன என் பதை அறியலாம். இவை மட்டுமன்றிக் குப்தருடைய காசுகளும் இலச்சினைகளும் குப்த வமிசத்தினரின் சமகாலத்தவரின் காசுகளும் கண்டுபிடிக்கப்பட்டுள் ளன. குப்தரது பிற்காலத்தைச் சார்ந்த புத்தரின்,



நாலந்தா மடாலயம்

சிற்பங்களும் பௌத்த சமயத் தெய்வங்களின் சிற்பங் களும், உலோகப் படிமங்களும், சுடுமண் பொம்மை களும், முத்திரைகளும் (Seals) கூட இங்கு அகழ்ந் தெடுக்கப்பட்டன. இவற்றுள் 'சிரீ-நாலந்தா-மகாவீர ஆர்ய-பிக்சு சங்கசுயா,(Sri-Nalanda-Mahavira Arya-Bhikshu Sanghasya)என்ற சொற்கள் பொறிக்கப் பட்ட நாலந்தா மடாலயத்தின் இலச்சினை மிகவும் குறிப்பிடத்தக்கது. நாலந்தாவில் பல சுதை உருவங் களும் (Stucco Sculptures) கண்டுபிடிக்கப்பட்டன.



நாலந்தா-புடைப்புச் சிற்பங்கள்

நாலந்தாவில் குப்தர் காலத்திய பொற்காசுகள் சிலவற்றையும், காசு வார்க்கும் வார்ப்புக் கருவியை யும் (Coin Mould) அகழாய்வினர் கண்டுபிடித்துள் ளனர். இங்கு உலோகத்தை வார்க்கப் பயன்படும்கருவி களும் உலையும் கூட அகழ்ந்தெடுக்கப்பட்டன. சைவ

சமயம் சார்ந்த கடவுள்களின் உருவங்களும் இங்குக் கண்டெடுக்கப்பட்டன. அவற்றுள் பலராமன், உமா மகேசுவரர், சரசுவதி, கங்கா, திருமால் ஆகிய திரு வுருவங்கள் அழகுமிக்கவை.

**நாலந்தாப்பல்கலைக் கழகம்** பண்டைய இந்திய பல்கலைக் கழகங்களுள் தலைசிறந்து விளங்கிற்று. அர்சவர்த்தனரின்(Harshavardhana)ஆட்சிக்காலத்தில் சிறந்துவிளங்கிய இப்பல்கலைக் கழகம் கங்கைக்கரை யில் உள்ள பார்கான் என்னும் கிராமத்தில் அமைந் திருந்ததாகக் கூறப்படுகிறது. அது அக்காலத்திய மகத நாட்டின் தலைநகராகிய இராசக்கிருகத்தில் இருந்து, 12 கி.மீ. தொலைவிலும், பாடலிபுத்திரத்தி லிருந்து (பாட்னா) தென்மேற்கில் 60 கி.மீ. தொலை விலும் அமைந்திருந்தது. கி.பி.4-ஆம் நூற்றாண் டில் இருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை புகழ் பெற்று விளங்கிய இப்பல்கலைக் கழகத்தில் உலகின் பல பகுதிகளிலிருந்து மாணவர்கள் வந்து கல்வி பயின்றனர். அவர்களுள் சீனா, மங்கோலியா, கொரியா, போகரா, மத்திய ஆசியா முதலான நாடு களைச் சேர்ந்த மாணவர்களைக் குறிப்பிடலாம்.

புத்தசமயச் சார்பான இப்பல்கலைக் கழகத்தில் புகழ் மிக்க ஆசியப் பேராசிரியர் பலர் பணிபுரிந்த னர். அவர்களுள் நாகார்ச்சுன சித்தர் என்னும் பெரிய பண்டிதர், மகாசாரியர் என்று போற்றபட்ட ஆரியதேவர், தருமபாலர் (கி.பி.528-560)சீல பத்திரர் (கி.பி.585-640), சந்திரகோமின் முதலான சான் றோர்கள் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

இப்பல்கலைக் கழகத்தில் பலர் கல்வி பயின்று, புகழ் பெற்றுள்ளனர். கி.பி. 6-ஆம் நூற்றாண்டில், புகழ்மிக்க பௌத்ததர்க்க நூல் வல்லுநராகிய ஆச்சா ரிய திக்நாகர் (தின்னாகர்)இங்குத்தான் கல்வி பயின் றார். இவரது மாணவரான தர்மபாலரும், தர்மபா லரின் மாணவரான சீலபத்திரரும் இப்பல்கலைக் கழகத்தின் மாணவரேயாவர். கி.பி. 7-ஆம் நூற் றாண்டில் புகழ் மிக்க சீனப் பயணிகளான யுவான் சுவாங்கு, இட்சிங்கு ஆகிய இருவரும் முறையே ஐந்து ஆண்டுகளும், பத்து ஆண்டுகளும் இங்கே தங்கிப் படித்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. கல்வியை முடித்துக்கொண்ட யுவான்சுவாங்கு புத்த தருமத்தில் வல்லவர் (Master of Law) என்னும் பட்டத்தை இப்பல்கலைக் கழத்தில் பெற்றார். கொரியாவி லிருந்து வந்து இங்குக் கல்வி பயின்ற கீவிலுன் என் பாரும் ஒரு புகழ்மிக்க சான்றோராகத் திகழ்ந்துள் ளார். நாலந்தாப் பல்கலைக் கழகத்தில் பயின்ற மாணவர்களுக்கு அக்காலத்தில் எங்கும் பெருமதிப்பு அளிக்கப்பட்டது. நுழைவுத் தேர்வில் வெற்றி பெற்ற மாணவர்கள் மட்டுமே இப்பல்கலைக் கழகத் தில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். தரமான கல்வி வழங்கப்பட்டதாலும், அறிவுத்திறனும் ஆற்றல்மிக்க பேராசிரியர்கள் பாடம் பயிற்றுவித்ததாலும் இப் பல்கலைக் கழகம் உலகப் புகழ்பெற்று விளங்கியது.

இங்கு 16 வயது நிரம்பப்பெற்றவர்களே சேர்த் துக் கொள்ளப்பட்டனர். இவர்கள் தமது விருப்பம் போல் நான்கு ஆண்டுகள் முதல் பத்து ஆண்டுகள் வரை இங்கே கல்வி பயிலலாம். இங்கு மாணவர்கள் ஆசிரியர்களுடன் தங்கியிருந்து (Residential University) கல்வி பயின்றனர்.

நாலந்தாவில் மகாயான புத்தசமயக் கல்வியே சிறப்பாக அளிக்கப்பட்டது.புத்தமதத்தின் பதினெட்டு உட்பிரிவுகளாகிய கொள்கைகள் அடங்கிய மதங்கள், இந்து வேதங்கள்,கலைகள் ஆகியன இங்கு விரிவாகக் கற்பிக்கப்பட்டன. பாணினி வியாகரணம் (இலக்க ணம்) மருத்துவம், சட்டம், தத்துவம், மொழிநூல், வான நூல், முதலான கலைகளும், நியாயம், சாங் கியம், யோகம் முதலான இந்து சாத்திரங்களும், வடமொழி (சமசுகிருதம்), பாலி ஆகிய மொழிகளும் இங்குப் பயிற்றுவிக்கப்பட்டன. அன்றைய இந்தியா வின் பல்வேறுபட்ட மதக்கோட்பாடுகளும் தத்துவங் களும் ஆசிரியர்களாலும் மாணவர்களாலும் காய் தல் உவத்தல் இன்றி விவாதிக்கப்பட்டன.

இங்கிருந்த விகாரங்கள், மடங்கள் அனைத்தும் ஒருபெரிய செங்கல் மதிலால் சூழப்பட்டிருந்தன. இவ் வளாகத்தில் அழகிய வேலைப்பாடுகளுடன்கூடிய பல கட்டடங்கள் இருந்தன. அவற்றுள் இரத்தினசாகரம் இரத்தினததி, இரத்தினரஞ்சகம் என்னும் மூன்று கட்டடங்கள் குறிப்பிடத்தக்கனவாகும். இவை மூன் றும் பல்கலைக்கழக நூலகங்களாகும். பல்கலைக் கழ கம் ஆறடுக்குமாளிகையில் செயற்பட்டது. யுவான் சுவாங்குநாலந்தாப்பல்கலைக் கழகத்தின் சிறப்பினைப் பற்றிவிரிவான செய்திகளைத் தந்துள்ளார். அரசரது (Harsa) ஆட்சியின்போது இப்பல்கலைக் கழகத்தில் கிட்டத்தட்ட 10,000 மாணவர்களும், 1150 ஆசிரியர் களும் இருந்தனர் என்றும்,ஒவ்வொரு நாளும் ஆசிரி யர்கள் நூறு சொற்பொழிவுகளை நிகழ்த்தினர் என் றும் இவர் குறிப்பிட்டுள்ளார்.

முதலாம், குமாரகுப்தன், புத்தகுப்தன், போன்ற குப்த மன்னர்களும், பின்னர் பாலவமிச மன்னர்களும் நாலந்தாவின் வளர்ச்சியில் பேரார்வம் கொண்டிருந்த னர். பெரும்புகழ் பெற்று விளங்கிய நாலந்தாப் பல் கலைக் கழகத்தைப் பின்பற்றிப் பிற நாடுகளிலும் இந்தியாவிலும் பல பல்கலைக் கழகங்கள் தோற்று விக்கப்பட்டன.

பால வமிசமன்னர்கள் (பீகார்) கி.பி.12-ஆம் நூற்றாண்டில் தமது ஆதரவை விக்கிரமசீலப் பல் கலைக் கழகத்திற்கு மாற்றியதால் நாலந்தா செல்

வாக்கினை இழந்தது. அடுத்து ஏற்பட்ட முகம்மதியர் படையெழுச்சியின்போது பல்கலைக் கழகம் தரை மட்டமாக்கப்பட்டது. இப்போது அவ்விடம் பாழடைந்து கிடக்கின்றது. இங்கு 1915-இல் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் இதன் பெருமையை உணர்த்தின. இ.ம.

**துணை நூல்:**

**கிருட்டிணமூர்த்தி, ரா.,** பண்டைய இந்திய பல்கலைக் கழகங்கள், கார்மேகக்கோன் வெளியீடு, தல்லா குளம் மதுரை, 1956.

**நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம்**: காண்க: திவ்வியப்பிரபந்தம்.

**நாலுகவிப் பெருமாள்**: காண்க: திருமங்கையாழ்வார்.

**நாலைகிழவன் நாகன்**: பாண்டிய நாட்டிலுள்ள நாலூர் என்பது நாலை என மருவி வழங்குவதாகக் கருதப்படுகிறது. இவ்வூர் அருப்புக்கோட்டை நாட்டில் உள்ளது. நாலை என்னும் ஊருக்குரிய நாகன் என்பான் நாலைகிழான் நாகன் என வழங்கப் பெற்றான். இவன் நாலை கிழானாகன் எனவும் சில ஏடுகளில் குறிக்கப் பெறுவன். வடநாட்டினின்றும் தென்னாட்டிற் குடிபுகுந்த பழங்குடியில் தோன்றிய வடநெடுந்தத்தனார் என்னும் புலவர் நாலைகிழவன் நாகனைப் புறநானூற்றுப் பாடலில் (179) வாகைத் திணையில் வல்லாண்முல்லை என்னும் துறையில் வைத்துப் புகழ்ந்து பாடியுள்ளார். இவன் பாண்டிய வேந்தனுக்குத் துணைநின்று படைவேண்டுழிப் படைத்துணை புரிந்தும் வினை வேண்டுழி அறிவுதவியும் வேண்டிய நல்பயன் தந்து துணை நின்றான் என்று புலவர் பாராட்டுகிறார். இப்பாடல் குறிக்கும் பாண்டியன் பெயர் புலப்படவில்லை. 'மண்பல தந்து திருவீழ் நுண் பூண்பாண்டியன்' எனவரும் தொடர் கொண்டு இப்பாடல் நிலந்தரு திருவிற் பாண்டியனைக் குறிப்பதாகச் சிலர் கருதுவர். நாலை கிழவனின் புகழ் மேம்பாட்டைத் 'தோலா நல்லிசை நாலை கிழவன்' என்றும் மறச் சிறப்பைப் 'பருந்து பசி தீர்க்கும் நற்போர்த் திருந்துவேல் நாகன்' என்றும் குறிப்பிட்டுள்ளார். இவன் தன் வீரத்தைக் காட்டிப் பெற்ற பொருள்களை எல்லாம் இரவலர்க்கு ஈர நெஞ்சத்தோடு ஈந்து மகிழ்ந்தான். 'உலகிலே வள்ளியோர் மாய்ந்தாராகப் பொருளைப் பெறாது கவிழ்ந்து கிடந்த என இரக்கும் கலத்தை மலர்த்த வல்லார்யார் எனக் கேட்கப் போர்க்களத்தில் பகைவரைக் கொன்று பருந்து பசிதீர்க்கும் திருந்து வேல் நாகனைக் கூறினார் பலர். அவன் பகைவரின் முரசங்களோடு மண்பலவற்றையும் கொண்ட பாண்டிய வேந்தனின் மறவன். அரசர்க்குப் படையுதவியும் அறிவுதவியும் அளித்துத் தான் பூண்ட நுகம் ஒரு பாற்கோடித் தளராமல் செலுத்தும் பகடு போல ஆண்மையிலும் சூழ்ச்சியிலும் தளராத ஆண்மைக் கூறுபாடு பொருந்திய ஊக்கமும் புகழும் உடையவன் என்பது நாலை கிழவன் நாகனைப் பற்றி வடநெடுந்தத்தனார் பாடிய புறநானூற்றுப் பாடற் கருத்தாகும். இரா.சா.

**நாவல்**: காண்க: புதினம்.

**நாவலந் தீவு** புராண முறையில் கூறப்படும் நான்கு மகா தீவங்களுள் ஒன்று. இதனை, 'ஏழு தீவுகளுள் உப்புக் கடல் சூழ்ந்த தீவு' என்று சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி விளக்குகிறது. நாவல் வடமொழியில் சம்பு எனப்படும். அதனால், அவர்கள் இதனை 'சம்புத் தீவு' என்று குறிப்பிடுவர். தமிழ் இலக்கியங்கள் நாவலந்தீவு, சம்புத் தீவு ஆகிய இரு பெயர்களையும் பயன்படுத்தியுள்ளன. மணிமேகலையில் இத்தீவு பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

சக்கரவாளக் கோட்டம் பற்றிக் கூறுங்கால் மணிமேகலை, 'சூழ்கடல் வளைஇய ஆழியங் குன்றத்து நடுவுநின்றமேருக் குன்றமும், புடையினின்ற எழுவகைக்குன்றமும், நால்வகை மரபின் மாபெருந்தீவும், ஓரீராயிரம் சிற்றிடைத் தீவும்' (மணி.6:192-196) கொண்டதான பகுதியைக் குறிப்பிடுகிறது. அதனைப் பதிப்பாசிரியர் டாக்டர் உ.வே.சாமிநாதையர் பின் வருமாறு விளக்கியுள்ளார். பெரும் புறக்கடலால் சூழப்பட்ட சக்கரவாள கிரியின் உள்பட்ட இடத்தில் மேருமலை அமைந்துள்ளது. அது எண்பத்தீராயிரம் யோசனை உயரமும் அதற்குத் தக்க பருமனும் கொண்டது. அம்மேருவின் பக்கத்தில், அதன் உயரத்தில் ஒன்றற்கு ஒன்று வரவரப் பாதியாய்க்குறைந்து, ஒன்றைச் சுற்றி ஒன்றாக ஏழு கிரிகள்அமைந்துள்ளன. மேருமலை, அதனைச் சூழ்ந்த ஏழு கிரிகள், அவற்றை ஒவ்வொன்றையும் சூழ்ந்து மிச்ச அளவில் அமைந்த ஏழு கடல்கள் உள்ளன. இவற்றை யெல்லாம் உள்ளடக்கியதான பெரும் புறக்கடலில் நான்கு பெருந்தீவுகள் உள்ளன. அவற்றில் ஒன்றே சம்புத்தீவு. அது நாவலந் தீவு எனவும் கூறப்படும். கூறப்படும். காண்க: சம்புத்தீவு

நான்கினுள் ஒவ்வொன்றையும் ஐந்நூறு சிறு தீவுகள் சூழ்ந்திருக்கும். அவ்வாறான இரண்டாயிரம் தீவுகளும் அந்தரத் தீவுகள்எனப்படும். இச் செய்திகளைப் பர்மா நாட்டுப் புத்த சமய நூல்களிலிருந்து தாம் அறிந்ததாக டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார்.

நாவலந் தீவினை நாவலொடு பெயரிய மாபெரும் தீவகம் (மணி.11.107) என்றும், நாவலோங்கிய மாபெருந் தீவு (மணி.2-1) என்றும் மணிமேகலை சுட்டுகிறது. நாவலோங்கிய என்னும் தொடர், அத் தீவிற்கு இப்பெயர் அங்கு மிகுதியாக விளங்கிய நாவன்மரத்தால் எய்தியது என்பதனைக் குறிப்பால் உணர்த்துவதாக உள்ளது. அது, 'தீங்கனி நாவல் ஓங்குமித் தீவிடை' என்பதனாலும் (மணி. 9 – 17) வலியுறுகிறது.

பின்னர் இந்திய நாடு, பொதுவாக நாவலந்தீவு, சம்புத் தீவு என்ற பெயர்களால் குறிப்பிடப்பட்டது. 'சம்புத்தீவினுள் தமிழக மருங்கில்'(மணி 17-62) என்னும் மணிமேகலைத் தொடரில் இந்தியாவும், அதிலுள்ள தமிழகமும் குறிப்பிடப்பட்டுள்ளன.

அ.மா.ப.

**நாழிகைக் கவி:** நாழிகைக் கவி தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இதற்கு நாழிகை வெண்பா, கடிகை வெண்பா என வேறு பெயர்களும் உண்டு. பன்னிருபாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், பிரபந்த மரபியல், இலக்கண விளக்கப் பாட்டியல், முத்து வீரியம், பிரபந்த தீபிகை, பிரபந்த தீபம் ஆகிய பாட்டியல் நூல்கள் இவ்விலக்கிய வகையைச் சுட்டுகின்றன. இது ஒரு நாளின் பகல்இரவுப் பொழுதுகளுக்குத் தனித்தனியே உரிய முப்பது நாழிகைகளை நான்கு யாமங்களாகப் பகுத்துக்கொண்டு பாடப் பெறுவது. முதல் யாமத்திற்கு எட்டு நாழிகையும் இரண்டாம் யாமத்திற்கு ஏழு நாழிகையும் மூன்றாம் யாமத்திற்கு ஏழு நாழிகையும் நான்காம் யாமத்திற்கு எட்டு நாழிகையுமாகப் பிரித்துக் கொண்டு ஒரு நாழிகைக்கு ஒரு வெண்பா வீதம் முப்பது வெண்பாக்களால் பாடப்பெறும். முதல் யாமம் பாடி எட்டாவதில் யாமம் ஒன்று என்றும் இரண்டாம் யாமம்பாடி ஏழில் யாமம் இரண்டுஎன்றும் மூன்றாம் யாமம் ஆறளவும்பாடி ஏழில்யாமம் மூன்று என்றும்,நான்காம் யாமம் ஏழளவும் பாடி எட்டில் யாமம் நான்கு என்றும் பாடின் முப்பது வெண்பா ஆம் என்று பன்னிரு பாட்டியலின் உரைநடைப்பகுதி கூறுகின்றது.இது நாழிகையளவில் தோன்றி நடப்பதாக இலக்கண விளக்கப் பாட்டியலும் முத்து வீரியமும் கூறும். பன்னிரு பாட்டியல் நீங்கலாக ஏனைய பாட்டியல் நூல்கள் அனைத்தும் இவ்விலக்கியவகை ஒரு பொழுதிற்கு முப்பத்திரண்டு வெண்பாவால் பாடப் பெறும் என்று கூறுகின்றன. மன்னரையும் கடவுளரையும் முன்னிலைப் படுத்தி இவ்விலக்கிய வகை பாடப்பெறும் என்று பன்னிரு பாட்டியலும், தேவரையும் மன்னரையும் வைத்துப் பாடப்பெறும் என்று வெண்பாப் பாட்டியல் நவநீதப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல், முத்து வீரியம் ஆகிய நூல்களும், மன்னரையும் ஈசரையும் வைத்துப் பாடப்பெறும் என்று சிதம்பரப் பாட்டியலும் ஈசரை மட்டும் வைத்துப் பாடப்பெறும் என்று பிரபந்த மரபியலும் கூறுகின்றன.

அரசரிடத்து வாழ்த்து மங்கலக் கவிகள் பாடும் கடிகையார் என்ற பிரிவினர் இருந்தனர் என்பதற்குப் பழைய நூல்களிலும் கல்வெட்டுகளிலும் சான்றுகள் உள்ளன. 'காவல் மன்னரும் கடிகையும் கடிவது நிறைத்தார்' (சீவகசிந்தாமணி 2367) என்ற தொடருக்கு 'மன்னர் கைக்காணியிட்டு வணங்கினார்; கடிகையார் மங்கலக்கவி பாடினார்' என்று நச்சினார்க்கினியர் உரைகூறுவர். இம்மரபினர் தம் படைப்பு முயற்சியே பிற்காலத்தில் ஒரு சிற்றிலக்கிய வகையாக உருவெடுத்திருக்கும் என்று கருதலாம். இச்சிற்றிலக்கிய வகைக்குப் பாட்டியல் நூல்களில் இலக்கணம் கூறப்படுகின்றதேயன்றி அவ்வகை இலக்கியம் இருப்பதாகத் தெரியவில்லை. சா.கி.

**நாழிகை வட்டில்:** நாழிகை வட்டில் நாழிகையைக் கணக்கிடும் ஒரு கருவி. காலத்தை அளந்தறிவதற்குப் பலவகைக் கருவிகளை முன்னோர் பயன்படுத்தினர். நிழற்கடிகாரம், நீர்க்கடிகாரம், மணற்கடிகாரம், மெழுகுவத்திக் கடிகாரம், இடைநிழற் கடிகாரம் எனப் பல கருவிகள் இருந்தன. இது நீர்க் கடிகார வகையைச் சேர்ந்ததாகும். நிழற்கடிகாரம் பகற்பொழுது காலத்தை மட்டும் கணக்கிட உதவியது. ஆனால் இது இரவுப் பொழுது காலத்தையும் அளவிடப் பயன்பட்டது. இந்நாழிகை வட்டில் பெயருக்கேற்ப மெல்லிய தகட்டால் கிண்ணம் போன்ற வடிவில் அமைந்திருக்கும். இதன் நடுவில் ஊசி முனையைக் காட்டிலும் சிறிய துவாரமொன்றிருக்கும். இவ்வட்டிலை நீருள்ள தொட்டியில் மிதக்க விடுவர். அப்பொழுது நீர் அச்சிறு துவாரம் வழியாக மேல் சென்று வட்டிலில் நிரம்பும். நீர் நிரம்பியவுடன் வட்டில் நீரில் அமிழும். இக்கால இடைவெளியையே ஒரு நாழிகையாகக் கணக்கிட்டனர். வட்டிலை நீரில் மிதக்க விட்டுக்காலத்தைக் கணக்கிட்டதால் இதனை மிதவைக் கடிகாரம் என்றும் குறிக்கலாம். இந் நாழிகை வட்டிலை முல்லைப் பாட்டு, 'குறுநீர்க் கன்னல்' (முல்லை. 58) என்று குறிக்கின்றது. கன்னல், கடிகை, நாழிகை என்பன ஒரு பொருளுடையன. 'குறுநீர்க் கன்னல்' என்பதற்கு 'நீரிலே காண்கின்ற நினது நாழிகை வட்டில்' என்று நச்சினார்க்கினியர் உரை கூறுவர். இவ்வட்டிலைக் கொண்டு நாழிகையைக் கணக்கிட்டுரைப்பவர்க்கு 'நாழிகைக் கணக்கர்', 'நாழிகை வட்டிலிடுவார்', 'கடிகையார்' என்ற பெயர் உண்டு. அரசர்க்குவாழ்த்துக் கவி, மங்கலக்கவி பாடுவதும் இவர்தம் பணிகளாக இருந்தன. சா.கி.

**நாற்கவிராச நம்பி:** நம்பி என்பது பழமை யான பெயர். சங்க காலத்திலேயே பாண்டியன் அறி வுடை நம்பி, நம்பி நெடுஞ்செழியன் என்னும் பெயர் களில் 'நம்பி' என்பது இடம் பெற்றிருத்தல் அறிய லாம்.

நம்பி என்பது ஆடவருள் சிறந்தான் என்னும் பொருளுடையது. எட்டி, காவிதி, ஏனாதி முதலிய பட்டங்களை அரசர்கள் முற்காலத்தில் வழங்கிய துண்டு. அவ்வாறே நம்பி என்னும் பட்டமும் வழங்கி னர் எனப் பழைய உரைகளால் அறிய முடிகின்றது. நம்பிபெயல், நம்பிப்புரவி, நம்பியூர் என்பவைஇன்றும் காணக் கூடியவை. நான்குவகைக் கவிகளிலும் சிறந்து விளங்கியமையால் இந்நம்பி நாற்கவிராச நம்பி எனப்பட்டார் என்பது பெயரால் புலனாகின்றது.

இந்நம்பியால் இயற்றப் பட்டுப் புகழுடன் விளங்கி வரும் இலக்கண நூல் 'நம்பியகப் பொருள்' எனப் பெயருடனும், அகப்பொருள் விளக்கம் எனப்பொருள் விளக்கத்துடனும் இருவகையாகவும் வழங்கி வருகின் றது. இறையனார் களவியலுக்குப் பின்னர்த்தோன்றி யது இந்நம்பியகப்பொருள். தொல்காப்பியம் என்னும் நூலின் வழியே நம்பி இந்நூலை இயற்றினார் என நூற்பாயிரம் உரைக்கின்றது. அன்றியும் இவர் சமண சமயம் சார்ந்தவர் என்பதும், இவர் தந்தையார் புளியங்குடி என்னும் ஊரினராகிய உய்யவந்தான் என்பவர் என்பதும், தமிழ் வடமொழி ஆகிய இரு மொழிப் புலமையும் எய்தியவர் என்பதும் அப்பாயி ரத்தால் அறிய வருகின்றன.

நூல் செய்த நம்பியே உரையும் வரைந்தாரோ என எண்ண வேண்டியுள்ளது. அதற்கு ஏற்றவாறு கிடைத்துள்ள பழைய உரை இன்னார்உரை என அறி யப்படவில்லை என்பதும் அறியத்தக்கது. அவ்வாறா யின், நம்பியின் உரையொடு பின்வந்த ஒருவர் தஞ்சைவாணன் கோவைப் பாடல்களை இணைத் திருக்க வேண்டும். 'நடுங்கா நாட்டத்திற்குச் சான் றோர் செய்யுள் இல்லை; ஆகலின் அஃதிலக்கண மன்று' என்று கூறியிருப்பவும் (139) தஞ்சைவாணன் கோவையில் இருந்தும், தொல்காப்பியம் களவியல் உரைமேற்கோளில்இருந்தும் இரண்டு பாடல்களைக் காட்டியுள்ளமை இக்கருத்தை வலியுறுத்துகின்றது. இந்நம்பியின் புளியங்குடி தொண்டை நாட்டது என் பர். அவ்வாறேஇவர் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு என்பர்.

இந்நூற் பாயிரவுரையில், 'காலம் பாண்டியன் குலசேகரன் காலம்' என்றுள்ளது. குலசேகரன் என் பார் இருவர் அறியப் பெறுகின்றனர். ஒருவன் முதல் சடையவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1190-1218); மற்றொருவன் முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1268-1311). இவருள் பின்னவன் காலத்திலேயே பாண்டியன் ஆட்சி தொண்டை நாட்டிலும் நடந்துள்ளது. இவன் தம்பி மாறவர்மன் விக்கிரம பாண்டியன் தொண்டை நாட்டுப் பகுதியில் இருந்து ஆட்சி நடத்தியதுடன் சைவ, வைணவ, சமண சமயங்களை ஒப்ப மதித்துப் போற்றினான் என்றும் அறிய வருதலால் இவன் காலமே நம்பியார் காலம் எனலாம்.

இரா.இ.

**நாற்கால் நடைப்பழக்கம்:** இது நான்கு கால்களால் நடக்கும் முறையை குறிக்கும். இம் முறை கிடைநிலை நடைப்பழக்கம் (Pronograde) என் றும் கூறப்படும். உயிரினங்கள் பூமியில் நன்கு தக வமைந்து வாழ வேண்டுமானால் ஓர் இடத்திலிருந்து வேறொர் இடத்திற்குச் சென்று வர ஏதோ ஒரு வகையான நகர்ச்சி முறை (Locomotion) தேவைப் படுகிறது. இருகால் நடைப் பழக்கம் (Bipedalism) முதல் பல்வேறு நகர்ச்சி முறைகள் மனிதனிடத்தும் பிற விலங்குகளிடத்தும் தோன்றின. அவற்றுள் ஒன்றே நாற்கால் நடைப்பழக்கம் (Quadrupedalism).

மனிதனுக்கு முந்திய மூதாதைகள் நிலத்தில் வாழ முற்பட்ட போது அவை பலவகையான நகர்ச்சி முறைகளைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பினைப் பெற் றிருந்தன. நான்கு கால்களையும் தரையில் பதித்துக் கிடைநிலையில் நடக்கும் முறையை ஏற்கும் வாய்ப்பு முதல் வகை. குந்தியிருக்கும் நிலை (Squatting Posture) அல்லது கால்களை மடக்கிக் குதித்துகுதித்து நகரும் முறையை ஏற்கும் வாய்ப்பு இரண்டாம் வகை. முன்னங்கால்களை தரையில் வைக்காமல் மேலேயே தூக்கி வைத்துக் கொண்டு பின்னங் கால் களைக் கொண்டு நிமிர்ந்து நிற்கும் முறையை ஏற் பது மூன்றாம் வகை.

மனித மூதாதைகளான உயர்பாலூட்டிகள் (Primates) முதலில் மரங்களில் தகவமைந்து வாழும் பொருட்டுப் பற்றுந்தன்மையுடைய (Grasping) கைகளைப்பெற்றன.இதன் பின்னர் மரங்களில் தாவித் திரியும் பொருட்டுப் பல வகையான நகர்ச்சி முறை களை ஏற்படுத்திக் கொண்டன. இவற்றுள் குறிப் பிடத்தக்கது மேற்கையை வீசிப் பற்றி நடக்கும் முறை (Brachiation) ஆகும். உயர்பாலூட்டிகளுள் ஒரு பிரிவு, அடர்ந்த காடுகளில் வாழாமல் பூமியில் வாழ முற்பட்டன. அப்பிரிவிலிருந்து தோன்றியவனே மனிதன். மனிதனின் இருகால் நடைப்பழக்க முறை, நில அடுக்கின் மூன்றாம் பிரிவின் புத்தம் புதிய காலத் தின் இடைக்காலத்தில் (Middle Pliocene Period) தோன்றியது என உடல்சார் மானிடவியலார் (Physical Anthropologists) மதிப்பிட்டுள்ளனர்.

உயிரினங்களின் நகர்ச்சி முறை நான்கு கால் களால் நடக்கும் முறையாக இருந்தாலும், இருகால்

களால் நடக்கும் முறையாக இருந்தாலும் அது அந்தந்த உயிரினத்திற்கும் பூமிக்கும் இடையே நிகழும் இயக்கவியலைப் பொறுத்து அமைகிறது. ஓர் உயிரியினுக்கும் (Organism) பூமியின் ஈர்ப்பு விசைக்கும் இடையே நிலவும் இந்த உயிர்சார் இயக்கவியலே (Biomechanical) அதன் நகர்ச்சி முறையை வடிவமைக்கிறது. ஓர் உயிரியின் தலைப்பாகத்தின் எடையும், உடலின் முன்பாகத்தின் எடையும் மிகுதியாகும் போது அவ்வுயிரியின் எடையைச் சுமக்கும் தண்டுவடமும் அதன் பக்கவாட்டு முட்களும் (Spines) நேராக நிற்க இயலுவதில்லை. அதே நேரத்தில் உடலின் எடை பெரும்பகுதி பின்பகுதியில் சேரும் போது தண்டுவடத்தின் அமைப்பு நேராக நிற்கும் நிலைக்கு மாற்றம் பெறுகிறது. ஆகவே, உடலின் எடை புவிஈர்ப்பு விசையோடு தொடர்பு கொள்ளும் இடம் உடலின் முன்பகுதியா, பின்பகுதியா என்பதைப் பொறுத்தே ஓர் உயிரியின் நடைப்பழக்க முறை அமைகிறது.

மனித மூதாதையர்களான ஆப்பிரிக்கக் குரங்கு வகையும் (Chimpanzee), வாலில்லா ஆப்பிரிக்கப் பெருங்குரங்கு வகையும் (Gorilla), காட்டு மனிதக் குரங்கும் (Orangutan) கனத்த தலை, எடைமிகுந்த மார்பகம், தடித்த முன்னங் கைகள் ஆகியவற்றைக் கொண்டிருந்தமையால் உடலின் எடை இடுப்புப் பகுதியிலோ (Pelvis) அதற்கும் பின்னரோ இல்லாமல் உடலின் மையப் பகுதியிலிருந்து முன் பக்கமாகவே தாங்கிக் கொள்ள வேண்டியதாயிற்று. இதன் பின்னங் கால்கள் உடலின் முழு எடையைத் தாங்கிக் கொள்ளு மளவிற்கு வலுவானதாக இல்லாமலிருப்பதற்கு மேற்கூறியவையே காரணமாகும். அவ்வாறே இவ் விலங்குகளின் இடுப்புப்பகுதி உடலின் எடையைச் சுமந்து செல்லுமளவிற்கு வலுவுடன் இல்லாமல் உள்ளது. இதனாலேயே இவ்விலங்குகள் நாற்கால் நடைமுறையைக் கொண்டுள்ளன. இவற்றின் நாற்கால் நடைப்பழக்கம் பிற பாலூட்டி (Mammals) விலங்குகளிடமிருந்து சற்று வேறுபட்டது. மேற்கூறிய வாலில்லாக்குரங்குகளின் கைகள் கால்களைக் காட்டிலும் நீண்டவையாக உள்ளமையால் முதுகெலும்பின் அமைப்பு பூமிக்கு இணையாக இருப்பதில்லை. இதனால் இவை நடக்கும்போது ஓரளவு நிமிர்ந்த (Partial Erect) முறை போன்று காணப்படும்.

நாற்கால் நடைப் பழக்கத்தைக் கொண்ட விலங்குகளின் முதுகுத் தண்டு, வில்லைப் போன்றோ ஒரு வளைவைப் போன்றோ (Bow or Arch) இருக்கும். வில்லைப் போன்று இருக்கும் இந்த முதுகுத் தண்டில் மிகவும் உயர்ந்த பகுதி முதுகுத்தண்டின் மையப்



ஆப்பிரிக்கப் பெருங் குரங்கின் நடைப்பழக்கம்

பகுதியாக இருக்கும் அல்லது சற்றுப் பின் தள்ளி இருக்கும். இதற்குக் காரணம் உடலின் எடைதாங்கும் போக்கில் முதுகுத்தண்டு ஏற்படுத்திக் கொள்ளும் தகவமைப்பேயாகும்.

கிடைநிலையில் நடக்கும் உயர்பாலூட்டிகளில் (Pronograde Primates) முதுகெலும்பு எதிர்ப்புறம் சாய்ந்த முதுகெலும்பாக (Anticlinal vertebra)இருக்கும். அதாவது வில் போன்றோ வளைவு போன்றோ இருக்கும் தன்மையை இது சுட்டிக் காட்டுகிறது. ஆனால் நிமிர்ந்து நடக்கும் உயர்பாலூட்டிகளில் (Orthograde Primates) எதிர்ப்புறம் சாய்ந்த முதுகெலும்பு இருப்பதில்லை. முதுகெலும்பின் அமைப்பில் ஏற்படும் இம்மாற்றம் உடலை நேராக நடக்கச் செய்யும் இயக்கத்தின் போது பின்புறத் தசைகளின் பிடிப்பில் ஏற்படும் மாற்றத்தைச் சார்ந்துள்ளது. ஆகவே, கிடைநிலை நடைப்பாணி (Orthograde posture),கிடைநிலை நாற்கால் நடைப்பழக்கம்(Orthograde Quadrupedal Locomotion), கிடைநிலையில் மேற்கைகளை வீசி, கிளைகளைப் பற்றும் முறை (Orthograde Brachiation) ஆகிய அனைத்து முறைகளிலும் பின்புற எலும்புகளுக்குத் துணையாக நிற்கும் தசைகளின் அமைப்பிலும் மாற்றங்கள் உள்ளன என்பதை அறிய முடியும்.

உயிரினப் படிமலர்ச்சியில் கிடை நிலையிலிருந்து நிமிர்ந்து நடக்கும் உடலமைப்பைப் பெற்ற மனிதனின் முதுகெலும்பின் அமைப்பு மாறியுள்ளது என்பது மேற்கூறிய கருத்துகளின் மூலம் அறிய முடியும். முதுகுத்தண்டின் முட்கள் உட்புறமாக (ventrally) வளைந்துள்ளன. உடலின் எடையைத் தாங்கும் மையம் உடலின் மையப் பகுதிக்கருகில் வந்துள்ளது. கிடைநிலையிலிருந்து முதுகெலும்பு நிமிர்ந்த நிலைக்கு மாறிய பின்னர் அதன் செயலிலும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. குறிப்பாக உடல் உடையைத் தாங்குவதாகவும் உடலுக்கு அரணாகவும் செயற்படுகிறது.

மனிதன் பெற்றுள்ள இருகால் நடைப் பழக்கத்திற்கு வழிகோலியது உயரின வாலில்லாக் குரங்குகளின் (great apes) பாதியளவு நிமிர்ந்த நடைமுறையே(Semi-erect Orthograde) ஆகும். இக்குரங்குகளிலிருந்து மனிதன் பெற்ற நிமிர்ந்த நடைப் பழக்கத்தில் சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. குறிப்பாக, இடுப்புப்பகுதித் தண்டெலும்பு (Lumbar bcne) என்ற கூடுதல் எலும்பமைப்பை மனிதன் பெற வேண்டியிருந்தது. இவ்வமைப்பை உயரின வாலில்லாக் குரங்குகள் பெற்றிருக்கவில்லை. உயிரினங்களின் நகர்ச்சி முறைகளில் நாற்கால் நடைப் பழக்கம் இன்றியமையா நிலையிலுள்ளது என்றும் இதில் மனிதனின் இருகால் நடைமுறைக் கருத்து உள்ளது என்றும் இதன் படிமலர்ச்சி நிலையினை வரிசைப் படுத்திக் கூறலாம். கே.நி சீ.ப.

**நான்சன்** என்பார் நார்வே நாட்டைச்சார்ந்த அரசியல்ஞானி; உயிரியல் வல்லுநர்; கடல் ஆராய்ச்சிக்காரர்; ஆர்டிக்குத்துருவப் பகுதியை ஆய்ந்த அறிஞர் பெருமகன். இவர் கி.பி. 1861-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 10-ஆம் நாள் நார்வேயிலுள்ள புரோயென் (Froen) என்னும் ஊரில் பிறந்தார். இவர் கிறிசுடியானா(இக்காலத்தில் இதனை ஆசுலோ (Aslo) பல்கலைகழகம் என்பர்) பல்கலைக் கழகத்தில் உயிரியல் பட்டம் பெற்றார். உயிர் வாழும் விலங்குகளின் வாழ்வியலை ஆராயும் நோக்குடன் இவர் கி.பி.1882-ஆம் ஆண்டில் ஆர்டிக்குப்பெருங்கடல் பயணத்தை மேற் கொண்டார். நாடு திரும்பியதும் இவர் பெர்கன் (Bergen) இயற்கை வரலாற்று அருங்காட்சியகத்தின் பொறுப்பாளராக நியமிக்கப்பெற்றார். நான்சன் (Nansen) கி.பி. 1888-ஆம் ஆண்டில் மேலும் ஐந்து கூட்டாளிகளுடன் இணைந்து கிரீன்லாந்தைக் (Greenland) கிழக்கு மேற்காகக் கடந்தார். இதனை ஒருவராலும் செய்ய முடியாது என்ற நிலையிருந்த போது செய்துமுடித்த வல்லுநர் இவர்.

வடதுருவ வடிநிலத்தை ஆய்வு செய்து சீரிய அறிவியற் செய்திகளைக் கொணரலாம் என்று நான்சன் நம்பினார். இப்பயணத்தை மேற்கொள்ளப்பனிக் கட்டிகளைத் தாங்கவல்ல சிறப்பான கப்பல் ஒன்று இவரால் கட்டப் பெற்றது. இக்கப்பலுக்குப் பிராம் (Fram) என்று பெயரிட்டார். பிராம் என்னும் சொல்லுக்கு முன்னேற்றம் என்பதுபொருள். நான்சன் கி.பி. 1893-ஆம் ஆண்டு சூன் மாதம் 24-ஆம்நாள்நார்வேயிலிருந்து பிராம்கப்பலில் புறப்பட்டுத்தம் பயணத்தைத் தொடங்கினார். இக்கப்பலில் இரண்டு ஆண்டுகள் தங்கிய அவரும், இலாமர்சோகன்சன் (Hjalmar Johansen) என்பாரும் முயற்சி செய்து வடதுருவத்தில் எசுக்கிமோக்கள் பயன்படுத்தும் கயக்கு (Kayak) என்னும் படகில் பயணம் செய்தனர். வடதுருவத்திற்கு 400 கி.மீ. தொலைவு வரை பயணம் செய்தனர். சொல்லொணாத் துயர்களுக்கு ஆளான அவர்கள் இசுபிட்சுபர்கன் (இக்காலத்தில் அதனைச் சுவால்பார்டு (Svalbard) என்பர்) என்னும் நகரத்திற்குத் திரும்பி வந்தனர். இங்கிலாந்து கப்பலொன்றில் பயணம் செய்து கி.பி. 1896-இல் நார்வே திரும்பினார்.

நார்வே நாட்டை சுவீடன் நாட்டிலிருந்து தனியாகப் பிரிக்கும் முயற்சியில் 1905-ஆம் ஆண்டில் நான்சன் பெரும் பணியாற்றினார். நார்வேயின் அமைச்சராக இங்கிலாந்தில் 1906 முதல் 1908 வரை தொண்டாற்றினார் நான்சன். நார்வே திரும்பியதும் இவர் உயிரியல் துறைப் பேராசிரியராகவும், கடல் ஆய்வாளராகவும் ஆசுலோ பல்கலைக் கழகத்தில்

பணிபுரிந்தார். 1910, 1912, 1913, 1914 ஆகிய ஆண்டுகளில் கடற்பயணங்களை இவர் தொடர்ந்து மேற்கொண்டார். பின்னர் பல நூல்களை வெளியிட்டார். 'வடகோடி முனை' (Farthest North) -1897, 'வடபனிப்படலத்தில் (Northern Mists)-1911, என்னும் நூல்களை இவர் வெளியிட்டார். இந்நூல்கள் ஆர்டிக்குப்பெருங்கடல் ஆய்வு பற்றியவை.

முதல் உலகப் போருக்குப் பின்னர் நான்சன் சர்வதேச சங்கத்தில் (League of Nations) நார்வே நாட்டின் பிரதிநிதியாகப் பணியாற்றினார். ஆசியா மைனரிலிருந்த உருசிய அகதிகளின் மறுவாழ்வுக்கு இவர் உதவி செய்ததுடன், செருமானிய, உருசிய போர்க் கைதிகளைத் தத்தம் நாடுகளுக்குப் போக வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். இவருடைய பெயரில் அடையாளச் சீட்டு ஒன்று அச்சிடப்பட்டு அகதிகளுக்கு நற்சான்றிதழாக வழங்கப்பட்டது. இதனை 'நான்சன் அடையாளச் சீட்டு (NansenPass port) என்பர். தாம் செய்த அறப்பணிகளுக்காக இவருக்கு 1922-ஆம் ஆண்டு நோபல் பரிசு வழங்கப்பட்டது. இவர் நினைவாக ஆர்டிக்குப்பெருங்கடல் பகுதியொன்று நான்சன்லாந்து என்று பெயரிடப் பெற்றது. நான்சன் 1930-ஆம் ஆண்டு மே திங்கள் 13-ஆம் நாள் ஆசுலோ நகரில் காலமானார். இரா.அ.

***நான்சாங்கு***: இது சீனக்குடியரசின் தென் கிழக்குப் பகுதியில் சாங்காய்(Shanghai) சியாங்சீ(Jiangxi) மாநிலத்தின் தலைநகராகும்; பாதுகாப்பு அரண்களைப் பெற்ற பழமையான நகரம். இந்நகரம் கான் (Kan) ஆற்றின் வலக்கரையில் அமைந்துள்ளது. பொயாங் கூ (Poyang Hu)ஏரியின் தென்மேற்கில் உள்ளது. இங்கு உழவுத் தொழிலின் மூலம் உற்பத்தியாகும் பொருள்களின் வணிகம் பெருமளவில் நடைபெறுகிறது. பீங்கான் பாண்டங்கள் இங்குச் சிறப்பாக வனையப்படுகின்றன. இந்நகரம் ஓரளவு வெளிநாட்டினரின் செல்வாக்கின் தாக்கத்திற்காட்பட்டது. நான் சாங்கு(Nanchang) இருப்புப்பாதைத் தொடர்பினைக் கொண்டுள்ளது. சியாங்சீ மாநிலத்தின் விளைபொருள்களான அரிசி, வீட்டுக்குப் பயன்படும் தட்டுமுட்டுப் பொருள்கள், இராமீ ஆடை (Ramie cloth), காகிதம், புகையிலை, சாயப் பொருள்கள் போன்றவற்றின் வணிக மையமாக நான்சாங்கு திகழ்கிறது.

இந்நகரத்திற்குத் தொன்மையான வரலாறுண்டு. இரண்டாயித்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் இதனை யூசாங்கு (Yuchang) என்னும் பெயரால் குறித்தனர். இந்நகரைச் சுற்றி 35 கி.மீ. சுற்றளவுள்ள மதிற்சுவர் கட்டப் பெற்றிருந்தது. தைப்பிங்குக்கலவரம் (கி.பி. 1858-1864) மூண்ட காலத்தில் இந்நகரம் அழிவிலிருந்து தப்பிப் பிழைத்தது. யாங்இட்சி ஆற்றுப் பள்ளத்தாக்கின் முக்கிய நகரங்களில் ஒன்றாக நான்சாங்கு திகழ்ந்தது. தேசியவாதிகளுக்கும், பொதுவுடைமைக் கட்சிக்காரர்களுக்குமிடையே எழுந்த போராட்டத்தின் போதும் இந்நகரம் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தது. பின்னர் 1927-ஆம் ஆண்டில் நான்சாங்கில் பொதுவுடைமைக் கட்சியினர் கலகம் செய்தனர். அதன் விளைவாகச் சீனாவில் உருவாக்கப் பெற்ற முதல் சோவியத்துகுடியரசும் இங்குதான் நிலைநாட்டப் பெற்றது. செஞ்சேனையும் இவ்வூரில் தான் உருவாக்கப்பெற்றது. எனினும் கலவரம் தோல்வியுற்றது. தேசியவாதிகளின் படையினர் 1933-ஆம் ஆண்டில் நான்சாங்கைத் தங்கள் தலைநகராகக் கொண்டு பொதுவுடைமைக் கட்சியினரைப் பல படையெடுப்புகளின் மூலம் தாக்கி அவர்களைச் சீயாங்சீ மாநிலத்திலிருந்தே 1934-இல் விரட்டி அடித்தனர். இரண்டாம் உலகப்போரின்போது சப்பானியர் 1939-ஆம் ஆண்டு மார்ச்சுமாதம் 21-ஆம் நாள் நான்சாங்கு நகரத்தைக் கைப்பற்றினர். ஆனால் 1949 சூலை 21-ஆம் நாள் பொதுவுடைமைக் கட்சியினர் நான்சாங்கைப் பிடித்தனர். இங்கு இயந்திர வகைகள், உழவுத் தொழிலுக்குப் பயன்படும் கருவிகள், பஞ்சாலைகள், காகித ஆலைகள், மருந்து உற்பத்திச் செய்யும் கூடங்கள் போன்றவை சிறப்பாக அமைந்துள்ளன.

நான்சாங்கு நகரத்தின் மக்கள்தொகை 520,000 (1958). இரா.அ.

***நான்சி*** பிரான்சு நாட்டின் வடகிழக்குப் பகுதியில் உள்ளதோர் நகரம். மெருத்தி(Meruthe) ஆற்றங்கரையில், மெர்ன்-இரைன் கால்வாயின் பகுதிகளைச் சுற்றி உருவாக்கப்பெற்றுள்ள மெருத்தி எத்-மோசல் (Meurthe-et-Moselle) என்னும் மாவட்டத்தின் முக்கிய நகரம் நான்சி (Nancy). பிரான்சு நாட்டின் தலைநகரமான பாரிசு மாநகருக்கு 284 கி.மீ. கிழக்கில் இந்நகரம் அமைந்துள்ளது. இந்நகருக்கு அருகில் வளமான இரும்புத் தாதுகள் நிறைந்த கனிம வயல்களைக் காணலாம். இதன் பயனாக இங்குச் சிறப்பான தொழிற்சாலைகள் அமைந்துள்ளன. கண்ணாடி, வேதியியற் பொருள்கள், வெண்கலம், உருக்குத் தொழில்கள், நூல்வெளியீட்டுப் பதிப்பகங்கள், ஆடை உற்பத்தி, மரச்சாமான்கள் உற்பத்தி போன்ற தொழில்கள் நான்சியில் நடைபெறுகின்றன.

நான்சி உலொராயின்(Lorraine) பகுதியின் தலைநகராயிருந்தது. கி.பி.9- ஆம் நூற்றாண்டில் உலொராயினின் பிரபுக்கள் இங்கு வாழத் தலைப்பட்டனர். இரண்டாம் இரேனே பிரபு என்பார்(Duke

Rene II) கி.பி 1447-ஆம் ஆண்டில் இங்கு நடைபெற்ற போரில் பர்கண்டியின் அரசர் விறல் வீரர் சார்லசு (Charles the Bold) என்பாரைத் தோற்கடித்தார். பிரெஞ்சுக்காரர் நான்சியை கி.பி. 1633-ஆம் ஆண்டில் கைப்பற்றி அதன் சுவர்களைத் தகர்த்தனர். பின்னர் கி.பி.1697-ஆம் ஆண்டில் ஏற்பட்ட இரிசுவிக்கு (Rys-wick) உடன்படிக்கையின்படி இது கோமகன் லியோ போல்டு என்பாரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் இந்நகரத்தை எழில் கொழிக்கும் அழகு நகராக்கினார்.

போலந்து அரசப் பதவியை இழந்த முதலாம் தனிசுலாசு (Stanislas I) உலொராயினை ஆண்ட போது அவர் தம் அரண்மனையை நான்சிக்கு மாற்றிக் கொண்டதுடன், புதியதொரு மாளிகையும் கட்டிக் கொண்டார். நான்சி கி.பி.1766-ஆம் ஆண்டில் பிரெஞ்சுக்காரரின் முடியாட்சிக்குட்படுத்தப் பட்டது. பிரசியர்கள் (Prussins) இதனை கி.பி. 1870 க்கும் 1873க்கும் இடைப்பட்ட காலத்தில் பிடித்துக் கொண்டனர். முதல் உலகப் போரின்போது குண்டு களால் தாக்கப் பெற்ற இந்நகரம் ஓரளவு சிதைந்தது. இரண்டாம் உலகப் போரின் போது நான்சி 1944-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15-ஆம் நாள் முன்னேறி வந்த அமெரிக்கப் படையினர் வசமாயிற்று கி.பி.18-ஆம் நூற்றாண்டு கட்டடங்களுக்கு இது பெயர் பெற்றது. நான்சி பல்கலைக் கழகம் கி.பி.1768-ஆம் ஆண்டில் நிலைநாட்டப் பெற்றது. இதன் மக்கள் தொகை 107,902(1975).

இரா.அ.

*நான்சிங்கு*: சீனாவின் மத்திய கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள ஒரு நகரம். இதை நான்கிங்கு(Nan-ching) என்றும் குறிப்பர். இது கியாங்சி (Kiangsi) என்னும் பகுதியின் தலைநகரமாகும். இந்நகரம் பண்டைக்காலந்தொட்டே பல சமயங்களில் சீனாவின் தலைநகரமாக இருந்துவந்ததால் இந்நகரைச் சுற்றிக் கோட்டை இருந்திருக்கின்றது. 'மிங்' பேரரசர்கள் முதலில் இந்நகருக்கு யிங்டீன் (Yingtien) என்று பெயரிட்டு கி.பி. 1368-இல் தங்களுடைய பேரரசின் தென்பகுதிக்குத் தலைநகராக்கினர். பின்னர் கி.பி. 1421-இல் நான்சிங் என்று பெயரிட்டிருக்கின்றனர். 'நான்' என்றால் தெற்கு, 'சிங்' அல்லது கிங் என்றால் தலைநகர் என்று பொருள்படும்.

நான்சிங்கு நகரம் யாங்சுடீ என்னும் ஆற்றின் வட கரையில் உள்ளது. இந்நகர் கலை, பண்பாடு, கல்வி ஆகியவற்றின் மையமாகத் திகழ்கின்றது. பல்கலைக் கழகம், கடற்படை பயிற்சிக் கல்லூரி, விமான நிலையம் முதலியன இருக்கின்றன. பெருந்தொழில்கள் பல தொடங்கப்பட்டுத் தொழில் மையமாக விளங்குகின்றது. நானகீன் என்னும் ஒரு வகைத் துணி இங்கு உற்பத்தி செய்யப்படுகின்றது.

நான்சிங்கு நகருக்கு அருகில் வானிலை ஆய்வுக் கூடம் அமைந்துள்ளது. இந்நகரைச் சுற்றி அமைந்துள்ள மதிலுக்கு வெளியே மிங் பேரரசர்களின் கல்லறைகளும், புதிய சீனாவின் தந்தை என்று போற்றப்படும் சன்யாட்சனின் கல்லறையும் உள்ளன. இந்நகரின் 1970-ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி மக்கள்தொகை 1,700,000.

இங்கு கி.பி. 1842-இல் செய்யப்பட்ட நான்சிங்கு ஒப்பந்தம் இந்நகரில் நடந்த முக்கிய நிகழ்ச்சியாகும். இதன் விளைவாகச் சீனாவின் ஐந்து முக்கிய துறைமுகங்கள் வெளிநாட்டு வணிகத்திற்குத் திறந்து விடப்பட்டன. இதுசீனாவில் தைப்பிங்குக்கலகம் நடந்த சமயத்தில் கி.பி. 1853 முதல் கி.பி 1864 வரை கலகக்காரர்களின் தலைநகராகச் செயற்பட்டிருக்கின்றது. சீனாவில் புரட்சி நடந்தபொழுது புரட்சியாளர்கள் நான்சிங்கை கி.பி.1911-இல் கைப்பற்றினர். சன்யாட்சனின் தற்காலிக அரசின் தலைநகராக இருந்தது. கி.பி. 1927-இல் சியாங்கேசேக்கின் தேசிய அரசின் தலைமையிடமாகியது.

இது கி.பி. 1937-இல் சீனாவுக்கும் சப்பானுக்கும் இடையே நடந்த போரில் நான்சிங்கு நகரம் சப்பானியர் வசமாகியதால் தலைநகர் சன்கிங்கு என்ற இடத்திற்கு மாற்றப்பட்டது. கி.பி. 1945-இல் சப்பான் இரண்டாம் உலகப்போரில் வீழ்ந்தபோது, நான்சிங்கு மீண்டும் தலைநகராக்கப்பட்டது. கி.பி. 1949-இல் பொது உடைமைவாதிகள் இந்நகரைக் கைப்பற்றினர். பீகிங்கு கி.பி. 1950-இல் இதன் தலைநகராக மாற்றப்பட்டது.

ஆ.செ.

*நான்சு*: நான்சு (Nantes) பிரான்சு நாட்டிலுள்ள ஒரு முக்கிய நகரமாகும். இது அட்லாண்டிக்கு உலோயர் (Loire) என்ற பகுதியின் தலைநகராக விளங்குகிறது. பிரான்சு நாட்டின் தலைநகரான பாரிசு மாநகருக்குத் தென்மேற்கே 337 கி.மீ. தொலைவில் உள்ளது.

நான்சு நகர் உலோயர் (Loire) ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. எல்லா வசதிகளும் கொண்ட ஒரு சிறந்த துறைமுகத்தைக் கொண்டுள்ளது. இங்குக் கப்பல் கட்டும் தொழில் நடைபெறுகின்றது. இரசாயன உரம், சாயம் ஆகியன தயாரித்தலோடு, இயந்திரங்களும் இந்நகரில் உற்பத்தி செய்யப்படுகின்றன. இங்கு, கி.பி. 1961-இல் பல்கலைக் கழகம் ஏற்படுத்தப் பட்டது. இந்நகரின் மக்கள்தொகை கி.பி. 1971-இன் கணக்கெடுப்பின்படி 269,400.

நான்சு நகரில் பல வரலாற்று முதன்மை வாய்ந்த நிகழ்ச்சிகள் நடைபெற்றிருக்கின்றன. இந்நகர் நாம் நிடிசு என்ற 'கால்' (Gaul) இன மக்களின் முக்கிய நகரமாக இருந்திருக்கின்றது. இந்நகர் கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட அந்நியர் படையெடுப்புகளால் மிகுதியாகப் பாதிக்கப்பட்டது. பின்னர் கி.பி. 1118-இல் நடந்த பெரும் தீ விபத்தினால், இந்நகர் பெருத்த அழிவிற்குள்ளாகியது. இந்நகர் கி.பி. 14, 15-ஆம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் இடையே நடந்த நூற்றாண்டுப் போரின் போதும் மிகவும் நாசமாகியது. பிரான்சை ஆண்ட நான்காம் என்றி இந்நகரில்தான் கி.பி. 1598-ஆம் ஆண்டு ஆகசுட்டு திங்கள் 13-ஆம் நாள் புகழ் பெற்ற நான்சு அறிக்கையைப் பிறப்பித்தார். இந்நகரம் கி.பி. 1789-இல் ஏற்பட்ட புரட்சியின் போது சொல்லொணாக் கொடுமைகளையும் அடக்கு முறையையும் அடைந்தது. இரண்டாம் உலகப்போரில் செருமானியர்கள் நான்சைக் கைப்பற்றி இந்நகருக்குப் பெரும் சேதங்களை விளைவித்தனர்.

நான்சு நகர் கி.பி. 1920-ஆம் ஆண்டு முதல் நல்ல வளர்ச்சியடையத் தொடங்கியது. பல கட்டடங்கள் எழுப்பப்பட்டன. இரண்டாம் உலகப் போரில் ஏற்பட்ட சேதத்திற்குப் பின் மீண்டும் கட்டடங்களும், தொழிற்சாலைகளும் கட்டப்பட்டன. இப்பொழுது இந்நகர் பெரிய தொழிற்சாலைகளின் மையமாகவும், பொருளாதார வளர்ச்சி மையமாகவும் திகழ்கின்றது. ஆ.செ.

*நான்சு அறிவிப்பு*: பிரான்சு நாட்டின் மன்னர் நான்காம் என்றி கி.பி. 1598-ஆம் ஆண்டு ஆகசுட்டுத் திங்கள் 13-ஆம் நாள் நான்சு (Nantes) நகரில் ஓர் ஆணையை வெளியிட்டார். இதுவே நான்சு பிரகடனம் என்று கூறப்படுகின்றது.

நான்காம் என்றி ஒரு சீர்திருத்தக் கிறித்தவர். அதனால், கத்தோலிக்க நாடான பிரான்சின் மக்கள் அவரை வெறுத்தனர். அவர்களின் ஒத்துழைப்பைப் பெற்று நன்முறையில் ஆட்சி செலுத்த வேண்டுமானால் தாம் கத்தோலிக்க மதத்தைச் சார்வது தான் சிறந்த வழி என எண்ணி அவ்வாறே செய்தார். மன்னரது இச்செய்கை சீர்திருத்த கிறித்தவர்களைச் சீற்றங்கொள்ளச் செய்தது. என்றியின் வெற்றிக்கும், பிரான்சின் மன்னராவதற்கும் காரணமாக இருந்த தம்மையும் தமது சமயத்தையும் விட்டுச் சென்றது துரோகம் எனக் கருதினர். அதனால் சீர்திருத்த கிறித்தவர்களைச் சமாதானப்படுத்தி ஆதரிக்க வேண்டியது தமது கடமை எனக் கருதிய என்றி நான்சு அறிவிப்பை வெளியிட்டார். இந்த ஆணை நிலையானது என்றும் அறிவித்தார்.

நான்சு பிரகடனம் சமயச்சீர்திருத்த வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. இது சீர்திருத்தக்கிறித்தவர்களுக்குச் சமயச் சுதந்திரத்தையும் வழிபாடு நடத்தும் உரிமையையும் அளித்தது. சீர்திருத்த கிறித்தவர்கள் வாழ்ந்த இருநூற்றிற்கும் மேற்பட்ட நகரங்களிலும் மூவாயிரம் கோட்டைகளிலும் வழிபாடு நடத்திக் கொள்ளலாம் என்று அறிவித்தது. பள்ளிகள், கல்லூரிகள், அச்சுக் கூடங்கள் போன்றவை நடத்தவும் உரிமை வழங்கியது. கத்தோலிக்கரைப் போல் இவர்களுக்கும் அரசியல் உரிமைகளையும் கொடுத்தது. நீதிமன்றங்களில் சீர்திருத்த கிறித்தவர்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரிப்பதற்கு ஏற்படுத்தப்பட்ட குழுக்களில் சீர்திருத்தக் கிறித்தவ நீதிபதியும் இடம் பெற்றார். சீர்திருத்த கிறித்தவர்களுக்குக் கொடுக்கப்பட்ட உரிமைகளும், சலுகைகளும் பறிக்கப்பட மாட்டா என்பதற்கு உறுதியாக அரண்கள் அமைந்த இருநூறு நகரங்கள் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. பாதுகாப்பிற்காக அவர்கள் படைகள் வைத்துக்கொள்ளலாம். அதன் பராமரிப்புச் செலவை அரசர் ஏற்பார். இந்த ஆணை, கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலேயே, எந்த நாடும் கடைபிடிக்காத சமய சகிப்புத் தன்மையை வலியுறுத்தியது. இது என்றி மன்னரின் மதிநுட்பத்தையும் பரந்த மனப்பான்மையையும் எதிரொலிக்கின்றது எனலாம். ஆனால், இவ்வாணையைப் பிரான்சின் பதினான்காம் உலூயி மன்னர் கி.பி. 1685-இல் விலக்கிவிட்டார். ஆ.செ.

*நான்-நீ தொடர்பு*: ஒருவர் தன்னைக் குறிப்பிடும்போது பயன்படுத்தும் சொல் 'நான்' என்பதாம். இது தன்மை ஒருமையைக் குறிக்கும் மறுபெயர்ச் சொல்லாம். ஒருவன் தான் செய்த செயலை யார் செய்தார் என்று குறிப்பிடும்போது 'நான்' செய்தேன் என்று குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படும் சொல்லாகும். அதே சமயத்தில் 'நான் செய்தேன்' என்று கூறுவது அகங்காரத்தைக் குறிக்குமென்று கருதி கடவுளிடமோ, உயர்ந்த தலைவரிடமோ கூறும்போது 'அடியேன் செய்தேன்' என்று கூறுவது மரபு. இவ்விதமே 'நீ' என்ற சொல் முன்னிலை ஒருமையைக் குறிக்கும் மறுபெயர்ச் சொல்லாகும். இச் சொல் 'நீ' என்பதற்குப் பதில் நீர், நீங்கள் என்று மரியாதையைக் குறிப்பதற்காக ஒருமையிலும் பயன்படுத்துவது வழக்கம். பொதுவாகத்தமிழில் எதிரில் உள்ளவர் சமூகத்தில் தாழ்வுநிலையில் இருக்கும்போது பேசுபவர் உயர்ந்த சமூகநிலையில் இருந்து 'நீ' என்ற சொல்லைப் பேசுவதும் மரபு. முதலாளிக்கும் தொழிலாளிக்கும் உள்ள தொடர்பே நான்-நீ என்ற சொற்களுக்கிடையே உள்ள தொடர்பாகும் (I-You Relationship). இவ்விதமே ஆசிரிய

ருக்கும் மாணவருக்கும் உள்ள தொடர்பு 'நான்-நீ' தொடர்பாகும். இவற்றில் முதலாளியும், ஆசிரியரும் மட்டுமே 'நான்' என்ற சொல்லையும் அவர்களே தங்களுக்கு முன்னிலையில் உள்ள தொழிலாளிகளை யும், மாணவர்களையும் பேசும்போது 'நீ' என்ற சொல்லையும் பயன்படுத்துவர்.ஆனால் இதே தொழி லாளிகளும் மாணவர்களும் தனித்தனியே பேசும் போது தன்னைக் குறிக்கும்போது 'நான்' என்பர், எதிரில் அல்லது முன்னிலையில் உள்ள முதலாளியை யும் ஆசிரியரையும் குறிக்கும்போது 'நீ' என்ற சொல் லைப் பயன்படுத்துவது வழக்கமன்று அதற்குப் பதில் 'நீங்கள்' என்றோ 'தாங்கள்' என்றோ ஒருமையைக் குறிக்குமிடத்தும் பயன்படுத்துவர். நான் என்பது சமுதாயத்தில் எல்லோரும் வித்தி யாசம் இல்லாமல் பயன்படுத்துவதாகும். 'நீ' என்ற சொல் முன்னிலையில் உள்ளவருடைய தகுதி அறிந்து, பயன்படுத்துவதாகும்.

மேற்கூறப்பட்ட முதலாளியும், தொழிலாளியும், ஆசிரியரும், மாணவரும் அவரவர்களே சேர்ந்த நிறுவனத்தில் சிறப்பாகச் செயற்படும்போது 'நான் -நீ தொடர்பு' போல் இல்லாமல் 'நாம்' என்ற சொல்லையே பயன்படுத்த வேண்டும். 'நாம்' என்ற சொல் நான்-நீ தொடர்பில் காணப்படும் வேறு பாட்டைக் காட்டுவதில்லை. இருவரிடமும் சமத் துவம் தோன்றுகிறது. பொதுவாக மக்கள் குழுவாக எந்த நிறுவனத்தில் செயற்படும் போதும் குறைந்த செலவில் அதிக உற்பத்தியைஅல்லது பலனை அடைய 'நாம்' என்ற சொல்லைப் பயன்படுத்தி நாம் எல்லோ ரும் சமம் என்ற உணர்வைத் தோற்றுவிக்க வேண் டும். சுருங்கக்கூறின் நாம் என்ற உணர்வு முதலாளி, தொழிலாளி, ஆசிரியர், மாணவர் என்பவர்களிடம் சம உணர்வைத் தோற்றுவிப்பதால் செய்யும் செய லில் ஒத்துழைப்பையும், முன்னேற்றத்தையும் தோற்று விக்கும்.

ஆகையால் சமூகத்தில் யாவரும் சம உணர் வோடு சேர்ந்து செயற்பட 'நாம்' என்ற உணர்வே சிறந்ததாகும். ஆனால் நான்-நீ தொடர்பு சிறப் பாக அமையாது. இவ்விதமே கணவன்-மனைவி, பெற்றோர்-மக்கள், அதிகாரி-அலுவலர் போன்றவர் கள் 'நான்-நீ தொடர்பு' அற்று 'நாம்' என்ற உணர் வோடு செயற்பட்டால் அவர்களுடைய வாழ்க்கை சிறப்பாக, அமைதியாக முன்னேற்றத்துடன் காணப் படும்.

வை.ந.

**நான்மணிக் கடிகை** இது, விளம்பிநாகனா ரால் இயற்றப்பட்டது. 'நான்கு இரத்தின மணிகளா லானதோர் அணிகலன்' எனப் பொருள் விரித்து ஒளிர்கின்றது. அணிந்து கொண்டார் உடல் அழகு பெறும் இவ்வணி கலனைப் போல, கொள்ளுவனவும் தள்ளுவனவும் ஆக எடுத்துச் சுட்டப்படும் நான்கு பொருளினாலமைந்த இந்நூலைக் கற்றொழுகுவார் உயிர் உறுதி பெறும். இதனால் இது, உவமையாகு பெயராயிற்று. கடவுள் வாழ்த்தொடு கூடிய தற்சிறப் புப் பாயிரம் இரண்டும், நூலின் செய்யுள்கள் 104-ம் ஆக 106 செய்யுட்களைக் கொண்டது இந்நூல். இது, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா ஐந்தடிப் பஃறொடை வெண்பா ஆகியவற்றானமைந்தது. பாட் டொன்றுக்கு நான்கு செய்திகள் கூறப்படுகின்றன.

சிறுபஞ்சமூலம், திரிகடுகம் போல இயற்றப்பட்ட இந்நான் மணிக்கடிகையின் ஆசிரியர் விளம்பிநாக னாரின் ஊர் முதலானவை அறிவதற்கில்லையா யினும், இவரது தற்சிறப்புப் பாயிரத்தால், இவர் வைணவரென்பது ஓரளவு புலனாகிறது. இது மகா வித்துவான் கோ. இராசகோபாலப் பிள்ளையவர் களது உரையுடன் அச்சாகியுளது. இதில் 26-ஆம் செய்யுளாகிய 'அலைப்பான் பிறவுயிரை' எனத் தொடங்கும் செய்யுளுக்கு மட்டும் உரை இல்லை; அதனைக் கா.ர. கோவிந்தசாமி முதலியார் நிறைவு செய்துள்ளார். இந்நூல் இளவழகனார் எனும் தி.சு. பாலசுந்தரனார் உரையுடன் ஒருமுறைஅச்சாகி யுளது.

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றா தலின் நூலாசிரியரின் காலம் ஏறத்தாழ 1800 ஆண்டுகட்கு முற்பட்டது. இது, கடைச்சங்க நூலாத லின் நல்ல தமிழ் நடைச் சிறப்பினை உடையது.

வீ.சொ.

**நான்மணிமாலை:** இது சிற்றிலக்கிய வகை களில் ஒன்று. மணிகள் இணை இணையாக இணைந்து அமைந்த மாலை போன்று நால்வகைப் பாவகைகள் விரவிய நாற்பது பாடல்களைக் கொண்டு பெரும்பாலும் துதிப்பொருண்மை வர இயல்வது நான்மணிமாலையாகும். இம்மாலை நூலில் பாடல்கள் அந்தாதித்தே வரும். பாவகையின் எண் ணிக்கையாலும் பாடல்களின் எண்ணிக்கையாலும் இப்பெயர் அமைந்தது. மூவகைப் பாக்களால் முப்பது பாடல்கள் அமைவது மும்மணிமாலை என்பது போலவே நான்மணி மாலையும் அமைந்துள்ளது. கிடைத்துள்ள நான்மணிமாலை என்னும் இலக்கிய வகையில் முதலில் தோன்றியது கோயில் நான்மணி மாலையாகும். மகாகவி சுப்பிரமணிய பாரதியார் இயற்றியது விநாயகர் நான்மணி மாலையாகும்.

பாட்டியல் நூல்களில் இதன் இலக்கணம் 'வெண்பா கலித்துறை அகவல் விருத்தம் நண்பாய் வருவது நான்மணிமாலை' எனக் காணப்படுவதால்

வெண்பா, கலித்துறை, ஆசிரியம், விருத்தப்பா ஆகிய நால்வகைப் பாக்கள் நான்மணிமாலையில் வரப் பெறும் என்பது தெளிவு. இவற்றுள்ளும் ஆசிரியம் முதலில் வரவேண்டும் எனும் விதியைப் பன்னிரு பாட்டியல் கூறுகிறது. முறைவைப்பில் பாட்டியல் நூல்களிடையே வேறுபாடு காணப்பெறுகிறது. தொன்னூல் விளக்க ஆசிரியர் விருத்தப்பாக்கள் நாற்பது வர வேண்டும் எனக் கூறியிருப்பது யாப்பமைதி மாற்றத்தின் காரணமேயாம்.

கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதல் இருபதாம் நூற்றாண்டு வரை நான்மணிமாலை இலக்கியங்கள் எழுந்துள்ளன. திருவாரூர் நான்மணிமாலையைக் குமரகுருபரர் இயற்றினார். துறைமங்கலம் சிவப்பிரகாசர் நால்வர் நான்மணிமாலை தந்தார். ஊர், தெய்வம், அடியார் பெயர்களில் இம்மாலை நூல்கள் எழுந்தன. எப்பொருளும் பாடுபொருளாக அமையலாம். எனினும் எழுந்தவை துதிப்பொருண்மை உடையனவே. பி.தெ.

**நான்முகன் திருவந்தாதி** என்னும் நூல், வைணவர்களின் தமிழ் வேதமாய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் நான்காம் ஆயிரமாகக் கருதப் பெறும் இயற்பா என்னும் பகுதியில் நான்காம் பகுதியாக அமைந்துள்ளது. இது திருமழிசை ஆழ்வாரால் அருளிச் செய்யப்பட்டது. 'நான்முகனை நாராயணன் படைத்தான்' என்று நூல் தொடங்குகின்றதாதலினாலும், அந்தாதி யாப்பில் அமைந்திருப்பதாலும் இதற்கு நான்முகன் திருவந்தாதி என்னும் பெயர் ஏற்பட்டுள்ளது. இது தொண்ணூற்றாறு வெண்பாக்களைக் கொண்டது. இந்நூற் சிறப்பைக் குறிப்பிட்டுச் சீராமப்பிள்ளை பாடிய தனியன் ஒன்றும் உண்டு. பெரும்பான்மையான ஏடுகளில் நாலாந் திருவந்தாதி, நான்காந் திருவந்தாதி என இந்நூற்பெயர் வழங்கி வந்ததாகக் குறிப்புகள் காணப்பெறுகின்றன.

திருமாலைப் பரம்பொருளாகக் கொண்டு இலங்குவதாகலின் அப்பெருமானின் சிறப்பு, அவனைத் தொழுதலினால் ஏற்படும் பயன்கள் முதலியவற்றை மிகவும் உறைத்த பத்திச் சிறப்புடன் திருமழிசை ஆழ்வார் அருளியுள்ளார். வைணவ சமயத்தில் பெருமானுக்கு ஏற்றம் கொடுப்பதைக் காட்டிலும் அடியார்களுக்கு மிக அதிகம் ஏற்றம் கொடுத்துப் பாராட்டுவது மரபு. அவர்கள் வழக்காறுகளில் தாசானுதாசன், அடியார்க்கடியன் போன்ற தொடர்கள் அடிக்கடி பயிலப்பட்டு வரும். அம்மரபை ஒட்டியே திருமழிசை ஆழ்வார் இந்நான்முகன் திருவந்தாதியிலும் பல பாடல்களில் அடியார்களின் பெருமையையும் போற்றிப் பாடியுள்ளார். திருமால் திருவடியிணைகளைத் தொழுதால் உடனே நற்பயன் கிட்டும் என்பது ஒருதலை. அதைவிட எளிமையான வழி ஒன்றுண்டு. அதுயாதெனில் திருமாலடியாரைக் கண்டு தொழுது வாழ்ந்தால் தங்கள் வினை நீங்கப் பெற்று விரைவில் வைகுந்தப் பதவி பெறுவர் என்பதாம். 'பழுதாகாதென்றறிந்தேன் பாற்கடலான் பாதம், வழுவா வகை நினைந்து வைகல்-தொழு வாரைக் கண்டிறைஞ்சி வாழ்வார் கலந்த வினை கெடுத்து, விண்திறந்து வீற்றிருப்பார் மிக்கு' என்பதே அப்பாடலாகும். இதனைப் போன்ற பலகருத்துக் கருவூலங்கள் இந்நான்முகன் திருவந்தாதியில் செறிந்து காணப் பெறுகின்றன. இரா.ச.

**நானாசாகிபு**, தென்னிந்தியாவைச் சேர்ந்த மராட்டிய அரசின் பேசுவாக்கள் (Peshwas) குலத்தைச் சேர்ந்தவர்.

நானாசாகிபின் இயற்பெயர் 'தந்துபந்து' என்பதாகும். ஆங்கிலேயருக்கும் மராத்தியருக்கும் நடந்த போரின் விளைவாகப் பதவி நீக்கம் செய்யப்பட்ட பேசுவா இரண்டாம் பாசிராவினால் கி.பி. 1827 இல் இவர் தத்து எடுக்கப்பட்டார். இவர் நல்ல கல்வி கற்றுக் கொடுக்கப்பட்டுச் சீரும் சிறப்புமாக வளர்க்கப்பட்டார்.

இரண்டாம் பாசிராவ் இறந்த பிறகு அவருடைய சொத்துகள் இவரை அடைந்தன. பாசிராவ் ஆங்கிலேயரிடமிருந்து ஆண்டுக்கு ரூபாய் எட்டு இலட்சம் ஓய்வூதியமாகப் பெற்று வந்தார் அவருடைய மறைவுக்குப் பின் அவருடைய வாரிசு என்ற முறையில் நானாசாகிபு அந்த ஓய்வூதியத்தைப் பெற முயன்றார். ஆனால் தலைமை ஆளுநர் தல்கௌசி பிரபு அதை நானாசாகிபுக்குக் கொடுக்க மறுத்துவிட்டார். நானாசாகிபு இங்கிலாந்துக்குக்கூடத் தன் பேராளரை அனுப்பினார். ஆனால் இவருக்கு வெற்றி கிட்டவில்லை. இதுவே இவர் ஆங்கிலேயரை வெறுக்கக் காரணமாயிற்று. இவர் ஆங்கிலேயர்பால் தீராப் பகைமை பூண்டார். ஆங்கிலேயரை எதிர்த்துச் சிப்பாய்க் கலகம் தோன்றியபொழுது, தில்லிக்கும் இலக்னோவுக்கும் தாமே பல தடவை சென்றும் தம்முடைய ஆட்களை நாட்டின் பல பகுதிகளுக்கு அனுப்பியும் அக் கலகத்தைப் பரவச் செய்து வலுவடையச் செய்தார். சிப்பாய்க் கலகம் பரவி வந்த சமயத்தில், நானாசாகிபு கான்பூருக்கு அருகில் உள்ள பித்தூர் என்ற இடத்தில் தம்மைப் பேசுவாவாகப் பிரகடனப் படுத்திக் கொண்டார்; தம்முடைய தளபதியான தாந்தியாதோபு மற்றும் அளிமுல்லாக்கான் போன்றோரின் உதவியுடன் கலகக்காரச் சிப்பாய்களுக்குத் தலைமைப் பொறுப்பேற்றுக் கான்பூரை முற்றுகையிட்டார். கடும் போருக்குப்பின்னர் ஆங்கிலத் தளபதியான அக்வீலர் கி.பி. 1857-ஆம் ஆண்டு சூன் 27-இல் சரண

டைந்தார். சுமார் 400 ஆங்கிலச் சிப்பாய்களும், 379 பெண்களும் குழந்தைகளும் அலகாபாதுசென்றடை வதற்கு அத்தளபதியிடம் நானாசாகிபு உத்தரவாத மளித்தார்; ஆனால் தம் வாக்குறுதியை மீறி அவர் களுள் பெரும்பாலோரைக் கொலை செய்தார்; பெண்களையும் குழந்தைகளையும்கூட ஈவிரக்கமின் றிக் கொன்றார். இவருக்கெதிராகப் போர்புரிய அனுப்பப்பட்ட ஆங்கிலப் படையினால் பல தடவை தோற்கடிக்கப்பட்டு,இவர்இறுதியாககி.பி. 1859-இல் நேப்பாளத்திற்குள் விரட்டியடிக்கப்பட்டார். பின்னர் இப்பகுதியில் இவர் இறந்திருக்கக் கூடும் எனக் கருதப்படுகிறது. ஆ.செ.

**நானா பட்னாவிசு (கி.பி. 1741-1800):** தென்னிந்திய வரலாற்றில் கி.பி. 18 – ஆம் நூற் றாண்டில் புகழ்பெற்ற மராட்டியத்தலைவர். வைதிக அந்தணர் குலத்தில் பிறந்த இவர் மராட்டியத் தலை வர்களில் மிகச்சிறந்த சிலருள் ஒருவராவர். இவர் புரிந்த சாதனைகள் மிகவும் போற்றத்தக்கவை. மராட்டிய அரசை, கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த பீசுவாக்களுக்கு உதவியாக இருந்த இவருடைய அரசியல் அறிவும் போர் ஆற்றலும் புக ழுக்கு உரியன.

பேசுவா (Peshwa) மாதவராவ், கி.பி.1762-இல் இவரைத் தமது அணுக்கச் செயலராக (Personal Secretary) அமர்த்திக் கொண்டார். இவரது இயற் பெயர் பாலாசி சனார்த்தனபானு. இவர், நானா பட்னாவிசு அல்லதுநானாபட்னிசு (Nana Fadnis)என வும் சொல்லப்பட்டார். மெலிந்த உயரமான உடல மைப்புப் பெற்ற இவர் மிகவும் சுறுசுறுப்பானவர்; செயல்வீரர்; மிகுதியாகப் பேசுவதை விரும்பாதவர். செயல்வீரராக விளங்கிய நானாபட்னிசு, நேர்மை யையும் திறமையையும் போற்றினார். கணக்குகளை யும்ஆவணங்களையும்மிகச்செம்மையாகவும், ஒழுங்கா கவும் இவர் வைத்திருந்தார். மகாராட்டிர நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்க அல்லும் பகலும் உழைத் துப்புகழ் சேர்த்துக் கொண்டார். இத்திறமைசாலியி டம்சொன்னசொல் தவறாதநேர்மைப்பண்புவிளங்கி யமை குறிப்பிடத்தக்கது. தம் தலைவர் மாதவரா வுக்குக் கீழ்ப்படிந்து நடந்ததுடன் அவருடையகருத்து களையும் குறிக்கோளையும் அவர் கி.பி.1722-இல் இறந்தபிறகு, போற்றி வளர்த்து அரசியலில் அவை நிலைத்து இடம்பெறுமாறு வழிவகுத்தார். அறிவாற் றல்மிக்க நானாபட்னிசு, கி.பி 1783-இல் மராட்டியர் வரலாற்றை முழுவதும் எழுத எண்ணினார். ஆனால் அதற்கு இவருக்கு நேரமில்லாமற்போய்விட்டது. இவர் தமது கலை உணர்வு காரணமாகப் பல கலைப்படங்களைச் சேகரித்திருந்தார். தாம் பதவி யில் இல்லாத காலத்திலும் இவர் தம் நாட்டுப்பற்றுக் காரணமாக மக்களுக்காக உழைத்தார். மராட்டிய ரின் பகைவர்களாக இருந்த ஆங்கிலேயரின் தன்மை, கொள்கை, அரச தந்திரம் முதலியவற்றை இவர் நன்றாகவும் தெளிவாகவும் அறிந்து கொண்டிருந்த தால், அவர்களிடம், தக்க முறையில் நடந்து வந் தார். மராட்டிய அரசியலை நிருவகித்து வந்த பன் னிருவர் குழுவில் நானாவுக்கு முக்கியமான இடம் கிடைத்தது. சால்பாய் என்னுமிடத்தில் (காண்க. சால்பாய் உடன்படிக்கை) கி.பி.1782-இல் நானா ஆங்கிலேயருடன் அமைதி உறவு செய்து கொண்டது, இவருடைய அரசியல் நுண்மாண்நுழைபுலத்தைக் காட் டாநிற்கும். பிறகு ஆங்கிலேயர் மைசூருடன் போரிட்ட போது (மூன்றாம் மைசூர்ப் போர்) நானா ஆங்கி லேயருக்கு உதவினார். நிசாம் இராச்சியத்திலிருந்து வரவேண்டிய வரி வந்து சேராததால் அங்குப் படை யெடுத்து நிசாமைத் தோற்கடித்த பெருமை இவருக்கு உண்டு (கி.பி.1795). பல நற்குணங்களைப் பெற்றி ருந்த நானாவுக்கு அதிகார ஆசை மிகுதியாக இருந் தது. அதனால் இவருக்குப் பல இடையூறுகள் தோன் றின. இவரைக் கொல்ல நடைபெற்ற பல முயற்சி கள் தோல்வியுற்றன. உளவாளிகளை அமர்த்தி, இவர் தமது பகைவர்களை அடக்கினார்; அகற்றி னார். சிற்றின்பப் பிரியரான நானாவுக்கு 9 மனை வியர் இருந்தனர். தம் 60-ஆம் வயதில் இவர் இறக் குந் தறுவாயில் இவருடைய மனைவியர் இருவரில் ஒருவருக்கு வயது 14, மற்றவருக்கு வயது 9. இறு தியாக 9 வயது பெண் மட்டும் தான் நானாவுக்கு வாரிசாக அவர் இறந்த பிறகு வாழ்ந்தாள். நானா வின் சிற்றின்ப ஒழுக்கக்கேடு பற்றியும் குறிப்புகள் உள. அவற்றை மறுப்பாரும் உளர். இவர், பல கோடி உருபாய்கள் தம் சொந்த முறையில் தேடி வைத்துக் கொண்டதாகவும் கூறப்படுகிறது. 'மராட் டிய மேக்கியவல்லி'என்று சிலர் இவரைக் கூறுவதுண்டு. இருபது ஆண்டுகளுக்கு மேலாக மராட்டிய நாட்டில் மேலாண்மை செலுத்திய இவர், கி.பி.1800இல் மரண மடைந்தார். இவருக்குப் பின் நாட்டில் விளைந்த குழப்பம் காரணமாக, முடிவில் மராட்டிய அரசு வீழ்ந்தது (கி.பி.1818.). தெ.பா.

**நானிங்கு** சீனாவின் தென்மேற்கிலுள்ள குவாங்சி (Kwangsi) மாநிலத்தின் சிறப்பானதொரு மாநகரம்; யுகியாங்கு (Yukiang) ஆற்றங்கரையின் வடபால் அமைந்துள்ளது. யுகியாங்கு ஆறு சிகியாங்கு (Sikiang) ஆற்றின் தென்கரையிலுள்ள முக்கிய துணையாறு. நானிங்கு வூசோ (Wuzhou) நகரத்திற்கு 580 கி.மீ. மேற்கில் உள்ளது. மேற்கு ஆற்றுப் பள்ளத்தாக்கின் மிகப்பெரிய வாணிக மைய மாக நானிங்கு (Nannin) திகழ்கிறது. இங்கிருந்து இருப்புப்பாதைத் தொடர்கள் சீனாவை வியத்நா

முடன் இணைக்கின்றன. சீனாவில் 1949-இல் பொது வுடைமைக் கட்சி பதவிக்கு வந்ததும் நானிங்கே மாநில அரசின் தலைநகரமாயிற்று. இந்நகரில் மருத்துவக் கல்லூரியொன்றும், வேளாண்மை நிறுவனம் ஒன்றும் இயங்கி வருகின்றன.

நானிங்கு பிரிட்டன் நாட்டுடன் வெளிநாட்டு வாணிகத்தை கி.பி. 1897-ஆம் ஆண்டில் தொடங்கிய போதும், வாணிகம் உண்மையில் 1907-ஆம் ஆண்டில் தான் செயற்படத் தொடங்கியது. இங்குச் சுங்கச் சாவடியொன்றும் நிலைநாட்டப் பெற்றுள்ளது. இருப்புப்பாதைகள் வரும்முன் போக்கு வரத்து ஆற்றின் மூலமே நடை பெற்றது. நீராவிப் படகுப் போக்குவரத்து இந்நகரத்தைத் தென் கோடியிலுள்ள காண்டன் நகருடன் இணைக்கிறது சாலைகள் நானிங்கு நகரத்தைப் பல பெரு நகரங்களுடன் இணைக்கின்றன.

இங்குள்ள தட்பவெப்ப நிலை வெதுவெதுப்பான தும் ஈரக்கசிவானதுமாகும். ஆண்டொன்றுக்கு இங்கு 135 செ.மீ. மழை பொழிகிறது. நெல், மக்காச் சோளம்,சோம்புவிதைகள்(aniseed), கரும்பு, பருத்தி, வேர்க்கடலை போன்ற வேளாண்மைப் பொருள்கள் நானிங்கின் முக்கிய விளைபொருள்களாகும் மர எண்ணெய் (Wood oil) எடுக்கும் தொழில் 1930-இலிருந்து இங்கு நடைபெற்று வருகிறது. தோல், சர்க்கரை, புகையிலை, காகிதம், வேர்க்கடலைப் பாளம், உலர்ந்த பழங்கள் போன்றவற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளும் உள்ளன. பொதுவுடைமைக் கட்சி நானிங்கை 1949-இல் கைப்பற்றிக் கொண்டது. இந்நகரத்தின் மக்கள்தொகை 375,000 (1970).

இரா.அ.

***நானிலம்***: தமிழில் உலகத்தைக் குறிக்கும் பெயர்களுள் ஒன்று நானிலம் என்பது. இது காரணப் பெயராகும். பழந்தமிழ் மக்கள் தாம் வாழ்ந்த உலகை-தமிழகத்தை-அதன் இயற்கை இயல்புகளை நோக்கி நான்காகப் பிரித்தனர். அவ்வகையில், நான்கு நிலம் என்பது நானிலம் என்று காரணப் பெயராக உலகினைக் குறிக்க வழங்குகிறது. குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்பன நானிலப் பிரிவுகளின் பெயராகும். மலையும் மலைச்சார்ந்த இடமும் குறிஞ்சி என்றும், காடும் காடுசார்ந்த இடமும் முல்லை என்றும், வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என்றும், கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் என்றும் சொல்லப்படுகின்றன. பாலை என்று ஒரு நிலப்பகுதியும் கூறப்படுகிறது. 'பெருமணல் உலகம்' என்னுமாறு நிலைத்த பெரிய மணல் வெளியோ, நிலையாக உறை பனி படர்ந்த நிலப்பரப்போ தமிழகத்தில் என்றும் இருந்ததில்லையாதலால், தமிழ்மக்கள் தாம் கண்ட உலகினை, அதிற் காணும் மலை, காடு, வயல், கடல் ஆகியவற்றின் அடிப்படையிலான இயற்கைத் தன்மையை உளங்கொண்டு நான்காகப் பகுத்துக் கண்டதும், அவ்வகையில் அதனை நானிலம் என்று வழங்கியதும் குறிப்பிடத்தக்க சிறப்புடையவாகும். குறிஞ்சியின் ஒரு பகுதியும், முல்லையின் ஒரு பகுதியும், வேனிற் கடுமையால் சிறிது காலம் பாலைத்தன்மை அடைவதுண்டு. அதனை, 'முல்லையுங் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலை என்பதோர் படிவம் கொள்ளும் காலை' என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். வேனில் அகன்று மழை பெற்றபோது அப்பாலை நிலப் பகுதி இயல்பானகுறிஞ்சியாகவோ முல்லையாகவோ ஆகிவிடக்கூடும். அதனால் நிலைபேறின்றி எப்போதாவது அமையும் பாலையினை, நிலைத்த பிரிவாககொண்டுஐந்நிலம் என்றுகொள்ளாது நானிலம் என்று உலகிற்குப் பெயர் கொண்டது பழந் தமிழ் மக்களின் நில நூலறிவுச் சிறப்பிற்குச் சான்றாகின்றது. தமிழர் வாழ்க்கையினைத் திணைவகையில் பகுத்து இலக்கணங் கூறுங்கால் பாலையையும் சேர்த்து ஐந்திணை எனக்கொண்டனர். அதனை நானிலத்து ஐந்திணை ஒழுக்கம் என்று அக இலக்கண நூல்கள் விளக்குகின்றன.

அ.மா.ப.

**நி** நகரமும் இகரமும் கலந்து ஒலிக்கும் இவ்வெழுத்து, நாநுனி மேலண்ணத்தின் நுனியில் பல்லைத் தொட்டுப் பின் இளித்தலால் வெளிவரும் ஒலியைக் குறிக்கும். நகர இகர எழுத்துகளுக்குரிய குறிப்புகளைப் பார்க்க.

தனியொரு மொழியாக இதற்கு ஒரு பொருளும் இல்லை. தமிழில் கலந்த வடசொற்களில் நிர்க்குணம், நிர்மலம் போன்ற சொற்களில், எதிர்மறைப் பொருளை உணர்த்துகின்றது. தமிழ்ச் சொல்லாக்கத்தில் இது இடம்பெறவில்லை. இசை மரபில் நிசாதம் என்ற ஏழாவது சுரத்தைக் குறிக்கும் எழுத்தாக 'சரிகமபதநி' என்று வழங்குகின்றது.

**வடிவம்:** இவ்வெழுத்தின் வடிவம் கி.மு.3-ஆம் நூற்றாண்டில் முதன் முதலாகக் குகைக் கல்வெட்டுகளில் கிடைக்கின்றது. ... ... ...

ஏறக்குறைய கி.பி. 4-ஆம் நூற்றாண்டுக்குப்பின் இந்த எழுத்தின் வடிவத்தில் ஏற்பட்ட மாறுதலை ஒட்டி இகரக்குறி (அதாவது வலப்புறம் ஒரு கோடு, அதனின்றும் தொடர்ந்து மேல்நோக்கி ஒரு கோடு) வளைத்து எழுதப்பட்டது. . ...

இகரம் கி.பி. 6,7ஆம் நூற்றாண்டில் அடிப்படை உருவத்தோடு முற்றிலும் வளைந்தது. ஆனால், தனித்து எழுதப்படலாயிற்று.... ... ...

மற்ற எழுத்துகளில் ஏற்பட்ட மாறுதலை ஒட்டி இந்தக் குறியும் தலைக் கட்டின் வலப்புறம் தொடங்கி எழுதப்பட்டது. இந்த மாறுதல் கி.பி.14-ஆம் நூற்றாண்டில் தான் ஏற்பட்டது.... ... ...

வட்டெழுத்தில் 'வ' எழுத்தின் அடியில் வலப்புறம் வளைகோடாக எழுதப் பட்டது. இது கி.பி.5,6-ஆம் நூற்றாண்டில் காணப்படுகின்றது. நகரம் முழுவளர்ச்சி அடைந்த பின்னரும் அவ்வாறே எழுதப்பட்டது. மாறுதல் ஏதும் இல்லை. ...

வட்டெழுத்து கேரளத்தில் மறைவதற்கு முன் மற்ற எழுத்துகளினின்றும் வேறுபாடில்லாத வகையில் திரித்து எழுதப்பட்டது. ... ...

கே.ஜி.கி.

***நிக்கல்சன் (சர்) எரால்டு:*** இவர் தலைசிறந்த ஆங்கில எழுத்தாளர்களுள் ஒருவராக உலகிற்கு அறிமுகம் ஆகியுள்ளார். இவர்தம் கட்டுரைகள் கருத்துச்செறிவுள்ளவை. பொது மக்களுடைய எண்ணங்கள், விருப்பங்கள் பற்றி எழுதுகின்ற இவரது திறமை பாராட்டுதற்கு உரியது. பொருத்தமான சொற்களைப் பயன்படுத்துகின்ற தன்மையும் சொற்றிறனும் இவருடைய எழுத்திற்கு மெருகூட்டுகின்றன. எரால்டு நிக்கல்சன் கி.பி.1886-ஆம் ஆண்டு இங்கிலாந்தில், தெகரான் என்னும் இடத்தில் பிறந்தார். இவர் தந்தையார் கார்நாக்குப் பிரபு அமைச்சராகப் பணியாற்றினார். நிக்கல்சன் வெசுடனில்

தொடக்கக்கல்வி பயின்று ஆக்சுபோர்டில் பாலியால் கல்லூரியில் மேற்படிப்புப் படித்துப் பட்டம் பெற்றார். கவிஞரும், புதின ஆசிரியருமான விக்டோரியா சாக் வில் வெசுட்டு என்ற சீமாட்டியை 1913-ஆம்ஆண்டுத் திருமணம் செய்து கொண்டார். வெளிநாட்டுப் பணியில் சேர்ந்த இவர் பிறநாட்டு இங்கிலாந்து தூதரகங்களில் பல ஆண்டுகள் பணிபுரிந்தார்; முதல் உலகப் போருக்குப் பின்னர், 1919-ஆம் ஆண்டு பாரிசு மாநகரில் நடைபெற்ற அமைதி மாநாட்டில் இங்கிலாந்துத் தூதுக்குழுவில் ஒருவராகப் பங்கேற்கும் வாய்ப்பைப் பெற்றார்; சருவதேச சங்கத்தில் 1919-1920-ஆம் ஆண்டுகளில் பணியாற்றினார்; காலப்போக்கில் இங்கிலாந்து நாட்டின் தலைசிறந்த தூதுவர்களுள் ஒருவராக உயர்ந்தார். எனினும், உலகம் இவரைச்சிறந்த எழுத்தாளராகவே கருதுகிறது. நிக்கல்சன் ஏற்ற சிறப்பான பதவிகள்-ஆங்கில மொழி இதழ் ஆசிரியர், இங்கிலாந்து நாட்டின் பாராளுமன்ற உறுப்பினர், தகவல் துறை அமைச்சகத்தில் பாராளுமன்றச் செயலாளர் முதலியவை ஆகும். எழுத்துலகிற்கு இவர் தந்த படைப்புகள் எண்ணிலடங்கா; வரலாற்று நூல்கள், புதினங்கள், கருத்துச்செறிவுள்ள கட்டுரைத் தொகுப்புகள், வாழ்க்கை வரலாற்று நூல்கள் ஆகியவை எல்லாம் இவர் எழுத்துலகிற்கு ஆற்றிய பணிகளுள் அடங்கும். ஐந்தாம் சார்சு மன்னர், ஆங்கிலக் கவிஞர்களான பைரன், தென்னிசன், சுவின்பர்ன்-ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றைச் சர் எரால்டு நிக்கல்சன் சிறப்பாக எழுதியுள்ளார். நடைமுறைக்குப் பொருத்தமான பயனுள்ள கருத்துகள் இவருடைய கட்டுரைகளில் காணப்படுகின்றன. இங்கிலாந்து நாட்டு வாசகர்களால் வரவேற்கப்பட்ட வாழ்க்கை வரலாற்று நூல்களுள் இவர்தம், ஐந்தாம் சார்சு மன்னர், கார்நாக்குப் பிரபு என்பவை அடங்கும். அரசருடைய ஆட்சி முறை பற்றி இவர் எழுதியுள்ள முடியாட்சி 1962 (Monarchy 1962) என்ற புத்தகம் சிறந்த புத்தகங்களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. அரசியலைப் பற்றி நிறைய எழுதியுள்ள இவர், பார்வையாளர் (Spectator) என்ற ஆங்கில இதழில் எழுதியுள்ள சில அரசியல் கணிப்புகள் இவரது புகழை மேலும் உயர்த்தின. அன்றாட வாழ்க்கையில் எளிய மனிதனுடைய அனுபவங்களைப் பற்றிய இவரது ஆய்வு குறிப்பிடத்தக்கது. இவருடைய படைப்புப் படிப்போரின் ஆர்வத்தைத் தூண்டக்கூடியது. பணிவாக நடந்து கொள்வதன் தேவையைப் பற்றியும், இலண்டன் மாநகரில் காட்சி வட்டரங்கு (Circus) பார்த்த அனுபவங்கள் பற்றியும் இவர் எழுதிய கட்டுரைகளைப் படிக்கும் போது அவை எழுத்தாளருடைய உணர்வை, அனுபவத்தை, அனுபவத்தின் பாடத்தை, அவற்றின் ஆய்வைத் தெள்ளத் தெளியப் படிப்போரின் உள்ளத்தில் பதியவைக்கின்ற இவரது திறமையைப் புலப்படுத்துகின்றன. இவர்தம் கட்டுரைகள் எளிய நடைக்கு ஓர் எடுத்துக்காட்டு. வி.எச்.பா.

**நிக்கலசு முதலாம் (கி.பி. 1796-1855):** இவர் கி.பி. 1825 முதல் 1855-ஆம் ஆண்டு வரை உருசியப் பேரரசராக இருந்தவர். இவருக்கு மூத்த சகோதரர்கள் இருவர் இருந்தமையால் அரசு கட்டில் ஏறும் வாய்ப்பு இல்லை. எனவே, அரசு உரியவர்க்கு அளிக்கப்படும் கல்வி முறை அல்லாது, போர்ப்பயிற்சி மட்டுமே இவர்க்கு அளிக்கப்பட்டது. இசுகாட்லாந்தைச் சேர்ந்த சேன் இலியான் என்னும் தாதி, முதல் ஏழு ஆண்டுகளுக்கு இவர்தம் பாதுகாப்பாளராகவும், ஆசிரியையாகவும் இருந்தார். பிறகு கி.பி. 1802-03-ஆம் ஆண்டு பெரும்படைத் தலைவர் மேதியோ இலாம்சுடார்பு என்பவர் நிக்கலசின் (Nicholas) ஆசிரியரானார். நடனம், இசை, குதிரை ஏற்றம் முதலியவை போதிக்கப்பட்டன. உருசியா, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் இவர் கல்வி சார்ந்த சுற்றுப் பயணங்கள் மேற்கொண்டார்.



நிக்கலசு, முதலாம்

எதிர்பாராதவிதமாக, கி.பி. 1825-ஆம் ஆண்டு நிக்கலசின் மூத்த சகோதரரும், உருசியப் பேரரசருமான முதலாம் அலெக்சாந்தர் இறந்தார். அவருக்கு நேரடி ஆண் வாரிசு எவரும் இல்லை. இவர்தம் மூத்த சகோதரர் போலந்து நாட்டுச் சாதாரணமான பெண்மணி ஒருத்தியைத்திருமணம் செய்துகொண்டதால் உருசியப் பேரரசராகும் தகுதியை இழந்தார். அந்நிலையில், கி.பி.1865-ஆம் ஆண்டு நிக்கலசு உருசியாவின் பேரரசரானார்.

பதவிக்கு வந்ததும் இவர் புரட்சி ஒன்றை எதிர்கொள்ள வேண்டியவரானார். வரம்புடை முடியரசு கேட்டு உயர்குடி மக்கள் தலைமையில் புனித பீட்

டர்சு பெர்கின் காவற்படை அரசுக்கு எதிராக நடத்திய புரட்சி நிக்கலசால் அடக்கப்பட்டது. அதற்குப் பிறகு, எல்லா அதிகாரங்களையும் மைய ஆட்சிக்கு உட்படுத்தி நிக்கலசு தம் ஆட்சியைத் தொடர்ந்தார்.

**நிக்கலசு அரசின் கருத்துப்போக்கு:** உருசியப் பேரரசரின் கல்வி அமைச்சரால் கி.பி. 1833 – ஆம் ஆண்டு பிரகடனப் படுத்தப்பட்ட, 'முறையார்ந்த தேசிய கோட்பாட்டின்' அடிப்படை மூலக் கோட்பாடுகள் மூன்றாகும். அவை 1. மரபுக்கோட்பாடுகள், 2. ஏகாதிபத்தியம், 3. தேசியம்.

**உள்நாட்டுச் சீர்திருத்தங்கள்:** 1. அடிமைகள் வாழ்க்கை மேம்பாட்டிற்கான சட்டங்கள் (கி.பி. 1827, 1833 மற்றும் 1842), 2. உருசியச் சட்டங்கள் தொகுத்து முறைப்படுத்தப்பட்டன (கி.பி. 1833). 3. வருவாய்ச்சீர்திருத்தத்தினால் உருசிய நாணயமான உரூபிளின் மதிப்பு நிலைநிறுத்தப்பட்டது. 4. புதிய பல தொழில் நுட்ப, படைத்துறை சார்ந்த, மற்றும் பொது நடைமுறைப் பள்ளிகள் நிறுவப்பட்டன.

**வெளிநாட்டு விவகாரம்:**பெர்சியா (கி.பி.1826-28) மற்றும் துருக்கியுடனான போர்கள் (கி.பி. 1828 – 29) மூலமாகக் கிடைத்த, நிலப்பகுதிகள் உருசியாவோடு சேர்த்துக்கொள்ளப்பட்டன. ஆனால், துருக்கியுடனான நல்லுறவு உடன்படிக்கை மூலம் கருங்கடற் பகுதியை உருசிய ஏரியாக மாற்ற இவர் எடுத்த முயற்சி, மற்றப் பேரரசுகளால் முறியடிக்கப்பட்டது. முறைமை நிலைக் கொள்கையின் ஆதரவாளரான நிக்கலசு, பிரான்சு, பெல்சியம் போன்ற நாடுகளில் (கி.பி. 1830) நடந்த புரட்சிக்குப் பிறகு அவற்றின் காரியங்களில் தலையிடுவதாக எண்ணம் கொண்டிருந்தார். ஆனால், போலந்து மக்களின் புரட்சியின் காரணமாக அவ்வெண்ணம் நிறைவேறாமல் தடுக்கப்பட்டது. போலந்துப் புரட்சி அடக்கப்பட்டு, அதன் அரசியல் அமைப்பிலிருந்து(கி.பி.1815)தனிச்சிறப்புகள்பல திரும்பப்பெறப்பட்டன. துருக்கியைத் துண்டு போட வேண்டும் என்ற இவரது எண்ணம், அண்மைக் கிழக்கு நாடுகளிடையே பகைமையை ஏற்படுத்தி, இறுதியில் அது கிரிமியன் போரில் முடிவுற்றது. இப்போர் நடந்து கொண்டிருக்கும்போதே, கி.பி. 1855-ஆம் ஆண்டு முதலாம் நிக்கலசு இறந்துவிட்டார்.

**நிக்கலசு, இரண்டாம் (கி.பி. 1868 – 1918):** இவர் கி.பி. 1894 முதல் 1917 வரை ஆண்ட கடைசி உருசியப் பேரரசர்; உறுதியற்றவர்; எளிதில் பயப்படுகின்ற தன்மை வாய்ந்தவர். மூன்றாம் அலெக்சாந்தரின் மூத்த புதல்வனான இவர், கி.பி. 1868-இல் புனித பீட்டர்சுபர்கில் பிறந்தார். தேனிலெவ்சுகி என்ற ஆசிரியரால் படைத்துறைத் தொடர்பான பாடங்கள் போதிக்கப்பட்டன. இவர் துணைநிலைத் தலைவராகவும், பின்பு காலாட்படை, குதிரைப்படை, பீரங்கிப் படைப் பிரிவுகளின் முதல்நிலைப் படைத்துறை ஆணையாளராகவும் இருந்து படைத்தொழில் முறைப் பயிற்சியை மேற்கொண்டார்; இறுதியில் படைப்பகுதி முதல்வரானார்; உருசியப் பேரரசின் ஆட்சிமுறைப் பேரவை, மற்றும் அமைச்சர்கள் குழு உறுப்பினராக நியமனம் செய்யப்பட்டார்; உருசியா, பின்லாந்து, தென்மார்க்கு மற்றும் தூரக் கிழக்கு நாடுகளில் பயணம் மேற்கொண்டார்; செருமானியப் பேரரசர் முதலாம் வில்லியத்தின் ஈமச் சடங்கிற்குத் தம் தந்தையின் பிரதிநிதியாகச் சென்று வந்தார்.



நிக்கலசு, இரண்டாம்

இவர் வளாடிவோசுடாக்கிலுள்ள, சைபீரியா வழி இருப்புப்பாதை (Trans-Siberian Raliway) அமைக்கும் நிறுவனத்தின் கட்டுமானப் பணியினை மேற்பார்வையிடும் குழுவின் தலைவராக நியமிக்கப் பட்டார்; தம் தந்தையின் இறப்பிற்குப்பின், கி.பி. 1894-ஆம் ஆண்டு ஆட்சிப் பொறுப்பை ஏற்றார்.

கி.பி.1894-இல் விக்டோரியா மகாராணியின் பேர்த்தி ஆலிசுவை இவர் திருமணம் புரிந்து கொண்டார். மனஉறுதி கொண்ட தம்மனைவியின் அறிவுரைகளையும் ஆன்மிக நோக்காளர்களின்அறிவுரைகளையும் கேட்டு அதன்படியே நடந்தார் பேரரசர்.

**உள்நாட்டு விவகாரங்கள்:** 'அரசாங்க விவகாரங்களில்பொதுமக்கள் பங்கு கொள்வது என்பது பகுத்தறிவுக்கு மாறான கனவு'என்று கூறி, மாவட்ட ஆட்சிக் கழகத்தின் (Zemstvo) பிரதிநிதிக்குழுவை எச்சரித்தார். அரசாங்கத்தின் பழமைக் கோட்பாடுகளைப் பேணுதல், எல்லா அதிகாரங்களையும் மைய ஆட்சிக்கு உட்படுத்துதல், எல்லா வற்றையும் உருசியப் பண்புடையதாக ஆக்குதல் போன்ற தம் தந்தை

யின் கோட்பாடுகளோடு, தொழிற்றுறை, மற்றும் வாணிகப் பெருக்கத்தின் மூலமாக உருசிய மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கான முயற்சிகளையும் மேற்கொண்டார். முதல் மக்கள் தொகை மதிப்புப்புள்ளி விவரத் தொகுதியினை கி.பி.1897-ஆம் ஆண்டு வெளியிட்டார். உருசிய நாணயத்தின் மதிப்பைத்தங்க நாணய ஏற்பளவைக்கு உயர்த்தினார்.

அறிவுரை கூறும் உரிமைகள் கொண்ட, தேசிய, பிரதிநிதித்துவப் பேரவை (DUMA) ஒன்றை ஏற்படுத்த அரைகுறை மனத்துடன் ஒப்புக் கொண்டார். இவர் 1905-இல் வெளியிட்ட பொது அறிக்கையில், அதன் ஒப்புதல் இல்லாமல் எந்தவொரு சட்டமும் இயற்ற இயலாத அரசியலமைப்போடு இசைவான ஆட்சி அமைப்பதாகவும், வாக்குரிமை, மற்றும் தன்னாட்சி உரிமைகள் வழங்குவதாகவும் வாக்குறுதி அளித்தார். ஆனால், இவ்வுரிமைகள் அளிக்கப்படவில்லை.

**வெளிநாட்டு விவகாரங்கள்:** 'முதலாம் ஏகு (HAGUE) அமைதி மாநாடு' எனப்பட்ட 'முதலாம் உலகப்படை வலிமைக் குறைப்பு மாநாட்டை கி.பி. 1899-ஆம் ஆண்டு தொடங்கி வைத்தார். அதே ஆண்டு, ஐரோப்பிய அரசுகளின் சமநிலை வலிமையை (Balance of Power)நிலை நிறுத்த வேண்டி, பிரான்சு-உருசிய நட்புறவொப்பந்தத்தை முறையானதொரு ஒப்பந்தமாக மாற்றி அமைத்தார்.

ஆனால், ஆழ்ந்த சிந்தனையற்ற இவரது மனப்பான்மை, பல சமயங்களில், சூழ்ச்சி நயம் வாய்ந்த உருசிய அரசியல் வீரர்களையே சிக்கலான நிலைக்கு உள்ளாக்கியதுண்டு.செருமனியின் எதிரியான பிரான்சுடன் ஏற்கெனவே ஒப்பந்தம் இருந்தபோதிலும், 1905 - இல், சோர்கோ என்ற இடத்தில் செருமானியப் பேரரசர் இரண்டாம் வில்லியத்தைச் சந்தித்த போது அவருடனும் ஒப்பந்தமொன்று செய்து கொண்டது முரண்பாடான செய்கையாகும்.

கொரியாவில் உருசியாவின் செல்வாக்கை நிலை நிறுத்தி, அதை மேலும் வலுப்படுத்த இவர் மேற்கொண்ட முயற்சி முன்பே அங்குக் காலூன்றிவிட்ட சப்பானுடன் பகைமையை வளர்த்து, இறுதியில் உருசியா-சப்பானியப் போராக (1904-05) முடிந்தது.

இப்போரில் உருசியப் படைக்கு ஏற்பட்ட மாபெரும் தோல்வி, மற்றும் தொழிலாளர்கள், உழவர்களுக்கிடையே அதிகரித்து வந்த மனநிறைவு இன்மை போன்றவை, 1905-இல் தியூமாவின் புரட்சியில் முடிந்தன. அதன்விளைவாக, இருதரப்பினருக்கும் உடன்பாடான அரசியலமைப்பும், அதற்குட்பட்ட பிரதிநிதித்துவ அரசாங்கமும் தோற்றுவிக்கப்பட்டன. அதற்குப் பிறகு, உருசியா பொருளாதார மற்றும் கலைத்துறைகளில் முன்னேற்றமடைந்தது.

திறமையற்ற முறையில் நடத்தப்பட்ட முதல் உலகப்போர்,மற்றும் அரசாங்க விவகாரங்களில் ஏற்பட்ட குழப்பம் ஆகியவை காரணமாக, 1917-ஆம் ஆண்டு புரட்சிவெடித்து, நிக்கலசைப் பதவி துறக்கும்படி செய்தது. நிக்கலசும் அவர் குடும்பத்தினரும் 'சார்சுகோயே செலோ' என்ற இடத்திலிருந்த அரண்மனையில் கைதிகளாக வைக்கப்பட்டனர். ஆனால், 1918-ஆம் ஆண்டு'அவர்கள் குடியிருந்த நிலவறையிலேயே அனைவரும் கொலை செய்யப்பட்டு விட்டனர். மு.அ.

***நிக்கலேயெவு*** சோவியத்து உருசியக் குடியரசைச் சேர்ந்த உக்ரேனியச் சோவியத்து சமஉரிமைக் குடியரசில் உள்ள ஒரு நகரம். நிக்கலேயெவு (Nikolayev) என்ற வட்டத்தின் தலைநகராகவும் இது விளங்குகிறது.ஐரோப்பியச் சோவியத்து உருசியாவின் தென்பகுதியில் இது அமைந்திருக்கிறது. இத்துறைமுகத்தில் கப்பற் கட்டும் தளங்கள் உள்ளன. இயந்திரக் கருவிகள், வார்ப்பு இரும்பு முதலியன இங்குத் தயாரிக்கப்படுகின்றன. இந்நகரம் கி.பி. 1784-இல் நிறுவப்பெற்றது. கப்பல்கட்டுந் தொழில் இங்கு வளர்ச்சியுற்றதன் காரணமாக கி.பி. 1788-இல் இதன் பெயர் நிக்கலேயெவு என்று மாற்றி அமைக்கப்பட்டது. இது வாணிகச்சிறப்பு மிக்கது. மக்கள் தொகை 480,000 (1984). தெ.பா.

***நிக்காரகுவா*** மத்திய அமெரிக்காவிலுள்ள மிகப்பெரிய நாடாகும். இதன் நிலப்பரப்பு 1,27,358 ச.கி.மீ.

**மக்கள்தொகை:** நிக்காரகுவாவின் மக்கள்தொகை 1984-ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி 2 9 மிலியன் ஆகும். இதில் 20 விழுக்காடு வெள்ளையர்; 10 விழுக்காடு நீக்கிரோக்கள், மெசுடிசோக்கள் மற்றும் சாம்போக்கள் (இந்திய நீக்கிரோக்கள்): எஞ்சியிருப்பவர்கள் மியூலேட்டர்கள்; மிக அதிகப்படியான மக்கள் மெசுடிசோ இனத்தைச் சேர்ந்தவர்கள் (இசுபானிய-இந்தியக் கலப்பினம்). பெரும்பான்மையினர் கிறித்தவ உரோமன் கத்தோலிக்கச் சமயத்தினர். இவர்கள் தவிரக் கிறித்தவச் சீர்திருத்தக் கோட்பாட்டை ஏற்றவர்கள் மற்றும் யூதர்களும் உள்ளனர்.

**எல்லைகள்:** வடக்கில் ஆண்டுரசும், தெற்கில் கோசுடாரிகாவும் கிழக்கில் கரீபியன் கடலும் மேற்கில் பசிபிக்குப் பெருங்கடலும் நிக்காரகுவாவின் எல்லைகளாக அமைந்துள்ளன.

**இயற்கை வளமும், பொருளாதாரமும்:** உழவு சார்ந்த பொருளாதாரம் நிக்காரகுவாவினுடையது.




நிக்காரகுவா

பருத்தி, காப்பி, எள்ளு, சர்க்கரை, நெல், பருப்பு, மக்காச்சோளம் மற்றும் அவரை, மொச்சை போன்றவை இந்நாட்டின் முக்கியப் பயிர்களாகும். காப்பி, பருத்தி மற்றும் எள்ளு ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. கிட்டத்தட்டப் பாதியளவு நிலப் பகுதியில் காடுகளே காணப்படுகின்றன. கட்டட மற்றும் தச்சு வேலைக்கான மரங்களே நாட்டின் முக்கிய இயற்கை வளங்களாகும். உலோகம் சார்ந்த மற்றும் உலோகம் அல்லாத கனிப்பொருள்களில் வளப்பம் மிக்க நாடாக இது விளங்குகிறது. ஆனாலும் தங்கம், வெள்ளி செம்பு ஆகியவைகளே இங்குக் கிடைக்கும் கனிப் பொருள்கள். சுரங்கவேலைக்கு முக்கியமாகத் தங்கச்சுரங்க வேலைக்கு, இது எக்காலத்திலுமே முக்கியத்துவம் பெற்ற நாடாகும். அமெரிக்கர்களும், சலுகைக் கொடை உரிமை பெற்ற கனடா நாட்டவர்களும் நிக்காரகுவாவின் முக்கிய சுரங்கங்களின் உடைமையாளர்கள்.

உள்நாட்டுத் தேவைகளுக்காக இறக்குமதி செய்யப்பட்ட எண்ணெயை நிக்காரகுவா சுத்திகரிப்புச் செய்துகொள்கிறது. பருத்தியிலிருந்து விதைகளை அகற்றுதல், நெசவுப்பொருள் உற்பத்தி, சர்க்கரைச் சுத்திகரிப்பு, தாவர எண்ணெயைப் பதனஞ்செய்தல், இறைச்சியைக் கட்டுமானத் தொழிலால் கட்டிப் பதனப் படுத்துதல் மற்றும் பசை மண் உற்பத்தி போன்றவைகள் மிக முக்கியமான தொழில்களாகும்.

தேசிய முன்னேற்ற நிறுவனம், நாட்டின் முன்னேற்றத்திற்காக ஊக்கமளித்து வருகிறது. நிக்காரகுவா, மத்திய அமெரிக்கப் பொது அங்காடியின் ஓர் உறுப்பினர் நாடாகும். 'கோர்டொபா' (Cordoba) நிக்காரகுவாவின் நாணயமாகும். இந்நாட்டின் வங்கித் தொழில்முறை, அரசுடைமையான நிக்காரகுவா தேசிய வங்கியின்கீழ் உள்ளது.

**தலைநகரம்:** மானகுவா (Managua) நிக்காரகுவாவின் தலைநகரமாகும். இது மற்ற மத்திய அமெரிக்கக் குடியரசுகளின் தலைநகரங்களோடு விமானப் பாதை மூலமாக இணைக்கப்பட்டுள்ளது. கோரின்டோ, சான் சுவான் டெல் சூர் மற்றும் பியூயெர்டோ சபேசா ஆகியவை இந்நாட்டின் முக்கிய துறை முகங்களாகும். இலியோன், கிரானடா, மசயா மற்றும் சினன்டெகா ஆகியவை இந்நாட்டின் முக்கிய நகரங்களாகும்.

**கல்வி:** நிக்காரகுவா மக்களில் 63 விழுக்காட்டினர் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள். இங்கு 1961-ஆம் ஆண்டுவரை தேசிய பல்கலைக்கழகம் என்ற ஒரு பல்கலைக்கழகம் மட்டுமே இருந்தது. தனியார் ஆதரவில் 1961-இல் மைய அமெரிக்கப் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டது. இசுபானிய மொழியே மக்களது தாய் மொழியாகும்.

**வரலாறு:** மாயர்கள் (Maya) பேரரசின் ஒரு பகுதியாக இருந்த நிக்காரகுவா, அசுடெக்கு (Aztecs) இனத்தவர்களின் படையெடுப்புக்குப்பின் பாழ்பட்டுப் போயிற்று. அசுடெக்கினர், நிரந்தரமாக இங்குத்தங்கவில்லை. பிறகு கி.பி.1502-இல் இதன் கிழக்குக் கடற்கரையைக் கொலம்பசு கண்டுபிடித்தார். இப்பகுதியில் காலடியெடுத்துவைத்தமுதல் ஆய்வாளராகிய ஐரோப்பியர், கில்கோன் சாலெசுடி அவிலா (Gil Gon Zalez De Avila). அவர், இங்கு அதிகமாகக் காணப்பட்ட இந்திய இனத்தவர்களின் தலைவரைக் கிறித்தவராக மதம் மாறச் செய்தார். பின்பு அவரது உதவியுடன் இசுபானியப் படைகள், மற்ற இனத்தவர்களையும் வென்று கைக்கொண்டு இப்பகுதியை இசுபெயினுடைய ஒரு மாகாணமாக்கின. கில்லிற்குப் பின் வந்த எர்னான் டி கோர்டொபா (Hernan De Cordoba) என்பவர் கி.பி. 1524-இல் கிரானடா (Granada) நகரத்தை உருவாக்கினார். இது கி.பி. 1822-23-இல் மெக்சிகன் பேரரசின் ஒரு பகுதியாக விளங்கியது. அதன் வீழ்ச்சிக்குப் பிறகு கி.பி. 1823-இல் மத்திய அமெரிக்கக் கூட்டுக் குழுவில் சேர்ந்தது. இங்கு கி.பி. 1838-இல் சுதந்திர அரசு நிறுவப்பட்டது. நிக்காரகுவாவின் சுதந்திரம் இசுபெயினால் கி.பி. 1865-இல் அங்கீகரிக்கப்பட்டது. அதற்குப் பின் வந்த ஆண்டுகளில் நிக்காரகுவா, பல தொல்லைகளை எதிர்கொள்ள வேண்டியதாயிற்று.

குடியரசுத் தலைவர் செலயா (Zelaya) அரசாங்கத்திற்கு எதிராக 1909-இல் புரட்சி ஒன்று வெடித்தது. புரட்சியாளர்களோடு சேர்ந்த இரு அமெரிக்கர்கள்,

செலயாவின் ஆணைப்படி சுட்டுக்கொல்லப் பட்டனர். அமெரிக்கா உடனே தன் போர்க் கப்பல்களை அனுப்பியதோடல்லாமல் நிக்காரகுவாவுடனான தன் உடன்படிக்கை உறவுகளைத் துண்டித்துக் கொண்டது. நிக்காரகுவாவின் குடியரசுத் தலைவர் அடோல் போ தயசின் (Adolfo Diaz) வேண்டு கோளுக்கிணங்க 1912-இல் அமெரிக்கப் படைகள் நிக்காரகுவாவில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டன. அப் படைகள் 1925-இல் திரும்பிச்சென்றபின்மறுபடி யும் புரட்சி ஏற்பட்டது. புரட்சியாளர்களின் தலைவர் 1926-இல் குடியரசுத் தலைவரானார். அங்கிருந்த பல குழுக்களிடையே சண்டை தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. அமெரிக்கக் கடற்படையோடு அமெரிக்கக் குடியரசுத் தலைவர் கூலிட்சு அனுப்பி வைத்த அவரது பேராளர், 1928,1930 மற்றும் 1932-இல் நடந்த தேர்தல்களை மேற்பார்வையிட் டார். அமெரிக்கக் கற்படைத்தளங்களை நிக்காரகுவா வில் அமைத்துக்கொள்ளவும், தன் விருப்பம்போல் கப்பல் போக்குவரத்திற்கான கால்வாய் வழி யொன்றை ஏற்படுத்திக் கொள்ளவுமான உரிமை களை அமெரிக்கா பெற்றது. அமெரிக்கக் கடற்படை 1933-இல் திரும்ப அழைத்துக் கொள்ளப்பட்டது. நிக்காரகுவா, 1941-இல் அச்சுநாடுகளின் மீது (Axis) போர்ப்பிரகடனம் செய்தது. ஐக்கிய நாடுகள் அமைப்பு தோற்றுவிக்கப்பட்ட போதே நிக்காரகுவா, அதன் உறுப்பு நாடாக இருந்தது. சொமோசா 1937-முதல் சுமார் 20 ஆண்டுகளுக்குக் குடியரசுத் தலைவராக இருந்தார். அவர் 1956-இல், செப்டம் பரில் படுகொலை செய்யப்பட்டார். அவருக்குப்பின் அவர் மகன் ஆட்சிக்கு வந்தார். குடியரெர்ரசு(Guti errez) என்பவர் 1963-இல் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

நிலையற்ற ஆட்சியின் காரணமாகத் திடீர் அரசி யல் புரட்சிகள் ஏற்பட்டுத் தளபதி சொமோசாவின் ஆட்சி ஏற்பட்டது.மக்கள் அதிகமாக வெறுத்த, ஊழல் நிறைந்த இவரது சர்வாதிகார ஆட்சியைக் கவிழ்க்க வென்றே 1979-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட கட்சி களின் கூட்டமைப்பான 'பொதுவுடைமைசார்பான தேசிய விடுதலை முன்னணி' (FSLN) இப்போது நிக் காரகுவாவை நிருவகித்து வருகிறது. நிக்காரகுவா வின் தலைவர் தேனியல் ஓர்தேகா (Daniel Ortega) பொதுவுடைமைக் கொள்கைகளை அமெரிக்காவிற் குள் நுழைக்கும் முயற்சியை மேற்கொண்டிருப்பதாக அமெரிக்கக் குடியரசுத் தலைவர் இரீகன் குற்றம் சாட்டுவதோடல்லாமல், இப்போதுள்ள அரசைக் கவிழ்க்கும்விதமாக 'காண்டுராசு' (Contras) எனப் படும் நிக்காரகுவா அரசுக்கெதிரான கொரில்லாப் போராளிகளுக்கு அமெரிக்கப் படை உதவிகளைத் தாராளமாக அளித்து வருகிறார். அமெரிக்கா, உருசிய நாடு ஆகியவற்றின் தனி நலன்கள் காரணமாக ஏற்பட்ட மோதல்களின் விளைவே இந்த உள்நாட்டுப் போர். அதனால் நிக்காரகுவாவின் பொருளாதாரமே சீர்குலைந்துள்ளது. இப்போது உள்நாட்டுப் போர் நிறுத்த உடன்பாடு ஏற்படும் சூழ்நிலை உருவாகி யுள்ளது.

*நிக்காரகுவா ஏரி*: மத்திய அமெரிக்கக் குடி யரசுகளில் ஒன்றான நிக்காரகுவாவின் மேற்குப் பகுதியில் நிக்காரகுவா, மானகுவா என்ற இரண்டு பெரிய ஏரிகள் உள்ளன. மத்திய அமெரிக்காவின் மிகப் பெரிய ஏரியும், தென்மேற்கு நிக்காரகுவாவி லுள்ளபலநன்னீர் சார்ந்த ஏரிகளில்மிகப்பெரியதுமான நிக்காரகுவா ஏரி 163 கி.மீ. நீளமும், 80 கி.மீ. அகல மும் கொண்டது. இதுபசிபிக்குப் பெருங்கடலிலிருந்து 24 கி.மீ.தொலைவில் அமைந்துள்ளது.இதன் மிகைநீர், சான்சுவான் நதி வழியாக அட்லாண்டிக்குப் பெருங் கடலில் சென்று வடிகிறது.

நன்னீர் சார்ந்த அல்லது உப்பற்ற நீர் சார்ந்த ஏரியான இதில் உப்பு நீரில் வாழும் பலவகை மீன் கள், சுறா, வாளை மற்றும் தென் அமெரிக்கப் பெரு மீன் வகைகள் போன்றவைகளும்கூட வசித்து வரு கின்றன. வடக்கேயுள்ள மானகுவா ஏரி, திபிதபா என்ற நதியின் வழியாக இந்த ஏரியில் வந்து வடி கிறது. படகுகள் போக்குவரத்து வழக்கமாக நடை பெற்று வருகிறது. இதிலுள்ள பல நூறு தீவுகளுக்குப் படகுப் போக்குவரத்து வசதி உள்ளது.

மிகப் பரந்த, அகன்ற ஏரியான இதில் கண்கவர் தீவுகள் பல உள்ளன. அவற்றுள் தன் எல்லையில் இரு எரிமலைச் சிகரங்களைக் கொண்ட ஓமதிபே என்ற தீவு மிகப் பெரியதாகும். மீன் பிடிக்கும் தொழில், பாய்மரக் கப்பல் பயணம், நீச்சல் மற்றும் உள்துறைப் போக்குவரத்துப்போன்ற வற்றிற்கும் பல ஆண்டுக் காலமாகப் பெயர்பெற்ற முக்கியத்துவம் வாய்ந்ததொரு ஏரியாகும் இது. இதில் கி.பி.1882-ஆம் ஆண்டு முதல் நீராவிக் கப்பல் போக்குவரத்தும் தொடர்ந்து நடைபெற்று வரு கிறது. இந்த ஏரியும், சான்சுவான் நதியும் கரீபியன் கடலுக்கும் பசிபிக்குப் பெருங்கடலுக்குமிடையே கால் வாய்ப் பாதையாக இருக்கக்கூடிய சாத்தியக் கூறுகள் நீண்டகாலமாக விவாதிக்கப்பட்டு வருகின்றதொரு செய்தியாகும். மு.அ.

*நிக்கோபாரிகள்*: இந்திய மைய அரசின் நேரடி ஆட்சிக்கு உட்பட்ட பகுதிகளுள் அந்தமான் -நிக்கோபார்த் தீவுகளும் ஒன்றாகும். இவ்விரண்டு தீவுக் கூட்டங்களில் நிக்கோபார்த் தீவுகளில் வாழும்

மக்களே நிக்கோபாரிகள் எனப்படுவர். நிக்கோபார் தீவுக் கூட்டத்தில் 19 தீவுகள் உள்ளன. அவற்றுள் வடகோடியிலுள்ள மிகுந்த வளர்ச்சி பெற்ற கார் நிக்கோபார்த்தீவும் தென் கோடியிலுள்ள வளர்ச்சி பெறாத பெரிய நிக்கோபார்த் தீவும் (Great Nicobar) மையத்திலுள்ள கமர்தா, நான்கவுரி போன்ற தீவு களும் குறிப்பிடத்தக்கவை. நிக்கோபாரிகள் உருவ அமைப்பில் மங்கோலியக் கூறுகளைப் பெரிதும் கொண்டுள்ளனர்; ஆனால், பிற மங்கோலிய இன மக் களைக் காட்டிலும் சற்றுக் கறுப்பாகவும் உடற் கட்ட மைப்பில் எடுப்பாகவும் உள்ளனர். கன்ன எலும்புகள் தூக்கலாக உள்ளன. மூக்குத் தட்டையாகவும் ஓரளவு குறுகியும் உள்ளது. இவர்கள் ஏறத்தாழ 1.75. மீ. வரையிலான உயரம் உடையவர்கள். நிக்கோபாரிகள் வயதான காலத்திலும் இளமைப் பொலிவுடன் உள்ளனர். தோற்றத்தை வைத்து இவர்களின் வய தைக் கணிப்பது கடினம். பெரும்பாலானோர் 70 வய துக்கு மேலும் நலமாக உள்ளனர்.

பெரிய நிக்கோபார்த் தீவில் மட்டும் சோம்பன் கள் (Shompans) எனப்படும் நிக்கோபாரிகள் வாழ்கின்றனர். இவர்கள் மிகவும் பின்தங்கிய நிலை யில் உள்ளனர். சோம்பன்கள் பிற நிக்கோபாரி களைக் காட்டிலும் உயரமானவர்கள். உருவ அமைப் பிலும் மேன்மையான தோற்றம் உடையவர்கள். மிக அடர்ந்த காடுகளைக் கொண்ட இத்தீவில் சோம்பன்கள் காடுகளுக்குள்ளேயே வாழ்கின்றனர். அதனால், இம்மக்களுடன் சரியான தகவல் தொடர்பு களில்லை. பழமையான வாழ்க்கை முறைகளாலும், கொடிய நோய்களாலும் அழிந்து வருகின்றனர். முத லைகள் நிறைந்த பெரிய நிக்கோபார்த் தீவின் ஆறு களில் உள்ள மீன்கள் சோம்பன்களின் முக்கியமான உணவுகளில் ஒரு பங்காகும். அவை தவிரப் பழங்கள், தேன் போன்ற பிற வனப் பொருள்களையும் உண்டு வாழ்கின்றனர். நிக்கோபாரில் உள்ள பத்தொன்பது தீவுகளில் பன்னிரண்டு தீவுகளில் மட்டுமே மக்கள் வாழ்கின்றனர். இவ்தீவுகளில் 15,000க்கும் அதிகமான மக்கள்வாழ்கின்றனர் நிக்கோபார்த் தீவுகளிலேயே பெரிய தீவான பெரிய நிக்கோபார்த் தீவில் வாழும் சோம்பன்களின் எண்ணிக்கை 500 க்கும் குறைவே.

நிக்கோபாரிகள் பேசும் மொழி நிக்கோபாரி மொழி (Nicobarese) ஆகும். இம்மொழி மான்-கமர் (Mon-khmer) என்னும் தலாய் கம்போடிய மொழித் தொகுப்பில் அடங்கும். தென் கிழக்கு ஆசியாவில் தொடக்கக் காலத்தில் வந்தடைந்த மங்கோலிய இனத்தவர்கள் இம்மொழியைப் பேசியிருந்திருக்க வேண்டும் எனக் கருதுகின்றனர். இந்தியாவில் வாழும் காசிகள் (Khasis), முண்டாக்கள் (Mundas) போன்ற பழங்குடி இன மக்கள் பேசும் மொழிக்கும் நிக்கோ பாரி மொழிக்கும் ஓரளவுக்கு ஒற்றுமைகள் உள்ளன.

நிக்கோபாரிகளின் குடும்பங்கள் கூட்டுக் குடும்ப அமைப்பைக் கொண்டவை. வழிவழியாகவரும் உறவு களுடன் நெடுங்காலம் தொடர்ந்து ஒன்றாக வாழ்வ தால் சில குடும்பங்கள் நூற்றுக்கும் மேலான உறுப் பினர்களைக் கொண்டுள்ளன. இக்குடும்பங்கள் குடும் பத் தலைவனின் தலைமை கொண்டு இயங்குகின்றன. ஒரு தலைவனின் மைந்தருள் ஒருவன் அடுத்த தலைவ னாகிறான். இருப்பினும் இம்முறை உறுதியாகப் பின் பற்றப்படுவதில்லை. தலைவனே ஒரு குடும்ப உறுப் பினர்களின் பராமரிப்புக்கும் வளர்ச்சிக்கும் பொறுப் பாளியாகிறான். இவ்வகையிலான கூட்டு அமைப் பினால் ஒவ்வொரு நிக்கோபாரியும் எந்தச் சூழ்நிலை யிலும் முழுப் பாதுகாப்பு உணர்வுடன் இருக்கிறான். ஏனெனில் அவனது அன்றாடத் தேவைகளைக் கூட்டுக் குடும்பம் நிறைவேற்றிவிடுகிறது.

இம்மக்கள் இடம் விட்டு இடம் பெயரும் வேளாண் முறையைக் (Shifting cultivation) கொண் டுள்ளனர். தென்னை, பாக்கு மரங்களைத் தவிரப்பிற பயிர் வகைகளை இம்முறையில் பயிரிடுகின்றனர். வாழை, பப்பாளி, சருக்கரைவள்ளி போன்றவை அவற்றுள் குறிப்பிடத்தக்கவை. இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை புதிய நிலம் தேர்ந்தெடுக் கப்படுகிறது. தென்னை மரத்திலிருந்து கிடைக்கும் தேங்காய்களை எடுத்து வருவதற்காக மட்டுமே தென்னந் தோப்புக்கு அதன் உரிமையாளர்கள் செல்கின்றனர். பராமரிப்புக்காகச் செல்வது மிகவும் அரிது. காவல் காக்கும் பழக்கமே இல்லை. தேங்காய் கள் முற்றிக் கீழே விழுந்தாலும் அதன் அருகில் வாழும் மற்றவர் யாவரும் அவற்றை எடுப்பதில்லை. இங்கு விளையும் தேங்காய்களில் மூன்றில் ஒரு பங்கு இம்மக்களாலேயேபயன்படுத்திக் கொள்ளப்படுகிறது. ஒரு பங்கினைப் பன்றி போன்ற வீட்டு விலங்குகளுக்கு உணவாக்கி விடுகின்றனர். எஞ்சியுள்ள ஒரு பங்கு கொப்பரை தயாரிக்கப் பயன்படுகிறது.

நிக்கோபார்த் தீவுகளிலிருந்து பாக்கும், கொப் பரையும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. நிக்கோபார்த் தீவுகளின் வளம் இங்கு வாழும் மக்களின் பயன் பாட்டைக் காட்டிலும் மிகுதியாக உள்ளது. இங்கு வாழும் மக்கள் 'உழைப்பு' என்ற சொல்லின் பொருளை இப்போதுதான் உணரத் தொடங்கி யுள்ளனர். இங்குள்ள நிலங்களுக்கு உரிமை வழங் கும் நிலப் பட்டாக்கள் இல்லை. நில வரி வாங்குவ தும் கிடையாது.

ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு தலைமைக் கிரா மத் தலைவனும் அவனுக்குக் கீழ் இரண்டாம், மூன்றாம் நிலையில் இரண்டு உதவிக் கிராமத் தலை வர்களும் உள்ளனர். அனைத்து விவகாரங்களிலும் கிராமத் தலைவனின் முடிவே இறுதியானது.

நிக்கோபார்த் தீவுகளில் வாழ்வோரில் 80 விழுக்காட்டினர் கிறித்தவ சமயத்தைத் தழுவியுள்ளனர். ஒரு பகுதியினர் இயற்கைப் பொருள்களை வழிபடுபவர்களாக உள்ளனர். வளர்ச்சியடைந்த கார் நிக்கோபார்த் தீவு மக்களுள் ஒரு சிலரைத் தவிர அனைவரும் கிறித்தவர்கள். கட்சால் தீவில் மட்டும் சில இந்துக்கள் உள்ளனர். இங்கு இராணி சங்கா எனும் பழங்குடித் தலைவியால் கட்டப்பட்ட ஒரு கோவிலும் உள்ளது.

கார் நிக்கோபார்த் தீவில் கொல்லு, தச்சு, தையல் வேலைகளுக்கான பயிற்சி நிலையங்களும் உயர்நிலை, மேல்நிலைப் பள்ளிகளும் மருத்துவமனைகளும் ஏற்படுத்தப் பட்டுள்ளன. பெரிய இலாபட்டி என்னும் கிராமத்தில் கால்நடை மருத்துவமனையொன்று அமைக்கப்பட்டுள்ளது. பிற தீவுகளுக்கும் இந்த வசதிகள் விரிவுபடுத்தப் பட்டுள்ளன. புதிய வேளாண் முறைகளும் காய்கறி, பயிர் வகைகளும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. ப.இரா.

*நிக்கோலசு* என்பவர் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஓர் உரோமன் கத்தோலிக்கத் தத்துவ ஆசிரியராவர். நிக்கோலசு (Nicholas of Cusa) செருமனியில் கி.பி. 1401-இல் பிறந்து, 63 ஆண்டுகள் வாழ்ந்து பின் இத்தாலியில் கி.பி. 1464-இல் உலோடி (Lodi) என்னும் ஊரில் மறைந்தார். இவர் இளமையில் பாடுவா பல்கலைக் கழகத்தில் (Padua) படித்தபின் சமய நிறுவனத்தின் அதிகாரங்களை ஆராய்வதில் ஈடுபட்டார். பேசல் நகரத்தில் நடந்த சமயக் கூட்டத்தில் (Council of Basel) இவர் இலீசு நகரத்தின் (Liege) சார்பாகக் கலந்து கொண்டு, அதில் போப்பின்முழுஅதிகாரத்தை எதிர்த்தவர்களின் சார்பாகப் பேசினார். ஆயினும் இவர் பின்னர்த் தம் கருத்துகளை மாற்றிக் கொண்டார். இவர் ஆயராகவும் (Bishop) உயர்குருவாகவும் (Cardinal) சில காலம் இருந்தார்.

இவர் குறுகிய தன்னல மனப்பான்மையோடு கூடிய பழங்காலப் படிப்பை வெறுத்தார். இவர் பூமி சூரியனைச் சுற்றி வருகிறது என்றும், பூமியைத்தவிர வேறு பல உலகங்களும் இருக்கின்றன என்றும் கூறினார்.

**சூழ்நிலை:** நிக்கோலசு வாழ்ந்து சிந்தித்த கி.பி. 15-ஆம் நூற்றாண்டு, இங்கிலாந்திலும் செருமனியிலும் சமூக சமத்துவமென்ற கருத்துகள் சாதாரண மக்களிடையே பரவியிருந்த காலம் ஆகும். இங்கிலாந்தில் விக்ளிப்பின் ஆதரவாளர்களான உலோலர்டுகளும் (காண்க: சான் விக்ளிப்பு, John Wycliffe Lollards), செருமனியில் பொகீமியாவில் சான் அசு என்பவரும் (John Hus) இக்கருத்துகளைப் பரப்பினர். இக்கருத்துகளின்படி கிறித்தவ விவிலிய நூலில் சொல்லப்பட்ட சட்டம் ஒரு பொதுவுடைமைக் கொள்கையே ஆகும். இக் கொள்கையுடைய சமூகத்தில் கிறித்தவ மக்கள் யாவரும் சுதந்திரமாகவும், சமத்துவமாகவும் வாழ்கின்றனர். இதில் மனித சட்டங்களினாலும், நிறுவனங்களினாலும் மனிதர்களுக்கிடையே விதிக்கப்பட்ட வேறுபாடுகளோ உரிமை வேறுபாடுகளோ இல்லை. இத்தகைய கருத்துகளை மறுத்த பலரும்கிறித்தவத்திருச்சபையில் சீர்திருத்தங்கள் செய்யப்படுதல் வேண்டு மென்று விரும்பினர். இந்த நோக்கத்தை ஏற்றுக் கிறித்தவத் திருச்சபையானது ஒரு குழுமுறை ஆட்சியில் இருத்தல் வேண்டுமென்று கூறும் ஒரு கொள்கையை (The Conciliar Theory of Church Government) கி.பி. 1414, கி.பி. 1431 ஆகிய ஆண்டுகளில் கூடிய கான்சுடன்சு, பேசில் திருச்சபை மன்றங்களில் (The Councils of Constance and Basel) சில சிந்தனையாளர்கள் வெளியிட்டனர். அவர்களுள் ஒருவரே நிக்கோலசு ஆவார்.

**நிக்கோலசின் ஆட்சிக் கொள்கை:** திருச்சபை என்பது தனது தேவைகளைத் தானே நிறைவு செய்து கொள்ளக் கூடிய அளவுக்குத் திறமையுள்ள, தன்னிலே நிறைவுபெற்ற, ஒரு முழுமையான சமூகம் ஆகும். ஆகையால் அது தான் தொடர்ந்து நிலை பெற்றிருத்தல் கூடுமென்ற உறுதிப்பாட்டை ஏற்படுத்துதற்குரிய முழு அதிகாரத்தையும் பெற்று ஓர் ஒழுங்கான அரசாங்கத்தை அமைத்தலும், தவறுகள் நேரும்போதெல்லாம் அவற்றைக் களைதலும் வேண்டும். ஆதலால் அதற்களிக்கப்பட்டுள்ள ஆன்மிக அதிகாரமானது திருச்சபையிலே தான், - அதாவது கிறித்தவ சமயத்தில் நம்பிக்கையுடைய அனைவருமடங்கிய முழு அமைப்பிலே தான்–இருக்கிறது. ஆகையால் போப்பு உள்ளிட்ட எல்லாக் குருமார்களும் சமூகத்துக்காகச் செயலாற்றும் அலுவலர்களாகவே இருக்கின்றனர்.

திருச்சபையின் குழுவே முழுத் திருச்சபையின் இசைவை அல்லது உடன்பாட்டை (Consent) எடுத்துக் காட்டுவதாகும்; ஆகையால் அதுவே அதில் வேலை செய்யும் குருமார்களை விடத் தலைமையான அதிகாரம் உடையது. சமூகம் எதனை ஏற்றுக் கொள்ளுகிறதோ அதுவே சட்டமாகிறது. அதனால் மறுக்கப்படுவது சட்டம் ஆகாது. அதனுடைய ஒப்புதல், வழக்கத்தின் வாயிலாகப் (Custom) பெறப்படுகிறது. ஆகையால் திருச்சபை முழுவதற்கும் பேராளராக விளங்கும் மன்றமே அல்லது குழுவே, சட்டத்தின் பொருளை நிலைநிறுத்துவதற்கு அதிலுள்ள எந்த ஒரு தனிப்பட்ட ஆளையும் விட உயர்ந்த அதிகாரமுடையது.

**மதிப்பீடு:** நிக்கோலசு விரித்துக் கூறும் திருச் சபையின் ஆட்சிக் குழுக் கொள்கைக்கு அடித்தளமாக விளங்கும் கருத்து யாதெனில், அது, கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் நிலவிய, 'எல்லா வகைப்பட்ட அரசாங்கத்துக்கும் ஆதாரமாக இருப்பது மக்களுடைய ஆதரவே அல்லது ஒப்புதலே' (Consent) என்பது தான். இக்கருத்து குடியாட்சிக் கருத்தை எடுத்துக் காட்டுகிறது. நிக்கோலசு கூறும் இயற்கையின் சட்டம் என்ற கருத்தும் (The Law of nature), குடிமக்களின் உரிமைகள் என்ற கருத்தும், பிற்காலத்தில் தோன்றிய புரட்சிக்கொள்கைகளுக்கு முன்னோடிகள் ஆகும். சமூகம் தன் விருப்பத்தின் பேரில் சட்டங்களுக்கு அளிக்கும் ஒப்புதல்தான் அவற்றுக்கு யாவரையும் கட்டுப்படுத்தக்கூடிய ஆற்றலை அளிக்கின்றது. ஆகையால் மக்கள் ஏன் அரசாங்கத்துக்குக் கீழ்ப்படிகின்றனர் என்ற அரசியற் கேள்விக்கு நிக்கோலசு அளிக்கும் விடை, மக்களுடைய தன்விருப்ப ஒப்புதல் என்பதே ஆகும். பா.கு.

**துணை நூல்கள்:**

**Bett, Henry,** Nicholas of Cusa, London, 1932.

**Jacob, E.F.,** Essays in the Conciliar Epoch, Manchester, 1953.

*நிக்கோலசு நிக்கிள்பி*: இது ஓர் ஆங்கிலப் புதினத்தின் பெயர். நிக்கோலசு நிக்கிள்பி எனும் கதாநாயகனின் பெயரைத்தலைப்பாகக்கொண்டுள்ள அந்தப் புகழ்பெற்ற புதினம் (கி.பி. 1838) சார்லசு திக்கன்சு எழுதிய முப்பதுக்கு மேற்பட்ட புதினங்களுள் தொடக்ககாலத்ததாகும்.

இளமையிலேயே தந்தையை இழந்த நிக்கோலசு நிக்கிள்பி, தாய் தங்கையோடு இலண்டனில் வசித்து வருகின்றான். சுயநலமும் பேராசையும் தீய எண்ணமும் கொண்ட இரால்பு நிக்கோலசு, அவனது சிறிய தந்தை. இலண்டனுக்கு வெகு தூரத்தில் சுகீர்சு என்பார் நடத்தும் ஓர் அனாதைப் பள்ளியில் நிக்கோலசை ஓர் உதவியாளனாகச் சேர்த்து விடுகிறார். அந்தப் பள்ளியை நடத்தும் சுகீர்சும், அவரது மனைவியும் நற்குணம் இல்லாதவர்கள். கல்வி புகட்டுவதாகச் சொல்லுவர். அவ்வளவே. உண்மை என்னவெனில் அங்குள்ள இளஞ் சிறுவர்களைக் கொடுமைப் படுத்தி அரைப்பட்டினியோடு வேலை வாங்குவர்; வேலை செய்ய இயலாதோரைக் கடுமையாகத் தண்டிப்பர். ஒரு நாள் சிமைக்கு என்னும் சிறுவனைச் சுகீர்சு அடிப்பதைக் காணப் பொறுக்காத நிக்கோலசு சுகீர்சையே அடித்து விட்டு அங்கிருந்து வெளியேறி விடுகிறான். பின்னர், போர்ட்சுமவுத்து என்னும் துறைமுக நகரத்தில் ஒரு நாடக அரங்கில் நடிகனாகச் சேர்ந்த நிக்கோலசு பெரும்புகழ் அடைகிறான். தங்கை கேட்டி ஏதோ இன்னலில் சிக்கி இருப்பதாகவும், அவளது பாதுகாப்பிற்கென்றே நிக்கோலசு இலண்டனுக்குச் செல்ல வேண்டுமெனவும் ஒரு செய்தி வருகிறது.

இலண்டனை அடையும்போது அவனுக்கு நல்ல பசி. ஓர் உணவுச் சாலையில் நுழைந்தான். அங்கே நண்பர்களுடன் மது அருந்திக் கொண்டிருந்த மல்பெரி என்பான் கேட்டியைப் பற்றி ஏதோ பேசினான். அதனைச் செவி மடுத்த நிக்கோலசு தன் தங்கையைப் பற்றிப் பேசுகிறானே என்று எண்ணி எதுவாயினும் விவரமாகச் சொல்லுமாறு கேட்க மல்பெரி மறுத்து விட்டான். தொடர்ந்து நடந்த கைக்கலப்பில் நிக்கோலசு மல்பெரியைத் தாக்கி வீழ்த்தி விடுகிறான். பின்னர்த் தன் தங்கையைச் சந்தித்துப் பெற்றெடுத்த அன்னையையும் அவளையும் பிரிய மாட்டேன் என்று உறுதி கூறினான்.

ஏற்றுமதி வணிகம் செய்யும் சீரிபிள் நிறுவனத்தில் நிக்கோலசுக்கு வேலை கிடைக்கிறது. அதன் உரிமையாளர்கள் நிக்கோலசு குடும்பத்தாரிடம் அன்பு செலுத்துகின்றனர். அவர்களின் அறிமுகத்தினால் நிக்கோலசுக்கும் மேடலின் என்ற இளம் நங்கைக்கும் நெருங்கிய நட்பு ஏற்படுகின்றது. இதற்கிடையில் மேடலின் தந்தைக்கு ஏராளமாகக் கடன் கொடுத்திருந்த ஒரு கிழவன், சிறிய தந்தை இரால்பின் துணை கொண்டு அவளை மணக்க விரும்புகிறான். அந்த பொருந்தாத் திருமணத்தை எப்படியாயினும் நிறுத்தி விட நிக்கோலசு முயல்கிறான். திருமண நாளன்று மேடலின் தந்தை இறக்கவே, மயக்கமுற்றுக் கிடந்த மேடலினைத் தங்கை கேட்டியின் உதவியினால் அங்கிருந்து மீட்டு மருத்துவமனையில் சேர்க்கிறான்.

வஞ்சகமே உருவான சுகீர்சு ஒரு சூழ்நிலையில் காவலரிடம் ஒப்படைக்கப்பட்டுச் சிறை செல்லுகிறான். அவன் நடத்திய பள்ளியும் விடுதியும் கலைக்கப்பட்டு விடுகின்றன. எந்த முயற்சியிலும் தோல்வியினையே கண்ட ஏமாற்றத்தில் இரால்பு தனது வீட்டிலேயே தற்கொலை செய்து கொள்ளுகிறான். சீரிபிள் உடன்பிறந்தோரின் உதவியால் நிக்கோலசு நிக்கிள்பி மேடலினை மணந்து கொள்வதோடு கதை நிறைவு பெறுகிறது. சமூகம், பொருளாதாரம் ஆகியவற்றினை அடித்தளமாகக் கொண்ட சார்லசு திக்கன்சின் புதினங்களை ஊன்றிப் பயில்வார்க்குச் சிற்சில கருத்துகள் தொடர்ந்து வருவது தெளிவாகப் புலனாகும். தந்தையை இழந்து அநாதையாக்கப்பட்டோர், வளமிக்க குடும்பங்களில் பிறந்து வறுமையில் வாடும் சிறுவர்கள், அனாதைப் பள்ளியில் அரைப் பட்டினியோடு நலிந்து பின் கயவர்களிடம் சிக்கி இன்னலுறுவோர், இறுதியில் எதிர்பாராது வரும்

செல்வத்தையோ குடும்பச் செல்வத்தையோ பெற்று மகிழ்வோர் போன்ற கருத்துகளே அவை.

நிக்கோலசும் தந்தையை இழந்தவனாக வாழ்வைத் தொடங்கிச்சிறிய தந்தை உள்ளிட்ட தீயோரை எதிர்த்துப் போராடி, இறுதியில் மணம் முடித்துச் சிறந்து நிற்றல் கதைச் சுருக்கத்தில் காட்டப்பட்டது. யார்க்குசயர் பகுதியில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் நடத்தப்பட்ட பல்வேறு பாலர் பள்ளிகளை மனத்திற் கொண்டே சுகீர்சின் அனாதைப் பள்ளியைத் திக்கன்சு விவரித்துள்ளார். இந்தப் புதினத்தின் முதற் பதிப்பில் (கி.பி. 1839) தாம் எழுதிய முன்னுரையில் அத்தகு கல்விச் சாலைகளில் இளஞ்சிறார் கொடுமைப்படுத்தப்படுவதை வெளிக் கொணரவே அப்புதினத்தை எழுதியதாகக் கூறியுள்ளார். உடலில் இருந்த சீழ்க்கட்டி மழுங்கிய துருப்பிடித்த பேனாக் கத்தியால் அறுக்கப்பட்டு மேலும் அவதிக்கு உள்ளாகிய ஒரு சிறுவன் இத்தகைய பள்ளியிலிருந்து தப்பிவந்த கதையினைக் கேள்வியுற்ற திக்கன்சு, மனம் வருந்தி இது போன்ற புதினங்களை எழுதத் தொடங்கினார் என்றும் கூறுவர். திக்கன்சும் தன் இளமைக் காலத்தில் சுகாதாரக் குறைவானதும், போதிய வெளிச்சமும் காற்றும் இல்லாததுமான கிடங்குகளிலும், தொழில் நிலையங்களிலும் கடுமையாகப்பணிபுரிந்து போதிய வருவாய் இன்றி இன்னலுற்றவர் என்பதும்ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும். ப.அ.

**நிக்கோலாய், கிறிசுட்டியன் பிரெடரிக்கு (கி.பி. 1733-1811):** இவர் ஒரு செருமானியக் கதாசிரியர்; பத்திரிகை ஆசிரியர் மற்றும் வெளியீட்டாளர் ஆவார். இவர் பெர்லின் நகரத்தில் பிறந்தார். ஆலோ என்னுமிடத்தில் உள்ள ஒரு சமய நிறுவனத்தில் கல்வி கற்றார். இவர் எந்தப் பல்கலைக் கழகத்திலும் கல்வி கற்கவில்லை. பின் இவர் பிராங்பர்ட்டு என்னும் நகரத்தில் வணிக உதவியாளராக மூன்றாண்டுகள் பணிபுரிந்தார். தம் தந்தை மறைவிற்குப் பிறகு ஏறக்குறைய தம் இறுதிக் காலம் நெருங்குவதற்குச் சில காலம் முன்பு வரையிலும், தம் குடும்பத்தைச் சார்ந்த புத்தக நிலையத்தை நடத்தும் பொறுப்பை ஏற்றார். பின்பு அதை ஒரு வெற்றிகரமான, இலாபம் பெறும் புத்தக வெளியீட்டு நிறுவனமாக மாற்றினார்; பெர்லினின் அறிவுலகத்தின் ஓர் அங்கமாக இயக்கினார்;சி.இலெசுங்கு, மோசசு மாண்டெல்சன் ஆகியோரின் சிறந்த நெருங்கிய நண்பரானார்.

இவர் கி.பி. 1757 முதல் 1758 வரை 'கலையுணர்வும் நுண்கலையும்' என்னும் நூலைப் பதிப்பித்தார். பின்பு கி.பி. 1759 முதல் 1765 வரை இலக்கியக் கடிதம் (Literature Letter) என்பதனைப் பதிப்பித்தார். அதன் பின்பு 'உலக, செருமானிய நூலகத்தை' கி.பி. 1765 இல் இருந்து பதிப்பித்து வந்தார். இரண்டாவதாகக் குறிப்பிட்ட புத்தகம் மிகவும் புகழ்பெற்ற செருமானிய இலக்கியத் திறனாய்வாக விளங்கியது. மேலும் அது கடவுள், மதம் பற்றிய கருத்துகளின் மீது தாக்கம் உடையதாகவும் அமைந்தது.

நிக்கோலாயின் சொந்தப் படைப்புகள், ஏனைய அறிஞர்களின் படைப்புகளைப் போல உயர்ந்த பத்திரிகையின் கூறுகளைக் கொண்டிருந்தன. இவர் படைப்புகள் அக்காலத்திய அறிவுலகின், இலக்கிய உலகின் நிலைகளையும், அவற்றைச் சார்ந்தவர்களையும் கடுமையாகத் தாக்கும் முறையில் இருந்தன. இவர்தம் கலைக்கடிதங்கள் கே.சி. காட்செக்ட்டு என்ற புகழ்பெற்ற இலக்கியத் திறனாய்வாளரை எதிர்ப்பதாக அமைந்துள்ளது இவரது தத்துவக் கதையான செபர்ல்டசு நார்த்தங்கர், ஆலேயில் உள்ள சில புரட்சிகர அமைப்புகளைத் தாக்குவதாக அமைந்துள்ளது. இவர் தம்முடைய பல கட்டுரைகளில் சே.சி. ஏமன், கோசுன் காசுபர், கிறிசுட்டியன் கார்வு போன்றோரை எதிர்த்து எழுதியுள்ளார். சே.சி. எர்டர் மற்றும் எப். எச்.ககோபி போன்றோருடன் இவர் வாக்குவாதம் செய்தார்.

இவருடைய, தேனியல் சாபர்லிச்சு போன்ற புதினங்கள் கோத்தே, எர்டர், சி.எ. பர்கர் மற்றும் இசுடர்ம்பிராங்கு போன்றோர்களின் படைப்புகளைப் பரிகசித்து எழுதப்பட்டவையாகும். இவர் கத்தோலிக்க இயக்கத்தின் மூடப்பழக்க வழக்கங்களை, இயேசு கொள்கைகளின் தொடக்கம் என்று இடித்துரைத்தார். இவர் ஞானசுநானம் பெற்று, உய்விக்கப்பட்ட குழுவின் அங்கத்தினராக இருந்த போதிலும் கத்தோலிக்க எதிர்ப்பைக் காட்டினார். இவர், தம் தத்துவப் புதினமான 'ஒரு பருத்த மனிதனின் கதை' (The Story of a Fat Man, 2 Vols., Berlin) போன்றவற்றில் காண்ட்டின் தத்துவங்களைக் குறை கூறினார். பெசட்டு போன்றோர்களைப்பெயர் அறியாக் கத்தோலிக்கர்கள் என்று குற்றம் சாட்டினார். இவர்தம் நண்பருக்கு எழுதிய 'கடிதங்கள்' என்பது இசுகிலியேர்மாச்சர் என்பவரை எதிர்ப்பதாக அமைந்துள்ளது.

நிக்கோலாயின் பல படைப்புகள் செருமனி மற்றும் சுவிட்சர்லாந்துப் பண்பாடு, சமூகம், பொருளாதாரம்மத வாழ்க்கை போன்றவற்றைச் சித்திரிப்பனவாக உள்ளன. நிக்கோலாய்க்கு கி.பி. 1799-இல் எம்சுடெட்டு இறையியல் நிறுவனம் மதிப்பியல் டாக்டர் பட்டம் வழங்கியது. மேலும் புனித பீட்டர்சு பர்குக் கழகம் கி.பி. 1804 -இல் இவரை உறுப்பினராக்கியது. இருப்பினும் புகழ்

பெற்ற பெரியோர்களைத் தாக்குதல் என்பது தொடர்ந்தது. இவர்தம் புதிய தத்துவக் கொள்கை களைப் புரிந்து கொள்ளாத தன்மையும், இவரது புது வாதக் கொள்கையும் இவர்தம் படைப்புகளைப் பற்றிய மாறான கொள்கைகளை அவர் காலத்திய அறிஞர்களும் வருங்காலத்தவரும் மேற்கொள்ள வேண்டிய சூழ்நிலையை உருவாக்கின.

ஆயினும் நிக்கோலாய் 'எல்லோரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய தத்துவவியல்'கொள்கைகளின் சார் பாளராகத் திகழ்ந்தார். இவர்தம் கொள்கைகள் பொது அறிவைச் சார்ந்தவையாகவும், சுருக்கமான குழப்பமான எண்ணங்களைத் தவிர்த்து, உபயோக மான, சுலபமான அறிவை ஆதரிப்பனவாகவும் அமைந்தன. வைதிகத் தன்மை, சகிப்புத் தன்மை யின்மை, மட்டற்ற மகிழ்ச்சி அடைதல், இரகசியத் தன்மை, தியானம் போன்றவற்றை இவர்எதிர்த்தார். உல்ப்பியின் தத்துவவியல்,புதிய பகுத்தறிவுத் தத்துவ வியல், எதிர்வாதக் கொள்கை, கத்தோலிக்க இயக் கம், இரகசிய அமைப்புகள் ஆகியவற்றைத் தாக்கி னார். மேலும் காட்செட்டின் சிறப்பியக்கம், செ. எச். வோசு மற்றும் பர்கர் போன்றோர்களின் தத்துவங் களை உயர்த்திப் பேசுதல் போன்றவற்றையும் இவர் எதிர்த்தார்; அவர்களை எல்லாம் எதிர்ப்பாளர்கள் என்றும், தீங்காளிகள் என்றும் கருதினார்;அவர்களின் எழுத்துகளைக் குழப்பமானவையாகவும் மாறான கருத்துகளைத் தெரிவிப்பவையாகவும், மிகைப் படுத் தப்பட்டவையாகவும் கருதினார்.

இவரது மதக் கொள்கையானது, அறிவுப் பூர்வ மானவற்றை மறுப்பது, கொள்கை வாதம் மற்றும் தியானம் போன்றவற்றை உள்ளடக்கியது ஆகியவற் றின் ஒருங்கிணைந்த கருத்தாகும். விஞ்ஞானம், மதம் இரண்டும் ஒன்றோடொன்று குழம்பிக் கொள் ளக்கூடாதுஎன இவர் விரும்பினார். பழைய மதம் நேர் மையை மாசு படுத்துவதாகவும், வெறும் பழமையூட் டக் கூடிய சமுதாய அமைப்புகளைச் சார்ந்ததாகவும் உள்ளது எனக் கருதினார்; பாவம், நரகத் தண்டனை போன்றவற்றை மறுத்தார்; சுதந்திரச் சிந்தனைக் கொள்கை, ஆன்மாவின் சாகாத்தன்மை ஆகிய வற்றை ஏற்றார்; மதம் தனிமனிதனின் மனச்சாட் சியையும் பொது அறிவையும் சார்ந்ததாக இருக்க வேண்டுமே அல்லாது புதிய வெளியீட்டுக் கொள்கை, மட்டற்ற மகிழ்ச்சி ஆகியவற்றைச் சார்ந்ததாக இருக்கக் கூடாது என்றார்.

நிக்கோலாயின் வாதப்படி, மதமும் இறப்பும் ஒன்றன்று. இறப்பு சமுதாயம், அனுபவம் ஆகியவற்றை அடிப்படையாகவும், மதம் பிறப்பால்காணப்படும் கட வுளின் நல்மனம், கடவுள் தன்மை ஆகியவற்றை அடிப் படையாகவும் கொண்டன என்றார். இவர் இயற்கையில் அமையும் மதம், மக்களுக்குப் போதுமானதன்று என உணர்ந்தார். ஆதலால், கிறித்தவ மதத்தை வெளிப் படையாக எதிர்க்க மறுத்தார். நிக்கோலாய் பாய் லியோ, சீன் பாப்டிசுட்டு, துபாம் போன்ற அறிஞர் களின் நுண்கலை உணர்ச்சிகளும், சே.சே.போட்மெர், கே.சே. பிரிசூங்கர் மற்றும் சே. சி. சுல்செர் போன்ற திறனாய்வாளரின் இயற்கை வாதக் கொள்கைகளும் இவர் கருத்துகளுக்கு உதவியாக இருந்தன. போலித் தனத்திற்கும், கற்பனைக்கும் இடைப்பட்ட நிலை யைக் காண இவர் முனைந்தார்; குறுகிய ஆணையில் இருந்து பிறந்த இலக்கியக் கொள்கைகளை எதிர்த் தார்; கவிதை என்பது எளிமையாகவும், காரண காரியங்களுடன் கூடியதாகவும், முக்கியமாக நற்குணங் களைப் பெருக்குவதாகவும் இருக்கவேண்டும் என்ற கருத்துகள் உடையவரா'ய் இருந்தார். இரா.சு.

***நிக்கோலோ காண்டி*** இத்தாலி நாட்டிலுள்ள வெனிசு நகரத்திலிருந்து இந்தியாவிற்கு வந்த பயணி. இவர் கி.பி. 1420-21-ஆம் ஆண்டில் தென்னிந்தியா வில் உள்ள விசயநகரத்திற்கு வருகை புரிந்து, விசயநக ரப் பேரரசு பற்றிய பல குறிப்புகளைத் தந்துள்ளார். விசயநகரத்தைப் பற்றி இன்று கிடைத்துள்ள குறிப்பு களுள்இவர்தம் குறிப்புகளே மிகவும்தொன்மை வாய்ந் தவை. நிக்கோலோ தெ காண்டி (Nicolo De Conti) கி.பி. 1420-இல் விசய நகர மன்னனான முதலாம் தேவராயரது ஆட்சிக்காலத்தில், தம் மனைவியுடன் விசயநகரத்தைப் பார்வையிட வந்தார். இவர் குறிப் புகள், விசய நகரத்தைப் பற்றியும், விசயநகர மக்க ளின் சமூக வாழ்க்கையைப் பற்றியும் கலை வளர்ச்சி பற்றியும் அறிந்துகொள்ளப் பெரிதும் பயன்படுகின்றன.

இவர்தம் பயண அனுபவங்களைப் போப்பாண்ட வரின் செயலாளரிடம் விவரித்துக் கூறி அவற்றை எழுதச் செய்தார். இவ்வாறு செயலாளரால் இலத் தீன் மொழியில் எழுதப்பட்ட குறிப்புகள் போப்பாண் டவரிடம் வழங்கப்பட்டன. பின்னர் அவை போர்ச்சு கீசிய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன. இலத்தீனில் எழுதப்பட்ட குறிப்புகள் இதுகாறும் கிடைக்கவில்லை.

விசயநகரத்தைப் பார்வையிட்டு மன்னனின் ஆடம்பர, ஆரவார மிக்க வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும் காண்டி, அம்மன்னனின் பெயரைக் குறிப்பிடாதது விந்தையே. இவர், மன்னனை நேரில் கண்டு அவருடன் பேட்டி கண்டதாகத் தெரிய வில்லை. மன்னனின் அந்தப்புரத்தைப் பற்றியும் இவர் குறிப்பிட்டுள்ளார். விசயநகரத்தாரின் அரசவை, நாணயச் செலாவணி, கலை முதலானவை பற்றியும் இவர் விரித்துக் கூற மறக்கவில்லை. விசயநகரத்தை

இவர், பிசெனேகரியா (Bizenegaria) என்று குறிப்பிட்டுள்ளார். மலையடிவாரத்தில் கட்டப்பட்டுள்ள இந்நகரம் 96 கி.மீ. சுற்றளவு கொண்டது என்றும், மலைப் பள்ளத்தாக்கையும் உள்ளடக்கி இதன் சுவர்கள் மலையுடன் இணைக்கப்பட்டதால் பரந்து விரிந்ததாகக் காணப்பட்டது என்றும் சுட்டுகிறார். இந்நகரத்தில்90,000படைவீரர்கள் இருந்தனர் எனவும் குறிப்பிடுகிறார்.

மன்னனின் அரண்மனை பெரிதும் அழகுபடுத்தப்பட்டு விரிந்து கிடந்தது என்றும். இதன் வாயில்கள் கவின்மிகு தோற்றத்தைக் கொண்டிருந்தன என்றும், தெருக்கள் அகன்றனவாக இருந்தன என்றும் இவர் குறிப்பிடுகிறார். தலைக்கோட்டைப் போருக்குப் பின்னர் விசயநகர அரசின் தலைமைப் பீடம் சந்திரகிரிக்கு மாற்றப்பட்டது. இது ஒரு மிகவும் புனிதமான நகரம் என்றும் 'பலாகொண்டா' என்று இது கூறப்பட்டது என்றும் காண்டி குறிப்பிடுகிறார். இது 16 கி.மீ. சுற்றளவு கொண்டதென்றும், விசயநகரத்திலிருந்து 8 நாள்கள் பயணம் செய்தால் இதனை அடையலாம் என்றும் இவர் விரிவாக விளக்குகிறார். மலைமீது 3,000 அடி உயரத்தில் அமைந்திருந்த இந்நகரம் இக்காலத்திய அனந்தப்பூரின் தென்புறம் இருந்தது என்றும், படைகள் தங்கும் கோட்டையாகப் பின்னர்ப் பயன்படுத்தப்பட்டது என்றும் குறிப்பிடுகிறார். கோல்கொண்டா நகரிலுள்ள சுரங்கங்களைப் புகழ்ந்து பேசும் இவர், விசயநகரத்திலுள்ள தங்கச் சுரங்கத்தைக் கண்டு வியப்பு அடைந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். விசயநகரத்தில் முன்பே 12 மாதங்கள் கொண்ட ஆண்டுமுறை இருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

விசயநகர மக்களின் சமுதாய வாழ்வு பற்றி இவர் காய்தல் உவத்தல் இன்றி விவரித்திருப்பது பாராட்டத்தக்கது. நாட்டில் அடிமை முறை நிலவியது பற்றியும், இரு பாலாரும் அடிமைகளாக இருந்தமை பற்றியும் இவர் கோடிட்டுக் காட்டுகிறார். கடன் வாங்கியவன், கடன் கொடுத்தவனுக்கு அடிமை ஆயினானென்றும், மனிதர்கள் விற்கப்பட்டனர் என்றும் கூறியுள்ளார். ஆண்கள் தங்கள் விருப்பப்படி எத்தனை பெண்களை வேண்டுமென்றாலும் மணந்துகொள்ள அனுமதிக்கப்பட்டனர். உடன்கட்டை ஏறும் வழக்கம் நடைமுறையில் இருந்தது. பலதார மணம், உடன்கட்டை ஏறும் வழக்கம் ஆகியவைபற்றிய சுவையான தகவல்களையும் இவர் தந்துள்ளார். விசயநகர வேந்தன் மற்ற வேந்தர்களைக் காட்டிலும் வலிமை மிக்கவனாகத் திகழ்ந்தான் என்றும், அவன் 12,000 மனைவிகளைக் கொண்டிருந்தான் என்றும், அவர்களுள் 4,000 பேர் மன்னன் செல்லுமிடத்திற்கெல்லாம் நடந்துசென்று மன்னனுக்குப் பணிவிடை செய்தனரென்றும் குறிப்பிடுகிறார்.

விசயநகர மக்களால் சிறப்பான முறையில் கொண்டாடப்பட்டு வந்த உகாதி (புத்தாண்டு), தீபாவளி, மகாநவமி போன்ற திருவிழாக்களைப் பற்றிய விரிவான செய்திகளையும் நிக்கோலா காண்டி சுவைபட விவரித்துள்ளார்.

ஆண்களும் பெண்களும் பட்டாடைகளையும் அணிந்திருந்தனர் எனவும், ஆண்கள் முழங்கால் வரையிலும், பெண்கள் கணுக்கால் வரையிலும், ஆடை உடுத்தியிருந்தனர் எனவும் இவர் கூறுகிறார். பெண்கள், வண்ணம் தீட்டப்பட்ட இரு குச்சிகளைக் கையில் கொண்டு, கோலாட்டம் ஆடினர் என்றும், தங்க இழையாலும் பட்டு இழையாலும் அலங்கரிக்கப்பட்ட மெல்லிய தோற் செருப்பை அணிந்திருந்தனர் என்றும் காண்டி கூறுகிறார். பெண்கள் பல விதமான தலை அலங்காரங்களை மேற்கொண்டது பற்றியும், அவர்கள் குதிரைச் சவாரி செய்தமை பற்றியும் இவரது குறிப்புகள் தெரிவிக்கின்றன. நாடு முழுவதிலும் விலைமாதர் பலர் இருந்தமை பற்றியும், அவர்கள் இயற்கை அழகுடன் செயற்கை அழகையும் சேர்த்து ஒப்பனையாலும், கவர்ச்சியாலும் ஆண்களைக் கவர்ந்தமை பற்றியும் காண்டி சுவைபடக் குறிப்பிடுகிறார்.

அப்துல் இரசாக்குக் குறிப்புகளைப் போன்று காண்டியின் குறிப்புகளும் விசயநகரத்தைப் பற்றிப் பயிலும் மாணவனுக்குப் பெரிதும் பயன்படுகின்றன. காண்டியின் குறிப்பு, விசயநகரப் பேரரசின் மக்கள் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டும் ஓர் அரிய பெட்டகமாகும். ம.இ.

**துணை நூல்கள்:**


**Saletore, R.N.**, Vijayanagar Art, Sundeept Prakasham, Delhi, 1982.

**Sreenivasa Murthy, H.V., Ramakrishnan R.**, History of Karnataka., S. Chand & Co., Delhi, 1978.


**நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்:** மான் கொம்பை நிமிர்த்திக் கைக்கோலாகக் கொண்டமையால் இவர் கலைக் கோட்டுத் தண்டன் எனப்பட்டார். இவரது இயற்பெயர் புலப்படவில்லை. நிகண்டன் என்ற அடைமொழியால் இவர் தமிழில் நிகண்டொன்று செய்தாரென்று தெரிகிறது. அதுவே, கலைக்கோட்டுத் தண்டு எனப்படுவது. இதனை இடுகுறிப் பெயர் என்று கொண்டார் களவியலுரைகாரரும் நன்னூல் விருத்தியுரைகாரரும் (சூத்.49). அது இதுகாறும் வெளிவந்திலது. இவ்வாறு இப்புலவரைக் குறித்து நற்றிணை உரையாசிரியர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் தம் நற்றிணைப் பதிப்பில் பாடினோர் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார். இவர்

பாடியதாக நற்றிணை 382-ஆம் பாடல் ஒன்றே காணப்படுகிறது.

ஒருவழித் தணந்த காலத்துப் பொழுதுபட ஆற்றாளாகி வருந்திய தலைமகளைத் தோழி ஆற்றுவிக்க வியலாது கவன்றபோது அவளுக்குத் தலைமகள் கூறியதாக நெய்தல் திணையில் இப்புலவர் அப்பாடலை அமைத்துள்ளார்.

'தண்ணத்துறைவனாகிய தலைவன் களவொழுக்கம் மேற்கொண்டு பலகாலும் இங்கு வருதலால் அவன் நாணமெய்தி இவ்விடம் நோக்காதவாறு நம் பகைவராய ஏதிலாட்டியரும் சேரியம்பெண்டிரும்ஒரு சேரத் தூற்றும் பழிச்சொல் மிகுதியாக உண்டன்றே; ஆதலின், மாலைப் பொழுதிலே கடற்கரைச்சோலை சூழ்ந்த கழியிடத்தே நீர் வெள்ளமாகப் பெருக, கடலிடத்துள்ள மீன்களைத் தின்னும் பறவைக் கூட்டம் கானலிடத்தேயுள்ள தத்தம் கூட்டினிடத்தே ஒரு சேரச் சென்று புகும் மாலைக் காலத்தை நினையாமல் நம்மைப் பிரிந்து நீங்கிய காதலன், முன்னர்த் தங்கியிருந்தவிடத்து நாமிருந்து பிரிவுக்கு மிக வருந்தி ஆருயிர் அழிவதாயினும் காதல் நோய் புறத்தார்க்குப் புலனாகாதவாறு மறைத்துக் கொள்ளுதல் வேண்டும்; ஆதலால் யான் புலம்பி வருந்தாது ஆற்றியிருப்பேன்; அது காரணமாக நீ வருந்தாதே' என்று தோழியிடம் தலைவி கூறுவதாக நற்றிணை 382-ஆம் பாடலை இப்புலவர் அமைத்துள்ளார். நெய்தல் நிலத்து மாலைக்காட்சியை இப்புலவர் அழகுபடப் புனைந்துள்ளது சுவைபயப்பதாகும். 'அலைக்கும் கடலில் மீனருந்திப் புள்ளினம் குடம்பை சேரும்' என்று கூறி, அரிய நெறியிலே சென்று வினைமுடித்துத் தலைவன் மீண்டு வந்து கூடினானில்லையே என்பதைத் தலைவி குறிப்பிற் புலப்படுத்தியது நயமிக்கது. இரா.சா.

***நிகண்டுகள்***: நிகண்டு என்பது இச்சொற்கு இதுவே பொருளென்று சொற்கும் பொருட்கும் உள்ள ஆற்றலாகிய நியமம் அறிவிக்கும் கருவி நூல். இது இந்திய மொழிகளில் சொற்பொருள் விளக்கும் துறை நூல்களைக் குறிக்கும் பொதுச் சொல்லாக வழங்கப்படுகின்றது. எனினும் தமிழைப் பொறுத்தவரை இது யாப்பு வழிபட்டுச் சொற்பொருள் விளக்கும் துறை நூலைக் குறித்தற்கு ஆளப் பெறுகின்றது.

நிகண்டு என்னும் வடசொல்லுக்குக் கூட்டம் அல்லது தொகுதி என்று பொருள். நிகண்டு நூலின் கண் சொற்கள் கூட்டமாக-தொகுதியாக அமைக்கப்பட்டுப் பொருள் விளக்கப்படுவதால் நிகண்டு என்னும் பெயர் பெற்றது.

**நிகண்டு விளக்கம்**: வேதச்சொற்களின் பொருளை ஆராயும் துறை நிருத்தம் எனப்படும். இந்த நிருத்தத்தின் ஒரு பகுதி நிகண்டு ஆகும். இப்போது நிலைத்திருக்கும் நிருத்தம் யாசுகர் என்பவரால் இயற்றப் பெற்றது. இது மூன்று காண்டங்களை உடையது. 1) நைகண்டுகம்-நிகண்டு என்னும் சொல்லிலிருந்து வந்தது என்பர்; பூமி, பொன், காற்று முதலிய பொதுப் பெயரின்கீழ் அவை தொடர்பான ஒரு பொருள் பல பெயர்களைத் தொகுத்துத் தரும். 2) நைகமம்-நிகமம் என்னும் சொல்லிலிருந்து வந்தது என்பர்;ஒரு பெயர், பல பொருளைக் கூறும் பகுதியாகும். 3) தைவதம்-தெய்வம் என்னும் சொல்லிலிருந்து வந்தது என்பர்; வைதிக தேவதைகள் பற்றி உரைக்கும் பகுதியாகும்.

சொல்லுக்குப் பொருள் கூறும் பொருட்டுப் பின்னர் எழுந்த தனி நூல்கள் 'நைகண்டுகம்' என்பதன் மூலச் சொல்லாகிய 'நிகண்டு' என்னும் பொதுப் பெயரால் வழங்கப்பட்டன. புராணம், பிரபந்தம் முதலிய பெயர்களைப் போல நிகண்டு என்னும் வடமொழிப் பெயர், தமிழ் உலகில் பெருக வழங்கி நிலை பெற்றுவிட்டது. நிகண்டு என்பதனைத் தமிழ்ச்சொல் எனக்கொள்வோரும் உளர்.

**உரிச்சொல், உரிசொற் பனுவல், நிகண்டு**: உரிச்சொல், உரிச்சொற் பனுவல் என்னும் பொதுப் பெயரால் தமிழ்ச் சொற்பொருள் கூறும் துறை நூல்கள் முதலில் வழங்கப்பட்டன. தமிழில் சொற்பொருள் விளக்கும் துறை முதன்முதலில் தொல்காப்பிய உரியியலில் காணப்படுகின்றது. பிற்காலத்து எழுந்த சொற்பொருள் விளக்கும் நூல்கள் உரிச்சொற்களுக்கு மட்டுமன்றி எல்லாச் சொற்களுக்கும் பொருள் கூறியிருப்பினும் அவை உரிச்சொல் அல்லது உரிச்சொற் பனுவல் என்றே வழங்கப்பட்டன. வைதிகச் சொற்களுக்குப் பொருள் கூறும் நூல் முதலில் நிகண்டு என வழங்கப்பட்டது; பின்னர் அனைத்துச் சொற்களுக்கும் பொருள் கூறும் நூலும் நிகண்டு எனக் கூறப்பட்டது. அவ்வாறே உரிச் சொற்களுக்கு மட்டுமன்றிப் பிற சொற்களுக்கும் பொருள் கூறும் நூலும் உரிச்சொல் அல்லதுஉரிச்சொற் பனுவல் என்றே வழங்கப்பட்டது. இதனை, 'சொல்லாம் பரத்தலிற் பிங்கலம் முதலா நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே' என்னும் நன்னூலின் நூற்பா அடிகள் வாயிலாகவும் மயிலை நாதரின் உரை வாயிலாகவும் அறிய முடிகின்றது. பிங்கலம் என்னும் நிகண்டின் சிறப்புப் பாயிரத்திலும் நூலின் இறுதியிலும் உரிச்சொற் பனுவல் என்னும் வழக்கு பயன்படுத்தப்பட்டுள்ளது.

உரிச்சொல், உரிச்சொற்பனுவல் என்னும் வழக்குகள் வீழ்ந்து, யாப்பில் சொற்பொருள் கூறும் நூலை 'நிகண்டு' என்னும் பொதுப் பெயரால் வழங்கும் வழக்கே இப்போது தமிழில் உள்ளது. நிகண்டு என்னும் வழக்கு தமிழ்ப் பரப்பில் முதன்முதலில் இறைய

னார் அகப்பொருள் உரையில் இடுகுறியால் நூல் பெயர் பெறும் முறைக்குக் காட்டுகள் குறிக்குமிடத்துத்தான் காணப்படுகின்றது. இருப்பினும் நிகண்டு என்னும் வழக்கு, சொற்பொருள் கூறும் நூலுக்கு முதன்முதல் அமைந்தது மண்டலபுருடர் இயற்றிய சூடாமணி நிகண்டு வழியாக என்று தெரிகின்றது. சூடாமணி நிகண்டின் பாயிரப்பகுதி, சிதம்பர ரேவண சித்தர் இயற்றிய அகராதி நிகண்டின் பாயிரப்பகுதி, நன்னூல்-460-ஆம் நூற்பாவிற்குச் சங்கர நமச்சிவாயர் உரை, ஆசிரிய நிகண்டின் பாயிரம், நாமதீப நிகண்டு ஆகியவற்றின் வாயிலாக நிகண்டு என்னும் ஆட்சி பரவியது; தமிழ் உலகில் பெருக வழங்கி நிலை பெற்று விட்டது.

**நிகண்டுகளின் தோற்றம்:** தொல்காப்பிய உவமவியல் பிற்கால அணியிலக்கண வளர்ச்சிக்கு அடித்தளமாய் அமைந்தது போன்று, உரியியல் முதலிய சொற்பொருள் விளக்கும் இயல்கள், சொற்பொருள் கூறும் துறை நூல்களாகிய நிகண்டுகளுக்குக் களமாயின.

இடைக்காலத்தில், (கி.பி.7-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர்) தோன்றிய இலக்கியங்களில் காணப் பெறும் செய்யுள் நடை, கவிதைப் பண்பு, சொற்களின் தன்மை, வடிவம், சொற்றொடர் அமைப்பு முதலியன சங்கத் தமிழினின்றும் பெரிதும் வேறுபட்டிருந்தன. அதனால் பண்டைத் தமிழ் நூல்களின் இலக்கியச் செழுமையை அறிந்து கொள்வதில் இடர்ப்பாடு இருந்தது; புலவர்களுக்கும் இலக்கியப் பயிற்சியில் ஈடுபட்டவர்களுக்கும் பண்டைக்கால நூல்களைப் படித்துச் சுவைப்பதற்கு உதவும் கருவி நூல்களாகவும், புதுவதாக இலக்கியம் படைக்க உறுதுணை நூல்களாகவும் நிகண்டுகள் தோன்றின என்று கொள்ளலாம். சொல்லுக்கு இரு பெரும் இயல்புகள் உள்ளன. அவை பொருண்மை, சொன்மை என்பன. இதனைத் தொல்காப்பியர், 'பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும் சொல்லின் ஆகும் என்மனார் புலவர்' எனக் குறிப்பர். பொருண்மை, சொன்மை ஆகிய இவ்விரு சொற்கூறுகளைத் தெளிந்தால் அன்றிச் சொற்களையோ மொழியையோ உணர்தல் இயலாது. எனவேதான், பொருண்மை அறிவு கருதி முதலில் நிகண்டுகளையும், சொன்மை அறிவு கருதிப் பின்னர் இலக்கணங்களையும் பயில்வது பண்டு தமிழகத்தில் மரபாக இருந்து வந்தது. எனவே, நிகண்டுகளின் தோற்றம் அக்காலத்தின் இன்றியமையாத் தேவையாக இருந்தது.

**நிகண்டுகளின் பொது அமைப்பு:** நிகண்டுகள் பெரும்பான்மை மூன்று பெரும் தொகுதிகளைக் கொண்டிலங்கும். அவையாவன: 1) ஒரு பொருட்பல் பெயர்த் தொகுதி, 2) ஒருசொற் பல்பொருட்பெயர்த் தொகுதி. 3) பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. இம்மூன்று பிரிவுகளையும் இன்றுள்ள நிகண்டு நூல்களுள் பழமையான திவாகரம் வாயிலாக விளக்கமுறக் காணலாம்.

திவாகரத்தின் அமைப்பு முறையே பிற்கால நிகண்டுகளுக்கு அடித்தளமாய் அமைந்தது. திவாகரம் பின்வரும் பன்னிரு தொகுதிகளைக் கொண்டது. 1) தெய்வப்பெயர், 2) மக்கட் பெயர், 3) விலங்கின் பெயர், 4) மரப்பெயர், 5) இடப்பெயர், 6) பல்பொருட் பெயர், 7) செயற்கை வடிவப் பெயர், 8) பண்புப் பெயர், 9) செயல் பற்றிய பெயர், 10) ஒலி பற்றிய பெயர், 11) ஒரு சொல் பல்பொருட் பெயர் 12) பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்.

தெய்வப் பெயரில் சிவன், திருமால் முதலிய தெய்வப் பெயர்களும் நாள் கோள்களின் பெயர், காலப்பெயர், பருவப்பெயர், மழை, மேகம் முதலியவற்றின் பெயர்களும் இடம் பெறுகின்றன. மக்கட் பெயரில் அருந்தவர், அறிஞர், அரசர், பரிவாரங்கள் தொழிலாளர், கீழ்மக்கள், பெண்டிர், நானில மக்கள் உறவினர், படைகள், உடல் உறுப்புகள் முதலியன விளக்கம் பெறுகின்றன. விலங்கின் பெயரில் விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, இவற்றின் உறுப்புப் பெயர் முதலியன குறிக்கப் பெறுகின்றன. மரப் பெயரில் மரம், செடி, கொடி, பூ, காய், கனி, தானிய வகை முதலியன கூறப் பெறுகின்றன. இடப்பெயரில் உலகம், நாடு, ஊர், மனை, மலை, ஆறு, நீர்நிலை ஆகியன சுட்டப்படுகின்றன. பல்பொருட் பெயரில் பொன், மணி, விளை பொருள், உணவு வகை ஆகியன பேசப்படுகின்றன. செயற்கை வடிவப் பெயரில் போர்க்கருவிகள், அணிகளின் வகை, உடை வகை, ஊர்தி வகை, விளையாட்டுக் கருவிகள் முதலியன அடங்குகின்றன. பண்பு பற்றிய பெயரில் காட்சிப் பொருள், உணர்விற்குப் புலப்படும் உண்மைப் பொருள் இவற்றின் குணத் தொடர்பு பற்றிய பெயர்கள் சேர்ந்துள்ளன. செயல் பற்றிய பெயர்த் தொகுதியில் வினைப் பெயர்கள் பலவும் பொருள் பெறுகின்றன. ஒலி பற்றிய பெயர்த் தொகுதியில் சொல்வகை, பாவகை, யாழ்வகை, இசை வகை முதலியன குறித்த பெயர்களைக் காணலாம். மேற்கண்ட பத்துத் தொகுதிகளும் ஒரு தொகுதி நீர்மையதாய் ஒரு பொருட் பல்பெயர்த் தொகுதி எனப்படும். பதினோராம் தொகுதியில் ஒரு சொல்லுக்குரிய பொருள்கள் எல்லாம் விரித்துரைக்கப்பட்டுள்ளன. இது ஒரு சொற்பல் பொருட்பெயர்த் தொகுதி எனப்படும். பன்னிரண்டாம் தொகுதி இருவினை, முப்பொறி போன்ற தொகைப் பெயர்களை விளக்கும். இது பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி எனப்படும்.

பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி தமிழுக்கும் வடமொழிக்கும் உரியது. ஒரு சொல் பல்பொருள பெயர்த்தொகுதி இன்றைய அகராதி யுடன் ஒப்புமையுடையது எனலாம். ஏனையதொகுதி களைக் காட்டிலும் இதனை மனப்பாடம் செய் யும் பழக்கம் இருந்தது. ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி ஆங்கிலத்தில் வழங்கும் சொற்களஞ்சியம் (Thesaurus) போன்றதாகும்.

நிகண்டுகளின் முப்பெரும் பிரிவுகளைப் பெற்றுத் திவாகரம் போல முழுமையான நிகண்டாகச் சூடா மணி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, பாரதி தீபம் முதலியன விளங்குகின்றன. மூவகைப் பிரிவுகளுள் முதல் பிரிவை மட்டும் உசித சூடாமனி, நாம தீபம், அபிதானத் தனிச்செய்யுள், நிகண்டு முதலியன கொண்டு உள்ளன. இரண்டாம் பிரிவை மட்டும் அகராதி நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, வேதகிரியார் சூடாமணி நிகண்டு, நாநார்த்த தீபிகை, சிந்தாமணி நிகண்டு, விரிவு நிகண்டு ஆகியன கொண் டுள்ளன. மூன்றாம் பிரிவை மட்டும் தொகை நிகண்டு, பொருள் தொகை நிகண்டு, தொகைப் பெயர் விளக்கம், இலக்கத் திறவுகோல் முதலியன உடையன; பிங்கலம், கயாதரம், கைலாச நிகண்டு, சூடாமணி, ஆசிரிய நிகண்டு, பொதிகை நிகண்டு, கந்தசுவாமியம் ஆகியவை முதலிரு பிரிவுகளை மட் டும் கொண்டவை. இறுதி இரு பிரிவுகளை மட்டும் கொண்டு பல்பொருட் சூடாமணி நிகண்டு அமைந் துள்ளது. முதல், இறுதிப்பிரிவுகளை மட்டும் கொண்ட நிகண்டு ஏதும் இல்லை.

திவாகர நிகண்டு ஒவ்வொரு பெயர்ப் பாகு பாட்டையும் 'தொகுதி' எனக் கூற 'வகை' என்று பிங்கலமும், 'இயல்' என்று கயாதரமும் 'வர்க்கம்' என்று நாம தீபமும் கூறுகின்றன. பிங்கலம், சூடா மணி முதலிய சில தொகுதிப் பெயர்கள் ஒன்றுடன் ஒன்று இணைத்து வகைப் படுத்தப்பட்டிருப்பினும் பொது அமைப்பில் திவாகரர் வகுத்த முறையில் மாறுதல் இல்லை; மேலும் நிகண்டுகளில் தொழிற் பெயர் வடிவில் வினைச் சொற்கள் நிறுத்தப் பெற் றுச் செயல் பற்றிய பெயர்த் தொகுதியில் பொருள் விளக்கப்பட்டுள்ளன. இந்த அமைப்பு முறையிலும் மாறுதல் இல்லை.

**நிகண்டுகளும் யாப்பும்:** நிகண்டுகள் மனனம் செய்தற்குரியனவாக இருந்தமையால் பலவகை யாப்புகளைப் பயன்படுத்தி இவற்றைப் படைத்தனர். நிகண்டு எழுதுவதற்கு ஆசிரியம், வெண்பா, கலித் துறை, விருத்தம் ஆகிய யாப்புகள் முறையே பயன் பட்டன. ஆசிரியப்பாவினால் இயன்ற திவாகரம் மனப்பாடத்திற்கு எளிதாகாது. எனவே திவாகர நூற்பா யாப்பினின்றும் பின்வந்த நூல்கள் மாறுபட லாயின. வெண்பா ஆசிரியப்பாவிலும் எளிதானது. கலித்துறையில் எதுகை, மோனை, தளை ஆகியவற்று டன் எழுத்து வரையறையும் சேர்ந்து உதவுகின்றது; விருத்தப்பாவில் எளிதான ஓர் இசையும் பொருந்தி யிருக்கின்றது. ஆகவே விருத்தப்பா, நிகண்டுகளில் மிகுதியாக இடம் பெற்றது. சூடாமணி நிகண்டு இவ் வகைப் பாவால் இயன்றது.

**வரலாற்று அடிப்படையில் நிகண்டுகள்:** திவா கரரால் இயற்றப்பெற்ற திவாகரமும் பிங்கலரால் இயற்றப் பெற்ற பிங்கலமும் கி.பி. 8-ஆம் நூற் றாண்டைச் சார்ந்தவை; மண்டலபுருடரின் சூடா மணி நிகண்டும், சிதம்பர ரேவண சித்தரின் அகராதி நிகண்டும் கி.பி.16-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தன வாகும். காங்கேயரின் உரிச்சொல் நிகண்டு, கயா தரரின் கயாதர நிகண்டு, ஈசுர பாரதியாரின் பல் பொருட் சூடாமணி நிகண்டு, வடமலை நிகண்டு, கைலாசரின் கைலாச நிகண்டு சூடாமணி, திருவேங் கட பாரதியின் பாரதிதீபம், ஆண்டிப்புலவரின் ஆசிரிய நிகண்டு ஆகியன கி.பி. 17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. அருமருந்தைய தேசிகரின் அரும்பொருள் விளக்க நிகண்டு, சுப்பிரமணியக் கவிராயரின் தொகை நிகண்டு, சுப்பிரமணிய பாரதியின் பொருள் தொகை நிகண்டு, சாமிநாதக் கவிராயரின் பொதிகை நிகண்டு, சிதம்பரக்கவிராயரின் உசித சூடாமணி நிகண்டு ஆகியன கி.பி. 18-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. சிவசுப்பிரமணியக் கவிராயரின் நாமதீப நிகண்டு. வேதகிரி முதலியாரின் வேதகிரியார் சூடா மணி நிகண்டு, தொகைப்பெயர் விளக்கம், சுப்பிர மணிய தேசிகரின் கந்தசுவாமியம், முத்துசாமிப் பிள்ளையின் நாநார்த்த தீபிகை, வைத்தியலிங்கம் பிள்ளையின் சிந்தாமணி நிகண்டு, கோபாலசாமி நாயகரின் அபிதானத் தனிச் செய்யுள் நிகண்டு ஆகியன கி.பி. 19-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. மான்மருகனார் என்று சொல்லப்பெறும் பண்டித இராம. சுப்பிரமணிய நாவலரின் தமிழுரிச் சொற் பனுவல். 20-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

தமிழில் இதுகாறும் நிகண்டு நூல்கள் 50 இருப் பதாக அறிய முடிகின்றது. அவற்றுள் பெயரளவில் தெரிந்தவை 15; அச்சாகாமல் சுவடியாக இருப் பவை 10; கிடைத்தற்கு அரியனவாக இருப்பவை 5; கிடைப்பவை 20 ஆகும்.

**நிகண்டுகளில் அகரநிரல் முயற்சி:** மனப்பாடத் திற்காக இயற்றப்பெற்ற நிகண்டுகளைக் குறிப்பு நோக்கீட்டுக்கு (reference) உதவும் வகையில் மாற்றி அமைக்க வேண்டும் என்னும் நோக்கில் முயற்சிகள் நடைபெற்றுள்ளன என்பது நிகண்டுகளின் வரலாற்

றால் தெரிய வருகின்றது. முதல் நிலையாக ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதியாகிய பதினோராம் தொகுதியில் செய்யுட் சுவை கருதி ஏக தேசமாகச் சொற்கள் எதுகையில் அமைக்கப்பட்டன. அடுத்த நிலையாக, இச்சொற்களைக் ககர எதுகை, சகர எதுகை முதலிய பகுதிகளாகப் பாகுபாடு செய்து எதுகையை வைத்துக்கொண்டே சொற்களைச் சிறிது முயன்று எடுக்கக் கூடிய முறை கையாளப்பட்டது. மூன்றாம் நிலையாக, ஓர் எதுகையில் பிறிதோர் எதுகைச்சொல் வந்து கலத்தல், செய்யுளுக்காகத் தேவையற்ற அடைமொழி புணர்த்துச் சொல்லின் பொருளைக் கருக வைத்தல் ஆகிய குறைகளை நீக்கும் முயற்சிகள் தோன்றின. இம்முறையும் நிறைவளிக்காததால், நான்காம் நிலையாக, அகராதி முறை அரைகுறையாகக் கையாளப்பட்டது. இம்முறையைக் கொண்டு தோன்றிய முதல்நூல் அகராதி நிகண்டு ஆகும்.

அகராதி நிகண்டில் சொற்களை ஒருபொருள், இருபொருள் உடையன எனப் பொருள் தொகை அடிப்படையில் பகுத்து முதல் எழுத்து அளவில் அகர நிரல் கையாளப்பட்டது. இம்முறையில் உள்ள குறைகளை நீக்கி, ஒரு பொருள் இரு பொருள் முதலிய பாகுபாடுகளை விலக்கிப் பல்பொருட் சூளாமணி முதல் எழுத்து அளவில் அகரநிரலைக் கொண்டுள்ளது. கைலாச நிகண்டு சூடாமணியில் ஓரெழுத்தொருமொழி மட்டும் அகரநிரலில் உள்ளது. பொதிகை நிகண்டு முதல் ஈரெழுத்துவரை அகர நிரலை வளர்த்தது. திவாகர நிகண்டைப் பதிப்பித்தவர்கள் திவாகரர் நூற்பாக்களை அமைத்தவாறு அமைக்காமல் 'ஆதியிற் பொருள்', 'அந்தத்துப் பொருள்' என இருகூறுபடுத்தி ஒவ்வொன்றிலும் நூற்பாக்களை அகராதி வரிசையில் அமைத்தனர். பிங்கல நிகண்டின் பதிப்பிலும் அகராதி வரிசையில் சொற்களை அமைத்துள்ள முறை காணப்படுகின்றது. குறிப்பு நோக்கீட்டை மனத்தில் கொண்டு இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. நிகண்டுகளின் படிமுறை வளர்ச்சியின் விளைவாலும் மேனாட்டார் தொடர்பாலும் கால மாற்றத்தாலும் தமிழில் அகராதிகள் தோற்றம் பெற்றன. வ.ஜெ.

**துணை நூல்கள்:**


**சுந்தர சண்முகனார்**, தமிழ் அகராதிக்கலை, கழகம், சென்னை, 1971.

**சுப்பிரமணிய அய்யர், ஏ.வி.**, தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, பாரி நிலையம், சென்னை, 1977.

**ஜெயதேவன், வ.**, தமிழ் அகராதியியல், அன்பு நூலகம், சென்னை, 1977.

**Vaiyapuri Pillai, S.**, History of Tamil Lexicography, Tamil Lexicon, Vol. I, PP.XXV - XIV. University of Madras, Madras, 1936.


*நிகழ்வடை ஒப்பந்தங்கள்*: இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் பிரிவு 31 நிகழ்வடை ஒப்பந்தம் பற்றிக் கூறுகிறது. ஒரு நிகழ்ச்சியின்போது ஒன்றைச் செய்வதற்கோ செய்யாமலிருப்பதற்கோ ஏற்படும் ஒப்பந்தம் நிகழ்வடை ஒப்பந்தமாகும். அந் நிகழ்ச்சிக்குத் துணையான செயல்கள் ஏற்படலாம் அல்லது ஏற்படாமலும் இருக்கலாம் என்று ஒப்பந்தச் சட்ட விதி கூறுகிறது. அதாவது, ஓர் ஒப்பந்தத் தொடர்பான நிகழ்ச்சி ஏற்பட்டாலும் அல்லது ஏற்படாத நிலையிலும் எந்த ஒப்பந்தத்தின் நிறைவேற்றம் சார்ந்துள்ளதோ அந்த ஒப்பந்தம் நிகழ்வடை ஒப்பந்தம் (Contingent Contract) ஆகும். எடுத்துக் காட்டாக, ஆறுமுகம் என்பவர் பாலனுக்கு உரூ. 20,000 தருவதாக ஒப்புக் கொள்கிறார். மறு பயனாகப் பாலனின் தொழிற்சாலை தீ விபத்துக்கு இலக்கானால் அவர் ஆறுமுகத்திற்கு மாதம் உரூ. 200 செலுத்தவேண்டும் என்பது ஒரு நிகழ்வடை ஒப்பந்தமாகும். மேற்கூறிய நிபந்தனையைக் கொண்டு எந்த ஒரு சாதாரண ஒப்பந்தத்தையும் ஒரு நிகழ்வடை ஒப்பந்தமாக மாற்றிடலாம்.

கப்பலில் பொருள் பத்திரமாக வந்தடைந்தால் அருண், பாலகிருட்டிணனுக்குப் பத்துப் பருத்திக் கட்டுகளை உரூ. 20,000-க்கு விற்பதாக ஒப்பந்தம் செய்கிறார். ஒரு குறிப்பிட்ட கப்பல் திரும்பவில்லை யென்றால் ஒருவர் மற்றொருவருக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைத் தருவதாக வாக்களிக்கிறார். மேற்கூறியவை எல்லாம் நிகழ்வடை ஒப்பந்தங்களாகும். காப்பீடு ஒப்பந்தங்களையும், நட்ட ஈடு உறுதிமொழி (Indemnity & Guarantee) ஒப்பந்தங்களையும் நிகழ்வடை ஒப்பந்தங்களுக்கு எடுத்துக்காட்டுகளாகச் சொல்லலாம்.

ஓர் ஒப்பந்தத்தின் நிறைவேற்றம் ஒரு நிகழ்வடை நிகழ்ச்சியைப் பொறுத்துள்ளதால் நிகழ்வடை ஒப்பந்தம் ஒரு நிபந்தனை ஒப்பந்தமாக மாறுகிறது. சில வேளைகளில் நிபந்தனை ஒப்பந்தமாக ஓர் ஒப்பந்தம் காணப்பட்டாலும் அது ஒரு சாதாரண, முழுமையான ஒப்பந்தமாகக் காணப்படும். 'அ' என்பவருக்கு 'ஆ' இரண்டு பேர் தங்குவதற்குப் போதுமான. ஓர் அறை மாதம் ஒன்றுக்கு உரூ. 500 வாடகையில் பார்த்துத் தந்தால் உரூ. 50 தருவதாக வாக்களிக்கிறார். இது ஒரு நிபந்தனை ஒப்பந்தம் போல் தோன்றினாலும் நிகழ்வடை ஒப்பந்தம் ஆகாது. இது ஒரு சாதாரண ஒப்பந்தமாகும். ஒரு நிலையற்ற நிகழ்ச்சியான, அதாவது அறையை அமர்த்துவது, ஒப்

பந்தத்தின் மறு பயனாக (consideration) விளங்கு கிறது. இந் நிகழ்ச்சி ஒரு துணையான அல்லது தொடர்பான (collateral) நிகழ்ச்சியாகாது. எனவே, நிகழ்வடை ஒப்பந்தங்களில் நிலையற்ற நிகழ்ச்சி அந்த ஒப்பந்தத்திற்கு ஒரு துணையாக இருக்கவேண் டும்.

**துணை நிகழ்ச்சி:** 'இது ஓர் ஒப்பந்தத்தின் முழு நிறைவேற்றமன்று; மறு பயனுமன்று' என்று பொல் லக்கு, முல்லா (Pollock and Mulla) என்போர் கூறு கின்றனர், 'இ' என்பவர், அவர் வீட்டிற்கு வெள்ளை யடிக்கும் 'ஈ' என்பவருக்கு உரு. 100 அளிப்பதாக ஒப் புக்கொண்டார். ஆனால், வேலை முழுவதும் முடிந்த பிறகுதான் பணம் கொடுப்பதாகக் கட்டுப்பாடு விதித்தார். இது ஒரு நிகழ்வடை ஒப்பந்தமன்று. வேலையை முடிக்கும் நிகழ்ச்சி ஒப்பந்தத்திற்கு ஒரு துணை நிகழ்ச்சியன்று. அது ஒப்பந்தத்தின் ஒரு பகுதி யான வாக்குறுதியாகும். சுருங்கக் கூறின், துணை நிகழ்ச்சி (Collateral event) என்பது ஓர் ஒப்பந்தத் தின் மறு பயனாகக் கொள்ளமுடியாது. அது தனித்து இயங்குவது. ஒருவர் ஓர் ஒப்பந்தக்காரரிடம் உரு. 1,00,000 தருவதற்கு மறுபயன் வீடு கட்டித் தருவ தாகும். கட்டடக் கலை நிபுணரால் ஏற்கும் நிகழ்ச்சி ஒரு துணை நிகழ்ச்சியாகும். அதற்கும் மறு பயனுக் கும் தொடர்பில்லை. ஆனால், இத் துணை நிகழ்ச்சி ஏற்பட்டால்தான் ஒப்பந்தம் வலியுறுத்தப்படும்.

எனவே, நிகழ்வடை ஒப்பந்தத்தின் மூலக் கூறு கள் இரண்டாகும். ஒன்று, ஒப்பந்த நிறைவேற்றம்; எதிர்கால நிலையற்ற நிகழ்ச்சி ஏற்படுவதாலும் அல் லது ஏற்படாமல் இருப்பதாலும் உள்ள நிலையைச் சார்ந்திருக்க வேண்டும். மற்றொன்று, எதிர்கால நிலையற்ற நிகழ்ச்சி ஒப்பந்தத்திற்குத் துணையாக அல்லது எதிர்பாராத வகையில் இருக்கவேண்டும்.

**நிகழ்வடை ஒப்பந்தத்தின் விதிமுறைகள்:** ஒப்பந்தச் சட்டத்தின் பிரிவுகள் 32,33,34,35,36 மேற்கூறிய கட் டளைகளை விளக்குகின்றன. 1) நிலையற்ற எதிர் கால நிகழ்ச்சிகள் நடந்தாலொழிய ஒரு செயலைச் செய்வதற்கும் அல்லது செய்யாமலிருப்பதற்கும் உள்ள ஒப்பந்தம் வலியுறுத்தப்பட முடியாது. எடுத்துக்காட் டாக, ஒரு குதிரையை 'இ' என்பவர் வாங்காவிட் டால் 'அ'என்பவர் 'ஆ'க்கு விற்பதாகச் சொன்னார். இங்கு 'இ'குதிரையை வாங்கிட மறுத்தாலொழிய இவ் வொப்பந்தத்தைச் சட்டத்தால்வலியுறுத்த முடியாது. 2) நடக்க வேண்டிய நிகழ்ச்சி நடக்கமுடியாத நிலை யிலிருந்து நடக்காவிட்டால் நிகழ்வடை ஒப்பந்தம் வலி யுறுத்தப்படலாம். எடுத்துக்காட்டாக, 'அ' என்பவர், ஒரு கப்பல் வராமலிருந்தால் 'ஆ'க்கு ஒரு குறிப்பிட்ட தொகை காப்பீட்டுக் கட்டணமாகத் தருவதாக வாக்களித்தார். அந்தக் கப்பல் மூழ்கிவிட்டது. எனவே, இவ்வொப்பந்தம் வலியுறுத்தப்படலாம். 3) ஒரு குறிப் பிட்ட காலத்திற்குள் ஒப்பந்தம் நிறைவேற்ற வேண்டி யிருந்து அந்நிகழ்ச்சி நடக்கமுடியாத நிலையிலிருந்தா லும் அக்குறிப்பிட்ட காலத்திற்குள் அவ் வொப்பந்தம் வலியுறுத்தப்படலாம். அல்லது எதிர்காலத்தில் நிறை வேற்றிவிடலாம். எடுத்துக்காட்டாக, 'அ' என்பவர், 'ஆ', 'இ'யை மணந்துகொண்டால் அவருக்குக் கடன் தருவதாகச் சொன்னார். ஆனால் 'இ', 'ஈ'யை மணந்துகொண்டார். எனவே 'ஆ', 'இ'யை மணந்து கொள்வது முடியாத நிகழ்ச்சியாகும் என்றாலும் 'ஈ' இறந்துவிட்டால் அதன்பின்னர் 'இ'யை மணந்து கொள்ளலாம். என்றாலும் அ ஆவுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தைப் புதுப்பிக்க முடியாது. கார ணம் இ, ஈயை மணந்துகொண்டபோதே அவ்வொப் பந்தம் நீக்கம் பெற்றுவிட்டது. 4) ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சி ஒரு குறிப்பிட்ட காலத்தில் நிகழ்ந்தாலும் குறிப்பிட்ட காலம் முடிந்து அந் நிகழ்ச்சி நிகழா விட்டாலும், காலம் குறிப்பிடப்படுவதற்குள் அந் நிகழ்ச்சி நடக்க முடியாததாக ஆகிவிட்டாலும் நிகழ் வடை ஒப்பந்தம் செல்லுபடியாகாது. எடுத்துக்காட் டாக 'அ' என்பவர், ஒரு குறிப்பிட்ட கப்பல் ஓர் ஆண்டிற்குள் திரும்பி வந்தால்'ஆ'வுக்குக் கடன் தருவ தாகச் சொன்னார். ஓர் ஆண்டுக் கழித்துக் கப்பல் திரும்பி வந்தால் ஒப்பந்தம் வலியுறுத்தப்படலாம். ஓர் ஆண்டிற்குள் கப்பல் எரிந்துவிட்டாலும் அல்லது திரும்பி வராவிட்டாலும் ஒப்பந்தம் செல்லாது. 5) ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் நிலையற்ற நிகழ்ச்சி நிகழாவிட்டால் அல்லது காலக்கெடு முடிந்துவிட் டால் அல்லது அக் காலத்திற்குள் நிகழ்ச்சி நிகழ முடியாததாக ஆகிவிட்டால் நிகழ்வடை ஒப்பந்தம் வலியுறுத்தப்படலாம். ஒரு குறிப்பிட்ட கப்பல் ஓர் ஆண்டிற்குள் திரும்ப வராவிட்டால் 'அ' என்பவர் 'ஆ'வுக்குக் காப்பீட்டுக்கட்டணம் போல் ஒரு தொகை யைத் தருவதாக உறுதியளித்தார். ஓர் ஆண்டிற்குள் கப்பல் திரும்பி வராவிட்டால் அல்லது எரிந்து விட் டால் நிகழ்வடை ஒப்பந்தம் வலியுறுத்தப்படலாம். 6) ஒரு நடக்க இயலாத நிகழ்ச்சி நடந்தாலும் இது மனிதர்களுக்குத் தெரிந்திருந்தாலும் அல்லது தெரியா மலிருந்தாலும் நிகழ்வடை ஒப்பந்தம் செல்லாது. எடுத்துக்காட்டாக, 'அ' என்பவர் 'ஆ'வுக்கு அவர் தம் மகளை மணம் செய்துகொண்டால் கடன் தருவ தாகச் சொன்னார். ஆனால், ஒப்பந்தம் ஏற்படும் பொழுது 'அ'வின் மகள் இறந்துவிட்டாள். எனவே, ஒப்பந்தம் செல்லாது.

**நிகழ்வடை ஒப்பந்தமும் சூதாட்ட ஒப்பந்தமும்:** சூதாட்ட ஒப்பந்தம்(Wagering Contract)என்பது எதிர் கால நிச்சயமற்ற நிகழ்ச்சி ஏற்பட்டால் அல்லது ஏற்படாமல் போனால் ஒரு குறிப்பிட்ட தொகை

அல்லது பொருள் செலுத்துவதற்கு அளிக்கும் வாக் குறுதியாகும். எனவே, இந்த ஒப்பந்தமும் நிகழ்வடை ஒப்பந்தமும் வேறுபட்டுத் திகழ்கின்றன. முதலாவ தாக, நிகழ்வடை ஒப்பந்தம் ஒரு செல்லத்தக்க ஒப் பந்தம். ஆனால், சூதாட்ட ஒப்பந்தம் செல்லத்தக்க ஒப்பந்தம் அன்று. அடுத்து, நிகழ்வடை ஒப்பந்த ஆட் கள் நிகழ்ச்சி நிகழ்தல் அல்லது நிகழாதிருத்தலில் அக்கறையுள்ளவர்களாகக் காணப்படுகின்றனர். ஆனால், சூதாட்ட ஒப்பந்தத்தில் ஆட்கள் நிகழ்ச்சி நிகழ்வதைப் பற்றி அக்கறையுடையவர்களாக இருப் பதில்லை. ஆனால், பந்தயப் பணத்தைப் பெறுவ தற்கு அல்லது இழப்பதற்கு மட்டும் அக்கறை காட்டு கின்றனர். இறுதியாக, ஒரு நிகழ்வடை ஒப்பந்தத் தில் எதிர்கால நிலையற்ற நிகழ்ச்சி, ஓர் ஒப்பந்தத் திற்குத் துணையாகத்தான் அமைகிறது. ஆனால், சூதாட்ட ஒப்பந்தத்தில் அந் நிகழ்ச்சிதான் முக்கிய காரணியாக விளங்குகிறது. கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Kapeor N.D.**, Elements of Mercantile Law, Sultan Chand & Sons, New Delhi, 1983.

**Kuchhal M.C.**, Mercantile Law, Vikas Publishing House, Pvt. Ltd., New Delhi, 1981.

***நிகழ் வழக்கு:*** ஓர் அசையாச் சொத்தின் மீதான உரிமை பற்றி நேரடியாக அல்லது குறிப்பாக வழக்கொன்று எழுந்து அது நிகழ்ந்து கொண்டிருக் கையில் அந்தச்சொத்தினை வேறொருவர் பேரில் ஏற்படுத்தும் உரிமை மாற்றம் பற்றிச் சொத்துரிமை மாற்றச் சட்டத்தின் 52-ஆம் பிரிவு குறிப்பிடுகின்றது. அவ்வாறு நடந்து கொண்டிருக்கும் வழக்கு அல்லது நடவடிக்கை 'நிகழ் வழக்கு' (Lis penders) என்று குறிப்பிடப்படுகிறது. இவ்விதியின் நோக்கம், ஏற் கெனவே ஏற்படுத்தப்பட்ட உரிமை மாற்றத்தினைச் செல்லாததாக்குவதோ விலக்குவதோ உரிமை மாற் றம் பெற்றவரிடம் உரிமை சேர்ந்தடைவதைத் தடுப் பதோ அன்று. அவ்வுரிமை மாற்றத்தினை வழக்கின் முடிவிற்கு உட்படுத்துவதே அதன் நோக்கமாகும்.

சொத்துரிமை மாற்றுச் சட்டத்தின் 52-ஆம் பிரிவு 'வழக்கின் இடையில் புதிதாக ஒன்றைப் புகுத் தக் கூடாது' (Pendente litenihil innovetu) என்ற முதுமொழியின் அடிப்படையில் அமைந்துள்ளது. அதன்படி நிகழ் வழக்கில் அசையாப் பொருளின் உரிமை பற்றித் தீர்மானிக்கப்பட வேண்டியிருக்கும் போது, தரப்பினர் எவரும் மற்றவரின் உரிமையைப் பாதிக்கும்படி சொத்தினை மாற்றவோ வேறு வகை யில் கையாளவோ கூடாது. இக் கோட்பாடு முன் தீர்ப்புத் தடைக் கோட்பாட்டின் தொடர்ச்சியே ஆகும்.

இந்த வழக்கிடை மாற்றம் பற்றிய கோட்பாடு 'பெல்லாமி எ சாபின்' (1857) என்ற ஆங்கில வழக்கில் தெளிவாக இறுதியாக்கப்பட்டது. இக் கோட்பாடு பற்றிய முதன்மையான இந்திய வழக்கு, பியாசு உசேன்கான் எ பிராக்கு நாராயண் (29 அலகாபாது 33) ஆகும். வழக்கிடை மாற்றம் பற்றிய இக்கோட் பாடு அறிவிக்கை (Notice) பற்றிய கோட்பாட்டின் அடிப்படையில் அமையவில்லை. முடிவான தீர்ப்புரை யின் தேவை மற்றும் பொதுக் கொள்கை ஆகியவற் றின் அடிப்படையில் இது அமைந்துள்ளது.

வழக்கிடை மாற்றம் பற்றிய நிகழ் வழக்குக் கோட்பாட்டினைச் செயற்படுத்தக் கீழ்க்காணும் நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும். அவை யாவன:

1. உரிமை மாற்றம், முடிவு செய்யப்படாத வழக்கு அல்லது நடவடிக்கையின் இடையே நிகழ வேண்டும்.

2. அந்த வழக்கு அல்லது நடவடிக்கை ஒரு தகுதி வாய்ந்த நீதிமன்றத்தின் முன் இருப்பதாக இருக்க வேண்டும்.

3. வழக்கு, வஞ்சகக் கூட்டால் ஏற்பட்டதாக இருக்கக்கூடாது.

4. வழக்கிலுள்ள சொத்தானது, வழக்கின் தரப் பினரால் மாற்றப்பட அல்லது கையாளப்பட வேண் டும்.

5. அசையாப் பொருளின் உரிமை, அந்த வழக் கில் நேரடியாக அல்லது குறிப்பாகத் தீர்மானிக்கப் படுவதாக இருக்க வேண்டும்.

6. உரிமை மாற்றமானது, மற்றத் தரப்பினருடைய உரிமைகளைப் பாதிப்பதாக இருக்க வேண்டும்.

முடிவுறாமல் இருக்கும் வழக்கு அல்லது நடவடிக்கை என்பதன் பொருள், 52-ஆம் பிரிவின் விளக்கத் தில் கூறப்பட்டுள்ளது. தகுதி வாய்ந்த நீதிமன்றத்தில் ஒரு வாதுரை தாக்கல் செய்யப்படும் போது ஒரு வழக்கு தொடங்குகிறது. ஒரு வழக்கு அல்லது நட வடிக்கை ஓர் இறுதித் தீர்ப்பாணை அல்லது உத் தரவு மூலம் தீர்க்கப்படும் வரை, அத்தகைய தீர்ப் பாணை அல்லது உத்தரவு முழுவதும் தீர்க்கப்பட்ட தாக அல்லது செலுத்தப்பட்டதாக ஓர் ஆணை பெறப் படும் வரை அல்லது அத்தகைய தீர்ப்பாணை அல்லது உத்தரவு காலவரையறைக் காலத் தால் முழுவதும் தீர்க்கப்படாமல் இருக்கும் வரை தொடர்ந்து இருக்கும். மேன் முறையீடு (appeal) அல்லது நிறைவேற்றல் நடவடிக்கை (execution pro- ceeding) தொடர்ந்து நடப்பில் இருக்கும் வரை

வழக்கு நடப்பில் இருப்பதாகவே கருதப்படும். ஆனால், தீர்ப்பின் சீராய்வு (Revision) அல்லது மறு ஆய்வு (Review) ஆகியவை வழக்கின் தொடர்ச்சியாகக் கருதப்படுவதில்லை.

52-ஆம் பிரிவு ஆள்களின் செயலால் நடைபெறும் உரிமை மாற்றத்திற்கு மட்டும் பொருந்தும்; சட்டச் செயலால் நடைபெறும் உரிமை மாற்றங்களுக்குப் பொருந்தாது. ஆ.ச.

**நிகழ்வியல்:** தொடக்கக் காலத்திலிருந்து மனிதன் தனது வாழ்க்கையை வறிதே வாழாமல் அதன் மதிப்பை அறியும் முயற்சியில் ஈடுபட்டு வாழ்ந்து வருகிறான். தான் வாழும் உலகையும், அதில் தனக்கு இருக்கும் இடத்தையும், அதனுடன் தனக்குள்ள பிணைப்பையும் அறிந்துகொள்வதில் அவன் தொடர்ந்து தளர்ச்சியடையாமல் தீவிரம் காட்டி வருகிறான். கிரேக்க அறிஞர் அரிசுடாட்டில், ஒவ்வொரு மனிதனுக்கும் இயற்கையிலேயே அறிவு நாட்டம் அமைந்திருக்கிறது என்கிறார். மற்றைய விலங்குகளைப் போல மனிதனுக்கும் தூண்டல்களுக்கு ஆட்பட்டு அவற்றுக்கு மறுமொழி தருகிற இயற்கை அமைப்பு முறை அமைந்திருக்கிறது. ஆயினும், அவன் மற்ற விலங்குகளைப் போல அல்லாமல் இயந்திர கதியில் தூண்டல்களுக்கு மறுமொழி தருவதில்லை. தன்னிடம் வருகிற தூண்டல்களையும், சாடைக் குறிகளையும் ஆராய்ந்து அவற்றின் பொருளையும் நோக்கத்தையும் தன்மையையும் புரிந்து கொள்ள முயல்கிறான். அப்படிப் புரிந்துகொண்ட பின்னரே அவனுடைய மறுமொழி அமைகிறது. இவ்வாறு மனிதன், அவன் வாழ்ந்து அனுபவிக்கும் உலகில் வறிதே வாழாமல் அதை எதிர்கொண்டு அதன் தன்மையை, அதில் தனக்குள்ள இடத்தை, வாழ்க்கை நிலையை ஆராய்ந்து அறிவதில் நாட்டம் செலுத்துகிறான். அவனுடைய வாழ்க்கை எவ்வளவுக்கு எவ்வளவு நிலைபெறுகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன், தான் வாழும் உலகைப் புரிந்துகொள்வதில் தீவிரம் காட்டுகிறான்.

இத்தகைய நாட்டம்-முயற்சி மனிதனுக்குத் தொடக்கக் காலத்திலிருந்தே இருந்துவருகிறது என்பதைவரலாற்றுக்குமுந்திய காலச் சான்றுகள் தெளிவுபடுத்துகின்றன. ஆதிகால மனிதர் வாழ்ந்ததாகக் கருதப்படுகிற குகைகளில் காட்டு விலங்குகளும், அவை வேட்டையாடப்படுவதும் ஓவியங்களாக வரையப்பட்டிருப்பது அத்தகைய சான்றுகளுள் ஒன்று. அந்த ஓவியங்கள் ஆதிகால மனிதனுக்குத் தான் வாழ்ந்த இயற்பியல் உலகைப் புரிந்து கொள்ளும் நாட்டம் அமைந்திருந்ததை எடுத்துக்காட்டுகின்றன. இன்றைக்கும் அறிவியல் ஆய்வுக் கூடங்களிலும், மருத்துவ ஆய்வுக் கூடங்களிலும் நடைபெற்று வருகின்ற ஆய்வுகளும், கல்வி அரங்குகளில் நிகழ்கின்ற விவாதங்களும் மனிதன் இன்னமும் தொடர்ந்து தனது இயற்பியல் உலகைப் புரிந்து கொள்ள நாடுவதைத் தெள்ளத் தெளியக் காட்டுகின்றன.

மனிதனுக்கு இயல்பாய் அமைந்துள்ள இந்த அறிவு நாட்டத்தை ஒட்டியே சமூகவியலும், சமூக வாழ்க்கையைச் சமூக வாழ்வில்நிகழும் நிகழ்வுகளைப் (Phenomena) புரிய வைக்கிற முயற்சியில் இறங்கியுள்ளது. தொடக்கக் காலத்தில் சமூகவியல், சமூக நிகழ்வுகளை ஆராயச் சில கருத்தாய்வு அணுகுமுறைகளை மேற்கொண்டது. சமூக நிகழ்வுகளை அவற்றின் வரலாற்றுத் தன்மையையும், செயற்பாட்டுத் தன்மையையும் வைத்து ஆராய்ந்தால்தான் அவற்றைப் புரிந்துகொள்ளவும், விளக்கவும் முடியும் என்ற நிலையை மேற்கொண்டிருந்தது. நாளடைவில் இந்த வகையான அணுகுமுறை மாறிப் புதிய அணுகுமுறைகள் ஏற்பட்டு அவற்றின்மூலம் சமூகவியல் சமூக நிகழ்வுகளை ஆராய்ந்து விளக்க முற்பட்டது. அத்தகைய புதிய அணுகுமுறைகளுள் ஒன்றுதான் நிகழ்வியல் (Phenomenology).

நிகழ்வியல் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்பட்டது. சமூக வாழ்வில் ஏற்படும் நிகழ்வுகளை எந்தவிதமான எல்லைக் கட்டுக்குள்ளும் இருத்தி வைக்காமல் விளக்கவேண்டும் என்பது நிகழ்வியலின் கொள்கை. சமூக வாழ்வில் ஏற்படும் நிகழ்வுகளை அவை தொடர்பான பொதுக் கருத்தாய்வுத் தொகுதி விளக்கங்களின் அடிப்படையில் அதாவது அவற்றின் தோற்றம், செயற்பாட்டுத் தன்மை ஆகியவை பற்றிய பொதுக் கருத்தாய்வுத் தொகுதிகளின் அடிப்படையில் ஆராயவோ விவரிக்கவோ முற்படலாகாது என்பது நிகழ்வியலின் நிலைப்பாடு. மேலும் நிகழ்வுகளைப் பற்றி நிலவிடும் ஆராய்ந்தறியாத அனுமானங்களையும், ஊகங்களையும் வைத்துக் கொண்டும் அவற்றை விவரிக்கக்கூடாது என்பது நிகழ்வியலின் நிலைப்பாடு. இவை எவையுமில்லாமல் சுதந்திரமாக, எந்தவிதமான கருத்தாய்வுத் தொகுதிப் பின்னணியும், முன்கூட்டியே அமைத்துக்கொண்ட கருத்துகளின் ஆதாரமும் இல்லாமல் சமூக நிகழ்வுகள் விளக்கப்படவேண்டும் என்பது நிகழ்வியலின் கொள்கை.

ஒரு கருத்தாய்வுத் தொகுதியை அடிப்படையாகக் கொண்டு அல்லது முன்கூட்டியே அமைத்துக் கொண்ட கருத்துகள், அனுமானங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் ஒரு சமூக நிகழ்வை விளக்க முற்பட்டால், அந்தவிளக்கம் இயல்பான, நிறைவான விளக்கமாக இருக்காது என்பது நிகழ்வியலின் கருத்து.

ஆகவேதான், நிகழ்வியல் சமூக நிகழ்வுகள் எந்தவித மான பின்னணியும் அடிப்படையும் இல்லாமல் ஓர் எல்லைக் கட்டுக்குள் இருத்தி வைக்கப்படாமல் சுதந் திரமாக இயல்பாக விளக்கப்படவேண்டும் என்று நிகழ்வியல் வலியுறுத்துகிறது.

ஒரு சமூக நிகழ்வை விளக்க முற்படும்போது அந்தச் சமூக நிகழ்வில் நனவுணர்வோடு ஈடுபட்டு அதில் அனுபவம் கொள்ளுகிற மனிதர்களின் கண் ணோட்டத்தில் அதை விளக்க முற்படவேண்டும் என்பது நிகழ்வியலின் நிலைப்பாடு. அதாவது, ஒரு சமூக நிகழ்வில் நனவுணர்வோடு பங்கேற்கிறவர்கள் அந்த நிகழ்வை எப்படி அனுபவித்தறிகிறார்கள் என் பதைத் தெரிந்துகொண்டு அந்த அடிப்படையில், அவர்களுடைய அனுபவக் கண்ணோட்டத்தில், அந்த நிகழ்வை விளக்கவேண்டும் என்று நிகழ்வியல் வலி யுறுத்துகிறது. ஆகவே, நிகழ்வியலின் நிலைப்பாட்டின் படி ஒரு சமூக நிகழ்வை ஆராய, அதில் பங்கேற்று அனுபவம் கொள்ளுகிற மனிதர்கள் அதை எவ்வாறு புரிந்து கொள்ளுகிறார்கள் என்பதை அறிந்துகொள் வது அவசியமாகிறது. அவர்கள் புரிந்துகொண்ட தற்கு ஏற்பவே அந்த நிகழ்வு விளக்கப்பட வேண்டும்.

ஆக, இந்தவகையில் ஒரு சமூக நிகழ்வை ஆரா யும் நிகழ்ச்சியாளர் அதைத் தமது கண்ணோட்டத் தில் விளக்காமல், அந்த நிகழ்வில் பங்கேற்று அனு பவம் கொள்ளுகிற மனிதர்கள் அதை எவ்வாறு புரிந்துகொண்டுள்ளார்கள் என்றறிந்து, அவர்களு டைய கண்ணோட்டத்தின்படியே அதைவிளக்கவேண் டும் என்றாகிறது. சமூக நிகழ்வில் பங்கேற்று அனு பவம் கொள்ளுகிறவர்கள் அந்த நிகழ்வைப் பற்றி அவர்கள் அகவயமாகப் புரிந்துகொள்ளுகிற தன்மை யின் அடிப்படையில் சமூக நிகழ்வுக்கு விளக்கம் காணப்பட வேண்டும். இவ்வாறு ஓர் ஆராய்ச்சியா ளரின் புறவளக் கண்ணோட்டம் ஒரு சமூக நிகழ்வில் பங்கேற்று அனுபவம் கொள்ளுகிற மனிதர்களின் அக வயக் கண்ணோட்டத்துடன் இயைந்து அமைந்தால் தான் ஆராய்ச்சியாளர் ஒரு சமூக நிகழ்வுக்கு ஏற்ற பொருத்தமான விளக்கம் தரமுடியும். அவர் பங் கேற்று அனுபவம் கொள்ளுகிற மனிதர்களின் அக வயக் கண்ணோட்டத்தைப் புறக்கணித்துத்தமது புற வயக் கண்ணோட்டத்தின் அடிப்படையில் ஒரு சமூக நிகழ்வை விளக்க முற்பட்டால் அது முறையான அணுகுமுறை ஆகாது. இரண்டாவது, ஆராய்ச்சியாள ரின் கண்ணோட்டமும், சமூக நிகழ்வில் பங்கேற்று அனுபவம் கொள்ளுகிற மனிதர்களின் கண்ணோட்ட மும் வேறுபட்டு-முரண்பட்டு, ஒரு முரண்பாடான விளக்கம் ஏற்பட வழி ஏற்படும்.

இவ்வாறு நிகழ்வியல், ஒரு சமூக நிகழ்வை அதில் ஈடுபட்டு அனுபவம்கொள்ளுகிற மனிதர்களின் அக வயக் கண்ணோட்டத்தின் அடிப்படையிலேயே விளக்கவேண்டும் என்று வலியுறுத்துகிறது. ஒருசமூக நிகழ்வில் ஈடுபடும் எல்லோருக்கும் அதை ஆராய்ந்து புரிந்துகொள்ளும் நாட்டம் இயல்பாய் அமைந்திருக் கும் என்பது நிகழ்வியலின் கருத்து. ஒவ்வொரு மனி தனும் தான் எதிர்நோக்கி அனுபவிக்கிற தூண்டல் களை ஆராய்ந்து அறிந்துகொள்ளும் நாட்டத்தை இயற்கையிலேயே கொண்டிருக்கிறான் என்ற அரி சுடாட்டிலின் கருத்தே நிகழ்வியலின் கருத்துக்கு ஆதாரம். ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் ஈடுபடும் சமூக நிகழ்வை, அதன்பொருளை, தன்மையை, நோக்கத்தை, மதிப்பை அறிந்துகொள்ளும் ஆர் வம், நாட்டம் இயல்பாய் அமைந்திருக்கிறது என்று நிகழ்வியல் கருதுகிறது.இந்த அடிப்படையிலேயே ஒரு சமூக நிகழ்வில் ஈடுபடும் எல்லோருக்கும் அதைப் பற்றிய கண்ணோட்டமும், அதைப் புரிந்துகொண்டி ருக்கிற நிலையும்அமைந்திருக்கும் என்பது நிகழ்விய லின் கருத்து. இந்த அடிப்படையில்தான் நிகழ்வியல், 'ஒரு சமூக நிகழ்வில் நனவுணர்வோடு ஈடுபடும் எல் லோருக்கும் அதைப்பற்றிய கண்ணோட்டமும், அறி வும் அமைந்திருக்கும்; அவர்களின் அந்தக் கண் ணோட்டத்தையும், புரிந்து கொண்டிருத்தலையும் ஒட்டி அந்த நிகழ்வு விளக்கப்படவேண்டும்' என்று கூறுகிறது.

நிகழ்வியலுக்கு அடித்தளம் அமைத்தவர் எட் மண்டு அசரல் (Edmund Husserl, கி.பி 1859-1938) என்ற ஒரு செருமானியத் தத்துவ அறிஞர். இவர் தான் நிகழ்வியலைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லை உருவாக்கியவர். 'இவர் மனிதனுடைய புலன்களால் பார்க்கக்கூடியவற்றை-புரிந்துகொள்ளக் கூடியவற்றை பற்றித்தான்அவனால்நன்கு அறிந்துகொள்ள முடியும்; மனிதனுடைய புலன்களால் காண இயலாதவற்றை -புரிந்துகொள்ள இயலாதவற்றை அவனால் அறிந்து கொள்ள இயலாது; எனவே மனிதன் வாழும் உலகில் நிகழக்கூடிய நிகழ்வுகளைப் பற்றிய அறிவு அவனு டைய புலன்களால் மட்டுமே வரமுடியும்' எனக் கூறு கிறார். மனிதனுடைய புலன்களுக்கு எட்டாதவற்றை அவனால் அனுபவிக்க இயலாது. அத்தகைய நிலை யில் புலன்களுக்கு அப்பாற்பட்ட, மனிதனால் அனு பவிக்க இயலாத பொருள்களையோ நிகழ்வு களையோ அவனால் அறிய இயலாது. ஆகவே, மனி தனுடைய அறிவு அவனுடைய புலன்களால் பார்க் கக் கூடிய, புரிந்துகொள்ளக்கூடிய நிகழ்வுகளிட மிருந்தே வருகிறது. அதைக் கொண்டுதான் அவ னால் விளக்கமுடியும். மனிதனுடைய புலன் களுக்கு அப்பாற்பட்ட அனுபவிக்க இயலாதநிகழ்வு களை அவன் விளக்கமுற்பட்டாலும் அதுவெறும்

யூகமாக அமையுமே தவிர அறிவு அடிப்படையிலான விளக்கமாக ஆகாது எனக் கூறுகிறார். இந்த அடிப்படையில்தான் நிகழ்வியல் அமைகிறது என்று அசரல் கூறுகிறார். நிகழ்வியல், மனிதன் அவனுடைய புலன்களால் காணக்கூடிய, அறியக்கூடிய நிகழ்வுகளில் மட்டுமே கவனம் செலுத்துகிறது. ஏனெனில், அத்தகையவற்றை மட்டுமே அவனால் அறிந்து கொள்ள முடியும்; விளக்கமுடியும். அல்லாதவற்றை விளக்கவோ அறியவோ இயலாது. ஆகவே, அவற்றுக்கு நிகழ்வியலில் இடமில்லை என்று அசரல் கூறுகிறார்.

ஆயினும், ஒரு நிகழ்வியலாளர் மனிதனுடைய புலன்களுக்கு மட்டுமே புலப்படும் பொருள்களை-நிகழ்வுகளை அவற்றின் புலனறி புறஅமிசங்களைக் கொண்டு மட்டும் விளக்கக்கூடாது. புலன்களுக்குப் புலப்படக்கூடிய புற அமிசங்களைக் கொண்டு ஒரு பொருளை-நிகழ்வை விளக்க முற்படுவது வெறும் புற மெய்ம்மைப் புலனறி போக்காக (Poitivistic Empiricism) அமைந்துவிடும் என்றும் அசரல் கூறுகிறார். ஒருநிகழ்வை அனுபவிப்பது என்பது அதன் புலனறி புற அமிசங்களை மட்டும் அறிந்துகொள்வது அன்று. அதன்உட்பொருளையும்அதாவது சாரத்தையும் (Essence) அறிந்துகொள்வதாகும். இதற்கு உள்ளுணர்வைப் (Intuition)பயன்படுத்த வேண்டும் என்று அசரல் கூறுகிறார். உள்ளுணர்வை இந்தவகையில் பயன்படுத்தும் நடவடிக்கை நிகழ்வியல் தொடர்பான பட்டறிவின் ஒரு பகுதியே என்கிறார் அசரல்.

ஒரு நிகழ்வை இவ்வாறு புறத்தேயும், அகத்தேயும் கண்டு அறிந்துகொள்ளும் முயற்சியில் ஈடுபடும் பொழுது அந்த நிகழ்வைப் பற்றிய முன்கூட்டியே அமைந்த கருத்துகளை, அனுமானங்களை, நம்பிக்கைகளை விட்டு விடவேண்டும். இவை எவையுமில்லாமல் ஒரு சுதந்தரமான நிலையில் வைத்து நிகழ்வுகளை ஆராயவேண்டும். மனிதனுடைய குழந்தைப் பருவத்திலிருந்தே சமூகமயமாக்கற் (Socialization) செயற்பாங்கின்மூலம் அவனுக்குப்பல பொருள்களை நிகழ்வுகளைப் பற்றிப் பலகருத்துகள் ஊட்டப்பட்டிருக்கக்கூடும். அவை சரியோ தவறோ அவற்றையெல்லாம்ஒதுக்கிவைத்துவிட்டுநிகழ்வுகளைஅவை மனிதனுடைய புலன்களுக்கு எவ்வாறு புலப்படுகின்றனவோ அவ்வாறே அவற்றைக் கண்டறிந்துகொள்ள வேண்டும் எனக் கூறுகிறார் அசரல்.

அவரைத் தொடர்ந்து ஆல்பிரெட் சூட்சு(Alfred Schutz, கி.பி. 1899-1959) என்ற மற்றொரு செருமானிய அறிஞர் நிகழ்வியலுக்கு வலுவூட்டினார். அசரலுடைய நிகழ்வியல், ஒரு தத்துவச் சார்பு கொண்டு அமைந்திருந்தது. அதாவது அவருடைய நிகழ்வியல் நிகழ்வியல் தத்துவமாக அல்லது தூய நிகழ்வியலாக அமைந்திருந்தது. அதை ஆல்பிரெட் சூட்சு சமூகவியலுக்கு இயைய வடிவு அமைத்தார். அதனால், அவருடைய நிகழ்வியல் தரவகை நிகழ்வியல் சமூகவியலாக (Phenomenological Sociology) அமைந்தது. ஆல்பிரெட் சூட்சு, எட்மண்டு அசரலின் நிகழ்வியல் தத்துவக் கூறுகளோடு, அவருக்குமுன் வாழ்ந்த மாக்சு வீபர் (Max Weber 1864-1920) என்ற ஒரு செருமானியச் சமூகவியல் அறிஞரின் சமூகவியல் சிந்தனைகளையும் சேர்த்துத் தம் நிகழ்வியல் சமூகவியலை அமைத்தார்.

மாக்சு வீபர்,மனிதனுடைய ஒவ்வொரு செயலுக்கும் ஒரு பொருள் உண்டு; அந்தப் பொருள் அதற்கென்று தானாக அமைவது கிடையாது;அந்தச் செயலில் ஈடுபடும் மனிதர்களால் அதற்குத் தரப்படுகிறது; அவ்வாறு அதற்கு அதில் ஈடுபடும் மனிதர்களால் தரப்படும் பொருளே (Subjective Meaning) அதற்குரிய பொருளாக அமைகிறது; அந்தப் பொருளைப் புரிந்துகொண்டால்தான் அந்தச் செயலின் தன்மையை உணரமுடியும் எனக் கூறுகிறார்.

இந்த அடிப்படையிலேயே ஒரு சமூக நிகழ்வையும் ஆராய வேண்டும் என்று ஆல்பிரெட் சூட்சு கூறுகிறார். மனிதர்கள் பல்வேறு சூழ்நிலைகளைச் சந்தித்துப் பல்வேறு மனிதர்களுடன் உறவாடுகிறார்கள். அந்தச் சூழ்நிலைகளில் அவர்களுடைய உறவும், செயற்பாடும் சீராக அமைகின்றன. ஒருவருக்கொருவர் ஒத்துப்போய் உறவாடி ஒருமித்துச் செயற்படுகிறார்கள். ஆயினும், ஒவ்வொரு மனிதரும் தாம் நாள்தோறும் சந்திக்கும் ஒவ்வொரு சூழ்நிலைக்கும் ஒரு பொருளைத் தருகிறார்.அப்படிப்பட்ட பல்வேறு சூழ்நிலைகளில் மனிதர்கள் ஒருமித்துச் செயற்படும் நிகழ்வு எப்படி ஏற்படுகிறது என்பதை நிகழ்வியல் அடிப்படையில் விளக்க வேண்டுமானால், ஒவ்வொரு சூழ்நிலைக்கும் அதில் ஈடுபடுகிற மனிதர்கள் தருகிற பொருளை ஆராய்வது முக்கியம். ஒவ்வொரு மனிதரும் ஒரு சூழ்நிலையில் ஒரு பொருளைக்கண்டு அதற்கேற்ப அந்தச் சூழ்நிலையில் நடந்துகொள்ளுகிறார். அதே பொருளை அந்தச் சூழ்நிலையில் செயற்படும் பிறமனிதர்களும் அதில் கண்டு அதற்கேற்பச் செயற்படும்போது எல்லோரும் இணக்கமாக உறவு கொள்ளவும் ஒருமித்துச் செயற்படவும் வழி ஏற்படுகிறது. இவ்வாறு ஒரே பொருள் ஒரு சூழ்நிலைக்கு அதில் ஈடுபடும் அனைவராலும் தரப்படும்போது அவர்களிடையே இணக்கமான உறவும் ஒருமித்துச் செயற்படுதலும் ஏற்படுகின்றன. இந்த நிலையைச் சூட்சு 'கண்ணோட்டத்தின் பரசுபரம்' (Reciprocity of Perspective) எனக் கூறுகிறார். அதாவது ஒரு சூழ்

நிலையில் ஈடுபடும் எல்லோரும் பரசுபரம் ஒரே கண்ணோட்டத்தைப் பரிமாறிக்கொண்டு அதன்படி செயற்படுகிறார்கள். இப்படிப் பரசுபரமான கண்ணோட்டம் இருப்பதால் ஒரு சூழ்நிலையில் இணக்கமாகச் செயற்படும் எல்லோரும் தத்தம் நிலைகளைப் பரிமாற்றம் செய்துகொண்டு செயற்பட்டாலும் அவர்களிடையே ஏற்பட்ட இணக்கமான உறவும், ஒருமித்த செயற்பாடும் மாறுவதில்லை. இதற்கு உரூத் வாலேசு (Ruth Wallace), ஆலிசன் உல்பு (Alison-Wolf) என்பவர்கள் ஓர் எடுத்துக்காட்டுத் தருகிறார்கள். ஓர் இசைக்குழுவில் (Orchestra) அதனுடைய நடத்துநரும், பிற உறுப்பினர்களும் அதாவது பாடகர்களும், இசைக் கருவியாளர்களும், ஓர் இசை நிகழ்ச்சி நடந்திடும் சூழ்நிலையில் ஒருமித்துச செயற்படுகிறார்கள். இதற்குக் காரணம் அவர்கள் எல்லோரும் அந்தச் சூழ்நிலை பற்றி ஒரே மாதிரியானபொருளைஅல்லது-கண்ணோட்டத்தைக் கொண்டிருக்கிறார்கள்.நடத்துநருடைய பொருளையே உறுப்பினர்களும் கொண்டிருக்கிறார்கள். இப்படி அனைவரும் அந்தச் சூழ்நிலை பற்றி ஒரே பொருளைக் கொண்டிருப்பதால் அவர்கள் தத்தம் நிலைகளைப் பரிமாற்றம் செய்துகொண்டாலும் அதாவது நடத்துநர் இசைக் கருவியாளராகவும், ஓர் இசைக் கருவியாளர் நடத்துநராகவும் மாறி அமைந்தாலும் இசைநிகழ்ச்சி பாதிக்கப்படாமல் சீராகவே இயங்கும். அதற்குக் காரணம் இவர்கள் பரசுபரம்ஒரேகண்ணோட்டத்தைப் பங்கிட்டுக்கொள்வதே ஆகும். இந்தப் பரசுபரக் கண்ணோட்டத்தினால் நடத்துநர் நிலையை ஓர் இசைக்கருவியாளர் அடையவும், அந்தச் சூழ்நிலையில் நடத்துநர் எந்த அனுபவம் பெற்றோரோ அதே அனுபவத்தை இசைக் கருவியாளர் பெறவும், இவ்வாறே நடத்துநரும் இசைக் கருவியாளருடைய நிலையையும் அனுபவத்தையும் பெறவும் வழி ஏற்படுகிறது.

இப்படிப்பட்ட ஒரு நிகழ்வை நிகழ்வியலாளர்கள் ஆராயும் போது அந்த நிகழ்வு அமையும் சூழ்நிலையில் அந்த நிகழ்வு சம்பந்தப் பட்டவர்கள் தமக்குள் பரசுபரம் பகிர்ந்துகொள்ளுகிற பொருள்களை (Shared Meanings) ஆராயவேண்டும் என்று ஆல்பிரெட் சூட்சு கூறுகிறார். அப்பொழுதுதான் அந்த நிகழ்வைப் புரிந்துகொண்டு விளக்க இயலும் என்கிறார். அந்த அம்சத்தை ஆராயாமல் அந்த நிகழ்வை விளக்க இயலாது என்றும் கூறுகிறார் சூட்சு.

சூட்சைத் தொடர்ந்து அவருடைய மாணவர்களான பீட்டர் பெர்சர் (Peter Berger), தாமசு இலக்மான் (Thomas Luckmann) என்ற இருவரும் நிகழ்வியல் சமூகவியலுக்கு உரம் ஊட்டினார்கள். அவர்களுடையநிகழ்வியல்கருத்துகள், அவர்களுடைய ஆசான் சூட்சின் கருத்துகளை மட்டுமல்லாமல் அவர்களுக்குமுன் வாழ்ந்த கார்ல் மான்கைம் (Karl Manheim 1843-1947) என்ற ஒரு செருமானியச் சமூகவியல் அறிஞரின் அறிவுச் சமூகவியல் (Sociology of Knowledge) சார்ந்த சிந்தனைகளையும் தழுவி வார்க்கப்பட்டன. கார்ல் மான்கைம், மனிதர்களுடைய அறிவு, நிலவிடும் சமூகச்சூழ்நிலைகளினால் உருவாகிறது என்று கூறுகிறார். மனிதனுடைய அறிவு, அவனுடைய நனவுணர்விலிருந்து மட்டுமன்றி அதற்கு அப்பாற்பட்ட அவன் ஈடுபடுகிற சமூக வாழ்விலிருந்தும் சமூகச் சூழ்நிலைகளிலிருந்தும் உருவாகிறது என்றும் கூறுகிறார். இதைத் தழுவிப் பெர்சரும் இலக்மானும் நிகழ்வியலின் அடிப்படையில் சமூக வாழ்வு நிகழ்வுகள் அமைகின்ற விதத்தைக் கூறுகின்றனர்.

மனிதர்களுடைய தினசரி வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு நிகழ்வும் புறவய நோக்கில் ஒரு மெய்ம்மையாகும். அதே நேரத்தில் அந்த நிகழ்வு மனிதர்களுடைய அகவய நோக்கிலும் மெய்ம்மையாக விளங்குகிறது. இவ்வாறு புறவய நோக்கிலும், அகவய நோக்கிலும் ஒரு நிகழ்வு ஒரு மெய்ம்மையாக விளங்குகிறது. ஆயினும், அந்த நிகழ்வு ஒரு சமூக மெய்ம்மை அதாவது சமூகத்தில் நிலவிடும் மெய்ம்மை என்ற நிலையை அதன் புறவயத் தன்மையை மட்டும் கொண்டு அமைவதில்லை. அது தன்னை எவ்வாறு மனிதர்களுக்கு அடையாளம் காட்டிக் கொள்கிறதோ எவ்வாறு மனிதர்களுக்குத் தன்னைப் புலப்படுத்திக் கொள்ளுகிறதோ அந்தஉருவகையில்தான் அது மனிதர்களுடைய அகவயக் கண்ணோட்டத்தில் இடம்பெற்று அதற்கேற்ப அவர்களால் கட்டமைக்கப்படுகிறது. உண்மையில் அதன் தோற்றம் ஒரு வகையாய் இருக்கக்கூடும். ஆனால், அது மனிதர்களுக்கு எவ்வாறு தோற்றமளிக்கிறதோ அந்தப் பார்வையின் அடிப்படையில் அதன் உருவகை அவர்களுடைய அகவயக் கண்ணோட்டத்தில் அமைந்து, அதற்கேற்ப அது ஒரு சமூக மெய்ம்மையாகக் கட்டமைக்கப்படுகிறது. சுருங்கச் சொன்னால், மனிதர்கள் ஒரு நிகழ்வை அது தமக்கு எவ்வாறு புலப்படுகிறதோ அவ்வாறு உருவகித்து அந்த அடிப்படையில் அதைப்பற்றிய அறிவை ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள். அப்படி அமைகிற அறிவின் அடிப்படையிலேயே அதை அணுகுகிறார்கள். அதன் புறவயத் தன்மை இங்கே எடுபடாமல் அது மனிதர்களுடைய அகவய நோக்கில் தென்படும் தன்மையையொட்டி ஒரு சமூக மெய்ம்மையாகக் கட்டமைக்கப்படுகிறது என்கிறார்கள்.

இவ்வாறு நிகழ்வியல் ஒரு சமூக நிகழ்வு எவ்வாறு விளக்கப்படவேண்டும், அது எவ்வாறு ஒரு சமூக மெய்ம்மையாகக்கட்டமைக்கப் படுகிறது என்பதை

விளக்குகிறது. மனிதர்களுடைய அகவயக் கண்ணோட்டத்தில் ஒரு சமூக நிகழ்வு எவ்வாறு அமைகிறது என்பதையொட்டியே அது விளக்கப்பட வேண்டுமேதவிர அது புறவய நிலையில் எவ்வாறு உள்ளது என்ற அடிப்படையில் விளக்கப்படலாகாது என்பதே நிகழ்வியலின் நிலைப்பாடு ஆகும். சி.என்.ந.

**துணை நூல்கள்:**


**Abraham, Francis M.**, Modern Sociological Theory: An Introduction, Oxford University Press, Delhi, 1982.

**Wallace Ruth A and Wolf, Alison**, Contemporary Sociological Theory, Englewood Cliffs, N.J., Prentice-Hall Inc., 1980.

**Wolff Kurt H.**, Phenomenology and Sociology., In Bottomore, Tom and Nisbet, Robert (Ed.)., A History of Sociological Analysis, Heinemann, London, 1979.


***நிகழ்வு நிலை அங்கீகாரமும், சட்டமுறை அங்கீகாரமும்:*** சட்டமுறை அங்கீகாரமென்பது யாதெனில் ஒரு நாடு பன்னாட்டுச் சட்டத்தின் கீழ்க் கொண்டிருக்கவேண்டிய அத்தனை குண நலன்களையும்கொண்டிருக்கிறது என்றும், அது சருவதேச சமூகத்தில் பங்குபெறத் தகுதியுள்ளது என்றும் மற்றொரு நாடு அங்கீகரிப்பதாகும்.

நிகழ்வு நிலை அங்கீகாரம் யாதெனில், அங்கீகாரம் வழங்கும் நாடு தான் அங்கீகாரம் வழங்கும் வேளையில் அங்கீகாரம் பெறுகின்ற நாடு அப்போதைக்கு ஒரு நாட்டிற்கான குண நலன்களைப் பெற்று விளங்குகிறது என்பதைக் குறிப்பதாகும். அப்போதைய அங்கீகாரத்தினைப் பெற்ற நாடு எதிர்காலத்தில் எவ்வாறு நடந்து கொள்கிறது என்பதை வைத்தே சட்டமுறை அங்கீகாரம் வழங்கப்படும். எனவே நிகழ்வுநிலை அங்கீகாரம் , சட்டமுறை அங்கீகாரம் என்னும் சொற்கள் அங்கீகாரம் செய்கின்ற முறைகளைக் குறிக்காமல், அங்கீகாரம் பெற்ற ஒரு நாட்டின் தகுநிலையை முடிவு செய்யவே உதவுகின்றன.

இக்காலத்தில் சட்டமுறை அங்கீகாரத்திற்குமுதற்படியாக நிகழ்வு நிலை அங்கீகாரம் தரப்படுகிறது. ம.கா.

***நிளாபுரி:*** காண்க: உறையூர்.

***நிகோசியா*** கிழக்கு மத்தியதரைக் கடலில் உள்ள சைப்பிரசுத் தீவின் தலைநகர். தீவின் நடுப்பகுதியில் பீடியாசு (Pedias) ஆற்றங்கரையில் உள்ள நிகோசியா(Nicosia)நகரம் ஒருசிறந்த வேளாண்மை வாணிக மையம். துணிகள, குடிவகை, சிகரெட்டு, தோல், பானை வகைகள் முதலியன இங்கு உற்பத்தி செய்யப்படுகின்றன. இதன் மக்கள்தொகை 161,100 (1982). இங்கு வாழும் மக்களுள் பெரும்பான்மையினர் கிரேக்க சிப்ரியேட்டுகள் (Greek Cypriots) எனப்படுவர்.

பண்டைக்காலத்தில் இதன்பெயர் இலெட்ரா அல்லது இலெட்ரே (Ledra or Ledrae). சைப்ரசுத் தீவை கி.பி.1192 முதல் ஆட்சிபுரிந்துவந்த உலூசிக்னன் (Lusignan)அரசர்கள், நிகோசியாவைத் தமது இருப்பிடமாக வைத்திருந்தனர். வெனிசு நாடு, கி.பி. 1489-இல் இதைக் கைப்பற்றிக் கொண்டது. பிறகு கி.பி. 1571-இல்இதைத் துருக்கியர் கைப்பற்றினர்.சைப்பிரசு (Cyprus) 1960-இல் சுதந்திரம் அடைவதற்கு முன்னர் நிகோசியாவில் கடுமையான போர் நிகழ்ந்தது. அது போலவே, 1974-இல் துருக்கி, சைப்பிரசைத் தாக்கிய பொழுதும் இங்குப்பெரும்போர் நடந்தது. வெனிசு ஆட்சிக் காலத்திலேற்பட்ட பல கோட்டைகள், அருங்கலையகங்கள் முதலியவற்றின் அழிபாடுகளை இன்றும் நிகோசியாவில் காணலாம். பண்டைக் காலத்திய அரிய காட்சிப் பொருள்கள் இந்நகரில் இன்றும் உள்ளன. தெ.பா.

***நிங்சியென்:*** காண்க: நிங்போ.

***நிங்போ*** தென் கிழக்குச்சீனாவில் செகியாங்கு (Chekiang) மாநிலத்தின் வடகிழக்குப் பகுதியில் நிங்போ (Ning-Po) ஆறும் யாவோ (Yao) ஆறும் கூடுமிடத்தில் உள்ள ஒரு நகரம். சீனாவின் சிறந்த மீன்பிடிக்கும் துறைமுகங்களில் இதுவும் ஒன்று. இங்கு துணி நெசவு, உணவு வகைகள் கட்டுமானம் செய்தல், உப்பளத் தொழில் முதலியன நடைபெறுகின்றன.

இந்நகரத்தின் வரலாறு கி.பி. 8 – ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்குகிறது. நீண்டகாலமாகவே இது சமயச்சிறப்பும் பண்பாட்டுப் பெருமையும் பெற்றுள்ளது. பல கோயில்களும் பௌத்த மடாலயங்களும் இங்கு உண்டு. சப்பானியத் தூதுக் குழுக்கள், கி.பி. 1433 முதல் 1549 வரை இத்துறைமுகத்தின் வழியாகவே சீன அரசியல் அவைக்குச் சென்று வந்தன. போச்சுகீசியர் கி.பி. 16 – ஆம் நூற்றாண்டில் ஒரு வாணிகத் தலத்தை இங்கு அமைத்தனர். பிறகு ஏற்பட்ட அபினிப் போர்க்காலத்தில் (கி.பி. 1841) ஆங்கிலேயத் துருப்புகள் இந்நகரைத் தம்வசப்படுத்தின. அப்போது முடிவுறச் செய்த நாங்கிங்கு (Nanking) உடன்படிக்கைப்படி இது ஓர் உடன்படிக்கைத் துறைமுகமாயிற்று (Treaty Port). இதன் இப்போதைய புதிய பெயர் நிங்சியென் (Ning-hsien). இங்கிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களுள்

முக்கியமானவை, மீன், உப்பு, தேயிலை, பருத்தி முதலியனவாம். தெ.பா.

*நிசாம்-உல்-முல்க்கு:* மீர் காமருத்தின் சின் குலிக் கான்(Mir Qamar-ud-din Chin Qilich Khan) என்பவர் வரலாற்றில் புகழ்மிக்க அரசியல்வாதியும், தக்காணத்தில் இன்றும் நினைவில் உள்ள ஐதராபாது நிசாம் அரசை நிறுவியவரும் ஆவார். இவரே 'நிசாம்-உல்-முல்க்' (Nizam-ul-Mulk) என வழங்கப்பட்டவர். இவர் பாட்டனார் குவாசா அபிட் சேக்-உல்-இசுலாம் (Khwaja-Abid Shaikh-ul-Islam) புகாரா மாநிலத்திலிருந்து(Bukhara) இந்தியாவுக்கு கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தில் வந்து ஔரங்கசீபு பேரரசரிடம் பணியில் அமர்ந்தார். நிசாம்-உல்-முல்கின் தந்தையார் காசி-உத்-தினும் உடன் வந்து முகலாயப் பேரரசரிடம் பணியிலமர்ந்து பல பொறுப்பான பதவிகள் வகித்தார். நிசாம்-உல் - முல்க்கு தந்தையாருடனிருந்து அரசியல் அறிவைப் பெற்று இளம் பருவத்திலேயே சிறந்து விளங்கினார். இவரது திறமை, அறிவு ஆகியவற்றை அறிந்த முகலாயப் பேரரசர் ஔரங்கசீபு இவரைச் சிறியபடையின் தலைவராக நியமித்தார். அப்போது இவருக்கு பதின்மூன்று வயது என்பது குறிப்பிடத்தக்கது. விரைவில் பதவியுயர்வு பெற்றுச் சின் குலிக் கான் (Chin Qilich Khan) என்ற பட்டத்தைப் பெற்றார்.

ஔரங்கசீபு இறந்தபோது நிசாம் பீசப்பூரில் இருந்தார். பதவிப்போர்கள் (Warsof Succession) நடந்தபோது இவர் முழுமையுமாக நடுநிலைமை வகித்தார். பேரரசர் பகதூர்சா(Bahadurshah)பட்டத்துக்கு வந்தபின் நிசாம் தக்காணத்திலிருந்து மாற்றப்பட்டு அயோத்தியின் ஆளுநராக(Governor)நியமிக்கப்பட்டார். சிலகாலம் அரசியலிலிருந்து விலகியிருக்க வேண்டிய சூழல் வந்தது. எனினும் மீண்டும் பேரரசர் பகதூர்சாவின் இறுதிக்காலத்தில் அரசுப் பணியில் சேர்ந்தார். இவருக்கு இவர் தந்தையின் பட்டமாகிய காசி-யுத்-தின் விருசு சங்கு (Qhazi-ud-din Viriuz Jang) என்ற பட்டம் அளிக்கப்பட்டது. பேரரசர் பரூக்சயர் (Farruk shiyar) கி.பி. 1713-ஆம் ஆண்டில் இவரைத் தக்காணத்தின் ஆளுநராக (Governor of Deccan) நியமித்தார். இவர் தம் சேவைகளைப் பாராட்டிப் பேரரசர் கான் கானான் (Khan Khanan) நிசாம்-உல்-முல்க் பகதூர் பாத்சங்கு(Nizam -ul-Mulk Bahadur Fath Jang) என்ற பட்டங்களை வழங்கினார். அதுமுதல் இவர் 'நிசாம்-உல்-முல்க்' என்ற பட்டப்பெயரில் வழங்கப்பட்டார். தக்காணத்தில் பேரரசரின் பேராளராக விளங்கிய இவர் மராத்தியரின் வலிமை தக்காணத்தில் வளரவிடாமல் கண்காணித்து வந்தார். கி.பி. 1713-ஆம் ஆண்டில் தலைநகர் தில்லியில் ஏற்பட்ட அரசியல் குழப்பத்தின் காரணமாக இவர் முராதாபாதுக்கு (Muradabad) மாற்றப்பட்டார். ஆனால் இவர் புதிய மாநிலத்தின் பதவிப் பொறுப்பேற்கு முன்னர்ப்பேரரசர் பாருக்சயரின் ஆட்சி முடிவுற்றநிலை எய்தியதன் காரணமாக இவர் மால்வாவுக்கு (Malwa) மாற்றப்பட்டார். இவர் அங்குத்தான் தமது எதிர்காலத்தின் வலிமை மிக்க அரசின் அடித்தள அமைப்பை ஏற்படுத்தினார். இவரது வளர்ச்சியைக் கண்ட சய்யது சகோதரர்கள் (Syyids who controlled the Administration in Delhi) இவரை மால்வாவிலிருந்து மாற்றி உத்தரவு அனுப்பினர். ஆனால், இவர் அவ்வாணையை ஏற்க மறுத்ததோடு பேரரசுக்கு எதிராகப் போரில் ஈடுபட்டார். தில்வார் அலிகான் (Dilwar Ali Khan), அலிம் அலிகான் (Alim Ali Khan) ஆகிய தளபதிகளை வென்று தமக்கு எதிராகப் படையெடுத்து வந்த உசேன் அலியைக்(Husain Ali) கத்தியால் குத்திக் கொன்றார். சயது சகோதரர்கள் பதவியிழந்த பின்னர் கி.பி.1720-ஆம் ஆண்டின் இறுதியில் தக்காணத்தின் தனிப்பெரும் தலைவராக விளங்கினார்.

பேரரசர் முகமது சா(Muhammad Shah)இவரைத் தில்லிக்கு அழைத்துச் சட்ட அமைச்சராக நியமித்தார். ஆனால், அரசியல் குழப்பங்கள் காரணமாக இவர் எதிரிகள் இவருக்கு எதிராகச்சதி செய்தனர். அதனை அறிந்த நிசாம், பேரரசரிடம் அனுமதி பெறாமலேயே தக்காணத்திற்கு கி.பி.1723-ஆம் ஆண்டு வந்தார். இவர் பேரரசருக்கு எதிராகப் புரட்சி செய்கிறார் என்று எண்ணி இவருக்கு எதிராகப் படைகள் அனுப்பப்பட்டன. அப்போது ஐதராபாத்தின் ஆளுநராக இருந்த முபாரிசு கான்(Mubariz Khan) நிசாம் மீது படையெடுத்தார். ஆனால் அவர் கி.பி. 1724-ஆம் ஆண்டு பீராரில் உள்ள சாகார் கேதா (Sakhar Kehda) என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டார். இவ்வெற்றிக்குப்பின் பேரரசர், நிசாம் தக்காணத்தின் தமது பேராளர் என்பதை உறுதி செய்து இவருக்கு 'அசப்சா' (Asf Jah) என்ற பட்டத்தையும் அளித்தார். இந்நாளிலிருந்து நிசாம் உல்-முல்க்குசுதந்திரஅரசராகஆனார் என்பதும் இக்காலத்தில் உள்ள ஐதராபாது அரசைத் தோற்றுவித்தார் என்பதும் வரலாற்று உண்மைகள். நிசாம் ஏறத்தாழ முப்பதேழு ஆண்டுகள் ஆட்சி செய்து கி.பி.1748- ஆம் ஆண்டு தமது 91-ஆம் வயதில் இறந்தார். இவர் ஏற்படுத்திய ஐதராபாது அரசின் 'நிசாம் அரசர்கள்' வரலாற்றில் இடம் பெற்றனர். இது நிசாம் – உல்-முல்க்கின் தலைசிறந்த வீரம், நிருவாகத் திறமை ஆகியவற்றின் பரிசு எனக் கூறுவது பொருத்தமாகும்.

பெ.சி.

**துணை நூல்கள்:**

**Siddiqui**, A. M., History of Golconda, Hyderabad, 1956.

**Sinha**, **S.K.**, Medieval History of the Deccan, Vol. I., Hyderabad, 1964.

**Srinivasan**, **C.K.**, Maratha Rule in the Carnatic, Annamalainagar, 1944.

***நிசாம் சாகி அரசர்கள்:*** தக்காணத்தில் கி.பி.1347-ஆம் ஆண்டில் பாமினிப் பேரரசு நிறுவப்பட்டது. இப்பேரரசு கி.பி.1489-ஆம் ஆண்டு ஐந்து முகம்மதிய அரசுகளாகச் சிதைவுற்றது. அவற்றுள், கி.பி. 1490-ஆம் ஆண்டு நிசாம் சாகி அரசு, அகம்மது நகரைத் தலைநகராகக் கொண்டு நிறுவப்பட்டது. மாலிக் ஆசன் பாகிரி (Maaliq Hazan Bhagari) என்பவர் இவ்வரசை நிறுவினார். இவர் இயற்பெயர் திம்ம பகத்து (Dhimma Bagath). இவர் அடிமையாக இருந்து, பாமினிப் பேரரசில் உயர் பதவி பெற்றுச் சிறந்த வீரராகவும், அரசியல் வல்லவராகவும் திகழ்ந்தார். இவர் ஒரிசா மாநிலத்தை வென்று கொண்டவீடு கோட்டைகளைக் கைப்பற்றிப் புதிய பேரரசை நிறுவினார். இவரது பேரரசு 'நிசாம் சாகி அரசு' என வழங்கப்பட்டது. இப்பேரரசு கி.பி. 1610முதல் வீழ்ச்சியுறத்தொடங்கியது.

பர்கன் நிசாம் சா இப்பேரரசின் இரண்டாம் அரசர், இவர் 45 ஆண்டுகள் ஆட்சி செய்தார். இவர் காலத்தில் பெரும் பகுதியை விசய நகரப் பேரரசுடன் நடத்திய போரில் கழித்தார். இவர் கி.பி 1550-ஆம் ஆண்டில் விசயநகரப் பேரரசுடன் அமைதி உடன்படிக்கை செய்து கொண்டார். ஆனால், அது நீடிக்கவில்லை. இப்பேரரசின் மூன்றாம் அரசராக உசேன் நிசாம் சா விளங்கினார். இவர் கி.பி 1553 முதல் 1565 வரை அரசாண்டார். விசயநகரப் பேரரசுக்கு எதிராகக் கோல்கொண்டா பீசப்பூர் சுல்தான்களுடன் சேர்ந்து புகழ் பெற்ற தலைக்கோட்டைப் போரில் கி.பி.1565-ஆம் ஆண்டு வெற்றி பெற்றார், ஆனால், அதே ஆண்டில் அவர் இறந்துவிட்டதனால் அந்த மாபெரும் வெற்றியினால் எவ்விதப் பயனுமில்லை. முதலாம் முர்டாசா நிசாம் சா (Murtaza Nizam Sha I) இப்பேரரசின் நான்காம் அரசராக கி.பி. 1565 முதல் 1586 வரை அரசாண்டார். இவர் பேரரை (Berar) வென்றார். ஆனால் பீடாரை (Bidar) வெற்றிகொள்ள முடியவில்லை. இரண்டாம் உசேன் நிசாம் சா இவரைக் கொன்று ஆட்சியைக் கைப்பற்றினார். உசேனின் இச்செயலே அவருக்கு அழிவைத் தேடித்தந்தது. அமைச்சர் மீர்சா கான் (Mirza Khan) இவரைச் சிறையில் அடைத்துக்கொன்றார். அரசன் பர்க்கன் நிசாம் சா காலத்திற்குப்பின் பல அரசியல் குழப்பங்கள் ஏற்பட்டன. அரசியலில் இரு பிரிவினர் தங்களுக்குள் போரிட்டனர். இந்நிலையில் மிர்சாகானைக்கொன்று சமால்கான் (Jhamal Khan) பேரரசன் இசுமாயிலின் ஆதரவைப் பெற்று ஆட்சியைத் தன் பொறுப்பில் ஏற்றான். இசுமாயிலின் தந்தை பர்கன் நிசாம்சா படையெடுத்து வந்து சமால்கானைக் கொன்று இசுமாயிலைச் சிறையில் அடைத்தபின் ஆட்சியைக் கைப்பற்றினார்.

இரண்டாம் பர்கன் நிசாம் சா இப்பேரரசின் ஆறாம் அரசராவர். இவரது வெற்றிக்குக் காரணம் மொகலாயப்பேரரசர் அக்பரின் உதவியைப்பெற்றதே எனக் கூறுவார். ஆயினும் தம்முடைய வலிமையினாலும் இதர பாமினி அரசர்களின் உதவியினாலும், இவர் ஆட்சியைக் கைப்பற்றினார் என வரலாற்று ஆசிரியர் கூறுவர். இவரது போர்ச்சுகீசியப் படையெடுப்புத் தோல்வியில் முடிந்தது. இவரால் சோலாபபூரை (Sholapur) மீட்க முடியவில்லை. இவர் கி பி. 1595-ஆம் ஆண்டு இறந்தபின், இவரது மூத்த மகனாகிய இப்ராகிம் நிசாம்சா பட்டத்துக்கு வந்தார். இவர் காலத்தில் அரசியல் அபாயங்கள் பல ஏற்பட்டன. புதிதாக ஏற்பட்ட தக்காண முகம்மதியர் கூட்டத்தினர் முன்பு போல் இவர் காலத்திலும் தொல்லைகள் கொடுத்தனர். பீசப்பூர் அரசர் அடில்சா இப்பேரரசின் மீது படையெடுத்து இப்ராகிமை நால்துர்க்கம் (Naldrug) என்னுமிடத்தில் நடைபெற்ற போரில்கி.பி. 1595 ஆகசுட்டு பதினாறாம் நாள் கொன்றார். இந்நிகழ்ச்சிக்குப் பின்னும் அகம்மது நகரப் பேரரசில் குழப்பங்கள் மறையவில்லை. மியான் மான்சு (Miyan Manju) முதலமைச்சர் அகம்மதுவை அமைச்சராக்கினார். இறந்த பீசப்பூரின் அரசன் அலி அடில் சாவின் மனைவியும், இறந்த அரசன் இப்ராகிம்மின் சகோதரியுமான சாந்த் பீபி (Chand Bibi) இப்பேரரசின் வாரிசாகத் தம் சகோதரியின் உயிருடன் இருந்த ஒரே மகன் பகதூரை அரசராக்க விரும்பினார். விரைவில் ஆட்சியினைத் தன் வசம் பெற்ற பீபி ஆட்சியைச்சீராக்கிக் கொண்டிருக்கும்போது மொகலாயப்பேரரசர் அக்பர் அகமதுநகர் மீது படையெடுத்தார். அகமது நகரின் பேரரசர் பீபி படைத்தலைமையினைத் தாமே ஏற்றுப் போரை நடத்தினார். முகலாயப் படை தோல்வியுற்றது. ஆயினும் இவ்வீரப் பெண்ணின் மீது பொறாமை கொண்ட எதிரிகள் இவரை வஞ்சகமாகக் கொன்றனர். மீண்டும் ஏற்பட்டமொகலாயர் படையெடுப்பினால் கி.பி.1600-ஆம் ஆண்டில் இப்பேரரசு வீழ்ச்சியுற்றது. இவ்வாண்டுக்குப்பின் இப்பேரரசின் வரலாறு முடிவுற்றது.

பெ.சி.

*நிசாமாபாது:* இது தென்னிந்தியாவில் ஆந்திரப் பிரதேசத்தின் வடமேற்குப் பகுதியிலுள்ள நகரம், மாவட்டம் ஆகியவற்றைக் குறிப்பிடுவதாகும். இதற்கு இந்தூர் என்று மற்றொரு பெயரும் உண்டு. நிசாமாபாது (Nizamabad) நகரம் அப்பெயரையே கொண்டிருக்கும் மாவட்டத்தின் தலைநகரமாகும். மத்திய இருப்புப் பாதையின் ஐதராபாது-கோதாவரிப் பாதையில் அது அமைந்துள்ளது. வரலாற்று நோக்கில் இங்குக்காணப்படும் முக்கிய இடங்களாவன: இப்போது குடிநீர் வழங்குவதற்கான தடாகம் அடங்கியுள்ள கோயில்; இந்தூர் அரண்; கலை மற்றும் அறிவியற் கல்லூரி ஆகியவையாகும். இங்கே கரும்பு அதிகமாக விளைகின்றது. பல்வேறு சாலைகள் சந்திக்கும் இடத்தில் இது அமைந்துள்ளது.

தக்காணப்பீடபூமியில் அமைந்துள்ள இம்மாவட்டம் 7969 ச.கி.மீ பரப்பளவைக் கொண்டுள்ளது. மஞ்சரா நதியின் மீது கட்டப்பட்டுள்ள நீர்த்தேக்கம் அந்நதிக்கு ஓர் அணையாக உள்ளது. அம்மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் நீர்ப்பாசனம் செய்கிறது. கட்டுமானத்திற்குத் தேவையான சிறந்த, விலை உயர்ந்த மரங்கள் இதன் காடுகளில் ஏராளமாகக் கிடைக்கின்றன. போதான் மற்றும் காமரெட்டி ஆகியவை முக்கியமான தொழிற்சாலை மையங்களாக விளங்குகின்றன. இவற்றில் சர்க்கரை ஆலைகளும், சாராயம் தயாரிக்கும் ஆலைகளும் இருக்கின்றன. அ.உ.

*நிசாமீ:* இவர் பாரசீக நாட்டின் மிகச் சிறந்த கவிஞர். ஆசர்பைசா மாநிலத்தைச் சேர்ந்த கன்சா என்னும் சிற்றூரில் கி.பி.1140-ஆம் ஆண்டு இவர் பிறந்தார். இளமையிலேயே பெற்றோரை இழந்த இவர், தம் மாமன் ஆதரவில் வளர்ந்து கல்வி பயின்றார். இவர் சூபி (Sufi) சமயநெறியில் மிகுந்த பற்றுக் கொண்டிருந்தார்; துறவியாகவே வாழ்ந்து வந்தார். இவருடைய காப்பியங்கள் பல உலகப் புகழ் பெற்றவை; உளவியல் கருத்துகள் நிறைந்தவை. அவற்றுள் ஐந்து காப்பியத் தொகுதிகள் குறிப்பிடத்தக்கன. அக்காப்பியங்கள், பாரசீகக் காப்பிய வளர்ச்சியின் உயர்நிலையை உணர்த்தக் கூடியவை.

'மக்சனுல் அசுரார்' (Makhzanul Asrar) என்பது நிசாமீ (Nizami) எழுதிய முதற் பெருங் காப்பியமாகும். இது குறுநில மன்னன் ஒருவனைப் பற்றிய சிறந்த சித்திரிப்பு நூலாகும். காப்பியமெங்கும் சூபி தத்துவக் கோட்பாடுகளைச் சுட்டிச் செல்வது இந்நூலின் சிறப்பாகும். 'குசுராவு-வ-சிரீன்' (Khusraw-Wa-Shirin) என்பது இவரது இரண்டாம் காப்பியமாகும். குசுராவு என்னும் சக்கரவர்த்தியின் வாழ்வை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டது இக்காப்பியம். இவர் ஓர் உளவியல் அறிஞர் என்பதை இந்நூலால் உணரலாம்.

இவருடைய மூன்றாம் காப்பியம் 'லைலா-வ-மஜ்னூன்' (Layla-Wa-Majnun)என்பது. இக்காதல் கதை இன்று வரை உலகம் முழுவதும் புகழ்பெற்று வரும் உயர்ந்த கதையாக விளங்குகிறது. இவருடைய நான்காம் காப்பியம் அலெக்சாந்தரின் வாழ்வை விளக்கும் வகையில் அமைந்தது. அக்காலத்தின் நிலையை முழுமையாக வெளிப்படுத்தக் கூடிய காப்பியமாக இந்நூல் விளங்கி வருகின்றது. இவரது ஐந்தாம் காப்பியம் சாசானிய வீரன் பக்ராம் கோர் (Bahram Gor) என்பவனைப் பற்றி விளக்கும் வகையில் அமைக்கப்பெற்றுள்ளது. இவற்றைத் தவிர இவர் பல சிறு காப்பிய நூல்களும் படைத்துள்ளார். இவருடையநூல்கள் அனைத்தும் (குசுராவு-வ-சிரீன் தவிர) ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யப் பெற்றுள்ளன. இவர் கி.பி.1202-ஆம் ஆண்டு மறைந்தார். சா.உ.

*நிசிடா கிட்டாரோ (கி.பி. 1870-1945):* இவர் புதிய சப்பானின் சிறந்த தத்துவவியல் அறிஞராவார். கன்னசவா இசுகிவா என்னும் நகரத்திற்கு அருகில் சப்பான் கடலில் அமைந்துள்ள ஒரு சிறு கிராமத்தில் இவர் பிறந்தார். இளமைக் கல்வியைத் தம் ஊரில் உள்ள சிறு பள்ளிகளில் பெற்றார். பின்பு தோக்கியோப் பல்கலைக் கழகத்தில் தம் உயர் கல்வியை முடித்தார். பட்டப்படிப்பு முடிந்த பிறகு நகர நடுநிலைப் பள்ளியில் ஆசிரியரானார். ஆயினும் பின்பு கன்னசவா இளநிலைக்கல்விக் கல்லூரியில் அமர்த்தப்பட்டார். அங்குப் பத்தாண்டுகள் ஆழ்ந்த படிப்பிலும் தத்துவவியல் கணிப்புகளிலும் மற்றும் 'சென்' தியானத்திலும் ஈடுபட்டார். அச்சமயத்தில் தான் இவர் தம்முடைய அடிப்படைத் தத்துவவியல் கொள்கைகளை உருவாக்கினார். அவற்றைப் பிற்காலத்தில் விரிவானவையாகவும், பயனுள்ளனவாகவும் மாற்றினார்.

மேலை நாட்டுத் தத்துவவியல் முறையை அடிப்படையாகக் கொண்ட ஒரு வரன்முறையை முக்கியமாகச் 'சென்' உள்ளுணர்வை உண்மைத்தன்மைக்குக் கொண்டு செல்வது என்பது பற்றி அமைப்பதுதான் அவர்தம் வாழ்க்கையின் முக்கிய குறிக்கோளாகும். தம்முடைய பள்ளியில் நடத்திய விரிவுரைகளின் அடிப்படையில் இவர் எழுதிய முதல் புத்தகம் 'நல்லது பற்றிய ஓர் படிப்பு' (1960). அது உண்மைக் கொள்கைகளை உள்ளடக்கிய ஒரு சீரான, ஏற்றுக் கொள்ளக்கூடிய தத்துவவியல் அமைப்பைப் பற்றியதாகும். அதில் நல்லொழுக்கம் (Ethics), மத தத்

துவம் ஆகியவை கூறப்பட்டுள்ளன. இந்தப் படைப்புக் கல்வியாளர்களின் உலகத்தில் கி.பி.1868-க்குப்பிற்பட்ட புதிய காலத்தில், ஒரு சிறந்த சப்பானிய சிந்தனையாளரால் எழுதப்பட்ட உண்மையான தத்துவவியல் கருவூலமாகக் கருதப்பட்டது. இதற்கு முன் வெளிவந்த அனைத்து நூல்களும் கன்பூசியசு அல்லது புத்தசமயக் கொள்கைகளின் அடிப்படையில் அமைந்தனவாகவோ கடினமான, தெளிவற்ற (electicism) அடிப்படையில் அமைந்தனவாகவோ இருந்தன.

நிசிடா 1910-இல்கியாட்டோப் பல்கலைக் கழகத்தில் பணியில் அமர்ந்து 1928-ஆம் ஆண்டு பணியிலிருந்து ஓய்வு பெறும் வரை பணிபுரிந்தார். பல கல்வி கற்ற, சிறந்த மாணவர்களைத் தம்முடன் சேர்த்துக் கொண்டு, அவர்களுடனும், தனபி ஆசிமே (Tanabe Hajime) என்பவருடனும் இணைந்து கியூட்டோ அல்லது நிசிடாதனபி தத்துவவியல் பள்ளியைத் தொடங்கினார். தம்முடைய தத்துவவியல் பணியை ஓய்வு பெற்ற பிறகும் தொடர்ந்து இரண்டாம் உலகப் போரின் போதும் சிறப்பாக நடத்தினார். இப்பணி அவர்தம் மறைவு வரையிலும், பல தேசியவாதிகளின் எதிர்ப்புகளையும் மீறித் தொடர்ந்தது.

தம்முடைய 'நல்லது பற்றிய ஓர் படிப்பு' (A Study of Good) நூலில் நிசிடா 'தூய்மையான அனுபவத்தின்' அடிப்படைக் கொள்கைகளை விரிவாக்கினார். இக்கொள்கை சிந்தனைக்கும், அறிவுக்கும் எதிரானதன்று. ஆனால், அனைத்து எதிர்வாதங்களுக்கும் அடிப்படையாக இருந்தது. எடுத்துக்காட்டாக, ஒரு மலரைப் பற்றிய கவிஞரின் நோக்கு 'தூய்மை அனுபவம்' எனலாம். இது கவிஞரின் கருத்தாண்மைக்கும், மலரின் நோக்குக்கும் முந்தியதாகும். நிசிடாவின் பார்வையில் இவ்விரண்டும், ஒரே மாதிரியான அனுபவத்தை நோக்கும் இரண்டு வெவ்வேறு முறைகளாகும். அந்த அனுபவம் ஒருவனின் மனத்தில் நிறுவப்படுவதில்லை. அந்த அனுபவம்தான் ஒருவனை நிலைநிறுத்துகிறது. நிசிடா, பொருள் கருத்து, உடல்-உள்ளம் ஆகியவற்றைவேறுபடுத்தும் மேலை நாட்டு வாதங்களுக்கு அப்பால் தம் கருத்துகளைச் செலுத்தி அதற்கு முந்திய வேறுபாடுகளைக் கண்டறிய முற்பட்டார். அதன் மூலம் அவற்றைப் பற்றித் தெளிவுற அறிய இயலும் என்று கருதினார். நிசிடாவின் நல்லது பற்றிய ஒரு படிப்பு பெரும்பாலும் தூய்மை அனுபவம் பற்றிய உளவியல் கூறுகளையே கூறுவதால், தம்முடைய பிற்காலப் படைப்புகளில் தூய்மை அனுபவத்தின் தருக்க நெறியினை விரிவாகக் கூற முயன்றார். புதிய காண்டின் கொள்கைத் தாக்கத்தாலும், பிச்சிட்டு, பெர்க்கன் ஆகியோர் பால் உள்ள அனுதாபத்தாலும் 'தூய்மை அனுபவம் தன் மனச்சாட்சிநிலை' யினை (Intuition & Reflection in Self-Consciousness) விரிவாக்கினார். அதன்படி 'தன்மனச்சாட்சி நிலை' என்பது ஒரு முழுமையான, உலகப் பொதுவான கூறு என்றும், மற்றவை அதன் அடிப்படையில் எழுந்தவை என்றும் அவர் கருதினார். மிகச் சிறந்த தம்முடைய இந் நூலில் 'தம்மனச்சாட்சி நிலை' யின் உருவகமாக 'நான் நான் தான்' என்ற பதத்தைப் பயன்படுத்தினார். இது 'அ' 'அ' தான் என்ற வாதத்தின் மூலம் எனக் கருதினார்.

இது தூய்மை வாதத்தின் தொடர்ச்சி, கணிதம், அனுபவம் ஆகியவற்றைப் பொதுவாகவும், நுண்கலையைப் பற்றிக் குறிப்பாகவும் அறியப் பயன்படும் எனக் கருதினார். மனித அறிவின் தோற்றம், எல்லைகள் மற்றும் உயிர்களின் மேல்நிலை பற்றிய அவரின் கருத்துகள் ஆகியவற்றை மேலும் விரிவாக நோக்கத்தொடங்கினர். முடிவில் தம் மன உணர்வை 'முற்றிலும் சுதந்திரமான சிந்தனை நிலை' என விளக்கினார். இது தூய்மையான நிலையாக இருக்கும் வரை அதை எதிரொலிக்கச் செய்ய முடியாது. ஏனெனில், அது எதிரொலிப்பைத் தாண்டிச் சென்று எதிரொலிப்பை உண்டாக்குகிறது. இந்தச் சிந்தனை நிலையின் மையமான 'தன்நிலை' எப்போதும் ஒரு 'நிலையான நிகழ்காலம்' (Eternal now) ஆகும். இது ஒரு வரையறை அற்ற வளர்ச்சி ஆகும். இந்த வாதத்தின் அடிப்படையில் நிசிடா தம் அடுத்த இரண்டு நூல்களை எழுதினார். அவை 'மனநிலைச் சிக்கல்' (The Problem of Consciousness, Tokyo, 1920) 'கலையும் நல்லொழுக்கமும்' (Art and Morality, Tokyo, 1923) என்பவையாகும்.

எனினும், நிசிடா தம் முற்றிலும் சுதந்திரமான சிந்தனை நிலைக் கொள்கைகளில், தாமாகவே மனத்தில் எழுகின்ற கொள்கைகளை முற்றிலும் விட்டு விடவில்லை. மேலும் அதையும் தாண்டிச் செல்லும் நிலையைத் தேடினார். அதற்கு முடிவு காணத் தம்முடைய சிறந்த படைப்பான 'செயல்களில் இருந்து பார்த்தலுக்கு' (From the Acting to the Seeing, Tokyo, 1927), தருக்க நிலம் அல்லது தருக்கக்களம் (Logic of the Place or the Logic of the Field) ஆகிய நூல்களில் அவர் தம் கொள்கையைத் தெளிவுபடுத்தினார். இந்தக்கொள்கை பிளேட்டோ, அரிசுடாட்டில் ஆகியோர் கருத்தில் காணப்பட்டாலும், இது நிசிடாவின் எண்ணங்களில் விளைந்ததாகும்.

ஓர் இடத்தையே அடிப்படையாகக் கொண்டு எல்லா உயிர்களும் நிலைப்படுத்தப் படுகின்றன. முற்றிலும் சுதந்திரமான சிந்தனை நிலை என்பது 'சூனியத்திலிருந்து தோன்றி மீண்டும் சூனியத்தையே அடைகின்ற நிலை' என அறிந்தார். அதன் காரண

மாக அதைச் 'சூனியம்' எனக் குறிப்பிட்டார். அந்தச் சூனிய நிலையில்தான் எல்லாமே அமைகின்றன. தானாகவே மனத்தில் எழுகின்ற தன்மையைத் தாண்டிச் செல்லும் நிலையை இவர் 'சூனியத்தின் இடம்' எனக் குறிப்பிட்டார். நிசிடாவின் இக்கொள்கை நிகழ் நிலையில் இருப்பனவற்றிற்கு நேர் எதிர் அன்று. அதாவது சூனியத்திற்கு அருகில் அதனுடன் தொடர்புள்ள நிலை எனலாம். 'இடம்' பற்றிய தம் கொள்கைகளின் அடிப்படையில் அமைந்த 'கொள்கை' மற்றும் 'வாத நிலைகளை' இவர் உருவாக்கினார். இது மேலை நாடுகளில் நிலவிய தியான நிலைக் கொள்கையோடு தொடர்புடையது எனலாம்.

'தன் நிலை'க்கும் உலகத்திற்கும் இடையில் உள்ள தொடர்பை ஆராய்ந்ததன் மூலம் 'முற்றிலும் முரண்பட்ட நிலைமையைக் கண்டறிதல்' அல்லது 'இருவேறு நிலைகளின் இணைப்பு' என்ற கொள்கையைத் தோற்றுவித்தார். அக்கொள்கையை, மதத்தைப் பற்றிய தத்துவவியல் கொள்கையை ஆராயப் பயன்படுத்தினார். மேலும், மனிதனின் வாழ்க்கை நிலை பற்றிய முரண்பாடுகள் முதலியவற்றையும் ஆராயப் பயன்படுத்தினார். இந்தச் சிக்கல்களின் விளைவாகச் சமயம் நிலைநிறுத்தப்பட்டது. ஏனெனில், முற்றிலும் முரண்பாடு பற்றிய நிலையையும் தன் சூனிய நிலையையும் அறிவதை விடுத்து, மக்கள் முழுமை நிலையையும், கடவுளையும் அறியத் தொடங்குகின்றனர்.

நிசிடாவிற்கும், ஏகலுக்கும் இடையே பல தொடர்புள்ள கூறுகள் உள்ளன. இருப்பினும், நிசிடாவின் கொள்கை 'சென்' உள்ளுணர்வை அடிப்படையாகக் கொண்டதாகும். நிசிடாவின் சிந்தனை அக்காலச் சப்பானிய அறிவுலகத்தில் மிகுந்த தாக்கத்தைக் கொடுத்தது. இருப்பினும் இக்கொள்கை மார்க்சிய சிந்தனையாளர்களால் எதிர்க்கப்பட்டது. மேலை நாட்டு மொழிகளில் நிசிடாவின் படைப்புகள் மொழி பெயர்க்கப்பட்டன. உலகத் தத்துவவியலில், தலைசிறந்த தத்துவவியல் அறிஞர் என்றும் இவர் கருதப்பட்டார். இவர்தம் கொள்கை கிழக்கு மேற்கு வேறுபாடுகளைக் கடந்து நின்றது. இரா.சு.

**நிசுகுவாலி இந்தியர்** அமெரிக்க இந்தியப் பழங்குடியினருள் ஒருவகையினர். இவர்கள் வாசிங்டனை அடுத்துள்ள மவுண்டு ரெய்னியர் (Mount Rainier) பகுதிகளில் வாழ்கின்றனர். நிசுகுவாலியினர் (Nisqualis), சாலிசான் (Salishan) மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழியைப் பேசுகின்றனர்.

முதன்முதலில் இசுபானியர்கள் இவர்கள் வாழுமிடங்களை கி.பி. 1603-இல் கண்டுபிடித்தனர். அதற்கடுத்த நூற்றாண்டுகளில் (1755) உருசிய வணிகர்கள் இவர்களுடன் வாணிகம் செய்தனர். உருசியர்களைத் தொடர்ந்து சேம்சு குக்கு (James Cook) என்னும் ஆங்கிலேயர் இவர்களுடன் வாணிகம் செய்ய முற்பட்டார். பின்னர் இவர்கள் அமெரிக்கர்களின் தலையீடுகளை எதிர்நோக்க வேண்டியதாயிற்று. அதனால், நிசுகுவாலி இந்தியர்களும் இவர்கள் பகுதிகளைச் சுற்றி வாழ்ந்த பிற பழங்குடி இனத்தவர்களும் ஒன்று சேர்ந்து அமெரிக்கர்களை எதிர்த்தனர். இவர்களின் முயற்சி ஓரளவு வெற்றி பெற்றாலும் அடுத்த ஆண்டில் அமெரிக்கர்கள் இவர்களைத் தம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தனர்.

அமெரிக்க அரசு கி.பி. 1857-இல் இவர்களுக்கென்று நிசுகுவாலி ஆற்றங்கரையில் தனியிடம் ஒதுக்க அங்குக் குடியேற்றினர். அப்பகுதி இவர்களின் வாழ்க்கைக்கு மிகவும் ஏற்றதாக உள்ளது என்று கூற முடியாது. ஏனெனில், கோடைக் காலங்களில் மக்கள் பல இடங்களுக்குச் சென்று மீன்பிடித்தும், வேட்டையாடியும் வாழ வேண்டியவர்களாக உள்ளனர். அதனால், நிலையான குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொள்ள முடிவதில்லை. கோடையில் பல குழுக்களாகப் பிரிந்து வெவ்வேறு இடங்களில் சிதறி வாழ்கின்றனர். மழைக் காலத்தில் பெரும்பாலும் அனைவரும் ஒன்று சேர்ந்து குறிப்பிட்ட சில கிராமங்களில் வாழ்கின்றனர். வேட்டையாடியும் கிழங்கு வகைகளைத் தோண்டி எடுத்தும் பிழைத்து வருகின்றனர். மீன் பிடித்தல் இவர்களின் முதன்மையான தொழில்களுள் அடங்கும். சீ.ப.

**நிட்சிலிக்கு:** வடதுருவத்தின் பனி உறைந்த பகுதிகளில் வாழும் ஓர் இனத்தவரே நிட்சிலிக்கு (Netsilik) ஆவர். இவர்கள் வாழும் பகுதி கனடா, இசுபென்சு (Spence) வளைகுடா, கோமகன் மேயர் (Lord Mayor) வளைகுடா ஆகிய பகுதிகளுக்கு இடையே உள்ளது. இம்மக்களைப் பற்றி முதன்முதலில் தேனிய நாட்டு மானிடவியல் அறிஞர் நுடு இரசுமுசன் (Knud Rasmussen) என்பவர் 1923-இல் கண்டறிந்து வெளி உலகம் அறியச் செய்தார்.

நிட்சிலிக்குகள் வாழும் பகுதி, ஆண்டிற்கு 7 மாதம் பனியால் உறைந்துள்ளது. இவர்கள் இக்லூ (Igloo) எனப்படும் பனிக்கட்டிகளால் கட்டப்படும் வீட்டில் வாழ்கின்றனர். பெரும்பான்மையாக இவர்கள் மீன், கலைமான் வகை (Caribou), கடல் நாய் (Seal) முதலியவற்றைப் பிடித்து வாழ்கின்றனர். கலைமான்களை உணவிற்கு மிகுதியாகப் பயன்படுத்துவதால் அவற்றைப் பல வழிகளில் பிடிக்கின்றனர். பனிப்பாறைகளில் ஓடும் ஆற்றைக் கலைமான்கள் கடக்க முற்படும்போது அவற்றைப் படகுகளில் சென்று அம்பெய்து கொல்கின்றனர். அம்பெய்



நிட்சிலிக்குகள்

வோரின் குறிக்குத் தவறிக் கரையைக் கடக்க முற்படு மானால் கரையில் நிற்கும் பெண்களும் குழந்தை களும் ஓநாய்களைப் போன்று ஊளையிடுவர். இச் சத்தத்தைக் கேட்டுக் கலைமான்கள் மீண்டும்ஆற்றில் நீந்தத் தொடங்கும். அப்போது அவற்றைக் கொன்று விடுவர். பனிப் பாறைகளில் துளைகளை ஏற்படுத்தி அவற்றில் சிக்கும் கலைமான்களையும் பிடிப்பர். அதன் இறைச்சியைப் பல மாதங்களுக்குப் பதப்படுத்தி உண் பர். அதன் தோலைக் கூடாரங்கள், கை, கால் உறை கள் முதலியவற்றைச் செய்யப் பயன்படுத்துவர்.

மழைக் காலம் மிகுதியாகும் போது 20-30 எண் ணிக்கையில் சிதறி வாழ்வோர் 50 முதல் 100 வரை யிலான கூட்டமாகச் சேர்ந்து வாழ்வர். அக்காலங் களில் அனைவரின் ஒத்துழைப்பும் இன்றியமையாத தாகிறது. ஏனெனில் அக்காலத்தில் வேட்டையாடு தல், குடிநீர் போன்றவற்றிற்கு மிகவும் அவதிப்படு வர். கடலிலிருந்து எடுக்கப்பட்ட பழைய பனிக்கட்டி களை உருக்கிக் குடிநீராகப் பயன்படுத்துவர். அவ் வாறு செய்வதால் கடல்நீரின் உப்புத் தன்மை குறைந்துவிடுகிறது.

நிட்சிலிக்குகள் கடல்நாய்களையும் மிகுதியாக வேட்டையாடுகின்றனர். பனிப் படுகைகளின் கீழ் வாழும் கடல்நாய்கள் மூச்சுவிடுவதற்காக மூச்சுவிடும் துளைகளை (Breathing holes) ஏற்படுத்திக் கொள் கின்றன. அத்துளைகளைத் தேடி அவற்றைக் கொல் கின்றனர். அத்துளைகள் எங்கெங்குள்ளன என்பதைக் கண்டறிவதில் இவர்கள் வளர்க்கும் நாய்கள் பெரிதும் உதவுகின்றன. கடல்நாய்களும் கலைமான்களும் வேட் டைக்குக் கிடைக்காத காலங்களில் மீன்களைப்பிடித்து உண்கின்றனர். இருப்பினும் கடல்நாய்களின் வேட் டையையே இவர்கள் மிகவும் இன்றியமையாததாகக் கருதுகின்றனர். ஏனெனில் அவை உணவாகவும், நீண்ட மழைக்காலத்தில் இருண்ட இக்லூ வீட்டில் ஒளி பெறப் பயன்படுத்தும் ஒருவகை மெழுகைச் செய்யவும், குளிர் காலங்களில் இக்லூவில் அடைந்து கிடக்கும்போது அடுத்த பருவத்திற்குத் தேவையான உடைகள், கை கால் உறைகள், கூடாரங்கள் ஆகிய வற்றைச் செய்ய உதவும் தோலாகவும் பயன்படுத்தப் படுகின்றன. நிட்சிலிக்குகள் பெண் குழந்தைகளை விரும்புவதில்லை. ஆகவே, பெரும்பாலும் மிகுதியாகப் பிறக்கும் பெண் குழந்தைகளைக் கொன்றுவிடுகின்ற னர். பெண் குழந்தைகள் பொருளீட்ட முடியாதவர் களாகவும், குடும்பத்திற்குச் சுமையாகவும் உள்ள தால் அவ்வழக்கம் இவர்களிடையே உள்ளது. சீ.ப.

**நிட்டை விளக்கம்:** இந்நூல் திருவாவடு துறை ஆதீனத்து மூன்றாம் பட்டத்தில் வீற்றிருந்த அம்பலவாண தேசிகர் என்பவரால் அருளிச் செய்யப் பட்டது. இது திருவாவடுதுறை ஆதீனப் பண்டார சாத்திரம் எனப் பெறும் பதினான்கு நூல்களுள் ஏழாம் இடத்தைப் பெற்றுள்ளது. இந்நூல் சிவ னடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானத்துக்கு வழி வகுக்க வல்லதாகும். இது கடவுள் வாழ்த்து வெண்பா ஒன்றும் நூல் இருபத்தெட்டுச் செய்யுள் களுமாக உள்ளது. நூல் கட்டளைக் கலித்துறை யாப்பினால் இயன்றது. 'நிட்டை விளக்கம் நிகழிரு பானெட்டையும் நம், சட்டம் அறுப்பதற்காய்ச் சாற் றினான்-சிட்டன், திருவாவடுதுறையான் சென்ற டைந்தோர்க்கெல்லாம் அருளாகும் அம்பலவாணன்' என்னும் சிறப்புப் பாயிரச் செய்யுளால் இந்நூற் பயனைத் தெரிந்து கொள்ளலாம். இந்நூலாசிரியர் காலம் கி.பி. 16-ஆம் நூற்றாண்டு. இந்நூலில் இவ் வாதீன முதற் குரவராகிய நமச்சிவாய மூர்த்திகளை ஆசிரியர் சிவாயநம மன்னவன், சிவாய நமகுரு,சிவாய மெய்த்தேசிகன்,சிவாய நெடுந்தகை,சிவாயஅருட்குரு, சிவாயமெய்த்.தூயவன் எனப்பலவாறாகப் பதினொரு பாடல்களில் போற்றி அவர் உபதேசப் பெருமை களையும் விளக்கிக் கூறிய திறம் சிறப்பாயுள்ளது. மேலும், முதற் பதினைந்து பாடல்களில் நிட்டை யைப் பற்றிய பல உண்மைகளைத் தில்லை நடராசப் பெருமானை விளித்துக் கேட்பது போல் விளக்கும் திறம் உளங்கொளற் பாலது. மாய நட்டோரையும் என்னும் பாடல் (16) பட்டினத்தார் பாடலைச் சிறிது மாற்றி இந்நூலிலும் அப்பாடலின் பெருமை

கருதி ஆசிரியர் சேர்த்துள்ளார் எனத் தெரிகிறது. அது நிட்டையின் இலக்கணத்தை மிகத் தெளிவாய் விளக்குகிறது.பஞ்சாக்கரத்தைஅடியொற்றிஅப்பாடல் அமைந்துள்ளது.சிவாய நம என்னும் ஐந்தெழுத்தில் 'ய' என்பது உயிர்; மாய நட்டோர் என்பது 'ந'; மாயாமலம் என்பது;'ம'; 'வ' என்பதுஅருளைக் குறிக்கும். 'சி' என்பது சிவன். மாய நட்டோரையும்மாயா மலம் என்னும் மாதரையும்வீயவிட்டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாம் தாயுடன் சென்று பின் தாதையைக் கூடிப் பின்தாயைமறந்துஏயுமதேநிட்டை யென்றான் எழிற்கச்சி ஏகம்பனே' என்பதே அப்பாடல். நடுவிலுள்ள 'ய' என்னும் ஆன்மா 'ந' என்னும் நண்பர்கள் உறவினர்கள், 'ம' என்னும் மாயையாம் மனைவி மக்கள் முதலியவற்றால் மறைப் புண்டிருக்கிறது. அவற்றை உதறிப்பின் 'வ' என்னும் அருளாய தாயின் துணை பெற்று, 'சி' என்னும் தந்தையாய இறைவன்பால் சென்று பின்னர்த் தாய்ப் பாசத்தையும் விட்டுத் தந்தையின் திருவடி நிழலின் புற்றுத் தியானத்திலிருத்தலே நிட்டை என்று காணப் பெறும் உண்மை மிகவும் உணர்ந்து இன்புறத் தக்கது. இவ்வாறே மற்றைய பாடல்களும் நிட்டையைப் பற்றிச் சிறப்பாக விளக்கிக் கூறுகின்றன. இரா.ச.

**நித்தவிநோத வளநாடு**: சோழப் பேரரசர்களுள் தலைசிறந்த அரசனாக விளங்கிய முதலாம் இராசராசன் தனது ஆட்சிப் பகுதியைப் பல்வேறு பிரிவுகளாகப் பிரித்து ஆட்சி செய்தான். அவற்றுள் ஒன்று நித்தவினோத வளநாடு ஆகும். இது சோழ மண்டலத்தில் இருந்தது. இவ்வளநாட்டின்கண் ஆவூர்க்கூற்றம்,காந்தாரநாடு, கரம்பைநாடு, கீழ்க் கூற்றம், முடிசோழநாடு, நல்லூர்நாடு, பாம்புணிக் கூற்றம், வெண்ணிக்கூற்றம், வீரசோழ வளநாடு போன்ற உட்பிரிவுகள் இருந்தன. சு.இரா.

**நித்திய சூரிகள்**: எம்பெருமானாரால். விளக்கம் பெற்ற விசிட்டாத்துவித சமயம், ஆன்மாக்கள் அழியாதவையென்றும், பலவென்றும் கூறுகின்றது. அவ்வான்மாக்கள் பத்தர் என்றும், முத்தர் என்றும் நித்தர் என்றும் மூவகைப்படும்.

வினைவயப்பட்டு உலகில் தோன்றித் தோன்றி உழல்பவர்களைப் பத்தர் என்பர். தத்துவத்திரயம் 'பத்தர் என்றது சம்சாரிகளை' என்று கூறும். உலகிலே தோன்றி அவனருளாலே, கரும நெறியாலோ ஞான நெறியாலோ பத்தி நெறியாலோ முத்தி பெற்றவர்களை முத்தர் என்பர். 'முத்தர் என்றது சம்சாரபந்தம் அற்றவர்களை' என்று தத்துவத்திரயம் கூறும்.

பத்தரிலும், முத்தரிலும் வேறுபட்டவர் நித்தர். இவர்களைத் தான் சான்றோர்கள் நித்திய சூரிகள் என்பர். இவர்கள் பரமபதத்திலேயே இருப்பர். இவர்கள் எம்பெருமானைப் போல ஒரு நாளும் வினைவயப் படாதவர்கள். நித்திய சூரிகள் ஞானமே வடிவாக உள்ளவர்கள். இவர்கள் எம்பெருமானின் இயல்பை நன்கு தெரிந்தவர்கள். ஆகையால் எம்பெருமானையன்றி வேறு எதையும் மதியாதவர்கள்.

பத்தர் கால வயப்பட்டவர்கள். முத்தர் காலக் கட்டிலிருந்து விடுபட்டவர்கள். நித்திய சூரிகள் காலக் கட்டையே அறியாதவர்கள். ஆதலால், இவர்களைக் 'காலமும் கணக்கும் நீத்தவர்கள்' என்று கூறலாம்.

நித்திய சூரிகளுள் முதன்மையானவன் ஆதிசேடன். அவன் எம்பெருமானுக்கு அரியணையாகவும் குடையாகவும், திருவடிப் பாதுகையாகவும் விளங்குவான். பெருமானுக்கு. வாகனமாகவுள்ள கருடன் ஆதிசேடனுக்கு அடுத்து விளங்குபவன். இப்பெருமகன் இறைவனுக்குக் கொடியாகவும் விளங்குவான். திருவாயில் பாதுகாக்கும் சேனை முதலிகளும், கணத் தலைவர்களும் நித்திய சூரிகளே. பிரபந்தத்தில் அமரர் என்று பேசப்படுவர் நித்திய சூரிகளே. வேதாந்த தேசிகர்,நித்திய சூரிகளைத் 'தொல்வினை என்றும் இல்லாச் சோதி வானவர்' என்று சுருங்கக் கூறி விளக்குகின்றார். எஸ்.கே.ரா.

**நித்தியானுசந்தானம்**: அந்தணன் வேதத்தைப் பயில்கின்றான். அதனால் அவன் ஞானம் பெறுகின்றான். அதுபோல் வைணவன் எம்பெருமானின் திருவருள் பெறத் திவ்வியப் பிரபந்தத்தை ஓதுகின்றான். அதற்காகவே அவன் தன் வாழ்நாளைப் பயன்படுத்துகின்றான்.

திவ்வியப் பிரபந்தம் நாலாயிரம் பாசுரங்களைக் கொண்டது. அவற்றை நாளும் ஓதுவது எவராலும் முடியாது. ஆதலால், நாலாயிரத்தின் முக்கியமான பதிகங்கள் நித்தியானுசந்தானமாகச் சுருக்கப் பெற்றன.

நித்தியானுசந்தானத்தில், திருப்பல்லாண்டு, திருப்பள்ளி யெழுச்சி, திருப்பாவை, நீராட்டம், பூச்சூட்டல், காப்பிடல், சென்னியோங்கு, அமலனாதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு, கோயில் திருவாய்மொழி, இராமாநுச நூற்றந்தாதி, வாரணமாயிரம், நாலாயிரத் தனியன்கள் ஆகியவை உள்ளன.

இவற்றை ஒவ்வொரு வைணவனும் நாளும் ஓதவேண்டும். சிலசமயங்களில் இவற்றை முற்றவும் ஓதாதபடி வேறு பணியிருந்தால் நித்தியானுசந்தானத்திலுள்ள பாசுரங்களை முன்னடி பின்னடி சேவிக்க வேண்டும். இதனை 'முன்னடி பின்னடி சேவை' என்பர்.

பிற்காலத்தில் வைணவம் வடகலை, தென்கலை என்று இரண்டு வகையாகப் பிரிந்தது. அப்போது தென்கலை வைணவர்கள், நித்தியானுசந்தானத்தில், மணவாள மாமுனிகள் திருவாய் மலர்ந்த உபதேச ரத்தின மாலையையும், திருவாய்மொழி நூற்றந்தாதியையும், ஆர்த்திப் பிரபந்தத்தையும்,. அருளாளப் பெருமாள் எம்பெருமானார் திருவாய் மலர்ந்த ஞானசாரத்தையும், பிரமேய சாரத்தையும், விளாஞ்சோலைப் பிள்ளை திருவாய் மலர்ந்த சப்தகாதையையும், அப்பிள்ளை திருவாய் மலர்ந்த ஆழ்வார்கள் வாழித் திருநாமத்தையும், ஓராண் வழி ஆசாரியர்கள் வாழித் திருநாமத்தையும் சேர்த்தனர்.

வடகலை வைணவர்கள், நித்தியானுசந்தானத்தில். வேதாந்த தேசிகர் திருவாய் மலர்ந்த அடைக்கலப் பத்தையும், மும்மணிக்கோவையையும், நவமணி மாலையையும், அதிகார சங்கிரகத்தையும். பிரபந்த சாரத்தையும், நயினாராச்சாரியார் திருவாய் மலர்ந்த பிள்ளையந்தாதியையும் சேர்த்தனர்.

நித்தியானுசந்தானத்தைத் தொகுத்த பெரியவர் பெயர் தெரியவில்லை. தொகுத்த காலமும் புலனாகவில்லை. வடகலையும், தென்கலையும் பிரிவதற்கு முன் நித்தியானுசந்தானம் தொகுக்கப் பெற்றது என்று சிலர் கூறுகின்றனர்.

அகோபில மடத்து நடைமுறை மரபிலும் திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்த 'அங்கண்மா ஞாலம் அஞ்ச' . என்னும் பதிகமும், 'காசையாடை' என்னும் பதிகமும், 'வாணிலா முறுவல்' என்னும் பதிகமும், சிரீ ஆதிவண் சடகோப யதீந்திர மகா தேசிகன் அடைக்கலப் பத்தும் சேர்ந்துள்ளன. சிரீ பரகால மடத்தின் நடைமுறை மரபிலும், சிரீ முநித்திரய நடைமுறையிலும் சிறு சிறு வேறுபாடுகள் உள்ளன.

இந்த நடைமுறைமரபுகள் சிறு சிறு வேறுபாடுகளைக் கொண்டனவேயன்றி மாறுபாடுகளைக் கொண்டனவல்ல. எந்த நடைமுறை மரபும் அடிப்படையில் ஒன்றுபட்டேயுள்ளது. எஸ்.கே.ரா.

**நிதி ஒதுக்கீட்டு வரைவு** என்பது இந்தியா, இங்கிலாந்து போன்ற பாராளுமன்ற நிருவாக முறையை ஏற்றுக்கொண்டுள்ள நாடுகளிலே, அரசாங்கத்தின் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை நாட்டின் பாராளுமன்றம் ஏற்று, ஆய்வு செய்து நிறைவேற்றும் 5 நிலைகளுள் ஒன்று ஆகும். 1) வரவு செலவுத் திட்டத்தை நிதி அமைச்சர் பாராளுமன்றத்தின் கீழ்ச் சபையில் தாக்கல் செய்தல், 2) வரவு செலவுத் திட்டத்தின் மீது மன்ற உறுப்பினர்கள் விவாதம் நடத்துதல். 3) மானியங்களின் மீதான பணத் தேவைகளை வாக்கெடுப்பின் வழியாக அளித்தல், 4) நிதி ஒதுக்கீட்டு வரைவினை (Appropriation Bill) ஆய்ந்து, சட்டமாக நிறைவேற்றுதல், 5. செலவுகளுக்கான பணத்தை வரிவிதிப்பின் வழியாகப் பெறுதற்கு வழி செய்யும் நிதிச் சட்ட முன்வரைவினைச் (Finance Bill) சட்டமாக நிறைவேற்றுதல் ஆகிய 5 நிலைகளும் இந்தியாவில் வரவு செலவுத் திட்டம் நிறைவேறுதலில் உள்ளன.

வரவு செலவுத் திட்டத்தை அரசாங்கத்தின் பல்வேறு ஆட்சித் துறைகளின் தலைவர்களும் கவனமாக வரைந்து தத்தம் துறைகளின் அமைச்சர்களிடம் விடுக்க, அவர்கள் அவற்றை நிதி அமைச்சரிடம் அளிக்கின்றனர். நிதி அமைச்சர் எல்லாவற்றையும் இணைத்து மொத்த வரவு செலவுத் திட்டத்தை உருவாக்கிப்பணத்தேவைகளைச் சரிக்கட்டுதற்கான புதிய வரித் திட்டங்களையும் வகுத்து, வரவு செலவுத்திட்டத்தைச் சட்டமன்றத்தில் தாக்கல் செய்து அதன்மீது உரை ஆற்றுகிறார். இரண்டாம் நிலையில் வரவு செலவுத் திட்டத்தின் பொதுவான விதிகளும், கொள்கைகளும் மன்ற உறுப்பினர்களால் விவாதிக்கப்படுகின்றன. பின்னர்ச் செலவினங்களின் மீது வாக்கெடுப்பு நடத்தப்பட்டு ஒப்புக்கொள்ளப்படுகிறது. செலவுக்கான பணத்தை வாக்கெடுப்பு நடத்தி அளித்தல் பாராளுமன்றத்தின் கீழ்ச்சபைக்கே உரிய தனி அதிகாரம் ஆகும். ஒவ்வொரு செலவினத்தின் மீதும் உறுப்பினர்கள் ஒரு குறிப்பிட்ட காலம் விவாதம் நடத்தி வாக்கு அளிக்கின்றனர். எல்லாச் செலவினங்களுக்கும் ஒதுக்கப்பட்ட நாள்களின் கடைசி நாளன்று, வாக்கெடுப்புக்காக விடப்பட வேண்டிய எஞ்சிய எல்லாச் செலவினங்களின்மீதும் விவாதம் இன்றியே வாக்கெடுப்பு நடத்தி முடிக்கப் படுகின்றது. இந்திய அரசாங்கப் பொது வரவுசெலவுத் திட்டத்தில் மொத்தம் 109 செலவினங்களும், இருப்புப் பாதைத் துறையின் வரவு செலவுத் திட்டத்தில் 23 செலவினங்களும் இருக்கின்றன. பாராளுமன்றத்தால் வாக்கெடுப்பின்வழியாக ஒப்புக்கொள்ளப்பட்ட செலவினமே (Demand), மானியம் (Grant) என்று சொல்லப்படுகிறது.

**வரைவின் கூறுகள்:** பாராளுமன்றத்தால் வாக்கெடுப்பின் வாயிலாக ஒப்புக்கொள்ளப்பட்ட எல்லாச் செலவினங்களும், திரள் நிதியில் சாட்டிய செலவினங்களும் நிதி ஒதுக்கீட்டு மசோதாவாக (Appropriation Bill) ஒன்று சேர்க்கப்படுகின்றன. இவ்விரண்டு வகைச் செலவினங்களே நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்தின் கூறுகளாக அமைகின்றன. வாக்கெடுப்பில் ஒப்புக்கொள்ளப்பட்ட செலவினங்கள் பல்வேறு ஆட்சித் துறைகளால் செலவிடப்படவேண்டியவை. குடியரசுத் தலைவருடைய ஊதியம், இதைப்போன்ற பிற செலவுகள்

தலைமை நீதிமன்ற நீதிபதிகளுடைய ஊதியங்கள், பாராளுமன்றத்தின் இருமன்றங்களின் தலைவர்கள், துணைத்தலைவர்கள் ஆகியோருடைய ஊதியங்கள், இந்தியத் தணிக்கையாளர் ஊதியம், இந்திய அரசாங்கக் கடன் தொகைகள், நீதிமன்றத் தீர்ப்பின்படி செலுத்தப்படவேண்டிய தொகைகள் முதலிய செலவினங்களுக்கு வேண்டிய பணம் பாராளுமன்றத்தின் வாக்கெடுப்புக்கு உட்பட்டவை அல்ல; இவை அரசாங்கத்தின் திரள் நிதியிலிருந்து (Consolidated Fund) சாட்டி எடுக்கப்படக்கூடிய (Charged Items of Expenditure) செலவினங்களாகும். இவ்விருவகைச் செலவுகளுமே நிதி ஒதுக்கீட்டு மசோதாவில் இணைக்கப்பட்டுச் சட்டமாக நிறைவேற்றப்படுகின்றன. இம்மசோதா முழுவதும் மன்றத்தின் வாக்கெடுப்புக்கு விடப்படும்போது, இதற்கு எவ்வகைத் திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா. ஏனெனில் அதிலடங்கியுள்ள செலவினங்கள் முன்பே ஒப்புக்கொள்ளப்பட்டு திரள் நிதியில் சாட்டப்பட்டு இருக்கின்றன. மன்றம் இதனை நிறைவேற்றியதும், 'இது ஒரு பணமசோதா' என்று கூறும் ஒரு சான்றிதழையும் இதனோடு இணைத்து மன்றத் தலைவர் (Speaker of the House) இதனை மேற்சபைக்கு விடுக்கிறார். மேற்சபை இதன் மீது சில பரிந்துரைகளை மட்டுமே செய்தல் கூடும் (14 நாள்களுக்குள்). இவற்றைக் கீழ்ச்சபை ஏற்றுக்கொள்ளாமல் விட்டுவிடலாம். கீழ்ச்சபை இதனை நிறைவேற்றிய 14 நாள்கள் கழித்து, இது குடியரசுத் தலைவருக்கு அனுப்பப்பட்டு, அவருடைய ஒப்புதலைப் பெறுகிறது. இதனைச் சபையின் மறு ஆய்வுக்குக் குடியரசுத் தலைவர் அதனைத் திருப்பிவிட இயலாது; அவர் அதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நிதி ஒதுக்கீட்டுச்சட்டத்தில் செலவுகளுக்கு வழங்கப்பட்ட தொகைகளை ஆதாரமாக வைத்தே இந்தியத் தணிக்கை அதிகாரி தம் பணிகளைச் செய்தல் இயலும்.

நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்தில் வழங்கப்பட்ட செலவுத் தொகைகளை வரிவிதிப்பின் வழியாகப் பெறுதற்கு வகை செய்வதே நிதிச்சட்டம் (Finance Act) ஆகும். இதனைப் பாராளுமன்றம் நிறைவேற்றியதும் பாராளுமன்றத்தின் வரவு செலவுத் திட்டத்தைநிறைவேற்றும் பணி முடிவடைகிறது.

**சிறப்பு**: நாட்டு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றத்தினால் அதிகார அடிப்படையில் ஒப்புக்கொள்ளப்பட்ட செலவினங்களைத் தவிரப் பிற செலவினங்களை அரசாங்கம் செய்தலாகாது என்ற சிறந்த குடியாட்சிக் கொள்கையை நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் எடுத்துக்காட்டுகிறது. பா.சு.

*நிதிக் குழுக்கள்*: ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் பல அரசியல் சட்டச் சீர்திருத்தங்கள் 1947-ஆம் ஆண்டுக்கு முன்பு கொண்டு வரப்பட்டன. மாண்டேகு செம்சுபோர்டு அறிக்கையின்மீது இந்திய அரசு 1919-ஆம் ஆண்டு அரசியல் சட்டத்தை (Government of India Act 1919) உருவாக்கியது. இந்த அரசியல் சட்டத்தின்படி மாகாணங்களுக்கும், மத்திய அரசுக்கும் உள்ள அரசியல், நிதி, நிருவாக அதிகாரங்கள் (Provisions) பிரித்துக் கொடுக்கப்பட்டன. இச்சட்டத்திற்குப் பிறகு ஆங்கிலேய அரசு 1935-ஆம் ஆண்டில் மற்றொரு அரசியல் சட்டத்தை உருவாக்கியது. இந்த அரசியல் சட்டத்தின்படி மாகாணங்களுக்குப் பல நிலை ஆதாரங்கள் ஒதுக்கித் தரப்பட்டன. மாகாண அரசுகளுக்கு வேளாண்மை வருமான வரியை விதிக்கும் அதிகாரம் வழங்கப்பட்டது. தேவையின் அடிப்படையில் (Need basis) மானிய உதவியும் (Grants-in-aid) வழங்கப்பட்டது. முத்திரை வரி (Stamp Duties), சொத்தில் கால்வரி, உரிமை வரிகள் (Succession Duties), விமானப் போக்குவரத்து, தொடர்வண்டிப் போக்குவரத்து வழியாகச் செல்லும் பயணிகள், சரக்குகள் மீது விதிக்கும் முனை வரிகளின் (Terminal Taxes) பங்கு ஆகியவை மாகாணங்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டன. ஏற்றுமதி, இறக்குமதி வரிகள் தீர்வை வரிகள், நிறுவன வரிகள், வருமான வரிகள் போன்ற வரிகளை மத்திய அரசே தன் அதிகாரத்தில் வைத்திருந்தது. மாகாண அரசுகள் நில வருவாய், வேளாண்மை வருமான வரி, வணிக வரிகள், தொழில் வரி போன்ற வரிகளை விதித்தன. ஆங்கிலேய அரசு 1936-இல் சர் ஒட்டோ நிம்மியர் (Sir Otto Niemeyer) என்ற பொருளியல் அறிஞரின் தலைமையில் மாகாண அரசுகளின் தேவையை அறிந்து நிதி ஒதுக்கும்படி கேட்டுக்கொண்டது. ஒட்டோ நிம்மியர் குழு அறிக்கை 1936-இல் தரப்பட்டது. இந்த அறிக்கையின்படி மாகாண அரசுகளுக்கு நிதி ஒதுக்கீடுகள் செய்யப்பட்டன.

ஆங்கிலேய ஆட்சிக் காலத்திலேயே மாகாண அரசுகள் தங்களின் பணிகளைச் செய்யப் போதுமான நிதி ஆதாரம் இல்லையென்று குறைபட்டுக் கொண்டன. இந்திய அரசியல் சட்டம் உருவாக்கப்பட்டபோது அரசியல் நிருணய சபையில் (Constituent Assembly) இருந்த பல அறிஞர்கள் மாநிலங்களுக்கு மிக்க நிதி ஆதாரங்களை வழங்கவேண்டுமென்று வலியுறுத்தினர். பாகிசுத்தான் பிரிவினையின் காரணமாக மத்திய அரசிற்கு மிகுந்த அதிகாரம் வேண்டுமென்ற நோக்கத்தோடு அரசியல் சட்டம் உருவாக்கப்பட்டது. எனவே மத்திய, மாநில அரசுகளிடையே இருந்த நிதி அதிகாரங்களுடன் 1935-ஆம் ஆண்டின் அரசியல் சட்டத்திற்கு மாறாக 1950-ஆம் ஆண்டு அரசியல் சட்டத்தில் ஒரேயொரு புதிய சேர்க்கை மேற்கொள்ளப்பட்டது. அதாவது 1950-ஆம் ஆண்

டின் அரசியல் சட்டத்தில் 280-ஆம் பிரிவின்படி நிதிக் குழு (Finance Commission) அமைக்கப்படும் என்று புதிய சேர்க்கையில் கூறப்பட்டது. இந்த அரசியல் சட்டத்தின் புதிய பிரிவின்படி ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை மாநில நிதித் தேவைகளை அறிவதற்காகக் குடியரசுத் தலைவர் ஒரு நிதிக்குழுவை அறிவிப்பார் என்று அரசியல் சட்டம் கூறுகிறது. இந்தியாவில் ஐந்தாண்டுத் திட்டங்கள் 1950-ஆம் ஆண்டிலிருந்து நிறைவேற்றப்பட்டு வருகின்றன. ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் மாநில அரசுகளால் பல புதிய ஆக்கப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன. இதன்காரண மாக மாநில அரசுகளுக்கு நிதிப் பற்றாக்குறையும் ஏற்பட்டது. எனவே, நிதிக்குழுவின் பரிந்துரைகள் மத்திய-மாநில உறவுகளை நிருணயிப்பதில் முக்கிய காரணியாகச் செயற்பட்டன. இந்தியாவில் இதுவரை எட்டு நிதிக் குழுக்கள் தங்கள் அறிக்கைகளைத் தந்துள்ளன. ஒன்பதாம் நிதிக்குழு 1987-ஆம் ஆண்டு சூன் மாதத்தில் முன்னாள் மத்திய அமைச்சர் என்.கே.பி. சால்வே (N.K.P.Salve) தலைமையில் அமைக்கப்பட்டுள்ளது.

நிதிக்குழு நியமிக்கப்படும் முன்பு எந்தச் சிக்க லில் அது ஆய்வை மேற்கொள்ள வேண்டுமென்பதை மத்திய அரசின் நிதித் துறை செயல் வரையறையின் (Terms of reference) மூலம் அறிவிக்கிறது. இச் செயல் வரையறைதான் நிதிக்குழுவின் செயற்பாட் டினைக் கட்டுப்படுத்த அடிப்படையாக அமைகிறது. நிதிக்குழு தனது வரையறைக்குள் மாநில அரசுகளின் நிதிப் பற்றாக்குறையைப் போக்குவதற்குப் பல பரிந் துரைகளைச் செய்கிறது. வரிகளின் வருமானத்தைப் பங்கீடு (Tax Share) செய்கிறது. இந்திய அரசியல் சட்டத்தில் மத்திய, மாநில அரசுகளின் நிதி அதி காரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. மாநில அரசுகளை விட மத்திய அரசு விதித்து வசூலிக்கும் வரிகள், மிகுந்த நிதி ஆதாரங்களைத் தருவதினால் நிதிக் குழுக்கள் இந்த வரிப் பங்கீட்டினைச் செய்கின்றன. வருமான வரி, (Income Tax), தீர்வை வரிகள் (Excise Duties), சொத்து வரி (Estate Duty) போன்ற வரிகளின் வருமானங்கள் சில அளவுகோல் களின் அடிப்படையில் மாநிலங்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படுகின்றன. மேலும், மானியத் தொகை யும் (Grants-in-aid) அரசியல் சட்டத்தின் 275-ஆம் பிரிவின்படி மாநிலங்களுக்குக் கொடுக்கப்படுகிறது. இரயில்வே,பயணிகளின் மீது விதிக்கப்படும் வரிகளின் பங்கினையும் நிதிக்குழுவின் பரிந்துரையின் மூலம் மாநில அரசுகள் பெறுகின்றன. இந்த நிதிப் பங்கீடு களின்போது ஒவ்வொரு நிதிக்குழுவும் சில அளவு கோல்களைக் (Criteria)கொண்டு அதாவது, மாநிலங் களின் மக்கள்தொகை அடிப்படையிலும் (Population Basis), வரி வசூலின் (Tax Collection) அடிப்படை யிலும் நிதி ஆதாரங்களைப் பிரித்துக் கொடுக்கின் றன. முதலாம் நிதிக்குழு (First Finance Commission) 80 விழுக்காடு மக்கள் தொகை அடிப்படையிலும் 20 விழுக்காடு வரி வசூலின் அடிப்படையிலும் நிதி ஆதாரங்களைப் பிரித்துக் கொடுப்பதற்குப் பரிந்துரை செய்தது. எட்டாம்நிதிக்குழு (Eighth Finance Commission) மக்கள்தொகை, வரி வசூலின் அடிப்படை போன்ற அளவுகோல்களுடன் பல புதிய அளவுகோல் களையும் பரிந்துரை செய்தது. எடுத்துக்காட்டாக வளர்ந்த மாநிலங்களுக்கும், வளர்ச்சியடைந்து வரும் மாநிலங்களுக்கும் உள்ள தனி ஆள் வருமானத்தின் (Per Capita Income) வேறுபாட்டின் அடிப்படையிலும் பகிர்ந்து கொடுக்கப்பட்டது. இயற்கைக் கொடுமை கள் காரணமாக மாநில அரசுகளின் நிதி இழப்பை ஈடுசெய்ய 120 கோடி உரூபாய் எல்லா மாநிலங் களுக்கும் கொடுக்க எட்டாம் நிதிக்குழு பரிந்துரை செய்தது.

மேலும், மாநிலங்களின் கடன் நிலைமையைப் போக்குவதற்கும் பல பரிந்துரைகளை எட்டாம் நிதிக்குழு மேற்கொண்டது. இந்நிதிக்குழு 38,500 கோடி உரூபாயை 1983-முதல் 1988-ஆம் ஆண்டு வரை ஆண்டுதோறும் பிரித்துக்கொடுக்க, பரிந்துரை செய்தது. நிதிக்குழுக்கள் தங்கள் வரையறைக்குள் செயற்பட்டாலும் மத்திய மாநில நிதி உறவுகளின் அடிப்படைச் சிக்கல்களைப் பெருமளவில் தீர்ப்பதற் குப் பயன்படவில்லை. வறிய மாநிலங்களுக்கு மிக்க நிதியை ஒதுக்கவேண்டுமென்று எட்டாம் நிதிக்குழு சில அளவுகோல்களை வைத்துப் பரிந்துரை செய் தது. இருப்பினும், இந்தியாவில் வறிய மாநிலங்களுள் ஒரு மாநிலமான பீகார் மாநிலம் தனிஆள் பங்கி னைப் (Per Capita Transfer) பெறுவதில் 16-ஆம் இடத்தில் இருக்கிறது. இந்தக்குறைபாட்டினைப்பொரு ளியல் அறிஞர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். வளரு கின்ற மாநிலங்களும் நிதிக்குழுவின் பரிந்துரையால் போதிய நிறைவு அடையவில்லை. மாநில அரசுகள் பொதுவாக நிதிக்குழு செயற்படும் விதத்தைக் குறை கூறியுள்ளன. இதற்குப் பல்வேறு காரணங்கள் உள் ளன. முதல் நிதிக்குழு 1951, நவம்பர் மாதத்தில் நியமிக்கப்பட்டது. அதன்பின் ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை தொடர்ந்து நிதிக்குழுக்கள் நியமிக்கப்பட் டுள்ளன.

இந்தியாவின் முதல் தலைமை அமைச்சர் சவகர் லால் நேரு 1950-இல் இந்தியத் திட்டக் குழுவை (Indian Planning Commission) உருவாக்கினார். திட்டக்குழுவின் தலைவராகத் தலைமை அமைச்சர் (Prime Minister) இருப்பார் என்று அறிவித்தார். துணைத் தலைவராகவும், உறுப்பினராகவும் பொரு ளியல், நிதி நிபுணர்கள் இருப்பார்கள் என்றும் அறி

விக்கப்பட்டது. நாடாளுமன்றச் சட்டத்தின் மூலம் திட்டக்குழு செயல் வடிவம் பெற்றது. நிதிக்குழு போன்று அரசியல் சட்டத்தின் அங்கீகாரத்தைத் திட்டக்குழு பெறவில்லை. எனவே, திட்டக்குழுவை அரசியல் சட்டத்திற்குச் சாராத அமைப்பு (Unconstitutional body) என்று அறிஞர்கள் பலர் கூறுகின்றனர். திட்டங்களைத் தீட்டுவதற்காகவும், செயற்படுத்துவதற்காகவும் ஏற்படுத்தப்பட்ட திட்டக்குழு நிதி ஆதாரங்களைப் பிரித்துக் கொடுக்கும் அதிகாரத்தையும் எடுத்துக் கொண்டது. ஏறக்குறைய 50 விழுக்காட்டிற்கு மேல் திட்டங்களுக்காக நிதி ஆதாரங்களை மாற்றத் (Plan Transfers) தொடங்கியது. இந்தக் குறுக்கீட்டினை இரண்டாம் நிதிக்குழுவின் தலைவராக இருந்த கே. சந்தானம் சுட்டிக்காட்டி இது பொருளாதார விரயத்திற்கு வழிகோலும் என்று எச்சரித்தார். ஏனென்றால், திட்டக்குழுவின் மூலம் பகிர்ந்தளிக்கப்படும் நிதி ஆதாரங்கள், பொருளாதார அளவுகோல்களின் தன்மையில் இல்லாமல் அரசியல் குறுக்கீடுகளின் தன்மையில் அமைந்துவிடலாம் என்ற கருத்தும் தெரிவிக்கப்பட்டது. மேலும் திட்டக்குழுவின் தலைவர் ஓர் அரசியல் கட்சியைச் சார்ந்தவராக இருப்பதினால் எல்லா மாநிலங்களுக்கும் நடுநிலையாகச் செயற்படாமல் போக வாய்ப்புண்டு என்றும் கருதப்பட்டது. தங்கள் கருத்துப்போல் நிதி ஆதாரங்களை மாநிலங்களுக்கு மாற்றும் அதிகாரத்தைத் திட்டக் குழு வைத்திருந்ததினால் இவ்வெண்ணம் தெரிவிக்கப்பட்டது.

மாநில அரசுகளுக்கு 1951-56-ஆம் ஆண்டுகளில் கிட்டத்தட்ட 634 கோடி உருபாய் இப்பிரிவின்படி ஒதுக்கப்பட்டது. இது 1979-84-ஆம் ஆண்டுகளில் 14,203 கோடி உருபாயாக உயர்ந்தது. இத் தொகை மாற்றத்தையும், திட்டக்குழுவால் திட்டத்திற்காக அளிக்கப்படும் தொகையையும் சேர்த்தால் நிதிக்குழு பரிந்துரை செய்யும் நிதி ஒதுக்கீடுகளைவிட உயர்ந்து காணப்படுகிறது. எனவேதான், பொருளியல் அறிஞர்களும், நிதி வல்லுநர்களும், முதல் அமைச்சர்களும் நிதிக்குழு தனக்குரிய அதிகாரத்தைத் திட்டக்குழுவின் செயற்பாடுகளால் இழந்து வருகிறது என்று குறிப்பிடுகின்றனர். காங்கிரசுக் கட்சியின் ஆட்சி 1967-ஆம் ஆண்டிற்குப்பின் பல மாநிலங்களில் வீழ்ந்து விட்டது. பல மாநிலக் கட்சிகள் ஆட்சியைக் கைப்பற்றத் தொடங்கின. எனவே, மாநிலக் அரசுகள் தங்கள் வேண்டுதல்களையும், நிதிப் பற்றாக்குறையையும் வெளிப்படையாக விவாதிக்கத் தொடங்கின.

தமிழ்நாடு அரசு 1969-ஆம் ஆண்டு இராசமன்னார் குழுவை நியமித்து மத்திய, மாநில உறவுகளை ஆய்ந்து அறிக்கை தரும்படி கேட்டுக் கொண்டது. (நீதிபதி பி.வி. இராசமன்னார் நான்காம் நிதிக்குழுவின் தலைவராகச் செயற்பட்டவர்). இக்குழு 1969-ஆம் ஆண்டு தனது அறிக்கையைத் தந்தது. அவ்வறிக்கையின்படி திட்டக்குழு ஓர் ஆலோசனை மன்றமாகச் செயற்பட வேண்டுமென்றும், நிதிக்குழு நிலையானதாக ஆக்கப்படவேண்டுமென்றும், (Permanent Finance Commission) பரிந்துரை செய்தது. நிதிக்குழு மட்டுமே மாநில அரசுகளின் நிதித்தேவையை அறிந்து செயற்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டது.

மேற்கு வங்க அரசும் 1977-ஆம் ஆண்டு மத்திய அரசிற்கு ஓர் ஆய்வு அறிக்கையைத் தந்தது. இவ்வாய்வு அறிக்கையில் நிதிக்குழுவின் அதிகாரங்கள் பரவலாக்கப்பட வேண்டுமென்றும், இக்குழு நிலையானதாக ஆக்கப்பட வேண்டுமென்றும் பரிந்துரை செய்யப்பட்டது. தென்னக எதிர்க்கட்சித் தலைவர்களின் மாநாடு 1983-ஆம் ஆண்டில் கூட்டப்பட்டது. கருநாடக முதல்வர் இராமகிருட்டிண எக்டே அவர்கள் கூட்டிய இந்த மாநாட்டில் தமிழ்நாடு, ஆந்திரா, பாண்டிச்சேரி முதலிய மாநிலங்கள் கலந்து கொண்டன. எட்டாம் நிதிக்குழு எப்படிச் செயற்பட வேண்டுமென்று 11 அமிசத் திட்டத்தை இம்மாநாட்டில் வழங்கினர். வறட்சி, வெள்ள நிவாரணப் பணிகளுக்காக 75 விழுக்காடு நிதியுதவி மானியத் தொகை மூலம் வழங்கப்பட வேண்டுமென்றும், மீதி 25 விழுக்காடு அளவிற்குத்தான் கடன்தொகை அளிக்கப்பட வேண்டுமென்றும் இம்மாநாடு வலியுறுத்தியது. 100 விழுக்காடு அளவிற்குப் புயல் நிவாரண நிதி அளிக்கப்பட வேண்டுமென்றும் இம்மாநாடு கூறியது மேலும், சிறுசேமிப்புத்திட்டத்தின் மூலம் மாநிலங்களுக்கு வழங்கப்படும் தொகை 75 விழுக்காடு உயர்த்தப்பட வேண்டுமென்றும், இதுவரை பங்கீடு செய்யாத நிறுவன வரியின் மூலம் வரும் வருமானத்தை மாநில அரசுகளுக்குப் பங்கீடு செய்ய வேண்டுமென்றும், வருமான வரி மிகை வரியையும் (Surcharge on Income Tax) மாநிலங்களுக்குப் பிரித்துக் கொடுக்கவேண்டுமென்றும், எட்டாம் நிதிக் குழுவிற்குப் பரிந்துரை செய்யப்பட்டது. இம்மாநாடு நடந்த சில நாளகளில் தலைமை அமைச்சராக இருந்த இந்திராகாந்தி அம்மையார் மத்திய, மாநில உறவுகளை மறு பரிசீலனைசெய்வதற்காக 1983-ஆம் ஆண்டு நீதிபதி சர்க்காரியா தலைமையில் ஒரு குழுவை (Sarkaria Commission on Centre-State Relations) அமைத்தார். இக்குழு தனது பரிந்துரையைப் பல ஆய்வுகளுக்குப் பின், அறிக்கையாக மத்திய அரசுக்கு 1988-ஆம் ஆண்டு கொடுத்தது.

சால்வே தலைமையில் 1987-ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட ஒன்பதாம் நிதிக்குழு இச்சூழலில் தனது ஆய்வை மேற்கொள்ள உள்ளது. மத்திய அரசின் அறிக்கை, மத்திய மாநில அரசுகளின் செலவைக்

கட்டுப்படுத்தவும், நிதி நிருவாகத்தில் திறமையை மேற்கொள்ளும் வழிகளைக் கண்டுபிடிக்கவும் ஒன்ப தாம் நிதிக்குழு பரிந்துரைகளை மேற்கொள்ளவேண்டு மென்று கேட்டுக் கொண்டுள்ளது. ஒன்பதாம் நிதிக் குழு இரண்டுவித அறிக்கைகளை அளிக்குமென்றும் வெளியிட்டுள்ளது. இக்குழு பல மத்திய,மாநில உறவு களில் உள்ள அடிப்படைச் சிக்கல்களை ஆய்வு செய்து அறிக்கையைத் தரும் என்றும் எதிர்பார்க்கப்படு கிறது.

| நிதிக்குழு | ஆண்டு | தலைவர் |
|---|---|---|
| ஒன்று | 1951 | கே.சி. நியோகி |
| இரண்டு | 1957 | கே. சந்தானம் |
| மூன்று | 1961 | ஏ.கே. சந்தா |
| நான்கு | 1965 | நீதிபதி பி.வி.இராசமன்னார் |
| ஐந்து | 1969 | மகாவீர் தியாகி |
| ஆறு | 1973 | கே பிரமானந்தரெட்டி |
| ஏழு | 1978 | நீதிபதி சிலாட்டு |
| எட்டு | 1984 | ஒய்.பி. சவான் |
| ஒன்பது | 1987 | என்.கே.பி. சால்வே |

மு.நா.

**துணை நூல்கள்:**

**Naganathan, M.**, New Dimensions of Fiscal Federalism, Centre for Research on New International Economic Order, Madras, 1987.

**Venu, S.**,The Finance Commissions of India, Institute for Financial Management and Research, Madras, 1978.

*நிதிக் கொள்கை* வளர்ந்த நாடுகளில் பொருளாதாரத்தின் சரிவை நிலைப்படுத்துவதற்காக உருவாக்கப்பட்டது எனலாம். பொது வருவாய், பொதுச் செலவு, பொதுக் கடன் போன்ற பொது நிதிகளின் கூறுகளை வகைப்படுத்துவதே நிதிக் கொள்கை (Fiscal Policy) யாகும். தொன்மைப் பொருளியல் காலத்தில் நிதிக் கொள்கை ஒரு குறிப் பிட்ட அளவில் பொருளாதார அமைப்பில் குறுக்கிட வேண்டுமென விரும்பப்பட்டது. பொருளாதாரத்தின் தந்தை என்று போற்றப்படுகின்ற ஆதம்சுமித்து (Adam Smith) பொதுச் செலவு நாட்டின் பாதுகாப் பிற்கும், அடிப்படைப் பலன்களுக்கும் பயன்பட வேண்டுமென்றும், அதன் அடிப்படையில்தான் வரி கள் போடப்பட வேண்டுமென்றும் விருப்பம் தெரி வித்தார். வரிகளும், பொதுச் செலவும் குறிப்பிட்ட அளவில்தான் செயற்பட வேண்டுமென்றும் தொன் மைப் பொருளியல் அறிஞர்கள் வலியுறுத்தினர். அங் காடி முறைப்பொருளியல்அமைப்பு(Market Economy) தானாகவே பொருளியல் சிக்கல்களைத் தீர்த்துக் கொண்டு செயற்படும் என்று நம்பினர். அமெரிக்கா விலும், ஐரோப்பிய நாடுகளிலும் 1930-ஆம் ஆண்டில் ஏற்பட்ட மந்த நிலை காரணமாகத் தொன்மைப் பொருளாதாரக் கருத்துகள் மறு ஆய்வுக்கு உட்படுத் தப்பட்டன. கீன்சு (Keynes) என்ற பொருளியல் அறிஞர் பொதுச்செலவின் மூலமும், அங்காடி அமைப்பின்மீது செலுத்தப்படுகின்ற கட்டுப்பாடு களின் மூலமும் பொருளாதார மந்தத்தைப் போக்க முடியுமென்ற கருத்தை முன்மொழிந்தார். பொதுச் செலவை மிகுதியாக்குவதன் மூலம் ஆக்கத் தேவையை மிகுதியாக்க முடியுமென்றும், அதன்மூலம் முதலீட்டு நடவடிக்கைகளை ஊக்கப்படுத்த முடியு மென்றும் உறுதியாகக் கூறினார். இக்காரணங்களால் உற்பத்தி பெருகி, வேலைவாய்ப்பு மிகுந்து பொருளா தார அமைப்பு நிலைத்த தன்மையுடையதாக இருக்குமென்றும் கூறினார். இக்கருத்து நடைமுறை யில் அமெரிக்காவில் வெற்றி பெற்றதனால் நிதி யியல் கொள்கை புதிய வலிவும், பொலிவும் பெற்றது.

ஆராடு தோமார் (Harrod Domar) என்ற பொருளியல் அறிஞர், பொருளாதார வளர்ச்சி விகி தம் மூலதன ஆக்கத்தைச் சார்ந்துள்ளது என்றும், மூலதன ஆக்கத்திற்கு நிதியியல் கொள்கை பெரும் ஊக்கச் சக்தியாக உள்ளதென்றும் கூறினார்.ஐரோப் பிய நாடுகளில் மந்த நிலையைப் போக்கிய காரணத் தினால் நிதியியல் கொள்கை, குறுகிய காலப் பொரு ளாதார வெற்றிகளை மட்டும்தான் ஈட்டித்தரும் என்று சில பொருளியல் அறிஞர்கள் கருதினார்கள். குறுகிய கால நிதியியல் நடவடிக்கைகள் வளர்ச்சி யடைந்த பொருளாதாரத்திற்குத்தான் பயன்படும் எனவும் கருதப்பட்டது. ஐக்கிய நாடுகள் சபையினால் நியமிக்கப்பட்ட உதவிக் குழுவின் அறிக்கை (The Report of the Sub Commission appointed by the Nations), நிதியியல் வளருகின்ற நாட்டிலும் கீழ்க் காணும் குறிக்கோள்களுடன் செயற்படலாம் என அறிவித்தது. அக் குறிக்கோள்களின்படி நிதியியல் கொள்கை, வளருகின்ற நாடுகளில் தீமை பயக்கின்ற வருமானம், சொத்து ஆகியவற்றால் ஏற்படும் ஏற் றத்தாழ்வைக் குறைக்கப் பயன்படலாம். மேலும், நிதி யியல் கொள்கை உள்நாட்டு அங்காடி முறையை விவ ரிக்கவும். தேவையற்ற இறக்குமதிகளைத் தவிர்க்க வும் பயன்படுத்தப்படலாம் என்ற கருத்தும் கூறப்பட் டது. பொருளாதார வளர்ச்சியால் ஏற்படும் பணவீக் கத்தைக் கட்டுப்படுத்தவும், தேவையான வளர்ச்சித் திட்டங்களை ஊக்கப்படுத்தவும், ஒட்டுமொத்தமான

சேமிப்பை உருவாக்கவும் நிதியியல் கொள்கை பயன் படும் என அவ்வறிக்கை வலியுறுத்தியது. மேற்கூறிய நிதியியல் குறிக்கோள்கள் ஒன்றையொன்று எதிர்த்து இருக்கக்கூடிய நிலையிலிருந்தாலும் நடைமுறையில் நிதியியல் கொள்கை பயன்படும் என அவ்வறிக்கை வலியுறுத்தியது. மேலும், அக் குறிக்கோள்களின் பல கூறுகள் வளருகின்ற நாடுகளுக்குப் பயனுள்ளதாக அமைந்துள்ளன.

நிதியியலில் ஒரு கூறான பொதுச்செலவு வளர்ந்த நாடுகளிலும் வளருகின்ற நாடுகளிலும் மிகுந்து கொண்டு வருகிறது. அதனோடு பொது வருவாயும் மிகுந்துகொண்டு வருகிறது. வளருகின்ற நாட்டில் ஏற்றத் தாழ்வுகள் மிகுதியாக இருப்பதனால் நேர் முக வரிகளின் மூலம் ஏற்றத்தாழ்வைக் குறைக்க லாம் என்ற கருத்து மேலோங்கியுள்ளது. இந்தியாவில் போடப்படும் நிறுவன வருமான வரியும், தனி ஆள் வருமான வரியும், மூலதன ஆதாய வரியும் இந் நோக்கத்திற்காகவே போடப்படுகின்றன. வரிச் சலுகையின் மூலம் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான தொழில்களுக்கு ஊக்கம் அளிக்கும் கொள்கையும் நிதியியல் கொள்கையில் அடங்கும். தனி ஆள் சேமிப்பை ஊக்கப்படுத்துவதற்கு வரி விதிப் புக் கொள்கை பயன்படுகிறது. பொது வருவாயைக் கொண்டு செய்யும் பொதுச் செலவின் மூலம் சமுதா யத்தில் நலிந்த பிரிவினருக்குப் பல சமுதாய நன்மை களை அளித்து ஏற்றத்தாழ்வுகளை ஓரளவிற்குக் குறைக்கப் பயன்படுகிறது. குறிப்பாக இந்தியாவில் கல்வி, பொதுச் சுகாதாரம், சமூகப் பாதுகாப்புப் போன்ற இனங்களுக்காக மத்திய, மாநில அரசுகள் பொதுச் செலவை மிகுதிப்படுத்தியுள்ளன.அமெரிக்கா போன்ற வளர்ந்த நாடுகளிலும் மேற்கூறிய பிரிவு களுக்கு இச் செலவைக் குறைக்க முடியவில்லை.

பொதுக்கடன், நிதியியல் கொள்கையில் மற் றொரு கூறாக அமைகிறது. பொதுக் கடனும் வளரு கின்ற நாடுகளில் பெரும் பங்கினை நிதியியல் கொள்கையில் வகிக்கிறது. உள்நாட்டுக் கடனும், வெளிநாட்டுக் கடனும் பொதுக் கடன் கொள்கையை நிருணயம் செய்கின்றன. இக்கடன்கள் அரசின் முத லீட்டுத் தேவைகளுக்குப் பயன்படுத்தப்படுகின்றன. பொதுக் கடனை நிலையான சொத்துகளை உரு வாக்கும் முதலீட்டில் பயன்படுத்தினால் பொதுக்கட னின் சுமை தெரியாமல் நீண்டகால நோக்கில் பொருளாதார வளர்ச்சிக்கு வழிகோலும். பொதுச் செலவும் பொருளாதார மையங்களை வலுப்படுத் தும். பொருளாதாரப் பணிகளுக்காகச் செலவிடப் பட்டால் உற்பத்தியும் பெருகி வேலைவாய்ப்பும் பெருகும்.

விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தி, வேலை வாய்ப்பைப் பெருக்கி, மூலதன ஆக்கத்தை உருவாக் கும் நிதியியற் கொள்கையைக் கடைப்பிடிப்பது அரி தாக உள்ளது. அரசியல், பொருளாதாரக் குறுக்கீடு களும், மக்கள்தொகைப் பெருக்கமும், அரசின் வரிச் சட்டங்களுக்குக் கட்டுப்படாமல் தனித்து இயங்கும் கறுப்புப் பொருளாதார அமைப்பும், நிதியியற் கொள்கைகளுக்கும் குறிக்கோள்களுக்கும் பெருந் தடைகளாக உள்ளன. இந்தியாவில் நிதிக் கொள்கை தொடக்கக்காலத்திலிருந்தே சில குறுகிய கால இலக்கு களை அடைவதற்காகப் பயன்படுத்தப்பட்டது. இது திட்டமிடப்பட்ட பொருளாதாரத்தை மிகுத்துச் செல்லும் தொலைநோக்குக் கொள்கையைக் கடைப் பிடிக்கவில்லை. மாறாக, இந்தியாவில் பொதுச் செலவு விரயப் பொருளாதாரத்தை (Unproductivity) உரு வாக்குவதற்கும் செலவிடப்பட்டுள்ளது. இதைத் தவிர்ப்பதற்குப் பல பொருளியல் அறிஞர்கள்வேண்டு கோள் விடுத்துள்ளனர். பொதுச் செலவுக் குழுவை (Expenditure Committee) அமைத்துப் பொதுச் செலவின் தன்மைகளை அறியலாம் என்ற கருத்தும் வலியுறுத்தப் படுகிறது. இந்தியாவில் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ள வரிக் கொள்கை, ஏழைகளுக்குப் பெரும் சுமையாக அமைந்துள்ளது. என எல்.கே.சா (L.K. Jha) தலைமையில் அமைந்த மறைமுக வரியின் மீதான ஆய்வறிக்கை கருத்துத் தெரிவித்துள்ளது. மறைமுக வரியினால் ஏற்படும் பளுவைக் குறைத்துப் பலமுனை வரியைத் தவிர்த்து வரி நிருவாகத்தைச் செம்மைப்படுத்தப் பல வழி களையும் வழங்கியுள்ளது.

இந்தியாவில் நேர்முக வரிகளைப் பற்றி ஆய்வு செய்த வாஞ்சிக் குழு (Wanchi Committee)பல்வேறு சீர்திருத்தங்களை முன் மொழிந்தது. நேர்முக வரி விகிதத்தைக் குறைக்கவும், எளிமையான வரிச் சட் டங்களை இயற்றவும், வரி ஏய்ப்போர் மீது கடுமை யான நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் பல பரிந் துரைகளைச் செய்துள்ளது.

இந்தியாவில் நிதியியற் கொள்கையில் ஏற்பட் டுள்ள பல கோளாறுகளை நீக்கவேண்டுமென்று மத்திய அரசு, 1985-86 நிதி நிலை அறிக்கையில், நீண்டகால நிதியியற் கொள்கையை (Long Term Fiscal Policy) அறிவித்தது. இந் நீண்டகால நிதிக் கொள்கையை இந்தியாவின் நிதி அமைச்சராக இருந்த வி.பி. சிங்கு (V.P. Singh) பாராளுமன்றத் தில் அறிவித்தார். நீண்டகால நிதியியற் கொள்கை மத்திய அரசின் வரி, பொதுச் செலவுக் கொள்கை ஆகியவற்றின் அடிப்படையில் வகுக்கப்பட்டது. அக்கொள்கை மத்திய அரசின் வரி, பொதுச் செல வுக் கொள்கை ஆகியவற்றை மாற்றியமைக்க வேண்டு மென்று அறிவித்தது.

நீண்டகால நிதியியற் கொள்கை, ஏழாம் ஐந்தாண்டுத் திட்டத்துடன் இணைந்து ஒரு புதிய பொருளாதார மறுமலர்ச்சிக்குப் பாடுபடும் என்றும், பொருளாதாரத் துறையில் மற்றத் துறைகளை அணைத்துச் செல்லவேண்டும் என்றும் வலியுறுத்தப் பட்டது. தொழிற் கொள்கை (Industrial Policy), வணிகக் கொள்கை (Commercial Policy), பணவியற் கொள்கை (Monetary Policy) ஆகிய கொள்கைகளோடு நிதியியற் கொள்கை ஒருங்கிணைந்து செல்வதற்குப் பல யோசனைகள் தெரிவிக்கப்பட்டன. பணவியற் கொள்கை, பொருளாதார அமைப்பில் பெரும் பங்கினை வகிப்பதாலும் வங்கிகள் மூலம் பணப் பெருக்கத்தையும், சுருக்கத்தையும் கட்டுப்படுத்தும் தன்மையில் அமைவதாலும் நிதியியற் கொள்கையும், பணவியல் கொள்கையும் இணைந்து சிறப்பான முறையில் செயற்பட்டால்தான் பொருளாதார இலக்குகளை அடையமுடியுமென்றும் வலியுறுத்தப்பட்டுள்ளது. நீண்டகால நிதியியற் கொள்கையின் அடிப்படையில் வரி விதிப்புக் கொள்கையை மாற்றியுள்ளது. நேர்முக வரி விகிதத்தை 1984-85-ஆம் ஆண்டில் குறைத்தது. வரி ஏய்ப்பு, பொருளாதாரக் குற்றங்கள் ஆகியவற்றைச் செய்த பெரும் தொழில் நிறுவனங்கள் மீதும் தொழில் அதிபர்களின் மீதும் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டது. வருமான வரிச் சட்டங்களை எளிமையாக்கி, மாற்றியமைத்து, மூலதன வரி விதிப்பில் பல சலுகைகளையும் அளித்தது. மறைமுக வரிகளிலும் பல சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. பலமுனை வரி விதிப்பைத் தவிர்த்துத் தீர்வை (Excise) வரியை மாற்றித் திருத்தி அமைக்கப்பட்ட மதிப்பின் அடிப்படையிலான வரி (Modified Value Added Tax-MODVAT) என்று ஒருமுனை வரியை அறிமுகப்படுத்தியதால்பல சிக்கல்கள் தீர்க்கப்பட்டன. நீண்ட நிதியியற் கொள்கை வெற்றிபெற வேண்டுமாயின் அரசு, பல கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்று பொருளியல் அறிஞர்கள் வலியுறுத்துகின்றனர்.

நிதியியற் கொள்கை, நாட்டிற்கு நாடு வேறுபட்டுள்ளது. ஒருநாட்டில் அமைந்துள்ள பொருளாதார, சமூக நலன்களுக்கேற்ப நிதியியற் கொள்கையின் குறிக்கோள்கள் மாறி வருகின்றன. பெரும்பாலும் முதலாளித்துவ நாடுகளிலும், கலப்புப் பொருளாதாரத்தைச் செயற்படுத்தும் இந்தியா போன்ற நாடுகளிலுந்தான் நிதியியற் கொள்கையின் தன்மைகளைப் பல கோணங்களில் ஆய்வு செய்து கருத்துகள் வெளியிடப்பட்டுள்ளன. சமதரும நாடுகளில் நிதியியற் கொள்கை, பெரும்பாலும் பொதுத்துறையின் திறமையை வளர்ப்பதற்கும், சமதருமக்கொள்கைகள் வெற்றி பெறுவதற்கும் உறுதுணையாக உள்ளது.

மு.நா.

**துணை நூல்கள்:**

**Raja, J. Chelliah**, Fiscal Policy in Under Developed Countries, George Allen Unwin Ltd., London, 1971.

**Tripathy, R.N.**, Public Finance in Underdeveloped Countries, Sterling Publishers Private Ltd., New Delhi, 1885.

*நிதித்தியாசனம்*: இது தியானம் அல்லது ஒருமுனைப்பட்ட தொடர்ந்த சிந்தனையைக் குறிக்கும். பரம்பொருளை உணர்தற்கும் அந்நிலையை அடைதற்கும் தடையாக இருப்பது அறியாமை என்னும் அஞ்ஞானமாகும். எனவே, அறியாமைக்கு எதிரான அறிவே, பரம்பொருள் நிலையை அடைவதற்குரிய வழி என்று நியாய வைசேடிகர்களும், அத்துவைதிகளும் அறிவுவழியை (ஞான நெறியை) வீடு பேற்றிற்குரியதாகக் குறிப்பிடுகின்றனர். அறிவு நெறியில் உள்ளனவாகக் குறிப்பிடப்படும் மூன்று நிலைகளில் இறுதியானதே நிதித்தியாசனம் ஆகும். கேட்டல் என்னும் சிரவணமும், கேட்டவற்றைச் சிந்தித்தலாகிய மனனமும் அறிவு நெறியின் ஏனைய இரண்டு நிலைகளாகும்.

நியாய வைசேடிகர்கள் நிதித்தியாசனத்தை அகத்தின் உண்மை இயல்பைப் பற்றிய தியானம் என்கின்றனர். அகத்தைப் பற்றிய அல்லது உயிரைப் பற்றிய அறியாமையை உடனடியாக நீக்கி உண்மையின் நேரடியான நுகர்விற்குச் செலுத்துவதே நிதித்தியாசனம் ஆகும். இத்தகைய அகத்தைப் பற்றிய உண்மையின் நேரடி நுகர்வைப் பெற்றோர் உடலைவிட்டு நீங்கியவுடன் முடிந்த நிலையை (அபவர்க்கம்)அடைவர் என்றும் நியாய வைசேடிகர்கள் கூறுகின்றனர்.

அத்துவைதிகள் நிதித்தியாசனத்தைப் பின்வருமாறு விளக்குகின்றனர். நிதித்தியானசத்திற்கு முந்திய நிலையாகிய மனத்தில், சிந்தனையில் தன்னைப் பற்றிய அல்லது பிரம்மத்தைப் பற்றிய அறிவு உறுதிபெறுகிறது. எனினும், தன்னை - பிரம்மத்தை உணர்தற்கு இடையே தடைகள் ஏற்படக்கூடும். தன்னைப் பற்றிய அறிவில் உறுதி இருப்பினும் அவ்வப்பொழுது புதிதாக உணர்ந்தவற்றுடன் பொருந்தாத பழைய எண்ணப் பழக்கங்கள் தன்னை அறியாமலே தோன்றக்கூடும். இத்தகைய தடைகளை நீக்குவதற்குத் தனி அகம்-பிரம்ம முற்றொருமையைப் பற்றிய நிதித்தியாசனம் உதவுகிறது. நிதித்தியாசனம் தனி அகம்-பிரம்ம முற்றொருமையை உள்ளுணர்வான அறிவில் உடனடியாக அடையும் வரையில் தொடர வேண்டும். அவ்வாறு தனி அகம்-பிரம்ம முற்றொருமையை உடனடியாக உணர்ந்த உள்ளுணர்வு ஒருவனைச்

சீவன் முக்தனாக்குகிறது. நிதித்தியாசனம் இவ்வகையில் உள்ளுணர்வின் கருவியாகச் செயற்படுகின்றது.

தனி அகம்-பிரம்ம முற்றொருமையைப் பற்றிய அறிவை நிதித்தியாசனமன்றி, அறிவு நெறியின் முதல் நிலையாகிய கேட்டலில் கூட அடைய முடியும் என்றும், சில அத்துவைதிகள் கருதுகின்றனர். கேட்டல் என்பது வேதாந்த நூல்களைக் கற்றறிந்தவரும், பிரம்மத்திலே திளைத்திருப்பவருமான ஆசிரியர் ஒருவரை அடைந்து அவரிடம் வேதாந்த உண்மையைக் கற்பதாகும். இத்தகைய வாய்மையினால் பிரம்மத்தைப்பற்றிய நேரடியான அறிவை அறியலாம் என்று உபநிடதமும் கூறுகின்றது. வாய்மையின் மூலமாகப் பெற்ற பிரம்மத்தைப் பற்றிய நேரடியான அறிவு, தடைகள் நீக்கப்பெற்றவுடன் உறுதியடைந்து வலிமை பெறுகின்றது. தடைகள் நீக்கப்பட்டாலே வாய்மை அறிவு உறுதிப்படுவதால், வாய்மையின் மூலம் பெறுகின்ற பிரம்மத்தைப் பற்றிய அறிவு இடைப்பட்டதாகும் என்றும், வாய்மை அறிவு இடைப்பட்டதாதலால் அவ்வறிவு அறியாமையை நீக்காது என்றும், அறியாமையை அகற்ற உடனடி அறிவால்தான், நிதித்தியாசனம் தரும் அறிவால் தான் இயலும் என்றும் வாசசுபதி, மந்தனர் போன்றோர் கருதுகின்றனர். மேலும், வாய்மை பொருட்களின் தொடர்பைப் பற்றிய அறிவையே தருகிறது என்றும் கருதுகின்றனர். ஆனால், சுரேசுவரர் வாய்மை தரும் அறிவு இடைப்பட்டதாகவும் நேரடியாகவும் அமைவது பொருள்களின் தன்மையைப் பொறுத்தது என்கின்றார். பிரம்மம் தன்னொளி பெற்ற, உடனடியாக இயக்கமுறும் பொருளாதலால் அதனைப் போன்றே இருக்கும். ஆனால், ஏனைய பொருள்கள் அத்தன்மையவல்ல. ஆதலால் அவற்றைப் பற்றிய வாய்மை அறிவே இடைப்பட்டதாகும். இவ்வாறு நிதித்தியாசனம் பற்றிய விளக்கத்தில் அத்துவைதிகள் தம்முள் மாறுபடினும் தனி அகம்-பிரம்ம முற்றொருமை பற்றிய நேரடி அறிவே வீடு பேற்றிற்கு இறுதியான வழி என்பதில் ஒன்றுபட்டுள்ளனர்.

பி.ஆர்.ந.

**துணை நூல்கள்:**


**இரியண்ணா, எம்,** இந்தியத் தத்துவம், த.வெ.க., சென்னை, 1968.

**இலக்குமணன்,** இந்தியத் தத்துவ ஞானம், **பழனியப்பா** பிரதர்ஸ், சென்னை, 1970.

**மகாதேவன்,** அத்துவிதத் தத்துவம், த.வெ.க., சென்னை, 1966.


***நிதி நடமாட்ட அறிக்கை:*** நிதி நிலை அறிக்கை என்பது இரு கால இடைவெளியில் வணிகத்தில் ஏற்படும் எல்லா நிதி நடமாட்டத்தையும் நிறுமப் பங்குநர்களுக்கும், மேலாண்மைக்கும் பயன்படும் வகையில் தயாரிக்கப்படும் ஓர் அறிக்கையாகும். இவ்வறிக்கை நிதி மூலத்தையும் (Sources of Fund) பயன்பாட்டையும் (Appliction of Fund) குறிக்கிறது. நிதி நடமாட்டத்தைச் சொத்துகள், பொறுப்புகள் ஆகியவற்றில் ஏற்படும் பெருக்கத்திலிருந்தும், குறைப்பிலிருந்தும் கணக்கிடலாம். அதேபோல் வணிக ஆதாயம், சொத்து வாங்குதல், விற்பனை, கடன் வாங்குதல், ஆதாய ஈவு செலுத்துதல் போன்றவற்றையும் எடுத்துக்கொண்டு நிதி நடமாட்டம் கணக்கிடப்படுகிறது.

நிதிப் பயன்பாடு நிகர நடைமுறை முதலைக் குறைக்கிறது. அதன் வருகை நடைமுறை முதலை அதிகரிக்கிறது. ஒரு வாணிகத்தில் இந் நிதி நடமாட்டம் ஒழுங்காக நடந்துகொண்டே இருக்கவேண்டும். அதாவது, ஒவ்வொரு பயன்பாட்டிற்கும் அந்த அளவு வருகை இருக்கவேண்டும். ஒவ்வொரு பயன்பாட்டிற்கும் அந்த அளவிற்குச் சொத்து வாங்கப்பட வேண்டும் அல்லது பொறுப்புகள் தீர்க்கப்பட வேண்டும்.

இந்நிலையில் நிதி நடமாட்ட அறிக்கை (Fund Flow Statement) நடைமுறை முதலை நல்ல முறையில் மேலாண்மை செய்திட ஒரு கருவியாகப் பயன்படுகிறது. இருவெவ்வேறு நாள்களில் காணப்படும் இருப்புநிலைக் குறிப்புகளின் நடைமுறை முதல்களை ஒப்பிட மிகவும் உதவுகிறது. இது ஓர் உயர்மட்ட மேலாண்மை அறிக்கையாதலால் நிகர நடைமுறை முதலில் ஏற்படும் மாற்றங்களுக்குக் காரணம் கூறுகிறது. முதல் அமைப்பு, சொத்துப் பெருக்கம் போன்றவைகளில் ஏற்படும் மாற்றங்களை இது எதிரொலிக்கிறது. இவ்வறிக்கையை வைத்துத்தான் நடைமுறை முதலை வளர்த்திட மேலாண்மை பரிந்துரை செய்கிறது. மற்ற நிதி அறிக்கைகள் தராத தகவல்களை இது வழங்குகிறது. எனவேதான், இது எல்லாக் கூட்டுரு நிறுவனங்களின் ஆண்டறிக்கையுடனும் இணைக்கப்படுகிறது.

இவ்வறிக்கையில் சில குறைபாடுகளும் காணப்படுகின்றன. அவை: நடைமுறைச் சொத்துகள், பொறுப்புகள் போன்றவற்றிடையே நிகழும் உண்மையான மாற்றங்களை இது குறிப்பதில்லை. மேலும், நடைமுறை முதலின் இழப்பால் ஏற்படும் நிதி நிலை மாறுபாட்டை இது காட்டுவதில்லை. இருப்புநிலை குறிப்புதான் அதைக் காட்டுகிறது. எனவே, வழக்கமான நிதியறிக்கைகளை அறவே நீக்கிவிட முடியாது. அதனால்தான் இவ்வறிக்கையை அவ்வறிக்கைகளுக்குத்துணைபுரியும்பொருட்டுத் தயாரிக்கிறார்கள்.

மேற்கூறிய குறைபாடுகள் இருந்தாலும் விகிதப் பகுப்பாய்வோடு ஒப்பிடும்போது இது மேலாண்மைக்குக் கூடுதல் தகவல்களை அளிக்கின்றது.

**நிதி நடமாட்டப் பகுப்பாய்வு தயாரித்தல்:** நிதி நடமாட்டப் பகுப்பாய்வை உணர நடைமுறை முதலில் ஏற்படும் மாற்றங்களைக் காட்டும் அட்டவணை (Schedule of Changes showing in Working Capital) நிதி மூலப் பயன்பாட்டு அறிக்கை (Statement of Sources and Application of Funds) ஆகிய இரண்டையும் தயாரிக்கவேண்டும். நடைமுறை முதலில் ஏற்படும் மாற்றங்களைக் காட்டும் அட்டவணை தயாரிக்க இரு நாள்களில் காணப்படும் இருப்பு நிலைக் குறிப்புகளின்நடைமுறைச் சொத்துகளையும், நடைமுறைப் பொறுப்புகளையும் ஒப்பிடவேண்டும். அவற்றில் ஏற்படும் கூடுதல்களையும், குறைவுகளையும் தனித்தனிப் பத்தியில் காட்டவேண்டும். இறுதியில் மொத்த நடைமுறைச் சொத்துகளிலிருந்து நடைமுறைப் பொறுப்புகளின் மொத்தத்தைக் கழிக்க வேண்டும். இவற்றிடை உள்ள வேறுபாடுதான் நிகர நடைமுறை முதலில் காணப்படும் உயர்வு அல்லது குறைவைக் காட்டும். சொத்துகளைப் பொறுத்தவரை உயர்வை உயர்வுப் பத்தியிலும், குறைவைக் குறைவுப் பத்தியிலும் காட்டவேண்டும். ஆனால், பொறுப்புகளின் உயர்வைக் குறைவுப் பத்தியிலும் குறைவை உயர்வுப்பத்தியிலும் எழுதவேண்டும்.

**மாதிரி நடைமுறை முதலில் காணும் மாற்றங்களைக் காட்டும் அட்டவணை**

| விவரம் | சென்ற ஆண்டு | நடைமுறை ஆண்டு | உயர்வு | குறைவு |
|---|---|---|---|---|
| | ௹. | ௹. | | |
| 1 | 2 | 3 | 4 | 5 |
| **நடைமுறைச் சொத்துகள்:** | | | | |
| கையிலுள்ள பணம் | . | .. | | |
| கடனாளிகள் | ... | | | |
| சரக்கிருப்பு | | ... | | |
| வரவு உண்டியல் | ... | ... | | |
| முன்செலுத்திய செலவுகள் | ... | .. | | |
| மொத்தம் (அ) | | | | |
| **நடைமுறைப் பொறுப்புகள்:** | | | | |
| கடனீந்தோர் | | . | | |
| செலுத்து உண்டியல் | . | . | | |
| கொடுபட வேண்டிய செலவுகள் | . | ... | | |
| மொத்தம் (ஆ) | | | | |
| நிகர நடைமுறை முதல் (அ - ஆ) | .. | | | |
| நடைமுறை முதலில் உயர்வு/குறைவு | ... | ... | | |

அடுத்து நிதி மூலத்தையும், பயன்பாட்டையும் காட்டும் அறிக்கை தயாரிக்க வேண்டும். இதில் ஒருபக்கம் நிதி மூலத்தையும், மறுபக்கம் நிதிப் பயன்பாட்டையும் எழுதவேண்டும், இதன் எடுத்துக்காட்டு கீழே தரப்பட்டுள்ளது.

**31.3.1987 முடிய நிதி மூலப் பயன்பாட்டு அறிக்கை**

| நிதி மூலம்/வருவாய் | | பயன்பாடு/செலவு | |
|---|---|---|---|
| 1) பங்கு முதலில் உயர்வு | | 1) முன்னுரிமைப் பங்கு மீட்டல் | |
| 2) கடன் பத்திரங்கள் வெளியிட்டது | | 2) கடன்பத்திரத் தீர்வு | |
| 3) வங்கிக் கடன் | | 3) வங்கிக் கடன் செலுத்தியது | |
| 4) முதலீடு விற்பனை | | 4) சொத்து வாங்குதல் | |
| 5) நிலைச் சொத்து விற்பனை | | 5) முதலீடு வாங்குதல் | |
| 6) வணிக ஆதாயம் | | 6) வரி, வட்டி, ஆதாய ஈவு செலுத்துதல | |
| 7) இதர வருமானம் | | 7) இதரச் செலவுகள் | |
| | ——— | | ——— |
| | ——— | | ——— |
| நடைமுறை முதலில் குறைவு | ——— | (அல்லது) நடைமுறை முதலில்உயர்வு | ——— |
| | ——— | | ——— |

மேற்கூறிய இரு கணக்குகளைத் தவிர சொத்துக் கணக்கு, பொறுப்புக் கணக்கு, ஆதாய நட்ட சரிக் கட்டும் கணக்கு போன்றவற்றையும் தயாரிக்க வேண்டும். அவ்வாறு தயாரித்தால்தான் சொத்து விற்பனை, சொத்துக் கொள்முதல்,பொறுப்புச்செலுத்தியது, கடன் பெற்றது,வணிக ஆதாயம் போன்றவற்றை அறியலாம். மேலும் தேய்மான நிதிக்கணக்கு, வரி ஒதுக்குக் கணக்கு, ஆதாய ஈவுக் கணக்குப் போன்றவற்றையும் தயாரிக்க வேண்டும். அப்பொழுதுதான் தேய்மானம் எழுதியது, வரி ஒதுக்கியது, ஆதாய ஈவு செலுத்தியது, போன்றவற்றைத் தெரிந்து சரிக்கட்டலாம்.

மேற்கூறிய காரணங்களால் நிதி நடமாட்ட அறிக்கை, பெறுதல்-செலுத்துதல் கணக்கிலிருந்தும், இருப்புநிலைக்குறிப்பிலிருந்தும், உரொக்க நடமாட்ட அறிக்கையிலிருந்தும் வேறுபடுகிறது. அதே சமயத்தில் நடைமுறை நிதி மேலாண்மையின் முடிவுகளைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியில் ஏற்படும் முக்கிய மாற்றங்களை உணர்த்துகிறது. தொழில் பெருக்கத்திற்கு நிதி எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதையும், கூடுதல் நிதி மூலம் எவ்வாறுபயன்படுத்தப்படுகிறது என்பதையும் விளக்குகிறது. வணிக ஆதாயம், ஆதாய ஈவு அளித்தல், புதிய முதல் திரட்டுதல், கடன்களைத்தீர்வு செய்தல் போன்றவற்றின் தொடர்பை இவ்வறிக்கை மூலம் அறியலாம்.

சுருங்கக்கூறின் நிதி நடமாட்ட அறிக்கை, நிதி மேலாளருக்கும், கடனீந்தோருக்கும் ஒரு நிறுவனத்திற்கு நிதி எவ்வாறு வருகிறது, எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்றறிய ஒரு கருவியாகத் திகழ்கிறது. இதை வைத்துக்கொண்டு ஒரு நிதி மேலாளர் ஒரு நிறுவனத்தின் வளர்ச்சியை மதிப்பீடு செய்யலாம். அதன் நிதித் தேவையை அறிந்து இடைக்கால,நீண்ட காலத் திட்டங்களைத் தீட்டலாம். இவ்வாறாக,நடைமுறை முதல்பகுப்பாய்விற்கு இது ஒரு சிறந்த கருவியாகும். இக்கால நிறுவனங்கள், தங்களின் நிதிஅறிக்கைகளைப் பகுப்பாய்வு செய்து சிறந்த முடிவுகளை எடுத்திட இவ்வறிக்கையை ஒரு சாதனமாகக் கையாளுகின்றன. மேலாண்மைக் கணக்கர்கள் சில முடிவுகளை எடுத்திடவும் இவ்வறிக்கை மிகவும் பயன்படுகிறது.

கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

Maheswar, S.N., Principles of Management, Accounting, Sultan Chand & Sons, New Delhi, 1985.

Man Mhoan&Shiva N. Goyal, Principles of Management Accounting, Sahitya Bhavan, Agra, 1984.

*நிதி நிறுவனங்கள்:* பணத்தோடு தொடர்புடைய பணிகளைச் செய்கின்ற நிறுவனத்தை நிதி நிறுவனம் (Financial Institutions) என்று கூறலாம். ஒரு நிறுவனம் பலரிடம் எச்சமாக இருக்கின்ற நிதியை ஒன்று திரட்டித் தேவையானவர்களுக்குக் கடனாக வழங்குகிறது. ஒரு நிதி நிறுவனத்தை நீர்த்தேக்கத்தோடு ஒப்பிடலாம். எங்கெங்கோ இருந்து வருகின்ற நீர், தேக்கத்தில் சேர்த்து வைக்கப்பட்டுப் பின்னர் அந்தத் தண்ணீர் தேவையானவர்களுக்குத் தேவையான அளவில் கிடைக்க வழிவகை செய்யப்படுகிறது.

ஒரு நாட்டில் தக்க வகையில் பொருளாதார வளர்ச்சி நடைபெற வேண்டுமானால், அங்குத் தேவைக்கு ஏற்ற அளவில் நிதி நிறுவனங்கள் இருக்க வேண்டும். நிதி நிறுவனங்கள் ஒரு நாட்டுப் பொருளாதாரம் தங்கு தடையின்றிச் சீரோடும் சிறப்போடும் செயற்படப்பல வழிகளில் உதவுகின்றன. ஆதலால் தான் ஒரு பொருளாதாரத்தின் அகக் கட்டுமானங்களில் (Infrastructures) ஒன்றாக நிதி நிறுவனங்கள் கருதப்படுகின்றன.

இந் நிதி நிறுவனம் மிகச் சிறிய அளவில் ஒரு தனி மனிதன் கடன் கொடுத்து வாங்கும் 'லேவாதேவி' (Money lender) அமைப்பாகவோ, மிகப் பெரிய அளவில் உலகம் தழுவிய வகையில் செயற்படுகின்ற பன்னாட்டு அமைப்பாகவோ இருக்கலாம். பன்னாட்டு நிதி நிறுவன அமைப்பிற்குச் சான்றாக, உலக வங்கி (World Bank), பன்னாட்டுப் பண நிதி (International Monetary Fund) ஆகியவற்றைக் கூறலாம்.

**வரலாற்றுப் பின்புலம்:** மனித வளர்ச்சியில் வேளாண்மை நிலையிலிருந்து மேம்பட்டுத் தொழில் வளர்ச்சி ஏற்பட்டது. அப்பொழுது வாணிகத்தில் குறிப்பிடத்தக்க மாற்றம் நிகழ்ந்தது. ஒருவருக்கு ஒருவர் பண்டமாற்றின் மூலம் பொருள்களைக் கைமாற்றிக் கொண்டிருந்தனர். பண்ட மாற்றில் இருந்த நடைமுறைச் சிக்கல்களைத் தீர்க்க மனிதன் பணத்தைக் கண்டு பிடித்தான். அதன்பிறகு பணத்தை மையமாகக் கொண்டு பொருளாதார நடவடிக்கைகள் நடைபோடத் தொடங்கின.

பணத்தை மனிதன் முதலில் ஓர் இடையீட்டுக் கருவியாகத் தான் (Medium of Exchange) பயன்படுத்தினான். பின்னால் பணம் மாற்று மையமாக மட்டுமன்றி வேறுபல பணிகளையும் செய்யத் தொடங்கியது. 'பணம் பத்தும் செய்யும்', 'பணம் பாதாளம் மட்டும் பாயும்', என்ற நிலை வந்த பிறகு பணத்தின் தேவை கூடியது. ஒரு சிலரிடம் தேவைக்கு மேல் எச்சமாகப் பணம் இருந்தது. வேறு சிலருக்குப் பணத்தின் தேவைமிகுதியாக இருந்தது. பணம் தேவையானவர்கள், பணம் வைத்திருப்பவர்களைத் தேடிப் பிடித்துக் கடன் பெற்றனர். இப்படிக்கடன் பெறுவதிலும் கொடுப்பதிலும் சில நடைமுறைச் சிக்கல்கள் இருந்தன. பணம் கொடுப்பவருக்குக் கடன் வாங்குபவரைப் பற்றி நன்கு தெரிந்திருக்க வேண்டும். கடன் திரும்ப வருமென்ற உறுதிப்பாடு இருக்க வேண்டும். இல்லை என்றால் கடன் கொடுப்பவர் தயங்குவார். இந்நிலையில் (Money lenders) சிலர், கடன் கொடுத்து வாங்குவதையே தொழிலாக மேற்கொண்டனர்.

கடன் கொடுப்பவர்கள் (லேவாதேவிக்காரர்கள்) முதலில் தங்களது சொந்தப் பணத்தைக் கொடுத்தனர். பின்பு மற்றவர்களிடம் குறைந்த வட்டிக்கு வைப்பு நிதிகளைப் பெற்று, மற்றவர்களுக்கு உயர்ந்த வட்டிக்குக் கடன் கொடுத்தனர். இந்தப் பணியின் வளர்ச்சிதான் கட்டுக்கோப்பான முறையில் வங்கி முறையாக (Banking system) உருவெடுத்தது.

வங்கிகள் மட்டுமன்றிப்பல்வேறு வகையான நிறுவனங்களும்இன்று நிதிகளைப் பெற்று, வழங்கும் பணிகளைச் செய்கின்றன. சின்னஞ்சிறு கிராமங்களில் சீட்டுகளின் (Chits) மூலம் பணத்தைத் திரட்டிக் கொடுக்கும் முறை இருக்கின்றது. நகரங்களில் முதலீடுகளைப் பெற்றுத்தரத் தனி நிறுவன அமைப்புகள் செயற்படுகின்றன. இப்பொழுது எண்ணற்ற நிதி நிறுவனங்கள் உள்ளன.

**வகைகள்:** நிதி நிறுவனங்களைப் புரிந்து கொள்ளப் பல வகைகளில் அவற்றை வகைப்படுத்திப் பார்க்கலாம்.

முதலாவதாக, அமைப்புக்குள் வரும் (Organised) நிதி நிறுவனங்கள், அமைப்புக்குள் வாராத (Un-organised) நிதி நிறுவனங்கள் என்று பிரிக்கலாம். அமைப்புக்குள் வருகின்ற நிதி நிறுவனங்களாக வங்கிகள், பதிவு செய்து கொண்டு பணி செய்யும் நிதி அமைப்புகள் ஆகியவற்றைக் கூறலாம். பதிவு செய்து கொள்ளாமல் கடன் கொடுத்து வாங்குபவர்களையும், சீட்டுகள் நடத்துகின்றவர்களையும் அமைப்புக்குள் வாராத நிதி நிறுவனங்களுக்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

இரண்டாவதாக, நிதி நிறுவனங்கள் பணிக்களமாகக் கொண்டு செயற்படுகின்ற இடத்தை ஒட்டி,

அவற்றைக் கிராம நிதி நிறுவனங்கள் (Rural Financial Institutions) என்றும், நகர நிதி நிறுவனங்கள் (Urban Financial Institutions) என்றும் பிரிக்கலாம்.

மூன்றாவதாக, நிதி நிறுவனங்களை அவற்றின் அமைப்பை ஒட்டியும் பகுக்கலாம். இத்தகைய முறையில் அவற்றைத் தனியார் நிறுவனங்கள், கூட்டுறவு நிறுவனங்கள், அரசு நிறுவனங்கள் என்று பகுக்கலாம். தனியார் நிதி நிறுவனங்கள் தனிமனித நிறுவனமாகவோ பங்காளி நிறுவனமாகவோ கூட்டுப் பங்கு நிறுவனமாகவோ இருக்கலாம்.

**பணிகள்:** பொதுவாக நிதி நிறுவனங்கள் பணத்தோடு தொடர்புடைய எல்லா வகையான பணிகளையும் செய்கின்றன. ஒரு வங்கி செயற்படுவதிலிருந்து நிதி நிறுவனத்தின் பணிகளைப் புரிந்து கொள்ளலாம். ஒரு நிதி நிறுவனம் தன் உறுப்பினர்களிடமிருந்தும், மற்றவர்களிடமிருந்தும் பணத்தைப் பெறும். நிதி நிறுவனத்தின் வெற்றி அது கையாளும் பணத்தின் அளவைச் சார்ந்து அமைகிறது. ஒவ்வொரு நிதி நிறுவனமும் பணத்தைப் பெறப் பல்வேறு வழி முறைகளைப் பின்பற்றுகின்றன.

நிதி நிறுவனம், பெற்ற பணத்தைக் கூடுதலான வட்டிக்குக் கடன் கொடுக்கிறது. சில வேளைகளில் நேரடியாக முதலீடு செய்வதும்உண்டு. கடன்கொடுக்கின்ற பொழுதும் முதலீடு செய்யும் பொழுதும் அவற்றிலுள்ள இடர்ப்பாடு (Risk) பாதுகாப்பு (Security) உரொக்கத்தன்மை(Liquidity), ஆதாயம் (Profit) ஆகியவற்றைச் சீர்தூக்கிப் பார்த்து முடிவு செய்யும்.

இவை தவிரக் கடன் பத்திரங்களைக் கழிவு செய்தல், பணத்தை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு அனுப்புதல், வாடிக்கை யாளர்கள் சார்பில் பணம் செலுத்துதல், பெறுதல்போன்றுபல்வேறு துணைப் பணிகளையும் செய்கின்றன.

**அரசின் கட்டுப்பாடு:** ஒரு காலத்தில் நிதி நிறுவனங்கள் தங்களது விருப்பம் போற் செயற்பட்டன. இதன் விளைவாகப் பொருளாதாரத்தில் சிக்கல்கள் தோன்றியதால் அரசு நிதி நிறுவனங்களைக் கட்டுப்படுத்து முகமாக நிதி நிறுவனங்கள் பதிவு செய்து கொண்டு சட்டப்படி வரையறுக்கப் பெற்ற பணிகளையே செய்ய வேண்டும் என்ற நிலையை ஏற்படுத்தியது. அவற்றைக் கண்காணிக்கவும் கட்டுப்படுத்தவும் அரசு தனி அமைப்புகளை வைத்திருக்கிறது.

இப்பொழுது நாட்டில் எண்ணற்ற நிறுவனங்கள் நிதி நிறுவனங்களாகச் செயற்படுகின்றன. மேற்போக்காகப் பார்த்தால் அவை நயக்குநிதி நிறுவனங்களாகத்தோன்றாமலிருக்கலாம். எடுத்துக்காட்டாகக் அஞ்சலகங்களையும் ஆயுள்காப்பீட்டுக் கழகத்தையும் கூறலாம்.

நாட்டில் நடைபெறுகின்ற எந்தப் பொருளாதார நடவடிக்கையை ஆராய்ந்து பார்த்தாலும் அதன் பின்புலத்தில் ஏதாவது ஒரு நிதி நிறுவனம் செயற்பட்டுக் கொண்டிருப்பதனைக் காணலாம். நாட்டுப் பொருளாதாரம் பணப் பொருளாதாரமாக மாற மாற, நிதி நிறுவனங்களின் செல்வாக்குப் பெருகிவருகிறது. மா பா.கு.

**துணை நூல்கள்:**

**குருசாமி, மா.பா.,** பணம், வங்கி- இயல்கள், குரு-தேவமொழி, திருச்செந்தூர், 1987.

**Hanson, J. L.,** Monetary Theory and Practice, The English Language Book Society, London, 1978.

**Thomas F., Gargyil,** Money The Financial System and Monetary Policy, Prentice Hall, Englewood Cliffs, 1979.

***நிப்பான்*** காண்க: சப்பான்.

***நிப்பிசிங்கு இந்தியர்***, அமெரிக்க இந்தியப் பழங்குடியினருள் ஒரு வகையினர். அல்கான்கிய (Algonkian) மொழியின் ஒரு பிரிவை இவர்கள் பேசுகின்றனர். இவர்கள் மொழியில் நிப்பிசிங்கு என்பதற்குக் 'குறைந்த தண்ணீர் மக்கள்' (Little water people) என்பது பொருள்.

இவர்கள் பேசும் அல்கான்கிய மொழிப் பிரிவில் அடங்கும் ஓசிப்வா (Ojibwa), சிப்பிவா (Chippewa) ஆகிய பழங்குடிகளை ஒத்தவர்களாகவே இவர்கள் உள்ளனர். இக்குடியினர் அனைவருமே சிறு குழுக்களாகக் (Bands) கூடிக் குக்கிராமங்களில் வாழ்கின்றனர்.

பல்வேறு அமெரிக்க இந்தியப் பழங்குடிகளைப் போன்றே இவர்களின் வரலாறும் நீண்டது. ஒண்டாரியோ (Ontario) பகுதியில் நிப்பிசிங்கு (Nipissing) ஆற்றுப் பகுதிகளில் வாழ்ந்து கொண்டிருந்த இவர்களைக் கி.பி. 1613-இல் பிரஞ்சு நாட்டவர்கள் முதன் முதலில் கண்டுபிடித்தனர். இதன் பின்னர் கி.பி. 1650-இல் இரோகுவிசு (Iroquois) இந்தியர்களால் இப்பழங்குடியினர் விரட்டப்பட்டனர். பின்னர் கி.பி. 1671-இல் மீண்டும் நிப்பிசிங்குப் பகுதிகளுக்குக் குடியேறினாலும், பெரும்பாலானோர் பலகுழுக்களாகப் பிரிந்து அப்பகுதிகளைச் சுற்றிய ஆற்றங்கரைப் பகுதிகளுக்குக் குடியேறினர்.

இவர்கள் நிலத்தை உழுது பயிரிடுவதில் விருப்பமற்றவர்கள். ஓரளவே பயிரிடுகின்றனர். ஆண்டின்

பெரும்பகுதி பல்வேறு இடங்களில் சுற்றித் திரிந்து உணவு சேகரித்தும் வேட்டையாடியும் வாழ்கின்றனர்.

நிப்பிசிங்கு இந்தியர்கள் மாயவித்தை, சூனியம் செய்வதில் வல்லவர்கள். இதனால், இவர்களின் அண்டைப் பகுதிகளில் வாழும் ஊரன் மக்களும் (Hurons), வெள்ளையர்களும் இவர்களைச் சூனியக்காரர்கள் என்றே கருதுகின்றனர். இருப்பினும் இவர்கள் அமைதியானவர்கள்; போர்க்குணமற்றவர்கள். கிறித்தவ சமயப் பரப்பிகளின் கருத்துகளை ஏற்றுக் கொண்டு வருவதால் இவர்கள் பழங்குடித் தன்மையிலிருந்து விடுபட்டு வெளியாரின் பண்பாட்டை ஏற்கத் தொடங்கியுள்ளனர். சீ ப.

**நிப்மக்கு இந்தியர்**, அமெரிக்க இந்தியப் பழங்குடியினருள் ஒரு பிரிவினர். இவர்கள் வொர்செசுட்டர் மாகாணத்தின் (Worcester County) தென் பகுதியில் பெருமளவு காணப்படுகின்றனர். அல்கான்கியன் (Algonkian) மொழியைப் பேசுகின்றனர். இம்மொழியில் நிப்மக்கு என்பதற்கு நன்னீர் மக்கள் (Fresh Water People) என்பது பொருள்.

நிப்மக்கு இந்தியர்கள் (Nipmac Indians) வாழும் பகுதிகளில் நன்னீர்க் குளங்களும், ஓடைகளும் பெருமளவு உள்ளன. இவர்களின் பொருளாதாரம் வேட்டையாடுதல், மீன்பிடித்தல், மக்காச் சோளம் விளைவித்தல் முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டது. இப்பழங்குடியினர் குறிப்பிட்ட சில இடங்களைத் தேர்ந்தெடுத்துப் பருவங்களுக்கேற்பப் இடம் மாறி மாறி வாழ்கின்றனர். இதனால் வேட்டை ஆடுதல், மீன்பிடித்தல் போன்றவை மூலம் உணவுப் பொருள்கள் தேவையான அளவு கிடைக்கின்றன.

இவர்கள் 29 கிராமங்களில் வாழ்கின்றனர். கிராமங்கள் மிகச் சிறியவையாக இருப்பதாலும், சிதறிக் காணப்படுவதாலும் ஒவ்வொரு கிராமமும் 'சச்சம்' (Sechem) என்ற மூப்பனால் கவனித்துக் கொள்ளப் படுகிறது. ஒரு கிராமத்தைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலும் இரத்த உறவுடையவர்களாக இருப்பதால் மணத்துணையை வேற்றுக் கிராமங்களிலிருந்து பெற்றுக் கொள்கின்றனர்.

பேரரசர் பிலிப்பு (King Philip) நடத்திய போரில் (கி.பி. 1675-1676) நிப்மக்கு இந்தியர்கள் பங்கு பெற வேண்டியதாயிற்று. போரின் கொடுமைகளால் இவர்கள் கானடாவின் எல்லைப் பகுதிகளுக்குக் குடியேற வேண்டியவரானார். பின்னர் இப்போதுள்ள பகுதிகளுக்குக் குடியேறிவிட்டனர். அண்டைப் பழங்குடிகளுடன் மிகுந்த இணக்கத்தோடு வாழும் பண்பினைப் பெற்றிருக்கவில்லை என்பதால் இவர்களுக்கும் மற்றவர்களுக்கும் அடிக்கடி சண்டைகள் ஏற்படுகின்றன.

நிப்மக்கு இந்தியர்கள் ஆவியுலக நம்பிக்கைகளையே (Animistic beliefs) பெரிதும் கொண்டுள்ளனர். முன்னோர் வழிபாட்டையும் இவர்கள் பெற்றுள்ளனர். இவர்களின் சடங்குகளுள் மழை நடன விழா குறிப்பிடத் தக்கது. சீ.ப.

**நிபந்தங்கள்**: நிபந்தங்கள் என்ற சொல்லிற்குக் கொடுக்கப்பட்டது என்பது பொருளாகும். தமிழ்நாட்டில் சமய நிலையங்களுக்கோ, அறநிலையங்களுக்கோ, நிதியோ, தாவரச் செல்வமோ, சங்கமச் செல்வமோ கொடுக்கப்படுவது நிபந்தம் என்று கூறப்படுகிறது. கோயில்கள், மடங்கள் முதலியவற்றை நிருவகிக்கக் கொடுக்கப்படுவது சமய நிபந்தங்களாகும். ஏழைகளுக்கு உதவுவதற்கும் அன்னதானம் செய்வதற்கும், கல்வி நிலையங்கள் நிருவகிப்பதற்கும், மருத்துவ நிலையங்கள் நிருவகிக்கவும் கொடுக்கப்படுவது அறநிபந்தங்களாகும்.

இந்தியநாட்டு மக்களுக்கு அறப்பணியிலும் சமயப் பணியிலும் பழைய கால முதற்கொண்டே ஈடுபாடு மிக உண்டு. அன்ன சாலைகளுக்கும், மருத்துவ நிலையங்களுக்கும், குளங்கள், கிணறுகள், நீர்த்தேக்கங்கள் போன்றவற்றை ஏற்படுத்துவதற்கும், இலவசக் கல்வி போதனைக்கு ஏற்பாடு செய்வதற்கும் தங்கள் செல்வத்தைக் கொடுத்துதவினால் இறைவனின் அருள் பெறலாம் என்ற நம்பிக்கை இந் நாட்டு மக்களிடையே உண்டு. பொருள் கொடுத்து உதவினால் அமரத்துவம் அடையலாம் என்று பாண்டிய மன்னர்களுடைய கல்வெட்டு ஒன்று கூறுகிறது. எனவே, மன்னர்கள் குடிமக்களின் நலனைக் கருதிக் கோயில்கள், மசூதிகள் போன்ற பல அறநிலையங்களை நிறுவி, அவற்றைப் பாதுகாத்து நிருவாகம் செய்ய நிலங்களைப் பெருமளவு கொடுத்தனர். அவ்வாறு நிறுவப் பெற்ற கோயில்கள் பல தமிழ்நாட்டில் காணலாம். அவை திருப்பதி, காஞ்சீபுரம், சிதம்பரம், தஞ்சாவூர், திருவாரூர், மதுரை, இராமேசுவரம், திருச்செந்தூர் ஆகிய இடங்களிலுள்ள கோயில்களாகும். இக்கோயில்கள் நிபந்தங்களாகப் பெற்ற நிலமும், நகையும் பெருமளவினவாகும்.

இந்து சமய நிபந்தங்கள் கோயில்களுக்கான நிபந்தங்கள், மடங்களுக்கான நிபந்தங்கள் என இரு வகைப்படும். இறைவழிபாட்டிற்குக் கோயில்களும், ஆன்ம போதனை தருவதற்கு மடங்களும் தோன்றின.

இந்துமதத் தலைவர்கள் இயற்றிய முக்கிய மடங்கள் சங்கராச் சாரியார் மடம், உடுப்பி மாத்துவ மடம், தருமபுர மடம், திருவாவடுதுறைமடம்,

திருப்பனந்தாள் மடம், திருக்கண்ணன்குடி மடம், வானமாமலை மடம், அகோபில மடம் ஆகியவை களாகும். மடாதிபதிகள் சீடர்களுடைய அன்பிற்கும் மக்களுடைய மதிப்பிற்கும் உரியவர்கள். மன்னர்களும் மக்களும், பெருமளவு செல்வத்தினைஇம்மடங்களுக்கு நிபந்தங்களாகக் கொடுத்துள்ளனர். நிபந்தங்களின் உதவியைக் கொண்டு தருமபுரம், திருவாவடுதுறை, திருப்பனந்தாள் மடங்கள் தமிழ் இலக்கியத்திற்குப் பெருந்தொண்டாற்றியுள்ளன.

தமிழ் நாட்டில் நிபந்தங்கள் பெற்ற முக்கிய மான மசூதிகள் நாகூர், திருப்பரங்குன்றம், கொள் ளிடம், பரங்கிப்பேட்டை, திருவல்லிக்கேணி முதலிய இடங்களிலுள்ளனவாகும்.

நிபந்தங்கள் ஏற்படுத்துபவர்கள் தங்களுக்கு நிபந்தத்தில் எந்தத் தொடர்பும் இல்லாதவாறு ஏற் படுத்தினால் அது முழுநிபந்தம் எனப்படும். தனக்கோ தனது வாரிசுதாரர்களுக்கோ நிபந்தமாக எழு தப்படும் செல்வத்தில் (பொருளில்) அறத்திற்கு ஒரு பங்கு செலவு செய்தது போக மீதி தங்களுக்கு என்று ஏற்படுத்தினால் அது பகுதி நிபந்தமாகும்.

கோயில் நிபந்தங்களை நிருவாகம் செய்பவர் தருமகர்த்தா எனப்படுவார். சில இடங்களில் இப் பதவி பரம்பரைப் பதவியாக இருக்கலாம். சில இடங் களில் குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமிருக்கலாம்.

இந்நாட்டில் பொதுவாகச் சமய நிபந்தங்கள் தாம் எண்ணிக்கையில் அற நிபந்தங்களை விட அதிகமாகவுள்ளன. அறநிபந்தங்களில் சிறப்பு மிக்க தாகக் குறிப்பிடத்தக்கது யாத்திரிகர்களுக்காக இரா மேசுவரம் வரை சாலைகள் அமைத்த தஞ்சை மராட்டிய மன்னர்கள் ஏற்படுத்திய தஞ்சைச் சத்திர நிபந்தங்களாகும். கி.பி.

***நிம்பார்க்கர்***: நிம்பார்க்கர் அல்லது நியாகா நந்தர் என்றழைக்கப்படும் இம் மகான் ஆந்திர நாட் டைச் சேர்ந்த ஒரு பிராமண யோகியாவார். இவர் ஒரு சிறந்த தத்துவ ஞானி. வானசாத்திரக் கலை யிலும் இவர் சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தார். தெய் வங்களான இராதா, கிருட்டிணன் ஆகிய இருவரிடமும் பக்தி கொண்டு வழிபாடு செய்யும் நிம்பார்க்க மதத்தை நிறுவியவர். இத்தகைய சிறந்த மகானைப் பற்றியும், மிகப் பிரபலமாக ஒரு காலத்தில் விளங் கிய இவரது வழிபாட்டு முறை பற்றியும் அநேக நூல்கள் எழுதப்பட்டிருந்தன. ஆனால், அந்நூல்கள் எல்லாம் இந்தியாவில் ஆண்ட முகலாய சக்கரவர்த்தி அவுரங்கசீபு காலத்தில் தீவிர இசுலாமிய வாதி களால் அழிக்கப்பட்டு விட்டன. எனவே, நிம்பார்க்கர் பற்றியும், அவரைப் பின்பற்றிய மாந்தர்கள் பற்றி யும், அறிந்து கொள்வதற்கான தக்க சான்று மிகக் குறைவாகும்.

நிம்பார்க்கர் வாழ்ந்த காலத்தைக் கி.பி.12 அல் லது 13-ஆம் நூற்றாண்டு என இந்து மத வரலாறு கூறும் வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர். இவரது பக்தி வழிபாடு கி.பி.12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இராமானுசரது முறையைப் பின்பற்றியுள்ளது. நிம் பார்க்கர் வேதாந்த சூத்திரத்திற்கு உரை எழுதி யிருக்கிறார். இதனை ஒரு வகையில் இராமானுசர் சித்தாந்தத்துடன் ஒப்பிடலாம் என்பது சிலரது கருத் தாகும்.

**நிம்பார்க்க மதம்**: நிம்பார்க்கர்துவைதம், அத்வை தம் இரண்டையும் அங்கீகரித்தார். இறைவனும் அவ னால் ஆக்கப்பட்ட ஆன்மாவும் வெவ்வேறாகும்; பிரம்மமானது தன்னிடமிருந்தே உலகத்தை உண்டாக் குகிறது; சீவன் நுகர்வோன்; அசித்து நுகரப்படும் பொருள்; ஈசுவரன் (இறைவன்) அவற்றுக்குள் அந் தரியாமியாய் இருப்பான்; பிறவிக் கடலிலிருந்து மீள வேண்டுமாயின் இராதாகிருட்டிண பக்தியில் ஈடுபாடு கொள்ள வேண்டும்; மனிதன் தனது முயற்சியால் அடைய முடியாத விமோசனத்தை இராதா கிருட்டிணனிடம் சரண் அடைந்து பெறலாம்; அந் நிலையில் இறைவன் அருள் பெற்று முக்திபெறலாம்; ஒவ்வொருவரும் பக்தியோகம் கடைப்பிடித்தல் வேண் டும்; இது போன்ற அமிசங்களைக் கொண்ட நிம் பார்க்க மதம், கி.பி.13,14ஆம் நூற்றாண்டுகளில் கிழக்கிந்தியாவில் மிகப் பிரபலமாக விளங்கியது.

**இராதா கிருட்டிண பக்தி**: நிம்பார்க்க மதத்தில் இராதாகிருட்டிண பக்திக்குத் தனிச் சிறப்புண்டு. இராதா கிருட்டிண பக்தியைச் சைதன்யரும், வல்ல பரும் சிறப்பாகக் கொண்டாடினார்கள். சைதன்னிய மதத்திற்கு அசத்திய பேதா பேதம் என்று பெயர். வல்லபர் மதத்திற்கு சுத்தாத் துவைதம் என்று பெயர். ஆனால், நிம்பார்க்கர் மதத்தில் சீவன் ஈசு வரனிடமிருந்து (இறைவனிடமிருந்து) உண்டான போதிலும்,அது ஈசுவரனினின்று வேறுபட்டதேயாகும். அதற்கு அறிவு, செயல், நுகர்வு ஆகிய மூன்று குணங் கள் உண்டு. சீவன் தேகாபிமானத்தால் இன்னலில் மூழ்க நேரிடுகிறது. ஆயினும், இராதா கிருட்டிண பக்தியினால் சீவன் முக்தியடைய முடியும் என்பது நிம்பார்க்கரது தத்துவமாகும்.

இந்திய நாட்டில் தோன்றி மறைந்த மகான்கள் பலருள் நிம்பார்க்கர் ஒருவராவர். கி.பி.

***நிமித்த காரணம்***: இந்திய மெய்ப் பொருளி யல் கொள்கைகளில் இயலுலகப் படைப்பின் தொடர் பில் காரணகாரியக் கோட்பாடு என்பது பற்றிப்

பேசப்படுகின்றது. காரியம் என்பது விளைந்தது, படைக்கப்பட்டது, பயன் உண்டாக்கப்பட்டது என்பவற்றைக் குறிக்கும். காரணம் என்பது காரியத்திற்கு முன்னிற்பதாகவும், இன்றியமையாததாகவும், சார்பற்றதாகவும் உள்ளவற்றைக் குறிக்கும். ஒரு பயனை விளைவிக்கும் பொருட்டு மூன்று வகையான காரணங்கள் தேவை என இந்திய மெய்ப்பொருளியல்களில் கூறப்படுகின்றது. அம்மூவகைக் காரணங்களில் நிமித்த காரணம் (Nimitta Karana) ஒன்றாகும். முதற் காரணம், துணைக் காரணம் என்பன ஏனைய இரண்டாகும்.

முதற் காரணம் என்பது ஒரு பயனை உண்டாக்குவதற்கு உரிய மூலப்பொருளைக் குறிக்கும். எனவே, அது பொருள் காரணம் எனவும் வழங்கப்படும். பருப்பொருள் அறிவற்ற தாகையால் அது தானே எதனையும் விளைக்காது. பருப்பொருளைத் தேவையான பயனாக உண்டாக்குவதற்கு ஓர் அறிவுக் காரணம் இன்றியமையாததாகும். அத்தகைய அறிவுக் காரணமே பயனை விளைவிக்கும் ஆற்றலே நிமித்த காரணம் எனப்படுகின்றது. பருப்பொருளை வேண்டிய பயனாக மாற்றுவதற்குச் சில கருவிகளின் துணை வேண்டும். அக்கருவிகள் துணைக் காரணம் எனக் கூறப்படுகின்றது. எடுத்துக்காட்டாகக் களிமண்ணிலிருந்து பானை உண்டாக்கப்படுவதில், களிமண் பொருட் காரணம்; குயவன் அறிவுக் காரணம்; பானையை உண்டாக்கப் பயன்படும் சக்கரம், கழி போன்றவை துணைக் காரணமாகும்.

இந்திய மெய்ப்பொருளியலில் இயலுலகைப் படைக்கப்பட்ட காரியமாகக் கருதுபவை இறைவனை நிமித்த காரணமாகவும், இயலுலகின் மூலப் பொருளாகக் குறிப்பிடப்படும் இயற்கை, மாயை போன்றவற்றை முதற் காரணமாகவும், இறைவனின் அறிவைத் துணைக் காரணமாகவும் கொள்கின்றன. மேலும், இறைவன் நேரடியாகத் தொழிற்படாமல் தன் சக்தியின் மூலமே தொழிற்படுகின்றான் எனவும் அவை கருதுகின்றன. உலகுண்மையையும், இறையுண்மையையும் ஏற்கின்ற மெய்ப்பொருளியல்கள் இறைவனை நிமித்தகாரணமாக மட்டும் கருதுகின்றன. உலகுண்மையை ஏற்காமல் அதனை உண்மையல்லாத, பொய்யல்லாத, இரண்டுமல்லாத மாயை தோற்றுவிக்கும் ஒரு தோற்றமாகக் கருதும் அத்துவிதக் கோட்பாடு, பிரம்மத்தைஒரே சமயத்தில் முதற் காரணமாகவும், நிமித்த காரணமாகவும், வேறுபாடின்றிக் குறிப்பிடுகின்றது. ஏனெனில், பரம்பொருளாகிய பிரம்மம் ஒன்றானதால் அதற்குப் புறம்பாக உலகின் மூலப் பொருள் என்று ஒன்றனைக் கருதுவது பிரம்மத்தை வரையறுத்தலில் கொண்டுவிடும்; உள்பொருள்களும் இரண்டு என்றாகும். எனவே, இயலுலகத் தோற்றத்தை உண்டாக்கும் மாயையைப் பிரம்மனிடத்திலேயே உள்ளதாக அது கூறுகின்றது. மாயையாகிய முதற்காரணம் பிரம்மனிடத்தில் இருப்பதால் பிரம்மம்நிமித்த காரணமாகவும் முதற் காரணமாகவும் ஓரேசமயத்தில் வேறுபாடின்றி விளங்குகிறது என அத்துவிதம் கூறுகின்றது. பி.ஆர்.ந.

**துணை நூல்:**

**இரியண்ணா, எம்.,** இந்தியத் தத்துவம், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1968.

***நிமுருத்து*** பண்டைய அசிரிய நகரங்களுள் ஒன்று. அசிரியர்கள் காலத்தில் இது காலா (Calah) எனக் கூறப்பட்டது. இந்நகரம் நினிவே (Nineveh) என்னும் நகருக்குத் தெற்கில் அமைந்திருந்தது. இது அக்காலத்தில் ஆளுநரின் ஆட்சிக்குட்பட்டு விளங்கியது. இந்நகரை முதன் முதலில் இலயார்டு (Layard) என்பவர் கி.பி. 1845 முதல் 1851 வரை அகழாய்வுகள் செய்தார். இவருக்குப் பின் மாலோவான் (Mallowan) என்பவர் 1949 முதல் 1958 வரை அகழாய்வுகள் செய்தார்.



அந்நகரம் கி.மு. 1300-இல் நிறுவப்பட்டது. இதனை முதலாம் சால்மனேசர் (Shalmaneser I) என்பவர் நிருமாணித்தார். இரண்டாம் ஆசுர்பானிபில் காலத்தில் அசிரியர்களின் இராணுவத் தலைநகரமாக இந்நகரம் விளங்கியது. இவரது காலத்தில் இந்நகரில் பல்வேறு கட்டடங்கள் கட்டப்பட்டன. ஆக்ரோபாலிசு எனும் புதிய குடியிருப்பு நகரத்தை இவ்வரசர் 26 எக்டர் பரப்பளவில் அமைத்தார். இவர் மகன் மூன்றாம் சால்மனேசர் காலத்தில் இந்நகரத்தைச் சுற்றிப் புறச்சுவர்கள் அமைக்கப்பட்டன. இந்நகரில் கிரேக்கப் புராணங்களில் கூறப்படும் செமிரமிசு (Semiramis) என்னும் பெண் தெய்வத்திற்குக் கி.மு. 798-இல் ஒரு கோயில் கட்டப்பட்டது. மேலும் இங்கு நிபோ (Nebo), எசிதா (Ezida) போன்ற கடவுள்களின் கோயில்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இந்நக

ரில் இருந்த நூலகம் ஒன்றும் அகழாய்வுகளில் வெளிப் பட்டது. இந்நூலகத்தில் சமயத் தொடர்பான நூல் கள் பல இருந்தன. இங்குள்ள புறநகர்ப் பகுதிகளிலும் பல்வேறு கட்டடங்கள் இருந்தமை கண்டுபிடிக்கப்பட் டுள்ளன. இந்த அழிபாடுகளில் தந்தத்தால் செய்யப் பட்ட சிற்பங்கள் பல இருந்தன. இங்குத்தான் உலகி லேயே மிகுதியான தந்தப் பொருள்கள் .கிடைத்துள் ளன. இந்நகரம் கி.மு. 700-இல் தன் சிறப்பை இழந் தது. சு.இரா.

***நியாசா ஏரி:*** ஆப்பிரிக்காவின் கிழக்குப் பகுதி யில் அமைந்துள்ளது நியாசா ஏரி (Lake Nyasa). இது அமைந்துள்ள பகுதி மாலாவி நாடு (Malawi) ஆகும். ஆகையால் நியாசா ஏரியை, மாலாவி ஏரி என்றும் குறிப்பர். ஆப்பிரிக்காவின் கிழக்குப் பள்ளத் தாக்குகளில் அமைந்துள்ள ஏரிகளில், நியாசா ஏரி மூன்றாவது மிகப் பெரிய ஏரியாகத்திகழ்கிறது. இதன் வட, கிழக்குக்கரைகளே மாலாவி நாட்டின் எல்லைக் கோடுகளாகும்:

நியாசா ஏரியின் தென் வட நீளம் 584 கி.மீ. ஆகும். அகலம் 16 கி.மீ முதல் 80 கி.மீ. வரை பரவி யுள்ளது. பரப்பளவு 29,604 ச.கி.மீ. இந்த ஏரி கடல் மட்டத்திற்கு மேல் ஏறத்தாழ 472 மீட்டர் உயர முள்ளது. இதன் வடக்குப் பகுதிதான் அதிக ஆழமாகக் காணப்படுகிறது. இப்பகுதியின் ஆழம் 704 மீட்டர்.

ஏரியின் கிழக்குப் பகுதியில் இலிவிங்சுடோன் (Livingstone) மலைகளும் மேற்குப் பகுதியில் நியாசா பீடபூமியும்(Nyasa Plateau),வியாபா மேட்டு நிலங்களும் (Viapa Highlands) கரைப் பகுதியாக அமைந்துள்ளன. ஆண்டுதோறும் மே-ஆகசுட்டு மாதங்களில் இந்த ஏரியிலிருந்து குளிர்ந்த காற்று வீசுகிறது. இக்கரையோரப் பகுதிகள் குடிசை வாழ் மக்களுக்குப் புகலிடமாகத் திகழ்கிறது. ஏரியின் அரு காமையில்ஆங்கிலிகத்தேவாலயம் அழகுற அமைந்துள் ளது. இது தொடக்கக் காலத்தில் போர்ச்சுக்கீசியர் களின் புகலிடமாகத் திகழ்ந்தது.

நியாசா ஏரிக்கு 14 வற்றாத நதிகள் மூலம் ஆண்டுதோறும் நீர்வருகின்றது. இவ்வாறு நீர்வரத் துப் பெறும் ஆறுகளில் மிகப்பெரியது இரகுகூ ஆறு (Ruhuhu) ஆகும். ஏரியின் வடிகால் பகுதி சயர் ஆறு எனக் குறிக்கப்படுகிறது. சயர் ஆறு (Shire River) சாம்பிசி (Zambezi) ஆற்றின் கிளை ஆறு ஆகும்.

நியாசா ஏரியில் 200 க்கும் மேற்பட்ட மீன் வகைகள் உள்ளன. மீன் பிடிக்கும் தொழில் முக்கியத் தொழிலாக இருந்து வருகிறது. ஏரியின் தென் பகுதி யில் மீன் விற்பனை நிலையங்கள் உள்ளன. திலாபியா (Tilapia) என்னும் மீன் வகை மிக மலிவாகக் கிடைக் கிறது.

பயணிகள், சரக்குப் போக்குவரத்து மாலாவி நாட் டின் இருப்புப் பாதை நிருவாகத்தால் நிருவகிக்கப் படுகிறது. புறப்பகுதிகளுக்கு இந்த ஏரியின் வழியாக பருத்தி, இரப்பர், அரிசி, நிலக்கடலை போன்ற பொருள்கள் எடுத்துச் செல்லப்படுகின்றன. சு.ஆ.



நியாசா ஏரி

***நியாசாலாந்து*** ஆப்பிரிக்காக் கண்டத்தில் தென்கிழக்கு ஆப்பிரிக்காப் பகுதியில் அமைந்துள்ள முக்கிய நாடுகளுள் ஒன்றாகும். இந்நாட்டிற்கு இப் பொழுது விளங்கும் பெயர் மாலவி (Malawi). இது வடக்கே தான்சேனியா நாட்டினையும், தென்மேற்கே சாம்பியா நாட்டினையும், தென் கிழக்கே மொசாம் பிக் நாட்டினையும் எல்லையாகக் கொண்டு புகழ் பெற்ற நியாசா ஏரியின் மேற்குக் கரையிலும் தெற் குக் கரையிலும் அமைந்துள்ளது.

**இயற்கையமைப்பு:** இந்நாடு, பிளவுப் பள்ளத்தாக் கும், இருபுறங்களிலும் பீடபூமியும் அடங்கிய நில வெளியாகும். இதனது நீளம் 576 கி.மீ. அகலம் 16 கி.மீ. முதல் 24 கி.மீ. வரை உள்ளது. இது ஒரு வெப்ப மண்டல நாடு. பீடபூமிப் பகுதியில் தட்ப வெப்பம் மிதமாக இருக்கும். இந்நாட்டில் சயர் (Shire) என் னும் நதி பாய்கிறது.

**வரலாறு:** ஆப்பிரிக்க நாட்டின் இயற்கைச் செல் வத்தை நாடி இங்கிலாந்து, பிரான்சு, செருமனி, போர்ச்சுகல் போன்ற ஐரோப்பிய நாடுகள் போட்டி யிட்டுக் கொண்டு தங்களின் குடியேற்றங்களை ஏற்




நியாசாலாந்து

படுத்தித் தங்களது ஆதிக்கத்தை நிறுவின. இங்கிலாந்து கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் செசில் ரோட்சு (Cecil Rhodes) என்பவரின் உதவி கொண்டு தங்களது செல்வாக்கினைப் பெருக்கியது. கி.பி. 1891-இல் உரோடேசியா, நியாசாலாந்து, சாம்பியா ஆகிய நாடுகளுக்கு ஆங்கிலேயரின் பாதுகாப்புக் கிடைத்தது. செசில் உரோட்சு, தங்க, வைரச் சுரங்கங்களை முன்னேற்றமடையச் செய்து, நிதி சேர்த்துப் பெரும் செல்வந்தரானார். நியாசாலாந்து 1907-இல் பிரிட்டிசு மத்திய ஆப்பிரிக்காக் காப்பு நாடாயிற்று. அது 1953 முதல் 1963 வரை உரோடேசியா நியாசாலாந்து கூட்டாட்சி அமைப்பில் சேர்ந்திருந்தது.

ஆப்பிரிக்காவில் ஏற்பட்ட அரசியல் விழிப்புணர்ச்சியின் காரணமாக 20-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆப்பிரிக்காவில் பல நாடுகள் சுதந்திரம் பெற்றன. நியாசாலாந்து 1964-இல் சுதந்திரமடைந்தது. அப்பொழுது மாலவி என்ற புதுப் பெயரும் அந்நாட்டிற்குக் கொடுக்கப்பட்டது. சுதந்திர நியாசாலாந்தின் முதல் அதிபராக எச். காமுசு பாந்தே(Kamuzu Benda) பதவி ஏற்றார். சுதந்திர நியாசாவில் அடிமை வியாபாரம் ஒழிக்கப்பட்டது. இந்த வணிகத்தில்ஈடுபட்டுப் பெரும் செல்வம் சேர்த்துக் கொண்டிருந்தவர்கள், தங்களது வணிகம் தடைப்படவே கிளர்ச்சிகள் செய்யலாயினர். பிரிட்டிசு உதவி கொண்டே அவர்களின் தொல்லைகள் ஒடுக்கப்பட்டன.

**பொருளாதாரம்:** ஓரளவு உழவுத் தொழிலும், அதிக அளவு தோட்ட வேலையும் நியாசா நாட்டில் நடைபெறுகின்றன மக்காச் சோளம் போன்ற தானியங்கள் பயிர் செய்யப்படுகின்றன. புகையிலை, தேயிலை, பருத்தி, காப்பி முதலியன பெருமளவில் உற்பத்தி செய்யப்படுகின்றன. மக்காச்சோளம், பருத்தி, புகையிலை, முதலியன ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களாகும். இயந்திரங்கள், துணிகள், மற்றும் பல உலோகப் பொருள்கள், வாகனங்கள் முதலியன இந்நாட்டில் இறக்குமதி செய்யப்படும் பொருள்களாகும். இந்நாட்டிலுள்ள முக்கியமான நகரங்கள் சாம்பா, பிளாண்டைர், இலிம்போ முதலியவையாகும். கி.பி.

***நியாய தரிசனம்***: தரிசனம் என்ற சொல்லுக்குக் காட்சி என்பது நேரான பொருளாகும். முடிநிலையான உண்மையைப் (Ultimate Reality) பற்றிய நேர்காட்சியே இந்திய மெய்ப்பொருளியலில் தரிசனம் என்று கூறப்படுகிறது. நியாயம் என்னும் சொல் தருக்கம் அல்லது விவாதம் செய்வது என்று பொதுவாகப் பொருள் கொள்ளப்படுகிறது. அறிவியலான பகுப்பியல்(Intellectulistic, Analytic)முறையை முடிநிலையான உண்மையைக் கருதுவதில் கைக்கொள்ளுகின்ற முறையையே நியாயம் என்னும் சொல் சுட்டுகின்றது. நியாயம் மனத்திற்குப் புறத்தே புற உலகமும், அதன் பொருள்களும் அவற்றின் இருப்பிற்கு எவ்வகையிலும் மனத்தைச் சார்ந்தவையல்ல என்று நம்புவதுடன், அதனை விளக்க அளவையியல் முறைகளைக் கையாள்வதாலும் இதனை அளவையியல் அடிப்படையில் அமைந்த பன்மையிலான காட்சிப் பொருள் கொள்கை (Logical Pluralistic realism) எனலாம். இந்திய மெய்ப்பொருளியல் கொள்கைகளில் வேதங்களின் சாற்றுரைத் தன்மையை (Authority of the Vedas) நியாயம் ஏற்பதால், நியாய தரிசனம் ஆத்திக தரிசனங்களுள் ஒன்று எனக் கருதப்படுகிறது.

**கௌதமரின் அடிப்படை நூல்:** நியாய தரிசனத்தின் அடிப்படை நூலான நியாய சூத்திரம் கி.மு. 4-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கௌதமரால் இயற்றப்பட்டதாகும். நியாய சூத்திரம், ஒவ்வொரு இயலும் இரு பகுதிகளைக் கொண்ட ஐந்து இயல்களை உடையது. நியாய மெய்ப்பொருளியல் கொள்கையில் அல்லது தரிசனத்தில் உலக, உயிர், இறைவன் பற்றிய கோட்பாடுகள் கருதப்படுகின்றன. உலகு பற்றிய கோட்பாடு பொதுவாகப் படைப்பையும், அதன் அடிப்படைப் பொருள்களையும், படைப்பின் படிநிலை வளர்ச்சியையும் குறிக்கும். படைத்தல் என்னும் பொழுது, படைப்புக்குரிய காரியத் தொடர்பு (Causation) பற்றிப் பின்வருமாறு விளக்கப்படுகிறது. ஒரு பயன் அல்லது காரியத்தில் கட்டற்ற, மாறான முன்நிகழ்வே காரணம் என்றும், முன்நிகழ்வது, கட்டற்ற தன்மை, என்றும் மாறாத தன்மை போன்றவை காரணத்தின் பண்புகள் என்றும் நியாயம் கூறுகின்றது. ஒரு பயனிற்கும் பல காரணங்கள் உள என்பதை நியாயம் ஏற்பதில்லை. குறிப்பிட்ட கார

ணம் குறிப்பிட்ட பயனையே தரும் என்றும், குறிப்பிட்ட பயன் அதன் குறிப்பிட்ட காரணத்தாலே உண்டாக்கப்படும் என்றும் நியாயம் கருதுகிறது.

ஒரு பயனானது அதன் முன் இன்மையின் எதிர் உளதாந்தன்மையாகும். பயன் அது உண்டாக்கப் படுவதற்கு முன் அதன் காரணத்தில் இல்லை. பயன் ஒரு புதிய படைப்பு ஆகும். பயன் அது உண்டாக்கப் படுவதற்கு முன் அதன் காரணத்தில் இல்லை என்பதால் இக்கொள்கை அசத்காரியவாதம் எனவும், பயன் முற்றிலும் புதிய படைப்பு என்பதால் ஆரம்ப வாதம் எனவும் வழங்கப்படுகிறது. பயனானது அதன் காரணத்தின் செயற்பாட்டினால் புதிதாக இருப்பில் கொண்டு வரப்பட்டதாகும். பயனானது காரணத்தின் தோற்றம் அல்லது உண்மையான மாறுபாடு அன்று. எவ்வாறு நூல் நெசவாளியினால் புதிய ஆடையாக நெய்யப்படுகின்றதோ அவ்வாறு படைப்புக்குரிய மூலப் பொருள்களான அணுக்களிலிருந்து இயலுலகம் புதிதாகப் படைக்கப்படுகின்றது என்று நியாயம் கூறுகின்றது.

இயலுலகின் மூலப் பொருள்களான அணுக்களைப் பற்றிய கொள்கை, வைசேடிகத்தில் விவரிக்கப்பட்டுள்ளதை நியாயம் முழுவதுமாக ஏற்றுக் கொள்கின்றது. வைசேடிகம் குறிப்பிடும் ஏழு சொற்பொருள் வகைகளான (Padarthas) பொருள், பண்பு, தொழில், பொதுமை, தனி இயல்பு, நீக்கமின்றி நிற்றல், இன்மை ஆகியவற்றில், ஒன்பது வகைப் பொருள்களான மண், நீர், தீ, வளி, வெளி, காலம், இடம், அகம், மனம் ஆகியவையே இயலுலகமாக விளங்குவது என்று நியாயம் கூறும். ஆனால், நியாயம் பதினாறு சொற்பொருள் வகைகளைக் குறிப்பிடுகின்றது. அவை 1. அறிவைப் பெறும் வழி, 2. அறியப்படும் பொருள், 3. ஐயம், 4. பயன், 5. எடுத்துக்காட்டு, 6. பெறப்பட்ட முடிவு, 7. முக்கூற்று முடிவின் உறுப்பு, 8. மறுப்பு, 9. உறுதிப்பாடு, 10. வழக்கு, 11. அழிவழக்கு, 12. இடக்கு, 13. காரணப்பிழை, 14. புரட்டு, 15. விடைப்போலி, 16. தோல்வியுரை என்பனவாகும். இவற்றுள் இரண்டாவதான அறியப் படும் பொருளில் வைசேடிகத்தின் ஏழு சொற்பொருள் வகைகளை நியாயம் அடக்குகின்றது. எஞ்சிய அனைத்தும் பகுத்தறிவினால் முழுமையாக ஆராய்கின்ற செயற் பாட்டினையும் வாதிடுங் கலையினையும் பற்றிக் குறிப்பனவாகும்.

**உயிர்க் கோட்பாடு**: நியாய தரிசனம் வாழ்க்கையின் அனைத்துச் செயல்களுக்கும் அடிப்படையாக விளங்கி அவற்றை விவரிக்கும் உணர்வினை (Consciousness) உயிரின் பண்பாகக் குறிப்பிடுகிறது. இதனுடன் மகிழ்ச்சி, இன்பம், விருப்பு, வெறுப்பு, முயற்சி, அறம், மறம், நுகர்ச்சிச் சுவடு ஆகிய பண்புகளும் உயிர்க்கு உண்டு என்று நியாயம் கூறுகின்றது. இப் பண்புகள் யாவும் பருநிலையற்றவையாதலால் அவை பருப்பொருளில் இருத்தல் இயலா. இவற்றின் அடிப் படையாக அமைந்து விளங்கும் பருப்பொருள் அல்லாத (Immaterial) பொருளே உயிர் அல்லது ஆன்மா ஆகும். நியாயம் உயிரை நிலைபேறுடையது என்றும், அழிக்க முடியாதது என்றும், வரம்பற்றதென்றும் கருதுவதோடு அறிவானாகவும், நுகர்வோனாகவும், செயற்பாடு கொண்டதாகவும் கருதுகின்றது. உயிரை நிலைபேறுடைய பொருளாகக் கொண்டு உணர்வை அல்லது அறிவுடைமையைஅதன் சிறப்பான பண்பாக ஏற்கும் நையாயிகர், இப்பண்பு எப்பொழுதும் உள்ளதாகக் கருதாது, உயிர் மனத்தோடும் உடலோடும் தொடர்புறும்பொழுது உண்டாவதாகக் குறிப்பிடுவது விந்தையான ஒருநிலையாகும். உயிரின் இருப்பை அதன் பண்புகள், அவற்றின் நிலைக்களனான பொருண்மை, புனித நூல்களின் உரை, மனச்சாட்சி ஆகியவற்றின் மூலமும் அறியலாம் என்கின்றனர் நையாயிகர்கள். அவர்கள் உயிர்களின் பன்மையையும் ஏற்பவர் ஆவர்.

**இறைக் கோட்பாடு**: நியாய தரிசனத்தின் இறைக் கோட்பாடு, இந்திய இறைக் கொள்கையை எடுத்துரைக்கும் சிறந்த நூலெனக் கருதப்படும் உதயணரின் குசுமாஞ்சலியில் விளக்கப்பட்டுள்ளது. நையாயிகர் இறை இருப்பிற்கு அடிப்படையாகப் பின்வரும் வழக்குரைகளை முன் வைக்கின்றனர். அவை 1) இயலுலகும் பயன் எனப்படுவதால் பிற பயன்களைப் போல அதனை இயற்றுவானொரு நிமித்தகாரணன் அல்லது செயற்பாட்டுக் காரணன் அல்லது படைப்போன், இத் தொழிலுக்கு வேண்டிய அறிவும் ஆற்றலும் உடையவனாக இருத்தல் வேண்டும். அவனே இறைவன் ஆவான். 2) படைக்கப்பட்ட உலகு அதில் காணப் படும் இயற்பியல் ஒழுங்குமுறைகளைக் கொண்டது எனவே, இவ்வொழுங்கு முறை நெறியாளனாக இறைவன் இருக்க வேண்டும். 3) இயற்பியல் ஒழுங்கு முறையைப் போன்று, அறவியல் ஒழுங்கு முறையும் உலகில் காணப்படுகின்றது. எனவே, தகுதிக்கேற்ப அறத்தை, நீதியை வழங்குவோனாக இறைவன் ஒருவன் இருத்தல் வேண்டும். 4) இறை இருப்பிற்கு மாறான தக்க சான்று இன்மையும் இறைவன் உண்டென்பதை உறுதிப்படுத்துகின்றது. எந்த ஓர் அறிவைப் பெறும் வழியினாலும் இறை உண்மையை மறுக்க இயல்வதில்லை.

நியாயம், இறைவனை உயிரின் வகையைச் சேர்ந்ததாகவும் அவற்றினின்றும் வேறுபடுத்துவதற்காகப் பரமாத்துமா என்றும் குறிப்பிடுகின்றது. இறைவன் எங்கும், என்றுமுள்ளவன். ஆனால், உணர்வும் அதன் தொடர்புடைய பண்புகளும் உயிர்களிடத்துப்

போன்று விட்டும் விடாமலும் இருக்காமல், இறைவனுடன் எப்பொழுதும் இருப்பவை. இறைவனின் அறிவு என்றுமுளதென்பதுடன் அது அனைத்தைப் பற்றியதாகவும் நிறைவுடையதாகவும் உள்ளது. இறைவனால் எதையும் விரும்பவும் இயற்றவும் இயலும். துன்பம், மகிழ்ச்சி தீயவிருப்பங்கள் அற்றவன் இறைவன். இயலுலகின் படைப்புக் காரணம் இறைவன். நியாயம் இறைவனை மனிதவடிவில் கருதவில்லை எனினும், உயிரின் வகையைச்சார்ந்தது எனக் கருதுவதால், மனித இயற்கையுடன் சிறிது தொடர்புடைய நிலை கொண்டது எனக் கூறலாம்.

**வீடு பேற்றுக் கோட்பாடு**: நியாய தரிசனம் வீடுபேற்றினை நிலைபேறுடைய இன்பத்தைத் தருவதாக உடன்பாட்டு நிலையில் கருதுவதில்லை. மாறாக எதிர்மறை நிலையினைச் சுட்டுகின்றது. நியாயத்தில் வீடு பேறு அபவர்க்கம் எனப்படுகிறது. அபவர்க்கம் என்பது, உயிர் அடிப்படைப் பண்பான அறிவுடைமையையும் அதன் தொடர்பாகப் பெறப்படும் ஏனைய பண்புகளையும் முற்றிலும் அழிப்பதில் அடங்கியிருப்பதாகும். உயிர் தனது இயல்பான நிலையில், உணர்வற்ற பருப்பொருளல்லாத(Unconscious immaterial) நிலையில், வீடு பேற்றில் இருக்கும். அந்நிலை உடலுடன் கூடியிராத நிலையாகும். இதனை முற்றிலும் துன்பமற்ற நிலை என நியாயம் விவரிக்கின்றது. இந்நிலை பயம், அழிவு, மாற்றங்களற்ற நிலையுமாகும்.

நியாயம் கூறும் வீடு பேற்று நிலையை அடைய அது கூறும் பதினாறு வகைச் சொற்பொருள் வகைகள் பற்றிய உண்மையான அறிவு வேண்டற் பாலதாகும். உண்மையறிவு அறியாமையை நீக்கும். அறியாமை நீங்கும்பொழுது உயிரின் குறைகள் அழியும். குறைகளான விருப்பு, வெறுப்பு, பிழை முதலியன அழிகின்றன. குறைகள் அழிந்தவுடன் செயலும் அழியும். செயல் அழிவதால் அதன் விளைவுகளான பிறப்பு, துன்பம் முதலியவையும் முடிவடைகின்றன. வீடுபேறு அடையப்படுகின்றது. நியாயத்தில் உள்ள ஒரு விந்தையான நிலைஎன்னவென்றால், உணர்வற்ற உயிர்,தான் துன்பத்திலிருந்து முற்றிலும் விடுபட்டதை எவ்வாறு உணரும் என்பதாகும். உணர்வற்ற நிலை என்பது பருப்பொருள் நிலைக்கு ஒப்பானது. இத்தகைய வீடுபேற்றுக் கருத்திற்கு நியாயம் எவ்வித விளக்கத்தையும் அளிக்கவில்லை. பி.ஆர்.ந.

**துணை நூல்கள்**:

**இரியண்ணா, எம்.**, இந்தியத் தத்துவம், தமிழ் வெளியீட்டுக் கழகம், தமிழக அரசு, 1968.

**இலக்குமணன், கி.**, இந்தியத்தத்துவ ஞானம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1970.

**Mahadevan, T.M.P.**, Outlines of Hinduism, Chetana Limited., Bombay, 1971.

**Radhakrishnan, S.**, History of Philosophy Eastern and Western, Vol. I, George Allen & Unwin Ltd., London.

***நியாயம்***: நியாயம் என்னும் சொல் ஒரு வழக்கின் இரு தரப்பு உரைகளையும் கேட்டு அறிந்து சட்டத்தின் அடிப்படையில், அற நூல்களின் அடிப்படையில் அல்லது சமுதாயத்தின் மதிப்பீட்டின் அடிப்படையில் வழங்கப்படும் தீர்ப்பு என்று பொதுவாகக் கூறப்படுகிறது. சட்டம், அறநூல் அடிப்படையில் வழங்கப்படும் தீர்ப்புகள் அதிக அளவிற்கு நிலைத்த தன்மை கொண்டவை. ஆனால், சமுதாய மதிப்பீடுகளின் அடிப்படையில் வழங்கப்படும் தீர்ப்புகள் கால, இட நிலைகளுக்கு உட்பட்டவையாதலால் அவை மாறுபட்டு விளங்கும் தன்மையுடையவையாகும்.

இந்திய மெய்ப்பொருளியலில் நியாயம் என்னும் சொல் சிந்திக்கின்ற மனங்களுக்குப் புறத்தே, புற உலகம் உண்மையில் உள்ளது என்ற காட்சிப் பொருள் உண்மைக் கொள்கையினரையும், அவர்களது இறை, உயிர், உலகு பற்றிய கோட்பாடுகளையும், அவற்றின் இருப்பை உறுதியாக நிலைநிறுத்த அவர்கள் கையாண்ட அறிவு இயலான பகுப்பியல் முறையையும் குறிக்கும். நியாயம் என்னும் சொல்லுக்கு நேர்பொருள் 'பின் செல்வது' என்பதாகும். இதனைத் தருக்கம் செய்தல் அல்லது வாதிடுதல் என்று பொதுவாகக் குறிப்பிடுவர்.

கண்ணால் காணப்படுபவற்றை மட்டுமே உண்மை எனக் கருதும் உலகாயதர் அல்லது இனிமையாகச் சொல்வோர்(Lokayata or Carvaka)இறை, உயிர்,உலகு ஆகிய உள்பொருள்களில் (Realities) உலகுண்மையை மட்டும் ஏற்று ஏனையவற்றை மறுக்கின்றனர். ஏனெனில், அவை கண்ணால் காணப்பட முடியாதவை. இறை, உயிர், உலகு ஆகியவற்றின் உண்மையை ஏற்கும் நியாயக் கொள்கையினர், உலகாயதர் இறை, உயிர் ஆகியவற்றின் உண்மையை மறுப்பதன் காரணம் அவற்றின் உண்மை தருக்க முறையில் நிறுவப்படாமை தான் என்று கருதினர். எனவே, உண்மையை நிலைநாட்டத் தருக்கம் அல்லது வாதிடும் முறை இன்றியமையாதது எனக் கருதினர். அவர்கள் தருக்கத்தினால் அல்லது நியாயப்படுத்துவதால் பெறப்படும் முடிவுகளைவிட, நியாயப்படுத்தும் முறைக்கே முதன்மை அளித்தனர். நியாயப்படுத்தும் முறைக்கு அளித்த முதன்மையின் பொருட்டே நியாயக் கொள்கையினர் நையாயிகர் எனவும் பெயர்

பெற்றனர். நியாயப்படுத்துவதில் காரணங்கள் முதன்மை நிலை பெறுவதால், நியாயக் கொள்கை ஏது வித்யை (காரணம் பற்றிய ஆய்வு) எனவும் வழங்கப்படுகிறது. தருக்க சாத்திரம் (நியாயப்படுத்தும் முறை பற்றிய நூல்) என்ற வேறு பெயரும் நியாயத்திற்கு உண்டு.

உலகு, உயிர், இறை ஆகியவற்றில் உலகின் உண்மையை நிலைநாட்டுதற்குக் காட்சிப் பொருள் உண்மைக் கொள்கையினரான (Realists) நையாயிகர், உலகு கண்ணால் காணப்படுவது என்னும் காட்சியளவையை மட்டுமே போதுமானது என்று கருதுவதில்லை. ஏனெனில், உண்மையில் இல்லாத பொருளாகிய கானல் நீர் கண்ணுக்குப் புலப்படுவதும் உண்டு. அதேபோன்று புலன்களுக்கு அப்பாற்பட்ட புலன் கடந்த பொருள்களான உயிர், இறை ஆகியவற்றின் இருப்பைச் சான்றோர் கூறியுள்ளனர் என்றோ, வேதங்களில் அவற்றின் உண்மை உரைக்கப்பட்டுள்ளது என்றோ ஏற்றுக்கொள்வதில்லை. மாறாகக் காட்சியளவையையும், உரையளவையையும் பகுத்து அவற்றிலுள்ள குறைகளை நீக்க முயன்றனர் நையாயிகர்கள். மேலும். பகுத்தறிவையும் (Reasoning) முறையாகக் கருதுகின்றனர். செம்மையாகப் பகுத்து நிருணயிக்கும் முறையில் மேலைநாட்டு மெய்ப்பொருளியல் அறிஞரான அரிசுடாட்டலின் அளவையியலுக்கு முன்னோடிகள் நையாயிகர்கள் என்று சிறப்பாகப் பேசப்படுகின்றனர்.

உள்பொருள்களின் உண்மையை உறுதிப்படுத்த முதலில் அவற்றைப் பற்றிய அறிவு வேண்டும். அறிவு நிகழ்தற்கு அறிபவன், அறியப்படும் பொருள், அறிவைப் பெறும் வழி, விளைகின்ற அறிவு ஆகிய நான்கு கூறுகள் தேவை. அவற்றுள் நையாயிகர்கள் அறிவைப் பெறும் வழிக்கே முதன்மை நிலையைக் கொடுக்கின்றனர். அறிவைப் பெறும் வழி முறையானதெனில் அதன் மூலம் கிடைக்கப்பெறும் அறிவும் சரியானதாக இருக்கும். அறிவைப் பெறும் வழியாகிய பிரமாணத்தைப் பற்றி நியாயம் கருதுவதால் நியாய சாத்திரம், பிரமாண சாத்திரம் எனவும் வழங்கப்படுகிறது.

நியாயம் அறிவைப் பெறும் வாயில்களாகக் காட்சியளவை, கருதுதல் அளவை, உரையளவை, ஒப்புமை அளவை ஆகியவற்றைக் கருதுகின்றது. புலன் – பொருளின் நேரடியான, உடனடியான தொடர்பினால் ஏற்படுவதே காட்சியளவை என்று கருதுகின்றனர். காட்சியளவையில் நிருவிகற்பக் காட்சி, சவிகற்பக் காட்சி என இருநிலைகள் உண்டென்றும் கருதுகின்றனர். பொருளை அதன் பண்புகளின்றுங் காணுதல் நிருவிகற்பம் அல்லது வேறுபாடற்ற காட்சி என்றும், பொருளை அதன் பண்புகளுடன் காண்பது சவிகற்பக் காட்சி அல்லது வேறுபாடுகள் கொண்ட காட்சி என்றும், காட்சியளவையில் இவ்விரு நிலைகள் இருப்பினும் இவை இடையீடின்றி விரைவாக நடைபெறுவதால் முதல்நிலையை யாரும் உணர்வதில்லை என்றும் கூறுகின்றது நியாயம். பொருளையும் அதன் பண்புகளையும் தனித்தனியே மேலைநாட்டு மெய்ப்பொருளியல் அறிஞரான காண்ட்டு என்பவரைப் போன்றே நையாயிகரும் கருதியிருந்ததே இவ்விரு நிலைகளுக்கும் காரணமாகும். அதே போன்று, ஒருவனை இன்னான் என்று அறிவதை இலௌகிகம் அல்லது உலகியலான காட்சி என்றும், அவனிடத்துள்ள மனிதப் பொதுப் பண்பினைக் காண்பதே அலௌகிகம் அல்லது உலகியல் சார்பற்றது என்றும் நியாயம் கூறுகின்றது.

கருதுதல் அளவை அல்லது வழி அளவை, உரை அளவை ஆகியவற்றைப் பொறுத்தமட்டில் நியாயம் கூறும் விளக்கம், பெரும்பாலும் ஏனைய இந்திய மெய்ப்பொருளியல் கோட்பாடுகளில் கருதப்பட்டுள்ளதைப் போன்றே உள்ளது. எனினும், முதன் முதலில் இவ்வளவைகளின் அடிப்படையை விவரித்ததே நியாயம் ஆகும். ஒருவன் முன் கண்டிராத ஒரு பொருளைப் பற்றி, அதனை அறிந்த ஒருவர், அவனுக்குத் தெரிந்த பொருள்களில் அது எதனைப் போன்று இருக்கும் என்பதனையும், இரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாட்டினையும் கூறின், அவன் அப்பொருளைக் காணும்பொழுது, ஒப்பிடுதல் மூலம் அறிவதே ஒப்புமை அளவை என்று நியாயம் விளக்குகின்றது. ஏற்புடைய முடிவுகள் பெறுவதற்கு முறையான வழிகள் இன்றியமையாதவை எனக் கருதிய நியாயக் கொள்கையினர், அறிவைப் பெறும் வாயில்களைப் பற்றி முதன் முதலில் சிறந்த அடிப்படைகளின் மீது விளக்கினர். அம்முறைகளைக் கொண்டு நியாயப் படுத்துவதை, தருக்கம் செய்வதை விளக்கியதால் நியாயம் ஒரு தரிசனம் அல்லது மெய்ப்பொருளியல் கோட்பாடு என்ற நிலையிலிருந்து விலகி, அளவையியல் கோட்பாடாகத் திகழ்கின்றது. பி.ஆர்.ந.

**துணை நூல்கள்:**

**இரியன்னா, எம்.**, இந்தியத் தத்துவம்–2, தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1968

**இராமானுசாச்சாரி, இர.**, அறிவு ஆராய்ச்சி இயல், 1966.

**இலக்குமணன், கி.**, இந்தியத்தத்துவ ஞானம், பழனியப்பா பிரதர்சு, சென்னை, 1970

***நியாயமானதும் ஒப்பத்தகுந்ததுமான காரணம்***: ஒருவர் மற்றொருவர் மீது நடவடிக்கை

எடுப்பதற்குச் சரியான, தகுந்த காரணம், நியாய மானதும் ஒப்பத்தகுந்ததுமான காரணம் எனப்படும்.

தீயநோக்குடைய குற்ற வழக்கில், வாதி நியாய மானதும் ஒப்பத்தகுந்ததுமான காரணம் எதுவும் இல்லை என்பதை மெய்ப்பிக்க வேண்டும். ஒருவர் கீழ்க்காணும்சூழ்நிலைகளில் நியாயமானதும் ஒப்பத் தகுந்ததுமான காரணத்திற்காகச் செயற்பட்டார் என்பது கூறப்படும். 1) நன்மனத்துடனும் நன்னம்பிக் கையுடனும் குற்ற முறையீட்டாளர் குற்றம் சாட்டப் பட்டவர் மீது குற்றத்தைச் சுமத்தினார். 2) நன்னம் பிக்கைசூழ்நிலைகளுக்கேற்ப எட்டப்பட்டதாக இருக்க வேண்டும். 3) தகுந்த அடிப்படைக் காரணங்களுக் காகக் குற்ற முறையீட்டாளருக்கு நன்னம்பிக்கை ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

நியாயமானதும் ஒப்பத்தகுந்ததுமான காரணம் உண்மையான நம்பிக்கையின் அடிப்படையில் ஏற் பட்டதாகவும், நடவடிக்கைகள் எடுத்தது சரியான முறையே என்று கொள்ளுமாறும் அமைந்திருத்தல் வேண்டும்.

தீய எண்ணத்துடன் போதிய காரணமின்றிக் குற்ற வழக்கிடுதல் தீய நோக்குடைய குற்ற வழக்கு எனப்படும்.இத்தகைய வழக்குகளில் எதிர்வாதி நியாய மானதும் ஒப்பத் தகுந்ததுமான காரணமின்றிக் குற்ற வழக்கிட்டார் என்பதை வாதி மெய்ப்பித்தல் வேண்டும். அவ்வாறு மெய்ப்பித்தால் தன்வாதிக்கு அவர் கோரும் பரிகாரமான தீங்கீடு வழங்கப்படும்.

ஒரு வழக்கில் நியாயமானதும் ஒப்பத்தகுந்தது மான காரணம் உள்ளதா என்ற வினா எழும்போது அதற்கான விடை சட்டக் கூறின் முடிவாகக் கருதப் படுமே தவிர, பொருண்மையின் முடிவாகக் கருதப் படமாட்டாது.

நியாயமானதும் ஒப்பத்தகுந்ததுமான காரணம் என்னும் சொற்றொடர் பல ஆங்கிலேய, இந்தியச் சட்டத் தொகுப்புகளிலும், இயற்றாச் சட்டத்திலும் எடுத்தாளப்பட்டுள்ளது.

எடுத்துக்காட்டாக இந்து திருமணச் சட்டத்தை எடுத்துக் கொண்டால் பிரிவு 13 (1) இல் நியா யமான காரணமின்றி மனுதாரரை எதிர்மனு தாரர், இல்வாழ்க்கையில் சேர்ந்து வாழாமல் ஒதுக்கி வைத்திருந்தால் நீதிமுறை மணமுறிவு வேண்டலாம் என்று கூறப்பட்டுள்ளது.

மேலும், முறையற்ற சிறை வைப்பு வழக்குகளில் நியாயமானதும் ஒப்பத்தகுந்ததுமான காரணம் எதிர் வாதமாக அமையும். எடுத்துக்காட்டாக, வாதி, எதிர் வாதியான காவல்துறை அலுவலர் மீது முறையற்ற சிறை வைப்புக்காகத் தீங்கீடு வேண்டலாம். அவ் வாறு வேண்டும்போது எதிர்வாதி தான் நியாய மானதும் ஒப்பத்தகுந்ததுமான காரணங்களுக்குத் தான் கைது செய்ததாகவும், வாதி மீது தனக்குத் தனிப்பட்ட பகையேதும் இல்லை என்றும் நீதிமன் றத்தில் மெய்ப்பிக்கலாம். அப்போது நீதிபதி வழக் கின் பொருண்மை, சூழ்நிலைகள் மெய்ப்பிக்கப்பட்ட பொருண்மைகளைக் கவனத்தில் கொண்டு வழக்கைத் தள்ளுபடி செய்யலாம். தகுந்த நியாயமான மற்றும் ஒப்பத்தகுந்த காரணம் ஒவ்வொரு வழக்கிலும் இருக் கின்றதா என்பதை நீதிபதியே வழக்கின் பொருண் மைகளுக்கேற்ப முடிவு செய்தல் வேண்டும். மீ.அ.

***நியான்சா*** கிழக்கு ஆப்பிரிக்கப் பகுதியிலுள்ள கென்யா நாட்டில் அதன் தென்மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது நியான்சா (Nyanza) என்னும் மாநிலம். இதன் பரப்பளவு ஏறக்குறைய 16,162 சதுர கி.மீ ஆகும். இங்குள்ள புகழ்பெற்ற விக் டோரியா ஏரி 3636 சதுர கி.மீ. பரப்புள்ளதாகும்.

**மக்கள் தொகை**: இதன் மக்கள்தொகை 2,643,000 (1979). ஒரு சதுர கி.மீ. க்கு ஏறக்குறைய 400 மக்க ளுக்குமேல் வாழ்கின்றனர். இம் மாநிலத்தின் மேற்கு மாவட்டங்களில் உலூ வோ என்னும் ஆப்பிரிக்க மக்களும், கிழக்கு மாவட்டங்களில் கூசி என்னும் ஆப்பிரிக்க மக்களும் அதிக எண்ணிக்கையில் வாழ் கின்றனர்.

**பொருளாதாரம்**: கென்யா, ஒரு வெப்பமண்டல நாடாகும். அதன் மாநிலங்களுள் ஒன்றாகிய நியான் சாவின் தட்பவெப்ப நிலையும் அதுவேயாகும். நியான்சாவின் முக்கியமான பணப்பயிர் பருத்தி யாகும். வடகிழக்குப் பகுதியில் காப்பியும் தேயிலை யும் முக்கிய தோட்டப் பயிர்களாகும்.

இம் மாநிலத்தின் தென்மேற்குப் பகுதியிலுள்ள மகால்தர் என்னுமிடத்தில் சிறிதளவு செம்பும் தங்க மும்சுரங்கங்களிலிருந்து வெட்டியெடுக்கப்படுகின்றன. இம் மாநிலம் ஓரளவு தொழில் முன்னேற்றமும், உழ வுத் தொழில் முன்னேற்றமும் அடைந்துள்ளது.

இம் மாநிலத்தின் தலைநகரம் கிசுமு (Kisumu) என்பதாகும். மேற்குக் கென்யாவிலுள்ள பெரிய நகரங்களுள் இதுவும் ஒன்றாகும். கி.பி.

**நியான்சா மொழி**: இது ஆப்பிரிக்காவிலுள்ள நியாசாலாந்தில் சிருவா, நியாசா ஏரிக்கரையோரங் களில் வாழும் நியான்சா (Nyanza) மக்களின் தாய் மொழி. பெதா, செவா போன்ற கிளைமொழிகள் இம்மொழியின் கண் உள்ளன. ஆங்கில மைய ஆப் பிரிக்காவின் அரசியல் படிப்பு மொழியாக இது

விளங்கி வருகின்றது.இம்மொழியின் அனைத்துச் சொற்களும் உயிர் எழுத்துகளில் முடிவது தனிச் சிறப்பாகும். தமிழ்மொழியில் உள்ளதைப் போல இம்மொழியிலும் மூன்று வகையான சுட்டுப் பெயர்கள் உள்ளன. அவை பெரும்பான்மையும் பெயரடைகளாகவே பயன்படுகின்றன. மூவிடப் பெயர்களும் தமிழைப் போன்றே அமைந்துள்ளன. தன்மைப் பன்மையில் உளப்பாட்டுத் தன்மை என்ற வேற்றுமை இல்லை. இம்மொழியைச் சி-நியன்சா (Chi-nyanza) அல்லது சி-மங்கஞ்சா (Chi-mang'anja) என்றும் உரைப்பர்.
சா.உ

*நியூஆம்சுடர்டேம்*: அமெரிக்காவில் மான்காட்டன் (Manhattan) தீவின் தென் முனையில் அட்சன் (Hudson) ஆற்றின் முகத்துவாரத்தில் உள்ள நியூஆம்சுடர்டேம் (New Amsterdam) பகுதியில் கி.பி. 1624-இல் ஒரு தச்சுக் குடியேற்றம் (Dutch Settlement) ஏற்பட்டது. இது நியூநெதர்லாந்துக் குடியேற்றத்தின் தலைநகராக கி.பி. 1626 முதல் 1664 வரை திகழ்ந்தது. பின்னர் ஆங்கிலேயர் இதைக் கைப்பற்றி, நியூயார்க்கு (New York) என்ற பெயர் சூட்டினர்.
தெ.பா.

*நியூ ஆர்லியன்சு*: இந்நகரம் அமெரிக்க ஐக்கிய நாட்டில் உலூசியானா (Louisiana) மாநிலத்தில் உள்ளது. உலூசியானா மாநிலத்தின் மிகப் பெரிய நகரமாகவும், உலகில் உள்ள மிகப் பெரிய துறைமுகங்களில் ஒன்றாகவும் நியூஆர்லியன்சு (New Orleans) விளங்குகிறது. தென் அமெரிக்காவின் முக்கிய வாணிகத்தளமாக, பண்பாட்டு மையமாக தொழிற்கூடங்கள் நிறைந்த நகரமாக விளங்குகிறது. இயற்கையின் பயனால் மிசிசிப்பி நதி (Missisippi River) இந்நகரை வளம் கொழிக்கச் செய்கிறது. இந்நதியின் வாயிலாக மெக்சிகோ வளைகுடாப் போன்ற வளைகுடாக்கள்ஏற்பட்டுஇதுகப்பல்கள்நகரமாக விளங்குகிறது.

சீன் - பேப்டிசிட்டு - லி - மோய்ன்(Jean Baptiste le Moyne), சீயர் டி-பைன்வில்லி (Sieur de Bienville) என்பவர்களால் கி.பி.1718-ஆம் ஆண்டு இந்நகரம் உருவாக்கப்பட்டது. தொடக்கக்காலத்தில் உலூசியானா பிரான்சின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது; பின்னர்ப்படிப்படியாகப் பல மாற்றங்களைக் கண்ட இந்நகரம் கி.பி. 1803-ஆம் ஆண்டு அமெரிக்கர்களால் கையகப்படுத்தப்பட்டது. இப்பகுதியில் முதன் முதல் குடியேறியவர்கள் ஆப்பிரிக்கக் கறுப்பர்களும், வெள்ளையர்களும் ஆவர். அடிமைகளாக வாழ்ந்த ஆப்பிரிக்கக் கறுப்பர்கள் அங்கு உள்ள பண்ணைகளிலும் வயல்களிலும் கூலிகளாக வாழ்க்கையைத் தொடங்கினர்.

இந்நகர் மாநகராட்சித்தந்தை (Mayor) என்பரால் நிருவகிக்கப் படுகிறது. அவருக்கு ஆலோசனை வழங்க ஏழு பேர் கொண்ட குழு உள்ளது. அவர்களது பதவிக் காலம் நான்கு ஆண்டுகள். அவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நகரின் நிருவாக நடைமுறைகளைத் தலைமை நிருவாக அலுவலர் கவனித்து வருகிறார். விற்பனை வரியே முக்கிய வரியாகும்.

நியூ ஆர்லியன்சு நகரின் பரப்பளவு 943 ச.கி.மீ. இவற்றில் 427 ச.கி.மீ. நீர்ப் பரப்பாகும். இந்நகரில் ஆண்டு முழுவதும் மிதமான தட்பவெப்ப நிலையே நிலவுகின்றது. மழைக் காலங்களில் அதிகமான மழைப் பொழிவு ஏற்படுகிறது. இயற்கையிலேயே நிலப்பகுதி தாழ்ந்து காணப்படுவதால் மழை நீர் வடிகால், சாக்கடை போன்ற வடிகால் வாய்ப்புகள் உள்ளன.

இந்நகர அமைப்பு பல பகுதிகளாக உள்ளது செபர்சன் சதுக்கம், பிரான்சுக் குடியிருப்புப் பகுதி குடியிருப்பு மாவட்டம், தலைநகர்ப் பகுதியெனப்பல பகுதிகளாக, பிரிந்துள்ளது.

இந்நகரில் உள்ள மக்களில் 55 விழுக்காட்டினர் வெள்ளையர், கறுப்பர், ஆர்லியன்சு பிரிவினர் மீதம் உள்ள மக்கள் ஆவர். வெள்ளையர்கள் ஐரோப்பாவிலிருந்து வந்தவர்கள். வெள்ளையர்கள் பணக்காரர்களாகவும், கறுப்பர்கள் ஏழைகளாகவும் உள்ளனர். பெரும்பான்மை மக்கள் கத்தோலிக்க மதத்தைச் சார்ந்தவர்கள். முப்பது விழுக்காட்டு மக்களே சொந்தக் குடியிருப்புகளைக் கொண்டுள்ளனர். ஏனையோர் வாடகை இல்லங்களில் உள்ளனர். மார்டி கிரசு (Mardi Gras)என்னும் விழாச் சிறப்பாக ஆண்டு தோறும் கொண்டாடப்படுகிறது. நகரப் பூங்கா(City Park) 1500 ஏக்கரில் அமைந்துள்ள மிகப் பெரிய பூங்காவாகும்.

புனித உலூயிசு கதீடரல் (St.Louis Cathedral) உலகப் பிரசித்தி பெற்ற தேவாலயமாகும்.கபில்டோ (Cabildo) போன்ற மிகப் பெரிய கட்டடங்களும் உள்ளன.

இந்நகரப் பொருளாதாரம், சுற்றுலா, கப்பல் கட்டுதல் முதலியவற்றையே மையமாகக் கொண்டுள்ளது. நியூ ஆர்லியன்சு துறைமுகம் அமெரிக்காவில் உள்ள இரண்டாவது மிகப் பெரிய துறைமுகமாகும். இந்நகரில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட தொழிற்கூடங்கள் உள்ளன. அமெரிக்க விண்வெளிப் பயணத்திற்குத் தேவையான கருவிகள் உற்பத்திசெய்யப்படுகின்றன. கப்பல் கட்டுதல், உணவு உற்பத்தி, இயந்திர சாதனங்கள், பெட்ரோலியப் பொருள்கள் முதலியன உற்பத்தி செய்யப்படுகின்றன.

இந்நகரில் ஏறத்தாழ 135 கல்விக் கூடங்கள் உள்ளன. தனியார், மதச்சார்பான கல்வி நிலையங்களும் உள்ளன. மாணவர்களில் பெரும்பாலோர் கறுப்பர். உயர்நிலைக் கல்வி தரும் நியூஆர்லியன்சு பல்கலைக் கழகம், தியூலேன் பல்கலைக் கழகம் (Tulane University) ஆகியன பழம்பெரும் பல்கலைக் கழகங்களாகும்.

நியூஆர்லியன்சு நகரம் சிறந்த பண்பாட்டு மையமாகத் திகழ்கிறது. இந்நகரப் பொது நூலகம் 12 கிளை நூலகங்களுடன் செயற்பட்டு வருகிறது. நியூ ஆர்லியன்சு நகரில் 100க்கும் மேற்பட்ட பூங்காக்கள் உள்ளன. சிட்டி பூங்கா, அடுபன் பூங்கா (Audupon Park) ஆகியன மிகப் பெரிய பூங்காக்களாகும்.

இந்நகரிலிருந்து இரண்டு நாளிதழ்கள் வெளிவருகின்றன. இங்கு 5 தொலைக்காட்சி நிலையங்களும் 30 வானொலி நிலையங்களும் உள்ளன. மக்கள் தொகை 5,57,515 (1980). சு.ஆ.

**நியூ இங்கிலாந்து:** இது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வடமேற்குப் பகுதியில் உள்ள 6 மாநிலங்கள் அடங்கிய பகுதியைக் குறிக்கும். இதில் உரோட்சு (Rhodes), மெயின் (Maine), நியூ ஆம்சயர் (New Hampshire), வெர்மாண்டு (Vermont), மசாசூசெட்சு மற்றும் கனெக்டிகட்டு ஆகியவை அடங்கியுள்ளன. அப்பகுதியின் கடற்கரையைக் கண்டுபிடித்த (கி.பி.1614) கப்பல் தலைவன் சான்சுமித்து (John Smith) என்பவர் இதற்கு நியூ இங்கிலாந்து (New England) என்று பெயரிட்டார். குடியேற்றமாகத் தோன்றிய இதில் சுதந்திர வாழ்க்கையை நாடிய சமய அகதிகள் குடியேறினர். பின்னாளில் இவர்களுக்குப் புனித பயணத் தந்தையர் (Pilgrim Fathers) என்று பெயர் வழங்கப்பட்டது. சோம்பலையும் ஆடம்பர வாழ்க்கையையும் வெறுத்து, சேமிப்பினை அதிகமாகப் புகழ்ந்த தூய்மையாளர்களின் நெறிமுறை, பணிசெய்வோர் ஒரு சிலராகவே இருந்த சமுதாயத்திற்கு மிகவும் உகந்ததாக இருந்தது. தாய்நாட்டிலிருந்து தனித்து நின்ற நியூஇங்கிலாந்து குடியேற்றங்கள், நகரசபை கூட்டங்கள், விரிவான வாக்குரிமை, குடியியல் உரிமைகள் ஆகியவற்றை வற்புறுத்திய மக்கள், பிரதிநிதிகள் அடங்கிய அரசுகளை உருவாக்கிக் கொண்டன. தன்னிறைவான பண்ணைகள் தொடக்கத்தில் இப்பகுதியின் சிறப்புக் கூறாக இருந்தன. ஆனாலும், நாளடைவில் வணங்களும், அருவிகளும், துறைமுகங்களும் கப்பல்கட்டும் தொழிலையும் வர்த்தகத்தையும் பெருமளவு வளர்த்தன.

பிரிட்டனிடமிருந்து விடுதலை பெறுவதற்காக நியூ இங்கிலாந்து கி.பி.18 ஆம் நூற்றாண்டில் புரட்சிமயமான கிளர்ச்சிக்கு இருப்பிடமாயிற்று பாசுடன் (Bostan) தேநீர்விருந்து போன்ற நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. இதன் தேச பக்தர்கள் புதிய நாடு ஒன்றை நிறுவுவதில் பெரும்பங்குபெற்றனர். புதிய குடியரசின் தொடக்கக் காலத்தில் தேசிய தலைவர்கள் தேசிய சுங்கவரி மற்றும் கூட்டாட்சிக்கட்சியின் (Federalist Party) கொள்கைகளைத் தீவிரமாக ஆதரித்தனர்.

பண்பாட்டு முறையில் மலர்ந்து கொண்டிருந்த இலக்கிய இயக்கம், ஆழ்ந்த அர்ப்பணிப்பு ஆகியவை 19-ஆம் நூற்றாண்டில் நியூ இங்கிலாந்தின் சிறப்புக் கூறுகளாகத் திகழ்ந்தன. மதுவிலக்கு, அடிமைத் தனத்தை ஒழித்தல், சிறைச்சாலைகள் சீர்திருத்தம், மனக்கோளாறுற்றவர்களுக்கான நிலையங்கள், சிறுவர்களை வேலைக்கு அமர்த்தலை நீக்குதல் முதலியவற்றை அந்த இயக்கம் வற்புறுத்தியது. இறுதியில், அடிமைத்தனத்தை ஒழித்தல் என்னும் இயக்கம் முதன்மையான நிலையை அடைந்தது. படிப்படியாக நியூ இங்கிலாந்து, அமெரிக்க உள்நாட்டுப் போரில் (கி.பி. 1861-65) மத்திய அரசிற்கு ஆதரவளித்தது. அதன் எல்லை மேற்கில் மேலும் விரிந்ததும், தன் கிராமப்புற இயல்பினைப் படிப்படியாக இழந்துவிட்டது. ஆனால், அதற்கிடையே புதிய குடியேற்றங்கள் உருவாகிப்புதிய பண்பாடுகளைப் பரப்பிக் கொண்டிருந்தன.

கடல் வாணிகம் கி.பி. 1812-ஆம் ஆண்டுப் போருக்குப் பிறகு புத்துயிர் பெற்றது எனினும், தொழிற்புரட்சியும் நியூ இங்கிலாந்தில் பரவியது; பெரும் வெற்றியும் கண்டது. பொருள்களை உற்பத்தி செய்தல் தேசிய பொருளாதார நிலையில் பெரும் சிறப்புப் பெற்று விளங்கியது, துணிகள், காலணிகள், கடிகாரங்கள், இரும்புப் பொருள்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்யும் தொழில்கள் பலவும் தோன்றின. அப்பொருள்கள், நடமாடும் வாணிகர்களால்மிசிசிப்பி ஆறு வரையிலும் பல்வேறு பகுதிகளுக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. உள்நாட்டுப் போருக்குப் பிறகு கிழக்கு ஐரோப்பாவிலிருந்து தொழிலாளர்கள் பெருவாரியாக நியூஇங்கிலாந்தில் நுழைந்தனர். இதனால், ஒரு பெரும் இனப்புரட்சியும் ஏற்பட்டது. பல்லாண்டுக்காலமாகஅவ்விடத்தில் இருந்து வந்த சீர்திருத்தக் கிறித்தவர்கள் (Protestants) தங்கள் அதிகாரத்தைக்கத்தோலிக்கர்களுடன் பகிர்ந்து கொள்ளவும் நேர்ந்தது 20-ஆம் நூற்றாண்டில் நியூ இங்கிலாந்து உயர்கல்வியின் மையமாகப் பெரும் புகழ் பெற்று விளங்கிற்று. அ.உ.

**நியூ எப்பிரிடிசு:** இது மேற்குப்பசிபிக்குப்பெருங் கடல் பகுதியில் உள்ள தீவுக் கூட்டம். இது 12 பெருந்தீவுகளை உள்ளடக்கியது. ஐரோப்பியர், வியட்நாமியர், சீனர், தாகித்தியர், மெலினீசியர், நியூ

கலிடோனியர், வாலீசுத்தீவினர் என்ற பலதரப்பட்ட இனமக்கள் அங்கு வாழ்கின்றனர்.

நியூ எப்பிரிடிசில் (New Hebrides) கரும்பாறை களாலான மலைகள், பீடபூமிகள், பவழப் பாறைகள், கடற்கரைப் பகுதிகள் உண்டு. எரிமலைப் படிவப் பாறைகளும் உண்டு. மிக்க கடுமையான வெப்பப் பிரதேசம். காட்டுப் பகுதிகளும் சாவன்னாஎன்ற புல் வெளிப் பகுதிகளும் உண்டு. கறுப்பு நிற மண்ணும் உண்டு.

பலதரப்பட்ட மக்கள் தனித்தனித் தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். வியட்நாமியர் கூலிகளாகவும், பாலினீசியப் பிரிவினர் தோட்டத் தொழிலாளர்களா கவும் உள்ளனர்.

போர்ச்சுகீசிய மாலுமி பீட்தோ பெர்னாண்டசு புகைரோயி என்பவரால் கி.பி. 1646 – இல் இப்பகுதி கண்டறியப்பட்டது. பிரெஞ்சு ஆய்வாளரான உலூயி -டி-பொகையின் வில்லா என்பவர் கி.பி. 1768-இல் அப்பகுதியை மீண்டும் ஆய்வுசெய்தார். சேம்சு குக்கு என்பவர் கி.பி. 1774-இல் இதனைப் பட்டய நிலப் பகுதியாக்கினார். இப்பகுதி கி.பி. 1870 வரை ஆங்கிலக் கட்டுப்பாட்டிலிருந்தது. இரண்டாம் உலகப் போரின் போது அது கூட்டுப் படையின் படை.நிலையாகச் செயற்பட்டது.

இன்று கூட்டு இறைமை அரசு இயங்கி வருகின் றது. பிரிட்டனும் பிரான்சும் 1914–இல் தம்முடைய தல அதிகாரிகளை வைத்துக்கொள்ள அனுமதிக்கப் பட்டன தத்தம் தேசிய ஆட்சிப் பிரிவினர்மீது ஆளுகை செலுத்தும் பொறுப்பினை அவர்கள் பெற்றி ருந்தனர். கிராம முதியோர் அவை, தேசிய மாவட்டப் பிரதிநிதிகள் போன்றோர் தல அரசுப் பிரிவுகளாகச் செயற்பட்டனர்.

தென்னை பயிரிடல் முக்கிய தொழில். கோகோ, காப்பி ஆகியனவும் பயிரிடப்படுகின்றன. ஆனால் தொழிலாளர்கள் கிடைப்பது அரிது. உற்பத்தி குறைவு. உற்பத்திச் செலவு அதிகமாகையால் விலை யும் மிகுதி. மா.கா.

**நியூ ஏவன்** அமெரிக்காவில் கனெக்டிகட்டு மாநிலத்தில் உள்ள ஒரு துறைமுக நகரம். இதன் மக்கள் தொகை 126,109(1980). இங்கு ஏல் (Yale) பல்கலைக் கழகம் அமைந்துள்ளது. இப்பல்கலைக் கழகம், நகரின் தென்மேற்கே இலாங்குத்தீவிலிருந்து 115கி.மீ.தொலைவில் அமைந்துள்ளது. நியூ ஏவனுக்குப் (New Haven) புகைவண்டி, பேருந்துகள், விசைப்படகு கள் போக்குவரத்துச் சாதனங்களாகப் பயன்படுத்தப் படுகின்றன. நியூ ஏவன் நகரம் குவினிபெக்கு என்ற கால்வாயின் மேல்பாகத்தில் அமைந்துள்ளது. நியூ ஏவன் நல்ல மணற்பாங்கான சமவெளியாக ஆரம்பித்து, அதன்பிறகு உயர்ந்த மலைகளாக அமைந்துள்ளது. இந்த மலை கிழக்குப்பாறை, மேற்குப்பாறை எனப் பிரிக்கப்பட்டுள்ளது. நகரத்தின் நடுவில் உள்ள 16 ஏக்கர் பசுமைப்பகுதியில் 3 கிறித் தவத்தேவாலயங்கள் அமைந்துள்ளன. இத்தேவாலயங் கள் கி.பி.1814-ஆம் ஆண்டில் கட்டப்பட்டன. பசுமை யான இந்த நிலப்பகுதியைப் பார்த்தாற்போல் ஏல் பல்கலைக் கழகமும், பெரிய உணவு விடுதிகளும், புராதனக் கட்டடங்களும் அமைந்துள்ளன. பல்கலைக் கழகத்தின் கார்க்னசு கோபுரத்தைப் பசுமை நிலப் பகுதியிருந்து காணமுடியும். பல்கலைக்கழகத்தின் அருகில் உள்ள தெருவில் கல்லறைகள் நிறைநத இடம் உள்ளது. புகழ்பெற்ற பல அமெரிக்கர்களின் கல்லறைகள் இங்கு உள்ளன

நியூ ஏவனில் பூங்காக்களும், விளையாட்டு மைதானங்களும், பொது இடங்களும் 2,119 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளன. கலங்கரை விளக்கப் பகுதியில் ஒரு பூங்காவும், பொதுமக்களின் உல்லாசக் குளியல் பகுதியும் அமைக்கப்பட்டுள்ளன. நியூ ஏவனில் கி.பி. 1893-ஆம் ஆண்டு மாநில ஆசிரியர்கள் கல்லூரி தொடங்கப்பட்டது. வேறு பல கல்லூரிகளும் இங்கு அமைந்துள்ளன.

நியூ ஏவன் தொழில் மயமான நகரமாகும். இங்கு 'மேயர் முறை' அரசாங்கம் பின்பற்றப்படு கிறது. இறப்பு எண்ணிக்கை மிகவும் குறைவு. இது கி.பி. 1784-ஆம் ஆண்டு தனி நகரமாக அறிவிக்கப்பட்டது. கு.இரா.

**நியூகாம்புசயர்**: அமெரிக்காவில் ஏற்படுத்தப் பட்ட புதிய இங்கிலாந்துக் குடியேற்றங்களுள் ஒன் றாக இது திகழ்ந்தது. மாசசூசட்சு பகுதியில் வாழ்ந்த குடியேற்ற மக்கள் கி.பி.1623 – இல் நியூகாம்புசயர் (New Hampshire) பகுதியில் குடியேறினர். முதலாம் சேம்சு மன்னரின் நண்பரான சான் மாசன் (John Mason) என்பவரின் உறைவிடமான காம்புசயரின் (Hampshire) நினைவாக அமெரிக்காவில் இப்பகுதி நியூகாம்புசயர் எனப்பட்டது. இப்பகுதி கி.பி.1679 -இல் மன்னரின் கட்டுப்பாட்டிலுள்ள ஒரு குடியேற்றப் பகுதியாக ஆக்கப்பட்டது. மாசசூசட்சின் பகுதியாக விளங்கிய நியூகாம்புசயர் கி.பி.1741 – இல் ஒரு மாநில மாக ஆக்கப்பட்டது. அமெரிக்க விடுதலைப்போர் தொடங்கியபோது கி.பி.1776 – இல் இங்குத்தான் தாயகமான இங்கிலாந்துக்கு எதிராக ஒரு விடுதலை அரசு உருவாக்கப்பெற்றது. அமெரிக்க உள் நாட்டுப் போரின் போது இம்மாநிலம் வடபகுதி யினரை ஆதரித்தது.

வடக்கில் கியூபெக்கையும் கனடாவையும், தெற்கில் மாசசூசட்சையும் கிழக்கில் மெயினையும் அட்லாண்டிக்குப்பெருங்கடலையும் மேற்கில் கனெக்டிகட்டு ஆற்றையும் தன்னுடைய எல்லைகளாக இது கொண்டுள்ளது. ஏறத்தாழ 951,000 (1982) மக்களைக் கொண்டுள்ள இப்பகுதி 24,097 ச.கி.மீ பரப்பளவுடையது. இது மலைப்பாங்கான பகுதிகளடங்கியது. மெரிமேக்கு ஆண்ட்ரா சுகாக்கின், கனெக்டிகட்டு, பிசுகோட்டாகுவா, சாகோ ஆகிய ஆறுகள் நீர்வளம் நிரம்பியவையாக இப்பகுதியில் பாய்கின்றன. ஏரிகள், காடுகள் நிரம்பியுள்ள இப்பகுதி மிகச் சிறந்த சுற்றுலா மையமாக உள்ளது.

காலணிகள் தயாரித்தல், நூற்பு, காகிதம் தயாரித்தல், போன்றவை இங்குள்ள முக்கிய தொழில்கள். கருங்கல் வெட்டி எடுக்கும் தொழிலும் நடைபெறுகிறது. அபிரகம், களிமண் ஆகியன மிகுதியாக உள்ளன. இங்குள்ள பள்ளத்தாக்குப் பகுதியில் புல் அதிகம்; அவை கால்நடைத் தீவனங்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஓட்சும், சோளமும் விளைகின்றன. ஓட்சு, உருளைக்கிழங்கு மற்றும் பழவகைகளும் பயிரிடப்படுகின்றன. ஏறத்தாழ 32 கி.மீ. நீளமுள்ள கடற்கரையைக் கொண்டுள்ள போதிலும் மீன்பிடிப்பு மற்றும் கப்பல் கட்டுதல் ஆகியன பெருமளவில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

கான்கார்டு (Concord) என்பது இதன் தலைநகர். மான்செசுட்டர் இம்மாநிலத்திலுள்ள முக்கிய நகரம். நியூகாம்புசயர் பல்கலைக் கழகம் சிறப்புமிக்க உயர்கல்வி நிலையமாகும். இங்குள்ள அனோவர் பகுதியில் அமைந்துள்ள தபர்ட்டுமவுத்துக் கல்லூரி வரலாற்றுச் சிறப்புடையது. இம்மாநிலம் தான் கி.பி. 1840 – இல் அரசு ஊழியரல்லாதோர் பத்துமணி நேர வேலையில் ஈடுபடவேண்டுமென்ற சட்டத்தை இயற்றியது. இங்குள்ள போர்ட்சுமவுத்துத் துறைமுகத்தில் தான் 1904 – 05 – இல் நடைபெற்ற உருசிய – சப்பானியப் போர் முடிவுற்றதற்கான ஒப்பந்தம் கையொப்பம் ஆயிற்று. இவ்வொப்பந்தம் அமெரிக்கக் குடியரசுத்தலைவர் தியோடோர் உரூசுவெல்ட்டு முயற்சியின் பயனாய் ஏற்பட்டதாகும். மா.கா

**நியூகாலிடோனயா**: இது பிரான்சு நாட்டின் குடியேற்றப்பகுதி. தெற்குப்பசிபிக்கு மாக்கடலில் ஆசுத்திரேலியா கண்டத்திற்குக் கிழக்கில் உள்ள நியூகாலிடோனியா (New Caledonia) பிரதேசம், பைன்சுத் தீவு (Isle of Pines), இலாயல்டிதீவுகள் (Loyalty islands), வால்போல் தீவு, நியூகாலிடோனியா தீவு, உவான் (Huon), செசுட்டர்பீல்டு (Chesterfield), பெலப்பு (Belop) முதலிய தீவுகள் அடங்கிய ஒரு பகுதியாகும். ஆசுத்திரேலியாவிலிருந்து இது 1,125 கி.மீ. கிழக்கில் உள்ளது. இதன் மொத்த நிலப்பரப்பு 18,342.4 ச.கி.மீ. ஆகும். நியூகாலிடோனியா தீவில் உள்ள நௌமியா (Noumea) இதன் தலைநகரமாகும். இப்பகுதிகளில் நடைபெறும் முக்கிய தொழில்களாவன இரும்புச் சுரங்க வேலை, காப்பி, கொப்பரைத் தேங்காய் உற்பத்தி, நிக்கல் சுத்திகரித்தல், சுரங்க வேலை, ஆடு மாடு வளர்த்தல், கோழி வளர்ப்பு முதலியன. பல உணவு வகைகளை இந்நாட்டு மக்கள் ஆசுத்திரேலியாவிலிருந்து இறக்குமதி செய்கிறார்கள்.

இங்குப்பிரான்சு நாட்டினால் நியமிக்கப் பெற்ற ஆளுநர் தலைமையில் தேர்ந்தெடுக்கப் பெற்ற உறுப்பினரடங்கிய ஒரு சட்டசபையும் ஓர் ஆலோசனைக் குழுவும் உள்ளன. மக்கள் தொகை 145,368 (1983). இதில் 53,974பேர் ஐரோப்பியர். ஐரோப்பியரில் பெரும்பான்மையினர் பிரெஞ்சு மக்கள்.

**வரலாறு**: சேம்சு குக்கு, இத்தீவைக் கி.பி.1774 -இல் முதலில் கண்டுபிடித்தார். பிரான்சு கி.பி.1853-இல் இதைத் தன்னுடன் இணைத்துக் கொண்டது.

இத்தீவுக் கூட்டத்தில் மிகப் பெரிய தீவாகிய நியூகாலிடோனியா மட்டும் 16,118 ச.கி.மீ. பரப்புடையது. இது பெரும்பாலும் மலைகளடர்ந்ததாகவும், மிதமான தட்பவெப்ப நிலையுடன் கூடியதாகவும் உள்ளது. இங்கே கிடைக்கும் கனிப் பொருள்களால் முக்கியமாக, நிக்கல், இரும்பு, தங்கம், வெள்ளி முதலியன குறிப்பிடத்தக்கவை. தெ.பா.

**நியூகென்சிங்டன்** அமெரிக்காவில், பென்சில்வேனியா மாநிலத்தின் தென்மேற்குப் பகுதியில் அலிகெனி (Allegheny) ஆற்றங்கரையில் உள்ளது. நியூகென்சிங்டன் (New Kensington) நகரம், நிலக்கரிச் சுரங்கப் பகுதியில் இருப்பதால், தொழிற்சிறப்பு வாய்ந்து விளங்குகிறது. 1933-ஆம் ஆண்டில் இது நகரத் தகுதியைப் பெற்றது. அதன் பிறகு இதன் சிறப்பு மிகுதியாக வளர்ந்துள்ளது. அலுமினியப் பொருள்கள் கி.பி.1892 முதல் இங்குச் செய்யப்படுகின்றன. தெ.பா.

**நியூகேசில்**: இப் பெயரில் பல நகரங்கள் உள்ளன. அவற்றுள், வடகிழக்கு இங்கிலாந்தில், தைன் ஆற்றங்கரையிலுள்ள (Tyne) வியர் (Wear) மாவட்டத்தின் தலைநகர் ஒன்றாகும். தைன் ஆற்றின் கரையில் இது உள்ளதால், இப்பெயரில் உள்ள பல நகரங்களிலிருந்து இதனை வேறுபடுத்திக் காட்ட, 'தைன் ஆற்றின் மேலுள்ள நியூ கேசில்' (New Castle Upon Tyne) எனப் பெயரிடப்பட்டுள்ளது. இது ஒரு சிறந்த துறைமுகப் பட்டினம்; மக்கள்தொகை. 277,674 (1981).

இது ஓர் உற்பத்தி, போக்குவரத்து மையமாக விளங்குகின்றது. இங்கு இயந்திரங்கள், மருந்துப் பொருட்கள் செய்யப்படுகின்றன. இங்கிருந்து மிக அதிக அளவில் நிலக்கரி ஏற்றுமதி செய்யப்படுகிறது. பயணிகள் நார்வே, தென்மார்க்கு முதலிய நாடுகளுக்குச் செல்கின்றனர்.

இந்நகரில் கி.பி.13-ஆம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட நகர மதிற்சுவர், கி.பி.14-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட புனித நிகோலசு தேவாலயம் (Cathedral of St. Nicholas) பல கலைக்கூடங்கள், பழம்பொருள் காட்சியகங்கள், பல்கலைக் கழகம், தொழில் நுணுக்கக் கல்லூரி ஆகியவை உள்ளன.

இந்நகரானது உரோமானியரின் பழைய கோட்டை ஒன்றில் உள்ளது. பின்னர் ஆங்கில்கள் (Angles) இங்குக்குடியேறினர். நிலக்கரியும், கம்பளியும் 13-ஆம் நூற்றாண்டில் ஏற்றுமதி செய்யப்பட்டன. பின்னர் 16-ஆம் நூற்றாண்டில் நிலக்கரி ஏற்றுமதியும், 19-ஆம் நூற்றாண்டில் கப்பல் கட்டும் தொழிலும் சிறந்து விளங்கின.

**நியூ கேசில்[2]**: இது நடு இங்கிலாந்தில் இசுடாபோர்டுசையரில் (Staffordshire), இசுடாக்கு ஆன் திரண்டு (Stok-on-Trent) என்னுமிடத்திற்கு அருகில் உள்ள ஓர் இடம். இங்கு கி.பி.12-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட கோட்டை ஒன்று இருப்பதாலும், இதற்கு அண்மையில் இலைம் (Lyme) காடுகள் உள்ளதாலும், இதனை 'இலைமுக்குக் கீழ் நியூ கேசில்' (New Castle-under Lyme) எனக்குறிப்பர்.

இங்கு இயந்திரங்கள், ஆடைகள், உணவுப்பொருட்கள், செங்கல், ஓடு, மட்பாண்டங்கள் ஆகியவை தயாரிக்கப்படுகின்றன. நிலக்கரி எடுத்தல் முக்கிய தொழில்.

இங்கு கி.பி.13-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டு கி.பி.1867-இல் புதுப்பிக்கப்பட்ட, புனித கைலின் ஆலயமும் (Church of Saint Giles), கி.பி.1947-இல் ஏற்படுத்தப்பட்ட கீல் பல்கலைக் கழகமும் (University of Keele) உள்ளன.

**நியூ கேசில்[3]** : அமெரிக்க ஐக்கிய நாடுகளில், மேற்குப் பென்சில்வேனியாவில், இலாரன்சு மாவட்டத்தில், செனான்கோ (Shenango), நேசன்னாக்கு (Neshannock) ஆறுகள் கூடுமிடத்தில் இந்நகர் அமைந்துள்ளது. இது பிட்சுபர்க்கிலிருந்து (Pittsburg) 80 கி.மீ. தொலைவில் இருக்கின்றது. சான் கார்பிசில் இசுடுவர்டு (John Carbysle Stewart) என்பவரால் கி.பி.1802-இல் ஏற்படுத்தப்பட்ட இது கி.பி.1869-இல் நகரமாக ஆனது. மக்கள்தொகை 33,62 1 (1980).

இங்கு நிலக்கரி, இரும்புத்தாது, சுண்ணாம்புக்கல். களிமண் ஆகியவை கிடைப்பதால் மட்பாண்டங்கள், உலோக, வேதியல், கண்ணாடி, தோல்பொருட்கள், இரப்பர் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. தொடக்கத்தில் இது இந்தியர்களின் வாணிக நிலையமாக இருந்து வந்தது. மேற்குப் பென்சில்வேனியாவில் கிட்டனிங்கு (Kittanning) என்னுமிடத்திலிருந்த தெலாவேர் இந்தியர்களின் குடியிருப்பு கி.பி.1756-இல் அழிக்கப்பட்டதால் நியூகேசில் அவர்களது முக்கிய இடமாக மாறியது பின்னர் கி.பி.1798-இல் ஆங்கிலேயர் இங்குக் குடியேறி இங்கிலாந்தில் தைன் ஆற்றங்கரையிலுள்ள நியூ கேசிலின் நினைவாக இதற்கு இப்பெயர் சூட்டினர்.

**நியூ கேசில்[4]** , நியூ கேசில் மாவட்டத்தில், தெலாவேர் (Delaware) ஆற்றங்கரையில், வில்மிங்டனுக்குத் தெற்கே 8 கி.மீ. தொலைவில் உள்ள சிறந்த துறைமுகப் பட்டணம். இது தெலாவேர் நினைவுப் பாலத்திலிருந்து (Delaware Memorial Bridge) 3கி.மீ. தூரத்தில் இருக்கின்றது. இது கி.பி 1875-இல் நகரமாக ஆக்கப்பட்டது. இதன் மக்களதொகை 4814.

இங்கு இரும்பு, எஃகு, இழைகள், இரயான், வண்ணங்கள், ஆகாய விமானங்கள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. கோதுமையும், மக்காச்சோளமும் விளைவிக்கப்படுகின்றன. கால்நடைகளும், கோழிகளும் வளர்க்கப்படுகின்றன.

இது கி.பி. 1651-இல் தச்சுக்குடியேற்றமாகவிருந்து, கி.பி. 1654-இல் சுவீடன்காரர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர்களிடமிருந்து கி.பி. 1664-இல் ஆங்கிலேயர் கைப்பற்றிக் கொண்டனர். பென்சில்வேனியாவின் கீழ் மாவட்டங்களுக்குக் கி.பி. 1776-இல் தலைநகரமாகவிருந்தது. தெலாவேர் மாநிலம் உருவானதும் அதன் தலைநகர் தோவருக்கு (Dover) மாற்றப்பட்டது. இங்குக்குடியேற்றக்காலம், புரட்சிக் காலம், 19-ஆம் நூற்றாண்டுக்காலம் ஆகியவற்றைச் சார்ந்த மிகப் பழைய கட்டடங்களைக் காணலாம்.

**நியூ கேசில்[5]** பசிபிக்கு மாக்கடலில் தென்கிழக்கு ஆசுத்திரேலியாவில் நியூசௌத்வேல்சு பகுதியில் உள்ள ஒரு நகரம். அக்கண்டத்திலேயே மிகப்பெரிய நிலக்கரிச் சுரங்கம் இங்கு உள்ளது. இது பெரிய துறைமுகம்; எஃகு ஆலைகளும் கப்பல்கட்டுந் தளங்களும் இங்கு உள்ளன. இரசாயனப் பொருள்கள், கண்ணாடி, உரவகைகள், ஆடைகள் முதலியன செய்யப்படுகின்றன.

இங்கு, நிலையான குடியேற்றம் கி.பி. 1804-ஆம் ஆண்டு ஏற்பட்டது. இதன் மக்கள் தொகை 414300 (1983).

சி.இரெ.

*நியூசவுத்து வேல்சு:* நியூசவுத்து வேல்சு ஆசுத்திரேலியாவில் பிரிட்டனால் அமைக்கப்பட்ட முதல் குடியேற்ற நாடாகும். ஆசுத்திரேலியப் பொது நலக் கூட்டின் (Commonwealth of Australia) பழமை யான பகுதியாக நியூசவுத்துவேல்சு(New Southwales) விளங்குகிறது.

கிழக்கில்பசிபிக்குப்பெருங்கடலும், தெற்கில் விக்டோரியா மாநிலமும்,மேற்கில் தெற்கு ஆசுத்திரேலியாவும்,வடக்கில் குயின்சுலாந்தும் நியூசவுத்துவேல்சின் எல்லைகளாக அமைந்துள்ளன.

சேம்சு குக்கு (James cook) என்பவரால் கி.பி. 1770-ஆம் ஆண்டு பாட்டனி வளைகுடாவில் உள்ள நியூசவுத்து வேல்சு கண்டு பிடிக்கப்பட்டது. மக்கள் கி.பி. 1788-ஆம் ஆண்டு முதல் இங்குக்குடியேறத் தொடங்கினர்.நியூசவுத்து வேல்சுதொடக்கக்காலத்தில் தாசுமேனியா (Tasmania), தெற்கு ஆசுத்திரேலியா (South Australia), விக்டோரியா (Victoria), குயின் சுலாந்து (Queensland) போன்ற எல்லாப் பகுதிகளை யும் உள்ளடக்கியதாகத் திகழ்ந்தது. கி.பி. 1825-ஆம் ஆண்டு தாசுமேனியாவும் 1859-ஆம் ஆண்டு குயின்சு லாந்தும் தனித்தனி நாடுகளாயின.

இப்பகுதிக்கென்று கி.பி. 1842 – ஆம் ஆண்டு ஓர் அரசியலமைப்பும்,கி.பி1855-இல்பொறுப்புள்ள ஆட்சியும் (Responsible Government) ஏற்படுத்தப்பட்டன.

ஆசுத்திரேலியப்பொது நலக் கூட்டு 1901 - ஆம் ஆண்டு உருவானபோது 6 குடியேற்ற நாடுகள் அதனுடைய பகுதிகளாயின. அந்த ஆறு பகுதிகளில் நியூசவுத்து வேல்சும் ஒன்றாகும்.

நியூசவுத்து வேல்சின் தலைநகர் சிட்னி (Sydney). இம் மாநிலத்தின் முக்கிய துறைமுகங்களாகச் சிட்னி, நிகேசில் (New castle) கெம்ப்லா (Port Kembla) விளங்குகின்றன. இப்பகுதியின் முக்கிய நகரங்களாவன:- நியூகேசில்,கோல்பர்ன் (Goulburn), தான்வொர்த்து(Tanworth), தப்போ (Dubbo). செசுநாக்கு(Cessnock), கெம்சி (Kempsey), தாரி (Taree), ஆர்மீ டேட்டு (Armidate) ஆகியனவாம்.

நியூசவுத்து வேல்சில் ஓடுகின்ற முக்கிய நதிகள்: இரிச்மாண்டு (Richmond), அண்டர் (Hunter) ஆகுசு பரி (Hawkesbury)சோல் ஏவன்(Shoal Haven).

கிறித்தவ மதத்தைத் தங்கள் மதமாக ஏற்றுக் கொண்ட நியூசவுத்து வேல்சின் மக்கள் தொகையில் எண்பது விழுக்காட்டினர் ஆங்கிலேய வமிசாவளியின ராகவும், எஞ்சியுள்ள மக்களில் 20 விழுக்காட்டினர் அயர்லாந்து வமிசாவளியினராகவும், மிகக் குறைந்த எண்ணிக்கையில் பூர்வீகக்குடிகளும் வசிக்கின்றனர்

நியூசவுத்து வேல்சின் நிருவாகப் பொறுப்பை மேற்பார்வையிட ஆளுநர் ஒருவர் பிரிட்டிசு அரசால் ஆசுத்திரேலிய அரசின் ஆலோசனைப்படி நியமிக்கப் படுகிறார். ஆளுநருக்கு உதவியாக இரு அவைகளைக் கொண்ட நாடாளுமன்றம் பொது நலக் கூட்டின் ஒவ்வொரு உறுப்பு மாநிலத்திலும் உள்ளது.

நிருவாகம் செம்மையாக நடைபெற மாநிலம் முழுவதும் 200 க்கும் மேற்பட்ட உள்ளாட்சிப் பிரிவுக ளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றின் பொறுப்பு ஒரு கூறப்பட்ட குழுவிடம் (Council) ஒப்படைக்கப் பட்டுள்ளது. அந்தந்தப் பகுதிகளின் மூத்த குடிமக்க ளால் மூன்றாண்டுக்கொரு முறை இந்தக் குழு தேர்ந்தெடுக்கப்படுகிறது.பதினெட்டு வயது நிரம்பிய ஆண், பெண் அனைவருக்கும் வாக்களிக்கும் உரிமை உண்டு.

ஆசுத்திரேலிய அரசின் பாதிக்கு மேற்பட்ட ஆடு வளர்ப்புத் தொழில் இங்கு நடைபெறுகிறது. நாட்டின் மொத்த கால்நடை வளர்ப்பில் நான்கில் ஒரு பகுதியும் பன்றி வளர்ப்பில் மூன்றில் ஒரு பங்கும், மொத்த உற்பத்தியில் ஐந்தில் இரண்டு பங்கும் நியூசவுத்வேல்சில் கிடைக்கின்றனகம்பளி, கோதுமை ஏற்றுமதியில் சிறந்து விளங்குகிறது.இங்கிருந்து ஏற்றுமதியாகும் பிற பொருட்கள் வெண்ணெய், நிலக்கரி, தோல், பதப்படுத்தப்பட்ட இறைச்சி, மாப்பண்டம், பழங்கள் முதலியவையாகும்.

கோதுமை, சோளம், பார்லி, ஓட்சு போன்ற விவசாயத் தொழிலும், காடு வளர்ப்பு, மீன்பிடித் தல் போன்றவையும்முக்கியதொழிலகளாக விளங்கு கின்றன. தேவதாரு மர வளர்ப்பும் அண்மைக் காலத்தில் அதிக அளவில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

கனரக இரும்பு, உலோகத் தொழிலில் வேகமாக முன்னேறி வருகிறது. புரோக்கன் இல் (Broken Hill) என்ற இடத்திலிருந்து கி.பி. 1884-இல் கண்டுபிடிக்கப் பட்ட வெள்ளி, துத்தநாகப் படிவப் பாறைகள் தாதுப்பொருள் உற்பத்தியில் நியூசவுத்துவேல்சு சிறப் புற்று விளங்க வழி வகுத்தது.

தொழில் வளர்ச்சி, இயற்கையாய் அமைந்த வளம் இவற்றோடு நியூசவுத்து வேல்சு, ஆசுத்திரேலியாவின் பெருமை பெற்ற கவிஞர்கள், எழுத்தாளர்கள் தோன்றிய, வாழ்ந்த மாநிலம் என்ற உயர்வினை உடையதாக விளங்குகிறது. ஆசுத்திரேலிய நாட்டின் சிறந்த ஓவியங்களைக் கொண்ட கலைக்கூடம் (Art gallery of New Southwales) இங்கு அமைந்துள்ளது. 1932-இல் உலகின் மிகப் பெரிய பாலம் இங்குத்திறக் கப்பட்டது.

எஸ்.அ.

**நியூசிலாந்து,** தெற்கு அமைதிப் பெருங்கடல் பகுதியில் ஆசுத்திரேலியாவுக்கண்மையில் அமைந்துள்ள தீவுக்கூட்டங்களாலான பகுதி. வடக்குத்தீவு மற்றும் தெற்குத் தீவு என்ற இருபெரும் தீவுகளாலானது. இவை குக் நீர்ச்சந்தியால் இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றும் 800 கி.மீ நீளமுடையவை; மொத்தம் 268,676 ச.கி.மீ. பரப்பளவுடையவை.




நியூசிலாந்து-அமைவிடம்

இப்பகுதி பெரும்பாலும் மலைப்பாங்கானது. இந்நாட்டில் மூன்றில் இரு பகுதிகள் கடல் மட்டத்தினின்று மிக உயரமானவை. அங்குள்ள தெற்கு ஆல்புசு மலைப்பகுதியில் குக் சிகரம் காட்சி அளிக்கிறது. குவாபெகு, நெகௌருகோ, தோங்காரிரோ போன்றவை பிற உயரமான சிகரங்களாகும். வடக்குத் தீவிலுள்ள எக்மாண்டு சிகரமும் மிக உயரமானதே. நீளம் குறைவான, வேகம் நிறைந்த ஆறுகள் மிகுதி. அருவிகளும், சுழல்களும் நிரம்பி உள்ளனவாகையால் ஆறுகள் போக்குவரத்திற்குப் பயன்படுவதில்லை. எழில் கொஞ்சும் எண்ணற்ற ஏரிகள் அங்கு உண்டு. தௌபோ என்னும் ஏரி ஏறத்தாழ 610 ச.கி.மீ பரப்பளவுடையது.

கடுங்கோடையோ மிக்க குளிரோ அங்கு இல்லை. வாழ்க்கைக்கேற்ற சூழல் உண்டு. தேவையான மழையும் உண்டு. அப்பகுதி மக்களால் புதர் என்றழைக்கப்படும் தாவரம் புகழ் வாய்ந்தது. பலதரப்பட்ட வழிகளில் பயன்படக்கூடிய எண்ணிறந்த மரங்களைக் கொண்ட காடுகள் வட பகுதியில் உண்டு. பீச்சு மரங்கள் தென்பகுதியில் அதிகம் உண்டு. பலதரப்பட்ட புல்வெளிகளும் அதிகம். நியூசிலாந்தில் தனிப்பட்ட விலங்குகள் இல்லை. பன்றிகள், வெள்ளாடு, முயல்கள் போன்றவை இறக்குமதி செய்யப்பட்டு இயற்கைச் சூழல்களுக்குப் பழக்கப்படுத்தப்பட்டுள்ளன. அங்குப் பாம்புகளும் இல்லை. தொல்லை தரக் கூடிய பூச்சிகளும் மிகக் குறைவே. ஆனால், எண்ணற்ற மீனினங்கள் அங்கு அதிகம். பெங்குவின், கிவி, கிளிகள், குருவிகள் போன்ற பறவைகள் காணப்படுகின்றன.

அப்பகுதியின் பழங்குடி மக்களான மௌரேய் என்பவர்கள் பாலினீசியர்களின் வழித்தோன்றல்களாவர். அவர்கள் அமைதிக்கடல் தீவுகளிலின்றும் ஏறத்தாழ1,600 கி.மீ. தொலைவிலிருந்து இங்கு வந்து குடியேறினர். ‘நீண்டவெண்மேகநாடு’ எனப் பொருள்படும் ‘ஆவ்-டீ-ரோவா’ என்ற பெயரில் அவர்கள் தமது புதிய பகுதியை அழைத்தனர்.

‘கூபா’ என்னும் பாலினீசியர் ஒருவர் கி.பி.10-ஆம் நூற்றாண்டளவில் படகுமூலம் இப்பகுதியை வந்தடைந்ததாகக் கூறப்படும் செவிவழிச் செய்தியை மக்கள் நம்புகின்றனர். தச்சு மாலுமியான ஏபெல் சான்சன் தாசுமன் என்பவர் கி.பி. 1642-இல் அங்குச் சென்றடைந்தார். பின்பு கி.பி.1769-வரை வேறெந்த ஐரோப்பியரும் அப்பகுதிக்குச் செல்லவில்லை. அவ்வாண்டில் தளபதி குக் அங்குவந்து, பின்பு ஆசுத்திரேலியாவிற்குப் பயணமானார். தொடர்ந்து மரவாணிகம் செய்யும் வணிகர்கள் அங்கு வரலாயினர். சங்கைக்குரிய சாமுவேல்மாாசுடன் என்பவர் கி.பி. 1814-இல் மௌரேயர்களுடன் தொடர்பு கொண்டு சமயம் பரப்பு ஊழியத்தில் ஈடுபட்டார். பல வளர்ச்சிப் பணிகள் கி.பி. 1840 வரை மேற்கொள்ளப்பெற்று, அவ்வாண்டில் நியூசிலாந்து ஆங்கிலக் குடியேற்றமாக ஏற்கப்பட்டது. வைடாமகி உடன் படிக்கை மூலம் தளபதி வில்லியம் காப்சன் என்பவரின் தலைமையின் கீழான ஆங்கில மேலாண்மையை மௌரேயர்கள் ஏற்றுக்கொண்டனர். இருப்பினும் கி.பி.1867 முடிய பல கிளர்ச்சிகள், போராட்டங்கள் ஆகியன தொடர்ந்தன.

அது ஒரு வேளாண்மை நாடாகக் கருதப்பட்டாலும், அங்குள்ள மக்களில் மூன்றில இருபங்கினர் நகரங்களில் வாழ்கின்றனர். ஆக்லண்டு, வெல்லிங்டன், நிரைசுடு சர்ச்சுதுனெடென் போன்றவை அங்குள்ள முக்கிய நகரங்களாகும்.விவசாயம் முக்கியத் தொழில். கால்நடை வளர்ப்பு சிறப்பாக நடைபெறுகின்றது. இறைச்சி, ஆட்டுமயிர், வெண்ணெய், பாலாடைக்கட்டி போன்றவை அதிக அளவில் கிடைக்கின்றன. இங்கு நிலக்கரிச் சுரங்கங்கள் உண்டு. இரும்பு, தைட்டானியம், யுரேனியம் போன்ற உலோகப் பொருட்கள் கிடைக்கின்றன.

நியூசிலாந்து கி.பி. 1854-இல் தனி ஆட்சியுரிமை பெற்ற குடியேற்றமாக மலர்ந்து, 1907-இல் தனி

உரியமைடைந்தது. ஆங்கில அரசியலமைப்பினடிப்படையில் ஆட்சி உருவாக்கப்பட்டது, ஆங்கில அரசின் பேராளராகத் தலைமை ஆளுநர் செயல்பட்டார் பிரதிநிதித்துவ சபை என்னும் அரசியலமைப்பு கி.பி. 1951 முதல் செயல்பட்டது. சமுதாய முன்னேற்றப் பணிகளுக்குக் கி.பி. 1898-லேயே ஓய்வூதியம் வழங்கப் பட்டது. குடும்ப ஊக்கத்தொகை, ஆதரவற்றோர் மற்றும் விதவைகளுக்கான ஓய்வூதியம், இலவச மருத்துவப்பரிசோதனைபோன்றவைசெயற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஐந்துநாள், 40 மணி நேர வேலை என்பது அங்குள்ள சிறப்புக் கூறு. சமுதாய உணர்வுமேலோங்கிக் காணப்படுகின்றது. தொழிற்சங்கங்கள் சிறப்பாக இயங்குகின்றன. தொழிலாளி முதலாளி உறவுகள் ஒப்பந்த அடிப்படையில் இயங்குகின்றன.

சிறுவர் சிறுமியர்க்கு 7 வயது முதல் 15 வயது வரை கட்டாயக் கல்வி உண்டு. நீண்ட இருப்புப்பாதையும், நீண்டசாலைகளும் தேசிய கடற்படையும், விமானப் போக்குவரத்தும்உண்டு. எழுத்தாளர்கள், இசைவாணர்கள், விஞ்ஞானிகள், கலைஞர்கள் ஆகியோர் பண்பாட்டு வளர்ச்சிக்குத் துணை புரிகின்றனர். கால்பந்து அந்நாட்டின் தேசிய விளையாட்டாகும்.

மா.கா.

*நியூசெர்சி*, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள ஐந்தாவது சிறிய மாநிலம். நடு அட்லாண்டிக்குக் கடற்கரையிலுள்ள நியூசெர்சி (New Jersey) 'தோட்டங்கள் மாநிலம்' (Garden State) எனக் அழைக்கப்படுகிறது. ஆங்கிலக் கால்வாயில் பிரான்சின் கடற்கரைக்கு அண்மையிலுள்ள செர்சி தீவின் நினைவாக இதற்கு இப்பெயர் இடப்பட்டது. இதன் தலைநகரம் திரெண்டன் (Trenton).

**இயற்கை அமைப்பு**: தெற்கில் இம்மாநிலத்தின் பரப்பளவில் ஐந்தில் மூன்று பங்கு கடற்கரைச் சமவெளியாகும். வடமேற்கில், மூன்றில் ஒரு பங்கு நிலம், மேட்டுநிலப்பகுதியாகும் (Upland). இம்மாநிலத்தின் நடுவில் தென்மேற்காக அமைந்துள்ள பகுதியே வளம் மிக்கது. இம்மாநிலத்தின் வடக்கில் நியூயார்க்கு மாநிலமும், தெற்கில் தெலாவேரும் (Delaware) கிழக்கில் அட்லாண்டிக்குக் கடலும், மேற்கிலும், வடமேற்கிலும் பென்சில்வேனியாவும் எல்லைகளாக உள்ளன. இதன் பரப்பளவு 20,295 சதுர கி.மீ. ஆகும். இதன் மக்கள் தொகை 7,864,823(1980).

**வேளாண்மை**: இங்கு மக்காச்சோளம், கோதுமை ஓட்சு, சோயா பீன்சு, ஆப்பிள், திராட்சை போன்ற பழவகைகள், காய்கறிகள் ஆகியவை பயிரிடப்படுகின்றன. கால்நடைகள், கோழிகள், வளர்க்கப்படுகின்றன.

**தொழில்கள்**: தொழிற்சாலைகள் நிறைந்த இம் மாநிலம் 'நாட்டின் தொழிற்கூடம்'(Workshop of the Nation) என்று சொல்லப்படுகிறது. இங்குள்ள தொழிற்சாலைகளில் 800,000 தொழிலாளர்கள் பணி புரிகின்றனர். இங்கு, கனரக இயந்திரங்கள், வேதியல் பொருட்கள், நறுமண எண்ணெய்கள், பிளாசுடிக்குப் பொருட்கள், வண்ணங்கள், மின்சாரக் கருவிகள், கண்ணாடிப் பொருட்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. செம்பு, பெட்ரோலியம் ஆகிய வற்றின் சுத்திகரிப்பு நிலையங்களும் உள்ளன.

**போக்குவரத்து**: இம்மாநிலத்தில் 7,832கி.மீ. நீள இருப்புப்பாதைகளும்; 52,177கி.மீ.நீளச் சாலைகளும், 192 விமான நிலையங்களும் உள்ளன.

**அரசு**: இம்மாநில ஆளுநர் மக்களால்4ஆண்டுகளுக்குத்தேர்ந்தெடுக்கப்படுகிறார். இங்குள்ள இரு அவைகளில் 40 உறுப்பினர்களைக் கொண்ட ஆட்சிப் பேரவைக்கு (Senate) 4 ஆண்டுகளுக்கும் 80 உறுப்பினர்களைக் கொண்ட பொது அவைக்கு (General Assembly) இரு ஆண்டுகளுக்கும் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இம்மாநிலம் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஆட்சிப் பேரவைக்கு இரு உறுப்பினர்களையும், பேராளர் அவைக்கு 14 உறுப்பினர்களையும் அனுப்புகிறது. குடியரசுத் தலைவர் தேர்தலில் இம் மாநிலத்திற்கு 16 வாக்குரிமைகள் கொடுக்கப்பட்டுள்ளன. தலநிருவாகத்தின் பொருட்டு இம்மாநிலம் 21 மாவட்டங்களாகப் (Counties) பிரிக்கப்பட்டுள்ளது.

**வரலாறு**: தொடக்கத்தில் இங்குத் தச்சுக்காரரும் (Dutch) பின்னர்ச் சுவீடன், பின்லாந்து நாட்டினரும் குடியேறினா. ஆங்கிலேயர் கி.பி.1664-இல் இங்குக் குடியேறி கி.பி.1665-இல் எலிசபெத்து நகரத்தையும், அடுத்த ஆண்டு நீவர்க்கு நகரத்தையும், பின்னர்ப் பிற நகரங்களையும் உண்டாக்கினர். சிறிதுசிறிதாகக் கி.பி.1700ஆம்ஆண்டுகளில் பிரெஞ்சு, செருமானிய, இசுகாட்லாந்து, அயர்லாந்து நாட்டினர் குடியேறினர். இக்குடியேற்றம் கி.பி.1738-இல் ஓர் ஆளுநரை வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. விடுதலை பெற்றதும் கி.பி.1787-இல் இது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மூன்றாவது மாநிலமாகச் சேர்ந்தது. உள்நாட்டுப் போரின் போது(கி.பி. 1861-65)இம் மாநிலத்திலிருந்து 88,000 பேர் ஐக்கியப் படையில் பணிபுரிந்தாலும் இம்மக்கள் தென்பகுதியையே ஆதரித்தனர். ஆபிரகாம் இலிங்கனின் மறுதேர்தலை எதிர்த்து வாக்களித்த மூன்று மாநிலங்களில் இதுஒன்றாகும். இங்குகி.பி19,20-ஆம் நூற்றாண்டுகளில் தொழிற்சாலைகள் வேகமாக வளர்ந்தன; மக்கள் தொகை பெருகியது.

**பிற செய்திகள்**: இம்மாநிலத்தவர் இருவர் குடியரசுத் தலைவர்களாக இருந்தது குறிப்பிடத்தக்கது. இம்மாநிலத்தைச் சேர்ந்த குரோவர் கிளீவ்லண்டு (Crover Cleveland) 22-ஆம் குடியரசுத் தலைவர். 28 - ஆம்குடியரசுத் தலைவராக இருந்த உட்ரோ வில்சன் (Woodrow Wilson) இம்மாநிலத்தில் ஆளுநராக இருந்தவர். உலக அறிவியல் வல்லுநர்களான தாமசு எடிசன் (Thomas Edison), ஆல்பர்ட்டுஐன்சுடீன் (Albert Einstein), சாமுவல் மோர்சு (Samual F.B. Morse) ஆகியோர் இம்மாநிலத்தைச் சேர்ந்தவர்கள். சி.இரெ.

**நியூசேலம்** அமெரிக்காவில் இல்லிநாய் மாநிலத்தின் நடுப்பகுதியில் இருந்த பழைய நகரம். இது இப்பொழுது அரசுப் பூங்காவாக விளங்குகிறது. சங்கமண் (Sangamon) ஆறு இதனருகே ஓடுகிறது. ஆபிரகாம் லிங்கன் கி.பி. 1831 முதல் 1837 வரை இங்கே வாழ்ந்தார். இந்நகரில் முதன் முதலில் கி.பி. 1828 -இல் மக்கள் குடியேறினர். ஆனால்,கி.பி. 1839 க்குப் பிறகு, இதன் அருகில் பீட்டர்சுபர்கு (Petersburg) நகரம் வளர்ச்சியடைந்த காரணத்தால், நியூசேலத்தின்(New Salem) சிறப்பு மங்கியது. இலிங்கன் இங்கு வாழ்ந்த காலத்தை நினைவூட்டும் வகையில் பல நினைவுச் சின்னங்கள் இங்கே புதுப்பிக்கப்பட்டுள்ளன. தெ.பா.

**நியூட்டன்**: அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இப்பெயரில் மூன்று நகரங்கள் உள்ளன. வடகிழக்குமாசசுசெட்சு (Massachusetts) மாநிலத்தில், மிடில் செக்சு (Middlesex) மாவட்டத்தில், சார்லசு ஆற்றங்கரையில் நியூட்டன் (Newton) நகரம் உள்ளது. பாசுடனிலிருந்து (Boston) 11 கி. மீ. தொலைவில் உள்ள இது பாசுடனின் புறநகர்ப்பகுதியாகவேகருதப்படுகிறது. இதில் 13 கிராமங்கள் அடங்கியுள்ளன. அழகிய மலைகளால் சூழப்பட்டு, இயற்கை அழகுடன் விளங்கும் இந்நகரில் தெருக்கள் ஒழுங்காக அமைந்துள்ளன. இது 'தோட்ட நகரம்' (Garden City) என்றழைக்கப்படுகிறது. இதன் பரப்பளவு 75 ச.கி.மீ. மக்கள் தொகை 83,622 (1980).

இப்பகுதியில் மக்கள் கி.பி. 1639-இல் குடியேறிய பொழுது, இது கேம்பிரிட்சின் (Cambridge) ஒரு பகுதியாகவே இருந்தது. பின்னர் நியூகேம்பிரிட்சு எனப்பட்டு, கி.பி. 1691-இல் நியூடவுன் (Newtown) என்றழைக்கப்பட்டு, பின்னர் கி.பி. 1766-இல் நியூடன் எனச்சுருங்கியது. இருப்புப்பாதை போடப்பட்டதால் இது முன்னேறத் தொடங்கிக் கி.பி. 1873-இல் நகரமானது.

இங்கு இயந்திரங்கள், ஊர்திகள், மின்சாரக் கருவிகள், மை, காகிதம், சோப்பு, சாயப் பொருள்கள், வேதியல் பொருட்கள் இரப்பர்பொருட்கள் ஆகியவை தயாரிக்கப்படுகின்றன.

சிறந்த அறிஞர்களான நதேனியல் ஆதானும் (Nathaniel Hawthorne), இரால்பு வால்டோ எமர்சனும் (Ralph Waldo Emerson) இந்நகரில் பிறந்தவர்கள்.

**நியூட்டன்[2]**: அயோவா (Iowa) மாநிலத்தில் சேசுபர் (Jasper) மாவட்டத்தில், அம்மாவட்டத்தின் தலைநகராக நியூட்டன்உள்ளது. இது அம்மாநிலத்தின் தலை நகரான தெசுமாயினு (Desmoines)க்குக்கிழக்கே 20 கி.மீ. தொலைவில் இருக்கின்றது, விவசாயப் பண்ணைகள் நிறைந்த இது மினியா போலிசு (Minneapolis),புனித உலூயி (St. Louis), சிகாகோ (Chicago) பசிபிக்கு (Pacific) இருப்புப் பாதையில் இருக்கின்றது. இங்குள்ள கார்னீசி நூலகம் (Carnegie Library) பிரடு மேதக்கு நினைவுப் பூங்கா (Fred Maytag Memorial Park) சிறப்பானவை. இங்கு சலவை இயந்திரங்கள் மிக அதிகமாக உற்பத்தி செய்யப்படுகின்றன. மேலும் பாலாடைக் கட்டியும், வேளாண்மைக் கருவிகளும் தயாரிக்கப்படுகின்றன. இது கி.பி. 1857-இல் நகரமாக ஆனது. இதன் மக்கள்தொகை 15,381 (1960).

**நியூட்டன்[3]**: கான்சாசு (Kansas) மாநிலத்தில் ஆர்வி (Harvey) மாவட்டத்தில் நியூடன் என்ற நகரம் உள்ளது. இது அம்மாநிலத்தின் தலை நகரான தோபிகா (Topeka) விற்கு 216 கி.மீ. தென்மேற்கில் இருக்கின்றது. இந்நகர் மிசோரி, பசிபிக் ஆட்கிசன் (Atchison) தோபிகா, சாந்தாபே (Santa Fe) இருப்புப்பாதையில் உள்ளது. இங்கு மாவு, பாத்திரங்கள், பால்பொருட்கள், நெகிழிப்பொருள்ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. மக்கள் இப்பகுதியில் கி.பி. 1870-இல் குடியேறினர்; அடுத்த ஆண்டு நகரமாக ஆனது. இதன் மக்கள் தொகை 15,381 (1960). சி.இரெ.

**நியூ நெதர்லாந்து** என்பது அமெரிக்காவின் கிழக்குக் கடலோரத்தில் இன்று உள்ள நியூயார்க்கு, நியூ செர்சி பகுதிகள். இப்பகுதி முன்பு தச்சுக் குடியேற்றமாக இருந்தது (Dutch Colony). ஆலந்து நாடு (Holland)தச்சு மேற்கு இந்தியக்குழுமத்திற்கு (Company) கி.பி. 1621-இல் இதை வழங்கியது. ஆங்கிலேயர், கி.பி. 1664-இல் இப் பகுதியைத் தம் வசப்படுத்தி, இதை நியூயார்க்கு,நியூசெர்சி என்னும் இரு குடியேற்றங்களாக்கினர். காண்க: நியூயார்க்கு நியூசெர்சி. தெ.பா.

**நியூபரி**, இங்கிலாந்தின் மையத் தெற்குப் பகுதியில் உள்ள ஒரு நகரம். நியூபரி (Newbury), பெர்க்

சயர் (Berkshire) என்னும் மாவட்டத்தில் உள்ளது. இது விவசாயத்திற்குப் பெயர் போனது. கம்பளி, மாவு வகைகள், விவசாயப் பொருட்கள், காகிதம், மரச்சாமான்கள், உலோகச் சாமான்கள், முதலியன இங்குத்தயாரிக்கப்படுகின்றன. இடைக்காலத்திலேயே (Middle ages) சிறப்பான துணி வகைகள் இங்குத் தயாரிக்கப்பெற்றன. கி.பி. 16-ஆம் நூற்றாண்டுக் குரிய துணி வகைகளைக் கொண்ட ஒரு பொருட் காட்சி சாலை இங்கே உள்ளது. நியூபரி (1973-இல்) 24,800 மக்களைக் கொண்டிருந்தது.1983-இல் மக்கள் தொகை 122,500 ஆக உயர்ந்துள்ளது.

2) நியூபரித்துறைமுகம் என்ற பெயரையுடைய ஒரு நகரம் அமெரிக்காவில்மாசசூசெட்சு மாநிலத்தின் வடகிழக்கில் உள்ளது.மெர்ரிமாக்கு(Merrimack) ஆறு இங்கே ஓடுகிறது. இங்கிலாந்தின் நியூபரியிலிருந்து கி.பி. 1635-இல் இப்பகுதியில் குடியேறினர். இந்நகரம் கி.பி. 1764-இல் அமைக்கப்பெற்றது. குடியேற்ற ஆட்சிக் காலத்திலேயே இங்கு வெள்ளிச் சாமான்கள், மது வகைகள் முதலியன தயாரிக்கப்பெற்றன. கப்பல்கட்டும் தொழிலும், திமிங்கிலம் பிடித்தலும் இங்கு வளர்ச்சியுற்றன.இங்குக்கப்பல்கட்டும் தொழில் கி.பி.1812-ஆம் ஆண்டுப் போருக்குப் பிறகு சிறப்புக் குன்றியது.கி.பி.1811-ஆம் ஆண்டு ஏற்பட்ட தீ விபத்து இப்பகுதியை மிகவும் சேதமுறச்செய்தது. அமெரிக்க உள்நாட்டுப் போருக்கு ஒரு காரணமாக இருந்தவரும், அடிமை முறையை அச்சகச் சேவை மூலம் ஒழிக்க முயன்றவருமான வில்லியம் இலாய்டு காரிசன் (William Lloyd Garrison), நியூபரி துறைமுகத்தில் பிறந்தவர் என்பது ஈண்டுக்குறிப்பிடத்தக்கது.

தெ.பா.

**நியூபவுண்டுலாந்து**: கனடா கூட்டாட்சி மாநிலங்களுள் ஒன்று நியூபவுண்டுலாந்து (New Foundland). சான் கேபட் (John Cabot) என்பவர் கி.பி. 1497-இல் முதலில் இப்பகுதியைக் கண்டறிந்தவராவார். முதலில் இங்குக் குடியேறிய பழங்குடிகள் பியோதிக் அல்லது பியோதக்சு(Beothuks or Beothic tribe of Indians) இனத்தவராவார்.

இங்குக் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் நோவாசு கோசியா பகுதியிலிருந்து மிக்மாக் இந்தியர்கள் (Micmac Indians) என்று கூறப்பட்டவர்கள் குடியேறி ஏற்கெனவே அங்கிருந்த பூர்விகக் குடிகளான பியோதக்சுகளிடம் சண்டையிட்டு அவர்களை விரட்டி விட்டுத்தாங்கள் நிலைபெறத் தொடங்கினர். பியோதக்கின் வழித்தோன்றல்கள் மிகக் குறைந்த எண்ணிக்கையில் சார்சசு வளைகுடா (Georges Bay) கோன் நதிப் (Conne river) பகுதிகளில் காணப்படுகின்றனர்.

சர் அம்ப்ரே கில்பர்ட் (Sir Humphrey Gilbert) என்பவரால்இது கி.பி1863-இல் ஆங்கிலேயக் குடியேற்றமாக்கப்பட்டது. அதிலிருந்து தொடர்ந்து இரு நூற்றாண்டுகள் வரை இந்தப் பகுதி மீன்பிடிக்கும் மையமாகத் திகழ்ந்தது. மக்கள் பெருமளவில் இங்குக் குடியேறுவதை இங்கிலாந்தின் மேற்குப் பகுதியைச் சார்ந்த வணிகர்கள் விரும்பவில்லை. தங்களுடைய சுறா மீன் பிடிக்கின்ற தொழிலை அது பாதிக்கும் என்று அஞ்சியதே காரணமாகும்.

மக்கள் நியூபவுண்டுலாந்துப் பகுதியில் நிலையாகக் குடியேறுவதைத் தவிர்க்கக் கடுமையான சட்டங்கள் கி.பி. 1634, 1698, 1775 ஆகிய ஆண்டுகளில் இயற்றப்பட்டன. இங்கு கி.பி. 1783 வரையில் மக்கள் குடியேறாதவாறு தடை விதிக்கப்பட்டது. தொடக்கக் காலத்தில் இப்பகுதியின் நிருவாகப் பொறுப்பு மீன் பிடிக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்களாலும், பின்னர், கடற்படையைச் சார்ந்த அதிகாரிகளாலும் மேற்கொள்ளப்பட்டிருந்தது. இவர்கள் மீன் பிடிக்கும் காலத்தில் மட்டும் அதாவது ஆண்டில் சில மாதங்களே இங்குத் தங்கி நிருவாகத்தை மேற்பார்வையிட்டனர்.

உட்ரெக்டு உடன்படிக்கையின்படி இப்பகுதியின் மீது இங்கிலாந்தின் ஆதிக்கம் பிரான்சால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. பிரெஞ்சுக்கடற்கரை(French shore) என்று அழைக்கப்பட்ட சிறிய நிலப்பரப்பில் பிரெஞ்சுக்காரர்கள் தங்கள் மீன்பிடி தொழிலைச் செய்தனர். இவர்கள், கி.பி. 1817-ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து நியூபவுண்டுலாந்திலேயே வசிக்க, நிருவாகப் பொறுப்பைக் கடற்படை அதிகாரிகள் மேற்பார்வையிடலாயினர். பொது மக்களிலிருந்து பொறுப்பாளர்கள் நியமிக்கப்படலானார்கள். சாதாரண மீன்பிடி நிலையம் என்ற நிலையிலிருந்து கி.பி.1811-ஆம் ஆண்டுவாக்கில் நியூபவுண்டுலாந்து,மக்கள்நிலையாகக் குடியேறி வசிக்கக் கூடிய நாடாக மாறியது. மக்கள் குடியேறத்தடையாகஇருந்தசட்டங்கள்கி.பி1824-ஆம் ஆண்டு திருத்தியமைக்கப்பட்டன.பொறுப்புள்ள ஆட்சி பெறுவதற்கான முயற்சிகள் கி.பி.1832-லிருந்து மேற்கொள்ளப்பட்டன. டாக்டர் வில்லியம் கார்சன் (Dr. William Carson) பாட்ரிக்கு மாரிசு (Patrick Morris)போன்றவர்கள்இதற்காகப் பெரு முயற்சிகள் மேற்கொண்டனர்.கி.பி.1855-இல்பி.எப்.லிட்டில் (P.F. Little) சான்கெண்ட் (John Kent) போன்றவர்களின் இடைவிடாத முயற்சியின் பயனாகப் பிரிட்டனின் பழமையான இந்தக் குடியேற்ற நாட்டிற்குப் பொறுப்புள்ள ஆட்சி கிடைத்தது.

முதல் உலகப் போரின் போது ஆயிரக்கணக்கான நியூபவுண்டுலாந்து கடற்படை வீரர்கள் போரில் ஈடு

பட்டனர். போருக்குப் பின் வந்த ஆண்டுகளில் இப் பகுதிக்கு உள்நாட்டு உரிமை சில (Dominion Status) வழங்கப்பட்டன. இடையில் பலமாறுதல்கள் ஏற் பட்டு 1949-ஆம் ஆண்டு பிரிட்டிசு வட அமெரிக்கச் சட்டத்தின் மூலம்அதே ஆண்டு மார்ச்சுத் திங்கள் கனடாவின் பத்தாவது உறுப்பு மாநிலமாகச் சேர்ந் தது.

நியூபவுண்டுலாந்தின் தலைநகர் புனிதசான் (St. John). முக்கிய ஏற்றுமதிப்பொருளாகச் சுறாமீன் விளங்குகிறது. இதைத் தவிர இரும்பு, துத்தநாகம், செம்பு, புளூரோசுபார் (Flurospar) போன்ற தாதுப் பொருட்களும் ஏற்றுமதியாகின்றன.

மார்கோனி (Gugliel Marconi) 1901-இல்கம்பி யில்லாச் செய்தி முறையின் மூலம் (Wireless singal) இங்கிலாந்தின் கார்ன்வாலிலிருந்து தலைநகரான புனித சானில் உள்ள சிக்னல் இல் என்னுமிடத்திற்கு முதல் செய்தியை அனுப்பினார். எஸ்.அ.

**நியூபிரன்சுவிக்கு**: அட்லாண்டிக்குக் கடற்கரை யோரத்தில் அமைந்துள்ளகனடாவின் மாநிலங்களுள் ஒன்று நியூபிரன்சுவிக்கு. கனடா கூட்டாட்சி கி.பி. 1867-இல்உருவாகிய போது அதன் பகுதியாக இருந்த நான்கு ‘மாநிலங்களுள் ஒன்றுநியூபிரான்சுவிக்கு(New Brunswick). இதற்கு அமெரிக்க நாட்டின் எல்லையில் அமைந்துள்ள மெயின் மாநிலம் (State of Maine) மேற்கு எல்லையாகவும், வடக்கில் கியூபெக்கும் (Quebec) கிழக்கில் இலாரென்சு வளைகுடாவும் (St. Lawrence) தெற்கில் பண்டி வளைகுடாவும் (Bay of Fundy) எல்லைகளாகஅமைந்துள்ளன.

ஐரோப்பியர்கள் கி.பி.18-ஆம் நூற்றாண்டு வரை இப்பகுதியைப் பற்றி அதிகம் அறிந்திருக்க வில்லை. இப்பகுதியுடன் முதன்முதலில் தொடர்பு கொண்டிருந்தவர்கள் பிரான்சுக்காரர்களேயாவர். ஆரம்ப காலத்தில் நியூபிரன்சுவிக் அகேடியா என்பது பிரான்சுக்குடியேற்றத்தின் ஒருபகுதியாகவே அறியப் படுகிறது. நோவா இசுகோசியா (Nova Scotia ) அகேடியா, நியூபிரன்சுவிக்கு உள்ளிட்ட இப்பகுதி சாக்சு கார்டியர் (Jaques Cartier) என்பவரால் கி.பி1534-இல் கண்டுபிடிக்கப்பட்டது. இப்பகுதியில் முதல் குடியேற்றம் 1904-இல் சிராயிக்சு (St. Sroix) நதிக்கரையில் ஏற்படுத்தப்பட்டது. நோவா இசுகோ சியா வரை பிரிட்டிசு குடியேற்றம் பரவியதும் பிரான்சுக்காரர்களுக்கும், ஆங்கிலேயர்களுக்கு மிடை யில் ஏற்பட்ட போட்டிகளின் விளைவாகப் பிரெஞ்சு மொழி பேசிய அகேடிய மக்கள் இப்பகுதியிலிருந்து வெளியேற்றப்பட்டனர். உட்ரெக்டு உடன்படிக்கை யின்படி இப்பகுதி பிரிட்டனுக்கே அளிக்கப்பட்டது. நோவா இசுகோசியாவிலிருந்துகி பி.1784-இல்பிரிக்கப் பட்டு நியூபிரன்சுவிக்குத் தனிமாநிலமாகியது.

நெப்போலியனுடைய போர்களின் விளைவாக அதிக எண்ணிக்கையில் இங்கு மக்கள் குடியேற ஆரம் பித்தனர். கி.பி. 1842-இல் ஏற்பட்ட ஆசுபர்டன் உடன்படிக்கை (Ashburton treaty) அமெரிக்காவு டன்உள்ள எல்லைத்தகராறைத்தீர்த்தது. அமெரிக்க சுதந்திரப் போரின்போது தளபதி வாசிங்டன் இங்கி ருந்து ஆரம்பித்த போராட்டம் பின்னர் யார்க் டவுனில் (York Town) வெற்றியாக அமைந்தது. நியூபிரன்சுவிக்கு என்ற பெயர் இங்கிலாந்து அரச வமிசத்தினர் (Hanover) நினைவாக இடப்பட்ட தாகும்.

இப்பகுதியில் நிலவும் தட்பவெப்ப நிலை காடு களின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாக உள்ளது. இது அதிக அளவு ஆறுகளையும், நீர்வீழ்ச்சிகளை யும், ஓடைகளையும் கொண்டதாகவும் உள்ளது. இதனுடைய தலைநகராக கி.பி. 1785 - இலிருந்து பிரடெரிக்டன் (Fredericton) உள்ளது. இங்கு விளை யும் முக்கியப் பொருள்கள் உருளை, ஓட்சு, பார்லி போன்றவையாகும். மீன்பிடித்தல் இப்பகுதி மக்களின் முக்கியத் தொழிலாக உள்ளது. காகித உற்பத்திக்குத் தேவையான மூலப் பொருள் அதிக அளவில் இங்கே கிடைக்கிறது. எஸ்.அ.

**நியூபிரிட்டன் தீவு**: பசிபிக்கு மாக்கடலில் தென்மேற்குப் பகுதியில் உள்ள ஓர் எரிமலைத்தீவுக்கு நியூ பிரிட்டன் (New Britain) என்று பெயர். இதன் பரப்பு 37,815 ச.கி.மீ. இதுவே பிசுமார்க்குத் தீவுக் கூட்டத்தின் (Bismarck Archipelago) மிகப்பெரிய தீவாகும். இது பாபுவா நியூகினியின் (Papua New) (Guinea) ஒரு பகுதி. மலைகள் அடர்ந்த இத்தீவில் பல எரிமலைகள் உள்ளன. வெந்நீர் ஊற்றுக்கள் இங்கு உண்டு. 2,135 மீட்டருக்கு மேல் உயரமுள்ள பல சிகரங்களும் இங்கு உள்ளன.

இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள் களில் முக்கியமாக உள்ளது கொப்பரைத் தேங்காய். செம்பு, தங்கம், இரும்பு, நிலக்கரி முதலிய உலோகங் களும் இங்கு எடுக்கப்படுகின்றன.

இத்தீவை முதலில் கண்டுபிடித்தவர் கி.பி.1700 -இல் இங்குப் போந்த வில்லியம் தாம்பியர் (William Dampier) என்னும் ஆங்கிலேயப் புதுநில ஆய்வாள ராவர். நியூபிரிட்டன் கி.பி.1884-இல் செருமானிய நியூகினியின் ஒரு பகுதியாயிற்று. முதலாம் உலகப் போருக்குப் பிறகு 1920-இல் சருவதேச சங்கத்தின் மேற்பார்வையின்கீழ் ஆசுத்திரேலியாவின் தலை மைக்கு உட்படுத்தப் பெற்றது (Mandated to

Australia). சருவதேச சங்கத்தின் மறைவுக்குப்பின், 1947 – இல் ஐ.நா. சபை இதன் பொறுப்பை ஏற்றுக் கொண்டது.

**நியூபிரிட்டன்** (2 நகரம்) அமெரிக்காவில் கனெக்டிகட்டு மாநிலத்தில் உள்ள தொழில் நகரம். மாநிலத்தின் நடுப்பகுதியில் உள்ள இந்நகரம் கி.பி.1686 – இல் குடியேறறத்தைப் பெற்றது. தகரக் கடைகளும், பித்தளை வேலைத் தொழிலகங்களும் இங்கு உள்ளன. இங்கு உள்ள நகரப் பொது மண்டபம் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். பிரடெரிக்-குலா ஆமுசுடட்டு(Frederick Law Olmsted) என்பாரால் திட்டமிடப்பட்டு அமைந்துள்ள பூங்காவும் காணத் தக்கது. இந்நகரின் மக்கள்தொகை 73,840 (1980).

தெ.பா.

*நியூபோர்ட்டு (நகரங்கள்)*: இப்பெயரில் இங்கிலாந்தில் ஒருநகரமும், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சில நகரங்களும் உள்ளன.

**நியூபோர்ட்டு**: இங்கிலாந்தில், வேல்சில் (Wales), நியூபோர்ட்டு (New Port) என்னும் நகரம் உசுக்கு (Usk) ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. மான்மவுத்சயரில் (Monmouthshire) உள்ள இது இலண்டன் மாநகருக்கு 214 கி.மீ. தொலைவிலும், செவரன் (Severan) ஆற்றிலிருந்து 8 கி.மீ. தொலைவிலும் இருக்கின்றது. இதன் மக்கள்தொகை 129,500 (1985).

இங்குள்ள துறைமுகம் 126 ஏக்கர் நிலப்பரப்புக் கொண்டது. இரும்பு, எஃகு, நிலக்கரி ஆகியவை இதன் மூலம் ஏற்றுமதியாகின்றன. இது 1970-இல் புதுப்பிக்கப்பட்டது.

இங்கு கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட கோட்டை ஒன்றும், புனித ஊலோசு தேவாலயமும் (Church of St. Woollos) பழைய நினைவுச் சின்னங்களாக உள்ளன. புதிய கட்டடங்களுள் நகர மன்றம், அரும் பொருட் காட்சியகம், கலைக்கூடம் தொழில் நுணுக்கப் பள்ளி ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

**நியூபோர்ட்டு[2]** அமெரிக்க ஐக்கிய நாடுகளில், கெண்டக்கி (Kentucky) மாநிலத்தில் காம்பெல் (Campbell) மாவட்டத்தில் இலிக்கிங்கு (Licking) ஓகையோ (Ohio) ஆறுகள் கூடுமிடத்தில் இந் நகரம் உள்ளது. இது உலூயிவில்லி (Louisville), நாசுவில்லி (Nashville) இருப்புப்பாதை, செசேபிக்கு (Chesapeake) ஓகையோ இருப்புப்பாதை ஆகியவற்றில் அமைந்துள்ளது. இதன் எதிர்ப் புறத்தில் ஓகையோ ஆற்றங்கரையில் சின்சினாடி (Cincinnati) நகரும் இலிக்கிங்கு ஆற்றங்கரையில் கோவிங்டன் (Covington), நகரும் உள்ளன. இதன் பரப்பளவு ஏறத்தாழ 5 ச.கி.மீ. மக்கள்தொகை 30,070 (1960).

இங்கிருந்து புகையிலை. பழங்கள், கால்நடைகள் ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இந்நகரில் இரும்பு, எஃகு உலோகங்கள், ஊர்திகளுக்கான பகுதிகள், உடைகள், ஓடுகள், விளையாட்டுப் பொம்மைகள் ஆகியன செய்யப்படுகின்றன.

இந்நகரம் கி.பி. 1791-இல் தோற்றுவிக்கப்பட்டு, கி.பி. 1795-இல் மாவட்டத் தலைநகரமாகி, கி.பி. 1835-இல் ஒரு நகரமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**நியூபோர்ட்டு[3]**: இது ஐக்கிய அமெரிக்க நாடுகளிலுள்ள உரோடுத் (Rhode) தீவில், நியூபோர்ட்டு மாவட்டத்தின் தலைநகரமாக உள்ளது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள பழமையான குடியேற்றங்களுள் இதுவும் ஒன்று. ஒரு காலத்தில் இது சிறந்த துறைமுகமாகவும், கப்பல் கட்டும் தளமாகவும் விளங்கியது. இப்பொழுது அமெரிக்கச் செல்வர்கள் வாழக் கூடிய கோடைக்காலத் தலமாக உள்ளது. இதன் மக்கள் தொகை 29,259 (1980).

இங்குள்ள திரினிட்டி கோயில் (Trinity Church, கி.பி.1726) அரசு மாளிகை(The State House, கி.பி.1739) நகர மன்றம் (The City Hall, 1760), தூரோ யூதர் கோயில் (The Touro Synagogue, கி.பி.1763)ஆகியவை மிகப் பழைய கட்டடங்கள். தூரோ கோயில் அமெரிக்காவிலேயே மிகப் பழமையான யூதர் கோயிலாகும். இப்பொழுது கப்பற்படைத் தளமாக விளங்கும் இங்கு அப்படையினருக்கான பல்வேறு பயிற்சிப் பள்ளிகள் உள்ளன. இங்குப்படகுகள் கட்டுவது, மின்னியல் கருவிகள் செய்து மீன்பிடிப்பது ஆகியவை முக்கியத்தொழில்களாகும்.

இந்நகரம் கி.பி.1639-இல் வில்லியம் கோடிங்டன் (William Coddington) என்பவரால் ஏற்படுத்தப்பட்டது. குவேக்கர்கள் (Quakers) கி.பி. 1657-இல் இங்கு வந்து குடியேறினர். இது கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாணிகத்தில் சிறந்து விளங்கியது. ஆனால், விடுதலைப் போருக்குப் பின்னர் அசசிறப்பினை இழந்தது. இது கி.பி. 1853-இல் நகரமாக ஆயிற்று.

**நியூபோர்ட்டு[4]** அமெரிக்க ஐக்கிய நாடுகளில், வெர்மாண்டு (Vermont) மாநிலத்தில், ஆர்லியன்சு (Orleans) மாவட்டத்தின் தலைநகர் இது. மெம்பிரிமகாகு (Memphremagog) ஏரியின் தென்முனையில் அமைந்துள்ளது. கோடைக்காலத்தில் இங்கிருந்து மாகாக்கு (Magog), நியூபெக்கிலுள்ள புரோவின்சு (Province), இப்பகுதியிலுள்ள பிற இடங்கள் ஆகியவற்றிற்கு நீராவிக் கப்பல் போக்குவரத்து உள்ளது. மக்கள்தொகை 4664. இங்குக் கருங்கல் வெட்டி எடுக்கப்படுகிறது. இது ஓர் உல்லாசப் பயண, விடுமுறை

இடமாகும். கூட்டாட்சிக் கட்டடம், குட்ரிச்சு நினைவு நூலகம் (Goodrich Memorial Library) ஆகியவை குறிப்பிடத்தக்க கட்டடங்களாகும்.

முதன்முதலில் இங்கு கி.பி. 1793-இல் குடியேற்றம் ஏற்படுத்தப்பட்டு, இது தங்கன்சுபரோ(Duncansboro) எனப்பட்டது. பின்னர் கி.பி. 1816-இல் நியூபோர்ட்டு என்னும் பெயர் பெற்றது.

**நியூ போர்ட்டு[5]**: இது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அரகன்சாசு (Arakansas) மாநிலத்தில் சாக்சன் மாவட்டத்தின் தலைநகர். மக்கள் தொகை 7,725.

வேளாண்மையில் சிறந்த இங்கு நெல்லும், பருத்தியும் விளைவிக்கப்படுகின்றன. கால்நடைகள் வளர்க்கப்படுகின்றன. சிறந்த வாணிக மையமாகவும் உள்ளது. பழங்களைப் பக்குவப்படுத்துவது, பருத்தி விளைவிப்பது, எண்ணெய் எடுப்பது ஆகியவை முக்கிய தொழில்கள். அண்மைக் காலத்தில் உலோகக் குழாய்கள், கண்ணாடி இழைகள், மரப்பெட்டிகள், காலணிகள் ஆகியவற்றைச் செய்யும் தொழிற்சாலைகளும், அரிசி ஆலைகளும் ஏற்பட்டுள்ளன.

**நியூபோர்ட்டு[6]**: இந்நகரமானது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நியூகேம்சயருக்குத் (New Hampshire) தென்மேற்கில், சுல்லிவன் (Sullivan) மாவட்டத்தில், சுகர் (Sugar) ஆற்றங்கரையில், அமைந்துள்ளது. மக்கள்தொகை 5,899.

இங்குக் கம்பளப் பொருட்கள், ஆடைகள், காலணிகள் ஆகியவை செய்யப்படுகின்றன. இயற்கை அழகும், நல்ல தட்பவெப்ப நிலையும் உள்ள இது சிறந்த கோடைக்கால வாழ்விடமாகத் திகழ்கின்றது. இப்பகுதியில் கி.பி. 1765-இல் மக்கள் குடியேறத் தொடங்கினர்.

சி.இரெ.

**நியூபோல்டு சர் என்றி** (கி.பி. 1862): நியூபோல்டு சர் என்றி நன்கு படித்துணர்ந்த கல்வியிற் சிறந்த மேதை. இவர் கி.பி. 1862-இல் பிறந்தார். விரி கடலைப் பற்றிய மையக்கருத்துகளைக் கொண்ட, நாட்டுப் பற்றைத் தூண்டும் வகையில் அமைந்த பாடல்களைக் காணும்போது, கவிஞராகவும் ஆய்வாளராகவும் உள்ள என்றி நியூபோல்டை இரட்பார்டு கிப்ளில் என்ற சிறப்பு மிகுந்த எழுத்தாளருக்கு அடுத்த நிலையில் இவர் கருதக் கூடியவராக உள்ளார். இவர் பாடல்கள் எண்ணிக்கையில் அதிகமில்லையாயினும், படிப்போர் மனத்தைக் கவரக்கூடியனவாக உள்ளன. உயர்படிப்பில் வித்தகராக இல்லையானாலும் பணக்காரப் பிள்ளைகள் படிக்கும் பெரிய புகழ் பெற்ற பொதுப்பள்ளிப் படிப்புப் பெற்றவர். பெற்றோரைப் போல எழுதுவதும், கப்பலில், போர்க்களத்தில் பணி புரியாவிடினும், அவ்வனுபவங்களைப் பெற்றவரைப் போல் எழுதுவதும் இவரியல்பு. பிறருக்கு நீதியைக் கற்பிக்கும் நோக்கமில்லாதது போல் இவர் எழுத்துத் தோற்றமளித்தாலும், கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்பவற்றைச் சொல்லாமற் சொல்லும் ஆற்றல் மிகுந்தது. தொட்டதெல்லாம் பொன்னாகும் திறன் பெற்றவை இவர்தம் பாடல்கள்.

இவர் பல புதினங்களையும், கவிதைத் தொகுப்புகளையும் உருவாக்கியுள்ளார். 'எதிரியிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டது' (கி.பி. 1892) என்பதே இவருடைய முதல் புதினம் ஆகும். இவருடைய கவிதைகள் பெரும்பாலும் விரிந்துபரந்து கிடக்கும் கடலைப் பற்றிய வருணனைச் சிறப்புப் பெற்றவையாக உள்ளன. 'கடலின் கீதங்கள்' 'இலிண்ட்டு' 'பறவையின்கூடு' போன்றவை சிறப்புமிக்க கவிதைத் தொகுப்புகளாகும். கட்டுரைகள், நயம்பாராட்டுதல்கள், கடல் வழி வரலாறுகள் போன்றனவும் இவர்தம் சிறப்புப் படைப்புகளாகும். முதல் உலகப்போர் நடைபெற்ற காலத்தில் கடல் வழியில் எவ்வாறு படைகளைப் பயன்படுத்தி வெற்றி காணலாம் என்ற செயல்முறை விளக்கங்கள் கொண்ட பயனுள்ள புத்தகமும் போர்க்களக் காட்சிகளையும் கதைகளையும் நேரில் கண்டது போல், கேட்டது போல் விவரிக்கும் புத்தகமும் 'எனது காலத்தில் இருந்த உலகு' என்னும் புத்தகமும் இவருடைய மிகச் சிறப்பான படைப்புகளாகும்.

சர் என்றி நியூபோல்டு, முன்மாதிரியாக எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய கவிஞர்களுள் ஒருவர். ஒரு சிறந்த கவிஞரின் மனம் எவ்வாறு தொழிலில் ஈடுபாடு கொள்ளுமோ அவ்வாறு முழு மனத்துடன் ஈடுபட்டுத் தம் படைப்புகளைப் படைத்தார். மேடைப் பேச்சிலோ, மடாலயக் கொள்கைப் பரப்புக் கூடுகளிலோ தம்மை அடைத்துக் கொள்ளாது, ஒரு கவிஞன் எவ்வாறு வெற்றிபெற முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாய்த் திகழ்ந்தவர்.

ஆர்.வெ.

**நியூமன் சான் என்றி**: சான் என்றி நியூமன் (Newman, John Henry கி.பி. 1801-1890) ஈர்லிங் பள்ளி, திரினிட்டி கல்லூரி, ஆக்சு போர்டு பல்கலைக் கழகம் முதலியவற்றில் கற்றுத் தேர்ந்து 'ஆரியல் தகையாளர்' (Fellow of Oriel) என்னும் பட்டம் பெற்றார். ஆக்சுபோர்டில் 1928-இல் புனிதமேரியார் கோயிலில் பாதிரியார் (Vicarage) பொறுப்பினை ஏற்றார். ஒவ்வொரு ஞாயிறும் காலையில் நடக்கும் நான்கு மணி வழிபாட்டில் அவர் நிகழ்த்திய சமயச் சொற்பொழிவினால் புகழ்பெற்றார்.

பிரவுடு (Froude) என்பாருடன் கி.பி. 1832-இல் தென் ஐரோப்பிய நாடுகட்குச் சென்று வந்து 'அப்போத்தலர் உணர்வு' (Lyra Apostalica) என்னும் தம்



நியூமன் சான் என்றி

கட்டுரைகளைத் தொகுத்தார். அவ்வாண்டில், வில்லியம் பால்மருடனும் பிரவுடுடனும் சேர்ந்து அப்போசுதலர் வாரிசு உரிமைக்காகவும், வழிபாட்டு நூல் ஒருமைப்பாட்டுக்காகவும் (Doctrine of Apostolic succession and Integrity of Prayer Book) போராடினார். மெதுவாகக்கத்தோலிக்கச்சமயத்தை நோக்கிச் சென்றார். இவர் 'இலிட்டில்மோர்' என்னுமிடத்தில் கி.பி. 1842-இல் ஓய்வு பெற்றார். இவர் பிரம்மச்சரிய விரதத்தை ஆதரித்துப் பேசினார்; புனித மேரியார் கோயிலில் இருந்து விலகி கி.பி. 1845-இல் உரோம் திருச்சபையில் சேர்ந்துகொண்டார். இந்த நிகழ்ச்சி அவருடன் இருந்தவர்களைத்திடுக்கிடச்செய்தது.ஆக்சுபோர்டு வாழ்வில் அவர் தனிமைப்படுத்தப்பட்டார். இவர் கி.பி.1846-இல் உரோம் நகர் சென்றார்;கி.பி. 1847-இல்அங்கிருந்து திரும்பி வந்து பர்மிங்காம் நகரில் தொடர்ப் பேருரையினை நிகழ்த்தினார்; பல்கலைக் கழகக் கல்வி பற்றிய பல சொற்பொழிவுகளை கி.பி. 1854-1858-இல் நிகழ்த்தி நூலாக வெளியிட்டார்.

பல்கலைக் கழகம் பற்றிய கருத்து (The idea of University) கி.பி. 1852-இல்அவரால் விளக்கப் பெற்றது. ஆராய்ச்சி செய்வதைக் காட்டிலும் பாடம் கற்பித்தலே பல்கலைக் கழகத்தின் பணி என்றும்,பல்கலைக் கழகத்தில் பலவகை அறிவுகளைப் போட்டுக் குழப்புவதைக் காட்டிலும் மாணவர் மனத்தைப் பக்குவப்படுத்துவதே நோக்கமாக இருத்தல் வேண்டும் என்றும் எடுத்துரைத்தார்.மறைநூல் பாட போதனைகளையும் குருகுல முறையினையும் வலியுறுத்தினார்.

கிங்சுலி (Kingsley) என்பாருக்கு விடைதரும் வகையில் 'அபாலசியா பிரோ விட்டா சுவா' (Apologia provita Suo) என்னும் தொகுதி நூலை வெளியிட்டார். அத்தொகுதி நூல் அவர்தம் ஆன்மிக வரலாற்றை வெளிப்படுத்துவதாக இருந்தது; அது மிகுந்த விழிப்புடனும் தற்காப்புடனும் எழுதப் பெற்றிருந்தது; அது இப்போது சீரிய இலக்கியப் படைப்பு என்று கருதப்படுகிறது.

'செரோன்ட்டியசின் கனவு' (The Dream of Gerontius) என்னும் அவர்தம் நூல் கி.பி. 1866-இல் வெளிவந்தது; இறப்பில் விடுபட்ட உயிரின் காட்சியினையும் தேவதைகள் மற்றும் பேய்களின் குரலைப் பாட்டுக்களையும் கொண்டு விளங்குகின்றது அந்த நூல்.

'சம்மதத்தின் இலக்கணம்' (The grammer of Assent) என்னும் நூலைக் கி.பி. 1870-இல் வெளியிட்டார். மக்கள் ஓர் உறுதிப்பாட்டினைத் தருக்கத்தின் வாயிலாகப் பெறவியலாது. ஆனால் உள்ளுணர்வின் வழியே பெறுகின்றனர். உண்மையான உலகம் தருக்க முறையில் ஆனதன்று; தருக்கத்தின் முகப்பு (Premises of logic) உண்மைகள் அல்ல, வெறும் கருதுகோள் மட்டுமே என்று அந்தநூலில் விளக்கியுள்ளார். நியூமன் கி.பி. 1879-இல் ஒருதிருத்தூதராகப் பதவி அமர்த்தப் பெற்றார்.

'இழப்பும் பேறும்' (Loss and gain) என்னும் புதினத்தை ஆசிரியர் பெயரின்றி வெளியிட்டார். 'சார்லசு ரெடிங்கு' எனும் பட்டதாரி இளைஞன் ஒருவன் படிப்படியாக உரோமன் கத்தோலிக்க மதம் நோக்கிச் செல்வதாக எழுதியுள்ளார் ஆசிரியர். கி.பி. 1856-இல் காலிசுடா (Callista) என்னும் சுவை குன்றிய ஒரு புதினத்தை வெளியிட்டார். மதம் மாற்றம் செய்து கொண்ட கிறித்தவர் ஒருவர் பட்ட துன்பங்களையும் செய்த தியாகங்களையும் விளக்குவதாக உள்ளது அந்த நூல்.

நியூமன் கார்டினல் சூழ்நிலைகளின் தாக்குதலாலும் கடமைப்பாட்டின் உந்துதல்களாலும் தம் நூல்களை எழுதினதாகவும், நூல் எழுதுவதென்பது ஒரு மகவைப் பெறுவது போன்றுகடினமானதாகும்என்றும் குறிப்பிட்டுள்ளார். பொன்.பா.

**நியூமாட்ரிடு**: இது அமெரிக்காவில் மிசாவுரி மாநிலத்தின் தென் கிழக்குப் பகுதியில், மிசிசிபி ஆற்றங் கரையில் உள்ள நகரம். நியூமாட்ரிடின் (New Madrid) மக்கள் தொகை 2719 (1970). இந்நகரம் கி.பி. 1789-இல் இசுபானிய அரசு (Spanish) வழங்கிய நிலத்தில் நிறுவப்பட்டது. பருத்தி விளைச்சல் இங்கு மிகுதி. வேளாண்மைச் செழிப்பும் குறிப்பிடத்தக்கது. அமெரிக்க உள்நாட்டுப் போரின்போது, தெற்குக் கூட்டமைப்பின் ஆதிக்கத்தின் கீழ் இருந்த

இந்நகரை, ஒன்றியத துருப்புகள் (Union troops) கைப்பற்றிக் கொண்டன. தெ.பா.

*நியூமெக்சிகோ:* ஐக்கிய அமெரிக்க மாநிலங் களுள் ஒன்று நியூமெக்சிகோ (New Mexico) மாநிலம். இது அமெரிக்காவின் தென் மேற்குப் பகுதியில் உள் ளது. இது வடக்கில் கொலராடோ மாநிலத்தாலும் கிழக்கில் ஓக்லகாமா தெக்சாசு மாநிலங்களாலும், தெற்கில் தெக்சாசு, மெக்சிகோ பகுதிகளாலும் மேற் கில் அரிசோனாவினாலும் சூழப்பட்டுள்ளது. இதன் பரப்பு, 315,115 ச.கி.மீ. இரியோ கிராண்டு (Rio Grande) ஆறு இதன் குறுக்கே ஓடுகிறது. இப்பகுதி கடல் மட்டத்துக்கு ஏறத்தாழ 1738.5 மீட்டர் உயரத் தில் அமைந்துள்ளது. இராக்கி மலைத்தொடரின் சில பகுதிகள் இம்மாநிலத்தில் உள்ளன. இயற்கை அழகு நிரம்பிய இம்மாநிலத்தின் பல இடங்களும் காடுகளும் தேசிய சின்னங்களும் நடுவண் அரசின் கண்காணிப்பின் கீழ் உள்ளன. இதன் தட்பவெப்ப நிலை மக்களை மிகவும் கவரத்தக்கதாக இருக்கிறது. சுற்றுலாப் பயணிகள் இங்கு மிகுதியாக வந்து போகின்றனர். இம் மாநிலத்தின் தலைநகர் சாந்தா பே (Santa Fe). மாநிலம், 32 வட்டங்களாகப் (Counties) பிரிக்கப்பட் டிருக்கிறது. ஆடு, மாடு மேய்த்தல், வேளாண்மை, பருத்திப் பயிரிடல், பால் பண்ணைத் தொழில் முத லியன இங்கே வளர்ச்சியடைந்துள்ளன. அண்மைக் காலத்தில், அணு சக்தி நிலையங்களும் இராணுவ நிறுவனங்களும் இப்பகுதியில் தோன்றியிருப்பதால், இம்மாநிலத்தின் பொருளாதார வளர்ச்சி மிகவும் குறிப்பிடத் தக்கவகையில் முன்னேறியுள்ளது. கனி வளங்களும் இங்கு மிகுதி. விண்மம்(Uranium), மங்க னம் (Manganese), மரஉப்பு(Potash), உப்புப் பளிங்குப் பாறை வகைகள், செம்பு, இயற்கை வாயு, கெட்டி யான வெள்ளை உலோகத் தனிம வகைகள் (Beryllium), தகரம், பாறை எண்ணெய், நிலக்கரி, வெள்ளி, பேரோசனை, இரத்தினக் கற்கள் (turquoise) முதலிய கனிப் பொருள்கள் இங்கு மிகுதியாகக் கிடைக்கின்றன. மாநிலத்தில் நூறில் ஒரு பங்கு காடாக உள்ளது. தேவதாரு மரங்கள் இங்கு மிகுதி.

**வரலாறு:** ஐரோப்பியர் இப் பகுதிக்குச் செல் வதற்கு முன்னரே, சிறப்பான நாகரிகம் இங்கு நிலவி யதற்குச் சான்றுகள் உள. முதன் முதலாக ஐரோப் பியக் குடியேற்றம், கி.பி. 1598-இல் இங்கு ஏற்பட் டது. இசுபானிய (Spain) நாட்டின் ஆதிக்கம் இங்கு கி.பி. 1821 வரை நிலவியது. அமெரிக்காவுக்கும் மெக்சிகோவுக்குமிடையே கி.பி. 1848-இல் நடை பெற்ற போரின் விளைவாக நியூமெக்சிகோ, அமெ ரிக்காவிற்குக் கிடைத்தது. இப்பகுதி, கி.பி. 1850-இல் நடுவண் ஆட்சிக்கு உட்பட்ட ஒரு (Territory) மாநில மாக்கப்பட்டது. பிறகு 1912-இல் நியூமெக்சிகோ, ஒரு மாநிலமாயிற்று. இதன் மக்கள் தொகை 1302,894 (1980).

**முக்கிய நகரங்கள்:** அல்புகர்க்கு (Albuquerque), உரோசுவெல் (Rosewell), பார்மிங்டன் (Farmington) முதலியன. தெ.பா.

*நியூயார்க்கு* அமெரிக்க நாட்டில் நியூயார்க்கு (New York) மாநிலத்தில் உள்ளது. இது அமெரிக்கா விலேயே மிகப் பெரிய நகரமாகவும் உலகின் மிகப் பெரிய துறைமுகங்களுள் ஒன்றாகவும் விளங்குகிறது. உலகின் மிகப் பெரிய நகரங்களில் நியூயார்க்கு நகரம் ஆறாம் இடத்தை வகிக்கிறது. இது மிகப் பெரிய வணிக மையமாகவும் பண்பாட்டு இடமாகவும் தொழிற்கூடங்கள் நிறைந்த நகரமாகவும் விளங்கு கிறது. உலக நாடுகளின் பொருளாதாரத்தை நிருண யிக்கும் நகரமாகவும் இது திகழ்கிறது.

இந்நகரம் ஒரு முந்நீரக நகரமாகும். இது அட்சன் (Hudson), ஈசுட்டு (East) ஆகிய இரு ஆறுகள் சந்திக் கும் இடத்தில் அமைந்துள்ளது. இதன் பரப்பளவு 3,996 ச.கி.மீ. சனவரி முதல் சூலை முடிய மிதமான தட்பவெப்ப நிலையே இங்குக் காணப்படுகிறது.



நியூயார்க்கு (அமைவிடம்)

நியூயார்க்குப் பகுதியில் கி.பி.1650-ஆம் ஆண்டள வில் ஏறக்குறைய 1000 மக்களே இருந்தனர். அப் போது 18 மொழிகள் அங்குள்ளமக்களால் பேசப்பட் டன. பிறகு கல்வி, வேலைவாய்ப்பு, பண்பாடு ஆகி யனவற்றின் காரணமாகப் பெருவாரியான மக்கள் இங்கு வந்து குடியேறத் தொடங்கினர். ஐரிசு (Irish) இத்தாலியன் (Italian) யூதர் (Jewish) நீக்கிரோ (Negro) போர்ட்டோரிகன் (Puerto Rican) ஆகிய ஐந்து இன மக்கள் இந்நகரின் மக்கள்தொகையுள் 77 விழுக்காடு அளவு உள்ளனர். இதில் நீக்கிரோ இன

மக்கள் மட்டும் 21 விழுக்காடு உள்ளனர். யூத இனத்தவர் 20 விழுக்காடு உள்ளனர். இத்தாலிய முன்னோர்கள் 15 விழுக்காட்டினர். போர்ட்டோரீகன் இனத்தவர் 11விழுக்காட்டினர். இவ்வைந்து இனமக்களில் நீக்கிரோ ஏழைகளாகவும், யூதஇனத்தவர் வணிகர்களாகவும், இத்தாலியர்கள் தொழிலதிபர்களாகவும் உள்ளனர். ஐரிசு இனத்தவர் அரசியல் வாழ்க்கையிலீடுபட்டு உள்ளனர். போர்ட்டோரீகர் தொழிலாளர்களாக வாழ்ந்து வருகின்றனர். இவ்வைந்து இனத்தைத் தவிரச் சீன மக்கள், கியூபாஇனம், செருமானியர்கள் கிரேக்கர்கள் ஆகிய இனத்தவரும் உள்ளனர். நியூயார்க்கு மக்கள் தொகை 7,071,030 (1980).

பொதுக் கல்வி முறை இங்குத்தான் முதன் முதல் 900 பள்ளிகளில் தொடங்கப்பட்டது. பொதுக் கல்வி முறை மத்திய கல்வி முறையை ஒத்ததாகும். இதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட 32 நிறுவனங்கள் உள்ளன. நியூயார்க்குப்பல்கலைக் கழகம்(New York University) உலகப் புகழ் பெற்ற பல்கலைக் கழகமாகும். கொலம்பியா பல்கலைக் கழகம் (Columbia University) கி.பி. 1754-ஆம் ஆண்டுத் தொடங்கப்பட்ட மிகப் பெரிய தனியார் பல்கலைக் கழகமாகும்.

நியூயார்க்கு நகரம் தொழில்துறையில் அமெரிக்காவில் 3-ஆம் இடத்திலுள்ளது. இந்நகரில் 26,000 தொழிற்கூடங்கள் உள்ளன. இதன் மூலம் 775,000 மக்கள் வேலைவாய்ப்புப் பெறுகின்றனர். முக்கிய தொழில் அச்சு மற்றும் வெளியிடுதலும், உடை தயாரித்தலும் ஆகும். நியூநகரில் எண்ணற்ற அச்சு மற்றும் வெளியிடும் மையங்கள் உள்ளன.

வால் தெரு (Wall Street) இந்நகரின் பொருளாதாரத்தை நிருணயம் செய்கிறது. 'தினசரிச் செய்திகள்' (The Daily News) 'தி நியூயார்க்குப்போசுட்டு' (The New York Post) 'நியூயார்க்கு டைம்சு' (The New York Times) ஆகியன நியூயார்க்கு நகரில் இருந்து வெளிவரும் முக்கிய நாளிதழ்களாகும். இந் நகரில் மட்டும் 45 வானொலி நிலையங்கள் உள்ளன.

நியூயார்க்கு நகரில் நியூயார்க்குப் பொது நூலக முறை, புருக்லின் பொது நூலக முறை, கியூன் பொது நூலகமுறைஆகியமூன்றுபொது நூலக முறைகள் உள்ளன. நியூயார்க்குப் பொது நூலகம் அமெரிக்காவிலேயே மிகப் பெரிய நூலகமாகும். இந்நூலகத்தில் 9 மிலியன் நூல்கள் உள்ளன.

நியூயார்க்கு மாநகராட்சி அருங்காட்சியகம் மிகப்பெரிய அருங்காட்சியகமாகும். இதில் 350,000 வகையான கலைப் பொருள்கள் இடம் பெற்றுள்ளன. இங்குள்ள பேரரசு இராச்சியக் கட்டடம் (Empire State Building) 102அடுக்குகளைக் கொண்டதாகும். புதிய காலக் கலைப் பொருட் கண்காட்சிச் சாலை (Museum of Modern Art) என்னும் அருங் காட்சியகத்தில் புதிய ஓவியம், வரைபடம், முதலியன பார்வைக்காக வைக்கப்பட்டுள்ளன. நியூயார்க்குத் துறைமுகத்தில் உள்ள சுதந்திரா நினைவுச்சின்னம் (Statue of Liberty) உலகப் புகழ்ப் பெற்றதாகும். உலக நாடுகளின் தலைமையகம் நியூயார்க்கு நகரில் தான் உள்ளது.

நகரின் நிருவாகத்தைக் கண்காணிக்க நகரத் தந்தை (மேயர்) நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்படுகிறார். நியூயார்க்கு நகரமன்றம், நகரக்குழு, மதிப்பீட்டுக் குழு என இரு அவைகளை உடையது. நகரக்குழு தலைவர் உட்பட 43 உறுப்பினர்களைக் கொண்டது. தச்சுக்காரர்கள் கி.பி. 1613-ஆம் ஆண்டு இப்பகுதியில் முதன்முதல் குடியேறத் தொடங்கினர். அமெரிக்கச் சுதந்திரப் போருக்குப் பின்னர் கி.பி.1785-ஆம் ஆண்டு நியூயார்க்கு நகரம் அமெரிக்காவின் அப்போதைய தலைநகராக்கப்பட்டது. நகரின் பொருளாதாரம் 1966 1971-ஆண்டுகளில் ஏற்பட்ட வேலை நிறுத்தத்தின் காரணமாக மிகவும் சீர்கெட்டது. நலிவுற்ற பொருளாதாரம் மைய அரசு உதவியுடனும் புதிய வரிகள் மூலமும் சீர்செய்யப்பட்டது. சு.ஆ.

## நியூரத்து ஆட்டோ (கி.பி. 1882 – 1945):

நியூரத்து ஆட்டோ என்பவர் ஓர் ஆசுத்திரியச் சமூக சீர்திருத்தவாதி. இவர் ஒரு தத்துவ வாதியும், சுயமான மார்க்சியக் கோட்பாட்டினரும் ஆவார். இவர் நகைச்சுவைத் திறன்வாய்ந்த அறிவாளி. நியூரத்து ஆட்டோ கலை அனைத்திலும் வல்லவர் எனக் கூறலாம். ஏனெனில், இவர் பொருளாதார, கல்விச் செயல்களில் திறன் வாய்ந்த ஒரு நல்ல அமைப்பாளர். சமூகவியல், பொருளாதாரம், சமூகத் திட்டமிடுதல், கட்புலக்கல்வி அறிவியல்முறை போன்ற துறைகளில் பெரும் பணியாற்றியுள்ளார். இவர்தம் மாபெரும் பணிகளில் குறிப்பிடத்தக்கதென்று கூறுவது, எளிமைப்படுத்திய பன்னாட்டுக் குறிமொழியாகும். இவர் அறிவியல், வரலாறு, அரசியல், நீதிக்கோட்பாடு, பொருளாதார வரலாறு, புள்ளியல் கோட்பாடு போன்றவற்றிலும் நாட்டம் கொண்டிருந்தார். இவர் எல்லாத்துறை அறிவையும் பெற ஒரு நிலையான திறனைப் பெற்றிருந்தார்.

**பொருளாதாரமும் ஒப்புநோக்கு வரலாறும்:** நியூரத்து ஆட்டோ 'பழங்கால வாணிக ஈடுபாடு' என்னும் தம் முதல் ஆய்வுக் கட்டுரையை 1904-இல் வெளியிட்டார். பின்பு 1909-இல் கிரேக்க,

உரோமானியப் பொருளாதார நிலையையும் அதன் வரலாற்றையும் தம்புகழ்வாய்ந்த கட்டுரையில் வெளியிட்டார். இதனைப்பழமைப் பொருளாதாரக் கோட்பாட்டுடன்வெளியிட்டார். இவருடையவரலாற்று ஈடுபாடுபின்புஉடற்பயிற்சிக் கல்விக்குத்திரும்பியது. இவர் 1915-இல் நியூட்டன்கோட்பாடுகள், தேகார்ட்டு, எங்பிரசுநெல், பியட்டு, மால்சு ஆகியோரின் கோட்பாடுகளுடன் ஒப்புநோக்கிப் பார்த்தார். அவ்வனைத்துக் கோட்பாடுகளிலும் உள்ள பொதுமுறைகளைப் பொதுமைப்படுத்தி அவற்றை ஒப்புநோக்கினார். மேலும், அப்பொதுமைப் படுத்திய எண்ணத்திலிருந்து தான் அனைத்துவித கோட்பாடுகளும் உருவாக்கப் பட்டன என்று விளக்குகிறார். பொதுவாக அக் கோட்பாட்டின் விளக்கம் இரண்டு வகையாகப் பிரிக்கப்படுகிறது. ஒன்று அலைக் கொள்கை (Wave Theory), மற்றொன்று பொருள் துகள் கொள்கை. (Corpuscular Theory) இவை முறையான, விரிவான, துல்லியமான, தெளிவான வரலாற்று வளர்ச்சியை விளக்குகின்றன.

நியூரத்தின் அடிப்படை விளக்கமான எண்ணத்தின் பயன், சில சமயம் உருவமாகவும், சிலசமயம் அருவமாகவும் பொதுச் சமூக அறிவியல் வரலாற்று ஆசிரியர்களுக்குத் தத்துவ விளக்கத்தின் மதிப்பை விளக்குகின்றது.

நியூரத்து 1916-ஆம் ஆண்டு வகைப்படுத்தல் பற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளார். பின்பு1931-இலும் 1944-இலும் தம்முடைய சிறிய புத்தகங்களில் இதை விரிவாக விளக்கியுள்ளார். அனுமானத்தின் வகைப்பாடே கோட்பாடுகளின் ஒப்புநோக்கு ஆய்வின் அடிப்படை முறையாகும். இதுவே, பல்வேறு பண்பாட்டு நிலைகளின் முற்போக்கு விளக்கத்தை அறியவுதவும் சரியான துணைக்கருவியாகும்.

**பொருளாதாரத் திட்டம், போர், பொதுவுடைமை:** இவர் 1919-இல் பவேரிய சமூக சனநாயக அரசின் மையத் திட்டமிடும் அலுவலகத்தில் பணியாற்றினார். இவர்தாம் சோவியத்துக் குடியரசின் குறுகிய கால ஆட்சியாளர். இவர் ஆட்சிக்குழுவில் பணிசெய்த போதும் எவ்விதக் கட்சியையும் சேர்ந்தவர் அல்லர். பொதுவுடைமை ஆட்சி வீழ்ச்சி அடைந்தபொழுது இவர் சிறைவைக்கப்பட்டார். 1920-இல் இவர் சிறையிலிருந்து விடுதலை அடைந்தவுடன் வியன்னாவுக்குச் சென்றார். அங்குத் தாம் ஏற்கெனவே செய்துவந்த பணியை மீண்டும் ஏற்றுக் கொண்டார். வியன்னாவில் சமூகவாதியின் அரசுக் கல்வி, நீதிநெறி, மதச்சீர் திருத்தம், தனி மனித உரிமை போன்றவற்றிற்காகப் பாடுபட்டார்.

மார்க்சியக் கொள்கை அடிப்படையில்முற்போக்குப் பொருளாதாரத்திற்கும், மையத் திட்டமிடுதலுக்கும் சோசப்பு பாப்பர்லுக்கினுடன் சொல்லப்பட்ட சமூகச் சீர்திருத்தவாதியருள் இவரும் ஒருவர். போட்டியான முதலாளித்துவத்தின் கட்டளையின்படியும், நிலைபெற்ற பண்பாட்டின் அடிப்படையிலும் தொழிலாளர்களின் இன உணர்வு வளர்ச்சி பெறுகிறது என்பதிலும், செல்வத்தைச் சம அளவு எல்லோருக்கும் பகிர்ந்தளித்தல் என்பதிலும் சற்றுத்தெளிவற்ற கருத்து இவருக்கு இருந்தது. இருந்தபோதிலும் சமூகப் பொருளாதாரத்துறையிலும் படித்த, முற்போக்குடைய, அறிவோடு சார்ந்த தொழிலாளர்களின் எல்லாவிதச் சிக்கல்களிலும், அவர்களின் செயல்களின் அடிப்படையிலும், நீதிநெறி அடிப்படையிலும் இவர் தம்முடைய அனுமானத்தை அமைத்தார்.

மாற்றி அமைக்கப்படும் வாழ்க்கையமைப்பையும், அதில் ஒரு மனிதன் தன் தனி வாழ்க்கையில் அமைதியான கூட்டுறவான எதிர் காலத்தை உணரலாம் என்பதையும் தம் நூலைப் படிப்பவர்களுக்குக் கற்பிக்க முனைந்தார். ஆனால், தவறாகப் பயன்படுத்தும் சமூகத்தில் நல்ல தனிமனித உணர்வும் நல்ல உள் வாழ்க்கையும், முற்போக்கான சமுதாயப் பொருளாதாரத்திலும், சமுதாய மாற்றத்திலும் தெள்ளிய நிலை அடையப்பெறுவதற்குத் (Soberrealization) தடையாக மாறுகின்றன.

**அனுபவ அடிப்படையிலான சமுதாயவியல்:** நியூரத்து 1930 களிலும், 1940 களின் தொடக்கத்திலும் பல்வேறுபட்ட சிறிய ஆராய்ச்சிக் கட்டுரைகளையே வெளியிட்டுள்ளார். கீழ்வருவன அவற்றுள் குறிப்பிடத்தக்கன. 'சமூகக் கோட்பாடு அதன் சிக்கல் அவற்றின் மேல் உளவியலாளரின் மறுகருத்து', 'சமூக வரலாற்றுக் கண்டுபிடிப்புகள்' 'வாழ்க்கை நிலைக் கண்டுபிடிப்பு' 'வாழ்க்கை நிலையில் உள்ள பகுத்தறிவுக் கணக்கீட்டு முறையின் சிக்கல்கள்'.

சமூகவியலை அறிவியல் அமைப்பாக ஆக்குவதற்கு நியூரத்து உளவியல் மொழியைப் பயன்படுத்தினார். ஏனெனில் அம்மொழி தான் நேரம், பொருள், செல்வம் இவைபற்றி விளக்கம் அளிக்கிறது. இவர், இவ்வகைச் சமூகப் பழக்க வழக்கங்கள் மார்க்சின் வரலாற்றுப் பொருள்முதல் வாதத்தை அனுபவ உண்மையாக ஆக்குவதுடன், மனித இனம், தெருக்கள், சமுதாயப் புத்தகம், சிறை, பாவனை ஆகியவற்றை உளவியலார் கோட்பாட்டு முறைப்படிப் பல்வேறு பிரிவுகளாகப் பிரிக்கமுடியும் என்றும் நம்பினார். மகிழ்ச்சியையும் வருத்தத்தையும் கூட இடம் காலம் மூலம் விளக்கலாம். ஆனால், பல ஆய்வு நிலைகளில் மனிதன் சட்டம் போன்ற இயற்கைச் சூழ்நிலையை அடக்குகிறான். நியூரத்தின் சரியான

விளக்கம் யாதெனில் முதலில் சதுப்புநிலத்தொடு (Swamp) மனிதனும் இருந்தான். அவற்றுள் மனிதன் மறைந்தான். இப்போது சதுப்புநிலமும் (Swamp) மறைகிறது.

இவர் தெளிவற்ற கலப்பான அனைத்துக் கலைச் சொற்களையும் மொழியிலிருந்து எடுத்துவிட முனைந் தார். புலன்கடந்த நுண்பொருள்ஆய்வு (Meta physics) என்பது சொற்களைத் தவறாகப் பயன்படுத்தி அதே சமயத்தில் இலக்கணப்படிச்சரியாகப் பயன்படுத் துவது ஆகும். எனவேதான் கோட்பாட்டாளர்கள் பல்வேறு பொருள் தரும் சொற்களையும் ஐயத்திற் குரிய சொல்லையும் பயன்படுத்துவதை இவர் தடுக்க விரும்பினார். சானறாக, இவரே 'கேபிடல்' (Capital) என்ற சொல்லை ஒருபோதும் பயன்படுத்தவில்லை. அனைத்துவிதமான சூழ்நிலை அறிவியல் விவாதங் களும் சமுதாய விளக்கத்திற்குத் தேவைப்படுகின்றன.

உடற்கூறு, மண்ணியல், இனவியல், வேதியியல், விளக்கங்கள், சமூகவியல், உளவியல்,பொருளாதாரம், சட்டவியல் மற்றும் எல்லாவற்றுடனும் மனித இனத் தோடு தொடர்புடைய அனைத்துத் துறைகளின் விளக்கங்களும் சேர்ந்திருக்க வேண்டும். அப்போது தான் அனைத்து விதமான துறைகளுக்கும் பயனு டைய, பொருந்தக்கூடிய அனுபவ அடிப்படையிலான மொழியைக் கண்டுபிடிக்கப் பயன் உள்ளதாக இருக் கும்.

இவர், சமுதாயம், உளவியல், முன் அறிந்து கூறும் அனுபவ அடிப்படையில் அமைந்த அறிவுடன் ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணினார். பழக்கத் தின் மூலம் பயிலும் நிலையிலும், அறிவியல் விளக்கத் திலும், கண்டு பிடிப்பிலும் உள்ள நிலையில்லாத் தன்மையை நியூரத்து எழுதியுள்ளார். வரலாற்று அறிஞன் பழைய நிகழ்ச்சியின் அடிப்படையில் இப் போதைய காலத்தைப் பற்றி விளக்கலாம். ஆனால், எதிர் காலத்தைப் பற்றிக் கணிப்பது கடினம். பல் வேறுவிதமான வேற்றுமைகள் உள்ளன. அவற்றுள் சில தெரியாதவையாகும். பலவகை, எதிர்பார்த்த மாற்றங்கள்; சில வகை அறிவியல் அடிப்படை எண் ணங்கள். எனவே, ஒருவர் நியூரத்தின் எண்ணப்படி எதிர்கால நிலைபற்றிக் கணிக்கலாம். மக்களிடையே சமுதாயச் சட்டம் போன்ற வரலாற்று எண்ணங்கள் உள்ளன. ஆனால், உறுதியான முற்போக்கு எண்ணம் இல்லை. இவருடையஎல்லா எழுத்துகளிலும் போலித் தனமான நிலையைப் பற்றி எடுத்தெழுதி, நல்ல பண் பியல்புகளைப் பற்றி எடுத்துக் கூறியுள்ளார். இவர் தம் கருத்துப்படி முடிவுகள், எண்ணக் கணக்குகளின் படி வரையறுக்கப் பட்டவை அல்ல. அவை நடை முறை வாழ்க்கையிலும் சரி, அறிவியல் உலகிலும் சரி நடக்கக் கூடியவை அல்ல.

**அறிவியல் முறை:** இயன்மைப்பாடு அல்லது பருப் பொருண்மைப்பாடு (Physicalism) என்பது நியூரத்து உருடால்ப்பு, கர்நங்கு ஆகிய இருவராலும் சிறப்பாக வளர்க்கப்பட்டது. இதனை நியூரத்துப் பொருள்வாத அறிவின் அடிப்படையில் வரையறைப் படுத்தினார். சமூகத்தின் உள்ளார்ந்த அகவயஒத்திசைவின் வாழ்வு சார் உண்மையைத் திரும்பத் திரும்பச் சொன்னதே அவருடைய வியன்னா வட்டத்தின் எதிர்புலன் நிகழ் கருத்துக்கு மூலாதாரமாகும். நியூரத்து அறிவியல் விவ ரணத்தையும், புலன் இயல்கடந்த (Metaphysical) விவரணத்தையும் சோதனைச் செயல்களின் மூலம் தெளிவாகவேறுபடுத்தினார். அவருடைய உள்ளார்ந்த அகவய ஒத்திசைவு தீர்வுகளுக்கு முழுதுமாய்ப் பொருந் துவது உரைப்பொருளுடன் அன்று. எதிர்ப்பாளர்கள் இயன்மைப்பாட்டுமொழி மூலமாக இக்கொள்கையை உறுதிப்படுத்திக்கொள்ளத் தம்எதிர்ப்பைக்காட்டினர். இதுமுறையான முழுதும் புரியாதஇறப்புக் கோட்பாடு களை மீறிய மொழியியல் கோட்பாடாகும். இது இயற்பியலின் சிறப்புப் பிரிவைக் குறைத்து உருவாக் கப்பட்டதன்று. ஆனால், பொதுவான இடம் காலம் எனும் நிலைகளின் பொதுமைப் படுத்தப்பட்ட இயற் பியல் கோட்பாடே ஆகும்.

நியூரத்து இது ஒரு கருதுகோள் என்பதை ஒத்துக் கொள்கிறார். உலகம் ஒரு முழுமைப்பட்டது என்ப தாகக் கருதினார். அதன் சமூகம், உயிரியல், உடல், அறிவியல் முதலிய பல்வகை விவரணங்களும், ஒரு முழுமையான ஒரே மொழியை நோக்கிச் செல்கின் றன. மேலும் அறிவியல், அறிவின் பகுப்பாய்வில் பருப்பொருண்மைக்கோட்பாட்டு (Physicalism) உடலி யலுக்கும் புலனுணர்வு சார்ந்த சமூக உளவிய லுக்கும், உள்ள தொடர்பையும், சோதனைகளாலும் தொழில் நுட்ப அளவுகளாலும் ஆன இயற்பியலுக் கும், அறிவியல் அல்லது பொதுவான புலன்சார்ந்த இயற்பியலுக்கும் உள்ள தொடர்பையும் விளக்குகிறது.

எங்கும் எதிலும் அடிப்படை அறிவாக விளங்கு வது உலகமே என்பது நியூரத்தின் பிறிதொரு கருது கோளாகும். இறுதியாகப் பிரோடோ கோல்சுட்சு (1932) என்பதில் நியூரத்து பருப் பொருண்மைப்பாடு (Physicalism) என்பதை அணுக்கூறுகள் பற்றிய அறிவுக் கோட்பாட்டின்வழி ஆய்ந்து கூறியுள்ளார். அதனை 'அப்போது கூட்டுடன்பாட்டு மூலப்படி (Protocol) வாக்கியங்கள் எனச்சொல்லப்பட்ட அடிப் படை வாக்கியங்கள், அவை உளவியல் முறையில் நிலையாக இருப்பினும், தருக்க முறைப்படி இன்னும் முயற்சி நிலையில் இருப்பினும், சோதனை முறையில் சோதிப்பில் இருப்பினும் உள்ளார்ந்த அகவய ஒத் திசைவு உடையவை' என்கிறார்.

இருப்பினும், கூட்டுடன்பாட்டு மூலப்படி (Protocol) வாக்கியங்களின் உண்மைச் சோதனை

களில் கிடைக்கும் சான்றே இறுதிச் சான்றெனும் கொள்கையைச் சார்ந்துதான் பங்கு வகிக்கிறது. ஒரு தனிப்பட்ட கூட்டுடன்பாட்டுமூலப்படி வாக்கு மூலத்திற்கும் மிகச் சிக்கலான வடிவும் செயலும் உள்ள கொள்கை முறையிலான கோட்பாட்டிற்கும் உள்ள முரண், தேர்வின் வசதியைப் பொறுத்து, கூட்டு ஒப்பந்தக் கூற்றுகளையே நீக்கிவிடக் கூடிய வாய்ப்பும் இருக்கிறது.

நியூரத்து தம்தொடக்கக்கால அடுத்தடுத்த கருத்துகளின் அமைப்பும் உண்மைக்குப் பொருந்தும் துணை வாக்குமூலமும் பற்றிய பகுப்பாய்வு மேற்கண்ட சோதனை முறையிலான பருப்பொருட் கோட்பாட்டாளர் (Physicalist) அடியான விவரணையில்தான் பிறந்தது என்பதை அறிந்தார்.

**காட்சிக் கல்வி**: அறிஞர்களும், சாதாரண உழைப்பாளிகளும் இணைவதையும், நாட்டுப்பிரிவுகளையும், மொழிப் பிரிவுகளையும் மீறிச் செயற்படுவதையும் கருத்தில் கொண்டே நியூரத்து தம் வியன்னா முறைக் காட்சிக் கல்வியை உருவாக்கினார். செயலில் அவர் வேறுபட்ட, ஆனால், தன் விளக்கப் படக் குறியீடுகளை ஒரு பொருளுக்குப் பயன்படுத்தினார். அது விரைந்து செய்தியைப் புலப்படுத்துவதாயும் எளிதில் நினைவில் நிறுத்துவதாயும் அமைந்தது. நியூரத்தின் கூற்றுகள் எளிமையானவை. 'எதை நீக்கிட வேண்டும் என்பதைச் சிறப்பாக அறிந்தவன் எவனோ அவனே சிறந்த ஆசிரியன்; துல்லியமான உருவங்களை மறப்பதை விட, எளிமையான படங்களை நினைவில் நிறுத்துவது எளிது' என்னும் எண்ணங் கொண்டவர்.

**அறிவியல் மற்றும் பல்துறை அறிவின் இணைப்பு**: பல்வேறு உறவுடைய தத்துவ நிறுவனங்களை ஒருங்கிணைத்த முதன்மையாளராக நியூரத்து இருந்தார். வியன்னாவில் மோரிட்சு சுலிக்கு என்னும் இடத்தில் 1929-இல் முறையான வியாழக்கிழமைக் கூட்டங்களில் விஞ்ஞானிகளும், தத்துவ வாதிகளும் விவாதத்திற்காகக் கூடினர். அவர்களின் சந்திப்பு குறிப்பிடத்தகுந்த 'கொள்கைவிளக்க அறிவிப்பு' (Manifesto) உருவாக்கும் சக்தியைத் தந்தது. அவ் வறிவிப்பில் நியூரத்து, ஆன்சு ஆன், கார்நாப்பு ஆகிய மூவரும் கையெழுத்திட்டிருந்தாலும் அது நியூரத்தின் பெரும்பான்மையான உழைப்பில் விளைந்தது தான்.

அதே ஆண்டில் அறிவியல் தத்துவ அகில உலகக் கூட்டம் என்னும் தொடர்க் கூட்டங்களின் முதல் கூட்டம் நடக்க மேற்கண்ட சந்திப்பும் கொள்கை விளக்க அறிவிப்புமே காரணமாக அமைந்தன.

நியூரத்து அறிவியல் துறைகளின் ஒருங்கிணைப்பை வற்புறுத்தினார். அதற்காக ஒருமையான மொழி, பொதுவான முறை, உள்ளொழுக்க உரையாடல் என்பவற்றை உருவாக்க எண்ணினார். இதுவே அவரை 'அகில உலக ஒருங்கிணைந்த அறிவியற் களஞ்சியம்' உருவாக்க வைத்தது. அதனைப் பதிப்பித்தவர்கள் நியூரத்து, கார்நாப்பு மற்றும் சார்லசு மோர்சு ஆவர். அக்களஞ்சியத்தை வெளியிடப்புதிய 'ஒருங்கிணைந்த அறிவியல் நிறுவனம்'1936-இல் ஆக்யூ-வில் நிறுவப்பட்டது. தொடக்கத் தொகுதிகள் இரண்டும் நியூரத்து இறந்து இருபது ஆண்டுகள் கழித்தும், இன்னும் முற்றுப் பெறாதவையாகவே உள்ளன. 'காட்சிக் கல்வி நிறுவனம்' 1945-க்குப்பின் நியூரத்தின் உடன் பணியாற்றியவர் ஒருவராலும், நியூரத்தின் மூன்றாம் மனைவி மேரி இரைடெமைசுடர் நியூரத்து என்பவராலும் நிருவகிக்கப்படுகிறது. இந்நிறுவனமே நியூரத்தின் பணிகளைத் தொடர்கிறது. இரா.சு.

*நியூரம்பர்கு* நகரம்தென்மேற்குச் செருமனியில் பெக்னிட்சு (Pegntiz) ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. இது, செருமனியின் வரலாற்றுச் சிறப்புமிக்க நகரங்களுள் ஒன்றாகும். இந்நகரம் வணிகத்துறை, தொழிற்றுறை, போக்குவரத்துத் துறை ஆகியவற்றின் மையமாகத் திகழ்கிறது. இந்நகரிலிருந்து தரம்வாய்ந்த மின்சாதனப் பொருள்கள், உயர்ரக இயந்திரங்கள், இரசாயனப் பொருள்கள், துணிமணிகள், துல்லியமான பொருள்கள், பீர், பொம்மைகள், இஞ்சி உரொட்டி ஆகியன ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இது கி.பி. 13-ஆம் நூற்றாண்டிலிருந்தே விடுதலை பெற்ற நகரமாகத் திகழ்ந்தது. பின்னர்ப் படிப்படியாக வளர்ச்சி பெற்று, இத்தாலியிலிருந்து வட ஐரோப்பாவுக்குச் செல்லும் வழியில் பெரிய வணிகத் தலமாக மாறியது. செருமனியின் மறுமலர்ச்சியின் போது நியூரம்பர்கு கலை, பண்பாடு போன்றவற்றில் எழுச்சி பெற்றது. சிற்பக் கலையில் சிறந்தவர்களான ஆதம்கிராப்ட்டு, வெயிட்சுதாசு, வண்ணக்கலையில் சிறந்தவரான பீட்டர், விசியர் போன்றவர்களும் இந்நகரைச் சேர்ந்தவர்களே. நியூரம்பர்கில் (Nurem-berg) கி.பி. 1494-இலிருந்து 1576 வரை ஏன்சு சாச்சு என்பவர் ஆட்சியாளராக விளங்கினார். நியூரம்பர்கு, மறுமலர்ச்சியை ஏற்றும், சமய அமைதியைக்காத்தும் கி.பி. 1532-இல் உலூத்தரன்களோடு சேர்ந்து கொண்டது. முப்பதாண்டுப் போரில் இசுடாவாசு, நியூரம்பர்கை முற்றுகையிட்டார். இப் போருக்குப்பின் இந்நகர் வீழ்ச்சியடைந்து, கி.பி.19-ஆம் நூற்றாண்டில் ஒரு தலைசிறந்த தொழில் மையமாக வளர்ச்சி பெற்று மீண்டும் தழைத்தது.

இந்நகர் கி.பி.1806-ஆம் ஆண்டில் பவேரியாவுக்கு உரியதாயிற்று. முதன்முதலில் போடப்பட்ட இருப்புப் பாதை இந்நகரிலிருந்து பர்த்து வரை போடப்பட்டது. இப்பாதை கி.பி. 1835-இலிருந்து பயன்படத்



நியூரம்பர்கு

தொடங்கியது. அடால்பு இட்லரின் ஆட்சியின்போது நாசிகள் அமைப்பின்கீழ் இது 1933 முதல் 19[illegible] வரை இருந்தது. இந்நகரில்தான் நாசிசத்தின் தலைவரான சூலியசு செரெட்சர் வசித்தார். யூதரை இனக் கொள்கையின் அடிப்படையில் வெறுத்தொதுக்கும் இவரும், இவரது கூட்டத்தாரும் இந்நகரைத்தங்களின் கொள்கைப்பரப்புமையமாகக்கொண்டனர். இந்நகரில் செருமனியின் மொத்தப் படையில் பாதியளவு தங்கி யிருந்தது. குறிப்பாக நீர்மூழ்கிக் கப்பல்கள், பொறி வண்டிகள்(tanks), விமானங்கள் முதலியன இருந்தன. இரண்டாம் உலகப்போருக்குப்பின் இந்நகரில்தான் 'தீர்ப்புகள்' வழங்கப்பட்டன. இந்நகரின் கலைச் செல்வங்கள் பல, இரண்டாம் உலகப்போரின்போது அழிந்தன. அவற்றுள் முக்கியமானவை புனித சீபால்டு (St. Sebald), புனித இலாரன்சு (St. Lorenz), புனித யாகோபு உருவச்சிலைகள், ஒகன் சோலர்ன் (Hohen zollern)கோட்டை முதலியவையாகும். ஏரோலங்கன் (Erolangan) பல்கலைக் கழகமும், கி.பி. 1852-ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட அருங்காட்சியகமும் நியூரம் பர்கில் காணத்தக்க சிறந்த இடங்களாகும். கோ.த.

**நியூலண்டன்:** அமெரிக்காவில் தென்கிழக்குக் கனக்டிகட்டில் (Connecticut), நியூலண்டன் (New London) மாவட்டத்தின் தலைநகரான இது தேம்சு ஆற்றின் முகப்பகுதியில் அமைந்துள்ளது. இது நியூ யார்க்கு நகரத்திற்கு 112 கி.மீ.வடகிழக்கிலும், நியூ ஏவனுக்கு(New Haven)80 கி.மீ. கிழக்கிலும், மத்திய வெர்மாண்டு, நியூயார்க்கு, நியூஏவன், ஆர்ட்போர்டு (Hartford) இருப்புப்பாதையில் அமைந்துள்ளது. உல்லாசப் பயணிகள் நிறைய வரக்கூடிய கடற்கரை நகரம். இது கி.பி 1784-இல் நகரமாக மாறியது. மக்கள்தொகை 28,842 (1980).

இது சிறந்த துறைமுகப் பட்டினம். இங்கிருந்து இந்நாட்டிலுள்ள பல துறைமுகங்களுக்கும், பிற நாடுகளுக்கும் கப்பல் போக்குவரத்து நடைபெறு கின்றது. இங்குள்ள திரம்புல் கோட்டையில் (Fort Trumbull) கி.பி.1849-இல் நிறுவப்பட்ட அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கடற்கரைக் காவல் பள்ளியும் (The U S. Coast Guard Academy), தேம்சின் குறுக் கேயுள்ள குரோடன் (Groton) என்னுமிடத்தில் அமெக்க ஐக்கிய நாடுகளின் நீர்மூழ்கிகளின் அலு வலர்களின் பள்ளியும் (The U.S. Submarine Officers School) உள்ளன. ஆண்டுதோறும் இங்கு ஆர் வார்டு (Harvard), ஏல் (Yale) பல்கலைக் கழகங் களுக்கு இடையே படகுப் போட்டி நடத்தப்படு கிறது.

இங்கு நீர்மூழ்கிக் கப்பல்கள் கட்டப்படுகின்றன. மேலும், உலோகப் பொருள்கள், இயந்திரங்கள், குறிப்பாக அச்சு இயந்திரங்கள், வேதியியல்பொருள் கள், ஆடைகள், நோய்த்தடுப்பு மருந்துகள் (antibio tics) ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன.

இளைய சான் வின்திராப்பு (John Winthrop, The younger) இங்கு கி.பி.1646-இல் ஒரு குடியேற் றத்தை ஏற்படுத்தியபொழுது இது மசாசுசெட்டுவளை குடா குடியேற்றத்தின் (Massachusetts Bay Colony) ஒரு பகுதியாக இருந்தது. இது பிகட்டு (Pequot) என முதலில் வழங்கப்பட்டது. இந்தியர்கள் இதை நமேகு (Nameaug) என்ற பெயரால் வழங்கினர். ஆங்கிலேயர் இதற்குக் கி.பி 1658-இல் நியூலண்டன் என்ற பெயர் சூட்டினர். இங்குள்ள மோன்கென்சின் (Monhengin) ஆற்றைத் தேம்சு என வழங்கினர். அமெரிக்க விடுதலைப் போரின்பொழுது இது முக்கிய பங்கு வகித்தது. இதனைப் பெனிடிக்டு ஆர் னால்டு (Benedict Arnold) தலைமையிலான இங்கி லாந்துப்படை கி.பி.1781-இல் தாக்கி அழித்தது. இது19-ஆம் நூற்றாண்டில் ஒரு முக்கிய கப்பல்கட்டும் தளமாக விளங்கியது. அப்பொழுது திமிங்கலம்(Whale), நீர்நாய் (Seal) வேட்டைக்குச் சிறந்த இடமாக இருந் தது. முதல் உலகப்போரின் பொழுது நீர்மூழ்கிக் கப்பல் களின் தலைமையிடமாகத் திகழ்ந்தது. இரண்டாம் உலகப் போரிலும் இது முக்கிய பங்காற்றியது. சி.இரே.

**நியூனிசு, பர்னே** தென்னிந்தியாவில் விளங் கிய விசயநகர அரசின் வரலாற்றை அறிய உதவும் போர்ச்சுகீசிய வரலாற்றறிஞர். இவர் கி.பி. 1529க்கும் 1542க்கும் இடைப்பட்ட காலத்தில், விசயநகருக்கு வந்து அந்நாட்டைப் பற்றி விளக்கமாக எழுதிப் போந்தார். குதிரை வாணிகத்தொழிலை மேற் கொண்டிருந்த நியூனிசு, பர்னே (Nuniz Fernao) விசயநகரின் தோற்றம், அரசியல் வரலாறு, விசய நகர-போர்ச்சுகீசிய நட்பு, அக்காலத்திய குதிரை

வாணிகம், விசய நகர மன்னர்கள் நடத்திய போர்கள் முதலிய பல செய்திகளை இவர் தொடர்ச்சியாகவும ஒழுங்காகவும் எழுதியுள்ளார். விசயநகர மக்கள் வாழ்க்கையை இவர் நூலிலிருந்து தெளிவாக அறிய முடிகிறது. குறிப்பாக அப்பொழுது (கி.பி. 1535-36) வழக்கில் இருந்த 'சதி' என்னும் உடன் கட்டை ஏறும் பழக்கத்தைப் பற்றி இவர் விரிவாக எழுதியுள்ளார். தெ.பா.

**நிர்க்குண பிரம்மம்:** நிர்க்குண பிரம்மம் (Nirguna Brahman) என்பது உபநிடதங்களில் பொதுவாகவும், சங்கரரின் அத்துவித மெய்ப் பொருளியலில் சிறப்பாகவும் பரம்பொருளான உள்பொருளின் இயல்பைச் சுட்டிக்காட்டும் பெயராகும். இதன் பொருள் 'வரையறைப்படாதது'(Indeterminate) என்பது அத்துவிதம் பரம்பொருளைப் பிரம்மம் என்றும் ஆத்மா என்றும் குறிப்பிடுகிறது. பிரம்மம் மட்டுமே ஒரே உள்பொருள்; அது இரண்டல்லாதது என்றும் கூறுகின்றது. அவ்வுள்பொருளின் தன்மையை நுகர்வியலான அறிவில் குறிப்பாக உணர்த்தப்படும் வரையறையற்ற உணர்வு என்றோ, வரையறையுற்ற பொருள்கள் அனைத்திற்கும் முற்கோளாக உள்ள வரையறையற்ற உள்பொருள் என்றோ கூறலாம். ஏனெனில், நுகர்வியலான அறிவும் தோற்றவியலான பொருளும் உள்பொருளுக்கு மேலும் தோற்றத்தைச் சேர்ப்பனவாதலால் அத்தகைய அறிவும் உள்பொருளும் (Knowledge and being) பரம்பொருளான உள்பொருளைக் (Being) காட்டவியலாதவை. இவை உள்பொருளுக்கப்பாலோ, தனித்தோ சேர்ந்தோ இல்லையாதலால் முடிநிலையான பிரம்மம்நிர்க்குணம எனப் பெறுகிறது.நிர்க்குணம், இன்மை அல்லது பாழ் என்று பொருள்படாது. பிரம்மம் அறிவிற்குரிய பொருளாக என்றுமே அமைவதில்லையாதலால் பழக்கமான சிந்தனையின் சொற்பொருள் வகைகளில் அதனைப் பொருத்த முடிவதில்லை. எனவே, பிரம்மத்தை நேரடியாக விவரிக்க இயலாது. ஆனால் தோற்றங்களைத் துணையாகக் கொண்டு அதனை மறைமுகமாகச்சுட்டிக்காட்டலாம். ஏனெனில் தோற்றங்கள் தனித்திருக்க முடியாதவை என்பதுடன் இன்றியமையாத நிலையில் அவை தமக்கு அப்பாலுள்ள உள்பொருளைக் குறிக்கும். 'தத் த்வம் அசி' (அது நீயாக இருக்கிறாய்), 'அகம் பிரம்மம் அசமி' (நான் பிரம்மம் ஆக இருக்கின்றேன்) போன்ற உபநிடத உரைகள் குறிப்பிடுவது இத்தகைய உள்பொருளையே ஆகும். இச் சாற்றுரைகளில் 'அது' என்பது பிரம்மத்தையும் 'நீ' என்பது பொய்த் தோற்றமான தடைகளாயுள்ள கட்டுகள் நீங்கிய ஆன்மாவையும் குறிக்கும். இங்கு ஆன்மாவும் பிரம்மமுமே முற்றொருமைப் படுத்தப்படுகின்றனவேயன்றி, சுட்டுக்குள்ளான சீவனும் பிரம்மமும் அல்ல.

அத்துவைதிகள் பரம்பொருள் வரையறுக்க ஒண்ணாதது என்பதுடன் அறியப்பட முடியாததும் ஆகும் என்று கருதுகின்றனர். ஏனெனில் பிரம்மம் அறிவின் பொருளோ, நுகர்வியலான அறிவானோ அன்று. உள்பொருளைப் பற்றிய அறிவைப் புலன்களை அடிப்படையாகக் கொண்ட அறிவிற்குரிய வாயில்களால் அறிய முடியாது. ஏனெனில், பிரம்மம் புலன்களுக்கு அப்பாற்பட்டது. உரையளவையும் நேரடியான அறிவு அன்று. ஆதலால், அதன் மூலமும் பிரம்மத்தை அறிய முடியாது. மேலும், ஒரு பொருளை அறிவதற்குத் துணையாக விளங்கும் வேறுபாடுகளோ, வடிவமோ, பண்புகளோ, செயற்பாடோ பிரம்மத்திற்கு இல்லை. ஒரு பொருளுக்கும் பிறிதொரு வகைப் பொருளுக்கும் உள்ள வேறுபாடு பிரம்மத்திற்குப் பொருந்தாது. ஏனெனில் பிரம்மம் ஒரே உள்பொருள், இதனைப் போன்ற மற்றொருபொருளும்இல்லையாதலால்ஒரே இனத்தைச் சார்ந்த இரு பொருள்களுக்கிடையே உள்ள வேறுபாடும் பிரம்மத்திற்குப் பொருந்தாது. பிரம்மம் பகுதிகளற்ற ஒன்றானதால் அது தன்வேறுபாடு களுமின்றித் திகழ்கிறது. வடிவமும், பண்புகளும் வரையறுக்கத் துணை செய்பவை. பிரம்மம் வரையறைக்கப்பாற் பட்டதால் வடிவமும், பண்புகளும் அதற்கு இல்லை. செயல் என்பது ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்வதற்கோ, இதுவரை அடையப்படாத ஒன்றினைப் பெறுவதற்கோ,மாற்றத்தை நிகழ்த்துதற்கோ, தூய்மைப் படுத்துதற்கோ செய்யப் படுவதாகும். பிரம்மம் எங்கும் உள்ளதாலும், எல்லாமாகஇருப்பதாலும், முழுமையானதாலும், தூய்மையானதாலும் மேற்கூறிய செயற்பாடுகளும் அற்றதாகும். இவ்வாறு பிரம்மம் தன்னளவில் அறிவான், அறியப்படுபொருள், அறிவுக்குத் துணை புரிவன உள்ளிட்ட அனைத்தையும் விலக்குகின்றதாதலால் அது அறியப்படாததாகும். பிரம்மம் அறியப்படாதது என்னும் கூற்று அறியொணாக் கொள்கையனறு உள்பொருளை அறிதற்கு மேலே குறிப்பிட்ட சிந்தனை முறை அனைத்தும் ஏற்றதல்ல.என்பதேயாகும். எனவேதான் அத்துவைதிகள் உபநிடதங்களில் வரும் 'அது அன்று, அது அன்று' (Neti neti) என்னும் கூற்றுகளைக் கொண்டு பிரம்மத்தை எதிர்மறையாக வருணிக்கின்றனர்.

உபநிடதங்கள் பிரம்மத்தை நிர்க்குணம் அல்லது வரையறுக்க இயலாதது என்றும், அறிய இயலாதது என்றும் கூறினாலும் அதனைப் பின்வருமாறு உணரலாம். பிரம்மத்தை 'அது அன்று, அது அன்று' என்று எதிர்மறையாக வருணிப்பது என்பது அவற்றின் உடன்பாட்டு உள்ளுறையைக் குறிப்பதற்கே ஆகும். ஒவ்வோர் உரையும் நேரடியாகவோ மறைமுகமாகவோ உள்பொருளைக் குறிக்கின்றது. அத்துவிதம் எதிர்மறைச் சாற்றுரைகளுக்கு இரண்டாம் இடத்தையும்,

'நீ அதுவாக இருக்கின்றாய்' போன்ற உடன்பாட்டுக் கூற்றுக்கு முதல இடத்தையும் தருவதானது பிரம்மம் உணர்வதற்குரிய பொருள் என்பதனால் தான். பிரம் மத்தை உடன்பாட்டு நிலையில் குறிப்பிடும்பொழுது உபநிடதங்கள் சச்சிதானந்தம் என்கின்றன. 'சத்து' எனறும் நிலையானதும், 'சித்து' என்றும் உணர்வான தும், 'ஆனந்தம்' என்றும் துன்பக் கலப்பில்லாத இனபமானதும் ஆகிய இருப்பே பிரம்மம் ஆகும். சத்து, சித்து, ஆனந்தம் ஆகியவை பிரம்மத்தின் பண்புகள் அல்ல. அவையே பிரம்மம் ஆகும்.

விசிட்டாத்துவைதம் வரையறுக்கப்படாத நிர்க் குண பிரம்மம் என்ற கருத்தினை ஏற்பதில்லை. மாறாகப் பிரம்மத்தை எப்பொழுதும் எண்ணிலடங்கா நற்பண்புகளுடன் கூடியதாகவே கருதுகின்றது. மேலும் பிரம்மம் நிர்க்குணமானது என்பதனை உப நிடதக் கூற்றுகளைக் கொண்டும், அத்துவைதிகளின் கூற்றுகளைக் கொண்டும் திறனாய்வு முறையில் மறுக்கின்றது. சைவ சித்தாந்தமும் பரம் பொருளைக் குணங்களுடன் கூடியதாகவே கருதுகின்றது. விசிட்டாத் துவிதமும், சைவ சித்தாந்தமும் பண்புகளுடன் கூடிய சகுண பிரம்மத்தை ஏற்றாலும் பிரம்மத்தை நிர்க் குணன் என்று வருணிக்கவே செய்கின்றன. இவை நிர்க்குணம் என்ற சொல்லுக்குத்தீய குணங்களற்றது; பிரகிருதியாகிய உலகின் அடிப்படைப்பருப்பொருளின் குணங்களான சத்துவம், இராசதம், தாமசம் ஆகியவை களுடன் இயல்பாகவே கூடியிராத நிலை எனக் கூறு கின்றன. இதனால்தான் பிரம்மத்தை முக்குண நிர்க் குணன் என்கின்றது சைவ சித்தாந்தம்.

பி.ஆர்.ந.

**துணை நூல்கள்:**

**இரியண்ணா, எம்.,** இந்தியத் தத்துவம் 11, தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை. 1968.

**இலக்குமணன், கி**, இந்தியத் தத்துவஞானம், பழனி யப்பா பிரதர்ஸ், சென்னை-1970.

**மகாதேவன், டி.எம்.பி.** அத்துவிதத் தத்துவம், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை. 1966.

**முத்துராமன், எம்.,** சைவ சித்தாந்தம், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

பி.ஆர்.ந.

*நிர்ச்சரம்:* கன்மம் சீவனுட் சென்று செறிதல் ஓயாது நிகழ்ந்து கொண்டிருக்கின்றது. வீடுபேற்றை அடைய வேண்டுமானால் அனுட்டிக்க வேண்டியவை இரண்டுள, புதுக்கன்மம் ஏற்படாது நிறுத்துவது முதலாவது. இதனைச் சமுவரம் என்பர், மற்றது, முன்னரே சேர்ந்த கன்ம ஈட்டத்தை அழிப்பது. இதனை நிர்ச்சரம் என்பர்.

இரா.கோ.

*நிரப்பு வகைச் சோதனை உருப்படிகள்:* புதுமுறைச் சோதனைகளில் நிரப்பு வகைச்சோதனை யும் ஒன்றாகும். இதனை முடித்தற் சோதனைகள் அல்லது நிறைவாக்கல் சோதனைகள் (Completion Type Test) என்றும் கூறுவர். பயிற்சிப் பகுதியாக ஆசிரியரே இவற்றைத் தயாரித்துக் கொள்ளமுடியும்.

இவ்வகைச் சோதனையில் பல வாக்கியங்கள் தரப்பட்டிருக்கும். அவற்றில் சில சொற்கள் அல்லது சொற்றொடர்கள் தரப்படாமல் அவ் விடங்களைக் குறிப்பிடக் கோடுகளிடப்பட்டிருக்கும். சரியான விடைகளை மாணாக்கரே சிந்தித்து எழுத வேண்டும். இட்டு நிரப்ப வேண்டிய சொற்கள் பாடப் பகுதியின் இன்றியமையாத கூறாக இருக்கும். திட்ட வட்டமான விபரங்களையே சோதிப்பதற்கேற்றவை யாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். கீழ் நிலைகளில் சாதாரண முடித்தற் சோதனைகள் பயன்படுத்தப்படுகின்றன. மேல்நிலைகளில் தொடர் வாக்கியங்களைக் கொண்ட முடித்தற் சோதனைகள் (Connected Discourse Type) பயன்படுத்தலாம். இவை ஓரளவு சிக்கலானவை. கோடிட்ட இடங்களை நிரப்ப உதவும் குறிப்புகளும் சில சமயங்களில் தரப் பட்டிருக்கும்.

நிரப்பு வகைச் சோதனைகளைத் (Fill up the Blank Test Items) தயாரிக்கும் ஆசிரியர் கவனிக்க வேண்டியவை: அ) நிரப்ப வேண்டிய சொல் அல்லது சொற்றொடர் திட்டவட்டமானதாகவும் தெளிவான தாகவும் முக்கியமானதாகவும் இருக்க வேண்டும். ஆ) பாடத்தில் காணப்படும் வாக்கியங்களைச் சிறிதும் மாற்றாமல் பயன்படுத்துதல் சிந்திக்க வாய்ப்பளிக் காது. இ) முடித்தல் வகையை விடச் சிறுவினாக் களை எழுப்பி விடைகூறச் செய்தல் கீழ் வகுப்பு களுக்கு ஏற்றதாக இருக்கும்.

**எடுத்துக்காட்டு**: 1) தமிழ்ப் பல்கலைக்கழகம் ... ... ... ... ... யில் அமைந்துள்ளது. 2) மதுரைக்கு ... .. ... ... ... என்றொரு பெயரும் உண்டு. 3) தமிழ் மொழியில் மொத்தம் ... ... ... எழுத்துகள் உள்ளன. 4) வெண்கதிரில் அடங்கியுள்ள ஏழு நிறங்கள் ... ... ... ... ... 5) பஞ்சசீலக் கொள்கையில் அடங்குபவை: அ. ... ... ... ஆ. ... .. ... இ. ... ... ... ஈ. .. ... ... ... உ. ... ... ... ... .. கடைசியாகக் கூறப்பட்டது தொடர் வாக்கியங்களைக் கொண்ட முடித்தற் சோதனைக்கும், மற்றவை சாதாரண முடித்தற் சோதனைக்கும் எடுத்துக்காட்டுகளாகும்.

நிரப்பு வகைச் சோதனைகள் நினைவுகூரல் என்ற ஆற்றலையே சோதிப்பதாக அமைகின்றன. அறிதல் திறனில் பிற உயர் மட்டங்களாகிய புரிந்து

கொள்ளல், பயன்படுத்தல், பகுத்தாய்தல், ஒருங்கிணைத்தல், மதிப்பிடல் போன்ற திறன்களை மதிப்பிட இது அவ்வளவாகப் பயன்படாது.

இவ்வகை உருப்படிகள் திட்டவட்டமானவையாக இருப்பதால் தேர்வாளர்களிடையே மதிப்பெண் வழங்குதலில் வேறுபாடுகள் இருக்க முடியாது. பொருத்தமற்ற விடைகள் ஏற்கப்படா. இவற்றை மதிப்பிடுதல் எளிதாகவும் துல்லியமாகவும் இருக்கும். சோதனை உருப்படிகளைக் கல்வியாளர் வகுத்துக்கொண்ட பொது மற்றும் சிறப்புக் குறிக்கோள்களினடிப்படையில் தயாரித்துக் கொள்ளலாம். இவை புறவயத் தன்மையுடையவை. எஸ்.ந.

**நிரம்ப அழகிய தேசிகர்**: இவர் சோழநாட்டுத் தமிழ்ப் புலவர். தஞ்சை மாவட்டத்திலுள்ள வேதாரணியம் என்னும் திருமறைக்காட்டில் பிறந்தவர். இவர் சைவ வேளாளர்களுக்குக் குருமாராயிருக்கின்ற அபிடேகத்தார் மரபிலே தோன்றியவர் என்பர். பின்னாளில் பாண்டிய நாட்டிலுள்ள துழாவூரில் வாழ்ந்தார். இவர் கி.பி. 16-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். திருவிளையாடற் புராணம்பாடிய பரஞ்சோதி முனிவரும் இவரும் ஒரு சாலை மாணாக்கர் என்று கூறுவர்.

இவர் தமிழ்மொழி, வடமொழி இரண்டிலும் நிரம்பிய புலமையாளர். சைவ சித்தாந்த நூல்களில் மிகுந்த பயிற்சியுடையவர் என்பதை இவருடைய சிவஞான சித்தியார், திருவருட்பயன் முதலிய நூல்களின் உரைகள் புலப்படுத்துகின்றன. இவர் மதுரையில் தங்கி மாணவர் பலருக்குச் சைவ சித்தாந்த வகுப்புகள் நடத்திச் சமயப்பணி ஆற்றினார். இவரின் புலமையை உணர்ந்தசேதுபதி மன்னர், சேதுபுராணத்தைப் பாடுமாறு கேட்டுக்கொண்டார். அதன்பேரில் இவர் இயற்றிய சேதுபுராணம் 3438 பாடல்களால் உருவாகிச் சொற்சுவையும் பொருட்சுவையும் கொண்டு விளங்கிவருகின்றது. இவர் திருப்பரங்குன்றப் புராணம், திருவையாற்றுப் புராணம், திருஞான சம்பந்தர் மாலை முதலிய நூல்களையும் எழுதியுள்ளார். திருவாரூர்ப் புராணம் பாடிய அளகைச் சம்பந்த முனிவர், செப்பேசப் புராணம் இயற்றிய ஞானக் கூத்தர் ஆகியோர் இவருடைய மாணவர் என்பர். இவர் ஏற்படுத்தியதே துழாவூராதீனம். இது குன்றக் குடிக்கருகில் உள்ள துழாவூரில் விளங்குகிறது. சா.உ.

**நிரல்வழிக் கற்றல்**: அண்மைக் காலத்தில் மாணாக்கர் தாமே கற்க உதவும் வழிமுறைகள் உருவாக்கப்பட்டு வருகின்றன. அவற்றுள் நிரல்வழிக் கற்றல்(Programmed Learning) பெருமளவு கல்வியாளர்களது கவனத்தைக் கவர்ந்துள்ளது. இன்று கற்பித்தல் என்பதைவிட வழி முறைகளைக் காண்பிப்பது உயர்வாகவும் அதிலும் நிரல்வழிக் கற்றல் நிரம்பப் பயனுடையதாகவும் கண்டறியப்பட்டுள்ளது.

இசுகின்னர் (B.F.Skinner) என்ற உளவியலறிஞருடைய கருத்துகளே இம்முறையை உருவாக்க உதவியுள்ளன. கற்க வேண்டிய பாடப்பொருள் சிறு சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு சிறு பகுதியும் மாணாக்கர் தவறுசெய்ய இடமளிக்காத வகையில் முறையாகத் தரப்பட்டால் கற்றல் திறம்பட அமையும் என்பதே இதன அடிப்படையாகும். இது ஒரு விளையாட்டு போலத் தோன்றும் தானே கற்கும் முறையாகும். இதில் கிட்டும் ஒவ்வொரு வெற்றியும் மேலும் தொடர்ந்து கற்றலில் முன்னேற ஊக்கமளிக்கும்.

கற்றலுக்கான நிரல்கள் வெவ்வேறு தலைப்புகளுக்காகத் தனித்தனியே தயாரிக்கப்படும். இவற்றைத் தயாரிப்போர் முதலில் அக்குறிப்பிட்ட நிரலின் பொது நோக்கங்களையும் சிறப்பு நோக்கங்களையும் வரையறுத்துக் கூறவேண்டும். அடுத்து, நிரலைக் கற்போரிடம் இறுதியில் எதிர்பார்க்கும் நடத்தை மாற்றங்களைக் குறிப்பிட வேண்டும். மாணாக்கரது நுழைவு நடத்தையை (முன்னறிவை) இதற்குமுன் கற்பித்த பாடங்களின் அளவையும் தேர்ச்சியையும் கொண்டு அறியலாம். கற்க வேண்டிய பாடப் பொருளை மாணாக்கரது வயது, பட்டறிவு, நாட்டம், ஆர்வம், திறமை ஆகியவற்றிற்கேற்ப நிரல் முறையில் வழங்கத் திட்டமிடலை அரும் பணிப் பகுப்பாய்வு என்கிறார்கள். நிரலின் நோக்கம் நூறு விழுக்காடு வெற்றியாகும். இதற்கென (Criterion) அடிப்படையிலான சோதனைகள் நடத்தப்படும்.

ஒரு நிரலை நூல் வடிவிலோ பொறிவாயிலாகவோ அளிக்கலாம். ஒவ்வொரு நிரலும் பல சட்டங்களை உள்ளடக்கியது. ஒவ்வொரு சட்டத்திலும் ஒரு பாடச் செய்தியும் ஒரு வினாவும் இருக்கும். கற்போர் வினாவிற்கான விடையை அதற்கென ஒதுக்கப்பட்டுள்ள இடத்தில் தரவேண்டும். அடுத்த சட்டத்தில், மேற்குறிப்பிட்ட வினாவிற்கான சரியான விடை தரப்பட்டபின், தொடர்புடைய அடுத்த பாடச் செய்தி தரப்படும். தேவையான இடங்களில் விடையை ஊகிக்க உதவும் குறிப்புகள் தரப்படலாம்.

**சட்டம்: 1.** பண்டைத் தமிழகம் மூவேந்தர்களால் ஆளப்பட்டது. அவர்கள் சேரர், சோழர், பாண்டியர் என்ற அரச பரம்பரையினராவர். அவர்கள் முறையே வில், புலி, மீன் ஆகிய சின்னங்களையுடைய கொடிகளைக் கொண்டிருந்தனர்.

**வினா**: 1. தமிழ் மூவேந்தர்களது தலை நகர்க ளாக விளங்கிய நகர்கள் யாவை?

**விடை**: ... ... ... ... ... ... ... ...
**சட்டம்**: 2. 1) முதல் வினைவிற்கான சரியான விடை 2) மேலும் தகவல்கள் 3) வினா-2 4) விடைக் கான இடம் 5) ஊகக்குறிப்புகள் (தேவையானால் மட்டும்) மேற்கண்ட எடுத்துக்காட்டு நேர்வழி நிரலா கும். நிரல்களைக் கிளை வழியிலும் தயாரிக்கலாம். இதை உருவாக்கியவர் நார்மன் கிரைவிடர் என்பவ ராவர். இதில் ஒன்றுக்கு மேற்பட்ட விடைகள் தரப் பட்டிருக்கும். கற்போர் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுக்க வேண்டும். சரியான விடையைத் தரு பவர் அடுத்த சட்டத்திற்குச் செல்லலாம். விடை தவறானால் குறை தீர் சட்டங்கள் மூலம் அவருக்கு விளக்கங்கள் தரப்படும். கற்போருக்கு மீண்டும் கற்க வேண்டிய சட்டங்கள் சுட்டிக் காட்டப்படும். எனவே, இம்முறையில் நிரல் வழிக் கற்போருடன் உரையாடுவது போலத் தோன்றும். கிளை வழிநிரலைத் தயாரிப் போர் கற்போர்செய்யக்கூடிய தவறுகளைக் கருத்தில் கொண்டே குறைதீர் சட்டங்களை அமைக்கின்றனர். தகவல்களைத் தரும் சட்டங்களில் அடங்குபவை: அ) மாணாக்கரது விடையைத் திரும்பக்கூறல், ஆ)உடன் பாட்டு முறையில் உறுதி செய்தல் (சரி), இ) புதிய செய்திகள், ஈ) வினை. 2) மாற்றும் விடைகளும் எப் பகுதியை மீண்டும் படிக்க வேண்டுமென்ற குறிப்பும், குறை தீர் சட்டங்களின் அமைப்பு முறை: அ) மாணாக்கரது பதிலை மீண்டும் கூறல், ஆ) எதிர் மறையில் உறுதி செய்தல், (தவறு), இ) தவற்றை விளக்குதல், ஈ) எளிய நடையில் தேவையான விளக் கங்கள், உ) மாணாக்கர் அடுத்துக் கற்க வேண்டியது பற்றியகுறிப்பு.

நிரல்வழிக் கற்றலில் பயிற்சிகளை அடிப்படை யாகக் கொண்ட முறை ஒன்றினைக் கில்பர்ட்டு(Thomas F. Gilbert) என்பார் உருவாக்கியுள்ளார். இதை 'மாதடிக்சு' (Mathetics) என்று கூறுவர். திறன் களைக் கற்பிப்பதற்கு இம்முறை மிக ஏற்றதாகும். ஒரு குழுவின் பயிற்சியில் காணப்படும் குறைகளை அறிய மாதடிக்சு பயன்படும். இம்முறையில் திறன் பகுப்பாய்வு செய்யப்பட்டுக்,கற்க வேண்டிய பொருள் விளக்கப்படுவதுடன் பயிற்சியில் காணும் குறைபாடு களைப் போக்கிக் கொள்ளும் உத்திகளும் கூறப்படும்.

**மாதடிக்சு முறையின் அமைப்பு**: அ) விவரத் தொகுப்பும் அரும்பணியின் பகுப்பாய்வும், ஆ) பயிற்சி யாளரது குணநலன்களை மதிப்பிடல்-முழுத்திறனை எட்டுவதற்கான குறிப்புகள், இ) பாடக் குறிப்பின் குணநலன்கள்-குறைகள் பட்டியலிடப்பட்டு அவற் றைச் சமாளிப்பதற்கான திட்டம் தரப்படல், ஈ) பயிற்சிகளை எழுதுதல், உ)சரிபார்த்துத் தொகுத் தல்.

நிரல்வழிக் கற்றலில் பல அணுகு முறைகள் கையாளப்படுகின்றன. ஒவ்வொன்றும் ஒரு குறிப் பிட்ட தலைப்பு அல்லது திறனுக்கு மிகவும் ஏற்புடை யதாக இருக்கக்கூடும். நிரலைத் தயாரிப்போரது அறிவாற்றலையும் பட்டறிவையும் பொறுத்தே நிர லின் தரம் அமையும். இத்தகைய நிரல்களே கற்பிக் கும் பொறிகளிலும், கணிப்பொறிகளிலும்(Computer) கையாளப்படுகின்றன. கற்போரே கற்கும் நேரத் தைத் நேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். எத்தனை முறை தவறான விடை தந்தாலும் இவை பொறு மையை இழப்பதில்லை, களைப்படைவதுமில்லை. இவை செய்யும் தவறுகளும் குறைவானவையே.

நிரல்வழிக் கற்றல் இன்னும் போதிய வளர்ச்சி பெறவில்லை. எனினும், இதற்கு மேலான வருங் காலம் உண்டு எனக் கூறலாம். இதனால் ஆசிரியரது நிலை தாழ்ந்து போகுமென்றோ ஆசிரியர்களுக்குத் தேவையிராது என்றோ கூறமுடியாது. ஆசிரியரது கையாளாகவே இது பயன்படும். நிரல்வழிக் கற்பிக்க முடியாதசெய்திகளையும், மிகுந்த விளக்கம் தேவைப் படும் நுட்பமான கருத்துகளையும் எடுத்துக்கூற ஆசிரியர் என்றும் தேவைப்படுவார். அவரால் மட் டுமே உணர்வோடு இயைந்து உணர்வு பூர்வமாக மாணாக்கருடன் கற்பித்தல் பணியில் ஈடுபட முடியும்.

எஸ்.ந.

**துணை நூல்கள்:**

**செந்தூர் பாண்டியன், செ.**, திட்டமிட்டதைக் கற்றல், மீனாட்சி பதிப்பகம், புதுக்கோட்டை, 1985.

**Sampath, PanneerSelvam & Santhanam**, Introduction to Educational Technology, Sterling Publishers, Pvt. Ltd. New Delhi, 1984.

***நிருணயவாக்கு***: காண்க: அறுதிவாக்கு.

***நிருத்தம்***: பரத நாட்டியம் என்ற சொல் ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளாகத்தான் வழக்கத்தில் இருந்துவருகிறது.இதனைக்கடந்த மூன்று நூற்றாண்டு களாகச் 'சதிர்' எனக்கூறி வந்தனர். நாட்டியம் என்ற சொல் நாடகத்தையே குறித்திருக்கிறது. 'நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து'-என்ற சிலப்பதிகார அடியில் வரும் 'நாட்டியம்' என்ற சொல்லுக்கு 'நாடகம்' என்றே சிலப்பதிகாரத்தில் உரை எழுதப்பட்டுள்ளதைக் காணலாம்.

பரத முனிவர் எழுதிய 'நாட்டிய சாத்திரமே' தொன்மை மிக்கது. இது 37 அத்தியாயங்களைக் கொண்ட தொரு சமசுகிருத நூல். இந்த நூல் பரதர் என்ற புனைபெயரைக் கொண்ட பலரால் எழுதப் பட்டுத் தொகுக்கப் பெற்றிருக்கலாம் என்ற கருத்

தும் நிலவுகிறது. இதன் சில அத்தியாயங்கள் கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்டிருக்கலாம் என அந்தத்துறை சார்ந்த வல்லுநர்கள் கூறுகின்றனர். எது எப்படி இருப்பினும் உலகில் நாடக இயல் பற்றித் தோன்றிய மிகப் பழைய நூல் இதுவே.

அக்காலத்தில் ஆடல், நாடகத்தின் ஒரு பகுதியாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. நாடகத்திலிருந்து ஆடலை மட்டும் பிரித்தெடுத்துக் கலை நிகழ்ச்சியாக நடத்துவது அதன் பிற்கால வளர்ச்சியாகும். நாடகத்திலிருந்து பிரித்து நடனத்தைப் பற்றி மட்டும் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்திய சொல்லே நிருத்தம் என்பது.

பரத முனிவர் 'நாட்டிய சாத்திரத்தில்' நாடகத்தில் வரும் நிருத்தம் (நடனம்) பற்றியே விவரித்துள்ளார்.

நிருத்தத்தின் உயிர் அபிநயமே. உடல் அழகினையும், நெளிவு சுளிவுகளின் குழைவுகளையும் தாளக் கூறுகளின் விசித்திரக் கூர்மையினையும், பாத சாலங்களையும் (Foot-work), இசை, அதன் தாளம் இவற்றின் வன்மை மென்மைகளையும் உருவகப் படுத்தும் நிலை நிருத்தத்தில் தான் உண்டு.

நிருத்தத்தில் தான் உடலின் எல்லா உறுப்புகளும் அழகுற இயங்குகின்றன. மகிழ்ச்சி, பக்திப் பரவசம், பேரானந்தம், ஆன்மிகம் ஆகியவற்றின் வெளித் தோற்றமாக அமைவது நிருத்தத்தின் சிறப்புக் கூறாகும். நிருத்தத்தில் இன்றியமையாத மற்றொரு கூறு 'அங்க சுத்தம்'. இதைப்பரத முனிவர் 'இலௌட்டவம்' என்று குறிப்பிடுகிறார். அடவுகளுக்கு உறுப்புத்தூய்மை மிகவும் தேவையாகும். அடவு என்பது ஆடலின் ஆதாரப்பகுதியாகும். மொழியில் வாக்கியம் எப்படியோ அப்படியே நடனத்தில் அடவுஎன்பது. 'ஆடல்'என்னும் சொல்லிலிருந்துஅடவு என்ற சொல் வந்தது என்று சொல்லப்படுகிறது. எந்த எந்த உறுப்புகள் எப்படி எப்படி இயங்க வேண்டுமோ அம்முறைமையில் இயங்கினால் அதுவே 'உறுப்புத் தூய்மை' எனப்படும். தொடக்கப் பாடம் முதல், பயிற்சி தருவோரும் பெறுவோரும் கவனிக்காவிடில் நிருத்தத்தின் தரம் தாழ்ந்து விடும். நிருத்தத்தில் பாவம் இல்லை என்றும், இரசம் இல்லை என்றும் ஒரு சிலர் கூறியிருக்கின்றனர். பரத முனிவரின் மூல நூலிலேயே இந்தக் கருத்து விலக்கப்பட்டு விட்டது. பாவம் இல்லாமல் நடனம் என ஒன்று எப்படி இருக்க முடியும்? பரத முனிவர் வடக்கே வாழ்ந்தவராகவும் பரத சாத்திரம் சமசுகிருதத்தில் எழுதப்பட்ட நூலாகவும் இருந்த போதிலும் 'பரத நாட்டியம்' என்ற வகை இன்று இந்தியப் பெரு நாட்டில் தமிழ் நாட்டிற்கே உரிய சாத்திரிய நடனமாக இருந்து வருவது குறிப்பிடத்தக்கது. நிருத்தத்தில் (நடனத்தில்) பல பத்ததிகள் (வழிகள்) உண்டு. அவற்றில் தஞ்சாவூர், பந்தணை நல்லூர், வழுவூர், காஞ்சிபுரம் பத்ததிகளே புகழ் பெற்றவையாகும். இன்று பலப்பல பத்ததிகள் மேடையேறிவிட்ட போதிலும் மேற்கண்ட நான்கு பத்ததிகளும்-பரத நிருத்தத்தில்-தனித்த தோர் இடம் பெற்றிருக்கின்றன.

சு. சண்.

**நிருத்தியம்**:'நாட்டிய நாடகம்'-எனத் தவறாக அமைக்கப்பட்டு வரும் ஆடற்கலை வடிவத்தின் சரியான பெயரே நிருத்தியம் என்பது. நாட்டியம் என்ற சொல்லுக்கு நாடகம் என்பதே பொருள். ஆகையால் நாட்டிய நாடகம் என்பது 'நடு சென்டர்' என்பது போன்ற தவறான சொல்லாட்சியாகிறது.

நடனமும், அபிநயத்தால் கருத்துகளை வெளிப்படுத்தும் நாட்டியமும் கலந்ததே நிருத்தியமாகும். பாட்டின் பொருளுக் கேற்ப அபிநயங்களை இயக்கிய வண்ணம் பாதங்களும் தாளத்திற்கேற்ப இயங்குவது இதன் இயல்பாகும். நிருத்திய நாடகங்கள் இன்று வழக்கத்தில் உள்ளன. நிருத்தத்தைப்போலவே நிருத்தியமும் ஒருவராலோ பலராலோ ஆடப்படலாம். நிருத்தியம் 'பிருகார்த்த நிருத்தியம்','ஏகார்த்த நிருத்தியம்' என இருவகைப்படும். பரதநாட்டியம் என்ற பெயரில் வழங்குவதே பிருகார்த்த நிருத்தியமாகும். ஏகார்த்த நிருத்தியத்தில் காணும் ஒவ்வொரு பாடலும் ஏதேனும் ஒரு மையப் பொருளைக் கொண்டு விளங்குவதாக இருக்கும். இது ஒரு கதையைத் தழுவியுமிருக்கலாம். நாட்டியத்தில் பல பாத்திரங்களுக் கேற்றவாறு வெவ்வேறு ஒப்பனைகள் செய்து கொண்டு தோன்றுவதற்கு மாறாக ஒருவரே பல பாத்திரங்களையும் அபிநயிப்பதால்இதற்கு 'ஏக ஆர்ய நிருத்தியம்' என்று பெயர் வந்ததாகச் சொல்வது முண்டு. நிருத்திய நாடகத்தையே சிலப்பதிகாரம் கதை தழுவி வரும் கூத்து என வகைப்படுத்திக் கூறுகிறது. இன்றைய பரத நாட்டியத்தைப் பரத நிருத்தியம் என குறிப்பதே பொருந்தும். பரதநிருத்தியத்திற்கு இன்றியமையாதது வாய்ப்பாட்டு. இது கருநாடக இசையை அடிப்படையாகக் கொண்டது. இதற்கு இன்றியமையாத பக்க வாத்தியம் மிருதங்கம். நட்டுவனார் ஆட்டுவிக்கப் பயன்படுத்தும் கைத்தாளம் நடனத்திற்கு அதன் இயக்குநராகிய அவர் பயன்படுத்தும் கருவியாகும். இவ்வாறு இயக்குவதை நட்டுவாங்கம் என்பர்.

நட்டுவாங்கம், வாய்ப்பாட்டு, மிருதங்கம், முகவீணை, துத்தி ஆகியவை சேர்ந்து இதற்குரிய இசைக் குழுவாக விளங்கிவந்தது. இந்த இசைக்குழுவைச் சென்ற தலைமுறையினர் சின்ன மேளம் என்றனர். முகவீணைக்குப் பதிலாகக் கிளாரினட்டும், துத்

திக்குப் பதிலாகத் தம்பூரா அல்லது சுருதிப்பெட்டியும் பயன்படுத்தப்படுகின்றன. இவை தவிரப் பிடில், குழல், வீணை போன்ற கருவிகளையும் பயன்படுத்துவது வழக்கமாகிவிட்டது. இவற்றில் எது இல்லாதிருப்பினும் நட்டுவனாரின் நட்டுவாங்கம் இன்றிப்பரத நிருத்தியம் இல்லை. தஞ்சையைச் சேர்ந்த புகழ்பூத்த ஆடலாசிரியர் வடிவேலு என்பார் திருவாங்கூர்ச்சமத்தான அரசவைக் கலைஞராக இருந்தபோது, சதிர்க் கச்சேரியையும் (பரத நாட்டியம்), கதகளியையும் இணைத்து உருவாக்கியதே மோகினியாட்டம் என்னும் ஆடல். வடிவேலு அரசவைக் கலைஞராக இருந்தபோது அரசராக இருந்தவர் கருநாடக இசையுலகம் நன்கறிந்த சுவாதித் திருநாள் ஆவார். சு. சண்.

**நிருவாக ஆவணம்:** சொத்துள்ள ஒருவர் உயிலின்றியோ நிறைவேற்பாளர் எவரையும் நியமிக்காமலோ இறந்து விட்டால், அதிகார வரம்புடைய நீதிமன்றம் தக்க ஆள் ஒருவருக்கு நிருவாக ஆவணத்தை (letter of administration) வழங்கும். அவ்வாறு வழங்கப்பட்டவர் நிறைவேற்பாளரைப் போன்று அதிகாரங்களையும் பொறுப்புகளையும் பெறுவார். நிருவாக ஆவணம் வழங்குதல் பற்றிய விதிகள் 1925-ஆம் ஆண்டின் இந்திய இறங்குரிமைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளன.

நிறைவேற்றாளர் ஒருவரை நியமிக்காமல் ஒருவர் உயிலெழுதி இறந்து விட்டால் அல்லது அவ்வாறு நியமிக்கப்பட்ட நிறைவேற்றாளர்பணியாற்றச் சட்டத் தகுதியின்றி இருந்தால் அல்லது பணியாற்ற மறுத்தால் அல்லது உயிலெழுதியவர் இறப்பதற்கு முன் நிறைவேற்பாளர் இறந்தால் அல்லது உயில் மெய்ப்பிக்கப்படுமுன் இறந்தால் பிரிவு 232 இன்படி நிருவாக ஆவணம் வழங்கப்படலாம்.

நிருவாக ஆவணம் பெற்றவர் உயிலெழுதியவர் பெற்றிருந்த எல்லா உரிமைகளையும் பெற்றுப் பணியாற்றலாம். ஆனால், நிறைவேற்றாளர் (exectuor) என்று ஒருவர் நியமிக்கப்பட்டிருக்கும்போது, வேறு ஒருவருக்கு நிருவாக ஆவணம் வழங்க முடியாது. அவர் தமது உரிமையைத் துறக்கும் போது அல்லது குறிப்பிட்ட காலத்திற்குள் ஏற்காத போது, தக்க ஒருவருக்கு நிருவாக ஆவணம் வழங்கப்படலாம். இளவருக்கு அல்லது பித்து நிலை கொண்டவருக்கு அல்லது ஒரு சங்கத்திற்கு (association or individuals) நிருவாக ஆவணம் வழங்கப்படமாட்டாது (பிரிவு 236).

இந்திய இறங்குரிமைச் சட்டத்தின் (1925)263-ஆம் பிரிவின் கீழ் நியாயமான காரணத்தின் (Just cause) பேரில் ஏற்கெனவே அளிக்கப்பட்ட நிருவாக ஆவணத்தைத் தள்ளுபடி செய்யலாம். இப்பிரிவில் எவைஎவை நியாயமான காரணங்கள் என்பன கூறப்பட்டுள்ளன. ஆ.ச.

**நிருவாகத் திறமை:** நிருவாக அமைப்பானது அதிகாரத்தையும் பொறுப்பையும் விளக்கி அவைகளின் மாற்றங்களைப் பற்றிக் கூறுகிறது. எடுத்த குறிக்கோளை நல்லமுறையில் நிறைவேற்றிட அது மக்களிடையே ஒரு தொடர்பை ஏற்படுத்துகிறது. இவ்வாறு நிறுவனத்தின் குறிக்கோளை நிறைவேற்றும் பணிகளையுடையவர்களின் நிருவாகத் திறமையைக் (Organisational effciency)கூறுவதுதான் நிருவாகம் ஆகும். நல்ல திறமையான நிருவாகம் ஏற்பட வேண்டுமானால் அது கீழ்க்காணும் தன்மைகளைப் பெற்றிருக்கவேண்டும்:

1) ஒரு நிருவாக அமைப்பினால் நிறைவேற்றப்பட வேண்டிய குறிக்கோள்கள் தெளிவாக இருக்க வேண்டும்.

2) குறிக்கோளில்காணும் பணிகளை அந்தத் துறையில் சிறந்த நிபுணர்களிடம் பிரித்துக் கொடுத்துவிட வேண்டும். ஒரு பெரிய வேலையை ஒரு சிலரால் ஒழுங்காகச் செய்யமுடியாது. ஆதலின் அதைப் பலரிடம் ஒதுக்குவதால் நிருவாகத்தில் திறமை ஏற்படுகிறது.

3) நிருவாக அமைப்பின் அதிகாரமும், பொறுப்பும் தெளிவாக விளக்கப்பட வேண்டும். ஒவ்வொரு கீழ்நிலைப் பணியாளரும் அவருக்கு மேல் அதிகாரி யார் என்பதையும் அவருடைய பணி என்ன என்பதையும் தெரிந்து வைத்திருக்கவேண்டும். அதிகாரம், பொறுப்பு ஆகியவைகளின்தொடர்பின் அமைப்புதான் நிருவாகமாகும். ஒருவரிடம் ஒரு பணி ஒப்படைக்கப்படுகிறது. பணிப் பகிர்வு மூலம் அதன் நிறைவேற்றம் நிகழ்கிறது.

4) ஒரு மேலாளர் திறம்பட மேற்பார்வையிடும் வண்ணம் அவரின் கீழ்ப் பணிபுரியும் ஆட்களின் எண்ணிக்கை கட்டுப்பாட்டு எல்லைக்குள் இருக்கவேண்டும். இவ்வமைப்புப் பெரியதாகவும் இருக்கலாம்; சிறியதாகவும் இருக்கலாம்.

5) பல்வேறு நிலையிலுள்ள பணியாளர்களிடையே தக்க தகவல்கள் தெரிவித்து அவர்களின் செயல்களிடையே ஓர் ஒருங்கிணைப்பை நிருவாக அமைப்பு ஏற்படுத்துகிறது.

6) ஒரு நல்ல நிருவாக அமைப்பில் அவர்தம் திறமையின் அடிப்படையில் பணிகள் தரப்படுவதால் இரட்டிப்பு அல்லது பலதரப் பணிகள் ஏற்பட வாய்ப்பில்லை. நல்ல, திறமையான நிருவாகம் கீழ்க்காணுபவைகளில் முக்கியத்துவம் பெறுகிறது.

**1) நல்ல நிருவாகம்:** நிருவாக அமைப்பு நல்ல முறையில் இருந்தால்தான் மேலாண்மையின் பணி திறமையாகவும் எளிதாகவும் காணப்படும். இது செயல்களைப் பல துறைகளுக்கு வகைப்படுத்துகிறது. இன்னாருக்கு இன்ன பணி என வரையறுக்கப் பட்டுள்ளதால் பணி மாற்றத்திற்கு இது உதவுகிறது. இதனால் வாடிக்கையான பணிகளைக் கீழ்நிலையில் உள்ளவர் செய்து வருகிறார்கள். உயர்மட்ட நிருவாகி கள் எதிர்காலத் திட்டம், கொள்கை அமைத்தல் போன்றவைகளில் முழுக் கவனம் செலுத்துகின்றனர். ஒரே பணியைப் பலர் செய்திடும் போக்கை இது அகற்றுகிறது. எனவே, நிருவாகிகளிடையே ஏற்படும் கருத்து வேற்றுமையை இது தடுக்கிறது.

**2) தனித்துறைப் பயிற்சியை ஏற்படுத்தல்:** ஒரு தனித்துறைப் பயிற்சியை ஏற்படுத்தும் கருவியாக நிருவாக அமைப்புத் திகழ்கிறது. பணியாளர்களின் திறமைக்கேற்ப ஒவ்வொருவருக்கும் பணிகள் ஒதுக்கப் படுவதால் ஒவ்வொருவரும் தத்தம் துறையில் சிறந்த வர்களாக விளங்குகிறார்கள். மேலும் தனித் துறைப் பயிற்சிபெற்ற வல்லுநர்களும் பணிக்கு அமர்த்தப்படு கிறார்கள். எனவே, சிறந்த நிருவாக அமைப்பு இல்லாதநிலையில் ஒருவரே பல பணிகளைப் புரிவ தால் திறமையின்மையும் முறையற்ற செயல்முறை களும் தோன்றிவிடும்.

**3) வளர்ச்சியும் மாற்றமும் வழங்குதல்:** நல்ல நிரு வாக அமைப்பு புதிய செயல்களை ஏற்படுத்துகிறது. பல்வேறுபட்ட மாற்றங்களை அது ஏற்றால்தான் நிறுவனம் வளர்ச்சியடையும்.

**4) புதிய தொழில்நுட்பம்:** ஒரு நல்ல நிருவாக அமைப்பு புதிய தொழில் நுட்பங்களைப் பின்பற்ற உதவுகிறது. இத்தகைய புதிய தொழில்நுட்பக் கண்டு பிடிப்புகளைப் பின்பற்றுவதால் நிருவாகத் திட்டம், அமைப்பு போன்றவைகளில் தொடர்ச்சியான மாற் றங்கள் ஏற்படுவது அவசியமாகிறது. எனவே, சாதக மான மாறுதல்களை ஏற்கக்கூடிய நிருவாக அமைப் புத்தேவைப்படுகிறது.

**5) புதியன ஆக்கும் திறன்:** நல்லதொரு நிருவாக அமைப்பு புதியனவற்றை உருவாக்கும் திறனை வளர்க்கிறது; பணியாளர்களிடையே இயல்பாக உள்ள இத் திறமையைப் போற்றுகிறது; தனிப்பட்ட வரின்சிறப்பான பணியை ஊக்குவிக்கிறது; தனிப்பட்ட வரின் சிந்தனையையும் படைப்பையும் ஆதரிக்கிறது; மேலாண்மையில் இத்தகைய புதியவைகளை உரு வாக்கும் திறனை விரும்புகிறது. எனவேதான் இலௌன்சு பரி பிசு (Louns Bury Fish) என்பவர் 'நிருவாக அமைப்பு ஓர் எழுத்தரைவிட உயர்வானது; அதன் மூலமாகத்தான் மேலாண்மை ஒரு தொழிலை நடத்தி, ஒருங்கிணைத்துக் கட்டுப்படுத்துகிறது; எனவே, உண்மையிலேயே இது மேலாண்மையின் அடிப்படையாகும்' என்று விளக்கியுள்ளார்.

**நிருவாக அமைப்பின் நிலைகள்:** ஒரு நிருவாக அமைப்பின் மேலாண்மைப் பணி கீழ்க்காணும் நிலை களைக் கொண்டுள்ளது.

**1) செயற்பாடுகளைத் தீர்மானித்தல்:** நிறுவனத் தின் கோட்பாடுகளை அல்லது குறிக்கோள்களை நிறைவேற்றிடும் வகையிலுள்ள நடவடிக்கைகளைக் கையாளவேண்டும். முழு வேலையைப் பகுதிகளாகப் பிரிக்க வேண்டும். ஒவ்வொரு தனி ஆளும் செய்ய வேண்டிய பணியினைத் தீர்மானிக்க வேண்டும்.

**2) இனப்படுத்துதல்:** அடுத்தபடியாக நடவடிக்கை களைப் பணி அல்லது இடம் அல்லது வழிமுறை ஆகியவற்றின் அடிப்படையில் இனப்படுத்த வேண்டும்; அல்லது ஒன்றாக்க வேண்டும். ஒவ்வொரு வகையான நடவடிக்கைக்கும் ஒரு துறையும், உள் வகை களுக்கு ஒரு பிரிவும் ஏற்படுத்த வேண்டும். எடுத்துக் காட்டாக, ஒரு தயாரிப்புத் தொழில் நிறுவனத்தின் நடவடிக்கைகள், உற்பத்தி, கொள்முதல், விற்பனை, நிதி, கணக்கு, வேலைக்கமர்த்தல் போன்ற பிரிவு களாக இனப்படுத்தப்பட வேண்டும்.

**3) பொறுப்புகளின் ஒதுக்கீடு:** ஒவ்வொரு தனி ஆளுக்கும் குறிப்பிட்ட பணி தரப்பட வேண்டும். பணியிடத்தில் அதற்குரியவரைத் தேர்ந்தெடுத்து அமர்த்த வேண்டும். ஒவ்வொருவருக்கும் ஒரு பொறுப் பைக் கொடுத்துவிட்டால் பணி நிறைவேற்றம் ஒழுங் காக நடைபெறும்.

**4) அதிகார மாற்றம்:** பணி நிறைவேற்றத்திற்கு உறுதி செய்திடும் அதிகார மாற்றம் மிகவும் முக்கிய மானது. ஒருவருக்கு அதிகாரம் இல்லையென்றால் அவர் தம்கீழ்ப் பணியாற்றும் ஆட்களிடமிருந்து வேலை வாங்கிட முடியாது. முடிவு எடுத்தல், கட் டளை பிறப்பித்தல், பணி புரிவோர்களைத் தம்கீழ் அமர்த்தல், அவர்களின் செயல்களை வழிநடத்தல் போன்ற அதிகாரங்கள் பெற்றவர்தாம் அதிகாரி எனப்படுவார்.

**5) அதிகாரத் தொடர்பு அமைத்தல்:** நிருவாக அமைப்பில் எடுக்கவேண்டிய அடுத்த நடவடிக்கை யானது பல்வேறு இனப்பகுதிகளைப் படுக்கைக்கோடு அல்லது நேர்க்கோடு முறையில் ஒருங்கிணைத்து அதி காரத் தொடர்பு ஒன்று உண்டாக்க வேண்டும். பணிப் பளுவிற்கேற்ப அதிகரிக்கப்படும் பணியாளர் களின் எண்ணிக்கை உயர்விற்குத் தக்கபடி நிருவாக அமைப்பின் மட்டம் உயர்த்தப்பட வேண்டும். ஒரு

நல்ல நிலையிலுள்ள மேலதிகாரி-கீழ் அதிகாரி தொடர்பு, நிறுவனம் நல்லமுறையில் எளிதாக இயங்குவதற்கு வழிகோலும்.

ஒரு நிறுவனத்தில் நிருவாகத் திறன் நல்லமுறையில் அமையவேண்டுமானால் மேற்கூறிய நடவடிக்கைகளை நிறுவனம் எடுக்கவேண்டும். அப்பொழுதுதான் நிருவாகத் திறன் சிறந்தோங்கும். இல்லையேல் நிருவாகம் சீர்கெடும். நிருவாகிகளும் மேற்கூறியுள்ள கருத்தை மனத்திற்கொண்டு நிருவாகத்தை நடத்த வேண்டும். கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Kumara Raj,** A., Business Management. Pallavan Pathippagam, South Arcot District, 1985.

**Srinivasan Chunawalla,** Management Principles and Practice. Himalaya Publishing House, Bombay. 1983.

***நிருவாக முகமை முறை:*** இந்தியாவில் தொழில் செய்யவந்த ஆங்கில வணிகர்கள், ஆங்கிலேய வணிக நிறுவனங்களை முகவர் என்ற அடிப்படையில் நிருவாகம் செய்தனர். அவர்களே நாளடைவில் நிருவாக முகவர் (Managing Agent) என்ற பெயர் பெற்றனர். அவர்களின் நிருவாக முறையே நிருவாக முகமை முறை (Managing Agency System) என்று கூறப்பட்டது. இந்திய நாட்டிலும் நிறும அடிப்படையில் பெரும் பெரும் தொழிலமைப்புகளைத் தோற்றுவித்தனர். அவற்றிற்குத் தேவையான நிதியைத் தம்மிடமும், தம் நண்பர்கள், உறவினர்களிடமும் இருந்து திரட்டித் தந்துதவினர். அவை வளர்ச்சி பெற்று முன்னேறுவதற்காக நிருவகிக்கும் பொறுப்பையும் ஏற்றனர். இந்திய நாட்டில் புதிய முறையில் பேரளவுத் தொழில்கள் தோற்றம் பெற்று ஏற்றம் பெறுவதற்கு உதவிய முன்னோடிகளாகத் திகழ்ந்தனர்.

ஏறத்தாழ அரை நூற்றாண்டு வரை இந்தியத் தொழில் வளர்ச்சியும், நிருவாக முகவர்களின் எழுச்சியும் இணைந்த வண்ணம் நடைபெற்று வந்தன. நிருவாக முகமை அமைப்பும் (1969-ஆம் ஆண்டு நிறுமத் திருத்தச் சட்டத்தின்படி 1970 ஏப்பிரல் முதல் தேதியிலிருந்து ) 1956-ஆம் ஆண்டு நிறுமச் சட்டம் அனுமதி அளித்த செயலாண்மையர் நிதியாண்மையர் (Secretaries and Treasurers) அமைப்பும் தொடர்ந்து செயலாற்றுவதற்குத் தடை விதிக்கப்பட்டதன் விளைவாக அவ்விரு அமைப்புகளும் இன்று செயலற்றுப் போய்விட்டன.

ஆங்கிலேய நிருவாக முகவர்கள் தொடக்கத்தில் தேயிலைத் தோட்டம், நிலக்கரி, சணல் ஆகிய தொழில் துறைகளிலும், போகப்போக வெற்றி வாய்ப்பு மிகுந்துள்ள ஏனைய துறைகளிலும் கவனம் செலுத்தி உலகத் தொழிற் படத்தில் இந்தியாவும் இடம் பெறுவதற்குக் காரணமாக விளங்கினர். அவர்களைப் பின்பற்றி இந்திய நாட்டவரில் போதுமான வளமும் வல்லமையும் பெற்றுள்ளோரும் நிருவாக முகவர்களாகப் பணியாற்றத் தொடங்கி, இந்தியாவின் தொழில் முன்னேற்றத்திற்கு மேலும் உரமிட்டு, அதை விரைவுபடுத்தினர். நிருவாக முகவர்களில் பலர் செல்வாக்கு, அயராத உழைப்பு, நேர்மை, விடாமுயற்சி போன்ற செம்மையான பண்புகளைப் பெற்றிருந்ததன் காரணமாக அவர்கள் தோற்றுவித்து, நிதியுதவி நல்கி நிருவகித்த தொழில் நிறுமங்கள் வளர்ச்சி பெற்று அவர்களுக்கு நற்பெயரைத் தேடித் தந்தன. இருப்பினும் முகவர்சிலர் தகுதி, திறமை, உழைப்பு ஆகியவற்றைப் பெற்றிராததின் அவர்கள் நிருவகித்துவந்த நிறுமங்களை எந்தெந்த வழிகளில் எப்படியெப்படி, எவ்வளவு சுரண்ட முடியுமோ அவ்வாறு சுரண்டத் தலைப்பட்டதனால் நிருவாக முகமை என்ற அமைப்புக்கே நீங்காத மாசும், பொது மக்களின் கடும்எதிர்ப்பும் வந்துசேர்ந்தன.

நிருவாக முகவர்கள் தோற்றுவிப்பாண்மையர், நிதியளிப்போர், நிருவாகர்கள் என்ற மூன்று நிலைகளிலும் தொழில் வளர்ச்சிக்கு உதவியுள்ளனர். 1) தோற்றுவிப்பாண்மையர் என்ற நிலையில் இந்தியத் தொழில்துறையில் பற்பல நிறுமங்களைத் தோற்றுவித்து இந்தியத் தொழில் வளர்ச்சிக்கு வழி வகுத்தனர். தோற்றுவிப்பாண்மையிலுள்ள பணிகளை இவர்கள் ஈடு இணையற்ற முறையிலும் மிகவும் பாராட்டத்தக்க வகையிலும் ஆற்றி வந்தனர். குறிப்பாக கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் இவர்கள் இத்துறையில் காட்டிய ஆர்வம், துணிச்சல், முனைப்பு ஆகியவை மிகவும் போற்றத்தக்கவையாகும்.

2) நிதியளிப்போர் என்ற நிலையில் இவர்கள் தம் சொந்தப் பணத்தை நிறுமங்களுக்கு அளித்தனர். உள்நாட்டிலிருந்து மட்டுமல்லாமல் வெளிநாட்டிலிருந்தும் நிதி திரட்டித் தந்தனர். தாம் பொறுப்புறுதி அளித்துஅந் நிறுமங்களுக்குத் தேவையான நிதியை வங்கிகள், பிற நிதியமைப்புகள் ஆகியவற்றிடமிருந்து பெற்றுத்தந்திருக்கின்றனர். பணப் பற்றாக்குறையால் இந்நிறுமங்கள் வீழ்ச்சியுற்றிருக்க வேண்டிய சிலநெருக்கடியான சூழ்நிலைகளில் இவர்கள் தம் குடும்ப நகைகளை அடகு வைத்து நிதி திரட்டித் தந்து அந்நிறுமங்களைக் காப்பாற்றியிருக்கின்றனர். இருப்பினும், ஆண்டுகள் செல்லச் செல்ல நிதியளிப்போர் என்ற நிலையில் இவர்கள் காட்டிவந்த ஆர்வமும் குறைந்தது. அந் நிறுமங்கள் மீதுள்ள தமது கட்டுப்பாடற்ற

அதிகாரத்தை நிலைப் படுத்திக் கொள்வதற்கு எவ்வளவு குறைந்த முதலீடு தேவையோ அதைமட்டும் அளித்து வந்தனர்.

3) நிருவாகர் என்ற நிலையில் இந்திய நாட்டில் வளர்ச்சி பெறாமலிருந்த நிருவாகத் திறம், நுட்பம், அனுபவம் ஆகியவற்றை நிறுமங்களின் நிருவாகத்தில் ஈடுபடுத்தினர். மேலும் நிருவாக முகவர்கள், தாம் தோற்றுவித்த பற்பல நிறுமங்களுக்கு நிருவாகப் பொறுப்பேற்பது வழக்கமாதலால் 'குழு நிருவாகம்' (Group Management) என்ற முறை தோன்றித் தொழில்துறையில் கூட்டுறவும், சேர்க்கை உடன்பாடுகளும் எழுந்தன. அதனால் நிருவாக முகவர் ஒருவரின் ஆதிக்கத்துக்குட்பட்டிருந்த பல நிறுமங்களுக்குப் பேரளவு இயக்கத்தின் விளைவாக எழும் பல சிக்கனங்களும் பயன்களும் கிட்டின.

இறுதியாக, நிருவாக முகமையங்கள், தாம் பெற்றிருந்த தொழில்நுட்பம், நிருவாகத் திறமை, நிதி வசதி காரணமாக இடர்மிகுந்தனவாக இருந்தாலும் அதை அவ்வளவாகப் பொருட்படுத்தாது பற்பல புதிய தொழில் துறைகளில் துணிச்சலோடு நுழைந்து இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் உதவின.

**நிருவாக முகமையமைப்பின் குறைகள்:** நிருவாக முகவர்கள், தமது ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த நிறுமங்களில் மிக்க வலிமை வாய்ந்தவர்களாக விளங்கினர். பெயரளவில் அவர்கள் இயக்குநரவைக்கு அடங்கியிருக்க வேண்டியவர்களாக இருந்தாலும், நடைமுறையில் இயக்குநர்களை நியமிக்கும் அதிகாரம் பெற்றிருந்ததால் இயக்குநர்கள், இவர்களின் கைப் பொம்மையாக இருக்கவேண்டிய அவல நிலை தோன்றியது.

அலுவல் படி, ஆதாயம் அல்லது விற்பனை மீது கழிவு, அலுவல் இழப்புக்கான ஈட்டுத்தொகை, இவர்கள் புரியும் பல்வேறு பணிகளுக்கான கட்டணங்கள் என்ற பெயர்களில் இவர்கள் நிறுமங்களிடமிருந்து பெற்ற ஊதியம் மிகமிக அதிகமானது. நிறுமங்களின் நிகர ஆதாயத்தில் 35 விழுக்காட்டிலிருந்து 70 விழுக்காடு வரை இவர்கள் ஊதியமாகப் பெற்றனர்.

இவர்கள், தமது நிருவாகத்துக்கு உட்பட்டிருந்த நிறுமங்களிடமிருந்து பெரும் தொகைகளைக் கடனாகப் பெற்றதோடு ஒரு நிறுமத்தின் நிதியை மற்றொரு நிறுமத்தில் முதலீடும் செய்தனர். மேலும் இவர்கள் அந் நிறுமங்களின் அந்தரங்கச் செயல்களை அறியும் வாய்ப்பைத் தமது சொந்த நலனைப் பெருக்கும்வகையிலும் அந் நிறுமங்களின் நலனுக்குப் பாதகமான முறையிலும் பயன்படுத்தத் தயங்கவில்லை. அந் நிறுமங்களின் பங்கு ஆதாய விகிதங்களை ஏற்றுவது அல்லது இறக்குவதன்மூலம் அவற்றின் பங்குகளின் விலைகளில் ஏற்ற இறக்கங்களை உண்டுபண்ணிப் பெரும் ஆதாயம் சேர்த்தனர்.

இவர்கள் போதிய திறமையும், தொழில் நுட்பமும் தெரியாத தமது உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரை அந் நிறுமங்களின் முக்கியபதவிகளில் அமர்த்தினர். தமக்கு அந் நிறுமங்கள்பால் உள்ள நிருவாக முகமை உரிமையைத் தமது விருப்பம்போல் மாற்றுவதால் பேராதாயம் பெற்றனர். ஆனால், அவ் வுரிமையை வாங்குபவர்கள் போதிய வல்லமை, அனுபவம், தொழில்நுட்பம் பெற்றவர்களா என்று கவனிக்கவில்லை. எனவே, தொடக்கநிலையில் தாம் உருவாக்கிய நிறுமங்கள் செம்மையாக வளர்ச்சி பெறுவதற்கு எவ்வளவுக் கெவ்வளவு அக்கறை காட்டினார்களோ அவ்வளவுக்கவ்வளவு அவற்றின் நலனைப் போகப் போகப் புறக்கணித்தனர்.

மேற்கூறியவற்றின் விளைவாக நிருவாக முகமை அமைப்புக் கடும்கண்டனத்துக்கு ஆளானதோடு அதை உடனடியாக ஒழிகக வேண்டும் என்ற கிளர்ச்சியும் வலுப்பெற்றது. இடைக்காலத்தில் இவர்களின் உதவி இல்லாமலேயே பற்பல தொழில் அமைப்புகள உருவாயின. இவை தோற்றுவிப்பாண்மையர் என்ற இவர்களின் சிறப்பைப் பெரிதும் குறைத்துவிட்டன. மேலும், மூலதன அங்காடி வளர்ச்சி, அரசு பல்வகை நிதி நிறுவனங்களை உருவாக்கி அதன மூலம் தொழில் முறைக்குச்செய்த நிதிவசதி, புதியபேரளவுத் தொழில் அமைப்புகளின் நிதித் தேவை நிருவாக முகவர்களின் சக்திக்கு மீறிய அளவாக வளர்ச்சி பெற்றமை, நிருவாக முகவர்களிடம் பொதுமக்கள் வைத்திருந்த நம்பிக்கையில் ஏற்பட்ட சரிவு ஆகியவையனைத்தும் 'நிதியளிப்போர்' என்ற அவர்களது சிறப்பு வீழ்ச்சியுறுமாறு செய்துவிட்டன.

நிருவாக முகமை முறையை ஒழித்ததன் விளைவாக இயல் முறையாகப் பயின்று நிருவாகத் திறன் பெற்றோர், உயர் நிருவாகப் பதவிகளில் அமர்த்தப் படுவதற்கு வாய்ப்பு மிகுந்துள்ளது. பெயரளவில் நிருவாகிகளாகப் பணிபுரிந்துவந்த நிருவாக முகவர்களின் இடத்தில் இவர்கள் நியமிக்கப்படுவதால் நிறும நிருவாகத்தின் தரம் உயரும் என்பது எதிர்பார்க்கப்படுகிறது. நிருவாக முகமை முறை ஒழிக்கப்பட்டதையடுத்து முன்பு அவ்வாறு பணியாற்றிய தொழிலகங்கள் இப்பொழுது 'ஆலோசனை உதவி நல்கும் நிறுமங்கள்' (Consultancy & Service Companies) என்ற பெயரில் புத்துயிர் பெற்று வந்துகொண்டிருக்கின்றன. இவை பணி ஆட்களைத் தேர்ந்தெடுத்தல், நிதி சார்ந்த சிக்கல்கள் முதலியன பற்றி

அறிவுரை தருவதோடு செயலாளர் தொடர்பான பணிகளில் உதவி நல்கவும் முன்வந்திருக்கின்றன.

கே.என்.இரா.

**துணை நூல்:**

Kapoor, N.B., Elements of Mercantile Law, Sultan Chand & Sons, New Delhi, 1983.

*நிருவாக மேலாண்மைப் படிப்பு*: நாகரிக வளர்ச்சியில் கைத்தொழில்,குடிசைத் தொழில் ஆகிய வற்றின் வலிமை குன்றி ஆலைத் தொழில்களும் கனரக உற்பத்தி முறையும் பெருகி வருகையில் இவற்றின் உற்பத்தி அமைப்பும் அளவும் இயல் பாகவே பேராற்றலை உள்ளடக்கியுள்ளனவாக மாறியுள்ளன.

இன்றைய தொழில் முனைவோர் பண்ட உற் பத்தியில் நேரடியாக ஈடுபடுவதில்லை; திறமையும் விசுவாசமும் உடைய கற்றுத் தேர்ந்த பலரைக் கொண்டு தமது நிறுவனத்தின் உற்பத்தி, விற்பனை. விளம்பரம், பழுதுபார்த்தல், கொள்முதல் போன்ற பணிகளை நிறைவேற்றிக் கொள்கின்றனர். உற் பத்திப் பணிகளையும் ஊழியர்களையும் மேற்பார்வை யிடல், வாடிக்கையாளரிடம் நல்லுறவுகளை வளர்த் தல், அங்காடி நிலவரங்களைக் கண்டறிதல், விலை பற்றிய கொள்கை வகுத்தல், தீர்வைகளையும் வரி களையும் உரிய காலத்தில் செலுத்துதல், தொழிற் சட்டங்களை அறிந்திருத்தல் போன்றன இன்றைய நிறுவன அலுவலர்களிடம் எதிர்பார்க்கும் திறன் களாகும்.

இதுபோன்ற துறைகளில் அறிவையும் பயில் திறன்களையும் அளிப்பதற்கெனச் சில படிப்புகள் உருவாக்கப்பட்டுள்ளன. அவற்றில் தலையானது நிரு வாக மேலாண்மைப் படிப்பு(Administrative management). வாணிக நிருவாகத்தில் முதுகலைப் பட்டப் படிப்பு (எம்.பி.ஏ.) இளநிலைப் பட்டப்படிப்பு (பி.பி.ஏ.) ஆகியன பல்வேறு பல்கலைக்கழகங் களிலும் இன்று சிறப்பிடம் பெற்றுள்ளன. செயல் அலுவலர்களுக்கான (Executives) பயிற்சிகளிலும் அலுவலக நடைமுறைகள், பணியாளர் மேற்பார்வை, துறை சார்ந்த சட்டங்கள், பொதுமக்கள் தொடர்பு போன்றவை அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.

நிருவாகப் பயிற்சியின் விளைவாகச் சாதாரணமான ஒரு மேலாளர் அசாதாரணமான சாதனைகளைப் புரிய முடியும் எனப் பார்க்கின்சன் (Parkinson) என்ற மேலாண்மை அறிவியல் வல்லுநர் கூறுகிறார். மேலும், ஒரு நிருவாகி மிகப்பல முடிவுகளைச் செய்ய லாகாது. ஒருவர் மிகப் பல முடிவுகளைச் செய்ய நேர்கையில் தவறான முடிவுகளை மேற்கொள்ளவும் இடம் உள்ளது. நிருவாகி தமக்குக் கீழ்ப்பணிபுரிவோ ரிடம் மிக நெருங்கிப் பழகலாகாது. அனைவரையும் சமமாக நடத்த வேண்டும். இல்லையெனில், பொறா மையும் உறவில் விரிசலும் தோன்றும்.

நிருவாகம் குறிக்கோள்களடிப்படையில் அமைதல் வேண்டும். அதற்கான வளர்ச்சித்திட்டங்களும் நெருக்கடிகளைச் சமாளிக்கும் திட்டங்களும் (Crisis Management) நிருவாகியினால் கைக்கொள்ளப்படு கின்றன.

நிருவாக, மேலாண்மைப் படிப்பில் வலியுறுத்தப் படுபவற்றுள் கருத்து மாறுபாடுகளைப் புறக்கணிக்கக் கூடாது என்பதும் ஒன்றாகும். நிருவாகி புகழ்ந்து பேசுபவர்களிடமும் மிகவும் நெருங்கிப்பழகுபவர்களி டமும் எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். தக்கவர் களிடம் நம்பிக்கை வைப்பதும் இன்றியமையாததா கும். மேலாண்மை நிருவாகப் படிப்புகளில் சிறப்பாகக் கூறப்படுபவை பின்வருவனவாகும்.

**அ. முறைமை அணுகுமுறை**: முறைமை அணுகு முறை (Systems Approach) என்பது ஒருங்கிணைந்த முழுமையில் உட்கூறுகள் ஒழுங்குற ஒன்றையொன்று பாதிக்கும் வகைகளை அறிந்து அதற்கேற்றாற்போல் தம் அமைப்பை மாற்றிக்கொள்வதாகும். முறைமைப் பகுப்பாய்வு (Systems Anaylysis) என்பது ஒரு முறை மையின் குறிக்கோள்களை எட்டுவதற்கான பல்வேறு படிகளையும் அறிவியல் முறையில் திட்டமிட்டுத் தேவையானால் படிமங்களாக (Models) வெளியிடு தலாகும். இதில் அடங்குபவை அ) இப்போதைய சூழ் நிலையைப் பகுத்துக் காணல், ஆ) விரும்பும் சூழ்நிலை யைக் காண இலக்குகளை வகுத்துக் கொள்ளுதல், இ) இலக்குகளை எட்டக் கையாளும் நுட்ப முறை களை மதிப்பிடும் வழிமுறைகளை விளக்குதல், ஈ)மாற் றுத் தீர்வுகளை உருவாக்கிக் கொள்ளுதல், உ)செலவு -பயன்பாடு அடிப்படையில் சிறந்த தீர்வினைத் தேர்ந்தெடுத்தல், ஊ) முறைமையின் வடிவமைப்பின் விவரங்களை வகுத்துக் கொள்ளுதல், எ) முறைமை யின் வளர்ச்சியினைக் கண்காணிக்கும் வழியைத் தெளிவுபடுத்தல், ஏ) தீர்வைக் காண்பதற்கான நடைமுறையை வகுத்தல்.

கல்வி நிருவாகத்திலும் முறைமை அணுகுமுறை பயன்படும்.கல்வி முறைமையில் கீழ்க்காணுமாறு விளக் கலாம். கல்வியமைப்பின் உள்ளீடுகளாக ஆசிரியர்கள்,

செயல்முறை

உள்ளீடு வெளியீடு

பகுப்பாய்வும் பின்
'விளைவு கூறலும்'

மாணவர்கள், கட்டடங்கள், சாதனங்கள் போன்றவற்றைக் குறிப்பிடலாம். வெளியீடு என்பது தரமானதும் குறிப்பிடத் தக்க அளவுடையதுமான கல்வித் தேர்ச்சியினை வெளிப்படுத்தலாகும். சிறப்பான வெளியீட்டைப் பெரிதும் உகந்த அளவில் உள்ளீடுகளைக் கொண்டு அடைவதற்கு ஏற்ற செயல்முறைகள் தேவை. இவை கல்வி ஏற்பாடு, பாடத்திட்டம், கற்பிக்கும் முறைகள், மேற்பார்வை, ஊக்குவிப்புத் திட்டங்கள் போன்றவையாகும். கல்வி நிருவாகி இவற்றைத் தக்கவாறு மாற்றி அமைத்துக் கொள்ளும் திறனைப் பெற நிருவாக மேலாண்மைப் படிப்பு உதவுகிறது.

**ஆ. திட்டமதிப்பீடு மீள்பார்வை உத்தி:** ஒரு நிருவாகியின் கடமைகளுள் திட்டம் வரைதல், வடிவளித்தல், நிறைவேற்றல் ஆகியன அடங்கும். கருத்தில் தோன்றித் திட்டமாக முகிழ்த்து, செயல்முறையாக வடிவெடுத்து நிறைவு செய்யப்படும் திட்டம், குறிக்கோள்களை எட்டிய முறையையும், சாதனை அளவையும் மதிப்பிடப் பெரிதும் பயன்படுகிறது. தொடர்ந்த கண்காணிப்பு முறையால் தேவையான மாற்றங்களைச் செய்துகொள்ள இயலும். இவை திட்ட இலக்குகளை ஒட்டியவையாகவோ செயல்முறை பற்றியவையாகவோ அடிப்படைக் கருத்தைச் சார்ந்தவையாகவோ இருக்கலாம்.பல்வேறு வழிநிலை விளக்கப்படங்கள் (Flow charts) திட்டத்தைத் தொடர்ந்து மதிப்பிட உதவுகின்றன.

**இ. பள்ளித் திட்டமிடல், மதிப்பீடு மற்றும் தொடர்புமுறைமை:** ஓர் அமைப்பில் தெளிவாகக்காணப்படும் பள்ளிச் செயல்களை ஓர்ந்து அத்தகவல்களைப் பயன்படுத்திக் கொள்ளும் விரைவான உத்திகளைக் கொண்டு வருங்காலத்திற்கான முடிவுகளை மேற்கொள்ள இம்முறை தனிச்சிறப்பளிக்கிறது. இம்முறையின் முதல் படி 'விளைவு' (Outcomes)பற்றியதாகும். ஒரு தனிஆள் அல்லது அமைப்புத்தனது'விளைவுகளில்' தோற்றுவிக்கும் மாற்றம் ஆராயப்படுகிறது. இதன் உட்பிரிவுகளான: அ) சமூக அடிப்படையான குறிக் [illegible], ஆ) தொழில் சார்ந்த நிகழ்ச்சித் திட்டம் [illegible] மதிப்பிடும் முறை, இ) கொள்கை வகுத்தல் -ஒருங்கிணைத்தல். இதனால் ஒரு நிறுவனம், பணியாற்றும் சமூகத்துடன் தனது நிருவாக மற்றும் வளர்ச்சித் திட்டங்களைப் பொருத்தப் பாடுடையனவாகச் செய்ய முடிகிறது. எஸ்.ந.

**நிருவாகிகள்:** கொள்கைகளைத் தீட்டி அவைகளுக்கு ஆதரவு தேடும் ஒருவர்தான் நிருவாகி. ஒரு முறை கொள்கை முடிவு எடுத்து விட்டால் அதன் நிறைவேற்றத்தை மேற்பார்வையிடும் பொறுப்பு நிருவாகிக்கு உண்டு. அப் பதவியை வகிக்கும் தனிப்பட்ட ஆள் அல்லது ஆட்களை அது குறிக்கும்.

பொதுவாக நிருவாகி என்றால் அது தலைமை நிருவாகியைத் தான் (Chief Executive) குறிக்கும். ஒரு தனிப்பட்ட ஆள் எல்லாப் பொறுப்புகளையும் நிருவகிக்க இயலாது. எனவே, நிருவாகிக்கும் (Executive) நிருவாகத்தைக் கவனிப்பவருக்கும் (Administrator) சிறிய வேறுபாடு உண்டு. அதை நிருபிப்பது கடினம்.

நிருவாகியின் விருப்பப்படிதான் கோட்பாடுகள் தீட்டப்பட்டு நிறைவேற்றப்படுகின்றன. அவைகளை நிறைவேற்றுபவர்கள் தாம் நிருவாக அலுவலர்கள் ஆவார்கள். எனவே, நிருவாகி என்ற சொல் அரசாங்கம், பண்ணை நிருவாகம், சட்டம் – நீதி போன்ற துறைகளில் எல்லாம் பயன்படுத்தப்படுகிறது. மேலும் வாணிகம், தொழில் நிறுவனங்கள் போன்றவைகள் நிருவாகிகளை அமர்த்துகின்றன.

ஒரு நிருவாகி என்பவர் அவருடைய மேற்பார்வையில் நிறைவேற்றப்படும் பணிக்குப் பொறுப்பேற்கும் உயர்மட்ட மேலாண்மை அலுவலராவார். முடிவு எடுக்கும் நிருவாகிகள் தொழில் நுட்ப (Technical), மனித (Human) பொதுக் கருத்துத் தொடர்பான (Conceptual) மூன்று அடிப்படைத் திறமைகளைக் கையாள வேண்டும்.

தொழில் நுட்பத் திறமை என்பது, ஒரு வேலையைச் செய்திடப் பயன்படும் வழிகள். கருவிகள், நிபுணர்களைப் பற்றிய அட்டவணைத் தயாரித்தல, கணக்குப் பொறி (Computer) காட்டுவதைக் கணக்கெடுத்தல், புள்ளிவிவரங்களைப் பகுப்பாய்வு செய்தல் போன்றவைகளாகும்.

மனிதத் திறமை என்பது மற்றவர்களுடன் பணிபுரியும்போது பணியில் செம்மையும், செயலில் நன்மையும் தரும்படி தனது ஆற்றலை மிகையாக வெளிப்படுத்துவதாகும். மற்றவர்களின் உணர்வுகளை மதித்து அவர்களின் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டும். கீழ் நிலையில் வேலை பார்ப்பவர்கள் சமமானவர்கள் என்ற உண்மையை உயர் அதிகாரிகள் போன்றவர்களுக்கு உணரவைக்க வேண்டும்.

பொதுக் கருத்துத் தொடர்பான திறமை என்பது மதிநுட்பம், வாதத்திறமை, நிறுவனத்தை ஒரு பணிபுரியும் அலகாகக் கருதுதல் போன்றவைகளைக் கொண்டதாகும். முடிவு எடுப்பதற்கு இத்திறமைகள் முக்கியமானவையாகக்கருதப்படுகின்றன. மேலும், சிக்

கல்களைத் தீர்ப்பதற்கு முன்னர் அவைகளின் தன்மையை அறிந்திட இவை பயன்படுகின்றன.

பெரிய நிறுவனங்களுக்கும் அரசு நிறுவனங்களுக்கும் திறமையான நிருவாகத் தலைமை அவசியமாகும். அரசு நிறுவன நிருவாகத் தலைமைக்கும் அரசுச் சார்பில்லாத நிறுவன நிருவாகத் தலைமைக்கும் பொறுப்புகளைக் கையாள்வதில்தான் வேறுபாடு உண்டு. தொழில் நிறுவன நிருவாகிகள் ஒரு குறிப்பிட்ட சிறிய இயக்குனர் அவைக்குப் (Board of Directors) பொறுப்பாகிறார்கள். கொள்கையளவில் பங்குதாரர்களுக்குப் பொறுப்பாகிறார்கள். ஆனால், நடைமுறை நிருவாகிகள், அவர்களுக்கு எது சரியென்று தோன்றுகிறதோ அதைச் செய்து பொறுப்பாளியாகிறார்கள். அதே சமயத்தில் பொதுமக்களுக்கும், வாடிக்கையாளர்களுக்கும் அவர்கள் பொறுப்பேற்க வேண்டும். ஆனால், இயக்குனர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இவர்கள் இருக்கும்வரை மற்றவர்களின் அதிருப்தி இவர்களை ஒன்றும் செய்ய முடியாது என்பதுதான் நடைமுறையில் உள்ள நிலைமையாகும்.

அரசு நிருவாகிகளின் வெற்றி அவர்கள் பெற்றுள்ள அரசு முறையின் செயல்களைப் பொறுத்துள்ளது. மக்களாட்சி முறையில் உள்ள நாடுகளில் அரசு நிருவாகிகள் மக்களுக்குப் பதில் சொல்லக் கடமைப்பட்டவர்களாகிறார்கள். காரணம் அவ்வப்போது நடந்திடும் தேர்தல்கள் மூலம் ஆட்சியை மாற்றுபவர்கள் மக்கள்தாம். மக்களாட்சி இல்லாத நாடுகளில் கூட விதிமுறைகள் பெரும்பாலான மக்களின் விருப்பத்திற்கேற்ப அமைவதால் நிருவாகிகள் மக்களுக்குப் பொறுப்பாளிகளாகிறார்கள்.

**நிருவாகியின் கடமைகள்:** நிருவாக அதிகாரி, தமக்குக் கீழ்ப்பணிபுரிபவர்களை வேலைக்கு அமர்த்தி அவர்களின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துகிறார்.

மேலும், வரவு செலவுத் திட்டங்களைத்தயாரித்துத் தங்கள் செலவுகளைக் கட்டுப்படுத்துகிறார். ஒப்பந்தங்களைஏற்று அதற்குத்தக்கவாறு கொள் முதல் செய்கிறார். நிறுமமுகவர்களுக்காக(Agents)இவர்பணியாற்றுகிறார். திட்டங்களை நிறைவேற்றுவதில் இவருடைய பங்கு முதன்மையானதாகக் கருதப்படுகிறது. மேற்கூறிய செயல்கள் ஒரு நிருவாகியின் கடமைகளைக் (Executives duties) குறிக்கின்றன.

ஒரு நிறுவனத்திற்கும் மற்ற நிறுவனத்திற்கும் அதன் அமைப்பில் உள்ள வேறுபாடு கீழே காட்டப்பட்டிருக்கிறது.

**முதல்வகை நிறுவன அமைப்பு**




**இரண்டாம் வகை நிறுவன அமைப்பு**



மூன்றாம் வகை நிருவாக அமைப்பு




இவ்வாறாகப் பல்வேறு நிருவாக அமைப்புகள் இருந்தாலும் பெரும்பான்மை நிறுவனத்தில் கீழ்க்காணும் நிருவாக அமைப்பே உள்ளது.




இவ்வாறு ஒரு நிறுவனத்தில் நிருவாகம் சரியாக நடந்திட நிருவாகிகள் அவசியம் தேவை. நல்ல நிருவாகிகளைப் பெற்றால்தான் நிறுவனம் நன்றாகச் செயற்பட்டுத் தனக்கு ஆதாயத்தை ஈட்டிக் கொள்வதோடு – சமுதாயத்திற்கும் தேசத்திற்கும் தொண்டு செய்யவும் முடியும். கு.நா.இ.

**துணை நூல்கள்:**

**Rupnahasanaroi**, M.N., Executive Development in India, Himalaya Publishing House, Bombay, 1977.

**Saksena**, S.C. Principles and practice of Management, Sahitya Bhavan, Agra, 1987.

**நிருவாணம்** என்னும் சொல் பௌத்த நெறியில் எல்லா உயிர்களும் அடைய வேண்டிய உயரிய நிலையைக் குறித்து நிற்கிறது. பிற சமயங்களில் வீடுபேறு என்றும் முக்தி என்றும் பலவாறாகக் கூறப்படும் நிலை போன்று, புத்த மதத்தில் குறிக்கப்படும் உயர்நிலை நிருவாணம் ஆகும். இந்நிலையை மணிமேகலை ஆசிரியர் சாத்தனார் 'இறுதியில் நற்கதி', 'பிறவி நீத்த பெற்றி', 'பெரும் பேறு' எனக் குறிப்பிடுகிறார். இத்தொடர்கள் நிருவாணம் என்பது 'முடிவற்ற நன்னிலை' என்றும், 'மீண்டும் பிறவாப் பெருநிலை' என்றும் குறிக்கக் காணலாம்.

உயிர்கள் பிறந்தும் இறந்தும், பிணி மூப்பு முதலியவற்றிற்பட்டும் துன்புறுகின்றன. இத்துன்பங்களினின்றும் நிரந்தரமாக விடுபட்ட நிலையே நிருவாணம் எனப்படும். அதாவது, மீண்டும் பிறவாதிருத்தலே நிருவாணம். பிறவிக்குக் காரணம் வினைகள். வினைப்பயனைத் துய்ப்பதற்கே பிறவி ஏற்படுகிறது. வினைகள் அறியாமையின் காரணமாகச் செய்யப்படுகின்றன. எவ்வாறெனின், பேதைமையின் சார்பாகச் செயலும், செயலின் சார்பாக உணர்வும், உணர்வின் சார்பாக அருவுருவும், அருவுருவின் சார்பாக வாயிலும், வாயில் சார்பாக ஊறும், ஊறு சார்பாக நுகர்வும், நுகர்வு சார்பாக வேட்கையும், வேட்கை சார்பாகப் பற்றும், பற்றுச் சார்பாகப் பவமும், பவம் சார்பாகப் பிறப்பும்,பிறப்பினைச் சார்ந்து வினைப்பயனும் தோன்றுகின்றன.வினைப்பயனாகப் பிணி, மூப்பு,சாவு, அவலம்,அரற்று, கவலை, கையறு எனத் துன்பங்கள் தொடர்கின்றன, என்பார் புத்தர். பேதைமையாம் அறியாமை நீங்கின் செய்கை முதலான அனைத்தும் முறையே நீங்கும். இப்பன்னிரு பொருளின் நீக்கத்தால் நிருவாணம் அறியப்படும். பேதைமையை நீக்குதற்கு நாற்பேருண்மைகளான, துன்பம், துன்பத்தின் தோற்றம்,துன்ப நீக்கம், துன்பநீக்க நெறிமுறைகள என்னுமிவற்றை உணர்ந்து, எண்வகை நெறிகளான நற்காட்சி நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை,நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடு ஆகியன வாய்க்கப் பெற்று நல்லொழுக்க நெறியில் நிற்கவேண்டும். அத்தகையோர் சோதபன்னர் (Sota panna), சகதா காமி (Sakata gami), அநாகமி (Anagami), அரகந்தர் (Arahanta) என்னும் நான்கு படிநிலைகளில் முன்னேறித் துன்பத்தினின்றும் விடுபடுவதற்கு உரியவராவார். இந்நான்கு நிலைகளுள் அரகந்தர் நிலை எய்தினோர் நன்மை, தீமை, பற்று, பாசம், வேட்கை முதலிய பிறவிக்குக் காரணமான கட்டுகள் அனைத்தையும் அழித்துப் பிறவா நிலையாம் நிருவாணம் எய்துதற்குரிய பக்குவம் அடைந்தவராவர். அரகந்த நிலையே நிருவாணம் அன்று. அவர்கள் தங்கள் முன்வினைப் பயனை அனுபவிக்க வேண்டியவராவர். ஆனால், அவர்களிடம் புதிய வினைகள் சேர்வதில்லை. ஏனெனில் அவர்களிடம் வேட்கையில்லை. வினைகள் இன்றேல் பிறப்பில்லை. பிறப்பற்ற நிலையே நிருவாணம். எனவே, அரகந்தர்கள் இப்பிறவியிலேயே நிருவாணம் எய்துதற்கு உரியவராவர். ஏனைய மூன்று நிலையினரும்தம் நிலைக்கேற்ப மேலும் ஒருசில பிறவிகளுக்குப் பின்னர் நிருவாணம் எய்துவர். முதல் மூன்று நிலைகளும் நான்காம் நிலையான அரகந்த நிலைக்கு இட்டுச் செல்வனவாகும்.

நிருவாணம் கட்புலனுக்கும் மனத்துக்கும் அப்பாற்பட்டது ஆனாலும், அது மனிதன் அடைய இயலாததன்று; அடையக் கூடியது; அடைய வேண்டியது. உண்மை நல்லறிவு நிருவாணத்தின் திறவுகோல் ஆகும்.

மிலிந்தனின் கேள்வி (Miinda panha) என்னும் நூல் நிருவாணத்தை வளமும் சிறப்பும் மிக்க நகருக்கு இணையாகப் பேசுகிறது. இங்குத் துன்பமில்லை,துயரமில்லை. இங்கு முதுமையில்லை, இறப்பில்லை, பிறப்பில்லை. இது தூய்மையானது; பாதுகாப்பும் அமைதியும் இன்பமும் நிறைந்தது. இது நல்வினையாளர் இறந்தபின் சென்றடையும்சுவர்க்கத்தினும்வேறானது. இது எங்கே அமைந்துள்ளது? கிழக்கிலா, தெற்கிலா, மேற்கிலா, வடக்கிலா, மேலேயா, கீழேயா, இவற்றினும் வேறான ஓர் இடத்திலா? இங்கெல்லாம் நிருவாணம் அமைந்திருக்கவில்லை. ஆனாலும், நிருவாணம் என ஒன்று உண்டு. அது வாழ்க்கையை நன்னெறிகளில் தூய்மையாகவும் பகுத்தறிவுடனும் நடத்தித் தம்மை அரகந்த நிலைக்கு உயர்த்திக் கொண்டவர் சென்றடையக் கூடிய இடமாகும். அவர் எந்த நாட்டினர், எவ்வினத்தினர் என்பது கணக்கில்லை என அந்நூல் கூறும்.

நிருவாணம் என்பது குறிப்பிட்ட நாட்டினர், இனத்தினருக்கு மட்டும் ஏற்பட்டதன்று. உயிர்கள் அனைத்திற்கும் உரியது. உயிர்கள் அனைத்தும் சென்றடைய வேண்டிய இடம் ஆகும். அனைத்து உயிர்களும் நிருவாணத்தை நோக்கியே சென்று கொண்டிருக்கின்றன. அப்பயணத்தைச் சரியான

வழியில் விரைவுபடுத்தவே தவம் முதலிய ஒழுக்க நெறிகள் கூறப்படுகின்றன.

நல்லொழுக்கத்தினர் எண்வகை நெறிகளில் நின்று தவம் செய்யத் தொடங்குகின்றனர். தவம் அவர்களது மன ஆற்றலை வளர்த்து ஞானம் எய்தச் செய்கிறது. ஞானம் எய்தினோர் உள்ளொளி பெருகப் பெற்றுப்புற உலகின் தொடர்புகளின்றும் விலகியுள் ளனர். அவர்கள் உள்ளத்தின் இருள் நீங்குகிறது. அவர்கள் எய்திய உள்ளொளி அவர்களுக்கு நிருவாண நிலையை உணர்த்துகிறது. அத்தகையோர் சாதாரண மானவர்கள் போன்று இவ்வுலக வாழ்வை நீத்தாலும் அவர்கள் இறந்தவர்களாகக் கருதப்படுவதில்லை. அவர்கள் மீண்டும் பிறவா நிலையாகிய நிருவா ணத்தை எய்தியவர்கள் எனக் கூறப்படுகின்றனர்.

இவ்வுலக வாழ்வை நீத்தபின் நிருவாணம் அடைந் தோர் எங்குச் சென்று சேர்கிறார் எனக்கூறவியலாது. விளக்கில் சுடர் அணைந்த பின்னர் அச்சுடர் எங்குச் செல்கிறது. மண்ணுக்குள்ளோ விண்ணுக்குள்ளோ செல்வதில்லை; நான்கு திசைகளிலும் செல்வதில்லை. விளக்கில் எண்ணெய் தீர்ந்தவுடன் சுடர் அணைந்து விடுகிறது. அதுபோல நிருவாணம் எய்தும் ஞானி யார் விண்ணிலோ மண்ணிலோ நான்கு திசைகளிலோ செல்வதில்லை. அவர்கள் தங்களிடமிருந்த வேட்கை யும் வினைகளும் பிறமலங்களும் நீங்கியவர்களாகப் பேரமைதி எய்துகின்றனர்.

நிருவாணம் பற்றிப் புத்தர் கூற்றாகப் பாலி இலக்கியங்களில் காணப்படுவனவற்றுள் சில:

உலகில் எப்பொருளுக்கும் ஆன்மா என ஒன் றில்லை. எல்லாப் பொருளும் நிலையற்றவை என் பதை ஒருவன் தன் அறிவினால் உணர்ந்து நிலையற்ற தன்மையினின்றும் நிலையான ஒன்றைச் சென்று அடைவதே வாழ்வின் நோக்கமாகும். நிருவாணம் என்பது ஒருவரால் செய்யப்பட்டதன்று. அது என்றும் நிலையாக உள்ளது; பாதுகாப்பானது; உயர்வானது; பேரின்பமானது. நிருவாணத்தில் நிலம், நீர், நெருப்பு காற்று ஆகியவற்றிற்கு இடம் இல்லை. இங்கு விண் மீன்கள் ஒளிர்வதில்லை. கதிரவன் தோன்றுவதில்லை. நிலவு காணப்படுவதில்லை. ஆனாலும், இங்கு இருள் என்பது இல்லவே இல்லை. நிருவாணத்தை உணர்ந் தவர் தம் குற்றங்கள் எல்லாவற்றையும் தவிர்த்தவ ராவார். உலக இன்பங்களைத் துறப்பதன் மூலம் அளவற்ற பேரின்பமான நிருவாணத்தை அடையலாம். விளக்கின் சுடர் அணைந்தவுடன் அச்சுடரின் நிலை பற்றிக் கூறவியலாதது போன்று நிருவாணம் அடைந் தவர் எங்குள்ளார் என்றும் கூறவியலாது. உலகப் பொருள்கள் அனைத்தும் அழியக் கூடியவை என்றும் துன்பத்திற்கு இட்டுச் செல்வனவென்றும் உணர்ந்து தம் மனம் வாக்கு காயம் இவற்றைக் கட்டுப்படுத்தி வேட்கையைத் தவிர்த்தவர் நிருவாணத்தை எய்துவது உறுதி. நா.செ.

**நிருவிகற்பக் காட்சி**: நிருவிகற்பக் காட்சி (Indeterminate Perception) என்பது வரையறைப் படாத, நிருணயிக்கப்படாத, வேறுபாடுறாத காட்சி எனப் பலவாறாகக் குறிப்பிடப்படுகின்றது. ஐம் பொறிகளின் வாயிலாகப் புற உலகப் பொருள்களின் உண்மை நிலையை அறிவதையே புலக்காட்சி (Determinate Perception) என்பர். புலன்-பொருள் தொடர் பினால் ஏற்படும் புலக்காட்சியை இந்திய மெய்ப் பொருளியல் கொள்கையினர் நிருவிகற்பக் காட்சி எனவும், சவிகற்பக் காட்சி (Determinate Perception) எனவும் வகைப்படுத்துகின்றனர். அத்துடன் இவ்விரு காட்சிகளைப் பற்றிய விளக்கத்தையும் வெவ்வேறா கத் தருகின்றனர். புலன் - பொருள் தொடர்பில் முதலில் நிகழ்வது நிருவிகற்பக் காட்சியாகும். முத லில் நிகழ்வதால் நிருவிகற்பக் காட்சியை எழுவாய்க் காட்சி, வாயிற்காட்சி என்றும் வழங்குவர். பொருள் கள் தமக்குரிய பண்புகளுடனும், தமக்கும் தம் பண்பு களுக்குமிடையே அமைந்துள்ள உறவுகளுடனும் விளங் குவன. ஆனால், நிருவிகற்பக் காட்சியில் பொருள், அதன் பண்புகள், பொருளுக்கும் அதன் பண்புகளுக்கு முள்ள உறவு ஆகியவை தனித்தனியே புலன்களால் பெறப்படாமல் அனைத்தும் சேர்ந்த ஒரு திரட்சி யாகப் (Mass) பொதுவாகப் பெறப்படுகின்றன. எனவே, நிருவிகற்பக் காட்சியைப் பொதுமைக் காட்சி என்றும் குறிப்பிடுவர். பொருள், பண்புகள், உறவுகள் தனித்தனியே பெறப்பட்டாலே அப் பொருளை வரையறுக்க இயலும். அவ்வாறு நிருவிகற் பக் காட்சியில் பெறப்படாததால் பொருளை வரை யறுக்க இயலவில்லை. எனவே, அது வரையறுக்கப் படாத காட்சியாகும். திரட்சியாகக் கொடுக்கப்பட்ட தைப் பகுத்து அதனை இன்ன பொருள் என்று தீர் மானிப்பது சவிகற்பக் காட்சி அல்லது வரையறைப் பட்ட காட்சி என்று இந்திய மெய்ப்பொருளியலில் ஒன்றான நியாயம் கருதுகின்றது.

சாங்கியம், அத்துவைதம்போன்ற மெய்ப்பொருளி யற் கோட்பாடுகள், நிருவிகற்பக் காட்சியில்பொருளா னது அதன் பண்புகளுடன் ஒன்று அல்லது அதற்கு மேற் பட்ட புலன்களில் புலக்காட்சியில் பதிகின்றது என் றும், அந்நிலையில் ஏற்படும் அறிவு தெளிவற்றதாக, வெறும் உணர்வாக (Bare consciousness) இருக்கும் என்றும் கருதுகின்றன. விசிட்டாத்துவைதம் தனது அறிவளவையியலில்,பொருள்கள் எப்பொழுதும் அதன் பண்புகளுடன் பிரிக்கவொண்ணாதபடி இணைந்திருப் பதால் பொருளையும், அதன் பண்புகளையும், அவற் றின் உறவுகளையும் சேர்ந்தே நிருவிகற்பக் காட்சி

அளிக்கின்றது என்று கூறுகின்றது. மேலும், நிவிகற்பக் காட்சிக்கும் நிருவிகற்பக் காட்சிக்கும் உள்ள வேறு பாட்டினை அது, பின்னதில் முன்னர் அறியப்பட்ட இதே போன்றஎடுத்துக்காட்டுகளால்மனத்தின் நினை வில் மீளாத நிலையில் பொருளை முதன் முதலாகக் காண்பது என்றும், முன்னதில் பின்னர் அறியப்பட்ட இதே போன்றஎடுத்துக்காட்டுகளால் மனம நினைவில் கொண்டுவந்து அத்துடன் இப்பொழுதைய காட்சி யையும் ஒருங்கே காண்பது என்றும் கூறுகின்றது.

சௌத்திராந்திக, வைபாடிக, பௌத்தப் பிரிவினர் கருத்துப்படி பொருள் என்று ஒன்றும் இல்லையாத லால் 'இது நீலமாயிருக்கின்றது' என்ற தீர்ப்பில் 'இது' என்று சுட்டப்படும பொருள் இல்லை என்றாகின்றது. இத்தீர்ப்பில் எஞ்சியுள்ள நீலவண்ணம் என்னும் உறவற்ற வெறும் புலனுணர்ச்சியையே அவர்கள் நிருவிகற்பக் காட்சி என்கின்றனர். இந்நிருவிகற்பக் காட்சி சுவலட்சணம் அல்லது தன்னியல்பைச் சார்ந்த தெனலாம். பி.ஆர்.ந.

**நிருவிகற்பச் சமாதி:** இது வேறுபாடுறாத தியானமாகும். இதன் பொருள் வேறுபாடுறாத தியானத்தில், ஆழ்ந்த சிந்தனையில் சிந்தனை செய் பவனிடத்து, சிந்தனை செய்யப்படும் பொருளைப் பற்றிய உணர்வும் மறைந்து தனி அகம் பற்றிய உணர்வு மட்டுமே நிலைத்திருப்பதாகும். நிருவிகற்ப சமாதி பதஞ்சலியின் யோகப் பயிற்சியில் அசம்பிரக் ஞாத சமாதி அல்லது உணர்வு இகந்த ஆழ்ந்த சிந் தனை என்று குறிப்பிடப்படுகின்றது. இது சமாதி யின் இறுதி நிலை ஆகும். சமாதி பதஞ்சலியின் எட் டுறுப்பு யோக நெறியில் எட்டாவதாக உள்ளதாகும்.

யோகப் பயிற்சி இந்தியாவில் மிகப் பழங்காலத் திலிருந்து வேதங்களின் சான்றாண்மையை ஏற்கின்ற, மறுக்கின்ற இருபிரிவினராலும் (ஆத்திகம், நாத்தி கம்) கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளது. இது உபநிட தங்களிலும் பௌத்தம் போன்ற கொள்கைகளிலும், தெரிப்பான இடம் பெற்றுள்ளது. மகாபாரதத்திலும் இதன் பெருவழக்குக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், யோகப் பயிற்சியைப் புரிந்து கொள்ளும் விதத்தில் பல்வேறு கொள்கையினரும் மாறுபட்டுள்ளனர். சிலர் அதனைப் பூடகமான (Occult) திறன்களைப் பெறு கின்ற வழியாகவும், சிலர் அதனைப் பரம்பொருளு டன் ஒன்றுபடுவதற்கான வழியாகவும், மற்றும் சிலர் அதனைச் சடத்தின் பிடியிலிருந்து விடுபடும் வழியாக வும் கருதியுள்ளனர். இவற்றுள் இறுதியான, சடத்தின பிடியை விடுவதற்கான வழியாகவே பதஞ்சலி யோகப் பயிற்சியைக் குறிப்பிடுகின்றார்.

யோகப் பயிற்சியின் முதல் இரண்டாம் நிலை யான இயமமும் நியமமும் துறவியியலான தொடக் கப் பயிற்சிகளைக் குறிக்கும். அடுத்துள்ள மூன்று நிலைகளான ஆசனம் (இருக்கை), பிராணாயாமம் (மூச்சை அடக்குதல்), பிரத்தியாகாரம் (புலன்களைப் பொருள்களினின்றும் மீட்டல்) ஆகியவை பரு நிலை யிலிருந்து உள்ளத்தை அடக்குவதற்குப் பயன்படுவன வாகும். எஞ்சியுள்ள மூன்றாகிய தாரணை (உள் ளத்தை ஏதாவதொரு பொருளின் மீது நிலைநிறுத் தல்), தியானம் (சிந்தனை), சமாதி (ஆழ்ந்த சிந் தனை) உள்ளத்தை ஒருநிலைப் படுத்துவதற்கான வழிகளாகும். இவை உள்ளத்தை நேரடியாக அடக் கும் நோக்கமுடையவை.

மனிதனுடைய திறன்கள் நீண்ட பழக்கத்தின் காரணமாக நுகர்நிலை அகத்தைப் பாதுகாப்பனவா கவே உள்ளன. வீடுபேற்றிற்கு இதற்கு முற்றிலும் எதிரானதான அகத்திலுள்ள புருடப் பகுதியை அத னுடைய உண்மையான நிலைக்குக் கொண்டுவர அத் திறன்கள் மாற்றியமைக்கப்பட வேண்டும். இதுவே, சமாதி யோகத்தின் அடிப்படை. சமாதியே நேர்முக மாகச் செலுத்துவதாகும். சமாதியின் கீழ்நிலையான உணர்வு நிலை சமாதியில் (சம்பிரக்ஞாத சமாதி) புத்தி குறிப்பிட்ட ஒரு பொருளைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையில் முழுவதும் ஈடுபட்டிருந்தாலும் தொடர்ந்து செயற்பட்டுக் கொண்டிருக்கும். அந் நிலையில் புத்தியைச் சிதறச் செய்பவை அனைத்தும் நீக்கப்படுவதால் புத்தியில் சத்துவப் பகுதி மேலோங்கி ஒளிர்கின்றது. சமாதியின் உயர்நிலையான நிருவிகற்ப சமாதி அல்லது வேறுபாடுறாத ஆழ்ந்த சிந்தனை அல்லது அசம்பிரக்ஞாத சமாதியில் சிந்திக்கப்படு கின்ற பொருள் பற்றிய உணர்வும் மறைந்து விடு கின்றது. எனவே, அது மீயுணர்வு (Superconscious) என வழங்கப்படுகிறது. இந்நிலையில் புத்தியின் செயற்பாடுகளாகிய விருத்திகள் (மாறுபாடுகள்) அனைத்தும் அவற்றின் மூலத்தில் ஒடுங்கியோ மறைந்தோ விடுகின்றன. மேலும், கீழ்நிலையில் இராசதம், தாமதம் ஆகியவற்றால் விளையும் விருத்தி கள் மட்டுமன்றிச் சத்துவத்திலிருந்து எழுபவையும் அடங்கப்பெறுகின்றன. நிருவிகற்பச்சமாதியின் இறுதி யில் புத்தி இவ்வாறு அகத்தில் ஒன்றி நிற்கும்போது புருடனை வேறாகவும் தனியாகவும் விட்டு விட்டு அது அடியோடு மறைந்துவிடுகிறது. நிருவிகற்பச் சமாதி இவ்வாறு உள்ளத்தை அடக்குவதையே நோக்கமாகக் கொண்டிருப்பதால் அது மக்களை வழக்கமான உள வாழ்க்கைக்கு அப்பால் செலுத்தி விடுகிறது. அது ஒருமையாட்சியில் நிலை நிற்பதைக் குறிக்கிறது. பி.ஆர்.ந.

**துணை நூல்கள்:**

**கிரியண்ணா, எம்.,** இந்தியத் தத்துவம், தமிழ் வெளி யீட்டுக் கழகம், சென்னை, 1968.

**Radhakrishnan, S.**, Indian Philosophy, 2 vols, A George Allen & Unwin Publication, New Delhi, 1983.

*நிரோட்டக யமகவந்தாதி*: நிரோட்டக யமகவந்தாதி என்ற இலக்கிய வகைப் பாடல்கள் அந்தாதித்து வரும் இலக்கியமாகும். முந்தைய பாடலின் இறுதிச்சீர் அடுத்த பாடலின் முதலில் இடம் பெறுவது. அந்தம் ஆதியாக வருவதாகும். நினைவாற்றலுக்குத் துணையாகும் வகையில் அந்தாதி நூல்கள் எழுந்தன. நிரோட்டகம், மடக்கானயமகம் ஆகியவற்றின் இணைவுடன் அமைந்த அந்தாதி நிரோட்டக யமகவந்தாதியாகும். இவ்விரு இயல்புகளும் சொல்லணி, சித்திரக்கவி நிலைகளில் காணப்பெறுவன. நிரோட்டகம் என்பது இதழ் முயற்சியால் பிறக்கும் மெய்யும், உயிரும் உயிர்மெய்யும் வராமல் பாடப்படுவதாகும். யமகம் என்பது அடிமுதல் எழுத்தொடு இரண்டெழுத்துகள் முதல் பத்தெழுத்துகள் வரை முதலடி போலவே நான்கடிகளால் அமைவதாகும். ஒவ்வொரு செய்யுளும் படிக்கும்போது இதழ்கள் ஒட்டாமல் ஒலிக்குமாதலின் இவ்விலக்கியத்திற்கு இதழகலந்தாதி எனுந் தூய தமிழ்ப் பெயரும் உண்டு. இவ்வந்தாதியில் ப, ம முதலிய இதழியல் ஒலிகள் உடைய எழுத்துகள் வரப்பெறா. அந்தாதிகள் பல பாடிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இதழகல் அந்தாதி எனக் குறிப்பிட்டுத் தமிழ் மரபினைப் போற்றினார். சு. வேலுச்சாமிப்பிள்ளையின் திருத்தில்லை நிரோட்டக யமகவந்தாதி 30 கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களால் ஆனது. சௌந்தர பாரதியின் குன்றுதோறாடுஞ் சண்முகப்பெருமான் நிரோட்டக யமக வந்தாதி கட்டளைக் கலிப்பாவில் அமைந்திருப்பினும் காப்பும், நூற்பயனும் வெண்பா யாப்பில் உள.

பொதுவாக அந்தாதி நூல்களில் 100 பாடல்கள் இடம் பெறும். நிரோட்டக யமக அந்தாதிகள் கலித்துறை அந்தாதிகளுக்கு அடுத்தபடியாக அமைந்துள்ளன. திருச்செந்தூர், திருச்சேறை, திருத்தில்லை, திருநாகை, திருவையாறு, மதுரை போன்ற ஊர்ப்பெயர்களில் நிரோட்டக யமக அந்தாதி நூல்கள் துதிப்பொருண்மையில் வெளிவந்துள. திருவொற்றியூர் என்னும் ஆதிபுரி நிரோட்டக ககர யமக அந்தாதி பாடிய கந்தசாமிக் கவிராசர் செய்யுளின் நான்கடிகளிலும் முதலெழுத்தாகக் ககரம் அமையும்படிப் பாடிப் புதுமை செய்துள்ளார். நயினை நிரோட்டக யமக அந்தாதி எனும் நூல் நாகமணிப்புலவர் இயற்றியதாகும். தனிப்பாடல் வரிசையிலும் பண்டித மு. நல்லசுவாமியாரின் தியானமாலை எனும் நூலிலும் இவ்வகைப் பாக்கள் வந்துள. பி.தெ.

*நில அரசியல்* என்பது அரசியல் நிகழ்ச்சிகளின் நில இயல்புகளைப் பற்றிய ஆய்வு அல்லது படிப்பு ஆகும். ஒரு நிலப்பகுதியில் இயற்கையினாலும் மனிதனாலும் தோற்றுவிக்கப்பட்ட நிலவியல் காரணிகள் (Geographical Factors), எவ்வாறு அந்நிலப் பகுதியில் மக்களுடைய அரசியல் வாழ்வை உருவாக்கியுள்ளன என்று நில அரசியலில் (Geopolitics) விரிவாக ஆராயப்படுகிறது.

இக்காலத்தில் நில அரசியலைப் பற்றிய நூல்கள், நிலத்தில் காணப்படும் சுற்றுப்புறத்தைப் பற்றிய கருத்துகள் (Environments) தந்தை நாடு (Fatherland) என்பதன் இயல்புகள், நில அரசியலின் அடிப்படையில் அமைக்கப்பட்ட மண்டலங்கள் (Regions) ஆகியவைகளைப் பற்றிக் கூறுகின்றன.

**நில அரசியல் ஆய்வின் தோற்றம்**: நில அரசியலைப் பற்றிய சொல், முதலில் 1900-இல் உருடால்பு செல்லன் (Rudolf Kjellen) என்னும் ஒரு சுவீடன் நாட்டு அரசியலாசிரியரால் புனையப்பட்டது. கல்வித் துறையில் நில அரசியலைப் பற்றிய படிப்பு, பிரடரிக்கு இராட்செல் என்ற செருமானியராலும், சர் ஆப்போர்டு மக்கின்டர் (Sir. Hafford Mackinder) என்ற ஆங்கிலேயராலும் புகுத்தப்பட்டது. 'உலகத்தின் அரசியலுக்கு ஆணிவேர் போலிருப்பது, கப்பல்களால் அடையமுடியாத பழங்காலத்திலே நாடோடிக் குதிரைவீரர்கள் அடைதற்கு எளிதாயிருந்தது; ஐரோப்பிய-ஆசியப் பகுதி (Euro-Asia) ஆகும்'. என்று மக்கின்டர் 1904-இல் குறிப்பிட்ட கருத்து இன்றும் நில அரசியல் ஆய்வுக்கு உதவுவதாகக் கருதப்படுகிறது.

**நில அரசியலின் பகுதிகள்**: நில அரசியலில் 1) சுற்றுப்புற ஆய்வு நில அரசியல் (Environmental Geopolitics), 2) விண்வெளித் தொடர்பான நில அரசியல் (Spatial Geopolitics), 3) அறிவியலான நில அரசியல் (Intellectual Geopolitics) என மூன்று வகைகள் உள்ளன. சுற்றுப்புற ஆய்வு நில அரசியலில் நிலத்தின் சுற்றுப்புறக் காரணிகளின் தாக்கம் கூறப்படுகிறது. நிலத்தின் மலை, ஆறு, கடல் வெளிகள் முதலிய கூறுகளெல்லாம் எவ்வாறு பொருளாதாரத் துறையில் மனிதரின் வளர்ச்சிக்கு அல்லது சுருங்கிய வளமுண்டாதற்கு வழி செய்கின்றன என்று ஆய்வு செய்யப்படுகிறது. விண்வெளித் தொடர்பான நில அரசியல் விண்வெளி (Space) நிலத் தொடர்பான இராணுவச் செயல்திறத்துக்கு (Geostrategical Factor) எவ்வாறு உதவுகிறது என்று ஆய்வு செய்யப்படுகிறது. அறிவியலான நில அரசியலில் இப்பொழுது நடைமுறையிலுள்ள நில அரசியல் தொடர்பான எண்ணங்களும், எதிர் காலத்தில் உருவாகவேண்டிய நில அரசியற் கருத்துகளும் ஆய்வு செய்யப்படுகின்

றன. ஐக்கிய அமெரிக்க நாட்டில் 'தெளிவான குறிக் கோள்' (Manifest Destiny) என்ற தொடர் சில நில அரசியற் கருத்துகளைத் தோற்றுவித்தது. வில்லியம் கில்பின (William Gilpin) கி.பி. 1836-இல் அமெரிக் காவின் முக்கிய நிலப்பகுதியாக எதிர்காலத்தில் மிசிசிப்பி ஆற்றுவெளியும், அமெரிக்காவின் தலை நகரமாகப் புனித லூயிசு (St. Louis) பட்டணமும் வருமென்று கூறினார். இதனைத் தொடர்ந்து பல அமெரிக்க ஆசிரியர்கள் மூன்று வகையான நில அரசி யலைப் பற்றியும் நூல்கள் எழுதினர். இக்கால அரசி யல் ஆய்விலும், பன்னாட்டு உறவுகள் பற்றிய ஆய் விலும் நில அரசியல் மிகவும் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. பா.கு.

*நிலக் கூட்டுரிமை*: ஒருவர் சொத்தொன்றைத் தனியாகவோ கூட்டாகவோ கொண்டிருக்கலாம். தனியாக முழுமையாகக் கொண்டிருக்கும் உடைமை யுரிமை (Absolute Ownership) என்றும் கூட்டாகக் கொண்டிருக்கும் உடைமையுரிமை (Co-ownership) என்றும் அழைக்கப்படும். பொது நிலச் சொத்துரிமை (Tenancy in Common) நிலக் கூட்டுரிமை (Joint tenancy) என்பன கூட்டுரிமையின் பொதுவான வடி வங்கள் ஆகும்.

நிலக் கூட்டுரிமை என்பது ஒருவர் அல்லது அதற்கு மேற்பட்டவர் தம் வாழ்நாளில் சம உரிமை யுடன் நிலச் சொத்தைக் கூட்டாக அனுபவித்தல் ஆகும். அவர்களில் ஒருவர் இறந்தவுடன் அவரது உரிமை எஞ்சி வாழ்வோருக்கு எச்ச வாரிசுரிமையாக இறங்கிடும். ஆனால், பொது நிலச் சொத்துரிமை (tenancy on common) என்பது இரண்டு அல்லது மேற்பட்டவர்கள் அவரவருக்குரிய தனிச்சொத்துக் களைப் பங்கு பிரிக்காமல் பொதுவாக அனுபவித்து வருதல் ஆகும். பங்குகள் சமமானவையாகவோ, ஏற்றத்தாழ்வாகவோ இருக்கலாம். உரிமை மூலம் (Title) ஒன்றாகவோ அல்லது வெவ்வேறாகவோ இருக்கலாம். அவர்களில் ஒருவர் இறந்தவுடன் அவரது பங்கு அவரது வாரிசினைச் சேரும்.

நிலக் கூட்டுரிமை (Joint tenancy) ஆள் களின் செயலால் மட்டுமே ஏற்படுத்த முடியும். இது சட்டத்தின் செயலால் எழுவதில்லை. ஆனால், பொது நிலக் கூட்டுரிமை (Tenancy in common) சட் டத்தின் செயலாலும் எழும்.

நிலக் கூட்டுரிமைக்கும் பொது நிலக் கூட்டுரி மைக்கும் இடையில் உள்ள அடிப்படை வேறுபாடு எஞ்சுநர் உரிமை (Survivorship) ஆகும்.

நிலக் கூட்டுரிமையானது, உடைமை, நலன், உரிமை மூலம், காலம் என்ற நான்கு கூறுகளைக் கொண்டிருத்தல் வேண்டும்.

பங்குரிமையைத் (Coparcenary) தவிர மற்றவற் றில் நிலக்கூட்டுரிமை இந்துச் சட்டத்தில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆ.ச

*நிலச் சீர்திருத்தம்* என்னும் சொல், வேளாண்மை உற்பத்தித் திறனைப் பெருக்குவதற் கான தடைகளை உடைத்தெறியவும், குடிவார உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கவும், சுரண்ட லைத் தடுப்பதின் மூலம் சமுதாய நீதியை நிலைப் படுத்தவும் அரசாங்கத்தால் எடுக்கப்படும் கூட்ட நிரு வாக நடவடிக்கைகளைக் குறிக்கிறது. அதாவது நிலச் சீர்திருத்தத்தின் (Land Reform) பொதுவான கருத்து, நில உரிமையாளர்களே அனைத்து நிலத்துக் கும் சொந்தம் கொண்டாடுவதைத் தடுப்பதும், நிலப் பண்ணை முறையில் மாறுதல்களைப் புகுத்தி வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதும் ஆகும்.

இத்தகைய ஆவணச் சீர்திருத்தம் (Documented Reform) கி.மு. 6-ஆம் நூற்றாண்டில் கிரீசு நாட்டி லும், கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் உரோம் நாட்டிலும் ஏற்பட்டது. பிரான்சுப் புரட்சியைத் தொடர்ந்து பிரான்சு நாட்டில் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் நிலப்பண்ணை அளவுகளில் எந்த மாற்றமும் செய் யாது, நில உடைமை முறையின் மாற்றத்துக்கு முக் கியத்துவம் கொடுத்தது, இந்நிலச் சீர்திருத்தத்தின் முதன்மையான விளைவாகும். இதுவே பின்னர் மெக் சிகோ (Mexico) புரட்சிக்குத் தனிச்சிறப்பாய் அந்நக ரில் 1910க்குப் பின்பும், எகிப்தில் 1952க்குப் பின் பும் பொலிவியாவில் (Bolivia) 1953-இலும் அமைந் தது. தவிர 20-ஆம் நூற்றாண்டில் சப்பானில் 1946-இல் ஏற்பட்ட நிலச் சீர்திருத்தம் மேற்கிந்திய நாட்டின் சுதந்திரத்திற்குப் பின்னர் ஏற்பட்ட சீர் திருத்தம், 1949-இல் ஏற்பட்ட பம்பாய் நிலஉரிமை ஒழிப்புச் சட்டம் 1949க்குப் பின்னர்த் தைவானில் ஏற்பட்ட நிலச்சீர்திருத்தம் ஆகியவற்றைக் கூறலாம். இதன் முக்கிய நோக்கங்கள் படைமானிய நிலவுரி மையை நீக்குதலும் அல்லது அடிமை முறையை ஒழித்தலும், நிலக் குத்தகையைக் குறைத்தலும் அல்லது நிலக் குத்தகைதாரர்களை நிலச் சொந்தக் காரர்களாக மாற்றுவதும் ஆகும்.

பொதுவுடைமை நாடுகளில் வேளாண்மைச் சொத்துகள் சமுதாயத்திற்குச் சொந்தமாக்கப்படு கிறது. சோவியத்நாடு, சீனா போன்ற நாடுகளில் ஏற் பட்ட நிலச் சீர்திருத்தங்களின் விளைவுகள் மற்ற நாடுகளிலும் எதிரொலிக்கத் தொடங்கின. மேலும், நிலப் பங்கீட்டைத் தேவையான ஒன்றாகக் கருதி 1960க்குப் பின்னர் 14 இலத்தீன் அமெரிக்க (Latin America) நாடுகள் நிலச்சீர்திருத்தச் சட்டத்தை இயற்றின.

ஈரான் நாட்டின் நிலச்சீர்திருத்தச் சட்டம் 1960-இல் செய்யப்பட்டது. அது ஒருவர் எவ்வளவு எக்டேர் நிலம் மிகுந்த அளவில் வைத்துக்கொள்ள முடியும் என்பதை வரையறுத்தது. ஆனால், தேவையான நில அளவீட்டுப் பதிவேடுகள், ஆவணங்கள் இல்லாததால் இச்சட்டம் 1962-ஆம் ஆண்டில் மாற்றி அமைக்கப்பட்டது. அதன்படி ஒரு நிலஉரிமையாளர் ஒரு சிற்றூரை மட்டும் (சிற்றூர் அளவைக் குறிப்பிடாமல்) தனக்கு உடைமையாக்கிக் கொள்ளலாம் என்று அச்சட்டம் கூறியது. ஈரான், எகிப்து, தைவான் இலத்தீன் அமெரிக்கா பிலிப்பைன்சு போன்ற நாடுகளில் நில அளவீட்டு முறையும், நிலக் குத்தகைதாரர்களுக்குப் பாதுகாப்பும் வழங்கப்பட்டன.

நிலச் சீர்திருத்தத்தின் முதல் அடிப்படையாக நிலஉரிமை முறைகளைப் பற்றிய சீர்திருத்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இங்கிலாந்து, பிரான்சு செருமனி, அமெரிக்கா போன்ற வளர்ச்சி பெற்ற நாடுகள் நிலஉரிமை முறைகளில் படிப்படியாக மாற்றங்களை ஏற்படுத்தின. அமெரிக்காவில் கி.பி.1785-ஆம் ஆண்டு முதல் 1937-ஆம் ஆண்டு முடிய இயற்றப்பட்ட பல்வேறு சட்டங்கள் அந்நாட்டின் நில உரிமை முறைகளில் மாற்றங்களைக் கொண்டு வந்தன. இருப்பினும் வளர்ச்சி குறைவான நாடுகளில் தீவிரமாகவும், விரைவாகவும் கொண்டு வரப்பட்டதைப் போல், அமெரிக்கா போன்ற வளர்ச்சி பெற்ற நாடுகளில் நில உரிமைகளில் மாற்றங்கள் கொண்டு வரப்படவில்லை எனலாம்.

இந்திய வரலாற்றில் இப்பொழுதுள்ள நில உரிமை அமைப்பு, தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட பல சோதனைகளின் விளைவாகும். மனு, செர்சா, (Shershah), தோடர்மால் (Todarmal) போன்றவர்களின் முயற்சியால் சீர்படுத்தப்பட்ட நில உரிமை முறைகள் ஆங்கிலேயர் ஆட்சியில் பெரும் மாற்றத்துக்குள்ளாயின. குறிப்பாக, சமீன்தாரி முறை, மகல்வாரி முறை, இரயத்துவாரி முறை ஆகியன ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில்தான் கொண்டுவரப்பட்டன.

இந்திய நிலச்சீர்திருத்த நடவடிக்கைகள், மூன்று முக்கிய குறிக்கோள்களை அடிப்படையாகக் கொண்டு செயற்படுத்தப்பட்டன. அவை 1) உழுபவர்களுக்கு நிலஉரிமையை மாற்றுதல், 2) மிகப் பெரிய அளவுடைய நில உடைமைகளைப் பொருத்தமான அளவுக்குப் பிரித்து நில உடைமைகளின் அளவைச் சமமாக்குதல், 3) சிறிய, சிதறிய நில உடைமைகளைப் பெரிய உடைமைகளாகக் கட்டுதல். இக்குறிக்கோள்கள் குடிவாரச்சீர்திருத்தம், நிலஉச்சவரம்பு, 'பட்டா' வழங்குவது போன்ற வழிகளில் மேற்கொள்ளப்படுகின்றன.

**குடிவாரச் சீர்திருத்தங்கள்**: சமீன்தாரி முறை ஒழிக்கப்பட்டபோதிலும் இன்றும் இந்தியாவில் குத்தகைப் பண்ணை முறையும், வாரச் சாகுபடி முறையும் உள்ளதால் நிலத்தைப் பற்றிய சிக்கல்கள் இன்றும் தீர்க்கப்பட்டதாகச் சொல்லமுடியாது. இந்தியாவைப் பொறுத்தவரை நிலச்சீர்திருத்தம் குடிவாரச் சீர்திருத்தமாகத் (Tenancy Reforms) தொடங்கியது. இப்பொழுதுள்ள குடிவாரப் பண்ணை முறையில் வாரப் பயிர் செய்வோர் நிலஉரிமையாளர்களால் மிகவும் சுரண்டப்படுகின்றனர். அவர்களுக்குப் போதிய பாதுகாப்பின்மை, வாய்மொழிக் குத்தகை முறை அளவுக்கு மீறிய வாரம் நிலச்சுவான்தாரர்களால் வசூலிக்கப்படுவது, மகசூல் நட்டம் ஏற்படும் காலத்தில் வாரத் தள்ளுபடி சலுகை இல்லாதது, ஒரே நிலத்தில் தொடர்ந்து சாகுபடி செய்ய முடியாத நிலைமை போன்றவை வாரக்குடிகளுக்குப் பயிர் செய்வதில் உண்மையாக உற்சாகத்தை அளிப்பதில்லை.

மேற்கூறிய முறைகளை நீக்கும் பொருட்டுத் திட்டக் குழுவின் பரிந்துரைகளின்படி குடிவாரச் சீர்திருத்தம் மூன்று முக்கிய குறிக்கோள்களைக் கொண்டு நிறைவேற்றப்பட்டது. அவை, (1) வாரத்தைக் குறைப்பதும், நியாயமான வாரத்தை நிர்ணயிப்பதும், (2) நில உரிமைக்குப் பாதுகாப்பளிப்பதும், (3) வாரக்குடிக்குப் பெற்றுரிமை (Ownership) அளிப்பதும் என்பனவாம். குடிவாரச் சட்டங்கள் இயற்றப்படாத இந்திய மாநிலங்களில் வாரக் குடிகளுக்கு இடைக்காலப் பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது.

வாரங்களைக் குறைப்பது, குடிவார உரிமையைக் காப்பது ஆகிய இரு நடவடிக்கைகளும் முதல் கட்ட நடவடிக்கை ஆகும். வாரக் குடிக்கு முடிந்த அளவிற்குப் பெற்றுரிமை அளிப்பது நிலச்சீர்திருத்தத்தில் இரண்டாம் கட்ட நடவடிக்கை ஆகும். வாரக் குடிக்கு நிலப் பெற்றுரிமை வழங்குகின்ற தன்மையானது மாநிலத்துக்கு மாநிலம் வேறுபடுகிறது.

இச் சீர்திருத்த நடவடிக்கையிலும் பல குறைபாடுகள் உள்ளன. நிருவாக வசதியின்மை போன்ற காரணங்களினால் இச்சட்டங்களை மாநிலங்கள் விரைவாக நிறைவேற்றவில்லை. இருந்தாலும் இக்குறைபாடுகளைத் தவிர்ப்பதற்கு ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

**நில உச்சவரம்பு**: தனி மனிதர் வைத்திருக்கும் நில உடைமைகளுக்கு உச்சவரம்பை நிர்ணயித்து அதற்கு மேற்பட்ட உபரி நிலங்களை மற்றவர்களுக்குப் பகிர்ந்து அளிக்கும் முறையே நில உச்சவரம்பு (Ceiling on Land holdings)எனச் சொல்லப்படுகிறது. அவை (1) இப்பொழுதுள்ள உடைமைகள் மீது உச்ச

வரம்பு நிருணயிப்பது, எதிர்காலத்தில் வாங்கப் படும் நிலங்கள் மீது உச்சவரம்பு நிருணயிப்பது என இருவகைப்படும். இச்சட்டத்தின்படி உச்சவரம்பிற்கு மேற்பட்ட நிலங்களை அரசாங்கம் எடுத்துக்கொண்டு அந்நிலங்களை நிலம் இல்லாத ஏழைகளுக்கு, குறிப் பாகக் குத்தகை உரிமையிலிருந்து விலக்கப்பட்டவர் களுக்குக் கொடுப்பதற்குச் சட்டம் வழி செய்கிறது. இவ்வாறு அரசாங்கத்தினால் எடுத்துக் கொள்ளப் படும் நிலத்துக்கு இழப்பீடு கொடுக்கப்படுகிறது. இழப்பீட்டுத் தொகையின் அளவு மாநிலத்துக்கு மாநி லம் வேறுபடுகிறது.

இந் நில உச்சவரம்பானது இரண்டு நோக்கங் களுக்காகச் செயற்படுத்தப்பட்டது. முதலாவதாக இதன் மூலம் ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்துக் கிரா மக் கூட்டுறவுப் பொருளாதாரத்திற்கு வழி செய்வ தாகும். இரண்டாவதாக, நிலம் இல்லாத கிராம மக்களுக்கு நிலத்தைப் பகிர்ந்தளிப்பதாகும். ஆனால், இந்நோக்கங்கள் நடைமுறையில் முழு வெற்றியைக் கொடுத்ததாகக் கொள்ள முடியாது. முதலாவதாக, இச்சட்டத்தைச் சரியான நேரத்தில் திடீரென்று அறிவிப்புச் செய்யத் தவறியதால் பெரும் நிலக்கிழார் கள் தங்களுடைய நிலங்களைப் பொய்மாற்றுகள் (Melefide transfers) அல்லது 'பினாமி' மாறுதல்கள் செய்து விட்டனர். இதனால், கிராமங்களில் ஏற்றத் தாழ்வுகள் குறைவதற்கு வாய்ப்பில்லை. இரண்டாவ தாக, நிலம் இல்லாத கிராம மக்களுக்கு நிலத்தைப் பகிர்ந்தளிப்பது என்பது உபரி நிலத்தைப் பகிர்வு செய்வதைப் பொறுத்து இருக்கிறது. எடுத்துக்காட் டாக, ஒரு கிராமத்தில் உபரி நிலம் மிகுதியாகவும், நிலம் இல்லாதவர்களின் எண்ணிக்கை குறைவாகவும் இருக்கலாம். வேறொரு கிராமத்தில் இதற்கு எதிர் மாறான நிலை இருக்கலாம். இந்நிலையில் எந்த முறையில் நிலத்தைப் பங்கீடு செய்வது என்ற சிக்க லும், அரசியல் செல்வாக்கும், நிருவாகச் சிக்கலும் சேர்ந்து இம்முறையைக் குறைபாடு உள்ளதாக ஆக்கி விட்டது. தவிர, கூட்டுறவுப் பண்ணை முறை என்று சொல்லும்பொழுது, அந்த அளவுக்கு ஒரே இடத்தில் உபரி நிலம் கிடைக்க வேண்டும். இதற்கு ஒருங் கிணைப்புத் திட்டம் இன்றியமையாததாகிறது. இதற்குப் பின்னரும் கூட்டுறவுப் பண்ணை முறையில் உள்ள குறைபாடுகள் முதலியவை இத்திட்டத்தில் உள்ள குறைபாடுகளாகக் கருதப்படுகிறது. மேலும், நில உச்சவரம்பில் உபரி நிலங்கள், நிலமற்றவர்களுக் குப் பகிர்வு செய்யபடும்பொழுது துண்டாக்கப் படுவ தால் இம்முறை செறிவான வேளாண்மை உற்பத் திக்கு எதிரானதாகக் கருதப்படுகிறது. நிலக் கொள் கையில் (Land holding) அடிப்படை மாற்றங்களை ஏற்படுத்த வேண்டிய தேவை, நிலஉரிமைகளைப் பற்றி (Ownership rights) ஆராய வேண்டிய தேவை, பொய் மாற்றுகள், விலக்குகள் (exemptions)போன்ற சிக்கல்களைப் போக்குவதற்கான சட்டங்கள் இயற்றி யும் நில உச்ச வரம்புச் சட்டம் தோல்வியடைந்து விட்டது. இந்திய மாநிலங்கள், மைய நேராட்சிப் பிர தேசங்கள் ஆகியவற்றினிடையே நிலஉச்சவரம்பின் அளவுகள் வேறு படுவதால், நாடு முழுதும் ஒரே மாதிரியான அளவுக்கு நிலஉச்சவரம்பைக் கொண்டு வரவேண்டும் என்றும், மத்திய நிலச் சீர்திருத்தக் குழு (Central Land Reforms Committee) கருத்துத் தெரிவித்ததைத் தொடர்ந்து, 1971-ஆம் ஆண்டின் தேர்தல் அறிக்கையில் காங்கிரசு கட்சி, இந்த உச்ச வரம்பு அளவைச் செயற்படுத்துவதின் மூலம் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கமுடியும் என் றும், கிராமப் பகுதிகளில் சமத்துவத்தை நிலைநாட்ட முடியும் என்றும் கூறியது. ஆனால், இன்றுவரை இது ஒரு முடிவு காணாத சிக்கலாகவே உள்ளது.

**ஏழை வேளாண் மாந்தர்க்குப் பட்டா வழங்குதல்:** நிலச்சீர்திருத்த நடவடிக்கைகளில் ஒன்றாக நிலம் இல்லாத வறிய உழவர்களுக்கு அரசின் தரிசு நிலங்களைப் பட்டா செய்யும் ஒரு புதிய முயற்சி திட்ட காலங்களில் மாநில அரசுகளால் நடைமுறைப் படுத்தும் பொருட்டு நிதி ஒதுக்கப்பட்டது. மேலும், நிலங்கள் தொடர்பான ஆவணங்கள் (records) நில அளவை, நில உடைமை, உரிமை ஆகியவற்றின் விவரங்கள் சரிவரக் கிடைக்காததனால் இந் நடவடிக் கையை விரைந்து செயற்படுத்த இயலவில்லை; கால தாமதம் ஏற்பட்டுள்ளது.

இந்திய நிலச்சீர்திருத்தத்தின் மேற்கூறிய முக்கிய கூறுகளோடு, பூமிதான இயக்கம், கூட்டுறவுப் பண்ணை ஆகிய இரண்டும் நிலச்சீர்திருத்த நடவடிக் கைகளாகக் கருதப்படுகின்றன.

**பூமிதான இயக்கம்:** இவ்வியக்கம் மக்களே விரும் பித் தாமாகவே முன்வந்து உற்சாகத்துடன் பங் கெடுத்த ஓர் இயக்கமாகும். இப்பூமிதான இயக்கம் (Budham Movement) 1951-ஆம் ஆண்டு ஆசார்ய வினோபாபாவேயினால் தொடங்கப்பட்டது. இதன் முக்கிய நோக்கம் நீதியும், சமத்துவமும் உள்ள ஒரு சமுதாயத்தில் எல்லோருக்கும் நிலம் இருக்கவேண்டும்; நிலத்தை நன்கொடையாக ஏழை கள் இரந்து கேட்காமல், தாமாகவே அவர்களுக்கு உரிமையுள்ள ஒரு பாகத்தைக் கொடுக்கும்படி வேண்டுவதாகும். இதன்படி மிகுதியான நிலம் வைத் திருப்பவர்களிடமிருந்து நிலங்களைப் பெற்று அவற்றை நிலம் இல்லாத ஏழைகளுக்குப் பகிர்ந்தளிக்கிறது. இவ்வியக்கம் முதல் ஐந்தாண்டுத்திட்டத்தில் முக்கிய அங்கமாகக் கருதப்படவில்லையாயினும், பின்னர்ச் சில மாநிலங்கள் இவ்வியக்கத்துக்குத் துணைசெய்யும் பொருட்டு நிலங்களைப் பகிர்வு செய்வதற்குச் சட்டங்

களை இயற்றியது. இவ்வியக்கம் கிராமதானம் என்னும் பெரியதோர் நிலைக்கு விரிவடைந்திருந்தாலும் இவ்வியக்கத்தின் விளைவுகளும் முழுப் பயன்பாட்டைக் கொடுக்கவில்லை எனலாம். ஏனென்றால் இவ்வியக்கத்தின்படி இனாமாக நிலம் கொடுப்பவர்கள் எந்தக் கட்டாயத்துக்கும் உட்படாமல் தாமாகக் கொடுப்பவர்கள் ஆதலால் சில சமயம் தகராறுகளுக்குரிய நிலங்களையும், சாகுபடிக்குப் பயன்படாத நிலங்களையும் கொடையாகக் கொடுத்து விடுகின்றனர். சுருக்கமாகச் சொன்னால் இவ்வியக்கத்தின் மூலம் கிடைத்த நிலங்களில் பாதி பகிர்வு செய்வதற்கு இயலாதவை என்று கூறப்படுகிறது.

**கூட்டுறவுப் பண்ணை முறை:** சிறிய உழவர்கள் நிலமற்ற உழவர்கள் ஆகியோரிடையே தோன்றிய சிக்கல்களைக் களையக்கூட்டுறவுமுறை வேளாண்மை, நிலச்சீர்திருத்த நடவடிக்கைகளில் ஒன்றாகக் கருதப்பட்டது. இதன்படி வேளாண்மையில் நிலங்களை ஒருங்கிணைக்கவும், இணைத்துப் பயிர் செய்யவும் வழிவகை செய்கிறது. இம்முறையில், கூட்டுறவுச் சங்கம் நில உரிமையைப் பெற்றுள்ளது. சங்கத்தின் உறுப்பினர்கள் அனைவரும் ஒருங்கிணைந்து வேளாண்மை செய்யவும் வாய்ப்புப் பெறுகின்றனர். இம்முறையினைச் செம்மைப் படுத்துவதற்காகத் திட்டக் காலங்களில் முயற்சிகள் எடுக்கப்பட்டாலும் இம்முறையும் வெற்றியை அடையவில்லை.

மேலும், நிலச்சீர்திருத்த நடவடிக்கையாகிய நில உச்சவரம்புச் சட்டம் உற்பத்தித்திறனில் பாதக விளைவை ஏற்படுத்துகிற தென்று சிலர் கருதுகின்றனர். பெரிய நிலக்கிழார்களால்தாம் பண்ணை முறையில் புதிய சாகுபடி முறைகளைப் பின்பற்ற முடியும் என்பதும் இவர்களுடைய வாதம். ஆனால், வார உரிமைப் பாதுகாப்புப் பெறாத வாரக் குடிகளும் உற்பத்தித் திறனைப் பெருக்கத் தயங்குவதில்லை என்ற கருத்தும் கூறப்படுகிறது. கா.தி.இ.

**துணை நூல்கள்:**

**Misra&Puri**, Indian Economy, Himalaya Publishing House, Bombay, 1984.

Progress in Land Reforms, United Nations Economic and Social Council, Fourth Report, New York, 1966.

**Sharma,A.N.**, Economic Structure of Indian Agriculture, Himalaya Publishing House, Bombay, 1984.

*நிலச்சேர்வு*: நிலச்சேர்வு என்பது இருக்கும் சொத்துடன் மேலும் நிலம் இயல்பாக, இயற்கையின் காரணமாகச் சேர்வதாகும். நிலச்சேர்வு என்பதனைச் சொத்தின் இயல்பு வளர்ச்சி என்றும் கூறலாம். நாட்டிடைச் சட்டமும், சொத்துரிமை மாற்றுச் சட்டமும், இயல்பாகச் சேர்ந்த சொத்தினுக்கான உரிமையினைப் பற்றிக் கூறுகின்றனவேயன்றி எப்படி நிலச்சேர்வு ஏற்படுகிறது என்று விளக்கவில்லை. கூறப்பட்ட விளக்கத்தினின்று இயற்கையாக, இருக்கும் சொத்துடன் நிலம் இணைவது நிலச்சேர்வு என அறிந்து கொள்ளலாம்.

நாட்டிடைச் சட்டப்படி, ஒரு நாட்டின் ஆள்நிலப் பகுதியோடு (Territory) மற்றொரு நிலப் பகுதி, இயற்கையின் காரணங்களால் (Natural Causes) இணையுமானால், இணைந்த நிலப் பகுதியின் மீதான இறைமை உரிமையும் அந்நாட்டிற்குக் கிடைக்கிறது. இறைமை உரிமையினை நிலைநிறுத்தவோ, உறுதி செய்யவோ தனிப்பட்ட செயல் வேண்டுவ தன்று. எந்த நாட்டின் ஆள்நிலப் பகுதியோடு புதிதாகத் தோன்றிய நிலப்பகுதி இணைகிறதோ அந்த நாட்டின் இறைமை உரிமையினைத் தானாகவே நிலச்சேர்வின் காரணமாகப் புதிதாகச் சேர்ந்த பகுதிக்கும் விரிவுப்படுத்தப்படுகிறது.

சொத்துரிமை மாற்றுச் சட்டம் 108 – ஆம் பிரிவு (டி) என்ற உட்பிரிவு, குத்தகைக்குக் கொண்ட நிலத்தோடு பிறிதொரு நிலம் சேருமானால் சேர்ந்த நிலத்தின் மீது, குத்தகைக்குக் கொண்டவரது உரிமை என்னவென்பதையும், சேர்ந்த நிலத்தினது சட்ட முறையிலான கூறுகள் என்ன என்பது பற்றியும் கூறுகிறது. எந்த நிலத்தோடு ஒரு நிலம் இயற்கையின் காரணத்தால் இணைக்கப்பட்டதோ, அந்த நிலத்தின் சட்ட முறையிலான கூறுகளையும் சட்டக் குணங்களையும் இணைக்கப்பட்ட நிலமும் பெறுகிறது. இதிலும் நிலச்சேர்வு முறை மிக நுட்பமானதாக இருக்க வேண்டும் என்பதில்லை; முறையானதாக, மெதுவானதாக (Gradual) இருக்கலாம் எனப் பல இந்தியத் தீர்ப்புகள் கூறுகின்றன. குத்தகைக்கு எடுத்துக் கொண்ட நிலத்தோடு நிலச்சேர்வின் காரணமாக மற்றொரு நிலம் சேருமானால் குத்தகைக்கு எடுத்துக் கொண்டவர், குத்தகைக் காலம் வரை, கூடுதலாகக் குத்தகைப் பணம்கொடுத்து, குறிப்பிட்ட குத்தகைக் காலம் முடிந்த பின்பு முன்னரே குத்தகைக்கு எடுத்த நிலத்தோடு நிலச்சேர்வின் காரணமாக இணைந்த நிலத்தையும் நில உரிமையாளரிடம் ஒப்படைத்துவிட வேண்டும். ஆக, குத்தகை எடுத்தவர், குத்தகைக் காலம் வரை நிலச்சேர்வின் காரணமாக இணைந்த நிலத்தையும் சேர்த்து, கூடுதல் பணம் கொடுத்து அனுபவிக்க உரிமை பெறுகிறார். ஆனால், நிலத்தின் மீது உரிமம் (Licence) பெற்றவருக்கு நிலத்தின் மீதான எவ்வித உரிமையும் இல்லாத

தால், உரிமம் பெற்றவருக்கு நிலச்சேர்வின் காரண மாக எவ்வித உரிமையும் கிடைக்காது.

அடைமானத்தைப் பொறுத்த வரையில், சொத்துரிமை மாற்றுச் சட்டம் 70-ஆம் பிரிவு, அடைமான நாளுக்குப் பின்பு, அடைமானச் சொத்துடன் ஏதேனும் இணைக்கப் பட்டால், அடைமானம் பெற்றவர் பிணையத்திற்காக இணைக்கப்பட்ட சொத்தினையும் பெற்றுக் கொள்ள உரிமை பெறுகிறார் எனக் கூறுகிறது. நிலச்சேர்வின் காரணமாக அடைமானச் சொத்துடன் ஏதேனும் நிலம் இணைக்கப்படுமாயின் இணைக்கப்பட்ட நிலத்தினையும் அடைமானமாக அனுபவிக்க அடைமானம் பெற்றவருக்கு உரிமையுண்டு. ஆனால், ஒப்பந்தத்தில், அடைமானம் பெறுபவர், இணைக்கப்படும் நிலத்தினை அனுபவிக்க உரிமையில்லை என இருக்குமாயின் அத்தகைய உரிமையினை இழந்துவிடுகிறார்.

ஆக, இயற்கையின் சூழ்நிலைகளால் ஒரு நிலத்தோடு பிறிதொரு நிலம் இணையுமானால் தாய் நிலத்திற்கான சட்டமுறையிலான அமிசங்களும் குணங்களும் இணைக்கப்பட்டநிலத்திற்கும் கிடைக்கப் பெறுகிறது. அரசாண்மை உரிமையும், குத்தகை உரிமையும் அடைமான உரிமையும் தாய் நிலத்தைப் போன்றே இணைக்கப்பட்ட நிலத்திற்கும் அமைகிறது.

அ.பி.பொ.

**நிலச் சொத்து** மனித நாகரிகம் தோன்றிய காலத்திலிருந்தே இருந்துவருகிறது. இங்கிலாந்தில் தோன்றிய தொழிற்புரட்சிக்குப்பின் உலகம் முழுமையும் தொழில் உற்பத்தி முறையில் மாறுதல்கள் தோன்றின. தொழில் வளர்ச்சியும் தொழில்நுட்ப வளர்ச்சியும், அறிவியல் வளர்ச்சியும், உற்பத்தி ஆக்கத்தையும், பெருக்கத்தையும் விளைவித்தன. இக்காரணங்களால் பல தொழில்களும், பெருநகரங்களும் வேளாண்மைக்குரிய நிலங்கள், நகர்ப்புற நிலங்கள் எனப் பாகுபாடுகள் தோன்றின. பொருளியல் சிந்தனையிலும் கோட்பாட்டிலும் நிலம் ஒரு முக்கிய காரணியாக உள்ளது. பெரு நகரங்கள், நகரங்கள், சிறு நகரங்கள் தோன்றத் தொடங்கியவுடன் நிலச் சொத்தின் மதிப்பு மிகுந்தது. நகர்ப்புறத்தில் இருப்பவர்கள் நிலச்சொத்து உலகத்தில் வாழுகின்றனர் (We urbanites live in a world of real estate) என்று இரிச்சர்டு இரேட்கிளிப்பு (Richard Ratcliff) என்ற அமெரிக்கப் பொருளியல் பேராசிரியர் கூறுகின்றார்.

தொழில்மயமான நகரங்களில் மக்கள்தொகை பெருக்கத்தினால் நிலச்சொத்தின் மதிப்பு கடந்த 50 ஆண்டுகளில் பன்மடங்காக உயர்ந்துள்ளது. நகர்ப்புறங்களில் கல்வி, மருத்துவ வசதி, குடிநீர் போன்ற வசதிகள் இருப்பதால் நிலச்சொத்தின் மதிப்பு உயருகிறது. தலைநகரங்களில் நிலச்சொத்தின் மதிப்பு மிகவும் உயர்ந்துள்ளது. இதற்குப் பல்வேறு அரசியல், பொருளாதார, நிருவாக மையங்கள் தலைநகரைச் சுற்றி அமைவதே முக்கிய காரணங்களாகும். நிலச் சொத்தில் முதலீடு செய்பவர்கள் பலவகையில் உள்ளனர். தங்களுடைய வாழ்க்கைக்கு அடிப்படையான வீடு கட்டுவதற்கும் அல்லது தொழில் தொடங்குவதற்கும் அல்லது வாணிகம் நடத்துவதற்கும் நிலங்களை வாங்குபவர்கள் உள்ளனர். முதலாம் வகையினர் தங்களின் சொந்தப் பயன்பாட்டைக் கருதியே இச்சொத்தில் முதலீடு செய்கின்றனர். இரண்டாம் வகையினர் தங்களின் சேமிப்பை அல்லது மிகுதியாகவுள்ள பணத்தை முதலீடு செய்வதற்காக நிலங்களையோ கட்டடங்களையோ விலைக்கு வாங்கி அவைகளின் மூலம் காலப்போக்கில் உயரும் வருவாயைத் தங்களின் எதிர்காலச் சந்ததியினருக்குச் சேமித்து வைத்திருக்கின்றனர். மூன்றாம் வகையினர் நிலச் சொத்துக்களை வாங்கிச் சில ஆண்டுகளில் ஆதாயம் கருதி மீண்டும் விற்பனை செய்கின்றனர். தனிப்பட்ட பல நிறுவனங்களும், பணம் படைத்த சிலரும் ஊக வணிகத்தின் அடிப்படையில் நிலச் சொத்தை விற்பனை செய்கின்றனர்.

அமெரிக்கா போன்ற நாடுகளில் நிலச்சொத்தைப் பற்றிப் பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்தியாவில் நிலச்சொத்து வாணிகம் கறுப்புப் பணப் பொருளாதாரத்திற்கு வழி வகுக்கிறது என நீதிபதி விஞ்ச்சு தலைமையில் அமைக்கப்பட்ட குழு தன் நேர்முக ஆய்வு அறிக்கையில் கூறியுள்ளது. குறிப்பாகப் பம்பாய், கல்கத்தா, சென்னை போன்ற பெரு நகரங்களில் நிலச்சொத்துக்களின் விலை கடந்த 30 ஆண்டுகளில் 100 விழுக்காட்டிலிருந்து 500 விழுக்காடு அளவிற்கு உயர்ந்துள்ளது எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. நிலச்சொத்தின் ஊக வாணிகத்தைத் தடுப்பதற்கு இந்தியாவில் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. மத்திய, மாநில அரசுகள் தங்கள் பணியாளர்களுக்கு வீட்டு வசதி அளிப்பதன் மூலமும், நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டத்தின் மூலமும் முயற்சிகள் மேற்கொண்டுள்ளன. இன்னும் வரி ஏய்ப்போர் அரசாங்கத்தின் சட்டங்களை ஏமாற்றி மற்றவர்களின் பெயர்களில் நிலத்தை வாங்கி நிலச்சொத்து ஊக வணிகத்தையும், வரி ஏய்ப்பையும் செய்து வருகின்றனர். நிலச்சொத்து மீது நடைபெறும் வணிகமும், ஊக வணிகமும் முதலாளித்துவ நாடுகளில்தான் மிகுதியாக உள்ளன. சமதரும நாடுகளான உருசியா, சீனா போன்ற நாடுகளில நிலச்சொத்தின் உரிமையை அரசே எடுத்துக் கொண்டு பயன்படுத்துவோர்களுக்கு மட்டுமே நிலங்

களையும், வீடுகளையும் விலைக்கு விற்பதினால் நிலச் சொத்தின் மதிப்பு ஒரேநிலையிலுள்ளது. நிலச்சொத் தின் நிதான ஊக வணிகமும் தடுக்கப்படுகிறது. மு.நா.

**துணை நூல்:**


**Richard, V. Ratcliff,** Real Estate Analysis, McGraw-Hill Book Company, Inc., London, 1961.


***நிலத் தீர்வை:*** நிலத்தின் மீது விதிக்கப்படும் வரி நிலத் தீர்வை (Land tax) எனப்படும். இது மிகத் தொன்மையான வரிமுறையாகும். இத் தீர்வை இந்திய மாநில அரசுகளால் விதிக்கப்பட்டு வசூலிக் கப்படுகிறது. ஆனால், இத் தீர்வையின் முக்கியத் துவம் அண்மைக் காலங்களில் குறைந்து காணப்படு கிறது. ஏனென்றால், மாநில அரசுகளின் முக்கிய வருவாய்களுள் ஒன்றாகத் திகழ்ந்த நிலத் தீர்வை இப்பொழுது விற்பனை வரிக்கு அடுத்தபடியாகத் தான் இருக்கிறது.

**நிலத் தீர்வையின் இயல்புகளும் குறைகளும்:** இந்தியாவில் பல்வேறு வகையான நிலத் தீர்வை முறைகள் பழக்கத்தில் இருந்து வந்திருக்கின்றன. சில இடங்களில் நிலையான தீர்வை முறையும், சில இடங் களில் இடைக்காலத் தீர்வை முறையும் உள்ளன. நிலச் சீர்திருத்தத்திற்குப் பிறகு (Land reforms) நில வேறுபாடுகள் மிகுதியாகக் குறைக்கப்பட்ட போதி லும், நிலத் தீர்வையும், அதன் விகிதமும் மாநிலத் துக்கு மாநிலம் வேறுபடுகிறது. மேலும், இரயத்து வாரி முறை அடிப்படையில், நிலத்தின் அளவுப்படி தீர்வை விதிக்கப்படுகிறது. இந்த முறையைத்தான் பெரும்பாலான மாநில அரசுகள் பின்பற்றுகின்றன. ஆனாலும், இது நிகரச் சொத்தின் அடிப்படை, நிகர விளைச்சலின் அடிப்படை, மொத்த விளைச்சலின் அடிப்படை என இடத்துக்கு இடம் வேறுபடுகிறது. மேலும், இத் தீர்வையானது கால இடைவெளிகளில் அறுதி செய்யப்படுகிறது. இதனால் நில வருவாய் வரவு, முடிவு செய்யப்பட்ட ஒன்றாகி விடுவதால் இத் தீர்வையானது நெகிழ்வுத் தன்மை அற்றதாகி விடுகிறது. கால இடைவெளிகளில் தீர்வை விதிக்கப் படுகிறது என்கின்ற நிலையில் நிலத்தின் மதிப்பு கணக்கில் எடுக்கப்படுவதில்லை. இத்தகைய நிலத் தீர்வை ஒரே விகிதத்தில் மாறாத தன்மையில் இருப் பதால் செல்வர்களை விட ஏழை உழவர்களையே மிகுதியாக வரிச்சுமை பாதிக்கிறது. இந்த வகையில் இது நேர்மைக்குப் புறம்பானதாகக் கருதப்படுகிறது.

நிலவரி வசூல் செய்யும் காலமும் அறுவடையை அடுத்து இருப்பதால், ஏழை உழவர்கள் நிலத் தீர்வை செலுத்தும் பொருட்டுத் தங்கள் பொருள்களைக் குறைந்த விலையில் விற்க நேரிடுகிறது. மேலும் நாட் டில், பஞ்சம், மழையின்மை, வெள்ளம் போன்ற இயற்கைக் கேடுகளால் விளைச்சல் பாதிக்கப்படும் பொழுது அரசும் நிலத்தீர்வையை அப்பொழுதைக் குத் தவிர்த்து விட நேரிடுகிறது. இதனால் மிக்க வரு வாய் இழப்பு நேர்கிறது. இதை வசூலிக்க ஆகும் நிருவாகச் செலவு, இத் தீர்வை வருவாயை விட மிகுதியாகின்றது.

மேற்கூறிய இயல்பினால் ஏற்படும் குறைகளைக் குறித்து இந்தியப் பொதுத் தேர்தலுக்குப்பின் 1967 -ஆம் ஆண்டின் தொடக்கத்தில், பெருவாரியான இந்திய மாநில அரசுகள். நிலத்தீர்வையை முழுவது மாக அல்லது பாதியாக ஒழித்து விடுவது என்று கருத் துத தெரிவித்தன. அதனால், ஏற்படும் நேரமுக வரு வாய் இழப்பை ஈடுகட்ட வேளாண்மை வரி விதிப் பைப் பொருளியலறிஞர்கள் ஆதரிக்கின்றனர். கா.தி.இ.

**துணை நூல்கள்:**


**குருசாமி, மா பா.,** பொது நிதி, கஸ்தூரி பவர் பிரசு, சாத்தான்குளம், 1984.

**Sharma, A.N.,** Economic Structure of Indian Agri culture, Himalaya Publishing House, Bombay, 1984.


***நிலந்தருதிருவின் நெடியோன்:*** இவன் மிகப் பழைய பாண்டிய அரசன்; பாண்டியன் மாகீர்த்தி எனவும் பாண்டியன் பன்னாட்டு தந்தான் எனவும், வடிம்பலம்ப நின்ற பாண்டியன் எனவும் அழைக்கப் பெறுபவன் இவன் அரசவையில் தொல்காப்பியம் அரங்கேறியது எனத் தொல்காப்பியப் பாயிரவழி அறியலாம். நற்றிணையைத் தொகுத்தவனும் இவனே என்பர். இந்நெடியோன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிக்கு முற்பட்டவன் என்பதை 'முந்நீர் விழ வின் நெடியோன் நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே' (புறம்.9) என்று நெட்டிமையார், முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்துவதால் அறியலாம்.

இவன் ஆட்சிக் காலத்தில்தான் பஃறுளியாறும், குமரிமலைத் தொடரும் சேர்ந்த பெரும்பகுதி அழிந் தது: அவ்வாறு அழிந்த தன் நாட்டிற்கு நிகரான அளவுள்ள பகுதியை வடநாட்டில் வென்று இப் பாண்டியன் ஆண்டான். இச்செய்தியைப் 'பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள வடதிசைக் கங்கையும், இம யமும் கொண்டு தென்திசை யாண்ட தென்னவன்' (சிலம்பு, காடுகாண் காதை 19 - 22) என்று சிலப்பதி காரம கூறும். இக்கடல்கோள் நிகழ்வை அடிப்படை யாகக் கொண்டு தன் நாட்டு எல்லையைப் பிற வேந் தர்களுக்கு உணர்த்த இப்பாண்டியன் கடலைத் தன்

காலால் மிதித்து உணர்த்தினமையாலும், அக்கடல் நீர் சுவற வேல் எறிந்தமையாலும் வெகுண்ட கடல், இவன் நாட்டை அழித்தது. இதனால் சினம் கொண்ட இவன் அவ்வாறு அழிப்பதற்கு ஆணை தந்த இந்திரன் முடிமீது வளை வீசினான்; அவன் ஆரத்தைக் கைப்பற்றினான். இதனால் கடல் இவ னிடம் அடைக்கலம் புகுந்தது எனச் சின்னமனூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன. கடற்பிரளயம் ஏற்பட்ட போது உலகு அழிய ஒரு பாண்டியன் மட்டும் தப்பி னான் என்று வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறும் பாண்டியன் இவனே என்றும் கருதுகின்றனர். சா.உ.

**நிலப்பண்ணை முறை** என்ற அமைப்பில் நில உடைமையாளர்கள் பயிர்செய்யும் நிலங்களை உரிமையாகக் கொண்டு நிலமற்றவர்களை வேலைக்கு அமர்த்தி உற்பத்தியில் ஈடுபடுவர் என்பதுதான் பொதுவான கருத்தாகும். நிலப் பண்ணை முறை (Fludalism) பற்றிப் பல்வேறு விளக்கங்கள் அளிக்கப் பட்டுள்ளன. இம்முறை ஒவ்வொரு நாட்டிலும் அந் நாட்டின் அரசியல், பொருளாதார, சமூக நிலைகளுக் கேற்ப இருந்து வந்துள்ளது. படைவீரர்கள் பிரபுக்க ளால் (Lords) போர்க்காலச் சேவைக்காக நிலம் கொடுக்கப்பட்டனர். அதில் வரும் வருமானத்தைப் பிரபுக்களுக்கு ஒரு பகுதியைக் கொடுத்துவிட்டு எஞ்சிய பகுதியை இப் படைவீரர்களே வைத்துக் கொண்ட னர்.

இம்முறையால் மனிதர்களிடையே ஏற்றத்தாழ்வு உருவாகியது. மனிதனை மனிதன் அடிமைப்படுத்தும் முறையும் தொடங்கியது. நிலம் வைத்திருந்த படை வீரர்கள் நில உடைமையாளராகிய பிரபுக்களுக்குக் கட்டுப்பட்டிருந்தனர். இம்முறை பொதுவாக ஐரோப் பிய நாடுகளில் இடைக்காலத்தில் பரவியது. காரணம் இந் நாடுகளில் அடிக்கடி பல மன்னர்களிடையே சண்டை நடைபெற்றது. காலப் போக்கில் நில உடைமையாளர்கள் நிலத்தில் பயிரிடுபவர்களை அடக்கி ஆள்வதில் மிகக் கடுமையான, கொடுமை யான முறைகளையும் கையாண்டனர். நில அடிமை களை வைத்து நிலங்களைப் பயிரிடும் முறை எல்லா நாடுகளிலும் இந்த இடைக்காலத்தில் பரவத்தொடங் கியது. இந்த நிலையை அடிமை முறை (Serfdom) எனக் குறிப்பிட்டனர்.

இந்தியாவில் மன்னராட்சி முறை தொடங்கிய வுடன் நிலப் பண்ணை முறையும் மெல்ல வளரத் தொடங்கியது. அரசு நிலம், மன்னர் நிலம், தனியார் நிலம், கிராமச்சமுதாய அமைப்பின் நிலம் என நிலத் தில் பல பிரிவுகள் இருந்தன. அரசு நிலத்திலும், மன்னர் நிலத்திலும், கிராமச் சமுதாய நிலத்திலும் அடிமைகளும், கூலித் தொழிலாளர்களும் பயிர்த் தொழிலைச் செய்யப் பயன்படுத்தப்பட்டனர். இவ் வாறு அடிமைகளையும், கூலி உழவர்களையும் பயன் படுத்தியபோது அவர்களுக்குக் கொடுக்கப்படும் விளைச்சலின் பகுதி மிகக் குறைவாக இருந்தது. இந்த முறையில் சுரண்டலும் அடிமைத்தனமும் ஒருங் கிணைந்திருந்தன. நிலப் பண்ணை முறையின் தொடக்கக்காலக் கூறுகள் என இவைகளைக் குறிப் பிடலாம். மௌரியர்கள் காலத்திலும். நந்தர்கள் காலத்திலும் அடிமைகளையும், உழுதொழிற் கூலி களையும் பயன்படுத்தும் வழக்கம் மிகுந்தது என வர லாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. நால்வகைச் சமூகப் பிரிவுகளின் அடிப்படையிலும், சாதிப் பிரிவுகளின் அடிப்படையிலும் சமுதாய அமைப்பு இருந்ததன் காரணமாக ஏற்றத்தாழ்வுகள் பெருகின. சாதி நிலை யில் தாழ்த்தப்பட்ட பிரிவினர் பெரும்பாலும் உழு தொழிற் கூலிகளாகவும் அடிமைகளாகவும் இருந்த னர். இவ்வகையான நிலப் பண்ணை அமைப்பு கி.பி. 1 – ஆம் நூற்றாண்டிலிருந்து 15 – ஆம் நூற்றாண்டு வரை சிற்சில மாறுதல்களோடு இருந்தது எனலாம். நிலக்கொடையும் (Land Grants) கி.பி.6 – ஆம் நூற்றாண்டு முதல் 12–ஆம் நூற்றாண்டு வரை மிகுதி யாக இருந்தது. அரசவையிலும், மதத் துறையிலும் செல்வாக்குப் பெற்றிருந்த பிராமணர்களுக்கு நிலக் கொடை அளிப்பது இக்காலக்கட்டத்தில் பெருகியது. இது பிரமதேயம் எனப்பட்டது. மேலும், இக்காலக் கட்டத்தில்தான் நிலப் பண்ணை முறை உறுதிபெறும் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பேரரசர்கள் வீழ்ந்தபின் னர், குறுநில மன்னர்கள் தோன்றத் தொடங்கினர். குறுநில மன்னர்களின் வருவாய் பெரும்பாலும் நிலத்தின்மீது விதிக்கப்பட்ட வரிகளால் ஏற்பட்டது. அக்காலக் கட்டத்தில் வரிகள் என்பது நிலத்தில் விளையும் பயிர்களின் பெரும் பங்கினை அளிப்ப தேயாகும்.

தமிழகத்தில் பாணர்கள், நுளம்பர்கள், வைதும் பர்கள், முத்தரையர், கொடும்பாளூர் வேளிர், பழ வேட்டரையர் போன்ற குறுநில மன்னர்களின் ஆட்சி கி.பி.5–ஆம் நூற்றாண்டிலிருந்து 15–ஆம் நூற்றாண்டு வரை தென் மாநிலத்தின் சிலபகுதி களில் இருந்தது குறிப்பிடத்தக்கது. தஞ்சை சர போசி மரபினர், மதுரை நாயக்கர்கள், பாளையக் காரர்கள் போன்றோரும் குறுநில மன்னர்கள் நிலையி லேயே வைத்துக் கருதப்பட்டனர். தமிழகத்தில் குறு நில மன்னர்கள் மட்டுமல்லாமல் குன்றளவு மன்னர் களும் இருந்தனர். குன்றுகளை ஒட்டிய நிலங்களை வைத்துத் தங்களின் ஆட்சியை நடத்தினர். கடை ஏழு வள்ளல்களில் சிலர் இவ்வகையைச் சார்ந்தவர் கள் ஆவர்.

நிலப் பண்ணை முறையின் எதிரொலிப்புகள் இப் பண்ணை முறையில் காணப்பட்டன. நில ஆளு கையின் மூலம் மக்களைக் கட்டுப்படுத்திய குறுநில

மன்னர்கள் அடிக்கடி தங்களுக்குள் சண்டையிட்ட தால் மக்கள் உழைப்பின் மூலம் வந்த நில வருவாயை எடுத்துக்கொண்டனர். நில அமைப்பு முறை இந்தியாவில் பல்வேறு பகுதிகளில், பல்வேறு அரச பரம்பரையினால் மாறிக்கொண்டே இருந்தது. பொதுவாக நிலத்தைக் கைப்பற்றி அதன் மூலம் ஆதிக்கம் செலுத்துபவர் நிலை பல வேறுபாடுடைய தாய் இருந்தது எனலாம். நிலப் பண்ணை முறை மொகலாயர் காலத்தில் வேரூன்றத் தொடங்கியது. அரச நிலங்களைக் காலிசா (Khalisa) நிலங்கள் என்றனர். மொகலாயர் படையைப் பல்வேறு பகுதிகளில் வைத்து ஆட்சிச் சீரமைப்புச் செய்வதற்காக நிலங்களைப் பிரித்து அதன்மூலம் வரும் வருவாயை அப் படைகளுக்குச் செலவு செய்தனர். இக்காரணங்களால் சாகீர் நிலங்கள் (Jagir Estates) மிகுதியாயின. சாகீர்களுக்கு இலட்சக்கணக்கான ஏக்கர் நிலங்களை மொகலாய மன்னர்கள் பிரித்துக்கொடுத்தனர்.

மொகலாய மத குருக்களுக்கும் நிலங்கள் கொடையாக அளிக்கப்பட்டன. இந் நிலப் பகுதியிலிருந்து அரசருக்கு நிலவரி செலுத்தப்பட்டது. இந்த நிலவரி அரசர், அரசியல் தன்மைக்கேற்பக் கடுமையாகவும், கடுமையின்றியும் இருந்தது. இறுதி நிலையிலிருந்த உழவர்களே வரிப் பளுவையும், வரிக் கொடுமையையும் தாங்கிக்கொண்டனர். மராட்டிய மாவீரன் சிவாசி மறைவிற்குப்பின் சிவாசியின் மரபினர் சண்டையிட்டுத் தளபதிகளுக்கும், மற்றப் பிரிவினருக்கும் நிலங்களைப் பிரித்துக் கடுமையான நில வரிகளை விதித்தனர். நிலப் பண்ணை முறையின் கொடுமை இக்கால கட்டத்தில் இந்தியா முழுமைக்கும் மிகுந்தது. வட இந்தியாவில் முழுமையான நிலப் பண்ணை முறைக்கு இதுதான் தொடக்கம் என வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்.

பின்னர் ஆங்கிலக் கிழக்கிந்திய ஆட்சிக்காலத்தில் நிலப்பண்ணை முறை வேரூன்றத் தொடங்கியது. நிலப்பண்ணை முறைக்குச் சட்ட வடிவத்தையும், சட்டப் பாதுகாப்பையும் ஆங்கில அரசு கொடுத்தது. சாகீர்தார்கள், சமீன்தார்கள் ஆகியோருக்கும் நிலவரிவிதிக்கும் அதிகாரம் அளிக்கப்பட்டது. ஆங்கில அரசு கொண்டுவந்த சட்டங்கள் மகல்வாரி முறை என்றும், இரயத்துவாரி முறை என்றும் பெயர் பெற்றன. நிலையான தீர்ப்பு முறை மூலம் சமீன்தார்கள் உழவர்களிடமிருந்து நில வருவாயை வசூலித்து அரசுக்குக் கொடுத்தனர். பம்பாய், சென்னை மாகாணங்களில் இரயத்வாரிமுறை நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது. இம் முறையின் மூலம் வேளாண்மை வரியை அரசாங்கத்திற்கு நேரடியாகச் செலுத்தினார்கள். இந்த மூன்று முறைகளாலும் மிகுதியான நிலவரி வசூலிக்கப்பட்டு உழவர்கள் கொடுமைக்கு உட்படுத்தப்பட்டனர். மேலும், தரகர்களும் வட்டிக்கு விடும் வட்டி உறிஞ்சிகளும் தோன்றி உழவர்களைக் கடுமையான சுரண்டலுக்கு உட்படுத்தினர். நிலப் பண்ணை முறை மனிதனை மனிதன் சுரண்டு வதை உறுதிப்படுத்துவதால் இம்முறை மனித சமத்துவ. சமதருமக் கருத்துகளுக்கு எதிரானது என அரசியல், பொருளியல் அறிஞர்கள் வாதிடுகின்றனர்.

காரல் மார்க்சு, ஏங்கல்சு போன்ற சமதருமச் சிந்தனையாளர்கள் பழங்காலத்தில் நிலவிவந்த அடிமை முறைக்கும் (Slavery) கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் தோன்றிய முதலாளித்துவ முறைக்கும் இடையில் ஏற்பட்ட நிலையே நிலப் பண்ணை முறையாகும் எனக் கூறினர். நிலப் பண்ணை முறையில் பொருளாதார ஏற்றத்தாழ்வும் சுரண்டலும் அடிப்படையாக அமைந்தன. எனவே, முற்போக்குச் சிந்தனையுடைய அரசியல், பொருளியல், சமுகவியல் அறிஞர்கள் இந்நிலப் பண்ணை முறையை ஒழிக்க வேண்டுமெனக் கூறினர். இந்தியத் தேசிய காங்கிரசு 1935-ஆம் ஆண்டு நிலப் பண்ணை முறைக்கும், ஆங்கில அரசின் நிலக் கொள்கைக்கும் எதிராகத் தீர்மானம் கொண்டுவந்தது. அத் தீர்மானம் உழுபவர்களுக்கே நிலம் சொந்தம் என்கிற அடிப்படையில் வரியை நேரடியாக உழவர் அரசாங்கத்திடம் செலுத்த வேண்டுமென்று கூறியது. அது சமீன்தார்களின் மேலாண்மை ஒழிக்கப்பட வேண்டுமென்றும் கூறியது.

இந்திய விடுதலைக்குப்பின் பல சீர்திருத்தச் சட்டங்கள் உருவாக்கப்பட்டன. சமீன்தாரி, சாகீர்தாரி. முறைகள் ஒழிக்கப்பட்டன. நிலச்சீர்திருத்தச் சட்டங்கள் சில குறிக்கோள்களை அடிப்படையாகக் கொண்டன. விளை நிலம் சிலரிடம் குவிந்திருப்பதைத் தடுப்பது, வேளாண்மையால் உற்பத்தித் திறனைப் பெருக்குவது, உழுபவர்களுக்கே நிலங்களைப் பங்கிடுவது போன்றவைகளே அக் குறிக்கோள்களாகும். அக்குறிக்கோள்கள் அரசியல், சமூகக் காரணங்களால் முழுமையாக வெற்றிபெற முடியவில்லை. பல மாநிலங்களில் நிலப் பண்ணை முறை இன்றளவிலும் இருந்து வருகிறது. எடுத்துக்காட்டாகப் பீகார், உத்தரப்பிரதேசம், ஒரிசா, இன்னும் பல பகுதிகளில் சட்டத்தின் பிடியை ஏமாற்றும்அரசியல் செல்வாக்குப் பெற்றுள்ள சுயநலங் கொண்டோர் காரணமாக இம் முறையை ஒழிக்க முடியவில்லை.

சீன நாட்டிலும் நிலப்பண்ணை முறை 3,000 ஆண்டுகளாக நிலவி வந்தது. இது கி.பி. 1840-ஆம் ஆண்டுக்குப்பின் அரைக்குடியேற்ற முறை அமைந்த, அரை நிலப்பிரிவு நிலையமைந்த சமுதாயமாகப் படிப்படியாக மாறியது. சிறப்புமிக்க வரலாற்று மரபையும், நீண்ட கால வரலாற்றையும், செழுமை

மிக்க பாரம்பரியத்தையும் பெற்றிருந்தாலும் இந்த நிலப் பண்ணை முறையின் காரணமாகச் சீனா நீண்ட காலமாக மந்த நிலையிலிருந்ததாகச் சீனப் புரட்சியைப் பற்றிய அறிக்கையில் மாவோ குறிப்பிட்டுள்ளார். சீனாவில் புரட்சி அரசு தோன்றியதின் காரணமாக 1949-ஆம் ஆண்டிற்குப் பின் நிலப் பண்ணை முறை அடியோடு ஒழிந்தது.

இவ்வாறாக, நிலப் பண்ணை முறை எல்லா நாடுகளிலும் அரசியல், சமூக, தட்பவெப்ப நிலைகளுக்கேற்ப இருந்தும் மறைந்தும் வருகின்றது.

மு.நா.

**துணை நூல்கள்:**

**Antoonva, K., & Bongard, G. Levan, G, Kotovsky,** History of India, Progress Publishers, Moscow, 1979.

**Critchley, J.S.,** Feudalism, George Allen & Unwin, London, 1978.

**Marc Bloch,** Translated from French by L.A. Manyon, Feudal Society, Routledge & Kegan Paul Ltd., London, 1962.

**Tom Bottomore,** (ed), A Dictionary of Marxist Thought, Blockwell Reference, England, 1983.

*நிலம்பூர்*: தென்னிந்தியாவில் கேரள மாநிலத்தில் மலபார் மாவட்டத்தில் உள்ள ஒரு புனிததலம் நிலம்பூர். உலகின் பழமை மிக்க தேக்கு விளையும் இடங்களுள் இதுவும் ஒன்று. தென் மலபார் மாவட்டக் காட்டு அதிகாரியின் தலைமை அலுவலகமும் இதுவாகும்.

இவ்வூர் மைசூர், உதகமண்டலம் ஆகிய இடங்களுக்குச் செல்லும் கோழிக்கோடு-மஞ்சேரி-கூடலூர் சாலையில் அமைந்துள்ளது. இதற்கு மேற்கில் 60 கி.மீ. தொலைவில் கோழிக்கோடு உள்ளது. பாலக்காட்டிலிருந்தும் (60கி.மீ.) நிலம்பூருக்குச் (Nilambur) செல்லலாம். நிலம்பூர்ப் பள்ளத்தாக்கில் பேப்பூர்ஆறு பாய்கிறது. இருப்புப் பாதை நிலையம் இங்கு உண்டு.

நிலம்பூரில் உள்ள கோவிலகம் திருக்கோயில் மிகவும் புகழ் மிக்கது. கேரள நம்பூதிரிகள் இங்குப் பூசை வழிபாடு செய்கின்றனர். இக்கோயில் தேவத்தானம் இவ்வூரின் பெரும்பகுதி நிலங்களைப் பெற்றுள்ளது. தமிழ்நாட்டிலிருந்தும் பலர் இக்கோயிலுக்குச் செல்கின்றனர். நிலம்பூரில் உயர்வகைத் தேக்குக் காடுகள் உள. இங்கு யானைகள் மிகுதி. இங்குள்ள காடு முக்கிய காப்புக் காடுகளுள் ஒன்றாகும். இதில் கி.பி.1843-ஆம் ஆண்டு நிறுவப்பட்ட மிகப் பெரிய தேக்குத் தோட்டம் இன்றும் வனப்புடன் காணப்படுகிறது.

நீலகிரி மலைத் தொடர்களின் வழியே நிலம்பூருக்குக் குறுகிய சாலை உள்ளது. மேற்குத் தொடர்ச்சி மலைகளையொட்டி நிலம்பூர் அமைந்துள்ளதால் இங்கு மிதமான குளிர் உள்ளது.

தெ.பா.

*நிலமானியக் கல்லூரிகள்*: ஏறத்தாழ 129 ஆண்டுகளுக்கு முன் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கல்விக் கொள்கையில் ஏற்பட்ட பெரும் புரட்சியினால் தோன்றியவையே நிலமானியக் கல்லூரிகள் (**Land Grant Colleges**). நிலமானியக் கல்லூரிகள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இடையில் தோன்றிக் கல்விக் கொள்கைகளிலும் அவற்றின் செயல்முறைப் பயிற்சிகளிலும் புதிய மாறுதலைத் தோற்றுவித்தன. வேளாண்மையையும், சிறு தொழில்களையும் நம்பி வாழும் எண்ணற்ற மக்களின் நலனே ஓர் அரசின் வலுவான தன்மையைக் கூறவல்லது. ஆகவே, நிலமானியக் கல்லூரிகள் இக்கூற்றை மனத்திற்கொண்டு வேளாண்மைத் துறையிலும், தொழில் துறையிலும் முன்னேற்றத்தைக் கொண்டுவருவதையே முக்கிய குறிக்கோளாகக் கொண்டன. வெறும் ஏட்டுக் கல்வியை மட்டும் வலியுறுத்தாது வாழ்க்கைக்கான கல்வியைப் பொதுமக்களுக்கு அளிப்பதில் அக்கறை காட்டியது நிலமானியக் கல்லூரி. ஏட்டுக் கல்வியால் மட்டும் மனித சமுதாயத்தின் பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டு வருதல் இயலாது; உண்மையான கல்வி அனுபவத்தையும், ஆற்றலையும் அடிப்படையாகக் கொண்டிருத்தலோடு சமுதாயத்துக்குப் பயன் உள்ளதாகவும் அமைய வேண்டும் என்ற நோக்கினையும் அடிப்படையாகக் கொண்டது இக்கல்வி முறை. அறிவு மனித ஆற்றலையும், சமுதாயத்தையும் எல்லாத் துறைகளிலும் உயர்த்தக் கூடியதாக அமைந்திட வேண்டும். தனக்குத் தேவையான உணவை உற்பத்தி செய்யும் ஆற்றல் இல்லாமல் எனக்குப் பசிக்கிறது என்பவனுக்கு ஆறுதல் மொழிகள் சொல்வதால் என்ன நன்மை ஏற்படும்? பண்டைய கல்விமுறை இந்த வெறும் ஏட்டுக் கல்வியையே ஊக்குவித்தது.

பண்டைக்காலக் கல்வித் திட்டத்தில் கல்வியும் அதன் பயன்களும் இரு வேறு பிரிவுகளாகக் கருதப்பட்டன. தொழிற்கூடங்களில் நடைபெற்ற அறிவியல் ஆராய்ச்சிகள் அனைத்தும் வணிக நோக்குடையவை எனவும், அவற்றிற்கும் கல்விக்கும் தொடர்பில்லை எனவும் கருதப்பட்ட அக்காலத்தில், மனித சமுதாயத்திற்கு ஒரு பெரும் பேறாக இந் நிலமானியக் கல்லூரிகள் அமைந்தன.

**பண்டைக்கால உயர்கல்வியின் நிலை:** முந்தைய நூற்றாண்டுகளில் கல்வி என்பது ஒருசிலர் மட்டுமே அனுபவிக்கக்கூடிய உரிமைப்பொருளாக இருந்துவந்தது. சமுதாயத்தின் சிறுபான்மையினர் மட்டுமே சட்டம், மருத்துவம், சமயவியல் போன்ற பாடங்களில் உயர்கல்வி பெற வாய்ப்புப் பெற்றனர். ஓர் உழவரின் மகனோ, கைவினைத் தொழிலாளரின் மகனோ உயர்கல்வி பெற வாய்ப்பளிக்கப்படவில்லை. அவர்களது தொழில் பரம்பரைத்தொழில் எனவும், அவர்கள் அதைமட்டுமே செய்யவேண்டும் எனவும் கருத்துகள் நிலவின. பெண்களுக்குக் கல்லூரிகளில் பயில அனுமதி மறுக்கப்பட்டது. மேலும், கல்விக் கூடங்களில் பயன்படுத்தப்பட்ட மொழியில் வார்த்தைகள் பழம்பெரும் மொழிகளான கிரேக்க, இலத்தீன் மொழிகளினின்று தோன்றியனவாகையால் பொதுமக்கள் அவற்றைப் புரிந்து கொள்ள இயலவில்லை. இவ்வாறு மக்கள் குடியரசில் கல்வி கற்கும் உரிமை சில குறிப்பிட்ட பிரிவினருக்கும், பெண்களுக்கும் பொதுமக்களில் பலருக்கும் மறுக்கப்பட்டு வந்தது.

**நிலமானியக் கல்லூரிச் சட்டம் (கி.பி. 1862):** கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இடையில் புதிய கருத்துகள் தலை தூக்கலாயின. பண்ணையமைக்கும் பணி, வேளாண்மை, வணிகம் போன்ற துறைகளிலும் கல்வி போதிக்கப்படவேண்டும் என்ற வேண்டுகோள் எழுப்பப்பட்டது. இவ்வகைக் கல்வியால் தொழிற்கூடங்களில் பயிற்சிபெறும் பயிற்சியாளர்கள் சிறப்பான முறையில் தத்தம் தொழில்களில் திறமை பெறுவர் என எண்ணப்பட்டது. இவ்வனைத்து எண்ணங்களும் வேண்டுதல்களாக உருவெடுத்துப் பின்னர் நிலமானியக்கல்லூரிகள் சட்டம் கி.பி. 1862-ஆம் ஆண்டு உருவாகக் காரணமாக இருந்தன.

பழங்காலக் கல்விக் கொள்கையிலிருந்து மாறுபட்ட இக்கொள்கை, தனது நோக்கத்தில் மட்டுமன்றி அதற்கு உருக் கொடுப்பதிலும் மாறுபட்டு நின்றது. நிலமானியக் கல்லூரிகள் அனைத்தும் பொது நிதியிலிருந்தே நடத்தப்பெற வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. வேளாண்துறையில் ஈடுபட்டுள்ள ஒருவனுக்கும், தொழிற்கூடத்தில் பணிபுரியும் ஒருவனுக்கும் பயனளிக்கும் வண்ணம் கல்லூரிக் கல்வி முறை நாட்டில் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும் என்ற எண்ணமே நாட்டின் குறிக்கோளாதல் வேண்டும் என வலியுறுத்தப்பட்டது.

நாட்டின் இக்கல்வித் தேவையினை நிறைவேற்றத் தூண்டுகோலாக இருந்தவர்களுள் சொனாதன் தர்னர் (Jonathan Turner) பெரும் பங்கு வகித்தார். அவரே நிலமானியக் கல்லூரிச் சட்டம் உருப்பெறுதற்கும் காரணமானவர். தர்னர் தமது புதிய கல்வித் திட்டத்தினால் தொழிலை அடிப்படையாகக் கொண்ட பல்கலைக்கழகத்தினைத் தோற்றுவிக்க எண்ணினார்.

அவரது கல்வித் திட்டத்தின் முதற்படியாக மனித சமுதாயத்தை அவர் இரண்டாகப் பிரித்தார். அவை 1) அரசுத் தொழிலில் இருப்போர் பிரிவு, 2) தொழில் மேதைகள் பிரிவு (Professional and Industrial) என்பனவாகும். ஏதேனும் குறிப்பிட்ட துறையில் சிறப்புப் பயிற்சி பெற விரும்பும் மக்களுக்கு அக் கல்விக்கான அனைத்து வசதிகளும் செய்யப்படுகின்றன. ஆனால், தொழிலாளர்களுக்கெனத்தனித்ததொரு கல்விமுறை ஏன் இதுவரை வரையறுக்கப்படவில்லை என்று குரல் எழுப்பினர். அதன்விளைவாய்த் தர்னரால் நிலமானியக்கல்லூரிச் சட்டம்வரையறுக்கப்பட்டு,காங்கிரசால் அங்கீகரிக்கப்பட்டு,உள்நாட்டுப் போர்நடந்துகொண்டிருந்த அந்த இருள்சூழ்ந்தகாலக் கட்டத்தில், ஆபிரகாம் லிங்கனால் கையெழுத்திடப்பட்டுச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இதுவே புதிய கல்விக் கொள்கைக்கு ஒரு மாபெரும் அடித்தளமாக அமைந்தது. மாணவன் விரும்பும் ஒரு குறிப்பிட்ட துறையில் பயிற்சி பெறச் செய்வதே இப்புதிய கொள்கையின் அடிப்படைத் தத்துவம். இத்தகைய கல்வியே வேளாண்மை ஆசிரியப் பயிற்சி போன்ற பல்துறைகளிலும் செயற்படுத்தப்பட வேண்டும் என வலியுறுத்தப்பட்டது. இப் புதிய முறையால் கல்விக் கோயிலின் புனிதமான எண்ணங்கள் உடைத்தெறியப் படுகின்றன எனக் கருதப்பட்ட அக் காலத்தில், இப் புதிய கல்விமுறை கடின சோதனைகளுக்கிடையே உருப்பெற வேண்டியிருந்தது.

**அறிவியல் ஆராய்ச்சியில் முன்னேற்றம்:** இப்போதைய ஆராய்ச்சி முறைகளை மாணவரோ ஆசிரியரோ அறிந்திருக்கவுமில்லை; பின் பற்றவுமில்லை. யாரும் புதிய முறைகளையோ கருத்துகளையோகல்வியில் கையாளுவது அனுமதிக்கப்படவில்லை. மாணவன் தன் மூத்தோர்களைவிடக் கல்வியில்முன்னேறுதல்கூடாது என்றும், எம் மாற்றத்தையும் புகுத்தக் கூடாது என்றும் கருதப்பட்டது. முயன்று முன்னேற விரும்பும் மாணவர் பல இன்னல்களைச் சந்திக்க நேர்ந்தது.

ஆனால், பின்னர் இப்புதிய கல்விக்கொள்கையின் அடிப்படையில் புதிய கற்பிக்கும் முறைகள் உருவாக்கப்பட்டன. இந்நேரத்தில் உலகில் பல்வேறு அறிவியல் கண்டுபிடிப்புகளும், கல்வி உலகில் பெரும் மாற்றங்களைத் தோற்றுவித்தன. அறிவியல் துறையில் கண்டுபிடிப்புகள் அனைத்தும் மரபுவழிப் புனிதத்தை மாசுபடுத்துகின்றன எனக் கருதப்பட்ட காலம் அது. மிகச் சிறந்த உயர்கல்வி நிறுவனங்களில் அறிவியல்,

வேளாண்மை, தொழிற்கல்வி போன்ற புதிய பாடங்களுக்கு வரவேற்பில்லை.இப்புதிய பாடங்கள் அனைத்தும் தனியாகப் பிரிக்கப்பட்டுத் தொழிற்பயிற்சிக் கூடங்களாகத் தனித்தியங்கவேண்டும் என எண்ணிய காலம் அது.

நிலமானியக் கல்லூரிச் சட்டப்படி உருவாக்கப் பட்ட புதிய கல்லூரிகளில் அறிவியல், பட்டப்படிப்பில் ஒருபாடமாக இடம் பெற்றது. அதற்குமுன் வேளாண் துறையில் அறிவியலின் பயன் என்ற முறையில் மட்டுமே அறிவியல் ஒரு பாடமாகப் போதிக்கப்பட்டு வந்தது. அந்நிலை தெளிவற்ற ஒன்றாக இருந்தது. எடுத்துக்காட்டாக, உழவர்களின் பண்ணை முறைகள் பற்றிய கருத்துகளை வகுப்பில் படிக்கும்போது உண்மைநிலைக்கும், வகுப்பறைப் பாடத்துக்கும் ஒன்றுக்கொன்று முரண்பாடு உள்ளது என உணரப் பட்டது. வகுப்பறைகளில் இக்கருத்துகளைப் புகட்டுவதிலும் கற்றலிலும் பல ஐயங்களும் வினாக்களும் தோன்றியமையால், மாணவரும் ஆசிரியரும் அவர்களது நேரடி அனுபவத்திற்கெனப் பண்ணையை நாடினர்.இயற்கையைத் தாங்களே நாடி அதன் உண்மைகளை அறிய முற்பட்டனர்.

அறிவியல் வளரவளரத் தொழிற்கல்விக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. இவ்விதம் பாரம்பரியக் கல்வி முறையில் அறிவியல் தன்இடத்தினைப்படிப்படியாக அடைந்தது. தொழிற் கல்விகள் அனைத்தும் பின்னர்ப் பொறியியற் பிரிவுகளாக மாற்றியமைக்கப் பட்டன. நிலமானியக்கல்லூரிகள்தாம் முதன் முதலில் தேசிய அளவில்அமைக்கப்பெறும் பொதுத்துறை நிறுவனங்களுக்குவழிகாட்டிகளாக அமைந்தன. அறிவியலும்,வேளாண்மையும் ஒரே நிறுவனத்தில் இணைந்து செயற்படும்போதுதான் அனுபவப் பயிற்சிக்கென ஒரு நிலையம் இன்றியமையாதது என்பதுஉணரப்பட்டது. இத் தேவையே நிலமானியக் கல்லூரியின் அடுத்த கட்ட வளர்ச்சிக்கு வழிகோலியது.

**ஆராய்ச்சி நிலையங்கள்:** இப் புதியவகைக் கல்வி நிறுவனங்கள் தேசிய அளவில் தோற்றுவிக்கப்பட்டிருந்தாலும் அந்நிறுவனங்களே தங்களுக்குத் தேவையானகட்டடம்போன்ற வசதிகளைச் செய்துகொள்ள வேண்டும் என அரசாங்கம் அறிவித்தது. ஆனால், அந்நிறுவனங்கள் தாங்களாகவே அவ்வசதிகளைச்செய்து கொண்டு அவற்றைப் பாதுகாப்பதில் பல இடர்ப் பாடுகள் தோன்றின.தங்களது பாதுகாப்புக்கு மாணவர்களையும், பொதுமக்களையுமே நம்பியிருக்க வேண்டிய நிலையிலிருந்தன.

எனவே, நிலமானியக் கல்லூரிகளில் பயிலும் மாணவர்கள் பெரும் பொருட்செலவில் கல்வி கற்க நேர்ந்தது. இங்குப்பயிலும் மாணவர்களின் எண்ணிக்கையும் மிகவும் குறைவாகவே இருந்தது. இங்குப் பணியாற்றும் ஆசிரியர்கள் உயர்கல்வியின் தரத்தைத் தாழ்த்துபவராகக் கருதப்பட்டனர். ஏனெனில் அறிவியல், வேளாண்மை, தொழிற்கல்வி ஆகியவை உண்மையான கல்வியாக இருப்பினும் இப்புதிய நிறுவனங்கள் மாநிலங்களே நிருவகிக்கும் கல்வியாகக் கருதப்படவில்லை. அதனால், நிலமானியக் கல்லூரிகள் மூடப்படும் ஆபத்து ஏற்பட்டது. அரசாங்கம் அளிக்கும் தொகையினைப்போல் இருமடங்கு அளிக்க மட்டுமே மாநிலங்கள் முன்வந்தன.

ஆனால்,காலப்போக்கில் இவ்வாராய்ச்சி நிலையங்களின் பயன்களை மக்கள் உணரத்தொடங்கினர். ஓர் உழவன் மட்டுமன்றி, சாதாரணக் குடிமகனும்கூடத் தொழில் வளர்ச்சியில் அறிவியலின் ஆற்றலையும், பங்கினையும் உணரத்தொடங்கினான். இவ் வளர்ச்சியினால் நிலமானியக் கல்லூரிகள் மாணவருக்குக் கற்பிப்பது மட்டுமல்லாது ஆராய்ச்சி, விரிவாக்கம் ஆகிய இரண்டினையும் தமது நோக்கங்களுக்காக இணைத்தும்கொண்டன. தங்களால் தீர்க்க இயலாத பல்வேறு பிரச்சினைகளைத் தீர்க்கும்பொருட்டு வேளாண் பெருமக்கள் ஆராய்ச்சி விரிவாக்க மையங்களை நாடிவந்தனர். இவ்வாராய்ச்சி விரிவாக்க மையங்களுக்கான பண உதவியும் தாராளமாகக் கிடைக்கத் தொடங்கியது. ஒரு தலைமுறைக்குள்ளாக இத்தகைய ஆராய்ச்சி நிறுவனங்கள் வளர்ச்சியடைந்து,ஏழைமக்களின் உள்ளத்தே உறைந்துகிடந்த பாரம்பரியக் கருத்துகளை அகற்றி, அறிவியலுக்கும் ஆராய்ச்சிக்கும் முக்கியத்துவம் கொடுக்கும் எண்ணத்தை உருவாக்கியிருப்பது ஒரு மகத்தான செயல் வெற்றியாகும்.

மனையியல் கல்வியும், நிலமானியக் கல்வி நிறுவனங்களும் பெரும்பாலும் ஆண், பெண் இணைந்து கற்கும்கூட்டு நிறுவனங்களாகவே அமைக்கப்பட்டன. கல்வியும், ஆராய்ச்சியும் தொழிற் கூடங்களை இவ்விதம் முன்னேற்றுமானால் ஏன் இல்லங்களை முன்னேற்றுதல் கூடாது?என்ற கேள்வி எழுந்தது. இல்லங்களிலும் அறிவியல் கருத்துகளைப் புகுத்திப் பெண்களின் வீட்டுவேலைகளை எளிதாக்கிக் குழந்தை வளர்ப்பு முறையில் மாற்றங்களைக் கொண்டுவர எண்ணியதன் காரணமாக, மனையியல் கல்வியும் போதிக்கப்படவேண்டும்என்ற கருத்துத் தோன்றியது. அக்கருத்தினை ஏற்றுக்கொள்ளாதுதொடக்ககாலத்தில் எள்ளி நகையாடினாலும் மனையியல் கல்வியை நிலமானியக் கல்லூரியில் கற்பிக்கத் தொடங்கினர். இவ்விதம் நிலமானியக் கல்லூரிகள் பெண்களின் வீட்டு நிருவாகத்திலும் மாற்றத்தையும் புரட்சியையும் செய்தன.

**விரிவாக்கக் கல்வி:** நிலமானியக் கல்லூரிகள் விரிவாக்கப் பணிகளை நான்கு முறைகளில் செய்தன.

அவை: 1) அஞ்சல்வழி வேளாண்மைக் கல்வி, 2) உழவர்களுக்கான நிறுவனம், 3) நடமாடும் வேளாண்மைப் பண்ணை, 4) செய்முறைப் பண்ணை என்பனவாகும். இம்முறைகளினால் கல்வி நிறுவனங்களுக்கு வாராத எண்ணற்ற உழவர்களும், பொது மக்களும் பயனடைந்தனர். அறிவியல் அறிவின் உதவியோடு வேளாண்மை தழைத்தோங்கியது. நிலமானியக் கல்லூரிகள் சமுதாயத்தின் மைய நிறுவனங்களாகத் திகழத்தொடங்கின.

இவ்வாறாகப் பண்ணையிலும், பட்டறையிலும் பணியாற்றும் ஆண்களுக்கும், வீட்டில் இயங்கும் பெண்களுக்கும் நாடுதழுவிய கல்வித்திட்டம் நிலமானியக் கல்லூரிகளால் வரையப்பட்டது. இத்தகைய கல்விமுறை பண்ணையிலும், தொழிற் கூடங்களிலும், வீட்டிலும் பயன்படுவதை மக்கள் நன்கு உணர்ந்தனர். கல்வி என்பது வெறும் ஏட்டுப் படிப்பன்று; அது வாழ்க்கைக்கு உறுதுணையாக நிற்கவேண்டும் என்ற கருத்து விரிவாக்கப்பணிகளால் வலுப்படுத்தப்பட்டது. நிலமானியக் கல்லூரி, பண்ணையிலும், பட்டறையிலும் பணியாற்றுவோருக்கும், மனையினை நிருவகிப்போருக்கும் ஏற்ற கருத்துகளைத் தொகுத்துக் கொடுத்தது. அறிவியல் கல்வி, வேளாண்மைக் கல்வி, தொழிற்கல்வி ஆகியவற்றைச் சொல்லித்தருவதுடன் மட்டுமல்லாது இத்துறையில் தம் ஆய்வுகளால் புதிய கண்டுபிடிப்புகளையும் மக்களுக்குத் தங்களது அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிப்பதற்கான வாய்ப்புகளையும் அளித்தது. இன்று உயர்கல்வியின் குறிக்கோள் கற்பித்தல், ஆராய்ச்சி, விரிவாக்கம் என்று கூறுவதற்கு நிலமானியக் கல்லூரிகளே வித்திட்டன. அத்துடன் வேளாண்மைப் பல்கலைக் கழகங்கள், மனையியல் கல்லூரிகள், தொழில்நுட்பக் கல்லூரிகள் தோன்றவும் இவை முன்னோடியாக விளங்கின. ஞா.ப.

***நில வள வங்கிகள்***: வேளாண்மைத் துறையில் நீண்ட காலக் கடன் வசதிகளை அளிப்பதற்கு நில வள வங்கிகள் (Land Development Banks) செயற்பட்டு வருகின்றன. சில காலத்திற்கு முன் இவை நில அடைமான வங்கிகள் எனப்பட்டன.

பழைய கடன்களை அடைக்கவும், நிலையான வகையில் நிலத்தைப் பயன்படுத்தவும், வளப்படுத்தவும் நீண்ட காலக் கடன் தேவைப்படுகின்றது. இக் கடனைத் திருப்பிச்செலுத்தப்பல ஆண்டுகள் தவணை வேண்டும். வட்டியும் குறைவாக இருத்தல் வேண்டும். ஏனென்றால், உழவர்கள் தம் நிலத்திலிருந்து கிடைக்கும் சிறு உபரித் தொகையினைக் கொண்டுதான் இந்த நீண்ட காலக் கடன்களைச் சிறுகச் சிறுக அடைக்க முடியும். குறுகிய காலக்கடன் வழங்கும் சங்கங்கள், மத்திய வங்கிகளிடமிருந்து பெறும் கடன் குறுகிய காலத்திற்கு மட்டுமே கிடைப்பதால், இந்தக் கடன் தொகையைக் கொண்டு நீண்ட காலக்கடன் வழங்குவது இயலாது போயிற்று. மற்றும், நீண்ட காலக் கடன்களை வழங்கத் தேவைப்படும் பணத்தைத் திரட்டக் கடனீட்டுப் பத்திரங்களை (Debentures) வெளியிட வேண்டியிருந்தது. கடனீட்டுப்பத்திர வெளியீடு அடைமானங்களின் அடிப்படையில் அமைந்தது. இந்தச் சடங்குகளையெல்லாம் குறுகிய காலக் கடன் வழங்கு நிலையங்கள் ஏற்றுக்கொண்டு நடத்துவது இயலாத செயலென்று உணரப்பட்டது. இந்த நிலையில் நீண்ட காலக்கடன்களை வழங்கத் தனி ஓர் அமைப்பு உருவாகியது. இவ்வமைப்பே பிரதம நில வள வங்கி எனத் தொடக்கக்காலத்தில் பெயர் பெற்றது. இவ்வங்கிகள் குறிப்பிட்ட ஓர் எல்லைக்குள் தம் செயல்களைச் செய்து வந்தன. பெரும்பாலும் குறிப்பிட்ட வட்டார எல்லையை அடிப்படையாகக் கொண்டு இவ்வங்கிகள் இயங்கி வந்தன.

தமக்குத் தேவைப்படும் நிதியினைத் திரட்ட ஒவ்வொரு பிரதமநில அடைமான வங்கியும் கடனீட்டுப் பத்திரத்தை வெளியிடத் தொடங்கியதால் அப்பத்திரங்களை விற்பது கடினமாயிற்று. எனவே, பிரதம நில அடைமான வங்கிகள் அனைத்திற்கும் தேவைப்பட்ட தொகையினை ஒன்று சேர்த்துக் கணக்கிட்டு, அத்தொகையைத் திரட்ட ஒரு கூட்டுறவு அமைப்பு முயற்சியினை மேற்கொண்டால் போதும் எனக் கருதப்பட்டது. அந்நிலையில்தான் மாநில அடைமானக் கூட்டுறவு வங்கிகள் உண்டாயின. மாநிலத்திற்கு ஒன்று என்ற முறையில் அமைக்கப்பெற்றுள்ள இவ் வங்கி, சில இடங்களில் மத்திய கூட்டுறவு நில வள அடைமான வங்கி என்றும் சொல்லப்பட்டது. பிரதம கூட்டுறவு நில அடைமான வங்கிகளின் சார்பாகக் கடன் பத்திரங்களை வெளியிட்டுப் பணம் திரட்டுவது இவ்வங்கியே.

கூட்டுறவு இயக்கத்தில் நீண்ட காலக் கடனளிக்கும் நிலையங்கள் இரண்டு அடுக்காகஅமைந்துள்ளன. அடித்தளத்தில் பிரதம கூட்டுறவு நில அடைமான வங்கிகளும், உச்சியில் மாநிலக் கூட்டுறவு நில அடைமான வங்கிகளும் செயற்பட்டு வருகின்றன. கடன் விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்தல், உரிமைப்பத்திரங்களைச் சரி பார்த்தல், நில மதிப்பை நிருணயித்தல், கடனைச் சரியான முறையில் பயன்படுத்துகின்றனரா எனக் கண்காணித்தல் போன்ற செய்திகளைப் பிரதம வங்கிகள் கவனித்துக் கொள்ளுகின்றன. மத்திய நில அடைமான வங்கிகள், பணச் சந்தையுடன் தொடர்பு கொண்டு தக்க நேரத்தில் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டுப் பணந்திரட்

டல், பிரதமவங்கிகளுக்கு அறிவுரை வழங்கல் போன்ற பணிகளைச் செய்து வருகின்றன.

நிலவள வங்கி கூட்டுறவுத் துறையில் மட்டுமல்லாமல் பிற துறையிலும் தொடங்கப்பட்டுச் செயற்பட்டு வருகிறது. பெரும்பாலும், அவை இலாப நோக்குடையவைகளே. இந்தியாவிலுள்ள நில வள வங்கிகள் அனைத்துமே கூட்டுறவுக் கொள்கைகளின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. எகிப்தின் வேளாண்மை வங்கி (The Agricultural Bank of Egypt), 'பிரான்சின் கிரடிட்-பான்சியர்' (The Credit-Fonceir-de-France) போன்றவை கூட்டுறவு அல்லாத துறையில் அமைந்துள்ள நிலவள வங்கிகளாகும். இந்தியாவில் பஞ்சாபுமாநிலத்திலுள்ள சங்கு(Jhang) என்னும் ஊரில் தான் முதன் முதலில் கூட்டுறவு முறையில் 1920-ஆம் ஆண்டில் நில வள வங்கி அமைக்கப்பட்டது எனத் தெரிகிறது. எனினும், தொடங்கிய சிறிது காலத்திற்குப் பின்னர் இவ்வங்கி செயலற்றுவிட்டது. பின்னர் 1925-ஆம் ஆண்டில் சென்னையில் தொடங்கப்பட்ட நிலவள வங்கியின் செயற்பெருக்கத்தைக் கண்டுணர்ந்த பிற மாநிலங்களும் தத்தம் மாநிலங்களுக்கு நில வள வங்கிகளை அமைத்துச் செயற்படுத்தி வருகின்றன. பி.ச.

**துணை நூல்:**

**Saravanavel**, P., Banking Theory Law & Practice, Margham Publications, Madras, 1987.

*நிலவுரிமை முறை* என்பது நிலத்தை உழுது பயிரிடுபவருக்கு அந் நிலவுடைமையில் பாதுகாப்பை இயற்கையாகவோ அரசாங்கத்தாலோ ஏற்படுத்திக் கொடுப்பதாகும். வேளாண்மைத் தொழிலின் வளர்ச்சியானது தொடக்கக் காலத்தில் நிலத்தைப் பயன்படுத்துவதற்கு மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட பாதுகாப்பு உரிமையுடன் தோன்றியது என்பது வரலாற்றுச் சான்றாகும். ஆனால் இந் நிலவுரிமையானது (Land Tenure System) மனிதப் பண்பாட்டின் மாற்றங்களுக்கேற்ப மாறியிருக்கிறது. இம் மாற்றங்களினால் ஏற்பட்ட நிலவுடைமை முறையின் குறைபாடுகள் நிலச் சீர்திருத்தத்தினால் (Land Reforms) ஓரளவுக்குத் தீர்க்கப்பட்டன என்று சொல்லலாம்.

நிலவுரிமையில் ஏற்பட்ட சிக்கல்களைத் தீர்ப்பதற்கு நிலச் சீர்திருத்தங்களைக் கிராமக் குடியரசில், கிறித்து பிறப்பதற்கு 2000 ஆண்டுகளுக்கு முன்னர்க் கிராக்கிச் (Gracchi) சகோதரர்கள் மேற்கொண்டனர் என்று வரலாறு கூறுகிறது. பண்டைக்காலத்தில் ஐரோப்பிய நாடுகளில் நிலவுரிமையைப் பற்றிய சிக்கல்கள் பரவலாக ஏற்பட்டன என்றும், அதன் விளைவாக நிலவுரிமை முறையில் பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன என்றும் வரலாற்றுச் சான்றுகள் கூறுகின்றன. இவ்வாறு உலக அளவில் நில உரிமை முறைகளைப் பற்றிய சீர்திருத்த நடவடிக்கைகள் கடந்த பல நூற்றாண்டுகளாகவே எடுக்கப்பட்டு வந்துள்ளன.

இருப்பினும் நிலவுரிமை முறைகளில் இன்றும் பல குறைபாடுகள் காணப்படுகின்றன. இக் குறைபாடுகள் இன்று உலக நாடுகள் பலவற்றின் கவனத்தை ஈர்த்துள்ளன. பன்னாட்டு உணவு வேளாண்மை அமைப்பின் (Food and Agricultural Organisation) மூலம் ஐக்கிய நாட்டுச் சபை அதனுடைய உறுப்பு நாடுகளுக்கு நிலவுரிமை முறையில் மாற்றங்களை ஏற்படுத்துவதற்காக உதவி செய்து வருகிறது. நிலவுரிமை முறைகளில் உள்ள குறைபாடுகளின் காரணமாக வேளாண்மைத் துறையின் வளர்ச்சியும், நாட்டின் பொருளாதார வளர்ச்சியும் பாதிக்கப்படுகின்றன. ஏனென்றால், நிலத்தை உழுபவர்களுக்கு நிலவுரிமைப் பாதுகாப்பு இல்லையென்றால் அவர்களுக்கு நிலத்தில் உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கம் குறைந்துவிடும். அதனால் வேளாண்மை உற்பத்திக்குறைவதோடு அத் துறையில் முதலாக்கமும், மூலதன அளிப்பும் குறைகின்றன. தவிர, நிலம் துண்டுபடுதல், சிதறுதல் போன்றவைகளாலும், பண்ணை நிருவாகக் குறைபாடுகளின் காரணத்தாலும்தொழில் நுண்ணறிவு மாற்றங்களை ஏற்படுத்த முடியாமற் போவதற்கு இந் நிலவுரிமை முறையிலுள்ள குறைபாடுகளே காரணமாகும். இவ்வாறு நில உரிமை அமைப்புப்பொருளாதார வளர்ச்சியில் முக்கிய பங்கினை ஆற்றுகிறது. பொருளாதார வளர்ச்சியின் மூன்று முக்கிய கூறுகளாகிய பொருளாதார வளர்ச்சி, சமூக முன்னேற்றம், அரசியல் உறுதித்தன்மை ஆகிய மூன்றிற்கும் வேளாண்மைத் துறையின் நிறுவனங்களில் மாற்றங்கள் ஏற்படுவது இன்றியமையாதது.

**இந்தியாவில் நிலவுரிமை முறை:** ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் இந்தியாவில் பல்வகையான நிலவுரிமை முறைகள் நிலவின. நிலத்தை உழுது பயிரிடுபவருக்கும் அரசாங்கத்திற்கும் மத்தியில் இடைப்பட்டவர்கள் பலர் தோன்றித் தங்களுக்கும் நிலவுரிமை உண்டு என்று கூறினர். இந் நிலைமை உண்டாவதற்கும் பல காரணங்கள் இருந்தன. ஆங்கிலேயக் கிழக்கிந்திய நிறுமத்தார் (East India Company) கி.பி. 1765-இல் வங்காளத்து நவாபிடமிருந்து வரி வசூலிக்கும் உரிமையைப் (Dewany) பெற்றதன் வாயிலாக ஆட்சி உரிமையையும் பெற்றனர். தங்களது நிருவாகக் காரியங்களுக்கும், இராணுவக் காரியங்களுக்கும் போதுமான வலிமை பெறுவதற்காக கி.பி. 1792-இல் வங்காளத்தில் காரன்வாலிசு (Corn

wallis) என்ற பிரபு சாசுவத நிலவரி ஏற்பாட்டு முறையை (Scheme of Permanent Settlement) உண்டாக்கினார். அதன்படி 10 ஆண்டுகளுக்கு நிலவரி வசூலிக்கும் உரிமையை அளிக்கும் உடன்படிக்கை ஒன்றைச் சமீன்தார்களுடன் செய்துகொண்டார். இம்முறை சமீன்தாரி முறை (Zamindari System) என்று சொல்லப்பட்டது. சென்னையில் இம்முறை கி.பி. 1802-இல் நிறைவேற்றப்பட்டது. ஆனால் கி.பி.1883-இல் இவ்வுடன்படிக்கை நீக்கப்பட்டது.

இம் முறையினால் வரி வசூலிப்பதற்கு என்று தோற்றுவிக்கப்பட்ட சமீன்தார்கள், நிலத்தில் உரிமை கொண்டாடினார்கள். அதனால் நிலத்தைப் பயிரிடுபவருக்கே நிலம் சொந்தம் என்று நீண்டநாள் இருந்த வழக்கம் மாறி நிலம் உழுபவர்களுக்கு இடையூறு உண்டாகியது. தவிர, பலன் முழுதும் இந்த இடைத்தரகர்களாகிய சமீன்தார்களுக்கே கிடைத்தது. இம்முறையின் குறைபாடுகளை உணர்ந்து இந்தியா சுதந்திரம் அடைந்தபின்னர் 1948 - இல் சென்னை அரசாங்கம் சமீன்தாரி ஒழிப்புச் சட்டத்தை இயற்றியது. அதன்படி சமீன்களிலிருந்து, வேளாண்மையினர் அரசாங்கத்திடம் தாங்கள் பயிரிட்டுவந்த நிலங்களுக்கான உரிமைச் சீட்டைப் (Patta) பெற்றனர்.

**மகல்வாரி நிலவுரிமை முறை:** இந்த முறை முதன்முதலாக ஆக்ராவிலும்,அயோத்தியிலும்புகுத்தப்பட்ட பின்னர்ப் பஞ்சாபிற்குப் பரவியது. இம் முறையின்படி நிலவுரிமை ஒரு குழுவினருக்கு அல்லது கிராமக் குழுக்களுக்குக் கொடுக்கப்பட்டது. நில வரி செலுத்துவதற்குக் குழுவிலுள்ள உறுப்பினர்கள் கூட்டாகப் பொறுப்பேற்றிருந்தனர். இருந்தபோதிலும் இம்முறையில் செயற்பட்டு வந்த குடியானவர்களின் நிலைமை, இரயத்துவாரி முறையின்கீழ்ச் செயற்பட்டவர்களின் நிலைமையை ஒத்திருந்தது.

**இரயத்துவாரி நிலவுரிமை முறை:** இம்முறை சாசுவத நிலவரித் திட்டம் ஏற்படுவதற்கு முன்னரே சென்னையில் ஏற்படுத்தப்பட்டது. கர்னல் இரீட்டு என்பவரால் குல்வாரி (Kulwar) என்ற நிலவரித்திட்டம் ஏற்படுத்தப்பட்டது. இத் திட்டம் கிராம நிலங்கள் அனைத்திற்கும் மொத்தமாக வரி நிருணயம் செய்து கிராமத்தைக் குத்தகைக்கு விடுவதற்குப் பதிலாக ஒவ்வொரு நிலத்துக்கும் வரி நிருணயிக்கும் முறையைக் கொண்டதாகும். ஆனால், இத்திட்டம் கி.பி. 1852 வரை முக்கிய தன்மை பெற்றிருந்தது. அந்த ஆண்டில் இரயத்துவாரி நிலவரி முறை (Ryotwari System) ஏற்படுத்தப்பட்டது. இம்முறைப்படி ஒவ்வொரு நிலமும் அளக்கப்பட்டு அதைப் பயிரிடுபவர் யார் என்பதைக் கவனியாமல் அதன் பரப்பையும் தன்மையையும் பொறுத்து வரி நிருணயிக்கப்பட்டது. அதன்மூலம் நில உரிமையாளர்கள் நிலத்தைப் பயன்படுத்தவோ குத்தகைக்கு விடவோ விற்பனை செய்யவோ மாற்றவோ தகுதி பெற்றனர். வரிவிதிப்பு 20 முதல் 30 ஆண்டுகளுக்கு நிலையாக இருக்கும். பின்னர் வரி புதுப்பித்து அல்லது திருத்தி அமைக்கப்படும்.

இதன் முதன்மையான நன்மையாக இடைத்தரகர்கள் ஒழிந்தனர்; அரசாங்கத்துடன் நிலச் சொந்தக்காரர்கள் நேரடித் தொடர்பு கொண்டனர். ஆயினும் இதிலும் பல குறைபாடுகள் காணப்பட்டன. முதன்மையாக இம்முறையும் சமீன்தாரி முறையைப் போலவே தோன்றுகிறது. கடுமையான நில வாரமும் (Rack Renting), நிலவரியில் உறுதியற்ற தன்மையும், உள் குத்தகை முறையும், உடன் இல்லாப் பண்ணை மேலாட்சி முறையும் (Absentee Land-lordism) காணப்படுகின்றன. இக் குறைகளை நீக்கும் பொருட்டுப் பல பரிந்துரைகள் வழங்கப்பட்டன.

**மிராசு முறை:** சென்னை மாவட்டத்தில் பல இடங்களில் மிராசுதார்கள் என்ற ஒருவகை நிலஉரிமையாளர்கள் இருந்தனர். அவர்கள் பெரும்பாலும் முன்காலத்தில் கிராமங்களில் பாகமுடையவர்களாக இருந்தவர்களின் சந்ததிகளேயாவர். அவர்கள் நிலத்தை அனுபவிப்பதோடு மிராசுதாராக இல்லாதவர்களிடம் பணம் (Fee) வசூலிப்பதென்ற மிராசு மானியம் என்னும் உரிமையும், கிராமத்திலுள்ள தரிசு நிலங்களைப் பயிரிட முதலுரிமையும் கொண்டாடுகின்றனர். இந்த உரிமைகள் எல்லா இடங்களிலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

**இப்போதைய நிலவுரிமை முறை:** இப்போதைய நிலவுரிமை முறை வேளாண்மையினரைச் சார்ந்துள்ளது. நிலத்தைப் பயிரிடுபவர்களுக்கு நிலத்தின்மீது முழு உரிமையும் உண்டு. இதில் நிலச் சொந்தக்காரர் நிலத்தில் பயிரிடாமல் வேறொருவருக்கு மாற்றிவிட்டால் அவர் அந்த நிலத்தின்மீதுள்ள உரிமையை இழக்க நேரிடுகிறது. 'பட்டா' (Patta) நிலவுரிமைச் சான்றிதழ் நிலத்தை உழுது பயிரிடுபவருக்கே கொடுக்கப்படுகிறது.

இந்திய மாநிலங்களிடையே நில வருவாய் வரியானது விதிக்கப்பட்டு வேளாண்மையினரால் செலுத்தப்படுகிறது. இதிலிருந்து நிலவுடைமையானது ஒரு சமுதாயத்திற்குச் சொந்தமென்பது தெரியவருகிறது. வேளாண்மையினர் நிலத்தை உழுது பயிரிடுவதால் அவர்களே நிலத்திற்கு உரிமையுடையவர்களாக விளங்குகிறார்கள்.

ஒரு நல்ல நிலவுரிமை முறை அமைப்புத்தான் வேளாண்மையினருக்கும் அரசாங்கத்துக்கும் உதவுவதோடு பொருளாதார வளர்ச்சியையும் மேம்படுத்தும். அவ்வாறு நல்ல நிலவுரிமை முறை என்பது

நிலம் துண்டுபடுதலைத் தடுப்பதும், அதேசமயம் ஒருவரே பெரும் அளவு நிலத்துக்குச் சொந்தக்காரராக இருப்பதைத் தடுக்கவும் செய்தல்; நிலவுடைமையில் நிலத்தை உழபவனுக்கே நிலத்துக்கான முழு உரிமையும் கொடுத்தல்; நிலச் சொந்தக்காரருக்குத் தம் நிலத்தின் உடைமைமீது பாதுகாப்பு உணர்ச்சியைக் கொடுத்தல்: வேளாண்மையினருக்கு உற்பத்தியைப் பெருக்கும்வகையில் வேளாண் பொருள்களைக் கொடுத்து அவர்களின் உற்பத்தி ஆற்றலுக்கு ஊக்கம் கொடுத்தல் ஆகியவையாம். மேற்கூறிய கருத்துகளை நிலவுரிமை முறையில் செயற்படுத்தவில்லையென்றால், உழுபவர் தம்முடைய வேலையில் நீதியோ நேர்மையோ காட்டமுடியாதது மட்டுமன்றி, வேளாண்மை உற்பத்திப் பெருக்கமும் இயலாததொன்றாகிவிடும். கா.தி.இ.

**துணை நூல்கள்:**

**Joshi**, P.C., Land Reforms in India, Allied Publishers Pvt. Ltd., New Delhi, 1975.

**Misra & Puri**, Indian Economy, Himalaya Publishing House, Bombay, 1983.

**Sharma**, A.N., Economic Structure of Indian Agriculture, Himalaya Publishing House, Bombay, 1984.

*நிலைக்கால உறுத்துக் கட்டளை:* குறித்த ஒன்றைச் செய்யுமாறு அல்லது செய்யாதிருக்குமாறு ஒரு தரப்பினருக்கு நீதிமன்றம் விடுக்கும் கட்டளை அல்லது தீர்ப்பு, உறுத்துக் கட்டளை எனப்படும்.

உறுத்துக் கட்டளைகள் இருவகைப்படும். அவை யாவன 1) இடைக்கால உறுத்துக் கட்டளை மற்றும் 2) நிலைக்கால உறுத்துக் கட்டளை. மறு உத்தரவு வரை நீதிமன்றம் நடப்பிலிருக்குமாறு இடும் கட்டளை இடைக்கால உறுத்துக் கட்டளையாகும். கால வரை எதுவுமின்றித் தீர்ப்பின் ஒரு பாகமாக வழங்கப்படும் உறுத்துக் கட்டளை நிலைக்கால உறுத்துக் கட்டளை எனப்படும்.

நிலைக்கால உறுத்துக் கட்டளை தீர்ப்பாணையின் ஒரு பகுதியாகவே வழங்கப்படும். நீதிமன்றம் வழக்கை விசாரித்து, வழக்கின் முடிவுக்கேற்ப நிலைக்கால உறுத்துக்கட்டளைவழங்கும். நிலைக்கால உறுத்துக் கட்டளையை வாதிக்கு ஆதரவாக நீதிமன்றம் வழங்கலாம், சட்டப் பிணைப்பு ஒன்றினால் ஒருவர் வாதிக்கு ஒரு செயலைச் செய்யக் கடமைப்பட்டிருக்கும் போது அக்கடமையினின்று அவர் தவறாதவாறு இருக்க நீதிமன்றம் நிலைக்கால உறுத்துக் கட்டளை பிறப்பிக்கலாம்.

நிலைக்கால உறுத்துக் கட்டளையின் இலக்கணம் குறித்த வகை பரிகாரச் சட்டத்தின் பிரிவு 37-இல் கூறப்பட்டுள்ளது. எந்தச் சூழ்நிலைகளில் இந்த வகை உறுத்துக் கட்டளை வழங்கப்படலாம் என்பது பிரிவு 38-இல் விளக்கப்பட்டுள்ளது.

ஒப்பந்தத்தின் மூலம் சட்டப் பிணைப்பு ஏதேனும் ஏற்படுங்கால் நீதிமன்றம்,ஒப்பந்தத்தில் குறித்த வகை நிறைவேற்றம் குறித்த விதிமுறைகளையும் வழிமுறைகளையும் பின்பற்ற வேண்டும்.

வாதிக்குரிய சொத்தினை அனுபவிக்கும் உரிமையை எதிர்வாதி பறிக்குங்கால் அல்லது பறிப்பதாகப் பயமுறுத்துங்கால் நீதிமன்றம் கீழ்க்காணும் சூழ்நிலைகளில் நிலைக்கால உறுத்துக் கட்டளை வழங்கலாம்.

அ) எதிர்வாதி வாதிக்காகச் சொத்தின் பொறுப்புரிமையராக இருக்கும் போது,

ஆ) எதிர்வாதி வாதியின் உரிமையைப் பறித்ததனால் ஏற்பட்ட இழப்பை அளவிட முடியாதபோது; அல்லது பறிக்குங்கால் ஏற்படும் இழப்பை அளவிட முடியாத போது,

இ) உரிமைப் பறிப்பு ஏற்பட்ட போது பணத்தால் தரப்படும் இழப்பீடு சரியான பரிகாரமாக அமையாது என்றிருக்கும் போது,

ஈ) பல்வேறு நீதிமன்ற நடவடிக்கைகளைத் தடுக்கும் பொருட்டு உறுத்துக் கட்டளை வழங்கப்பட வேண்டும்போது, நிலைக்கால உறுத்துக் கட்டளையை நீதிமன்றம் வழங்கலாம்.

வாதி தனது சட்டப்படியான உரிமையைநிலை நாட்டிய பின்னர் வாதிக்கு ஆதரவாகவும் எதிர்வாதிக்கு எதிராகவும் நீதிமன்றம் நிலைக்கால உறுத்துக் கட்டளை வழங்கலாம். நிலைக்கால உறுத்துக் கட்டளை எப்போதும் நடப்பிலிருக்கும். நிலைக்கால உறுத்துக் கட்டளையின் மூலம் எதிர்வாதி வாதிக்குத் தீங்கு விளையும் எச் செயலையும் எப்போதும் செய்யாதிருக்குமாறு பணிக்கப்படுகின்றார்.

நிலைக்கால உறுத்துக் கட்டளையொன்றை ஆணையிடுமாறு நீதிமன்றத்தில் வாதி முறையிடும் போது, தனது சட்ட உரிமையை அவர் நீதிமன்றத்தில் மெய்ப்பித்தல் வேண்டும். சொத்தினைத் தான் மட்டுமே அனுபவிப்பதாகவும், பயன்படுத்துவதாகவும் அது தன்னுடைய உடைமையில் இருக்கின்றது எனவும் மெய்ப்பித்தல் வேண்டும். ஒவ்வொரு உரிமைக்கும் எதிர்த் தரப்பினருக்குச் சட்டப் பிணைப்பு ஒன்றுண்டு. அவர் சட்டப்பிணைப்புக்கு எதிராகச் செயற்படுங்கால் வாதி உறுத்துக் கட்டளை வேண்டும் உரிமையைப் பெறுகிறார்.

எந்த ஓர் உரிமை பறிக்கப்படும்போதும், அல்லது பறிக்கப்படுவதாகப் பயமுறுத்தல் ஏற்படும்போதும் எல்லா நேரங்களிலும் உறுத்துக் கட்டளைகளை நீதிமன்றம் வழங்காது. சட்டத்தில் கூறியிருக்கிற காரணங்களுக்காகத் தகுந்த சூழ்நிலைகளில் மட்டுமே உறுத்துக் கட்டளை வழங்கப்படும்.

சாதாரணமாகத் தீங்கீடு அல்லது இழப்பீடு சரியான பரிகாரமாக அமையும் போது, நீதிமன்றம் உறுத்துக் கட்டளைகளை வழங்காது. அது போன்றே தீங்கு மன்னிக்கக்கூடிய சிறு செயலாக இருக்கும் போதும் உறுத்துக் கட்டளை வழங்கப்படுவதில்லை.

உறுத்துக் கட்டளைகள் வழங்குவதற்கும் அனுமதிக்காமலிருப்பதற்கும் நீதிமன்றங்களுக்கு நீதிமுறை விருப்பத் தேர்வு உண்டு. அவ்வாறு விருப்பத் தேர்வைப் பயன்படுத்தும் போது நீதிமன்றம் வாதிக்கு ஏற்பட்ட சொத்தழிப்பின் நிலை, உறுத்துக் கட்டளை வழங்குவதால் எதிர்வாதிக்கு ஏற்படும் மாறுதல் நிலை முதலியவற்றைக் கருத்திற் கொண்டு வழங்குதல் வேண்டும்.

நிலைக்கால உறுத்துக் கட்டளை வழங்குவதற்கு நீதிமன்றம் வழக்கின் பொருண்மை, சூழ்நிலைகள், இடம், கட்டளை, சமூகத்திற்கு ஏற்படும் நன்மைகள் முதலியவற்றைக் கவனத்தில் கொள்ளலாம். ஒவ்வொரு வழக்கிற்கும், இம்மாதிரியான காரணிகளைத் தான் வழக்கின் தீர்ப்பிற்கு எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்று கூறுதல் இயலாது.

சாதாரணமாக வேறு நல்ல பரிகாரங்கள் ஏதேனும் சட்டத்தினால் வாதிக்கு வழங்கப்பட்டிருப்பின் அந்தச் சூழ்நிலைகளில் உறுத்துக் கட்டளைகள் வழங்கப்படுவதில்லை.

**தேவைகள்**: 1. வாதிக்குச் சில சட்ட உரிமைகள் உண்டு. அதனை எதிர்வாதி மீறுதல் வேண்டும். அந்த மீறுகை முடிவு பெற்றதாகவோ அல்லது மீறப்படும் தன்மை வாய்ந்ததாகவோ இருக்கலாம்.

2. நீதிமன்றங்களுக்கு உறுத்துக் கட்டளை பிறப்பிக்க ஆள் நிலைவரம்பு குறித்த வகைப் பரிகாரச் சட்டத்தின் 38–ஆம் பிரிவில் வழங்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மீறுகைக்கும் நீதிமன்றம் உறுத்துக் கட்டளை வழங்குதல் இயலாது. வாதிக்குச் சட்ட உரிமை உள்ளது. அதுபோன்றே எதிர்வாதிக்குச்சட்டப் பிணைப்பு உள்ளது. எதிர்வாதி சட்டப்பிணைப்பைமீறும் போது நீதிமன்றம் நிலைக்கால உறுத்துக் கட்டளை வழங்கலாம். உறுத்துக் கட்டளை பெறுவதற்காக ஒருவர் சொத்தின் முழுச் சொத்துரிமையராக இருக்க வேண்டுமென்பதில்லை. சொத்தின் உரிமையை எவர் அனுபவிக்கின்றாரோ அவர் சொத்தின் உரிமை மூலம் இல்லாத ஒருவர், அனுபவிப்பதில் இடையூறு ஏற்படுத்துங்கால் உறுத்துக் கட்டளை வேண்டலாம்.

3. எதிர்வாதி சட்டப் பிணைப்பை மீறுவதால் தனக்கு ஆதரவாக உறுத்துக் கட்டளை தேவை என்பதை மெய்ப்பித்தல் வேண்டும்.

4. உறுத்துக் கட்டளை பிறப்பிக்க வேண்டி மனுச் செய்யும் மனுதாரர், எதிர்வாதி ஒரு செயலைச் செய்யமாட்டேன் என்று உடன்பட்டுள்ளார் என்பதை மெய்ப்பித்தல் வேண்டும்.

ஒவ்வொரு நிலத்தின் சொந்தக்காரருக்கும் அந்நிலத்திலுள்ள மண் முதலானவற்றைப் பாதுகாத்தலுக்கு உரிமைஉண்டு. இதுஒரு வசதியுரிமையன்று. இது சொத்தின் ஓர்உரிமையாகும். அம்மண் சரிந்து தன்னுடையநலனுக்குத்தீங்கு விளைவிக்காத முறையில் தனது உரிமையை நிலை நாட்டிடலாம். தனது நிலத்திற்கு ஒட்டிய நிலத்தின் சொந்தக்காரர் பள்ளம் வெட்டுவதால், நிலச்சொந்தக்காரரின் நலன் பாதிக்கப்படலாம். அப்போது அவர் நிலைக்காலத் தடை உறுத்துக் கட்டளை வேண்டலாம். அவ்வாறு மனுச் செய்யும்போது வாதிக்கு உண்மையாக இழப்பு ஏற்பட்டிருத்தல் வேண்டுமென்பதோ அதனை அவர் மெய்ப்பிக்க வேண்டியதோ இல்லை. எதிர்வாதியின் செயலால் தனக்குத் தீங்கு ஏற்படும் என்பதை மெய்ப்பித்தால் அதுவே போதும்.

எதிர்வாதி தன்னுடையநிலத்தில் மரங்களை நடுவதால் வாதி தன்னுடைய நிலத்திற்குத் தீங்கேதும் ஏற்படும் என்று கருதுவாராயின் அதனை அவர் மெய்ப்பிக்கும்போது நீதிமன்றம் உறுத்துக் கட்டளை வழங்கலாம்.

எதிர்வாதி, வாதியின் வணிகத்தில் தகுந்த காரணங்களும் எதிர்வாதங்களுமின்றிச் சட்டத்திற்குப் புறம்பானவழிகளில் இடையூறு செய்வாராயின் அதற்காக நீதிமன்றம் தடையுறுத்துக் கட்டளை வழங்கலாம்.

கீழ்க்காணும் சூழ்நிலைகளில் தடையுறுத்துக் கட்டளை வழங்குதல் இயலாது.

i) ஏதாவது ஒரு மனிதர் நீதிமுறை நடவடிக்கை எடுப்பதைத் தடை செய்யும் பொருட்டுத் தடையுறுத்துக் கட்டளை பிறப்பித்தல் கூடாது. ஆனால், ஒரு பொருள் குறித்துப் பல்வேறு நடவடிக்கைகளை எடுப்பதைத் தடை செய்யும் பொருட்டுத் தடையுறுத்துக்கட்டளை வழங்கலாம்.

ii) தடையுறுத்துக் கட்டளை பிறப்பிக்க வேண்டி மனுச்செய்த நீதிமன்றத்திற்கு மேல் அதிகாரம் படைத்த எந்த நீதிமன்றத்திலும்வழக்குத் தொடுப்பதற்குத் தடையுறுத்துக் கட்டளை பிறப்பித்தல் கூடாது.

iii) தருந்த பரிகாரம் வேண்டிச் சட்டமியற்றும் சட்டமன்றத்திற்கு ஒருவர் மனுச் செய்யுங்கால் அதற்கு எதிராகத் தடையுறுத்துக் கட்டளை வழங்குதல் இயலாது.

iv) ஒரு குற்றவியல் வழக்கின் நிமித்தம் வழக்குத் தொடுக்கவோ அதனைத் தொடரவோ தடையுறுத்துக் கட்டளை பிறப்பித்தல் இயலாது.

v), குறித்த வகையில் நிறைவேற்ற முடியாத எந்த ஒப்பந்தமும் நிறைவேற்ற முடியாதபோது ஒப்பந்த மீறுகையைத் தடுக்கும் பொருட்டுத் தடையுறுத்துக் கட்டளை பிறப்பித்தல் இயலாது.

vi) ஒரு செயல் தொல்லை என்று சரியாகத் தெரியாத போது, தொல்லை என்ற தீங்கின் நிமித்தம் அதனைத் தடுப்பதற்காக உறுத்துக் கட்டளை பிறப்பித்தல் இயலாது.

vii) தொடர்ந்து மீறுகை ஏற்படுங்கால் வாதி அதற்காக வெளிப்படையான அல்லது நடத்தையிலிருந்து ஊகிக்கக் கூடிய சம்மதம் தெரிவித்திருந்தால் அத்தொடர் மீறுகையைத் தடுப்பதற்காக உறுத்துக் கட்டளை பிறப்பித்தல் இயலாது.

viii) பொறுப்பு அமைப்பு மீறல் அல்லாது வேறெந்த நடவடிக்கையினால், சரியான தகுதி வாய்ந்த பரிகாரத்தை வாதி பெற்றிடலாம் என்னும் நிலையில் நீதிமன்றம் உறுத்துக் கட்டளை பிறப்பிக்காது.

ix) வாதி அல்லது அவரது முகவரின் நடவடிக்கை சரியான நிலையில் இல்லாதபோது அதற்காக அவருக்கு நீதிமன்றம் தனது உதவியை அளித்தல் கூடாது என்று எண்ணும்போது உறுத்துக் கட்டளை பிறப்பிக்காது.

x) வழக்கில் வாதிக்குத் தனிப்பட்ட நலன் எதுவும் இல்லாதபோது நீதிமன்றம் உறுத்துக் கட்டளை பிறப்பிக்காது.

மீ.அ.

**நிலைத்த உருப்படிவம்:** நுகர்வோர், நிறுவனங்கள், அரசுப் பதிலாண்மைகள் போன்ற பல பொருளாதார அலகுகளின் பொருளாதார நடவடிக்கைகளைப் பற்றியும் அவற்றினால் தோன்றும் பிறவிளைவுகளைப் பற்றியும் விளக்கத்தக்க பொருளாதார உருப்படிவங்கள் (Economic Models) பல பொருளாதாரக் கோட்பாட்டை உருவாக்கித் தந்திருக்கின்றன. இவ் வுருப் படிவங்கள் உலகின் ஒருசில நிலப்பகுதிகளில் அல்லது உலகம் முழுவதிலும் தோன்றியுள்ள பொருளாதார அமைப்புகளுக்குக் (Economic Systems) காரணங்களாக அமைந்துள்ளன.

ஓர் உண்மை நிலையைப் படம்பிடித்துக் காட்டுவதுபோல விளக்குவது ஓர் உருப்படிவம். இருப்பினும் நடைமுறை உண்மை நிலையில் பல்வேறு மாற்றங்கள் நிகழும் வாய்ப்புகள் உண்டு என்பதால் குறிப்பிட்ட எடுகோள்களை (Assumptions) அடிப்படையாக வைத்துக்கொண்டு, உண்மைநிலையை விளக்கப் பயன்படும் கற்பனை அமைப்பே உருப்படிவம் ஆகும். உருப்படிவத்திற்கு அடிப்படையாக அமைக்கப்படும் எடுகோள்கள் பெரும்பாலும் உண்மை நிலையை ஒத்திருக்கும்வண்ணம் அமைக்கப்பட்டாலும், அவை நூற்றுக்கு நூறு உண்மை நிலைகள் என்று குறிப்பிட முடியாது.

பகுத்தாய்விற்காகவோ (Analysis), முன் கணிப்பிற்காகவோ (Prediction) உருப்படிவங்கள் அமைக்கப்பெறலாம். முன்கணிப்பு ஆற்றல் (Predictive Power), எடுகோள்களின் உண்மைத் தன்மை, எடுகோள்களின் ஒன்றோடொன்று தொடர்புடைய தன்மை, உருப்படிவம் தரத்தக்க செய்தி, அதன் பொதுத்தன்மை (Generality), அதன் எளிமை போன்ற பல அடிப்படைகளைக் கொண்டு ஓர் உருப்படிவத்தை மதிப்பிடலாம். முன்கணிப்புத் தன்மைக்குச் சிறப்பிடம் தந்து முன்கணிப்புத் தன்மையே ஓர் உருப்படிவத்தின் பயனுக்கான சரியான காரணி என்ற பொருள்பட மில்ட்டன் பிரைடுமேன் (Milton Friedman) என்னும் அறிஞர் குறிப்பிட்டிருக்கிறார். எடுகோள்களின் உண்மைத் தன்மை, உற்பத்தியாளர்கள், நுகர்வோர் போன்ற பொருளாதாரப் பதிலாண்மைகளின் பொருளாதார நடவடிக்கைகளை விளக்கும் ஆற்றலுக்குச் சிறப்பிடம் தந்து, அவற்றின் அடிப்படையில் ஓர் உருப்படிவத்தின் சிறப்புத் தன்மையை விளக்குகிறார் பேராசிரியர் சாமுவேல்சன்.

முன்கணிப்பு ஆற்றலுக்கும், எடுகோள்களின் உண்மைத் தன்மைக்கும் சிறப்பிடம் கொடுக்கப்பட்டாலும் நடைமுறையில் அவை முழு அளவிலான பலனைத் தருவதில்லை. உருப்படிவத்தை வடிவமைப்பவர் திறமையினால் உருப்படிவம் மிகச் சிறப்புற்றுத் திகழ்ந்தாலும் நடைமுறை நிலைகளில் எதிர்பாராத பல்வேறு மாற்றங்களும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. எனவே, ஒவ்வோர் உருப்படிவமும் பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டதாக இருத்தல் இன்றியமையாதது. நடைமுறை நிலைகளில் மாற்றங்கள் தோன்றும்போது உருப்படிவத்தின் பயன்களும் மாற்றமடையலாம்.

**உருப்படிவங்களின் வகைகள்:** உருப்படிவங்களைப் பல அடிப்படைகளில் வகைப் படுத்துவர். நிலைத்த உருப்படிவங்கள் (Static Models), இயங்கு நிலை உருப்படிவங்கள் (Dynamic Models) என்னும் வகைபாடுகள் அவற்றுள் அடங்கும்.

**இயங்குநிலை:** மக்கள்தொகையிலும், மூலதன அளிப்பிலும் (Supply of Capital), உற்பத்தி முறைகளிலும், வாணிக அமைப்புகளிலும், மக்களின் விருப்பு வெறுப்புகளிலும் மாற்றங்கள் தொடர்ந்து நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. அவற்றைத் தவிர்த்தல் இயலாது. இத் தன்மைகளைக் கொண்டுள்ளதொரு நிலையை இயங்கு நிலை என்பர். இம் மாற்றங்களின் விளைவாக உருப்படிவங்களின் மூலம் பெறத்தக்க முன் கணிப்புகளில் மாற்றங்கள் ஏற்படலாம்.

**நிலைத்த உருப்படிவங்கள்:** மக்கள்தொகை, மூலதன அளிப்பு, உற்பத்தி முறைகள், வாணிக அமைப்புகள், மக்களின் விருப்பு, வெறுப்புப் போன்றவைகளில் மாற்ற மெதுவும் இல்லாததொரு நிலையை நிலைத்த நிலை (Static State) என்பர். இக் கருத்து இயற்பியலிலிருந்து (Physics) பெறப்பட்டதொரு கருத்தாகும். முதலீடுகள் முன்பிருந்த அதே நிலையில் தொடர்ந்து இருந்தால் பொருளாதாரத்தில் மாற்றங்கள் இருக்கமாட்டா என்பதால் முதலீட்டு அளவுகள் மாறாதிருக்கும் நிலையை நிலைத்த நிலை என்ற பொருள்படப் பல பேராசிரியர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். நிலைத்த நிலை என்பதற்குப் பலர் பல விளக்கங்களைத் தந்திருந்தாலும் பொருளாதாரத்தின் இயக்கத்தின் விளைவுகளால் பெரிய அளவு மாற்றங்கள் தோன்றாததொரு நிலை, நிலைத்த நிலை என்று குறிப்பிடப்படுகிறது.

இயங்கா நிலை எடுகோள்களின் அடிப்படையில் அமையப்பெறும் உருப்படிவங்களை நிலைத்த உருப்படிவங்கள் (Static Models) என்பர். பொருளாதார நடவடிக்கைகளுக்குக் காரணிகளில் ஏற்படும் மாற்றங்களே காரணம். அக் காரணிகளில் மாற்றங்கள் எவையும் நிகழாவிட்டால் பொருளாதார நடவடிக்கைகளிலும் எவ்விதமான மாற்றங்களும் நிகழ வாய்ப்புகள் இல்லை. எனவே, நிலையானவைகளாக இருக்கும் என்ற காரணிகளின் அடிப்படையில் அமைக்கப்படும் உருப்படிவங்கள் நிலைத்த உருப்படிவங்கள் ஆகும்.

குறிப்பிட்ட எடுகோள்களின் அடிப்படையில், பொருளாதாரத்தின் தனித்த அங்கங்களின் பொருளாதார நடவடிக்கைகளைப் பற்றி விளக்குவதை நுண்ணின நிலைத்த பகுத்தாய்வு (Micro Static Analysis) என்பர். அதுபோன்றே பொருளாதாரம் முழுவதிலுமுள்ள பல்வேறு நிலைகள் மாறாதிருக்கின்றன என்ற எடுகோள்களின் அடிப்படையில், பொருளாதார நடவடிக்கைகளைப் பற்றி விளக்குவதைப் பேரியல் நிலைத்த பகுத்தாய்வு (Macro Dynamic Analysis) என்பர்.

பொருளாதார இயலில் புகழ்பெற்றவராகக் கருதப்படும் ஆராடு தோமார் (Harrod Domar), பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான நிலைகளை விளக்குவதற்காக அவர்தம் உருப்படிவங்களை அமைத்து விளக்கியுள்ளார். அவ்வுருப்படிவங்களை (Harrod Domar Models) நிலைத்த உருப்படிவம், இயங்கு நிலை உருப்படிவங்கள் என்ற இரு அடிப்படைகளில் விளக்குவர்.

1) முழு வேலை வருமான நிலை (Full employment level of Income) இருக்கிறது; 2) பொருளாதார நடவடிக்கைகளில் அரசின் தலையீடு இல்லை; 3) அயல்நாட்டு வாணிகம் எதுவும் இல்லை; 4) பொருளாதாரத்தில் அளிப்புக்கும் தேவைக்கும் இடையே தானியங்கும் (Automatic) சமன்பாடு தோன்றிவிடும் என்பதால் அளிப்பு, தேவை மாற்றங்களுக்கிடையே சமன் செய்வதில் கால இடைவெளி (Time lag in adjustment) எதுவும் இல்லை; 5) மக்களின் சேமிப்பு நாட்டம் (Propensity of Save) நிலையானதாக இருக்கிறது, 6) விளைவுக்கு மூலதன இருப்பாகிய (Capital stock to output) மூலதனக் கெழு (Capital Co-efficient) மாறாதிருக்கிறது என்ற பல எடுகோள்களில் ஆராடு-தோமார் நிலைத்த உருப்படிவங்களை அமைத்துள்ளார். அவ்வுருப்படிவங்களைத் திறனாய்வு செய்பவர்கள் அவ்வுருப்படிவங்களுக்கு அடிப்படைகளாக அமைந்துள்ள பல எடுகோள்கள் நடைமுறை நிலைகளுக்குப் பொருந்தாமலிருப்பதால் உருப்படிவத்தின் பயன்களும் எதிர்பார்த்த அளவில் இல்லை என்பதைச் சுட்டிக் காட்டியுள்ளனர். என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**


Agarwal, H.S., Principles of Economics, Shiva Lal Agarwala Company, Agra, 1978.

Alfred W.Stouier & Douglas C.Hauge, A Text Book of Economic Theory, The English Language Book Society, Longman Group Ltd., London, 1982.

Koutsoyiannis A., Modern Micro Economics, Macmillan, London, 1979


**நிலைமுறைச் சட்டம்:** நடப்பிலிருக்கும் சட்டங்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று நிலைமுறைச் சட்டம், மற்றொன்று நடைமுறைச் சட்டம். மக்களின் உரிமைகள், கடமைகள், அதிகாரங்கள், சுதந்திரங்கள் முதலியவற்றை எடுத்தியம்புபவை நிலைமுறைச் (Substantive Law) சட்டங்களாகும். அந்த உரிமைகளையும் கடமைகளையும் நிறைவேற்றவும் செயலாக்கி நிலை நாட்டவுமான முறைகளைக் கூறுவது நடைமுறைச் சட்டங்களாகும். குறிப்பாகக்

கூறினால் நடைமுறைச் சட்டங்கள் நடைமுறைகளையும், சாட்சியத்தையும்பற்றி இயம்புவன. குற்றவியல் நடைமுறையினின்றுசமூக உரிமை நடைமுறை வேறுபட்டது. அது போன்றே குற்றவியல் சான்றிலிருந்து சமூக உரிமைச் சான்றும் வேறுபடுகின்றது.

மேலும் நிலைமுறைச் சட்டத்தை நடைமுறைச் சட்டத்தினின்று வேறுபடுத்துங்கால் உரிமைகளை எடுத்தியம்புவன நிலைமுறைச் சட்டங்களென்றும், அவற்றிற்கான தீர்வழிகளைக் குறிப்பன நடைமுறைச் சட்டங்கள் என்றும் சட்டவியல் அறிஞர் சால்மண்ட்டு கூறுவார். மேலும், இந்த வகையான வேறுபாட்டை உறுதிப்பாடான வேறுபாடாக எடுத்துக் கொள்ளுதல் இயலாது என்றும் கூறுகின்றார். ஏனெனில், மேல்முறையீடு செய்யும் உரிமைகள், தனக்குச் சாதகமாகத் தானே சான்று பகரும் உரிமை, மறு தரப்பினரை விசாரணை செய்யும் உரிமை முதலானவை நடைமுறைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளன.

மேலும், சில நடைமுறைச் சட்டங்களில் தீர்வழிகள் கூறப்பட்டிருக்கலாம். நடைமுறைச் சட்டங்களில் உரிமைகளினூடே தீர்வழிகளும் சொல்லப்பட்டிருக்கலாம். குற்றவியல் சட்டத்தைப் பொறுத்தவரை அது, குற்றங்களைமட்டுமன்றிஎவ்வகையான தண்டனைகளை விதிக்கலாம் என்பதையும் கூறுகின்றது.

இவ்வாறு நடைமுறைச் சட்டத்தில் கூற வேண்டியவை நிலைமுறைச் சட்டத்திலும், நிலைமுறைச் சட்டத்தில் கூறவேண்டியன நடைமுறைச் சட்டத்திலும் கூறப்பட்டிருப்பின் இவ்விரு சட்டங்களுக்குமுள்ள வேறுபாடுகள் என்ன? நிலைமுறைச் சட்டங்கள் மக்களின் உரிமைகளைக் கூறுகின்றன. எடுத்துக் காட்டாக இந்தியத் தண்டனைச் சட்டத்தைக் கூறலாம். குற்றங்களின் வகைகள் அவற்றின் இலக்கணம் அவற்றிற்கான தண்டனை, எதிர்வாதங்கள், தண்டனைகளின் வகைகள் ஆகியவற்றைக் கூறுவது இச்சட்டம்.

வழக்குத் தொடர்பாகப் பின்பற்ற வேண்டிய நடைமுறைகள் என்னென்ன என்பதைக் கூறுவது நடைமுறைச்சட்டம். எடுத்துக் காட்டாகக் குற்றவியல் நடைமுறைச் சட்டத்தையும் உரிமையியல் நடைமுறைச் சட்டத்தையும் எடுத்துக் கொள்ளலாம். நீதிமன்றத்தின் அதிகாரங்கள், ஒவ்வொரு நடவடிக்கையிலும் பின்பற்றப்பட வேண்டிய நெறிமுறைகள், புலனாய்வு, கைது செய்யப்பட்டவரின் உரிமைகள், குற்றம் சாட்டப்பட்டவரின் உரிமைகள், மேலாய்வு, சீராய்வு, மறு ஆய்வு முதலியவற்றைத் தெளிவாக விளக்குவது நடைமுறைச் சட்டம். நீதிமுறை நிருவாகம் எந்த எண்ணத்தை நிறைவேற்ற முற்படுகின்றதோ அதனை அளிப்பது தான் நிலைமுறைச் சட்டம். அந்த எண்ணத்தை எவ்வகையில் எக் கருவிகளின் துணைக்கொண்டு ஈடேற்ற வேண்டும் என்று கூறுவது நடைமுறைச் சட்டம்.

ஒருவருக்கு ஒரு பொருளைப் பெறும் உரிமை இருக்கிறதா என்பதை அறிவிப்பது நிலைமுறைச் சட்டம். இதுவே, நீதி நிருவாகத்தின் தலையாய இன்றியமையாப் பணி. ஆனால், எந்த நீதிமன்றத்தில் வழக்கினைத் தாக்கல் செய்திடல் வேண்டும், எந்தக் காலக் கட்டத்திற்குள் வழக்கினைத் தாக்கல் செய்ய வேண்டும் என்பதைத் தெரிவிப்பது நடைமுறைச் சட்டம். தீங்கு ஒன்று ஏற்பட்டிருப்பின் அத்தீங்கிற்கான பொருண்மைகளை அறிவிப்பது நிலைமுறைச் சட்டம். எப்பொருண்மைகள் மெய்ப்பிக்கப்பட்ட பொருண்மைகளாகும் என்பதைக் கூறுவது நடைமுறைச் சட்டம்.

ஒரு குற்றம் நடைபெற்று, ஒருவர் மீது குற்றம் சாட்டப்பட்டிருப்பின் அதற்காகச் சிறைத் தண்டனை விதிக்க வேண்டுமா அல்லது பொருள் தண்டம் விதித்தால் போதுமா என்று கூறுவது நிலைமுறைச் சட்டம். ஆனால், அவரைக் குறுக்குமுறைவிசாரணைக்கு ஆட்படுத்த வேண்டுமா அல்லது அழைப்பாணை வழக்குகள் அல்லது பிடியாணை வழக்குகள் முறையில் நீதிமுறை விசாரணை செய்ய வேண்டுமா என்று பகர்வது நடைமுறைச் சட்டம்.

இவ்வாறு நிலைமுறை மற்றும் நடைமுறைச் சட்டங்களின் இலக்கணம் கூறப்பட்டிருப்பினும், நடைமுறை விதிகள் பலவும் நிலைமுறைச் சட்டங்களுடன் ஒத்திருப்பதை அறியலாம். முதலாவதாகச் சான்றியல் சட்டத்தில் ஒப்பந்தத்தை எழுத்து மூலமாகத்தான் மெய்ப்பித்தல் வேண்டும் என்று கூறப்பட்டிருக்கலாம். இது ஒரு நடைமுறைச் சட்டம். இதன் விளைவு ஒப்பந்தம் எழுத்து மூலமாக இல்லாவிடில் அது செல்லாநிலை ஒப்பந்தமாகும். இவ்வாறு கூறுவதால் இது நிலைமுறைச் சட்டத்திற்கு ஈடானதாகிறது. இரண்டாவதாக அறுதிச் சான்று, மெய்ப்பிக்கப்பட்ட பொருண்மைக்கு ஒப்பானதாவதோடு அதன் இடத்தையும் பெறுகின்றது. அறுதித் துணிபுகள் எவையென நடைமுறைச் சட்டமுறைச் சட்டத்தில் அல்லது சான்றியல் சட்டத்தில் கூறப்பட்டுள்ளன. ஏழு வயதிற்குக் குறைவான குழந்தைகள் கருத்துடன் செயற்படல் இயலாது எனக் கூறுவது சான்றியல் சட்டம். ஆனால், ஏழு வயதிற்குக் குறைந்த குழந்தைகளைத் தண்டிக்க முடியாது என்று கூறுவது நிலைமுறைச் சட்டம். மூன்றாவதாகக் காலவரையறை பற்றிய பிரிவுகள் நடைமுறைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளன. இவை நீடனுபோக உரிமை அளித்தலுக்கு ஒத்தவையாகும். காலவரையறைக் குட்பட்ட காலத்தில் மனுச் செய்யாததால், மேல்

முறையீடு செய்யாததால் ஒருவர் தம் உரிமையை இழக்கலாம். இங்கு உரிமை பறிக்கப்படுகிறது. இது நிலைமுறைச் சட்டத்தினால் ஏற்பட்ட இழப்பன்று.
மீ.அ.

**நிலை மூலதனம்:** பொருள் உற்பத்திக்கு நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு என்கின்ற நான்கு உற்பத்திக் காரணிகள் தேவை. இவற்றில் மூலதனம் (Capital) உற்பத்தியில் சிறப்பான இடத்தைப் பெறுகிறது. பொதுவாக வாணிகத்தையும், தொழில்களையும் அமைக்கவும், நடத்தவும் பயன்படுத்துகின்ற பணம் 'மூலதனம்' என்று கூறப்படுகிறது. பாம் பாவர்க்கு (Bohm Bawerk) மூலதனத்தை 'உற்பத்தி செய்யப்பெற்று உற்பத்திக்காகப் பயன்படுத்தும் சாதனங்கள்' (Produced Means for Production) என்று கூறுகிறார். சாப்மன் (Chapman) என்பவர் 'மூலதனம் செல்வமாகும்; அது வருவாய் தருகிறது அல்லது வருவாயை உற்பத்தி செய்யத் துணை செய்கிறது அல்லது அதனைச் செய்யும் நோக்கில் இருக்கிறது' என்று விளக்குகிறார்.

தொழிலில் பயன்படுத்துகின்ற மூலதனத்தை அதனுடைய இயல்பையும், பணியையும், அது யாருடைய உடைமை என்பதையும் ஒட்டிப் பலவகைகளாகப் பிரிக்கலாம். அவற்றில் நிலை மூலதனம் ஒருவகையாகும்.

நிலை மூலதனம் கட்டடமாகவோ இயந்திரங்களாகவோ பிற சாதனங்களாகவோ இருக்கும். ஓரளவாவது நிலை மூலதனம் இருந்தால்தான் தொழிலில் ஒரு பொருளையாவது உற்பத்தி செய்ய முடியும். நிலை மூலதனத்தின் உச்ச அளவு உற்பத்தி ஆற்றல்வரை மாறுகின்ற மூலதனத்தைக் கூட்டிக் கொண்டே உற்பத்தி செய்யலாம். நிலை மூலதனத்தின் இயல்புகளைப் பின்வருமாறு விளக்கிக் கூறலாம்.

முதலாவதாக, ஒரு நிறுவனத்தின், நிலை மூலதனம் அதனுடைய சொத்தாக (Asset) இருக்கும். ஒரு தொழில் நிறுவனத்தின் பொருளாதார மதிப்பு (Value) அதனுடைய நிலை மூலதனத்தைச் சார்ந்தே அமைகிறது.

இரண்டாவதாக, உற்பத்தி கூடுகின்ற அளவிற்கு நிலை மூலதனம் கூடுவதில்லை. குறிப்பிட்ட மூலதனத்தை வைத்துக்கொண்டு உற்பத்தியைக் கூட்டும்பொழுது ஒரு பொருளின் அடக்கச்செலவு குறைகிறது. இது அகச் சிக்கனம் (Internal Economy)எனக் குறிப்பிடப்படுகின்றது.

மூன்றாவதாக, நிலை மூலதனம் ஒரு நிறுமத்தின் ஆக்கத் திறனைக் (Productivity) கூட்டுகிறது. இக்காலத்தில் மிகுதியாக முதலீடு செய்ய இயலுமானால் உயர்ந்த தொழில் நுட்பமுள்ள இயந்திரங்களை உற்பத்தியில் ஈடுபடுத்த இயலும். அதனால் தொழிலாளரின் திறமை கூடுகிறது. இந்த ஆக்கத்திறனுக்காக மூலதனத்தைக் கடனாகப் பெறுகின்றபொழுது வட்டி தருகின்றனர்.

நான்காவதாக, ஒரு நிறுமத்தின் வருவாயைப் பெருக்க நிலை மூலதனம் துணை செய்கிறது. மிகுதியாக நிலை மூலதனம் உள்ள நிறுமத்தின் ஆதாய வீதம் உயர்வானதாக இருக்கும்.

ஐந்தாவதாக, நிலை மூலதனம் உருவாக்க மூலமாக இருப்பது உழைப்பு. இயற்கையோடு இணைந்து உழைப்பு மூலதனத்தைப் படைக்கிறது. அதனால் தான் சே.எசு.மில். (J.S. Mill) 'எதிர்காலச் செல்வத்தை உற்பத்தி செய்வதற்காகக் கடந்தகால உழைப்பைச் சோத்து வைக்கப்பெற்ற உற்பத்தி' என்று மூலதனத்தை விளக்குகிறார்.

ஆறாவதாக, சேமிப்பின் விளைவாக நிலை மூலதனம் உருவாகிறது. அதாவது மக்கள் வருவாயை நுகராமல் ஓரளவு சேர்த்துவைத்து அந்தச் சேமிப்பை இயந்திரங்கள் வாங்கவும், கட்டடங்கள் கட்டவும் என்று பயன்படுத்தும்பொழுது நிலை மூலதனம் உருவாகிறது.

ஏழாவதாக, நிலை மூலதனம் காலப்போககில் கரையக் கூடியது. ஓர் இயந்திரத்தில் இலட்சம் உரூபாய் முதலீடு செய்தால் அது இருபதாண்டுகள் உழைக்குமென்றால் ஓராண்டிற்கு அதனுடைய தேய்மானம் (Depreciation) 5,000 உரூபாய் ஆகும்.

**நிலை மூலதன ஆக்கம்:** சேர்த்து வைக்கப்பெற்ற உழைப்பு, நிலை மூலதனமாக உருவெடுக்கிறது. ஆதலால்தான் மூலதனம் 'சேமிப்பின் விளைவு' எனக் கூறப்படுகிறது. பேராசிரியர் தாசிக்கு (Tausiq) 'மூலதனம் செய்யப்பட்டது; அல்லது உருவாக்கப் பெற்றது;ஆனால் அது சேமிக்கப்பெற்றதும் சேர்க்கப் பெற்றதும் ஆகும்' என்று பொதுவாகக் கூறுவது நிலை மூலதனத்திற்குப் பொருந்தும். நிலை மூலதனம் எவ்வாறு உற்பத்தி செய்யப் பெறுகின்றதென்பதைப் பின்வருமாறு விளக்கலாம்.

நிலை மூலதனம் அடிப்படையில் உழைப்பால் உருவாகிறது. பேராசிரியர் பென்காம் (Benham) இதனை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்குகிறார். மீன் பிடிக்கின்ற ஒரு சமுதாயம் படகுகள் இருந்தால் மிகுதியாக மீன் பிடிக்க முடியுமென்று உணர்கிறது. படகு இங்கு நிலை மூலதனம் ஆகும். அந்தச் சமுதாயம் அப்படகை உருவாக்கக் கீழே குறிப்பிட்டுள்ள மூன்று வழிகளில் ஒன்றைப் பின்பற்றலாம். முதலாவதாக, ஆண்டில் 11 மாதங்கள் மீன் பிடிக்கையில் ஒரு

மாதத்திற்கு வேண்டியவற்றைச் சேர்த்து வைத்துக் கொண்டு 12-ஆம் மாதம் எல்லோரும் படகு செய்யலாம். இரண்டாவதாக, ஒவ்வொரு நாளும் ஒரு குறிப்பிட்ட காலம் படகு செய்துவிட்டு எஞ்சிய நேரம் மீன் பிடிக்கச் செல்லலாம். மூன்றாவதாக, அவர்களுள் சிலர் தொடர்ந்து படகு செய்யும் பணியில் ஈடுபட மற்றவர்கள் மீன் பிடித்துப் படகு செய்பவர்களுக்கு வேண்டியதைத் தரலாம்.

மேற்கூறியவற்றில் எந்த முறையைப் பின்பற்றினாலும் உழைப்பின் மூலமாகத்தான் படகு என்ற மூலதனம் கிடைக்கிறது. இதற்கு அவர்கள் சேமிப்பு தேவையாகிறது. சேமிக்க வேண்டுமென்றால் தங்களது நுகர் பொருள்களில் ஓரளவாவது தியாகம் செய்யவேண்டியுள்ளது. அந்தச் சமுதாயம் படகு இல்லாமல் பிடிக்கின்ற மீனின் அளவைவிடப் படகின் துணையோடு பிடிக்கின்ற மீனின் அளவு மிகுதியாக இருக்கும். அதுதான் உற்பத்தி ஆற்றலின் பெருக்கம் எனக் குறிப்பிடப்படுகிறது.

**வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிலை மூலதனம்:** நிலை மூலதனத்தின் அளவு குறைவாக இருப்பதினாலேயே சில நாடுகள் பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிவிடுகின்றன. இவ்வாறு வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிலை மூலதனம் குறைவாக இருப்பதற்குச் சில காரணங்களைக் கூறலாம். இந் நாடுகளில் மக்களின் சேமிப்பாற்றல் குறைவாக இருக்கிறது. வறுமைப் பிடியில் சிக்கித் தவிப்பதால் குறைந்த வருவாயும், தாழ்ந்த வாழக்கைத்தரமும் கொண்ட மக்களால் எதுவும் சேமிக்க முடிவதில்லை. நடுத்தர வகுப்பினரும், இருக்கின்ற சில செல்வர்களும் சிறந்த முதலீட்டாளர்களாகப் பணியாற்றுவதில்லை. மாறாக மேலைநாட்டினரைப் பார்த்தும். படங்கள், செய்தித்தாள்களின் மூலம் அறிந்தும் நாகரிகமாக வாழ நினைத்து வருவாயில் பெரும்பகுதியை அதற்காகச் செலவிடுகின்றனர். இதனை இரேக்னர் நர்க்சு (Ragnar Nurkse) 'வெளிக்காட்டும் விளைவு' அல்லது 'நுகர்வில் செய்முறை விளைவு' (Demonstration Effect) எனக் குறிப்பிடுகிறார்.

மக்கள் 'வறுமையின் நச்சு வட்டத்திற்குள்' (Vicious Circle of Poverty) சுழல்வதால் அவர்களால் சேமிக்க இயலுவதில்லை. நாட்டில் குறைந்த அளவில் முதலீடு இருப்பதால் உற்பத்தியும் வருவாயும் குறைவாக இருக்கின்றன. குறைந்த வருவாயின் பெரும்பகுதியைச் செலவிடும் வகையில் 'நுகர்வு விருப்பம்' (Propensity to Consume) மிகுதியாக இருப்பதால் சேமிப்புக் குறைவாக இருக்கிறது. குறைந்த சேமிப்பினால் மூலதனம் தாழ்ந்த நிலையிலிருக்கிறது. அதனால் மறுபடியும் அதே வட்டம் தொடங்கிச் சுழல்கிறது.

மக்களின் வருவாய் குறைவாக இருப்பதால் பல்வேறு பொருள்களுக்கான தேவை மொத்தத்தில் குறைவாக இருக்கிறது. அதனால் வாணிக அளவு சுருங்கிய நிலையிலிருப்பதால் ஆதாய விகிதம் தாழ்ந்ததாக இருக்கும். முதலீடு செய்யத் தூண்டுதல் இருக்காது. சேமிப்பு வைத்திருக்கின்றவர்கள் நகைகள், துணிகள், வீடு கட்டுதல் போன்றவற்றிற்குச் செலவிடுவார்களே தவிரச் சேமிப்பை மூலதனமாக மாற்றமாட்டார்கள். அதனால் நிலை மூலதனத்தின் வளர்ச்சி குறைவாக இருக்கும்.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் தனியார்மூலம் ஏற்படும் நிலை மூலதனத்தின் வளர்ச்சி குறைவாக இருப்பதால் அரசு, நிலை மூலதனத்தின் ஆக்கத்தில் ஈடுபட வேண்டியுள்ளது. நாடு, விரைவான வளர்ச்சி பெறச் சமுதாயத்தில் தொழில்களை அமைப்பது அரசின் பொறுப்பாகிறது. அரசு இருக்கின்ற வளங்களைப் பகிர்ந்து மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்யவும், நுகர் பொருள்களை உற்பத்தி செய்யவும் தீர்மானிக்கிறது. தேவையானால் நுகர்வைக் கட்டுப்படுத்தியும், கட்டாயச் சேமிப்பைக் கூட்டியும் நிலை மூலதன வளர்ச்சிக்கு அரசு துணை செய்கிறது.

ஒரு நாட்டில் போதுமான மூலதனம் இல்லாதபோது வெளிநாட்டு மூலதனத்தை ஏற்றுக்கொண்டு ஒரு நாடு, தனது நிலை மூலதனத்தைப் பெருக்கி முன்னேறலாம். வெளிநாட்டின் மூலதனத்தைப் பொதுவாக மூன்று வழிகளில் பெறலாம். முதலாவதாக, வெளிநாட்டினரை நேரடியாக முதலீடு செய்ய அனுமதிக்கலாம். இரண்டாவதாக, வெளிநாடுகளிலிருந்து கடனாகப் பெற்று முதலீடு செய்யலாம். மூன்றாவதாக உலக வங்கி, பன்னாட்டுப் பண நிதி போன்ற நிறுவனங்களிலிருந்தும் நிதியுதவி பெற்று மூலதனத்தைப் பெருக்கலாம்.

நிலை மூலதனம் இல்லாமல் எந்த நாடும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறமுடியாது. வேளாண்மையில் நிலை மூலதனமாகக் கிணறும்,பிற சாதனங்களும் உள்ளன. அவை இல்லாமல் நிலத்தில் விளைச்சல்செய்ய இயலாது. நிலை மூலதனம் பெருகினால் வேலைவாய்ப்பைக் கூட்டி உழைப்பை நன்கு பயன்படுத்திக்கொள்ள இயலும். நிலை மூலதனம் இருந்தால் மட்டும்தான் அமைப்புத் திறனாலும் ஆக்கப் பணிகளில் ஈடுபட இயலும்.

நிலை மூலதனம் எல்லாவகைப் பொருளாதார அமைப்பிலும் உற்பத்திக்கு இன்றியமையாத துணையாக இருக்கிறது.பொதுவுடைமை நாட்டிலும் பொருளாக்கத்திற்கு மூலதனம் தேவையாகிறது. இதனைப் பென்காம் 'எந்தவகையான, எப்படி அமைக்கப் பெற்ற சமுதாயமாக இருந்தாலும் அது வைத்திருக்

கின்ற மூலதனத்தின் அளவு, மொத்த உற்பத்தியைப் பாதிக்கின்ற முக்கியமான காரணிகளில் ஒன்றாக இருக்கிறது' என்று கூறுகிறார். இன்றைய பேரளவு உற்பத்தி முறையில் நிலை மூலதனத்தின் முக்கியத் துவம் கூடிவருகிறது. மா.பா.கு.

**துணை நூல்கள்:**


**குருசாமி, மா.பா.,** நுண்ணினப் பொருளியல், குரு -தேமொழி, திருச்செந்தூர், 1987.

**Ahuja, H.L.,** Macro Development Economics, S. Chand & Co., New Delhi, 1984.

**John Lindaues,** Macro Economics, John Wiley & Sons, New York, 1976.


***நிலைமைச் சோதனை:*** உண்மையான வாழ்க்கையில் நிலைமையைச்சோதனை செய்து அதி லிருந்து ஒருவனுடைய நடத்தைத் திறன், அறிவு, ஆற்றல் போன்றவற்றை அறிய நிலைமைச் சோதனை (Situational Test) பயன்படும். இச் சோதனையின் நிலைமை (சூழ்நிலை) கட்டுப்படுத்தப்பட்டுத் திட்ட மான அமைப்புடைய இயல்பான உண்மைச் சூழ் நிலையை அறிவதன் மூலம் நடத்தையை அறியமுடி யும். இதில் சூழ்நிலை அமைப்பு முதன்மையானது. ஒரு சிறு குழுவாக உள்ள 11 சிப்பாய்களைக் கொண்டு ஒரு பாலம் அமைக்கச்சொல்லி அவர்கள் பாலம் அமைக்கும்போது தனிப்பட்டவர்கள் எத் திறமை யைக் காட்டிச் செயற்படுகின்றனர் என்பதையும், குழு வாக எத்தகைய திறமையுடன் ஒற்றுமையாகச் செயற்படுகின்றனர் என்பதையும் மதிப்பீடு செய்யும் முறையாகும். பாலம் அமைப்பவர்கள் சிறப்பாக அமைக்க அவர்களுக்குள் கலந்து பேசிக்கொள்வதும், சிறப்பான கருத்துகளை நல்குதலும் ஒற்றுமையாகச் செயற்படுதலும், அவர்களே அவர்களுக்குள் தம்விருப் பம் போல் வரம்பு அமைத்துச் செயற்படுதலுமாகும். இம்முறை சோதனை நடத்துபவரால் கட்டுப்படுத்தப் பட்ட திட்டமான அமைப்புடைய சூழ்நிலை. ஆனால் இயற்கையாக, இயல்பாக, நடைபெற்ற செயலின் தன்மையில் தனித்திறனும், குழுத்திறன் அல்லது குழு இயக்கத்திறனும் மதிப்பிடப்படுகின்றன. இச் சோத னையை மதிப்பிடுபவர் சோதனையில் பங்கெடுத்துக் கொள்பவர்களுக்குத் தெரிந்தோ தெரியாமலோ மதிப்பீடு செய்யலாம். இச் சோதனை கட்டுப்படுத் தப்பட்ட உண்மை வாழ்க்கைச் சூழலைக் கொண்ட அமைப்பாகும்.

ஆசிரியப் பயிற்சி பெறும் மாணவர்கள் இம்முறை யால் கற்பிக்கும் திறனை மதிப்பீடு செய்ய இயலு கிறது. செய்முறைத் தேர்வில் ஆசிரியப் பயிற்சி பெறும் மாணவர் ஒரு குறிப்பிட்ட வகுப்பிற்கு எந்தப் பாடத்தை வேண்டுமானாலும் தம் விருப்பம்போல் தேர்ந்தெடுத்து அதற்குரிய பாடக்குறிப்பினைத் தாமே தயார்செய்து உண்மையான மாணவர்களைக் கொண்ட வகுப்பறைச் சூழ்நிலையில் ஆசிரியத் திறமை அத்தனையையும் காட்டிப் பாடம் நடத்த வேண்டும். அப்போது அவருடைய கற்பிக்கும் திற னைத் தேர்வாளர் அவருக்குத் தெரிந்தே மதிப்பீடு செய்கிறார். ஆகையால் நன்கு பயிற்சி பெறாத ஆசிரியராக இருந்தால் அவருக்கு மன இறுக்கம் மிகுந்தும், அதிகப் பயிற்சியும் திறமையும் உடை யவராக இருந்தால் மன இறுக்கம குறைந்தும் இருக்கும். இவ்வியற்கைச் சூழ்நிலையில் மாணவர்கள் நடுவில் உளவியல் சமூகவியல் கருத்துகள் அடிப்படை யில் தாம் ஒரு சிறந்த ஆசிரியர் என்பதனை அனைத் துத் திறன்களையும் காட்டித் தேர்வாளரிடம் நன் மதிப்பைப் பெறுகிறார். இம்முறை கட்டுப்படுத்தப் பட்ட, திட்டமான அமைப்பையுடைய சூழ்நிலை இயல்பாக அமைந்துள்ளது. இச்சான்று நிலைமைச் சோதனைக்குரியதாகும். இவ்வாறே அறிவியல் துறை யிலும், பொறியியல் துறையிலும் செய்முறைத் தேர்வு கள் நடத்தப்படுகின்றன. எடுத்துக்காட்டாகத் தாவர வியல் படிக்கும் மாணவர்களிடம் ஒரு செடியினைக் கொடுத்து அதன் உள் பாகங்களையும் புறப் பாகங் களையும் பிரித்துப் பெயரிட்டுக் காட்டும் முறையும் உண்மைச்சூழலில் நடக்கும் நிலைமைச் சோதனை யாகும். விலங்கியல் படிக்கும் மாணவர்கள் தவளை யின் இதயத்தை மட்டும் எடுத்து அதன் பாகங்களைக் குறித்துக்காட்டுதல், இயற்பியலில் கருவிகளின் உதவி யால் ஒரு திரவத்தின் அடர்த்தி எண் காணல், வேதி யியலில் கந்தக அமிலத்தைத் தாமிரத்துடன் சேர்த் தால் என்ன நிகழும் என்பதைக் கண்டறிதல், இவை களுக்குத் தேவையான செய்முறைத்திறன், பாடத் தொடர்பான பழைய அறிவு, கண்ட கருத்தினைப் பதிவு செய்யும் முறை ஆகிய உண்மைச் சூழ்நிலையை அறிந்து தேர்வாளர் மதிப்பிடுகிறார்.

பொறியியல் வல்லுநர்கள் வீடு கட்டுவதற்குத் தயாரிக்கும் திட்டம் போடுதல், இயந்திரங்களை இயக்கி உற்பத்தியைப் பெருக்கும் ஆற்றல், மருத்து வத்துறையில் நடைபெறக்கூடிய செய்முறைத்தேர்வு -நோய் நாடி, அதற்குக் காரணம் கண்டு அதற்கு மருந்தும் கூறும் ஆற்றல் போன்றவையும் நிலைமைச் சோதனைக்கு எடுத்துக்காட்டாகும். இவை அனைத் தும் இவை போன்ற பலவும் நிலைமைச் சோத னைக்குச் சான்றாகும்.

சுருங்கக்கூறின் இம்முறையில் இயல்பான உண் மைச் சூழ்நிலையை மதிப்பிட்டு நடத்தையை அறி யலாம். இச் சூழ்நிலை கட்டுப்படுத்தப்பட்ட, திட்ட மான அமைப்புடைய சூழ்நிலையாகும். இச்சூழ்நிலை

புறவயத்தன்மை உடையது. யாருக்கும் பொதுவாக ஒரே சூழ்நிலைதான் உண்டு. நிலைமைச் சோதனை என்பது மிகவும் ஒத்த நிலைமையில் சோதனை செய்தல் என்பதையும் இங்கு அறிய வேண்டும்.

**நிலைமையில் சோதனை:** இதனை விளக்கும்முன் நிலைமைச் சோதனைக்கும், நிலைமையில் சோதனைக்கும் உள்ள வேறுபாடுகளை வேறுபடுத்திக் கூற வேண்டும். அவ்வேறுபாடுகள் பின்வருவன:

| நிலைமைச் சோதனை | நிலைமையில் சோதனை |
|---|---|
| 1. உண்மையான வாழ்வின் சூழ்நிலையில் நடைபெறக்கூடியவை. | 1. கற்பனையாகவோ உண்மையாகவோ சோதனைக்கு உட்பட்டவர் மன நிலைக்கேற்றவாறு அமையும். |
| 2. சோதனையாளரால் கட்டுப்படுத்தப்பட்ட சூழ்நிலை நிகழ்கிறது. | 2. சோதனையாளரால் கட்டுப்படாச் சூழ்நிலை நிகழ்கிறது. |
| 3. சோதனைக்கு உட்படுத்தப்பட்டவர் சூழ்நிலையை முழுமையாக மாற்ற இயலாது. | 3. சோதனைக்கு உட்படுத்தப்பட்ட ஒரே சூழ்நிலையை உருவாக்கிக் கொள்கிறார். |
| 4. சோதனை உருப்படிகள் தெரிந்தவை; பழைய அனுபவம் வாய்ந்தவை. | 4. சோதனை உருப்படிகள் தெரிந்தவையாக இரா. |
| 5. இவற்றின் உண்மை நோக்கம் சோதனைக்கு உட்பட்டவருக்குத் தெரிந்திருக்கும். | 5. இவற்றின் உண்மை நோக்கம் சோதனைக்கு உட்பட்டவருக்குத் தெரிந்திராது. |
| 6. ஒருவனுடைய துலங்கல்கள் உண்மையை அறியக் கூடியனவாக இருக்கும். | 6. ஒருவனுடைய துலங்கல்கள் உண்மையை அறியக் கூடியனவாக இருக்கலாம். |
| 7. இச் சோதனைக்குத் தெளிவான விளக்கம் தேவை. | 7. இச்சோதனைக்குத் தெளிவான விளக்கம் தேவையில்லை. |
| 8. தூண்டல்கள் உண்மை, உருவம், வடிவம் உடையவை. | 8. தூண்டல்கள் உண்மை, உருவம், வடிவம் உடையவையல்ல. |
| 9. இதில் நிலைமையைச் சோதித்தல் முக்கியமாகும். | 9. நிலைமையில் ஏற்படும் துலங்கல் முக்கியமாகும். |

இப்போது நிலைமையில் சோதனை என்பது தெளிவாக இருக்கும். இருப்பினும் மேலும் சற்றுச்சிறப்பாக அறிவது அவசியம். நிலைமையில் சோதனை நடைபெறும் சூழ்நிலை செயற்கைச் சூழ்நிலையாகும். சூழ்நிலை கட்டுப்படுத்தப்படவில்லை. சோதனையாளர் அல்லது ஆய்வாளர் கட்டுப்பாடற்ற உண்மையற்ற, திட்டமிடப்படாத தூண்டல்களை அளிப்பதன் மூலம் சோதனைக்குட்பட்டவரின் துலங்கல்களை அளந்தறிவதன் மூலம் நடத்தையினை அறியலாம். சமூக அறிவியல் அல்லது வாழ்வியல் சார்ந்த துறைகளில் நிலைமையில் சோதனை பெரிதும் பயன்படுகிறது. இதில் சூழ்நிலையைவிட நடத்தையை அறிதல் முக்கியமாகும். எடுத்துக்காட்டாக உரோசாக்கு (Rorschach) என்பாரின் மைத்தடச் சோதனை, பொருள் அறிவோடு இணைந்தறி சோதனை; சமூக விளக்கப்படம் போன்றவை அமையும்.

**உரோசாக்கு-மைத்தடச் சோதனை:** இது ஒருவனுடைய ஆளுமைப் பண்புகளை அறியப் பயன்படுத்தும் முறையாகும். இதனை உரோசாக்கு என்பவர் கண்டு பயன்படுத்தினார். இச் சோதனையில் கருப்பு வண்ண மை தடவிய அட்டைகள் ஐந்தும், கருப்பும் சிவப்பும் சேர்ந்தவை இரண்டும், பல்வேறு வண்ணங்களான மூன்று சமச் சீரான அமைப்பினைக் கொண்ட மைதடவிய அட்டைகளும் காணப்படும். சோதனைக்கு உட்பட்டவருக்கு இவை ஒவ்வொன்றாகக் காட்டப்படும். பின்னர் இவரிடம் மூன்று வினாக்கள் கேட்கப்படும். அவை: 1) மைத்தட அட்டைகளில் காணப்படும் பொருள்கள் யாவை? 2) மைத்தட அட்டையின் எப்பகுதி சோதனைக்குட்பட்டவரின் துலங்கலை உண்டுபண்ணியது? 3) விடையின் தன்மை நிருணயித்தலில் மைத்தட அட்டையின் எப்பகுதி காரணமாக அமைந்தது? இவற்றின் விடைகளிலிருந்து ஒருவருடைய ஆளுமைப் பண்பை அறியலாம். இம்முறைக்கு புறத்தேற்று நுண்முறைகள் என்பது பெயர்.

**பொருளறிவோடு இணைந்தறிசோதனை:** இச் சோதனையில் 20 மனித உருவப் படங்கள் உள்ளன. இம்

மனித உருவப் படங்கள் நிழல் உருவம்போல் அடையாளம் காண இயலாமல் இருக்கும். இவற்றுள் ஒன்று படமே இல்லாதிருக்கும். இவற்றினை ஒவ்வொன்றாகப் பரிசோதனைக்கு உட்பட்டவரிடம் காட்டி இப்படத்தைப் பற்றிய கருத்தைக் கதையாகவோ கட்டுரையாகவோ உன் விருப்பம் போல் எழுதுக என்று பரிசோதனையாளர் கூறுவார். பரிசோதனைக்கு உட்பட்டவர் தந்த கருத்துகளைப் பகுத்தாய்ந்து அவருடைய பண்பினைக் காணலாம். இதுவும் புறத்தேற்று நுணுக்க முறைகளுள் ஒன்றாகும்.

**சமூக விளக்கப்படம்:** சமூகத்தில் ஒரு குழு உறுப்பினர்களுக்குள் எவ்வாறு தொடர்பு இருக்கின்றது என்பதையும், எல்லோருக்கும் தலைவனாக இருக்கக் கூடியவன் யார்என்பதையும்அறிவதற்குச் சமூக விளக்கப்படம் பயன்படுகிறது. இக்குழுவில் உள்ளஒவ்வொருவரிடமும் யாரை மிகவும் விரும்புகிறாய்? யாரை மிகவும் வெறுக்கிறாய்? என்று வினாக்களைக் கேட்டு அப் பதில்களைக் கொண்டு அவரவர்களுக்குள்ள தொடர்பைக் காட்டும் ஒரு விளக்கப்படம் தயாரிக்கலாம். இவ்வாறு குழுவில் உள்ளவர்களுடைய சமூகத் தொடர்பினைச் சமூகவிளக்கப்படம் மூலம் அறியலாம்.

இருபுறத் தேற்று நுணுக்கமுறைகள், உரோசாக்கு மைத்தடச் சோதனை, பொருளறிவோடு இணைந்தறி சோதனை, மூன்றாவது சமூக விளக்கப்படம் ஆகியவை நிலைமையில் சோதனைக்கு உரிய எடுத்துக் காட்டுகளாகும். வை.ந.

***நிலைமொழியாக்கம்:*** நிலைமொழி என்பது ஒரு மொழியில் வழங்கும் பல வட்டாரக் கிளைமொழிகளுக்குள் ஒரு சமூகத்தினரால் பேசப்படும் மொழியை ஒட்டி அமைவது. இது அரசியல், பொருளாதார, பண்பாட்டுச் சூழல்களால் உருவாவது. நிலைமொழியாக்கம் என்பது அப்படி உருவான நிலைமொழிக்கு இலக்கணம் எழுதி ஓரளவு செம்மைப் படுத்தி, பிறகிளைமொழிகளின் கூறுகளையும் ஒத்துக் கொண்டு அமைத்துப் படித்தவர்களிடையே பொது இடங்களில் பேசும்போதும், இலக்கியம் எழுதும் போதும் பயன்படுத்துவது ஆகும். நிலைமொழியிலே கலைச்சொற்கள் உருவாக்கப்படும். பல துறைகளிலும் அது கையாளப்படும்.

பொதுவாக இன்று கிளைமொழிகளுக்கு இலக்கணம் எழுதப்பட்டாலும் அந்தமொழியைக் கற்கும் தாய்மொழியாளர்களும்பிறமொழியாளர்களும் நிலைமொழிக்கு எழுதப்பட்ட இலக்கணத்தையே படித்துப் பயன்படுத்துவார்கள். பண்டைக் காலத்தில் நிலைமொழிக்கு மட்டுமே இலக்கணம் எழுதப்பட்டது. ஆனால், அந்த இலக்கணத்தில் கிளைமொழிகள் இருப்பதையும்,சில கிளைமொழிக் கூறுகளை இலக்கியத்திலும் கையாளலாம் என்பதையும் இலக்கண ஆசிரியர்கள் விளக்கியுள்ளார்கள். தொல்காப்பியமும் இலக்கியத்தில் (அதாவது செய்யுளில்) கையாளப் படும் சொற்களைப் பாகுபாடு செய்யும்போது திசைச் சொல் என்ற ஒன்றைக் குறிப்பிட்டிருப்பது கிளைமொழிகளை என்று எல்லோரும் ஒத்துக்கொள்வதால் இந்த உண்மையை அறியலாம்.

ஒவ்வொரு மொழிக்கும் பல கிளைமொழிகள் உண்டு. அந்தக் கிளைமொழிகள் வட்டார அடிப்படையிலும் சமூக அடிப்படையிலும் அமைகின்றன. வட்டார வழக்கு அல்லது வட்டாரக் கிளைமொழி என்பது ஆட்சி நிருவாகத்துக்காகச் செய்யப்படும் பிரிவுகளை ஒட்டி அமையாமல் ஓரளவு பரந்த நிலப் பரப்பை ஒட்டியது ஆகும். இதைக் கிளைமொழியியலாளர் கிளைமொழிப் பரப்பு (Dialect area) என்று சொல்லுகிறார்கள். தமிழ்மொழி தென்பாண்டி (கன்னியாகுமரி மாவட்டம்), பாண்டி (பழைய மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்கள்) சோழ, (தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை) கொங்கு (பழைய சேலம், கோவை மாவட்டங்கள்), தொண்டை (செங்கற்பட்டு, வடஆர்க்காடு தென்னார்க்காட்டின் ஒரு பகுதி) என ஐந்து கிளைமொழிப் பரப்புகள் உடையதாகக் கருதப்படுகிறது.

சமூகக் கிளைமொழி என்பது ஒரு கிளைமொழிப் பரப்புக்குள்ளும், சாதி, சமூக மதிப்பு, கல்விநிலை ஆகியவற்றை ஒட்டி உயர்ந்தவர்கள், நடுத்தரத்தினர், தாழ்ந்தவர்கள் என்னும் சமூகப் பாகுபாட்டைச்சார்ந்து அமையும் பேச்சுமொழி வேறுபாடுகள். தமிழகத்தில் சமூக,பொருளாதார நிலையினை ஒட்டி முற்பட்ட சாதியினர், பிற்பட்ட சாதியினர், தாழ்த்தப்பட்ட சாதியினர் என்று மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரித்திருப்பதும் குறிப்பிடத் தகுந்தது. இதற்கு மேலாக நகர்ப்புறத்தில் வாழ்வோர்-கிராமப் புறத்தில் வாழ்வோர், படித்தோர்-படிக்காதவர் என்ற வேறுபாடுகளும் சமூகக் கிளைமொழியில் சேர்த்தே பாகுபாடு செய்யப்படும்.

நிலைமொழி என்பது ஒரு வட்டாரக் கிளைமொழியுள் ஒரு சமூகக் கிளைமொழியை ஒட்டி அமைவது ஆகும். ஒரு வட்டாரக் கிளை மொழியுள் ஒரு சமூகக் கிளைமொழி நிலைமொழிஆன பிறகு பிற கிளைமொழிகளின் ஒன்றிரண்டு கூறுகளையும் ஏற்றுக் கொள்ளும். அப்போது அந்த மொழி, பேசும் எல்லோருக்கும் பொதுவானது என்ற எண்ணம் ஏற்பட்டு விடும்.

உலக மொழிகளில் அமைந்துள்ள நிலைமொழிகளை ஆராய்ந்தால் இரண்டு விதத்தில் நிலைமொழிகள் உருவாகின்றன என்பது புலனாகும். ஒன்று: மேலே குறிப்பிட்டபடி ஒரு வட்டாரச் சமூகக் கிளை மொழியை ஒட்டி அமைவது. ஆங்கிலம், பிரெஞ்சு போன்றமொழிகள் இந்த வகையில் நிலைமொழிகளை உடையன. பிரித்தானிய ஆங்கிலத்தைப் பொறுத்த வரையில் பிரிட்டனின் தலைநகரான இலண்டன் மாநகரத்திலும் அதைச் சுற்றியுள்ள இடங்களிலும் வாழும் படித்தவர்கள் பேச்சுமொழியை ஒட்டியே அமைந்துள்ளது. ஆங்கில மொழியின் சொல்லெழுத்துகள் (Spelling) பழமையானவையே தவிர ஒலியியல் (அதாவது பேச்சுமொழியின் உச்சரிப்பு), சொல்லியல் (சொல்லமைப்பு), தொடரியல் (வாக்கிய அமைப்பு), அகராதி (சொற்களஞ்சியம்) ஆகியவை இன்றைய பேச்சு மொழியை ஒட்டியே அமைந்துள்ளன. வேறு சிலமொழிகளில் நிலைமொழி என்பது எந்தத் தனிப்பட்ட வட்டார-சமூகக் கிளை மொழிகளுக்கும் பொதுவான கூறுகளையும் பேச்சு மொழியிலிருந்து மாறுபட்ட கூறுகளையும் கொண்டு அமைந்திருக்கும். இதை மீக்கிளை நிலைமொழி (Supra dialectal norm) என்று கூறுகிறார்கள். இத்தாலி மொழியின் நிலைமொழி இந்த முறையில் அமைந்தது. தமிழில் பேச்சுமொழியும் எழுத்து மொழியும் வேறுபடுதலால் தமிழை இருவழக்கு மொழி (Diglossic Language) எனக் குறிப்பிடுகிறார்கள். அதனால், தமிழின், நிலைமொழியையும் மீக்கிளை நிலைமொழியாகக் கருதலாம்.

மொழி அமைப்பில் காலந்தோறும் மாற்றம் ஏற்படுவதுபோல நிலைமொழியில் காலந்தோறும் மாற்றம் ஏற்படாவிட்டாலும் நிலைமொழி மாறும் என்பதை உலகமொழிகளின் வரலாறு காட்டுகிறது. பழைய ஆங்கிலமொழியின் (Old English) நிலைமொழி இலண்டன் நகரப் பேச்சை ஒட்டி அமையாமல் அதற்குத் தெற்கே இருந்த நகரத்தின் பேச்சை ஒட்டியதாக அமைந்திருந்தது. தமிழிலும் நிலைமொழி மாற்றம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தமிழ்மொழி வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். சங்க காலத்தில் மதுரையும் வையையும் தமிழோடும் தமிழ்ச் சங்கத்தோடும் தொடர்பு படுத்திப் பாடப்பட்டுள்ளதால் சங்க இலக்கியங்களின் மொழி பாண்டி நாட்டுத் தமிழாக இருக்க வேண்டும் என்று பலரும் கருதுகிறார்கள். இடைக்காலத்தில் சோழ நாட்டுத் தமிழே நிலைமொழியாகக் கருதப் பட்டிருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியுள்ளது. தொல்காப்பிய உரையாசிரியர்களுள் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் சோழநாட்டையே செந்தமிழ் நிலம் என்று குறிப்பிட்டுள்ளார்கள். அதற்கு ஏற்பவே சங்கத் தமிழுக்கும் பத்தி இலக்கியத்துக்கும் மொழி அமைப்பில் வேறுபாடு காணப்படுகிறது. இந்த வேற்றுமைகள் அனைத்தையும் மொழி அமைப்பில் ஏற்பட்ட மாற்றமாக விளக்க முடியவில்லை. எனவே, நிலைமொழியிலும் மாற்றம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. எடுத்துக்காட்டாகச் சங்க இலக்கியத்திலும் தொல்காப்பியத்திலும் நீயிர், நீர் என்ற வடிவங்களே முன்னிலைப் பன்மை வடிவங்களாக உள்ளன. ஆனால், இடைக்காலத்தில் நீம், நீங்கள் (நீம்+கள்) என்ற புதிய வடிவங்களும் கையாளப்பட்டுள்ளன. நீயிர் என்ற வடிவம் மாறி நீம் ஆகியிருப்பதாகக் கூற முடியாது. எனவேதான் நிலைமொழி மாற்றம் ஏற்பட்டிருக்கவேண்டும் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது.

தொல்காப்பியரும் 'இயற்சொல்' என்று கூறியிருப்பது நிலைமொழிச் சொற்களையே என எல்லோரும் ஒத்துக்கொள்கிறார்கள். அவர் 'செந்தமிழ் நிலத்து வழக்கொடு பொருந்தியது' என்று விளக்கியுள்ளதால் அது ஒரு வட்டார வழக்கை ஒட்டியது என்பது தெளிவாகிறது. ஆனால், நன்னூலார் இயற்சொல்லை மீக்கிளை நிலைமொழி என்பதுபோல விளக்கியுள்ளார். அவர் கருத்துப்படி, 'செந்தமிழாகித் திரியாது யார்க்கும் பொருள் விளக்கும் சொற்களே இயற்சொல் ஆகும். இங்கு இயற்சொல் ஒரு வட்டாரக் கிளை மொழியோடு தொடர்பு படுத்தி விளக்கப் படவில்லை என்பது கவனிக்கத் தகுந்தது.

வங்காளமொழியில் கி.பி.19-ஆம் நூற்றாண்டு வரையிலும் நிலைமொழி பேச்சுவழக்கை ஒட்டி அமையாமல் பழைய இலக்கிய வழக்குகளை ஒட்டி அமைந்து வந்தது. அதற்குச் சாதுபாசா (இலக்கிய மொழி) என்பது பெயர். கல்கத்தாவிலும் அதைச் சுற்றியுள்ள ஊர்களிலும் வாழ்ந்த கற்றோர்கள்-சிறப்பாக ஆங்கிலக் கல்வி கற்றவர்களின் பேச்சு வழக்கைப் பிரமதா சவுத்திரி, இரவீந்திரநாத தாகூர் போன்றவர்கள் இலக்கியங்களில் பயன்படுத்தினார்கள். இதற்குச் சாலித்து(Calit), பாசா(பேச்சு மொழி) என்பது பெயர். இப்பொழுது சாலித்பாசாவே இலக்கிய மொழியாகவும் ஆட்சிமொழியாகவும் கையாளப் படுவதால் அதுவே நிலைமொழியாகவும் அமைந்துவிட்டது. எனவே, நிலைமொழி மாற்றமும் உலகப் பொதுவானது. செ.வை.ச.

***நிலையவயப்படுத்துதல்:*** மக்கள் ஈடுபடுகிற ஏதாவதொரு நடவடிக்கை சமூகத்தினால் அனுமதிக்கப்பட்டு, ஒரு சமூக நிறுவனத்தில் அல்லது அமைப்பு முறையில் (System) ஒரு கூறாக ஆக்கப் படும் செயற்பாங்கே நிலையவயப்படுத்துதல் (Inst-

itutionalization) ஆகும். ஒரு குறிப்பிட்ட நட வடிக்கை மக்களால் பரவலாகக் கடைப்பிடிக்கப்பட்டாலும் சமூக ஏற்பும், ஏற்றுக்கொள்ளுந்தன்மையும் இல்லாத சமயத்தில் அதுஒரு நிலையவயப்பட்ட நட வடிக்கையாக அமைவதில்லை. அது சமூகத்தினரால் அனுமதிக்கப்படும் சமயத்தில் அது ஒரு சமூக நிறு வனத்தில் அல்லது அமைப்பு முறையில் ஒரு கூறாக இடம்பெற்று நிலைபெறுகிறது. அத்தகைய நிலைமை யில்தான் அது ஒரு நிலையவயப்பட்ட நடவடிக்கை யாக அமைகிறது.

இவ்வாறு ஒரு நடவடிக்கை ஒரு சமூக நிறுவனத் தின் அல்லது அமைப்பு முறையின் ஒரு கூறாக அமைந்து சமூகத்தில் நிலைபெறும்போது மக்கள் அதைக் கடைப்பிடிப்பதைச் சமூகம் மறுப்பது கிடை யாது. மக்கள் அதைக் கடைப்பிடிப்பதைச் சமூகம் வரவேற்கிறது; ஏற்றுக்கொள்கிறது. ஆயினும், அந்த நிறுவனத்தின் அல்லது அமைப்பு முறையின் எல்லைக் குள்ளேயே அந்த நடவடிக்கை அமைவதைத்தான் சமூகம் ஏற்கிறது; ஒப்புக்கொள்ளுகிறது. அந்த எல் லைக்கு அப்பால் அந்த நடவடிக்கை நிகழுவதைச் சமூகம் ஏற்பதும் இல்லை; ஒப்புக்கொள்வதும் இல்லை.

ஒருவருக்குப் பணம் கடனாகக் கொடுக்கிறபோது அந்தக் கடனுக்கு வட்டி வசூலிப்பது ஓர் இயல்பான நடவடிக்கையாகும். இதைச் சமூகம் ஒப்புக்கொண்டு நிலையவயப்படுத்தி இருக்கிறது. கடன் வழங்கும் அமைப்பு முறையில் அல்லது வங்கித் துறையில் கொடுக்கிற கடன் பணத்திற்கு வட்டி விதிப்பது அந்த அமைப்பு முறையில் அல்லது துறையில் சமூகத் தினால் ஒப்புக்கொள்ளப்பட்டு ஒரு நிலையவயப்பட்ட கூறாக இருக்கிறது. ஆகவே அங்கே வட்டி விதிப்பது முறையற்றது என்ற கொள்கைக்கே இடமில்லை.

இவ்வாறே ஓர் ஆணும் பெண்ணும் இணைந்து உடலுறவு கொள்வது உயிரியல் அடிப் படையில் ஓர் இயல்பான நடவடிக்கை ஆகும். ஆயினும், அந்த நட வடிக்கை திருமணம் என்ற அமைப்பு முறையில் நடை பெறும் பொழுதுதான் அது நிலையவயப்பட்ட நட வடிக்கையாக அமைகிறது. திருமண எல்லைக்கு வெளியே அல்லது திருமணம் ஆகாமல் ஓர் ஆணும் பெண்ணும் இணைந்து உடலுறவு கொள்வதைச் சமூ கம் ஏற்றுக் கொள்வது கிடையாது. அதை முறை யற்ற நடவடிக்கை என்று கண்டிக்கிறது. ஆனால், திருமணம் செய்துகொண்டு ஓர் ஆணும் பெண்ணும் உடலுறவுகொள்ளும்போது அது ஒரு நிலையவயப் பட்ட நடவடிக்கையாக அமைந்து சமூக ஏற்புக்கும் ஒப்புதலுக்கும் உரியதாகிறது.

போரில் எதிரி ஆட்களை வெட்டிக் கொல்வது அல்லது சுட்டுக் கொல்வது ஏற்றுக்கொள்ளப்பட்ட, நிலையவயப்பட்ட நடவடிக்கையாக அமைகிறது. எனவே, போரில் எதிரிகளை வீழ்த்துவது கண்டிக்கப் படுவதில்லை. மாறாக அதை ஒரு வீரச் செயலாக எண்ணிப் பரிசளித்துப் பாராட்டுவதுண்டு. ஆனால், போர் இல்லாத சூழ்நிலையில் ஒருவனைக் கொலை செய்வது கடுமையான தண்டனைக்குரிய குற்றமாக அமைகிறது.

ஆக, ஒரு சமூக நிறுவனத்தின் அல்லது அமைப்பு முறையின் கூறாக ஒரு நடவடிக்கை அமைகிற பொழுதுதான் அது நிலையவயப்பட்ட நடவடிக்கை யாக அமைந்து ஏற்புக்கும் ஒப்புதலுக்கும் உரியதா கிறது. அத்தகைய நடவடிக்கை கண்டனத்திற்கோ தண்டனைக்கோ உள்ளாவதில்லை. சமூக நிறுவனத் திற்கு அல்லது அமைப்பு முறைக்கு வெளியே நடை பெறும் பொழுதுதான் அது தவறாகவும் குற்றமாக வும் அமைகிறது.

ஒரு நடவடிக்கை நிலையவயப்படுத்துதல் செயற் பாங்கின்மூலம் ஒரு நிறுவனத்தின் அல்லது அமைப்பு முறையின் கூறாக அமைகிறபொழுது அது சில கட்டுப்பாடுகளுக்கும், விதிமுறைகளுக்கும் உட்படு கிறது. எடுத்துக்காட்டாகக் கடன் வழங்கு அமைப்பு முறையில் வட்டி வாங்குதல் ஒரு நிலையவயப்பட்ட நடவடிக்கையாக அமைகிறபொழுது அதன் விகிதம், கால அளவு முதலியன நிருணயிக்கப்பட்டு அந்த நிருணய விதிமுறைகளுக்குள்ளேயே கடன் வழங்குதல் நடைபெறுகிறது. இவ்வாறே திருமண அமைப்பு முறையில் நிகழும் உடலுறவும், போரில் நடைபெறும் உயிர்க்கொலையும் நிருணயிக்கப்பட்ட விதிமுறை களுக்குள்ளேயேதான் நடைபெறுகின்றன.

இராபர்ட்டு கிங் மெர்ட்டன் (Robert King Merton) என்ற சமூகவியல் அறிஞர் சமூக நெறிகளை யும் மரபுகளையும் வழக்காறுகளையும் மீறுவது ஒரு நிலையவயப்பட்ட நடவடிக்கையாக அமையக்கூடும் எனக் கூறுகின்றார். கால மாறுதலுக்கேற்பப் புதிய கருத்துகள், விழுமியங்கள் எழுகிறபோது பழைய கருத்துகளையும் நம்பிக்கைகளையும் மரபுகளையும் மீறுவது ஒரு நிலையவயப்பட்ட நடவடிக்கையாக அமையும் என்கிறார். பழைய கருத்துகளுக்கும் மரபு களுக்கும் போட்டியாகப் புதிய கருத்துகளும் செய லாறுகளும் சமூகத்தில் இடம்பெறுகிறபொழுது முன்னவற்றை மீறுவதைக் காலத்தின் கட்டாயமாகச் சமூகம் கருதி ஏற்றுக்கொள்கிறபொழுது நடத்தை அமைப்பு முறையில் (Behavioural System) அந்த மீறல் ஓர் ஏற்றுக்கொள்ளப்பட்ட நிலையவயப்பட்ட பகுதியாக அமைகிறது எனக் கூறுகிறார்.

அரசுக்கு மரியாதை செலுத்துதல், அரசு ஆணைகளை மதித்து நடத்தல், அரசுச் சின்னங்களைப் போற்றுதல் ஆகியன ஒரு காலக்கட்டத்தில் பொதுவாக உயர்ந்த விழுமியங்களாகப் போற்றப்படுவதுண்டு. ஆனால், விடுதலைப் போராட்டம் நிகழ்கிற காலக்கட்டத்தில்அரசு ஆணைகளை மீறுதல், அரசுச் சின்னங்களை அவமதித்தல் முதலிய நடவடிக்கைகள் விடுதலைப் போராட்டத்தின் கூறுகளாக, வீரச் செயல்களாகப் போற்றப்பட்டு அவை பெரிதும் வலியுறுத்தப்படுவதுண்டு. விடுதலை என்ற புதிய கருத்து மேலோங்குகிற காலக்கட்டத்தில் அரசுக்குப் பணிதல் என்ற பழைய கொள்கை அடிமைத்தனமாகச் சித்திரிக்கப்பட்டு அதை மீறுவது ஒரு விழுமியம் என்று போற்றப்படுகிறது.

ஆக, ஒரு நடவடிக்கை ஒரு காலக்கட்டத்தில் நிலையவயப்பட்ட நடவடிக்கையாக அமைவதும், மற்றொருகாலக்கட்டத்தில்அதைமீறுவது ஒரு நிலையவயப்பட்ட நடவடிக்கையாக அமைவதும்கூடும். கால மாறுதலுக்கேற்பப் புதிய கருத்துகளும் விழுமியங்களும் எழும்போது அவற்றிற்கேற்பப் பழைய கருத்துகளும் கொள்கைகளும் மீறப்படுவது தேவையாகிறது. அந்த நிலையில் பழையநிலையவயப்பட்ட நடவடிக்கை மீறல் ஒருபுதிய நிலையவயப்பட்ட நடவடிக்கையாக அமைகிறது. சி.என்.ந.

**நிழல்விலை:** வளர்ச்சி குறைந்த நாடுகளில் அங்காடி விலைகளின் அடிப்படையில் திட்டங்களை மதிப்பிடுவதும், உற்பத்திக் காரணிகளைப் பகிர்ந்தளிக்கத் திட்டமிடுவதும் சரியாக அமைவதில்லை. ஏனென்றால் அங்காடியில் அடிப்படை ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றன. அங்காடி விலை உண்மையில் அங்காடிச் சமநிலையைக் காட்டுவதில்லை. இந்தச்சிக்கலைத் தீர்க்க, சே. தின்பெர்சென் (J. Tinbergen), எச்.பி. சேனரி (H.P. Chenery), கே.எசு. கிரெட்செமர் (K.S. Kretchemer) ஆகியோர் 'நிழல் விலை' (Shadow Price) அல்லது 'கணக்கு விலை'யைப் (Accounting Price) பின்பற்றலாமென்று வலியுறுத்துகின்றனர்.

**பயன்படுத்துவதற்கான தேவை:** பின்தங்கிய நாடுகளில், விலையால் அதன் பணிகளைச் செவ்வனே செய்யமுடிவதில்லை. அங்காடி விலைகள், சார்பு நிலைப் பற்றாக்குறைகளையும், நன்மைகளையும், செலவுகளையும் சரியாக எதிரொலிக்கவில்லை. ஏனென்றால் இங்கெல்லாம் நிறைவுப்போட்டி என்பது முற்றிலும் இருக்கவில்லை. மேலும், பொருள் உழைப்பு, மூலதனம், அயற் செலாவணி ஆகிய அங்காடிகளின் நிறுமக் காரணிகள், இருக்கின்ற சமநிலையைக் கெடுக்கின்றன. இதனால் தேவை, அளிப்பு ஆகியவற்றின் நேரடி, மறைமுகச் செல்வாக்கினை, விலைகள் வெளிக்காட்டவில்லை. அமைப்பு முறைகளின் நெகிழ்வற்ற தன்மைகளின் காரணமாக அங்காடிகள் சமநிலையில் இருப்பதில்லை.

சமநிலையற்ற போக்கினை ஒவ்வொரு அங்காடியிலும் காணலாம். இருக்கின்ற கூலி அளவில் எல்லோருக்கும் வேலை கிடைப்பதில்லை. இருக்கின்ற வட்டி விகிதத்தில் பணப் பற்றாக்குறை இருக்கிறது. நடைமுறை மாற்று விகிதத்தில் அயற் செலாவணி பற்றாக்குறையாக இருக்கிறது. ஆகையால், அயற் செலுத்துநிலை சமநிலையில் இல்லை. ஆதலால், சமநிலை விலைகள் இருந்தால் நிலவக்கூடிய நிழல் விலைத் திட்டங்களை மதிப்பிடவும், உற்பத்திக் காரணிகளைப் பகிர்ந்தளிக்கவும் பயன்படுத்துகின்றனர்.

நிழல் விலை, உற்பத்திக் காரணிகள் அல்லது பொருள்களின் உள்ளார்ந்த அல்லது உண்மையான மதிப்பைக் காட்டுகிறது. இந்தப் பொருளில் நிழல் விலை என்பது சமநிலை விலையாகும். நிழல் விலைகள் காலத்திற்குக் காலம் வேறுபடலாம்; இடத்திற்கு இடம் மாறுபடலாம். தொழில்களுக்கிடையில் உழைப்பின் விலையில் வேறுபாட்டைக் காணலாம். அவை அங்காடி விலைகளிலிருந்து விலகிச் செல்லலாம்.

நிழல் விலைகள், உற்பத்திக் காரணிகளின் மாற்று வாய்ப்புச் செலவினையும் (Opportunity Cost) குறிக்கின்றன. மூலதனம், உழைப்பு, அயற் செலாவணி ஆகியவற்றின் உற்பத்திப் பொருளின் நிழல் விலை, அதனுடைய மாற்று வாய்ப்புச் செலவினைக் காட்டுகிறது. இந்தப் பொருளின் அளிப்பில் ஓரலகு குறைந்தால் பொருளாதாரத்திற்கு ஏற்படுகின்ற இழப்பினை நிழல் விலை என்று கருதலாம். ஓர் உற்பத்திக் காரணி பற்றாக்குறையாக இருந்தால் அதனுடைய 'கணக்கு விலை' அங்காடி விலையைவிட மிகுதியாக இருக்கும். ஒரு பொருளின் அளிப்பு எச்சமாக இருந்தால் அதனுடைய மதிப்பு அங்காடி விலையைவிடக் குறைவாக இருக்கும். அதாவது அங்காடி விலை ஒரு பொருளின் உண்மையான மதிப்பைக் காட்டாதபொழுது அதன் உண்மையான மதிப்பினைப் காட்டக் கணக்கு விலையாகப் பயன்படுத்துவதே நிழல் விலையாகும்.'

**நிழல் விலையைக் கணக்கிடும் முறைகள்:** நிழல் விலையைக் கணக்கிடப் பொதுச் சமநிலைப் பகுத்தாய்வு (General Equilibrium Analysis), பகுதிச் சமநிலைப் பகுத்தாய்வு (Partial Equilibrium Analysis) என்ற இரண்டு முறைகள் பின்பற்றப்படுகின்றன.

பொதுச் சமநிலைப் பகுத்தாய்வு முறையில், எல்லா உற்பத்திக் காரணிகளுக்கும் இடையில் அவற்

றின் இறுதித் தேவையையும், அளிப்பையும் கணக்கி லெடுத்துக்கொண்டு சமநிலையை நிறுவுகின்றனர். இதற்காகப் பொருளாதாரத்தின் பல்வேறு துறை களைச் சார்ந்த புள்ளிவிவரங்களையும் திரட்டவேண் டும். ஒவ்வொரு உற்பத்திக் காரணியின் கணக்கு விலையையும் இயற் கணிதக்குறியீடுகளில் (Algebraic Symbols) குறிப்பிட வேண்டும். மொத்தப் பொருளா தாரத்திற்கும் அவற்றைக் கூட்டவேண்டும். சரியான போதுமான அளவு புள்ளிவிவரங்கள் கிடைக்காவிட் டால் இச்சிக்கலைத் தீர்க்க ஒரே சமயத்தில் பல சமன் பாடுகள் தேவைப்படும். நிழல் விலை என்பது சம நிலை விலையாதலால் ஒவ்வொரு உற்பத்திக் காரணி யின் அல்லது பொருளின் விலையை நிருணயிக்க முழுச் சமநிலை இருக்கவேண்டியது இன்றியமையாத ஒன் றாகும்.

பகுதிச் சமநிலைப் பகுத்தாய்வு முறையில் மூல தனம், உழைப்பு, அயற்செலாவணி ஆகியவற்றின் நிழல் விலைகளைத் தனித்தனியாகத் தீர்மானிக் கின்றனர். நிழல் விலையைத் தீர்மானிக்க இம்முறை எளிதானதாகவும் சரியானதாகவும் இருக்கிறது.

**வரையறைகள்:** நிழல் விலை என்ற கருத்துச் சிறப் பானதாகவும், பயன்பாடுடையதாகவும் இருந்த போதிலும் அதனைத் தீர்மானிப்பதிலும், பயன்படுத் துவதிலும் சில நடைமுறைச் சிக்கல்கள் உள்ளன. அவற்றைத் தொகுத்துப் பின்வருமாறு கூறலாம். முதலாவதாக, நிழல் விலைகளைக் கணக்கிடுவதற்குப் போதுமான அளவு புள்ளிவிவரங்கள் தேவை. வளர்ச்சி குறைந்த நாடுகளில் தக்க புள்ளி விவரங்கள் தேவை யான அளவில் கிடைப்பதில்லை. ஆதலால், நிழல் விலைகளைக் கணக்கிடப் பெரும்பாடுபட வேண்டி யுள்ளது. இரண்டாவதாக, ஒரு பொருளின் அல்லது ஓர் உற்பத்திக் காரணியின் உள்ளார்ந்த மதிப்பை நிருணயிக்க எல்லா அங்காடிகளிலும் முழுச் சமநிலை இருக்கவேண்டும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் அடிப்படை ஏற்றத்தாழ்வுகளே மிகுதியாக இருக்கின் றன. ஆதலால், மொத்தப் பொருளாதாரத்திலும் சம நிலை என்பது ஏற்படுவதில்லை. இத்தகைய சூழ்நிலை யில் உள்ளார்ந்த மதிப்பைக் காட்டும் நிழல் விலை யைக் கணக்கிடுதல் எளிதன்று. மூன்றாவதாக, நிழல் விலைக் கருத்து, மொத்தப் பொருளாதாரத்திலும் முழுநிறை வேலைவாய்ப்புச் சமநிலை இருக்கின்ற தென்ற எடுகோளின் அடிப்படையில் உருவானது. முழுநிறை வேலைவாய்ப்பு இல்லாததால் நிழல் விலை என்பது உறுதியற்ற கருத்தாக உள்ளது. நான்காவ தாகக் காலத்தின் அடிப்படையில் நிழல் விலைக் கணிப்பில் சிக்கல் தோன்றுகிறது. நடைமுறையில் காலத்தைப் புறக்கணித்து விட்டு உருவாக்கும் கோட் பாட்டால் மிகுந்த பயன்கள் விளையா. ஐந்தாவ தாகத் தனியார் துறையினர் இடுமானங்களை வாங்கு வதையும், உற்பத்திப் பொருள்களை விற்பதையும் அங்காடி விலைகளில் மேற்கொள்ளும்போது நிழல் விலைகளைப் பயன்படுத்தித் திட்டங்களை மதிப்பிடு வதும், பொருள்களை வாங்கவும் விற்கவும் அங்காடி விலைகளைப் பயன்படுத்துவதும் நடைமுறையில் மிகுந்த குழப்பங்களை ஏற்படுத்தும். ஆறாவதாக, மூலதனச் செறிவுள்ள திட்டங்களையும், ஒன்றுக்கு ஒன்று பதிலியாகவும், துணையாகவும் இருக்கின்ற திட்டங்களையும் மதிப்பிடுவதில் பல தொல்லைகள் உள்ளன.

**பயன்பாடுகள்:** நிழல் விலைகளைத் தீர்மானிப்ப தில் நடைமுறைச் சிக்கல்கள் இருந்தபோதிலும் அவற் றினால் சில குறிப்பிடத்தக்க பயன்கள் கிடைக் கின்றன.

முதலாவதாக, திட்டங்களை மதிப்பிட நிழல் விலை பெரிதும் பயன்படுகிறது. அங்காடி விலையின் அடிப்படையில் பொருள்களின், உற்பத்திக் காரணி களின் விலைகளை நிருணயிப்பது சரியாகாது. ஏனென்றால் இது தவறான முறையில் மூல வளங் களை ஒதுக்கீடு செய்ய வழி வகுத்துவிடும். ஆனால் நிழல் விலை, சரியாகத் திட்டங்களை மதிப்பிடத் துணை செய்கிறது. திட்டங்களின் விளைவுகளைக் கணிக்கவும் நிழல் விலை தான் ஏற்றதாக உள்ளது.

இரண்டாவதாக, பொதுக் கொள்கையை (Public Policy) அரசு, நடைமுறைப்படுத்த நிழல் விலை உதவுகிறது. பொதுக் கொள்கையைச் சரியா கச் செயற்படுத்தினால்தான் அரசின் திட்டங்கள் வெற்றி பெறும். நிழல் விலையின் அடிப்படையில் வளங்களை ஒதுக்கித் திட்டங்களை அரசு நன்கு செயற்படுத்த இயலும். இதனால், அரசின் பொதுக் கொள்கை சிறப்புப் பெறுகிறது.

மூன்றாவதாக, எதனையும் திட்டமிட்டுச் செய்ய (Programming) நிழல் விலை உற்ற துணையாகிறது. பொருளாதாரம் அறிவார்ந்த முறையில் தொடர்ந்து ஒருங்கிணைந்து செயற்படத் திட்டமிடுதல் தேவை யாகிறது. அதனுடைய தலையாய நோக்கம் குறுகிய காலத்தில் நாட்டு வருவாயை மிகுதிப்படுத்துவதாகும். இதற்கு அரசு, தக்க முறையில் மூலவளங்களையும், முதலீட்டையும் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். இதற்கேற்ற வகையில் அரசின் நிதி, பண, வாணிகக் கொள்கைகள் அமையவேண்டும். இவற்றிற்கெல்லாம். நிழல் விலை உதவியாக இருக்கிறது.

பேராசிரியர் குன்னார் மிர்தால் (Gunnar Myr- dal) நிழல் விலைக் கருத்தை உண்மைக்குப் புறம்பான

தாகவும், நடைமுறைக்கு மாறுபட்டதாகவும் இருக்கிறதென்று கருதுகிறார். இருந்தாலும், திட்டத்தை மதிப்பிடுவதற்கும், திட்டத்தையும் கொள்கைகளையும் வகுப்பதற்கும் நிழல் விலை துணை செய்கின்ற காரணத்தினால் இது பயனுள்ள கருத்தாகக் கொள்ளப்படுகிறது. மா.பா.கு.

**துணை நூல்கள்:**

**குருசாமி, மா.பா.**, திட்டமிடலும் வளர்ச்சியும், குருதேமொழி, திருச்செந்தூர், 1987.

**Jhingan, M. L.**, The Economics of Development and Planning, Vikas Publishing House, New Delhi, 1982.

**Joseph, A.Shumpeter.**, The Theory of Economic Development, Oxford University Press, London, 1978.

**Mehta, J.K.**, Economic Development, Chaitanya Publishing House, Allahabad, 1971.

**நிறக் குருடு:** சில நிறங்களைப் பிரித்தறிய இயலாமை அல்லது சில நிறங்களைக் காணமுடியாமை என்பது நிறக் குருடு (Colour Blindness) எனப்படுகிறது. குறிப்பாகச் சிவப்பு நிறமும், பச்சை நிறமும் சரியாகக் காண முடிவதில்லை. சிலருக்கு எல்லா நிறங்களும் கருமையாகவும் வெண்மையாகவுமே தென்படும். ஆண்களில் 20 பேர்களில் ஒருவரும், பெண்களில் 200 பேர்களில் ஒருவரும் நிறங்களைத் பிரித்தறிய இயலாமையால் பாதிக்கப்படுவதாகக் கூறப்படுகிறது. கண் பரிசோதனை செய்யும் வரை பலருக்கு நிறங்களைப் பிரித்தறிய இயலாமை தெரிவதில்லை.

இந்தப் பார்வைக் குறைபாடு மரபுவழியாக வருவது. பெண்கள் இந் நோயினால் பாதிக்கப்படுவதில்லை; என்றாலும், அவர்களுடைய குழந்தைகளுக்கு வரலாம். வேறு சில அருகிய, நிறம் பிரித்தறிய இயலாப் பார்வைக் கோளாறுகள் ஆண்-பெண் இருபாலாரையும் சமமாகப் பாதிக்கின்றன. இப்பார்வைக் கோளாறு மிகுதியாக ஆண்களிடையே காணப்படும். இடையில் ஒரு தலைமுறையில் இக்குறை தோன்றாது இருக்கலாம். நிறங்களைப் பிரித்தறிய இயலாக்குறைபாட்டுக்கான காரணங்கள் கண்டுபிடிக்கப்படவில்லை. விழித்திரையில் உள்ள சில கூறுகள் நிறத்தைக்கண்டுணரப் பயன்படுகின்றன. இக்கூறுகள் நிறத்தையறிய இவற்றுள் வண்ணத்துகள்கள் உள்ளன. இத்தகைய குறிப்பிட்ட வண்ணத்துகள்கள் இல்லாமை, தொன்று தொட்டு வரும் இக் குறைபாட்டிற்குக் காரணமாகலாம்.

சில நேரங்களில் விழித்திரை மற்றும் விழி நரம்பு நோயினால் 'நிறக் குருடு' தோன்றலாம். இது மிகுதியாகத் தோன்றுவதில்லை. இதனால் பொதுப் பார்வைக் கோளாறும் ஏற்படும். ஆனால், பரம்பரையில் வரும் 'நிறக் குருடு' பொதுப் பார்வையைப் பாதிப்பதில்லை. பரம்பரையினால் வரும் நிறக்குருடு உள்ளவர்கள் பச்சை, மஞ்சள், இளஞ்சிவப்பு, சிவப்பு முதலான நிறங்களைப் பார்த்து அறிவார்கள். பிறந்தது முதல் இக் குறை உள்ளவர்கள் சில வண்ணங்களை அதன் அமைப்பு, அடர்த்தி, சாயல் முதலிய வற்றை ஒப்புநோக்கி அறியப் படிப்படியே பழகிவிடுகின்றனர். அருகிய வகைகளில் கருமையும் வெண்மையும் மட்டுமே பார்க்க முடிகிறது. பார்வை மங்கி வருகிறது.

நிறம் பிரித்தறிய இயலாமை வாழ்வில் ஒரு குறையாக இருப்பதில்லை. ஆனால் ஒருவருடையதொழில், நிறம் பிரித்தறிவதுடன் தொடர்பு கொண்டிருந்தால் அது அவருடைய தொழிலுக்குத் தடையாகிறது. சிவப்பும், பச்சையும் உலகெங்கும் 'நில்/செல்' என்பதற்கான சமிக்கை அல்லதுசுட்டுக்குறியாகும். எனவே குறிப்பாக ஓட்டுநர்களுக்கும், மாலுமிகளுக்கும் இந்தக் குறையானது ஆபத்து விளைவிக்கலாம். இருந்த போதிலும் விளக்குகள் இருக்கும் இடத்தைப் பொறுத்து நிறத்தை அறியமுடியும் என்பதால் ஓட்டுநர்களுக்குச் சிக்கலில்லை. மரபுவழியாக ஏற்படும் 'நிறக்குருடு' நீங்க மருத்துவம் இல்லை. பிறப்பிலிருந்து உள்ள இக் குறைபாட்டினால் தொல்லை ஏதுமில்லை. வே.ந.

**நிறப்புலன் காட்சி:** நிறங்கள் அனைத்தையும், நிறமற்றவை, நிறமுடையவை என வகைப்படுத்தலாம். வெள்ளை, சாம்பல்நிறம், கறுப்பு ஆகியவை நிறமற்றவையாகும். வண்ணங்களின் நிறங்கள் அவற்றின் ஒளிஅலை நீளங்களைப் பொறுத்துக் கறுப்பிற்கும் வெள்ளைக்குமிடையில் அடங்கும். பல்வேறு அலை நீளங்களை உடைய ஒளியை அல்லது வண்ணப் பொருள்களை விழி உணர்கிறது. வழக்கமாகச் சிவப்பு, ஆரஞ்சு, மஞ்சள், மஞ்சள்பச்சை, பச்சைநீலம், கருநீலம், ஊதா என்ற ஏழு வண்ணங்கள் வண்ணப் பட்டையில் குறிப்பிடப்படுகின்றன. நிறங்களை ஒப்பிட்டுப் பார்த்தால் சில வெளிச்சமுடையவதாகவும். சில கருமையுடையவதாகவும் இருப்பதை அறியலாம். மஞ்சள், பச்சை ஆகியவை மிக வெளிச்சமுடையவை; சிவப்பு, ஊதா, கருநீலம் ஆகியவை கறுமை நிறமுடையன, வண்ணங்கள் அவற்றின் நிறத்தைப் பொறுத்தும் தன்னிறைவின் தன்மை (Saturation). யைப் பொறுத்தும் உருவாகின்றன. கறுப்பில் வெள்ளையைச் சேர்ப்பதன் மூலம் அதே போன்ற கறு நிறங்களைப் பெறலாம். வண்ண வண்ண நிறங்கள்

தன்னிறைவாக்கப்படுவதைப் பொறுத்து வெளிச்ச மாகின்றன. வண்ணப் பட்டையின் பல்வேறு நிறங்கள் தன்னிறைவால் வேறுபடுகின்றன. சான்றாக மஞ்சள், நீலத்தை விடக்குறைவாகத் தன்னிறைவுடையது. அடிப்படை நிறங்களான சிவப்பு, பச்சை, மஞ்சள், நீலம் அதன் இயல்புகளின் மாற்றத்தினால்தான் நிறப்புலன் காட்சியில் (Colour Perception) மாற்றம டையச் செய்கின்றன. நிறத்தின்செறிவு மாறும்போது அதன் வெளிச்சமும் தன்னிறைவும் மாறுதலடை கின்றன. விழியின் கூம்பு அணுக்கள் நிற உணர்ச் சியை அறியப் பயன்படுகின்றன. நிறங்களைப் பார்க்க இயலாத குறைந்த மங்கிய ஒளியில் நிற உச்சக் கூருணர்ச்சி குறைந்த அலை நீளமான 500 மி. மையுடைய நீலப்பச்சைக்கு இடம் பெயர்கிறது. இவ்வாறு பகல் ஒளியிலிருந்து மாலை ஒளிக்கு மாறும் போதுஅதுஉச்சப்பார்வை நிறப்பட்டையின் நீலப் பகுதிக்கு இடம் பெயர்தல் அல்லது பர்க்கின்சியின் நிகழ்முறை (Purknje Phenomenan) எனப்படும்.

ஜி.இரா.

**துணைநூல்:**

**Teevan, Richard. C.,** and Birney, Robert C., Colour Vision, D.Van Nostrand Co., New york, 1961.

*நிறவெறி*: ஐ.நா. சாசனத்தின் 56-ஆம் பிரிவு, மனித உரிமைகளை முன்னேற்றுமுகமாக நாடுகள் அனைத்தும் உறுதிப்பாடு பூண்டு ஒழுகுவதை விளக்கு கிறது. அகிலத்துக்குமான மனித உரிமைகள் பிர கடனத்தின் 1-ஆம் பிரிவு,எல்லோரும் பிரகடனத்திற் கூறிய அனைத்து உரிமைகளையும் பெற்று விளங்கு கிறார்கள் என்றும், இன, நிற, மொழி, மதம், மற் றும் அரசியல் எண்ணம், தேசிய எண்ணம், சமூகத் தொடக்கம், சொத்து, பிறப்பு, அல்லது ஏனைய தகு நிலைகளின் அடிப்படையில் மனிதருக்குள் பாகுபாடு செய்தல் கூடாது என்றும் கூறுகிறது.

ஆனால், மனிதர்களுக்குள் பாகுபாடு காட்டி, மனித உரிமைகளை ஒரு பகுதியினருக்கு மறுக்கின்ற வழக்கம் முற்றிலும் அகன்று விட்டது என்று கூற இயலாது. ஓர் இனத்தை மேன்மை பாராட்டுவது என்பது எவ்வாறு மற்றொரு இனத்தின் அழிவிற்குக் காரணமாக இருந்தது என்பதும் அது எவ்வாறு உல கப்போருக்கு வித்திட்டது என்பதும் அறியாதது அன்று. இதனை மனத்திற்கொண்டே இனத்தின் பெயரால் நடக்கும் பாகுபாட்டினைத் தணிக்க எல்லா உருவங்களிலும் இனப்பாகுபாடு தணிப்பிற்கான பிர கடனம் ஒன்றினை ஐ.நா. பொதுச் சபை இயற்றியது. இதில் நிறத்தின் பெயரால் செய்யப்படும் பாகுபாட் டினை உடனடியாகத் தடுக்க வேண்டும் என்று வலி யுறுத்தப்பட்டுள்ளது. இருப்பினும் நிறத்தின் பெய ரால் மனிதர்கள் பாகுபாடு செய்யப்பட்டு, கறுப்பு நிறம் கொண்ட பெரும்பான்மைத் தென் ஆப்பிரிக்க மக்களின் மனித உரிமைகளைச் சிறுபான்மையரான வெள்ளையர்கள் திட்டமிட்டுப் பறிக்கின்ற நிலை தொடர்ந்து நீடித்தே வருகிறது. இவ்வகைக் கொள்கையையே நிறவெறிக் கொள்கை (Apartheid) எனக் கூறுவர்.

தென் ஆப்பிரிக்காவின் நிறவெறிக் கொள்கையி னால் 80 விழுக்காடுகள் பெரும்பான்மை உடைய ஆப்பிரிக்க மக்கள்20 விழுக்காடே உடைய வெள்ளை ஆட்சியாளர்களால் ஆளப்படுகிறார்கள். இங்கு நடப் பிலிருக்கும் குழு பரப்பளவு சட்டத்தின்(Group Areas Act) கீழ் வெள்ளையரல்லாத மக்கள் தனிமைப் படுத் தப்பட்டுத் தனியிடங்களில் மட்டுமே வசிக்க அனுமதிக் கப்படுகின்றனர். இது போலவே இவர்கள் சில வேலை களுக்கு மட்டுமே அமர்த்தப்படுகிறார்கள். இனப்பாகு பாட்டினை எதிர்த்து முழக்கமிடும் அரசியற் கட்சி கள் இங்குத் தடை செய்யப்பட்டுள்ளன. வெள்ளையர் அல்லாதோர் இங்கு இராணுவத்திற்கூடச் சேர்ந்து கொள்ள முடியாது. கேப்பு மாநிலத்தைத் தவிர மற்ற மாநிலங்களில் வசிக்கும் வெள்ளையர் அல்லா தோருக்கு வாக்குரிமை கூட இல்லை.

இந்நிலையை மாற்ற வேண்டி 1952-ஆம் ஆண்டி லிருந்து பொதுச் சபையின் நாடுகள் பறிக்கப்பட்ட மனித உரிமைகளை வெள்ளையர் அல்லாதோருக்குத் திருப்பித் தரத் தென் ஆப்பிரிக்க அரசாங்கத்தைத் தொடர்ந்து வலியுறுத்தி வந்தன. இதற்கு அந்த அரசு செவி சாய்க்க வில்லை. எனவே, ஐ.நா. பொதுச் சபை, அதன் உறுப்பு நாடுகளைத் தென் ஆப் பிரிக்க நாட்டுடன் தூதர் உறவை முறித்துக் கொள்ளு மாறும், இராணுவத் தளவாடங்கள் ஏற்றுமதி செய் வதைத் தவிர்க்குமாறும், பொருளாதார உறவு களைத் துண்டித்துக் கொள்ளுமாறும், அந்நாட்டு விமானங்கள் ஏனைய நாட்டு விமான நிலையங்களில் தரை இறங்குவதைத் தடை செய்யுமாறும், தென் ஆப்பிரிக்கக் கப்பல்கள் மற்ற நாடுகளின் துறைமுகங் களுக்கு வருவதைத் தடுத்து நிறுத்துமாறும், தென் ஆப்பிரிக்காவுக்குப்பணஉதவி அளிப்பதைத் தடுக்கவும், தென் ஆப்பிரிக்க அரசை எதிர்க்கும் தென் ஆப்பிரிக்க அரசியற் கட்சிகளை ஆதரிக்குமாறும் கேட்டுக்கொண் டது. இப்போது, ஆப்பிரிக்க முன்னரங்க நாடுகளை உறுதிப்படுத்தப்பணஉதவி செய்ய ஆப்பிரிக்க முன்ன ரங்க நாடுகளுக்கான நிதியம் ஒன்றினை அமைத்திருப் பதையும் காணலாம்.

ஆப்பிரிக்கச் சிறுபான்மை வெள்ளை அரசு நிற வெறிக் கொள்கையினைப் படிப்படியாக விட்டுவிடச்

செய்வதற்கு உலக நாடுகள் எடுத்துக் கொள்ளும் இந்த வகையான முயற்சிகள் உடனடியான தீர்வை உருவாக்க இயலவில்லை என்றாலும், என்றாவது ஒரு நாள் வெள்ளையரல்லாத ஆப்பிரிக்க மக்கள் தென் ஆப்பிரிக்காவைத் தன்னாட்சியின் கீழ்க் கொண்டு வருவர் என்பது திண்ணம். அந்தநேரத்தில் நிறவெறிக் கொள்கையும் அழிவுக்கு வந்துவிடும்.

ம.கா.

*நிறுத்த அதிகாரம்* என்பது ஐக்கிய அமெரிக்க நாட்டில், தங்களுடைய நில எல்லைகளினுள்ளே ஏதேனும் ஒரு கூட்டாட்சிச் சட்டத்தைச் செயலில் நிறைவேறாதவாறு தடுக்கும் அல்லது நிறுத்திவைக்கும் மாநிலங்களுக்குரிய அதிகாரத்தைக் குறிக்கும். நிறுத்த அதிகாரமானது (Nullification) மாநில உரிமைகளென்ற கருத்தோடும் (StateRights) இணையத்திலிருந்து பிரிந்து செல்லுதல் அல்லது பிரிவினை (SecessionorSedparation from the Union) என்ற கருத்தோடும் நெருங்கிய தொடர்புடையது.

**வரலாறு:** கூட்டாட்சிச் சட்டத்தைச் செயற்படுத்தாமல் நிறுத்திவைப்பதற்கு மாநிலம் கையாளும் இவ்வதிகாரத்தை ஒரு கொள்கையாக கி.பி. 1798-இல் கென்ட்டுகி-வெர்சினியா தீர்மானங்கள் (Kentucky and Virginia Resolutions) குறிப்பிட்டன. அயல்நாட்டவர் பற்றியும், நாட்டுக் குற்றம் பற்றியும் செய்யப்பட்ட சட்டங்களை மறுத்துத் தாமசு செபர்சனும், சேம்சு மேடிசனும் இக்கென்ட்டுகித் தீர்மானங்களை வரையும்போது, இக்கொள்கையை வகுத்தனர். பென்சில்வேனியாவின் ஆளுநர் தம் மாநிலத்தில் கூட்டாட்சி நீதிமன்றமளித்த தீர்ப்பு ஒன்றை நிறுத்தி வைக்கும்பொருட்டுப் படைகளை அழைத்து இவ்வதிகாரத்தை கி.பி. 1809-இல் கையாண்டார். புதிய இங்கிலாந்து மாநிலங்களும், சியார்சியா (Georgia) அலபாமா முதலிய மாநிலங்களும் இவ்வதிகாரத்தின் கொள்கையை ஏற்றன. சான் சி. கால் கூன்(John C.Calhoun) என்னும் அரசியற் சிந்தனையாளர் கி.பி.1832-இல் நிறுத்த அதிகாரத்தின் கொள்கையை முழுஅளவில் உருவாக்கினார். தென் கரோலினா மாநிலம் கி.பி. 1832-இல் தனது நிறுத்த அதிகாரத்தை ஓர் ஆணையாக (Nullification) Ordinance) ஆக்கிற்று. வட, தென் மாநிலங்களின் நலன்களுக்கு இடையூறாகவுள்ள கூட்டாட்சிச் சட்டங்களை எதிர்க்கும் மாநிலங்களில் இவ்வதிகாரத்தின் கொள்கைக்கு வரவேற்பு இருக்கிறது.

**இதற்கு ஆதரவான கால் கூனின் கருத்துகள்:** மாநிலங்களுக்குக் கூட்டாட்சிச் சட்டத்தைச் செயற்படுத்தாமல் நிறுத்தி வைக்கும் அதிகாரம் உண்டென்று கூறியோருக்கு நிறுத்த அதிகாரக்காரர்கள் (Nullifiers) என்று பெயர் ஏற்பட்டது. இவர்களுடைய கருத்தின்படி, அரசியலமைப்புச் சட்டம், கூட்டாட்சி அரசாங்கமும் மாநிலங்களும் அதிகாரங்களை உடையன என ஒப்புக்கொண்டுள்ளது. அது, அவைகளுக்கிடையே அதிகாரங்களைத் துல்லியமாகப் பிரித்து விடவுமில்லை. அவைகளுக்கிடையே இதுபற்றி ஏதேனும் வழக்குத் தோன்றினால் எதனுடைய அதிகாரம் உயர்ந்ததென்று அது கூறவுமில்லை. கூட்டாட்சி அரசாங்கத்துக்கு அரசியலமைப்புச் சட்டத்தினால் வழங்கப்பட்ட அதிகாரங்கள் மட்டுமே இருக்கின்றன: ஆனால், மாநிலங்களோ எஞ்சிய அதிகாரங்களையெல்லாம் தங்களிடமே வைத்துள்ளன. மேலும் வரலாற்று வகையாகப் பார்த்தால் மாநில அரசாங்கங்களே முதலில் தோன்றியவையாகும், அவையே ஐக்கிய அமெரிக்க நாடு என்னும் இணையத்தைத் (Union)தோற்றுவித்தன, அவையேதங்களுடையமுகவராகிய(Agent) கூட்டாட்சி அரசாங்கத்துக்கு அதிகாரங்களை அளித்தன. ஆகையால் எவ்வளவு அதிகாரங்கள்கூட்டாட்சி அரசாங்கத்துக்கு வழங்கப்பட்டன என்பதைத் தீர்மானிக்கும் இறுதியான உயர் நீதிபதி, மாநிலங்களால் தோற்றுவிக்கப்பட்ட முகவரிடம் இருத்தலாகாது; மாறாக, அது கூட்டாட்சியை உருவாக்கிய மாநிலங்களிடத்தேதான் இருத்தல்வேண்டும். ஆகையால், இந்நிறுத்த அதிகாரத்துக்கே அடிப்படை ஆதாரமாகஇருப்பது மாநிலங்களின் இறைமை (State Sovereignty) ஆகும். கூட்டாட்சி அரசாங்கம் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்ட உரிமைகளில் தலையிடுமானால், இரண்டுக்குமிடையே எந்த மோதலுக்கும் இடமில்லாமல், இந்தப் பூசலுக்கு ஓர் அமைதியான தீர்வைத் தரக்கூடியது இந்த நிறுத்த அதிகாரமே யாகும். இவ்வதிகாரம் மாநிலங்களுக்கு இருக்குமாயின், மாநிலங்கள் பிரிந்துசெல்லுதற்கோ, புரட்சி செய்தற்கோ வாய்ப்பே இராது. இந்த நிறுத்த அதிகாரத்தை மாநிலங்கள் கையாளுதலின் வாயிலாக, அமெரிக்க இணையம் சிதைந்து போய் விடாது. இவ்வதிகாரத்தைக் கையாளுதற்கு 'முன் இணையம் எவ்வாறு இருந்ததோ,அவ்வாறேஅதற்குப் பின்னும் உறுதியாக நீடித்திருக்கும். எந்தச் சட்டம் நிறுத்த ஆணையினால் நிறுத்திவைக்கப்படுகிறதோ, அதைத் தவிர மற்ற மாநில, நடுவண் உரிமைகளும், கடமைகளும் மாறாமல் அப்படியே இருக்கும்.

**இதற்கு மாறான வெப்சுடரின் கருத்துகள்:** கால் கூன் நிறுத்த அதிகாரத்துக்கு ஆதரவாகக் கூறிய இக்கருத்துகளைத் தேனியல் வெப்சுடர் என்பார் (Daniel Webster)மறுத்து, ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பு,இறைமையை உடைய அரசுகளுக்கிடையே செய்துகொள்ளப்பட்ட ஓர் ஒப்பந்தம் (Compact) அன்று என்றும், அது அமெரிக்க மக்களால் உண்டாக்கப்பட்டதென்றும், எனவே இந்த அரசியலமைப்புச் சட்டமும், அதனைப் பின்பற்றிச் செய்யப்படுகின்ற

எல்லா ஐக்கிய அமெரிக்க நாட்டின் சட்டங்களும் நாட்டின் உயர்தரச் சட்டங்களாகுமென்றும், அவை ஒவ்வொரு மாநில நீதிபதிகளையும் கட்டுப்படுத்து மென்றும் கூறினார். மேலும் இவருடைய கருத்தின்படி அமெரிக்க அரசியலமைப்புப் பிரிவு III, சிறு பிரிவு 2-இன் படி, கூட்டாட்சி நீதி அதிகாரம், அரசியல மைப்பின்கீழும், அமெரிக்க நாட்டின் சட்டங்களின் கீழும் தோன்றும் எல்லா வழக்குகளுக்கும் பொருந்து வதாகும். மேலும், தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி சான்மார்சல் (John Marshall), (1803-இல் மார்பரி-மாடிசன் வழக்கில்) தீர்ப்பளித்ததுபோல், கூட்டாட்சிச் சட்ட மன்றமானது (Congress) தனக்கு வழங்கப்பட்ட அதிகாரங்களை மீறியுள்ளதா, அல்லது ஏதேனுமொரு மாநிலம் அல்லது மாநிலங்கள் கூட்டாட்சி அரசாங்க உரிமைகளில் தலையிட்டுள்ளனவா என்று தீர்மானித்தற்குத் தலைமை நீதிமன்றத்துக்கே (Supreme Court) இறுதி அதிகாரம் இருக்கிறது. கால் கூனும், வெப்சுடரும் தத்தம் கருத்துகளை அமெரிக்கக் கூட்டாட்சிச் சட்டமன்றத்தின் மேலவையில் (Senate ) எடுத்துக்கூறிச் சொற்போர் செய்தனர்.

**சச்சரவு முற்றி நீங்குதல்:** பொதுவாகத் தென் மாநிலங்கள் நிறுத்த அதிகாரத்தை ஆதரித்தன. இதற்குக் காரணம், அவை தங்களுடைய பொருளாதார முன்னேற்றத்தின் பொருட்டுத் தங்களுக்குக் காப்புச் சுங்கவரி முறையையும், ஓரளவு அடிமை முறையையும் வைத்துக் கொள்ள விரும்பியதே ஆகும். தென் கரோலினாவில் (South Carolina) கூட்டப்பட்ட ஒரு தனிமாநாடு (Special Convention) நிறுத்த அதிகார ஆணைகளை(Nullification Ordinances) விடுப்பதற்கு அந்த மாநிலத்துக்கு அதிகாரம் அளித்தது. குடியரசின் தலைவர் அண்ட்ரூ சாக்சன் (Andrew Jackson) நிறுத்த அதிகாரம் நடுவண்-மாநிலப் பூசல்களுக்கு அமைதியான தீர்வுக்கு வழிசெய்யாதுஎன்று கூறியும், மாநில உரிமைகளென்னும் நோக்கில் அரசியல மைப்புக்குக் கொடுக்கப்படும் விளக்கத்தை மறுத்தும், அரசியலமைப்புக்குத் தேசிய நோக்கிலளிக்கப்படும் விளக்கமே ஏற்றுக்கொள்ளத்தக்கதென்று உறுதியாகக் கூறியும் கி.பி. 1832-இல் ஓர் அறிக்கையை விடுத்தார். கூட்டாட்சிச் சட்டமன்றமானது, நடுவண் அரசாங்கம் விதிக்கும் சுங்க வரிகளை மற்ற மாநிலங்களைப் போலத் தென்கரோலினாவிலும் தேவைப் பட்டால் அரசாங்கத்தின் முழுவல்லந்தத்தையும் கையாண்டு வாங்குவதற்குக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரமளித்து ஒரு சட்டத்தைச் (Force Act) செய்தது. இதன் பின்னர்த் தென்கரோலினா தன் நிறுத்த அதிகார ஆணையை நீக்கிவிட்டது,

இப்போது மாநில உரிமைகளைக் காத்துக்கொள்ளும் பொருட்டு ஒரு நிறுத்த அதிகாரம் கையாளப் படுவதில்லை. ஆனால், இவ்வதிகாரத்துக்கு அடிப்படையான மாநிலங்களின் இறைமை (State Sovereignty) என்ற கருத்து கைவிடப்படவில்லை. மாநில உரிமைக்கு ஆதரவளித்தவர்கள் நிறுத்த அதிகாரத்தை விடுத்து, இணையத்திலிருந்து மாநிலங்கள் பிரிந்து செல்லுதற்கு (Secession) உரிமை உண்டென்ற கொள்கையைப் பரப்பவே, இதன் விளைவாக கி.பி. 1861-65-இல் உள்நாட்டுப்போர் நடைபெற்றது. உள்நாட்டுப் போரில் இணைய அரசாங்கம் வெற்றி பெறவே, தேசிய உயர் அதிகாரம் (National Supremacy) என்பது நிலைபெற்றது. நிறுத்த அதிகாரமும், பிரிவினை உரிமையும் கைவிடப்பட்டன. நீக்கிரோ இனமக்களை அரசாங்கப் பள்ளிகளில் இன ஒதுக்கம் செய்தல், அரசியலமைப்பின்படி சட்டத்தின் சமமான பாதுகாப்பு என்பதை அவ்வின மக்களுக்கு வழங்க மறுக்கும் செயலாகுமென்றும், அச்செயல் சட்டப்படி செல்லாதெனவும் கூறி, 1954-இல் தலைமை நீதி மன்றம் ஒரு தீர்ப்பளித்தது. தென்மாநிலங்கள் இத்தீர்ப்பை நிறுத்தி வைத்தற்காக, நிறுத்த அதிகாரத்தை, இடையீட்டதிகாரம் (Interposition) என்ற வேறொரு வடிவத்தில் கையாள முயன்றன. உலூசியானா மாநிலம் (Louisiana) கல்வித்துறை அதிகாரம் மாநிலத்துக்கு ஒதுக்கப்பட்ட உரிமை ஆகுமென்றும், அதில் அது இனஒதுக்கல் கொள்கையைக் கையாளுதலைத் தடுத்தற்குத் தலைமை நீதிமன்றத்துக்கு அதிகாரம்இல்லையென்றும் 1960-இல் கூறிற்று. ஆனால், இந்த வாதத்தில் பொருளில்லை என்று தலைமை நீதிமன்றம் உறுதியாகக் கூறித் தள்ளிவிட்டது.

ஐக்கிய அமெரிக்க நாட்டில் மாநில உரிமைகள் என்ற கருத்தினின்றும் தோன்றிய நிறுத்த அதிகாரம், பிரிவினை உரிமை முதலியனவெல்லாம், மைய-மாநில உறவுகளைப் பற்றி ஆய்வுசெய்யும் பிற கூட்டாட்சி நாடுகளுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கின்றன.

பா.கு.

**துணை நூல்கள்:**

**Calhoun, John, C.**, Works, 1854-55, New York, 1877.

**Haines, Charles, G.**. The Role of the Supreme Court in the American Government and Politics, Berkeley, California, 1944.

**Powell, E.P.**, Nullification and Secession in the United States, New York, 1897.

***நிறுமக் கணக்குகள்:*** ஒரு நிறுமத்தைப் பற்றிய முழு விவரங்களையும், நிறுமச் சட்டத்தின்

நுணுக்கங்களோடு கொடுக்கப்பட்டிருக்கும் கணக்கு முறையே நிறுமக் கணக்குகள் (Company Accounts) ஆகும். ஆனால், நிறுமக் கணக்கு முறைகள் பெரிதும் சிக்கலானவையும், மிகவும் நுட்பமானவையும் ஆகும். நடைமுறையில் பெரிய நிறுமங்களில் தகுதி பெற்ற தலைமைக் கணக்கருடன் தனித்துறை ஒன்று அமைக்கப்பட்டிருக்கும். அத்துறை நிருவாக இயக்குநருக்கு நேரடியான பொறுப்பாகும். இந்நிலையில் பல துறைத் தலைவருக்கிடையே பொறுப்புணர்ச்சியை ஏற்படுத்தி நெருங்கிய சுமுகமான உறவையும், சூழ்நிலையையும் உண்டாக்குவது செயலரின் தலையாய கடமையாகும். நிதி, உற்பத்தி-அடக்கவிலை (Costing), புள்ளிவிவரப் பட்டியல் போன்ற விளக்கங்களைத் தயாராக வைத்திருந்து நிறும அவைக் கூட்டத்திற்கு உரிய காலத்தில் கிடைக்குமாறு செய்யவேண்டியவர் செயலரே ஆவார்.

சட்டத்தின் 209-ஆம் பிரிவில் கொடுத்துள்ளபடி ஒவ்வொரு நிறுமமும், 1) தான் பெற்றுக்கொண்ட எல்லாப் பணத்திற்கும், செலவழித்த தொகைக்கும், வரவு-செலவு பற்றிய மற்ற எல்லா விவரங்களுக்கும்; 2) நிறுமத்தால் கொள்முதல், விற்பனை செய்த எல்லாச் சரக்குகளுக்கும்; 3) நிறுமத்தின் சகல சொத்துகளுக்கும் பொறுப்புகளுக்கும், 4) மேலும் 1965-ஆம் ஆண்டின் திருத்தச் சட்டத்தின்படி மத்திய அரசு நிருணயித்தவாறு தணிக்கையைப் பயனுள்ளதாக்கச் செய்யும் பொருட்டுத் தயாரிப்பு நிறுமம். உற்பத்தி நிறுமம், சுரங்கத்தொழில் நிறுமம் ஆகியவை, தாங்கள் பயன்படுத்திய கச்சாப் பொருள்கள், உழைப்பு, இதர வகைகளின் அடக்க விலை சம்பந்தப்பட்ட விவரங்களுக்கும் சரியான கணக்குகளை எழுதி அதன் பதிவு அலுவலகத்தில் வைக்க வேண்டும். திருத்தப்பட்டசட்டத்தின்படி, எல்லாக் கணக்கு ஏடுகளையோ எந்தவொரு கணக்குப் புத்தகத்தையோ இந்தியாவின் வேறு எந்த இடத்திலாவது வைத்திருக்க வேண்டி இயக்குநர் அவை முடிவுசெய்தால், முடிவு செய்த ஏழு தினத்திற்குள் அந்த இடத்தின் முழு முகவரியையும் எழுத்து மூலமான அறிவிப்பின்மூலம் பதிவாளருக்குத் தெரியப்படுத்த வேண்டும். இந்தியாவினுள்ளோ வெளியிலோ இந் நிறுமத்துக்குக் கிளை அலுவலகம் ஒன்றிருந்தால் அது சம்பந்தப்பட்ட கணக்குவழக்குகள் சரியாக எழுதப்பட்டுக் கிளை அலுவலகத்தில் வைக்கப்பட வேண்டும்; மூன்று நாட்களுக்கொரு முறை இக் கணக்குகளின் சுருக்க விவரத் தாக்கலை முக்கிய கணக்கேடுகள் வைத்திருக்கும் இடத்திற்கோ, நிறுமத்தின் பதிவு அலுவலகத்திற்கோ அனுப்பி வைக்கவேண்டும். சரியாக எழுதப்பட்ட கணக்கு ஏடுகளிலிருந்து நிறுமத்தின் அல்லது அதன் கிளை அலுவலகத்தின் உண்மையான நிலைமையை உணர்ந்து கொள்ளலாம். கணக்கு ஏடுகளை வைத்துப் பராமரிக்க வேண்டிய பொறுப்புகளைப் பிரிவு 209(6)-இன்படி கீழ்க்காணுபவர்களிடம்விடச் சட்டத்தில் வழிசெய்யப்பட்டுள்ளது.

அ) நிருவாக முகவர் அல்லது கருவூலரைக் கொண்ட நிறுமமாயின் அந்த நிருவாக முகவரும் அல்லது செயலர்-கருவூலரும்; ஆ) அந்த நிருவாக முகவர் அல்லது செயலர்-கருவூலர் ஒரு கூட்டு நிறுமமாயின்(Firm)அந்த நிறுமத்திலுள்ள ஒவ்வொரு கூட்டாளியும்; இ) அந்த நிருவாக முகவர் அல்லது செயலர்-கருவூலர் ஒரு கூட்டமைப்பாயின் அந்த நிறுமத்தின் ஒவ்வொரு இயக்குநரும்; ஈ) நிருவாக முகவரோ, செயலர்-கருவூலரோ இடம்பெறாத நிறுமமாயின் அந் நிறுமத்தின் ஒவ்வோர் இயக்குநரும் இச் சட்டத்தில் கூறியுள்ள விதிமுறைகளை வேண்டுமென்றோ, மறைமுகமாகவோ அனுசரிக்கத் தவறினால் தவறிய ஒவ்வொரு குற்றத்திற்காக ஆறு திங்கள் சிறைத் தண்டனைக்கும் அல்லது உரூ.1,000/- வரை தண்டத் தொகைக்கும் அல்லது இருவித தண்டனைக்கும் உள்ளாவார்கள். திருத்தப்பட்ட சட்டத்தின்படி கணக்கு ஏடுகள் வேலைநேரங்களில் எந்தவொரு இயக்குநரின் மேற்பார்வைக்கும் கிடைக்குமாறு செய்யப்பட வேண்டும். மேலும், பதிவாளரும் அல்லது மத்திய அரசினரால் அனுமதிக்கப்பட்ட எந்தவொரு அரசு அதிகாரியும் அவ்வேடுகளைப் பார்வையிட அதிகாரமுண்டு. ஒவ்வொரு நிறுமமும் நடப்பு ஆண்டிலிருந்து முந்திய 8 ஆண்டுகளுக்குரிய அல்லது நிறுமம் நிறுவிய காலம் 8 ஆண்டுகளுக்குள்ளாயின் எல்லா ஆண்டுகளுக்குமுரிய கணக்கேடுகளையும் நல்ல முறையில் பாதுகாத்து வைத்திருக்க வேண்டும். ஒவ்வொரு நிறுமமும் சரியான கணக்கேடுகளை வைத்திருக்கவேண்டும் என்று சட்டத்தில் கூறப்பட்டுள்ளதே தவிர என்னென்ன கணக்கு ஏடுகள் என்று கூறப்படவில்லை. நிறுமத்துக்குத் தேவையான சரியான கணக்கேடுகள் யாவை என்பதனை நிறுமத்தின் கணக்கர்களும், தணிக்கையாளர்களும் மட்டுமே நிருணயிக்க வேண்டும். பலபொது நிறுமங்களில் முதற் குறிப்பேடு அல்லது கையேடு, உரொக்க ஏடு, பெயரேடு, விற்பனை ஏடு, கொள்முதல குறிப்பேடு, விற்பனைத் திருப்பக் குறிப்பேடு, கொள்முதல் திருப்பக் குறிப்பேடு,செலுத்தவேண்டிய உண்டியல்கள், கணக்கு ஏடு, வரவுடைய உண்டியல்கள் கணக்கேடு போன்ற பல கணக்கு ஏடுகள் பெரிதும் உபயோகத்தில் இருந்து வருகின்றன. பிரிவு 210-இன்படி நிறுமத்தின் ஒவ்வோர் ஆண்டுப் பொதுக் கூட்டத்திலும் அந்தந்த ஆண்டிற்குரிய இருப்புநிலைக் குறிப்பு,இலாப நட்டக் கணக்கு ஆகியவற்றையும் ஆதாயத்தைக் குறிக்கோளாகக் கொண்டு வணிகத்தை நடத்தாத

நிறுமமாயின் வரவு செலவுக் கணக்கையும் இயக்குநர்கள் அவை தாக்கல் செய்யவேண்டும்.

**ஆதாய நட்டக் கணக்கு:** நிறுமத்தின் கணக்குகள் எந்தவொரு குறிப்பிட்ட காலத்திலிருந்து எந்தக் காலம் வரை எழுதப்பட்டு ஆதாய நட்டம் கணக்கிடப்படுகின்றதோ அதுவே 'நிதி ஆண்டு' எனப்படும். நிதி ஆண்டு என்பது சாதாரண (Calender) ஆண்டைவிடப் பெரியதாகவோ குறுகியதாகவோ இருக்கலாம்; எனினும், ஒரு நிதி ஆண்டு 15 திங்களுக்கு அதிகமாக இருக்கக் கூடாது; ஆனால், பதிவாளரின் முன்னனுமதியிருந்தால் இதனை 18 மாதங்கள் வரை நீடிக்கச் செய்யலாம்.

இந்த ஆதாய நட்டக் கணக்கை மூன்று கூறுகளாகப் பிரிக்கலாம். அவை: அ) வணிகக் கணக்கு அல்லது தயாரிப்புக் கணக்கு, ஆ) பொது ஆதாய நட்டக் கணக்கு, இ) ஆதாய நட்ட ஒதுக்கீட்டுக் கணக்கு என்பனவாகும். இக்கூறுகளில் நிறுமம் சம்பந்தப்பட்ட அனைத்து வருமானமும், மேற்கொண்ட செலவுகளும் அடங்கும்.

**இருப்பு நிலைக் குறிப்பு:** சொத்துகள், பொறுப்புகள், இதர இருப்பு நிலைகள் யாவும் இனவாரியாகப் பிரிக்கப்பட்ட ஒரு திரட்டையே கணக்குப்பதிவியலில் இருப்புநிலைக் குறிப்பு (Balance Sheet) என்பர். இருப்பு நிலைக்குறிப்பிலிருந்து ஒரு குறிப்பிட்ட தேதியில் நிறுமத்தின் உண்மையான நிலையை உணர்ந்துகொள்ள முடியும். எனவே, நிறுமத்தின் செயல்முறைப் போக்கைப் புரிந்துகொள்ள இது ஒரு சிறந்த கருவியாகும். இவ்விருப்பு நிலைக்குறிப்பு இருபாகமாகப் பிரிக்கப்பட்டு வலக்கைப் புறம் 'சொத்துகள்' (Assets) என்றும், இடக்கைப்புறம் 'பொறுப்புகள்' (Liabilities) என்றும் தலைப்புகளிடப்பட்டிருக்கும். நிறுமத்தின் இவ்விருப்புநிலைக் குறிப்பில். நிலைத்தன்மையை (Permanency) அடிப்படையாகக் கொண்டு சொத்துகளை நிலையான சொத்துகளென்றும், உரு மாறும் சொத்துகளென்றும், பொறுப்புகளை நிலையான பொறுப்புகளென்றும், சிறு காலக் கடன்களென்றும் இனவாரியாகப் பிரித்து அமைத்துள்ளனர்.

**சொத்துகள்:** I) வலப்புறத்தில் முதல் பிரிவாக நிலையான சொத்துகள் உள்ளன. நிலையான சொத்துகளை முடிந்தவரையில் பின்வருமாறு வேறுபடுத்தித் தொழில் நன்மதிப்பு, நிலம், கட்டடங்கள், குத்தகைச் சொத்துகள், இயந்திரச் சாதனங்கள், மரச் சாமான்கள், சொத்துகளின் முன்னேற்றம், உரிமைக் காப்புகள், வணிகக் குறிப்புகள், கால்நடைகள், வண்டிகள் முதலிய தலைப்புகளில் கொடுக்கப்பட வேண்டும்.

ஒவ்வொரு தலைப்பின்கீழ் அந்தந்தச் சொத்துகளின் அசல் விலை மதிப்பும், அதனுடன் அதே ஆண்டில் சேர்க்கப்பட்ட அல்லது கழிக்கப்பட்ட சொத்துகளின் விவரமும், தேய்மான மதிப்பும் இடம்பெற வேண்டும்.

இரண்டாவது பிரிவாக முதலீடுகளின் இயல்பு, மொத்த மதிப்பு, மதிப்பிடும் முறை போன்ற விவரங்களைச் சேர்த்து ஒவ்வொரு முதலீட்டையும் வேறுபடுத்திக் காட்டவேண்டும். எடுத்துக்காட்டாக அரசு முதலீடுகள் அல்லது காப்புப் (Trust) பத்திரங்கள்; பங்குகளில் அல்லது கடன் பத்திரங்களில் செய்த முதலீடு (செலுத்தப்பட்ட தொகையையும் குறிப்பிட வேண்டும்); துணை நிறுமங்களின் பங்குகளில அல்லது கடன் பத்திரங்களில் செய்யப்பட்ட முதலீடு; நிலையான சொத்துகள்.

இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகளின் பகுதியில் மூன்றாவது பிரிவு நடப்புச் சொத்துகளும் (Current Assets), கடன்களும் (Loans and Advances) ஆகும்.

**அ) நடப்புச் சொத்துகள்:** இதில் முதலீடுகளின் பேரில் ஏறிய வட்டி, அது சம்பந்தப்பட்ட கடன்கள், இருப்புச் சரக்கு, அதனை மதிப்பிடும் முறை ஆகியவற்றுடன் நிறுமத்தின் இயக்குநர்களிடமிருந்து அல்லது இதர அதிகாரிகளிடமிருந்து தனியாகவோ மற்றவர்களுடன் கூட்டாகவோ வரவேண்டிய கடன்களையும், இந் நிறுமத்தின் இயக்குநர்களில் எவரேனும் ஒருவர் இயக்குநராகவோ கூட்டாளியாகவோ உறுப்பினராகவோ உள்ள தனி நிறுமங்களிடமிருந்து வரவேண்டிய கடன்களையும் தனித்தனியாகக் குறிப்பிட வேண்டும். அதே நிருவாகத்திலுள்ள மற்ற நிறுமங்களிடமிருந்து வரவேண்டிய கடன்களையும் வெளிப்படுத்திக் காட்டவேண்டும் (பி. 370).

**ஆ) கொடுக்கப்பட்ட கடன்கள்:** இதில் துணை நிறுமங்களுக்குக் கொடுக்கப்பட்ட கடன்கள், மாற்றுச்சீட்டு (Bill of Exchange), பணமாகவோ வேறு விதமாகவோ திரும்பப் பெறக்கூடிய முன் பணம் எடுத்துக்காட்டாகக் கட்டணங்கள், வரிகள், காப்பீடு முதலியன; நிருவாக முகவருடன் அல்லது செயலர் -கருவூலருடன் உள்ள நடப்புக் கணக்கிலுள்ள இருப்புகள், சுங்கத் துறையிடமுள்ள அல்லது துறைமுகக் காப்பிலுள்ள இருப்பு முதலியன (கேட்கும்போது பெறக்கூடியவையாயிருந்தால் மட்டும்); இன்னும் தொடக்கச் செலவுகள் போன்ற பிறவகைச் செலவுகளும், இயல்புகளும் காட்டப்பட வேண்டும்.

**பொறுப்புகள்:** இருப்புநிலைக் குறிப்பில் 'பொறுப்புகள்' என்னும் பகுதியில் முதற்பிரிவு பங்கு

மூலதனமாகும் (Share Capital). இதில் அனுமதித்த முதல், வெளியிட்ட முதல், ஒப்பிய முதல் போன்ற பல வகுப்பு மூலதனத்தையும் விரிவுபடுத்திக் காட்ட வேண்டும். எடுத்துக்காட்டாகச் சாதாரணப் பங்குகள், சலுகைப் பங்குகள் இவற்றின் மேல் செலுத்திய தொகை, மீட்கக்கூடிய சலுகைப் பங்குகளாயின் மீட்பதற்குரிய நிபந்தனைகள், ஊக்கத்தொகைப் (Bonus) பங்குகள் முற்றிலும் செலுத்தப்பட்ட பங்குகளாக வெளியிட்டிருப்பின் அதற்கான விவரங்கள், நிருவாக முகவரிடமிருந்து அல்லது செயலர்-கருவூலரிடமிருந்து வரவேண்டிய செலுத்தப்படாத அழைப்புப் பணம், பறிமுதல் செய்யப்பட்ட பங்குகளின் தொகை போன்ற விவரங்கள் தனித்தனியாகக் குறிப்பிடப் பட்டிருக்க வேண்டும்.

அடுத்ததாகக் காப்பிருப்புகளும் உபரியும் (Reserves and Surpluses) என்ற பிரிவில் காப்பிருப்புகளின் இயல்பும், தொகையும் (ஆதாய நட்டக்கணக்கில் ஏதேனும் மிகுபற்று இருந்தால் கழிக்கவும்), கடன் கழிவுநிதி போன்ற குறிப்புகளும் அடங்கியிருக்க வேண்டும்.

காப்புள்ள கடன்கள் (Secured loans) என்ற பிரிவில் கடன் பத்திரங்கள், வங்கிகளிடமிருந்து பெற்ற கடன்கள், துணை நிறுமங்களிடமிருந்து பெற்ற கடன்கள், இதர கடன்கள் முதலியவை அடங்கும்.

காப்பற்ற கடன்கள் (Unsecured loans) என்ற பிரிவில் மாறா வைப்புகள், துணை நிறுமங்களிடமிருந்து பெற்ற கடன்கள், வங்கிகளிடமிருந்தும் பிறரிடமிருந்தும் வாங்கிய குறுகிய காலக் கடன்கள், பெற்ற மற்றக் கடன்கள் முதலியவை அடங்கும். இதில் இருப்புநிலைக் குறிப்பின் நாளிலிருந்து ஓர் ஆண்டிற்குள் திருப்பித் தர வேண்டிய கடன்களையே 'குறுகிய காலக் கடன்களுடன்' சேர்க்க வேண்டும்.

**நடப்புப் பொறுப்புகளும் ஒதுக்கீடுகளும்** இப் பிரிவில் குறிப்பாக ஏற்புகள் (Acceptances), பலவகைப் பட்ட கடனீந்தோர்கள், துணை நிறுமங்கள், வரிகளுக்கான ஒதுக்கீடுகள், ஆதாய ஈவுகள் போன்றவை அடங்கும்

ஒதுக்கீடுகள் (Provisions) என்ற பிரிவில் ஐயப்பாடானபொறுப்புகளுக்கும்,சேமநல நிதித்திட்டத்திற்குக் காப்பீடு, ஓய்வு ஊதியம் போன்ற ஊழியர்களின் திட்டத்திற்கு ஒதுக்கீடுகள் போன்றவை அடங்கும்.

இருப்புநிலைக் குறிப்பிலோ, ஆதாயநட்டக்கணக்கிலோ அதனோடு சேர்க்கப்பட்ட அல்லது ஒட்டப்பட்ட எந்த வொரு பத்திரத்திலோஎந்த விவரங்களை யாவது சேர்க்க வேண்டியிருப்பின் அப்பொறுப்புகள் யாவும் அத்தொடர்பு கொண்ட நிறுமத்தின் அதிகாரியையேசாரும். இது குறித்து எவரேனும் வேண்டுமென்றே தவறினால் ஆறுதிங்கள் சிறைத் தண்டனைக்கும் அல்லது உரு. 5,000/-வரை தண்டத்தொகை செலுத்துவதற்கும் அல்லது இருவித தண்டனைக்கும் உள்ளாவார்கள் (பி.221). இருப்புநிலைக் குறிப்புடன் அவையின் அறிக்கையும், தணிக்கையாளரின் அறிக்கையும் ஒட்டப்பட்டு (Attached) ஆதாய நட்டக் கணக்கும் இணைக்கப்பட (Annexed) வேண்டும். (பி.216)

பி.ச.

**துணை நூல்:**

Kuchhal, M.C., Mercantile Law, Vikas Publishing House Pvt. Ltd., New Delhi, 1981.

***நிறுமக் கலைப்பு***: ஒரு நிறுமத்தின் செயற்பாட்டைமுடித்து அதன் சொத்துகளைக்கடனீந்தோர்களுக்கும் உறுப்பினர்களுக்கும் பயன்படுத்துவதே நிறுமக் கலைப்பு (Company Winding Up) ஆகும். நிருவாகத்தை இயக்குநர்களிடமிருந்து எடுத்து, கலைப்பாளர் ஒருவரை நியமித்து, அவர் மூலம் அந் நிறுமத்தின் சொத்துகளை விற்றுப் பணமாக்கி, அதன் கடன்களைத் தீர்த்துவிட்டுப் பாக்கியைப் பங்குதாரர்களிடமே கொடுப்பது நிறுமக்கலைப்பு என்று கூறப்படுவதும் உண்டு.

நிறுமத்தைக் கலைப்பதற்குரிய காரணங்கள் பலவாகும். நட்டத்தில் நடந்து கொண்டிருந்தால் தான் நிறுமம் கலைக்கப்படும் என்பது அவசிய மில்லை. எடுத்த தொழிலை நடத்தி முடித்துவிட்டாலும் நிறுமம் கலைந்துபோகலாம்; குறிப்பிட்ட காலத்திற்குத் தொழிலாற்ற ஏற்படுத்திய நிறுமம் அக்காலம் முடிவுற்றதும் கலைக்கப்பட்டு விடலாம்; இருக்கும் நிறுமத்தைக் கலைத்துவிட்டுத் திறமையான நிருவாகத்தின் மூலம் அதிக அதிகாரங்களுடன் அல்லது நோக்கங்களுடன் புதிதாக மறுபடியும் பதிவு செய்யும் பொருட்டும் நிறுமக் கலைப்பை மேற்கொள்ளலாம்; நிறுமம், தன் கடன் தீர்க்கும் நிலையைத் தாண்டி நொடிக்கும் நிலையிலிருந்தாலும் கலைப்பு நடவடிக்கை மேற்கொள்ளப்படும். ஆனால், நிறுமக் கலைப்பிற்கும், நொடிப்பிற்கும் வேறுபாடுண்டு. முதலாவதாக, நொடிக்கும்போது நொடித்தவரின் முழுச்சொத்துகளும் (சட்டப்படியானதும், நியாயமானதும்) அவரது பிடியிலிருந்து எடுக்கப்பட்டு அவரின் நம்பிக்கை யாளரிடத்தில் கொடுக்கப்படும்; ஆனால், நிறுமம் கலைக்கப்படும் பொழுது விற்கப் பட்டிருந்தாலொழிய அந் நிறுமம் கலைக்கப் படும் வரை அதன் உரிமையாளரிடமே இருக்கும். இரண்டாவதாக, நொடிப்புச்சட்டத்திலுள்ள'நம்பிக்கை உரிமை' (Reputed Ownership) என்னும் பிரிவு நிறுமக்கலைப் பில் பயன்படுத்தப்படுவதில்லை.

**நிறுமக் கலைப்பின் வகைகள்:** நிறுமச் சட்டத்தின் 25-ஆம் பிரிவின்படி, ஒரு நிறுமத்தைப் பின் வரும் மூன்று முறைகளில் எவையேனும் ஒன்றின் மூலம் கலைக்கலாம். அவை: 1) நீதிமன்றத்தால் கலைப்பு. இது கட்டாயக் கலைப்பு (Compulsory Winding Up) என்று வழங்கப்படும். 2) தன் விருப்பக் கலைப்பு (Voluntary Winding Up) நீதிமன்றம் தலையிடாமல் கலைப்பு ஏற்படுவது. 3) நீதிமன்றத்தின் பார்வையின்கீழ்க் கலைப்பு (Winding Up Subject Supervision of Court) என்பன.

**கட்டாயக் கலைப்பு:** நீதிமன்றத்துக்கு விண்ணப்பம் செய்ததன்பேரில் அந்நீதிமன்றத்தால் நிறுமம் கலைக்கப்பட்டால் அது கட்டாயக் கலைப்பு எனப்படும். பின்வரும் காரணங்களினால் ஒரு நிறுமம் கட்டாயமாகக் கலைக்கப்படலாம் (பி.433). அவை:

1) நிறுமம், நீதிமன்றத்தால்தான் கலைக்கப்பட வேண்டுமென்று சிறப்புத் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டிருந்தால், இம்முறையில் நிறுமத்தைக் கலைக்கும்பொழுது அதன் உறுப்பினர்கள் தங்களின் உரிமைகளுக்குக் குரல் கொடுக்க முடியுமாதலால் இதுவே சிறந்ததாகும். மேலும், இம்முறை மிகச் சிக்கனமானதும் துரிதமானதும் ஆகும். ஆனால், இம்முறையில் செய்யப்படும் கலைப்பு, நிறுமத்திற்கு அல்லது பொது மக்களுக்குத் தீங்கு விளைவிக்கக் கூடுமென நீதிமன்றம கருதினால் அது தன் விருப்ப அதிகாரத்தைப் பயன்படுத்தாது.

2) சட்டமுறைக் கூட்டம் அல்லது சட்டமுறை அறிக்கையைப் பதிவாளரிடம் சேர்க்கத் தவறியிருந்தால் அக்காரணத்திற்காகப் பதிவாளர் அல்லது வழங்கக் கடமைப்பட்டவர்களுள் ஒருவர் நீதிமன்றத்துக்கு விண்ணப்பிக்கலாம்.

3) பதிவான நாளிலிருந்து நிறுமம் ஓராண்டுக்குள் தொழிலைத் தொடங்காவிட்டாலும் அல்லது ஓராண்டு முழுதும் தொழிலைநிறுத்தி வைத்திருந்தாலும், தன் தொழிலைத் தொடங்கவேண்டுமென்ற எண்ணம் நிறுமத்திற்கு இல்லையென்றாலும் அல்லது தொழிலைத் தொடங்குவது சாத்தியமில்லையென்றாலும் நிறுமத்தைக் கலைக்கும்படி நீதிமன்றம் உத்தரவிடலாம். ஆனால், தொழிலைத் தொடங்குவதில் முன்னர் ஏற்பட்ட காலக்கழிவைப் பற்றிச் சரியாகத் தெரிவிக்கப் பட்டிருந்தாலும், நியாயமான காலத்திற்குள் நிறுமம் தன்தொழிலைத் தொடங்குவதற்கான வாய்ப்பிருந்தாலும் நிறுமத்தைக்கலைப்பதற்கான தன் விருப்ப அதிகாரத்தை நீதிமன்றம் பயன்படுத்தாது.

4) தனி நிறுமமாக இருப்பின் இரண்டு உறுப்பினருக்கும், பொது நிறுமமாக இருப்பின் ஏழு உறுப்பினருக்கும் கீழே குறைந்துவிட்டால், இவ்வாறு உறுப்பினர்களின் எண்ணிக்கை குறைந்துவிட்ட பின்னரும் நிறுமம் தன் தொழிலை ஆறு திங்களுக்குமேல் தொடர்ந்து நடத்தினால், இக்காலத்திற்குள் நிறுமம் மேற்கொண்ட கடன் பொறுப்புகள் யாவையும் இக்குற்றத்தை அறிந்திருந்தும் உறுப்பினராகத் தொடர்ந்து வந்தவர்களே தனித்தனியாக மேற்கொள்ளவேண்டும் (பி.45).

5) நிறுமம் தன் கடன்களைச் செலுத்தமுடியாமல் போனால், நிறுமத்திற்கு ரூ.500-க்கு மேல் கடனீந்த ஒருவர் தம் கடனைத் திருப்பித் தரும்படி நிறுமத்தைக் கேட்டு, அதன் பதிவு அலுவலகத்திற்கு ஒரு கடிதத்தை அனுப்பிக் கேட்டிருந்த நாளிலிருந்து மூன்று வாரத்திற்குள் பணம் செலுத்தவோ, வேறு ஏற்பாடு செய்யவோ தவறினாலும், கடனீந்தோருக்காக நீதிமன்றத்தால் நிறுமத்தின்மீது விடுக்கப்பட்ட ஆணை நிறைவேற்றப்படாமலிருந்தாலும், நிறுமதால் அதன் கடன்களைச் செலுத்த முடியவில்லையென்பது நீதிமன்றத்துக்குச் சரியென்று தோன்றும் வகையில் நிரூபிக்கப்பட்டிருந்தாலும், பிரிவு 434-இன்கீழ் நிறுமத்தைக் கலைக்கும்படி நீதிமன்றம் கலைப்பு ஆணையைப்பிறப்பிக்கலாம்.

6) நிறுமத்தைக் கலைப்பதே தக்க நியாயமான செயல் என்று நீதிமன்றம் கருதினால் இப்பிரிவின்கீழ் நீதிமன்றத்துக்கு விரிவான அதிகாரங்கள் அளிக்கப் பட்டுள்ளன. ஆனால் 'தக்க நியாயமான செயல்' என்னென்ன என்பது அந்தந்த நிறுமத்தின் அல்லது வழக்குகளின் சூழ்நிலைகளைப் பொறுத்ததாகும்.

**விருப்பக் கலைப்பு:** நீதிமன்றத்தின் முன் வராமலே நிறுமத்தின் உறுப்பினர்களும் கடனீந்தோர்களும் தமக்குள் ஓர் ஏற்பாடு செய்துகொண்டு நிறுமத்தைக கலைக்க முற்படுவதே விருப்பக் கலைப்பின் முக்கிய நோக்கமாகும். அவசியம் ஏற்பட்டால் நீதிமன்றத்துக்கு விண்ணப்பித்து ஆணைகளைப் பெறலாம். குறிப்பிட்ட காலத்திற்கென நிறுமம் ஏற்படுத்தப் பட்டிருப்பின் அக்காலம் முடிவுற்றதும் அல்லது நிறுமச் சங்கச் செயல்முறை விதிகளில் குறிப்பிட்ட நிகழ்ச்சி நடைபெற்றால் நிறுமம் கலைக்கப்படும் என்று குறிக்கப்பட்டு, அக்குறிப்பிட்ட நிகழ்ச்சி நிகழ்ந்ததும் அல்லது சிறப்புத் தீர்மானம் நிறைவேற்றித் தன் விருப்பக் கலைப்பை நிறுமம் வேண்டினாலும் விருப்பக் கலைப்பு ஏற்படலாம். விருப்பக் கலைப்பு இரு வகைப்படும். ஒன்று, உறுப்பினர்களின் விருப்பக் கலைப்பு (Member's Voluntary Winding Up); மற்றது, கடனீந்தோர்களின் விருப்பக் கலைப்பு (Creditor's Voluntary Winding Up).

**நீதிமன்றக்கண்காணிப்பின் கீழ்க் கலைப்பு:** தன் விருப்பக் கலைப்புக் கோரிச் சிறப்புத் தீர்மானம் நிறைவேற்றியுள்ள நிறுமத்தை, நீதிமன்றம் தன் கண் காணிப்பின்கீழ்க் கலைப்பு நடத்த வேண்டுமென்று ஆணையிடலாம். உறுப்பினரோ கடனீந்தோரோ விண்ணப்பித்தால்தான் இவ்வகை ஆணையை நீதி மன்றம் பிறப்பிக்கும் (பி. 522). சட்டப்படி செல்லும் விருப்பக் கலைப்பு ஒன்று இருந்தால்தான் இவ்வகை ஆணையை நீதிமன்றம் பிறப்பிக்கும். விருப்பக் கலைப் பின் நடவடிக்கைகள்சரியானவையல்லவென்றுகடனீந் தோர் ஒருவரால் விருப்பம் தெரிவிக்கப்பட்டால் அவர் நீதிமன்றத்தின் கண்காணிப்பின் கீழ்க் கலைப்பு நடத்துமாறு விண்ணப்பிக்க முடியாது. சிறுபான்மை யோரைத் தகாத வழியில் பயன்படுத்தி அல்லது புறக்கணித்து அல்லது மோசடி செய்து விருப்பக் கலைப்பிற்கான தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாக நீதிமன்றம் கருதினாலும் கண்காணிப்பு உத்தரவைப் பிறப்பிக்காது. நீதிமன்றத்தின் கண்காணிப்பின்கீழ் நடக்கும் விருப்பக் கலைப்பு கட்டாயக் கலைப்புப் போன்றதாகும் (பி.523).

நீதிமன்றத்தின் கண்காணிப்பின்கீழ்க் கலைப்பு நடக்கும்படி நீதிமன்றம் உத்தரவிட்டதும் மற்றொரு கலைப்பாளரையும் நியமிக்கலாம். இறப்பு, பதவி விலகல் அல்லது நீக்கம் காரணமாகக் கலைப்பாளர் பதவியில் ஏற்படும் காலியிடத்தை நிரப்ப நீதிமன்றத் துக்கு அதிகாரமுண்டு. மேலும், பதிவாளர் விண்ணப் பத்தின் பேரிலும் கலைப்பாளரை நியமிக்கலாம் அல்லது நீக்கலாம். விருப்பக் கலைப்பிலுள்ள கலைப் பாளருக்கு உள்ள அதிகாரங்கள், கடமைகள் யாவும் நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்ட கலைப்பாளருக்கும் உண்டு (பி.525). **பி.ச.**

**துணை நூல்:**

**Kuchhal, M.C.,** Mercantile Law, Vikas Publishing House Pvt. Ltd., New Delhi, 1981.

*நிறும வகைகள்:* பொதுவாக நிறுமங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை: 1) **சாசன நிறுமங்கள்:** பழைய காலத்தில் மன்னர்கள் அளித்த சாசனத்தின்படி உண்டாக்கப்பட்ட நிறுமங்களைச் சாசன நிறுமங்கள் (Chartered Companies) என்பார் கள். இவற்றிற்கு எடுத்துக்காட்டு இந்தியாவில் ஆங்கி லேயரால் தொடங்கப்பட்ட கிழக்கிந்திய நிறுமம்.

2) **சட்டமுறை நிறுமங்கள்:** நிறுமங்களுக்கென்றே அரசாங்கம் தனிச்சட்டம் இயற்றித் தோற்றுவிக்கும் நிறுமங்கள் சட்டமுறை நிறுமங்கள் (Statutory Companies)எனப்படும். இவைமத்திய அல்லது மாநிலச் சட்டமன்றங்களால் நிறைவேற்றப்படும் சட்டங் களால் உருவாக்கப்பட்டவை. ஒவ்வொரு சட்டமும் அதனுடைய பிரிவுகளால் செயற்படுத்தப்படுகிறது. இத்தகைய நிறுமங்களுக்கு அமைப்பு முறையேடும், செயல்முறை விதிகளும் இல்லை. அவற்றில் மாறுதல் செய்ய வேண்டுமென்றால் சட்டமன்றம் திருத்திய சட்டம் ஒன்றை நிறை வேற்றவேண்டும். அவற்றின் ஆண்டறிக்கையைப் பாராளுமன்றத்தில் அளித்திட வேண்டும். இந்தியத் தணிக்கைத் துறைத் தலைவரின் மேற்பார்வையில் இந்நிறுமங்களின் கணக்கு தணிக்கை செய்யப்பட வேண்டும். இவை பெரும்பா லும் பொதுத்துறை நிறுமங்களாகவே உள்ளன. இவற் றின் நோக்கம் தொண்டு மனப் பான்மையேயொழிய இலாப மனப்பான்மை அன்று. இவற்றின் பொறுப்பு வரையறுக்கப் பட்டாலும் பெயர்களுக்குப் பின்னால் 'வரையறுக்கப் பட்டது' (Limited) என்னும் சொல் சேர்க்கப்படுவதில்லை. இந்திய மைய வங்கி, பாரத மாநில வங்கி, இந்திய ஆயுள் காப்பீட்டுக் கழகம் போன்றவை இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

3) **பதிவு செய்யப்பட்ட நிறுமங்கள்:** இந்திய நிறுமச் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்பட்ட நிறுமங்கள் (Registered Companies) எனப்படும் இவற்றை நிறு மச் சட்டத்தின் பிரிவுகளும், அமைப்பு முறையேடும், செயல்முறைவிதிகளும் ஒழுங்குபடுத்துகின்றன. இவற் றைப் பங்குகளில் வரையறுக்கப்பட்ட நிறுமம், உறுதி மொழியால் வரையறுக்கப்பட்ட நிறுமம், வரையறா நிறுமம் என்று மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

**அ) பங்குகளால் வரையறுக்கப்பட்ட நிறுமம்:** மிகுந்த அளவில் பதிவு செய்யப்படும் நிறுமங்கள் பெரும் பாலும் பங்குகளால் வரையறுக்கப்பட்ட பொறுப்பு டையனவாக இருக்கின்றன. இந்நிறுவனங்களின் மூல தனம் பல பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும் (Company Limited by Share). ஒருவர் எத்தனை பங்குகள் வாங்குகிறாரோ அத்தனை பங்குகளின் மதிப்பிற்கும் அவர் பொறுப்பாவார். நிறுமத்துக்குக் கடன் ஏற் பட்டு நட்ட மடையும் பொழுது அவர் வாங்கியுள்ள பங்கின் மதிப்பைப் பொறுத்து அவரின் பொறுப்பு அமையும். இவ்வகையான நிறுமங்கள் தங்கள் பெயரின் பின்னால் 'வரையறுக்கப்பட்டது' என்ற சொல்லைத் தவறாமல் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

**ஆ) உறுதி மொழியால் வரையறுக்கப்பட்ட நிறு மம்:** இத்தகைய நிறுமங்கள் ஆதாய நோக்கத்துடன் தோற்றம்பெற்றனவல்ல. அறம், கலை, மதம், மருத் துவம், அறிவியல் போன்றவை வளர்ச்சியடையும் பொருட்டு ஏற்படுத்தப்படுபவை. உறுப்பினர்கள் செலுத்தும் நுழைவுக் கட்டணம், சந்தாத் தொகை போன்றவை இவற்றின் மூலதனமாகும். இங்கு நிறு

மங்களின் கலைப்புச் செலவும், மற்றக் கடன்க ளும் நிற்க ஒவ்வொரு உறுப்பினரும் குறிப்பிட்ட ஒரு தொகையின் அளவு பொறுப்பேற்று உறுதிமொழி அளிக்கின்றனர் (Company Limited by guarantee). மத்திய அரசின் அனுமதி பெற்ற இத்தகைய நிறு மங்கள் தங்கள் பெயர்களுக்குப் பின்னால் 'வரை யறுக்கப்பட்டன' என்ற சொல்லைச் சேர்த்துக் கொள்ளாமலிருக்கலாம்.

**இ) வரையறா நிறுமம்:** பொறுப்பு வரையறுக்கப் படாத நிறுமங்களின் (Unlimited Company) உறுப் பினர்கள் நிறுமங்களின் கடன்களை அடைக்கும் முழுப் பொறுப்பையும் ஏற்கக் கடமைப்பட்டவர்கள். உறுப்பினர்களின் பொறுப்பு இவ்வளவுதான் என்று வரையறுக்கப்படவில்லை. இங்கு உறுப்பினர்கள் நிறு மங்களில் ஏற்படும் கடன்கள் முழுவதையும் தீர்க்க வேண்டும். கடனீந்தோர்கள் உறுப்பினர்கள்மீதுநேரடி யாக வழக்குத் தொடரமுடியாது. கலைப்பிற்குத் தான் ஏற்பாடு செய்யவேண்டும்.இந்தியநாட்டில் இத் தகைய நிறுமங்கள் இல்லை. மேற்கூறிய ஒவ்வொரு வகை நிறுமங்களிலும் பொது நிறுமம், தனி நிறுமம் என்ற பாகுபாடு உண்டு.

**தனி நிறுமம்:** தனி நிறுமம் (Private Company) குறைந்த அளவு இரண்டு மனிதர்களையும், உச்ச அளவு ஐம்பது மனிதர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டுள்ளது. நிறுமங்களில் வேலையிலிருந்தவர் களும், இருப்பவர்களும் மேற்கூறிய உச்ச அளவில் சேர்த்துக்கொள்ளக்கூடாது. தனி நிறுமங்களின் பங்குகளை மாற்றித் தரமுடியாது. பொதுமக்களுக்கு இந்நிறுமங்களின் பங்குகள் கடன் பத்திரங்கள்போன் றவை வழங்கப்படுவதில்லை. தனி நிறுமங்களின் உறுப் பினர்கள் பெரும்பாலும் ஒரு குடும்பத்தைச் சார்ந்த வர்கள் அல்லது அவர்களின் உறவினர்கள் அல்லது நெருங்கிய நண்பர்களாவார்கள். எனவேதான், மேற் கூறிய கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. இங்கு உறுப்பினர்கள் ஒருவரையொருவர் நன்கு அறிந்திருப் பதால் சட்டம் இதன் நிருவாகத்தில் அவ்வளவாகத் தலையிடுவதில்லை. இந்நிறுமங்கள் தம் பெயரின் கடைசியில் 'தனி வரையறுத்தது' (Private Limited) என்ற சொற்களைச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

**அரசு நிறுமம்:** அரசு நிறுமம்(Government Company)என்பதுஇந்தியநாட்டில்மாநில அரசு அல்லது மத்திய அரசு அல்லது இரண்டும் சேர்ந்து தொழில் களை நடத்தத் தொடங்கும்நிறுமங்களாகும். மேலும், இவ்வரசாங்கங்கள்அரசின்நடைமுறைச் சட்டங்களுக்கு உள்ளாகாமல் மற்ற வணிகர்கள் நடத்துவதுபோல் நிறுமச்சட்டப்படி இந்நிறுமங்களை நடத்தி வருகின் றன. பாரத கனரக மின் தொழில் நிறுவனம் (BHEL) நெய்வேலிப் பழுப்புநிலக்கரி நிறுவனம் (Neiveli Lignite Corporation Ltd.)ஆகியன எடுத்துக் காட்டுகளா கும். அரசு நிறுமம், அதன் பங்குத் தொகையில் 51 விழுக்காட்டை மத்திய அரசுக்கோ மாநில அரசுக்கோ கொடுத்திருக்கும் அல்லது இவ்விரு அரசுகளும் 51 விழுக்காடு உள்ள அல்லது அதற்கு மேலுள்ள பங்கு களுக்கு உரிமையுடையனவாக விளங்கும்.



**பிடிப்பு நிறுமமும் துணை நிறுமமும்:** பிடிப்பு நிறு மத்துக்கு (Holding Company) மற்றொரு நிறுமத்தின் பெரும்பான்மை இயக்குநர்களை நியமிக்கும் அல்லது நீக்கும் அதிகாரம் உண்டு. மேலும், மற்றொரு நிறு மத்தின் 50 விழுக்காட்டிற்கு மேற்பட்ட வாக்குரிமை யைக் கட்டுப்படுத்துகிறது; மற்றொரு நிறுமத்தின் பங்குகளில் 50 விழுக்காடு அளவிற்கு மேற்பட்ட பங்குகளைத் தன்வசம் வைத்துள்ளது.

இப்பிடிப்பு நிறுமத்தின் பிடியில் அடங்கியுள்ள மற்ற நிறுமம் துணை நிறுமம் (Subsidiary Company) எனப்படும். எடுத்துக்காட்டாக 'அ' எனும் நிறுமம் 'ஆ' எனும் நிறுமத்தில் உள்ள பத்து இயக்குநர்களில் அறுவரை நியமிக்கும் உரிமை பெற்றுள்ளது. அல்லது முன்னர்க் குறிப்பிட்டுள்ள நிறுமத்தில் சொல்லப் பட்ட நிறுமங்களின் 51 விழுக்காடு வாக்குரிமை பெற் றுள்ளது அல்லது முன்சொன்ன நிறுமங்களில் சொல்லியுள்ள நிறுமங்களின் சாதாரணப் பங்கு மூலதனமான உரு. 10,00,000த்தில் ரூ.6,00,000 மதிப்புள்ள பங்குகளைத் தன் வசம் வைத்துள்ளது. எனவே 'அ' நிறுமம் பிடிப்பு நிறுமம் என்றும் 'ஆ' நிறுமம் துணை நிறுமமென்றும் கூறப்படும்' மேலும் 'அ' நிறுமம் 'இ'நிறுமத்திற்குத் துணைநிறும மானால் 'ஆ' நிறுமம் 'அ',நிறுமத்திற்கு மட்டும் துணை நிறுமமாகாமல் 'இ' நிறுமத் திற்கும் துணை நிறுமமாகும். எனவே 'அ', 'ஆ' நிறுமங்களுக்கு 'இ' நிறுமம் பிடிப்பு நிறுமமாகும்.

ஒரு பொது நிறுமத்தின் துணைநிறுமமாக ஒரு தனி நிறுமம் இருந்தால் அதுவும் பொது நிறும மாகவே கருதப்படும். தனி நிறுமமாக அனுபவித்து வந்த சலுகைகள் போய்விடும். பிடிப்பு நிறுமங்களில் துணை நிறுமம் பங்குகள் பெறும் உரிமை இல்லை. ஒரு பிடிப்பு நிறுமம் தன்னுடைய ஆண்டுக் கணக்கு களுடன் துணை நிறுமங்களின் ஆண்டுக் கணக்குகளின் படியையும் இணைத்து வெளியிட வேண்டும்.

**அயல்நாட்டுநிறுமம்:** வெளிநாட்டில் தோற்றுவிக் கப்பட்டு 1956-ஆம் ஆண்டின் நிறுமச் சட்டத்திற்கு முன் இந்தியாவில் தொழில் தொடங்கப் பெற்றிருந்து பின்னர் அத்தொழிலையே தொடர்ந்து செயலாற் றிக் கொண்டு வரும் நிறுமங்களும், இந்தியாவில் அதன் தொழில் நிறுவப்பட்டால் அந்நிறுமமும் அயல்நாட்டு நிறுமம்(Foreign Company)என்றேகூறப் படும்.

**ஒரு மனிதர் நிறுமம் அல்லது ஒருகுடும்ப நிறுமம்:** ஒரு தனி நிறுமம் குறைந்தது இருஉறுப்பினர்களைக் கொண்டும் ஒரு பொது நிறுமம் குறைந்தது ஏழு உறுப்பினர்களைக் கொண்டும் தொடங்கப்படுகிறது. ஒருவர் தம்முடன் மற்றொரு மனிதரையும் அல்லது ஒருவர் தம்முடன் மற்ற ஆறு மனிதர்களையும் சேர்த்துக்கொண்டால் அப்போது முறையே தனி நிறுமத்தையும் பொதுநிறுமத்தையும் தொடங்கும் தகுதி உடையவராவார். ஒருவர் நிறுமத்தைக் கட்டுப்படுத்தும் அளவிற்குவேண்டிய பங்குகளைத் தாமே வைத்திருப்பாரேயானால் அது 'ஒரு ஆள் நிறுமம்' (One man Company) எனப்படும். சில நேரங்களில் ஒருவர் தம் குடும்ப உறுப்பினர்களைச் சேர்த்துக்கொண்டு நிறுமத்தைத் தொடங்கினால் அது ஒரு குடும்ப நிறுமம்(Family Company)எனப்படும். இங்கு நிறுமம் கூடத் தன் உறுப்பினர்களிடமிருந்து தனித்தியங்கும் தன்மையைப் பெற்றுள்ளது. கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Shukla,**M.C,, A Manual of Mercantile Law,S. Chan &Co. Ltd., New Delhi, 1982.

**Davre,** Sohrae, R.,Mercantile Law, Progressive Corporation Private Ltd., Bombay, 1980.

**நிறும வருமான வரி:** வாணிக நிறுமங்களின் வருவாயின்மீது விதிக்கின்ற வரி 'நிறும வரி' எனப்படும். நிறும வரி (Tax on Corporate Income) பங்குதாரர்கள் தங்களுடைய பங்குக்குக்கிடைக்கின்ற ஆதாயப் பங்கிற்குச் செலுத்தும் வரியிலிருந்து வேறுபட்டதாகும். இந்திய நாட்டில் வருமான வரிச் சட்டத்தின்படியும் நிதிச் சட்டத்தின்படியும் நிறும வரியை விதிக்கின்றனர். இது வருமான வரி முறையின் ஒருங்கிணைந்த வரியாகும், நிறுமங்கள் நிறும வருமான வரியோடுகூடப் பங்கு ஆதாய வரியும், கூடுதல் வரியும் (Sur Tax) செலுத்துகின்றன.

நிறுமங்கள் வட்டி, கூலி, தேய்மானம், செலவு போன்றவற்றைச் செலுத்தியதுபோகப் பெறுகின்ற நிகர வருவாயின் மீது (ஆதாயத்தின் மீது) நிறும வருமான வரியைக் கணிக்கின்றனர். இந்த வரியைச் செலுத்திய பிறகுள்ள ஆதாயத்தையே நிறுமங்கள் தங்களுடைய பங்குதாரர்களுக்குப் பங்கு ஆதாயமாகப் பிரித்துக் கொடுக்கின்றன.

**ஆதரவான கருத்துகள்:** நிறும வருமான வரியை ஆதரிக்கின்றவர்கள் நிறும வருமான வரிவிதிப்பை நியாயப்படுத்திக் கீழ்க்காணும் காரணங்களைக் கூறுகின்றனர்.

**பெறும் நன்மை:** பொது வணிக நிறுமங்கள் நிறும வருமானவரிகளால் சட்டப்படி பல நன்மைகளைப் பெறுகின்றன. சட்டம், நிறுமங்களை ஏற்றுக்கொண்டு அவற்றிற்குத் தனிப்பெயரிலும், முத்திரையிலும் செயற்படுவதைப் போன்ற அதிகாரங்களை வழங்கியுள்ளது. பெரிய வாணிக நிறுமங்கள் அரசின் பொதுச் செலவிலிருந்து எண்ணற்ற நன்மைகளைப் பெறுகின்றன. சான்றாகச் சாலைப் போக்குவரத்து, அஞ்சல், தந்தி, காவல்துறை ஆகியவற்றால் நிறுமங்கள் பெறுகின்ற நன்மைகளைக் கூறலாம். இவற்றிற்காக நிறுமங்கள் வரி செலுத்துவது தேவையாகும்.

**சமுதாயச் செலவு:** அரசின் பொதுச்செலவில் நிறுமங்களின் நன்மைகளுக்காகச் செய்கின்ற செலவு குறிப்பிடத்தக்க அளவிலுள்ளது. ஆதலால், சமுதாயச் செலவைச் சரியாகப் பகிர்ந்துகொள்ள நிறுமங்கள் வரி செலுத்த வேண்டியுள்ளன.

**செலுத்தும் திறன்:** பொது நிறுமங்களிடம் மிகுதியாகச் செலுத்தும் திறன் உள்ளது. ஆதலால் அதனடிப்படையில் அவை வரி செலுத்துவதை ஆதரிக்கலாம்.

**முற்றுரிமைத் தடுப்பு:** நிறுமங்கள் மிகப் பெரிதாக வளர்ந்து முற்றுரிமை நிலையை அடையாமல் தடுப்பதாக நிறும வரி உள்ளது.

**உற்பத்தியை நெறிப்படுத்துதல்:** நிறும வரி மூலம் நிறுமங்களின் உற்பத்தியை நெறிப்படுத்தி நாட்டின் உற்பத்தியைச் சரியான முறையில் செலுத்தமுடிகிறது.

**வருவாய்-வழிமுறை:** பொதுச் செலவுகள் கூடிச் செல்லும் இக்காலத்தில் அரசின் சிறந்த வருவாய் வழிமுறைகளுள் ஒன்றாக நிறும வரி இருக்கிறது.

**ஏற்றத்தாழ்வைக் குறைக்க:** நிறுமங்கள் வருவாய் பெற்றுப்பங்குதாரர்களுக்கு மிகுதியாகப் பகிர்ந்தளிக்கிறபோது, சிலரின் வருவாய் பல மடங்கு கூடுவதால், சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வு மிகுதிப்படுகிறது. இதனை ஓரளவு குறைக்க நிறும வரிகள் துணை செய்கின்றன.

**எதிரான கருத்துகள்:** நிறும வரியை எதிர்ப்பவர்கள் பின்வரும் கருத்துகளைச் சுட்டிக் காட்டுகின்றனர். நிறும வரி உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதன் மூலம் நிறுமப் பங்குதாரர்களின் சேமிப்பு, முதலீடு ஆகியவற்றைப் பாதிக்கின்றது. நிறுமங்கள் இயன்றால் தங்களது வரிச்சுமையின் ஒரு பகுதியை வாடிக்கையாளர்களிடம் மாற்றிவிடவல் லன. அதனால் பொருள்களின் விலைகள் மிகுதியாவதால் நுகர்வோர்கள் பாதிக்கப்படுவார்கள். புதிய நிறுமங்கள் விரிவான வளர்ச்சித் திட்டத்தோடு செயற்படுவதை நிறும

வரி தடுக்கிறது. வருமான வரி தனியாக விதிக்கப்படு வதால் நிறும வரியும் விதிப்பது ஒரே வருவாயின் மீது விதிக்கின்ற இரட்டை வரிகள் போல் தோன்று கின்றது. ஆனால் இக்கருத்தைப் பலர் ஏற்க வில்லை. இதில் கருத்து வேறுபாடுள்ளது.

**விளைவுகள்:** நிறும வரிவிதிப்பின் விளைவுகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம். முதலாவதாக, நிறுமங்கள் தங்களுடைய வருவாயில் ஒருபகுதியைத் தொடர்ந்துமுதலீடு செய்ய விரும்புகின்றன. ஆனால் நிறுமவரி நிறுமங்களின் நிகர வருவாயைக்குறைப்பதன் மூலம்அவற்றின் புதிய முதலீட்டின் அளவையும் பாதிக் கின்றது. இரண்டாவதாக, பொது நிறுமங்களின் வளர்ச்சி பாதிக்கப்படுகிறது.(நிறுமத்தை விரிவுப் படுத்தி மிகுதியாக ஆதாயம் பெற்றால் மிகுதியான வரி செலுத்தவேண்டியிருப்பதால் தனியார் நிறுமங் களின் வளர்ச்சி கெடுகிறது. மூன்றாவதாக, நிறும வரி, நிறுமங்களின் ஆதாயத்தையும் சேமிப்பையும் பாதிக்கிறது. இதனால் பங்குதாரர்களின் வருவாய் குறையச் சேமிப்பும் நுகர்வும் குறைய நேரலாம். நான்காவதாக, நாட்டு வருவாய், வேலை வாய்ப்பு, பொருளாதார வளர்ச்சி ஆகியவற்றை நிறும வரி பாதிக்கிறது.

**இந்தியாவில் நிறும வரி:** இந்தியாவில் தனி ஆள் வருமான வரி விதிக்கின்ற அடிப்படையையொட்டியே நிறும வருமான வரியையும் விதிக்கின்றனர். நிறுமங் களின் வருவாயின்மீது நிறும வருமான வரியும், மேல்நிலை வரியும் விதிக்கப்படுகின்றன. நிறும வரு மான வரியை மொத்த வருவாயின்மீது கணிக்கின் றனர். மேல்நிலை வரியை ஒரே விகிதத்தில் விதிக் கின்றனர். மேல்நிலை வரி விகிதம், உள்நாட்டு வெளி நாட்டு நிறுமங்கள் என்ற அடிப்படையிலும்பெரிய சிறிய நிறுமங்கள் என்ற முறையிலும் வேறுபடு கிறது. இந்திய நிறும வரி மிகவும் சிக்கலானதாக இருக்கிறது.

இரண்டாம் உலகப்போருக்கு முன்னால் நிறும வருமான வரியின் மூலம் அரசுக்கு மிகவும் குறை வான அளவிலேயே வருவாய் கிடைத்தது. இது இப் பொழுது பலமடங்கு கூடியுள்ளது. நிறும வருமான

| ஆண்டு | வருவாய்(உரு.கோடி) |
|---|---|
| 1950-51 | 40.49 |
| 1960-61 | 111.05 |
| 1972-73 | 558.00 |
| 1978-79 | 1459.00 |
| 1986-87 | 5330.00 |

வரி வருவாய் 1939 இல் 2.38 கோடி உருபாயாக இருந்தது. இப்பொழுது அது மேற் குறிப்பிட்டவாறு உயர்ந்துள்ளது. பி.ச.

**துணை நூல்கள்:**

**Richard, A. Musgraul** and **Peggy B.** Musgrave, Public Finance in Theory and Practice, McGraw Hill Book Company, New York, 1983.

**Sundharam, K.P.M.** and **Sundharam E.V.**, Fiscal Economics, Sultan Chand and Sons, New Delhi, 1981.

*நிறுவன உளவியல்*: மனித ஆற்றலை நிரு வகிப்பதில் மக்களைத் திறமையாகப் பயன்படுத்து வது ஓர் இன்றியமையாத சிக்கலாக இருந்துவரு கிறது. ஒரு வேலையை எவ்வாறு நிருவகிப்பது; அதனை எவ்வாறு தொழிலாளருக்குப் பிரித்தளிப் பது; தொழிலாளர்களை எவ்வாறு தேர்வு செய்வது, பயிற்சியளிப்பது, நிருவகிப்பது; நீண்டகாலம் பயன் தரும் வகையில் ஒழுங்குணர்வும் திறமையும் இருந் திட எவ்வாறு 'பரிசளிப்பும் தண்டனையும்' என்ற செயற்பாட்டினையும் தொழிற் சூழல்களையும் ஏற் படுத்துவது; மாறிவரும் சுற்றுப்புறச் சூழலுக்கும், தொழில்நுட்பச் சீரமைப்புகளுக்கும் தக்கவாறு நிறு வனத்தை எவ்வாறு மாற்றியமைப்பது; பிற நிறு வனங்களின் அல்லது ஒரு நிறுவனத்திலுள்ள பல குழுக்களின் போட்டியினையும் இடையூறுகளையும் எவ்வாறு சமாளிப்பது என்பன போன்ற வினாக்கள் ஒவ்வொரு நிறுவனத்திலும் அடிப்படையாக இருக் கின்றன. இத்தகைய வினாக்களைத் தங்களின் ஆய்வு களின் வழியாகத் தீர்வுகாண்பதில் உளவியலார்கள் பெரிதும் ஆர்வம் காட்டி வருகின்றனர். உளவியலார் தொழிலாளர்களை அளவீடு செய்து தேர்வு செய் வதில் பெரிதும் நாட்டம் கொண்டுள்ளனர். ஆனால், ஒரு நிறுவனத்தின் ஒட்டுமொத்த நலம், நிகழ்ச்சிகள் ஆகியவற்றில் மிகுதியாக நாட்டம் செலுத்துவ தில்லை. ஒரு தொழிலாளரிடம் எத்தகைய பண்பு களை ஒரு நிறுவனம் எதிர்பார்க்கின்றதோ அவற்றை அறிவியல் அடிப்படையில் அளவீடு செய்து தேர்வு செய்வதில் உளவியலார் முனைப்புக் காட்டுகின்றனர். அடைந்திட வேண்டிய குறிக்கோள்களை நிறுவனம் ஏற்படுத்துகிறது; அதனை அடைந்திட உளவியலார் உதவுகின்றனர்.

ஒரு பணியினைக் கட்டமைத்து நிருவகிப்பதில் ஒழுங்கு முறையினை நிலைநாட்டிட முயற்சி செய் வதன் மூலம் உளவியலார் நிறுவனம்சார் சிக்கல்களை ஆய்வதிலும், தீர்வு காண்பதிலும் நிறுவனத்தோடு

நெருங்கிச் செயற்படுகின்றனர். ஒரு தனி மனித ஆற்றலின் நிறை குறை; தொழிலாளர்களிடையிலான குழுப்பணியும், ஒருங்கிணைப்பும்; ஒட்டுமொத்த நுட்பத்திறன் ஆகியவற்றை முழுமையாக்கிடும் ஒரு பணியினை ஒவ்வொரு தனிமனிதனுக்கும் அளித்திடுவதற்காகப் பல்வேறு பணிகளின் பண்புகளை ஆராய்வதில் தொழிலக உளவியலார் பொறியாளருடன் இணைந்து செயற்படுகின்றனர். இவ்வாறு போட்டித் திறன் மிக்க பணியாளர்கள் ஒரு பணியினை எவ்வாறு செய்கின்றனர் என்று தீர்மானிக்கும் வகையில், கால அசைவு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. மேலாளர் பணியாளரைச் சிறப்பாகத் தேர்வு செய்தற்கும் பயிற்சியளிப்பதற்கும், பணிகளைத் தரப்படுத்துவதற்குமாகப் 'பணி ஆய்வுகள்' செய்யப்பட்டன. பணிமமனயின் சுற்றுச் சூழல், இரைச்சல், களைப்பு, சலிப்பு, பணிசார்ந்த சூழல்கள் ஆகியன எவ்வாறு ஒரு பணியின் அளவிலும் தரத்திலும் மேலாண்மை கொண்டிருக்கின்றன என்பதைத் தீர்மானித்திட ஆய்வுகள் நடத்தப்பட்டன. மனிதச் செயற்பாட்டினை மேலும் பயன்தரத்தக்க வகையில் ஆய்ந்திடுவதற்கு நிறுவனம் ஒரு பின்னணியாக அமைகிறது.

பணியாளர்களை ஆய்ந்ததின் பயனாக நிறுவனங்கள் கடைப்பிடித்து வரும் 'பரிசளிப்பும் தண்டனையும்' என்ற செயல்முறை பணியாளர்மீது மிகுந்த பயன் விளைப்பதை உளவியலார் கண்டனர். எனவே சம்பளம், பதவி உயர்வு, ஊக்கியாகவும் கற்கும் முறையாகவும் பயன்படும் 'கண்டித்தல்' போன்ற தண்டனை ஆகியனபற்றி உளவியலார் பெரிதும் ஆர்வம் காட்டுகின்றனர். பணியாளர்களின் ஊக்கிகளைப் பற்றி ஆய்ந்த உளவியலார், தாம் கருதியதை விடப்பெரிய அளவில் பணியாளர்களுக்கிடையேயுள்ள உறவில் ஒரு வேற்றுமையைக் கண்டனர். சான்றாக, ஒருவன் எவ்வளவு கடினமாக உழைக்கின்றான் என்பது, அதனால் அவனுக்கு எவ்வளவு பணம் கிடைக்கும் அல்லது அவன் முதலாளி அவனை எவ்வளவு வேலை வாங்குகின்றார் என்பதைவிட அவன் தோழர்கள் எவ்வளவு கடினமாக உழைக்கின்றார்கள் என்பதைச் சார்ந்தே இருக்கிறது எனக் கண்டறியப்பட்டுள்ளது. ஒவ்வொரு நிறுவனத்திலும் பல உட்குழுக்கள் இருக்கின்றன. அவை எவை யெல்லாம் சரியான செயல்கள் என்பதற்கான சொந்தத் தரவீடுகளை ஏற்படுத்திக்கொண்டுள்ளன. எவ்வளவு வேலை, எத்தகைய வேலை செய்வது என்பதுபற்றி இத் தரவீடுகள்தாம் நிருணயிக்கின்றன.

*ஊக்கிகள்* (Motivation), *ஊக்க முறைகள்* (Incentive System), பணியாளர் கோட்பாடுகள், குழுக்களிடைப்பட்ட உறவுகள் ஆகியன பற்றி ஆய்ந்த போது நிறுவனம் ஓர் ஒட்டுமொத்தமான அமைப்பு முறை என்பது கண்டறியப்பட்டது. ஒட்டுமொத்தமாக ஒரு நிறுவனம், ஒரு பணியாளர் அல்லது மேலாளருக்கு, எதிர்வினை புரியக்கூடிய ஓர் உளவியல் அமைப்பாக இருக்கிறது என உளவியலார் கண்டறிந்துள்ளனர். ஒருவர் ஆற்றும் பணியின் அளவும், தரமும் அவர் அந் நிறுவனம் பற்றி கொண்டுள்ள கற்பனை உருவுடன்தொடர்புடையனவேயன்றி பணவூக்கம் அல்லது பணித்தன்மை பற்றியன அல்ல. எந்தவொரு பணியாளரும் ஒரு நிறுவனத்தில் தனியாளாக இல்லை; மாறாகத் தமக்குள்ளே ஒருவருக்கொருவர் ஒற்றுமை, போட்டி அல்லது வேற்றுமையுணர்வு கொண்ட பல்வேறு குழுக்களின் உறுப்பாக இருக்கின்றனர். இந்தக் கணிப்புத்தான் நிறுவன உளவியல் ஒரு தனி அறிவுக் கொள்கையாக நிலைபெற்றிட உதவுகிறது. கி.இரா.

**துணை நூல்கள்:**

Kalb, D.A., Rubin I.M., and McIntyre J.M., Organizational Psychology: An ExperimentalApproach to Organizational Behaviour, Prentice-Hall Inc., New Jersey, 1984.

Schein, E.H., Organizational Psychology, Prentice-Hall of India Pvt. Ltd., New Delhi, 1976.

**நிறுவனத் திட்டம்**: நிறுவனத் திட்டம் என்பது திட்டமிட்ட கல்வி வளர்ச்சிக்கெனக் கண்ட வழிமுறைகளுள் ஒன்று. கல்விவளர்ச்சிக்கான திட்டங்கள், பள்ளிகளின் அடிப்படையில் பயிற்றும் ஆசிரியர்களை உட்படுத்தி அமைய வேண்டும் என்ற கருத்தின் செயற்பாடே நிறுவனத் திட்டம். கொண்டுள்ள நோக்கங்களின் நிறைவினுக்காக உள்ள வளங்களை முழுமையாய், செம்மையாய்ப் பயன்படுத்திக் கொள்ளுதற்கென அமைந்ததே நிறுவனத் திட்டம் (Institutional Planning).

கல்வி வளர்ச்சிக்கான திட்டங்கள் பெரும்பாலும் மேலிருந்தே கீழ்வருகின்றன. நாட்டளவிற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டு, நடைமுறைக்காகக் கீழ் அனுப்பப்படுகின்றன. மாநில அளவிலான திட்டங்களும் நாட்டுத் திட்டங்களின் நடப்பினை ஒட்டியே அமைகின்றன. இவ்வாறாகும் திட்டங்களைத் தீர்வு செய்வதில், இவற்றை நடைமுறைப் படுத்தும் ஆசிரியர்கட்கேதும் பங்கில்லை. இவ்வகைத் திட்டங்கள் தேவைகளின் அடிப்படையில் அமைவதே வளர்ச்சிக்கு வழியாகும். அவ்வாறன்றி ஒதுக்கப்பட்ட நிதியின் பகிர்வாகவே திட்டங்கள் அமையுமானால் பயன் பெரிதாவதில்லை. நல்ல மேலாண்மையில், முடிவுகளைச் செயல்படுத்துவோருக்கும் முடிவுகளைத் தீர்வு செய்வதில் பங்கு வேண்டும். கல்வி வளர்ச்சிக்

கான திட்டங்களைத் தீட்டுவதில் ஆசிரியர்கட்கும் பங்கு வேண்டும். இப்பங்கினைத் திறம்பட ஆற்றத் திட்டங்களைத் தீட்டுவதில் ஆசிரியர்கட்குப் பயிற்சி வேண்டும். பள்ளி வளர்ச்சிக்கான திட்டங்களை அமைத்துச் செயற்படுத்திப் பெறும் பயிற்சி, மாவட்ட அளவில், மாநிலஅளவில், நாட்டளவில் திட்டங்களை அமைக்கப் பெரிதும் உதவும். கல்வி வளர்ச்சிக்கான திட்டங்கள் பள்ளி, மாவட்டம், மாநிலம், நாடு என்ற நான்கு நிலைகளிலும் அமைய வேண்டும். திட்டங்களின் அமைப்புகட்கான அடிப்படைகள் கீழிருந்து மேற் செல்லவேண்டும்; மேலிருந்தும் கீழ்நோக்கி வர வேண்டும். இவ்வாறாகும் இருவழிப் போக்கே நற்பயன் விளைவிப்பதாகும்.

நிறுவனத் திட்டம் இக்கோட்பாட்டினைச் செயற்படுத்த எழுந்தது. கோத்தாரி கல்விக் குழு (1964-66) இத்திட்டத்தினைப் பள்ளிகள் மேற்கொள்ள வேண்டுமெனப் பரிந்துரை செய்தது. பள்ளிகள் அனைத்தும் ஒரே பாங்கில் உள்ளன அல்ல. அவற்றின் வளங்களும் தேவைகளும் மாறுபடுகின்றன. உள்ள வாய்ப்புகளை, வசதிகளை,வளங்களை பலர் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்வதில்லை. நிறுவனத் திட்டத்தின் முக்கிய நோக்கமே, நிறுவனங்கள் தம் நிலையறிந்து, தேவை தெரிந்து, உள்ள வளங்களை முழுமையாய், நலம்பெறப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே.

இந்தியாவில் பள்ளிகள் தம்மிடத்தே உள்ள வளங்களை, சிறப்பாய் மனித வளத்தை, முழுமையாய்ப் பயன்படுத்திக் கொள்வதில்லை. இப்போதுள்ளதைக் காட்டிலும் சற்றே கூடுதலான முயற்சி, ஈடுபாடு, உழைப்பு இவற்றால் மிகப் பல நலன்களை எய்தக் கூடும். திட்டமிடல் என்பது தேவைகளின் பட்டியல் தயாரித்தல் என்றாதல் கூடாது. தேவையே கூடாது என்பதன்று. மேலும் மேலும் பொருளும் பிறவளங்களும் தேடிக் கொண்ட பின்னரே வளர்ச்சி வாய்க்கும் என்ற எண்ணம் முற்றிலும் சரியானதன்று என்பதே உண்மை. தேவைகளைப் பெரிதும் நாடிப் போகாது உள்ள வளங்களைச் சிறப்புறப் பயன்படுத்தி வளர்ச்சி காணுதல் வேண்டும்.

ஒவ்வொரு பள்ளியும் வளர்ச்சிக்கென நீண்டகாலத் திட்டம் இட வேண்டும். இந்நீண்டகாலத்திட்டத்தின் குறிக்கோள்களை ஒட்டி, நாட்டின் ஐந்தாண்டுத் திட்டத்தோடு இணையும் வண்ணம் ஓர் ஐந்தாண்டுத் திட்டமும் வேண்டும். ஐந்தாண்டுத் திட்ட நோக்கங்களை ஒட்டி ஆண்டுத் திட்டங்கள் வகுக்கப்பட வேண்டும். நீண்ட காலத்திட்டம் நாட்டின் பொதுக் கல்விக் கொள்கையின் அடிப்படையில் அமையும். ஐந்தாண்டுத் திட்டங்கள், நாட்டின் பல திட்டங்களை அமைக்க அடிப்படையாதல் வேண்டும். ஆண்டுத் திட்டம் நோக்கங்களின் நிறைவுக்குதவுவனவாதல் வேண்டும்.

நிறைவேற்றுதற்கருமையான பெருமளவிலான பேராசைத் திட்டங்கள் கூடா. திட்டங்களைத் தீர்மானித்தலில் ஆசிரியர்கள் அனைவரும் பங்கு பெறல் வேண்டும். நிறைவு செய்யப்படாத பெருந்திட்டங்களே குற்றமாய்க் கருதப்படும். சிறிய அளவிலாயினும் எய்திய திட்டங்களே ஏற்றமுடையன. பள்ளி, சமுதாய அமைப்பின் ஒரு சிற்றமைப்பே. எனவே பள்ளியின் வளர்ச்சித் திட்டங்களில் சமுதாயத்தினரும் பங்கு பெற வேண்டும்.

பள்ளிக்கான ஆண்டுத் திட்டம், ஆசிரியர்களால் வேண்டுங்கால் உள்ளூர்ச் சமூகத்தினரையும் உட்படுத்தி, ஆண்டு முதலில் பள்ளி திறக்கும்முன் வகுக்கப் பெறும். பள்ளி திறந்த முதல் வாரம், திட்டம் தயாரித்தலுக்காக ஒதுக்கப் பெறும். அப்போது மாணவர்க்குப் பள்ளியில்லை; வகுப்புகள் நடைபெறா. ஆண்டிறுதியிலும் மாணவர் தேர்வெழுதிச் சென்றபின் ஒருவார காலம் ஆசிரியர்கள் கூடி, முடிந்து போன ஆண்டில் நிறைவேறிய திட்டங்கள் பற்றி ஆய்ந்து, எய்தியன யாவை? எய்தாதன எவை? எய்திய தரமென்ன? எய்தாமைக்குக் காரணங்கள் யாவை? என்பனவற்றைக் கண்டறிந்து, வருமாண்டில் எய்துதற்கான அளவில், துறையில் ஏற்ற திட்டங்களை உருவாக்கத் தம்மைத் தயாரித்துக் கொள்ளுவர்.

நிறுவனத் திட்டத்தால் எய்தும் பலன்கள் பல ஆசிரியர்கட்குத் திட்டமிடுதலில் பயிற்சி, தேவையறிந்து திட்டமிடல், உள்ளவளங்களை முழுமையாய்ப் பயன்படுத்தல், பள்ளியின் வளர்ச்சியில் மிகுதியான ஈடுபாடு, பள்ளிகளின் தனித்தன்மையறிந்து அதன் அடிப்படையில் வளர்ச்சித் திட்டங்களை வகுத்தல், தற்சார்பு என்பன அவற்றுள் சில.

பி.எஸ்.பா.

**நிறுவனப் பொருளாதாரம்**: அமெரிக்காவில் 20-ஆம் நூற்றாண்டில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த பொருளியற் கருத்துகள் நிறுவனப் பொருளாதாரம் (Institutional Economics) என்று குறிப்பிடப்படுகின்றன. நிறுவனப் பொருளாதாரக் கருத்துகளைத் தார்சுடைன் வெப்லன் (Thorstein Veblen, 1857-1929), சான். ஆர். காமன்சு (John R. Commons, 1862-1945), மிட்செல் (Mitchel, 1874-1948) என்ற மூன்று அமெரிக்கநாட்டு அறிஞர்கள் விளக்கியுள்ளனர்.

**நிறுவனங்கள்**: 'நிறுவனங்கள்' (Institutions) என்ற கலைச் சொல்லிற்குத் தெளிவான விளக்கத்தைத்

தார்சுடைன் வெப்லன் வழங்கியுள்ளார். இவ்விளக்கத்தின் அடிப்படையிலேயே பிற பொருளியற் கருத்துகளும் கூறப்பட்டுள்ளன. 'நிறுவனங்கள்' என்று குறிப்பிடும்பொழுது அது தொழிற்சாலைகளையோ கட்டடங்களையோகுறிக்கவில்லையென்றும்மாறாகச் சமூகத்தில் காணப்படும் குடும்ப அமைப்பு முறை, சாதிகள், சொத்துரிமை, வரிவிதிப்பு முறை, உற்பத்தி, உறவுநிலை முதலியவற்றையே குறிக்கின்றன என்றும் வெப்லன் கூறியுள்ளார். மேலும் அவர் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்துகள், கொள்கைகள், நம்பிக்கைகள் ஆகியவற்றையும் அவற்றால் தோற்றுவிக்கப்பட்ட வாழ்க்கை முறையையும் பிற அமைப்புகளையும் நிறுவனங்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார். அதாவது நிறுவனங்கள் மக்களின் ஒருமித்த நம்பிக்கையின்மீது கட்டப்பட்டுள்ள சமூக, பொருளாதார அமைப்புகளாகும் என்பது வெப்லனின் கருத்தாகும்.

**நுட்பாட்சியரும் முதலாட்சியரும்:** தொழிற்றுறையின் வளர்ச்சிக்கு நுட்பாட்சியரின் (Technocrats) பங்கினை நன்கு உணர்ந்திருந்தவர்கள் நிறுவனப் பொருளியற் குழுவினர். உற்பத்தி முறையில் புத்தாக்கங்களைக்(Innovations)கண்டு,உற்பத்தியைப் பெருக்கி அடக்கச்செலவைக் குறைப்பதில் நுட்பாட்சியர் முனைப்புடன் செயற்படுவரென்று நிறுவனப் பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். இந்த வகையான அறிவொடுபட்ட சிந்தனையிலும், நடவடிக்கையிலும் முதலாட்சியர் (Capitalists) ஈடுபடுவதில்லை. ஆனால், மிக்க இலாபத்தை மட்டும் ஈட்டுவதில் முதலாட்சியர் குறியாயிருப்பர். அதன் விளைவாக முதலாட்சியருக்கும் நுட்பாட்சியருக்கும் முரண்பாடு தோன்றி வர்க்கப் போராக வடிவெடுக்கிறது என்று நிறுவனப் பொருளியலறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். நுட்பாட்சியரின் தணியாத தாகமும் வங்கிக் கடன்களும் வளத்தை நிருணயிக்கின்றன.

புதிய உற்பத்தி முறைகளைக் கண்டாக வேண்டும் என்று தொழில் நுட்பாட்சியரிடம் எழும் தணியாத தாகம் அவர்களை விடா முயற்சியுடன் உழைத்துப் புத்தாக்கங்களை உருவாக்குவதில் முனைப்புடன் ஈடுபடச் செய்கிறது. இதனால், தொழிற்றுறையில் உற்பத்தி பன்மடங்காகப் பெருகுகிறது. மாறாக நுட்பாட்சியரிடம் சோர்வு தேன்றும் பொழுது உற்பத்தி குறைந்துவிடுவதால், பொருளாதாரத்தில் மந்த நிலை தோன்றுகிறது என்று நிறுவனப் பொருளியலார் விளக்கியுள்ளனர். வங்கிகளின் கடனுதவி, வளர்ச்சிக்குத் தகுந்த நிதி ஆதாரமாகத் திகழ்கிறது. எளிய கட்டுப்பாடுகளுடன் மிகுந்த கடனை வங்கிகள் வழங்கும் பொழுது தொழிற்றுறையில் முதலீடு பெருகி தொழில் வளம் செழிக்கிறது. மாறாக, வழங்கிய கடனைமுனைப்புடன் வசூலிக்க முற்படும் போது தொழிற்றுறையில் மூலதனப் பற்றாக்குறை ஏற்படுகிறது. முடிவில், தொழிற்றுறையில் மந்தநிலை ஏற்பட்டுவிடுகிறது என்று நிறுவனப் பொருளியலார் கூறியுள்ளனர்.

**சுகவாசிகள் பற்றிய கோட்பாடு:** நிறுவனப் பொருளியலார் உழைப்பின் தேவையை நன்கு வலியுறுத்திக் கூறியுள்ளனர். உழைப்பினடிப்படையில் பெறப்படும் வருமானத்தைத்தான் கவனமுடனும் பொறுப்புடனும் மக்கள் செலவிட முனைவர். முன்னோர் சேமிப்பிலிருந்து சேர்க்கப்பட்ட சொத்திலிருந்து பெறப்படும் வருமானத்தை எளியவழி வருமானம் (Easy Income) என்றும்,அவ்வாறு எளியவழியில் பெறப்படுகின்ற வருமானத்தைத் தவறான வழியில்தான் மக்கள் செலவிடுகின்றனர் என்றும் நிறுவனப் பொருளியலார் குறிப்பிட்டுள்ளனர். எளியவழியில் வருமானத்தைப் பெற்று வாழ்க்கை அனுபவிக்கின்றவர்களைச் சுகவாசிகள் என்று நிறுவனப் பொருளியலார் வகைப்படுத்தியுள்ளனர். சுகவாசிகளிடையே(Theory of Leisure Class) நாட்டு வருமானத்தைப் பெருக்க வேண்டும்; சமூகத்தைமுன்னேற்ற வேண்டும் என்ற சமூகப் பொறுப்புச்(Social Responsibility) சிறிதளவுகூட இல்லை. சுகவாசிகள் தங்களுடைய கையிருப்பிலுள்ள பணத்தைச் செலவிடுவதிலும், ஆடம்பர வாழ்க்கை வாழ்வதிலும் தங்களுக் குள்ளாகப் போட்டி போடுகின்றனர். தொலைநோக்கில் பார்க்கும்பொழுது இவ்வகையான போட்டியின் விளைவாகச்சுகவாசிகளுக்கும் நாட்டிற்கும் எவ்விதப்பயனும்ஏற்படுவதில்லை என்றும், சுகவாசிகள் முறையான முதலீட்டின்மீது நம்பிக்கை வைக்காமல் குறுகிய காலத்தில் மிகுந்த ஆதாயத்தைப் பெறுவதையே நோக்கமாகக் கொண்டிருப்பதைச் சுகவாசிகளின் பணம்திரட்டும் பண்பாடு (The Pecuniary Culture of Leisure Class) என்றும் நிறுவனப் பொருளியலார் குறித்துள்ளனர்.

**தொழில் வாரியங்கள்:** முதலாளித்துவ உற்பத்தி முறையின் விளைவாகத் தொழில் வாரியங்கள் (Industrial Corporations) தோன்றுகின்றன என்று நிறுவனப் பொருளியலார் குறிப்பிட்டுள்ளனர். இக்கணிப்புச் சரியானது என்பதற்கு ஆதாரமாக அமெரிக்கப் பொருளாதாரத்தில் ஒவ்வொரு தொழிலிலும் ஒவ்வொரு வாரியம் தோன்றியுள்ளது. மேலும் தொழில் நுட்பத்தில் ஆராய்ச்சியை மேற்கொள்ளுதல், பெரிய இயந்திரங்களை வடிவமைத்து உற்பத்தி செய்வதற்கு உதவிசெய்தல் முதலிய நடவடிக்கைகளைத் தொழில் வாரியங்கள் மேற்கொள்ளுவதால், அவை தொழில் வளர்ச்சிக்குத்துணை செய்கின்றன என்பது நிறுவனப் பொருளியலாரின் கருத்தாகும். அமெரிக்க நாட்டுப் பொருளாதாரத்தைப் பொறுத்த வரையில் இவர்களின் கருத்து முற்றிலும் பொருத்தமாக அமை

கிறது. தொழில் வாரியங்களால் மிக்க ஆதாயத்தைப் பெறமுடியும் என்று தொழிலதிபர்கள் நம்புகிறார்கள். அதன் விளைவாகத்தான் முதலீட்டிலும், தொழில் நுட்ப ஆராய்ச்சியிலும் தொழிலதிபர்கள் ஆர்வம் காட்டுகின்றனர். அதனோடு மக்களுக்குக் குறைந்தவிலையில் பண்டங்களை உற்பத்தி செய்து தரவேண்டும் என்ற சமூக உணர்வு தொழிலதிபர்களுக்கு ஒருபோதும் தோன்றுவதில்லை என்றும் பெருந் தொழிலதிபர்களுக்கும், சிறிய தொழிலதிபர்களுக்கு மிடையே போட்டி தோன்றுவதைத் தவிர்க்க முடியாது என்றும், போட்டியின் முடிவில் திறமையற்ற தொழிலதிபர்கள் தொழிலைவிட்டு வெளியேற வேண்டிய நிலை தோன்றுகிறது என்றும் நிறுவனப் பொருளியலார் குறிப்பிட்டுள்ளனர்.

**தனிமனித சுதந்திரமும் பொருளியற்கொள்கையும்:** நிறுவனப்பொருளியலார் முதலாளித்துவம்,சமதருமம் (Communism), பாசிசம் முதலிய தத்துவங்களின் கூறுகளை ஆராய்ந்து அவற்றுள் சிறந்த தத்துவம் முதலாளித்துவக் கொள்கையே என்று குறிப்பிட்டுள்ளனர். முதலாளித்துவ அமைப்பில் நுகர்பவர்களுக்கும் உற்பத்தியாளர்களுக்கும் முழுமையானசுதந்திரம் வழங்கப்பட்டுள்ளது. பிறவகைத் தத்துவங்கள் தனிமனித சுதந்திரத்தின் முதன்மையை உணரத் தவறிவிட்டன. தனிமனித சுதந்திரந்தான் முன்னேற்றத்தை உருவாக்கும் தூண்டுகோலாக அமைகிறது. இவ்வாறு தனிமனித சுதந்திரத்தைப் பெரிதும் போற்றும்வகையில் கருத்துகளைக் கூறியுள்ள அதேநேரத்தில், தொழிற்சங்கங்கள் தொழிலாளர்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தப் போராட வேண்டும் என்ற கருத்தையும் நிறுவனப் பொருளியலார் கூறியுள்ளனர்.

**திட்டமிடுதலின் தேவை:** திட்டமிடுதலின் பயனை நிறுவனப் பொருளியலார் நன்கு உணர்ந்திருந்தனர். திட்டமிடுதல் என்பது தொழிலதிபர்களோடு நின்றுவிடுவதில்லை; அரசும் திட்டமிட்டாக வேண்டுமென்று மிட்செல் கூறியுள்ளார். அமெரிக்கப் பொருளாதாரத்தை மந்தநிலையிலிருந்து மீட்பதற்காக வகுத்துச் செயற்படுத்தப்பட்ட புதிய பொருளாதாரக் கொள்கையின் (New Deal policy) கூறுகளை மிட்செல் பெரிதும் வரவேற்றார். மக்களின் பொதுவான நலனைப் பேணும்வகையில் திட்டமிடுவதை மிட்செல் சிறந்த திட்டமென்று குறிப்பிட்டுள்ளார். பொதுவான நலன் என்று குறிப்பிடும்பொழுது வெறும் உற்பத்திப் பெருக்கத்தை மட்டும் குறிக்காமல், மக்களுக்கு நேரடியாகப் பயனளிக்கக்கூடிய நடவடிக்கைகளைக் கொண்ட திட்ட அணுகுமுறையினையே மிட்செலும் மற்ற நிறுவனப்பொருளியல் அறிஞர்களும் வலியுறுத்தியுள்ளனர்.

**பொருளாதார ஆய்வுமுறையின் தன்மை:** நிறுவனப் பொருளியலாரின் கருத்துப்படி ஒவ்வொரு நாட்டிலும் நிலவும் சமுதாய அமைப்பின் அடிப்படைக் கூறுகளையும், ஒவ்வொரு நாட்டு வரலாற்றுப் பின்னணியையும் நன்கு கற்றறிந்தபின்னரே பொருளாதார ஆய்வை மேற்கொள்ள வேண்டும். பணத்தைச் செலவிடும் தன்மை, வங்கித் துறையின் செயல்திறன், நுட்பாட்சியரின் திடநம்பிக்கை, தொழிலதிபர்களின் போக்கு, தொழிலாளரின் நிலை முதலிய கூறுகளின் அடிப்படையில்தான் சமூக, பொருளாதார அமைப்புகள் தோன்றி வளர்கின்றன. இக் கூறுகளைத் தனித் தனியே ஆராயாமல் பொருளாதார ஆய்வை மேற்கொள்ளுதல் முடியாது என்று நிறுவனப் பொருளியலார் கூறியுள்ளனர். ஆய்வின் முடிவில் கண்டறியப் படும் உண்மைகள் குறிப்பிட்ட காலத்திற்கும், குறிப்பிட்ட இடத்திற்கும் மட்டுமே பொருந்துபவை என்றும் நிறுவனப் பொருளியலார் குறிப்பிட்டனர். கொள்கைகளின் வெற்றி தோல்வியைப் பற்றி மக்கள் கருத்துகளின் வலிமையைச் சோதனை செய்தபின்னர்தான் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் நிறுவனப் பொருளியலார் கூறியுள்ளனர். மக்களின் மனத்தின் கண் பொதிந்துகிடக்கின்ற பல்வேறு வகையான உள்ளுணர்வுகளும்,குறிக்கோள்களும் (Instincts and Motives), பொருளாதார ஆய்விற்கு மிக முக்கியமான கூறுகளாகும். அவற்றை அளவிட்டு அறிந்துகொள்ள முடிவதில்லை (Not Measurable) என்று கருதினார்கள் நிறுவனப் பொருளியலார். மேலும் சமூக, அரசியல், பொருளாதார அமைப்புகள் படிப்படியாகத் தொன்றுதொட்டு வளர்ந்தவையாகும் (Evolutionary) என்ற முடிவிற்கு நிறுவனப் பொருளியலார் வந்துள்ளனர். சு.வெ.பா.

**துணைநூல்கள்:**


**Newmon, Philips Charles**, The Development of Economics, Prentice Hall, New York, 1952.

**Overton H.Taylor**, A History of Economic Thought, McGraw Hill Book, Co., Inc., Kogakusha Co. & Ltd., Japan, 1956.

**Schumpeter J.A.**, History of Economic Analysis, Oxford University Press, New York,1954.

**Scott, William A.**, The Development of Economics, Oxford Press, 1953.

**Spiegel, Henry Wlliam (ed)**, The Development of Economic Thought:Great Economists-Perspective, John Wiley & Sons, 1952.


*நிறுவனம் (சமூகவியல்)* :தனி மனிதனும் மனித சமூகமும் நிலைத்து வாழ்வதற்கு மனிதர்

களுக்கு என்று விதிக்கப்பட்ட பணிகள் நடந்தேயாக வேண்டும். இனப்பெருக்கத்திற்கான செயல்முறையை ஒரு கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பது இப் பணிகளில் முக்கியமான ஒன்றாகும். ஒவ்வொரு சமூகமும் அதற்கான உறுப்பினர்களை உருவாக்குவதோடன்றி அவர்கள் நல்லமுறையில் வாழ்வதற்குத் தேவையான சூழலை ஏற்படுத்தித் தரவும் வேண்டும். அவர்களுக்கு வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றும் வழிமுறைகளை உருவாக்கித் தரவும் வேண்டும். மேலும், உறுப்பினர்களின் செயல்கள் சமூகத்தின் மேம்பாட்டுக்கு அன்றி அவை வீணாகாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும். சமூகத்தில் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலவ ஓரளவாவது பொறுப்பேற்க வேண்டும். அதாவது, தனியார் சண்டைகளினால் உயிர், உடல், உடைமை ஆகியவற்றிற்குப் பங்கம் விளைவிக்காமல் பாதுகாக்க வேண்டும். சிறந்த செயல்களைப் பற்றிய அறிவை வளரும் சந்ததியினருக்குக் கற்றுத் தரவேண்டும். கடைசியாகச்சில வினாக்களுக்கு விடைகளைக் கண்டு அறிந்துகொள்ளும் ஆற்றலை வளர்க்கவேண்டும். அதாவது 'வாழ்க்கை என்பதன் பொருள் என்ன? மரணத்திற்குப் பின்னர் என்ன நடக்கும்? பிறப்புக்கு முன்னால் எங்கிருந்தோம்?என்பன போன்ற வினாக்கள்.

மனித சமூகங்கள் எல்லாவற்றிற்கும் மேற்கண்ட கடமைகள் உண்டு. ஏனென்றால், எந்தவொரு குழுவும் உயிர்வாழ அவை தேவையான அடிப்படைகள் ஆகின்றன. ஒவ்வொரு சமூகமும் மேற்குறிப்பிட்ட பணிகளைத் தங்களுக்குத் தகுந்த வழிமுறைகளை வகுத்துக்கொண்டு செய்கின்றன. சிறு குழந்தைகளைப் பாதுகாக்கவும், அவர்கள் பெரியவர்களாகும் வரை பேணவும் எல்லாச் சமூகத்திலும் குடும்பம் என்கிற நிறுவனம் (Institution) அடிப்படையாக உள்ளது. ஒவ்வோர் உறுப்பினருக்கும் வேண்டிய உணவு, உடை, உறைவிடம் ஆகியவற்றைப் பெறப் பொருளாதார நிறுவனம் உள்ளது. குழந்தைகள் தேவையான அறிவும் பயிற்சியும் பெறவும் சமூகத்தோடு ஒன்றி வாழவும் கல்வி நிறுவனம் உள்ளது. கடைசியாக, புலன்களால் மட்டுமே அறிந்துகொள்ள முடியாதவற்றை விளக்குவதற்கு ஒவ்வொரு சமூகத்திலும் ஏதாவது ஒரு வகையிலான சமய நிறுவனம் உள்ளது. இவைதாம் எந்தவொரு சமூகத்திலும் காணப்படும் அடிப்படையான நிறுவனங்கள். அமைப்புகள் மாறுபட்டாலும் அடிப்படை ஒன்றுதான. ஒவ்வொரு நிறுவனத்திற்கும் பலநாட்டார் வழக்குகள் (Folkways), வழக்கடிப்பாடுகள் (Mores), சட்டங்கள் (Laws) முதலியன வகுக்கப்பட்டு அவை உறுப்பினர்களால் கடைப்பிடிக்கப்பட வேண்டுமென எதிர்பார்க்கப்படுகின்றன. ஏனென்றால் அவை வாழ்க்கையை எளிதாக்குகின்றன.

எந்தவொரு குறிப்பிட்ட தலைமுறையைச் சேர்ந்தவர்களும் ஏறத்தாழ ஒரே தன்மையான சிக்கல்களையே எதிர்நோக்குகின்றனர். கடந்த காலம்,எதிர்காலம் இவற்றுடன் முறையே தம் பெற்றோர், குழந்தைகள் ஆகியோருடன்மூலம்தொடர்புகொள்கின்றனர். இதனாலேயே நிறுவனங்கள் நிலையாக உள்ளன. இந்தத் தொடர்ச்சியான, ஒழுங்குமுறைக்கு உட்படுத்தப் பட்ட பழக்கவழக்கங்களே நிறுவனங்கள் எனப்படுகின்றன.

தனிமனிதனின் தேவைகளை நிறைவு செய்வதோடு மட்டுமல்லாமல் நிறுவனங்கள் ஒரு சமூகத்திலுள்ளவர்கள் ஒன்றி வாழவும் உதவுகின்றன. ஒவ்வொருவரும் தம் விருப்பப்படியே நடந்து கொள்ளத் தொடங்கினால் சமூகத்தில் குழப்பமும் கலவரமுமே மிகும். குடும்பம் என்றொரு நிறுவனம் இல்லாவிடில் பெற்றோர் கவனிப்பு குழந்தைகளுக்குக் கிடைக்காது. ஏனென்றால் பேணுதல் என்கிற உணர்வு இயற்கையிலேயே வருவதன்று;பெரியவர்களால் கற்றுக் கொடுக்கப்படுவது. பணம் ஈட்டுவதற்கு முறையான வழிகள் இல்லாவிடில் போட்டியும் பூசலும் பெருகிவிடும். கட்டுப்பாடுகள் இல்லாவிடில் வல்லவனுக்கே வாழ்வு என்கிற நிலை ஆகிவிடும். ஆகவேதான் நிறுவனங்கள் சமூகத்தின் அடித்தளம் அல்லது தூண்கள் என்று சொல்லப்படுகின்றன.

மீண்டும் மீண்டும் மேற்கொள்ளப்படும் பழக்கவழக்கங்களே நிறுவனங்கள் எனப்படுகின்றன. நிறுவனங்கள் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை; ஒன்றையொன்று சார்ந்து நிற்பவை. எதுவுமே தனித்து இயங்குவதில்லை. அவற்றின் அமைப்புகளும் செயல்முறைகளும் மாறுதல்களுக்கு உட்பட்டும் மாறுதல்களை எதிர்த்தும் நிலையான போராட்டத்தில் இருக்கின்றன. சமூக உறுப்பினர்கள் நடைமுறையில் இருக்கும் பழக்கவழக்கங்களை மேற்கொள்ளுவதோடு நில்லாமல் புதிய வழிமுறைகளையும் வகுக்கின்றனர். ஆகவே, நிறுவன அமைப்புகள் மாறிக் கொண்டேயிருக்கின்றன. மாறுபட்ட புதிய பழக்கவழக்கங்கள் எளிமையாகவும் ஏற்றுக்கொள்ளப்படும் வகையிலும் இருந்தால் மாறுதல்களைத் தவிர்க்க முடியாது.

முடிவாக, நிறுவனங்கள் என்பவை ஒரு கருத்தேற்றமே; ஒழுங்குமுறைக்கு உட்படுத்தப்பட்ட பழக்கவழக்கங்களே. அவை கண்ணுக்குப் புலப்படாதவை. மனிதனால் உணரக்கூடியவை. வீடு, பள்ளி, கோவில், நீதிமன்றம், சிறைச்சாலை, மருத்துவமனை போன்ற வெறும் கட்டடங்கள் மனிதர்களால் நிரப்பப்பெற்று இயங்கும்போதுதான் அவை உருப்பெறுகின்றன. இவ்வாறுதான் மனிதர்களால்

நிறுவனங்களுக்கும் அவற்றால் மனித நடத்தைக்கும் உருவம் கிடைக்கிறது.

சமூகத்திற்கும் பண்பாட்டிற்கும் இடையே நிலவும் உறவை விளக்கச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது நிறுவனம். பண்பாடு என்பது, மனிதர்களின் எண்ணங்கள் உருவகப்படுவதை மிகவும்பாதிக்கிறது. மனித சமூகத்தில்இயற்கையின் வேட்கையைக் கூடப் பண்பாடு ஒரு கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கிறது. அத்தகைய கட்டுப்பாடு நிறுவனங்களால் செயற்படுத்தப்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு மனிதன் தன் பாலின வேட்கைக்கு முறையான வடிகால் பெறாவிடில் வெளியே தெரியாத, தெரிவிக்க முடியாத இறுக்கத்தால் அவதிப்படுகிறான். சமூகத்தின் ஏற்பு இல்லாத வகையில் வடிகால் தேடினால் அவமானம், குற்ற உணர்வு ஆகியவற்றால் சீர்கேடுறுகிறான். ஆகவேதான் திருமணம் என்கிற நிறுவனம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறுதான் நிறுவனங்கள் மனித நடத்தைக்கு உடன்பாடானதும் நேர்மாறானதும் ஆன ஒப்புதல்களை அளிக்கின்றன.

ஒரு மனிதன் தன் வாழ்நாளில் ஆயிரக்கணக்கான செயல்களைச் செய்கிறான். அவை யாவுமே ஒப்புதல் பெற்றவை அல்லது பெறுபவை எனச் சொல்லமுடியாது. எடுத்துக்காட்டாக, இரு மனிதர்கள் தங்கள் முழு பலத்தோடு மோதிக்கொள்ளும்போது மற்றவர்கள் அவர்களைப் பிரித்துக்கண்டித்து, தேவைப்பட்டால் சட்டத்தின் உதவியோடு தண்டிக்கவும் செய்கிறார்கள். இரண்டு குத்துச்சண்டை வீரர்கள் மோதிக்கொள்ளும்போது அவர்களை இன்னும் வன்மையாகச் சண்டையிட உற்சாகமூட்டுகிறார்கள். இரண்டு இடங்களிலும் இரு மனிதர்களின் நடவடிக்கைகளும் ஒரேதன்மையானவை என்றாலும், பின்னது உடன்பாடான ஒப்புதலும் முன்னது எதிர்மாறான ஒப்புதலும் பெறுகிறது.

**நிறுவனமும் சங்கமும்:** சங்கம் என்பது ஒழுங்கு முறைக்கு உட்பட்ட, நிலையான ஒரு குழு அல்லது அமைப்பு ஆகும். மேலும் தனக்கென்று ஒரு பெயரும் அடையாளமும் கொண்டதாகும். ஆனால் நிறுவனத்தை ஒரு குழு என்று சொல்லமுடியாது. அது ஒழுங்குபடுத்தப்பட்ட, கட்டுப்பாடுகள் நிறைந்த, ஒப்புதல்பெற்ற செயல்முறை ஆகும். சுருங்கக் கூறின், சங்கம்ஒழுங்குபடுத்தப்பட்ட குழு; நிறுவனம் ஒழுங்குபடுத்தப்பட்ட செயல்முறை ஆகும். ஒன்றில்லாமல் ஒன்று இருக்கமுடியாது.

மருத்துவம் என்பது நிறுவனம்.ஆனால் மருத்துவமனை-சங்கம் ஆகும். கல்வி என்பது நிறுவனமானால் கல்லூரி என்பது சங்கம் ஆகும். அதேபோல் போக்குவரத்து. சமயம், அரசியல், வணிகம் இவை நிறுவனங்கள். ஆனால் முறையே புகைவண்டி, கோயில், அரசாங்கம், கடைகள் இவையனைத்தும் சங்கங்கள் ஆகும். சங்கங்களில் உறுப்பினராக முடியும், ஆனால் ஒரு நினவனத்தில் உறுப்பினராக முடியாது. ஏனென்றால் நிறுவனம் என்பது ஒப்புதல் அளிக்கப்பட்ட செயல்முறையே.

மேலும் சங்கம் என்பது, ஏதாவது ஒரு நிறுவனத்தின் குறிப்பிட்ட செயல்முறைக்கு வடிவம் கொடுக்க ஏற்படுத்தப்படுகிறது. குறிப்பிட்ட சங்கம் அழிந்து போனாலும் அதன் நிறுவனம் அழிவதில்லை. எடுத்துக்காட்டாக ஒரு சிற்றூரில் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கவேண்டி ஒரு திண்ணைப் பள்ளிக்கூடம் நிறுவப்பட்டுக்காலப்போக்கில் புதியகல்விக்கூடங்கள் தோன்றியமையால் அந்தத் திண்ணைப் பள்ளிக்கூடம் என்ற சங்கம் மறைந்துபோகலாம். ஆனால் கல்வி எனும் நிறுவனம் மறைவதில்லை. அதேபோல் கோயில் சேதமடைந்தாலும், கல்லூரிகள் மூடப்பட்டாலும், அரசாங்கங்கள் கலைக்கப்பட்டாலும் சமயம், கல்வி, அரசியல் என்கிற நிறுவனங்கள் அழியாமல் தொடர்ந்து நிலை பெற்றிருக்கும் வி.கோ.

**நிறுவனம்(பொருளியல்)** உற்பத்தி,பயன்பாட்டைப் படைக்கிறது. இவ்வுற்பத்தியில் நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு என்னும் காரணிகள் இடுமானங்களாகப் (Inputs) பயன்படுகின்றன. இந்நான்கு காரணிகளும் இணைந்து பயன்பாட்டைப் படைக்கும் ஒரு சின்னத்தை (Device) நிறுவனம் என்பர். ஒரு பண்டத்தை அல்லது பணியை உற்பத்தி செய்யும் அல்லது விற்பனை செய்யும் அமைப்பை, நிறுவனம் (Firm) என எளிமையாகக் குறிப்பிடலாம்.

**பலவகை அங்காடிகளும் நிறுவனங்களும்:** பண்டத்தை அல்லது பணியை நுகர்வோர் மிகப்பலர் இருக்கிறார்கள் என்ற எடுகோளை வைத்துக்கொண்டு, நிறுவனத்தின் எண்ணிக்கையின் அடிப்படையில், அங்காடிகளை விலைக்கோட்பாட்டில் (Price Theory) வகைப்படுத்துவர். நெருக்கமான பதிலிகள் எவையுமில்லாப் பண்டத்தை அல்லது பணியை உற்பத்தி செய்யும் ஒரேயொரு நிறுவனம் இருப்பின் அந்நிலையை முற்றுரிமை அங்காடி (Monopoly) அமைப்பு என்றும், இத்தகைய நிலையில் இரு நிறுவனங்கள் இருப்பின் அந்நிலையை இரு முற்றுரிமை அங்காடி (Duopoly) அமைப்பு என்றும், நெருக்கமான பதிலிகளாகவும் ஓரியல்பு இல்லாதவைகளாகவும் உள்ள பண்டம் அல்லது பணியை உற்பத்தி செய்யும் ஒருசில நிறுவனங்கள் இருந்தால் அந்நிலையைச் சில்லோர் முற்றுரிமை (Oligopoly) அங்காடி அமைப்பு அல்லது ஒருசிலர் முற்றுரிமை அங்காடி என்றும், இத்தகைய

பண்டங்களையும், பணிகளையும் உற்பத்தி செய்யும் பல (many) நிறுவனங்கள் இருக்கும் அங்காடியை முற்றுரிமைப் போட்டி அங்காடி (Monopolistically Competitive Market) என்றும் குறிப்பிடுவர். மேற் குறிப்பிட்ட அங்காடிகள் யாவும் நிறைகுறைப் போட்டி அங்காடிகளாகும் (Imperfectly Competitive Markets). இவ்வங்காடிகளில் உள்ள நிறுவனங்கள் அவைதம் கொள்கைகளுக்கேற்ப விலை, உற்பத்தி அளவு ஆகிய வைகளை மாற்றியமைத்து உச்சநிலை மொத்த ஆதா யத்தைப் பெற முயலுவது இயல்பு. இதற்கு மாறா னது நிறைவுப்போட்டி நிலவும் அங்காடி. ஓரியல்பான பண்டங்களைப் பெரும் அளவில் உற்பத்திசெய்யும் நிறுவனங்கள் உள்ள அங்காடியை நிறைவுப்போட்டி அங்காடி என்பர்.

**நிறுவனங்களின் தேவை, அளிப்புக் கோடுகள்:** நிறைவுப்போட்டி நிலவும் அங்காடியில் ஓரியல்பான பண்ட அலகுகளை உற்பத்தி செய்யும் மிகுதியான நிறுவனங்கள் இருப்பதாலும், ஒவ்வொரு நிறுவன மும் மொத்த உற்பத்தியில் மிகச்சிறியதொரு பங் கையே உற்பத்தி செய்வதாலும் நிறுவனத்திற் கெனத் தனி விலைக்கொள்கை இருப்பதில்லை. அங்காடியில் தேவை அளிப்பிற்குத்தக நிருணயமா கும் விலையை அப்படியே நிறுவனங்கள் ஏற்றுக் கொள்கின்றன. எனவே நிறுவனங்களை விலையை ஏற்றுக்கொள்பவை (Price taker) என்றும், உற்பத்தி அளவைச் சரிசெய்துகொள்பவை (Quantity Adjuster) என்றும் குறிப்பிடுவர். நிறுவனத்தின் தேவைக்கோ டாகிய சராசரி வருவாய்க்கோடும் (Average Revenue Curve), இறுதிநிலை வருவாய்க் கோடும் (Marginal Revenue Curve) படம் 1-இல் காட்டியுள்ள வண்ணம் x அச்சுக்கு இணையான படுகிடைக் கோடுகளாக

வரைபடம்: 1




அமைகின்றன. நிறைவுப் போட்டி தவிரப் பிற வகை அங்காடிகளில் ஓரியல்பான பண்டங்கள் உற்பத்தி செய்யப்படாத காரணத்தாலும், நிறுவனத்திற்கெனத் தனி விலைக் கொள்கை உண்டு என்பதாலும் நிறு வனத்தின் சராசரி வருவாய்க் கோடு மேலிருந்து கீழ் நோக்கிச் சரிந்து செல்லும் கோடாகவும், இறுதிநிலை வருவாய்க் கோடு அதற்குக் கீழ்நிலையில் உள்ளதாக வும் அமையும் (படம் 2-ஐக் காண்க).

வரைபடம்: 2




ஒருசிலர் முற்றுரிமை அங்காடியில் விலை நிருணய அமைப்பு உறுதியற்றமுறையிலானதாக (indeterminate) இருப்பதால் அந்நிறுவனத்தின் தேவைக்கோடு பற்றிய பல உருப்படிவங்கள் குறிப்பிடப்படுகின்றன. பால் சுவீசி (Paul Swaezy) என்பவரின் திருப்பமுற்ற தேவைக்கோட்டு உருப்படிவத்தின்படி சராசரி இறுதி நிலை வருவாய்க்கோடுகள் படம்3-இல் காட்டியுள்ள வண்ணம் அமைகின்றன.

உற்பத்தியளவை அதிகரிக்கும்போது குறிப்பிட்ட தொரு நிலை வரை உற்பத்திச் சிக்கனங்கள் (Economies of Scale) கிடைப்பதால் சராசரி செலவு குறைந்து செல்வதாகவும், பின்னர் இதுமாறாச் செல வாகவும் பின்னர் உற்பத்தி எதிர்ச் சிக்கனங்களால் (Diseconomies of Scale) அதிகரித்துச் செல்வதாயும் படம் 4-இல் காட்டியுள்ளவண்ணம் சராசரிச் செலவு இறுதிநிலைச் செலவுக் கோடுகள் அமைகின்றன. இறுநிலைச் செலவுக்கோடு நிறுவனத்தின் அளிப்புக் கோடாகும்.

வரைபடம்: 3




வரைபடம்: 4




**எச்சத்திறன்:** நிறைவுப்போட்டி அங்காடியில், நீண்டகாலத்தில் போட்டி இயல்பின் காரணமாக எல்லா நிறுவனங்களும், அவற்றின் முழுத் திறனையும் பயன்படுத்தி உற்பத்தியை நிகழ்த்துமாதலால் எச்சத் திறன் (excess capacity) எதுவும் இருக்காது. ஆனால் நிறைகுறைப் போட்டி அங்காடியில் போட்டி இருந் தாலும் நிறுவனத்திற்கெனத் தனி விலைக் கொள்கை இருப்பதன் விளைவாக நிறுவனம், அதன் முழுத் திற னையும் உற்பத்தியில் பயன்படுத்தாது. எனவே எச் சத்திறன் இருக்கும்.

**நிறுவனத்தின் சமநிலை:** நிறுவனத்தின் அடிப்படை நோக்கம் உச்சநிலை மொத்த ஆதாயத்தைப் பெறு வதாகும். இதனைப் பெற நிறுவனம் அதன் இறுதி நிலை வருவாயும், இறுதிநிலைச் செலவும் ஒன்றுக் கொன்று சமமாக இருக்கும் நிலையில் உற்பத்தி யளவை நிலைபெறு கொள்ளச்செய்யும். இதனை நிறுவனத்தின் சமநிலை (equilibrium of firm)என்பர். பல்வேறு அங்காடிகளில் நிறுவனத்தின் சமநிலை யைக் கீழ்வரும் படங்கள் காட்டுகின்றன.

படங்களில் E என்னும் புள்ளிகள் சமநிலையைக் காட்டுகின்றன. நிறைவுப் போட்டி நிலவும் அங்காடி யில் குறுகிய காலத்தில் ஒருசில நிறுவனங்கள் கூடுத லான ஆதாயத்தையும் (படம் 5), இயல்பு ஆதாயத் தையும் (படம் 6), நட்டத்தையும் (படம் 7) பெற லாம். ஆனால் தேவை மாற்றத்திற்கு ஏற்ப அளிப் பும் மாற்றமடையும். நீண்டகாலத்தில் எல்லா நிறு வனங்களும் போட்டியின் விளைவாக இயல்பு ஆதா யத்தை (normal profit) மட்டுமே பெறும் (படம் 8). முற்றுரிமைப் போட்டி நிலவும் அங்காடியில் ஒருசில நிறுவனங்கள், குறுங்காலத்தில் கூடுதலான ஆதா யத்தைப்பெறலாம் (படம் 9); ஒருசில நிறுவனங்கள் குறுங்காலத்தில் இயல்பு ஆதாயத்தை மட்டும் பெற லாம் (படம் 10); நீண்டகாலத்தில் எல்லா நிறுவனங் களும் போட்டி இயல்பின் காரணமாக இயல்பு ஆதா யத்தை மட்டுமே பெறும் (படம்11). முற்றுரிமை நில வும் அங்காடியில் முற்றுரிமை ஆற்றலின் (Monopoly Power) விளைவாக எப்போதுமே நிறுவனம் கூடுத லான ஆதாயத்தைப்பெறும் (படம் 12).

**விலை இணக்கமின்மை:** சில்லோர் முற்றுரிமைப் (Oligopoly) அங்காடியில் நிறுவனங்களிடையே தகாப் போட்டி நிகழும். இதன்விளைவாக நிறுவனங்களின் வளர்ச்சி பாதிக்கப்படும். இத்தகைய கழுத்தறுப்புப் போட்டியின் (Cut-throat Competition) விளைவாக விலை இணக்கமின்மை (Price rigidity) தென்படும். இதனை விளக்கும் பல உருப்படிவங்கள் (Models) பொருளியலில் பயன்படுத்தப்படுகின்றன.

**உச்சநிலை:** உச்சநிலை மொத்த ஆதாயத்தைப் பெறுவதே நிறுவனத்தின் குறிக்கோள் என்ற எண் ணம் பல காலம் வழக்கிலிருந்தது. ஆனால் இக்காலத் தில் நிறுவனத்தின் உரிமையும் நிருவாகமும் தனித் தனியாகச் செயற்படும் நிலை தோன்றியுள்ளதால் நிறுவனத்தின் அடிப்படை நோக்கங்களாகப் பல கருத்துகள் தெரிவிக்கப்படுகின்றன.

**பாதுகாப்பு நாட்டம்:** வேறு எவ்வகை அங்காடி யிலும் இல்லாவிட்டாலும் முற்றுரிமை அங்காடியில் மட்டுமாவது, ஒருசிலர் உச்ச ஆதாய நாட்டம் என்ற எடுகோள் தவறாகத்தான் இருக்கும் என்று குறிப் பிடும் இராத் சைல்டு (Rothechild) என்பார், இத் தகைய அங்காடியில் சீரான, உறுதியான ஆதாயத் தைப் (Secure profit) பெறுவதையே நிறுவனங்கள் விரும்புவனவாகக் குறிப்பிடுகிறார்.

**உச்ச விற்பனை அளவுக் கருத்து:** குறைந்த அள விலானது ஆதாயம் கிடைக்கும் என்ற உறுதி இருக்கு



படம் 5



படம் 9



படம் 6



படம் 10



படம் 7



படம் 11



படம் 8



படம் 12

மானால், இயன்ற அளவு விற்பனையை உச்சநிலைப் படுத்தவே நிறுவனங்கள் விரும்பும் என்று பாமல் (Baumol) குறிப்பிடுகிறார்.

**முழுச் செலவுக் கோட்பாடு:** நிறுவனங்கள் அவை தம் மொத்தச் செலவைக் கணக்கிடுகின்றன; பின்னர்க் குறிப்பிட்டதொரு விழுக்காடு ஆதாயத்தைச் சராசரிச் செலவோடு சேர்த்துக்கொண்டு விலையை அமைக்கின்றன என்பது கால்,கிட்சு (Hall and Kitch) ஆகியோரின் கருத்து. இது 'முழுச் செலவு' அல்லது 'செலவுடன் ஆதாயம்' என்று விலை நிருணயிப்பதைக் குறிக்கிறது.

**மனநிறைவு எடுகோள்:** மிகக் குறைவான ஆதாயத்தைப் பெறுவதைக்காட்டிலும் மனநிறைவு தரக்கூடிய ஆதாயத்தைப் பெறுவதற்கே நிறுவனங்கள் பாடுபடுகின்றன என்ற கருத்தும் குறிப்பிடப்படுகிறது.

**உத்தம நிறுவனம்:** நீண்டகாலச் சராசரிச் செலவுக்கோட்டின் அடிமுனைப் புள்ளியிலிருந்து வரையப்

வரைபடம் 13




வரைபடம் 14




படும் செங்குத்துக்கோடு OX அச்சை வெட்டும் அளவில் (படம் 13, 14-இல் OQ அளவில்) உற்பத்தியை அமைத்துக்கொள்ளும் நிறுவனம், உத்தம நிறுவனம் ஆகும். அதாவது நீண்டகாலத்தில் மிகக் குறைவான சராசரி உற்பத்திச் செலவில் உற்பத்தி செய்யும் நிறுவனத்தை உத்தம நிறுவனம் எனலாம். உத்தம நிறுவனத்தின் அளவு வளம்பறித் தொழில்களிலும் (Extractive industries) மொத்தவணிகத்திலும், சில்லரை வணிகத்திலும் மிகக் குறைவாக இருக்கும். எனவே, இவற்றில் மிகுதியான நிறுவனங்கள் செயற்படும். கனரகத் தொழில், இரும்பு, உருக்குப்போன்ற பொறிசெய் தொழில்களில் உத்தம அளவு பெரும்பாலும் பெரியதாக இருக்கும். எனவே, இவற்றில் ஒருசில நிறுவனங்களே இருக்கும். படம் 13 சிறிய அளவிலான உத்தம நிறுவனத்தையும், படம் 14 பெரிய அளவிலான உத்தம நிறுவனத்தையும் காட்டுகின்றன.

என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**Alfred W. Stonier & Doughlas C. Hegue**, A Text Book of Economic Theory, Longman Group Ltd., London, 1982.

**David W. Peatee** The Dictionary of Modern Economics, Macmillan Company Ltd., London, 1983.

**Koutsoyiannis**, Modern Micro Economics, Macmillan Company Ltd., London. 1932.

***நிறுவனம்சார் நடத்தை:*** தனி மனிதனாலும் குழுக்களாலும் ஆன நிறுவனங்கள் சிறப்புத் திறனுடனும் ஒத்துழைப்புடனும் பொதுக் குறிக்கோள்களை அடைய இயங்குகின்றன. நிறுவனங்கள் அதனுடன் தொடர்பு கொள்வோரின் எண்ணங்கள், உணர்வுகள், செயல்கள் ஆகியவற்றைப்பாதிக்கின்றன. நிறுவனங்களின் வெற்றி, தோல்விகள் நிறுவன ஊழியர்களின் மனப்பாங்கினையும்,ஒத்துழைப்பையும் ஒத்திருக்கும். நிறுவனத்தில் இருந்து கொண்டு ஒருவர் செயற்படுவது அவருடைய ஆற்றல், மனப்பான்மை, நம்பிக்கை, ஆர்வம், நாட்டம், ஆளுமை ஆகியவற்றைப் பொறுத்தது எனினும், தனியாக இயங்குவது என்பது விதிவிலக்கு. நிறுவனங்களின் குறிக்கோள்களை எட்ட மற்றவர்களுடன் ஒத்துழைத்துத்தான் செயற்பட வேண்டும். குழுக்களின் சிறப்பியக்கமானது பயன், வளர்ச்சி, அடிப்படை வசதிகள், கால மாற்றத்தை ஏற்கும் தன்மை, புதுமை நாட்டம், படைப்பாற்றல் போன்றவற்றைப் பொறுத்தது.

நிறுவனம் நிலைத்திருக்க வேண்டும். ஆகவே, ஒவ்வொரு மனிதனும் ஆற்றலுக்கேற்பப் பயனுள்ள

நிலையில் அந் நிறுவனத்தில் ஓரிடத்தை நிரப்பவேண்டும். ஒரு மனிதனுக்கு முழு விடுதலை இருக்கிறது. எனினும், மேற்பார்வையாளர் வரும்போது தன் வேலையின் வளர்ச்சியைக் காட்டத்தான் வேண்டும். சட்டதிட்டங்கள், விதிகள் ஆகியவை மீறப்படும்போது சுட்டிக்காட்டாத மேற்பார்வையாளர்களை ஊழியர்கள் மதிப்பதில்லை.

**தொழில் வாழ்க்கையின் தன்மை:** தொழில் வாழ்க்கையின் தன்மை மனிதாபிமானத் தொழில் சூழ்நிலையை ஏற்படுத்துதல் என்பது வெறுங்கருத்தன்று; வழியும் முடிவும் ஆகும். இதனைக் 'குறிக்கோளும் போக்கும்' எனக் கூறுகிறார் புரூசுவார்மான் (Bruce Warman). எல்லா நிலைகளிலும் மிகுந்த அளவில் ஈடுபடுத்திப் பலன் தருவனவாகவும் மனநிறைவு தரக்கூடியனவாகவுமுள்ள பணிகளைத் தொழில் சூழ்நிலையில் உருவாக்குதல் இன்றியமையாக் குறிக்கோளாகும்.

நிறுவனத்தின் வளர்ச்சியுடன் மக்களின் தேவைகளையும் வளர்ச்சியையும் இணைப்பது இம் முயற்சி. எல்லா ஊழியர்களுக்கும் தொழில் அமைப்பில் திட்டமிடுவதில் சிறு செல்வாக்கேனும் இருத்தல் இன்றியமையாதது. பணிப் போக்கானது ஒவ்வொருவருக்கும் இருக்கும் தொடர்பின் விளைவாக அமைதல் வேண்டும். ஊழியர்களின் சமூகச் சிக்கல்களை நிறுவனத்தார் தெரிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது. அதுபோலவே ஊழியர்களும் நிருவாகிகளைப் பற்றிய தம் மனப்பான்மையை மாற்றிக் கொள்ளுதலும் இன்றியமையாதது. பிரான்சு நாட்டில் ஓரளவிற்கு ஊழியர்கள் நிருவாகத்தில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். செர்மனி, நார்வே, சுவீடன் போன்ற நாடுகளில் தொழிலாளர்களுக்கு நிருவாகத்தில் சம உரிமை தரப்பட்டுள்ளது. யூகோசுலேவியா நாட்டில் சம உரிமை தரப்பட்டுள்ளது. அந்நாட்டில் நிருவாகம், முழுமையாகத் தொழிலாளர்களின் பொறுப்பில் இருக்கின்றது. இருப்பினும், இதுபோன்ற நிறுவன -தொழிலாளர் உறவு பல நாடுகளில் சிறப்பாக இல்லை. இந்தத் தளர்ச்சிக்குப் பல காரணங்கள் உள.

இன்றைக்கும் நிறுவனத்தார் தம் குரல்தான் ஓங்கி உயர்ந்திருக்க வேண்டுமென்ற மனப்பான்மையைக் கொண்டிருக்கின்றனர். தொழிலாளர்களை நியாயமாக நடத்துவது, ஊதிய ஊக்கததொகை அளிப்பது என்பன போன்றவற்றை உணர மறுக்கின்றனர். வேலைக்கேற்ப ஊதியம் என்பது இன்று வரைக்கும் நிகழ்ந்துவிடவில்லை. சம ஊதியம் என்பது பொறுப்பிற்கேற்றாற் போலவும் இருத்தல் வேண்டும். தனிப்பட்டோர் சாதனையைப் போற்றுவது என்பது ஊதியத்தின் வாயிலாக இருக்க வேண்டும். பாதுகாப்பான உழைப்பிடம் என்னும்போது இடப் பாதுகாப்பு மட்டுமல்லாது உள்ளத்திற்கும் பாதுகாப்புத் தேவை. நல்ல ஊக்கத்துடன் விடுதலை, ஈடுபாடு, தன்மானம் ஆகியவை வளர்தலுக்கு வாய்ப்புகள் தேவை. தொழில் வளர்ச்சி என்பது நிரந்தரமான வருவாயுடன் பயிற்சிக்கும் பணி உயர்விற்கும் வாய்ப்பளிக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாகத் தொழிலாளி தனக்கான தனித்தன்மையை வளர்த்துக் கொள்ள வாய்ப்புகள் அமையவேண்டும். பேச்சுரிமை, சமமான பேணிப்பு, தனிக் கருத்துகளுக்கு மதிப்பளித்தல், ஓய்வு நேரத்தைப் பறிக்காதிருத்தல் போன்ற முயற்சிகள் உதவும்.

இந்தச் சிறப்புத் திட்டங்களை நிறைவேற்றுவதில் தடங்கல்கள் இல்லாமலில்லை. நிறுவனத்தார் மனப்பான்மை, தொழிற் சங்கங்களின் சந்தேக நோட்டம், தொழில் பொறியியல் அமைப்பு ஆகியவை ஒத்துவாராதபோதெல்லாம் இத்திட்டம் சிறந்து விளங்க முடிவதில்லை. நிறுவனத்தார் தம் ஆளும் உரிமை பறிபோவதாக எண்ணுகின்றனர். தொழிலாளிகள் பொதுவாகச் சோம்பேறிகள், பொறுப்பில்லாதவர்கள், ஆகவே நேரடிக் கண்காணிப்பிலேயே வைக்கப்பட வேண்டியவர்கள் என்ற எண்ணம் இருந்து கொண்டே வருகிறது. ஊதியத்தில் ஈடு தராமல் தொழிலாளிகளை வேகமாக இயங்கவைத்து நிகர உற்பத்தி ஏற்படுத்துவதற்காக நிருவாகம் செய்யும் தந்திரம்தான் இத்தகைய வளர்ச்சித் திட்டங்கள் என்று தொழிற் சங்கங்கள் நம்புகின்றன. தொழிற் பொறியாளர்கள் செயல்களைப் பிரித்து முனைப்பாக இயங்கத் திட்டமிடுகிறார்களே தவிரத்தொழிலாளர்களுக்கு ஏற்றது எது எனபதுபற்றித் தொழிலாளர்களுடன் சேர்ந்து சிந்தித்துப் பார்ப்பதில்லை. தொழில் உயர் நுட்பங்களில் வரப்போகும் மாறுதல்கள் தொழிலாளிகளுக்கு முன்கூட்டியே தெரிவிக்கப்பட வேண்டும் என்ற தேவையைப் பொறியியல் வல்லுநர்கள் எண்ணிப் பார்க்காது போவது ஒரு பெரும் குறையாகும்.

நிறுவனம்சார் நடத்தை வளர்ச்சி பெற வேண்டுமென்றால் எல்லாவித முயற்சிகளைப் பற்றியும் எல்லா ஊழியர்களும் தெரிந்திருக்க வேண்டும். இம் முயற்சி இன்று சப்பானில் கடமையாக்கப்பட்டு நடைமுறையில் இருக்கிறது. உத்தரவைவிட ஒத்துழைப்பு வேண்டுதல்கள் தாம் பெரிதும் வேண்டப்படுகின்றன. சிறு சிறு முயற்சிகளின் விளைவுகள், மாற்றங்களின் விளைவுகள், வருவாய், ஊக்க ஊதியம், இழப்பு, தோல்விகள், சேமிப்பு ஆகிய அனைத்துமே எல்லோருக்கும் அறிவிக்கப்படுகின்றன.

**மேன்மை நாடும் புதுமை:** அண்மைக்காலத்தில் நிறுவனம்சார் நடத்தையைப் பற்றி மிகுதியாகத்

தெரிந்துகொள்ள வேண்டும் என்ற வேட்கை மக்க ளிடையே மிகுந்திருக்கிறது. குறிப்பாக அமெரிக்கா வும் கனடாவும் தொழில்வளம் பெற்று முன்னேற்ற மடைந்த நாடுகள் எனினும், பொருள்களைப் படைப் பதில் வேகத்தை இழந்துவிட்டன. வட அமெரிக்கா வானது 1967-ஆம் ஆண்டில் 9 விழுக்காடு உந்துவண்டி களை இறக்குமதி செய்தது; ஆனால் 1980-ஆம் ஆண் டில் வெளிநாட்டுஉந்துவண்டிகள்அமெரிக்காவில் 27 விழுக்காடு இறக்குமதிஆயின. அதுபோலவே தென் கொரியா, தைவான் நாட்டுத் துணிகள் குறைந்த விலையில் கிடைக்கப்பெற்றன.

தொழில்நுட்பக் கண்டுபிடிப்புகள் எதுவாயினும் அவற்றைப் பயன்படுத்துவோரின் அறிவுரைகளைக் கேட்டுப் படைத்தால்தான் உயர் தொழில்நுட்பம் நல்ல பயனைத் தரும் என்பது அண்மைக்காலக் கண்டுபிடிப்பு ஆகும். நிருவாகி, கட்டளையிடுவதை மாற்றி ஆசிரியர் போல அன்போடு கற்பிப்பவராக மாறவேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது.

கச்சாப்பொருள் இல்லாது, மலிவான கூலியும் இல்லாது சப்பான் நாடானது பெரிதும் முன்னேறி யிருப்பது வியப்பே. முன்னேற்றத்திற்கான வேறு காரணங்களை நிறுவனம்சார் நடத்தையில்தான் காணமுடியும். அங்கு மூன்றில் ஒரு பகுதித் தொழி லாளர்கள் வாழ்நாள் முழுவதும் உழைக்கலாம். தொடர்ந்து ஓய்வு ஊதியம் (Pension) வாழ்நாள் முழுவதும் தரப்படுவதில்லை. ஓய்வு பெறும்போது. ஆறு ஆண்டுச் சம்பளத்தைப் பெறுகிறார்கள். தொழி லாளியின் வேலைத் தன்மையைத் தாமதித்துத்தான் சீர்தூக்கிப் பார்க்கின்றனர். பொருளின் தரத்தை வளையச் சோதனை என்ற பெயரில் பல குழுக்கள் சோதித்துப் பார்த்தபிறகுதான் அதனை விற்ப னைக்கு வெளியிடுகின்றனர்.

அமெரிக்காவிலும் மிக வெற்றிகரமாக இயங்கு கிற 43 தொழிற் கூடங்களில் நிகழ்த்திய ஆராய்ச்சி யின் அடிப்படையாகச் சில புதிய பரிந்துரைகள் வந் துள்ளன. அவற்றுள் சில பின்வருவன. 1) ஒருவர் ஒரு தொழிலில் ஒரே வகையான வேலையை மட்டும் செய்வது தவிர்க்கப்பட வேண்டும். 2) வேலையை மாற்றியமைக்கும்போதும்' அன்றாடப் பணிகளைத் திட்டமிடும்போதும், தொழிலாளர்களைக் கலந்தா லோசித்தல் வேண்டும். 3) வேலை நேரத்தையும், இடத்தையும் முடிவு செய்யும்போது நிறைய இசை விணக்கம் (Flexibility) இருக்க வேண்டும் 4) புறக் கண்காணிப்பைத் தவிர்த்து அவரவர்களின் பணித் திறனைத் தாமே சோதித்தறிய வாய்ப்பளித்தல் வேண்டும். 5) புதுக் கருத்துக்களைச் செயற்படுத்திப் பார்க்க எல்லோருக்கும் வாய்ப்பளித்தல் வேண்டும். 6) நுகர்வோர் ஆலோசனைகளைச் சோதித்துப் பார்த்தல் வேண்டும். 7) நிறுவன அதிகாரிகள் சாமா னியர்களுடன் நெருங்கிப் பழகி அவர்களுடைய பரிந் துரைகளை ஏற்றல்வேண்டும். 8) எல்லாப் பொறுப்பு களும் ஊழியர்களிடையே பரவலாக்கப்படுதல் வேண்டும். 9) பேரம் பேசுவதற்கும், திட்டமிடுவதற் கும் தொழிற் சங்கங்களுடன் நெருங்கிய புதுத் தொடர்பை ஏற்படுத்துதல் வேண்டும். 10) ஊழியர் களின் உயர் கல்விக்கும், தொழில்நுட்பப் பயிற்சிக் கும் நிறுவனமே பொறுப்பேற்றல வேண்டும் என்பன வாகும். மா.பெ.

**துணை நூல்கள்:**

**Arnold H.J., and Feldman D.C.**, Organisational Behaviour, Mcgraw-Hill Book Co, New Delhi, 1986.

**Bernard C.I.**, Functions of the Executive, Harvard University Press, London, 1976.

**Cameron K.S,. and Whetten D.A. (Eds.)**, Organisational Effectiveness: A Comparison of Multiple Models, Academic Press, New York, 1983.

**Killen K.H,.** Management, Houghton Mifflin Co., Boston, 1977.

*நின்றசீர் நெடுமாற நாயனார்* பெரிய புராணம் சிறப்பிக்கும் அறுபத்து மூன்று நாயன்மார் களுள் ஒருவர். இவர் வரலாறு அந்நூலிலுள்ள கறைக் கண்டன் சருக்கத்தில் பேசப்படுகிறது. இம்மன்னர் திருஞானசம்பந்தர் காலத்தில் மதுரையினை ஆண்ட பாண்டிய மன்னராகையால், ஞானசம்பந்தர் மதுரை மாநகர் சென்றபோது நிகழ்ந்த செயலால், ஞானசம் பந்தரின் பாண்டிப் பயணத்தைக் கூறும் பெரிய புராணப் பகுதியிலும் அந்நூலிலுள்ள மங்கையர்க் கரசியார் புராணத்திலும் இவரைப் பற்றிய குறிப்பு கள் அமைந்துள்ளன. கூன்முதுகுடைமை காரணமாக இவர் கூன்பாண்டியன் எனப்பட்டார். திருஞானசம் பந்தர் தாம் பாடிய பதிகத்தில் 'வேந்தனும் ஓங்குக' என்றருளிச் செய்தமையால்,அரசரின் கூன் நிமிர்ந்தது என்றும், அதனால் அவர் நெடுமாறன் எனப்பட்டார் என்றும் கூறப்படுகிறது. இதனைச் சேக்கிழார், தம்பி ரான் அருளால் வேந்தன் தன்னை முன் ஓங்கப் பாட ...செம்பியன் செங்கோலென்னத் தென்னன் கூன் நிமிர்ந்த தன்றே' என்று (திருஞான. 847) பாடியுள் ளார்.

நின்றசீர் நெடுமாற மன்னர் சைவ சமயம் துறந்து, சமணம் மேற்கொண்டார். பாண்டி நாடும் சமணச்செல்வாக்கிற்பட்டுழன்றது. பாண்டிமா தேவி

மங்கையர்க்கரசியார், அமைச்சர் குலச்சிறையார் ஆகியோர்தம் வேண்டுகோளை ஏற்று ஞானசம்பந்தப் பிள்ளையார் மதுரை சென்றார். சமணர் வஞ்சனையால் எழுந்த தீயினைப் பிள்ளையார் பையவே சென்று பாண்டிய மன்னனை வெதுப்புமாறு ஏவினார். சமணர் முயற்சியால் வெப்பு நோய் தீர்ந்திலது. பிள்ளையாரின் அருளால் மன்னர் நோய் நீங்கப் பெற்ற நிலையில் தம் சமய உயர்வினை நிறுவ விரும்பிச் சமணர் கூறிய அனல், புனல் வாதங்களை ஏற்று, அவற்றில் ஞானசம்பந்தர் வென்று நின்றார். நெடுமாற பாண்டியன் சைவமாட்சியும், நீற்றின் பெருமையும் உணர்ந்து மீண்டும் சைவ சமயஞ் சார்ந்து இறைபணி நிற்கலாயினார்; தம் நாட்டின் மீது படையெடுத்து வந்தவர்களை நெல்வேலிப் போரில் வென்று வாகை சூடினார். இம்மன்னர் சைவச் சீலம் குன்றாது வளர்த்து வந்த தம் மனைவியார் மங்கையர்க்கரசியுடன், 'அரசுரிமை நெடுங்காலம் அளித்து, இறைவர் அருளாலே பரசு பெரும் சிவலோகத்து' இருக்கப் பெறும் பேறு பெற்று விளங்கினார்.

இம்மன்னரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் திருத்தொண்டத் தொகையில், 'நிறைக் கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்' என்று போற்றியுள்ளார். சமணர்களைக், கூர்த்த கழுவின் நுதி வைத்த பஞ்சவன் என்றுரைக்கும், வார்த்தையது பண்டு நெல்வேலியில் வென்ற மாறனுக்கே'என்றுநம்பியாண்டார் நம்பி இவரைச் சிறப்பிக்கின்றார். சைவ சீலத்தின் நீங்காது நின்று தம் கணவனைச் சைவ நெறிக்கு மீளச்செய்த மனைவியும், புறச் சமயம் சென்றுழன்று, உண்மை உணரப் பெற்றுச் சைவ சமயம் மீண்டு சிவத்தொண்டு புரிந்த கணவனும் ஆகிய இருவரும் (மங்கையர்க்கரசியாரும் நின்ற சீர் நெடுமாறனும்) நாயன்மார்களாக அமைந்து விளங்கும் சிறப்புக் குறிப்பிடத்தக்கது.

நின்றசீர் நெடுமாறன் ஞானசம்பந்தர் காலத்தவராதலின் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட பாண்டிய மன்னராவார். ஆய்வாளர் சிலர், இறையனார் அகப் பொருள் உரையில் காட்டப் பெறும் கோவையில் குறிக்கப் படும் அரிகேசரி இம்மன்னரே யாவார் என்று கருதுகின்றனர். மேலும், இம்மன்னர் வேள்விக் குடிச் செப்பேடுகளில் புகழப்பட்டுள்ளார் என்றும், இவர் காலத்தில் யுவான்சுவாங்கு என்னும் சீனப் பயணி பாண்டி நாட்டிற்கு வந்து சென்றான் என்றும் கூறுகின்றனர்.

அ.மா.ப.

**நினிவே** அசிரியர்களின் தலைநகரங்களுள் ஒன்றாக விளங்கிய நகரம். இது நினுசு (Ninus) என்று முன்பு கூறப்பட்டது. இன்றைய ஈராக்கில் மேலை மெசபடோமியப் பகுதியில் அழிபாட்டு மேடுகளுடன் காட்சியளிக்கும் நினிவே (Ninevea), பல்வேறு சிறப்புகளை அசிரியப் பேரரசுக் காலத்தில் பெற்றுத் திகழ்ந்தது. இங்கிலாந்து நாட்டின் தொல்லியல் அறிஞர்கள் இங்கு முறையான அகழாய்வுகளை மேற்கொண்டனர். அவ்வகழாய்வுகள் பல ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்றன. இங்குத் தான் அசிரியர்களின் மிகப் பெரிய சிற்பமும் ஆப்பு வடிவ எழுத்துப் பொறிப்புகள் இருந்த நூலகமும் கண்டுபிடிக்கப்பட்டன.

நினிவே நகரத்தின் அமைப்பினை அகழாய்வுகளால் தெளிவாக அறிய முடிந்தது. இந்நகரம் 13 கி.மீ. நீளமுடையது. இதனைச் சுற்றி இரண்டு மேடுகள் எழுப்பப் பெற்றன. அவற்றுள் ஒன்று நெபி யனுசு (Nebi yunus) என்று கூறப்படுகிறது. இங்குச் சோனா (Jonah) என்பவரின் கல்லறை இருந்தது. வடக்கிலிருந்த மற்றொரு மேடு குயூன்சிக்கு (Kuyunsik) எனக் கூறப்படுகிறது. மெசபடோமியாவின் தொன்மையான மேடுகளுள் இம்மேடே மிகப் பெரியது. இம்மேட்டிலிருந்து 14 கண்டி (Tons) மண்ணை அகழாய்வின்போது வெளியேற்றினர். இந்நகரில் மூன்று அரண்மனைகளும் இரண்டு கோயில்களும் இருந்தமை கண்டுபிடிக்கப்பட்டது. ஊரின் தெற்கில் சென்னாசெரிபு (Sennacherib) அரசரின் அரண்மனையும், வடக்கில் ஆசூர்பானிபல் அரண்மனையும் இருந்தமை அகழாய்வுகளால் வெளிப்பட்டது. இவற்றிற்கு இடையில் இரண்டாம் ஆசூர்பானிபலின் அரண்மனை இருந்தது. காதலுக்கும் போருக்கும் கடவுளாக விளங்கிய இசுதர் (Ishtar) என்னும் பெண் கடவுளுக்கு ஒரு கோயிலும் நாபு (Nabu) என்னும் கடவுளுக்கு ஒரு கோயிலும் இங்கு இருந்தன. பிற கட்டடங்களும் அகழாய்வுகளில் வெளிப்பட்டன. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலேயே இந்நகரம் சிறப்புற்று விளங்கியது. அசுனா (Hassuna) எனக் கூறப்படும் மெசபடோமியத் தொன்மை மட்கலன்கள் இங்கு மிகுதியாகக் கிடைத்துள்ளன. சென்னாசெரிபின் கல்வெட்டுகளும் இங்குக் கிடைத்துள்ளன. அவ்வரசருக்கு முன்பே பல அழகிய கட்டடங்கள் இந்நகரில் இருந்துள்ளன.

ஆப்பு வடிவ எழுத்துப் பொறிப்புகளின் மூலம் நினிவே நகரத்தின் பழமையை அறிய முடிகிறது. அசிரியாவை கி.பி. 1800-ஆம் ஆண்டளவில் ஆட்சி புரிந்த முதலாம் சம்சிஆதாது (Shamshi Adad I) இந்நகரில் இருந்த இசுதர் கோயிலுக்கு உரிமை கொண்டாடினார். பாபிலோனிய அரசர் ஆமுராபியின் ஆட்சியின் கீழும் இந்நகரம் சில காலங்கள் இருந்தது. மிட்டானி (Mitanni) அரசர்கள் கி.மு. 1400 -ஆம் ஆண்டளவில் இந்நகரைத் தங்கள் ஆதிக்கத்திற்கு உட்படுத்தினர். மீண்டும் அசிரியர்களின் ஆட்சிக்

குட்பட்ட இப்பகுதி அவ்வரசர்களின் பல்வேறு நடவடிக்கைகளுக்கு உட்பட்டு விளங்கியது. இவர்களின் கோடை வாழ்விடமாக இந்நகரம் விளங்கியது. சென்னாசெரிபு (கி.மு. 704-681) என்ற அரசரின் காலத்தில் நினிவே அசிரியர்களின் தலைநகராக மாற்றப்பட்டது. எனவே, இந்நகரம் இக்காலகட்டத்தில் பெருவளர்ச்சி பெற்று விளங்கியது. உணவு உற்பத்தியைப் பெருக்கத் தைகிரிசு ஆற்றின் துணை ஆறான கோசர் (Khosr) ஆறு விரிவுபடுத்தப்பட்டது. கால்வாய்கள் பல வெட்டப்பட்டன. பல தோட்டங்களும் வளைவுகளும் மாளிகைகளும் சென்னாசெரிபு காலத்தில் அமைக்கப்பட்டன. மேற்கு நாடுகளின் முக்கிய நகரமாக விளங்கி வந்த இந்நகரத்தைப் பாபிலோனியர்கள் கி.மு. 612-ஆம் ஆண்டளவில் படையெடுத்து அழித்தனர். இந்நகரின் அழிவைப் பல்வேறு இலக்கியச் சான்றுகள் குறிப்பிடுகின்றன. இவ்வழிவிற்குப் பின்னர் இந்நகரத்தின் புகழ் குன்றியது. சு.இரா.

**நினைவிருத்தலும் மீட்டறிதலும்:** சில செய்திகளை நினைவிலிருத்த அவற்றை முதலில் உணர்வுப் பகுதிகளாகக் குறுகிய நினைவிலிருத்தி மீண்டும் மீண்டும் பயில வேண்டும். இக் கட்டத்தில் புதியன புகுமானால் முந்திய செய்திகளைச் சரிபார்ப்பது தடைபடுகிறது. கற்கப்படுவதற்காகப் புதிய செய்தி நினைவில் இருக்கும். குறுகிய கால நிலையில் தேக்கப்பட்ட செய்தியானது மீண்டும் ஒப்பிக்கப்படுவதற்கு வாய்ப்பு உண்டு. சரிபார்த்தல் மிகுமானால் அச் செய்தியானது நெடுங்கால நினைவிலிருத்தப்படும். சரிபார்த்தல் குறையுமானால் குறுகிய கால நினைவானது நெடு நினைவிற்குப் போகும் வாய்ப்பும் குறையத்தான் செய்யும். குறுகிய கால நினைவிற்கும் நெடு நினைவிற்கும் மூளையில் தனித்தனி இடங்கள் இருப்பதாக எண்ணிவிடக் கூடாது. இக்காலப் பதிவும் ஏற்கெனவே உள்ள பதிவும் ஒரே இடத்தில் இருக்கக்கூடும்.

குறுங்கால நினைவாற்றலானது பயிற்சியின் காரணமாகச் சிறக்காது. ஆனால், நெடுநினைவில் மறக்கப்படாத செய்திகள் மிகுதியாகச் சேகரம் ஆகும்போது குறுங்கால நினைவின் வீச்சானது மிகும். ஐந்து எண்களை நினைவில் கொண்டவருக்கு ஏழு எண்களை நினைவிலிருத்துவது எளிதாகும்.

பொதுவாக நெடுங்கால நினைவிலிருத்தப்படும செய்திகள் பொருளுடையனவாக இருக்கும். ஒரு சொல்லாக இருந்தால் அதன் பொருளோடு உச்சரிப்பும் நினைவிலிருத்தப்படும். அதோடு அதற்குத் தொடர்பான நிகழ்ச்சி ஏதேனும் இருப்பின் அதுவும் நினைவிலிருக்கும். எடுத்துக்காட்டாகக் காந்தியடிகள் சுடப்பட்ட செய்தியைக் கேட்டபோது என்ன செய்து கொண்டிருந்தீர் என்று கேட்டால் இன்றைக்கும் மறவாது அந் நிகழ்ச்சியைப் பலரால் நினைவு கூறமுடியும்.

நினைவிலிருத்தல் கற்றலுடன் தொடர்பு கொண்டுள்ளது. மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருந்தாலே நினைவில் பதிந்துவிடும். பாடலையோ வாய்ப்பாட்டையோ எழுத்துகளையோ இவ்வாறு நினைவிலிருத்த முடியும். ஒரு நூலைப் படிக்கும் போது அந் நூலாசிரியரின் கருத்துகளை அவருடைய சொற்களில் அல்லாமல் வேறு சொற்களை அமைத்துக் கருத்துகளைச் சரியாகச் சொல்லமுடியும். ஒவ்வொரு சொல்லையும் படித்ததும் இவ்வாறு நிகழாது; சொற்றொடர்களைப் படித்து முடித்ததும் நிகழலாம். முன்னர் இதைப்பற்றி அறிந்திருக்கும் செய்திகள் பயன்படக்கூடும். இவை புதிய செய்தியை நினைவிலிருத்தச் செய்யும்.

மூளையின் ஓசை பதிவாகும் இடம் ஒன்று; உருவம் பதிவாகும் இடம் மற்றொன்று. இவற்றின்மீது சொல்லும் பதிவாகும். 'பறவை' என்ற சொல்லோசையுடன் 'சிட்டுக்குருவி' என்பதும் பதிவாகி இவ்விரண்டிற்கும் உறவு ஏற்படுத்துவது மொழி. அதற்கு மாறாகப் 'பறவை' என்ற சொல்லோசையுடன்'மண்' என்பதைக் கேட்டால் அது பறவை இனத்துடன் பதிவாகாது. ஆகவே, மண் என்ற சொல் இணைக்கப்பட முடியாததால் நினைவிலிருத்தப்படுவதில் பெரும் தொல்லை ஏற்படுகிறது. ஒன்றுக்கொன்று உறவாக்கப்பட்டுப் பதிக்கப்பட்டால் நினைவேட்டில் பதிவாகும்.இவ்வாறு பதிவாகும் முறையானது ஓசை,உருவம் அல்லது மொழியின் அடிப்படையிலிருக்கலாம். இவ்வாறு முறைப்படுத்தப்பட்டுப் பதிவானதைத்தான் பின்னர் மீட்டறிவது எளிது.

**மீட்டறிதல்:** மீட்டறியும் ஆற்றலானது ஒருவர், தாம் நினைவிலிருத்தியதை நினைவு படுத்தச் சரிபார்க்கும் பயிற்சி தந்ததைப் பொறுத்தது. வேகமாகக் கற்பவருக்கும், மெள்ளக் கற்பவருக்கும் மறதியின் வேகம் ஒன்றே. அறிந்ததையும் புரிந்ததையும் தேவையானபோது உணர்விற்குக் கொண்டுவர முடிவதுதான் மீட்டலாகும். கற்றதைப் பல்வேறு வகையில் மாற்றியமைக்க முனைவோர் அதனை நினைவிலிருத்த விரும்பாதிருந்தபோதிலும் நல்லமுறையில் பதிவாகி மீட்டறிதலுக்கும் எளிதாக அமைந்துவிடுகிறது.

எத்தகைய உறவும் இல்லாத ஒரு 'பியானோ' என்ற சொல்லை உச்சரிக்கக் கேட்டதனாலோ எழுத்து வடிவில் பார்த்ததனாலோ நினைவில் பதிவாகிவிடாது. ஒருவன் பியானோவை நகர்த்த முயன்றான்; அல்லது பியானோ கனமாக இருந்தது; நல்ல

இசையைத் தரக்கூடிய பியானோ என்றபடி ஏதா வது உறவிருந்தாலொழிய அச்சொல் பதிவாகாது. அம் மனிதன் பியானோவை நகர்த்திவிட்டான் என்றி ருந்தாலும் பதிவாகும். அதுமட்டுமன்று; மீட்டுக் கொணர்வதும் எளிது. இவ்வாறு உறவுகளைப் பெறு வதனால் கற்றது பொருளுள்ளதாக ஆகிவிடுகிறது. முழுமையான பொருள் அமைந்தால்தான் நிரந்தர மாக நினைவிலிருத்தப்படும். பழகிப்போன பாடலி லிருந்து நடுப்பகுதி மிகச் சிறிதாக அளிக்கப்படும் போது எப்பாடல் என்பது தெரியாது.ஆனால், பாட லானது முழுமையாக அல்லது பெரும்பகுதி நினைவி விருத்தப்படுவதுதான் முழுமையைக் குறிக்கிறது. முழுமை உணர்வு ஏற்பட்டதிலிருந்து சிறு முயற்சி யுடன் நினைவும் மீட்கப்படும். மீட்டறிதலுக்குச் சிறந்தவழி கற்கும்போது வேண்டாதனவற்றை மறத் தலாகும். மா.பெ.

**துணை நூல்கள்:**

**Hamilton** V.& **Vernou M.D.**, Development of Cognitive Process, Academic Press, London, 1976.

**John E.R.**, Mechanism of Memory, Academic Press, New York, 1967.

**Montague W.E.** and **Others**, Coding, Intention and Recall of High and Low Association, Value Digits, Unpublished Manuscript, University of Illinois, 1971.

*நினைவிழப்பு*: நரம்புக் கோளாறு அல்லது மூளைக் கோளாறு என்று குறிக்கப்படுகின்ற மெல் லிய உளவியல் கோளாறுகள் அனைத்துக்கும் அடிப் படை, பீதி அல்லது ஆபத்தை எதிர்நோக்கும் கவலை என்று கருதப்படுகிறது. ஏதோ தீமைவிளையப் போகிறது என்ற எண்ணத்தில் ஏற்படும் தெளிவற்ற உணர்வே பீதி (Anxiety) என்று குறிக்கப்படுகிறது. இது சில நேரங்களில் 'பீதித் தாக்குதல்' எனப்படும். எதிர்பாராத வகையில் தோன்றிப் பெரிதும் திண றடிக்கும் நிகழ்வுகளால் இது ஏற்படுகிறது. இவ்வுணர்வு பெரிய அளவில் தாங்கமுடியாத அளவிற்கு ஏற்படும். இத்தகைய தாக்குதல்களிலிருந்து தன் முனைப்புக் (Ego) காப்பாற்றப்படும் முயற்சியில், நரம்புக் கோளாறு அல்லது மூளைக் கோளாறு ஏற்படுகிறது. வாழ்வில் சிக்கல்கள் ஏற்பட்டுப் போதாமை, துன்பம் ஆகியன நேருமாயின் இம் மூளைக் கோளாற்றுடன் வேறுசில குறிப்பிட்ட அறிகுறிகளும் தோன்றும். இவ்வறிகுறிகள் அலைக்கழித்து வலுக்கட்டாயப்படுத் தும் தன்மையுள்ள கோளாறுகள். இவற்றுக்கு மூளைக் கோளாறு தற்காப்பாக அமைகிறது.

இவற்றுள் தொடர்பற்ற போக்குள்ள எதிர் விளைவு மற்றொரு வகைத் தற்காப்பாகும். இதனால் ஒருவர் தம்மை அறியாமலேயே அவருடைய உணர் வில் அல்லது குணநலனில் ஒரு பகுதியை விட்டு விலகி அல்லது விலக்கிவிடுகிறார். இத்தகைய குணநலன் தொடர்பறும் எதிர் விளைவுகள் நான்கு வகைகளாக வகுக்கப்படுகின்றன. அவை: 1) நினைவிழப்பு (Fugue) அல்லது மறதி என்னும் முதல்நிலை தொடர்பறும் போக்காகும். இந்நிலையில் ஒருவர், தம்மைப் பற்றிய எல்லா நினைவுகளையும் இழந்துவிடுகிறார்; ஆனால், அதே நேரத்தில் அவருடைய எல்லாத் திறமைகளும், செயல்திறனும், பொது அறிவும் மாறுவதில்லை, மறைவதில்லை. 2) இரண்டாவது, ஆழ்ந்த நினை விழப்பு நிலை அல்லது இடப்பெயர்ச்சியுடன் கூடிய நினைவிழப்பு.இந்நிலையில் ஒருவர் தம்மைப் பற்றிய எல்லா நினைவுகளையும் இழப்பதுடன் அவருடைய சூழ்நிலைஅல்லது சுற்றுப்புறத்தையும்விட்டுப்புதிய சூழ் நிலையில்புதுவாழ்வு வாழத்தொடங்குகிறார்.இப்புது வாழ்வு சில மாதங்கள் அல்லது சில ஆண்டுகள் கூடத் தொடரலாம். இடமாற்றத்துடன்கூடிய நினைவிழப்பு நிலைக்குப் பின்னர் அவர், தம்முடைய பழைய நிலைக்கு மாறலாம். அப்போது நினைவிழந்த நிலை யில் வாழ்ந்த வாழ்வு பற்றிய நினைவுகள் எவையும் அவருக்கு இருக்கமாட்டா. 3) மூன்றாவது, தூக்கத் தில் நடக்கின்ற தொடர்பறு நிலை. இந்நிலையில் ஒருவர் முற்றிலும் மாறுபட்ட உணர்வுடன் இருப் பார்; உண்மையில் இதுஉறக்கமன்று. 4) இறுதியானது பன்முகக் குணநலன் என்னும் தொடர்பறு எதிர் விளைவாகும். இந்நிலையில் ஒருவர், ஒன்றுக்கு மேற் பட்ட தனித்த குணநலன்களை உடையவராகத் தோன்றுவார்.

உளவியல் பகுப்பாய்வுக் கொள்கையின்படி தொடர்பற்ற எதிர் 'விளைவுகள் என்பன பெரிய அளவில், இயல்பான உணர்வுத் தூண்டுதல்களை அடக்கி வைப்பதன் விளைவுகளாகும். கடுமையான துன்பம் தரும் உணர்வுத் தூண்டுதல் அல்லது உணர்வு உந்துதல்களை அடக்கி வைத்ததின் விளைவாக ஒரு வர், தாமே அறியாமல் தம்முடைய குணநலனில் ஒரு பகுதியைப் பிரிந்துத் தாமே அத்தகைய குணநலம் உள்ளதை மறுப்பதாகும். அதேபோல தொடர்பற்ற எதிர் விளைவுகள் ஒருவரைக் கடுமை யான மன அழுத்தத் தாக்குதலிலிருந்து காக்கும் தவிர்க் கும் பதில் விளைவு என்று வேறொரு உளவியற் கொள்கை கூறுகிறது.

தொடர்பற்ற எதிர் விளைவுக் குணநலன்கள் கவர்ச்சியாகத் தோன்றும். அதேநேரத்தில் அவை மிகவும் அரிதாகத் தோன்றுவனவாகும். வே.ந.

**நினைவுக் கருவிகள்**: எல்லா உயிரிகளிடமும் தமது பழைய அனுபவங்களைச் சேர்த்துச் சேமித்து வைக்கக்கூடிய திறன் உண்டு. இத்திறனை நினைவு (Memory) எனலாம். இத்திறனைப் பயன்படுத்துதல், நினைவு கூர்தல் (Remembering) எனப்படும். ஒரு கருத்து, எண்ணம் அல்லது நிகழ்ச்சியைப் பற்றிய அறிவுடன் அதை ஒருவர் முன்பே அறிந்தோ அனுபவித்தோ இருக்கிறார். எனினும் வேறோர் உணர்ச்சியும் ஒருவர் உள்ளத்தில் ஏற்படுதலே நினைவு எனப்படும். நினைவுகூர்தல் என்பது பழைய நிகழ்ச்சிகள், எண்ணங்கள் முதலியவற்றைத் திருத்தமாகக் குறித்து அவை இப்போதும் தம்முடனிருப்பது போல அவற்றைப் பயன்படுத்தும் செயலாகும். கற்றல், பழக்கம் ஆகிய இரண்டிற்குமே நினைவு கூர்தல் அடிப்படையாகும். சிறு குழந்தையின் நினைவுத் திறன், முதிர்ச்சியுள்ள மனிதனின் நினைவுத்திறனைக் காட்டிலும் அளவிற் குறைந்தது. இத்திறன் மெதுவாகப் பெருகிக் கிட்டத்தட்ட 25-ஆம் வயதின்போது முழு வளர்ச்சியடைகிறது. இத்திறன் 45வயது வரை அந்நிலையிலேயே இருந்து பின்னர் மிக மெதுவாகக் குறைகிறது என்று உளவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். குழந்தையிடம் 2 வயதில் ஐந்து ஓரசைச் சொற்களை நினைவில் வைத்துத் திரும்பக் கூறும் திறன் காணப்படுகிறது, 4வயதில் 12 அல்லது 13 ஓரசைச் சொற்களை நினைவில் வைத்துத் திரும்பக்கூறும் திறன் காணப்படுகிறது. நினைவு எனப்படுவது ஒரு பெற்றி அல்லது மனவன்மை எனப் பண்டைய உளவியலார் கருதினர். நினைவு என்னும் உளவியற் சொல் கற்றல், மனத் திருத்தல், மீட்டுக் கொணர்தல், மீட்டறிதல் என்னும் நான்கு பிரிவுகளைக் கொண்டது.

**நினைவு பற்றிய உளவியற் சோதனைகள்**: உளவியல் ஆய்வுக் கூடங்களில் நினைவு பற்றிய பல சோதனைகள் நடத்தப்பட்டுள்ளன. நினைவுச் சோதனைகளில் பெரும்பாலும் வெற்றசைகளே (Non sense Syllabus) கற்கவேண்டிய பொருளாக அமையும். அவை பொருளற்ற அசைகள் ஆதலின் எவரும் முன்னரே அறிந்திருக்க மாட்டார்கள். அதனால் சோதனைகளை நன்கு கட்டுப்பாட்டுடன் நடத்த முடியும். இச் சோதனைகளிலிருந்து பெறப்பட்ட முடிவுகள் ஆசிரியர்களுக்குப் பயன்படுகின்றன. கற்றதைப் பல நாள்கள் கழித்துத் தங்களது மனதில் இருத்தி, தேவைப்படும்போது பயன்படுத்திக் கொள்ளவும் பயிற்சியளிக்கவும் முடியும்.

ஒரு குறிப்பிட்ட பாடப்பகுதியை நினைவில் இருத்திக்கொள்வதற்கு அதனைப் பல தடவைகள் திரும்பத் திரும்பப் பயிலவேண்டும். அவ்வாறு பல தடவைகள் திரும்பத் திரும்பப் பயிலுவது நல்லதா இடைவெளி விட்டுப் பயிலுதல் நல்லதா என்பதைப் பற்றிப் பல சோதனைகள் நடத்தப்பட்டுள்ளன. உளவியல் அறிஞர்கள் இடைவெளி விட்டுப் பயிலுவதே நல்ல பயனைத் தரவல்லது எனக் கண்டுள்ளனர். ஒரு பகுதியை இருபது தடவைகள் தொடர்ந்தாற்போலப் படிப்பதைவிட அப்பகுதியை ஒரு நாளைக்கு ஐந்து முறைகள்வீதம் நான்கு நாள்களில் படித்தால் அப்பகுதியை நன்றாக நினைவில் நிறுத்திக்கொள்ள இயலும். தேர்வுக்குப் படிக்கும் மாணவர்களுக்கு இதைப்போன்ற முறைதான் நல்ல பயனைத்தரும்.

மாணாக்கர் மனப்பாடம்செய்யவேண்டிய பகுதி நீண்டதாக இருக்கலாம். அப் பகுதியினை முதல் வரியில் தொடங்கிக்கடைசி வரி வரையில் ஒரேமுறையில் படிப்பது சிறந்த முறையா, அப் பகுதியினைச் சிறு சிறு பிரிவுகளாகப் பகுத்து ஒவ்வொரு பகுதியாக மனப்பாடம் செய்வது சிறந்த முறையா என்னும் வினாவுக்கும் சோதனைகள மூலம் விடை காணப்பட்டுள்ளது. அதன்படி நீண்ட தொடர்ச்சியான பகுதியை முழுமையாகப் படிப்பதே சிறந்த, சிக்கனமான மனப்பாடம் செய்யும் முறையாகும் எனக் கருதப்படுகிறது. இவ்வாறு முழுமையாகக் கற்கும்போது கற்கப்படும் பகுதியின் பொருளும் தொடர்பும் எளிதில் தெளிவாக விளங்குவதால பகுதியை நினைவில் வைத்துக் கொள்வது எளிதாகிறது. கற்கவேண்டிய பகுதி மிகவும் நீளமானதாக இருந்தால் பொருள் தொடர்ச்சியுள்ள சிறு சிறு பகுதிகளாகப் பிரித்துப் பின்னர் ஒவ்வொரு சிறு பகுதியையும் முழுமையாகக் கற்குமாறு செய்யலாம்.

மனப்பாடம் செய்யவேண்டிய பகுதியைப் பொதுவாகப் பல தடவை பயிலுதல் நல்லது. அவ்வாறு பல தடவை பயிலும்போது கற்கவேண்டிய அப் பகுதியை எதிரில் வைத்துக்கொண்டு பார்த்துப் பயிலுவதைக் காட்டிலும் ஓரிரு தடவைகளுக்குப்பின் அவற்றைப் பார்க்காமலே பயிலுதல் சிறந்த பயனை அளிக்கும் என உளவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். நினைவு தடுமாறும்போது மட்டும் அப் பகுதியை எடுத்துப் பார்த்துக்கொள்ளலாம். அதனால் மாணாக்கர்களுக்குத் தன்னம்பிக்கையும் உற்சாகமும் ஏற்பட வழியுண்டு எனலாம்.

பாடப்பொருளை நன்கறிந்த மாணவர்கள எளிதாக மனப்பாடம் செய்துவிடுவர். பொருளை நன்கு அறியாத மாணவர்கள் மனப்பாடம் செய்வதைக் கடினமான செயலாகக் கருதுவர். எனவே, ஏதாவது ஒரு பாடப்பகுதியை மனப்பாடம் செய்யச் சொல்லுவதற்குமுன் பாடப்பகுதியினை நன்கறிந்துள்ளனரா என்பதைஉறுதிப்படுத்திக்கொள்வது இன்றியமையாததாகும். மகிழ்ச்சி பொருந்திய சூழ்நிலையில் கற்கப்படும் பாடங்கள் எளிதில் மறக்கப்படுவதில்லை.

ஆனால் அச்சம், வெறுப்புப் போன்ற சூழ்நிலையில் மாணவர்கள் எவ்வளவுதான் முயன்று கற்றாலும் கற்றன எல்லாம் விரைவில் மறந்துபோகும்.

கற்கும் மாணவன் எந்தப் பாடத்தையும் ஆர்வத்துடன் கற்க முனைந்தால் எளிதில் கற்கலாம். மேலும், ஒருவர் கற்கும் பாடங்கள் எதிர் காலத்திற்குப் பயன்படும் எனக் கருதினால் அப்பகுதியை நன்கு கற்க விழைவார். அதை எளிதில் மறக்கவும் மாட்டார் என்பதில் ஐயமில்லை.

கற்ற பொருள்கள் உள்ளத்தில் சுவடுகளை (Traces) விட்டுச் செல்லுகின்றன. அச் சுவடுகளே முன்பு கற்ற பகுதிகளை நினைவுக்குக் கொண்டுவர உதவுகின்றன. விரும்பிக்கற்றல், பொருளுணர்ந்து கற்றல், கற்ற பொருள்களைச் சில காலத்திற்கு ஒரு முறை மீள நோக்குதல், மகிழ்ச்சியுடன் கற்றல் போன்றன யாவும் மனத்தில் இருத்த உதவும். பள்ளிகளில் பயன்படுத்தப்படும் புறவய வினாக்களில் விடை தெரிதல், மீட்டறிதல் ஆகியவை மாணவர்களது அறிவாற்றலைச் சோதிக்கப் பயன்படும்.

**நினைவு வீச்சுப் பொருள்கள்:** ஒருமுறை பார்த்த பின் தான் பார்த்த பொருள்களுள் எத்தனை பொருள்களைத் தவறின்றி நினைவுபடுத்திக் கூறவியலுமோ அப் பொருள்களின் எண்ணிக்கையில் ஒருவரது நினைவுவீச்சு (Memory Storm) கணக்கிடப்படும். அதை நினைவு உருளை (Memory Drum) என்னும் கருவியைப் பயன்படுத்தி அறியலாம். நினைவு வீச்சு உடனடி நினைவைச் சோதிக்கிறது. பொருளுக்கேற்பவும் நினைவுவீச்சின் அளவு வேறுபடுகிறது. அதே போன்று வயது அதிகரிக்க அதிகரிக்க நினைவுவீச்சும் அதிகரிக்கிறது எனலாம்.

**நினைவுக் கருவிகள்:** அறிவியல் உண்மைகளையும், அறிவியல் தகவல்களையும் மாணவர் தம் மனத்தில் மறக்காமல் நிலைபெறச்செய்ய ஆசிரியர் பல நினைவுக் கருவிகளைக் (Memory Aids) கையாளலாம். அறிவியல் உண்மைகளோடு கவர்ச்சியான சில தொடர்புகளை ஏற்படுத்திச் சிறு சொற்றொடர்களாக அமைத்து நினைவு ஏற்படுத்தலாம். சில சமயங்களில் அவ்வாறு அமைக்கப்படும் சொற்களுக்குப் பொருள் இராது. எடுத்துக்காட்டாகச் சில கருவிகள் பின்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளன.

பல உண்மைகளை நினைவிற்கொள்ள வேண்டும் போது ஒவ்வொரு சொல்லின் முதல் எழுத்தைக் கொண்டு ஒரு சொற்றொடராக அமைத்துக்கொண்டு அதை மட்டும் நினைவில் நிறுத்திப் பின்னர் அதிலிருந்து எல்லா உண்மைகளையும் அறியலாம். எடுத்துக்காட்டாக, ஒளியானது முப்பட்டைக் கண்ணாடி மூலமாக ஏழு வண்ணங்களாகப் பிரிக்கப்பட்டுக் குறிப்பிட்ட வகையில் தோன்றுவதைக் கீழ்க்காணும் முறையில் நினைவிற் கொள்ளலாம். (VIBGYOR)




அது போன்றே உயிருள்ள பொருள்களின் தன்மைகளை நினைவு கூர Merring என்ற சொற்றொடரை நினைவில்கொண்டாற் போதும், அதன் விளக்கம் பின்வருமாறு:




இரா.சி.

**துணை நூல்கள்:**

**சந்தானம், எசு.,** கல்வி உளவியலும் கல்விச் சமூகவியலும், பழனியப்பா பிரதர்சு, சென்னை, 1976.

**சந்தானம், எசு.,** கல்வி உளவியல், கார்த்திகேயன் கம்பெனி, சென்னை, 1978.

***நினைவுக் குறியீடுகள்:*** மனிதனால் தெரிந்ததைத்தான் நினைவிலிருத்த இயலும்; நினைவிலிருந்ததைத்தான் தெரிந்திருக்க இயலும். மனனம் செய்யும் மாணவர்களைவிட நினைவுக் குறியீடுகளைப் (Memories) பயன்படுத்திய மாணவர்கள் மிகுதியான செய்திகளை நினைவிலிருத்தித் தேவையானபோது மீட்டுக் கொணரமுடிகிறது. நினைவிற் கொள்வதென்பது கவனத்தை முறைப்படுத்துவதாகும்.

நினைவுக் குறியீடுகள் என்பவை நினைவிற் கொள்ள வேண்டிய செய்திகளை முறைப்படுத்தலாகும். குறிப்பிட்ட இடத்தில் எல்லாச் சாவிக் கொத்துகளையும் தனித்தனியே மாட்டி வைப்பதுபோல அல்லது தொழிற்சாலையில் கருவிகளைத் தனித்தனி ஆணிகளில் முறையாகப் பொருத்தி வைப்பது போல, தேவையானபோது தேடாமல் நேராக

எடுத்துக்கொள்வதற்கு ஏற்றவாறு வைப்பதுபோல இதனைப் பேணுங்கலை என்றும் கூறலாம்.

**பேணுங்கலை:** மனனம் செய்வது பலருக்குக் கடினமான செயல். மனத்திலிருத்த வேண்டியதை நன்கு பொருள் தெரிந்தவற்றுடன் பொருத்தி மனத்தில் கொள்ள முயல்வது ஒரு முயற்சி. தெரியாத சொற்களுக்குப் பொருள் தந்தபிறகு புரிந்துகொள்ள முடியும். சான்றாக, சட்லி, மக்சு, கண்மி, நன்து என்ற பட்டியலை மனத்திலிருத்தச் சட்னி என்பதற்குச் சட்லியாகவும், மக்கு என்பதற்கு மக்சுவாகவும், கண்மாய் என்ற சொல்லிற்குக் கண்மியாகவும், நல்லது என்பதற்கு நன்துவாகவும் கூறியதாக ஒரு மாணவி, தான் கற்பனை செய்ததை விவரித்தபிறகு அவ்வகுப்பில் வேறுசில மாணவ மாணவிகள்கூட இப்பட்டியலை மனனம் செய்ய முடிந்தது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஒரு புதிய சொல்லைப் பழைய சொல்லுடன் அளித்தால் இவ்விரு சொற்களுக்கிடையே விரைவில் ஏதாவதொரு உறவு கற்பித்துக்கொள்ளப்படும். அவை நினைவில் தேக்கப்படும்.

ஒருவர் மற்றொருவருக்கு வேண்டியவராக இருந்தால் அவருடைய முகம் நினைவிலிருக்கும். அத்துடன் அவருடைய பெயரை இணைத்துப் பார்க்க வேண்டும். பிறகு உடை, பாவனை, குரல் ஆகியவற்றினைப் பற்றிக் கவனமாக இருக்கவேண்டும். இந்த விவரங்களுடன் அப்பெயரைத் திருப்பித் திருப்பிச் சொல்லிப் பார்த்துக்கொள்ள வேண்டும். அந்த முகத்தின் தனிச் சிறப்புகளைக் கவனிக்க வேண்டும். குறுகிய வாய், பெருங் கண்கள், நீண்ட காது, மச்சம், மையிட்டிருக்கும் பாங்கு, புருவ அமைப்புப் போன்ற வேறுபாடுகளைப் பார்க்கும்போதுகூடப் பெயரைச் சொல்லிப் பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு முகத்தை நினைவிற் கொள்ளப் பெயர் மட்டும் போதாது.

முயல், குதிரை, மாடு, தென்னை, அவரை மேசை, நாற்காலி, எலி, படுக்கை, மிளகாய், யானை, வெண்டை, தேக்கு, விசிறி, வேம்பு ஆகிய 15 சொற்களை நினைவு கொள்வதை விலங்குகள், மரங்கள், காய்கறி, பொருள்கள் என்ற நான்கு இனமாகப் பிரித்துத் தெரிந்துகொண்டால் அவை மறக்கமுடியாத அமைப்பைப் பெற்றுவிடுகின்றன.

பொடி உப்பு, திராட்சை, குரு மிளகு, கடுகு, கோசு, ரவை என்பதனை நினைவில் இருத்தமுடியாதது போலத் தோன்றும். பொடி உப்பு, ரவை என்றும் கடுகு, மிளகு என்றும், கோசு, திராட்சை என்றும் வகைப்படுத்தி அவற்றின் முதலெழுத்துக்களை இணைத்து 'உரக்குகோதி' என்ற சொல்லை உண்டாக்கிக் கொள்ளலாம். உச்சரிப்பதற்கு ஏதுவாக மூன்றாம் எழுத்தை மெய்யெழுத்தாக வைத்துக் கொண்டதும் ஒவ்வோர் எழுத்தும் எதனைக் குறிக்கும் என்பதும் உச்சரிப்போர்க்குத் தெரியும். இச் சொல்லை உருவாக்கியது வீணன்று.

எண்களை நேரடியாக உருப்படுத்திக்காணமுடிவதில்லை. ஒன்று என்பதைக் குச்சியாகவும், எட்டைக் குண்டான பெண்ணாகவும் கற்பனை செய்வது எளிதன்று. கற்பனை உருவங்கள் மிகுதியாகக்குழப்பும். நான்கு எண்களுக்கு மிகுதியாக நினைவில் கொள்ள முடிவதில்லை. அதனால் பேருந்து போன்ற வண்டிகளின் அடையாள எண் நான்கிற்கு மிகுந்து இருப்பதில்லை. அத்துடன் மூன்று எழுத்துகள்-MDC, MDU, TNA போன்று இருக்கும். இவற்றைக்கூட மனத்தில் கொள்ளமுடியும்- 6345723 என்பதை 6345 723 என்று இரண்டு இரு எண் தொகுப்புகளாகப் பிரித்து நினைவிற் கொள்ளலாம். சில எண் தொகுப்பில் அமைந்திருக்கும் சிறப்பைப் புரிந்துகொண்டால் நினைவிற் கொள்ளமுடியும். கீழே தரப்பட்டுள்ள எண் வரிசையில் 5432109, 1074159, 192837465

முதல் வரிசையில் ஒவ்வொன்றாகக் கழித்து பூச்சியத்தை எட்டியபிறகு 9-ஐச் சேர்த்துக்கொள்ள வேண்டும். இரண்டாம் எண் வரிசையில் பத்திலிருந்து 3-ஐ மூன்று முறை கழித்து இரண்டு முறை 4-ஐக் கூட்டினால் 1074159 என்ற எண் கோவை வரும். அதை மறக்கமுடியாது. மூன்றாவது எண் வரிசையில் எண் தொடர் நீண்டிருப்பினும் அதை நினைவிற் கொள்வது மிகமிக எளிது. பத்திலிருந்து 1-ஐக் கழித்தால் 9. பிறகு 2-ஐக் கழித்தால் 8, 3-ஐக் கழித்தால் 7, 4-ஐக் கழித்தால் 6. பிறகு பத்திலிருந்து கழிக்கப்பட வேண்டிய எண். 5. அதோடு நிறுத்திக் கொள்ள வேண்டியது. ஒன்றிலிருந்து பத்து வரையுள்ள எண்களுக்கு எழுத்துகளை (1-அ, 2-ஆ, 3-இ, 4-ஈ முதலியன) அடையாளமாக வைத்தும் எண்களை மனத்தில் கொள்ள முடியும்.

பழுதுபட்ட மூளையுள்ளவர்கள் கூடக் குறுகிய கால நினைவின் போது நினைவுக் குறியீடுகளைப் பயன்படுத்துகின்றனர். ஆனால், நீண்ட நினைவில் இவ்வாறு கற்ற செய்தியை நினைவிலிருத்த முடிவதில்லை. மாணவர்களே உருவாக்கிய பேணுங்கலையைப் புறக்கணிக்கக்கூடாது. ஒருவருக்குப் பயனுள்ளதாக இருக்கும் பேணுங்கலை மற்றவர்க்கு ஒத்ததாக இல்லாமற்போகலாம். ஆகவே, அவரவர் கற்பனைக்கேற்ப நினைவுக் குறியீடுகளை வளரவிட வேண்டும். ம.பெ.

**துணை நூல்கள்:**


**Bower, G.H.**, Psychology of Learning and Motivation-Advances in Research and Theory, Academic Press, New York, 1972.

**Bermak, L.H.**, Improving Your Memory, McGraw Hill Book Co., Tokyo, 1976.

**Pressley, M. and Dennis, Rounds. J.**, Transfer of a Memoric Keyword Strategy at Two-age Levels, Journal of Educational Psychology, 1980.

**நீ** நகரமும் ஈகாரமும் இணைந்து ஒலிப்பது. நாவின் நுனி மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒற்றி ஒலிக்கும் இவ்வெழுத்து இளித்தநிலையில் ஒலியள வில் ஒரு மாத்திரை கூடுதலாக இவ்வொலி வெளிவருகிறது.

நீ, தனியொரு மொழியாக வளம் நிறைந்த எழுத்து. ஒருவரை மற்றொருவர் உறவின் நெருக்கத்தையும் தரத்தின் தன்மையையும் ஒட்டி முன்னிலைப்படுத்திப் பேசும் பொழுது நீயென்று அழைக்கிறார். வினைப் பெயராக வரும்பொழுது பிரிதல் என்ற அடிப்படைப் பொருளை வழங்கும். அதன் அடியாக வேறாதல்,துறந்து விடுதல், தள்ளுதல், இழிவுபடுத்தல், வெறுத்தல், விட்டுவிடுதல் என்ற பொருள்களைக் கொடுக் கும்.

**வடிவம்:** இவ்வெழுத்து கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் குகைக் கல்வெட்டுகளில் காணப்படவில்லை. ஆயினும், இகர ஈகாரங்களில் வேறுபாடு காட்டப்படாததால் இகரக் குறியே இதற்கும் குறியாக அமைந்தது. ... ... ...

காலப் போக்கில் இகரக் குறியை முடிவில் சுழித்து எழுதி இவ்வொலியைக் குறிக்க முற்பட்டனர். எனினும் பெரும்பாலும் இச்சுழி இல்லாமலே சூழ்நிலைப் பொருளை ஒட்டி நெடிலாக வாசிக்கப்பட்டது. இறுதியாகக் காட்டப்பட்ட வடிவம் கி.பி. 16,17-ஆம் நூற்றாண்டுகளுக்குப் பிறகே தோன்றிற்று. ... ...

வட்டெழுத்திலும் இச்சுழி சில இடங்களில் காட்டப்பட்டும்; பல இடங்களில் காட்டப்படாமலும் இருந்தது. ... .. ...

தமிழ், வட்டெழுத்து இரண்டு வழக்கிலும் நெடில் சுழி கி.பி. 7,8, ஆம் நூற் றாண்டு முதல் காணப்படுகின்றது. ... ... ...

கே.ஜி.கி.

**நீக்கிரிட்டோ:** நீக்கிரோ இனத்தின் முப்பெரும் பிரிவுகளுள் நீக்கிரிட்டோ (Negrito) பிரிவு ஒன்றாகும். இப்பிரிவினர் நீக்கிரில்லோ இன மக்களைப் போன்றே மிகவும் குள்ளமானவர்கள். இவர்கள் வாழும் புவிப் பரப்பின் அடிப்படையில், ஆசிய நீக்கிரிட்டோக் கள் என்றும், பசிபிக்குப்பகுதி நீக்கிரிட்டோக்கள் என் றும் இருவகைப்படுவர். இவர்கள் ஆசியக் குள்ளர்கள என்றும் பசிபிக்குக் குள்ளர்கள் என்றும் கூறப்படுவர்.

ஆசியக் குள்ளர்கள் பிரிவில் . அந்தமானியர் (Andamanese), செமாங்கு(Semang),அயிட்டா (Aeta) ஆகியோர் அடங்குவர்.பசிபிக்குக் குள்ளர்கள் பிரிவில் பேராளராகத் திகழ்பவர்கள் தப்பிரே (Tapiro) இனத்தவர்கள் மட்டுமே.

**அந்தமானியர்:** இந்திய இனங்களுள் நீக்கிரிட்டோ பண்புகளைக் கொண்டவர்கள் அந்தமானில் வாழும் பழங்குடிகளே. இவர்களுள் ஒங்கே (Onge) பழங்குடி யினரை மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கூறலாம். ஒங்கேயினரும் பிற அந்தமானியரும் மிகக் குள்ள மானவர்கள். ஆண்கள் சராசரியாக 148 செ.மீ. உயர மும், பெண்கள் 139 செ.மீ. உயரமும் உடையவர்கள். பெண்கள் பிட்டப் பகுதி மிகவும் புடைத்த அமைப் பைக் (steatopygia) கொண்டவர்கள். குறுகி அகன்ற தலையையும் (Brachycephalic ), நேரான மூக்கினை யும் கொண்டவர்கள். குள்ளமான உடலமைப்பிற் கேற்றாற்போல் குட்டையான கைகளையும் கால் களையும் கொண்டுள்ளனர். முகம் அகன்றது, கன்னப் பகுதி மிகவும் அகன்றது; உதடுகள் தடித்தவை; தலை



அந்தமான் ஓங்கே பழங்குடி

மயிர் சுருட்டையானது; தோல் நிறம் புகை நிறக் கறுப்பு முதல் கறும்பழுப்பு வரையிலானது. காண்க: அந்தமான் தீவுகள், ஓங்கே.

**சீமாங்கு:** இவர்கள் மலாய் முந்நீரகத்திலும் (Malay Peninsula) கிழக்குச் சுமத்திராவிலும் வாழ்கின்றனர். இவர்களின் சராசரி உயரம் 152 செ.மீ. அந்தமான் ஓங்கேயினரைக் காட்டிலும் இவர்கள் சற்று உயரமானவர்கள். சீமாங்கு மக்களின் தலை நடுத்தர வகையானது (Mesocephalic); முகம் வட்டமானது; மூக்கு மிக அகன்றது; தட்டையானது; உதடுகள் மிகவும் தடித்தவையல்ல; தலை மயிர் சுருட்டையானது, குட்டையானது; உடல் நிறம் கறும்பழுப்பு.





ஆப்பிரிக்க நீக்கிரிட்டோ

**அமிட்டா:** இவர்கள் பிலிப்பைன்சுத் தீவுகளில் வாழ்கின்றனர். இவர்கள் உடற் பண்புகள், ஓங்கே இனத்தவர்களை மிகவும் ஒத்துள்ளன. சராசரி உயரம் 145 செ.மீ. இவர்கள் நீக்கிரிட்டோ இனத்தவர்களுக்கே உரிய குட்டையான மூக்கு, அகன்று தடித்த உதடுகள், மிகவும் குட்டையான சுருட்டை மயிர், கறும்பழுப்பு நிறம் முதலான பண்புகளைக் கொண்டுள்ளனர்.

**தப்பிரோ:** இவர்கள் நியூகினித் தீவுகளில் வாழ்கின்றனர். இவர்களின் சராசரி உயரம் 146 செ.மீ. உடல் தசை பிடிப்பாக இருக்கும். நடுத்தரத் தலையும், குறுகிய மூக்கும், குவிந்த மேலுதடும் கொண்டவர்கள். தலை மயிர் கறுமையானது; சுருண்டது; குட்டையானது. தோல் நிறம் மஞ்சள் கலந்த கறுமையானது.

நீக்கிரிட்டோ இனத்தைச் சேர்ந்த பெரும்பாலான பழங்குடியினர் வேட்டையாடி உணவு சேகரித்தலையும், காட்டுப் பொருள்கள் சேகரித்தலையும், மீன்பிடித்தலையும் முதன்மைத் தொழில்களாகக் கொண்டுள்ளனர். பெரும்பாலானோர் குல அமைப்புடைய சமுதாயத்தையும, பலதுணை மணமுறையையும் கொண்டுள்ளனர். அந்தமான் ஓங்கே பழங்குடியினர் குல அமைப்பைக் கொள்ளாதவர்கள். பெரும்பாலும் ஒருதுணை மண முறையைப் பின்பற்றுகின்றனர். காட்டுப் பகுதிகளில் பெரும்பாலும் வாழ்ந்து வருவதால் இயற்கைப் பொருள்களை வழிபடுகின்றனர். அதோடு இவர்கள் ஆவியுலக நம்பிக்கை (Animistic Beliefs) கொண்டுள்ளனர். சீ.ப.

**நீக்கிரில்லோ:** நீக்கிரில்லோக்கள் ஆப்பிரிக்காவில் நடுநிலைக் கோட்டுப் பகுதியில் உள்ள பெருங்காடுகளில் பெருமளவு வாழ்கின்றனர். ஆமி என்பவர் இக்குட்டையான கறுப்பு மக்களுக்கு நீக்கிரில்லோ (Negrillo) எனப் பெயர் கொடுத்தார். இவர்கள் ஆப்பிரிக்காவைச் சேர்ந்தவர்கள்.

இவர்களில் 1) கிழ்ப்பாக நீக்கிரில்லோ, 2) நடுப்பாக நீக்கிரில்லோ, 3) மேற்பாக நீக்கிரில்லோ எனும் 3 பிரிவுகள் உள்ளன. கிழ்ப்பாக நீக்கிரில்லோக்கள் பம்பூதி என்று சொல்லப்படுகின்றனர். இவர்கள் பெல்சியம் காங்கோவில் உள்ள வடஇத்தூரி (Ituri) என்னும் இடத்தில் உள்ளனர். இம்முப்பிரிவுகளில் இவர்களே பெருந் தொகையினராகக் காணப்படுகின்றனர். இவர்கள் 30 முதல் 40 ஆயிரம் வரையில் உள்ளனர். மேற்பாக நீக்கிரில்லோக்கள் பாப்பிங்கா என்று சொல்லப்படுகின்றனர். இவர்கள் பிரெஞ்சு காங்கோவிலுள்ள காபோன், தென்காமரூன் என்னும் இடங்களில் உள்ளனர். இவர்கள் மக்கள் தொகை 20,000. இவர்கள் பல இடங்களில் சிதறி வாழ்கிறார்கள். நடுப்பாக நீக்கிரில்லோக்கள் பத்வா என்று சொல்லப்படுகின்றனர். இவர்கள் வாழும் இடம் பெல்சியம் காங்கோ. இவர்கள் நீக்கிரோக்களுடன் கலந்து வாழ்ந்து வருகிறார்கள்.

பம்பூதிகள் சராசரி 145 செ.மீ. உயரம் உடையவர்கள். ஆனால், பாபிங்கோ 196 செ.மீ. உயரம் உடையவர்கள். இவர்கள் தோல் சிவப்புக் கலந்த பழுப்பு அல்லது மஞ்சள் கலந்த நிறமாக இருக்கும்; அடர்ந்தமயிர் உடையவர்களாக இருப்பர். தலை உருண்டையாயும் கண்கள் குழி விழுந்தும் காணப்படும். மூக்கு மிகவிரிந்து தட்டையாயும் இருக்கும். சிலருக்கு மூக்கு இருப்பதாகத் தெரியாது. இரண்டு குமிழ்கள் போல் இருக்கும். தாடைகள் நடுத்தரமாக முன்வந்து இருக்கும். உதடுகள் வெளிவந்திரா; உள்வாங்கியிருக்கும். உடல் நல்ல கட்டுடையதாக இருக்கும். கால்கள் குட்டையானவை. இவர்கள் இன்னும் நாகரிகம் அடையவில்லை; காட்டில் வேட்டையாடி உணவு சேகரிக்கின்றனர்; உழவுத் தொழில் அறியாதவர்களாக இருக்கின்றனர்; சட்டி பானை செய்யத் தெரியாதவர்கள்; இவர்களுக்குக் கூடைகள் மட்டும் முடையத் தெரியும்.

இவர்கள் 20 பேர் முதல் 100 பேர் வரை சிறு சமூகங்களாக வாழ்கிறார்கள்; குடிசைகளை மரக் கிளைகள் கொண்டு பின்னித் தேன்கூடுகள் போல் அமைக்கிறார்கள்; 30 ஆண்டுகளுக்கு முன் வரையில் இரண்டு குச்சிகளைக்கடைந்தே தீமூட்டினர். இவர்கள். தீ மூட்டச் சக்கிமுக்கிக் கற்களைப் பயன்படுத்தினர். ஆண்கள் மரப்பட்டையால் நெய்த கோவணம் அணிந்தனர். பெண்கள் இலைகளைக் கொண்டு அரையை மூடிக் கொண்டனர். இன்று அண்டைய மக்களின் தொடர்பினால் உடை உடுத்துகின்றனர். நீக்கிரோக்களுடன் தொடர்புடையவர்கள் பச்சை குத்திக் கொள்கின்றனர்; கன்னத்துச் செய்து கொள்கிறார்கள். வடக்கிலும் நடுவிலும் உள்ள நீக்கிரில்லோக்கள் மரத்தால் ஆன அம்பையும் வில்லையும் பயன்படுத்துகிறார்கள்.

வேட்டையின்போது பாபபிங்கோக்கள் ஈட்டியைப் பெரிதும பயன்படுத்துகின்றனர். அதைக் கொண்டு யானையையும் தாக்குகிறார்கள். இவர்கள் பலதார மணம் உடையவர்கள்; தந்தைவழி வாரிசுரிமை கொண்டுள்ளார்கள். மேற்பாக நீக்கிரில்லோக்களுள் பலர் குழுமண முறையைக் கொண்டவர்கள். ஒரு கடவுள் உண்டு என்று நம்பியபோதிலும் பல தெய்வங்களிடம் தங்கள் வேட்டையைப் பாதுகாக்குமாறு வழிபாடு செய்வார்கள். பூப்பு, மணம், மகப்பேறு, மரணம் ஆகியவற்றிற்கு எவ்வித சடங்குகளும் இல்லை. நடனம் மட்டுமே சிறப்பாக ஆடுகின்றனர்.

**ஆப்பிரிக்க நீக்கிரோக்கள்:** மக்களினத்தைப் பொதுவாக நீக்கிரோக்கள் (Negroid), மங்கோலியர்

(Mongoloid), காக்கேசியர் (Caucasoid) என மூன்று பெருங் குழுக்களாகப் பகுக்கலாம். நீக்கிரோ இனத்தவர்கள் ஆப்பிரிக்கக் கண்டம்முழுவதிலும்,மெலனீசியத் தீவுகளிலும்,அந்தமான் தீவுகளையொத்த ஒதுக்கிடங்களிலும், மலாயா முந்நீரகத்தின் உட்பகுதிகளிலும் பிலிப்பைன் தீவுகளின் சில பகுதிகளிலும் வாழ்கின்றனர். நீண்ட தலையும் நெடிய உருவமும் திண்ணிய உடற்கட்டுமுடைய ஒரு வகை நீக்கிரோக்களும், உருண்டைத் தலையும், குட்டையாய்ப் பருத்த உடலுமுடைய மற்றொரு வகை நீக்கிரோக்களும் உள்ளனர். நீக்கிரோ இனத்தின் சிறப்பியல்புகள் சுருண்ட தலைமயிரும்,கறுத்த மேனியும், தட்டையான மூக்கும், கறும்பழுப்புக் கண்களும், அடர்ந்த புருவமும் நீண்ட கைகளும் ஆகும். நிறம் கறுப்பு, பழுப்பு, செம்பு, மஞ்சள் எனப் பலவிதமாகக் காணப்படுகிறது. நீக்கிரோ வகுப்பினரில் பலர் காக்கேசியப் பண்புடையவர்களாகவும் இருக்கின்றனர்.

ஆப்பிரிக்கக் கண்டத்தில் சகாராப் பாலைவனத்தை அடுத்துத் தெற்கேயுள்ள பெரும் பகுதியில் நீக்கிரோக்கள் வாழ்கிறார்கள். இவர்கள் பல்வேறு உடல் அமைப்புகள் கொண்டவர்கள். சில வகுப்பினர் 2 மீ. உயரமுள்ள குள்ளர்கள். சில வகுப்பினர் 1.2 மீ. உயரமுள்ளவர்கள்.சுத்தமான நீக்கிரோக்கள் வசிப்பது கினிகோசுட்டு என்னும் பகுதியாகும். இவர்கள் குள்ளமானவர்கள்; கட்டான உடலும் மிகுந்த கறுப்பு நிறமும்,நீண்ட தலையும் மிகுதியாகச் சுருண்ட தலைமயிரும் உடையவர்கள்.காமரூன்-பெல்சியம் காங்கோப் பகுதி முதல் இந்துமாக் கடல் வரை தென்கிழக்காக நீண்டு கிடக்கும் பெரும் பகுதியில் நீக்கிரோக்கள் வாழ்கின்றனர். ஆப்பிரிக்காவின் மற்றப் பகுதிகளிலும் பரவலாக உள்ளனர்.

பண்டைக் காலத்தில் நீக்கிரோக்கள் சமூகமாக அமைந்து ஒழுங்காக வாழ்க்கை நடத்தி வந்தனர்.





நீக்கிரோக்கள்

ஆப்பிரிக்காவின் தெனபகுதி புல்வெளிப் பிரதேசம். அதனால், ஆடு மாடுகளை மந்தையாக வைத்து வளர்த்தனர். வேளாண்மையே பொருளாதாரத்தின் அடிப்படை. கடற் கரையோரப் பகுதிகளில் கோதுமை யையும் பார்லியையும், ஏனைய இடங்களில் கரும்பு, புகையிலை. சோளம், பருத்தி முதலியவற்றையும் விளைவித்தனர். சில இடங்களில் ஆடு மாடுகளின் எண்ணிக்கையே பொருளாதாரத்தைக் குறிப்பதாக இருந்தது. இவர்கள் சந்தைகள் அமைத்தனர். அதன் விளைவாகக் கிராமங்களும் நகரங்களும் தோன்றின. கிராமமே அரசியல் அமைப்பின் தொடக்க நிலை. பரம்பரை வாரிசு தந்தை வழியது. இவர்களிடையே பலதார மணம் உண்டு.

இவர்களிடையே அரசியல் தொடர்புடையதும் மதத் தொடர்புடையதுமான சடங்குகள் மிகுதி. இயற்கைத் தேவதை வணக்கமும் மூதாதையர் வழி பாடும், மந்திரவாதத்தில் நம்பிக்கையும் உண்டு. மூதாதையரை அடிப்படையாகக் கொண்டு சாதிகள் பிரிந்துள்ளன. அரசியல் அமைப்புக்கும் அதுவே அடி நிலை. இசை, நடனம், கதை போன்ற கலைப் பிரிவு களில் இவர்கள் ஆர்வம் கொண்டவர்கள். இவர்கள் மரத்திலும் உலோகத்திலும் தந்தத்திலும் எலும்பி லும் செய்யும் அழகான செதுக்கு வேலைகளிலும் நேர்த்தியான துணி நெசவிலும் இரும்பு வேலையி லும் மட்கலத் தொழிலிலும் சிறந்து விளங்குகின்றனர். இவர்கள் முழவு, யாழ், குழல், கொம்பு போன்ற பல இசைக் கருவிகளையும் பயன்படுத்துகின்றனர்.

ஆப்பிரிக்க இலக்கியம் என்பது ஆப்பிரிக்காவிலும் அமெரிக்காவிலும் வாழும் நீக்கிரோ மக்களுடைய நாடோடி இலக்கியமாகும். அது கதைகளாகவும் புதிர்களாகவும் பழமொழிகளாகவும் காணப்படுகிறது. நீக்கிரோ மக்களுடைய கதைகள்அவர்கள் வாழ்க்கை முறையை அறிந்துகொள்ள உதவுகின்றன. இவர்களு டைய கதைகளில் பல புராணக் கூறுகளும் அறவழிக் கூறுகளும் காணப்படுகின்றன. கடவுளரைப் பற்றிய புராணக்கதைகள் கூட்டத்திற்குக் கூட்டம் வேறுபடு கின்றன. கதைகள் கல்விக்குப் பெருந்துணை என்பது நீக்கிரோக்களின் கருத்து. இவர்களுடைய கதைகள் மிகுந்த இலக்கியத் திறமை உடையனவாகக் காணப் படுகின்றன. இவர்களிடையே நாடோடிப் பாடல் களும் சிறந்து விளங்குகின்றன.

ஆப்பிரிக்கர்கள் நூற்றுக்கணக்கான மொழிகளைக் கொண்டுள்ளனர். அவற்றுள் பன்னிரண்டு மொழி களே மிகுதியாகப் பேசப்படுகின்றன. சூடானிக்கு, பாண்டு மொழிகளே நீக்கிரோக்களால் பெரிதும் பேசப்படுகின்றன. வடஆப்பிரிக்கா, அண்டை நாடு களின் படையெடுப்பாலும், அவர்களின் குடியேற்றங் களினாலும் நாகரிகத்தில் நன்கு வளர்ச்சி அடைந்தி ருந்தது. தென் ஆப்பிரிக்கா நாகரிகத்தில் வளர்ச்சி யடையவில்லை. வடஆப்பிரிக்காவில் அரேபியர்களின் படை யெடுப்பினால் முசுலிம்கள் உருவாக்கப்பட்ட னர். ஐரோப்பியக் குடியேற்றங்களுக்குப் பிறகு கிறித்தவ மதம் ஆப்பிரிக்கா முழுவதும் பரவியது.

நன்னம்பிக்கை முனை போர்ச்சுகல் தேசத்து வாசுகோட காமாவால் கி.பி. 15-ஆம் நூற்றாண்டின் இறுதியில் கண்டுபிடிக்கப்பட்டது. அவர் நீக்கிரோவுக் கும் ஆசியாக் கண்டத்திற்கும் இடையே அரேபிய, இந்திய வணிகர்கள் மூலம் வாணிகம் நடந்துவந்தது என்று கூறுகிறார். ஐரோப்பியர்கள் கி.பி.15-ஆம் நூற் றாண்டு முதல் 18-ஆம் நூற்றாண்டு வரை ஆப்பிரிக் காவிலிருந்து நீக்கிரோக்களைப் பிடித்துக் கொண்டு போய் அடிமைகளாக விற்று வந்தனர்.

காடுகள், மலைகள், ஏரிகள் அடங்கிய மத்திய ஆப்பிரிக்காவில், கி.பி. 19-ஆம் நூற்றாண்டில், கைத் தொழில்களுக்கு வேண்டிய மூலப்பொருள்களைப் பெறக்கூடுமென்றும், அக்கண்டத்தில் தொழிற்சாலை கள் அமைக்கலாம் என்றும் கண்டுபிடித்தனர். அதன் விளைவாக ஐரோப்பிய நாடுகள் நீக்கிரோக்களை வென்று, அடிமைப் படுத்தி அந்நாட்டிலுள்ள இயற்கை வளங்களைச் சேகரித்துத் தங்கள் நாடுகளுக்கு ஏற்று மதி செய்தன.

பிரிட்டன், பிரான்சு, இசுபெயின் ஆகிய நாடுகள் மேற்கு ஆப்பிரிக்காவில் பிடித்த நீக்கிரோக்களை அமெரிக்காவில் தங்கள்குடியேற்றப் பகுதிகளில் விற்று வந்தன அதன் விளைவாக அமெரிக்காவில் நீக்கி ரோக்களின் எண்ணிக்கை மிகுதியாயிற்று. அதுவே பின்னர் அமெரிக்க உள்நாட்டுப் போருக்கு வழி வகுத்தது.

**அமெரிக்க நீக்கிரோக்கள்(கி.பி.19-ஆம் நூ வரை):** ஐரோப்பிய மறுமலர்ச்சிக் காலத்தில் கி.பி.15,16-ஆம் நூற்றாண்டுகளில் கிழக்கு நாடுகளுக்குப் புதிய கடல் வழி கண்டுபிடிக்க முனைந்ததன் விளைவாகவும், கி.பி. 16, 17-ஆம் நூற்றாண்டுகளில் ஆப்பிரிக்காவில் தங்கள் குடியேற்றங்களை ஏற்படுத்த முனைந்ததன் விளைவாகவும் அமெரிக்க நீக்கிரோக்கள் உருவாக்கப் பட்டனர். போர்ச்சுகீசியர்கள் முதன் முதலில் ஆப்பிரிக்காவிலிருந்து நீக்கிரோக்களைப் பிடித்துக் கொண்டுபோய்த் தங்கள் குடியேற்ற நாடுகளில் விற்றனர். பின்னர் இசுபெயின், தச்சு, பிரான்சு, பிரிட்டன் ஆகிய நாடுகள் நீக்கிரோ அடிமைகளைத் தங்கள் குடியேற்றப்பகுதிகளிலும் அறிமுகப்படுத்தி னர். இந்த வாணிகம் மிகவும் இலாபமுடையதாக இருந்தது. இது கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் உச்ச நிலையை அடைந்தது. நீக்கிரோக்களின் எண்ணிக்கை

கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் 10,000,000 ஆக இருந்தது. அடிமைப்படுத்தப்பட்ட நீக்கிரோக்கள் பெரிய பண்ணைகளிலும், பருத்தி, புகையிலை, கரும்புத் தோட்டங்களிலும் வேலை செய்தனர். வேளாண்மை பெருகப் பெருக அடிமைகளின் எண்ணிக்கையும் உயர்ந்தது.

தொடக்கக்காலத்தில் நீக்கிரோக்கள் அமெரிக்க வேலைக்காரர்களைப் போலவே நடத்தப்பட்டனர். அமெரிக்க வேலைக்காரர்கள் குறிப்பிட்ட காலங்கள் மட்டுமே அடிமைகளாக இருந்தனர். பிறகு அவர்களுக்குச் சிறிதளவு நிலம் கொடுத்து அவர்களை விடுதலை செய்தனர். ஆனால், நீக்கிரோக்களுக்கு இந்தச் சலுகைகள் தரப்படவில்லை. இவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் அடிமைகளாக இருந்தனர். எட்டு, ஒன்பது வயதுக் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் மிகுந்த நேரம் பண்ணைகளிலும் தோட்டங்களிலும் வேலை செய்தனர். அவர்களுக்கு நல்ல உணவோ தங்குவதற்கு இடவசதியோ செய்து தரப்படவில்லை. நீக்கிரோக்கள் அடித்துத் துன்புறுத்தப்பட்டனர். சிறு தவறுகளுக்குக்கூடக் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். அதனால் பல நீக்கிரோக்கள் பழிவாங்க முற்பட்டனர். சிலர் வடபகுதிகளுக்குத் தப்பிச் சென்றனர். தங்கள் முதலாளிகளுக்குச் சொந்தமான பொருள்களை உடைத்தும், அவர்கள் வளர்க்கும் விலங்குகளைத் துன்புறுத்தியும் பயிர்களை நாசம் செய்தும், சிலர் தங்கள் முதலாளிகளைக் கொன்றும் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தனர்.

நீக்கிரோக்கள் பலர் பண்ணைகளில் வேலை செய்தாலும் சிலர் கைத்தொழில்களில் தேர்ச்சி பெற்றிருந்தனர். அதன் பலனாகத் தங்கள் உரிமையை விலை கொடுத்து வாங்கிக் கொண்டனர். சிலர் தங்கள் அடிமைகளைத் தாமே விடுதலை செய்தனர். மற்றும் பலர் அவர்களின் வீரச் செயல்களைப் பாராட்டி விடுதலை செய்தனர். சிலர் எழுதப்படிக்கக் கற்றுக் கொண்டதன் விளைவாக மற்ற நீக்கிரோக்களுக்கு ஆசிரியர்களாக விளங்கி, அவர்கள் விடுதலை பெறுவதற்கு உதவியும் செய்தனர்.

வட அமெரிக்காவில், தென் அமெரிக்காவைப் போல நீக்கிரோக்கள் கொடுமைப்படுத்தப்படவில்லை. அவர்களுக்குக் கல்வி அளிக்கப்பட்டது. அவர்களை மனிதர்களாக மதித்தனர். அவர்தம் உரிமை பெறும் எண்ணத்தை ஆதரித்தனர். தென்பகுதியிலிருந்து தப்பி வந்தவர்களுக்கு ஆதரவளித்தனர்.

பிரிட்டன் குடியேற்றப் பகுதிகளில் கி.பி. 1833-இலும் பிரான்சுக் குடியேற்றப் பகுதிகளில் கி.பி.1848-இலும் அடிமை முறையை ஒழித்தனர். அமெரிக்க விடுதலைப் போராட்டக் காலத்தில் மக்கள் நாட்டின் விடுதலைக்கும் தனிமனித உரிமைகளுக்கும் முக்கியத்துவம் அளிக்க வேண்டும் எனப் போராடினர். தாமசு செபர்சன் தம்முடைய விடுதலை அறிவிப்பில் தனிமனித உரிமைகளுக்கு முக்கியத்துவமும் சமத்துவமும் அளிக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். தென் அமெரிக்காவிலிருந்து தப்பி வந்த நீக்கிரோக்கள் வட அமெரிக்காவில் உரிமையுடன் வாழ்ந்தனர். பலர் விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டதன் விளைவாக உரிமை பெற்றனர். வட அமெரிக்கர்கள் நீக்கிரோ அடிமைகளை விடுவிப்பதற்கு முயற்சிகள் மேற் கொண்டனர். அவற்றின் விளைவாகப் பல இடங்களில் நீக்கிரோக்கள் கலகம் செய்தனர். வர்சீனியாவில் கி.பி. 1831-ஆம் ஆண்டு மிகவும் கொடுமையான நிகழ்ச்சி நடந்தது. அதில் 100 நீக்கிரோக்களும் 60 அமெரிக்கர்களும் உயிர் நீத்தனர்.

அமெரிக்கக் குடியேற்றச் சங்கம்ஒன்று கி.பி.1817-ஆம் ஆண்டில் ஏற்பட்டு, அமெரிக்காவில் அடிமையாயிருந்த நீக்கிரோக்களைப் பணம் கொடுத்து உரிமை உடையவர்களாகச் செய்து, ஆபபிரிக்காவில் குடியேறச் செய்தது. மிகச் சிலர் மட்டுமே அவ்விதம் வெளியேற முடிந்தது. அந்தக் குடியேற்றமே இப்போது இலைபீரியாக் குடியரசாக (Republic of Liberia) இருந்து வருகிறது.

வடபகுதியில் கி.பி. 1820,1830-இல் இருந்த நீக்கிரோக்கள்தங்களுக்கென்று தனியான கோயில்களையும் பள்ளிகளையும் கல்லூரிகளையும் அமைத்துக் கொண்டனர். பலர் கூட்டுறவு அமைப்புகளையும் மன்றங்களையும் அமைத்துக் கொண்டனர். நீக்கிரோக்கள் கி.பி. 1827-இல் தனியாக நாளிதழ்களை நடத்தத் தொடங்கினர்.

அடிமைகளை ஒழிக்கும் இயக்கம் ஒன்று ஏற்பட்டு அதன் விளைவாகச் சுரங்கப் பாதைகளின் வழியாக ஆயிரக் கணக்கான நீக்கிரோக்கள் விடுதலை செய்யப்பட்டனர்.

விடுதலை பெற்ற நீக்கிரோக்களின் எண்ணிக்கை கி.பி. 1860-ஆம் ஆண்டில் மிகுதியாயிற்று. ஆனால், மிகச் சிலர் மட்டுமே சரிசமமாக நடத்தப் பட்டனர். மற்றவர்கள் விடுதலை பெற்றதற்கான அடையாளங்களுடன் தான் வெளியில் செல்ல முடிந்தது. அடையாள அட்டைகள் இல்லாதவர்கள் மீண்டும் அடிமைகளாக விற்கப்பட்டனர். தென் அமெரிக்காவில் இருந்த உரிமை பெற்ற நீக்கிரோக்கள் மன்றங்கள் அமைக்கவோ கூட்டங்கள் நடத்தவோ தங்கள் சிக்கல்களை விவாதிக்கவோ மறுக்கப்பட்டனர்.

அமெரிக்க ஐக்கிய நாடு கி.பி. 1808-ஆம் ஆண்டு அடிமை வாணிகத்தைச் சட்ட விரோதமாக்கியது. ஆனால், உள்நாட்டுப் போரின் தொடக்கக் காலம் வரை அடிமைகளைக் கடத்தி வந்து வாணிகம் செய்த னர். மிசாவுரி, கி.பி. 1820-ஆம் ஆண்டு ஐக்கியத்தில் புதிதாகச்சேர்ந்த பொழுது, அது அடிமை நீக்கிரோக் களை வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. மெக் சிகோவிலிருந்து கி.பி. 1850-ஆம் ஆண்டு பெறப்பட்ட பகுதிகளில் குடியேறும் மக்கள் அடிமைகளை வைத் துக்கொள்வதும் வைத்துக் கொள்ளாததும் அந்தந்தப் பகுதி மக்களின் விருப்பம் என்று என்றி கிளே (Clay) மசோதாகொண்டு வந்தார். மேலும், வடபகுதிக்குத் தப்பிச்சென்ற நீக்கிரோக்களை மீண்டும் அவர் தம் முதலாளிகளிடம் ஒப்படைக்க வேண்டும் என்று அம் மசோதா கூறியது. வடபகுதியினர் தப்பிவரும் அடி மைகள் பற்றிய சட்டத்தை ஏற்றுக் கொள்ள மறுத் தனர். தப்பி ஓடிவந்தவர்களுக்கு ஆதரவு தந்ததனால் வடபகுதியினர் சட்டத்தை மீறினர். கான்சாசு நெப் ராசுகா சட்டத்தின்படி கி.பி. 1854-ஆம் ஆண்டு உலூ சியானாப் பகுதியில் மக்கள் தங்கள் விருப்பம் போல் அடிமைகளை வைத்துக் கொள்ள அனுமதிக்கப் பட்டனர். இவ்வாறு வட பகுதியினர் அடிமைகளை வைத்துக்கொள்ளக் கூடாது என்றும், தென் பகுதி யினர் அடிமைகள் தேவை என்றும் அடிமைகள் தனிப் பட்டவர் சொத்து என்றும் வாதிட்டனர்.

வடபகுதியில், புதிதாகத் தோன்றிய குடியரசுக் கட்சி அடிமைத்தனம் மேலும் பரவுவதைத் தடை செய்யவும் அடிமை முறையை ஒழிக்கவும் பாடுபட் டது. குடியரசுக் கட்சியைச் சேர்ந்த ஆபிரகாம் லிங் கன் குடியரசுத் தலைவராக கி.பி. 1861-இல் தேர்ந் தெடுக்கப்பட்டார். இலிங்கனின் வெற்றியை ஏற்றுக் கொள்ளாத தென் பகுதியினர் அமெரிக்க ஐக்கியத்தி லிருந்து பிரிந்து அமெரிக்கக் கூட்டு அரசை ஏற்படுத் திக் கொண்டனர். அதனால், உள்நாட்டுப் போர் தொடங்கியது. அதற்கு அரசியல், பொருளாதார சமுதாயக்காரணங்கள் அடிப்படையாக இருந்தபோதி லும் அடிமைகள் பற்றிய சிக்கலே முக்கிய காரண மாக அமைந்தது.

இலிங்கன், கி.பி. 1863-ஆம் ஆண்டு சனவரி முதல் நாள், விடுதலை அறிவிப்பில் (Emancipation Proclamation) அமெரிக்க ஐக்கியத்தை எதிர்த்துக் கலகம் செய்துவரும் பகுதிகளில் எல்லா அடிமைகளும் இனி உரிமையுள்ளவர்களாக இருப்பர் என்று அறி வித்தார். அமெரிக்கா முழுவதிலும் கி.பி. 1865-ஆம் ஆண்டு அதன் அனைத்து மாநிலங்களிலும் அடிமைத் தனத்தை ஒழிக்கும் 13-ஆம் திருத்தம் ஒப்புக் கொள் ளப்பட்டது. நீக்கிரோக்கள் அதிகாரபூர்வமாகஉரிமை யுள்ளவர்களாக இருந்தாலும், அவர்களுக்குக் குடியுரி மையும் வாக்களிக்கும் உரிமையும் 15-ஆம் திருத் தங்களின் மூலமே அளிக்கப்பட்டன.

பிரிந்து சென்ற நாடுகள் மீண்டும் ஐக்கியத்தில் சேர்ந்து புதிய சமுதாய அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு நீக்கிரோக்களுக்குப் பாதுகாப்பளித்தன. கி.பி. 1866, 1875-ஆம் ஆண்டுகளில் செயற்படுத்தப் பட்ட பொது உரிமைச் சட்டம், நீக்கிரோக்களுக்குப் பாதுகாப்பும் பொதுஇடங்களில் நிலை பெற உரிமை யும் வழங்கியது. பின்னர் நீக்கிரோக்கள் பொறுப்புள்ள அரசாங்க அலுவல்களில் அமர்த்தப் பட்டனர். சில நீக்கிரோக்கள் சட்டசபைக்கும் காங்கிரசிற்கும் தேர்ந் தெடுக்கப்பட்டனர். நீக்கிரோக்களின் நிலையில் 20-ஆம் நூற்றாண்டில் பலமாறுதல்கள் ஏற்பட்டன. அவை அவர்கள் வாழ்க்கையில் முன்னேற வழிவகுத்தன.

**இருபதாம் நூற்றாண்டு:** கறுப்பர்களின் முன் னேற்றத்திற்கான தேசிய மன்றத்தை (The National Association for the Advancement of Coloured People) 1909-ஆம் ஆண்டு, நீக்கிரோக்களும் வெள்ளை யர்களும் இணைந்து தோற்றுவித்தனர். இந்த இயக் கத்தைச் சேர்ந்தவர்கள் நீக்கிரோக்களுக்கும் கல்வி, வேலைவாய்ப்பு, அரசாங்க வேலைகள் ஆகியவற்றில் சம உரிமை அளிக்க வேண்டும் என்று நீதிமன்றங் களில் விண்ணப்பம் செய்தனர்; காங்கிரசிற்கும் விண்ணப்பம் செய்தனர்; தங்கள் நிலைமையை அமெரிக்க மக்களின் கவனத்திற்குக் கொண்டுவர முயன்றனர். அதுபோலவே 1910-ஆம் ஆண்டு தோற்று விக்கப்பட்ட தேசிய ஊரகச் சங்கம் (National Urban League) நீக்கிரோக்களின் வாழ்க்கைத் தரம் உயர் வதற்கும் வேலை வாய்ப்புகள் கிடைப்பதற்கும் பாடு பட்டது.

வெள்ளையர்கள் பலர் நீக்கிரோக்களின் எண்ணங் களைப் புரிந்துகொள்ளவில்லை; நீக்கிரோக்கள் நடத் தும் பத்திரிகைகளைப் படிப்பதில்லை. நீக்கிரோக்கள் பெருமளவிற்கு வெள்ளையர்களிடமிருந்து பிரித்துத் தனியாக நடத்தப்பட்டனர். அதனால், அவர்கள் தங் களுக்கென்று ஏற்படுத்தப்பட்ட கழகங்களையும் குழுக்களையுமே சார்ந்திருந்தனர். அவற்றுள் நீக்கி ரோக்களின் கோயில்கள் பெரும்பங்கு வகித்தன.

முதல் உலகப் போர் தொடங்கிய காலத்தில் தென்பகுதியிலிருந்து வடபகுதிக்கு நீக்கிரோக்கள் சென்று குடியேறினர். அதனால், தென் பகுதியில் தொழிலாளர்களின் எண்ணிக்கை குறைந்தது. தென் பகுதியைச் சேர்ந்த அரசியல் தலைவர்களும் பொது அலுவலர்களும பல அரசாங்க அதிகாரிகளும் நீக்கிரோக்களின் வடபகுதிக்குடியேற்றத்தைத் தடுக்க முற்பட்டுத் தோல்வியடைந்தனர்.

நீக்கிரோக்கள் வடபகுதியில் முழு உரிமைகளுடன வாழலாம் என்றும், தங்கள் குழந்தைகளுக்கு நல்ல பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கல்வி கற்க வாய்ப்புக் கிடைக்கும் என்றும் நினைத்தனர். தொடக்கக்காலத்தில் அவர்களுக்குப் போர்க் கருவிகள் செய்யும் தொழிற்சாலைகளில் வேலையும் அதற்கேற்பக்கூலியும் கிடைத்தன. நீக்கிரோக்கள் மிகுதியாக வட பகுதியில் குடியேறியதன் விளைவாக நீக்கிரோக்களுக்கு நல்ல வேலைவாய்ப்பும் தங்குவதற்கு வீடுகளும் போதிய அளவு கிடைக்கவில்லை. வடபகுதியிலும் அவர்கள் தனியாகப் பிரித்து நடத்தப்பட்டனர். அதனால், தகுந்த காரணமின்றி இனக் கலவரங்கள் தோன்றின. முதலாம் உலகப் போர்க் காலத்தில் 270 க்கும் மேற்பட்ட இனக் கலவரங்கள் நடந்தன.

அமெரிக்கா உலகப் போரில் நேரடியாகப் பங்கு கொண்ட போது நீக்கிரோக்கள் அமெரிக்கப் படையில் சேர்ந்து நாட்டைக் காக்க முற்பட்டனர். ஆனால், போர்க் களங்களிலும் அவர்கள் தனித்து நடத்தப்பட்டனர். பொதுவாக நீக்கிரோக்கள் போர்க் களத்தில் எடுபிடி வேலைகளை மிகுதியாகச் செய்ய வேண்டிய நிலையிலிருந்தனர். மிகச்சிலர் மட்டும் போரில் பங்கு கொண்டு சிறந்த பணிக்காகப் பெருமைப்படுத்தப் பட்டனர்.

அமெரிக்கக் குடியரசுத் தலைவர் உட்ரோவில்சன் முதல் உலகப் போரில் உலகத்தை மக்களாட்சிக்குக் காப்பாற்றித் தர வேண்டும் என்று கூறினார். மேலும் மக்களாட்சிக்குத் துணையாகப் போர் முடிந்தால் தங்கள் உரிமைகளைப் பெற்று உண்மையான அமெரிக்கர்களாக நடத்தப்படுவோம் என்று நீக்கிரோக்கள் நம்பினர். ஆனால், போர் முடிந்த பின்னர் முன்பை விட மிகுதியான துன்பத்திற்கு ஆளாயினர். இனக்கலவரங்கள் வடபகுதியிலும் தென்பகுதியிலும் மிகுதியாக ஏற்பட்டன. காங்கிரசு உறுப்பினர்கள் சிலர் இனக் கலவரங்களைத் தடுக்க 1921-இல் மசோதாக்கள் கொண்டு வந்தனர். ஆனால், தென்பகுதியைச் சேர்ந்தவர்கள் மசோதாக்கள் வாக்கெடுப்புக்கு வாராமலேயே தடுத்தனர். இனக் கலவரங்கள் தொடர்பான மசோதாக்கள் 1935-இலும், 1940-இலும் தோல்வி யடைந்தன.

நீக்கிரோக்களால் தோற்றுவிக்கப்பட்ட சில கழகங்கள், தங்கள் உரிமைகளை என்றும் பெறவியலாது என்ற எண்ணத்தில், நீக்கிரோக்கள் ஆப்பிரிக்காவிற்குத் திரும்ப வேண்டும் என்ற கொள்கையை வெளியிட்டன.

நிறிதளவு மாற்றம் 1940-ஆம் ஆண்டில் ஏற்பட்டது. மக்களாட்சிக்கும் பாசிசத்திற்கும் ஏற்பட்ட உலகம் தழுவிய போட்டியின் காரணமாக மக்களாட்சி தன் சிறப்பை நிலைநாட்ட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டதே இந்த மாற்றத்திற்கு முக்கிய காரணமாகும். நீக்கிரோக்களின்விடா முயற்சியும் மற்றொரு காரணமாக அமைந்தது. நீக்கிரோக்களின் இனப் பற்றும், பண்பாட்டு இயக்கங்களும், நீக்கிரோக்களின் மறுமலர்ச்சிக்கு வழி வகுத்தன.

ஆசுகார்-டி-பிரீசுட்டு (Oscar De Priest) என்ற நீக்கிரோ முதன் முதலில் 1928-இல் காங்கிரசிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். குடியரசுத் தலைவர் உரூசுவெல்ட்டு நீக்கிரோக்களின் உரிமைகளையும் அவர்களின் கடமைகளையும் உணர்ந்து நீக்கிரோக்களை முக்கியமான அரசாங்கப் பதவிகளில் அமர்த்தினார். இரண்டாம் உலகப் போர்க் காலத்தில நீக்கிரோக்கள் போரில் பங்கு கொண்டு உயிர் விடுவதை விடத் தங்கள் உரிமைகளுக்காகப் போராடி உயிர் விடுவதையே பெருமையாகக் கருதினர். அனைத்து அமெரிக்கர்களும் போரில் முழுமையாகப் பங்கு கொண்டால் தான். வெற்றி பெற முடியும் என்ற நிலையில் உரூசுவெல்ட்டு நீக்கிரோக்களுக்கு மேலும் பல உதவிகள் செய்தார். அவர்களின் குறைகளை நீக்கினார். கொள்கைகளை நிறைவேற்றும் கட்டளை (Executive Order) 8802, 1941-இல் கொண்டுவரப்பட்டது. அதன்படி நீக்கிரோக்கள் சமமாக நடத்தப்படுவதற்கும், போர்க்கருவிகள் செய்யும் தொழிற்சாலைகளில் வேலைவாய்ப்புப் பெறுவதற்கும் வழி வகுக்கப்பட்டது.

உரூசுவெல்ட்டு, நீக்கிரோக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்படுகிறதா என்றும், அவர்கள் மறுக்கப்பட்ட இடங்களுக்குச் செல்ல முடிகிறதா என்றும், தங்கும் இடங்கள் நல்ல முறையில் உள்ளனவா என்றும் கவனித்துக் கொண்டார். நீக்கிரோக்களின் 93-ஆம் பிரிவு, பசிபிக்குப் போர்க் களங்களில் பங்கு கொண்டு வெற்றி பெற்றது. போர்க் கப்பல்கள் பல நீக்கிரோக்களின் பெயர்களைக் கொண்டிருந்தன. துருமன் 1948-இல் கொள்கைகளை நிறைவேற்றும் கட்டளை 9981-ஐக் கொண்டு வந்தார்.

இரண்டாம் உலகப் போர்க் காலங்களிலும் அதற்குப் பிறகும் நீக்கிரோக்கள் பலர் அரசாங்கத்தின் முக்கியமான வேலைகளில் அமர்த்தப்பட்டனர். சிலர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பெட்ரீசியா ஆர். ஆரிசு (Petricia R. Harris) லக்சம்பர்க்கிற்குத் தூதுவராக அனுப்பப்பட்டார். நீக்கிரோ இனத்தைச் சார்ந்த அறிஞர்களும் கலைஞர்களும் உருவாக்கப்பட்டனர்.

மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், ஆசிரியர்கள், சமூகப்பணி செய்பவர்கள், மத குருக்கள் போன்றவர்களின் வாழ்க்கை முறையில் வியக்கத் தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. சிறந்த வரலாற்று வல்லுநர்

களும் மருத்துவ நிபுணர்களும் சிறந்த பத்திரிகை யாளர்களும் உருவாக்கப்பட்டனர். நீக்கிரோ அறிவியல் அறிஞர்கள் விண்வெளி ஆராய்ச்சிகளில் பங்கு கொண்டு சிறப்புற்றனர். போர்க் காலங்களில் சிறப்பாகப் பணியாற்றியவர்கள் பெருமைப்படுத்தப்பட்டனர். இசை, நாடகம், நடனம் போன்ற கலைத்துறைகளிலும் விளையாட்டுகளிலும் பங்கு கொண்டு பாராட்டப்பட்டனர். பல நீக்கிரோக்களின் புகழ் உலகம் முழுவதும் பரவியது.

நீக்கிரோக்கள் இவ்வாறு பல துறைகளிலும் சிறப்புற்று விளங்கிய போதிலும், நீக்கிரோக்களைப் பிரித்து வைப்பதும், வேறுபாடாக நடத்துவதும், அதனால் இனக் கலவரங்கள் ஏற்படுவதும் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தன. போக்குவரத்து வாகனங்களில் நீக்கிரோக்கள் சமமாக நடத்தப்படவில்லை. தனித்தனியான ஆனால், சமமான கல்வி என்று கி.பி. 1896-இல் உயர்நீதி மன்றம் அறிவித்திருந்த போதிலும் அது முழுமையாக நடைமுறைப் படுத்தப்படவில்லை.

நீக்கிரோப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பணிபுரியும் ஆசிரியர்களுக்கு வெள்ளையர்களுக்கு வழங்கப்படும் ஊதியம் வழங்க வேண்டும் என்று நீதிமன்றங்களில் போராடி வெற்றி பெற்றனர். நீக்கிரோப் பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் வேண்டிய வசதிகளைச் செய்ய நீக்கிரோக்களால் நிறுவப்பட்ட கழகங்கள் நிதி உதவி செய்தன. தனித் தனியான கல்வி வசதிகள் என்றால் சமமற்றவையாகத் தான் இருக்கும்; அதனால், அதற்கு முடிவு காண வேண்டும் என்று 1954-ஆம் ஆண்டு நீதிமன்றங்களில் வாதாடி வெற்றி பெற்றனர். நீக்கிரோக்களை இன வேறுபாட்டினால் பிரித்துவைக்கக் கூடாது என்றும் போராடினர். அதைத் தொடர்ந்து பள்ளிகளில் இன சமத்துவம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பொது வாகனங்களிலும் நீக்கிரோக்களைப் பிரித்து வைக்கும் முறைக்கு முடிவு ஏற்பட்டது.

வாக்களிப்பதில் உள்ள குறைகளை, 1957,1960 -ஆம் ஆண்டுகளில் கொண்டுவரப்பட்ட பொது உரிமைச் சட்டமும், 1965-இல் செயற் படுத்தப்பட்ட வாக்களிக்க முழு உரிமை வழங்கும் சட்டமும் போக்கின. அது 1970, 1975-ஆம் ஆண்டுகளில் மேலும் விரிவுபடுத்தப்பட்டது.

வேலைவாய்ப்பு, வீட்டுவசதி, பொது இடங்களில் தங்குதல் ஆகியவற்றில் சமஉரிமைகள் கிடைக்காத இடங்களில் முழு உரிமைகள் கிடைக்கப் பொது உரிமைச் சட்டத்தில் 1964-இல் வழிவகுக்கப்பட்டது. நீக்கிரோக்கள் அரசாங்கத்தின் முக்கியமான பதவிகளில் பொறுப்பேற்கும் வாய்ப்புக் கிடைத்தது. 1971 -இல் 12 நீக்கிரோக்களும், ஆட்சிப்பேரவைக்கு (Senate) ஒருவரும், மூன்று நகரங்களின் காங்கிரசிற்கு நகராண்மைக் கழகத் தலைவர்களாக மூன்று நீக்கிரோக்களும், உயர்நீதி மன்ற நீதிபதியாக ஒருவரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நீக்கிரோக்களுக்கு உரிமைகள் மறுக்கப்பட்ட இடங்களில் இனக் கலவரங்கள் நடந்தன. நீக்கிரோ இளைஞர்கள் தங்கள் உரிமைகள் மறுக்கப்படுகின்ற இடங்களில் ஆயுதம் ஏந்தத் தயாராயினர். 1964-இல் கொண்டுவரப்பட்ட முழு உரிமைகள் வழங்கும் சட்டம் முழுமையாகச் செயற்படுத்தப்படவில்லை என்று குறை கூறினர். கலவரத்திற்கான காரணங்களை ஆராயக் குடியரசுத் தலைவர் சான்சன் ஒரு குழுவை அமர்த்தினார். அக்குழு, நீக்கிரோக்கள் அமெரிக்காவில் தங்களுக்கென்று தனியான நாடு வேண்டும் என்று விரும்புகின்றனரென்றும் அதைத் தவிர்க்க அவர்களுக்குப் போதிய வீட்டுவசதிகளும் வேலை வாய்ப்புகளும் அளிக்க உடனடி நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்றும் கூறியது.

பொது உரிமைச் சட்டம் 1968-இல் கொண்டுவரப்பட்டு அது நீக்கிரோக்களைச் சமமாக நடத்த வழி வகுத்தது. அந்தச் சட்டத்திலும் நம்பிக்கை இல்லாத நீக்கிரோ இளைஞர்கள், 1966-இல் தோற்றுவிக்கப்பட்ட கறுப்புப் பதான் கட்சியில் (Black Pathan Party) சேர்ந்தனர். அக்கட்சி, நீக்கிரோக்கள் முழு உரிமை பெறவும், தேவைப் பட்டால் தற்காப்பிற்குத் துப்பாக்கி வைத்துக்கொள்ளவும் வலியுறுத்தியது. அதனால் பல இனக் கலவரங்களும், நாட்டில் குழப்பமும் ஏற்பட்டன. அந்தக் கட்சி ஆயுதம் ஏந்தித் தங்கள் உரிமைகளுக்காகப் போராடுவதை விரும்பாத அரசாங்கம் 1971-இல் முழுமையாக அக்கட்சியை ஒழித்தது.

தொடர்ந்த போராட்டங்களின் விளைவாக அமெரிக்க நீக்கிரோக்கள் உரிமைகளைப் பெற்றனர். இன்றைய நீக்கிரோக்கள் நிலையில் பல மனித மேம்பாட்டுத் திட்டங்களும், சமவாய்ப்பு முறைகளும் உள்ளன. அமெரிக்காவில் நீக்கிரோ இனம் முழுமையான உரிமைகளை அனுபவிக்கத் தொடங்கியுள்ளது எனலாம். மு.ந.

**நீசு** பிரான்சில், மத்தியதரைக் கடற்கரையில், இத்தாலிக்கு அண்மையில் உள்ள மிகப் பழைமையான துறைமுகப்பட்டினம். இது பாரிசிலிருந்து 676 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆல்ப்சு மலையின் அடிவாரத்தில் நீசு (Nice) அமைந்துள்ளதால் வடக்கிலிருந்து வீசும் குளிர்காற்றுத் தடுக்கப்பட்டுக் குளிர் மிதமாக உள்ளது. இது சிறந்ததோர் சுற்றுலாமையமாக விளங்குகிறது. இதன் மக்கள் தொகை 338,486 (1982).

**நகர அமைப்பு**: இந்நகரைப் பைல்லான் (Paillon) ஆறு இரண்டாகப் பிரிக்கிறது. ஆற்றுக்குக் கிழக்கில் அமைந்துள்ள பழைய நகரத்தில் கோட்டை ஒன்று உள்ளது. பழைய வீடுகளும், பாழடைந்த அரண் மனைகளும் பண்டைய நினைவுச் சின்னங்களாக இருக்கின்றன.

பைல்லான் ஆற்றின் வடக்கு, வடகிழக்கு, மேற் குப் பகுதிகளில் புதிய நகரம் அமைந்துள்ளது. இங்குப் பல நூலகங்கள், அரும்பொருட் காட்சியகங்கள், திரைப் பட நிலையங்கள், நடன, நாடகத் திறந்தவெளி அரங்குகள் ஆகியவை உள்ளன.

இந்நகரில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் கட்டப் பட்ட உரோமன் கத்தோலிக்கக் கோயில் ஒன்றும், உருசியாவைச் சேர்ந்த மாவட்டத் தலைமைத் திருக் கோயில் ஒன்றும், யூதர்களின் கோயில்கள் இரண்டும் உள்ளன. இங்குள்ள கிராசு மலையில் (Mont.Cross) வானவியல், வானிலை ஆராய்ச்சி நிலையம் ஒன்று உள்ளது.

இந்நகரிலிருந்து ஒன்றரை கி.மீ. தொலைவிலுள்ள சிமிசு (Cimiz) என்னும் நகரில் கி.பி. முதல் நூற் றாண்டில் உரோமானியரால் கட்டப்பட்ட மாபெரும் பொது விளையாட்டு அரங்கு (Amphitheatre) ஒன்று பாழடைந்த நிலையில் உள்ளது.

நீசுத் துறைமுகம் பைல்லான் ஆற்றுமுகப் பகுதி யில் 8 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது.

**தொழில்கள்**: சுற்றுலாப் பணியே இம்மக்களின் முக்கிய தொழிலாகும். உல்லாசப் பயணிகளுக்கெனப் பல விழாக்கள் கொண்டாடப்படுகின்றன. அப் பொழுது ஊர்திகள் (automobiles) இரு சக்கர வண்டி கள், படகுகள் (Yachts) ஆகியவற்றின் போட்டிகள் சிறப்பானவை. இங்கு நடைபெறும் பிற தொழில்கள் வாசனை எண்ணெய்கள், ஆலிவு, எண்ணெய், மது சோப்பு, சிமிண்டு, மரச்சாமான்கள், பட்டு, இரப்பர்ப் பொருள்கள், உலோகச் சாமான்கள் முதலியவை தயாரித்தலாகும். ஆலிவு, ஆரஞ்சு, மல்பரி, திராட்சை ஆகியவை பயிர் செய்யப்படுகின்றன.

**வரலாறு**: மிகப் பழைய நகரமான இது 2000 ஆண்டுகளுக்கு முன்னர் மார்செயில்சிலிருந்த போசி யன்களால் (Phocaeans of Marseilles) உண்டாக்கப் பட்டு, இலத்தீன் மொழியில் நீசியா (Nicaea) எனப் பட்டது. பின்னர் அவர்கள் அண்மையிலிருந்த இலி கூரியன்களை (Ligurians) வென்றதன் நினைவாக, 'வெற்றி' என்னும் பொருளில், நிகே (Nike) எனப் பெயரிட்டனர். பழங்காலத்தில் இது வலிமைமிக்க, சிறந்ததோர் வணிக நகரமாக இருந்தது. இலம்பார்டு கள் (Lombards), சாரசன்கள்(Saracens )ஆகியோரின் படையெடுப்புகளால் இது அழிக்கப்பட்டது. பிரான்சு கி.பி. 1705-இல் இதனை முற்றுகையிட்டு இதன் கோட்டைகளையும் மதிலையும் அழித்தது. உட்டி ரக்டு (Utrecht) உடன்படிக்கையின்படி கி.பி 1713-இல் இருந்து 1748-இல் ஐக்சுலா செபேல் (Aix-la-Chapella) உடன்படிக்கை ஏற்படும் வரை இதனைப் பிரான்சுக்காரரும், இசுபானியரும் கைப்பற்றியிருந்த னர். மீண்டும் பிரான்சு இதனை கி.பி. 1792-இல் கைப்பற்றி, கி.பி.1814 வரை தன்னுடைய நாட்டின் ஒரு பகுதியாகவே வைத்திருந்தது. வியன்னா மாநாட் டின் முடிவின்படி இது சார்டினியாவுடன் இணைக்கப் பட்டது. இத்தாலிய ஐக்கியத்தின் பொழுது, கி.பி. 1860-இல் சார்டீனிய மன்னர் இதனை மூன்றாம் நெப்போலியனுக்குக் கொடுத்ததால் இது பிரான்சின் ஒரு பகுதியாக ஆயிற்று. சி.இரெ.

***நீசுட்டர் ஆறு*** ஐரோப்பியச் சோவியத்து ஒன்றியக் குடியரசின் தென்மேற்குப் பகுதியில் ஓடு கிறது. நீளம் 1370 கி.மீ. உக்ரெய்ன் பகுதிக்கும் மோல்டேவியன் (Moldavian) குடியரசுக்குமிடையே உள்ள எல்லையின் ஒரு பகுதி நீசுட்டர் (Dniester or Dnestr) நதியாகும். கார்ப்பேத்தியன் மலைகளில் தோன்றித் தென்கிழக்கில் உக்ரெய்ன்,மோல்டேவியக் குடியரசு முதலியவற்றின் வழியாகஓடி, ஓடீசாவின் தென்மேற்கில் கருங்கடலில் இந்நதி விழுகிறது. உரு மேனியாவுக்கும் சோவியத்துக் குடியரசுக்கும் இடையே அமைந்த எல்லையாக இது, 1918 முதல் 1940 வரை இருந்தது. நீண்டதூரம் போக்குவரத் துக்கு ஏற்றவகையில் உள்ள இந்த ஆறறில் இசுத்திரி (Stry), செரெட்டு (Seret)ஆகிய நதிகள் கலக்கின்றன. இதில் மீன் மிகுதியாகக் கிடைக்கிறது. தெ.பா.

***நீட்சேபிரடரிட்சு*** (**கி.பி. 1844-1900**): நீட்சே தலைசிறந்த தத்துவஞானி. இவர் செருமனி நாட் டின் சாக்சனியில் உள்ள இராக்கென் என்னும் இடத் தில், ஒரு கிராமப் பாதிரியாருக்கு மகனாகப் பிறந் தார். நீட்சே, பான், இலீப்சிக்குப் பல்கலைக் கழகங் களில் பயின்றார். செவ்வியல் படைப்புகளில் மிகச் சிறப்பாகத் தேர்ந்து விளங்கிய நீட்சேயின் அறிவுத் திறத்திற்குச் சான்றாக கி.பி.1869-இல் இவர் பட்டம் பெற்ற உடனேயே பாசில் கல்லூரியில் செவ்வியல் ஒப்பியல் பிரிவிற்குப் பேராசிரியராக நியமிக்கப்பட்ட தைக் குறிக்கலாம். பத்தாண்டுகள் தொடர்ந்து அப் பதவியில் இருந்த நீட்சே கடைசியில் உடல்நலக் குறைவு காரணமாகப் பதவி விலக நேர்ந்தது.

இலீப்சிக்குப் பல்கலைக் கழகத்தில் பயின்றபோது நீட்சே, சோபனர் என்ற தத்துவஞானியின் கோட் பாடுகளால் பெரிதும் ஈர்க்கப்பட்டார். அவருடைய துறத்தல் கோட்பாடு, கலை என்பது துன்பத்தினின்

றும் விடுவிக்கும் ஆற்றலுடையது எனும் கோட்பாடு ஆகியன இவரை மிகவும் கவர்ந்தன.

இவர் செருமானிய இசைக்கலைஞராகிய வாக்ன ரிடம் நெருங்கிய நட்புக் கொண்டிருந்தார். இவர் இசையினைப் பெரிதும் விரும்பும் கலைஞர்களுள் ஒருவரானார். தொடக்கக்காலத்தில் நீட்சேயின் சிந் தனைகளில் பெரிதும் பாதிப்பினை ஏற்படுத்தியவர் கள் சோபனரும் வாக்னரும் ஆவர்கள்

பாசிலில் பணியாற்றிய போது அடிக்கடி வாக்ன ரின் மாளிகைக்குச் செல்வார் நீட்சே. தம் முதல் நூலை வாக்னருக்கு கி.பி.1871-இல் காணிக்கையாக் கினார். இசையின் ஆன்மாவிலிருந்து பிறக்கும் துன் பியல் அல்லது கிரேக்க இயலும் துன்பியலும் என்ற தம் நூலில் வாக்னரின் இசைப்படைப்பு, கிரேக்கத் துன்பியல் நாடகங்களின் உண்மையான கால்வழி எனக் குறிப்பிட்டார். அந்த நூலில் கிரேக்கத் துன் பியலின் தோற்றம் பற்றிச் சிறப்பாக இவர் ஆராய்ந் திருப்பினும், ஒப்பியல் துறையில் இது பெரிதும் வர வேற்பினைப் பெறவில்லை.

நீட்சே கி.பி. 1873 முதல் 1876 வரையில் வெளி யிட்ட நான்கு கட்டுரைகள் தாம் அறிவுலகில் பெரி தும் வரவேற்கப்பட்டன. அறிவிலிருந்து பிறக்கும் எண்ணங்கள் என்ற பெருமிதமான தலைப்பிட்டு வெளிவந்தன அக்கட்டுரைகள். இரண்டு கட்டுரைகள் சோபனர்,வாக்னர் ஆகியோருக்கு ஆசிரியர் பட்டுள்ள கடப்பாட்டினைப் புலப்படுத்துகின்றன. ஒரு கட்டுரை சமகாலப் பண்பாட்டு மாற்றங்களைக் கண்டிக்கின் றது.

'வரலாறு படிப்பதால் வாழ்வில் ஏற்படும் நன்மை தீமைகள்' என்ற தலைப்பிலான கட்டுரையில் 'எகல்' கோட்பாட்டினை வழிபடும் போக்கினைத் தாக்குகின் றார். ஒரு கோட்பாட்டினைத் தழுவுதல் என்பது, பண் டைய கிரேக்க நாட்டில் உருவானது போல, ஒருங் கிணைந்த மனித ஆளுமைத் திறனைச் செம்மைப் படுத்துவதற்குத் துணைநிற்க வேண்டும் என்பார்.

நீட்சே கிரேக்க நாடகக் கொள்கை ஒன்றை வெளிப்படுத்தினார். அப்போலோனிய அல்லது மனித இயல்பின் பகுத்தறிவுக்கூறு, தயனீசிய அல்லது உணர்ச்சிக் கூறு என்ற இரண்டு கூறுகளுக்கும் இடை யிலான வேறுபாட்டினை இக்கொள்கை வழி அறி முகப்படுத்தினார்.

நீட்சேயின் வாழ்வில் கி.பி. 1876 முதல் கி.பி.1882 -ஆம் ஆண்டு வரையிலான காலக்கட்டம் மனச் சிக் கலையும் மாற்றத்தையும் ஏற்படுத்தியது. மானிடம் எல்லாம் வெறும்மானிடன் என்ற நூலை வால்டேரின் நினைவுக்குப் படையலாக அளித்தார். அந்நூலில் முருகியல், ஒழுக்கம், சமயம் முதலான உணர்வுகள் மெய்யுணர்வு முறைக்கு உறுதுணையாகமாட்டா என்பதற்கான விளக்கத்தினை மிக நுணுக்கமாக வெளியிட்டார்.

மானிடப் பெறுமதிகள் பற்றி கி.பி. 1881-இல் விடியல் என்ற தலைப்பிலும், கி.பி. 1882-இல் மகிழ்ச்சி யான அறிவியல் என்ற தலைப்பிலும் இரண்டு தொகுதிகள் வெளியிட்டார்.

இங்ஙனம் பேசினான் சராதுட்டிரர் என்ற பகுதி நீட்சேயின் கூர்த்த மதியின் உருவாக்கமாகும். அதில் மரபுவழிப் பெற்ற கடந்த கால விதிமுறைகளுக்கு உரிய இடத்தை நீதி நெறிகள் எங்ஙனம் பெற்று விடு கின்றன என்பதை எடுத்துக்காட்டினார்.

ஆற்றொழுக்கான கவித் தன்மைபெற்ற உரைநடை யில் கடவுளின் மரணம், உயர்மானுடன், அதிகார மேனிலை ஆகியவைப்பற்றிப்பேசுகின்றார். மென்மை யான கிளத்தல் நடையில் இசை நயமுடைய வழி பாட்டுக்கவிதைகளில் சராதுட்டிரர் ஆழமான இயல் புடைய குறிக்கோளில் திளைத்துப் பெருமானுட னாய் உயர்வடைந்ததைக் காட்டுகிறார். கிறித்தவமும் சனநாயகமும் பலக்குறைவான மனிதக் கூட்டத்திற் குரிய ஒழுக்க நெறிகள் என அவற்றைக் கடுமையாகத் தாக்குகிறார்.

தேசிய பிரபுத்துவத் தன்மையுடைய உயர் மானு டன் தன் வலிமை மிகு சக்தியால் மண்ணினை ஆளும் உண்மை வாழ்வே வானுலகப் பேற்றினும் உயர்ந்தது என வாதிடுகின்றார் நீட்சே. அந்நூலின் இலக்கிய அழகும் பல பகுதிகளில் ஆற்றல்மிகு வெளிப்பாடும் உலகப் புகழுக்குரிய படைப்பாக அதனை உயர்த்தியுள்ளன.

'நன்மைகளுக்கப்பால்' என்ற நூலை கி.பி. 1886 -இல் இயற்றினார். ஒழுக்க வமிசாவளியை நோக்கி கி.பி. 1887-இல் தீமை என்ற நூலை எழுதினார். இதில் ஆண்டான் அடிமை என்னும் இருதிறத்தாருக்கு முரிய இருவேறு ஒழுக்க நடைமுறைகளைப் பற்றிப் பேசுகின்றார்.

வாக்னர் பற்றிய வழக்கு என்ற நூலை கி.பி. 1988-இல் வெளியிட்டார். கிறித்தவம், பகுத்தறிவு வாதம் ஆகியவற்றை ஒப்புக்கொண்ட வாக்னர் மீதும் கோபங் கொண்ட நீட்சே மேற்குறித்த நூலை எழுதி னார். 'தெய்வ உருவங்களின் அந்திமாலை' என்பது நீட்சே உலகிற்கு அளித்த இறுதிப் பரிசு.

பாசிலில் பேராசிரியர் பதவியைவிட்டு விலகி கி.பி. 1880-இல் இருந்து சுவிட்சர்லாந்து, இத்தாலி, செரு மனி ஆகிய நாடுகளில் உடல் நலம் கருதி வாழத்

தொடங்கினார். இவர் மன நோயினால் கி.பி. 1880-இன் தொடக்கத்தில் பாதிக்கப்பட்டார். எக்கேஹோமோ (Ecce Homo) என்ற நூல் இவர்தம் மனத் தடுமாற்றத்தையும் காட்டுகின்றது.

நீட்சே வரன்முறையற்ற தத்துவஞானி. முரண்பாடுகளின் உருவம் அவர். எழுத்துகளை வைத்து இவரை எந்த ஒரு கோட்பாட்டிற்கும் உரியவர் என்று அளவிட்டுக் கூறமுடியாது.

செயலாற்ற முன்வரல், துணிவு, உயர்வடையத் துடிக்கும் ஆசை, மனித வரம்புகளை மதித்தல் ஆகிய கிரேக்க அலுவலர்களுக்குரிய உயர் பண்புகள் தாம் நாணயமான மனிதனை உருவாக்கும் என நீட்சே போற்றினார்.

மனிதப் பெறுமதிகளிலிருந்து உயர்பெறுமதிகளைப் பெறுவதே இவர் வாழ்வின் வேட்கை. நீட்சே தம் முன்னோர்களாக எராக்லிட்சு, இசுபினோசா, கதே ஆகியோரை மதித்தார். ஆனால், ஒலிம்பிய அமைதித் தன்மையை இவரால் அடையமுடியவில்லை.இவருடைய பிற்காலப் படைப்புகள் வெறுப்பும் தன் முனைப்பும் கொண்டு பொலிவிழந்தன. நீட்சே இருப்பியல் கோட்பாட்டிற்கு முன்வரவு கூறும் ஞானி என்ற சிறப்புப் பேறு பெற்றார்.

பி.எஸ்.வே.

***நீட்டி, பிரான்செசுகோ, சாவேரியா* (கி.பி. 1868-1953):** இவர் இத்தாலிய அரசியல் வல்லுநர்; தாராளக் கோட்பாட்டுப் பிரிவினருள் இடது சாரிப் பிரிவினராகத் திகழ்ந்தார். இவர் தம் படிப்பினை முடித்தபின் வழக்குரைஞராகப் பணிபுரிந்தார். பின்பு நேப்பிள்சுப் பல்கலைக் கழகத்தில் பொதுநிதி இயல் பேராசிரியராகப் பணியாற்றினார். இவர் 1904-இல் நடைபெற்ற தேர்தலில் வென்று இத்தாலியப் பாராளுமன்ற உறுப்பினரானார். நீட்டி (Nitti) தம்முடைய திறமை, செல்வாக்குக் காரணமாக 1911 முதல் 1914 வரை செயற்பட்ட கியோவானி கியோலிட்டியின் நான்காம் அமைச்சரவையில் வேளாண்மை, வாணிகம், தொழில் துறை அமைச்சராக விளங்கினார். 1917 அக்டோபர்த் திங்கள் முதல் 1919 சனவரித் திங்கள் வரையில் ஆர்லாண்டோ அமைச்சரவையில் பொதுநிதித் துறை அமைச்சராகச் செயலாற்றினார். மக்கள் இவர் மீது கொண்டிருந்த பற்றுக் காரணமாக 1919 சூன் மாதத்தில் இத்தாலியின் பேரமைச்சரானார். பொருத்தமிகு பகிர்வுக் கோட்பாட்டினடிப்படையில் 1919 ஆகசுட்டு மாதத்தில் பிரதிநிதித்துவம் வழங்கப்பட வேண்டுமென்ற கொள்கையை இவர் வெளிப்படுத்தினார். அதன் விளைவாகச் சமதருமம் மற்றும் கிறித்தவ மக்களாட்சிப் பிரிவினர் பெருமளவில் செல்வாக்குப் பெற்றனர். ஆனால்,இவருடைய கருத்துகள் முழுமையாகச் செயற்படுத்தப்படவில்லை. முதல் உலகப் போரின்பாதிப்புகளாலும் பாசிசுட்டுகளின் எழுச்சியினாலும் இத்தாலிய அரசியலில் அமைதியற்ற தன்மை ஏற்பட்டது. வேலை நிறுத்தங்கள், ஒழுங்கின்மை போன்ற செயல்கள் இவர்தம் பணிகளுக்குத் தடையாக இருந்தன. அவற்றினால் நேரடிப் பாதிப்பிற்குள்ளான நீட்டி 1920-ஆம் ஆண்டு சூன் மாதம் ஒன்பதாம் நாள் தமது பேரமைச்சர் பதவியைவிட்டு விலகினார்; பின்னர் 1921-ஆம் ஆண்டு மே மாதம் நடைபெற்ற தேர்தலில் வெற்றி பெற்றுப் பாராளுமன்ற உறுப்பினரானார்.அதன் பின்பு 1924- ஆம் ஆண்டில் பெனிட்டோ முசோலினி நடத்திய தேர்தலில் இவர் போட்டியிடாமல், தாயகத்தைவிட்டு சுவிட்சர்லாந்திற்குச் சென்று வாழலானார். பின்பு அங்கிருந்து சென்று 1925 முதல் பிரான்சு நாட்டின் தலைநகரான பாரிசில் வாழ்ந்தார். இவர் 1943 ஆகசுட்டு மாதத்தில் இரண்டாம் உலகப்போரின்போது செருமானியரால் சிறைப்படுத்தப்பட்டார். ஆனால், 1945 ஏப்பிரலில் விடுதலை செய்யப்பட்டார். பின்னர்த் தாயகம் திரும்பிய இவர் அரசியலில் மீண்டும் ஈடுபட முனைந்துப் வெற்றிபெறவில்லை.

சிறப்புமிகுந்த அரசியல்வாதியான நீட்டி பல நூல்களை எழுதியுள்ளார். அரசியல் மற்றும் பொருளியல் தொடர்பான இவர் படைப்புகள் இவரது புகழினை மேலும் பரப்பின.

மா.கா.

***நீண்டகாலப் பாராளுமன்றம்*:** இங்கிலாந்து மன்னர் முதலாம் சார்லசு கி.பி. 1640-இல் கூட்டிய பாராளுமன்றம் நீண்டகாலப் பாராளுமன்றம் (Long Parliament) எனப்படும். ஏறத்தாழ 20 ஆண்டுகள் இது நீடித்ததால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டது.

பல்வேறு போர்களில் ஈடுபட்டிருந்த முதலாம் சார்லசு தமது இராணுவச் செலவுகளைப் பாராளுமன்றம் ஏற்று மானியம் அளிக்கச் செய்ய எண்ணி கி.பி. 1640- ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் மீண்டும் பாராளுமன்றத்தைக் கூட்டினார். இப்பாராளுமன்றத்தில் மன்னரின் ஆதரவாளர்கள் இடம் பெறும் வாய்ப்பை இழந்த நிலையில் அன்றைய பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்களது நீண்டகால விருப்பங்களை அரசன் ஏற்றுக்கொண்டால் மட்டுமே அரசன் வேண்டுகின்ற மானியத்தை அளிக்கச் சம்மதம் தெரிவிப்பதென முடிவு எடுத்திருந்தனர். நீண்டகாலப் பாராளுமன்றத்தை இலண்டன் நகரப் பெருமக்களும், பொருள்வளம் படைத்த வணிகர்களும் ஆதரித்தனர். மேலும், இப்பாராளுமன்றத்தில் பிம் (Pym), ஆம்பெடன் (Hampden), கிராம்வெல்(Cromwell)போன்ற ஆற்றல் மிக்கவர்கள் உறுப்பினர்களாய் இருந்தனர்.

நீண்டகாலப் பாராளுமன்றம் முக்கிய குறிக்கோள்களைக் கொண்டு செயற்பட்டது. பாராளுமன்றத்திற்குரிய உண்மையான அதிகாரங்களை வரையறுக்கவும், மன்னருக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே உள்ள உறவின் தன்மையை எடுத்துக்காட்டவும் நீண்டகாலப் பாராளுமன்றம் செயற்பட்டது.

நீண்டகாலப் பாராளுமன்றத்தின் பணிகளில் முக்கியம் வாய்ந்தது இங்கிலாந்தில் அப்பொழுது நடந்த உள்நாட்டுப் போரை வெற்றியுற நடத்தியதாகும். குற்றம்புரிவோர் சட்ட வரைவு (Bill of Attainder) ஒன்றினை நிறைவேற்றி, மன்னரின் நம்பிக்கைக்குரியவர்களையும் தண்டிக்கும் அதிகாரத்தை இப்பாராளுமன்றம் தன்னிடம் வைத்துக்கொண்டது. மன்னர்தாம் பாராளுமன்றத்தைக்கூட்ட வேண்டும் என்று இதுகாறும் நிலவிய நிலையினைப் போக்கி, மூன்றாண்டுக் கொருமுறை பாராளுமன்றம் கூட்டப்பட வேண்டும் என்ற விதியினை மூவாண்டுச் சட்டத்தின்(Triennial Act )மூலம் நிறைவேற்றியது. மேலும், பாராளுமன்றக் கூட்டம் நடைபெறுகையில் பாராளுமன்றத்தைக் கலைக்கவோ அதன் கூட்டத்தை ஒத்தி வைக்கவோ மன்னருக்கு உரிமையில்லை என்பதும்வரையறுக்கப்பட்டது. பாராளுமன்றத்தின் ஒப்புதலின்றி மன்னன் தன்னிச்சைப்படி வரிகளை வசூலிக்கத் தடை விதிக்கப்பட்டது. கருவூலம்,நீதிமன்றம்முதலியவற்றின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டன. நட்சத்திரமன்றம் (Star Chamber), வடக்குக்குழு (Council of North), வேல்சு மன்றம் (Council of Wales) ஆகியவற்றின் அதிகாரங்கள் ஒழிக்கப்பட்டன. மக்கள்தம் உரிமைகள் பாதுகாக்கப்பட்டன. சட்டத்தின் ஆட்சி (Rule of Law) வலியுறுத்தப்பட்டது. மன்னரைவிட நாட்டின் சட்டமே மேலானது, முக்கியமானது என்ற நிலை உருவாக்கப்பட்டது. எஸ்.கி.அ.

**நீண்ட காலம்**: காலம் என்ற சொல் நடைமுறை வழக்கில் மணி, நாள், வாரம், மாதம், ஆண்டு, என்ற நேர அளவைக் குறிப்பிடுகிறது. பொருளாதார இயலில் இச்சொல் அளிப்பின் அளவை மாற்றியமைக்கும் சார்பு நிலையைக் (Functional) குறிப்பிடுகிறது. நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு ஆகிய எல்லா உற்பத்திக் காரணிகளையும், உற்பத்தியில் பயன்படுத்தப்படும் தொழில்நுட்பத்தையும் (Technology), மற்றப்பிறவற்றையும் மாற்றியமைக்கத்தக்க தொரு நிலையை நீண்டகாலம் (Long Period) அல்லது நெடுங்காலம் (Long Term) என்பர்.

உற்பத்தியில் பயன்படுத்தப்படும் உற்பத்தி முறைகளையும், தொழில் நுட்பத்தையும் மாற்ற இயலாமல், தேவை மாற்றத்திற்கேற்ப அளிப்பைச் சிறிது கூட மாற்றியமைக்க இயலாத நிலையை மிகக் குறுங்காலம் அல்லது அங்காடிக் காலம் (Very Short Period or Market Period) என்பர். ஏதாவது ஒருசில காரணிகளை மட்டும் ஓரளவுக்கு மாற்றியமைத்து அளிப்பின் அளவை ஓரளவுக்கு மாற்றியமைக்கத்தக்க தொரு நிலையைக் குறுகிய காலம் (Short Period) என்பர். எல்லாக் காரணிகளையும், உற்பத்தி முறைகளையும், தொழில் நுட்பத்தையும் எந்த அளவுக்கு வேண்டுமானாலும் மாற்றியமைக்கத்தக்க தொரு நிலையை மிக நீண்ட காலம் (Secular Period) எனக் குறிப்பிடுவர்.

விலைக் கோட்பாட்டில் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் தேவையும், அளிப்பும்விலையை நிருணயிப்பவை என்பது தெளிவாக விளக்கப்படுகிறது. இவ்விரண்டில் செயல்திறன் மிக்கது எது என்பது ஒரு வினா? இரண்டும் சேர்ந்துதான் விலையை நிருணயித்தாலும் ஒருசில நிலைகளில் தேவை, செயல்திறன் மிக்கதாக இருக்கிறது என்பதைப் பேராசிரியர் மார்சல் (Marshall) விளக்குகிறார். அங்காடிக் காலத்தில் அளிப்பின் அளவு மாறாதிருக்கும் என்பதால் விலையை நிருணயிப்பதில் தேவை மாற்றங்கள் மிகச் சிறப்பான பங்காற்றுகின்றன; குறுகிய காலத்தில் அளிப்பின் அளவை ஓரளவுக்கே மாற்றமுடியும் என்பதால் தேவை மாற்றங்கள் (அங்காடிக் காலத்தைப் போன்றில்லாமல் அதற்குச் சற்றுக் குறைவான அளவில்) சிறப்பான பங்காற்றுகின்றன. நீண்ட காலத்திலும், மிக நீண்ட காலத்திலும் தேவை, அளிப்பு மாற்றங்கள் இரண்டும் சிறப்பான பங்காற்றுகின்றன என மார்சல் விளக்கிக் குறிப்பிடுகிறார். மிக நீண்ட காலம், நீண்ட காலம் ஆகிய இரண்டுக்குமான பகுத்தாய்வு ஏறத்தாழ ஒன்றாக இருப்பதால் அங்காடிக் காலம், குறுகியகாலம், நீண்ட காலம் என்பவை மட்டும் கருத்தில் எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

மேலும், குறுகிய காலங்களின் தொகுப்பே நீண்ட காலம் ஆகும். எடுத்துக்காட்டாக, அவ்வப்போதிருக்கும் அங்காடி விலைகளைச் சரியாக அறியலாம். ஆனால், சராசரி விலையைக் காணுதல் இயலாது. எல்லா விலைகளின் அடிப்படையில் சராசரி விலை கணக்கிடப்படுகிறது. அது போலப் பல குறுங்காலங்களைச் சேர்த்து ஒரு நீண்டகாலத்தை நிருணயித்துக் கொள்வர்.

**நீண்டகாலச் சராசரிச் செலவு**: எல்லாக காரணிகளும் நிறைவான அளவுக்குப் பாகுபடுந்தன்மை உடைய (Perfectly divisible) என்றஅடிப்படையை வைத்துக்கொண்டு பார்க்கும்போது, உற்பத்தியை மிகுக்கும் போது இயல்பாகக் குறிப்பிட்ட தொரு நிலைவரை தோன்றத்தக்க உற்பத்திச் சிக்கனங்களால் (Economies of Scale) சராசரிச் செலவுக்கோடு குறைந்துசெல்லத் தக்கதாகவும், அந்நிலைக்குப் பின் உற்பத்தி எதிர்ச் சிக்கனங்களின்

(Diseconomies of Scale) விளைவாகச் சராசரிச் செலவுக்கோடு அதிகரித்துச் செல்லத்தக்கதாகவும் அமைகிறது. ஆங்கில 'U' எழுத்து வடிவத்தில் இது அமைகிறது. இவ்வாறு ஒவ்வொரு குறுங்காலத்திலும் தோன்றத்தக்க குறுகியகாலச் செலவுக்கோடுகளை மூடிச் செல்லத்தக்கவகையில் நீண்டகாலச் செலவுக் கோடு அமைந்து உறைகோடு (Envelope Curve) எனப் பெயர் பெறுகிறது. இதைக் கீழ்க்காணும் வரை படம் விளக்குகிறது.

வரைபடம் 1.




மேற்கண்ட வரைபடத்தில் நீண்டகாலச் சராசரிச் செலவுக்கோட்டின் அமைப்பைப் பற்றிய எவ்வித மான கோட்பாடும் இல்லையெனினும், அனுபவத் தின் அடிப்படையில் AB பகுதி குறைந்துசெல் செல வையும் (வளர்ந்துசெல் விளைவையும்), B புள்ளி மாறாச் செலவையும் (மாறா விளைவையும்), BC பகுதி வளர்ந்துசெல் செலவையும் (குறைந்துசெல் விளைவையும்) குறிக்கின்றன எனக் கொள்வது மரபு.

**நீண்டகால இறுதிநிலைச் செலவு:** ஏற்கெனவே உற்பத்தியாகியுள்ள அலகுகளுக்கான மொத்த உற் பத்திச் செலவுக்குமேல் மிகுதியாக ஓர் அலகுப் பண் டத்தை உற்பத்தி செய்வதற்காகும் செலவு இறுதி நிலைச் செலவு ஆகும். நீண்டகாலத்தில் எல்லா உற் பத்திச் செலவுகளும் மாறத் தக்கவைகளாக இருப் பதாலும், நீண்டகால இறுதிநிலைச் செலவுக் (Long Term Marginal Cost) கோட்டின் அமைப்பைப் பற் றிய எவ்விதமான விதியும் இல்லாமலிருப்பதாலும், குறுகிய காலத்தில் சராசரி இறுதிநிலைச் செலவுக் கோடுகளுக்குள்ள தொடர்பே நீண்ட காலத்திலும் இருப்பதாகக் குறிப்பிடப்படுகிறது. அதாவது, நீண்ட காலச் சராசரிச் செலவுக்கோடு சரிந்து செல்லும் போது, நீண்டகால இறுதிநிலைச் செலவுக்கோடு அதற்குக் கீழ்நிலையிலும், நீண்டகாலச் சராசரிச் செலவுக் கோடு அதிகரித்துச் செல்லும்போது, நீண்ட கால இறுதிநிலைச் செலவுக் கோடு அதற்கு மேல் நிலையிலும் அமையும். மேலும், நீண்டகால இறுதி நிலைச் செலவுக்கோடு நீண்டகாலச் சராசரிச் செல வுக்கோட்டின் அடிமட்டப் புள்ளியின் வழியாகப் படத்தில்காட்டியுள்ளபடி வெட்டிக்கொண்டுசெல்லும்.

வரைபடம் 2.




வரைபடம் 3.



**நீண்டகால நுகர்வுச் சார்பு**: குறுங்கால இறுதி நிலைச் சார்பு (Marginal Propensity to Consume) மாறாதிருக்கும் என்ற பேராசிரியர் கீன்சின் எடு கோளின் அடிப்படையில் நேர்கணிய இடைமறி ஒன்று டன் கூடிய நேர்கோட்டு நுகர்வு சார்பு (Straight-line Consumption function with a Positive intercept) விளக்கப்படுகிறது. அதனை $C=a+by$ என்ற சமன் பாடாகக் குறிப்பிடுவர். இறுதிநிலை நுகர்வு நாட் டம் ஒன்றுக்குக் குறைவானது ($MPC<1$), இறுதி நிலை நுகர்வு நாட்டம் சராசரி நுகர்வு நாட்டத்திற் குக் குறைவானது ($MPC<APC$); இறுதிநிலை நுகர்வு நாட்டம் மாறாமல் இருக்கிறது என்ற கருத்துகள் இங்கே உள்ளடங்கியுள்ளன.

கீன்சின் குறுகியகால் நுகர்வுச் சார்புக்கு மாறாக, நீண்டகால நுகர்வுச் சார்பு (Long run Consumption function) விளக்கப்படுகிறது. அதாவது, வருமானம் நுகர்வு ஆகிய பொருளாதார மாறிகளிடையே உள்ள தொடர்பை விளக்குவதற்காகவும், வாணிகச் சுழல் களின்(Business Cycles) விளைவுகளைத் தவிர்ப்பதற் காகவும், 50 ஆண்டுக் காலத்திற்கும் மேற்பட்ட விவரங்களை 10 ஆண்டுகளுக்கான சராசரி விவரங் களாகத் தொகுத்து, நீண்டகால நுகர்வுச் சார்பு விளக்கப்படுகிறது. இதன்படி, 1) இறுதிநிலை நுகர் வுச் சார்பு ஒன்றுக்குக் குறைவாக இருக்கிறது ($MPC<1$), 2) சராசரி நுகர்வுச் சார்பு ஒன்றுக்குக் குறைவாக இருக்கிறது ($APC<1$), 3) இறுதிநிலை நுகர்வுச்சார்பும் சராசரி நுகர்வுச் சார்பும் சமமாக இருக்கின்றன ($MPC=APC$).

நுகர்வுச் சார்பின் அமைப்பைப் (Shape) பற்றிய கீன்சின் முழு வருமானக் கருது கோளுக்கு (Absolute income hypothesis) மாறாக, நுகர்வு வருமான நேர்கோடு தோற்றுவாயிலிருந்து (Origin) செல்லத் தக்கதொரு நேர் கோடாக இருக்கும் என்று நீண்ட கால நுகர்வுச் சார்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதா வது, C நுகர்வாகவும், Y வருமானமாகவும், B ஒரு மாறிலி (Constant)யாகவும் இருக்கும்போது $C=by$ என்று சமன்பாடு அமையும் என்பது கருத்து.

என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**


**Alfred W, Stonier and Dougles C.Hague.**, A Text Book of Economic Theory, Longman Group Ltd., London, 1982.

**David W. Pearce**, The Dictionary of Modern Economics, Macmillan Press Ltd., London, 1983.

**Koutsoyiannis, A.**, Modern Micro Economics, Macmillan Press Ltd., London, 1982.


**நீதி**: மிகப் பழங்காலத்திலேயே நீதி பற்றிய கருத்துகளும் எண்ணங்களும். கிரேக்க நாட்டிலும், தமிழ் நாட்டிலும், உரோமானிய நாட்டிலும் ஆழ மாகவும் பரவலாகவும் நிலைகொண்டிருந்தன. கிரேக்கச் சிந்தனையாளராகிய பிளேட்டோ தாம் எழுதிய 'குடியரசு' (Republic) என்ற நூலில் நீதி பற்றிய தமது கருத்தினைத் தெளிவு படுத்தியுள்ளார். நீதி என்பது எல்லா அறங்களிலும் தலையாய அறம் (Supreme virtue); அது ஒரு சிறந்த அரசின் பண் பினை எடுத்துக் காட்டுவது.. பிளேட்டோ இங்கு அறம் என்று குறிப்பிடுவது உயிரினும் மேலாக ஓம் பப்படும் ஒழுக்கத்தினையே. இந்த வரையறையில் கருத்து வேறுபாடு இருக்கலாம். ஆனால், அவர் ஒழுக் கத்தினையே உயர்ந்த நீதியாக வலியுறுத்தியும் வற் புறுத்தியும் கூறியுள்ளார். சமுதாயத்தில் ஒவ்வொரு மனிதனும் தன் கடமையைச் செம்மையாகச் செய்து விடுவானேயானால், நீதி என்பது தானாகவே வெளிப்பட்டுத் தோன்றும். நீதி என்பது யாது? அதனை எவ்வாறு விளங்கிக் கொள்வது? அதனை எவ்வாறு அடைவது? என்பன போன்ற கேள்வி களுக்கு விடைகாணும் தகுதி ஒரு நாட்டின் அரசனுக்கு உண்டு; மெய்ஞ்ஞானிக்கு உண்டு. இவ்வாறு கருதி னார் பிளேட்டோ.

இன்ப,துன்ப நடுநிலைவாதிகள் (Stoic Philosophers)நீதி பற்றிச் சிறிது மாறுபட்ட கருத்துடையவர் களாக இருக்கிறார்கள். அரசியல் துறையிலும் சட் டத் துறையிலும் உரோமானியச் சட்டத்தைத் தழுவித் தம் கருத்துகளை வலியுறுத்தினர். வரலாற்றுச் சூழ் நிலையாலும் இக்கருத்து வளர்ந்தது. இதன்படி சட் டம் இயல்பானது; இயற்கை நியதியுடையது (Natural Law), இக்கருத்துக்குச் சமயவாதிகள் வலு வான ஆதரவு தந்தனர். இந்த உலகம் ஒரு வரை யறைக்கு உட்பட்டது. இயற்கை நெறிகளுக்கு இயைந்து செயற்படுவது. மனிதனும் இயற்கை நிய திக்கு உட்பட்டவனே. அவன் தன் பகுத்தறிவினால் இயற்கை நியதியை உணர்ந்துகொள்ள முடியும். மனிதனால் செய்யப்படும் சட்டம் இந்த இயற்கை நெறிகளுக்கு முரண்படாது இருத்தல் வேண்டும். பல நூற்றாண்டுகள் வரை உரோமானியச் சட்டம் பற் றிய இத்தகைய கொள்கைகளே நிலவின. ஆனால், இக் காலத்தில் ஐரோப்பாவில் புதிய கல்வியும் மதச் சீர்திருத்தமும் பரவிய பின்னர்ச் சமுதாய நீதி பற்றி யும் மக்கள் உரிமைகள் பற்றியும் கருத்து வளர்ச்சி ஏற்பட்டது. அவற்றிற்கேற்பச் சட்டங்களும் உரு வாயின.

**நீதி பற்றிய தமிழர் கொள்கை**: கிரேக்கர்களோடு கருத்துப் போட்டியில் பண்டைக் காலத்தில் இணை யாக விளங்கியவர்கள் தமிழர்கள். அரசு, சட்டம்

நீதி, உரிமை, கடமை முதலியன பற்றிப் பழந்தமிழ் இலக்கியங்களில் பல கருத்துகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. முற்காலத்தில் அரசனே சட்டம் இயற்றுவோனாகவும், அதனைச் செயற்படுத்துவோனாகவும், நீதி வழங்குவோனாகவும் விளங்கினான். அரசன் இறைவனாகவே மதிக்கப்பட்டான். நடுநிலை தவறாது செங்கோல் செலுத்துவதைப் பழந்தமிழர் அரச நீதி அல்லது இறைமாட்சி என்று குறிப்பிட்டனர். நீதியைக் குறித்த பழந்தமிழ்ச் சொல் 'முறை' என்பது. முறை செய்து காக்கும் மன்னவனைத் திருவள்ளுவர் இறைவன் என்றே குறிப்பிடுகின்றார். எனவே, முறைமை (Justice) என்பது இறைமை (Divinity) யுடன் தொடர்புடையது. சமுதாயத்தில் நீதி வழங்கும் அரசன் துலாக்கோல் போல் நடுநிலை தவறாது செயற்படுதல் வேண்டும். இவ்வகையில் நோக்கும்போது பிளேட்டோ கூறும் ஒழுக்கக் கோட்பாட்டிலும் தமிழரின் இறைமைக் கோட்பாடு சிறந்து விளங்குவது காணலாம். நா.பா.

நீதி குறித்துப் பல கொள்கைகளும் கோட்பாடுகளும் இன்றும் நிலவி வருகின்றன. சட்டத்தின் நோக்கம் நீதியை நிலைநாட்டுவதே. இக்கொள்கை சட்ட வல்லுநர் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று. நீதி என்பது சூழ்நிலைக்கு ஏற்ப மாறுபடும் தன்மை வாய்ந்தது. தனிமனிதனின் நியாய உணர்வே நீதி என்றும் கூறலாம். ஆனால், சட்டத்தின் வழியாக நீதியை நிலைநிறுத்த வேண்டுமாயின், சட்டம் நியாயமானதாக அமையவேண்டும். எனவே, நியாயமற்ற சட்டங்களைச் சட்டங்களே அல்ல என்று வாதிடுவது வழக்கம்.

ஒரு சட்டம் பொதுமை வாய்ந்ததாக இருத்தல் வேண்டும். அது மனிதர்களுக்குள் வேறுபாடு அல்லது ஒரு சார்பு காட்டக்கூடாது. இவ்வாறு அமைகின்ற சட்டங்கள் நீதி தழுவிய சட்டங்களாகப் போற்றப்படுகின்றன.

நீதி என்பது வெவ்வேறு வகையில் அமைவதும் உண்டு. அரிசுட்டாட்டில் நீதி இருவகைப்படும் என்பார். ஒன்று, பங்கீட்டு நீதி (Distributive Justice); மற்றையது வழிப்படுத்து நீதி (Correctional justice). ஒரு நாட்டில் மேற்கண்ட இரண்டு வகையான நீதிகளும் இடம் பெறவேண்டும் என்று அவர் விரும்பினார்.

பங்கீட்டு நீதி என்பது, ஒரு நாட்டிலுள்ள மக்களிடையே நாட்டின் வழியாகக் கிடைக்கும் நலன்களையும், நாட்டை மேம்படுத்த அவர்கள் ஏற்க வேண்டிய சுமைகளையும் செவ்விய முறையில் பங்கிடுவதைக் குறிக்கும். அவ்வாறு செய்யப்பட்ட பங்கீட்டினை மாற்றி அமைப்பது போல நடந்து கொள்ளுகின்ற மனிதரைத் தண்டனை தருவதன் மூலம் நல்வழிப்படுத்துவது வழிப்படுத்து நீதியாகும்.

இக்காலத்தில் நாகரிகம் மிகுந்த அனைத்து நாடுகளிலும் சட்டத்தை நடைமுறைப்படுத்துவதன் வாயிலாக நீதி வழங்கப்படுகிறது. இதனை வழங்க நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டுள்ளன. எல்லோருக்கும் பொதுவான நடைமுறைச் சட்டங்கள், நிலைமுறைச் சட்டங்கள், எல்லோருக்கும் பொதுவான நீதிமன்றங்கள் ஆகியன இவ்வகை நீதியினை வழங்க உதவுகின்றன. எனவே, ஒரு பக்கம் சாயாது சட்டத்தை நடைமுறைப் படுத்தல் நீதியினை நிலை நிறுத்தும் என்பது தெளிவு.

நீதிமன்றங்கள் வழியாகக் கிடைக்கின்ற நீதியை இருவகைப் படுத்தலாம். ஒன்று, குற்றவியல் நீதி (Criminal justice); மற்றொன்று, உரிமையியல் நீதி (Civil justice). குற்றவியல் நீதியின்படி குற்றம் செய்ததாக மெய்ப்பிக்கப்பட்டவர்கள் சட்டத்தின் படி தண்டனை பெறுகிறார்கள். உரிமையியல் நீதி என்பது, ஒருவனது சட்டப்படியான உரிமையை வரையறுக்கவோ உண்டாக்கவோ மாற்றவோ அழிக்கவோ பயன்படுகிறது.

இந்திய அரசமைப்புச் சட்டத்தில் மூன்று வகை நீதிகள் கூறப்பட்டிருக்கின்றன. இந்த மூன்று வகை நீதிகளையும் மக்களுக்கு வழங்குவதுதான் அரசமைப்புச் சட்டத்தின் நோக்கம் என்று அரசமைப்புச் சட்டத்தின் முகவுரை (Preamble) கூறுகிறது. அவ்வாறு அரசியற் சட்டம் உருவாக்க விழைகின்ற நீதிகள் 1) அரசியல் நீதி, 2) பொருளாதார நீதி, 3) சமூக நீதி என்பனவாம். அரசின் அனைத்துத் திட்டங்களும் மேற்கண்ட மூவகை நீதிகளை உருவாக்குவதற்காகவே வரையப்படுகின்றன. இதனின்று நீதி என்ற கருத்தமைவு எவ்வளவு முக்கியம் வாய்ந்தது என்பது விளங்கும். ம.கா.

***நீதி அதிகாரம்*** என்பது குடிமக்களுக்கிடையேயும், குடிமக்களுக்கும் அவர்கள் அரசாங்கங்களுக்கிடையேயும் எழும் வழக்குகளை ஆய்ந்து, தீர்ப்புச் செய்வதற்கு நீதிபதிகள் பெற்றிருக்கும் அதிகாரம் ஆகும். இத்தகைய நீதி அதிகாரமுடைய (Judicial Authority) நீதிபதிகள் அமர்ந்து நீதி செலுத்துமிடம் நீதிமன்றம் (Court) எனப்படுகிறது.

**நீதி அதிகாரத்தின் வகைகள்:** குடிமை இயல் வழக்குகள் (Civil disputes) தனி ஆட்களுக்கிடையே பெரும்பாலும் எழுகின்றன. இவற்றில் வழக்காளிகளைக் (Parties) கட்டுப்படுத்தக்கூடிய தீர்ப்புகளை வழங்கும் அதிகாரம், குடிமை இயல் நீதி அதிகாரம்

(Power of civil justice) எனப்படும். இதில் நீதிமன்றங்கள் கையாளும் குடிமைஇயல் சட்டவிதிகளை அரசாங்கத்தின் ஒரு கிளையாகிய சட்டமன்றம் இயற்றுகிறது. குடிமைஇயல் வழக்குகள் உரிமைகள் பற்றி (Rights) எழுகின்றன. நீதி அதிகாரத்தின் மற்றொரு வகை குற்றஇயல் நீதி அதிகாரம் (Powers of Criminal justice) ஆகும். ஒருவர் மற்றொருவரின் உயிர், உடல் ஆகியவற்றிற்கு ஊறுவிளைவிக்கும்செயலில் ஈடுபடுதல் குற்றவியல் சட்டத்தின்படி குற்றமாகும். அரசாங்கத்தின் மற்றொரு கிளையாகிய நிருவாகக்கிளை (Executive Branch) செய்யும் செயல் குற்ற இயல் சட்டத்துறையில் காணப்படும். காவல் துறையினர் குற்றம் செய்தவர் எனப்படுபவரைக் கைப்பற்றி நீதிமன்றத்துக்கு அவர்களைக் கொண்டு வர, அங்கு அவர் நீதிபதியின் முன்னர்க் குற்றவாளி என்று ஆய்வில்மெய்ப்பிக்கப்பட்டால்,அவரைத் திருத்தம் செய்தற்காக நீதிபதி அவரை அதற்குரிய அதிகாரிகளிடம் ஒப்படைக்கிறார். குடிமை இயல் நீதி அதிகாரத்தைப் பொறுத்தவரையில், அரசாங்கமே ஒரு வழக்கிலீடுபட்டிருந்தாலொழிய அவ்வகை வழக்கை நிருவாகத் துறையே நீதிமன்றத்துக்குக் கொண்டு வருவதில்லை. ஆயினும், இவ்வழக்கில் தீர்ப்பு அளிக்கப்பட்டதும், அத்தீர்ப்பை நீதிமன்றம் செயற்படுத்துகிறது. நீதிபதிகள் சட்டங்களைக் குறிப்பிட்ட வழக்குகளுக்குப் பொருந்துமாறு கையாளும்போது அவற்றை விளக்கி, விரிவாக்கி அவற்றுக்கு ஒரு புதியவடிவம் கொடுக்கின்றனர். இவ்வாறு நீதிபதிகள் வழக்குகளை ஆய்வு செய்யும்போது அச்சட்டங்களுக்கு அளிக்கும் விளக்கங்களே புதிய சட்டங்களாகின்றன; இதுவே நீதிபதிகளின் சட்டமியற்றும் அதிகாரம் (Power of adjudication) எனப்படும். நீதிபதி ஓம்சு என்பவர் (Justice Holmes), 'நீதிபதிகள் சட்டம் செய்கின்றனர்; சட்டம் செய்தல் வேண்டும்' என்று கூறுகிறார். நீதிபதியின் சட்டமியற்றும் அதிகாரம், இந்தியா, அமெரிக்கா போன்ற எழுதப்பட்ட அரசியலமைப்புச் சட்டங்களையுடைய நாடுகளில் மிகவும் முக்கியத்துவம் உடையதாகக் காணப்படுகிறது. எவ்வாறெனில், இந்நாடுகளின் சட்டமன்றங்களும் இந்நாடுகளின் அரசியலமைப்புகளும் தங்களுக்கு எத்தகைய அதிகாரங்களை அளித்துள்ளனவோ, அத்தகைய அதிகார எல்லைகளுக்கு உட்பட்டுத்தான் அவ்வதிகாரங்களைக் கையாளுதல் இயலும். ஆகையால், இந்நாடுகளின் சட்டமன்றம், அரசியலமைப்பு விதிகளை மீறாதபடி, தம் சட்டமியற்றும் அதிகாரங்களைக் கையாண்டுள்ளதா என்று ஆய்வு செய்து தீர்ப்புக் கூறும் அதிகாரம் நீதிபதியிடம் இருக்கிறது.

நீதித்துறையின் மற்றொரு வகை அதிகாரம் நீதிப்புனராய்வு அதிகாரம் (Power of Judicial Review) எனப்படும். அமெரிக்க அரசியலமைப்பிலே மிகச் சிறப்பான ஒரு கூறு நீதிப்புனராய்வு அதிகாரம் ஆகும். அமெரிக்க நீதித்துறையும் இறுதியாக அமெரிக்கத் தலைமை நீதிமன்றமும், அமெரிக்கச் சட்டமன்றம் நிறைவேற்றும் சட்டமும், அமெரிக்க நிருவாகத்துறை செய்யும் செயலும், அமெரிக்க அரசியலமைப்புச் சட்டத்துக்கு ஒத்து இருக்கிறதா, முரணாக இருக்கிறதா என்று ஆய்வு செய்வதற்குரிய அதிகாரமே நீதிப்புனராய்வு அதிகாரம் எனப்படும். எல்லா நாடுகளிலும் நீதித்துறை இருவகையான பொறுப்புகளை நிறைவேற்றுகிறது.

அ) அது, அரசாங்கத்தின் சட்டமன்றமும், நிருவாகமும் விடுக்கும் ஆணைகளைச் செயற்படுத்தும் செயலியாகச் (Agent) செயற்படுகிறது.

ஆ) அதே சமயத்தில் தனியாட்களைச் சட்டமன்றத்தின் எதேச்சாதிகாரச் செயல்களினின்றும், நிருவாகத் துறையின் எதேச்சாதிக்காரச் செயல்களினின்றும் காப்பாற்றும் பொறுப்பும் அல்லது பணியும் நீதிமன்றத்துக்கு இருக்கிறது. இவ்விருவகையிலேதான் அதனுடைய அதிகாரம் வெளிப்படுகிறது. அமெரிக்கத் தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாகச் சான் மார்சல்(John Marshall) என்பார், கி.பி. 1803-ஆம் ஆண்டில் தாம் ஆய்வு செய்த மார்பரி மாடிசன் வழக்கிலே (Marbury V. Madison) தீர்ப்புக் கூறும்போது, 'எழுதப்பட்ட அரசியலமைப்புச் சட்டங்களை வரைந்தவர்களெல்லாரும், அத்தகைய எழுதப்பட்ட சட்டம் நாட்டின் அடிப்படையான, முதன்மையான அல்லது யாவரையும் கட்டுப்படுத்தக்கூடிய சட்டமாக அமைதல் வேண்டுமென்றுதான் எண்ணி இருக்கின்றனர். எனவே, அத்தகைய அரசியலமைப்பின்படி அமைக்கப்படும் ஒரு சட்டமன்றத்தின் சட்டமானது, அவ்வரசியலமைப்புக்கு முரணானதாக இருக்குமாயின், அச்சட்டம் செல்லுபடி ஆகாது (Void) என்பதுதான் அத்தகைய அரசியலமைப்பின்படி உள்ள அரசாங்கத்தின் கொள்கையாக இருத்தல் வேண்டும்' என்று கூறினார். இதுவே நீதிப்புனராய்வு அதிகாரத்துக்கு ஆதாரமான கொள்கை ஆகும். ஆயினும், ஐந்தாம் பிரான்சுக் குடியரசு, சுவிட்சர்லாந்து, சோவியத்து உருசியா, இத்தாலி முதலிய நாடுகளில் எழுதப்பட்ட அரசியலமைப்புச்சட்டங்கள் இருந்தாலும், அவற்றின் நீதிமன்றங்களுக்கு நீதிப்புனராய்வு அதிகாரம் இல்லை.

**குடிமை இயல் நீதியும், குற்ற இயல் நீதியும்:** குடிமை இயல் சட்டத்தின்படி அளிக்கப்படும் நீதி, குடிமையியல் நீதி எனப்படும். இக்காலச் சட்டமுறை குடிமை இயல்சட்டம் எனவும் (Civil Law), பொதுச்

சட்டமெனவும் (Common Law) இருவகையாகப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. பொதுச் சட்டம் என்பது வழக்கத்தின் அடிப்படையில் தோன்றி நீதி மன்றங்களால் சட்டமாகப் பின்பற்றப்படுகின்ற எழுதப்படாத கருத்துகளாகும். இது இங்கிலாந்தில் தான் வளர்ந்தது; இதுவே இக்காலத்தில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் சட்ட அமைப்புக்கு ஓர் அடித்தளமாக இருக்கிறது. குடிமை இயல் சட்டம் என்பது பிரான்சு, செருமனி, இத்தாலி முதலிய நாடுகளில் நடைமுறையிலிருந்து வருகிறது. முற்றிலும் எழுதப்பட்டுள்ள இதில் தனிவாழ்வுத்துறை பற்றிய சட்டங்களனைத்தும் (Law of Private life) தொகுக்கப்பட்டுள்ளன. 'சட்டவகையாக ஆய்வு செய்வதற்கும், நீதிவழங்குவதற்கும் உதவியாக இருக்கும் பொருட்டு, விதிகளையும் கொள்கைகளையும் ஒழுங்குபடவும் முழுமையாகவும் உரைப்பதுதான் தொகுத்தல் (Codification) எனப்படும்). குடிமை இயல் சட்டத்தில் பண்டைய உரோமானியச் சட்டத்தின் தாக்கம் (Influence) பல வகைகளில் ஏற்பட்டுள்ளது. குடிமை இயல் சட்டமும், பொதுச் சட்டமும் ஐரோப்பிய நாகரிகத்தில் வளர்ந்தவை.

ஒவ்வொரு சமூகத்தின் அடிப்படை விதிகளும் அதனுடைய குற்ற இயல் சட்டத்தின் வாயிலாக வெளிப்படுகின்றன; அவ்வாறு வெளிப்படுத்தப்படும் அடிப்படை விதிகளை அச்சமூகத்தின் காவல்துறையும், நீதிமன்றங்களும், சீர்திருத்தப்பள்ளிகளும் சிறைகளும் செயற்படுத்தும் முறையே (System) குற்ற இயல் நீதி என்பதாகும். குற்ற இயல் நீதி இல்லாவிடில், அரசாங்கம் நடைபெறுதலோ, எந்த ஓர் ஆளின் உயிரும், உடைமையும் பாதுகாப்பாக இருத்தலோ இயலாது. களவு, கொலை போன்றவை எல்லாச் சமூகங்களாலும் குற்றங்களாகக் கருதப்பட்டு, அவற்றுக்குத் தண்டனைகளும் அளிக்கப்படுகின்றன. மேலும், சில செயல்களைக் குற்றங்களாக வரையறை செய்து, அவற்றுக்கான தண்டனைகளையும் வகுத்துக் குற்ற இயல் சட்டங்கள் ஆக்கப்பட்டுள்ளன. குடிமை இயல் நீதித்துறையிலும், குற்ற இயல் நீதித்துறையிலும் வரும் வழக்குகளை ஆய்வு செய்து, தீர்ப்பு வழங்குவதற்கு உதவியாக இருக்கும் பொருட்டுக் குடிமை இயல் சட்டச் செயல் முறைவிதிகளும் (Code of Civil Procedure), குற்ற இயல் சட்டச் செயல் முறை விதிகளும் (Code of Criminal Procedure) வகுக்கப்பட்டுள்ளன.

**முற்சான்று முறையும் விளக்க முறையும்:** நீதி அதிகாரத்தைக் கையாளுதலில் சில நாடுகளில் முற்சான்று முறை (Method of Precedent) பின்பற்றப்படுகிறது. இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்க நாடு, பொதுநல நாடுகள் (Commonwealth Countries) முதலியவை பொதுச் சட்ட நாடுகள் (Common Law Countries) எனப்படும். இவற்றில் நீதிபதிகள் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும்போது, அவற்றை ஒத்த வழக்குகளுக்கு முன்னர் எவ்வாறு தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறதோ, அதை முற்சான்றாக அல்லது மேற்கோளாகக் காட்டியே பெரும்பாலும் தீர்ப்புவழங்குகின்றனர். (ஆனால் அமெரிக்க ஐக்கிய நாட்டுத் தலைமை நீதிமன்றம் தான் முன்பு அளித்த தீர்ப்புகளுக்கு மாறாகத் தீர்ப்புகளை அளித்தும் உள்ளது). இங்கிலாந்தைத் தவிர மற்ற ஐரோப்பிய நாடுகளும், இலத்தீன் அமெரிக்க நாடுகளும், சில ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளும் குடிமை இயல் சட்ட நாடுகள் (Civil Law Countries) எனப்படும். குடிமை இயல் சட்ட நாடுகளில் நீதிமன்றங்கள், எழுதப்பட்ட சட்ட விதிகளுக்கு இணங்க வழக்குகளில் தீர்ப்பு வழங்கும் போது, சட்ட விதிகளிலிருந்து நேராகத் தீர்ப்பை வருவிக்க இயலாதபோது, அச்சட்ட விதிகளின் எல்லையை மீறாமல் அவைகளுக்கு விளக்கம் (Interpretation) அளித்து, அவ்விளக்கத்தினைச் சார்ந்து, வழக்கில் தீர்ப்பளிக்கின்றன. இதுவே விளக்க முறை அதிகாரம் (Power of Interpretation). எனப்படும்.

எல்லா நாடுகளிலும் நீதி அதிகாரமானது மக்களுடைய உரிமைகள் பாதுகாக்கப்படுதல் வேண்டும் என்ற நோக்கத்துக்காகவே கையாளப்படுதல் வேண்டும். அப்போதுதான் சமூக நீதியும் அமைதியும் உண்டாகும்.

**துணை நூல்கள்:**

**Karlen., Delmar**, Anglo-American Criminal Justice, London and New York, 1967.

**Von Mehren, Arthur**, The Civil Law System, Cases and Materials for the Comparative Study of Law, Boston, 1957.

**Willoughby, W. F.**, Principles of Judicial Administration, The Brookings Institution, 1939.

**நீதி ஆயம்:** 'நீதி ஆயம்' என்பது ஒருவருக்கு மேற்பட்ட நீதிபதிகள் ஒரே நீதிமன்றத்தில் அமர்ந்து ஒரு வழக்கையோ, மேல் முறையீட்டு வழக்கையோ, மனுவையோ விசாரணை நடத்தித் தீர்ப்பு வழங்குவதற்காக உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியாலோ உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதியாலோ நியமிக்கப்படும் நீதிபதிகள் குழுவிற்கு 'நீதி ஆயம்' (Bench) என்பது பெயர்.

பகுதி **நீதி ஆயம்** என்பது இரு நீதிபதிகள் கொண்ட குழு ஆகும் ஒரு வழக்கையோ, மேல் முறையீட்டு வழக்கையோ நீதிப்பேராணை மனுவையோ

விசாரணை நடத்தித் தீர்ப்பு வழங்குவதற்காக அமைக்கப்படும் நீதிபதிகள் குழுவிற்குப் பகுதி நீதி ஆயம் என்பது பெயர். சில வேளைகளில் வழக்கின் சிறப்புக் கருதி (Special cases) விசாரணை நடத்த இருவர் நீதி ஆயம் அமைக்கப்படுவதும் உண்டு.

உயர் நீதிமன்றங்களில் ஒருவர் நீதி ஆயம் மற்றும் பகுதி நீதிஆயம் அமைக்கப்பட்ட எல்லா நாள்களிலும் செயற்படும். உயர் நீதிமன்றங்களில் சில சிறப்பான வழக்குகள் பதிவு செய்யப்படுமே யானால், மூவர் கொண்ட நீதிஆயமோ, ஐவர் கொண்ட நீதி ஆயமோ எழுவர் கொண்ட நீதி ஆயமோ அமைக்க உயர் நீதிமன்றத்தலைமை நீதிபதிக்கு உரிமை வழங்கப் பட்டுள்ளது.

வழக்கின் இன்றியமையாமை மற்றும் அதில் உள்ள சட்டச் சிக்கல் ஆகியவற்றைக் கருத்திற் கொண்டு உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதி இவ் வாயத்தை அமைத்து ஆணை வழங்குவார். எடுத்துக் காட்டாக, ஆள்கொணர் பேராணை (Habeas Corpus) மனுவை விசாரிக்கும் உரிமை இருவர் (பகுதி) நீதிஆயத்திற்கே உண்டு. இதில் தனிமனி தனின் உயிர், சுதந்திரம் பாதிக்கப்பட்டிருப்பதால் அதிக அக்கறையோடு விசாரணை நடத்த வேண்டி நீதிஆயம் நியமிக்கப்படுகிறது.

கீழே வழங்கப்பட்டுள்ள வழக்குகள் யாவும் இரு வர் (பகுதி) நீதிஆயம் விசாரணை நடத்த உரிமை வழங்கப்பட்டுள்ளன. 1. ஒரு வழக்கில் சட்டச் சிக்கலோ, பொருண்மை (Fact) பற்றிய விளக்கமோ முக்கியத்துவம் பெற்றிருத்தல் வேண்டும். 2. அ. இயலா நிலை வழக்கின் மேல் முறையீடு (Forma pauperis), ஆ.வழங்கப்பட்ட காலஅளவுக்குள் மேல் முறையீடு செய்யாமல் செய்யப்படும் மேல் முறையீடு வழக்கு, இ. வருமான வரிச் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்படும் வழக்குகளின்மேல்முறையீடு, ஈ. செல்வ வரி வழக்கு, உ. செலவு வரிச் சட்டம், ஊ. நன் கொடை வரி வழக்கு, 3. உச்ச நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்ய வேண்டிப் பரிந்துரை மனு (Leave to appeal) ஒவ்வொன்றையும் இருவர்நீதி ஆயத் திற்கே விசாரணை நடத்தி அனுமதி அளிக்கும் உரிமை வழங்கப்பட்டுள்ளது. 4. பேராணை மனுக்கள், உத்தரவு, கட்டளை வேண்டும் மனுக்கள், ஆட்கொணர் பேராணை மனுமுதலியன, 5. அ. உரிமையியல் நடைமுறை. சட்டத்தின்படி-மேல் முறையீடு செய்யப்படும் வழக்குகள், ஆ. உரிமைப் பட்டயச் சட்டத்தில் மேல் முறையீடு, இ. வழக் கின் மதிப்பு உரூ.50,000-க்கு மேற்பட்ட வழக் கின் தீர்ப்பின் மீது மேல்முறையீடு வழக்கு, ஈ. தமிழ்நாடு பொது விற்பனை வரிச் சட்டத்தின்படி செய்யப்படும் மேல் முறையீடுகள், 6. மக்களின் பிரதி நிதித்துவச் சட்டத்தின்படி செய்யப்படும் மேல் முறையீடுகள், அதாவது தேர்தல் தொடர்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தேர்தல் அதிகாரி வழங்கிய தீர்ப்புக்கு எதிராகச் செய்யப்படும் மேல்முறையீடு வழக்கு, 7. கீழே குறிக்கப்படும் ஒவ்வொரு மறு ஆய்வு மனுவும் இருவர் நீதி ஆயத்தாலே விசாரிக்கப் பட வேண்டும். அ. வேளாண்மை வருமான வரி வழக்கின் தீர்ப்புக்கு எதிராகச் செய்யப்படும் மறு பரிசீலனை மனு ஆ. தமிழ்நாடு பொது விற்பனை வரிச் சட்டத்தின் தீர்ப்பின்படி மீண்டும் மறுபரி சீலனைக்குக் கொடுக்கப்படும் வழக்கு, 8. இந்திய அரசியலமைப்புச் சட்டம் பிரிவு 228இன் படி திரும்பப் பெறும் ஒவ்வொரு வழக்கிற்கும் இருவர் நீதிஆயம் அனுமதியளிக்க வேண்டும். 9. தீர்ப்பைச் சரிபார்த்து இறுதியாகத் தீர்ப்பு வழங்குவதற்குப் பதிவு செய்யப் படுகின்ற ஒவ்வொரு இறுதி முடிவுக்காக மனுக்கள் யாவும் நீதி ஆயத்தால்தீர்மானிக்கப்படவேண்டும். அ. 113-ஆம் பிரிவின்படி அனுமதிக்கப்பட்ட ஒப் படைப்பு வழக்கு, ஆ. வருமான வரிச்சட்டம் பிரிவு 256இன் படி செய்யப்பட்ட முடிவுக்கான ஒப்படைப்பு வழக்கு, இ. மரணவரிச் சட்டம் பிரிவு 64இன் படி, ஈ.செல்வ வரிச்சட்டம் பிரிவு 27இன் படி, உ, செலவு வரிச்சட்டம் பிரிவு 25இன் படி, ஊ. நன்கொடை வரிப்பிரிவு-26இன் படி, பதிவு செய்யப்பட்ட வழக்கு கள் யாவும் இருவர் நீதி ஆயம் இறுதி முடிவு அளிக் கும் உரிமை அளிக்கப்பட்டிருக்கின்றன, 10. அ. குற்ற நடைமுறைச் சட்டம் பிரிவு 366இன் படி தொடுக்கப் பட்ட வழக்கு, 11. கீழே குறிப்பிடப்பட்டுள்ள ஒவ் வொரு மேல் முறையீடு வழக்குக்கும் இருவர் நீதி ஆயம் விசாரிக்கும் உரிமை வழங்கப்பட்டிருக்கிறது. அ. மரண தண்டனை அல்லது ஆயுள் தண்டனை வழங்கப்பட்ட தீர்ப்பின் மீது செய்யப்பட்ட மேல் முறையீடு வழக்குகள், 12. மரண தண்டனை அல்லது ஆயுள் தண்டனைத்தீர்ப்பின் மீது மறு ஆய்வு செய் தால் அதை விசாரிக்கும் உரிமை இரு நீதிஆயத்திற்கே உண்டு. 13. சென்னை நாடக நடிப்புச் சட்டம், பிரிவு 10-இன் படி தொடுக்கப்படுகின்ற ஒவ்வொரு மேல் முறையீட்டு வழக்குக்கும், உச்சநீதிமன்றத்தில் எல்லா வகையான வழக்குகளுக்கும் இருவர் கொண்ட நீதி ஆயமே விசாரணை நடத்தித் தீர்ப்பு வழங்கும் உரிமை வழங்கப்பட்டுள்ளது. 14. பட்டயக் கணக்குச் சட்டம் பிரிவு-21, 22-பிரிவின்படி செய்யப்படும் ஒவ்வொரு மேல் முறையீடு அல்லது மறு ஆய்வு மனு விசாரிக்கும் உரிமை குழு நீதி ஆயத்திற்கே வழங்கப் பட்டுள்ளது.

**நிறை நீதிஆயம்** (Full Bench): நிறை நீதிஆயம் என்பது மூன்று நீதிபதிகளுக்குக் குறையாமல் நியமிக் கப்பட்ட நீதிபதிக் குழுவிற்கு நிறை நீதிஆயம் என் பது பெயர்.

கீழே குறிப்பிடப்பட்டுள்ள வழக்குகளை விசாரிக்க நிறை நீதிஆயத்திற்கு உரிமை வழங்கப்பட்டிருக்கிறது. அ. வழக்கறிஞர்கள் பணிச் சட்டம் பிரிவு 13 -இன் படி கொடுக்கப்பட்ட ஒவ்வொரு வழக்கும், ஆ. இந்திய மணமுறிவுச் சட்டத்தின் கீழ்க்கொடுக்கப்பட்ட ஒவ்வொரு இறுதி முடிவு மனு, இ. இந்திய வில்லைச் சட்டத்தின்படி (Indian Stamp Act). செய்யப்பட்ட ஒவ்வொரு இறுதி முடிவுக்கான வழக்கும் இதில் அடங்கும்.

மேலே கூறப்பட்டவைகளைத் தவிர அவ்வப்பொழுது உயர் நீதி மன்றத்தின் தலைமை நீதிபதிக்கு வேறு எந்த வகையான மேல் முறையீடு, மறுஆய்வு, மறுபரிசீலனை, இறுதி முடிவுக்காக ஏற்றுக் கொள்ளப்பட்ட வழக்குகள் ஆகியனவற்றை விசாரிக்க நிறை நீதிஆயத்தை அமைக்கும் உரிமை வழங்கப்பட்டுள்ளது.

சட்டத்தின் விளக்கம் அல்லது சட்டச் சிக்கல் தொடர்பாக நிறை நீதிமன்றத்திற்கு அனுப்பப்பட்டால் அதை விசாரணை செய்து சட்டத்தினை ஆராய்ந்து உரிய விளக்கம் கொடுக்க நிறை நீதி மன்றத்திற்கே உரிமை வழங்கப்பட்டுள்ளது.

மேலே கூறப்பட்ட வழக்குகளைத் தவிர அரசியல் அமைப்புச் சட்டத்தின் செயற்பாடு குறித்தும், குடியரசுத் தலைவர் அல்லது மாநில ஆளுநர் பிறப்பிக்கின்ற ஆணை, உத்தரவு, கட்டளை ஆகியவற்றின்செயற்பாடுஅல்லதுஅவைசெல்லத்தக்கதல்லஎன்று வழக்கு உயர் நீதிமன்றத்திலோ உச்ச நீதிமன்றத்திலோ கொடுத்தால் அதை விசாரிக்கும் உரிமை நிறை நீதிஆயத்திற்கே உண்டு.

நிறை நீதிஆயத்தில் அமர்ந்து விசாரணை நடத்தும் நீதிபதிகள் ஒத்த கருத்துள்ளவர்களாக அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரே தீர்ப்பு எழுதி வழங்கலாம். அப்பொழுது அதில் அவர்கள் கையொப்பம் போட்டால் மட்டும் போதும், ஒத்த கருத்து இருந்தாலும் தனித்தனியே தீர்ப்பு எழுதவும் உரிமையுண்டு. அதாவது முடிவு ஒன்றாக இருந்தாலும் முடிவுக்கான காரணங்கள் வேறுவிதமாக அவர்கள் எடுத்துக் கொண்டு தீர்ப்பு வழங்கலாம்.

அந்த வழக்கின் தீர்ப்பில் மாறுபாடான கருத்துக் கொண்டவர்கள் தனியான தீர்ப்பு எழுத உரிமையுண்டு. இங்கேயும் மாறுபட்ட கருத்துடையவர்கள் ஒன்று சேர்ந்து, ஒரே தீர்ப்பாக எழுதி அதில் அனைவரும் கையொப்பம் இட வேண்டும் அல்லது மாறுபட்ட கருத்து இருந்தாலும் அதன் முடிவுக்கான காரணம் பற்றி ஒருவருக்கு ஒருவர் வேறுபடும்போது தனித்தனியே தீர்ப்பு எழுதி வழங்கலாம்.

பெரும்பான்மையான நீதிபதிகள் ஒத்த கருத்துடையவர்களாக இருந்தால் ஒருவர் எழுதிய தீர்ப்பில் அனைவரும் கையொப்பம் போட வேண்டும். மாறுபட்ட கருத்து உடையவர்களின் தீர்ப்பு மாறுபட்ட தீர்ப்பு (Dissenting Judgement) எனப்படும்.

நிறை நீதிஆயம் அமைத்து வழக்கு விசாரித்தல் என்பது நெடுங்காலம் தொட்டே பழக்கத்தில் இருந்து வருகின்றது. இங்கிலாந்தில் கி.பி. 1875-இல் பதின்மூன்றுநீதிபதிகள் கொண்ட நிறை நீதி ஆயம் அமைத்துத் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

இந்தியாவிலும் இந்து சட்டத்தின்படி ஆளின் வாரிசு, மகவேற்பு, பாகப்பிரிவினை, என்ற சிக்கல்கள் உண்டாகின்ற பொழுது நிறை நீதிஆயம் அமைத்து வழக்குகளின் சிக்கல்கள் தீர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்த நிறை நீதிஆயம் என்ற அமைப்பு உருசியா அமெரிக்கா போன்ற மேலை நாடுகளிலும் பின்பற்றப்படுகின்றன.

உருசியாவில் மூவர் கொண்ட நிறை நீதிமன்றம் அமைக்கப்படுகிறது. இதில் இருவர் சட்டம் பயிலாதவர்களாகவும் ஒருவர் மட்டும் சட்டப்படிப்பு உள்ளவராகவும் நியமிக்கப்படுவார். சட்டம் படிக்காதவர்களாக இருந்தாலும் ஒருவழக்கைவிசாரணை நடத்துகின்றபோது வெளிப்படையாக அறிந்து கொண்ட உண்மையை அடிப்படையாகக் கொண்டு தீர்ப்பு வழங்கப்படுகிறது. சட்டம் பயிலாத நீதிபதிகளின முடிவை முறைப்படி தீர்ப்பு எழுதுவது படித்த நீதிபதியின் கடமையாகும். ச.நா.

***நீதி நூல்கள்***: இந்தியத் துணைக் கண்டம் ஆன்மிகத்தின் விளைநிலம் எனக் கருதப்படுகின்றது. அதனால் இங்கு வழங்கப்படும் மொழிகள் அனைத்தும் நீதிக் கருத்துகளைப் பெற்றுள்ளன. நீதிக் கருத்துகள் உரைவடிவிலும் கதை வடிவிலும் இந்திய மொழிகளில் இடம்பெற்றுள்ளன. இவற்றின் இன்றியமையாமையினை உணர்ந்த இந்திய இலக்கியப் புலவர்கள் இவற்றை இலக்கியத்தின் 'இலக்கு' என வரையறை செய்தனர். இவ்வரையறை அறம், பொருள், இன்பம், வீடு எனத் தமிழிலும், தருமம், அருத்தம், காமம், மோட்சம் என வடமொழியிலும் வலியுறுத்தப்படுகின்றது.

**தொல்காப்பியம்:** நீதிக் கருத்துகள் மிகப் பழங்காலத்திலிருந்தே தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்று வருகின்றன. கிடைக்கப் பெற்றுள்ள நூல்களுள் முற்காலத்ததாகிய தொல்காப்பியத்தில் நீதி கூறும் வகையில் வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ, அறிவு மெய்ந்நிறுத்தல் என்னும் துறைகள் உள்ளன.

மேலும், 'தந்தையர் ஒப்பர் மக்கள்' (145), 'பெரியோர் ஒழுக்கம் பெரிது' (148) என்பன போன்ற நீதிகள் இந்நூற் பொருளதிகாரத்தில் இடம்பெற்றுள்ளன.

**சங்க இலக்கியம்:** சங்க காலத் தமிழர் உரிமையுடன் தன்னாட்சிக்கு உட்பட்டிருந்தனர். புலவர்களும் அறிஞர்களும் மக்களாலும் மன்னர்களாலும் மதிக்கப் பெற்றுத் தங்கு தடையின்றித் தம்முணாச்சிகளை வெளியிடும் ஆற்றல் பெற்றிருந்தனர். மக்களிடையேயும் மன்னர்களிடையேயும் அறவுணர்வு தாழும் நிலை ஏற்பட்ட போது புலவர்கள் நீதிக் கருத்துகளை எடுத்துக் கூறி இடித்துரைத்தனர். காதலர்களிடையே ஒருவர்பால் மற்றொருவருக்கு ஐயம் ஏற்பட்டபோதும், காதல் நிறைவேறாது அறத்தின் பாற்பட்ட இல்வாழ்க்கை அமையாதோ என்ற அச்சம் ஏற்பட்டபோதும் தோழி முதலிய அணுக்கர்கள் அறத்தொடு நின்று நீதிகளை எடுத்துரைத்தனர். இந்த அறவுணர்வே தன்னுணர்ச்சிப் பாடல்களாக இருந்தபோதிலும் அகப்பாடல்களிலும் புறப்பாடல்களிலும் நீதிக் கருத்துகள் விரவிக் கிடக்கக் காரணமாகும். 'ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை' (கலி .18), 'பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்' (கலி .133). 'புரைய மன்ற புரையோர் கேண்மை' (நற்.1), 'வினையே ஆடவர்க்கு உயிரே' (குறுந்.135), 'திறவோர் செய்வினை யறவதாகும்' (குறுந்.247), 'யாதும் ஊரே யாவரும் கேளிர், தீதும் நன்றும் பிறர்தர வாரா' (புறம்.192) 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே, நன்னடை நல்குதல் வேந்தற்குக் கடனே' (புறம்.312), 'நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்' (புறம்.195) என்பன போன்ற நீதிகள் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கு விரவிக்கிடக்கின்றன. இவை பிற்காலத்தில் தோன்றிய நீதி நூல்களுக்கு வித்துகளாக அமைந்துள்ளன.

**பதினெண் கீழ்க்கணக்கு நீதிநூல்கள்:** தமிழக வரலாற்றிலும் தமிழ் இலக்கிய வரலாற்றிலும் கி.பி. 3-ஆம் நூற்றாண்டிற்கும் 6-ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலம் ஒரு திருப்புமுனையாகும். தமிழகமும் தமிழர் பண்பாடும் வேற்று இனத்தவரின் ஆட்சியால்கவரப்பட்டுத் தன்னியல்பை இழந்தன. தெற்கில் பாண்டியரை வென்று களப்பிரர் ஆட்சியைக்கைப்பற்றினர். வடக்கில் தொண்டை நாடும், நடு நாடும் பல்லவரிடம் சிக்கிக் கொண்டன. களப்பிரரும் பல்லவரும் தத்தம் மதக் கருத்துகளை மக்களிடையே பரப்பினர். மக்களிடையே ஏற்பட்ட மதமாற்றமும் பண்பாட்டு மாற்றமும் தமிழரின் நீதிநெறிகளிலும் பாதிப்பை உருவாக்கின. தமிழர்களால்ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்த பரத்தையர் உறவு, கள்ளுண்ணுதல், புலால் உண்ணுதல் போன்ற பழக்கங்கள் பெரும் பாவச் செயல்களாகக் கருதப்பட்டன. பௌத்த, சமண அறிஞர்கள் தத்தம் மதக் கருத்துகளை நீதிகளாக எழுதி இலக்கிய வடிவில் உலவவிட்டனர். இதனால் தன்னுணர்ச்சிப் பாடல்களில் ஆங்காங்கே விரவப்படும் நிலையில் இருந்த நீதிக் கருத்துகள் தமிழ் இலக்கியத்தில் தலைமையிடம் பெற்று, நீதிநூல்களாக உருவாயின. சங்க காலத்தில் தலைமைக் கருவாக இலக்கியத்தில் இடம் பெற்றிருந்த காதல் வாழ்வும், போர்வாழ்வும் பின்னுக்குத் தள்ளப்பட்டு முதன்மை இழந்தன. இம்மூன்று நூற்றாண்டுகளும் வேற்று இனத்தவரின் ஆட்சியில் தமிழகமும் தமிழிலக்கியமும் தம்இயல்பை இழந்தமையால் 'இருண்ட காலம்' என வரலாற்றறிஞர்களால்குறிக்கப்பட்ட போதிலும், நீதி இலக்கியங்களைப் பொறுத்தவரையில் 'பொற்காலமாகக்' கருதத்தக்கன. இக்காலத்தில்தான் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களும் முதல் தமிழ்க்காப்பியங்களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் இயற்றப்பட்டன.

பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் நீதியை மட்டும் கருவாகக் கொண்டவை பதினொன்று. அவை: திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, திரிகடுகம், ஆசாரக் கோவை சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி, பழமொழி என்பன. ஏனையவற்றுள் களவழி நாற்பது போர்க்கள நிகழ்ச்சிகளை விளக்குகின்றது; கார் நாற்பது, திணைமொழி ஐம்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை என்னும் ஆறும் அகவாழ்க்கை பற்றி விளக்குகின்றன.

திருக்குறள் உலகிலுள்ள தலையாய நீதி நூல்களுள் ஒன்று. இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் கருத்துகளைச் சமயம், இனம், நாடு, மொழி போன்ற வேறுபாட்டுணர்வுகளைக் கடந்து நின்று கூறுகின்றது; செய்திகளைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் உவமை போன்ற உரை உத்திகளைப் பயன்படுத்தி விளக்குகின்றது. 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்', 'வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும் தீமைஇலாத சொலல்', 'பிறன் மனை நோக்காத பேராண்மை', 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்பன போன்ற அரிய கருத்துகள் இதன்கண் நிறைய உள்ளன. இது தனி மனித அறத்தை அறத்துப்பாலிலும், சமூக-அரசியல் நீதிநெறிகளைப் பொருட்பாலிலும் எடுத்துக் கூறுகின்றது. இதன் காமத்துப்பால் கணவன்-மனைவியரின் இல்லற அகவாழ்க்கையைப் பற்றிய செய்திகளைத் தருகின்றது. இம்முப்பால்களும் முறையே 38, 70, 25 அதிகாரங்களைக் கொண்டவை. ஒவ்வோர் அதிகாரத்திலும்

10 குறள் வெண்பாக்கள் அடங்கியுள்ளன. இந்நூல் ஆங்கிலம், இலத்தீன் உள்ளிட்ட பல மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளது. கருத்து அணுகுமுறை காரண மாகத் திருக்குறள் 'உலகப் பொதுமுறை' என்னும் சிறப்பு உடையது. இதன் ஆசிரியர் திருவள்ளுவர்.

நாலடியார் தமிழ் நீதி நூல்களுள் திருக்குறளுக்கு அடுத்த சிறப்புடையது; நான்கு அடிகளைக் கொண்ட வெண்பாக்கள் 400 உடையது. இதற்கு நாலடி நானூறு என்னும் பெயரும் உண்டு. இது அமைப்பி லும் கருத்திலும் திருக்குறளை ஒத்த தன்மை கொண் டது. அறத்துப்பாலும் பொருட்பாலும் காமத்துப் பாலும் முறையே 13, 24, 3 அதிகாரங்களை உடை யன. 'கல்வி அழகே அழகு', 'மனத்தனையர் மக்கள்', 'பச்சோலைக்கு இல்லை ஒலி', 'வாழாதார்க்கு இல்லை தமர்', 'பாற்கூழை மூழை சுவையுணராது', 'களைபவோ கண் குத்திற்றென்றுதம்கை' என்பன போன்ற பல தொடர்களை நாலடியாரில் காணலாம். இவை நீதிகளை உலகியல் நிகழ்ச்சிகள், உவமைகள், அன்றாட வாழ்க்கைக் கூறுகள் போன்றவற்றோடு இணைத்தும் கூறும் நெறியை வெளிப்படுத்துகின்றன. செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என்னும் கருத்துகள், நூலின் முகப்பில் அமைந்து, சமண முனிவர்களால் இது பாடப்பெற்ற மையைக் காட்டுகின்றன.

பிற நூல்களுள் விளம்பி நாகனார் இயற்றிய நான்மணிக்கடிகை குறிப்பிடத்தக்கது. இதில் 102 நேரிசை வெண்பாக்களும் 1 பஃறொடை வெண் பாவும் உள்ளன. ஒவ்வொரு பாவும் நானான்கு மணி களைக் கோத்துள்ள மாலை போன்று நானான்கு ஒப்புடைக் கருத்துகளை எடுத்துரைக்கின்றது. 'மனைக்கு விளக்கம் மடவார்','இளமையோடு ஒப்பது இல்', 'தாயென்பாள் முந்து தான் செய்த வினை' 'நல்லார்க்குத் தம் ஊரென்று ஊரில்லை' என்பன இதிலுள்ள சில நீதிகள்.

இனியவை நாற்பதும், இன்னா நாற்பதும், முறையே பூதஞ்சேந்தனாராலும், கபிலராலும் யாக் கப் பெற்றவை. இந்நூல் ஒவ்வொன்றும் கடவுள் வாழ்த்துடன் 41 இன்னிசை வெண்பாக்களை உடை யது. இனியவை நாற்பது 4 செய்யத்தகுந்த இனிய கருத்துகளையும், இன்னா நாற்பது 4 செய்யத்தகாத இன்னாக் கருத்துகளையும் ஒவ்வொரு பாடலிலும் கூறுகின்றன. 'மானம் அழிந்தபின் வாழாமை இனிது', 'கடன் கொண்டும் செய்வன செய்தல் இனிது', 'உடம் பாடு இலாத மனைவி தோள் இன்னா', 'உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பு இன்னா' என்பன போன்ற அரிய நீதிகள் இவற்றில் உள்ளன.

நீதிகளை மருந்துகளோடு (உறை) ஒப்பிட்டு வாயுறை, செவியுறை எனக் கூறுதல் தமிழர் மரபு. இம்மரபினைப் பின்பற்றிப் பெயர்கொண்ட நூல்களா கத் திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி என்பன உள் ளன. சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மருந்துகளைப் போன்ற மூன்று கருத்துகளைத் திரிகடுகம் ஒவ்வொரு பாடலிலும் தருகின்றது. நல்லாதனார் இயற்றிய இந்நூலில் 101 நாலடி வெண்பாக்கள் உள்ளன. அவற்றுள் திருமால் வாழ்த்துப் பாடலொன்று. சிறு பஞ்சமூலம் கண்டங்கத்தரி, சிறுவழுதுணை, சிறு மல்லி, பெருமல்லி, நெருஞ்சி என்னும் ஐந்து மூலிகை களை ஒத்த ஐந்து நீதிகளைக் கொண்ட 98 நேரிசை வெண்பாக்களை உடையது. பாடல்களுள் ஒன்று கடவுள் வாழ்த்துப் பற்றியது. இதன் ஆசிரியர் காரி யாசான். கணிமேதையார் இயற்றிய 80 நேரிசை வெண்பாக்கள் ஏலாதியில் அடங்கியுள்ளன. இதன் முகப்பில் மேலும் 2 பாடல்கள் பாயிரமாகக் காணப் படுகின்றன. இது ஏலம், இலவங்கம், சிறுநாவற்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு என்னும் ஆறு மருந்துகளை ஒத்த ஆறு கருத்துகளை வலியுறுத்துகின்றது.

முதுமொழிக் காஞ்சி 100 நீதிகளைப் பத்துப் பத் தாக வகைப்படுத்தி ஒரு வரியில் கூறுகின்றது. 'கற்ற லின் கற்றாரை வழிபடுதல் சிறந்தது', 'சீர் அறிந்து ஒழுகாதாள் தாரம் அல்லள்', 'அறத்தாற்றின் ஈயா தது ஈகை அன்று' போல்வன இதிலுள்ள சில நீதிகள். கூடலூர் கிழார் இதனை இயற்றியுள்ளார். தமிழ் மக்களிடம் பழகிய நானூறு பழமொழிகளைத் தேர்ந் தெடுத்து, அவற்றின் வழி நீதிகளைப் பழமொழி நானூறுஎடுத்துரைக்கின்றது.இதில் கடவுள் வாழ்த்து, பாயிரம் பற்றிய2 வெண்பாக்களும் நீதி பற்றிய 400 வெண்பாக்களும்இடம்பெற்றுள்ளன. இதனைஇயற்றி யவர் முன்றுறையரையர். மக்கள் அன்றாட வாழ்வில் மேற்கொள்ளத் தக்க பழக்கவழக்கங்களைத் தொகுத் துக் கூறும் வடமொழி நீதி நூல்களைத் தழுவித் தமிழில் எழுந்த நூலே ஆசாரக்கோவையாகும். பெருவாயின் முள்ளியார் இதனை யாத்தவர். இந் நூல் குறள்வெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா, பஃறொடை வெண்பா எனப்பல்வேறு வெண்பாக்களால் ஆன 100பாடல்களைக் கொண்டது. மூத்தோரின் பெயரைக் கூறுதல் கூடாது; மன்னன், ஆசிரியர், தாய், தந்தை, மூத்த உடன் பிறந்தார் ஆகி யோரைத் தெய்வத்திற்குச் சமமாகத் தொழுதல் வேண்டும் என்பன போன்ற நீதிகளும், உண்ணும் போது முதலில் இனிப்பையும் இறுதியில் கசப்பையும் இடையில் இடைப்பட்ட சுவைகளையும் உண்ணுதல் வேண்டும் என்பன போன்ற ஒழுக்க நெறிகளும், இந் நூலில் விரவிக் கிடக்கின்றன. பதினெண்கீழ்க்கணக் கில் கைந்நிலையை நீக்கிவிட்டு இன்னிலை என்னும் நீதிநூலைச் சேர்த்துக் குறிப்பிடுவாரும் உளர். இந் நூல் 46 வெண்பாக்களைக் கொண்டது.

நீதி இலக்கியக் காலத்தில், சங்க காலத்தில் பாடற் கருவாகிய காதலும் போரும் சிறப்பிழந்து, நீதிக் கருத்துகள் தலைமை பெற்று மாற்றமெய்தியது போலப் பாடலின் வடிவத்திலும் மாற்றம் ஏற்பட்டது. மிகுந்த வரிகளை உடைய ஆசிரியத்தின் இடத்தைக் குறைந்த வரிகளை உடைய வெண்பாக்கள் கைக்கொண்டன. இவ்வடிவ மாற்றத்திற்குக் கருத்து மாற்றமே காரணமாகும்.

**பிற்கால நீதிநூல்கள்:** பிற்காலத்தில் அவ்வப்போது சில நீதிநூல்கள் தோன்றின. கி.பி. 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஔவையார் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை (வாக்குண்டாம்), நல்வழி என்னும் நூல்களை இயற்றினார். இந்நூல்கள் சிறுவர்களும் கற்றுணரும் வகையில் எளிய நடையில் நீதிகளைப் போதிக்கின்றன. ஆத்தி சூடி, 'அறம் செய விரும்பு', 'ஆறுவது சினம்', 'இயல்வது கரவேல்' என ஒருவரியில் நீதிகளைக் கூறுவதோடு, சிறுவர்களுக்குத் தமிழ் எழுத்துகளையும் கற்பிக்கும் வகையில் அகர வரிசைப்படி அமைந்துள்ளது. ஒரு வரி நீதிப் பாடல்களுக்கு முதுமொழிக் காஞ்சி வழிகாட்டி எனலாம். மேலும், ஔவையாரின் ஆத்திசூடியைப் பின்பற்றி 20-ஆம் நூற்றாண்டில் பல ஆத்தி சூடிகள் தோன்றி நீதிகளைக் கூறுகின்றன. அவற்றுள் தேசியகவி சுப்பிரமணிய பாரதியாரின் புதிய ஆத்திசூடி, நாரா-நாச்சியப்பனின் நெறிசூடி, வ.சுப. மாணிக்கனாரின் தமிழ் சூடி, புலவர் சோம. இளவரசு இயற்றிய நீதி சூடி, இரெ. முத்துக்கணேசனின் முத்துசூடி ஆகியன குறிப்பிடத் தக்கவை.

இடைக்காலத்தில் தோன்றிய நீதி நூல்களுள் குறிப்பிடத்தக்க மேலும் சில நூல்கள்: அருங்கலச் செப்பு, அறநெறிச்சாரம், நறுந்தொகை (வெற்றி வேற்கை), நீதிநெறிவிளக்கம், நன்னெறி, உலகநீதி என்பன ஆகும். இவற்றுள் அருங்கலச் செப்பு 180 குறட்பாக்களில் கொல்லாமை, பொய்யாமை, திருடாமை, காமநீக்கம், பொருளாசை நீக்கம் என்னும் சமண நீதிகளைக் கூறுகின்றது. இந்நூல் வடமொழி நூலின் பெயர்ப்பாகும். இதன் ஆசிரியர் பற்றிய குறிப்பு இல்லை. ஏனைய நூல்களை முறையே முனைப்பாடியார், அதிவீரராம பாண்டியர், குமர குருபரர், சிவப்பிரகாசர், உலகநாதர் என்னும் புலவர்கள் பாடியுள்ளனர்.

**சதகங்கள்:** தமிழில் தோன்றிய நீதிநூல்களுள் 100 பாடல்களைக் கொண்ட சதகம் என்னும் வகையும் குறிப்பிடத்தக்கது. இது வடமொழியிலிருந்து ஏற்றுக்கொண்ட இலக்கிய வகையாகும். தண்டலையார் சதகம், கோவிந்த சதகம், சயங்கொண்டார் சதகம், குமரேச சதகம், அறப்பளீசுர சதகம், மணவாள நாராயண சதகம், கைலாச நாதர் சதகம் மநுநீதி சதகம் என்பன குறிப்பிடத்தக்க தமிழ்ச் சதக நூல்கள் ஆகும்.

பிற்காலத்தில் தோன்றிய நீதி நூல்களுள் வேதகிரி முதலியாரின் நீதி சிந்தாமணி, வேதநாயகம் பிள்ளையின் பெண்மதிமாலை, நீதிநூல், முத்துராமலிங்க சேதுபதியின் நீதிபோதம், விவேக சிந்தாமணி என்னும் தனிப்பாடல்திரட்டு ஆகியன நினைக்கத் தகுந்தன. வேதநாயகம்பிள்ளை, சுப்பிரமணிய பாரதி, பாரதிதாசன் போன்றோரின் நீதி நூல்களில் ஆங்கிலப் பண்பாட்டின் தாக்கத்தினைக் காணலாம். இப்புலவர்கள் பெண்விடுதலை, பெண்கல்வி, சாதி யொழிப்பு, சமய ஒருமைப்பாடு, நாட்டுணர்வு போன்றவற்றையும் நீதிகளாக வலியுறுத்துகின்றனர்.

**நீதிக்கதைகள்:** கதைகளின் வழி நீதிகளைப் போதிக்கும் இலக்கிய உத்தி வடமொழியைப் பின்பற்றித் தமிழிலும் அமைந்துள்ளது. சிவஞான முனிவர் இயற்றிய சோமேசர் முதுமொழி வெண்பாவில் இதனைக் காணலாம். இந்நூல் கதைகளின் வழித் திருக்குறள் நீதிகளை விளக்குகின்றது. இது தவிரப் பிறமொழிகளிலிருந்து பல கதை நூல்கள் தமிழில் பெயர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் பஞ்ச தந்திரக் கதைகளும் ஈசாப்புக்கதைகளும் குறிப்பிடத்தக்கவை. பஞ்சதந்திரம் விட்டுணு சர்மா என்னும் அறிஞரால் தென்னாட்டு மகிலாரோப்பிய நகர மன்னன் அமர சக்தியின் மைந்தர்களுக்காக வடமொழியில் இயற்றப்பட்டது. இந்நூல் எதிரிகளின் நண்பர்களைப் பிரித்தல், ஆற்றலுள்ளவனை நண்பனாக்கிக் கொள்ளுதல், எதிரியை நண்பன் போலப் பழகிக் கெடுத்தல், எதிரிக்குப் பேரழிவை ஏற்படுத்துதல், ஆராயாமல் செயற்படுதலின் விளைவு என்னும் ஐந்து அரச நீதிகளைக் கூறுகின்றது. கிரேக்க நாட்டு அடிமையாகிய ஈசாப்பு என்பவரால் (கி.மு. 6-ஆம் நூற்றாண்டு) கிரேக்க மொழியில் எழுதப்பட்ட நூல் ஈசாப்புக்கதைகள் ஆகும். இதுவும் பஞ்சதந்திரம் போல விலங்கு, பறவைகளின் கதைகள் வழி நீதியை எடுத்துரைக்கிறது.

நீதி உணர்வு மனித குலம் முழுமைக்கும் பொதுவானது. மாந்தர் வாழும் சமூக அமைப்பு, காலம், இடம் போன்ற சூழ்நிலைகளுக்கு ஏற்ப நீதிக்கருத்துகள் வேறுபடுகின்றன. அவ்வேறுபாட்டிற்கு ஏற்ப நீதி கூறும் இலக்கிய நெறிகளிலும் மாறுபட்ட போக்குகள் அமைந்துவிடுகின்றன. பெ.சு.

**நீதிநூல்கள் (வடமொழி):** இந்தியாவின் பண்டைய இலக்கியங்களின் தலையாய நோக்கம் நன்னெறி காட்டுவதாகும். சர்வில்லியம்சோன்சு போன்ற மேல்நாட்டு அறிஞர்கள் இந்தியர்களுடைய எந்த

இலக்கியங்களை எடுத்துக் கொண்டாலும் ஏதேனும் ஒரு நீதியைப் போதிப்பதாகவேயுள்ளன என்று கூறினர். பௌத்தர்களும், சமணர்களும் இந்த அறநோக்கத்தினைத் தங்கள் நூல்களிலும் போதனைகளிலும் வற்புறுத்தினர். ஆர்யாசூரன் எழுதிய புத்தருடைய பழம் பிறப்புக்களைக் கூறும் சாதகக்கதைகள், அவதானங்கள் போன்றவை நீதி புகட்டுவனவாகவே உள்ளன.

வடமொழியில் வேதகால முதற்கொண்டே நீதியையும், அறத்தையும் போதிக்கக்கூடிய பல பகுதிகள் காணப்படுகின்றன. நீதிகளைப் போதிக்கக் கூடிய பல கதைகள் இதிகாச, புராண காலங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஒவ்வொரு வேதத்தைச் சேர்ந்த உபநிடதங்களின் நோக்கமே, அறத்தையும் நீதியையும் புகட்டி அதன்மூலம் பிரும்மஞானத்தை அறியச் செய்வதேயாகும். மனு, பராசரர், யாக்ஞியவல்கியர் போன்ற மாபெரும் முனிவர்கள் தங்களுடைய தரும சாத்திரங்களை (சுமிருதிகளை), அறம், நீதி முதலியவைகளைப் போதிப்பதற்காகவே எழுதியுள்ளனர்.

வடமொழியில் நீதிநூல்கள் யாவும் செய்யுள் வடிவத்தில் உள்ளன. இவைகள் கண்ட காவியங்கள் அல்லது சிறு காப்பியங்கள், சிருங்காரம், பத்தி, நன்னெறி அல்லது நீதி இவைகளைப் பொறுத்து முப்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. நீதிநூல்கள் யாவும் நீதி கண்ட காவியங்களின் கீழ்க் கொண்டு வரப்படுகின்றன. பொதுவாகக் கண்ட காவியங்களுக்கான இலக்கணங்கள் யாவும் நீதிநூல்களுக்கும் பொருந்தும். மகா காவியங்களைப் போன்று இவைகளுக்கு ஒரு குறிப்பிட்ட வடிவமோ விருத்தமோ செய்யுள்களின் எண்ணிக்கைகளோ கிடையாது. ஒரு நூலில் ஒரு செய்யுளிலிருந்து பல செய்யுள்கள் இருக்கலாம். எல்லாச் செய்யுள்களும் பலவகையான விருத்தங்களிலும் இருக்கலாம். நீதிநூல்களில், சிறப்பாகப் பல நூல்களிலிருந்து, பல கவிஞர்களால் எழுதப்பட்ட செய்யுள்களைக் காணலாம். ஒரே கவியினால் எழுதப்பட்ட செய்யுள்களைக் கொண்ட நூல்களும் இருக்கின்றன. நீதிநூல்களில் பெரும்பாலும் பல கவிஞர்களால் எழுதப்பட்ட செய்யுள்களின் தொகுப்பே காணக்கிடக்கின்றது.

நீதி, அறம் பற்றிய கவிதையின் தொடக்கத்தை இருக்கு வேதத்திலும், மற்றும் இதிகாச புராணங்களிலும் காணலாம். மகாபாரதத்திலுள்ள அனுசாசன பருவம், சாந்தி பருவம், இயக்கப் பிரச்சினம், விதுரநீதி முதலியவைகள் நீதி நூல்களில் மிகப் பழையன. பிற்காலத்தில் தோன்றிய பஞ்சதந்திரம், இதோபதேசம் போன்ற நூல்கள் கதைகளின் மூலம் நீதி நெறிகளைப் போதிப்பதற்காகவே எழுதப்பட்டன. மிருகங்கள், பட்சிகள் முதலியவைகளைக் கதாபாத்திரங்களாக அமைத்து இராசநீதி, உலக நீதி போன்றவைகள் அறிவுறுத்தப்படுகின்றன. பௌத்தர்களின் சாதகக் கதைகளும், அவதானக் கதைகளும் பலநீதிகளைப் புகட்டுவதற்காகவே எழுதப்பட்டுள்ளன.

வரலாற்றுக் காலத்தில் தோன்றிய பழைய நீதி நூல் அருத்த சாத்திரத்தின் ஆசிரியரான சாணக்கியரால் எழுதப்பட்டது என்று கூறப்படும். சாணக்கிய நீதிசாத்திரம் என்ற நூல், சாணக்கிய சதகம், விருத்த சாணக்கிய, இலகு சாணக்கிய என்று பல தலைப்பில் சொல்லப்படுகிறது. நீதிரத்தினம், நீதிசாரம், நீதிபிரதீபம் போன்ற நூல்கள், வரருசி, கடகர்பரர், வேதாள பட்டர் ஆகியயோர்களால் எழுதப்பட்டன என்ற செய்தி பழைய தொகுப்புகளில் காணப்படுகின்றது.

நீதி திவிசசட்டிகா என்று ஆரியாவிருத்தத்தில் 116 செய்யுள்களைக் கொண்ட நீதிநூல் சுந்திரபாண்டியன் என்பவரால் எழுதப்பட்டது.

நீதிநூல்களில் அடுத்தெழுந்தவை கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பருத்துருகிரி இயற்றிய நீதி சதகமும், வைராக்கிய சதகமும் ஆகும். இவை வடமொழியிலுள்ள நீதி நூல்களுள் மிகச் சிறந்தனவாகக் கருதப்படுகின்றன.

மோகமுத்கரம் என்கிற 'பசகோவிந்தம்' என்ற சங்கராச்சாரியரால் எழுதப்பட்ட நூல் நிலையாமை, பற்றின்மை, ஆன்மிக வாழ்க்கை முதலியவற்றை விளக்குகின்றது.

கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த காசுமீர கவி தாமோதர குப்தர் எழுதிய குட்புனிமதம் அல்லது சம்பலி மதம் என்ற நூல் காதலர்கள் எச்சரிக்கையோடு பழக வேண்டிய முறைகளைக் கூறுகின்றது.

அதே நூற்றாண்டைச் சேர்ந்த மற்றொரு காசுமீரகவி பல்லடன் என்பவர் தம்முடைய பல்லடசதகத்தில் அரசர்களைப் பற்றிக் கூறுகிறார்.

திகம்பர சைன வகுப்பைச் சேர்ந்த அமித கீதி என்ற சைனகவி பலநீதிச்செய்யுட்களைத் தம்முடைய 'சுபரடித ரத்தன சந்தோக' என்ற நூலில் தொகுத்துக் கொடுத்திருக்கின்றார்.

கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புகழ்பெற்ற சிறந்த காசுமீரக் கவி'சேமேந்திரன்' என்பவர் பலநீதி நூல்களை இயற்றியுள்ளார். அவர் கலியுக வாழ்க்கையைப்பற்றிக் 'கலிவிலாசம்' என்ற நூலிலும், நன்னடத்தையைப் பற்றிச் 'சாருசர்யா' என்ற நூலி

லும், அறம, பொருள், இன்பம், வீடு ஆகியவை களைப் பற்றியும், அவற்றை அடையும் முறைகளைப் பற்றியும்'சதுர்வர்க்கசாரசங்கிரகம்' என்ற நூலிலும், தலைவர்களும் அவர்களுடைய பணியாட்களும் நடந்துகொள்ளவேண்டிய முறைகளைக் குறித்தும், அவர்களுக்கிடையே நிலவவேண்டிய ஒத்துழைப்பைக் குறித்தும் 'சேவ்யசேவகோபதேச' என்ற நூலிலும், அகங்காரம், பொறாமை ஆகியவற்றைக் கண்டித்துத் 'தர்பதளனம்' என்றநூலில் 7 அத்தியாயங்களிலும் விரிவாக எழுதியுள்ளார். பரத்தையர்கள் கையாளு கின்ற பல முறைகளைக்கூறி, அவர்களின் வலையில் விழாதிருக்குமாறு ஆண்களை எச்சரித்துத் தம்மு டைய 'சமயமாத்ரிகா' என்ற நூலில் 8 அத்யாயங் களில் எழுதியுள்ளார். அதே நூற்றாண்டைச் சேர்ந் தவரும் ஆனால், சேமேந்திரனுக்குப் பிறகு தோன் றியவருமான சல்கணர் என்ற மற்றொரு காசுமீரகவி தம்முடைய 'முத்தோபதேசத்திலும்' பரத்தையர் வலையில் விழாதிருக்குமாறு எச்சரிக்கிறார்.

சம்பு என்ற மற்றொரு காசுமீரகவி அன்யோக்தி மாலா என்ற தம் நூலில் 108 செய்யுள்களில் மறை முகமான நல்ல கருத்துகளைக் கூறி, வாழ்க்கையில் நடைபெறும் பல இன்னல்களைக் கூறுகின்றார்.

பருத்துருகரியின் இரசிகரும் காசுமீரகவியுமாகிய 'சில்கணன்' என்ற கவி சாந்திசதகம் என்கிற தம் நூலில்பருத்துருகரியின்கருத்துகளையே தம்சொந்த நடையிலும், சிலசமயம் பருத்ருகரியின் செய்யுள் களைச் சேர்த்தும் எழுதியுள்ளார். கி.பி. 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வேதாந்த தேசிகர் தம்மு டைய 'சுபாசித நீவி' என்கிற நீதிநூலில் 145 செய் யுள்களில், 12 பகுதிகளாகப் பிரித்து, நன்னடத்தை களைப் பற்றி எழுதியுள்ளார். கி.பி. 17-ஆம் நூற் றாண்டைச் சேர்ந்த சகந்நாதபண்டிதன் 'பாமினி விலாசம்' என்கிற தம் நூலில், 250 செய்யுள்களில், அன்யோக்தி, சிருங்காரம், கருணை, சாந்தி ஆகிய செய்திகளை முறையே நான்கு பகுதிகளில் கூறு கிறார்.

கி.பி. 17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நீல கண்டதீட்சிதர், கலியுகத்தில் காணப்படும் பல தீமை களைக் 'கலிவிடம்பணம்' என்ற நூலிலும், பேச்சு மேடைகளில் கையாளும் முறைகளைக் குறித்துச் 'சபா ரஞ்சன சதகம்' என்ற நூலிலும், சாந்தியின் மேன்மையைப் பற்றிச் 'சாந்திவிலாசம்' என்ற நூலி லும், ஆசைகளைத் துறப்பதின் மேன்மையைப் புகழ்ந்து 'வைராக்கிய சதகம்' என்ற நூலிலும், பல்வேறு நன்னடத்தைகளை மறைமுகமாகத் தம் அன்யாபதேச சதகத்திலும் எழுதியுள்ளார்.

நல்லொழுக்கத்தை உணர்த்தும் இலக்கிய வகை யில் 'அந்நியாபதேசம்' 'அன்யோக்தி', வியாசோக்தி போன்ற பிரிவுகள் உள்ளன. மரம், செடி, கொடி கள், விலங்குகள் முதலியவற்றைக் கொண்டு குண தோடங்களை எடுத்துக்காட்டும் மரபை இதில் காண லாம். இப்படிப்பட்ட காவியங்கள் 'அன்யாபதேச சதகம்' என்று சொல்லப்படுகின்றன. தமிழ்நாட்டி லும், தென்னிந்தியாவிலும் 'அன்யாப தேசம்' என்ற நீதிநூல் வகை மிகுதியாகக் கையாளப்பட்டது.

பஞ்சதந்திரக் கதைகளும், ஈதோபதேசக் கதை களும் நீதி நெறிகளைப் போதிப்பதற்காகவே எழு தப்பட்டன. இவற்றைத் தவிரக் குணாட்டியன் எழு திய 'பிருகத்கதா'விலும் அதனுடைய மூன்று சுருக் கங்களான, புத்தசுவாமி எழுதிய 'பிருகத்கதாசு லோகசங்கிரகம்', சோமதேவன் எழுதிய 'பிருகத் கதாசரிதசாகரம்', சேமேந்திரன் எழுதிய 'பிருகத்து காமஞ்சரி'யிலும் நல்லறம் போதிக்கக் கூடிய கதைகள் காணப்படுகின்றன. மேலும், கதை இலக்கியங்களில் 'சிம்காசனத்வாத்ரும்சிகா', 'வேதாள பஞ்ச விம்சதி', 'சுகசப்ததி' போன்ற கதை நூல்களிலும் நீதிநெறிகள் நிரம்பக் காணப்படுகின்றன. எஸ்.ஜெ.

***நீதிநெறி விளக்கம்***: உலகோர் நீதிவழுவா நெறிமுறையோடு வாழ வேண்டும் என்ற குறிக் கோளுடன் சைவ சித்தாந்தத்துறை யொழுகிய பெருமகனார் குமரகுருபர அடிகளாரால் கி.பி. 17 -ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நூலே நீதிநெறி விளக்கமாகும். இந்நூல் 102 வெண்பாக்களைக் கொண்ட சிற்றிலக்கியமாகும். இது அறநூற் பேழையாகிய திருக்குறளினை அடியொற்றி வெண்பா யாப்பில் இயற்றப்பட்ட நூலாகும். மதுரையினை ஆண்ட மன்னர் திருமலை நாயக்கர் விழைவிற்கேற்ப எளிமையாகவும் இனிமையாகவும் தெளிவாகவும் சுருக்கமாகவும் இந்நூல் உயர்ந்த நீதிகளைக் (அறங் களை) கூறும் பான்மையில் அமைந்துள்ளது.

இந்நூல் சிறந்த சங்கச் செய்யுட்களோடு ஒப்ப மதிக்கத்தக்க உயர்வினையுடையது. திட்பமான கருத்துச் செறிவும், பொருளாழமும் கொண்டிலங்கு கிறது. இந்நூல் மிகுதியாக வடசொற்கள் கலவாது தூய செந்தமிழ் நடைகொண்டு ஒளிர்வது ஆகும். இது பல ஆங்கிலப் புலவர்களின் உள்ளத்தினை ஈர்க் கும் வன்மையுடையது. இந்நூலிற்குப்பல ஆங்கில மொழிபெயர்ப்புகள் தோன்றியுள்ளன. இது பிற் காலத்தே எழுந்த ஈடு இணையில்லாத நீதிநூல் என்பது புலனாகின்றது.

இந்நூலின் கடவுள் வாழ்த்தே ஒரு பெரிய புரட்சிப் பாவாக அமைந்து சைவ நன்னெறியினை விளக்குவது. 'மக்களது இளமை வாழ்வு நீரில்

தோன்றும் குமிழி போலவும், அவர்கள் பெற்ற பொருட்செல்வம் அந்நீரில் தோன்றும் நீண்ட அலைகளைப்போலவும் அம்மக்கள் பெற்ற உடல் நீரில் எழுதும் எழுத்துப் போலவும் நிலையாது விளங்குவதால், மக்களே! அம்பலத் துறையும் ஆடல் அரசனை ஏன் இன்னும்வழிபடாதுள்ளீர்கள். உடனே அம்பலத்தரசை வழிபடத் தொடங்குங்கள்' என்று உலகோர்க்கு உயர்ந்த நெறியினை உபதேசிக்கின்றார். அதுவே நிலைத்த பேரறம் என்றும் கூறுகின்றார்.

மேலும் 'கல்வியே சிற்றுயிர்க் குற்ற துணையாகும்' என்றும், 'மலரவன் வண்தமிழ்ப்புலவர்க்கு ஈடாகான்' என்றும், 'யாரே அழகுக்கு அழகு செய்வார்' என்றும், 'சிற்றுளியால் கல்லுந்தகரும் தகரா, கொல்லுலைக் கூடத்தினால்' என்றும், 'கற்றாரை நோக்கிக் கருத்தழிக' என்றும், 'சீரெலாம் தூற்றிச் சிறுமை புறங்காக்க வேண்டும்' என்றும் உயர்ந்த பொன்மொழிகளைத் தன்பாற் கொண்ட அறநூலாகும் இந்நூல். இறுதியாக, நிறைபொருளாக இவர் கூறும்கருத்து இவர் உளக்கிடக்கையினை வெளிப்படுத்துகின்றது.'ஐயந்திரிபின்றளந்துத்தியில் தெளிந்து, மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார்-தம்முளே காண்பதே காட்சி கனவு நனவாகப் பூண்பதே தீர்ந்த பொருள்' என்ற இந்நூலின் கடைசிப் பாடலில் உயர்ந்த சிவநெறித் தத்துவத்தினை விளக்குகின்றார். இறைவன், உயிர்,பற்று(பதி, பசு பாசம்)ஆகியவற்றின் தன்மைகளை உணர்ந்து, ஐயந்திரிபின்றிக் கருத்தில் தெளிவு பெற்று, மெய்யறிவாகிய கண் விழித்து அறிவுத்துயில் மேற்கொள்ளுவோர் தம் உள்ளத்தில் காண்பதே காட்சியாகும் எனவும், அக்கனவினை நனவாகக் கொள்வதே முடிந்த முடிபாகும்(சித்தாந்தமாகும்)எனவும் அறுதியிட்டு உறுதியாகக்கூறுகின்றார். ஆகவே, மெய்யுணர்வு பெற்று இறைவனோடு ஒன்றி நிற்பவரே அந்தமில் இன்பத்து அழிவில் வீடெய்தும் நெறியில் தலைநின்ற சான்றோராவர் எனக் கூறித் தம் தத்துவ நெறியினை விளக்கித் தலைக் கட்டுகின்றார் குமரகுருபரர். கி.கோ.

**நீதி, நேர்மை, நன்மனச்சான்று:** ஒரு வழக்கினைத் தீர்ப்பதற்குக் குறிப்பிட்ட சட்ட விதிகள் இல்லாத பொழுது, நீதிபதி அவ்வழக்கினை நீதி நேர்மை, நன்மனச்சான்றின் படி முடிவு செய்தல் சாதாரணமாகப் பின்பற்றப்படும் நடைமுறையாகும். அவ்வாறு நீதிபதி முடிவு செய்யுங்கால் அம்முடிவு பொதுவான சட்டங்களுக்கு எதிரானதாகவோ, பொதுவிதிகளுக்கும் நடைமுறைகளுக்கும் மாறுபட்டதாகவோ இருத்தல் கூடாது.

இக்கோட்பாடு கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் தோன்றி இத்தாலி, பிரான்சு மற்றும் செருமானிய நாடுகளில் பரவியது. பின்னர் இங்கிலாந்து நாட்டிலும் பின்பற்றப்பட்டது. இங்கிலாந்தில் கி.பி. 1536-இல் இயற்றப்பட்ட வாரிசுரிமைச் சட்டத்திலும் நீதி, நேர்மை, நன்மனச்சான்று என்னும் சொற்றொடர் காணப்படுகிறது.

கிழக்கிந்திய வணிகக்குழுவினர் இக்கோட்பாடுகளை இந்தியாவில் நடைமுறைப்படுத்தினர். பம்பாயில் கி.பி. 1668-ஆம் ஆண்டு நிறுமச் சட்டத்தின் (CompanyAct) கீழ் நியமிக்கப்பட்ட நீதிபதிகள் நன்மனச் சான்றுடன் பணிபுரிதல் வேண்டும் என்று பணிக்கப்பட்டனர். இங்கிலாந்து அரசின் ஆணையால் 9. 8. 1683 அன்று பம்பாயில் நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. அதில் பணியாற்றும் நீதிபதிகள் நேர்மையுடனும் நன்மனச்சான்றுடனும் பணியாற்றுமாறு அறிவுறுத்தப்பட்டனர். அதே மாதிரியாக 30.12.1687 இல் சென்னையில் 'மேயர்' நீதிமன்றங்கள் ஏற்படுத்திய போதும் நீதிபதிகள் நீதி, நேர்மை, நன்மனச்சான்றுடன் தீர்ப்புகள் வழங்குமாறு இங்கிலாந்து அரசால் பணிக்கப்பட்டனர். மேலும், கி.பி. 1726 மற்றும் கி.பி.1753-ஆம் ஆண்டுகளில் பிறப்பிக்கப்பட்ட ஆணைகளின்படி 'மேயர்' நீதிமன்றங்களில் பணியாற்றும் நீதிபதிகள் 'நீதியையும் உரிமையையும்' நிலைநாட்டுமாறு பணிக்கப்பட்டனர்.

பின் கி.பி. 1781-இல் பிறப்பிக்கப்பட்ட ஒழுங்குமுறையின் 60-ஆம் பிரிவின்படி குறிப்பிட்ட ஆணைகள் எதுவும் இல்லாதபோது நீதிபதிகள் நீதி, நேர்மை,மற்றும் நன்மனச் சான்றுடன் பணியாற்றிடல் வேண்டும் என்று கூறப்பட்டது. சரியான சட்டங்கள், வழக்காறுகள் மற்றும் நேர்மையான கருத்துரைகள் எதுவும் இல்லாத போது தான் 'நீதி, நேர்மை மற்றும் நன்மனச் சான்று' என்னும் கொள்கை பின்பற்றபபடுகிறது.

இந்தியாவைப் பொறுத்த வரை எந்த வழக்கிற்கும் குறிப்பிட்ட சட்டதிட்டங்கள், ஒழுங்குமுறைகள் இல்லாத போது மக்கள் நீதிமன்றங்கள(Adalats) நீதி, நேர்மை மற்றும் நன்மனச் சான்றுடன் செயற்பட வேண்டும் என்று கூறப்பட்டது. சட்டங்கள் இல்லாத நீதிபதிகள் எந்த ஒரு விதியை அல்லது தனக்கு நியாயமானதாகத்தெரியும் வழக்கத்தை சூழ்நிலைகளுக்கேற்பப் பின்பற்றலாம். இவ்வாறு இப்பிரிவு, நீதிமுறை சட்டமியற்றும் தன்மையதாக அமைந்தது. இந்நடைமுறை வங்காளத்தில் கி.பி. 1781-இல் முதல்முறையாகப் பின்பற்றப்பட்டது. ஒரு முக்கிய பொருண்மையின் பொருட்டு ஒரு வழக்கை முடிவுசெய்ய நாடாளுமன்றச் சட்டமும்; ஒழுங்குமுறையும் இல்லாத போதும் மற்றும் இந்து, முகமதியர் சட்டங்களுக்கு அப்பாற்பட்டதாக இருக்கின்ற போதும் நீதி

மன்றங்கள் நீதி, நேர்மை, மற்றும் நன்மனச்சான்றுடன் செயற்படுதல் வேண்டும் என்பது கூறப்பட்டது. வாரன்ஏசுடிங்சு திட்டம் வாரிசுரிமை, திருமணம், சாதி மற்றும் சமயப் பழக்கங்கள் நிறுவனங்கள் குறித்துச் சட்டங்கள் இயற்றியது. அதனை நீதிமன்றங்கள் பின்பற்றுதல் வேண்டும் என்றும் கூறப்பட்டது, பிற பொருண்மைகளைப் பற்றிய வழக்குகளுக்கு எம்மாதிரியான சட்டங்கள் பின்பற்றப்பட வேண்டும் என்று வாரன் ஏசுடிங்சு சட்டத்திலும் அதன் பின்னர் உள்ள ஒழுங்கு முறைகளிலும் கூறப்படவில்லை. இவ்வாறாக முக்கியமான பிரிவுகளில் ஒரு காலியிடம் ஏற்பட்டது. இக்காலியிடத்தை நிரப்புவதற்காக நீதி மன்றங்கள் நீதி, நேர்மை மற்றும் நன்மனச் சான்றுடன் செயற்பட வேண்டும் என்பது கூறப்பட்டது.

'நீதி, நேர்மை மற்றும நன்மனச் சான்று' என்னும் கோட்பாட்டின் பொருள் என்ன என்பதை உற்று நோக்குவோமாயின் அது குறிப்பாக, திடமாக எதையும் குறிக்கவில்லை என்பது தெளிவாகும். இக் கோட்பாடு சட்டத்தின் எந்த ஒரு தொகுப்பையும் குறிக்கவில்லை. இக்கோட்பாடு சுருக்கமான முறையில் நீதிபதிகளின் உளத்தேர்வு அல்லது விருப்பத் தேர்வையே சுட்டுகிறது. தொடக்கத்தில் நீதிபதிகள் எவ்வாறு இந்த விருப்பத் தேர்வைப் பயன்படுத்திட வேண்டும் என்றும் குறிப்பிடவில்லை. நீதிபதிகளுக்கு வழக்குகளை முடிவு செய்ய முழுச் சுதந்திரம் அளிக்கப் பட்டது. நீதிபதிகள் வழக்கின் தரப்பினருக்குச் சரியான முறையில் நீதி வழங்கிட வேண்டும் என்பது எதிர் பார்க்கப்பட்டது. இவ்வாறு நீதி வழங்குவது நீதிபதிகள் சட்டமியற்றும் தன்மையதாகும். இவ்வாறு சட்டம் ஒரு நிலையில்லாத முறையில் இருந்தபோது, அதனால் சட்ட முறையில் குழப்பமும் திடமற்ற நிலையும் காணப்பட்டன. எது நீதி, நேர்மை, நன்மனச் சான்று என்பது நீதிபதிக்கு நீதிபதி மாறுபட்டுக் காணப்பட்டது. எனவே. ஒரு குறிப்பிட்ட பொருண்மைகள் உள்ள வழக்கில் எந்த வகையான சட்டக் கோட்பாடுகளை நீதிபதிகள் பின்பற்ற வேண்டும் என்ற உறுதியான நிலையில்லாமல் இருந்தது. மேலும்கிழக்கிந்திய நிறும (company) ஆட்சி முறையின் கீழ் நீதிபரிபாலன முறையைக் கையாண்ட நீதிபகளுக்கு நீதிபரிபாலன முறையில் சரியான பயிற்சியும் இல்லை. நீதிபதிகளில் பெரும்பாலானோர் ஆங்கிலேயர்களாகவும் நம்நாட்டு மக்களின் மொழி, பழக்கம் பல்வேறுவாழ்க்கை நடைமுறைகள் ஆகியவற்றை அறியாதவர்களாகவும் இருந்தனர். நீதிபதிகளுக்குச் சட்டத்தில் துணை புரிய காசி, பண்டிட்டு முதலான சட்ட வல்லுநர்கள் நியமிக்கப்பட்டனர். இவ்வாறாக இந்து, முகமதியர் சட்டத்தைச் செயற்படுத்தி நிலைநாட்ட நீதிமன்றங்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தாலும் எல்லா வழக்குகளையும் அவர்களால் இந்தச் சட்டத்தின் துணை கொண்டு முடிவு செய்யமுடியாமல் போகும் போது, நீதிபதிகள் தங்களது விருப்பத்தேர்வைப் பயன்படுத்தி முடிவுகள் வழங்கினர்.

பல ஆண்டுகளுக்குப் பின்னர், நீதி, நேர்மை மற்றும் நன்மைச் சான்று என்னும் கோட்பாட்டிற்குப் புது மெருகூட்டப்பட்டது. ஆங்கிலேயச் சட்டங்களை இந்திய மண்ணிற்கேற்பப் பயன்படுத்துதல் வேண்டும் என்னும் புதுக்கருத்துத் தெரிவிக்கப்பட்டது. இவ்விதமான மாற்றத்திற்கு இந்தியாவின் நீதித்துறையில் ஏற்பட்ட இரு வளர்ச்சிகள் துணைபுரிந்தன. அவையாவன.(1) கி.பி. 1851-இல் ஏற்பட்ட உயர்நீதிமன்றங்கள், அவற்றில் ஆங்கிலேயர்கள் நீதிபதிகளாக நியமிக்கப் பட்டனர். அவர்கள் ஆங்கிலேயர் சட்டத்தை முழுவதுமுணர்ந்த சட்டத் தொழிலாளர்கள் (Baristers). அவர்களுக்குத் தங்களின் சட்டத்தை நடைமுறைப்படுத்தவேண்டும் என்ற ஆசை இருந்தது. எனவே, அவர்கள் சட்டம் எதுவும் இல்லாத வேளையில், வழக்காறு எதுவும் இல்லாதபோது நீதி, நேர்மை, நன்மனச்சான்று என்னும் கோட்பாட்டைச் செயற்படுத்த வேண்டிய நிலையில் ஆங்கிலேயச் சட்டத்தை நடைமுறைப்படுத்தினர். மாவட்டங்களிலும் கிராமப்புறங்களிலும் ஆங்கிலேயச் சட்டத் தொழிலாளர்கள் நீதிபதிகளாக நியமிக்கப் பட்ட பின்னர் நீதி, நேர்மை, நன்மனச்சான்று என்னும் கோட்பாட்டின்படி ஆங்கிலேயர் சட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டது. (11) கி.பி.1833-ஆம் ஆண்டு முதல் மேல் முறையீடுகள் அனைத்தும் இங்கிலாந்தின் உச்சநீதிமன்றத்திற்கு (Privy Council) அனுப்புதல் வேண்டும். எனத் தெரிவிக்கப்பட்டது. மேல் முறையீடுகள், அந்த உச்சநீதிமன்றத்திற்குச் சென்றமையால் இந்திய நீதிபரிபாலன முறையில் பெரும்மாற்றங்கள் ஏற்பட்டன. அந்த உச்சநீதிமன்றத்தில் திறனார்ந்த மூத்த வழக்கறிஞர்கள் நீதிபதிகளாக இருந்தனர். அவர்கள் முடிந்தவரை இந்திய நீதி முறையில் தங்களுக்கு நீதி, நேர்மை என்பது எது என்று தெரிந்ததோ அதையே புகுத்தி வந்தனர். எனவே, பெரும்பாலும் இந்திய நீதிமுறையில் ஆங்கிலேயச் சட்டமே புகுத்தப்பட்டது. இந்த முடிவுகளைப் பின்பற்றியே இந்திய உயர் நீதிமன்றங்களும் தங்கள் முடிவுகளை அறிவித்தன: அவ்வாறான முடிவுகளை உற்றுநோக்கினால் அவற்றில் நீதி, நேர்மை மற்றும் நன்மனச் சான்று என்ற பெயரில் ஆங்கிலேயச் சட்டங்கள் புகுத்தப்பட்டதை அறியலாம்.

இம்மாதிரியான நிலை நெடுங் காலம் நீடித்தது. இவற்றை மாற்றியமைப்பது சட்டமியற்றும் சட்ட மன்றத்தினால் மட்டுமே இயலும். பல்லாண்டுகளுக்குப் பின்னர் இந்திய நீதிமுறையை மாற்ற வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. சட்டத்தைத் தொகுக்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. இதற்கான முதல் முயற்சி கி.பி.1833- ஆம் ஆண்டு

எடுக்கப்பட்டது. கி.பி. 1853-ஆம் ஆண்டு இம்முயற்சிக்குத் தனிவேகம் அளிக்கப்பட்டது. சட்டத்தொகுப்பு என்பது சட்டத்தை எளிதான, திடமான, எளிதில் அறியும்படியான மொழியில் கூறுதல் ஆகும். மீ.அ.

**நீதிபதி**: வழக்கை விசாரித்துச் சட்டத்தின் அடிப்படையில் நீதி வழங்குவதற்காக அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட நீதிமன்ற அதிகாரி நீதிபதி எனப்படுவார்.

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின்படி நீதிபதிகள் நியமிக்கப்படும் முறைகளைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும். முதலாவது, உச்சநீதி மன்ற நீதிபதிநியமனமும் (Supreme Court Judge), உச்ச நீதிமன்றத்திற்காக நியமிக்கப்படும்நீதிபதியின் தகுதிகளும்: அவைபின்வருவன: 1) இவர் இந்தியக் குடிமகனாக இருத்தல் வேண்டும், 2) சட்டப் படிப்பில் இளநிலைப் பட்டம் பெற்றவராக இருத்தல் வேண்டும், 3) உயர் நீதிமன்றத்தில் (High Court) குறைந்ததுஐந்து ஆண்டுகளாவது நீதிபதியாகப் பணியாற்றியிருத்தல் வேண்டும் அல்லது இரண்டு அல்லது மூன்று உயர் நீதிமன்றங்களில் அதே கால அளவு பணியாற்றியிருத்தல் வேண்டும் அல்லது 4) குறைந்தது பத்து ஆண்டுக் காலமாவது, உயர் நீதிமன்றத்திலோ உச்சநீதிமன்றத்திலோ வழக்கறிஞராகப் பணியாற்றியிருத்தல் வேண்டும் அல்லது இரண்டு அல்லது மூன்று உயர் நீதிமன்றங்களில் அதே காலஅளவு வழக்கறிஞராகப் பணியாற்றியிருத்தல் வேண்டும் அல்லது 5) இந்தியக் குடியரசுத் தலைவரின் கருத்துப்படி, ஒருவர் சிறந்த சட்ட மேதை அல்லதுசட்ட வல்லுநராக விளங்கினால் அவரும் உச்ச நீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்படலாம். உச்ச நீதிமன்றத்திற்கு நீதிபதியாக நியமிக்கக் குறைந்த வயது வரம்பு வரையறுக்கப்படவில்லை. இருந்தாலும், நாற்பது வயதிற்கு மேற்பட்டவர்களையே நியமிக்க வாய்ப்புண்டு. உச்ச நீதி மன்ற நீதிபதியின் ஓய்வு வயது அறுபத்தைந்து என வரையறுக்கப் பட்டுள்ளது.

உச்ச நீதிமன்றத்தில் நீதிபதியாகப் பணியாற்றும் நீதிபதியைப் பணியிலிருந்து நீக்கும் முறை:

அ. உச்ச நீதிமன்ற நீதிபதி தாமே பதவி விலகல் கடிதம் எழுதி அதைக் குடியரசுத் தலைவருக்கு அனுப்புவதனால் பதவி விலகிக் கொள்ளலாம்.

ஆ. அல்லது இந்திய நாடாளுமன்றத்தின் இரு சபைகளிலும் அதாவது கீழ்ச்சபை, மேல்சபை இரண்டிலும் குடியரசுத் தலைவர் நீதிபதியை நீக்குமுகமாகத் தீர்மானம் கொண்டு வரவேண்டும். இரு சபையிலும் அந்தத் தீர்மானத்தை விளக்கிப் பேச வேண்டும். குடியரசுத் தலைவர். மொத்த அங்கத்தினர்களில் மூன்றில் இரண்டு பங்கு பங்கேற்றுக் குடியரசுத் தலைவரின் தீர்மானத்திற்கு ஆதரவாக மூன்றில் இரண்டு பங்கு வாக்களிக்க வேண்டும். அந்தத் தீர்மானத்தின் படி குடியரசுத் தலைவர் உச்ச நீதிமன்ற நீதிபதியைப் பதவியிலிருந்து நீக்கும் உத்தரவு வழங்கலாம்.

ஒரு முறை உச்ச நீதிமன்றத்தில் நீதிபதியாகப் பணியாற்றியவர் இந்தியாவின் எல்லைக்குள் எந்த நீதிமன்றத்திலும் வழக்கு நடத்தவோ வாதிடவோ அல்லது பிற அதிகாரிகள் முன்பு வாதிடவோகூடாது எனச் சட்டம் தடுக்கிறது.

உயர் நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கான தகுதிகள் இரண்டு. 1) இந்தியக் குடிமகனாக இருத்தல் வேண்டும், 2) இந்தியாவிலுள்ள நீதிமன்றங்களில் குறைந்தது பத்தாண்டுக் காலமாவது நீதிபதியாகவோ நீதிமன்ற அதிகாரியாகவோ பணியாற்றியிருத்தல் வேண்டும் அல்லது. 3) இந்திய நீதிமன்றங்களில் வழக்கறிஞராகக் குறைந்தது பத்தாண்டுக் காலம் பணியாற்றியிருத்தல் வேண்டும்.

மேலே கூறப்பட்ட தகுதியுடையவரை உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி மற்றும் மாநில ஆளுநர் ஆகியோரின் கலந்துரையுடன் குடியரசுத் தலைவர் அந்த மாநில உயர் நீதிமன்றத்திற்கு நீதிபதியாக நியமித்து உத்தரவு வழங்கலாம்.

உயர் நீதிமன்றத்திற்கு நியமிக்கப்பட்ட நீதிபதி அறுபத்திரண்டு வயது வரையில் பணியாற்றலாம். உயர்நீதிமன்றத்தில் கீழ்க்காணும் காரணங்களினால் நீதிபதி பதவி காலியாகலாம். அ) நீதிபதியே பதவி விலகல் கடிதம் குடியரசுத் தலைவருக்கு எழுதிப் பதவி விலகிக்கொள்ளுதல், ஆ) நாடாளுமன்றங்களின் தீர்மானத்தின் அடிப்படையில் குடியரசுத் தலைவர் பதவி நீக்கி உத்தரவு வழங்குதல், இ) உயர் நீதிமன்ற நீதிபதியாகப் பணியாற்றுபவருக்குப் பதவி உயர்வு அளித்து உச்ச நீதிமன்ற நீதிபதியாக நியமித்துக் குடியரசுத் தலைவர் ஆணை பிறப்பித்தல், ஈ) ஒரு மாநிலத்தின் உயர் நீதிமன்றத்திலிருந்து மற்றொரு மாநிலத்தின் உயர் நீதிமன்றத்திற்கு மாற்றி விடுதல்.

மேலும், ஓர் உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாக, வேறு ஒரு மாநிலத்தின் உயர் நீதிமன்ற நீதிபதியை நியமிக்கும் கொள்கையை இந்திய அரசு கடைப்பிடித்து வருகிறது.

**மாவட்ட நீதிபதிகள்** : இந்நீதிபதிகளை மாநில ஆளுநர் உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியைக் கலந்தறிந்து புதியதாகவோ பதவி உயர்வு மூலமாகவோ நியமித்து ஆணை வழங்குகிறார்.

**மாவட்ட நீதிபதிக்கான தகுதிகள்**: எந்த மாநிலத்தில் நியமிக்கப்படுகிறாரோ அந்த மாநிலத்தைச் சார்ந்தவராக இருத்தல் வேண்டும். அதாவது, அந்த

மாநில மொழி தெரிந்தவராக இருத்தல் வேண்டும். 1) மாநில அரசில் அல்லது மைய அரசில் பணியாற்றாதவராக இருததல் வேண்டும். 2) குறைந்தது ஏழு ஆண்டுகள் வழக்கறிஞராகப் பணியாற்றியிருத்தல் வேண்டும். மாவட்ட நீதிபதிகளின் ஓய்வு வயது ஐம்பத்தெட்டாகும.

இனிக் கீழ் நீதிமன்றங்களின் நீதிபதி நியமனம் பற்றியும் அறிந்து கொள்ளுதல் வேண்டும். மாவட்ட நீதிமன்றங்களுக்குக் கீழான நீதிமன்றங்களுக்கு மாநில அரசுப் பணியாளர் தேர்வு ஆணைக் குழு, உயர்நீதிமன்றம் ஆகியவற்றினைக் கலந்தாலோசித்து, மாநில ஆளுநர் மற்ற நீதிமன்றங்களுக்கான நீதிபதிகளை நியமித்து உத்தரவு வழங்குகிறார்.

இந்த நீதிபதிகளின் பணியின் கண்காணிப்பு, பதவி உயர்வு, பதவியிறக்கம், பதவி நீக்கம், தண்டனை ஆகிய அதிகாரங்கள் உயர் நீதிமன்றத்திடம் வழங்கப் பட்டுள்ளன. ச.நா.

**நீதிமன்ற அவமதிப்பு:** நீதிமன்றத்தைப் பற்றியோ நீதிபதியைப் பற்றியோ அவதூறாகப் பேசுவதும் எழுதுவதும் நீதிமன்ற அவமதிப்பாகும். இவை இருவகைப்படும்; 1) உரிமையியல் நீதிமன்ற அவமதிப்பு 2) குற்றவியல் நீதிமன்ற அவமதிப்பு.

உரிமையியல் அவமதிப்பு என்பது நீதிமன்றத்தின் தீர்ப்பு, உத்தரவு, கட்டளை, ஆணை நீதிமன்றத்தின் பிற நடவடிக்கைகள் ஆகியவற்றை நிறைவேற்றாமல் இருத்தலும், வேண்டுமென்றே நீதிமன்ற உத்தரவுக்குக் கீழ்ப்படியாமல் இருந்தலுமாகும். அதாவது, நீதிமன்றத்தின் தீர்ப்புக்குட்பட்டவர் அல்லது அதைச் செயற்படுத்தக் கடமைப்பட்டவர், நீதிமன்றத்தின் உத்தரவை நிறைவேற்றுவதாக உறுதியளித்து விட்டு, நிறைவேற்றாமல் இருப்பாராயின் நீதிமன்ற அவமதிப்புப் புரிந்தவராவர்.

பொதுவாக நீதிமன்றத்திற்கு அவமதிப்புச் செய்தவராகக் குற்றஞ்சாட்டப் பட்டவரும் ஏதாவது ஒரு வகையில் நீதிமன்றத்தோடு தொடர்பு உள்ளவராக இருப்பர். இவர் நீதிமன்றத்தில் வழக்கைத் தொடுத்தவராகஇருக்கலாம் அல்லது பிரதிவாதியாக நீதிமன்றத்தில் சேர்க்கப்பட்டவராக இருக்கலாம். அல்லது வழக்குத் தொடர்பாகச் சான்று அளிக்க வந்த சாட்சியாளராக இருக்கலாம். அல்லது நீதிமன்றத்திற்கு ஆவணங்கள் ஒப்படைக்க வேண்டிய கடமைக்குட்பட்டவராக இருக்கலாம். இவர்கள் நீதிமன்றத்திற்குச் செய்கின்ற தத்தம் கடமையினின்று தவறுவார்களேயானால் அது நீதிமன்ற அவமதிப்புக் குற்றமாகும்.

எடுத்துக்காட்டாக, அ – என்பவர் ஈ – என்பவருக்கு எதிராக வழக்குத் தொடுக்கிறார். அ – வின் வழக்கை விசாரித்த நீதிபதி ஈ – என்பவரை நீதிமன்றத்திற்கு வரும்படி உத்தரவு வழங்குகிறார். அந்த உத்தரவை ஒரு காவல்துறை அதிகாரியோ நீதிமன்ற ஊழியரோ ஈ – இருக்கும் இடம் எடுத்துக் செல்லுகிறார். ஈ–நீதிமன்ற உத்தரவை வாங்க மறுப்பதோ வாங்காமல் இருக்கத் தலைமறைவாக மறைந்து விடுதலோ நீதிமன்ற அவமதிப்புக் குற்றமாகும்.

மேல் நீதிமன்றங்களின் தீர்ப்பு மற்றும் உத்தரவுகளைக் கீழ் நீதிமன்றங்கள் நிறைவேற்றாமல் இருந்தாலும் நீதிமன்ற அவமதிப்பாகும். நீதிமன்றத்தின் உத்தரவை நிறைவேற்றாதவர் அரசாங்க ஊழியராகவோ அதிகாரியாகவோ இருந்தாலும் நீதிமன்ற அவமதிப்புப் புரிந்தவராவார்.

இந்த நீதிமன்ற அவமதிப்பு–நீதிமன்றங்களின் தீர்ப்பு, உத்தரவு, கட்டளை, மற்றும் ஆணை ஆகியவற்றை நிறைவேற்றும் பொருட்டு நீதிமன்ற அவமதிப்பு குற்றமாகக் கருதப்படுகிறது. இந்த நீதிமன்ற அவமதிப்புக் குற்றம் இல்லையென்றால் நீதிமன்றத்தின தீர்ப்பு, கட்டளை, உத்தரவு மற்றும் ஆணைகள் ஆகியவற்றை யாரும் செயற்படுத்த மாட்டார்கள். நீதி வழங்கியும் நீதி கிடைக்க வேண்டியவருக்குப் போய்ச் சேராது. இறுதியில் நீதித்துறையே கேலிக்குரியதாகி விடும். இந் நிலையைத் தவிர்க்கவே நீதிமன்ற அவமதிப்புச் சட்டம் செயற்படுத்தப்பட்டு வருகிறது.

**குற்றவியல் நீதிமன்ற அவமதிப்பு:** குற்றவியல் நீதிமன்ற அவமதிப்பு என்பது ஒருவர் தம் வார்த்தையால், எழுத்தால், குறிப்பீடு முறைகளால் அல்லது பிற வழிகளினால் நீதிமன்றம் மற்றும் நீதிபதிகளின் கண்ணியத்தையும், கடமையையும், ஒழுக்கத்தையும், நடத்தையையும் இழிவுபடுத்தும் நோக்கத்தோடு வெளியீடு செய்வது குற்றவியல் நீதிமன்ற அவமதிப்பாகும்.

குற்றவியல் நீதிமன்ற அவமதிப்பு என்பது நீதிமன்றத்துடன் தொடர்பில்லாதவர்கள் புரியும் செயல்களாகும். அதாவது இவர்கள் வாதியாகவோ பிரதிவாதியாகவோ சாட்சியாகவோ நீதிமன்றத்திற்கு அழைக்கப்படாதவர்கள். இவர்கள், நீதிமன்றத்தின் மீது மக்கள் வெறுப்புக் கொள்ளட்டும் என்ற நோக்கத்தோடு செயற்படுவார்கள். தங்களின் பொய்யான, அவதூறான சொற்களால் நீதிமன்றத்தின் மதிப்பைக் குறைப்பதற்காக முயலுபவர்களாவார். பொய்யான தகவல்களை மக்களிடத்தில் பரப்பி நீதிமன்றத்தின் மதிப்பையும் செயற்பாட்டையும் தாழ்வ

டையச் செய்வதே இவர்களின் அடிப்படைநோக்கமாகும். ஆகவே தான், இவர்களின் தவறான போக்கு மற்றும் தவறான பிரசாரத்தைத் தடுக்கும் நோக்கத்தோடு இயற்றப்பட்டது தான் குற்றவியல் நீதிமன்ற அவமதிப்புக் குற்றமாகும்.

இந்திய அரசியலமைப்பில் அனைவருக்கும் பேசவும் எழுதவும் தம் கருத்துகளை வெளியிடவும் உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. இந்த அடிப்படை உரிமையினால் இந்தியாவில் உள்ள ஒவ்வொரு குடிமகனும் அச்சமின்றிப் பேசவும் எழுதவும் உரிமையுடையவனாகிறான். ஆனால், இவ்வுரிமை நல்ல நோக்கத்திற்கு மட்டுமே பயன்படுத்த அனுமதியளிக்கப்பட்டுள்ளது.

அதாவது நீதிமன்றங்களில் நடைபெறும் வழக்குகளின் உண்மை நிகழ்ச்சிகளைப் பற்றியோ வழக்குத் தொடர்புடையவரின் உண்மையான ஒழுக்கத்தைப் பற்றியோ சாட்சியளிக்க வந்தவரின் உண்மையான ஒழுக்கத்தைப் பற்றியோ அந்த வழக்கை விசாரிக்கும் நீதிபதியின் உண்மையான நடத்தையையும் ஒழுக்கத்தையும் பற்றியோ அதாவது உண்மையான திறமையைப் பற்றியோ பேசுவதும் வெளியிடுவதும் அவமதிப்புக் குற்றமாகா.

பொய்யான தகவல்கள் கொடுத்து நீதிபதிக்குக் கெட்ட பெயர் ஏற்படுத்துவதுதான் அவமதிப்பாகும். உண்மையான தகவல்களை உள்ளபடி நல்ல நோக்கத்தோடு,பொது நன்மை கருதி வெளியிடுவது நீதிமன்ற அவதூறு ஆகாது என்று சட்டம் கூறுகிறது.

பொது ஊழியர் மற்றும் தனிப்பட்டவர்களின் கடமையும் கடமையுணர்வும் பாதிக்கப்படுதல்கூடாது என்பது இதன் நோக்கம். இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் நீதிமன்ற அவமதிப்புக்குற்றமாகச் செயற்படுத்தப்பட்டு வருகிறது. ஆனால், இச்சட்டம் உருசியாவில் செயற்படுத்தப்படவில்லை.

நீதிமன்ற அவமதிப்புக் குற்றம் எல்லா நீதிமன்றங்களுக்கும் பொருந்தும். ஆனால், கிராமப் பஞ்சாயத்து, ஊர்ப் பஞ்சாயத்து, நியாயப் பஞ்சாயத்து ஆகியவற்றிற்குப் பொருந்தாது என நீதிமன்ற அவமதிப்புச் சட்டம் அறிவிக்கின்றது.

பொதுவாக நீதிமன்றத்தில் முறையோடு பதிவு செய்யப்பட்ட வழக்குகள் மட்டுமே விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படும். முறை கேடான, சட்டத்திற்குப் புறம்பானவற்றைத் தள்ளிவிட நீதிமன்றத்திற்கு அதிகாரமுண்டு. நீதிமன்றத்திற்கு யாரும் கடிதம் எழுதக் கூடாது. முன் அனுமதியின்றி நீதிமன்றத்தில் நுழையக் கூடாது. அவ்வாறே முன் அனுமதியின்றி நீதிமன்றத்தில் எதையும் பேசக் கூடாது. அவ்வாறு நுழைவதும் பேசுவதும் நீதிமன்ற அவமதிப்பாகும்.

ச.நா.

*நீதிமன்ற ஆள்வரை*: நீதிமன்ற ஆள்வரை என்பது ஒவ்வொரு நீதிமன்றத்திற்கும் வழக்குகளை விசாரிக்கும் உரிமையின் எல்லையைக் குறித்து நிற்பதாகும். இதனை நீதிமன்ற ஆள்வரை அல்லது நீதிமன்ற எல்லை அளவு, நீதிமன்ற அதிகார வரம்பு, நீதிமன்ற செயற்பாட்டு எல்லை என்று பலவாறு குறிப்பிடுவர். ஒவ்வொரு நீதிமன்றத்திற்கும் அதன் ஆள்வரைக்குள் அடங்கும் ஊர்களின் பெயர் மற்றும் எல்லையளவு அல்லது பஞ்சாயத்து எல்லையளவு போன்றவற்றைத் தீர்மானித்து அங்கிருந்து வரும் வழக்குகளை ஏற்று விசாரிக்கும் உரிமை வழங்கப்பட்டுள்ளது.

வெள்ளையர் ஆட்சி இந்தியாவில் நடைபெற்ற பொழுது இங்கிலாந்தின் உயர்மட்ட நீதிமன்றமான பிரிவி கவுன்சிலின் ஆள்வரையின் கீழ் அந்த நாட்டின் காலனிகளான இந்தியா, பர்மா, சிலோன், மலேசியா சிங்கப்பூர் (பாகிசுதான் இந்தியா) போன்ற நாடுகள் வந்தன. இந்நாட்டு நீதிமன்றங்களில் முடிவு பெற்ற வழக்குகள் மேல்முறையீட்டிற்குப் பிரிவி கவுன்சிலுக்குச் சென்றன.

இந்தியா சுதந்திரம் அடைந்தவுடன் இந்தியாவுக்கென அரசமைப்புச் சட்டம் (Constituion of India) உருவாக்கப்பட்டது. இதன்படி இந்தியா முழுமைக்கும் ஒரே ஓர் உச்ச நீதிமன்றம் அமைக்கப்பட்டது. மேலும், ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒவ்வொரு உயர் நீதிமன்றம் அமைக்கவும் வழிவகை செய்யப்பட்டது.

**உச்சநீதிமன்றத்தின் ஆள்வரை:** இந்தியாமுழுமைக்கும் ஒரே ஓர் உச்ச நீதிமன்றம் அமைத்துச் செயற்படுவதால் இதன் நீதிமன்ற ஆளவரை இந்தியா முழுமையும் உள்ளது. அதாவது இந்தியாவில் உள்ள எந்த ஒருவரும் உயர் நீதிமன்றத்தின் தீர்ப்பால் பாதிக்கப்பட்டால் அந்தத் தீர்ப்பை எதிர்த்து உச்ச நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யலாம். அதேபோன்று மாநில அரசாங்கத்தின் உத்தரவு, ஆணை, கட்டளை ஆகியவற்றால் பாதிக்கப்பட்ட ஒருவர் நேரடியாக உச்ச நீதிமன்றத்தில் முறையீடு செய்யவும் இந்திய குடிமக்களுக்கு உரிமை வழங்கப்பட்டுள்ளது. அதாவது உச்ச நீதிமன்றத்தில் நீதிப்பேராணை மனு (Writ Petition) செய்ய அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இந்த உரிமை இந்தியக் குடிமகனின் அடிப்படை உரிமைகளில் ஒன்றாகும்.

உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்பு இந்தியாவில் உள்ள எல்லா நீதிமன்றங்களையும் கட்டுப்படுத்தும். உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்பை உயர் நீதிமன்றங்கள் பின்

பற்றியாக வேண்டும். உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்பே இறுதியானது.

**உயர் நீதிமன்றத்தின் ஆள்வரை:** மாநிலத்தின் தலையாய நீதிமன்றம் உயர் நீதிமன்றமே. உயர் நீதிமன்றத்தின் தீர்ப்பு அந்த மாநிலத்திலுள்ள மற்ற நீதிமன்றங்களைக் கட்டுப்படுத்தும். மாநிலத்திலுள்ள மாவட்ட நீதிபதிகள், வட்ட நீதிபதிகள், மற்றும் குற்ற நடுவர்கள் ஆகியோர்களின் பணிகளைப் பரிசீலிக்கவும் அந்த நீதிமன்றங்களைச் சோதனையிடவும், கண்காணிக்கவும் உரிமையுண்டு.

மாவட்ட நீதிமன்ற நீதிபதிகள் மற்றும் இதர நீதிமன்றங்களுக்கு நியமிக்கப்படும் ' நீதிபதிகளைத் தேர்வு செய்து அரசாங்கத்திற்குப் பரிந்துரை செய்யும் அதிகாரமுண்டு.

மாநிலத்தில் நடக்கும் குற்ற வழக்குகள் மற்றும் உரிமையியல் வழக்குகளின் தீர்ப்பின் மேல்விசாரணை செய்யும் அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

**மாவட்ட நீதிமன்றத்தின் ஆள்வரை:** ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒன்று அல்லது ஒன்றிற்கு மேற்பட்ட நீதிமன்றம் அமைக்கப்பட்டுச் செயற்பட்டு வருகின்றன. இது வழக்கின் எண்ணிக்கை அடிப்படையாகக் கொண்டு ஒரே மாவட்டத்தில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அந்தந்த மாவட்டத்தில் நடக்கும் குற்றங்கள் மற்றும் தகராறு அந்தந்த மாவட்ட நீதிமன்றத்தில தான் விசாரணை நடத்தப் படவேண்டும். இவற்றிற்கு கீழ் நீதிமன்றங்களின் தீர்ப்பை விசாரிக்கும் மேல்முறையீட்டு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. மாவட்ட நீதிமன்ற எல்லை அளவை அரசாங்கமே நிருணயிக்கும். மாவட்டம் மாற்றியமைக்கும் போது நீதிமன்றங்களின் எல்லையளவும் மாறுபடும்.

**கீழ் நீதிமன்றங்கள்:** தலைமைக் குற்றவியல் நீதிமன்றம் (Chief Judicial Magistrate) முதல் நிலைக் குற்றவியல் நீதிமன்றம் (First Class Judicial Magistrate) இரண்டாம் நிலைக்குற்றவியல் நீதிமன்றம் (Second Class Judicial Magistrate)மற்றும் நிருவாகக் குற்றவியல் நீதிமன்றம் (Executive Magistrate)எனப் பிரிக்கப்பட்டுள்ளது.

பெருநகர்க்குற்றவியல் நீதிமன்றம் (Metropolitan Magistrate) சென்னை, பம்பாய், கல்கத்தா போன்ற பெரு நகரங்களில் அமைக்கப்பட்டுச் செயற்பட்டு வருகின்றது.

இதைத் தவிர மாவட்ட உரிமையியல் நீதிமன்றம் (District Munsif Court) துணை நீதிமன்றம் (Sub-court) ஆகிய நீதிமன்றங்கள் ஒவ்வொரு வட்டத்திலும் அமைக்கப்பட்டுச் செயற்படுத்தப்பட்டு வருகின்றன.

**தண்டனை வழங்கும் அதிகாரம்:** உயர் நீதிமன்றம் மற்றும் மாவட்ட நீதிமன்றம் ஆகியவைகளுக்குத் தண்டனை வழங்கவும் அதிகாரம் உள்ளது. ஆனால், மாவட்ட நீதிமன்றத்தில் குற்றவாளிக்கு மரண தண்டனை வழங்கப்பட்டால் அதை உயர் நீதிமன்றத்தின் ஒப்புதல் பெற்றபின்பு தான் மரண தண்டனையை நிறைவேற்றப்பட வேண்டும் என்று சட்டத்தில் வரையறுக்கப்பட்டுள்ளது. ஆயுள் தண்டனை மற்றும் அபராதம் விதிக்கும் உரிமை மாவட்ட நீதிமன்றத்திற்கு உண்டு. உதவி மாவட்ட நீதிமன்றத்தில் (Assistant Sessions Judge) மரண தண்டனை,ஆயுள், சிறைத்தண்டனை, பத்தாண்டுக்காலச்சிறைத்தண்டனை நீங்கலாக மற்றத் தண்டனைகள் வழங்க அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

**தலைமைக் குற்றவியல் நீதிமன்றம்:** இது மரண தண்டனை, ஆயுள், சிறைத் தண்டனை, மற்றும் ஏழாண்டுக் காலச்சிறைத்தண்டனை நீங்கலாக மற்றக் குறைவான அதாவது ஏழாண்டுக்குக் குறைவான சிறைத்தண்டனை வழங்க அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

**முதல்நிலை குற்றவியல் நீதிமன்றம்:** இது மூன்று ஆண்டுக் காலச்சிறைத்தண்டனைக்கு மிகாமலும் ஐயாயிரம் உரூபாய் அபராதம் விதித்தும் தீர்ப்பு வழங்க உரிமை வழங்கப்பட்டுள்ளது.

**பெருநகர்க்குற்றவியல் நீதிமன்றம்:** இது குற்றங்களுக்கு ஏழாண்டுக் காலச் சிறைத்தண்டனை வரை வழங்கும் அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

மேலே கூறப்பட்ட நீதிமன்றங்கள் எல்லா வழக்குகளையும் விசாரிக்கும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை. அதாவது எந்த அளவு சிறைத் தண்டனை, வழங்க அதிகாரம் வழங்கப்பட்டுள்ளதோ, அஃதே அளவு தண்டனையுள்ள குற்றங்களை மட்டுமே வழக்குகளாக விசாரணைக்கு எடுத்துக்கொள்ளும் உரிமை வழங்கப்பட்டுள்ளது. அதிகதண்டனை வழங்கும் வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் இந்த நீதிமன்றங்களுக்குக் கிடையாது. உரிமையியல் வழக்கில் ரூபாய் 15,000/- வரை மதிப்புள்ள வழக்குகளை முனிசீப் நீதிமன்றத்தில் தொடரவும் அதை விசாரிக்கும் அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. உரூபாய் 15,000/-க்கு மேற்பட்ட வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் துணை மாவட்ட நீதிமன்றத்திற்கு உண்டு. பெரு நகர்ப்பகுதியாகிய சென்னை நகரில் உரூபாய் 1,00,000/-க்கு மேற்படாத வழக்கைப் பெருநகர்

உரிமையியல் நீதிமன்றத்தில் தொடரலாம். உருபாய் 1,00,000/-க்கும் மேற்பட்ட தொகை தொடர்பான வழக்குகளை உயர் நீதிமன்றத்தில் தொடர வேண்டும். ஏனெனில் இதை விசாரிக்கும் அதிகாரம் உயர் நீதிமன்றத்திற்கே வழங்கப்பட்டுள்ளது.

குற்றவியல் நீதிமன்றத்தில் குற்ற வழக்கை விசாரித்துக் குற்றவாளிக்கு விடுதலையளித்துத் தீர்ப்பு வழங்கினால் அந்தத் தீர்ப்பை எதிர்த்து மேல் முறையீடு செய்ய விரும்பினால் உயர் நீதிமன்றத்திடம் தான் முறையீடு செய்ய உரிமை வழங்கப்பட்டுள்ளது.

குறைந்த சிறைத் தண்டனையோ குறைவான அபராதத் தொகையோ விதிக்கப்பட்ட தீர்ப்புக்கு எதிராக மேல்முறையீடு செய்ய அனுமதியளிக்கப்படவில்லை. ச.நா.

**நீதி வெண்பா**: நீதிக் கருத்துகளை உரைக்கும் வெண்பாவாலான நூல்; நூறு வெண்பாக்களைக் கொண்டது. ஊர் வெண்பா, நாழிகை வெண்பா, தொகை வெண்பா, நூற்றந்தாதி வெண்பா என்பவை போன்று இதுவும் சிற்றிலக்கிய வகைகளுள் அடங்கும். இதனை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. இந்நூல் அச்சாகியுள்ளது. இலங்கை வடமராட்சியில் ம. முத்துக்குமாரசாமி குருக்கள், சுப்பிரமணிய சாத்திரி ஆகிய இருவரால் பதிப்பிக்கப்பெற்ற இந்நூலில், இதன் ஆசிரியர் ஔவையார் என்று குறிக்கப் பெற்றுள்ளது. எளிய நடையிலமைந்த நீதி நூல்களை ஔவையார் இயற்றினார் என்பதால் இந்நூலையும் அவரே இயற்றியிருத்தல் கூடும் என்று கருதிப் பதிப்பித்துள்ளனர் போலும். நூலில் அடங்கிய நூறு வெண்பாக்களினின்றும் ஆசிரியர் பற்றிய குறிப்பேதும் இருப்பதாகத் தெரியவில்லை. இருப்பினும் இந்நூலாசிரியர் சைவ சமயத்தினர் என்பதை, ஐந்தெழுத்து மந்திரத்திற்கு எவையும் ஒப்பாகா (97), சிவபெருமானைப் பூசிப்பதே மேல்(51), சிவனது கோபத்தினும் அவனது அடியார் கோபம் தாங்குதற்கரியது (39) என்ற குறிப்புகளால் அறியலாம்.

'முன்னோர் ஓதிய நீதி மொழிகளையே நீதி வெண்பாவாகப் படைத்துள்ளேன்' என்று இந்நூலின் காப்புச் செய்யுள் கூறுகின்றது உலகோர் நன்னெறி நடத்தற்கான பல்வகை நீதிக் கூறுகள் எளிய நடையில் இந்நூலுள் கூறப்பட்டுள்ளன. இன்சொலுடைமை, பண்புடைமை, பாவம் செய்யாமை, பிறன் மனை நயவாமை, பரத்தையர்ச் சேராமை போன்ற பல அறக் கருத்துகள் உடன்பாட்டு நெறியாலும், எதிர்மறை நெறியாலும் எடுத்துரைக்கப்பட்டு உள்ளன. ஆசையை அடிமையாகக் கொண்டவனாலேயே உலகத்தை அடிமைப்படுத்த முடியும் (12);கன்னியர், விதவை, பிறன் மனைவி, ஆசிரியன் மனைவி, அரசன் மனைவி,தன்மனைவியின் தாய் ஆகியோரைப் பெற்ற தாயாகக் கருத வேண்டும் (42). தாசியை விரும்பினால் ஒழுக்கமும், பொதுப்பெண்டிரை விரும்பினால் பொருளும், விதவையை விரும்பினால் ஆயுளும், பிறன் மனைவியை விரும்பினால் எல்லா நலங்களும் அழியும் (84).

பொன், கரும்பு, பால், சந்தனம் போன்றவை துன்புற்றாலும் முன்னிருந்த நற்குணமே தோன்றுவது போல், நல்லவர் துன்புற்றாலும் நற்குணம் மாறாதவராய் இருப்பர் (64). தீயோர்க்கு எந்நிலையிலும் இடங்கொடுத்தலாகாது; கொடுத்தால் கொடுத்தவர் கிளையுடன் கெடுவர் (74). உடல் தோற்றத்தால் ஒருவரைக் கற்றறிந்தவர் என்று அறியலாகாது. அவர் வாக்கு நயத்தால் மட்டுமே அறிய முடியும் (87). இரகசியத்தை ஒருவன் எந்நிலையிலும் காக்க வேண்டும். அதனைக் காப்பவனே உத்தமன்; பிறர்க்குச் சொல்லுவோன் மத்திமன்; பொருளைப் பெற்றுச் சொல்லுவோன் அதமன் (90). திங்களொளி குளிர்ச்சியுடையது; சந்தனம் அதனினும் குளிர்ந்தது; அன்பு அறிவு சாந்தமுடையோர் சொல் இவை யாவற்றினும் குளிர்ந்தது (94).

கிடைத்த பொருளால் நிறைவடையாத பெரியோர், நிறைவடையும் அரசர், நாணமடையாத பெண்டிர், நாணமடையும் வேசி ஆகியோர் வாழ்வில் தாழ்வடைவர் (14). பெண்டிர் அமைதியின் உருவமானவர். அவர் பேசினால் பல விளைவுகள் நிகழும். பெண் ஒருத்தி பேசினால் பூமி அதிரும் இருவர் பேசினால் வான்மீன்கள் உதிரும்; மூவர் பேசினால் கடல்நீர் வற்றும்; பெண்ணினமே பேசினால் இவ்வுலகம் என்னாகுமோ? (31). இத்தகு பெண்ணின் மனத்தை எவரால் அறியலாகும்? அத்தி மலரையும், வெண்ணிறக் காக்கையையும், கடலின் மீன்நிலையையும் கண்டாலும் பெண்ணின் மனத்தை அறிபவர் எவரும் இலர் (55).

உலகோர்க்கு இன்றியமையாத இவைபோன்ற பல கருத்துகள் இந்நூலுள் நிரம்பிக் காணப்படுகின்றன. நாயின் வாலைப் பிடித்துக்கொண்டு கரையேறுதல் அரிது (11). தால நிழற் கீழிருந்தான் பாலருந்திடினும் பாலெனச் சொல்லுவரோ (78) போன்ற உவமைகளும், வேடன் பிராமணனைக் காப்பாற்றியது, குரங்கு அரசனைக் கொன்றது (3), நகுலன் கதை (16),இரவில் வந்த காக்கைக்கு இடங்கொடுத்து அன்னம் கெட்டது (74) போன்ற கதைகளும் இந்நூலுள் நீதிவிளக்கத்திற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. சா.கி.

*நீப்பர் ஆறு*, ஐரோப்பிய சோவியத்து ஒன்றியத்தின் மேற்கில், வால்தாய் (Valdai) குன்றுகளில் மாசுக்கோவிற்கு (Moscow) மேற்கில் உற்பத்தியாகித் தெற்கே ஓடி, பெலோருசியா (Belorussia) வழியாகவும் உக்ரெய்ன் வழியாகவும் பாய்ந்து, கருங்கடலில் கலக்கிறது. நீப்பர் (Dnieper or Dnepr) ஆறு 2300 கி.மீ. நீளமுடையது. நீப்பர் கெசு (Dneproges) அணை, 1932-இல் கட்டப்பட்ட பிறகு, நீப்பர் ஆறு அதன் முழு நீளத்திற்கும் போக்குவரத்துக்குப் பயனுடையதாக உள்ளது. இந்த ஆறு கி.பி. 11-ஆம் நூற்றாண்டு வரை இசுலேவிய மக்களுக்கும் (Slavs) பைசாண்டியர்களுக்கும் (Bysantines) ஒரு முக்கிய வாணிக வழியாக இருந்தது. தெசுனா (Desna), பிரீப்பியட்டு (Pripyat), சாழ் (Sozh), பெரீசீனா (Berezina) ஆகிய நதிகள் இதில் கலக்கின்றன. தெ.பா.

*நீபுர், ரெயின்ஹோல்டு*, கி.பி.1892-ஆம் ஆண்டு மிசூரியிலுள்ள (Missouri) இரைட்டு நகரில் (Wright City) பிறந்தார். இவருடைய தந்தை கசுடேவு நீபுர் (Gustave Nibuhur) என்பவர். இவர் தம் 17-ஆம் வயதில் அமெரிக்காவிற்கு வந்தார். இவர் ஏல் பல்கலைக் கழகத்திலுள்ள (Yale University) எல்ம்கர்சுடுக் கல்லூரியில் (Elmhurst) படித்தார். அதன்பிறகு நியூயார்க்கிலுள்ள சமய சித்தாந்தக் கல்விச் சாலையில் பேராசிரியராக நியமிக்கப்பட்டார்.

இவர் இரண்டு வகைகளில் சிறந்து விளங்கினார். ஒன்று சமூகச் சிக்கல்களுக்குத் தீர்வு காண இவர் மேற்கொண்ட முயற்சி. மற்றொன்று கிறித்தவ சமயத்திற்கு நல்லமுறையில் கூறிய விளக்கம். இவருடைய சமய, அறஇயல் சிந்தனை சிறப்புடையது.

நீபுரின் (Niebhur Reinhold) சமயப் போதகள் தெய்விகமானவையும் மன்னிக்கும் தன்மை வாய்ந்தவையும் ஆகும். அவை அளவிலா அன்பும் மனித வாழ்க்கைக்கு ஒரு பொருளும் கொடுக்கின்றன. எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட சக்தியை நம்பினால் மனத்திற்கு உறுதியும் மேன்மையும் கிடைக்கும் என்றும் கூறுகின்றன. இயேசு கிறித்துவின் வாழ்க்கையிலிருந்து இது தெரிய வருகின்றது.

**பாவமும் கவலையும்:** கவலை அல்லது துக்கத்திலிருந்து பாவம் தோன்றுகின்றது. மனிதன் தன்னையும் உலகினையும் பழிக்கிறான். அவன் ஒரு வரையறையை நினைத்துக்கொள்கிறான். ஒரு சிறந்த வாழ்க்கையைக் கற்பனை செய்துகொண்டு கவலைப்படுகிறான். மனிதன் கடவுளின் மன்னிக்கும் திறமுடைய அன்பையும், சிறந்த சக்தியையும் நம்பினால், கவலையைக் கட்டுப்படுத்திப் பாவத்திலிருந்து விடுதலைபெற முடியும். அப்படியில்லாமல், மனிதன் கவலையை இறைவன் அருள் தன்னிடம் இருப்பதாகப் பாவனை செய்துகட்டுப்படுத்தமுயல்கின்றான். இத்தகைய பாவனை கருவத்திற்கும், கொடுமைக்கும், அநியாயத்திற்கும் வழிகாட்டும். இவைகளெல்லாம் பாவங்கள். அதனால், மனிதன் கடவுளை விட்டு ஒரு தனியான வாழ்க்கையை நோக்கிச்சென்று கொண்டிருக்கின்றான். மனிதர்கள் பாவிகளாக மாறுவதால் உலகில் பாவங்கள் மிகுந்திருக்கின்றன. இத்தகைய இடர்ப்பாடான சூழ்நிலையில் இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று கடவுளின் மன்னிக்கும் அன்பில் நம்பிக்கை வைப்பது. இரண்டாம் வழி இரண்டு வகைப்படும். ஒன்று மனக்கசப்பான தன்மையில் மூழ்கிக் கிடப்பது. மற்றொன்று இடர்ப்பாடான சூழ்நிலையை மூடி மறைப்பது. முதலில் கூறியதைக் கடைப்பிடித்தால், அன்பிற்காக வாழ்வது மட்டுமல்லாமல், சரித்திரத்திற்கப்பாற்பட்ட தெய்விக அன்பிற்காகவும் வாழ வேண்டிவரும்.

நீபுர் கூறிய சுதந்திரம், பகுத்தறிவு, அன்பு முதலியன அறிவுக்கெட்டாதவை. நீபுர் கருத்துப்படி, அன்பு செய்கின்ற கடவுள் காலத்திற்கப்பாற்பட்டவர், உலகிற்கப்பாற்பட்டவர்.அதேபோல் அவருக்குக் காரணம் கிடையாது.

மனித சுதந்திரமும், பகுத்தறிவும் பற்றி இவர் கூறுவன. மனிதனைப் பற்றிக் கூறும்பொழுது மனிதன் கட்டுண்ட நிலையிலும் இருக்கின்றான்; சுதந்திரமாகவுமிருக்கின்றான். பகுத்தறிவு என்ற கருவியை நன்மைக்கும் பயன்படுத்தலாம்; தீமைக்கும் பயன்படுத்தலாம். மேற்கூறிய நம்பிக்கை கவலையைப் போக்குவதற்கு மனஉறுதியை அளிக்கின்றது. கடவுளின் மன்னிக்கும் அன்பு எல்லாவிதத்தீமைகளையும் அகற்றிவிடும். நீபுர், தாம் வில்லியம் சேம்சின் பயன்வழிக்கொள்கையைக்கடைப்பிடித்ததாகஒருநண்பருக்குஎழுதினார். இவர் பகுத்தறிவுகொண்டு கிறித்தவ நம்பிக்கையை நிலைநிறுத்த முடியாமற் போனதால் அந்த நம்பிக்கையினால் ஏற்படுகின்ற தைரியம், அமைதி, அன்பு, மன்னிக்கும் தன்மை முதலியவற்றால் நிலைநாட்டினார்.

**அன்பு:** நீபுர் மூன்றுவிதமான அன்பைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். அவை:பயன் எதிர்பாராத அன்பு, ஒருவருக்கொருவர் ஏற்படும் அன்பு, பயனை எதிர்பார்க்கும் அன்பு.

**அரசியல் கருத்துகள்:** அரசியல் தொடர்பான தீர்ப்புகள் கூறுமிடத்து, மனிதன் சமூகநிலையில் ஓரவஞ்சகமாக இருக்கின்றான். அப்படி இருக்கின்றதால் தன்னலம் காத்து வாழ்கின்றான். இத்தகைய ஓரவஞ்சகநிலையிலிருந்து யாருமே விடுபடுவதில்லை,

ஆனால், கடைசியாக அடையும் நன்மை இறை நம்பிக்கையில்தான் இருக்கின்றது. அத்தகைய ஒரு நம்பிக்கையானது கிறித்தவ உண்மைக் கொள்கையைக் கடைப்பிடிக்கத் துணைபுரிகிறது. அக்கொள்கையின் மூலம் ஆன்மாவிலிருக்கும் தீமையைத் தெரிந்து கொள்ள முடியும். மேலும், மனித வாழ்க்கையில் தீமையின் அளவையும் தெரிந்துகொள்ள இயலும். தன்நன்மையைப் பிறர் நன்மை போல் கருதி அரசியலில் செய்கின்றார்கள். நீபுர் சில சிக்கல்களை அதாவதுசமய அடிப்படையில் எழுந்தவற்றையும் பகுத்தறிவிற்குப் பொருத்தமானவற்றையும் பிரித்து உணர்கிறார். இரா.கோ.

**துணை நூல்கள்:**

**Niebhur**, Reflections on the End of an Era, New York, 1934.

**Niebhur**, An Interpretation of Christian Ethics, New York, 1935.

***நீர்த்தலை அமைப்பு***: அறிவு ஊனம் ஏற்படக் காரணமாக இருக்கும் பிறவிக் கோளாறுகளில் மண்டையோடும் மூளையும் பாதிக்கப்படும் வகைகளும் அடங்கும். இதில் நீர்த்தலை அமைப்பு (Hydrocephaly)என்னும்கோளாறுகாரணமாக மூளைமற்றும் தண்டுவட நீர் மூளையைச் சுற்றிப்பெருமளவில் சேர்வதால் குழந்தையின் தலை மிகப்பெரியதாகத் தோற்றமளிக்கும். இவ்வாறு நீர் சேர்தலுக்குக் குழந்தை பிறக்கும்போது அல்லது அதற்கு முன்போ, பின்போ, ஏற்படும் கோளாறுகள் அல்லது காயங்கள் காரணமாக இருக்கலாம். இந்நீரின் அழுத்தத்தால் மூளைவளர்ச்சி குன்றிக்குழந்தையின் அறிவிற்கு ஊனம் ஏற்படக்கூடும். நரம்பியல் அறுவை மருத்துவத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் காரணமாக இக் கோளாறைச் சீர்படுத்த இயலும். பிறந்த மூன்று மாதங்களுக்குள் அறுவை மருத்துவம் மூலமாக மூளையைச் சுற்றித் தேங்கி நிற்கும் நீரை ஒரு வடிகுழாய்கொண்டு அதன் வயிற்றுக்குள் வடிய வழி செய்யலாம். இதனால், குழந்தையின் அறிவிற்கு ஊனம் ஏற்படுவதைத் தடுக்க இயலும். வே.க.

**துணை நூல்:**

**Ullman, L.P., & Krasner, L.**, A Psychological Approach to Abnormal Behaviour, Prentice Hall, New York, 1975.

***நீர்ப்பாசனம்*** என்பது செயற்கை முறையில் பயிர்கள் வளர்வதற்குத் தேவையான நீரைப் பாய்ச்சுவது ஆகும். அதாவது இயற்கையில் மழைக் குறைவால் ஏற்படும் நிலத்தின் ஈரமற்றதன்மையைப்போக்கித் தாவரங்களின் வளர்ச்சிக்கு மழைக்காலங்களில் சேர்த்துவைத்த நீரை வாய்க்காலின்மூலம் நிலத்துக்குப் பாய்ச்சுவது நீர்ப்பாசனம் (Irrigation) எனப்படும். எளியமுறையில் நீர்ப்பாசனம் செய்யும் வழக்கம் பல நூற்றாண்டுகளாக உலகின் எல்லாப் பகுதிகளிலும் நிலவி வந்துள்ளது.

நீர்ப்பாசனத்தின் முக்கியத்துவத்தைக் குலாத்தி (N.D. Gulati) என்பவர் 'நீர்ப்பாசனம் என்பது உலக நாடுகளின் நாகரிகத்தைப் போல மிகத் தொன்மையான கலை. ஆனால், அதேசமயம் உலகம் முழுமைக்கும் இது ஓர் இக்கால அறிவியல்-பிழைப்புத் தன்மை பற்றிய அறிவியல்' என்று குறிப்பிடுகிறார். இவ்வாறாக நீர்ப்பாசனம் என்பது உலகத்தில் ஒரு பயன்முறை அறிவியலாகச் சொல்லப்படுகிறது. இம்முறை பழமைக் காலந் தொட்டே இருந்தாலும், கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்துதான் அறிவியலைப் பயன்படுத்திய புதிய முறையில் நீர்ப்பாசனம் செய்யும் வழக்கம் ஏற்பட்டது.

வேளாண்மை, இயற்கை மழையைப் பொறுத்திருப்பதால் பயிர் செய்தல் நிலையுறுதியற்ற தன்மையை ஏற்படுத்துகிறது.மேலும், மழை பொய்த்துப் போன காலங்களில் வறட்சி நிலையிலிருந்து வேளாண்மையைக் காப்பாற்றும்பொருட்டுச் செயற்கையான நீர்ப்பாசனம் மூலம் பயிர்களுக்குப் பாய்ச்சுவது என்பது உலக நாகரிகத் தோற்றத்திலிருந்தே முயற்சிகள் எடுக்கப்பட்டு வந்த ஒன்றாகும். ஆனாலும், கிடைக்கும் வரலாற்று ஆதாரங்களை வைத்து, நீர்ப்பாசன முறையை முதலில் செயற்படுத்தியது எகிப்தியர்களா (Egyptians), பாபிலோனியர்களா (Babylonians), மற்ற நாட்டவர்களா என்பதும் இவர்களின்முயற்சிகள் எல்லாம் சமகாலத்தைச் சார்ந்தவையா என்பதும் அறுதியிட்டுச் சொல்லுவது கடினமாகும். ஆனால், இந்தியாவைப் பொறுத்தவரை செயற்கையாகப் பயிர்களுக்கு நீர் பாய்ச்சுவது என்பது பழமைக் காலத்திலிருந்து பழக்கத்தில் உள்ளது.

பொதுவாக நீர்ப்பாசனத்திற்கு ஏரி, கிணறு, குளம், குட்டை முதலியன பயன்படுகின்றன. ஏற்றங்களும், கபிலைகளும் கிணற்று நீர்ப்பாசனத்திற்குப் பயன்படுகின்றன. இக்காலத்தில் இவற்றிற்குப் பதிலாகக் குழாய்க் கிணறுகளும் (Pump sets), காற்றாலைகளும் பயன்படுத்தப்படுகின்றன. ஆற்று நீர்ப்பாசனத்தில் ஆறு அல்லது நீரோடையின் குறுக்கே அணை கட்டி வாய்க்கால் மூலம் நீர்த்தேக்கத்திற்கு (Reservoir) நீரைச் செலுத்தி, நீரைச் சேமித்து வைத்துக் கொண்டு, பயிர்களுக்குத் தேவையான பருவங்களில் பல கால்வாய்களின்மூலம் நீர்ப்பாசனத்திற்கு நீரைத் திறந்து விடுவார்கள். இத்தகைய திட்டங்கள் ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்கள் (River Valley Schemes)

என்று கூறப்படுகின்றன. இவ்வகைத் திட்டங்கள் பல ஆயிரம் கி.மீ. தொலைவுள்ள நிலங்களுக்கு நீர்ப் பாசன வசதியளிப்பதுடன் நவீன வாழ்க்கைக்கு மிக இன்றியமையாத மின்சார சக்தியை உண்டாக்கவும் அருகிலுள்ள நகரங்களுக்குக் குடிநீர் வசதி செய்யவும் இன்னும் பல வழிகளிலும் பயன்படுகின்றன.

உலக நாடுகளில் நீர்ப்பாசனத்தின் படிமலர்ச்சி யைப் பார்க்கும்பொழுது, வெள்ளையர் அமெரிக்கா வில் சென்று குடியேறுவதற்கு முன்னரே செவ்விந்தியர் நியூமெக்சிகோ, ஆரிசோனாப்பகுதிகளில் நீர்ப்பாசனம் செய்துவந்தனர் என்று வரலாறு கூறுகிறது. இவ் வாறு நீர்ப்பாசனத்திற்குப் பயன்பட்ட கால்வாய் களை அவ்வப்போது ஆழமாக்குவதைச் சமூகத்தின் பொதுவானதொரு கடமையாக இவர்கள் கருதினர். அந்நிலையில் அமெரிக்காவில் குடியேறிய இசுபெயின் (Spain) நாட்டவர் அணை கட்டி நீரைத் தேக்கி வைக்கும் முறையைச் செவ்விந்தியருக்குக் கற்பித்த னர். முதன்முதலாக கி.பி. 1847-இல் மார்மானியர் (Mormons) அமெரிக்காவில் நீர்ப்பாசனத் திட்டத்தை அமைத்தனர். பின்னர் கி.பி. 1933-இல் தென்னசிப் பள்ளத்தாக்கு வேலைத் திட்டம் (Tennessy Valley Project) தொடங்கப்பட்டது. இவ்வுலகப் புகழ்வாய்ந்த திட்டத்தினால் அமெரிக்க வேளாண்மை செழித்த தோடல்லாமல், பல நாடுகளும் இத்திட்டத்தின் அமைப்பைப் பின்பற்றித் தம் நாடுகளில் செயற்படுத் தத் தொடங்கின. எனவே, இத்திட்டத்தை உலகப் பள்ளத்தாக்குத் திட்டங்களின் முன்னோடி என்று சொல்லுகின்றனர்.

கனடா நாட்டின் மேற்குப் பகுதியில் மழை மிகக் குறைவு என்பதால் நீர்ப்பாசனம் இந்நாட்டிலும் இன்றியமையாத ஒன்றாக உள்ளது. இந்நாட்டின் நீர்ப்பாசனத் திட்டங்களுள் பெரும்பாலன தனிப்பட் டவரோ தனி நிறுமங்களோ, அரசாங்க அனுமதியும் உதவியும் பெற்று நடத்தும் சிறிய திட்டங்களாகும். பெரிய நீர்ப்பாசனத் திட்டம் ஒன்றைப் பசிபிக்கு இரயில்வேயினர் அமைத்துள்ளனர். போ (Bow) ஆற்று நீரைப் பாசானோ (Bassano) அருகில் நீர்த் தேக்கம் அமைத்து, அதனைத் தேக்கிவைத்து, அதே ஆற்றின் குறுக்கே குதிரை இலாட வளைவு அணை கட்டி நிலத்திற்கு நீர்ப்பாசன வசதி செய்கின்றனர்.

எகிப்து நாட்டில் 4,000 ஆண்டுகளுக்கு முன் பிருந்தே நீர்ப்பாசனம் நடைபெற்றதாக வரலாற்றுச் சான்றுகள் தெரிவிக்கின்றன. உலகின் மிகப்பெரிய, நீளமான நைல் (Nile) ஆற்று நீரைக் குடங்களில் எடுத்துச்சென்று செடிகளுக்கு ஊற்றி நீர்ப்பாசனம் செய்தனர் என்றும், பின்னர், சிறிய அணைகட்டிக் கால்வாய் மூலம் நீரைப் பாய்ச்சினர் என்றும் தெரிய வருகிறது. ஆனால், இந்நாட்டின் நிலையான நீர்ப் பாசனத் திட்டம் ஆங்கிலேய அரசாங்கத்தால் கி.பி. 1902-இல் அசுவான் அணையைக் கட்டியதின்மூலம் நிறுவபபட்டது. பின்னர் இதே அணை இருமுறை பெரிதாக்கப்பட்டு நீர்ப்பாசன வசதி பெருக்கப்பட்டி ருக்கிறது.

சீனாவில் செஞ்சீன அரசாங்கத்தால் பல நீர்ப் பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. முதன்முதல் யாங்சி (Yongshi) நதியின் குறுக்கே அணையைக் கட்டி நிலத்திற்கு நீர்ப்பாசன வசதியைச் செய்தனர்.

ஆசுத்திரேலியா நாட்டில் மழை அளவு குறை வானதால் பல ஆண்டுகளாகவே நீர்ப்பாசனத்தில் கருத்தைச் செலுத்தினர். முரம்பிட்சி (Murrumbidgee) ஆற்றின் குறுக்கே கட்டப்பட்ட அணையும், தாவ்சன் பள்ளத்தாக்குத் திட்டமும் (Dawson Valley Scheme) அந்நாட்டின் புகழ்பெற்ற திட்டங்களாகும். தவிரத் தென் அமெரிக்கா, மெக்சிகோ, சூடான், தென் ஆப்பிரிக்கா, சப்பான், இத்தாலி, இசுபெயின், போர்ச் சுகல், சோவியத்து உருசியா, பிரான்சு, கிரீசு, அரே பியா, ஈராக்கு முதலிய நாடுகளிலும் நீர்ப்பாசன வசதிகள் முன்னேற்றம் அடைந்துள்ளன.

இந்திய வரலாற்றில் வேதங்களிலும், கௌசிக சூத்திரம், மனுசுமிருதி ஆகிய நூல்களிலும் கிணறு கள், செய்குளங்கள், ஏரிகள், நீர்த்தேக்கங்கள், கால் வாய்கள், கண்மாய்கள் பற்றிய குறிப்புகள் உள்ளன. தவிர கி.மு. 300-இல் சந்திரகுப்தரின் அரசவைக்கு வந்த மெகசுதனீசு என்ற கிரேக்கத் தூதர் அக்காலத் தில் இந்தியாவிலிருந்த நீர்ப்பாசன வசதிகளைப் பற்றிப் புகழ்ந்து கூறியுள்ளார். கல்வெட்டுப்பொறிப்பு ஒன்று, கத்தியவாரில் (Kathiawar) கிர்னார் பாறை யின் மேல் (Girnor Rock) முதலாம் உருத்திரதாமன் (Rudradaman I) என்பவர் கட்டிப் பழுதுபார்த்த 'சுதர்சன்' என்ற செயற்கை ஏரியைப் பற்றிக் கூறு கிறது. இதே ஏரி பின்னர் வந்த மௌரிய, குப்த அரசர்களால் பழுதுபார்க்கப்பட்டது என்பதும் தெரிய வருகிறது.

கி.பி. முதலாம் நூற்றாண்டில் தென் இந்தி யாவை ஆண்ட சோழ அரசர்களுள் கரிகாலன், காவிரி ஆற்றின் குறுக்கே கட்டிய கல்லணை இப் பொழுதும் பல நூறு எக்டேர் பரப்பளவுக்குத் தமி ழகத்தில் நீர்ப்பாசன வசதி அளிக்கிறது. இதைத் தொடர்ந்து கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் வடார்க் காடு மாவட்டத்தில் உள்ள மகேந்திரா குளமும், செங்கற்பட்டு மாவட்டத்தில் கட்டி முடிக்கப்பட்ட பல குளங்களும், கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் காஞ்சி புரத்தில் நந்திவர்மனால் கட்டப்பட்ட மிகப்பெரிய

ஏரியும், செங்கற்பட்டு, வடார்க்காடு, சேலம் மாவட்டங்களில் கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் பல்லவ அரசர்களால் கட்டப்பட்ட செய்குளங்களும், கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் முதலாம் பராந்தகனால் வெட்டப்பட்ட பல கால்வாய்களும், குளங்களும் அதே காலத்தில் இராசராசனால் திருச்சிக்கருகில் காவேரியில் வெட்டப்பட்ட கால்வாய்களும், பாண்டிச்சேரிக்கு அருகிலுள்ள பாகூர் என்னும் இடத்தில் கட்டப்பட்ட குளமும் பற்றிய குறிப்புகள் பட்டயங்களிலிருந்தும், கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்தும், அறியக் கிடக்கின்றன.

இராசேந்திர சோழன்,கி.பி.11-ஆம்நூற்றாண்டில் வடக்கில் தனக்குக்கிடைத்த வெற்றியைக் கொண்டாடும்பொருட்டுக் கங்கை ஆற்றிலிருந்துநீர் கொணர்ந்து சோழநாட்டின் தலைநகரான கங்கைகொண்ட சோழ புரத்துக்கு அருகில் ஏரி ஒன்று வெட்டி அதில் அந்நீரை நிரப்பியதாகவும், அவ்வேரியின் கரை 23 கி.மீ. தூரத்தைக் கொண்டதென்றும் கல்வெட்டுக் குறிப்புகள் கூறுகின்றன. இதேபோலப் போசப்பூருக்கு அருகில் போசி மன்னரால் (Raja Bhoj) கட்டப்பட்ட போசப்பூர் ஏரியும் (Bhojpur Lake) இந்தியச் செயற்கை நீர்வளத்திற்கு மிகச்சிறந்த எடுத்துக் காட்டாக இன்றளவும் விளங்குகிறது. இது போபாலிலிருந்து தெற்காக 30 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது. அனந்தவருமன், இந்திரவருமனைப் பற்றிய செப்பேடுகள் கி.பி. 11-ஆம் நூற்றாண்டிலிருந்த 2 ஏரிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் மைசூரிலுள்ள சிந்துவள்ளிக் குளமும் (Sindhuvalli Tank), சோழ அரசன் மூன்றாம் இராசராசனால் கி.பி 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திருச்சிக்கருகே முசிறி என்ற இடத்தில் கட்டப்பட்ட ஏரியும், இதே ஆண்டின் மத்தியில் வாரங்கல்லின் வடக்கில் கட்டப்பட்ட பாகல் ஏரியும் (Pakhal Lake) பாசுகரராவினால் கி.பி. 14-ஆம் நூற்றண்டில் கட்டப்பட்ட அனந்தராச சாகரா என்ற மிகப்பெரிய நீர்த்தேக்கமும்,சர்மித்திரா (Surmitra) என்பவரால் கி.பி. 15-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் குண்டூர் மாவட்டத்தில் கட்டப்பட்ட பீரங்கிபுரம் என்ற ஏரியும், நரசிம்மராசாவால் கி பி. 15-ஆம்நூற்றாண்டின் இறுதியில் அனந்தபூர் மாவட்டத்தில் கட்டப்பட்ட மிகப்பெரிய ஏரியும், கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் விசயநகர கிருட்டிணதேவராயரால் கட்டப்பட்ட நாகல்புரா (Nagalpura Tank) ஏரியும், இதே அரசரால் துங்கபத்திராவிலிருந்து கோரங்கல், பாசன்னா (Korrangal & Basanna) என்ற பெயரில் வெட்டப்பட்ட வாய்க்கால்களும், கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் இடையில் பெங்களூருக்கு அருகில் கட்டி முடிக்கப்பட்ட சிவசமுத்திரம் என்ற பெரிய ஏரியும் வடக்கில் வெட்டப்பட்ட சில வாய்க்கால்களும் (Canals) புகழ் வாய்ந்தவையாக விளங்குகின்றன. மன்னன் பெரோசா துக்ளக்கினால் (Ferozshah Tughlaq) கி.பி. 14-ஆம் நூற்றாண்டின் இறுதியில் கட்டப்பட்ட பழைய மசுனா வாய்க்காலும்(Majuna Canal), இன்றும் பஞ்சாபு, சிந்துவில் உள்ள சில வாய்க்கால்களும், வடக்கில் விரிவாக்கப்பட்ட கண்மாய்களும் (Lakes), கி.பி.17-ஆம் நூற்றாண்டின் இடையில் மன்னன் சாசகானால் ரவி ஆற்றிலிருந்து வெட்டப்பட்ட வாய்க்காலும்சிறப்புடையனவாக விளங்குகின்றன. இவர்களால் கட்டி, வெட்டி முடிக்கப்பட்ட கால்வாய்கள், நீர்த்தேக்கங்கள், ஏரிகள், குளங்கள், வாய்க்கால்கள் போன்றவற்றைப் பராமரிப்பதற்கும் பழுதுபார்ப்பதற்கும் மேற்பார்வையிடுவதற்கும் அரசாங்க உதவியும் படைமானிய உதவியும் நீர்ப் பகிர்வும் இருந்தன என்பதற்குப் போதுமான சான்றுகள் உள்ளன. இவைகளெல்லாம் புராணக் கதைகளாலும், மரபு, வரலாற்றுக் கதைகளாலும் தெரியவருகின்ற நிகழ்ச்சிகளாகும். இவையனைத்தும் மழை பெய்யாத காலங்களில் செயற்கை நீர்ப்பாசன முறையில் காலச் சூழ்நிலைகளுக்கேற்றவாறு பயிர்ப் பாதுகாப்பு கொடுத்ததை வெளிப்படுத்துகின்றன. எடுத்துக்காட்டாகத் தென் இந்தியாவில் நீரைத் தேக்கிவைக்கும் வேலைகளும், வட இந்தியாவில் வாய்க்கால் வெட்டி நீரை எல்லா இடங்களுக்கும் கொண்டுசெல்வதும் அக்காலத்தில் ஆண்ட மன்னர்களால் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன.

மேலும், இவைகளனைத்தும் கட்டுவதற்கு வேண்டிய பணமும், பொருளும், கழிவுகளை வெளியேற்றுவதில் தொழில் முன்னேற்றமும், குழாய்வழி இட்டுச் செல்லும் நீர் பற்றிய ஆய்வுத்திறனும் குறிப்பாக அணைக்கட்டுக்கட்டுவதிலும், ஆற்றுநீர்ப்பயிற்சியிலும் வெளிப்பாடாகத் தெரிகிறது. ஆனால், குறிப்பிட்ட இடங்களைத் தவிர வேளாண்மையானது பழங்காலத்தில் முழுதும் செயற்கைப் பாசனத்தால் பாதுகாக்கப்பட்டது என்று கூறுவதற்கில்லை. சில முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டதை மட்டும் கிடைக்கும் சான்றுகள் தெரியப்படுத்துகின்றன. அன்றி இந்தக் காலக் கட்டங்களில் வேளாண்மை பெரும்பாலும் இயற்கை மழையைப் பொறுத்தே அமைந்திருந்ததால், சில சமயங்களில் பயிர்நாசத்தால், தோல்வியால் பஞ்சம் ஏற்பட்டதையும் வரலாறு கூறுகிறது.

பின் கி.பி.19-ஆம் நூற்றாண்டின் இடைக்காலம் வரைஆங்கிலேய அரசாங்கம் நீர்ப்பாசன வேலைகளில் கவனமோ முன்னேற்றமோ செய்யவில்லை எனலாம். இந்நிலையில் முன்னோர்கள் வெட்டி வைத்த நீர்ப் பாசன வசதிகள் அனைத்தும் பாழாகிக் கொண்டிருந்தன என்றுகூடச் சொல்லலாம். குறிப்பாகக் கி.பி. 1877-78-ஆம் ஆண்டுப் பஞ்சத்திற்குப் பின்னர்த்தான்

ஆங்கிலேய அரசாங்கம் பாதிக்கப்பட்ட இடங்களில் நீர்ப் பாசனத்துக்கு வழிவகை செய்வது இன்றியமையாதது என்றுணர்ந்து செயற்படத் தொடங்கிற்று. ஆங்கிலேய ஆட்சிக்காலத்தில் நீர்ப்பாசன முறைகள் பெரும்பாலும் இந்தியத் தக்காணப் பகுதிகள், பஞ்சாபு, மத்திய பிரதேசம், பம்பாய், பீகார் ஆகிய பகுதிகளில் செயற்படுத்தப்பட்டன.

இந்திய நீர்ப்பாசன வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டு முக்கியமானது. அரசரால் நியமிக்கப்பட்ட நீர்ப்பாசனக் குழு 1901 – 02-இல் நாடு முழுதும் சுற்றிப் பார்த்தபின்னர் 1903-இல் தம் அறிக்கையைத் தந்தது. இக் குழுவின் பரிந்துரைகளை ஏற்றுக்கொண்டு நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கியதால் கிட்டத்தட்ட 10 ஆண்டுகளில் நீர்ப்பாசனம் பெறும் நிலப்பரப்பு 70 விழுக்காடு அளவுக்கு மிகுந்தது. தென்னார்க்காடு மாவட்டத்தில் 1922-இல் வெள்ளாற்றின் குறுக்கே தொழுதூர் என்னும் இடத்தில் அணை கட்டி, வெல்லிங்டன் நீர்த்தேக்கத்திற்கு நீரைச் செலுத்திப் பிறகு கால்வாய்மூலம் நிலத்திற்கு நீர்பாய்ச்ச வசதி செய்தனர். ஐதராபாத்தில் (ஆந்திரப்பிரதேசத்தில்) உள்ள மிகப்பெரிய அணையான நிசாம்சாகர் அணை 1923 – இல் தொடங்கி 1931-இல் முடிவடைந்தது. இதன் நீளம் 3156 75மீ. உயரம் 35மீ. மைசூர் அருகில் காவிரியின் குறுக்கே கட்டப்பட்ட கிருட்டிணராசசாகர் அணை கி.பி.1911-இல் தொடங்கப்பட்டு 1931-இல் முடிவடைந்தது. இதன் நீளம் 2623 மீ. உயரம் 39.6 மீ. காவிரியின் குறுக்கே கட்டப்பட்ட மேட்டூர் அணை 1925-இல் தொடங்கப்பட்டு 1934 – இல் கட்டிமுடிக்கப்பட்டது. இதன் நீளம் ஏறக்குறைய 1½ கி.மீ. உயரம் 53.5 மீ. ஆகும். இது உலகிலேயே மிகப்பெரிய அணைகளுள் ஒன்றாக இன்றளவும் கருதப்படுகிறது.

**குழாய்க் கிணறுகள்:** பூமிக்கு அடியிலுள்ள நீரைக் குழாய்க் கிணறு மூலம் வெளிக்கொணர்ந்து நீர்ப்பாசனத்திற்குப் பயன்படுத்தும் முறை 1930-இல்தான் தோன்றியது. இன்றளவில் இந்திய மாநிலங்களில் பல்லாயிரக்கணக்கான குழாய்க் கிணறுகள் அரசாங்க உதவியுடன் அமைக்கப்பட்டுள்ளன.

**இன்றைய நிலையும், வருங்காலமும்:** இந்தியாவில்70 விழுக்காடு மக்கள் வேளாண்மையை நம்பியிருக்கின்றனர். உலகிலேயே மிகுந்த நிலப்பரப்பு நீர்ப்பாசனம் செய்யும் நாடு இந்தியாவாகும். அமெரிக்காவில் நீர்ப்பாசனம் பெறும் நிலப்பரப்பைப் போல் இருமடங்கு நிலங்கள் இந்தியாவில் நீர்ப்பாசன வசதி பெறுகின்றன என்று கூறப்படுகிறது. இந்திய சுதந்திரத்திற்குப் பின்னர்க்குறிப்பாக ஐந்தாண்டுத் திட்டங்கள் செயற்படுத்தப்பட்ட பின்னர் ஒவ்வொரு மாநில அளவிலும் பல பெரிய, சிறிய பல்நோக்கு நீர்ப்பாசனத் திட்டங்கள் தீட்டப்பட்டுச் செயற்படுத்தப்பட்டு வருவதால் வேளாண்மையில் முன்னேற்றமும் ஏற்பட்டுள்ளது. திட்டக் காலங்களில் குறிப்பாகப் பஞ்சாபில் பக்ரா நங்கல் திட்டம், பீகார் மேற்கு வங்காளத்தில் தாமோதர் நதிப் பள்ளத்தாக்குத் திட்டம், ஒரிசாவில் இராக்குட்டு அணைத்திட்டம், பம்பாயில் தப்தித் திட்டம், ஆந்திரப் பிரதேசத்தில் துங்கபத்திராத் திட்டம், தமிழ்நாட்டில் கீழ் பவானி, பரம்பிக்குளம்-ஆளியாறு முதலிய பல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. இதுதவிரப் பல பெரிய சிறிய திட்டங்கள் இந்த ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் நிறைவேற்றப்பட்டு வருவதால் குறிப்பாகத் தமிழ்நாட்டில் நீர்நிலைகள் முழுதும் ஏறக்குறையத் தேக்கப்பட்டுப் பயன்பாட்டிற்கு உதவுமாறு செய்யப்பட்டிருக்கின்றன.

இருந்தபோதிலும் இந்தியாவில் ஆண்டு தோறும் பெய்யும் மழை நீர், இந்திய ஆறுகளின் வழியே கடலில் விழுந்து வீணாகிவிடுகிறது. இத்தகைய ஆற்று நீரை வீணே கடலில் கலப்பதைத் தடுக்க அதன் போக்கை மாற்றி அணை கட்டி, நீரைத் தேக்கி, நீர்ப்பாசனத்திற்கு நீர் கிடைக்கச்செய்வது இன்றைய தேவையின் முதல் அமிசமாகும். புள்ளியியல் விவரப்படி, இந்திய ஆறுகளில் ஓடும் நீரில் ஆறு விழுக்காடு அளவு மட்டுமே பயன்படுத்தப்படுவதாகவும் எஞ்சிய 94 விழுக்காடு அளவு நீர் வீணாகிக் கடலில் கலக்கிறது என்றும் அறியமுடிகிறது. இவ்வாறு வீணாகக் கடலில் விழும் நீரில் பெரும்பகுதியைப் பயன்படுத்திப் பயனடைய நிதித் தட்டுப்பாடு, மூலதனப் பற்றாக்குறை, சிறந்த தொழில் நுட்பக் கருவிகள் இல்லாமை, நிருவாகச் செயல்முறைத் தடுப்புப் போன்றவை தடைகளாக இருக்கின்றன.

**நீர்ப்பாசன ஆராய்ச்சி:** இந்தியாவிலுள்ள நீர்ப்பாசன ஆராய்ச்சி நிலையங்களுள் மிகப் பழமையானதான மத்திய நீர் மின் ஆராய்ச்சி நிலையம், கி.பி. 1916-இல் பம்பாய் மாநில அரசால் தொடங்கப் பெற்றது. அதனைக் கி.பி.1937-இல் இந்திய அரசாங்கம் தன்னுடைய நிருவாகத்தின் கீழ்க் கொண்டு வந்தது. இந்நிலையமானது நாளடைவில் விரிவாக்கப்பட்டது. பம்பாய், வங்காளம், ஆந்திரம், கருநாடகம், தமிழ்நாடு முதலிய மாநிலங்களும் தத்தம் நீர்பாசனஆராச்சி நிலையங்களை நடத்தி வருகின்றன. மாநில ஆராய்ச்சி நிலையங்களின் வேலைகளைத் தொடர்புபடுத்த மத்திய நீர்ப்பாசனக் குழு (Central Board of Irrigation and power) ஒன்றும் நிறுவப்பட்டுள்ளது. கா.தி.இ.

**துணை நூல்கள்:**

**Rao, V. K. R. V.**, Impact of Irrigation Studies of Canal, Well and Tank Irrigation in Karnataka, Himalaya Publishing House, Bombay, 1979.

**Sharma, A. N.**, Economic Structure of Indian Agriculture, Himalaya Publishing House, Bombay, 1984.

***நீர் வீழ்ச்சி***: பொதுவாக, நிலத்தில் சென்று கொண்டிருக்கும் ஆறு அதன் கீழே இருக்கும் ஆழமான பள்ளத்தாக்கில் இறங்கும்போது நீர்வீழ்ச்சி ஏற்படு கிறது. ஆற்றுப் படுகைகளின் ஏற்றத் தாழ்வுகள் காரணமாகக் கடினமான பாறை உள்ள இடங்களில் நீர் வீழ்ச்சிகள் நிலைபெறுகின்றன. நீர்வீழ்ச்சிகளில் உயரக்குறைவானவையும்மிகுதியானஉயரத்தை உடை யனவும் உண்டு. சில நீர்வீழ்ச்சிகளில் நீர்பெருவெள்ள மாகப் பாய்ந்தோடும். சிலவற்றில் படிப்படியாக நீர், குதித்துக் குதித்துப் பாயும். நீர் வீழ்ச்சிகள், காலப் போக்கில் மண்அரிப்பை உண்டாக்கி ஆழமான மடுக் களை ஏற்படுத்திவிடுவதும் உண்டு. கடினமான பாறை வெளியைக் கடந்து, ஆறுகள் மென்பாறை வெளியில் பாயும்போது அவ்வெளி கரைந்து நீர்வீழ்ச்சிகள் ஏற்படுவதுமுண்டு. ஆப்பிரிக்காவில் உள்ள விக் டோரியா நீர்வீழ்ச்சி போல, வழியிலே இருக்கும் பெரும் பள்ளத்தை ஆறு கடக்கும்போது நீர்வீழ்ச்சி கள் ஏற்படுவதும் உண்டு. கனடாவில் உள்ள நயாகரா நீர்வீழ்ச்சி, முன்னரே உள்ள குத்துச் சரிவை ஆறு கடப்பதால் ஏற்பட்ட ஒன்று. செங்குத்தான ஓங்கல் கரையில் ஆறு கடலிலோ ஏரியிலோ கலக்கும்போது, நீர்வீழ்ச்சி ஏற்பட்டுள்ளமைக்கு எடுத்துக்காட்டாக ஆவாய் (Hawaii) தீவின் வட கிழக்குக் கரையைக் குறிப்பிடலாம். தெ.பா.

***நீரோ***; உரோமப் பேரரசின் மன்னன்; இரக்க மற்ற கொடியவன். இவனுடைய தாய், மன்னர் கிளாடியசை மணந்ததும், அவர் இவனைத் தம் மக னாக ஆக்கிக் கொண்டார். இவனுடைய தாய் கிளா டியசுக்கு நஞ்சூட்டிக் கொன்று தன்மகனை மன்னன் ஆக்கினாள். நீரோ ஆட்சிப் பீடத்தில் அமர்ந்தவுடன் கொடுங்கோலனாகவும், காமவெறியனாகவும் மாறி னான். முறைப்படி மன்னனாக வந்திருக்க வேண்டிய தன் மாற்றாந் தாயின் மகனைக் கொன்றான். தன் காதலியின் விருப்பத்திற்கிணங்கத்தன் தாயைக் கொன் றான். மேலும், தன் மனைவி ஆக்டேவியாவைக் கொன்று, தன் நண்பனின் மனைவியான பாப்பீ யாவை மணந்தான். இரத்தவெறி பிடித்த விலங்கின் செயல்போல் இவனுடைய செயல்கள் இருந்தன. இவன் தீயசெயல்களில் மூழ்கித் திளைத்தான்.

உரோம் நகரில் கி.பி. 64-ஆம் ஆண்டு பெருந்தீ மூண்டு நகரின் பெரும்பகுதி எரிந்து சாம்பலானது. அப்பொழுது நீரோ மன்னன் உற்சாகமாகப் பாடிக் கொண்டிருந்தான் என்று கூறப்படுகிறது. நெருப்பில் எரிந்து சாம்பலான நகரை மீண்டும் நிறுவினான். தனக்குத் தேவையான ஆடம்பரமான அரண்மனை யையும் கட்டிக் கொண்டான். இவனுக்கு எதிராக கி.பி. 65-ஆம் ஆண்டு நடந்த சதி முறியடிக்கப்பட்டது. கருவுற்றிருந்த தன்மனைவியை உணர்ச்சி வெறியிலே காலால் உதைத்துக் கொன்றான். பின்னர்க்கிளாடிய சின் மகள்அண்டோனியாவை மணக்க விரும்பினான். தன் விருப்பம் நிறைவேறாமல் போகவே அவளையும் கொன்றான். இசுட்டாட்டிலியா மெசலைனா என்ப வளின் கணவனைக் கொன்று, அவளை மணந்து கொண்டான்.



நீரோ

தன்னைக் கவிஞன், இசைவாணன், தத்துவஞானி என்றெல்லாம் மக்கள் புகழ வேண்டும் என்று விரும்பி, பல நகரங்களுக்குச் சென்றான். இவனுடைய கொடுஞ்செயல்களை எதிர்த்து கி.பி.68-இல் நாட்டில் கலகம் நடந்தது. உரோம் நாட்டு அவையான ஆளவை மன்றம் இவன் குற்றவாளி என்று குற்றம் சாட்டியது. பிறகு இவன் தப்பிச் சென்று தற்கொலை செய்து கொண்டான். நீரோவின் மக்கள் அளவு கடந்த வெறுப்புக் கொண்டு சாசனங்களிலிருந்து இவன் பெயரை நீக்கினர். இவனுடைய நினைவுச் சின்னங்களை அழித்தனர். சே.நா.

***நீல், சான் மேசன்***(கி.பி. 1818-1866): இவர் ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தில் துவங்கி வீறு பெற்றுப் பரவிய சமயச் சீர்திருத்த இயக்கத்தில் பற்றுக்கொண்டு, அவ்வியக்கத்தின் குறிப்பிடத் தக்க பங்கு பெற்ற எழுத்தாளர் ஆவார். நீல், சான் மேசன் (Neale, John Mason) கேம்பிரிட்சுப்பல்கலைக் கழகத் தைச் சேர்ந்தவர். 'ஆக்சுபோர்டு இயக்கம்' என அழைக்கப்பட்ட அச்சமயச் சீர்திருத்த இயக்கத்தில் கொண்ட ஈடுபாட்டின் காரணமாகக் கிறித்தவ

சமயத் துறையில் 'பரந்த நோக்கிற்கு' (Liberalism) எதிராக எண்ணங்கொண்டு இயங்கினார். ஆங்கிலிகன் தேவாலயத்தின் (இங்கிலாந்தின் அங்கீ கரிக்கப்பட்ட கிறித்தவ சமய வழிபாட்டுநெறி) ஆணிவேரே, விரிவடையும் 'பரந்த நோக்கால்' ஆட்டம் கண்டுவிடும் என்ற நம்பிக்கையைக் கொண்டவர். இவ்வியக்கத்தைத் தன் கோயில் உரையில் (பிரசங்கத்தில்)துவக்கி வைத்த அவ்வியக்கத் தலைவரான சான் கெபில் (John Keble) என்பவரின் தாக்கத்திற்கு உட்பட்டு, இவ்வியக்க அடிப்படையிலான பல படைப்புகளை இயற்றியுள்ளார்.

**தூய கிழக்குத் தேவாலயத்தின் வரலாறு** (History of the Holy Eastern Church) என்ற தனது படைப்பின் வாயிலாக 'ஆக்சுபோர்டு இயக்கத்தின்' கையை வலுப்படுத்தினார். ஆயினும், இவரது இவ்வரலாற்று நூலை விட, இவரால் படைக்கப்பட்ட பல துதிப் பாடல்களே(Hymns)புகழ் பெற்றவையாகவும், சுவை நிரம்பியவையாயும் காணப்படுகின்றன.இவரது துதிப் பாடல்கள் தொன்மைக் காலத்தே வழங்கிய துதிப்பாடல்களைத் தழுவிப் படைக்கப்பட்டவை. கி.பி. 12 – ஆம் நூற்றாண்டின் மோர்வலைச் சார்ந்த பெர்னார்டு (Bernard of Morval)என்பவரின் நீண்ட பரவச உணர்ச்சி மிக்க துதிப்பாடல்களைப் பல பகுதிகளாக மொழிபெயர்த்துள்ளார். இவற்றில் பல சிறப்புப் புகழ் பெற்றுள்ளன.'உலகம் தீது நிறைந்தது', 'இங்கு நம் பங்கு குறுகிய வாழ்வே', 'தங்க எருசலம்', 'உனக்காக என் அருமை நாடே' ஆகியன இம் மொழி பெயர்ப்பில் காணப்படும் சிறப்பான துதிப்பாடல்களாகும். இங்கிலாந்தின் மூலை முடுக்கெல்லாம் புகழ் பெற்றுப் பாடப்பட்டது 'வெங்கிசுலசு எனும் நல்ல அரசன்' (Good King Wenceslas)என்ற துதிப்பாடல் ஆகும். இவர் தம் பாடல்கள் துதிப்பாடல்களின் தொகுப்பு (Collected Hymns) 'அலேலூயாவிற்குப் பின் பாடப்பெறும் துதிப் பாடல்களும், கிறித்தவச் சமயப் பாடல்களும்' (Sequences and Carols) என்ற நூல்களில் தொகுத்து வழங்கப் பட்டுள்ளன.

தாமசு கிராப்டன், தாமசு ரைட்டு (Thomas Crofton, Thomas Wright) என்பவர்களுடன் இணைந்து கேம்டன் அமைப்பை (Camden Society) உருவாக்கியவரும் சான் மேசன் நீல் ஆவார். எம்.பா.

***நீலகண்ட சாத்திரியார், க.அ.*** தென்னிந்திய வரலாற்றுப் பேரறிஞர். இவர் தமிழ்நாட்டில்திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கல்லிடைக்குறிச்சியில் கி.பி. 1892-ஆம் ஆண்டு பிறந்தார். இவர் தம் தொடக்கக் கல்வியைக் கல்லிடைக்குறிச்சியில் முடித்த பின் அம்பாசமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப் பள்ளியிற் படித்துத் தேறினார். அடுத்து, திருநெல்வேலி இந்து கல்லூரியிலும் சென்னைக்கிறித்தவக் கல்லூரியிலும் கற்று இளங்கலைப் பட்டம் பெற்றார். முதுகலைப் பட்டம்பெற்ற பின்னர் 1913 முதல் 1918 வரை திருநெல்வேலி இந்துத் கல்லூரியில் விரிவுரையாளராகவும், கி.பி. 1918 முதல் கி.பி. 1920 வரை காசி இந்துப்பல்கலைக்கழகத்தில் (Banaras Hindu University) பேராசிரியராகவும், கி.பி. 1920 முதல் 1929 வரை சிதம்பரம் மீனாட்சி கல்லூரியில் (இன்றைய அண்ணாமலைப் பல்கலைக்கழகம்) முதல்வராகவும் பணிபுரிந்தார். பின்னர்ச்சிலகாலம் திருச்சி தேசிய கல்லூரியில் வரலாற்றுப் பேராசிரியராகப் பணிபுரிந்த இவர் கி.பி. 1929 முதல் 1947 வரை சென்னைப் பல்கலைக்கழகத்தில் பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறையில் பேராசிரியராகப் பாராட்டத்தக்க முறையில் பணிபுரிந்தார். இவர் 1952 முதல் 1956 வரை மைசூர்ப் பல்கலைக் கழகத்தில் இந்தியவியல் (Indology) பேராசிரியராகப் பணியாற்றினார். இவர் கி.பி. 1952-ஆம் ஆண்டில் நேபாளம் சென்று திரிபுவன் பல்கலைக் கழகத்தில் சில மாதங்கள் இந்தியப் பண்பாடு பற்றிச் சிறப்புரை ஆற்றினார். சென்னையிலுள்ள தென்கிழக்கு ஆசியப் பண்பாட்டு மையத்தில் கி.பி. 1957 முதல் 1971 வரை இயக்குநராகப் பணிபுரிந்தார். சப்பான் சென்ற இப்பேராசிரியர் சிலகாலம் சிகாகோ பல்கலைக்கழகத்தில் வருகைப் பேராசிரியராக (Visiting Professor)அமர்த்தப்பட்டார். இந்திய அரசு இவரது அளப்பரிய சேவையைப் பராட்டி இவருக்குக் கி.பி. 1958-இல் 'தாமரைத்திரு' (பத்மபூசன்) என்னும் பட்டத்தை வழங்கியது.



நீலகண்ட சாத்திரியார், க.அ.

வரலாற்றறிஞராகத் திகழ்ந்த இவர் பல அனைத்திந்திய வரலாற்று மாநாடுகளில் 'தலைமை தாங்கி

அறிவார்ந்த சிறப்புச் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். இவர் கி.பி. 1946-இல் பாட்னாவில் நடைபெற்ற இந்திய வரலாற்றுப் பேரவைக்குத் தலைமை வகித்தார். பல கருத்தரங்குகளைத் தலைமையேற்று நடத்திக் கொடுத்துள்ளார். மத்திய தொல்லியல் துறையின் ஆலோசனைக் குழுவில் அங்கம் வகித்துப் பல நல்ல ஆலோசனைகளைக் கூறியுள்ளார்.

தென்னிந்திய வரலாற்றுப் பேரறிஞராகத் திகழ்ந்த இவர் 22 நூல்களையும் 160 ஆய்வுக் கட்டுரைகளையும் வெளியிட்டுள்ளார். அவற்றுள் சில பிற வரலாற்றறிஞர்களுடன் இணைந்து எழுதப்பட்டன வாகும். இவரது வரலாற்று நூல்களுள் 'சோழர்கள்' (The Cholas-1935), தென்னிந்திய வரலாறு (History of South India-1966), தென்னிந்தியாவைப் பற்றி அயலார் குறிப்புகள் (Foreign Notices of South India -1939), நந்தர்கள் மற்றும் மௌரியர்களின் காலம் (Age of Nandas and Mauryas-1952), இந்தியாவின் சிறப்பு வரலாறு (Advanced History of India-1970) முதலானவை மிகவும் புகழ் பெற்றனவாகும். இவரது முதல் நூல் 'பாண்டியர் அரசு' (The Pandiyan Kingdom-1929) ஆகும்.

இவரால் இயற்றப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளுள் 'பேரரசுக்கெதிரான அலெக்சாந்தரின் படையெழுச்சி', 'இந்தியாவிற்கும் தென்கிழக்கு ஆசியாவிற்கும் இடையிலான பண்டைய தொடர்பு', 'இந்தியாவிற்கும் சீனாவிற்கும் இடையிலான தொடர்புகளின் தொடக்கம்', 'பாதாமிச் சாளுக்கியர்', 'உத்தரமேரூரில் உள்ள சோழர் கல்வெட்டு' ஆகியன மிகவும் குறிப்பிடத்தக்கன. திரு.கே. கோபாலாச்சாரியுடன் இணைந்து எழுதிய கட்டுரைகளுள் 'மணிமேகலை மற்றும் சிலப்பதிகாரத்தின் காலம்', 'தொடக்கக்காலப் பாண்டியர்களின் காலவரையறை' ஆகியனபாராட்டுதற்குரியன. இவர் வேங்கடரமணய்யா, கே கோபாலாச்சாரி, டி.என்.சுப்பிரமணியன், எசு.காமேசுவரராவ், எம். வேங்கடராமையா முதலான அறிஞர்களுடன்இணைந்தும் பல அறிவார்ந்த ஆராய்ச்சிக் கட்டுரைகளை இயற்றியுள்ளார். ம.இ.

*நீலகண்டனார்*: இவர், களவியல் என்ற இறையனாரகப் பொருள் உரை தோன்றிய பின்னர், அதன் ஆசிரியர் வழியே குருசீடமுறையில் அவ்வுரையினைக் கேட்டவர்களின் மரபில், இறுதியில் கேட்ட புலவர் ஆவார். இறையனார் களவியலுக்குப் பலர் எழுதிய உரைகளுள், கணக்காயனார் மகனார் நக்கீரனார் செய்த உரையே சிறந்ததென்று ஏற்றுக்கொள்ளப் பட்டது. பின்னர், நக்கீரனார் தம் உரையைத் தம் மகனார் கீரங் கொற்றனாருக்கு உரைத்தார். அவரைத் தொடர்ந்து பலர் வழிவழியாக உரைக்க அவ்வுரை தொடர்ந்து, பல மாணவர் பரம்பரையால் கேட்கப்பட்டு வந்துள்ளது. அதில் இறுதியாகக் கேட்டவரே, நீலகண்டனார் ஆவார். இவர் பெயர், முசிறி ஆசிரியர் நீலகண்டனார் என்று களவியல் உரையில் குறிக்கப்பட்டுள்ளது. அதனால், இவரது சொந்த ஊர் முசிறி ஆகும் என்பது தெரிகிறது. 'இங்ஙனம் வருகின்றது உரை' என்று அவ்வுரை குறிப்பிடுவது கொண்டு, நீலகண்டனாருக்குப் பின்னரும், அவ்வுரை கூறிக் கேட்கும் மரபு இருந்திருக்கலாம் என்றும், அவருக்குப் பின்னர் அவ்வுரை ஏட்டில் எழுதப் பட்டிருக்கலாம் என்றும் உய்த்துணர்தல் கூடும்.

அ.மா.ப.

*நீலகிரி மாவட்டம்*: காண்க: தமிழ்நாட்டு ஆட்சிப்பிரிவுகள்.

*நீலகேசி*: நீலகேசி ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்று. ஆசிரியர் பெயர் அறிய இயலவில்லை. இது பத்துச் சருக்கங்களும், 894 செய்யுட்களும் கொண்டது. சமணமே சிறந்ததென நிறுவக் குண்டலகேசிக்கு எதிராகத் தோன்றிய வாத நூல்; தருக்க நூல்.

யாப்பருங்கல விருத்தி நீலகேசிக் காப்பியத்தை நீலம் என்றும், நீலகேசி என்றும் குறிக்கிறது. நூலுக்கு உரையெழுதிய சமய திவாகர முனிவர் நீலகேசித் திரட்டு என்று குறித்துள்ளார். காப்பியத்தில் வரும் நீலகேசி என்னும் பாத்திரத்தின் ஆசிரியராகிய முனி சந்திர பட்டாரகர் அருகன் நெறியை யாவர்க்கும் கூறித் தெளிவிக்க வேண்டும் என்று நீலகேசியிடம் கூறுகிறார். 'செய்த தீமை கெடக்கட னாட்டிற், சினவ ரன்நெறி யேதெருட் டென்றான்' என்பன அவ்வடிகள். சினவரன் நெறியைத் தெருட்டு என்று கூறியபடி அந்நெறியை யாவர்க்கும் தெருட்டுதலின் இந்நூலுக்கு நீலகேசித் தெருட்டு என்ற பெயரும் ஏற்பட்டது.

நீலகேசியைப் பற்றிக் குறிக்கும்பொழுது நூலாசிரியர் 'நீலவைம் பாற்பெயராளும்' என்று குறிக்கின்றார். நீலநிற மிக்க கூந்தலால் பெயர்பெற்ற என்பது இதன் பொருள். இதனால் நீலகேசி என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. மேலும் அவளுடைய பண்பைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது 'தீநீல வுள்ளம்' என்று குறிப்பிடுகின்றார். நீலநிறமுடைய இலேசியையோடு கூடிய நெஞ்சம் என்பது இதன் பொருள்.

இலேசியை என்பது உயிரின் நுண்ணுடலின்கண் உண்டாகும் குணபேதங்களால் ஏற்படும் விகாரம். இது ஆறுவகைப்படும். அவை கிருட்டிணலேசியை நீலகேசியை, கபோதலேசியை, பீத லேசியை, பதும லேசியை, சுக்கிலலேசியை என்பன. இவற்றுள் முதல் மூன்றும் தீக்குணத்தாலாவன. பின் மூன்றும் நற்

குணத்தாலாவள். எனவே, நீலகேசி தீய நெஞ்ச முடையவள் என்னும் பொருள்பட 'தீநீல வுள்ளம்' என்று குறித்துள்ளார். மேலும் 'நீலி' என்ற சொல் லும் தீமை என்ற பொருளுடையது என்பதும் இங்கு அறியத்தக்கது. இத்தீநீல உள்ளத்தினை முனி சந்திர பட்டாரகர் என்னும் முனிவர் மாற்றி நல்ல உள்ள மாக்குகிறார். நீலகேசியை உள்ள பெண்ணைப் பற் றிய கதையாதலின் இது நீலகேசி என்று பெயர் பெற்றதாகவும் கொள்ளலாம். மேலும், குண்டல கேசிக்கு எதிராக எழுந்தமையாலும் 'கேசி' என்னும் தொடர் வருமாறு நீலகேசி என்ற பெயரால் அமைக்கப்பட்டது என்றும் பொருள் கொள்ளலாம்.

**நூல் தோன்றக் காரணம்:** மணிமேகலை தோன் றிய காலத்திலேயே பௌத்தருக்கும் சமணருக்கும் இடையே நிலவிய உட்பகையை மக்களால்அறிய முடி கிறது. இந்தப் பூசல் ஒருசில நூற்றாண்டுகள் நிலவி யிருக்கக் கூடும் என்பதை நீலகேசியால் உணர முடி கிறது. குண்டலகேசி என்றும் பௌத்தக் காப்பியம் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாக உள்ளது. குண்டலகேசி ஆசிரியர் தமது பெருங்காப்பியத்தில், குண்டலகேசி ஆவண நகரத்து அரசவையில் நாதகுப்த னார் என்னும் சமண சமயத் துறவியோடு சொற் போர் புரிந்து சமண சமயக் கொள்கைகளைப் பெரி தும் பழித்துப் பௌத்த சமயப் பெருமைகளை நிலை நாட்டுவதாகப் படைத்துள்ளார். குண்டலகேசியின் கூற்றுகள் சமண சமயத்தைச் சார்ந்தவர்களைப் பெரிதும் புண்படுத்தி இருக்கின்றன.இக்கருத்துகளுக்கு விடை தரும் முகமாக ஒரு காப்பியத்தை எழுத வேண்டும் என்று நீலகேசி ஆசிரியர் விழைந்திருக் கிறார். உலக மக்களுக்குச் சமண சமயப் பெருமை களை அறிவுறுத்த வேண்டும் என்றும் ஆசைப் பட் டிருக்கிறார். இதன் மூலம் தம் சமயத்தைப் பரப்ப வேண்டும் என்பது அவருடைய நோக்கம். குண்டல கேசிக்கு எதிராகப் படைக்கப் பட்டமையால் நீலகேசி யும் ஒரு பெண் துறவியாகப் படைக்கப் பட்டிருக்கி றாள். நீலகேசியாகிய பேய்க்குச் சமண சமய நெறி களை அறிவுறுத்தும் ஆசிரியராக முனி சந்திர பட்டா ரகர் என்னும் துறவி படைக்கப் பட்டிருக்கிறார்.

குண்டலகேசியை எதிர்த்து வெல்வதாலும், புத்த சமயக் கொள்கைகள் நீலகேசியால் மறுக்கப்படுவ தாலும் இந்நூல் அவளால் பெயர் பெறுகின்றது. பிற சமயங்கள் இந்நூலில் எதிர்க்கப்பட்டாலும் புத்த சம யத்தை எதிர்ப்பதே இதன் தலையாய நோக்கமாக இருந்திருக்கிறது. புத்த சமயத்தை எதிர்க்கும் முக மாக நான்கு சருக்கங்கள் உள்ளன. ஆசீவக வாதம், சாங்கிய வாதம், வைசேடிக வாதம், வேதவாதம், பூத வாதம் ஆகியன முறையே ஒவ்வொரு சருக்கத் தில் எதிர்க்கப் படுகின்றன.

புத்த சமயம் மட்டுமே சமண சமயத்திற்குச் சம மான எதிர்ச் சமயமாக நிலவி இருக்கிறது. புத்த சமயத்தைத் தாக்குவதற்கு ஆசிரியர் பல வாய்ப்பு களைப் படைத்துக் கொள்கிறார். பிற சமயங்களை இவ்வளவு வலிமையோடு எதிர்க்கவில்லை.

இந்நூல் சமயங்களைப் பற்றிய ஒப்பாய்வு முறையில் படைக்கப்பட்டுள்ளது.சமயத்தைக் குறித்து எழுந்த முதல் தருக்க நூலும் இதுவே.நேரிடையாகச் சொற்போர் நடத்திச் சமய உண்மைகளை நிலை நாட்டும் முறையில் அமைந்துள்ள சமய நூல் இது ஒன்றேயாகும்.

நீலகேசியின் வரலாறு பண்டைய சமண நூல் களில் காணப்படவில்லை. உண்மையில் நீலகேசி என்று யாரும் இருந்ததில்லை. ஆசிரியர் இக்கதையை ஒரு தெய்வம் தன் கனவிலே வந்து கூறியதாகவும், அது காப்பியம் இயற்றப்படும் அளவிற்குச் சிறப்பாக இருந்தமையால் காப்பியம் இயற்றியதாகவும் கூறி இருக்கிறார்.

இக்கால வழக்காடு மன்றங்களின் கால்கோள் விழா நீலகேசியில் நடைபெற்றிருக்கிறது எனலாம். சமயப் பூசல்களை விளக்கும்போது வெறும் சொல்லா ரவாரங்களால் அவை மறுக்கப்படவில்லை. அறிவு அடிப்படையில் மறுக்கப்படுகின்றன.

**காலம்:** இந்நூலாசிரியரின் காலம் சரியாகத் தெரியவில்லை.ஆனால், மகேந்திரவர்ம பல்லவனின் நாடக நூலில் காணப்படும் புத்த சமயத்தவர் கூடா ஒழுக்கமும், நீலகேசியில் கூறப்படும் புத்த சமயத்த வர் கூடா வொழுக்கமும் ஏறத்தாழ ஒத்துக் காணப் படுகின்றன. எனவே, இந்நீலகேசி கி.பி. 6-ஆம் நூற் றாண்டைச் சேர்ந்தவனாகிய மகேந்திரவர்மன் காலத்திற்கு அணித்தாக முந்திய கி.பி. 5-ஆம் நூற் றாண்டில் தோன்றியிருக்கலாம். சு.சு.தே.

## நீலாம்பிகை அம்மையார்:

இவர் மறை மலையடிகளார் மகள். இவருடைய தாயார் சவுந்திர வல்லியம்மையார். இவர் 1903-ஆம் ஆண்டு நாகப் பட்டினத்தில் பிறந்தார். பல்லாவரத்தில் தொடக்கக் கல்வியைப் பயின்று சென்னை வெல்லிங்கடன் சீமாட்டி உயர் நிலைப் பள்ளியில் ஒவ்வோராண்டும் இரட்டை உயர்வு பெறும் வகையில் சிறப்பாகப் பயின்றார். பள்ளிப் படிப்பினும் மிகுதியாக, இவர் தந்தை மறைமலையடிகளாரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் வடமொழி, ஆங்கிலம் முதலிய மொழிகளையும் கற்றார். மேலும், சொற்பொழிவுப் பயிற்சி, இசைப்பயிற்சி முதலியவற்றையும் அடிகளாரி டம் பெற்றார்.


நீலாம்பிகை அம்மையார்

இவர் வள்ளலார் திருவருட்பாவைப் பற்றி 1916-ஆம் ஆண்டின் ஒருநாள் மாலையில் தந்தையாரிடம் உரையாடிக்கொண்டிருந்தபோது, 'பெற்ற தாய்தனை மக மறந்தாலும்' எனத் தொடங்கும் பாடலில் 'தேகம்' என்ற சொல்லிருக்குமிடத்தில் 'யாக்கை' எனுஞ் சொல்லிருந்தால் சிறப்பாக இருந்திருக்கும்; தமிழில் பிறமொழிச் சொற்களைக் கலப்பதால் தமிழ்ச் சொற்கள் மறைந்து போகின்றன என்று மறைமலையடிகள் கூறினார். அதற்கு இவர் 'இன்று முதல் நாம் அயன் மொழிச் சொற்கள் நீக்கித் தனித்தமிழில் பேசுவோம்' என்று கூறினார். இதுவே, தனித் தமிழ் வரலாற்றின் தொடக்க நிகழ்ச்சி என்பர். இவர் சென்னை இராயபுரத்திலுள்ள நார்த்விக்கு மகளிர் கல்லூரியில் 1924 -ஆம் ஆண்டு முதல் 1942-ஆம் ஆண்டு வரை தமிழாசிரியையாகப் பணிபுரிந்தார். அப்போது மாணவர்களிடத்தும் பிறரிடத்தும் தனித்தமிழில் பேசித் தமிழுணர்வு ஊட்டினார். அக் காலத்தில் இவர் தனித்தமிழில் எழுதிய கட்டுரைகள் திராவிடன், தேசாபிமானி, ஆனந்த போதினி, ஒற்றுமை, தமிழ்நாடு முதலிய இதழ்களில் வெளிவந்தன. இக்கட்டுரைகள் பின்னாளில் 'தனித் தமிழ்க் கட்டுரைகள்' என்ற பெயரில் நூலாக வெளிவந்தன. இது தனித்தமிழில் தோன்றிய முதல் நூலாகும்.

இவர் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத் தோற்றுவித்த திருவரங்கனாரை 1927-ஆம் ஆண்டு காதல் மணம் புரிந்தார். பெண்ணுரிமைக்காகவும் இவர் அயராது உழைத்தார். சென்னை ஒற்றைவாடை நாடகவரங்கில் 1938-ஆம் ஆண்டு தமிழ் நாட்டுப் பெண்கள் மாநாடு இவர் தலைமையில் நடைபெற்றது. மாதர் முன்னேற்றத்திற்கு ஊக்கமூட்டும் வகையில் 1942-ஆம் ஆண்டு திருநெல்வேலியில் 'சைவ மாதர் கழகம்' ஒன்றை நிறுவி அதன் செயலாளராக விளங்கித் தொண்டு புரிந்தார்.

தனித் தமிழ்க் கட்டுரைகள், முப்பெண்மணிகள் வரலாறு, வடசொற்றமிழ் அகர வரிசை, பட்டினத்தார் பாராட்டிய மூவர், பிளாரன்சு நைட்டிங்கேல், 'சோன் ஆப் ஆர்க்கு', ஆராய்ந்தெடுத்த அறுநூறு பழமொழிகளும் அவற்றிற்கேற்ற ஆங்கிலப் பழமொழிகளும், தமிழ்மொழியும் தமிழ்நாடும் முன்னேறுவதெப்படி?, எலிசபெத்து பிறைப் பெருமாட்டி, மேனாட்டுப் பெண்மணிகள் (இரண்டு பகுதிகள்), பழந்தமிழ் மாதர், நால்வர் வரலாறு முதலியவை இவருடைய நூல்களாகும். இவர் 1945-ஆம் ஆண்டு மறைந்தார். சா.உ.

***நீவா ஆறு*** ஐரோப்பிய உருசிய ஒன்றியத்தின் வடமேற்கில் ஓடுகிறது. இது இலடோகா (Ladoga) ஏரியையும், பின்லாந்து வளைகுடாவையும் (Gulf of Finland) இணைக்கிறது. நீவா ஆற்றின் (Neva River) நீளம் 74 கி.மீ. இது பால்டிக்குக் கடலின் நுழைவிடமாக அமைந்துள்ளது. இந்த ஆறு கால்வாய்கள் மூலம் ஒல்கா (Volga) நதியுடனும் வெள்ளைக் கடலுடனும் (White Sea) இணைக்கப்படுகிறது. மாரிக் காலத்தில் இது உறைந்துவிடும். இலெனின்கிராடு (Leningrad) நகரம் நீவா ஆற்றின் கழிமுக வெளியில் உள்ளது. தெ.பா

***நீள்பெருங் கால்வாய்:*** இது சீனாவில்உள்ள உலகின் மிகப் பழைமை மிக்கதும் நீளமிக்கதுமான கால்வாய்; சீனாவின் வடக்கு – தெற்கில் உள்ள ஒரே நீர் வழி. தொடக்கத்தில் இந்நீர்வழி யுன்லியாங் கோ (Yunliang Ho- தானியம் ஏற்றுமதி செய்யப்படும் ஆறு) என்று சீனமொழியில் கூறப்பட்டது. இது பேரரசுக் கால்வாய் என்றும் (The Imperial Canal) சொல்லப்பட்டது. இக்கால்வாயின் நீளம் 1900 கி.மீ. வடக்கேயுள்ள கிங்கிலிருந்து, 24 கி.மீ. கிழக்கிலுள்ள தங்சோ (Tung Chow) என்னுமிடத்திலிருந்துதொடங்கித் தெற்கில் சாங்காயிலிருந்து தென்மேற்கே 160 கி.மீ. தொலைவிலுள்ள காங்சோவில் (Hang Chow) இக்கால்வாய் முடிவடைகிறது.

நீள்பெருங்கால்வாய் (Grand Canal) கி.மு 8-ஆம் நூற்றாண்டுப் பழைமை வாய்ந்ததாயினும், இதன் பெரும்பகுதி சீனாவை ஆண்ட சூ வமிசத்தின் யாங் டிமன்னனால் (Yang-Ti of Sui dynasty)கி.பி. 605-618 ஆம்ஆண்டுகளில் அமைக்கப்பட்டது. இவ்வேந்தன் பல நீர்வழிகளைச் சீர்திருத்தியமைத்ததுடன், புதிய கால்வாய்களையும் அமைத்தான். யாங் டிசி சமவெளிப் பகுதியிலிருந்து மிகுதியான உணவுப் பொருள்களை

வடசீனாவிற்குக் கொண்டு செல்ல, இக்கால்வாய் முன்பு பயன்படுத்தப்பட்டது. அதனால் வாணிகம் பெருகியது. இது தென் சீனப் பகுதிகளையும், வட சீனப் பகுதிகளையும் பொருளாதாரத்திலும் பண்பாட்டிலும் அரசியலிலும் படைத்துறையிலும் ஒருங்கிணைக்கப் பயன்பட்டது. பின்னர் மத்திய ஆட்சி வலுவிழந்ததால், இக் கால்வாய் கவனிப்பாரற்றுப் பழுதுபட்டது.

மங்கோலியத் தலைவன் குப்ளாய்கான் ஏறத்தாழ கி.பி. 1265-முதல் பீக்கிங்கைத் தனது தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தபோது கி.பி. 1289-இல் இக்கால்வாயைப் புதுப்பித்ததுடன், இதன் நீளத்தையும் குறைத்து, வடக்கு-தெற்கு நேர்வழியில் மாற்றியமைத்தான். இவனுக்குப் பின்னர் ஆட்சி புரிந்த மற்ற வேந்தரும் இதனை அடிக்கடி செப்பனிட்டுப் பயன்படுத்தினர். இன்றைய நீள்பெருங்கால்வாய், குப்ளாய்கான் காலத்தில் ஓடிய திசையிலேயே ஏறத்தாழ ஓடுகிறது எனலாம். இன்று இதன் உச்ச அகலம் 60 மீ; ஆழம் 0.6. மீட்டர் முதல் 4.6. மீ வரை (2'–15') உள்ளது. இக்கால்வாய் கி.பி. 18-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர்ப் படகுப் போக்குவரத்திற்குப் பயன்படுத்தப்பட்டது. இப்போது நிலக்கரி முதலான தொழிற்சாலைக்குத் தேவையான பொருள்களை ஏற்றிச் செல்ல இக்கால்வாய் பயன்படுகிறது.

**நீள்பெருங் கால்வாய்**[2]: இத்தாலி நாட்டிலுள்ள வெனிசிலும் இதே பெயரில் கால்வாய் ஒன்று உள்ளது. போக்குவரத்திற்குப் பயன்படும் இவ்வியற்கைக் கால்வாய் 4 கி.மீ.நீளமும் 30 முதல் 70 மீட்டர் அகலமும் சராசரியாக 5 மீ. ஆழமும் கொண்டுள்ளது. இது இரண்டு வளைவாக நகரைச் சுற்றி வளைந்து செல்கிறது.

தெ.பா.

**நு** நகரமும் உகரமும் இணைந்த ஒலி. நாவின் நுனி மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒற்றி ஒலிக்கும் இவ்வெழுத்து குவிந்த நிலையில் வெளிப்படும் ஒலி ஆகும்.

தனியொரு மொழி வழக்கில்லை.

**வடிவம்:** முதலில் குகைக் கல்வெட்டுகளில் கி.மு. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 3-ஆம் நூற்றாண்டு வரை இதன் அடிப்படை உருவத்தில் கீழ்நோக்கிய கோடு சேர்க்கப்பட்டது.... ...

மூல உருவம் கி.பி. ஆறு, ஏழாம் நூற்றாண்டுகளில் மாறும்பொழுது அடிக் கோட்டின் இறுதியில் வலப்புறம் நோக்கி இந்தச் சிறு கோடு சேர்க்கப்பட்டது. .. ...

பின் நகரத்தின் மூல உருவத்தில் ஏற்பட்ட மாறுதலால் உகரக் குறி கீழே வலப் புறக் கோடாக அமைந்தது. இம்மாறுதல் கி.பி. 11-ஆம் நூற்றாண்டிற்கு முன் ஏற்பட்டது. நகரத்தின் கீழ் உள்ள வளைகோட்டில் வலப்புறம் இணைக்கப்பட்ட சிறு கோடு மறுபடியும் மேல்நோக்கிப் போவதற்கு யாதொரு விளக்கமும் கொடுக்க இயலாது. ஒருகால் நீண்டு வந்த இக்கோடு விரைவாக எழுதப்படுவதால் மேல்நோக்கி வளையத் தொடங்கிப் பின் நேர் கோடாகியிருக்கலாம். .. ... ...

கீழே உள்ள வளைகோடு விரைவாக எழுதப்படும்பொழுது வலப்புறக் கோட்டின் இடப்புறமுனை சுழியாக மாறிற்று. இது இககால வடிவமே.... ... ...

வட்டெழுத்து வழக்கில் முதலில் கி.பி. 4,5-ஆம் நூற்றாண்டுகளில் தொடங்கி கி.பி. 9-ஆம் நூற்றாண்டு வரை ஒரே விதத்தில் வழங்கி வந்தது. .. ... ...

கே.ஜி.கி.

**நுகர்வு:** மனிதனின் விருப்பத்தை நிறைவுசெய்யும் பணிகளும் பொருள்களும் அவற்றின் செயற்பாட்டில் நுகர்வு (Consumption) எனப்படும்.

இந்நுகர்வு பொருளியலின் அடிப்படையாகவும் தொடக்கமாகவும் நோக்கமாகவும் விளங்குகிறது. நுகர்வு, உற்பத்திக்குக் காரணமாகவும் பின்னர் உற்பத்தியின் விளைவாகவும் அமைகிறது. நுகர்வு, பரிமாற்றத்தின் (Exchange) அடிப்படையாக விளங்குவதோடு நாட்டின் வருவாயையும் தொழிலையும் வரையறுக்கிறது.

மக்களின் வருவாய்க்கும் நுகர்வுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை கி.பி.19-ஆம் நூற்றாண்டின் செருமனி நாட்டுநிருவாகியாகவும், புள்ளிவிவரத் துறையின் தலைவராகவும் இருந்த டாக்டர் எர்னசுட்டு எங்கெல் (Dr. Earnest Engel) சாக்சோனியில் (Saxony) குடும்பங்களின் வரவு செலவுத் திட்டங்களைப் பற்றி ஆராய்ந்து கூறினார். அவருடைய ஆய்வின் மூலக் கருத்துகளாவன:

(1) வருவாய் கூடுகிறபொழுது அடிப்படைத் தேவையான உணவுக்குச் செலவிடும் பணத்தின்

விழுக்காடு மொத்த வருவாயில் குறைவாக இருக்கும். (2) உடைக்காகச் செலவிடுகின்ற பணத்தின் விழுக்காடு மாறாமல் இருக்கும். (3) வீட்டு வாடகை, எரிபொருள் ஆகியவற்றின் செலவும் மாறாது. ஆனால் கல்வி, உடல்நலம், பொழுதுபோக்குப்போன்ற செலவுகளின் விழுக்காடு கூடும்.

எங்கெலின் முடிவுகள் வரைபடத்தின் மூலம் (எங்கெல் வளைகோடு: Engel's Curve) விளக்கப் படுகின்றன

வரைபடம்:1




படத்தில் தனிமனிதன் வருமானத்திற்கும் நுகர்வுக்கும் உள்ள உறவைக் கோடு குறிக்கிறது. வளைவுக்கோட்டில் எந்த ஒரு புள்ளியும் தனி மனிதனின் இறுதி நுகர்வு நாட்டத்தைக் குறிக்கிறது. அதாவது, வருமான மாற்றத்தினால் ஏற்பட்ட நுகர்வின் மாற்று விகிதத்தைக் குறிக்கிறது. OA கோடு மொத்த வருமானத்திற்கு ஏற்ற மொத்த நுகர்வு விகிதத்தைக் குறிக்கிறது. இறுதி நுகர்வு நாட்டத்திற்கும், சராசரி நுகர்வு நாட்டத்திற்கும் உள்ள விகிதம் பொருளின் தேவைக்கான வருமான விரிவாகும் (Income Elasticity of Demand for Goods). கணிதக் குறியீட்டின் மூலம் இதைப் பின்வருமாறு எழுதலாம். Y - நுகர்வோர் வருமானம்; Q - நுகர்வு;

$\frac{\Delta Q}{\Delta Y}$ - இறுதி நுகர்வு நாட்டம்; $\nabla$ - மாற்றம்;

Q/Y - சராசரி நுகர்வு நாட்டம்.

இப்பொழுது $\frac{\Delta Q/Y\Delta}{Q/Y} = \frac{\Delta Q,Y}{\Delta Y,Q}$ இதுவே வருமான விரிவின் பொருளுக்கான தேவையாகும்.

**நுகர்வுக்கோட்பாடுகள்:** உலக நாடுகள் பலவற்றையும் பாதித்த 1930-ஆம் ஆண்டுக் கால மந்தத்தினால் அதுவரை சரியானவை என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருந்த பொருளாதாரக் கருத்துகள் தவறானவை என்று தெரியவந்தன.

கீன்சு (J.M. Keynes) பொது வேலைக் கோட்பாடு, வட்டி, பணம் (Keynes General Theory of Employment, Interest and Money)என்ற நூலினை 1936 -ஆம் ஆண்டு வெளியிட்டார். அதில் தொழில்மந்தத்திற்கான காரணங்களை ஆராய்ந்து தொகு தேவைகளுக்கேற்ப (Aggregate Demand) நெகிழ்ச்சியற்ற அளிப்பு (Inelastic Supply) இருந்ததென்றால் முழு வேலைநிலை (Full Employment) பொருளாதாரத்தில் நிலவுவதாகக் கீன்சு கூறினார். தொகு தேவை, நுகர்வுச் செலவையும் (Consumption Expenditure) முதலீட்டுச் செலவையும் (Investment Expenditure), தன்னுள் அடக்குகிறது. பல பொருளாதாரப் பிரிவுகளால் (Economic Units) நுகர்வுப் பொருள்களில் செலவிடும் செலவு நுகர்வுச் செலவாகவும், பல வாணிக அல்லது உற்பத்தி நிறுவனங்கள் உற்பத்திச் செலவை ஏற்கும்போது அவை உற்பத்திச் செலவாகவும் கருதப்படுகின்றன. நுகர்வு, பெறப்படும் வருமானத்தைப் பொறுத்தது. முதலீடு (Investment), வட்டி வீதத்தையும் (Rate of Interest)மூலதனத்தின் இறுதிநிலைத் திறனையும் (Marginal Efficiency of Capital) அடிப்படையாகக் கொண்டது. நுகர்வின் பகுத்தாய்வினைக் கீன்சின் பொருளியற் கருத்துகள் எனவும், கீன்சின் பிற்காலக் கருத்துகள் (Post Keynesian Economics)எனவும் இரு பிரிவுகளாக வகைப் படுத்துகின்றனர்.

**கீன்சின் கருத்துகள்:** கீன்சின் கலைச்சொற்களுள் (Keynesian Technology) நுகர்வு என்பது வருமானத்தை வரையறுக்கும் காரணியாக விளங்குகிறது. அதாவது ஒரு மனிதனின் செலவு அடுத்த மனிதனின் வருமானமாகிறது. வருமானத்தின் மற்றப் பகுதி சேமிப்புக்காக ஒதுக்கப்படுகிறது. 't' காலத்தில் நுகர்வு எதிர்நோக்கும் வருமானத்தைப் (Expected Income) பொறுத்துள்ளது. அதாவது $Y_t = C_t + I_t$ ...(1)

$C_t =$ Expected, $Y_t$ ... (2)

$S_t = Y_t = C_t$ ... ... ......(3)

இச் சமன்பாடுகளில், $Y_t =$ 't' காலத்தில் பெறப்படும் வருமானம்: $C_t =$ 't' காலத்தின் நுகர்வு; $I_t =$ 't' காலத்தின்மூலதனம் $S_t =$ 't' காலத்தின் சேமிப்பு ஆகும்.

வருமானத்தின் ஒரு பகுதியாக ஒதுக்கப்படும் சேமிப்பு வாணிக நிறுவனங்களால் மூலதனமாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. நுகர்வு எதிர்நோக்கும் வருமானத்தைச் (Expected Income) சார்ந்துள்ளதே தவிர இறந்தகால வருமானத்தைப் பொறுத்ததன்று. அதாவது $C_t = f$ (expected $Y_t$) and not $Y_{t-1}$ or $Y_{t-2}$ இதில் வருமானத்திற்கும் நுகர்வுக்கும் இடைவெளியில்லாத உறவு (Lagless Relationship) காணப்படுகிறது. தனி மனிதனின் நுகர்வு எதிர் நோக்கும் வருமானத்தைச் சார்ந்து அமைவதுபோலச் சமூகத்தின் நுகர்வும் (Community's Consumption) தான் எதிர்நோக்கும் வருமானங்களைப் பொறுத்த மைகிறது.

கீன்சின் கோட்பாட்டில் திட்டமிட்ட நுகர்வு (Planned Consumption), உண்மை வருமானம் (Act ual Income) ஆகியன மாற்றமடைந்தாலும் அவை பாதிப்புக்குட்படா; ஏனெனில், கடன் வாங்கியோ சேமிப்புச் செலவைக் குறைத்தோ திட்டமிட்ட நுகர்வு பெறப்படுகிறது. அதேபோல் திட்டமிட்ட முதலீடும் (Planned Investment), உண்மை முதலீடும் (Actual Investment) சமமாகிறது. அதனால், எதிர்பார்க்கும் நுகர்வும், எதிர்பார்க்கும் முதலீடும் (Ex-ante Consumption and Ex-ante Investment) உண்மையான நுகர் வுக்கும், முதலீட்டிற்கும் (Ex-Post Consumption and Investment) சமமாகிறது. ஆனால், இதை அடிப்படை யாகக் கொண்டு எதிர்நோக்கும் வருமானமும் (Expected Income), பெறப்பட்ட வருமானமும் (Realized Income) சமமாக இருக்குமென்று கூறமுடியாது. ஏனெனில், வட்டியும் மூலதனத்தின் இறுதிநிலைத் திறனும் முதலீடு செய்பவருக்குச் (Investors) சாதக மாக இல்லையெனில் வருமானத்தின் நுகர்வு செல வைத் தவிரப் பிற மாறிலியான சேமிப்பானது (Savings) முதலீட்டிற்கு ஈடாகாது. திட்டமிட்ட முத லீடும் (Planned Investment), எதிர்பார்த்த சேமிப்பும் (Expected Saving) சமமானால் தவிர, உண்மை வரு மானமும் (Actual Income) எதிர்பார்த்த வருமான மும் (Expected Income) சமமாகா என்பது கீன்சின் கருத்தாகும்.

நுகர்வு, வருமானம் தவிரப் பிற காரணிகளைச் சார்ந்துள்ளபொழுது அவ்வுறவு 'நுகர்வுச் சார்பு (Consumption Function) எனப்படும். இந்த நுகர்வுச் சார்பானது தனிமனிதனுக்கும், அனைத்துச் சமூகத் திற்கும் தனித்தனியே அமைகிறது. நுகர்வு நாட் டத்தை வரையறுக்கும் காரணிகள் அகநிலைக் கார ணிகள் (Subjective Factors), புறநிலைக் காரணிகள் (Objective Factors) என இருவகைப்படுகின்றன.

அகநிலைக் காரணிகள் பெரும்பாலும் குறுங் காலத்தில் மாறுவதில்லை.அவை நிலையானவை. நுகர் வுச் சார்புக்கோட்டின் சாய்தளத்தையும், அதன் இருப் பிடத்தையும் இவை வரையறுக்கின்றன. அகநிலைக் காரணிகள் தனி மனிதனைக் குறிப்பிட்ட சில நோக் கங்களுக்காகச் செலவு செய்யவிடாமல் தடை செய் கின்றன. அவை: 1) எதிர்காலத்தில் ஏற்படும் தேவை களுக்காகச் சேமித்தல், 2) எதிர்பாராமல் நடை பெறும் செலவுகளுக்காக வைத்திருக்கும் கையிருப்பு, 3) வட்டியையும் சொத்துகளின் கூடுதல் மதிப்பையும் Appreciation) பெற விரும்புதல், 4) உயர்ந்த வாழ்க் கைத்தரத்தை விரும்புதல், 5) தன்னிச்சையாக வாழ வும், விரும்புவதை நிறைவேற்றவும் தேவையான ஆற்றலைப் பெறுதல், 6) ஊக நடவடிக்கைகளில் ஈடு படுதல் அல்லது ஊக வாணிகத்தை (Speculation) மேற்கொள்ளுதல், 7) பின் தலைமுறைகளுக்குச் சொத்து சேர்த்து வைத்தல், 8) செலவு செய்யவே விரும்பாத கருமியாக இருத்தல்.

மேற்கூறிய நோக்கங்களுக்கான காரணிகளைக் கீன்சு முறையே முன்னெச்சரிக்கை, நோக்கம், எதிர் காலம் உணர்தல், சிக்கனமாக இருத்தல், முன்னேற் றம், தன்னிச்சை, தொழில் செய்ய முனைதல், சிறப் புத் தகுதி, கருமித்தனம் எனக் குறிப்பிட்டார். முன் னெச்சரிக்கையாக இல்லாதிருத்தல், எதிர்காலத்தைப் பற்றி உணராதிருத்தல், ஆடம்பர வாழ்க்கை, தவறா கக் கணித்தல்,பொருளைத் தாராளமாக வாரி வழங் குதல், மற்றவர் தன்னை மதிக்கவேண்டும் என்பதற் காக ஊதாரித்தனமாகச் செலவு செய்தல் போன் றவை செலவுகளைக் கூடுதலாக்கத் தூண்டும் காரணி களாகும்.

தொழில் செய்யும் ஆவல், கையிருப்புப் பணம் மிகும் வருமானம், நிதிவகைச் சிக்கனம் போன்ற அக நிலைக் காரணிகள் மூலதனத் திரட்சியின் விளைவாக வாணிகக் கழகங்களுக்கும், அரசு நிறுவனங்களுக்கும் பொருந்துகின்றன. இக்காரணிகளைக் குறைவான வேகத்தினாலோ, மிகக் கடினமான சமூக மாற்றத் தினாலோ, நெடுங்காலப் பொருளாதார வளர்ச்சி யினாலோ மாற்ற இயலும். எனவே, நுகர்வுநாட்டம் புறநிலைக் காரணிகளால் ஏற்படும் மாற்றங்களைத் தான் சார்ந்திருக்கிறது.

புறநிலைக் காரணிகளான கூலி வீதத்தில் ஏற் படும் மாற்றங்கள், வருமானத்திற்கும் நிகர வருமா னத்திற்கும் இடையே உள்ள வேறுபாட்டினால் உண் டாகும் மாற்றங்கள், எதிர்பாராமல் தொழிலில் உண் டாகும் ஆதாயம் அல்லது இழப்பு, நிதிக் கொள்கை யில் ஏற்படும் மாற்றங்கள், நுகர்வுப் பண்டங்களின் அளிப்பு, விலை ஆகியவற்றின் எதிர்பார்ப்புகளில் ஏற்படும் மாற்றங்கள்,வட்டிவீதத்தில் ஏற்படும் மாற் றங்கள் ஆகியவற்றால் நுகர்வு பாதிக்கப்படுகிறது.

மேலும், நுகர்வுச் சார்பு மூன்று எடுகோள்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது. அவையாவன: 1) நுகர்வு, தொகு வருமானம் (Aggregate Income) உயரும்போது உயருகிறது. ஆனால், அவ்வுயர்வு வருமானம் உயர்ந்த அளவிற்கு அல்லாமல் அதற்குக் குறைவாக இருக்கிறது. 2) வருமான உயர்வு முழுவதும் நுகர்வுக்காகச் செலவழிக்கப்படுவதில்லை. மாறாக ஒரு பகுதி சேமிக்கப்படுகிறது. 3) வருமான உயர்வானது, நுகர்வையும் சேமிப்பையும் முன்பிருந்ததைவிட மிகச் செய்கிறது. குறுங்கால மாற்றங்களை விட நெடுங்கால மாற்றங்களே வருமானத்தின் மூலமும் பிற காரணிகளின் மூலமும் நுகர்வைப் பாதிக்கின்றன.

கீன்சின் நுகர்வுச் சார்பு தவறானதென்றும், நடைமுறைக்கு ஒவ்வாதது என்றும் பல பொருளாதார வல்லுநர்கள் குறை கூறியுள்ளனர். அக்குறைகளை நீக்கும்பொருட்டுப் பல புதிய நுகர்வுக் கோட்பாடுகள் வெளிவந்தன. அவை உண்மையான புள்ளி விவரங்களைச் சேகரித்து, ஆராய்ந்து, தெளிந்த முடிவுகளை அடிப்படையாகக் கொண்டவை.

**கீன்சின் பிற்காலக் கருத்துகள்:** செல்வமும், நிகழ்கால வருமானக் கோட்பாடும் (Wealth and Current Income Principle) மக்களின் உளவியல் பண்புகளை அடிப்படையாகக் கொண்டு குளோவர் புருசு, சான்சன் (Clower Bruce & Johnson) என்பவர்களால் விரிவாக்கப்பட்டன. மக்கள் தாங்கள் விரும்பும் நுகர்வையும் (Desired Consumption), விரும்பும் செல்வத்தையும் (Desired Wealth) கொண்டு வரவு செலவுப் பட்டியலை அமைக்கிறார்கள் என்று கூறுகிறார்கள்.

**செல்வமும் நுகர்வும்:** இசுபைரோவின் (Spiro) சொத்து, நுகர்வுக் கோட்பாட்டின்படி (Wealth and Consumption Principle) உண்மைச் செல்வத்துக்கும், விரும்பும் செல்வத்துக்கும் இடையில் ஏற்படும் மாறுபாட்டினால் தான் சேமிப்பு உண்டாகும்; இடைவெளி இல்லையானால் சேமிப்பு பூசியமாகும்; வருமானம் நிலையாக இருக்குமானால் விரும்பும் செல்வம் பெறப்படும். அதனால் நுகர்வு, நிகர வருமானத்திற்குச் (Net Income) சமமாகிறது என்ற கருத்து கூறப்படுகிறது.

தியூசன்பெரியின் (Duesenberry) தகவு-வருமானக் கோட்பாட்டின்படி (Relative-Income Principle) நுகர்வு, முழுமையாகப் பெறப்படும் (Absolute Income) வருமானத்தைப் பொறுத்ததன்று; மாறாக இறந்தகால வருமானத்தையோ, இறந்தகால நுகர்வையோ, மற்றவர்களின் நுகர்வையோ பொறுத்துள்ளது. வருமானம் உயரும்போது நுகர்வு எளிதாக உயர்த்தப்படுகிறது. வருமானம் குறையும்போது நுகர்வு குறைவதற்கு மாறாக மிகுதியாகச் செலவழித்தேனும்



முன்பு பெறப்பட்ட சம அளவு வாழ்க்கைத்தரம் மீண்டும் பெறப்படுகிறது. நெடுங்கால நுகர்வானது (Longrun Consumption) வருமானத்துடன் சம விகிதத்தில் அமையும். தொழிற் சுழற்சியினால் (Cyclica Fluctuations) ஏற்படும் வருமான மாற்றம், நீண்ட காலத்தில் சமவிகிதத்திற்கும் குறைவான நுகர்வு மாற்றத்தை (Less than proportionate change in consumption) ஏற்படுத்தும். நுகர்வுச் செலவு மிகும்போது ஏற்படும் எளிமை, செலவைக் குறைக்கும்போது கடினமாக இருக்கும். இத் தன்மையை 'இராச்செட் விளைவு' (Ratchet Effect) என்று குறிப்பிடுகின்றனர்.

வரைபடம் 2-இல் நீண்டகால வருமானமும், நுகர்வும் மிகுகின்றன. அவை புள்ளியிட்ட கோடுகளால் காட்டப்பட்டுள்ளன. இறுதிநிலை நுகர்வு நாட்டம் மாறாமல் காணப்படுகிறது. நுகர்வின் மாற்றம் மிகவும் நுண்ணியதாகக் காணப்படுவதால் நுகர்வுக்கும் வருமானத்திற்கும் இடையில் காணப்படும் இடைவெளியானது தொழிற்சுழற்சி கீழ்நோக்கும்போது குறையவும், மேல்நோக்கும்போது அதிகரிக்கவும் செய்கிறது. சராசரி நுகர்வு நாட்டம், சுழற்சி கீழ்நோக்கும்போது மிகுதியாகவும், மேல் நோக்கும்போது குறைவாகவும் உள்ளது. இக் கோட்பாட்டில் குறைந்த வருமான நாடுகளை எடுத்துக்கொண்டால் மற்றவர்களைப்போல் சம வாழ்க்கைத்தரத்தை அடையும்பொருட்டு (Demonstration) நுகர்வு மாற்றமடைகிறது. அதனால், நாளடைவில் நாட்டில் குறைந்த ஏற்றுமதியும், மிகுந்த இறக்குமதியும் வரையறுக்கப்பட்டு அயல்நாட்டுச் செலுத்துநிலை (Balance of Payments) பாதிக்கப்படுகிறது.

பிரீட்மெனின் நிலை வருமானக் கோட்பாட்டின்படி (Friedman's Permanent Income Principle) நுகர்வு, பெறப்படும் வருமானத்தைப் பொறுத்திருக்கிறது. வருமானம், நிலை வருமானமாகவும் Permanent Income), மாறும் வருமானமாகவும் (Transitory Income) பிரிக்கப்பட்டுள்ளது. நிலைவருமானம் மனித சக்தியிலிருந்தும், மனித சக்தி அல்லாத செல்வங்களிலிருந்தும் பெறப்படும் வருவாயைக் குறிக்கிறது. மாறும் வருமானம் எதிர்பாராது நிகழும் நிகழ்ச்சிகளினால் ஏற்படும் விளைவைக் குறிக்கிறது.

நுகர்வு, வருமானத்தைத் தவிரப் பிற காரணிகளையும் சார்ந்துள்ளது. நிலை வருமானக் கோட்பாட்டின் சமன்பாடு

1) $Y = Y_p + Y_t$

2) $C = C_p + C_t$

3) $C_p = K(i,w,u)\ Y_p$

இவைகளில் Y என்பது வருமானம்; $Y_p$- நிலை வருமானம்; $Y_t$- மாறும் வருமானம், C- நுகர்வு; $C_p$- நிலை நுகர்வு; $C_t$- மாறும் நுகர்வு. முதல் சமன்பாட்டின்படி மொத்த வருமானம் நிலை வருமானத்தையும், மாறும் வருமானத்தையும் கொண்டிருக்கிறது. இரண்டாம் சமன்பாட்டில் நுகர்வு, நிலையான நுகர்வையும் மாறும் நுகர்வையும் கொண்டிருக்கிறது. மூன்றாம் சமன்பாடு வருமானத்திற்கும், நுகர்வுக்கும் உள்ள உறவைக் குறிக்கிறது. வருமானத்திற்கும் நுகர்வுக்கும் ஏற்படும் விகிதம் மாறிலிகளைப் பின்பற்றியுள்ளது. மாறிலிகளாவன; 1-வட்டிவீதம்; w-சொத்துகளிலிருந்தும், திறமை மூலமும் பெறப்படும் வருமானம்; u-உடனடி நுகர்வு அல்லது மாறும் நுகர்வு. இம் மாறிலிகள் நிலை வருமானத்தால் பெருக்கப்பட்டு நிலை நுகர்வை வரையறுக்கின்றன.

கீன்சின் பிற்கால நுகர்வு ஆராய்ச்சிக் கருத்துகள் கோட்பாட்டிலும் நடைமுறையிலும் பல மாற்றங்களை அளித்துள்ளன. நுகர்வு வருமானம். செல்வம், வயது ஆகியவற்றோடு மட்டுமல்லாமல் பணியின் தன்மை (Occupation), பூகோள அமைப்பு (Geographical Situations) மக்களின் இனம் (Race) ஆகியவற்றையும் சார்ந்துள்ளது. எனவே, கீன்சின் பிற்கால நுகர்வுக் கருத்துகள் பல பொருளியல் ஆய்வுகளிலும், பொருளியற் கொள்கைகளிலும், நிதிக் கொள்கையிலும் (Fiscal Policy) பேரியற் பொருளாதாரக் கோட்பாடுகளிலும் இன்றியமையா இடத்தை வகிக்கின்றன. ஜி.வ.

**துணை நூல்கள்:**

**Dudley Dillard**, The Economics of John Maynard Keynes., Vikas Publishing House, New Delhi, 1979.

**James S., Duesenberry**, Income, Saving and the Consumer Behaviour, Harvard University Press, 1949.

**Kenneth K., Kurihara (Ed )** Post-Keynesian Economics, Rodgers University Press, 1959.

**Milton Friedman**, A Theory of Consumption Function, Princeton University Press, Princeton, 1957.

**நுகர்வோர் உளவியல்**: நுகர்வோரின் நடத்தையைப் பற்றி விளக்கும் உளவியல் துறை நுகர்வோர் உளவியல் (Consumer Psychology) எனப்படும். நுகர்வோர் நடத்தையில் இரு இன்றியமையாக் கூறுகள் உள்ளன. அவை; 1) இயற்கைத் தேவைகளை (Needs) நிறைவேற்றுதல், 2) மற்றத் தேவைகளை (Wants) நிறைவு செய்துகொள்ளுதல் என்பன

வாகும். இயற்கைத்தேவைகளுக்கும் பிறதேவைகளுக்கும் இடையே பெரிய வேறுபாடுகள் இல்லையென்றாலும் அவை இரண்டும் சிற்சில வகைகளில் வேறுபடுகின்றன. அவற்றைப் பற்றியும், நுகர்வோர் உளவியலிற் காணப்படும் நவீன கண்டுபிடிப்புகளுக்குக் காரணமாக இருக்கும் சில கோட்பாடுகளைப் பற்றியும், நுகர்வோர் நடத்தையில் நடத்தப்பெறும் ஆய்வினைப் பற்றியும் ஆராய்வது இன்றியமையாதது.

நுகர்வோர் நடத்தையின் ஆய்வில் முதல் கட்டத்தில் ஒருவர் என்ன, எப்போது, எங்கே வாங்கினார் என்பதைத் தெரிந்துகொண்ட பிறகு அவர் ஏன் அதை வாங்கினார் என்பதை அறிந்து கொள்ள முயலுவர். ஏன் என்ற வினாவிற்கு விடையளிக்க முயலும்போதுதான் சிக்கல் நிறைந்த பிற தேவைகளை ஆழ்ந்து ஆராய வேண்டியுள்ளது. ஒருவருக்குப் பசி எடுத்தால் உண்பது இயற்கை. ஆனால், அம்மனிதர் ஒரு குறிப்பிட்ட வகையான உணவைத்தான் உண்டார், ஏன் மற்ற உணவு வகைகளை உண்ணவில்லை என்று ஆராய முற்படும்போது மிகச்சிக்கலான பகுதிக்குச்செல்ல வேண்டியுள்ளது. நுகர்வோரின் நடத்தை இயற்கைத் தேவைகளைமட்டும் அடிப்படையாகக் கொண்டு அமைந்தால்அந் நடத்தைக்கு விளக்கம் அவ்வளவாகத் தேவைப்படாது. ஆனால், பிற தேவைகளைப் பொறுத்து நுகர்வோர் நடத்தை அமைந்தால் அதற்கு விளக்கங்கள் பெரிதும் தேவைப்படும். சார்சு கட்டோனா என்பவர் நுகர்வோர் நடத்தை, ஒருவரின் நிதி, உளத் தொடர்புடைய கூறுகள் ஆகியஇரண்டின்இடைவினையால் (Interaction) ஏற்படுவது என்று விளக்கிக் கூறியிருக்கிறார்.

நுகர்வோரின் மனநிலை (Attitude), விருப்பங்கள் (Preferences), விருப்பங்களை வெளிப்படுத்துதல் ஆகியவை பற்றி அறிந்துகொள்ளப் பொருளியல், மானிடவியல், உளவியல் ஆகிய மூன்றிலும் ஓரளவு அறிவுபெற்றிருத்தல் வேண்டும். நுகர்வோர்நடத்தை அனைத்தும் பெரும்பாலும் ஒருவரின் இதர தேவைகளைப் பற்றி விளக்கம் கேட்க, அவற்றை அவர் தரும்போது தெளிவின்றிக்காணப்படுகின்றன.

ஏன் என்ற வினா பெரும்பாலும் இயற்கைத் தேவைகளைவிடப் பிற தேவைகளைப் பற்றியே அமைகிறது. பழைய செருப்பு தேய்ந்தபிறகு ஒருவர் புதிய செருப்பு வாங்கினால் அவரது நடத்தை எளிதாகப் புரிகிறது.ஆனால், மற்றொருவர் பத்து இணை நல்ல செருப்புகள் இருந்தும் மற்றொரு இணை வாங்கினால் அதற்குக் காரணங்கள் பல இருக்கலாம். ஆசையின் காரணமாக வாங்கினாரே தவிர வாங்க வேண்டும் என்ற இயற்கைத் தேவை அவரிடம் இல்லை. இயற்கைத் தேவைகள் என்பன உடற்றொடர்புடையனவாகும். அதாவது பசி, வேட்கை, ஓய்வு முதலியன. ஆசை, மேலாண்மை, அடைவுமுதலியன உளத் தொடர்புடைய இதர தேவைகளாகும். ஆபிரகாம் மாசுலோ என்பவர் ஐந்து மனிதத் தேவைகளைப் படிவரிசையில் வேறுபடுத்திக்காட்டியுள்ளார். அவற்றில் இயற்கைத் தேவைகள் முதல் இதர தேவைகள் அனைத்தும்அடங்கியுள்ளன.ஆனால், அத்தகைய தேவை படிவரிசைகளில் இயற்கைத் தேவைகளும், மற்றத் தேவைகளும் ஒன்றையொன்று பின்னிப் பிணைந்துள்ளன. ஒருவர், தம் வேட்கையைத் தீர்த்துக்கொள்ள ஏதேனும் ஒரு நீராகாரம் அருந்தினால் மட்டும் போதாது. அந் நீராகாரம் சமூகத்திலுள்ள பெரும்பான்மையோரால் அருந்தப்படுகிறதா என்று பார்த்து அவர் அதை அருந்த நினைக்கலாம். நுகர்வோர் உளவியல் மேலெழுந்தவாரியாக நுகர்வோர் நடத்தையை வருணிக்காமல் அதைஆழமாகப்பகுத்து நுகர்வோரின் ஊக்கமூட்டியை (Consumer Motive) ஆராய்கிறது.

நுகர்வோர் உளவியலைப் பற்றி நன்கு தெரிந்து கொள்ளப் பல கோட்பாடுகள் உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை பின்வருவன:

**அ) முழுமைக் கோட்பாடு:** இக் கோட்பாட்டின் படி நுகர்வோர் நடத்தையை அவர் வாழும் பண்பாட்டு அமைப்பின் சார்பில் ஆராயவேண்டும். சில அடிப்படை வினாக்களை எழுப்பி அவரது நடத்தையை நன்கு பகுத்து ஒரு முழுமையான விடையைப் பெறவேண்டும் என்பது இக் கொள்கையாளர்களின் போக்கு.

**ஆ) பனிக்கட்டிக் கோட்பாடு:** ஒரு குறிப்பிட்ட நடத்தையைப் பற்றி வினவும் பொழுது அனைவரும் ஏதோ ஒரு காரணம் காட்டி விளக்குகின்றனர். எடுத்துக்காட்டாக, ஏன் மது குடிக்கிறீர்கள் எனக் கேட்டால் வேட்கையைத் தீர்த்துக்கொள்ள என்று சொல்வர்; அவ்வாறு வேட்கை தீர்த்துக்கொள்ள வேண்டுமெனில் தண்ணீரோ, தேநீரோ அருந்தினால் போதுமல்லவா? சொல்லப்படும் காரணம் நீரில் மிதக்கும் பனிக்கட்டியின் மேற்பகுதியைப் போன்றும், சொல்லப்படாது விட்டமற்றக்காரணங்கள் நீரினடியில் அமிழ்ந்திட்ட பனிக்கட்டியின் பிற பகுதிகளைப் போன்றும் ஒருவருக்கும் தெரியாமல் இருக்கின்றன. இதனைத்தான் (Ice Berg Principle) பனிக்கட்டிக் கோட்பாடு என்கின்றனர். பனிக்கட்டிக் கோட்பாட்டின்படி (Ice Berg Principle) மேல்மட்டத்தில் காணப்படும் நடத்தை ஒவ்வொன்றிற்கும் கீழேஏதோ நடந்துகொண்டிருக்கிறது; அதற்கு நேரடியாக 'ஏன்' என்ற வினாவை எழுப்பி அறிய முயற்சி செய்தால் கேட்கப்படுபவர் சில நேரங்களில் உண்மைக்குப் புறம்

பான, ஆனால், சமூகத்தினால் பாராட்டப்படும் விளக்கங்களைக் கொடுக்க நேரிடலாம். எனவே, நுகர்வோரின் நடத்தையைக் கூராய்வின் (Observation) அடிப்படையில் அறிந்துகொள்ள முற்படுதல் வேண்டும்.

**இ) விசை இயக்கக் கோட்பாடு:** மனித ஊக்க மூட்டிகள் ஒரே நிலையில் என்றும் இருப்பவை அல்ல. சமூக, பொருளாதார, உளத் தொடர்பு காரணிகள் எல்லாவித நடத்தைக்கும் காரணமாக உள்ளன. இப்போதைய நிலையை மட்டும் விசாரிக்கும் வினா நிரல் முறை (Questionnaire Method) பெரும்பாலும் சில இன்றியமையா விவரங்களை விட்டுவிடுவதால், வேறு முறையைக் கையாளவேண்டும் எனக் கருதுகின்றனர்.

**ஈ) கற்பனை உருவமும், குறியீட்டு முறையும்:** ஒவ்வொரு பொருளுக்குப் பின்பும் ஓர் எண்ணம் அல்லது குறியீடு உள்ளது. ஒரு பொருளுடைய விளம்பரத்திற்குப் பின்பு நுகர்வோர் ஒருவர், அப்பொருளைப் பற்றி என்ன நினைக்கிறார் என்பது முக்கியம். பொருளைப் பற்றிய விளம்பரத்தில் எதைப் பற்றி, யாரைப் பற்றி, எந்நாட்டைப் பற்றி என்பதுடன் அவ்விளம்பரம் செய்யும் விதமான இசை இனிமை (Melody) சந்தம் (Rhythm) முதலியவற்றையும் மக்கள் மிகவும் கவனிக்கின்றனர். இவற்றின்மூலம் மக்கள் அப் பொருளைப் பற்றிய கருத்தைத் தத்தம் உள்ளத்தில் உருவாக்குகின்றனர். ஒருவருக்குப்பிடித்தவர்களோ,பிடிக்காதவர்களோ அப் பொருளுடன் தொடர்பு கொண்டிருப்பதாக விளம்பரம் வந்தால் அதன்படி ஒருவர் கருத்து அமையும். எடுத்துக்காட்டாக, ஒரு தொலைக்காட்சிப் பெட்டியுடன் ஒருவர் விரும்பும் ஒரு விளையாட்டுவீரர் தொடர்பு கொண்டிருந்தால் அதேவகையான தொலைக்காட்சிப் பெட்டியை அவர் வாங்க விரும்புவார்.

மேற்கூறிய நான்கு கோட்பாடுகளும் நுகர்வோர் உளவியலில் காணப்படும் புதிய கருத்துகள் அல்லது கண்டுபிடிப்புகளுக்கு மிக இன்றியமையாதவை. இக் கோட்பாடுகளில் பயன்படுத்தப்படும் சொற்கள் மானிடஇயல் (Anthropology), ஆழஉளவியல் (Depth Psychology), எதிர்கால இயல் (Futurology), குறியீட்டியல் (Symbolism) ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்டவையாகும். இக் கோட்பாடுகள், நுகர்வோர் ஊக்கமூட்டிகள் யாவை என்பதைத் துல்லியமாகக் கண்டுபிடிக்கப் பெரிதும் பயன்படுகின்றன.

**நுகர்வோர் உளவியலில் நடத்தப் பெறும் ஆய்வு:** ஆய்வு பொதுவாக இரு வகைப்படும். அவை: 1) விளக்கவுரை ஆய்வு (Descriptive Research) 2) உட்பொருள் வெளிப்படுத்தாய்வு (Interpretive Research) என்பவை. விளக்கவுரை ஆய்வு, நுகர்வோர் நடத்தையை வருணிப்பதாகும். இதுவும் ஆய்வில் ஒரு சிறந்த வகையாக இருந்தாலும் அடிப்படை ஆய்வன்று. நுகர்வோரைஊக்கமூட்டவோ வயப்படுத்தவோ வேண்டுமெனின் நுகர்வோர் நடத்தையின் உட்பொருளைத் தெரிந்தாக வேண்டும். விசாரிக்கப்படுபவர்கள் வேண்டுமென்றே உண்மைக்குப் புறம்பான எதிருன்றல்களைத் (Responses) தந்தால் அவற்றை ஒதுக்கிவிட்டு உண்மையான எதிருன்றல்களை மட்டும் புள்ளியியல் பகுப்பிற்கு எடுத்துக்கொள்ள வேண்டும். அப்போது தான் தெளிவான, முரணற்ற நுகர்வோரின் உள்ளத்தைப் பற்றிய படம் கிடைக்கும்.

இப்போதைய நுகர்வோர் உளவியலில் நடத்தப் பெறும் ஆய்வு எப்படியென்றால், விசாரிக்கப்படுபவர் தாமே தெளிவான முறையில் தமது நுகர்வோர் நடத்தையை வருணிக்க வேண்டும். அப்போது தம்மைத்தாமே மூலமறிந்து (Self Diagnosis) கொள்ளாமல் நடப்பதை இன்னதென்று கூறவேண்டும். வினாக்களை விசாரிக்கப்படுபவர்மீது தூக்கி எறியாமல், அவரே ஒரு பொருளை வாங்க நினைத்ததிலிருந்து வாங்கி முடித்தவரை என்ன, என்ன நடந்தனவோ அவற்றையெல்லாம் ஆய்வாளரிடம் சொல்ல வேண்டும். அதைக்கொண்டு ஆய்வாளர் புள்ளியியல் பகுப்பு மூலம் நுகர்வோரின் உண்மையான நுகரும் ஊக்கமூட்டிகளை அறிவார். நுகர்வோர், அவர் தான் ஒருபொருளை வாங்குவது என்று முடிவு எடுத்ததாகச் சொன்னாலும் இப்போதைய ஆய்வுமுறையான தடையில் இயைபு முறையில் (Free Association) நாங்கள்' என்று எப்போதாவது சொல்ல நேரிட்டால் ஆய்வாளருக்கு, அப் பொருளை வாங்குவதென்று முடிவு எடுத்தது ஒருவர் அல்லர்; குறைந்தது இருவராவது இருக்கலாம் எனத் தெரியவரும். இந்தச் சமயத்தில் ஒருவர் பார்ப்பது பனிக்கட்டிக் கோட்பாட்டின் முறையாகும்.

நல்ல நுகர்வோர் உளவியல் ஆக்கபூர்வமான அறிவு நிரம்பிய புனை கொள்கையில் (Hypothesis) தொடங்கப்படும். இப் புனை கொள்கைகள் பண்பாட்டு அமைப்பிலிருந்தோ, ஆழ உளவியலிலிருந்தோ எதிர்கால இயலிலிருந்தோ எழும்பலாம். ஏன் நுகர்வோர் ஒரு குறிப்பிட்ட வகையான பொருளை (எடுத்துக்காட்டாகச்சவர்க்காரம்) வாங்குகிறார்கள் என்ற வினா ஒன்றே நியாயமான மற்றும் இன்றியமையாத நுகர்வோர் உளவியலின் கூறாக இருக்கலாம். இதற்கு அவர் குளிக்கும் பழக்க வழக்கத்திலிருந்து அவரது நடத்தையின் பகுப்பைத் தொடங்கலாம். ஒரு குறிப்பிட்ட சவர்க்காரம் என்பது உடலைத் தூய்மைப்படுத்துவது மட்டுமன்றி மற்றும் பல காரணங்கள் கொண்டும் இருக்கலாம். அந்தக் குறிப்பிட்ட சவர்க்காரத்தைத் தேர்ந்தெடுத்ததற்குப் பனிக்கட்டிக் கோட்பாட்டைப் பயன்படுத்தினால், ஒரு

வருடைய ஆன்மாவைப் பாவங்களிலிருந்து தூய்மைப் படுத்துவது என்று நுகர்வோர் நினைத்துக் குளிக்கலாம் என்பது தெரியவரும். இதைப்பற்றி ஓர் ஆய்வு மேலைநாட்டில் நடத்தப் பெற்றது. அவ்வாய்வில் நுகர்வோர், அவர்கள் குளிக்கும்போது பெறும் பட்டறிவுகளும், குளியலுடன் தொடர்புடைய மற்றவைகளும் எவ்வாறு அந்தக் குறிப்பிட்ட சவர்க்கார வகைக்குத் தொடர்புடையனவாகஇருக்கின்றன என்பது தெரியவந்தது.

விசை இயக்கக் கோட்பாடு, நுகர்வோர் நடத்தையில் காணும் சிறிய மாற்றங்களைக் கண்டுபிடிக்க ஆய்வாளருக்கு மிகவும் பயனுடையதாக இருக்கிறது.

நுகர்வோர் உளவியல் பல்துறைத் தொடர்புடையதாகையால் (Inter Disciplinary) ஆய்வாளர்கள், பல தரப்பட்ட ஆய்வுக் கருவிகளைப் பயன்படுத்துகின்றனர். குறிப்பாக மனப்பான்மை அளவுகோல்கள் (Attitude Scales), கருத்து அளவுகோல்கள் (Opinion Scales), வாக்கெடுக்கும் முறைகள் (Polling Techniques), சோதனைக்கூடக் கருவிகளான கணிப்பொறி, புகைப்படக் கருவிகள், அங்காடி அளவாய்வு (Marketing Survey) போன்றவை பெரிதும் பயன்படுத்தப் படுகின்றன.

நுகர்வோர் உளவியல் நாளுக்கு நாள் நன்கு வளர்ந்து கொண்டு வருவதால் பொருளாதார வல்லுநர்களும், அங்காடிப் பகுப்பாய்வாளர்களும் (Market Analysts) நுகர்வோர் உளவியலின் பயனைப் பெரிதும் உணர்ந்து தங்கள் துறைக்கு அவற்றைச் செயற்படுத்துகின்றனர். மேலும், நுகர்வோர் உளவியலில் பயன்படுத்தப்படும் கருத்துகள் பொருள் மிகுந்தனவாகவும்பகுத்தறிவு வாய்ந்தனவாகவும்இருப்பதால் அதன்எல்லை வளர்ந்துகொண்டும், எல்லோராலும் ஏற்கப்பட்டும் இருக்கிறது. எதிர் காலத்தில் இத்துறையின் வளர்ச்சியினால் உளப்பொருளாதாரம் (Psychological Economics) என்ற புதிய துறை உருவாவதற்குச்சார்சு கட்டோனா என்ற பொருளியல் மேதை அடிக்கல் நாட்டிச் சென்றுள்ளார். வ.தே.சா

**நுகர்வோர் கடன்:** நாட்டின் பொருளாதார உயர்வை வரையறுக்கும் முக்கிய கூறுகளுள் நுகர்வு (Consumption) இன்றியமையாததாகும். குறிப்பிடத்தக்க நுகர்வு இல்லாவிடில் நாட்டு வருமானம், உற்பத்தி, அளிப்பு, வேலைவாய்ப்பு ஆகியவை பாதிக்கப் படுகின்றன. எனவே, வங்கிகளும், பல நிதி நிறுவனங்களும் (Financial Corporations) நுகர்வோருக்குத் தவணை முறைக் கடன் (Instalment credit) கொடுத்துத் தேவையை நிறைவு செய்கின்றன.

நுகர்வோர் கடன் தேவையானது (Demand from consumer credit) முக்கியமாக மூன்று காரணிகளைச் சார்ந்துள்ளது. அவையாவன:

1. நுகர்வோரிடம் இருக்கும் உறுதிப் பொருள்களின் இருப்பு (Stock of durable goods). உறுதிப் பொருள்கள் மிகுதியாக இருந்தால் நுகர்வோர் கடன் தேவையானது குறைகிறது.
2. வேலை வாய்ப்புகளின் நிலையைச் (Level of employment) சார்ந்த நுகர்வோரின் வருமானம்.
3. கூடுதல் கடன் (Additional debt) பெற நுகர்வோரிடம் ஏற்படும் விருப்பு அல்லது வெறுப்பு; நுகர்வோர் ஏற்கெனவே கடன்பட்டுள்ள பொறுப்புகள்; எதிர்கால வருமானத்தில் எதிர்பார்க்கப்படும் செலவுகளும், செய்முறை விளைவுத் தாக்கங்களும்.

பெரும்பாலும் நுகர்வோர் கடன் (Consumer credit) வணிக வங்கிகளிடமிருந்து பெறப்படுகிறது. ஆனால், இத்தொழில் சிக்கலானதாக உள்ளது. நுகர்வோர் கடனைத் திருப்பிப் பெறுவது, அதனை மேலாண்மை செய்வது, கணக்குகளைச் சீராகப்பதிவு செய்வது போன்றவற்றிற்கு ஆகும் செலவு மிகுதியாகிறது. மேலும், அடிக்கடி மாறும் வட்டிவீதக் (Usury Laws) காரணத்தால் நுகர்வோர் கடனளிப்பு கி.பி. 18,19 – ஆம் நூற்றாண்டுகளில் தவிர்க்கப்பட்டது. ஆனால், பிறநிதி நிறுவனங்களின் செயல்களைப் பின்பற்றி மீண்டும் கடனளிப்புத் தொடங்கப் பட்டது.

உறுதிப் பொருள்களுக்கான நுகர்வோர் கடன், விற்பனை நிதி நிறுவனங்களிலிருந்து (Sales Finance Companies) பெறப்படுகிறது. கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் மோட்டார் வண்டி (Automobile), வீட்டிற்குத் தேவையான உறுதிப் பொருள்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்து விற்ற சில்லறை விற்பனையாளர்கள் இதன் அளிப்பை மிகுதிப்படுத்தியதன் மூலம், நுகர்வோர் கடன் பெருகத் தொடங்கியது.

நுகர்வோர் கடன், சட்ட விரோதமான வட்டித் தொழிலர் (Illegal Money Lenders), அடகு பிடிப்பவர் (Mortgage Dealers), பல வாணிகக் கடன் சங்கம் ஆகியவற்றிலிருந்து மக்களைப் பாதுகாக்கும் பொருட்டுச் சிறிய அளவுத் தொகையினை அளிக்கும் பல நுகர்வோர் நிதி நிறுவனங்கள் (Consumer Finance Companies) மூலம் செயற்படுகின்றது.

இத்தகைய நிதி நிறுவனங்களைத் தவிரப் பல கூட்டுறவு வங்கிகளும் நுகர்வோர் கடனளிப்பில் பங்கேற்கின்றன. கூட்டுறவு வங்கிகள் வேளாண்மைக் கடனுக்குத் தலையாய இடம் அளிக்கின்றன. அடுத்து, நகர எல்லைகளிலும், புறநகர் எல்லைகளிலும்

வாழும் பல்வேறு தொழிலில் ஈடுபட்டிருக்கும் பெரும் பான்மையான வகுப்பினர்களுக்குக்குறிப்பாக, மிதமான சிறிய வருவாய் உள்ளவர்களுக்குக் கடன் வசதியை அளிக்கின்றன. அத்தகைய மக்களுள் சிறுதொழில் முனைவோர், கை வினைஞர், வணிகர், அரசுப் பணி யாளர், நகராட்சி ஊழியர், மாத ஊதியம் பெறுபவர், சுயவேலையிலமர்ந்திருப்பவர் ஆகியோரும், தொழில், துறைத் தொழிலாளிகளும், ஆலைத் தொழிலாளர் களும், பிற மூலவளங்களின் மூலம் வருவாய் பெறு பவர்களும் அடங்குவர்.

நுகர்வோர் கடன் நடைமுறையில் கீழ்க்காணும் கட்டுப்பாடுகளுக்குட்பட்டு அளிக்கப்படுகிறது.

1. தொழில், வாணிகம், நிதி நிறுவனங்கள் ஆகியவற்றில் பணியாற்றுவோர், ஆசிரியர்கள் பேராசிரியர்கள், பொறியாளர்கள் வழக்குரைஞர்கள், மருத்துவர்கள், அரசுப் பணியாளர், தனியார் அரசு இணைந்த தொழில்துறைப் பணியாளர் (Semi-Government Institutions), நிலையான ஊதியம் பெறுபவர் ஆகியோர் நுகர்வோர் கடன் பெறத் தகுதியுடைய வராவர். இவர்கள் நிலைத்த பண்டங்களான (Durable goods) மின் விசிறிகள், இரும்பு அலமாரி, வானொலிப் பெட்டிகள், ஒலிப்பதிவு செய்யும் கருவி (Tape-recorders Stereo sets), குளிர்பதனச்சாதனங் கள், தொலைக்காட்சி (T.V.sets), உந்துவண்டி, அரைக் கும் இயந்திரங்கள், நீர் சூடுபடுத்துங்கருவி, பலவகைத் தொழிற் கருவிகள் ஆகியவற்றை வாங்குவதற்கான கடன் உதவியைப் பெறலாம்.

2. நுகர்வோர் கடன் அளிக்கும் வங்கி அமைந் திருக்கும் மண்டலத்தில் (Region) வாழ்பவரும், மாதம் உரூ. 300-குறைந்த வருமானம் பெறுபவர் களும் இக்கடன் பெறத் தகுதியுடையவராவர்.

3. கடன்பெறும் ஒவ்வொருவரும் உரூ. 1- கொடுத்துக் கூட்டுறவு நுகர்வோர் கடன் சங்கத்தின் உறுப்பினராக இருக்கவேண்டும்.

4. கடனாளி தனக்குப் பிற கூட்டுறவுக் கடன், சங்கங்களில் கடன் நிலுவை இல்லை (No Due Certificate) என்ற சான்றிதழை அளிக்கவேண்டும்.

5. நுகர்வோர் கடன் தீர்க்கப்படாதபோது, கூடுதல் கடன் (Additional loan) வழங்கப்படமாட் டாது. கடன் திருப்பி அளிப்பது வங்கியால் ஏற்றுக் கொள்ளப்படும். 'ஆ' (B, Class) வகுப்பைச் சார்ந்த இருவரால் பொறுப்புறுதி (Guarantee) அளிக்கப்பட வேண்டும். பொறுப்பாளியின் மாத வருமானம் கடனாளியின் வருமானத்தை விடக் குறைவாக இருக் கக்கூடாது. ஒருவர் ஒரே ஒரு கடனாளிக்குத்தான் பொறுப்புறுதி அளிக்கவேண்டும்.

6. பழைய பொருள்களோ, பயன்படுத்தப்பட்ட பொருள்களோ (Second-hand goods) வாங்கக் கடன் அளிக்கப்படமாட்டாது.

7. கொடுக்கப்படும் உயர்ந்த அளவு கடன் ரூ. 7,500/- ஆகும். ஒருவரின் மொத்த வருமானத்தைப் பொறுத்து இது அமைகிறது. ஒருவரின் மாத மொத்த வருமானத்தைப் போல் (Monthly gross income) நான்கு மடங்குக்கு மேல் கடன் அளிக்கப்பட மாட் டாது.

8. கடனை அதன் சம அளவுத் தொகையில் (Equal monthly instalments) 60 மாதங்களுக்கு மேற் படாமல் திருப்பித்தர வேண்டும். அதன் ஆண்டு வட்டி 15 விழுக்காடாகும்.

9. வாங்கும் உறுதிப் பொருளின் விலையில் 25 விழுக்காட்டை நுகர்வோர் வங்கிக்குக், கடன் வாங்கும் போது அளித்துவிட வேண்டும். பொருளின் விலை உரூ.7500-ஐயும் கடந்துவிட்டால் மிகுதியான தொகையை 25 விழுக்காட்டுடன் சேர்த்துக் கட்ட வேண்டும்.

10. கடனாளி கடனைச் செலவழிப்பதற்கான இசைவாணைக் கடிதத்தை (Authorisation letter) வங்கிக்கு முதலில் கொடுக்க வேண்டும்.

11. வணிகரிடமிருந்து மூல விலைப்பட்டியலை (Original invoice) வங்கி பெற்றுக்கொண்டு, பொரு ளின் முழுவிலைக்கேற்ற தொகையை, வணிகரின் பெயரில் காசோலையாக (Cheque) வங்கி அளிக் கிறது.

12. கடனாளி பொருள்களை வாங்கியவுடன், வணிகர் அதனை வங்கிக்கு அறிவிக்கவேண்டும்.

13. தவணைமுறை ஒப்பந்தங்களில் வாங்கப்படும் உந்து வண்டி போன்ற பொருள்கள் போக்குவரத்து உரிமைக்கான (Traffic License) உதவி காவல் துறைச்சட்ட அதிகாரங்களுக்கு உட்பட்டிருக்கவேண் டும்.

14. கடனுதவி கொண்டு வாங்கிய பொருளானது கடனாளியிடந்தான் இருக்க வேண்டும். வங்கிக்கு இதனை ஆய்வு செய்யும் உரிமை உண்டு.

15. கடன் பெற்ற அடுத்த மாதத்திலிருந்து திருப் பித் தரும் தொகை செலுத்தப்பட வேண்டும். மாதத் தின் 10-ஆம் நாளுக்குள் திருப்பியளிக்கப் படாவிட் டால் தவறுதல் வட்டியாக (Penal interest) 3 விழுக் காடு வீதம் ஆண்டுக்கு வசூலிக்கப்படுகிறது. தவறுதல் மீண்டும் நீடித்தால் கடனானது நீக்கம் செய்யப்பட்டு, கடன்மூலம் வாங்கிய பொருளை வங்கி எடுத்துக் கொள்கிறது.

16. கடனாளியின் அனைத்து விவரங்களும் அடங்கிய வருமானச் சான்றிதழை அவரின் தலைமை அதிகாரியிடமிருந்து (Employer) வங்கி பெறவேண்டும். சட்ட முறையான வணிகரிடமிருந்து, வாங்க வேண்டிய பொருள்களின் விலைப்பட்டியலை (Invoice) வங்கிக்குக் கடனாளி அனுப்பவேண்டும்.

**பொருளாதார ஏற்றத்தாழ்வு (Economic Fluctuation) நிலையில் நுகர்வோர் கடன்:** பொருளாதார வளர்ச்சியின் முக்கிய கூறுகளுள் 'நுகர்வு' முக்கியமானதாகக் காணப்பட்டாலும், அதற்குக் கொடுக்கும் கடனுதவியால், தேவை மிகும்போது பொருளாதாரச்சமநிலை சீர் குலைகிறது. அதாவது நுகர் பொருளின் தேவையானது நுகர்வோர் கடனால் எப்போது மிகுகின்றதோ அப்போது பிற உற்பத்தித் துறைகளில் இருக்கும் உற்பத்தி மூலப் பொருள்களும் உற்பத்தித் தொழிற்சாலைக்கு அனுப்பப்பட்டு உற்பத்தி பெருகி நாளடைவில் பணவீக்கம் (Inflation) உண்டாகும்.

பணவீக்க நிலையின்போது நுகர்வோர் கடனைக்கட்டுப்படுத்துதலும், தொழில் மந்தத்தின் போது (Depression) கடனை மிகச்செய்து நிலையான பொருளாதார நிலையைக் (Economic Stability) கொணர்வதும் மத்திய வங்கியின் (Central Bank) கொள்கையாகும். மத்திய வங்கி நடைமுறைக்காலச் சூழ்நிலைக்கேற்பக் கடனை உடனடியாகச் செலுத்தும் அளிப்பினையும் (Down payments), தவணைமுறையில் திருப்பி அளிக்கும் காலத்தையும் (Periods of repayment) மாற்றிப் பொருளாதாரச் சமநிலையை உருவாக்குகிறது. எடுத்துக்காட்டாக, ஓர் உந்துவண்டியின் மதிப்பு உரூ. 500/-எனவும், அதற்கான கடன் வாணிக வங்கியிலிருந்து (Commercial Banks) கிடைக்கிறது எனவும் கொண்டால் மத்தியவங்கி, உந்துவண்டியின் விலையில் குறைந்த அளவு உடனடி பணத்தொகை அளிப்பு 50 விழுக்காடாகவும், திருப்பி அளிக்கும் அதிகபட்சக்கால அளவு 10 மாதங்களாகவும் (Maximum periods of repayment) வரையறுக்கிறது. அதனால், நுகர்வோர் உரூ. 250/-ஐ உடனடி பணத் தொகை அளிப்பாக வங்கியில் கொடுத்துவிட்டு, மீதித்தொகையை உரூ. 25/-வீதம் 10 மாதங்களில் அளிக்கலாம். இந்தச் சலுகையினால் உந்து வண்டியின் தேவை அதிகரித்து. உந்து வண்டி உற்பத்தி செய்யும் தொழிற்சாலையும், அதனோடு தொடர்புகொண்ட இரப்பர் மேலுறை (Tyre), உள்ளுறை (Tube) போன்ற துணைப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளும் வளர்கின்றன. இருப்பினும் கடனின் அளவு அதிகரிப்பதால், பணஅளிப்பு மிகுந்து பணவீக்க நிலை உருவாகிறது. இதைச் சரிக்கட்டுவதற்காக மத்திய வங்கி குறைந்த அளவு உடனடி பணத்தொகை அளிப்பை (Minimum down payments) 70 விழுக்காடாகவும். திருப்பி அளிக்கும் காலத்தை மூன்று மாதமாகவும் மாற்றலாம். அதனால், நுகர்வோர் முதலில் உரூ.350/-ம் உரூ.50/-வீதம் மூன்று மாதங்களிலும் கொடுக்கவேண்டும். அதனால் நுகர்வோர் கடன் தேவையானது ஓரளவு குறையும். பொருளாதாரத் தொழில் மந்தம் காணப்பட்டால், உடனடி அளிப்புத் தொகையைக் குறைத்து, திருப்பி அளிக்கும் காலத்தை மிகுதிப்படுத்துவதன் மூலம் மந்த நிலையை மாற்றலாம்.

மேலும் நுகர்வோர் கடன் வட்டியைப் பொறுத்து (Interest-inelastic) மாறுவதில்லை. அது மற்றவர்களின் நிலையைப் பொறுத்தோ, மற்றவர்களிடம் உள்ள பொருள்களைப் பொறுத்தோ அமைகிறது. இது பொருளியலில் செய்முறைத்தாக்கம் எனக் (Demonstration Effect) குறிப்பிடப்படுகிறது. நுகர்வோர் கடன் தேவை மனிதனுக்கு மனிதன் மாறுபடுகிறது. இக்கடனால் பெறும் பொருள்களும் வேறுபடுகின்றன. ஜி.வ.

**துணை நூல்கள்:**


De Kock, M.H., Central Banking, Crosby Lockwood Staples, London, 1974.

Mitra, S., (Ed.) Money and Banking: Theory, Analysis and Policy, Random House, New York, 1970.


***நுகர்வோர் கூட்டுறவு*** என்பது நுகர்வோர் சங்கத்துக்குச் சொந்த மானதும், அதனாலேயே நிருவாகம் செய்யப்படுவதுமான ஒரு வாணிகத் தொழில் முயற்சியாகும். இவ்வகையான நுகர்வோர் கூட்டுறவு (Consumer co-operative) சில்லறை, மொத்த விற்பனையுடன் உற்பத்தி, நுகர்ச்சிப் பண்டங்களைப் பதப்படுத்துதல் போன்றவற்றையும் செய்கிறது.

இங்கிலாந்தில் கி.பி. 1844-இல் இராக்டேல் (Rochdale) என்னுமிடத்தில் 28 நெசவாளர்கள் ஒன்றுகூடித் தொடங்கிய நுகர்வோர் சங்க மூலந்தான் கூட்டுறவுச் சங்க வரலாறே உலகில் தொடங்கியது. அன்று முதல் மேலை நாடுகள் அனைத்திலும் கூட்டுறவு இயக்கம் வியக்கத் தக்க வகையில் வளர்ந்து வந்துள்ளது. உணவுப்பண்டம், மற்ற நுகர்ச்சிப் பொருள் அனைத்தின் விலைக் கட்டுப்பாட்டிலும் உலகப் போருக்குப் பின் இவ்வியக்கம் பெரிதும் உதவியது. இக் கூட்டுறவு இயக்கம் இங்கிலாந்து, சுவீடன், தென்மார்க்கு, பின்லாந்து போன்ற மேலை நாடுகளில் நல்ல வெற்றியைத் தந்துள்ளது. இந்நாடுகளில் தரமான பண்டங்களை வழங்குவது, நுகர்வோருக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தும் வகையில் போதிய கல்வியைப் புகட்டுவது, முற்றுரிமை, மிகையான ஆதாயம் ஆகியவற்றிலிருந்து நுகர்வோரைக் காப்பது, பண்டங்களின் விலையைக் குறைத்து விற்பதி

னால் நுகர்வோரின் உயர்ந்த வாழ்க்கைத்தரம், கூடுதலான சேமிப்புக்கு வழி செய்வது போன்ற வகைகளில் நுகர்வோர் கூட்டுறவு செயற்படுவதால் பொருளாதார நிலைப்பாட்டை ஏற்படுத்த உதவுகிறது. கிழக்கு ஐரோப்பிய நாடான சோவியத்து உருசியாவிலும், நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலை வளர்ச்சியில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

நுகர்வோர் கூட்டுறவு இயக்கம் இந்தியாவில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வளர்ச்சி பெற்றது. கடன் சுமையினால் பெரிதும் துன்புற்ற வேளாண்மையினரைக் காக்கும் பொருட்டுப் பல பரிந்துரைகளின் பேரில் கி.பி. 1904-இல் கூட்டுறவுக் கடன் சங்கச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இச் சட்டம், கடன் சங்கங்கள் அமைக்க மட்டுமே வகை செய்ததால் நுகர்வோர் கூட்டுறவு அமைக்கப் பெரு முயற்சி மேற்கொள்ளப் பட்டது. மேலும், கி.பி. 1904-ஆம் ஆண்டுக்கூட்டுறவுச் சட்டத்துக்கு முன்பே இந்தியாவில், முதன்முதல் சென்னை நகரில், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கம், 'திருவல்லிக்கேணி நகரக் கூட்டுறவு சங்கம்' (Triplicane Urban Co-operative Society) என்ற பெயரில் தொடங்கப்பட்டது. இச் சங்கம் இன்றும் சிறப்பாகச் சென்னை மக்களுக்குப் பணி புரிகிறது.இச்சங்கத்தைப் போல ஒருசில சங்கங்களே நன்முறையில் நடைபெற்று வருகின்றன. பின்பு 1905-இல் கோயம்புத்தூர், பெங்களூர் ஆகிய இடங்களிலும், 1907-இல் காசியிலும் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன.அவை பண்டங்களை விற்பதோடு வங்கிப் பணியையும் செய்தன. இந்தியக் கூட்டுறவுச் சட்டம் போலல்லாமல் 1905-ஆம் ஆண்டு மைசூர்க் கூட்டுறவுச் சட்டம் எல்லாவகையான கூட்டுறவுப் பணிகளுக்கும் வகை செய்தது.

அதைத் தொடர்ந்து 1912 – இல் வெளியிடப் பட்ட கூட்டுறவுச் சங்கச் சட்டம் உற்பத்தி, பகிர்வு போன்ற பல பணிகளைச் செய்யும் வகையில் திருத்தி அமைக்கப்பட்டது. நகர்ப்புற,கிராமப்புறச் சங்கங்கள் என்பதற்கு மாறாக இச்சட்டம், பொறுப்பு வரையறுக்கப்பட்ட சங்கம், வரையறுக்கப்படாத சங்கம் என அறிமுகப்படுத்தியது. அதையடுத்து 1919-இல் கொண்டுவரப்பட்ட மாண்ட்போர்டு சீர்திருத்தச் சட்டத்தின்படி கூட்டுறவு, மாநில அரசின் கட்டுப்பாட்டுக்கு அனுப்பப்பட்டது. அதைத் தொடர்ந்து கூட்டுறவு இயக்கம் அடுத்த 10 ஆண்டுகள் விரைவான வளர்ச்சி நிலையை அடைந்தது. பின்னர்ப் போர்க்காலங்களில் ஏற்பட்ட இன்னல்களினாலும், அதன்பின் ஏற்பட்ட விலை ஏற்றத்தினாலும் நுகர்வோர் கூட்டுறவின் முக்கியத்துவம் பலருக்குப் புரிந்தாலும் இக் கூட்டு இயக்கத்தில் குறிப்பிடத்தக்க வளர்ச்சி இல்லை. இவ்வியக்கம் மறுபடியும் இரண்டாம் உலகப் போர்க்காலத்தில் நல்ல வளர்ச்சியைக் கண்டது. பொதுமக்கள் எதிர்பாராத அளவுக்குக் கூட்டுறவு அமைக்க ஆர்வம் காட்டினர்.

மேலும், இந்தியாவில் 1951-இலிருந்து செயற்படுத்தப்பட்ட ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் இக் கூட்டுறவு இயக்கம் கணிசமான வளர்ச்சியைக் கொண்டு விளங்குகிறது. இவ்வியக்கத்தினால் கிராமப்புறம், நகர்ப்புறங்களிலுள்ள நுகர்வோர் நலன் காக்கப்படுவதோடு அவர்களுடைய பணத் தேவைகளும் இவ்வியக்கத்தின் கடன் வழங்குதல் மூலம் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

**பல்கலைக்கழகம், கல்லூரிகளில் நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகள்:** இந்திய உருபாய் மதிப்பு 1966 சூனில் குறைக்கப்பட்டதால் ஏற்பட்ட விலைவாசி உயர்வைத் தடுக்கப் பல்கலைக்கழகங்கள், கல்லூரிகளிலும்கூட நிறைய நுகர்வோர்கூட்டுறவு ஏற்படுத்த அரசு முன்வந்தது. அதன்மூலம் ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும், அதனோடு தொடர்புடைய கல்லூரிகளிலும் மாணவர்கள், ஆசிரியர்கள் ஆகியோரை உறுப்பினர்களாகக் கொண்டு பண்ட சாலைகள் தொடங்கப்பட்டன. இப் பண்டசாலைகள் மாணவர்களுக்குத் தேவையான பாடப் புத்தகங்கள், வெளிநாட்டுப் புத்தகங்கள், அறிவியல் கருவிகள், தேவையான நுகர்வோர் பண்டங்கள்விற்றல், உணவகம் நடத்துதல்போன்ற பல பணிகளைச் செய்கின்றன.

**விநியோகத்தில் கூட்டுறவின் பங்கு:** இந்திய அரசு 1974-இல் நுகர்பொருள் விநியோகமும், கூட்டுறவுத் துறையும் (Department of Civil Supplies and Co-operation) என்ற தனித் துறையை அமைத்து அதன்மூலம் நுகர்வோர்கள் பாதிக்கப்படாமல் இருக்க உணவு போன்ற தேவையான பண்டங்களை நுகர்வோர் கூட்டுறவு இயக்கம் மூலம் வழங்க முன்வந்தது. கட்டுப்பாட்டுத் துணிகளை மக்களுக்கு வழங்குவதிலும் நுகர்வோர் கூட்டுறவு ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது.

நுகர்வோர் கூட்டுறவு, மறைந்த இந்தியத் தலைமை அமைச்சர் இந்திராகாந்தியின் 20 அம்சத் திட்டத்தை நிறைவேற்றப் பெரும்பங்கு ஆற்றி வருகிறது. தேவையான பண்டம், தரமான கட்டுப்பாட்டுத் துணிகள் ஆகியவற்றை மாணவ விடுதிகள், அரசு அனுமதி பெற்ற விடுதிகள் போன்றவைகளுக்குச் சலுகை விலையில் விற்பனை செய்கிறது. இப் பணிகளைத் தொடர்ந்து ஒழுங்காக நுகர்வோர் கூட்டுறவு செயற்படுத்த மைய அரசு தேவையான நிதியை மாநில அரசுகளுக்கு வழங்குகிறது.

**மாநில நுகர்வோர் கூட்டுறவு இணையம்:** மாநிலங்களில் மாநிலக் கூட்டுறவு இணையங்கள் (State Co-operative Consumer Federation) சம்மு, காசுமீர், அசாம், நாகாலாந்து நீங்கலாக 14 மாநிலங்களில் அமைக்கப்பட்டன. இவைகளின் முக்கிய பணியே மாநில அளவிலான நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகளின் பணிகளை ஒருங்கிணைத்துத் தேசிய கூட்டுறவு இணையத்திலிருந்தும், மற்ற வழியிலும் நுகர்பொருளைப் பெற்று, அவற்றை நுகர்வோர் பண்டசாலைகளுக்கு அளிப்பதே ஆகும். மாநிலத் தேவைக் கேற்ப மொத்தக் கூட்டுறவுப் பண்டசாலைகள் நுகர்பொருள்களை நிறைய வாங்குகின்றன.

**சிறப்பு அங்காடிகள்:** இந்திய உரூபாய் மதிப்பு குறைக்கப்பட்டதுடன் 1966-இல் தில்லியில் ஒரு பெரிய சிறப்பு அங்காடி (Super Bazar) முதன்முதல் திறக்கப்பட்டது. இந்திய நுகர்வோர் கூட்டுறவு இயக்கத்தில் இது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். இத்திட்டம் பெரிய நகரங்களுக்காக மட்டும் முதலில் தொடங்கப்பட்டாலும், பின் 2 இலட்சத்துக்குக் குறைவான மக்கள்தொகை கொண்ட சில தெரிந்தெடுக்கப்பட்ட நகரங்களுக்கும் விரிவுபடுத்தப்பட்டது. பின் 1 இலட்சம் மக்கள்தொகை உள்ள இடத்திலும் தொடங்கலாம் என மாற்றப்பட்டுள்ளது. இதனுடைய எண்ணிக்கை ஏழாம் திட்டக்காலத்தின் இறுதியில் 430க்கு உயர்ந்துள்ளது.

இச் சிறப்பங்காடிகள் விலையைக் கட்டுப்படுத்தும் ஒரு சிறந்த கருவியாகவும், நுகர்பொருளை நியாயமாக வழங்கும் நிலையமாகவும் பணியாற்றுகின்றன. நுகர்பொருளின் விலையைக் கட்டுப்படுத்துவதில் இவை விலையைத் தீர்மானிப்பவை (Settlers) யாகவும், அங்காடியின் தலைவராகவும் (Market Leader) செயற்படுகின்றன. சமுதாயத்தில் வலுக்குன்றியவர்களும் தங்களின் குறைந்த வருமானத்திலேயே பண்டங்களைப் பெறுகின்ற வகையில் சிறப்பங்காடிகள் எண்ணெய், சீப்பு, துணி, காய்கறிகள், மீன், இறைச்சி, முட்டை, மருந்து, காலணி, வானொலிப் பெட்டி, தட்டுமுட்டுப் பொருள், அடுப்பு, சமையல் வாயு போன்ற அனைத்து நுகர்பொருளையும் நுகர்வோருக்கு நியாய விலையில் வழங்குகின்றன. வசதிக்காகப் பண்டங்களைச் சுத்தம் செய்து பையிலிட்டு, விலை குறித்துச் சுயசேவைப்பகுதி போன்றவற்றை ஏற்படுத்தி விற்கின்றன.

இவ்வியக்கத்தின் உறுப்பினர்களுக்கு உதவும் பொருட்டு உறுப்பினர்களுக்குப் பண்டங்களை வாங்கும் போது ஒரு கழிவு (Discount) தரப்படுகிறது. அரிய பண்டங்களை உறுப்பினர்களுக்குத் தருவதில் சிறப்புச் சலுகை, உறுப்பினர்களின் திருப்பித் தரும் திறனறிந்து கடனுக்குப் பொருள்களை அளித்தல் போன்ற முறைகளும் செயற்பாட்டில் இருந்து வருகின்றன. பணியாளர்கள் பணியாற்றும் நிறுவனம் மூலம் கடன் தந்து அக்கடன் தொகை ஊதியத்தில் மாதந்தோறும் பிடித்துக்கொள்ளப்படுகிறது.

**கொள்முதல்:** கூட்டுறவுப் பண்டசாலைகளுக்குத் தேவைப்படும் பொருள்களையெல்லாம் கொள்முதல் செய்து விநியோகிப்பதற்கு என்று மத்திய அரசின் கூட்டுறவுத் துறை, மத்திய கொள்முதல், விநியோக நிறுவனம் (Central Purchase & Supply Organisation) ஒன்றை அண்மையில் அமைத்துள்ளது. மாநில மட்டத்திலும், தேசிய மட்டத்திலும் அமைக்கப்பட்டுள்ள கூட்டமைப்புச் சங்கங்கள் தங்களுக்கு வேண்டிய பொருள்களை இந் நிறுவனத்திடமிருந்து கொள்முதல் செய்து கொள்கின்றன.

மேலும், இந்தியாவிலுள்ள அனைத்துத் தொழில் நிறுவனங்களுமே கூட்டுறவுப் பண்டசாலைகளுக்குத் தம் பொருள்களை வழங்க ஒத்துக்கொண்டுள்ளன. பருத்தித் துணி நெசவாலைகள் தம் உற்பத்தியில் 10 விழுக்காட்டைக் கூட்டுறவுப் பண்டசாலைகளுக்கென்று ஒதுக்கியுள்ளன. அதுபோலவே கம்பளி, பின்னல் துணிகளிலும் கூட்டுறவுப் பண்டசாலைகளுக்கென ஓரளவு ஒதுக்கப்பட்டுள்ளது. காப்பி வாரியமும் (Coffee Board) முக்கிய தேயிலைத் தொழிலதிபர்களும் கூட்டுறவுப் பண்டசாலைகளுக்கு விற்கும்போது மலிவாக விற்க ஒத்துக்கொண்டுள்ளனர். மத்திய அரசின் வருவாய்க் குழுவும் தாம் பறிமுதல் செய்யும் கடத்தல் பொருள்களை இப் பண்டசாலைகளுக்கே வழங்குவதென முடிவு செய்துள்ளது. மேலும், மொத்தப் பண்டசாலைகளுக்கு இறக்குமதி அனுமதியும் வழங்கப்பட்டது. எனவே, கூட்டுறவுப் பண்டசாலைகள் செழிப்புடன் வளர்ந்து சமுதாயத்திற்கு நற்பணிகளைச் செய்ய நிறைய வாய்ப்புண்டு.

**விலைக் கொள்கை:** விலைக் கொள்கையில் பெருகி வரும் முற்றுரிமை விலையைக் கட்டுப்படுத்தச் சுவீடன் போன்ற நாட்டில் கூட்டுறவு நுகர்வோர் இயக்கம் 'தீவிர விலைக்கொள்கை' (Active Price Policy) என்ற ஒன்றைப் பின்பற்றுகிறது. பண்டங்களை வாங்கும் நுகர்வோர் கூட்டுறவின் உறுப்பினர்களுக்கு ஆதாய ஈவு என்ற நேரடியான பொருளாதாரப் பலனை வழங்குவதற்குப் பதிலாகப் பண்டங்களின் விலையைச் சற்றே குறைத்து விற்பது 'தீவிர விலைக் கொள்கை' எனப்படுகிறது. அதன்மூலம் நுகர்வோர் பொருளாதார நன்மையைப் பெறுகிறார்கள். இவ்வாறு கூட்டுறவு அங்காடியின் நடப்பு விலையைவிடச்

சற்றே குறைத்துப் பண்டங்களை விற்பதால் சுவீடனில் கூட்டுறவு இயக்கம் வெற்றி கண்டுள்ளது. இந்தியாவும் இப்பொழுது தீவிர விலைக் கொள்கையைக் கடைப்பிடிக்கிறது.

மேலும், இக் கூட்டுறவுப் பண்டசாலைகள் கலப்படம், எடைக்குறைவு போன்ற தவறுகளைச் செய்வதில்லை. நுகர்வோர் கூட்டுறவு தீவிர விலைக் கொள்கையைப் பின்பற்றுவதிலும் சில தொல்லைகள் ஏற்படுகின்றன. தனியாரும், கூட்டுறவு விலையை விடக் குறைந்த விலைக்குப் பொருள்களை விற்பதினால் கூட்டுறவை இழப்புக் குள்ளாக்குகின்றனர். மாநில அரசுகள், கட்டுப்பாட்டுப் பொருள்களான சர்க்கரை, உணவு தானியம் முதலியவற்றை விநியோகம் செய்யும் விற்பனை நிலையங்களுக்கு அனுமதிக்கப்பட்ட ஆதாயமாகிய 2 முதல் 3 விழுக்காடு என்பது மிகவும் குறைவே. இந்தியக் கூட்டுறவு உண்மையான கூட்டுறவாகச் செற்பட வேண்டுமானால் அது தங்களுக்குரிய வணிக மூலதனத்தைப் பெருக்க வேண்டும். அது சிறிது ஆதாயம் பெற வேண்டும். அதற்காக அது தேவையான பண்டங்களின் விலையை மிகவும் குறைக்கலாம்; ஆனால், மற்றப் பண்டங்களின் விலையைக் கூட்டி இழப்பை ஈடு செய்யலாம்.

மேலும், விலை நிருணயிப்பதில் வேறுபல பொருளாதாரக் காரணிகளும் செயற்படுவதால் இவ்வியக்கம் மட்டும் பொருள்களின் விலையைக் கட்டுப்படுத்த முடியாது. இந்நிலையில், இந்தியாவில் தரமான பண்டங்களையும், பணிகளையும் கூட்டுறவுச் சிறப்பங்காடிகள் அளிப்பதால் வரி ஏய்ப்புக் குறையும்; அரிய பண்டங்கள் கிடைக்கும்; பதுக்கல் மறையும். தேவையான பண்டங்கள் இவற்றின் மூலம் விநியோகிக்கப்படுவதால் விலை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தப்படவும் முடிகிறது.

கூட்டுறவு இயக்கம் இந்தியாவில் வளர்ந்த நிலையில் இருந்தபோதிலும் அதன் செயற்பாடு சிறப்புடையதாக இல்லை. நுகர்வோர் பண்டசாலைகளின் அமைப்பு, செயல், நிருவாகம் அனைத்திலும் திறமைக் குறைவு காணப்படுவதே இதற்குக் காரணமாகும். தவிர, சில மாநிலங்களின் இரண்டுங்கெட்ட நிலை, சரியான மேற்பார்வையின்மை, தணிக்கையின்மை, குறுகிய செயற்பாடு, பலமில்லா அமைப்பு முறை, நிதிப் பற்றாக்குறை, திறமையற்ற நிருவாகம், உறுப்பினர்களின் உண்மையற்ற நிலை, சிறந்த தலைமை இன்மை, நிருவாகச் செலவு கூடுதல், மற்றக் கூட்டுறவுகளுடன் இணக்கமற்ற நிலை, தொழிலாளர்களின் நேர்மையற்ற நிலை, இருப்பு ஒழுங்காகக் கணக்கிடாமை, தவறுதலான விலை, கொள்முதல் கொள்கை, குறைந்த அளவு ஆதாயம், வேளாண்மைப் பண்டங்களின் விலை வேறுபாடு போன்றவை இவ்வியக்கத்தின் குறைந்த செயற்பாடுகளுக்கான காரணங்களுள் குறிப்பிடத்தக்கவையாகும். வி.ரு.

**துணை நூல்கள்:**

**Bedi, R.D.**, Theory, History and Practice of Co-operation, Loyal Book Depot, Meerut, 1974.

**Goyal, S.K.**, Consumers Co-operative Movement in India, Meenakshi Prakasam, Meerut, 1972.

**நுகர்வோர் பாதுகாப்பு**: இன்று, பல நிலைகளில் நுகர்வோர்கள் ஏமாற்றப்படுவதால் நுகர்வோர் பாதுகாப்பு இயக்கம் என ஒன்று உலகெங்கும் வளர்ந்துள்ளது. நுகர்வோர், அதாவது மக்கள் அனைவரும், தங்கள் பண்டங்களை விற்பவர்களால் சுரண்டப்படுவதை உணரத் தொடங்கி விட்டனர். மிகக் கடுமையாக உயர்ந்துவரும் பண்ட விலை, தரமில்லாத பொருள், சரியான செய்தியின்மை, பணியாள்களின் இரண்டுங்கெட்ட மனநிறைவற்ற செயல், பாதுகாப்பற்ற பண்டங்கள் போன்ற பல நிகழ்ச்சிகள் நுகர்வோர் பாதுகாப்பு இயக்கம் வளரத் தூண்டின. இந் நுகர்வோர் பாதுகாப்பு (Consumer Protection) பற்றிப் பலரால் பல விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

நுகர்வோர், பண்டம் பற்றிய குறை, இழப்பு, மனநிறைவின்மை போன்றவற்றைக் களைந்து வாழ்க்கைத் தரத்தை உயர்த்த நுகர்வோர் ஒருங்கிணைந்து மேற் கொள்ளும் ஒழுங்கான முயற்சியே 'நுகர்வோர் பாதுகாப்பு' எனப்படுகிறது. மேலும், 'விரிந்த அரசு நடவடிக்கைகள், வாணிகங்கள், சுதந்திர அமைப்புகள் போன்றவை மூலம் நுகர்வோர் உரிமைக்கு ஊறு ஏற்படும்போது தனியாளினைத் 1) தெளிவான குறைகளிலிருந்து காத்தல், 2) சரியான விவரங்களைப் பெற வசதியளித்தல், 3) நுகர்வோரை நுகர்வோரிடமிருந்தும், மற்றவர்களிடமிருந்தும் காத்தல் போன்ற பல செயல்களைத் தெரியப் படுத்துவதே நுகர்வோர் பாதுகாப்பாகும்' எனவும் விளக்கப்படுகிறது.

இவ் விளக்கங்கள் முழுமையானவையல்ல. நுகர்வோர் பாதுகாப்பு என்பது, அவரது உடல் நலனைக் கெடுக்கும்பண்டம்,பணிகளிலிருந்து காத்தல், ஏமாற்று வாணிக முறை, சூழ்நிலைச் சீர்கேடு, முற்றுரிமை வாணிகச் சூழல் போன்ற செயல்களிலிருந்து காத்தல் முதலியவற்றைக் குறிக்கிறது. இந்நுகர்வோர் பாதுகாப்பு, நுகர்வோர் தொடர்புடையது என்று

நிலையில் அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளில் நுகர்வோர் விழிப்போடு உள்ளனர். ஆனால், இந்தியா போன்ற வளரும் நாடுகளில் நுகர்வோர் பாதுகாப்பு வருந்துதற்குரிய நிலையிலுள்ளது.

நுகர்வோர் பாதுகாப்புக் குறித்த அரசின் விழிப்புணர்ச்சியினை கி.மு. 1950-இல் பாபிலோனிய அரசன் அமுராபி (Hammurabi) தயாரித்த சட்டங்கள் மூலம் அறியமுடிகிறது. அதில் ஒரு பிரிவு எடைக் குறைவு, தரமில்லாத, ஆபத்தான, சிலமுறைகேடான வாணிக நடவடிக்கைகள் ஆகியவற்றின் மூலம் நுகர்வோர் நலம் பாதிக்கப்படுமானால் அரசு அவர்களைக் காக்கும் எனக் குறிப்பிடுகிறது.

இதன் பின்னர் நுகர்வோர் பாதுகாப்புக் குறித்த எண்ணம் முதலில்அமெரிக்காவில் 20-ஆம்நூற்றாண்டில் தோன்றியது. எழுத்தாளர்கள் சில வாணிக நடவடிக்கைகளை இக்காலத்தில் கடுமையாகத் தாக்கி எழுதினர். இது மக்களிடம் ஒரு பெரிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது. அதன் விளைவாக அமெரிக்க நாடாளுமன்றம் 'தூய உணவு மற்றும் மருந்து நிருவாகச் சட்டத்தை' (Pure Food and Drugs Administration Act) இயற்றியது. அதன் பின்னர் இந்த இயக்கம் அமெரிக்காவில் 1960க்குப் பின் வளரத் தொடங்கியது. இவ்வியக்கத்திற்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர் இரால்ப்பு நடார் (Ralph Nadar) என்று குறிப்பிடப்படுகிறார். மேலும், சில தனி ஆள்களும், குழுக்களும் அதன் வெற்றிக்குக் காரணமாக அமைந்தனர். அமெரிக்காவின் குடியரசுத்தலைவராக இருந்த சான். எப். கென்னடி (John F. Kennedy) 1962-இல் நுகர்வோரின் அடிப்படை உரிமைகளை வெளியிட்டார். சரியான விவரங்களை அறியும் உரிமை (Right to be informed),பாதுகாப்புரிமை(Right to be safe),தேவையானவற்றைத் தெரிந்தெடுக்கும் உரிமை (Right to be able to choose), வழக்குரைக்கும் உரிமை (Right to be heard), குறைபாடுடைய பண்டங்களைக் குறித்து வாங்கியோர் உற்பத்தியாளர் மேல் வழக்குத் தொடர்ந்து குறை தீரும் உரிமை (Right to redress)ஆகியன அவ்வுரிமைகளாகும்.

இன்று அமெரிக்காவில் பல வாணிக நிறுவனங்கள், நுகர்வோர் பாதுகாப்புச் செயல்களில் ஈடுபட்டுள்ளன. அவை குறிப்பாக நுகர்வோர் கல்வித் திட்டம், வாங்கப்படும் பொருள்கள் பற்றித் துண்டு வெளியீடு, விளம்பரம், சுவரொட்டிகள், சிறு புத்தகங்கள், வீட்டில் பயன்படுத்தும் வகையில்படங்கள், நுகர்வோர் குறை தீர்க்கும் துறை, நுகர்வோர் சிக்கல் பற்றி ஆய்ந்து அடையாளங் காணுதல், உற்பத்தியைத் தொடங்குமுன்னர்ச்சமுதாயத் தணிக்கை மேற்கொள்ளுதல் போன்ற பலவற்றைச் செய்கின்றன.

இப்போது அமெரிக்காவில் நுகர்வோர் பாதுகாப்புக்கென 25 சட்டங்கள் உள்ளன. நுகர்வோரைக் காக்க அஞ்சலகப் பொருள்கள், உணவு, மருந்து, ஒப்பனைப் பொருள்கள், மரப் பண்டங்கள், மென்மயிர்ப் பொருள்கள், இயந்திரப் பொருள்கள், நூலிழை, பொம்மைகள், கோழிஇறைச்சி, புகைக்கும் பொருள் ஆகியவை பற்றிய சட்டங்கள் இயற்றப்பட்டன. பொருள்கள் விற்கப்பட்ட பின்னரும் தரமுடையவாக இருக்கவும் குழந்தை நலம் காக்கவும் வாகனங்களிலிருந்து காக்கவும் ஒளியினால் ஏற்படும் தீமைகளிலிருந்து காக்கவுமாகச் சில சட்டங்கள் வந்துள்ளன.

உற்பத்தியாளர்கள் கவனக்குறைவால் குறைபாடுடைய பண்டங்கள் விற்கப்பட்டு நுகர்வோர் பாதிப்புக்குள்ளானால் அப்பாதிப்புக்கு உற்பத்தியாளரிடமிருந்து நட்ட ஈடு பெற இத்தாலி, நெதர்லாந்து, செருமானியக் குடியரசு, இங்கிலாந்து, அயர்லாந்து, தென்மார்க்குப் போன்ற நாடுகளில் உரிய சட்டம் உள்ளது. இது மேலும் இப்போது வளர்ந்துள்ளது. சப்பானில் 1950-இல் ஒரு நுகர்வோர் புரட்சி (Consumer Revolution) ஏற்பட்டது. இச்செயல், அந்நாட்டுத் திட்டத்தில் நுகர்வோர் நலத்தை இடம் பெறச் செய்தது.

இங்கிலாந்தில் நுகர்வோர்கள் நலத்தைத் தொடக்கத்தில் கிறித்தவக் கோயில், சேவை நிறுவனம் ஆகியவற்றோடு பொதுச் சட்டமும் (Common Law) காத்தது. விடுதியில் ஏற்படும் இழப்புகளுக்கு விடுதிக் காப்பாளரே பொறுப்பேற்க வேண்டும் என்ற நிலை இருந்ததே இதற்கு எடுத்துக்காட்டாகும். இதைஅடுத்து 1960-க்குப் பின்னரே நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம் இங்கிலாந்தில் வலுப்பெற்றது. இங்கிலாந்தில் நுகர்வோரிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியவர் திரு.சேம்சு டை (James Tye) என்பவராவார். இவர்தம் முயற்சியால் கார் ஓட்டுநர், தோல் பட்டை (Belt) அணியச் சட்டம் வந்தது. தூய வாணிகச் சட்டம் 1973-இலும், முறையற்ற ஒப்பந்த உடன்படிக்கைச் சட்டம் 1977-இலும் உருவாயின.

இவ்வாறாக மேலை நாடுகளில் பொருளியல் கோட்பாட்டின் இருண்ட காலம் எனக் குறிப்பிடப்பட்ட 'நுகர்வோர் பாதுகாப்பு' ஏறத்தாழ அனைத்து நாடுகளிலும் 1960க்குப் பின் ஒளி பெறத் தொடங்கி விட்டது. குறிப்பாக,அமெரிக்காவில் இரால்ப்புநடார், இளைய பிராங்குபார்ட்டு, கனடாவில் சேக் பிளட்சர், இங்கிலாந்தில் சேம்சு டை, பினாங்கில் டாக்டர்

இராபர்ட்டு ஆர்.கேர்டன் போன்ற பலர் முயற்சியால் இப்பொழுது ஒளி பெற்று விளங்குகிறது.

இந்தியாவிலும் சந்திரகுப்தர், அசோகர் காலத்தில் நுகர்வோருக்குப் பாதுகாப்பு இருந்ததாக வரலாறு கூறுகிறது. அவர்கள் காலத்தில் இருந்த தரும சமாசம், சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினருக்கும் சம பாதுகாப்பு வழங்கியதாக அறியமுடிகிறது.

**இந்தியஅரசுச் சட்டமும் கட்டுப்பாடும்**:இப்பொழுது நுகர்வோர் நலன் காக்கும் பொருட்டு இந்தியாவில் பல சட்டங்கள் இயற்றப்பட்டன. அவற்றுள், உணவுக் கலப்படத் தடைச் சட்டம் 1954, மருந்துகள், அழகு சாதனங்கள் சட்டம் 1940, இன்றியமையாதபொருள்கள் சட்டம் 1955, எடைகள் அளவைகள் சட்டம் 1956, முற்றுரிமை, வாணிக நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் சட்டம் 1969, பொதிந்த பொருள்கள் ஆணை 1975,(பொதிந்த பொருள்களைத் தயார் செய்வோர் பொட்டணத்தின் மேல் அளவு, எடை, விலை, தயாரித்த நாள், பயன்படுத்தக் கடைசி நாள் உற்பத்தியாளர் பெயர் போன்றவற்றைக் குறிப்பது மூலம், நுகர்வோர் தங்களுக்குத் தேவையான பொருளைத் தெரிந்தெடுக்கஉதவும்.)முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

**நுகர்வோர் அமைப்பு**: வலுவான நுகர்வோர் இயக்கம் மூலம் நுகர்வோர் தங்களைக் காத்துக் கொள்ளமுடியும். இதற்கு நுகர்வோர் கல்வியும் துணை செய்கிறது. இந்தியாவில் உள்ள நுகர்வோர் இயக்கம், நிதிப் பற்றாக்குறையால் பாதிக்கப்படுகிறது. அதனாலேயே நுகர்வோர் கல்வி, பண்டங்களின் எடை போன்றவற்றைச் சோதிக்கும் வசதியை வழங்க இயலவில்லை. இங்கிலாந்தில் ஒவ்வொரு நுகர்வோரையும் காக்கும் வகையில் தேசிய நுகர்வோர் குழுவிற்குப் போதிய நிதியுதவி வழங்கப்படுகிறது. அது போன்ற நிலை இந்தியாவில் இல்லாததால் இவ்வியக்கம் வலுப்பெறுவது ஒரு தொடர்கதையாக இருக்கிறது.

மேலும், இந்தியாவில் நுகர்வோர் இயக்கமானது பம்பாய், தில்லி, சென்னை, கல்கத்தா போன்ற பெருநகரங்களில்மட்டுமே உள்ளது. அதுவும் வசதிபடைத்த நுகர்வோரிடையே மட்டுந்தான் உள்ளது. பெரும்பாலான மக்கள் இவ்வியக்கம், தங்கள் நலன்காக்க உள்ளதென்பதை அறியாமல் உள்ளனர். எனவே, உணவு மற்றும் நுகர்பொருள் வழங்குதுறை அமைச்சர் 1987-இல் நாடாளுமன்றத்தில் நுகர்வோர் பாதுகாப்பை 7-ஆம் திட்டத்தில் சேர்ப்பதாகக் கூறித் திட்டக்குழுவிடம் அதற்குரிய திட்டங்களை வகுத்துச் செயலைக் கணக்கிடுமாறு கூறினார். பின்னர் மாநில முதல் அமைச்சர்களை நுகர்வோர் குறை தீர்க்க மாவட்ட, மாநில அளவிலான பல குழுக்களை ஏற்படுத்தச் செய்தார். நுகர்வோர் பாதுகாபபுக் குழு ஏப்பிரல் 15 முதல் நடைமுறைக்கு வருவதாகக் கூறினார். நுகர்வோர் பாதுகாப்புக்கென மகளிரிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த மாதர் சங்கமும் தோற்றுவிக்கப்பட்டது.

இந்திய நுகர்வோர் அமைப்பின் இணையம் (Indian Federation of Consumer Organisation) அன்றாட உணவுத் தேவைகளாகிய எண்ணெய், பருப்பு, வனசுபதி போன்ற பல பொருள்களில் 30 விழுக்காடு அளவு கலப்பட்மாக உள்ளதாகக் கூறுகிறது.ஏழுஉணவுப்பொருளுககுஒரு பொருள் கலப்படமானதாக உள்ளதாகமைய உடல்நலச்செய்திக்கழகம் (Central Bureau of Health intelligence) தெரிவிக்கிறது. எடையைக் குறைப்பதன் மூலம் மட்டும் ஆண்டுக்கு உரூ. 1000/-கோடிக்கு மேல் நுகர்வோர் ஏமாற்றப்படுவதாகக் கூறுகிறார்கள். இந்திய நுகர்வோர்கள் எடை, விலை, கலப்படம், நச்சுத்தன்மை கொண்டபொருள்,பயன்படுத்தப்படவேண்டிய காலம் முடிந்தபின் விற்கப்படும் மருந்துகள், தவறுதலான விளம்பரம், நுகர்வோருக்கான போட்டி போன்ற பல நியாயமற்ற வாணிக நடவடிக்கைகளால் ஏமாற்றப்படுவதோடுஅவர்கள்உடல்நலமும்பாதிக்கப்படுகின்றனர்.

இப்படிப் பல்வேறு சட்டங்கள்,ஆணைகள் இருந்தும் அவை குறிப்பிடத்தக்க வெற்றியைத் தாராத தால், நுகர்வோரின் மதிப்பை உயர்த்த 1986-இல் நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.

இச்சட்டம் நுகர்வோர் குறைகளைத் தொகுப்பதில் எளிய முறைகளைக் குறிப்பிடுகிறது. எடுத்துக்காட்டாகக்குறையுடையபண்டங்களும்பணிகளும் விற்கப்படும்போது அதுகுறித்த முறையீட்டைப் பின்வருமாறு தொகுத்து வழக்குத் தொடரலாம்: அ) எந்த நுகர்வோருக்குப் பொருள்கள் விற்கப்பட்டனவோ அல்லது ஒப்படைக்கப்பட்டனவோ, அல்லது பணிகள் செய்யப்பட்டனவோ; ஆ) பண்டங்களை வாங்கிய நுகர்வோர், அனுமதிக்கப்பட்ட நுகர்வோர் சங்க உறுப்பினராக இருந்தாலும், இல்லாவிட்டாலும்; இ) மைய அல்லது மாநில அரசுக்கு முறையீட்டை எப்படி வேண்டுமானாலும் கொடுக்கலாம். நுகர்வோர்களின் குறைகள் தீர்க்க இச்சட்டம், நுகர்வோர்அமைப்புக்குப் பெரும் பங்கை அளித்துள்ளது. நுகர்வோர் அமைப்பின்மீது எல்லோரும் நம்பிக்கை வைக்கத் தன்னிச்சையான நடத்தை விதிகளை அமைத்துச் செயற்பட வேண்டும்.

**நடத்தை விதிகள்**: 1) போட்டி, பொறாமை காரணமாக விளையாட்டுத்தனமான முறையீட்டைத்

தரக்கூடாது.2) குற்றவாளியோடு குற்றம் சுமத்தப் பட்டபின் எந்தவிதமான தனி விவாதமும் வைத்துக் கொள்ளக் கூடாது. 3) தொழில் வாணிக அமைப்பி லிருந்து எவ்வித கொடையும் பெறுதல் கூடாது. மேலும் நுகர்வோர் அமைப்பு,எல்லாத் தரப்பினரை யும் உறுப்பினராக்கி நுகர்வோர்ச் சிக்கல்களைத் தீர்க்கும் முறை பற்றியும் விளக்கவேண்டும்.

இந்திய நுகர்வோர் அமைப்பின் இணையம் (I.F. C.O.),நுகர்வோர் கல்வி,ஆராய்ச்சிமையம்(Consumer Education and Research Centre), தேசிய நுகர்வோர் பாதுகாப்புக் குழு (National Consumer Council), நுகர்வோர் வழிகாட்டும் சங்கம்(Consumer Guidance Society), நியாயமான வாணிக நடவடிக்கைகள், பொதுக் காரணம் பற்றிய குழு (Council for Fair Business Practices and Common Cause) போன்ற பல தொண்டு மனப்பான்மையுடைய நுகர்வோர் அமைப்புகள், நுகர்வோர் நலங்கருதிப் பல்வேறு பகுதி களிலும் பயனுள்ள பணிகளைச் செய்து வருகின்றன.

இந்திய அரசு, தேசிய நுகர்வோர் வழக்குகள் குழுவை (National Consumer's Disputes Commission) 1988-இல் முன்னாள் உச்ச நீதிமன்ற நீதி பதி திரு.வி. பாலகிருட்டிண ரெட்டி தலைமையில் அமைத்து, குறையுடைய பண்டங்கள், மிகையான விலை போன்றவை குறித்து விசாரிக்கக் கூறியுள்ளது. ஆபிரகாம் இலிங்கன் கூறியதுபோல 'எல்லாமே பொதுமக்கள் உணர்ச்சியைப் பொறுத்தது. பொது மக்கள் உணரவில்லை என்றால் எல்லாமே தோல்வி யுறும்; அவர்கள் உணர்ந்தால் எல்லாமே வெற்றி பெறும்' என்ற நிலையில் இவ்வமைப்புகள் நுகர் வோரிடையே நல்ல சூழ்நிலையை உருவாக்கி, நுகர் வோர் சுரண்டப் படுவதைச் சமுதாயத்தில் எல்லோ ரும் ஒரேநேரத்தில் ஒருமனமாக எதிர்க்கச் செய்தால் இவ்வியக்கம் முழுமையான வெற்றி பெறும். வி.கு.

**துணை நூல்கள்:**

**குருசாமி, மா.பா.,** நுண்ணினப் பொருளியல், குரு தேமொழி, திருச்செந்தூர், 1987.

**Acharya, B.K.** and **Govekar P.B.,** Trade Practices, Kitab Mahal, Allahabad, 1987.

**நுகர்வோர் மிகை** என்பது நுகர்வோர், ஒரு பொருளுக்கோ உழைப்புக்கோ கொடுக்க விருப்பப் படும்விலைக்கும், உண்மையில் கொடுக்கும் விலைக் கும் உள்ள வேறுபாடாகும். 'நுகர்வோர் மிகைக் (Consumer's Surplus) கோட்பாடு' இக்காலப் பொரு ளியற் கோட்பாட்டிலும் ஆராய்ச்சியிலும் முக்கிய மான இடத்தைப் பெற்றுக் கருத்து வேறுபாட்டிற்கு (Controversial) இடமளிப்பதாக அமைந்துள்ளது. பொருளியல் வல்லுநர் பலர் இதனை மிகச்சிறந்த பொருளியற் கோட்பாடாகக் கருதுகின்றனர்.

நுகர்வோர் மிகைக்கருத்தை முதன்முதல் பிரான் சுப் பொறியியல்-பொருளியல் அறிஞரான சூல்சு துபூத்து (Jules Dupuit) கி.பி. 1884-இல் குறிப்பிட் டார். ஆல்பிரட்டு மார்சல் (Alfred Marshall) இக் கருத்துக்கு முழு வடிவம் தந்தார். இக் கருத்தை 'நுகர்வோர் வாரம்' (Consumer's Rent) என்று கி.பி, 1879-இல் கூறிய மார்சல், பின்னர்'நுகர்வோர் மிகை' (Consumers Surplus) எனக் குறிப்பிட்டார். பேரா சிரியர் போல்டிங்கு (Prof. Boulding) இதனை 'வாங்குவோர் மிகை' (Buyer's Surplus) என்று குறிப்பிட்டார்.

துபூத்து கி.பி. 1844-ஆம் ஆண்டு தமது பொதுப் பணியின் பயன்பாடு (Utility of Public Works) பற் றிய கட்டுரையில் வாங்குபவர்கள் (Buyers), தங்கள் வாணிக நடவடிக்கைகளிலிருந்து மிகை பெறுகிறார் கள் என்று உறுதியாகக் கூறினார். வாங்குபவர்களி டம் வாங்கும் பொருளுக்காக ஏற்படும் தியாகத்திற் கும், வாங்கும் விலைக்கும் ஏற்படும் வேறுபாடு'மிகை' எனத் துபூத்து வரையறுத்தார்.

வரைபடம்:1




படம் 1-இல் காட்டியுள்ளபடி தேவைக்கோட்டிற் குக் கீழாகவும் (Demand Curve), விலைக் கோட் டிற்கு (Priceline) மேலாகவும் காணப்படும் முக் கோணப் பரப்பு துபூத்தின் கருத்தின்படி மிகை ஆகும். அதாவது படத்தில் DPS குறிக்கும் பரப்பு உபரி ஆகும்.

குறிப்பிட்ட விலையில் பொருள்களை நுகர்வோர் வாங்கும்போது மிகைப் பயன்பாடு (Surplus Utility) பெறப்படுகிறது. நுகரப்படும் பொருளிலிருந்து கிடைக்கும் மிகுதியான மொத்தப் பயன்பாடு (Excess of Total Utility) நுகர்வு மிகைக்கான அடிப்படைக் கருத்தாகும். மார்சல், ஒருவர் ஒரு பொருளில்லாமல் போவதைக் காட்டிலும் அதனை வாங்குவதற்கு எவ்வளவு விலை மிகுதியாகத் தருவாரோ அதற்கும், அவர் உண்மையில் கொடுக்கும் விலைக்குமுள்ள வேறுபாடு, மிகை மனநிறைவைக் காட்டுகிறது எனக் கூறினார். இது 'நுகர்வோர் மிகை' என்றும், துபூத்தின் அதே முக்கோணப் பரப்பால் அளக்கப்படுகிறது என்றும் வரையறுத்தார்.

குறைந்துசெல் பயன்பாட்டு விதிக் (Law of Diminishing Marginal Utility) கருத்தையொட்டி 'நுகர்வோர் மிகைக் கோட்பாடு' உருவாக்கப்பட்டது. குறைந்துசெல் பயன்பாட்டு விதியின்படி ஒரு பொருளுக்குக் கொடுக்கின்ற விலை, அதன் இறுதிநிலைப் பயன்பாட்டிற்குச் சமமாயிருக்கும். ஆனால், அந்தப் பொருளிலிருந்து கிடைக்கின்ற மொத்தப் பயன்பாடு (Total Utility) மிகுதியாக இருக்கும். ஓர் ஆப்பிளுக்கு 25 காசு கொடுத்தால் அதிலிருந்து கிடைக்கின்ற பயன்பாடு 25 காசுக்குச் சமமாகவோ, மிகுதியாகவோ இருக்குமென்பது இதன் பொருள். ஓர் ஆப்பிளிலிருந்து பெறும் பயன்பாடு ஓர் உரூபாய்க்குச் சமமென்று கருதினால் அதற்கு ஓர் உரூபாயைக் கொடுக்க மக்கள் விரும்புவர். ஆனால், உண்மையில் கொடுப்பது 25 காசாக இருந்தால் அதிலிருந்து 75 காசு பெறுமான பயன்பாடு மிகையாகக் கிடைக்கிறது. இதுவே நுகர்வோர் மிகையாகும்.

நுகர்வோர் மிகையை, ஒரு பொருளை நுகர்வதிலிருந்து கிடைக்கின்ற மொத்தப் பயன்பாட்டிற்கும், அதற்குச் செலுத்துகின்ற விலைக்கும் உள்ள வேறுபாடு என்றும் கூறலாம்.

நுகர்வோர் மிகை = மொத்தப் பயன்பாடு — விலை × வாங்கிய பொருள்களின் எண்ணிக்கை.

நுகர்வோர் மிகையைச் சமநோக்கு வளைகோடுகளால் (Indifference Curves) அளக்க இயலும். மார்சலின் கருத்தின்படி பணத்தின் பயன்பாடு மாறாமலிருக்கும் என்ற எடுகோளுக்கு மாறாக, நுகர்வோர் மிகை இக்சின் சமநோக்கு வளை கோட்டால் கணிக்கப்படுகிறது. இக்சு (Hicks) மார்சலின் நுகர்வு மிகை தம் சமநோக்கு வளைகோட்டு வருமானத்தின் ஈடு செய்யும் மாற்றத்திற்குச் சமம் என்று கூறுகிறார். ஆனால், ஏன்டர்சன் (Henderson) இக்கூற்றை மறுத்து மார்சலின் நுகர்வோர்மிகை, நுகர்வோர்தாம் ஏற்கெனவே வாங்கிய பொருள்களுக்குக் கொடுக்கத் தயாராக இருந்த பணத்தைத் தொடர்புபடுத்துகிறது என்றும், இக்சின் வருமானம் ஈடுசெய்யும் மாற்றக் கோட்பாடானது (Concept of Compensating Variation in income), நுகர்வோர் தாம் விரும்பும் அளவு பொருளுக்குக் கொடுக்கத் தயாராக இருக்கும் பணத்தைத் தொடர்பு படுத்துகிறது என்றும் கருதினார். அதன் படி, மார்சலின கோட்பாட்டில் அளவு வரையறுக்கப்பட்டும் (Quantity Constraint), இக்சின் கோட்பாட்டில் அளவு வரையறுக்கப் படாமலும் காணப்படுகிறது.

நுகர்வோர் மிகைக் கோட்பாடு பல எடுகோள்களை (Assumptions) அடிப்படையாகக் கொண்டுள்ளது. அவையாவன: மார்சல், பயன்பாட்டை (Utility) பணத்தை அளவுகோலாகக் கொண்டு அளக்கலாமென்றும், பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு மாறாதிருக்கிறது என்றும் கருதினார். அவ்வாறு கருதினால்தான் மாற்றத்தில் (Price Change) கிடைத்த பயன்பாட்டையும், இழந்த பயன்பாட்டையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். ஒரு பொருளின் பயன்பாடு அதனுடைய அளவை மட்டுமே சார்ந்துள்ளது. பொருள்களுக்குப் பதிலிகள் இல்லை; பதிலிகள் இருந்தால் அவை அனைத்தையும் ஒரே பொருளாகக் கருத வேண்டும். ஓர் அங்காடி முழுமைக்கும் நுகர்வோர் மிகையை மதிப்பிடும்போது வாங்குவோரிடையே வருவாய், சுவையுணர்ச்சி, நாகரிகம் ஆகியவற்றில் வேறுபாடுகள் இல்லை. அங்காடியில் நிறைவுப்போட்டி; இறுதிநிலைப் பொருளில் நுகர்வோர் மிகை இருக்காது; அதற்கு முந்திய பொருள்களில் மிகை இருக்கும். ஆனால், இவ்வெடுகோள்களைப் பொருளியல் அறிஞர்கள் பலர் குறை கூறியுள்ளனர்.

ஏனென்றால் நுகர்வோர், பொருள்கள் வாங்க அங்காடியில் நுழையும்போது அவற்றைப் பெற எவ்வளவு பணம் கொடுக்கக் காத்திருக்கிறார்கள் என்று கூற முடியாது; அங்காடி விலைக்கு ஒத்துப்போகிறார்கள். நுகர்வோரின் மனநிறைவைத் (Psychic Satisfaction) துல்லியமாக அளக்க இயலாது. தவிர, நுகர்வோர் மிகைப் பொருளாதாரச் சூழ்நிலை, நுகர் பொருளின் தன்மை, பதிலிகள், இணை பொருள்கள், விலை, நுகர்வோர் வருவாய், சமுதாய நிலை போன்ற பல காரணிகளையும் ஒட்டி அமைந்துள்ளதால் இதைத் துல்லியமாக மதிப்பிட முடியாது.

**பயன்கள்:** 1) நுகர்வோர் மிகைக் கோட்பாடு கருத்தளவில் சில குறைகளைக் கொண்டிருந்தாலும் வாங்கும் பொருள்களில் மிகைப் பயன்பாடு இருக்கிறதென்பதை நடைமுறை உணர்த்துகிறது. சிறப்பாக முற்றுரிமையாளர்கள் மிகைக் கருத்தைப் பயன்படுத்தி ஆதாயம் பெறுகிறார்கள். எந்தப் பொருளில் நுகர்

வோரின் மிகை மிகுதியாக இருக்கிறதோ அதன் விலையைக் கூட்டியும், விலைகளில் வேறுபாட்டை (Discrimination) ஏற்படுத்தியும் ஆதாயம் பெறுகிறார்கள். 2) ஒரு பொருளின் பயன் மதிப்பிற்கும், மாற்று மதிப்பிற்கும் (Value-in-use & Value-in-exchange) உள்ள வேறுபாட்டை நுகர்வோர் மிகை தெளிவாக்குகிறது. அன்றாடம் பயன்படுத்தும் உப்பு, தீப்பெட்டி, செய்தித்தாள் போன்றவற்றில் கிடைக்கின்ற பயன்பாடு, அவற்றிற்குக் கொடுக்கின்ற விலையைவிட மிகுதியாக இருப்பதால் அவற்றின் பயன்மதிப்பு, மாற்று மதிப்பைவிட மிகுதியாக உள்ளது. 3) பன்னாட்டு வாணிகத்தில் விலை மலிவாக இருக்கும் பொருள்களை இறக்குமதி செய்வதற்குமுன் கொடுத்த விலையானது, இறக்குமதி செய்தபிறகு குறைகிறது. இவ்வாறு பன்னாட்டு வாணிகத்தில் கிடைக்கும் நன்மைகளை அளக்க நுகர்வோர் மிகை பேரளவில் பயன்படுகிறது.

எத்தகைய சூழ்நிலைகளில் வரி விதிக்கலாம், உதவித்தொகை வழங்கலாம் என்பவற்றை முடிவு செய்ய நுகர்வோர் மிகைக் கருத்து பெரிதும் துணை செய்கிறது. பொருளின்மீது வரி விதிப்பதால் நுகர்வோரின் மிகை குறைகிறது. ஆனால், அரசுக்கு ஆதாயம் கிடைக்கிறது. அரசுக்குக் கிடைக்கின்ற ஆதாயத்தோடு நுகர்வோருக்கு ஏற்படக்கூடிய இழப்பை ஒப்பிட்டு, ஆதாயம் மிகுதியாக இருந்தால் அந்த வரி நியாயமானதாகக் கருதப்படுகிறது.

மேற்கூறிய பயன்களைத் தவிரப் பொது நிறுவனப் பணியைத் தொடங்குவதற்கும், மூலதனத்தை எந்தெந்தப் பிரிவுகளுக்குப் பயன்படுத்தவேண்டும் என்பதற்கும், பொருளாதாரக் கொள்கைகளை நிருணயிப்பதற்கும் நுகர்வோர் மிகைக் கோட்பாடு பெரிதும் துணைபுரிகிறது. ஜி.வ.

**துணை நூல்கள்:**


**Hicks J.R.**, Value and Capital, Oxford University Press, Oxford, 1946.

**Marshall Alfred.**, Principles of Economics, McGraw Hill Book Company, London, 1966.

**Samuelson.** Economics, McGraw-Hill Book Company, London, 1970.


***நுகர்வோர் விலைக் குறியீடு***: குறியீட்டு எண் என்பது ஒரு 'மாறி' யில் வெவ்வேறு காலங்களில் ஏற்படும் மாற்றங்களை அளவிட உதவும் கருவியாகும். விலைக் குறியீட்டு எண் (Price Index) என்பது வெவ்வேறு காலங்களில் பண்டங்கள் அல்லது பணிகளின் விலைகளில் ஏற்படும் மாற்றங்களை அளவிடும் சாதனமாகும். எப்போதும் ஓர் ஆண்டின் விலைக்குறியீட்டு எண், தள ஆண்டு அல்லது அடிப்படை ஆண்டின் விலைக் குறியீட்டு எண்ணோடு ஒப்பிட்டு விலை மாற்றத்தை எடுத்துக் காட்டுகிறது.

விலைக் குறியீட்டு எண்களில் மொத்த விலைக் குறியீட்டு எண், சில்லறை விலைக் குறியீட்டு எண், வாழ்க்கைச் செலவுக் குறியீட்டு எண் எனப் பல வகையுண்டு. இந்தியாவில் வாழ்க்கைச் செலவு அல்லது சில்லறை விலைக் குறியீட்டு எண்ணை, நுகர்வோர் விலைக் குறியீட்டு எண் (Consumer Price Index) எனக் கூறுகின்றனர். இங்கு நுகர்வோர் பயன்படுத்தும் பண்டங்களின் விலை மாற்றங்கள் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுவதால் இப்பெயர் வந்துள்ளது.

மேலும், நுகர்வோர் பயன்படுத்தும் எல்லாப் பண்டங்களின் விலைகளும் ஒரே சீராக மிகுவதோ குறைவதோ இல்லை. ஒன்றின் விலை மிகுதியாகலாம்; மற்றொன்றின் விலை குறையலாம். எனவே இவ் விலைகளைப் பொது அடிப்படைக்குக் கொண்டுவர வேண்டும். அவ்வாறு செய்து பொது எண்ணாக விலைகளைக் குறிப்பதே நுகர்வோர் குறியீட்டு எண்ணாகும்.

**கணிக்கும் முறை:** முதலாவதாகத், தள ஆண்டு அல்லது அடிப்படை ஆண்டு எது என்று தீர்மானிக்கப்படுகிறது. இரண்டாவதாகத் தொழிலாளர்களின் தொகையிலிருந்து பிரதிநிதித்துவ மாதிரி (Representative Sample) எடுக்கப்படுகிறது. மூன்றாவதாக, அவர்களது குடும்ப வரவு செலவுத் திட்டம் ஆராயப்பட்டுக் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டிய பண்டங்களின் பட்டியல் தயாரிக்கப்படுகிறது. நான்காவதாக, அப் பண்டங்களின் தள ஆண்டு விலைகள், நடப்பாண்டு விலைகள் ஆகியவை பற்றிய புள்ளி விவரங்கள் சேகரிக்கப்படுகின்றன. ஐந்தாவதாகத் தள ஆண்டின் விலைகள் உரூ. 100 ஆகக் கருதப்பட்டு நடப்பாண்டு விலைகள் அதன் சம விகிதமாகக் குறிக்கப்படுகின்றன. எடுத்துக்காட்டாகத் தள ஆண்டில் ஒரு பண்டத்தின் விலை உரூ 400 என்றும், நடப்பாண்டில் அதன் விலை உரூ.600 என்றும் கொண்டால் தள ஆண்டு விலையை உரூ.100 எனக் கொண்டு நடப்பாண்டு விலையை உரூ.150 எனக் குறிக்கவேண்டும். இதற்குரிய நடப்பாண்டு விலைக்

$$\text{குறியீட்டெண்} \times \frac{\text{நடப்பாண்டு விலை}}{\text{தள ஆண்டு விலை}} = 100$$

நுகர்வோர் பல பண்டங்களைப் பயன்படுத்துவதால் அனைத்துப் பண்டங்களின் விலையும் பட்டியலாகக் குறிக்கப்பட்டு அவற்றின் குறியீட்டெண்களும் பட்டிய

**எடுத்துக்காட்டு:**

**நுகர்வோர் குறியீட்டெண் (தள ஆண்டு – 1960)**

| பொருள் | தள ஆண்டில் விலை (உருபாயில்) (1960) | தள ஆண்டுக் குறியீட்டெண் | 1975-ஆம் ஆண்டில் விலை (உருபாயில்) | 1975-ஆம் ஆண்டின் குறியீட்டெண் |
|---|---|---|---|---|
| உணவு | 300 | 100 | 450 | 150 |
| வாடகை | 100 | 100 | 200 | 200 |
| உடை | 50 | 100 | 75 | 150 |
| பொழுதுபோக்கு | 25 | 100 | 50 | 200 |
| போக்குவரத்து | 40 | 100 | 50 | 125 |
| இதர வகைகள் | 50 | 100 | 50 | 100 |
| | | 600 | | 925 |

லாகக் குறிக்கப்பட்டுப் பின்னர் அவற்றின் சராசரி கண்டறியப்படுகிறது.

$$1960\text{-இல் நுகர்வோர் குறியீட்டெண்} = \frac{600}{6} = 100$$

$$1975\text{-இல் நுகர்வோர் குறியீட்டெண்} = \frac{925}{6} = 154.17$$

1960-இல் இருந்ததைவிட 1975-இல் நுகர்வுப் பண்டங்களின் விலை 54.17 பங்கு கூடியுள்ளதென்றும், வாழ்க்கைச் செலவு கூடியுள்ளதென்றும் இதிலிருந்து முடிவு எடுக்கப்படுகிறது.

**நிறையிட்ட நுகர்வோர் குறியீட்டெண்:** இதில் பயன்படுத்தும் பண்டங்கள், பணிகள் அனைத்திற்கும் ஒரே தன்மையான முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. ஆனால், வாங்கப்படும் பண்டங்களுக்கு வாங்குவோர் ஒரே அளவு முக்கியத்துவம் தருவதில்லை. அரிசியின் விலை ஏற்றத்தினால் ஏற்படும் சிரமத்தைப் பருப்பின் விலையிறக்கம் ஈடு செய்யமுடியாது. அரிசிக்குப் பருப்பைவிட முக்கியத்துவம் தரப்படுவதை இது காட்டுகிறது. எனவே, பண்டத் தராதர முக்கியத்துவத்தைக் கண்டறிந்து நுகர்வோர் குறியீட்டெண் கணக்கிடும் போது அதற்கேற்றாற்போல் பண்டங்களுக்கு நிறைகள் (Weightage) கொடுக்கப்படுகின்றன. நடைமுறையில் தள ஆண்டில் பண்டங்கள் மீதான தராதரச் செலவின் அடிப்படையில் நிறைகள் தரப்படுகின்றன.

$$\left.\begin{array}{l}\text{1960-இல் நிறையிட்ட}\\ \text{நுகர்வோர் குறியீட்டெண்}\end{array}\right\} = \frac{1300}{13} = 100$$

$$\left.\begin{array}{l}\text{1975-இல் நிறையிட்ட}\\ \text{நுகர்வோர் குறியீட்டெண்}\end{array}\right\} = \frac{1975}{13} \quad 151.92$$

நிறையிட்டபின் 1960-இல் இருந்ததைவிட நுகர்வுப் பொருள்களின், பணிகளின் விலைஉரு. 51.92 பங்கு கூடியிருப்பதைக் காட்டுகிறது.

நுகர்வோர் குறியீட்டு எண்ணைக் கணக்கிடுவதில் சில சிக்கல்களும் உள்ளன. முதலாவதாகத், தள ஆண்டைத் தீர்மானிப்பது கடினம். உற்பத்தியையும் விலையையும் பாதிக்கக்கூடியபோர், அரசியலில் பெரும் போராட்டம், வெள்ளம், வறட்சி போன்றவை நிகழாத ஆண்டைத் தள ஆண்டாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். இரண்டாவதாகத் தள ஆண்டின் விலைகள், நடப்பு ஆண்டின் விலைகள் பற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரிப்பது கடினம். மேலும், தேர்ந்தெடுக்கப்படும் பண்டங்கள், மக்களின் நுகர்வு நிலையை வெளிப்படுத்தக் கூடியதாக இருக்கவேண்டும். மிக்க வருவாய் பெறுபவர்கள் அல்லது மிகக் குறைந்த வருவாய் பெறுபவர்கள் மட்டுமே பயன்படுத்தும் பண்டங்களைத் தேர்ந்தெடுப்பது சரியன்று. இறுதியாக, பண்டங்களுக்கு நிறைகள் அளிப்பதும் கடினம். 'நுகர்வோர் அங்காடி'யின் உள் அமைப்பு மாறுபடக்கூடியது. அதாவது பண்டங்களுக்கு நுகர்

**எடுத்துக்காட்டு:**

**நிறையிட்ட நுகர்வோர் குறியீட்டெண்**
**(தள ஆண்டு-1960)**

| பொருள் | நிறை | தள ஆண்டு விலை (உரு.) | தள ஆண்டில் நிறையிட்ட குறியீட்டு எண்கள் | 1975-ஆம் ஆண்டில் விலை (உருபாயில்) | 1975-இல் நிறையிட்ட குறியீட்டு எண்கள் |
|---|---|---|---|---|---|
| உணவு | 4 | 300 | 400 | 450 | 600 |
| வாடகை | 2 | 100 | 200 | 200 | 400 |
| உடை | 3 | 50 | 300 | 75 | 450 |
| பொழுதுபோக்கு | 1 | 25 | 100 | 50 | 200 |
| போக்குவரத்து | 1 | 40 | 100 | 50 | 125 |
| இதர வகைகள் | 2 | 50 | 200 | 50 | 200 |
| | 13 | | 1,300 | | 1,975 |

வோர் தரும் முக்கியத்துவமும், வாங்கும் பண்டங்களும் தள ஆண்டிலிருந்து நடப்பு ஆண்டிற்கு வேறுபடலாம். அதற்கு அகக் காரணிகளும், புறக் காரணிகளும் காரணமாக அமைகின்றன. நுகர்வோரின் விருப்பம், மனநிலை, நாகரிகம், சுவையுணர்வு மாற்றமடைதல் முதலியவை அகக் காரணிகளாகவும், சந்தையிலிருந்து பழைய பண்டம் மறைதல், புதிய பண்டம் அறிமுகப்படுத்தப்படுதல், திருமணங்கள் மிகுதியாதல், இறப்பு விகிதம் குறைதல், பிறப்பு விகிதம் கூடுதல், பண்டங்களின் அமைப்பு, தரம், அளவு, செயற்படும் விதம் மாறுதல் ஆகியவை புறக் காரணிகளாகவும் கருதப்படுகின்றன. மேற்கூறியவற்றால் நுகர்வோர், பண்டங்கள் மீது செலவிடும் தொகை மாறுவதால் நிறைகளை நிருணயிப்பது கடினமாகிறது.

**பயன்கள்:** தொழிலாளர்களின் பணக்கூலி, உண்மைக்கூலி ஆகியவற்றில் அவர்கள்பயன்படுத்தும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் விலைமாற்றங்களால் ஏற்படும் விளைவுகளை அறியமுடிகிறது. எடுத்துக்காட்டாக, நுகர்வோர் விலைக் குறியீட்டெண் தள ஆண்டைவிட மிகுதியாயிருத்தல், தொழிலாளர்களின் உண்மைக்கூலி குறைந்துள்ளதைக்காட்டும்; வெவ்வேறு காலங்கள் அல்லது வெவ்வேறு இடங்களுக்கிடையே வாழ்க்கைச் செலவை ஒப்பிட உதவுகிறது; பொதுக் கொள்கையை வகுக்க அரசு அமைப்புகளுக்கு உதவுகிறது; வெவ்வேறுஇடங்களில் கிடைக்கக்கூடிய வேலைகளின் மூலம் பெறக்கூடிய வருவாயை ஒப்பிடத் தனிப்பட்டோருக்கு உதவுகிறது. தொழில் நிறுவனங்களும் தொழிற் சங்கங்களும் கூலி, அகவிலைப்படி ஆகியவற்றின் நிருணயம் பற்றி முடிவு எடுக்க உதவுகிறது.

சுருங்கச்சொன்னால், உடல்நிலையைக் கண்டறிய நாடித்துடிப்பு உதவுவதுபோல், நுகர்வோர் குறியீட்டு எண் பொருளாதார நிலையை அறிய உதவுகிறது. பணவீக்கமா பணவாட்டமா எனஅறிந்துதகுந்த நடவடிக்கை எடுக்க உதவுகிறது. ஆனால், நீண்ட கால இடைவெளிக்குப்பின் குறியீட்டு எண்களை ஒப்பிடுவது முறையன்று. அதுபோல் வெவ்வேறு நாடுகளில் மக்களின் விருப்பம், வழக்கங்கள் மாறுவதால் அவர்களிடையே குறியீட்டு எண்ணை ஒப்பிடுவதும் முறையன்று.

இந்தியாவில் பல மாநிலங்களின் ஆலைத் தொழிலாளர்களின் நுகர்வோர் விலைக் குறியீட்டு எண்ணும், வேளாண்மைத் தொழிலாளர்களின் நுகர்வோர் குறியீட்டு எண்ணும் தொழிலாளர் அமைச்சகத்தின் தொழிலாளர் குழுவால் (Labour Bureau, Ministry of Labour) கணக்கிடப்படுகிறது. திட்ட அமைச்சகத்தின் புள்ளிவிவர அமைப்பு (Statistical Organisation, Ministry of Planning), நகர்ப்புற உடல் உழைப்பாளர்கள் தவிர்த்த பிற ஊழியர்களின் நுகர்வோர் குறியீட்டெண்ணைக் கணக்கிடுகிறது. இக்குறியீட்டு எண்கள் மாதந்தோறும் வெளியிடப்படுகின்றன.

இந்தியாவில் நுகர்வோர் குறியீட்டெண்களைக் கணக்கிடும்போது உணவுப் பொருள்களின் குறியீட்டெண் மொத்தமாகக் கணக்கிடப்படுகிறது. இதற்காக உணவுப் பொருள்கள், பல குழுக்களாகப் பிரிக்கப்படுகின்றன. தானியங்கள், பருப்பு வகைகள், எண்ணெய் வகைகள், காய்கறிகள், மாமிச வகைகள், பால், பால் சார்ந்த பொருள்கள், வாசனைப் பொருள்கள் பிற வகைகள் என்று பல குழுக்கள் உள்ளன. ஒவ்வொரு குழுவிற்கும் குறியீட்டெண் கணக்கிடப்பட்டு அவையனைத்தும் சேர்த்து உணவுப் பொருள்களுக்கான குறியீட்டெண் கண்டறியப்படுகிறது.

க.த.

**துணை நூல்கள் :**

**Mithra, J.U.,** Economics, World Press Pvt. Ltd., Calcutta, 1970.

**Samuel Raj, A.,** Economics for Indian Students, Allied Publishers Pvt. Ltd., New Delhi, 1983.

**நுண்ணறிவு:** அனைத்து அறிதல் செயல்களையும் உள்ளடக்கிக் கிரேக்க மொழியில் அரிசுட்டாட்டில் பயன்படுத்திய சொல்லினை இலத்தீன் மொழிக்கு மொழிமாற்றம் செய்யும்போது முதன்முதலாகச் சிசரோ (Cicero) என்பார் 'நுண்ணறிவு' என்று பொருள்படும் சொல்லைப் பயன்படுத்தினார். நுண்ணறிவு (Intelligence) என்பதற்குப் பல்வேறு வரையறைகள் சொல்லப்படுகின்றன. மனிதன் எதனையும் அறிந்துகொள்ளும் ஆற்றலைத் தன் உள்ளார்ந்த நிலையில் பெற்றிருப்பதாகச் சிலர் கருதுகின்றனர். இவ்வாற்றல் பிறப்பிலேயே இருக்கிறது. இதனையே நுண்ணறிவு என்கின்றனர். ஒரு சிக்கலான அல்லது புதிய சூழ்நிலையில் தம்மை ஒத்தமைத்துக்கொள்ளும் திறமையே நுண்ணறிவு என்கின்றார் இசுபென்சர் (Spencer). ஆனால், கால்டன் (Galton) போன்றோர் கருத்துச் சிந்தனையில் செயற்படும் திறமைதான் நுண்ணறிவு என்கின்றனர். இன்னும் சிலர் புலன்சார் வழிகளில் வரையறை செய்கின்றனர். புலன்களின் செயற்பாடுகள் விளைவாகச் சிக்கலான தூண்டல்கள் நிகழும்போது தோன்றும் ஓர் ஒருங்கிணைந்த நடத்தையே நுண்ணறிவுஎன்கின்றனர்விரைவாகவும், திறம்படவும் கற்கும் ஆற்றலை நுண்ணறிவு என்போரும் உளர். கடினமானதும் நுண்மையானதுமான தொடர்புகளின் புலன்காட்சிதான் நுண்ணறிவு என்பது இசுபியர்மென் (Spearman) என்பவரின் கருத்தாகும். நனவு நிலை உள்துடிப்புகளையும் அவற்றின் நிறைவையும் இணைப்பது நுண்ணறிவு என்று தர்சுட்டன் (Thurstone) என்பவர் கருதுகின்றார். ஒரு சூழ்நிலையைத் திறம்படவும் அறிவியலுடனும் சிந்தித்து உலகத்தோடு ஒட்டி ஒழுகுவதான செயல் திறனே நுண்ணறிவு என்று வெசுலர் (Weschler) கூறுகின்றார்.

**நுண்ணறிவுக்கான காரணிகள் :** இசுபியர்மென்என்பார் நுண்ணறிவின் இரண்டு காரணிக் கொள்கைகளைக் கண்டறிந்து வெளியிட்டார். இக்கொள்கையின்படி, நுண்ணறிவு இரண்டு காரணிகளைக் கொண்டிருக்கிறது. எந்தவொரு அறிதல் செயலிலும் ஒரு பொதுப்படையானதும், பொதுநிலையானதுமான கூறுகள் காணப்படும். இவை பொதுக்காரணி (பொ) என்றுசொல்லப்படும். அதுபோலவே ஒரு தனிவகை அல்லது தனித்தன்மையான கூறுகளும் காணப்படும். அவை சிறப்புக் காரணி (சி) எனப்படும். எந்தவொரு செயலிலும் இவ்விரண்டு காரணிகளும் உண்டு.

எல்லா மனிதர்களிடமும் இவ்விரு காரணிகளும் ஒரேவகையில் அமைந்திருப்பதில்லை. வேறுபட்ட அறிதல் செயல்களுக்கு வேறுபட்டஅளவு 'பொதுக் காரணி தேவைப்படுகின்றது. அதாவது ஒரு மனிதனின் கணித ஆய்வில் அவன் திறமை அவனிடத்திலுள்ள பொதுக்காரணியைச் சார்ந்ததாகும். அதுபோலவே இசையைப் பாராட்டுகின்ற ஒருவனிடம் சிறப்புத்திறன் (சி) மிகுதியாகவும் பொதுக் காரணி குறைவாகவும் உள்ளன என அறியலாம். ஒருவனின் சிறப்புத்திறன் மிகுதியாக இருக்கும் போது அத்துறையில் அவன் உயர்ந்து விளங்குவான்.

அமெரிக்கநாட்டு உளவியலார் தர்சுட்டன், இசுபியர்மெனின் பொதுக்காரணியை மறுத்து நுண்ணறிவு, பல முதன்நிலைத் திறன்களைக் கொண்டது என நிறுவினார். அவர் கருத்துப்படி ஒருவரிடம் காணப்படும் முதனிலை உள்ளத்திறன்களாவன: எண் சார் திறன் (Numerical Ability), சொல்லோட்டம் (Verbal Fluency), சொற்களைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் (Verbal Comprehension). பொருளுணரா நினைவு (Rote Memory), புலன்காட்சி விரைவு (Perceptual Speed). இடைவெளித் தொடர்பு (Spatial Relations), தொகுப்பு ஆய்வு (Inductive Reasoning), பகுப்பு ஆய்வு (Deductive Reasoning) என்பனவாகும்.

இவ்விரு கொள்கைகளும் நுண்ணறிவு பற்றிய பொதுவான கொள்கைகளாக இன்று ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இசுபியர்மெனின் இருகாரணிக் கொள்கையின் பொதுக்காரணி, இளைஞர்களின் உள்ளத்து அமைப்பையும். தர்சுட்டன் உள்ளத்திறன் காரணிகள் முதியவர்களின் உள்ளத்து அமைப்பையும் நன்கு அளவிடுவனவாக இசுடேக்னர் (Stagner). கார்வோசுகி (Karwoski) போன்ற உளவியலார் கருதுகின்றனர்.

**நுண்ணறிவில் தனியாள் வேற்றுமை:** மனிதர்கள் நுண்ணறிவில் வேறுபாடுடையவர்களாக இருக்கின்றனர். சிலர் நுண்ணறிவில் மேம்பட்டும் சிலர் பேதைகளாகவும் (Idiot) இருக்கக் காணலாம். நுண்ணறிவு வரிசைப்படியில் ஒன்றிலிருந்து ஒன்றிற்கு ஒருவர் உயர்வதோ தாழ்வதோ இயலும்.

மக்கள்தொகையின் ஒரு பகுதியினரைத் தேர்ந்தெடுத்து அவர்களின் நுண்ணறிவினைக் கணக்கீடு செய்து பார்க்கும்போது பெரும்பாலோரின் நுண்ணறிவு ஈவு 70க்கு மேலும் 140க்குள்ளும் இருக்கிறது. இவ்விரண்டு அளவுக்கும்அப்பாற்பட்டோரும் உண்டு; ஆனால், அத்தகையோர் மிகச் சிலரே. நுண்ணறிவு ஈவு 70 முதல் 140 வரை உள்ளோருள்ளும் மிகப் பெரும்பான்மையினர் 90 முதல் 120 வரை நுண்ணறிவு ஈவினை உடையவர்களாக இருக்கின்றனர். இவர்கள் சராசரி நுண்ணறிவு உடையவர்கள் அல்லது இயல்பான குழுவினர் எனப்படுவர். இந்த இயல்பான குழுவினருக்கும் குறைவான நுண்ணறிவுடையோர் பேதைகள் (Morans) எனப்படுவர். இவர்கள் சற்றுக் குறைவான திறமை, வேண்டிய வழக்கமான வேலைகளைக் கற்றிடும் அளவிற்கு நுண்ணறிவு உள்ளவர்கள். எளிய வேலைகளைக் கற்றுக் கொடுத்தால் மேற்பார்வையின்றிச்செய்து முடிப்பார்கள். இக் குழுவினரைக் காட்டிலும் கீழானோர் ஏலா அறிவிலிகள் (Imbeciles) எனப்படுவர். இவர்கள் எவ் வேலையையும் மேற்பார்வையின்கீழ்தான் செய்யக்கூடியவர்கள். இவர்களின் பேச்சு மிக எளிமையானதாக இருக்கும். உண்ணல், உடுத்தல், தூய்மை செய்துகொள்ளல் போன்ற அடிப்படைத் தேவைகளைக் கற்றுக் கொண்டு பேணி வருவர். மிகக் குறைந்த அறிவுள்ளவர்கள் அறிவிலிகள் (Idiots) எனப்படுவர். இவர்கள் தங்கள் உடல் தேவைகளையும், பேண இயலாதவர்கள். உடுக்கவும், தூய்மையாக இருக்கவும்கூடக் கற்றிடாதவர்கள்; ஓரசைச் சொற்களால் பேசிடுவர்; ஆபத்திலிருந்துகூடத் தங்களைக் காத்துக் கொள்ளத் தெரியாதவர்கள். இவர்கள் குடும்பத்திற்கும் சமூகத்திற்கும் சுமையெனக் கருதப்படுபவர்கள்.

இத்தகைய கீழ்வரம்பு நுண்ணறிவாளர்களைப் போலவே மேல்வரம்பு நுண்ணறிவாளர்களும் உள்ளனர். அவர்கள் மேல்நிலையர் (Superior), மிக மேல்நிலையர் (Very Superior), மேதை (Genius) என்று பிரிக்கப்பட்டுள்ளனர். மேல்நிலையருக்கு 120 முதல் 130 வரையும், மிக மேல்நிலையினருக்கு 140 வரையும், மேதைகள் 140க்கும் மேலான நுண்ணறிவு ஈவினைக் கொண்டிருப்பர்.

**நுண்அறிவு ஈவு:** மனிதன் வளர வளர அவனின் நுண்ணறிவு வளர்கிறது. எனவே, ஒருவனின் நுண்ணறிவு அவனின் வயதிற்கேற்ப அமைந்திருக்கிறது. சிலவேளைகளில் ஒருவன் அவன் வயதைக்காட்டிலும் சிறப்பான அல்லது மோசமான நுண்ணறிவினைப் பெற்றிருப்பதைக் காணலாம். இக்கருத்தின் அடிப்படையில் பீனே (Binet) என்பார் 'உள வயது' (Mental Age) என்னும் கருத்தினை உருவாக்கினார். அதாவது ஓர் ஏழு வயதுச் சிறுவனின் அறிதல் செய்கை அவனது ஒத்த வயதினர்களைப்போல் இயல்பானதாக அமைந்திருப்பின் அவனின் உள வயதும் ஏழு ஆகும். ஏழு வயதினனின் அறிதல் செய்கை எட்டு வயதினரைப் போன்றிருப்பின் அவனது உளவயது எட்டு. ஆகும் ஏழு வயதினன்ஆறுவயதினனின் செய்கையைக்கொண்டிருந்தால் அவனது உள வயது ஆறு ஆகும். இந்த உள வயது அவனின் காலவயதினால் (Chronological Age) வகுத்திடப் பெறப்படும் மதிப்பு அவன் நுண்ணறிவு ஈவு (Intelligent Quotient) எனப்படும். இப்படிக் கிடைத்த பின்னத்தை வசதி கருதி நூறால் பெருக்கவேண்டும். இதனைக் கீழ்க் காணுமாறு குறித்திடுவது வழக்கம்:

$$\text{நுண்ணறிவு ஈவு} = \frac{\text{உள வயது}}{\text{கால வயது}} \times 100$$

ஒருவனின் உள வயதும்காலவயதும்ஒரே தன்மையதாக இருப்பின் அவனது நுண்ணறிவு ஈவுநூறாக இருக்கும். இதனைச் சராசரியான அல்லது பொது இயல்பான நுண்ணறிவு என்று கொள்ளவேண்டும்.

**நிலையான நுண்ணறிவு ஈவு:** ஓர் எட்டு வயதுச் சிறுவனின் உள வயது பத்தாக இருக்குமானால் அவனது நுண்ணறிவு ஈவு $\frac{10}{8} \times 100 = 125$ ஆகின்றது. அவனின் காலவயது மிக மிக உள வயதும் மிகுதியாகும். எனவே, அவனது நுண்ணறிவு ஈவு எந்த வயதில் கணக்கிட்டாலும் முன்பு இருந்ததைப் போலவே மாறாதிருத்தலைக் காணலாம். இதனைத்தான் நிலையான நுண்ணறிவு ஈவு (Contancy of I-Q.) என்று சொல்லுவர். ஆனால், இக் கருத்து அண்மைக்காலத்தில் ஐயத்திற்குரியதாக உள்ளது. ஏனெனில் ஒருவருக்குக் கிடைக்கும் வாய்ப்பு மற்றும் பயிற்சியின் அடிப்படையில் நுண்ணறிவு ஈவு மாற வாய்ப்புண்டு என எடுத்துக்காட்டப்படுகிறது. கி.இரா.

**துணை நூல்கள்:**

Freeman, F.N., Mental Tests, Houghton Mifflin, Cambridge, 1939.

Goodenough, F.L., Mental Testing Rinehart, New York, 1949.

**Knight, R.,** Intelligence and Intelligence Tests Mathuen, London, 1950.

***நுண்ணிலைக் கற்பித்தல்:*** ஆசிரியப் பயிற்சியில் மாணவர்களுக்குப் பயிற்றுவித்தல் முறை முதலிடம் பெறுகிறது. ஆசிரியர்கள் திறமையுடையவர்களாய் இருந்தாலொழிய அவர்கள் கற்ற பாடங்களோ, அவர்தம் அறிவோ எவ்விதப் பயனையும் அளிக்கா. ஆசிரியர் வகுப்பறையில் திறமையாகக் கற்பித்தாலொழிய அவரது பயிற்சி முழுமையடைந்ததாகக் கூறமுடியாது. பெரும்பாலும் கல்வியியல் கல்லூரிகளில் ஆசிரியப் பயிற்சியில் இது குறித்துப் போதிய கவனம் செலுத்தப் படாமல் உள்ளது.

ஆசிரியர் பயிற்சி நிலையங்களில் பாடப் பகுதிகளுக்கு ஐந்தில் நான்கு பங்கு நேரத்தை ஒதுக்கி விட்டு, ஒரு பங்கு நேரத்தை மட்டும் மாணவர் பயிற்சிக்கு (Student Teaching) ஒதுக்குகிறார்கள். பயிற்சிக் கல்லூரிகளில் மாணவர் பயிற்சிக்கு வாய்ப்பளிக்கும் பொருட்டு, அருகிலுள்ள பள்ளிகளில் குறிப்பிட்ட காலத்திற்கு அல்லது பயிற்சியின் போது பரவலாக மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இம்முறை நிறுவனத்திற்கு நிறுவனம் மாறுபடுகிறது. உலகம் முழுவதும் கல்வி பரவி வருவதனால், ஆசிரியர்கள் பெரிதும் தேவைப்படுகிறார்கள். பொறியியற் கல்லூரி, மருத்துவக் கல்லூரி போன்ற சில கல்லூரிகளும் தத்தம் ஆசிரியர்களுக்குப் பயிற்சி கொடுப்பதன் இன்றியமையாமையை உணர்ந்து விட்டன. இதனால், ஆசிரியப் பயிற்சி நிறுவனங்களின் தேவை மிகுதியாகி விட்டது. நிறைவு செய்வதற்குப் பள்ளிகளின் எண்ணிக்கை குறைவாக உள்ளது. மேலும் பயிற்சிக்காகச் செல்லும் ஆசிரியர்கள் அங்குள்ள மாணவர்களைப் பயன்படுத்த அனுமதிக்கப்படுவதில்லை. இத்தகைய சிக்கல்களை எதிர்கொள்வதற்கும், மாணவப் பயிற்சிக்குரிய திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் நுண்ணிலைக் கற்பித்தல் (Microteaching) போன்ற புதிய முயற்சிகள் தோன்றியுள்ளன.

**நுண்ணிலைக் கற்பித்தல் முறை** ஒரு சிறிய வகுப்பிற்குக் கற்பித்தல் போன்றதாகும். இம்முறை எளிதானதும் கட்டுப்பாட்டுப் பயிற்சியுள்ளதுமாகும். வகுப்புகள் மிகச் சிறியவையாக அமைக்கப்படும். இதில் விரிவான பாடங்களும், இவற்றை 3 நிமிடம் முதல் 15 நிமிடம் வரை கற்பித்தலும், 3 முதல் 10 பேர்வரை மாணவர்களாக இருத்தலும் நடைமுறையாகக் கொள்ளப்படுகிறது. மாணவர்கள் எப்பொழுதும் உண்மையான படிப்பாளர்களாகவும், கற்பித்தல் உண்மையானதாகவும், இருக்கச் சுற்றுப்புறச் சூழ்நிலைக்கு ஏற்றவாறுகற்பிக்கும் வண்ணம் அமைக்கப்பட்டிருக்கும். மாணவர்களின் நடத்தை முறைகளுக்கு ஏற்றவாறு வகுப்பறை அமைக்கப்படும்.

இச் சூழ்நிலையில், கீழே அடங்கியுள்ள முறைகள் பின்பற்றப்படுகின்றன: அம்மாணவர்கள் நுண்ணிலை வகுப்புகளை 15 நிமிடம் வரை நடத்த வேண்டும். அவ்வாறு நடத்தும் போது பாடத்தின் சிறு பகுதியானது ஒளிப் பதிவுக் கருவியில் (Tape Recorder) பதிவு செய்யப்பட வேண்டும். பயிற்சி ஆசிரியர்கள் பாடத்தில் திறமை, பொருள் ஆகிய இரண்டையும் அடிப்படையாகக் கொள்ள வேண்டும். நுண்ணிலை வகுப்பின்போது ஆசிரியர் திறமையை வளர்ப்பதாக இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாகப் பாடத்தின் முடிவில் பயிற்சியாளர் அறையைப் பார்வையிட்டு அங்குத் தம்முடைய கற்பித்தலின் திறமையை மதிப்பிடுகிறார். பாடத்தைப் பார்த்து முடித்த பிறகு, மாணவர்களின பாடத்தைத் திரும்ப அமைத்து, திரும்ப அதே பாடத்தின் பொருளை வெவ்வேறு குழுக் குழந்தைகளுக்குத்திரும்பக் கற்பிக்க வேண்டும். திரும்பவும் அந்தப் பாடத்தைப் பதிவுசெய்து மதிப்பிட வேண்டும். அதனால், அம் முறையானது கற்பித்தல், மதிப்பிடுதல், திருப்பி அமைத்தல், திரும்பவும் மதிப்பிடுதல், திரும்பவும் கூறுதல் என்ற நிலைகளில் அமைகிறது.

**நுண்ணிலைக் கற்பித்தலின் பகுதிகள்:** கீழே கொடுக்கப்பட்டுள்ளவை நுண்ணிலைக் கற்பித்தலின் முக்கிய பகுதிகளாகும்.

**அ. ஒரு மாணவ ஆசிரியர்:** ஒரு மாணவ ஆசிரியர்க்கு அவருடைய கற்பித்தலின் தன்மைகளை வளர்ப்பதற்குத் தக்கவிதத்தில் திட்டத்தின்படி நுண்ணிலைக் கற்பித்தல் பாடம் கொடுக்கப்பட வேண்டும்.

**நுண்ணிலைக் கற்பித்தலின் சூழ்நிலைகள்** நுண்ணிலைக் கற்பித்தலின் சூழ்நிலைகள் பொதுவான வகுப்பறையின் சூழ்நிலைகளைக் காட்டிலும் எளியது. வகுப்பின் அளவு 5 முதல் 10 மாணவர்களாகக் குறைக்கப்பட்டுள்ளது. கற்பிக்கும் பாடம் சிறியதாகவும், 5 அல்லது 10 நிமிடங்கள் பிடிக்கக்கூடியதாகவும் இருக்க, ஒவ்வொரு பாடத்திற்குப் பின்னும் 5 அல்லது 10 நிமிடங்கள் இடைவெளி இருக்குமாறுஅமைக்கவேண்டும்.

**திறமை அடிப்படையிலான அணுகுமுறை:** மாணவர்களிடையே விரும்பத்தக்க மாற்றங்களைக் கொண்டு வருவதற்கான திறமை வாய்ந்த ஆசிரியரின் பழக்க வழக்கங்கள்தாம் கற்பிக்கும் திறன் என வரையறுக்கலாம்.

**பிரௌனின் திறமை:** கற்பித்தலின் நோக்கங்களை எழுதும் திறன், ஒரு பாடத்தை அறிமுகப் படுத்தும் திறன், கேள்வி கேட்கும் திறன், விளக்கும் திறன், எடுத்துக்காட்டுடன் செய்து காட்டும் திறன், ஊக்கு மாறுபாடு திறன், பலப்படுத்தும்திறன், மாணவர்கள் கலந்து கொள்வதை மிகுவிக்கும் திறன், கரும்

பலகையை உபயோகிக்கும் திறன், வெற்றிகரமாக முடிவுகட்டும் திறன் எனப் பலவாறு வகைப்படுத்துவார் பிரெளன்.

**ஊக்கி மாறுபாடு:** வகுப்பின் கவனத்தைக் கவரும் செயல் முறைகள்:

| | |
|---|---|
| இயக்கம் அல்லது நகர்தல் | - அபிநயம் அல்லது சைகை - பேசும் முறையில் மாறுபாடு |
| குவித்தல் | - இடைவினை முறையில் மாற்றம் |
| ஆசிரியர் | - குழு |
| ஆசிரியர் | - மாணவர் |
| மாணவர் | - மாணவர் தாமதம் |

**கேள்வி கேட்கும் திறன்:** கீழ் வரிசை - இடை வரிசை - மேல் வரிசை என மூன்று நிலைகளாகப் பிரித்துக் கேள்வி கேட்டல் இதில் அடங்கும்.

**விளக்கும் திறன்:** கருத்துகளைத் தொடங்கி அவற்றைத் தொடர்ச்சியாக விளக்கி இறுதியாக முடிக்கின்ற முறை இதில் ஆராயப்படும்.

**கரும்பலகையைப் பயன்படுத்தும் திறன்:**

கையெழுத்துப் புரிகின்ற தெளிவு, பொருத்தமான எழுத்து வேலை ஆகியவை இதிலடங்கும்.

**பலப்படுத்தும் திறன்:**

நம்பிக்கையான பேச்சு மூலமாகப் பலப்படுத்துதல்,
நம்பிக்கையான திடமான பலப்படுத்துதல்,
நம்பிக்கையற்ற வாய்மொழியல்லாத பலப்படுத்துதல்,
நம்பிக்கையற்ற வாய்மூலமல்லாத பலப்படுத்துதல் முதலானவை இதிலடங்கும்.

**கற்பித்தலின் நோக்கங்களை எழுதும் திறன்:**

தகுந்த அளவு - பொருத்தம் ஆகியவற்றை ஈடுபடுத்துதல் இதிலடங்கும்.

**பாடத்தைப் புகுத்தும் திறன்:**

விரும்பத் தகுந்த பழக்கவழக்கங்கள், விரும்பத் தகாத பழக்கவழக்கங்கள் ஆகியவை இதிலடங்கும்.

**மாணவர்கள் கலந்து கொள்வதை மிகுவிக்கும் திறன்:** குழுக்களை உருவாக்குதல், கேள்வி கேட்டல் முதலானவை இதன்கண் அடங்கும்.

**மாணவர்கள் கலந்துகொள்வதை உற்சாகப்படுத்துதல்:** அமைதி காத்தல், திறமைகளை ஒன்று சேர்த்தல் முதலானவை இதிலடங்கும்.

**மறுபடியும் சரிபார்த்தல்:** இது நுண்ணிலைக் கற்பித்தலின் முதன்மையான பகுதியாகும். இது பயிற்சியாளரின் கற்பிக்கும் நடத்தையை மாற்ற உதவுகிறது. இவ் விலக்கை முழுவதுமாக அடைவதற்கு மறுபடியும் சரிபார்த்தல் கொள்கை பொறுப்புள்ளதாகவும் சரியானதாகவும் இலக்குள்ளதாகவும் இருக்க வேண்டும்.

**மறுபடியும் சரிபார்த்தலைக் கொடுக்கும் வழிவகை யாவன:** மறுபடியும் சரிபார்க்கும் வினாத்தாளைப் பயன்படுத்த வேண்டும். இது சிறிய விவாதத்துடன் விவாதிக்கப்படுகிறது. மேற்பார்வையாளருடன் கேட்கும் பதிவு நாடாவைப் பயன்படுத்த வேண்டும். இது மறுபடியும் நுண்ணிலைக் கற்றலின் போது நாடாப்பதிவுக் கருவியில் பதிவு செய்யப்பட்டவற்றை அதாவது முழுவதுமான பேச்சு இடைவினைகளைப் போட்டுப் பார்த்து மேற்பார்வையாளர் இதனைக் கணக்கிட்டபடி இது நிருணயிக்கப்படுகிறது.

காட்சிப்-பதிவு நாடாவைப் பயன்படுத்த வேண்டும். நுண்ணிலைக் கற்பித்தலின் போது முழுமையான கேட்கும் பார்க்கும் படக்காட்சி வகுப்பறை இடைவினையின் போது இது கொடுக்கப்படுகிறது. இது பேசும், பேசாத இடைவினைகளை அடக்கியுள்ளது.

**நுண்ணிலை ஆய்வுக்கூடம்:** நுண்ணிலை ஆய்வுக் கூடம், கற்பிக்கும் பயிற்சிக்குப் பாதுகாப்பான இடத்தை அளிக்கிறது. இது நுண்ணிலைக் கல்விக்குத் தேவையான ஒன்று. இதன்மூலம் கட்டுப்பாடான கல்வி ஆராய்ச்சி நடத்துவதற்கு நல்ல வாய்ப்பு உள்ளது.

**பயன்கள்:** நுண்ணிலைக் கற்பித்தல் மிகுந்த சிறப்பிடம் பெற்றுள்ளது. மரபுவழிக் கற்பித்தல் பயிற்சியைக் காட்டிலும் இது எளிமையானது. முதலாவதாக, இதில் தனியான குறிப்பிட்ட கற்பித்தலின் தன்மைகள் அடங்கியுள்ளன. இரண்டாவதாக, இது கட்டுக்கடங்கிய முறையாக உள்ளது. அதாவது பாடப் பொருள் மாற்றமும், மாணவர்கள் மாற்றமும் வகுப்பினுள் ஏற்படும்போது நுண்ணிலை ஆய்வுக் கூடத்திலேயே இப்பாதிப்புகள் சரிசெய்யப்படுகின்றன. மூன்றாவதாக, நுண்ணிலைக்கற்பித்தல் பொருள் நிலைக்கு ஏற்றதாக உள்ளது. இது ஆசிரியர்களின் நேரத்தை மிச்சப்படுத்துவதுடன், பயிற்றுவித்தலை மிகுதியாக்குகிறது. நான்காவதாக, ஆசிரியர்கள் மதிப்பீட்டைக் கணக்கிட வகை செய்கிறது. சிறந்த பதிவேடுகளையும், கற்பித்தல் வேலைகளில் சமநிலையையும் இது அளிக்கிறது.

**நுண்நிலைக்கற்பித்தலின் வரையறைகள்:** நுண்ணிலைக் கற்பித்தலுக்குக்காட்சி நாடாப்பதிவுக் கருவி

(Video), காட்சி நாடா ஒலிப்பதிவுப் பெட்டிகள், அளவைகள்,ஒலிப்பதிவு நாடாக்கள் ஆகியன தேவைப் படுகின்றன. இவற்றின் துணையின்றி நுண்ணிலைக் கற்பித்தலை முறையாகச் செயற்படுத்த முடியாது.

நுண்ணிலைக் கற்பித்தலுக்குரிய ஆய்வுக்கூடங் களை இந்தியக்கல்வியியல் கல்லூரிகளிலும் கல்வி நிலையங்களிலும் அமைப்பது செலவு அதிகமான கூறாக இருக்கலாம்.

இந்திய நாட்டில் நுண்ணிலைத் திட்டம் விரிவான அளவில் நடைமுறைப்படுத்தப்படுவதற்கு முன் ஆசிரியப் பயிற்சி நிறுவனங்களில் உள்ள விரிவுரையா ளர்களுக்கு நுண்ணிலைக் கற்பித்தல் முறையைக் கற்பிக்க வேண்டும்.

நுண்ணிலைக் கற்பித்தல் ஒரு முழு நிறைவான முறையாக உள்ளது.இது இடைவினை, பகுப்புமுறை ஒரே மாதிரியான கற்பித்தல் தொழில் நுணுக்கங்கள், மாணவர்கள் கற்பித்தல் மீதான வகுப்பறை விரிவுரை கள், ஆசிரியர்களால் வகுப்பறைச் சூழ்நிலையில் கொடுக்கப்படும் செய்முறை வகுப்புகள் அல்லது காட்சி நாடாப் பதிவுக் கருவி மூலம் காண்பித்தல், கல்வித் தொடர்பான புகைப்படச் சுருள் போன்ற பிற தொழில் நுணுக்கங்களோடு ஒன்று சேர்க்கப்பட வேண்டும். எனவே, கற்பித்தல் பயிற்சியில் நுண்ணி லைக் கற்பித்தல் முறை ஒரு புதிய முறையாக விளங்குகிறது. கே.ஆ.

***நுண்ணினப் பொருளியல்***: பொருளினை ஆதாரமாகக் கொண்டமைவது பொருளாதாரம். மனிதர்களின் பொருள் தேடும் நடவடிக்கைகளுக்குப் பின்னணியில் விருப்பங்கள் அமைந்துள்ளன. அவ் விருப்பங்கள் மனித முயற்சிகளால் நிறைவு பெறுகின் றன. இவ்வாறு விருப்பம், முயற்சி, நிறைவு என்னும் முறையில் சங்கிலித்தொடர் போலப் பொருளாதார நடவடிக்கைகள் அமைந்துள்ளன. இந் நடவடிக்கை களைப் பொருளாதார அறிவியல் ஆராய்ச்சி செய்து பல கோட்பாடுகளை உருவாக்கியுள்ளது. இப்பொரு ளாதார ஆராய்ச்சியினை இக்காலப் பொருளாதார அறிஞர்கள் நுண்ணினப் பொருளாதாரம், பேரினப் பொருளாதாரம் என (Micro Economics and Macro Economics) இருவகைகளாகப் பகுத்துள்ள னர். ஆராய்ச்சிசெய்யப்படும் பொருளுக்கேற்ப இவ் விருஅணுகுமுறைகளும் தனித்தனியாகவோ இணைக் கப்பட்டோ பயன்படுத்தப்படுகின்றன.

நுண்ணினம், பேரினம் (Micro and Macro) ஆகிய சொற்கள் முதன்முதலில் இரேக்னர் பிரிசு (Ragnar Frisch) என்னும் சுவீடன் நாட்டுப் பொருளாதார அறிஞரால் 1933-ஆம் ஆண்டு அறிமுகப்படுத்தப்பட் டன. இவை கிரேக்கச் சொற்களிலிருந்து உருவாகி யவை.

நுண்ணினப் பொருளியல், பொருளாதாரத் தின் மிக நுண்ணிய பகுதியை ஆராய்கிறது. பேரி னப் பொருளியலோ பொருளாதார அமைப்பு முழு வதையும் ஆராய்கிறது. நுண்ணினப் பொருளா தாரம், நுகர்வோர், சாதனங்களின் உரிமையாளர்கள், வணிக நிறுவனங்கள் என்ற முறையில் தனிப்பட்ட பொருளாதார அலகுகள் மேற்கொள்ளும் பொருளா தார நடவடிக்கைகளைப் பற்றியதாகும். இதனை விளக்கிக் கூறின் நுண்ணினப் பொருளியல் குறிப்பிட்ட தனி மனிதரையும், தனித்தனிக் குடும்பத்தையும் தொழில் நிறுவனங்களையும், தனிப் பொருளின் விலையையும், தனி மனிதர்களின் வருவாயையும், ஆராய்கிறது எனலாம். பேரினப் பொருளியல் நாட்டு வருமானத்தையும், நாட்டின் பொதுவான விலை மட்டத்தையும். நாட்டின் மொத்த உற்பத்தி யையும் ஆராய்கிறது. எனவே, நுண்ணினப் பொருளியல் பொருளாதாரத்தின் ஒரு சிறு பகு தியை ஆராய்கிறது என்று கூறினால், பேரினப் பொருளியல் அதன முழுமையையும் ஆராய்ச்சி செய்கிறது என்று கூறலாம். இதனை ஓர் எளிய எடுத்துக்காட்டின்மூலம் விளக்கலாம். நுண்ணினப் பொருளாதாரம் காட்டிலுள்ள ஒரு மரத்தை மட்டும் ஆராய்கிறது எனில், பேரினப் பொருளாதாரத்தின் ஆராய்ச்சி, ஆயிரக்கணக்கான மரங்களடர்ந்த ஒரு காடு முழுவதையும் பற்றி அமைவதை ஒத்த தாகும்.

நுண்ணினப் பொருளியல் பொருளாதார நட வடிக்கைகளில் ஒரு சிறு பகுதியை, ஒரு தனிப்பட்ட பொருளாதார அலகின் (எடுத்துக்காட்டாக ஒரு தனி மனிதனின்) நோக்கில் ஆராய்கின்றபொழுது, சில அனுமானங்களைக் கொண்டமைகிறது. விலையைப் பற்றி ஆராய்ச்சி செய்தால் நுகர்வோரின் வருமானம், உற்பத்தி நிலை ஆகியன மாறுதலின்றி முன்னர் இருந்ததைப் போன்றே இருப்பதாக அனு மானம் செய்து விதிகள் (Laws) வகுக்கப்பட்டுள்ளன. ஆனால்,பேரினப் பொருளியலில் பொருளாதாரத்தின் அனைத்துக் கூறுகளும் ஒன்றோடொன்று தொடர்பு டையனவாகக் கருதப்பட்டு அத்தொடர்பின் விளைவு கள் ஆராய்ச்சி செய்யப்படுகின்றன. எடுத்துக்காட் டாக நாட்டின் மொத்த உற்பத்தி, மொத்த நுகர்வு, மொத்த வருவாய், சேமிப்பு, முதலீடு ஆகிய அனைத் துப் பொருளாதாரக் கூறுகளும் தொகுத்து ஆராயப் படுகின்றன.

நுண்ணினப் பொருளாதாரத்தில் தலையாயவர் ஆல்பிரட்டு மார்சல் ஆவார். பேரினப் பொருளாதாரச் சிந்தனைகளை வளப்படுத்திய பெருமை சே.எம்.கீன்சு (J.M. Keynes) என்னும் அறிஞரையே சாரும். எனினும் நுண்ணின, பேரின நோக்குகளுக்கு நெடிய வரலாறு உண்டு. பொருளியல் சிந்தனையின் தொடக்கக்காலங்களில் பேரின நோக்கே பெரிதும் நிலவிவந்தது எனலாம். எடுத்துக்காட்டாக, வணிகவியலார் என்று (Mercantalists) வழங்கப்பட்ட ஐரோப்பியச் சிந்தனையாளர்கள் நாட்டின் செல்வ நிலையை எவ்வாறு வணிகத்தின்மூலம் மேம்படுத்தலாம் என்பது குறித்துக் கருத்து வழங்கினர். ஆதம் சுமித்து (Adamsmith) உலக நாடுகளின் செல்வங்கள் பற்றி ஆராய்ந்தார். இவருடைய கருப்பொருள் பேரின ஆய்வினுக்குரியது எனினும், இவருடைய அணுகுமுறையில் நுண்ணின நோக்கினைக் காண முடியும். பல தனி மனிதர்கள் தங்களுடைய நலனைக் கருதிச் (Self interest) செயற்படும்பொழுது எல்லோருடைய செயற்பாட்டின் விளைவாக அப் பொருளாதாரம்தானே இயங்கத் தொடங்குகிறது. அனைத்துப் பொருளாதாரமும் ஒரு கண்ணுக்குப் புலனாகாத சக்தியினால் இயக்கப்படுகிறது எனக்கூறும் ஆதம்சுமித்து, இப்பின்னணியில் தனிப்பட்ட பொருள்களின் உற்பத்தி, விலை நிருணயம், வருவாய், பகிர்வு எனப்படும் நுண்ணின நோக்கில் கருத்துகளை வழங்கினார். தொன்மை நூலார் (Classicalists) என வழங்கப்படும் சிந்தனையாளர்கள் பலர் நுண்ணின நோக்குச் சிந்தனையை மேலும் வளப்படுத்தினர். குறிப்பாக மார்சல் போன்ற அறிஞர்கள் பேரின ஆய்வுமுறையை முற்றிலும் மறுத்துப் பொருளாதாரத்தின் தனிப் பகுதிகளை நுணுகி ஆராய்ந்து வழங்கினர். எனினும் தொன்மைநூலார்களின் இடையிலேயே இந்நோக்கு மறுக்கப்பட்டதும் உண்டு. டி.ஆர். மால்தசு (T.R. Malthus), காரல் மார்க்சு (Karl Marx) ஆகியோர் பொருளாதார அமைப்பினை முழுமையாக நோக்குதலையே வலியுறுத்தினர். மேலும், போட்டிப் பொருளாதார அமைப்புகள வாணிகச் சுழலுக்கு (Trade Cycle) உள்ளாகிப் பொருளாதார மந்தநிலை ஏற்படுத்துகிற நிலையில் எவ்வாறு தொன்மைநூலாரின் கருத்துப்படி பொருளாதாரம் தன் நிலைகுலைவைத் தானே செம்மைப்படுத்திக்கொள்ள முடியும் என்னும் வினாவும் அறிஞர்களால் எழுப்பப்பட்டது. குறிப்பாக உலகப் பெருமந்தம் (1929-33), அமெரிக்க ஐக்கிய நாடுகள் உள்ளிட்ட பல தொழிற்றுறை நாடுகளையும் பாதித்து விலை, வருவாய், வேலைவாய்ப்புகள் ஆகியவற்றை வீழ்ச்சியடையச் செய்தபோது பேரின நோக்கிலேயே சிக்கல்கள் அணுகப்படவேண்டும் என்று வல்லுநர்கள் வலியுறுத்தத் தொடங்கினர். சே.எம். கீன்சு, பேரின அணுகுமுறையின்மூலம் எங்ஙனம் நாட்டின் மொத்த உற்பத்தி, வேலைவாய்ப்பு ஆகியனவற்றை மேம்படுத்தமுடியும் என்று வழிகாட்டினார். அவருடைய அறிவுரையின் படி, அமெரிக்க அதிபராக இருந்த உரூசுவெல்ட்டு, வீழ்ச்சியுற்ற அமெரிக்கப் பொருளாதாரத்தினை மீட்சியடையச் செய்யும் புதிய திட்டங்களைச் செயற்படுத்தினார்.

மேற்கூறியபடி நுண்ணினம், பேரினம் ஆகிய இரு அடிப்படைகளிலும் பொருளாதார அறிஞர்கள் சிந்தனைகளை வழங்கி வந்துள்ளனர். எனினும், இரு ஆராய்ச்சிமுறைகளுமே ஒன்றுக்கொன்றுமுரணானவை என்று கொள்ள முடியாது. உண்மையில் பொருளாதார நடவடிக்கைகளை நன்கு புரிந்துகொள்ளவும், எழும் சிக்கல்களுக்குத் தீர்வு காணல் இரு முறைகளுமேஒன்றுக்கொன்று துணையாக நிற்கின்றன. பகுதிகளின் தொகுப்பே முழு அமைப்பாக மாறுவதால், நுண்ணினப் பொருளியல்நோக்கில் பொருளியல் நடப்புகளை அணுகி அதனை விரிவுப்படுத்திப் பொருளாதாரத்தின் பேரினச் சிக்கல்களை அறிய முடியும். எனினும், நுண்ணினப் பொருளியல் நோக்கில் காணப்படும் உண்மைகள் முழுமையான அளவிற்குப் பேரின நோக்கிலும் ஏற்றுக்கொள்ளத் தக்கவை என்று கருதிடமுடியாது.

நுண்ணினப் பொருளாதாரம் பொருளாதார அமைப்பிலுள்ள பல சிறு பகுதிகளுக்கு இடையிலமையும் தொடர்புகளை ஆராய்கிறது. எடுத்துக்காட்டாக ஓர் அங்காடியில் விலை எவ்வாறு நிருணயம் செய்யப்படுகிறதுஎன்பதைக் காண்பது இன்றியமையாதது. அங்காடியில் நுகர்வோரும் விற்பனையாளரும் தம்முடைய விருப்பப்படி வாங்குதல், விற்றல் ஆகிய தம்சந்தை நடவடிக்கைகளை மேற்கொள்கிறார்கள். அப்பொழுது தேவை, அளிப்பு ஆகிய இரு சக்திகள் செயற்பட்டுச் சந்தை விலை உருவாகிறது. இந்த விலை நிருணயம் தேவை, அளிப்பு ஆகியவற்றிற்கு இடையே அமையும் தொடர்பின் விளைவாக எழுவது ஆகும். இவ்விரு பக்கங்களையும் பாதிக்கின்ற காரணிகளைப் பற்றி ஆராய்ந்து அவற்றினிடையில் அமையும் தொடர்புகளை நிலைநாட்டுகின்றபோது விலை நிருணயம் பற்றிய கோட்பாடு தோன்றுகிறது.

நுண்ணின ஆய்வு முறையை மதிப்பீடு செய்கின்ற பொழுது, கீழ்வரும் கருத்துகளை அதன் நிறைகளாகக் கூறவியலும்.

முதலாவதாக நுண்ணின ஆய்வில் பொருளாதார அமைப்பின் பகுதிகளைத் தனித்தனியே நுணுகி ஆராய்ந்து காரண-விளைவுகளை விளக்கிட வழியுள்ளது.

இரண்டாவதாகத் தனி நிறுவனத்தின் செயற்பாடுகளை ஆராய்வதை அடிப்படையாகக் கொண்டு எண்ணற்ற பொருளாதார அலகுகளையுடைய, பொருளாதார அமைப்பு முழுவதையும் ஆராய்ந்திட முடியும். இங்ஙனம் நுண்ணின ஆய்வின் மூலம் பேரினப் பொருளாதார ஆய்வும் பயன்பெறுகிறது.

மூன்றாவதாகப் பொருள்கள், பணிகள் ஆகியனவற்றின் விலை நிருணயம் பற்றியும், உற்பத்திக் காரணிகளின் ஊதிய நிருணயம் பற்றியும் தெளிவுடன் அறிய இம்முறை உதவுகிறது.

மேலும், அரசின் பொருளாதார நடவடிக்கைகளுக்குத் துணைபுரியும் வகையில் நுண்ணினப் பொருளாதாரக் கோட்பாடுகள் அமைகின்றன. எடுத்துக்காட்டாக, நுகர்வோருக்கு வரிவிதிப்பதில் ஒரு நாட்டின் நிதியமைச்சருக்கு 'நுகர்வோர் மிகை' (Consumer s Surplus) என்னும் நுண்ணினக் கோட்பாடு உதவுகிறது. உற்பத்தியும், நுகர்வும் நாட்டின் வளங்கள் வீணாகாமல் முழுமையாகப் பயன்படுத்தப்படவும், அதற்கேற்ற பொருளாதாரக் கொள்கைகளை அரசு உருவாக்கவும் நுண்ணினப் பொருளாதார நோக்கு உதவுகிறது.

அடுத்து, ஒரு தடையிலாப் பொருளாதாரம், எண்ணற்ற நுகர்வோர்களையும், உற்பத்தியாளர்களையும் கொண்டு, அவர்களுடைய விருப்பத்தினை நிறைவு செய்யும்படி இயங்கி வருவதைச் சிறப்புற விளக்கும் தத்துவமாக அமைகிறது. அதனால் அத்தகைய போட்டிப் பொருளாதாரங்களில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களும், பணிகளும் விலை அல்லது அங்காடி எனப்படும் இயந்திரத்தன்மையால் (Price or Market Mechanism) எங்ஙனம் மக்களின் நுகர்வுக்காக அளிக்கப்படுகின்றன என்பதை எளிதே விளங்கிக்கொள்ள முடிகிறது.

மேற்கூறிய வகையில் நுண்ணினப் பொருளியல் நோக்குச் சிறப்புடையதாக இருப்பினும் அதில் சில குறைகளும் உள்ளன. பொருளாதார அமைப்பில் ஒரு சிறு பகுதியைப் பற்றிக் கூறப்படும் கருத்து ஒரு பொருளாதாரம் முழுமைக்கும் பொருத்தமாக இல்லாமற் போகலாம். அடுத்து, வேலைநிறைவு நிலை (Full Employment) அமைந்துள்ள பொருளாதார அமைப்பில்தான் நுண்ணின ஆய்வுமுறையை நன்கு பயன்படுத்திட முடியும். மேலும், நடைமுறையில் காணப்படாத வேலை நிறைவுநிலையை அனுமானம் செய்து வழங்கப்படும் கருத்துகள், பயனுள்ள பொருளாதார ஆராய்ச்சிக்கு வழி வகுக்கமாட்டா எனக் கூற இடமுள்ளது. எனவே, நுண்ணின ஆய்வுமுறை முழுமைபெறப் பேரின ஆய்வு முறையும் துணைசெய்கிறது. இரண்டும் இணைந்து பயன்படுகின்ற பொழுதுதான் பொருளாதாரச் சிக்கல்களுக்கு முழு விளக்கம் கிடைக்கிறது; தீர்வுகளும் கிடைக்கின்றன.

இரா. தே.

**துணை நூல்கள்,**

**Gurusamy** M.P., Micro Economics, Tiruchendur, 1984.

**Meade, J.E.,** Planning and Price Mechanism, Allen and Unwin, London, 1948.

***நுண்ணினம்:*** மனிதர்கள் பல்வேறு இனங்களாகப் பாகுபட்டுக் காணப்படுகின்றனர். இந்த ஒவ்வோர் இனத்திற்குள்ளும் சிறப்புத் தன்மைகளைக் கொண்ட பல மக்கள் குழுவினர் தனித்தன்மையுடன் காணப்படுகின்றனர். இவ்வாறான குழுக்களே நுண்ணினம் (Micro-race) எனக் கூறப்படும். இன்றைய உடல்சார் மானிடவியலார் (Physical Anthropologists) மக்களினத்தவர்களை நீக்கிரோக்கள் (Negroids), மங்கோலியர் (Mongoloids) காக்கேசியர் (Caucasoids) என முப்பெரும் பிரிவாகப் பாகுபடுத்துவர். ஒருசிலர் ஆசுத்திரேலிய இனம் (Australoids) என்ற நான்காம் வகையையும் குறிப்பிடுவர். ஒவ்வோர் இனத்தைச் சேர்ந்தவர்கள் உலகின் அனைத்துப் பகுதிகளிலும் வாழ்ந்து வருவதால்அவ்வினத்திற்குள்ளேயே பல வேறுபாடுகளுடன் கூடிய குழுவினர்கள் காணப்படுகின்றனர். இவர்களே நுண்ணினத்தவர்களாவர். ஓர் உட்குழுவிற்குள் மேலும் பல பிரிவினர் இருப்பதையும் காணமுடியும்.

எடுத்துக்காட்டாக, காக்கேசிய இனத்தவருள் பல குழுவினர் உள்ளனர். பெரும்பாலான இந்தியர்கள் காக்கேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களுள் இந்தோ-ஆரியர் (Indo-Aryans), ஈரானிய-சித்தியர் (Irano-Scythian), திராவிடர், தொன்மை-மத்திய தரைக்கடல் இனத்தவர் (Palaeo-mediterranean) போன்ற பல இனத்தவர்கள் உள்ளனர். இவர்களுக்குள்ளும் நுணுகிப் பார்த்தால் சிறு வேறுபாடுகளைக் கொண்ட பல உட்குழுவினர் உள்ளதைக் காணமுடியும். இவ்வகையானவர்கள் எவ்வாறு தோன்றுகின்றனர் என்பதை இனவியலார் பலவாறு விளக்கிக் கூறுவர்.

ஒரு நுண்ணினம் ஏற்படுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. அது தனி ஒரு செயலால் ஏற்படுவதில்லை.பல செயல்களின் ஒட்டு மொத்த நிகழ்வால் ஏற்படுகிறது. இந்நிகழ்வுகளைப் பின்வருமாறு வரிசைப் படுத்தி அறியலாம்.

**மரபணுவில் உடனடி மாற்றம்:** ஓரினத்தைச் சேர்ந்த மக்களின் மரபணுத் தொகுதியில் (Gene





ஒரே இனத்திற்குள் நுண்ணிய வேறுபாடுகள்

pool) ஒரு தனிப்பட்ட பண்பிலோ சில பண்புகளிலோ உடனடி மாற்றம் (Mutation) ஏற்பட்டால் அதன் மூலம் பழைய பண்புகள் மாறிப் புதுப் பண்புகள் தோற்றம் பெறுகின்றன. இவ்வாறு புதுப்பண்புகளை உண்டாக்கும் மரபணுக்கள் (Genes) ஒரு தலைமுறையிலிருந்து அடுத்தடுத்த தலைமுறைகளுக்குச் செல்லும்போது எண்ணற்ற மக்களிடம் நிலையான பண்புகளாகின்றன.

ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சேர்ந்த மக்கள் ஒரு புவிப்பரப்பிலிருந்து வேறொரு பகுதிக்குச் செல்லும்போது அங்கு தகவமைந்து வாழ வேண்டியிருப்பதால் உடற்கூற்றுப் பண்புகளில் மாற்றங்கள் ஏற்படும். ஓர் இனத்திற்குரிய பண்புகள் அனைத்தும் மரபியற் பண்புகள்(Genetic Characters)அல்ல; ஒரு சில தகவமையும் பண்புகளாகவும்அல்ல.(Adaptive Characters) எடுத்துக்காட்டாக ஈரப்பதம்குறைந்த வெப்பப் பகுதியிலுள்ள மக்கள் கறுத்த மேனியையும் அகன்ற மூக்கையும் கொண்டிருப்பர். கருமை நிறம் சூரியனின் ஒருவகைக் கதிரிலிருந்து (Actinic Rays) உடலைக் காக்கிறது. அகன்ற மூக்கு, சூடான காற்றைச் சுவாசிப்பதற்கு ஏற்றது. அவ்வாறே குளிர்ப் பகுதிகளிலுள்ள மக்கள் வெண்மைத் தோலையும் குறுகிய மூக்கையும் கொண்டுள்ளனர். வெண்ணிறத்

தோல் உடலின் வெப்பத்தைக் காக்கவல்லது. குறுகிய மூக்கு, கடுமையான குளிர் காற்றை உள்ளிழுக்கும் போது அதனை எளிதில் வெப்பப்படுத்தும் இயல்புடையது. இவ்வாறான தகவமையும் பண்புகளை இடமாற்றம் மூலமும் மக்கள் பெற வாய்ப்புள்ளது.

**தனிமைப் படுத்தல்:** வாழுமிடத்தால் தனிமைப் படுத்தப்பட்டாலோ (Isolation) சமூகத்தால் ஒதுக்கப் பட்ட குழுக்களாக இருந்தாலோ அதன் மூலம் நுண்ணினத் தன்மைகள் பெருகும் வாய்ப்புகள் உள்ளன. மத்திய தரைக்கடல் இனத்தவர்களுள் சில பழங்குடிகள் வாழுமிடத்தால் மிகவும் தனிமைப்பட்டுள்ளனர். நியூகினித் தீவுகள், நியூ எபிரைட்டுத் தீவுகள்மைக்ரோசித் தீவுகள், பாலினீசியத் தீவுகள் முதலான பல தீவுகளில் வாழும் மக்கள் பல நுண்ணினங்களாகக் காணப்படுகின்றனர். இதற்கு இவர்கள் வாழும் நிலப்பகுதிகள் கடற்பகுதிகளால் தனிமைப்படுத்தப்பட்டதும் ஒரு காரணமாகும்.

**இனக் கலப்பு:** மனித இனத்தவர்கள் நெடுங்காலமாகவே கலப்படைந்து வருகின்றனர். வெவ்வேறு இனத்தவர்கள் கலப்படையும்போது (Missegenation) அவரவரின் தனிப் பண்புகள் மறைந்து புதிய பண்புகள் தோன்றுகின்றன. எடுத்துக்காட்டாக, வெள்ளையர்கள் இந்தியர்களோடு கலப்படைந்ததன் மூலம் ஆங்கிலோ இந்தியர்கள் (Anglo-Indians) என்ற புதிய இனம் தோன்றியது. இவ்வாறு அந்தந்த வட்டார மக்கள் பிறருடன் கலப்படையும்போது புதிய நுண்ணினங்கள் தோன்றுகின்றன.

**மணத் தேர்வு:** ஒரு பரந்த புவிப்பரப்பில் வாழும் மக்கள் அவர்களின் மணத் துணையைத் தேடும் போது வாழிடம், சமூகத் தகுதி, செல்வ வளம், கல்வி போன்ற பல காரணிகளை முன் வைத்துத் தேர்வு செய்கின்றனர். எடுத்துக்காட்டாக, மேலை நாடுகளில் நீல நிறக்கண் கொண்டவர்களும் பழுப்பு நிறக் கண் கொண்டவர்களும் உள்ளனர். நீல நிறக் கண்ணுடையவர்கள் பழுப்பு நிறக் கண்கொண்டவர்களைப் பொதுவாக விரும்பி ஏற்பதில்லை. அதனால், நீல நிறக் கண்களைப் பெற்றவர்கள் தனிக் குழுவாகவும் பழுப்பு நிறக் கண்களைப் பெற்றவர்கள் தனிக் குழுவாகவும் காணப்படுகின்றனர். அவ்வாறே இந்தியச் சமுதாயத்தில் சாதிக் குழுக்கள் மணத்துணையைப் பெறுவதில் முதன்மையான காரணிகளாக விளங்குகின்றன. ஒரு சாதியினர் வேற்றுச் சாதியினரை மணந்து கொள்வது மிகவும் அரிதாகவே உள்ளது. மேற்கூறிய அனைத்துக் கூறுகளாலும் மக்களினத்தவர்கள் பல நுண்ணினங்களாக வகைப்படும் போக்குஏற்படுகிறது. சீ.ப.

**நுண்பொருள்:** கற்றலைச் சிறப்பிக்கப் பயன்படுத்தும்கருவிகள் அனைத்தையும் கல்வி நுட்ப இயல் என்று கருதலாம். கல்வி நுட்ப இயலின் நோக்கம் கற்றல் இலக்குகளைக் குறைந்த காலத்தில் விரைவில் அடைவதற்கு வேண்டிய வழிமுறைகளைத் திட்டமிட்டுச் செயற்படுத்தி மதிப்பீடு செய்தறிதலே ஆகும். இத்தகைய கல்வி நுட்ப இயலில் பல கருவிகள் அல்லது இயந்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றில் திரையில் வீழ்த்தும் கருவிகள் என்றும், திரையில் வீழ்த்தாத கருவிகள் என்றும் இருவகை உண்டு. சுருள் படக்கருவி, நழுவல் காட்டும் கருவிகள், தலைக்கு மேல் பிம்பம் வீழ்த்தி, ஒளி ஊடுருவா வீழ்த்தி ஆகியவை திரையில் வீழ்த்தும் கருவிகளாகும். வரைபடங்கள், கேலிப்படங்கள்,விளக்கப்படங்கள், கருத்துப் படங்கள், நாட்டுப் படங்கள், சுவரொட்டிகள், படக் கதைகள், மின் அட்டைகள், கற்பிக்கும் இயந்திரம், கணிப் பொறி,வானொலி, தொலைக்காட்சிப் பெட்டி, காட்சிப்பதிவு நாடா (Video) போன்றவை திரையில வீழ்த்தாத கருவிகளாகும். இத்தகைய இருவகைக் கருவிகளிலும் கற்பிக்கப் பயன்படுத்தும் பொருள்களுக்கு நுண்பொருள் (Software) என்பது பெயர்.

இந் நுண்பொருள் ஒவ்வொரு கருவிக்கும் தனித் தனியே அதன் இயக்க அமைப்புக்கு ஏற்றவாறு உருவாக்கப்படுகிறது. உளவியற் கோட்பாடுகளையும் கொள்கைகளையும் விதிகளையும் தத்துவங்களையும் பயன்படுத்தி நுண்பொருள் தயார் செய்யப்படுகிறது. இந்த நுண் பொருளின் சிறப்பு என்பது பாடப்பகுதியின் கற்றல் நோக்கங்களைத் தெளிவாக்குதல், செயல்களைப் பகுத்து ஆராய்தல், கற்பிக்கும் முறைகளைத் தேர்ந்தெடுத்தல், உடனுக்குடன் வலு ஊட்டிகளைக் கொடுத்தல், மதிப்பிடுதல் போன்ற பல படிகளைக் கொண்டதாகும்.

ஒரே நுண்பொருளை எல்லாக் கருவிகளிலும் பயன்படுத்த முடியாது. கருவிக்கு ஏற்றவாறு நுண்பொருள் தயாரிக்கவேண்டும். தனித்தனியே ஒவ்வொரு கருவிக்கேற்ற நுண்பொருள் தயாரிக்கத் தேசிய கல்வி, பயிற்சி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம் (புது தில்லி) ஆசிரியர்களுக்குப் பயிற்சியளிக்கிறது.

பாட நூல்கள், செய்தித்தாள்கள், படங்கள் திட்டமிட்டதைக் கற்பித்தல் போன்றவையும் நுண்பொருளைச் சார்ந்தவையாகும். பாட நூல்களை உளவியல் கருத்துப்படி எப்படி எழுதுவது எனவும், அதனை எவ்வாறு மாணவர்களுக்குச் சிறப்பாகக் கற்பிப்பது எனவும், அதற்கான கற்பிக்கும் நுட்பவியலை எவ்வாறு தயாரிப்பது எனவும் அறிவது நுண்பொருள் எனக்கருதப்படும். கற்பிக்கும்நுட்பவியல் என்பது, குறுகிய காலத்தில் சிறு கடினப் பாடப்பகுதிகளை எளிமையாகக் கற்பிக்கப் பயன்படும் துணைக் கருவிகளைக் குறிப்பதாகும். எடுத்துக்காட்டாகத் தொலைக்காட்சியின் நிகழ்ச்சிகள் அனைத்துமே மக்க

ளுக்குப் பெருமளவில் கல்வி கற்பிக்கும் துணைக்கருவி யாய்ப் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால், அதே தொலைக் காட்சியில் ஏதாவதொரு தலைப்பினைக் குறித்து மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்கப்பயன்படும் நிகழ்ச்சி கற்பிக்கும் நுட்பவியலைச் சாரும். இவ்வாறு தொலைக்காட்சிக்காகத் தயாரித்த நிகழ்ச்சிநிரல், நிகழ்ச்சி நடத்தும் முறை போன்றவை நுண்பொருள் எனப்படும். இவ்வாறே வானொலிக்கும் நுண்பொருள் தயாரிக்கலாம். ஒரு குறிப்பிட்ட பாடத்தில், குறிப்பிட்ட தலைப்பில் வானொலி மூலம் எல்லா மாணவர்களுக்கும் கற்பிக்க ஏற்ற நிகழ்ச்சியையும்,நிகழ்ச்சி நிரலையும் தயாரிப்பதும் நுண்பொருள் தயாரிப்பதற்கு ஒப்பாகும்.

இவ்வாறே கணிப்பொறி மூலம் கற்பித்தலுக்கும் ஏற்ற நுண்பொருள் தயாரிக்கலாம். பள்ளி அல்லது கல்லூரிப்பாடத் தொடர்பாகச் சில தலைப்புகளின் கீழ்க்கல்வி அனுபவம் பெற்ற ஆசிரியர்களால் சில நிகழ்ச்சிகளும் அமைக்கப்படுகின்றன. எடுத்துக்காட்டாக 'காண்போம் கற்போம்' என்ற நிகழ்ச்சிகள் அனைத்தும் இவ்வகையைச் சேர்ந்தவையாகும்.இவை போன்ற நிகழ்சசியை மாணவர்கள் பார்த்து அறிந்த செயல் வினை விளைவைக் கொண்டு மேற்கொண்டு நிகழ்ச்சிகளைத் திட்டமிட வேண்டும். இவ்வாறு நிகழ்ச்சியைச் சிறப்பாகத் தயாரித்த பொருளையே நுண்பொருள் என்று கூறுகிறார்கள். இத்தகைய நுண்பொருள் பெரும்பாலும் வல்லுநர்களால் திட்டமிடப்பட்டு நிகழ்ச்சியாக அமைக்கப்பட்டு அவர்களின் திறமைகள் பல மாணவர்களுக்கும் ஒரே சமயத்தில் கிடைக்க வாய்ப்பளிக்கப்படுகிறது. மேலும்,இத்தகைய நுண்பொருள் காட்சிப் பதிவு நாடாக்களாக (Video Cassette) உருவாக்கப்பட்டால் எவ்வளவு முறை வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

வை.ந.

***நுதலிக் கற்பிக்கும் உருப்படிவம்:*** கல்வி கற்பிப்பதன் தலையாய நோக்கம்மாணவர்களிடையே சமூகத்தில் ஒத்துக்கொள்ளப்பட்ட வகையில்நடத்தை மாறுதல்களை ஏற்படுத்துவதேயாகும். இதை நிறைவேற்றுவதற்குப் பல முறைகளை ஆசிரியர் கையாளலாம். வெளியுலகில் காணும் செய்திகள் பலவற்றை அறிந்து அவற்றைச் சரியாகப் புரிந்துகொண்டு அதற்கேற்பத் தமமைப் பொருத்தப்பாடு செய்துகொள்வதற்கு வழிவகைகள் அமைப்பதே கற்பிக்கும் முறை எனப்படும். பொதுவாக ஆசிரியர்கள் அனைவரும் பிறப்பாலேயே ஆசிரியர்கள்; உண்டாக்கப்படுபவர்கள் அல்லர் என்று ஒரு கூற்று இருப்பதாயினும் இன்று கல்வி பரவலாக்கப்பட்டபிறகு ஆசிரியர்களைத் தயாரிக்கவும் வேண்டியுள்ளது. எந்த ஒரு முறையும் எல்லா நோக்கிற்கும் எல்லாப் பாடங்களுக்கும் எல்லா மாணவர்களுக்கும் சிறப்பாக அமையுமென்று சொல்ல முடியாது. ஒரு பாடத்தைக் கற்பிக்கும் ஆசிரியர் குறிப்பிட்ட ஒரு முறையைப் பின்பற்றி வெற்றிகரமாக முடித்திருக்கலாம். ஆனால், வேறு ஓர் ஆசிரியர் அதே முறையைப் பின்பற்றி அதே பாடத்தைக் கற்பித்தாலும் வெற்றி கிட்டும் என்று சொல்லமுடியாது. சில சமயங்களில் தோல்வியும் கிட்டலாம்.

கற்பிக்கும் முறைகளைப் பொதுவாக இரு வகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று மாணவருக்கு எவ்வித சுதந்திரமும் கொடுக்காமல் அதிகாரத்தை நிலை நிறுத்திக்கற்பிக்கும் முறைகள். மற்றொன்றுமாணவர்கள் ஒவ்வொருவரையும் ஒரு சிறு செடியைப்போல எண்ணி அதன் வளர்ச்சிக்குத் தேவையான ஊட்டச் சத்துகளையும், சுதந்திரத்தையும் வழங்கி ஆசிரியர் அச் செடிகளை வளர்க்கும் தோட்டக்காரர் போல அமைந்து அச் செடிகள் அழகுற வளராதபோது சிறிது கத்தரித்து, வளர்ச்சி குன்றும்போது சிறிது உரமும் தண்ணீரும் அளித்து வளரச் செய்கின்ற முறை ஆகும். இவ்விரு முறைகளிலும் பல வகையான பயிற்றுவிக்கும் முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றுள் ஒன்றே நுதலிக் கற்பிக்கும் உருப்படிவம் (Expository Teaching model) ஆகும்.

**விரிவுரை முறை:** இன்று பெரும்பாலும் கல்லூரிகளிலும், சிறிதளவு மேல்நிலைப் பள்ளிகளிலும் இம் முறைபின்பற்றப்படுகிறது. கற்பித்தலிலும் கற்றலிலும் ஆசிரியருக்குப் பெரும்பங்குண்டு. மாண்டிசோரி அம்மையார் சொல்லியதுபோல வண்ணத்துப் பூச்சிகள் குண்டூசியினால் குத்தப்பட்டுப் பலவகையில் வைக்கப்பட்டதுபோல இடத்தைவிட்டு அகலாமல், ஆசிரியரிடமிருந்து வெள்ளம்போல் வருகின்ற அறிவு ஊற்றினில் நனைந்து செவிமடுத்தவண்ணம் அமைதல் வேண்டும். ஏதேனும் ஐயம் தோன்றியவிடத்து மாணவர்கள் எழுந்து ஆசிரியரைக்கேள்வி கேட்டால் ஆசிரியரது கருத்தோட்டம் தடைப்பட்டு நின்று விடும். ஆசிரியர் செய்திகளைத் தருக்க அடிப்படையில் விளக்கிக்கொண்டேயிருப்பார். மாணவர்கள் குறிப்பெடுத்துக் கொள்ள வேண்டும். பெரும்பாலான விரிவுரைகள் செய்திகளை அளிப்பதற்காகவே அமைக்கப்படுகின்றன. புதிய பாடப்பொருள்களைப் பற்றிக் கற்பிக்கத் தொடங்குவதற்கு விரிவுரை முறை சிறந்த பயனளிக்கும். போதிய வளர்ச்சியடையாத மாணவர்களுக்குப் புத்தகங்களைப் படித்துப் புரிந்து கொள்வதைவிட வாய்மொழிவாயிலாகக்கேட்டறிவது எளிது. அதிகமான பாடங்களைக் குறைந்தநேரத்தில் கற்பித்து முடிக்கலாம். ஆய்வகம், துணைக்கருவிகள் எவையும் தேவையில்லை. புத்தகங்களில் எழுதியுள்ள செய்திகளைவிட அண்மைக்கால நிகழ்ச்சிகளையும் கற்பிக்க இயலும்.

**ஆய்வக முறை:** செய்து கற்றல் மிகச்சிறந்த கல்விக் கொள்கையாகச் சென்ற பல ஆண்டுகளாக இருந்துவருகின்றது. இக் கருத்தையொட்டியே அறிவியல் கற்பிப்பதிலும் மாணவர்கள் ஒவ்வொரு தத்துவத்தையும் சோதனையின் அடிப்படையில் தாங்களாகவே செய்து அவற்றின் முடிவுகளைக் கண்டறிதல் வேண்டும் என்ற கொள்கை பரவியது. சோதனையின் அடிப்படையில் நிறுவப்படாத கருத்துகள் எவையும் தெளிந்த உண்மைகளாகவோ முடிவுகளாகவோ இருத்தல் முடியாது என்பது அறிவியல் வரலாறு கூறும் உண்மை. அரிசுட்டாட்டிலின் பொருளியல் பற்றிய சில கொள்கைகள் பல நூற்றாண்டுகளுக்குப் பின் தோன்றிய கலிலியோ, மாரிசெல்லி போன்ற அறிவியல் அறிஞர்களால் சோதனையின் அடிப்படையில் எவ்வாறு தவறு என்று நிரூபிக்கப்பட்டு மதிப்பை இழந்தன என்பது எல்லோரும் அறிந்த உண்மை. இன்று அறிவியல் துறையில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகள் அனைத்தும் அறிவியல் அறிஞர்கள் விருப்பு, வெறுப்பின்றிப் புறவயத் தன்மையுடன் உண்மைகளை ஆராய்ந்து அமைத்துக் காட்டிய சோதனைகளின் முடிவுகளேயாகும். இன்றும் எவரேனும் புதிய கருத்து ஒன்றினைக் கூறும்போது கேட்பவர் இதற்கு ஆதாரம் என்ன? என்ற வினாவைத் தொடுப்பதைப் பார்க்கலாம். உண்மையான அறிவியற் சோதனைகள் மாணவரது உயர் சிந்தனை ஆற்றலைத் தூண்டுபவை. சோதனைகளின் அடிப்படையில் செய்து கற்ற உண்மைகள், தெளிவான அறிவை ஏற்படுத்துவதுடன் மாணவர்களே செய்து கற்பதால் நிலைத்த கற்றலுக்கும் வழிகோலுகின்றன எனலாம்.

**கண்டறியும் முறை:** கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் அறிவியல் கற்பித்தலில் புரட்சிகரமான மாறுதலை ஏற்படுத்தியவர் இலண்டன் நகரில் அமைந்த, இரசாயனக் கழகத்தில் பணியாற்றிய ஆர்ம்சுடிராங்கு ஆவார். உயர் கல்விக்காக அவரை நாடிய மாணவர்களில் எவருக்கும் சோதனைகள் செய்வதற்குரிய அடிப்படை அறிவுகூட ஏற்படாதிருந்தது குறித்து வருத்தமுற்றுப் புதிய முறை ஒன்றினை உருவாக்கினார். புதிய அறிவினைக் காண்பதில் முனைந்து நிற்கும் அறிவியல் அறிஞர்கள் நிலையில் மாணவர்களை வைத்துப் சிக்கல்களை எழுப்பி, அவர்களுக்குத் தேவையான கருவிகளைக் கொடுத்து, அவர்களே சோதனையைச் செய்யுமாறு செய்தலே இம்முறையின் நோக்கமாகும். பாடப் பகுதிகளையே சிக்கலாக அமைத்து, ஒவ்வொரு சிக்கலையும் தம் மாணவர்களுக்குக் கொடுத்து, அச் சிக்கலுக்குரிய விடைகளை மாணாக்கர்கள் தனித்தனியாகக் கண்டறியுமாறு செய்தல் வேண்டும். உற்று நோக்கல்களும் உற்று நோக்கிச் சேகரித்த தகவல்களிலிருந்து தொடர்பை அறிதலும் வலியுறுத்தப்படுகின்றன. இம் முறையில் மாணவர்கள் என்ன கற்கிறார்கள் என்பதைவிட எப்படிக் கற்கிறார்கள் என்பதே முக்கியமாகக் கருதப்படுகிறது. கண்டறியும் முறையின் நோக்கம் கற்கும் முறையில் பயிற்சி கொடுப்பதை வலியுறுத்தி, அறிவு வளர்ச்சி என்பதை இரண்டாம்தரமாக ஆக்குகிறது. இம்முறையில் மாணவர்களுக்குச் சிக்கல் தீர்க்கும் முறையைப்பற்றிக் கற்பிப்பதால் அறிவியல் முறையில் சிறந்த பயிற்சி பெறுகின்றனர். தாமாகவே சிந்தித்துச் சோதனைகளை அமைத்துத் தகவல்களைச்சேகரித்து அவற்றிலிருந்து உண்மையையேஅறிகின்றனர். பெசுடலாசி, இலாக்கு, ரூசோ போன்ற கல்வியாளர்களும் ஆராய்ந்து காண்பதே சிறந்த முறையெனத் தெளிவாகக் கூறியுள்ளனர். அறிவியல் மேதை ஆல்பர்ட்டு ஐன்சுட்டீனும் எதையும் ஆராயும் மனமே அறிவை விடச் சிறந்தது எனக் கூறியுள்ளார்.

**திட்டமிட்டுக் கற்றல்:** அண்மைக்காலத்தில் மாணவர்கள் தாமாகவே கற்றுக் கொள்ளும் சில கருவிகள் உருவாக்கப்பட்டுள்ளன. பொத்தானை இயக்கியவுடன் தொலைக்காட்சித் திரையில் ஒரு வினா தோன்றுகிறது. அவ் வினாவிற்குரிய விடையை மாணவன் சொன்னவுடன் சரியான விடையாயின் பாராட்டுத் தெரிவித்து அடுத்த வினாவிற்குச் செல்கிறது. மாணவன் தவறாக விடைசொல்லின் அவ்வினாவிற்குரிய விடையை விளக்கிக் கற்பித்துவிட்டு மீண்டும் ஒரு பயிற்சி கொடுத்து அதற்குச் சரியாக விடையளித்த பின் மேற்கொண்டு புதியபகுதிக்குச் செல்கிறது. இக்கருவி அண்மைக்காலத்தில் கல்வித்துறையில் பெரும்புரட்சி ஏற்படுத்தியுள்ளது. கற்பிக்கும் பொறி (Teaching Machine) என்பது இக் கருவிக்குப் பெயர்.

உளவியல் ஆய்வகங்களில் உளவியல் அறிஞர்களால் இம்முறைக்கு வித்திடப்பட்டது. உளவியல் அறிஞர் இசுகின்னர் என்பவரே கற்பிக்கும் இயந்திரத்தின் தந்தை எனலாம். கற்பிக்கவேண்டிய பாடங்களைத் தருக்க அடிப்படையில் சிறுசிறு பகுதிகளாகப் பிரித்து அவற்றைச் சிறிது சிறிதாக மாணவர்களுக்கு அளித்து மனத்தில் பதியச் செய்தால் எவ்வித தவறும் நிகழ்வதற்கு இடமில்லை. மாணவர்கள் தனித்தனியாக அவரவர் கற்கும் வேகத்திலேயே செல்ல இம்முறை வாய்ப்பளிக்கிறது. மாணவர்களிடம் கேட்கப்படும் வினாவிற்குரிய விடையைச் சரியா தவறா என அறிந்துகொள்ளும் வாய்ப்பும், தவறெனில் உடனுக்குடன் சரியான விடையைத் தருவதன்வாயிலாகக் கற்ற செய்திகளை மனத்தில் நிலைபெறச் செய்யும் வாய்ப்பும் ஏற்படுகின்றன. திட்டமிட்டு அமைக்கப்பெற்ற இதுபோன்ற நிகழ்ச்சியினைத் தொடர்ச்சியாகப் புத்தகங்கள் வாயிலாகவோ தொலைக்காட்சி வாயிலாகவோ படக்

காட்சி வாயிலாகவோ அமைக்கலாம். இயந்திரத்தின் மூலம் அமைக்கப்படும் நிகழ்ச்சிக்குக் கற்பிக்கும் இயந்திரம் என்ற பெயர் உண்டு.

இத் திட்டமிட்டுக் கற்றலில் இரு முறைகள் பின்பற்றப்படுகின்றன. தொடர் நீள முறை (Linear Programme) என்றும், கிளை முறை (Branching Programme) என்றும் இவை சொல்லப்படுகின்றன. வினாவை எழுப்பி வினாவிற்குரிய விடையை மறைத்துவைத்து மாணவர் அளிக்கும் விடை சரியாயின் சரி என்று மேலே செல்வதும், தவறாயின் சரியாகக் கொடுக்கப்பட்டுள்ள விடையை அறிந்து மேலே செல்வதும் தொடர்நீள முறையாகும். மாணவர்கள் விடை தவறாக அளித்தால் தவற்றைத் திருத்திப் பின் மேலும் அதில் சில குறைநீக்கப் பயிற்சிகள் கொடுத்துத் தெளிவு பெற்றபின் மேற்கொண்டு செல்லும் முறை கிளை முறை ஆகும்.

**வகுப்பறை சூழல் பகுத்தறிமுறை:** ஒரு வகுப்பறையில் ஆசிரியர் மாணவர்களிடையே இயற்கையாக நிகழும் உரையாடல்களை நன்கு திட்டமிட்டு முறையாக, ஒழுங்காக, தெளிவாகப் பகுத்தறியும் முறை வகுப்பறைச் சூழல் பகுத்தறி முறை எனப்படும். இம்முறையில் மேற்பார்வைக்கு வரும் அலுவலர் ஒருவர், குறியீடுகளைக் கொண்டு வகுப்பறையில் நிலவுகிற சூழலை நன்கு கண்டுணர இயலும். மேலும், ஆசிரியப் பெருமக்களும் தங்கள் குறையியல்புகளை மாற்றிக் கொள்வதற்கும் முறைகளில் மாற்றம் செய்து மாணவர்களைப் பங்குபெறச் செய்வதற்கும் மாணாக்கர்களும் ஆசிரியரின் நல்லியல்புகளுக்கேற்பக் கருத்துப் பரிமாற்றம் செய்து கலந்துரையாடல் செய்வதற்கும் வாய்ப்பளிக்கும் முறையே வகுப்பறைச் சூழல் பகுத்தறி முறையாகும்.

**பிளாண்டர்சின் பாகுபாடு:** இம் முறை கி.பி. 1965-ஆம் ஆண்டு டாக்டர் பிளாண்டர்சு என்பவரால் முதன்முதலில் அறிமுகப்படுத்தப்பட்டது. இதில் ஒரு வகுப்பறையில் ஆசிரியர்-மாணவர்களுக்கிடையில் நடைபெறும் உரையாடல்களைக் கீழ்க்காணுமாறு வரிசைப்படுத்தலாம். பொதுவாக ஒரு வகுப்பறையில் பெரும்பாலும் மூன்று நிலைகளை மட்டுமே காண இயலும். அவை; 1) ஆசிரியரே உரையாடிக் கொண்டிருத்தல், 2) மாணாக்கர்கள் பேசிக்கொண்டிருத்தல், 3) யார் பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அறியமுடியாத ஒருவித குழப்பநிலை (இந்நிலை அமைதி அல்லது குழப்பம் எனக் கூறலாம்) என்பவை யாகும்.

**ஆசிரியரின் பேச்சுகள்:** ஆசிரியர் பாடத்தைத் தொடங்கித் தாமாகப் பேசுவதும், பாடம் நடைபெற்றுக்கொண்டிருக்கும்போது மாணாக்கர்கள் ஏதேனும் வினவ அதன் காரணத்தால் தூண்டப்பெற்றுப் பேசுவதும் என ஆசிரியரின் உரையாடலை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். மாணாக்கர்களால் தூண்டப்பெற்ற ஆசிரியர் பேசும் பேச்சுகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை: 1) மாணாக்கரின் உணர்வலைகளை ஏற்றுக்கொள்ளல், 2) மாணாக்கர்களைப் போற்றிப் பாராட்டல், 3) மாணாக்கர்கள் கூறும் கருத்துகளை ஏற்றுக்கொள்ளல்.

**ஆசிரியர் தாமாகவே பேசும் நிலை:** இது நான்கு வகைப்படும். அவை: 1) வினாக்கள் கேட்டல், 2)ஆசிரியர் விளக்குதல், 3) வழிகாட்டல், 4) குறை காணல் அல்லது தன்னிலை நாட்டல் என்பவை.

**மாணாக்கர்களின் பேச்சுவகைகள்:** இதில் இரு வகைகள் உள்ளன. அவை. 1)எதிர்மொழி (ஆசிரியர் கேட்டவற்றிற்கு மாணவர் பதிலளித்தல்), 2) மாணவர்கள் தாமாகவே பேசுதல் (தமக்குரிய ஐயத்தைப் போக்கக் கேள்வி கேட்டல்). அமைதி அல்லது குழப்பம் மற்றொரு வகையாகும்.

**அட்டவணை:** இம்முறையினை மதிப்பீடு செய்வதற்கு ஓர் அட்டவணையைத் தயாரிக்கலாம். அவ்வட்டவணையைக் கொண்டு வகுப்பில் நிலவிய சூழலைத் திட்டவட்டமாக அறியமுடியும். அதன்மூலம் பயிற்சிபெற்ற ஆசிரியர், பயிற்சிபெறாத ஆசிரியர் ஆகியோரது கற்பித்தல் திறனை மதிப்பிடமுடியும். பல்வேறு பாடங்களில் பொதுவாக ஏற்படும் வகுப்பறைச் சூழலை நன்கு அறியலாம். அட்டவணையைக் கொண்டு ஆசிரியர்கள் தங்கள் முறைகளில் மாற்றம் செய்துகொள்ள வழி ஏற்படுகிறது. பல்வேறு பள்ளிகளில் காணப்படும் வகுப்பறைச் சூழலை அட்டவணையின்மூலம் ஒப்பிட்டுக் காணலாம். இரா.சி.

**துணை நூல்:**


**கோவிந்தராசன்**, மு., நற்றமிழ் பயிற்றலின் நோக்கமும் முறையும், திருமலைக் குமரன் பதிப்பகம், சென்னை, 1979.


**நுபியின் மொழி:** இம்மொழி கிழக்குச் சூடானிக்கு மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது. சூடான் நாட்டிலும் எகிப்து நாட்டின் சில பகுதிகளிலும் இம்மொழி வழக்கில் உள்ளது. இம்மொழிக்குரிய எழுத்துமுறை கிரேக்க மொழியிலிருந்து தோன்றிய காப்டிக்கு (Cobtic) உருவத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது. நைல் நதிப் பள்ளத்தாக்கில் கி.பி.6 முதல் 13-ஆம் நூற்றாண்டு வரை வாழ்ந்த கிறித்தவ நுபிய அரசின் மொழியாக இது இருந்து வந்துள்ளது. இம்மொழியில் 1928 ஆம் ஆண்டில்தான் இலக்கணம் தோன்றியுள்ளது.

சா.உ.

**நுளம்பபாடி**: நுளம்பர்களின் ஆட்சிக்குட்பட்ட பகுதி நுளம்பபாடி எனக் கல்வெட்டுகள் குறிப்பிடு கின்றன. இன்றைய கருநாடக மாநிலத்திலுள்ள தும் கூர், சித்திரதுர்க்கம் ஆகிய மாவட்டங்களையும், பெங்களூர், கோலார், பெல்லாரி ஆகிய நகரங்களை யும் நுளம்பபாடி கொண்டிருந்தது.இதில்கி.பி.10-ஆம் நூற்றாண்டில் சேலம், வடார்க்காடு ஆகிய மாவட் டங்களின் பகுதிகளும் இணைக்கப்பட்டன. சோழப் பெருவேந்தன் முதலாம் இராசராசனின் கல்வெட்டு களில் இப்பகுதியை அம்மன்னன் கைப்பற்றியமை குறித்த செய்திகள் உள்ளன. அம்மன்னனின் காலத் தில் நுளம்பபாடி, இராசராசனின் சிறப்புப்பெயரால் நிகரிலி சோழ மண்டலம் எனப் பெயர் மாற்றம் பெற்றது. சு.இரா.

**நுளம்பர்**: தென்னிந்திய வரலாற்றில் கி.பி. 9, 10-ஆம் நூற்றாண்டுகளில் சிறந்து விளங்கிய அரச மரபினருள் நுளம்பரும் ஒருவராவர். நுளம்பர், நொளம்பர் எனவும் குறிப்பிடப்படுகின்றனர். கரு நாடகத்தின் எல்லையில் கன்னடம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளையும் பேசக்கூடிய மக்கள் வாழ்ந்த பகுதிகளை இவர்கள் ஆண்டு வந்தனர். அது நுளம்பவாடி, நொளம்பபாடி, நொளம்பராட்டிரம் எனச்சொல்லப்பட்டது. இதில் 32,000 ஊர்களும், ஆந் திர மாநிலத்திலுள்ள அனந்தபூர் மாவட்டத்தின் ஒரு பகுதியும்,கருநாடக மாநிலத்திலுள்ள சித்திரதுர்க்கம், தும்கூர் மாவட்டங்களும் அடங்கும்.பின்னர் இது விரி வடைந்ததால் பெல்லாரி மாவட்டத்தின் பெரும்பகுதி யும், பெங்களூர், கோலார் மாவட்டங்களும் இணைக் கப்பட்டன. பிறகு, சேலம், வட ஆர்க்காடு மாவட்டங் களின் சில பகுதிகளும் இவர்களுடைய ஆட்சியின்கீழ் வந்தன. இராட்டிரகூட, கங்க நாடுகளின் எல்லையில் இந்நாடு அமைந்திருந்ததால் அந்நாடுகளுடன் அடிக் கடி போர் நடந்துவந்தது.

இவர்களுடைய வரலாற்றை அறிந்துகொள்ளக் கருநாடக மாநிலத்தில் தும்கூர் மாவட்டத்தில் கிடைத்துள்ள ஏமாவதி கல்வெட்டுப் பயன்படுகிறது. இருப்பினும்இவர்களுடைய விரிவானவரலாறு தெரிய வில்லை.

இவர்கள் திருநயனன் வழிவந்த ஈசுவர மரபினர் ஆவர். இவர்களுடைய முதல் அரசன் மங்களன் அல் லது நொளம்பாதிராசன். அவருக்குப்பின் ஆட்சிக்கு வந்த அவர் மகன் சிம்மபோத்தன் அல்லது சிங்க போத்த காளி, கங்க நாட்டு அரசன் இரண்டாம் சிவமாறனுக்கு உட்பட்டு ஆட்சிபுரிந்தான். அடுத்து வந்த சாருபொன்னேரன் சிறந்த அரசனாக இருந்தாலும் இராட்டிரகூட மன்னன் மூன்றாம் கோவிந்தனின் குறுநில மன்னனாக இருந்து வந் தான். பின் ஆட்சிக்கு வந்த முதலாம் மகேந்திரன் சேலம் மாவட்டத்தை அடுத்துள்ள தகடூர் அல்லது தருமபுரியையும் ஆட்சி புரிந்துவந்தான். சோழர் களுக்கு எதிராக எழுந்து, புலி நாட்டைத்தாக்கி னான் என்று கூறப்படுகிறது. இவன் பாணருட னும் வைதும்பருடனும் பல போர்களில் ஈடுபட் டான். பின்னர் அரசு கட்டில் ஏறிய நன்னிகன் என்ற ஐயப்பதேவன், கீழைச் சாளுக்கிய மன்னன் இரண் டாம் பீமனை எதிர்த்துப் போர் புரிந்தான். கங்கர் களுக்கு எதிராக நடத்திய போரில் இவன் மாண் டான். பிறகு வந்த அண்ணிகன் அல்லது அண்ணை யன் இராட்டிரகூட மன்னன் மூன்றாம் கிருட்டிணனி டம் போர்புரிந்து தோற்றான். முதலாம் திலீபராசன், இரவி நுளம்பன் என்ற நுளம்பரசன், கங்க நாட்டு மன்னன் பூதுகனை எதிர்த்துப் போர் புரிந்து மாண் டான். பின்னர் நன்னி நுளம்பனைக் கங்க மன்னன் மூன்றாம் மாறசிம்மன் வென்று 'நுளம்ப குலாந்த கன்' என்ற விருதினைப் பெற்றான்.

அதன்பிறகு நுளம்பரின் வலிமை குன்றலாயிற்று. மேலைச்சாளுக்கியர், பாண்டியர், சோழர், ஒய்சாளர் ஆகியோரின் ஆதிக்கத்தின்கீழ் இந்நாடு சென்றது. நுளம்ப மரபினர் சோழப் பேரரசில் நிருவாக அலு வலர்களாகவும், படைத் தளபதிகளாகவும் பணி புரிந்தனர். இவர்கள் மேலைச் சாளுக்கிய மன்னர் களிடமும் பல பதவிகளில் இருந்தனர்.

சைவ சமயத்தைச் சேர்ந்த நுளம்பர்கள் சிவன் கோயில்களை எடுப்பித்துச் சிவாசாரியார்களை ஆதரித்தனர். சி.இரெ.

**துணை நூல்கள்:**

Mahalingam T.V., Readings in South Indian History, B.R. Publishing Corporation, New Delhi, 1977.

Robert Sewell., The Historical Inscriptions of Southern India, Asian Educational Services, New Delhi, 1983.

**நூ** நகரமும் ஊகாரமும் இணைந்து ஒலிக்கும் ஒலி. நுனிநா மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒற்றிப் பின் முழுதும் குவித்து நீட்டி ஒலிப்பதால் வரும் இசையே யாகும்.

தனியொரு மொழியாக அதிகம் வழக்கில் இல்லை. எனினும் எள், யானை என்ற இருபொருள்களைத் தருவதாக நிகண்டுகள் குறிக்கின்றன. யாழ்ப்பாண அகராதியில் ஆபரணம் என்னும் பொருள் இருப்பதாகக் காணப்படுகிறது.

**வடிவம்:** நூ என்ற எழுத்தின் வடிவம் பல ஆண்டுகள் வரை கல்வெட்டில் கிடைக்கவில்லை. இதன்வடிவம் கி.பி.11-ஆம் நூற்றாண்டில் இராசேந்திர சோழனின் கரந்தைச செப்பேட்டில் நுகரத்தின் வளர்ச்சியை ஒட்டியே காணப்படுகின்றது.

கீழே வளைந்த கோடு இடப் புறத்திலிருந்து நேர்கோடாக வந்து பிறகு ஒரு காலின் (அதாவது நெடிலின்) வடிவத்தை அடைந்தது. நுகரத்துக்குச் சொல்லப்பட்ட விளக்கமும் இதற்குப் பொருந்தும். . ... ...

கீழே உள்ள வளைகோடு விரைவாக எழுதப்படும்பொழுது வலப்புறக் கோட்டின் இடப்புற முனை சுழியாக மாறிற்று. இது இக்கால வடிவமே.... ... ...

கே.ஜி.கி.

**நூசுரதி** தென்னிந்தியாவில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் பீசப்பூரை ஆட்சிபுரிந்த இரண்டாம் அலி ஆதில் சாவின் (Ali Adil Shah II) அவைக்களப் புலவர். இவருடைய முழுப்பெயர் முகம்மது நூசுரதி (Nusrati) என்பதாகும். இவர் மிகுந்த புலமையுடைய வராக விளங்கியதால் முல்லா நூசுரதி என்றும் இவர் சொல்லப்பட்டார். கி.பி. 1656 முதல் கி.பி.1673 வரை ஆட்சிபுரிந்த பீசப்பூர் சுல்தான் காலத்தவர் இவர் என்பது தெளிவு. இவர் எழுதிய நூல்களுள் முக்கிய மாகக் குறிப்பிடத்தக்கது அலீநாமா. இந்த வீரகாவி யத்தை இவர் கி.பி.1666-இல் இயற்றினார். வரலாற் றாசிரியர்களுக்குப் பயனுடைய இந்நூலில் அலி ஆதில்சா வின் பத்தாண்டு ஆட்சிக் காலத்திய (கி.பி. 1655முதல்) நிகழ்ச்சிகளைக் காணலாம். இது தக்கணீ மொழியில் எழுதப்பெற்றது. இப்புலவருடைய மற் றொரு நூல் 'மேராசு நாமா' ஆகும். முகம்மது நபிகள் சுவர்க்கம் சென்று மீண்டதை இது சிறப்பிக்கின்றது. அகப்பொருட் பாடல்களின் திரட்டுநூல் ஒன்றும் இவரால் எழுதப்பெற்றது. அதன்பெயர் குல்தசுத-எ-இசுக்கு (Guldasto-e-Ishq). எண்ணாயிரம் அடிகளை யுடைய குல்சன்-எ-இசுக்கு (Gulshan-e-Ishq) என்னும் காதல் நூல் ஒன்றையும் கி.பி. 1657-இல் இவர் எழுதி னார். பீசப்பூர் மன்னன் இவருடைய கவித்திறமை யைக் கண்டு வியந்து தம் தோழராகவும் அவைக் களப் புலவராகவும் இவரை ஆக்கினார் என்பது தெரிய வருகிறது. தெ.பா.

**நூட்கா இந்தியர்,** வட அமெரிக்காவில் வாழும் இந்தியப் பழங்குடி இனத்தவர்களுள் ஒரு குடியினர். இவர்கள் வடமேற்குப் பசிபிக்குக் கடற் கரையில் வாழ்கின்றனர். இப்பகுதி வான்கூவர் தீவின் (Vancouver Island) தென் மேற்குக் கரையில் அமைந் துள்ளது. இவர்கள் வக்காசன் (Wakashan) என்னும் மொழியைப் பேசுகின்றனர்.

நூட்கா இந்தியர் (Nootka Indians) பண்பாட் டளவில் குவாக்கியூட்டில் (Kwakuitl) இந்தியர்களு டன் ஒத்துள்ளனர். குவாக்கியூட்டில் இந்தியர் அமெரிக்க இந்தியப் பழங்குடிகளுள் குறிப்பிடத் தக்க

வர்கள். நூட்கா இந்தியர்கள் வாழும் பகுதிகளில் மத்திய, தென் பகுதிகளில் வாழும் குழுவினர் சமுதாய அரசியல் அமைப்புகளில் ஓரளவு தனித்தே காணப்படுகின்றனர். வட பகுதியில் உள்ளவர்கள், பல நூற்றாண்டுகளாகப் பல கிராமங்கள் ஒன்று சேர்ந்து கூட்டாட்சி அமைப்புடைய நிருவாக முறையைக் கொண்டுள்ளனர். ஒவ்வொரு பழங்குடிக் குழுவினருக்கும் தனித்தனியான வேட்டையாடும் பகுதிகளும் மீன்பிடிககுமிடங்களும் உள்ளன. ஒருசில அமெரிக்க இந்தியப் பழங்குடிகளைப் போன்றேஇவர்களும் கோடைக் காலங்களில் தம்முடைய குடியிருப்புகளிலிருந்து நெடுந்தொலைவு சென்று இடைக்காலக் குடிசைகளை அமைத்து வேட்டையாடி உணவு சேகரித்து வாழ்கின்றனர். மழைக் காலத்தில் அனைவரும் அவர்களின் நிலையான குடியிருப்புகளுக்கு வந்து விடுகின்றனர்.

கடற் பகுதிகளில் வேட்டையாடுவதில் இவர்கள் வல்லவர்கள். குறிப்பாக, திமிங்கில வேட்டை இவர்களுக்குப் பிடித்தமானது. இவ்வகை வேட்டையில் மரக்கட்டையைக் குடைந்து செய்த தோணிகளையும் எறி ஈட்டிகளையும் (Harpoons) பயன்படுத்துகின்றனர்.எறி ஈட்டிகளை எறிவதில் மிகவும் திறமை வாய்ந்தவர்கள் மட்டுமே ஈடுபடுகின்றனர். இவர்களிடம், திறமை என்பது உடல் வலிமையும் நுண்ணறிவையும் மட்டும் குறிக்கவில்லை.எவனொருவன் மாய வித்தை, ஆவிகளைக் கட்டுபடுத்தும் திறன் முதலானவற்றைக் கொண்டுள்ளானோ அவனே திறமையானவன் எனக் குறிப்பிடப்படுகிறான். திமிங்கில வேட்டையின்போது விரிவான பல சடங்குகளை மேற்கொள்ளுகின்றனர். அதனால் நூட்கா இந்தியர்களின் பண்பாடு எசுக்கிமோவினர் (Eskimos), அலூயத்து (Aleut)மக்கள் ஆகியோரின்பண்பாட்டோடு தொடர்புடையதாக உள்ளது எனலாம்.

நூட்காவினரின் வாழ்வியலில் தெய்வத்தன்மையுற்றவனின் நடனம் (Shaman's Dance) மிகச் சிறப்பானது. இந் நடனத்தின் போது இயல்பிறந்த இயற்கையின் ஆற்றல்கள் மூலம் இறந்த முன்னோர்களை மீட்டுப் பார்க்க முடியும் என்று கருதுகின்றனர். இச் சடங்கின் போது ஒவ்வொருவருக்கும் சமுதாயத்திலுள்ள தகுதி வெளிப்படும். இவ்விழாவின் இறுதியில் விரயச் சடங்கு (Potlatch) ஒன்று நடைபெறும். பொருள்வளமிக்கவர் அனைவருக்கும்விருந்தளித்துத் தம்மிடம் உள்ள பொருள்களை அன்பளிப்பாக வழங்குவார். சீ.ப.

**நூபுர கங்கை:** இது மதுரை மாவட்டத்திலுள்ள அழகர் மலையில் அருவியாகச்செல்லும் ஒருசிறியஆறு. சிலம்பாறு என்று சிலப்பதிகாரம் இந்த ஆற்றினைக் குறிப்பிடுகிறது. கவுந்தியின் துணையொடு கோவலனும் கண்ணகியும் மதுரைசெல்லுங்கால், மதுரைசெல்வழி வினவிய கோவலனுக்கு, மாங்காட்டு அந்தணன் அதனைக் கூறுமிடத்து இவ்வாற்றினைக் குறிப்பிடுகின்றான். இந்த ஆறு விளங்கும் அழகர்மலையினை அவன் 'திருமால்குன்றம்' என்று கூறுகிறான் (சிலப.11. 91)அங்குள்ள இந்தச் சிற்றாற்றினை, 'நிலம்பக வீழ்ந்த சிலம்பாறு' என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். நிலம்பக வீழ்ந்த என்பதனால இவ்வாறு மலையினின்றும் அருவியாய்ப் பாய்ந்து தரையில் செல்லும் தன்மையுடையது என்பது புலனாகிறது. அழகர்மலை என்றும், பழமுதிர்சோலை என்றும் இக் காலத்தில் அறியப்படும் மலையின் உச்சியில் ஒருசிறிய அருவியாய் ஆண்டுள்ள தீர்த்தத்தொட்டியில விழுந்து செல்லும் சிற்றருவியினைக் காணலாம். நூபுர கங்கை என்னும் பெயரால் இனறு, புனித தீர்தத மாகக் கருதப்படும் அதுவே சிலம்பாறாகும் என்று கூறுகின்றனர். சிலம்பாறு என்னும் பெயரே 'நூபுர கங்கை' என மொழிமாற்றிக்கொளளப்பட்டு, வழங்கி வருகிறது. இக் காலத்தில, வேனிற்காலத்தே இம் மலை உச்சி செல்லும் அனபர்களுக்குக் குளிர்ந்த நீர் உதவும் அருவியாக இது உள்ளது. அ.மா.ப

**நூர்சகான் (கி.பி.1577-1645):** இந்தியாவை ஆண்ட மொகலாயப் பேரரசர் சகாங்கீரின மனைவி, இவருடைய இயற்பெயர் மெகருன்னிசா. இவர் அக்பரின்ஆட்சிக் காலத்தில் பாரசீகத்திலிருந்து செல்வம் தேடுவதற்காக இந்தியாவிற்கு வந்த மிர்சா கியாசு பெக்குஎன்பவரின்மகள். மிர்சாகியாசு பெககு தம் குடும்பத்தாருடன் இந்தியா வரும் வழியில் காந்தகார் என னுமிடத்தில் மெகருன்னிசா பிறந்தார். இலக்கியத்தில தேர்ச்சி பெற்றிருந்ததால் மிர்சா கியாசு பெக்கை அரணமனை மேற்பார்வையாளராக அக்பர் நியமித்தார். நூர்சகான் செர்ஆப்கன் எனும் அலிகுலிபெக்கு என்ற பாரசீக இளைஞரை மணந்தார். அலிகுலி பெக்கு சகாங்கீர் ஆட்சியில்வங்காளத்தின்ஒரு பகுதிக்கு அதிபதியாக (Jagirdar) இருந்தார். சிறிது காலத்திற்குள் அலிகுலிபெக்கு பேரரசரின் வெறுப்புக்குள்ளானார். எனவே, அவரைத் திருத்துவதற்காகச் சகாங்கீர் தம் உடன் பிறவாச்சகோதரரும் வங்காள ஆளுநருமான குத்புதீனை அனுப்பினார். ஆளுநருக்கும் அலிகுலி பெக்கிற்கும் நடநத சண்டையில் ஆளுநருடைய ஆட்கள் அலிகுலியைக் கொன்று விட்டனர். விதவையான மெகருன்னிசாவைக் குழந்தையுடன் அரண்மனைக்குக் கொண்டு வந்தனர். பேரழகு வாய்ந்த இவள் மீது சகாங்கீர் காதல் கொண்டார். சகாங்கீர் கி.பி. 1611-இல் இவளை மணந்து அரசியாக்கிக் கொண்டார்.

சகாங்கீர், முதலில் 'அரண்மனையின் ஒளி விளக்கு' எனப் பொருள்படும் 'நூர்மகால்' என்ற பட்டத்தை அளித்தார். ஆயினும், சிறிது காலத்திற்குப் பிறகு 'உலகத்தின் ஒளி விளக்கு' எனப் பொருள்படும் 'நூர்சகான் பேகம்' எனும் பட்டத்தைப் பெற்றார். சகாங்கீர், நூர்சகானுக்கு இறைமை சார்ந்த உரிமைகளையும் அரசாங்க அதிகாரங்களையும் அளித்திருந்தார். அவர் தம் உற்றார் உறவினர் அனைவருக்கும் பொருளும் பதவியும் கொடுத்து அவர்கள் வாழ்வு மேம்பாடடையச் செய்தார். மேலும், தம்பெயரில் நாணயங்கள் வெளியிட்டார். சகாங்கீர், அளவுக்கு மிஞ்சிய குடியால் உடல் நலம் குன்றினார். எனவே, நூர்சகான் தம் முதல் கணவனுக்கும் தமக்கும் பிறந்த பெண்ணைச் சகாங்கீருடைய மூத்த மனைவியின் மகனான சாரியருக்கு மணம் செய்வித்தார். சகாங்கீர் கி.பி.1627-இல்இறந்ததும் நூர்சகான் தம்அதிகாரத்தை இழந்தார். ஆட்சியைக் கைப்பற்ற நடந்த வாரிசுரிமைப் போரில் சாரியரும்உயிரிழந்தார். சகாங்கீரின் மற்றொரு புதல்வர் சாசகான் அரசு கட்டில் ஏறினார். நூர்சகான் சாசகானிடம் ஆண்டொன்றுக்கு இரண்டு இலட்சம் உருபாய் பெற்றுத் தம் எஞ்சிய வாழ்நாளை விதவையாகக் கழித்தார்.

நூர்சகான் அழகும் ஆற்றலும் மிக்கவர்; குதிரை ஏற்றத்திலும் வேட்டையாடுவதிலும் விருப்பம் மிக்கவர்;இலக்கியத்திலும் கலைகளிலும்ஈடுபாடுடையவர்; வள்ளண்மைமிக்கவர்.இவர் தலை சிறந்த பெண் அரசியாக இருந்தார். வாழ்நாளின் பிற்பகுதியிலும் நூர்சகான்பேரழகுடன் மிளிர்ந்தார். நூர்சகான் கி.பி.1645-இல் தம் 68-ஆம் வயதில் இறந்தார். தி.கை.

**நூல்: சொற்பொருள்:** தொடக்கத்தில் நூல் என்னும் தமிழ்ச்சொல், நூற்கப்பட்டது என்னும் பொருளில், பருத்தியால் இழைத்துச் செய்யப்பட்ட நூலினைக் குறித்து வழங்கியது. பின்னர் அதுவே, பருத்தி அல்லாத பட்டு, முடி முதலியவற்றால் ஆக்கப்பட்ட இழையினைக் குறிக்கலாயிற்று. சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி, நூல் என்னும் சொல்லிற்குப் பஞ்சுநூல், பூணூல், மங்கலநாண், கொத்தனின் எற்று நூல், மரத்தை அறுக்கும்போது அளவிடும் 24 சதுர அடி, சாத்திரம், ஆகமம், பழைய நாடகத் தமிழ் நூல்களுள் ஒன்று, ஆலோசனை முதலிய 13 பொருள்களைக் குறிப்பிட்டுள்ளது. அப்பொருள்களுள் பெரும்பாலன, பருத்தி நூல் சார்புடையவனாக உள்ளன. சாத்திரம், ஆகமம், ஆலோசனை முதலியன, புத்தகமாகிய நூல்களையும் அது தொடர்பாய் அமைந்த அதன் வகையினையும் உணர்த்துவனவாக உள்ளன.

**தொல்காப்பியத்தில்:** இக்காலத்தில் நூல் என்று கூறினால், அது பொதுவாகப் புத்தகம என்னும் பொதுப் பொருள்பட்டு அவ்வகையிலமையும் இலக்கண இலக்கிய நூல்களையும், உரைநடையிலும் செய்யுளிலுமமைந்த பல்துறை நூல்களையும் குறிக்கும். ஆனால், தொல்காப்பியர் காலத்தே இச்சொல், மொழியின் எழுத்துச் சொற்பொருள் இலக்கணத்தையோ, சிற்பம், ஓவியம், மருத்துவம், நாடகம், நாட்டியம், இசை போன்ற கலைச் சிறப்புணர்த்தும் நூல்களையோ குறிப்பதாக வழங்கியுள்ளது. 'பாட்டுரை நூலே', என்றும், 'நூலினான உரையினான' என்றும், 'நூலெனப்படுவது' என்றும், 'முதல் நூல் வழிநூல்' என்றும். 'முனைவன் கண்டது முதனூலாகும்' என்றும், 'நூலெனமொழிவ' என்றும் 'தன்னூலானும்' என்றும் வரும் இடங்களிலெல்லாம் நூல் என்பது இலக்கணத்தை உணர்த்துவதாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

தொல்காப்பிய எழுத்ததிகாரத்திலுள்ள முதல் இயல் ஒரு மொழியின் இலக்கணத்திற்குரிய, அம்மொழிக்கு அடிப்படையாக அமையும் எழுத்துப் பற்றிய மரபினைக் கூறுவதாக அமைந்துள்ளது. இங்கு நூல் என்னும் சொல் இலக்கணம் என்னும் பொருளினதாகவே உள்ளது. பிற்காலத்தில் இலக்கண விதிகளை, பா, பாவினம் கொண்டு எழுதும் மரபு தோன்றியுளதேனும், பண்டைக் காலத்தில் அது சூத்திரம் எனப்படும் நூற்பா யாப்பினாலேயே பெரிதும் செய்யப்பட்டது. நூற்பா (நூல்+பா) என்னும் பெயரின் முதனிலையாக நூல் என்பது இலக்கணம் என்னும் பொருளில் அமைந்ததாகலாம். பிற்காலத்தில் ஒரு புத்தகத்திற்கு முன்னர் அமையும் பாயிர அமைப்பு இலக்கிய, இலக்கணம் ஆகிய இரு வகைப்படைப்பிற்கும் அமைக்கப்பட்டது. தொடக்க காலத்தில் அதுவும் இலக்கண நூல்களுக்கே சிறப்பாக அமைக்கப்பட்ட செய்தியினைப் பாயிர இலக்கணம் கூறும் பகுதிகளால் அறியலாம். பாயிரத்தின் வேறு பெயர்களுள் ஒன்றான 'நூன்முகம்' (நூல்+முகம்) என்னும் பெயரிலுள்ள நூல் என்பதும் இலக்கணத்தை உணர்த்துவதாகக் கொள்ளல் ஏற்புடையதாகும். 'நூலுள்ளும் செய்யுளுள்ளும்' எனவரும் உரைத்தொடரில் இடம்பெறும் நூல் என்பது இலக்கணத்தையும் செய்யுள் என்பது இலக்கியத்தையும் சுட்டி நிற்பது அறியத்தக்கது.பவணந்தியின் நன்னூற் பெயரில் இடம்பெறும் நூல் என்னும் சொல் இலக்கணத்தை உணர்த்தி நிற்பது வெளிப்படை.

பருத்தி நூலால் இயன்றது என்னும் பொருளிலும் தொல்காப்பியர் நூல் என்னும் சொல்லை ஆண்டுள்ளார். பருத்தியான் இயன்று, ஆடை நெசவுகாரணமாக உருவாக்கப்படும் நூலின் பல புரிகவால் இயன்றதனை அந்தணர் முதலியோர் உடம்

பில் அணிந்து கொள்வர். அது காரணப் பெயராகப் 'பூணூல்' என்று வழங்கப்படும். அதனை நூலென்ற பெயரால் தொல்காப்பியர், 'நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங்காலை அந்தணர்க்குரிய என்று வழங்கியுள்ளார்.

பண்பட்ட மொழிகளில், ஒரு பொருளைக் குறிக்கத் தோன்றிய ஒரு சொல் பல்வேறு காரணங்களால் காலப்போக்கில் பல பொருளைக் குறிப்பது மொழியியலார் ஏற்றுக்கொண்ட உண்மையாகும். அவ்வாறு உணர்த்தும் பொருள், முதற் பொருளோடு நேர் தொடர்புடையதாகவோ சார்புத் தொடர்புடையதாகவோ அமையும். சார்புப்பொருள் ஆகுபெயர் அன்மொழித் தொகை போன்ற இலக்கணவகையால் அமைவதுண்டு. பஞ்சிழையை உணர்த்தும் நூல், உவம ஆகுபெயராகப் புல் மக்களால் இயற்றப்படும் இலக்கணத்தையோ, பின்னர் இலக்கியத்தையோ உணர்த்தலாயிற்று. இவ்வாறு, நூல் என்னும் சொல்லின் பொருள் விரிவு பெற்று, வேற்றுப் பொருளை உணர்த்தும் நிலை தொல்காப்பியத்திற்கு முன்னரே தோன்றியதேனும், அவ்வாறு தோன்றியதன் காரணமான விளக்கத்தை நன்னூலாசிரியர் தம் நூலில் தெளிவாகக் காட்டியுள்ளார்.

**இலக்கணத்தை நூல் என்றதன் காரணம்:** பழங் காலத்தில் பருத்தி நூல் நூற்பது பெரும்பாலும் பெண்களுடைய வேலையாக இருந்தது. அவர்கள் 'பருத்திப் பெண்டிர்' எனக் குறிப்பிடப்பட்டனர். நூல் நூற்றலில் பருத்திப்பெண்டிரின் செயல்களைப் புலவரொருவர் நூலியற்றுமாற்றிற்கு உவமைப் படுத்தியுள்ளார் பவணந்தியார். பருத்திப்பெண்டிர், செஞ்சொற் புலவராகவும், நூற்றற்குரிய பஞ்சு, நூல் செய்தற்குரிய சொற்களாலாகிய செய்யுட்களாகவும், நூற்கும் மகளிரின் கை புலவரின் வாயாகவும், நூற்கும் கதிர் புலவர்தம் அறிவாகவும் காட்டியுள்ளார். மகளிரிடத்திருந்தும் புலவரிடத்திருந்தும் 'மையிலா நூல்' உருவாகின்றது. பெண் நூற்கும் நூல் பலவாகச் சேர்த்து உருட்டப்பெற்று அமையும் கயிறும் நூல் எனப்படும். கயிறாகிய நிலையில் நூல் பயன்படுத்தப் படும் ஒரு செயலைப் புலவரால் உருவாக்கப்படும் செயலோடு ஒப்புமைகாட்டி விளக்கியுள்ளார். தச்சர் மரங்களை வெட்டி அவற்றிலிருந்து பொருள்களைச் செய்வதற்கு முன், அம் மரக்கட்டையிலுள்ள கோணல் மாணல்களைச் செம்மை செய்து சீராக்குவர். அவ் வேலைக்கு உதவியாக மரத்தில் நேர்கோட்டு அடையாளமிடுவதற்கு நூலைப் பயன்படுத்துவர். அந்நூல் பட்டடம் அறிந்து வெட்டி ஒழுங்குபடுத்துவர். மரக் கோட்டத்தை நேர் செய்யப்பஞ்சு நூல் பயன்படுவது போல, மக்களின் மனக்கோட்டத்தை நேர் செய்து, அவர்களைப்பயன்கொள்ளவும் பயன்படவும் செய்வது புலவர் தம் நூலாகும் என்று குறிப்பிட்டுள்ளார்.

**தொல்காப்பியம், சங்கநூல் ஆகியவற்றுள் நூல்:** தொல்காப்பிய ஆட்சியில், இலக்கணம் என்ற சிறப்புப் பொருளில் இடம்பெற்றுள்ள நூல் என்னுஞ் சொல், அவருக்குப் பின்னர், மக்கள் வாழ்க்கையில் இடம் பெறும் பல்வேறு துறை பற்றிய அறிவினைப் பற்றிக் கூறும் நூல்களுக்கும் வழங்கலாயிற்று. சங்க இலக்கியம் திருக் குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, முதலான தமிழ் இலக்கியங்களில் அவ்வாறு வழங்கப் பெற்ற ஆட்சியைக் காணமுடிகிறது. சிலவிடங்களில் நூல் என்ற சொல்லை, அடைமொழி சேர்த்து வழங்கிக் குறிப்பிட்ட சிறபபுப பொருள் விளங்குமாறும் செய்துள்ளனர்.

பாட்டிலும் தொகையிலும் 37க்கும் மேற்பட்ட இடங்களில் நூல் என்னும் சொல் ஆளப்பட்டுள்ளது. அவற்றுள் ஏறத்தாழ 25 இடங்களில் அச் சொல், பருத்திநூல் தொடர்பான பொருளிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. 'மாலைமார்ப நூலறிபுலவ' (திருமு. 261), 'நூல்வழிப் பிழையா நுணங்கு நுண் தேர்ச்சி' (மது. 646) ஆகிய இடங்களில் நூல் பொதுவாக இயற்றப்பட்ட நூல் என்னும் பொருளில் உள்ளது. மருந்துரை இருவரும் திருந்து நூல் எணமரும் (பரி-8:5), 'நான்மறை முது நூல் முக்கட் செல்வன்' (அகம். 181-16), 'ஆறுணர்ந்த ஒரு முது நூல்' (புறம். 166.4) ஆகிய இடங்களில் நூல் என்னுஞ் சொல், அடைபெறாமலும் பெற்றும் வந்து, வைதிக நெறி சார்ந்த வேதங்களைக் குறிக்கின்றது. 'நூலறி வலவ' (அகம் 114-8) 'நூலமைபிறப்பின் நீலஉத்தி' (அகம். 400.5) 'நூலியல் கண்ணோக் கொழிக்கும் பண்ணமை நெடுந்தேர்' (அகம் 234-7,8) ஆகிய இடங்களில் நூல், பரி இலக்கணங் கூறும் நூலையும், தேரியற்றும் இலக்கணம் கூறும் நூலையும் உணர்ததுகின்றது. 'விரிநூல் அந்தணர் விடிவு தொடங்க' (பரி.11-78) என்னுமிடத்து விரிநூல் என்பது வேததததை உணர்த்துமாயினும் உரையாசிரியர்கள் 'ஆகமங்கள்' என்று பொருள் கூறியுள்ளமை குறிப்பிடத்தக்கது. முதுநூல், விரிநூல் என்பன, சமய அடிப்படையிலான வைதிக நெறி சார்ந்த வேதாகமஙகளை உணர்த்துவனவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

'அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்,

திறம் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது' (கலி 99:2,3) என்னுமிடத்தில் தேவகுருவாகிய வியாழ பகவானும், அசுரகுருவாகிய சுக்கிராசசாரியும் முறையே செய்த பாற்கற்பத்தியம், சுக்கிர நீதி ஆகிய பொருள் நூல்களை, நூல் என்னும் சொல் உணர்த்து

வதாக உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார். திருக்குறளில் 12 இடங்களில்இச்சொல் ஆளப்பட்டுள்ளது அவற்றுள், 'மணியுள் திகழ்தரு நூல்போல்' (1273) என்னும் காமத்துப்பால் குறட்பகுதி தவிர எஞ்சிய இடங்களிலெல்லாம், பொதுவாகவும் சிறப்பாகவும் அமையும் நூல்களையேகுறிப்பதாக உள்ளது. 'நுண்ணிய நூல்பல' (373), 'நிரம்பிய நூலின்றிக் கோட்டி கொளல்' (401), 'மதிநுட்பம் நூலோடுடையார் (636), நூலொடென் நுண் அவை அஞ்சுபவர்க்கு', (726) 'அஞ்சுமவன் கற்ற நூல்' (727), 'நவில்தொறும் நூல் நயம் போலும்', (783) ஆகிய இடங்களில் இச்சொல், இலக்கணம், இலக்கியம், சாத்திரம் பிற அறிவு நூல்கள் ஆகியவற்றை உள்ளடக்கி நூல்கள் என்னும் பொதுப் பொருளிலே வழங்கப்பட்டுள்ளது. 'இலங்கு நூல் கற்றாரோடு' (410) என்னும்போது, இலங்கு என்னும் அடையால் நூல் என்னுஞ் சொல், மெய்ஞ் ஞான நூல்களைக் குறிப்பதாகக் கொள்ளல் தகும். இச்சொல், 'அறுதொழிலோர் நூல் மறப்பர்' (560) என்னுமிடத்து, வேதநெறி முதலியன உணர்த்தும் நூல்களையும், 'ஒற்றும் உரைசான்ற நூலும்' என்னுமிடத்து (581), அரசியற்கலை நூலையும், 'அமைவரண் என்றுரைக்கும் நூல்' (743) என்னுமிடத்து அரண் அமைப்பது பற்றிய சாத்திர நூலையும் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது. நூல் என்பது அறத்துப் பகுதியில் இடம்பெறுமாயின் அது அறநூல்களையும், பிறபகுதிகளில் இடம்பெறுமாயின் அவ்வப் பகுதியிலமையும் சிறப்பான அறிவுத்துறை பற்றிய நூல்களையும் குறிக்கும் என்று கொள்ளல் வேண்டும்.

**இரட்டைக் காப்பிய ஆட்சி**: நூல் என்பது மொழியின் எழுத்து சொல் முதலியவற்றை உணர்த்துவது என்னும் கருத்து மாறி, பிறவற்றையும் குறிக்கும் நிலை, சங்க இலக்கியங்கட்குப் பின்னரும் தொடர்ந்து வருவதாயிற்று. சிலப்பதிகாரமும் நூல் என்னும் சொல்லை, பருத்தி நூல் தொடர்பான பொருளில் மிகச்சிலவிடங்களிலும், அறிஞர் படைப்புகளை உணர்த்தும்பொருளில் பலவிடங்களிலும் பயன்படுத்தியுள்ளது. 'நாத்தொலைவில்லா நன்னூற் புலவன்' (சிலப்.3-44), 'நன்னூற் புலவற்கு நன்கனம் உரைத்தாங்கு' (சிலப்.25-106) ஆகிய இடங்களில் அறிஞர் தம் நூல்கள் என்னும் பொதுவான பொருளில் ஆண்டுள்ளார் இளங்கோவடிகள். 'நூல் நெறி மரபின் அரங்கம் அளக்கும்' (சிலப்.3.99), 'நாட்டிய நன்னூல் நன்கு கடைப் பிடித்தாங்கு' (சிலப்.3–158) ஆகிய இடங்களில் நாடக இலக்கண நூலையும், 'உரை நூல்கோடி ஒரு திறம்பற்றினார் (சிலப்.5–136) என்னுமிடத்தில் பொதுவான நீதிநூல்களையும், 'வரிநவில் கொள்கை மறை நூல்' (சிலப்.13-38), 'ஒத்துடைஅந் தணர் உரைநூல்' (சிலப்.15–70) என்னுமிடத்தில் வைதிக வேதங்களையும், 'விண்ணவர் கோமான் விழுநூல்' (சிலப்.11–99) என்னுமிடத்தில் ஐந்திர வியாகரணத்தையும், 'நூலறிபுலவரை நோக்க' (சிலப்.25-116) என்னுமிடத்து அரசியல் நூலையும் குறிப்பிட்டுள்ளார். நூல் 'திறன்மாக்கள் நீர்ப்படை செய்து' (சிலப்.27–16) என்னுமிடத்து இச்சொல், நடுகல் அமைத்துக் கோயில் எழுப்புவது பற்றிய செய்தி கூறும் சாத்திரத்தை உணர்த்துகிறது. மணிமேகலைக்காப்பிய ஆசிரியர் 'கந்துகக் கருத்தும் மடைநூற் செய்தியும்' (மணி.2-22) என்னுமிடத்து மடை நூல் என்ற பெயரால் சமையல் சாத்திரத்தினைச் சுட்டியுள்ளார். பின்னர் வந்த சமய நூல்களையும் பெரும்பாலும் இவ்வகைப் பொருளிலேயே பயன்படுத்தியுள்ளார். பவணந்தி போன்ற பின்வந்த இலக்கண நூலாசிரியர் சிலர் நூல் என்னும் சொல்லை மொழி இலக்கணமாகவே கொண்டு ஆண்டுள்ளனர். இலக்கணமாகிய நூலுக்குச் சொல்லப்பட்ட பொதுப் பாயிரம், சிறப்புப் பாயிரம் போன்ற அமைப்புகளைப் பின்னர் வந்த இலக்கியங்களும் பெறுவனவாயின.

**நூலமைப்பு**: தமிழ் இலக்கண ஆசிரியர்களான தொல்காப்பியரும்,பவணந்தி முனிவரும் தத்தம் இலக்கணப் படைப்புகளில் நூல் பற்றிய செய்திகளை விளக்கமாகக் கூறியுள்ளனர். அச்செய்திகளில் நூல் என்பதனை, மொழியின் எழுத்துச் சொல் முதலிய இலக்கணங் கூறும் பெயராகவே கொண்டு அதற்கு இலக்கணம் அமைத்துள்ளார்கள். அவை இலக்கண நூல்களுக்கே பொருந்துவனவாயினும், ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்குமிடத்து இக்காலக் கல்வி பயிற்றுதல் முறை பற்றிய பல செய்திகளும் பொருந்துமாறு அமைந்திருப்பது புலனாகும். தாங்கள் வகுத்த நூல் பற்றிய இலக்கணத்திற்கு, அவர்கள் உருவாக்கிய இலக்கண நூல்களே தக்க எடுத்துக்காட்டாகத் திகழும் சிறப்புடன் விளங்குகின்றன.

**தொல்காப்பியர் கருத்து**: தொல்காப்பியர் தம் இலக்கண நூலின் இறுதி இயலாகிய மரபியலில் நூல் பற்றிய இலக்கணத்தைக் கூறித் தம் நூலைச்செய்துள்ளார். மரபுநிலை மாறாமல், மொழியில் தொடர்ந்து அமைக்கப்படும் நூல், முதல் நூல், வழி நூல் என்று இரு வகைப்படும். பற்றிநிற்கும் இருவினைகளின் நீக்கத்தின் கண், விளங்கித் தோன்றும் மிக்க அறிவொடு கூடிய சான்றோன் முனைவன் எனப்படுவான். அம்முனைவனாற் செய்யப்படுவது முதநூலாகும். 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதல் நூலாகும்' (தொல். பொருள். 640) என்பது தொல்காப்பியம். வினையின் நீங்கி, விளங்கும் அறிவனால் செய்யப்படும் நூலில் குற்றம் இராது என்று பழைய உரையாசிரியர்கள் கருதுவர். அதனால் அத்தகைய ஆசிரியர் கூற்றைச் சான்றில்லாவிடினும் அப்படியே ஏற்றுக்கொள்வர். உரையாசிரியர்களின் கருத்தைப் பின்வந்தோர் மறுப்பரேயன்றி, நூலாசிரி

யர் கருத்தை மறுக்கமாட்டார்கள். இது பண்டை உரையாசிரியர் போற்றிய உரை மரபாகும்.

வழிநூல் என்பது முதல் நூல் கருத்தினை ஏற்று அதன் வழியாக உருவாக்கப்படும் நூலாகும். அவ்வா றமையும் வழிநூல், தொகுத்துக் கூறுதல், விரித்துக் கூறுதல், தொகுத்தும் விரித்தும் கூறுதல், பிற மொழியிலிருந்து மொழிபெயர்த்துக் கூறுதல் என்று நால்வகைப்படும். அந்நூல், சூத்திரத்தாலும் காண்டிகையாலும் பொருளைக் கூறுவதாய்ப் பத்து வகையான குற்றங்களும் நீங்கப்பெற்று, பல வகை உத்திகள் பொருந்தியதாக அமையும். சூத்திரம் என்பது, சில்வகை எழுத்தினால் இயன்ற செய்யுளாகி, உரைக்கும் போது கூறப்படும் உரைகளையெல்லாம் தன்னுள் அடக்கி, நுண்மையும் ஒண்மையும் உடையதாய், அசைக்க முடியாத இயல்பினதாய், அளப்பரும் அரும்பொருளைக் கொண்டதாய் அமைக்கப்படுவதாகும். காண்டிகை முதலான உரைகள், சூத்திரப் பொருளையும், ஏதுஎடுத்துக்காட்டு முதலிய சான்றுரைகளையும் காட்டி உரைக்கப்படுவதாகும். தொல்காப்பியர் ஒரு நூலில் இடம்பெறத் தகாத குற்றங்களையும் தொகுத்துக் காட்டியுள்ளார். அவை கூறியது கூறல், மாறுகொளக் கூறல், குன்றக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில கூறல், மயங்கக் கூறல், கேட்போர்க்கு இன்னாயாப்பிற்றாதல்,பழித்த மொழியால் இழுக்கங் கூறல், தன்னால் ஒரு பொருள் கருதிக் கூறல், என்னவகையிலும் மனங்கோள் இன்மை ஆகியனவாகும். முனைவன் படைத்த முதனூலில் இத்தகைய குற்றங்கள் இடம் பெறா என்பது துணிபு.

நூலில், செய்திகளைக் கூறுவதற்குப் புலவர் மேற்கொள்ளும் உத்திவகைகள் பலவற்றையும் தொகுத்துக் காட்டியுள்ளார். அவற்றை நுதலியது அறிதல், அதிகார முறைமை, தொகுத்துக் கூறல், வகுத்து மெய்ந்நிறுத்தல், மொழிப் பொருளோடு ஒன்றவைத்தல், மொழியாததனை முட்டின்று முடித்தல் முதலியனவாகக் குறிப்பிட்டுள்ளார். தம் நூலுள் கூறாத உத்திகள் இருப்பின் அவற்றையும் இயல்பறிந்து ஏற்றுக்கொண்டு நூலினை முடித்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் கருத்து.

தொல்காப்பியர் தம் நூலின் இறுதியில் நூல் பற்றி விளக்கும் நூற்பாக்களை அமைத்துள்ளார். எனினும், நூலமைப்பின் இன்றியமையாமை கருதிச் செய்யுளியலிலும் நூல் பற்றிய கருத்தினைக் கூறியுள்ளார். அங்கு நூல் எனப்படுவது, தொடக்கமும் முடிவும் மாறுபடாமல், தொகை வகையால் பொருண்மை காட்டிப் பலவித உரையொடு கூடி அமைவது என்கின்றார். நூல், சூத்திரம், ஒத்து, படலம், பிண்டம் ஆகிய உட்பிரிவுகள் கொண்டமையும். ஆடிபோல் பொருளை உணர்த்துவது சூத்திரம் என்றும், நேரின மணியை நிரல்படவைத்தது போல ஓரினப் பொருளை அடுக்கிக் கூறுவது ஒத்து என்றும், விரவிய பொருளால் பொது மொழி தொடர்வது படலம் என்றும், இம்மூன்று உறுப்புகளையும் கொண்டமைவது பிண்டம் என்றும் கூறுகின்றார். செய்யுள் தோன்றும் நிலம் ஏழு எனச் சுட்டி, அவற்றுள் ஒன்றாக நூல் என்று குறிப்பிடுவதனால் அது இலக்கணத்தைக் குறிப்பது என்பதும், அதுவொழிந்த பிறவெல்லாம் இலக்கணமல்லாத பிறவகைகளைக் குறிப்பன என்பதும் புலனாகின்றன.

**பவணந்தியார் கூறும் நூல் அமைப்பு**: பவணந்தி முனிவர் தம் நன்னூலின் தொடக்கத்தில் பொதுப் பாயிரம் என்று ஒரு பகுதியை அமைத்துக்கொண்டு அதன்கண் நூல் பற்றிய செய்திகளை விளக்கமாகக் கூறுவதோடு, நூலாசிரியர், நூல் கற்போர், நூற்பயன் போன்ற பிற பல செய்திகளையும் குறிப்பிட்டுள்ளார்.

அவர் கருத்துப்படி, நூல், இருவகைப் பாயிரங்களைக் கொண்டதாய் மூன்று வகையுள் ஒன்றினுட்படுவதாய், நாற்பொருள் பயப்பதாய், ஏழு மதங்கள் தழுவியதாய், பத்துக்குற்றம் நீங்கியதாய், பத்தழகு சான்றதாய், முப்பத்திரண்டு உத்திகளைக் கொண்டதாய், ஒத்தும் படலமும் உடையதாய், சூத்திரம், காண்டிகை, விருத்தி முதலியன அமைந்ததாய் இருத்தல் வேண்டும்.

நன்னூலார், தொல்காப்பியர் கூறும் முதல், வழி ஆகிய இரண்டொடு, சார்பு நூல் என்பதையும் சேர்த்து நூல் மூன்று வகைப்படும் எனக் கூறுகிறார். முதல் வழி நூல்களைத் தொல்காப்பியரை ஒட்டியே விளக்கியுள்ளார். முதல் நூலை விளக்குங்கால் 'வினையின் நீங்கிய' எனத் தொடங்கும் தொல்காப்பிய நூற்பாவையே எடுத்தாண்டுள்ளார். முதல் நூல் வழி நூல் ஆகிய இரு நூலாசிரியர் கருத்தையும் ஒரு வகையான் ஒத்து, பிறவகையால் ஒவ்வாது அமைக்கப்படுவது சார்புநூல் எனப்படும்.

நூலில் இடம்பெறும் மதங்களை-கோட்பாடுகளை, உடன்படல், மறுத்தல், பிறர்தம் மதமேற்கொண்டு களைதல்,தாஅனாட்டித்தனாது நிறுத்தல், இருவர் மாறுகோள் ஒருதலை துணிதல்,பிறர்நூற்குற்றங் காட்டல், பிறிதொடு படாஅன் தன்மதங்கொளல் என்று ஏழு வகையினவெனக் கூறுகின்றார். குன்றக்கூறல், மிகைபடக் கூறல், கூறியது கூறல் முதலாகப் பத்துக்குற்றங்களைக் குறிப்பிட்ட ஆசிரியர், சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கினிமை, நன்மொழி புணர்த்தல், ஓசை உடைமை, ஆழம் உடைத்தாதல், முறையின் வைப்பு, உலக

மலையாமை, விழுமியது பயத்தல், விளங்கு உதா ரணத்தாகுதல் என்று பத்து அழகுகளையும் சுட்டிக் காட்டியுள்ளார். நூலில் அமைய வேண்டிய உத்திகள் நுதலிப்புகுதல் முதலாக, உய்த்துணர வைத்தல் ஈறாக, முப்பத்திரண்டாகும் என்று வரையறை செய் துள்ளார். உத்திகளில் தொல்காப்பியர் கூறியவற்றுள் சில விடுத்தும், தாமே சிலகொண்டும் கூறியுள்ளார். ஒத்து, படலம், சூத்திரம் என்பனவற்றை விளக்கிய ஆசிரியர், நூற்பாவினைப் பொருள் கொள்ளும் நிலையை, ஆற்றொழுக்கு, அரிமாநோக்கு, தவளைப் பாய்த்து, பருந்தின் வீழ்வு என்று நால்வகைப் படுத்தி யுள்ளார்.

நூலை இயற்றும் ஆசிரியருக்கு இலக்கணம் கூறி யது போலவே, நூலைக் கற்பிப்போருக்கும், கற்கும் மாணவர்க்கும் பவணந்தியார் இலக்கணங் கூறியுள் ளார். நூலாசிரியரும்,(நூல்) கற்பிப்போரும் மாண வரும் ஆகிய முத்திறத்தாரும் கல்வி என்னும் முக் கோணத்தின் மூன்றுகோணங்களாக அமைகின்றனர். அம்மூன்றின் செம்மையே கல்விப் பயனை நிறைவிக் கும் என்பர் இக்காலக் கல்வியியல் ஆய்வாளர்கள். இதனையே நன்குணர்ந்து கூறப்பட்டதுபோல நன் னூலார் கூறும் ஆசிரியர் மாணாக்கர் இலக்கணம் அறிந்து மகிழத்தக்கதாகும்.

நூலைக் கற்பிக்கும் சிறந்த ஆசிரியர் என்பவர், குலன், அருள், தெய்வங்கொள்கை, மேன்மை, கலை பயில் தெளிவு, கட்டுரைவன்மை ஆகியவற்றோடு நிலம், மலை, நிறைகோல், மலர் ஆகியவற்றை ஒத்த மாட்சியும், உலகியல் அறிவும், உயர்குணமும் அமைந் தவராவார். மொழி குணம் இல்லாதவர், இழிகுண இயல்புடையவர், அழுக்காறு முதலிய குணமுடைய வர், கழற்குடம், மடற்பனை, பருத்திக் குண்டிகை முடத்தெங்கு ஆகியவற்றின் பண்புடையவர் ஆகி யோர் நூலாசிரியர் ஆகார். அவ்வாறே நூலைக் கற் கும் மாணவர் பண்பையும், கற்கத் தகாதார் பண் பையும் எடுத்துரைத்துள்ளார். அடுத்து நூலைக் கற் பிக்கும் முறையினையும் கற்கும் முறையினையும் விரி வாகக் கூறியுள்ளார். நன்னூலார் தம் பொதுப்பாயிர இலக்கணப் பகுதியின் இறுதியில் ஒரு நூலுக்கு அமைய வேண்டிய சிறப்புப்பாயிரம் பற்றிய இலக்கணத்தினைக் கூறியுள்ளார். ஒரு நூலின் சிறப்புப் பாயிரம், அந் நூலினை ஆக்கியவர் பெயர், வழி, எல்லை, நூற் பெயர், யாப்பு, நுதலிய பொருள், கேட்போர், பயன் ஆகிய எட்டுச் செய்திகளையும் கொண்டிருத்தல் வேண்டும். இவற்றோடு நூலியற்றப் பெற்ற காலம், இடம், காரணம் ஆகியனவும் அதன்கண் இடம் பெறலாம்.

ஒரு நூலுக்குப் பாயிரம் இன்றியமையாததாகும். நூல் ஆயிரம் வகையால் சிறப்பெய்தியதாயினும் பாயிரம் இல்லையேல் நூலெனக்கொள்ள இயலாது என்று கூறுவதன் மூலம் அதன் சிறப்பினைப் புலப் படுத்தியுள்ளார். நூற்கமையும் பாயிரம், மாடத் திற்குச் சித்திரம் போலவும், மாநகரத்திற்குக் கோபுரம் போலவும், அழகிய மாதர்க்கு அணிகலன் போலவும் சிறப்புடையதாகும்.

இந்தியச் சமயங்களுள் பெரும்பாலன, மக்கட்பிற விப்பயன் வீடுபேறு அடைவதாகும் என்று குறிப்பிடு கின்றன. இந்தியத் தத்துவ ஞானம் வீடுபேற்றினை வெவ்வேறு வகையில் விளக்கியுள்ளது. அதனால் சமயங்களின் அடிப்படையில் தோன்றிய இலக்கியங் கள் அனைத்தும் வீடுபேற்றை இறுதிப் பயனாகக் காட்ட முனைந்தன. காப்பிய இலக்கணக் கூறாக 'நாற்பொருள் பயக்கும் நடை' பேசப்பட்டது. நன்னூ லாரும் நூல் கற்பதன் பயனை, 'அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே' என்னும் இலக் கணத்தால் குறிப்பிட்டுள்ளார்.

அவ்வாறாயின், காப்பியத்திற்குப் பொருந்தும் நாற்பொருள் பயக்கும் தன்மை, ஒரு மொழியின் எழுத்து, சொல் போன்றவற்றைக் கூறும் இலக்கண நூலிற்கு எவ்வாறு பொருந்தும் என்னும் வினா எழக் கூடும். அதனைப் பழைய வெண்பா ஒன்று தெளிவு படுத்துகிறது. ஒருவன் எழுத்திலக்கணத்தை நன்கறிந் தால் அவனது இழி தகைமை நீங்கும்; அவ்வாறு இழிதகைமை நீங்கப் பெற்றவன் மொழியிலமையும் முட்டுப்பாடுகளை நீக்கி உண்மை உணரும் தன்மை யனாவான்; அவ்வாறானபோது அவன் முதல்வன் இயற்றிய முதல் நூலின் பொருளினை நன்குணர்ந்து, அதனால் தன் பிறவிப் பிணிக்கேதுவாயதனை களை யறுத்து,வீடுபேறடைவான் என்று அந்த வெண்பா கூறு கிறது.இதனால்நூல்என்பதனால் சுட்டப்படும்இலக்கண நூலும்வீடு பேற்றினை வாழ்வின்முடிந்த பொருளாக உணர்ந்து நன்மையுறுவதற்கு வாயிலாகவே அமைக் கப்படும் தன்மை புலனாகிறது.

தொல்காப்பியம், நன்னூல் போன்ற இலக்கணங் கள் 'நூல்' என்பதனை இலக்கண நூலாகவே கொண்டு விளக்கம் செய்துள்ளபோதிலும், காலப் போக்கில் அது காப்பியங்களையும், சிற்றிலக்கியங் களையும், உணர்த்துவதாகிப் பின்,உரைநடையிலான பிற துறை நூல்களையும் குறிப்பதாக அமைந்தது.

இலக்கணங்களையே யன்றிப் பிற எல்லாவகை யான ஞானத்தையும் அளிக்கும் நூல்களைப் பயின்ற வர்களும், 'நூலோர்' என்று கூறப்பட்டனர். பாரதி யும்,தமிழ் இலக்கிய இலக்கணம், ஆங்கிலம், சட்டம் முதலியன கற்றுச் சுதந்திரப் போரின் முன்னோடி யாய் நின்று, சிறை சென்றுசெக்கிழுத்த வ.உ.சிதம்ப ரனார் போன்றோரைக்குறிக்குமிடத்து 'நூலோர்கள் வெஞ்சிறையில் வாடுவதும்' என்று குறிப்பிட்டுள்ளார்,

விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும் வளர அதன் விளைவாக மிகப்பல துறைகளாகப் பெருகியுள்ள ஞானவாயில்களான புத்தகங்கள் அனைத்தும் இன்று நூல் என்ற சொல்லாலே குறிப்பிடப்பட்டும், அவை தொகுத்து வைத்துள்ள இடம் 'நூல்நிலையம்' 'நூலகம்' என்று பெயரிடப்பட்டும் வழக்கில் உள்ள தனைக் காணலாம். அ.மா.ப.

**நூலகச் சங்கம்**: நூலகம் பற்றியும், நூலகக் கல்வி பற்றியும், நூலகர் பணியைப் பற்றியும், அவர்களின் தேவையைப் பற்றியும், அவர்களை நல்லநிலையில் வைக்கவேண்டிய இன்றியமையாமை பற்றியும் மக்கள் அறியவேண்டும் என்ற நோக்கத்தோடு நூலகச் சங்கங்கள் உலக நாடுகள் பலவற்றில் தோன்றியுள்ளன.

நூலகப் பணியின் முன்னேற்றத்தினாலும் இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நன்கு வளர்ச்சியடைந்து கொண்டிருந்த பொது நூலகங்களினாலும் நூலகர்களுக்கு அவர்களுடைய நோக்கத்தையடைய ஓர் அமைப்புத்தேவைப்பட்டது.

அமெரிக்காவில் கி.பி. 1840-ஆம் ஆண்டில் 644 நூலகங்கள் இருந்தன. அச்சமயம் அந் நூலகங்கள் மிகச்சிலருக்கே பயன்படுவனவாக இருந்தன. இந் நூலகங்கள் மக்கள் அனைவருக்கும் பயன்படவேண்டும் என்ற குறிக்கோளுடன் கி.பி. 1876 – இல் பிலடெல்பியா என்ற அமெரிக்க மாநிலத்தில் நடைபெற்ற நூலகர்களின் மாநாட்டில் அமெரிக்க நூலகச் சங்கம் அமைக்கப்பட்டது. இச் சங்கம் உருவாக மிகப் பாடுபட்டவர்கள் பௌக்கர், மெல்வில்டூயி, சார்லசு கட்டர் ஆகியோராவர். அங்கு கி.பி. 1876 – இல் நூலகச் சட்டம் உருவானதற்கு அமெரிக்க நூலகச் சங்கம் காரணமாக இருந்தது. அமெரிக்க நூலகச் சங்கத்தின் தலைமையகம் சிகாகோவில் உள்ளது. அமெரிக்க நூலகச் சங்கத்தில் 1927-இல் 10,000 உறுப்பினர்கள் இருந்தனர். பின்னர் 1966-இல் இதில் 35,000-க்கும் மேற்பட்ட உறுப்பினர்கள் இருந்தனர். அமெரிக்க நாட்டிலும் மற்றஉலக அளவிலும் நூலகப் பணியின் முன்னேற்றத்திற்கு உழைப்பதே இச் சங்கத்தின் முக்கியக் கொள்கையாகும்.

இங்கிலாந்து நூலகச் சங்கம் கி.பி. 1877-இல் அமைக்கப்பட்டது. 'இங்கிலாந்து நூலகச் சங்கம்' என்பது கி.பி. 1896-இல் 'நூலகச் சங்கம்' எனப் பெயர்மாற்றம் செய்யப்பட்டது. அச்சங்கத்திற்கு கி.பி. 1898-இல் ஒப்புதல் அளிக்கப்பட்டது.

பின் உலகெங்கும் நூலகச் சங்கங்கள் தொடங்கப்பட்டன. இந்தியாவில் கி.பி.1923-இலும், அயர்லாந்துக் குடியரசு நாட்டில் 1928 இலும், ஆசுத்திரேலியாவில் கி.பி. 1937-இலும், நியூசிலாந்தில் 1933-இலும், கனடாவில் 1946-இலும், பாகிசுத்தானில் 1954-இலும் நூலகச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. நெதர்லாந்து, நார்வே, சுவீடன், தென்மார்க்கு, பின்லாந்து ஆகிய நாடுகளிலும் பல்வேறு நூலகச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. பின்னர் ஆசுத்திரியா, சைப்ரசு, செக்கோசுலோவாகியா, கிரீசு, அங்கேரி, இசுரேல், சப்பான், இலெபனான், போலந்து, உருமேனியா, துனீசியா, துருக்கி, உருசியா, ஐக்கிய அரபுக் குடியரசு ஆகிய நாடுகளிலும் நூலகச் சங்கங்கள் அமைக்கப்பட்டன.

அனைத்துலகக் கூட்டமைப்பு நூலகச் சங்கம்(International Federation of Library Association)1929-இல் தொடங்கப்பட்டது. இந்த அனைத்துலக நூலகச் சங்கம் 1958-59-ஆம்ஆண்டுகளில் நடத்திய விசாரணையின்போது இங்கிலாந்திலும் சுவீடனிலும் ஆசிரியர் தொழிலுக்குச் சமமாக அனைத்து நிலையிலும் நூலகர்கள் நடத்தப்படுவதாகத் தெரியவந்தது. இச் சங்கத்தின் குழு ஒன்று ஆண்டிற்கு ஒரு முறை ஒவ்வொரு நாட்டிலும் தனது மாநாட்டை நடத்திவருகிறது.

அனைத்திந்திய நூலகச் சங்கம் 1923-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இது மாநில நூலகச் சங்கங்கள் மூலம் நூலக இயக்கத்தைப் பரப்பி வருகிறது. ஆண்டு தோறும் மாநாடுகள் கூட்டப்படுகின்றன. இம் மாநாட்டில் இந்தியாவிலிருந்து நூலகத் துறையைச் சேர்ந்தவர்கள் 500 பேர்களுக்கும் மேலாகக் கலந்து கொள்கிறார்கள். மேலும், வெளி நாட்டிலிருந்தும் பலர் வந்து கலந்துகொள்கிறார்கள். இந்திய நூலகச் சங்கத்தில் உறுப்பினராக விரும்புவர்கள் உரூ 25-உறுப்பினர் கட்டணம் செலுத்தவேண்டும். நா.பாண்.

**நூலகச் சட்டம்**: பல்வேறு நூல்களும், இதழ்களும் முறைப்படிச் சேகரித்து ஓரிடத்தில் வைக்கப்பட்டிருக்கும் அறிவுக்களஞ்சியங்கள் நூலகங்கள் எனப்படும். நூலகத்திலுள்ள நூல்கள் பொருள்வாரியாகப் பகுத்துப் பட்டியலிட்டுப் பயன்படுத்தும் வகையில் இருக்கவேண்டும். அமைப்பும் செயல்முறையும் கொண்ட நூலகத்தின் பணி சிறப்பாக நடைபெற நூலகச் சட்டம் தேவைப்படுகிறது.

நூலகங்கள் பள்ளி நூலகம், கல்லூரி நூலகம், பல்கலைக்கழக நூலகம், தொழில்நுட்பவியல் நிறுவனங்களைச் சேர்ந்த நூலகம், பொது நூலகம் எனப் பலவகையாக அமைந்துள்ளன. இவற்றில் பொது நூலகங்களைத் தவிர மற்ற நூலகங்களின் நிருவாகம் வேறுபட்டதாகும். எடுத்துக்காட்டாகக் கல்லூரி நூலகத்தை எடுத்துக்கொண்டால் இது கல்லூரிக் கல்வி இயக்குநரின்கீழ்ச் செயற்படுகிறது. கல்லூரி

இயங்க என்ன சட்டமுறைகளோ அவையே இந் நூலகத்தையும் சாரும் இதேபோல்தான் பள்ளி, பல்கலைக்கழகம், தொழில் நுட்பவியல் நிறுவனங் களைச் சார்ந்த நூலகங்களின் நிருவாகமும் சட்ட முறைகளும் அவ்வந் நிறுவனங்களைச் சார்ந்தே விளங்குகின்றன; பொதுவான சட்டமுறைகள் இல்லை.

ஆனால், பொது நூலகம் அதன் பணியைச் செவ்வெனச் செய்வதற்குத் தனியான நூலகச் சட்டம் தேவைப்படுகிறது. முதன்முறையாக அரசு ஆணைப்படிதான் நூலகப்பணியைத் தொடங்கி நடத்தமுடியும். நூலகப் பணியானது மக்களுக்கு முழுமையாகப் பயன்பட வேண்டுவதே சரியான வழியாகும். சட்ட முயற்சி மூலம்தான் இன்று நூலகத்துறையில் பல்வேறு நாடுகள் முன்னேறி யுள்ளன. குறிப்பாகப் பிரிட்டன்,அமெரிக்கா,உருசியா சப்பான்(Japan) மெக்சிகோ, செக்கோசுலோவாகியா, தென்மார்க்கு, பெல்சியம், பல்கேரியா, பின்லாந்து, போலந்து ஆகிய நாடுகளைக் கூறலாம்.

நூலகச் சட்டமானது நோக்கம், அமைப்பு, நடை முறை, நிதிநிலை, கண்காணிப்பு, பயன் முதலியவை களைக் கொண்டிருக்க வேண்டும்; அந்தந்தக் காலத்திற் கேற்ப மாற்றிக்கொள்ள வசதியாக இருக்கவேண்டும். அரசியல் மாற்றத்திற்கு ஆளாகி விடாத நிலையில் நூலகச் சட்டத்தை இயற்ற வேண்டும். கல்வியைப் போலவேநூலகப் பணியும் இலவசமாகக் கிடைக்க வழி செய்யவேண்டும். நூலகப் பணிக்கான வரவு செலவுத் திட்டம் நிரந்தரமாக இருக்கவேண்டும். இந்த வரவு செலவானது நாளுக்கு நாள் முன்னேறும் மக்கள் தேவைக்கேற்ப வளர்ந்து வருவதாகத் திட்டமிட வேண்டும்.

ஒரு நூற்றாண்டிற்கு முன்னதாகவே அதாவது கி.பி. 1850-ஆம் ஆண்டில் சட்டத்தோடு இயைந்த வகையில் நூலகப்பணியைத் தொடங்கிய முதல் நாடு இங்கிலாந்து ஆகும். எவார்ட்டு என்பவரின் பெரு முயற்சியால் கி.பி.1850-இல் இங்கிலாந்து பாராளுமன் றத்தில் நூலகச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. பின் சிறிது சிறிதாகச் சட்டத்தில் மாற்றங்கள் செய்து கொண்டு நூலகப் பணியில் முன்னேற்றம் கண்டனர்.

அமெரிக்க நாட்டில் கி.பி.1876-இல் பிலடெல் பியாமாநிலத்தில் அமெரிக்க நூலகச்சங்கம் தொடங் கப்பட்டதைத் தொடர்ந்து கி.பி.1876-இல் அங்கு நூலகச் சட்டம் கொண்டுவரப்பட்டது. இதன்பின் அங்குள்ள அனைத்து மாநிலங்களிலும்நூலகச் சட்டம் கொண்டு வரப்பட்டது. அமெரிக்க அரசு 1956 -இல் நூலகப் பணச்சட்டம் கொண்டுவந்தது. இதன் படி மாநிலங்கள் மைய அரசிடம் நிதியுதவி பெற லாம். நாட்டுப்புற நூலகங்களுக்கு நூல்கள் வாங்க மட்டும் ஏழு இலட்சம் தாலர்கள் கி.பி.1956 - 58-இல் செலவழிக்கப்பட்டன.

சப்பானில் கி.பி.1899-இல் நூலகச் சட்டம் கொண்டுவரப்பட்டுக்கல்வி அமைச்சகம்மூலம் கிராமப் புறங்களில் நூலகம் நிறுவ முடிந்தது. உருசியா 1921-இல் நூலகச் சட்டம் கொண்டுவந்து நூலகப் பணியைப் பரவச் செய்தது. இதன்பின் இச் சட்டத் தில் பல திருத்தங்கள் செய்யப்பட்டன.

காசியில் முதல் ஆசியக் கல்வி மாநாடு 1931 -ஆம் ஆண்டில் நடைபெற்றது. அம் மாநாடா னது நூலகப் பணி பற்றி விவாதித்து நூலகத் தந்தை அரங்கநாதன் அவர்களால் உருவாக்கப்பட்ட மாதிரி நூலகச் சட்டம் (Model Library Act) ஒன்றையும் தந்தது.

சென்னைச் சட்டசபையில் நூலகச் சட்ட முன்வரைவு 1933-இல் கொண்டுவரப்பட்டு பணம் மிகுதியாகச் செலவாகும் என்ற காரணத்தால் பின்னர் அத்திட்டம் கைவிடப்பட்டது. சென்னை அரசாங்கம் 1948-இல் பொது நூலகங்களின் சட் டத்தை இயற்றியது. இச்சட்டம் தலைமை ஆளு நரின் ஒப்புதல் பெற்றுச் சென்னை அரசிதழில் 1949 -இல் வெளியாகியது. பின்னர் 1950, ஏப்பிரல் திங்க ளில் செயல்முறைக்கு வந்தது. இச்சட்டத்தின் பய னாக மாநில மைய நூலகம் ஒன்றும் மாவட்டத்திற்கு ஒரு மைய நூலகமும் பெரிய ஊர்களில் கிளை நூல கங்களும் பணியாற்றி வருகின்றன. அரசால் நியமனம் செய்யப்படும் இயக்குநர் அரசின் மாநில, மைய நூல கங்களையும் மாவட்டங்களின் மைய நூலகங்களை யும் பிற கிளைப்பொது நூலகங்களையும் நெறிப் படுத்தி நிருவகிப்பார்.

ஒவ்வொரு மாவட்டத்திலும் வீட்டுவரி அல்லது சொத்து வரியில் உருபாய்க்கு 5 காசுகள் வீதம் நூலக வரி வசூலிக்கப்படுகிறது. இவ்வாறு பெறப்படும் தொகைக்குச் சமமான தொகையை அரசாங்கம் மானியமாக வழங்கும். சென்னை நகருக்கு மட்டும் மானியம் கிடையாது. அதன் நூலக வரியே போது மானதாக இருக்கும் என்பது கருத்து.

ஐதராபாது அரசாங்கம் 1954-ஆம் ஆண்டில் ஐதராபாது நூலகச் சட்டத்தை நிறைவேற்றி யது. சென்னையிலிருந்து பிரிந்த ஆந்திர மாநிலம் இந் நூலகச் சட்டத்தை ஏற்றுக்கொண்டுவிட்டது. இந்திய அரசு கே.பி. சின்கா தலைமையில் ஒரு நூலக அறி வுரைக் குழுவை (Library Advisory Committee) 1956-இல் நியமித்தது. இக் குழு 1958-இல் 147 பக்கங்கள் கொண்ட அறிக்கையை இந்திய அரசின் கல்வி அமைச்சருக்குக் கொடுத்தது.

**அறிக்கையின் முக்கியக் குறிப்புகள்: 1)** இந்தியா முழுமைக்கும் 25 ஆண்டு நூலகத் திட்டம் ஒன்று

வேண்டும். 2) அதற்காக அரசாங்கம் நூலக வரி விதித்துப் பணம் சேர்க்கவேண்டும். 4) அப்படி வரும்பணத்திற்கு இணையாக மாநில அரசுகள் உதவித்தொகை அளிக்கவேண்டும். 4) அதைப்போலவே மைய அரசும் உதவித்தொகை அளிக்கவேண்டும். 5) நாட்டிலிருக்கும் எல்லா உதவி பெறும் நூலகங்களும் நாளடைவில் பொது நூலகங்களாக மாற்றப்பட வேண்டும். 6) ஒவ்வொரு மாநிலமும் நூலகச் சட்டம் ஒன்று இயற்றவேண்டும் 7) இப் பணியினை நெறிப்படுத்த மைய அரசு நூலகச் சட்டம் ஒன்றை நிறைவேற்ற வேண்டும். இதனைக் கொள்கையளவில் ஏற்றுக்கொண்டு மைய அரசு நூலகப் பணிச் சட்டம் ஒன்றை 1963-இல் உருவாக்கி எல்லா மாநிலங்களுக்கும் அனுப்பிவைத்துப் பண உதவியும் செய்தது. இதனை நன்கு பயன்படுத்திக்கொண்டு அந்நாளைய மைசூர் அரசு 1956-ஆம் ஆண்டிலும் மகராட்டிர அரசு 1967-ஆம் ஆண்டிலும் நூலகச்சட்டத்தை நிறைவேற்றின. நா.பாண்.

**நூலகம்**: நூல்கள், காலமுறை இதழ்கள், நிலப்படங்கள், கையெழுத்துப் படிகள், சுவடிகள், நிழற்படங்கள், நாளிதழ்கள், ஒலி,ஒளிநாடாக்கள் முதலியன ஒன்றாகத் தொகுத்து மக்கள் பயன்கொள்ளும் வகையில் வைக்கப்பட்டுள்ள இடம் நூலகம் எனப்படும். பொதுவாக நூலகங்களை 1) பொது நூலகங்கள், 2) கல்வி நூலகங்கள், 3) சிறப்பு நூலகங்கள் என மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

தேசிய நூலகம், மாநில மைய நூலகம், மாவட்ட மைய நூலகம் முதலியன பொது நூலகங்களின்கீழ் அமையும் நூலகங்கள் ஆகும். இந்தியாவில் தேசிய நூலகம் கல்கத்தாவில் உள்ளது. தமிழத்தில் சென்னையில் உள்ள கன்னிமாரா நூலகம் மாநில மைய நூலகமாகும். தமிழகத்தின் 22 மாவட்டங்களுள் 16 மாவட்டங்களில் மாவட்ட மைய நூலகங்கள் உள்ளன. ஒவ்வொரு மாவட்ட மைய நூலகத்தின்கீழும் பல கிளை நூலகங்கள் செயற்பட்டு வருகின்றன.

பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழக நூலகங்கள் முதலியன கல்வி நூலகவகையுள் அடங்கும். சிறைச்சாலை, மருத்துவமனை, சுவடி நூலகங்கள், அரசுத் துறைகள் ஆகியவற்றிலுள்ளன சிறப்பு நூலகங்களில் அடங்கும். இதைத் தவிரத்தனியார் நூலகங்களும் வாடகை நூலகங்களும் உள்ளன.

தொடக்கக் காலத்தில் சமணர்களும் பௌத்தர்களும் கல்வியைவளர்த்து வந்தது மட்டுமல்லாது தங்கள் மடங்களில்ஏராளமான சுவடிகளைச் சேகரித்துக் காத்தும் வந்தனர். அவ்வாறே சைவ மடங்களிலும் எண்ணற்ற சுவடிகள் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன.

முதன்முதல் பாபிலோனியாவில் நூலகம் ஏற்படுத்தப்பட்டது. அந் நூலகத்தில் களிமண் பலகைகள் ஏடுகளாகப் பயன்படுத்தப்பட்டன. அசிரிய மன்னர் ஆசுர் பாணிபால் (Assur Bani-pal) என்பவருடைய நூல்நிலையம் மிகப் பழமையான நூல் நிலையமாகும். நூலகர்என்ற பதவியை முதன்முதல் வகித்தவர் அமில் அனு(Amil Annu) என்னும் பாபிலோனியராவர். அட்டலசு(Attalus) என்பவர் ஆசியாமைனரில் உள்ள பர்கமம் (Pergamam) என்னுமிடத்தில் நூல் நிலையத்தினை ஏற்படுத்தினார். அந்த நூல் நிலையத்திற்கு மார்க்கு அந்தோணி (Mark Antony) என்ற உரோமானிய வீரர் இரண்டு இலட்சத்திற்கு மேற்பட்ட நூல்களை அன்பளிப்பாக வழங்கினார்.

உலகப் புகழ்பெற்ற அறிஞர்களான பிளேட்டோ, அரிசுட்டாட்டில் என்பவர்களிடம் மிகப்பெரிய நூல் தொகுப்புகள் இருந்தன. உலகில் முதனமுதல் கிரீசு நகரங்களே பொதுமக்களுக்கான நூல நிலையங்களை நிறுவின. உரோமாபுரியில் முதன்முதல் கி.மு.150-ஆம ஆணடு நூல் நிலையம் ஏற்படுததப்பட்டது. வெளி நாடுகளில படையெடுத்துக் கவர்நது கொண்டு வந்த நூல்களைக் கொண்டே அந நிலையம உருவானது. அலபியன் நூலகம் (Ulpian Library)உரோமில் மிகப புகழ்மிக்க நூலகமாகும். உரோமாபுரியில கி.பி. 300-ஆம் ஆண்டு பொதுமக்களுக்கான 30 நூல் நிலையங கள் இருந்தன. அவை பெரும்பாலும் கோயில்களிலேயே இருந்தன. பெனடிக்டைன் துறவிகள(Benedictine Monks) கி.பி. 530-ஆம் ஆணடு இத்தாலியில மாண்டி கிரிசுடோ அபி (Monte Cristo Abbey) என்ற மாதாகோயிலில் முதல் மட நூல் நிலையத்தை நிறுவினர்.

இங்கிலாந்தில் முதன்முதல் நூல் நிலையங்களை நிறுவியவர்களும் கிறித்தவ மதத் துறவிகளே. காண்டர்பரி (Canterbury) என்னும் ஊரில் கி.பி. 596-ஆம ஆண்டில் நூல் நிலையம் ஏற்படுத்தப்பட்டது. ஆக்சுபோர்டில் உள்ள புகழ்மிக்க நூல் நிலையம் 'பிரான்சிசுகன்' (Fransiscan) எனப்படும் துறவிகளால் ஏற்படுத்தப்பட்டதாகும்.

ஐரோப்பாவில் மறுமலர்ச்சி இயக்கம் தோன்றிய பின்னர் ஐரோப்பிய நாடுகளில் அரசர்களும், மக்களும் பல நூல் நிலையங்களை நிறுவலாயினர். அச்சுமுறை கண்டுபிடிக்கப்பட்டதே மிகுதியாக நூல் நிலையங்கள் ஏற்பட முதற் காரணமாயிற்று. இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில் கி.பி.1850-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட பொது நூல் நிலையச் சட்டத்தினால் பிரிட்டனில் நூல் நிலைய இயக்கம் உண்டாகியது. அதே காலத்தில் அமெரிக்காவிலும் நூல் நிலைய இயக்கம் தொடங்கியது. இவ்விரு நாடுகளும் கி.பி. 19-ஆம்

நூற்றாண்டின் இறுதியில் நூலகர்களுக்கான பயிற்சியைப் பல்கலைக்கழகங்கள் மூலம் அளிக்கத் தொடங்கின. பிரித்தானியப் பொருட்காட்சிச்சாலை நூல் நிலையம் (British Museum Library in London) உலகில் பெரியது; இசுலோன் (Sloane) என்பவருடைய நன்கொடையால் கி.பி. 1753–ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. இது 32,00,000 அச்சுப்பிரதிகளையும்,56,000 கையெழுத்துப் பிரதிகளும் ஆயிரக்கணக்கான நாள்,வார, திங்கள் இதழ்களையும் கொண்டது. இங்கிலாந்தில் வெளியிடப்படுகின்ற நூல்கள் ஒவ்வொன்றும் இந் நூல் நிலையத்திற்கு அனுப்பப்பட வேண்டும்.

இந்தியா சுதந்திரம் அடைவதற்குமுன் இந்திய அமைச்சரின் அலுவலகம் இந்திய அலுவலகம் எனப்படும். அந்த அலுவலகம் இலண்டனில் இருந்தது. அதில் ஒரு நூல் நிலையம் அமைந்துள்ளது. அந் நூல் நிலையம் கிழக்கிந்திய வணிகக் குழுவினைச் சார்ந்த சிலரால் வளர்ச்சிபெற்றது. இந்திய அலுவலக நூல் நிலையத்தில் 20,000 கையெழுத்துப் பிரதிகளும், 2,30,000 அச்சுப் பிரதிகளும் உள்ளன. இங்கிலாந்தில் ஒவ்வொரு பிரிவிலும் ஒரு நூல் நிலையம் இருக்கிறது. இங்கிலாந்திலுள்ள பல்கலைக்கழகங்களின் நூல் நிலையங்களுள் கி.பி. 1602–ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட ஆக்சுபோர்டு பாட்லியன் (Oxford Bodleian) நூல்நிலையம் மிகவும் தொன்மை வாய்ந்தது. பொதுமக்களுக்கான சிறிய கிளை நூலகங்களும் உள்ளன. நூல் நிலைய வசதியற்ற இடங்களுக்கு நடமாடும் நூலகங்கள் செயற்பட்டன. இலண்டனில் கி.பி. 1882–ஆம் ஆண்டு பார்வை அற்றவர்களுக்கென்று தனி நூலகம் ஏற்படுத்தப்பட்டது. மான்செசுடர் பல்கலைக்கழகத்தில் 1926–ஆம் ஆண்டு காது கேளாதோர் நூல் நிலையம் ஏற்படுத்தப்பட்டது. நோயாளிகளுக்கென். றும் தாதியர்களுக்கென்றும் ஒரு நூலகம் 1911–ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது.

பிரான்சு நாட்டு நூல் நிலையங்களில் சுமார் 3 கோடி நூல்கள் உள்ளனவென்று கணக்கிடப்பட்டுள்ளது. பிரான்சு நாட்டுத்தேசிய நூலகத்தில் (Bibliotheque Nationele in Paris) நூலகத்தில் 44,00,000–க்கும் மேற்பட்ட அச்சுப் பிரதிகளும் 1,22,000 கையெழுத்துப் பிரதிகளும் உள்ளன. கலை, அறிவியல் துறைகளில் ஆராய்ச்சி செய்வோர் உலகத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் இந் நூலகத்திற்கு வருகின்றனர்.

செருமனியில் உள்ள மொத்த நூல் நிலையங்கள் 395 ஆகும். உலகிலேயே மிகப்பெரிய இலெனின் கிராடு நகர நூல் நிலையத்தில் 45,66,645 அச்சுப் பிரதிகளும், 2,40,000 கையெழுத்துப் பிரதிகளும் உள்ளன. மாசுக்கோவில்உள்ள இலெனின் நினைவு நூலகத்தில் 120 இலட்சத்திற்கும் மேலாக நூல்கள் உள்ளன. மாசுக்கோப்பல்கலைக்கழக நூலகத்தில் 3,10,000 நூல்கள் உள்ளன.

இத்தாலியில் வாடிகன் நகரத்தில் (Vatican City) கி.பி.1447 -இல் உரோமன் கத்தோலிக்கப் போப்பாண்டவர் ஒரு நூலகத்தை ஏற்படுத்தினார். அந் நூலகம் அரிய நூல்களின் கருவூலமாகத் திகழ்கிறது. அந் நூலகத்தில் 31,000 அரிய இலத்தீன் கையெழுத்துப் பிரதிகளும் 4,000 பழைய கையெழுத்துப் பிரதிகளும் 40,000 அச்சு நூல்களும் உள்ளன.

சீனாவில் 1927–இல் 503 நூல்நிலையங்கள் இருந்தன.பீக்கிங் நகர நூலகம் மிகப் பெரியது.மாகாணத் தலைமை நூல் நிலையங்களும், பல்கலைக்கழக நூல் நிலையங்களும் உள்ளன.

நூலக இயக்கத்தில் சப்பான் மிக முன்னேறியுள்ளது. தோக்கியோ நகர நூல் நிலையமும், தியடோ பல்கலைக்கழக நூலகமும் மிகப் பெரியன ஆகும். சப்பானில் நகராட்சி நூல் நிலையங்கள் மிகுதியாக உள்ளன.

நூலக வளர்ச்சியில் அமெரிக்கா முன்னணியில் உள்ளது. அந் நாட்டுச் செல்வர்கள் நூலக வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்றனர். நியூயார்க்குப் பொதுமக்கள் நூலகத்தில்29,71,209நூல்கள் உள்ளன. அமெரிக்கப் பல்கலைக்கழக நூல் நிலையங்களுள் ஆர்வார்டு, கொலம்பியா, கலிபோர்னியா, சிக்காகோ, பென்சில்வேனியா முதலியன புகழ்பெற்றவை. அமெரிக்கக் காங்கிரசு நூலகம் கி.பி. 1800 – ஆம் ஆண்டு ஏற்படுத்தப் பட்டது. இந் நூலகம் அமெரிக்காவின் தேசிய நூலகமாகும். இந் நூலகக் கட்டடம் அழகாகவும் பெரிதாகவும் அமைந்துள்ளது. உலகில் உள்ள நூலக வரிசையில் இது 3–ஆம் இடத்தைப் பெற்றுள்ளது. அமெரிக்காவிலுள்ள 700 நூலகங்களிலுள்ள நூல்களின் பட்டியல்கள் இந் நூலகத்தில் இடம் பெற்றுள்ளன. அமெரிக்காவில் 6,000 பொது நூலகங்கள் உள்ளன.

**இந்தியத் தேசிய நூலகம்:** இந்தியாவிலுள்ள நூல் நிலையங்களில் மிகவும் சிறப்பு வாய்ந்தது கல்கத்தா தேசிய நூலகமாகும். இந் நூலகம் 1948 – ஆம் ஆண்டுக்கு முன்னர் 'இம்பீரியல்' நூலகம் எனக் குறிக்கப்பட்டு வந்தது. இந் நூலகம் கர்சன் பிரபு (Lord Curson) என்பவரால் உருவாக்கப்பட்டது. இந் நூலகம் கல்கத்தாவில் துணை ஆளுநர் மாளிகையில் இயங்கி வருகிறது. இந்தியாவில் வெளியிடப்படுகின்ற நூலின் ஒவ்வொரு பிரதியும் 1945 – ஆம் ஆண்டு இந்தியப் பொது நூலகச் சட்டத்தின்படி (Copyright Law) இந் நூலகத்திற்கு வழங்கப்பட வேண்டும், இச்சட்டத்தின்படி நான்கு பிராந்தியங்களிலும் (Regions) தேசியமைய நூலகங்கள் நிறுவப்

பட்டன. கிழக்குப் பிராந்திய தேசிய நூலகம்-கல் கத்தா, மேற்குப் பிராந்திய மைய நூலகம்-பம்பாய், தெற்குப் பிராந்தியம், கன்னிமரா பொது நூலகம் -சென்னை, வடக்குப் பிராந்திய நூலகம்-தில்லி. இந் நான்கு நூலகங்களுக்கும் புத்தக, நாளிதழ் வெளி யீட்டாளர்கள் ஒரு பிரதியை வெளியிட்ட 30 நாள் களுக்குள் அனுப்ப வேண்டும். கல்கத்தா நூலகம் 1,45,00,000; பம்பாய் நூலகம் 6,00,000; கன்னிமாரா நூலகம் 2,50,000 நூல்களைப் பெற்றுள்ளன.

'ஆசியக் கழகக் கிளை நூலகம்' கி.பி. 1784-ஆம் ஆண்டில் கல்கத்தாவில் ஏற்படுத்தப்பட்டது. பம்பா யில் இத்தகைய நூலகம் கி.பி. 1804-இல் ஏற் படுத்தப்பட்டது. சென்னையில் கி.பி.1847-ஆம் ஆண்டு அரசாங்கக் கீழ்த்திசை மொழிக் கையெழுத்துச்சுவடி நூலகம் ஏற்படுத்தப்பட்டது.

தமிழக அரசு – அப்போதைய சென்னை அரசாங் கம் பொது நூல் நிலையங்களின் சட்டத்தை 1948-ஆம் ஆண்டு இயற்றி 1950-ஆம் ஆண்டு நடைமுறைக்குக் கொண்டுவந்தது. இச்சட்டத்தின் வாயிலாக எல்லா நகரங்களும் நூல்நிலைய வரியாக உரூபாய்க்கு 6 காசுகள் வசூலிக்க அதிகாரம் வழங்கப் பட்டது. இச்சட்டத்தின்வழி ஒவ்வொரு மாவட்டத் திலும் ஒரு மாவட்ட மைய நூலகம் ஏற்படுத்தப் பட்டது. மேலும், இச்சட்டத்தின்படி தனித்து இயங்கி வந்த கன்னிமாரா பொது நூலகம்,மாநில மைய நூலகமாக அறிவிக்கப்பட்டது. கிளை நூலகங்கள் 5,000 மக்கள்தொகைக்கு மேல் உள்ள நகரங்களில் எல்லாம் ஏற்படுத்தப்பட்டன. இப்போது தமிழ்நாட்டி லுள்ள பொது நூலகங்களின் எண்ணிக்கை, மாநில மைய நூலகம் 1, மாவட்ட மைய நூலகம் 16, கிளை நூலகங்கள் 1476. தமிழ்நாடு அரசு 1972-ஆம் ஆண்டு நூலகங்களுக்கென்று தனித்துறை ஒன்றினை உருவாக்கி நூலகத் துறை சார்ந்த ஒருவரை இயக்கு நராகவும் நியமித்தது. அதுபோல மாவட்ட மைய நூலகங்களில் நூலகப் பயிற்சியும், அனுபவமும் பெற்ற நூலகர்களை மாவட்ட நூலக அலுவலர்களாக அரசு நியமித்தது. தமிழக அரசு 1982-ஆம் ஆண்டு முதல் நூலக அலுவலர் அனைவரையும் அரசு ஊழி யர்களாக்கியது.

மாநில மைய நூலகம் அல்லது கன்னிமாரா பொது நூலகம் கி.பி. 1896-ஆம் ஆண்டு இந்தியாவி லேயே முதல் பொது நூலகமாகத் திறந்து வைக்கப் பட்டது. தமிழ்நாட்டிலேயே சிறப்பு வாய்ந்த நூலகம் சரசுவதிமகால் நூல்நிலையம் ஆகும். இந்தியாவி லுள்ள அரிய நூல்நிலையங்களில் இதுவும் ஒன்று. இந் நூலகத்தில் தமிழ், தெலுங்கு, சமசுகிருதம், மராத்தி, ஆங்கிலம், பிரெஞ்சு, செருமன், தச்சு (Dutch) முதலிய பல மொழிகளிலுள்ள அச்சுப் பிரதிகளும், கையெழுத்துப்பிரதிகளும் சுவடிகளும் உள்ளன. இசை, நாட்டியம், சிற்பம் முதலிய பல நுண் கலைகளைப் பற்றிய நூல்களும் உள்ளன. தஞ்சைமராட்டிய மன்ன ரின் வழிவந்தோர் 1918-ஆம் ஆண்டு தமது சொந்த உடைமையாகிய இந் நூல்நிலையத்தை அரசாங்கத்திடம் ஒப்படைத்தனர்.

தமிழகத்தைத் தொடர்ந்து பல மாநிலங்கள் நூலகச் சட்டங்களை இயற்ற முன்வந்தன. ஆந்திரப் பிரதேசம்,கருநாடகம்,மகாராட்டிரம் ஆகியபகுதிகளின் நூலகச் சட்டங்கள் முறையே 1960,1963,1967-இல் இயற்றப்பட்டன. மேற்குவங்க நூலகச் சட்டம் 1979 -ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. நூலக முன்னேற்றத் திற்கும் வளர்ச்சிக்கும் ஐந்தாண்டுத் திட்டங்களில் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. இந்தியாவில் முதன்முத லில் மன்னார்குடியில் நடமாடும் நூலகம் செயற் பட்டது.

**பல்கலைக்கழக நூலகங்கள்:** தேசிய நூலகங்களைப் போன்றே பல்கலைக்கழக நூலகங்களும் சமுதாயத்தில் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. உலகி லுள்ள அனைத்து நாடுகளிலும் உள்ள பல்கலைக்கழ கங்கள் மிகப் பெரிய நூல் நிலையங்களைக் கொண் டுள்ளன. பல்கலைக்கழக நூல் நிலையங்கள் கல்வி வளர்ச்சிக்குப் பெருந்தொண்டுபுரிகின்றன.ஆர்வார்டுப் பல்கலைக்கழக நூலகம் (Harvard University Library), பாசுடன் (Boston), ஆக்சுபோர்டில் உள்ள பாடிலியன் நூலகம் (Bodleian Library, Oxford) ஆகிய நூலகங்கள் மிகுதிமான நூல்களைக் கொண் டுள்ள நூலகங்களாகும்.

இந்தியாவில் மொத்தம் 142 பல்கலைக்கழக நூலகங்கள் உள்ளன. எல்லாப் பல்கலைக்கழக நூலகங் களும் கல்வி வளர்ச்சியில் பெரும் பங்கு வகிக்கின்றன. வட இந்தியாவிலுள்ள முக்கிய பல்கலைக்கழக நூல கங்கள் பின்வருவன: 1) அலிகார் முசுலிம் பல்கலைக் கழக நூலகம், 2) காசி இந்து பல்கலைக்கழக நூலகம், 3) சவகர்லால் நேரு பல்கலைக்கழக நூலகம் என்பன.

தமிழகத்திலுள்ள எல்லாப் பல்கலைக்கழகங்களி லும் மிகச்சிறந்த நூல் நிலையங்கள் உள்ளன. முதன்மை வாய்ந்தது சென்னைப் பல்கலைக்கழக நூலகமாகும். பிராநதிய மொழிகளுக்கென அமைக்கப் பட்ட முதல் பல்கலைக்கழகம் தமிழ்ப் பல்கலைக்கழக மாகும். பிற பல்கலைக்கழக நூலகங்களைவிட தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம் கட்டட அமைப்பிலும் பணி அமைப்பிலும் மாறுபட்டதாகும். இந் நூலகக் கட்டட மானது இந்தியப் பாராளுமன்றக்கட்டட அமைப் பில் அமைக்கப்பெற்றுள்ளது. 64 கலைகளையும் விளக்கும் வகையில் தூண்கள் இந் நூலகத் தில் உள்ளன. பல அரிய நூல்களும் இந்நூலகத்

தில் உள்ளன. முதன் முதலில் ஏற்பட்ட நடமாடும் நூலக வண்டி (மாதிரி வடிவத்தில்) நினைவுச் சின்னமாக இந் நூலகத்தில் வைக்கப்பட்டுள்ளது. இந் நூலகத்திற்குப் பல கிளை நூலகங்களும் உள்ளன. இவற்றுள் சிறப்பு வாய்ந்தது உதகமண்டலத்திலுள்ள மலை இன மக்கள் ஆய்வு மைய நூலகமாகும்.

தனி நூலகங்கள் நாட்டின் அறிவியல் வளர்ச்சியில் சிறப்பான பங்கு வகிக்கின்றன. தனி நூலகங்கள் அரசு அலுவலகங்கள், அரசுத் துறைகள், மருத்துவ மனைகள், பொருட்காட்சி சாலை ஆகியவற்றுடன் இணைந்து காணப்படுகின்றன. இந்தத் தனி நூலகங்கள் அனைத்தும் தத்தம் தேவை, சூழ்நிலையைப் பொறுத்து நூல்களை வாங்குகின்றன. இந்தத் தனி நூலகங்களில் குறிப்பிடத் தக்கவை விண்வெளி ஆராய்ச்சித் துறைகளில் உள்ள நூலகங்கள, மருத்துவமனை நூலகங்கள் முதலியனவாகும்.

இந்தியாவிலுள்ள பெரும் பான்மையான பள்ளிகளில் நூலகங்கள் இல்லை. கேந்திரியா வித்தியாலயா போன்ற மத்திய அரசு நடத்தும் பள்ளிகளில் பள்ளி நூலகங்கள் உள்ளன. அவற்றுக் கென்று தனியான கட்டடமும் இல்லை. ஓர் அறையே நூலகமாகப் பயன்படுத்தப்படுகிறது.

இந்தியாவில் உள்ள அனைத்துக் கல்லூரிகளிலும் நூலகங்கள் உள்ளன. அவற்றிற்கென்று நூலகர்ளும் உள்ளனர்.

பல்கலைக்கழக நூலகம், தனி நூலகம், பொது நூலகம்தவிர்த்தனியார் நூலகங்களும், வாடகை நூல் நிலையங்களும் செயற்படுகின்றன. தனியார் நூலகங்கள் தனிமனிதர் ஆர்வத்தின் காரணமாகத் தொடங்கப்படுகின்றன. தமிழ் நாட்டில் மறைமலை அடிகள் நூலகமும், உ. வே.சாமிநாதையர் நூலகமும் குறிப்பிடத்தக்கவையாகும்.

வணிக நிறுவனங்களும் நூலகங்களை நிறுவியுள்ளன. தொழிற்சாலைகளிலும் நூலகங்கள் உள்ளன. இவ்வகையான நூலகங்கள் அனைத்தும் தத்தம் பணியாளர்களுக்கென்றே ஏற்படுத்தப்பட்டவையாகும். வங்கிகளிலும் ஆயுள் காப்பீட்டுக் கழகங்களிலும் நூலகங்கள் உள்ளன.

இராணுவத் துறைகளிலும் சிறப்பு நூலகங்கள் உள்ளன. இந்தியாவில் இராணுவ ஆராய்ச்சி நூலகம் உள்ளது. அமெரிக்கக் கடற்படைமட்டும் 16,000க்கும் மேற்பட்ட கிளை நூலகங்களை ஏற்படுத்தி உள்ளது. தேசிய போர்க் கல்லூரி நூலகத்தில் (National War College Library) 1,50,000 தொகுதிகள் உள்ளன.

**நூலகக் கட்டட அமைப்பு:** நூலகக் கட்டடம் நினைவுச் சின்னமாகவோ, வட்ட வடிவமாகவோ, சதுரமாகவோ இருக்கக்கூடாது. நூலகக் கட்டடத்தில் ஒரே ஓர் உள் வழியும், ஒரேயொரு புற வழியும் இருத்தல் வேண்டும். நூலகம் வளரும் தன்மையுடையது. எனவே, கட்டடம் பல அடுக்கு மாடிக்கட்டடங்களாகவும் இருந்தால் நன்மை பயக்கும். எதிர்கால வளர்ச்சிக்கு உகந்ததாகவும், சிக்கனமுடையதாகவும் இருத்தல் வேண்டும். நூலகம் பொதுமக்கள் எளிதில் வந்து போகக் கூடிய இடமாக இருத்தல் வேண்டும். அமைதியான இடமாகவும், இயற்கையான வெளிச்சம் கிடைக்கக் கூடிய இடமாகவும் இருத்தல் வேண்டும். பொது நூலகங்கள் அனைத்தும் தரைப் பகுதியிலே அமைய வேண்டும். படிக்கட்டுகள் இல்லாது எளிதில் வந்து போகக்கூடியதாக இருத்தல் வேண்டும். மாடிப் பகுதிகள் ஒரே மட்டமாக இருத்தல் வேண்டும். கட்டடம் பார்ப்பதற்குக் கவர்ச்சியாகவும், வாசகர்களைக் கவர்வதாகவும் இருக்க வேண்டும். நூலகத்தின் உள்ளே வருபவர்களையும் வெளியே செல்பவர்களையும் சோதனை செய்ய மேசை அல்லது நுழைவாயில் அருகே மேடை இருக்கவேண்டும். நூலகத்தின் உள்ளே வாசகர்கள் சிரமமின்றிப் படிக்க ஒவ்வொரு துறையும் தனித்தனி வசதிகள் கொண்டதாக இருக்கவேண்டும். வாசகர்கள் படிப்பதற்கு வசதியாக இடம் அமைந்திருக்க வேண்டும் நல்ல அமைப்புள்ள நூலகக் கட்டடமே நல்ல சமுதாயத்திற்கு வழிகோலுவதாகும்.

**நூலக நிருவாகம்:** பொதுவாக எல்லா நூலகங்களிலும் அதன் தன்மைக்கு ஏற்ப நூலகப் பணிகள் முப்பெரும் பிரிவுகளாகப்பிரிக்கப்பட்டுள்ளன. அவை: 1) நிருவாகப் பணி, 2) தொழில்நுட்பப் பணி, 3)வாசகர் பணி முதலியவையாகும். நிருவாகப் பணி திட்டமிடுதல், நிகழ்ச்சி தயாரித்தல், பாதுகாத்தல் ஆகியவற்றை உள்ளடக்கியது. தொழில்நுட்பப் பணி நூல் சேர்க்கை, பகுப்பு, பட்டியலிடுதல் ஆகியவற்றைக் கொண்டதாகும். வாசகர் பணிகள் பொதுவானவையென்றும், சிறப்பானவையென்றும் பிரிக்கப்பட்டுள்ளன. பொதுவான பிரிவில் நூல் வழங்குதல், குறிப்புதவி செய்தல், நூலகங்களுக்கிடையேயான கடன் வசதி முதலியன அடங்கும். சிறப்புப் பணிகளில் தேர்ந்தெடுத்த தகவல் அளித்தல், நடப்பு நிலை அறிவித்தல், மொழி பெயர்ப்பு, நகல் எடுத்துத் தரும் பணி, நூலக வெளியீடு, நூலக விரிவாக்கம் முதலியன அடங்கும்.

**நூல்கள் சேகரிப்பு:** நூலகப் பணிகளில் முதன்மையானது நூல்கள் சேகரிப்பேயாகும். இப் பணி தொடங்குவதற்கு முன்னர் எந்தெந்த நூல்களை

வாங்கலாம் என்பததையும், அவற்றின் பயன்பாடு யாது என்பதையும் அறிதல் வேண்டும். நூல்களைத் தேர்வு செய்யும்முன்னர் அந் நூலகத்திற்கான நிதி நிலைமை, நூலகத்தின் தன்மை, துறைத் தலைவருடைய கருத்துகள், வாசகர்களின் கருத்துகள், நூலகருடைய சொந்த அனுபவம் ஆகியனவற்றை அறிதல் வேண்டும். நூல் தேர்விற்காக நூல்கள் வெளியிடுபவர்கள், விற்பனையாளர்கள், உலக மற்றும் தேசிய, மாநில நூல் தொகை ஆகியவற்றை நூலகர் அறிதல் வேண்டும். பாடப்புத்தகம் தொடர்பாக அத்துறைத் தலைவர்களின் கருத்துகளைச் கேட்டறியலாம். நிதி நெருக்கடியான காலங்களில் நூல்களை வாங்கும் சமயத்தில் எல்லாத் துறைகளுக்கும் வேறுபாடின்றி ஒதுக்கீடுசெய்து நல்ல நூல்களையும்தரமான நூல்களையும் வாங்க நூலகர்முயற்சிசெய்யவேண்டும். நூல்களைத்தேர்வுசெய்யும்போது நூலகர், நூலகத்தின் ஐந்து விதிமுறைகளைப் பின்பற்றி வாங்கினால் நலன் பயக்கத்தக்கதாக இருக்கும். நூல்கள் படிப்பதற்கு என்பதால், தேர்ந்தெடுக்கும்நூல்கள் வாசகர்களுக்குப் பயனுள்ளனவாக இருத்தல்வேண்டும். ஆளுக்கு ஒரு நூல் என்ற முறையில் எல்லா வாசகர்களுக்கும் நூல்கள் கிடைக்கும் படியாகத் தேர்வு செய்யப்பட வேண்டும். நூலுக்கு ஓர் ஆள் என்ற கொள்கையின் வழி எல்லா நூல்களும் வாசகர்களால் பயன் படுத்தப்பட வேண்டும். பயனில்லா நூல்கள் வாங்குவது தவிர்த்தல் வேண்டும். காலம் பொன் போன்றது என்பதால் காலங்கருதித் தேவைக்கேற்ப நூல்கள் வாங்குவதால் வாசகனுடைய நேரத்தைச் சேமிக்கலாம். நூலகம் என்பது வளரக்கூடிய நிறுவனம். எனவே, தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்கள் வைப்பதற்கேற்ப, அதனுடைய கட்டடம் அமைதல் வேண்டும்.

**நூற்பட்டியல்:** நூலக நூற்பட்டி என்பது ஒரு நூலகத்திலுள்ள நூல்களின் பட்டியல் தொகுப்பாகும். இந் நூற்பாட்டியல் சிறிய நூலகங்களில் புத்தக வடிவில் இருக்கும். கல்லூரி, மற்றும் பல்கலைக்கழக நூலகங்களில் இந் நூற்பட்டியல் அட்டை வடிவங்களாக (Card Catalogue) இருக்கும். இவ்வட்டை நூற்பட்டிகள் நிலையான அளவினைக் கொண்டிருக்கும். நூலக நூற்பட்டிகள் கீழ்க்காணுமாறு பகுக்கப் பட்டுள்ளன. அகரவரிசை நூல்பட்டி (Dictionary Catalogue), பிரித்தமைந்த நூல்பட்டி (Divided Catalogue), பகுப்புவாரி நூல்பட்டி (Classified Catalogue) ஆகியனவாகும். வாசகர்களுக்கு ஒரு குறிப்பிட்ட நூல் எளிதில் கிடைக்கும்வண்ணம் ஆசிரியர், நூல் தலைப்பு, பொருள்வாரி முறை ஆகியவற்றில் நூற்பட்டி தயாரிக்கப்படுகிறது. பகுப்புவாரி நூற்பட்டி என்ற முறைபகுப்புவாரி பகுதி (Classified part), அகரவரிசைப் பகுதி (Alphabatic Part) என்ற இரு பகுதிகளைக் கொண்டது. பகுப்புவாரிப் பகுதியில் குறியீட்டுப் பகுதிகளும் (Number Entries), அகரவரிசைப் பகுதியில் சொல் பதிவுகளும்(Word Entries) அடங்கியுள்ளன. பகுப்புவாரிப் பகுதி என்பது ஒரு நூலில் இடம்பெற்றுள்ள இடம்சுட்டு எண்ணாகவோ (Call Number), ஒரு பொருளை உணர்த்துகிற பகுப்பு எண்ணாகவோ இருக்கலாம். இந்தப் பதிவுகளுக்குக் குறியீட்டுப் பதிவுகள் என்று பெயர். இந்தப் பதிவுகள் எல்லாம் பொருள்வகைப் பதிவுகளாகும்.

நூற்பட்டி தயாரிக்க நூற்பட்டி அமைப்பு விதிமுறைத் தொகுப்பு அவசியமாகும். இவ் விதிமுறைத் தொகுப்பு நூற்பட்டி சீராகத் தயாரிக்க உதவுகிறது. நூற்பட்டி அமைப்பு விதிமுறைத் தொகுப்பு நூல்கள பல இருந்தபோதிலும் இந்தியாவில் டாக்டர் எசு.ஆர். அரங்கநாதன் அவர்கள் இயற்றிய பகுப்புவாரி நூற்பட்டி அமைப்பு விதிமுறையும், (Classified Catalogue Code), ஆங்கிலோ அமெரிக்க நூல்பட்டி விதிமுறையும் (Anglo-American Cataloguing Rules) பெரும்பான்மையான நூல்களில் பயன்படுத்தப்படுகின்றன.

நூற்பட்டி, ஆசிரியர் நூற்பட்டி, தலைப்பு நூற்பட்டி, பொருள் நூற்பட்டி, அகரவரிசை நூற்பட்டி ஆகிய முறைகளில் நூலகத்தில் நூற்பட்டிகள் தயாரிக்கப்படுகின்றன. ஆசிரியர் நூற்பட்டி என்பது நூலாசிரியரை முதன்மையாகக் கொண்டு தயாரிக்கப்படுகிறது. இந் நூலாசிரியர் நூற்பட்டி நூலகங்களில் அகரவரிசையில் அடுக்கி வைக்கப்படுகின்றன. இந நூற்பட்டி குறிப்பிட்ட ஆசிரியர் எழுதிய நூல் நூலகத்தில் உள்ளதா இல்லையா என்பதை அறிய உதவுகிறது. எடுத்துக் காட்டாக சேக்சுபியர் வில்லியம் -வாழ்க்கை வரலாறு என்பதைக் குறிப்பிடலாம். தலைப்பு நூற்பட்டி நூலின் தலைப்பு வைத்துத் தயாரிக்கப்படுகிறது. இப்பட்டியல் குறிப்பிட்ட வாசகர் குறிப்பிட்ட தலைப்பில் நூல்களைத் தேட உதவுகிறது. எடுத்துக்காட்டு: தமிழக வரலாறு. பொருள் முறைப் பட்டியல் நூலின் தலைப்பினுடைய பொருள் சார்ந்துள்ள துறையை வைத்துத் தயாரிக்கப்படுகிறது. இப் பொருள் துறைசார்ந்த பட்டியல் மூன்றுவகையில் தயாரிக்கப்படுகிறது. அவை 1) அகரவரிசை- குறிப்பிட்ட பொருளைச் சுட்டும் பட்டியல், 2) அகரவரிசை-பகுப்புப் பொருள்வாரிப் பட்டியல், 3) பகுப்புப் பட்டியல் ஆகியன.

**பகுப்பு முறை:** நூல்களை எளிதில் அடுக்கவும், ஒழுங்காக அடுக்கவும் ஒரு குறிப்பிட்ட பகுப்புமுறை தேவைப்பட்டது. இவ்வகையில் நூல்கள் ஒரு கொள்கையின் வழி அடுக்கப்பட்டது. 1)பகுப்புமுறைத் தோற்றம், அடிப்படை ஆகியவற்றைக் கொண்டு பகுக்கப் பட்டது. எடுத்துக்காட்டு: பொருள்வழி நூல். 2)

எதிர்பாராதது; காலவரை அல்லது நில அமைப்பு முறையில் பகுத்தல். 3) செயற்கை: அகரவரிசை, மொழி, உருவ அமைப்பு ஆகிய முறையில் பகுத்தல் முதலியனவாகும். மிகுதியான பகுப்புமுறைகள் இருந்த போதிலும் ஒரு குறிப்பிட்ட முறையே ஒரு நூலகத்தில் பின்பற்றப்படுகின்றன. நடைமுறையில் உள்ள பகுப்பு முறைகள் பின்வருவன: 1) கோலன் பகுப்பு முறை (Colon Classification), 2) தூவி தசாமிசப் பகுப்பு முறை, (Dewey Decimal Classification), 3) காங்கிரசு நூலகப் பகுப்பு முறை (Library Congress Calssification), 4) ஒருங்கிணைந்த தசாமிசப் பகுப்பு முறை (Universal Decimal Classifecation) முதலியனவாகும்.

**வழங்குதலும் பெறுதலும்:** நூல் வழங்குதலில் பல முறைகள் கையாளப்படுகின்றன. நூல்களை, வாசகர்களுக்கு வழங்கும் முறையை வழங்குதல் என்றும், வாசகர்களிடமிருந்து திரும்பப் பெறுவதை பெறுதல் (Charging and Discharging) என்றும் குறிக்கின்றனர். தொடக்கக் காலங்களில் நூல் வழங்குவதில் பதிவேடு முறை கையாளப்பட்டது. இம்முறை நிரந்தரப் பதிவேடாக அமைந்தாலும் பல குறைபாடுகள் தென்பட்டன. அதாவது இம்முறையில் ஒவ்வொரு வாசகருக்கும் சில பக்கங்கள் ஒதுக்கப்பட்டு அதில் வரிசை எண், வழங்கிய நாள், தலைப்பு, கெடு நாள், நூலகர் கையொப்பம் போன்றவையிருந்தும் உடனடித் தேவைக்கு இப் பதிவேடு முறை பயன்படாததால் மாற்று உருவமுறை (Dummy System) அறிமுகப்படுத்தப்பட்டது. இம்முறையின்படி நூல்கள் வடிவத்தில் கட்டைகள் செய்யப்பட்டு அதன்மீது கோடிட்ட தாள்கள் ஒட்டப்படும். வாசகர்களுக்கு நூல் வழங்கும்போது அந்நூலின் விவரங்களை அக் கட்டையின்மீது ஒட்டப்பட்டுள்ள தாளில் எழுதி வழங்கப்பட்ட நூல் இருந்த இடத்தில் வைக்கப்படும். இம் முறையில் வாசகர்களுக்கு எந்த நாள் வழங்கப்பட்டது, அதனுடைய கெடு நாள் என்ன என்பதை அறியவியலாது. இம் முறையிலுள்ள குறையை நீக்க அட்டை முறை கொண்டுவரப்பட்டது. இந்த அட்டை முறையே இப்போது நூலகங்களில் நடைமுறையில் உள்ளது. இந்தியாவில், பெரும்பான்மையான நூலகங்களில் பிரவுனி வழங்கு முறை கையாளப்படுகிறது (Browney Charging System).இம் முறை பாசுடன் நூலகத்திலுள்ள நைனி இ பிரவுனி என்ற நூலகரால் கண்டு பிடிக்கப்பட்டது.

**தேவையான பொருள்கள்:** தவணை நூல் சீட்டு, நூல் பை, நூல் அட்டை முதலியன இம்முறைக்குத் தேவைப்படும் பொருள்களாகும். தவணை நூல் சீட்டு ஒரு குறிப்பிட்ட அளவினைக்கொண்டு நூலட்டையின் முன்புறப் பக்கத்தின் எதிர்ப் பக்கத்தில் ஒட்டப்பட்டிருக்கும். இதன் மேல்பக்கத்தில் நூலகத்தின் பெயர், வகுப்பு மற்றும் சேர்க்கை எண் முதலியன இருக்கும். கீழ்ப் பகுதி நேர், குறுக்குக் கோடுகளால் ஆன பல கட்டங்களைக் கொண்டிருக்கும். நூல் பை என்பது நூலின் முன்பக்கம் அல்லது கடைசிப் பக்கத்தின் உட்புற அட்டையில் ஒட்டப்பட்டிருக்கும். இதில் நூலகத்தின் விதிமுறைகள் சுருக்கமாக இருக்கும். ஒவ்வொரு நூலகத்தின் விதிமுறைகளுக்கேற்ப வாசகர்களுக்குக் குறிப்பிட்ட அட்டைகள் வழங்கப்படும். இவை குறிப்பிட்ட அளவுடன் ஒரு பை போல் இருக்கின்றன. இந்த அட்டையில் வாசகரின் பெயர், வரிசை எண் போன்ற விவரங்கள் இருக்கும். நெவார்க்கு நூல் வழங்கும் முறை அமெரிக்காவில் உள்ள நியூசெர்சி மாநிலத்தில் உள்ள நெவார்க்குப் பொது நூலகத்தில் சான் காட்டன் தானா என்பவரால் அறிமுகப்படுத்தப்பட்டது.

**நூல் இரவல் வழங்குதல்:** நூலகங்களுக்கிடையே நூல்கள் இரவலாக வழங்கப்படுதல் மிகமுக்கியப் பணியாகக் கருதப்படுகிறது. பெரும்பான்மையான நூலகங்கள் தன்னிறைவு அடைவதில்லை. எனவே, பிறிதொரு நூலகத்திலிருந்து தேவையான நூல்களை இரவலாக வாங்கி வாசகர்களுக்கு வழங்கி வருகின்றன.

தனிப்பட்ட ஒருவருக்கோ ஒரு குழுவிற்கோ குறிப்பிட்ட நேரத்தில் தேவையான தகவல்களைத் தருதல், நூலகத்தில் நாள்தோறும் நடக்கும் முன்னேற்றங்களை வாசகர்களுக்கு அறிவித்தல், மொழிபெயர்ப்புச் செய்தல், ஆய்வாளர்களுக்குத் தேவையானவற்றை நகல் எடுத்துத் தருதல் ஆகிய சிறப்புப் பணிகள் நூலகத்தில் செய்து தரப்படுகின்றன.

**நூலகப் பாதுகாப்பு:** நூல்களை வாங்குதல், பட்டியலிடுதல்,பகுத்தல்ஆகியன செவ்வனே நடைபெற்ற போதிலும், நூலகத்தின் தலையாய பணி வாங்கிய நூல்களை மனிதன், பூச்சியினங்கள், நீர், நெருப்பு ஆகியவற்றிலிருந்து பாதுகாத்தலாகும். நூல் இருப்புப் பிரிவில் நூல்களை நூல் அடுக்குகளில் அடுக்க வேண்டும். அரிய நூல்களைத் தனியாகவும், தேசப் படங்கள், நிழற்படங்கள் முதலியவற்றைத் தனியாகவும் வைத்தல் வேண்டும்.

**நூலக விரிவாக்கம்:** நூல்களைக் கிராமங்களுக்கு எடுத்துச்சென்று படிக்காத பாமர மக்களுக்குப் படித்துக் காட்டலாம். நூலகச் சொற்பொழிவுகளை வல்லுநர்களைக் கொண்டு நிகழ்த்தலாம். நூலகக் கண்காட்சி நடத்துதல் போன்றவை நூலக விரிவாக்கத்திற்கு மிகவும் பயன்படுகின்றன.

**தேவையான நிதி**: நூலகம் என்பது ஒரு வணிக நிறுவனம் அன்று. அது ஒரு சமுதாயத் தொண்டு நிறுவனமே ஆகும். எனவே, ஆதாய நோக்கைக் கருதாது அதன் நிதிநிலை கணக்கிடப் பட வேண்டும். நூலகங்களுக்கு மானியம், சந்தா, வரி, அன்பளிப்பு, அறக்கட்டளை, தண்டத்தொகை ஆகியவையே வருமானம் ஆகும்.

தொடர்ந்து கிடைக்கும் மானியம், எப்போதாவது கிடைக்கும் மானியம் என மானியம் இரண்டு வகைகளில் கிடைக்கிறது. தொடர்ந்து கிடைக்கும் மானியம் நூல்கள் வாங்கவும், பராமரிப்பு, அலுவலர் ஊதியம் ஆகியவற்றுக்கும் பயன்படுத்தப்படுகிறது. தொடரா மானியம் கட்டடம், நாற்காலி, மேசை முதலிய தொடக்கக்கால வசதிகளுக்குப் பயன்படுத்தப்படுகிறது. பல்கலைக்கழக நூலகங்களுக்கு மூன்று வழிகளில் மானியம் கிடைக்கிறது. எல்லாப் பல்கலைக்கழக நூலகங்களும் பல்கலைக்கழக மானியக் குழுவிடமிருந்து மானியம் பெறுகின்றன. மாநில அரசிடமிருந்து பொது நூலகங்கள் மானியம் பெறுகின்றன. சொத்து வரியின் மூலமும் வருவாய் கிடைக்கிறது. சந்தாத் தொகைமூலம் ஓரளவு வருமானம் கிடைத்தாலும் அது உறுப்பினர்களின் காப்புத் தொகையேயாகும். நிதியைச்சிக்கனமாகக்கையாண்டு, நல்ல நூல்களைக் குறைந்த விலைக்கு வாங்கி நூலகத்தை வளர்த்தலே நூலகரின் தலையாயபணியாகும்.

**நூலகச் சங்கங்கள்**: சென்னை நூல்நிலையச் சங்கம் பொதுமக்களுக்குத் தொண்டாற்றி வருகிறது. நூல்நிலையம் பற்றிய நூல்கள் பலவற்றை இச்சங்கம் வெளியிட்டிருக்கிறது. அகில இந்தியப் பொதுமக்கள் நூல்நிலையச் சங்கம் 1923-ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது. இந்தியத் தேசிய அறிவியல் செய்தி சேகரிப்பு மையம் (Indian National Scientific Documentation Centre) 1952-ஆம் ஆண்டு இந்திய அரசால் 'யுனெசுகோ' தொழில்நுட்ப உதவியுடன் ஏற்படுத்தப்பட்டது. இந் நிறுவனம் நூலகர்களுக்குப் பல பயிற்சிகளை அளிக்கின்றது. செய்தி சேகரிப்பு ஆராய்ச்சிப் பயிற்சி மையம் (D.R.T.C. பெங்களூரில் உள்ளது. இந்நிறுவனத்திலும் நூலகர்களுக்கு $2\frac{1}{2}$ ஆண்டுகள் பயிற்சி அளிக்கப்படுகிறது. இதுபோலப்பல்வேறு நூலகச் சங்கங்கள் இணைந்து ஒன்றிய நூற்றொகை, நூற்பட்டி முதலானவற்றை வெளியிட்டுப் பொதுமக்களுக்குப் பல நன்மைகள் செய்து வருகின்றன. சு.ஆ.

## நூற்றந்தாதி

**நூற்றந்தாதி**: அந்தாதி என்பது அந்தம்+ஆதி என்னும் சொற்களின் கூட்டாய், அந்தத்தை ஆதியாக உடையது என்னும் பொருள் பயப்பது. செய்யுள் உறுப்பாகிய தொடையின் வகையாகி, ஒரு நூலின் செய்யுளுள் உறுப்பாகவும், இலக்கியக் கூறாகவும் அமையும் பழமையும் சிறப்புமுடையது அந்தாதி. சிற்றிலக்கிய வகைகள் பல்கிப் பெருகிய பிற்காலத்தில் அது, ஓர் இலக்கிய வகையாக அமைந்து தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாய் இடம் பெற்றது. பாடல் எண்ணிக்கை அடிப்படையில் அது பதிற்றந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, நூற்றந்தாதி என வெவ்வேறு வகைஇலக்கியமாக அமையலாயிற்று. செய்யுள்களைத் தொடர்ந்து நினைவு கொள்வதற்கு இவ்வமைப்புப்பெரிதும் உதவியாக அமைவதால் இவ்வகையில் பலவகைச் சிற்றிலக்கியங்கள் தோன்றலாயின.

வெண்பா அல்லது கலித்துறைச் செய்யுள்கள் அந்தாதி முறையில் 100 பாடல்கள் கொண்டமையும் பிரபந்தநூல் நூற்றந்தாதி எனப்படும். இதன் இலக்கணத்தினை இலக்கண விளக்கப் பாட்டியல், தொன்னூல் விளக்கம், பிரபந்த தீபிகை, முத்துவீரியம், சுவாமிநாதம் ஆகிய பாட்டியல் நூல்கள் கூறுகின்றன. 'நூறு வெண்பா, நூறு கலித்துறை கூறுதல் நூற்றந்தாதிக் கோளே' என்பது இலக்கண விளக்கம். இராமானுச நூற்றந்தாதி, திருநூற்றந்தாதி முதலிய நூல்கள் இவ்வகையில் அமைந்தவையாகும்.

சதகம் என்பதும் நூறு செய்யுள்கள் கொண்டமைவதேயாகும். அது அகப் பொருள் அல்லது புறப்பொருள் பற்றி, ஒரு பொருள் நுதலிப் பாடும் 100 செய்யுள்களைக் கொண்ட நூலாகும். அப்பாடல்கள் அந்தாதியாக அமைய வேண்டியதில்லை. ஆனால், திருவாசகத்தில் வரும் திருச்சதகத்திலுள்ள யாப்பு வேறுபாடு கொண்டு பத்துவகையாக அமைந்த பத்துகள்பத்தும் அந்தாதியாக அமைந்துள்ளன. அதனால், அதனை நூற்றந்தாதி வகையில் அடக்குவதில்லை. அ.மா.ப.

## நூற்றுமானம்

**நூற்றுமானம்**: மதிப்பெண் ஒன்றைமற்ற மதிப்பெண்களோடு ஒப்பிடும்போதே அதனுடைய மதிப்பு மிகுதியாகிறது. எடுத்துக்காட்டாக ஒருவர் ஒரு சோதனையிலோ தேர்விலோ 60 விழுக்காடு பெறுகிறார். இம் மதிப்பெண் ஓரளவுதான் அவரது சாதனையைக் குறிக்கும். ஆனால், அக்குழுவின் பிற உறுப்பினர்களின் மதிப்பெண்களுடன் இவரது மதிப்பெண்ணை ஒப்பிட்டுப்பார்த்தால் இவரது நிலை இன்னும் தெளிவாகத் தெரியும்; அதாவது இவரது மதிப்பெண்ணான60விழுக்காடு என்பது மிக அதிகமா, அதிகமா, நடுத்தரமா, குறைவா, மிகக்குறைவா எனத் தெரியவரும். ஏனெனில், இவரது மதிப்பெண் மற்ற மதிப்பெண்களுடன் சேர்த்துவைத்து வரிசைப் படுத்திப் பார்க்கப்படுகிறது. இந்த நோக்கம் மிக எளிமையானதாகத் தோன்றினாலும் புள்ளியியலின் படி சில வழிமுறைகளைப் பயன்படுத்தி இந்த நோக்கத்தை அடையவேண்டும். பெரும்பான்மையாக

மூன்று புள்ளியியல் முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. அவை: 1) நூற்றுமானம் (Percentile), 2) கால்மங்கள் (Quartiles), 3) தசமங்கள் (Deciles) என்பன. இன்னும் பலமுறைகள் இருப்பினும் இம் மூன்று தான் பெரிதும் பயன்படுத்தப்படும் முறைகளாகும்.

**வரையறை:** நூற்றுமானம் என்பது பரவல் (Distribution) ஒன்றிலுள்ள ஒரு மதிப்பெண் புள்ளியாகும். இம் மதிப்பெண் புள்ளி, மற்ற மதிப்பெண்களுடன் வரிசைப்படுத்தப்பட்டுள்ளதாலும், அவ்வரிசை நூற்றுமானமாக (நூறு தொகுதிகளைக் கொண்டிருப்பதால்) இருப்பதாலும், அப்புள்ளிக்கு மேல் எவ்வளவு மதிப்பெண்கள் உள்ளன, கீழே எவ்வளவு மதிப்பெண்கள் உள்ளன என்பதைத் திட்டமாகக் கூறமுடியும். எனவே, நூற்றுமான வரிசை எண், விழுக்காட்டை அடிப்படையாகக் கொண்ட ஒன்றாகும். எடுத்துக்காட்டாக, ஒரு பரவலின் 25 விழுக்காடு 110 என்ற மதிப்பெண்ணிற்குக் கீழே இருந்தால் 110 என்ற மதிப்பெண்ணின் நூற்றுமானம் 25 ஆகும். குழு ஒன்றில் 80 விழுக்காடு 130 என்ற மதிப்பெண்ணிற்குக் கீழே இருந்தால் 130 என்ற மதிப்பெண்ணின் நூற்றுமானம் 80 ஆகும்.

**கணக்கிடும் முறை:** முதலில் குவிவு விழுக்காடுகளைக் (Cumulative Percentages) கண்டுபிடித்தல் வேண்டும்: அதை அடிப்படையாகக் கொண்டு மேலே தொடரவேண்டும். இந்த முறையை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம்.

பின்வரும் அட்டவணையில் 30 பெண்கள், தங்களது 12-ஆம் பிறந்தநாளன்று எவ்வளவு உயரம் இருந்தனர் என்பது தரப்பட்டிருக்கிறது.

குவிவு விழுக்காடு கண்டுபிடிக்கும்முன் குவிவு அலைவெண்ணைக் கணக்கிடவேண்டும். அலைவெண் என்பது ஒவ்வொரு பிரிவு இடைவெளியில் (Class Interval) எவ்வளவு உருப்படிகள் இருக்கின்றன என்பதாகும். இந்த எடுத்துக்காட்டில் உயரத்தை அங்குல அளவில் 9 பிரிவு இடைவெளிகளாகக் கொடுத்துள்ளனர். ஒவ்வொரு பிரிவு இடைவெளியும் மூன்று அங்குல அளவைக் கொண்டதாகும் (அதாவது 67-69 பிரிவில் 67,68,69 அங்குலம் உயரம்கொண்ட பெண்கள் உள்ளனர்). 67 அங்குலம் முதல் 69 அங்குலம் வரை உயரமுள்ள பெண்ணின் தொகை ஒன்றுதான். 58 முதல் 60 அங்குலம் வரை உயரமுள்ள பெண்களின் எண்ணிக்கை 9 ஆகும். எனவே, 58-60 பிரிவு இடைவெளியின் அலைவெண் 9. இவ்வாறு 30 பெண்களுடைய உயரம் 9 பிரிவு இடைவெளிகளாகக் கொடுக்கப்பட்டுள்ளது. குவிவு அலைவெண் என்பது இறங்கு வரிசையில் அமைந்திருக்கும். இந்த அலைவெண் பரவல் அட்டவணையின் (Frequency Distribution Table) முதல் பிரிவு இடைவெளி 67-69 அங்குலம் ஆகும். அதுதான் இக்குழுவான முப்பது பெண்களைப் பொறுத்தவரை உச்சிமுனையாகும். அல்லது அனைத்துப் பெண்களும் 69 அங்குலத்திற்குக் குறைவாக உயரம் உள்ளவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். இரண்டாம் பிரிவு இடைவெளியான 64-66 அங்குலத்தில் குவிவு அலைவெண் 29 ஆகும். அதாவது 30-1; ஏனெனில் ஒரு பெண் 67 முதல் 69 அங்குலம் பிரிவு

| உயரம் (அங்குலம்) | அலைவெண் (Frequency) | குவிவு அலைவெண் (Cumulative Frequency) | குவிவு விழுக்காடு (Cumulative Percentage) |
|---|---|---|---|
| 67-69 | 1 | 30 | 100.0 |
| 64-66 | 3 | 29 | 96.7 |
| 61-63 | 5 | 26 | 86.7 |
| 58-60 | 9 | 21 | 70.0 |
| 55-57 | 6 | 12 | 40.0 |
| 52-54 | 2 | 6 | 20.0 |
| 49-51 | 2 | 4 | 13.3 |
| 46-48 | 1 | 2 | 6.6 |
| 43-45 | 1 | 1 | 3.3 |
| (மொத்தம் எண்) N = 30 | | | |

இடைவெளியில் இருப்பதால் 29 பெண்கள் 66 அங்குலத்திற்குக் குறைவாக இருப்பார்கள். இவ்வாறு இறங்குமுகமாக அமைந்திருக்கும் இவ்வட்டவணையில் குவிவு அலைவெண்ணைக் கண்டுபிடிக்க மொத்த எண்ணிக்கையை (N) முதலில் வைத்து அதிலிருந்து முன்பிரிவு இடைவெளியின் அலைவெண்ணைக் கழித்தால், அந்தப் பிரிவு இடைவெளியின் குவிவு அலைவெண் வரும். குவிவு விழுக்காடு, குவிவு அலைவெண்ணைப் பகுதியாகவும் (Numerator), மொத்த எண்ணிக்கையைத் தொகுதியாகவும் வைத்து 100 -ஆல் பெருக்கிய தொகையாகும்.

மேற்கூறிய எடுத்துக்காட்டில் 58 முதல் 60 அங்குலம் பிரிவு இடைவெளியின் குவிவு அலைவெண் 21 ஆகும். எனவே, அப்பிரிவு இடைவெளியின் குவிவு விழுக்காடு 21÷ 30×100+70 விழுக்காடு ஆகும். இவ்வாறு குவிவு விழுக்காடு முறையைப் பின்பற்றினால் இரு தொல்லைகள் ஏற்படும். 1) ஒரு குறிப்பிட்ட சில குவிவு விழுக்காடுகளே (இவ்வெடுத்துக்காட்டில் ஒன்பது குவிவுவிழுக்காடுகள்தான் பெறமுடியும்) பெற முடியும். 2) அவ்வாறு குவிவு விழுக்காடுகள் பெற்றாலும் அவை பின்னத்தில் (Fraction) வருகின்றன. ஆனால், நூற்றுமான எண் வரிசை முழு எண்ணாக வைக்கப்பட்டு ஒருவருடைய இயல்பு அறியப்படுகிறது. எனவே, புள்ளியியல் வாய்பாடு (Statistical Formula) கொண்டு ஒருவருடைய நூற்றுமான நிலையை அறியலாம்.

புள்ளியியல் முறைப்படி இருவிதங்களில் நூற்றுமானக் கொள்கையைக் கடைப்பிடிக்கலாம். 1) ஒரு குறிப்பிட்ட நூற்றுமான எண்ணின் இணையான மதிப்பெண் யாது என்றும், 2) ஒரு குறிப்பிட்ட மதிப்பெண்ணின் இணையான நூற்றுமான எண் யாது என்றும் இருவகைகளில் நூற்றுமானக் கொள்கையைப் பயன்படுத்தலாம்.

முதல் விதத்திற்குப் பயன்படுத்தப்படும் வாய்பாடு இடைநிலை (Median) என்ற சராசரியைக் கணக்கிடப் பயன்படுத்தப் படும் வாய்பாடு போன்றதாகும்; ஏனெனில் இரண்டும் குவிவு அலைவெண்ணை யொத்ததாகும். மேலே கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டிற்குப் பின்வரும் வாய்பாடு பயன்படுத்தப்படலாம்:

வாய்பாடு $P_{10}$ (பத்தாவது நூற்றுமானம் கண்டுபிடிக்க)

$$= L + \frac{\left(N \div \frac{10}{100} - Cf\right)}{f} \times i$$

L = 10 - ஆம் நூற்றுமானம் இருக்கும் பிரிவு இடைவெளியின் கீழ் முனை மதிப்பு

Cf = குவிவு அலைவெண் (முன் பிரிவு இடைவெளியின்)

f = அலைவெண் i = பிரிவு இடைவெளி அலைவு

மேற்கூறிய எடுத்துக்காட்டில் $N \div \frac{10}{100}$ என்பது $\frac{30\times10}{100} = 3$ ஆகும். மூன்றாம் குவிவு அலைவெண் 49 முதல் 51 அங்குலம் உயரப் பிரிவு இடைவெளியில் இருக்கிறது. ஏனெனில், அப் பிரிவு இடைவெளியின் குவிவு அலைவெண் 4 என்பதால் அதில் முதல் மூவர் அடங்கியுள்ளனர்.

49 முதல் 51 அங்குலப் பிரிவு இடைவெளியின் முன் பிரிவு இடைவெளியான 46 முதல் 48 பிரிவு இடைவெளியின் குவிவு அலைவெண் 2. முதல் 10-ஆம் நூற்றுமானப் பிரிவு இடைவெளியான 49-51 அங்குலத்தின் அலைவெண் 2; அப்பிரிவு இடைவெளியின் அளவு 3 ஆகும். இப்பொழுது இந்த மதிப்பெண்களை வாய்பாட்டில் பொருத்தி $P_{10}$ கண்டுபிடிக்கப்படுகிறது.

$$P_{10} = {*}49.5 = \frac{3-2}{2} \times 3$$

$$= 49.5 + 1.5 = 51.0$$

* 49.0 என்ற எண் 49.5 ஆக மாற்றப்பட்டதன் காரணம் மேலே கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டு, விலக்குப் பிரிவு இடைவெளி (Exclusive Class Interval) கொண்டதாகும்.

இவ்வாறு $P_{15}$, $P_{20}$, $P_{25}$, $P_{30}$, $P_{50}$, என்று ஒரு குறிப்பிட்ட நூற்றுமானப் புள்ளியின் இணையான மதிப்பெண் என்ன என்று கண்டுபிடிக்கலாம். இவ்வாறுதான் கால்மங்களும் கண்டுபிடிக்கப்படுகின்றன. $Q_1$ (முதல் கால்மம்) என்பது $P_{25}$. இடைநிலை (Median) என்பது நூற்றுமான அடிப்படையில் ஆகும். இரண்டாம் முறையில் மதிப்பெண் ஒன்று குறிப்பிடப்பட்டு அதனுடைய நூற்றுமான எண் என்ன என்பது கணக்கிடப்படுகிறது.

**கணக்கிடப் பயன்படுத்தப்படும் வழிமுறை: படி 1:** எந்தப் பிரிவு இடைவெளியில் கொடுக்கப்பட்ட மதிப்பெண் உள்ளது என்று பார்த்துப் பின்னர் அம் மதிப்பெண்ணிலிருந்து அந்தப் பிரிவு இடைவெளியின் கீழ் முனையைக் கழித்து அவ்விடைவெளியின் அளவு அல்லது அகலத்தினால் வகுக்க வேண்டும்.

**படி 2:** அப் பிரிவின் அலைவெண்ணை முதல் படியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள எண்ணால் பெருக்க வேண்டும்.

**படி 3:** படி 2-இல் கண்டுபிடிக்கப்பட்டுள்ள எண்ணை அடுத்த பிரிவு இடைவெளி (இறங்கு வரிசையில் அட்டவணை இருந்தால் கீழ் உள்ள பிரிவு இடைவெளி, ஏறு வரிசையில் அட்டவணை இருந்தால் மேல் உள்ள பிரிவு இடைவெளி) யின் குவிவு அலைவெண்ணுடன் கூட்ட வேண்டும்.

**படி 4:** மூன்றாம் 'படியில் கணக்கிடப்பட்டுள்ள தொகையை மொத்த எண்ணிக்கையால் (N) வகுத்து 100 – ஆல் பெருக்கினால் (பின்னமாகப் பெருக்குத் தொகை வந்தால் முழு எண்ணாக மாற்றுக) நூற்று மான வரிசை எண் கிடைக்கும்.

**எடுத்துக்காட்டு:** மேலே கொடுக்கப்பட்டுள்ள வழிமுறையைப் பின்வரும் அட்டவணை மூலம் விளக்கலாம். இதில் 52 என்ற மதிப்பெண்ணின் நூற்றுமான வரிசை எண் கணக்கிடப்படுகிறது.

| பிரிவு இடைவெளி | அலைவெண் | குவிவு அலைவெண் |
|---|---|---|
| 70-74 | 3 | 105 |
| 65-69 | 4 | 102 |
| 60-64 | 7 | 98 |
| 55-59 | 12 | 91 |
| 50-54 | 14 | 79 |
| 45-49 | 21 | 65 |
| 40-44 | 17 | 44 |
| 35-39 | 15 | 27 |
| 30-34 | 10 | 12 |
| 25-29 | 2 | 2 |
| (மொத்த எண்ணிக்கை (N) = 105. | | |

**படி 1:** 52 என்ற மதிப்பெண் 50-54 என்ற பிரிவு இடைவெளியில் உள்ளது. பிரிவு இடைவெளிகள் விலக்குப் பிரிவு இடைவெளி வகையைச் சார்ந்ததால் 50 – 54 பிரிவு இடைவெளியின் கீழ்முனை 49.5 ஆகும். எனவே 49.5 முதல் 52 வரை இருக்கும் பகுதி 52-49 5 = 2.5 % பிரிவு இடைவெளி அகலம் அல்லது அளவு 5. எனவே 2.5%5=0.5.

**படி 2:** 52-க்கும் 49.5-க்கும் இடையேயுள்ள உருப்படிகள் அல்லது மனிதர்களின் எண்ணிக்கை. 5× அலைவெண் 14. எனவே .5×14= 7 பேர்.

**படி 3:** 52 மதிப்பெண்ணிற்குக் கீழே உள்ளவர்களின் மொத்தஎண்ணிக்கை என்பது 7= அடுத்த (கீழ் உள்ள) பிரிவு இடைவெளியின் குவிவு அலைவெண் 65. எனவே 7 +65 = 72. இவ்வாறு 72 பேர் 52 மதிப்பெண்ணிற்குக் கீழ் உள்ளவர்கள்.

**படி 4:** 52மதிப்பெண்ணிற்குக் கீழ் 72 பேர் உள்ளனர். மொத்த எண்ணிக்கைக் குழுவில் உள்ளவர்கள் 105. எனவே,நூற்றுமானம் அல்லது விழுக்காடு அடிப்படையில் கூறவேண்டுமெனில் 72÷105×100= 6857×100. 68.57 அல்லது 69. ஆகவே 52 மதிப்பெண் பெற்றவரது நூற்றுமான எண் 69 ஆகும்.

உளவியலில் நூற்றுமானம் என்ற சொல் பெரும்பாலும் இரண்டாம் வகையில் கண்டுபிடித்த வழிமுறையைப் பின்பற்றக்கூடிய விதத்தில் பயன்படுத்தப் படுகிறது. அதாவது, உளவியற் சோதனைகளுள் சில, குறிப்பாகச் சொல்லவேண்டுமெனில், நுண்ணறிவுச் சோதனைகளும் (Intelligence Tests), அடைவுச் சோதனைகளும் (Achievement Tests) நூற்றுமான அடிப்படையில் ஒருவருடைய செயல்திறனை (Performance) அறிவிக்கின்றன. வேறு சொற்களில் கூற வேண்டுமெனில் சில உளவியற் சோதனைகளில் ஒருவருடைய மூல மதிப்பெண்ணை (Raw Score) நூற்றுமான மதிப்பெண்ணாக மாற்றி அவருடைய நிலையை அறிந்துகொள்ளலாம்.எடுத்துக்காட்டாக, இரேவன்சு படித்தர ஏற்றச் சோதனை (Revens Standard Progressive Matrices Test) என்ற நுண்ணறிவுச் சோதனை. இன்னும் சில பட்டாளத்தில் (Army) பயன்படுத்தப்படும் நுண்ணறிவுச் சோதனைகளான பட்டாள ஆல்பா, பீட்டா சோதனைகள் (Army Alpha, Beta Tests of Intelligence) போன்றவற்றில் அவற்றினுடைய கைப் புத்தகங்களைப் (Manuals) பார்த்து, அதில் குறிப்பிட்டுள்ளவாறு ஒருவருடைய மூல மதிப்பெண்ணை நூற்றுமான மதிப்பெண்ணாக மாற்றி அவருடைய நிலையையும் செயல்திறனையும் விளக்குகின்றனர். வ.தே.சா.

**துணை நூல்கள்:**

Chase C.T., Elementary Statistical Procedures, Mc-Graw - Hill Kogakusha Ltd., New Delhi, 1976.

Garrett H.E., Statistics in Psychology and Education, Longmans, London, 1970.

## நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா:

அழகிய மணவாளதாசர் என்கிற திவ்வியகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்காரால் 'நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா' என்னும் நூல் இயற்றப்பட்டது. இந்நூல் 'நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி' எனவும் வழங்கப் பெறும். ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளைப் பற்றிய வெண்பாக்கள் என்பதால் நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா எனப் பெயர் பெறுகின்றது. மேலும்,அந்தாதித் தொடையால் அமைந்த நூல் என்பதால் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி எனவும் வழங்கப் படுகின்றது. இதனை, 'ஏற்றமண

வாளர் இசைத்தாரந் தாதிவெண்பா' என்னும் இந் நூல் அடியினால் அறியலாம். இதனால் நூற்பெயரும் நூலின் யாப்பும் பெறப்பட்டது.

இந்நூல் சிறப்புப் பாயிரச் செய்யுளொன்றும் காப்புச் செய்யுள் ஆறும் தன்னைப் பிறன்போல் கூறிய செய்யுளொன்றும் தொகுத்துக் கூறும் செய்யுளொன்றும் நீங்கலாக நூற்றெட்டு வெண்பாக்களைக் கொண்டது. மேலும், இந்நூல் நூற்றெட்டுத் திருப்பதிகளைப்பாடுவதால் அந்தாதிக்குரிய நூறு என்னும் எண்ணிக்கையைக் கடந்து நூற்றெட்டுப் பாடல்களைப் பெற்றுள்ளது. இவ்வந்தாதியில் குறிக்கப் பெற்ற திருப்பதிகள் நாடு என்னும் அமைப்பில் பகுக்கப்பெற்றுள்ளன. சோழநாட்டுத் திருப்பதிகள்-40, பாண்டி நாட்டுத் திருப்பதிகள் – 18, தொண்டை நாட்டுத் திருப்பதிகள் – 22, மலைநாட்டுத் திருப்பதிகள் – 13, நடுநாட்டுத் திருப்பதிகள்-2, வடநாட்டுத் திருப்பதிகள்–12, திருநாட்டுத் திருப்பதி–1, என்ற முறையில் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் திருப்பதிகளைப் பாடியுள்ளார். சோழநாடு, பாண்டி நாடு என்றாற்போல நாடுகள் அடிப்படையில் திருப்பதிகளைத் தொகுத்திருப்பதால் ஐயங்கார் காலத்தில் இந்நாட்டுப் பிரிவுகள் வழக்கில் இருந்தனஎன்பது பெறப்படும்.

நூலின் முதற்பாடல் திருவரங்கம் பற்றியது, இறுதிப் பாடல் திருவைகுண்டம் பற்றியது.திருவரங்கமும் திருவைகுண்டமும் வைணவர்களால் பெரிதும் மதிக்கத்தக்க. சிறப்பின. திருவரங்கத்தைத் திருவைகுண்டமாகவே வைணவர்கள்கருதிப் போற்றுவர். அதனால், ஐயங்கார் திருவரங்கத்தை முதல் திருப்பதியாகக் கொண்டு பாடியுள்ளார். மேலும் இவர், திருவரங்கத்தில் வாழ்ந்து அப்பெருமானிடம் அன்பு செலுத்தியவர் ஆதலாலும், திருவரங்கத்தந்தாதி இயற்றியபின் திருவேங்கடத்தந்தாதி பாடினார் என்பதாலும் திருவரங்கத்தை முதல் திருப்பதியாகக் கொண்டு இந்நூலை இயற்றியுள்ளார்.

வெண்பாவால் தலப் பெருமைகளைப் பாடியிருப்பது ஐயங்காரின் யாப்புப் புலமையைக் காட்டும். செம்மையும் பதினைந்து சீரும் கொண்ட வெண்பா யாப்பில் தலப் பெயர்களை அமைப்பதே பெருஞ் சாதனை. இதனை மிக எளிதாக ஐயங்கார் ஆட்சி செய்து இலக்கியத் துறையில் வெற்றி பெற்றுள்ளார். இந்நூலில் பின்னிரண்டடிகளைத் திரிபுஎன்னும் சொல்லணியில் அமைந்திருப்பதும் இவரது பெரும்புலமையைக் காட்டும். இவ்வந்தாதி வெண்பாவில் தலப் பெயர்களை மட்டும் கூறாமல் அத்தலங்களின் சிறப்பியல்புகளையும் அத்தலப் பெருமானின் சிறப்பியல்புகளையும் அமைத்திருப்பது ஐயங்காரின் ஆற்றலை மேலும் உயர்த்தும். நா.இரா.

**நூற்றொகை விளக்கம்:** நூற்றொகை விளக்கம் (நூல்தொகைவிளக்கம்)என்னும் பெயரையுடைய நூல் மனோன்மணீயம் இயற்றிய பேராசிரியர் பெ. சுந்தரம்பிள்ளையால் இயற்றப்பட்டது. இதுநூற்பாவும் உரைநடையுமாக அமைந்தநூலாகும்.இந்நூல் கி.பி. 1888-இல் சுந்தரம்பிள்ளையால் வெளியிடப்பட்டது. பின்னர்ச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் 1936-இல் இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்டது.

இந்நூல், நூல்களை எத்துணைப் பகுப்புகளாய்ப் பகுக்கலாம் என்பதும் அவற்றின் சிறந்த முறையும் பொருளும் எவை என்பதும் தக்க வகையில் விளக்குதற்காக எழுதப்பட்டது.

இவர் நூல்களை மதநூல், பொதுநூல், கலைநூல் என மூன்று பாகுபாடு செய்துள்ளார்.பேரறிவுப் பொருளுடையவை மதநூல் என்றும், இயற்கை அறிவாகிய சிற்றறிவுச் செய்தி பொதுநூல் என்றும்,புலனறிவுச் செய்தி கலைநூல் என்றும் அவற்றை விளக்குகிறார்.

அவற்றுள் பொது நூலை, முதல்நூல், வழிநூல் சார்புநூல் என மூன்று பகுப்பாக்கி, தத்துவநூல், கணிதநூல், சத்திநூல், இரசாயன நூல், உயிர்நூல், உளநூல் என்பவற்றை முதல்நூல் என்றும், சோதிடநூல், பௌமியநூல், வியாகரணம் போல்வன வழிநூல் என்றும், தருக்கநூல், தரும நூல், சிற்பநூல் நாவீகம் (Nautics), தனுர்வேதம் (The Practical, Science of War) ஆயுள் வேதம் போல்வன சார்பு நூல் என்றும் பகுக்கிறார்.

கலைநூல்களைப் பொதுக்கலை யோகக்கலை என இரண்டாகப் பகுத்து, அப்பொதுக்கலையையும் சாதாரணக்கலை, நற்கலை என இரண்டாக்கி, நற்கலை கீதம், சித்திரம், கவி போல்வன என்கிறார். யோகக் கலையை அட்டாங்க யோகம், ஞானயோகம் என இரு பிரிவு செய்கிறார்.

திருவாங்கூர் அரசின் சொற்பொழிவு ஏற்பாட்டின்படி இந்நூல் இயற்றப்பட்டு அப்பல்கலைக் கழக அறிஞர் அவையில் படிக்கப்பட்டமையை நூலாசிரியர் தம் முகவுரையில் குறித்துள்ளார். இந்நூலை ஒவ்வோர் இயலாக விரித்து விளக்கவேண்டும் என்னும் குறிப்புடையவராக ஆசிரியர் இருந்தார் என்பது அம் முகவுரையால் விளங்குகின்றது. 'அறிவினை உணர்த்தும் கருவி நூல் என்ப' என்பது அதன் முதல்நூற்பா. 'நூல் என்பது அறிய வேண்டியவற்றை அறிவிக்கும் ஒரு கருவி. சதுர்வேதம் முதல பல்லியின் குரல் முதலியவற்றால் நேரிடுகிறவைகளைத் தெரிவிக்கும் பல்லிசாத்திரம் வரை கற்கக் கூடிய எல்லாவற்றிற்கும் நூல் எனும் தமிழ்ப்பெயர்

பொருத்தமுடையதாக இருக்கின்றது. இது அநநூற் பாவின் ஒரு பகுதி. நூற்றொகை விளக்கம் 38 நூற் பாக்களையுடையது. இரா.இ.

**நூறாண்டுப் போர்:** இடைக்காலத்தில் பிரான்சுக்கும் இங்கிலாந்துக்கும் இடையே நடை பெற்ற போர் நூறாண்டுப் போர் எனப்படும். இப் போர் கி.பி.1338 முதல் 1453 வரை நூறாண்டு களுக்கு மேலாக நடைபெற்றமையால் இது நூறாண் டுப் போர் என்று சொல்லப்படுகிறது. இந்தப் பெயர் பொருத்தமானது அன்று. ஏனெனில், இவ்விரு நாடு களும் நூறாண்டுகளாகத் தொடர்ந்து போரிட வில்லை. இடையிடையே அவை சமாதானமாக வாழ்ந்து வந்தன, சமாதான காலங்கள் போர்க் காலங்களைவிட நீண்டு இருந்தன. ஆயினும், இவ்விரு நாடுகளுக்கு இடையே ஏற்பட்டிருந்த பகைமை உணர்ச்சி நூறாண்டுகளாக இருந்துவந்தமையால் இப்போரை நூறாண்டுப் போர் எனத் தொடர்ந்து கூறிவருகின்றனர்.

இப்போரைத் தொடங்கியவர் இங்கிலாந்து மன்னரான மூன்றாம் எட்வர்டு ஆவார். அவர் இசுகாட்லாந்து நாட்டுடன் போரில் ஈடுபட்டிருந்த போது பிரான்சு நாட்டரசர் இசுகாட்லாந்துக்கு உதவி அளித்து அவருடைய சினத்தை எழுப்பினார். இடைக்காலத்தில் இங்கிலாந்து, பிரான்சின் மேலாதிக் கத்திற்குட்பட்டிருந்த பிளாண்டர்சுடன் (Flanders) ஆட்டு உரோம வாணிகம் செய்துவந்தது. அப்பகுதி மக்கள் பிரான்சுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தபோது எட்வர்டு அவர்களுக்கு உதவி செய்தார். அதனால், பிரான்சு மன்னர் இங்கிலாந்து மீதுவெறுப்புக்கொண் டார். மேலும், இங்கிலாந்தின் ஆதிக்கத்திற்குட்பட்டி ருந்த பிரான்சில் இருந்த காசுகனியைத் (Gascony) தம் நாட்டுடன் இணைக்கப் பிரான்சு மன்னர் முயற்சி செய்தார். அப்பகுதியுடன் ஆங்கிலேயர்கள் மது வாணிகம் (Wine Trade) மேற்கொண்டிருந்தமையால் அவ்வாணிகத்திற்குப் பேராபத்து ஏற்படவிருந்தது. தாமே பிரான்சு நாட்டுமன்னராகிவிட்டால் பிளாண் டர்சுடன் மேற்கொண்டிருந்த உரோம வாணிகமும், காசுகனியுடன் மேற்கொண்டிருந்த மது வாணிகமும் காப்பாற்றப்பட்டுவிடும் என்று எட்வர்டு எண்ணினார். அதனால், தம் தாய் வழியாகப் பிரான்சு முடியர சுக்கு உரிமை கொண்டாடினார். அதனை ஒரு பொய்ச் சாக்காகக் கருத வேண்டும். ஏனெனில் அதற்கு முன்னரேயே ஆறாம் பிலிப்பை எட்டுவர்டு அரசராக ஏற்றுக் கொண்டு தமக்குப் பிரான்சில் சொந்தமாக இருந்த பகுதிகளுக்கு ஊழியம் செய்ய ஒப்புக் கொண்டார். மேலும்,போர் தொடங்கி மூன்று ஆண்டுகளுக்குப் பின்னரே இந்த உரிமையை எட்வர்டு கொண்டாடினார்.

போர் கி.பி.1338-இல் தொடங்கியது. இசுலூயிசு (Sluys) என்னுமிடத்திற்கருகே பிரான்சுக் கப்பற் படை தோற்கடிக்கப்பட்டது. ஆங்கிலக் கால்வாயில் இங்கிலாந்தின் கடலாதிக்கம் நிலைநாட்டப்பட்டது. அதையடுத்து ஆங்கிலப் படைகள் பிரான்சில் இறங்கிக் கிரெசி (Crecy) என்னுமிடத்தில் பிரான்சுப் படை களைப் புறமுதுகிட்டோடச் செய்தன. அதையடுத்துக் கலேயை (Calais) கி.பி.1347-இல் எட்வர்டு கைப் பற்றினார். அதன் பிறகு போரில் மந்த நிலை ஏற்பட்டது. அதற்கு ஒரு முக்கிய காரணம் கருங் கொள்ளை (Block Death) நோயாகும்.

மீண்டும் கி.பி.1355-இல் போர் தொடங்கியது. இம்முறை எட்வர்டின் மகனான கறுப்பு இளவரசர் (Black Prince) பாய்டியர்சு (Poltiers) என்னுமிடத் தில் மாபெரும் வெற்றியைக் கண்டார். அப்போதைய பிரான்சு மன்னரான சான் (John) சிறைபிடிக்கப் பட்டார். பிரிடிக்னி உடன்படிக்கை கி.பி.1360-இல் கையெழுத்தாயிற்று. அதன்படி அக்விடைன் (Aquit-ane), பாந்தியூ (Pontheu), கலே ஆகிய இடங்கள் ஆங்கிலேயருக்கு அளிக்கப்பட்டன. எட்வர்டு பிரான்சு அரசின் மீது கொண்டாடிய உரிமையைக் கைவிட் டார்.

போர் மறுபடியும் கி.பி.1369-இல் தொடங்கியது. பிரான்சுக் காரர்கள் தங்களுடைய போர் முறையை மாற்றினர். நேருக்கு நேர்போரிடுவதைத் தவிர்த்துக் கோட்டைக்குள்ளும் நகரங்களுக்குள்ளும் தங்கள் படை களை நிறுத்தினார்கள். ஆங்கிலேயப் படைகளை அங் கும் இங்கும் அலைக்கழித்து அவர்களைக் களைப்புறச் செய்தனர். மேலும்,ஆங்கிலேயர்கள்நீண்ட முற்றுகைப் போர் மேற்கொள்ளக் கட்டாயப் படுத்தப்பட்டனர். இலிமோசசு (Limoges) நகரைக் கைப்பற்றி அங்கி ருந்த மக்களைப்பெரும் இன்னல்களுக்கு ஆளாக்கி அவ தூற்றைக் கறுப்பு இளவரசர் தேடிக்கொண்டார். இலா ரோசல்லி (La Rochelle)கப்பற் சண்டையில் கி.பி.1372-இல் ஆங்கிலேயர் தோற்றுத் தங்களுடைய கடலாதிக்கத்தை இழந்தனர். ஆகவே, கி.பி.1375-இல் சமாதானம் நாடினார்கள். அதன் பயனாக ஆங்கி லேயர்கள் கலே,போர்டோ (Bordeaux), பேயோன் (Bayonne) நீங்கலாகத் தாம் வென்ற பகுதிகள் அனைத்தையும் இழந்தனர்.

போர் மீண்டும் கி.பி. 1415-இல் தொடங் கியது. அப்போதைய ஆங்கில மன்னரான ஐந்தாம் என்றிக்கு, நாட்டு மக்கள் சதித்திட்டங் களில் ஈடுபடாதிருக்க அவர்களுடைய கவனத்தை அயல் நாட்டுப் போரில் திசைதிருப்ப வேண்டிய சூழ் நிலை ஏற்பட்டிருந்தது. வெற்றி பொருந்திய அயல் நாட்டுப் போர் மூலமாகத் தனது அரசகுலத்திற்கு ஏற்பட்டிருந்த பலமற்ற அரசுரிமைக்கு ஈடுசெய்ய

முற்பட்டார். எனவே, பிரான்சு அரசுக்கு உரிமை கொண்டாடினார். பிரான்சு அரசியலில் ஏற்பட்டிருந்த குழப்பமான சூழ்நிலை அவருக்குத் துணையாக அமைந்திருந்தது. பிரான்சு மன்னரான ஆறாம் சார்லசின் மனநிலை பாதிக்கப்பட்டது. பிரபுக்கள் இருகட்சிகளாகப் பிரிந்திருந்தனர். பர்கண்டியர்கள், ஆர்லியன்சிசுட்டுகள் (Orleanists) ஆகியோர்களுக்கிடையே பூசல்கள் ஏற்பட்டிருந்தன. என்றி கி.பி. 1415-இல் 10,000 பேர்களுடன் பிரான்சு நோக்கிப் புறப்பட்டார். ஆர்புளுவர் (Harfleur) என்ற நகரை முற்றுகையிட்டுக் கைப்பற்றினார். அந்த முற்றுகையின்போது ஆங்கிலப் படையின் மூன்றில் ஒரு பங்கு அழிந்தது. அதன் பின்னர் அவர் கலேயை நோக்கிப்படைநடத்திச் சென்றார். வழியில் அசின்கோர்ட்டு (Agincourt) என்னுமிடத்தில் நடந்த போரில் பெரு வெற்றி பெற்றார். பிரான்சுப் படைகள் பெரும் சேதத்திற்கு உள்ளாயின. அதைத் தொடர்ந்து பர்கண்டியர்கள்பிரான்சு அரசருக்கு அளித்து வந்த தங்களுடைய ஆதரவை விலக்கிக் கொண்டனர். அதன் பின்னர் மூன்று ஆண்டுகள் முற்றுகைப்போர் நடந்தது. உருவன் (Rouen) கைப்பற்றப்பட்டது. பாண்டாசு (Pontoise) கி.பி. 1419-இல் வீழ்ந்தது. பாரிசு நகருக்குச் செல்லும் வழி காலியாக இருந்தது. பர்கண்டியத் தலைவரை ஆர்லியனிசுட்டுகள் கொன்றுவிட்டமையால் பர்கண்டியர்கள் ஆங்கிலேயர்களுடன் சேர்ந்து கொண்டனர். நிலைமை மோசமாகவே கி.பி. 1420-இல் திராயிசு (Troyes) ஒப்பந்தத்தைப் பிரான்சுக்காரர்கள் ஏற்றனர். தம் மகள் காதரினை என்றிக்கு மணம் செய்து கொடுக்கச் சார்லசு ஒப்புக் கொண்டார். சார்லசுக்குப் பிறகு ஐந்தாம் என்றிக்குப் பிரான்சு அரசர் முடிசூட்டிவைப்பதும் அறிவிக்கப் பட்டது. என்றி தம் மணப்பெண்ணுடன் கி.பி. 1420-இல் பாரிசு நகருக்குள் வெற்றியுடன் புகுந்தார். திராயிசு உடன்படிக்கை, பிரான்சில் ஆங்கிலேயர் பெற்ற வெற்றிகளின் சிகரமாக விளங்கியது. என்றி காதரினை.கி.பி. 1420-ஆம் ஆண்டு சூன் மாதம் மணந்தார். பிரான்சு அரசின் வாரிசாக அவர் கொண்டாடப்பட்டார். ஆனால், 1422-இல் என்றி மரணமடைந்தார். இரண்டு மாதங்களுக்குப் பிறகு சார்லசு மறைந்தார்.

என்றி ஒன்பது மாதக் குழந்தை ஒன்றை விட்டுச் சென்றார். அது பிரான்சு மற்றும் இங்கிலாந்து ஆகிய நாடுகளை ஆளும் உரிமை பெற்றிருந்தது. அது இங்கிலாந்தின் ஆறாம் என்றியாக முடிசூட்டிக் கொண்டது. பிரான்சில் ஆறாம் சார்லசின் மகன் அரசுரிமையைக் கொண்டாடினார். எனவே, அந்நாட்டில் ஆறாம் என்றிக்குஇருந்த உரிமைகளைக் காக்கப் பெட்போர்டு கோமகன் ஆன (Duke of Bedford) சான் (John) நியமிக்கப்பட்டார். திறமை வாய்ந்த பெட்போர்டு பர்கண்டியர்களுடன் திருமணத் தொடர்பு கொண்டு அவர்களுடைய நாட்டைப் பலப்படுத்தினார். ஆனால், அவருடைய சகோதரரான கிளசுடர் கோமகன் அம்பிரி (Humphrey,The Duke of Gloucester) என்பவரின் பொறுப்பற்ற செய்கைகளின் விளைவாகப் பர்கண்டிய நட்புறவு சீரழியத் தொடங்கியது.

இதற்கிடையில் பிரான்சு அரசியலில் பெரியதொரு திருப்பம் ஏற்பட்டது. அதற்கு முக்கிய காரணமாகத் திகழ்ந்தவள் 'சோன் ஆப் ஆர்க்கு' (Joan of Arc) என்னும் பெண்ணாவள். நாட்டைப் பகைவர்களிடமிருந்து விடுவித்துப் பிரான்சு இளவரசரான (Dauphin) சார்லசுக்கு முடிசூட்டும்படி தேவதூதர்கள் தமக்குக் கட்டளை விடுவித்ததாக அவள் கூறிப் பிரான்சு இளவரசர் தங்கியிருந்த ஆர்லியன்சு நகர் நோக்கி விரைந்தாள். அதுபோது ஆங்கிலேயர்கள் ஆர்லியன்சு நகரை முற்றுகையிட்டு வந்தனர். பிரான்சு இளவரசரைச் சந்தித்துத் தனது உதவியை ஏற்றுக் கொள்ளும்படி சோன் வேண்டினாள். போர்க் கோலம் பூண்டு படைகளுக்குத் தலைமை தாங்கிப் போர் முனை சென்றாள். அவளுடைய செயல்கள் பிரான்சு மக்களின் நம்பிக்கைக்குப் புத்துயிர் அளித்தன. ஆர்லியன்சு நகரை முற்றுகையிலிருந்து மீட்டு ஆங்கிலேயர்களைப் படே(Patay)என்னுமிடத்தில் வெற்றி கண்டாள், இளவரசருக்கு இரிமிசு (Reims) நகரில் முடிசூட்டுவித்தார். ஆனால், கி.பி. 1430-இல் அவளுடைய படை பாரிசுக்கு அருகில் தோற்கடிக்கப்பட்டது. பர்கண்டியர்கள் அவளைச் சிறைப்பிடித்து ஆங்கிலேயர்களிடம் ஒப்படைத்தனர். ஆங்கிலேயர்கள் அவளைச் சூனியக்காரி எனக் குற்றம் சாட்டித் தீயிலிட்டனர். அவளுடைய கடவுள் பக்தியும் எளிமையும்தியாகமும் பிரான்சு மக்களிடையே ஒற்றுமையையும்,சுதந்திர வேட்கையையும் ஊட்டின. அம்பிரியின் செய்கையால் மன வருத்தமுற்று இருந்த பர்கண்டியர்கள் பிரான்சுஅரசருடன்சேர்ந்துகொண்டனர். பெட்போர்டும் மறைந்தார். அது முதல் பிரான்சில் இங்கிலாந்துக்கு ஏற்பட்டிருந்த செல்வாக்கு அழிவுப் பாதையை நோக்கி விரைந்தது. ஒன்றன்பின் ஒன்றாக எல்லாக் கோட்டைகளும் பிரான்சு அரசிடம் வீழ்ந்தன. பின்னர் பாரிசு நகரத்தைப்பிரான்சுக்காரர்கள் கி.பி. 1436-இல் மீட்டனர். கலே முற்றுகைக்கு உட்படுத்தப்பட்டது. நிலைமை மோசமாகவே கி.பி. 1444-இல் சமாதானம் செய்துகொள்ளப்பட்டது. அதன்படி ஆங்கிலேயர்கள் சில பகுதிகளை விட்டுக்கொடுத்தனர். என்றிக்கும்பிரான்சு நாட்டுப் பெண்ணான மார்கரெட்டுக்கும் திருமணம் நடந்தது. இந்தச் சமாதான ஏற்பாடு நிலைக்கவில்லை.பிரான்சுக்காரர்கள் கி.பி. 1449-இல் உருவனைக் (Rouen) கைப்பற்றினார்கள். பார்மிங்கிப்

(Formingy)போரில் ஆங்கிலேயர்களைத் தோற்கடித்து நார்மண்டியைக் (Normandy) கைப்பற்றினார்கள். என்றிக்கு கி.பி. 1450-இல் பைத்தியம் பிடித்தது. ஆங்கிலப் பிரபுக்களுக்கிடையே பூசல்கள் வளர்ந்தன. அதன் விளைவாக அவர்களுக்கு இருந்த நாட்டுப் பற்றுச் சீரழிந்தது. பிரான்சுப் போரில் அவர்களுக்கிருந்த ஈடுபாடு மறைந்தது. ஆங்கிலேயர்கள் கி.பி.1453-இல் நடந்த சாடில்லோன்(Chatillon)போரில் தோற்றனர். காசுக்கனி (Gascony) பிரான்சுக்காரர் கைவசமாயிற்று. கலே நீங்கலாகப் பிரான்சில் ஆங்கிலேயர் பெற்றிருந்த எல்லாப்பகுதிகளையும் அவர்கள் இழந்து விட்டனர். அத்துடன் போரும் முடிவுற்றது.

போரின் காரணமாகப் பிரான்சு பலத்த சேதத்திற்கு உள்ளாயிற்று. பல நகரங்கள் அழிந்தன. எண்ணற்ற மக்கள் உயிரிழந்தனர். வேளாண்மை, தொழில், வாணிகம் ஆகியவை கேடுற்றன. ஆயினும் வேறுவகைகளில் பிரான்சு பலனடைந்தது. ஆங்கிலேயர்கள் கைவசமிருந்த எல்லாப் பகுதிகளும் அப்போது பிரான்சு அரசரின் நேரடி ஆட்சிக்கு உட்படுத்தப்பட்டமையால் நாட்டு ஒற்றுமை உறுதிப்படுத்தப்பட்டது. போரின் காரணமாக நாட்டுப்பற்று வளர்ந்தது. பல பிரபுக்கள் அழிந்துவிட்டமையால் அரசருடைய அதிகாரம் வளர்ந்தது. இங்கிலாந்தைப் பொறுத்த அளவில் அதனுடைய அயல்நாட்டுக் கொள்கையை மாற்றியமைக்க இப்போர் உதவியது. அதுவரை அக்கொள்கை பிரான்சைப் பற்றியதாக இருந்தது. பிரான்சில் இங்கிலாந்துக்கு இருந்த நிலப் பகுதிகள் அதன் கைகளிலிருந்து நழுவிவிட்டமையால் தனது கவனத்தை உலகின் வேறு பகுதிகளில் செலுத்தலாயிற்று. ஆங்கிலப் பேரரசு உருவாகுவதற்கு இது ஒரு முக்கிய காரணமாகும். அதுமட்டுமன்றி இதுகாறும் ஆங்கில அரசர்களும் பிரபுக்களும் தங்கள் கவனத்தைப் பிரான்சுக்கும் இங்கிலாந்துக்கும் இடையே பங்கிட்டு வந்தனர். இனி அவர்கள் இங்கிலாந்தின் மீது மட்டுமே செலுத்த வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளானர்கள். அதன் பயனாக இங்கிலாந்தின் தேசியம் வளர்ச்சியுற்றது. போர்ச்செலவை ஈடுகட்ட அரசர் நாடாளுமன்றத்தை அடிக்கடி கூட்டினார். அரசரின் நிலைமையைப் புரிந்து கொண்ட நாடாளுமன்றம் தனக்கு ஏற்பட்ட வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பல சலுகைகளைப் பெற்றது. இவ்வாறாக நாடாளுமன்றம் ஒட்டிய ஆட்சி இங்கிலாந்தில் அமைய இப்போர் வழிவகை செய்தது. ஆங்கிலச் சமுதாயமும் இன்னலுக்குள்ளாயிற்று. அதன் ஆட்சியாளர்கள் பிரான்சிலிருந்து வந்தமையால் அது வரை பிரான்சுநாட்டுப்பண்புகளே இங்கிலாந்தில் மேலெழுந்திருந்தன. போருக்குப் பிறகு அவர்கள் பிரான்சை மறந்துவிட நேர்ந்தது. ஆகவே, அவர்கள் இங்கிலாந்து மொழி மற்றும் பண்புகளை வளர்ப்பதில் ஆர்வம் காட்டினர். அதன் விளைவாக ஆங்கில இலக்கியம் வளர்ச்சியுற்றது. தி.அர.இரா.

**நெ** நகரமும் எகரமும் கலந்து வரும் இந்த ஒலி, நுனிநா மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒட்டியபடியே மூக்கொலியாக வாயை இளித்துப் பின் தாடையை இறக்கி வெளிப்படும்பொழுது தோன்றும். நகர எகரக் குறிப்புகளைப் பார்க்க, நெ என்னும் தனி எழுத்து ஓரெழுத்து ஒரு மொழியாகப் பயன்படுதல் இல்லை.

**வடிவம்:** தொடக்கத்தில் மெய்யெழுத்தின் தலைக்கட்டுக்கு இடப்புறமாக இழுக்கப்படும் கோடு எகரத்தைக் குறித்தது. இவ்வுருவம் கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மாங்குளம் (மீனாட்சிபுரம்) கல்வெட்டுகளில் காணப்படுகின்றது. எகரக் குறிலுக்குப் புள்ளி இடவேண்டும் என்று தொல்காப்பியத்தில் சொல்லப்பட்டதைத் தமிழர் அறிந்திருந்தும் பெரும்பாலான கல்வெட்டுகளில் எந்த எழுத்துக்கும் புள்ளி இடும் வழக்கத்தை ஒழுங்காக மேற்கொள்ளவில்லை. மொழி அறிவால் வாசிப்பவரே இக்குறையை நிரப்பிக் கொள்ளலானார்கள். இந்த இடப்புறக் கோடு கி.பி. 7-ஆம் நூற்றாண்டிற்கு முன்னாலேயே வளைவாக மாறிற்று, ஆயினும், முதலில் கிடைப்பது, பல்லவ மகேந்திரவர்மனின் வல்லம் குகைக் கல்வெட்டின் காலத்தில் நெகரத்தோடு ஒப்புமையால் அமையும் வடிவம்.... ... ...

இந்த வளைவு அப்படியே எழுதப்பட்டு கி.பி. 11-ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே முழு வளைவாக, ஏறக்குறைய இன்றைய உருவத்தில் தனித்து எழுதப்பட்டது. முதலாம் இராசராச சோழனின் இடீலய்டன் அதாவது ஆனைமங்கலச் செப்பேடுகளைப் பார்க்க... ... ...

வட்டெழுத்தில் இடப்புறக் கோடு கீழ்நோக்கி வளைத்து எழுதப்பட்டது. இந்த வளைவு கி.பி. 6 – ஆம் நூற்றாண்டில் திருநாதர் குன்று கல்வெட்டில் காணப்படுகிறது. நெகரத்துக்கும் அந்த வளைவு ஏற்பட்டதாகக் கருதுதல் பொருந்தும். தமிழ் எழுத்தில் மேல்நோக்கி வளைந்த எழுத்து வட்டெழுத்தில் கீழ்நோக்கி வளைந்தது. இந்த உருவம் வட்டெழுத்து மறையும் வரை மாறவில்லை.... ... ...

கே.ஜி.கி.

*நெக்கிரசோவு*: நிக்கோலாய் அலெக்சிவிச் நெக்கிரசோவு(Nicolai Alekseevich Nekrasov)என்பார் கி.பி.1821 – 1877-இல் வாழ்ந்த ஓர் உருசியக் கவிஞர் ஆவார்; இவர் ஒரு பதிப்பாசிரியராகவும் இருந்தார். இவர்தம் முதற் செய்யுள் கி.பி. 1838-இல் வெளிவந்தது. கி.பி. 1840-இல் கனவும் ஒலியும் (Dreams and sounds)என்னும் கவிதைத் தொகுதியினை வெளியிட்டார். பின்னர் ஓர் இதழாசிரியராகத் தமது பணியினைத் தொடங்கினார். பதிப்பாசிரியர் பொறுப்பில் மிகச் சிறந்த திறமையைக் காட்டினார். கி.பி. 1846 –இல் 'பீட்டர்சுபர்க்குத் தொகுப்பு' (Petersburg Collection) என்னும் நூலை வெளியிட்டார்.

கி.பி. 1847 முதல் கி.பி. 1866 வரை 'சமகாலம்' (The Contemporary)என்னும் இதழின் ஆசிரியராகப் பணியாற்றினார். அவ்விதழில் கி.பி. 1852-இல் இலியோ தால்சுடாயின் 'பாலபருவம்' (The Child hood)என்னும் ஒரு கதை வெளியிடப் பெற்றது.

மற்றும் 'துர்க்குனேவ்', 'அசுட்ரவ்சுகி, என்னும் கதைகளும் வெளியிடப் பட்டன.

இவர்தம் இரண்டாம் தொகுதி நூல், 'நிக்கோலாய் நெக்கிரசோவின் கவிதைகள்' என்பது. அந்தக் காலத்தில் இருந்த கடும் இலக்கியக் கட்டுப்பாட்டினின்றும் (Literary Sensorship) தப்பி வந்த அந்தக் கவிதை நூல் இவருக்குப் பெரும்வெற்றியினை ஈட்டித் தந்தது. எருசனைப் (Herzen) பார்க்கும் முயற்சியின் பொருட்டு ஐரோப்பாவுக்குச்சென்ற இவர், கி.பி. 1857-இல் இலண்டன் மாநகரைப் பார்வையிட்டார்.

'சமகாலம்' என்னும் இதழ் நிறுத்தப்பட்டு விட்டது; அதன் பின்னர் 'தந்தை நாட்டின் குறிப்புகள்' (Notes of the Father land)என்னும் ஒரு புரட்சி இதழுக்கு ஆசிரியராகத் திகழ்ந்தார்.

நெக்கிரசோவு தாம் உருசிய நாட்டின் பெரிய சமுதாயக் கவிஞராகக் கருதப்படுகிறார். இவர்தம் கவிதைகளில் உருசிய நாட்டு உழவர்களின் வாழ்க்கையே முதன்மைக் கருப்பொருளாக வைக்கப்படுகின்றது. பனி படர்ந்த நிலத்தில் உழவர் படும் தொல்லையும், அடர்ந்த ஆலங்கட்டி மழை பெய்து, விளைந்த கோதுமைப் பயிர்கள் பாழாவதும், உழவர்க்கு உணவும் உறைவிடமும் போதாமல் துன்புறுவதும் மனத்தை நெகிழ்விக்கும் முறையில் இவர்தம் கவிதைகளில் பாடப்பட்டுள்ளன.

'கவிஞனும் குடிமகனும்' (The Poet and the Citizen) என்னும் கவிதை உரையாடல் ஒன்றில், 'நீங்கள் கவிஞனாக இருக்க வேண்டிய கட்டாயம் ஒன்றுமில்லை; ஆனால், குடிமகனாக இருந்தாக வேண்டும்', என்று குடிமகன் உரைப்பதாக எழுதியுள்ளார்.

இவர் எழுதிய நூல்கள்-தெருக் கூடை வணிகர்கள் (The Peddlers), செம்முகப் பனி (Rednosed Frost), இருப்புப்பாதை (The Railway), உருசியாவில் யாரே மகிழ்ந்தார்? (Who is happy in Russia), உருசியப் பெண்மணி (Russian Women) என்பனவாகும்.

உருசிய நாட்டில் பின்னர் ஏற்பட்ட மாபெரும் செம் புரட்சிக்கு நெக்கிரசோவு காலத்தில் இலக்கிய வித்திடப் பெற்றது எனலாம். பொன்.பா.

*நெக்கெரி செம்பிலான்*: மலேசியாவில் மலேயா முந்நீரகத்தில் உள்ள ஒரு கூட்டாட்சி அரசு. இதன் தலைநகர் செரம்பான் (Seremban) நகரம். இலிங்கி (Lingi) ஆறு இங்குப் பாய்கிறது. நெக்கெரி செம்பிலான் (Negeri Sembilan) பகாங்குக்குத் (Pahang) தென்மேற்கிலும், செலாங்கூருக்குத் (Selangr) தென்கிழக்கிலும், மலாக்காவிற்கு வடமேற்கிலும் உள்ளது. இது ஒன்பது அரசுகள் அடங்கிய ஒரு தொகுதியாகும். இரப்பர் மரம் வளர்த்தலும், தகரச் சுரங்கம் வெட்டுதலும் மக்களின் முக்கிய தொழில்களாகும். தெ.பா.

*நெகிழ்ச்சி* என்பது ஓர் இனத்தின் பண்பாடு பிறிதோர் இனத்தோடு கலத்தலைக் குறிக்கும். இவ்வாறு பண்பாட்டுக் கலப்பின் காரணமாக மொழிக் கூறுகளும் பரிமாறிக் கொள்ளப் படுகின்றன. நெகிழ்ச்சியைக் (Diffusion) கூட்டிணைப்பு (Acculturation) என்னும் தன்மையிலிருந்து மிகவும் மென்மையாகப் பிரித்தறிதல் வேண்டும். எவ்வளவு காலத்திற்கு, எந்த அளவிற்குத் தொடர்பு ஏற்பட்டிருக்கிறது என்பதன் அடிப்படையில் இவையிரண்டும் வேறுபடுகின்றன. ஓரினமாதல் என்பது, பொதுவாக, நீண்ட காலமாக, பண்பாட்டு முழுமையிலும் ஏற்பட்ட தொடர்பின் காரணமாக நிகழும் செயலாகும். இது ஒரு பக்கத் தாக்கத்தைக் கொண்டதாயும் இருக்காலம்; இரு பக்கத் தாக்கத்தைக் கொண்டதாயும் இருக்கலாம்.

நெகிழ்ச்சியைப் பற்றிய ஆய்வுகள் பண்டைக் காலம் தொட்டே நிகழ்ந்து வந்திருக்கின்றன. எரடோட்டசு என்னும் கிரேக்க அறிஞர் கி.மு.5-ஆம் நூற்றாண்டிலேயே நெகிழ்ச்சிகளை எடுத்துக் காட்டுகளுடன் விளக்கியுள்ளார். எனினும், அமெரிக்க நாடு கண்டுபிடிக்கப்பட்டு, அங்குப் பண்பாடு வளர்ச்சியடைந்த நிலையில் தான் நெகிழ்ச்சியைப் பற்றிய முழுமையான அறிவியல் பாங்கான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன எனலாம். அலெக்சாந்தர் வான் அம்போல்ட்டு, பிரான்சுபோயசு போன்ற அறிஞர்கள் நெகிழ்ச்சியின் வாயிலாகப் பண்பாடு எவ்வாறு பரவுகிறது என்பதைப் பற்றி மிகவும் தெளிவாக விளக்கங்கள் அளித்துள்ளனர்.

குடியேற்றத்தின்(Migration) காரணமாக ஒருபண்பாட்டின் எல்லாக் கூறுகளும் பரவக் கூடும் என்றாலும் அப்பண்பாடானது பிற இனத்தவர்களால் ஏற்றுக்கொள்ளப்படும்பொழுது முற்றிலுமாக அப்படியே ஏற்றுக் கொள்ளப்படாமல் சில மாற்றங்களுடனேயே ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. சில வேளைகளில் அயல் பண்பாட்டில் சில கூறுகள் ஒதுக்கித் தள்ளப்படுவதும் உண்டு. ஒரு பண்பாட்டின் ஒரு குறிப்பிட்ட கூறு ஏற்றுக் கொள்ளப்படுகிறதா தள்ளப்படுகிறதா என்பது, அக்கூறு ஏற்றுக்கொள்வோருக்குப் பயன்படுவதாய் இருத்தல் வேண்டும் என்பதோடு, அவர்களின் பண்பாட்டோடு அதனை இணைத்துக் கொள்ள முடியுமா என்பதையும் பொறுத்துள்ளது. அறிவியல், தொழில் நுட்பத்துறையில் உள்ள பற்பல ஆங்கிலச் சொற்கள் தமிழ்மொழியில் கடன் வாங்கப் பட்டுள்ளன; வாங்கவும் படுகின்றன. இது தமிழ்நாடு

அறிவியல் மற்றும் தொழில் நுட்பத் துறைகளில் அடைந்துள்ள வளர்ச்சியைக் குறிப்பிடுவதாக உள்ளது. அறிவியல் தொழில் நுட்பத் துறைகளில் நாடு வளர்ச்சி பெற்றிராத நிலையில் இத்தகைய சொற்களைக் கடன் வாங்க வேண்டிய இன்றியமையாமை ஏற்படாது.

பிற அமைப்புகளின் கூறுகளில் ஏற்படுவதைவிடச் சமுதாய அமைப்புகளின் கூறுகளில்நெகிழ்ச்சி ஏற்படுவது எளிதானதாக உள்ளது. மேலும், இதில் கவுரவம் (Prestige) பெரும் பங்கு பணியாற்றுகிறது. அயல் பண்பாட்டின் கூறுகள், அவை பெற்றுக்கொள்வோரின் சூழ்நிலைக்கும் வாழ்க்கை முறைக்கும் சாதகமாக இல்லாத போதும் கூடக் கவுரவம் என்பதன் அடிப்படையில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, இந்தியா போன்ற வெப்ப நாடுகளில் ஐரோப்பியர்களின் குளிர்ச்சியான பகுதிக்கு ஏற்ற உடைகள் பரவியிருப்பதைக் கூறலாம்.

நெகிழ்ச்சியின்போது அயல் பண்பாட்டின் சில கூறுகள் ஏற்றுக் கொள்ளப்படலாம்; சில கூறுகள் ஒதுக்கித் தள்ளப்படலாம். எக்காரணத்தால் அயல் பண்பாட்டின் ஒரு கூறு ஏற்றுக்கொள்ளப்படுகிறது, பிறிதொரு கூறு ஒதுக்கித் தள்ளப்படுகிறது என்பதற்கான விளக்கங்கள் கிடைப்பது அரிது. அவை மிகவும் தன்னிச்சையாகப் பரவுகின்றன என்று கூறலாம்.

எத்தகைய கூறுகளில் நெகிழ்ச்சி ஏற்படுகிறது என்பது கொடுப்போர் மற்றும் கொள்வோரின் தன்மையைப் பொறுத்துள்ளது. அவர்களை நெகிழ்ச்சியின் முகவர்கள் (Agents of diffusion) என்று குறிப்பிடலாம். இந்த முகவர்கள் சமயச் சார்புடையவர்களா, மருத்துவர்களா, வணிகர்களா, கலைஞர்களா, ஆண்களா, பெண்களா என்பதன் அடிப்படையில் கூறுகள் மாறுபடும். நெகிழ்ச்சியானது மொழியில் பரவலாக நிகழக்கூடும். மொழியின் ஒலியன், உருபன், தொடரியல் போன்ற எல்லா நிலைகளிலும் நெகிழ்ச்சி ஏற்பட வாய்ப்புள்ளது. சி.சி.

## நெகிழ்வுறு திட்டம்

**நெகிழ்வுறு திட்டம்**: மாறிவரும் உலகின் போக்கிற்கிணங்கத் தனி மனிதனுடைய விருப்பு வெறுப்புகள் அமைகின்றன. தனி மனிதனுடைய தேவைகள் மாறும்போது சமுதாயத்தின் தேவைகளும் மாறும் என்பது உறுதி. இவ்வாறு சமுதாயத் தேவைகளில் மாற்றம் ஏற்படும்போது அத் தேவைகளை நிறைவேற்றித் தரவேண்டிய பொறுப்பு கல்வி முறையைச் சார்ந்ததாகும். அவ்வாறு கல்விமுறைப் பொறுப்பேற்றுக்கொள்ளும்போது கல்வியாளர்களும் அரசினரும் சமூகத் தேவைகளையொட்டிய கல்வியைக் கற்றுத்தர வசதிகள் செய்துதர வேண்டும். பொருளாதார வசதி, மூலப்பொருள்கள் வசதி போக்குவரத்து வசதி, கற்பிக்கும் தொழிலில் பயிற்சி பெற்ற ஆசிரியர் கிடைக்கும் வசதி ஆகியவற்றையெல்லாம் கருத்திற்கொண்டு அவ்வப்போது கல்வி கற்பிக்கும் வாய்ப்பு ஏற்படுத்துவதில் நெகிழ்வுறு திட்டம் (Flexible Scheduling) பயன்படுகிறது எனலாம்.

நெகிழ்வுத் தன்மையை அடிப்படையாகக் கொண்ட ஒரு முறை (System) அமெரிக்க நாட்டில் தோன்றியது. தால்டன் (Dalton) என்னும் ஊரில் கி.பி.1920-ஆம் ஆண்டு எலன் பார்க்கு அர் சுட்டு என்ற அம்மையார் இதனைத் தோற்றுவித்தார். இதை ஒரு முறை என்றோ கல்வித்திட்டம் என்றோ கூறாமல் இது கல்வி பற்றிய ஒரு சீர்திருத்தம் என்றும் கல்வி கற்றல், கல்வி கற்பித்தல் என்ற இரு செயல்களுக்கும் ஒரு தொடர்பு ஏற்படுத்தும் சாதனம் என்றும் அந்த அம்மையார் கூறுகிறார்.

**தால்டன் திட்டம்**: பள்ளியின் நடைமுறையைப் புதியமுறையில் அமைத்து, இம்முறையில் எளிதில் மேற்கொள்ளலாம். இத் திட்டம் பாடத்திட்டத்தில் மாற்றம் விரும்பவில்லை. கற்பிக்கும் முறைகளில் ஒரு முறையையும் தழுவவில்லை. தனிப்பட்ட மாற்றங்களின் தேவைகளையொட்டி இம் முறையைத் தொடங்கவேண்டும். இதனால் எல்லா அறிவுநிலை மாணாக்கர்களும் பயன் அடையமுடியும்.

இத்திட்டத்தில் வகுப்பறைகள் இல்லை. பாடவேளைப் பட்டியல் இல்லை. தேர்வுகள், வகுப்பு மாற்றம் முதலிய நிகழ்ச்சிகள் இல்லை. வகுப்பு ஆசிரியர் என்று ஒருவர் இரார். இங்கு வகுப்பறைகள் பாட ஆய்வகங்களாகிவிடும். ஆசிரியர்கள்தாம் பாட வல்லுநர்கள்; மாணாக்கர்கள் ஆய்வு நடத்துவோர். பாட நூல்களுக்குப் பதிலாக ஒப்படைப்புகள், தேர்ச்சிப்பதிவுத்தாள்கள் ஆகியவற்றைக் கையாள்வர். ஒவ்வொரு பாடத்திற்கும் தனித்தனி ஆய்வகம் உண்டு. அங்கு அப்பாடத்திற்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் எல்லா நூல்களும் எல்லாத் துணைக்கருவிகளும் பிற தேவைப் பொருள்களும் இருக்கும். படிக்கும் சூழ்நிலையை நிலவச்செய்தல், ஒப்படைப்புகளை விளக்குதல், குறிப்பிட்ட பொருள்களை எவ்வாறு படித்தல் என வழிகாட்டல், துணைக்கருவிகளைப் பற்றிய யோசனை கூறல், ஒரு குறிப்பிட்ட பொருளையும் பாடத்தில் அதன் தொடர்பையும் விளக்குதல் போன்ற செயல்களை மேற்கொள்வதே இவரது செயலாகஇருக்கும்.

**நடைமுறை**: இம்முறையில் பாடவேளைப் பட்டியல் என்ற ஒன்றில்லை. பள்ளி காலை 8.45 மணிலிருந்து மாலை 4.30 மணி வரை நடைபெறும். பிற்பகல் 1 மணி முதல் 2 மணி வரை உணவுகொள்ள ஒய்வு நேரம் உண்டு. எத்தனை பாடங்கள் உள்ள

னவோ அத்தனைவிதமான ஒப்பந்தங்கள் இருக்கும். ஒவ்வொரு மாணாக்கனும் ஓராண்டிற்குள் இத்தனை ஒப்பந்தங்கள் செய்து முடிக்க வேண்டும் என்ற வரையறை உண்டு. ஒரு பள்ளியாண்டில் எத்தனை மாதங்கள் இருக்கின்றனவோ அத்தனை ஒப்பந்தம் ஒரு பாடத்திற்குண்டு. ஒவ்வொரு ஒப்பந்தமும் நான்கு பிரிவுகளாகவும், ஒவ்வொரு பிரிவும் ஐந்து உட்பிரிவுகளாகவும் பிரிக்கப்பெற்றிருக்கும். ஒவ்வொரு வார, மாத, ஆண்டுக்கும் ஆசிரியர் முன்னதாகவே ஒப்படைப்புகளை அச்சிட்டுவழங்குவர். இவ்வொப்படைப்புகளைத் திட்டத்தின் உயிர்நிலை என்று சொல்ல வேண்டும். ஒவ்வொரு ஒப்படைப்பும் ஒரு சுருங்கிய முகவுரை, படிக்கவேண்டிய பகுதியில் எழுதவேண்டிய தலைப்பு, அதைப்பற்றி எழுதவேண்டிய குறிப்புகள், விடையளிக்கவேண்டிய வினாக்கள், அவற்றிற்குத் தேவையான மேற்கோள் நூல் விவரங்கள் முதலியவற்றைக் கொண்டதாயிருக்கும்.

முற்பகலில் மாணாக்கர்கள் தாம் விரும்பும் ஆய்வகங்களில் ஒப்படைப்பு வேலையில் ஈடுபட்டிருப்பர். பிற்பகலில் பாட வல்லுநரின் விருப்பப்படி சிறு கூட்டங்கள், வாய்மொழிப் பயிற்சிகள், உடற்பயிற்சிகள் முதலியவை நடைபெறும். அப்போது பாடவல்லுநர் மாணாக்கர்களின் பட்டறிவுக்கப்பாற்பட்ட மேற்கோள் நூல்களில் காணமுடியாத சில அரிய கருத்துகள் எவையேனும் இருந்தால் அவற்றைக் கூறுவர். ஒவ்வொரு வகுப்பிற்கும் ஒவ்வொரு பாடத்திலும் ஒரு மாதத்திற்குரிய ஒப்படைப்புகள் முன்னரே கொடுக்கப்படும். ஒரு மாதத்திற்குரிய எல்லாப் பாடங்களின் ஒப்படைப்புகளையும் முடித்துவிட்டுத்தான் அடுத்த மாதத்திற்குரிய ஒப்படைப்புகளைப் பெறுதல் வேண்டும். ஒரு மாதத்திற்குள் பாடங்களுக்குரிய ஒப்படைப்புகளை மாணாக்கர்கள் தத்தம் விருப்பப்படி செய்யலாம். தேவைக்கேற்றவாறு ஒரு பாடத்திற்குக்கூடுதல் காலத்தையும், மற்றொரு பாடத்திற்குக் குறைவான காலத்தையும் செலவிடலாம். ஒப்படைப்பு வேலையில் ஈடுபட்டிருக்கும்போது மாணாக்கர் அவரவர் விருப்பப்படி ஓர் ஆய்வகத்திலிருந்து மற்றோர் ஆய்வகத்திற்குப் போகலாம். அவ்வாறு சென்று ஆசிரியரையோ வேறு மாணாக்கரையோ அணுகித் தம் ஐயங்களைப் போக்கிக்கொள்ளலாம்.

**தேர்ச்சி**: பழைய முறைகளில் உள்ள தேர்வுகள் போன்றவை இங்கில்லை. மாணாக்கர்களின் தேர்ச்சி வரைபடங்கள் (Graph) மூலம் அளக்கப் பெறுகின்றது. நான்கு வரைபடங்கள் கையாளப்பெறுகின்றன. அவற்றுள் இரண்டுவரைபடங்கள்மாணவர்களிடமும், இரண்டு வரைபடங்கள் ஆசிரியர்களிடமும் இருக்கும். மாணாக்கர்களிடம் இருப்பவற்றுள் ஒன்று வாரத்தின் பாட வளர்ச்சியையும் மற்றொன்று மாதத்தின் பாட வளர்ச்சியையும் காட்டும். ஆசிரியர்களிடம் இருப்பனவற்றுள் ஒன்று மாணாக்கர்கள் வந்த நாள்களையும் மற்றொன்று வகுப்புமாணாக்கர்கள் அனைவரின் பாட வளர்ச்சியினையும் தெரிவிக்கும். மாணாக்கர்கள் தம்மிடமுள்ள வரைபடங்களில் தாம் எப் பாடங்களில் எவ்வளவு தேர்ச்சி பெற்றுள்ளனர் என்பதையும் எவற்றில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும் என்பதையும் தெரிந்துகொள்ளலாம், ஆசிரியர் தம வரைபடங்களிலிருந்து எம் மாணாக்கர் தனியாகக் கவனிக்கப் பெறவேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ள இயலும். இவற்றிற்கெல்லாம் கண்ணும்கருத்துமாகக் கண்காணிக்கும் ஆசிரியர்களின் மேற்பார்வை மிகவும் வேண்டற்பாலது. இன்றைய வகுப்புமுறைப் பயிற்றலிலேயே இத் திட்டத்தைச் சிறிது கையாளலாம். ஒவ்வொரு பாடம் தொடங்குவதற்கு முன்பு அப் பாடம் பற்றிய சில வினாக்களைத் தேர்ந்து,ஆசிரியர்தயாரித்து அச்சிட்டு அல்லது கரும் பலகையில் எழுதி, அவற்றின் விடைகளைக் கண்டறியுமாறு செய்யலாம். இது பாட முன் ஒப்படைப்பு எனப்படும். இவ்வாறே பாடம் முடிந்தபிறகு சில பயிற்சி வினாக்களைத் தந்து விடை எழுதச் செய்யலாம். இது பாடப் பின் ஒப்படைப்பு எனப்படும். இம்மாதிரியான பயிற்சிகள் சில பாடங்களில் காணப்படுகின்றன. இவற்றால் மாணாக்கர்களின் தன் முயற்சி தூண்டப்பெறும். வாய்க்குள் படிக்கும் பழக்கமும் நன்கு வளரும்.

**இத் திட்டத்தின் நிறைகள்**: இத்திட்டத்தில் ஒவ்வொரு மாணாக்கரும் தமக்குரிய வேகத்தில் கற்கின்றனர். மாணவர்கள் பொறுப்புடன் கற்பதால் உண்மையான தேர்ச்சியை அடையமுடிகிறது. இங்கு மாணாக்கர்களே தம் முயற்சியினால் கற்பதால் அவர்களிடம் நல்ல பயிற்சி ஏற்படுகின்றது. நூலைப்படிப்பதில் ஆர்வம் உண்டாகின்றது. தத்தம் தேவைக்கேற்றாற்போல் சில பாடங்களில் மிகுந்த கவனத்தையும் சிலவற்றில் குறைந்த கவனத்தையும் செலுத்த முடிகின்றது. இங்குப் பெறும் தன் முயற்சி, பொறுப்பு, பட்டறிவு முதலிய பண்புகள் பிற்கால வாழ்க்கைக்குப் பயன்படும். எதிர்பாராத காரணங்களால் ஒரு மாணாக்கர் பள்ளிக்கு வர இயலாவிடில் அதனால் பெருங்கேடு ஒன்றும் விளைவதில்லை. வந்த பிறகு அவன் விட்ட இடத்தில் தொடங்கிப் படிக்கும் வாய்ப்பு இங்குள்ளது. வகுப்பு மாற்றம் இல்லாததால் எல்லோரும் படித்து முன்னேற முடிகின்றது. ஒருவருடைய காலமும் முயற்சியும் இங்கு வீணாவதில்லை. வீட்டு வேலையின் கட்டாயம் இங்கில்லை. ஆதலால் மாணாக்கர்கள் தாம் அதைச் செய்யவில்லையே என அஞ்சத் தேவையில்லை. ஒழுங்குமுறை பற்றிய சிக்கல்கள் இங்கு எழுவதில்லை. வெறுப்பு, சலிப்பு,

கட்டாயம், அச்சம் முதலியவை இங்கு இல்லாததால் ஒழுங்குமுறை தானாக அமைந்துவிடுகிறது. ஆசிரியர்கள் மாணாக்கர்களைத் தனித்தனியாக நன்கு அறியும் வாய்ப்புள்ளது. சுதந்திரம் மிக்கிருப்பதால் மாணாக்கர்கள் ஆசிரியரை அணுகி நெருங்கிப் பழகித் தங்கள் ஐயங்களை அகற்றிக்கொள்ள முடிகிறது. ஆசிரியர் மாணாக்கரின் நண்பராகவும், வழிகாட்டியாகவும், நெறியாளராகவும் இருந்து மாணாக்கர்களை நன்னெறிகளில் கொண்டுசெலுத்த முடிகின்றது. இம்முறையில் கையாளப்பெறும் நேர்ச்சிமுறையும், வரைபடங்களும் மாணாக்கர் தம் தேர்ச்சிநிலையைத் தாமே அறியவும், பிற்போக்கு, முற்போக்கு மாணாக்கர்களை ஆசிரியர் அறியவும், மாணாக்கர் ஒருவரோடொருவர் போட்டியிட்டுக்கொண்டு வேலை செய்யவும் துணைசெய்கின்றன. இரா.சி.

**துணை நூல்கள்:**

**கோவிந்தராசன். மு.**, நற்றமிழ் பயிற்றலின் நோக்கமும் முறையும், திருமலைக் குமரன் பதிப்பகம், சென்னை, 1979.

**சுப்புரெட்டியார், ந.**, தமிழ் பயிற்றும் முறை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1980.

*நெசவுத் தொழில்:* இந்தியாவில் நெசவாலைகள் நிறுவப்படுவதற்கு முன்னால் மக்கள் கை நெசவால் தங்கள் ஆடைகளை நெய்து வந்தார்கள். கி.பி. 13-ஆம் நூற்றாண்டுக் காலத்தில் இந்திய நெசவுத் துணிகள் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. ஏனென்றால் இந்தியத் துணிகளுக்கு அந்நாடுகளில் பெரும் வரவேற்பு இருந்தது. பின்பு கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் குசராத்து மாநில மக்கள் இந் நெசவுத் தொழிலில் (Textile Industry) மிகவும் தேர்ச்சி பெற்று ஆடைகளை உற்பத்தி செய்து, சாவா முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தனர். ஆனால், ஆங்கிலேய ஆட்சி இந்தியாவில் ஏற்பட்டபின் இக் கை நெசவுத்தொழிலுக்குஆதரவு குறையத் தொடங்கியது. மேலும் தொழிற்புரட்சிக்குப்பின் எல்லாம் தொழில் மயமாக்கப்பட்டதால் இத்தொழில் மேலும் நலிவடையத் தொடங்கியது.

இந்தியத் தந்தை காந்தி அடிகளார் கதர் ஆடைகளுக்கு முதன்முதலில் மிக்க ஊக்கமளித்தார். அவரது கருத்துப்படி அதிக மூலதனமும், தொழில் நுட்பப் பயிற்சியும் தேவையில்லாத கை நூற்றல் தொழிலை உடனே நடப்பிற் கொண்டுவர இயலும். அதற்குப் பட்டினியில் ஆழ்ந்து வறுமையால் பீடிக்கப்பட்டுள்ள பாமர மக்கள் பெற்றுள்ள அறிவே போதுமானது. உணவுக்கு அடுத்தபடியாக இது சமூகத்தில் இன்றியமையாததாக இருப்பதுடன் இத்தொழில் கைத்தறி நெசவாளர்களுக்கும், உழவர்களுக்கும் நிலையாகப் போதிய பண வசதியும் அளிக்கத் தகு முறையில் உள்ளது. கைத்தறித் தொழில் பல மிலியன் மக்களுக்கு உயிர்வாழத் துணை செய்கிறது. வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தீர்ப்பதுடன் படித்த மக்களுக்கும் வேலையற்றுள்ள உழவர்களுக்கும் பகுதிநேர வேலை கொடுக்கும் என்று இத்தொழிலை மிகவும் புகழ்ந்து காந்தி அடிகளார் கூறினார். இங்கிலாந்து இந்தியாவை ஆண்டதால் இந்தியக் கிராமத் துணித்தொழில் நசிந்தது. ஆலைத் துணியின் விலை கதரின் விலையைவிடக் குறைவாக இருந்தது. வன்முறை, நேர்மையின்மை, பொய்ம்மை ஆகியவற்றைப் பின்புலமாகக் கொண்டு ஆலைத்துணி அமைந்தது. கிராமத் தொழில்களே உண்மையான மக்களாட்சிக்கான பின்புலத்தை உருவாக்குகின்றன.

**பருத்திக் கைத்தறி நெசவுத் தொழில்:** ஆலை நெசவுத் துணியின் காரணத்தால் பலத்த போட்டி ஏற்படினும் இத் தொழிலை மிக்க ஈடுபாட்டுடன் மக்கள் மேற்கொள்வதால் வேளாண்மைக்கு அடுத்த படியாக இது மிகவும் மேம்பட்டதாய் அமைகிறது. நெசவுத்தொழிலை முழு வேலையெனப் பெரும் பகுதி மக்கள் மேற்கொள்கின்றனர். அதுபோலவே, இதைப் பகுதிநேரப் பணியெனக் கொண்டுள்ள மக்கள் பெரும்பாலோர் உள்ளனர். இத் துணி உற்பத்தியில் அடக்க விலை மிகுதியாக உள்ளதென்றும், தரகர்கள் பலர் இடையில் புகுவதால் அவர்களுக்கு ஆதாயம் கிடைக்கிறதே ஒழிய நெசவு செய்வோருக்கு யாதொரு பலனும் ஏற்படவில்லையென்றும், போர்க்காலத்தில் உண்டான, அப்போதைய வாணிகப் பெருக்கத்தால் மட்டிலும் சிறிதளவு தொழிலில் ஏற்றம் உண்டாகியதென்றும், மந்தக் காலம் ஏற்பட்டவுடன் மறுபடியும் இத் தொழிலில் பல இடையூறுகள் ஏற்பட்டுள்ளன என்றும் கூறப்பட்டது. இத் தொழில் ஏறக்குறைய 100 இலட்சம் பேர்களுக்கு வாழ்வளித்து வருகிறது. பலர் இதில் பொருளீட்டுகின்றனர். மற்றும் பலர் இதைத் தொழிலாகக் கொண்டவர்களிடம் அண்டி வாழ்கின்றனர்.

**பருத்தி நெசவுத்தொழில்:** பம்பாயில் கி.பி. 1854-ஆம் ஆண்டு முதன்முதலாக ஒரு நெசவாலை நிறுவப்பட்டது. இதுவே முதன்முதலாக இந்தியாவில் பருத்தி இயந்திர நெசவுக்குத் தொடக்கக்காலம் எனலாம். மூலதனக் கடன் வசதிகளையும், ஈரப்பசையுள்ள தட்பவெப்ப நிலையையும் அனுசரித்துப் பம்பாய் தேர்ந்தெடுக்கப்பட்டது. உள்நாட்டுப் பகுதிகளான நாகபுரி, சோலாப்பூர் முதலிய இடங்களில் கி.பி. 1877 முதல் பருத்தி நெசவு ஆலைகள் ஏற்பட்டன. இப்போது பெரும் அளவு நெசவாலைகள் மதுரை, கோவை முதலிய இடங்களில் தோன்றியுள்ளன.

பருத்தி நெசவாலைத் தொழிலுககுப் பெருத்த வாணிகத்தின் காரணமாக 1917 – 23-இல் நல்ல ஆதாயம் கிடைத்தது. இதையடுத்து மந்த நிலை ஏற்பட்ட காரணத்தால் வேளாண்மைப் பொருள்களின் விலைகள் சரிந்ததால் பருத்தியின் விலையும் மிகவும் குறைந்தது. இப்போது பருத்தி நெசவுத் தொழிலுக்கான இடர்களாவன: 1) நாட்டுப் பிரிவினைக்குப் பிறகு மூலப்பொருள் கிடைக்காமை. 2) சிக்கனமற்ற நெசவாலைகள் 150 இந் நாட்டில் உள்ளமை. 3) தொழிலாளர்கள் தகராறுகளும் கூலி உயர்வும். 4) அயல்நாடுகளிடம் இருந்து இதனை எதிர்த்துநிலவும் பலத்த போட்டி. 5) கைத்தறி நெசவிற்கு மானியமளித்துப் பெருந்தொழிலான பருத்தி நெசவாலைகளின்மீது தீர்வை விதித்து இதன் முன்னேற்றத்தைத் தடுத்தமை. 6) தேய்ந்து பழுதடைந்த இயந்திரங்களை வைத்து ஆலைகள் செயற்பட்டமை. ஆயினும் பருத்தித் துணி ஏற்றுமதியில் இந்தியா, சப்பானுக்கு அடுத்து இரண்டாம் இடம் வகிக்கிறது.

பருத்தி ஆடைகளுக்கேயன்றி இந்தியா பட்டு நெசவுக்கும் புகழ்பெற்று விளங்குகிறது. பட்டுப்புழுக்களை உற்பத்தி செய்து, அவற்றிலிருந்து பட்டு எடுப்பது கிராமங்களில் ஒருகுடிசைத் தொழிலாகவே விளங்குகிறது. தென்னாட்டில் காஞ்சிபுரம், திரிபுவனம், ஆரணி ஆகிய இடங்களில் பட்டாடைகள் பெருமளவு தயாரிக்கப்படுகின்றன. இவற்றுள் காஞ்சிபுரம் பட்டு மற்றவகைப் பட்டைவிட மிகச் சிறந்ததாக அமைந்துள்ளது. பட்டு, செல்வர்களால் மட்டுமே வாங்கக் கூடிய ஒன்றாகும். கூட்டு நெசவாளர் சங்கங்களின்மூலம் பட்டுத் துணிக்கு நல்ல விலை அங்காடியில் கிடைக்கிறது. பனாரசுப் பட்டு காசி என்ற இடத்தில் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக அமைகிறது.

**கை நெசவுக் கம்பளி:** கம்பளி நெசவினைப் பல பகுதிகளில் கைத்தறியில் செய்துவருகின்றனர். இராசசுத்தானில் கம்பளி உற்பத்தி முக்கிய தொழிலாகும். கம்பளி நூற்பும், நெசவும் பொருளாதார வளர்ச்சியற்ற பகுதிகளில் மேற்கொள்ளப் படுகின்றன. எடுத்துக்காட்டாக, இராயலசீமையில் கம்பளி உற்பத்தி மிகவும் முக்கியமானது.

நெசவுத்தொழிலுக்கு மக்களிடையே பலத்த ஆதரவு இருந்தாலும், இப்பொழுதுள்ள நிலைமை நலிவுற்றதாக உள்ளது. ஏனெனில், துணிநெய்வதற்கு வேண்டிய பருத்தி நூல்கள் கிடைப்பது அரிதாகிவிடுகிறது. அயற் செலாவணி மிகுதியாகப் பெறவேண்டும் என்ற நோக்கத்தாலும், பருத்தி, பட்டுத் துணிகளுக்கு அயல்நாட்டில் பலத்த வரவேற்பு இருப்பதாலும் கம்பளி நெசவு நலிவுறத் தொடங்கியது. மேலும் நெசவாளிகள் நூல் இழை அசுத்தமும் முடிச்சுகளும் இல்லாததாய் அழகாக இருக்கவேண்டும் என்று விரும்புகிறார்கள். ஆனால், இவர்கள் விரும்பும் அளவுக்கு நூல் இழைகள் அமையாததால் இவர்கள் நெய்யும் துணியும் தரமானதாக அமைவதில்லை.

மேலும் தரமான நூலிழைகள் அயல்நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்படுவதால் நெசவாளர்கள் வேலையில்லாமல் இருத்தல் நேரிடுகிறது. அதனால் சிலர் வறுமைக்கோட்டிற்குக் கீழேயும் வாழ்ந்து வருகிறார்கள். ஆனால், பாகிசுத்தானில் நெசவாளர்கள் நிலை, இந்தியாவைவிட மிகவும் மேன்மையுடையதாக இருக்கிறது. ஏனென்றால், அங்கு அதிக அளவு பருத்தி உற்பத்தி செய்வதால், அடக்கவிலை குறைவாக உள்ளபடியால் அங்குள்ள நெசவாளர்கள் நல்ல நிலையில் இருக்கின்றார்கள்.

நூலிழையின் விலை இப்பொழுது 30 விழுக்காட்டிலிருந்து 40 விழுக்காடு மிகுதியாகிவிட்டது. அதனால் பருத்தி நெசவாளர்களின் சம்பளம் குறைந்தும், பல்லாயிரக்கணக்கான கைத்தறி நெசவாளர் வேலை இல்லாமலும் தவிக்கின்றார்கள். இப்பொழுது தமிழ் நாட்டில் சென்னை, செங்கற்பட்டு, தென்னார்க்காடு ஆகிய இடங்களில் நெசவாளர்கள் வேலை நிறுத்தம் செய்ய முன்வந்துள்ளார்கள். மேலும் அரசாங்கம் பருத்தித் துணிகளின் ஏற்றுமதியைப் பெரிதும் வரவேற்கின்றது. ஏனெனில், இந்த ஆண்டு அதாவது 1987–ஆம் ஆண்டுக் கணக்கின்படி இதை ஏற்றுமதி செய்வதால் கிடைக்கும் வருமானம் 170 கோடி உருபாயிலிருந்து 250 கோடி உருபாயாக மிகுந்துள்ளது.

இதனால் நெசவாளர்களை இச்சிக்கலில் இருந்து காப்பாற்ற, அரசாங்கம் சுழலும் தொகை என்ற நிதியை உருவாக்கி அவர்கள் துன்பக்காலத்தில் இந்நிதியில் இருந்து பணஉதவி பெறச் செய்கிறது. மேலும், 300 கோடி உருபாய் மதிப்புள்ள கைத்தறித் துணிகள் விற்காமல் தேங்கிக் கிடக்கின்றன. இந்நிலையில் பருத்தி நூல்களின் விலைகளைக் குறைத்து நெசவாளர்களைக் காப்பாற்ற அரசாங்கம் தயங்குகிறது. பருத்தி நூல் இழைகளின்மீது அரசாங்கம் விற்பனை வரியை விதிப்பதால் இதன் விலை மேலும் உயர்ந்து பன்னாட்டு அங்காடியிலும் இந்திய நாட்டு வணிகர்கள் போட்டி போட முடியாதவர்களாகி விடுகிறார்கள். அதனால் மேற்கு வங்காளம், ஒரிசா, பீகார், அசாம், திரிபுரா, கேரளம் ஆகிய மாநிலங்களில் விற்பனை வரியை முழுமையாக நீக்கிவிட்டனர். மேலும், பருத்தி உற்பத்தியின் அளவு 96 இலட்சம் கட்டுகளாகக் (Bales) குறைந்துவிட்டதால் நடுத்தர, குட்டை இழைப் பருத்திகளைக் கட்டாயமாக அரசாங்கம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய

வேண்டிய நிலை உருவாகியுள்ளது. அரசாங்கத்தால் ஏழை மக்களுக்காகத் தயாரிக்கப்பட்ட சனதா துணியின் விலையும் உயர்ந்ததால் இந்திய நெசவாளர்கள், அரசாங்கம் இத் துணி உற்பத்தி செய்வதற்கு உதவி செய்யாவிடில் உடனடியாக இத்துணியின் உற்பத்தியை நிறுத்திவிடுவதாகத் தீர்மானித்துள்ளனர்.

இவ்வாறாக நெசவுத்தொழில் இந்தியநாட்டில் பல கோடி உரூபாய் அயற் செலாவணியை ஈட்டித் தந்தாலும், உள்நாட்டில் இத்தொழில் இன்று மிக்க முன்னேற்றம் அடையாமல் உள்ளது. இதற்குக் காரணம் பருத்தி நூல்களின் விலை உயர்வும், அவைகளின் ஏற்றுமதியுமே. அதனால் பல நெசவாளர் குடும்பங்கள் வேலையில்லாமல் அவதிப்பட்டு மிகுந்த துன்பத்தை அனுபவிக்கின்றன. இவ்வாறான நெசவாளர்களின் துயரத்தைத் துடைப்பதற்கு அரசாங்கம் உடனடியாகத் தகுந்த நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். த.கா.

**துணை நூல்கள்:**


**Misra, S.K.&Puri, V.K.**, Indian Economy, Himalaya Publishing House, New Delhi, 1986.

**Ruddar Datt&Sundharam, K.P.M.**, Indian Economy, S.Chand & Company Ltd., New Delhi, 1984.


*நெசுட்டர்*: கிரேக்கப் புராணங்களில் வீரராக இடம் பெற்றுள்ள நெசுட்டர் (Nestor) நீலியசி என்ற (Neleus) கிரேக்க மன்னரின் மகன் ஆவார். தந்தை பைலாசு(Pylos)என்னும் பகுதிக்கு அரசராக விளங்கினார். எர்குலிசு(Hercules)என்பான் இவர் தந்தையின் நாட்டின் மீது படையெடுத்து இவர் உடன் பிறந்தார் அனைவரையும் கொன்றுவிட்டான். நெசுட்டர் மட்டும் தப்பிவிட்டார். மிகச் சிறந்த போர் வீரராகிய இவர் சென்டார்சு(Centaures), இலாபித்சு (Lapiths)ஆகியோருக்கு இடையே நடைபெற்ற போரில் பங்குகொண்டார். மேலும் இவர் தம் 60-ஆம் வயதில் திரோசன் (Trojan) போரில் பங்கு கொண்டார். இவர் தம் வாழ்க்கையின் இறுதிக்காலத்தில் அறிவுத் திறமைக்காக மிகவும் பாராட்டப்பட்டார். ஓமர் (Homer) எழுதியுள்ள 'இலியாது', 'ஒடிசி' (Iliad and Odyssey) ஆகிய கிரேக்கக் காவியங்களில் இவர் சிறப்பிக்கப் பெற்றுள்ளார். நெசுட்டர் என்பதற்கு அறிவுமிக்க, தூய்மையானவர் என்பது பொருள்.

**நெசுடர்(2)** இவர் உருசியாவின் மாநிலங்களில் ஒன்றான உக்ரெயின் (Ukraine) தலைநகரான கீவு (Kiev) என்னு மிடத்தில் கி.பி. 1056-ஆம் ஆண்டு பிறந்தார்; கவு மடத்துத் துறவியாக விளங்கினார். இவர் திருத்தொண்டர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதுவதில் மிகுந்த ஆர்வம் உள்ளவராகத் திகழ்ந்தார். அளவற்ற காலக் கணிப்பு நூல்களை எழுதியுள்ளார். அவற்றின் வாயிலாக இடைக்கால உருசிய வரலாற்றைத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகிறார். பழங்காலத் தேவாலயங்களைப் பற்றியும் உருசியமொழியிலே இவர் எழுதியுள்ளார். 'பாவெசுட்டு' (Povest) என்னும் நூல் கி.பி. 9,10, 11-ஆம் நூற்றாண்டுகளில் மிகச் சிறந்த கலைக் களஞ்சியமாகக் கருதப்பட்டது. அந்நூல் உருசிய வரலாறு, மொழி, எழுத்தின் மூதாதையர், சமயம், புவியியல், கலை, வெளிநாட்டு உறவு முதலியவற்றைத் தெளிவாக விளக்குகிறது. சு.ஆ.

*நெசுடு*: சவுதி அரேபியாவின் நடுப் பகுதியில் உள்ள பெரிய பீடபூமிக்கு நெசுடு (Nejd) என்பது பெயர். இதன் உயரம் 762.5 மீ. முதல் 1525 மீ.வரை உள்ளது. இதன் கிழக்குப் பகுதியில் பாலைப்பகர் திடல்கள் உள்ளன. மற்றப்பகுதிகளில் பெடூவின்கள் (Bedouins) என்று சொல்லப்படும் நாடோடிகள் காணப்படுகின்றனர். நெசுடு கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாகாபி (Wahabi) இயக்கத்தின் மையமாக இருந்தது. இபின் சவுது (Ibin Saud) என்னும் புரட்சித் தலைவர் சிறிது சிறிதாக இப்பகுதியைத் துருக்கியின் ஆதிக்கத்தினின்று மீட்டார். இந்த மீட்பு கி.பி. 1899 முதல் 1912 வரை நிகழ்ந்தது. நெசுடுப் பகுதியினின்று மற்ற இடங்களையும் இபின் வென்றார். முடிவில் 1932-இல் நெசுடு, சௌதி அரேபியாவின் ஒரு பகுதியாயிற்று. இது குதிரைகளின் தாயகம். மேலும் எண்ணெய்வித்துகள், காபி, கோதுமை, பார்லி, பேரீந்து, எலுமிச்சை முதலியன இங்கு விளைகின்றன. தெ.பா,

*நெஞ்சுவிடுதூது*: தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று தூது என்பதாம். அது கலிவெண்பாவினாலே, உயர்திணைப் பொருளையும். அஃறிணைப் பொருளையும் ஊடலைத் தீர்க்கும் பொருட்டுத் தூதாக விடுத்தலாம். சுந்தர மூர்த்தி நாயனார் பரவை நாச்சியாரின் ஊடலைத் தீர்த்தற்பொருட்டுச் சிவபெருமானையே தூதாக அனுப்பினார். கந்தபுராணத்து வீரவாகுத் தேவர் தூது, இராமகாதையில் அங்கதன் தூது, வீடணன் தூது, மாபாரதத்தில் கண்ணன் தூது, உலூகன் தூது, சஞ்சயன் தூது முதலானவை பகைவர்பால் விடுக்கப்பட்ட தூதுகளாம். கணவன் மனைவி ஊடலைத் தீர்க்க விறலியினைத் தூதாக விடுத்தல் விறலிவிடு தூது எனப்படும். இவை போல்வன உயர்திணைத் தூதுகளாம்.

பிரபந்தத் திரட்டில், அன்னம், மயில், கிளி, மேகம், நாகணவாய்ப்புள், தோழி, குயில், நெஞ்சம்,

தென்றல், வண்டு ஆகிய பத்தும் தூதுக்குரியவை என்று பேசப்படினும், பாணன், விறலி முதலான உயர்திணையரையும், தமிழ், துகில், மான், புகையிலை, பணம், எலி, செருப்பு, பழையது, காதல், சவ்வாது, அன்னச் சேவல், தாமரை, நெல், படுக்கை, பாக்கு, வெற்றிலை, பொன் முதலானவைகளையும் தூதாக விடுத்துள்ளனர். இவ்வாறான தூதுகள் நகைச்சுவையுமுடையன. தூது நூலில் தூது செல்வோரின் சிறப்பும், மற்றையதன் இழிவும், தூதனுப்புவோர் செயலும், தூது ஏற்போர் சிறப்பும், தூதனுப்புவோர் வேண்டுகோளும், தூது செல்வோர் அடையும் பயனும் கூறப்படும். அவ்வாறு தூதனுப்பப்பட்ட தூது நூல், இதுவரை தெரியவந்தவை 100க்கும் மேற்பட்டவையாகும்.

அவற்றுள் இராமநாதஞ் செட்டியார் மீது முத்தையாப்புலவர் பாடிய நெஞ்சுவிடுதூது, குமாரதேவர் மீது திருப்போரூர்சிதம்பர சுவாமிகள்பாடிய நெஞ்சுவிடுதூது, திருக்கடந்தை மறைஞான சம்பந்த தேசிகர்மீது கொற்றவன் குடி உமாபதி தேவநாயனார் பாடிய நெஞ்சுவிடுதூது, சிவஞானபாலைய சுவாமிகள் மீது சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய நெஞ்சு விடுதூது, திருவாவடுதுறைச் சுப்பிரமணிய தேசிகர் மீது மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் பாடிய நெஞ்சுவிடுதூது, சொரூபானந்தர் மீது தத்துவராயர் பாடிய நெஞ்சுவிடுதூது முதலானவை நெஞ்சைத் தூதாக விடுத்துப்பாடிய நூல்களாம். மேலும், அவிநாசிநாத முதலியார், சட்டையப்ப அடிகள், முருகதாசப்பிள்ளை, மா. சிங்காரவேலு முதலியார் முதலானோரும் நெஞ்சுவிடுதூது பாடியுள்ளனர். மேற்கூறப்பட்டவற்றுள் உமாபதி தேவநாயனார் தம் ஞானாசாரியாராகிய மறைஞான சம்பந்தர் என்பார் பால் விடுத்தருளிய நெஞ்சுவிடுதூதுமிகச்சிறப்புடைது. அது, 'பூமேவும் உந்திப் புயல்வண்ணன் பொற்பதுமத் தார்மேவும் மார்பன் சதுர் முகத்தோன்' எனத் தொடங்கி, 'பூங்கொன்றை வாங்கிப்புகழ்ந்துபுரி நெஞ்சமே, ஈங்கொன்றவாராய் இனி' என்று 129 கண்ணிகளில் முடிகிறது. இதனுள், 'பொன்போல் ஒளிரும் ஆயிரத்தெட்டு இதழ்களையுடைய செந்தாமரைப் பூவினை யொத்த திருத்தாளினைத் தரவேண்டியதனைச் 'செங்கமலப் பூந்திருத்தாள் தாராய்' என்று இயற்றியருளியிருப்பது வியக்கத் தக்கது. வீ.சொ.

*நெட்டிமையார்*: இவர் சங்க காலப் புலவர்களுள் ஒருவர். உறுப்பினால் பெயர் பெற்றவர் என்று டாக்டர். உ.வே. சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார். தம் கவிதை ஒன்றில், நீண்ட இமையைப் புனைந்துரைத்தமையால் இவர் இப்பெயர் பெற்றார் என்று ஆராய்ச்சியாளர் சிலர் கருதுகின்றனர். ஆனால், இவரால் பாடப் பெற்று இன்று கிடைக்கும் பாடல்களுள் நீண்ட இமை பற்றிய புனைவு யாதும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவர்தம் மூன்று பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. (புறம்.9,12,15). பாடாண்டிணை, இயன்மொழித் துறையில் அமைந்துள்ள அம்மூன்று பாடல்களும் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைச் சிறப்பிப்பனவாக உள்ளன. ஆவும் ஆனியற் பார்ப்பனமாக்களும், பெண்டிரும் பிணியுடையோரும், புதல்வர்ப் பெறாதோரும் ஆகியவர்களைப்பாதுகாப்பான இடம் செல்லுமாறு அறிவித்துப் பின்னர்ப் போர் செய்ய முற்படும் அறநெஞ்சம் சான்றவன் முதுகுடுமிப் பெருவழுதி என்பதைச் சிறப்பாக உணர்த்தியுள்ளார் (புறம்.9). மேலும் அம்மன்னன் இன்னாவாகப் பிறர் மண் கொண்டு, தன் ஆர்வலர் பால் இனிய செய்தோம்பும் சிறப்பினையும் புலப்படுத்தியுள்ளார். அம் மன்னனுடைய வீர, ஈரச் சிறப்புகளை உணர்த்திய இவர், அம் மன்னன் வேள்விகள் பல செய்து விளங்கிய தன்மையை 'அவனை எதிர்த்துத் தோற்றவர் பலரா' அவன் தூண்கள் நாட்டி அமைத்த வேள்விக் களங்கள் பலவா என்று வினவும் பாங்கில், 'வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி, யூபம் நட்ட வியன் களம் பல கொல், யா பல கொல்லோ' என்னும் வினாவால் விளக்குவது நயமிக்குத் திகழ்கிறது (புறம்-16). அ.மா.ப.

*நெடுங் கழுத்துப் பரணர்* சங்கப் புலவர்களுள் ஒருவர். பரணர் என்னும் சங்கப் புலவரின் வேறுபடுத்தி அறிவதற்கு வாய்ப்பாக, நெடுங் கழுத்து என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டதாதல் வேண்டும். இவ்வகையில், வன் பரணர் என்னும் சங்கப் புலவர் பெயரும் அமைந்ததாகும். நெடுங் கழுத்து என்னும் அடைமொழி இவருக்கு உறுப்பால் வந்ததாகலாம் என்று டாக்டர்உ.வே. சாமிநாதையர் கருதுகிறார். இவரது ஒரே பாடல் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது, (புறம்.291). கரந்தைத் திணையில் வேத்தியல் துறையாக அமைந்துள்ள அப்பாடல் போரில் புண்ணுற்ற ஒரு வீரனின் வீரச் சிறப்பைக் கூறுவதாக உள்ளது. பண்டைக் காலத்தில் போர்க்குச் செல்லும்வீரன், தூய்மையான வெள்ளிய ஆடையினை அணிந்து செல்லும் மரபினைப் புலவர் 'தூவெள்ளறுவை மாயோன்' என்னும் தொடரால் குறிப்பிட்டுள்ளார். அ.மா.ப.

*நெடுங்கிள்ளி*: 'இவன் கடைச்சங்க காலத்திலுள்ள சோழநாட்டின் ஒரு பகுதியை ஆண்ட சோழ அரசன்; சோழன் மணக்கிள்ளி என்பவனின் மகன். இவன் ஆவூரையும் உறையூரையும் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தான். இவனைஎதிர்த்து இவன் பங்காளியான நலங்கிள்ளி ஆவூரில் போருக்கு வந்தான். அச்சமயம் நெடுங்கிள்ளியின் படை சிறிது நேரத்தில்

தளர்ச்சியுறவே அவன் கோட்டைவாயிலை அடைத்துக்கொண்டு உள்ளேயேயிருந்தான். நலங்கிள்ளி ஆவூர்க் கோட்டையைச் சுற்றி முற்றுகை யிட்டிருந்தான். நீண்டகாலமாகவே கோட்டைக்குள்ளிருந்தவர்களுக்கு உணவின்றித் தவிக்கும் நிலை ஏற்பட்டது. அதுகண்ட கோவூர்கிழார் மனம் வருந்தினார். உடனே நெடுங்கிள்ளியிடம் சென்று அவனுக்கு அறிவுறுத்தினார். 'யானை உணவின்றி வருந்துகிறது. பால் இல் குழவி அலறுகிறது. பெண்டிர் பூ இல்லாமல் வறுந்தலை முடிக்கின்றனர். நல்ல வீடுகளில் எல்லாம் துன்பக்குரல்தான் கேட்கிறது. இன்னாது அம்ம ஈங்கு இனிது இருத்தல், அறவையாயின் நினது எனத்திற; மறவையாயின் போரொடு திற, நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல் மிகவும் நாணம் தரத்தக்கது' என்று அவர் அறிவுரை அமைந்தது (புறம்.44). அது கேட்டு நெடுங்கிள்ளி மனம் திருந்தினான். சங்க காலத்தில் அரசர்களும் சிறந்த புலவர்களாயிருந்தனர். அத்தகைய அரசப்புலவர்களுள் நலங்கிள்ளியும் ஒருவன். அவன் பாடல்கள் புறம் 73,75 ஆக உள்ளன. புறம் 73-இல் 'எனக்குத் தாழ்ந்து இரந்தால் இன்னுயிராயினும் கொடுப்பேன்'. எதிர்த்தால் யாராயினும் 'துஞ்சுபுலி இடறிய சிதடன் போல உய்ந்தனன் பெயர்தலோ அரிதே' என்று அவன் வஞ்சினம் கூறும் சிறப்பு மிகவும் போற்றத்தக்கது. புறம் 75-இல் 'விதியால் உள்ளம் சிறியோன் ஆட்சியைப் பெறின் அவனுக்கு அது கனமாக இருக்கும். வலிய முயற்சியால் சீரியோன் ஒருவன் ஆட்சியை அடையின் அவனுக்கு அச்செல்வம் நொய்தாம்' என்னும் உண்மை உளங்கொளத் தக்கது. இப்பெருமகனைப் பற்றிப் புறம் 225-இல் ஆலத்தூர் கிழார் இரங்கிப்பாடிய கையறு நிலை மிகவும் உருக்கமாயுள்ளது. அவன் போர் விருப்பம், படைச் சிறப்பு முதலியன பற்றியும் புறநானூற்றுப் பாடலில் விளக்கிக் கூறுகிறார்.

இரா.சா.

**நெடுஞ்செழியன்:** காண்க: ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

**நெடுஞ்சேரலாதன்:** காண்க: இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்.

**நெடுந்தொகை:** காண்க: அகநானூறு.

**நெடுநல்வாடை:** பத்துப்பாட்டுள் நெடுநல்வாடை ஏழாம் நெடும்பாட்டாகும். மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரர் 188 அடிகளையுடைய இதனைப் பாண்டியன் நெடுஞ்செழியன்மீது பாடியுள்ளார். முதல் 28 அடிகாறும் கூதிர்க் கால வருணனை கூறப்படுகிறது. நான்கு நிலத்துக்கூதிர்ப்பருவ இயற்கை நிகழ்ச்சிகள்சித்திரமாகத்தீட்டப்படுகின்றன. பின்னர் 72 அடிகாறும் மதுரை மாநகரில் மாலைப்போது வந்துற்றகாலை மகளிர் விளக்கேற்றி வழிபடுதலுட்பட அச்சிறுபொழுது பற்றிய நிகழ்வுகள் கூதிராகிய பெரும்பொழுதுடன் ஒருங்குவைத்துணருமாறு புனையப்படுகின்றன. இறுதியில் கூதிர் நின்றன்றால் போதே' எனக் கார்காலத்தே வருவதாகக் கூறிச்சென்ற தலைமகன் கூதிர்ப்பருவம் வந்தும் வந்திலன் என்று வருந்தும் தலைவியைப் பற்றிக் கூறத் தொடங்குவார், முத்தகண் அவள் இருக்கும் அரண்மனையைக் காப்பியப்போக்கில்புனையத்தொடங்குகிறார். அடுத்து 73 – ஆம் அடி முதல் 135-ஆம் அடிவரை அரண்மனைக் கட்டட அமைப்பு, வாயில், அந்தப்புரம், கட்டில், சேக்கை முதலியன நிரலே காட்டப்படுகின்றன. பின்னர், 168 அடிவரையிலுள்ள இடைப்பட்ட 33 அடிகளில், தலைவியாகிய கோப்பெருந்தேவி புனையா ஓவியம்போலக் கிடந்து, கண்ணீர் உகுத்து வருந்துதலும், செவிலியர் அவளைத் தேற்றி 'இவளுடைய இன்னா அரும்படர் தீர, அரசனுக்கு வெற்றி தந்து, அவனது போர்ச்செயல் இனிதே முடிவதாக' எனக் கொற்றவையை வேண்டுதலுமாகிய நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன. இறுதியிலுள்ள 20 அடிகளில் அரசன் பாசறையில் நள்ளிரவிலும் உறங்காமல், விழுப்புண்பட்ட வீரர்களைப் பார்வையிடும் காட்சி கூறப்படுகிறது. தலைவியை ஆற்றுவிக்கும் செவிலியர் கொற்றவையைப் பரவும் துறையமைந்தஇப்பாடல், அச்செவிலியர் கூற்றாகவே புனையப்பட்டுள்ளது. 'நெடுநல்வாடை' என்ற பெயர், பிரிந்து வருந்தும் தலைவிக்கு வாடை நெடிதாகவும் தன்கடமையில் ஈடுபட்டுள்ள தலைவனுக்கு அது நன்றாகவும் அமைந்தமையைச்சுட்டி விளங்குகின்றமையின் ஒரு நிகரற்ற பொருத்தத்தைத் தந்து விளங்குகிறது.

இதனைப் பாடிய நக்கீரர் சங்க இலக்கியத்தில 37 சிறந்த பாடல்களைப் பாடியுள்ளார். திருமுருகாற்றுப் படையும் இவர் பாடியதேயாகும். அகநானூற்றில் முருகவேளை இயற்கையில் கண்டு இவர் மகிழ்தலும் காணலாம் (120). தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பாண்டியன் நன்மாறன், சோழநாட்டுப் பிடவூர்கிழான்மகன் பெருஞ்சாத்தன் ஆகியவர்களை இவர் பாடியுள்ளார். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் சங்க காலப் பாண்டியப் பெருவேந்தர்களுள் ஒருவனாவான். தானே பாடல் பாடும் திறமுடைய மன்னர்களில் இவனும் ஒருவன். ஒரே நாளில் எழுபகை மன்னர்களைத் தன் இளமையிலேயே வென்றமையால் பெரும்புகழ் பெற்றவன். இத்தகைய வள்ளலாகிய இப்பெருவேந்தனைப் பாடல் ஒன்றின் வழிப் புனைந்து புகழ நினைத்த நக்கீரர், இவ்வழகிய பாடலை இயற்றி, இதனை அகப்பாடலாகவே கருதிப் படித்து இன்புறுவார். அவ்வாறே இலக்கிய

இன்பம் துய்க்குமாறு இதனைப் பாடினார். எனினும், அரண்மனை வருணனையால் இப்பாடல் தலைவி அரச மரபினள் என்பதையும், பாசறை வருணனை யால் தலைவன் அரசன் என்பதையும் உணரவைத்த அவர், வீரன் ஏந்திய வேலின்மேல் வேப்பந்தழை இருப்பதைக் குறிப்பாகச் சுட்டி, இப்பாடல் பாண்டிய மன்னனையே பாட வந்ததுஎன்பதைஉய்த்துணரு மாறு செய்தார். மரபை மீறாமல், தம் சொந்தத் திறனைச் சங்கப் புலவர்கள் வெளிப்படுத்த முயன்றனர் என்பதற்கு இப்பாட்டுச் சிறந்த சான்றாகும்.

இதனால் நச்சினார்க்கினியர் போன்ற பெரும் புலவர்களும் இதனை அகப்பாடலில் சேர்ப்பதா புறப்பாடலில் சேர்ப்பதா எனக் குழப்பமெய்தியுள்ளனர். அவர் இதற்கு வாகைத்திணை – கூதிர்ப்பாசறை வஞ்சித்திணை-கொற்றவைநிலை எனவும் தோற்றுமாறு எழுதியிருப்பதுடன், அகத்திணையுள் பாலைத் திணையாகக் கருத இடமுளது என்பார் போலவும்தம் பத்துப்பாட்டு உரையுள் விளக்கங்கள் தந்துள்ளார். இன்று ஆய்வாளர் பலர்தம் கருத்தின்படி இப் பாட்டு முல்லைத்திணையுள் கொற்றவையைச் செவிலியர் பரவுதலாகிய துறை என்பதே பொருந்துவதாகும்.

கூடுதலான அடிகளையுடைய நெடும்பாடல்களைக் கொண்ட பத்துப் பாட்டில், 103 அடிகளையுடைய முல்லைப்பாட்டிற்கு அடுத்த நெடும் பாட்டு 188 அடிகளையுடைய இந் நெடுநல்வாடையாகும். 'வையகம்பனிப்ப...' எனத் தொடங்கும் இப்பாடலில் கோவலர் கன்னத்தில் கைவைத்து நடுங்குவது முதல் கூதிர்க்காலக் காட்சி ஒவ்வொன்றும் சித்திரமாகத்தீட்டிக்காட்டப்படுகின்றது, 'பரேர் எறுழ்த் திணிதோள், முடலை யாக்கை முழுவலிமாக்கள்', 'மனையுறை புறவின் செங்காற் சேவல், இன்புறு பெடையொடு மதலைப் பள்ளி மாறுவன இருத்தல்', 'கைவல் கம்மியன் கவின்பெறப் புனைந்த செங்கேழ் வட்டம்', 'வென்றெழுகொடியோடு வேழம் புகுமாறமைந்த ஓங்கு நிலை வாயில்', 'தூங்குஇயல் மகளிர் வீங்கு முலை கடுப்பப் புடை திரண்டிருந்த குடத்தை யுடைய கால்கள் பொருத்திய பாண்டில்' என இதில் வரும் வருணனை யாவும் சித்திரமாகவே தீட்டிக் காட்டப்படுகின்றமையை, இதன் அடைமொழி முதல் ஒவ்வொன்றையும் உற்றுணர்வார் உணர்தல் கூடும். தலைவியைப் 'புனையா ஓவியமாக்கிக்' காட்ட எழுந்த நக்கீரர் நெஞ்சம், பாடல் முழுவதையுமே ஓவியமாக்கி விட்டது எனலாம். இறுதியில் வாடைக் காற்றையும், பாண்டியன் விளக்கின் 'சுடர்' 'தெற்கு ஏர்பு இறைஞ்சிய தலையவாதலில்' வைத்தே காட்டும் இப்பாட்டு, சித்திரப்பாட்டு அல்லது சிற்பப் பாட்டு என்னுமாறு இதன் புனைவு அமைந்துள்ளது.

இராம.பெ.

*நெடு நினைவு*: படிக்கும்போது ஒவ்வொரு சொல்லையும் தெரிந்துகொள்ள முயலுகின்றனர். அதுபோலவே தட்டெழுத்துக் கருவியைப் பயன்படுத்தும்போது ஒவ்வொரு எழுத்தையும் அறிந்துதான் தட்டச்சுச் செய்யவேண்டும். தொலைபேசியை இயக்கும்போதுகேட்ட அல்லது பார்த்த எண்களை ஒவ்வொன்றாகச் சுழற்றவேண்டும். இவை நிகழ்ந்துவிட்ட பிறகு படித்த ஒவ்வொரு சொல்லையும், தட்டிய ஒவ்வொரு எழுத்தையும், சுழற்றிய ஒவ்வொரு எண்ணையும் மறந்துவிடுகின்றனர். இவ்வாறு சொல்லையோ எழுத்தையோ எண்ணையோ நினைவில் கொண்டு இயங்குவது குறுகிய கால நினைவு. அவற்றை விரும்பி இருத்தினாலொழிய நினைவிற்கு மீட்டுக் கொணர முடியாது. அவை நினைவின் தேக்கத்திலிருப்பதில்லையாதலால் மறக்கப்பட்டு விடும். அவற்றை மீண்டும் பயன்படுத்த எண்ணியிருந்தால் வகைப்படுத்தி நினைவில் தேக்கியிருக்கலாம். தேக்கத்தில் இடம் பெற்றுவிட்டால் அது நெடு நினைவு (Long term Memory) எனப்படும்.

**நினைவாற்றல்**: விரும்பிய போது நினைவிற்குக் கொண்டுவர முடிவது, கற்றவற்றைச் சீராக்கி அமைப்பது, சாயல்களாக (Images) மாற்றிக்கொள்வது ஆகியவை பேணுங்கலை அல்லது நினைவுக் குறியீடுகளை அமைத்துக்கொள்வதைப் பொறுத்தவை. செய்தியைத் தேக்கத்திலிருந்து மீட்டுக் கொணர்வதைவிட நினைவாற்றலில் இருந்து எடுத்துக்கொள்ளும் முயற்சியே சிறப்பானது.தேக்கி வைப்பதைவிடச் செய்தியைச் சீர்படுத்தலே நினைவிற்கு மீட்டுக் கொணர்தலுக்குப் பெரிதும் உதவும். நெடுநினைவில் எவ்வளவு வேண்டுமானாலும் தேக்கலாம். இந்த ஆற்றலுக்கு எல்லையில்லை.ஏற்கெனவே சீர்மைப்படுத்தப் பட்ட செய்தியுடன் புதிய செய்திகளைக் கோப்பது எளிது. இது மிக விரைவாகவும் நிகழக்கூடியது. நெடு நினைவில் சேரும் செய்திப் பெருக்கமானது நினைவாற்றலை எளிதாக்குகின்றது. குறுகிய கால நினைவிலிருந்துதான் நெடுநினைவிற்குச் செல்லவேண்டும். எந்தச் செய்தியும் சீர்படுத்தும் முயற்சியை விரைவுடன் செய்யத் தவறிவிட்டால் குறுகியகால நினைவு மறக்கப்பட்டுப் பெரும்பகுதி இழக்கப்படும். ஆகவே, ஒத்திகைக்காக நெடு நினைவில் இருத்தியதை மீட்டறிதல் பயிற்சி தருவதைவிட ஏற்கெனவே உள்ள சேமிக்கப்பட்ட செய்தியை மேலும்சீராக நிருவகித்து விடுவது நல்லது.

பதினான்கு வயதிற்குப் பிறகு கேட்டுப் புரிந்து கொள்வதைவிடப் பார்த்துத் தெரிந்துகொள்ளும் ஆற்றல் மிகுதியாக வளர்கின்றது. ஒரு முறை 14 வயது மாணவர்களுக்குக் கொடுக்கப்பட்ட பகுதியை

அவர்கள் முழுமையாகப் படித்தாலும் பகுதி பகுதிகளாகக் கற்றாலும் ஒரே ஆற்றலுடன்தான் மனனம் செய்தனர். ஆனால், கடுமையான பகுதிகளாக இருப்பின் முதலில் முழுமையாகக் கற்றுப் பிறகு பகுதி பகுதியாகக் கற்றதனால்தான் மனனம் செய்வது எளிதாக இருந்தது. சில புதிர்களை விடுவிக்கும்போது அப்புதிரை முழுவதுமாகக் கவனித்தால்தான் விடையைக் காண்பது எளிதாகிறது. அதற்கு மாறாகப் பகுதி பகுதியாகக் கவனிப்பது நேரமெடுக்கும்.

பகுதிகளாகக் கற்பது தொடக்கத்தில் எளிமையாக இருக்கும். அதனைக் கற்பதில் ஏற்படும் பட்டறிவு அடுத்த பகுதிகளுக்கு எளிதாகப் பயன்படுத்தும் உணர்வை ஏற்படுத்தும். பகுதி பகுதியாகக் கற்றவற்றை இணைத்துக் காணுதலில் தொல்லை ஏற்படுவதுண்டு. முழுமையாகக் கற்பதைப் பழக்கப்படுத்திக் கொண்டால் அத் தொல்லை இருப்பதில்லை. சிக்கலான பகுதிகளைக்கூட மனத்தில் வைத்துக்கொள்ள முழுமையாகக் கற்பது எளிது.

தொடர்ந்து கற்பதைவிட அடிக்கடி குறுகிய காலப் பயிற்சி தருவது நெடுநினைவிற்கு உதவியாக இருக்கும். ஒப்புவித்தலால் தனக்குத் தெரிந்திருக்கும் அளவு எவ்வளவு என்பது திட்டவட்டமாகத் தெரிந்துவிடும்; எவ்வளவு நன்றாக நினைவில் இருத்தப்பட்டிருக்கிறது என்பதையும் அறியலாம்.

**நெடு நினைவு நிகழ்வு:** குறுங்கால நினைவானது விரைவாகக் கற்றலாகும். இதில் சில செய்திகள்தாம் இருக்கமுடியும். அவற்றுடன் புதியதொன்று புகின் முன்பிருந்த செய்தி இழக்கப்படும். நினைவின் பதிவானது நான்கு கட்டங்களாக நிகழ்கின்றது. அவை: பதிவு, சாயல், தேக்கம், மீட்டல் என்பன. கேள்வியறிவு பார்த்தறிவதைவிட விரைவாகப் பதிவாகும். ஆனால், பொறுத்திருந்து கற்பதில் பார்த்து நினைவில் கொள்வது நன்கு பதிவாகின்றது.

குறுகியகால நினைவில் இருத்தப்படும் செய்திகள் நாளா வட்டத்தில் விரைவாகவே மறக்கப்பட்டுவிடும். குறுகியகாலத் தேக்கத்திலிருக்கும் செய்திகள் நெடு நினைவிற்குச் சென்று விடுமானால் அவற்றை நினைவிலிருத்த வாய்ப்புண்டு. அதற்கு முன்னதாக உடனுக்குடன் புலன்களுக்கு எத்தனையோ தூண்டுதல்கள் இருக்கலாம். அவற்றைப் பற்றிச் சிறிதேனும் சிந்தனை அல்லது கவனம் ஏற்பட்டால்தான் குறுகிய நினைவிலாவது நிற்கும். நெடு நினைவில் செய்தி பதிவாவதற்குச் சற்று நேரம் பிடிக்கின்றது. இந்த இடைவெளி கிடைக்காதுபோனால் குறுகிய கால நினைவில் கற்றது நெடுநினைவில் பதிவாகாது போகக் கூடும்.

வெறுஞ்சொற்கள் உலகத் தொடர்பில்லாதனவாக இருக்கும். நாய்-பூனை, நகை-வைரம் என்னும் போது தொடர்புண்டாகிவிடுகின்றது. இச் சொற்களுக்கான உறவின் கருத்துச் சொல்லும் தெரிந்திருந்தால் தான் தொடர்பு நினைவிலிருக்கும். அதுதான் நெடு நினைவில் தேக்கப்படும் வழி.

நெடு நினைவிலிருந்த அச்சிலிருப்பனவற்றைப் படிப்பதானது, கேட்பதைவிட மிகுந்த உதவியாக இருக்கிறது. அச்சான செய்தியை உற்றுக் கவனிக்கமுடிவதோடு கற்கும் செய்திகளைச் சீராக்கி நிரல்படுத்திக் கொள்ளவும் முடிவது உதவியாக இருக்கும். ம.பெ.

**துணை நூல்கள்:**

**Bower G.H.**, Psychology of Learning and Motivation, Vol. No.5. Academic Press, New York, 1972.

**Germak, L.S.**, Improving Your Memory, McGraw-Hill Book Co., Tokyo, 1975.

**Griffiths, M. M.**, Part and Whole Methods of Presentation Aust. Comm. Education Research Ser. No.52. Melborne, 1938.

**நெடும்பல்லியத்தனார்:** இவர் சங்க காலப் புலவர்களுள் ஒருவர். பல்லியம் என்பது பல வாத்தியங்களைக் குறிக்கும். நெடிய பல வாத்தியங்களை உடைமையின் இவருக்கு நெடும்பல்லியத்தனார் என்னும் பெயர் வந்தது. இப்பெயருக்கேற்ப இவர், 'நல்யாழ், ஆகுளி, பதலையொடு சுருக்கிச் செல்லாமோதில் சில்வளை விறலி' (புறம். 64) எனக் கூறியிருப்பது நோக்கத்தக்கும் என்று உ.வே.சா. உரைப்பர் (குறுந்தொகை பாடினோர் வரலாறு காண்க). குறுந்தொகை 178-ஆம் பாடலைப் பாடிய நெடும்பல்லியத்தையை இப்புலவரின் உடன் பிறப்பினராகக் கருதுவோரும் உளர். இவர் பாடியவாகப் புறநானூற்றில் ஒன்றும் (64) குறுந்தொகையில் ஒன்றும் (203) ஆக இரு பாடல்கள் உள்ளன. குறுந்தொகை 203 ஐப் பாடியவர் நெடும்பல்லியத்தன் எனக் காணப்படுதலின் மர்ரே பதிப்பும் வையாபுரிப்பிள்ளைபதிப்பும் நெடும்பல்லியத்தனாரை இவரினும் வேறாகக் கருதும்.

இவர் பாடிய புறப்பாடல் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் கொடைச் சிறப்பையும் வீரச் சிறப்பையும் புலப்படுத்தும். இப்பாடல் விறலியாற்றுப் படை என்னும் துறையில் அமைந்துள்ளது. முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழாரும் நெட்டிமையாரும் பாடியிருத்தலின் நெடும்பல்லியத்தனார் அப்புலவர்கள் வாழ்ந்த காலத்தினர் என்னலாம். இவர் பாடிய குறுந்தொகைப் பாடல், 'வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைவி கூறியது' என்னும் துறையிலமைந்தது. 'தலைவர் மலையிடை

யிட்ட நாட்டரும் அல்லர்; மரந்தலைத் தோன்றா ஊரரும் அல்லர்; கண்ணிற் காணுமளவு பக்கத்திருந்தும் முனிவரை அஞ்சி வாழும் பகுதியினர் போல் மனத்தால் நீங்கியொழுகும் தலைவர் பொருட்டு முன்னர்ப் பரிதலை உடையேன், இப்பொழுது அது கழிந்தது' என்பது அப்பாடற் கருத்தாகும். தூய இயல்புடைய தலைவியை நீங்கிய பரத்தைமைத் தலைவனுக்குத் தூய துறவியை நீங்கியொழுகும் மனமாசுடையவனை உவமை கூறியிருப்பது சிறப்பினது.

இரா.சா.

**நெடும்பல்லியத்தை:** சங்ககாலத்தே திகழ்ந்த பெண்பாற் புலவர்களுள் இவர் ஒருவர். நெடும்பல்லியத்தனார் என்னும் புலவர் பாடிய பாடல்கள் புறநானூற்றில் ஒன்றும்(64) குறுந்தொகையில் ஒன்றும் கிடைத்துள்ளன. நெடும்பல்லியத்தை இவர்தம் உடன் பிறந்தவரோ என்று ஊகிக்கப்படுவதாக டாக்டர் உ.வே.சா. தம் குறுந்தொகைபாடினோர் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார். பல்லியம் என்பது பல வாத்தியங்களைக் குறிக்கும். நெடிய பல வாத்தியங்களை உடைமையின் இவருக்கு இப்பெயர் வந்திருக்கலாம். நெடும்பல்லியத்தனார்என்றபெயரும் இக்காரணம் குறித்து எழுந்ததாகக் கருதலாம். 'நல்யாழ்ஆகுளி பதலையொடு சுருக்கிச் செல்லாமோதில் சில்வளை விறலி' என்று நெடும்பல்லியத்தனார் தம் பெயருக்கேற்பப் புறநானூற்றுப் பாடலில் (64) கூறியிருத்தல் நோக்கத் தகுவதாம்.

குறுந்தொகை 203 ஆம் பாடல் ஆசிரியர் நெடும் பல்லியத்தன் என்று காணப்படினும் பாடவேறுபாடாக நெடும்பல்லியத்தை என்ற பெயரும் கொடுக்கப்பட்டுள்ளது. ஆகவே, இவர் குறுந்தொகையில் பாடியனவாக இரண்டு பாடல்களைக் (178, 203) கருதலாம். 178-ஆம் பாடல் கடிநகர் புக்க தோழி தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு, முன்னர்க் களவுக் காலத்து ஒழுகலாற்றை நினைந்து அழிந்து கூறியது என்னும் துறையிலும், 203-ஆம் பாடல் வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது என்னும் துறையிலும் அமைந்துள்ளன. தலைவனின் களவுக் காலத்துக் காமநிலையை, 'ஆம்பல் குறுநர் நீர் வேட்டாங்கு இவள் இடைமுலைக் கிடந்தும்நடுங்கலானீர்' எனத் தோழி ஏற்ற உவமையுடன் சுட்டிக் காட்டுவது நயம் பயப்பதாகும். தலைவி தலைவனுக்குக் களவுக் காலத்தில் அரியளாய்த் தோன்றியதற்கு மூன்றாம் பிறைத்திங்கள் கண்டு தொழுவோர்க்கு அரியதா தலை உவமையாக்கியும் (178) தலைவியின் கற்புத் தூய்மை கண்டு பரத்தமைத் தலைவன் நீங்கி ஒழுகுவதற்கு முனிவரது தூய்மையைக் கண்டு தூய்மையிலாதார் அஞ்சி விலகிச் செல்வதை உவமையாக்கியும் (203) பாடியிருத்தல் நுானயம் தருவதாகும்.

இரா.சா.

**நெடும்பவளத்திட்டு:** உலகிலேயே மிகப்பெரிய பவளத்திட்டான, நெடும்பவழத்திட்டு (Great Barrier Reef) ஆசுத்திரேலியாவின் வடகிழக்குக்கு அப்பால் உள்ள பவளக் கடலில் உள்ளது. இதன் நீளம் 2010 கி.மீ.அகலம் 48-144 கி.மீ. பரப்பு, ஏறத்தாழ 260,000 ச.கி.மீ. தனித்தனியாகப் பல திட்டுகளைக் கொண்ட இப்பகுதி, ஆசுத்திரேலியாவால் பிரிக்கப்படுகிறது. இக்கடற்கழியின் அகலம் 16 முதல் 160.9 கி.மீ. வரை உள்ளது. கிளிஞ்சல்களும் முத்துச்சிப்பிகளும் திட்டுக்கு அண்மையில் உள்ளன.

தெ.பா

**நெடும்பாரதாயனார்:** பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்துப் பதிகத்தில் நெடும்பாரதாயனாரைப் பற்றியசிறுகுறிப்புக் காணப்படுகின்றது.வேறு எந்நூலிலும் இவரைப் பற்றிய செய்தி கூறப்படவில்லை. இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவனின் புரோகிதராகத் திகழ்ந்தார் என இவரைப் பற்றி மூன்றாம் பத்தின் பதிகப் பழைய உரைக் குறிப்புக் கொண்டு அறியலாம். இவர் 'ஆற்றல் சால் முன்பொடு ஒடுங்கா நல்லிசையும் உயர்ந்த கேள்வியும்' எய்தியவர். நெடும்பாரதாயனாராகிய தன் புரோகிதர் துறந்து தனக்கு முன்னே காடு புக்க செய்தியறிந்து குட்டுவனும் துறவுள்ளம் பிறந்து துறந்து காட்டிற்குச் சென்றான் எனப் பதிகத்தாலும் பழைய உரையாலும் அறிய முடிகிறது. அப்புரோகிதரால் உள்ளொளி பெற்ற பல்யானைச் செல்கெழு குட்டுவன் ஆசிரியர் பாலைக் கௌதமனாரின் விருப்பப்படி அவரையும் அவர் துணைவியையும் சுவர்க்கம் புகச் செய்தான் என்று பதிகக் குறிப்பு உணர்த்தும்.

இரா.சா.

**நெடுமாறன்:** காண்க: நின்றசீர் நெடுமாற நாயனார்.

**நெடுமிடல்:** சங்க இலக்கியத்தால் அறியலாகும் ஒரு வீரன். பதிற்றுப்பத்தின் நான்காம் பத்தில் காப்பியாற்றுக் காப்பியனார் இவ்வீரனைக் குறிப்பிட்டுள்ளார். நான்காம் பத்தின் தலைவனான களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல் இவ்வீரனை வென்றுள்ளான். 'நெடுமிடல் சாயக் கொடுமிடல் துமிய' என்றுள்ள நான்காம் பத்தின் செய்யுட் பகுதிக்கு அதன் பழைய உரையாசிரியர் குறிப்புரை எழுதுங்கால், 'நெடுமிடல் அஞ்சி இயற் பெயராம்' என்று கூறியுள்ளார். அதனால் இவன், 'நெடுமிடல் அஞ்சி' எனப் பட்டான் என்பது புலனாகிறது.

பரணர், தம் அகநானூற்றுப் பாடல் ஒன்றில் (அகம். 266) இவனைப் பற்றிப் பின்வருமாறு குறிப்

பிட்டுள்ளார்:- 'யாழ்இசை மறுகின் நீடூர் கிழவோன், வாய்வாள் எவ்வி ஏவல் மேவார், நெடுமிடல், சாய்த்த பசும்பூட் பொருந்தலர், அரிமண வாயில் உறத்தூர்'. இதில், நீடூர்க்கு உரிமையாளனாகிய எவ்வியின் ஏவலைக் கேளாது அவனை எதிர்த்த பகைவரை, நெடுமிடல் அஞ்சி என்பான் அரிமண வாயில் உறத்தூரில் பொருது வென்றான் என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது. இதனால், நெடுமிடல் என்பவன், நெடுமிடல் அஞ்சி என்று வழங்கப் பெற்றான் என்பதும், அவன் எவ்விக்காக, அவன் பகைவரை வென்றான் என்பதும், நெடுமிடலைக் களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல் வென்று அவன் நாட்டை அகப்படுத்தினான் என்பதும்புலனாகின்றன. இவ்விரு பாடல்களிலும் வரும் நெடுமிடல் என்பதனை ஒரு வீரன் பெயர் எனக் கொள்ளாது, நெடிய வலிமை என்று பொருள் கொள்வாரும் உளர். அ.மா.ப.

**நெடு வெண்ணிலவினார்:** நெடுவெண்ணிலவினார் சங்கப் புலவர்களுள் ஒருவர்; குறுந்தொகை 47-ஆம் பாடலை மட்டும் பாடியவர். 'கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்' என்ற அப்பாடலுள் அமைந்த 'நெடுவெண்ணிலவு' என்னும் தொடரின் சிறப்புக் கருதி, அத்தொடராலேயே பெயர் பெற்றவர். தேய்புரிப்பழங் கயிற்றினார், ஓரேருழவர், குப்பைக் கோழியார் என்னும் பெயர்களைப் போன்று நெடுவெண்ணிலவினார் என்பது இவர்தம் பெயராயிற்று. இரவுக்குறி வந்து செல்லும் தலைவனின் அரிய களவொழுக்கத்தைக் கடிந்து, தலைவியை அவன் மணம் செய்து கொள்ள வேண்டி, அவனுக்கு அறிவுறுத்துமாறு தோழி நிலவுக்கு உரைப்பதாக அமைந்தது அப்பாடல். களவு வழிப்பட்ட நிலைமையாதலால், நீண்ட நேரம் ஒளிதரும் நிலவாகத் தம்மால் வெறுக்கத் தக்கது அந்நிலவு என்பதைச் சுட்டுவதற்கு 'நெடுவெண்ணிலவு' என்று தோழி குறித்தாள். நெடுநல்வாடை என்ற தொடரைப் போலத் 'தனக்கு நெடிய, பிறர்க்கு வெள்ளிய நிலவு' என நெடுவெண்ணிலவு என்பதும் அமைந்ததால் அது சிறப்புடையதாகக் கருதப்பட்டது.

இந் நெடுவெண்ணிலவு என்னும் சிறப்புத் தொடர், சங்க இலக்கியங்களில் இரண்டு இடங்களிலும் (குறுந். 47, 193) 'நெடுவெண் திங்கள்' என ஓரிடத்திலும் (அகம்.2) குறிக்கப்படுகின்றது. நெடுவெண்ணிலவினார்தம் பாடல் குறிஞ்சித்திணைப் பாடலாயினும் அதனுள், வேங்கை மலர்ந்து உதிர்வதாகக் கூறியதால் வேனிற்காலம் சுட்டப்பட்டுத் திணை மயக்கம் வந்துள்ளது. இப்பாடலைப் பேராசிரியர் (தொல், மரபு. 8, உவம 22), நச்சினார்க்கினியர் (தொல்.அகத்.12, களவு 16), நம்பியகப் பொருளுரையாசிரியர் (நூ. 161), காரிரத்தினக் கவிராயர் (மாறனலங்காரம் 103), தண்டியலங்கார உரையாசிரியர் (பொருளணி. 12), வைத்திய நாத தேசிகர் (இலக். விளக். 394, 519, 645) ஆகியோர் மேற்கோளாகக் காட்டியுள்ளனர். சா.கி.

**நெடுவேளாதன்:** இவன் வேளிர்குடித் தலைவருள் ஒருவன். இவன் போந்தைப் பட்டினத்துக்கு உரியவன். குன்றூர் கிழார் மகனார் ஒரெயின் மனனன் மகளைப் போற்றும்போது நெடுவேளாதனின் போந்தை நகரைப் போன்ற பெருஞ் சீருடையாள் என்பதை 'நெடுவேளாதன் போந்தை அன்ன' (அகம். 338) என்று குறிப்பிடுகிறார். அதனால் நெடுவேளாதன் காலத்துப் போந்தை நகர் மிக்க வளமுடன் விளங்கியமை புலப்படும்.

ஆதன் என்னும் பெயர் சங்க காலத்தில் சிறப்பாக வழங்கப்பட்டது. நெடுஞ்சேரலாதன், ஆதனுங்கன், ஆதன் ஓரி, ஆதன் அழிசி, ஆதன் எழினி முதலிய பெயர்கள் நோக்கத்தகும். ஆதன் + தந்தை = ஆந்தை என வருதற்குத் தொல்காப்பியத்தில் விதி கூறப்பட்டுள்ளது. இச்செய்தியும் பண்டு ஆதன் என்ற பெயர் சிறப்பாக வழங்கியமையை உணர்த்தும். ஆதன் என்ற பெயர் பண்டு சேர மரபினரைக் குறிக்கும். சா.உ.

**நெடு வேளாவி:** இவன் பொதினி (பழனி) மலையைச் சேர்ந்த வேளிர்குலத் தலைவன். வண்டுகள் மொய்க்கும்படி செறிந்த மலர்களையுடைய கண்ணியையும் ஒள்ளிய வீரக் கழலையும் பகைவர்க்கு அச்சமுண்டாக்கும் குதிரைகளையும் உடைய மழநாட்டு மறவரைப் போரில் வென்று புறங்கொடுத்து ஓடச் செய்த சிறந்த போர்த்திறமுடைய நெடுவேளாவி என்று அகநானூற்றுச் செய்யுளில் (அகம்.1) இவனை மாமூலனார் போற்றுகிறார். இவன் பெண்மக்கள் இருவருள் ஒருத்தி இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனையும் மற்றொருத்தி செல்வக் கடுங்கோ வாழியாதனையும் மணந்த சிறப்பினர். 'முழவுறழ் திணிதோள் நெடுவேளாவி பொன்னுடை நெடுநகர்ப் பொதினி' (அகம்.61) என்று இவன் மலை சிறப்பிக்கப் பட்டுள்ளது. சா.உ.

**நெதர்லாந்து.** வடமேற்கு ஐரோப்பாவில் வடகடலில் அமைந்துள்ள நெதர்லாந்து (The Netherlands) அரசியலமைப்புக்கு உட்பட்டதோர் முடியாட்சி நாடாகும். இந்நாடு பெரும்பாலும் ஆலந்து (Holland) என்றே குறிப்பிடப்படுகின்றது. இது கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலிருந்து நெதர்லாந்து என்றே சொல்லப்படுகின்றது. நெதர்லாந்து என்னும் சொல்லுக்குத் 'தாழ்ந்த நிலம்' என்பது பொருள். இந்நாடு கடல் மட்டத்திற்குக் கீழே உள்ளதால் இப்பெயர் பெற்றது. இந்நாட்டு மக்கள் தங்களை

நெதர்லாந்துக்காரர்கள் (Netherlanders) அல்லது ஆலந்துக்காரர்கள் (Hollanders) என்கின்றனர். ஆனால், ஆங்கிலம் பேசும் நாடுகளில் இவர்கள் தச்சுக் காரர்கள் (The Dutch) என்றே சொல்லப்படுகின்ற வர். இந்நாட்டின் தலைநகர் ஆம்சுடர்டாம். எனி னும் அரசு தி ஏகிலிருந்து (The Hague) செயற் படுகிறது.




நெதர்லாந்து

**தட்ப வெப்பம்:** இந்நாடு கடலால் சூழப்பட்டிருப் பதால் மிதமான தட்ப வெப்ப நிலையைக் கொண் டுள்ளது. கடலிலிருந்து வீசும் மேலைக்காற்று இந் நாட்டைக்குளிர்காலத்தில் வெப்பமாகவும், கோடைக் காலத்தில் குளிர்ச்சியாகவும் வைத்திருக்கிறது. அது ஈரப்பசையான காற்றைக் கொண்டு வருவதால் ஆகாயம் மேகங்கள் நிறைந்திருக்கும். இங்குக் கடற் காற்றைத் தடுக்க மலைகள் இல்லாததால் நாடு முழுவதிலும் வெப்பநிலை சராசரியாக உள்ளது. சராசரி வெப்பநிலை கோடையில்16°இலிருந்து18°செ. வரை; குளிர்காலத்தில் 1°செ. ஆண்டில் சராசரி 86 செ.மீ.க்கு மேல் மழை பெய்கிறது. வடமேற்குப் பகுதியில் குளிர்காலத்தில் மூடுபனி மிகுதி.

**இயற்கை அமைப்பு:** இந்நாட்டிலுள்ள நிலப் பகுதியில் ஐந்தில் இரு பங்கு கடல் மட்டத் திற்குக் கீழிருந்த ஏரிகளையும் சதுப்பு நிலங் களையும் தூர்த்துப் பெறப்பட்டதாகும். அவர் கள் நீரை வடித்து வெளியேற்றிக் கடல் அணை களைக் (Dykes) கட்டி, கடல்நீர் உள்ளே புகாதவாறு தடுத்துள்ளனர். நீரை இறைத்து, வாய்க்கால்கள் வழியே கடலுக்குக் கொண்டு சென்று அவ்வாறு பெறப்பட்ட நிலத்தை விளைநிலமாக மாற்றியுள்ள னர். இந்நாட்டில் பெரும்பகுதி சமதளமாகவே உள் ளது.

இயற்கை அமைப்பின்படி இந்நாட்டை 1) மணற் குன்றுகள் (the Dunes), 2) மீட்கப்பட்ட நிலங்கள் (the Polder), 3) மணற்பாங்கான சமவெளி,4) தெற்கு மேட்டுநிலம் என நான்காகப் பிரிக்கலாம். மணற் குன்றுகள் கடல் மட்டத்திலிருந்து 4.6 மீ. இலிருந்து 7 6 மீ. வரை உயரமுள்ளவை. இந்நாட்டின் வட கடல் கடற்கரைப்பகுதி முழுவதும், வடக்கில் மேற்குப் பிரிசியன் தீவுகளும் (West Frigian Islands) இத்தகை யவை. நடுப்பகுதியில் இது தொடர்ச்சியாகக் காணப் பட்டாலும், தெற்கில் அகன்ற ஆறுகள் பாய்வதால் வெட்டுண்டுள்ளது. இப்பகுதியில் சில மரங்கள் வளர்த் தாலும் அவை வேளாண்மைக்கு ஏற்றவையல்ல. போல்டர் (Polder) எனப்படும் மீட்கப்பட்ட இடங்கள் கடல் மட்டத்திற்குக் கீழே உள்ளன. அவற்றை மணற் குன்றுகளும், கடல் அணைகளும் பாதுகாக் கின்றன. அலெக்சாந்தர் இடம் (The Prins Alexan-der Polder) என்பது கடல் மட்டத்திலிருந்து 6.7 மீ கீழே இருக்கின்றது. வேளாண்மைக்குரிய வளமான நிலங்களும், மிகப்பெரிய நகரங்களும் இப்பகுதியில் தான் அமைந்துள்ளன. மணற் சமவெளிகள் பல இடங்களில் கடல்மட்டத்திலிருந்து 30 மீ. உயரத்தில் அமைந்துள்ளன. இது வறண்ட நிலமாகையால் நல்ல நீர்ப்பாசனம், உரமிடுதல் ஆகியவற்றின் விளைவாக வேளாண்மை செய்யப்படுகிறது. இதில் பெரும்பகுதி பைன் (Pine) மரக்காடுகளாகும். தெற்கு மேட்டு நிலம் இந்நாட்டின் மிக உயர்ந்த பகுதியாகும். மிக உயரமான வால்சர் பெர்க்கு (Vaalser Berg) மாசுடி ரிக்டு (Maastricht) என்னுமிடத்தின் அருகில் 322 மீ. உயரத்தில் உள்ளது. மிக வளமான இப்பகுதியில் பழத் தோட்டங்கள் உள்ளன.

ஐரோப்பாவின் மிகப் பெரிய ஆறான இரைன் (Rhine) இறுதியில் நெதர்லாந்து வழியாகச் சென்று கடலில் கலக்கின்றது. இதனுடைய துணை ஆறுகள் விரல்களைப் போல் இங்குப் பரவியுள்ளன. இந்நாட் டில் பாயும் மற்றும் இரு முக்கிய ஆறுகள் மியூசு (Meuse), சுகெல்ட்டு(Scheldt) என்பன.

**பரப்பளவு:** இதன் பரப்பளவு 41,548ச.கி.மீ. இதில் உள்நாட்டிலுள்ள நீர்ப்பகுதியான 3,043 ச.கி.மீ. இல் அடங்கும்.

**எல்லைகள்:** வடமேற்கு ஐரோப்பாவிலுள்ள இந் நாட்டின் கிழக்கில் செருமானியக் கூட்டுக் குடியரசும், தெற்கில் பெல்சியமும், மேற்கிலும் வடக்கிலும் வட கடலும் எல்லைகளாக உள்ளன.

**மக்கள் தொகை:** இந்நாட்டு மக்கள் தொகை 1985 சனவரி 1-இல் 14,453,833.

**மக்கள்:** செருமானிய இனத்தைச் சேர்ந்த இம் மக்கள் ஐரோப்பாவிலேயேநீண்ட வாழ்நாளை உடை

யவர்கள். மனஉறுதியும் விடாமுயற்சியும் நிறைந்த இவர்கள் தங்களுடைய நாட்டைக் காக்கத் தொடர்ந்து கடலுடன் போராடிக்கொண்டிருக்கின்றனர். இவர்கள் விருந்தோம்பலுக்குப் பெயர் பெற்றவர்கள்.

**மொழி:** செருமானிய மொழியிலிருந்து கிளைத்த இவர்களுடைய மொழியான தச்சு (Dutch) இந்தோ-ஐரோப்பிய மொழியினத்தைச் சேர்ந்தது. இதில் ஆங்கிலம், செருமனி, பிரெஞ்சு ஆகிய மொழிகளின் செல்வாக்கைக் காணலாம். இங்குள்ள மக்கள் தச்சு மொழியுடன் செருமனி அல்லது ஆங்கில மொழியையும் அறிந்துள்ளனர். பிரிசியன் (Prisian) இம் மாநிலத்தின் அரசு மொழியாகும்.

**சமயம்:** இம்மக்களுள் 40 விழுக்காட்டினர் சீர்திருத்தக் கிறித்தவப் பிரிவையும், 40 விழுக்காட்டினர் கத்தோலிக்கச் சமயத்தையும் பின்பற்றுகின்றனர். சீர்திருத்தக் கிறித்தவர்களுள் 75 விழுக்காட்டினர் தச்சுச் சீர்திருத்தத்திருச்சபையைப்(Dutch Reformed Church) பின்பற்றுகின்றனர். அரச குடும்பத்தினர் இத்திருச் சபையைச் சேர்ந்தவர்களே. மீதமுள்ளவர்களுள் 17 விழுக்காட்டினர் எந்தத் திருச்சபையிலும் சேரவில்லை. மூன்று விழுக்காட்டினர் யூதர்களும் பிற சமயத்தவரும் ஆவர்.

**பொருளாதாரம்:** இம்மக்களின் பொருளாதாரம் மிக உயர்ந்த நிலையில் உள்ளது. இந்நாட்டில் கனிமங்கள் இல்லையென்றாலும் இவர்கள் தங்களுக்குத் தேவையான கச்சாப்பொருள்களைப் பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து, பொருள்களை உற்பத்தி செய்து, ஏற்றுமதி செய்கின்றனர்.

**வேளாண்மை:** மக்கள் நெருக்கம் காரணமாக விளைநிலங்கள் மிகக் குறைவாகையால் அவற்றைப் பெரும் அளவிற்குப் பயன்படுத்துகின்றனர். இவர்கள் அதிக உரங்களை இட்டும், நவீன இயந்திரங்களைப் பயன்படுத்தியும் மிக அதிகமான விளைச்சலைப் பெறுகின்றனர். இங்கு விளைவிக்கப்படும் முக்கிய பொருள்கள் கோதுமை, பார்லி, ஓட்சு, கூம்பு, தர்னிப்பு, கேரட்டு, பட்டாணி, உருளைக்கிழங்கு, தக்காளி, முட்டைக்கோசு, வெங்காயம் முதலியன. பழத் தோட்டங்களில் ஆப்பிள், பியர், பிளம் ஆகியவை பயிரிடப்படுகின்றன. இங்குப் பலவகையான மலர்கள் பெருமளவில் பயிர்செய்யப்பட்டு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

கால்நடை வளர்ப்பது இம்மக்களின் முக்கிய தொழில். இங்குள்ள கால்நடைகள் உலகிலேயே மிகுந்த பாலைக் கொடுக்கின்றன. எனவே, பாலாடைக் கட்டி ஏற்றுமதியில் இது முதலிடம் பெறுகிறது. பால், பாலாடைக்கட்டி, வெண்ணெய் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. முட்டை உற்பத்தியும் இந்நாட்டில் அதிகமாகையால் அதன் ஏற்றுமதியில் இந்நாடு முதலிடத்தில் உள்ளது. இங்கு 8 விழுக்காடு நிலப்பகுதியில் காடுகள் உள்ளன. அவற்றில் பீச்சு, ஓக்கு, பைன் ஆகிய மரங்கள் வளர்கின்றன.

**கனிமங்கள்:** இந்நாட்டில் உப்பும் இயற்கை வாயுவும் அதிகம் கிடைக்கின்றன. உலகிலேயே அதிகமான இயற்கைவாயு இந்நாட்டில் உள்ளது. சிறிதளவு நிலக்கரியும் பெட்ரோலியமும் கிடைக்கின்றன. அண்மையில் இங்கு விண்மம்(Uranium) கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. பீங்கான் பொருள்கள் செய்வதற்கு ஏற்ற களிமண் இங்கு இருக்கின்றது.

**தொழிற்சாலைகள்:** இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் இந்நாட்டில் தொழிற்சாலைகள் வேகமாக வளர்ந்தன. இங்கு அரசும், முதலாளிகள், தொழிலாளர்கள் ஆகியோரின் சங்கங்களும் இணைந்து செயற்படுவதால் வேலைநிறுத்தம் என்பதே கிடையாது. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் இரும்புத்தாதுவைக் கொண்டு இரும்பும் எஃகும் தயாரிக்கப்படுகின்றன. ஆம்சுடர்டாமிலும் உரோட்டர்டாமிலும் பெரிய கப்பல் கட்டும் தொழிற்சாலைகள் உள்ளன. உலகிலேயே பெரிய மின்னியல் தொழிற்சாலை எண்ட்கோவனில் (Eindhoven) உள்ளது. இந்நாட்டில் பீட்சர்க்கரை, சாக்லேட்டு, பதப்படுத்தப்பட்ட புலால், கால்நடைகளுக்கான தீவனம் ஆகியவை தயாரிக்கப்படுகின்றன. மேலும், மருந்துகள், உரம், வண்ணங்கள், நெகிழி, செயற்கை இரப்பர் ஆகியவற்றைத் தயாரிக்கும் நிலையங்கள் உள்ளன. இந்நாட்டில் பருத்தி, கம்பளம், செயற்கை இழைகள் ஆகியவற்றைக் கொண்டு துணிகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆம்சுடர்டாம் வைரங்களை வெட்டி, பட்டை தீட்டும் தொழிலுக்கு உலகில் பெயர் பெற்றது. மேலும் இந்நாட்டில் செங்கல், சிமெண்டு, கண்ணாடிப் பொருள்கள், தோல் பொருள்கள். காகிதம், மட்பாண்டங்கள், இரப்பர் பொருட்கள், புகையிலைப் பொருள்கள் ஆகியவையும் தயாரிக்கப்படுகின்றன.

**போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்:** இந்நாட்டில் 1984-இல் 53,848 கி.மீ. நீளத்திற்குச் சாலைகள் இருந்ததில் 1819 கி.மீ. நெடுஞ்சாலைகளாகும். 1984-இல் 3200 கி.மீ. நீளத்திற்கு இருப்புப்பாதை இருந்தது. இங்கிருந்து பிறநாடுகளுக்கு வானூர்திப் போக்குவரத்தும் உண்டு.

உள்நாட்டுக் கப்பல் போக்குவரத்திற்கு ஆறுகளும் கால்வாய்களும் 4385 கி.மீ. நீளத்திற்குப் பயன்

படுகின்றன. இந்நாட்டுக் கப்பல்கள் வெளிநாட்டு வாணிகத்தில் மிகவும் ஈடுபட்டுள்ளன.

**கல்வி**: இந்நாட்டில் சமயப் புரட்சி கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் தொடங்கியதிலிருந்து கல்வியானது சிறந்து விளங்கலாயிற்று. இங்குக்கல்வி அறிவு அற்றோர் மிகக் குறைவானவர். இந்நாட்டில் 6 வயது முதல் 15 வயது வரை கட்டாயக் கல்வி அளிக்கப்படுகிறது. இளஞ்சிறார்களுக்குத் தனிப் பள்ளிகள் உள்ளன. தொடக்கப் பள்ளிகளில் அவர்கள் 6 ஆண்டுகள் படிக்க வேண்டும். உயர்நிலைப் பள்ளிகளில் செருமன், ஆங்கிலம், பிரெஞ்சு-ஆகிய மூன்று மொழிகளும் கட்டாயமாகக் கற்பிக்கப்படுகின்றன. இந்நாட்டில் 12 பல்கலைக் கழகங்கள் உள்ளன. அவற்றுள் சில மிகப் பழமையானவை.

**முக்கிய நகரங்கள்: ஆம்சுடர்டாம்:** வடக்கு ஆலந்து மாநிலத்திலுள்ள ஆம்சுடர்டாம் (Amsterdam) நெதர்லாந்தின் தலைநகரும், சிறந்த துறை முகமும், இந்நாட்டின் முக்கிய வாணிக, பொருளாதார, பண்பாட்டு மையமுமாகும். இது 'வட திசையின் வெனிசு' (The Venice of the North) எனக் குறிப்பிடப்படுகிறது. இந்நகரில் பல அழகிய பூங்காக்கள், தேசிய, நகர அரும்பொருட்காட்சியகங்கள் ஆகியவை உள்ளன.. உலகிலேயே மிகப் பெரிய விமான நிலையம் இங்கு உள்ளது. வைரங்கள் தயாரிப்பதில் இது உலகச் சிறப்பு வாய்ந்தது. இதன் மக்கள்தொகை 675,579 (1985).

**திஏகு**: தெற்கு ஆலந்து மாநிலத்தின் தலைநகரான தி ஏகு (The Hague) இந்நாட்டின் அரசியல் தலைமையிடமாகும். இந்நாட்டின் மூன்றாம் பெரிய நகரமான இதில் இந்நாட்டுப் பாராளுமன்றம் உள்ளது. பன்னாட்டு வாணிக நிலையங்கள் பலவற்றின் தலைமையிடமாகவும் இது உள்ளது. இங்கு1921-இலிருந்து பன்னாட்டுக் கழகத்தின் நடுவர் தீர்ப்பு நீதிமன்றம் (Permanent Court of Arbitration) இயங்கி வந்தது. 1945 – இலிருந்து ஐ.நா.வின் பன்னாட்டு நீதிமன்றம் இங்கு உள்ளது.

**உரோட்டர்டாம்**: இந்நாட்டின் முக்கிய துறைமுகப் பட்டினம் உரோட்டர்டாம் (Rotterdam). இரைன் ஆற்றங்கரையில் உள்ள இது ஐரோப்பிய நாடுகளின் ஏற்றுமதி, இறக்குமதி வணிகத்திற்குப் பயன்படுவதால் 'ஐரோப்பாவின் நுழைவாயில்' (Gateway to Europe) என்று கூறப்படுகிறது.

**அரசு: அரசர்**: இந்நாடு அரசியல் அமைப்புக்குட்பட்ட பரம்பரையான அரசர் அல்லது அரசியின் ஆட்சிக்குட்பட்டது. ஆனால், அவர்கள் முடிசூட்டிக் கொள்வதில்லை. இது கி.பி. 1814-இல் பிறப்பிக்கப்பட்ட அரசியலமைப்பின்படி, பின்னர்ச் செய்யப்பட்ட பல மாற்றங்களுக்கிணங்க, ஆட்சி செய்யப்படுகின்றது.

**பாராளுமன்றம்:** இந்நாட்டுப் பாராளுமன்றம் (States General) முதல் அவை இரண்டாம் அவை எனப்படும். இருஅவைகளை உடைய அவை முறையே முதல் அவை (First Chamber) அல்லது மேல்சபை, இரண்டாம் அவை (Second Chamber) அல்லது கீழ் சபை ஆகும். இந்நாடு 12 மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவர்களைப் பொது மக்கள் 4ஆண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுப்பர். இவை பாராளுமன்ற முதலவைக்கான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதுடன்,அம்மாநிலத்திற்கான சட்டங்களையும்இயற்றுகின்றன.

**தல ஆட்சி:** நிருவாகத்தின் பொருட்டு நாடு 720 நகராண்மைக் கழகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மக்களால் 4 ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள், அரசரால் நியமிக்கப்பட்ட மேயர் (Burgo master or Burgemeester)தலைமையில் நிருவாகத்தை நடத்துகின்றனர்.

**வரலாறு:** இந்நாட்டின் வரலாறு, கி.மு. 58-இல் சூலியசு சீசர் (Julius Caesar) நெதர்லாந்து, பெல்சியம், இலக்சம்பர்க்கு ஆகியவற்றை வென்று அடிமைப்படுத்தியதிலிருந்து தொடங்குகிறது. உரோமானியர் ஆட்சியில் 250 ஆண்டுகள் இந்நாட்டில் அமைதி நிலவி, பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டது. உரோமானியரின் ஆதிக்கம் கி.பி. 300-இல் குன்றலாயிற்று. இந்நாட்டின் மீது செருமானியக் குடும்பினர் பலர் படையெடுத்து வந்தனர். வடக்கில் பிரிசியன்களும்(Frisians) கிழக்கில் சாக்சன்களும் (Saxons), மேற்கிலும் தெற்கிலும் பிராங்குகளும் (Franks) குடியேறினர்.

**இடைக்காலத்தில்:** பின்னர் இப்பகுதியில் பிராங்குகளின் ஆதிக்கம் ஏற்பட்டு கி.பி. 800-இல் சார்லமேனின் (Charlemagne) பேரரசின் ஒரு பகுதியாக இதுஆயிற்று. வைகிங்குகள் கி.பி.9,10-ஆம் நூற்றாண்டுகளில் இதன்மீது படையெடுத்ததால் இங்குப் பிரான்சு, செருமெனி ஆகிய நாடுகளின் ஆதிக்கம் ஏற்பட்டது. பின்னர்ப் பிரான்சுக்குச் சொந்தமான பர்கண்டியின் கோமகன்கள் (Dukes of Burgundy) இங்கு ஆதிக்கம் செலுத்தினர். அவர்கள் நடுவண் அரசை ஏற்படுத்தி அரசியல் ஐக்கியத்தைத் தோற்றுவித்தனர். பர்கண்டியின் கோமகன் ஐந்தாம் சார்லசு (Duke Charles of Burgundy) இசுபெயின் அரசராக ஆனதும் இந்நாடு இசுபெயினின் ஆதிக்கத்தின் கீழ்ச் சென்றது. அவர் கி.பி. 1519-இல் புனித உரோமப் பேரரசராக ஆனதும் இதன் ஆட்சியை

வலிமை பெறச் செய்தார். பின்னர் அவருடைய குமாரர் இரண்டாம் பிலிப்பு இசுபானிய அரசராகி கி.பி. 1555-இல் நெதர்லாந்தையும் பெற்றார். கி.பி. 1581 சூலை 26 - இல் இது விடுதலை அடைந்ததாக அறிவிக்கப்பட்டது. இறுதியில் முன்சுடர் உடன்படிக்கையின்படி (The Treaty of Munster) இசுபெயின் நெதர்லாந்தின் விடுதலையை ஏற்றுக் கொண்டது.

**பொற்காலம்:** நெதர்லாந்து கி.பி.17-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட வாணிக வளர்ச்சியால் ஐரோப்பாவிலேயே கடல் வலிமைமிக்க நாடாக மாறியது. அக்காலத்தில் செல்வச் செழிப்பின் காரணமாக அந்நாட்டில் கலைகள் பெரிதும் வளர்ச்சியடைந்தன. தச்சுக்காரர்கள் பல கடற் பயணங்களை மேற்கொண்டு ஆப்பிரிக்கா, தென்கிழக்கு ஆசியா, அமெரிக்கா ஆகிய நாடுகளில் குடியேற்றங்களை ஏற்படுத்தினர். தச்சுக் கிழக்கிந்தியக் குழுமம் கி.பி. 1602-இல் ஏற்படுத்தப்பட்டு, இந்தோனேசியாவின் தலைநகரான சாகர்த்தாவைத் தலைமையிடமாகக் கொண்டு இயங்கலாயிற்று. அந்நகருக்குப்பட்டேவியா எனப் பெயரிட்டனர். ஆப்பிரிக்காவின் தென்கோடி முனையிலும் ஒரு குடியேற்றத்தை ஏற்படுத்தினர். தச்சு மேற்கு இந்தியக் குழுமம் கி.பி. 1621-இல் தொடங்கப் பெற்று கி.பி.1624-இல் நியூயார்க்கு, நியூசெர்சி (New Jersey), கனக்டிகட்டு (Connecticut), தலவரா (Delaware) ஆகியவிடங்களில் குடியேற்றங்களை ஏற்படுத்தி அவற்றிற்குப் 'புதிய நெதர்லாந்து' எனப் பெயரிட்டது.

வாணிகப் போட்டியின் காரணமாக இந்நாடு இங்கிலாந்துடனும் பிரான்சுடனும் போர் புரிய வேண்டிய நிலை ஏற்பட்டது. இங்கிலாந்திற்கு எதிராக கி.பி. 1652 முதல் கி.பி. 1674 வரை போர் செய்து, வெற்றி பெற்று, அமைதி உடன்படிக்கை ஒன்றைச் செய்து கொண்டது. பின்னர்ப் பிரான்சும், இங்கிலாந்தும் சேர்ந்து நெதர்லாந்தின் மீது படையெடுத்தன. மூன்றாம் வில்லியம் (William III,Prince of Orange) கடல் அணைகளை உடைத்துவிட்டு நாட்டை எதிரிகளிடமிருந்து காப்பாற்றினார். அவர் இங்கிலாந்தின் மன்னராக ஆனதும் பிரான்சைத் தோற்கடித்தார். இந்நாடு பிரான்சுடன் கி.பி. 1688 முதல் கி.பி. 1713 வரை போரிட்டதால் தன் வலிமையை இழந்தது. இங்கிலாந்து கடல்வலிமை மிக்க நாடாக ஆயிற்று.

**பிரான்சு ஆதிக்கம்:** முதலாம் நெப்போலியன் கி.பி. 1795 - இல் நெதர்லாந்து மீது படையெடுத்து, அதனைக் கைப்பற்றி, பட்டாவியன் குடியரசை (Battavian Republic) நிறுவினார். பின்னர் கி.பி. 1806-இல் அதற்கு ஆலந்து அரசு (Kingdom of Holland) எனப் பெயரிடப்பட்டது. தச்சுக்காரர்கள் பிரான்சுக்கு எதிராகப் போராடி 1813 - இல் பிரான்சுப் படையை விரட்டியடித்தனர். நெப்போலியனின் வீழ்ச்சிக்குப் பின்னர் கி.பி.1815-இல் ஏற்பட்ட வியன்னா உடன்படிக்கையின்படி நெதர்லாந்தும் பெல்சியமும் இணைக்கப்பட்டன. இதனை விரும்பாத பெல்சிய மக்கள் விடுதலைப்போரைத் தொடங்கி கி.பி.1830-இல் விடுதலை பெற்றனர்.

**இரு உலகப் போர்களில்:** நெதர்லாந்தின் பொருளாதாரம் கி.பி.1880-இலிருந்து கி.பி.1914 வரை மிக வேகமாக வளர்ச்சியடைந்தது. முதல் உலகப் போரில் இதன் பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்பட்டது. இரண்டாம் உலகப் போர் தொடங்கியபொழுது இந்நாடு நடுநிலை வகிப்பதாக அறிவித்தது. இருப்பினும் 1940 - இல் செருமனி இதன் மீது படையெடுத்தது. நான்கு நாள்களுக்குப் பின்னர் அது உரோட்டர்டாமின் மீது குண்டுவீசி, அதன் பெரும்பகுதியை அழித்தது. செருமானியரின் ஆட்சியில் 1940-இலிருந்து 1945 வரை இம்மக்கள் மிகவும் அல்லற்பட்டனர். மார்சல் திட்டத்திலும், பல்வேறு ஐரோப்பியப்படை, பொருளாதாரக் கூட்டுகளிலும் இந்நாடு சேர்ந்து விரைவாகப் பொருளாதார முன்னேற்றம் பெற்றது.

**இன்றைய நிலை:** இரண்டாம் உலகப் போர் முடிந்த பின்னர் இந்நாட்டில் அரசு, தொழிலதிபர்கள், தொழிலாளர்கள் ஆகியோரின் சங்கங்கள், அரசியல் கட்சிகள் ஆகியவை இணைந்து பொருளாதார முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டன. கூலியையும், பொருள்களின் விலையையும் கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர். பொருள்நிலை 1960-இல் நன்கு வளர்ச்சியடைந்த பின்னர், முன்னேறிய ஐரோப்பிய நாடுகளைப் போல் கூலியும் விலைகளும் உயர்த்தப்பட்டன. எனவே, இன்று இந்நாட்டு மக்கள் மிக உயர்ந்த வாழ்க்கைத் தரத்தைப் பெற்றுள்ளனர்.

சி.இரெ.

*நெப்பிராசுகா*: அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வடக்கு மத்திய மாநிலங்களுள் ஒன்று நெப்பிராசுகா (Nebraska). வேளாண்மையில் சிறந்த இம் மாநிலத்தின் தலைநகர் இலிங்கன் (Lincoln). இப் பெயரானது இந்தியச் சொல்லான 'நெப்பிராதகு' (Nebrathak) அதாவது தட்டையான அல்லது அகன்ற ஆறு என்பதிலிருந்து பெறப்பட்டது. இம் மாநிலத்தில் ஓடும் பிளாட்டு (Platte)ஆற்றின் காரணமாகவே இம்மாநிலம் இப்பெயர் பெற்றது.

**புவியியல் அமைப்பு:** இங்குக் கோடை மிகவும் வெப்பமாகவும், குளிர்காலம் மிகக் குளிராகவும் உள்ளன. தட்பவெப்ப நிலை திடீரென மிக அதிக வேறு

பாட்டுடன் மாறும். ஆண்டுச்சராசரி மழை, கிழக்கில் 69.செ.மீ. மேற்கில் 46செ.மீ. ஆகும். இதன் பரப்பளவு 200,349 சதுர கி.மீ. ஆக உள்ளது.

**எல்லைகள்**: வடக்கில் தெற்குத் தகோடாவும் (South Dakota), வடகிழக்கில் மிசோரி ஆறும், கிழக்கில் அயோவாவும் (Iowa), மிசோரியும், தெற்கில் கான்சாசும், தென்மேற்கில் கொலொராடோவும் (Colorado), மேற்கில் வியோமிங்கும் (Wyoming) இதன் எல்லைகளாக உள்ளன. இம்மாநில மக்கள் தொகை 1 569,825 (1980) ஆகும்.

**மக்கள்**: இங்குள்ள மக்களுள் 94.9 விழுக்காட்டினர் வெள்ளையர்; 3.1. விழுக்காட்டினர் கறுப்பர். அமெரிக்க இந்தியர் 9147, வியட்நாமியர் வழிவந்தோர் 1432, சப்பானியர் வழிவந்தோர் 1378, சீனர் வழிவந்தோர் 1106.

**சமயம்**: இங்குத் தனிப் பெரும் சமயமாக உரோமன் கத்தோலிக்க சமயம் உள்ளது.

**பொருளாதாரம்: வேளாண்மை**: இங்குச் சாகுபடி செய்யப்படும் 19 மிலியன் எக்டேர் நிலப்பரப்பில் 2.8 மிலியன் எக்டேருக்கே நீர்ப்பாசன வசதி உள்ளது. கோதுமை, சோளம், சோயாபீன்சு, பீட் கிழங்கு ஆகியவை விளைவிக்கப்படுகின்றன. இங்கு 40,000 எக்டேர் நிலப்பரப்பில் கால்நடைகள் வளர்க்கப்படுகின்றன. இது மாட்டு இறைச்சி உற்பத்திக்குப் பெயர் பெற்றது.

**கனிமங்கள்**: மணல், களி மண், கற்கள், பெட்ரோலியம், இயற்கை வாயு, சிப்சம் (Gypsum) ஆகியவை இங்குக் கிடைக்கின்றன.

**உற்பத்தி**: இங்கு உணவுப் பொருள்கள் தயாரிப்பது முக்கிய தொழிலாகும். இயந்திரங்கள், மின், மின்னியல் கருவிகள், வேதியியல் பொருள்கள், உலோகங்கள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன.

**போக்குவரத்து**: இங்கு 1984-இல் 15,923 கி.மீ. நெடுஞ்சாலைகளும், 137,563 கி.மீ. மாநிலச் சாலைகளும், 11,496 கி.மீ. இருப்புப் பாதைகளும் இருந்தன. விமானப் போக்குவரத்தும் இங்குள்ளது.

**கல்வி**: இங்கு 7 வயது முதல் 16 வயது வரையுள்ள சிறுவர்களுக்குக் கட்டாயக் கல்வி அளிக்கப்படுகிறது. இங்கு 1980-ஆம் ஆண்டுகளில் இருந்த 1697 பொது தொடக்க, உயர்நிலைப் பள்ளிகளில் தொடக்கக் கல்வி 1,89,000 பேரும், உயர்நிலைப் பள்ளிக் கல்வி 91,400 பேரும் பெற்றனர். தனிப்பட்டவரின் பள்ளிகளில் 39,700 பேர் பயின்றனர். அப்பொழுது 39உயர் கல்வி நிலையங்களில் 89,500 மாணவர் படித்தனர்.

**நகரங்கள்**: ஓமகா (Omaha), இலிங்கன் (Lincoln) பெரிய தீவு (Grand Island), வடக்குப் பிளேட்டு (North Platte), பிரிமாண்டு (Fremont), ஏசுடிங்குசு (Hastings), நார்போக்கு (Norfolk) ஆகியவை இங்குள்ள முக்கிய நகரங்களாகும்.

**அரசு**: இம் மாநில அரசு கி.பி.1875-ஆம் ஆண்டு அரசியலமைப்பின்படி செயற்படுகிறது. அது 184 முறை திருத்தப்பட்டுள்ளது. ஐக்கிய அமெரிக்க நாடுகளில் இது ஒன்றுதான் ஒரே அவையைக் கொண்டுள்ளது. தல நிருவாகத்தின் பொருட்டு இம் மாநிலம் 93 மாவட்டங்களாகவும், 540 நகராண்மைக் கழகங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. நகர நிருவாகத்தை நகரத் தந்தையும் அவரது அவையினரும் நடத்துகின்றனர்.

**வரலாறு**: தொடக்கக்காலத்தில் இங்குப் பல் வேறு குடும்பங்களைச் சேர்ந்த செவ்விந்தியர் வாழ்ந்து வந்தனர். இசுபானியரும், பிரெஞ்சுக்காரரும் இப்பகுதியைக் கண்டறிவதில் போட்டியிட்டனர். முதலில் பிரான்சு, இப்பகுதியின்மீது உரிமை கொண்டாடியது. அதுகி.பி.1763-இல் இதனை இசுபெயினுக்குஅளித்தது. பிரான்சு மீண்டும் இதை 38 ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி.1801-இல்பெற்றது. ஆனால், நெப்போலியன் கி.பி.1803-இல் இதை அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு விற்றுவிட்டார். பின்னர் அமெரிக்கர்கள் இப்பகுதியை ஆராய்ந்து குடியேறலாயினர். மேற்கு நோக்கி நகர்வதற்கு கி.பி.1854-இல் இது ஒரு நெடுஞ்சாலையாக இருந்தது. கான்சாசு-நெப்பிராசுகாசட்டம் கி.பி.1854-இல் இயற்றப்பட்டதும் மக்கள்பெருமளவில் குடியேறினர். இது கி.பி.1854 மே 30-இல் ஒரு மாநிலமாக (Territory)ஆயிற்று. இது1867, மார்ச்சு 1-இல் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் 37-ஆம் மாநிலமாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டது. இங்கு1900-ஆம் ஆண்டுக்குப்பிறகு மக்கள்தொகை அதிகரித்தது. முதல் உலகப் போர் முடிந்துஏற்பட்டபொருளாதார மந்தத்தால் பொருள்களின் விலை குறைந்ததால் மக்கள் வெளியேறலாயினர். இரண்டாம் உலகப்போர் தோன்றியதும் வேளாண்மைப் பொருள்களுக்கு நல்ல விலை கிடைத்ததால் இம் மாநிலத்தின் வளம் பெருகியது. பின்னர்ப் பல தொழிற்சாலைகளும் ஏற்பட்டன. சி.இரெ.

**நெப்போலியன், முதலாம் (கி.பி.1769-1821)**: பிரான்சு நாட்டில் ஒரு பேரரசனாகப் புகழ்க் கொடி நாட்டி மறைந்த நெப்போலியன், மத்திய தரைக் கடலில் உள்ள கார்சிகா தீவின் போன பார்ட்டுக் குடும்பத்தைச் சேர்ந்தவன் (காண்க:போன பார்ட்டுக் குடும்பம்). கார்லோ போனபார்ட்டுக்கும் (Carlo Bonaparte) இலெடிசியா உராமோலினோ (Letız a Ramolino) போனபார்ட்டுக்கும் மகனாக கி.பி.1769-ஆம் ஆண்டு ஆகசுட்டு பதினைந்தாம்நாள் கார்சிகாவில் உள்ள அசாசியோ (Ajaccio) என்னும்

ஊரில் பிறந்த நெப்போலியனுக்குத்தொடக்கக்காலம் முதல் நல்வாய்ப்புக்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து குவிந்தன. முதலாவதாகச்செனோவா (Genoa) அரசுக் குக் கட்டுப்பட்டிருந்த கார்சிகா, நெப்போலியன் பிறந்ததற்கு முந்திய ஆண்டு தான் பிரான்சுத் தீவா கியது. ஆதலால், நெப்போலியன் பிரான்சுக் குடிமக னாக முடிந்தது. பிரான்சில், பிரெய்ன் (Brienne) என்னுமிடத்தில் சிறப்புற்று விளங்கிய இராணுவப் பள்ளி, நெப்போலியனுக்குத் தொடக்கக்காலஇராணு வப் பயிற்சியைத் தந்தது. பிரான்சின் மன்னன் பதி னாறாம் உலூயி அளித்த உதவித்தொகைதான், ஏழை நெப்போலியனின் இராணுவப் பயிற்சிக்கு ஆதாரமாக இருந்தது.



நெப்போலியன் (முதலாம்)

இளமையிலேயே உரூசோவின் (Rousseau) கருத் துகள் நெப்போலியனின் உள்ளத்தைக் கவர்ந்தன. எத்தகைய சூழ்நிலையிலும் முன்னணிக்கு வரக்கூடிய திறமையும், எடுத்த முயற்சியை இறுதிவரை கடைப் பிடிக்கும் உறுதியும், பொறுப்புகளை ஏற்றுக்கொள் ளும் ஆற்றலும் அவரிடம் இருந்ததால் படைத் துறையில் கீழ்நிலையிலிருந்து உயர முடிந்தது. பிரான்சுப்புரட்சி கி.பி. 1789-இல் ஏற்பட்ட பொழுது நெப்போலியன் அதை வரவேற்றார். கி.பி.1795முதல் 1799 வரை பிரான்சில் ஏற்பட்டிருந்த புரட்சிக்கால அரசு, பல உள்நாட்டு, வெளிநாட்டுச் சிக்கல்களைச் சமாளிக்க முடியாமல் தவித்தது. (காண்க: பிரான்சுப் புரட்சி). அச் சூழ்நிலையைப் படைத் தலைமை பெற் றிருந்த நெப்போலியன், தம் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்திக் கொண்டார்.

வரம்புமீறி மக்கட் கூட்டத்தினர் கலகம் செய்த காலங்களில் அவற்றை அடக்கித் தம்முடைய திறமையை அரசியலாருக்கு உணர்த்தி, அவர்தம் ஆதரவைப் பெற்ற நெப்போலியன், கி.பி. 1796-இல் ஆசுத்திரியாவுக்குச் சொந்தமான இத்தாலியப் பகுதி களை எதிர்த்துப் படையெடுக்குமாறு அனுப்பப்பெற் றார். இவர் தம் சொல்வன்மை, வீரம், அரச தந்திரம், புதிய போர் முறைகள் முதலியவற்றால் வியக்கத்தக்க வகையில் சென்றவிடங்களில் எல்லாம் வெற்றிகள் பெற்றுப் பிரான்சு மக்களின் உள்ளத்தில் உறுதியான இடத்தைப் பெற்றுவிட்டார். ஆசுத் திரியா இவருக்கு அடிபணிந்தது.

வடஇத்தாலியில் பிரான்சு ஆதிக்கத்தை ஏற் படுத்தியபின் நெப்போலியன், ஆங்கிலேயரின் உயிர் நாடியான கீழ்நாட்டு வாணிகத்தை அழிக்கும் நோக்கத்துடன் எகிப்தில் படையெடுத்தார். ஆனால், எகிப்தில் நெப்போலியனின் படையை ஆங்கிலேயக் கப்பற்படைத் தலைவன் நெல்சன், கி.பி. 1798-இல் நைல்நதிப் போரில் முறியடித்தார். (காண்க: நெல் சன். (தனிக் கட்டுரை.) அதன் விளைவாக நெப் போலியன் கிழக்கு நாடுகளில் ஆதிக்கம் பெற முற் பட்டது பயனற்றதாகியது.

**பேரரசனாக அமர்தல்**: இதற்கிடையில பிரான்சில், அரசியல் குழப்பம் மேலிட்டு வந்ததால் நெப்போலி யன் தாயகம் திரும்பி அங்கு இருந்த அரசியலைக் கவிழ்த்துவிட்டு கி.பி. 1799 நவம்பர் 9-ஆம்நாள்தம்மை முதல் 'தலைவராகக்' (Consul) கொண்ட புதிய அர சாங்கம் ஒன்றை நிறுவினார். உண்மையிலேயே நெப் போலியன் சருவாதிகாரியாக விளங்கினார். நீண்ட காலத் துயரங்களில் அயர்வுற்றிருந்த பிரான்சு மக்கள் நெப்போலியனிடம் கொண்டிருந்த நம்பிக்கை யின் காரணமாக, இவரது திறமையைப் பாராட்டி 10 ஆண்டுக் காலத்துக்கு நிருணயிக்கப்பட்ட கான் சல் பதவியை மாற்றி, ஆயுட்காலம் முழுவதும் ஆளும் பேரரசனாக அமர வாகளித்தனர். முடி வேந்தர்களையெல்லாம் எதிர்த்துப் போராடிய பிரான்சு, முடியாட்சியை உதறித் தள்ளி ஒருவருக்கு மடங்காமல் துள்ளிக் குதித்த அந்நாடு, மீண்டும் தனிக் கோலாட்சியின் கீழ்ப்பட்டது. நெப்போலியன் சூலியசு சீசரையும், சார்லமேனையும் போல் சரு வாதிகாரியாக முற்பட்டார்.

**சீர்திருத்தங்கள்**: கி.பி. 1799 முதல் 1815 வரை ஐரோப்பாவின் வரலாறு நெப்போலியனின் வரலாறு என்றே கருதப்படலாம். உள் நாட்டில் குழப்பத்தை முடிவுறச் செய்து, ஒழுங்கான, பொருளாதார, சமூக அமைப்பை நெப்போலியன் தோற்றுவித்தார். பிரான்சு, 83 மண்டலங்களாகவும் ஒவ்வொரு மண்ட லமும் பல மாவட்டங்களாகவும் ஒவ்வொரு மாவட்ட மும் பல நகரங்களாகவும் புதிய முறையில் பிரிக்கப் பட்டன நிலையான அரசியலமைப்பை எங்கும் நிறுவி

னார். அரசியலமைப்பில் தந்திரமான முறையில் குறிப்பிடத்தக்க மாறுதல்களைப் புகுத்தினார். இவற்றின் விளைவாக அரசியல் அதிகாரங்கள் யாவும் தம்மிடமே இருக்குமாறு செய்து கொண்டார். புதிய சட்டங்களைத் தொகுக்கச் செய்தார். நெப்போலியனின் கல்வித் துறைச் சீர்திருத்தங்கள் நிலையான பயனை அளித்தன. நெப்போலியனின் சீர்திருத்தங்களால் பிரான்சு மட்டுமன்றி ஐரோப்பிய நாடுகள் பலவும் பயனடைந்தன. உள்நாட்டு அமைப்பில் இவருடைய புதிய சட்டங்கள் நீடித்த நன்மையை அளித்தன. மக்களின் உரிமை ஏற்றுக்கொள்ளப் படாத போதிலும், ஒப்புணர்ச்சி, உடன்பிறந்தாருணர்ச்சி, சமயப் பொறை முதலிய கருத்துகளை இவர் போற்றினார். ஆனால், இவர் பிரான்சுக்கு அளித்த உள்நாட்டுச் செழிப்பு, இவருடைய 'வெளிநாட்டுக்கொள்கையின் விளைவுகளால் அழிவுறலாயிற்று. மேலும் மேலும் போரில் வெற்றிகளடைந்து தமது புகழை ஓங்கச் செய்ய வேண்டுமென்பதே இவர் குறிக்கோளாகும். அமைதியை இவர் மனம் நாடவில்லை. மக்களின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்திச் சருவாதிகாரம் செலுத்துவதென்பது கி.பி. 19 – ஆம் நூற்றாண்டில் எளிதான செயலன்று. ஆதலால், நெப்போலியன், மக்கள் கருத்தைப் போரிலும் வெற்றியினால் ஏற்படும் புகழிலும் திருப்பி, தமது தனிக்கோலை வலியுறுத்த விரும்பினார். போர் இல்லாமல் இவரால் வாழ முடியவில்லை. (காண்க:நெப்போலியப்போர்).

பிரிட்டன், நெப்போலியனால் ஏற்படக்கூடிய கேடுகளை முன்கூட்டியே அறிந்து அவரை ஒடுக்கத் திட்டமிட்டது. அந்நாட்டின் தலைமையில் மூன்று பெரும்(ஐரோப்பிய நாடுகள்) கூட்டிணைப்புத்தோன்றியது.நெப்போலியன் எதிர்பார்த்தவாறு இங்கிலாந்து அவ்வளவு எளிதில்தோற்கடிக்கப்படக்கூடிய நாடன்று. நிலப்படையில் பிரான்சுக்குள்ள வலிமையைவிட இங்கிலாந்து நாடு கடற்படையில் மிக்க வலிமை பெற்ற ஒன்று என்பதால், அதனுடன் போரிட்டுப் பிரான்சு தோல்வியுறும் வரை ஐரோப்பா மிகவும் அலைக்கழிக்கப்பட்டது.

நெப்போலியன், இசுபெயின் நாட்டைத் துணை கொண்டு பிரிட்டன் மீது படையெடுக்க முயன்றார். ஆனால், திரபால்சர் (Trafalgar, கி.பி. 1805) என்றவிடத்தில்,ஆங்கிலத்தளபதி நெல்சன் நெப்போலியனின் படையைச் சிதற அடித்ததால் அம்முயற்சி பயனற்றதாக ஆயிற்று. விடாமுயற்சியுடன் பிரான்சுப் பேரரசர், இங்கிலாந்தின் கூட்டு நாடுகளான ஆசுத்திரியா, பிரசியா, உருசியா முதலிய நாடுகளை எதிர்த்துச் சென்று சிறப்பான வெற்றிகளைப் பெற்றார். அல்ம், ஆசுத்தர்லிட்சு என்றவிடங்களில் ஆசுத்திரியா படைகளையும், கினாப் போர்க்களத்தில் உருசியாவையும் தோற்கடித்து கி.பி. 1806 இல் ஐரோப்பாவில் நெப்போலியன் தனது ஆதிக்கத்தை நிறுவினார். கி.பி. 1807-இல் ஈடு இணையற்ற புகழுடன் பிரான்சுப் பேரரசர் விளங்கினார். உருசியப் பேரரசர் தில்சிட்டு என்ற இடத்தில் இவருடன் நட்பு உடன்பாடு செய்து கொண்டார். (காண்க: தில்சிட்டு உடன் படிக்கை (தனிக் கட்டுரை) நெப்போலியன் தம் மனம் போனவாறு நாடுகளைப் பிரித்தும், இணைத்தும் பெரும் மாறுதல்களைப் புரிந்தார். வலிமைமிக்க பிரசியா மூன்று பகுதிகளாக்கப்பட்டது. செருமனியில் காணப்பட்ட 300க்கும் மேற்பட்ட குறுநிலப் பகுதிகள் 120 பகுதிகள் கொண்ட புதிய செருமன் குடியரசாகத் தோற்றுவிக்கப்பட்டது.

பிரான்சு மன்னனின் உறவினர்கள் பல நாடுகளில் ஆட்சி புரியலாயினர். இருப்பினும் இங்கிலாந்தைத் தோற்கடிக்காத வரை நெப்போலியன் அமைதி கொள்ளவில்லை. ஆகவே அதன் வணிகத்தை அழிக்கக் 'கண்டத்திட்டம்'ஒன்றைத் தயாரித்தார். (காண்க: கண்டத்திட்டம். (த.க.) அதன்படி ஐரோப்பியத் துறைமுகங்கள் பிரிட்டனுடன் வாணிக உறவு கொள்ளக்கூடாதென வற்புறுத்தப்பட்டன. அம்முறையால் ஆங்கிலேயர் இன்னலுக்குட்படுத்தப் பட்ட போதிலும் உறுதி குன்றவில்லை. நெப்போலியனின் திட்டத்தை ஏற்றுக்கொண்ட நாடுகள் பிரித்தானியப் பேரரசைச் சேர்ந்த பகுதிகளிலிருந்து பொருள்கள்பெறமுடியாமையால்ஐரோப்பியர் மிகுந்த இடையூறுகளைப் பெற்றனர். முடிவாகக் கண்டத் திட்டம் வெற்றி பெறவில்லை. அதனால் நெப்போலியன் பல நாட்டினருடைய வெறுப்பைப் பெற்றார். இங்கு உருசியாவின் வெறுப்பு குறிப்பிடத்தக்கது. பிரான்சு மக்களும் அவருடைய ஏற்பாட்டை ஏற்றுக்கொள்ளவில்லை. குமுறிக் கொண்டிருக்கும் ஐரோப்பியரின் பொறுக்க முடியாத துயர உணர்ச்சியை நெப்போலியன் பொருட்படுத்தாமல், வலுக்கட்டாயமான முறையில் தமது திட்டத்தை வெற்றியாக்க முனைந்தார்.

**வீழ்ச்சி:** இசுபெயின், போர்ச்சுகல் நாடுகளில் தமது ஆதிக்கத்தை நிறுவ நெப்போலியன் செய்த முயற்சி அந்நாடுகளில் வலிய எதிர்ப்பையும் பெரும் போரையும் உண்டாக்கின. இசுபெயின் மக்களுக்கு ஆங்கிலேயர் உதவியளித்தனர். இசுபெயின் படையிடம் நெப்போலியன் பெற்றதோல்வியால் ஐரோப்பாவின் பிற பகுதிகளில் மக்கள் பிரான்சு ஆதிக்கத்தை எதிர்த்துச் செயலாற்றிடத் துணிந்தனர். (காண்க: தீபகற்பப்போர் (த.க.) ஒரே காலத்தில் பல போர்களை நடத்த வேண்டிய நிலையில் பிரான்சு திணறியது. நெப்போலியன், கி.பி.1812-இல் உருசியாவையும் பகைத்துக் கொண்டு அந்நாட்டில் படையெடுத்தார்.

அந்நாட்டில் தொடங்கிய குளிர் காலச் சூழலில் பிரான்சுப் படை சிக்கிக் கொண்டது. சென்ற 4,50,000 வீரரில் 20,000 பேர்களே மிகுந்த சிக்கலுக்கிடையில் நாடு திரும்ப முடிந்தது. அத்தோல்வி பிரான்சுப் பேரரசின் அடிப்படையை ஆட்டிச் சாவு மணியாக அடிக்கத் தொடங்கியது. நெப்போலியன் கி.பி. 1813-இல் இலிப்சிக்குப்(Leipzig) போரில் தோல்வியுற்றார். அந்நிலையில் இவர் அமைதியை நாடியிருந்தால், குறைந்த பட்சம் பிரான்சின் மன்னராகவாவது இவர் இருந்திருக்க முடியும். ஆனால், இவருடைய போர் வெறி கி.பி.1814-இல் இவரைப்பெருந்தோல்வியுறச் செய்து எல்பா தீவுக்குக் கடத்தப்பட வைத்தது. சில தின ஓய்வுக்குப் பின் அங்கிருந்து தப்பிப் பிரான்சில் படை திரட்டிப்போரிடத்தொடங்கினார். அங்குத் தான் இவரது வீழ்ச்சி காத்துக்கொண்டிருந்தது. கி.பி. 1815-இல் வரலாற்றுப் புகழ்மிக்கபோரில்வெல்லிங்டன்என்ற ஆங்கிலத் தளபதியிடம் வாட்டர்லூ என்ற இடத்தில் தோல்வியைப் பெற்று அங்கிருந்தசெயின்ட்டுஎலினா என்ற தீவில் ஆறாண்டுச் சிறைப்படுத்தப் பட்டுப்பின் உயிர் நீத்தார். போர்க் கருவிகளால் நாடாள்வதை விட அறிவாண்மையால் ஆள்வதே சிறந்தது என்ற உண்மை எலினா தீவில்தான் இவருக்கு உதயமானது. இவருடைய மனக்கோட்டைகளும், பேரரசும் அழிந்தன. இவருடைய அரிய சீர்திருத்தங்கள் ஐரோப்பா நாட்டிற்குப் பிற்காலத்தில் நன்மைகளைப் பயத்தன. இவரின் அரசியல் சீர்திருத்தங்கள் இத்தாலி, செருமனி முதலிய நாடுகளில் தேசிய ஒற்றுமைக்கு அடிகோலின. தெ.பா.

நெப்போலியப் போர் (**கி.பி. 1803 முதல் 1815 வரை**): பிரான்சு நாட்டில் கி.பி. 1789 – இல் ஒரு பெரும்புரட்சி ஏற்பட்டது. அதையடுத்துப் பிரான்சு குடியரசாக மாறியது. பிரான்சுக் குடியரசுக்கும் சில ஐரோப்பிய நாடுகளுக்கும் இடையே போர் மூண்டது. பிரான்சு கி.பி. 1803-இல் மீண்டும்போரில் ஈடுபட்டது. இதற்கிடையில் பிரான்சுக் குடியரசு அழிக்கப்பட்டு நெப்போலியனுடைய சருவாதிகார ஆட்சி பிரான்சில் ஏற்படுத்தப்பட்டது. இப்போது தொடங்கப்பட்ட போர் நெப்போலியப் பேரரசுக்கும் சில ஐரோப்பிய நாடுகளுக்கும் இடையே நடைபெற்றமையால் இது நெப்போலியப் போர் எனக் கூறப்பட்டது. இப்போருக்கு ஒரு காரணம் நெப்போலியனுடைய ஆதிக்க வெறியாகும். பிரான்சின் செல்வாக்கை ஐரோப்பா மட்டுமன்றி இந்தியாவிலும் ஏற்படுத்துவதற்காக இந்திய மன்னர்களோடுந் தொடர்பு கொண்டார். அடுத்தது பிரித்தானிய வாணிகத்தை அழிக்க இவர் முயற்சி மேற்கொள்ளலானார். இவ்விரு காரணங்களால் ஆங்கிலேயர்கள் நெப்போலியன் மீது கோபம் கொண்டனர். பிரித்தானியச் செய்தித்தாள்கள் நெப்போலியனை ஒரு கொடுங்கோலன் என்று குறிப்பிட்டு வந்தன. அத்தகைய விளம்பரத்தைத் தடுக்கப் பிரித்தானிய அரசு யாதொரு நடவடிக்கையும் மேற்கொள்ளவில்லை. மேலும், பிரான்சின் அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்குப் பிரிட்டன் புகலிடம் தந்தது. இவற்றின் காரணமாகப் பிரித்தானிய அரசு மீது நெப்போலியன் கோபம் கொண்டார்.

போர் கி.பி.1803-இல் தொடங்கியது. பிரான்சுக்கு இசுபெயினும், பிரிட்டனுக்கு ஆசுத்திரியா, இரசியா சுவீடன், நேபிள்சு ஆகிய நாடுகளும் உதவி செய்தன. இது மூன்றாம் கூட்டிணைவு எனப்படும். போரின் தொடக்கக்காலத்தில் பிரிட்டன் மீது படையெடுத்துச் சென்று அதனைக் கைப்பற்றுவதே நெப்போலியனுடைய முக்கிய நோக்க மாகும். அதற்காக ஒரு பெரும் படையைப் போலோன் பட்டினத்தில் சேகரித்தார். அங்கிருந்து ஆங்கிலக் கால்வாயைக் கடந்து செல்ல 2000 படகுகளைக் கட்டுவித்தார். கால்வாயை ஆங்கிலக் கப்பற்படை பாதுகாத்து வந்தது. அதனுடன் போரிட்டு அப்படையை அங்கிருந்து அப்புறப்படுத்துவதற்கு வேண்டிய கப்பற்படைப் பலம் நெப்போலியனுக்கு இல்லை. எனவே, அதனைத் தந்திரமாக அங்கிருந்து அப்புறப்படுத்த இவர் மேற்கொண்ட முயற்சிகள் வீணாயின.

படையெடுத்துச் சென்று பிரிட்டனைக் கைப்பற்ற இயலாது என்ற நிலை ஏற்பட்டவுடன் நெப்போலியன் பிரிட்டனைஅழிக்க மற்றொரு திட்டத்தைக் கையாண்டார். அதாவது அதனுடன் நட்புக் கொண்டிருந்த நாடுகளை வென்று அவற்றைத் தம் பக்கம் சேர்த்துக் கொண்டு பிரிட்டனைத் தனிமைப்படுத்திவிட்டால் அது தானாகச் சரணடையும் என்று இவர் எண்ணினார். அத்திட்டத்தை நிறைவேற்ற இவர் முதலில் ஆசுத்திரியா மீது படையெடுத்தார். ஆசுத்திரியாவை அல்ம் (Ulm) என்னுமிடத்தில் தோற்கடித்தார். ஆசுத்திரியாவின் தலைநகரான வியன்னா இவர் கைவசமாயிற்று. ஆசுத்திரியா உருசியாவின் உதவியை நாடியது. இதற்கிடையில் திரபால்கர் (Trafalgar)கடல் முனைக்கு அருகே பிரித்தானியக்கப்பற்படை பிரான்சு மற்றும் இசுபானியக் கப்பற்படைகளைத் தோற்கடித்துத் தனது கடலாதிக்கத்தை உறுதிப்படுத்தியது. (காண்க: திரபால்கர் (த.க.). உருசியாவில் உதவியைப் பெற்ற ஆசுத்திரியப் பேரரசர் மீண்டும் நெப்போலியனை ஆசுடர்லிட்சு (Austerlitz) போர்க் களத்தில் சந்தித்துத் தோல்விகண்டார் அதன்பிறகு ஆசுத்திரியா நெப்போலியனுடன் பிரசுபர்க்கு (Pressburg) உடன்படிக்கைசெய்து கொண்டது.

அதன்பின்னர் நெப்போலியன் செருமனியின் பால் தம் கவனத்தைத் திருப்பினார். பல நூற்றாண்

டுகளாகச் செயற்பட்டு வந்த புனித உரோமானியப் பேரரசை அழித்து இரைன் ஆற்றுப் பிரதேச நாடுகளின் கூட்டமைப்பை (Confederation of the Rhine) உருவாக்கினார். அக்கூட்டமைப்புப் பிரான்சுக்குக் கப்பம் செலுத்தி வர ஏற்பாடு செய்யப்பட்டது. அதற்கு நெப்போலியனே தலைவரானார். பிறகு பிரசியா (Prussia) நாட்டின் மீது படையெடுத்துச் சென்றார். சீனா (Jena) என்னுமிடத்தில் பிரசியா தோற்கடிக்கப்பட்டது. அதன்பிறகு கி.பி. 1807-இல் பிரிட்லாந்து (Friedland) என்னுமிடத்தில் உருசியாவைத் தோற்கடித்தார். அதையடுத்து உருசியாவும் பிரசியாவும் நெப்போலியனுடன் தில்சிட்டு உடன்படிக்கையைச் (Treaty of Tilsit) செய்து கொண்டன. (காண்க. தில்சிட்டு உடன்படிக்கை (த.க.) மேற்குச் செருமனியில் பிரசியாவிற்குச் சொந்தமாக இருந்த பகுதிகளுடன் பிரிட்டனுக்குச் சொந்தமான அனோவர் பகுதியை (Hanover)இணைத்து வெசுட்டுபேலியா (Westphalia) அரசை உருவாக்கி அதற்குத் தம் சகோதரனான செரோம் போனபார்ட்டை (Jerome Bonaparte) அரசராக்கினார். மேற்குப் போலந்துடன் ஆசுத்திரியாவிற்குச் சொந்தமான காலீசியாவை இணைத்து வார்சா கோமகனுடைய பெரும் ஆட்சிப் பகுதியாக (Grand Duchy Warsaw) அமைத்து அதற்குத் தம் நண்பனான சாக்சனி (Saxony) அரசரைத் தலைவராக்கினார்.

இவ்வாறாகப் பிரிட்டனுடன் சேர்ந்திருந்த நாடுகள் பெரும் பாலானவற்றை அதனிடமிருந்து பிரித்து அதனைத் தனிமைப்படுத்தினார். எனினும்,பிரிட்டன் அடிபணியவில்லை.எனவே,நெப்போலியன் மற்றொரு திட்டத்தைக் கையாண்டார்.அதுவே கண்டத் திட்டமாகும்(Continental System)(காண்க: கண்டத்திட்டம் (த.க.) பிரிட்டனுடைய வலிமை அதனுடைய வாணிகத்தைப் பொறுத்திருந்தது. ஐரோப்பாவின் பெரும் பகுதிக்குத் தலைவராகிவிட்ட நெப்போலியன் தமது அதிகாரத்தால் பிரிட்டனின் வாணிகத்தைத் தடை செய்து விட்டால் பிரிட்டன் அடிபணிந்துவிடும் என்று கருதிச் செயற்பட்டார். அதற்காகக் கீழ்க்காணும் கட்டளைகளைவெளியிட்டார்.அவையாவன:பெர்லின் கட்டளை, வார்சா கட்டளை, திரையனான் தீர்வை (Trianon Tariff) பான்டெயினிபுளு (Fontainebleu) கட்டளை. பிரிட்டன் தன் கடலாதிக்கத்தைப் பயன்படுத்தி வேறெந்த நாடும் ஐரோப்பாவுடன்நேரடியாக வாணிகத் தொடர்பு வைத்துக்கொள்வதைத் தடுக்க முற்பட்டது. ஐரோப்பிய நாடுகள் பல, பிரிட்டனுடன் திருட்டுத்தனமாக வாணிகம் செய்தன. பிரிட்டனில் தயாரிக்கப்பட்ட பொருள்கள் ஐரோப்பாவில் தொடர்ந்து விற்பனையாயின. அதைக் கண்ணுற்ற நெப்போலியன் அதற்கான காரணத்தைத் தேடலானார். ஐரோப்பாவின் கடற்கரைப் பகுதிகள் சில தம்முடைய நேரடி ஆட்சியின் கீழ் இராமையே என்பதை எளிதில் கண்டறிந்தார். எனவே, அவற்றின் சுதந்திரத்தைப் பறிக்கலானார். அதன் காரணமாகச் சில இடங்களில் சுதந்திர உணர்ச்சி வெளிப்பட்டது. அவற்றுள் முக்கியமானவை இசுபெயினும் போர்ச்சுகலும் ஆகும். பிரிட்டன் தன் கடலாதிக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு அம்மக்களுக்கு உதவி செய்தது. கிளர்ச்சிகளை அடக்க நெப்போலியன் பெரும் படையை இசுபானிய நாட்டிற்கு அனுப்பிவைத்தார். இவ்வாறாகத் தீபகற்பப் போர் (Peninsular War) தொடங்கியது. (காண்க: தீபகற்பப்போர் (த.க.) ஆங்கிலப் படைக்குத் தலைமையேற்று வந்த ஆர்தர் வெல்லெசுலி (Arthur Wellesly),பல வெற்றிகளை அடைந்தார். விமீரோ (Vimiero),தலவீரா(Talavera), சலமான்கா (Salamanca), விட்டோரியா (Victoria), ஓர்தெசு (Orthez), தூலூசு (Toulouse) முதலிய இடங்களில் போர்கள் நடந்தன. ஐபீரியத்தீபகற்பத்திலிருந்து பிரான்சின் ஆதிக்கம் அகற்றப்பட்டது. வெல்லெசுலி பிரான்சு நாட்டுக்குள் புகுந்து பாரிசு நகர் நோக்கிப் படைநடத்திச் சென்றார்.

இதற்கிடையில் உருசியாவிற்கும் நெப்போலியனுக்கும் இடையே இருந்த நட்பு முறிவுற்றது. கண்டத் திட்டத்திற்கு உருசியா போதிய ஆதரவு அளிக்கத் தவறியதே அதற்கு முக்கிய காரணமாகும். ஆகவே, நெப்போலியன் கி.பி. 1812-இல் மாசுகோ (Moscow) நகர் நோக்கிப் படை நடத்திச் சென்றார். இப்படையில் 600,000 பேர் இருந்தனர். உருசியப்படைகள் பின்வாங்கின. அப்போது அவர்கள் காலி செய்த இடங்களில் இருந்த உணவுப் பொருள்களை அழித்து விட்டுச் சென்றனர். போராடினோ(Borodino)போரில் உருசியப் படைகளைத் தோற்கடித்துமாசு கோவைக் கைப்பற்றினார். போதிய உணவுப் பொருள்கள் கிடைக்காமையினால் நெப்போலியன் கடுங்குளிரைக் கண்டஞ்சி நாடு திரும்பலானார். உருசியர்கள் அவரை வந்தவழியிலேயே செல்வதற் கான முயற்சிகளை மேற்கொண்டனர். அங்கு உணவுப் பொருள்கள் ஏற்கெனவே அழிக்கப்பட்டமையால் அவர்கள் அவதிக்குள்ளாக வேண்டுமென்று எண்ணினார்கள். உருசியப் படைகளாலும், குளிராலும், பசியினாலும் துன்புறுத்தப்பட்ட பிரான்சுப் படை பெரும் அழிவிற்குள்ளாயிற்று. இவ்வாறாக இவருடையஉருசியப் போர் பெரும் தோல்வியிலும் சேதத்திலும் முடிவுற்றது.

உருசியப் படையெடுப்பின் தோல்வியை அறிந்த ஆசுத்திரியாவும் பிரசியாவும் மீண்டும் பிரான்சுக்கு எதிராக இங்கிலாந்துடன் சேர்ந்து போர் தொடுத்தன. இதனை நான்காம் கூட்டிணைவு என்பர்.

மேலும் செருமனியில் தேசிய உணர்ச்சி மேலிட்டெழுந்தது. ஆகவே, நெப்போலியன் செருமனியில் போர் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. இலிப்சிக்கு (Leipzig) என்னுமிடத்தில் நெப்போலியனுடைய படை தோற்கடிக்கப்பட்டது.எனவே,பிரான்சுப் படை பின்வாங்கியது.எல்லாத் திக்குகளிலிருந்தும் பகைவர்கள் பாரிசு நகர் நோக்கிச் சென்றனர். அந்த நிலையில் பிரான்சு மக்களும், படைத் தலைவர்களும் சமாதானம் விரும்பினார்கள். வேறு வழியின்றி நெப்போலியன் பதவியைத் துறந்து எல்பா (Elba) தீவிற்குச் சென்றுஅங்குத் தமது அரசவையை ஏற்படுத்திக் கொண்டார். பிரான்சு நாட்டில் பூர்போன் மன்னரின் ஆட்சி மீண்டும் ஏற்படுத்தப்பட்டது. சமாதான ஏற்பாட்டை வரைய வியன்னாவில் மாநாடு ஒன்று கூடியது.

பின்,கி.பி.1815-இல் நெப்போலியன் எல்பாவிலிருந்து தப்பித்துக் கொண்டு பிரான்சில் காலடி வைத்தார். விரைவில் மக்கள் ஆதரவு பெற்றுத் தமது ஆட்சியை மீண்டும் ஏற்படுத்தினார். பின்னர்ப் பெல்சியம் மீது போர் தொடுத்தார். எனவே, போர் மீண்டும் துவங்கியது. ஆங்கிலேயர்கள் தச்சுக்காரர்கள் மற்றும் பிரசியர்கள் இவரை எதிர்த்தனர். இலிக்னி (Ligny) என்னும் இடத்தில் பிரசியர்கள் தோற்கடிக்கப்பட்டனர். ஆனால், வாட்டர்லூ (Watereloo) என்னுமிடத்தில் நெப்போலியன் முழுமையாகத் தோற்கடிக்கப்பட்டார். அதையடுத்து இவர் ஆங்கிலேயரிடம் அடிபணிந்தார். ஆங்கிலேயர்கள் எவராலும் எளிதில் அடைய முடியாத புனித எலினா (St. Helena) என்னும் தீவில் இவரைச் சிறை வைத்தனர். அத்துடன் நெப்போலியப் போர் முடிவுற்றது.

இப்போரின் காரணமாக நெப்போலியப் பேரரசு அழிந்தது. பிரான்சில் மீண்டும் பழைய பூர்போன்கள் ஆட்சி நிறுவப்பட்டது. ஐரோப்பாவில் தேசிய உணர்ச்சி கொழுந்துவிட்டெரியலாயிற்று. அதன் விளைவாக இத்தாலி, மற்றும் செருமனி தேசிய நாடுகளாக உருப்பெறலாயின. தி.அர.இரா.

**நெப்போலியன், இரண்டாம் (கி.பி.** 1811-1832): முதலாம் நெப்போலியனின் மகனான, பிராங்காய் சார்லசு சோசபு போனபார்ட்டு, இரண்டாம் நெப்போலியன் (Francois Charles Joseph Bonaparte Napoleon II) பெயரளவுக்குத் தான் பிரான்சுப் பேரரசராக இருந்தார். முதலாம் நெப்போலியனுக்கும் அவர் மனைவி ஆசுத்திரிய இளவரசி மேரி உலூயிசுக்கும் (Marie Louise) பாரிசில் கி.பி. 1811-இல் பிறந்த இரண்டாம் நெப்போலியன், பிறந்த உடனேயே 'உரோமானிய மன்னன்' என்றபட்டம் வழங்கப் பெற்றார். முதலாம் நெப்போலியனின் பகைவர்கள், பாரிசில் படையெடுத்ததின் விளைவாக, கி.பி. 1814-ஆம் ஆண்டு ஏப்பிரல் நான்காம் நாள், தம் மகனைத் தம் வாரிசாக அறிவிப்புச் செய்துவிட்டு முதலாம் நெப்போலியன் அரசு துறந்தார். ஆனால் நேசநாட்டுக்கூட்டுக் கட்சியினர், அந்த அறிக்கையைப் புறக்கணித்துவிட்டுப் போர்பன் குலத்திய பதினெட்டாம் உலூயியை, பிரான்சின் மன்னராக்கினர். புதிய உடன்படிக்கையின்படி (மே 30, கி.பி. 1814) பார்மா இளவரசன் (Prince of Parma) என்ற பட்டம் இளைய நெப்போலியனுக்கு வழங்கப்பெற்றது. அதனால் மனநிறைவு பெறாத முதலாம் நெப்போலியன் வாட்டர்லூ போரில் தோல்வி கண்ட பிறகு இரண்டாம் முறை அரசு துறந்த போது (22.6.1815) தம் மகனை 'இரண்டாம் நெப்போலியன்' என்று அறிவித்தார். ஆனால், அதை யாரும் பொருட்படுத்தவில்லை. குழந்தை நெப்போலியன் தனது பாட்டன் ஆசுத்திரியப் பேரரசன் பிரான்சிசு வீட்டில் வியன்னா நகரில் வாழ்ந்து வந்தான். இளமையிலேயே இவன் சிறந்த படைப் பயிற்சி பெற்றான். ஆனால், காச நோயால் பீடிக்கப்பட்டு கி.பி. 1832-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 22-ஆம் நாள் இறந்தான். பெயரளவில் இருந்த 'இரண்டாம் நெப்போலியன்' என்ற பட்டமும் மறைந்தது. வியன்னாவில் புதைக்கப்பட்ட இவனுடைய சவப்பெட்டி, 1940-ஆம் ஆண்டில் இட்லரால் பாரிசு நகருக்கு அனுப்பப் பெற்றது. முதலாம் நெப்போலியனின் உடல் புதைக்கப்பட்டிருந்த இடத்துக்கு அருகிலேயே அவர் மகனின் சவப் பெட்டியும் புதைக்கப்பெற்றது. தெ.பா.

**நெப்போலியன், மூன்றாம்**: முதலாம் நெப்போலியனின் உடன் பிறப்பாளர் உலூயி போனபார்ட்டின் மகனாக உலூயி நெப்போலியன் கி.பி. 1808-இல் பாரிசு நகரில் பிறந்தார். நெப்போலியனின் மகன் இரண்டாம் நெப்போலியன் கி.பி. 1832-இல் இறந்ததைத் தொடர்ந்து,போனபார்ட்டுக் குடும்பத்தினரின் வாரிசாக உலூயி நெப்போலியன் ஏற்றுக் கொள்ளப்பட்டார்.

முதலாம் நெப்போலியன் குடும்ப வழித் தோன்றலான இவரிடமும் சில புரட்சிகரமான கருத்துகளும், நாடாளும் வேட்கையும் மிகுந்திருந்தன. பிரான்சு நாட்டில் கைது செய்யப்பட்டு நாடு கடத்தப்பட்ட போதிலும் இவருடையப் பணி வெளிநாடுகளில் இருந்தபடியே தொடர்ந்தது. இவர் பல நூல்களை ஆக்கிப் புகழ் பெற்றார். அவற்றுள் கி.பி. 1839-இல் வெளியான நெப்போலியனின் கருத்துகள் என்ற நூல் குறிப்பிடத்தக்கது. பிரான்சில் கி.பி. 1848-இல் ஏற்பட்ட புரட்சிக்குப்பின் நடந்த தேர்தலில் இவர் நிற்பதற்குத் தடை செய்யப்பட்டாலும் இரண்டாம் பேரரசுக்கான இவருடைய பணிகளை


நெப்போலியன் (மூன்றாம்)

இவர் ஆதரவாளர்கள் மக்களிடையே பரப்பிக் கி.பி. 1848-இல் நடைபெற்ற இடைத் தேர்தல் ஒன்றில் இவர் வெற்றியடையமாறு செய்தனர்.

இடைத்தேர்தலைத் தொடர்ந்து நடைபெற்ற (திசம்பர்,கி.பி. 1848)குடியரசுத் தலைவர் தேர்தலில் பிரான்சின்இரண்டாம் பேரரசின் தலைவராக இவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். தேர்ந்தெடுக்கப்பட்ட பின் இவர் சில சீர்திருத்தங்களைச் செய்த போதிலும், நாட்டில்அரசியல் குழப்பங்கள் தவிர்க்கமுடியாததாக இருந்தன.இவர் மீது நம்பிக்கை இல்லாத்தீர்மானம் நிறைவேற்றப்பட்ட போது, அதனைச் சமாளித்த தோடு, கி.பி. 1851-இல் நடந்த திடீர்ப் புரட்சியை யும் எதிர் கொண்டு அதில் இவர் வெற்றி பெற்றார்.

**புதிய அரசியலமைப்பு:** பிரான்சில் கி.பி. 1852 -ஆம் ஆண்டு சனவரி 14-ஆம் நாள் புதிய அரசிய லமைப்பு ஏற்பட்டது.அதன் விளைவாகப் புதிய சட்ட சபை உருவானது. அரசியல் சட்டம் புதிதாக இயற் றப் பட்டபின்பும் உலூயி நெப்போலியன் நாடு முழு வதும் பயணம் செய்து மக்களின் ஆதரவு பெற்று, மக்களின் கருத்துவாக்கு மூலம் கி.பி. 1852-ஆம் ஆண்டு திசம்பர் மாதம் 2-ஆம் நாள் தம்மை மூன் றாம் நெப்போலியப் பேரரசன் என்று அறிவித்தார்.

**உள்நாட்டுச் சீர்திருத்தங்கள்:** நெப்போலியன் பேரரசராக முடிசூட்டிக் கொண்டபின் உள்நாட்டுச் சீர்திருத்தங்களை மேற்கொண்டார். பிரான்சில் இரு பெரும் தேசிய வங்கிகள் ஏற்படுத்தபட்டன. நிலவரி கள்மேம்பாட்டுச் சாகுபடிமுறை ஊக்குவிக்கப்பட்டது. தொழிலாளர்களின் உரிமைகள் ஊக்குவிக்கப்பட்டன. தொழிலாளர்களின் உரிமைகள் அங்கீகரிக்கப்பட்டு அவர்களின் சங்கங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. கி.பி. 1813-இல் ஏற்படுத்தப்பட்ட சட்டத்தின் மூலம் கூட்டுறவுச்சங்கங்கள் ஏற்படுத்த வழிவகுக்கப்பட்டது. கி.பி. 1864-இல் ஏற்படுத்தப்பட்ட சட்டம் நியாய மான வேண்டுதல்களுக்காகத் தொழிலாளர்கள்வேலை நிறுத்தத்தை மேற்கொள்ளலாம் என அறிவித்தது. அரசின் தொழிற்கொள்கை தாராள மனப் பான்மையுடன் செயற்பட்டது. மக்களின் வரிச் சுமைகள் குறைக்கப்பட்டன.

போப்பாண்டவரைக்காப்பாற்றப் பிரான்சுப்படை கள் உரோமுக்கு அனுப்பப்பட்டதால் கத்தோலிக் கர்களுடன் நல்லுறவு ஏற்பட்டது. கத்தோலிக்கக்குரு மார்களுக்கு ஆதரவாக கி.பி. 1860-இல் பிரான்சில் மன்னரின் கீழ் இரு மக்களவைகள் செயற்பட்ட போதிலும், அனைத்து அதிகாரங்களையும் பெற்ற மன்னர் ஏறக்குறைய சருவாதிகாரியாகவே மாறத் தொடங்கினார். அக்காரணத்தால் அரசியலமைப்பு மறுபரிசிலனை செய்யப்பட்டது. மன்னனைக் குறை கூறிய குடியரசுக் கட்சியினர் கி.பி. 1863-இல் நடை பெற்றதேர்தலில் பெரும்பான்மை இடங்களைக்கைப் பற்றினர். சைமன், தியர்சு முதலிய குடியரசுவாதிகள் சபைகளில் பங்கு பெற்றதால் மூன்றாம் நெப்போலி யனுக்குப் புதிய சிக்கல்கள் ஏற்பட்டன. மேலும் கி.பி. 1866-இல் ஆலிவர் என்பார் விடுதலைக் கட்சியினைத் தொடங்கிய பிறகு பேரரசர் செய்தித்தாள் கட்டுப் பாட்டைச் சற்றே தளர்த்தினார். பின்னர், கி.பி.1869 -ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில் ஆலிவரின் கட்சி மந்திரிசபை அமைத்தது.

**அயல்நாட்டுக் கொள்கை:** நெப்போலியன் தமது வெளிநாட்டுக் கொள்கையில் தீவிரப் போக்கினை கையாண்டதால் பல போர்களை எதிர்நோக்க வேண்டிய சூழல் உருவானது.

உரோமில் சுதந்திரப் படைகளைப் பதவி நீக்கம் செய்து, போப்பாண்டவரைப் பதவியில் அமர்த்தப் பிரான்சின் படைகள் போப்புக்கு ஆதரவாக உரோ மில் சென்று வெற்றியும் பெற்று கி.பி. 1870 வரை அங்கு நிலைகொண்டன. அதனால் பிரான்சில் கத் தோலிக்கர்களின் ஆதரவை மன்னர் பெற வாய்ப்பு ஏற்பட்டது.

**கிரிமியாப் போர்:** உருசிய நாட்டின் மன்னன் முத லாம் நிக்கோலசுக்கும், பிரான்சுக்குமிடையே நீண்ட நாளைய பகைமை நிலவியது. பிரான்சில் உள்ள அனைத்துத் தரப்பினரும் உருசியாவை எதிர்த்தனர். அந்நிலையில்துருக்கியில் உள்ள கிறித்தவ மக்களையும் குருமார்களையும் காக்கும் உரிமையை உருசிய மன் னர் சார் நிக்கோலசு துருக்கிச் சுல்தானிடம் கேட்கும் அதே நேரத்தில் மூன்றாம் நெப்போலியனும் அதே உரிமையைத்துருக்கியிடம்வேண்டி, அதில்வெற்றிபெற்

றார். அதனால் வெகுண்ட உருசியா, துருக்கி நாட்டில் படை யெடுத்தபோது,பிரான்சு இங்கிலாந்தின் துணை யுடன் உருசியாவை கி.பி. 1845-இல் கிரிமியப்போர்க் களத்தில் எதிர்த்துத் தோல்வியுற்றுப் பின்னர் வெற்றி பெற்று, பாரிசு உடன்படிக்கை மூலம் போரை நிறுத்தி அமைதிக்கு வழிகோலியது. கிரிமியப் போர், நெப் போலியனின் புகழை உயர்த்தியது.(காண்க கிரிமியப் போர் (த.க.)

**இத்தாலி:** மூன்றாம் நெப்போலியன் தம் இளம் வயதில் இத்தாலிய சுதந்திர இயக்கத்தில் பங்கு பெற்றிருந்தார்.அதன் தொடர்பாக ஆசுத்திரியா விடம் இருந்து இத்தாலியை விடுவிக்க இவர் விரும்பிய போதிலும் உள்நாட்டில் கணிசமான ஆதரவு இதற்கு இல்லை.இருப்பினும் நீண்ட குழப்பத்திற்கு இடையே இத்தாலிக்கு ஆதரவு தர நெப்போலியன் முடிவு செய்தார். இலம்பார்டி, வெனிசு ஆகிய இத்தாலியப் பகுதிகளிலிருந்து ஆசுத்திரியாவை வெளியேற்ற கி.பி. 1858 இல் சார்டினியத் தலைவர் கவூருடன் உடன் பாடு செய்துகொண்டு அதற்குப் பரிசாக நைசு (Nice), சவாய் (Savoy) பகுதிகளைத் தாம் பெற நெப்போலி யன் திட்டமிட்டார். இக்கூட்டுப் படை சால்போ ரினோ படைக்களத்தில்போரிட்டது.அப்போர் சூரிச்சு உடன்படிக்கையின்படி முடிவுக்குக் கொண்டு வரப் பட்டது. முன்னரே செய்து கொண்ட ஒப்பந்தப் படி நைசும், சவாயும் பிரான்சுக்குக் கிடைத்தன. ஆசுத்தி ரியர் வெளியேற்றப்பட்டனர்.சால்போரினோ படைக் களத்தைக் கண்ட மூன்றாம் நெப்போலியன் அதிர்ச்சி அடைந்தார். பின்னர் இவருக்கு ஏற்பட்ட சிறுநீரகக் கோளாறு காரணமாக இவர்தம் துணிவு குறையலா யிற்று. மேலும், இங்கிலாந்தின் ஆதரவைப் பிரான்சு இழக்கத் தொடங்கியது. போர் நடவடிக்கைகளில் பிரான்சு தனிமைப் படுத்தப்பட்டது.

நெப்போலியன் உருமேனியா ஒருமைப் பாட்டி லும் கவனம் செலுத்தினார். இரு மாநிலங்களை இணைத்து அதன் மூலம் உருமேனியா ஒருமைப்பாடு உருவாக வழி வகுத்தார். இதேபோன்று போலந்து மக்களை உருசிய ஆதிக்கத்தினின்றும் விடுதலை அடையச் செய்ய, பிரான்சு நாட்டின் கத்தோலிக்க இனத்தவரின் ஆதரவுடன் நெப்போலியன் போரில் ஈடுபட ஒத்துக் கொண்டார்.ஆனால், கி.பி. 1863-இல் போலந்து மக்கள் விடுதலை வேண்டிப் போராடத் தொடங்கிய போது நெப்போலியன் வாளாவிருந்து விட்டார். அதனால் பல போலந்து மக்களை இறக்கச் செய்ததுடன் கத்தோலிக்கர்களின் ஏமாற்றத்துக்கும் காரணமானார்.

**ஆசுத்திரிய-பிரசியப் போர்:** கி.பி. 1866-இல் ஆசுத் திரியா, பிரசியா ஆகிய இரு நாடுகளுக்குமிடையே நடைபெற்ற போரில் சாடோவா போர்க்களத் தில் ஆசுத்திரியா தோல்வியுற்றது. இத்தோல் விக்குப் பிரான்சின் தலையிடாக் கொள்கை ஒரு காரணமாகும். மூன்றாம்நெப்போலியன் அப்போரில் தலையிடாமல் இருந்ததற்காகத் தமக்குச் சில நிலப் பகுதிகளைப் பிரசியாவிடமிருந்து பெற முயன்றார். ஆனால், பிரசிய அரசு இவரை ஏமாற்றிவிட்டது. நெப்போலியன் பெல்சியத்தையாவது இலக்சம்பர்கை யாவது தனக்கு நன்றிக் கடனாகப் பெற விரும்பி னார். ஆனால், பிரசியத் தலைவர் பிசுமார்க்கு தமது அரச தந்திரத்தால நெப்போலியனை ஏமாறச் செய்தார். மேலும், அக்காலத்திய பிரான்சின் நிலை பிசுமார்க்கின் ஐரோப்பியத் திட்டங்களுக்கு அனு கூலமாக இருந்தது. நெப்போலியனின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளில் சில தவறுகள் காணப் பட்டன. சிறப்பாக உள்நாட்டு அரசியலில் முதலாம் நெப்போலியனின் தனிக்கோல் முறையை மூன்றாம் நெப்போலியனும் பின்பற்றியதால் மக்களிடம் அமைதியின்மை வளரலாயிற்று. அமைதி இழந்த பிரான்சு மக்களின் கருத்தை ஒரு பெரும்போரில் திருப்பி, தமது ஆதிக்கத்தை உறுதி செய்துகொள்ள மூன்றாம் நெப்போலியன் திட்டமிட்டார்.

**பிரெஞ்சு பிரசியப் போர் (கி.பி. 1870-71):** பிரசியத் தலைவன் பிசுமார்க்கு, பிரான்சுடன் போர்செய்யத் தருணம் பார்த்திருந்தார்; தனது சூழ்ச்சியால் நெப் போலியனைப் போரில் இறங்கச் செய்வதில் வெற்றி யுங்கண்டார். பிரான்சு, கி.பி.1870-இல் பிரசியப் படைகளால் தாக்கப்பெற்றது. போருக்கு முன்ன தாகப் பிசுமார்க்கு தம் அரசியல் தந்திர முறை களால், பிரான்சு, பிறநாடுகளின் உதவியைப் பெற முடியாதவாறு செய்திருந்ததால், மூன்றாம் நெப் போலியன் எளிதில் தோற்கடிக்கப் பெற்றார். சேடான் (Sedan) போர்க் களத்தில் பிரசியா முடிவான வெற்றியைப் பெற்றது. மூன்றாம் நெப் போலியனின் ஆட்சி முடிவுற்று, பிரான்சில் ஓர் இடைக்கால அரசு அமையப்பெற்றது. பிறகு கி.பி.1875-இல் பிரான்சில் குடியரசு ஏற்பட்டது. பிரான்சில், அல்சாசு, உலொரெய்ன் மாநிலங்களை யும் பெரும் இழப்பீட்டுத் தொகையையும், பிரசியா வுக்கு அளிக்க வேண்டியதாயிற்று. கி.க.

## நெய்தல் சாய்த்துய்த்த ஆவூர்கிழார்:

இவர் சங்கப் புலவர். 'நெய்தல் சாய்த்துய்த்த' என் னும் அடைமொழிக்குரிய காரணம் புலப்படவில்லை. இது அவர் வாழ்வின் நிகழ்ச்சிகளுள் ஒன்று எனக் கூறுவர். அந்நிகழ்ச்சி என்னவென்பது தெரியவில்லை. ஒரே ஒரு பாடல் பாடிய சங்கப் புலவர்களில் இவரும் ஒருவர் அகநானூற்றில் குறிஞ்சித் திணையில்

அமைந்த இவருடைய பாடலுக்குரிய துறை 'இரவுக் குறி வந்த தலைமகனை எதிர்ப்பட்டு நின்று, தோழி வரைவு கடாயது'. இப்பாடலில் 'கழியக் காதலர் ஆயினும், சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்' (அகம்.112) என்னும் வரிகள் ஆராய்தற் குரியன. களவு வாழ்க்கையில் உடன்போக்கு, மட லேறுதல் போன்றவற்றை வெறுக்கும் போக்கும் சங்க காலத் தமிழர் சிலரிடையே காணப் பட்டது என்னும் குறிப்பை இப்பாடலால் உணர முடிகிறது.
சா.உ.

**நெய்தல் தத்தனார்:** நற்றிணையில் வரும் 49-ஆம் பாடலைப் பாடியவர் நெய்தல் தத்தனார் எனவும், 130 – ஆம் பாடலைப் பாடியவர் நெய்தற் றத்தனார் எனவும் குறிக்கப்பட்டுள்ளது (பின்னத்தூ ரார் பதிப்பு). இவ்விருவரும் ஒருவரே எனக் கொள் ளுதல் தகும். ஆயின், அகநானூற்றில் வரும் 243 –ஆம் பாடலைப் பாடியவர் பெயர் கொடியூர் கிழார் மகனார் நெய்தல் தத்தனார் என்று குறிக்கப் பட்டுள்ளது. இம்மூன்று பாடல்களையும் பாடிய புலவர் ஒருவரா? பலரா? என்ற கேள்வி எழும்.இம் மூவரையும் குறிக்குமிடத்து 'நெய்தல்' என்னும்அடை ஒன்றாகவே உள்ளது, எனவே, இம் மூவரும் ஒருவரே எனக் கொள்ளுதலே தகும். கொடியூர் கிழார் மகனார் என்னும் தொடர் நற்றிணையுள் சுட்டப் படாததற்குச் சிறப்பான காரணம் இருப்பதாகத் தோன்றவில்லை. காண்க: கொடியூர் கிழார் மகனார் தத்தனார்.
சா.உ.

**நெய்தற் கார்க்கியார்:** இவர் சஙகத் தமிழ்ப் புலவர். இவருடைய இரண்டு பாடல்களும் குறுந் தொகையில் இடம் பெற்றுள்ளன. அவ்விரு பாடல் களும் நெய்தல் திணையில் அமைந்தவை. நெய்தலைப் பாடும் சிறப்புக் கருதியே இவர் நெய்தற் கார்க்கியார் என வழங்கப் பெற்றார் என்பர்.

நெய்தற் பூக்களைக் குவியச் செய்யும்படி அவற் றிலிருந்து தெறிக்கும் நீர்த்துளியோடு மேகத்தைப் பொருந்திச் செல்லும் வாடைக்காற்றால் தலைவியின் துயரம் மிகுதிப் படுவதைக் காட்டுகிறார் (குறுந்.55). நெய்தல் நிலத் தலைவன் ஏறிச்சென்ற நெடுந்தேர் காணும்படி வந்து பின்பு நாணும்படியாக மீண்டு செல்வது இரங்கத்தக்கது என்று குறைநேர்ந்த தோழி தலைவியிடம் குறைநயப்பக் கூறும் பாங்கு (குறுந்.212) சிறப்புடையது.
சா.உ.

**நெருக்கடி நிலை:** நாட்டின் பாதுகாப்புக்கு இடையூறு நேரும் சூழ்நிலையே அரசியலமைப்புச் சட்டத்தில் நெருக்கடிநிலை எனப்படும். ஆகையால், நெருக்கடி நிலையிலே (Emergency) நாட்டின் பாதுகாப்புக்கும் அமைதிக்கும் ஏற்ற வகையில் ஒருமைப்படுத்தப்பட்ட முறையில், விரைவாகவும் திறமையுடனும் தக்க நடவடிக்கை எடுத்தற்கு அரசி யலமைப்புச் சட்டத்தில் வழிகள் செய்யப்படுதலும் இயல்பே ஆகும்.

**ஆங்கில ஆட்சியில் நெருக்கடி நிலை அதிகாரங்கள்:** ஆங்கிலேயர் இந்தியாவில் பல சிறிய சுதந்திர அரசு களைக் கைப்பற்றி ஒரே நாடாக இந்தியா என்று இணைத்து ஆளும்போது, அவர்கள் படிப்படியாக அதிகாரங்களை இந்தியர்களுக்கு வழங்கினாலும், சில குறிப்பிட்ட நலன்களை (எடுத்துக்காட்டாக) இந்தியக் குடிமை அதிகாரிகள் (I.C.S.), சிறு பான்மையோர் முதலியோரின் நலன்களைப் பாது காக்கும் பொருட்டு, 1909,1919-ஆம் ஆண்டுகளின் இந்திய அரசாங்கச் சட்டங்களிலே தலைமை ஆளு நருக்கும், மாகாண ஆளுநருக்கும் பெருமளவில் தனிப்பட்ட அதிகாரங்களை ஒதுக்கியிருந்தனர். இதே போல் 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டமானது நடுவண் அரசாங்கம், மாநில அரசாங் கம் ஆகியவற்றின் சட்டமியற்றும் அதிகாரங்களை யும், நிருவாக அதிகாரங்களையும் தனித்தனியே பிரித்துச் சிலவரம்புகளுக்கு உட்படுத்தி வழங்கிய போதிலும், நெருக்கடி நிலைகள் தோன்றுமானால், அப்போது மாநிலங்களின் செயல்களை இயக்குதற் கும், கட்டுப்படுத்துதற்கும் நடுவண் அரசாங்கத்துக்கு அது சில தனிப்பட்ட அதிகாரங்களை வழங்கிற்று. மேலும், ஏதேனுமொரு மாநில அரசாங்கம் செயற் படாமல் நின்றுவிடக் கூடிய நெருக்கடிநிலை தோன்றுமானால் அப்போது அந்த மாநிலத்துக்கு ஆட்சி இயந்திரத்தை அமைத்தற்கு வேண்டிய வழி யையும் மேற்படி சட்டம் வகுத்தது. அச்சட்டத்தின் பிரிவு 102-இன்படி, இந்தியாவின் அல்லது அதனு டைய ஏதேனுமொரு பாகத்தின் பாதுகாப்புக்கு அழிவைத்தரும் சூழ்நிலையைப் போரோ உள் நாட்டுக் கலகமோ உண்டாக்குமேயானால் அப் போது மாநில அரசாங்கம் எல்லாத் துறைகளிலும் நடுவண் அரசாங்கத்தின் ஆணைகளுக்குக் கீழ்ப்படிந்து செயற்படுதல் வேண்டும்; அதன் பொருட்டு மாநிலத் துக்கு ஒதுக்கப்பட்ட சட்டமியற்றும் பொருள்களின் மீதும் சட்டங்களைச் செய்வதற்கு நடுவண் சட்ட மன்றத்துக்கு அதிகாரங்கள் வழங்கப்பட்டன. பிரிவு 126-இன் படி இந்திய அரசாங்கம், நெருக்கடி நிலை யிலே மாநில அரசாங்கத்தின் நிருவாக அதிகாரத் தைக் கட்டுப்படுத்தவும், முழுவதும் தானே ஏற்றுச் செயற்படுத்தவும் அதிகாரங்களைப் பெற்றிருந்தது. இதேபோல் பிரிவு 93–இன் படி மாகாணத்தின் அரசாங்க அமைப்புச் செயற்படாமல் போகுமாயின், அதனுடைய ஆளுநர் ஓர் அறிக்கையை விடுத்து

(Proclamation), தமது நிருவாக அதிகாரங்களை மாநிலச் சட்டமன்றத்துக்குப் பொறுப்புள்ள அமைச்சரவையின் ஆலோசனையின்படி அல்லாமல், தம் விருப்பப்படி (Discretion) நெருக்கடி நிலையைக் கட்டுப் படுத்து மளவுக்குக் கையாளுதல் இயலும். அப்போது அவர் மாநிலச் சட்டமன்றத்தின் அதிகாரங்களையும், அமைச்சரவையின் அதிகாரங்களையும் கையாளுதல் கூடும்.

இந்த 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தின் கூட்டாட்சி அமைப்புப் பற்றிய பிரிவுகள் நடைமுறைக்கு வரவில்லை ஆகையால், நடுவண் அரசு 1919-ஆம் ஆண்டுச் சட்டத்தைப் பின்பற்றியே பெருமளவில் செயற்பட்டது.

**இந்திய அரசியலமைப்பில் கூறப்படும் நெருக்கடி நிலை அதிகாரங்கள்:** சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்புச் சட்டத்தில் மிகவிரிவாகவும், 3 வகைகளிலும் நெருக்கடிநிலை அதிகாரங்கள் கூறப்படுகின்றன.

(அ) குடியரசுத் தலைவர் இந்திய நாடும் அல்லது அதனுடைய எப்பகுதியும் போரினாலோ, வெளிநாட்டுப் படையெடுப்பினாலோ, உள்நாட்டுக் கலகத்தினாலோ பாதுகாப்பின்றி அழிவுக்குள்ளாகு மென்று கருதினால், அவர் அவ்வாறு கூறும் ஒரு நெருக்கடி அறிக்கையை வெளியிடுதற்கு (Proclamation of Emergency) அதிகாரம் உடையவராவர். அவருடைய நெருக்கடி அறிக்கையை அது வெளியிடப்பட்ட இரு மாத காலத்துக்குள்ளாகப் பாராளுமன்றத்தின் இரு மன்றங்களும் தீர்மானங்களின் வாயிலாக ஒப்புக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு ஒப்புக் கொள்ளத் தவறினால் நெருக்கடிநிலை அறிக்கை இரு மாதங்களுக்குப் பின்னர்ச்செல்லுபடி ஆகாது. நெருக்கடி நிலையைத் தோற்றுவிக்கக்கூடிய போர்ச்செயல் எதுவும் தொடங்கும் முன்னதாகவே குடியரசுத் தலைவர் நெருக்கடிநிலை அறிக்கையை வெளியிடுதல் கூடும். (இந்திய அரசியலமைப்புப் பிரிவு 352, (1) (2), (3)-).

நெருக்கடி நிலை செயற்படும்போது,எந்த மாநிலமும் தனது நிருவாகத்தை எவ்வாறு நடத்துதல் வேண்டுமென்று வரையறுத்து, நடுவண் அரசாங்கம் அதற்கு ஆணைகளை விடுத்தற்கும், நடுவண் அரசாங்கத்தின் அதிகாரப் பட்டியலில் அடங்காத எந்தப் பொருளையும் பற்றிச் சட்டம் செய்தற்கும், வரிகளை விதித்தற்கும் நடுவண் அரசாங்கத்துக்கு அதிகாரம் உண்டு. (அரசியலமைப்புப் பிரிவு 353 (a), (b)-).

ஒரு நெருக்கடி அறிக்கை செயலிலிருக்கும்போது மாநிலப் பட்டியலிலுள்ள அதிகாரங்களெல்லாவற்றையும் தானே ஏற்றுக்கொண்டு சட்டம் செய்தற்கு நடுவண் பாராளுமன்றத்துக்கு அதிகாரம் உண்டு. நெருக்கடி நிலை முடிவடைந்த ஆறு மாத காலத்துக்குள் நடுவண் பாராளுமன்றம் மாநிலப் பட்டியலின் மீது செய்யும் சட்டமும் செயற்படாமல் நீங்கிவிடும் (பிரிவு, 250, (1), (2)-).

(ஆ) ஏதேனுமொரு மாநிலத்தின் அரசாங்கம் இந்திய அரசியலமைப்பின் பிரிவுகளுக்கிணங்கச் செயலாற்ற முடியாத ஒரு சூழ்நிலை அந்த மாநிலத்தில் தோன்றியுள்ளதாக அதனுடைய ஆளுநர் குடியரசுத் தலைவருக்கு அறிவித்தால், அப்போது குடியரசுத் தலைவர் ஒரு நெருக்கடி நிலை அறிக்கையை வெளியிட்டு, அதன் வாயிலாக அந்த மாநிலத்தின் முழு அல்லது ஒரு பகுதி நிருவாக அதிகாரங்களைத் தாமே ஏற்றுச் செயற்படுத்தவும், அந்த மாநிலச் சட்டமன்றத்தின் அதிகாரங்களை நடுவண் பாராளுமன்றத்திடம் ஒப்படைக்கவும், நெருக்கடி ஆணையை நிறைவேற்றவும் வேண்டிய துணைவிதிகளை எல்லாம் செய்யவும் அதிகாரம் உடையவராவார். ஆனால், மாநில உயர்நீதி மன்றத்தின் அதிகாரங்களைக் குடியரசுத் தலைவர் ஏற்றுச் செயற்படுத்த மாட்டார். அவரால் வெளியிடப்படும் நெருக்கடி நிலை அறிக்கை அது வெளியிடப்பட்ட இரண்டுமாத காலங்களுக்குள்ளாகப் பாராளுமன்றத்தின் இரு மன்றங்களின் தீர்மானங்களின் வாயிலாக ஒப்புக் கொள்ளப்படாவிடில், அது செயலற்றுப் போகும். இவ்வாறு ஒப்புக் கொள்ளப்படும் நெருக்கடி நிலை அறிக்கையும் ஆறு மாதங்களுக்கே செயற்படும். இந்தக் காலவரம்பு முடிவடையும் முன்னதாக அவ்வறிக்கை மேலும் ஆறுமாத காலத்துக்குப் புதிய தீர்மானங்களின் வாயிலாகப் புதுப்பிக்கப்படுதல் கூடும். எவ்வாறேனும் எந்த ஒரு நெருக்கடி நிலை அறிக்கையும் மூன்றாண்டுக் காலத்துக்கு மேல் நடைமுறையில் இருத்தல் இயலாது. (அரசியலமைப்புப் பிரிவு 356 (1) a,b,c, (3), (4)-).

நெருக்கடிநிலை அறிக்கை செயலிலிருக்கும் காலத்தில் இந்திய அரசியலமைப்புப் பிரிவு 19-இல் வழங்கப்பட்டுள்ள பேச்சுரிமை, கூட்டம் கூடும் கழகங்கள் அமைக்கும் உரிமை, இந்திய நாட்டில் எங்கும் போய் வருவதற்கும், குடியேறி இருப்பதற்கும் உரிய உரிமை, சொத்துகளை வாங்கவும், விற்கவும், எத்தொழிலையும் செய்தற்கும் உள்ள உரிமை முதலிய அடிப்படை உரிமைகளை அப்போதைக்கு நிறுத்தி வைப்பதற்கு மாநில அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு.(அரசியலைப்புப் பிரிவு 358). நெருக்கடிநிலை செயற்படும் காலத்தில் மேற்படி ஆதார உரிமைகளைப் பாதுகாக்கும் பொருட்டு எவரும் நீதிமன்றங்களில் வழக்குத் தொடுக்க இருக்கும் உரிமையையும் குடியரசுத் தலைவர் நிறுத்திவைக்கலாம். (அரசிலயமைப்புப் பிரிவு. 359).

(இ) மூன்றாவது வகையான நெருக்கடி நிலை நிதி நெருக்கடி நிலை (Financial Emergency)ஆகும்.

இந்திய நாட்டின் அல்லது அதன் எந்த ஒரு மாநிலத்தின் நிதிநிலைமையோ, நாணயமோ (credit) உறுதியாக இல்லாமல் பாதிப்புக்குள்ளாக இருப்பதாகக் குடியரசுத் தலைவர் கருதினால், அதனைச் சீராக்கும் பொருட்டு ஒரு நெருக்கடி நிலையை வெளியிடுதற்குக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. இவ்வறிக்கையும் மற்றவகை நெருக்கடி நிலை அறிக்கைகளைப் போலவே பாராளுமன்ற ஒப்புதலுடனே தான் செல்லுபடி ஆகும். இவ்வகை நெருக்கடி நிலையில், மாநில அரசாங்கத்தின் நிதிநிலையைச் சீர்படுத்தும் பொருட்டு அதற்குத் தக்க விதிகளை வகுத்து அதற்குக் கொடுக்கவும், அவற்றைச் செயற்படுத்துதற்குரிய ஆணைகளை அதற்கு விடுக்கவும், அந்த மாநில அதிகாரிகளின் ஊதியங்களையும், படிகளையும் குறைத்து வழங்கவும், அதனுடைய நிதிச் சட்டமுன்வரைவுகளைத் தமக்கு அனுப்பும்படி கேட்டும் அந்த மாநிலத்தைக் கட்டுப்படுத்துதற்குக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. (அரசியலமைப்புப் பிரிவு 360, (1), (2), (3), (4)-).

**இவ்வதிகாரத்தைப் பற்றி மதிப்பீடு:** நெருக்கடி நிலையில் வரம்பற்ற, விரிவான அதிகாரங்களைக் குடியரசுத் தலைவருக்கும், நடுவண் பாராளு மன்றத்துக்கும் இந்திய அரசியலமைப்புச் சட்டம் வழங்கியிருக்கிற காரணத்தால், கூட்டாட்சி அரசுகளில் இருப்பது போல, இந்தியாவிலும் நடுவண், மாநில அரசுகளுக்கிடையேஅதிகாரப் பங்கீடு செய்யப்பட்டிருந்தாலும், உண்மையில் இந்தியா ஒரு கூட்டாட்சி நாடு அன்று (Federation) என்றும், நடைமுறையில் அது ஓர் ஒருமைப்பட்ட அரசே ஆகுமென்றும் (Unitary State) சில அரசியலாசிரியர்கள் கருதுவர்.இந்தக் குறைபாடு காணப்படுகிறது என்பது உண்மையே. ஆயினும், இந்தியாவின் கடந்த கால வரலாற்றையும், இக்கால உலகச் சூழ்நிலைகளையும் காணும்போது, இந்தியச்சுதந்திரத்தைப் பாதுகாத்து, நாடு இருக்குமாறு செய்தற்குச் சிறிது அதிகாரக்குவிப்புள்ள நடுவண் அரசாங்கம் இருத்தல் இன்றியமையாததே என்பதை யாவரும் ஒப்புக் கொள்ளுவர். ஆகையால், இந்தியச் சுதந்திரத்துக்கு யாதொரு இடையூறும் ஏற்படாத சாதாரணச் சூழ்நிலைகளில் நெருக்கடி அதிகாரங்கள் கையாளப்படமாட்டா என்பது தெளிவு. இக்கருத்தை அரசியலமைப்பை வரைந்தவர்களுள் முக்கியமானவர்களான டாக்டர் அம்பேத்காரும்,அல்லாடி கிருட்டிணசுவாமி ஐயரும் அரசியலமைப்புச் சட்டமன்றத்தில் நடைபெற்ற விவாதங்களில் விளக்கியுள்ளனர். மேலும், இக்காலத்தில் தொழில்கள் பெருமளவில் அமைக்கப்படுதலையும், பொருளாதாரத் துறையில் நாடுகள் ஒன்றை ஒன்று நெருக்கமாகச் சார்ந்திருக்க வேண்டிய நிலை தோன்றியுள்ளதையும், அணுக்கருவிகள் வாயிலாகப் பேரழிவைத் தரும் போர்முறைகள் தோன்றியுள்ளதையும் காணும்போதும், வாழ்வின் துறைகளிலெல்லாம் ஒரே சீரான வளர்ச்சியும், பாதுகாப்பும் ஏற்படுதல் வேண்டுமென்பதைக் காணும்போதும், மாநிலங்களின் மீது நடுவண் அரசாங்கத்துக்குக்கட்டுப்படுத்தும் அதிகாரங்கள் சிறிது கூடுதலாகவேஇருத்தல் சரியே எனத் தெரிகிறது. பா.சு.

**துணை நூல்கள்:**

Basu, D.D., Commentary on the Constitution of India, 2 vols., Calcutta. 1955-56.

Jennings, W.I., Some Characteristics of Indian Constitution, Oxford, 1953.

Shiva Rao, B.(Ed.), The Framing of India's Constitution, Select Documents.

The Constitution of India, 1950.

**நெருப்புவழிபாடு:** ஆதிக்குடிகள் தொடக்கக் காலத்தில் இயற்கைக்கப்பாற்பட்ட ஆற்றல்கள் மனிதச் செயல்களை இயக்குகின்றன என நம்பி வழிபட்ட முறையே ஆவியுலக நம்பிக்கையாகும் (Animism). இதற்கடுத்து இந்த ஆற்றல்கள் இயற்கைப் பொருள்களிலும் குடி கொண்டுள்ளது என நம்பிச் சூரியன், சந்திரன், மழை, நீர், தாவரங்கள், விலங்குகள் நெருப்பு முதலானவற்றையும் வழிபடத் தொடங்கினர்.

நெருப்பு, புனிதப்பொருள் எனக்கருதப்பட்டமையால் சமயச் சடங்குகளின்போது நெருப்பை வழிபடும் முறை ஏற்பட்டது. அதனோடு நெருப்பு அழிக்கும் ஆற்றலையும், தூய்மைப்படுத்தும் ஆற்றலையும், வெப்பம், ஒளி ஆகியவற்றைக் கொடுக்கும் ஆற்றலையும் கொண்டுள்ளதால் தொடக்கக் காலத்தில் இது வழிபாட்டுக்குரியதாயிற்று. சிலர் கடவுள் அல்லது ஆவிகள் நெருப்பைக் கொண்டுள்ளன என்று எண்ணியதால் வணங்கினர்.இந்தியாவிலுள்ள பார்சிமரபினரும், சொராசுட்ரானிய சமயக்கொள்கையைப் (Zoroastrianism) பின்பற்றும் பிற மக்களும் நெருப்பைப் புனிதப் பொருளாகக் கொண்டுள்ளனர். தொன்மைக் கிரேக்கர்களும், உரோமானியர்களும் உலகின் முதன்மையான கூறுகளுள் நெருப்பையும் ஒன்றாகக் கருதினர். சில அமெரிக்க இந்தியப் பழங்குடியினர் புத்தாண்டின் முதல் நாளன்று நெருப்பை உண்டாக்கி வழிபடுகின்றனர். இன்றும் பல குடியினர் விழாப்பந்தம் (Bonfire)

ஏற்றிக் கொண்டாடும் சடங்குகள் நடத்துகின்றனர். இவ்வகை வழக்கங்கள் தொன்மைக்காலத்தில் முன்னோர்கள் மேற்கொண்டிருந்த நெருப்பு வழிபாட்டின் தொடர்ச்சியாக இருக்கலாம்.

நெருப்புக் கிடைத்த விதம் குறித்துப் பல கதைகள் நிலவுகின்றன. பண்டைக்காலத்தில் வாழ்ந்த மூதாதையர்களும், வீரர்களும் உயர்ந்த ஆவிகளின் சக்தியிலிருந்து நெருப்பினைத் திருடிப் பெற்றனர் என்பது ஒரு புனை கதையாகும். கிரேக்கக் கடவுளான புரோமிதியசு (Prometheus) போன்றோர் சுவர்க்கத்திலிருந்து பழங்கள், இரும்பு, இசைக்கருவிகள் ஆகியவற்றுடன் நெருப்பையும் கொண்டுவந்தனர் எனப் புராணக் கதைகளை மக்கள் கூறுவர். நோம்மோ (Nommo) என்னும் கருமான் நெருப்பையும் முதன்முதலில் பழுத்த பழங்களையும் பூமிக்குக் கொண்டுவந்தான் எனக் கதை கூறுகிறது. எப்பாசுடசிடமிருந்து (Hephestus) புரோமிதியசு நெருப்பினைத் திருடிக்கொண்டு வந்தான் என வேறொருகதை கூறப்படுகிறது. இதனைக் குறிப்பிடும் பொருட்டே புரோமிதியசு இருந்த இடங்களில் ஆண்டுதோறும் தீப்பந்த அணிவகுப்புக் கொண்டாடப்படுகிறது. கிரீசு நாட்டில் தீப்பந்த விழா, புரோமித்திய விழா (Promethea Festival) என்னும் பெயரில் கொண்டாடப்படுகிறது.

நெருப்பு பூமிக்கடியில் இருப்பதைக் குறிக்கும் வகையில் வெந்நீரூற்றும் (Geysers), எரிமலைகளும் அமைந்திருக்கும் இடங்களில் விலங்குகளாலும், வீரர்களாலும் நெருப்புக் கொண்டுவரப்பட்டது என்ற வழக்கும் உள்ளது. மௌரி (Mauri) வீரரான மாய் (Maui) என்பவன் நெருப்பினைத் தன் முன்னோரான மகூஇக் (Mahuike) யினரிடமிருந்து கைப்பற்றி அதனை ஒரு மரத்தில் இட்டான் என்றும், அதுமுதல் மரக்கட்டைகளிலிருந்து நெருப்புக் கிடைப்பது சாத்தியமானது என்றும் கூறப்பட்டுள்ளது. குறிப்பாகக் கிழக்கு மற்றும் தெற்கு ஆப்பிரிக்காவிலும் இந்தியா, இந்தோனேசியா, மெக்சிகோ ஆகிய இடங்களிலும் இந்த நம்பிக்கை காணப்படுகிறது. போர்னியோ நாட்டில் நெருப்புப் பற்றி நிலவும் கட்டுக்கதை ஒன்றில் தொத்திப் படரும் கொடி (Liana) ஆணாகவும் அது படர்ந்துள்ள மரம் (Tree) பெண்ணாகவும் உருவகப்படுத்தப்பட்டுள்ளன. இவ்விரண்டிற்குமிடையே உண்டாகும் புணர்ச்சியால் விளைந்ததே நெருப்பு எனப்படுகிறது. வடமேற்கு அமெரிக்காவிலுள்ள 'திலிங்கித்து'ப் (Tlingit) பழங்குடியினரிடையே நெருப்புத் துளையிடும் கருவியிலிருந்து வெளிப்பட்ட உமித்தூளால் சிறுமியொருத்தி மாயமாகக் கருத்தரித்தாள் எனும் கதை நிலவுகிறது. மேற்கு ஆப்பிரிக்காவில் 'உலோங்கோ'ப் (Loango) பேரரசில் புதிதாக நெருப்பினை உண்டாக்குவது இளம் தம்பதியர் வெளிப்படையாகப் புணர்ச்சியுறுவதுடன ஒப்பிடப்பட்டுள்ளது.

மனித உடலில், அதிலும் குறிப்பாகப் பாலின வாழ்க்கையின் மையமாகத் திகழும் பெண்களின் உடலில் அமைந்துள்ளதாகக் கூறப்படும் நெருப்பைப் பற்றித் தொடக்கக் காலத்தில் நிலவிய எண்ணங்கள் பாப்புவா (Pappua), ஆசுத்திரேலியத் தொல்பழங்குடியினரிடையே காணப்படுகின்றன. நியூ கினி, மாரிண்டுத் (Marind) தீவுகளின் பழங்குடியினரிடையே நிலவும் கருத்துப்படி பாலினச் செய்கையால் விளைந்ததே நெருப்பு எனக் கூறப்படுகிறது.



நெருப்பு வழிபாடு

புதிய கற்கால மக்களிடையே நெருப்பினைக் கொண்டு இரும்பினை உருக்கும் தொழில்நுட்ப முறை ஏற்பட்ட காலத்தில் இந்தோனேசியா, அமெரிக்கா ஆகிய இடங்களில் இரும்பினை உருக்கப் பயன்படும் எரிகலன்கள் (Shaft Furnace) பெண்ணாகவும், துருத்திகள் (Bellows) ஆணாகவும் உருவகப்படுத்தப்பட்டு இவை இரண்டிற்குமிடையே ஏற்பட்ட புணர்ச்சியால் விளைந்ததே நெருப்பு எனக் கூறப்படுகிறது. இந்நம்பிக்கை குறிப்பாகப் பண்டு (Bantu) பழங்குடியினரிடையேயும காணப்படுகிறது.

அரசவழி வந்த மூதாதையர்களின் கோயில்களிலிருந்த புனிதமான நிலையான நெருப்பு ஆண்குறியுடைய மூலப்பொருளைக்(Phallic element) கொண்டிருந்ததாகப் பண்டைய சமுதாயத்தினரிடையே வாழ்ந்த அரசர்கள் நம்பினர் எனப்படுகிறது. அக்காலத்தில் கன்னிப் பெண்கள் நெருப்பின் மனைவியராகக் கருதப்பட்டனர். பண்டைய உரோமாபுரி, மோனோமொடாபா (Monomotapa), முந்தைய கொலம்பிய அமெரிக்கா(Pre-Columbian America) ஆகிய இடங்களில் இத்தகு கன்னிப் பெண்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளனவென்றும் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. மத்திய அமெரிக்காவின் மாயா (Maya) பழங்குடியினரிடையே நெருப்புப் பாதுகாவலர்கள் (Fire Caretakers) பற்றிய ஆணை (order), நெருப்பிலிருந்து தெய்வப் பிறவியாகத் தோன்றிய கன்னிப் பெண்ணொருத்தியால் கண்டுபிடிக்கப்பட்டது எனப்படுகிறது. பொதுவாக இளவரசர்களின் முடிசூட்டு விழாவில் நெருப்பினை அணைப்பதும், தூண்டிவிடுவதுமான செயல் இளவரசரின் ஆன்மாவை நிலையான நெருப்பில் தூய்மைப்படுத்தும் செயலாகக் கருதப்பட்டது. நிலையான நெருப்பு தொடர்ச்சியாகப் புனித நெருப்பில் புதுப்பிக்கப்படுவதாகவும், அங்ஙனம் புதுப்பிக்கப்படுதல் புதிய ஊழியின் தொடக்கத்தைக் குறிப்பதாகவும் நம்பினர்.

அட்டார் (Atar) எனும் கடவுளின் சமய நெறியிலிருந்து பெறப்பட்டதே பரானியர்களின் நெருப்பு வழிபாடு எனப்படுகிறது. இவ்வழிபாடே கி.மு.6-ஆம் நூற்றாண்டில் சோராசுடர் என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட சோராசுட்ரானிய சமயத்தின் மையச் சடங்காகத் திகழ்கிறது. இக்கால இந்தியாவில் இச் சமயத்தைச் சேர்ந்த பார்சிமக்களிடையே இன்றும் நெருப்பு வழிபாடு உள்ளது. இவர்கள் கோயிலில் அர்ச்சகர்கள் சந்தனக் கட்டையினை எரித்து நெருப்பினை உண்டாக்கி அதனை அழியாமல் பராமரிக்கின்றனர்.

சில பழங்குடியினரிடையே நெருப்புக் குலக் குறியாகவும் (Totem) வழிபடப்படுகிறது. மேற்கு ஆசுத்திரேலியப் பழங்குடியினர் இதற்கு ஓர் எடுத்துக் காட்டு.

மத்திய ஆசுத்திரேலியாவைச் சேர்ந்த வாரமுங்காப் (Warramunga) பழங்குடியினரிடையேயும் அருண்டாப் (Arunta) பழங்குடியினரிடையேயும் இன்றும் நெருப்புச் சடங்கு (Fire Ceremony) நடைபெறுகிறது. வாரமுங்காப் பழங்குடி மக்களிடையே சண்டையினை முடிவுறச் செய்ய இச்சடங்கு செய்யப்படுகிறது. இதன் முதல்கட்டமாகப் பெண்களின் நடனம் நடைபெறுகிறது. இச்சடங்கில் பங்குகொள்ளும் கணவன், தன் மனைவியை ஒரு வார காலம் பிரிந்திருத்தல் அவசியமெனக் கருதப்படுகிறது.

அருண்டாப்பழங்குடியினர் தங்கள் ஏற்புச்சடங்கை (Initiation Ceremony)நிறைவுறச் செய்யவும் நெருப்புச் சடங்கினை மேற்கொள்ளுகின்றனர். இச்சடங்கினை இவர்கள் 'எங்குவாரா' எனக்குறிப்பிடுகின்றனர். பல்வேறு இடங்களில் பரவிக்கிடக்கும் தமது உறவினரை ஒன்றுசேர்க்க இச்சடங்கினைப் பயன்படுத்திக்கொள்கின்றனர்.

தமிழகக் கிராமங்களில் நடைபெறும் சில திருவிழாக்களின்போது நெருப்பு மிதித்தல் சடங்கு நடைபெறுகிறது. வேண்டுதல்களுக்காக மக்கள் இச்சடங்கினை விரதமிருந்து மேற்கொள்ளுகின்றனர். இங்ஙனம் நெருப்பு வழிபாடு பிறப்பு, இறப்பு, திருமணம், ஏற்புச் சடங்கு போன்ற அனைத்திலும் மேற்கொள்ளப்படுகிறது. ம.ந.பு.

**நெல்சன்:** ஒரேசியோ வைகவுண்டு நெல்சன் (Horatio Viscount Nelson,கி.பி.1758-1805),இங்கிலாந்தின் தலைசிறந்த கடற்படைத் தளபதியாக இருந்து பிரான்சுக்கு எதிராகப் பல போர்களில் வெற்றி பெற்று, உலக வரலாற்றில் இடம் பெற்றுள்ளார். இவருடைய வெற்றிகளின் பயனாக முதலாம் நெப்போலியனின் படையெடுப்புகளிலிருந்து இங்கிலாந்து காப்பாற்றப்பட்டது. இங்கிலாந்துக் கடற்படை உலகிலேயே வலிமை மிக்கதாக ஆயிற்று.



நெல்சன் பிரபு

நெல்சன், இங்கிலாந்தில் நார்போக்கில் (Norfolk) உள்ள பர்ன்காம்-துரோப்பில் (Burnham-Trope) கி.பி. 1758-இல் பிறந்தார். இவர் தம் 12-ஆம் வயதில் கடற்படையில் சேர்ந்து கிழக்கு, மேற்கு இந்தியத்

தீவுகளுக்குப் பலமுறை சென்று கி.பி. 1779-இல் தள பதியானார் (Captain). இவர், மேற்கிந்தியத் தீவு களில் இருந்தபோது கி.பி. 1787-இல் பிரான்சிசு நிசு பெத்து (Francis Nisbet) என்பவரை மணந்தார். இவர் கி.பி. 1793-இல் 64 பீரங்கிகள் பொருத்தப் பட்ட அகமெம்னான் (Agamemnon) என்ற கப்பலின் தலைவராக (Commander) நியமிக்கப்பட்டு மத்திய தரைக்கடல் கடற்படையில் பணி புரிந்தார். நேப் பிள்சு சென்றிருந்தபொழுது இவர் எம்மா ஆமில் ட்ன் (Emma Hamilton) என்பவரைக் கண்டு காதல் கொண்டார். பின்னர் அந்நாட்டிற்குச் சென்ற பொழுது அவரைத் திருமணம் செய்துகொண்டார். கார்சிகா (Corsica) தீவிலுள்ள பாசிடியா (Bastia), கல்வி (Calvi) ஆகிய இரு இடங்களையும் பின்னர் அத் தீவையும் கைப்பற்றப் பேருதவியாக இருந்தார். கல்வியில் நடந்த போரின்பொழுது இவரது வலக் கண்ணில் காயம் ஏற்பட்டுப் பார்வையை இழந்தார். பின்னர் கி.பி. 1797-இல் சாந்தாகுருசு தெதேனரிப்பு (Santa Cruz de Tenerife) என்ற இடத்தைக் கைப் பற்ற முயன்றபொழுது அவரது வலக் கையில் பெரும் காயம் ஏற்பட்டு அது வெட்டி எடுக்கப்பட்டது.

**நைல் நதிப் போர்:** முதலாம் நெப்போலியனின் எகிப்தியப் படையெடுப்பிற்காகப் பிரான்சுக் கடற் படை தாலூனில் (Toulon) வைக்கப்பட்டிருந்தது. அதனைத் தடுத்து நிறுத்த நெல்சன் தலைமையில் இங்கிலாந்தின் கடற்படை அனுப்பப்பட்டது. ஆனால், பிரான்சுப் படை இவரை ஏமாற்றிவிட்டு எகிப்திற் குச் சென்றது. நெல்சன் அபூ கிர் வளைகுடாவில் (Aboukir Bay) அப்படை இருப்பதைக் கண்டுபிடித்து கி.பி. 1798-இல் நடைபெற்ற நைல் நதிப் போரில் அப்படையை அழித்தார். அதனால், நெப்போலியனின் படையெடுப்புத் தடுத்து நிறுத்தப்பட்டு மத்திய தரைக் கடற் பகுதியில் ஆங்கிலேயர் கடற் படையின் ஆதிக் கம் நிலைநாட்டப்பட்டது. இப்போரில் நெல்சனின் நெற்றியில் ஏற்பட்ட காயம் அவருக்கு வலியைக் கொடுத்துக் கொண்டேயிருந்தது. அவர் தேசிய வீர ராக ஆனார். அவருக்குப் பிரபு பட்டமும், ஆண் டிற்கு 200- பவுன் ஓய்வு ஊதியமும் வழங்கப்பட்டன.

**திரபால்கர் போர்:** இவர் கி.பி. 1803-இல் இங்கி லாந்தின் மத்திய தரைக்கடல் பகுதி கடற்படையின் தலைமைத் தளபதியாக (Commander-in-Chief) நிய மிக்கப்பட்டார். இங்கிலாந்திற்கும் பிரான்சிற்கும் இடையே போர் தொடங்கியபொழுது பிரான்சுக் கடற்படை இங்கிலாந்தின்மீது படையெடுப்பதற் காகத் தாலூனில் வைக்கப்பட்டிருந்தது. நெல்சன், அப்படை அங்கிருந்து புறப்பட முடியாமல் ஈராண்டு கள் பார்த்துக்கொண்டார். பின்னர் கி.பி. 1805-இல் நடைபெற்ற திரபால்கர் சண்டையில் (Battle of the Trafalgar) பிரான்சுக் கடற்படையை அழித்து, இங்கி லாந்தின் மீது படையெடுக்க வேண்டுமென்ற நெப் போலியனின் எண்ணத்தை முறியடித்தார். வரலாற் றுச் சிறப்பு மிக்க இப் போரில் நெல்சன் மரண மடைந்தார். இவருடைய பூதவுடல் கி.பி. 1805,நவம் பரில் புனித பால் கோயிலில் (Saint Paul's Cathedral) நல்லடக்கம் செய்யப்பட்டு, அங்கு இவருக்கு அழகிய நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டது. இவருடைய நினைவாக இங்கிலாந்தில் திரபால்கர் சதுக்கத்தில் கி.பி. 1849-இல் 'நெல்சன் தூண்' (Nelson Column) நிறுவப்பட்டது. (காண்க: திரபால்கர்)

இங்கிலாந்து கடற்படையின் சிறந்த தலைவரான இவர், தம்முடைய வீரத்தாலும், திறமையாலும், அறிவு நுட்பத்தாலும் பல வெற்றிகளைப் பெற்று அந்நாட்டுக் கடல் ஆதிக்கத்தை நிலை நாட்டினார். நைல் நதிப் போரிலும், திரபால்கர் சண்டையிலும் இவர் அடைந்த வெற்றிகளின் பயனாகப் பிரிட்ட னின் தேசிய வீரராகக் கருதப்படுகிறார். சி இரெ.

**துணை நூல்கள்:**

**Gazen Charles Downer**, Modern Europe upto 1945, S.Chand & Co., Ltd., New Delhi, 1977

**Grant A.J. and Temperley.**, Europe in the Nineteenth and Twentieth Centuries (1789-1950), Longmans, London, 1964.

**நெல்சன் ஆறு:** கனடாவில் மானிடோபா (Manitoba) மாநிலத்தின் வடகிழக்குப் பகுதியில் ஓடும் ஒரு நீண்ட ஆறு நெல்சன் ஆறு. இது வின்னிபெக்கு ஏரியில் (Lake Winnipeg) தோன்றி, வடக்கு நோக்கி ஓடி, இசுபில்டு (Split) ஏரியை அடைந்து, பின்னர் வடகிழக்குத் திசையில் சென்று நெல்சன் கோட்டைக்கு அருகில் அட்சன் வளைகுடாவை (Hudson Bay) அடை கிறது. வின்னிபெக்கு ஏரியின் வடபகுதியில் இது உற்பத்தியாகும் இடத்திலிருந்து அட்சன் வளைகுடா வில் இது கலக்கும் இடம் வரை இதன் நீளம் 644 கி.மீ. இவ்வாற்றுடன் வின்னிபெக்கு, வின்னிபெகாசிசு (Winnipegosis), மானிடோபா ஏரிகளும் வின்னிபெக்கு, இரட்டு (Red), சாசுகட்டுசுவான் (Saskatchewan) ஆறு களும் இணைகின்றன. எனவே, இராக்கீசில் (Rochies) போ ஆறு (Bow River) தோன்றுமிடத்திலிருந்து அட்சன் வளைகுடாவில் கலக்கும் இடம்வரை நெல்சன் -சாசுகட்சுவான் ஆறுகளின் நீளம் 2575 கி.மீ. அதிக மான நீரைக் கொண்டுசெல்லும் இந்த ஆறு, சில இடங்களில் ஏரிகளை உண்டாக்கி, சில இடங்களில் மிக ஆழமாகவும், சில இடங்களில் மிக வேகமாகவும் ஓடுகிறது.

இதன் முகப்பகுதியில் 208 கி.மீ. நீளத்திற்கும் வின்னிபெக்கு ஏரியில் 160 கி.மீ. நீளத்திற்கும் போக்கு

வரத்திற்குப் பயன்படுகிறது. இவ்வாற்றின் முகப்பகுதி கி.பி.1612-இல் தாமசு பட்டன் (Thomas Button) என்ப வரால் கண்டுபிடிக்கப்பட்டது. கனடாவின் மேற்குச் சமவெளிக்குச் சென்று வந்த உரோம வணிகர்களுக்கு இது மிகவும் பயன்பட்டது. பின்னர்க் அட்சன் வளைகுடாக்குழுமம் (Hudson Bay Company) பல ஆண்டுகள் இதனைப் போக்குவரத்திற்குப் பயன் படுத்தி வந்தது.

தென் கனடாவில் புல்வெளிப் பகுதிக்கு (Prairies) இது அதிகமான மின் விசையை அளிக்கிறது. கெல்சி நீர்வீழ்ச்சியில் (Kelsey Rapids) எடுக்கப்படும் மின்சாரம், தாம்சனில் (Thompson) உள்ள நிக்கல் சுரங்கங்களுக்கும், சுத்திகரிப்பு நிலையத்திற்கும் பயன் படுகிறது. சி.இரெ.

**நெல்சன், லியோநார்டு (கி.பி. 1882-1927):** இவர் செருமானியத் தத்துவஞானி. இவர் புதிய பிரிசியன் (New Friesian) பள்ளியைத் தொடங்கி வைத்தவர். இவர் பெர்லினில் பிறந்தார். கணிதமும் தத்துவமும் படித்தபிறகு, 1919-ஆம் ஆண்டு ஒரு பேராசிரியராகப் பணிமேற் கொண்டார்.

நெல்சன் லியோநார்டின் தத்துவ நூல் இரண்டு விதச்சிக்கல்களைப் பற்றியது. ஒன்று, தத்துவத்திற்கு ஓர் அறிவியல் அடிப்படையை ஏற்படுத்துவது. இரண்டாவது அறவியல் தத்துவத்தை முறையாக வளர்ச்சியடையச் செய்வது மட்டுமல்லாமல், நேர்மைத் தத்துவத்தையும் வளர்ச்சியடையச் செய்து கல்வியிலும், அரசியலிலும் அதனைக் காப்பது. நெல்சனின் திறனாய்வு அவரைத்தத்துவ ஆராய்ச்சி யில் கொண்டு சேர்த்தது. நெல்சன், சேக்கப் பிரடிரிக் பிரைசு (Jakob Friedrich Fries) என்பவரின் தத்து வத்தை நன்றாக ஆராய்ந்தார். இவர் மாணவராக இருக்கும்பொழுதே பிரைசின் எழுத்துகளைப் படித்து வந்தார்.

**திறனாய்வு முறையும் பகுத்தறிவு ஆராய்ச்சியும்:** நெல்சன் அவருடைய எழுத்துகளில் பகுத்தறிவு ஆராய்ச்சியையும், அதனைப் பற்றித் தவறுதலாகப் பொருள் கொண்ட அநுபவங் கடந்த மூல தத்துவ ஆராய்ச்சியையும், உளநூல் ஆராய்ச்சியையும் பிரித் தார். பகுத்தறிவு ஆராய்ச்சியானது ஒரு தத்துவ முறைக்கு அடித்தளம் அமைக்க உதவுகிறது. மேலும், ஓர் அறிவியல் தளமும் திறனாய்வு மூலம் ஏற்படு கிறது. நெல்சன் கருத்துப்படி, பகுத்தறிவு ஆராய்ச்சி யில் ஏற்பட்ட தத்துவமானது, அநுபவங் கடந்த மூல தத்துவ ஆராய்ச்சியில் சென்றடையும் அல்லது உளநூல் தத்துவத்தில் சென்றடையும்.

**இயற்கைத் தத்துவம்:** அறிதலைப் பற்றி நெல்சன் கூறுவது கணிதத் தொடர்பான இயற்கைத் தத்து வத்தைக்குறிக்கும். ஒவ்வொரு இயற்கைக் கொள்கை யும், உற்றுநோக்கலும், செயற்காட்சியும் கொடுத்த தீர்வைக் கடந்துசெல்லும்.

**அறஇயல் திறனாய்வு:** நெல்சன் திறனாய்வு முறையைச் செயல்முறைத் தத்துவத்தில் பயன்படுத்தி னார். மேலும், நேர்மைத் தத்துவம் கல்வியிலும், அரசியலிலும் பயன்படுத்தப்பட்டது. நெல்சன் இரண்டுவித அடிப்படை அறக் கொள்கைகளைத் கடைப்பிடித்தார். ஒன்று சமநிலையான நோக்கு; மற்றொன்று ஒவ்வொருவருடைய வாழ்க்கையையும் உண்மை, அழகு, நேர்மை என்ற அடிப்படையில் அமைப்பது.

மேற்கூறிய இரண்டு கொள்கைகளின் அடிப்படை யில் நெல்சன் தம்முடைய அற இயல் தத்துவத்தை அமைத்தார். அற இயல் மனிதனின் கடமையை வலி யுறுத்துகிறது. நேர்மையான தத்துவம் நேர்மையான அரசை வலியுறுத்துகிறது.

நேர்மைத்தத்துவத்தில் நெல்சன் முதற் கூறா கக் 'முற்கோள்' என்பதனைக் (Postulates) கண்டு பிடித்தார். அவையாவன: பொதுநியாயம், அரசியற் குற்றச்சாட்டு, ஒப்பந்தப்படியுள்ள சட்டம், சொத்துரி மைச் சட்டம் முதலியன. கல்வியானது பலப்படுத்தப் படுதல்வேண்டும். அரசியல் அரசின் நேர்மையை நிலைநாட்டவேண்டும். அரசுகளினிடையில் சட்ட அடிப்படையில் தொடர்புகளை ஏற்படுத்த அர சமைப்புகள் அமையவேண்டும்.

**சுதந்திரமும் கட்டாயத் தேவையும்:** இயற்கையி லுள்ள கட்டாயத் தேவையும் மனிதனின் சுதந்திர மும் பொறுப்பும் நெல்சனின் எண்ணங்களைத் தூண்டின. அறஇயல் சார்ந்த கொள்கைகள் இயற் கையில் அமைந்த மனிதனின் செயல்களுக்குக் காரண மாக இருந்தன. இயற்கையில் நிகழ்கின்றவை யெல் லாம் இயற்கை விதியின்படி நடக்கின்றன.

மனிதன் ஓர் அளவிற்குட்பட்டவன். அவன் நடத்தமுடியாத காரியங்களையெல்லாம் ஒதுக்கி விடலாம் மனிதனின் சுதந்திரம் எவ்வாறு இயற்கை விதியுடன் ஒத்துப்போகும். இதற்கு விடை கடந்த நிலைக் கருத்துக் கொள்கையில் காணலாம். மனித னுடைய அறிவு வரையறையுடையது. முழுமுதற் பொருளைக் காண முடியாது. சுதந்திர உணர்வினால் உலகினை அறியமுடியும்.

**கல்வியும் அரசியலும்:** அறஇயலுக்குத் தேவை யானவை,நெல்சனைத் தத்துவக் கருத்துகளுக்கப்பாற் செயலறிவில் கொண்டுசேர்த்தன. சிறப்பாக அரசி யலிலும், அரசியல் கல்வியிலும் நாட்டம் செலுத்தி

னார். முதலாம் உலகப்போரின் கடைசியில் நெல்சன் மனிதர்களையும், உடன் வேலை செய்கிறவர்களையும் சேர்த்துக்கொண்டு அவர்களை நன்றாகப் படிக்கச் செய்து, அரசியல் வேலைகளைச் சிறப்பாகக் கற்றுக் கொடுத்தார். இவர் 1926-ஆம் ஆண்டு தம்முடைய அரசியல் அமைப்பு முறையைத் தொடங்கினார். இவர் 1924 – ஆம் ஆண்டு கிராமக் கல்வி நிலையம் ஒன்றை நிறுவினார். இங்கே சிறுவர்களும், குழந்தைகளும் கல்வி பயின்றார்கள். பிறகு 1933-ஆம் ஆண்டு தேசிய பொதுவுடைமைக் கட்சியாரால் இந்நிலையம் மூடப்பட்டது.

நெல்சன் ஒரு சிறந்த கல்விமான் மட்டுமல்லாமல் நல்ல ஆசிரியரும் ஆவார். சாக்கிரட்டீசின் முறையைப் பின்பற்றிக் கற்பவர்களை வாதம் செய்யத் தூண்டுவார். இவர் அவர்களுக்கு நியாயமானதாகத் தோன்றியதைச் செய்யக் கூறுவார். அறஇயல்களைச் செயல்முறையில் செய்துவந்தார். இரா. கோ.

**நெல்லிக்குப்பம்**: தமிழ்நாட்டில் தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த கடலூருக்கு மேற்கே, பண்ணுருட்டிக்குச் செல்லும் வழியில் பத்துக் கிலோ மீட்டர் தொலைவில்உள்ளது நெல்லிக்குப்பம் நகரம். இது ஒரு நகராட்சி.

இந்நகரில் அமைந்துள்ள இ.ஐ.டி பாரி(இந்தியா) நிறுவனமான சருக்கரை மற்றும் இனிப்பு ஆலைகள் புகழ் மிக்கனவாகும். இந்நிறுவனம் கி.பி.1788 – இல் தொடங்கப் பெற்றது. இந்நிறுவனம் தன் இருநூறாவதாண்டு விழாவைக் கொண்டாடிய பெருமை பெற்றுத்திகழ்கிறது. இந்நகரில்அரசினர் பள்ளிகள், நகராட்சிப் பள்ளிகள், கிறித்தவப் பள்ளிகள் என ஆடவர்க்கும் மகளிர்க்கும் பள்ளிகள் உள்ளன. ஆயினும் இந்நகரில் கல்லூரி ஏதுமில்லை.

இந்நகர்க் கோயில்களுள் பூலோகநாதர் கோயிலும் கைலாச நாதர் கோயிலும் பழமையும் சிறப்பும் கொண்டனவாம். பூலோகநாதர் கோயில் இந்நகரின் கீழ்பால்கடலூர் செல்லும் நெடுஞ்சாலையையொட்டி அமைந்துள்ளது. ஆடல்வல்லான் திருநடம்புரியும் திருச் சிற்றம்பலமும் கோவிந்தராயர் பள்ளிகொண்ட திருச்சித்திரகூடமும் ஒருங்கே அமைந்து விளங்கும் தில்லைத் திருக்கோயிலின் சிறப்பு இப்பூலோக நாதர் கோயிலுக்கும் உண்டு. பூலோகநாதராகிய சிவபெருமானையும் பிரசன்ன வேங்கடாசலபதியாகிய திருமாலையும் திருக்கோயிலுள் ஒரிடத்து நின்றே வணங்கி வழிபடலாம். ஈசுவரி புவனாம்பிகை; தாயார் அலர்மேல் மங்கையம்மை, திருச்சுற்றிலே தட்சிணாமூர்த்தி, சொன்னவிநாயகர், முத்துக் குமாரசாமி, வைணவ துர்க்கை, சண்டீசர் ஆகியோரும் தனித்தனியே கோயில் கொண்டுள்ளனர். திருக்கோயில் மண்டபத்தில் விநாயகர் தண்டபாணி, நவக்கிரகம் ஆகியோர் உள்ளனர். உற்சவமூர்த்திகளுள் அப்பரடிகளும் உளனரென்பது குறிப்பிடத்தகுவதாகும். திருக்கோயிலின் தலவிருட்சம் வில்வம். வலப்புறத்தில் திருக்குளம வறட்சியோடு காணப்படுகின்றது. இப்போது இத்திருக்கோயில் தமிழக அரசின் இந்து அறநிலையத் துறையின் ஆட்சிப் பொறுப்பில உள்ளது. முப்பதாண்டுகளுக்கு முன் சிறப்புற உற்சவங்கள் நடைபெற்று வந்த இக்கோயிலில் இப்போது சிறப்பு அபிடேகங்கள் மட்டும் நிகழ்கின்றன.

நெல்லிக்குப்பத்திற்குக் கிழக்கில் வைணவத் தலமான திருவகீந்திர புரமும் மேற்கிலும் தென்மேற்கிலும் சிவத்தலங்களான திருக்கண்டேச்சுரமும் திருமாணிகுழியும் உள்ளன. இவ்வூர்க்குப் பேருந்துத் தடத்தோடு புகைவண்டித் தடமும் உண்டு. வ.கு.

**நெல்லூர்**: இது இந்தியாவில் ஆந்திர மாநிலத்தில் உள்ள மாவட்டத் தலைநகர். மாவட்டத்தின் பெயரும் இதுவே. இந்நகர் சென்னைக்கு வடக்கே 152 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. பெண்ணாற்றங்கரையில் அமைந்துள்ள இவ்வூர் வரலாற்றுச் சிறப்பு மிக்கது. நெல்லூர் மாவட்டத்தின் பரப்பளவு 13068 சதுர கிலோ மீட்டர். நெல்லூர் மாவட்டத்தில் மக்கள் தொகை 201 4879(1981 )கிழககுத் தொடர்ச்சி மலையின் சரிவில் உள்ளதும் கடற்கரை வரையிலும் பரவிவிரிந்துள்ளதுமானஇமமாவட்டத்தில்பெண்ணாறு, காண்டலாறு, சுவர்ணமுகி, முசி, பாலாறு பொன்னாறு ஆகியவை பாய்கின்றன. இவற்றின் பயனாக ஆந்திர மாநிலத்தின் செழிப்பு மிக்க மாவட்டங்களுள் ஒன்றாக இம்மாவட்டம் விளங்குகிறது. இங்கு வளர்ந்து வரும் கால்நடைகளும் உருவாக்கப்படும் வேலைப்பாடு மிகுந்த மட்பாண்டங்களும் தனித்தன்மை பெற்றவையாம். இந்தியக் கடற்கரையில் அடிக்கடி புயலின் சீற்றத்திற்கு உட்படும் மாவட்டங்களில் இதுவும் ஒன்றாகும்.

நீண்டகாலமாகக் கருநாடக நவாப்பின் ஆட்சியிலிருந்த நெல்லூர் கி.பி.1801 ஆம் ஆண்டு ஆங்கிலேயர் ஆட்சிக்கு மாறியது. இந்நகர் கி.பி.1866 -ஆம் ஆண்டு நகராட்சி நிலைக்கு உயர்த்தப்பட்டது. இவ்வூரின் முதல் அறிவியல் கலைக்கல்லூரி கி.பி. 1876-ஆம் ஆண்டு வேங்கட்டகிரி இராசாவால் நிறுவப்பட்டது. இங்குள்ள சமசுகிருதக் கல்லூரியும் ஏனைய கல்லூரிகளும் வேங்கடேசுவராப் பல்கலைக் கழகத்துடன் இணைக்கப் பட்டுள்ளன. வெள்ளையர் ஆட்சிக் காலத்தில் இந்நகரில் அவர்கள் இராணுவ முகாம் ஒன்றை நிறுவியிருந்தனர். எஸ்.கி.அ.

**நெல்லையப்பர், பரலி. சு.**: இவர் திருநெல்வேலிக்கு அருகேயுள்ள பரலிக்கோட்டையில்

கி.பி.1889-ஆம் ஆண்டு பிறந்தார். தமிழறிஞர் சிவ ராமப்பிள்ளையிடம் பயின்ற இவர் வடமொழி, வங்கமொழி, இந்தி ஆகிய மொழிகளிலும் புலமை வாய்ந்தவர். இவர் சிறந்த இதழாசிரியராக 45 ஆண்டுக்காலம் பணியாற்றியவர். 'சூரியோதயம்' என்ற இதழின் உதவியாசிரியராகப் பணிபுரிந்து பின்னர்ப்'பாரதி'என்ற இதழைத் தெ.பொ.கிருட்டிண சாமிப் பாவலர் துணையோடு தொடங்கினார். அவ் விதழை மூன்றாண்டுகள் நடத்திய பின்னர்த்'தேசபக் தன்' இதழுக்குத் திரு.வி.க., வ.வே.சு. ஐயர் ஆகி யோருக்குப் பின் ஆசிரியராக அமர்ந்தார்.'உலோகோ பகாரி' என்ற கிழமை இதழுக்கு 1913-ஆம் ஆண்டு துணையாசிரியராக அமர்ந்து, 1922-ஆம் ஆண்டு அவ்விதழின் உரிமையாளராகவும் ஆசிரியராகவும் பணியில் ஈடுபட்டு 1949 வரை நடத்தினார்.



நெல்லையப்பர், பரலி. சு.,

இவர் நல்ல நூலாசிரியராகவும் விளங்கினார். வ.உ.சி வரலாற்றை 1941-ஆம் ஆண்டு எழுதி வெளி யிட்டார் காந்தியடிகள் எழுதிய 'இந்திய சுயராச் சியம்' என்னும் நூலை மொழிபெயர்த்தார். மெய்ய றிவாளர் அரவிந்தர் வங்கமொழியில் தம்முடைய மனைவிக்கு எழுதிய கடிதங்களை மொழிபெயர்த் தார். வங்கப் புதின ஆசிரியர் பக்கிம் சந்திர சட்டர்சி எழுதிய 'சோடி மோதிரம்', 'இராதா ராணி' என் னும் புதினங்களைத் தமிழில் வெளியிட்டார். சிவானந் தர் ஆங்கிலத்தில் எழுதிய அறிவுரைகளைத் தமிழில் மொழிபெயர்த்துச் 'சிவானந்தர் உபதேச மொழிகள்' என்னும் பெயரில் வெளிட்டார். இவருடைய பாடல் கள் 'நெல்லைத்தென்றல்' என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளன.

இவர் மார்க்கசு அரேலியரால் எழுதப்பட்டு இராசகோபாலாச்சாரியார் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட 'மார்க்க அரேலியர் ஆத்ம சிந்தனை' என்னும் நூலை வெளியிட்டார். திருவாசகத்தை மிகுந்த எண்ணிக்கையில் அடக்கவிலைக்கு வெளி யிட்டுத் தமிழ்நாடெங்கும் பரவச் செய்த பெருமையும் இவருக்குண்டு.

இவர் சிறந்த விடுதலைப் போராட்ட வீரரா கவும் திகழ்ந்தவர். விடுதலைப் போரில் இவர் இரண்டுமுறை சிறை சென்றவர். வ.உ. சியோடு 1908 -ஆம் ஆண்டு ஒரு சேரச் சிறையில் இருந்தார். காந் தியடிகளால் 1941-ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற அறப்போரில் பங்கேற்று மீண்டும் சிறைபுகுந்தார். வ.உ. சியால் தொடங்கப்பெற்ற 'உள்நாட்டுக் கப்பல் நிறுவனம்'(Swadesi Steam Navigation)என்ற அலுவல கத்தில்தம் தமையனார், தம்பியார் ஆகிய இருவ ரோடு தாமுஞ் சேர்ந்து பணியாற்றிய பெருமைக்கு உரியவர்.பாரதியாரிடம் நெருங்கிய நட்புக் கொண்டி ருந்த இவர் அவருடைய பாடல்களை அரசினரின் எதிர்ப்புக்கு நடுவே மக்களிடையே வெளிப்படுத் தினார். அரவிந்தர் புதுச்சேரிக்கு வந்தபோது அவரை வரவேற்றவர்களுள் இவரும் குறிப்பிடத் தக்கவர். மொழிக்காகவும் நாட்டுக்காகவும் உழைத்த இவர் இறுதிவரை திருமண வாழ்வில் ஈடுபடாமலேயே 1971-ஆம் ஆண்டு மறைந்தார். சா.உ.

**நெல்லை வருக்கக்கோவை:** இக்கோவை நூல் திருநெல்வேலிப் பெருமான் நெல்லை நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது. நூலின் இறுதிப் பாடல் வாயிலாக இந்நூலாசிரியர் 'வீரையில் வேதியன் அம்பிகாபதி' என அறிய முடிகிறது. இவர் கி.பி.16-ஆம் நூற்றாண்டுப் புலவர்.

வருக்கக் கோவை என்பது தமிழ் நெடுங்கணக் கில் மொழிக்கு முதலில் வரத்தக்க எழுத்துகளாகிய அகரம் முதல் வகரம் வரையிலுள்ள எழுத்துகளை முதலெழுத்தாகக் கொண்ட கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் கோவை இலக்கியத்திற்குரிய சிலதுறை களைத் தேர்தெடுத்துப் பாடி அமைப்பது.இந்நெல்லை வருக்கக்கோவை சிறப்புப் பாயிரமுள்பட 100 பாடல் களால் ஆனது. இவ்வகை நூல்களில் சிலசமயம் நூலாசிரியர் ஓரெழுத்துக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்கள் பாடுவதுண்டு. அவ்வாறு இந்நூலில் 'தொ' என்ற எழுத்துக்கு இரண்டு பாடல்கள் பாடப் பெற்றுள்ளன. இந்நூலில் திரட்டப்பட்டுள்ள துறை கள் கோவையின் பொருள் தொடர்பை நோக்கித் திரட்டப் பெறவில்லை எனலாம். பாடல்கள் பலமுன் பின்னாக அமைந்துள்ளன. இந்நூலின் இறுதியில் ஆசிரியர் வாழ்த்து அமைந்திருப்பது கோவை இலக் கிய வகைக்கு ஒரு புதுமையாகும். இச்சிறுநூல் மு.ரா. அருணாசலக் கவிராயரால் 1914-ஆம் ஆண்டு

பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலைப் பாடியவர் நெல்லைப் பெருமாள் ஐயர் என்றும் சிலர் கருதுவர்.

சா.உ.

**நெவாசா:** மகாராட்டிர மாநிலத்தில் அகமது நகர் மாவட்டத்தில் உள்ளதோர் ஊர். இது தொல்லியல் சிறப்புப்பெற்றஊராகும். இவ்வூர் கோதாவரியின் துணை ஆறான பிரவாரா ஆற்றின் வடகரையில் அமைந்துள்ளது. இங்குத் தக்காணக் கல்லூரியின் தொல்லியல் பிரிவினர், முனைவர் சங்காலியா தலைமையில், அகழாய்வினை 1954-ஆம் ஆண்டு மேற்கொண்டனர்.

இப்பகுதியில் கற்காலத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்துள்ளமை அகழாய்வுகளின் மூலம் கண்டறியப்பட்டது. மூன்றாம் பண்பாட்டுக் காலம் இங்கு கி.மு. 1300-ஆம் ஆண்டளவில் இருந்தது. அதன் பின்னர் இப்பகுதியில் நீண்ட இடைவெளிக்குப் பின் கி.மு.200 -ஆம் ஆண்டளவில் நான்காம் பண்பாட்டுக்கால மக்கள் வாழ்ந்தனர். இவ்வரலாற்றுக் காலப் பகுதியில் கறுப்பு சிவப்பு மட்கலன்களும்,இரும்புப்பொருள்களும் கிடைத்துள்ளன. சாதவாகன அரசர்களின் துளை நாணயங்களும் கிடைத்துள்ளன. பல்வகை மணிகளும் அகழாய்வில் கிடைத்தன. ஐந்தாம் பண்பாட்டுக் காலத்தின் உரோமானிய ஆம்போரா சாடிகள் இங்குக் கிடைத்துள்ளன. இவை கி.மு. 50-ஆம் ஆண்டைச் சார்ந்தவையாகும். இப்பகுதியில் கி.மு.300-ஆம் ஆண்டிலிருந்து மக்கள் வசித்தற்கான தடயங்கள் கிடைக்கவில்லை. மீண்டும், கி.பி.1400-ஆம் ஆண்டளவில், தில்லிச்சுல்தானியர், மொகலாயர், மராத்தியர் காலங்களில், மக்கள் இப்பகுதியில் வசிக்கத் தலைப்பட்டனர்.

சு.இரா.

**நெவாடா:** ஐக்கிய அமெரிக்க நாடுகளில் ஒரு மாநிலம். வடக்கில் ஒரிகான் மாநிலமும், கிழக்கில் உடா மாநிலமும், தென்கிழக்கில் அரிசோனாவும், மேற்கே கலிபோர்னியாவும் இதனைச் சுற்றியுள்ளன. நெவாடாவின் (Nevada) பெரும்பகுதி வடிநிலங்களாகவும் உப்பங்கழிகளாகவும் உள்ளன. நெவாடாவின் வடக்குத் தெற்குப் பகுதிகளில் சிறுசிறு நீரோடைகள் உள்ளன. மாநிலத்தின் பெரும்பகுதி பாலைவனமாக உள்ளது. நெவாடா என்பது இசுபானியச் சொல்லாகும். இதன் பொருள் பனிச்சிலை என்பது. இங்கு அதிகமாகப் பனி பொழிகிறது. ஐக்கிய அமெரிக்காவிலேயே மிகக் குறைவான மழை பெற்று வறட்சியான மாநிலம் நெவாடாவே ஆம். கி.பி.1860-இல் இருப்புப் பாதைகள் போடப்பட்டன. குடியரசுத் தலைவர் இலிங்கன் கி.பி. 1864-இல் நெவாடாவை ஐக்கிய அமெரிக்காவில் ஒரு மாநிலமாக இணைத்துக் கொண்டார்.




நெவாடா (அமைவிடம்)

இதன் தலைநகர் கார்சன் (Carson). இலாசு, வேகாசு, இரீனோ, கார்சன் ஆகியவை முக்கிய நகரங்கள். இம்மாநிலம் 286,299 சதுர கி.மீ. பரப்பளவு உள்ளது. மக்கள்தொகை 799,184 (1980). அம்போல்ட், கொலராடோ ஆகியவை முக்கிய ஆறுகளாகும். மிரமிடு ஏரி, மீட்டு ஏரி, ஆகியவை மிகப்பெரிய ஏரிகளாம். நெவாடாவில் 50,0000,0 ஏக்கர் காடுகள் உள்ளன. 1,09,43,0 ஏக்கர் நிலப்பரப்பில் மக்காச்சோளம், உருளை, கோதுமை, பார்லி ஆகியவை பயிரிடப்படுகின்றன. ஆனால், வேளாண்மையை விடக் கால்நடைப் பாதுகாப்பு சிறப்பாக உள்ளது, 5,26,000 கால்நடைகளும், 3,04,000 ஆடுகளும் உள்ளன. நெவாடாவில் உள்ளவர்கள் பெரும்பாலோர் இசுபெயினில் இருந்து குடியேறியவர்கள். நெவாடாவில் கார்சன், வாசுக்கு, சூசோன், ஈசன், பீகக்கு, மோரிசு ஆகிய மலைகளிலிருந்து பலவகையான கனிமங்கள் கிடைக்கின்றன. செப்பு, வெள்ளி, தங்கம், ஈயம், துத்தநாகம், தங்குடன், கந்தகம், கிராபைட்டு, மெக்னீசியம், கோபால்ட்டு ஆகியவை இங்குக் கிடைக்கும் முக்கியஉலோகங்கள், நெவாடா மக்கள் வெள்ளி, தங்கம் முதலிய தாதுக்கள் மலைகளின் மீது படிந்திருப்பதைக் கி.பி. 1873-இல் கண்டெடுத்தனர். இதன்பிறகு இங்குள்ள மக்கள் மிகவும் செல்வர்கள் ஆனார்கள். செப்புத்தாது உருக்குதல், சுத்தம் செய்தல், வெள்ளி உருக்குதல், ஆகியவை முக்கிய சுரங்கத் தொழில் ஆகும். நெவாடாவில் பொருளாதார வளர்ச்சி இத்தொழிலையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. இவை தவிர வேறு சில தொழிற்சாலைகளும் உள்ளன. கொலராடோ நதியின் குறுக்கே உள்ள ஊவர் அணையில் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகின்றது.

நெவாடாவின் ஒரு பல்கலைக் கழகமும் வான ஊர்தி நிலையமும் உள்ளன. அமெரிக்க மத்திய சட்ட சபையில் நெவாடாவின் இரண்டு ஆளவை உறுப் பினர்கள் 4 வருட காலத்திற்குத் தேர்ந்தெடுத்து அனுப் பப்படுகிறார்கள். நெவாடாவில் எப்போதும் வெப்ப நிலை வறட்சியாகவே காணப்படும். வடக்கு நெவா டாவை அறிவாளிகளின் இருப்பிடம் என்றும் வெள்ளி மாநிலம் என்றும் செல்லமாகக் குறிப்பர். நெவாடாப் பாலைவனத்தில் ஐக்கிய நாட்டின் அணுச் சோதனை மையம் உள்ளது. ஆடு மாடு வளர்ப்பதற்குத் தேவை யான, புல் பயிரிடுவதற்கு இங்குள்ள மக்கள் அரசாங் கத்திற்கு வரி செலுத்த வேண்டும். நெவாடாவின் இரீனோ, இலாசுபேகாசு ஆகிய இரண்டு சுற்றுலா மையங்களிலும் சுற்றுலாப் பயணிகள் மிக அதிக மாக வருகிறார்கள். எனவே, சுற்றுலாத் தொழிலும் இங்கு வளர்ச்சியடைந்துள்ளது. தி.கை.

***நெற்குன்றவாணர்:*** இவர் தொண்டைநாட் டில் குன்றூர் என்னும் ஊரில் தோன்றிய சிறந்த வள்ளல். இவர் முன்னோர் ஆமூர் என்னும் ஊரி லிருந்து சிறந்திருந்தார்களாதலின் ஆமூர் முதலி என் னும் பாராட்டினைப் பெற்றவர். அவர் பரம் பரையாகவே மேலோங்கிய களப்பாளர் குடியில் தோன்றியவர்; சிறந்த புலவருமாவார். இவர் சிறப் பைக் கண்டு குன்றூருக்குத் தலைவராகத் தொண்டை நாட்டு அரசன் இவரை நியமித்தான். இவரும் தம் மாலாய தொண்டுகளை மக்களுக்குச் செய்து வந்த தோடு புலவர்களுக்குப் பரிசு நல்குவதிலும் சளைக்க வில்லை. இவர் வரியினைப் பெற்று அரசருக்குச்செலுத் தும் கடமையும் மேற்கொண்டிருந்தார். புலவருக்கு வாரி வழங்கியதால் தம் குடும்பச் செல்வமும் சென்ற தோடுவரிப் பணத்தையும் செலவிட்டார். இவர் புகழ் மிக்கோங்குவதைக் கண்ட போத்தன் என்னும் பொறாமை மிக்க செல்வன் ஒருவன் ஒருசமயம்நெற் குன்றவாணரிடம், 'நீ கொடுத்துக் கொடுத்துக்கெட்டு விட்டாய். என்றாவது ஒருநாள் நீ எனக்கு அடிமை யாவாய்' எனச் சூளுரைத்துச் சென்றான். அதையும் அவர் பொருட்படுத்தவில்லை. ஒருநாள் நம்பிகாளி என்னும் புலவர் நெற்குன்றவாணரிடம் பரிசில் வேண்டிவந்தார். அப்போது வறுமையின் உச்ச நிலையில் வள்ளலிருந்தார். இருப்பினும் நம்பிகாளியை வெறுங்கையோடு அனுப்ப அவர் மனம் இடந்தர வில்லை. தாமேவலியச் சென்று போத்தனிடம் தாம் அடிமையாவதாகக் கூறி நிறையச் செல்வத்தைப் பெற்றுப் புலவருக்குக் கொடுத்து அனுப்பினார். புல வருக்கு இச்செய்தி தெரியாது. போத்தன் வீட்டில் நெற்குன்றவாணர் அடிமையாயிருந்த போது அரசன் ஏவலர்கள் வரிப்பணம் கேட்டு அவரிடம் வந்தனர். அது தெரிந்த போத்தன் ஒரு நாளாவது அடிமையா யிருந்தது போதும் என்று கருதி நெற்குன்ற வாணரை விடுவித்து விட்டான். அவர் அரசனிடம் சென்று செல்வத்தைப் புரவலர்களுக்கு வழங்கியது பற்றிக் கூறினார். அரசன் சினந்து பணம் தராமல் தம் நாட்டிலிருக்கக் கூடாதெனத் தொண்டை நாட்டிற்கு வெளியே அனுப்பி விட்டான். நெற்குன்றவாணர் மனம் தளர்ந்து பல சிவப்பதிகளை வணங்கிக் கொண்டு திருப்புகலூர் வந்து சேர்ந்தார். முதலில் விநாயகரை வணங்கி ஒரு பாடல் பாடினார். அதனை அருகிலிருந்துகேட்ட கோமளம் என்னும் பெயருடைய தாசி அதனையே வாழ்த்தாகக் கொண்டு புகலூர்ப் பெருமான் மீது ஓர் அந்தாதி பாடித்தருமாறு கேட்டாள். அவரும் இசைந்து பாடி முடித்தார். ஒரு நன்னாளில் நூல் அரங்கேற்றம் செய்யப்பட்டது. அவள் நிறைந்த செல்வத்தையும் வாரிக் கொடுத்த துடன் பல்லக்கு முதலிய சிறப்புகளையும் அவருக்குச் செய்து மகிழ்ந்தாள். நெற்குன்றவாணர் அச் செல் வத்துடன் தம் ஊர் திரும்பி வந்து அரசனுக்குக் கொடுக்கவேண்டிய பணத்தைக் கொடுத்து முன்னை யிலும் சிறப்பாக வாழ்ந்து வந்தார். அரசன் ஒரு தாசி செய்த செயலை நான் செய்ய வில்லையே என நாணமுற்றான். பழைய சிறப்பிலேயே அவரை அரசன் போற்றி வந்தான். போத்தன் என்னும் செல் வன் தம் நிலைமாறி மிக வறுமையிலாழ்ந்திருந்தான். நெற்குன்றவாணர் அவனுக்கும் தாம் அவனிட மிருந்து பெற்ற செல்வத்திற்கும் மேலாகக் கொடுத்து அவனை முன்னேற்றினார். இவர் குணமேம்பாடு கருதி இவர் விளைபுலன்கள் யாவும் ஒன்று ஆயிரம் விளையுட்டாக விளைந்தன. ஆதலின் இவர் வீட்டின் முன் நெல் குன்றுபோல் கிடக்குமாம். அதனாலேயே இவருக்கு நெற்குன்றவாணர் என்ற காரணப் பெயர் ஏற்படலாயிற்று. இவர் இயற்பெயர் மறைந்துவிட்டது.

தொண்டை மண்டல சதகத்தில் 29, 80, 83-ஆம் பாடல்கள் இவரைக் களப்பாளன் நெற்குன்றவாணன் என்றும், களப்பாளன் எனும் ஆதிக்கம் பெற்றவன் ஆமூர் முதலி என்றும், நெற்குன்றவாண முதலியென் றும் முறையே பாராட்டிச் சிறப்பிக்கின்றன. 'உள்ளங் கால் வெள்ளெலும்பு தோன்ற ஒருகோடி, வெள்ளங் காலம் திரிந்து விட்டோமே-தெள்ளு தமிழ், ஆமூர் முதலி அரசர் பிரான் இங்கிருக்கப், போமூர் அறி யாமற் போய்' என்ற காளமேகப் புலவர் பாடலும் இவர் கொடைச்சிறப்பைத் தெற்றென விளக்கும். காளமேகப் புலவர் காலம் கி.பி. 14-ஆம் நூற்றாண் டாதலின் நெற்குன்றவாணர் காலமும் அதுவே என்ப தற்கு ஐயமில்லை. இவ்வள்ளல் பாடிய புகலூர் அந் தாதியும் மிகச் சிறந்த நயமிக்க பாடல்களைக் கொண்டது. யாவரும் படித்து இன்புறத்தக்க தொன்றாகும்.. இரா.ச.

**நெறிப் பிறழ்வு நிலை**: சமூகத்தினரால் ஏற்கப்பட்டுள்ள நடத்தை நெறிகளுக்கு மாறுபட்டு ஒழுகுவோர் ஒவ்வொரு சமுதாயத்திலும் ஒரு சிலரேனும் காணப்படுவர்.இது சமூகத்தில் கட்டுப்பாடு, ஒழுங்கு, உறுதி ஆகியவற்றைக் குலைக்கவல்லது. இத்தகைய மாறுபட்ட நடத்தை பொதுவாக சமூக ஒழுங்குக் குலைவு (Social Disorganization), சமூகச் சக்திகளிடையிலான சமநிலைப் பிறழ்வு (Disbalance) ஆகியவற்றால் ஏற்படுகின்ற விளைவாகும் எனச் சமூகவியலறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு சமூக நெறிகளுக்கு எதிராகச்சமூக ஒழுங்குக்குலைவை ஏற்படுத்துகிற நடத்தை, பிறழ்வு நடத்தை (Deviant Behaviour) எனப்படும். இப் பிறழ்வு நடத்தை நெறிப் பிறழ்வு நிலையால் (Anomie) ஏற்படுகிறது.

ஒரு மனிதனுடைய குறிக்கோளும் வழிவகையும் (Means) முரண்படும்போது உண்டாகின்ற மனநிலை நெறிப்பிறழ்வு நிலை எனப்படும். இம் மனநிலையில் ஒரு மனிதன் எவ்வாறு நடக்கவேண்டும், அவனிடமிருந்து எது எதிர்பார்க்கப்படுகிறது என்பதை அவன் அறியமாட்டான். இந்நிலையே நெறிப்பிறழ்வு நிலையாகும். இந் நெறிப்பிறழ்வு நிலை என்பதற்கான ஆங்கிலச் சொல்லை (Anomie) முதன்முதலாக அறிமுகப்படுத்தியவர் எமிலி தர்க்கைம் (Emile Durkheim) என்ற சமூகவியலறிஞர் ஆவார்.

பொதுவாக இந்நிலை, ஒருவன் சமுதாயத்திலிருந்து தனிமைப் படுத்தப்படும்போதோ அவன் சமுதாயத்தில் தனித் தன்மையற்று மூழ்கிப் போகும் போதோ எழுகிறது. மனிதனுடைய சமூகத் தேவைகளைச் சமுதாயம் நிறைவு செய்யத் தவறுதல், தீவிரப்பட்ட நவீனமயமாதலின் விளைவாகப் பொருந்திப் போகவியலா நிலைமைகள் எழுதல் போன்றன சமூக விரோத நடத்தைக்குக் காரணமாகின்றன. இப்போதைய சமுதாய அமைப்பில் குமரப் பருவத்தினர் இந்நிலைமைக்கு உட்படுகின்றனர். இதன்விளைவாக நெறிப்பிறழ்வு நடத்தையின் அளவு மிகுந்துள்ளது.

நெறிப்பிறழ்வு நிலை உளப் போராட்டங்களைத் தோற்றுவிப்பதாகும். இது சமூகப் புறக்கணிப்பு நடத்தையினையோ சமூக எதிர்ப்பு நடத்தையையோ உருவாக்கவல்லது. இது சமூகப் பண்பாட்டுத் தொடர்புடையதாகையால் இதன் வரையறை காலப்போக்கில் மாறக்கூடும்.

நெறிப்பிறழ்வு நிலைக்கு மரபுநிலைக் கூறுகள் சிலநேரங்களில் காரணிகளாக அமையக்கூடும் எனச் சமூகவியலறிஞர்கள் கூறுகின்றனர். ஆனால், இவை ஒருவனிடம் பிறழ்வு நடத்தைக்கான அடித்தளத்தை அமைத்துவிடும் அது வளர்ச்சி பெறுவதற்கு சமூகக் காரணிகள் முக்கியமானவை என்று இவர்கள்





நெறிப்பிறழ்வு நிலை

கூறுகின்றனர். எனவே, ஒருவனுடைய வாழ்க்கைச் சூழலின் சமூகப் பண்பாட்டுக் கூறுகள் நேரடியாகவும், மறைமுகமாகவும் நெறிப்பிறழ்வு, குற்றங்கள், சமூக நோய்கள் ஆகியவற்றை உருவாக்குகின்றன என்பது சமூகவியலாரின் கருத்து.

நெறிப்பிறழ்வு நிலை சமூகவியலில் பல ஆண்டுக் காலமாக ஆராயப்பட்டு வருகிறது. இது சமூகவியலில் மட்டுமன்றி உளவியல், அரசியல், அறிவியல் போன்ற பிற சமூக அறிவியல்களிலும் ஆராயப்படுகிறது. பிராய்டு (Freud), மனிதன் அடிப்படையில் ஒரு விலங்கு என்றும், அவனுடைய இயல்பூக்கங்கள் (Instincts) விலங்கினை ஒத்தவை என்றும் கூறுகிறார். இவர் நெறிப் பிறழ் நிலையை இயல்பூக்கங்களின் அடிப்படையில் விளக்குகிறார். அரசியல் அறிஞர்கள் அரசுக் கோட்பாட்டின் அடிப்படையில் விளக்குகின்றனர். தத்துவ அறிஞர்கள் ஒரு மனிதனிடம் தற்கட்டுப்பாடு இருப்பின் அது மனித நடத்தையில் கட்டுப்பாட்டை ஏற்படுத்திப் பிறழ்வு நடத்தையிலிருந்து அவனைத் தவிர்க்கிறது என்று கூறுகின்றனர். தர்க்கைம், மெர்ட்டன் (Merton), தால்காட்டு பார்சன்சு (Talcott Parsons) போன்ற அறிஞர்கள் சமூகவியலில் நெறிப் பிறழ்வு நிலையைப் பற்றி ஆய்வு செய்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

சமூகம், மனிதனுக்கு எப்போதும் நல்ல, உயர்ந்த எண்ணங்களையும், செயல்களையும் மட்டும் பயிற்றுவிப்பதில்லை; சில நேரங்களில் தீய செயல்களையும் பயிற்றுவிக்கிறது எனத்தர்க்கைம் கூறுகிறார். ஒரு மனிதன்மீதான சமூகத்தின் மேலாண்மை எதிர்மறையாக இருப்பின் அவன் பிறழ்ந்து நடக்கிறான். இதற்குப் பின்வரும் இரு காரணிகள் தூண்டுதல்களாக அமைகின்றன எனக் கூறுகிறார். அவை: 1) சமூகத்திலிருந்து மனிதனைத் தனிமைப் படுத்துகிற நிலைகள், 2) ஒரு மனிதன் தனித்தன்மையற்றுச்சமூகத்தில் மூழ்கிப் போகின்ற சூழ்நிலைகள் முதலியவையாகும். மேலும், தர்க்கைம், 'சமூகத்தில் திடீரென மாற்றம் ஏற்படும்போது சமூகத்தின் இயல்பான நெறிமுறை அமைப்பு ஆட்டம் காண்கிறது. அப்போது மனிதனுக்கு எது சரி, எது தவறு என்பது தெரியாது; அப்போது அவனுடைய மன உந்துதல்களும் மிகுதியாக இருக்கும். அந்நிலையில் அவற்றை மனநிறைவு செய்ய அவன் நெறிப் பிறழ்வு நிலையை நாடுகிறான்' எனக் கூறுகிறார்.

மெர்ட்டன் செயற்பாட்டுக் கண்ணோட்டத்தில் நெறிப் பிறழ்வு நிலையை விளக்குகிறார். இவர், பண்பாட்டு நெறிகளுக்கும்,குறிக்கோளுக்கும்இடையே மிகுந்த வேறுபாடு ஏற்படும்போது நெறிப் பிறழ்வு நிலை ஏற்படலாம் எனக் கூறுகிறார். இவர்தம் கோட்பாடு சமூகவியல் ஆய்வில் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது. மனிதன் அடிப்படையில் பொதுவாக அவனுடைய உயிரியல் உந்துதல்களை நிறைவு செய்ய ஆர்வம் கொள்வதுடன் சமூகத்தின் நெறிகளை மனதளவில் வெறுக்கிறான். எனவே, சமூகக் கட்டுப்பாட்டிற்கும் உயிரியல் உந்துதல்களுக்கும் ஒரு நிரந்தரப் போராட்டம் நிலவிக் கொண்டிருக்கிறது. மெர்ட்டனுடைய கோட்பாட்டின்படி மனித நடத்தைக்குச் சமூகத்தின் கூட்டமைப்பு (Soical Structure) ஒரு முக்கியத் தூண்டல் காரணியாகும். சமூகத்தில் மனிதர்களின்மீது இச் சமூகக் கூட்டமைப்பு ஒரு வரையறுக்கப்பட்ட அழுத்தத்தை உண்டு பண்ணுகிறது. இந்த அழுத்தத்தின் காரணமாக அவர்கள் சமூகத்திற்கெதிரான, ஒத்துப்போகாத நடத்தையைக் கையாளுகின்றனர். எனவேதான் மெர்ட்டன் சமூகக் கூட்டமைப்பும், பண்பாட்டு விழுமியங்களுமே(Cultural Values) நெறிப்பிறழ்வு நிலைக்குக் காரணங்களாக அமைகின்றன எனக் கூறுகிறார்.

பூ.த.

**நே:** நகரமும் ஏகாரமும் கலந்து வரும் இந்த ஒலி நுனிநா மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒட்டியபடியே மூக்கொலியாக வாயை இளித்துப் பின் மேலண்ணத்தை ஏற்றி வெளிவரும்பொழுது பிறக்கும். நகர ஏகாரக் குறிப்புகளைப் பார்க்கவும்.

தனியெழுத்து ஒருமொழியாக இதற்கு, அன்பு, ஈரம் என்னும் பொருள்கள் உள. நேயம் என்பதன் அடியாக நே என்ற சொல்லே அன்பை உணர்த்தும். இது இலக்கிய வழக்கு.

**வடிவம்:** நெகரக் குறிலுக்குச் சொல்லப்பட்டதுபோல் இடப்புறம் இழுக்கப் பட்ட எகரக் குறியே இந்த எழுத்துக்கும் கொடுக்கப்பட்டது. புள்ளி இடப்பட்டால் குறிலும் இல்லாவிட்டால் நெடிலுமாகக் கருதப்பட்டது. புள்ளியிடும் வழக்கம் கல் வெட்டில் பெரும்பாலும் காணப்படாததால் மொழி அறிவுடையார், சொல்லப்படும் பொருள் நோக்கி அதை நெடிலாக வாசித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. ...

கி.பி. 3-ஆம் நூற்றாண்டுக் குகைக் கல்வெட்டுகளில் ... ... ...

இக்கோடு கி.பி. 11-ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே மேல்நோக்கி வளைத்து எழுதப்பட்டது. பிரித்தும் எழுதப்பட்டது. கொம்பாக வளர்ந்த இந்தக்குறி இக் காலத்து எழுதப்படுவது போல்மேலேயும் ஒரு சுழி இடப்பட்டது. இம்முறை கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வீரமாமுனிவர் என்ற கிறித்தவத் தமிழ் அறிஞரால் அமைக்கப்பட்டது. ஆனால், கல்வெட்டில் பிற்காலத்திலும் இம்முறை காணப்பட வில்லை. ... ... ...

வட்டெழுத்திலும் நெகரத்துக்கும் நகர ஏகாரத்துக்கும் ஒரே குறி. முதலில் தோன்றும் பொழுதே இடப்புறக் கோடு தலைக்கட்டிலிருந்து கீழ்நோக்கி வளைந்த வாறே இழுக்கப்பட்டது. புள்ளி இடப்படாவிட்டால் நே என்றே வாசிக்கப்படும். நெகரக் குறிலுக்கும் அதே குறி சிறுபான்மை புள்ளியோடும் பெரும்பான்மை புள்ளி இல்லாமலும் எழுதப்படும். அப்பொழுது மொழி அறிவைக்கொண்டு நெடிலாக வாசித்துக் கொள்ளவேண்டும். செங்கம் நடுகற்கள் காலத்திலிருந்து (கி.பி. 6 நூ.) தொடர்ந்து வட்டெழுத்து மறையும் வரை இந்நிலை இருந்தது. ஒரு மாற்றமும் இல்லை. ... ... ...

கே.ஜி.கி.

**நேகல் எர்நெசுடு:** இவர் ஓர் அறிவியல் தத்துவஞானி. நேகல் தம் பத்து வயதில் அமெரிக்கா விற்கு வந்தார். இவருக்கு 1919-ஆம் ஆண்டு குடி யுரிமை வழங்கப்பட்டது. இவர் 1925-ஆம் ஆண்டு கொலம்பியா பல்கலைக் கழகத்தில் கணிதத்தில் எம்.ஏ. பட்டம் பெற்றார். இவர் 1930-ஆம் ஆண்டு தத்துவத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். மாரிசு. ஆர். கோகன் (Moris. R. Cohen), சான்டூயி (John

Deweeg), பெர்ட்ராண்டு இரசல் (Bertrand Russell), சார்சு சாந்தயானா (George Santayana) முதலானோரின் நூல்கள் இவரைப் பெரிதும் கவர்ந்தன.

நேகல் அறிவியல் தத்துவம் பற்றிப் பல நூல்கள் எழுதியிருக்கிறார். மாரிசு. ஆர். கோகெனும், இவரும் சேர்ந்து அளவையியலும், அறிவியல் முறைகளும் (Logic and Scientific Method) ஓர் அறிமுகம் என்ற நூலை வெளியிட்டனர். நேகலின் நூலான அறிவியலின் அமைப்பு (The Structure of Science) பல ஆண்டுகள் ஆசிரியராக இருந்து இவர் பெற்ற அநுபவத்தைத் தன்னகத்தேயுடையது. உயிர்த் தத்துவ விளக்கமில்லாத அளவையியல் (Logic without Ontology) என்ற நூலில், நேகல் அளவையியலின் இயற்கைத் தன்மைக்காக வாதாடினார். தலைமையான மெய்யுணர்வு (Sovereign Reason) என்ற நூலில் பிராண்டு பிலான்சார்டு (Brand Blanshard) என்பவரின் பகுத்தறிவு வாய்ந்த கருத்துக் கொள்கையை ஆராய்ந்தார். நேகலின் கருத்துப்படி அளவையியலின் நோக்கமென்னவெனில் ஊகிக்கப்பட்ட கருத்துகளை வெளிப்படுத்துவதும், அறிவாராய்ச்சிக்குரிய அடிப்படையான முறைகளைத் தெளிவுபடுத்துவதுமாகும். எல்லாவித அறிவாராய்ச்சிகளும், அறிவு வளர்ச்சியினால் புதுப்பிக்கப்பட நேரிடலாம். சிலவற்றை ஒதுக்கிவிடவும் நேரிடும். இத்தகைய பயன் வழிக் கொள்கை தற்செயல் நிகழ்ச்சியை ஒத்துக்கொள்ளச் செய்வதல்லாமல், மனித ஆராய்ச்சியில் குற்றமென்பது தவிர்க்க முடியாமல் அமைகின்றது என்பதனையும் கூறுகின்றது. அறிவியலிலும் நேகல் மிகுந்த கவனம் செலுத்தினார். அறிவியல், புலன் கடந்த நுண்ணறிவினால் ஊக்குவிக்கப்படுகின்றது.

நேகலின் தத்துவம் சார்ந்த இயற்கைக் கோட்பாடானது, தத்துவத் தொடர்பான சில கருத்துகளை வெளியிடத் துணைபுரிகின்றது. எடுத்துக்காட்டாகப் பருப்பொருட் கோட்பாட்டிலும், நாத்திகவாதத்திலும், உறுதிக் கோட்பாட்டிலும் நிரந்தர முடிவெடுக்கின்றது.

இயற் கோட்பாட்டினர், பருப்பொருட் கோட்பாட்டினராகையினால், அவர்களால் மனம் தொடர்பான இயற் காட்சிகளைக் கணக்கிட முடியவில்லை. நேகல் குறைபாடுடைய பருப்பொருட் கோட்பாட்டினை ஒத்துக்கொள்ளவில்லை. ஆனால், மனத்தின் செயல்கள், உடம்பின் அமைப்பைப் பொறுத்திருக்கிறதென்று கூறினார்.

சரித்திரத்தில் உறுதிக் கோட்பாட்டைப் பற்றி ஊகிக்கும்பொழுது, நேகல் இயற்கை அறிவியலில் உறுதிக் கோட்பாட்டின் பொருளை விளக்குகிறார். அறிவியல் கொள்கை சில கொள்கைகளில் உறுதியானது. அத்தகைய கொள்கையானது இயற்கையானது. ஐன்சுடீன் (Einstein), பிளாங்கு (Planck) போல, நேகல் கதிரியக்கத்தில் ஆற்றல் அலை வீச்சுக் கோட்பாடு (Quantum Theory) உறுதிப்பாடற்ற பலனுடையது என்பதை மறுத்தார். பருப்பொருட் கோட்பாடு அறிவியலறிவிற்கு இடம் அளிப்பதுமல்லாமல் கற்பனைத் திறனிற்கும், பரந்த மதிப்பீடுகளுக்கும், மனித அறிவிற்கும் வழிவகுக்கிறது என்று கூறினார். இரா.கோ.

**துணை நூல்கள்:**

Morris. R, Cohen., An Introduction to Logic and Scientific Method, New York, 1904.

Krikorian, Y.H.,(Edn.), Neturailism and the Human Spirit, New York, 1944.

**நேச நாயனார்:** இவர் சிவபெருமான் மீது மிக்க பக்தி கொண்ட அடியவர். பெரியபுராணத்திற் கூறப்பெறும் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர், செயன்முறை ஒழுக்கமும், சிந்தையில் வாய்மையும், குன்றாத செழிப்புமிக்க பழம்பதியாகிய காம்பீலி இவர் வாழ்ந்த ஊர் ஆகும். அறுவையர் (சாலியர்) குலத்தைச் சார்ந்தவர். சிவனடியார்களைப் பணிந்து வழிபடும் இயல்பினர். இவர் தம் உள்ளத்தைச் சிவனடி மலர்களுக்காக்கி வாக்கினை ஐந்தெழுத்துக் காக்கினார்.

இவ்வடியார் தம் தொழிலால் நெய்த உடை, கீள், கோவணம் ஆகியவற்றைச் சிவனடியார் வந்து, வேண்டுமளவு பெற்றுச் செல்வதற்கு ஈந்து வந்தார். இப்பெருந்தொண்டினைச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் குறிப்பிடும்பொழுது 'ஆங்கவர் மனத்தின் செய்கை அரனடிப் போதுக் காக்கி, ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்தஅஞ் செழுத்துக் காக்கித், தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரான் அடியார்க்காகப் பாங்குடை உடையும் கீளும் பழுதில்கோவணமும் நெய்வார்'. என்று கூறிப் பாராட்டுவார். இங்ஙனம் மன மொழி மெய்களால் இவர் சிவத்தொண்டினைச் செய்து சிவனடி நீழல் எய்தினார். ஈ.வே.மா.

**நேசுபிப் போர்:** இங்கிலாந்து நாட்டிலுள்ள நார்த்தாம்டன்சயரின் ஒரு கிராமம் தான் நேசுபி (Naseby). இது மார்க்கெட்டு கார்பரோவிலிருந்து 11 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கிலாந்தில் கி.பி.1642 முதல் 1646 வரை நடைபெற்ற உள் நாட்டுப் போரை, முடிவு செய்யும் விதமாக கி.பி. 1645-ஆம் ஆண்டு நேசுபியில் சிறப்புமிக்க ஒரு போர் நடைபெற்றது. இசுட்டுவர்ட்டுகள்(Stuarts) வமிசத்

தைச் சேர்ந்த அரசன் முதலாம் சார்லசின் படைகள் பத்தாயிரத்திற்கும் குறைவான வீரர்களைக் கொண்டது.அதே நேரத்தில் பாராளுமன்றத்திற்குச் சொந்தமானதும், சர் தாமசு பேர்பாக்சுவால் தலைமையேற்று நடத்திச் சென்றதுமான படையில் பதின்மூன்று ஆயிரம் வீரர்கள் இருந்தார்கள். படைத்துறைத் தலைவர் ஆலிவர் கிராம்வெல் புதியமாதிரிப் படையைச் சிறந்த முறையில் வைத்து இருந்தார். அரசருடைய படை பல ஆண்டுகள் போரில் ஈடுபட்டுப் பழகிய வீரர்களைக் கொண்டது. ஆனால், பாராளுமன்றத்தினுடைய படை புதிதாக நிறுவப்பட்டது. அதில் உள்ள வீரர்கள் பாதி அளவே பயிற்சி பெற்றவர்கள். இருப்பினும், தகுந்த காரணங்களின் அடிப்படையில் பேர்பாக்சும், ஆலிவர் கிராம்வெல்லும் முழு நம்பிக்கையுடன் இருந்தார்கள்.

போர் நடைபெற்ற இடம் நேசுபிக்கும், சிபர்டாப்டுக்கும் இடையில் நேசுபியிலிருந்து வடக்கே 5 கி.மீ. தொலைவில் இருந்தது. புதிய மாதிரிப் படையினர் வடக்குத் திசையிலும், அரசருடைய வீரர்கள் தெற்குத் திசையிலும் இருந்தார்கள். தொடக்கத்தில் போர் அரசனுக்குச் சாதகமாகவே இருந்தது. எதிரிப படையின் முன்னணி வீரர்களின் ஐந்து பிரிவுகளில் நான்கு பிரிவுகள் முறியடிக்கப்பட்டன. காலாட்படைத் தலைமை அதிகாரி இசுசிம்பன் காயப்படுத்தப்பட்டார். ஆனால், போர்பாக்சுவின் படைகள், இரண்டாம் காலாட் படைவீரர்கள் அந்த இடத்திற்கு மீண்டும் வந்து சரிசெய்யும் வரை அப்படியே அசையாமல் இருந்தன. இதற்கிடையில் அரசருடைய குதிரைப்படைகள் இளவரசர் உரூபர்ட்டுதலைமையில் துணைத்தலைவர் அயர்டன் படைகளை முறியடித்தன. நேசுபி கிராமத்தில் உள்ள பகைவர் அணியைத் தாக்க முயன்றார்கள். இத்தாக்குதல் எதிர்க்கப்பட்டது. உரூபர்ட்டுடல வீரர்களைச் சேர்த்துக்கொண்டு போர் நடந்த இடத்தை அடைந்தான். பாராளுமன்றத்தின் குதிரைப்படை வீரர்கள் ஆலிவர் கிராம்வெல்லின் தலைமையில் தக்க பதிலடி கொடுத்தார்கள்.

ஆலிவர் கிராம்வெல்லும், பேர்பாக்சும் சேர்ந்து அரசருடைய படையைத் தாக்கினார்கள். அரசருடைய படைவீரர்கள் பாதிப்பேர் பிடிபட்டார்கள். ஆயிரம் பேர் மாண்டார்கள். ஆயுதங்களும், எண்ணாயிரம் துப்பாக்கிகளும் கைப்பற்றப்பெற்றன. நேசுபிப் போரில் ஆலிவர் கிராம்வெல்லின் புதுமாதிரிப்படை வெற்றியையும், அரசருடைய படை தோல்வியையும அடைந்தன. முதலாம் சார்லசு கி.பி.1649-ஆம் ஆண்டு சனவரி 30-ஆம் நாள் மரண தண்டனை விதிக்கப்பட்டார். கி.பி. 1658-ஆம் ஆண்டு செப்டம்பர் 2-ஆம் நாள் வரை இங்கிலாந்தில் செல்வாக்குடன் கிராம்வெல் அரசாட்சி செய்தார். பின்னர் இரண்டு ஆண்டுகள் சிறப்பற்ற ஆட்சி நடைபெற்றது. அதற்குப் பிறகு இரண்டாம் சார்லசு மன்னர் கி.பி.1660 முதல் 1685 வரை இங்கிலாந்தை ஆண்டார். கு.இரா.



**நேட்டால்:** இது தென் ஆப்பிரிக்கக் குடியரசின் ஒரு மாநிலமாகும். இதன் தலைநகர் பீட்டர்மாரிட்சுபர்கு (Pietermaritzburg);பரப்பு 91,785 ச.கி.மீ. இதன் கடற்கரை 576 கி.மீ. நீளமுள்ளது. இதன் வடமேற்கில் சுதந்திர ஆரஞ்சு மாநிலமும், வடக்கில் திரான்சுவால் மாநிலமும், வட கிழக்கில் சுவாசிலாந்தும், மொசாம்பிக்கும், கிழக்கில் இந்தியப் பெருங்கடலும், தெற்கில் திரான்சுகியும் (Transkei), தென் மேற்கில் இலேசோதோ (Lesotho) வும் எல்லைகளாம். நேட்டால் (Natal) மக்கள்தொகை 2,676,340 (1980).




நேட்டால் (அமைவிடம்)

**தொழில்கள்:** இங்குச் சூலூலாந்தில் 375,000 எக்டேர் பகுதியில் கரும்புப் பயிர் செய்யப்படுகிறது.அதில் கி.பி. 1985-இல் 20,756,000 கண்டி கரும்பு உற்பத்தி செய்யப்பட்டது. இம்மாநிலத்தில் எல்லாவிதத் தானியங்களும், காபி, தேயிலை, புகையிலை, பருத்தி, அவுரி, இஞ்சி, பழங்கள், காய்கறிகள் ஆகியவையும் பயிரிடப்படுகின்றன. காடுகள் நிறைந்து இருப்பதால் மரம் வெட்டும் தொழில் உள்ளது.

கனிவளம் மிகுந்த இம்மாநிலத்தில் நிலக்கரி, தங்கம். செம்பு ஆகியவை வெட்டி எடுக்கப்படுகின்றன. இரும்பு, எஃகு, காகிதம், காகிதக்கூழ். உலோகங்கள், வேதியல் பொருட்கள். உரம், எண்ணெய் சுத்திகரிப்பு ஆகியவற்றைச் செய்வதற்கான தொழிற்சாலைகள் உள்ளன.

**கல்வி:** தொடக்க, உயர்நிலைப் பள்ளிக்கல்வி மாநில அரசின் நிருவாகத்திலும் பல்கலைக் கழகத்

தொழில் நுணுக்கக் கல்வி மைய அரசின் நிருவாகத் திலும் உள்ளன. பீட்டர் மாரிட்சுபர்கில் கி.பி. 1909-இல் நேட்டால் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டது. மாநில அரசு இந்தியர், சோதோ (Sotho), சுவாசி (Swazi), சோங்கோ (Tsongo), வெண்டா (Venda), சூலூ (Zulu) மக்களுக்கெனத் தனித்தனிப் பல்கலைக் கழகங்கள் ஏற்படுத்தியுள்ளது.

**முக்கிய நகரங்கள்**: நேட்டால் மாநிலத்தின் தலைநகரான பீட்டர்மாரிட்சு பர்கு ஒரு முக்கிய நகரம். தர்பன் (Durban) இம்மாநிலத்திலேயே பெரிய துறைமுகப்பட்டினம். பிற நகரங்கள் இரிச் மாண்டு (Richmond), கிரேடவுன் (Graytown), கார் டிங்கு (Harding), நியூகேசில் (New Castle) ஆகியவை களாகும்.

தென் ஆப்பிரிக்க அரசியலமைப்பில் (1961) கண் டுள்ளபடி மாநில ஆட்சியைக்குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்ட நிருவாகி 5ஆண்டுகளுக்கு நடத்து கிறார். மாநில அவையிடம் தொடக்க, உயர்நிலைப் பள்ளிக்கல்வி மருத்துவம், சாலை, நிதிஆகிய துறைகள் கொடுக்கப்பட்டுள்ளன. மாநில் அவையின் உறுப் பினர்கள் 5 ஆண்டுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்ற னர். மாநில அரசு நிறைவேற்றும் சட்டத்தைத் தள்ளி விடக் (Veto)குடியரசுத் தலைவருக்கு அதிகாரமுண்டு.

**வரலாறு**: இதனைப் போர்ச்சுகீசிய மாலுமி வாசு கோடகாமா கி.பி. 1497-ஆம் ஆண்டு திசம்பர் திங் கள் கிறித்து பிறந்தநாளன்று கண்டுபிடித்து,இதற்குத் தெர்ரா நேடாலிசு (Terra Natalis) எனப் பெயரிட் டார். இங்கு கி.பி. 1720-இல் தச்சுக்காரர் குடியேறி னாலும் அந்நாட்டுமக்களின் எதிர்ப்பின் காரணமாகக் குடியேற்றத்தை அமைக்க இயலவில்லை. ஆங்கிலே யர் கி.பி. 1824-இல் நேட்டால் துறைமுகத்தில் இன்றைய தர்பனில்(Durban), வாணிக நிலையத்தை ஏற்படுத்தினர். போயர்கள் (Boers) சூலூக்களை (Zulus) விரட்டிவிட்டு கி.பி. 1837 முதல் 1843 வரை இங்கு ஆதிக்கம் செலுத்தினர். அதன் பின்னர் இது ஆங்கிலேயரின் குடியேற்றமாக ஆனதால் கி.பி.1844 -இல் கேப்புக்குடியேற்றத்துடன் இணைக்கப்பட்டது. மீண்டும் இது தனிக்குடியேற்றமாக கி.பி. 1856-இல் ஆனது. இதற்குக் கி.பி. 1893-இல் ஓரளவு தன்னாட்சி வழங்கப்பட்டது. 4ஆண்டுகளுக்குப் பிறகு சூலுலாந்து (Zululand) இத்துடன் இணைக்கப்பட்டது. தென் ஆப்பிரிக்கப் போர் தொடங்கிய பொழுது, கி.பி. 1899 - இல் போயர்கள் இதனைத் தாக்கினர். ஆனால், ஆங்கிலேயர் அவர்களைக் கி.பி. 1900 - இல் விரட்டியடித்தனர். தென் ஆப்பிரிக்க ஒன்றியம் (Union of South Africa) 1910 - இல் ஏற்பட்ட பொழுது நேட்டால் அதன் ஒரு மாநிலமாக ஆனது. பின்னர் 1961 - இல் தென் ஆப்பிரிக்கக் குடியரசு தோன்றியதிலிருந்து இது ஒரு மாநிலமாகத் தொடர்ந்து இருந்து வருகின்றது. சி.இரெ.

**நேடார்ப்பு, பால் (கி.பி. 1854 - 1924)**: இவர் ஒரு செருமானியத் தத்துவஞானி. இவர் பெர்லின், பான்முதலிய பல்கலைக்கழகங்களில் பயின்றார். இவர் கி.பி. 1885 - ஆம் ஆண்டு பேராசிரியரானார். பின் னர் ஒரு சிறந்த பதிப்பாசிரியரானார். இவர் எர் மான் கோகனுடன் (Hermann Cohen) சேர்ந்து பல தத்துவ நூல்களைப் பதிப்பித்தார். மாணவராக இருக்கும்பொழுதே பருப் பொருட் கோட்பாட்டின் சிறந்த தத்துவத்தை உணர்ந்தார். அவர் அறிவியல் அறவியல், அழகியல், சமயக் கருத்துக்கொள்கை முதலியவற்றில் ஆர்வம் காட்டினார்.

கோகன் (Cohen) கி.பி. 1912 - ஆம் ஆண்டு பெர்லினுக்குச் சென்ற பின்னரும் மார்பர்கு (Marburg) என்ற இடத்தில் நேடார்பு (Natorp Paul) இருந்து, புதிய காண்டின் கொள்கையை எடுத்துக் கூறினார். காண்டினுடைய கடந்த நிலைக் கொள்கை அறிவி யல், ஒழுக்கம், கலை, சமயம் முதலிய எல்லாவற்றிற் கும் அடிப்படை என்று கருதினார். காண்டின் இரு மைக் கொள்கையான உள்ளுணர்விற்கும், எண்ணத் திற்கும், உருவத்திற்கும், பருப்பொருளிற்கும் உள்ள வேறுபாட்டைக் களைய முனைந்தார்.

இவர் கி.பி. 1918 - ஆம் ஆண்டு கோகென் இறந்தபிறகு, காண்டின் பொருளுரை விளக்கத்திற் கும் கோகெனின் கொள்கைக்கும் ஓர் உடன்பாடு ஏற்படுத்த முயன்றார். இவருடைய முதல் நூலில் அறிவியல், அறவியல், அழகியல் உணர்வுகளை அள வியலோடல்லாமல் உளவியலோடு தொடர்புபடுத்தி னார். இரண்டாம் நூலில் உண்மையான எண்ணத் திற்கு (Pure Will) இடமளித்தார். அது இருத்தலை யும் (Being) கடமையையும் (Duty)பிரித்து, அவை தம்மில் உடன்பாடும் ஏற்படுத்தியது.

நேட்டார்ப்பின் 'பிளேட்டோ' என்ற நூல் கி.பி 1902 - ஆம் ஆண்டு வெளிவந்தது. பதினைந்து ஆண்டுகள் ஆராய்ச்சியின் முடிபு இந்நூல். அரிசுடாட் டில் காலத்திலிருந்து உளநூல் அடிப்படையிலும், புலன்கடந்த நுண்பொருள் அடிப்படையிலும் தத் துவ ஆராய்ச்சி அமைந்திருந்தது. கருத்துகள் சட்டங் களாகவும், முறைகளாகவும் தொகுக்கப்பட்டன. அவை அறிவியலின் அளவை இயல் அடிப்படைகளா கும். அவை பிளேட்டோவின் உண்மையான கண்டு பிடிப்புகளாகும். பிளேட்டோவின் தத்துவத்திலுள்ள மறைமெய் சார்ந்த கருத்துகளை வலியுறுத்தினார்.

நேட்டார்பின் கருத்துகளில் காண்டினுடையவும் பிளேட்டோவினுடையவுமான கருத்துகள் காணப் பட்டன. அவர் எப்பொழுதும் பிறர் கருத்துகளை வரவேற்பார்; தம்முடையகருத்துகளில் குற்றமிருப்பின் ஏற்றுக்கொள்வார். அவருடைய கருத்துகளில் கணித மும் இயக்க நூல் கருத்துகளும் காணப்பட்டன. அவருக்கு அரசியலிலும் சமூக நூல்களிலும் விருப் பம் உண்டு; அகவியல் கருத்துகளைப் புறக்கணிக்கக் கூடாது என்னும் கொள்கை உடையவர்.

நேட்டார்பின் முறையான நுணுகி ஆராயுந் திறன், அவருடைய செயற்கைத் தத்துவ விரிவுரை களில் தெரியவந்தது. சமயக் கருத்துகளில் ஏற்பட்ட சிக்கல்களைப் பகுத்தறிவினால் தீர்க்க முடியாதென் றார் அவர். இரா.கோ.

**துணை நூல்கள்:**


**Cassirer, Ernst**, 'Paul Natorp's Kant Studien, Vols. 30, 1925.

**Natorp**, Philosophische Propadeutek. Marburg, 1903.


**நேபாளம்**: தெற்கு ஆசியாவில் இமயமலை யில் இந்தியாவிற்கும் சீனாவிற்கும் இடையே அமைந் துள்ள சிறிய மலை நாடு நேபாளம். இது அரசிய லமைப்புக்குட்பட்ட பரம்பரையான முடியாட்சி நாடு. உலகிலேயே இது ஒன்றுதான் இந்து அரசாகும். அன்னியரின் தொடர்பின்றி இந்நாடு தனித்து இருந்து வந்ததால் 'கடவுள்கள் வாழுமிடம்' (The Home of Gods) எனப்பட்டது. இயற்கை அழகு மிக்க இம்மலை நாடு உல்லாசப் பயணிகளைக் கவர்ந்து இழுக்கின்றது. கௌதம புத்தர் வாழ்ந்த இடங் களைக் காணப் புத்த சமயத்தவரும், இந்துக்களின் புனித இடங்களைக் காண இந்துக்களும் இங்கு வருகின்றனர்.




நேபாளம்

**புவியியல் அமைப்பு: தட்ப வெப்பம்**: இந் நாட்டில் தட்பவெப்பமானது உயரத்திற்கு ஏற்ப இடத்திற்கு இடம் மாறுபடுகின்றது. அது வங்காள விரிகுடா விலிருந்து வீசும் தென் மேற்குப் பருவக் காற்றையும் சார்ந்துள்ளது. இந்நாட்டில் சூன் முதல் செப் டம்பர் வரை மழைக் காலமாகும். ஆண்டுச் சராசரி மழை 1428 மி.மீ.

**இயற்கை அமைப்பு**: இந் நாட்டில் 20 விழுக்காடு அதாவது3000 ச. கி.மீ. நிலம் 3000 மீட்டர் உயரத்தில் எப்பொழுதும் பனியால் மூடப்பட்டு உள்ளது. இப்பகுதி யிலுள்ள மலைத்தொடர்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று தெற்கிலுள்ள சூரியா, சிவாலிக்கு மலைத்தொடர்கள் (Churia and Siwalik Ranges) இவை 750 முதல் 1800 மீட்டர் வரை உயரமுள் ளவை. கங்கைச் சமவெளியிலிருந்து இதன் உயரம் செங்குத்தாக அதிகரித்துக் கொண்டே செல்கிறது. வடக்கில் உள்ள பெரிய இமயமலைத்தொடர் இரண் டாம் பிரிவாகும். இங்குத்தான் உலகிலேயே மிக உயரமான சிகரங்களான எவரசுட்டு(8848 மீ) கஞ்சின்சங்கா (8598 மீ), மகலூ (8481 மீ.), அன்ன பூர்ணா (8091 மீட்டர்) ஆகியவை உள்ளன. மூன்றாம் பிரிவு மகாபாரத்து என்னும் மலைத்தொடர். இம்மலைகள் 1500 மீ.இலிருந்து 2700 மீ. வரை உயரம் உள்ளவை. இங்குள்ள சமவெளிப் பகுதி தரை (Therai) எனப்படுகின்றது. இதன் வடபகுதி காடுகளும், சதுப்பு நிலங்களும் நிரம்பியது. தென்பகுதி, இந்தியா வின் எல்லையில் உள்ளது; மண்வளம் மிக்கது. இங்கு நெல், சணல், கரும்பு, கடுகு, புகையிலை ஆகியவை பயிரிடப்படுகின்றன. இந்நாட்டிலுள்ள மூன்று முக்கிய ஆறுகளான கர்னாலி (Karnali),கண்டகி (Gandaki), கோசி (Kosi) ஆகியவை வடக்கிலிருந்து தெற்கு நோக்கி ஓடிக் கங்கையில் கலக்கின்றன. இந்நாட்டின் வடக்கில் திபெத்தும், கிழக்கு, தெற்கு,மேற்குப் பகுதி களில் இந்தியாவும் எல்லைகளாக உள்ளன. இதன் மக்கள் தொகை 1985-இல் 16.48 மிலியன்.

**மக்கள்**: இந்நாட்டு மக்கள் பொதுவாக நேபாளி கள் (Nepalese) என்றே குறிப்பிடப்படுகின்றனர்: திபெத்து,மங்கோலியா, இந்தியா ஆகியவற்றிலிருந்து இங்குவந்து குடியேறியவர்களின் வழிவந்தவர்கள். இவர்கள் கூர்காக்கள் (Gurkhas), நேவார்கள் (Ne wars),செருபாக்கள் (Sherpas), தமங்குகள் (Tamangs), மகர்கள் (Magars), தருக்கள் (Tharus), கிரந்திகள் (Kiranthis), இராய்கள்(Rais), இலிம்புகள் (Limbus)

எனப் பல குடும்புகளைச் சேர்ந்தவர்கள். கூர்காக்கள் கி.பி. 1768- இல் இந்நாட்டை வென்று ஆட்சிபுரிந்த அரச குடும்பத்திலிருந்து இப் பெயரைப் பெற்றனர். சிறந்த போர் வீரர்களான இவர்கள் வீரம் உலகறியும். நேவார்கள் காட்மாண்டு பள்ளத்தாக்கில் அதிகமாக வாழ்ந்து வருகின்றனர். வேளாண்மையில் ஈடுபட்டுள்ள இவர்கள் வணிகத்திலும், கைத்தொழிலிலும் கட்டடக் கலையிலும் சிறந்து விளங்குகின்றனர். இவர்கள்தாம் அரசுப் பணிகளிலும் அதிகம் உள்ளனர். செருபாக்கள் வேளாண்மையிலும், கால்நடை வளர்ப்பிலும் மிகவும் ஈடுபட்டுள்ளனர்; மலையேறுபவர்களுக்கு உதவியாகச் செல்வர்.

**மொழி**: இந்நாட்டு அரசு மொழியான நேபாளி (Nepali) இந்தோ -ஐரோப்பிய மொழி இனத்தைச் சேர்ந்தது. இந்தியாவிலிருந்து இந்நாட்டில் குடியேறிய இந்துக்களால் புகுத்தப்பட்ட இம்மொழி, இந்தியைப் போன்று உள்ளது. இந்நாட்டில் பாதிப்பேருக்கு மேல் இம்மொழியைப் பேசுகின்றனர். சிலர் திபெத்தோ -பர்மிய மொழிகளைப் பேசுகின்றனர். இப்பகுதியில் 30 மொழிகள் வரை வழக்கில் உள்ளன.

**சமயம்**: இங்குள்ள மக்களுள் பெரும்பாலோர் இந்து சமயத்தையும், புத்த சமயத்தையும் பின்பற்றுகின்றனர். இசுலாமியர் 3 விழுக்காட்டினராக- உள்ளனர். கிறித்தவப் பாதிரிமார்கள் அனுமதிக்கப்பட்டாலும் சமயமாற்றம் செய்வது தடை செய்யப்பட்டுள்ளது.

**பொருளாதாரம்**: இம்மக்களில் 90 விழுக்காட்டினர் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளதால் பொருளாதாரம் பின்தங்கியே உள்ளது. இவர்கள் இந்தியா, இங்கிலாந்துப் படைகளில் போர் வீரர்களாகச் சேர்ந்து பணியாற்றியமையால் நல்ல ஊதியம் பெற்றனர். அவர்களுள் 60,000 பேர் அவ்வரசுகளிடமிருந்து ஓய்வு ஊதியம் பெற்று இந்நாட்டில் வாழ்ந்து வருகின்றனர். அயல்நாடுகளிலிருந்து இந்து, புத்த சமயப் புனிதப் பயணிகள், உல்லாசப் பயணிகள், ஆகியோர் வருவதால் சிறிது வருவாய் கிடைக்கின்றது.

**வேளாண்மை**: இது ஒரு மலை நாடாகையால் 15 விழுக்காடு நிலப்பகுதியே வேளாண்மைக்கு ஏற்றதாக உள்ளது. உயரம் குறைந்த மலைச் சரிவுகளிலும் சிறு பள்ளத்தாக்குகளிலும், தெற்கு நேபாளச் சமவெளியிலும் வேளாண்மை நடைபெறுகின்றது. மலைச்சரிவுகளை அடுக்கடுக்காக வெட்டி அதில் பயிர் செய்கின்றனர். நெல், கோதுமை, சோளம் ஆகியவை முக்கிய விளைபொருள்கள். பார்லி, சணல், மிளகு, புகையிலை உருளைக்கிழங்கு, அபினிச் செடிகள் ஆகியவையும் பயிரிடப் படுகின்றன. இம்மக்கள் பாலுக்காகவும், தோலுக்காகவும் கால்நடைகளை வளர்க்கின்றனர். இந்நாட்டில் 1984- இல் 7 மிலியன் கால்நடைகள் இருந்தன. அவற்றுள் பசுக்கள் 420,4000; எருமைகள் 4.4 மிலியன்; ஆடுகள் 2.52 மிலியன்; பன்றிகள் 2.6 மிலியன்; கோழிகள் 25 மிலியன் ஆகும்.

**தொழிற் சாலைகள்**: இங்குச் சணல், சருக்கரை, காலணிகள், கண்ணாடிப் பொருள்கள், காகிதம், காகிதக்கூழ், வேதியியல் பொருள்கள், சிமெண்டு ஆகியவற்றைத் தயாரிக்கும் தொழிற்சாலைகள் உள்ளன. மரம், உலோகம் ஆகியவற்றில் பலவிதமான கைவினைப் பொருள்களும் செய்யப்படுகின்றன.

**ஏற்றுமதி**: இந்நாட்டிலிருந்து தானியங்கள், சணல், மரம், எண்ணெய் வித்துகள், வெண்ணெய், உருளைக்கிழங்கு, மருந்து மூலிகைச் செடிகள், தோல், கால்நடைகள் ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

**இறக்குமதி**: பருத்தி, பட்டுத் துணிகள், புகைப்பூஞ்சுருள், உப்பு, பெட்ரோலியம், மண்ணெண்ணெய், இயந்திரங்கள், மருந்துகள், காகிதம், சிமெண்டு, இரும்பு, எஃகு, தேயிலை ஆகியவை இங்கு இறக்குமதி செய்யப்படுகின்றன.

**போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்: சாலைகள்**: மிக உயர்ந்த மலைகள் நிறைந்துள்ளதால் சாலைப் போக்குவரத்து கடினம். இங்குப் பேருந்து வண்டிகள் செல்லக்கூடிய சாலைகள் 1900கி.மீ. நீளத்திற்கு உள்ளன. அதில் இந்திய, அமெரிக்க நாடுகளின் பொருளுதவியுடன் 1440 கி.மீ. நீளத்திற்குப் போடப்பட்ட சாலைகள் அடங்கும். இங்கு 103கி.மீ. நீளத்திற்கு நேபாளத்திற்கும் இந்தியாவிற்கும் இடையே இருப்புப்பாதை உள்ளது. காட்மாண்டுவை அதன் 11 மாவட்டங்களுடன் இந்நாட்டு விமானப் போக்குவரத்து (The Royal Nepal Airline Corporation) இணைக்கிறது. இந்தியாவின் கல்கத்தா, பாட்னா, புது தில்லி மற்றும் பாங்காக்கு, இரங்கூன், தாக்கா ஆகிய இடங்களுக்கும் இவ்விமானங்கள் செல்கின்றன.

**செய்திப் போக்குவரத்து**: இங்கு 1978-இல் தொலைபேசிகள் 9425 இருந்ததில் 5431 காட்மாண்டில் உள்ளன. இந்நாட்டு வானொலி நிலையம் (Radio Nepal) காட்மாண்டிலிருந்துநேபாளி மொழியிலும் ஆங்கிலத்திலும் ஒலிபரப்புகின்றது. இங்கு 1983 -இல் 300,000 வானொலிப் பெட்டிகள் இருந்தன. அவ்வாண்டு 7 நாளேடுகள் 75,000 பிரதிகளை வெளியிட்டன.

**கல்வி**: இந்நாட்டில் 1981-இல் 23 விழுக்காட்டினரே கல்வி அறிவு பெற்றிருந்தனர். இங்கு மலைச் சரிவுகள் நிறைந்து இருப்பதாலும், கிராமங்கள் மிகத்

தொலைவில் தனித்தனியே இருப்பதாலும், கல்வி கற்க வசதி மிகக் குறைவு. இந்நாட்டில் 6 வயது முதல் 10 வயது வரை கட்டாயக் கல்வி இருந்தாலும் மக்கள் அதனைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. இங்கு 1982-இல் தொடக்கப் பள்ளிகளில் 1 4,75,700 மாணாக்கரும், உயர்நிலைப் பள்ளிகளில் 3,70,000 பேர்களும் பயின்றனர். திரிபுவனப் பல்கலைக் கழகம் இந்நாட்டிலுள்ள ஒரே பல்கலைக் கழகமாகும்.

**நகரங்கள்: காட்மாண்டு:** இங்குள்ள நகரங்களில் மக்கள் நெருக்கம் மிகவும் அதிகம். தலைநகரான காட்மாண்டுவின் மக்கள் தொகை 235160 (1985). பாகமதி, விசுவமதி ஆறுகளுக்கிடையே உள்ள மேட்டு நிலப்பகுதியில் பழைய நகரம் அமைந்துள்ளது. அரசு அலுவலகங்கள், பொதுக் கட்டடங்கள், வெளிநாட்டுத் தூதரகங்கள், கலைக்கூடம் ஆகியவை அதைச் சுற்றி இருக்கின்றன.

**பட்டன்:** இலலித்பூர் அல்லது இலலித்பட்டன் என்னும் இவ்வழகிய நகரம் சுருக்கமாகப் பட்டன் (Patan) எனச் சொல்லப்படுகிறது. இந்நகரின் நான்கு எல்லைகளிலும் சைத்தியங்கள் உள்ளன. மேலும், 149 விகாரங்களும், 18 மகா விகாரங்களும் இருக்கின்றன. இங்குப் புத்த சமயத்தினர் மிகுதியாக வாழ்கின்றனர்.

**பத்கான்:** பக்தகிராமா அல்லது பக்தபூர், அதாவது பக்தர்களின் நகரம் எனப்படும் பத்கான் (Bhadgaon) இந்துக்கள் நிரம்ப வாழும் இடமாகும். இம்மக்களுள் பெரும்பாலோர் நேவாரிகள் (Newars). இங்கு 24 புத்த விகாரங்களும், பக்கோடா (Pagoda) எனப்படும் இந்துக் கடவுள்களுக்கான அழகிய கோயில்களும் உள்ளன. இதன் மக்கள் தொகை 48,472 (1985).

**அரசு:** இந்நாடு 1951 பிப்பிரவரியில் அரசியலமைப்புக்குட்பட்ட முடியாட்சி இந்து அரசு (Constitutional Monarchical Hindu State) என அறிவிக்கப்பட்டது. புதிய அரசியல் அமைப்பு ஒன்று 1962-இல் இயற்றப்பட்டு, 1975-இல் மாற்றியமைக்கப்பட்டது. இக்குடியாட்சி முறையில் கிராமங்களும், நகரப்பஞ்சாயத்துகளும் அடிப்படைக் கூறுகளாகும். இவை இரண்டும் சேர்ந்து மாவட்டப் பஞ்சாயத்துகளைத் (Zilla Panchayats) தேர்ந்தெடுக்கின்றன. அவை வட்டாரப் பஞ்சாயத்துகளைத் தேர்ந்தெடுக்கின்றன. இறுதியில் வட்டாரப் பஞ்சாயத்துகள் தேசிய பஞ்சாயத்தைத் (Rashtriya Panchayat) தேர்ந்தெடுக்கின்றன. இதுவே இந்நாட்டின் பாராளுமன்றமாகும். இம்மன்றத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் 112 பேருடன், வணிக நிறுவனங்களிலிருந்து நியமிக்கப்பட்ட 28 உறுப்பினர்களும், அரசரால் நியமிக்கப்பட்ட 15 விழுக்காட்டிற்கு மிகாத உறுப்பினர்களும் இடம் பெறுவர். நிருவாகத்தை நடத்த அரசர் ஒரு தலைமை அமைச்சரையும், அவருடைய அமைச்சரவையையும் ஏற்படுத்த வேண்டும். இந்நாட்டில் அரசியற் கட்சிகளுக்கு அனுமதியில்லை.

தல நிருவாகத்தின் பொருட்டு இந்நாடு 14 வட்டாரங்களாகவும், 75 மாவட்டங்களாகவும், 16 நகரப் பஞ்சாயத்துகளாகவும், 3,500 கிராமங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது.

**வரலாறு:** இன்றைய நேபாளப் பகுதி நூற்றுக் கணக்கான ஆண்டுகள் இந்தியா, திபெத்து ஆகியவற்றின் ஆதிக்கத்தில் இருந்து வந்தது. காட்மாண்டுப் பள்ளத்தாக்கு என்னும் இப்பகுதி கி.பி. 400-இல் தான் நேபாளம் என்று குறிப்பிடப்படலாயிற்று. நடு ஆசியா, திபெத்து, இந்தியா ஆகிய பகுதிகளிலிருந்து வீரர்களும் நாடோடிகளும், இடம்பெயர்ந்தோடி, இப்பகுதியில் குடியேறி இன்றைய நேபாளிகளின் மூதாதையர் ஆயினர்.

**ஐக்கியம்:** இங்குப்பல உரிமை பெற்ற சிற்றரசுகள் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு வரை இருந்துவந்தன. பல குடும்புகளைச்சேர்ந்த தலைவர்கள் அவற்றைஆண்டு வந்தனர். பின்னர் கி.பி. 1769-இல் கூர்காக்களின் தலைவரான பிருதிவி நாராயண் சா (Prithwi Narayan Shah) பல சிற்றரசுகளை வென்று நாட்டை ஐக்கியப்படுத்தினார். அவரால் ஏற்படுத்தப்பட்ட 'சா' (Shah) மரபுதான் இன்றுவரை இந்நாட்டை ஆட்சி புரிந்து வருகின்றது. அவர்தான் முதன்முதலில் 'நேபாள அரசர்' என்னும் பட்டத்தைச் சூட்டிக் கொண்டார். அவர் கி.பி. 1775 - இல் இறக்கும் பொழுது நேபாளம் முழுவதும் இணைககப்பட்டுவிட்டது. நேபாளிகள் தங்கள் நாட்டை விரிவடையச் செய்ய இந்தியாவின் பகுதிகளைக்கவர்ந்ததால் கி.பி. 1814-16-இல் நேபாளப் போர் ஏற்பட்டு, நேபாளிகள் தோற்கடிக்கப்பட்டனர். அவர்களிடமிருந்து தரைப் பகுதியை, மலைவாழ் இடங்கள் நிறைந்த பகுதியை, கிழக்கிந்தியக் குழுமம் பெற்றது.

**இராணாக்களின் ஆட்சி:** சங் பகதூர் குன்வர் என்பவர் கி.பி. 1846 - இல் ஆட்சியைக் கைப்பற்றி இராணா என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டார். அவருடைய குடும்பத்தில் ஒருவர் பரம்பரையாக 'இராணா' என்ற பட்டத்துடன் இந்நாட்டின் தலைமை அமைச்சராக இருக்க ஏற்பாடுகளைச் செய்தார். இராணாக்களின் ஆதிக்கம் 1951 வரை நீடித்தது. இந்தியப் பெருங்கிளர்ச்சி கி.பி. 1857-இல் ஏற்பட்ட பொழுது அதை நசுக்கக் கூர்க்காப்படை உதவியதால் அவர்களுக்குக்கிழக்கிந்தியக் குழுமம் தரைப் பகுதியில் சிலவற்றைத் திரும்பக் கொடுத்தது. முதல்

உலகப் போரிலும் இவர்கள் ஈடுபட்டுத் தங்கள் வீரத்தை உலகிற்குக் காட்டினர்.

**பஞ்சாயத்து ஆட்சி**: இராணாக்களின் ஆட்சிக்கு 1930-40 ஆண்டுகளில் எதிர்ப்புப்பெருகியது. இந்திய விடுதலைப்போருக்குப் பின்னர் அது மேலும் வலிமை பெற்று 1950-51-இல் ஏற்பட்ட புரட்சியால் இராணாக்களின் ஆட்சி வீழ்த்தப்பட்டு, மன்னரின் அதிகாரம் நிலைநாட்டப்பட்டது. அரசர் திரிபுவன் 1951-இல் அந்நாடு 'அரசியலமைப்புக்குட்பட்ட முடியாட்சி இந்து அரசு' என அறிவித்தார். நேபாளக் காங்கிரசு 1950 நவம்பரில் புரட்சி செய்ததால் அரசர் இந்தியாவில் தஞ்சம் புகுந்தார். இந்திய அரசின் ஏற்பாட்டின்படி திரிபுவன் மீண்டும் ஆட்சியில் அமர்த்தப்பட்டார். நேப்பாளக் காங்கிரசு 1959 தேர்தலில் பெரும்பான்மை இடங்களைப் பெற்று ஆட்சியை அமைத்தது. திரிபுவன் 1955-இல் மரணமடைந்ததால் அவருடைய மகன் மகேந்திரர் (Mahendra Bir Bikram Shah Dev) அரசரானார். அவர் 1962-இல் புதிய அரசியலமைப்பு ஒன்றைக் கொண்டுவந்து, பஞ்சாயத்து முறையை ஏற்படுத்தினார். அவர் 1972 சனவரி 31-இல் மரணமடைந்ததும் அவருடைய மூத்த மகன் பிரேந்திரர் (Birendra Bir Bikram Shah Dev) அரசரானார். நாட்டு முன்னேற்றத்தில் அவர் அக்கறை கொண்டு கல்வியைப் புதுமைப்படுத்தி, அறிவியல், தொழில்நுணுக்கக் கல்விக்கு வழிவகுத்தார். போக்குவரத்தையும், தொழிற்சாலைகளையும் பெருக்க இந்திய, அமெரிக்கப் பொருளுதவியுடன் சாலைகளை அமைத்தார். முதலாம் ஐந்தாண்டுத் திட்டத்தை 1970-இல் தொடங்கினார். இந்தியக் கூட்டுறவுடன் இந்நாடு பொருளாதார முன்னேற்றம் அடைந்துவருகின்றது. சி.இரெ.

**துணை நூல்கள்:**

**George Kotturan.**, The Himalayan Gateway, Sterling Publishers Pvt. Ltd., New Delhi, 1983.

**Ronald M. Bernier.**, The Nepalese Pagoda Origins and Style, S. Chand & Company Ltd., New Delhi, 1979.

**Rushbrook Williams L.F.**,A Handbook for Travellers in India, Pakistan, Nepal, Bangladesh and Srilanka, John Kurray, London, 1975.

**நேபிள்சு**, தென் இத்தாலியின் கவின்மிகு நகரம்; நேபிள்சு மாநிலத்தின் தலைநகரம். உரோம் நகரத்திலிருந்து தென் கிழக்கே 192 கி.மீ தொலைவில் உள்ள இந்நகரம், நேபிள்சு குடாக்கடற்கரையின் வடபகுதியில்அமைந்துள்ளது. பெரியதோர் துறைமுகத்தைத் தன்னகத்தே கொண்டுள்ள இது இன்றும் தென் இத்தாலியின் மிகச் சிறந்த வணிக மையமாகவும் பண்பாட்டுமையமாகவும் விளங்குகிறது; மக்கள் தொகையில் இத்தாலியில் மூன்றாம்இடத்தைப் பெற்றுள்ளது.வரலாற்றுச் சிறப்புமிக்க பல அழகிய கட்டடங்களையும் நேபிள்சு (Naples)கொண்டுள்ளது. இது அயல் நாட்டுப் பயணியர்களைத் தன்பால் ஈர்த்த வண்ணம் உள்ளது. அதனால், இந்நாட்டின் வருவாயும் பெருகி உள்ளது. நேபிள்சு என்பது 'புதிய நகரம்' எனப்பொருள்படும்.



நேபிள்சு

**வரலாற்றுச் சிறப்பு**: தொடக்கத்தில் கிரேக்கர்களின் குடியேற்றமாகத் திகழ்ந்த நேபிள்சு (Naples), கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் உரோமர்களால் கைப்பற்றப்பட்டது; இருப்பினும் கிரேக்கப் பண்பாட்டினைத் தங்க வைத்துக் கொண்டது. உரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர், கி.பி.5-ஆம் நூற்றாண்டில் நேபிள்சு நகரம் பொலிவிழந்தது. பைசாண்டியப் பேரரசிற்கு கி.பி.6-ஆம் நூற்றாண்டில் உட்பட்ட இந்நகரம், கி.பி.8-ஆம் நூற்றாண்டில் சுதந்திரச் சிற்றரசாக மாறியது; பின்னர் கி.பி.1282-இல் நேபிள்சு மாநிலத்தின் தலைநகரமாயிற்று. தெற்கு இத்தாலியிலுள்ள இந்நகரம் கி.பி.1860-இல் புதிய இத்தாலியுடன் இணைக்கப்பட்டது. இரண்டாம் உலகப் போரில் பேரழிவிற்கு உட்பட்டு, 1943-இல் நேச நாடுகளால் இந்நகரம் கைப்பற்றப்பட்டது. போருக்குப் பின்னர் இது புதுப்பிக்கப்பட்டு முன்னேறியது.

**தொழிலும் வணிகமும்**: நேபிள்சு, கி.பி. 1200க்குப் பின்னர்ப் பல முன்னேற்றங்களைக் கண்டு, இன்று தொழில் துறையிலும் வணிகத்துறையிலும் இத்தாலி

நாட்டிலேயே முன்னணியில் உள்ளது. பொறியியல், நெசவு, இரும்புத்தொழில், இரசாயனத் தொழில், தோல் பதனிடல், உணவுப் பொருள்களைப் பதப் படுத்துதல், கப்பல் கட்டும் தொழில் ஆகியவை இங்கு நல்ல முன்னேற்றம் கண்டுள்ளன. இயந்திர உற்பத்தி யும் இங்குப் பெருகியுள்ளது. அயல் நாட்டுப் பயணிய ரின் வருகையாலும் நேபிள்சு நல்ல வருவாயைப் பெறுகிறது. வணிகத்தில் சிறந்து விளங்க இங்குள்ள பெருந்துறைமுகம் துணை புரிகிறது.

**தொன்மைமிக்க கட்டடங்கள்:** இடைக்காலத்தில் கட்டப்பட்ட கவின்மிகு அரண்மனைகளும், மாதா கோயில்களும் இங்கு ஏராளமாக உள்ளன. தெல் லுவோ (Dell' Ovo, கி.பி.12-ஆம் நூற்றாண்டு), நுவோவா (Nuovo, 'கி.பி. 13-ஆம் நூற்றாண்டு), சேண்ட் எல்மோ (Sant'Elmo, கி.பி.14ஆம் நூற்றாண்டு) ஆகிய அரண்மனைகள் இவற்றுள் குறிப்பிடத் தக்கனவாகும். சேன் ஜென்னரோ (San Jennaro), மாண்டி ஓலிவடோ (Monteoli-veto), சேண்டி செவரினோ இ சோசியோ (Santi Severinoe Sosio), முதலான மாதா கோயில்கள் குறிப்பிடத்தக்கவை யாகும்.

**பண்பாட்டுப் பெருமை:** நேபிள்சிற்குத் தனித்த பண்பாட்டுச் சிறப்பு உண்டு. இந்நகரம் கி.பி.1600 களில் வண்ணம் தீட்டும் கலையில் குறிப்பிடத்தக்க தோர் இடத்தைப் பெற்றிருந்தது. இங்கு கி.பி.1224-இல் நிறுவப் பட்ட பல்கலைக் கழகம் உயர்கல்வியை வளர்க்கின்றது. நேபிள்சு தேசிய நூலகத்தில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டிலேயே ஏறத்தாழ 1 3,00,000 நூல்கள் இருந்தன. இங்குள்ள தேசிய அருங்காட்சி யகமும், தேசிய கலையரங்கும் நேபிள்சின் கலைச் செழுமையையும் பண்பாட்டுப் பெருமையையும் காப் பாற்றி வருகின்றன. அழிந்துபட்ட நகரங்களான பாம்ப்பே (Pompeii), எர்குலானியம் முதலானவற்றி லிருந்து கொண்டுவரப்பட்ட கவர்ச்சிமிக்க சிற்பங்கள் பல இங்குப் பாதுகாப்பாகப்பார்வைக்கு வைக்கப்பட் டுள்ளன. கபோடி மோன்டே அரண்மனையில் அமைந் துள்ள தேசிய கலையரங்கில் (National Gallery) இத்தாலி நாட்டின் மிகச் சிறந்த வண்ண ஓவியங் கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. நேபிள்சு வரலாற்றின் சிறப்பு அமிசங்களைக் காண விரும்புவோருக்குச் சேன் மார்டினோ மடாலயம் (Monastery of San Martino) ஒரு சிறந்த காட்சி மையமாகும். சேன் கார்லோ ஓபரா நிலையம் (The San Carlo Opera House கி.பி. 1737) இத்தாலியி லேயே மிகவும் பெரியது என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. தொரே அனுன்சியாட்டா, போர்டிசி (Torre Annunziata, Portici) ஆகிய இடங்களில் அழ கிய தாவரத் தோட்டங்கள் (Botanic Gardens) உள் ளன. இங்கு நுண்கலைக் கூடமும் நேபிள்சு மீன் காட்சிச் சாலைகளும் உள்ளன.

சால்வடோர் டி கியாகோமோ (Salvatore di Giacomo, 1860-1964) என்னும் புலவரும், கெயிட் டனோ பிளங்கிரி (Gaetano Filangieri 1752-1788) கியோவன் பட்டிசுடா விகோ (Giovan Battista, Vico 1688-1744) முதலான தத்துவ ஞானிகளும் உலோரென் சோ பெர்னினி (1598 – 1680). உலூய்கி வன்விடெல்லி (1700-1773) முதலான கட்டடக் கலை ஞர்களும், என்ரிகோகருசோ (கி.பி. 1873-1921) என் னும் பாடகனும் மற்றும் பல கலைஞர்களும் நேபிள் சிற்குப் பெருமை சேர்த்துள்ளனர். இதன் பரப்பளவு 1171 கி.மீ. மக்கள் தொகை 12,8545 (1983). ம.இ.

## நேபுகாத்நேசர்

**நேபுகாத்நேசர்** பண்டைக்காலத்தில் பாபி லோனிய நாட்டின் மிகச்சிறந்த மன்னர். இவர் பழைய பாபிலோனியாவை கி.மு.1146 முதல் 1123 வரை ஆட்சிபுரிந்தார். இரண்டாம் நேபுகாத்நேசர் பல இடங்களை வென்று அவற்றை இணைத்துப் புதிய பாபிலோனிய அல்லது சால்டியப் பேரரசை வலிமை பெறச்செய்து கி.மு. 605 முதல் 562 வரை இதன் பேரரசராக இருந்தார்.

**இளமை:** அப் பேரரசை நிறுவிய நேபோபொல சாரின் (Nebopolassar, கி.மு.625-605) மூத்த மகனாய் இவர் பிறந்தார். பட்டத்து இளவரசரான இவர், கி.மு. 607-606-இல் தம் தந்தையுடன் சென்று அசிரியாவிற்கு வடக்கிலுள்ள மலைப்பகுதியில் போர் புரிந்தார். இவருடைய தந்தை பாபிலோன் மீண்ட தும், இவர் படைக்குத் தலைமை தாங்கி நடத்திச் சென்றார். இவர் கி.மு. 605-இல் எகிப்தியப் படையைச் சிரியாவிலுள்ள சார்சமிசு (Carchemish), அமத்து (Hamath) ஆகியவிடங்களில் வென்று சிரியா முழுவதையும் கைப்பற்றிப் பாபிலோனியாவை மத்திய கிழக்கில் ஒரு வலிமைமிக்க நாடாகச் செய்தார்; தம் தந்தை இறந்தபின்னர்ப் பாபிலோனியா சென்று கி.மு.605 -இல் அரசராக முடிசூட்டிக்கொண்டார்.

**போர்கள்:** இவர் சிரியா, பாலசுத்தீனம், எகிப்து ஆகிய நாடுகளுடனும் அரேபியருடனும் போர் புரிந்தார். செருசலத்தை இவர் கி.மு.597- இல் வென்று யூதர்களின் அரசன் சேகோயாசின் (Jehoia-chin) என்பவரையும், அந்நாட்டு மக்கள் சிலரையும் போர்க் கைதிகளாகத் தம் நாட்டிற்குக் கொண்டு சென்றார். அப்பொழுது அந்நாட்டு அரசனாக இவரால் நியமிக்கப்பட்ட செதீகியா (Zedekia) கி.மு.588- இல் இவருக்கெதிராகக் கிளர்ச்சி செய் ததால் இவர் மீண்டும் செருசலத்தின்மீது படை யெடுத்துச் சென்று அதை (கி.மு587-86 அழித்தார். பின்னர், பொனீசியர்களின் நகரமான தயர் (Tyre)

மீது படையெடுத்துச் சென்று 13 ஆண்டுகள் (கி.மு. 585 முதல் 572 வரை) அதனை முற்றுகையிட்டு இறுதியில் பணியச் செய்தார். இவர், எகிப்தின் மீது படையெடுத்துச் சென்று அதனை வென்று கி.மு.570-இல் அமாசிசு (Amasis) என்பவரை அரியணையில் அமர்த்தினார்.

**கட்டடக் கலை:** பெரும் வெற்றி வீரரான இவர், பல இடங்களையும் வென்று கொள்ளையடித்ததாலும், அந்நாடுகளிடமிருந்துதிறைபெற்றதாலும்செல்வ வளம் பெருகிப் பல கட்டடங்களைக் கட்டினார்; அழிவுற்றிருந்த பாபிலோன் நகரைப் புதுப்பித்து அதைச் சுற்றி 16 கி.மீ. நீளத்திற்கு இருசுவர்களை எழுப்பினார்; மீடுகள் (Medes) இடமிருந்து நாட்டைப் பாதுகாக்க,வடக்குப்பாபிலோனியாவில் மீடியன்சுவர் (Median Wall) எனப்படும் பெருஞ்சுவரைக் கட்டினார். பல நகரங்களிலிருந்த கோயில்களைப் புதுப்பித்தார். தலைநகரில் மிகப்பெரிய சிக்கூரட்டு (Ziggurat) என்றுகூறப்படும் கோயிலைக் கட்டினார். மேலும் இவரால் பல அரண்மனைகள், கோயில்கள், சாலைகள்,மதிற் சுவர்கள், நுழைவாயில்கள் ஆகியவை கட்டப்பட்டன. பல கால்வாய்கள் வெட்டப்பட்டன. சாலை வழியில் கட்டப்பட்ட பல நுழைவாயில்களுள் இசுதர் நுழைவாயில்(Ishtar Gate)குறிப்பிடத்தக்கது. மெருகிடப்பட்ட, பல வண்ணச் செங்கற்களால் கட்டப்பட்டுள்ள இதில் விலங்குகளின் உருவங்கள் மிக அழகாக அமைக்கப்பட்டுள்ளன. இவர் இறந்த 100 ஆண்டுகளுக்குப் பின்னர் இந்நாட்டிற்குச் சென்ற எரடோடசு (Herodotus) இவற்றைக் கண்டு வியந்து எழுதியுள்ளார்.

**தொங்கும் தோட்டம்:** பண்டைக்கால உலகின் ஏழு வியக்கத்தக்க பொருள்களாகக் கருதப்படுவனவற்றுள் ஒன்றான தொங்கும் தோட்டம் (Hanging Garden) இவரால் அமைக்கப்பட்டது என நம்பப்படுகிறது. இவர் மீடியாவைச் சேர்ந்த தம்முடைய மனைவியான அமியிதிசு (Amyitis) என்பவளை மகிழ்விக்க இதனை அமைத்தார். மலைநாட்டைச் சேர்ந்த அவள், அதனை நினைத்து ஏங்காமலிருக்கப்பல பெரிய செங்கற்களைக் கொண்டு பல வளைவுகளை ஒன்றன்மேல் ஒன்றாகக் கட்டி அவற்றின்மீது தோட்டத்தை உருவாக்கினார்

இவர் கி.மு.562 இல் மரணமடைந்தார். பின்னர் இவருடைய மகன் அமெல் மர்டுக்கு (Amal Merduk) பேரரசனானான். சி.இரெ.

**துணை நூல்கள்:**

**Esmond Wright** (General Editor), The Ancient World, The Kamlyn Publishing Group Ltd., London, 1979.

**Plantagenet Somerset Fry**, The Hamlyn Children's History of the World, Hamlyn, London, 1974.

***நேமிநாதம்***: நேமிநாதம் என்னும் இந்நூலின் ஆசிரியர் குணவீர பண்டிதர்; சமண சமயத்தைச் சார்ந்தவர். இந்நூல் எழுத்து இலக்கணத்தையும், சொல் இலக்கணத்தையும் சுருக்கிக் கூறும் நூல் ஆகும். அதனால் இதனைச் 'சின்னூல்' என்றும் வழங்குவர். இது எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என இரண்டு அதிகாரங்களை உடையது. எழுத்ததிகாரத்தில் வீரசோழியத்தையும் சொல்லதிகாரத்தில் தொல்காப்பியத்தையும் பின்பற்றுவது. மொத்தம் 99 வெண்பாக்களைக் கொண்டது. நன்னூல் தோன்றுவதற்கு முன் தொல்காப்பியம் கற்பவர் முதலில் இந்நூலைக் கற்றுப் பின்னரே தொல்காப்பியம் கற்று வந்தனர். முன்னிருந்த இலக்கண நூல்களால் கூறப்பட்ட செய்திகளைத் தொகுத்துக் கூறும் நோக்கத்தில் இதுசெய்யப்பட்டது. இலக்கணத்துறையில் செய்யப்பட்ட சுருக்க நூல் முயற்சியில் இதுவே முதலாவதாகும்.

**பெயர்க்காரணம்:** தென்மயிலாபுரி நீல்நிறக் கடவுள் நேமிநாதர் தம் திருப்பெயரால் செய்யப் பெற்றமையின் நேமிநாதம் எனப் பெயர்பெற்றது. நேமிநாதர் என்பவர் சமணர்கள் போற்றும் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களுள் இருபத்திரண்டாம் தீர்த்தங்கரர் ஆவார்.

**நூலாசிரியர்:** குணவீர பண்டிதர் காஞ்சிபுரத்திற்குத் தென்கிழக்கில் 48கி.மீ. தொலைவில் உள்ள களத்தூர் என்னும் ஊரினர். கொங்கு நாட்டில் உள்ள களந்தை என்னும் ஊரே இவரது ஊராகலாம் என்பர் புலவர் செ.இராசு. இவரது ஆசிரியர் வச்சணந்தி முனிவர் என்பவர். அவர் பெயரால் வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியலையும் இவர் இயற்றினார். தமிழ் நாவலர் சரிதை இவரைப் பேராசிரியர் எனக் குறிப்பிடுகின்றது.

**காலம்:** வச்சணந்தி மாலை திரிபுவன தேவன் காலத்தில் இயற்றப்பட்டது என அதன் உரைப்பாயிரம் குறிப்பிடும். இத்திரிபுவன தேவனை மூன்றாம் குலோத்துங்கன் எனக் கொண்டு குணவீர பண்டிதரின் காலம் கி.பி.12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என முடிவு செய்வர் சதாசிவப் பண்டாரத்தார். மற்றொருவர் திரிபுவன தேவன் முதல் இராசராசன் எனக் கொண்டு கி.பி.10-ஆம் நூற்றாண்டின் இறுதி எனக் கொள்வர். கி.பி.11-ஆம் நூற்றாண்டில் தோன்றிய வீர சோழியத்தைப் பின்பற்றி இந்நூலின் எழுத்ததிகாரம் அமைந்திருப்பதால் கி.பி.12-ஆம் நூற்றாண்டு என்பதே ஏற்கக் கூடிய கருத்தாகும்,

**சின்னூல்:** நேமிநாதம் சுருக்க நூல் ஆதலின் இதனைச் சின்னூல் என்று கூறுவர். 'சின்னூல் உரைத்த குணவீர பண்டிதன்' என்பது தொண்டை மண்டல சதகம். இந்நூல் தொல்காப்பியக் கடலைக் கடக்கப் படகாகப் பயன்பட்டது என்பதனைச் சிறப்புப் பாயிரவெண்பா ஒன்று புலப்படுத்துகின்றது. தொல் காப்பியக் கடலின் சொல்தீபச் சுற்றளக்கப், பல்காற் தொண்டோடும் படகென்ப - பல்கோட்டுக், கோமிகா மற்புலனை வெல்லும் குணவீர, நேமிநாதத்தினெறி.

**நூலமைப்பு:** இது எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என இரு அதிகாரங்களைக் கொண்டது. எழுத்ததி காரத்தில் 24 வெண்பாக்களும், சொல்லதிகாரத்தில் 70 வெண்பாக்களும் உள்ளன. இவையேயன்றிச் சிறப்புப் பாயிரச் செய்யுள் இரண்டும், எழுத்ததி காரத்தில் பாயிரச்செய்யுள் ஒன்றும், அவையடக்கச் செய்யுள் ஒன்றும், சொல்லதிகாரத்தில் தற்சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றும் ஆக 5 வெண்பாக்கள் காணப்படுகின்றன. வெண்பாவால் சூத்திரங்களை அமைக்கலாம் என்பதற்கு நேமிநாதம் சான்று.

**எழுத்ததிகாரம்:** நேமிநாத எழுத்ததிகாரம் கருத்தா லும் அமைப்பாலும் வீரசோழியத்தைப் பின்பற்றிச் செல்கின்றது. வீரசோழியம் 'சந்திப்படலம்' என்ற ஒரே இயலாக எழுத்திலக்கணத்தை விவரிக்கிறது. இவ்வதிகாரமும் உட்பிரிவுகள் இன்றி ஒன்றாகவே இருக்கிறது. வீரசோழியம் போலவே நேமிநாதத் திலும் எழுத்ததிகார நூற்பாக்களில் ஓர் இயைபைக் காண இயலவில்லை. புணர்ச்சி பற்றிய நேமிநாத நூற்பாக்கள் பதினைந்தில் பத்து நூற்பாக்கள் வீர சோழியத்தைத் தழுவியன என்பர் பி.சா.சுப்பிர மணிய சாத்திரியார். எழுத்துகளைப் பற்றிக் குறிப் பிடும்போது அகர இகரம் என்றும், யரழ என்றும் எழுத்தின் பெயரையே எடுத்துக் கூறுவது தொல் காப்பிய மரபு. அதற்கு மாறாகத் தமிழ் எழுத்துக் களை 'மூன்றொடு நான்கு ஒன்பதாம் உயிர்' என எண்ணிக்கையில் வைத்துப் பேசும் வீரசோழியம். இம்மரபினைப் பின்பற்றி 'மூன்று நான்கு ஒன்பான் உயிர்ப்பின்னும்' என்று சுட்டுகின்றது நேமிநாதம்.

வீரசோழியம் வடமொழி மரபினைப் பின்பற்றி இன எழுத்துகளை 'வன்மையில் வருக்கத்து' என வருக்கம் என்று குறிப்பிடுகிறது. இதனைப் பின் பற்றியே நேமிநாதம் வல்லொற்று வருக்கம் என வகைப்படுத்துகின்றது. நேமிநாதச் சொல்லதிகாரம் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின் கருத்தையும். அமைப்பையும் தழுவியுள்ளது. இயல்களின் பெயர் களில் கூட ஒற்றுமையைக் காணலாம்.

**நூற் சிறப்புகள்:** முதலெழுத்துகளை 'முதல் வைப்பு' என்ற பெயரால் குறிக்கிறது இந்நூல். ஆய் தத்தை முதலெழுத்துகளுள் ஒன்றாக வைத்திருப்பது குறிப்பிடத் தக்கது. சார்பெழுத்தின் எண்ணிக்கையை நன்னூல் பெருக்கிக் காட்டுவதற்கு (369) முன்னோடி யாக இருந்தது நேமிநாதமேயாகும். மொழி முதல், மொழி யிறுதி எழுத்துகள் பற்றிய கருத்தில் தொல் காப்பியத்திலிருந்து இது வேறுபடுகிறது. எழுத்துப் போலி, உடம்படுமெய் என்பன பற்றி இது விரிவாக விளக்குகிறது. வினையெச்சப் பட்டியலை வீர சோழி யத்தை யொட்டி இது விரித்துக் கூறுகிறது. குறிப்பு வினை முற்றுப் பட்டியலைக் காட்டுவதும் குறிப்பிடத் தக்கது. நேமிநாதம் தொல்காப்பியத்துள் பரந்து கிடக்கும் பல்வேறு விதிகளில் சிறுபான்மையான வற்றையே எடுத்துக் கூறுகின்றது. இலக்கண நூலில் சுருக்கம் கருதி இலக்கண வளர்ச்சியைப் புலப்படுத்தத் தவறிவிட்டது. பழ.மு.

**நேமிநாதர்:** நேமிநாதர் சமண சமயத் தீர்த்தங் கரர்கள் இருபத்து நால்வருள் இருபத்திரண்டாம் தீர்த் தங்கரர். இவர் கசார்த்தா தேசத்தில் சௌரியபுரத் தில் பிறந்தவர். தந்தை சமுத்திர விசய மகாராசா; தாயார் சிவதேவி. நேமிநாதர், ஆவணி மாதம் சுக்கில பட்சம் சட்டி, சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவர். இவருடைய உயரம் பத்து வில்லளவு; நிறம் இந்திர நீலம், ஆயுள் ஆயிரம் ஆண்டுகள் எனச் சமண நூல் கள் கூறுகின்றன. இவருடைய வமிசம் அரிவமிசம். இவருடைய இலச்சினை சங்கு. இவர் கண்ணனுக்குத் தாயாதி முறையில் வந்த தம்பியார் ஆவர்.

**நேமிநாதர் வரலாறு:** கம்சனின் மனைவி சீவத்தி யசை; அவளுடைய தந்தை சராசந்தன். கம்சன் கண்ணனால் கொல்லப் படுகின்றான். அதனால் ஆத்திரமடைந்த சீவத்தியசை சராசந்தனுக்கு அதைத் தெரிவிக்கிறாள். சராசந்தன் வாசுதேவனைக் (கண்ணனின் தந்தை) கொல்லத் தன் மகனுடனும் பெருஞ்சேனையுடனும் சென்று தோல்வியடைகிறான். பின் மிக்க பலசாலியான அபராசிதன் என்றொரு மகனை ஏவுகிறான். அவனும் தோற்றபின் காளயவன் என்னும் மகனை ஏவுகிறான். வாசுதேவன் முதலான யாதவர் அனைவரும் காளயவனை எதிர்க்க முடியா மல் சௌரிபுரம், அத்தினாபுரம், மதுராபுரம் என்ற நகரங்களை விட்டுச் செல்கின்றனர். அதற்குப் பின் யாதவர் எல்லாரும் கடற்கரை வந்தடைகின்றனர். இவர்களின் குடியிருப்புக்கு என்ன செய்யலாம் என்று வாசுதேவன் மந்திர செபம் செய்து கொண்டிருக்க, கனவில் கௌதமன் என்றொரு தேவன் வந்து விடியற்காலத்தில் குதிரை வடிவில் வரும் என் மீதேறி, கடலில் பன்னிரண்டு யோசனை தூரம் சென்றபின், அங்கே சேனையுடன் தங்குவாயாக! என்று கூற விடியற்காலையில் வாசுதேவன் அவ் வாறே செய்கிறான். அங்குத் திருவவதாரம் செய்யப்

போகிற நேமி பகவானின் மகிமையால், இந்திரனின் ஆணைப்படி, குபேரன் பலவிதமான இரத்தினங்கள், பொன், வெள்ளி மயமான சமண ஆலயம், மதிற் சுவர், கோபுரம், அரண்மனை முதலியவற்றால் அலங் கரிக்கப்பட்ட துவாரகை என்னும் நகரத்தை அமைத்த பிறகு யாதவரெல்லாரும் கடல் வழியாகத் துவாரகை நகரம் சேர்கின்றனர். வாசுதேவனுக்கு இனிதே காலம் கழிகின்றது. அப்போது அரிவமிசம்காசியபகோத்திரத் துச் சமுத்திர விசய மன்னனின் இல்லத்தில் இந்திர னுடைய ஆணையால் குபேரன் பொன் மழை பொழி கிறான். தேவர் கூட்டம் சமுத்திர விசயனையும், அவனுடைய மனைவியையும் பாற்கடல் நீரால் அபி டேகம் செய்து, நல்ல ஆடை அணிகலன்களால் நாள் தோறும் அலங்கரித்து வர, கார்த்திகை மாதம் சுக் கில பட்ச சட்டி, உத்திராட நட்சத்திரத்தில் சிவ தேவி உறங்கிக் கொண்டிருந்த போது நான்காம் யாமத்தின் முடிவில் பதினாறு கனவுகள் கண்டபின், பாடகர்களின் மங்கலத் துதிகளாலும், காலை வேளை துந்துபியொலியாலும் விழித்தெழுந்து, மங்கல அணி கலன்கள் புனைந்து, மன்னனிடம் தான் கண்ட கனவு களைக் கூறுகிறாள். மன்னன் தன் ஞானத்தால் உணர்ந்து அவற்றின்பயன்களை அறிவிக்கிறான். தேவி யும் 'மூவுலக நாதனை என் கருப்பத்தில் தாங்கிப் பிறவிப் பயன் பெற்றேன்' என்று மிகவும் மகிழ்ச்சி யுற்றிருக்கிறாள். அன்று முதல் சிரீ, அரி திருதி, கீர்த்தி, புத்தி, இலட்சுமி முதலான தேவ சுந்தரிகள் சிவ தேவியின் பணிப் பெண்களாகிப் பணிவிடை செய்ய ஒன்பது மாதங்கள் நிறைந்த பிறகு ஆவணி மாதம், சுக்கில பட்ச சட்டி சித்திரை நட்சத்திரத்தில் அவ ளுடைய கருப்பத்தில் அவதாரஞ் செய்தருளுகிறார். உடனே நால்வகைத் தேவதேவேந்திரர்கள் வந்து மந்திராபிடேக கலியாணம் நடத்தியபின் 'நேமி பகவான்' என்று திருப் பெயர் சூட்டுகின்றனர்.

நேமி குமாரன் அரசாட்சியில் நிலைநிறுத்தப் பட்டபோது, அரசபதவி நிலையற்றதாகையால் குமாரனுக்கு ஒருவகையில் பற்றற்றமனப்பான்மையை ஏற்படுத்தி வைப்பது கடமை என்று வாசுதேவன் நினைத்துக் காட்டிலிருந்து பலவகையான விலங்கு களையெல்லாம் கொண்டு வந்து தெருக்களில்கூட்டம் கூட்டமாக நிறுத்தி வைக்கிறான். நேமிகுமாரன் நன்கு அலங்கரித்துக் கொண்டு மதயானை மீதேறி நகரத்தை வலம் வரும்போது எல்லாப் பக்கங்களிலும் கதறுகின்ற விலங்குகளைப் பார்த்து 'இவை என்ன?' என்று கேட்கப் பணியாட்கள் நீங்கள் திருவிளை யாடல் புரிவதற்காகச் சக்கரவர்த்தியால் இந்த விலங்குகள்கொண்டுவரப்பட்டன என்று கூறக்கேட்டுக் கருணையே வடிவான நேமிகுமாரன் உலகப் பற்றற் றுத் திரும்பிச் சென்று தன் அரண்மனை சேர்கிறான். அதே நேரத்தில் தேவர்கள் வந்து இது தீட்சைக் குரிய காலம் என்று விண்ணப்பிக்கின்றனர். பின்னர் நேமிநாதர் முறைப்படி தீட்சையேற்கிறார்.

இவருடைய பெயரால் களந்தைப் பதிக் குணவீர பண்டிதர் 'நேமிநாதம்' என்னும் இலக்கண நூலை இயற்றியுள்ளார். 'இந்நூல் என்ன பெயர்த்தோ எனின் இந்நூல் எய்திய சிறப்பின் எழுத்தையும் சொல்லையும் மெய்தெரி வகையின் விளங்கநாடித் தேனிமிர் பைம் பொழில் தென்மயிலாபுரி நீல்நிறக் கடவுள் நேமிநாதர் தம் திருப் பெயராற் செய்தமை யின் நேமிநாதம் என்னும் பெயர்த்து'. மயிலையில் நேமி நாதர் கோயில் இருந்தது என்பதும், அக்கோ யில் சமணர்களால் நன்கு போற்றப்பட்டிருந்தது என்பதும் நேமிநாதம் என்னும் இலக்கண நூலின் உரைப்பாயிரத்தால் அறியமுடிகின்றன. அவிரோதி ஆழ்வார் என்னும் சமணர் நேமிநாதரைப் பற்றித் திருநூற்றந்தாதி என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அந்நூலின் பதினாறாம் செய்யுள் நேமிநாதரைப் பற்றிக் 'கறவைத் திரள்காத்தகார்வண்ணனுக்கிளை யான், நிறைமிக்க நேமிசினன்' எனக் குறிக்கின்றது. நேமிநாதர் முத்தியடைந்த இடம் வடநாட்டில் உள்ள சயந்தகிரி என்னுமூராகும். சு.சு.தே.

**நேமியா**: இது பண்டைய கிரீசில் விளங்கிய புகழ்பெற்ற நகரம். கிரேக்க உலகத்தை ஒருவகையில் ஒற்றுமைப்படுத்தி வந்த தேசிய விளையாட்டுகளில் நேமியன்(Nemean)விளையாட்டுகள் முக்கியமானவை. இந்தவிளையாட்டுகள் குறிப்பிட்டகாலங்களில்சியசுத் (Zeus) தேவதையின் கோயிலில் நடைபெறுவது வழக்கம். இப்பகுதியில் புதைபொருள் ஆராய்ச்சிகள் நடைபெற்றுள்ளன. தெ.பா.

**நேர்காணல்** என்பது பொது ஆட்சித் துறையில் பதவிகளுக்கு ஆட்களைச் சேர்ப்பதில் பின்பற்றப்படும் தகுதிமுறையின் (Merit System) ஒரு பாகமாகும். விண்ணப்பம் செய்பவருடைய அல்லது வேட்பாளரு டைய ஆட்பண்புகளைத் தேர்வதிகாரிகள் நேரில் கண்டறிதற்காகக் கையாளும் ஒரு வழிதான் நேர் காணல் முறை (Interview) அல்லது வாய்மொழித் தேர்வு(Viva voce)என்று கூறப்படுகிறது. நேர்காணல் முறையோடு எழுத்துத் தேர்வுமுறையும் பின்பற் றப்படுகிறது.

**இதன் நோக்கங்கள்:** எழுத்துத் தேர்வுமுறை வேட்பாளருடைய ஆட்பண்புகளை எடுத்துக்காட்ட உதவுவதில்லை. எழுத்துத் தேர்வுகளை நல்ல முறை யில் செய்திருப்பவரும், ஒரு வெற்றியான ஆட்சி யாளருக்கு இருக்க வேண்டிய உணர்ச்சிவசப்படாத அமைதியான மனநிலை, தன்முயற்சி, இடநேரத்

திற்கேற்ப முடிவுசெய்யும் அறிவு (presence of mind), தீர்மானிக்கும் ஆற்றல், ஆர்வம் முதலிய பண்புகளை யெல்லாம் பெற்றிருப்பாரென்று கூறுதல் இயலாது. ஆகையால், இப்பண்புகளெல்லாம் ஒரு வேட்பாள ரிடத்து உள்ளனவா என்று அறிதற்கு, எழுத்துத் தேர்வுக்கு ஒரு துணைத் தேர்வாக நேர்காணல் தேர்வுமுறை பின்பற்றப்படுகிறது.

**நேர்காணல் தேர்வு வகைகள்:** ஏதேனும் ஒரு பொருளைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆற்றல் வேட்பாளரிடம் உள்ளதா என்றறியும் பொருட்டு அவரிடம் அப்பொருளைப் பற்றிக் கேள்விகள் கேட்டல் ஒரு வகை நேர்காணல் தேர்வுமுறையாகும். மற்றொருவகையான நேர்காணல் முறையில் வெளிப்படையான போட்டியே நடத்தப்படுகிறது. இதில் வேட்பாளர்கள் சில எழுத்துத் தேர்வுகளில் பங்கெடுத்து, அடுத்து ஆட்பண்புத் தேர்வுக்காக ஒரு குழுவின் முன் வருதல் வேண்டும். இக்குழு ஒவ்வொரு வேட்பாளரையும் நேரில் பார்த்து, ஆட்பண்புகளை மதிப்பிட்டு மதிப்பெண்கள் வழங்கும். இம்மதிப்பெண் கள் வேட்பாளர் எழுத்துத் தேர்வில் பெற்ற மதிப் பெண்களோடு இணைக்கப்படுகின்றன. மூன்றாம் வகையான 'களைந்தெறியும் நேர்காணல்' என்பதில் (Weeding Interview) போட்டியில் கலந்துகொள் ளுதற்குத் தகுதியற்ற வேட்பாளர்களை நேர் காணலில் கண்டுபிடித்துப்போட்டியினின்றும் நீக்கிவிடு கின்றனர். எனவே, இந்த முறையில் தகுதியான வேட்பாளர்களைத் தேர்ந்தெடுத்தற்கு மாறாகத் தகுதியற்றோர்களைப் போட்டியினின்று நீக்குதல் செய்கின்றனர். இந்தவகை நேர்காணல் முறை முற் காலத்தில் இந்தியக் குடிமைப் பணிக்கு (Indian Civil Service) ஆள்களைத் தேர்வு செய்தலில் கையாளப் பட்டது. நான்காம் நேர்காணல் முறை தேர்வுக்கழக முறை (Selection Board Procedure) ஆகும். இந்த முறையில் வேட்பாளர்கள் ஓரிடத்தில் 2 அல்லது 3 நாட்கள் ஓய்வுபெற்ற அதிகாரிகள், உளவியலார், பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் முதலியவரோடு தங்கி இருத்தலால், அவர்களுடைய மன இயல்புகள் அறியப்படுகின்றன. சில எழுத்துத் தேர்வுகளும், வாய் மொழித் தேர்வுகளும் நடத்தப்படுகின்றன. வேட்பா ளர்கள் சிறு குழுக்களாகப் பிரிக்கப்பட்டு, ஏதேனு மொரு ஆட்சி இயல்பான சிக்கலை ஆய்வு செய்யுமாறு விடுக்கப்படுகின்றனர். இவற்றில் வேட்பாளர்களு டைய திறன்களைத் தேர்வுக் கழகம் மதிப்பிட்டுத் தனது முடிவுகளைக்குடிமைப் பணி ஆணையத்துக்கு (Civil Service Commission) அனுப்புகிறது. அதன் பின்னர்குடிமைப் பணி ஆணையமே வேட்பாளர் களுக்கு ஓர்இரண்டாம் நேர்காணல் தேர்வை நடத்தி, வேட்பாளருடைய கல்லூரி, பல்கலைக் கழகப் பணி ஏடுகளைக் கவனித்து, முதல் நேர்காணல் தேர்வின் முடிவுகளையும் கவனித்து, இறுதியாகப் பதவிக்கு வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்கிறது. இம்முறை இங்கிலாந்தில் பின்பற்றப்படுகிறது. இந்தியாவில் உயர் பதவி வேட்பாளர்களுக்கு 5 மணித்துளி அளவுக்குக் குழு ஆய்வு முறை கொண்டு வரப்பட்டுள்ளது.

**மதிப்பீடு:** நேர்காணல் தேர்வை நடத்துபவர் களுடைய சொந்தக் கருத்துகள் இதில் வெளிப்பட இடமிருப்பதால், இந்த முறையும் வேட்பாளருடைய ஆட்பண்புகளைச் சரிவர மதிப்பீடு செய்தற்கு ஏற்ற முறை ஆகாது. இதை நடத்தும் தேர்வாளர்களுடைய ஆட்பண்புகளைப் பற்றிய கருத்துகளும் வேறுபடுகின் றன. வேட்பாளர்களுடைய புறத்தோற்றத்தைச் சிலர் ஆட் பண்பாகக் கொள்ளுகின்றனர். நேர்காணல் தேர்வின் கால அளவும் மிகவும் சுருக்கமாக இருக்கி றது. வேட்பாளர்களுடைய பேச்சுத்திறன், தோற்றம் முதலியவற்றையே இச்சுருங்கியகால நேர்காணல் தேர்வில் மதிப்பிடமுடியுமே தவிர, அவர்களுடைய தலைமைத் தன்மை, திறன், ஆற்றலுணர்வு முதலிய வற்றைக்கண்டறிதல் இயலாது. எனவே, நேர்காணல் தேர்வில் வெற்றி கிடைத்தல் என்பது எப்போதேனும் கிடைக்கக்கூடிய ஒரு வாய்ப்பே ஆகும். நேர்காணல் தேர்வில் பெறும் மதிப்பெண்கள் போட்டியின் மொத்த மதிப்பெண்களுள் ஓர் உயர்ந்த பாகமாக இருக்கும்பொழுது, இந்த முறையில் வெற்றிபெறுதல் இயலாது. இந்தியாவில், போட்டித் தேர்வில் வேட் பாளர்கள் வெற்றிபெறுதற்கு ஒவ்வொரு வேட்பாள ரும் குறைந்த அளவு 33 விழுக்காடாயினும் நேர் காணலில் மதிப்பெண்கள் வாங்குதல் வேண்டும் என்ற விதி 1957 வரை பின்பற்றப் பட்டது. இப்பொழுது இவ்விதி கைவிடப்பட்டு, நேர்காணல் மதிப்பெண்கள் எழுத்துத் தேர்வின் மதிப்பெண்களோடு சேர்க்கப் பட்டுப் பின்னர் மொத்த மதிப்பெண்களினடிப்படை யில் வேட்பாளர்கள் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படு கின்றனர்.

நேர்காணல் தேர்வுக்காக ஒவ்வொரு வேட்பாள ருக்கும் அரை மணிக்காலம் செலவழிக்கப்படுதல் வேண்டு மென்றும், அதில்பள்ளிக் கூடப் பாடத் தொடர்பான கேள்விகள் கேட்கப்படுதல் வேண்டு மென்றும், அது எழுத்துத்தேர்வுக்குத் துணையாக இருக்கவேண்டுமென்றும், அதற்குப் பின்னரே எழுத் துத்தேர்வு நடத்தப் படுதல்வேண்டும் என்றும், நேர் காணலுக்கு ஒதுக்கப்படும் மதிப்பெண்கள் பாதியாகக் குறைக்கப்படுதல்வேண்டு மென்றும் பைனர் (Finer) என்ற ஆசிரியர் கூறுகிறார். பா.கு.

**நேர்முக வரி:** வரிகளை நேர்முக வரி, மறைமுக வரி என இரண்டு வகையாகப் பிரிக்கலாம். வரியானது வருமான வரவினங்கள் அல்லது செலவினங்களின் மீது விதிக்கப்படுகிறது. இவ்வாறு வருமான வரவினங்

களின் மீது விதிக்கப்படும் வரியானது நேர்முக வரி (Direct Tax) என்றும், செலவினங்களின் மீது விதிக்கப்படும் வரியானது மறைமுக வரி (Indirect Tax) என்றும் சொல்லப்படுகின்றன.சே.எசு.மில் (J.S.Mill) என்ற பொருளியலறிஞரின் கருத்துப்படி நேர்முகவரி என்பது, ஒரு மனிதனுக்கு வரி செலுத்த விருப்பம் இருக்கிறதோ இல்லையோ அவரிடமிருந்து வரி வசூலிப்பதாகும். மறைமுக வரி என்பது, ஒரு மனிதனுடைய செலவில் அந்த வரித்தொகையை வசூல் செய்வதாகும். மேலும் வரிப்பளு யார்மீது விழுகிறது என்பதைப் பொறுத்து இவ்விரண்டு வரி முறைகளும் வேறுபடுத்தப் படுகின்றன. எடுத்துக்காட்டாக. ஒருவரின் சொந்த வருமானத்தின் மீது அல்லது வீட்டுக்குச் சொந்தக்காரர் மீது விதிக்கப்படும் வரியானது நேர்முக வரியாகும். ஏனென்றால், மேற்சொன்னவற்றில் வரிப்பளுவை அடுத்தவரிடம் மாற்றமுடியாது. அவரேதான் செலுத்தவேண்டும். மாறாக விற்பனை வரியில் விற்பனையாளர், வாங்குபவரின் மீது இந்தச் சுமையை மாற்றி விடுகிறார். அதன் அடிப்படையில் வருமான வரி, ஆதாய வரி, மூலதன ஆதாய வரி, சொத்து வரி ஆகிய அனைத்தும் நேர்முக வரிக்கு எடுத்துக் காட்டுகளாகும். உற்பத்தி வரி, சுங்க வரி, விற்பனை வரி ஆகியவை மறைமுக வரிக்கு எடுத்துக்காட்டுகளாகும். இவ்விரு வரிகளும் பொதுவாக வழக்காற்றில் இருந்தாலும், இவற்றைப் பயன்படுத்துவதில் மேற்கூறிய வரியமைப்பில் அடங்கிய வரிகள் காலந்தோறும் மாறுபடுவதோடு, நாட்டுக்கு நாடு வேறுபடவும் செய்கின்றன.

'நேர்முகம்' என்ற சொல் எப்பொழுதுவழக்காற்றுக்கு வந்தது என்பதுபற்றிய குறிப்பில்லை. பிரான்சு நாட்டில் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் ஆளைப்பற்றிய வரிகளைக் (Personal Taxes) குறிப்பதற்கு (Assize Directment)இந்தச் சொல்லைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். ஆதம்சுமித்து 'நாடுகளின் செல்வம்' என்ற தம் நூலில் இந்தக் சொல்லைப் பயன்படுத்தியிருந்தாலும், இதைக் குறியீட்டுச் சொற்றொடராகப் பயன்படுத்தினாரா என்பதுபற்றித் தெளிவில்லை. ஏனென்றால், அவர்இந்நூலை எழுதிய காலத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இச்சொல் குறியீடாக வழக்கில் இருந்திருக்கிறது. ஆனால், அப்பொழுது 'நேர்முகவரி' எனபதற்கு ஆள் வரி (Poll Tax) என்று பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

இங்கிலாந்து நாட்டில் வருமான வரி விதிக்கப்படுவதற்கு முன்பு 'தீர்வையிடப்பட்ட வரிகள்' என்ற வகையினை நேர்முக வரிகளாகக் கொண்டிருந்தனர். நிலம், சன்னல், ஏவலாட்கள் இன்னும் இவற்றைப் போன்ற செல்வத்தின் புறச் சின்னங்களைக் கொண்டு இவ்வரிகள் விதிக்கப்பட்டன. ஆனால், வருமான வரி விதித்த பின்னர்த் தீர்வையிடப்பட்ட வரிகளின் முக்கியத்துவம் குறைந்தது. மேலும், வருமான வரி மிகத்தெளிவாகவும் நேரடியாகவும் இருந்ததால் எந்தெந்த வரிகள் நேரடியாக விதிக்க அல்லது வசூலிக்கப் படுகிறதோ அவை அனைத்தையும் நேர்முக வரிகளாகஇங்கிலாந்து வருவாய் அதிகாரிகள் கொண்டனர்.இவ்வாறு,நேர்முக வரி என்பது ஓர் ஆளின்மீது விதிக்கும் வரி எனக் கொள்ளப்பட்டது.

செருமனியில் ஆளைப்பற்றிய வரிகள் ஆயத் தீர்வைகள் என்றும், பிரான்சில் ஆளைப்பற்றிய வரிகள் (Assize Directment) சுங்கத் தீர்வைகள் (Tariffs) என்றும் நேர்முக வரிகள் வகைப்படுத்தப்பட்டிருந்தன.

மேலும், வரிகளின் இத்தகைய வகைப்பாடு, ஆட்சி, சமுதாயக் கணக்கு, ஆய்வுப் பயன்பாடுகள்ஆகியவற்றிற்காக ஏற்படுத்தப்பட்டது.எனவே,நேர்முக, மறைமுக வரி என்ற பாகுபாடு தோற்றுவாயிலும் சரி,இப்பொழுதும் சரி ஆட்சியினர் கற்பித்த வேறுபாடாகும். அதாவது வரி செலுத்துவோரை நேரடியாகவோ தனித்தனியாகவோ மூன்றாம் மனிதர் வாயிலாகவோ தொடர்பு கொள்வது குறித்து ஒரு பாகுபாடு தேவைப்பட்டது.அதுவே நேர்முக, மறைமுகவரி என்ற பாகுபாட்டிற்கு வழிகோலியது. அதாவது வரியைப் பற்றிய கருதுகோளின்படி ஒரு குறிப்பிட்ட வரியின் வரிப்பளுவை யார் இறுதியில் தாங்குகிறார்கள் என்பதைப் பொறுத்து இவ்வேறுபாடு அமைகிறது. இவ்வாறு இறுதியில் வரி எவ்விடத்தில், யார்மீது தங்குகிறது என்பதை வரி நிலைப்பாடு (Tax Incidence) எனலாம். மேலும் வரியை இறுதியாகச் செலுத்துபவர் வேறு யார்மீதும் வரியை இடம்பெயராமல் (Shifting of Tax) இருக்கச் செய்ய வேண்டும். அவ்வாறு மற்றவர்மீது மாற்ற முடியாதபடி தனி ஆளின் மொத்த வருமானம் அல்லது செல்வத்தின்மீது விதிக்கப்படும் வரிகளே நேர்முக வரிகள் எனப்படுகின்றன.

மேலும், நேர்முக வரிவிகிதத்தில் வரி நிலைப்பாடு அதிகம் என்பதால் அவ்வரி செலுத்துபவரின் வாங்கும் ஆற்றல்பாதிக்கப்படுறது. அதனால், வரிநிலைப்பாட்டைக் குறைப்பதற்கும் தவிர்ப்பதற்கும் உண்டான எல்லா வாய்ப்புகளையும் வரிசெலுத்துவோர் பயன்படுத்திக் கொள்கிறார்கள். வரிகளைத் தவிர்ப்பதின்மூலம் இடப்பெயர்ச்சியையும் தவிர்க்கலாம்.இவ்வாறு சிறிது சிறிதாக வரியின் அடித்தளமானது குறைக்கப்படுவதால் வரிப்பளுப் பகிர்வில் ஒழுங்கற்ற ஏற்றத்தாழ்வுள்ள நிலை ஏற்படுகிறது.

அதோடு வரி விதிக்கப்பட்ட தொழில் நிறுவனத்தின் சேமிப்புத் தொகையும், முதலீட்டுத் தொகை

யும் குறையும். அதுபோலவே வரி விதிக்கப்பட்டதனி யாளின்நுகர்வு அல்லதுசேமிப்பின் அளவும் பாதிக்கப் படும். இவ்வாறு நிலைப்பாடு பகிர்வு செய்யப்படும் பொழுது மொத்த நுகர்வும், முதலீடும் பாதிக்கப்படு கின்றன.

**நேர்முக வரிவிதிப்பின் நோக்கம்:** மூலதனத் திரட்சிக்கும், அரசின் செலவினங்களுக்கும் ஒரு நாட் டின் குடிமக்கள் தங்கள் பங்கை வரியாகச் செலுத்து வதே நேர்முகவரிவிதிப்பின்முக்கியநோக்கமாகும். அவ் வாறு செலுத்தும் உச்ச அளவுத் தொகையே வரிதாங் கும் வல்லமை (Taxable Capacity) எனப்படுவதோடு, வருமானப்பகிர்விலுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக் கவும் இது கருவியாகப் பயன்படுத்தப்படுகிறது. இதனுடைய வரிச்சுமையானது பெரும்பாலும் செல் வர்களின் மீது விழுவதால் சில சமயங்களில் இவ் வரியின் உச்சஅளவு மட்டத்தினால் தனியாரின் தொழில் முனைவுக்கும் முதலீட்டுக்கும் கடுமையான ஊறு ஏற்படுவதும் உண்டு.

**நேர்முக வரிகளின் விளைவுகள்;** இவ்வரிகளின் விளைவாக 1) நுகர்விற்காகத் தனி ஆள் செலவிடும் பணம் குறைகிறது; 2) வாணிக நிறுவனங்களின் வரு மானம் குறைவதால் காரணிகளுக்கான தேவையும் குறைகிறது; 3) தொழிலை விரிவடையச் செய்வதற் கான நிதி திரட்டுவது குறைகிறது. தொழிலை விரி வடையச் செய்த நிலையில் மேலும் ஈட்டிய வரு மானத்தின் பெரும் பகுதியும் வரியாக வசூலிக்கப் படும் என்பதை உணர்ந்த தொழில் அதிபர்கள் தொழிலை விரிவுபடுத்தமாட்டார்கள். உறுதிப் பாடின்மையால் சில நாடுகளில் தொழிலதிபர்கள் பணமாகவே வைத்திருக்கும் நிலையும் ஏற்படுகிறது.

**வளங்களின் ஒதுக்கீடும் நேர்முக வரியும்:** தனி ஆட்களின் பண வருமானம் பல்வேறு செலவுகளுக்குப் பகிர்ந்துகொள்ள வேண்டியிருப்பதால், அவ் வரு மானத்தின்மீது விதிக்கப்படும் வரியானது அவர் களின் தொழில் பங்கீட்டை நேரடியாகவோ மறை முகமாகவோ பாதிக்கிறது. எடுத்துக்காட்டாக, வரு மான வரி தனி ஆளின் பண வருமானத்தைக் குறைப் பதனால், அவர்கள் குறைந்த அளவு பொருளையே வாங்கவேண்டிய நிலைக்குக் கட்டாயப் படுத்தப்படு கிறார்கள் அல்லது பொருள் வாங்குவதையே தவிர்க்க அல்லது தள்ளிவைக்க வேண்டிய நிலைக்கு ஆளாக்கப்படுகிறார்கள். அதனால் அவர்களின் வாழ்க்கைத் தரமானது எல்லா வகையிலும் குறைக் கப்படுகிறது. ஆனால், இந்நிலையை மறைமுகவரி யோடு ஒப்பிடும்போது எடுத்துக்காட்டாக, வெண் சுருட்டின்மீது விதிக்கப்படும் தீர்வையானது அதன் விலையை மிகச் செய்வதோடு நுகர்வோரைக் குறைந்த அளவிலே வெண்சுருட்டை வாங்க அல்லது மற்றப் பொருள்களுக்குப் பதிலாக அதே அளவுள்ள வெண்சுருட்டை வாங்கச் செய்கிறது. இந்நிலையில் இரண்டுவரிகளுமே தனி ஆளின் பொருள் பகிர்வு முறை யைப்பாதிக்கின்றன. இருந்தபோதிலும், இந்தப் பொருள் ஒதுக்கீட்டில் (Allocation of Resoures) துணையான பலனை மறைமுக வரியைவிட நேர்முக வரிதான் கொடுக்கிறது என்பது பொருளியலறிஞர் களின் கருத்தாகும்.

மேலும், வருமானத்தைப் பொறுத்து நேர்முக வரி அமையும் என்ற நிலையில் இது ஒரு வளர்வீத வரி விதிப்பு முறையாகும். இவ்வளர்வீத வரி விதிப்பி னால் மிக்க வருமானம் உள்ளவர்கள் பயன்படுத்தும் பண்டங்களின் உற்பத்தி குறையும். இவ்வரியினால் செல்வர்களின் சேமிப்பில் பாதிப்பு ஏற்படுவதனால் கறுப்புப் பணம் பெருக வாய்ப்புண்டு. தவிர, அரசின் செலவின் பெரும்பகுதியும் நுகர்வுப் பண்டத்துக்கா கவே இருக்கும் நிலையில் மூலதனத் திரட்சி வீதம் குறையும். அதனால் குறுகிய காலத்தில் நுகர்வுப் பண்டங்களின் உற்பத்திப்பெருகி நீண்ட காலத்தில் வாழ்க்கைத்தரம் குறையும்.

வரி செலுத்துவோர் தங்கள் நுகர்வு அட்ட வணையை மாற்ற வேண்டியிருப்பதும், வரியினால் ஏற்பட்ட மாறுதலால் உண்டான புதிய பொருளா தாரச் சூழ்நிலையைக் கருத்திற்கொண்டு உற்பத்தி யாளர்கள் காரணிகளை மறு ஒதுக்கீடு (Reallocation) செய்யவேண்டியிருப்பதும் முக்கியமான விளைவுகளா கும். பொருள்களின் விலைகளில் மாறுதல்கள் ஏற்படுவ தற்குக் காரணம் வருமான வரி செலுத்துவோர்கள் வரியைப் புரட்ட முற்படுதலே எனக் கருதப்படுகிறது. ஆனால், செலவு வரிகள்தாம் விலைகளில் சேர்க்கப்படுகின்றனவே தவிர வருமான வரிகள் அல்ல. மேலும், மக்களின் வருமானங்களில் எத்துணை விழுக்காடு, அவர்களுக்குப் பண்டங்களையும், பணி களையும் விற்பவர்களுக்குப் போய்ச்சேராமல் அரசுக் குச் செலுத்தப்படுகிறது என்பதைப் பொறுத்து, மக் களுக்குப் பொதுவான பல நன்மைகளைக் கருத்தில் கொண்டு, இவ்வரியின் மூலம் வளங்களுக்கு அரசு பகிர்வு செய்கிறது. இக் கணக்கீட்டின் விளைவு வரி யின் தோற்ற நிலைப்பாடு (Formal Incidence) எனப்படுகிறது. நேர்முக வரிகளைப் பொறுத்த அள வில் இதற்குத் தளமாக வருமானப்பகிர்வு, செல்வப் பகிர்வு, ஒரு நாட்டின் தொழில் மைய முன்னேற்றம், நிறுவனத்தின் அமைப்பு ஆகியவற்றைப்பற்றிய அறிவு தேவைப்படுகிறது. மாறாக மறைமுக, வரிகளைப் பொறுத்தவரையில் அதற்குத் தளமாக அமைவது அங்காடி நிலவரங்கள், தேவை, ஆக்கச்செலவு ஆகிய காரணிகளாகும்.

**நேர்முக வரிகளும், பகிர்வுப் பங்கீட்டு விளைவுகளும்:** இவ் வரியினால் வருமானத்தில் இருக்கும் ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கலாம் என்பது பொருளியல் அறிஞர்களின் கருத்து. ஆனால், நடைமுறையில் வருமானத்தை மறு பகிர்வு செய்வதில் வருமானவரி வெற்றி பெறவில்லை. ஏனென்றால் வரிகளின் முடிவான விளைவானது சமதரும வருமானப் பங்கீட்டைக் கொண்டு வருவதற்காகத் தனித் துறையிலிருந்து அரசுத்துறைக்கு மாற்றுவதாகும். அவ்வாறு மாற்றப்பட்ட பணமானது பகிர்வின்மூலம் ஏழைகளுக்குச் செலவு செய்யப்படும்போது அவர்களின் வாழ்க்கைத்தரம் உயரும். மேலும், வருமான வரியானது தனிப்பட்டவரின் வருமானத்தைக் குறைக்கிறது. ஆண்டுச் சொத்து வரியானது தனி மனிதனின் சொத்தைக் குறைக்கிறது. இறப்பு வரியானது பரம்பரை அல்லது மரபுவழிச் சொத்தின் அளவைக் குறைக்கிறது. நேர்முக வரியானது வளர்நோக்குத் தன்மையுடையது. அதாவது வருமானம், சொத்து ஆகியவை மிகுதியாக மிகுதியாக நேர்முக வரியும் மிகுதியாகும். எனவே, பொதுவாகச் செல்வர்களின் வருமானத்தின்மீது மட்டும் விதிக்கப்படும் வரியானது பங்கீட்டு நன்மையைக் கொடுக்கும்.

ஆனால், சுவீடன் நாடு மட்டுமே செல்வத்தையும் வருமானத்தையும் மறுபகிர்வு செய்வதில் வெற்றி கண்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது, பொதுவான தோல்விக்குக் காரணம் வருமான வரிச்சட்டத்தில் பல குறைபாடுகள் இருப்பதும், அவற்றிற்குச் சட்ட மன்றங்களின் ஆதரவிருப்பதும் ஆகும். தவிர வருமானம் அல்லது செல்வத்தை முழுதும் தெரிவிக்கும் படிகட்டாயப்படுத்துவதில் வரி நிருவாகமும் தோல்வி காண்கிறது. அதனால், ஒவ்வோராண்டும் வரவு செலவுத் திட்டத்தில் பரிந்துரைத்து மாற்றப்படும் நேர்முக வரி வீதங்கள் தோற்றத்தில் எவ்வளவாக இருந்த போதிலும் இந்தியாவில் சொத்துள்ளவர்களின் உண்மையான வரிப்பளு மிகவும் குறைவாகவே இருக்கிறது என்று பிரசுட்டு(Prest) கருத்துத் தெரிவிக்கிறார். சம்பளம் வாங்கும் பணி முதல்வர்கள் முழுச் சம்பளத்தையும் அதிகாரிகளுக்குத் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் சொத்து வைத்திருப்பவர்களும், தொழில் அதிபர்களும் தங்களின் உண்மையான வரவுக் கணக்குகளைக் காண்பிப்பதில்லை. வளர்வீத நேர்முக வரியினால் பணி முதல்வர்கள், கட்சியாளர்கள், அறிஞர்கள் ஆகியோரின் பேரில் அளவுக்குமீறிய வரிப்பளு சுமத்தப்படுகிறது. மேலும் வளர்வீத வரிவிதிப்பினால் வரி ஏய்ப்பும், வரி செலுத்துதலிலிருந்து தப்பித்துக் கொள்வதும் நடைபெறுவதால் நேர்முக வரியினால் வருமான மறு பகிர்வு ஏற்படுவதற்கான வாய்ப்புகள் மிகக் குறைவாகவே உள்ளன.

**நேர்முக வரியும் நிருவாகத் தன்மையும்:** நேர்முக வரி வசூலிப்பதில் மிக்க நிருவாகச் செலவும், திறனும் தேவைப்படுகின்றன. பொதுவாக நேர்முக வரியானது வரி செலுத்துபவருக்கு விருப்பமின்மையைக் கொடுப்பதால் அவ்வரியை வசூலிப்பது என்பது எளிதான காரியமன்று என்று விவாதிப்பதுமுண்டு. ஏனென்றால் வருமான வரி செலுத்துபவர் வருமான வரி, சொத்து வரி செலுத்துவதனால் உண்டாகும் இழப்பை நிறைவு செய்யவேண்டிய நிலையில் வரியை அவ்வளவு எளிதில் செலுத்துவதில்லை. மேலும், நீண்டகாலமாகவே நேர்முக வரியானது குறைந்த வருமானமுடைய மக்களுக்கு விதிக்காமல் தேவையான விலக்குகள் மேற்கொள்ளப்பட்டன. இந்தியாவைப் பொறுத்தவரை பெரும்பாலான மக்கள் குறைந்த வருமானம் உடையவர்களாதலால் அவர்கள் சொத்துமீது வரி விதிப்பதில் மிகுந்த பயன் கிடையாது. தவிர, மிகுந்த வருமானம் உடையவர்கள் வரி ஏய்ப்பு, கையூட்டு, ஊழல் போன்ற சமுதாயத் தீங்கினைச் செய்து வரிப்பளுவிலிருந்து தப்பித்துக்கொள்கிறார்கள். அதனால், இந்தியாவில் நேர்முக வரிகள் வசூலிக்க ஆகும் செலவானது அந்நேர்முக வரியால் அரசுக்குக் கிடைக்கும் வருவாயைவிட மிகுதியாகவுள்ளது. நிருவாகத் தன்மையோடு ஒப்பிடுகையில் நேர்முக வரியைவிட மறைமுக வரியே நன்மை பயக்கக்கூடியதாக உள்ளது. தவிர வருமான வரி கட்டுபவர்கள் வருமான வரி ஏய்ப்புக்காகவும், அறியாமையினாலும் கணக்குகளை ஒழுங்காக வைத்திருப்பதில்லை. இந் நிலையில் வருமானக் கணக்கைப் பார்த்து விதிக்கப்படும் வரியை வசூலிப்பதில் பல சிக்கல்களும், மிகுந்த காலமும், நிருவாகச் செலவும் ஏற்படுகின்றன. இந்தியாவில் வேளாண்மை வருமான வரிவிதிப்புக்கு எதிர்ப்புத் தெரிவிப்பதன் அடிப்படையே, இந்த நிருவாக வசூலிப்பில் இருக்கும் சிக்கல்தான் என்று சொல்லலாம். ஆனாலும், இப்பொழுது வரி விதிப்பதிலும் அதை வசூலிக்கும் முறையிலும் நிருவாகத் திறமையானது முடுக்கிவிடப்பட்டிருக்கிறது. இருந்தபோதிலும் நிருவாகச் செலவு திறன் ஆகியவற்றின் அடிப்படையில் நேர்முக வரியைவிட மறைமுகவரிதான் சிறந்தது என்ற கருத்து இருக்கிறது. மேலும் வளரும் நாடுகளில் பெரும்பான்மையான மக்கள் வறிய நிலையிலிருப்பதால் அவர்களால் அரசாங்கத்துக்கு எந்தவிதத்திலும் நேர்முக வரியைச் செலுத்தமுடிவதில்லை.

**நேர்முக வரியின் நன்மைகள்:** நேர்முக வரியின் நன்மைகளாக நான்கைச் சொல்லலாம். முதலாவதாக, நேர்முக வரியானது அந்தந்தப் பிரிவினரின் செலுத்தும் தன்மைக்கேற்றவாறு விதிக்கப்படுவதால் வரிப் பளுவானது அவரவர் வருமானம், செல்வத்திற்குத் தக்கவாறு பகிரப்படுகிறது. இரண்டாவதாக,

நேர்முக வரியானது ஒருவர் அரசுக்குச் செலுத்த வேண்டிய வரித்தொகை, அதன்மூலம் அரசுக்குக் கிடைக்கும் வருவாய், அதன்மூலம் அரசின் செலவுகள் ஆகியவை நிருணயிக்கப்படுவதால் உறுதிப்பாட்டுக் (Certainty) கொள்கையை நிலைப்படுத்துகிறது. மூன்றாவதாக, இது நெகிழ்வுத் தன்மையைக் (Elasticity) கொண்டிருக்கிறது. அதாவது தனி ஆளின் வருமானம், சொத்து ஆகியவை மிகுதியாகும் போது அதற்கேற்ப வரிவீதமும் மிகுதியாகும். இக்கால அரசின் தொடர்ந்த தேவைகளுக்கு இத்தகைய நெகிழ்வுத் தன்மை வரிகள் 'வருவாய் வளத்தைப் பெருக்கும். நான்காவதாக, இவ்வரியானது, வரி செலுத்துபவர்களுக்கு வரிப் பளுவை உணர்த்துவதால் பொதுப் பணத்தைச் செலவிடுதலில் அக்கறையையும், பொதுச் சொத்தைக் காப்பதில் ஆர்வத்தையும் ஏற்படுத்துகிறது. நாட்டின் குடிமகனாக இருப்பதில் உரிமையையும் பொறுப்பையும் பற்றி அக்கறை எடுத்துக்கொள்ள உதவுகிறது. எனவே, நேர்முக வரியின் நன்மைகளாகச்சமன்நோக்கு, உறுதிப்பாடு, நெகிழ்வுத்தன்மை, பொதுச் சொத்தையும் தன்பொருள் போலப் பாவிக்கும் உணர்வு ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

**நேர்முக வரியின் தீமைகள்:** நேர்முக வரியின் தீமைகளாகச் சிலவற்றைக் கூறலாம். முதலாவதாக நேர்முக வரியானது, தெளிவற்ற தன்மையைக் கொடுக்கிறது. ஏனென்றால், வரி செலுத்தும் ஆற்றலின் அடிப்படையில் நேர்முக வரி விதிக்கப்படுகிறது என்ற கருத்தை ஏற்றுக்கொள்ள முடியாது. காரணம் நடைமுறையில் வருமான வரி விதிப்பு என்பது அரசியல் தலைவர்களின் வெளிப்பாட்டைப் பொறுத்து அமைந்துள்ளது. மக்கள் ஆதரவு அரசானது குறைந்த வரி வீதத்தையும், அதற்கு எதிரான அரசானது மிக்க வரி வீதத்தையும் பரிந்துரைக்கும்.

இரண்டாவதாக, நேர்முக வரியானது நேர்மையின் பெயரில் விதிக்கப்படுகிறது. ஆனால் வரி செலுத்துபவர் வரி ஏய்த்தும், கணக்குகளை முழுதும் அல்லது பாதியளவு மறைத்தும், பொய்க் கணக்குகளைக் (Malafide Accounts) காண்பித்தும் வரிப்பளுவிலிருந்து தப்பிக்க முயற்சி செய்கிறார். அதற்காக நிருவாகத் திறமையும், காலமும், பொதுச்செலவும் வீணாக்கப்படுகின்றன. இருந்தபோதிலும் இப்பொழுது நிருவாகத்திறமை பல முனைகளிலிருந்தும் முடுக்கிவிடப்பட்டு முடிந்தவரை வரி ஏய்ப்பைத் தடுக்க முயற்சிகள் எடுக்கப்படுகின்றன. அரசுச் சட்டங்களின் மூலமும் இது கட்டுப்படுத்தப்படுகிறது.

மூன்றாவதாக, நேர்முக வரியானது வரி செலுத்துபவருக்கு அதற்கீடாக எந்தப் பயன்பாட்டையும் திரும்பக் கொடுக்காததால், வரி ஆணையாளர்களுக்குச் செலுத்தவேண்டிய தொகைக்காகத் தம் எல்லா வருமான வாயில்களையும் பயன்படுத்த வேண்டிய நிலைக்கு உள்ளாக்கப்படுகிறார்கள். அதனால் இவர்களுடைய வாழ்க்கைத்தரம் பாதிக்கப்படுகிறது.

நான்காவதாக, நேர்முக வரியை வசூலிக்க அரசுக்கு ஆகும் செலவினம் மிகுதியாகிறது. ஏனென்றால் வரி செலுத்துபவர் ஒவ்வொருவரும் வரி அலுவலர்களிடம் தனிப்பட்ட முறையில் தொடர்பு கொள்ள வேண்டியிருப்பதால் இதற்கு விரிவான அரசியல் நிருவாகத்திறனும் செயற்பாடும் தேவைப்படுகின்றன. இப்பொழுது வளர்ந்த நாடுகளைப்போல வளரும் நாடுகளிலும் நேர்முக வரியின் குறைபாடுகள் குறைக்கப்பட்டும் நீக்கப்பட்டும் வருகின்றன.

**இந்தியாவில் நேர்முக வரிகள்:** இந்திய அரசாங்கம் வருமான வரி (Income Tax), சொத்து வரி (Wealth Tax) என இரண்டு வகையான நேர்முக வரிகளை விதிக்கிறது. இந்திய அரசியல் சட்டத்தின்படி இவ்விரண்டு வகை வரிகளில் அடங்கும் இனங்கள் மைய, மாநில அரசுகளுக்கிடையே பிரிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு மைய அரசுவிதிக்கும்வருமான வரியானது, தனி ஆள் வருமான வரி(Personal Income Tax) நிறுவன வரி (Corporation Tax) என்று இரண்டு வகையாகப் பிரிக்கப்படுகிறது. இதில் தனி ஆளின் வருமானத்தின்மீது விதிக்கும் வரி தனி ஆள் வருமான வரியாகும். ஒரு நிறுவனத்தின்மீது விதிக்கும் வரி நிறுவன வரி எனப்படும். மைய அரசு விதிக்கும் சொத்து வரியானது, நிகரச் சொத்து மதிப்பின்மீது வரி (Wealth Tax), மூலதனத்தின் ஆதாயத்தின்மீது வரி (Capital Gains Tax), சொத்தை ஒருவருக்கு மாற்றிக் கொடுக்கும்போது அதன் மதிப்பின்மீது வரி (Tax on Transfer of property), சொத்தை ஒருவர் நன்கொடையாக மற்றவருக்குக்(பெரும்பாலும் வாரிசுகளுக்கு) கொடுக்கும்போது கொடை வரி (Gift Tax), ஒருவர் இறப்பின்போது அவர் பெயரில் உள்ள சொத்தின்மீது வரி (Estate Duty), சொத்தைச் சட்டப்படி மாற்றம் செய்யும்பொழுது தபால் தலை பதிவுகளின் மீது வரி (Stamps and Registration Tax-on Transfer of Property) எனப் பலவகைகளில் விதிக்கப்படுகிறது. இதில் வருமான வரி என்பது தொன்றுதொட்டு வரும் பழமையான வரி ஆகும். ஆனால், சொத்துவரியானது இந்திய விடுதலைக்குப்பின் நடைமுறைப் படுத்தப்பட்டது. மொத்த மைய அரசின் வரி வருவாயில் 24 விழுக்காடு வருமான வரியின் மூலமாகக் கிடைக்கிறது. ஆனால், சொத்து வரியானது மொத்த வரி வருமானத்தில் ஒரு விழுக்காட்டு அளவுக்குச் சிறிது கூடுதலான வருமானத்தையே மைய அரசுக்குக் கொடுக்கிறது.

இந்திய மாநில அரசாங்கமும் மேற்கூறிய இரண்டுவிதமான நேர்முக வரிகளை விதிக்கின்றது. அவற்றுள் மாநிலங்களின் வருமான வரியானது, வேளாண்மை வருமான வரி (Agricultural Income Tax), ஊதிய வரி (Professional Tax) என இருவகைப் படும். ஆனால், அவற்றிலிருந்து மாநிலங்களுக்குக் கிடைக்கும் வருவாய் மிகச் சொற்பமான அளவிலேயே உள்ளது. சொத்துவரியில், நில வருவாயின்மீது விதிக் கும் வரியும் (Land Tax), தபால் பதிவுகளின்மீது விதிக்கும் வரியும் (Registration Fee), நகரத்தில் அசையாத சொத்துகளின்மீது விதிக்கப்படும் வரியும் (Tax on Urban Immovable Property) அடங்கும். நில வருவாய் வரியும், தபால் பதிவுகளின்மீது விதிக் கும் வரியும் (இரண்டுமே சொத்தை அல்லது மூல தனத்தை மாற்றும்போது விதிப்பது) ஓரளவு வரு வாயை மாநிலக் கருவூலங்களுக்கு அளிக்கின்றன. இருந்தபோதிலும் மைய அரசைப் போல மாநிலங் களுக்கு நேர்முக வரியினால் மிக்க வருவாய் கிடைப் பதில்லை. இதை இந்திய விடுதலைக்குப் பின்னர் எடுக்கப் பட்ட புள்ளிவிவரக் கணக்குகளுடன் ஒப் பிட்டுப் பார்க்கும்பொழுது இதன் விழுக்காட்டின் அளவு மிகவும் குறைந்து வருகிறது. இதிலிருந்து இந்திய அரசின் நிதிக்கொள்கை, ஏற்றத்தாழ்வுகளை நீக்குவதற்குப் பதிலாக நடுத்தர, குறைந்த வரு மானத்தை உடையவர்கள் மிக்க வரிப்பளுவினால் பாதிக்கப்படுவதற்குக் காரணமாக அமைகிறது என் பது தெரியவருகிறது. காரணம், நேர்முக வரியானது செல்வர்கள், வசதி படைத்தவர்கள், உயர்ந்தபட்ச நடுத்தர வகுப்பினர் ஆகியோர் மீது விதிக்கப்படு வதால், அதிலிருந்து கிடைக்கும் வருவாயானது மொத்த வருவாயில் நான்கில் ஒரு பங்காக இருப்பத னால், மீதி வரி வருவாயானது மறைமுக வரியினால் கிடைக்கிறது. மறைமுக வரி என்கிறபொழுது அதைச் செலுத்துபவர்கள் பெரும்பாலும் நடுத்தர, குறைந்த வருமானம் உடையவர்களாகத்தான் இருப்பார்கள். மேலும், செல்வர்கள்மீது விதிக்கும் வருமான,சொத்து வரியிலிருந்து தப்பிக்கச் சட்டத்திலும், அரசாங்க நட வடிக்கைகளிலும் நடைமுறைகளில் குறைகள் இருப்ப தால் அவர்கள் அதைப் பயன்படுத்திக்கொண்டு வரிப் பளுவிலிருந்து தப்பித்துக் கொள்கிறார்கள். ஆனால், ஏய்த்தலும் தப்பித்தலும் மறைமுக வரியில் சாத்திய மில்லாததால் அந்த வரிப்பளுவை ஏற்கவேண்டிய நிலை நடுத்தர, கீழ்மட்ட அளவிலுள்ள மக்கள்மீது விழுவதால் அவர்கள் பெரிதும் பாதிப்புக்கு உள்ளா கிறார்கள் இந்தியாவில் கிராமங்களைவிட நகரத் தில் வரிப்பளுவானது மிகுதியாக இருக்கிறது. கிராம மக்கள் எளிதில் தப்பித்துக்கொள்கிறார்கள்

கருநுகோள் அளவில் நேர்முக வரிகள் உழைக்கும் ஆற்றலையும் சேமிக்கும் விருப்பத்தையும் பாதிக்கின் றனவெனக் கூறப்படுகிறது. ஆனால், வருமான வரி, இறப்பு வரி, சொத்துவரி முதலிய நேர்முகவரிகளால் மூலதனத் திரட்சிக்கும் ஆக்கத்துக்கும் ஊறு ஏற்பட வில்லை என்றே சொல்லலாம். மேலும், மேற்கூறிய வரி, செல்வர்களின் தேவையற்ற செலவுகளைக் கட்டுப்படுத்தப் பயன்படுத்தப்படுகிறது இவ் வரிகளி லிருந்து கிடைக்கும் வருவாயை அரசு, கல்வி, சுகா தாரம், போக்குவரத்துப் போன்றவைகளுக்குச் செல வழிக்கிறது அல்லது தானே தொழில்களைத் தொடங் குகிறது. இந்தவகையில் நேர்முக வரியானது சமுதா யத்தின் சேமிப்புக் கருவியாகப் பயன்படுகிறது. ஆயினும், மக்களின் வரிதாங்கும் வலலமை மிகவும் குறைவாக இருப்பதாலும், வரி விதிப்புக்கு வரம்புகள் இருப்பதாலும், இந்தியாவில் மிகக் குறைவான எண் ணிக்கையினரே நேர்முக வரிகளைச் செலுத்துகிறார் கள். மொத்த மக்கள் எண்ணிக்கையில் இவர்களின் எண்ணிக்கை ½ விழுக்காட்டிற்கும் குறைவாகவே உள்ளது

கா.தி.இ.

**துணை நூல்கள்:**


**Bhargava R.N.,** The Theory and Working of Union Finance in India, Chaitanya Publishing House, Allahabad, 1971.

**Prest, A. R.,** Public Finance in Theory and Practice, English Language Book Society and Weidenfeld and Nicolson, 1966.

Readings in 'The Economics of Taxation.' The American Economics Association, George Allen & Unwin Ltd. 1959.

**Ursula K. Hicks,** Public Finance, James Nisbet & Co. Ltd., Cambridge University Press, London, 1956.


*நேரக்கிளவி*: காலம் என்பது ஒரு கருத்துப் பொருள். இது எல்லா மொழிகளிலும் காணப்படும். காலம் மொழியில் இரண்டு வகையில் வெளிப்படுத்தப் படுகிறது. ஒன்று வினைச் சொற்களில் விகுதி சேர்த்தோ, சொல் சேர்த்தோ வெளிப்படுத்துவது. வினைச் சொற்களில் விகுதி மூலம் வெளிப்படுத்தும் முறை ஓர் இலக்கணக் கூறாகவும் (Grammatical Category), சொல் மூலம் உணர்த்துவது அகராதிக் கூறாகவும் (Lexical Category) மொழியியலில் கருதப்படுகிறது. எல்லா இலக்கண ஆசிரியர்களும் வினைச் சொல்லின் சிறப்புப் பண்பாகக் காலத்தை —அதாவது கால விகுதி ஏற்று வருவதைக் குறிப்பிட் டுள்ளார்கள். மொழியியல் நோக்கில் இதுவே 'காலம்' (Tense) என்று சொல்லப்படுகிறது.

பெயர்ச்சொற்களிலும் காலத்தைக் குறிக்கும் சொற்கள் எல்லா மொழிகளிலும் உண்டு. இதுவே மொழியியலாரால் நேரக்கிளவி (Time expression) என்று கூறப்படுவது. காலக் கிளவி என்பது வினைச் சொல் பற்றிய ஆய்வின் பகுதியாகவும், நேரக்கிளவி என்பது பெயர்ச்சொல் பற்றிய ஆய்வின் பகுதியாக -சிறப்பாக அகராதிச் சொற்பொருளியல் (Lexical semantics) பற்றிய ஆய்வின் பகுதியாகவும் அமையும்.

தமிழைப் பொறுத்தவரையில் தொல்காப்பியத்தில் காலக்கிளவிசொல்லதிகாரத்தில் வினையியலிலும், நேரக்கிளவிகள் பொருளதிகாரத்திலும் விளக்கப் பட்டுள்ளன. நேரக்கிளவி பெயர்ச் சொற்கள் ஆகையால் அவற்றின் வடிவ மாற்றம்-புணர்ச்சி- எழுத்ததிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பொருளதிகாரத்தில் முதற்பொருளாக நிலம் பொழுது என்ற இரண்டு குறிப்பிடப்பட்டு ஒவ்வொரு உரிப்பொருளுக்கும்- திணைக்கும் (குறிஞ்சி, முல்லை போன்ற ஒழுக்கங்கள்) உரிய பொழுது விளக்கப்பட்டுள்ளது. அங்கு இன்று ஆண்டின் பிரிவாகக் கருதுவனவும் (கார், கூதிர் போன்றவை), நாளின் ஒரு கூறாகக் கருதுவனவும் (மாலை, விடியல்) சேர்த்தே (உ-ம். காரும், மாலையும் முல்லை) குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றையே பிற்கால இலக்கண நூல்கள் பெரும் பொழுது, சிறு பொழுது என்று தனித்தனியாகப் பெயரிட்டு வழங்குகின்றன. சிறுபொழுது என்பது ஒரு நாளின் கூறினையும் பெரும்பொழுது என்பது ஆண்டின் பகுதியையும் குறிக்கும். நேரக்கிளவியைப் பெரும்பொழுது சிறுபொழுது என்று இரண்டாகப் பிரிப்பது இலக்கண மரபே. அதுவும் பொருள் இலக்கண மரபே தவிரத் தமிழ் வழக்கை ஒட்டிய பிரிவாகக் கருத முடியாது. ஏனெனில், சங்க இலக்கியங்களில் நேரக்கிளவி-சிறப்பாகப் பெரும்பொழுது எனப்படுவது பலவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

பதிற்றுப்பத்தில் (90) நாள், திங்கள் (மாதம்) ஆண்டு, ஊழி, வெள்ளம் என்று ஐந்து பிரிவாகவும் சிலப்பதிகாரத்தில் (27) ஆண்டு, மதி (மாதம்), நாள் என்று முப்பிரிவாகவும் கூறப் பட்டிருக்கிறது. வெள்ளம் என்பதன் காலவெல்லையை இலக்கியத்திலிருந்து அறிந்துகொள்ளமுடியவில்லை. ஊழி என்ற ஒருவருடைய வாழ்நாள் (ஆயுள்), யுகம் என்ற சிறப்புப் பொருள்களில் சங்க இலக்கியங்களில் கையாளப் பட்டுள்ளது. மேலும், பரிபாடலில் நான்கு வகை ஊழி என்ற குறிப்பும் உள்ளது. எனவே. கிருத யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலியுகம் என்று புராணங்களில் குறிப்பிடப்படும் யுகங்களைக் குறிப்பதாகக் கொண்டால் அவை ஒவ்வொன்றிற்கும் கால அளவு புராணங்களில் கூறப்பட்டதை எடுத்துக் கொள்ளவேண்டும்.

ஆண்டு என்பது தமிழ் இலக்கியங்களில் திங்கள், பொழுது என்று இரண்டு பிரிவாகக் காணப்படுகிறது. ஆண்டு பன்னிரண்டு திங்களாகப் பிரிக்கப்படும். இது சங்க இலக்கியத்தில் நேரடியாகக் குறிப்பிடப்பட வில்லை. ஆனால், தொல்காப்பியர் திங்கட் பெயர்கள் -இகரத்திலும் ஐகாரத்திலும் முடியும் என்று கூறுவதாலும்; தை, ஆடி, பங்குனி, மாசி ஆகிய திங்கட் பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுவதாலும் இன்று வழங்கும் சித்திரை, வைகாசி முதலிய பன்னிரண்டு பெயர்களே சங்க காலத்திலும் வழங்கியிருக்க வேண்டும் என்று கொள்ளலாம். ஒவ்வொரு மாதத்திலும் பௌர்ணமி நாளில் நிலாவோடு சேரும் நட்சத்திரத்தின் பெயரைக் கொண்டே மாதப் பெயர்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன,

ஒவ்வோர் ஆண்டையும் ஆறு பருவங்களாகப் பிரித்துப் பெயரிடுவது இடைக்கால இலக்கண நூல்களில் காணப்படுகிறது. ஆனால், தொல்காப்பியத்தில் கார், கூதிர், பனி எதிர்பருவம், பின்பனி, வேனில் என்று தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளனவே தவிர மொத்தம் எத்தனை பருவம் என்று குறிப்பிடப்பட வில்லை. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்று ஆறாகப் பிரிப்பது பின்னாளைய மரபு. கார் என்பது மழைக் காலத்தையும், கூதிர் என்பது குளிர்காலத்தையும், முன்பனி என்பது இரவின்தொடக்கத்தில்பனி மிகுந்திருக்கும் காலத்தையும், பின்பனி என்பது விடியற்காலத்தில்-பின்னிரவில் பனி மிகுந்திருக்கும் பருவத்தையும், இளவேனில் வெயிலின் அல்லது கோடையின் தொடக்கக் காலத்தையும், முதுவேனில் வெப்பம் மிகுதியாக இருக்கும் காலத்தையும் குறிக்கும். பொதுவாக இந்தப் பாகுபாடு தட்ப, வெப்ப நிலையை ஒட்டி அமைந்தது.

மாதத்தை வாரமாகப் பிரிப்பது சங்க காலத்தில் காணப்படவில்லை. மேலும் சிலப்பதிகாரத்தில் வெள்ளிக்கிழமை என்பது வெள்ளிவாரம் (23.135) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது வாரம் என்பது கிழமை அல்லது நாள் என்ற பொருளில் கையாளப் பட்டுள்ளது. ஆனால், இன்று வாரம் என்பது ஏழு நாள் கொண்ட ஒரு காலத்தைக் குறிக்கிறது. எனவே, மாதத்தின் சிறுபிரிவாக இன்று வாரம் அமைந்துள்ளது.

நாள் என்பது சங்க காலத்தில் நட்சத்திரத்தின் பெயர் அடிப்படையில் அமைந்துள்ளது. எனவே, இன்று மாதம் என்பது முப்பது நாளைக் கொண்டது போல அன்றும் முப்பது கொண்டதாகக் கருதப்பட்டதா

அல்லது நட்சத்திரத்தின் பெயரை ஒட்டி இருபத்தேழு நாள்களாகக் கொள்ளப்பட்டதா என்பது தெரிய வில்லை. ஆனாலும், அந்தக்காலத்தில் ஒவ்வொரு நாளும் பெயரிடப்பட்டுக் குறிப்பிடப்பட்டன. இன் றும் சோதிட நூலார் அந்தப் பெயரைப் பயன் படுத்தி வருகிறார்கள்.

தொல்காப்பியர் நாட்பெயர்கள் இகரம்,ஐகாரம், மகரம் ஆகிய மூன்று எழுத்துகளில் முடியும் என்று குறிப்பிட்டுள்ளார். சங்க இலக்கியத்திலும் உரோ கினி, ஆதிரை, ஓணம், பூசம் ஆகிய சொற்கள் பயின்று வந்துள்ளன. எனவே, இன்று வழங்கும் அசுவினி, பரணி, கார்த்திகை, மகம் முதலிய இருபத்தேழு பெயர்களே தொல்காப்பியர் காலத்திலும் வழங்கி வந்திருக்க வேண்டும்.

வாரத்துக்குரிய ஏழு நாளைக்கு உரிய பெயர் களாக மேலே குறிப்பிட்டபடி முதன் முதலில் சிலப் பதிகாரத்தில் 'வெள்ளி' என்ற பெயர் வந்துள்ளது.சம் பந்தர் தேவாரத்தில் கோளறு பதிகத்தில் (ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி) இன்று வழங்கும் ஏழு பெயர்களும் குறிப்பிடப்பட்டுள் ளன. சம்பந்தர் 'வியாழம்' என்ற வடிவத்தையே கையாண்டுள்ளார். ஆனால், இன்று வியாழன் என்ற வடிவமே வழக்கில் உள்ளது.

நாள் என்ற காலமும் பல பிரிவுகளாகப்பிரித்துப் பெயரிடப்பட்டுள்ளது.தொல்காப்பியர்மாலை,யாமம் விடியல், எற்பாடு, நண்பகல் என்ற பெயர்களைப் பயன்படுத்தியுள்ளார். பிற்கால நூல்கள் சிறுபொழுது என்று குறிப்பிட்டு மாலை, யாமம், வைகறை, எற் பாடு, காலை, நண்பகல் என ஆறு பிரிவாகப் பிரித் துப் பேசியுள்ளன. இன்றும் காலை, நண்பகல், மாலை, இரவு, நள்ளிரவு, விடியல் என்ற சொற்கள் பயன் படுத்தப்பட்டு வருகின்றன.

ஒருநாளைப் பல கடிகைகளாகப்பிரிப்பதைப் பற் றிச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது (27: 8-10). ஒரு நாளை அறுபது நாழிகையாகப் பிரித்துப் பேசுவது இந்த நூற்றாண்டுத் தொடக்கம் வரைபரவலாக வழங்கி வந்துள்ளது. இப்பொழுது மேலை நாட்டுத் தொடர்பால் ஒருநாளை 24 ஆகப் பிரித்து மணி என் றும், ஒரு மணியை அறுபதாகப் பிரித்து நிமிடம் என் றும்ஒரு நிமிடத்தை அறுபதாகப் பிரித்து விநாடிஎன் றும் பெயரிட்டு வழங்கி வருகின்றனர். செ.வை. ச.

**நேரங்காட்டி**, வாழ்வின் தேவைகள் பலவற் றுள் காலங்காட்டும் கருவியும் ஒன்றாகும். ஒவ் வொரு செயலுக்கும் நேரம் அறிதல்-காலம் அறி தல்-இன்றியமையாததாகும். நேரம் அறிந்துதான் ஒவ்வொரு செயலும் செய்யப் பெறுகிறது. அதற்காக இக்காலத்தில் பலரும் கையில் கடிகாரம் கட்டிக் கொண்டிருக்கின்றனர்; வீடுகளில் சுவர்க்கடிகாரம் தொங்கிக் கொண்டிருக்கிறது; கடைகளில், திரை யரங்குகளில் மணிகாட்டும் கருவிகள் உள்ளன. இன்று நிமிடம் மணி காட்டுவதோடு, நாள் போன்ற விவ ரங்களைக் காட்டும் காலங் காட்டிகள் பலவகையில் தோன்றியுள்ளன. மின் ஆற்றலாலும், பிறவாற்றலா லும் இயங்கும் காலங்காட்டிகளும் உள்ளன.

பண்டைக்காலத்தில்நேரத்தை எப்படி அறிந்தனர்? கடிகாரங்களுக்கு வேறாகப் பழந்தமிழ் மக்கள் பல வழிகளில் காலத்தை-பொழுதினை-அறிந்து வந்துள்ள னர். சூரியன் உதித்ததும் பகல் நேரம் தொடங்கு கிறது.சூரியன் மேல் ஏற ஏறப் பொருள்களின் நிழல் நிலத்தில் விழுகிறது.நிழலின் நீள அளவைக் கொண்டு நேரம் அறிந்தனர். இரவில் நிலவு, விண்மீன், விடி வெள்ளி போன்றவற்றைக் கொண்டு நேரம் அறிந் தனர். அதனோடு கோழி கூவுவது, காகம் கரைவது போன்றவற்றால் முறையே வைகறையினையும் விடி யலையும் அறிந்தனர்.

வானம் மூடியபோதும், மழைக்காலங்களில் எப் படி நேரத்தை அறிவது? மன்னர்களின் அரண்மனை யில் நாழிகைக் கணக்கர் என்போர் இருந்தனர். அவர்கள் இரவுபகல் எந்த நேரத்திலும்'குறுநீர்க் கன் னல்' என்ற கருவியைக் கொண்டு நேரம் அறிந்து மன்னருக்கு அறிவித்து வந்தனர். நீர் நிறைந்த கலத் தில் சிறுதுவாரம் அமைத்து நீர் ஒழுக வைப்பர். சிறு கச் சிறுக நீர் குறைவதைக் கொண்டு உரிய நாழி கையை அறிவர். கலத்தில் மணல் பெய்து, அதன் துளைவழி மணலை வெளிவரச் செய்து அவ்வகை யாலும் அறிந்தனர். இத்தகு கருவி நாழிகை வட்டில் எனப்பட்டது.

பொதுவாக மலர்களைக் கொண்டு நேரம் அறி வதுண்டு. மலர் குறிப்பிட்ட நேரத்தில் மலரும் தன்மையுடையது. குறிஞ்சி என்ற மலர் 12 ஆண்டிற்கு ஒருமுறை மலரும். மலைவாழ் மக்கள் குறிஞ்சி மல ரும் காலம் கொண்டு தம் வயதினை அறிந்து வந் தனர்.

கார் காலத்தில் கடம்பு மலரும்; கொன்றை மல ரும்; வேனில் காலத்தில் பாதிரியும், அதிரலும் மல ரும். முதுவேனில் காலத்தில் பலாசமும், இளவேனில் காலத்தில் வேங்கையும் மலரும் அவை கொண்டு பொதுவாக அப்பருவ காலத்தை உணரலாம்

பகலில் மலரும் மலர்கள் பல வண்ணத்துடனும் மணத்துடனும் மிளிர்கின்றன. இரவில் மலரும் மலர் கள் பெரும்பாலும் வெண்மையாக இருக்கும் அவற் றைக் கொண்டும் நேரம் அறியப்பட்டது. 'நள்ளிருள் நாறி' என்பது ஒரு மலருக்குப் பெயர். இம்மலர் நடு

**இரவில் மலரும்; மணம் தரும். அதனை மணத்தால் உணர்ந்து நேரம் அறியலாம்.** நடு இரவில் மலர்ந்து **மணம் வீசுவதால்** இருள்வாசி என்றும் குறிப்பர்.

பகற் காலத்தை அறியப் பழந் தமிழ் மக்கள் ஒரு முறையைக் கொண்டிருந்தனர். பதினாறு விரற்கடை நீண்ட துரும்பு ஒன்றெடுத்து அதனை 'ட' போல மடித்து, கதிரவன் ஒளிபட நிறுத்துவர். 'ட' அமைப்பில் நீண்ட பகுதியின் உச்சியின் நிழல், கிடந்த துரும்புப் பகுதியின் முனையில் பொருந்துமாறு மடிப்பர். அப்போது, நிலையாக நிற்கும் துரும்பின் நீளத்தை விறற்கடையால் அளந்து அத்தனை நாழிகை என்று அறிந்தனர். இதனை, 'காட்டுத் துரும்பெடுத்துக் கண்டம் பதினாறாக்கிநீட்டிக்கிடந்ததுபோக நின்றது நாழிகை' என்று பாடல்போல் அமைத்துத் தமிழ் மக்கள் போற்றிக் கொண்டனர். மரங்கள், கட்டடங்கள் போன்றவற்றின் நிழல் கொண்டும் நேரத்தை அறிந்தனர். அந்தி மந்தாரை என்னும் பூ அந்தியில் (மாலையில்) மலர்வதால் அப்பெயர் பெற்றது.

நேரந்தவறாது மலர்வது மலர்களின் இயல்பாதலின் நன்னூலார் மலரைக் குறிக்கும்போது 'பொழுதின் முகமலர்வுடையது பூவே' என்று குறிப்பிட்டுள்ளார். குறிப்பிட்ட ஒவ்வொரு நேரத்தில் மலரும் மலர்ச் செடிகளை வட்டமாக அமைத்து மேலை நாட்டறிஞர் ஒருவர் மலர்க் கடிகாரம் ஒன்றமைத்தார். அம்மலர்க் கடிகாரத்தால் ஒவ்வொரு மலரும் மலர்வது கொண்டு நேரத்தை அறிதல் கூடும். சி.அ.

**நேரி:** இது தமிழ் நாட்டிலுள்ள ஒரு மலை. சோழனின் பெயர்களுள் நேரியன், நேரிவெற்பன் என்னும் பெயர்களையும் திவாகர நிகண்டு குறிப்பிட்டுள்ளது.அதனால் நேரி என்பது ஒருமலை என்பதும், அது சோழநாட்டில் உள்ளது என்பதும்,அதனை உடைமையால் சோழன் நேரியன் என்றும், நேரி வெற்பன் என்றும் குறிக்கப் பெற்றான் என்பதும்புலனாகின்றன.

நேரிமலை சேர நாட்டில் உள்ளதொரு மலையாகப் பதிற்றுப் பத்தில் குறிப்புக் காணப்படுகிறது. அந்நூலில் நான்காம் பத்தின் தலைவனாகிய களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் குறிப்பிடும்போது அதன் ஆசிரியர் காப்பியாற்றுக் காப்பியனார் 'நனை, நறவு மகிழ்ந்து, நீரிமிழ் சிலம்பின் நேரியோனே' என்று கூறியுள்ளார். அவ்வாறே, செல்வக் கடுங்கோ வாழியாதனை ஏழாம் பத்தாற் பாடிய கபிலர், 'பாடுசால் நெடுவரைக் கல்லுயர் நேரிப் பொருநன்' (பதிற் 67:22,23) என்று குறிப்பிட்டுள்ளார். அவற்றால் நேரி என்பது கற்களுயர்ந்த நெடிய மலை என்பதும், அதில் அருவிகள் பல விளங்கின என்பதும், அம்மலை சேர மன்னர்கள் சென்று தங்கும் இடமாக இருந்தது என்பதும் புலனாகின்றன.

இவற்றை ஒருங்கு வைத்து நோக்க, சங்க காலத்தில் சேரர்க்குரியதாக இருந்த நேரிமலை அதனை அடுத்தகாலத்தில் சோழர்க்குரியதாயிற்று என்றும், அது கொண்டு அக்காலத்தே தோன்றிய திவாகரம் நேரியைச் சோழர்க்குரியதாகக் குறிப்பிட்டது என்றும் உய்த்துணரலாம். நேரிஎன்னும் பெயரில் இருநாட்டிலும் மலைகள் இருந்தன என்றும் கருத இடமுண்டு.

சிலப்பதிகாரத்தில் 'நேரிவாயில்' என்றோர் ஊர் பேசப்படுகிறது. (சிலப்.28:117). அதனை விளக்கும் குறிப்புரையாசிரியர் அது, 'உறையூர்த் தெற்கில் வாயிலதோரூர்' என்று விளக்கியுள்ளார். சேரன் செங்குட்டுவன், தன் மைத்துனச் சோழனுக்காக நேரிவாயில் எனப் பெயரிய இடத்தில், அவனை எதிர்த்து நின்ற ஒன்பதின்மரோடு போர் செய்து வென்று, சோழ அரசினைத் தன் மைத்துனனுக்குரியதாக்கினான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. சேரர்க்குரிய நேரிமலையும், சோழர்க்குரிய நேரிவாயிலும் தனிப்பட்ட தொடர்புடையனவாகா; மலையும் ஊரும் ஆகும். நேரிமலை இன்று எப்பெயரான் வழங்குகின்றது என்றறியும் வாய்ப்பில்லை.

அ.மா.ப.

**நேரிவாயில்:** இது சிலப்பதிகாரத்தால் அறியலாகும் ஓரூர். இவ்வூரை விளக்கும்போது அரும்பதவுரையாசிரியர் 'நேரிவாயில் உறையூர்த் தெற்கில் வாயிலதோரூர்' என்று குறிப்பிட்டுள்ளார். அதனால் இவ்வூர் நாற்றிசையும் வாயில் கொண்ட உறையூரின், தெற்குப் புறவாயிலினை அடுத்திருந்த ஓர் ஊர் என்பது தெரிகிறது. சேரன் செங்குட்டுவன் போர் புரிந்த இடங்களாகக் குறிப்பிடப்படுவனவற்றுள் இந்த நேரிவாயிலும் ஒன்றாகும் (சிலப்.28:117). செங்குட்டுவனின் அம்மானான சோழவேந்தன் இறந்தபின்னர் அரசெய்திய கிள்ளி எனப் பெயரிய இளஞ் சோழனை உடன்படாது சோழ மரபினைச் சேர்ந்த ஒன்பது குறு நில மன்னர்கள் ஒருங்கு திரண்டு நேரிவாயில் என்னுமிடத்தில் இளஞ்சோழனை எதிர்த்தனர். தன்மைத்துனனாகிய கிள்ளியை ஒன்பதின்மர் எதிர்ப்பது கண்ட செங்குட்டுவன் படையொடு போந்து நேரிவாயிலில் அவ்வொன்பதின்மரொடும் பொருது அவர்களைத் தோற்றோடச் செய்தான். அதனை 'ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை நேரிவாயில் நிலைச்செருவென்று' என்பதனாலும் (சிலப். நடுகல் 117), 'மைத்துனவளவன் கிள்ளியொடு பொருந்தா ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்',... ஒன்பது குடையும் ஒருபகல் ஒழித்தவன்' என்பதனாலும் (சிலப். 27:118-122) இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

அ.மா.ப.

**நேரு இளைஞர் மையங்கள்:** எதிர் காலத்தை எண்ணித் திட்டமிடும் எச்சமுதாயமும், அவ்வெதிர் காலத்தை முன்னின்று நடத்திச் செல்லக்

கூடிய நிகழ்கால இளைஞரைப் பற்றியும், அவர்தம் முறையான வளர்ச்சியைப் பற்றியும் எண்ண வேண்டியது முதன்மையாகிறது. இளைஞர்களின் மேம்பாட்டிற்குத் திட்டமிடாத எந்நாடும் தலைவர்கள் இல்லாத பஞ்சத்தால் தவிக்க வேண்டிவரும். அப்போது,அந்நாடு அடைந்த முன்னேற்றங்கள் பாழாய்ப் போகும்.

இந்திய விடுதலைப் போராட்டத்தின்போது இளைஞர்கள் செய்த பெருந் தியாகங்களை எதிர் காலத்திலும் தவறாமல் செய்ய வேண்டும் என்ற கருத்துடன் பெரும் தலைவர்கள் முறையான திடடங்கள் தீட்ட வேண்டியதன் இன்றியமையாமையை உணர்ந்தனர். அவ்விருப்பத்தினடிப்படையில் சி.டி. தேசுமுக்கு தலைமையில் ஒரு குழுவை ஏற்படுத்தித் தக்க பரிந்துரைகள் தருமாறு கேட்கப்பட்டது.அக்குழுவின் பரிந்துரைகளின்படி தேசிய மாணவர் படை, நாட்டுத் தொண்டுத் திட்டம், நாட்டுப் பணித் தொண்டர்கள் திட்டம் எனப் பல திட்டங்கள் முனைப்பாகச் செயற்படுத்தப்பட்டன.

இத்திட்டங்களும் அனைத்திந்திய அளவில் தன்னார்வக் குழுக்கள் செயற்படுத்தி வந்த இளைஞர் மேம்பாட்டுப் பணிகளும், 15 முதல்34வயதிற்குள்ளான கிராம இளைஞர்களையோ, மாணவரல்லாத இளைஞர்களையோ பெரிதும் சென்றடையவில்லை. பெரும் எண்ணிக்கையிலான இளைஞர்கள் கல்வியைத் தொடர முடியாமலும், தேவைக்கும் திறமைக்கு மேற்ப ஊதியம் பெற முடியாமலும், சமூகத்தால் ஒதுக்கப்பட்டவர்களாகவும் காணப்பட்டனர். அவர்களுக்கு ஆர்வமும் ஊக்கமும் அளித்து அதன் மூலம் அவர்களின் ஆற்றலைப் பயன்படுத்திக் கொள்ள நாடு தழுவிய செயல் திட்டம் தேவைப்பட்டது. இத் தேவையை நிறைவு செய்யுமுகத்தான்1972-இல்நேரு இளைஞர் மையங்கள்(Nehru yuva KendraSangathan) என்ற பெயரில் ஓர் அமைப்புத் தொடங்கப்பட்டது. இந்நிறுவனத்தின் நோக்கங்கள் நாடு தழுவியனவாயிருந்தாலும், செயற்பாட்டு எல்லைகள் வருவாய் மாவட்டங்களை மையமாகக் கொண்டு வரையறுக்கப்பட்டன. ஒவ்வொரு வருவாய் மாவட்டத்திற்கும் ஒரு நேரு இளைஞர் மையம் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு, இதுவரை 247 மையங்கள் நிறுவப்பட்டுள்ளன. தமிழகத்தில் மட்டும் 12 மையங்கள் செயற்பட்டு வருகின்றன.

கிராமப்புற இளைஞர்களையும் பள்ளிகளுக்குச் செல்ல இயலாத இளைஞர்களையும் தற்சார்புடையவர்களாக, சமயச் சார்பற்றவர்களாக, தேசிய ஒருமைப்பாட்டில் நம்பிக்கையுடையவர்களாக, அறிவியல் மனப்பான்மை கொண்டவர்களாக வளர்த்து, ஆக்கத்தோடியைந்த தேசிய வாழ்க்கைக்கு வித்திடச் செய்ய வேண்டுமென்பதே இம்மையத்தின் குறிக்கோளாகும். இக் குறிக்கோளை நிறைவேற்றத் தேசிய, மாநில, மாவட்ட அளவிலான நிறுவன அமைப்பும், செயற்பாட்டு முறைகளும் முறையாக வகுக்கப்பெற்று நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்றன.

வகுக்கப்பட்ட குறிக்கோள்கள் தடையின்றி நிறைவேற, இம்மையங்கள் பல செயல் திட்டங்களைத் தீட்டிச் செயற்படுகின்றன. இந்நிறுவனத்தின் பணிகளைக் கல்விப் பணி, சமூகசேவை, உடற்பயிற்சி, பண்பாட்டுப் பணி, வாழ்க்கைத் தொழிற்பயிற்சி, தலைமைப் பயிற்சி, இளைஞர் குழுக்களை ஏற்படுத்தும் பணி என்று ஏழு வகைகளாகப் பிரிக்கலாம்.

கல்விப் பணியின் கீழ் வயதுவந்தோர் கல்வி, முறைசாராக் கல்வி, குடும்ப நலம், உடல்நலக் கல்வி, அறிவியல், வேளாண் தொழில் நுட்பக் கல்வி, செயல் திறன் கல்வி போன்றவை செயற்படுகின்றன. இராசாராம் மோகன்ராய் நூலகத் திட்டம், மையங்களிலும் மையத்துடன் இணைந்த நிறுவனங்களிலும் நூலகங்கள் ஏற்படுத்த உதவி செய்கிறது.

சமூகசேவைப் பணியின் கீழ்க்கிராமக் குளங்களை ஆழப்படுத்துதல், வடிகால் வசதி செய்து தருதல், தெருக்களையும் சாலைகளையும் செப்பனிடுதல், பராமரித்தல், நகரச் சேரிகளில் மேம்பாட்டுப் பணிகளை மேற்கொள்ளல், சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பிற்காக மரம் நடுதல், பொதுக் கழிப்பறைகள் ஏற்பாடு செய்தல் போன்ற பணிகள் மேற்கொள்ளப்படுகின்றன.மேலும் சாதி, சமயம், மணச்சீர்க் கொடுமைகள் முதலானவற்றை எதிர்த்துச் செயற்படும் சமூகச் சீர்திருத்தப் பணிகளும் இதில் அடங்கும்.

சுதேசி விளையாட்டுகள், உடற்பயிற்சிக் கல்வி முதலியவற்றை விரிவுபடுத்தி அதன்மூலம் எல்லோரும் இப்பயிற்சிகளில் பங்கேற்க வாய்ப்புத் தேடித் தருதல் சிறந்த உடற்பயிற்சி ஊக்குவிப்புப் பணிகளின் கீழ் அடங்கும். கிராமங்களுக்கிடையேயும், ஒன்றியங்களுக்கிடையேயும் விளையாட்டுப் போட்டிகள் நடத்துதல் உடற்பயிற்சி ஊக்குவிப்புப் பணிகளுள் ஒன்றாகும்.

பண்பாட்டு மேம்பாட்டுப் பணிகளின் கீழ்க் கிராம இளைஞர்களிடையேயும் மாணவரல்லாத இளைஞர்களிடையேயும் பண்பாட்டுப் பாரம்பரியத்தைப் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துதல் முதன்மையான பணியாகும். ஆண்டுதோறும் கலை விழாப் பலவற்றால் கிராமியக் கலைகளை வளர்க்கவும், கிராமிய நாடகங்கள், நடனங்கள், பொம்

மலாட்டம் போன்ற கலைநுட்பங்களை அறிந்து கொள்ளவும், பல பணியரங்குள் நடத்தப்படுகின்றன. மாநிலங்களுக்கிடையே பரிமாற்ற முறையில் பண்பாட்டுப் பயணங்கள் மேற்கொள்ளுதலும் இச்செயல் திட்டங்களுள் அடங்கும்.

வாழ்க்கைத் தொழிற் பயிற்சிப் பணித் திட்டத்தின்கீழ் தொழில் சார்ந்த துறைகளில் பயிற்சியளித்து அவர்களின் திறனையும், உற்பத்தியாற்றலையும் வளர்க்க உதவும் பணிகள் கற்பிக்கப்படுகின்றன. அவ்வப் பகுதிகளுக்குப் பொருத்தமான தொழில்களைத் தேர்ந்தெடுத்துச்சுயவேலை வாய்ப்பைத் தேடிக் கொள்ளத் துணைபுரிதல், கிராம மக்கள் அரசின் பல்வேறு திட்டங்களின் பயன்களை இடைத்தரகர்களின் குறுக்கீடின்றி அடைய உதவுதல் ஆகியன இப்பணிகளுள் அடங்கும்.

தலைமைப் பயிற்சி முகாம்கள் நடத்துவதன் மூலமாக இளைஞர்களின் ஆளுமைப் பண்புகளை வளர்த்து, அவர்களை மேலாண்மை மிக்கவர்களாக ஆக்க உதவுகின்றனர். இளைஞர் குழுக்களைத் தொடங்கி அவற்றின் மூலம் இளைஞர்களை அமைப்பு வழியில் ஒருங்கிணைத்தல் செய்கின்றனர்.

**நிறுவன அமைப்பு:** நேரு இளைஞர் மையத்தின் குறிக்கோள்களைச் செயற்படுத்தத் தேசிய, மாநில அளவிலான அறிவுரைக் குழுவமைப்பு, மாவட்ட அளவிலான நிருவாக அமைப்பு, ஒன்றிய அளவிலான துணை நிறுவன அமைப்பு, நேரு இளைஞர் மையங்களுடன் இணைக்கப் பெற்ற இளைஞர் குழுக்கள் என இதன் நிருவாகம் பலநிலைகளாகப் பகுக்கப் பட்டுள்ளது.

**அறிவுரைக் குழு அமைப்பு:** மாவட்ட அளவில் செயற்படும் நேரு இளைஞர் மையங்கள் பணி சிறக்கவும், தேசிய அளவில் மையங்களை ஒருங்கிணைத்து வழி நடத்தவும், மையங்களின் சிக்கல்களைக் களைந்து,அவற்றின்செயல்திறனைவளர்க்கவும் தேசிய மாநில மற்றும் மாவட்ட அளவிலான அறிவுரைக் குழுக்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. மைய அரசின் கல்வியமைச்சரைத் தலைவராகவும், பிற துறைச் செயலர்களை உறுப்பினர்களாகவும் இது கொண்டுள்ளது. அவ்வம் மாநில அரசின் இளைஞர் நலவாழ்வுத் துறை அமைச்சர் தலைமையின் கீழ் அமைக்கப் பட்டுள்ள மாநில அறிவுரைக் குழுவும் இதன்கீழ்ச் செயற்படுகிறது. இது தவிர, மையங்களை மாவட்ட அளவில் திறனுடன் செயற்படுத்த மைய ஒருங்கிணைப்பாளரால் மாவட்ட அளவில் ஆய்வுரைக் குழுவும் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

**மாவட்ட நிருவாக அமைப்பு:** வருவாய் மாவட்டங்களைப் பணி எல்லைகளாகக் கொண்ட மாவட்ட மைய அமைப்பை வழி நடத்திச் செல்ல நியமிக்கப் பட்டிருப்பவர் மைய ஒருங்கிணைப்பாளராவார். ஒருங்கிணைப்பாளருக்கு உதவ முழு நேரக் கணக்கர் ஒருவரும், ஏவலாள் ஒருவரும் துப்புரவுப்பணியாளர் ஒருவரும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

ஒருங்கிணைப்பாளரின் களப்பணியிலும், செயல் திட்டம் நடைமுறைப்படுத்துதலிலும் உதவ உடற் பயிற்சியாளர், தேசிய சேவைத் தொண்டர்கள், வாழ்க்கைத் தொழில் கல்வி, வயது வந்தோர் கல்வி பயிற்றுபவர்கள் ஆகியோரைத் தேவையினடிப்படையில் நியமித்துக் கொள்ள வாய்ப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன.

மையத்திற்கு விளையாட்டு, உடற்பயிற்சிக் கல்வி தொடர்பாக உதவி செய்ய 'நேதாசி சுபாசு சந்திர போசு தேசிய உடற்பயிற்சிக் கல்லூரியின் சார்பாக உடற்பயிற்சிக் கல்வியாளர்கள் நியமிக்கப்படுவர். தேவைப்படின், மேலும் ஓர் இணைப் பயிற்சியாளரைக் குறிப்பாகப் பெண்களுக்கு உதவ மாவட்ட மையம் அழைத்துக் கொள்ள முடியும்.

அது தவிர, மையம்செயற்படுத்தும் வாழ்க்கைத் தொழிற் பயிற்சிக், கல்வி மற்றும் வயதுவந்தோர் கல்விப் பணிகளைச் செயற்படுத்தத் தேவையான, சிறப்பான பயிற்றுநர்களை மாவட்ட மையங்களால் பணியிலமர்த்திக் கொள்ள முடியும்.

**துணைநிறுவனங்கள்:** மாவட்ட அளவிலான மையங்களைப் போன்று ஒன்றிய அளவில் இளைஞர் மையங்கள் ஏற்படுத்தத் தொடக்கக்காலத்திலேயே பரிந்துரை செய்யப்பட்டிருந்தாலும், ஒரு சில ஒன்றியங்களில் இது போன்ற அமைப்புகள் இன்னும் ஏற்படுத்தப் படவில்லை.

**சார்பு நிறுவனங்கள்:** நேரு இளைஞர் மையங்கள், தம் செயற்பாடுகளை நேரடியாகப் பல நேரங்களில் அவற்றின் குறிக்கோள்களோடு இசைவு கொண்ட இளைஞர் தன்னார்வக் குழுக்களோடு சேர்ந்து நடைமுறைப்படுத்தி வருகின்றன. மையத்தின் பரந்துபட்ட செயல் திட்டங்களை நடைமுறைப் படுத்த இது போன்ற சார்பு அல்லது இணை நிறுவனங்களின் ஒத்துழைப்பைப் பெறுவதோடு மட்டுமல்லாமல், இது போன்ற இணை நிறுவனங்களை ஏற்படுத்தத் தன்னாலியன்ற பொருளுதவியும், அறிவுரைகளும் வழங்குகின்றன. ஒவ்வொரு மாவட்டத்திலும் குறைந்த அளவு 15இலிருந்து 405 குழுக்கள் வரை இருப்பதாக மதிப்பிடப்பட்டுள்ளது.

இக் குழுக்கள் நகர, கிராம, ஒன்றிய, மாவட்ட அளவில் செயற்படும் இளைஞர் விளையாட்டுக் குழுக்களாகவும், வயது வந்தோர் கல்வி மையங்களாகவும்

வாழ்க்கைக் கல்விப் பயிற்சி மையங்களாகவும், பல பெயர்களில் விளங்கி, முன்னேற்றத்தையும், வளமையையும், முக்கிய குறிக்கோளாகக் கொண்டு செயற்பட்டு வரும் குழுக்களாக இருக்கின்றன. 3000 இளைஞர்களுக்கு ஒரு குழு வீதம் நேரு இளைஞர் மையங்கள் தொடங்கப்பட்டிருப்பதாக ஒரு புள்ளி விவரம் கூறுகின்றது.

**மதிப்பீடு செய்தல்:** இந்திய அரசின் இளைஞர்கள் மற்றும் விளையாட்டு நலத்துறை, நேரு இளைஞர் மையங்களின் பணிகளை மேற்பார்வையும் மதிப்பீடும் செய்கிறது. த.வே.பெ.இரா.

**நேரு நினைவு அருங்காட்சியகம்:** இந்திய நாட்டில் சிறந்தோரைப் பற்றிக் கூறுவதற்காக ஏற்பட்ட அருங்காட்சியகங்களுள் நேரு நினைவு அருங்காட்சியகம் (Nehru Memorial Museum) தலைசிறந்தது. இவ்வருங்காட்சியகம் புது தில்லியிலுள்ள தீன்மூர்த்தி இல்லத்தில் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வில்லம் பண்டித சவர்கர்லால் நேரு சுதந்திர இந்தியாவின் முதல் தலைமை அமைச்சராகப் பொறுப்பேற்று இறுதிவரை வாழ்ந்த இடமாகும்.

நேரு நினைவு அருங்காட்சியகம் 1964-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 14-ஆம் நாள் அப்போதைய குடியரசுத் தலைவர் டாக்டர் இராதாகிருட்டிணன் அவர்களால் தொடங்கப்பட்டது. பின்னர் இவ்வருங்காட்சியகம் புதிய இந்தியா பற்றிய நூலகத்தையும், ஆராய்ச்சி மையத்தையும் கொண்டதாக வளர்ச்சியுற்றது. இம் மையம் நேரு காலத்திய ஆராய்ச்சிக்கு முதன்மை கொடுக்கிறது. இவ் வருங்காட்சியகம், நேரு நினைவு அருங்காட்சியகமும் நூலகச் சங்கமும் (Nehru Memorial Museum & Library Society) என்னும் தன்னாட்சிக் குழுவால் 1-4-1966-இலிருந்து நிருவகிக்கப்படுகிறது.

இப் பெருந்தலைவரை மக்கள் நினைவுக்குக் கொண்டு வரும் வகையில் சுதந்திர நாளான 1947 ஆகசுட்டுத் திங்கள் 15-ஆம் நாள் சட்டப் பேரவையின் நள்ளிரவு அமர்வில் இவர் ஆற்றிய வரலாற்றுப் புகழ்மிக்க 'குறிக்கோளுடன் முயல்வீர்' (Trust With Destiny) என்னும் சொற்பொழிவின் பகுதிகள் பொறிக்கப்பட்ட மிகப்பெரிய கருங்கற் பாறையொன்று அருங்காட்சியகத்தின் முகப்புப் புல்வெளியில் அமைக்கப்பட்டுள்ளது. மேலும், முதன்மைக் கட்டடத்தின் நுழைவாயிலருகே இவர்தம் இறுதி உயிலின் பகுதிகள் இரு சலவைக் கல்துண்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளன.

சவகர்லால் நேரு வாழ்ந்த காலத்தில் இருந்தது போன்றே எவ்வித மாற்றமுமின்றி அவருடைய படுக்கை



முகப்புக் கட்டடம்

யறை, வரவேற்பறை, படிக்கும் அறை ஆகியன இன்றளவும் இங்குப் பாதுகாக்கப்பட்டுள்ளன. கீழ்த் தளத்திலுள்ள ஓர் அறையில் நேரு பயன்படுத்திய இருக்கைகளையும், பொருள்களையும் கொண்டு வெளியுறவு அமைச்சகத் துறையில் அமைந்திருந்த அவருடைய அலுவலகம் மீட்டுருவாக்கப்பட்டுள்ளது. ஏனைய அறைகளில் ஒளிப்படங்களின் வாயிலாக நேருவின் வாழ்க்கையும் சாதனைகளும் சித்திரிக்கப் பட்டுள்ளன. இவற்றிலிருந்து ஓர் ஒப்பற்ற அரசியலறி ஞர், வரலாற்றறிஞர், கொள்கையாளர், சிறந்த நண் பர், தேசியவாதி, உலகக் குடிமகன் போன்ற நேரு வின் பன்முக ஆளுமை சிறப்புற வெளிப்படக் காண லாம்.

பிற நிறுவனங்களுடைய ஆவணங்களின் சேகரிப்பு களும், சிறந்த தலைவர்களின் குறிப்பேடுகளும், கடிதங் களும் இங்குள்ளன. இங்கு 1946-ஆம் ஆண்டு வரை நேரு குடும்பத்தைச் சேர்ந்த குறிப்பேடுகளும் கடிதங்களும் சேகரிக்கப்பட்டுள்ளன.

சென்னை மகாசன சபையின் ஆவணங்கள் இந் நூலகத்தின் குறிப்பிடத்தக்க சேகரிப்பாகும். நடேசன் (C.A. Natesan), மசானி (R.P. Masani), சிந்தாமணி (C.Y. Chintamani), சத்தியமூர்த்தி (S. Satyamurti), இராவ் (B.N. Rao) போன்ற பல இந்தியத் தலைவர் களின் குறிப்பேடுகளையும், கடிதங்களையும் இந்நூல கம் கொண்டுள்ளது. இவை தவிர, நேரு காலத்திய



நேருவின் படிப்பறை

இங்குள்ள நூலகத்தில், இராசாராம் மோகன் ராய் காலம் முதல் நேருவின் காலம் வரையிலான நூல்கள் பெரும் எண்ணிக்கையில் உள்ளன. இங்கு நேரு, காந்தி ஆகியோரால் எழுதப்பட்ட நூல்களும், இவர்களைப் பற்றிப்பிறர் எழுதிய நூல்களும் பெரு மளவில் உள்ளன. பம்பாய் இதழ் (Bombay Chronicle) 'திரிபியூன்' (Tribune), இந்து (Hindu) போன்ற பல் வேறு சிறந்த செய்தித்தாள்களின் அடைவுத் தொகு திகளையும் (Back Volumes) இந்நூலகம் கொண்டுள் ளது. இவை தவிரப் புதிய இந்திய வரலாற்றைக் கூறும்

35,000 ஒளிப்படங்கள் (Photos) இந்நூலகத்தில் உள் ளன.

கிருபளானி (J.B. Kripalani), கட்சு (K.N.Katju), காமத்து (H.V. Kamath), பீம்சேன் சச்சார் (Bhimsen Sachar), அசோக்மேத்தா (Asok Mehta) போன்ற இந்திய சுதந்திரப் போராட்டத் தியாகிகளோடும் மவுண்டுபேட்டன் பிரபு, ஆர்னால்டு டாயின்பீ (Arnold Toynbee), திருமதி உலோரெட்டா கிங் (Mrs. Loretta King), ஒரசு அலெக்சாண்டர் (Horace

Alexander) போன்ற புகழ்வாய்ந்த வெளிநாட்டவரோடும் பதிவு செய்துள்ள பேட்டிகள் இங்குள்ளன. இது வாய்மொழி வரலாற்றுத் திட்டம் (Oral History Project) எனக் கூறப்படுகிறது.

இந்நூலகத்தில் கி.பி. 1968-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதல் ஆராய்ச்சியாளர்களுக்கு வேண்டிய உதவிகள் அளிக்கப்படுகின்றன. இந்திய நாட்டையும் வெளிநாட்டையும் சார்ந்த அறிஞர் பெருமக்கள் இவ்வாராய்ச்சி உதவிகளைப் பெற்றுப் பயனடைந்துள்ளனர். இத்தகைய சிறப்புகளால் புதிய இந்திய வரலாற்றை அறிந்துகொள்வதில் நேரு நினைவு அருங்காட்சியகம் ஒரு சிறந்த தகவல் மையமாகத் திகழ்கிறது.

என்.அ.

# நை

இது நகரமும் ஐகாரமும் கலந்த ஒலி. நுனிநா மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒட்டியவாறு வாயைக் கீழ்நோக்கி நன்றாக இளித்த நிலையில் வெளிவரும் ஒலியாகும்.

**பொருள்:** தனியொரு மொழியாகக் குறைதல் என்னும் பொருளின் அடிப்படையில் நசுங்குதல், கெடுதல், சுருங்குதல், மாத்திரையிற் குறைதல், தளர்தல், வாடுதல், வருந்துதல், இரங்குதல், தன்னை இழந்த நிலையில் இருத்தல் என்ற பொருள்களைக் கொடுக்கும்; இகழ்ச்சிக் குறியாகவும் இலக்கியத்தில் வழங்கும்.

**வடிவம்:** ஐகாரக் குறி கி.மு. 3-ஆம் நூற்றாண்டிலிருந்தே எல்லா மெய்யெழுத்துகளுக்கும் இடப்புறம் இழுக்கப்பட்ட இரு கோடுகளால் காட்டப்படுவதுபோல் இந்த எழுத்துக்கும் உணர்த்தப்படும். படிப்படியாக வளர்ந்தபொழுதே எகர ஏகாரங்களைப் போலவே இந்த இரு கோடுகளும் இரு வகைக்கோடுகளாக கி.பி. 7 – ஆம் நூற்றாண்டுக்கு முன்னால் மாறின. அந்த நூற்றாண்டிலேயே அடுத்தடுத்து எழுதப்பட்டன. அதற்குப்பிறகு ஒருகால் இணைத்தும் ஒருகால் அடுத்தடுத்தும் கி.பி. 15 – ஆம் நூற்றாண்டு வரை எழுதப்பட்டது. அதற்குப்பின் விசயநகரக் கல்வெட்டுகளில் நடுச்சுழி தெரியும் படியாக எழுதப்பட்டது..... ... ..

வட்டெழுத்தில் இருகோடுகள் பயன்படுத்தப்படவில்லை. மாறாக கி.பி.7-ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே ஒரே கோடு மேல்நோக்கி வளைத்து எழுதப்பட்டது. நெகர, நகர ஏகாரங்களில் கீழ்நோக்கி வளைக்கப்பட்டதை மேலே பார்த்துக்கொள்க. வட்டெழுத்து மறையும் வரை மாற்றமில்லை.... ... ...

கே.ஜி.கி.

***நைசர் ஆறு*:** இது மேற்கு ஆப்பிரிக்காவிலுள்ள மிக நீண்ட ஆறு. இது4180 கி.மீ. நீளமுள்ளது. நைசர் (Niger) ஆறு ஆப்பிரிக்காக் கண்டத்தில் நைல், காங்கோ ஆறுகளை அடுத்து மூன்றாம் பெரிய ஆறாகும். இந்த ஆறு மாலி, நைசர், நைசீரியா ஆகிய நாடுகள் வழியாக ஓடிக் கினியா (Guinea) வளைகுடாவில் கலக்கிறது. இதன் நீர் 15,08000 ச.கி.மீ. பரப்பளவில் பாய்கிறது. இதற்குச் சோலிபா (Djoliba or Joliba), கொவரா (Kworra or Kovara) என்னும் வேறு பெயர்களும் உண்டு. இது கினியாக் குடியரசிலுள்ள பவுடா சாலன் மேட்டுநிலப்பகுதியில் (Fouta Djalon Plateau) 750 மீ. உயரத்தில் உற்பத்தியாகிறது. இங்குத் தான் செனகல் (Senegal), காம்பியா (Gambia) ஆறுகளும், பல்வேறு ஓடைகளும் தோன்றுகின்றன. இந்நதியில் பல நீர்வீழ்ச்சிகளும், குறுகிய இறக்கங்களும் (rapids), பள்ளத் தாக்குகளும் உள்ளன. இதன் அகலம் சில நூறு மீட்டர்களிலிருந்து மூன்று கி.மீ. வரை வேறுபடுகின்றது.

**பயன்கள்: வேளாண்மை:** இவ்வாற்றோரப் பகுதியில் மக்கள் தொகையும், நெருக்கமும் மிகுதி. நைசர் ஆறும், அதன் துணை ஆறுகளும் மாலியில் வேளாண்மைக்குப் பெரிதும் பயன்படுகின்றன. நீரைக் கட்டுப்படுத்த 1940-இல் பிரான்சுக்காரர் பெரிதும் முயன்று சான்சண்டிங்கு (Sansanding) அணையை 1946-இல் கட்டி முடித்தனர். 'பல கால்வாய்கள் வெட்டப்பட்டு 100,000 ஏக்கருக்கு நீர்ப்பாசனம் கொடுக்கப்பட்டதால் இப்பகுதியில் மக்கள் மிகுதியாகக் குடியேறி வேளாண்மையில் ஈடுபட்டனர். இங்கு 65 விழுக்காடு நிலத்தில் நெல் விளைவிக்கப்படுகிறது. இப்பகுதியில்

கால்நடை வளர்த்தல் மிக முக்கியமான தொழில். இதிலுள்ள மற்றொரு அணை பாமாகோவிற்குக் (Bamako) கீழ்ப்பகுதியில் சோட்டுபா (Sotuba) என்னுமிடத்தில் கட்டப்பட்டது. மூன்றாம் அணை 1960-இல் மேற்கு நைசீரியாவில் கெயின்சி(Kainji) என்னுமிடத்தில் தொடங்கப் பெற்றது. இந்நதிபோரப்பகுதியில் சிலவிடங்களில் மண்ணெண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டு எடுக்கப்பட்டு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

இங்கு மீன்பிடித்தல் முக்கியமான தொழிலாகும். நைசர் பெர்ச்சு (Niger Perch), புலிமீன் (Tiger Fish) ஆகியவை இங்கு நிரம்பக் கிடைக்கின்றன. நீர் யானையும், முதலைகளும் மிகுதியாக உள்ளன. முதலையைக் கொன்று தோலை ஏற்றுமதி செய்கின்றனர்.

**போக்குவரத்து:** இவ்வாற்றில் பல இடங்களில் அருவிகளும் ஆழமான இறக்கங்களும் உள்ளன. சில இடங்களில் நீரின் ஆழமும், ஓட்டமும் குறைவாக இருப்பதால் நல்ல மழைக் காலங்களில் மட்டும் போக்குவரத்து உள்ளது. மேல் நைசர் பகுதியில் கினியாவிலுள்ள கோருசாவிலிருந்து (Kouroussa) மாலியிலுள்ள பாமாகா (Bamaka) வரையில் சூலை முதல் அக்டோபர் வரை போக்குவரத்து நடைபெறுகிறது. அன்சாங்கோவிலிருந்து (Ansango) நைசீரியாவிலுள்ள செப்பா (Jebba) வரையில் பயணம் செய்ய இயலாது. அதன் பின்னர் நைசர் ஆற்றுநீரும், வேறு பல ஓடைகளின் நீரும் சேர்வதால் 880 கி.மீ. தூரத்திற்கு ஆகசுட்டு முதல் பிப்பிரவரி வரை போக்குவரத்து நடைபெறுகின்றது.

இந்தஆறுபற்றி எரடோட்டசு (Herodotus), பிளினி, தாலமி முதலியோர் குறிப்பிட்டிருந்தாலும் இதன் தோற்றம், போக்கு சேருமிடம் பற்றி எதுவும் தொடக்ககாலத்தில் தெரியவில்லை. இபின பட்டூடா என்னும் முகமதியப் பயணி கி.பி.15-ஆம்நூற்றாண்டில் தம்பக் டூவிலிருந்து காவோ வரை (Tombouctou to Gao) கண்டறிந்தார். இதன் பகுதிகளைக் கண்டறிய ஆங்கிலேயர் கி.பி.18-ஆம் நூற்றாண்டில் முயன்று தோற்றனர். மங்கோ பார்க்கு (Mungo Park) என்பவர் இது கிழக்கு நோக்கிப் பாய்கிறது எனக் கண்டறிந்தார். இவ்வாற்றில் அவர் 2400கி.மீ. பயணம் செய்து, அதுகடலோடு கலக்குமிடத்தைக்காண முயன்று, கி.பி. 1805-ஆம் ஆண்டில் பூசா (Bussa) என்னுமிடத்தில் மரணமடைந்தார். இரிச்சர்டு இலாண்டர் (Richard-Lander), சான் இலாண்டர் (John Lander) என்னும் இங்கிலாந்துச் சகோதரர்கள் கி.பி. 1830-இல் இது கினியா வளைகுடாவில் முடிவடைகிறது எனக்கண்டனர். சி.இரெ.

**நைசர்-காங்கோ மொழிகள்** இவை ஆப்பிரிக்க நாட்டின் பெரியமொழிக்குடும்பமாகக்கருதப்படும். நைசர் காங்கோ மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை. இம்மொழிகள் ஆப்பிரிக்காவின் தென்பகுதி முதல் சூடான் வரையிலும் பேசப்பட்டு வருகின்றன. செனகால், கினே, மோரிட்டானியா போன்ற நாடுகளிலும் இம்மொழிகள் வழக்கிலுள்ளன. நைசர்-காங்கோ மொழிகள் (Niger-Congo Languages) ஆறு பெரும் பிரிவுகளை உடையன. மேற்கு அட்லாண்டிக்கு மொழிகள், மண்டே மொழிகள், கூர்மொழிகள், குவா மொழிகள், அடமாவா கிழக்கு மொழிகள், பெனுவே காங்கோ மொழிகள் என அவை பெயர் பெறுகின்றன.

மேற்கு அட்லாண்டிக்கு மொழிகள் ஏறத்தாழ 10,000,000 மக்களால் பேசப்பட்டு வருகின்றன. இம்மொழிகளில் புலானி மொழி, வோலோப்புமொழி, திம்னே மொழி போன்றவை குறிப்பிடத் தக்கவை. மண்டே மொழிகள் ஏறத்தாழ 8,000,000 மக்களால் பேசப்பட்டு வருகின்றன. இவற்றில் மாலெங்கே-பம்பாரா, சோனீங்கே, மெண்டே, சகு, வை, உலோமோ, கப்பேலா ஆகிய ஏழு மொழிகள் முதன்மையானவை. கூர்மொழிகள் என்னும் பிரிவின்கண் ஐம்பதுக்கும் மேற்பட்ட மொழிகள் உள்ளன. இம்மொழிகளைச் செனுபோ, உலோபி-டகோங்கு, மோசி-குருசி, குருமா, தெம்மு, பார்கு என ஆறு பிரிவுகளில் அடக்குவர். குவா மொழிகள் இலைபீரியா, ஐவரி கோசுட்டு, கானா, தெகோ, தவோமே ஆகிய நாடுகளில் பேசப்படுகின்றன. இம்மொழிகளைப் பதினொரு பிரிவுகளாகப் பகுப்பர். அடமாவா-கிழக்கு மொழிகள் அடமாவா மொழிகள் என்றும் கிழக்கு மொழிகள் என்றும் இரண்டு பெரும் பிரிவுகளை உடையன. அடமாவா மொழிகள் அடமாவா மலைப்பகுதிகளில் பொதுவாக வழங்கி வருகின்றன. கிழக்கு மொழிகள் காமரூன் பகுதிகளிலும் காங்கோ, சூடான் நாடுகளிலும் பேசப் பெற்று வருகின்றன. பெனுவே காங்கோ மொழிகள் நைசர்-காங்கோ மொழிக் குடும்பத்தில் முதன்மை வாய்ந்தனவாகும். ஏறத்தாழ 700 மொழிகள் இப்பிரிவில் உள்ளன. தெற்கு ஆப்பிரிக்காவிலும் கிழக்கு ஆப்பிரிக்காவிலும் மேற்கு ஆப்பிரிக்காவின் சில பகுதிகளிலும் பேசப்பெற்று வரும் பாண்டு மொழிகளும் (Bantu language) நைசர்-காங்கோ மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை எனச் சிலர் கருதுவர். சா.உ.

**நைசர் குடியரசு:** இது மேற்கு ஆப்பிரிக்காவிலுள்ள மிகப்பெரிய, மக்கள் நெருக்கம் குறைந்த ஒரு குடியரசாகும். பிரான்சு மேற்கு ஆப்பிரிக்காவின் ஒரு பகுதியான இது, 1960 ஆகசுட்டு 3-ஆம் நாள் விடுதலை பெற்று நைசர் குடியரசு (Republic of Niger) என்னும் பெயர் பெற்றது. இப்பகுதியில் ஓடும் நைசர் ஆற்றிலிருந்து இந்நாடு இப்பெயரைப் பெற்றது. இதன் தலைநகர் நியாமி(Niamey) ஆகும்.




நைசர் குடியரசு அமைவிடம்

**புவியியல் அமைப்பு: தட்பவெட்பம்:** இதன் பெரும் பகுதி பாலைநிலமாக உள்ளது; வறட்சி மிக்கு, வெப்பம் மிகுதியாக உள்ளது. மார்ச்சு முதல் சூன் வரை கோடைக் காலமாகும். அப்பொழுது வெப்பநிலை 43 பாகை 'செலுசியசு' வரை செல்லும். சூலை முதல் செப்டம்பர் வரை மழைக் காலமாகும். ஆண்டின் சராசரி மழை 18 செ.மீ. ஆக உள்ளது. சில இடங்களில் மட்டும் 53 செ.மீ. வரை பெய்யும். இதன் பாதிப் பகுதியில் மழை 10 செ.மீ.க்குக் குறைவாகப் பெய்கிறது.

**இயற்கை அமைப்பு:** இந்நாட்டின் பெரும்பகுதி கடல் மட்டத்திலிருந்து குறைந்தது 457 மீட்டர் உயரம் கொண்டது. இதன் வடகிழக்கு, கிழக்கு -மத்திய பகுதிகள் சகாராப் பாலைவனத்தில் உள்ளன. தென் பகுதியில் மட்டும் புல்வெளி உள்ளது. இதன் தென்மேற்கு மூலையில் நைசர் ஆறு ஓடுவதால் அவ்வாற்றில் வெள்ளம் ஏற்படும் காலங்களில் வேளாண்மை செய்யப்படுகிறது.

**பரப்பளவு:** இதன் பரப்பளவு 1,186, 408 ச. கி.மீ. இதன் வடக்கில் அல்சீரியாவும் (Algeria), இலிபியாவும் (Libya), தெற்கில் நைசீரியாவும், பெனின் என்ற தகோமியும் (Beninor Dahomey)கிழக்கில்சதுவும் (Chad), தென்மேற்கில் மேல் ஒல்டாவும், (Upper Volta), மேற்கில் மாலியும் (Mali) எல்லைகளாக உள்ளன.

**மக்கள்:** இங்கு வாழும் மக்கள் புலனி (Fulani) தாரகு (Tuareg), தெர்மா (Djerma) கவுசா (Hausa) என்னும் நான்கு பெரும் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள். இவர்கள் வெவ்வேறு பகுதிகளில் தனித்தனியே, பல்வேறு மொழிகளைப் பேசிக் கொண்டு வாழ்கின்றனர். இந்நாட்டின் ஆட்சிமொழியான பிரெஞ்சு மொழியை ஒரு சிலரே பேசுகின்றனர். இதன் மக்கள் தொகை 6.27 மிலியன் (1984). இம்மக்களுள் 80 விழுக்காட்டினர் இசுலாமியர்.

**பொருளாதாரம்: வேளாண்மை:** இங்கு நெல், பருத்தி, மிளகாய், நிலக்கடலை, பீன்சு, வெங்காயம் முதலியன விளைவிக்கப்படுகின்றன. கால்நடைகள் வளர்க்கப் படுவதால் தோல் உற்பத்தி மிகுதி.

**கனிமங்கள்:** தகரம், விண்மம் (Uranium)சிறிதளவு தங்சுடன் ஆகியன வெட்டியெடுக்கப்படுகின்றன.

**தொழிற்சாலைகள்:** தொழில் வளர்ச்சி குறைவு. மேற்கு-மத்திய நைசரில் விண்மம் அதிகம் உள்ளதால் 1971 – இல் ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தப்பட்டது. கைத்தறித் துணிகளும், தாவர எண்ணெயும் உற்பத்தி செய்யப்படுகின்றன. நிலக்கடலை, நிலக்கடலை எண்ணெய், பருத்தி, தோல் ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. உணவுப் பொருள்கள், எரிபொருள், கச்சாப் பொருள்கள் இறக்குமதியாகின்றன.

**போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்:** இந்நாட்டில் இருப்புப் பாதை இல்லை. சாலைகள் 5630 கி.மீ. நீளத்திற்கு உள்ளன. நியாமியின் பன்னாட்டு விமான நிலையம் ஒன்றும், அரசு வானொலி நிலையம் ஒன்றும் உள்ளன.

இங்கு மக்கள் பரவலாக நாடோடிகளாக உள்ளதால் கல்வி வளரவில்லை. கிறித்தவப் பாதிரிமார்களும் பள்ளிகளை ஏற்படுத்த அனுமதிக்கப்படவில்லை. இப்பொழுது அரசாங்கம் பள்ளிகளைக் கட்டி, ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளித்து வருகிறது.

**நகரங்கள்:** இந்நாட்டின் தலைநகரான நியாமி முக்கிய நகரமாகும். இதன் மக்கள்தொகை 130,299. அடுத்து குறிப்பிடத்தக்க நகரான சிந்தர் (Zinder) 1900த்திலிருந்து 1926 வரைஇந்நாட்டின் தலைநகராக விளங்கியது.

**அரசு:** இங்கு 1960-ஆம் ஆண்டின் அரசியல் அமைப்பின்படி குடியரசுத் தலைவர் ஒருவரும், தேசிய அவையினரும் (National Assembly) 5 ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்நாட்டில் 1974 -இல் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி காரணமாக இராணுவ ஆட்சி ஏற்பட்டது. அதனால் ஏற்படுத்தப்பட்ட அமைச்சரவை (Supreme Military Council)குடியரசுத் தலைவரின் கீழ் ஆட்சியை நடத்துகின்றது.

**வரலாறு:** இன்றைய நைசர் குடியரசும், அதனைச் சுற்றியுள்ள பகுதிகளும் பண்டைக் காலத்தில்

மேற்கு ஆப்பிரிக்காவில் இருந்த பல பேரரசுகளின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன. அவற்றுள் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் நிலவிய சோங்காய்ப் (Songhai) பேரரசும், கி.பி. 19 - ஆம் நூற்றாண்டில் சிறந்து விளங்கிய சோகோடோப் (Sokoto) பேரரசும் குறிப்பிடத்தக்கன. இப்பகுதியை முதன்முதலில் மங்கோ பார்க்கு (Mungo Park) என்னும் சுவிட்சர்லாந்து அறிஞர் ஆராய்ந்தார். பின்னர்ச் செருமானியரும், கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் பிரான்சுக்காரரும் இங்குக் குடியேறினர். 1922 - இல் இங்கு ஏற்படுத்தப்பட்ட பிரான்சுக் குடியேற்றம், 1958 வரை நீடித்தது. பின்னர் இது தன்னாட்சி நாடாக (Self Government State) இருந்து வந்து, 1960 ஆகசுட்டு 3-இல் விடுதலை பெற்றது. சி.இரெ.

நைசீரியக் கூட்டாட்சிக் குடியரசு: ஆப்பிரிக்க நாடுகளிலேயே அதிக மக்கள் தொகையைக் கொண்ட இந்நாடு, அக்கண்டத்தின் மேற்குக் கடற்கரையில் கினி வளைகுடாவில் (Gulf of Guinea) அமைந்துள்ளது. நைசீரியக் கூட்டாட்சிக் குடியரசு (Federal Republic of Nigeria) என்று சொல்லப்படும் இதில் 19 மாநிலங்கள் (States) உள்ளன. இதன் தலைநகர் இலாகோசு (Lagos).

**புவியியல் அமைப்பு: தட்பவெப்பம்:** வெப்ப மண்டலப் பருவ நிலையைக் கொண்ட இங்கு ஆண்டு முழுவதும் வெப்பம் அதிகம். வடபகுதி தென்பகுதியை விட வெப்பமாகவும் வறட்சியாகவும் காணப்படுகிறது. ஆண்டுச் சராசரி வெப்பநிலை 29 பாகை 'செல்சியசு'. பகலில் வெப்பம் 38 பாகை 'செல்சியசு'. ஏப்பிரல் முதல் அக்டோபர் வரை மழைக் காலம். ஆண்டுச் சராசரி மழையின் அளவு 381 செ.மீ. ஆனால், வடக்கில் சில பகுதிகளில் 64 செ.மீ. க்குக் குறைவாகவே மழை பெய்கிறது.

**இயற்கை அமைப்பு:** இந்நாட்டில் நான்கு வகையான நில அமைப்பைக் காணலாம். கடற்கரைப் பகுதிகளில் ஏரிகளும் சதுப்பு நிலங்களும் நிறைந்துள்ளன. வடக்கில் வெப்ப மண்டலக் காடுகள் உள்ளன. அவற்றில் மரங்கள் 60 மீ. உயரம் வரை வளர்கின்றன. அவற்றை அடுத்துச் சவன்னா (Savanna) புல்வெளி உள்ளது. இந்நாட்டின் ஒரு பகுதி சகாரா பாலைவனப் பகுதியாக இருக்கிறது.

**பரப்பளவு:** இதன் பரப்பளவு 923,73 ச.கி.மீ.

**எல்லைகள்:** இதன் வடக்கில் நைசர் குடியரசும், கிழக்கில் காமரூனும் (Cameroon), வடக்கில் சதும் (Chad), வடமேற்கில் மேல் ஓடாவும் (Upper Volta), மேற்கில் தகோமி அல்லது பெனினும் (Dahomey or Benin) தெற்கில் கினியா வளைகுடாவும் எல்லைகளாக உள்ளன. இதன் மக்கள்தொகை 82.39 மிலியன் (1983).




நைசீரியக் கூட்டாட்சிக் குடியரசு

**மக்கள்:** இங்குள்ள மக்கள் 250 க்கும் மேற்பட்ட இனக்கூட்டங்களைச் சேர்ந்தவர்கள். இவர்கள் மொழி, உடை, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றில் பெரிதும் மாறுபடுகின்றனர். மூன்று முக்கிய இனங்களான கவுசா (Hausa), யருபா (Yoruba), ஈபோ (Ibo or Igbo) ஆகியோர் மக்கள் தொகையில் 60 விழுக்காட்டினராக உள்ளனர். ஆட்சிமொழி ஆங்கிலம்.

**சமயம்:** இந்நாட்டு மக்களுள் 50 விழுக்காட்டினர் இசுலாமியர். 33 விழுக்காட்டினர் கிறித்தவர். எஞ்சியோர் தங்களுடைய பண்டைய சமயப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வருகின்றனர்.

**பொருளாதாரம்: வேளாண்மை:** இங்கு 75 விழுக்காட்டினர் வேளாண்மையிலும், கால்நடை வளர்ப்பிலும் ஈடுபட்டுள்ளனர். கொக்கோ, பனை எண்ணெய், நிலக்கடலை, இரப்பர் ஆகியவை மிக அதிக அளவில் உற்பத்தி செய்யப்படுகின்றன. மேலும், நெல், பருத்தி, அவரை, மரவள்ளிக்கிழங்கு, மக்காச்சோளம் ஆகியவை விளைவிக்கப்படுகின்றன. மீன்பிடித்தல் முக்கியமான தொழிலாகும்.

**கனிமங்கள்:** இந்நாட்டில் 'கோலம்பைட்டு' (Columbite), என்னும் கனிப்பொருள், சுண்ணாம்புக்கல், தகரம், நிலக்கரி ஆகியவை வெட்டி எடுக்கப்படுகின்

றன. பாறை எண்ணெய் உற்பத்தியிலும் ஏற்றுமதியிலும் இது உலகில் சிறந்து விளங்குகின்றது.

**தொழிற்சாலைகள்:** சிமெண்டு, வேதியியல் பொருள்கள், உணவுப் பொருள்கள், துணிவகைகள் ஆகியவற்றை உற்பத்தி செய்யவும், பாறை எண்ணெய், இரப்பர் எண்ணெய், பனைஎண்ணெய் ஆகியவற்றைச் சுத்தம் செய்யவும் தொழிற்சாலைகள் பல உள்ளன.

**ஏற்றுமதி, இறக்குமதி:** இந்நாட்டிலிருந்து கொக்கோ, நிலக்கடலை,பனங்கொட்டை, பனைஎண்ணெய், பருத்தி, இரப்பர், தகரத்தாது, பாறை எண்ணெய், (Petrol) மரம், தோல் ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. பிற நாடுகளிலிருந்து பருத்தி, செயற்கை இழை ஆடைகள், ஊர்திகள், இயந்திரங்கள், மீன், எரிபொருள், உணவுப் பொருள்கள், புகையிலை, வெண்சுருட்டு ஆகியவை இறக்குமதியாகின்றன.

**போக்குவரத்தும் செய்தித்தொடர்பும்:** இந்நாட்டிலுள்ள 100,000 கி.மீ. நீளமுள்ள சாலைகளில் 20,000 கி.மீ. நீளத்திற்குக் கீல் (Tar) போடப்பட்டுள்ளது. நைசீரியத் தொடர் வண்டி நிறுவனம் (Nigerial Railway Corporation) 3508 கி.மீ. நீளத்திற்கு இருப்புப் பாதைகளை அமைத்துள்ளது. ஆறுகளும் ஓடைகளும் 8,500 கி.மீ. நீள உள்நாட்டுப் போக்குவரத்திற்குப் பயன்படுகின்றன. நைசீரியா விமானப் போக்குவரத்து (Nigeria Airways) உள்நாட்டு, வெளிநாட்டுப் போக்குவரத்தை நடத்துகின்றது.இங்கு 20-க்கு மேற்பட்ட நாள்,வாரச் செய்தித்தாள்களும்,25 வானொலி நிலையங்களும், 7 தொலைக்காட்சி நிலையங்களும் உள்ளன.

**கல்வி:** இம்மக்களுள் 25 விழுக்காட்டினரே எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள். அரசாங்க முயற்சியின் விளைவாக 1972-இல் தொடக்கப் பள்ளிகளில் 4,391,000 குழந்தைகளும், உயர்நிலைப்பள்ளிகளில் 456,000 மாணவர்களும் பல்கலைக் கழகங்களில் 21,000 பேரும் பயின்றனர். இந்நாட்டில் 6 பல்கலைக் கழகங்கள் உள்ளன. இங்கு 1979-இல் தொடக்கக் கல்வி கட்டாயமாக ஆக்கப்பட்டது.

**முக்கிய நகரங்கள்:** இந்நாட்டின் தலைநகரமான இலாகோசு, தொழில் நகரமான எனுகு (Enugu). இபாதான் (Ibadan) ஒக்போமோசோ (Ogbomosho) ஆகியவை முக்கிய நகரங்களாகும்.

**அரசு:** குடியரசுத் தலைவர் இந்நாட்டின் தலைவர். அவரும், அவரால் நியமிக்கப்படும் அமைச்சர்களும், ஆட்சியை நடத்துகின்றனர். அவரும் பாராளுமன்ற உறுப்பினர்களும் 4 ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இரு அவைகளைக் கொண்ட பாராளுமன்றத்தின் ஆட்சிப் பேரவையில் (Senate) 95 உறுப்பினர்களும், பேராளர் அவையில 449 உறுப்பினர்களும் உள்ளனர். இது 19 மாநிலங்களைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு மாநிலத்திற்கும் அதன் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆளுநர் தலைவராவர். மாநில அவையின் உறுப்பினர்களும், மக்களால்தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். தலநிருவாகத்தின் பொருட்டு ஒவ்வொரு மாநிலமும் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அது மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகின்றது.

**வரலாறு:** பண்டைக் காலத்தில் இப்பகுதியில் பல பேரரசுகள் தோன்றிப் பண்பாட்டிலும் வாணிகத்திலும் சிறந்து விளங்கின. போர்ச்சுகீசியர் கி.பி. 1472-இல் இதனைக் கண்டுபிடித்த பின்னர் ஆங்கிலேயர், தச்சுக்காரர், பிறஐரோப்பியர் ஆகியோர் இங்குக் குடியேறி வணிகப் போட்டியில் ஈடுபட்டனர். பின்னர்த் தெற்கு, வடக்கு நைசீரியா ஆங்கிலேய ஆட்சியின் கீழ் வந்தன. நைசீரியக் கூட்டரசு (Federation of Nigeria) 1952-இல் ஏற்படுத்தப்பட்டது. அந்நாடு 1963-இல் முழுச் சுதந்திரம் பெற்றுப் பொதுநல நாடுகளில் (Common Wealth) ஒன்றாகி, நைசீரியக் கூட்டாட்சிக் குடியரசு (Federal Republic of Nigeria) எனப்பட்டது. இங்கு, 1966 சனவரியில் இராணுவப் புரட்சி தோன்றி 1979 வரை இராணுவ ஆட்சி நிலவியது. அதன் பின்னரே மக்களாட்சி ஏற்பட்டது.

சி.இரெ.

## நைசுபெரோ,ஆல்பிரடோ (1876-1960):

இவர் ஓர் இத்தாலியச் சமூகவியலறிஞர் ஆவார். இவர் இத்தாலியிலுள்ள காசுட்டிகிளியாண் டிசிசிலியா (Castiglione di Sicilia) என்னுமிடத்தில் 23.1.1876-இல் பிறந்தார். இவர் சமூகவியலில் மட்டுமன்றிக் குற்றவியல், புள்ளியியல் ஆகிய துறைகளிலும் சிறந்த புலமை பெற்றிருந்தார். மேலும், முதன்மையாகத் தோன்றிய செயலறிவுச் சமூக அறிவியலறிஞர்களுள் (Empirical Social Scientists) இவரும் ஒருவராவார்.

ஆல்பிரடோ நைசுபெரோ (Alfredo Niceforo) சுவிட்சர்லாந்திலுள்ள இலாசன் (Lausanne) புருசெல்சு (Brussels) மற்றும் பிற இடங்களில் குற்றவியல் பேராசிரியராகப்பணியாற்றியுள்ளார். மேலும், இவர் நேப்பிள்சுப் (Naples) பல்கலைக்கழகங்களிலும் உரோமிலும் (1931-ஆம் ஆண்டிலிருந்து) புள்ளியியல் பேராசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

இவர், ஒவ்வொருமனிதனும் தன்னிடையே உள்ள சாதாரணக் குணங்களுடன் ஓர் ஆழ்ந்த தன்னுணர்வுடன் (Deep Ego) கூடிய சமூக விரோதத் தன்மையையும் கொண்டிருக்கிறான் என்று கூறுகிறார்.

மேலும் இவர், மனிதன் ஒருபுறம் இத் தன்னுணர்வைக் கொண்டிருந்தாலும் மறுபுறம் இக் குற்ற உணர்வைத் தடை செய்யவும் மனத்திற்குள் முயற்சி செய்து கொண்டிருக்கிறான். இது மனிதனுடைய சமூக இடைவினையால் உருவாக்கப் படுகின்ற ஒரு மிகைநிலை மனம் (Superior Ego) எனக் கூறுகிறார். இவர், இக் கோட்பாட்டை 1902-இல் வெளியிட்டார். இது சம காலத்தில் தோன்றிய உளப் பகுப்பாய்வுக் கோட்பாட்டை (Psycho- Analytical Theory) மிகவும் ஒத்திருந்தது.

இவர், தொடக்கக்காலத்தில் சீசர் இலாம்பரசோ (Cesare Lombroso) என்ற இத்தாலியக் குற்றவியல் அறிஞரின் கோட்பாடுகளைப் பின்பற்றி ஆய்வு செய்தார். ஒரு சாதாரண மனிதன் செய்கின்ற குற்றத்தை உயிரியல், உளவியல், சமூகவியல் முதலியனவற்றின் அடிப்படையில் ஆய்வு செய்யும்போதே நன்றாக அறிய இயலும். என நைசுபெரோ கூறுகிறார்.

'ஆழ்ந்த தன்னுணர்வும் அதனுடைய மாற்றுத் தன்மைகளும்' (Deep Ego and Its Masks) என்ற நூல் இவர்தம் முக்கிய படைப்பாகும். இவர் உரோமில் 2.3.1960-இல் இறந்தார். பூ.த.

**நைட்டிங்கேல் அம்மையார் (கி.பி. 1820-1910):** நைட்டிங்கேல் அம்மையார் இத்தாலியில் உள்ள பிளாரன்சு நகரில் கி.பி.1820-ஆம் ஆண்டு மே மாதம் 12-ஆம் நாள் பிறந்தார். இவரது இளமைப் பருவம் இங்கிலாந்தில் உள்ள இவரது தந்தையின் பண்ணைகளில் கழிந்தது. பொது வாழ்க்கையில் மகளிரது பங்கு சாரமற்றுக் காணப்பட்ட அந்தக் காலத்தில் மகளிர் தம் வாழ்க்கைக்குப் புதிய பொலிவினை ஊட்ட நைட்டிஙகேல் அம்மையார் விழைந்தார். தாதியர் தொழிலுக்கு உகந்த மரியாதையும் வரவேற்பும் கிடைக்காத அன்றைய சூழ்நிலையில், இவர் தாதியர் தொழிலின் மேன்மையை உலகிற்கு எடுத்து இயம்ப எண்ணி அதற்கான பணிகளில் ஈடுபடலானார். இவரது சுற்றத்தார் இதனை வெறுத்தனர்.எனினும், நைட்டிங்கேல் அம்மையார் எதிர்நோக்கிய எதிர்ப்புகளுக்கு அஞ்சாது கி.பி. 1844 – ஆம் ஆண்டு முதல் தாதியர் பணியில் ஈடுபடலானார். செருமனி நாட்டில் உள்ள கெய்சர்வொர்த்து மறறும் பிரான்சு நாட்டில் பாரிசுநகரிலுள்ள 'கருணைச் சகோதரிகள்' (Sisters of Mercy) என்ற பயிற்சி நிலையங்களில் தாதியர் பயிற்சியினை முடித்துப் பின் கி.பி. 1853-ஆம் ஆண்டு இலண்டன் மாநகரிலுள்ள ஊனமுற்ற பெண்களுக்கான மருத்துவ மனையில் தமது பணியைத் தொடங்கினார்.

துருக்கி நாட்டில் உள்ள கிரிமியா (Crimea) என்ற



நைட்டிங்கேல் அம்மையார்

இடத்தில் நடந்த போரில் காயமுற்ற இராணுவ வீரர்கள் இசுகுடாரி(Scutari)நகர மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருந்தனர்.அங்கு அவர்களுக்குச் சரியான மருத்துவஉதவியும் பாதுகாப்பும் கொடுக்கப்படாத காரணத்தால், ஆயிரக்கணக்கான வீரர்கள் மரணமடைந்தனர். இச்செய்தி இங்கிலாந்து மக்களைத் துயரத்தில் ஆழ்த்தியது. ஆங்கில அரசின் இராணுவத் துறை அமைச்சர் சிட்னி எர்பர்ட்டு (Sidney Herbert) என்பவர் நைட்டிங்கேல் அம்மையாரைக் கிரிமியாவில் நடைபெற்றுக் கொண்டிருந்த போர்ப்பகுதிகளுக்கு அனுப்பி, இராணுவ வீரர்களின் துயர்துடைக்கும் முயற்சிகளை மேற்கொண்டார். நைட்டிங்கேல் அம்மையாரது நீண்டகாலக் கனவு நனவாகும் காலம் பிறந்தது. முப்பத்தெட்டு தாதியர்களுக்குத் தலைமையேற்று நைட்டிங்கேல் அம்மையார் கி.பி. 1854-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் அங்குச் சென்று துயர் துடைப்புப் பணியில் ஈடுபட்டார். கடமையுணர்வுடன் தாம் கண்துஞ்சாது துஞ்சவிருந்த எண்ணற்ற வீரர்களைக்காப்பாற்றினார். விளக்கேந்தி இரவு கண்விழித்து இராணுவவீரர்களின் இன்னல் களையஇன்முகத்துடன் பணியாற்றினார். ஓயாத உழைப்பால் உடல் நலிவுற்று கி.பி 1856-ஆம் ஆண்டு மீண்டும் இலண்டன் திரும்பினார்.

நைட்டிங்கேல் அம்மையாரது அரும்பணியால் கி.பி. 1859-இல் இராணுவ மருத்துவக் கல்லூரியும் கி.பி. 1861-இல் முதன்முறையாக இராணுவ வீரர்களுக்கென மருத்துவமனையும் உருவாக்கப்பட்டன. தாதியர் தொழிலுக்குப் பயிற்சி அளிக்க மருத்துவக் கல்லூரி ஒன்றும் தொடங்கப்பட்டது. இவருக்கு இங்கிலாந்து அரசு கி.பி. 1907-ஆம் ஆண்டில் மதிப்புமிக்க அரசவை விருதினை(Order of Merit) அளித்துப் பாராட்டியது. இங்கிலாந்து நாட்டு வரலாற்றில்

இவ்விருதினைப் பெற்ற முதல் பெண்மணியும் இவரே. இவரை உலகோர் அனைவரும் தாதியர் தொழிலின் தலைமகள் எனப் புகழ்கின்றனர். எஸ்.கி.அ.

**நைடதம்:** நிடதநாட்டின் மன்னனாகிய நளன் வரலாற்றைக் கூறும் நூல் நைடதம் ஆகும். இதனைத் தமிழில் விருத்தப்பாவால் இயற்றியவர் அதிவீரராம பாண்டியர். வடமொழியில் 'அர்சகவி' என்பவர் 'நைடதம்' என்னும் நூலை இயற்றினார். நிடத நாட்டின் மன்னன் நளன் வரலாற்றைக் கூறுவதால் வடமொழி மரபுப்படி இந்நூல் 'நைசதம்' எனப் பட்டது. இது தமிழ் மரபுப்படி 'நைடதம்' என வழங்கப்படலாயிற்று.

'மகாபாரதத்தில்' ஒரு கிளைக் கதையாக இருந்த 'நளோபாக்கியானம்' ஒரு தனி நூலாகப் பின்னர்ச் செய்யப்படவே, அந்நூலை முதல் நூலாகக் கொண்டு நைடதம் தோன்றியது.

நைடதம் சுவைமிக்க நூல்; அரிய சொல்லாட்சி களையும் வருணனைகளையும் உடையது. ஆதலால், 'நைடதம் புலவர்க்கு ஔடதம்' எனப்படலாயிற்று. ஔடதமாவது மருந்து. இங்கு அறியாமை நோயைத் தீர்க்கும் மருந்து என்பதாம்.

ஆசிரியர், முதற் பாடலில் பிள்ளையார்க்கு வணக்கம் செலுத்துகிறார். அதிலேயே, ஓர் அழகிய வருணனை அமைக்கிறார். தம் கொம்பு ஒன்றை ஒடித்து எழுதுகோலாகக் கொண்டு பாரதத்தைப் பிள்ளையார் எழுதினார் என்பது புராண மரபு. அதனை நினைந்த அதிவீரராமர், 'சிவபெருமான் தலைமேல் உள்ள பிறைநிலாவைத் தாம் முன்னே ஒடித்த கொம்பின் பகுதி போலும் என்று பற்றிப் பிடித்து ஒப்பிட்டுப் பார்க்கிறார் பிள்ளையார்' என்று சுவையாகக் கூறுகிறார்.

கலைமகள் உருவென விளங்கிய வெண்மேகம் கடல் நீரைக் குடித்து மலைமகள் உருவெனக் கருநிறங்கொண்டது (3) நளவேந்தன் வேல் போல் மின்னியது; அவன் முரசு போல் முழங்கியது; அவன் கொடைபோல் பொழிந்தது (4) எனத் தொடர்ந்து சுவைபடச் சொல்கிறார்.

நைடதம் பாயிரம் இரண்டுபாடல்களும், நாட்டுப் படலம், நகர்ப்படலம், அன்னத்தைக் கண்ணுற்ற படலம், அன்னத்தைத் தூதுவிட்ட படலம், கைக் கிளைப் படலம், மாலைப்படலம், நிலாத்தோற்று படலம், சந்திரோபாலம்பனப் படலம், மன்மதோ பாலம்பனப் படலம், இந்திரப்படலம், நளன் தூதுப் படலம், சுயம்வரப்படலம், போர் புரி படலம், மணம் புரிபடலம், மீட்சிப்படலம், கலிதோன்றுபடலம், இள வேனிற்படலம், போதுகொய்படலம், புனல் விளை யாட்டுப் படலம், சூதாடு படலம், நகர் நீங்குபடலம், கான்புகுபடலம், பிரிவுறுபடலம், வேற்றுரு அமைந்த படலம், வீமன் தேடவிட்ட படலம், கலிநீங்குபடலம் தேவியைக் கண்ணுற்ற படலம், அரசாட்சிப்படலம் என 28 படலங்களும் 1173 பாடல்களும் கொண்டுள்ளது.

நளவெண்பாவும், நைடதமும் ஒரே கதையைப் பற்றிக் கூறும் நூல்களே எனினும், இரண்டும் வெவ் வேறு நூல்களை மூல நூல்களாகக் கொண்டமை யாலும், இருவேறு காலத்தில் இருந்த இருவேறு புல வர்கள் பாடியமையாலும் சில நுண்ணிய வேறுபாடு கள் உள்ளன. முந்திய நூலைக் கண்ட ஒருவர் தாம் கருதும் மாற்றத்தைப் பிந்திய நூலில் சேர்க்க வாய்ப்பு இருத்தல் வெளிப்படை.

நளவெண்பா, வெண்பாயாப்பில் வந்த நூல். நைடதம் விருத்த யாப்பில் வெளிப்பட்ட நூல். புக ழேந்திப் புலவர்க்கும் அதிவீரராம பாண்டியர்க்கும் நான்கு நூற்றாண்டுகள் இடைவெளியுண்டு. புகழேந்தி யார் அவைப்புலவர். அதிவீரராமர் அரசர். இவை யெல்லாம் கூடச் சில வேறுபாடுகளை நூலில் உண் டாக்குதல் உண்மை. அவ்வகையில் வரும் வேறுபாட் டுள் பின்வருவ தொன்றாகும்.

'அன்னம், தமயந்தியைப் பற்றி நளனுக்குக் கூறிய பின்னரே அவன் அவள்மேல் அன்பு மீதூரப் பெற்றான். மணங்கொள்ள விரும்பினான்'. என்பது நளவெண்பா. ஆனால், நைடதத்தில் நளனும் தமயந் தியும் ஒருவரை ஒருவர், வருகின்றவர் போகின்றவர் வழியாகக் கேள்விப் பட்டிருந்தனர் என்றும், காதல் கொண்டிருந்தனர் என்றும் அன்னம் தூது சென்று இணைத்து வைத்தது என்றும் கூறப்பட்டுள்ளது. இவ் வாறு சிற்சில வேறுபாடுகள் உள்ளன. மகளிர் வருணனைப் பகுதிகள் நளவெண்பாவினும் பன் மடங்கு மிக்கவையாய் நைடதத்தில் உள்ளன. இரா.இ.

**நைமிசாரணியம்:** இது வட இந்தியாவில் உள்ள ஒரு வைணவத் தலம். உத்தரப் பிரதேசத்தின் தலைநகராகிய இலக்னோவிலிருந்து இது வடமேற்கில் 75 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இந்தத் திவ் விய தேசம் கிழக்கிந்தியப் புகைவண்டிப் பாதையில் பலமு-சீதாபூர் கிளைப்பாதையில் உள்ளது. இது புகை வண்டி நிலையத்திலிருந்து ஒன்றரை கி.மீ. தொலை வில் அமைந்துள்ளது. இங்குத் திருமால் ஆரணிய வடி வத்தில் சேவை சாதிக்கின்றார் என்பர். முற்காலத் தில் இங்குத் தனியாகக் கோயில் எதுவும் அமைக்கப் பெறவில்லை. அரிபிரபந்த இராமானுசச்சாமி என்ற வடநாட்டு வைணவ சமயத்தைச் சார்ந்த அந்தணர் ஒருவர் திருக்கோயில் எழுப்பி உற்சவங்கள் நடத்தி வருகின்றார். திருத்தலப் பயணிகளுக்கு எல்லா வகை யான வசதிகளும் இங்குச் செய்யப் பெற்றுள்ளன.

பெரும்பாலும் பத்திரிகாச்சிரமத்திற்குச் செல்வோர் திரும்பும்போது இத்தலத்திற்கு வருகை புரிகின்றனர். அவர்கள் முதலில் சக்கர தீர்த்தத்திலும், பின்னர் அருகிலுள்ள கோமுகி நதியிலும் நீராடி அவற்றிற்கு முன்னருள்ள ஆரணியத்தைச் சேவிப்பர். இங்குள்ள திருக்கோயிலில் உள்ள பெருமானின் திருநாமம் தேவ ராசன், சிரீஅரி; தாயார் இலக்குமி, புண்டரீகவல்லி; பெருமான் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். இத்திருத்தலத்துப் பெரு மானைத் திருமங்கையாழ்வார் ஒரு திருமொழியில்மங் களாசாசனம் செய்துள்ளார்.

இதன் பெயர்க் காரணங்கள் பலவாறு கூறப் பெறுகின்றன. ஒரு காலத்தில் முனிவர்கள் நான் முகனை நோக்கித், 'தவம் செய்வதற்கு ஏற்ற இடம் இப்பூவுலகில் எங்குளது?' என்று வினவினர். நான் முகன் ஒரு தருப்பைப் புல்லைச் சக்கரம்போல் செய்து மண்ணுலகில் உருண்டோடச் செய்து அது சென்று நின்ற இடமே சிறந்தது என்று காட்டினதாகப் புராண வரலாறு கூறும். ஆகவே, நைமிசம் எனப் பெயர் பெற்றது என்பர். நைமிசம்-நேமி விழுந்த இடம்; நேமி-சக்கரம்; ஆரணியம் - காடு. எனவே, இத்திருத்தலம் நைமிசாரணியம் என்ற திருநாமம் பெற்றது. திருமால் அரக்கர் படையை ஒருமுறை ஒரு நிமிடத்தில் அழித்த இடம் இது, எனவே, நைமி சாரணியம் எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர். இவ்வூர் நிம்கார் என்றும் நிமிசார் என்றும் வழங்கு கின்றது. எட்டு வைகுந்தங்களுள் ஒன்றாக வடநாட்ட வர் இதனைக் கருதுகின்றனர். இங்குப் பதினெண் புராணங்களும் எழுதப்பெற்றன என்பது புராண வழக்கு. அகோபில மடத்து 3-ஆம் சீயர் இங்கு எழுந் தருளினபோது திருநாடு அலங்கரித்து விட்டார். அவருடைய சமாதி இங்குள்ளது. அகோபில மடத்துக் கிளை ஒன்று இங்கு நிறுவப் பெற்றுள்ளது. இங்கு இராமாநுச கூடம் என்ற பெயரிலும் ஒரு மடம் இயங்கி வருகின்றது. வியாசர் இங்குத் தவம் செய்த தாக ஒரு புராண வரலாறு வழங்கி வருகின்றது. பழங்காலத்தில் இங்கு இருடிகள் கூடிப் புராணச் சொற்பொழிவுகள் செய்து வந்ததாக ஒரு வரலாறும் உண்டு. சா.உ.

**நைமித்திக கன்மம்** என்பது யாதேனும் ஒரு நிமித்தம் பற்றிச் செய்யுங்கிரியைகள் (நிமித்தம் காரணம்). அவை பிரதிட்டை, உற்சவம் முதலியன வும் கிரகணம், அர்த்தோதயம், மகோதயம் முதலாய புண்ணிய காலங்களில் தீர்த்த நீராடல் முதலியன வுமாம். அவற்றுக்கு உறுப்பாவன: வாசுது சாந்தி, திருச் சங்கிகரணம், அங்குரார்ப்பணம் இரட்சாபந் தனம் முதலியனவும், செபம், தருப்பணம், தானம் முதலியனவுமாம். இரா.கோ.

**நைல் நதி:** உலகிலேயே மிக நீளமான நைல் நதி ஆப்பிரிக்காவில் உள்ளது. விக்டோரியா ஏரியி லிருந்து மத்திய தரைக்கடலில் இது கலக்கும் இடம் வரை இதன் நீளம் 5584 கி.மீ. புருண்டியிலுள்ள உலு விரான்சா (Luvironza)ஆற்றிலிருந்து கணக்கிட்டால் இதன் நீளம் 6671 கி.மீ. உலகிலேயே மிகப்பெரிய இதன் பள்ளத்தாக்கு (Basin) 2,590,000 ச.கி.மீ. பரப்பளவு கொண்டது.



நைல் நதி அமைவிடம்

இந்நதியால் எகிப்து பெரும் பயன் அடைகிறது. எனவேதான் பண்டைக்காலத்தில் இந்நாட்டை நைல் நதியின் நன்கொடை எனக் குறிப்பிட்டனர். இப்பகுதி கி.மு. 5000 ஆண்டிலேயே வேளாண்மைக்கு ஏற்ற தாக இருந்ததால், மக்கள் இங்குக்குடியேறி உலகி லேயே மிகப்பழைமையான எகிப்திய நாகரிகத்தைத் தோற்றுவித்தனர். இந்நதியால் நீர்வளம் சிறந்திருப்ப துடன் இது ஆண்டுதோறும் வெள்ளப் பெருக்கெடுத்து வருவதால் அடித்து வரப்படும் வண்டல் மண் வயல் களில் படிந்துவிடுவதால் மண்வளமும் நிறைந்துள் ளது.

**நதியின் போக்கு:** இந் நதியின் போக்கு தான் சானியாவிலுள்ள (Tanzania) காகெரா (Kagera) ஆற்றிலிருந்து தொடங்குகிறது. இது வடக்கு நோக் கிப் பாய்ந்து, இரவண்டாவின் (Rwanda) எல்லையை அடைந்து, உகண்டாவின் (Uganda) எல்லையில் திரும்பி விக்டோரியா ஏரியில் கலக்கிறது. பின்னர் இவ்வேரியிலுள்ள இரிப்பன் அருவியிலிருந்து தொடங்கி 483 கி.மீ. தொலைவு உயர்ந்த பாறைகள் வழியாகப் பல இடங்களில் அருவிகளாக விழுந்து ஆல்பர்ட்டு (Albert) ஏரியை அடைகிறது. இவ்விரு ஏரிகளுக்கும் இடையிலான இந்நதி, விக்டோரியா நைல் எனச் சொல்லப்படுகிறது. பின்னர் ஆல்பர்ட்டு ஏரியின்

வட கோடியிலிருந்து ஆல்பர்ட்டு நைல் என்னும் பெயரில் இதுபுறப்பட்டு வடக்கு உகாண்டா வழியாக ஓடுகிறது. சூடானின் எல்லையில் இது பகர் அல்-சபல் (Bahr - al-jabal) எனப்படுகிறது. பின்னர்ப் பகர் அல் காசல் (Bahr al - ghazal) ஆற்றுடன் சேருமிடத்திலி ருந்து இது வெள்ளை நைல் (White Nile) அல்லது பகர் அல் - அபயத்து (Bahr al - abyad) என்று சொல்லப்படுகிறது. பகர் அல்-காசல் மாவட்டத்தில் இவ்வாற்றுடன் பல துணை ஆறுகள் சேருகின்றன. கார்டூம் (Khartoum) என்னுமிடத்தில் வெள்ளை நைலுடன், நீல நைல் (Blue Nile) அல்லது பகர் அல்-அசரக்கு (Bahr - al-azraq) கூடுகிறது. நீல நைல், எதியோப்பியன் மேட்டுநிலப் பகுதியிலுள்ள தானா (Thana) ஏரியிலிருந்து நீரைப் பெற்று 1529 கி.மீ. தொலைவு செல்கிறது. அதன்பின்னர் நடு நைல் பகுதியில் 6 அருவிகள் உள்ளமையால் போக்குவரத் திற்கு ஏற்றதாக இல்லை. கீழ் நைல் (Lower Nile) பகுதியானது வண்டல்மண் நிறைந்து வளம் மிக்க தாக உள்ளது. வெள்ளம் பெருகும்போது அசுவானில் 8 மீட்டர் உயரத்திற்கும், கெய்ரோவில் 7 மீட்டர் உயரத்திற்கும் நீர் மட்டம் உயரும். கெய்ரோவுக்கு அருகிலிருந்து தொடங்கும் கழிமுகப் பகுதியில் இது உரோசட்டா (Rosetta), தமியட்டா(Damietta) என இரு கால்வாய்களாகப் பிரிந்து மத்திய தரைக் கடலை அடைகிறது.

**கண்டுபிடிக்கப்படுதல்**: பல ஆண்டுகள், பலருடைய அரிய முயற்சிகளின் விளைவாக இந்நதியின் போக்கு முழுவதையும், அது உற்பத்தியாகும் இடத்தையும் கண்டறிய முடிந்தது. கிரேக்க மெய்யறிவாளரான அரிசுடாட்டில் (Aristotle), இத்தாலியின் சிறந்த அறிவியல் வல்லுநரான இலியனார்டோ டா வின்சி (Leonardo da vinci), நிலவியல் வல்லுநரான தாலமி (Ptolemy)ஆகியோர் இந்நதி, சந்திரனின் மலைகளில் (Mountains of the Moon) உற்பத்தியாகிறது எனக் கருதினர். எரடோட்டசு (Herodotus), இசுடராபோ (Strabo), பேரரசர் நீரோ ஆகியோர் இதனைக் கண் டறிய முயன்றனர்.

இங்கிலாந்து நாட்டு ஆராய்ச்சியாளர் சான் கென் னிங்கு இசுபெக்கு (John Hanning Speke), பர்ட்டன் (R.Burton) என்பாருடன் சென்று கி.பி. 1858-இல் ஓர் ஏரியைக் கண்டுபிடித்து அதற்குத் தன்னாட்டு அரசியின் நினைவாக விக்டோரியா ஏரி எனப் பெய ரிட்டார். பின்னர் அவர் கி.பி. 1862-இல் இரிப்பன் அருவியைக் கண்டுபிடித்தார். இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த சர் சாமுவேல் பேக்கர் (Sir Samuel Baker), ஆல்பர்ட்டு ஏரியைக் கண்டார். செருமானிய நாட் டைச் சேர்ந்த சியார்சு ஆகசுட்டு சுகிவின்பர்த்து (George August Schweinfurth), வெள்ளை நைலின் துணை ஆறுகளை ஆராய்ந்தார். சர் என்றி மார்ட்டன இசுடேன்லி (SirHenry MortonStanley) கி.பி.1875-இல் விக்டோரியா ஏரியின் பகுதிகளை ஆராய்ந்து நைல் நதி இவ்வேரியில் உற்பத்தியாகிறது என ஒரு நூலை வெளியிட்டார். அவர் கி.பி. 1899-இல் செம்லிகி (Semliki) ஆற்றின் போக்கை ஆராய முயன்று, எட் வர்டு மீரி, உருவென்சோரி மலைத்தொடர் (Ruwen-zori Range) ஆகியவற்றைக் கண்டுபிடித்தார்.

**பயன்கள்**: இதன் கரையில் வரலாற்றுப் புகழ் மிக்க அபு சிம்பல் (Abu Simbel), இலக்சார் (Luxor), தீப்சு (Thebes), கார்னக்கு (Karnak), அசுயூத்து (Asyut), மெம்பிசு (Memphis), கெய்ரோ (Cairo) போன்ற பண்டைய நினைவுச் சின்னங்கள் உள்ளன.

பல்நோக்குத் திட்டங்களுடன் வெள்ளத்தைக் கட்டுப்படுத்தவும், நீர்ப்பாசனத்தைப் பெருக்கவும் இதில் அணைகள் கட்டப்பட்டன. முதல் உலகப் போருக்குப் பின்னர் நீல நைலில், கார்ட்டூமுக்குத் தெற்கில், மக்வார் அணை (Makwar Dam) கட்டப் பட்டது. அதனால், சூடானில் பருத்தி விளைச்சல் பெருகியது. இப்பொழுது இந்த அணை, இதன் அரு கிலுள்ள ஊரின் பெயரால், சென்னர் அணை (Senner Dam) என்று சொல்லப்படுகிறது. அசுவான் அணை கட்டப்பட்டதும் பல இலட்சம் எக்டேர் நிலத்திற்கு நீர்ப்பாசன வசதி கிடைத்தது. உலகிலேயே மிகப் பெரிய 5 கி.மீ. நீளமும், 90 மீ. உயரமும், 1200 மீ. அகலமும் உடைய அசுவான் உயர் அணை 1971 -இல் கட்டி முடிக்கப்பட்டதால் எகிப்தில் நீர்ப்பாசன வசதி பெருகியது. அதன் நீர்த் தேக்கத்திற்கு நாசர் ஏரி (Lake Nasser) என்ற பெயர் வைக்கப்பட்டது. இங்குள்ள பண்டைய நினைவுச் சின்னங்கள், குறிப் பாக அபு சிம்பல் கோயிலையும், அங்குள்ள20மீ.உயர முடைய இரண்டாம் இராம்செசு (Ramses II) சிலையையும் பாதுகாக்க ஐக்கிய நாடுகளின் கல்வி, சமூக, பண்பாட்டு நிறுவனம் பொருளுதவி செய் தது.

எகிப்தில் 2,550,000 எக்டேர் நிலத்திற்கும், சூடா னில் 1,130,000 எக்டேர் நிலத்திற்கும், எதியோப் பியா, உகாண்டா ஆகிய நாடுகளுக்கும் நைல் நதி, நீர்ப்பாசனத்திற்குப்பயன்படுகிறது. அத்துடன் இதன் கரையோரப் பகுதிகளில் பலவகை மீன்கள் பிடிக் கப்படுகின்றன. இவ்வணைகளிலிருந்து நீர்மின் விசை யானது உற்பத்தி செய்யப்படுகிறது. கீழ் நைல்நதி போக்குவரத்திற்குப் பயன்படுகிறது.

**நைல் நதிப் போர்**: இங்கிலாந்திற்கும், பிரான்சிற் கும் இடையே கி.பி.1798-இல் அலெக்சாண்டிரியா வுக்கு வடகிழக்கில் 24 கி.மீ. தொலைவிலுள்ள அபூ கர் விரிகுடாவில் (Abu Qir Bay) நடந்த கப்பற்

போர், வரலாற்றில் நைல் நதிப் போர் எனப்படு கிறது.

நெப்போலியன், எகிப்தின்மீது படையெடுத்து வந்தபொழுது பிரான்சுக் கப்பற்படை, பிரான்சிசு பால் புரூயிசு த அய்கெயிலசு (Francis Paul Bruise Aigaillise) என்ற துணைத் தளபதி தலைமை யில் அனுப்பப்பட்டது. அப் படை கடலைக் கடக்கா மல்தடுத்து நிறுத்த இங்கிலாந்து அரசு, ஒரேசியோ நெல்சன் (Horatio Nelson) தலைமையில் ஒரு கப்பற் படையை அனுப்பியது. நெப்போலியன் ஆங்கிலேயப் படையை ஏமாற்றிவிட்டு கி.பி. 1798 சூலையில் எகிப்தை அடைந்து அலெக்சாண்டிரியாவைக் கைப் பற்றினார். பின்னர்ப் பிரமிடுகள் போரில் வெற்றி பெற்றுக் கெய்ரோவை அடிபணியச் செய்தனர். நெல் சன், பிரான்சுக் கப்பற்படையை மத்திய-கிழக்கு, மத்திய தரைக்கடற் பகுதிகளில் தேடிப் பார்த்து விட்டு இறுதியில் ஆகசுட்டு முதல் நாள் அபூ கர் வளைகுடாவில் அப் படை இருப்பதைக் கண்டார்.

அப்பொழுது புரூயிசு, தம்முடைய கப்பல் படையை அவ்வளைகுடாவின் கரையோரத்தில் வரிசையாக நிறுத்தியிருந்தார். எனவே நெல்சன், தம் கப்பல்களைப் பிரான்சுக் கப்பற்படைக்கு இரு புறமும் கொண்டு சென்று சூரியன மறையும் நேரத் தில் போரைத் தொடங்கினார். அப்பொழுது பிரான் சுக் கப்பற்படை வீரர் பலர், குடிநீர் கொண்டுவரக் கரைக்குச் சென்றிருந்தனர். நெல்சனின் தாக்குதல் காரணமாகப் பிரான்சுக் கப்பல்கள் அவர் கைப் பற்றிய நான்கு தவிர எஞ்சியவை சரணடையப் பெற்று அல்லது மூழ்கடிக்கப்பட்டுப் பிரான்சுக் கப்பற் படை தோற்கடிக்கப்பட்டது. அப் போரில் ஆங்கிலே யர் 218 பேர் மடிந்தனர்; 677 பேர் காயமுற்றனர். பிரான்சுப் படையில் 5000 பேர் மாண்டனர், காய மடைந்தனர் அல்லது சிறை செய்யப்பட்டனர்.

அப் போரில் பிரான்சுக் கப்பற்படை தோல்வி யுற்றதால் நெப்போலியன் பிரான்சுடன் கொண்டி ருந்த தொடர்பு துண்டிக்கப்பட்டது. அவர், மத்திய கிழக்கில் தம்முடைய படையெடுப்பைக் கைவிட்டுத் தம் நாட்டிற்குத் திரும்பவேண்டியவரானார். அப் போரின் விளைவாக மத்திய தரைக்கடற் பகுதி முழுவதிலும் ஆங்கிலேய ஆதிக்கம் நிலைநாட்டப் பெற்றது. இங்கிலாந்துடன் பிற நாடுகள் சேர்ந்து கி.பி.1799-இல் பிரான்சுக்கு எதிராகக் கூட்டணி ஒன்றை உருவாக்க அது தூண்டுகோலாக அமைந் தது. சி.இரெ.

**நைலோ சகாரன் மொழிகள்:** இம்மொழி கள் ஆப்பிரிக்க நாட்டு நீக்கிரோ மக்களால் பேசப் பெற்று வருகின்றன. இவை நைசீரியா, நைசர், அப் பர் ஒல்டா, தகோமே, சட்டு, இலிபியா, சூடான், எத்தியோப்பியா, கென்யா ஆகிய நாடுகளில் வழங்கு கின்றன. இம்மொழிகள் செங்காய், சகாரன், மபான், பூர், கொமாங்கு, சாரிநைல் ஆகிய ஆறு பிரிவு களைக் கொண்டுள்ளன. இம்மொழிகளை நைலா டிக்கு மொழிகள் (Nilotic languages) என்று சிலரும், கிழக்குச் சூடானிய மொழிகள் (East Sudanic languages) என்று சிலரும் வழங்கி வருகின்றனர். சா.உ.

**நைனிட்டால்,** வட இந்தியாவில் உத்தரப் பிரதேசத்தின் வட கிழக்கில் உள்ள ஒரு மாவட்டம். இதன் தலைநகரும் நைனிட்டால்(Nainital).இது வட இந்தியாவின் மிக அழகிய மலையூர்களுள் ஒன்று. இது காதகோடம் (Kathgodam) இரெயில் பாதை யில் உள்ளது. இதனைச் சுற்றிப் பெரிய அழகிய ஏரி அமைந்துள்ளது. இந்த நகர் கி.பி.1840 இல் நிறுவப் பட்டது. இப்பொழுது உத்தரப்பிரதேசத்தின் கோடை காலத் தலைநகராக இருக்கிறது. ஏரியின் இருமருங்கிலும் மலைகள் உள்ளன. இங்கு உல்லாச மாகப் படகில் செல்வதற்கும், குதிரை ஏற்றத்துக் கும், பிறவிளையாட்டுகளுக்கும் வசதிகளுள்ளன. மலைகளில் பார்க்கத் தகுந்த இடங்கள் பல இருக் கின்றன.சீன சிகரம் (Cheena), கில்பரி (Kill bury), தேவ்பட்டா (Deopatha), இலாரியா காண்டா (Lariya Kanta) ஆகிய இடங்களிலிருந்து சுற்றிலு முள்ள அழகிய இயற்கைக் காட்சிகளைக் கண்டுகளிக் கலாம்.

இந்நகரில் முக்கியமான விளையும் பயிர்கள் நெல் லும் கோதுமையும். நைனிட்டால் குன்றுப் பகுதியாக இருப்பதால் தேயிலையும் பழங்களும் பயிரிடப்படு கின்றன. நைனிட்டால் மாவட்டம் குமனான் மலைப் பகுதியையும், தெராய் நகரைச் சுற்றியுள்ள பகுதி யையும் கொண்டது. சே.நா.

**நொ** நகரமும் ஒகரமும் கலந்த ஒலி. நகர ஒகரங்களின் குறிப்புகளைப் பார்க்க. நுனிநா மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒட்டியபடி மூக்கால்வெளிவரும் ஒலியே இது. அப்பொழுது வாய் குவித்தபடி சற்று உயர்த்தி இருக்கும் உகரத்தின் விளைவான ஒகரத்துக்கு, வாய் குவித்தல் அமைந்தது. ...

**பொருள்:** ஓரெழுத்து ஒரு மொழியாக இது நொந்து போதல் என்ற ஒரு பொருளை அடிப்படையாகக் கொண்டு துன்புறுதல், துன்பம், நோய் என்ற பொருள் களைக் கொடுக்கும்.... ... ...

**வடிவம்:** தமிழ்நாட்டில் கி.மு.3-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட குகைக் கல் வெட்டுகளில் (இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி என்ற மாவட்டங்களில்) இந்த எழுத்துக் காணப்படுகின்றது. நகரத்தின் உருவத்துக்குத் தலைக்கட்டிலிருந்து இரு புறமும் இழுக்கப்பட்ட கோடுகள் இந்த ஒலியைக் குறிக்கும். இருபுறமும் இழுக்கப் பட்ட கோடு ஒரே மாதிரி சமமான நிலையில் எழுதப்பட வேண்டுமாயினும் ஒரு கோடு இடப்புறம் நேராகவும், மற்றொரு கோடு சற்று இறக்கி நடுக்கோட்டிலிருந்து வலப்புறமாகவும் இழுக்கப்பட்டது. சமமான முறையில் இழுக்கப்பட்டால் இவ்வுரு வத்தை ண கரமாகக் குழம்ப நேரிடும் என்பதே இதற்குக் காரணம். அன்று மக்கள் மிகக் கவனத்துடன் இந்த மாறுதலை அமைத்துக்கொண்டதால் குழப்பத்தைத் தவிர்த்தார்கள்.... ... ...

பிறகு கி.பி.6-ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே நகரத்தின் உருவம் மாறத் தொடங்கிற்று. அப்பொழுது இரண்டு கோடுகளும் சமமாக இரு புறங்களிலும் இழுக் கப்பட்டன. இது தமிழுக்கும் வட்டெழுத்திற்கும் பொதுவான உருவம். இவ்வுருவம் திருநாதர் குன்று வட்டெழுத்துக் கல்வெட்டில் காணப்படும்.... ... ...

அடுத்தபடியாக கி.பி.6-ஆம் நூற்றாண்டில் வல்லத்தில் கிடைத்த பல்லவன் முதல் மகேந்திரனின் தமிழ்க் கல்வெட்டில் கண்ட முறைப்படி நொகரத்தின் இடப் புறக்கோடு வளைவுடன் எழுதப்பட்டிருக்க வேண்டும். அதில் கிடைக்கும் 'பொ' என்ற எழுத்தின் முறையை ஒட்டிக் நொகரத்திற்கும் இடப்புறக் கோடு வளைந்திருக்க வேண் டும். பிற்காலப் பல்லவர் காலத்தில் (கி.பி.8-ஆம் நூ) இடப்புறக் கொம்பு பிரித்து எழுதப்பட்டது.... ... ...

நகரத்தின் வளர்ச்சியை ஒட்டிப் படிப்படியாக நொகரமும் ஏறக்குறைய இன்றைய உருவத்தைப் பெற்றது. கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த முதல் இராசேந்திர சோழனின் கரந்தைச் செப்பேட்டில் அதனைக் காணலாம்.... ...

வலப்புறம் இழுக்கப்பட்ட காலும் கொண்டு இவ்வெழுத்து கி.பி.13-ஆம் நூற் றாண்டில் முழு உருவத்தையும் அடைந்து விட்டது.... ... ...

வட்டெழுத்தில் பொது முறைப்படி கி.பி.6-ஆம் நூற்றாண்டுவரை தமிழுக்கும் வட்டெழுத்துக்கும் பொதுவான உருவம் மேலே சொல்லப்பட்டபடியே இருந்தது. வட்டெழுத்தின் முறைப்படி, கி.பி.8 – ஆம் நூற்றாண்டுக்கு முன்னால் பாண்டியரின் வட்டெழுத்துக் கல்வெட்டுகளில் கீழ் நோக்கிய வளைவுக்கோட்டால் எகரக் குறி இடப்புறமும், மேல்நோக்கிச் செல்லும் நேர்கோடு நகரத்தின் வளைவிலிருந்தும் இடப்பட்டன. இந்த உருவமே வட்டெழுத்து மறையும் வரை நிலைத்திருந்தது .. ...

தமிழ் எழுத்து முறையில் புள்ளி குத்தும் நெறியை அறிந்திருந்தும் அதனை ஒழுங்காகப் பின்பற்ற வில்லை. பரமேச்சுவர பல்லவனின் கூரம் செப்பேடுகள், செந்தலை முத்தரையர் கல்வெட்டு, பல்லவ நந்திவர்மனின் திருவெள்ளறை மாற்பிடுகு கிணற்றுக் கல்வெட்டு. பாண்டியன் சேந்தனின் வைகைப்படுகை வட்டெழுத்துக் கல்வெட்டு முதலிய கல்வெட்டுகளில் எகர ஒகர உயிர், எகர ஒகர உயிர் மெய்யெழுத்துகளுக்குப் புள்ளி குத்துவதை அறிந்திருந்தார்கள் என்பதைப் புலப்படுத்துகிறது.ஆயினும் புள்ளி குத்துவதை முறையாகச் செய்யவில்லை, மொழி அறிவை ஒட்டி வாசித்துக் கொள்ள விட்டு விட்டார்கள்.... ... ...

கே.ஜி.கி.

**நொச்சி நியமங்கிழார்:** இவர் சங்கத் தமிழ்ப்புலவர். திருச்சிராப் பள்ளியிலிருந்து முசிறிக்குச் செல்லும் வழியில் உத்தமர் கோயிலுக்கு அருகே உள்ள நொச்சியம் எனும் ஊரினர். நொச்சி நீயக் கிழார் என்றும் இவருடைய பெயர் சில சுவடிகளில் குறிக்கப் பெற்றுள்ளது. இவருடைய ஐந்து பாடல்கள் சங்கத் தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன (நற், 17, 208, 209; அகம். 52; புறம்.293).

காமநோய் உயிரைத் துன்புறுத்தும் தன்மையை, 'படுங்கால் பையுள் தீரும்; படாஅது தவிருங்காலை யாயின் என் உயிரோடு எல்லாம் உடன் வாங்கும்மே' (நற்.209) என்று இவர் சிறப்பாகப் பாடியுள்ளார். பூக்கோள் காஞ்சியாக அமைந்த இவரது புறச்செய்யுள் (புறம்.293) அக்காலப் போர்நிலையினையும் மறவர்குல மக்களின் மாண்பினையும் பொருட்செறிவுடன் விளக்குகிறது.

சா.உ.

**நொடித்தவரின் பொறுப்புத் தீர்த்தல்:** ஒருவர் மீளாத கடனில் அகப்பட்டு எப்பொழுதும் நொடித்தவராகவே இருக்கச் சட்டம் அனுமதிப்பதில்லை.அவர்கடன்களிலிருந்துவிடுபட்டுப் புதியதோர் வாழ்க்கையைத் தொடங்கச் சட்டத்தின் விதிகள் உதவுகின்றன.அதன்மூலம் தகுதியின்மை நீக்கப்படும். நொடிந்தவர் தம் பொறுப்புத் தீர்ப்பு வேண்டி (discharge of the insolvent) மனுப்போட வேண்டும் தீர்ப்பளிப்பு உத்தரவு நிறைவேறும் போது, தீர்வுக்கு நீதிமன்றம் ஒருகாலம் ஒதுக்க வேண்டும். அக்காலக் கெடுவிற்குள் நொடிந்தவர் பொறுப்புத் தீர்ப்புக்காக விண்ணப்பம் போட வேண்டும். நீதிமன்றம் விரும்பினால் அக்காலக் கெடுவை நீட்டிக்கலாம். மாநில நகரங்களின் நொடிப்புச் சட்டத்தின் கீழ் விடுதலை வேண்டி அவர் விடுத்த விண்ணப்பத்தைச் சரி பார்ப்பதற்கு முன்னர், பொது விசாரணை நடத்தி முடிக்க வேண்டும். சில வழக்குகளில் அப்போது விசாரணை நடத்திடாமல், விடுதலை வேண்டிப் போடப்பட்ட விண்ணப்பம் பரிசீலனை செய்யப்படும்.

விடுதலை வேண்டி வந்துள்ள விண்ணப்பத்தை நீதிமன்றம் பெற்று அதை முழுவதும் ஏற்று விடுதலை உத்தரவு வழங்கலாம்; அல்லது அவ்வாறு விடுதலை உத்தரவு வழங்க மறுக்கலாம்; அல்லது விடுதலை உத்தரவு வழங்கி அதைச் சில நாள்களுக்கு நிறுத்தி வைக்கலாம்; அல்லது சில நிபந்தனைகளை விதித்து அவ்வுத்தரவை வழங்கிடலாம். நொடித்தற்குப்பின் அவர் ஈட்டிய சொத்துகளைப் பற்றித்தான் அந்நிபந்தனைகள் விதிக்கப்படும்.

மேற்கூறிய உத்தரவுகள் நிறைவேறுவதற்கு முன்னர், விண்ணப்பத்தின் பேரில் விசாரணை செய்ய நீதிமன்றம் ஒரு நாளைக் குறிக்கும்; அந்நாளில் சம்பந்தப்பட்ட மனிதர்களை விசாரணை செய்யும். நொடித்தவரின் நடத்தை, அலுவல் சம்பந்தப்பட்ட ஓர் அறிக்கை ஆகியவற்றை நீதிமன்ற அதிகாரியொருவர் நீதி மன்றத்தில் தாக்கல் செய்யவேண்டும். மேற்கூறிய தகவல்களை நன்றாக அலசிப் பார்த்துத்தான் நீதிமன்றம் விண்ணப்பத்தை நிறைவேற்றிடும். நொடித்தவர் பொய்க் கணக்குக் காட்டினாலும், மோசடி செய்து எதையாவது மறைத்திருந்தாலும், பொது விசாரணைக்கு வரத்தவறினாலும் அவர் நொடிப்புச் சட்டத்தின் கீழ்க் குற்றவாளியாவார். அக்குற்றங்களுக்காக நீதிமன்றம்விடுதலை உத்தரவை நிறைவேற்றிட மறுத்திடும். நொடித்தவர் இந்தியக் குற்றப்பிரிவுச் சட்டத்தின் பிரிவுகள் 421,424இன்கீழ்க் குற்றம் புரிந்திருந்தாலும் அதே நிலைமையைத்தான் அவர் பெற்றிருக்க முடியும். மோசடி மூலம் சொத்து

களை அப்புறப்படுத்துதல், மறைத்தல், விற்றல், கடன்களைப் பணமாக்க முடியாத நிலையில் தடுத்தல், தவறான முறையில் மறுபயன் பெறுதல் போன்றவை அக்குற்றங்களாவன. எனவே, மாநில நகரங்களின் நொடிப்புச் சட்டத்தின்கீழ், நொடித்தவரின் நிலைமை இவ்வாறுள்ளது.

கீழ்க்காணும்நிலைகளில் நீதிமன்றம்நொடித்தவர்களுக்கு முழு விடுதலை உத்தரவு அளிக்கமறுத்திடும்.

1) நொடித்தவரின் சொத்துகள் ஓர் உருபாயில் 25 பைசா திரும்பக் கொடுக்க முடியாத நிலையில் உள்ளபோது, மாநில நொடிப்புச் சட்டத்தில் அது ஓர் உருபாயில் ஐம்பது காசாகும்;2)சரியான கணக்கு வழக்குகள் கொடுக்கத் தவறிய போதும், நொடிப்பாவதற்கு முன் மூன்றாண்டுகளுக்குண்டானசொத்து விவரங்களைத் தெரிவிக்காத போதும்; 3) தான் ஒரு நொடித்தவர் என்று தெரிந்தும், தொழிலைத் தொடர்ந்து நடத்தி வருகின்ற போதும்;4)தெரிந்தும் கடன்களைக் குறைத்துக் கூறிய போதும், கடனைத் திரும்பச் செலுத்த முடியாத போதும்; 5) சொத்துகளின் நட்டத்தைச் சரிகட்டத் தவறிய போதும்; 6) அவரின் நொடிப்பு நிலைமைக்கு அவசரமாகவும், அபாயகரமாகவும் அவர் வழங்கிய போதும்; 7) தம் நிலைமைக்கு முக்கியமில்லாத தொந்தரவுள்ள பாதுகாப்புத் தேடிய போதும்; 8) தவறான தொந்தரவு உள்ள வழக்குகளை அவர் கொணர்ந்த போதும்; 9) நொடிப்பு விண்ணப்பம் தாக்கல் செய்வதற்கு முன் மூன்று மாதங்களில் தவறான சலுகைகளைப் பயன்படுத்தியபோதும்; 10) அவர் மோசடிக்குற்றம் புரிந்த போதும், மோசடி மூலம் நம்பிக்கை முறிவு ஏற்படுத்தியபோதும் நீதிமன்றம்விடுதலை உத்தரவை நீக்கிச், சில நிபந்தனைகளை இணைத்து ஒரேசமயத்தில் உடன் நிகழ்கின்ற உத்தரவை நிறைவேற்றும். கீழ்க்காணும் நிபந்தனைகளை நீதிமன்றம் விதிக்கும்.

1) நொடித்தவர் நீதிமன்ற அதிகாரியிடம் தம் எதிர்கால வருமானம் முழுவதையோ அதில் ஒரு பகுதியையோ,நொடித்த பின்னர் ஏற்பட்ட சொத்துகளையோ ஒப்படைக்க வேண்டும். 2) கடனீந்தோர்களுக்கு ஓர் உருபாயில் 25 காசு கடன் ஈவு செலுத்தும் வரை விடுதலை உத்தரவை நிறுத்தி வைக்க வேண்டும். 3) பின்னர்ப் பரிசீலனை செய்யக்கூடிய கடனுக்கும், மீதமுள்ள கடனுக்கும் நீதிமன்ற அதிகாரியின் பேரில் தீர்ப்பு வழங்கப்பட்ட ஒருவருக்குத் தீர்ப்பிற்கு நொடித்தவர் உடன்பட வேண்டும். மாகாண நகரங்களின் நொடிப்புச்சட்டத்தின்கீழ் நொடித்தவர் பிரிவு 43இன்படி சொத்ததிகாரியோடு ஒத்துழைக்கத் தவறினாலும், நொடித்த பிறகு வந்தடைந்த சொத்து விவரங்களைத் தெரியப்படுத்தத் தவறினாலும், நீதிமன்ற அதிகாரியின் பேரில் நிறைவேற்றப்பட்ட வழக்குத் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் அவருடைய விடுதலை ஆணை நீக்கம் செய்யப்படும். ஆனால், மாநில நொடிப்புச் சட்டத்தின்கீழ் இவ்வாறு குறிப்பிடப்படக்கூடிய சட்ட நிபந்தனைகள் இல்லை.

**பொறுப்புத் தீர்ப்பு உத்தரவின் பலன்**:முழுமையான பொறுப்புத் தீர்ப்பு உத்தரவு, நொடித்தவரை அவரின் கடன்களிலிருந்து முழுவதும் விடுதலையடைய உதவுகிறது. தீர்ப்பளிப்பு உத்தரவு வழங்கும்போது அவருக்குண்டான தனிப்பட்ட தகுதியின்மைகளைப் போக்குகிறது. என்றாலும், கீழ்க்காணும் கடன்களிலிருந்து அவர் மீளமுடியாது.

1) அரசாங்கத்திற்குச் சேர வேண்டிய கடன். 2) மோசடி மூலம் ஏற்பட்ட கடன், அதாவது, இரகசிய ஆதாயம் வைத்துள்ளதற்காக நிறுமம் தோற்றுவிப்பாளரின் பொறுப்பு. 3) தவறான வழிகளில் வழக்குத் தொடர்வதற்கான வசதியுள்ள அவரது கடன்கள்; 4) குற்றப்பிரிவுச் சட்டத்தின்கீழ் அவர் மனைவி அல்லது அவர் குழந்தைகளுக்கு வாழ்க்கைப்பணம் (alimony) கொடுக்கும்படி நீதிமன்றம் நிறைவேற்றிய பொறுப்பு. 5) அவரது கூட்டுப்பொறுப்பால் ஏற்பட்ட கடன், அதாவது அவர் உறுதி அளிப்பவராகவும், உடன்பாதுகாப்பாளராகவும் இருந்தால் அவருக்குரிய பொறுப்பால் ஏற்பட்ட கடன். 6) தீர்ப்பளிப்பு உத்தரவிற்குப் பின்னும் விடுதலை உத்தரவிற்கு முன்னும் ஏற்பட்ட கடனுக்கு அவர் பொறுப்பாளியாகிறார். காரணம் அக்கடன்கள் நொடிப்பில் நிரூபிக்கப்பட முடியாத கடன்கள். 7) விடுதலை அளிக்கப்பட்ட பின்னர் நீதிமன்ற அதிகாரிவசம் நொடித்தவரின் சொத்துகள் காணப்பட்டால் கடனீந்தோர் தம் பாக்கிக்காக உரிமை வேண்டலாம். ஆனால், ஏற்கனவே வழங்கிய கடன் ஈவு இதனால் பாதிக்கப்படக் கூடாது. 8) இப்பொறுப்புத் தீர்ப்பு உத்தரவு இந்தியாவிற்கு வெளியே செல்லாது. கே.என்.இரா.

**துணை நூல்கள்;**

**Mulla**, D.F., The Law of Insolvency in India, N.M. Tripathi Pvt. Ltd., Bombay, 1980.

**Pandiah,R.H.**, Principles of Insolvency Law, N.M. Tripathi Pvt. Ltd., Bombay, 1980.

*நொடிப்பு நிலை*: இந்திய நாட்டின் 'நொடிப்புச் சட்டம்', 1909-ஆம் ஆண்டின் மாகாண நகர நொடிப்புச் சட்டம் என்றும், 1920-ஆம் ஆண்டின் மாகாண நொடிப்புச் சட்டம் என்றும் இரண்டு சட்டங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. முதலில் கூறப்பட்டது மாகாண நகரங்களான சென்னை, பம்பாய்,

கல்கத்தா போன்ற நகரங்களுக்குப் பொருந்தும். பின்னர்க் கூறப்பட்டது முன் கூறிய நகரங்களை விடுத்து ஏனைய உள்நாட்டுப் பகுதிகளுக்குப் பொருந்தும். இச்சட்டத்தின் நோக்கங்கள், நேர்மையான கடனாளிகளுக்குப் பாதுகாப்பு அளிப்பது, கடனீந்தோர்களின நலனைப் பாதுகாப்பது போன்றவைகளாகும்.

கடனாளிகள் எதிர்பாராத விதமாகத் தாங்கள் பெற்ற கடனைத் திருப்பித் தர இயலாதபடி இன்னல் அடைகிறார்கள். நாட்டின் பொதுக் கொள்கை என்ற அடிப்படையில் அவர்களுக்கு உதவ அரசாங்கம் முன் வருகிறது. அவர்கள் பழைய கடன் சுமைகளிலிருந்து விடுபடவும், புதிய வாழ்க்கை தொடங்கவும் அரசாங்கம் இச்சட்டத்தின் மூலம் அவர்களுக்கு உதவுகிறது. அதே போல் கடனீந்தோர்களுக்கும் அரசாங்கம் உதவுகிறது. நொடிந்தவரின் சொத்துகளைக் கடனீந்தோர்களிடையே நியாயமாகப் பிரித்து வழங்குவதற்கு நீதிமன்றம் ஏற்பாடு செய்கிறது. அதன் மூலம் தகாத சலுகைகளையும், மோசடிகளையும் நீதிமன்றம் தடுக்கிறது. நீதி, நேர்மை, மனிதநேயம் போன்றவற்றின் அடிப்படையில் நொடிப்புச் சட்டம் இயற்றப்பட்டுள்ளது. மேலும், வாணிக நன்மை கருதியும் இச்சட்டம் அமைக்கப்பட்டுள்ளது. ஒருவரை நொடிந்தவர் என்று முடிவு கட்டித் தீர்ப்பளிக்க வேண்டிய சட்டப் பகுதிகளை இச்சட்டம் தன்னகத்தே கொண்டுள்ளது. நொடிந்தவரின் சொத்துகளை விற்கவும், நியாயமான முறையில் பகிர்ந்தளிக்கவும் இச் சட்டத்தில் விதிகள் உள்ளன. மாநில நகரச் சட்டத்தின் கீழ் நொடித்தவரின் அலுவல்களைக் கவனிக்க அமர்த்தப்பட்ட அதிகாரிக்கு, அதிகார முறையில் உரிமை மாற்றம் பெறும் அதிகாரி (Official Assignee) என்றும், மாநிலச் சட்டத்தின் கீழ் அவ்வாறு அமர்த்தப் படுவோருக்குக் கடனாளி சொத்ததிகாரி (Official Receiver) என்றும் பெயர்

இந்திய நீதிமன்றத்தின் விவகார அல்லது அதிகார எல்லைக்குட்பட்ட கடனாளிகள் தொடர்பான விவகாரங்களுக்குத் தான் இச்சட்டம் செல்லுபடியாகும். எனவே, உலகில் உள்ள கடனாளிகளை இது குறிக்காது. தான் பெற்ற கடனைத் திரும்பத் தர இயலாத கடனாளிக்கெதிராக, ஒரு தகுதி வாய்ந்த நீதிமன்றம் வழங்கும் தீர்ப்பளிப்பின் முறையான கட்டளைதான் 'நொடிப்பு' (Insolvency) என்பது. ஒருவர் கடனாளியாக இருக்க வேண்டும். பின்னர் அவர் நொடித்தவராகி இருக்க வேண்டும். அப்பொழுது தான் அவரை நொடித்தவர், திவாலானவர் என்று தீர்ப்பளிக்கலாம்.

'நொடிப்பு நிலையை உறுதி செய்யக் கடனாளி செய்யும் எட்டு விதமான செயல்களை நொடிப்புச் சட்டம் (Acts of Insolvency) குறிப்பிடுகிறது. இத்தகைய செயல்களில் ஏதாவது ஒன்றைக் கடனாளி செய்திருந்தால் தான், அவரை நொடித்தவர் என்று தீர்ப்பளிக்க நீதி மன்றத்திற்கு விண்ணப்பம் செய்யலாம்.

கடனாளியின் இச் செயல்களை அவர் தம் சொத்துகளோடு கொண்டுள்ள நிலைமை என்றும் அவர் தம்மைப் பற்றிக் கொண்டுள்ள நிலைமை என்றும் அவர் தம் அலுவல்களோடு கொண்டுள்ள நிலைமை என்றும் மூன்று வகைப்படுத்தலாம். முதலில் அவர் சொத்துகளைப் பொறுத்தமட்டில் தம் கடனீந்தோர்களின் நலனுக்காகத் தம் முழு அல்லது ஒருபகுதிச் சொத்துகளை அவர் உரிமை மாற்றிடலாம். கடனீந்தோர்களின் உரிமைகளை முறியடிக்கவும் அல்லது தாமதப் படுத்தவும் இத்தகைய சொத்து மாற்றம் பயன்படும்; இறுதியாக ஒரு கடனாளரின் செயல் அவர் வாழ்க்கை நிலையைக் குறிப்பதாகக் கூட இருக்கும். அதாவது தம் அலுவல் அல்லது செயல்களை மறு ஏற்பாடு செய்து கொள்வதாகவும் இருக்கலாம். இவை அனைத்தும் நொடிப்புச் சட்டங்களில் வரும் செயல்களாகும். மேற்கூறிய சட்ட நடவடிக்கைகளில் எவ்வித நடவடிக்கையும் வரவில்லையென்றால் அது நொடிப்புச் சட்டத்தின் பாற்பட்டதாகாது.

**கடனீந்தோர்களின் விண்ணப்பம்:** ஒரு கடனாளியை 'நொடித்தவர்' என்று தீர்ப்பளிக்கக் கடனீந்தோர் விண்ணப்பிக்க (Creditors Petition) வேண்டுமானால் கீழ்ச்காணும் நிபந்தனைகள் தேவை: 1) கடனாளி கடன்பட்ட தொகை உரூ. 5000 அல்லது அதற்கு மேல் இருக்க வேண்டும். இது பணவரையறையாகும். ஒன்றுக்கு மேற்பட்ட கடனீந்தோர்கள் இருந்தால், மொத்தமாக அவர்களுக்குத் தர வேண்டிய தொகை உரூ. 500 அல்லது அதற்கு மேலிருந்தால் போதும். 2) அப்பணம் உடனடியாகவோ எதிர் காலத்திலோ செலுத்த வேண்டும் என்று உறுதி செய்யப் பட்டதாகவும் இவ்வளவுதான் எனத் தனித்துச் சொல்லக் கூடியதாகவும் இருக்க வேண்டும். 3) கடனாளி நொடித்த தொண்ணூறு நாள்களுக்குள் விண்ணப்பம் செய்யவேண்டும். இக் கட்டுப்பாடுகள் ஒரே காலத்தில் அமைந்த கட்டுப்பாடுகளாக இருக்க வேண்டும்.

பிணையமுள்ள கடனீந்தோர், மேற்கொண்டு சில காரியங்கள் செய்ய வேண்டும். அதாவது, அவர் தாம் பெற்றுள்ள பிணையத்தைத் துறந்து விட்டுச் சாதாரணக் கடனீந்தோராக ஆக வேண்டும். அவர் தாம் பெற்றுள்ள பிணையத்தை விலை மதிப்பிட்டு, மீதியுள்ள தொகைக்குத் தான் வேண்டுகோள் விடவேண்

டும் அல்லது பிணையத்தைவைத்துக் கொண்டு நொடிப்பு விவகாரத்தில் ஈடுபடாமலிருந்து விடலாம்.

**கடனாளியின் விண்ணப்பம்:** கடனாளி விண்ணப்பம் (Debtor's Petition) செய்யும் போது அவரால் கடனைத் திரும்பிச் செலுத்த முடியவில்லை என்று அறிவிக்க வேண்டும். கீழ்க்காணும் நிலைகளில் அவர் விண்ணப்பம் தாக்கல் செய்யலாம்.

1) அவர் பெற்றுள்ள கடன் உரூ. 5000 அல்லது அதற்கு மேற்பட்டிருக்க வேண்டும். 2) நீதிமன்றத்தின் தீர்ப்பை நிறைவேற்றும் பொருட்டு அவர் கைது செய்யப்பட்டுச் சிறையிலிடப்பட வேண்டும். 3) அவர் சொத்துகளுக்கெதிராக வழங்கப்பட்ட தீர்ப்பை நிறைவேற்றும் பொருட்டு அவர் சொத்துகளைப் பறி முதல் செய்யும் கட்டளை இருக்க வேண்டும். இக் கட்டுப்பாடுகளில் ஒன்று அல்லது இரண்டிருந்தாலே போதும்.

ஒரு கடனாளி இவ்விண்ணப்பத்தைத் தகுந்த முறையில் கவனமுடன் தாக்கல் செய்யவில்லையென்றால், அவரது விண்ணப்பம் தள்ளுபடி செய்யப்படும். எனவே, அவர் மறுமுறைவிண்ணப்பம் செய்திட நீதிமன்றத்தின் அனுமதி வேண்டும். மறு விண்ணப்பம் செய்ய, முன் விண்ணப்பம் சரியான முறையில் தாக்கல் செய்யப்படாததற்கு நியாயமான காரணங்களை அவர் காட்டியாக வேண்டும். மேலும் மறு விண்ணப்பத்தில், முதல் விண்ணப்பத்தில் அடங்காத உண்மைகள் அடங்கி இருக்க வேண்டும்.

**செயல்முறை:** கடனாளி எங்கு வசிக்கிறாரோ, அந்த எல்லையில் உள்ள நீதிமன்றத்தில்தான் அவர் தம் விண்ணப்பத்தைத் தாக்கல் செய்ய வேண்டும்; அல்லது அவர் எங்கு வணிகம் செய்கிறாரோ அங்கும், அல்லது அவருக்குச் சொத்து எங்குள்ளதோ அங்கும், அல்லது அவர் எங்குக் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டுள்ளாரோ அங்கும் அவர் விண்ணப்பம் செய்யலாம். விண்ணப்பம் குறிப்பிடப்பட்டுள்ளதாளில் எழுத்தால் எழுதி, கையெழுத்திடப்பட்டிருக்க வேண்டும். கீழ்க்காணும் விவரங்கள் விண்ணப்பத்தில் சேர்க்கப்பட வேண்டும். 1)கடனைத் திரும்பத்தர இயலவில்லை என்ற அறிக்கை ஒன்று சேர்க்கப்பட வேண்டும், 2) விவகார அல்லது அதிகார வரம்பு எல்லையைக் கண்டுபிடிக்க அவர் வசிக்கும் இடம், வாணிகம் செய்யுமிடம் ஆகியவற்றை அதில் குறிப்பிட வேண்டும், 3) அவர் தர வேண்டிய கடன்களின் விவரம், 4) அவர் பாக்கித் தர வேண்டிய கடனீந்தோர்களின் பெயர்கள், 5) அவர் சொத்து விவரம், அதன் மதிப்பு, சொத்து உள்ள இடம், நீதிமன்ற அதிகாரியின் பாதுகாப்பில் அச்சொத்துகளை விட விருப்பம் தெரிவித்த அறிக்கை ஆகியவை அடங்கியிருக்க வேண்டும், 6) முன்பு தாக்கல் செய்த விண்ணப்பம் ஏதாவதிருந்தால் அதன் விவரமும், முடிவும் குறிப்பிட வேண்டும். கடனீந்தோர் விண்ணப்பம் தாக்கல் செய்யும் பொழுது, அதில் கடனாளி செய்த நொடிப்புச் செய்கையைப் பற்றியும்,அவர் எந்த நாளில் அச்செயலைப்புரிந்தார், கடனாளி தமக்கு எவ்வளவு தொகை பாக்கித் தர வேண்டும் என்பன பற்றியும் குறிப்பிட வேண்டும்.

நீதி மன்றத்தின் ஒப்புதல் இல்லாமல் எந்த விண்ணப்பத்தையும் திரும்பப் பெற முடியாது. எல்லா விண்ணப்பங்களையும் ஒன்று சேர்த்து, ஒரே நேரத்தில் அவை அனைத்தையும் விசாரணை செய்வதற்கு நீதிமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. விசாரணையின் போது கடனாளரை விசாரித்த குறிப்பும், சாட்சியங்கள், விசாரணை செய்யப்படும் போது எடுக்கப்பட்ட குறிப்பும் நிலையான சான்றாகத் திகழும். குற்றப் பிரிவில்லாத சமூக நடைமுறைச் சட்டத்தில் விசாரணைக்குக் குறிப்பிடப்பட்டுள்ள அத்தனை முறைகளும் நொடிப்பு நீதிமன்ற விசாரணைக்கும் பொருந்தும். ஒப்பந்தம் செய்யத் தகுதியான எந்த மனிதரும் நொடித்த வராகத் தீர்ப்பளிக்கப்படலாம். எனவே, வயது வாராதஇளவர்(Minor)நொடித்தவராகத் தீர்ப்பளிக்கப்பட மாட்டார். கவனக் குறைவாக அவ்வாறு தீர்ப்பளிக்கப்பட்டால் அது செல்லாது.

சித்தம் கலங்கியவர் கூட, அவர் நல்ல முறையில் உள்ள போது பட்ட கடனுக்காகத்தான் நொடித்தவராகத் தீர்ப்பளிக்கப்படலாம். அவர் சித்தம் கலங்கியுள்ளபோது பட்ட கடனை இது கட்டுப்படுத்தாது. திருமணமான பெண் அவள்மீது சொத்திருக்குமானால் நொடித்தவள் என்று தீர்ப்பளிக்கப்படலாம். கூட்டாளிகள் கூட்டாகவும், தனித்தனியாகவும் நொடிப்புச் செய்கையைச் செய்திட்டால் அவர்களையும் நொடித்தவர்கள் எனத் தீர்ப்பளிக்கலாம்.

இறந்து விட்டவர்களின் சட்டமுறையிலான வாரிசுதாரர்கள் நொடித்தவர்களாகத் தீர்ப்பளிக்கப்படமாட்டார்கள். அவர்கள் தனிப்பட்ட முறையில் இறந்துவிட்டவர்களின் செயல்களுக்குப் பொறுப்பாளியாக மாட்டார்கள். நொடிப்பாவதற்குரிய விண்ணப்பம் தந்துவிட்ட பிறகு, கடனாளி இறந்துவிட்டால், அவரது சொத்துகளை நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்ட அதிகாரி கண்காணித்து வருவார்.

இந்தியக் கூட்டுக் குடும்பத்தைப் பொறுத்த மட்டில், அதன் தலைவர்தான் நொடிப்பு விண்ணப்பம் தாக்கல் செய்யமுடியும். குடும்பத்தில் ஏனைய உறுப்பினர்கள் தனிப்பட்ட முறையில் பொறுப்பாளியாக மாட்டார்கள். கூட்டுக்குடும்பச் சொத்தில் தங்களுக்கு எவ்வளவு பங்கு உண்டோ அந்த அளவிற்குத்தான் அவர்கள் பொறுப்பாளியாவார்கள். ஒரு கூட்டுக்குடும்

பத்தின் உறுப்பினர்கள் அனைவரும் நொடிப்புச் செய்கையைக் கூட்டாகச் செய்திருந்து, அவர்கள் பொறுப்பாளியானால் அவர்கள் மீது நொடிப்பு விண் ணப்பம் தாக்கல் செய்யலாம்.

ஓர் அயல்நாட்டவர் இந்தியாவில் வசித்து வரும் பொழுது நொடிப்புச் செய்கையைப் புரிந்தால், அவரையும் நொடித்தவர் என்று தீர்ப்பு வழங்கலாம். அவர் இந்தியாவில் வசித்து வரும்பொழுது நொடிப் பானாலொழிய அவரை நொடித்தவர் என்று குறிப் பிட முடியாது. நொடிப்புச் சட்டத்தின் கீழ் ஒரு கட னாளர் என்பவர் இந்தியச் சட்டத்திற்கு மட்டும் உட்பட்டவரேயொழிய உலகச் சட்டம் முழுவதற்கும் உட்பட்டவர் அல்லர். எனவே, அயல் நாட்டினர் இந் தியாவில் வசித்து வரும்பொழுது நொடிப்புச்செய்கை புரிந்திருந்தால் அவர் விண்ணப்பம் தாக்கல் செய்யும் போது இங்கு இல்லாமலிருந்தால்கூட அவரை நொடித்தவர் என்று தீர்ப்பளிக்கலாம். இங்கு அவர் புரிந்த நொடிப்புச் செய்கை முக்கியமே யொழிய, விண்ணப்பம் தாக்கல் செய்வது முக்கியமில்லை.

கே.என்.இரா.

**துணை நூல்கள்:**


**Kuchhal,M.C.**, Mercantile Law, Vikas Publishing House Pvt, Ltd., New Delhi, 1981.

**Pandiah,R.H.**, Principles of Insolvency Law in India, N.M. Tripathi Pvt, Ltd., Bombay, 1982.


***நொண்டிச் சிந்து:*** இலக்கிய வகைகளை வரை யறுக்கும் பாட்டியல் நூல்களால் சுட்டப்படாதன வற்றுள் சிந்துப்பாடல்கள் குறிப்பிடத் தகுந்தன வாகும். சிந்து என்பது இசைப்பாவின் ஒருவகையென வும் கூத்துவகைகளில் ஒன்றெனவும் சிலப்பதிகார உரை கூறும். சிந்து என்னுஞ் சொல்லிற்குப் பண் என்ற பொருளும் உண்டு என்பதைச் 'சிந்தொக்கும் சொல்லினார்' எனவரும் கம்பராமாயணத்தொடரா லும் அறியலாம். மூன்று சீர் அடிகள் மிகுதியாக வருவதால் இவ்வகைப் பாடல்கள் சிந்து என்ற பெயர்பெற்றிருக்கக்கூடும் என்று இசைவல்லுநர்களும் கருத்துத் தெரிவிக்கிறார்கள். சிந்தில் பல வகைகள் உள்ளன. 1. நொண்டிச் சிந்து. 2. காவடிச் சிந்து, 3. வழிநடைச் சிந்து, 4. கொலைச் சிந்து, 5. விபத்துச் சிந்து, 6. நீதிச் சிந்து என்பன.

தமிழ் இலக்கிய வகைகளில் நொண்டி நாடகம் என்பதும் ஒன்றாகும். இதற்கு ஒத்தநிலையிலேயே சிந்து இலக்கியங்களில் நொண்டிச்சிந்து என்றொரு வகை காணப்படுகிறது. தவறான நெறியிற் சென்று முடமானவன் ஒரு தலத்தில் இறைவனைக் கண்டு தன் பழைய தவறுகளுக்காக வருந்தும் முறை நொண்டி நாடகத்தில் இடம் பெறுவதாகும். இந் நாடகம் முழுவதும் நொண்டிச் சிந்து என்ற யாப்பு வகையில் பயின்று வரும். முதலடியில் மூன்று சீரும் தனிச் சொல்லும் இரண்டாமடியில் நான்கு சீருமாக அமைவது நொண்டிச் சிந்தாகும். இரண்டாமடிக்கு முதலடி ஒரு சீர் குறைந்து நொண்டிபோலக் காணப் படுவதால் இப்பெயர் பெற்றதாகலாம். கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும்சிந்து நூல்கள் பரவலாக எழுந்தன. இவ்வகைக்கு கி.பி. 1709க்கும் கி.பி. 1711 க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுந்த திருச்செந்தூர் நாடகமே முன்னோடியெனலாம்.

இவ்வகையில் ஒரு சில நூல்களே கிடைத்துள்ளன. அவற்றில் தங்கவேலுப் பிள்ளை என்பார் பாடிய எட்டிக்குடி சுவாமி பேரில் எழுதிய நொண்டிச் சிந்து என்னும் வேல்பாட்டு, குன்றக்குடி குமரன் பேரிலுள்ள நொண்டிச்சிந்து போன்றவற்றைக் குறிப்பிடலாம். பாரதி பாடல்களிலும் நொண்டிச் சிந்து வகை இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

நாட்டுப்புற மக்களிடையே செல்வாக்குப் பெற்ற இவ்வகையில் நாட்டுப்புறக் கூறுகள் இடம் பெறக் காணலாம். திரும்பத் திரும்ப வரல், இசைப்பாங்கு, புராணமரபுச் செய்தி, பழமொழியாட்சி, பேச்சு வழக்குச் சொற்கள் போன்றவற்றைக் குறிப்பிடலாம். நாட்டுப் புறப்பாடல் வகைகளுடன் நொண்டிச் சிந்துவையும் இணைத்துப் பார்க்க வழியுண்டு. நாட்டுப்புறப் பாடல்கள் சிறுசிறு பாடல்களாக வாய் மொழியாக இருந்து வளர்ந்து வருவன. ஆனால், சிந்துப் பாடல்கள் நீண்ட பெரும்பாடல்களாக அமைந்து அண்மைக் காலங்களில் அச்சானவையா கும்.

பொதுவாகச் சிந்து நூல்களுக்குள்ள கட்ட மைப்பை நொண்டிச் சிந்திலும் காணலாம். வேறு பட்ட ஓசைப்பாக்கள் குளகச் செய்யுள் என்பது பல பாடல்களைக் கொண்டு விளங்கி ஒரு பொருளையே நிலை நாட்டுவதாகும். முதலில் கடவுள் வாழ்த்து அமைந்திருக்கும். வெண்பா யாப்பில் அமைந்திருக்கும். அப்பகுதி விநாயகர் வழிபாடாகவே அமைந்திருக்கும். நொண்டிச் சிந்தில் பல இடங்களில் முருகன் பெருமை, அவன் திருத்தலங்களின் பெருமை, வழிபாட்டு முறை கள் ஆகியவைகள் பாடுபொருளாக அமைகின்றன. நூலின் இறுதியில் ஆசிரியர் தம்மைப் பற்றிக் கூறிக் கொள்ளும் மரபும் இடம் பெறுகிறது. இந்நூலினைக் கேட்டவர்களையும், பதிப்பித்தவர்களையும் வாழ்த்தும் பகுதியாக அமைக்கிறது. இலக்கியச் செறிவைக் காட்டி லும் கேட்போராகிய நாட்டுப் புற மக்களை மனத் திற்கொண்டு இவ்வகை நூல்கள் அமைவதால் வழக்கு நடையும், பிறமொழிக் கலப்பும் இயல்பாகின்றன.

திருவாரூர் இயற்றமிழ்ப் பயிற்றகத்தின் வழியாக த. சரவணத் தமிழன் என்பார்-'யாப்பு நூல்' என்ற இலக்கணநூலை 1981-இல் வெளியிட்டுள்ளார். அந் நூலில் சிந்துவிற்கான இலக்கணங்கள், வகைகள் பேசப்படுகின்றன. இரா.பா.

**நொண்டி நாடகம்:** இது, தொண்ணூற்று மூன்று வகை வரிக்கூத்தினுள் ஒன்று. சிந்து எனும் பாவினத்தின் வளர்ச்சியில் நொண்டிச்சிந்து என்ற பெயரோடு, வெண்பா, விருத்தம் முதலானவற்றைக் கொண்டு, இனிய சந்தத்தோடு, நாடோடிப் பாடலைப் போல, எளிதில் சுவைக்கும் தன்மையில் பாடப் படுவது. இது பண்டைக் காலத்தில் எழுந்த இலக்கியங்களுள் இடம்பெறவில்லை. இவ்வகை இலக்கியம் கி.பி.17,18-ஆம் நூற்றாண்டுகட்குப் பின்னர் எழுந்தது.

இது, நடிக்கப்படும்போது, நாடக மேடையில் பலர் தோன்றி நடிக்கப் பெறார்; ஒருவனே தோன்றித் தன், கடந்தகால வரலாற்றினைச் சொல்லியும், பாடியும், நடிப்பன். ஒரு காலிழந்த இவன், ஒருகாலைக் கொண்டு நொண்டி, நொண்டி ஆடிக்கொண்டே நடிப்பதால் இதற்கு 'நொண்டிநாடகம்' எனப் பெயர் வந்தது. இந்நாடகம் எழுந்த காலத்தில், இதற்குத் தென்னாட்டில் பாளையக்காரர்கள் மிகவும் ஆதரவு தந்தனர். அதனால், இதனை எழுதப் புகுந்த புலவர்கள், பாளையக்காரர்களையும் இதில் புகழ்ந்து கூறலாயினர்.

திருடன் ஒருவன் ஊரெல்லாம் திருடிப் பொருள் சேர்க்கின்றான். ஒருவிலைமாதின் மீது காதல் கொண்டு, தான் திருடிய பொருளை எல்லாம் அவளிடம் தந்து விடுகிறான். பின்னரும் பொருள் தர இயலாமல் வருந்துங்கால், அம்மாது, இவனை மேலும் திருடிவரத் தூண்டுகின்றாள். அவனோ அவள் மீது கொண்ட மயக்கத்தால் பலமுறை திருடிக் கொண்டு வந்து கொடுக்கிறான். அவ்வாறு, திருடச் சென்றவன் ஒருநாள் அரசனுடைய படை வீட்டிற் புகுந்து குதிரை ஒன்றினைத் திருடும்போது, காவலாளர்கள் கண்டு கொள்கின்றனர். தப்பி ஓட முயன்றும் முடியாமல் அகப்பட்டுக் கொள்கிறான். அவனை அரசன் முன் நிறுத்தி விசாரிக்கின்றனர். திருடிய குற்றத்திற்காக அவனை மாறுகால் மாறுகை வாங்கிவிடுமாறு அரசன் உத்தரவிடுகின்றான். அவ்வாறே கொலைக் களத்தில், கொல்பவனால், மாறுகால் மாறுகை வாங்கப் படுகின்றான்.

திருடன் ஆற்றுவார், தேற்றுவார், ஆதரிப்பாரின்றி அல்லலுற்று அவதியுறுகின்றான். அவ்வழிவந்த, வழிப்போக்கர்களுள் ஒருவரான பேரருளாளர், இவனைக் கண்டு, இவனுக்கு உதவி செய்து குணப்படுத்துகிறார்.

உடல் நலம் பெற்ற கள்வன் அவருடைய நல்லுரைகளினால் மன நலம் பெற்றுத் தூயவனாகிறான். அவனை, அவர் இறைவழிபாடியற்றக் கோயிலுக்குச் செல்லுமாறு ஆற்றுப் படுத்துகின்றார். அவ்வாறே, அவன் கோயிலடைந்து, இறைவனை நோக்கிக் காதலாகிக் கசிந்து, கண்ணீர் மல்க, நெஞ்சுருகப் பாடித் தன்பிழைகளை எண்ணி, நைந்து வேண்டி அழுகின்றான். அழுதாற் பெறலாமே என்றபடி, இறைவன் இவன் மீது இரக்கம் கொண்டு, பிழைகளைப் பொறுத்துத் திருவருள் பாலிக்கின்றான். அதன் காரணமாக இவன், இழந்த காலும், கையும் மீண்டும் வளரப் பெறுகின்றான். கொடியவன் அடியவனாகின்றான். மற்றவர்களையும் நல்வழிப்படுத்தும் தூயவனாகின்றான். சான்றோனாகிய இவன், தானே இவற்றைக் கூறி நடித்துக் காட்டுவதே நொண்டி நாடகம். இதற்கு, ஒற்றைக்கால் நாடகம் என்ற மற்றொரு பெயரும் உண்டு.

இதில், பல்வேறு பெயர்களோடு நாடகங்கள் தோன்றினும், அடிப்படை ஒன்றே. ஊர்களும் பெயர்களும் செயல்களும் சுருங்கியும் விரிந்தும் காணப்படும். தவறு செய்யும் மக்கள் திருந்தும் பொருட்டு நீதிகளைக் கூறுவது இது.

தென்பாண்டி நாட்டில், பாளையக்காரர்களின் செல்வாக்கு மிக்கிருந்த காலம் கி.பி.17,18-ஆம் நூற்றாண்டுகள். அப்போது தோன்றிய நாடகங்கள், திருச்செந்தூர் நொண்டிநாடகம், சீதக்காதி நொண்டி நாடகம், குளத்தூர் ஐயன் நொண்டி நாடகம், திருமலை நொண்டி நாடகம், சாத்தூர் நொண்டி நாடகம் முதலியன. முத்தாலக் குறிச்சிக் கந்தசாமிப் புலவர் இயற்றிய நொண்டி நாடகத்தில் திருடன் திருப்பதியைச் சேர்ந்தவன். இவன், திருடியது திருக்காட்டுப் பள்ளியில. திருவருள் பெற்றுத் திருந்தியது திருச்செந்தூரில். அதனால், அதற்குத் திருச்செந்தூர் நொண்டி நாடகம் என்று பெயர். சீதக்காதி நொண்டி நாடகத்தில், கள்ளன் பழமுதிர் சோலையைச் சேர்ந்தவன். திருடியது செஞ்சிக்கோட்டையில். வள்ளல் சீதக்காதி மரைக்காயரால் ஆதரிக்கப்பட்டு, மெக்காவுக்கு ஆற்றுப் படுத்துப் பெறுகிறான். மெக்கா எனும் இசுலாமியர்களின் புனிதத் தலத்தில் திருவருள் பெறுகிறான். இது இசுலாமிய சமயத் தொடர்பான நொண்டி நாடகம். சாத்தூர் நொண்டி நாடகத்தில், ஊற்றுமலைத் திருடன் விசயாபுரியில் திருடிச் சாத்தூர் இறைவனிடம் திருவருள் பெறுகின்றான். சிரீவைகுண்டக்கள்ளன், ஆலப்புழை என்ற ஊரில் திருடித் தண்டனை பெற்றுக் குளத்தூர் ஐயனாரைப் பணிந்து திருவருள்

பெற்றதுபற்றியதுகுளத்தூர்ஐயனார்நொண்டி நாடகம்.திருமலைக்குமரன்கோயில்பெருமானிடம்வழிபாடியற்றிப் பேரருள பெற்றது, மன்னர் பெருமாள் புலவரால் இயற்றப்பட்ட திருமலை நொண்டிநாடகம். மேலும், திருக்கச்சூர் நொண்டி நாடகம், பழனி நொண்டிநாடகம் முதலியனவும் சிறப்புடையன. மற்றும் பல நாடகங்கள் தமிழ்நாட்டில் தோன்றியுள்ளன. வீ.சொ.

*நொவாரா*:இது ஓர் இத்தாலிய நகரம். வடக்கு இத்தாலியில்பீட்மாண்டுப்பகுதியில் உள்ள நொவாரா (Novara) மாநிலத்தின் தலைநகரான நொவாரா வேளாண்மை, தொழில் கேந்திரமாகவும் இருப்புப் பாதைச் சந்திப்பாகவும் விளங்குகிறது. துணிகள், இரசாயனப் பொருள்கள், இயந்திரப் பொருள்கள், அச்சடிக்கப்பெற்ற சாதனங்கள் முதலியன இங்கே உற்பத்தியாகின்றன. இதன் மக்கள்தொகை 102, 279 (1983).

நொவாரா வரலாற்றில் பல போர்களின் களமாக இது விளங்கியதைக் காணலாம். இத்தாலியப் போர்க் காலத்தில் (கி.பி. 1500,1513) இதனருகே பல போர்கள் நிகழ்ந்தன. ஆசுத்திரியப் பேரரசு கி.பி. 1849-இல் சார்லசு ஆல்பர்ட்டு தலைமையின் கீழிருந்த பீட்மாண்டியரை,நொவாரா போரில்தோற்கடித்தது. இங்கு உள்ள கௌடென்சியோ (Gaudenzio) திருச்சபை சிறப்பு வாய்ந்ததாகும். தெ.பா.

# நோ

நகரமும் ஓகாரமும் கலந்த ஒலி நகர ஓகாரங்களின் குறிப்புகளைப் பார்க்க. நுனிநா மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒட்டியபடி மூக்கால் வெளிவரும்பொழுது குவித்த வாயை நன்றாக உயர்த்தி ஒலித்தால் இவ்வொலி தோன்றும்.

**பொருள்:** நொ என்ற ஓரெழுத்து ஒரு மொழியின் பொருள்களெல்லாம் இதற்கும் உள. நொந்துபோதல் என்ற ஒரு பொருளை ஒட்டியே வருந்துதல், துன்பத்தை வெளிப்படுத்தல், தன்மை அழிதல், வறுமைப்படுதல் என்ற வினைப் பொருள்களையும், துன்பம், நோய், சிதைவு முதலான பெயர்ப்பொருள்களையும் இச்சொல் தரும்.

**வடிவம்:** நொகரத்துக்கும் நகர ஓகாரத்துக்கும் ஒரே வடிவம். இரண்டுக்கும் தமிழ் வட்டெழுத்து இரண்டிலும் ஒரே தோற்றமும் வளர்ச்சியும் உள்ளன. நொகரத்துக்குரிய குறியைப் பார்க்க.

புள்ளியிடும் வழக்கத்தை ஒழுங்காகப் பின்பற்றாததால் புள்ளி இல்லாததை நோ வாக வாசித்துக் கொள்க என்று சொல்லத் தேவையில்லாத நிலையில் போக்கறிந்து வாசித்துக் கொள்ளும்படி எழுதி வந்தார்கள். கே. ஜி. கி.

நோகி என்பவர் சப்பானிலுள்ள யாமாகூசி (Yamaguchi) என்ற இடத்தில் கி.பி.1849-ஆம் ஆண்டு, சாமுராய் என்னும் வீரக் குடும்பத்தில் பிறந்தார். இவர் கி.பி. 1894-ஆம் ஆண்டு முதல் 1895-ஆம் ஆண்டுவரை நடைபெற்ற சீன-சப்பானியப் போரில் போர்ட் ஆர்தரைக் கைப்பற்றி மாபெரும் வெற்றி வீரராகத் திகழ்ந்தார். இவர், கி.பி. 1895-இல் இராணுவத்தில் துணைநிலைத் தளபதியாகப் பதவி உயர்வு பெற்றார். பின் தைவானுக்கு ஆளுநராக அமர்த்தப்பட்டார். நோகி (Nogi) 1904-ஆம் ஆண்டு முதல் 1905-ஆம் ஆண்டுவரை நடைபெற்ற உருசிய-சப்பானியப் போரில் போர்ட் ஆர்தரைச் சப்பானுக்கு இரண்டாம் முறையாகக் கைப்பற்றிக் கொடுத்தார். உருசிய-சப்பானியப் போரின்போது, தமது 6,00,000 படை வீரர்களுடன் மூக்டன் என்ற இடத்தில் நடந்த கடுஞ் சண்டையில் ஈடுபட்டு வெற்றி கண்டார். தம்முடைய பேரரசர் இறந்தபோது படைத்தொழிலைத் தம் மனைவியிடம் ஒப்படைத்துத் துறவியானார். இது இவரது அரசபக்திக்கு எடுத்துக் காட்டாகவும் சாமுராய் (படைவீரர் குடும்பம்) குடும்பத்திற்குப் பெரும் புகழாகவும் அமைந்தது. கோ. த.

நோசசு, பண்டைய கிரீட்டுத் தீவிலிருந்த நகரங்களுள் ஒன்று. மினோசு (Minos) என்ற புராண அரசரின் தலைநகரமாக இது விளங்கியது. மத்திய தரைக்கடலில் அமைந்த கிரீட்டுத்தீவில் அமைந்திருந்த இந்நகரத்தில் புதிய கற்காலத்திலிருந்தே மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இந்நகரம் கி.மு. 2000 (2nd Millennium) ஆண்டளவில் மிகச் சிறப்புற்று விளங்கியது. கிரேக்கர்கள் இந்நகரின் மீது கி.மு. 1500-ஆம் ஆண்டளவில் படையெடுத்துத் தாக்கினர். இந்நகரில் இருந்த பல அரண்மனைகள் அப்படையெடுப்புகளால் அழிக்கப்பட்டன. இருப்பினும், இந்நகரில் மக்கள் உரோமானியப் பேரரசுக் காலம் வரை தொடர்ந்து வாழ்ந்து வந்தனர். இந்நகரில் அகழாய்வுகளை ஆர்தர் இவான்சு (Arthar Evans) என்பவர் மேற்கொண்டார். இவ்வகழாய்வுகளின் மூலம் இந்நகரின் தொன்மைச் சிறப்புப்பெரிதும் வெளிப்பட்டது. இந்நகரில்பல்வேறு காலக்கட்டங்களில் கட்டடங்...



நோசசு

அரண்மனைகளும் கட்டப்பட்டன. நில நடுக்கத்தால் அடிக்கடி இக்கட்டடங்கள் அழிந்துள்ளன. அரண் மனையும் அதனுள் பல கூடங்களும் சிறு அறைகளும் பெரியவறைகளும் அரச பீடமும் இருந்தமை அகழாய்வுகளில் வெளிப்பட்டது. இந்நகரில் அரங்கு களும் இருந்தன. இவையாவும் மினான் நாகரிகத்தில் வாழ்ந்த மக்களின் கலைத்திறனை எடுத்தியம்புகின் றன. மின்னான் நாகரிகத்திற்கு முன்பு, கி.மு. 6500 -ஆம் ஆண்டைச் சார்ந்த புதிய கற்காலக் கருவிகள் இங்குக் கிடைத்துள்ளன. அகழாய்வுகளில் மட்கலன் களும் சுடுமண் உருவங்களும் செப்புக்கால நாகரிகத் தின் எச்சங்களும் கிடைத்துள்ளன. சித்திர எழுத்துகள் கொண்ட பொறிப்புகள் பலவும் இவ்வகழாய்வுகளில் வெளிப்பட்டன. இந்நகரத்தில் முறையான களஆய்வு களும் அகழாய்வுகளும் நடத்தப்படவில்லை. இம் முயற்சிகள் தொடர்ந்தால் இப்பகுதியின் சிறப்பைத் தெளிவாக அறியமுடியும். சு.இரா

**நோபல் பரிசுகள்:** சுவீடன் நாட்டில் இசு டாக்குகோம் (Stockholm) நகரில் கி.பி. 1833-இல் பிறந்து, இத்தாலியில் உள்ள சான்ரெமொவில் கி.பி. 1896 – ஆம் ஆண்டில் புகழுடம்பெய்திய ஆல்பிரடு பெர்ன்கார்டு நோபல் என்பவரால் பரிசுகள் வழங் கக்கூடிய அறக்கட்டளை நிறுவப்பெற்று, மனித குலத்துக்குப் பயன்படக் கூடிய சிறந்த சேவை செய் தவர்களுக்கு ஆண்டுதோறும் வழங்கப்படும் பரிசுகளே நோபல் பரிசுகள் எனப்படும். சுவீடன் அரசாங்கம் கி.பி.1900த்தில் பிறப்பித்த ஒரு சட்டத்தின் மூலம், நோபல்பரிசைக் கொடுப்பவர்கள் பின்பற்ற வேண்டிய சிறப்பு விதிகளும் வரையறுக்கப்பட்டன. நோபல் அறக் கட்டளைக்காக 1 75,0 000 பவுன்களை நோபல் விட்டுச் சென்றார். அம் மூலதனத்திலிருந்து கிடைக்கக் கூடிய வட்டியிலிருந்து 8000 பவுன்கள் ஒவ்வொரு பரிசுக்கும் ஆண்டுதோறும் கொடுக்கப்படுகின்றன. இப்பரிசுகள் 1901 முதல் கொடுக்கப்படுகின்றன. 'இயற்பியல், வேதியல், துறைகளுக்கான பரிசுகளைச் சுவீடன் அறி வியல் கழகமும், மானுடவியல் அல்லது மருத்துவ சாதனைக்கான பரிசுகளை இசுடாக்கோமில் உள்ள கெரோலின் நிறுவனமும். இலக்கியத்திற்கு இசுடாக் கோம் நிறுவனமும் அமைதிக்காகப் பாடுபடுபவர்களுக் கான பரிசை நார்வேயைச் சேர்ந்த ஐந்து உறுப் பினர்களைக் கொண்ட ஒரு குழுவும் வழங்கும். 'இப் பரிசுகள் வழங்குவதில் தம் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதற்காகவோ, பிற நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதற்காகவோ வேறுபாடு காட்டாமல், தகுதி உள்ளவர்கள் இப்பரிசைப் பெற வேண்டும்' என்று ஆல்பிரடு பெர்ன்கார்டு நோபல் தம்முடைய இறுதி முறியில் எழுதி வைத்துள்ளார். இம்முறி பாரிசில் கி.பி. 1895-ஆம் ஆண்டு ஆல்பிரடு பெர்ன்கார்டு நோபலால் எழுதப்பட்டது.

இசுடாக்கோம் அருகில் உள்ள கெலன் போர்த் தொழிற்சாலை கி.பி. 1864-ஆம் ஆண்டு தீப்பற்றிய தால் ஆல்பிரடு நோபலின் சிறிய தம்பி எமில் இறந் ததை அந்நாட்டு நாளிதழ்கள் நோபல் இறந்ததாகத் தவறாக எண்ணி 'மரணத்தின் வணிகர் இறந்துவிட்



ஆல்பிரடு நோபல்

டார்' என வெளியிட்டன. இவர் தந்தையார் கி.பி. 1872-இலும், மூத்த சகோதரர் 1888-இலும், தாய் 1889 -இலும் இறந்தனர். பொதுமக்கள் தம்மீது கொண்ட தவறான எண்ணத்தை மாற்றுவதற்காகத் தாம் அது வரை சேர்த்து வைத்த செல்வத்தை மனிதகுலத்திற் குப் பயன்படும் அரியதொண்டாற்றியவர்களுக்குப் பரி சாகக் கொடுப்பதற்காக ஆல்பிரடு நோபல், நோபல் அறக்கட்டளையை ஏற்படுத்தினார்.

நோபல் பரிசுகள் தொடக்கக் காலத்தில் இயற் பியல், வேதியியல், மருத்துவம், இலக்கியம் ஆகியவற்றுக் கும், நாடுகளுக்கிடையில் சகோதரத்துவத்தையும் அமைதியையும் ஏற்படுத்துவதில் சிறந்த தொண்டாற் றியவர்களுக்குமே வழங்கப்பட்டன. இப்பரிசுகள் கடந்த எண்பத்தேழு ஆண்டுக் காலமாக 1901 -இலிருந்து கொடுக்கப்படுகின்றன. இப்பொழுது புதிய துறைகளில் குறிப்பாகப் பொருளாதாரத் துறைகளில் பன்னாட்டுச் சாதனைகள் புரிந்தவர்களுக்கும் வழங் கப்படுகின்றது. 1901 முதல் 1949 வரையில் இயற்பிய லில் 43 பேர்களும், வேதியலில் 41 பேர்களும், மருத் துவத்தில் 40 பேர்களும், இலக்கியத்தில் 41 பேர்களும் அமைதிக்காக 35 பேர்களும் நோபல் பரிசுகளைப் பெற்றுள்ளார்கள்.

ஒவ்வோர் ஆண்டும் ஆசுலோவில் திசம்பர் பத் தாம் நாள் நடைபெறக்கூடிய ஆல்பிரடு நோபல் இறந்த நாளன்று, இசுடாக்கோமில் நடைபெறும் விழாவன்று நோபல் பரிசு பெற்றவர்களுக்குப் பரிசுப் பணமும், நோபல் தங்கப்பதக்கமும், சான்றிதழ்களும் வழங்கப்படுகின்றன.

நோபல் பரிசைப் பெற்ற முதல் இந்தியரான இரவீந்தரநாத தாகூர், 1913-இல் இலக்கியத்திற் காக அப்பரிசைப் பெற்றார். இயற்பியலுக்கான பரிசை சி.வி. இராமனும், பின்னர்ச் சந்திரசேகரும் பெற்றார்கள். அன்னை தெரசாவும் இப்பரிசைப் பெற்றுள்ளார் அறிவியல் சாதனைகளை மனித வளத்திற்காகப் பயன்படுத்துவதில் சாதனைகள் புரிந் தவர்களுக்குக் கொடுக்கப்படும் இந்த நோபல் பரிசு கள் உலகிலேயே கொடுக்கப்படும் பரிசுகளுள் தலை சிறந்த பரிசுகளாகும். இதனால், பொது மக்கள் நல் லெண்ணமும், பரிசை ஏற்படுத்தியவர்மீதான மதிப் பும் சுவீடனில் மட்டும் அல்லாமல், உலகம் முழு வதும் பரவின. நோபல் அறக்கட்டளை பற்றிய முக் கியமான செய்திகளும், பிற பத்திரங்களும் இசுடாக் கோமில் உள்ள நோபல் அறக்கட்டளை ஆவணக் காப் பகத்தில் வைக்கப்பட்டுள்ளன. கு.இரா.

**நோய் பாடியார்**: இவர் சங்ககாலப் புலவர். இப்பெயர் நோய்ப் பாடியார் என்றும் ஏடுகளில் காணப் பெறுகிறது. இவர் பாடியதாகக் கிடைத்துள்ள ஒரே பாடல் அகநானூற்றில் (67) இடம்பெற்றுள் ளது. காதலர்ப் பிரிந்து வருந்தும் துன்பத்தை நன்கு புலப்படுத்தியமையின் நோய் பாடியார் எனப் பெயர் பெற்றார் போலும். இவர் பாடல் பாலைத் திணையில் பொருள் வயிற் பிரிந்தவழி வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது என்னும் துறை யில் அமைந்துள்ளது. இப்புலவர் பாலை நிலத்தை நன்கு சித்திரித்துள்ளார். வானம்பாடி பாடவும் மழை பெய்யவில்லை. பொலிவிழந்த மரங்களை யுடைய மேட்டுநிலத்தில் ஆநிரையைக் கவர்ந்த வெட்சியாரிடமிருந்து அதனை மீட்க இரவில் மண் டிப்பொருது விழுப்புண் பட்டு வீழ்ந்த கரந்தை மற வர்க்குப் பாலைவழிதோறும் பெயரும் பீடும் எழுதிப் பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்லை நட்டு அதன் பக்கத்தே வீரர் கைக்கொண்டிருந்த வேற்படையினை யும் கிடுகுப் படையினையும் சார்த்தி வைத்தனர். அக்காட்சி பகைவர்தம் போர்க்களத்தை ஒத்திருந் தது. அங்குள்ள பிணங்களைத் தழை கொண்டு மூடிக் கற்களைக் குவித்து வைத்த பதுக்கைகள், கேடயம் ஏந்திய காலாட்படை அணிவகுத்தாற் போன்ற தோற்றத்துடன் காணப்பட்டன. அங்குக் கிடந்த பரற்கற்கள் பேய்த்தேர் பரத்தலினாலே மின்மினி போல் ஒளிர்ந்தன. இங்ஙனம் பாலையின் கொடுமை யைக் கூறி இதன் வழியே தலைவன் பிரிந்து சென் றான் என முடித்துள்ளார். தலைவியும் தன் காதலன் பிரிவுக்கு வருந்தாமல் அவர் சென்ற வழிக் கொடுமை நினைந்து வருந்துவதாகத் தோழியிடம் உரைப்பது இப்பாடற் கருத்தாகும். இரா.சா.

**நோவாசுகோசியா**: இது கனடாவின் ஒரு மாநிலமாகும். நோவாசுகோசியா என்ற மூந்நீரகமும், கேப்பிரிட்டன் என்ற தீவும் உடைய இரண்டு

பகுதிகளை இது கொண்டுள்ளது. இரண்டும் கேன்சோ என்ற கால்வாயினால் பிரிக்கப்பட்டுள்ளன. நோவாசுகோசியா வடக்கிலிருந்து கிழக்காகவும், தெற்கிலிருந்து மேற்காகவும் 448 கி.மீ. வரைக்கும் பரவியுள்ளது. கேப்பிரிட்டனையும் சேர்த்து, வடக்கிலிருந்து கிழக்காகவும், தெற்கிலிருந்து மேற்காகவும் 560கி.மீ. நீளம் உடையது. 11½ மீ. அகலமுள்ள சிக்நெக்டோவின் கழுத்துப்பகுதி, நோவாசுகோசியாவை நியூ ரௌன்சுவிக்கு என்ற மாநிலத்துடன் இணைக்கின்றது.கோபிகுவிட்டுத் தொடர்ச்சி மலைகள் கேப்பு சிக்நெக்டோவில் கிழக்கிலிருந்து மேற்காக அமைந்துள்ளன. மிகவும் உயரமான இடம் இக்நோயிசு மலையாகும். இதற்குப் பின்னர் மிகவும் செழிப்பான அனபோலிசு என்ற பள்ளத்தாக்கு அமைந்துள்ளது. அட்லாண்டிக்குப்பெருங் கடலின் ஓரத்தில் கேன்சோவிற்கும், கேபிகளுக்குமிடையே காலிவேக்சு என்ற துறைமுகம் அமைந்துள்ளது. பிக்டோ துறைமுகந்தான் நோவாசுகோசியாவின் துறைமுகங்களிலேயே சிறந்த துறைமுகமாகும். கேபிள் தீவு தான் நோவாசுகோசியாவின் மிக முக்கியமான இடமாகும்.




நோவாசுகோசியா அமைவிடம்

நோவாசுகோசியாவின் வெப்பநிலை, நியூ பிரௌன்சிவிக்கைவிடக் கூடுதலாகும். மக்கள்தொகை 847,442 (1981). நிலப்பரப்பு 52,840 ச.கி.மீ. இதன் தலைநகரம் ஆலிபாக்சு (Halifax). இதன் மக்கள்தொகை 114,594 (1981). மற்றப்பெரிய நகரங்கள் சிட்னி (28,300); கிளேசுபே (25,147); தார்ட்டுமௌத்து (10,847); துருரோ (10,300). நோவாசுகோசியாவின் மக்களுள் பெரும்பாலோர் கத்தோலிக்கர்கள். பெரும்பாலோர் இங்கிலாந்துத் திருச்சபையைச் சேர்ந்தவர்கள் அல்லர். உள்நாட்டுச் சபை 30 உறுப்பினர்களைக் கொண்டதாக உள்ளது. இதன் ஆளுநர் மேல்சபை உறுப்பினரால் நியமிக்கப்படுகிறார். ஆளுநரின் ஆட்சிக்காலம் ஐந்து ஆண்டுகள் ஆகும். இந்த மாநிலத்தில் அனைவருக்கும் கட்டாயக் கல்வி வழங்கப்படுகிறது.'அரசர் கல்லூரி', தலைமைப் பல்கலைக்கழகம், ஆலிபாக்சு பல்கலைக் கழகம் ஆகியவை கி.பி. 1790-ஆம் ஆண்டிலும்; அக்கேடியாப் பல்கலைக் கழகமும், வொல்வைல் பல்கலைக்கழகமும், கி.பி.1839-ஆம் ஆண்டிலும்,தல்கவுசி பல்கலைக்கழகம் கி.பி.1886-ஆம் ஆண்டிலும் தொடங்கப்பட்டன. வேளாண்மைக் கல்லூரி 1905-ஆம் ஆண்டு துருரோ என்ற இடத்தில் தொடங்கப்பட்டது.

இங்கு வேளாண்மையே மிகவும் முக்கிய தொழிலாகக் கருதப்படுகிறது. கோழி, வாத்து, மாடுகள் முக்கியமாக வளர்க்கப்படுகின்றன. ஆப்பிள் சிறப்பாகப் பயிரிடப்படுகிறது. நிறைந்த மகசூலுக்காக நீர்ப்பாசன வசதி செய்வதில் மிக்க ஆர்வம் காட்டப்படுகிறது. இங்கு மீன்பிடிக்கும் தொழிலும் பண்டைநாள் தொட்டுச் செய்யப்படுகிறது.ஏறத்தாழ 18,000 பேர்கள் மீன் பதனிடும் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். மரங்கள் நன்கு பராமரிக்கப்படுகின்றன. பைன், பர்க்கு, கெம்லாக்கு, ஓக்கு, மேபிள் போன்ற மரங்கள் பெரும்பாலான அளவில் பயிர் செய்யப்படுகின்றன. அலுமினியம் எடுத்தல், பன்றி இறைச்சி பதனிடுதல், இரும்பு எடுத்தல், மீன் பதனிடுதல், உரொட்டி, மிட்டாய் தயாரித்தல், புகைவண்டிக்குத் தேவையான சாமான்கள் தயாரித்தல், உள்ளாடைகள் தயாரித்தல் ஆகியவைகளுக்குத் தனியே தொழிற்சாலைகள் இருக்கின்றன.

பிரான்சு நாட்டினர் கி.பி. 1604-இல் இங்குக் குடியேறினர். அப்பொழுது இதன் பெயர் அக்கேடியா. சர். அலெக்சாண்டர், அக்கேடியா என்ற பெயரை கி.பி. 1621-இல் மாற்றி நோவாசுகோசியா என்று பெயரிட்டார்.இரண்டாம் சார்லசு மன்னரால் கி.பி. 1667-இல் நோவாசுகோசியா பிரான்சு நாட்டினருக்குக் கொடுக்கப்பட்டது. உட்ரெக்ட்டு உடன்படிக்கை மூலம் கி.பி.1713-இல் நோவாசுகோசியாவை இங்கிலாந்து பெற்றது. பிரான்சு நோவாசுகோசியாவில் பெற்றிருந்த எல்லா உரிமைகளையும் கி.பி. 1763-இல் இழந்தது.அப்போதைய அரசாங்க ஆட்சி கி.பி. 1758-இல் ஏற்படுத்தப்பட்டு, கி.பி. 1848-இல் நிலைநாட்டப்பட்டது. கனடா நாட்டின் மாநிலமாக இது கி.பி. 1867-இல் சேர்த்துக்கொள்ளப்பட்டது. கு.இரா.

**நோவொசிபிர்சுக்கு:** உருசியக் குடியரசைச் சேர்ந்த தெற்குச் சைபீரியப் பகுதியில் ஓபு (Ob) ஆற்றங்கரையில் உள்ள நோவொசிபிர்சுக்கு (Novosibirsk)

நகரம் அதே பெயரையுடைய மாவட்டத்தின் தலை நகராக விளங்குகிறது. சைபீரியக் குறுக்கு இருப்புப் பாதைத் தொடர் இதன் வழியாகப் போகிறது. இங்குத் துணிகள், இயந்திரங்கள், இரசாயனப் பொருள்கள், உலோகப் பொருள்கள் முதலியன தயாரிக்கப்படுகின்றன இது கி.பி. 189.-ஆம் ஆண்டில் நிறுவப்பெற்றது. அது முதல் ஒரு வாணிக மையமாக விளங்கி வருகிறது. இதன் வளர்ச்சிக்கு முக்கிய காரணம் இது கூசுநெட்சுக்கு (Kuznetsk) ஆற்றுப் பள்ளத்தாக்குக்கு மிக அண்மையில் இருப்பதாகும். இதன் கிழக்குப் பகுதியில் நிலக்கரி பெருகியுள்ள போதிலும், பொதுவாக இங்கு வேளாண்மை முக்கிய தொழிலாக இருந்து வருகிறது. இதன் மக்கள்தொகை 1 384 000(1984). தெ.பா.

# நௌ

நகரமும் ஔகாரமும் கலந்த ஒலி. நுனிநா மேலண்ணத்தின் நுனியில் பல்லை ஒட்டியபடி மூக்கொலியாக வெளிவரும் ஒலி குவித்தவாயைச் சற்று இளித்துப் பின் குவித்தலால் நௌ வாக வெளிப்படுகிறது..

ஓரெழுத்தொருமொழியாக இது மரக்கலம் என்ற பொருளைத் தரும்.

**வடிவம்:** பல நூற்றாண்டுகளாக இதன் வடிவம் காணப் படவில்லை. இலக்கண முறையில் அவ் என்ற ஒலியே ஔ என்ற ஒலியைப் போலி என்ற வகையில் குறிக்குமாயினும் (எ-டு ஔவை-அவ்வை) இரண்டிற்கும் ஒலித் தோற்றத்தில் வேறுபாடு இருத்தலை மறுத்தல் இயலாது. ஔ என்ற ஒலியில் உள்ள குவித்தல் அவ் என்ற ஒலியில் கிடையாது. உருவத்தில் உள்ள நிலைமையும் வேறு. நொ, நோ என்ற ஒலிகளின் உருவத்தில் வலப்புறம் இழுக்கப்படும் கோடு பிற்காலத்தில் காலாக மாறும் பொழுது காலின் தலைப்பகுதியில் நடுவில் ஒரு கீழ்நோக்கிய சிறுகோடு (Denting) தோன்றி அதனை நௌ வாக உருப்படுத்தியது. தமிழின் தாக்கத்தை அடைந்த கிரந்தத்தில் கி.பி. 6 – ஆம் நூற்றாண்டில் இந்தக் கொம்பும், சிறு கோடு உள்ளடங்கிய காலும் இணைந்த ஔ வடிவம் தோன்றத் தொடங்கியதால் இந்த வளர்ச்சி கி.பி. 6-ஆம் நூற்றாண்டிலேயே தோன்றி விட்டது என்று சொல்லலாம். ஆயினும் தமிழ்க் கல்வெட்டுகளில் சோழர் காலத்தில் (ஏறத்தாழ கி.பி. 8,9-ஆம் நூற்றாண்டுகளில்) இவ்வுருவம் தோன்றியது. பிறகு மாறுதல் இல்லை.... ... ...

வட்டெழுத்தில் நோ என்பதற்குரிய குறியில் மாறுதல் ஏதும் இல்லை.... ...

கே.ஜி.கி.

*நௌருத்தீவு:* கொந்தளிப்பு இல்லாத கடலில் உள்ள மேற்குப் பசிபிக்குத் தீவுகள், மண்ணியல் தன்மைக்கேற்ப நான்கு பிரிவுகளாக விவரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் மூன்றாவதான மேற்குப் பசிபிக்குச் சுற்றளவில் கரோலின் தீவுகள், மார்சல் தீவுகள், கில்பெர்ட்டுத் தீவுகள், நௌருத்தீவு (Nauru) என்று உரைக்கப்படும் மகிழ்ச்சித் தீவு, கடற்கரைத் தீவுகள், எல்லிசுத் தீவுகள், உரோட்டுமா தீவுகள் எனப் பல சிறிய தீவுகள் கொண்ட பிசித் தீவுகள் உள்ளன. ஆங்கிலேயர்கள் நௌருத் தீவை கி.பி. 1798-இல் கண்டு பிடித்தார்கள். செருமனி கி.பி. 1888-இல் இத்தீவைக் கைப்பற்றியது. முதல் உலகப் போரின்போது ஆசுத்திரேலியர்கள் இத்தீவைக் கைப்பற்றினார்கள். அவர்களுக்குக் கீழ் 1920-ஆம் ஆண்டு வரை இத்தீவு இருந்தது. முதல் உலகப்போர் நடந்து கொண்டு இருந்தபோது சப்பானியர்கள் இத்தீவைக் கைப்பற்றினர். முதல் உலகப் போருக்குப்பின்னர் இங்கிலாந்தின் கீழ் உள்ள தீவாகச் சருவதேச சங்கம் தீர்மானித்தது. 1947-ஆம் ஆண்டில் ஐக்கிய நாடுகள் சபையின் தருமகர்த்தாக் குழுவின் கீழ் இங்கிலாந்து, ஆசுத்திரேலியா, நியூசிலாந்து ஆகிய நாடுகளின் கூட்டு மேற்பார்வையில் இத்தீவு இருந்தது. இத்தீவின் மக்கள்தொகை 1940-ஆம் ஆண்டு 3460. இத்தீவு ஏறத்தாழ 20.7 ச. கி.மீ.பரப்பளவைக் கொண்டது. 3460 பேர்களுள், ஐரோப்பியர்கள் 171 பேர்கள், சீனமக்கள் 1,512 பேர்கள்.

நௌருத்தீவு கடற்கரைத் தீவுகளுக்கு அருகில் அமைந்துள்ளது. கடற்கரைத் தீவுகளிலும் நௌருத்தீவுகளிலும், பிசித் தீவுகளோடும் ஆசுத்திரேலியாவோடும் செய்தித் தொடர்பு கொள்வதற்காகக் கம்பியில்லாச்

செய்தி நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. கடற்கரைத் தீவுகள், கில்பர்ட்டுத் தீவுகள் போல் அல்லாமல், நௌருத் தீவு உயரமான பகுதியில் அமைந்துள்ளது. எரிமலை இருக்கும் காரணத்தினால் இப்பகுதி உயரமாக்கப்பட்டுள்ளது என்று எண்ணப்படுகிறது. கடற்கரைத் தீவுகள்1901-இல் இங்கிலாந்தினால் தன் நாட்டுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

இத்தீவில் மிகுந்த அளவில் உயர்ந்த எரியகிப் (Phosphate) படிவங்கள் கிடைக்கின்றன. 20 - ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இந்தப் படிவங்கள் இங்கிலாந்து நாட்டின் நலனுக்காகவே பயன்படுத்தப்பட்டன. மண்ணியற் கூறுகளும், தட்பவெப்ப நிலைகளும் சிறப்பாக உள்ளபடியால் நௌருத் தீவு, மகிழ்ச்சித் தீவு என்று உரைக்கப்படுகிறது.

நௌருத் தீவு பசிபிக்குப் பெருங்கடலிலிருந்து 56 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. நில நடுக் கோட்டுப்பகுதியிலிருந்து 1670 கிழக்கில் அமைந்துள்ளது. இதன் மக்கள் தொகை 8,421(1982).

கு.இரா.

**ப** இரு உதடுகளையும் அழுத்திப் பின் இலேசாகத் திறந்து ஒலியை வெளிப்படுத்தினால் 'ப்' என்னும் ஒலியும், நன்றாகத் திறந்து ஒலித்தால் 'ப' என்னும் ஒலியும் வெளிப்படும். வடமொழியிலும்பிராகிருதத்திலும் பகர ஒலி வேறுபாடுகளைக் காட்ட வெவ்வேறு ஒலியன்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், தமிழில் மற்ற எழுத்துகளுக்கு அமைந்ததைப் போல் பகரம் ஒன்றே அந்தஒலியன்களுக்கு மாற்றாக அமைந்திருக்கின்றது. எனவே, அவ்வொலிகள் உள்ள சொற்கள் வேற்றுமொழியிலிருந்து வந்தால் பகரமே செயற்படுகிறது.

**பொருள்:** ஓரெழுத்தாக இது இசைமரபில் பஞ்சமம் எனப்படும் இளி என்ற சுர நிலையினைக் குறிக்கப் பயன்படும். வட்டெழுத்திலும் இதே நிலை; அடி தட்டையாக இல்லாமல் வளைவாகவே நின்றது. ஒரு சிறு கொக்கி கி.பி. 11 – ஆம் நூற்றாண்டில் முதலில் சேர்க்கப்பட்டது. அதுவே நிலைத்தது.

**உருவம்:** ஒரு நேர்கோட்டில் (மேலிருந்து கீழ் நோக்கி) ஒரு வளைவான மேல் நோக்கிய கோடு இணைக்கப்படும் அமைப்பு கி.மு. 3 – ஆம் நூற்றாண்டிலிருந்து காணப்படும் மிகப் பழைய உருவமாக உள்ளது. அவ்வுருவமே இந்தியா முழுதும் தமிழ்நாட்டுக் குகைகளில் உள்ள தமிழ்க் கல்வெட்டுகள் உட்பட எல்லாக் கல்வெட்டுகளிலும் காணப்படுகின்றது. இவ்வுருவம் கி.பி. 3 – ஆம் நூற்றாண்டின் இடைவரை மாறவில்லை.... ... ...

முதன்முதலில் ஏறக்குறைய கி.பி. 3 – ஆம் நூற்றாண்டின் இடையில் எழுதப்பட்டதாகக் கருதக்கூடிய அரச்சலூர்க் கல்வெட்டில் இப்பகரத்தின் கீழ் வளைவு மேல் நோக்கிச் சென்று இருகோடுகளும் குறுகிச் சமநிலை அடைந்தன.... ...

பிற்காலத்தில் அடிப்பாகம் வளைவு இல்லாமல் தட்டை ஆகவும் ஒருகால் வளைவுடனும் எழுதப்பட்டு இன்றைய நிலையை அடைந்துவிட்டது.... ...

கே.ஜி.கி.

***பக்கர் இலக்கியம்:*** இது, மராட்டியர்களின் வீரதீரச் செயல்களை வெளிக்காட்டும் இலக்கியமாகும். 'கபர்' என்ற அரபிச் சொல்லுக்குச் செய்தி, அறிய வைத்தல் முதலிய பொருள்கள் உள.இச்சொல்லின் எழுத்துகள் இடம் பெயர்ந்து (Metathesis) பகர் (பக்கர்) ஆகியது என்பர். இசுலாமியர்களின் தொடர்பால், அவர்களுடைய வரலாற்று இலக்கியமான 'தவாரிகா' வைப் பார்த்து மராட்டியர்களும், 'பக்கர்' இலக்கியத்தைப் படைக்க முனைந்தனர் என்பது மற்றொரு செய்தி. எனினும், வி.கா. இராச வாடே போன்ற வரலாற்று அறிஞர்கள், 'பக்' என்பதற்குப் பகர்தல், பேசுதல் ஆகிய பொருளைக் கொண்டு, வாய்மொழியாக வழங்கப்பட்ட வரலாற்றுச் செய்திகள், பின்னாளில் எழுத்து வடிவம் பெற்றபோது 'பக்கர்' இலக்கியமாயின என்பர். ஆக, மகாராட்டிரத்து முன்னாளில் நிகழ்ந்த தனிமனிதனின் வீரதீரச் செயல்களை அல்லது ஒரு காலக் கட்டத்தில் நிகழ்ந்த வரலாற்றுச் செய்திகளை உரைநடைவழியாகத் தெரிவிப்பது 'பக்கர்' இலக்கியமாகும்.செய்திகள் வரலாற்றுத் தொடர்பானவையே எனினும், இலக்கிய

நயத்துடன் வெளியிடப்படுவதால், இதனைத் தமிழில் 'வரலாற்று இலக்கியம்' எனலாம்.

இப்போது கிடைப்பனவற்றுள் '96 பத்தி பக்கர்' என்பதே பழமையானது என்பார் வி.ல.பாவே. எனினும், பிற்காலத்தில் எழுத்துவடிவம் பெற்ற 'சாலிவாகன் பக்கர்' மிக நீண்ட காலமாகவே வாய்மொழியாக வழங்கப்பட்டிருப்பதால் அதனைக் காலத்தால் முந்தியது எனலாம்.

பக்கர் இலக்கியத்திற்குப் பெயர் வைக்கும் முறை பெரும்பாலும் பிற்காலத்தே நிகழ்ந்ததொன்றாகும். ஒரு சில தவிர, ஏனைய பக்கர் இலக்கியங்கள் பெயரின்றியே எழுதப்பட்டுள்ளன. இதனைப் படியெடுப்பவரோ பதிப்பித்து வெளியிடுபவரோதான் அதனதன் செய்திக்கேற்பப் பெயரிடுகின்றனர்.

பக்கர் இலக்கியத்தைப் பொதுவாக மூவகைப் படுத்தலாம். 1) வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு தனி மனிதனின் வீரதீரச் செயல்களை அல்லது ஒரு காலக்கட்டத்தில்நிகழ்ந்தநிகழ்வுகளைச் சொல்லுவது. இதனை இரு பிரிவாகக் கூறலாம். ஒன்று, எழுதுபவர் தம் சமகால நிகழ்வுகளைக் கூறுவது. மற்றொன்று எழுதுபவர் தமக்கு முற்பட்ட கால நிகழ்வுகளைச் செவி வழிச் செய்தியாகவோ நினைவுக் குறிப்பிலிருந்தோ நாட்டுப்புறப் பாடல்களிலிருந்தோ பிற சான்றுகளின் உதவிகொண்டோ அறிந்து கூறுவது. சான்று: சபாசத் பக்கர் (வீர சிவாசியின் வரலாற்றைக் கூறுவது).

2) பக்கர் என்ற தலைப்புக் கொடுக்கப்படாவிடினும், வரலாற்று நிகழ்வுகளைச் சரிதை, சுயசரிதை, கைபியத்து வீரக்கதை முதலியவாறாகக் கூறுவது. சான்று: பாவு சாயேப்பின் கைபியத்து, ஆங்கிலேயரின் கதை, போசலே வமிச சரித்திரம் (தஞ்சைப்பெரிய கோயிலிலுள்ள மராட்டியக் கல்வெட்டு).

3) வரலாறு அல்லது அரசியற் செய்திகளைக் கூறாவிடினும், 'பக்கர்' என்ற பெயர் தாங்கிவந்தவை. இவற்றில் ஒரு குறிப்பிட்ட சமயத்தைப் பற்றியோ புராணக் கதைகளைப் பற்றியோ மாய மந்திர வித்தைகளைப் பற்றியோ சொல்லப்பட்டிருக்கும். சான்று: சமர்த்தரின் பக்கர், கிருட்டிண பிறப்புக்கதை பக்கர்.

இரா.வி.கோ.

**துணை நூல்கள்:**

**இரகுநாத விநாயக கேர்வாட்கர்,**-மராட்டி பக்கர் (மராட்டி) வீனசு பிரகாசன், புனே, 1957.

**கிராமோபாத்யே, க.ப.,** பக்கர் இலக்கியம் (மராட்டி) மராட்டி இலக்கிய வரலாறு, தொகுதி – 3, மகாராட்டிர சாகித்திய பரிசத்து, 1983.

**பக்கிங்காம் அரண்மனை:** இங்கிலாந்து நாட்டில் இலண்டன் மாநகரில் உள்ள மன்னர் அரண்மனை. இது புனித சேம்சு பூங்காவிற்கு நேர் எதிரில் அமைந்துள்ளது. இவ்விடம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் பக்கிங்காம் வீடு எனக் கூறப்பட்டது. முதலாம் பக்கிங்காம் கோமகன் (Duke of Buckingham I) என்ற பிரபுக்காக இது, கி.பி.1703-இல் கட்டப்பெற்றது. இக்கட்டடத்தை கி.பி.1761-இல் மன்னர் மூன்றாம் சார்சு (George III) 28,000 பவுனுக்கு வாங்கினார். பிறகு, புனித சேம்சுஅரண்மனையில்அதுவரை வாழ்ந்த அவர் குடும்பத்தினர், புதிதாக வாங்கப்பட்ட இந்த இடத்திற்குக் குடிபெயர்ந்தனர். சான் நாசு (John Nash) என்னும் பொறியியல் வல்லுநரின் புதிய அமைப்பு முறையில், கி.பி.1825 க்கும் 1836 க்கு மிடைப்பட்ட காலத்தில், அரண்மனை புதுப்பிக்கப்



பக்கிங்காம் அரண்மனை

பட்டது. பிறகு இதற்குப் பக்கிங்காம் அரண்மனை (Buckingham Palace) என்னும் பெயர் ஏற்பட்டது. மன்னர் நான்காம் வில்லியம் (கி.பி. 1830-1837) இப்புதிய கட்டடத்தை விரும்பவில்லை; ஆதலால் அங்கு வாழவில்லை. ஆனால், பிறகு ஆட்சிக்கு வந்த விக்டோரியா மகாராணியார் (கி.பி. 1837-1901) பட்டத்திற்கு வந்தவுடனேயே இம்மாளிகையைத் தமது இருப்பிடமாக்கிக் கொண்டார். சிறிது சிறிதாக இக்கட்டடம் விரிவாக்கப்பெற்றது. பல புதிய பகுதிகள் கட்டப்பெற்றன. 1,50,000 பவுன்கள் செலவில், கி.பி. 1846-இல் இக்கட்டடம் புதுப்பொலிவைப் பெற்றது. இப்பொழுது இக்கட்டடத்தில் அரியணை அறை, நூலகம், பெரும் நுழைவாயில்கள், படக் காட்சிச் சாலை, சிற்பச் சிறப்புகள், மண்டபம் முதலியன உட்பட்ட பல கண்கவர் பகுதிகள் காட்சி அளிக்கின்றன, இம்மாளிகையின் பரப்பு நாற்பது ஏக்கர்கள்.

தெ.பா.

***பக்கிங்காம் கால்வாய்***: ஆந்திராவிலுள்ள மசூலிப்பட்டினத்தில் தொடங்கித் தமிழகத்தில் தென்னார்க்காடு மாவட்டத்தில் மரக்காணத்தில் முடிவடையும் இக்கால்வாய் ஏறத்தாழ 450 கி.மீ. நீளமுள்ளது. தமிழகத்தில் இக்கால்வாயின் பெரும்பகுதி செங்கற்பட்டு மாவட்டத்தில்தான் உள்ளது.

சென்னை மாகாணத்தில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் கொச்ரேன்(Cochrane)மற்றும் தென் கடற்கரைக் கால்வாய்கள் இருந்தன. கொச்ரேன் கால்வாய் கூவத்திலிருந்து வடக்காகத் துரகரசப்பட்டினம் வரையிலும், தென் கடற்கரைக் கால்வாய் செங்கற்பட்டு மாவட்டத்தில் பாப்பன் சாவடியிலிருந்து தெற்காகச் சதுரங்கப் பட்டினம் அருகில் பாலாறு ஆற்றின் கழிமுகம் வரையிலும் ஓடின. அக்காலத்திலேயே இக்கால்வாய்கள் வழியாக மரப்பொருள்களும் விறகுகளும், மீன் உணவு வகைகளும் படகில் ஏற்றிக் கொண்டு செல்லப்பட்டன. கொச்ரேன் கால்வாய் அவ்வப்பொழுது வடக்காக மேலும் மேலும் வெட்டப்பட்டு, கிருட்டிணா மாவட்டத்தில் பெடகஞ்சம் வரையில் நீடிக்கப்பட்டுக் கிருட்டிணா ஆற்றுச் சமவெளியில் கொம்மமொர் கால்வாயுடன் இணைக்கப்பட்டது. அதே போன்று தென் கடற்கரைக் கால்வாய் தெற்காகத் தென்னார்க்காடு மாவட்டத்தில் மரக்காணம் வரையில் விரிவாக்கப்பட்டது.

சென்னை மாகாண ஆளுநர், பக்கிங்காமின் நிருவாகக் காலத்தில் மேற்கூறப்பட்ட இரு கால்வாய்களும் 8கி.மீ. தூரம் வெட்டப்பட்ட ஒரு புதிய கால்வாயால் இணைக்கப்பட்டன. அந்தப் புதிய கால்வாயை வெட்டும் பணி கி.பி. 1876-78-ஆம் ஆண்டில் பஞ்ச நிவாரண வேலைகளிணைந்த ஒரு பணியாயிற்று. இது சென்னை நகரில் கூவத்திலிருந்து திருவல்லிக் கேணி, மைலாப்பூர் வழியாக அடையாறு ஆறுவரையில் நீடித்தது. இது பக்கிங்காம் கால்வாய் (Bucking ham canal) எனப்பட்டது. இணைக்கப்பட்ட இரு கால்வாய்களையும் சேர்த்துப் பக்கிங்காம் கால்வாய் என்று கூறப்பட்டது. அதனால் கோதாவரி, கிருட்டிணாச் சமவெளிகள், பக்கிங்காம் கால்வாய் ஆகியவற்றின் மூலமாகத் தெற்கில் மரக்காணத்திலிருந்து வடக்கில் காக்கிநாடா வரையில் ஏறக்குறைய 740 கி.மீ. தூரத்திற்கு மக்கள் போக்குவரத்திற்கு வசதி ஏற்பட்டது.

தமிழகத்தில் ஏறக்குறைய-1955-ஆம் ஆண்டு வரையில் பக்கிங்காம் கால்வாய், செங்கற்பட்டு மாவட்டத்தின் கடற்கரையோரக் கிராமங்களுக்கு மிகவும் வசதியான நீர்ப்போக்குவரத்தாக இருந்தது. சவுக்குக் கட்டை, தென்னை, மரப்பொருள்கள், கிளிஞ்சல், சுண்ணாம்பு, உப்பு மற்றும் வேளாண்மைப்பொருள்களைப் படகில் ஏற்றிக்கொண்டு சென்றார்கள். சென்னையிலிருந்து மகாபலிபுரம் செல்லும் மக்களும் அப்போது இக்கால்வாய் மூலம் படகில் சென்றனர். இக்கால்வாய் கடற்கரை ஓரமாகவே சென்றதால் மக்களுக்கு இப்பயணம் மகிழ்ச்சியூட்டுவதாக விளங்கியது. அப்பயணத்திற்கெனப் படகுத்துறைகள்,பலகை வாராவதி ஆமில்டன்பாலம்,எண்ணூர்,மூலக்கொத்தளம், கத்திவாக்கம் ஆகிய இடங்களில் இருந்தன. ஆனால், நாளடைவில் இக்கால்வாயில் நீர்வரத்துக் குன்றி, நகரின் சாக்கடைகளும் தொழிற்சாலைக் கழிவுகளும் கலந்தமையால் இது போக்குவரத்துக்குப் பயனற்றதாகிவிட்டது. இப்பொழுது, சென்னை மாநகரைச் சுத்தமாகவைத்திருக்கும் திட்டத்தின் ஒரு பகுதியாகப் பக்கிங்காம் கால்வாயைச் சுத்தப்படுத்தி, அதில் எப்பொழுதும் நீர் இருக்கும்படியான திட்டம் ஒன்றை மத்திய அரசு அங்கீகரித்துள்ளது. சி.கே.சி.

**துணை நூல்:**

Srinivasachari, C.S., History of the city of Madras, P. Varadachary & Co., Madras, 1939.

***பக்கிங்காம் சயர்***: இங்கிலாந்தின் ஒரு பகுதியான பக்கிங்காம் சயர் (Buckingham Shire) 1950 ச.கி.மீ. பரப்பளவு கொண்டது. 1878 ச.கிலோ மீட்டர் அகன்ற பகுதியினுள், தாழ்ந்த நிலக்கரையிலுள்ள ஊசு (Ouse) பள்ளத்தாக்கு, தேம்சு பள்ளத்தாக்கு முதலியனவும் மேடான பகுதியிலுள்ள சாக்சில்ட்ரன் குன்றுகள் (தெற்கிலும் மேற்கிலும்) காட்சுவால்ட்டு குன்றுகள் (மேற்கில்) முதலியனவும் உள்ளன. பூமியின் அமைப்பியல் அடிப்படையில் புதிதாகத் தோன்றிய களிமண்பரப்பு பைசெசுடர் நகரத்திற்கும், பெட்போர்டு நகரத்திற்கும் இடையேயுள்ள பரப்பை, நெல் விளைச்சலுக்கும் வேட்டையாடுதலுக்கும் ஏற்றதாக்கியது. சில்ட்ரனின் சிகரம் தென்மேற்கிலிருந்து வடகிழக்குப்பகுதி வரை குறுக்காகச் செல்வதால், தெற்குப்பகுதியில், ஆங்காங்கே சாக்குக்கட்டிக்குன்றுகள் காணப்படுகின்றன. தென்பகுதியின் உயர்ந்த நிலப்பரப்பில் சரளைக்கற்கள் நிறைந்துள்ளன. வடநிலப்பகுதியை, வேளாண்மைக்கு ஏற்பப் பலதரப்பட்டதாக, அங்கு நிறைந்துள்ள களிமண்ணும் சரளைக்கற்களும் மாற்றியமைத்துள்ளன. அதன் தாழ்ந்த பகுதிகளில் சிறப்பாக நகரின் மையப்பகுதியில் உள்ள அயிலசுபரி பள்ளத்தாக்கில் உள்ள மண்வளம் மிகச்சிறந்த செழிப்புள்ளது.

பழைய கற்காலத்திலிருந்த மனிதன் குடியேற்றம் அங்கு ஏற்பட்டது. சில்ட்ரனின் மேற்பகுதி புதிய கற்கால, தொடக்கக் கால, இரும்புக்கால மனிதர்களின் இருப்பிடமாக இருந்தது. அயில்சுபரி பள்ளத்

தாக்கில் உரோமானியர் காலத்திற்கு முன்பே குடியேற்றம் அமைந்தது.மேற்குச் சாக்சானியர்கள், ஏறத்தாழகி.பி.570-இல் இப்பரப்பினை அடைந்து தங்கள் குடியேற்றத்தினை ஏற்படுத்தினர். பின்பு இப்பகுதி மர்சியாவின் ஒரு பகுதியாகியது மர்சியா பிரிட்டனின் ஏழு ஆங்கிலேய சாக்சானிய அரசுகளில் ஒன்று. இக்காலக் கட்டத்தில் தென்மார்க்கு தேசத்தவர்களுக்கு எதிராகப்பல போராட்டங்கள் நடைபெற்றன. இப்போராட்டங்கள் கி.பி.6-ஆம் நூற்றாண்டிலிருந்துகி.பி. 10-ஆம் நூற்றாண்டு வரை நடைபெற்றன.அயில்சுபரிப் பள்ளத்தாக்கு, செல்வம் நிறைந்த நன்கு பாதுகாப்புடன் கூடிய சாக்சானியக் குடியேற்றம் என்பதற்கான அறிகுறிகள் உள்ளன. அடர்ந்த காட்டுப்பகுதி ஒன்று கி.பி.11 – ஆம் நூற்றாண்டில் சீராக்கப்பட்டது. முடிவில் பிரிட்டன் பேரரசர் முதலாம் சேம்சு காலத்தில் கி.பி.1603–ஆம் ஆண்டிலிருந்து கி.பி. 1625-ஆம் ஆண்டு வரை காடுகள் அழிக்கப்பட்டன. நிருவாகத்திற்காகத் தென்மார்க்கிடம் அவர்கள் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தன. பின் அவர்களிடமிருந்து திரும்பப் பெறப்பட்ட நூறு பகுதிகளை ஒன்றாக இணைத்துப் பக்கிங்காம் சயர் அமைக்கப்பட்டது.

முதலாம் வில்லியத்தின் ஆணைப்படி ஆக்கப்பட்ட நில அளவுப்பதிவுப்புத்தகம் 'தூம்சுடே' புத்தகம் ஆகும். அப்புத்தகக் காலத்தில் (கி.பி.1086) பக்கிங்காம் ஒரு முதன்மை நகரமாக விளங்கியது. அதே காலத்தில் அயில்சுபரியில் உள்ள கிறித்தவத் தேவாலயம் முதன்மைச் சமய நிலையமாக மாறத் தொடங்கியது. சயர் இலண்டனுடன் கொண்டுள்ள நெருக்கத்தின் காரணமாகப் பல தேசிய நிகழ்ச்சிகளில் தொடர்புடையதாக விளங்குகிறது.

ஐரோப்பாவினை கி.பி.1348 முதல் 1350 வரைவருத்திய கொள்ளை நோய், இந்நகரத்தினையும் பாதித்தது. கி.பி. 17 – ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் இங்கிலாந்தில் ஏற்பட்ட உள்நாட்டுப்போரில் பக்கிங்காம் சயர்தான், முதன் முதலில் ஆட்சியினை ஆதரிப்பவர்களுக்கு எதிராகப் பாராளுமன்றத்துடன் சேர்ந்துகொண்டது. கிளைவுடன் ஏம்டன் முதலியன அங்குள்ள புகழ் வாய்ந்த பண்ணைகளாகும்.

பக்கிங்காம் சயரின் பெரும்பகுதி புல்தரையாக அமைந்தபோதிலும், அங்குப் பயிர் செய்வதற்கேற்ற நிலப்பகுதியும் கணிசமான அளவில் இருந்தது. அங்குப் பயிரிடப்பட்ட முக்கிய பயிர்களாவன பார்லி, கோதுமை முதலியன. ஆடு, மாடு, பன்றி வளர்த்தல், கோழிப்பண்ணை அமைத்தல் முதலியன குறிப்பிடத்தக்க தொழில்களாகும். சு.ப.

**பக்கிங்காம் பிரபு (கி.பி.1592 – 1628)** இங்கிலாந்து நாட்டின் சிறந்த அரசியல்வாதியும் படைத்தலைவரும் ஆவார். பக்கிங்காம் பிரபுவின் உண்மைப் பெயர் சார்சு வில்லியர்சு (George Villiers) என்பதாகும். இங்கிலாந்து மன்னரான முதலாம் சேம்சின் அன்பைப் பெற்றதுடன் அவர் ஆதரவால் பக்கிங்காம் பிரபு என்ற பட்டத்தையும் இவர் பெற்றார். பேரழகும் கவர்ச்சியும் கொண்ட இவர் ஆபட்டு (Abot), இலாடு (Laud), பேக்கன் பிரபு (Bacon) போன்ற நல்ல, பல பெரிய மனிதர்களின் நண்பராகவும் சிறந்த போர் வீரராகவும் திகழ்ந்தார்.

சாமர்செட்டு பிரபுவிற்குப் பின் முதலாம்சேம்சின் அமைச்சரானார். இவர் அமைச்சரானதும் இசுபெயினுக்கு விரோதமாக ஏதாவது செய்யவேண்டுமென்ற எண்ணத்தால் உந்தப்பட்டுச் சேம்சைத் தூண்டி, சர் வால்டர் – ராலேயைச் சிறையிலிருந்து விடுவித்துக் குடியேற்ற நாடுகளின் மீது அவரை ஏவிவிட்டார். இராலேயைச் சிரச்சேதம் செய்யவும் பக்கிங்காம் காரணமாயிருந்தார் எனக் கூறுவதில் தவறொன்றுமில்லை.

கி.பி.1625 – இல் ஆட்சிக்கு வந்த முதலாம் சார்லசு, பக்கிங்காமின் கைப்பாவையாக விளங்கினார்; பக்கிங்காம் மீது அளவு கடந்த நம்பிக்கை வைத்திருந்ததால் அவர் ஆட்டியபடியெல்லாம் ஆடினார். சுருங்கக்கூறின் பக்கிங்காமே உண்மையான அரசராகச் செயற்பட்டார் எனலாம். இசுபெயின் நாட்டுப் பகை ஒருபுறமிருக்க, பிரான்சு நாட்டுடன் தொடர்பு கொண்டு, கத்தோலிக்க இளவரசியான என்றியாட்டா மரியாவை (Henrietta Maria) இங்கிலாந்து மன்னரான முதலாம் சார்லசுக்கு மணம் முடித்து வைத்துச் சார்லசின் சமயக் கொள்கையில் பெருஞ்சிக்கலை ஏற்படுத்தினார். அதனால், இங்கிலாந்து மக்களின் வெறுப்பையும் பக்கிங்காம் தேடிக் கொண்டார்.

சார்லசின் இரண்டாம் பாராளுமன்றம் கி.பி. 1626 இல்-கூடியபோது பக்கிங்காம் மீது அது அரசியல் துரோகக் குற்றம் சாட்டியது. காடிசு முற்றுகையின் தோல்விக்கும் நாட்டைப் பிடித்த எல்லாத் தீமைகளுக்கும், பக்கிங்காமே காரணம் எனக் குற்றம் சாட்டிய எலியட்டு (Eliot) என்பார், இவரை 'மன்னரின் கருவூலத்தில் நெளியும்கனிப்புழு' என்றும், 'நாட்டின் நலத்தை அரிக்கும் கறையான்' என்றும் குறிப்பிட்டார். சார்லசு கோபத்தால் பாராளுமன்றத்தைக் கலைக்க நேரிட்டது. முதலாம் சார்லசு ஒரு படையைப் பக்கிங்காம் தலைமையில் இசுபெயினுக்கு அனுப்ப ஏற்பாடு செய்த போது, அப்படையினைத் தணிக்கை பார்ப்பதில் தம் முழுக் கவனத்தையும் செலுத்திக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் பெல்டன் என்னும் பகைவன் ஒருவன், பக்கிங்காம் பிரபுவைக் கத்தியால் குத்திக் கொன்று விட்டான். பக்

கிங்காம் கி.பி.1628-இல் கொலை செய்யப்பட்டதை அறிந்த இலண்டன் மக்கள் 'கொலை செய்தவன் ஒரு தியாகி; அவன் வாழ்க' என வாழ்த்தி மகிழ்ச்சியால் கூத்தாடினார்கள். கோயில்களில் மணிகள் ஒலித்தன. ஆனால்,சார்லசு அந்நாட்டு மக்களை மறக்கவுமில்லை; மன்னிக்கவுமில்லை.

**பக்கிங்காம் (கி.பி. 1823 – 1889):** இவரது இயற்பெயர் இரிச்சர்டு கிரென்வில்லி ஆகும். இவர் கி.பி. 1846 முதல் 1857 முடியப் பாராளுமன்ற உறுப்பினராகப் பணிபுரிந்தார். இவர் தம் தந்தை கி.பி. 1861 -இல் இறந்ததும் பக்கிங்காம் கோமகனாகி அவைத் தலைவர் (Lord President of the Council) ஆனார். இவர் கி.பி. 1875 முதல் 1880 முடியச் சென்னை மாநில ஆளுநராக இருந்தார். சென்னையில் வெட்டப்பட்ட(1876 – 78)கால்வாய் பக்கிங்காம் கால்வாய் என இவர் பெயர் கொண்டு விளங்குகிறது. க.பூ.சி.

**துணை நூல்:**

Mahajan V.D., England Since 1485, Chand Publications, New Delhi 1965.

**பக்கீர் மோகன் சேனாபதி (கி.பி. 1843-1918):** ஒரிய இலக்கியம் கி.பி. 1866-ஆம் ஆண்டு தொடங்கி மறுமலர்ச்சி பெறத் தொடங்கியது. பக்கீர் மோகன் சேனாபதி, (Fakir Mohan Senapathi) இராதா நந்தரே, மதுசூதன ராவ் என்ற முப்பெரும் படைப்பாளியர், அம்மொழி இலக்கிய மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர்கள் எனப் போற்றப் பெறுகின்றனர். அவர்களுள் மூத்தவர் பக்கீர், இளையவர் மதுசூதன ராவ்.

ஒரிசா மாநிலத்தில் பாலசோர் என்ற துறைமுகப்பட்டினத்தில் கி.பி. 1843-இல் பிறந்து $1\frac{1}{2}$ வயதில் பெற்றோரை இழந்து அநாதையாகிப் பாட்டியாரால் வளர்க்கப் பெற்ற பக்கீர் தொடக்கநிலைக் கல்விகூட முழுமையாகப் பெறவில்லை. ஆனாலும், தேசியவாதியாகவும், மனிதாபிமானியாகவும் திகழ்ந்த பக்கீர் தம் கடுமையான உழைப்பாலும், சிறந்த படைப்பாக்கத் திறனாலும் ஒரிய இலக்கியத்திற்குப் பெரிதும் வளம் உண்டாக்கினார்.

இவர், கவிஞர், புதினஆசிரியர், நிருவாகி, அறிஞர், சீர்திருத்தவாதி, அச்சுத்தொழில் வல்லுநர், பத்திரிகையாளர், வணிகர், நாட்டுப் பற்றாளர் என்று பல்துறை வல்லுநராய்த் தம்மை உருவாக்கிக் கொண்டவர். ஒரிசா மாநிலத்தில் இவர்முதல் முதலாக அச்சுப் பதிப்பகம் வைத்துப் புரட்சி செய்தவர். இவரது தேர்ந்த நிருவாகத் திறன் கண்ட ஆங்கிலேயர் இவரை ஒரிசாவில் பல சமசுதானங்களுக்குத் 'திவானாக' நியமனம் செய்தது குறிக்கத்தக்கது.

**பக்கீரின் படைப்புகள்:** எழுபத்தைந்து வயது வரை வாழ்ந்து ஒரிய மொழிக்கும் இலக்கியத்திற்கும் பெருந்தொண்டாற்றிய பக்கீர் கடைசிக் காலத்தில் 'ஆத்ம சரித்திர' என்ற தம் வாழ்க்கை வரலாற்று நூலை எழுதவில்லை என்றால் இவர் பற்றிய சிறப்புச் செய்திகள் பல காலப் போக்கில் மறைந்திருக்கும். இந்தியத் தன் வரலாற்று இலக்கியங்களில் 'ஆத்ம சரித்திரத்'திற்குத் தனியிடம் உண்டு.

இவர் பள்ளிச் சிறுவர்களுக்காகத் தாய்மொழியில் இந்திய சரித்திரம் இரண்டு தொகுதிகள், கணித நூல் ஆகியவற்றை எழுதினார்.

'உத்கல பிரமணம்' என்ற கவிதை நூல் கி.பி. 1892-இல் வெளிவந்தது. சமகால ஒரிய சமுதாயத்தில் தாம் கண்ட பெரியவர்களைப் பற்றி நகைச்சுவை படவும் வெளிப்படையாகவும் எழுதிய நூல் இது. 'புட்பமாலா', 'அபசர்பசரே', 'பூசா பூலா', 'பிரார்த்தனா', 'துளி' போன்றவை குறிக்கத்தக்க கவிதைத் தொகுதிகள். அவ்வப்போது பத்திரிகைகளுக்குச் சிறுகதைகள் எழுதினார் பக்கீர். 'இலச்மானியா', 'ஆனந்தா' போன்ற சிறுகதைகள் அவர் வாழ்ந்த சமுதாயத்தின் வெளிப்பாடுகள். 'சாமன அதாகுந்தா' (ஆறு ஏக்கர், எட்டு தசமங்கள்) என்ற புதினம் ஒரியப்புதின இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுள்ளது. 'பிராயச் சித்தா' 'மாமு' என்பவை சமூகப் புதினங்கள். 'இலச்சம்மா' என்ற வரலாற்றுப் புதினமும் குறிக்கத்தக்கது. பக்கீரின் புதினங்கள் மிக உயர்ந்த தத்துவப் பார்வை கொண்டவை. பக்கீர், மக்களின் பேச்சு மொழியை இலக்கியப் படைப்பிற்குப் பயன்படுத்தித் தம்மை மக்கள் இலக்கியப் படைப்பாளராக வெளிப்படுத்திக் கொண்டவர். தாமசு ஆர்டியைப் போல ஒரிய நாட்டுப்புற வாழ்வினைத் தம் படைப்புகளில் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

நிறுவனங்கள் செய்யக்கூடிய மாபெரும் இலக்கியப் பணி ஒன்றனைத் தனி ஒருவராகச் செய்து முடித்த பெருமைக்குரியவர் பக்கீர். இராமாயணம் மகாபாரதம் இரண்டையும் ஒரிய மொழியில் மொழி பெயர்த்துள்ளார். பகவத் கீதை, சாந்தோக்கிய உபநிடதம், அரி வமிசம் போன்றவற்றையும் மொழி பெயர்த்திருக்கிறார். ஒரிய மக்கள் இவரை 'வியாச கவி' எனப் பாராட்டினர். பாமந்தா சமசுதானம் இவருக்குச் 'சரசுவதி' என்ற சிறப்பு விருதினை அளித்துப் பெருமை கொண்டது. 'உத்கல் சம்மிலானி'க்குத் தலைவராகவும் இவர்தேர்ந்தெடுக்கப்பட்டார். பக்கீர் மோகன் சேனாபதி 1918-இல் மறைந்தார். தி.லீ.

**பக்குடுக்கை நன்கணியார்,** சங்க காலப் புலவர்களுள் ஒருவர். நன்கணியார் என்பது இப்புல

வரின் இயற்பெயர். இவர் பக்குடுக்கைஎன்னும் ஊரில் பிறந்தவர் ஆதலால் 'பக்குடுக்கைநன்கணியார்' என்று குறிப்பிடப் பெற்றார் என்பர். பக்கு, உடுக்கை என்று பிரித்துப பொருள் கூறுவாரும் உளர். பக்கு என்றால் பை; உடுக்கை என்றால் உடை.இப்புலவர் பையையே உடையாக உடுத்ததனால் 'பக்குடுக்கை நன்கணியார்' என்று பெயர் பெற்றார் என்றும் கூறுவர்.

ஒருவர் உடுப்பவை இரண்டு. அவ்வாறிருந்தும் இவர் ஒன்றையே உடுத்தவர் என்பதனால் இவரை ஒரு சிறந்தஞானி என்று கருதுவர்; முற்றும் துறந்த முனிவர் என்று இவரைக்குறிப்பிடுவர் அறிஞர்.'கணி' என்றால் சோதிடன் என்று பொருள் கொண்டு, நல்ல கணி என்னும் பொருளில் நன்கணியார் என்ற பெயர் அமைந்தது என்றும் சிலர் கூறுவர். எனவே, இவர் கோள்களின் இயக்கங்களைக் கணித்துக் கூறும் அறிஞராகத் திகழ்ந்தவர் என்று கொள்ளவும் இடமுண்டு.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே உலக உண்மைகளை உலகுக்கு எடுத்துரைத்தவர் பக்குடுக்கை நன்கணியார். இவர் பாடிய பாடற் பொருள் வருமாறு.

'ஓர் இல்லத்தில் துன்ப உணர்வைத் தரும் பிணப் பறையாகிய நெய்தல் ஓசை முழங்குகிறது; மற்றோர் இல்லத்தில் மகிழ்ச்சியூட்டும் மணப் பறையாகிய இனிய முழவோசை முழங்குகிறது. கணவனோடு கூடி வாழும் கவின்மிகு மகளொருத்தி ஓர் இல்லத்தில் தன் கண்ணிறைந்த கணவனோடு வாழ்கிறோம் என்ற பெருமகிழ்ச்சியில் திளைக்கிறாள். மற்றோர் இல்லத்தில் மங்கை ஒருத்தி தன் கணவனை இழந்த துன்பம் தாங்காமையின் கண்ணீர் பெருக்கி அழுகிறாள்.இந்த இருவேறுபட்டநிலைகளைக்காணும் போது மனம் துன்புறுகிறது. உண்மையில் இது மிகக் கொடுமையானது. இவ்வாறு இருவேறு நிலை இருக்குமாறு படைக்கும் போதே இந்த உலகைப் படைத்தவுன் உருவாக்கினான் என்று கூறினால், அங்ஙனம் படைத்த அவன்அறிவில்லாதவனே ஆவான். ஆனால், படைத்தவன் அவ்வாறு படைக்கவில்லை. வேற்றுமைகளை உண்டாக்கியவரும் அவற்றை வளர்ப்பவரும் நாமே.ஆகவே, உலகின் இயல்பை உணர்ந்த உயர்ந்தவர்கள் இத்தகைய இன்னாமையை அகற்றி, எங்கும் இனிமையே நிலைக்கவழிகாண வேண்டும்.அத்தகைய அரிய முயற்சியில் அவர்கள் ஈடுபடுவாராக' என்று உலக மக்களைப் பார்த்து வேண்டுகின்றார் பக்குடுக்கை நன்கணியார்.

இவர் பாடியுள்ள இப்பாட்டு, புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. பொதுவியல் திணையில் அமைந்த அப்பாடல் (புறம். 194) அது தரும் பொருளால் பெருங்காஞ்சித் துறையில் அமைந்துள்ளது. இவர் பாடியதாகக் கிடைக்கப் பெற்றுள்ளது இந்த ஒரு பாடல்தான். ஆனால், இவர் இத்தகைய பாடல்கள் பலவற்றைப் பாடியிருக்கக் கூடும் என்பதை ஊகிக்க முடிகிறது. மு.த.

**பக்சார்,** வட இந்தியாவில் பீகார் மாநிலத்தில் உள்ளதோர் ஊர். இது அம்மாநிலத்தின் மாவட்டங்களுள் ஒன்றான சாகாபாதில் (Shahabad) அடங்கியதாகும். இந்த ஊர் கங்கையாற்றின் தென் கரையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இந்த ஊர் பாட்னா மாநகரிலிருந்து மேற்கில் 124 கி.மீ. தொலைவிலுள்ளது.

நெல், கோதுமை, எண்ணெய் விதைகள், பார்லி, கரும்பு, போன்ற விளை பொருள்கள் இப்பகுதியில் விளைவு செய்யப்படுகின்றன.

இந்திய வரலாற்றில் பக்சார்ப் போர் சிறப்பானதெனக் கருதப்படுகின்றது. இங்கு கி.பி. 1764-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 23-ஆம் நாள் ஆங்கிலேயருக்கும் மொகலாயருக்குமிடையே போர் மூண்டது. ஆங்கிலப்படைகளுக்கு 'மேசர் எக்டர் மன்ரோ(Major Hector Munroe) என்பார் தலைமை தாங்கினார். மொகலாயப்படைகளுக்கு மீர் காசீம்(Mir Kasim)என்பாரும் அயோத்தி நவாபும் தலைமை தாங்கினர். வரலாற்றில் இப்போர் பெற்ற வெற்றியால் இந்தியாவின் பகுதிகளான வங்காளத்திலும் பீகாரிலும் ஆங்கில ஆட்சி உறுதி செய்யப்பட்டதெனலாம். வங்காள நவாபாக இருந்தவர் மீர் காசிம். அவருக்கு உதவி செய்த அயோத்தி நவாபு சூசா-உத்-தௌலா (Shuja-ud-daula) என்பாரும், மொகலாய மன்னர் இரண்டாம் சா ஆலமும் (Shah Alam II) ஆங்கிலப் படையை எதிர்த்துப் போரிட்டுத் தோல்வியுற்றனர்.

இவ்வூரின் மக்கள் தொகை 1981 – ஆம் ஆண்டுக் கணக்குப்படி ஏறத்தாழ 30000 ஆகும். இரா.அ.

**பக்தவத்சலம் பிள்ளை - திருநின்றவூர்** (கி.பி.1878-1930), மிகச் சிறந்த தமிழ்ப்புலவராவார். இவர் தந்தையார் தேவராசு பிள்ளை. இவர் கருணீக மரபினில் பிறந்தார்; சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் இளங்கலை (பி.ஏ.) படித்தார்; தமிழ் இலக்கியத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார்.

இலக்கிய உலகினுக்குச் சேவை செய்ய வேண்டுமென்னும் ஆர்வமும், தமிழ் மொழியினிடத்து ஆழ்ந்த பற்றும் உடையவராய் இவர் விளங்கினார். மேனாட்டுத் தத்துவம், அறிவியல் போன்ற துறைகளில் காணப்பெறும் உயர்ந்த கருத்துகளைத் தமிழிலும் கொண்டு வரவேண்டும் என்னும் தளரா எண்ணம் கொண்ட இவர் ஆங்கில மொழியினரும்



பக்தவத்சலம் பிள்ளை, திருநின்றவூர்

வியக்கும் வகையில் ஆங்கிலத்தில் சிறந்த பயிற்சி பெற்றிருந்தார். இவரது பேச்சும் செயலும் தமிழின் மூச்சாக இருந்ததை அக்காலத்து அறிஞர்கள் பெரிதும் பாராட்டியுள்ளனர். இவர் எழுத்திலும் பேச்சிலும் தமக்கெனத் தனித்தநடை படைத்தவர்.

தமிழிலும் ஆங்கிலத்திலும் இவர் நாடகம், புதினம்,கட்டுரை,வரலாறு பற்றியநூல்களைப்படைத்துள்ளார். இராமாயணத்தின் கதையமைப்பை ஒட்டிச் 'சீதாகல்யாணம்', 'சுக்ரீவர் ஆக்ஞை', 'இராம பட்டாபிடேகம்' என்னும் மூன்று நாடகநூல்களை மேடைக் கேற்ற வகையில் அமைத்துள்ளார். இவர் 'முக்தமாலா','மனமோகன மாணிக்கம்' என்ற இரு புதினங்களைப் படைத்துள்ளார். கந்தபுராண வரலாற்றினை அடியொற்றி 'முருகன் ஒரு தமிழ்த் தெய்வம்' என்னும் நூலைப் படைத்துள்ளார்.

'இந்திய தேசத்து இணையில்லா மகான்கள்', 'கிருட்டிணசைதன்ய சரிதம்', 'பச்சையப்ப முதலியார் சரிதம்', 'நாராயண வரத்தில் வாழ்ந்த ஒரு பெரியவரின் வரலாறு' ஆகிய நூல்களை எழுதியுள்ளார். 'இந்திய தேசத்து இணையில்லா மகான்கள்' என்னும் தமிழ் நூலினை ஆங்கிலத்தில். Indian Saints, என்ற தலைப்பிலும் எழுதியுள்ளார்.

சென்னை இலயோலாக் கல்லூரித் தொடங்கப் பட்ட நாள்முதல் தம் வாழ்வின் இறுதிவரை தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிய இவர் 1930-ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 23-ஆம் நாள் மறைந்தார்.

செ.ப.

**பக்தவத்சலம், மீ.:** தமிழக விடுதலைப் போராட்ட வீரரும்,முன்னாள் முதல் அமைச்சருமான மீ. பக்தவத்சலம் (மீ. என்பது செங்கற்பட்டு மாவட்டத்து மீஞ்சூரைக் குறிக்கும்), கி.பி. 1897-இல் செங்கற்பட்டு மாவட்டம் நாசரத்துப் பேட்டையில் பிறந்தார். இளம் வயதிலேயே தந்தையை இழந்தமையால் மாமன் சி.என். முத்துரங்கம் என்பவரால் வளர்க்கப் பட்டார். டி.வி. கோபாலசுவாமி என்பவரின் மகளை மணந்தார்.



பக்தவத்சலம். மீ.

**கல்வி:** தொடக்கக் கல்வியினை இவர் பொன்னேரியிலும்,பள்ளிக் கல்வியினை மயிலாப்பூர் பெ.சு. உயர்நிலைப் பள்ளியிலும் கற்றார். இவர் சென்னை மாநிலக் கல்லூரியில் பயின்று பொருளாதாரத்தில் பட்டம் பெற்றார். பின் சென்னைச் சட்டக் கல்லூரியில் சட்டத் துறையில் பட்டம் பெற்றார். இவர் 1922-இல் வழக்கறிஞராகப் பதிவு செய்து, புகழ்பெற்ற வழக்கறிஞர் அல்லாடி கிருட்டிணசாமியிடம் ஓராண்டுப் பயிற்சி வழக்கறிஞராய்ப் பணியாற்றிப் பின்னர்த் தனியே வழக்கறிஞர் தொழிலைத் தொடர்ந்தார்.

இவர் கி.பி. 1927-இல் – சட்டத் தொழிலைத் துறந்தார். சிறிதுகாலம் மோதிலால்நேரு, நேத்தாசி முதலான காங்கிரசு இயக்கத் தலைவர்கள் நடத்திய வணிகக் காப்பீட்டு நிறுவனத்தின் முகவராகப் பணியாற்றினார்.

**அரசியல் வாழ்க்கை:** கல்லூரியில் பயின்ற காலத்திலேயே இவர் அன்னிபெசண்டு அம்மையாரின் தன்னாட்சி இயக்கத்தில் ஆர்வம் கொண்டு பங்கேற்றார். சென்னை மாநிலத்தில் அமைச்சரவைச் செயலாளராக1937-இல் இவரை இராசாசி நியமித்தார். இவர் தம் பொறுப்புகளைச்செவ்வனே நிறைவேற்றினார்.

**விடுதலைப்போரில்:** இந்திய விடுதலைப் போராட்டத்தில் தடையைமீறி 1932-ஆம் ஆண்டு ஊர்வலம் ஒன்றினைத் தலைமை வகித்துச் சென்றமைக்காக ஆறு மாதச் சிறைத் தண்டனை விதிக்கப் பெற்று வேலூரில் வாழ்வின் முதல் சிறைவாசத்தை அனுபவித்தார்.

'தனிப்பட்டோர் அறப்போரில்' 1940-ஆம் ஆண்டு பங்கேற்று ஒன்பது மாதங்கள்சிறைத்தண்டனை பெற்றார். 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தின் போது 1942-ஆம் ஆண்டு இவர் கைதுசெய்யப்பட்டுத் தமிழகத்திற்குத் தொலைவில் இருந்த அம்ரோட்டிச் சிறையில் காமராசர், வி.வி.கிரி ஆகியோருடன் மூன்றாண்டுகளைக் கழித்தார்.

**பதவிப்பொறுப்புகள்:** இவர் காங்கிரசு இயக்கத்தில் தமிழ்நாடு பிரிவின் செயலாளராகவும், துணைத் தலைவராகவும் பணியாற்றியிருக்கிறார். தமிழ்நாடு காங்கிரசுக் குழு, அனைத்திந்தியக் காங்கிரசுக்குழு ஆகியவற்றின் செயற்குழு உறுப்பினராகப் பல ஆண்டுகள் பணியாற்றியிருக்கிறார்.

**பதவிகள்:** இவர் செங்கற்பட்டு நகராட்சியின் துணைத்தலைவராகவும், சென்னை மாநகராட்சியின் துணை மாநகரத் தந்தையாகவும் தேர்ந்தெடுக்கப் பட்டுப் பணியாற்றி உள்ளார். ஓ.பி. இராமசாமியார், குமாரசாமி இராசா, காமராசர் ஆகியோர் அமைச்சரவையில் 1946-இலிருந்து 1963வரை அமைச்சராகவும், 1963 முதல் 1967 வரை முதல் அமைச்சராகவும் ஏறக்குறைய 21 ஆண்டுகள் அமைச்சர் பதவி வகித்துள்ளார்.

இவருடைய முதலமைச்சர் பதவிக் காலத்தில் பல துறைகளிலும் வளர்ச்சிகாணப்பட்டது. ஆயினும் உணவுச் சிக்கலின் விளைவால் இவருடைய அமைச்சரவை தேர்தலில் தோற்றது. இவரும் வெற்றி வாய்ப்பினை இழந்தார்.

**வெளிநாட்டுப் பயணம்:** இவர் ஐரோப்பாவில் 1956-இல்நடைபெற்ற பன்னாட்டுத்தொழிலாளர் மாநாட்டிற்குச்சென்ற தூதுக்குழுவை அழைத்துச் சென்றார்; சோவியத்து ஒன்றியத்திற்கு1960-இல் சுற்றுப்பயணம் சென்றார். உலக உணவு மாநாட்டில் இவர் 1964-இல் பங்கேற்றார்.

**மறைவு:** இவர் 1987-ஆம் ஆண்டு நோய்வாய்ப் பட்டிருந்து, தமது 89 - ஆம் வயதில் உயிர்நீத்தார்.

**மதிப்பீடு:** இவர்சமயப்பற்று மிக்கவர். கல்வித்துறையில் இவரது முதலமைச்சர் பதவிக்காலத்தில் மதுரையில் புதிய பல்கலைக் கழகம் தோன்றியது. தமிழ்நாட்டில் 1965- ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்பின்போது கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டு அதை ஒடுக்கினார். ஆலயங்களில் வழிபாடுகள் முறையாக நடைபெறுதற்கு வேண்டியனவற்றை இவர் இந்து அறநிலையத்துறை அமைச்சராகப் பணியாற்றிய போது செய்தார். ந.க.ம.

**பக்தி இயக்கம்:** இறை உணர்வும் அவனை ஏத்தும் மரபும் காலத்தால் மிகமிக முற்பட்டனவாகும். இறை உணர்வும் பக்தி இயக்கமும் மிக மிகப் பழங்காலத்திலேயே-மனிதன் தன் உணர்வு பெற்ற அந்த நாளிலேயே-அரும்பிவிட்டது எனலாம். பக்தி என்பது தம்மினும் மிக்காரிடம் காட்டும் ஓர் உணர்வு-பாசம் அல்லது பற்று. உலகம், இறைவன் முன் விண்ணப்பம் வைத்து வேண்டுதலையே பக்தி என்கின்றது. வாழ்கின்ற சமயங்களெல்லாம் இப்பக்தி அடிப்படையில்தான் வாழ்கின்றன. வாழ்வில் முன்னேற மறுமைநலம் பெற முழு நம்பிக்கை, பற்று, அன்பு ஆகியவை கலந்த பக்தியே அடிப்படையாக உள்ளது.

பக்தியும் அதன் அடிப்படையில் முகிழ்த்த சமயமும், எண்ணத்தில்-உறுதியான உள்ளத்தில்-உணர்வில்-சொல்லில்-செயலில்அமைந்த, மனிதனுடைய செம்மை நெறி, உலகநெறி,உற்ற சமுதாய நெறி ஆகியவற்றில் அடங்குவனவாகும். இப்பக்தியும் சமயநெறியும் குறு நிலம் அல்லது திணை அடிப்படையில் அரும்பி, நாட்டு நலமாக மலர்ந்து, உலக உணர்வாகக்காய்த்துக் கனிகின்ற ஒன்றாகும். 'தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்ற திருவாசகம் உலகச் சமய வழிகாட்டியாகும்.

இன்று காணப்படும் வகைகளுக்கு முற்றும் மாறுபட்டதாய் முரணியதாய்க்கூட அந்தத்தொடக்க நாளில் பக்தி மனித உள்ளத்தில தோன்றியிருக்கும். ஆறறிவுடைய மனிதன் - தோன்றிய அந்த நாளிலே மனம் போன போக்கிலே வாழ்ந்தவன்; வரையறுத்த சமுதாய வாழ்வு அவன் அறியாதது. கண்டதைத் தின்று கண்டபடி திரிந்து, காட்டில் உறைந்து எப்படியோ இனப் பெருக்கத்தை அறிந்து வளர்ந்து வந்தவன் என்பதுவரலாறு காட்டும் உண்மை. அவன் மனம் போன போக்கில் செல்லும்போது பல அல்லல்களைச் சந்தித்திருத்தல் கூடும். தான் கருதியது முடியாத போது அவன் சிந்தனை-எண்ணம் - புதிதாக அரும்பிய உணர்வு ஆகியவை அவனுக்கு ஓர் உண்மையினை உணர்த்தியிருக்கும். அந்த உணர்வே பக்தி இயக்கத்தின் வித்தாக அமைந்தது.

தனக்கு ஊறு விளைக்கும் தீயும்வெள்ளமும் இடியும் மழையும் பிறவும் தனக்கு மேம்பட்டன என்ற உணர்வும், அவற்றிற்கு அஞ்சியே தான் வாழ வேண்டும் என்ற எண்ணமும் அவனுக்குத் தோன்றியிருக்

கும். அந்த அச்ச உணர்வே பக்திக்கு அடிப்படை எனலாம். 'அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும், நெஞ்சம் வாழி நினை' (தேவாரம் 5-ஆம் திருமுறை) எனத் தன் நெஞ்சத்துக்கு அப்பர் நினைவூட்டியது அந்தப் பழமையினையும் பின்வந்த அன்பு நெறியினையும் இணைத்த நிலையினைத் தான்.

தனக்கு ஊறு நேரக்கூடாது என்ற உணர்வில் மனிதன் அச்சந்தரும் பொருள்களுக்கு வழிபாடு செய்தான். அந்த உணர்வு, அவ்வாறு வழிபட்டால் நன்மை பெறலாம் என்ற நம்பிக்கை உணர்வே யாகும். பக்தி இயக்கத்துக்கும் சமய இலக்கியத்துக்கும் நம்பிக்கை முக்கிய அடிப்படையாகும். 'நம்பினார் கெடுவதில்லை நாலு மறைத்தீர்ப்பு' என்று இதனையே பாரதியார் வற்புறுத்தினார்.

வெம்மை அளிக்கும் சூரியனையும், அலை வீசி ஓங்கும் கடலினையும், பெரு நெருப்பினையும், இடி மழையினையும் சீறிவரும் பாம்பினையும், பிறவற்றையும் கண்டு அஞ்சிக் கருத்தழிந்து ஆதி மனிதன் வழிபட்டிருக்க வேண்டும். எனவேதான் பக்தியின் தொடக்கநிலை அச்சத்தால் உண்டானது என்று உலக சமயங்கள் அனைத்தும் கூறுகின்றன. வேதங்கள் இந்திரனையும் வருணனையும் சூரியனையும் தெய்வங்களாகப் போற்றுவதும், விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் பலவகை அஞ்சந்தரு பொருள்களை அஞ்சி வழிபட்டதும் இந்த உண்மையினை நிலைநாட்டும். பாபிலோனியர், உரோமர், கிரேக்கர், எகிப்தியர், பிற மத்திய தரைக்கடற் பகுதியில் வாழ்ந்த பழங்கால மக்கள் எல்லோரும் தொடக்க நாளில் இவ்வாறே அச்சத்தின் வழியே பக்தி வலைப் பட்டனர் என்பது கூறப்படுகின்றது. இந்தியநாட்டில் உள்ள மாரி போன்ற கிராம தேவதைகளும் இந்த அடிப்படையில் உண்டானவையே. அத்தகைய அஞ்சத்தக்க தெய்வங்களை வழிபட்ட காரணத்தால் தான் உயிர்ப்பலி போன்றவை அக்காலத்தில் மிகச் சாதாரணமாக இருந்தன.

தமிழகத்தில் இன்று நீலகிரியில் வாழும் தோடர் வாழ்வில் எருமையும் கந்தும் தெய்வமாய்ப் போற்றப்படுவதைக் காணலாம். மேலே கூறப்பட்டபடி அஞ்சிவழிபட்ட நிலையைப் பலபழங்குடி மக்கள் இன்றும் கொள்ளுகின்ற நிலையிலே, தோடர்போன்ற தமிழகமலையின மக்கள் தமக்கு வாழ்வளித்த எருமையினைத் தெய்வமாகப் போற்றும் தன்மையினைக் காணமுடிகிறது. 'நல்லதன் நலனும் தீயதன் தீமையும்' மனித அறிவு உணரத் தொடங்கிய அந்தக்காலம் எதுவாயினும் அதுவே இந்த வழிப்பாட்டுக்கு அடிப்படையாகும். 'எல்லா அறிவும் நம்பிக்கையாகாது; ஆனால் எல்லா நம்பிக்கையும் அறிவின் பாற்பட்டனவே' என ஓர் ஆங்கிலக்கலைக்களஞ்சியம் கூறுவதுபோன்று, முன் அச்சம் காரணமாக எழுந்த நம்பிக்கையும், தம்மை வாழவைப்பவை காரணமாக எழுந்த நம்பிக்கையும் அறிவின் முதற் கூறுகளாகக் கொள்ள அமையும். பின் மெல்ல அறிவும் நம்பிக்கையும் வளர வளரப் பக்தி இயக்கம் பல வகையில் வளர்ச்சியுற்றது.

ஒரு காலத்தில் பக்தி, 'மூடபக்தி' யாக, வைராக்கிய பக்தியாக அமையத் தொடங்கியது. தம்மையே தீயிடைப்புகுத்தல்-கடுந்தவம் இயற்றல் போன்றவையும் செலாக்குத்தல்-உறுப்பழித்தல் போன்றவையும் பக்தியாகக் கருதப்பெற்றன. அவற்றின் சாயல்கள் இன்றும் உலகில் ஆங்காங்கே நிலவியுள்ள தன்மையினைக் காணமுடிகின்றது. 'தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள் கிலேன்' என்று மணிவாசகர் இதுபற்றித் தான் கூறினாரோ என எண்ண வேண்டியுள்ளது. மக்களைப் பலியிடும் வழக்கமும் பக்தியின் பாற்பட்டதாகவும் கருதப்பட்டது. எனினும், அவை பெரும்பாலும் அறிவும் நாகரிகமும் முதிர்ச்சியடையாத மக்கள் மேற்கொண்ட பக்தியாகக் கருதப் பெற்றன. தொல்காப்பியப் புறத்திணை இயல், புறப்பொருள் வெண்பாமாலை போன்றவற்றில் வரும் களவேள்வி, கொற்றவைநிலை, உண்டாண்டு போன்றவையும் பிறவும் வெற்றிபெற்ற நிலையில் தம்மையே கடவுளுக்குப் பக்திப் பரிசாகத் தரும் அத்தகைய வைராக்கிய பக்தியை உணர்த்துவனவாக உள்ளன.

இதற்கிடையில் வீரம் விளைத்தாருக்கும் களத்தில் இறந்தார்க்கும் நடுகல் நட்டு வழிபாடாற்றும் பக்தி வளர்ந்து வந்தது. தொல்காப்பியமும் பிற தமிழ் இலக்கண இலக்கியங்களும் இந்த நெறியினை உணர்த்துகின்றன. மேலும், நத்தம் முன்னோரை வழிபாடாற்றும் பக்திநெறியும் பலவிடங்களில் தோன்றிற்று. இன்றும் பலர் 'பூவாடை' போன்று முன்னோரை வழிபடும் வழக்கத்தை மேற்கொண்டுள்ளதை இந்திய நாட்டிற் காணலாம்.

அச்சத்தொடு அமைந்த பக்தி மெல்ல மெல்ல அன்பொடு இயைந்த பக்தியாக நெடுங் காலத்துக்கு முன்பே மாறி வந்துள்ளது என வரலாற்று நெறி உணர்த்துகின்றது. தமிழில் பழைய இலக்கியமாகிய தொல்காப்பியத்திலும் வடமொழியில் கீதையிலும் இத்தகைய பக்தியும் வழிபாடும் காணக்கிடக்கின்றன. அவ்வாறு வளர்ச்சி பெறுவதற்கு இடையில் எத்தனை எத்தனையோ ஆயிரம் ஆண்டுகள் கழிந்திருக்க வேண்டும். அதற்குப் பிறகும் பழைய மரபினை ஒட்டிய பக்தி முற்றும் மறைந்து விடாமல் ஒன்றை ஒன்று பின்னிப் பிணைந்து உலகிடை வாழ்கின்றது என்பதும் உண்மையாகும். இதனையே கி.பி.7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பரும் 'அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும் நெஞ்சம் வாழிநினை' என்கிறார்.

பாரதப்போர் துவாபரயுகத்தின் கடைசிக்காலத்தில் அதாவது இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் நடைபெற்றதென்பர். தொல்காப்பியர் காலத்தினையும் அந்த எல்லையில் சார்த்திச் சொல்லுவர். எனவே, இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அன்பொடு கலந்த பக்தி உலகில் சிறக்க நின்றது என அறிய வேண்டும். தொல்காப்பியத்தில் திணை நிலத் தெய்வங்களாக வேந்தன் (இந்திரன்) வருணன், மாயோன், சேயோன் ஆகியோர் பேசப் பெறுகின்றனர். நிலவு வழிபாடு போன்றவையும் உள்ளன. இவை மக்களினம் தனித்தனியாகப் பிரிந்து வெவ்வேறு நிலங்களில் வாழ்ந்த பழங்காலத்துப் பக்தி நிலைக்குச் சான்றாக அமைகின்றன. பாலை நிலத் தெய்வமும் உள்ளது. அவற்றிற்குப் பலியிடலும் பராவலும் பக்தியின் பாற்பட்டனவே. எனினும், அதே தொல்காப்பியத்திலே 'கொடிநிலை கந்தழி வள்ளி என்ற வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும், கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே' என்ற நூற்பாவினால் எல்லாச் சிறு தெய்வங்களுக்கும் மேலாக உயரிய பரம்பொருள் உள்ள ஒரு நிலையும் உணர்த்தப் பெறுகின்றது. எனவே, ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே-'அப்பாலுக்கப்பாலாய்' நின்று யாண்டும் நீக்கமற நின்ற இறை உணர்வு அரும்பிவளர்ந்து வந்துள்ளது எனவும், அதுவும் அன்பு நெறியில் அமைந்தது எனவும் மிகத் தெளிவாக விளங்குகிறது.

கண்ணிற் காணும் அச்சந் தருவனவற்றையும் ஆக்கம் அளிப்பனவற்றையும் வணங்கியமனிதன் அவற்றின் வழியே தான் எண்ணியதை முடித்துக் கொள்ள முடியாத ஒரு நிலையைநெடுங்கால அனுபவத்தினால் மெல்லமெல்ல உணரத்தொடங்கினான். அந்த உணர்ச்சியிலே இப்படித் காணும் தெய்வங்களுக்கும் தம் எண்ணத்துக்கும் மேலாக ஏதோ ஒரு பொருள் கண்ணுக்குப் புலப்படா வகையில் எங்கிருந்தோ எல்லாவற்றையும் ஆட்டிப் படைக்கின்றதென்பதையும் அது எங்கும் நிறைந்த ஒன்றாக-யாவையும் அறிந்த ஒன்றாக இருக்கவேண்டும் என்பதையும் உணர்ந்தான். அந்த 'ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமிலா' இறைவனை உணரத் தொடங்கியகாலத்திலும் அதை உள்ளத்தால் அன்புடன் வழிபடுவதோடு, அதுவரையில் புறத்தே கண்டு வழிபட்டு வந்தவற்றையும் அச்சத்தால் விடாது போற்றியும் வந்தான். எனவே, இன்று வரை இவை இரண்டும் இணைந்த பக்தி மார்க்கமே உலகில் நிலவுகிறது.

மேலும், தொல்காப்பியம் புறத்திணை இயல் 21-ஆம் நூற்பா, 'ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச் சொல்லிய வகையில் ஒன்றோடு புணர்ந்து தொல்லுயர் வழங்கிய அவிப்பலி' என்பதால்தம் உயிரையே அவிப்பலியாகக் கொடுத்த தன்மையும் வீரத்தொடு கலந்த பக்தியேயாகும். அடுத்துக் காஞ்சித் திணைபற்றி வருகின்ற 24-ஆம் நூற்பாவில் கூறப் பட்ட பல துறைகளும், விளக்கமாகப் பக்தி எனப் பேசப்பெறாவிடினும் ஒருவரோடு ஒருவர் பற்றி அன்பின் காரணமாக அமைந்த 'பதிபக்தி' போன்ற வகையில் அமைந்தனவாகக் கொள்ளலாம். இக்காஞ்சித்திணையே வீடுபேறு பெறுதற்குஏதுவாக அமையும் நிலையினையும், கடவுள், கணவர், பெரியோர், பெற்றோர், உற்றார், பிள்ளைகள் ஆகியவரிடம் காட்டும் அன்பின் காரணமாக அமைந்த செயல்களையும் விளக்குகிறது. இந்தத் திணையும் பிற திணைகளுள் அமைந்த 'வெறியாட்டயர்தல்' போன்ற துறைகளும் அன்று 'பக்தி' எனப் பாராட்டப் பெறாவிடினும் அவையும் பக்தி இயக்க இடைக்கால வரலாற்றில் இடம் பெறவேண்டுவனவே யாகும். இவையாவும் தன்னை மறந்து தன்னிலும் மேலான ஒன்றில் மனம் வைத்த பக்தி நிலையாகும்.

அவ்வாறே, பகவத் கீதையிலும், போர்க்காலத்தில் அறம் உரைக்க வந்த கண்ணன், அதன் பன்னிரண்டாம் அத்தியாயத்தில் பக்தி யோகம் பற்றியே இருபது சூத்திரங்களில் விளக்கிக் கூறுகின்றார். பிற பகுதிகளைப் போன்று இதை 'யோகம்' என்று கூறினாலும் இதுவும் பக்தி இயக்கம் பற்றியதே. ஆயினும், இந்த அத்தியாயத்தில் பெரும்பாலும் தன்னை மறந்து இறைவனை எண்ணும் நிலையே கூறப் பெறுகின்றது. அதில் வரும் விளக்கம், மனிதன் தன் செயல் அனைத்தையும் இறைவன் செயலாக எண்ணி எதுவும் செய்ய வேண்டும் என வற்புறுத்துகின்றது. அவ்வாறு செய்வதால் மனிதனைப் பற்றியுள்ள 'யான்' 'எனது' என்னும் செருக்கு அகலுவதோடு யாவும் இறைவன் செயல் என்ற உணர்வும்,'பார்க்கும் பொருள்அனைத்தும் பரன் வடிவமே' என்ற எண்ணமும் அரும்பும். அவ்வாறு முடியாதவர்கள் பக்தி மார்க்கத்திலமைந்த பல வேறு நற்செயல்களைச் செய்யினும் இறையருளைப் பெறலாம் என்கிறான் கண்ணன். அவன் காட்டும் பக்தி நெறியில் முனைப்பு இல்லை; சுகதுக்கமில்லை; மானம் அபிமானம் இல்லை. ஆனால், பொறுமை உண்டு; தன்னடக்கம் உண்டு; தயை உண்டு; திட உணர்வு உண்டு; அவற்றால் பெறும் சாந்தியுண்டு. இதற்கு 63 நாயன்மார் வரலாறு சான்றாகும். இவ்வாறு வடக்கிலும் தெற்கிலும் பாரதத்தின் பக்தி நெறி, ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வளர்ச்சியுற்ற இயக்கமாக, தனிப்பட்ட இயக்கமாக அன்றி நாடு முழுவதும் தழுவிய இயக்கமாகவும் நின்றது.

இலக்கியச் சான்றுகளைத் தவிர்த்து, சிந்துவெளி நாகரிகம் பற்றிய அகழாய்வுகளிலும் அந்த நெடுங் காலத்துக்கு முன்பே சிவ வணக்கமும் அதற்குரிய

பக்திநெறியும் இடம் பெற்றிருந்தன எனக் காண முடிகிறது. அவற்றின் அடிப்படையில் கணக்கிடமுடியாத மனித இனத் தோற்றத்தை ஒட்டி, அவன் எண்ணத் தொடங்கிய நாள் ஒட்டி வளர்ந்த பக்தி நெறி, ஏறத்தாழ ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பல சமயங்களாகத் தோன்றும் நிலையினை உண்டாக்கக் காணலாம். எனவே, ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இன்று தமிழ்நாட்டில் காணும் சைவ, வைணவச் சமய நெறிகள் தோன்றிவிட்டன என்பது உறுதி. காலந்தோறும் தொல்காப்பியத்தில் காணும் கந்தழியும் சேயோனும் மாயோனும் பகவத்கிதை தந்த கண்ணன் வழிபாடும் பல்வேறு வகையில் இந்திய நாட்டில் சிறந்தன என்பது வரலாறு காட்டும் உண்மை.

வேதகால ஆரியர் வட இந்தியச் சமவெளியில் வாழ்ந்த காலத்திலே அவ்வேதங்களில் வரும் உருத்திரன் போன்ற தெய்வங்களும் தமிழகத்துச் சிவனும் பின் இணைந்து பலவகையில் சைவ சமய நெறியாகிப் பின் இந்து சமயப் பெருநெறியில் ஒன்றிய நிலையினை வரலாறு காட்டுகிறது. அப்படியே இடையில் தோன்றிய பௌத்த, சமண சமயப் பக்திநெறியும் இந்திய மண்ணிலே தோன்றிப் பிற நாடுகளிலும் பரவிய நிலையினைக் காணலாம். மத்திய தரைக் கடல் நாடுகளிலும், பல்லாயிரமாண்டுகளாக மாறி மாறி வந்த சமயத்தோடு வந்த பக்தி நெறி, கிறித்தவ ஊழித் தொடக்கத்தில் நெறிப்படுத்தப்பட்டது என்பது தெளிவு. பின்கிறித்தவமும் இசுலாமும் உலகெங்கும் பரவ, அவற்றின் பக்தி மார்க்கமே ஊன்றுகோலாயிற்று என்பதுதெளிவு.

எல்லாச் சமயங்களும் மனிதனுக்கும் பிற உயிர்களுக்கும் மேற்பட்ட ஓர் இறை உண்டு என்பதை வற்புறுத்தினாலும், அதை முன்னிறுத்தித் தனக்கு வேண்டியதைக் கேட்டுப் பாடிப் பரவும் வழக்கம் அன்று இல்லை எனலாம். இராவணன், சூரபதுமன், இரணியன் போன்றோர் கடுந்தவம் புரிந்து வேண்டியன பெற்றார்களேயன்றிக் கசிந்து பாடிப் பயன் பெற்றதாக இல்லை. சாமவேதம் பாடிய தாகக் கூறப்பெறினும் அதில் உருக்கம் இல்லை. எனவே, இன்றைய பக்திஇயக்கத்தின் சிறந்த கூறாகிய பக்தி இலக்கியங்கள் அப்பழங்காலத்தில் எழவில்லை என்பது கண்கூடு. வேதங்களும் கிரேக்க உரோம இலக்கியங்களும் கடவுள் தன்மையைக் காட்டி, வழிபடுமுறைகளைவிளக்குகின்றனவேயன்றிப் பாட்டிசைத்துப்போற்றிய மரபினைக் காட்டவில்லை. அந்தநிலை ஏறக்குறைய தமிழகச் சங்ககாலம் வரையில் நிலவியது எனக் கொள்ளலாம். சங்க காலத்திலே சிவனும் திருமாலும் முருகனும் சக்தியும் பிற சிறு தெய்வங்களும், வீரர் வழிபாடும் காணப்படுகின்றன. அவையெல்லாம் பக்தியின் அடிப்படையில் அமைந்தனவே. எனினும், அக்காலத்திலேயும் அத் தெய்வங்களைப் போற்றிப் பரவும் பக்தி இலக்கியம் இல்லை என்பது வெளிப்படை. முதல் முதலாகத் தமிழில் 'திருமுருகாற்றுப்படை'யே சங்ககாலப் பக்தி இலக்கியமாகக் கிடைக்கிறது. சங்க காலத்தை ஒட்டி எழுந்த சிலப்பதிகாரத்திலே வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை போன்ற பகுதிகளும், மணிமேகலையின் 'மாரனை வெல்லும் வீர நின்னடி' போன்றவையும் விளக்கமாகப் பக்தி இயக்கத்தைப் பாரறியச் செய்தன. அக்காலத்தில் பக்தி இயக்கம் வெறும் மந்திரங்களைச் சொல்லும் மரபுநெறிமாறிப் பொதுமக்கள் இலக்கியமாக-பாட்டாக வளர்ச்சியுற்றமை தெளிவு. அதற்குப்பின் தெளிந்த இந்திய வரலாற்றில் பக்தி இலக்கியவளர்ச்சி காணப் பெறுகிறது.

இத்தகைய கடவுள் வழிபாட்டுக்கிடையிலும், அக்காலத்தில் கோயில்கள் இல்லை. திருமுருகாற்றுப் படையில் கூறிய ஊர் ஊர் கொண்ட விழாக்கள் மரங்களை அடிப்படையாகக் கொண்டு சிறந்தன. எனவே. மரவழிபாடு பக்தி இயக்கத்தில் முக்கிய இடம்பெறுகின்றது.இது பற்றியே,கோ. சுப்பிரமணியப் பிள்ளை மரவழிபாடு (Tree worship) என்று ஒரு நூலே எழுதியுள்ளார். இன்றும் வேம்பும் அரசும் தெய்வமாகப் போற்றப்படுவதைக் காணலாம். மதுரை கடம்பவனமாகவும், சிதம்பரம் தில்லைவனமாகவும் பிற இடங்கள் திருவேற்காடு, வெண்காடு, மறைக்காடு போன்றனவாகவும் இந்த அடிப்படையில் அமைந்தனவே. கோயிலில் உள்ள மூர்த்தத்தைக் காட்டிலும் அதன் மூலமாகிய மரத்தடியினையே தெய்வம் நிலைபெறுமிடமாகக் கண்டனர். அதனால் தான் போலும் சுந்தரரைத் திருவொற்றியூரில் இறைவன், சன்னிதியில் சூளுரை செய்யவிடாது 'மூவாத திருமகிழ' மரத்தின் கீழ்ச் சூளுரை செய்யச் சொன்னார் என எண்ண வேண்டியுள்ளது. எனவே. பக்தி இயக்கத்தில் அன்றும் இன்றும் 'மரவழிபாடு' முக்கிய இடம் பெறுகின்றது.

சங்க காலத்துக்குப்பின் இந்திய வரலாற்றில்-சிறப்பாகத் தமிழக வரலாற்றில்பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. தெளிந்த தமிழகத்தை கி.பி.முதல்நூற்றாண்டிற்குப் பிறகு 7-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தான் காணமுடிகிறது. இடையில் எத்தனையோ. வேற்று அரசுகள், பௌத்த சமணமத ஆதிக்கங்கள், மொழி ஆதிக்கம் ஆகியபல நடைபெற்றுள்ளன. அக்காலத்திலேதான் பக்தி இயக்கத்திற்கு முக்கிய ஆதாரமான கோயில்கள் கட்டப் பெற்றன. கோச்செங்கணான் என்ற ஒரே சோழமன்னன் சிவனுக்கு எழுபது கோயில்களையும் பல வைணவக் கோயில்

களையும் கட்டி முடித்தான். அக்காலத்தில்தான் பக்தி இலக்கியமும் பரவலாயிற்று. காரைக்காலம்மையார், திருமூலர் போன்ற அடியார்களும் ஆண்டாள், பெரியாழ்வார் போன்ற வைணவ அடியார்களும் தோன்றி வாழ்ந்துபக்திப் பரவசத்தில் திளைத்துப் பாடல்கள் பாடினர். அவர்களைப் பக்தி இலக்கிய முன்னோடிகள் எனக் கொள்ளல் பொருந்தும்.

இதற்கிடையில் தமிழ் மொழியில்பல்வேறு வகையில் பலவகைப் பாவினங்கள் பல்கிப் பெருகின. அவற்றின் வழியே பல பாடல்களும் உருவாயின. தமிழகம் முழுவதும், கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் சமயக் கிளர்ச்சிகள் வழியேபெருமாற்றம்அடைந்தது. முற்றும் பரவியிருந்த சமணத்துக்கு மாறாகச் சைவ வைணவ இலக்கியங்கள் மலர்ந்தன. நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஊர்தொறும் சென்று பத்தியைப் பரப்பிப் பல்லாயிரக் கணக்கான பக்திப் பாடல்களைப் பாடினர்.சைவத் திருமுறைகளும் நாலாயிரப் பிரபந்தமும் பெரும் பக்தி இலக்கியங்களாகப் போற்றப்பெறுகின்றன.அவர்கள் சென்ற இடங்களெல்லாம் தெய்வத் தலங்களாகப் போற்றப் பெற்றன. ஆங்காங்கே மரத்தடிகளில் இருந்த மூர்த்தங்களுக்குக் கோயில்கள் எழலாயின. பின் வந்த சோழர் காலத்தும் அதற்குமுன் இருந்த பல்லவர் காலத்தும் அமைத்த பல கோயில்கள் இன்றளவும் நிலவுகின்றன. சைவ, வைணவ நெறிகளின் பக்தி இயக்கத்தின் அடிப்படையாக இக்கோயில்களே இன்று விளங்குகின்றன. எனினும், மிகப் பழமையாகப் போற்றப் பெற்ற கிராம தேவதைகளின் கோயில்களும் உடன் போற்றப் பெறுகின்றன. பிற்காலத்தில் இப்பக்தி நெறிக்கு ஆக்கம் தரும்வகையில் பெரும் தலங்களுக்கெல்லாம் தல புராணங்கள் எழுதப்பெற்றன. அவை பெரும்பாலும் கற்பனை கலந்தனவாக அமைந்தமையின் இன்று மக்களிடை மிகுந்த ஆதிக்கம் செலுத்தவில்லை.

பக்தி இயக்கம் வளர வளர அதன்இலக்கியங்களும் வளரலாயின. பின்னர்க் கோவை, உலா, பிள்ளைத் தமிழ், மாலை, அந்தாதி போன்ற பிரபந்தங்கள் ஆயிரக்கணக்கில் உண்டாயின. அவற்றுள் பெரும்பாலான இன்றளவும் வாழ்கின்றன. சைவ, வைணவ சமய பக்தி இலக்கியங்களைக் கண்ட இந்நாட்டில் பின் வந்து கால்கொண்ட கிறித்தவ இசுலாமிய சமயத்தவரும் பல்வேறு பக்தி இலக்கியங்களை எழுதினர். வடநாட்டிலும் சென்ற சில நூற்றாண்டுகளில் 'மீரா' போன்ற பக்தர்கள் தோன்றிப் பக்தி இயக்கத்தை வளரச் செய்தனர். இராமகிருட்டிணர், விவேகானந்தர் போன்றோர் பக்தி இயக்கத்தைச் சார்ந்த பல கருத்துகளை உலகுக்கு உணர்த்தி வேதாந்த நெறியைப் போதித்தனர். சைவ, வைணவ, கிறித்தவ, இசுலாமிய நெறிகளில் உள்ள பல்வேறு பிரிவுகளும் இன்று பக்தி இயக்க அடிப்படையில் தான் வாழ்கின்றன. அத்துவிதம், துவைதம், விசிட்டாத்துவைதம் போன்ற பல நெறி பற்றிய வேதாந்த சித்தாந்தக்கொள்கைகளும் இப்பக்தி இயக்க அடிப்படையில்தான் சிறக்கின்றன. அவரவர் கருத்துகளைத் தாம் தாம்கொள்ளும் முதற்பொருள் பால் செலுத்தி அதற்கேற்பத் தோத்திரப் பாக்களும் சூத்திரங்களும் இயற்றி, பக்திநெறி நின்றே தத்தம் கொள்கைகளை இன்றளவும் பரப்புகின்றனர்.

பக்தி என்பது வெறும் பூசனை அல்லது வழிபாடு ஒன்றோடு முடிவு பெறுவதன்று. மனிதப் பண்பு நிறைந்த ஒன்றே பக்தியாகும். அதனாலே பல பக்தி இலக்கியங்கள் 'இரப்பவர்க்கீய வைத்தார் ஈபவர்க்கருளும் வைத்தார்' என்று கொடையினையும், 'பொய்யனைத்தையும் விட்டவர் புத்தியுள் மெய்யனை' என்று வாய்மையினையும், 'கல்லாதார் மனத்தணுகாக் கடவுள் தன்னை' என்று கல்வியினையும், 'வஞ்சமின்றி வணங்குமின்' என்று வஞ்சமில்லா உள்ளத்தையும், 'பிறர்தமைப் புறமே சொல்லக் கூசினான்' எனப் புறங்கூறா நிலையினையும், 'வெய்ய மொழி தன் புலவருக்கு உரையாதவர்' என்று இன்சொல்லையும் அப்பர் போன்ற தேவார ஆசிரியர்கள் பக்தியோடு சார்த்தியுள்ளனர். தாயுமானவர் 'எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே' என்று உலகம் வாழப் பாடுபடுவதும் பாடுவதும் பக்தி நெறியாகக் காட்டுகிறார். 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்றார் வள்ளலார். எனவே,பக்தி இயக்கம் தனிமனித வாழ்வாக மட்டும் அமையாது, மனித உணர்வோடு சமுதாயம் அனைத்தையும் உயிர்கள் அனைத்தையும் ஒத்து நோக்கி ஒன்றாக இணைக்கும் பெருவாழ்வு நெறியாக அமைகின்ற உண்மையினையும் உணர வேண்டும்.

தொடக்கத்தில் சுட்டிக் காட்டியமை போன்று நம்பிக்கையே, மனித இனத்துக்குச் சமயத்தையும் தமக்குமேல் ஒன்றுள்ளது என்ற உண்மையையும் உணர்வையும் உண்டாக்கி, பக்தி இயக்கத்தை வளர்த்து, பக்தி இலக்கியத்தைப் பெருகச் செய்தது-செய்கிறது. இன்றும் பாரில் அவையெலாம் பலவகையில் மாறுபட்டன போன்று தோன்றினும், இறைவன் ஒருவன் அல்லது தமக்குமேல் ஒருபொருள்இருக்கின்றதென்று உணர்ந்து வாழ வழி வகுக்கின்றன. மனித இனம் மனித உணர்வோடு வாழும் காலம் வரையில் இப்பக்தி இயக்கம் நிலைத்து நிற்கும் என்பதும் உறுதி.

அ.மு.ப.

**பக்ராநங்கல் அணை** இந்தியாவில் பஞ்சாபுப் பகுதியில் ஓடும் ஐந்து ஆறுகளுள் மிகவும் நீளமான சட்லெசு (Sutlej – நீளம் 1450 கி.மீ.) நதியின் குறுக்கே கட்டப்பட்டுள்ள அணையாகும். உலகிலேயே மிகவும் உயரமான அணைகளுள் இதுவும் ஒன்று. இதன் உயரம் ஏறத்தாழ 247 மீட்டர். நீளம் ஏறத்தாழ 100மீட்டர், அகலம் 10மீட்டர். இந்த அணையினால்; ஆற்றில் ஏற்படும் வெள்ளம் தடுக்கப்படுகிறது; அதே சமயம் நீர்ப்பாசனமும் நன்கு நடைபெறுகிறது; மின் சக்தி உற்பத்தியும் கிடைக்கிறது. இந்த அணையிலிருந்து ஏறத்தாழ 29கி மீ. தொலைவில் உள்ள கங்குவால்என்னுமிடத்தில் 24,000கிலோவாட்டு மின்சாரம் உற்பத்தி செய்யக்கூடிய மின்னாக்க நிலையங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. இந்த அணையைச் சேர்ந்த வாய்க்கால்கள் ஏறத்தாழ 5000 கி.மீ. நீளமுள்ளவை. ஐந்தாண்டுத் திட்டங்களினால் வளர்ச்சியுற்ற இந்த அணை, வியப்புக்குரிய சாதனைகளுக்குக்காரணமாக உள்ளது. தில்லி நகருக்கு 440 கி.மீ. வடக்கில் இமய மலையின் அடிவாரத்தில் உள்ள பக்ரா என்ற ஊரில் இந்த அணை கட்டப்பட்டதால் இதற்குப் பக்ரா அணை என்று பெயர். நங்கல், பக்ராவிலிருந்து ஏறத்தாழ 11 கி.மீ. தொலைவில் உள்ளது. தெ.பா.

**பக்ரீது**:உலகெங்கிலுமுள்ள இசுலாம் சமயத்தினர் கொண்டாடும் இரண்டுபண்டிகைகளுள் ஒன்று பக்ரீது (Bakrid) ஆகும். மற்றொன்று 'இரம்சான்' பண்டிகை. அரேபிய மொழியில் 'ஈத் அல் அசா' என்று பக்ரீது பண்டிகையையும், 'ஈத் அல் பிஃது' என்று இரம்சான் பண்டிகையையும் கூறுவர். உசேன் என்பவரின் உயிர்த் தியாகத்தை நினைவு கூரும் நாளாக மொகரம் விளங்குகிறது.

'ஈத்' என்பது ஒருவருக்கு ஏற்படுத்தப்பட்டுள்ள நிகழ்ச்சியைக் குறிக்கும். இந்த அடிப்படையில் பக்ரீது பண்டிகை ஆண்டின் ஒரு சிறப்பு விருந்து நாளாகும். எல்லாரும் ஒன்று கூடி மிக்க மகிழ்ச்சியுடன் அன்று விருந்தோம்பலில் ஈடுபடுவர். 'அசா' என்பது பலியிடுதலைக் குறிக்கும். ஆகவே, அன்று ஒரு கால்நடை (Cattle) பலியிடப்பட்டு விருந்தோம்பலுக்குச் சிறப்புக் கூட்டும்.

பக்ரீது பண்டிகை 'அசு' (Haj) புனிதப்பயணத்துடன் மிக்க தொடர்புடையது. இசுலாம் சமயத்தைச் சார்ந்தவருக்கு விதிக்கப்பட்டுள்ள ஐந்து கடமைகளுள் ஒன்று அல்லாவின் உறைவிடமாகிய மெக்காவிற்கு வாழ்நாளில் ஒருமுறையாவது புனிதப்பயண மேற்றுத் தொழுகையில் ஈடுபட வேண்டும் என்பது. இதை இசுலாமியப்பஞ்சாங்கப்படி கடைசி மாதமாகிய சுல்-ஈச்சாவின்ஒன்பதாம் நாள் செய்யவேண்டும். அன்று உலகெங்கிலுமிருந்து இலட்சக் கணக்கான முசுலீம்கள் மெக்காவில் உள்ள மசூதியில் கூடித் தொழுவர். அதற்கடுத்தநாள் மெக்காவிற்கு 6½ கி.மீ.தொலைவிலுள்ள மதீனாவிலும் உலகெங்கிலும் பக்ரீது திருவிழா கொண்டாடப்படும். ஈத்துத்தொழுகைக்குப் பின்னரே பலி கொடுத்தல் நிகழும்.

ஏதாவது ஒரு கால்நடை பலியாகக் கொடுக்கப்படும். வசதிமிகுந்தோர் ஒட்டகத்தைக்கூடப் பலி கொடுப்பர். பலியின் இறைச்சி ஏழை எளியோருக்கு வழங்கப்படுவது 'பக்ரீது' பண்டிகையின் சமூகக் கண்ணோட்டத்தை எடுத்துக் காட்டும். வெ.சீ.சே.

**பகத்சிங்கு**: இந்திய நாட்டு விடுதலைக்காகத் தூக்கில் உயிர் விட்டவர் பகத்சிங்கு. இறப்பிற்குப் பின்னரும் வரலாற்றில் வாழ்கிற சிலருள் இவரும் ஒருவர். இந்திய நாட்டு விடுதலைக்காகப் பல்வேறு நிலைகளில், பல்வேறு முறைகளில் பலர் போராட்டப் பாதைகளை வகுத்துக் கொண்டனர். அவ்வகையில் பகத்சிங்குப் பாதை ஆயுதம் தாங்கிய போராட்டப் பாதையாகும்.

பஞ்சாபு மாநிலத்தில் இலாகூர் (Lahore)நகருக்கு அருகில் இலாயல்பூர் மாவட்டத்தில் பாங்கா என்ற கிராமத்தில் 1907-இல் பகத்சிங்கு பிறந்தபோது தந்தை கிசன்சிங்கு வீட்டில் இல்லை. விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காகப் பர்மாவில் மாண்டலே சிறைச் சாலையில் தம் உடன் பிறந்தாரொடு வைக்கப் பட்டிருந்தார்.



பகத்சிங்கு

இவர் பிறந்த கிராமத்தின் 'கல்சா'உயர் நிலைப் பள்ளி, ஆங்கில மாயையில் மூழ்கிக் கிடந்தமையால் பகத்சிங்கின் பள்ளிப்பருவம் இலாகூர் தயானந்தா வைதிகப் பள்ளியில் கழிந்தது. பள்ளிக்கல்வி முடிந்து தேசிய கல்லூரியில் சேர்ந்து முதலாண்டுத் தேர்ச்சியும் பெற்றார்.

பகத் சிங்கிற்குச்சகத்சிங்கு என்று ஓர் அண்ணனும் குல்வீர்சிங்கு என்று ஒரு தம்பியும், சகுந்தலாதேவி என்று ஒரு தங்கையும் இருந்தனர். அவர்களுள் அண்ணன் இளமையிலேயே இறந்துவிட்டார்.

பகத்சிங்கு பள்ளியில் படித்துவரும்போது, விடுதலைப் போராட்ட வரலாற்றில் குறிப்பிடப்படும் இலாகூர் முதல் சதிவழக்கு (1909-1915) நடந்து கொண்டிருந்தது. அவ்வழக்கில் முதன்மையான குற்றவாளியாகக் கருதப்பட்ட கர்த்தார்சிங்கு சாராபா பகத்சிங்கிற்கு இலட்சிய வழிகாட்டியானார். நீதிமன்றத்தீர்ப்பிற்குப் பின்னர் 17.11.1915 அன்று கர்த்தார் சிங்கிற்குத் தூக்குத்தண்டனை நிறைவேற்றப்பட்டது. உயர்நீதி மன்றத்தில் 'ஏன் நீங்கள் மேல்முறையீடு செய்யக் கூடாது'என்று கேட்கப்பட்ட போது, 'எதற்காக நான் மேல்முறையீடு செய்ய வேண்டும்? எனக்கு ஒன்றுக்கும் மேற்பட்ட உயிர்கள் இருக்குமானால் அவற்றையும் கூட நான் என் நாட்டிற்குத் தியாகம் செய்யும் பெருமையே என் விருப்பம்' என்று கர்த்தார்சிங்குவழக்கு மன்றத்தில் மறுமொழி தந்தார். இந்நிகழ்ச்சிகளால் பகத்சிங்கு கர்த்தார்சிங்கைத் தம் வழிகாட்டியாகமேற் கொண்டார்.

**போராட்டப் பாதை:** எதிரிகள்தாம் போராட்டப் பாதையைத் தீர்மானிக்கிறார்கள் என்பதற்கேற்பப் பகத்சிங்கை ஆயுதம் தூக்கவைத்தவர்கள் ஆங்கிலேயர்களே. சீக்கியரின் புனித ஊரான அமிர்தசரசில் சாலியன் வாலாபாகு என்னும் இடத்தில் தளபதி தயர் என்பவரால் 1919-இல் நிகழ்த்தப்பட்ட கொலைகள், ஆங்கிலேயர் காலத்து இந்திய வரலாற்றில் கறுப்பு நாளை உண்டாக்கின எனலாம். அந்நிகழ்ச்சி பன்னிரண்டு வயதுப் பகத்சிங்கின் வாழ்க்கையையே திருப்பிவிட்டது. அந்நிகழ்ச்சியைக்கேள்விப் பட்ட பகத்சிங்கு பள்ளி செல்லாமல் கொலை நடந்த இடத்திற்குச் சென்றான். அந்த இடத்திலேயே உயிரற்றவனைப் போல் பல நிமிடங்கள் நின்றுகொண்டிருந்த அவன், அந்த மண்ணை எடுத்துத் தன் நெற்றியில் பூசிக் கொண்டதோடு கொஞ்சம் மண்ணை, ஒரு சிறிய கண்ணாடிப் புட்டியில் போட்டுக் கொண்டான். அவன் வீடு திரும்பியதும், அவனுக்காக வைத்திருந்த உணவையும் மாம்பழங்களையும் உண்ணுமாறு அவன் சகோதரி கூறினாள். பகத்சிங்கு அவனுக்கு மிகப்பிடித்தமான மாம்பழங்களைக் கூட உண்ணாமல், அந்த இரவு உண்ணாவிரதம் இருந்தான். உணவு உண்ணுமாறு சொன்னபோது தன் சகோதரியைப் பக்கத்தில் அழைத்துச் சென்று இரத்தம் கலந்த அந்தப் புனித மண்ணைக் காட்டி விட்டு, உண்ணாமலேயே இருந்துவிட்டான். அவன் குடும்பத்தினர் கூற்றுப்படி, அவன் நாள் தோறும், புத்தம் புது மலர்களை அந்த மண்ணில் வைத்து, அதன்மூலம் எழுச்சியைப் பெற்றுக் கொண்டிருந்தான்.

அந்நிகழ்ச்சிக்குக் காரணமாக இருந்த தளபதி தயரைப் பின்தொடர்ந்து சென்று, 21 ஆண்டுகள் இங்கிலாந்தில் தங்கியிருந்து துப்பாக்கியால் அவனைத் தீர்த்துக் கட்டிய உத்தம் சிங்கு, பகத்சிங்கின்நண்பரா வார்.கல்லூரியில் பயின்றபோது சுகதேவுபகவதிசரண் வோரா (ஆக்ரா), யசுபால் (தர்மசாலா) ஆகியோர் பகத்சிங்கிற்கு நண்பர்களானார்கள். அவர்களுள் சுகதேவு பகத்சிங்குடன் தூக்கில் மாண்டவராவார்.

நாளடைவில் காந்தியின் அகிம்சைக் கொள்கையில் நம்பிக்கையிழந்த பகத் சிங்கு வன்முறையில் நமபிக்கைகொண்ட 'பப்பர்' அகாலி' எனும் அமைப்பில் சிறிதுகாலம் உறுப்பினராக இருந்தார். பின்னர் 'நவசவான் பாரத்சபை' என்ற பெயரில் இலாகூரில் நண்பர்களுடன் இணைந்து ஓர் அமைப்பை உருவாக்கி அதில் பகத்சிங்கு முழுநேரம் பணியாற்றத் தொடங்கினார். அக்காலத்தில் பல புரட்சியமைந்த அமைப்புகள் நாடெங்கும் உருவாயின. பகத்சிங்கிற்குப் பலர் நண்பர்களானார்கள். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சந்திரசேகர ஆசாது என்பவராவார்.

நவசவான் பாரத் சபாவின் சார்பில் பகத்சிங்கின் வழிகாட்டியாகக் கருதப்படும் கர்த்தார்சிங்கு சாராபாவின் நினைவு நாள் கூட்டம் நடத்தப்பட்டது. அப்போதுதான் முதன்முறையாகப்பகத்சிங்கு காவலரின் கவனத்திற்கு வந்தார். அதன்பின்னர் நண்பர்களின் உதவியால் பல்வேறு பத்திரிகைகளுக்குப் பகத்சிங்கு எழுதத் தொடங்கினார்.

இலாகூர்இராம்லீலா திடலில்1926- அக்டோபரில் நவராத்திரிவிழா நடந்துகொண்டிருந்தபோது யாரோ ஒருவன் வீசிய வெடிகுண்டிற்காகப் பகத்சிங்கு கைது செய்யப்பட்டார். சிலவாரச் சிறைத் தண்டனைக்குப் பிறகு பொறுப்பில் நீதி மன்றம் விடுதலை செய்தது. அப்போதுதான் முதன்முறையாகப் பகத்சிங்கின் மத நம்பிக்கைகள் நீங்கின. சிறையிலிருந்து வெளிவந்ததும் பலவாக உருவாகியிருந்த புரட்சிகர அமைப்புகளை ஒன்றுபடுத்தினார்.

சிவ வர்மா, செயதேவு, விசய், சதீந்திரநாத் தாசு ஆகியோரின் நட்புடன் 1928 திசம்பரில் 'இநதிய சம

தருமக் குடியரசு இராணுவம்' (Hindu Socialist Republic Army) எனும் அமைப்பு உருவாக்கப் பட்டது. அதன் மத்திய குழு உறுப்பினராகப் பகத் சிங்கு தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சைமன் குழுவை எதிர்த்து, 1928-இல் மதன்மோ கன் மாளவியா தலைமையில்ஊர்வலம் சென்றபோது இசுகாட்டு,சாண்டர்சுஎனும் காவல்துறை அதிகாரிக ளால் கடுமையாகத் தாக்கப்பட்டு 1928-இல் இலாலா இலசபதிராய் மரணமடைந்தார். சித்தரஞ்சன் தாசின் மனைவி வீரவசந்ததேவி, இலாலா லசபதி ராயின் கொலைக்குப் பழி வாங்கவேண்டும் எனும் கருத்தில் இளைஞர்களுக்கு உணர்ச்சியூட்டும் அறைகூவல் விடுத்தார்.

பொதுப் பாதுகாப்பு மற்றும் தொழில் தகராறு கள் மசோதா (Public Safety and Trade Disputes Bill) சட்டமன்றத்தில் தாக்கல் செய்யப்படும்போது, குண்டுவீசித் தப்பி ஓடாமல், கைதாகி நீதி மன்றத் தில் தம்கொள்கையைப் பரப்பிட வேண்டும் என்று இராணுவ அமைப்பு முடிவெடுத்தது. அதன்படி பகத் சிங்கு பி.கே. தத்து இருவரும் சட்டமன்றப் பார்வை யாளர் இருக்கையில் அமர்ந்து மன்ற நடவடிக்கை களைக் கவனித்து,எப்படிக் குண்டுவீசலாம் என்பதைத் திட்டமிட்டுக் கொண்டனர். சட்டமன்றத்திற்குள் செல்லக் காங்கிரசுக் கட்சியின் உறுப்பினர் 6.4.1929 முதல் 8.4.1929 வரைவழி அனுமதிபெற்றிருந்தனர். ஆனால், அவருடைய பெயரைக் காட்டிக் கொடுத்து விடக்கூடாது என்பதற்காகக் கைதாவதற்கு முன்பாக அந்தச் சீட்டைக் கிழித்துத் தூக்கி எறிந்துவிட்டனர்.

சட்டமன்றத்தில் அரசப்பேராளர் அறிவிப்பைச் சர்சார்சி சூசுடர் அறிவிக்க எழுந்தபோது8.4.1929-இல் 'இன்குலாப் சிந்தாபாத்' என்று முழக்கமிட்டவாறு ஆளைக் கொல்லாத குண்டுகளைப் பகத்சிங்கும், பி.கே.தத்தும் வீசி எறிந்துவிட்டு,வானத்தை நோக்கிக் கைத்துப்பாக்கியால் சுட்டுவிட்டுத் துண்டறிக்கை களை வீசி எறிந்து விட்டுத் தாமாகவே முன்வந்து கைதானார்கள்.

கைது செய்யப்பட்ட இருவரும் தில்லிக்காவல் நிலை யத்தில் வைக்கப்பட்டனர். இலாகூர்க் குண்டுத் தொழிற்சாலை 15.4.1929-இல் சோதனையிடப்பட்டு, சுகதேவு, செய்கோபால், கிசோரிலால் ஆகிய மூவரும் கைதுசெய்யப்பட்டனர். அவர்கள் விருப்பப்படியே நீதிமன்றத்தித்துக்கு வழக்கு வந்தது. பத்திரிகைகள் பரபரப்பாக எழுதின. நீதிமன்றம் வழி தங்கள் கருத் துகள் மக்களைச் சென்று அடைவது பற்றி அவர்கள் மகிழ்ந்தனர். இடையில் சிறையில் நடந்த கொடுமை களைக் கண்டித்து உண்ணாவிரதம் இருந்தனர்.

இலாகூர் உயர்நீதிமன்றம்7.10.1930-இல்பகத்சிங்கு, இராசகுரு, சுகதேவு ஆகிய மூவருக்கும் தூக்குத் தண் டனை விதித்துத் தீர்ப்பளித்தது. பாசத்தின் காரண மாகப் பகத்சிங்கின் தந்தை கருணை மனுக் கொடுத் தார். கேள்வியுற்ற பகத்சிங்கு கோபமடைந்து தம் தந்தையைக் கண்டித்துக் கடிதம் எழுதினார்.

நாடெங்கும் பகத்சிங்கை விடுவிக்க வேண்டிக் குழுக்கள் அமைக்கப்பட்டன. பல ஊர்களில் பகத்சிங்கு நாள் கொண்டாடப் பட்டது. ஆனால், 'குற்றவாளி களைக் கொல்வதுபோல் தூக்கில் போடாமல், எதிரணிப் போர்வீரர்களை வீழ்த்துவது போல் இரா ணுவத்தினரைக் கொண்டு சுட்டு வீழ்த்துங்கள்' என்று அவர்கள் மூவரும் கையெழுத்திட்டு அரசுக்கு அனுப்பினர். அரசாங்கம் வழக்கம் போல் மறுத்து விட்டு அவர்களைத் தூக்கிலிட்டது.

இந்திய நாட்டு விடுதலைக்காகப், பகத்சிங்கு நடத்திய வீரம் செறிந்த போராட்டங்கள் சுதந் திர வரலாற்றிற்கு வலிமை சேர்த்தன. அவரிட மிருந்த நாட்டுப் பற்று அவரைத் தீவிர வாத நோக் கித் திருப்பிவிட்டது. இறுதி மூச்சையும் இந்திய நாட் டிற்காகச் செலவிட்ட பகத்சிங்கு இந்தியாவிற்கு எடுத் துக் காட்டாக நிற்கும் வீரமறவராவர். ம.இரா.சே.

**துணைநூல்கள்:**

**சிவவர்மா-எத்திராசுலு** (மொ.பெ), பகத்சிங்கும் புரட்சித் தோழர்களும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5.

**வீரபாண்டியன், சுப.**, பகத்சிங்கும் இந்திய அரசியலும், கனிமுத்துப் பதிப்பகம், சென்னை, 1987.

**பகதூர் சா:** இப் பெயரில் இந்திய வரலாற்றில் மூன்று அரசர்கள் உள்ளனர்.

**பகதூர் சா (கி.பி. 1526-37):** இவர் குசராத்தின் அரசர். மொலாயப் பேரரசர்களான பாபர், உமாயூன் (Humayun) ஆகியோரின் சமகாலத்தவர். இவர் மாளவச் சுல்தானை வென்று மாளவத்தைத் தம் முடைய அரசுடன் சேர்த்துக் கொண்டார். சித்தூ ரையும் கி.பி.1534-இல் வென்றார். அதனால் உமா யூனை வலுச்சண்டைக்கு இழுத்தார். போரில் உமாயூனால் தோற்கடிக்கப்பட்டு இந்தியாவை விட்டுக் காம்பே வளைகுடா வழியாகத் தப்பியோடி, அரபிக்கடலில் இருந்த போர்ச்சுகீசியர்களிடம் தஞ்சம் புகுந்தார். உமாயூன் தம் ஆட்சியின்கீழ்இருந்த செர்கானை (Sherkhan) அடக்க, அவர் குசராத்தை விட்டு நீங்கிய சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு போர்ச்சுகீசியர்களின் உதவியோடு குசராத்தை மீண்டும் கைப்பற்றினார். பகதூர்சா போர்ச்சுகீசியர்

களைத் தையூவில் ஒரு தொழிற்பேட்டை கட்டிக் கொள்ள அனுமதித்தார். ஆனால், அவர்களின்போக்கு கைப்பற்றுதலாக மாறவே அவர்களை வெளியேறும் படி கட்டளையிட்டார். அதனால், கோபமுற்றபோர்ச் சுக்சீசியர்கள் சதிசெய்து கி.பி.1537-இல் பகதூர் சா பயணம்செய்த கப்பலை மூழ்கடித்து இவரைக் கொன் றனர்.

**பகதூர் சா (கி.பி. 1707 – 1712):** இவர் ஔரங்க சீபின் இரண்டாம் மகன்; இயற்பெயர் முவாசம் (Muazzam). இவர் மொகலாய அரியணை ஏறுமுன் காபூலில் காப்பாளராக இருந்தார். ஔரங்கசீபிற் குப் பிறகு ஏற்பட்ட அரியணை உரிமைப்போரில் தம் சகோதரன் ஆசம்மை (Azam) ஆக்ரா அருகில் நடை பெற்ற போரில் கொன்று, பகதூர்சா என்ற பட்டத் துடன் அரியணை ஏறினார். இவரை முதலாம் சா ஆலம் என்றும் வரலாற்றில் குறிப்பிடுவதுண்டு. இவர் கி.பி. 1712-இல் இறந்தார்.

**பகதூர் சா (கி.பி. 1831-62):** இவர் மொகலா யப் பரம்பரையின் கடைசி அரசர் ஆவார். இவருடைய ஆட்சிக் காலத்தில்தான் கி.பி. 1857-இல் சிப்பாய்க் கலகம் அல்லது முதலாம் சுதந்திரப்போர் நடைபெற்றது. பரக்பூரில் வெடித்து மீரட்டிற்குப் பரவிய சிப்பாய்க் கலகத்தின்வீரர்கள் தில்லி சென்று பகதூர்சாவைச் சந்தித்து அவரை இந்தியாவின் பேர ரசராக விளம்பரப்படுத்தினார்கள். ஆனால், பகதூர் சா இதில் இருமனத்துடன் இருந்தார். சிப்பாய்க் கல கத்தின் தலைமையை ஏற்று நடத்திச் செல்ல இவர் எவ்வித அக்கறையும் முயற்சியும் எடுத்துக் கொள்ள வில்லை. சிப்பாய்களால் இவர் விரும்பாமலேயே தலைவராக ஆக்கப்பட்டார். ஏனென்றால் பாதுகாப் பான தில்லிக் கோட்டை, மறைந்துகொண்டு போரிடச் சிப்பாய்களுக்குத் தேவையாக இருந்தது. இந்தச் சிப் பாய்க் கலகம் ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தினால் அடக்கி ஒடுக்கப்பட்டு அதன் தலைவர்கள் தூக்கிலிடப் பட்டனர். பகதூர் சா கைது செய்யப்பட்டுப் பர்மாவி லுள்ள இரங்கூன் நகரத்திற்கு நாடுகடத்தப்பட்டார். இவரின் மூன்று புதல்வர்களும் பேரனும் ஆங்கி லேய அதிகாரி அட்சனால் (Hodson) ஈவு இரக்கமின் றிச் சுட்டுக் கொல்லப்பட்டனர். பகதூர்சா கி.பி. 1862 – இல் இரங்கூனில் காலமானார். சே.ந.

**துணை நூல்:**

**Majumdar, R.C.**, The Mughal Empire, The History and Culture of the Indian People, Vol. VII, Bharatiya Vidya Bhavan, Bombay, 1974,

***பகர்பூர்***, மேற்கு வங்கத்தில் தார்சிலிங்கிற்கு ஏறத்தாழ 7 கி.மீ. மேற்கே ஆத்ரேயி (Athreyi) ஆற் றங்கரையில் அமைந்துள்ளது. இது ஒரு மலை நகரம். வங்கமொழியில் பகர்பூர் (Paharpur) என்ற சொல்லுக்கு 'மலை நகரம்' என்பது பொருள். இவ்வூரின் அருகில் ஓங்கி நிற்கும் சமல் கஞ்சு (Jamal Kanji) என்னும் மலையின் வடமேற்கில் கவல் பீட்டா (Gwal Bhita) என்ற பகுதி உள்ளது. அதற்கு 'இடையன் மேடு' என்பது பொருள். இவ் வூரின் வடபுறத்தில் உள்ள தொல்லி யல் மேடு ஏறத்தாழ 24 மீட்டர் உயரமுடையது. இம் மேட்டைச்சுற்றிலும்30மீ முதல் 40 மீ. வரைஅகலமுடைய கோட்டை மதில் உள்ளது. இதன் நடுவில் உள்ள மேட்டுப் பகுதி ஏறக்குறைய 40 ச.மீ. பரப்புடை யது. மேற்பரப்பில் செங்கல் சுவரின் இடிபாடுகளும், உடைந்த செங்கற்களும் காணப்படுகின்றன. இம்மேட் டில் சுடுமண் பொம்மைகளின் உடைந்த பகுதிகளும், எழுத்துகள் கொண்ட செங்கற்களும் கிடைக்கின்றன. இத்தொல்லியல் தடையங்களைக் கண்டு மாதிரி அகழாய்வை மேற்கொண்ட அலெச்சாந்தர் கன்னிங்காம் (A.Cunningham) இங்கு இந்து சமயக் கோவிலின் இடி பாடுகளைக் கண்டார். சிதைந்த நிலையில் உள்ள இக் கோயிலின் கருவறை கிழக்கு நோக்கியுள்ளது. இது 61×46 மீ.நீளஅகலங்களைக் கொண்டு, 15 மீ உயரம் உடையதாக இருந்தது; மகா மண்டபம் உள்ளது. இங்கு மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் கிடைக்கப் பெற்ற சுடுமண் பொம்மைகளில் காளியின் உருவம் சிறப்பானது. இது 35 செ.மீ. உயரமுடையது. இங்குக் கிடைக்கப்பெற்ற செங்கற்களின் வெளிப்புறத் தில் நுண்ணிய வேலைப்பாடுகள் காணப்படுகின் றன. செங்கற்கள் வெவ்வேறு அளவுகளில் செய்யப் பட்டன. இங்கு அகழாய்வுகளில் கிடைத்த பொருள் கள் சிலவற்றைக் கல்கத்தாப் பல்கலைக் கழகத்தி லுள்ள அசுடோசு அருங்காட்சியத்தில் (Ashtosh Museum) பாதுகாத்து வைத்துள்ளனர். ஆ.க.

***பகர அதிகார ஆவணம்***: ஒருவர் தமக்குப் பகரமாகக் குறித்த காரியங்களில் வேறொரு ஆளினை அல்லது ஆள்களை குறித்த காரியங்களில் செய லாற்றுமாறு அதிகாரமளிக்கும முறையாவணம் பகர அதிகார ஆவணம் (Power of Attorney) ஆகும். குறித்த செயல் அல்லது செயல்களைச் செய்திட அதி காரமளிக்கும் முறையாவணம் தான் பகர அதிகார ஆவணம் எனப்படும். பொதுவாகச் சில செயல்களைச் செய்திட அதிகாரமளிக்கும் முறையாவணம் பொதுப் பகர அதிகார ஆவணம் எனப்படும்.

ஒப்பந்தம் செய்வதற்குத் தகுதி படைத்த எவ ரும் பகர அதிகார ஆவணத்தை எழுதலாம். ஆனால், திருமணமான இளவயது மகளிரைப் பொறுத்தவரை யில் அவர்கள் இளவராக இருந்தாலும் பகர அதி கார ஆவணத்தை எழுதலாம்.

பொதுவாக இந்த வகையான ஆவணங்களைச் சான்றொப்பமிட அல்லது பதிவு செய்ய

வேண்டியதில்லை. ஆனால், இந்த ஆவணங்கள், வேறொரு ஆவணத்தைப் பதிவு செய்யத் தாக்கல் செய்யும் அதிகாரம் வழங்குமேயானால், அந்த ஆவணத்தில் பகர அதிகாரம் வழங்குபவர். பதிவாளர் அல்லது சார் பதிவாளர் முன்னிலையில் கையொப்பமிட வேண்டும். அந்த அலுவலர்களும் தங்கள் முன்னர்க் கையொப்பமிட்டதாக உறுதியளித்துச் சான்றளித்தல் வேண்டும். பதிவு செய்தல் சட்டம் நடைமுறையில் இல்லாவிட்டால், பகர அதிகாரம் வழங்குபவர், குற்றவியல் நீதிபதி முன்னர் ஆவணத்தில் கையொப்பமிடல் வேண்டும். இந்திய நாட்டிற்கு வெளியே பகர அதிகார ஆவணத்தில் ஒருவர் கையொப்பமிட மேண்டுமாயின், நீதிபதி, குற்றவியல் நடுவர், இந்திய வணிகத் தூதுவர், துணை வணிகத் தூதுவர், நடுவண் அரசின் முகவர் அல்லது சான்றுறுதி அலுவலர் (Notary Public) ஆகியோருள் யாரேனும் ஒருவர் முன்னர்க் கையொப்ப மிடலாம்.

பகர அதிகாரம் பெற்ற ஒருவர் முகவராகக் கருதப்படுவார். எனவே, அவர் முகவரின் கடமைகளையும் பொறுப்புகளையும் நிறைவேற்றும் தகுதி பெற்றவர். ஒரு கூட்டாண்மையில் பங்குரிமையாளர்கள் வேறொரு பங்குரிமையருக்குப் பகர அதிகாரம் அளிக்கலாம். அப்பொழுது இந்தியக் கூட்டாண்மைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ள வழிமுறைகள் அனைத்தையும் பகர அதிகாரம் பெற்ற பங்குரிமையர் பின்பற்ற வேண்டும். பொதுவாகக் கூட்டாண்மையில் பங்குரிமையருக்குக் கூட்டாண்மையின் சாதராண அலுவலைக் கவனிக்க மறைமுக அதிகாரம் உண்டு. கூட்டாண்மையின் உரிமையிலுள்ள சொத்துகளை உரிமை மாற்றம் செய்வதற்கோ பொறுப்புரிமை எதனையும் ஒப்புகை செய்வதற்கோ தனிப் பகர அதிகாரம் ஒரு பங்குரிமையருக்கு வழங்கப்பட வேண்டும்.

பகர அதிகார ஆவணம் தன்மை முறையில் எழுதப்படுகிறது. பொர்துவாகத்தாம் இந்த ஆவணம் மூலம் உரிமைகளைப் பிறருக்கு அளிப்பதாகப் பகர அதிகாரம் அளிப்பவர் குறிப்பிடுதல் வேண்டும். வாசகங்கள் எதுவுமின்றிச் செயல்முறைப் பகுதிகள் குறிப்பிடப்படுகின்றன. செயல்முறைப் பகுதிகளில் பகர அதிகாரம் அளிப்பது பற்றிக் குறிப்பிடப்படும். பகர அதிகாரம் பெறுநருக்கு என்னென்ன அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன என்பது தனித்தனிப் பத்திகளில் குறிப்பிடப்படும்.

குறிப்பிட்ட அதிகாரங்களைப் பொதுப் பகுதியில் குறிப்பிட்ட பின்னர்ச் சட்டப்படியான செயல்களைச் செய்ய அதிகாரமளிக்கும் பகுதி காணப்படும். அதனால், அதிகாரம் அளிக்கப்பட்டவர் போதுமான காரணங்களில் தமக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தைப் பயன்படுத்துவதற்காகத் தேவையான செயல்களைச் செய்யலாம். பின்னர் அதிகாரம் பெறுநர் செய்யும் செயல்களுக்கு ஏற்புறுதி அளிக்கும் பகுதி காணப்படும். பகர அதிகாரம் அளித்திடும் ஆவணம் தனி ஓர் ஆவணமாகக் கருதப்படுவதால் அதில் பயன்படுத்தப்பட்டிருக்கும் சொற்களின் பொருள்களைத் தெளிவாக எடுத்துக்கொள்ளுதல் வேண்டும். முகவருக்கு வழங்கப்பட்ட அதிகாரங்களை ஆவணத்தில் கூறியுள்ளவாறு பயன்படுத்துதல் வேண்டும். ஏதாவது பொருள் மாறுபாடு ஏற்படுமாயின் பொதுவாகச் சொற்களுக்கு எப்பொருள் கொள்ள வேண்டுமோ அதனையே பயன்படுத்துதல் வேண்டும். சொற்களுக்குப் பொருள் காணும்போது எந்தக் காரணத்துக்காகப் பகர அதிகாரம் வழங்கப்பட்டது என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். ஆவணத்தில் வாசகங்கள் எவையேனும் அடங்கியிருந்தால் செயற்படு பகுதியில் கூறப்பட்டுள்ள பொதுவான சொற்களுக்குப் பொருள் காணும்போது அவற்றைப் பயன்படுத்துதல் வேண்டும். பகர அதிகாரம் பெறுநருக்குத் தனி அதிகாரம் வழங்கும் போது சொற்களைக் கவனமாகக் கையாளுதல் வேண்டும். கணக்கு நிலை ஒப்பு, நிறுவனக் கலைப்பு மற்றும் கணக்குகளைச் சரிபார்க்க அதிகாரம் வழங்கப்பட்டால் அது இசைவுத் தீர்ப்புக்கு அனுப்ப அதிகாரம் பெற்றதாகக் கருதப்படக் கூடாது.

பகர அதிகாரம் பெறுநராகப் பல ஆள்கள் நியமிக்கப்பட்டால் அவர்கள் கூட்டாக இயங்க வேண்டுமா தனித்தனியாக அதிகாரங்களைப் பயன்படுத்தலாமா என்பதைக் குறிப்பிடுதல் வேண்டும். தனித்தனியாகச் செயற்படலாம் எனப் பகர அதிகார ஆவணத்தில் குறிப்பிட வில்லையென்றால அவர்கள் அனைவரும் கூட்டாகவே இயங்க வேண்டும்.

பகர அதிகாரம் பெறுநர் எக்காலம் வரை தம் அதிகாரத்தைப் பயன்படுத்தலாம் எனப் பகர அதிகார ஆவணத்தில் தரப்பட்டிருந்தால் அக்காலம் வரை அவர் தம் அதிகாரத்தைப் பயன்படுத்தலாம். அவ்வாறு காலத்தைக் குறிப்பிடாத போது பொதுப் பகர அதிகார ஆவணம் பின்னழிப்புச் செய்யப்படும் வரை அல்லது பகர அதிகாரம் அளித்தவர் அல்லது பெறுநர் மரணமடையும் வரை நடப்பிலிருக்கும். தனிப் பகர அதிகார ஆவணம் ஒரு செயலைச் செய்வதற்காக இயற்றப்பட்டிருக்கலாம். அப்போது அச்செயல் முடிவுறுங் காலம் வரையில் பகர அதிகாரம் பெறுநர் தம் அதிகாரத்தைப் பயன்படுத்தலாம். தனிப் பகர அதிகார ஆவணத்தில் குறிப்பிட்ட காலம் வரை அல்லது குறிப்பிட்ட செயல் நடைபெறும் வரை அதிகாரத்தைப் பயன்படுத்தலாம்

எனக் குறிப்பிட வேண்டுமாயின் அதனைத் தெளி வாகக் குறிப்பிடல் வேண்டும்.

பகர அதிகார ஆவணத்தைப் பதிவுச் சட்டத் தின் கீழ்ப் பதிவு செய்ய வேண்டியதில்லை. பகர அதிகார ஆவணச் சட்டத்தின் நான்காம் பிரிவு, பகர அதிகார ஆவணத்தையும் அதில் சட்டக் கையொப்பமிட்டதற்கான ஆணையுறுதிப் பத்திரத் தையும் உயர்நீதிமன்றத்தில் தாக்கல் செய்யலாம் எனவும், சான்றளிக்கப்பட்ட நகல் ஒன்றை உயர்நீதி மன்ற அலுவலகத்தில் தாக்கல் செய்தால் போது மானது எனவும் கூறுகிறது. மீ.அ.

**பகல்பூர் பல்கலைக்கழகம்**: 1985 – 86-ஆம் கல்வியாண்டில் வெள்ளி விழாக் கொண்டாடிய 9 பல்கலைக்கழகங்களுள் ஒன்றான பகல்பூர் பல்கலைக் கழகம், பீகார் மாநிலத்தின் பகல்பூர் நகரில் 1960 –இல் அமைக்கப்பட்டது. தேசு நாராயண்பெனாலி கல்லூரி, இப்பல்கலைக் கழகத்தின் கருவாக இருந்து இன்று 35 கல்லூரிப் பகுதிகளையும் 22 இணைக்கப் பட்ட கல்லூரிகளையும் கொண்டு விரிவடைந்துள் ளது. இம்மாநிலத்தின் பாகல்பூர், தும்கா பகுதிகளி லுள்ள பகல்பூர், மூங்கேர், காகடியா, தும்கா, சாகிப் கஞ்சு, தேங்காட்டு, கோத்தா மாவட்டங்களின் கல் லூரிக் கல்வியை உள்ளடக்கும் இப்பல்கலையில் 24 பட்ட மேல்நிலைத் துறைகள் உளளன. 1983-84-இல் 40182 மாணவ, மாணவியர் இப்பல்கலைக்கழகத்தில் பயின்று வந்தனர்.

மாநில ஆளுநரை வேந்தராகக் கொண்டு இயங் கும் இக்கழகத்திற்குத் துணைவேந்தர், முன் துணை வேந்தர், பதிவாளர், தேர்வுக்கட்டுப்பாட்டாளர், துணைநூலகர், மாணவ நல முன்னவர், செயல் முன்னவர் ஆகியோருடன் மனிதவியல், சமூகவியல், வணிகவியல், அறிவியல், பொறியியல், இசையியல், கல்வியியல், சட்டவியல், மருந்தியல் ஆகிய ஒன்பது இயல்களுக்குரிய புலத்தலைவர்களும் (Deans) உள்ள னர்.

ஒவ்வோராண்டும் சூன் முதல்நாள் முதல் மறு ஆண்டு மே இறுதி நாள் வரை கல்வியாண்டாகக் கொண்டுள்ள இங்கு ஆண்டுத்தேர்வுகள் மார்ச்சுக்கு மேல் மேமாதத்திற்குள் எல்.எல்.பி.யைத் தவிர மற்ற வகுப்புகளுக்கு நடைபெறும். எல்.எல்.பிக்குச் சனவரி யிலும், சூலையிலும் தேர்வுகள் உண்டு. பி.எசுசி. (பொறியியல்) தேர்வுக்கு மட்டும் 30% உள் மதிப்பீடு நிலவியிருக்கிறது. கலை, அறிவியல், வணிகத் துறை களில் இடைநிலை, பட்டநிலை வகுப்புகளுக்கு ஒவ் வொரு பாடத்திலும் வாரந்தோறும் தனி வகுப்பு கள் நடைபெறுகின்றன ஆனர்சு வகுப்புகளுக்கு வாரமிரு முறை இவ்வகுப்புகள் நடைபெறும். இடைநிலை (கலை, வணிகம்) வகுப்புத் தேர்வுக்கும் பி.ஏ., பி.காம்., தேர்வுகளுக்கும் எம்.ஏ.,எம்.காம்., தேர்வுகளுக்கும் தனிக்கல்வி பயிலும் மாணவர்கள் அனுமதிக்கப்படுவதுண்டு. இப் பல்கலைக்கழகத் தேர்வுகளில் தேர்ச்சியுற்ற மாணவர்களும், ஓராண் டுக் காலமேனும் இப்பல்கலைக்கழகப் பகுதியில் பணி யாற்றி வரும் மாநில, மத்திய அரசுப் பணி யாளர்களும் மற்றும் பல்கலைக்கழகக் கல்விக் குழுவினரால் ஒப்புதல் பெறப்பட்ட பொதுத் துறைப் பணியாளர்களும், அரசு ஒப்புதல் பெறப்பட்ட உயர் நிலைப்பள்ளி ஆசிரியர்களும், மாநிலப் பல்கலைக் கழகங்களில் பணியாற்றுவோரும், மாநிலத்தின் பிற ஒப்புதல் பெற்ற கல்வி நிறுவனங்களில் ஓராண்டுக் காலமேனும் பணியாற்றி வருவோரும் மாநில எல்லைக்குள் ஓராண்டுக் காலமேனும் வசித்து வரும் பெண்களும் மேற்கண்ட தனிக்கல்வித் தேர்வுகளுக்கு அனுமதிக்கப்படுவர். ஆய்வுக்கூடத் துணையாளர் களும் விளக்குநர்களும் சில விதிகளுக்குட்பட்டு பி.எசுசி.எம்.எசுசி. தேர்வுகளுக்கு அனுமதிக்கப்படுவர். ஏற்கெனவே இப்பல்கலைக்கழக மாணவராகப் பதிவு பெற்றவர்கள் பிற பல்கலைக்கழகத்திற்கு மாற்றுதல் பெற்றிருந்தால் அவர்களும் மேற்கண்ட தேர்வுகள் எழுதலாம்.

பல்கலைக்கழக நூலகத்தில் ஆசிரியர்களுக்குத் தனிப் படிப்பறையும் ஆராய்ச்சி மாணவர்களுக்கென 22 படிப்பறைகளும் உள்ளன. 1983-84-இல் 83,338 நூல்களையும் 2587 பருவ ஏடுகளையும் கொண்ட இந்நூலகம் ஆண்டொன்றுக்கு ஏறத்தாழ 3 இலட்சம் உரூபாய்க்கான நிதித் திட்டத்தைக் கொண்டு செயலாற்றி வருகிறது. உரூ.60 முதல் உரூ.120 வரை யுள்ள மாதக் கல்வித்துணைத் தொகை 1605 மாணவர்களுக்கும் உரூ.400 முதல் ரூ.500 வரையுள்ள ஆராய்ச்சித் துணைத் தொகை 18 மாணவர்களுக்கும் மொத்த மாணவர்களில் 12½ விழுக்காடு பேருக்கு இலவசக் கல்வியும், எல்லாப்பட்டியல் மற்றும் மலைச் சாதியினருக்குக் கல்விக் கட்டண விலக்களிப்பும் பல்கலைக்கழகத் தேர்வுக் கட்டணச் சலுகைகளும் இப்பல்கலைக்கழகத்தில் ஆண்டுதோறும் வழங்கப்படு கின்றன. 1983-84-இல் 775 இலட்சம் உரூபாய் வருமானமும் 856 இலட்சம் உருபாய்ச் செலவும் இங்குள்ள நிதி நிலையைக் காட்டுகின்றன.

பல்கலைக்கழக நிதி மற்றும் உடல் நலப்பகுதி, பகல்பூரிலுள்ள தே.நா.பெ. கல்லூரிமற்றும்மார்வாடிக் கல்லூரி மாணவர்களுக்கும் ஆசிரியர்களுககும் பட்ட மேல் துறையினருக்கும் பிற பல்கலைக்கழகப் பணியாளர்களுக்கும் பெயரளவில் பெறப்படும் அட்ட வணைத் தொகையின் பேரில் மருத்துவ வசதிகளை அளித்து வருகிறது. விரிவான விளையாட்டுத் திடல்

களுடன் இங்கு உடற்கூற்று விளையாட்டுகளான கால்பந்து, கிரிக்கெட்டு, ஆக்கி, வரிப்பந்து (Tennis) கைப்பந்து, பூப்பந்து வசதிகளும் இப்பல்கலைக்கழகக் கல்லூரிகளில் உள்ளன. மாணவ, மாணவியர்க்கெனத் தனி விடுதிகளுடன் மாநில, சமூக நலத்துறையினர் நிருவாகத்திற்குட்பட்ட விடுதிகளும் இங்குள்ள கல்லூரிகளுக்குப் பயன்பட்டு வருகின்றன.

கலைத்துறையில் இளங்கலை வகுப்புகளுக்கு வங்காளம், இந்தி, மைதிலி, உருது அல்லது ஆங்கிலம் கட்டாய மொழிப் பாடமாகவும் வங்காளம், ஆங்கிலம், பிரெஞ்சு, இந்தி, மைதிலி, ஒரியா, பாலி, பாரசீகம், பிராகிருதம், சமசுகிருதம், உருது ஆகிய வற்றில் ஒன்று மற்றொரு மொழிப் பாடமாகவும், வருங்கால இந்திய வரலாறும் பண்பாடும், பொருளியல், புவியியல், வரலாறு, மனை அறிவியல், தொழிலும் சமூகநலமும், கணிதவியல், இசை, தத்துவம், அரசியல், உளவியல், கிராமப் பொருளியலும் கூட்டுறவும், சமூகவியல், புள்ளி விவரவியல் ஆகியவற்றில் இரண்டு விருப்பப் பாடங்களாகவும் கலைத் திட்டத்தில் இடம் பெற்றுள்ளன. ஒரு விருப்பப் பாடத்திற்குப் பதில் ஒரு மொழியையும் பாடமாகக் கொள்ள முடியும். எல்லாப் பாடங்களிலும் பொது வகுப்பும் ஏதாவது ஒரு பாடத்தில் ஆனர்சு வகுப்பும் மாணவர்கள் பயில முடியும்.

இளங்கலைப் பட்டம் பெற்றோர் ஓராண்டுக் கல்விக்குப் பின் நூலகவியல் இளங்கலைப் பட்டம் பெற்று, நூலக அமைப்பு, நூலக நிருவாகம், நூற்றொகுதியும் நூல் தேர்வும், குறிப்பெடுத்தல், நூலகப் பிரிவாக்கம், நூல்வளம், செயல்முறை ஆகியவற்றில் அறிவும் திறனும் பெற முடியும்.

பொருளியல், ஆங்கிலம், காந்திய சிந்தனை, புவியியல், இந்தி, வரலாறு, மனை அறிவியல், தொழிலும் சமூகநலமும், மைதிலி, கணிதவியல், இசை, தத்துவம், அரசியல், உளவியல், கிராமப் பொருளியலும் கூட்டுறவும், சமசுகிருதம், சமூகவியல், புள்ளி விவரவியல் ஆகியவற்றில் முதுகலைப் பட்ட வகுப்புகள் உண்டு.

அறிவியற் பகுதியில் வேதியியல் முதற்பாடமாகவும் தாவரவியல், புவியியல், மண்ணியல், கணிதம், இயற்பியல், புள்ளிவிவரவியல், விலங்கியல் ஆகியவற்றில் இரண்டு துணைப் பாடங்களாகவும் கொண்ட இளநிலைப் பட்ட வகுப்புகளும், வேதியியல், தாவரவியல், புவியியல், மனை அறிவியல், கணிதம், உளவியல், புள்ளி விவரவியல், விலங்கியல் ஆகியவற்றைக் கொண்ட முதுநிலைப்பட்ட வகுப்புகளும் உண்டு.

வணிகப் பகுதியில் பி. காம்., பி. காம். ஆனர்சு, எம். காம் வகுப்புகளும்; கல்விப் பகுதியில் பி.எட். வகுப்புகளுடன் இரு மாதப் பட்டய வகுப்புகளும் உள்ளன. இளநிலைப் பட்டம் பெற்று 5 ஆண்டுகளாவது நடுநிலை, உயர்நிலைப் பள்ளிகள் அல்லது ஆசிரியர் பயிற்சிப் பள்ளி, கல்லூரி நிறுவனம் ஆகியவற்றில் பணியாற்றி வருவோருக்காகப் பொறியியல் பகுதியில் பி.எசுசி(பொறியியல்) வகுப்புகளுடன் பி.எசுசி (பட்டுத் தொழில் நுட்பவியல்)வகுப்பும், சட்டப்பகுதியில் எல்.எல்.பி. வகுப்பும் மருந்தியற் பகுதியில் எம்.பி.பி.எசு. வகுப்பும் நுண்கலைப் பகுதியில் பட்டய வகுப்புகளும் நடைபெறுகின்றன.

கலை, அறிவியல், கல்வி, வணிகம், சட்டம், பொறியியல் துறைகளில் பிஎச். டி. பட்டமும், கலை, வணிகம், கல்விப் பகுதிகளில் டி. லிட். பட்டமும் அறிவியல், பொறியியல் பகுதிகளில் டி. எசுசி. பட்டமும், சட்டப் பகுதியில் எல்.எல்.டி பட்டமும் பெறத் தக்க ஆராய்ச்சி வசதிகள் உண்டு. அறிவியல், பொறியியல் இளநிலைப் பட்டதாரிகள் மூன்றாண்டுகளும் முதுகலைப் பட்டதாரிகள் ஈராண்டுகளும் ஆராய்ச்சி செய்தபின் பிஎச்.டி.பட்டம் பெறத்தக்க ஆராய்ச்சி அறிக்கையை அனுப்ப முடியும். மூன்றாண்டுகளுக்கு முன்னர் பிஎச்.டி. பட்டம் பெற்றவர்களும் ஆறாண்டுகளுக்கு முன்னர் முதுநிலைப் பட்டம் பெற்றவர்களும் டி.லிட்டு. எசுசி., எல்.எல்.டி. பட்டங்களைப் பெறத் தகுதி பெற்றவராவார். எஸ்.சு.

*பகல் வேடம்:* சிலர் புராண இதிகாச மனிதர்கள் போலவும், தெய்வங்கள் போலவும் வேடமிட்டுக் கொண்டு பகலில் தெருத் தெருவாகவும் வீடு வீடாகவும் பாடிக்கொண்டும் உரையாடிக் கொண்டும் வருகின்றனர்.பகலில் வேடம்போட்டு வருவதால் பகல் வேடம் என்றும், பலவகையான வேடங்களைப்போடுவதால் பல வேடம் எனவும் இவர்கள் புனையும் வேடம் கூறப்படுகிறது.

தெருக்கூத்தைப் போலவே இதிலும் நடிகர்கள் வேடமிட்டு வருகின்றனர். தெருக்கூத்து இரவில் ஒரே இடத்தில் நிகழ்த்தப் பெறும். இப் பகல்வேடம் பகலில் நகரும் கலையாக நடமாடும் அரங்கக் கலையாக உள்ளது. இராமன் சீதை, போன்ற காப்பிய மாந்தர்கள், சிவன், பார்வதி, திருமால் போன்ற தெய்வங்கள், சரித்திர கால வீரர்கள் என்னும் இவர்களின் வேடங்களைத் தாங்கி நம் இல்லங்களுக்கே இவர்கள் வருவதால் மக்கள் இவ் வேடங்களைக் கண்டு மகிழ்வதிலும் அவர்கள் கூறுகின்ற புராண இதிகாச நிகழ்ச்சிகளைக் கேட்பதிலும் ஆர்வமுடையவர்களாக இருப்பதால் இக்கலை அழிந்துபடாமல் இருக்கிறது.

இக்கலை பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே இங்கு வழங்கிவரும் ஒரு கலையாக இருக்க வேண்டுமெனத் தெரிகிறது. மன்னர்கள் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் இவர்களை ஒற்றர்களாகப் பயன்படுத்தினர் என்ற கருத்தும் நிலவுகிறது. இக்கலை தஞ்சைக் கருகில் உள்ள வல்லம் பகுதியில் முதலில் தோன்றியதாகவும்,பின்னர்த் திண்டிவனம் பகுதியில் பரவியதாகவும் குறிப்பிடுகின்றனர். தமிழ் நாட்டில் உள்ளவேறு பகுதி மக்கள் இக்கலையில் ஈடுபடுவதாகத் தெரியவில்லை. ஆனால்; ஆந்திராவிலிருந்து பல பகல்வேடக் குழுவினர் இங்கு வந்து நிகழ்ச்சிகள் நடத்துகின்றனர் எனவும், அதனால் தங்கள் வருவாய் பாதிக்கப்படுகிறது எனவும் இக்கலைஞர்கள் குறிப்பிடுகின்றனர். எனவே, இப்பகல் வேடக் கலை அண்டை மாநிலங்களிலிருந்து இங்கு வந்திருக்க வேண்டும் என்று கருத இடமுள்ளது. தமிழ் நாட்டில் இக்கலையை நடத்துவோரின் தாய்மொழி தெலுங்காக இருப்பது இவ்வெண்ணத்திற்கு வலுவூட்டுவதாக உள்ளது. எனினும் இது ஆய்வுக்குரியது.

திண்டிவனத்திற்கும் விழுப்புரத்திற்கும் இடையில் தென்களவாய் என்னும் ஊருக்கருகில் உள்ள வயிரம் பேட்டையில் வாழும் 10 குடும்பங்களும், இக்கிராமத்திலிருந்து 1½ கி.மீ. தொலைவில் உள்ள வேங்கை என்னும் கிராமத்தில் வாழும் 10 குடும்பங்களும் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஓர் ஆண்டில் 6 மாதம் பயிர்த்தொழிலிலும், எஞ்சிய 6 மாதம் இப்பகல் வேடக் கலையிலும் கழிக்கின்றனர். மேற்கண்ட இப்பகுதிகளில் வாழும் இக்கலைஞர்கள் 200 குழுக்களாகப் பிரிந்துள்ளனர். தமிழ்நாட்டில் பல ஊர்களையும் இன்னின்ன குழுக்களுக்கு இன்னின்ன ஊர் எனப் பிரித்துக் கொண்டுள்ளனர். ஆண்டுக்கு



பகல் வேடம்

ஆந்திராவில் இப்பகல் வேடக்கலை பெருமளவில் இருப்பதாகக் கூறுகின்றனர். ஒரிசாவில் உள்ளூர்ப் புறங்களிலிருந்து கண்ணன் (கிருட்டிணன்) கோபியர் வேடமிட்ட கலைஞர்கள் நகர்ப்புறத்திற்கு மிதிவண்டிகளில் வந்து இக்கலையை நிகழ்த்திப் பணம் பெற்றுச் செல்லும் வழக்கம் இன்றும் நடைபெற்று வருகிறது.

ஒரு கூட்டமே தங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட பகுதியில் உள்ள ஒவ்வோர் ஊரிலும் ஓர் ஊருக்கு இத்தனை நாள்கள் எனத் தங்கி, இக்கலையில் ஈடுபடுகின்றனர். இக்குழுவினர் தங்களுக்கென்று விதிக்கப்படாத பகுதிகளுக்குச் செல்வதில்லை. தொடர்ந்து ஒரு குழுவே ஒரு பகுதிக்குச் செல்வதால் அப்பகுதி மக்களிடம் நன்றாகப் பழகி, அப்பகுதி மக்களின் மனநிலை அறிந்து அதற்கேற்ப நடந்துகொள்ள முடிகிறது.

ஒரு குழு என்பது இரண்டு அல்லது மூன்று கலைஞர்களைக் கொண்டது. ஒரே குடும்பத்து உறுப்பினர்களாலும், ஒன்றுக்கு மேற்பட்ட குடும்பத்து உறுப்பினர்களாலும் இக்குழு அமையும். அந்தந்தப் பகுதி மக்கள் சிலரிடம் நன்கு பழகி, கோயில்கள், சத்திரங்கள் போன்ற பொது இடங்களில் தங்கிக்கொண்டு, முற்பகல் 10 மணியிலிருந்து பிற்பகல் 3 மணிவரை வேடமணிந்து ஒவ்வொரு தெருவிலும் செல்கின்றனர். முக்கியமான இடங்கள், கடைகள் முன்பு சிறிது நேரம் நின்று இந் நிகழ்ச்சியை நடத்துகின்றனர். இவர்கள் ஓர் இடத்தில் செலவிடும் நேரம் அந்த இடத்து மக்கள் காட்டும் ஆர்வத்தை ஒட்டியே அமைகிறது. சிறிய ஊராக இருந்தால் இரண்டு மூன்று நாள்களும், பெரிய ஊராக இருந்தால் 15 அல்லது 20 நாள்களும் தங்கி இப்பகல் வேடநிகழ்ச்சியை நடத்துகின்றனர்.

ஒவ்வோர் ஆண்டும் இந்நிகழ்ச்சிகளை நடத்த வீட்டைவிட்டுப் புறப்படுகையில், இந்த ஆண்டு இத்தனை வேடங்கள், இன்ன வேடங்கள் நடத்துவது எனத் திட்டமிட்டு, அவற்றிற்குரிய உடை ஒப்பனைப் பொருள்கள், அணிகள்ஆகியவற்றை மட்டும் எடுத்து வருகின்றனர்.ஒரு வேடத்தை ஊரின் பரப்பிற்கேற்பவும் மக்கள்தொகைக்கேற்பவும் இரண்டு முதல் ஐந்துநாள்கள் வரை போடுகின்றனர். ஓர் ஊரில் அனைத்து வேடங்களையும் போட்டபின்னர்க்கடைசிநாள்வேடமின்றிப் பணம் வாங்க வருகின்றனர். நிகழ்ச்சி நாள்களில் யார் பணம்கொடுத்தாலும் வாங்குவது இல்லை. வேடங்கள் முழுவதையும் பார்த்த பின்னர்க் கொடுத்தால் மிகுதியாகக் கொடுப்பார்கள் என்பதால் இம்முறையைக் கடைப்பிடிக்கிறார்கள் போலும்.

இவ் வேடக்குழுவினர் பொதுவாகக் காசிப்பிராமணர், தீட்சிதர்-பட்டாச்சாரி, அர்த்தநாரீசுவரர், ஞான வெட்டியான் போன்ற 21 வகை வேடங்களைப் போடுகின்றனர். புராண, இதிகாச நிகழ்ச்சிகளும், தெய்வச் செயல்களும் இந்நிகழ்ச்சிகளில் இடம் பெறுகின்றன. மகாபாரதமும் இராமாயணமும் இவர்களின் கதைகளுக்கு மூலக் கருவூலமாக இருக்கின்றன.

ஒருநாள் பகல வேடத்தில் அன்றைய வேடங்கள் தொடர்புடைய இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட நிகழ்ச்சிகள் கதையாகக் கூறப்படுகின்றன. வேடம் தரித்து வந்துள்ளவர்கள் தாங்கள் ஏற்றிருக்கும் வேடத்திற்குரிய பேச்சுகளைப் பேசுவதுடன் வேடமேற்று வாராத பாத்திரங்களுக்குரிய பேச்சுகளையும் 'இவ்வாறு கூறினார்' என்ற முடிப்புடன் பேசியும் கதையைக் கூறிச் செல்கின்றனர்.

கதையமைப்பைப் பொறுத்தவரை ஒரு பாத்திரம் மற்றொரு பாத்திரத்திடம் கதை கூறும்போக்கில் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட புராண, தெய்வ நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன.

நிகழ்ச்சிகளின் அமைப்புமுறை என்பது, வேடந் தாங்கி வந்துள்ள பாத்திரங்களில் ஒரு பாத்திரம் கதையைச் சொல்வதாகவும், மற்றப் பாத்திரம் 'ஆமாம்'எனச் சொல்லியும், 'ஓகோ' என்று இடையிடையேசொல்லியும்அவ்வப்போது கதையைத்தொடர்வதற்கு ஏதுவாகச் சிறு சிறு கேள்விகளைக் கேட்டும், கதை சொல்லும் பாத்திரம் சொல்லிய கடைசி வாக்கியத்தின் இறுதியில் உள்ள இரண்டொரு வார்த்தைகளைத் திருப்பிச் சொல்லியும் கதையைத் தொடர்ந்து சொல்ல வழிவகுக்கிறது. இப்பாத்திரப் பேச்சு ஒரு நிகழ்ச்சியில் 10 சதவிகிதமாக இருக்கிறது. எஞ்சிய 90 சதவிகிதப் பேச்சு கதை கூறும் பாத்திரப்பேச்சாகவே அமைகிறது.

கால மாற்றம், இடமாற்றம் என்னும் இவை பாத்திரங்களின் இட, வல மாற்றங்களினால் குறிக்கப்படுகின்றன.புராண,இதிகாச,தெய்வ நிகழ்ச்சிகளைத் தனிப்பட்ட வகையில் சேர்த்து அவற்றைக் கதைகளாகச் சொல்லும்போது ஒரு பாத்திர வேடத்திலிருப்பினும், அந்த அந்தப் பாத்திரங்கள் பேசுவது போலவே தனது பேச்சில்-பாத்திர நேர் பேச்சு முறையைப் பயன்படுத்துவதாலும், அடுத்து என்ன என்ற ஆவலை உண்டாக்கும் வகையில் தனது கதை கூறும் முறையை அமைத்திருப்பதாலும் இந்நிகழ்ச்சியை ஓரளவு சலிப்பின்றிக் காண முடிகிறது.

உடும்பின் தோலால் ஆன கஞ்சிரா எனப்படும் சிறு பறையை ஒருவன் அடித்துப் பாட்டிற்கேற்ப ஒலியெழுப்ப, அதற்குப் பக்க வாத்தியமாகச் 'சால்ரா' வாசித்துக்கொண்டு பாடல்களைப் பாடுகின்றனர். அவர்கள் தொடக்க, முடிப்புப் பாடல்களாகப் பாடுகின்றனர்.

முகபாவங்களோ, உடலசைவுகளோ, இயக்கமோ, இசையின் இணைவோ மிகுதியாக இல்லை. வேடம் போட்டுக் கதை சொல்லல் அல்லது கதாகாலட்சேபம் செய்தல் என்னும் நிலையிலேயே இப்பகல் வேடம் அமைந்துள்ளது.

நடமாட்டக் கலையாக இக்கலை நிகழ்த்தப் படுதலும் பகலில் தெருவில்பலரும் பார்க்க நடத்தப் படுதலும் இதன் தனிச் சிறப்புகள் எனலாம். கு.மு.

**பகவத் கீதை:** பகவத் கீதை என்ற சொல்லுக்குத் 'தெய்வப் பாடல்' என்பது பொருள். குருட்சேத்திரப் போர்க்களத்தில் செய்வதறியாது திகைத்துத் தேரிலிருந்த விசயன் கேட்க, கண்ணபிரான் அருளிய மெய்ப்பொருளை எல்லாம் தொகுத்து வியாசமுனிவர் பகவத் கீதையாக அளித்தார் என்பர். பகவத்கீதை எழுநூறு குறள் வாக்கியங்கள் அடங்கிய தருமகாவியம். இலட்சம் சுலோகத்தோடு கூடிய மகாபாரதம் என்னும் இதிகாசத்தின் மத்தியில் வீடும பர்வத்தில் 25-ஆம் அத்தியாயத்திலிருந்து 42 – ஆம் அத்தியாயம் வரையில் கீதை இடம் பெற்றுள்ளது.

மகாபாரதம் என்னும் உடலுக்குப் பகவத்கீதை இதயமாக அமைந்துள்ளது. மொழி அமைப்பிலும், கருத்தமைப்பிலும் கீதை பாரதத்தை ஒத்துள்ளது. உபநிடதங்களில் அடங்கியுள்ள கருத்துகளையெல்லாம் தெளிவுபட விளக்குவது கீதை. உபநிடதங்களைப் பசுக்கள் எனக் கொண்டால் பகவத் கீதையைப் பாலெனப் பகரலாம். உபநிடதங்கள், பகவத் கீதை ஆகியவற்றில் மெய்ப்பொருள் விளக்கம் முறையாக அமைந்துள்ளது.

பதினெட்டு அத்தியாயங்களைக் கொண்ட கீதை மூன்று சட்கங்களாகப் (மூவாறு அத்தியாயங்கள்) பகுக்கப்பட்டு, முறையே கர்மம், பக்தி, ஞானம் என்னும் மூன்று காண்டங்களைக் கொண்டுள்ளது. பதினெட்டு அத்தியாயங்களில் கருமயோகம், இராசயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்ற நான்கு யோகங்கள் பேசப்பெறுகின்றன. தொடக்க நிலையில் இருக்கும் கருமயோகம் பிறகு இராச யோகமாகப் பரிணமித்து, அதனின்று பக்தியோகம் ஓங்கி இறுதியில் ஞானமாக முற்றுப் பெறுகிறது என்பதைக் கீதையின் பதினெட்டு அத்தியாயங்களின் அமைப்புக் காட்டுகிறது. கருமத்தோடு ஞானத்தை இணைத்தல்; பிறகு பக்தியையும் ஞானத்தையும் ஒரே பாங்கில் பொருள் படுத்துதல்; யோகத்தையும், பக்தியையும் மற்றோரிடத்தில் ஒன்று படுத்துதல் ஆகியவற்றால் ஒரு யோகம் மற்றொன்றிற்கு முந்தியதுமன்று ,பிந்தியது மன்று,மேலானதுமன்று , கீழானதுமன்று என்று காட்டுவது கீதையின் சிறப்பாகும். நான்கு யோகங்களும் ஒரே காலத்தில் சேர்ந்து கடைப்பிடிக்கப்படும் பொழுது வாழ்க்கையின் குறிக்கோள் நிறைவேறுவதாகக் கீதை காட்டுகிறது.

கீதைக் கோட்பாடு எல்லார்க்கும் பொதுவாகும். வாழ்க்கைக்கான திறவுகோலைக் கீதைக்கோட்பாட்டில் காணமுடிகிறது. மனம், மொழி, செயல் மூன்றையும் இறைவனிடம் ஒப்படைப்பதால் ஆத்ம நிலை எய்தலாம் என்பதே கீதையின் நோக்கம். பரநலத்திற்காக உடலாலும், மனத்தாலும் கருமம் செய்வதால், கருமத்தால் ஏற்படும் பலனைத் துறப்பதால், அனைத்துச் செயல்களையும் இறைவனது திருவடிகளில் ஒப்படைப்பதால் ஆத்ம நிலை எய்தலாம் எனக் கீதை உரைக்கிறது. மனிதனை நிலையான நிலைக்குக் கொண்டு சேர்ப்பது உறுதியான உடலும் உயர்ந்த உள்ளமும் தெளிந்த அறிவுமாகும்.

வேதாந்தத்தின் சாரமான கீதை 'தத்துவம், இதம், புருடார்த்தம்' ஆகியவை பற்றிப் போதிக்கின்றது. கீதையின் மூன்று பகுதிகளும் தத்துவ இத புருடார்த்த ஞானத்தை முறையே விரித்துக் கூறுகின்றன. இறைவனது தத்துவத்தை உணர்ந்து, உய்யும் வழிகளை அறிந்து, இறைவனை அடைதலே தத்துவம், இதம், புருடார்த்தம் என்பதன் குறிப்பாகும். தத்துவம் என்பது சித்து,அசித்து, ஈசுவரன் (தத்துவத்திரயம்) என்ற மூன்று பகுதிகளைக் கொண்டது. அசித்து என்னும பொருளும், சித்து என்னும் ஆத்மாவும் தமது வாழ்க்கை முழுவதும் இறைவனைச் சார்ந்தே இருக்கின்றன. எனவே, இறைவனின் உடலாகவே பொருளும், ஆத்மாவும் அமைகின்றன. இறைவனின் நோக்கத்திற்கேற்ப அவை இயங்குகின்றன. இதம் என்பது வீடுபேற்றினை அடையும் வழிகள். அவை பக்தி மூலம் அடைதல், பிரபக்தி (சரணாகதி) மூலம் அடைதல் என இருவகைப்படும். புருடார்த்தம் (புருடன் –ஆன்மா:அர்த்தம்-பொருள்) ஆன்மா அடையவேண்டிய பொருள். பரம்பொருளாகக் கொள்ளப்படுவது எது? அதனை அடையும் வழியாகக் கருதப்படுவது எது? அடைந்தபின் கொள்ளும் பயன் எது? என்பனவற்றை நிலைப்படுத்துவதே தத்துவ இத புருடார்த்தங்களின் நோக்கம் ஆகும்.

'தருமங்களையெல்லாம் அறவே விட்டுஎன்னையே சரணடைக. பாபங்களனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன்; வருந்தாதே'. எனக் கீதாசாரியன் அருச்சுனனாகிய சீடனுக்குப் பொருளோடு அருளுகிறான். இறைவன் உபாயமாய் நிற்பதைப் பிரபத்தி உணர்த்துகிறது. பக்தியோகம் முதலிய உபாயங்களை அறிந்து, வேதத்தில் விதிக்கப்பட்ட கருமங்களை வழுவாது நடத்த முயலாது அல்லது இயலாது திகைத்து நிற்கும் தறுவாயில், இறைவனது திருவடிகளில் தஞ்சம் அடைவதைத் தவிர வேறு சிறந்த உபாயமில்லை.

கீதை உரைப்பதெல்லாம் 'ஆத்ம அறிவு அடையப் பெற்றவன் ஆவாயாக. உனது பேரியல்பில் நிலை பெற்றுக் கரவாது கடமையைச் செய்க. உலகுக்கும், உனக்கும் தொடர்புண்டு. தூக்கி வினைசெய்து அத்தொடர்பை மெய்ப்பிப்பாயாக ஆத்ம சொரூபத்தில் அனைத்தையும்அடக்கிக்கொள்வாயாகஎன்பதேஇவ்வா

றாக உயிர்கள் யோகிகளாகும்படி கீதை உபதேசிக்கிறது.

ஆண்மையுடன் எழுந்திரு, வாழ்வு என்னும் போராட்டத்தை வெற்றியுற நடத்து. ஆயினும், அதனிடத்துப் பற்றுவைக்காதே' என முக்தி மார்க்கத்தைப் போதிப்பது கீதை. சிவ.ம.

*பகவத் விசயம்*: திருமாலே முழுமுதற் கடவுள்; விசிட்டாத்வைத வைணவ மதமே உண்மையான வைதிக மதம் என்ற கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளதும், மிகத் தொன்மையானதுமான சிரீ வைணவ சித்தாந்தத்தை இருபத்து நான்கு நூல்கள் அடங்கிய திவ்வியப் பிரபந்தங்களின் மூலம் நிலை நிறுத்தி வந்துள்ளனர் வைணவச் சமய குரவர்களான ஆழ்வார்கள். அவர்களுள் முதன்மையானவராகக் கருதப்படுகின்றவர் 'அருமறைகள் தமிழ் செய்த மாறன்' என்னும் 'நம்மாழ்வார்'. அவர் செய்த பிரபந்தங்கள் நான்கு. அவையாவன. 1) இருக்குவேத சாரமெனக் கருதப்படும் நூறு பாசுரங்கள் கொண்ட 'திருவிருத்தம்'. 2) யசுர்வேத சாரமான ஏழு பாசுரங்கள் கொண்ட 'திருவாசிரியம்'. 3) எண்பத்தேழு பாசுரங்கள் கொண்டதும், அதர்வணவேத சாரமாகியதுமான 'பெரிய திருவந்தாதி'. 4) ஆயிரம் சாகைகள் உடைய சாமவேத சாரமாகவுள்ளதும், 1102 பாசுரங்களைக் கொண்டதும் பிரபந்தங்களிலேயே மிகப் பெரியதுமான 'திருவாய்மொழி'. இது திருமால் முழுமுதற் கடவுள் என்றும், சீவர்களாகியோர் அவனுடைய 'தாசர்கள்' என்றும், இறைவனை அடையத்தக்க உபாயம், சரணாகதி யென்றும் இறைவனை அடைவதனால் கிடைக்கவுள்ள பயன்கள் இன்னின்ன என்றும் இவ்வழியில் உள்ள தடைகள் இன்னின்ன என்றும் எடுத்தியம்பும். திருவாய்மொழிக்குத் தென் மொழி, வடமொழி ஆகிய வற்றிலுள்ள வியாக்கியானங்கள் (உரைகள்) அனைத்திற்கும் 'பகவத் விசயம்' என்பது பெயர். அவ்வுரைகளின்றித் திருவாய் மொழியின் உட்கருத்துகள் அறிவது முடியாது. அதனைவும் தக்க ஆசாரியனை அடைந்துதான் பெற இயலும்.

ஆழ்வார்களின் காலத்தில் திவ்வியப் பிரபந்தங்கள் உரையின்றியே மக்களிடை வழங்கி வந்தன. ஆச்சாரியர்களுள் முதல்வரான நாதமுனிகள் தொடங்கித்தான் திவ்வியப்பிரபந்தங்களுக்கு வாய்மொழி உரை கூறுவது நடைமுறைக்குகந்ததாகக் கொள்ளப் பட்டது.

நாதமுனிகளின் பேரனார் ஆளவந்தார் பேரவையில் திருவாய்மொழிப் பாடல்கள் நன்கு ஆராயப்பட்டன. அவர்தம் சீடராகிய திருமாலையாண்டானிடம் திருவாய்மொழிப் பொருளாட்சிகளைக் கேட்டறிந்த இராமானுசர் திருவாய்மொழிப்பொருளை விரித்து வளர்க்க எண்ணி, நூல் வடிவில் அமைக்கத் திருவுள்ள முற்று, திருக்குருகைப்பிரான் பிள்ளானிடம் அப்பணியை அளித்தார். அதனால் 'அன்றுரைத்தது (பிள்ளானின்) இன்பமிகும் ஆறாயிரம்'. இது ஆறாயிரம் சுலோகங்களைக் கொண்ட விட்டுணுபுராணத்தினை ஒத்ததாகும். வேதாந்தத்தில் வல்லவராய், வைணவராக மாறுவதற்குமுன் அத்துவைத சித்தாந்தத்தில் ஈடுபட்டிருந்தவரும் சிரீபராசரபட்டருடைய சீடருமான நஞ்சீயர்-ஆச்சாரியரின் திருவுள்ளப்படி 'ஒன்பதாயிரப்படியை' ஆய்ந்துரைத்தார். அதைத் தொடர்ந்து நம்பிள்ளை திருவுள்ளத்திற்கிணங்கப் பெரியவாச்சான் பிள்ளையின் 24,000 சுலோகங்களையுடையதான இராமாயணத்தின் அளவிலான 'இருபத்துநான்காயிரப்படி' வைணவ உலகில் அறிமுகமாயிற்று. இதனால் 'வியாக்கியான சக்கரவர்த்தி' என்று போற்றப்பட்ட இப்பெரியவாச்சான்பிள்ளையின் சீடரான வாதிகேசரி அழகியமணவாள சீயர், 12,000 சுலோகங்களைக் கொண்ட பாகவதத்தின் அளவில் 'பன்னீராயிரப்படியில்' மாறன் மறையின் பொருளுரைத்தார். வடக்குத் திருவீதிப்பிள்ளை (கி.பி. 1167-1262)யின் புகழ்பெற்ற 'ஈடு முப்பத்தாறாயிரம்' சுருதப்பிரகாசிகையின் அளவேயாம்.

மணவாளமாமுனிகளின் 'உபதேசரத்தினமாலையில்' வரும் பாசுரம், மேற்குறிப்பிட்ட விவரங்களைக் கூறுகிறது. இவை தவிர, வடமொழியில் சிரீவேதாந்த தேசிகன் இரு நூல்களையும் வாதிகேசரி சிரீ அழகிய மணவாள சீயர் ஒரு நூலினையும் இயற்றியுள்ளனர். அவற்றின் ஒவ்வொரு வடமொழிச் சுலோகத்திலும் திருவாய்மொழியின் ஒவ்வொரு பாசுரத்தின் பொருள் உள்ளடக்கியிருப்பதையும், ஒவ்வொரு பத்தின் பொருள் பொதிந்திருப்பதையும் காணலாம்.

'பகவத்விசயம்' மணவாளமாமுனிகள் காலம் வரை ஓராள் வழியாகவே செலுத்தப்பட்டதாகத் தெரிகிறது. நம்பிள்ளை (கி.பி. 1147-1252) என்னும் ஆச்சாரியன் இதுபற்றி விரிவுரையாகச் சொற்பொழிவாற்றி வைணவர்களிடையே பகவத் விசயம் பற்றி அறிவதில் பேரார்வத்தை வளர்த்தார். அதன் விளைவாகப் பல உரைநூல்கள் பிற்காலத்தில் வரலாயின.

வடமொழி வேதத்தின் சாரம் அனைத்தையும் ஒன்று விடாமல் திராவிடவேதமாகிய திருவாய்மொழியில் நம்மாழ்வார் அருளிச் செய்திருப்பது சிரீ வைணவத்திற்கு ஆற்றிய மாபெரும் தொண்டாகும். அதனைப் பாமரர்களும் அறிந்துபயனடையஉதவுவது பகவத் விசயம் என்னும் தொகுப்பு. வெ. சீ .சே.

*பகாமாத்தீவுகள்*: வட அட்லாண்டிக்குக் கடலின்மேற்கே அமைந்துள்ள இத்தீவுக்கூட்டங்கள் சிறு தீவுகளாக ஏறத்தாழ 1223கி மீ. தூரம் பரந்துள்ளன. அமெரிக்க ஐக்கிய நாட்டின் தென்கிழக்காக அமைந்துள்ள இத்தீவுத்தொடர், பிளாரிடாக் கடற்கரையின் கிழக்கே ஏறத்தாழ 80 கி.மீ. தொலைவில் உள்ளது. 20°-30° வடக்குத் தீர்க்க ரேகையிலும் 70°-80° மேற்கு அட்ச ரேகையிலும் இத்தீவுகள் உள்ளன. இத்தீவுத்தொடரில் ஏறத்தாழ எழுநூறு சிறு தீவுகளும்; கணக்கிலடங்கா முருகைப்பார்களும் பரவிக் காணப்படுகின்றன. இத்தீவுக்கூட்டங்களின் மொத்த நிலப்பரப்பு 13939 ச. கி.மீ. ஆகும். இதன் தலைநகரம் நாசௌ (Nassau) ஆகும்.

இங்கு எண்ணிறந்த தீவுகள் காணப்பட்ட போதிலும் முப்பது தீவுகளில் மட்டுமே மக்கள் வாழ்கின்றனர். இங்குள்ள தீவுகளுள் நியூ பிராவிடன்சு, அபகோ, கிரேண்டு பகாமா, கேட்தீவு, ஆர்பர் தீவு, இசுபானிசு வெல்சு, இலாங்ஐலண்டு, மயகுவானர, இலியூதெரா, சான்சால்வடார், ஆக்ளிங் ஐலண்டு, குரூக்கடு ஐலண்டு, இனாகுவா, ஆன்ட்ரோசு, தாமினி முதலானவை குறிப்பிடத்தக்கனவாகும். இவற்றுள் நியூபிராவிடன்சு தீவு பெரியது; மிகுந்த மக்கள் தொகையைக் கொண்டது .இத்தீவில் மட்டும் 109000 மக்கள் வாழ்கின்றனர்.




பகாமாத்தீவுகள்

பெரும்பாலான தீவுகள் குறுகலானதும் ஆழமற்ற மண் கொண்ட மலைப் பாங்கானதும் (Rocky with shallow soil) ஆகும். இங்கே அயன மண்டலக்காடுகளும் மித வெப்ப மண்டலக்காடுகளும் அருகருகே உள்ளன. இங்கே உள்ள பெரும்பாலான பூக்களும் பழங்களும் அயல்நாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்டுப் பயிர் செய்யப்பட்டவையேயாகும். அன்னாசி, வாழைப்பழம், சப்போட்டில்லா (நடு அமெரிக்க வகைப் பழம்), சோர்சோப்பு (மேலை இந்தியத் தீவுப் பழ வகை) முதலான பழங்கள் மிகுதியாக விளைகின்றன. இங்கு வாழும் பறவைகளுள் பச்சைக்கிளி, செந்நாரை (Flamingo), இசையெழுப்பும் சிறுபறவை (Humming-bird) முதலானவை குறிப்பிடத்தக்கனவாகும்.

பொதுநல அரசு நாடுகளின் அமைப்பில் முப்பத்து மூன்றாம் நாடாக அங்கம் வகிக்கும் பகாமா, கவின் மிகு கடற்கரையும், நல்ல பொழுதுபோக்குச் சூழலும் கொண்டுள்ளதால், இங்குள்ள கடற்கரைகளில் மீன் பிடித்தல் ஓர் இன்பப் பொழுது போக்கு. இங்குள்ள கவர்ச்சி மிகு உணவுறை இல்லங்கள், அயல் நாட்டினருக்கு உல்லாச புரியாக மிளிர்கின்றன. பெரும்பாலும் அமெரிக்காவிலிருந்து ஆண்டுதோறும் அரை மிலியன பயணியர் இங்கு வந்து இன்பப்பொழுது போக்குகின்றனர். அயல்நாட்டுப் பயணியரைக் கவனித்து அவர்களின்தேவைகளை நிறைவு செய்வதே இங்குள்ள மக்களின் முக்கிய தொழிலாகஉள்ளது. அதனால், இவர்கள் நல்ல வருவாய் பெறுகின்றனர். இந்த நாட்டைச் சேர்ந்த 3800 பேர் அமெரிக்காவிற்குச் சென்று பண்ணை வேலை செய்து பிழைக்கின்றனர்.

பழங்களும் காய்கறிகளும் முக்கிய வேளாண்மை உற்பத்திப் பொருள்கள் ஆகும். இவையனைத்தும் உள்ளூர்த் தேவைக்கே சரியாகி விடுகின்றன. பழ வகைகளுள் தக்காளி மட்டுமே ஏற்றுமதி செய்யப்படுகின்றது. தொழில் வளர்ச்சியில் இந்நாடு ஓரளவு முன்னேற்றம் கண்டுள்ளது. பெட்ரோலியம், மருந்தாக்கத் தொழில் பொருள்கள் ஆகியன இங்கு மிகுதியாக உற்பத்தி செய்யப்படுகின்றன. சிமிண்டு, பெட்ரோலியப் பொருள்கள், மருந்தாக்கத் தொழில் பொருள்கள, அன்னாசி, உப்பு, இறால் மீன், மரம், ஆகியன இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றன. எந்திரம், உடை, இறைச்சி, உணவுப் பொருள்கள், கச்சா எண்ணெய், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் ஆகியன அயல்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. இந்நாடு பெரும்பாலும் அமெரிக்கா, கிரேட் பிரிட்டன், கனடா முதலான நாடுகளுடன வணிக உறவு கொண்டுள்ளது. கிளிஞ்சல்களைக் கொண்டும் வைக்கோலைக் கொண்டும் தயாரிக்கப்படும் கைவினை அலங்காரப் பொருள்கள் கவர்ச்சியான வகையில் இங்குத் தயாரிக்கப்படுகின்றன. இவை அயல்நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

போக்குவரத்துத் துறையிலும் பகாமா நல்ல முன்னேற்றம் கண்டுள்ளது. இங்குள்ள துறைமுகத்தில் இறக்குமதி வரியின்றிப் பிற பொருள்கள் இறக்குமதி

செய்யப்படுகின்றன. இங்குள்ள முக்கிய துறைமுகம் நாசௌ (Nassau) ஆகும். இது ஒரு பன்னாட்டு விமானத்தளமாகவும் உள்ளது. இது தவிர வேறு 15 தீவுகளில் விமானங்கள் இறங்க வசதிகள் செய்யப்பட்டுள்ளன. பகாமா வான்வழி நிறுவனம் விமானப் போக்குவரத்தில் சேவை புரிகின்றது. பன்னாட்டு விமான பகாமா (International Air Bahamas) 1966-இல் நிறுவப்பட்டது.

கல்வியும் இங்கு நன்கு முன்னேறியுள்ளது. இலவசக் கல்வி அளிக்கும் தொடக்கப் பள்ளிகள் கி.பி. 1885-இலிருந்தே கல்விப் பணியாற்றி வருகின்றன. ஆறு வயது முதல் பதினான்கு வயது வரையிலான அனைத்துக் குழந்தைகளும் கட்டாயமாகப் பள்ளி செல்ல வேண்டும்; வருகைப் பதிவும் கட்டாயமாகும். தலை நகரில் பல கல்லூரிகள் உள்ளன. தொடக்க நிலைப்பள்ளிகளில் 25000மாணவர்களும் உயர்நிலைப் பள்ளிகளில் 5000 மாணவர்களும் பயில்கின்றனர்.

பகாமா பழைமையான வரலாற்றைக் கொண்டது. கொலம்பசு கி.பி. 1492-இல் சான் சால்வடாரைக் கண்டுபிடித்தார். மக்கள் சிலர் கி.பி.1647-இல் இங்குக் குடியேற்றப்பட்டனர். இசுபானியரின் (Spaniards) கடுமையான தாக்குதலின் விளைவாக இங்கிருந்த ஆங்கிலக் குடியேற்றம் ஒழிந்தது. அடுத்து இது சிலகாலம் கொள்ளைக்காரர்களின் புகலிடமாகவும் விளங்கியது. ஆங்கிலேயர் இங்கு கி.பி. 1729-இல் நேரடியாகச் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டினர். அமெரிக்கச் சுதந்திரப் போரின் போது கி.பி. 1782 இல் பகாமா மீண்டும் இசுபானியர் வசமாயிற்று. பகாமா கி.பி. 1783-இல் கையெழுத்தான வார்சே உடன்படிக்கையின்படி ஆங்கிலேயருக்கு அளிக்கப்பட்டது. இங்கு கி.பி. 1834-ஆம் ஆண்டு அடிமை ஒழிப்பு நடைமுறைப்படுத்தப்பட்டது.

இங்குள்ள அனைத்து அரசியற் கட்சிகளும் 1962-இல் தங்கள் நாட்டிற்குப்பொறுப்பாட்சி கேட்டனர். இங்குப் புதிய அரசியலமைப்பு 7-1-1964-இல் செயற்படுத்தப்பட்டது. சுயாட்சி உள்ளாட்சி அமைப்பு 1973-ஆம் ஆண்டு வரையில் செயற்பட்டது. ஆங்கிலேய ஆளுநர் வெளிநாட்டுறவுப் படை, உள்நாட்டுப்பாதுகாப்பு, காவற்படைநிருவாகம் ஆகியனவற்றைக் கவனித்து வந்தார். இளவரசர் சார்லசு (இரண்டாம்எலிசபெத்து அரசியார்காலத்தில்) 1973-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் பத்தாம் நாள் பகாமாவின் மீதிருந்த முந்நூறு ஆண்டுக் குடியேற்ற ஆதிக்கத்தை நீக்கி விடுதலை அளித்தார். பகாமா பொது நல அரசு நாடுகளின் அமைப்பில் 33-ஆம் சுதந்திர உறுப்பினராக இடம் பெற்றது. இச்சுதந்திர நாட்டில்38-உறுப்பினர் கொண்ட கீழ்ச்சபையும், 15 உறுப்பினர் கொண்ட மேலவையும் உள்ளன. பிரதம மந்திரி நிருவாகத் தந்தையாவார்.

இந்நாட்டின் மக்கள் தொகை 1985-ஆம் ஆண்டின் கணக்கெடுப்பின்படி 236000-ஆகும். ஆண்டுச் சராசரி மக்கள் உயர்வு 2.0% ஆகும். நாசௌ இந்நாட்டின் தலைநகர். இதன் மக்கள் தொகை 139,000 ஆகும். மக்கள பல்வேறு மதங்களைப் பின்பற்றுகின்றனர். இவர்களுள 29% பாப்டிசுட்டு, (Baptist) 23% ஆங்கிலிகன், 23% உரோமன் கத்தோலிக்கர், 7% மெதடிசுட்டு (Methodist) ஆவர். இங்கு ஆங்கிலம் தான் ஆட்சி மொழி.

பகாமா 1983-இல் 900 மிலியன் தாலர் மதிப்புள்ள வாணிகம் புரிந்தது. இது. 1970-82-ஆம்ஆண்டுகளில் 4.1% சராசரி ஆண்டு உயர்வு காட்டியது. தனி ஆள் சராசரி ஆண்டு வருமானம் 1980-இல் 3,300 தாலர் ஆகும். தொழில் துறையிலும்வாணிகத்துறையிலும் பகாமா நல்ல முன்னேற்றம் கண்டு வருகிறது.

க.ம.

**பகாரி ஓவியங்கள்**, இந்தியாவில் இமயமலை அடிவாரப் பகுதிகளில் வளர்ச்சியடைந்த சிற்றோவியங்களாகும். பகாரி ஓவியங்கள் பசோலிப் பிரிவு என்றும் காங்கிராப் பிரிவு என்றும் இருவகையாக வளர்ச்சியடைந்துள்ளன. பகாரி (Pahari) என்பதற்கு மலைப்பகுதி ஓவியங்கள் என்று பொருள் கொள்ளப்படும். இவை இராசசுத்தான் ஓவியங்களுடன் பெரிதும் தொடர்புடையவை. கிருட்டிணனின் கதைகளைப் பெருமளவில் ஓவியங்களாகக் கொண்டுள்ள இவ்வோவியங்கள் கி.பி. 17-ஆம் நூற்றாண்டிலிருந்து வளர்ச்சியடைந்தது. காங்கிரா ஓவியங்களுக்கும் முற்பட்டதாகப் பசோலி ஓவியங்கள கருதப்படுகின்றன. மொகலாய ஓவியப் பாணியைப் பெரிதும் கற்ற பல ஓவியக் கலைஞர்கள் தில்லியை விட்டு நீங்கி மலையடிவாரப் பகுதிகளில் வாழத் தலைப்பட்டனர். அதன் மூலம் இமயமலைப் பகுதியில் இவ்வோவியங்கள் வளர்ச்சியடைய வாய்ப்பு ஏற்பட்டது. வண்ணங்கள் குறைந்தும் நில அமைப்பும் இயற்கை அழகும் மாறாத நிலையில் இவ்வோவியங்கள் எழுதப்பட்டன. காங்கிரா ஓவியம் கி.பி. 1770-ஆம் ஆண்டிற்குப் பின் வளர்ச்சியடைந்துள்ளது. இது இராசா சன்சார் சந்து என்ற அரசரின் ஆதரவில் பெரிதும் வளர்ச்சியடைந்தது.

மலைப்பகுதிகளில் இருந்த அரசுகளின் பேராதரவைப் பெற்று வளர்ச்சியடைந்த இவ்வோவியங்களில் கீதகோவிந்தம், பாகவதபுராணம் போன்றவற்றின் அடிப்படைக் கூறுகளே இடம்பெற்றுள்ளன. இந்து



பிரிட்டாபக்கு.

சமயபுராண நிகழ்ச்சிகள் இவற்றுள் முக்கிய இடம் பெற்றன. இசை நுணுக்கம், மலைத்தலைவர்கள் அவர்களின் குடும்பம் போன்றவையும் இவற்றுள் சித்திரிக்கப்பட்டுள்ளன. பகாரி ஓவிய வளர்ச்சி கி.பி. 18-ஆம் நூற்றாண்டுக்குப் பின் அழியத் தொடங்கியது. சு.இரா.

**பகீரதன்:** சூரியகுலத்தில் அஞ்சுமான் என்ற மன்னன் மரபில் பகீரதன் தோன்றினான். அவன் அயோத்தியை அரசாண்டு வருங்கால் வசிட்டர் மூலமாகத் தன் முன்னோராகிய சகரர் அறுபதினாயிரவர் கபிலமுனிவர் சாபத்தால் அழிந்ததை அறிந்து, அவர்கள் நற்கதி அடைதற்குரிய வழியினைக் கூறியருளுமாறு வசிட்டரை வேண்டினான். அவர் அறிவுரைப்படி பகீரதன் பிரமனை நோக்கிப் பதினாயிரம் ஆண்டுகள் தவம் செய்தான். பிரமன் அவன்முன் தோன்றி ஆகாயகங்கை நதி பூமியில் பெருகிவந்து சகரர்களின் எலும்புகளின்மீது பாயுமாயின், அவர்கள் நற்கதி அடைவர் என்றும், அந்நதி பூமியில் வரின், அதன் வேகத்தைச் சிவபெருமானால் தான் தாங்க முடியும் என்றும், எனவே அவரைக்குறித்துத் தவம் புரியும்படியும் கூறினான். பகீரதன் சிவபெருமானைக் குறித்துப் பதினாயிரம் ஆண்டுகள் தவம் செய்தான். சிவபெருமான் அவன்முன் தோன்றி ஆகாய கங்கை வந்தால் தாம் தாங்கிக் கொள்வதாகக் கூறினார். ஆகாய கங்கையை வருவிக்கப் பகீரதன் மேலும் ஐயாயிரம் ஆண்டுகள் தவம் செய்தான். கங்காதேவி ஒரு பெண்வடிவில் காட்சி அளித்தாள். கங்கை நதியின் வேகத்தைச் சிவனால் தாங்க முடியாது என்று செருக்குடன் கூறிமறைந்தாள்.

பகீரதன் மிகவும் வருத்தமுற்று மீண்டும் சிவபெருமானைக் குறித்து இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகள் தவம் செய்தான். சிவபெருமான் அவன் முன் தோன்றிக் கங்கை வரின் அதன்நீர் சிறிதும் புறத்தே சிந்தாதபடி அடக்குவதாகக் கூறி மறைந்தார். மேலும் அவன் கங்கையைக் குறித்து இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகள்தவம் செய்தான். அதன் பயனாய் எவரும் அஞ்சும்படி மிக்க வேகத்துடன் இழிந்த கங்கை நதியைச் சிவபெருமான் தன் ஒரு சடையிலேயே அடக்கி மறைத்தார். பகீரதன் சிவபெருமானை வணங்கித் திகைத்து நின்றான். சிவபெருமான் தாம் அடக்கிய கங்கையைச் சிறிது விட்டார். அது மிக்க வேகத்துடன் வந்து வழியில் சன்னு முனிவரின் வேள்வியைச் சிதைத்தது, சன்னு முனிவர் சினங்கொண்டு தம் தவவலிமையால் கங்கையைத் தம் ஒரு கையால் அடக்கிப் பருகினார். அதைக்கண்டுபகீரதன் மிகவும், வருந்தித்தன்குறையை முனிவரிடம் கூறி இரந்தான். முனிவர் மனமிரங்கிக் கங்கையை மீண்டும் தம் காதின் வழியே வெளிவரச் செய்தார். அது பரந்து பாய்ந்ததும் நரகமுற்ற அறுபதினாயிரம் சகரர்கள் நற்கதி அடைந்தனர். பகீரதன் பல இன்னியங்கள் முழங்க அயோத்திக்கு மீண்டான். பகீரதனின் கதை, விடாமுயற்சியால் எத்துணை அரியசெயலையும் சாதிக்கலாம் என்ற உண்மையை உணர்த்துகிறது. செ.ப.

**பகுத்தறிவுக் கொள்கை:** மேலை நாட்டுத் தத்துவத்தில், பகுத்தறிவுக் கொள்கை என்பது அறிவை அடிப்படையாகக்கொண்டதுதான் ஞானம் எனக்கூறும் தத்துவவாதிகளின் கொள்கையைக் குறிக்கும். அங்கு, கி.பி.17-18ஆம் நூற்றாண்டில் தலைசிறந்ததத்துவ ஞானிகளான தேகார்ட்டே; இசுபினோசா, இலைபினிட்சு ஆகியவர்கள் தத்துவத்திற்கு 'ஏற்புடைத்தான முறை பகுத்தறிவுக்கொள்கைதான் (Rationalism) எனக்கொண்டு, அதன்மூலம் கடவுள், உலகம், மனம், மற்றும் அடிப்படை உண்மைகளை அறிவு முறையில் ஆராய்ந்தனர். தத்துவத்தில் பகுத்தறிவுக் கொள்கை என்பது அவர்களின் தத்துவ முறையையேகுறிக்கும்என்றாலும், கி.பி.18-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில், முக்கியமாகத்தேகார்ட்டே பிறந்த பிரான்சு நாட்டில், மூட நம்பிக்கைகளை ஒழிக்கும் ஓர் இயக்கமாக உருவெடுத்த பகுத்தறிவு வாதத்திற்கும் இப்பெயர் பொருந்தும். இதுவே, 20-ஆம் நூற்றாண்டில் இந்தியா, சீனா போன்ற நாடுகளிலும், குறிப்பாகத் தமிழ்நாட்டிலும், ஒரு பகுத்தறிவு இயக்கமாக மாறிப்பெரும் புரட்சியை ஏற்படுத்

தியது. ஆக, இந்த நாட்டில் பகுத்தறிவுக் கொள்கை என்பது பகுத்தறிவினால் மூடநம்பிக்கைகளைத் தகர்த்தெறியும் இயக்கத்தைக் குறிக்கலாயிற்று.

மேலை நாட்டுத் தத்துவம், கி.மு. 6-ஆம் நூற்றாண்டில்தொடங்கி, கிரேக்க நாட்டுத் தத்துவமாகப் படிமலர்ச்சியுற்றுச் சாக்கிரட்டீசு, பிளேட்டோ, அரிசுடாட்டில் ஆகிய தலைசிறந்த கிரேக்க ஞானிகளினால் தத்துவத்தின் சிகரத்தை எட்டியது. அன்றிருந்து இன்றுவரை, மேலை நாட்டுத் தத்துவத்தின் சிறந்த எடுத்துக்காட்டாகப் பிளேட்டோ, அரிசுடாட்டிலின் தத்துவங்களே விளங்குகின்றன. அறிவின் வளர்ச்சிக்கு உதவுவது பகுத்தறிவும், அனுபவ ஞானமுமே என இவ்விரு தத்துவ ஞானிகளும் கருதினர். ஞானம் என்பது, இந்திரியங்களின் மூலம் பெறும் அனுபவ ஞானமும், அறிவின் மூலம் பெறும் விவேகமுமே ஆகும். இவ்வழி வந்ததே, கி.பி.17-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஏற்பட்ட மறுமலர்ச்சி இயக்கத்தின் தத்துவ விளக்கங்கள். பகுத்தறிவும், அனுபவமும் மக்களுக்குஞானத்தைக் கொடுக்கும் இரு வழிகளாகும். அவற்றுள் எதற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பது என்பதில் தத்துவ ஞானிகளுக்குள் ஏற்பட்ட கருத்து வேற்றுமையில் சிலர் பகுத்தறிவு வாதிகள் என்றும் (Rationalists) சிலர் புலனியல் வாதிகள் (Sensationalists) என்றும் கருதப்படலாயினர். மனிதனுக்கு முதலில் ஏற்படுவது அனுபவ ஞானமே எனக் கூறுபவர், எம்பிரிசுட்டு எனப்படும் ஆங்கிலத்தத்துவ ஞானிகள். இலாக்கு (Locke), பார்க்கிலி (Berkeley), இயூம் (Uume) ஆகிய மூவரும் அனுபவ ஞானத்தை ஏற்றுக்கொண்ட தலை சிறந்த ஆங்கிலத்தத்துவஞானிகள் ஆவர்.

அதே நேரத்தில், ஐரோப்பாக் கண்டத்தில் தேகார்ட்டே என்ற பிரான்சுத்தத்துவஞானியும், இசுபினோசா என்ற யூத ஞானியும், இலைபினிட்சு என்னும் அறிஞரும் பகுத்தறிவுத் தத்துவத்தைப்பரப்பினர். அறிவே ஞானத்திற்குச் சிறந்த வழி, எல்லா நேரத்திற்கும், எல்லா இடத்திற்கும் பொருந்தும் ஞானத்தை அளிக்க வல்லது அறிவுசால் விவேகமே ஆகும் என அவர்கள் உறுதியாக நம்பினர். பிரான்சு, நாட்டுத் தத்துவ ஞானி தேகார்ட்டே முதன்முதலில் அறிவுச் சிக்கலை ஆராய்கையில், மனிதன் ஞானம் பெறுவது அனுபவ முறையாகவும், அறிவு வழியாகவும், உள்ளுணர்வு மூலமாகவும் ஆகும் என மூன்று வழிமுறைகளைச் சுட்டிக்காட்டினார். அவற்றில், மனிதனுக்குப் பொதுவாகப் பல சமயங்களில் கிடைப்பது அனுபவ முறை ஞானமே என ஒப்புக்கொண்டாலும், அறிவுச் சார்பு ஞானமே முக்காலத்துக்கும் பொருந்தும் ஞானத்தை அளிக்க வல்லது என உறுதியாகக் கூறினார். அதற்கு எடுத்துக்காட்டாகப் பல சமயங்களில் ஒருவர் புலன்களே அவரை ஏமாற்றுவதைக்குறிப்பிட்டார். அதேநேரத்தில், கணிதத்தில் தூய்மையான, அனுபவக் கலப்பில்லாத அறிவாற்றலினால் எவரும் எக்காலத்திலும் மறுக்கவொண்ணா உண்மைகளைப் பெறுவதைச் சுட்டிக்காட்டினார். அக்கணித முறையையே தத்துவத்திலும் கையாண்டால், அத்தகு உண்மைகளைத் தத்துவத்திலும் பெறலாம் என முடிவாக எடுத்துரைத்தார். இதையே அறிவு வழியிலான முறை (Rationalistic Method) எனக்கொள்ளலாம்.

அவரைப் போலவே, இசுபினோசாவும், இலைபினிட்சும் அறிவுவழியிலான ஞானமே சிறந்தது என அறுதியிட்டுக் கூறினர். இசுபினோசா, தாம் எழுதிய தத்துவ நூலையே கணித முறையில் இயற்றியுள்ளார். முதலில் அடிப்படையான ஓர் உண்மையை உரைத்துஅதிலிருந்து படிப்படியாகப் பிற சிறப்பு உண்மைகளை மேற்கொள்ளுவதே கணித முறை (Mathematical method). அதுவே அறிவு வழியிலான முறை (Rationalisticmethod); அதுவே, தத்துவத்திற்கும் சிறந்ததென இவரும்தீவிரமாக நம்பினார். மேற்குறிப்பிட்ட மூவருமேகணிதத்தில் மேதைகளாய் இருந்தமை இதற்குக் காரணமாக இருக்கலாம். ஆக, இம்மூவரும் வகுத்த முறையே பகுத்தறிவுக் கொள்கை எனப்படும். எம.வே.

**துணை நூல்:**

**Radhakrishnan, S.,** History of Philosophy: Eastern and Western, Vol-II, George Allen & Unwin Ltd., London, 1953.

**பகுப்பு உளவியல்** காரல் குசுதாவ் யூங்கு (Carl Gustav Jung) என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. இது தோன்றிய காலத்தைக் குறிப்பிட்டுக் கூறமுடியவில்லை. ஏனென்றால்முப்பது ஆண்டுகளுக்கு மேலாகக்காரல் யூங்கு அப்போதைக்குப்போது வெளியிட்டு வந்த ஆராய்ச்சிக் கட்டுரைகளும், சிக்மண்டு பிராய்டுடன் கொண்டிருந்த கருத்து மாறுபாட்டுக்கான விளக்கக் கட்டுரைகளும், புராண இதிகாசங்களிலிருந்தும் பல்வேறு நாகரிகங்களிலிருந்தும் பெறப்படுபவை யாவை என்பது பற்றி எழுதிய கட்டுரைகளும் பகுப்பு உளவியல் (Analytical Psychology) துறையின் தோற்றத்திற்கு அடிப்படைகளாக அமைந்தன. மேலும், பகுப்பு உளவியலின் தோற்றமும், வரலாறும் காரல் யூங்கின் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடும் பின்னிப் பிணைந்து கிடப்பதால் பகுப்பு உளவியலை அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு இணைத்தே காணுவதுதான் சாலச் சிறந்ததாகும். பகுப்பு உளவியல், சிக்கல் உளவியல் (Complex Psychology) என்றும் சொல்லப்படுகிறது.

காரல் யூங்கு தம் முனைவர் பட்டத்திற்கான ஆராய்ச்சிக் கட்டுரையை 1902-ஆம் ஆண்டில் வெளியிட்டார். அக் கட்டுரை காரல் யூங்கு, சிக்மண்டு பிராய்டுடன் கொண்டிருந்த தொடர்பை வெளிப் படுத்தியது. அக்காலத்தில் உள மருத்துவத்தில் புகழ் பெற்று விளங்கிய செனட்டு (P.Janet), மையர்சு (F. W.H.Myers) ஆகியோர் எழுதிய நூல்களையும் காரல் யூங்கு நன்கு கற்றிருந்தார் என்பதையும் அக் கட்டுரை வெளிப்படுத்தியது. மேலும், அவர் மருத்து வம், உளமருத்துவம்,மெய்ப்பொருளியல் ஆகியதுறை களிலும் சிறந்த புலமை பெற்றிருந்தார். பகுப்பு உள வியலைக் காரல் யூங்கு தொடங்குவதற்கு நெடு நாள்களுக்கு முன்பே சிக்மண்டு பிராய்டு தோற்று வித்த உளப் பகுப்பாய்வுக் (Psycho-Analysis) கோட் பாடைப் பற்றித் தம்முடைய கருத்தை வெளியிட் டார். உளப் பகுப்பு என்று ஒன்று இருக்குமானால் ஓர் உள இணைப்பாக்கமும் (Psychosynthesis) இருந் தாக வேண்டுமென்று பிராய்டுக்கு எழுதினார். இந்த விளக்கக் கடிதந்தான் பிற்காலத்தில் காரல் யூங்கு பகுப்பு உளவியலைத் தோற்றுவிப்பதற்கு அடிப்படைக் காரணமாக அமைந்தது. இந்த ஓர் இணைப்பாக்கத் திற்கான ஆராய்ச்சியிலேயே இவர்வாழ்நாளின்பெரும் பகுதியைச் செலவிட்டார். இந்த முயற்சிதான் பிராய் டோடு தொடர்புகொள்ளும் வாய்ப்பைக் காரல்யூங் கிற்கு அளித்தது.

உளப் பாகுபாட்டுக் கோட்பாட்டில் பெரிதும் பேசப்பட்டு வந்த பொருள் அடிமனம் (Unconscious) என்ற செயல்முறையாகும். அதைக் காரல்யூங்கு பிராய்டிடமிருந்து தெரிந்துகொண்டு, அதில் முழுக் கவனத்தையும் செலுத்தினார். செருமன் நாட்டின் மெய்ப்பொருளியல் வல்லுநர்களான சோப்பான் கோவர் (Schopenhauer), வான் ஆர்ட்மென் (Van Hartmann) போன்றவர்களின் கருத்துகளிலிருந்தும் காரல்யூங்கு அடிமனத்தைப் பற்றித் தெரிந்துகொண் டார். பாசல் (Basal) பல்கலைக்கழகத்தில் கி.பி. 1895-ஆம் ஆண்டு முதல் 1900-ஆம் ஆண்டுவரை. மாணவராக இருந்த காலத்தில் கனவுகளின் உளவியல் முக்கியத்துவம், மறைபொருளின் (Occult Phenomena) இயல் நிகழ்ச்சி ஆகியவைகளின் தனிச்சிறப்புக் களிலும் காரல்யூங்கு ஆர்வம் காட்டிவந்தார். இவர் 1900-ஆம் ஆண்டில் ஊசென் பெலுலர் (Eugen Bleuler) என்பவருக்கு உதவியாளராக இருந்து ஆராய்ச்சி களை நடத்தினார். இவர் ஐந்தாண்டுகளுக்குப் பின் னர் 1905-ஆம் ஆண்டில் பரிசோதனை உள நோயி யல் ஆராய்ச்சிக் கூடத்தை அமைத்தார். இங்குத்தான் இவர் தம்முடைய சொல் தொடர்பு (Word Association) ஆராய்ச்சி முடிவுகளை வெளியிட்டார். இது அழுத்தம், தடைக்கட்டு (Repression, Inhibition) போன்ற சில பிராய்டின் ஆராய்ச்சி முடிவுகளை உறு திப்படுத்துவதாக அமைந்தது. இந்தச்சொல் தொடர்பு சோதனையில், பிணியாளர்களுக்குப் பல சொற் கள் வாசிக்கப்படுகின்றன. ஒவ்வொரு சொல்லும் அவர்களுடைய உள்ளத்தில் முதலில் என்ன தோற்று விக்கின்றதோ அதை அவர்கள் விடையாகத் தர வேண்டும். பிணியாளர்களின் துலங்கல்கள் அடிக்கடி முறையற்றதாகவோ தவறான விளக்கம் கொண்ட தாகவோ பொருத்தமற்ற விடையாகவோ தாமத மானதாகவோ இன்னும் சில சமயங்களில் விடைத் துலங்கல் இல்லாததாகவோ இருக்கக் கண்டார். பரி சோதனையின்போது இப்படிப்பட்ட துலங்கல்கள் ஏற் படும்பொழுதெல்லாம் தூண்டல் சொல் பிணியாளர் களின் மனவெழுச்சி சார்ந்த நினைவுகளைத் தொடு வது போன்று காணப்பட்டது. இது அடிமன நிலை யில் ஓர் உணர்ச்சி சார்ந்த சிக்கல் இருப்பதை வெளிப் படுத்துகின்றது என்று இவர் நம்பினார். யூங்கின் இந்தச் சொல் தொடர்பு சோதனை இன்றும் ஒரு படிமுறையாக்கப்பட்ட சோதனையாக இருந்து நோய்க்குறியை அடையாளம் காட்டும் கருவியாக இருந்துவருகிறது இச்சோதனைதான் பிற்காலத்தில் பொய் கண்டறியும் சோதனையாக (Lie Deductor-பொய்மானி) விரிவடைந்தது.

அடிமன நிலையிலுள்ள சிக்கல்களைச் சோதனை களின் மூலம் வெளிப்படுத்திக்கொண்டிருந்த இந்தக் காலக்கட்டத்தில்சிக்கல்களைச் சிற்றின்பத் தன்மை யின் அடிப்படையில் விளக்கம் செய்வதில் இவர் சிறி தும் சிரமப்படவில்லை. ஆனால், உளம்சார்ந்த வாழ்க்கையில் சிற்றின்பத் தன்மைதான் முற்றிலும் பங்கு பெறுகிறது என்று கூறும் பிராய்டின் கருத்தை ஏற்றுக்கொள்வதில் இவர் தயக்கம் காட்டினார். பிராய்டுதோற்றுவித்தது, உளப் பகுப்பாய்வுக் கொள் கையாகும். காரல்யூங்கு தோற்றுவித்தது பகுப்பு உளவியலாகும்.

காரல்யூங்கு, முதன்முதலில் 1906-ஆம் ஆண்டில் சிக்மண்டு பிராய்டைச் சந்தித்துப் பேசியபோது, பிராய்டின் கருத்துகள் ஏற்றுக்கொள்ளத் தக்கன வாகத்தான் அவருக்குத் தோன்றின. சிக்மண்டு பிராய்டு 1909-ஆம் ஆண்டு அமெரிக்காவிலுள்ள கிளார்க்கு (Clark) பல்கலைக்கழகத்தில் சொற்பொழி வாற்றச் சென்றபோது காரல்யூங்கும் உடன் சென் றார். அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்ததும் பெலு லரிடம் (Bleuler) கருத்து வேற்றுமை கொண்டு பிரிந்து சென்றார். சிக்மண்டு பிராய்டுடன் ஆராய்ச்சி யில் ஈடுபட்டிருந்தவர்களில் ஒருசிலர்தான் யூத இனத் தைச் சாராதவர்களாக இருந்தனர். அவர்களில் ஒரு வர் காரல் யூங்கு. செருமானிய மொழி பேசுகிற நாடுகளில் அப்போது பரவிவந்த யூத எதிர்ப் புக் கொள்கை, தம் உளப் பகுப்பாய்வுக்

கோட்பாடு பரவுவதற்குத் தடையாக இருக்குமோ என்று பிராய்டு நினைத்தார். அதனால், பிராய்டு 1910-ஆம் ஆண்டில் யூங்கைச் சருவதேச உளப் பகுப்பாய்வுக் குழுவின் தலைவராக்கினார். அடுத்த சில ஆண்டுகளில் அடிமனத்தைப் பற்றிக் காரல்யூங்கு கொண்டிருந்த கருத்து, பிராய்டின் கருத்தோடு முரண்படுகின்ற வகையில் அமைந்தது. 'உளப் பகுப்பாய்வுக் கோட்பாட்டு விளக்கம்' (Theory of Psycho Analysis)என்ற நூலைக் காரல்யூங்கு 1913-ஆம் ஆண்டு வெளியிட்டார். அதில், மூல உளப் பாகுபாட்டுக் கோட்பாட்டில் மாற்றங்கள் பல செய்திருந்தார். அதன் காரணமாகப் பிராய்டுடன் மிகுந்த கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அதனால், காரல்யூங்கு, சருவதேச உளப் பகுப்பாய்வுக் குழுவின் தலைவர் பதவியிலிருந்து விலகினார். உணர்ச்சி உந்தலுக்குக் (Libido) காரல்யூங்கு கொடுத்த விளக்கங்கள் எல்லாம் பிராய்டின் சிற்றின்பவியல் சார்பான விளக்கங்களிலிருந்து மிகவும் விலகிச் சென்றவைகளாக இருந்தன. உணர்ச்சி உந்தல்தான் பிராய்டுக்கு அடிப்படை ஆற்றலாகும். இது சிற்றின்பத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. எல்லாவிதமான ஆற்றல்களுக்கும், ஆக்கத் திறமைகளுக்கும் இந்தச் சிற்றின்ப அடிப்படைதான் காரணமாக அமைகின்றது என்கின்ற பிராய்டின் கருத்தைக் காரல்யூங்கு ஏற்றுக்கொள்ளவில்லை. இதுவும் பகுப்பு உளவியலின் தோற்றத்திற்கு ஓர் அடிப்படைக் காரணமாக அமைந்தது. தொடக்கத்திலிருந்தே உளப் பகுப்பாய்வுக் கருத்தைப் பகுப்பு உளவியலின் வளர்ச்சிக் கட்டமாகவே காரல்யூங்கு விரிவுபடுத்திக்கொண்டு வந்தார். அதனால்தான், பிராய்டுடன் கருத்து வேற்றுமைகொண்டு இவர் பிரிந்துபோகின்ற சமயத்தில் பகுப்பு உளவியலின் கோட்பாடு முழுவதையும் விளக்கமுடிந்தது.

உணர்ச்சி உந்தல் என்ற பிராய்டின் கருத்துச் சொல்லையே இவர் பயன்படுத்தி வந்தார். பிராய்டு அதை உள் ஆக்கக் கூற்று இயல்பூக்கங்களின் ஒரு திரள் (Set) எனக் கொண்டு வயதுவந்தோரின் சிற்றின்ப ஊக்கியில் இணைத்திருந்தார். அவர் கருத்துப்படி வாய் சார்ந்ததும், ஆசனவாய் சார்ந்ததும், பிறப்புறுப்பும் (Oral, Analgenital) ஆக்கக்கூறு இயல்பூக்கத்தில் அடங்கும். காரல்யூங்கு அதைத் தெளி உணர்வு நிலைக்கும் (Conscious) அடிமன நிலைக்குமிடையிலுள்ள இறுக்கத்தின் உற்பத்தி எனக் கூறுகிறார். ஆற்றல், தெளிஉணர்வு நிலைக்கும் அடிமனத்திற்குமிடையில் தடையின்றி ஓடுகின்றது என்றும், இந்த இரண்டு முறைகளும் சிற்றின்ப நடவடிக்கையுட்பட, ஒவ்வொரு நடவடிக்கையிலும் தானாகவே வெளிப்படுகின்றன என்றும் காரல்யூங்கு கருதினார். இயல்பூக்கத்தின் (Instinct) பகுதியாக அதைச் சேர்க்கவில்லை. ஆனால், அது தனி முழுமையாதலோடும், நடுநிலையானது என்பதும் ஒன்றுபோலவே இருக்கக்கூடியது என்பதும்காரல்யூங்கின் கருத்து. பிராய்டுக்கு ஆற்றல் பெரிதும் சிற்றின்பச் சார்பானது. ஏனென்றால், அதனுடைய நோக்கம் சிற்றின்பம் சார்ந்த இன்பந்தான்; அது எல்லா இன்பங்களுக்கும் முன்னோடியாக இருக்கிறது என்றும் பிராய்டு கூறுகிறார். ஆனால், இன்பம் எந்த நடவடிக்கையிலிருந்தும் வெளிப்படும் என்று காரல்யூங்கு கருதுகிறார். உண்ணலும் உறிஞ்சுதலும் குடித்தலும் சப்புதலும் இன்பம் தரும் செயல்கள்தான். ஆனால், இந்த நடவடிக்கைகள் சிற்றின்பத்தின் சார்பாக இருக்கவேண்டிய தேவையில்லை. ஈடிபசுசிக்கல் (Oedipus Complex) என்ற செயல்முறைதான் பிராய்டின் கோட்பாட்டின் அடித்தளமாகும். காரல்யூங்கின் சிந்தனையில் அது உணவுக்கும், பாதுகாப்புக்கும் குழந்தை கொள்கின்ற விருப்பமாகும். இந்த ஈடிபசு சிக்கல்தான் தாய், குழந்தையிடம் அன்பு கொள்ளச் செய்கிறது. நெருங்கிய உறவினர்களிடம் கலவி கொள்ளுதல் (Incest) சமூகத்தில் தடுக்கப் பட்டிருக்கிறது. இது அமுக்கப்பட்டுள்ள ஓர் உலகளாவிய தூண்டலாகும். குழந்தைப் பருவம் தொட்டு அன்றாடம் உடனிருந்து வருவதால் ஏற்படும் அன்பின் வெளிப்பாடாகும். இது வலிமை பொருந்திய சிற்றின்பக் கவர்ச்சியை உண்டு பண்ணுவதில்லை என்று காரல்யூங்கு கருதுகிறார்.

பகுப்பு உளவியலை விரிவுபடுத்திக்கொண்டு செல்லும் காரல்யூங்கு உளப்பகுப்பாய்வு உளவியலின் முக்கிய கருத்துகளில் ஒன்றான நரம்புக் கோளாறு (Neurosis) பற்றிக் குறிப்பிடும்போது அதனுடைய தோற்றம் அடிமனத்திலிருக்கின்ற அழுத்தங்களின் காரணமன்று என்று கூறுகிறார். மனிதன் தன்னுடைய வாழ்க்கைச் சிக்கலை நேரடியாக நோக்கும் திறமையின்மையின்விளைவுதான் நரம்புக் கோளாறுக்குக் காரணம் என்று காரல்யூங்கு கூறுகின்றார். அன்றைய சிக்கல்களை எதிர்நோக்குவதை விட்டு அடிமனச் செயல்முறைகளை முழுமையாக்கும் செயலில் பின்னோக்கி ஈடுபடுகின்றான். உளப்பிணி தொடர்பாக இந்த அடிப்படையைக் கொண்டு காரல்யூங்கு பகுப்பு உளவியலின் கருத்துகளை விரிவுபடுத்தினார்.

பிராய்டிடமிருந்து மிகுதியாக விலகிச் செல்லச் செல்லக் காரல்யூங்கின் ஆர்வம் அடிமன உருவகத்தில் மிகுதியாக ஈடுபட்டிருந்தது. இவர் தம் ஆராய்ச்சிக் காலத்தின் பெரும்பகுதியை இரசவாதத்தின் மூலக் கருத்துகளில் செலவிட்டார். அதிலிருந்து விம்பங்களுக்கும், அறிகுறிகளுக்கும் தொடர்புகளிருப்பதாகக் கண்டார். நோயாளிகளைப் பாகுபாடு செய்யும்போது இச்செயல்முறை நிகழ்வதைக் கண்டார். கீழைநாட்டவர்களிடம் இயற்கையாகவுள்ள உருவகத்தின் உள்ளு

ணர்வு (Symbolic Intution) சார்ந்தஉணர்வாற்றலை மேலைநாட்டினர் இழந்து விட்டனர் என்று காரல் யூங்கு நம்பினார். அதனால்தான், முழுமையான ஆராய்ச்சியில் மிகுந்த இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன என்று கூறினார். பல ஆண்டுகளின் ஆராய்ச்சிக்குப் பிறகு தொடக்கக்காலத்திலும், இடைக்காலத்திலும் கண்ட உருவகங்களைத் தம்முடைய விளக்கத்தில் பெரிதும் பயன்படுத்தினார். காரல்யூங்கு 1929-ஆம் ஆண்டில் இரிச்சர்டு வில்லியம் என்பவரோடு சேர்ந்து பொன் மலரின் இரகசியம் (The Secret of Golden Flower) என்ற பழமையான சீன நாட்டு நூலை மொழிபெயர்த்து வெளியிட்டார். சீன நாட்டு இலக்கியங்களில் கண்ட உருவமைப்பைத் தம்முடைய விதிகளின் அடிப்படையில் அந்நூலில் விளக்கமளித்தார். தம் வழியில் விளக்கமளிக்கவும் சிகிச்சையளிக்கவும் தம்மாணவர்களுக்குப் பயிற்சியளிக்கும் பொருட்டு 1948-ஆம் ஆண்டில்சூரிச்சு (Zurich) நகரத்தில் யூங்கு ஆராய்ச்சி நிலையம் (Jung Institute) என்ப தொன்றை நிறுவினார். அந் நிலையம் 1961-ஆம் ஆண்டில் யூங்கு இறந்துபோகின்ற நாள் வரையிலும் அவருடைய நூல்களை ஆராய்ச்சி செய்துவந்தது.

**ஆளுமை:** அனைவரும் கருதிக்கொண்டிருப்பது போலல்லாமல் இது மிகவும் விரிவான எல்லையைக் கொண்டதாக இருக்கிறது என்று யூங்கு கருதினார். தெளிஉணர்வு நிலையும் அடிமனமும் பற்றி யூங்கு சில விளக்கங்கள் அளித்தார். மனிதன், தான் வாழ்கின்ற காலத்தில் பெறுகின்ற தெளிஉணர்வு, நிலை சார்ந்த மனப் பொருள்கள் எல்லாம் பலவகையான நிலைகளில் தங்குகின்றன. சில, சிலகாலத்திற்குப் பிறகு மறக்கப்படுகின்றன. மற்றவை எல்லாம் விரைவாக அழுத்தப்படுகின்றன. அவை தனிமனித அடிமனத்தில் சென்றடைகின்றன. இந்தத் தனி மனித அடிமனம்,கூட்டு அடிமனத்தோடு தொடர்பு கொண்டிருக்கிறது. அதைப்புறவயமான மனம் என்றும் கூறலாம். இந்தக் கூட்டுஅடிமனம் மரபுரிமையான அடிப்படையைக்குறிப்பிட்டுக் காட்டுகிறது. இதன்மீதுதான் தனி மனித தெளிஉணர்வு நிலை;அடிமனநிலை ஆகியவைகளின் வாழ்க்கை அமைகிறது. முழுமையான ஆளுமை மொத்த தற்படிவம் (Self) ஆகும். இது தெளிஉணர்வு நிலையும், அடிமனநிலையும் இணைந்ததாகும்.ஆனால்,தெளிஉணர்வு நிலைதான் நடவடிக்கைகளின் ஈட்டி முனையாகும். அடி மனநிலை பின்னணியிலிருக்கின்றது. இதிலிருந்துதான் செயல் பிறக்கிறது. இயல்பாகவே செயல்முறை ஒருவழிப் போக்குவரத்தாக இல்லை. தெளி உணர்நிலை தொடர்ந்து அடிமன நிலையால் குறை நிரப்பப்பட்டு ஊக்கமளிக்கப்படுகிறது. தெளிஉணர்நிலையில் ஆற்றல் பொழிவு அதிகரித்துக் கொண்டிருக்கிறது. இவ்வாறு செயற்படுகின்ற கூட்டு அடிமனந்தான் (Collective Unconscious) காரல் யூங்கின் பகுப்பு உளவியலின் முக்கிய கருத்துச் சொல்லாக இருக்கின்றது.

**புற முகமும் அக முகமும்:** கூட்டு அடிமனம் போலவே புற முகமும் (Extrovert), அக முகமும் (Introvert) யூங்கு தம் பகுப்பு உளவியலில் தோற்றுவித்தவைகளாகும். இந்த இரண்டு சொற்களையும் ஆளுமையை விவரிக்க யூங்கு பயன்படுத்துகிறார். ஆளுமை தொடர்ந்து விரிவடைந்து செல்லுகிறது. குழந்தைப் பருவத்தில் தொடங்கி, குமரப் பருவம் வழியாகச்சென்று முதிர்ச்சியடைந்து முதுமை வயதையடைகிறது. இதற்கு ஒரு நிற்பிடம் கிடையாது. ஓர் ஆற்றலைப் பூமியில் செலுத்தினால் அது முன்னோக்கியும் பின்னோக்கியும் பக்கவாட்டிலும் அசைந்து செல்லலாம். ஆளுமை வளர்ச்சியும் அவ்வாறாகும். நரம்புப் பிணியும்,மனப் பிணியும் உடலில் செலுத்தப்பட்டஆற்றல் மாறிச்செல்லுவதால் ஏற்பட்ட விளைவுகளாகும். ஆற்றல் தெளிஉணர்வு நிலைக்குச் செல்லுவதைவிட அடி மனநிலைக்கு மிகவும் வலிமையாகச் செலுத்தப்படுகிறது. நடவடிக்கைகளின் இரண்டு முக்கிய திக்குகளை யூங்கு வேறுபடுத்திக் காட்டுகிறார். அது புறப் பொருள்களை நோக்கித் திரும்பலாம். இதுதான் எல்லாவற்றிலும் உலகம் என்று கூறப்படுகின்றது. புற முகம் என்றும் யூங்கு கூறுகிறார். மிகுந்துவருகின்ற ஆற்றல் (சக்தி) உள் உலகத்தை நோக்கியும் திரும்பலாம். இது கற்பனையும் சிந்தனையுமான உலகமாகும். இதனை அக முகம் என்றும் கூறலாம். இவையிரண்டும் கவர்ச்சி, நடவடிக்கை ஆகியவைகளின் இயல்பான திசைகளாகும். ஆனால், இவைஒவ்வொன்றும் வெவ்வேறு வகைகளைச் சார்ந்த மக்களால் விரும்பப்படுகிறது. புற முகத்தினர் பொருள்களின் வெளிப் பண்புக் கூறுகளில் கவர்ச்சி கொள்கின்றனர். கண் பார்வையில் அடங்குகின்ற உலகம், அமைப்பு, ஒலிகள், நிறங்கள் முதலியவைகளில் புற முகத்தினன் கவர்ச்சி கொள்கின்றான்.ஒரு புறமுகத்தினன் ஓர் அறிவியல் வல்லுநனாக இருந்து நிகழ்ச்சி உண்மைகளில் கவர்ச்சி கொள்கிறான். ஒரு கலைஞனாக இருந்து உருவ அமைப்பிலும் ஒலியிலும் நிறத்திலும் கவர்ச்சி கொள்கிறான். புறமுகத்தினன் தான் எதிர்நோக்குகின்ற பொருள்களிலிருந்து என்ன செய்யமுடியும் என்பதில்தான் கவனம் செலுத்துகிறான். அவன், தான் ஈடுபட்டிருக்கும் நடவடிக்கைகளினால் உலகத்திற்கு என்ன அமைப்புக் கொடுக்க முடியும் என்று பார்க்கிறான்.அவன் தன்னுடைய நன்மைக்காகச் சோதனைகளைச் செய்து பார்த்துக் கொள்வதில்லை. தன்னுடைய சிந்தனைகளுக்கான கருவியாக அவைகளை முற்றிலும்பயன்படுத்துகிறான். இயல்பாகவே மனிதன், தன்னுடைய பிள்ளைப் பரு

வத்தைப் புற முகத்தில் கழிக்கிறான். குமரப் பருவத்தை அக முகத்தில் கழிக்கிறான். முதிர்ச்சிப் பருவத்தில் இந்த இரண்டில் ஏதேனும் ஒன்றில் அமைகிறான். மற்றொன்றிலும் சிறிது ஈடுபட்டிருக்கலாம்.

**நான்கு செயல்முறைகள்:** ஒவ்வொரு மனிதனும் தெளி உணர்வுநிலை நடவடிக்கைகளில் தான் விரும்பிய செயல்முறைகளைக் கொண்டிருக்கின்றான். அவை நான்கு செயல்முறைகளில் அடங்குகின்றன என்று யூங்கு கருதுகிறார். அவை சிந்தனை, உள் உணர்ச்சி, புலனுணர்ச்சி, அகத்திற உணர்வு என்பன. இந்த நடவடிக்கைகள் உலகில் காணப்படுகின்றவைகளையெல்லாம் மெய்யா? பொய்யா எனமதிப்பீடு செய்கின்றன. உள் உணர்ச்சி, அவைஏற்கக்கூடியவைகளா கூடாதவைகளா என்று கணிக்கின்றது. ஏனென்றால் இதிலுள்ள எதிர்முனையான செயல்முறைகள், ஒருவருடைய கருத்துச் சொற்களான மெய்-பொய், நல்லது-கெட்டது ஆகியவைகளில் ஆட்கொள்ளப்படுகின்றன. புலனுணர்ச்சிகளும் அகத்திற உணர்வும் பொருள்களோடு ஒருவரைச் சாதாரணமாக அறிமுகப்படுத்துகின்றன. ஒரு பொருள் கருப்பா சிவப்பா, நான்கும் நான்கும் எட்டா பத்தா என்பன போன்றவற்றை ஒருவர் உணர்ந்தறிவது இந்த இரண்டின் துணைகொண்டுதான் என்று யூங்கு கருதுகிறார். இதில் ஈடுபடுகின்ற அக உணர்வுத் திறத்தைத் தற்படிவச் சான்றின்மீதான புலன் காட்சி என்று யூங்கு கூறுகின்றார். எனவே, யூங்கின் கருத்துப்படி புலனுணர்ச்சியும் அக உணர்வுத் திறமும் உண்மைப் பொருளறிய உதவுகின்றன என்பதாகும்.

ஒரு குழந்தை, தன்னுடைய செயல்முறைகளைப் பயன்படுத்தும்போது ஒன்று மட்டும் மற்றவைகளை விட மிகவும் பொருத்தமாக இருப்பதைக் காண்கின்றான். அது அவனுடைய மேம்பட்ட செயல்முறை (Superior Function) ஆகிறது. அதற்கு அடுத்தது, துணைச் செயல்முறையாகிறது. யூங்கின் பகுப்பு உளவியற் கோட்பாட்டின்படி எல்லா ஆற்றல்களும், எல்லா நடவடிக்கைகளும் இரண்டு எதிர்முனைச் சக்திகளுக்கிடையில் உருவாகின்ற இறுக்கத்தின் (Tension) விளைவுகளாகும். இரண்டு எதிர் முனைகள் என்று யூங்கு குறிப்பிடுவது தெளிஉணர்வு நிலையும், அடிமன நிலையுமாகும். சிந்தனைஉள் உணர்ச்சியின் எதிர்முனையாகும். சிந்தனை மேம்பட்ட செயல்முறையாக இருக்கின்றபோது தாழ்ந்த (அடிமன நிலை) செயல்முறை உள் உணர்ச்சியாகிறது. சிந்தனை மேம்பட்ட செயல்முறையாக இருக்கின்றபோது புலனுணர்ச்சியோ அகத்திறன் உணர்வோ துணைச் செயல்முறையாகின்றது. முதிர்ச்சி மேம்பட மேம்படத் தாழ்ந்த செயல்முறையும் பெறப்படத் தக்கதாகிறது. அதனால் மனிதன் இறுதியில் நான்கு செயல்முறைகளையும் ஏறத்தாழ ஒரு கட்டத்தில் பயன்படுத்துகிறான். மனிதன் தன்னுடைய மேலான செயல்முறையைத் தனித்துப் பயன்படுத்தும்போது மற்ற நடவடிக்கை முறைகளை ஏற்க மறுக்கிறான். அழுத்தப்பட்டுள்ள தாழ்ந்த செயல்முறை அவனுடைய செயல்களில் மறைமுகமாகச் செல்வாக்குப் பெறுகிறது. இது அடிக்கடி அழிவு தரத்தக்கதாகிறது. ஆகையினால், ஓர் அகமுகச் சிந்தனையாளன், தனக்கு எந்தவகையிலும் ஒத்த குணநலன்களைப் பெற்றிராத ஒரு பெண்ணால் அழிவைச் சந்திக்கின்ற அளவுக்குக் கவர்ச்சிகொண்டிருக்கலாம். அப் பெண் குறிப்பிடத்தக்க அளவு கவர்ச்சியற்றவளாகவுமிருக்கலாம். ஆனால், ஒரு சமயத்தில் அவள்தொடர்பாக அழுத்திவைக்கப்பட்டிருக்கின்ற அவனுடைய உள் உணர்ச்சிச் செயல்முறை கரடுமுரடானதாகவே இருந்து வந்திருக்கிறது. நீண்ட நாள்களாகப் புறக்கணிக்கப்பட்டு வந்துள்ள அது இப்பொழுது பழி தீர்த்துக்கொள்கிறது. தான் (Ego) என்ற கருத்துச்சொல்லை ஆளுமையின் ஒரு பண்புக் கூறாகப் பிராய்டுகருதினார். யூங்கு அதையே சற்று வேறுவிதமாகக் கூறினார். மமதையானது (தான்) தனியாளை, அவன் பெறுகின்ற அனுபவங்களினால் வெளியுலகத்தோடு அவன் தன்னைப் பொருத்திக் கொள்ளுவதை வெளிப்படுத்தும் ஆளுமைப் பகுதியாகும். இந்த விதமான ஆளுமைப் பகுதியை யூங்கு தெளி உணர்வு நிலை மமதை (தான்) (Conscious Ego) என்று கூறுகிறார். இதை வெளிப்படுத்துவதற்கு மனிதனுக்குப் பல வாய்ப்புகளிருக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய வாழ்க்கையை ஒரு குடும்பத்தில் தொடங்கி, அதில் ஓர் அங்கத்தினனாக இருந்து, பிறகு ஒரு சமுதாயத்திலும், ஒரு நாட்டிலும், ஒரு மனித இனத்திலும் தொடர்ந்து அங்கத்தினனாகவே இருந்து வருகிறான். நடத்தை, அனுபவம் ஆகியவைகளில் மரபுரிமையைப் பெறுகிறான். இவைகளின் செயல் விளைவுகளினால் தன்னை வெளிப்படுத்துபவனாகவே வாழ்ந்து வருகிறான். அதேசமயத்தில் அவன் கூட்டு அடிமனத்தின் உருவகமாகவுமிருக்கிறான்.

பகுப்பு உளவியல், ஆளுமையை விளக்கும்போது தெளிஉணர்வு நிலையை மிகவும் வலியுறுத்துகிறது. முதிர்ச்சியடைவதற்கு முன்பு ஒவ்வொரு மனிதனும் தெளிஉணர்வு நிலையையே முற்றும் நம்பியிருக்கிறான். தெளிஉணர்வு நிலைமட்டத்தில் ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய விதிக்குத் தானே தலைவனாக இருக்கிறான். அதனால், அவன் தன்னுடைய மேலான செயல் முறையினால் (Superior Function) கையாள முடியாததையெல்லாம் முற்றிலும் புறக்கணித்துவிடுகிறான். எனவே, மேல்மட்ட நிலையில் தன்னுடைய வாழ்க்கையைக் கழிக்கிறான். ஒரு

வேலையைப் பெற்றுக்கொண்டு, ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு குடும்ப மனிதனாகி அரசாங்கத்திற்கு வரி கட்டிக்கொண்டு வெற்றிவாய்ந்த ஒரு குடிமகன் என்று காட்டி, உலகத்தில் தன்னை நிலைப்படுத்திக் கொள்கின்றான்.இவ்வாறுஅவன் ஒரு தனி மனிதனாக அமைகிறான். தன்னுடைய முகத்தை உலகத்தை நோக்கித் திருப்புகிறான்.. அதுவன்றி ஒரு மனிதன் இறுக்கமில்லாத ஒரு நல்லிணக்கத்தைப் பெறமுடியாது. தனி மனிதன் ஒரு மொத்த தற்படிவமன்று. ஒரு மனிதன், தெளிஉணர்வு நிலையாகத் தனி மனிதனை ஒன்றுதல் செய்யும்போது அடிமன நிலையைப் புறக்கணிக்கிறான்; மறுக்கவும் செய்கின்றான். அடிமன நிலை இயங்குவதற்கு நேரடியான ஒரு வடிகால் கிடையாது. எனவே, இந்த அடிமன நிலை தெளிஉணர்வு நிலையை உடைத்துக்கொண்டு புரட்சிகரமாகக்கனவுகள் மூலமாகவோ, நரம்புக் கோளாறுகள் மூலமாகவோ, மனக் கோளாறு மூலமாகவோ வெளிப்பட்டுப் புறக்கணித்த மனிதனைப் பழிவாங்குகிறது. சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்படாத அல்லது உண்மைக்குப் புறம்பான செயல்முறைகளைக் கொண்ட கனவுகளிலிருந்து மனக்கோளாறு வரையிலுள்ள சீர்கேடுகளில் பலதரப்பட்ட படித் தரங்களிருக்கின்றன.

காரல் யூங்கின் பகுப்பு உளவியலில் முக்கிய கருத்துச் சொற்களில் மூலப்படிவங்களும் (Archetypes) ஒன்றாகும். அதை முன் மாதிரிகள் என்றும் கூறலாம். இது மிகவும் ஒரு கடினமான சிந்தனை என்று யூங்கு கருதுகிறார். மன நோயாளிகளை மேலும் மேலும் ஆராய்ந்து வரும்போது நோயாளிகளின் கனவுகளில் மனிதர்களின்வயதுக்காலம் முழுவதற்கும் பொருள் விம்பங்கள் (Images) இருக்கக் கண்டார். கனவு காணுகின்ற தனி மனிதன் இந்த விம்பங்களின் குறிப்புகளைத் தெரிந்து கொண்டிருக்க மாட்டான். தனிப்பட்ட பட்டறிவின் மூலமோ கற்றல் மூலமோ கூடத் தெரிந்திருக்க முடியாது. புராணக் கதைகளிலும், தெய்வங்களைப் பற்றிய கதைகளிலும் கனவுகளில் வருவது போன்ற மூலப்படிவ விம்பக் களைத்தான் பயன்படுத்தியுள்ளர். எடுத்துக்காட்டாக சிங்கத்தின் தலை கொண்ட மனிதன் (நரசிங்க உருவம்), மீன் உருவம் கொண்ட பெண் (மச்சகந்தி) போன்ற உருவங்கள் கனவுகளில் வரலாம். இத்தகைய விம்பங்கள் மூலப்படிவங்களல்ல. அவை மூலப்படிவங்களின் அனுபவத்தின் வெளிப்பாடுகளாகும். மூலப் படிவம் மரபுரிமையாகப் பெறப்பட்ட உளச் செயல் முறையின் வழியாகும். மரபுரிமையாகப் (Hereditary) பெற்ற நடத்தை மாதிரி என்றும் கூறலாம். மூலப் படிவத்தைத் தனி மனிதனுடைய அனுபவத்தில் பெறுகின்றபோது அது அடிப்படை முக்கியத்துவம் பெறுகிறது. மூலப் படிவம் அறிகுறிகளாகத்தான் (Symbols) வெளிப்படுகிறது. மேலும் மூலப் படிவம், தனி மனிதனைப்பற்றியதாக இருக்கிறது. எனவே, இந்த மூலப்படிவம் தனிமனிதன் அடிமன ஆற்றலாக இருந்து கொண்டு விம்பங்களாக வெளிப்பட்டு அவைகளின் மூலம் கூட்டு அடிமனம், தனிமனிதனை விளைவுகளுக்கு உட்படுத்துகிறது.

மனிதன் உலகத்தை அறிவதற்கு இரண்டு வகையான வழிகள் இருக்கின்றன என்று யூங்கு கருதுகிறார். ஒருவழி உடல் சார்ந்த உண்மைகளைத் தருகின்றது. மற்றொன்று உளம்சார்ந்த உண்மைகளைத் தருகின்றது. வெளி உலகத்தின்மீது ஒருவருடைய சொந்த அடிமனம் சார்ந்த போக்குகளை வெளிப் படுத்திக் காட்டமுடியும். அதனால் மனிதன் புறத்தில் காணப்படுபவைகளிலிருந்து உண்மையைப் பிரித்தறிய முடியும்.

**சமயம்:** மனிதர்கள் இப்போது பின்பற்றி வருகின்ற சமயங்கள், மனிதன் நாகரிக மடையாத காலத்திலிருந்து மிக முன்னேறியுள்ள இக்காலம் வரையிலும் உருவக அமைப்பில் முத்தியடைவதற்கான வழிகளையே கோடிட்டுக் காட்டி வருகின்றன. அதனால், நம்பிக்கையுள்ளவர்கள் தனித் தன்மைக்கான செயல்முறையில் மனமறிந்து உறுதியுடன் இறங்க வழி செய்கின்றது. நாகரிகமடையாத மக்களிடையே கடவுள் விம்பம் இன்னமும் அடிமனத்திலிருந்து முற்றிலும் புறத்தெறியப்பட்டதாகவே இருந்து வருகின்றது. தன்னுடைய அடிமனத்திலிருந்து மனவெழுச்சி திடீரென்று பீறிட்டெழுவதற்கு எதிரே, நாகரிகமடையாத மனிதன் உதவியற்றவனாகிறான். சமயத்தை உளவியல் நிலைக்கு யூங்கு இறக்கிவிட்டார் என்று அவரைப் பலர் குற்றம் சாட்டுகின்றனர். ஆனால், அவர் தம்முடைய கோட்பாட்டில் அதற்கு விளக்கமளித்திருப்பதால் அவரைக் குற்றம சொல்வதற்கில்லை. யூங்கின் கருத்துப்படி, தீமை என்பது ஓர் உண்மையான மூலப்படிவ ஆற்றலாகும். சொர்க்கத்திலிருந்து வெளியேற்றப்பட்ட உலூசிபரும் (Lucifer), சாத்தானும் (Satan) மூலப் படிவத்தின் விம்பங்களாகும். இவை உளம்சார்ந்த மூலப் பண்புக் கூறுகளின் வெளிப்பாடாகும். யூங்கின் கோட்பாட்டின்படி இறைவனின் அல்லது நன்மையின் சம அளவுக்கு ஆற்றல் வாய்ந்ததும் உண்மையானதுமான எதிர்முனைகள இருக்க முடியும் என்பதாகும். எதிர்முனைகளின்றி ஆற்றல் பற்றிச் சிந்திக்க முடியாது என்பது யூங்கின் கருத்து. கிறித்தவ சமயத்தில் கூறப்பட்டுள்ளது என்னவென்றால் எல்லாமே இறைவனால் படைக்கப் பட்டவை. அதனால் எல்லாமே நன்மையானவைகள்தாம். சில உயிரினங்களுக்குத் தன்னுரிமை

கொடுக்கப்பட்டிருப்பதால் அவை இறைவனிட மிருந்து விடுபட்டுச் சென்று இறைவனுக்கெதிராக அவற்றின் விருப்பத்தை அமைக்கின்றன. அவர்கள் தீயவர்களாகின்றனர். ஆனால், அவர்களின் கருப் பொருளை இறைவன்தான் உண்டாக்கினான். அவர் களின் விருப்பந்தான் தீயவை. எனவே தீயவர்களா கின்றனர்.

யூங்கு, சிக்மண்டுபிராய்டின்கோட்பாட்டிலிருந்து எவ்வளவு தூரம் விலகிச் சென்றாரோ அதே அள வுக்கு அவருடைய தொழிலின் செயல் நுட்பத் திற மும் விலகிச் சென்றது. பிராய்டைப் போலவே நோயாளிகளின் சிக்கல்களின் அடிப்படையை ஆராய் வதற்கு அவர்களின் கனவுகளைப் பயன்படுத்தினார். ஆனால், பிராய்டைப் போலன்றிக் கனவுகளின் தொடர்ச்சியில் யூங்கு மிகுந்த நம்பிக்கை வைத்திருந் தார். பிராய்டு தன்னுரிமைத் தொடர்பு முறையைப் (Free Association) பயன்படுத்தினார். ஆனால், யூங்கு விரிவு விளக்க முறையைப் (Amplification) பயன் படுத்தினார். இந்த இரண்டு முறைகளுக்கும் அடிப் படை வேறுபாடுகளுண்டு. பிராய்டு, நோயாளியின் ஒத்துழைப்பைப் பயன்படுத்தி மறைந்துள்ள நினைவு களைத் தோண்டியெடுத்தார். காரல்யூங்கு, நோயாளி யின் கனவு உருவங்களின் பொருள்களைக் கண்ட றிந்து அதிலிருந்து கனவுக் கதைகளின்பொருள்களைத் தேடினார். காரல் யூங்கின் பகுப்பு உளவியல் புரா ணக் கதைகள், சமயம், கடவுள் கதைகள், நீதிக் கதைகள், கீழை நாட்டு நாகரிகம் முதலியவைகளை உள்ளடக்கியதாகவும், நீண்ட கால விளக்கங்களைக் கொண்டதாகவுமிருப்பதால் அவருடைய உளவியலை எளிதில் புரிந்துகொண்டு விளக்கம் தருவது கடினமா கிறது.

சிக்மண்டு பிராய்டு போன்றே யூங்கும் நினை வைப் பற்றிய ஆராய்ச்சிகளை மேற்கொண்டிருந் தார். ஆராய்ச்சிகளை மேற்கொண்டவுடனேயே, பகற் கனவும் கற்பனையும் அடிமனத்திற்கு இட்டுச் செல்லும் சிறந்த சாலைகள் என்று கண்டார். மனித னுக்குப் பேராசைவமும், அதேபோன்று காம உணர்ச்சியும் உண்டு. அவனுடைய கற்பனைகளுக் குத் தடை ஏதுமில்லை. கற்பனைகள் இயல்பாகவே, திட்டமிட்டுச் செயற்படுத்துவதற்கு இணையானவை களாகும். தெளிஉணர்வு வாழ்க்கையில் அல்லது அன் றாட வாழ்க்கையில் ஏற்றுக் கொள்ளப்படாத பேராசைகளினின்றும் கவனத்தை ஈர்க்கச் சிறந்த கருவியாகப் பயன்படுகின்றது கற்பனையேயாகும். கற்பனையின் இந்தச் செயல்முறைக்கப்பால் மேற் பட்ட பண்புடைய ஒரு தனியாளான (Extra-indivi- dual),புறவயமனத்தோடு நேரடித்தொடர்பு கொள்ளு வதற்கும் ஒரு புதிய கருத்தைத் தன்னுடைய மெய்ப் பொருளியலில் காரல்யூங்கு திட்டமிட்டுக் கூறுகிறார்.

மு.இரா.

**துணை நூல்கள்:**

**Jacobs, Jolande,** Complex, Archetype, Symbol in the Psychology of C.G. Jung, Pantheon, New York, 1959.

**Jung, C.G.,** Collected Works, Volume I: Psychiatric Studies, Pantheon, New York, 1957.

**Jung, C.G.,** Two Essays on Analytical Psychology, Pantheon, New York, 1959.

**Jung, C.G.,** The Archetypes and the Collective Unconscious, Pantheon, New York, 1959.

**Jung, C.G.,** Modern Man in Search of a Soul, Routledge, London, 1959.

*பகுப்பு முறை ஒலியனியல்*: மொழி இரு வகை அடிப்படை அலகுகளைக் கொண்டு இயங்கு கிறது. ஒன்று ஒலியன் (Phoneme); மற்றொன்று உரு பன் (Morpheme). ஒலியன் என்பது பொருளை வேறு படுத்தும் ஒலி. அடு, ஆடு என்ற இணைச்சொற்களில் அகர, ஆகார ஒலி வேறுபாடே பொருள் வேறுபாட் டுக்குக் காரணமாகிறது. ஆனால், ஒலியனுக்குப் பொருள் இல்லை. உருபன்கள் பொருளுடையவை. அவை ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட ஒலியன் களால் அமைபவை. அவன் என்ற சுட்டுப்பெயரில் அ, அன் என்ற இரு உருபன்கள் உள்ளன. ஆனால், அ,வ்,அ, ன் என்ற நான்கு ஒலியன்கள் உள்ளன.

ஒலியனே மொழியின் மிகச்சிறிய தொடர்ச்சி யாய் அமைந்த (Linear) மேலும் பகுக்கமுடியாத அடிப்படை அலகு. இதில் மொழியியலாரிடையே கருத்து வேறுபாடு இல்லை. எனினும், ஒலியன் பற் றிய கொள்கை, ஒலியனைக் கண்டறியும் முறை, மொழியமைப்பில் அதன் இடம் ஆகியவற்றில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. மொழியியலாரிடையே பல் வேறு கோட்பாட்டுக் குழுக்கள் (Schools of thought) இருப்பினும் மேற்போக்கான வேறுபாடுகளை நீக்கிக் கொள்கை, ஆய்வுமுறை அடிப்படையில் அவை இரு குழுக்களாகப் பிரிகின்றன. அமைப்பு முறை (Struc- tural) அல்லது பகுப்பு முறை (Taxonomic) மொழி யியலில் ஒருவகை. மாற்றிலக்கண அணுகுமுறை (Transformational Generative approach) மற்றொரு வகை.

பகுப்புமுறை மொழியியலார் ஒரு மொழியின் ஒத்த பகுதிகளைப் பிரித்தெடுத்தல் (Segmentation), பிரித் தெடுத்தவற்றை வகுத்தல் (Classification) என்ற

அடிப்படையில் மொழியை ஆராய்வர். அவ்வாராய்ச்சியின் பயனாக மொழி பல்வேறு ஒழுங்குகள் (Systems) அல்லது நிலைகளாகப் (Levels) பிரிபடுகிறது. ஒரு மொழியை ஒரு முழு ஒழுங்காகக் கொண்டால் அது பல துணை ஒழுங்குகளைக் (Sub-systems) கொண்டிருக்கும். இவற்றை மையத் துணை ஒழுங்குகள் (Central sub systems), புறத் துணை ஒழுங்குகள் (Peripheral) என இரண்டாகப் பிரிப்பர். மையத் துணை ஒழுங்குகள் மூன்றும், புறத் துணை ஒழுங்குகள் இரண்டுமாக ஐந்து துணை ஒழுங்குகள் பின் வரும் அமைப்பைக்கொண்டு விளங்கும்.

1. பொருண்மையியல் (Semantics) புறத்துணை ஒழுங்கு
2. கிளவியமைப்பு (Grammatical Structure) மையத் துணை.
   அ) தொடரியல் (Syntax)
   ஆ) உருபனியல் (Morphology)
3. உருபொலியனியல் (Morpho Phonemics) ஒழுங்குகள்
4. ஒலியனியல் (Phonemics)
5. ஒலியியல் (Phonetics) புறத்துணை ஒழுங்கு.

பொருண்மையியல் உலகப் பொருள்களையும் மொழியையும் தொடர்புபடுத்துவது. தொடரியல் வாக்கியத்தில் சொற்களும் பிற உருபன்களும் அமையும் முறையை ஆராய்கிறது. உருபொலியனியல் உருபன்கள் ஒலியன்களால் அமையும் முறையையும் அவற்றிடையே நிகழும் ஒலியன் மாற்றங்களையும் விளக்குவது. ஒலியனியல் ஒரு மொழியில் வழங்கும் ஒலியன்களின் எண்ணிக்கை, அவ்வ மொழியமைப்பில் ஒன்றுடன் ஒன்று இணைந்து வழங்கும் முறை ஆகியவற்றை ஆராயும். ஒலியியல் ஒலியன்கள் எவ்வாறு பேசுவோரின் ஒலியுறுப்புகளின் செய்கைகளால் ஒலிக்கப்பட்டு ஒலியலைகளாக மாற்றப்படுகின்றன; அவை எவ்வாறு கேட்போரால் உணரப்படுகின்றன என்பதை விளக்கும். இவற்றில் பொருளும் ஒலியும்முறையே உலகப் பொருள்களோடும் ஒலியுறுப்புகள் கேள்வியுறுப்புகளோடும் தொடர்புள்ளவையாதலால் பொருண்மையியலும் ஒலியியலும் புற ஒழுங்குகளாகக் கருதப்படுகின்றன.ஆனால், மற்றத் துணை ஒழுங்குகள் மொழியோடு மட்டும் தொடர்புடையவை. ஆதலால், மைய ஒழுங்குகளாகக் கருதப்படுகின்றன.

மேற்கூறியவாறு அல்லாமல் மாற்றிலக்கண அணுகுமுறை ஒரு மொழியின் இலக்கணத்தைப் பொருண்மையியற் பகுதி (Semantic component), தொடரியற் பகுதி (Syntactical component), ஒலியனியற் பகுதி (Phonological component) என மூன்று பகுதிகளில் அமைக்கிறது. இவற்றில் தொடரியற் பகுதியே சிறப்புடையதாகும். மற்ற இரு பகுதிகளும் அதனை விளக்குவதற்காக அமைக்கப்பட்ட பகுதிகளே. எனவே, மொழியமைப்பில் சமமான பங்குடைய பகுப்புமுறை ஒலியனியல் மாற்றிலக்கண ஒலியனியல் பகுதியிலிருந்து வேறுபட்டது என்பது தெளிவாகும். பகுப்புமுறை ஒலியனியலின் மற்றச் சிறப்பியல்புகள் கீழே விளக்கப்படும்.

பகுப்புமுறை ஒலியனியல் பேச்சொலிகளை (Phones) ஒலி ஒற்றுமை (Phonetic similarity), வேற்றுநிலை வழக்கு (Contrast), துணைநிலை வழக்கு (Complementary distribution), உறழ்ச்சி (Free variation) என்ற ஆய்வுமுறைகளின் அடிப்படையில் ஒலியன்களாக வகுக்கிறது. இரண்டு ஒலிகள் இரண்டு சொற்களிடையே பொருள் வேறுபடுத்தும் குறைந்தபட்ச வேறுபாடுகளாக நிற்கும் பொழுது அவை இருவேறு ஒலியன்களாகின்றன. அடு - ஆடு; இடு - ஈடு; உடு - ஊடு; எடு-ஏடு என்ற இணைச் சொற்களில் ஒவ்வோர் ஒலிகளே வேறுபடுகின்றன. அவ்வேறுபாட்டால் பொருள் வேறுபாடு ஏற்பட்டுள்ளது. இது வேற்றுநிலை வழக்கு எனப்படும். அ, ஆ,இ,ஈ,உ,ஊ,எ,ஏ,ஒ,ஓ ஆகியவை வேற்றுநிலை வழக்கில் வந்து வெவ்வேறு ஒலியன்களாகின்றன.

கட்டம், சட்டம், தட்டம், பட்டம் போன்ற சொற்கள் க், ச், த், ப் என்பன வெவ்வேறு ஒலியன்கள் என்பதைக் காட்டுகின்றன. ஆனால் சங்கு தங்கம், எண்கள் போன்ற சொற்களில் க என்ற எழுத்து வேறுபட்டு ஒலிக்கிறது. இச்சொற்களில் அது ஆங்கில g-ஐப் போல ஒலிக்கிறது. அகல், பகல் போன்ற சொற்களில் வரும் 'க'கரத்தின் ஒலி ஆங்கில 'h' போல இருப்பது ஒலித்துப்பார்த்தால் புரியும். சொல்லின் முதலிலும் பக்கம், சக்கரம் போன்ற சொற்களில் இரட்டாதபொழுதும் வழங்கும் ஆங்கில 'k' போன்ற ஒலியும் மேற்கூறிய g, h போன்ற ஒலிகளும் வெவ்வேறு ஒலியன்களாம்இவை வேறுபட்ட ஒலியன்களாயினும், தமிழில் இணைச்சொற்களில் வந்து, பொருள் வேறுபடுத்தி, வேற்றுநிலை வழக்கில்வாராமையால் வெவ்வேறு ஒலியன்கள் அல்ல. இவை, வரும் சூழல்களை நோக்கினால் ஒன்று வருமிடத்தில் மற்றொன்று வருவதில்லை என்பது புலப்படும். சொல் முதலிலும் இரட்டித்தும் 'k' போன்ற ஒலியே வரும். மெல்லெழுத்தை அடுத்து 'g' போன்ற ஒலியே வரும். எங்கே, மான்கள் போன்ற சொற்களிலும் இவ்வொலியே வருகிறது. ஈருயிர்களுக்கு இடையே (அக்அல் அகல்)'h' போன்ற ஒலியே வரும். வேகம், காகம் போன்ற சொற்களிலும் இவ்வொலி வருகிறது. இம்மூன்று ஒலிகளும் வேறு ஒலிகளாயினும் கடைநா கடையண்ணத்தைத் தொடும்பொழுது

பிறப்பவையாதலால் ஒலி ஒற்றுமை உடையவை. இவ்வாறு ஒலி ஒற்றுமை யுடைய ஒலிகள் ஒன்று வருமிடத்தில் மற்றவை வாராமல் வழங்குதலைத் துணை நிலை வழக்கு என்பர். துணை நிலை வழக்கில் வழங்கும் ஒலி ஒற்றுமை யுடைய ஒலிகள், ஓர் ஒலியனின் மாற்றொலிகள் (Allophones). ஒலியன் மாற்றொலிகளின் தொகுதி.

மாற்றொலிகள் உறழ்ச்சியாகவும் வரலாம். தமிழில் சில கிளை மொழிகளில் (சேலம் மாவட்டம்) ல், ள் உறழ்ச்சியாய் ஒலிக்கப்படும். சேலம்/சேளம், வேலை/வேளை என ஒலிப்பர். அப்பகுதிகளுக்கு இவ்வேறுபாடு தெரிவதில்லை. ஒரே இடத்தில் இருவேறு ஒலிகள் வந்து பொருள் வேறுபாடு இன்றி வருவது உறழ்ச்சி எனப்படும். உறழ்ச்சியால் வரும் ஒலி ஒற்றுமையுடைய வேற்றுநிலை வழக்கில் வாராதஒலிகளும் ஓர் ஒலியனின் மாற்றொலிகளே.

இவ்வாறு ஒரு மொழியில் வழங்கும் ஒலிகள் அனைத்தும் ஒலியன்களாகவும் அவற்றின் மாற்றொலிகளாகவும் வகுக்கப்படும். பின் இவை உயிர், மெய் எனவும் வகைப்படுத்தப்படும்.

பகுப்புமுறை ஒலியனியல் ஒலியன்களின் வரன்முறை பற்றி ஆராயும். வரன்முறை (Distribution) என்பதில், ஒரு மொழியில் ஒலியன்கள் ஒன்றுடன் ஒன்று இணைந்து வருதல், இணைந்து வரும்பொழுது எத்தனை ஒலியன்கள் இணைந்து வரும் என்பதை ஆய்தல் ஆகியன அடங்கும். எடுத்துக்காட்டாக இன்றைய எழுத்துத் தமிழில் ற,ன,ள,ல,ழ போன்றவை மொழி முதலில் வருவதில்லை. மொழி இறுதியில் எகரம் வாராது. உயிர்கள் இணைந்து ஒரு சொல்லில் வருவதில்லை. மெய்கள் இணைந்து மொழியிடையில் மட்டுமே வரும். இவை போன்றவை தமிழ் ஒலியன்களின் வரன்முறை.

பகுப்புமுறை ஒலியனியல் மொழியாராய்ச்சியில் சில அடிப்படைக் கொள்கைகளைப் பின்பற்றுகிறது. அவற்றில் ஒன்று நிலைக்கலப்பு (Mixing of levels) கூடாது என்பது. பொருண்மையியல் முதல் ஒலியியல் வரை உள்ள நிலைகள் மேல்நிலை, அடுத்துக் கீழ்நிலை என்ற அமைப்பில் அமைந்துள்ளன. கீழ்நிலைச்செய்திகள் மேல்நிலை ஆய்வில் பயன்படுத்தப்படும். ஒலியியல் செய்தி ஒலியனியலில் பயன்படும். ஆனால், உருபனியல் செய்தியை ஒலியனியலில் பயன்படுத்தலாகாது. அவ்வாறே மற்ற இயல்களிலும். இன்னொன்று ஓர் ஒலி ஒரே சூழலில் இரண்டு ஒலியன்களில் மாற்றொலியாக அமையலாகாது. இவைபோன்ற கொள்கைகளைப் பகுப்புமுறை ஒலியனியலார் கட்டுப்பாடாகப் பின்பற்றுவர். ஆனால், மாற்றிலக்கண மொழியியலாருக்கு இத்தகு ஆய்வுக் கொள்கைகள் உடன்பாடல்ல. அவர், மொழி முழுவதையும் ஓர் ஒழுங்காகக் கொண்டு ஒரு நிலையின் செய்திகள் மற்ற நிலையில் பயன்படுத்தப்படவேண்டும் என்பர். ஒலியன் ஆய்வில் தொடரியற் செய்திகளையும் பயன்படுத்துவர். ஒரே சூழலில் ஓர் ஒலி இரண்டு ஒலியன்களின் மாற்றொலியாக வருவதையும் ஏற்பர். இவ்வாறு பகுப்புமுறை ஒலியனியலும் மாற்றிலக்கணமுறை ஒலியனியல் ஆய்வும் பெரிதும் வேறுபடுகின்றன. க.பா.

**பகுருதீன் அலி அகமது:** காண்க: அலி அமது பகுருதீன்.

**பகோபன், சான் சேக்கபு (கி.பி.1815-1887),** சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த சட்ட வல்லுநரும் சிறந்த மானிடவியல் அறிஞரும் ஆவார். இவர் எழுதிய தாய் உரிமை (Das Mutterrecht) என்னும் நூல் தொடக்கக் காலச் சமுதாயம் தாய் வழியிலானது என்ற கொள்கையை உறுதிப்படுத்தியது.

பகோபன் (Jhoann Jakob Bachofen) சுவிட்சர்லாந்தில் பேசல் (Basel) என்னுமிடத்தில் கி.பி. 1815-இல் பிறந்தார். கல்லூரிப் படிப்புக்குப் பின் இவர் பேசல் பல்கலைக் கழகத்தில் உரோமானியச் சட்டத் துறையின் பேராசிரியராகப் பணியாற்றினார் (கி.பி. 1841 – 45); அதனோடு பேசல் குற்றவியல் நீதிமன்றத்தில் நீதிபதியாகவும் பணியாற்றினார்; பேராசிரியராகப் பணியாற்றிய பட்டறிவினைக் கொண்டு உரோமானியக் குடியியல் சட்டம் (Roman Civil law) தொடர்பாக இரு நூல்களை எழுதினார்; அதன் பின் இத்தாலி, கிரேக்கம் முதலான பகுதிகளுக்குச் சென்று அங்கிருந்த கல்லறைகளின் சிறப்புத் தன்மைகளைப் பற்றி ஆராய்ந்தார்; அதன் மூலம் தொன்மை மனிதனைப் (Primitive Man) பற்றியும், அவனது சட்டம், சமயம் முதலானவற்றைப் பற்றியும் ஆழ்ந்து ஆராய்ந்தார்.

பகோபன் கிரேக்கம், இலத்தீன் முதலான பண்டைய இலக்கியங்களில் வல்லுநர்; கிரேக்க, உரோம சமுதாயங்களுக்கு முன்னர்த் தாய்வழிச் சமுதாயங்கள் (Matrilineal Societies) இருந்ததற்கான குறிப்புகளைப் பண்டைய இலக்கியங்களிலிருந்து கண்டெடுத்தார்; மேலும், பல தாய்வழிச் சமுதாயங்களைப் பற்றி இனக்குழுவியல் (Ethnograpy) குறிப்புகளிலிருந்து கண்டறிந்தார்; அதன் மூலம் குடும்பம் என்னும் சமுதாய நிறுவனத்தின் வரலாற்றை அறிவியல் நோக்குடன் முதன் முதலில் விளக்கிய பெருமையைப் பெற்றார்; தாய் உரிமை என்னும் நூலில் இவரது கொள்கையை விளக்குகிறார். கட்டுப்பாடற்ற பாலுறவு நிலவிய தொல் பழங்காலத்தில் உலகளாவிய நிலையில் தாய்வழிச் சமுதாயங்கள் இருந்திருக்க வேண்டும் என்றும், சுதந்திரமான பாலுறவு

நிலைபெற்ற அக்காலத்தில் ஒருவரின் தந்தையைச் சரியாக அடையாளம் காட்ட இயலாமல் வாழ்ந்தனர் என்றும், இது பாலூட்டிகளின் (Mammals) இனப் பெருக்கத்தில் தாயை மட்டுமே அடையாளம் காணக் கூடிய நிலையை ஒத்துள்ளது என்றும் பகோபன் குறிப்பிடுவார். ஆகவே, தொடக்கக் காலத்தில் தாய்வழி உரிமையோ தாய்வழித் தலைமையோ இருந்திருக்க வேண்டும். அதன் பின்னரே தந்தைவழி உரிமை வந்திருக்க வேண்டும் எனப் பகோபன் கருதினார். தந்தை வழி உரிமை ஏற்படுவதற்குக் காரணம் சொத்துகளை அவரவர் மக்களுக்குப் பிரித்துக் கொடுக்கும் ஆர்வம் ஏற்பட்டதனால் வந்திருக்கலாம். அவரவருடைய மக்களை இனங்காணும் பொருட்டுக் கட்டுப்பாடற்ற பாலுறவு நிலையை விடுத்து ஒருதுணை மணமுறையை (Monogamy) ஏற்றனர் என்பார். இவருடைய கருத்துகள் பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டன. பகோபன் கி.பி. 1872க்குப் பின் அமெரிக்க நாட்டின் முதுபெரும் மானிடவியலறிஞரான மார்கன் உறவுமுறைக் கோட்பாட்டில் ஈடுபாடு கொண்டு அதனைத் தம் கருத்துகளுக்கு உதவும் வகையில் ஏற்றுத் தாய்வழி மரபுரிமைக் கொள்கையை வலுப்படுத்தினார். இவர் பேசல் நகரில் கி.பி. 1887-இல் காலமானார். சீ.ப.

**பங்கர்க் குன்றுப் போர்:** இது அமெரிக்கச் சுதந்திரப் போரின்போது நிகழ்ந்த போர்களுள் ஒன்று. இப்போர் பங்கர்க் குன்று என்னுமிடத்தில் கி.பி. 1775-ஆம் ஆண்டு ஜுன் மாதம் 17 – ஆம் நாள், அமெரிக்கக் குடியேற்ற வாதிகளுக்கும் ஆங்கிலேயருக்கும் இடையே நிகழ்ந்தது. இப்போரின் தொடக்கமாக ஆயிரக்கணக்கான அமெரிக்கக் குடியேற்ற வாதிகள் பாசுட்டனில் (Boston) நிறுத்தப் பெற்றிருந்த ஆங்கிலப் படையைச் சூழ்ந்து கொண்டு முற்றுகையிட்டனர். ஆங்கிலப் படைத் தலைவரான தாமசு கேகு (Thomas Gage) என்பார், இக்குன்றுகளைப் பாதுகாக்கும் நோக்குடன் சார்லசுடவுன் முந்நீரகத்தின் பக்கம் படைகளைத் திரட்டி வலுவூட்டத் திட்டமிட்டார். அவருக்கு இங்கிலாந்திலிருந்து படைகள் வந்ததும் பாசுட்டனுக்கு வடக்கே சார்லசு ஆற்றைக்கடந்து படைகளைக் கொண்டு பங்கர்க்குன்றுகளைக் காப்பது என்பது அவர் திட்டம். இத்திட்டத்தை அறிந்த அமெரிக்கர்கள் ஆங்கிலப் படைகள் பங்கர்க்குன்றுகளுக்கு வரும் முன்னர் அதனைக் கைப்பற்றுவது என முடிவு செய்தனர். அம்முடிவின்படி கி.பி. 1775-ஆம் ஆண்டு சூன் மாதம் 16-ஆம் நாள் அமெரிக்கப் படைகள் சார்லசுடன் முந்நீரகத்திற்குள் நுழைந்து பங்கர்க் குன்றுகளைக் கடந்து பாசுட்டனுக்கு அருகில் இருந்த பிரீடிசுக் குன்றுகளை (Breed's Hill) வலுவடையச் செய்தன. பங்கர்க் குன்று நகரைவிட உயரமான நிலையிலிருந்து ஆங்கிலப்படைகளை அமெரிக்கர்கள் தாக்கினர். அடுத்த நாள் ஆங்கிலேயருக்கு அமெரிக்கரின் திட்டம் புரிந்தது. ஆங்கிலப் படைத்தலைவரான சர் வில்லியம் ஓ (Sir William Howe) என்பவர் 2500 படைவீரர்களைக் கொண்ட கப்பல் மூலம் சார்லசு ஆற்றைக் கடக்க முயன்றார். அவரை அமெரிக்கர்கள் எதிர்த்தனர். இருமுறை முயன்றும் ஆங்கிலேயரால் அமெரிக்கர்களை விரட்ட இயலவில்லை. மூன்றாம் முறை ஆங்கிலேயர் தாக்க முயன்ற நிலையில் அமெரிக்கர்களின்


பங்கர்க் குன்றுப் போர்

படைவலிமை குறைந்து விட்டது. பங்கர்க்குன்று பக்கமிருந்து அவர்களுக்குப் போர்த் தளவாடங்கள் வந்து சேரவில்லை. எனவே, அமெரிக்கர்கள், முந்நீரகத்தை விட்டு ஓடலாயினர். இதையே பங்கர்க் குன்றுப் போர் என்பர். இப்போரில் ஆயிரத்திற்கும் மிகுதியான ஆங்கிலப் படை வீரர்கள் கொல்லப்பட்டனர். சற்றேறக்குறைய 400 அமெரிக்க வீரர்கள் கொல்லப்பட்டனர். இப்போரில் அமெரிக்கர்கள் பெற்றது ஒரு வகையான அற வெற்றியெனலாம். இரா.அ.

**பங்களா தேசம்,** தெற்கு ஆசியாவில் இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் இடையில் உள்ள குடியரசு நாடு. பரப்பு 143,999 ச. கி.மீ. இதன் தலைநகர் தாக்கா (Dhaka). மக்கள் தொகை 96 மிலியன் (1983). இப்பகுதி 1971-ஆம் ஆண்டு திசம்பர் வரை கிழக்குப் பாகிசுத்தான் என்ற பெயருடன், பாகிசுத்தான் நாட்டின் ஒரு மாகாணமாக இருந்தது. காண்க: வங்காளம்.




பங்களாதேசம் அமைவிடம்

பங்களாதேசம் (Bangla Desh) கங்கை, பிரம்ம புத்திரா, மேக்னா ஆறுகளின் கழிமுகப் பகுதிகளைத் தன்னுட் கொண்டுளளது.

பாகிசுத்தானின் இரு மாகாணங்களாக இருந்த மேற்குப் பாகிசுத்தானும் கிழக்குப் பாகிசுத்தானும் பலவகைகளில் வேறுபாடுகளைப் பெற்றிருந்தன. வரலாற்று அடிப்படையிலும், பொருளாதாரத் துறையிலும், இயற்கை அமைப்பிலும் ஒன்றுடன் ஒன்று ஒற்றுமை இல்லாமலிருந்தது. இரு பகுதிகளுக்கு மிடையே உள்ள தொலைவு 1610 கி.மீ. இந்நிலையில் செயிக் முசிபுர் ரகுமான் (Sheikh Mujibur Rahman) (காண்க: தனிக் கட்டுரை) தலைமையின் கீழிருந்த அவாமி லீக் கட்சி (Awami League Party), 1970 – ஆம் ஆண்டுத்தேர்தலில் பெரும்பான்மையான இடங்களைச் சட்டசபையில் பெற்றுக் கிழக்குப் பாகிசுத்தான் மாகாணத்திற்கு மிகுதியான உரிமைகள் வேண்டுமென வற்புறுத்தியது. பாகிசுத்தான் அரசு இராணுவச் சட்டத்தைப் பிறப்பித்து அடக்கு முறையைக் கையாண்டது. கிழக்குப் பாகிசுத்தானில் உள்நாட்டுப் போர் 1971 -ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் மூண்டது. இந்தியா, முசிபுர் ரகிமானுக்கு உதவியது. போர் 1971 திசம்பரில் முடிந்து கிழக்குப் பாகிசுத்தான் பங்களாதேசம் என்ற பெயருடன் சுதந்திர நாடாக அறிவிக்கப்பெற்றது.

பங்களாதேசம், மிகுதியான தாதுப்பொருள்களைப் பெற்றிருக்கவில்லை. நாடு வேளாண்மையையே பெரிதும் நம்பியுள்ளது. நெல், சணல், கரும்பு, தேயிலை, புகையிலை, கோதுமை முதலியன பயிராகின்றன. உலகம் முழுதும் உற்பத்தி செய்யப்படும் சணலில் பாதி அளவுக்கு மேலாகப் பங்களாதேசத்திலிருந்து கிடைக்கிறது. மீன்பிடித்தல் சிறப்பாக இங்கு நடைபெறுகிறது. ஆடை வகைகள், சணல் பொருள்கள், காகிதம், தோல்பொருள்கள் முதலியனவும் செய்யப் படுகின்றன. உணவுப் பொருள்களைப் பொறுத்த வரை, இந்நாடு பிறநாடுகளிலிருந்து இறக்குமதி செய்தலையே நம்பியுள்ளது.

இந்நாட்டில் 1972-ஆம் ஆண்டு திசம்பர் முதல் புதிய அரசியலமைப்புச் செயல்முறைக்கு வந்துள்ளது. குடியரசுத் தலைவரைக் கொண்ட 'நாடாளுமன்ற மக்களாட்சி நிலவுகிறது. இந்நாடு 21 மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதன் முக்கிய நகரங்கள், இராசசாகி (Rajshahi), பாரிசால் (Barisal). பங்கள (Bangla) மொழியே அரசாங்க மொழியாகும். ஐக்கிய நாடுகளின் சபையில் இந்நாடு இடம் பெற்றுள்ளது.

தெ.பா.

துணை நூல்:

Franda, M., BanglaDesh: The First Decade, New Delhi, 1982.

***பங்காதாயம்***: வாணிகத்தில் வரும் ஆதாயங்களின் ஒரு பகுதியை உறுப்பினர்கள் தாங்களே பகிர்ந்துகொள்வது கூட்டுப் பங்கு நிறுமத்தின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாகும். அவ்வாறு பகிர்ந்து கொள்ளப்படும் தொகையே 'பங்காதாயம்' (Dividend) எனப்படும். எனவே, பங்காதாயம் என்பது நிறுமத்தின் பகிர்வு ஆதாயத்திலிருந்து ஒவ்வோர் உறுப்பினருக்கும் கிடைக்கக் கூடிய தொகையேயாகும். ஆதாயம் என்றால் என்ன என்பதைச் சட்டம் விளக்கவில்லை. ஆகவே, ஆதாயம் என்பது ஆதாயத்தையும் (Capital Profits) குறிக்கக் கூடும். முதலின ஆதாயத்தைப் பங்காதாயமாக வழங்குவதற்கு நிறுமத்திற்கு அதிகாரம் இருந்தால்தான் அந்த ஆதாயத்திலிருந்து பங்காதாயம் வழங்கலாம். அவரவர்கள் வாங்கிய நிறுமப் பங்குகளின் கணக்கின் படியோ செலுத்தப்பட்ட பங்குத்தொகையின் படியோ பங்காதாயம் வழங்கப்படலாம். பங்காதாயம் என்பது வட்டியினின்று வேறுபட்டதாகும்.

பங்காதாய அறிவிப்பு, வழங்கப்படும் முறை, காலம் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகள் நிறுமச் சட்டம் 1956-இன் பிரிவுகள் 205, 206, 207, முதலியவற்றில் கொடுக்கப்பட்டுள்ளன. நிறுமத்தின் நடப்பு ஆதாயத்திலிருந்து அல்லது கடந்த கால ஆதாயத்திலிருந்து சேர்த்து வைக்கப்பட்ட நிதியிலிருந்து மட்டுமே பங்காதாயம் வழங்கப்பட வேண்டும். மூலதனத்திலிருந்து பங்காதாயம் சாதாரணமாக வழங்கக் கூடாது. நிறுமத்துக்கு ஆதாயம் கிட்டவில்லை என்றாலோ நிதியொன்று அதற்கெனச் சேர்த்து வைக்கவில்லை என்றாலோ பங்காதாயம் என்ற

கேள்விக்கே இடமில்லை. ஆனால், பங்காதாய விகிதம் பற்றி அரசு உத்திரவாதமளித்திருப்பின் நிறுமத்துக்கு ஆதாயம் கிட்டவில்லையென்றாலும் பங்காதாயம் வழங்கப்படும். பதிவு செய்யப்பட்ட பங்குதாரர்களுக்கு மட்டுமே அவர்களின் உத்தரவின் பேரிலோ, அவருடைய வங்கியருக்கோ பங்காதாயம் வழங்கப்படும். நிறுமப் பங்குரிமைச் சீட்டுகளை வெளியிட்டிருந்தால் அச்சீட்டைக் கொணர்பவருக்கும் பங்காதாயம் வழங்கப்படும். பங்குகளின் எண்ணிக்கைகளை அல்லது பங்குகளின்மேல் செலுத்தப் பட்ட தொகையை அடிப்படையாகக் கொண்டு பங்காதாயம் வழங்கலாம்.

**பங்காதாயம் வழங்குதல்:** ஆண்டுப் பொதுக் கூட்டத்திற்கான அறிவிப்பை உறுப்பினர்களுக்கு அனுப்பி வைக்கும்பொழுது இயக்குநர்களின் அறிக்கையையும், தணிக்கை செய்யப்பட்ட ஆண்டுக் கணக்குகளையும் சேர்த்து அனுப்பி வைத்தல் வேண்டும். பங்காதாயவிகிதம் பற்றி இயக்குநர்கள் பரிந்துரை செய்தவாறு நிறுமப் பொதுக்கூட்டத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டுத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால் பங்காதாயம் உரிமைச் சீட்டு (Dividend Warrant) அனுப்பக் கூடிய உத்தேச நாளையும் அவ்வறிவிப்பில் சேர்த்து அனுப்ப வேண்டும். பொதுக் கூட்டத்தில், பங்காதாயம் பற்றி முடிவு செய்து அனுமதிக்கப்பட்ட நாளிலிருந்து 42 நாள்களுக்குள் உறுப்பினர்களுக்குச்சேர வேண்டிய பங்காதாயத் தொகையை அனுப்பி வைத்தல்வேண்டும் தவறினால், தெரிந்திருந்தும் இத்தவறுதலுக்குக் கராணமாயிருந்த இயக்குநர் ஒவ்வொருவரும், செயலர்-கருவூலரும் தண்டத் தொகை செலுத்தவும் ஏழுநாள்கள் சிறைத் தண்டனை அனுபவிக்கவும் நேரிடும். கீழ்வரும் காரணங்களுக்காகப் பங்காதாயத்தை வழங்குவதில் கால தாமதம் ஏற்பட்டால் அது தவறு எனக்கருதப்படமாட்டாது.

அ) சட்டம் குறுக்கிடும் காரணத்தால் பங்காதாயம் வழங்கப்பட முடியாதிருத்தல்; ஆ) பங்காதாயம் வழங்குவதற்காக உறுப்பினர் ஒருவர் கொடுத்த உத்தரவிற்குக் நிறுமம் இணங்காதிருத்தல்; இ) பங்காதாயம் பெற்றுக்கொள்ளும் உரிமையைப் பற்றிய தகராறு இருத்தல்; ஈ) அந்த உறுப்பினரிடமிருந்து நிறுமத்துக்கு வரவேண்டிய எந்தவொரு தொகைக்காவது அவருக்குச் சேரவேண்டிய பங்காதாயத்தைச் சரிக்கட்டிக் கொள்ளுதல்; உ) நிறுமத்தின் மீது தவறில்லாமல் வேறுஎந்தக் காரணங்களினால் பங்காதாயத்தொகை கொடுக்கப்படாதிருத்தல் அல்லது பங்காதாயம் உரிமைச் சீட்டு அஞ்சல் செய்யப்படாதிருத்தல்.

**கோளாப் பங்காதாயம்:** சில சமயங்களில் பங்காதாயம் பற்றிக் நிறுமம் விளம்பரப்படுத்தியிருந்தும் பல உறுப்பினர்கள் அதைப் பெற முற்படாமலிருக்கலாம். பொதுக் கூட்டத்தில் உறுதிப்படுத்தியவுடன் பங்காதாயம் உறுப்பினர்களுக்குச் சேரவேண்டிய கடனாகிறது. பெற்றுக் கொள்ள முற்படாத பங்காதாயத்தினைக் 'கேளாப் பங்காதாயக் கணக்கிற்கு' (Unclaimed Dividend Account) மாற்றி, உறுப்பினர்கள் கேட்கும்வரையிலும் அல்லது சட்டத்தால் கால வரையறையைக் கடக்கும் (பெறவேண்டிய நாளிலிருந்து ஆறு ஆண்டுகள்) வரையிலும் அக்கணக்கிலேயே வைத்தல் வேண்டும், அத் தொகைக்கு வட்டி கொடுக்க நிறுமம் கடமைப்பட்டதன்று. இதற்கிடையில் நிறுமம் கலைக்கப்பட்டால் பெறுவதற்குரிய நாளிலிருந்து ஆறு திங்கள் கடந்த பின் பெற்றுக் கொள்ளாத பங்காதாயத் தொகையை நிறுமக் கலைப்பாளர் மைய வங்கியிலுள்ள இந்தியப் பொதுக் கணக்கிற்கு (The Public Account of India) மாற்றி விட வேண்டும்.

உறுப்பினர்களிடமிருந்து நிறுமத்துக்குச் சேர வேண்டிய எந்தவொரு கடன் தொகைக்காவது அவர்களுக்குச் சேரவேண்டிய பங்காதாயத் தொகையின் மேல் நிறுமம் தனது பற்றுரிமையினைச் (Lien) செலுத்தலாம். பொதுவாக அதற்குரிய அதிகாரம் அனைத்து நிறுமங்களின் சங்கச் செயல்முறை விதிகளிலும் கொடுக்கப்பட்டிருக்கும். பி.ச.

*பங்கிம் சந்திர சட்டர்சி* (கி.பி. 1838–1894) வங்கத்திற்கு மட்டுமல்லாது இந்தியாவிற்கே முழுமுதல் புதினத்தைத் தந்து, 'இந்தியப் புதின இலக்கியத்தின் தந்தை' என்று புகழப்படுகிறவர் ஆவார். இவர், மேற்கு வங்க மாநில பார்கானா என்னும் மாவட்டத்தில் உள்ள காண்டாலா பாரா என்னும் கிராமத்தில் 1838-ஆம் ஆண்டு யாதவ்சந்திரர் என்பவருக்கு மகனாகப் பிறந்தார். இவர் குலீன் என்ற ஓர் அந்தண மரபைச் சார்ந்தவர். பங்கிம் சந்திரர் என்பது இவருடைய இயற்பெயர். இவர் பட்டக் கல்வியிலும், சட்டக் கல்வியிலும் தேர்ச்சி பெற்றுத் திகழ்ந்தார். கல்கத்தாப் பல்கலைக்கழகத்தில் முதன்முதல் பட்டம்பெற்ற இருவருள் இவர் ஒருவர்.

வங்காளம், சமசுகிருதம், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் ஆழ்ந்த புலமை பெற்றவராக இவர் விளங்கினார். தம் பட்டப்படிப்பை கி.பி. 1858–ஆம் ஆண்டு முடித்த உடனேயே இவருக்கு அக்கால ஆங்கிலேய அரசு, இந்தியர்களுக்கென அளித்துவந்த உயர்ந்த பதவியான மாவட்டத் துணை ஆட்சியர்



பங்கிம் சந்திர சட்டர்சி

பதவியை அளித்தது. அந்நாளில் வங்க மாநிலப் பகுதிகளாக இருந்த மேற்கு வங்காளம், கிழக்கு வங்காளம், ஒரிசா ஆகியவற்றின் பல்வேறு மாவட்டங்களிலும் பணிபுரிந்து கி.பி. 1891-ஆம் ஆண்டு ஓய்வு பெற்றார். சில காலம் இவர் நீரிழிவு நோயால் துன்பப்பட்டு கி.பி. 1894-ஆம் ஆண்டு காலமானார்.

பங்கிம்சந்திரர் தம் இளவயதில் கவிதை எழுதுவதில் விருப்பம் உடையவராக இருந்தார். கவிஞர் ஈசுவர சந்திர குப்தா என்பவர் நடத்திய 'சம்பாத் பிரபாகர்', 'சம்பாத் சதுராஞ்சன்' ஆகிய இதழ்களில் பல கவிதைகளும் கட்டுரைகளும் வெளியிட்டு வந்தார். இவருடைய மாணவப் பருவத்திலேயே 'இலலிதா' (Lalita), 'மானச' (Manasa) என்னும் இவர் எழுதிய இரு கவிதை நூல்கள் வெளியாயின.

தம்முடைய கவிதைகள் தரம் வாய்ந்தனவாக இல்லை என்பதைத் தாமே உணர்ந்து இவர் புதின உலகில் அடியெடுத்து வைத்தார். இவர் முதன்முதலில் 'இராசமோகனின் மனைவி' (Rajamohan's Wife) என்னும் ஒரு புதினத்தை ஆங்கிலத்தில் எழுதி முடித்தார். இது முதலில் கி.பி. 1864-ஆம் ஆண்டு 'இந்தியன் பீல்டு' இதழில் தொடராக வெளிவந்து பின்னர் 1935-ஆம் ஆண்டு நூலாக வெளிவந்தது. இப் புதினம் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தமையால் கற்றுவல்ல மேட்டுக் குடியினராலேயே பெரிதும் விரும்பிப் படிக்கப்பட்டது. அனைவரும் படிக்கவேண்டுமாயின் தாய்மொழி வாயிலாக இலக்கியம் படைக்க வேண்டும் என்பதை உணர்ந்தார். எனவே, கி.பி. 1865-ஆம் ஆண்டில் 'துர்கேச நந்தினி' (Durge's Nandini) என்னும் ஒரு புதினத்தை வங்க மொழியில் எழுதி வெளியிட்டார். அப்புதினமே இந்தியாவின் முதல் புதினம் ஆகும். வரலாறும் கற்பனையும் கலந்து எழுதப்பட்ட அப் புதினத்தால் மிகுந்த புகழ் இவருக்குக் கிட்டியது. இவர் எழுதியுள்ள புதினங்களின் மொத்த எண்ணிக்கை துர்கேச நந்தினியையும் சேர்த்துப் பதினான்காகும். அவை: கபால குண்டலை (Kapalakundala, கி.பி. 1866), மிருணாளினி (Mirnalini, கி.பி. 1869), விடவிருட்சம் (Bisabriksa கி.பி. 1873), இந்திரா (Indira, கி.பி. 1873), யுகலாங்குரீயம் (Jugalanguriya, கி.பி. 1874), சந்திரசேகர் (Chandrasekhar, கி.பி. 1875), இராதாராணி (Radharani கி.பி. 1875), இரசனி (Rajani, கி.பி. 1877), கிருட்டிணகாந்தன் உயில் (Krsnakanteh will, கி.பி. 1878), இராசசிம்மன் (Rajasimha, கி.பி. 1882), ஆனந்த மடம் (Ananda Math, கி.பி. 1882), தேவி சௌதுராணி (Devi Caudhurani, கி.பி. 1884), சீதாராமன் (Sitaram, கி.பி. 1887) என்பனவாகும்.

இவருடைய புதினங்கள் பெரும்பாலும் வரலாற்றுத் தொடர்புடையனவாகவும் சமூகத் தொடர்புடையனவாகவும் உள்ளன. துர்கேச நந்தினி, இராசசிம்மன். ஆனந்தமடம் போன்றன இவருடைய வரலாற்றுப் புதினங்கள் ஆகும். ஆனந்த மடத்தில் வெளிவந்த 'வந்தே மாதரம்' என்ற பாடல் இந்திய விடுதலைப் போராட்டக் காலத்தில் இமயம் முதல் குமரி வரை மக்களின் இலட்சிய முழக்கமாகத் திகழ்ந்தது. விதவை மறுவாழ்வுச் சிக்கலை மையமாக வைத்து எழுதப்பெற்றவை விடவிருட்சம், கிருட்டிண காந்தன் உயில் ஆகியவை.

பங்கிம்சந்திரர் கிண்டலும் கேலியும் கொண்ட நகைச்சுவை இலக்கியங்கள் சிலவும் எழுதியுள்ளார். அவ்வகையில் இவர் எழுதிய 'கமலா காந்தன் தப்தர்' (Kamala Kanten Daptar, கி.பி. 1875)' என்னும் நகைச்சுவை இலக்கியம் மிகச்சிறப்புடையது. இதைத் தவிர, 'உலோக இரகசியம்' (Loga Rahasiya, கி.பி. 1874) என்னும் தலைப்பில் நகைச்சுவைக் கட்டுரைத் தொகுதி ஒன்றையும் இவர் வெளியிட்டுள்ளார்.

இவருக்கு முன்பே வங்க மொழி உரைநடை தோற்றம் பெற்றிருந்தபோதிலும் அதற்கு ஓர் ஒழுங்குமுறையினை அமைத்துக் கொடுத்த பெருமை இவரையே சாரும். இவருடைய மொழிநடை வடமொழி கலந்த இலக்கிய நடையாக இருப்பினும் புதுமையும் விறுவிறுப்பும் கலந்து அது விளங்குகிறது.

சிறந்த புதின ஆசிரியரான பங்கிம்சந்திரர், சிறந்த பத்திரிகை ஆசிரியராகவும் திறனாய்வாளரா

கவும் தத்துவாசிரியராகவும் விளங்கினார். இவர், கி.பி. 1872 – ஆம் ஆண்டு 'வங்க தரிசனம்' (Banga Darsan) என்னும் ஓர் இலக்கிய மாத இதழை வெளியிட்டு வந்தார். இவ்விதழின் தோற்றத்தால் பிற வங்க இதழ்களின் புகழ் மங்கியது. விடவிருட்சம், இந்திரா, சந்திரசேகர் போன்ற புதினங்களை முதன் முதலில் இவ்விதழில்தான் தொடராக எழுதி வந்தார். சமயக் கட்டுரைகள் உட்பட அளவற்ற கட்டுரைகளையும் அதில் எழுதி வெளியிட்டார். கட்டுரைகள் அனைத்தும் தொகுக்கப்பட்டு 'விவித பிரபந்தம்' (Bibidha Prabandha) என்ற தலைப்பில் இரு தொகுதிகளாக வெளிவந்தன (கி.பி. 1887,1892). இவருடைய கட்டுரைகளில் 'இந்து திருவிழாக்களின் தோற்றம்', 'சாக்கியத் தத்துவம்', 'இந்து தத்துவ ஆராய்ச்சி' ஆகியன குறிப்பிடத்தக்கன. விவித பிரபந்தத்தைத் தவிரவும் சாம்ய (Samya, கி.பி. 1879) என்ற ஒரு கட்டுரைத் தொகுப்பினையும் வெளியிட்டுள்ளார்.'

திறனாய்வுத் துறையில் 'விவித சமாலோசனா (Bibidha Samalocana) என்னும் விமரிசனக் கட்டுரைத் தொகுதி ஒன்றை கி.பி. 1876–ஆம் ஆண்டு வெளியிட்டுத் தாமொரு திறனாய்வாளர் என்று உலகிற்கு வெளிபடுத்தினார். இந்து சமயத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு விளங்கிய இவர், 'தரும தத்துவம்' (Dharmia Tatva, கி.பி. 1888) என்னும் நூலை வெளியிட்டுள்ளார். இவர் கி.பி. 1875–ஆம் ஆண்டு 'விஞ்ஞான இரகசியம்' (Bijhan -Rahasya) என்னும் நூலையும் வெளியிட்டுள்ளார்.

இவருடைய பெரும்பான்மையான இலக்கியப் படைப்புகள், தமிழ் உள்ளிட்ட பல்வேறு இந்திய மொழிகளிலும் உலக மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இவருடைய இலக்கியப் படைப்புகள் உலக அரங்கில் அறிமுகமானதால் வங்கத்திற்கும் இந்தியாவிற்கும் பெருமை உண்டாக்கின. இவருடைய இலக்கியப் பணிக் காலத்தை வங்க இலக்கிய வரலாற்றாசிரியர்கள் 'பங்கிம்சந்திரரின் காலம்' என்று தனியாகப் பிரித்து வங்க இலக்கிய வரலாறு எழுதி வருவது குறிப்பிடத்தக்கதாகும். பா.ந.

**துணை நூல்கள்:**

**சுபோத் சந்திர சென்குப்தா**, பங்கிம்சந்திர சட்டர்சி தமிழாக்கம்; அசோகமித்திரன், புதுதில்லி, 1979.

**Bhabatos Datta**, Cintanayak Bankim Candra, Calcutta, 1961.

**Haraprasad Mitra**, Bankim-Sahitya Path, Calcutta, 1963.

**Jayanta Kumar Dasgupta**, A Critical study of the life and work of Bankim Chandra, Calcutta, 1937.

**பங்கீட்டுக் கோட்பாடுகள்:** தொழிலதிபர்கள் முன்நின்று முதலை வட்டிக்கு வாங்கி, நிலத்தை வாரத்துக்கு எடுத்துத் தொழிலாளர்களைக் கூலிக்கமர்த்தி ஆக்கத்தில் ஈடுபடுகிறார்கள். ஆக்கப்பட்ட பொருளை விற்று வாரம், வட்டி, கூலி ஆகியவற்றைக் கொடுத்து மீதமிருப்பதை ஆதாயமாக அடைகிறார்கள். இந் நான்கு காரணிகளும் ஊதியம் பெறும் தத்துவத்தைப் பங்கீட்டுக்கோட்பாடுகளை (Distribution Theories) விளக்குகின்றன. செலிக்மெனின் (Seligman) கூற்றுப்படி 'பகிர்வில் (Distribution) உற்பத்திக் காரணிகளுக்கு ஊதியம் வழங்கப்படுவதைப் பற்றியே முக்கியமாகப் பேசப்படுகிறது. அவற்றுள் வாரம், கூலி, வட்டி, ஆதாயம் ஆகியவற்றால் சமூக வருமானம் முழுவதும் காலி செய்யப்படுகிறது'.

**ஆக்கக் கோட்பாடு**, இக் கோட்பாட்டின்படி ஒவ்வோர் உற்பத்திக் காரணிக்கும் கிடைக்கும் ஊதியம் அந்த உற்பத்திக் காரணியின் இறுதிநிலை ஆக்கத்திற்குச் சமமாக இருக்கவேண்டும் என்பதாகும். உற்பத்திக் காரணியின் இறுதிநிலை ஆக்கம் என்பது மூன்று காரணிகளின் அளவும் மாறாதிருக்கும்போது ஒரு காரணியின் அளவில் ஓர் அலகு மிகுதியாவதனால் மொத்த உற்பத்தியில் ஏற்படும் பெருக்கமாகும். அக்காரணியை உற்பத்தியில் ஏற்படுத்த ஆகும் இறுதிநிலைச் செலவு, அதன் இறுதிநிலை ஆக்கத்தைவிடக் குறைவாக இருக்குமானால் அக் காரணியின் அலகுகள் மேலும் மிகுதியாக்கப்படும். அதன் இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை ஆக்கமும் சமமாகும் நிலையில் அதற்குமேல் அக் காரணியின் அளவு மிகுதியாக்கப்படுவதில்லை. எனவே, உற்பத்திக் காரணிகளின் ஊதியம் அதன் இறுதிநிலையில் காணப்படும் ஆக்கத்திற்கேற்ப இருக்குமென ஆக்கக் கோட்பாடு (Production Theory) விளக்குகிறது.

எடுத்துக்காட்டாக, ஒரு தொழிலதிபர் உரூ.1000–மூலதனமிட்டு ஓர் ஏக்கர் நிலப்பரப்பில் ஆறு தொழிலாளர்களோடு ஏழாம் தொழிலாளியையும் சேர்த்துக் கொண்டதனால் மொத்த நெல் உற்பத்தி 1200 படி ஆகுமானால், இறுதிநிலை உற்பத்தி 200 படி நெல் என்றும்7–ஆம் தொழிலாளியின் ஊதியம் 200 படிநெல்லின் விலைக்குச் சமமாக இருக்குமென்றும் இக்கோட்பாடு கூறுகிறது.

உழைப்பின் ஊதியத்தை, அதன் இறுதிநிலை உற்பத்தியால் கணக்கிட்டது போல, மூலதனம், நிலம் ஆகியவற்றின் ஊதியத்தையும் கணக்கிடலாம்.

இக்கோட்பாடு குறைந்து செல் விளைவு விதியின் அடிப்படையில் வகுக்கப்பட்டுள்ளது. உற்பத்தியின் ஒரு காரணியின் அளவைப் பெருக்கிக் கொண்டே போனால், அக்காரணியின் இறுதிநிலை ஆக்கம்

குறைந்துகொண்டே போகும். காரணிக்குத் தரப்படும் ஊதியத்திற்குச் சமமாக (காரணியின் விலைக்கு) இறுதிநிலை ஆக்கம் ஆகும் வரையில் அக்காரணியின் அலகுகள மிகுதியாக்கப்படும். அதற்கு மேல் அக் காரணியின் அலகுகள் மிகுதியாக்கப்படாமல், மற்றக் காரணிகளின் அளவு மிகுதியாக்கப்படும்.

மிகையான ஆதாயமடையும் நோக்கத்துடன் தொழிலதிபர் பல விகிதங்களில் உற்பத்திக்காரணிகளைப் பதிலீடு செய்து,மிகவும் உத்தமமான தொகுப்பையே தெரிந்துகொள்வார். மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கம், உழைப்பின் இறுதிநிலை ஆக்கத்தைவிட மிகுதி எனக் கண்டால் மூலதனத்தின் அளவை அதிகரித்து உழைப்பாளிகளின் எண்ணிக்கையைக் குறைத்துக்கொள்வதன் மூலம் இரண்டு காரணிகளின் இறுதிநிலை ஆக்கமும் சமன் செய்யப்படுகிறது.

பொதுவாக இக்கோட்பாடு, காரணிகளின் தேவை, அளிப்பு ஆகியவற்றின் தொடர்பைக் குறிப்பிடுகிறதெனக் கொள்ளலாம். ஏனென்றால் ஒரு காரணியினால் ஏற்படும் ஆக்கம் அக்காரணியின் தேவையையும் அளிப்பையும் பொறுத்தது. அதன் தேவை மிகுதியாக இருக்குமானால் அதன் ஊதியமும் மிகுதியாக இருக்கும்.

**தேவை அளிப்புக் கோட்பாடு அல்லது புதிய கோட்பாடு:** இறுதிநிலை உற்பத்தித்திறன் கோட்பாடு தேவைப் பக்கத்தை மட்டுமே வலியுறுத்துகிறது. இக்காலத்தில் தேவை, அளிப்பு ஆகிய இரண்டையும் கருத்திற்கொண்டு புதிய கோட்பாடு (Modern Theory) அமைக்கப்பட்டிருக்கிறது.

**எடுகோள்கள்:** 1) பண்ட அங்காடியிலும் (Commodity Market), காரணிகள் அங்காடியிலும் (Factor Market) நிறைவுப் போட்டி நிலவுகிறது; 2) காரணியின் எல்லா அலகுகளும் ஒரே இயல்புடையவையாகவும், ஒன்றுக்கொன்று நிறைவான பதிலியாகவும் இருக்கின்றன; 3) காரணியின் எல்லா அலகுகளும் பகுபடும் தன்மையுடையன; 4) விளைவு விதி செயற்படுகிறது.

**தேவை:** இக்கோட்பாட்டின்படி காரணியின் தேவை (பெறப்படும்) பிறப்பிக்கப்பட்ட தேவை (Derived Demand) பண்டங்களுக்கான தேவை மிகுதியானால் காரணியின் தேவையும் மிகுதியாகும். காரணியின் தேவை மற்றக் காரணிகளைச் சார்ந்திருக்கும் தேவையாகஇருக்கிறது. ஓர் உற்பத்திக் காரணியின் தேவையை1) அக் காரணியின்விலை, 2) அதனால் உற்பத்தி செய்யப்படும் பண்டத்திற்கான தேவை, 3) அக்காரணி தவிரப் பிற காரணிகளின் அளவும்விலையும், 4) இப்போது பயன்பட்டுக்கொண்டிருக்கும் காரணியின் அளவும் தன்மையும், 5) தொழில்நுட்ப மாற்றம் ஆகியன நிருணயிக்கின்றன.

நிறுவனத்தைப் பொறுத்தமட்டிலும் காரணியின் இறுதிநிலை ஆக்கத் திறனையும்அதற்கான அங்காடி விலையையும் பொறுத்துத் தேவை அமைகிறது. இத்தேவைகளின் மொத்தம் தொழிலின் தேவையாகும். வரைபடம் 1 – இல் OW ஆக இருக்கும்போது நிறுவனத்தின்காரணித் தேவை ON ஆக இருப்பதையும் கூலி $OW_1$ஆக உயரும்போது தேவை $ON_1$ ஆகக்குறைவதையும் படம் '(A)' காட்டுகிறது. நிறுவனங்களின் தேவையின் மொத்தம் தொழிலின் தேவையாகும். கூலி WO ஆக இருக்கும்போது தொழிலில் காரணித் தேவை ON ஆகவும் கூலி OW, ஆக உயரும்போது தேவையின் அளவு OM, ஆகவும் சுருங்குவதைப் படம் 'B' காட்டுகிறது.

**அளிப்பு:** காரணியின் அளிப்பைப் பல்வேறு காரணிகள் நிருணயிக்கின்றன. நிலத்தின் அளிப்பு மொத்



(A) நிறுவனத்தின் தேவை அளவு



(B) தொழிலின் தேவை அளவு

தத்தில் நிலையானதாகவும், நிறுவனத்தின் அளிப்பு மாறத்தக்கதாகவும் இருக்கும். உழைப்பின் அளிப்பை மக்கள் தொகை, உழைப்பவரின் திறன், கல்வி, பயிற்சி போன்ற பல்வேறு காரணிகள் நிருணயிக்கின்றன. மேலும், கூலி உயரும்போது உழைப்பின் அளிப்பு குறையும்வாய்ப்பு உண்டு. இவ்வாறு அளிப்பு (Supply) பல்வேறு காரணிகளின் அடிப்படையில் அமைந்திருப்பதால் காரணியின் விலை அதிகமாக இருந்தால் அளிப்பு அதிகமாக இருக்கும் என்றும், விலை குறைந்தால் அளிப்பும் குறையும் என்றும் பொதுவாகக் குறிப்பிடலாம்.




சம நிலைத் தேவை அளிப்புக் கோட்பாட்டின் படி தேவை, அளிப்பு ஆகிய இரண்டும் காரணியின் விலையை நிருணயிக்கின்றன. வரைபடம் 2-இல் OW சமநிலை விலை.

**வாரம்**; பொருளியலில் வாரம் என்ற சொல் வாடகை என்ற பொருளில் பயன்படுத்தப்படாமல் உற்பத்திக் காரணிகளில் ஒன்றான நிலத்தைப் பயன்படுத்தியதற்கு அளிக்கப்படும் வெகுமதி எனப் பொருள் கொள்ளப்படுகிறது. பொதுவான வழக்கில் வீடு, வாகனம், நிலம் ஆகியவற்றிற்கு வழங்கும் ஒப்பந்தத்தொகை வாரம் எனக் கூறப்பட்டாலும் அதன் மூலதனத்துக்கான வட்டியும், உழைப்பிற்கான ஊதியமும், தொழில் அமைப்பிற்கான ஆதாயமும் கலந்திருப்பதனால் அதைப் பொருளாதார வாரம் (Economic Rent) எனக் கொள்ளமுடியாது. பொருளியலில் குத்தகைதாரர் நிலத்தைப் பயன்படுத்தியதற்காக நில உடைமையாளனுக்குச் செலுத்தும் விலை வாரம் (Rent) எனப்படும். மேலும், தரம் கூடிய நிலங்களுக்கே வாரம் உரியதாகையால் அது செலவிற்குமேல் உபரியாகக் (Surplus over cost) கருதப்படுகிறது.

**வாரக் கோட்பாடுகள்; இரிக்கார்டோவின் வாரக் கோட்பாடு**: பொருளாதார வாரம் எவ்வாறு நிருணயிக்கப்படுகிறது என்பதைத் தொன்மைப் பொருளியல அறிஞர் தாவீது இரிக்கார்டோ என்பவர் விளக்குகிறார். 'இயற்கையில் அமைந்ததும் அழிக்க முடியாததுமான நிலத்தின சக்தியைப் பயன்படுத்துவதற்காக நில உரிமையாளருக்குச் செலுத்தப்படும் உற்பத்தியின் ஒரு பகுதியே வாரம் என இரிக்கார்டோ வாரத்திற்கு இலக்கணம் (Ricardian Theory of Rent) வகுத்துள்ளார். நிலத்தின் வளமும், இட அமைப்பும் மாறுபடுபவை. 'தரமான நிலத்தில, தரமற்ற நிலத்தில் கிடைப்பதைவிட வருவாய் கூடுதலாகக் கிடைக்கிறது. அந்தக் கூடுதலே (உபரி) வாரமெனக் கூறப்படுகிறது. எனவே, அளிப்பு நெகிழ்ச்சியற்ற உற்பத்திக் காரணியான நிலத்திற்கே வாரம் கிடைக்குமெனக் கொள்ளலாம். அளிப்பு நெகிழ்ச்சி கூடிய காரணிகள தேவைக்கேற்றாற் போல் மாறுமாகையால் உபரி ஏற்படாது. இதனை இரிககார்டோவின் எடுத்துக்காட்டு மூலம் விளக்கலாம்.

மனிதரே இல்லாத தீவு ஒன்றுக்கு மககள கூட்டம் ஒன்று செல்வதாகக் கருதிக் கொள்ளலாம். அங்கு முதலில் தரமானநிலங்களில் அவர்கள் பயிரிடுகிறார்கள். மிகுந்த முதல்தர நிலங்கள இருப்பதால் அவற்றின் உபயோகத்திற்கு யாரும் விலை (வாரம) கொடுக்க முன்வர மாட்டார்கள்.

இனி, இரண்டாம் குழு அத்தீவிற்கு வருவதாகக் கொள்ளலாம்; அல்லது மக்கள தொகைப் பெருகுவதாகக் கொள்ளலாம். முதல் தர நிலங்கள் யாவும் பயன்படுத்தப்பட்டு விட்டதால், இவர்கள் இரண்டாந் தர நிலங்களைப் பயிரிடுவார்கள. முதல் தர நிலத்தின் அதே அளவுள்ள இரணடாந்தர நிலத்தில், முன்பு செய்த உற்பத்திச் செலவிறகுக் குறைந்த அளவுள்ள உற்பத்தியே கிடைக்கும். எடுத்துக்காட்டாக, ஒரு குறிப்பிட்டஉழைப்பும், முதலும் கொண்ட முதல் தர நிலத்தில் குறிப்பிட்ட உற்பத்திச் செலவில் 25 கிலோ கோதுமை கிடைக்கிறது எனக் கொண்டால், இரண்டாந்தர நிலத்தில் அதே அளவுள்ள இடத்தில், அதே உற்பத்திச் செலவிற்கு 20 கிலோ கோதுமையே கிடைக்கும். இந்நிலத்தில் உற்பத்திச் செலவு, முதல் தர நிலத்தில் ஆகிய செலவை விட அதிகமாக இருப்பதனால் பண்டத்தின் விலை இரண்டாந்தர நிலத்தின் இறுதி நிலை உற்பத்திச் செலவிற்குச் சமமாகக் காணப்படும். முதல் தர நிலத்தில் விளைந்த பொருளுக்கும் (25 கிலோ) இந்த

அதிக விலை கிடைப்பதனால், முதல் தர நிலம் வாரம் பெறுகிறது. (25கிலோ-20 கிலோ=5 கிலோ). இரண்டாம் வகை நிலத்திற்கு வாரமில்லை. இந்நிலம் வாரமற்ற நிலம் (No Rent land) என்றும் இது இறுதி நிலமென்றும் கூறப்படுகிறது. இரண்டாம் தர நிலம் பயிரிடப்படும் போதே முதல் தர நிலம் வாரம் பெறுகிறது. மூன்றாம் தர நிலம் பயிரிடப்படும்போது இரண்டாம் தர நிலம் வாரம் பெறுகிறது. இந்நிலை நிலத்தின் தரம் குறையும்போதெல்லாம் ஏற்படுகிறது. இந்த எடுத்துக்காட்டின் மூலம் தரம் குறைந்த நிலம் பயிரிடப்படுவதானால் உற்பத்திக்குறைவதாகக் குறிப்பிடப்படுகிறது.

பேராசிரியர் சில்வர் மேனைப் பின்பற்றி இதனை ஒரு பட்டை வரைபடம் மூலம் விளக்கலாம். வரைபடம் 3-இல்காட்டியுள்ளபடி மூன்றாந்தர நிலமான 'C'யின் வருமானம் உற்பத்திச் செலவிற்குச் சமமாக அமைவதால் அது வாரமில்லாத நிலமாகும். 'A' நிலமும்,'B' நிலமும்வாரமளிக்கின்றன. படத்தில்உடைந்த கோடுகள் உள்ள பகுதி வாரத்தைக் காட்டுகிறது.




எனவே, நிலவளத்தின் வேறுபாட்டினால் வாரம் தோன்றுகிறது. இதை வேறுபாட்டு வாரம் (Differential Rent) எனலாம்.

நிறைகுறையான நெகிழ்ச்சியுடைய அளிப்பின் காரணமாக, உயர்தர நிலங்கள் உயரிய வாரத்தையும், தரங்குறைந்த நிலங்கள் குறைந்த வாரத்தையும், பெறுகின்றன. எனவேதான், வாரத்தை வேறுபாட்டு உபரி (Differential Surplus) என இரிக்கார்டோ கூறுகிறார்.

**பற்றாக்குறை வாரம்**: உற்பத்திப் பொருளின் தேவை விரிவடைவதன் காரணமாகத் தரங்குறைந்த நிலங்களும் முற்றிலும் பயன்படுவதாலும்,தேவை விரிவின் காரணமாகப் பண்டத்தின் நிலை உயர்வதால் தரங்குறைந்த நிலங்களும் வாரத்தை அளிக்கும். எனவே, வளமுடைய நிலங்கள் வேறுபாட்டு வளத்தின் காரணமாக அளிக்கும் வேறுபாட்டு வாரத்தோடு, நில அளிப்பின் பற்றாக்குறை காரணமாகப் பற்றாக்குறை வாரத்தையும் அளிக்கும். எனவே, பொதுவாக நோக்கினால் எல்லா வகை நிலங்களும் பற்றாக்குறை அளிப்புடையனவே. ஆகவே, எல்லா வாரமுமே பற்றாக்குறை வாரமாகும்.

**வாரத்தின் புதுமைக் கோட்பாடு**: வாரம் என்ற கருத்தை நிலத்திற்கு மட்டும் தாவீது இரிக்கார்டோ பயன்படுத்தியதை மாற்றி இக்காலப் பொருளியல் அறிஞர்கள் எல்லா உற்பத்திக் காரணிகளுக்கும் பொருத்தி வாரத்தின் புதுமைக் கோட்பாட்டை (Modern Theory of Rent) விளக்குகிறார்கள். அதன்படி குறிப்பிட்டதொரு உற்பத்திக் காரணியின் ஒரு பகுதியைப் பணியில் ஈடுபட்டிருக்கத் தூண்டுவதற்குத் தேவையான குறைந்த அளவு வருமானம் எதுவோ அதற்கு மிகுதியாக அக் காரணியால் பெறப்படும் உபரியே வாரம் எனச் சோன் இராபின்சன் குறிப்பிடுகிறார். இதை 'வாரம் என்பது உண்மை வருவாய்க்கும் மாற்று வருவாய்க்குமுள்ள வேறுபாடே ஆகும்' எனலாம். உண்மை வருவாய் என்பது அக் காரணியின் உபயோகத்துக்குக் கொடுக்கப்பட்ட தொகையையும், மாற்று வருவாய் என்பது (Transfer Earnings) அக்காரணி இந்த உற்பத்தியிலிருந்து, அடுத்த சிறந்த உற்பத்தியில் ஈடுபடுவதனால் ஈட்டக்கூடிய வருவாயையும் குறிக்கின்றன. கணித வாயிலாகச் சொன்னால் வாரம்=உண்மை வருவாய்—மாற்று வருவாய்.

**போலி வாரம்**: பேராசிரியர் மார்சல், போலி வாரம் (Quasi Rent) என்னும் கருத்தை முதன்முதலில் பொருளியலில் புகுத்தினார். இவர், நிரந்தரமாக அளிப்பை மாற்றமுடியாத காரணிகளின் வருவாயை வாரம் என்றும், குறுகியகாலத்தில் அளிப்பை மாற்ற இயலாத காரணிகளின் வருவாயைப் போலி வாரம் என்றும் குறிப்பிடுகிறார். இயந்திரங்கள் (உறுதித் தன்மையுடைய பொருள்) பெறும் ஊதியத்தின் ஒரு பகுதி வாரம் எனப்பட்டாலும், அவற்றின் அளிப்பு நிரந்தரமான மாறாத இயல்பற்றதனால் அவற்றின் வாரம் போலித் தன்மையுடையது. எனவே, இவ் வருவாய்க்கு மார்சல் போலி வாரம் எனப் பெயரிட்டார்.

இடைக்காலமாக அளிப்பை மாற்ற இயலாத இயந்திரங்கள் மூலம் உற்பத்தி செய்யப்பட்ட பண்

டங்களின் மூலம் கிடைத்த வருவாய், அவற்றின் உற்பத்திச் செலவிற்கு மிகுதியாகக் காணப்பட்டால் அந்த உபரியைப் போலி வாரம் எனக் கொள்ளலாம், பேராசிரியர் பென்காம் (Prof. Benham) இதனை ஒரு கப்பல் எடுத்துக்காட்டு மூலம் விளக்குகிறார். திடீரென்று கப்பல் பயணத்தின் தேவை பெருகினால் கப்பல்களின்(எண்ணிக்கையை) அளிப்பைக் குறுகிய காலத்தில் மிகுதியாக்க இயலாது. இந்நிலையில் பயணக்கட்டணம் மிகுதியாவது உண்டு. ஆனால், நீண்ட காலத்தில் புதிய கப்பல்கள் வரும்பொழுது இம் மிகுதிக் கட்டணம் குறையும். அப்போது போலிவாரம் மறைந்து கப்பல் கட்டணங்கள் குறையும்.

**கூலி:** உழைப்புக்குக் கிடைக்கும் ஊதியம் கூலி (Wage) ஆகும். ஆளுக்காள், இடத்திற்கு இடம் கூலி மாறுபடலாம். வாரம், வட்டி, ஆதாயம் ஆகியவற்றைத் தனி மனிதர்களும், நிறுவனங்களும் பெறலாம். ஆனால், உழைப்பைத் தனி ஒருவரோ ஒரு கூட்டத்தினரோ மட்டுமே அளிக்கமுடியுமாதலால், கூலியைத் தனி ஒருவரோ ஒரு கூட்டத்தினரோ பெறுகிறார்கள். அது மாதக் கூலியாகவோ, வாரக் கூலியாகவோ, நாட் கூலியாகவோ இருக்கும்.

**பணக் கூலி:** ஒரு தொழிலாளி ஊதியமாகப் பெறும் பணத்தின் அளவையே பணக் கூலி (Money Wage) அல்லது பெயரளவுக் கூலி (Nominal Wage) எனக் குறிப்பிடுகின்றனர்.

**உண்மைக் கூலி:** தொழிலாளி ஊதியமாகப் பெற்ற பணத்தினால் பெறக்கூடிய பண்டங்கள், சேவைகள். ஆகியவற்றின் மதிப்பே உண்மைக் கூலி (Real Wage) யாகும்.

**காலக் கூலி:** செய்யும் பணியை ஒரு குறிப்பிட்ட கால அளவில் (நாள், வார, மாதக் கூலி) கணித்து அதன்படி தொழிலாளிக்குக் கூலியைக் கொடுத்தால் அதைக் காலக் கூலி (Time Wage) எனலாம்.

**வேலைக் கூலி:** செய்யும் தொழிலுக்கேற்பத் தொழிலாளிக்குக் கூலி வழங்கப்படுமானால் அதை வேலைக் கூலி (Piece Wage) எனலாம். எடுத்துக்காட்டாக ஒரு சதுரம் கட்டடம் கட்டிப் பூச்சுப் பூச இவ்வளவு கூலி என நிருணயித்தளிப்பது இவ்வகையைச் சார்ந்ததாகும்.

**கூலிக் கோட்பாடுகள் : பராமரிப்புக் கூலிக் கோட்பாடு,** கூலிக் கோட்பாடுகளில் தொன்மை வாய்ந்தது. பிரான்சுப் பொருளியல் அறிஞர்களான **இயற்கைவாதிகள்(Physiocrats)எனப்படும் பள்ளியைச் சேர்ந்தவர்களால் தோற்றுவிக்கப்பட்டதுபராமரிப்புக் கூலிக் கோட்பாடு** (Subsistence Theory of Wage) ஆகும். இக் கோட்பாட்டினை இலாசேல் (Lassale) என்ற செருமானியப் பொருளியல் வல்லுநர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் 'கூலியின் இரும்பு விதி' (Iron Law of Wage) அல்லது 'வெட்கமற்ற கூலிக் கோட்பாடு' (Brazen Law of Wage) எனக் குறிப்பிட்டார். காரல் மார்க்சு தம் 'சுரண்டல் விதி' க்கு(Exploitation Theory) இக் கோட்பாட்டையே அடிப்படையாகக் கொண்டார்.

கூலி எப்போதும் தொழிலாளியின் உற்பத்திச் செலவுக்குச் சமமாக இருக்கும் என்பதே இக்கோட்பாட்டின் கருத்தாகும். தொழிலாளியின் உறபத்திச் செலவென்பது தொழிலாளியையும், அவன் குடும்பத்தையும் பராமரிப்பதற்கான செலவெனக் கொள்ளப்படுகிறது. பராமரிப்பு மட்டத்திற்குத் தேவையான கூலியே மிகக் குறைந்த கூலியென்றும், பராமரிப்புச் செலவு மட்டத்திற்குமேல் கூலி ஏறினால் மக்கள்தொகை உயர்ந்து அதன் விளைவினால் தொழிலாளர்களின் அளிப்பு அதிகரித்துக் கூலி மட்டம் பராமரிப்பு மட்டத்திற்கு மீண்டும் இறங்கி விடும் என்றும், இதற்கு எதிராகக் கூலி மட்டம் பராமரிப்பு மட்டத்திற்குக் குறைவாக இருந்தால் மரணம், சிசு மரணம், கொள்ளை நோய் ஆகியவற்றால் தொழிலாளர் எண்ணிக்கை குறைந்து கூலி மட்டம் பராமரிப்புச் செலவு மட்டத்திற்கு உயருமென்றும் கூறப்பட்டது. இது நெடுங்காலத்தில ஏற படுவதாகையால் இக் கோட்பாட்டை நீண்டகாலக் கூலி மட்டக் கோட்பாடு எனலாம்.

**கூலி நிதிக் கோட்பாடு:** ஆதம் சுமித்தினுடைய (Adam Smith) நூல்ல் முதன்முதல் இக் கூலி நிதிக் கோட்பாடு (Wage Fund Theory) காணப்பட்டாலும் இதனைப் புழக்கத்துக்குக் கொண்டுவந்தவர் சே.எசு.மில் (J.S.Mill) ஆவார். அவரது கூற்றின்படி 'உழைப்பின் தேவையையும் அளிப்பையும் பொறுத்தே கூலி மட்டம் நிலைபெறும். அதாவது, மூலதனம், உழைப்பு ஆகியவற்றின் வீதத்தைப் பொறுத்துக் கூலி மட்டம் காணப்படும் . இக் கூற்றில் மூலதனமென்பது கூலிக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட நிதியாகும். எனவே, உழைப்பின் தேவை மூலதனத்தைப் பொறுத்திருப்பதனால் கூலி மட்டம் மூலதனத்தையும், உழைப்பையும் பொறுத்து இருக்கும் எனக் கூறியுள்ளார் சே.எசு.மில்.

இன்றைய உற்பத்தி அமைப்பில் பண்டங்களை உற்பத்தி செய்வதற்கும், விற்பதற்கும் நீண்ட காலம் பிடிக்கிறது. கூலியாள்கள் அது வரை கூலி பெறாமல் காத்திருக்க இயலாது. எனவே, ஒவ்வொரு நாட்டிலும் தொழிலதிபர்கள் கூலிக்கென மூலதனத்தின் ஒரு பகுதியை ஒதுக்கி வைக்கிறார்கள். இவ்விதம்

ஒதுக்கி வைக்கப்பட்ட தொகைக் கூலி நிதி எனப்படுகிறது. இந்நிதியின் அளவு மக்களின் வாழ்க்கைத் தரம், தொழிலின் சிறப்பு, தொழிலாளர்களின் உழைப்புத்திறன் ஆகியவற்றைப் பொறுத்திருக்கும். இந்த நிதியை உழைப்பாளிகளின் எண்ணிக்கையால் வகுத்துப் பெறும் ஈவுக் கூலி மட்டமாகும். எனவே கூலி பெறும் ஆள்களின் எண்ணிக்கை பெருகினால் கூலி மட்டம் இறங்குமென்பதும், அவர்களின் எண்ணிக்கை குறைந்தால் கூலி மட்டம் உயருமென்பதும் வெளிப்படை.

கூலி நிதிக்கோட்பாட்டில் கூலி நிதி மாறாமலிருக்கும் என்பது கூறப்படவில்லை. சேமிப்புப் பெருக்கத்தாலும், உற்பத்தி மிகுதியாலும் கூலி நிதியின் அளவு மிகுதியாகும்போது கூலி மட்டம் உயரும் என்பது உண்மை. ஆனால், உழைப்பவர்களின் எண்ணிக்கை உயரும் வேகத்தில் சேமிப்பும் உற்பத்தியும் பெருகுவதில்லை. எனவே, கூலி மட்டம் மிகவும் நிதானமாகவே உயர்கிறது என்பது இக்கோட்பாட்டின் சார்பான கருத்தாகும். மேலும், ஒரு பகுதி உழைப்பாளிகளுக்கு மிகையான கூலி கொடுக்கப்பட்டால், அதன் காரணமாக மற்றொரு பகுதியினர் குறைவாகக் கூலி பெறுவர் அல்லது வேலை இழப்பர் என்றும் கூறப்படுகிறது.

**மிச்ச உரிமையர் கோட்பாடு:** சேவான்சு (Jevans), வாக்கர் என்ற பொருளியலறிஞர்கள் முதன் முதலில் தொழிலாளியின் உற்பத்தித் திறனுக்கு முதலிடம் கொடுத்து மிச்ச உரிமையர் கோட்பாட்டை (The Residual Claimant Theory) வகுத்தனர். சேவான்சு என்பவர், 'ஓர் உழைப்பாளியின் கூலி அவன் உற்பத்தி செய்ததில் வாரம், வட்டி, ஆதாயம் ஆகியவை கழிந்தது போக மீதிக்கு ஈடாக இருக்கும்' எனக் கூறினார்.

**கூலியின் இறுதி நிலை ஆக்கக் கோட்பாடு:** அமெரிக்கப் பேராசிரியரான சே.பி.கிளார்க்கு (J.B.Clark) ஆங்கிலேயப் பேராசிரியர் விக்சுடீடு (Wicksteed) என்பவர்களாலும் இக்கோட்பாடு முழு உருவத்தைப் பெற்றுள்ளது. கூலியை விளக்குவதில் மட்டுமல்லாமல், வாரம், வட்டி ஆகியவற்றை இறுதி நிலைத் தத்துவத்தைக் கொண்டு விளக்கவும் இந் நிபுணர்கள் முற்பட்டனர்.

பண்டங்களின் விலை இறுதிநிலை உற்பத்திச் செலவினால் முடிவுசெய்யப்படுவதைப் போலவே உற்பத்திக் காரணிகளின் மதிப்பும் தீர்மானிக்கப்படுகிறது என்பதே கூலியின் இறுதிநிலை ஆக்கக்கோட்பாட்டின் (Marginal Productivity Theory of Wages) கருத்து. இறுதியாக வேலைக்கமர்த்தப்பட்ட தொழிலாளியின் ஆக்கச் சக்திக்குச் சமமாகவே கூலி இருக்கும் என்பது இக்கோட்பாடு கூறும் உண்மையாகும். தொழிலாளியின் ஆக்கச் சக்தி, கூலியை விட அதிகமாக இருக்கும் வரையில் மேலும் மேலும் ஆள்களை வேலைக்கமர்த்திக்கொண்டே போவர். ஆனால், தொழிலாளியின் ஆக்கச்சக்தி, கூலிக்குச் சமமாகும் நிலையில் மேலும், ஒரு தொழிலாளி வேலைக்கமர்த்தப்பட மாட்டார். ஏனெனில், இதற்கு மேல் வேலையில் ஈடுபடும் புதிய தொழிலாளியின் ஆக்கத்தின் மதிப்புக் கூலியை விடக் குறைவாகவே இருக்கும்.

இக்கோட்பாடு பின்வரும் எடுகோள்களைக் கொண்டு விளக்கப்பட்டுள்ளது. 1) உழைப்பு அங்காடியில் நிறைவுப் போட்டி நிலவுகிறது; 2) பண்ட அங்காடியிலும் நிறைவுப் போட்டி நிலவுகிறது; 3) உழைப்பாளிகளின் திறன் ஒரே தன்மையானது; 4) ஒரே கால அளவில் வேலை செய்கிறார்கள்; 5) குறைந்து செல் விளைவு விதி செயற்படுகிறது; 6) தேவைக்கேற்ற அளவு உழைப்பின் அளிப்புக் காணப்படுகிறது; இடப்பெயர்ச்சி உடையது; 7) மற்றக்காரணிகளின் அளவு மாறாமல், உழைப்பின் அளவு மட்டுமே மாறுகிறது.

மேற்கூறிய எடுகோள்களின் அடிப்படையில், ஒரு தொழில் முனைவோர் உற்பத்தியில் ஈடுபடுத்தப்பட்டுள்ள இதர உற்பத்திக் காரணிகளை நிலையாக வைத்து, உழைப்பின் (உழைப்பவர்) அலகுகளை மட்டுமே அதிகரித்துக்கொண்டு போனால் ஒரு நிலை வரை உற்பத்தி விகித அளவிற்கு மேல் பெருகும். அதாவது, அவ்வுழைப்பினால் கிடைக்கும் இறுதிநிலை உற்பத்தி முதலில் கூடிக்கொண்டே செல்லும். ஒரு நிலைக்குப் பின் இறுதி நிலை உற்பத்தி குறையும். இவ்வாறாகக் குறைந்து செல்லும் நிலையில் உழைப்பின் இறுதி நிலை உற்பத்தி (ஓர் அலகின் உற்பத்தி), அவ்வலகின் விலைக்குச் சமமாகிறது. இவ்விதமாக, உற்பத்தியில் ஈடுபடுத்தப்படும் மிகையான உழைப்பின் அலகே இறுதி நிலை அலகாகும். அதனுடைய விலையே மற்றெல்லா உழைப்பின் அலகுகளின் விலையையும் நிருணயிக்கிறது.

பொதுவாக ஓர் உற்பத்தியாளருக்கு எவ்வளவு மிகைப்பண்டங்களை உற்பத்தி செய்யலாம் என்பதை விட, எவ்வளவு மிகைவருவாய் கிடைக்கிறது என்பதில்தான் அதிக கவனம் இருக்கும். எனவே, தொழிலாளர்களை உற்பத்தியில் ஈடுபடுத்தினால் கிடைக்கும் இறுதிநிலை வருவாய் அவன் கொடுக்கும் கூலிக்கு அதிகமாக இருக்கும் வரை தொழிலாளர்களை அமர்த்திக்கொண்டே செல்வார். கூலியும் இறுதிநிலை வருவாயும் சமமாகும்போது உற்பத்தியை மதி நலம் வாய்ந்த தொழிலதிபர் நிறுத்திவிடுவார். எனவே, கூலி = இறுதிநிலை வருவாய் ஆக்கம் (Marginal revenue product) எனலாம்.

**கழிவு நீக்கிய உற்பத்தித்திறன் கோட்பாடு:** அமெரிக்கப் பொருளியலறிஞரான தாசிக்கு (Taussig) இறுதி நிலை உற்பத்தித்திறன் கோட்பாட்டிற்கு ஒரு திருத்தம் கூறியுள்ளார். உழைப்புக்குக் கொடுக்கப்படும் கூலி, அதனால் ஆக்கப்பட்ட பண்டங்கள் விற்பனையான பின்னர்க் கொடுக்கப்படுவது அன்று. ஆக்கத்தில் ஈடுபடும் உழைப்பு, ஊதியம் பெறும்போது அதன் இறுதி நிலை வருவாய் ஆக்கத்தை விடச் சற்றுக் குறைந்த கூலியேபெறும் என்று அவர் கூறியுள்ளார். இக்கழிவு, கூலிகொடுக்கப்படுவதற்கும், பண்டத்தின் விற்பனைக்கும் இடைப்பட்ட காலத்திற்கான வட்டிக்குச் சமமாக இருக்கும். எனவே, 'கூலிகள் உழைப்பின் கழிவு செய்யப்பட்ட இறுதிநிலை வருவாய் ஆக்கத்தினால் நிருணயிக்கப்படுகின்றன' என்பதே கழிவு நீக்கிய உற்பத்தித் திறன் கோட்பாட்டில் (Discounted Marginal Productivity Theory) தாசிக்கு கூறும் முடிவாகும்.

**கூலியின் புதுமைக்கோட்பாடு:** (நிறைவுப் போட்டியில் குறுகிய நீண்ட காலங்களில் கூலி நிருணயம்) பொதுவான மதிப்புக்கோட்பாட்டைப் (Value Theory) பயன்படுத்திக் கூலி மட்டத்தைக் கண்டறிவதே கூலியின் புதுமைக் கோட்பாட்டின் (Modern Wage Theory) நோக்கமாகும். தேவை, அளிப்பு ஆகியவை சமநிலை அடையும் நிலையும் கூலி நிருணயமாகும். வரைபடம் 4-இல் நிறைவுப் போட்டியில் நிறுவனத்திற்கு, உழைப்பு அளிப்புக்கோடு Xஅச்சுக்கு இணையாக இருக்கும். அதாவது சராசரிக் கூலிக்கோடும், இறுதி நிலைக் கூலிக்கோடும் ஒன்றோடொன்று

வரைபடம்-4




சேர்ந்து X அச்சு இணையாகக் (ச.கூ. = இ.கூ.) காணப்படுகிறது. O W கூலியில் இறுதிநிலை வருவாய் ஆக்கக்கோடும், இறுதிநிலை கூலிக்கோடும் G என்ற முனையில் சந்திக்கின்றன. இந்நிலையில் நிறுவனத்தில் O M ஆள்கள் வேலைக்கமர்த்தப்படுகிறார்கள்.

சராசரி வருவாய் ஆக்கவளைகோடும் (ச.வ.ஆ.) இறுதிநிலை வருவாய் ஆக்க வளைகோடும் (இ.வ.ஆ.) திருப்பப்பட்ட வடிவினவாகக் காணப்படும். இவ்விரு கோடுகளும் வரைபடத்தில் Eஎன்ற முனையில் சந்திக்கின்றன. இவ்வரைபடத்திலிருந்து OM ஆட்களை வேலைக்கமர்த்தும்போது இறுதிநிலை வருவாய் ஆக்கமும், இறுதிநிலைக் கூலியும் G என்ற முனையில் சமமாக, OW கூலியில் OM ஆட்கள் வேலை செய்கிறார்கள் என்பது தெரிகிறது. எனவே, கொடுக்கப்பட்ட மொத்தக் கூலி $OM \times OW = OMGW$. OM ஆள்கள் வேலை செய்யும் போது சராசரி வருவாய் ஆக்கம் MF ஆகையால், மொத்த வருவாய் ஆக்கம் $OM \times MF = OMFW_1$ எனவே, தொழிலதிபரின் ஆதாயம் $OMFW_1 - OMGW = WGFW_1$ இந்த ஆதாயம் குறுகிய காலத்தில் ஏற்படுகிறது.

ஆனால், நீண்டகாலத்தில் ஆதாய நோக்கத்தோடு பல நிறுவனங்கள் தொழிலுக்கு வருவதனால் தொழிலாளிகளின் கூலி மட்டம் உயர்ந்து, $W_1$ என்ற இணைகோடு மேல்நோக்கி $W_2$ - க்கு இடம் பெயர்கிறது. இறுதிநிலை வருவாய் ஆக்கமும், இறுதிநிலைக் கூலியும் E என்றமுனையில்சந்திக்கின்றன. இம்முனையில் இ.வ.ஆ. = ச.வ.ஆ. இ.கூ. = ச.கூ. என்பது தெளிவாகிறது. எனவே $W_2$கோட்டுக்கு ச.வ.ஆ. வளைகோட்டிற்குத் தொடுகோடாக அமைகிறது. இந்த நிலையில் $OW_2$ கூலியில் $OM_1$ ஆள்களை வேலைக்கமர்த்தி நிறுவனம் இயல்பான ஆதாயமே பெறுகிறது.

**நடைமுறைக் கூலி நிருணயம்:** நிறைவுப் போட்டி நிலைமை நடைமுறை உலகுக்கு ஏற்றதாக இல்லை. நடைமுறையில் பொதுவாகப் பண்டத்தின் விற்பனையில் முற்றுரிமைப் போட்டியும் (Monopoly), உழைப்பைப் பெறுவதில் வாங்கல் முற்றுரிமைப் (Monopsony) போட்டியும் காணப்படுகின்றன. எனவே, கூலி நிருணய உண்மை நிலையறியப் பண்டத்தை முற்றுரிமைப் போட்டி நிலையிலும், உழைப்பை வாங்குவோர் முற்றுரிமை நிலையிலும் வைத்து விளக்கவேண்டும்.

இவ்விரு வகை அங்காடி நிலையிலும் கூலி மட்டம் ஆக்கமும், இறுதிநிலைக் கூலியும் சந்திக்கும் முனையில் நிருணயமாகும். பண்டங்கள் விற்கப்படும் முற்றுரிமைப் போட்டியில் இறுதிநிலை வருவாய் ஆக்கம் நிறைவுப் போட்டியில் காணப்படுவதைவிட வேகமாகக் குறைகிறது. முற்றுரிமைப் போட்டியில்

பண்டத்தின் விலை மாறுவதனால் இறுதிநிலை வருவாய் ஆக்கத்தைக் கண்டுபிடிக்க இறுதிநிலைப் பொருளாக்கத்தை இறுதிநிலை வருவாயால் பெருக்கவேண்டும்.

உழைப்பின் அங்காடியில், வாங்கல் முற்றுரிமையில் உழைப்பின் தேவை மிகுதியாகும்போது கூலி மிகுதியாவதையும், தேவை குறையும்போது கூலி குறைவதையும் காணலாம். எனவே, கூலிக் கோடுகள் X அச்சுக்கு இணையாகச் செல்லாமல் கீழிலிருந்து மேல்நோக்கி இடமிருந்துவலமாகச் செல்லும். இறுதி நிலைக் கூலிக் கோடு எப்பொழுதும் சராசரிக் கூலிக் கோட்டிற்கு மேலேயே காணப்படுகிறது. எனவே, வாங்கல் முற்றுரிமையில் சராசரிக்கூலியைவிட இறுதி நிலைக் கூலி மிகையாகவே இருக்கும் என்று தெரிகிறது.

ஊதியமே வட்டி (Interest). பொருளியலில் தூய வட்டி (Pure Interest) அல்லது நிகர வட்டி(Net Interest) அல்லது பொருளாதார வட்டி(Economic Rent) என்பதை வட்டி என்ற சொல் குறிப்பிடுகிறது. ஆனால், நடைமுறை வாழ்வில் வட்டி என்ற சொல் மொத்த வட்டியைக் குறிப்பிடுகிறது.

**நிகரவட்டி:** இது மூலதனத்தின் பணிக்கு மட்டுமே செலுத்தப்படும் கட்டணமாகும். மூலதனத்தைக் கடனாகக் கொடுக்கும்போது எந்தவித இடர்களோ, சிரமங்களோ, அதற்கெனத் தனிப்பட்ட வேலையோ இல்லாமலிருந்தால் அம் மூலதனம் பெறும் வட்டி தூய வட்டி அல்லது நிகர வட்டி எனப்படும்.

**மொத்த வட்டி:** நிகர வட்டி மொத்த வட்டியின் (Gross Interest) ஒரு சிறு பகுதியே. நிருவாகச் செலவுக்கான கட்டணம்; வட்டி முழுவதையும் அல்லது




வரைபடம் 5-இல் OM ஆள்கள் வேலைக்கமர்த்தப்படும்போது இ.வ.ஆ. வளைகோடும் இ.கூ. கோடும் T என்ற முனையில் சந்திக்கின்றன. எனவே, இறுதிநிலைக் கூலி TM என்றும், சராசரிக் கூலி RM என்றும் தெரிகின்றன. இந்நிலையில் இறுதிநிலை வருவாய் ஆக்கத்திற்குக் குறைவான கூலியே கொடுக்கப்படுகிறது, எனவே, PQRS என்ற பரப்பின் அளவுக்கு ஒத்த மிகஅதிக ஆதாயத்தைத் தொழிலதிபர் பெறுகிறார். இதனைத் திருமதி சோான் இராபின்சன் 'சுரண்டல்' (தொழிலாளியின் ஊதியத்திலிருந்து) எனக் கூறுகிறார்.

**வட்டி:** மூலதனத்தின் பயனுக்காக அளிக்கப்படும்

ஒரு பகுதியைக் கடன் வாங்கியவர் செலுத்தாமல் போவதற்கான வாய்ப்பினால் ஏற்படும் இழப்பைச் சரிகட்டுவதற்கான கட்டணம்; கடன் கொடுத்த பின்னர்க் கொடுத்தவருக்குப் பணம் தேவைப் பட்டால் பணத்தை உடனே திரும்பப் பெற முடியாதாகையால் ஏற்படும் சிரமங்களுக்கான கட்டணம் போன்றனவும் நிகர வட்டியும் சேர்ந்தது மொத்த வட்டி ஆகும்.

**வட்டிக் கோட்பாடுகள்: 1) உற்பத்தித் திறன் கோட்பாடு:** மூலதனம் உற்பத்தித் திறனுடையது. இதனை உற்பத்தியில் பயன்படுத்துவதனால் உற்பத்தியின் அளவு பெருகுகிறது. இவ் வுற்பத்திப்பெருக்கில்

ஒரு பகுதி மூலதனத்திற்கு ஊதியமாகத் (வட்டியாக) தரப்படுவது நியாயமே என இவ்வுற்பத்தித் திறன் கோட்பாட்டில் (Productivity Theory) சே.பி.சே. (J.P.Say) குறிப்பிடுகிறார். உற்பத்தித் திறன் அதிகமாக இருந்தால் மிகையான வட்டி விகிதமும், குறைவாக இருந்தால் குறைவான வட்டி விகிதமும் இருக்கும் என்பதும் குறிப்பிடப்படுகிறது.

2) **துய்ப்புத் தவிர்ப்புக் கோட்பாடு**: நாசு சீனியர் என்பவர் இக் கோட்பாட்டை விளக்கியதாக நூல்கள் கூறுகின்றன. கடன் கொடுப்பவரது அல்லது முதலீடு செய்பவரது துய்ப்புத் தவிர்ப்புக்குக் கொடுக்கப்படும் வெகுமதியே வட்டி என துய்ப்புத் தவிர்ப்புக் கோட்பாடு (Abstinence Theory) கூறுகிறது. சேமிப்பிலிருந்து மூலதனம் தோன்றுகிறது. சேமிக்க வேண்டுமானால் மூலதனம் தவிர்க்கப்பட வேண்டும். நிகழ்கால நுகர்ச்சியைத் தவிர்ப்பது என்பது துன்பம் தரத் தக்கதே. இத்துன்பங்களைத்(துய்ப்புத் தவிர்ப்பு அல்லது தியாகம்) தாங்குவதற்காகக் கொடுக்கப்படும் ஊதியம், வட்டி என விளக்கப்படுகிறது.

3)**காத்திருத்தல் கோட்பாடு**: பேராசிரியர் மார்சல் துய்ப்புத் தவிர்ப்பு என்பதற்குப் பதிலாகக் காத்திருத்தல் என்ற சொல்லைப் பயன்படுத்திப் பின்வருமாறு இக்கோட்பாட்டை (Waiting Theory) விளக்குகிறார். கடன் கொடுத்தவர்கள் துய்ப்பைத் தவிர்க்கிறார்களோ இல்லையோ, கடனைத் திரும்பப் பெறுவதற்குக் குறிப்பிட்டதொரு கால அளவுக்குக் காத்திருக்க வேண்டும். காத்திருந்தவனுக்குத் தரும் வெகுமதியே வட்டி.

4) **காரல் மார்க்சின் சுரண்டல் கோட்பாடு**: செல்வத்துக்கு மூலதனம் உழைப்பே. ஆனால், உழைப்பினால் உற்பத்தி செய்தவை அனைத்தும் உழைப்பவருக்குச் சேருவதில்லை. உற்பத்திச் சாதனங்களைத் தம் பொறுப்பில் கொண்டுள்ள முதலாளிகள், உழைப்பவரின் உரிமைத் தொகையில் ஒருபகுதியைப் பறித்துக் கொள்கிறார்கள். இப்படி முதலாளிகள் தொழிலாளிகளைச்சுரண்டிப் பெறும் பகுதியே வட்டி. பட்டினிக்குப் பயந்து தொழிலாளர்கள் தங்களுக்குச் சேர வேண்டியதைமுதலாளிக்குவிட்டுக்கொடுத்துக்குறைந்த கூலிக்கு உழைக்கிறார்கள். அதனால், உழைக்காமல் முதலாளிகள் இன்பம் அனுபவிக்கிறார்கள்.

5) **பாம்பாவர்க்கின் காலக்கழிவுக் கோட்பாடு**: இக் கோட்பாட்டை முதலில் புனைந்தவர் சான் இரே (John Rae) என்ற அறிஞரானாலும், இதனைச் செம்மைப் படுத்தியவர் ஆசுத்திரியப் பொருளியல் மேதை பாம்பாவர்க்கு(Bham Bawark)ஆவார். இவரது அடிப்படைக்கருத்து, நாளை கிடைக்கும் பொருளைவிட இன்று கிடைக்கும் பொருளுக்கு மதிப்பு அதிகம் என்பதாகும். பழமொழி வாயிலாகக் குறிப்பிட்டால், 'செடியிலிருக்கும் இரண்டு பறவைகளைவிடக்கையிலிருக்கும் ஒரு பறவையே மேலானது' எனலாம். வருங்காலம் என்பது நிச்சயமற்ற ஒரு காலம். ஒரு கற்பனை போல நிகழ்காலம் உண்மை உலகத்தைக் காட்டுகிறது. எனவே, எப்போதும் இப்போது கிடைக்கும் பண்டங்களால் மனநிறைவு பெறலாம். இம்மன நிறைவை விட்டுக்கொடுப்பதற்குத்தரப்படும் ஈட்டுத்தொகையே வட்டி எனப்படும். வேறு வகையில் குறிப்பிட்டால் இன்றைய மன நிறைவையும், வருங்கால மன நிறைவையும் சமன் செய்வது வட்டி என்றுபாம்பாவர்க்குக் காலக் கழிவுக் கோட்பாட்டில் (Bohm-Bawark's Agio Theory) கூறுகிறார்.

6) **பிசரின் கால விருப்பெச்சக்கோட்பாடு**: பாம்பாவர்க்கின் மாணவரான பிசர் (Fisher) தம் ஆசிரியரின் கோட்பாட்டிற்குத் தொடர்ச்சியாகக் கால விருப்பெச்சக் கோட்பாட்டை (Time Preference Theory) வெளியிட்டார். ஒரே அளவு, ஒரு தன்மையுடைய உடனடியாகக் கிடைக்கும் வருவாயினால் ஏற்படும் மனநிறைவு, எதிர்காலத்தில் கிடைக்கும் அதே அளவு அதே தன்மையுடைய வருவாயினால் ஏற்படும் மனநிறைவைவிட அதிகம் என்கிறார் பிசர். எனவே, நிகழ் கால வருவாய் வருங்கால வருவாயை விடக்கால விருப்பெச்சமுடையது. கால விருப்பெச்சமென்பதைப் பிசர் மக்களின் பொறுமையின்மை எனக் கூறுகிறார். ஒருவரின் கால விருப்பெச்சத்தை வெல்லக் கொடுக்கப்படும் கட்டணமே வட்டி எனப்படும்.

7) **கீன்சின் நீர்மை விருப்பக் கோட்பாடு**:கீன்சின் நீர்மை விருப்பக் கோட்பாடு (Keynes Liquidity Preference Theory) வட்டி நிருணயத்தைப் பண இயல் (Monetary Science) மூலமாக விளக்குகிறது. கீன்சு தம் 'வேலை, வட்டி, பணம் ஆகியவற்றின் பொதுக் கோட்பாடு' (General Theory of Employment, Interest & Money) என்ற நூலில் 'வட்டி என்பது பணத்தின்மேல் அதன் உரிமையாளர் கொண்டிருக்கும் நீர்மைக் கட்டுப்பாட்டைப் பிரிப்பதற்கான வெகுமதியே' எனக் கூறியுள்ளார். நீர்மை என்பது உரொக்கப் பணமாக வைத்துக்கொள்ளும் ஆசை எனலாம். வேண்டும்போது வேறு பண்டங்களை வாங்கும் ஒரு தனித்திறன் பணத்திற்கு இருப்பதனால் பணத்தின்மேல் மக்கள் அதிக விருப்பம் காட்டுகிறார்கள். இவ்விருப்பத்தைக் கீன்சு நீர்மை விருப்பம் எனக் கூறியுள்ளார்.

தனி மனிதனின் வருமானம் முழுவதும் நுகர்ச்சியில் செலவிடப் படுவதில்லை. நுகர்ச்சிக்குச் செலவானது போக ஒரு பகுதி சேமிக்கப் படுகிறது. நுகர்ச்சிக்கென்று ஒதுக்கப்படும் பணத்தின் அளவு நுகர்வோரின் நுகர்ச்சி நாட்டத்தைப் (Propensity to Consume) பொறுத்திருக்கும். நுகர்ச்சிக்கு ஒதுக்கப்பட்டது போக மீதமிருக்கும் பணத்தில் எவ்வளவு உரொக்கப் பணமாகத் தம் வசமிருக்கவேண்டும், எவ்வளவு வட்டிக்குக் கொடுக்கப்படவேண்டும் என்பது அவரது நீர்மை விருப்பத்தைப் பொறுத்தது எனக் கூறுகிறார். உரொக்கப் பணம் அதிகமாக வேண்டுவோருக்கு நீர்மை விருப்பம் அதிகமாக இருக்கும். அத்தகைய மனிதர் பணத்தைக் கடனாகக் கொடுக்கும்போது பேரளவு நீர்மை விருப்பத்தை விட்டுக் கொடுக்க வேண்டியிருப்பதால் அதிக வட்டியை எதிர்பார்ப்பார். எனவே, வட்டிவீதம் நீர்மை விருப்பத்தால் பாதிக்கப்படுகிறது. 'வட்டி வீதம் நீர்மையை ஒரு குறிப்பிட்டகாலத்திற்கு விட்டுக் கொடுப்பதற்கான வெகுமதி' என்று கீன்சு கூறுகிறார்.

நீர்மை விருப்பம் மூன்று நோக்கங்களின் அடிப்படையில் அமைகிறது.

1. **பேர நோக்கம்**: தனிமனிதர்களின் அன்றாடச் செலவுகளுக்காகவும், வாணிக நிறுவனங்களின் கொள்முதலுக்காகவும், விற்பனைக்காகவும் பணத்தை மக்கள் விரும்புகிறார்கள். இதைப் பேர நோக்கம் (Transaction Motive) எனக் குறிப்பிடலாம்.

2. **எச்சரிக்கை நோக்கம்**: எதிர்பாராமல் திடீரென ஏற்படும் செலவு வைத்தியம் பழுதுபார்க்கும் செலவு போன்றவற்றை சமாளிக்கவும், அரசு ஏலங்களில் பண்டங்களை வாங்கவும், எதிர்காலச் செலவுகளைத் (வரித் தொகை, வாடகைப் பணம், காப்பீட்டுக் கட்டணம் போன்றவை) தீர்க்கவும், தேவைப்படும் பணம் எச்சரிக்கை நோக்கத்தால் (Pre-Cautionary Motive) ஏற்படுவதாகும்.

3. **ஊக வாணிக நாட்டம்**: வட்டி விகித மாற்றங்களையொட்டி அல்லது கடன் பத்திரங்களின் விலைகளில் தோன்றும் மாறுதல்களையொட்டிப் பத்திரங்களை வாங்கியோ விற்றோ அங்காடியில் ஆதாயம் பெறும் நோக்கத்துடன் பணத்தை மக்கள் வைத்திருக்க விரும்புகிறார்கள். இது ஊக வாணிக நோக்கம் (Speculative Motive) எனப்படுகிறது.

8. **கடன் நிதிக் கோட்பாடு**: இக் கோட்பாட்டைப் புதுமைத் தொன்மைப் பொருளியல் கோட்பாடு (Neo - Classical Theory) என்றும் குறிப்பிடலாம். விக்செல் (Wicksell), குன்னர் மிர்தால் (Gunnar Myrdal), எரிக் இலிந்தால் (Eric Lindahl), இராபர்ட்சன் (Robertson), பெர்டின் ஆலின் (Bertin Ohlin) ஆகியோர் இக் கடன் நிதிக் கோட்பாட்டை (Loanable Fund Theory) விளக்கியுள்ளனர். இதன்படி கடன்நிதியின் அளிப்பு, தேவை ஆகிய இரண்டும் வட்டியை நிருணயம் செய்கின்றன.

கடன் நிதியின் அளிப்பைத் தனி மனிதர் அல்லது நிறுவனங்களின் சேமிப்பு, சேமிப்புக்கலைப்பு (Dishoarding), வணிக வங்கிகளால் பிறப்பிக்கப்பட்ட கடன், மைய இருப்பு வங்கியினால் வெளியிடப்பட்ட காகிதப் பணம், முதலீட்டுக் கலைப்பு (Disinvestment) போன்ற காரணிகள் நிருணயிக்கின்றன.

தொழிலதிபர்கள், வணிகர்கள் ஆகியோரின் மூலதனத் தேவையோடு நுகர்வோரின் கடன் தேவையும் சேரும். கடன் நிதியின் மற்றொரு முக்கிய தேவை நீர்மைத் தேவை எனலாம். இது சமுதாயத்தின் நீர்மை விருப்பத்தால் ஏற்படுவதாகும்.

**ஆதாயம்**: தொழிலதிபருக்கு அவர் ஆற்றும் பணிக்காகக் கொடுப்பது ஆதாயம் எனப்படுகிறது. ஒரு நிறுவனம் நிலத்திற்கு வாரமும், உழைப்புக்குக் கூலியும், மூலதனத்துக்கு வட்டியும் அளித்தபின் எஞ்சியதை ஆதாயமாகப் பெறுகிறது. இதை மொத்த ஆதாயம் (Gross Profit), நிகர ஆதாயம் (Net Profit) என வகைப்படுத்தலாம்.

நிகர ஆதாயம் என்பது தொழில்முனைவோரின் பணிக்காக மட்டும் கொடுக்கப்படுவதாகும். மொத்த ஆதாயம், நிகர ஆதாயத்தோடு வேறு சில இனங்களுக்காகவும் சேர்த்துக் கொடுப்பதாகும். எடுத்துக்காட்டாக, தொழிலதிபர் அளித்த வேறு உற்பத்திக் காரணி, அவரது மூலதனம், உழைப்புக்கு வழங்கப்படும் ஊதியம்; மூலதனத் தேய்மானத்திற்கு என்று ஒதுக்கப்படும் தொகை; பணவீக்கக் காலங்களிலும் பண்டங்களின் பற்றாக்குறையினாலும் எதிர்பாராமல் ஏற்படும் ஆதாயம்; முற்றுரிமைச் சக்தியினால் ஏற்படும் ஆதாயம் போன்றவை இவ்வகையைச் சாரும்.

**ஆதாயக்கோட்பாடுகள்: 1) ஆதாய வாரக் கோட்பாடு**: நில வளம் வேறுபடுவதுபோலத்தொழில் முனைவோரின் திறமையும் வேறுபடலாம். நிலவள வேறுபாட்டின் அடிப்படையில் வளமிக்க நிலம் வாரம் பெறுகிறது என்று தாவீது இரிக்கார்டோ குறிப்பிட்டதுபோலத் திறமைமிக்க தொழிலதிபர் கூடுதல் ஆதாயத்தையும், திறமை குறைந்தவர்கள் குறைந்த ஆதாயத்தையும் பெறுகிறார்கள் என்று ஆதாய வாரக் கோட்பாடு (Rent Theory of Profit) கூறுகிறது. மிகவும் திறமை குறைந்தவர்கள் ஆதாயம் பெறுவதில்லை. வாரமில்லாநிலம் போல இவர்களை ஆதாயமில்லாத் தொழிலதிபர் எனலாம்.

**2) ஆதாயக் கூலிக் கோட்பாடு:** உழைப்பைத் தந்து தொழிலாளர்கள் கூலி பெறுவது போலத் தொழிலதிபர்களும் அவர்கள் ஆற்றும் பணிக்கு ஆதாயத்தைப் பெறுகிறார்கள் எனப் பேராசிரியர் தாசிக்கு (Taussig) கூறுகிறார். மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், ஆசிரியர்கள் போன்றோர் மூளை உழைப்பைத் தந்து கூலியைப் பெறுவதுபோல் தொழிலதிபர்களும், அவர்களது பணிக்கென 'ஆதாயம' என்ற கூலியைப் பெறுகிறார்கள் என்று ஆதாயக் கூலிக் கோட்பாடு (Wage Theory of Profit) கூறுகிறது.

**3) ஆதாய இடர்தாங்கு கோட்பாடு:** அமெரிக்க அறிஞர் ஆல் (Hall) இடர் தாங்குவதுதான் தொழில் முனைவோரின் முதற் பணியென்றும், அதற்கு ஊதியமாகப் பெறப்படுவதே ஆதாயம் என்றும் கூறுகிறார். தொழிலில் ஈடுபடும் மற்ற மூன்று காரணிகளுக்கும் நிரந்தரமான ஊதியம் கொடுக்கப்படுகிறது. ஆனால், தொழிலதிபர் பெறப்போவது ஆதாயமா, நட்டமா என்ற நிச்சயமற்ற நிலை கவலையை அளிக்கிறது. இந்த நிச்சயமற்ற நிலைக்குக்(இடர்) கிடைக்கும் பரிசுதான் ஆதாயம் என இவ்வாதாய இடர் தாங்கு கோட்பாடு(Risk Taking Theory of Profit) கூறுகிறது.

**4) ஆதாய உறுதியின்மை தாங்கும் கோட்பாடு:** முன்கூட்டியே அளவிடக்கூடிய தொழில் ஆபத்துகளைக் காப்பீடு செய்யத்தக்க இடர்கள் என்றும், அவற்றைக் காப்பீட்டுக் கழகங்கள் ஏற்கின்றன என்றும் நைட்டு (Knight) கூறுகிறார். ஆனால், அவ்வாறு அளவிட இயலாத விபத்துகளை உறுதியின்மை என்றும், அதைத் தாங்குவதற்குத் தரப்படும் வெகுமதி ஆதாயம் என்றும் ஆதாய உறுதியின்மை தாங்கும் கோட்பாட்டில் (Uncertainty Bearing Theory of Profit) குறிப்பிடுகிறார். எடுத்துக்காட்டாக, விலைவாசியில் ஏற்படும் சரிவுகள், பண்டத்தின் கூடுதலான தேவை நெகிழ்ச்சி, மக்களின் விருப்பு வெறுப்புகளில் ஏற்படும் மாறுதல்கள், தொழில் பின்னிறக்கம், அரசியல் மாற்றங்கள் போன்றவை உறுதியின்மையில் அடங்கும்.

**5) இயக்கநிலைக் கோட்பாடு:** பொருளியலின் அடிப்படைச் சக்திகள் மாறுவதனால் ஆதாயம் தோன்றுகிறது எனக் கூறுகிறது இயக்குநிலைக் கோட்பாடு (Dynamic Theory). தொழிலதிபர்கள் புதிய முறை உற்பத்தியில் ஈடுபடுவதினாலும், புதிய முறைகளைப் புகுத்துவதினாலும், புதிய கண்டுபிடிப்புகளைப் பயன்படுத்துவதினாலும் உற்பத்திச்செலவைக் குறைத்து ஆதாயமடைகிறார்கள் என்பதே இதன் கருத்து. ஆதாயம் = விற்பனை விலை - செலவு. செலவைக் குறைப்பதென்பது இயக்க நிலையில் மட்டுமே முடியும். எனவே, மாறா இயக்கநிலையில் ஆதாயம் ஏற்படுவது இல்லை என்பது கிளார்க்கின் (Clark) முடிவு.

**6)ஆதாயப்புத்தாக்கக்கோட்பாடு:** மக்கள்தொகை, மூலதனத்தின் அளவு, உற்பத்தி முறை, வாணிக அமைப்புகள், நுகர்வோரின் விருப்ப நிலைகள் ஆகியவை மாறாதிருக்கும் நிலை தேக்க நிலை. இவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டால் அது இயங்கு நிலை. மேலே குறிப்பிட்டவற்றில் ஏற்படும் மாற்றங்களினால் ஆதாயம் தோன்றுகிறது எனப் பேராசிரியர் கிளார்க்கு கூறியுள்ளார். ஆனால், இவற்றிற்குப்பதிலாக உற்பத்தியில் ஏற்படும் புத்தாக்கங்களின் காரணமாக ஆதாயம் தோன்றுகிறது என்று சும்பீட்டர் (Schumpeter) ஆதாயப்புத்தாக்கக் கோட்பாட்டில் (Innovation Theory of Profit) கூறுகிறார். பி.ச.

**துணை நூல்கள்:**


Alfred, W., Stonier & Douglas C. Hague, A Text Book of Economic Theory, The English Language Book Society, London,, 1982.

David W.,Pearce, The Dictionary of Modern Economics,The Macmillan Press Ltd., London, 1983.

Jhingan, M.L., Micro Economic Theory, Vikas Publishing House Pvt.Ltd., 1984.

Koutsoyiannis., Modern Micro Economics, Macmillan Company, London, 1982.

Meade, J E., An Introduction to Economic Analysis and Public Policy, North-Holland Publishing Company, Amesterdam, 1957.


***பங்குகள்:*** மூலதனத்தின் ஒரு பாகம் அல்லது பகுதிதான் பங்கு (Share) எனப்படும். பங்கு மூலதனத்தை இருவகையாகப் பிரிக்கலாம். (1) சாதாரணப் பங்கு முதல(Equity or Ordinary share Capital) (2)சலுகைப் (முன்னுரிமை) பங்கு முதல் (Preference share Capital)சலுகைப் பங்குகளில்லாத பிற பங்குகள் அனைத்தும் சாதாரணப் பங்குகள் எனப்படும். சாதாரணப் பங்குகளை வெளியிடுவதன் மூலம் திரட்டப்படும் மூலதனம் சாதாரணப் பங்கு முதலாகும்.

**சலுகைப் பங்குகள்:** சலுகைப் பங்குகளை வெளியிடுவதன் மூலம் திரட்டப்படும் மூலதனம சலுகைப் பங்கு முதலாகும். பங்காதாயம் வழங்குவதிலும் மூலதனத்தைத் திருப்பித்தருவதிலும் தனிச்சலுகை காட்டப்படுவதால் அத்தகைய பங்குகளுக்குச் சலுகைப் பங்குகள் எனப் பெயரிடப்பட்டுள்ளது. அத்தகைய சலுகைகள நிறுவனத்தின் அமைப்பு

முறையேட்டிலும் சங்கச் செயல்முறை விதிகளிலும் கொடுக்கப்பட்டிருக்கும். பங்காதாயச் சலுகைகளின் விகிதங்கள் பற்றி முன்பேமுடிவு செய்யப்பட்டிருக்கும். இச்சலுகைகளை அடிப்படையாகக் கொண்டு சலு கைப் பங்குகளைப் பற்பல வகைகளாகக் கீழ்க்காணு மாறு பிரிககலாம்

**அ) குவிவுச் சலுகைப் பங்குகள்:** இத்தகைய பங்குகளைக்கொண்டவர்கள் மிகவும் சிறந்த நிலை யில் உள்ளனர்; ஏனென்றால், ஒரு குறிப்பிட்ட ஆண் டில் நிறுவனத்துக்குப் போதிய அளவு ஆதாயம் கிடைக்கவில்லையென்றால், இத்தகைய பங்குதாரர் களின் அந்த ஆண்டிற்கான ஆதாய ஈவுச்சலுகை அடுத்த ஆண்டிற்குத் தள்ளி வைக்கப்படும். அடுத்த ஆண்டிலும் போதிய ஆதாயம் கிட்டவில்லையெனின் அதற்கு அடுத்த ஆண்டிற்குத் தள்ளி வைக்கப்படும். அவ்வாண்டில் போதிய அளவு ஆதாயம் கிடைக்கப் பெறின் கொடுபடாத கடந்த ஆண்டுகளுக்கும் சேர்த்து அப்பொழுது பங்காதாயம் வழங்குதல் வேண்டும். ஆதாயம் கிடைக்கும் ஆண்டு வரை இச் சலுகை குவிந்துகொண்டே செல்வதால் இத்தகைய பங்குகள் குவிவுச் சலுகைப் பங்குகள் (Cumulative Preference Shares) என வழங்கப்படுகின்றன. குவி யாச் சலுகைப் (Non-cumulative Preference Shares) பங்குதாரர்களுக்கு இத்தகைய சலுகைகள் இல்லை. ஆதாயம் கிட்டிய ஆண்டுகளுக்கு மட்டுமே ஆதாய ஈவு கொடுக்கப்படும். ஆதாயம் கிட்டாத ஆண்டிற் குரிய குறித்த ஆதாயம் ஈவு விகிதங்கள் அடுத்த ஆண்டிற்குக் குவிந்து செல்லா. அந்தந்த ஆண்டு களோடு அச்சலுகையும் முடிந்து விடும்.

**ஆ) எஞ்சியதில் பங்கு பெறும் சலுகைப் பங்கு கள்:** இத்தகைய பங்குதாரர்களுக்குத் தங்களுக்கு வரவேண்டிய குறித்த பங்காதாயம் கிடைத்த பிற கும் சாதாரணப் பங்குதாரர்களுக்குக் கொடுக்கப் பட்ட பிறகு எஞ்சிய ஆதாயத்தில் (மற்றப்பங்கு தாரர்களோடு சேர்ந்து) மீண்டும் பங்காதாயம் பெறும் சலுகை வழங்கப்படும். இத்தகைய சலுகை யைப் பெறாத பங்குகள் எஞ்சியதில் பங்கு பெறாச் சலுகைப் பங்குகள் (Non-participating preference Shares) எனப்படும்.

**இ) மீட்கக்கூடிய சலுகைப் பங்குகள்:** இத்தகைய பங்குதாரர்களுக்குப் பங்குச் சான்றிதழில் குறிப்பிட் டுள்ளவாறு ஒரு குறித்த காலம் கடந்தவுடன் அவர் களது பங்குத் தொகை திருப்பித் தரப்படும். அதா வது, குறிப்பிட்டகாலம் முடிந்தவுடன் அப்பங்கு தாரர்கள் தங்களின் பங்குத் தொகையை மீட்டுக் கொள்ளமுடியும். எனவே, இச் சலுகையைக் கொண்ட பங்குகள 'மீட்கக் கூடிய சலுகைப் பங்கு கள்' (Redeemable Preference Shares) என்றும், இச் சலுகைகளைக்கொண்டிராத பங்குகள் 'மீட்க இய லாத சலுகைப் பங்குகள் (Non-Redeemable Preference Shares) என்றும் குறிப்பிடப்படும்.

மீட்கக் கூடிய சலுகைப் பங்குகளை வெளியிடுவ தற்கான அதிகாரம் சங்கச் செயல்முறை விதிகளில் கொடுக்கப்பட்டிருக்கும். நிபந்தனைகள், முறைகள் ஆகியவற்றிற்கு உட்பட்டுத்தான் அத்தகைய பங்கு களை மீட்க வேண்டும். பங்காதாயம் வழங்கிய பின் எஞ்சியுள்ள ஆதாயத்திலிருந்து அல்லது மீட்கும் கார ணத்திற்காகவே புதிதாக வெளியிட்ட புதிய பங்குத் தொகையிலிருந்துதான் அத்தகைய பங்குகளை மீட்க முடியும். பங்கு மதிப்பின் முழுத்தொகையும் செலுத் தப்பட்ட பங்குகளை மட்டுமே மீட்க வேண்டும்.

மீட்கப்படும் பங்குகளுக்கு ஏதேனும் முனைமம் (Premium) கொடுக்க வேண்டியிருப்பின் அத்தொகை யை நிருமத்தின் ஆதாயத்திலிருந்து அல்லது நிருமத் தின் பங்கு முனைமக் கணக்கிலிருந்து (Company Share Premium Account) கொடுக்கலாம். இத்தகைய பங்குகளை மீட்பதற்காகவே 'மூலதன மீட்புக் காப் பிருப்புக் கணக்கு அல்லது நிதி' (Capital Redemption Reserve Fund) என்னும் காப்பு நிதிக் கணக் கொன்றைத் தொடங்கி வைத்திருக்கப்படும். பங்கா தாயத்தில் சேர்க்கப்படாத ஆதாயங்களிலிருந்து ஒரு பகுதியை இக் கணக்கிற்கு மாற்றி, பங்கு மீட்பதற்கு வேண்டிய தொகையைச் சேர்த்து வைக்கலாம். ஏதா வது மீட்கக் கூடிய சலுகைப் பங்குகள் மீட்கப்பட் டால் அல்லது மீட்கப்படும் தறுவாயிலிருந்தால் அப் பங்குகளின் இயல்புத் தொகைக்கு மிகாமல் புதிய பங்குகளை நிறுவனம் வெளியிடலாம். பதிவாளருக்குச் செலுத்த வேண்டிய மூலதன உயர்வுக் கட்டணத் திற்காகக் கணக்கிடப்படும்பொழுது இப்புதிய பங்கு வெளியீட்டையும் சேர்த்துக் கொள்ளக் கூடாது. பழைய பங்குகள் மீட்கப்படுமுன் புதிய பங்குகளை வெளியிட்டால் புதிய பங்குகளை வெளியிட்ட ஒரு மாதக்காலத்திற்குள் பழைய பங்குகள் மீட்கப்பட வேண்டும். மீட்கப்பட்ட நாளிலிருந்து 30 நாள்களுக் குள் அது பற்றிப்பதிவாளருக்கு அறிவித்தல் வேண் டும். நிறுவனத்தின் இருப்பு நிலைக்குறிப்பில் (Balance Sheet) மீட்கப்பட்ட பங்குகளின் விவரங்களும் தேதி களும் சேர்க்கப்பட வேண்டும். மேற்கூறிய விதி களைப் பின்பற்றாவிடில் நிறுவனத்தின் ஒவ்வொரு அதிகாரியும் உரூ. 1000/- வரை தண்டம் விதிக்கப் பட்டுத் தண்டிக்கப்படலாம்.

**சாதாரணப்பங்குகள்:** சலுகைப்பங்குகள் அல்லாத பங்குகள் அனைத்தும் சாதாரணப்பங்குகள் எனப் படும். இவற்றிற்குச் சிறப்புரிமைகள் ஏதும் இல்லை.

சலுகைப் பங்குதாரர்களுக்குப் பங்காதாயம் வழங்கியபின் சாதாரணப் பங்குதாரர்களுக்கு வழங்கப் படும். நிறுவன இயக்குநர்கள் இப்பங்குகளின் மீது கொடுக்கக்கூடிய பங்காதாய விகிதத்தை நிருணயிக்கின்றனர். பங்காதாயத்தின் அளவு அந்தந்த ஆண்டின் ஆதாய நிலைமையைப் பொறுத்தது. ஆதாயம் மிகுதியாகக் கிடைக்கும் ஆண்டுகளில் இப்பங்குகளின் மீது நிறையப் பங்காதாயம் கிடைக்கும். நிறுவனம் கலைக்கப்படும் காலத்திலும், அதன் சொத்துகளிலிருந்து சலுகைப் பங்குதாரர்களின் பங்குப் பணத்தை முதலில் திருப்பிக் கொடுத்த பிறகுதான் எஞ்சியதில் சாதாரணப் பங்குதாரர்களுக்குக் கிடைக்கும். சாதாரணப் பங்குதாரர்கள்தாம் நிறுவனத்தின் நடவடிக்கைகளைப் பெரிதும் கட்டுப்படுத்துவார்கள். பொதுவாக, அவர்களுக்குக் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசவும் வாக்களிக்கவும் உரிமைகள் உள்ளன.

பி.ச.

**பங்குச் சந்தை**: காண்க: இருப்பு அங்காடி.

**பங்கு மாற்றம்**: கூட்டுப்பங்கு நிறுவனத்தில் ஒருவர் தமக்குள்ள பங்கைமற்றொருவருக்கு மாற்றித் தருவது பங்கு மாற்றம் எனப்படும். பங்கு மாற்றத்திற்கு நிறுவனத்தின் ஒப்புதல் வேண்டும். அது பதிவேட்டிலும் பதியப்படல் வேண்டும். பங்கு மாற்றத்தைப் பதிவேட்டில் பதியுமுன் கீழ்வரும் விவரங்கள் மாற்றுப் பத்திரத்தில் சரியாகக் கொடுக்கப்பட்டுள்ளனவா என்று செயலர்/தணிக்கையாளர் கூர்ந்து ஆராய வேண்டும். 1) சங்கச் செயல்முறை விதிகளின்படி பங்குமாற்றம் (Share Transfer) செய்தல்;2) நிறுவனத்தின் பெயர் சரியாகக் குறிப்பிடப்பட்டிருத்தல்; 3) மாற்றுபவர், மாற்றிப்பெறுபவர் ஆகியோர்களின் பெயர், முகவரி, தொழில் முதலியன விவரங்கள் சரியாகக் குறிக்கப்பட்டிருத்தல்; 4) மாற்றுப் பத்திரத்திலும் உறுப்பினர்களின் பதிவேட்டிலுமுள்ள மாற்றுபவரின்பெயர், முகவரி ஒத்திருத்தல்; 5) மாற்றுப்பத்திரம் சரியாக எழுதப்பட்டு, நாளிடப்பட்டுத்தக்க சாட்சிகளைக் கொண்டிருத்தல் (ஒருவர் கையொப்பத்திற்கு மற்றொருவர் சாட்சியாகக் கணவனுக்கு மனைவியும் அல்லது மனைவிக்குக்கணவனும் அமைதல் விரும்பத் தக்கதன்று); 6) மாற்றுப்பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும்கைம்மாறு அன்றைய அங்காடி விலைக்கேற்ப நியாயமானதாகவும், அம்மதிப்பின்படி முத்திரைவில்லை ஒட்டப்பட்டதாகவும் இருத்தல்; 7) பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் பங்குகளின் எண்களும் வகையும் பங்குச் சான்றிலும் உறுப்பினர்களின் பதிவேட்டிலும் உள்ளவாறு ஒத்திருத்தல்; 8) பத்திரத்திலுள்ள மாற்றுபவரின் கையொப்பமும் நிறுமத்தின் வசமுள்ள அவரின் மாதிரிக் கையொப்பமும் ஒத்திருத்தல்; கூட்டாக வாங்கிய பங்குகளாயின் கூட்டுச் சேர்ந்தவர்கள் அனைவரும் சேர்ந்து கையொப்பமிட வேண்டும். அவர்களில் எவரேனுமொருவர் இறந்துவிட்டால் இருப்பவர்கள் அதை உறுதி செய்து கையொப்பமிடலாம்;9) மாற்றத்திற்கெதிராகத் தடைஉத்தரவு அல்லது தடை அறிவிப்பு ஏதும் இல்லாதிருத்தல்; 10) மாற்றுப் பத்திரத்தில் முக்கிய மாறுதல்கள் செய்யப்பட்டிருப்பின் அப்பத்திரத்தில் இருவரும் கையொப்பமிட வேண்டும்; ஒருவரின் முகவரி மாற்றப்பட்டிருப்பின் அவர்கையொப்பமிட்டால் போதுமானது; ஐயப்பாடு எழுமிடத்து முழுக்கையொப்பமிடுவதே சாலச்சிறந்ததாகும்.

பங்குச்சான்றுகள் மாற்றுமுறையாவணங்களின்று வேறுபட்டதால் அவற்றின் மேலுள்ள உரிமைகளை எழுத்துமூலமான தனிப்பத்திரங்களின் மூலமே மாற்ற இயலும். அப்பத்திரங்கள் பங்கு மாற்றப் பத்திரங்கள் (Transfer deeds) எனப்படும். அம்மாற்றப் பத்திரங்களின் அமைப்பும் விவரங்களும் சங்கச் செயல் முறை விதிகளில் கொடுத்துள்ளவாறு இருக்க வேண்டும். இப்பத்திரத்தில் மாற்றுபவர், மாற்றிப்பெறுபவர் ஆகியவர்களின் முழுப்பெயர், முகவரி, தொழில், மாற்றப்படும் பங்குகளின் எண், பத்திரம் எழுதப்பட்ட தேதி முதலியவிவரங்களைத் தெளிவாகக்குறிப்பிடல் வேண்டும். மாற்றுபவர் கையெழுத்திட்டு இப்பத்திரத்துடன் பங்குச் சான்றையும் அல்லது பங்கு ஒதுக்கல் கடிதத்தையும்(பங்குதாரர்களுக்கு நிறுவனம்பங்குச்சான்றுகளை வழங்குவதற்கு முன் பங்குகள் மாற்றப் படும் பொழுது) சேர்த்து மாற்றிப் பெறுபவருக்குக் கொடுக்க வேண்டும். இதில் மாற்றிப் பெறுபவரும் கையெழுத்திட வேண்டும். இப்பத்திரத்தைத் தயாரிக்கும்செலவும்பொறுப்பும் பங்குகளை வாங்குபவரையே சார்ந்ததாகும். இதில் கொடுக்கப்பட வேண்டிய விவரங்கள் விடுபட்டிருந்தால் பத்திரம் செல்லுபடியாகாது. எனினும், விடுபட்ட விவரங்கள் இயக்குநர்களுக்குத் தெரிந்திருப்பின் பத்திரம் செல்லுபடியாகும்.

இப்பத்திரத்தைக் நிறுமத்தின் செயலகத்தில் தாக்கல் செய்து பதிவு செய்த பின்னரே பங்கு மாற்றம் முழுமை பெறும்; நிறுவனச் சட்டத்தின் 108-ஆம் பிரிவிலிருந்து 113 வரை கொடுக்கப்பட்டுள்ள விதிப்படிமாற்றுப் பத்திரத்தைப் பதிவு செய்யும் பொருட்டு மாற்றுபவரோ மாற்றிப்பெறுபவரோ நிறுவனத்துக்கு விண்ணப்பிக்கலாம். மாற்றுபவர் விண்ணப்பித்திருப்பின், பங்குகளின் மதிப்பில் முற்றிலும் செலுத்தப் படாவிடின், அது பற்றிய அறிவிப்பை மாற்றிப் பெறுபவருக்கு நிறுவனம் அனுப்பிவிட வேண்டும். அறிவிப்புக் கிடைத்த இரு வாரத்திற்குள் மாற்றிப்பெறுபவர் மறுப்புத் தெரிவிக்காவிடில், உறுப்பினர்களின் பதிவேட்டில் மாற்றிப் பெறுபவரின் பெயரைப் பதியலாம், முற்றிலும்செலுத்தப்பட்ட பங்குகளாயிருப்பின்

அறிவிப்பு அனுப்பா வேண்டிய அவசியத்தைச் சட்டம் வலியுறுத்தாவிடினும் அதை மாற்றிப் பெறுபவர் விண்ணப்பித் திருப்பின் மாற்றுபவருக்கு அதை அறிவிக்க வேண்டிய கட்டாயமில்லை. எனினும், அறிவிப்பை அனுப்பி வைப்பது நிறுவனத்தின் வழக்கத்திற்குரிய ஒரு செயலாகும். தக்க காரணங்களுக்காகப் பங்கு மாற்றத்தைப் பதிய நிறுவனம் மறுக்குமாயின் அவ்விவரத்தை மாற்றுப பத்திரம் நிறுவனத்திடம் தாக்கல் செய்யப்பட்ட இரண்டு திங்களுக்குள் மாற்றுபவருக்கும் மாற்றிப் பெறுபவருக்கும் தெரியப்படுத்த வேண்டும். தவறினால், நிறுவனமும் அத்தவற்றுக்கு உடந்தையாயிருந்த ஒவ்வோர் அதிகாரியும் தவறு நீடிக்கும் நாளொன்றுக்கு உரூ. 50-க்கு மிகாத தொகையைத் தண்டமாகச் செலுத்த நேரிடும்.

பி.ச.

***பங்கு முறை ஒதுக்கல்***: அரசு அவ்வப்போது சில பொருளின் முதன்மை, இன்றியமையாமை கருதி அனுமதி, பங்கு முறை ஒதுகக்ல் அல்லது பங்களவு முறை, வழங்கலில் அளவை வரையளவு செய்தல் போன்றவற்றைக் கடைப்பிடிக்கிறது. அதோடு, இறக்குமதியைக கட்டுப்படுத்தி, ஏற்றுமதியை ஊக்கப்படுத்தவும், பங்குமுறை ஒதுக்கல் (Quota System) கடைப்பிடிக்கப்படுகிறது. இதனால், தேவையான பொருளைத் தேவையான போது வழங்கவும், இறக்குமதிப் பொருள்களைக் கட்டுப் படுத்தவும், விலைக் கட்டுப்பாட்டை ஏற்படுத்தவும் முடிகிறது.

அரசு ஒரு குறிப்பிட்ட தொழில் ஒரு குறிப்பிட்ட கால அளவில் இவ்வளவு பொருளைத்தான் உற்பத்தி செய்ய வேண்டுமென்றும், உள்நாட்டில் இவ்வளவு தான் விநியோகிக்கலாம் என்றும், சில தொழிலுக்கு அனுமதி வழங்கும்போதே இவ்வளவுதான் இயந்திரங்களை இறக்குமதி செய்யலாம் என்றும், பங்கு முறை ஒதுக்கலை அறிமுகப்படுத்துகிறது. இறக்குமதி செய்யும் பொருளின் மீது வரி விதிப்பதற்குப் பதிலாக அப்பொருளை ஒரு குறிப்பிட்ட கால அளவிற்கு மேல் இறக்குமதி செய்யக்கூடாது என்று கட்டுப்படுத்தலாம். இங்குப் பங்கு முறை ஒதுக்கலை முடிவுசெய்யும் போது அந்நியச் செலாவணி நிலை, அப்பண்டத்தின் முதன்மை, உள்நாட்டில் அப்பண்டம் உற்பத்திசெய்யப்படும் அளவு ஆகியவை கவனிக்கப்படும். இம்முறையின் மூலம் இறக்குமதியைக் கட்டுப்படுத்துவது இறக்குமதி வரிகள் மூலம் கட்டுப்படுத்துவதைவிடச் சிறந்ததாகும். இதனால், இறக்குமதிப் பண்டங்களின் விலை உயராமல் காக்கப்படுகிறது. பி.ச.

**துணை நூல்:**

**Gupta, K.R.**, International Economics, Atma Ram & Sons, Delhi, 1983.

***பங்குரிமையர்***: இந்துக் கூட்டுக் குடும்பம் (Hindu Joint Family) என்பது இந்துச் சட்டத்தில் ஒரு சிறப்பான அமைப்பாகும். பொதுவாக ஓர் இந்துக் கூட்டுக் குடும்பம், ஒரு பொது ஆண் மூதாதையரைத் தலைவராகக் கொண்டு, புதல்வர், புதல்வியர், தமையன், தமக்கைகள், பேரப் பிள்ளைகள், மனைவி, தாய் என அனைத்துக் குடும்ப உறுப்பினர்களையும் உள்ளடக்கியிருக்கும்.

பங்கமைப்பு (Coparcenary) என்பது இந்து மிதாச்சரச் சட்டத்தில் இந்துக் கூட்டுக் குடும்பத்தில் அடங்கிய ஒரு குறுகிய அமைப்பாகும். பங்குரிமையர் (Coparcener) என்பவர் பிறப்பினால் பங்குரிமைச் சொத்தில் ஒரு நலம் பெறுபவர் ஆவார். ஒரு பங்குரிமையானது குறிப்பிட்ட ஒரு சமயத்தில் ஒரு பொது ஆண் மூதாதையரையும் (Common male ancestor), அவருக்கு அடுத்து மூன்று தலை முறை நேர்வழி ஆண் தோன்றல்களையும் கொண்டிருக்கும். அதாவது தந்தையைத் தவிர்த்து, மகன், மகனுடைய மகன், மகனுடைய மகனின் மகன் என மூன்று தலைமுறையினரைக் கொண்டிருக்கக் கூடியது. பங்குரிமை அமைப்பில் இவர்களைத் தவிர வேறு எவர்க்கும் இடமில்லை. பெண்கள் பங்குரிமையர் ஆக முடியாது. நான்காம் தலைமுறையில் நேர்வழி ஆண் தோன்றல் கூடப் பங்குரிமையர் அல்லர். தந்தை (பொது ஆண் மூதாதை) இறப்பின் நான்காம் தலைமுறையைச் சார்ந்தவர் மூன்றாம் தலை முறையினராக மாறிப் பங்குரிமை அமைப்பில் இடம் பெற முடியும்.

பெண்களும், நான்காம் தலைமுறை ஆண்களும் பங்குரிமையராக இடம் பெற முடியாமைக்குக் காரணம் உண்டு. இந்துச் சட்டத்தின் கீழ், தந்தை மற்றும் அவருக்கு அடுத்த மூன்று தலைமுறையினர் மட்டுமே, இறந்த முன்னோர்களுக்குச் சமயச்சடங்குகள் மேற்கொள்ள முடியும். மற்றவர் அச் சமயச் சடங்குகளை ஆற்ற முடியாது. எனவே தான், மற்றவர் பங்குரிமையராக முடியாது.

பங்குரிமை என்பது சட்டவழியே (By Operation of law) ஏற்படுவது. ஆள்களில், செயலால் ஏற்படுத்த முடியாது. எனவே, அன்னியர் எவரும் ஒரு பங்குரிமை அமைப்பில் இடம் பெற முடியாது. பிறப்பினால் மட்டுமே ஒரு பங்குரிமையர் என்ற தகுநிலையைப் (Status) பெற இயலும். இதற்கு ஒரே ஒரு விதி விலக்கு உண்டு. தத்தெடுப்பின் வாயிலாக ஒருவரைப்பங்குரிமை அமைப்பில் சேர்த்துக் கொள்ளலாம்.

இந்துச் சட்டத்தில் சொத்து பங்குரிமைச் சொத்து, தனிச்சொத்து என இருகூறாகப் பிரிக்கப்

படுகிறது. இதில் பங்குரிமையரின் பங்குரிமைச் சொத்து, அடுத்தவருக்கு எஞ்சுநர் உரிமை (Survivor ship) வழியாகவும், தனிச்சொத்து (Succession) இறங்குரிமை வழியாகவும், சொத்தின் இயல்பை ஒட்டிச் செல்லும்.

பங்குரிமைச் சொத்தில் ஒரு பங்குரிமையரின் பங்கானது குடும்பத்து மற்றப் பங்குரிமையரின் பிறப்பு இறப்பினால் குறையவோ அதிகரிக்கவோ கூடியது. பாகப் பிரிவினைக்குப் பின்னர்த்தான் ஒரு பங்குரிமையரின் பங்கினை அறுதியிட்டுக் கூற முடியும். ஓர் இந்து மிதாட்சரக் கூட்டுக் குடும்பத்தில் ஒரு தந்தையும் மூன்று புதல்வர்களும் இருக்கிறார்கள் என்று வைத்துக் கொண்டால், அக்குடும்பப் பாகப்பிரிவினையின்போது ஒவ்வொருவருக்கும் நான்கில் ஒரு பங்கு சொத்துக் கிடைக்கும். அத்தந்தைக்கு நான்காவதாக மற்றொரு மகன் பிறந்தால் ஒவ்வொருவரின் பங்கும் ஐந்தில் ஒரு பங்காகக் குறையும். அல்லது மூன்று புதல்வர்களில் ஒருவர் இறப்பின் ஒருவரின் நான்கில் ஒரு பங்குச்சொத்தானது மூன்றில் ஒரு பங்காக அதிகரிக்கும். எனவே, பாகப்பிரிவினை தான் பங்குரிமையரின் பங்கின் அளவை நிருணயிக்கக் கூடியது.பாகப்பிரிவினை வேண்டும் உரிமை ஒவ்வொரு பங்குரிமையருக்கும் உண்டு. மற்றவர்கள் மறுத்தாலுங்கூட ஒரு பங்குரிமையர் தமது உரிமையை நிலைநாட்ட முடியும். அதே போலப் பாகப்பிரிவினை ஏற்படும் வரை ஒவ்வொரு பங்குரிமையருக்கும் பங்கமைப்புச் சொத்தின்மீது பொது சுவாதீனத்திற்கும் நுகர்ச்சிக்கும்(Common possession and enjoyment) உரிமை உண்டு.பொதுவாகக்,குடும்பவசதிக்காகக் குடும்பத்துச் சொத்து தந்தை அல்லது கருத்தாவால் நிருவகிக்கப்படும். தந்தை அல்லது குடும்பத்து மூத்த பங்குரிமையர் 'கருத்தா' வாகச் செயற்படலாம்.

பங்குரிமையருக்குப் பங்குரிமைச் சொத்தில் பல உரிமைகள் உண்டு. அவையாவன: 1) பிறப்பினால் சொத்தில் நலம் பெறும் உரிமை, 2) எஞ்சுநர் உரிமை, 3) பாகப் பிரிவினை வேண்டும் உரிமை, 4)கூட்டுச் சுவாதீனத்திற்கும் நுகர்ச்சிக்குமான உரிமை, 5) அனுமதி பெறாச் செயல்களைத் தடுக்கும் உரிமை, 6) தமது உரிமை மாற்றம் செய்யும்(Alienate) உரிமை, 7)குடும்பக்கணக்குகளைச் கேட்கும் உரிமை,8) தனியே தமக்கெனச் சொத்தினைப் பெறும் உரிமை.

பங்குரிமைச் சொத்து கூட்டாக அனுபவிக்கப் படுவதால் பாகப் பிரிவினைக்கு முன் எந்த ஒரு பங்குரிமையருக்கும்மற்றப்பங்குரிமையரின்இசைவின்றி உரிமை மாற்றம் செய்ய உரிமையில்லை. தந்தைகூட, புதல்வர்களின் இசைவின்றி ஓர் உரிமை மாற்றம் ஏற்படுத்த முடியாது. அவ்வாறுசெய்யப்படும் செயல்களை மற்றப் பங்குரிமையர் தடுக்க முடியும். பம்பாய் சென்னைச் சட்டக் குழாங்களைச் சார்ந்தவர்கள் மறு பயனுக்காகத் தங்களின் பங்கினை மற்றவர் இசைவின்றி உரிமை மாற்றம் செய்யலாம்.

இந்து இறங்குரிமைச் சட்டம் இயற்றப்படும் வரை (1956)பங்குரிமையர் ஒருவருக்குத் தம் பங்கினைக்கூட உயில் (will) வழி மாற்ற உரிமையில்லை. ஆனால், இச் சட்டத்தின் 30-ஆம் பிரிவின்கீழ் ஒரு பங்குரிமையர் இப்போது தமது பங்கினை உயில்வழி மற்றவருக்கு அளிக்கத் தடையில்லை. எனினும், இப்போதும் ஒரு பங்குரிமையர் தமது சொத்தினைக் கொடை மூலமாக உயிருடன் இருக்கும் இருவரிடையே ஏற்படுத்தும் உரிமை மாற்றம்(Transfer bygift inter vivos)வழியாக ஏற்படுத்த இயலாது. ஆ.ச.

**பங்குனி மாதம்**:நெடுங்காலமாக ஞாயிற்றின் தோற்றமும் மறைவுமே பொழுது கணக்கிட அடிப்படையாய் இருந்து வரலாயின. நாழிகை, மணி, நாள், வாரம், மாதம், ஆண்டு என்பன பின்னர் அடிப்படைக்கால அளவுகளாக அமைந்தன. நாள்களுக்குக் கோள்கள் காரணமாயும் மாதங்களுக்கு மீன்கள் காரணமாயும் அமைந்தன.

தமிழில் சித்திரை முதற்கொண்டு பங்குனி இறுதியாகப் பன்னிரு மாதங்கள் ஓராண்டாகக் கொள்ளப்பட்டன. தெலுங்கு மரபில் அமாவாசை அன்று மாதம் மாறுகிறது. தமிழில் முழுமதி நாள் அன்று மாதம் மாறுகிறது. ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு இராசிக் குரியதாகக் கொள்ளப்பட்டது. இவ்வகையில் பங்குனிக்கு மீன இராசி உரியதாகிறது.

பொதுவாக, மீன இராசி சிறந்த இராசியாகக் கணிக்கப்பட்டுள்ளது. ஆகவே, மீன இராசிக்குரிய பங்குனி மாதமும் பல நல்ல காரியங்களுக்கு உகந்ததாகிறது. இப்பங்குனி மாதம்-உத்திர நட்சத்திரம், நிறை மதி திதி ஆகியவை கூடியது நன்னாளாகும்.

வடமொழியில் 'பல்குனி' என்று சொல்லப்படும் மாதமே தமிழில் பங்குனி என வழங்கலாயிற்று. இது ஆங்கிலத்தில் பெரும்பாலும் மார்ச்சு மாதத்தின் இடையில் தொடங்கி ஏப்பிரல் மாதத்தின் இடையில் முடிகிறது. (ஏறக்குறைய மார்ச்சு 15-ஆம் நாள் முதல் ஏப்பிரல் 14 – ஆம் நாள் வரை).

இப்பங்குனி நாள் இளவேனிற்காலம் தொடங்கி மக்களுக்குண்டாகும் இன்பத்தைக் குறித்து நிற்கிறது. வாடைக்காற்றும், நடுங்கும் குளிரும், வருத்தும் பனியும் நீங்கி வசந்தகாலம் அரும்புவதைக் காட்டும் திங்கள் பங்குனியாகும். முந்திய வாடையால் இலை உதிர்ந்து பட்டு விட்டன போலக் காணப்பெறும்

மரங்களும் செடிகளும் புதுத்தளிரைக் கொண்டு பூத்துக்குலுங்கும் திங்களும் இதுவேயாகும்.

திருத்தக்கதேவர் இப்பங்குனியை, 'பாசறைப் பிரிவு தீர்க்கும் பங்குனிப் பருவம் செய்தான்' என்று குறிப்பிடுகிறார். தமிழ் இலக்கியங்களிலும் இந்தப் பங்குனி உத்திர நாளின் சிறப்புப் பேசப்படுகின்றது.

இம்மாதம் சிவ வழிபாட்டுக்குரிய சிறப்புடைய மாதமாக ஏற்கப்பட்டுள்ளது. உத்திரத் திருவிழாவும் இம்மாதத்தில் கொண்டாடப் பெறுகிறது. சிவபெருமான் சுந்தரேசர் என்ற பெயரில் மதுரையில் திருமணம் செய்து கொண்டது இந்த நன்னாளில்தான். அதனால், இந்நாள் 'கலியாண விரதநாள்' என்றும் பெயர் கொள்ளலாயிற்று. சிவ பார்வதி திருமணத்தை மையமாகக் கொண்டு இந்நாளை எல்லாச் சிவாலயங்களிலும் தவறாது அவர்களுக்குரிய சிறப்புடைய நாளாகக் கொண்டாடுகின்றார்கள்.

இந்நாளின் சிறப்பை உணர்த்தும் வகையில் பின் வரும் செய்திகள் சில நிலவி வருகின்றன. கிருத யுகத்தில் இரகு என்னும் அரசன் ஆட்சி புரிந்து வந்தான். அவன் ஆட்சியில் மக்கள் எல்லா நலங்களையும் பெற்றாலும் ஓர் அரக்கனால் அவர்களுக்கு அவ்வப்பொழுது தொல்லைகள் இருந்து வந்தன. தம் முயற்சியால் அந்த அரக்கனை அழிக்கமுடியவில்லை. இறுதியாக அரசனாகிய இரகுவிடம் முறையிட்டனர். இரகு, நாரதர் அறிவுரையின்படி தாமும் தம் மக்களும் பங்குனி உத்திர நன்னாளில் அதற்காக விரதம் மேற்கொண்டனர். மேற் கொண்டதன் பலனாய் அந்த அரக்கன் அழிந்ததோடு, அவர்களுக்கு வளமும் வாழ்வும் பெருகலாயின. இந்த விரதம் மதுரை, திருவாரூர், காஞ்சிபுரம், வேதாரணியம், திருநெல்வேலி, பேரூர் ஆகிய சிவாலயங்களில் மேற்கொள்ளப்பட்டது.

இந்த உத்திர நன்னாளில்தான் பார்வதி காஞ்சிபுரத்தில் ஒரு மாமரத்தின் கீழ் இருந்து தவம் செய்து சிவபெருமானின் அருள் பெற்றுத் தான் இழந்த பழைய நிலையையும் எய்தினாள் என்ற செய்தியும் உண்டு. சிவபெருமான் ஒரு சமயம் தவத்தில் ஆழ்ந்திருக்கும்பொழுது மன்மதன் அதற்குத் தடையாய் நின்றான்; அதனால் சீற்றங்கொண்ட சிவபெருமான் தன் நெற்றிக்கண்ணால் மன்மதனை எரித்துச் சாம்பலாக்கினான். அதையறிந்த இரதிதேவி (மன்மதன் மனைவி) திருமாலிடம் முறையிட்டாள். அவர் ஆணைப்படி இரதி தண்டக வனத்தில் சிவபெருமானை நோக்கித் தவம் செய்தாள். அவள் தவத்திற்கு மனமிரங்கிய சிவபெருமான் பங்குனி உத்திர நன்னாளில் மன்மதன் உயிரை மீண்டும் அளித்தான். இம்முச்செய்திகளும் பங்குனி உத்திர நன்னாளின் சிறப்பைப் புலப்படுத்துகின்றன.

இவ்வுத்திர நன்னாளில் தமிழ் நாட்டில் முருக பக்தர்கள் ஆற்றில் நீராடிக் குடங்களில் தூய நீர் நிரப்பி நீர்க்காவடிகளை எடுத்துக்கொண்டு பழநி முருகனை நீராட்டும் வழக்கம் இருந்து வருகிறது. இதனை ஒரு விழாவாகக் கொண்டாடுகின்றார்கள். அப்பொழுது சாமி ஆட்டம் ஆடுகின்ற பழக்கமும் உண்டு. ந.த.

**பச்சைகுத்தல்:** பச்சை குத்திக் கொள்ளுதல் தொன்று தொட்டு உலகில் பல்வேறு இனத்தவர்களிடம் இருந்து வரும் ஓர் ஒப்பனைக் கலையாகும். இது உலகின் பிற பகுதிகளைக் காட்டிலும் ஆசிய நாடுகளில் மிகுதியாகக் காணப்படும் ஒரு பழக்கமாகும். ஆப்பிரிக்க மக்களிடமும் பசிபிக்குக் கடற் பகுதித் தீவுகளில் வாழும் மக்களிடமும் இப்பழக்கம் வேரூன்றியுள்ளது. குறிப்பாகப் பழங்குடி மக்களிடையே இப்பழக்கம் மிகவும் சிறப்புற்றுள்ளது.

தென்னிந்தியாவில் பச்சை குத்தலுக்கு மூலப் பொருளாகப் பயன்படுவன பெரும்பாலும் மஞ்சட் பொடியும் அகத்திக் கீரையும் ஆகும். இரண்டையும் அம்மியில் வைத்து அரைத்துப் பின் அரைத்த அந்த விழுதை ஒரு மெல்லிய துணியில் பரப்பித் திரியாகத் திரிப்பார்கள். பிறகு அதை ஒரு விளக்கெண்ணெய் விளக்கில் கொளுத்துவார்கள். கொளுத்திய திரியையும் விளக்கையும் ஒரு மட்பாண்டத்தால் சிறிது நேரம் மூடி வைப்பார்கள். அப்பொழுது திரி எரிந்து சட்டியின் உட்பாகத்தில் கரி படிந்து விடும். பின்பு படிந்த அந்தக் கரியைச் சுரண்டி எடுத்து தண்ணீரிலோ முலைப் பாலிலோ கரைத்துக் கொள்வார்கள். சில நேரங்களில் அகத்திக் கீரைக்குப் பதிலாக அறுகம் புல்லையோ கரிசலாங்கண்ணியையோ திரி செய்வதற்காகப் பயன்படுத்துவதும் உண்டு.

பச்சை குத்துவதற்குத் தையல் ஊசியைப் பயன்படுத்துவர். இரண்டு அல்லது மூன்று ஊசிகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டிக் கொண்டு பின் அதைப் பச்சை குத்தப் பயன்படுத்துவர். குத்துவதற்கு முன் குத்த வேண்டிய இடத்தில் அவர்கள் விரும்பிய ஓவியம் அல்லது எழுத்துகளை மேற்கூறிய கரி மையில் தோய்த்த குச்சி ஒன்றால் வரைந்து கொள்வார்கள். பின் அதன்மேல் ஊசிகளினால் குத்துவர். குத்தி முடிந்ததும் அந்த இடத்தைக் குளிர்ந்த தண்ணீரால் சுத்தம் செய்வார்கள். குத்திய மேல் பாகத்தில் மை தீட்டுவார்கள். வலியை நீக்க எண்ணெய் தேய்ப்பார்கள். வீங்காமல் இருப்பதற்காகச் சிறிதளவு மஞ்சள் பொடியைக் குத்திய இடத்தின்மேல் தேய்ப்பார்கள்.

ஆசியா, வட அமெரிக்கா, தென் அமெரிக்கா, பாலினேசியா முதலிய பல நாடுகளில் உள்ள மக்கள்

பச்சை குத்திக் கொள்ளும் பழக்கம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். பாலினேசியாவில் பச்சை குத்திக் கொள்ளல் அழகாகவும், பருவ அறிகுறியாகவும் கருதப்படுகிறது. அசாம், பர்மா ஆகிய பகுதிகளிலும் மக்கள் பச்சை குத்திக் கொள்ளும் பழக்கமுடையவர்களாக இருக்கின்றனர். பர்மாவில் உள்ள மனிதர்கள் தம் அரை முதல் முட்டி வரை பச்சை குத்திக் கொள்ளும் பழக்கமுடையவர்களாகக் காணப்படுகின்றார்கள்.

தமிழ் நாட்டிலும் பச்சை குத்திக் கொள்ளும் முறை பரவலாகக் காணப்படுகிறது. பொதுவாக நகரத்தைவிடக் கிராமப் பகுதிகளில் மிகுதியாக இப் பழக்கம் காணப்படுகிறது. பெண்கள் தங்கள் முன் கைகளிலும், கால்களிலும், நெற்றியிலும் பச்சை குத்திக் கொள்கிறார்கள். இது அழகுக்காகவே குத்தப்படுகிறது. ஆண்களும் தங்கள் மார்பகங்களிலும் முன்கைகளிலும் தங்களுக்கு விருப்பமான பறவையையோ விலங்கினையோ வேண்டிய பெயரையோ பச்சைகுத்திக் கொள்கின்றனர்.

தென் இந்தியாவில் குறத்தி இனப் பெண்கள் பச்சை குத்துவதில் சிறந்து விளங்குகின்றனர். கொங்கு நாட்டில் பச்சை குத்தல் கலை சிறப்புற்றிருக்கிறது. நியூசிலாந்து நாட்டைச் சார்ந்த மவோரிகள் (Maoris) தங்கள் உதடுகளின் மேலும், முகவாய்க் கட்டையிலும் மாத்திரமே பொதுவாகப் பச்சை குத்திக் கொள்கின்றனர். ஆனால், இவ்வினத்தில் ஓர் ஆண் தன் முகம், தொடை, பின்பாகம் முதலிய உடல் உறுப்புகள் . பலவற்றிலும் பச்சை குத்திக் கொள்கிறான்.

அவாய் (Hawaii) இன மக்கள் தங்கள் நாவிலும் பச்சைக் குத்திக் கொள்கிறார்கள். இவ்வினத்தின் தலைவன் பச்சை குத்தாவிடில் முழுமையான தலைவனாகக் கருதப்படமாட்டான். சமோவாத் (Samoa) தீவு மக்கள் தங்களது அரையிலிருந்து முழங்கால் வரையிலும் பச்சைகுத்தி அழகுபடுத்திக் கொள்கின்றனர். சில வேளைகளில் பச்சை குத்துதலைத் தொழிலர்கக் கொண்ட கலைஞர்கள் பலர் ஒன்று சேர்ந்து ஒரு சங்கமாக வேலை செய்வார்கள். மிகக் கடினமான ஓவிய வேலைக்கு அவர்கள் மிகுந்த தொகையைக் கேட்பார்கள். வலியையும் செலவையும் பச்சை குத்திக் கொள்ளும் மக்கள் பொருட்படுத்துவதில்லை. சில இனங்களில் பச்சைக்குறி இல்லாதவர்கள் குறையுடையவராகக் கருதப்படுகின்றனர்.

பண்டைக் காலத்தில் தென் இந்தியாவில் கிராமப் புறங்களில் பச்சை குத்துதலைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கு அரிசி, சோளம், கேழ்வரகு போன்ற தானியவகைகளுள் ஏதாவது ஒன்றோ பணமோ கொடுப்பதுண்டு. நீலகிரியில் வாழும் தோடர்களிடமும் (Todas) இப்பழக்கம் காணப்படுகின்றது. இங்கு வயது வந்த பெண் ஒருத்தி மற்றப் பெண்களுக்குப் பச்சை குத்துகிறாள்.

பச்சை குத்தும் பழக்கத்தைத் தொன்மையான இலக்கண நூலாகிய தொல்காப்பியம் 'வள்ளி' எனக் குறிப்பிடுகிறது. இதனை விளக்கும் உரையாசிரியர் இளம்பூரணர் 'முலையிலும் தோளிலும் எழுதிய கொடி' எனக் குறிப்பிடுகிறார். பண்டைத் தமிழ் இலக்கியங்கள் இப்பழக்கத்தைத் 'தொய்யில் எழுதுதல்' எனக் குறிப்பிடுகின்றன.

இப்போது ப்சசை குத்தும் பழக்கம் பழங்குடி மக்களிடமே மிகுதியாகக் காணப்படுகிறது.

இக்கால மக்களிடையே பச்சை குத்திக் கொள்ளும் வழக்கம் பெரிதும் குறைந்து வருவதற்குப் பல காரணங்கள் உள்ளன. இதற்கு மாறாக வேறு வகையில் அழகுபடுத்தும் முறை கையாளப்படுகிறது. இந்த முறையில் போடப்படும் ஓவியமானது சில காலமே நிலையாக இருக்கும். பின் அது அழிந்து விடும். வை.இரா.

**பச்சைமலைக் குன்றுகள்**: தமிழ்நாட்டில் திருச்சிராப்பள்ளி, சேலம் ஆகிய மாவட்டங்களின் எல்லையில் அமைந்துள்ள மலைத் தொடர்களாகும். இக் குன்றுகளின் பரப்பளவு சற்றேறக்குறைய 500 ச.கி.மீ. ஆகும். அவற்றுள் பெரும்பகுதி திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த முசிறி,பெரம்பலூர் வட்டங்களிலும், எஞ்சியவை சேலம் மாவட்டத்தைச் சார்ந்த ஆத்தூர் வட்டத்திலும் அமைந்துள்ளன. இக்குன்றுகள் கடல் மட்டத்தை விட 825 மீட்டர் உயரம் உடையவை. தென்வடலாக இதன் நீளம் 32 கி.மீ. கொண்டதாகும்.

சேலம் மாவட்டத்தைச் சார்ந்த பச்சைமலைக்குன்றுகள், பல பள்ளத்தாக்குகளையும் மலைமுகடுகளையும் கொண்டு, வடக்காகவும்கிழக்காகவும் உயர்ந்து, தென்மேற்கிலுள்ள மேட்டு நிலத்தின் பகுதியாகின்றன. இம்மேட்டு நிலம் திருச்சி மாவட்டத்தின் பகுதியாகவும் தொடர்ந்து நீண்டு செல்கிறது. மேட்டு நிலம் மூன்றுபகுதிகளைக்கொண்டமுக்கோணவடிவமாகும். அவை பக்கலம் சமநிலம் (Pakkalam Flat), மாயம்பாடி, மங்களம் என்பனவாம். இப்பகுதியில் கோட்டங்கல் என்னும் ஆறு பாய்கிறது.

பச்சை மலைக் குன்றுகளின் வடபால் உள்ள பள்ளத்தாக்கில்வேப்படிஎன்னும் ஊருள்ளது. அதற்கு வடக்கில் கங்கவள்ளிக் காடுகளும் (Gangavalli Reserve) வடக்கில் தாழ்ந்த மேட்டு நிலங்களும்

உள்ளன.பச்சைமலைக் குன்றுகளின் வடஎல்லை வேப் பந்தட்டையும் வேலூர்ப் பள்ளத்தாக்குகளுமாகும்.

பச்சை மலைக்குன்றுகளில் மூங்கிற் காடுகள் மிகுதியாக உள்ளன. பயிர்த் தொழில் செய்யப்படும் சமநிலம் பாறைகளுடையது. எனவே, மண்வளம் குறைவு. இம்மலைக்குன்றுகளில் வாழும் மக்கள் மலையாளிகள் எனப்படுவர். இவர்கள் பல வகுப்புகளாகப் பிரிந்துள்ளனர். தாயாதிவகுப் பாகக்கருதப்படுபவர்கள் அண்ணன் தம்பிகளாக உறவு கொண்டாடுகின்றனர்.

பச்சை மலையாளிகள் மூன்று நாடுகளாகப் பிரிந்து வாழ்கின்றனர். அவற்றுள் வெண்நாடு, தெம் பரநாடு மலையாளிகள் திருச்சி மாவட்டத்திலும், அத்திநாடு மலையாளிகள் சேலம் மாவட்டத்திலும் வாழ்கின்றனர். வேளாண்மை செய்யும் நிலத்தைப் பச்சை மலைக் குன்று வாழ் மக்கள் இரு பிரிவுகளா கப் பிரித்துள்ளனர். அவை 1) உழவுக்காடு 2) புனல் காடு என்பனவாம். முந்தையது உழுநிலம்; பிந்தையது உழவுக்குப்பயன்படாத நிலம். இரா.அ.

**பச்சையப்ப முதலியார்**, காஞ்சிபுரம் விசுவ நாத முதலியாருக்கும் பூச்சி அம்மாளுக்கும் கி.பி. 1754 – இல் தம் தாய்வழிப்பாட்டனார் வீட்டில், சென்னைக்கு அண்மையிலுள்ள பெரியபாளையத்தில் பிறந்தார். பிறக்கும் முன்பே தந்தையை இழந்த கார ணத்தால், தாயின் மிகச்சோக நிலையில், பல இன் னல்களை அனுபவிக்க நேர்ந்தது. தாயார், பச்சையப் பருடனும் அவர்தம் இரு தமக்கையாருடனும் சென்னை வந்து, அங்கே பவுனி (Powney) என்னும் ஆங்கிலேயரி டம் 'துவிபாசி'யாக இருந்த பவுனி நாராயண சாமிப் பிள்ளை என்னும் 'துவிபாசி' (Dubash) ஆதரவில் வாழ்ந்து வந்தார். நாளாக ஆகப் பச்சையப்பர் கல்வி கற்று, ஆங்கிலத்தில் தேர்ச்சி பெற்று, எழுதவும் பேச வும் கற்றுக் கொண்டதோடு கணக்கு வழக்கு முறை களையும் அறிந்துகொண்டார். தமக்கையாருக்கும்திரு மணமாயிற்று. தாம் கற்ற கல்வி வழி பொருள்களை வாங்கியும் விற்கவும் செய்து இளம் வயதிலேயே பொருள்தேடத்தொடங்கினார்.தம்பதினாறாம்வயதி லேயே சம்பாதிக்கத் தொடங்கியதோடு, தம் செல் வத்தைச் சமய நெறியிலும் அறவழியிலும் செலவிட்டு மக்களுக்கு உதவினார். இடையில் அக்காலப் படை யில் சேர யாருக்கும் தெரியாமல் சென்றுவிட்டார். எனினும்நாராயணசாமிப்பிள்ளைமறுபடியும்இவரைச் சென்னைக்குக்கொண்டுவந்து, நிக்கோலாசு (Nikholas) என்ற துரையிடம் 'துவிபாசி' யாக அமர்த்தினார். விரைவில் பச்சையப்பர் செல்வம் பெற்றவராகித் தம் தமக்கை மகள் ஐயாளு அம்மாள் என்பவரை மணந் தார். தம் மணத்தின் சின்னமாகக் காஞ்சி ஏகாம்பர நாதர் கோயில் கலியாண மண்டபத்தைக் கட்டுவித் தார்.



பச்சையப்ப முதலியார்

இவர் கி.பி. 1776-இல் தம் இருபத்திரண்டாம் வயதில் தம் செயலிற் சிறந்து, சில மாவட்டங்களில் வரி வசூல் செய்து, அரசாங்கத்துக்கும் (அன்றைய குழும ஆட்சி) சுல்தானுக்கும் தந்து, தாமும் பெருந்தொகை ஈட்டினார். இவர்தம் 28-ஆம் வயதில் சலிவன் (Salivan) என்பவரின் 'துவிபாசி'யாக இருந்து பெரும் புகழும் செல்வமும் பெற்றார். இதற் கிடையில் நவாபுக்கும் தஞ்சைத்துல்சாசி(Duljaji)என்ற மராட்டிய மன்னருக்கும் இடையே உண்டான வேறு பாட்டில் இடைநின்று சந்து செய்து, நாட்டில் அமைதி நாட்டினார். பெருந்தொகையை மன்னருக் குக் கடனாகக் கொடுத்ததோடு, தஞ்சையிலேயே தங்கித் தம் தொழிலையும் சிறப்புறச் செய்தார். தம் முதல் மனைவிக்குப் பிள்ளைப்பேறு இன்மையின் தஞ் சையில் இருந்தபோது, வேதாரணியத்திலிருந்த பழநியம்மாள் என்பவரை மணந்தார். அவருக்கு ஒரு பெண் பிறந்த போதிலும் பச்சையப்பருக்குப் பின் அக்குழந்தை நெடுநாள் வாழவில்லை.

தஞ்சையிலிருந்தபோது சிதம்பரம், கும்பகோ ணம், இராமேசுவரம் ஆகிய தலங்களில் கோயில் பணி கள் பல ஆற்றியதோடு அறக்கட்டளைகளையும் அமைத்தார். காசி முதல் குமரி வரையில் பலப்பல கோயில்கள் இன்றும் பச்சையப்பர் அறக்கட்டளை களை ஏற்று நலம் பெறுகின்றன. சிதம்பரத்தில் ஒரே அமைப்பில் உள்ள நடராசர், கோவிந்தராசர் சந்நிதி

களை இணைத்து மாறுபட்ட இரு சாராரையும் ஒன்று படுத்தினார். சிதம்பரத்தில் இரண்டாம் பெருவிழாவாகிய 'ஆனித் திருமஞ்சனப்' பத்து நாள் விழாவை இவரே முதலிட்டுத் தொடங்கி வைத்தார். கோயில்களில் திருமுறை, பிரபந்தங்கள் ஆகியவை ஓத மானியங்கள் ஏற்படுத்தினார்.

இடையில் வேண்டாதவர்களால் பலஇன்னல்கள் உண்டான போதிலும், இவர் நற்செயல்களாலும் பண்பினாலும் அனைத்தையும் கடந்து மிகு செல்வ ராகி எண்ணற்ற அறப்பணி ஆற்றினார். பின் சென்னை கோமளீச்சுரன் பேட்டையில் தமக்கென அமைந்த மாளிகையில் வாழ்ந்து பணிபுரிந்தார். பல மேலைநாட்டு வணிகர்களும் ஆட்சியாளர்களும் (ஆளுநர் உட்பட) இவர் திறம் வியந்து போற்றினர்.

திருவேங்கட சீயர் என்பவர் இவர் தோற்றத்தை அழகுறக் காட்டியுள்ளார். 'முழங்காலைத் தொடும் நீண்ட கைகளோடும், நீண்ட சதுர முகத்தோடும் அகன்று ஆழ்ந்த கண்களோடும், அழகிய பொலிவோ டும் விரிந்த நெற்றியோடும் உயர்ந்த உருவமுடைய வர் பச்சையப்பர்' எனச் சீயர் கூறுவர்.

கடைசிக் காலத்தில் இவர் வருவாயினைப் பவுனி நாராயணசாமிப் பிள்ளை வசம் ஒப்படைத்து, அனைத்தும் அறப்பணிக்கெனவே ஒதுக்கி ஆவணம் செய்து, தாம் விரும்பிய வண்ணமே திருவையாற்றில் கி.பி. 1794-இல் காலமானார்.

இவர் செல்வத்தைப் பங்குபோட இரண்டாம் மனைவியும் மற்றைய நெருங்கிய உறவினர்களும் முயன்றமையால், நீண்ட வழக்குகளுக்கும் காலதாமதத் துக்கும் பின்னர் கி.பி. 1832-இல் இவர்தம் செல்வம் அனைத்தும் அறத்துக்கெனவே அமைந்தது. பின் அறங் காவலர் குழுவினை நீதிமன்றம் அமைக்க, 9.10.1841 இல் அது செயல்பெற, இவர் பெயரில் பள்ளி தொடங்கப் பெற்றது. இன்று அனைத்துத் திருக்கோயில்களும் இவர்தம் அறம் செழிக்கும் அதே வேளையில், ஐந்து பெருங் கல்லூரிகளும் பல பள்ளிகளும் வேதபாட சாலைகளும் பிற அறச்சாலையும் முறையாக நடை பெற்று வளர்ந்து, இவர்தம் புகழைத் தரணிக்கு அறிவித்துக் கொண்டிருக்கின்றன. அ.மு.ப.

**பசவப்ப சாத்திரி** (**கி.பி. 1843 – 1891**) ஒரு கன்னட மொழிக் கவிஞர்; மைசூர் அரசவைப் புலவர். காளிதாசனுடைய சாகுந்தலத்தை இணையற்ற முறையில் கன்னடத்தில் மொழி பெயர்த்ததால் இவர் 'அபிநவ காளிதாசன்' என்னும் பட்டம் பெற் றார். இவர் தந்தை மகாதேவ சாத்திரி மைசூர் அரசவைப்புலவராக இவருக்கு முன் இருந்தார்.

கன்னட இலக்கிய வரலாற்றில் பழமை புதுமை ஆகிய இரண்டையும் இணைக்கும் பாலம் போன்று இவர் திகழ்ந்தார். இவர் சம்பு காவிய நடையில் சிறந்த நூல்கள் பலவற்றை எழுதியுள்ளார்.

பசவப்ப சாத்திரி தம் ஆறாம் ஆண்டிலேயே பெற்றோர்களை இழந்தார். எனினும் மைசூர் அரசர் 'மும்முடி கிருட்டிணராய' ருடைய மருமகன் 'இலிங்க ராசர்' இவருடைய தனித்திறமையைக் கண்டு இவரது கல்விக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்வித்தார். இளமையிலேயே தருக்கம், வியா கரணம், அலங்காரம் முதலிய துறைகளில் அளவற்ற புலமை எய்தினார்; இசையிலும் வல்லுனராக விளங் கினார். தம்முடைய தனித்திறமையினால் மைசூர் அரசர் போற்றும் வகையில் 18-ஆம் வயதிலேயே அரசருடைய புரோகிதராகவும், அரசவைப் புலவரா கவும் அமர்ந்தார்.

'சிரீ சாமராசேந்திர நாடக சபை' என்னும் அரண்மனை நாடகசபைக்கு 'விக்கிரமோர்வசீயம்', 'உத்தம ராமசரிதம்', 'இரத்தினாவளி', 'சண்ட கௌசி கம்' என்னும் நாடக நூல்களை கி.பி. 1882-இல் மொழி பெயர்த்து உதவியுள்ளார். கன்னட நாடக இலக்கியத்தின் தந்தை என்று மைசூர் மக்கள் இவரைப் புகழ்வர்.

சமசுகிருதப் பெருங்கவிகளின் நாடக நூல்களை மொழி பெயர்த்துக் கன்னட மொழியில் அமைத்துக் கொடுத்தது போன்று, ஆங்கில நாடக ஆசிரியர் சேக்சுபியரின் நாடகமாகிய ஒதெல்லோவைச் 'சூர சேன சரிதம்' என்னும் பெயரில் மொழி பெயர்த் தார். இவையேயன்றி 'கிருட்டிண ராசாப்யுதய', 'சாவித்திரி சரிதம்', 'நீதிசார சங்கிரகம்', 'சிரீமத் தேணுக விசயம்' என்னும் கன்னட நூல் களையும் இயற்றியுள்ளார். இவர் சமசுகிருதத்தில் சில தோத்திரங்களையும் இயற்றியுள்ளார். இவ்வாறு பலவகைகளில் புதுக் கன்னடத்திற்குப் புதிய ஆற்றலை இவர் ஏற்படுத்தினார். கன்னட இலக்கிய வரலாற்றில் நீங்கா இடம் பெற்று, நாடக இலக்கியத் தின் தந்தை எனும் பெருமையுடன் வாழ்ந்த இவர் கி.பி.1891 – இல் இயற்கை எய்தினார். ச.ப.

**பசி**: பசியாவது உணவு வேட்கையாகும். வயிற் றுக்கு உணவில்லாமையால் உடலுக்கு நேரிடும் துன் பமே பசி. பசி வறுமையால் ஏற்படுகிறது. மிடி என்பதும் இவ் வறுமையைக் குறிக்கும். எனவே பசி என்பது வறுமை மிடி எனவும் பொருள்படும். மேலும் இலம்பாடு, ஒற்கம் என்ற இரண்டு சொற்களும் வறுமை எனப் பொருள்படும்.

**பசியின் தன்மை**: பசி, உடலை மிகவும் வருத்தும் தன்மையது என்பதைத் தொல்காப்பியர் மெய்ப்

பாட்டியலில் 'பசி அட நிற்றல்' (மெய்ப், 22) எனக் குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் இங்குக் குறிப்பிடும் பசி வறுமையால் உண்டாவதன்று. காதலன் பிரிவால் ஏற்படும் துன்பத்தைத் தாங்க இயலாத தலைவி உணவை வெறுத்துப் பசியால் வாடுவதை உணர்த்துவதாகும். 'அழிபசி வருத்தம்' என்ற சிறுபாணாற்றுப் படைத் தொடர் (140) பசி அறிவு முதலியனவற்றை அழித்துப் பெரிதும்வருத்தும் என்பதைக் குறிப்பிடுகிறது.

மழை பெய்யவேண்டிய காலத்துப் பெய்யாவிடின் உலகத்தில் பசி நிலைபெற்று வருத்தும் என்ற உண்மையைத் திருக்குறள் உணர்த்துகிறது. மழையின்மையால் உணவில்லாமற் போகும். அதனால் உலகத்துயிர்கள் கடும் பசியால் பெரிதும் துன்பப்படும் என்பதை இக்குறள் தெளிவுபடுத்துகிறது. மேலும், 'நேற்று என்னைக் கொல்வது போன்று வருத்திய வறுமை, (பசி) இன்றும் வருமோ? வருமாயின் யான் என்ன செய்வேன்' என்று பசிக் கொடுமையால் ஒருவனின் உள்ளம் துடிப்பதையும் அந்நூல் புலப்படுத்துகிறது.

'ஒரு பாணன் கையில் இலக்கண முறைமையோடு அமைந்த யாழ்; உடம்பின்கண்,பொருள் கொடுத்துக் காப்பவர் இல்லாமையால் கடும்பசி; அவன் அரையில் மிகவும் கிழிந்து வேர்வையால் நனைந்த ஆடை' என்று புறநானூறு பாணனின் கடும்பசியையும் கொடிய வறுமையையும் உணர்த்துகிறது. பசி பல துன்பங்களைத் தருதலால் அதன் கொடுமை நோக்கி அதனைப் பகை என்கிறார் ஓடைகிழார் என்ற புலவர்.

'நெஞ்சு பொறுக்கு திலையே' எனத் தொடங்கும் பாடலில் கவி சுப்பிரமணிய பாரதியார் நாட்டில் ஏற்பட்ட பஞ்சத்தால் மக்கள் பலரும் பசி மிக்கவராய் உயிர் துடிதுடித்து மடிகின்றார்கள் என்றும், அவர்கள் துன்பங்களைத் தீர்க்க ஒருவழியும் இல்லையே என்றும் பெரிதும் நெஞ்சம்நைந்துருகுவதை உணரலாம். 'கிளிக்கண்ணி' என்ற தலைப்புடைய பாட்டில் அவர் பஞ்சத்தின் விளைவாக ஏற்பட்டுள்ள பசி, நோய் ஆகியவற்றால் பாரத மக்கள் பலர் புழுக்கள் போல் மடிவதை நாட்டிலுள்ள பிற மக்கள் கண்டும் பஞ்சத்தைப் போக்க முயலாமல் சோம்பிக் கிடக்கிறார்கள் என மனமிரங்குகிறார்.

பாரதியார் தம் தந்தையை இழந்தபிறகு மிடியால் மிகவும் தாக்குண்டு வாடியதையும், பசியின் மிகுதியால் மனத்தில் தெளிவும் உரனும் உடலில் வலிமையும் இல்லை என்பதையும் தம் சுயசரிதைப் பகுதியில் உணர்த்துகிறார். இது வறுமையால் நேர்ந்த அவர்தம் பசிக்கொடுமையைப் புலப்படுத்துகிறது.

கடும்பசி நீடிக்குமாயின் உடல் வாடி மெலிவுற்று உயிரும் நீங்கும். ஆகையால் அதை நோய் என்பர். மணிபல்லவத் தீவில் கோமுகிப் பொய்கையிலிருந்து மணிமேகலை அமுதசுரபி என்னும் அட்சய பாத்திரத்தைப் பெறுகிறாள். அப்போது அவளுடன் இருக்கும் தீவ திலகை நீடிக்கும் பசியின் கொடுமையை விளக்கி அதைப் பிணி எனக் குறிப்பிடுகிறாள். அதில் 'பசிப்பிணி உயர்குடிப் பிறப்பைக் கெடுக்கும்; சிறப்பினை அழிக்கும்; வாழ்க்கைக்குத் துணையாகப் பெற்ற கல்வியறிவு நீங்கும்படி செய்யும்; நாணத்தைச் சிதைக்கும்; அழகைக் கெடுக்கும்; பெண்டிரொடு பிறர் வாயிலில் கொண்டுபோய் நிறுத்தும்' என்று கூறுகிறார். பசியினால் விளையும் பொறுத்தற்கரிய பல துன்பங்களைக் கருதி அதைப் பிணி என்பதோடன்றிப் பாவி எனவும் குறிப்பிடுகிறார் மணிமேகலை ஆசிரியர்

வாசவதத்தையின் பிரிவால் பெரிதும் வருந்தும் உதயணனை நோக்கி அவன் தோழர்கள் 'பசியால் மிகவும் வருந்தும் ஒருவன் ஒரு மரத்தில் அழகாகப் பழுத்துக் காட்சியளிக்கிற நச்சுப் பழங்களை இனிய பழங்கள் எனக் கருதி உண்பானாயின், அவை அவனை அழிப்பது போலக் காமமானது அழிக்கும் தன்மையுடையது' எனக் காமத்தின் இயல்பைக் கூறித் தேற்றுகின்றனர்.

என்றும் பிறர் பசியைத் தீர்க்கும் சீரிய பண்புடையவனைப் புறநானூறு 'பசிப்பிணி மருத்துவன்' எனப் புகழ்கிறது. வள்ளலாகிய பண்ணனிடம் பரிசில் பெறப்போகும் இரவலன் வழியில் வருகின்றவரை நோக்கிப் பரிசிலர் பசியினைப் போக்கும் பண்ணனின் இல்லம் இருக்கும் இடம் அருகிலுள்ளதா சேய்மையிலுள்ளதா என வினவுகிறான்.

அதில் பலருக்கும் உணவளித்து அவர்தம் கொடும் பசியைப் போக்கும் பண்ணன் 'பசிப்பிணி மருத்துவன்' எனப் போற்றப்படுகிறான்.

கூத்தர், பாணர், பொருநர், விறலியர் ஆகியோர் வறுமையின் காரணமாகப் பெரிதும் பசியால் வாடும் கலைஞர்கள். அவர்கள் தம் வறுமையையும் பசியையும் தீர்க்கும்பொருட்டு வள்ளல்களை அடைந்து பெரும்பொருள் பெறுவர். அவர்கள் பொருள்பெற்று வரும் வழியில் வறுமையால் வாடும் தம் போன்ற கலைஞர்களைக் காணின், அவர்களும் வறுமை தீரப் பொருள்பெறும் பொருட்டு அவர்களைத் தமக்குப் பொருள் வழங்கிய வள்ளலிருக்கும் இடத்திற்கு வழி கூறி அனுப்புவர்.

மிகவும் பசியால் வாடிய பாணன் தன் விறலியோடு பேகன் என்ற வள்ளலிடம் சென்று பெரும்

பொருள் பெற்றுக் காட்டு வழியே திரும்புகிறான். அவனைப் பசிக் கொடுமையால் வருந்தும் இரவலன் எதிர்ப்பட்டு யாரென வினவுகிறான். அதற்கு அப் பாணன் தானும் பேகனை அடைதற்கு முன்பு அவ் விரவலனை விட மிகவும் வறியவனாய் இருந்ததாக வும், பேகனை அடைந்த பிறகு அவன் தனக்கு வழங் கிய பெரும் பொருளால் செல்வத்தோடு திகழ்வதாக வும் கூறிப் பேகனின் வள்ளன்மையைப் புகழ்கிறான்.

பெருஞ்சித்திரனார் என்ற புலவர் குமணனிட மிருந்து பெரும்பொருள் பெற்றுவந்து அதைக் கொண்டு தாமும் தம் மனைவியும் மட்டும் வாழ எண்ணாமல், அப்பொருளைத் தம் மனைவியிடம் கொடுத்து 'உன்னை விரும்பியவர்களுக்கும் நீ விரும்பு பவர்களுக்கும் உன் சுற்றத்தவருக்கும் அவர்களுடைய கடும்பசி தீரும் வண்ணம் எல்லோருக்கும் வழங்கு வாயாக!' என்கிறார் (புறம்: 163).

போரில் எழினி இறந்துபட்டதைக் குறித்து, அரி சில் கிழார் என்ற புலவர் மிகவும் வருந்தி எமனை விளித்து 'அறமில்லாத கூற்றமே! கடும்பசியால் கலங்கித் துன்பம் நிறைந்த நெஞ்சுடன் எழினியை இழந்து வருந்தும் இவ்வுலகத்தினும், நீ அவனைப் பெரிதும் இழந்து விட்டாய்!' என இரங்கிப் பாடு கிறார். இதனின்றும் எழினி உலகின் கடும்பசியைத் தீர்த்து அதனை வாழ்வைத்தவன் என்பது புலனா கிறது. எமன் அவனைப் பெரிதும் இழந்துவிட்டான் என்பது, பொருகளத்தில் எழினி எமனுக்குப் பருகப் பல உயிர்களைத் தந்திருப்பான் என அவன்தன் வீரத்தைக் குறிப்பதாகும்.

மேற்கூறிய சான்றுகள் சங்க காலத்தில் வள்ளல் கள் பிறர் பசி தீர்ப்பதைப் பேரறமாகக் கொண் டொழுகினர் என்பதைப் புலப்படுத்துகின்றன. திருக் குறளும் இப்பேரறத்தை வலியுறுத்துகிறது.

தவம் வல்லவருக்கு வலிமையாவது தம் பசியைப் பொறுத்துக் கொள்ளுதலாகும். அவ்வலிமையும் பிறர் பசியைப் போக்குவாரது ஆற்றலுக்குப் பிற்பட்டதே யாகும் எனத் திருக்குறள் கூறுகிறது. தவத்தால் மேன்மை எய்தியவரைக் காட்டிலும் பிறர் பசியைப் போக்குபவர் மேன்மையுடையவராவர் என்பது அக் குறட்பாவின் கருத்து.

வறியவர்களின் உடலை அழிக்கத்தக்க கடும்பசி யைத் தீர்ப்பது, செல்வமுடையவன் தன் பொருளை வைத்தற்குரிய பாதுகாப்பான இடமாகும் என்கி றார் திருவள்ளுவர்.

மேலும், திருவள்ளுவர், தன் உணவை வறியவர் களுக்குப் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்ணும் இயல்புடையவனைப் பசி என்னும் கடும் நோய் தீண் டாது என்கிறார். பிறர் பசியை நீக்கும் சீரிய அறத் தைச் செய்கின்றவன் என்றும் பசியின்றி வளமுற வாழ்வான் என்பது இதன் கருத்து (குறள், ஈகை:7). சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களில் இவ்வறத்தைப் போற்றும் திறம் கற்போர் நெஞ்சை நெகிழ்விப்பதாகும்.

பொய்ச் சான்று சொன்ன தன் மகனைப் பூத சதுக்கத்திலுள்ள பூதம் கொன்று தின்பதைக் கண்ட தாய் கதறுவதைக் கோவலன் பார்த்துப் பெரிதும் இரங்கி, அவளை அழைத்துச் சென்று அவளுடைய பசியையும் அவள் சுற்றத்தார் அனைவருடைய பசி யையும் தீர்த்து, அவர்களைப் பல ஆண்டுகள் பாது காத்தனன். அதனால் அவனை மாடலன் என்ற மறையோன் 'இல்லோர் செம்மல்' – அதாவது வறி ஞர்களின் துன்பங்களைத் தீர்க்கும் அருங்குணத் தலைவன் எனப் புகழ்கிறான் (சிலப் , அடைக்கலக் காதை, அடி:78 – 90).

காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திர விழாவில் மறக் குடிப் பெண்கள் காவல் பூதத்தின் பலிப் பீடிகையில் அவரை, துவரை, பூ முதலானவற்றைச் சொரிந்து, குரவைக் கூத்தாடித் தம் மன்னன் நாடு முழுதும் பசியும் பிணியும் பகையும் நீங்கி மழையும் வளமும் சுரக்க வேண்டுமென வாழ்த்துகிறார்கள். பசியே பிணிக்கும் பகைக்கும் காரணமாகலின் பசி நீங்க வேண்டுமென முதலில் குறிப்பிட்டு வாழ்த்துகிறார் கள் எனலாம். (சிலப் , இந்திரவிழவூர் எடுத்தகாதை, அடி:67–75).

மணிமேகலை கோமுகிப் பொய்கையிலிருந்து உணவு சுரக்கும் அமுத சுரபி என்னும் பாத்திரத் தைப் பெற்ற பின்பு, தன் தாய் மாதவியோடும் தோழி சுதமதியோடும் அறவணவடிகளை அடைந்து அவரைத் தொழுகிறாள். அவர் அவளை நோக்கி, 'நீ பெறுதற்கரிய பாத்திரத்தைப் பெற்றுள்ளாய்; பிறருடைய பசிப்பிணியைத் தீர்த்தலே மக்களுக்கும் தேவர்க்குமுரிய தலையாய அறம்' என அறிவுறுத்து கிறார்.

காஞ்சி நகரத்தில் மழையின்மையால் வறுமை மிகுந்து பல உயிர்களும் பசியால் இறந்தன என்பதை மணிமேகலை அறிந்து அங்குச் சென்று ஒரு சோலை யில் தங்கிக் குருடர், செவிடர், கால்முடமானோர், அகதிகள், ஊமையர், பிணியுற்றோர், வறுமையுற் றோர், ஆயிரக்கணக்கான விலங்கின் கூட்டம் ஆகிய அனைத்து உயிர்களுக்கும் அமுத சுரபியைக் கொண்டு உண்பித்து அவ்வுயிர்களின் பசித் துன்பத்தை அகற்று கிறாள். உண்ண உண்ண மேன்மேலும் உணவு பெரு

ரும் தன்மை வாய்ந்த அமுதசுரபியைச் சீத்தலைச் சாத்தனார் 'பசிப் பிணி மருந்து' எனப் போற்று கிறார்.

சொல்லரும் துன்பங்களைத் தரும் பசி நோயைப் போக்குவோரின் புகழ் சொல்லில் அடங்காது.

செல்வர்களுக்கு அளிப்பது பயன் கருதிச் செய்வ தாகலின் அது அறத்தை விலை பேசுவதாகும் என் றும், ஏழைகளின் கடும் பசியைத் தீர்ப்பதே உண்மை யான அற வாழ்க்கை என்றும், உலகில் வாழும் ஏழை களுக்கு உணவு கொடுத்தோர் உயிர் கொடுத்தவ ராவர் என்றும் மணிமேகலை பசி தீர்த்தலின் இன்றி யமையாமையினையும் மேன்மையினையும் வற்புறுத் திக் கூறுகிறது.

நாட்டில் வாழும் மக்கள் ஒவ்வொருவருக்கும் உண்ணப் போதிய உணவு கிடைக்கும்படி செய்ய வேண்டும். அந்த நிலைக்கு நாடு உயரவேண்டும் என்ற கருத்தமையப் பாரதியார்

'வயிற்றுக்குச் சோறிடவேண்டும்-இங்கு
வாழு மனிதருக் கெல்லாம்'
(பாரதியார், முரசு:பா.23)

என்கிறார்.

பொருளுடையவர் அதன் பயனைப் பெற வேண்டு மாயின் பசியால் வாடுவோர்க்குப் பொருளை வழங்கி அவர்கள் அனைவரும் உண்டு பசி நீங்குமாறு செய்தல் வேண்டும் என்ற கருத்தைப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்

'இயல் பொருள் பயன்தர மறுத்திடில் பசிப்போம்
ஈவதுண்டாம் எனில் அனைவரும் புசிப்போம்'.
(புதிய உலகு செய்வோம்: அடி: 9-10)

என்ற அடிகளில் அறிவுறுத்துகிறார். 'செல்வத்துப் பயனே ஈதல்' என்ற புறநானூற்றடியின் (பா. 189) கருத்து இவ்வடியில் அமைந்திருத்தலை உணரலாம்.

பசி மிகவும் வருத்துகிறது எனச் சொன்னால் செய்த பாபமே அப்பசிக்குக் காரணம் என்பார்கள் என்று எடுத்துக் கூறும் பாரதிதாசன், உடலை வாட் டும் நோயையும், பெரும் பசியையும் இவற்றால் ஏற் படும் பல கவலைகளையும் அறவே ஒழிக்கப் போராட வேண்டும் என்கிறார்.

'ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கைய ரல்லா தவர்க்கு' (கயமை:7).

இக்குறளில், பசித் துன்பத்தால் வாடும் ஏழைகளுக்கு அவர்களின் பசி தீர்த்தற்குத் தம் பெரும் பொருளில் தாமே மனமுவந்து சிறிதளவுகூடக் கொடுத்துதவாத வர் கயவர்களாவர் என்றும், ஆனால், அவர்கள் தம் கன்னத்தை அடித்து உடைப்பவர்களுக்கு அஞ்சித் தம் பொருளைக் கொடுப்பர் என்றும் திருவள்ளுவர் உரைக்கிறார். கயவர்கள் தம் பொருளில் ஓர் இம்மி யும் கொடுத்துதவமாட்டார்கள் என்பதை 'ஈர்ங்கை விதிரார்' என்ற தொடர் உணர்த்துகிறது. தாம் உணவு உண்ட கையைக்கூட உதற மாட்டார்கள் என்பது இதன் பொருள். அதாவது, அக்கையில் எஞ்சி யிருக்கும் சில சோற்றுப் பருக்கைகள்கூடப் பிறருக்குக் கிடைக்கக் கூடாது என்ற கீழ்த்தரமான எண்ண முடையவர்கள் கயவர்கள். அவர்களை வன்முறையால் தாக்கினாலன்றி அவர்களிடமிருந்து உணவு பெற்றுப் பசி தீர்க்க இயலாது என்பதை இக்குறட்பா குறிப் பிடுகிறது.

'நாட்டில் ஒருவரும் பசியால் வாடுதல் கூடாது; நாட்டில் எவனொருவனுக்காவது உண்ண உணவு இல்லையெனில் இவ்வுலகை அழித்திடுவோம்; இதனை நாம் ஒரு விதியாகக் கொண்டு எந்நாளிலும் கடைப் பிடிக்க வேண்டும்' என்று முடிவாகப் பாரதியார் உணர்ச்சி பொங்க வன்முறையை அறிவுறுத்துகிறார்.

'இனியொரு விதி செய்வோம்-அதை
எந்த நாளும் காப்போம்
தனியொருவனுக்கு உணவிலை எனில்
சகத்தினை அழித்திடுவோம்'
(பாரத சமுதாயம்)

நாட்டில் பசி அறவே ஒழியவேண்டும் என்பதில் பாரதி யார் கொண்டுள்ள உறுதி இவ்வடிகளிலிருந்து நன்கு புலனாகிறது.

'பசியால் வாடும் ஏழைகள், பிறருக்கு உதவாமல் பொருளைக் குவித்து வைத்திருக்கும் செல்வர்களை அடித்துத் துன்புறுத்துவார்களாயின், அதற்கு அஞ்சி அச் செல்வர்கள் ஒரு நொடியில் தம் செல்வத்தை இல்லாதவர் பலருக்கும் தருவர்; அதனால் பொது வுடைமை நாட்டில் நிலைபெறும்!' என்ற கருத்தை

'ஓடப்ப ராயிருக்கும் ஏழையப்பர்
உதையப்ப ராகி விட்டால் ஓர் நொடிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பப்பர் ஆய்விடுவர் உணரப்பா நீ'
(உலகப்பன்பாட்டு, பா.5).

என்ற இவ்வடிகளில் பாரதிதாசன் உணர்த்துகிறார். இதனின்றும் நாட்டில் ஏழை-செல்வர் வேற்றுமை நாளுக்குநாள் மிகுந்து வறுமையும் பசியும் நிலைபெறு மாயின் நாடு செழிக்கப் பொதுவுடைமைக் கொள் கையே ஏற்ற வழியாக அமையும் என்றும், அது வன்

முறைப் புரட்சியாலேயே நிறைவேறமுடியும் என்றும் பாரதிதாசன் கருதுகிறார் என்பது புலனாகிறது.

தா.ஏ.ஞா.

**பசிபிக்குப் பெருங்கடல்** உலகில் உள்ள கடல்களுள் மிகப் பெரியது ஆகும். இக்கடலின் பெரும் பான்மையான இடங்கள் மற்றக் கடல்களைப் போலன்றிச் சீற்றங்களற்று அமைதியான நிலையில் இருப்பதால் 'அமைதிக் கடல்' எனப் பொருள்படும் வகையில், மெகெல்லன் என்பவர் இப்பெருங்கடலுக்குப் பசிபிக்கு எனப் பெயர் சூட்டினார் (PACIFIC ocean). இருப்பினும், இக்கடலின் பெரும்பகுதி அமைதியற்றதாகவே உள்ளது.

இப்பெருங்கடலானது புவியின் மொத்தப் பரப்பில் மூன்றில் ஒரு பங்கைக் கொண்டுள்ளது. இப்பெருங்கடல் ஏறக்குறைய 16,52,45,000 ச.கி.மீ. அளவு பரந்து விரிந்துள்ளது. இப்பெருங்கடலானது மேற்கில் ஆசியப் பெருநிலத்திலிருந்து கிழக்கில் அமெரிக்கப் பெருநிலங்கள் வரையிலும், வடக்கில் பேரிங்கு (Bearing) நீர்ச் சந்தியிலிருந்து தெற்கில் அண்டார்டிக்கா வரையிலும் பரந்து காணப்படுகிறது. இது சற்றேறக்குறைய, முக்கோண வடிவில் அமைந்துள்ளது. இதன் அடிப்பாகம் அண்டார்டிக்கா பகுதியிலும், தலைப்பாகம் ஆர்டிக்குப் பகுதியிலும் அமைந்துள்ளது.எனினும், இப்பெருங்கடல் அடிப்பாகத்தைவிட மத்திய பகுதியில், நிலநடுக்கோட்டுப் பகுதியில் மிகுதியான அகலம் கொண்டது. இப்பெருங்கடல் கடற்கரைப் பகுதிகளில் ஒழுங்கற்றுக் காணப்படுகின்றது. இது ஆசியப் பெருநிலப் பகுதியோடு இணையும் பகுதிகளில், சிறு கடல்களால் பெருநிலத்திலிருந்து பிரிக்கப்படுகின்றது. இப்பகுதிகளில் ஒகாட்சுக்கடல், மஞ்சட் கடல், சப்பான்கடல், கிழக்குச் சீனக்கடல் போன்ற கடல்கள் இப்பெருங்கடலைச் சூழ்ந்துள்ளன.

இக்கடலில் எண்ணற்ற சிறு சிறு தீவுகள் காணப்படுகின்றன. இப்பெருங்கடலில் மட்டும் 20,000க்கும் மேற்பட்ட சிறிதும் பெரிதுமான தீவுகள் காணப்படுகின்றன. இத்தீவுகள் பெரும்பாலும் நில இறக்கத்தாலும், எரிமலைகளினாலும் உண்டானவையாகும். எடுத்துக்காட்டாகப் பிரிட்டிசுக் கொலம்பியாவில் உள்ள அலூசியன் (Aleutian) தீவுகள், கடற்கரையை ஒட்டியுள்ள பகுதிகள் நீரினால் சூழப்பட்டமையால் உண்டானவையாகும். சப்பான் தீவுகள், பிலிப்பைன் தீவுகள், மேற்கிந்தியத் தீவுகள் போன்றவை-எரிமலைகளினால் உண்டானவையாகும். மேலும் சில தீவுகள் கடல் வாழ் பிராணிகளால் ஆன முருகைப் பாறைகளால் உண்டானவையாகும்.

இப்பெருங்கடல், ஆழத்தில் இடத்திற்கு இடம் வேறுபடுகின்றது. சில இடங்களில் 10,000 மீட்டருக்கும் மேற்பட்ட ஆழம் உடையதாக உள்ளது.

சான்சுட்டன் என்பவர் இப்பெருங்கடலை வடக்குப் பசிபிக்கு, மத்திய பசிபிக்கு, தெனமேற்குப் பசிபிக்கு, தென் கிழக்குப்பசிபிக்கு என நான்கு பிரிவுகளாகப் பிரித்துள்ளார்.

**வடக்குப் பசிபிக்கு:** இப்பகுதி மத்திய பகுதியை விடச் சற்று ஆழம் குறைந்த பகுதியாகும். இப்பகுதியில் நீரின் சராசரி ஆழம் 5000 மீட்டரிலிருந்து 6000 மீட்டர் வரை காணப்படுகின்றது.

**மத்திய பசிபிக்கு:** இப்பகுதியானது மிக ஆழமான பகுதிகளைத் தன்னகத்தே கொண்டது. இப்பகுதி மற்றப் பகுதிகளைவிட மிக்க ஆழம் கொண்டதாகும். இப்பகுதியில் கடல் நீரின் ஆழம் 8000 மீட்டரிலிருந்து 10,000 மீட்டர் வரை காணப்படுகிறது. இப்பகுதிகளில் எரிமலைகளினால் உண்டான தீவுகள மிகுதியாகக் காணப்படுகின்றன.

**தென்மேற்குப் பசிபிக்கு:** இப்பகுதியானது ஆழம் குறைந்த பகுதியாகும். இப்பகுதியில் சராசரி ஆழம் 4000 மீட்டர் ஆகும். இப்பகுதியில் மத்திய பசிபிக்குப் பகுதியில் காணப்படுவது போல் தீவுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**தென்கிழக்குப் பசிபிக்கு:** இப்பகுதியானது தொடர்குன்றுகளும் பீடபூமிகளும் கொண்டது. இப்பகுதியில் மேற்குப் பகுதியைப் போல் சிறுகடல்கள் காணப்படுவதில்லை.

**பசிபிக்குப்பெருங்கடல் நிலத் தோற்றங்கள்:** புவியின் மேற்பரப்பில் காணப்படுவது போலவே பசிபிக்குப் பெருங்கடலின் கடலடி நிலப்பகுதிகளிலும் வேறுபட்ட நிலத் தோற்றங்கள் காணப்படுகின்றன.

**கண்டத்திட்டுகள்:** கண்டத்திட்டு என்பது கடற்கரையிலிருந்து ஏறத்தாழ 1000 மீட்டர் ஆழம் வரை காணப்படும் மண் சரிவினைக் கொண்ட பகுதியாகும். இப்பெருங்கடலின் கிழக்குக்கரைப் பகுதிகளில் இவ்வகையான கண்டத்திட்டுகள் காணப்படுகின்றன. இக்கண்டத்திட்டுகள் 160கி.மீ. முதல் 1600கி.மீ. அகலம்வரை பரந்து காணப்படுகின்றன.

**தொடர் குன்றுகளும் பீடபூமிகளும்:** இப்பெருங்கடலில் நீருக்கு அடியில் தொடர்குன்றுகளும் பீடபூமிகளும் காணப்படுகின்றன. கிழக்குப் பசிபிக்குத் தொடர்குன்றானது கடலடியிலிருந்து ஏறத்தாழ 4000 மீட்டர் உயரம் வரை உள்ளது. இது மத்திய அமெரிக்கப் பகுதியிலிருந்து தென்மேற்காக ஏறத்தாழ 1600 கி.மீ. அகலம் பரந்து காணப்படுகிறது.

மேற்குத்தொடர் குன்றானது இக்கடலில் 20° தெற்குக் குறுங்கோட்டிலிருந்து 40° தெற்குக் குறுங்கோடுவரை பரந்து, பீடபூமியைப் போல் காணப்படுகிறது. தென்மேற்குப் பசிபிக்குப் பீடபூமியானது கடலடியிலிருந்து ஏறக்குறைய 4000 மீட்டர் உயரம் கொண்டதாக உள்ளது. இவைகளன்றிப் பசிபிக்குப் பெருங்கடலில் எண்ணற்ற கடற் குன்றுகளும், குறுங்குன்றுகளும் ஆங்காங்கே பரந்து காணப்படுகின்றன.

இத்தகைய உயர்நிலத் தோற்றங்களன்றிக் கொப்பரைகள் (basins), ஆழ்கடல் குடாக்கள் போன்ற அமைப்புகளும் பசிபிக்குப் பெருங்கடலில் காணப்படுகின்றன. கொப்பரைகள் என்பவை ஆழம் மிகுந்த பரந்து பட்ட குழிகளாகும். இக்கொப்பரைகள் 5000 மீட்டருக்கும் மேற்பட்ட ஆழம் உடையவையாகும். இத்தகைய கொப்பரைகளுள், அலூசியன் கொப்பரை, பிலிப்பைன் கொப்பரை, மேற்குக் கரோலின் கொப்பரை, பிசிக் கொப்பரை, கிழக்கு ஆசுத்திரேலியக்கொப்பரை போன்றவை குறிப்பிடத்தக்கவையாகும்.

கொப்பரைகளைப் போலவே ஆழம் மிகுதியான மடுக்களும் (Deeps), பேரகழிகளும் (Trenches) இப்பெருங்கடலில் காணப்படுகின்றன. இப்பெருங்கடலில் 32 குறிப்பிடத்தக்க மடுக்களும், பேரகழிகளும் காணப்படுகின்றன. பெரும்பாலும் இத்தகைய தாழ் நிலத் தோற்றங்கள் இப்பெருங்கடலின் மேற்குப் பகுதியில் மிகுதியாகக் காணப்படுகின்றன. அவற்றுள் அலூசியன் பேரகழி, (Aleutian trench), குரில் பேரகழி (Kuril trench), பிலிப்பைன் பேரகழி (Philippine Trench), நீரோ மடு (Nero deep) போன்றவை மிகவும் முக்கியமானவையாகும். அலூசியன் பேரகழி, 7679 மீட்டர் ஆழமும், குரில் பேரகழி 10378 மீட்டர் ஆழமும், பிலிப்பைன் பேரகழி 10497 மீட்டர் ஆழமும் நீரோ மடு 9635 மீட்டர் ஆழமும் கொண்டுள்ளன.

**பசிபிக்குப் பெருங்கடலின் முக்கியத்துவம்:** இத்தகைய சிறப்புகளைக் கொண்ட பசிபிக்குப்பெருங்கடலானது பல்வேறு வகையில் முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. இப்பெருங்கடலானது இதனைச் சூழ்ந்துள்ள நிலப்பகுதியின் கால நிலையில் வெப்பம், குளிர் ஆகியவற்றின் தன்மையைக் கட்டுப்படுத்துகிறது. புதிய உலகிற்கும் பழைய உலகிற்கும் இடையில் ஒரு பாலம் போல் அமைந்து, இரு உலகிற்கும் இடையில் எளிதான நீர்ப்போக்குவரத்துத் தொடர்பினை உண்டாக்கியுள்ளது. இப்பெரு நீர்ப்பரப்பின் காரணமாகப் பொருட்போக்குவரத்தில் குறிப்பிடத் தக்க அளவு செலவு குறைகிறது. இது ஒரு போக்குவரத்துத் தளமாக அமைந்ததோடன்றி, எண்ணற்ற வள ஆதாரங்களைக் கொண்ட ஒரு களஞ்சியமாகவும்விளங்குகின்றது. இப்பெருங்கடலின் நீரிலும் நிலத்தடியிலும் கணக்கிடமுடியாத அளவு வள ஆதாரங்கள் உள்ளன. கடல் நீரில் பல்வேறு வகையான கனிமங்களும் இரும்பும் காணப்படுகின்றன. நிலத்தில் உள்ள ஆதாரங்கள் தீர்ந்து போகின்ற காலத்தில், இப்பெருங்கடலின் நீர்த்திறன் அவ்வாதாரங்களை அளிக்கக் கூடிய ஒரு மாற்றாக அமையும் என்பதில் ஐயமில்லை. பிற்காலத்திற்கு உதவுவதோடன்றி இக்காலத்திலும் எண்ணற்ற வளங்கள் கடலடி நிலப்பரப்பிலிருந்து பெறப்பட்டு வருகின்றன. இப்பெருங்கடலின் கண்டத்திட்டுப் பகுதிகளில் பெரும்பான்மையான இடங்களில் பெட்ரோலியமும் இயற்கை வாயுவும் பெறப்படுகின்றன. இக்கடலில் வாழக்கூடிய மீன் போன்ற உயிரினங்கள் கிழக்கு ஆசியப் பகுதிகளிலும் மேற்கு அமெரிக்கப் பகுதிகளிலும் வாழக்கூடிய மக்களுக்கு ஒரு முக்கியமான உணவுப் பொருளாக உள்ளது. இவைகளின் மூலம் ஆண்டொன்றுக்கு கோடிக் கணக்கான ரூபாய் வருமானமும், ஆயிரக்கணக்கான மக்களுக்கு வேலை வாய்ப்பும் கிடைக்கின்றன. எனவே, பசிபிக்குப் பெருங்கடலானது இயற்கை, மக்களுக்களித்த ஒரு நன் கொடையாகக் கருதப்படுகிறது. ம.பு.

**துணை நூல்கள்:**


Gabler, Sager, Brazier, Pourcian, 'Essentials of Physical Geography, Holt Rinehart and Winstore, New York, 1977.

Sharma R.C., Oceanography for Geographers, Chaitanya Publishing House, Allahabad, 1970.


*பசுடோ:* பசுடோ மொழி, ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்திலேயே, இந்தியாவின் வடமேற்கு எல்லை மாகாணத்தின் (இன்றைய பாகிசுத்தான் நாட்டுள் அடங்கிய இடங்கள்) முக்கிய மொழியாகக் கருதப்பட்டு வந்தது. அது அங்கு 90 விழுக்காடு மக்களால் பேசப்பட்டு வந்தது. ஆப்கானிசுத்தானத்தின் தேசிய மொழியாக இருந்து வந்த 'தாரி' 1936-இன் அரசு ஆணைப்படி பாரசீக மொழிக்குப் ('Dari', Persian) பதிலாகப் பசுடோ அந்நாட்டின் தேசிய மொழியாக ஆயிற்று. ஆனால், இப்போது ஆப்கானிசுத்தானத்தில் பசுடோ மொழியோடு பாரசீக மொழியும் தேசிய மொழி மதிப்பைப் பெற்றுள்ளது.

ஆப்கானிசுத்தானத்தின் பெரும்பான்மை மக்களால் பேசப்பட்டு வரும் மொழி பசுடோ. இம்மொழி பேசுவோர் 1950 கணக்கெடுப்பின்படி, 55 இலட்சம் மக்கள் ஆவர். ஏறத்தாழ 78 இலட்சம் மக்களின் இரண்டாம் மொழியாகவும் இது விளங்கு

கிறது. ஆப்கானிசுத்தானில் மட்டுமன்றிப் பாகிசுத் தானிலும் இம்மொழி பேசப்படுகிறது. இரு நாட்டிலும் உள்ள பசுடோ மொழி பேசுவோர் ஏறத்தாழ ஒரு கோடி மக்கள் ஆவர்.

ஆப்கானிசுத்தானத்தின் மக்களைப் 'பக்டுன் அல்லது பட்டாணியன்' (Pathans) என்று குறிப்பிடுவர். பட்டாணியருடைய பழக்கவழக்கங்கள் வாழ்க்கை நெறிகளைக் குறிக்கும் வகையில் பசுடோ என்னும் பெயர் அமைந்ததாகக் கூறுவர்.

உலகில் உள்ள மொழி இனங்களில் முக்கிய இனமாகக் கருதப்படுவது இந்தோ ஐரோப்பிய மொழி இனமாகும். பசுடோ, இந்தோ ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் வடகிழக்குப் பிரிவைச் சேர்ந்தது. இது இந்தோ ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் உட்பிரிவான கிழக்கு இரானிய மொழிக் கிளையைச் சேர்ந்தது. இரானியன் மொழியைப் பழைய இரானியன், இடைக்கால இரானியன், இக்கால இரானியன் என மூன்று பிரிவுகளாகப் பிரிப்பர். இக்கால இரானியன் மொழிகளில் பாரசீகம், குர்திசு, பசுடோ போன்றவை முக்கியமான மொழிகளாகும். பசுடோ மொழியில் சுமசுகிருதம், அரபி மொழி ஆகியவற்றிலிருந்து மிகுதியான சொற்கள் கலந்துள்ளன எனக் கூறுவர். இம்மொழியில் உள்ள நாவளை ஒலிகள் சமசுகிருதமொழியின் செல்வாக்குக் காரணமாக ஏற்பட்டவை என்பர். மேலும், பழைய இரானியனின் மொழிக் கூறுகள் பல பசுடோவில் உள்ளன என்றும் அறிஞர்கள் கூறுவர்.

ஆப்கான் நாடு அமைக்கப்பட்ட பின்னர்த்தான் (கி.பி. 18-ஆம் நூ.) பசுடோ மொழி சிறப்புப் பெறத் தொடங்கிற்று. அக் காலத்தில் ஆப்கானிசுத்தானத்தில் ஏற்படுத்தப்பெற்ற பசுது தொலனா (Pashtu Tolana) அல்லது பசுது கழகம் (Pashtu Society) என்னும் அமைப்பு, பசுடோ மொழியின் இலக்கியப் பெருமையையும், பசுடோ மக்களின் வரலாற்றுச் சிறப்புடைய பாரம்பரியப் பெருமையையும் கூறிப் பசுடோ மொழியின் சிறப்பை வெளிப்படுத்துவதில் பெருமுயற்சி எடுத்துக்கொண்டது. இம்மொழியினைக் கல்விக் கூடங்களில் பயிற்று மொழியாகவும், மக்கள் தொடர்பு மொழியாகவும் ஆக்குவதற்கு அக்கழகம் பெருமுயற்சி மேற்கொண்டது. அதன் பயனாக அது வரை தேசிய மொழியாக இருந்த பாரசீக மொழியின் இடத்தை இம்மொழி கைப்பற்றியது.

பசுடோவில் பல கிளைமொழிகள் உள்ளன. அவற்றைத் தெற்கு, வடக்கு என்ற இரு பெரும் பிரிவில் அடக்குவர். ஆப்கானிசுத்தானிலுள்ள கந்தகர் (Kandahar) நகரத்தை ஒட்டிப் பேசப்படும் பசுடோ தெற்குப் பிரிவில் அடங்கும். அதனைக் கந்தகர் கிளைமொழி அல்லது பசுடோ (Pastto) என்று கூறுவர். பாகிசுத்தானிலுள்ள பெசாவர் (Peshawar) நகரத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் பேசப்படும் பசுடோவை வடக்குப் பிரிவில் அடக்குவர். இதனைப் பெசாவர் கிளைமொழி அல்லது பக்தோ (Pakhto) கிளைமொழி என்று கூறுவர். இவை தவிரக் கிழக்கு, மேற்கு வழக்குகளும் உள்ளன. ஆப்கானிசுத்தானம் பாகிசுத்தான் எல்லையை ஒட்டி 'அப்ரிதி' (Afridi), வாசிர் (Wazir) என்னும் பழங்குடி மக்கள் உள்ளனர். அவர்கள் பேசும் பசுடோவும் தனிக் கிளைமொழியாகக் கருதப்படுகிறது. இவ்வாறு பல கிளைமொழிகள் இருப்பினும் ஆப்கானிசுத்தானத்தில் பேசப்படும் பசுடோவை நிலைமொழியாக (Standard language) கொள்கின்றனர்.

இலக்கியப் பசுடோவின் பழைய எழுத்துச் சான்றுகள் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கிடைக்கிறது. அக் காலகட்டத்தில்தான் ஆப்கானிசுத்தானமும் அதன் அண்டை நாடுகளும் மொகலாயப் பேரரசின் கீழ் இருந்தன என்பது குறிப்பிடத்தக்கது. அதனால், அரபி எழுத்து முறையைப் பின்பற்றி இம்மொழி எழுதப் பெற்றது. ஆயினும் இம்மொழியிலுள்ள சில ஒலிகளைக் குறிக்க அரபி நெடுங்கணக்கிலுள்ள எழுத்துகள் போதாமையால் சில புதிய எழுத்து வடிவங்களை உருவாக்கிக் கொண்டனர். பசுடோ ஆப்கானிசுத்தானத்தின் தேசிய மொழியாக ஆனதிலிருந்து பசுடோ நெடுங்கணக்கின் தெளிவிற்காகப் பல மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. ஆனால், பாகிசுத்தானில் பேசப்படும் பசுடோ மொழி, பேச்சு வழக்கை அடிப்படையாகக் கொண்டுள்ளதால் பேச்சு வழக்கிலுள்ள சில சிறப்பான ஒலிகளைக் குறிக்க உருது வரி வடிவங்கள் பயன்படுத்தப் படுகின்றன.

அரபி எழுத்து முறை மெய்யெழுத்தை (Consonant) அடிப்படையாகக் கொண்டது. அதாவது, எளிய அமைப்புடைய உயிரொலிகள் இம்மொழியில் காணப்படுகின்றன. ஆனால், பல சிக்கலான உயிரொலி அமைப்புகளைக் கொண்ட பசுடோ மொழிக்கு அரபி எழுத்து முறை பொருந்தாது. இருப்பினும் பல அரசியல் காரணங்களை முன்னிட்டுப் பசுடோ மொழி அரபி நெடுங்கணக்கைப் பின்பற்றி எழுதப் பட்டு வருகிறது. ஆப்கானிசுத்தானத்தின் அண்டை நாடான ஈரானின் பாரசீக மொழிக்கு இதே போன்ற ஒரு நிலை காணப்படுவது குறிப்பிடத் தக்கது.

அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்து உயிரொலிகள் பசுடோவில் உள்ளன. பசுடோவின் மூலமொழியின் (Proto language) உயிரொலிகளில் குறில், நெடில் வேறுபாடு காணப்பட, இப்பொழுது பசுடோவில் இவ்வேறுபாடு மறைந்து வருகிறது என்பர். இம்மொழியில் அசை அழுத்தம் (Stress) ஒலியனாக

விளங்குவது குறிப்பிடத்தக்கது. உரத்த (Loud), மெலிந்த (Weak), இடைப்பட்ட (Medium) என்னும் மூன்று விதமான அசை அழுத்த ஒலியன்கள் பசுடோ வில் உள்ளதாகக் கூறுவர்.

முன்னரே குறிப்பிட்டது போன்று சமசுகிருதத்தின் செல்வாக்கினால் இம்மொழியில் (LC.t.),ண(n), ள (l) என்னும் நாவளை (Retroflex) ஒலிகள் உள்ளன. மேலும், த்ச (ts, dz) என்னும் பல் அடைப்புரசொலிகள் (Dental affricates), உள்நா ஒலி (q), (Uvular), குரல்வளை அடைப்பொலி (Glottal stop), குரல் வளை உரசொலி (Glottal fricative) போன்ற ஒலிகள் இம்மொழியிலுள்ள குறிப்பிடத்தக்க ஒலிகளாகும். நுனிநா நுனியண்ண உரசொலிகளும்(s,z) கடையண்ண உரசொலிகளும்(Xr) இம்மொழியில் காணப்படும் சிறப்பான ஒலிகளாகக் கருதப்படுகின்றன.

மொழி முதலில் இருமெய்கள் மயங்கி வருதலும், மூன்று மெய்கள் மயங்கி வருதலும் இம்மொழியின் இயல்பாகும்.

ஆண்பால், பெண்பால் என்னும் பகுப்பு உயர்திணைச் சொற்களில் மட்டுமன்றி அஃறிணைச் சொற்களிலும் காணப்படுவது இம்மொழிக்குரிய சிறப்பாகும்.

பன்மை விகுதிகளாக, உன, ஆன், எ,இ, ஐ போன்றன காணப்படுகின்றன.இவை வட்டாரவழக்கு வேறுபாடுகளைக் காட்டுவதாகவும் அமைகின்றன. பன்மை விகுதிகள், ஆண்பால் பெயர்ச் சொற்களுக்கென்றும் பெண்பால் பெயர்ச் சொற்களுக்கென்றும் தனித்தனி விகுதிகளைக் கொண்டிருப்பதும் நோக்கத்தக்கது.சிலபெயர்ச் சொற்கள் மேற்படி ஒழுங்கமைவுக்குள் வாரா. வேறுபட்ட பன்மை விகுதிகளை ஏற்கும் நிலையும் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இம்மொழியில் பொருள்களைக் குறிக்கும் சில பெயர்கள் எப்போதும் பன்மையில் தான் காணப்பெறும். பெயர்களின் எண், பால் ஆகியவற்றிற்கு ஏற்றவாறு பெயரடைகளும் மாறுவது குறிப்பிடத்தக்கது. வேற்றுமை உறவுகள் முன்ஒட்டுகளாலும்பின் ஒட்டுகளாலும், சில வேளைகளில் இரண்டும் சேர்ந்த ஒட்டுகளாலும் உணர்த்தப்படுகின்றன.

பசுடோவில் தன்மை முன்னிலை இடப்பெயர்களே காணப்படுகின்றன. படர்க்கையில் சுட்டுப் பெயர்ப் பகுதிகளாகப் பயன்படும் சொற்களே படர்க்கை இடப் பெயராகவும் பயன்படுகின்றன. சில வேளைகளில் இடப் பெயர்கள் அல்லாத சொற்கள் இடப் பெயர்களாகப் பயன்படுகின்றன. சான்றாக, சன் (jan) என்னும் சொல் 'உடல்' என்னும் பொருளைத் தருவதோடு, 'நான், தான், நீதான், அவன்தான்' என்ற பொருளிலும் பயன்படுகிறது.

வினைச் சொற்களில், நிகழ்காலத்திற்கு இறந்த காலத்திற்கெனத் தனித்தனியாக இரண்டு வினையடிகள் உள்ளன. அவற்றோடு எண்பால் விகுதிகள் சேர்க்கப்படுகின்றன. படர்க்கையில் மட்டும் எண் வேறுபாடு வினையில் காட்டப் பெறுவதில்லை.

பசுடோ எழுவாய், செயப்படுபொருள், பயனிலை (SOV) என்ற தொடரமைப்புக் கொண்டுள்ள மொழியாகும்.

நான் மனிதனைப் பார்த்தேன் என்று தமிழில் வரும் வாக்கியம் பசுடோவில் என்னால் மனிதன் பார்க்கப் பட்டான் என்று வரும்.

பசுடோவில் அளவற்ற பிற மொழிச் சொற்கள் கலந்துள்ளன என்பர். குறிப்பாக அரபி, பாரசீக மொழிச் சொற்கள் மிகுதியாகக் கலந்துள்ளன என்று கூறுவர்.

கோ.ச.நா.

**துணை நூல்கள்:**


**Mackenzie, D. N.,** Pashto in The World's Major Languages (ed.by Bernard Comrie) Croom Helm, London, 1987.

**Payne, J.R.,** 'Iranian Languages' in The World's Major Languages (ed. by. Bernard Comrie) Croom Helm, London, 1987.

**Penzl, H.,** A Reader of Pashto, The University of Michigan Press, USA, 1965.


***பசுபதி***, சிவபெருமானின் திருப்பெயராகும். இவ்வுலகத்தில் உள்ள அனைத்து உயிர்வாழ் இனங்களுக்கும் தலைவர் என்ற கருத்தில் பசுபதி என்றனர். பசுக்களுக்குத் தலைவன் என்றலும் பொருந்தும். வாசசனேயி சம்கிதை (Vajasaneyi Samhita) சிவனின் மாற்று வடிவமே பசுபதி எனவும், மக்களையும், விலங்குகளையும் பிணிகளிலிருந்து காப்பதால் அப்பெயரால் சிவன் குறிக்கப்பட்டான் எனவும் கூறும். பசுபதியின் தோற்றத்தை இலிங்க புராணமும், வாயுபுராணமும் கீழ்க்காணுமாறு விளக்குகின்றன. பசுபதி இலகுலிசன் என்னும் பிராமண அவதாரத்தில், சவத்தின் உடலில் நுழைந்து 'காயாரோகணன்' (Kaya-rohana) என்று பெயர் பெற்று, நான்கு சீடர்களுக்குக் குருவானார். அவர்கள் மகேசுவர யோகிகளாகிச் சாம்பலைப் பூசிக் கொண்டு திரிந்து சிவனுடன் இணைந்தனர். பசுபதி வணக்கம் அரப்பா நாகரிக காலம் முதல் வழக்கில் இருந்துள்ளது. அங்குக் கிடைத்த முத்திரைகளில் அமர்ந்த நிலையில், மூன்று பிரிவான மகுடத்தைத் தலையில் அணிந்த உருவம் காணப்படுகிறது. அதன் இரு பக்க

மும் மிருகங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவ்வுருவம் பசுபதியாக இருக்கலாம் என்று கருதுகின்றனர். பிற் காலத்தில் பசுபதி வணக்கம் இந்தியாவின் பல பகுதி களில் வழக்கில் இருந்துள்ளது. களச்சூரி, பல்லவர்கள், ஒய்சளர், விசயநகர மன்னர் ஆகியோர் ஆட்சிக்காலங் களில் பசுபதி வணக்கம் நிலவியுள்ளது. பசுபதியின்திரு உருவங்களும் பசுபதிக்கென்று தனிக்கோயில்களும் அதிகமாகக் காணப்படவில்லை. பொதுவாக இத்திரு உருவங்கள், சடாமகுடத்துடன், மூன்று கண்களுடன், நான்கு கைகளில் அபய முத்திரை, திரிசூலம், வரத முத்திரை, அக்கமாலை ஆகியவற்றுடன் நின்ற அல்லது அமர்ந்த நிலையில் அமைக்கப்பட்டிருக்கும்.சில்சமயம் அக்கமாலைக்குமாறாகக் கபாலம் அமைக்கப்படும். பசுபதியின் மற்றுமொரு வடிவம் உருத்திர பாசுபத மூர்த்தியாகும். திரிசூலம் குத்திய தலையுடனும், கபாலம், கத்தி ஆகிய ஆயுதங்களோடும் இத்திருவுரு வம் காட்சியளிக்கும்.பசுபதியின் திருஉருவங்கள் காட் மாண்டு, சிதம்பரம் ஆகிய இடங்களில் அமைக்கப் பட்டுள்ளன. பசுபதியை வணங்குகிறவர்கள் பாசுபதர் கள் எனப்பட்டனர். ப.ச.

**பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்**: காண்க: தமிழ்நாட்டு ஆட்சிப்பிரிவுகள்.

**பசுலுல் அக்கு** என்பார் வங்காளத்தின் முதல் அமைச்சர்களாக இருந்தவர்களுள் ஒருவர். இவர் கி.பி. 1873-ஆம் ஆண்டு கிழக்கு வங்காளத்தைச் சார்ந்த பாரிசால் (Barisal) மாவட்டத்தில் சக்கர் (Chakhar) என்னும் சிற்றூரில் பிறந்தார். இவருடைய தந்தையார் காசி முகமது வாசெடு (Kazi Mohammed Wajed) என்பார் அரசு வழக்குரைஞராகப் பாரி சாலில் பணியாற்றிப் புகழ் பெற்றவர்.

பசுலுல் அக்கு என்பாரின் முழுப்பெயர் அப்துல் காசிம் பசுலுல்அக்கு (Abdul Kasim Fazlul Haq)என்ப தாகும். இவர் மும்முறை திருமணஞ் செய்துகொண்ட வர்; தலைசிறந்த கல்விமான்.அராபி, பாரசீக மொழி களைக்கற்றபின்,கி.பி.1890-இல் பள்ளியிறுதி வகுப்பில் தேறியபின், கல்கத்தா மாநகர் மாநிலக்கல்லூரியில் சேர்ந்து கற்று கி.பி. 1894-இல் பட்டம் பெற்றார். வேதியியல், கணக்கியல், இயற்பியல் ஆகிய மூன்று அறிவியற் கலைகளிலும் பட்டம் பெற்ற இவர் கி.பி. 1896-இல் கணக்கியலில் முதுகலைப்பட்டம் பெற்றார். கல்கத்தாப் பல்கலைக்கழகத்தில் கணக்கியலில் முது கலைப் பட்டம்பெற்ற முதல் முசுலிமாக இவர் கருதப் படுகிறார். பின்னர் கி.பி. 1897-இல் சட்டத்தைக் கற்றும் பட்டம் பெற்றார்.

பசுலுல் அக்கு, பாரிசால் இராசசந்திராகல்லூரியில் ஆசிரியராகத் தம்வாழ்வைத் தொடங்கினார். இவருக்கு இலக்கியத்திலும் பத்திரிகை இயலிலும் ஆர்வம் பிறந்தது. 'நவயுகம்' (Nyvajug)என்னும் நாளிதழுட னும் ஏனைய இதழ்களுடனும் இவருக்கு நெருங்கிய தொடர்பிருந்தது. பசுலுல் அக்கு 1906-ஆம் ஆண்டில் துணை நீதிபதியாகப் பதவி வகித்தார். பின்னர் 1912 இல் தாம் வகித்த பதவிகளைத் துறந்துவிட்டு இவர் கல்கத்தா வழக்குரைஞர் மன்றத்தில் சேர்ந் தார்; தலைசிறந்த வழக்குரைஞராகப் புகழ்பெற்றார். அன்று கல்கத்தா மாநகரில் புகழ்பெற்று விளங்கிய ஆசுதோசு முகர்சி போன்ற பெரியார்களுடன் இவ ருக்கு நெருக்கமான தொடர்பேற்பட்டது.

பசுலுல் அக்கிற்கு இளமைப்பருவத்திலிருந்தே அரசியல்மோகம் இருந்தது. வங்காளத்தில் முசுலிம்கள் பட்ட இன்னல்களுக்குப் பரிகாரம் காண இவருடைய கவனம் திரும்பியது. இந்திய முசுலிம்களின் நலன் களைப் பேணும் நோக்குடன் இவர் 1906-ஆம் ஆண்டில் அகில இந்திய முசுலிம் லீகு (All India Muslim League) என்னும் நிறுவனத்தை நிலை நாட் டினார். இவர் 1953-ஆம் ஆண்டில் வங்காளச் சட்டமன் றத்தின்மேலவை உறுப்பினரானார். பின்னர் நாட்டுப் பிரிவினை ஏற்படும் வரை இவர் வங்காளச் சட்டமன் றத்தின் உறுப்பினராக இருந்து பணியாற்றினார். இவர் 1916-முதல் 1921 வரை அகில இந்திய முசுலிம் லீகின் தலைவரானார். அதன் விளைவாக இவருக்கு அகில இந்தியக்காங்கிரசுக் கட்சியுடனும் நெருங்கிய அரசியல் தொடர்பேற்பட்டது.காங்கிரசுக்கும் இலீகிற் கும் 1917-இல் ஏற்பட்ட இலக்னோ உடன்பாட்டிற் குக் (Lucknow pact) காரணமானவர்களுள் இவரும் ஒருவர். பின்னர் இவர் காங்கிரசுக்கட்சியின் இணைச் செயலாளராகவும், பொதுச் செயலாளராகவும் பொறுப்பேற்றார். சாலியன்வாலாபாகுப் படு கொலையை ஆராய உருவாக்கப்பெற்ற குழுவில் இவருக்கும் இடம் கொடுக்கப்பட்டது.

ஒத்துழையாமை இயக்கத்தை எதிர்த்து இவர் காங்கிரசை விட்டு விலகினார். வங்காளத்தில் இரட்டையாட்சி முறை செயற்பட்டபோது இவர் கல்வி அமைச்சரானார். மூன்றாம் வட்டமேசை மாநாட்டின் போது (1930-33) இவர் முசுலிம் லீகின் பேராளராக இலண்டன் சென்றார். கல்கத்தா மாநகராட்சியின் கோட்ட உறுப்பினராகவும் (Councillar) பின்னர் நகரத்தந்தையாகவும் (Mayor) இவர் பதவி வகித்தார். இந்தியாவின் மத்திய சட்டமன்றத் தில் ஈராண்டுகள் பணியாற்றியபின் இவர் 1936-இல் வங்காளத்தின் அரசியலில் ஈடுபட்டார். முகம்மது சின்னாவுடன் (Jinnah) இவருக்கேற்பட்ட கருத்து வேறுபாட்டினால் இவர் முசுலிம் லீகைவிட்டு வெளி யேறிக் 'கிருசிக்கு பிரசாக்' கட்சியை உருவாக்கி னார். முசுலிம் லீகின் வேட்பாளரைத் தோற்கடித்து

வங்காளச் சட்டமன்றத்தின் உறுப்பினரானார். காங்கிரசுடன் கூட்டு அமைச்சரவை நிறுவ முயன்று தோல்வியுற்றார். ஆனால், முசுலிம் லீகுடன் கூட்டு அமைச்சரவை நிறுவி, முசுலிம் நலன்களுக்காகப் பாடு பட முனைந்தார். பாகிசுத்தான் வேண்டுகோளை இலாகூரில் முன்மொழிந்தவரும் இவரே. எனினும், இவர் முசுலிம்லீகுடன் தமக்கிருந்த தொடர்பினை அறுத்துக்கொண்டார். சியாமபிரசாத்து முகர்சியுடன் இணைந்து கூட்டு அமைச்சரவையை அமைத்தார். முசுலிம் லீகும் ஆங்கிலேயரும் இவருக்கெதிராகச் செய்த விளம்பரத்தின் பயனாக இவர் 1943-இல் பதவியை விட்டு விலக்கப்பட்டார். மீண்டும் 1946-இல் இவர் முசுலிம் லீகுடன் சேர்ந்து கொண்டார்.

நாட்டுப் பிரிவினைக்குப் பின்னர்ப் பசுலுல்அக்கு, தாக்கா (Dhaka) நகரில் கிழக்குப் பாகிசுத்தானத்தின் அரசாங்க வழக்கறிஞராகப் பதவியேற்றார். தம் 81-ஆம் வயதில் 1954-இல் இவர் பதவியை விட்டு விலகிக் 'கிருசிக்கு கிராமிக் கட்சியை' நிறுவினார். முசுலீம் லீகுக்கு எதிராக ஒன்று சேர்ந்த அனைத்துக் கட்சிகளின் தலைவராகப் பசுலுல் அக்கு தேர்ந்தெடுக் கப்பட்டார். கிழக்குப் பாகிசுத்தானத்தின் முதல்தேர் தலில் இரு இடங்களில் நின்று வென்ற இவர் 57 நாள்களுக்கு மட்டுமே பதவியில் இருந்தார். பின்னர் 1955-இல் பாகிசுத்தான் அரசின் மத்திய அமைச்சரவை யில் சேர்த்துக்கொள்ளப்பெற்று உள்துறை அமைச்ச ரானார். பின்னர் 1956-இல் இவர் கிழக்குப் பாகிசுத்தானத்தின் ஆளுநராக நியமிக்கப்பெற்றார். இரண்டாண்டுகளுக்குப் பின்னர் அரசியல் நெருக்கடி யின் விளைவாகப் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். பசுலுல் அக்கு 1962-ஆம் ஆண்டு தாக்காவில் காலமா னார். இரா.அ.

***பசோலி ஓவியங்கள்***: இவை சம்மு காசுமீர்ப் பகுதிகளில், கி.பி. 17-18-ஆம் நூற்றாண்டுகளில் தோன்றி வளர்ந்த ஓவியப் பாணியில் தீட்டப்பட்ட ஓவியங்களாகும். செசுரோதா (Jesrota) மாவட்டத் தில்(சம்மு காசுமீர் மாநிலம்)உள்ள பசோலி(Basholi) என்ற ஊரைச் சுற்றியுள்ள ஏறத்தாழ 74 ஊர்களில் இப்பாணி ஓவியங்கள் தீட்டப்பட்டன. பலூரியா (Baluria)அரச பரம்பரையினரைச் சார்ந்த புபத்பால் (Bhupatpal, கி.பி. 1598-1635) என்பவரால் பசோலி நகரம் ஏற்படுத்தப்பட்டது. இவ்வரச பரம்பரையைச் சேர்ந்த மன்னர்கள் திருமாலிடத்தில் பெரும்பக்தி செலுத்தினர். அதன் காரணமாக இவ்வோவியப் பாணி இப்பகுதியில் வளர்ச்சி பெற அடிகோலினர். முகலாய அரசவை ஓவியக் கலைஞர்களின் துணையை யும், சங்கரம் பால் (கி.பி. 1635-1673) என்ற மன்னர் நாடிப் பெற்றார். இப்பாணி ஓவியங்களில் பாகவத புராணம், இரச மஞ்சரி, கீதகோவிந்தம், இராமாய ணம் ஆகிய இலக்கியக் காட்சிகள் முதன்மை பெறு கின்றன. இவ்வோவியங்கள், பொதுவாகச் சிவப்பு, மஞ்சள் நிறங்களில் கண்ணைப் பறிக்கும் வண்ணக் கலவையில் தீட்டப்பட்டுள்ளன. சிறிய முகமும் கூரிய மூக்கும் கூர்ந்து நோக்கும் பெரிய கண்களும் இந்த ஓவியங்களின் சிறப்புத் தன்மையைக் குறிக்கும். மரங் கள் ஒரே மாதிரி வடிவினை உடையன. ஓவியங்கள் தீட்டப்பயன்படுத்தப்பட்ட வண்ணங்களுள் மஞ்சள், வசந்தத்தையும் சூரிய உதயத்தையும் உணர்த்தும்; நீலம் கிருட்டிணனையும் கார்மேகத்தையும் குறிக் கும். இடியும் மின்னலும் வெண்மை மற்றும் பொன் நிறக் கோடுகளால் சுராட்டப்பட்டிருக்கும். இவ் வோவியங்களாள்சிறந்தவைகளை இலாகூர், அகமதா பாது, சம்மு, மற்றும் இலண்டன் ஆகிய இடங்களில் உள்ள அருங்காட்சியகங்களில் காணலாம்.

இவ்வோவியங்களுள், தேவியின் உருவங்கள், அரசரின் உருவங்கள், பாகவதபுராணக் காட்சிகள், இராமாயணக் காட்சிகள், கீதகோவிந்தக் காட்சிகள், இரச மந்திர் காட்சிகள் ஆகியவை சிறப்பானவை. அவற்றில், அரசனின் உருவ ஓவியம் ஒன்றில் கிர்பால் அரசர், பெண்கள் புடைசூழ ஏறத்தாழ 40 வயதுடை யோராகச் சித்திரிக்கப்பட்டுள்ளார். மற்றொரு ஓவியத்தில், அமர்ந்த நிலையில் புகைபிடித்துக் கொண்டிருக்கும் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. பாகவத புராணக் காட்சிகளில் அண்டத்தின் பிறப்பு, பல்வேறு உயிர்களின் தோற்றம் ஆகியவை தீட்டப் பட்டுள்ளன. தேவர்கள் பாற்கடலைக் கடையும் காட்சியும், கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்திருக்கும் காட்சியும் நன்கு தீட்டப் பட்டுள்ளன. இராமாயணக் காட்சிகளில், இராமர் வனவாசத்திற்குப் புறப்படும் காட்சியும், சீதையை இழந்த நிலையில் துயரவடிவத்தோடு காட்டப் படும் இராமன், இலக்குவன் ஆகியோரின் சித்திரங் களும் நேர்த்தியான வண்ணக் கலவையுடன், தீட்டப்பட்டுள்ளன. காதல் வயப்பட்ட கண்ணனும் இராதையும் யமுனை நதிக் கரையில் இணையும் கீதகோவிந்தக் காட்சி சிறந்த ஓவியமாகும். இளமை யும் வனப்பும் மிக்க நாயகி, நாயகனின் வரவுக்காக ஏங்கும் காட்சியும், நாயகனின் வரவு கண்டு பொய் உறக்கத்தில் உள்ள நாயகியின் தோற்றமும் மிகச் சிறந்த படைப்புகளாகும். த.க.

***பஞ்ச சீலம்***: காண்க: ஐந்து நெறிக் கோட்பாடு.

***பஞ்ச தந்திரம்*** என்பது நட்புப் பிரித்தல், நண்பரைப் பெறுதல், அடுத்துக்கெடுத்தல், பொருட் கேடு, ஆராயாது செய்தல் என்னும் ஐந்து வழிகளை மேற்கொண்டு எடுத்துக்கொண்ட செயலில் வெற்றியோ தோல்வியோ பெறும் முறையாகும். இப்

பஞ்சதந்திரங்களையும் தன்னுட் கொண்டு பல கதைகள் எழுந்தன. அதனாலேயே அக்கதைகள் அடங்கிய நூலுக்குப் பஞ்சதந்திரக் கதைகள் என்ற பெயரும் ஏற்படலாயிற்று. இதன் முதல் நூல் வடமொழியிலிருந்தது என்றும், அதிலிருந்து ஆங்கிலம், பாரசீகம், மராத்தி, அரபு முதலிய பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு இக்கதைகள் உலகமுழுவதும் பரவியுள்ளன என்றும் தெரிகிறது. மராத்தி மூலத்திலிருந்து கி.பி. 1826-ஆம் ஆண்டு வித்துவான் தாண்டவராய முதலியார் என்பவர் தமிழில் உரைநடையில் இப் பஞ்சதந்திரக் கதைகளை மொழி பெயர்த்தார். இப் பஞ்சதந்திர உரைநடைநூல் வருவதற்கு முன்னரே வீரமார்த்தாண்ட தேவர் என்பவர் 737 செய்யுள்கள் கொண்ட பஞ்சதந்திரப் பாடல் என்ற ஒரு நூலை இயற்றியுள்ளார். பாடல்கள் மிகவும் எளிமையானவை. இதிலிருந்து தாண்டவராய முதலியார் மொழிபெயர்ப்புக்கு முன்னரே தமிழ்நாட்டில் இக் கதைகள் வழக்கில் உலவி வந்தமையாலேயே செய்யுள் நூலை வீரமார்த்தாண்டதேவர் இயற்ற முடிந்தது என்பதை ஊகித்தறியலாம். 'வயவீரர் ஒன்பான் வழியுற்ற மேலோன் சயவீரமார்த்தாண்ட தேவன்...பஞ்ச நற்றந்திரத்தை மன்னூலாச் சொற்றான் மகிழ்ந்து' என்னும் செய்யுளிலிருந்து வீரமார்த்தாண்ட தேவர் இச்செய்யுள் நூலாசிரியரென்றும், அவர் செங்குந்த மரபினரென்றும் தெரிய வருகின்றது. மேற்கூறப் பெற்ற ஐந்து தந்திரங்களை மேற்கொண்டு செயலில நினைத்ததை முடிக்கத்தக்கவாய்ப்பினை விளக்கவல்ல இனிய கதைகள் பல இந்நூலில் உள்ளன. கற்பார்கரு மிக மகிழ்ச்சியை இக்கதைகள் தருவன.

இப் பஞ்சதந்திரக் கதைகளுள் முதலாம் பகுதி நட்புப் பிரித்தல் ஆகும். வடமொழியில் இதனை மித்திரபேதம் எனக்கூறுவர் நரி, சிங்கம், காளைமாடு ஆகிய மூன்று மிருகங்கள் ஒரு காட்டில் மிக நட்பாயிருந்தன. காளைமாடு காட்டில் மேய்ந்து நன்றாய்க் கொழுத்துக் காணப்பட்டது. ஒருசமயம் அதன் தசை நல்ல உணவாகுமே என நரி எண்ணியது அதனால் சிங்கத்திற்கும் காளைக்கும் உள்ள நட்பைப் பிரித்துச் சிங்கத்தைக்கொண்டு காளையைக் கொல்லச் செய்து அதன்தசையைச்சிங்கமும் நரியும்உண்டன. சிங்கம் தன் நண்பனாகிய காளையைக் கொல்லக்கூடாது என்று கூறியபோது நரி தந்திரத்தால் பல கதைகளைக் கூறி அதைக் கொல்லுவதற்கு இசையும் நிலையை உண்டாக்கி அதனால் தன் நெடுநாளைய ஆசையை நிறைவேற்றிக் கொண்டது. இந்நூலிற் காணப்படும் இரண்டாம் தந்திரம் நண்பரைப் பெறுதல் என்பதாம். வடமொழியாளர் இதனைச் சுகிர்லாபம் என்பர். காகம், எலி, ஆமை, மான் ஆகிய நான்கும் சிறந்த நண்பர்களாயிருந்தன. தங்களுள் ஒவ்வொருவருக்கும் ஏற்பட்ட ஆபத்துகளையெல்லாம் உண்மையான நண்பர்களாயிருந்ததால் நீக்கி உய்ந்தவிதத்தினை இப் பகுதி கூறுகிறது. இப்பகுதியிலும் பல கிளைக்கதைகள் உள்ளன. மூன்றாம் பகுதி அடுத்துக் கெடுக்கை என்பதாம். இதனை, வடமொழியில் சந்திவிக்கிரகம் என்று கூறுவர். இப்பகுதியில் காக்கை கோட்டானை வெல்லல், முயல்யானையை வெல்லல் முதலிய பல கதைகள் காணப்பெறுகின்றன. நண்பர் போன்றேயிருந்து கூடவுள்ளவர்களைத் தந்திரத்தால் அழிக்கும் விதம் இப்பகுதியில் சிறப்பாகக் காணப்பெறுகிறது. நான்காம் பகுதி பொருட்கேடு என்பதாம். இதனை வடநூலார் அர்த்தநாசம் என்பர். கிடைத்த பொருளை ஏமாந்து இழந்தபின் கழிவிரக்கப்படும் நிலை இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. முதலை குரங்கைக் கைவிட்டு நாணம் உற்ற கதை, தவளை பாம்பை வஞ்சித்தது முதலிய பல கதைகள் காணப் பெறுகின்றன. புத்தியினால் தனக்கு வரும் ஆபத்துகளையும் போக்கிக் கொள்ளலாம். கிடைக்கக் கூடிய பொருள்களும் புத்தியின்மையால் கிடைக்காத நிலை கிட்டும் என்னும் உண்மைகளை இப் பகுதியிலிருந்து தெளிவாய் உணரலாம். இறுதிப் பகுதி ஆராயாது செய்தல் என்பதாம். இதனை வடமொழியாளர் அசம்பிரேட்சிய காரித்துவம் என்பர். எச்செயலையும் தீர விசாரியாமல் தொழிற்பட்டுப்பின் கழிவிரக்கப் படுதல் பற்றிப் பல கதைகள் இப்பகுதியில் உள்ளன. பார்ப்பனி கீரிப்பிள்ளை வளர்த்த கதை,பொரி மாத்தோண்டி உடைத்த கதை முதலிய பல கதைகள் ஒவ்வொன்றுக்கும் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு சங்கிலி போன்று தொடர்ந்து காணப் படும். காட்டப்படும் நீதிகள் அளவிலடங்கா.

பாம்பு பால்பெய்திட்டாலும் குச்சிதவிடத்தை நல்கும் (மித்திரபேதம் 110). நிதியிலார்க்கு எவையும். பாழே, நினைக்கின் மூவுலகினுள்ளும் (சுகிர்லாபம் 89) தம்மை அடைந்தார் தமைக்கோறல் தருமம் அன்று (சந்திவிக்கிரகம் 87). தன்னிலே வருஞ் செல்வத்தைத் தள்ளுவார் ஒருவர்க்காணேன்(அர்த்த நாசம் 41). இக் குவலயத்து ஒருவற்கு இதம் ஒழித்து அகிதம் செய்தால் துக்கமே அடைவர் (அசம்பிரேட்சிய காரித்துவம் 88) என்பன போன்ற நீதிகள் பலவறறை இந் நூலில் யாணடும் காணலாம். கதைகளைக் கூறுவது போன்று பல நீதிகளைச் சிறுவர்களுக்குப் புகட்டும் முறை மிகச் சிறந்து காணப்படுகிறது. அதனாற் றான் இது உலகம் முழுவதும் பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப் பட்டுச் சிறந்து விளங்குகிறது.

இரா.ச.

**பஞ்ச தயானி**, புத்த சமயத்தில் குறிப்பிடப் படும் போதி சத்துவரின் ஆற்றல்களைத் தாங்கிய பெண் உருவசக்திகளாவர். இச்சக்திகள் பின்வருமாறு ஐவகைப்பட்டவராவர். 1) வச்சிரதாதீசுவரி

(Vajradhatisvari), 2) உலோசனா (Locana), 3) மாமகி (Mamaki), 4) பாண்டரா (Pandara). 5) தாரா (Tara). இவர்களுள் வச்சிரதாதீ சுவரி நடுவில் அமைக்கப்பட்டிருப்பாள். மற்றவர்கள் இரண்டு பக்கங்களிலும் அமைக்கப்பட்டிருப்பர். இவர்களுள் உலோசனா, அக்சோபயா (Akshobhya) ஆகிய இருவரும் போதிசத்துவரின் சக்திகளாவர்; வச்சிராயுதம் மற்றும் தாமரை மலரைத் தாங்கியவளான. மாமகி, இரத்தின சம்பவ போதிசத்துவரின் சக்தி; தாமரை மலரைக் கையில் ஏந்தியவளான; பாண்டரா, அமிதாபா போதிசத்துவரின் சக்தி; சிவந்த நிறமுடையவளும், தாமரை மலரை ஏந்தியவளுமான தாரா, அமோகசித்தி என்னும் போதிசத்துவரின் சக்தியாவாள் ப.ச.

**பஞ்சநதம்**: இது தஞ்சை மாவட்டத்திலுள்ள தேவாரப் பாடல் பெற்ற தலமாகிய திருவையாற்றின் வடமொழிப் பெயராகும். ஐந்து ஆறுகள் பாயும் பகுதி என்பது இதன் பொருள். காண்க: திருவையாறு.

**பஞ்சநதம்**[2]: இது வட இந்தியாவிலுள்ள பஞ்சாபு மாநிலப் பகுதியைக் குறித்த பெயராகும். ஐந்து நதிகள் ஓடும் பகுதி என்னும் காரணத்தாலாகிய பெயர். காண்க: பஞ்சாபு.

**பஞ்சநதம்**[3]: வாரணாசி எனப்படும் காசியில், கங்கைக் கரையில் அமைந்து விளங்கும் புனித நீராடும் துறைகளுள் (கட்டங்கள்) ஒன்று. பஞ்சநதம் எனப்படும் ஐந்து ஆறுகளின் கூட்டம் என்பது இதன் பொருளாகும். புராணமரபில் இதுபற்றிக் கூறப்படும் செய்தி வருமாறு: வேதசிரசு என்னும் முனிவர் சுசி என்பாளைக் கூடி ஒரு பெண் பெற்றார். அப்பெண் தவம் புரிகையில் தருமன் என்பான், அவளை வலிதிற் கூடவே, அவள் அவனை ஓர் ஆறாகுமாறு சாபமிட்டாள். அதற்கு மாறாக அவனும் அவளை ஓர் ஆறாகுமாறு சாபமிட்டான். இவற்றை உணர்ந்த முனிவர் அப்பெண்ணைத் 'தூதபாவை' எனப் பெயரிய நதியாகிச் சென்று, தருமனைக் கூடுமாறு ஏவினார். அவ்வகையில் அமைந்த இரண்டு ஆறுகளோடு, சூரியன் தவமியற்றியதால் அவன் உடலில் தோன்றியவியர்வை நீர் பெருகி ஓடிய வெள்ளமாகிய கிரணை என்னும் ஆறும், யமுனை, கங்கை ஆகிய ஆறுகளும் கூடிய இடம் பஞ்சநதம் எனப்பட்டுப் புனித நீராடும் கட்டமாயிற்று. இச்செய்தி காசிகாண்டம் என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது. அ.மா.ப.

**பஞ்ச பாரதீயம்**, பண்டைக் காலத்தில் விளங்கி, அடியார்க்கு நல்லார் காலத்திற்கு முன்பே இறந்துபட்ட இசைத்தமிழ் நூல்களுள் ஒன்று. இதன் ஆசிரியர் தேவ இருடியாகிய நாரதர் ஆவார். இந்நூல் தம்முடைய காலத்திலேயே இறந்துபட்ட செய்தியினை அடியார்க்கு நல்லார் தம் சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார். எனினும், வேனிற் காதை உரையில் இந்நூலிலிருந்து ஒரு செய்யுளை மேற்கோளாகக் காட்டியுள்ளார். யாழ்வாசிப்போன் யாழில், தவிர்க்க வேண்டிய குற்றங்களாகிய செம்பகை, ஆர்ப்பு, கூடம் அதிர்வு ஆகியவற்றினை விளக்கிப் பின், அதற்கு எடுத்துக்காட்டாக, 'இன்னிசை வழிய தன்றி இசைத்தல் செம் பகையதாகும்' எனத் தொடங்கும் செய்யுளைக் காட்டி, 'இதுபஞ்ச பாரதீயம்' எனக் குறிப்பிட்டுள்ளார். அச்செய்யுளை நோக்கும் போது, இந்நூல் விருத்தப்பாவால் இயற்றப் பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது. அ.மா.ப.

**பஞ்சம்**: உணவுப் பற்றாக்குறையால் ஏற்படும் பசி, பட்டினி போன்ற துன்பங்களை உண்டாக்கும் நிலை பஞ்சம் (Famine) எனப்படும். இது உண்ண உணவே கிடைக்காமல் பசிக் கொடுமையால் அல்லற்படும் மக்களின் மிகப்பெருந் துன்ப நிலையைக் குறிக்கிறது. மிகுதியான உணவுப் பற்றாக்குறையால் ஏற்படும் பசி, பட்டினி, அதைத்தொடர்ந்த மக்களின் மெலிந்த நிலை, பட்டினிச் சாவு முதலியவற்றைப் பஞ்சம் குறிப்பதாக அறிஞர்கள் கூறுகின்றனர். உணவுப் பற்றாக்குறை பொதுவாக மழையின்மை, வறட்சி, வெள்ளம், பூச்சிகளால் பயிர் நாசம் ஆகிய வற்றால் விளைச்சல் பாதிக்கப்படும்போது ஏற்படக் கூடும்.

பஞ்சம் என்ற சொல் இலத்தீன் மொழி 'பேம்சு' (Fames) என்பதிலிருந்து வந்திருக்கிறது. பேம்சு என்றால் பசி என்று பொருளாகும். பஞ்சம் பொதுவாகப் பரப்பளவில் விரிந்து, மிகுதியான மக்களைப் பாதிக்கவல்லது. ஆனால், இது வறட்சி (Drought) பற்றாக்குறை (Scarcity) முதலியவற்றிலிருந்து வேறுபடுகிறது. ஏனென்றால், வறட்சியும் பற்றாக்குறையும் தட்ப வெப்ப நிலையால் குறிப்பிட்ட பகுதிகளில் மட்டும் குறைந்த காலத்திற்கே நீடிக்கும். இதே போல அறுவடைக்கு முன்னர்ச் சிறிதுகாலம் மட்டுமே நிலவும் உணவுப் பற்றாக்குறையையோ, வழக்கமான உணவுகளில் சர்க்கரையும், புல்லால் உணவும் போதாதிருந்து மற்றப் பொருள்கள் அதிகமாகக் கிடைப்பதால் உடல் வளத்துக்குத் தேவையான குறிப்பிட்ட சத்துப் பொருள்கள் (Vitamins) இன்மையால் உண்டாகும் நோய் நிலையையோ பஞ்சம் எனச் சொல்லவியலாது. மாறாகப் பஞ்சத்தினால் பாதிக்கப்பட்ட மக்கள் பொதுவாக நாளடைவில் மெலிந்து, இளைத்து வீட்டிலோ வீதியிலோ தெருவிலோ படுத்துக்கிடந்து, எலும்புத் தோற்றத்துடன்

சாவுக்குப் போராடிக் கொண்டிருப்பார்கள். பஞ்சம் ஏற்பட்டுள்ள பகுதிகளில் மிகையான சமுதாயச் சாவு, வழக்கத்துக்கு மாறான கொள்ளை, தேவையற்ற அலைச்சல், உணவைத் தேடி இடப்பெயர்வு போன்றவை நிகழும். மேலும் ஆண்கள், பெண்கள்,குழந்தைகள் அனைவரும் வயல்வெளி, முட்டுச்சந்து, குப்பைக் குவியல்கள் இவற்றில் ஏதாவது உண்ணத்தக்க பொருள்கள் கிடைக்குமா என்று தேடிப்பார்த்துக் கிடைக்காதபோது ஏமாறும் நிலை, கால்நடைகளின் சாவு, உயிரோடிருக்கும் கால்நடைகளை மனிதன் அடித்துத் தின்பது, மனிதனை மனிதனே உண்கின்ற நிலை ஆகியவையெல்லாம் பஞ்சக் கொடுமையின் வெளிப்பாடுகளாகும்.

உலக வரலாற்றில் இப் பஞ்சத்தின் கொடுமையால் அதிகம் பாதிக்கப்பட்ட நாடுகள் இந்தியா, சீனா, சோவியத்து நாடு போன்றவையாகும். மற்ற நாடுகளிலும் இந்நிலைமை ஏற்பட்டபோதிலும் அதன் தாக்கம் மேற் குறிப்பிட்ட மூன்று நாடுகளைவிடக் குறைவு என்று சொல்லலாம். பஞ்சத்தின் கொடுமையைப் பற்றி கி.பி.1920-21-இல் வட சீனாவில் வீட்டுக்கு வீடு எடுத்த ஆய்வில் அங்குள்ள மக்கள் நிலத்தில் வீழ்ந்த இலைகளின் தூள், வண்ணான் காரம் (Fuller's earth), பூக்களின் விதைகள், நெட்டிலிங்க மர வகைகளின். மொட்டுகள், மக்காச் சோளக் கதிரின் கெட்டித் தண்டு (Corn Cobs), மரத்தூள், மரப்பட்டைகள் (Elm bark), பருத்திக்கொட்டை, நிலக்கடலையின் மேல் தோல் (Peanut hulls) ஆகியவற்றையும்கூட உணவாகக் கொண்டதாகத் தெரியவருகிறது.

பஞ்சத்தின் கொடுமைகள் பெரும்பாலும் ஏழைகளையே தாக்கியது. உணவுப் பொருள்களின் விலைகள் அதிகரிப்பு (பயிர் நாசத்துக்கு முன்னரும் பின்னரும்), அல்லது இராணுவம் அல்லது அரசியல் குறுக்கீடுகள் போன்றவற்றினால் மக்களுக்குத் தேவையான அளவு உணவுப் பொருள்கள் கிடைப்பதில்லை. மேலும், வாங்கும் திறன் கொண்ட மக்கள் தேவைக்கும் மிகுதியாகப் பொருள்களை வாங்கித் தங்களின் எதிர்கால நுகர்வு அல்லது வரும் நாள்களில் அதிக விலைக்கு விற்கவேண்டிச் சேமித்து வைத்தல் போன்ற காரணங்களினால் அங்காடிகளில் உணவுப் பொருள்களின் வரவு குறைந்தது. தவிர, வேலை நிலை சுருங்கியதால் கூலி நிலையும் குறைந்தது. அப்படியே வேலை இருந்த இடங்களிலும் உணவு விலைக்கேற்ப வேலையும், அதற்குண்டான கூலியும் தரப்படவில்லை. அதனால், குறைந்த வருமானம் உள்ள குடும்பத்தினர் முதலில் பசியின் வலிமையை உணரத் தொடங்கினார்கள். அதனால், அவர்களது உடைமைகள் உணவுக்காக விற்கப்பட்டன. உட்கேம் சுமித்து (Woodham Smith) என்பவரின் கூற்றுப்படி புகழ்பெற்ற அயர்லாந்தில் (Irish) உருளைக்கிழங்குப் பஞ்சம் கி.பி.1840-இல் ஏற்பட்டபொழுது அங்குள்ள மீனவர்கள் தங்கள் துணைக்கலம் அல்லது கப்பல், பாய்மரங்களின் தொகுதியை அடகுவைத்தோ விற்றோ உணவு வாங்கியதாக அறியப்படுகிறது. அப்பொழுதும், மற்றப் பஞ்சக் காலங்களிலும் அதிகமான ஏழை உழவர்கள் புதிய பயிரை விளைவிக்க வேண்டி வைத்திருந்த விதைகளையே உணவாகக் கொண்டனர் என்றும் தெரியவருகிறது.

மேலும், சீனாவில் பஞ்சத்தின்போது குழந்தைகள் விற்கப்பட்டனர்; ஆண்கள் தங்களைத் தாங்களே அடிமைகளாக விற்றுக்கொண்டனர்; பரத்தமை தளிர்த்தது. சமுதாயத்தில் சில உறுப்பினர்கள் இந்தப் பஞ்ச நிலையைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு பலவகைகளில் அரசின் துணைகொண்டு ஆதாயம் தேடினர். எனவே பஞ்சம் ஏழைகளை, இல்லாத வறியவர்களையே அதிகக் கொடுமைக்குள்ளாக்கியது.

**காரணங்கள்:** நாட்டில் பஞ்சம் ஏற்படப் பல காரணங்கள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. ஏறக்குறைய 100 ஆண்டுகளுக்கு முன்னால் வால்போர்டு (Walford) என்பவர், பஞ்சங்களை மனிதனுடைய முயற்சிகளுக்கும் அப்பால் இயற்கை விளைவுகளால் ஏற்படும் பஞ்சம் என்றும், மனிதனால் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரக்கூடிய செயற்கைப் பஞ்சம் என்றும் பஞ்சத்தை வகைப்படுத்தியிருக்கிறார். இந்த வேறுபாடு இன்றைய காலச்சூழ்நிலைக்குப் பொருந்தும் என்றாலும் மனிதன் தன்னுடைய முயற்சியால் இயற்கை விளைவுகளை மாற்றியமைக்க அல்லது அதன் தாக்கத்தைக் குறைக்கக் கற்றுக் கொண்டுள்ளான்.

இயற்கைக் காரணங்களான வறட்சி, வெள்ளம், ஆலங்கட்டிப் புயல் மழை, உறைபனி, சூறாவளி, கடலோதம், நீடித்த குளிர்காலம், வறண்ட கோடைக் காலம் அல்லது வழக்கத்திற்கு மாறான வானிலை நிகழ்வியக்கங்கள், கடல் கொந்தளிப்பு, பயிர்ப்பகை விலங்கு-புள் இனங்களின் அட்டூழியம், பருவத்திற்கு உரியதல்லாத குளிர்வானிலை போன்றவை பயிர் விளைச்சலைப் பாதிக்கின்றன. இவற்றை வெளிப்படையான காரணங்கள் (Apparent Causes) என்று சொல்லலாம். மேற்கூறிய காரணங்களின் தாக்கம் குறைந்த காலமேயானாலும் வெள்ளம் அல்லது உறைபனி போல்வன உணவுப்பொருள்களை அதிகப்படியான இடத்திலிருந்து குறை விளைச்சலுள்ள பகுதிகளுக்குப் போவதைத் தடுத்துவிடும்.

செயற்கைக் காரணங்களாக அரசியல் சார்புடைய, போர் சார்புடையவற்றைக் குறிப்பிடலாம். குறிப்பாகப் போர்க்காலங்களில் பொருளாதாரம் சிக்கலுக்கு உள்ளாக்கப்படுகிறது. உணவுப்பொருள்கள சமுதாயத்துக்குப் போவது தடுக்கப்படுகிறது. தானிய இருப்புக்குறைக்கப்படுகிறது. மிகுதியாக வரி விதித்தல், மிகை தானியத்தை உழவர்களிடமிருந்து வாங்கிவிடுதல் போன்றவைகளால் சோவியத்து நாட்டில் கி.பி. 1932-33-இல் பஞ்சம் ஏற்பட்டதாக வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. தவிர வனங்களும் காட்டுப் பிரதேசங்களும் அழிக்கப்படுவதால் மழைக் காலங்களில் ஏற்படும் வெள்ளப்பெருக்கு ஆபத்தை அதிகப்படுத்தும்; வேளாண்மை செய்யும் நிலத்தின் அளவைக் குறைக்கும். அதனால் உணவுப் பொருள்களின் விளைச்சல்குறையும. மேலும் பஞ்சம்ஏற்பட அரசியலும் ஒரு காரணம் என்றாலும், தெளிவற்ற உலகப் பஞ்ச வரலாற்றிலிருந்து அரசியல் காரணத்தினால் தான் பஞ்சம் ஏற்பட்டது என்று அறுதியிட்டுக் கூறுவது கடினமான ஒன்றாகும். பழங்காலப் போர் முறைகளுள் எதிரி நாட்டில் பஞ்சத்தை ஏற்படுத்துவதும் ஒரு முறையாக இருப்பதை வரலாற்று அறிவியல் தெரிவிக்கிறது.ஆனால், உலகப்பெரும் பஞ்சங்களெல்லாம் இயற்கைக் காரணங்களால் ஏற்பட்டபோதிலும்அதைத் தீவிரப்படுத்தியது,வலுப்படுத்தியது அரசியல் காரணம் என்று சொல்லலாம். சில சமயங்களில் பொருளாதார அல்லது மக்கள்தொகைச் சூழ்நிலைகள், ஏழ்மை நிலை, வேலையில்லாத் திண்டாட்டம், பிழைப்பு நிலை வேளாண்மைத் தொழில் அல்லது நிலமற்ற வேளாண்மைத் தொழிலாளர்களின் அதிக எண்ணிக்கை ஆகியனவெல்லாம் பஞ்சம் ஏற்படக் காரணங்களாக அமைந்தன.

**உலகளவில் இயற்கைப் பஞ்சங்கள்:** உலகளவில் இயற்கைப் பஞ்சங்கள் ஏற்பட மிகுதியான மழையும் குறைந்த அளவுமழையும்முதன்மையான காரணங்களாகக் கருதப்படுகின்றன. வட சீனாவில் கோடைக் காலத்தில் மஞ்சள் ஆறு (Yellow River) உயர்ந்து அதன் கரைகளை உடைத்துக்கொண்டு அதன் சுற்றுப் பள்ளத்தாக்கில் உள்ள வேளாண்மைச் சமவெளிகளைப் பயனற்றதாக்கி விட்டது. இவ்வாறு வெள்ளத்தினால் ஏற்பட்ட பஞ்சங்களுக்கு எடுத்துக் காட்டுகளாக கி.பி. 1315,16,17 – ஆம் ஆண்டுகளில் ஆங்கிலேயத் தீவுகள (British Isles) நாடு, பிரனீசு (Pyrenees) நாட்டின் கிழக்கு, வடக்குப் பகுதிகள் ஆகியவற்றில் சாவு எண்ணிக்கை அதிகரித்தது. மேலும், தொடர்ந்து விடுப்பில்லாத மழையால் பயிர் அறுவடை பாதிப்போடு சாவு விளைவிக்கின்ற கொள்ளை நோய் நிறையப்பண்ணை மிருகங்களைக் கொன்றுவிட்டது. பயிர்ப்பகை விலங்கு – புள் இவைகளின் பெருவளர்ச்சியால் ஏற்படும் பஞ்சமும் வறட்சி அல்லது வெள்ளத்தால் ஏற்படும் பஞ்சத்தைப் போல மிகப் பெரியதாகும். எடுத்துக்காட்டாக, வளரும் பயிர்வகைகளை வெட்டுக்கிளி நாசம் பண்ணுவது மற்றப் பகுதிகளுக்கும் சிறிதுநேரத்தில் பரவிவிடும். அயர்லாந்தில் பயிர்நோய்த் தாக்கத்தினால் உண்டான உருளைக்கிழங்கு அழிவினால் கி.பி. 1845 – 49 -இல் ஏற்பட்ட உருளைக்கிழங்குப்பஞ்சத்தை(Potato famine) இயற்கையால் மிகக் கடுமையாக ஏற்பட்ட பஞ்சம் என்று சொல்லலாம். இதேபோல் வடகிழக்குப் பிரேசில் (Brazil) நாட்டில் ஒருவகைக் கிழங்குச் செடியின் விளைச்சல் குறைவால் பஞ்சம் ஏற்பட்டதாகக் குறிப்பு இருக்கிறது. மேலும், இந்நாட்டில் வடகிழக்குப் பகுதியில் அடிக்கடி ஏற்பட்ட கடுமையான வறட்சியால் பஞ்சம் வந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆண்டுக் கணிப்பின்படி (Chronicle) உலகளவில் சப்பான் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டதாகக் குறிப்புகள் இல்லையென்றாலும் வரலாற்று அறிஞர்கள் அந்நாட்டின் வேறுபட்ட பகுதிகளில் கி.பி. 1732-33, 1783-87, 1832-36-ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட மூன்று பஞ்சங்களினால் கடுமையான வன்முறைகள் தோன்றியதாகக் கூறுகின்றனர். ஐரோப்பாவில், மேற்கு உருசியாவில் அயர்லாந்து (Irish) அபாயம் கி.பி. 1840 – இல் ஏற்பட்டதற்குப் பின்னர் இயற்கைப் பஞ்சம் என்று எதுவும் ஏற்படவில்லையென்றாலும், செயற்கைப் பஞ்சங்கள் குறைந்த அளவிலே இரண்டாம் உலகப்போரை அடுத்துக்கிரீசு நாட்டிலும், ஆலந்தின் (Holland) மேற்குப் பகுதியிலும் ஏற்பட்டன. உலகின் பல பாகங்களிலும் முதலாம் உலகப் போரின்போதும், அதைத் தொடர்ந்தும் உணவுப் பற்றாக்குறை இருந்துவந்தது. ஏன்சல் கீசு (Ancel Keys) என்பவர் கி.பி.1850 – ஆம் ஆண்டிலிருந்து ஏற்பட்ட பஞ்சங்களின் எண்ணிக்கையைக் குறிப்பிடுகிறார். இவர், பெர்சியாவில் (Persia) கி.பி. 1871, ஆசியாமைனரில் (Asia Minor) கி.பி. 1874-75, எகிப்தில்கி.பி.1877ஆகிய ஆண்டுகளில் ஒவ்வொருபஞ்சமும், மொராக்காவில் (Moracca) கி.பி.1877-78-ஆம் ஆண்டில் ஒன்று அல்லது இரண்டு பஞ்சங்களும்ஏற்பட்டன எனக் குறிப்பிடுவதிலிருந்து அந்நாடுகளில் அடிக்கடி பஞ்சம் நிகழவில்லை எனத் தெரிகிறது. இதே காலங்களில் சோவியத்து நாட்டில் பத்துக்குக் குறையாமலும், இந்தியாவில் 1943-இல் ஏற்பட்ட வங்காளப் பஞ்சத்தைச் சேர்க்காமல் 13 பெரிய பஞ்சங்களும்ஏற்பட்டனஎனவும்குறிப்பிடப்படுகிறது. சீன நாட்டில் இக் காலங்களில் ஏற்பட்ட பஞ்சங்களின் எண்ணிக்கையைப் பற்றித் தெரியவில்லையெனினும் கடுமையான ஒன்று கி.பி. 1877-78-ஆம் ஆண்டும், மற்றப்பஞ்

சங்கள் 1919-20, 1929-30 ஆகிய ஆண்டுகளிலும், சாதாரணக் கடுமையற்ற பஞ்சங்கள் கி.பி. 1906, 1911, 1916, 1924-ஆம் ஆண்டுகளிலும் அந்நாட்டில் ஏற்பட்டிருக்கின்றன.

இவ்வாறு உலக நாடுகளில் சோவியத்து நாடு, இந்தியா, சீனா இம் மூன்று நாடுகளும் கடுமையான பஞ்ச ஆக்கிரமிப்புக்குப் பலியானதுக்குக் காரணம் ஒவ்வொரு நாட்டிலும் பஞ்சம் ஏற்பட்ட பகுதிகள் பாலைவனத்தை அடுத்து இருந்தமையே இயற்கையாகவே மழைக் குறைவும், கோடைத் தாக்கமும் விளைச்சல் இல்லாமைக்குக் காரணமானதோடு, மழை குறைவான ஆண்டுகளில் இதன் தாக்கம் இன்னும் மிகுந்திருந்தது. இந்தப் பகுதிகளில் மக்கள் தொகை நெருக்கம் மிகுதியாக இருந்ததோடு வேளாண்மையே பிழைப்புத் தொழிலாக இருந்ததாலும் நிலைமையை மேலும் மோசமாக்கிவிட்டது. உருசியாவில் வோல்கா (Volga) ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதிகள் அடிக்கடி வறட்சியால் பாதிக்கப்படக் கூடியவை. சீனாவில், மஞ்சள் ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதி, இந்தியாவில் வடமேற்கு மாகாணப் பகுதி, தக்காணப் பீடபூமிப் பகுதி ஆகியவை பஞ்சப் பாதிப்புக்கு உட்பட்டவை ஆகும். தவிர 20-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட பெரிய பஞ்சங்கள் அனைத்தும் வறட்சி, வெள்ளம், போர், புரட்சி போன்ற இயற்கை, செயற்கைக் காரணங்களினால் ஏற்பட்டனவே ஆகும்.

**இந்தியாவில் பஞ்சம்:** இந்திய வரலாற்றில் பஞ்சம் நிலவிய காலங்களைப் பண்டைய இந்தியா, வரலாற்றின் இடைநிலைக் காலத்திய இந்தியா, மொகலாயர் காலம், ஆங்கிலேயர் காலம், இக்காலம் என்று வகைப்படுத்தலாம்.

**பண்டைய இந்தியாவில் பஞ்சங்கள்:** மழையின்மை, அதைத் தொடர்ந்த பயிர் நாசம் என்பன மற்ற நாடுகளைப் போல இந்தியாவின் பண்டைக் காலத்திலிருந்தே அறிந்த உண்மையாகும். இருக்கு வேதங்களிலிருந்தும், தேவாரப் பாடல்களிலிருந்தும் மக்கள மழையை வழிபட்டு வரவழைத்ததாகத் தெரிகிறது. மேலும், அதிகமான மழை அல்லது வறட்சி பயிர் அழிவை உண்டுபண்ணியதால் அக்காலத்தில் ஏற்பட்ட பஞ்சத்தைப் பற்றி அதர்வண வேதமும், இன்னும் பிற குறிப்புகளும் குறிப்பிடுகின்றன. பின்னர்ச் சந்திரகுப்த மௌரியர் காலத்தில் கி.மு. 298-இல் பீகாரில் ஏற்பட்ட கடுமையான பஞ்சம் நீண்ட நாட்கள் நீடித்தது என்று வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. தவிர கல்கணர் எழுதிய இராசதரங்கணி என்ற நாடகத்தில் காசுமீரில் கி.பி. 917 – 18-இல் ஏற்பட்ட பயங்கரப் பஞ்சத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் 'சீலம் (Zelum) நதியில் தண்ணீரைக் காண்பதே அரிது என்றும், மாறாக அந்த நதி முழுவதும் நீண்ட நாள்கள் கிடந்து நீரில் ஊறியும், ஊதியும் போன பிணங்களே நிறைந்து கிடந்தன என்றும், அந்த நிலம் முழுதும் சவ எலும்புகளால் மூடப்பட்டிருந்தது' என்றும் கூறுகிறார்.

**வரலாற்றின் இடைக்கால இந்தியா:** இடைக்கால இந்தியா பஞ்ச வரலாற்றில் சலாலுதீன் கில்சி (Jalaluddin Khilji) காலத்தில் கி.பி. 1291-இல் தில்லியின் ஒரு பகுதியும், சிவாலிக் குன்றின் பகுதிகளும் கடுமையான பஞ்சத்தால் பாதிக்கப்பட்டனஎனத்தெரிகிறது. இதையடுத்து கி.பி. 1326-27-இல் மழையின்மையால் தோவாபின்(Doab) பாதிக்கப்பட்ட பல பகுதிகள் முகமதுபின் துக்ளக்கின் ஆட்சிமுறையினால் மேலும் துன்பமடைந்தன. இம் மன்னரின் ஆட்சிக் காலத்திலேயே கி.பி. 1334-35-இல் ஏற்பட்ட பஞ்சமானது கடுமையானது என்பதோடு ஏழாண்டுகளுக்கு நீடித்ததாகவும் கூறப்படுகிறது. 14-ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் குறிப்பாக கி.பி. 1396-இல் ஏற்பட்ட பஞ்சம் பெரும்பாலான மக்களைக் கொள்ளை கொண்டது. அதைத்தொடர்ந்து தென்னிந்தியாவில் அடுத்தடுத்து கி.பி. 1412-13,1424-ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட பஞ்சத்தில் எண்ணிறநத கால்நடைகள் குடிக்க நீர்கூடக் கிடைக்காமல் வாடி உலர்ந்து இறந்தன. பாமினி ஆட்சிப்பகுதியில் கி.பி 1407, இப்போதைய மகாராட்டிர மாநிலத்தில் கி.பி. 1509-ஆகிய ஆண்டுகளில் பஞ்சத்தால் மிக மோசமான விளைவுகள் ஏற்பட்டிருக்கின்றன. விசயநகர ஆட்சிப் பகுதியில் கி.பி. 1540-இல் நிகழ்ந்த போரினால் விளைந்த பஞ்சத்தில் ஏராளமான மக்கள் இறந்தனரெனக்கூறப்படுகிறது.இதே பஞ்சம் மைசூரில் கடுமையாக இருந்ததோடு மனிதன் தன்னைத்தானே உண்கின்ற நிலையை ஏற்படுத்தியது என்றும் கூறப்படுகிறது.

**மொகலாயர் காலத்தில் பஞ்சங்கள்:** மொகலாயர் காலத்தில் அக்பருடைய ஆட்சியில் கி.பி. 1556-இல் தில்லியைச் சுற்றிய பகுதிகளிலும், கி.பி. 1575-இல் குசராத்திலும், கி.பி. 1595–99-ஆம் ஆண்டுகளில் வட இந்தியாவிலும் ஏற்பட்ட மூன்று பஞ்சங்களும் கொடுமையோடு நீடித்திருந்தன என்றும்வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. அடுத்துச் சாசகான் (Shahjahan) காலத்தில் கி.பி. 1630-இல் குசராத்திலும், தக்காணத்திலும் வறட்சியினால் ஏற்பட்ட பஞ்சமானது வரலாற்றிலேயே மிகப்பெரியது என்று சொல்லப்படுகிறது. அப்போது சுவாலி (Swally) என்னுமிடத்தில் 260 குடும்பங்களில் 11 குடும்பங்கள் மட்டுமே உயிர்பிழைத்தன என்றும், மக்கள்தொகைக்கு

அக்காலத்திலேயே பெயர்பெற்ற சூரத்து (Surat) நகரத்தில் எந்த உயிருமே பிழைக்கவில்லை என்றும் சொல்லப்படுகிறது. சூரத்துக்கும் சுவாலிக்கும் இடையே உள்ள வழியில் ஏராளமான உடல்கள் அழுகிக் கிடந்தனஎனக் கூறப்படுகிறது. மேலும், கணக்கற்ற கால்நடைகள் அழிந்தன என்றும், ஏராள மான மக்கள் கிராமப்புறங்களை விட்டுச்சென்றனர் என்றும், ஆண்கள் தங்கள் மனைவியரைக் கைவிட்டுச் சென்றனர் என்றும், தாய்மார்கள் தங்கள் குழந்தை களை விற்றனர் என்றும், பெண்கள் தங்களையே அடிமைகளாக விற்றுக் கொண்டனர் என்றும், பல குடும்பத்தவர் விடம் (Poison) அருந்திச் செத்து மடிந்தனர் என்றும், மனிதர்களே மனித சதையை எடுத்து உண்ணும் அளவுக்குப் பசிக்கொடுமை தாண் டவமாடியது என்றும் கூறப்படுகிறது. அடுத்து அவுரங்கசீபின் காலத்தில் கி.பி. 1686-இல் தக்காணத்தில் ஏற்பட்ட கடுமையான பஞ்சம் குசராத்து வரை பரவியதாகத் தெரிகிறது. அதே இடத்தில் மறுபடியும் கி.பி. 1747-இல் பஞ்சம் ஏற் பட்டிருக்கிறது. இவ்வாறாக கி.பி. 1660-இலிருந்து 1750 வரை 14 பெரிய பஞ்சங்கள் ஏற்பட்டனஎனச் சொல்லப்பட்டாலும் அதன் விளைவுகள் பற்றித் தெளிவாகத் தெரியவில்லை. மொகலாயர் காலத்தில் ஏற்பட்ட அனைத்துப் பஞ்சங்களிலும் வட இந்தியப் பகுதிகளில் கி.பி. 1335 – 43-இல் முகமதுபின்துக்ளக்கு ஆட்சியிலும், கி.பி. 1595-99-இல் அக்பரின் ஆட்சியி லும், கி.பி.1396-1407-இல் பெரோசா (Feroz Shah) காலத்திலும் கி.பி. 1630-இல் சாசகான் காலத்திலும் கி.பி. 1686-இல் அவுரங்கசீபின் காலத்திலும் ஏற் பட்ட 5 பஞ்சங்கள் குறிப்பிடத்தக்க கடுமையான பஞ்சங்களாகும்.

**ஆங்கிலேயர் காலத்தில் பஞ்சம்**: ஏறக்குறைய வறட்சியால் ஏற்பட்ட 12 பஞ்சங்கள் ஆங்கிலேயக் கிழக்கிந்திய நிறுமக் காலத்தில் (East India Company Under British Rule) ஏற்பட்டிருக்கின்றனஅவைகளில் கி.பி. 1769-70 (வங்காளம்) கி.பி.1783 (வடஇந்தியா), கி.பி. 1790 - 92 (தக்காணம் குறிப்பாகப் பம்பாய், ஐதராபாது (Hyderabad),கி.பி. 1800 (மைசூர்), கி.பி. 1803 (பம்பாய்), கி.பி. 1804 (வட இந்தியா), கி.பி. 1807 (சென்னை), கி.பி. 1813 (பம்பாய்), கி.பி. 1823,33 (சென்னை), கி.பி. 1837 (வட இந்தியா) முதலிய ஆண்டுகளில் ஏற்பட்டவை குறிப்பிடத்தக் கவையாகும். இவற்றில் முதல் மூன்றும், இறுதிப் பஞ்சங்களும் மிகக் கடுமையானவை என்று விவரிக்கப் படுகின்றன.

வங்காளத்தில் கி.பி. 1769-70-இல் ஏற்பட்ட பஞ்சத்தில் 1/3பங்கு மக்கள் அல்லது 10 கோடி மக்கள் உயிரிழந்தனர் என்றும், வேளாண்மை செய்யும் பயிர் நிலம் குறைந்தது என்பதோடு1/3 பங்குப்பயிர் விளையும் நிலங்கள் பயனற்ற நிலங்களாக மாறி விட்டன என்றும் கூறப்படுகிறது. அதனோடு கி.பி. 1783-இல் வட இந்தியாவில் ஏற்பட்ட சாலிசா (Chalisa) பஞ்சமானது கிழக்கு முனையான பனாரசி லிருந்து (Benares) வடக்கே இலாகூர், சம்மு வரை பரவிய் தென்றும், இந்தப் பஞ்சம் அடுத்த ஆண்டிலும் தொடர்ந்தது என்றும், கி.பி. 1784 -இல் திரும்பவும் சென்னையில் வறட்சிநிலை நிலவியதென்றும் தெரிகிறது. இப் பஞ்சத்தின் கொடுமைகள் உள்நாட்டுப் பாடல்களில் வெளிப் பாடாகத் தெரிகின்றன. தானியத்திற்குப் பதிலாக மக்கள் வேர்களையும், மரப் பட்டைகளையும் உண் டனர் என்று கூறப்படுகிறது.

ஏசுடிங்குப் பிரபு (Lord Hastings) கி.பி. 1784 -இல் குழு வாரியத்துக்கு(Council Board)எழுதியதில் பக்சாரிலிருந்து பனாரசு பகுதிவரை என்னால் எதை யும் பார்க்க முடியவில்லை; எல்லாக் கிராமங்களும் அழிக்கப்பட்டிருக்கின்றன என்றும், எட்வர்டு(Edward) என்பவர் கி.பி. 1783-இல் அயோத்தி (Oudh) மனித வாடையே அற்ற நகரமாக இருந்தது என்றும் குறிப் பிடுகிறார்கள். அடுத்துத் தக்காணத்தில் கி.பி.1790-92 -இல் ஏற்பட்ட பஞ்சம் பம்பாய் முழுவதும், ஐதரா பாது, சென்னையின் வடபகுதி மாவட்டங்களுக்கும் பரவியது. இதன் கொடுமையைப் பற்றி விவரிக்கை யில் ஏராளமாக இறந்துபோன மக்களைப் புதைக்கக் கூட முடியவில்லை என்று குறிப்பிடப்படுகிறது.

அடுத்து வடமேற்கு மாகாணத்தில் கங்கை, யமுனை நதியின் பகுதிகளில் கி.பி. 1837-38-இல் உண்டான கடுமையான பஞ்சத்தால் ஏற்பட்ட இறப்புகள் கணக்கில் அடங்காதவை என்பதோடு கோதல் (Hodal), பால்வல் (Palwal) பகுதிகளில் மனித வாடையே இல்லையென்றும், இதில் 8 இலட் சம் மக்கள் அழிந்தனர் என்றும், கான்பூர், பேத்பூர், ஆக்ரா போன்ற பகுதிகளில் சிறப்பு ஏற்பாடாக ரோந்துப் படையை நியமித்து வீதிகளில் கிடக்கும் பிணங்களை அகற்றினர் என்றும், அப்படியும் அகற்ற முடியாத பிணங்களைச் சூழ்ந்து மிருகங்கள் புசித் தது கோரக்காட்சி என்றும் விவரிக்கப்படுகிறது.

மேலும், முடியாட்சிக் காலத்தில் 8பெரிய அழிவு கள் ஏற்பட்டன என்பதற்கு வேண்டிய குறிப்புகளும், ஆதாரங்களும் இருக்கின்றன. இதில் அதிகம் பாதிக் கப்பட்டவை தில்லி, ஆக்ரா, அலகாபாது, ஆல்வார் ஆகிய பகுதிகளாகும். அடுத்துக் கடுமையான பஞ்சம் கல்கத்தாவின் கிழக்குக் கடற்கரையிலிருந்து சென்னை வரைக்கும் பரவி அதற்குமேலும் அப்பாலுள்ள தீவு களுக்கும் ஊடுருவியது. இது கி.பி. 1865-இல் ஒரிசா

வில் ஆரமபித்துப் பின்னர்ப்பீகாருக்கும் வங்காளத்துக்கும் பரவியது. இதனுடைய கொடுமைகள் கி.பி. 1866-இல் ஒரிசாவில் அதிகம் என்பதால் இதைப் பொதுவாக ஒரிசாப் பஞ்சம் 1866 என்று சொல்வதுண்டு. இதனால் 47½ மிலியன் மக்களும், 2,60,000 சதுர கி.மீ. பரப்பளவும் பாதிப்புக்கு உள்ளாக்கப்பட்டன. ஒரிசாவில் மட்டும் குறைந்தது 10 இலட்சம் மக்கள் அல்லது மொத்த மக்கள்தொகையில் 1/3 பகுதியினர் இறந்தனர் என்றும், வங்காளத்தின் சில பகுதிகளில் மொத்தத்தில் 1/4 பகுதியினர் இறந்தனர் என்றும் கூறப்படுகிறது. மேலும், ஒரிசா தனித்திருப்பதால் அங்கு நிலைமை மிகவும் மோசம் என்றும் அனுமானிக்கப்பட்டது. ஏனென்றால் தானிய வகைகள் கிடைத்தாலும் மழைக்காலத்தில் சரியான போக்குவரத்து வசதியின்மையால் அதை ஒழுங்காகப் பகிர்வு செய்ய முடியாமை நிலைமையை இன்னும் மோசமாக்கியது.அதனோடு சரியான புள்ளிவிவரமின்மை, செய்திகள் உடனுக்குடன் கிடைக்காமை முதலியவை இச் சோகத்துக்கு முக்கிய பொறுப்பாகும் என்றும் கூறப்படுகிறது.

இந்தியாவின் கிழக்குப் பாகத்தில் ஏற்பட்ட இப் பஞ்சமானது விரைவிலேயே மேற்குப் பாகத்திற்கும் கி.பி. 1868-70 வரை ஒன்றன்பின் ஒன்றாகத் தொடரத் தொடங்கிவிட்டது. இராசபுதனம், வடமேற்கு மாகாணத்தின் சில பகுதிகள், பஞ்சாபு, பண்டிலகெண்டு (Bundelkand) ஆகிய பகுதிகளுக்குப் பரவிய இப் பஞ்சத்தைப் பொதுவாக கி.பி. 1868-69-இன் இராசபுதனப் பஞ்சம் என்று சொல்லுவதுண்டு. ஏனென்றால் இது இராசபுதனம், ஆசுமீர் (Ajmir) மாகாணங்களையே மையம் கொண்டது என்று சொல்லலாம். இப் பஞ்சத்தின் தீவிரத்தால் மொத்தம் 44½ மிலியன் மக்களும்,3,50,000சதுரகி.மீ.நிலமும் பாதிக்கப்பட்டர். இதன் அதிகப் படியான இறப்பு எண்ணிக்கைக்குக் காரணம் பஞ்சத்துக்குப் பின்னர் ஏற்பட்ட வாந்திபேதி(Cholera) என்ற கொள்ளை நோய், பெரிய அம்மை (Small-Pox), காய்ச்சல் போன்றவை ஆகும். இப்பஞ்சந்தான் பண்டைக் காலத்திய பஞ்சங்களைப்போல உணவுப் பற்றாக் குறையினால் கடுமையாகப் பாதிக்கப்பட்ட இறுதிப் பஞ்சம் என்றும் சொல்லலாம். அதிகப்படியான கால் நடைகளின் இறப்பு, பெரும்பான்மை மக்களின் நோக்கமில்லாத அலைச்சல்கள் ஆகியவை இப் பஞ்சத்தின் விளைவுகளாகும். இந்தியப் பஞ்ச அறிக்கைக் குழு (Indian Famine Commission) கி.பி. 1880-இல் தனது அறிக்கையில் பெரும்பான்மையான இராசபுதனத்துக் கால்நடைகள் அழிந்தன என்றும், பெரும்பான்மையான மக்கள் இராசபுதனத்தை விட்டுத் தம் போக்கில் திசைமாறி உணவுத் தேடலுக்காகவும், தீனிக்காகவும் அலைந்தனர் என்றும், இததகைய அலைச்சலில் அதிக இழப்புகள் ஏற்பட்டன என்றும் கூறுகிறது அரசாங்க அலுவலர்களும் இப் பஞ்சத்தின் கொடுமையால் குடிபெயரத் தொடங்கியதால் இலாரன்சு பிரபு (Lord Lawrance) ஒரு விதியை வகுத்து, அதன்படி அரசாங்க அலுவலர்களுள் ஒவ்வொருவரும் பசியின் கொடுமையால் ஏற்படும் இறப்பைத் தடுக்க எல்லாவித நடவடிக்கைகளையும் சொந்தமாக எடுத்து மேற்கொள்ள வேண்டுமென்று ஆணையிட்டார்.

இதையடுத்துப் பீகாரில் கி.பி. 1873-74-இல் ஏற்பட்ட பஞ்சம் பீகார்ப் பஞ்சம் என்று சொல்லப்படுகிறது. இது பீகாரோடு அதனையொட்டிய வங்காளத்தின் சில பகுதிகளையும், உத்தரப்பிரதேசத்தையும் பாதித்தது. மேலும், இப் பஞ்சத்தில் ஏற்பட்ட இழப்பானது ஒரிசாப் பஞ்சம் கி.பி. 1866, இராசபுதனப் பஞ்சம்கி.பி.1868-69இரண்டையும்விடக் குறைவுதான் என்றாலும் இவ்விரணடு பஞ்சங்களின் கோரமானது இன்னும் மக்களின் மனத்திலும், அரசாங்க அலுவலர்களின்மனத்திலும் பசுமையாக இருக்கிறது என்றும் சொல்லலாம். இதைத் தொடர்ந்து கி.பி. 1876-80-ஆம் ஆண்டுகளில் பஞசமானது நாடு முழுவதும் ஏற்பட்டது. இதில் அதிகம் பாதிக்கப்பட்டவை சென்னை மாகாணத்தின் பல பகுதிகள், பம்பாய், மைசூர், ஐதராபாது, வடமேற்கு மாகாணம், அயோத்தி ஆகிய பகுதிகளாகும். இவற்றில் கி.பி. 1877-இல் சென்னையிலும், பம்பாயிலும் ஏற்பட்ட பஞ்சம கடுமையானதாக இருநதது. இப் பஞ்சத்தின் விளைவாக மக்கள் இந்தியாவின் தென்பகுதியிலிருந்து மேற்கு மலைத்தொடருக்கு நகரத் தொடங்கினர்.

இதைத்தொடர்ந்து அடுத்த 15 ஆண்டுகளுக்கு (கி.பி. 1880-1895) கடுமையான பஞ்சம் என்று சொல்லக்கூடிய அளவில் எதுவும் இல்லையென்றாலும் உள்நாட்டில் உணவுப் பற்றாக்குறை குறிப்பாக வங்காளத்தில் கி.பி. 1884-85-ஆம் ஆண்டிலும், சண்டிகரில் கி.பி. 1886-ஆம் ஆண்டிலும், ஒரிசாவில் கி.பி. 1889-ஆம் ஆண்டிலும், சென்னை, மத்திய மாகாணத்தின் சில பகுதிகளில் கி.பி. 1890-95-ஆம் ஆண்டுகளிலும் இருந்தது. அடுத்து கி.பி. 1896-97-இல் ஏற்பட்ட பஞ்சத்தால் பர்மாவின் தெற்குப் பகுதி, தக்காணத் தீபகற்பத்தின் தெற்குப் பகுதியைத் தவிர இந்தியாவின் மற்ற எல்லாப்பகுதிகளிலும் இது பரவியிருந்தது. இதனால் கொள்ளை நோய்(Plague) ஏற்பட்டு மிகுதியான அழிவு ஏற்பட்டது இக் கொள்ளைநோய் அதிகமாகப் பஞ்சம் எங்கெல்லாம் தாக்காது என்று கருதப்பட்டதோ அந்த இடங்களிலெல்லாம் பரவியிருந்ததால் விளைச்சல்

நில மெல்லாம் தரிசு நிலங்களாக மாறின என்றும், இதனுடைய கேடு முன்னர் ஏற்பட்டதை விட அதிகம் என்றும் மத்திய மாகாணத்தில் உள்ள எல்லா மாவட்டங்களுமே அழிந்துவிட்டன என்றும் சொல்லப்படுகின்றன. தொடர்ந்து கி.பி. 1899 - 1900-இல் ஏற்பட்ட பஞ்சத்தின் விளைவாக வாந்திபேதி (Cholera), குளிர்க் காய்ச்சல் (Malaria) போன்ற தொற்றுநோய்களால் மக்களின் இறப்பும், ஆடு மாடுகளின் இறப்பும், இந்திய மாகாண எல்லை யிலிருந்து ஆங்கிலேய எல்லைக்கு மக்கள் குடிபெயர்ந் ததும் இப் பஞ்சத்தின் விளைவுகளாகும்.

அடுத்த 40 வருடங்களுக்கு, கி.பி.1901-43 வரை பஞ்சம் என்று குறிப்பிட்டுச் சொல்லமுடியாத அள வுக்கு அங்கங்கே சிறுசிறு உள்நாட்டு உணவுப் பற்றாக்குறை தோன்றிக்கொண்டிருந்தது. தவிர, 1943-இல் வங்காளத்தில் ஏற்பட்ட பஞ்சத்துக்குப் பல காரணங்களைச் சொல்லலாம். வங்காளம் தனது உற்பத்தியில் 80விழுக்காட்டிற்கு மேல் உணவு உற்பத்தி அளிப்பில் இருந்தாலும், பெரும்பாலும் உணவுப்பொருள்கள் பர்மாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. அச் சமயத்தில் அதாவது 1942-இல் பர்மாவைச் சப்பான் கைப்பற்றிக்கொண்டதால் அங் கிருந்து அரிசி வரவு தடைபட்டது.இதனோடுமித்னாப் பூர் (Midnapur) சூறாவளிக் காற்று 1942-இல் 1.5 மிலியன் கண்டி (Ton) அரிசி விளைச்சலை நாசம் செய்துவிட்டதால் உணவுப் பற்றாக்குறையானது மேலும் தீவிரமாகிவிட்டது. தவிர, பர்மா அன்னியர் ஆட்சியில் வீழ்ந்துவிட்டதாலும், மறுப்புக் கொள்கை யினாலும், உணவுப்பொருள்களை எதிரிகளுக்குப் பயன்படுத்திவிடுவார்கள் என்ற பொதுமக்களின் பயத்தாலும், கிழக்கு வங்காளத்திலிருந்து படகுகளில் அரிசியைக் கடத்தியதும், அரிசிக் கிட்டங்கிகளை நீக் கியதும் தெளிவான பற்றாக்குறைக்குக் காரணங்க ளாயின. இதன் விளைவாகப் பதுக்கல் (Hoarding) வலுப்படுத்தப்பட்டு அரிசி அளிப்பானது வாணிக நிமித்தம் முழுதும் பதுக்கப்பட்டு மக்களின் வாங்கும் திறனுக்குமேல் விலையானது உயர்ந்தமை ,இயற்கை யாக உணவு உற்பத்திப் பாதிக்கப்படாத இடங்களில் கூடப் பஞ்சம் உண்டாகக்காரணமாகிவிட்டது. அதே போல வெளியிடங்களிலிருந்து வங்காளத்துக்கு வர வேண்டிய உணவுப்பொருள்களும் இரு காரணங்களி னால் தடுக்கப்பட்டன. முதலாவதாக, பொதுவான அமைதிக் குலைவினால் தானிய அங்காடிகளில் அளிப்பு கள் இல்லாதது. போக்குவரத்துத் தடைகளால் குறிப பாகப் புகைவண்டி நிலையத் தடைபாட்டால் வங் காளத்துக்கு வரவேண்டிய உணவுப்பொருள்கள் தடுக் கப்பட்டன. மேலும், தாமோதர் ஆற்றில் 1943-இல் பருவக் காலத்தில் ஏற்பட்ட வெள்ளம்உத்தரப்பிர தேசம், பஞ்சாபிலிருந்து வரும் அளிப்பையும் தடை செய்துவிட்டது. இரண்டாவதாகக் கல்கத்தா ஆலை யிலிருந்து வந்த தானிய வரவை அரசாங்கம் முறை யாகப் பகிர்வு செய்யவோ, நிலைமையைக் கட்டுக் குள் கொண்டுவரவோ தவறிவிட்டது ஆகும்.

அரசு அதிகாரிகளின் கருத்துப்படி 1942-இல் ஏற் பட்ட குளிர்காலப் பயிர் விளைச்சலின்மையே இப் பஞ்சத்திற்கு அடிப்படைக் காரணமாகும். ஆனால், வங்காளப் பஞ்ச விசாரணைக் குழுவின் கருத்துப் படி பயிர் விளைச்சலின்மையுடன் மிகுதியான விலை யும் சேர்ந்து பட்டினியை விளைவித்துவிட்டது என்ற னர். அரசுக்குக் கிடைத்த தாமதமான தகவல்களும், மத்திய,மாநில அரசுகளின் காலங்கடந்த நடவடிக்கை களும் இப் பஞ்சத்தின் கொடுமைக்கு ஒரு காரண மாகும். இவ்வாறாக, இயற்கையோடு செயற்கைக் காரணங்களான போர், பதுக்கல், அரசின் மெத்த னம் ஆகிய உடனிகழ்வு நிகழ்ச்சிகளால் இப் பஞ்சம் மனிதனால் ஏற்படுத்தப்பட்ட பஞ்சம் என்று கருதப் படுகிறது.

உட்கெட்டு குழுவின் (The Woodhead Commi - ssion) கணக்கின்படி 60 இலட்சம் மக்கள் அல்லது வங்காளத்தின் மொத்த மக்கள்தொகையில் 1/10 பகுதியினர் பாதிக்கப்பட்டனர் எனலாம்,இதனோடு சேர்ந்த கொள்ளைநோய், தொற்றுநோய்களான வாந்தி பேதி, குளிர் காய்ச்சல், வயிற்றுப்போக்கு இவற்றோடு பட்டினிச்சாவும் சேர்ந்து இறப்பு எண் ணிக்கையை (1.5 மிலியனாக) அதிகரித்தது. இந்திய சுதந்திரத்துக்குப் பின்னர் உணவுப் பற்றாக்குறை சில இடங்களில் 1949-50, 1950-51, 1951-52, 1972 ஆகிய ஆண்டுகளில் தோன்றினாலும் இது பெரிய சோத னையாக இருக்கவில்லை. ஆனால், வங்காளப் பஞ்ச மானது சில உண்மைகளைத் தெளிவாக்கியது. அவை:

1) பசி, பட்டினி இறப்புக்குப் பயிர் விளைச்சலின் மையோடு மிகுதியான விலை, ஊக வாணிகம், பதுக் கல், வாணிகச் சுழற்சியால் ஏற்படும் விலை மாற்றம் முதலியவையும் காரணமாகும். 2) பாதிக் கப்பட்ட மக்கள் அனைவருமே கிராமப்புறத் தில் வாழும் ஏழை மக்கள். உணவு வளர்ப்பவரே அவருடைய வருட நுகர்வுக்குத் தேவையான அளவு உற்பத்தி செய்த போதிலும், பசியினால் இறப்பு என்பது நிகழ்கின்ற பொருளாதார அமைப்புக்கு ஒரு கடுமையான சவாலாகும். 3) போக்குவரத்து வசதி கள் இருந்தும், சில விரும்பத்தகாத சூழ்நிலைகளி னால் கொடுமை அதிகமாகியது. நாட்டில் கட்ட மைப்புகள் வளர்ந்தபிறகு பசி, பட்டினி,இறப்பு பரவு வது தடுக்கப்பட்டது என்ற நாட்டின் நம்பிக்கை சிதைந்துபோயிற்று. 4) சரியான காலத்தில் தக வலின்மை, காலத்தில் தகுந்த ஏற்பாடின்மை இவை

கள் எந்த அளவுக்கு நிலைமையைச் சீர்கேட்டிற்கு ஆளாக்கின என்பதைச் சாவு எண்ணிக்கைகள் நிரு பித்தன. 5) கடந்த பஞ்சங்களின் தாக்கமானது மத்திய மாநில அரசுகள், உணவுப் பற்றாக்குறை யின் சிக்கலைப் பற்றிய தன்மைகளையும், அதன் அள வையும் காணுமளவுக்குக் கவனத்தில் கொண்டுவந்தது.

**இக் காலப் பஞ்சம்**: இக் காலப் பஞ்சக் கோட் பாடு என்பது அரசானது பரவிக்கிடக்கிற வேலை யில்லாத் திண்டாட்டத்தை உணர்ந்து, அதைத் தீர்த் துவைக்கும் முறையில் சிறப்பான கொள்கைகளை வகுத்து, வேண்டிய வழியில் அக் கொள்கைகளைச் செயற்படுத்துவதாகும்.

**பஞ்சத்தின் விளைவுகள்**: பஞ்சத்தினால் மக்களுக் குப் போதிய உணவு இல்லாததால் அது மனிதனுக்கு நோய்நிலையைத் தூண்டி விரைவுபடுத்துகிறது. உண வின்மையால் உடலில் இயற்கையாக இருக்கக்கூடிய எதிர்ப்புத் திறன் குறைந்து கொள்ளைநோய், குளிர் காய்ச்சல், சளிக்காய்ச்சல், எலும்புருக்கி நோய், பெரிய அம்மை, வாந்திபேதி, நச்சுக் காய்ச்சல் போன்றவைஏற்படுகின்றன.இதனோடு,சுகாதாரமற்ற சூழ்நிலையில் தூய்மைக் கேட்டினால் ஏற்பட்ட தண் ணீரை, உணவுப் பொருள்களை உட்கொள்ளுவதால் குறிப்பாக இது அதிகமாகக் குழந்தைகளைத் தாக்கிய தோடு இறப்பு எண்ணிக்கையை அதிகப்படுத்தியது. இந் நிலையில் பிறப்பு எண்ணிக்கையும் குறைந்ததால் மக்கள்தொகை வளர்ச்சி குறையத் தொடங்கியது.

தவிர, உணவுக் குறைவினால் நோய்கள் பரவு வது பஞ்ச காலங்களில் தவிர்க்க இயலாதது என்று தொற்றுநோய் ஆய்வறிஞர்கள் (Epidemiologists) கூறுகின்றனர். எடுத்துக்காட்டாகக் கொள்ளைநோய் பிளாரன்சில் (Florence) கி.பி.1348-இலும், குளிர்க் காய்ச்சல் (Malaria) மேல் சைபீரியாவில் கி.பி. 1848-இலும், பின்லாந்து நாட்டின் தைபசு (Typhus) என்ற இடத்தில் கி.பி.1867-68-இலும், பிளாக்கு நோய் பம்பாயில் கி.பி.1896-இலும், வாந்திபேதி, பெரியஅம்மை போன்ற நோய்கள் இராசபுதனத்துப் பஞ்சத்துக்குப் பின்னரும்,வாந்திபேதி, குளிர்காய்ச் சல் போன்ற நோய்கள் கி.பி.1899-1900-ஆம் ஆண்டுப் பஞ்சத்துக்குப் பின்னரும், வாந்திபேதி, குளிர்காய்ச் சல், பெரிய அம்மை போன்ற நோய்கள் 1943-இல் ஏற்பட்ட வங்காளப் பஞ்சத்திற்குப் பின்னரும் ஏற் பட்டிருக்கின்றன.

மக்களின் பட்டினிச் சாவுக்கும், நோய் காரணமாக ஏற்படும் இறப்புக்கும் இடை யிலுள்ள வேறுபாட்டைப் புள்ளியியல் விவரப் படி கணிப்பது இயலாதென்றாலும், பெரும்பஞ் சங்களின்போது இறப்பு எண்ணிக்கை, அதாவது அயர்லாந்து (Irish) பஞ்சம் கி.பி. 1845 – 49; இந்தி யப் பஞ்சங்கள் கி.பி. 1877 – 78, 1896 – 97, 1890 -1900, 1943; சோவியத்து நாட்டில் 1921 – 22, 1932 -33-ஆம் ஆண்டில் ஏற்பட்ட பஞ்சங்களில்சீனாவில் 1877 – 78,1929 – 30 ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்ட பஞ்சங்களில் இறப்பு எண்ணிக்கை, சராசரியாகப் பத்து இலட்சம் அல்லது அதற்கு மேல் என்று கூறப் படுகிறது. பின்னர் 20-ஆம் நூற்றாண்டில் நோயைப் பற்றிய அறிவியலில் ஏற்பட்ட முன்னேற்றம், தேசிய அளவில் பன்னாட்டு அளவில் உடல்நலச் சேவையில் ஏற்பட்ட வளர்ச்சி ஆகியவை பஞ்சத்தினால் ஏற் பட்ட இறப்பு எண்ணிக்கையைப் பெருமளவுக்குக் குறைத்தது.

**இடப் பெயர்வு**: பஞ்சத்தின் கொடுமையிலிருந்து தப்பிக்க மக்கள் வேலை தேடி அதன்மூலம் தமக்கும் தம்மைச் சார்ந்தவர்களுக்கும் உணவளிக்க இடப் பெயர்வை மேற்கொண்டனர். இதனால் நாட்டுப் புறத்திலிருந்த அகதிகள் நகர்ப்புறங்களுக்குக் குறிப் பாக அரசாங்கப் பகுதிகளின் மையத்துக்குக் குடி பெயர்ந்தனர். இம்மாதிரி சூழ்நிலைகளில் வறட்சி யின்போது மக்கள் பெரும்பாலும் அந்தந்த நாட்டின் மற்ற பகுதிகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டார்கள். எடுத்துக்காட்டாக வடகிழக்குப் பிரேசில் வறட்சியால் பாதிக்கப்பட்டபொழுது மக்கள் இவ்வாறு நாட்டின் பிறபகுதிகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டனர். ஆனால், நாடுவிட்டு நாடு இடப்பெயர்வு என்ற நிலை யில் வரலாற்று நிகழ்ச்சியில் ஓர் எடுத்துக்காட்டாக அயர்லாந்தில் கி.பி. 1840-இல் ஏற்பட்ட பஞ்சத்தின் போதும், அதற்குப்பின்னரும் 10 இலட்சத்துக்கும் மேற்பட்ட மக்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்குச் சென்று அங்கேயே இருந்து கொண்டு அந்நாட்டின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டதைக் குறிப்பிடலாம். உள்நாட்டு இடப்பெயர்வுகள் சோவியத்து நாடு, இந்தியா, சீனா போன்ற நாடுகளில் ஏற்பட்டிருக் கலாம். ஆனால், அதைப்பற்றித் தெளிவான குறிப்பு கள் இல்லை. மேலும், பஞ்ச இடப்பெயர்வுகளால் குடும்பங்கள் பிரிக்கப்பட்டு இலட்சத்துக்கும் மேற் பட்ட மக்களைத் தனி மனிதர்களாக்கியது.

உணவுக்காகத் தேடியலைந்த கொடுமை காலிசா பஞ்சத்திலும்(Chalisa Famine),இராசபுதனப் பஞ்சத் திலும் ஏற்பட்டிருக்கிறது. இதோடு விருப்பமான இடங்களுக்கு நிலையான இடப்பெயர்வும் ஏற்பட்டிரு கிறது. அரேபியா நாட்டில் கி.பி. 600-இல் ஏற்பட்ட இடப்பெயர்வு அங்கு ஏற்பட்ட பெரிய பஞ்சத்திற்குப் பின்னரே என்றும், அதைத்தொடர்ந்து கி.பி. 816, 1072-ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட கடுமையான வறட் சியினால் மக்கள் தொடர்ந்து இடப்பெயர்வு செய்

தார்கள் என்றும் சொல்லப்படுகிறது. இதேமாதிரி வன்பாலையிலிருந்து(Steppes) அங்கேரியின் (Hungary) வட சமவெளிக்கு மாறியதும், தொடர்ந்து நீடித்த வறட்சியின் காரணமாக என்றும் கூறப்படுகிறது.

அயர்லாந்தில் ஏற்பட்ட பஞ்சத்தினால் ஆங்கிலேய நாட்டிற்கு உண்மை புலப்பட்டது. அதன்படி எல்லாக் காலங்களிலும் அடிப்படை உணவுப் பொருள்கள் ஏழைகளுக்கு மலிவாகக்கிடைக்க வழிவகை செய்யப் பட்டதோடு தானியச் சட்டப்படி (Corn Laws) தானிய விலைகள் நீண்டகாலமாக அதிக அளவில் இருந்து வந்ததும் கி.பி.1846-இல் தள்ளுபடி செய்யப்பட்டது. அதனோடு ஆங்காங்கு ஏற்பட்ட பஞ்சங்கள் அல்லது பற்றாக்குறைகள் வரிச்சுமையைக் குறைக்க வலியுறுத்தியதோடு, பண்ணை உழவர் மக்களுக்குப் பஞ்சத் தடுப்பும், நிவாரணமும் கொடுக்கும் பொறுப்பை அரசாங்கம் ஏற்கவும் காரணமாக இருந்தன.

**நிவாரண உதவிகள்:** இவ்வாறாக ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்னர் உலகம் முழுதும் ஏற்பட்ட பஞ்சங்கள் தவிர்க்கமுடியாதவை என்றும், அவை தெய்வச் சீற்றத்தின் வெளிப்பாடு என்றும் எல்லோராலும் நம்பப்பட்டு வந்தன. ஆனால், சில சமயங்களில் அவ்வப்போது ஆட்சி புரிந்தவர்கள் இதைத் தடுக்கவும், நிவாரணம் அளிக்கவும் முயற்சி எடுத்துள்ளார்கள். பஞ்சத் தடுப்பாக நீர்ப்பாசன முறையை ஏற்படுத்திப் பயிர்ப் பாதுகாப்புக் கொடுத்திருக்கிறார்கள். அதற்காக அணைகள் கட்டப்பட்டு வாய்க்கால்களும் வெட்டப் பட்டிருக்கின்றன. ஏறத்தாழ 5,000 ஆண்டுகளுக்கு முன்னரே சுமர் (Sumer) என்ற இடத்திலும், ஆசியாவின் தொன்மைப் பகுதிகளிலும், வட ஆப்பிரிக்காவிலும் நீர்ப்பாசன முறைகளைப் பயன்படுத்தியிருப்பதாகக் குறிப்புகள் இருந்தாலும், நீர்ப்பாசனத்துக்குப் பஞ்சம் ஒன்றுமட்டுமே ஊக்கியாக இருந்ததென்று சொல்ல முடியாது. பஞ்ச நடவடிக்கையாகப் பழமை முறைகளுள் வெள்ளத் தடுப்பிற்குக் கரைகளும், அணைகளும் கட்டப்பட்டதைக் குறிப்பிடலாம்.

தவிர, இயற்கைப் பஞ்சம் ஏற்படக் காரணங்களான வறட்சி அல்லது வெள்ளம், பயிர் நோய் அல்லது பயிர்ப் பூச்சியினால் பயிர் நாசம் இவையெல்லாம் இக்காலத்தில் தவிர்க்கக்கூடியவையாகும். ஒரு நாட்டில் ஏற்படக்கூடிய பஞ்சமானது, அரசின் முயற்சியால் தேவையான காலத்தில் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்து அதிலிருந்து நிவாரணம் அளிப்பதன் மூலம் தடுக்கப்படலாம். ஆனால், இதுவும் சில சமயங்களில் பொய்த்துவிடுகிறது என்பதற்கு எடுத்துக்காட்டாகச் சோவியத்து நாட்டில் கி.பி. 1963 - 64 - இல் கடுமையான வறட்சியைத் தொடர்ந்து மிகையான தானியங்கள் இறக்குமதி செய்யும் நிலைமை கட்டுக்குள் வராததைக் குறிப்பிடலாம். சீனாவிலும் இதே நிலைதான் ஒன்று அல்லது இரண்டு வருடங்களுக்கு நீடித்தது. ஆனால், இந்தியாவும், பாகிசுத்தானும் 1945-இல் போர் முடிவுக்குப்பின்னர்ப் பஞ்சத் தடுப்பாகத் தேவையான தானியங்களைப் பாதிப்பன்னாட்டுக் கடனுதவியுடன் இறக்குமதி செய்தன. இதேமாதிரி பிரேசிலும், யுகோசுலேவியாவும் செய்தன. ஆனால், 1960-இல் எல்லா அரசுகளின் தன்மையானது தத்தம் நாட்டின் எல்லைக்குள் ஏற்படும் பஞ்சம் அல்லது வெள்ளம் இவற்றுக்கு நிவாரணம் அளிப்பதோடு, அவை தங்கள் எல்லைக்கப்பால் ஏற்படுகின்ற சூழ்நிலைகளில் பணம் நன்கொடையாகக் கொடுப்பது அல்லது கடனுதவி அளிப்பது அல்லது உணவு மிகையை அளிப்பது என்ற நிலை ஏற்பட்டு அது நாளடைவில் பெருகத் தொடங்கியது. கடந்த நூற்றாண்டுகளில் இவ்வாறு நாட்டுக்கு நாடு உதவுவது என்பது மிகுந்து வந்துள்ளது. அதற்காக உலகளவில் சில அமைப்புகளும் தோற்றுவிக்கப்பட்டு அதன்மூலம் நாடுகள் ஒன்றுக்கொன்று உதவிகளைப் பரிமாறிக் கொள்கின்றன. இதற்குச் சான்றுகளாகச்செஞ்சிலுவைச்சங்கம்(Red Cross Society) சீனா நிவாரணக் குழுக்கள் (The China Relief Commissions), முதலாம் உலகப்போரில் அமெரிக்க நிவாரண நிருவாகம் (The American Relief Administration of World War I), இரண்டாம் உலகப்போரைத்



பாதிக்கப்பட்ட மக்களின் நிலை

தொடர்ந்து நிறுவப்பட்ட ஐக்கிய நாடுகளின் நிவாரண மறுவாழ்வு நிருவாகம் (United Nations Relief and Rehabilitation Administration), ஐக்கிய நாடுகளின் உணவு வேளாண்மை நிறுவனம் (The Food and Agricultural Organisation)போன்றவைகளைக் குறிப்பிடலாம். உலகளவில் இன்று வேளாண்மை முன்னேற்றத்தினால் உணவு உற்பத்திப் பெருக்கம், மக்கள் தொகை வளர்ச்சி வீதத்திற்கேற்ப மிகுந்துள்ளது.

**இந்தியாவில் பஞ்ச நடவடிக்கைகள்:** பஞ்சங்களின் போது அவ்வப்போது ஆட்சி புரிந்தவர்கள் சில தடுப்பு நிவாரண உதவிகளைச் செய்துவந்தார்கள். என்றாலும், அவை எதுவும் முறையானதாக அமைந்திருக்கவில்லை. மேலும், ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் அவர்கள் எண்ணம் முழுதும் அவர்கள் ஆட்சியை இந்தியாவில் நிலைநிறுத்துவதிலும் ஆதாயத்தைப் பெறுவதிலுமே இருந்ததால் நாட்டின் நலவாழ்வில் அவர்கள் சிறிதும் அக்கறை காட்டவில்லை. இருந்தும், அரசு தானியச் சேமிப்பு, பதுக்கலைத் தண்டித்தல், இறக்குமதியை ஊக்குவிக்கும்பொருட்டு வணிகர்களுக்கு உதவித்தொகை அளித்தல், ஏற்றுமதித் தடை, இரவலர் அகங்கள் (Poor Houses) திறத்தல், கிணறு வெட்டுவதற்குப் பணம் அளித்தல், பஞ்ச நாள்களில் வேலைவாய்ப்பு ஏற்படுத்தும்பொருட்டு நிவாரண நிருமாணப் பணிகளைச் செய்தல் போன்றவற்றில் ஈடுபட்டிருந்தாலும் அம் முயற்சிகள் முழு வெற்றியைத் தரவில்லை. தவிர, ஒரிசா, வங்காளப் பஞ்சங்களுக்குப் பின்னர்த்தான் முதியோர்களையும், அனாதைகளையும் கட்டிக்காக்கும் பொறுப்பைச் சமுதாயமே பார்த்துக்கொள்ள வேண்டும் என்பது மாறி அரசாங்கமே அதன் முழுப் பொறுப்பையும் எடுத்துக் கொண்டு உதவும்நிலை வந்தது. இதேபோல இராசபுதனப் பஞ்சத்தின்போது ஒவ்வொரு மாவட்ட அதிகாரியும் தனது சொந்தப் பொறுப்பாகப் பஞ்சப் பகுதியை எடுத்துக்கொண்டு வேண்டிய உதவிகளைச் செய்து இறப்பைத் தடுக்க வேண்டும் என்று அரசு ஆணை பிறப்பித்தது. இருந்தும் இறப்பு எண்ணிக்கை மிகுதியாகவே இருந்தது. இவ்வாறாகப் பீகார், ஒரிசா, இராசபுதனம்பஞ்சங்களின்போது ஏற்பட்ட கொடுமைகளும், மனித இழப்புகளும் மக்களின்மனத்தில்என்றும் பசுமையாக இருக்கும் என்பதால் நார்த்புரூக்கு( North Brook) என்பவர், இம்மாதிரியான துயர நிகழ்ச்சிகள் இனித் திரும்ப வரவிடாமல் செய்யவேண்டும் என்று தீர்மானித்துத் தேவையான நிவாரண நடவடிக்கைகளை எடுத்தார். இந்நிலையில் பஞ்சப் பகுதிகளின் மொத்த மக்கள்தொகையில் 26 விழுக்காட்டினர் காப்பாற்றப்பட்டனர் என்றும், இன்னும் சில இடங்களில் இதன் அளவு 50-இலிருந்து 70 விழுக்காடாக அதிகரித்திருந்தது என்றும் கூறப்படுகிறது.

மேலும், இரண்டாம் உலகப்போர்க் காலத்திலும் அதைத் தொடர்ந்து வந்த ஆண்டுகளிலும் இந்தியாவில் உணவு நெருக்கடி அதிகமாக இருந்து வந்தது. இந் நிலையைச் சமாளிக்கும்பொருட்டு உணவுத்தானியங்கள் இறக்குமதி செய்யப்பட்டன. அதேசமயம் ஏற்றுமதியும் குறையவில்லை. விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த அரசு, நகர்ப்புறங்களில் பங்கீட்டு (Ration) முறையை நடைமுறைப்படுத்தியது. இதோடு மிகுதியான உணவு உற்பத்தி இயக்கம் (Grow More Food Campaign) ஒன்றும் தொடங்கப்பட்டது. இவ்வியக்கம் ஓரளவுக்கு வெற்றியைக் கொடுத்தபோதிலும் உள்நாட்டு உற்பத்தித் தேவைக்குச் சமமான அளவில் இல்லை. இதோடு இறக்குமதியும் அதிகரிக்கப்பட்டது. தவிர விலைக் கட்டுப்பாடு, பங்கீட்டு முறை போன்ற அரசாங்கக் கொள்கைகளுக்கு மக்கள் மத்தியில் ஆதரவு இல்லாததால் ஒருசில நகர்ப்புறத்தில் மட்டும் இப் பங்கீட்டு முறை செயற்பட்டது. பின்னர் மறுபடியும் 1948 - இல் இக் கட்டுப்பாடு எல்லாப்பகுதிகளிலும் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது.

**இந்தியாவில் பஞ்ச நிவாரணக்குழு:** பஞ்சத்தினால் ஏற்பட்ட கொடுமைகளை உணர்ந்த அரசு அதற்குக் காரண காரியங்களை அறியும்பொருட்டு முதலாம் பஞ்சக் குழுவை (First Famine Commission) சர். இரிச்சர்டு இசுடார்க்கி (SirRichard Starchy) என்பவரின் தலைமையில் கி.பி. 1880-இல் அமைத்தது. இக்குழு அரசினால் எடுக்கப்படும் எந்தவொரு நடவடிக்கையும் சிக்கனத்தையோ மக்களிடையே தமக்குத் தாமே உதவியாக இருக்கவேண்டும் என்ற நிபந்தனையையோதடைசெய்வதாகக் இருக்கக் கூடாது என்று பஞ்சத் தடுப்பு மற்றும் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்காக ஆலோசனை கூறியது. மேலும், இதன் பரிந்துரைகள் பின்வருவன:

1) வேலை செய்யத் தகுதியுடையவர்களுக்கு வேலை அளிக்கவேண்டும். அவர்களுடைய கூலிகள், உணவுப் பொருள்களை வாங்குவதற்குப் போதுமானதாக இருந்தால் போதும். 2) உடல் ஊனம் அடைந்தவர்களுக்கு அவரவர்களுடைய கிராமங்களிலேயே இனாமாக உதவிகள் அளிக்கப்படவேண்டும். 3) பயிர் செய்பவர்களுக்குத் 'தக்காவி'க் கடன்கள் அளிக்கப்படவேண்டும். 4) நிலவரி வசூலிப்பதை நிறுத்திவைப்பது, நீக்குவது போன்ற நடவடிக்கைகளைத்தாராளமாக்கவேண்டும். 5) உணவுத்தானியங்களில் தனியார் வாணிகத்தைச் சுதந்திரமாக்க வேண்டும். 6) வறட்சி மிகுதியான காலங்களில் கால்நடைகளைக் காட்டுப் பகுதிகளுக்கு இடப்பெயர்வு செய்ய வசதிகளைப் பெருக்கவேண்டும். வங்காளம், பர்மா, சென்னை, பம்பாய் போன்ற இடங்களில் பெரும் நாசத்தை அல்

லது அழிவை ஏற்படுத்திய பஞ்சக் காலங்களின்போது மேற்கூறப்பட்ட பரிந்துரைகளை அரசு செயற்படுத்தியது.

இதைத்தொடர்ந்து கி.பி. 1898 – ஆம் ஆண்டில் இரண்டாம் பஞ்சக் குழுவை ஆங்கிலேய இந்திய அரசு சர். சேம்சு இலியால் (Sir James Lyall) என்பவர் தலைமையில் அமைத்துச் செயற்படுத்தியது. இதுவும் முதல் குழு செயற்படுத்திய கொள்கைகளையே பின்பற்றியது. இதனோடு நெசவாளிகள் மலைவாசிகள் போன்ற வகுப்பினர்களிடம் தனிக் கவனம் செலுத்த வேண்டும் என்றும் நிலவரி நீக்கத்தைத் தாராளமாக்க வேண்டும் என்றும் பரிந்துரைத்தது.

இதையடுத்துக் கி.பி. 1899-1900 – இல் ஏற்பட்ட பஞ்சத்தின் காரணமாக 1901 – இல் மூன்றாம் பஞ்சக் குழு சர் அந்தோணி மக்டோனெல் (Sir Antony Macdonel) என்பவரின் தலைமையில் நியமிக்கப்பட்டது. இக் குழுவும் முந்தைய இரண்டு குழுக்களைப் போலவே பயிர் செய்வோருக்குத் தக்காவிக் கடன்களைத் தாராளமாகவும், உடனுக்குடனும் வழங்கவேண்டும் என்றும், கால்நடைகள் மடிவதைக் குறைப்பதற்காகத் தீவனங்கள் கிடைக்க வழி செய்யவேண்டுமென்றும், கூட்டுறவுச் சங்கங்கள், மாநில நீர்ப்பாசனத் திட்டங்களை விரிவுபடுத்துதல், புகைவண்டி நிலையங்களை விரிவுபடுத்திப் பாதுகாப்பை ஏற்படுத்துதல் போன்ற நடவடிக்கைகளை எடுக்குமாறும் பரிந்துரை செய்தது. இப் பரிந்துரைகள் உத்தரப்பிரதேசத்தில் 1907-1908 -இல் ஏற்பட்ட பஞ்சத்தைப் போக்கச் செயலாக்கப்பட்டன. அதோடு பம்பாய், ஐதராபாத்து, சென்னை, வங்காளம் போன்ற பகுதிகளிலும் அப்பரிந்துரைகள் செயலாக்கப்பட்டன.

அடுத்து வங்காளத்தில் 1943 – இல் ஏற்பட்ட பஞ்சத்தையொட்டி 1944-இல் உட்கெட்டின் (Woodhead) தலைமையில் பஞ்சக்குழு ஒன்று செயற்பட்டது. இதன்படி நாட்டில் உணவுப் பஞ்சத்தைத் தவிர்ப்பதற்காக ஓர் அகில இந்திய உணவுக் கழகம் (All India Food Council) அமைக்கும்படி பரிந்துரைத்தது. இதன்படி மாநிலங்கள் தானியங்களைக் கொள்முதல் செய்து பங்கீடு செய்யவேண்டுமென்றும், உற்பத்தியாளர், நுகர்வோர் ஆகிய இரு பிரிவினருக்கும் பொதுவான ஒரு நியாய விலையை நிருணயம் செய்யவேண்டும் என்றும் கூறியது. உலகப் போருக்குப் பின்னர் ஏற்பட்ட உணவு நெருக்கடியைத் தவிர்ப்பதற்கு இந்திய அரசாங்கம் மேற்கூறிய ஆலோசனையைச் செயற்படுத்தியது.

பஞ்சத்தை முன்கூட்டியே அறிந்துகொள்வது கடினம் என்றாலும் அதனால் விளையும் கேடுகளைப் போக்கவேண்டி எச்சரிக்கையாகப் பஞ்சக்காலத்தில் செயற்படும்விதமாக இப்போதைய இந்தியப் பஞ்சக் குழு அமைக்கப்பட்டுள்ளது. அதன்படி பல நிவாரண வேலைகள் தயார்நிலையில் வைக்கப்பட்டுள்ளன. பருவ மழை பொய்த்தல், விலையேற்றம், கடனைத் திருப்பி அடைப்பதில் ஏற்படும் சுணக்கம், சிறிய அளவு திருட்டுகள் போன்ற பஞ்சத்தின் அறிகுறிகள் கவனிக்கப்பட்டு வருகின்றன. இதன்தொடர்பாகப் பஞ்சத் தவிர்ப்பு நடவடிக்கைகளாக வேளாண்மை முன்னேற்றத்திற்குக் கால்நடைகள், கலப்பைகள், விதைகள் ஆகிய மூலப் பொருள்களுக்காக முன்பணம் அளிக்கப்படுகிறது. இப் பணம் சமயத்தில் நிறுத்தியும், நீக்கியும் வைக்கப்படுகிறது. குழந்தைகள் உடல் ஊனம் அடைந்தவர்களுக்கு இலவச உதவிகள் அளிக்கும் பொருட்டு இரவலர் அகங்கள் திறக்கப்படுகின்றன. பஞ்சத்தை அடுத்து ஏற்படும் கொள்ளை நோய்களைத் தவிர்க்கும்பொருட்டு மருத்துவப் பணியாளர்கள் தயார்நிலையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். நிலத் தீர்வையைக் குறைந்த அளவில் நிருணயித்தல், கடன்களைக் குறைந்த வட்டிக்குத் தருதல், எளிய தவணைகளில் கடனைத் திருப்பி அளிக்க வாய்ப்பளித்தல், மலைவாசிகள், ஆதிவாசிகள், நெசவாளர்கள் என்று சமுதாயத்தின் எல்லா வகுப்பினருக்கும் நிவாரண உதவி சரியான வழிகளில் அளிக்கப்படுதல், நீர்ப்பாசன, போக்குவரத்து வசதிகளைப் பெருக்குதல், வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குதல், தொழிற்றுறையை வசதி அடையச் செய்தல் போன்ற பல வழிகளில் நடவடிக்கை எடுப்பதின் மூலம் பஞ்சத்தை எதிர்க்கும் திறனை அதிகரித்துள்ளனர். எனவே, தவிர்க்க முடியாத சில குறைபாடுகளைக் கொண்டிருந்தபோதும் இந்தியப் பஞ்ச நிவாரண இயக்கமானது பஞ்ச நிவாரண நிருவாகத்தின் வரலாற்றில் குறிப்பிடப்பட வேண்டிய முக்கிய சாதனைகளுள் ஒன்றாகும்.

இந் நிவாரணங்களுக்குத் தேவையான நிதியை கி.பி. 1878 இல் ஆங்கிலேய இந்திய அரசு ஏற்படுத்தியது. அந்த ஆண்டிலிருந்து தொடர்ந்து ஆண்டுதோறும் பஞ்ச நிவாரண உதவித் தொகையாக உரூ.1.5 கோடி அளிக்கப்பட்டு வந்தது. பின்னர் 1919-இல் பஞ்ச நிவாரணக் கொள்கை மாநில அரசுகளின் கொள்கையில் சேர்க்கப்பட்டதுமுதல் மாநில அரசுகள் 'பஞ்ச நிவாரண நிதி' என ஒரு குறிப்பிட்ட தொகையை ஆண்டுதோறும் ஒதுக்கி அதை மத்திய அரசிடம் ஒப்படைத்துவிடுகின்றன. பஞ்சக காலங்களில் பாதுகாப்புப் பணிகளுக்கும், பயிர் செய்வோருக்குத் தக்க உதவித்தொகைஅளித்தலுக்கும்இந் நிதி பயன்படுத்தப்படுகிறது. இதல்லாமல் பொதுமக்களால் இந்திய மக்களின் பஞ்சப் பொறுப்பாட்சிக்

தொழ என்னும் நிதி ஒன்று ஏற்படுத்தப்பட்டுச் செயற்படுத்தப்பட்டது.

பொதுவாக உணவுப் பற்றாக்குறையால் ஏற்பட்ட பஞ்சமே மிகுதி என்பதை வரலாற்றுச் சான்றுகள் தெரிவித்தபோதிலும், 19-ஆம் நூற்றாண்டின் இடையிலிருந்து ஏற்பட்ட பஞ்சங்களுக்குப் பணம் காரணமாக இருந்தது என அறியப்படுகிறது. இது வேலை கிடைக்காத நிலையில் அதனால் வாங்கும் திறன் குறைவினால் விளைந்த பஞ்சம் ஆகும்.

மேலும், பஞ்சங்களின் அவலங்கள் பெரும்பாலும் ஏழை மக்களைத்தான் வாட்டுகின்றன. உணவுப் பொருள்களை விளைவிப்பவர்களே உண்ண உணவு கிடைக்காமல் பசி, பட்டினியால் இறந்தனர் என்பது பஞ்சக்காலத்தின் விரும்பத் தகாத உண்மையாகும். இதோடு, உணவுப் பற்றாக்குறையைவிட மனிதனால் ஏற்படுத்தப்பட்ட பொருளாதாரக் காரணிகளே பஞ்சத்திற்குக் காரணமாக இருந்திருக்கின்றன என்பது வருத்தத்திற்குரிய செயலாகும். எந்த நாட்டில் பஞ்சம் வியக்கும்வண்ணம் ஏற்படுகிறதோ அங்கே அதன் தாக்கம் குறைவாகவும், எங்கே அடிக்கடி பஞ்சம் ஏற்படுகிறதோ அங்கே அதன் தாக்கம் நீடித்த, முடிவில்லாத ஒன்றாகவும் இருந்திருக்கிறது. மேலும், முன்னேற்றமடைந்த நாடுகளைவிட ஏழை நாடுகளில் மக்களுக்கு நோய் எதிர்ப்புத் திறன் குறைவென்பதால் பஞ்சத்தின் விளைவுகளிலிருந்து பாதுகாப்பு என்பது மிக மெதுவாகத்தான் கிடைக்கும்.

ஆனால், அறிவியல் முன்னேற்றம்,வேளாண்மைப் புரட்சி, போக்குவரத்து, தகவல் தொடர்பு, நீர்ப்பாசன வசதிகள், உணவுப் பொருள்களைச் சேமித்து வைக்கும் முறை, பகிர்வு செய்யும் முறை ஆகியவற்றில் ஏற்பட்ட மாற்றம், நில வருமானக் கொள்கை ஆகியன இடர்க்காலத்தில் குறிப்பிட்ட இடத்தில் இருக்கும் தீவிரத் தன்மையைத் தடுத்துப் பரவலாக்குவதால் பஞ்சத்தின் கடுமையானது குறைக்கப்படுகிறது. மேலும், இம் முன்னேற்றங்கள் உலகிலிருந்து பஞ்சத்தை அறவே ஒழித்துவிட்டன என்பதோடு நாகரிக உலகில் பஞ்சம் என்பது அசாதாரணமான ஒன்றாகிவிட்டது. இவ்வாறு பஞ்சங்களை எதிர்த்துப் போராடி வெற்றி காணும் முறைகள் முன்னேற்றமடைந்திருப்பதால் அவற்றால் ஏற்படும் துன்பங்கள், கேடுகள் குறைந்திருக்கின்றன.

இன்றைய நிலையில் இயற்கைச் சீற்றத்தினால் ஏற்பட்ட பஞ்சங்கள் அரசியல், பொருளாதார, சமுதாய அடிப்படையில் மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், குறுகிய காலத்தில் போர் அல்லது புரட்சியால் செயற்கைப் பஞ்சம் மறுபடியும் திரும்பாது என்று உறுதியாகக் கூறவியலாது. கா.தி.இ.

**துணை நூல்கள்**

**Bhatia. B.M.**, Famines in India: A Study in some Aspects of the Economic History of India, 1860 1945, Asia Publising House. New York. 1963.

**Fisher Harold, H.**, The Famine in Soviet Russia 1919-1923: The Operations of the American Relief Administration, Macmillan, New York. 1927.

**Golder, Frank A. & Hutohinsog, Elncolltn**, On the Trail of the Russian Famine. Stanford University Press, 1927.

**Knight Henry**, Food Administration in Ihdia 1939-47, Stanford University Press, 1954.

**Loveay Alexander**, The History and Economics of Indian Famines, (Bell) London, 1914.

**Mallory, Watar,H.**, China: Land of Famine, American Geographical Society, New York, 1926.

**Sharma, A.N.**, Economic Structure of Indian Agriculture, Himalaya Publishing House,Bombay, 1984.

***பஞ்ச மரபு***: இந்நூல் இசை, நாடகம் பற்றி எழுந்த நூலாகும். அடியார்க்குநல்லார் தாம் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதுவதற்குத் துணை செய்த நூல்களுள் இதுவும் ஒன்றெனக் குறிப்பிடுகின்றார். இசை, முழவு, தாளம், கூத்து, அவிநயம் ஆகிய ஐந்தின் இலக்கணங்களைக் கூறலின் இந்நூல் பஞ்சமரபு எனப் பெயர்பெற்றது. தோல், துளை, நரம்பு, கஞ்சம், மிடறு ஆகிய ஐந்திடங்களில் தோன்றும் இசை, 'பஞ்ச மாசத்தம்' எனப் பெயர்பெறும்.அவ்வைந்திலக்கணங்களைக் கூறுதலின் பஞ்சமரபு எனப் பெயர் பெற்றது என்றலும் ஒன்று. இந்நால் 240 வெண்பாக்களால் இயற்றப்பெற்றது. ஆடூஉ முன்னிலைப் பாடல்களில், பாண்டிய மன்னன் முன்னிலைப்படுத்திப் பாடப் பெறுகின்றான். பாயிரம், இசைமரபு, வாச்சிய மரபு, நிருத்த மரபு, அவிநய மரபு, தாள மரபு என ஐம்பெரும் பிரிவுகளை இந்நூல் கொண்டுள்ளது.

நரம்புக் கருவிகளாகிய யாழ்மரபு, அவற்றின் பெயர், அவற்றிற்கு வேண்டிய மரங்கள், உறுப்புகள், நரம்புகள் ஆகியனவும் அவற்றை இயக்குகின்ற தொழில் முறைமைகளும், குழற் கருவிகளுக்கு வேண்டிய மரங்கள், குழற் கருவிகளின் வழி எழும் இசை மரபு ஆகியனவும், பாடல் பகுதிக்குரிய பலநிறங்கள், பாடப் பெறாதார், பாடல் பெறுபவர் மற்றும் பாட

லின் குற்றங்கள் முதலியனவும், தோல, துளை, நரம்பு, கஞ்சம், மிடறு ஆகிய இவற்றில் வெளிப் படும் பண்களின் வகைகள, காலம், அவற்றிற்குரிய தெய்வங்கள், ஓசைகள், இசைக்குரிய தமிழ்ப் பாவினங்கள், வண்ணங்கள் முதலியனவும், முழவுக் கருவிகளின் இலக்கணங்கள், அவற்றின் பெயர், அவற்றிற்குரிய கடவுளர்களின் பெயர் ஆகியனவும், தோற்கருவிகளில் வாசிக்கப் பெறும் சொற்கட்டு களின் முறை, எழுத்துகள், அவற்றின் பெயர்கள் ஆகியனவும், மற்றும் இசை, நாடகத் தொடர்பான செய்திகள் பலவும் இந்நூற்கண் இடம் பெற்றுள்ளன.

இந்நூலின் ஆசிரியர் அறிவனார் ஆவர். இவர் பாண்டி நாட்டுச் சேற்றூரினர். சோழநாட்டுத் திருச் சேறையினர் என்று கூறுவாறும் உளர்.

இந்நூல் இடைச்சங்க காலத்தது என்றும், கடைச் சங்க காலத்தது என்றும் கூறுவர். எனினும், மூவர் தேவாரத்தில் கூறப் பெறாத 'சாளரப்பரணி' என்ற பண்ணமைதி பற்றி இந்நூல் கூறுவதாலும், 'நிருபதுங்கராகம்' என ஓர் இராகம் பற்றிய குறிப்பு இதன்கண் உள்ளதாலும் இந்நூலாசிரியர் காலம் மூவர் காலத்தை அடுத்த கி.பி. 9-ஆம் நூற்றாண் டெனக் கருத இடமுண்டு என்பர். கு.சு.

**பஞ்சமுக வாத்தியம்**: தென்னிந்திய இசைக் கருவிகளுள் குடமுழவம் என்னும் பஞ்சமுக வாத்தியம் சிறப்பிடம் பெறுகிறது. பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம், மதுரைக் காஞ்சி, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை, குறுந்தொகை முதலான சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சீவக சிந்தாமணி, சூளாமணி முதலான காப்பியங்களிலும் தேவாரப் பதிகங்கள், ஆழ்வார் பாசுரங்கள், திருப் புகழ் போன்ற பக்தி இலக்கியங்களிலும் 'குடமுழவம்' பற்றிய பல குறிப்புகள் காணப்பெறுகின்றன.

இந்திய நாட்டின் பல்வேறு பகுதிகளில் வடிக்கப் பட்டுள்ள சிற்பங்களிலும், தமிழகத்தில் கி.பி. 10 -ஆம் நூற்றாண்டுவரை படைக்கப்பட்ட பல்லவர், பாண்டியர், சோழர்களின் சிற்பங்களிலும், ஓவியங் களிலும் ஆடவல்லானின் திருநடனத்திற்குப் பூத மொன்று குடமுழவம் இசைக்கும் காட்சி வடிக்கப் பட்டுள்ளதை இன்றும் காணலாம்.

பஞ்சமுக வாத்தியத்தின் இப்போதைய அமைப் பின் வளர்ச்சி நிலைகளை இலக்கிய-சிற்ப - ஓவியங் களின் வரலாற்றுக் கால அடிப்படையில் தொகுத்து நோக்கும்போது இக்கருவி, முதலில் ஒரே வாயுடைய பானையாக இருந்ததாகத் தெரிகிறது. இது பலாப் பழம், பனைமரத்தின் அடிப்பகுதி, நீள் கழுத்துள்ள



பஞ்சமுக வாத்தியம்

சாடி, பருத்த மத்தளம், பெரிய கங்காளம் போன்ற வடிவுகளில் இருந்தது. இவ்வாறு ஒரே வாயுடைய குடமுழவம் 'கஞ்சம்' என்னும் உலோகத்தால் செய் யப்பெற்று மான் தோலால் வாய் கட்டப்பட்டுத் திகழ்ந்திருந்தது. ஒரே வாயுடைய குடமுழவத்தை இசைப்பதைவிட, இரண்டு, மூன்று, நான்கு குடமுழ வங்களை இணைத்துப் பல வாய்களில் உள்ள தோலைத் தட்டித் தாளம் எழுப்பும் மாறுபட்ட வளர்ச்சி நிலை கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் ஏற் பட்டது. தில்லைக் கோயிலின் மேலைக் கோபுர வாயிலில் கல்வெட்டு விளக்கங்களோடு காணப்படும் சிற்பங்களில், இரண்டு குடங்களில் நான்கு வாய் களைப் படைத்து அதில் தோல்களை இணைத்து இசைக்கும் முயற்சி தெரிகிறது. இதில் எழும் தாளத் திற்கேற்ப ஆடல் மகளிர் 108 கரணங்களை ஆடினர் எனத் தெரிகிறது. பின்னர்க் குடமுழவின் அமைப் பில் ஆடற் கலைக்கேற்ப மற்றுமொரு வளர்ச்சி நிலை ஏற்பட்டது. இரண்டு இரண்டு வாய்களை யுடைய இரண்டு குடங்களின் உருவத்தையும் இணைத்து ஒரே பானையில் ஐந்து முகங்களும் நிறு வப்பட்ட நிலையே அது. இதில் நடுவிலுள்ள முகம் மற்ற நான்கு முகங்களைக் காட்டிலும் சற்றுப் பெரியதாக இருக்கும். இதுவே பஞ்சமுக வாத்தியம் என்னும் குடமுழவமாகும்.

தமிழகத்தில் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் தொடங்கி கி.பி. 19-ஆம் நூற்றாண்டுவரை படைக்கப்பெற்ற சிற்பங்கள், செப்புத் திருமேனிகள் மற்றும் ஓவியங்களில் பஞ்சமுக வாத்தியம் இடம் பெற்றுள்ளது. தமிழ் இலக்கியத்தில் பஞ்சமுக வாத்தியம் பற்றிய தெளிந்த சான்று கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் கல்லாடனாரால் இயற்றப்பட்ட கல்லாடத்தில் காணப்படுகிறது. பின்னர், கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்களில் 'குடபஞ்சமுகி' என்று இவ்வாத்தியம் குறிப்பிடப்பட்டுள்ளது. சோழ மன்னர்களின் ஆட்சியில் (கி.பி. 11-ஆம் நூ.) தோன்றிய பஞ்சமுக வாத்தியங்கள் பல அழிந்த போதும் திருவாரூர், திருத்துறைப் பூண்டி ஆகிய இரண்டு கோயில்களில் மட்டும் இவ்வாத்தியம் தொடர்ந்து இசைக்கப்பெற்று வருகிறது. திருத்துறைப்பூண்டி அருமருந்தீசர் திருக்கோயிலில் 1 மீ. உயரமும் 90 கிலோ எடையும் கொண்ட பஞ்சலோகத்தில் உருவாக்கப்பட்ட பஞ்சமுக வாத்தியம் உள்ளது.

திருவாரூரிலிருந்துகிடைத்த ஏட்டுச்சுவடி ஒன்று, 'பாண்ட வாத்தியம்' என்னும் பஞ்சமுக வாத்தியம் சிரீசதாசிவனுடைய ஐந்து முகங்களான ஈசானம் வாமதேவம், அகோரம், தற்புருசம், சத்யோ சாதம் ஆகியவற்றிலிருந்து தோன்றியதெனவும், இதனை ஐந்து விதமாகவும், ஏழு விதமாகவும் வாசிக்க வேண்டுமென்றும் கூறுகிறது.

பஞ்சமுக வாத்தியத்தின் ஐந்து முகங்களும் சாம கானத்தின் ரி,க,ம,த,நி சுரங்களுக்குச் சுருதி கூட்டி வாசிக்கப்படும். சட்ச, பஞ்சம சுரங்கள் கோயிலின் மணிகளிலிருந்தும், சங்கிலியிலிருந்தும் ஒலிக்கும். இந்த வாத்தியத்தைத் தனியாகவும், சுத்த மத்தளத்துடன் சேர்த்தும், இரண்டு கைகளாலும் வாசிப்பார்கள். ஆடவல்லானின் ஆடலுக்காக இசைக்கும் தகுதியைப் பெற்றிருந்தபோதிலும், கோயில்களில் சருவ வாத்திய நிகழ்ச்சியிலும் இக்கருவி இடம்பெறுகிறது. திருவாரூர், திருத்துறைப்பூண்டி ஆகிய ஊர்களிலுள்ள திருக்கோயில்களில் பூசைகளுக்கும், தாண்டவங்களுக்கும், விழாக்களுக்கும் பஞ்சமுக வாத்தியம் பயன்படுத்தப்படுகிறது.

பஞ்சமுக வாத்தியம் சதாசிவனின் அமிசமெனக் கருதப்பட்டபோதும், இதனை இசைக்கும் இசைவாணனை 'நந்தி' யென்றும், 'வாணன்' என்றும் இலக்கியங்களும், புராணங்களும் கூறுகின்றன. பரசவர் அல்லது பாரசைவர் என்ற முட்டுக்காரர்களே இக்கருவியை இசைக்கும் தகுதியுடையவர்கள். அவர்கள் சிவதீட்சை பெற்றவர்களாய் இருத்தல் வேண்டும்.

பி.எஸ்.லோ.

**பஞ்சவடி**, தண்டகவனத்தில் கோதாவரி நதிக் கரையில் அமைநத ஓரிடம். ஐந்து ஆலமரங்கள் ஓங்கி வளர்ந்திருந்த இடமாதலால் இப்பெயர் பெற்ற தென்பர்; அரசு, ஆல், வில்வம், நெல்லி, சோகம் ஆகிய ஐந்து மரங்கள் வளர்ந்திருந்த இடம் என்றும் கூறுவர். இராமர் தம் இளவல் இலக்குவனோடும் மனைவி சீதா தேவியுடனும் அகத்திய முனிவர் சொற்படி தம் வனவாசத்தில் தங்கியிருந்தார் என்று இராமாயணத்தில் கூறப்படுகிறது. அவர்கள் இங்கிருந்தபோதுதான் இராவணன் சீதாபிராட்டியைச் சூழ்ச்சியால் கவர்ந்து சென்றான். அங்கு இலக்குவன் அமைத்திருந்த பாணசாலையை அடியுடன் பெயர்த்து அவளை மண்ணொடும் கொண்டு போனான் என்று கம்பர் கூறுகிறார்.

பஞ்சவடி என்பது ஆண்டு முழுவதும் மலர்களும் காய்கறிகளும் நிறைந்த பலவகை மரங்களைக் கொண்ட இயற்கையெழில் மிக்க இடம். கோதாவரியின் தெளிந்த நீரும் குளிர்ந்த நீரோடைகளும் குளங்களும் அன்னப்பறவைகளும் நீர்க் காக்கைகளும் (காரண்டம்)மற்றும் பலவகைப் பறவைகளும், விலங்குகளும் மிகுந்த இடம். அது இப்போது மகாராட்டிர மாநிலத்திலுள்ள நாசிக்கு என்னும் இடம் என்று சிலர் கூறுவர். அது ஆந்திர மாநிலத்திலுள்ள பத்திராசலம் என்னும் புனிதத்தலத்தின் அருகே இருந்தது என்று அத்தல வரலாறு தெரிவிக்கிறது. அதற்கான அடையாளங்கள் பல அங்குள்ளன எனவும் கூறப்படுகிறது.

ஆர்.கி.

**பஞ்சாக்கரமாலை**: பஞ்சாக்கரம் -ஐந்தெழுத்து. இவ்வாறு இத்தொடர் பொதுவாகப் பொருள்படினும் ஆதிமந்திரமாகிய திருவைந்தெழுத்தையே இது குறிக்கும். இத்திருவைந்தெழுத்தின் வகையையும், சிவலிங்கத் திருமேனியில் இவ்வெழுத்துகள் நிற்கும் முறையையும், சத்திகளை இவை அதிட்டித்து நிற்கும் முறையையும், இதனை இடையறாது எண்ணுவார்க்குச் சிவானுபவம் கிடைக்கும் முறையையும், அவ்வனுபவத்தையும் தொடர்ச்சியாக இந்நூல் கூறுதலின் பஞ்சாக்கரமாலை எனப் பெயர் பெற்றது.

இந்நூல் காப்பு முதலாக உள்ள அறுபது வெண்பாக்களை உடையது; தூலபஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், சீவன் முத்தர் ஞானபூசைக் கிரமம் என்னும் மூன்று பிரிவினையுடையது. கடவுள் வாழ்த்தில் மூத்த பிள்ளையாருக்கு உரிய வணக்கம் அமைந்துள்ளது. மூத்த பிள்ளையாரை வணங்கின் இயமன் அஞ்சுவன்; திருவைந்தெழுத்து மக்களுக்கு அரணாக அமையும் எனக் கூறுகிறது.

தூல பஞ்சாக்கரம் என்பது 'நமசிவாய' என்பதாம். சூக்கும பஞ்சாக்கரம் என்பது 'சிவாயநம' என்பதாம். இத்திருவைந்தெழுத்தை இடையறாது எண்ணி அதன்வழி மலநீக்கம் பெற்றுச் சிவானுபவம் பெற்றவர்கள் சீவன் முத்தர் எனப்படுவர். அவர்கள் அந்நிலை வருங்காறும் இத்திருவைந்தெழுத்தையே பற்றுக் கோடாகக் கொண்டு நிற்பர். அந்நிலை கைவரப் பெற்ற பின்னரும் தம் நிலை குலையாத வாறு இத்திருவைந்தெழுத்தையே பற்றுக் கோடாகக் கொள்வர்.

இதனை அருளியவர் கண்ணுடைய வள்ளல் என்பார். இவர் சீர்காழிப் பதியினர். தம் முன்னோராய ஞானசம்பந்தப் பிள்ளையார் மீது அளவிறந்த பற்றுடையவராவர். இவர்காலம் கி.பி.14-ஆம் நூற்றாண்டின் இறுதியும், கி.பி.15-ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆகும். கு.சு.

**பஞ்சாங்கம்**: பஞ்ச-அங்கம் பஞ்சாங்கம் எனப்படும். இத்தொடர் ஐந்து உறுப்புகளைப் பற்றிக் கூறும் கணிதக்குறிப்புஎனப் பொருள்படும். சோதிடம், நிமித்தம், சகுனம் போன்றவற்றில் நம்பிக்கை உடையவர்களுக்குப் பஞ்சாங்கம் பயன்பட்டு வருகிறது.

சோதிடக் கலையின் அடிப்படையில் வானநூலை ஆதாரமாகக் கொண்டு திதி, வாரம், யோகம், கரணம் நட்சத்திரம் என்னும் ஐந்தையும் கணித்துக் கூறும் கருவியாதலால் இது பஞ்சாங்கம் எனப் பெயர் பெற்றது.

பஞ்சாங்கம் பல உள்ளன. ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு பஞ்சாங்கம் சிறப்பாகக் கருதப்படுகிறது. எடுத்துக்காட்டாகத் தஞ்சை மாவட்டத்திற்கு 28-ஆம் எண் பஞ்சாங்கம் சிறப்பாகக் கருதப்படுகிறது.

காலத்தை வரையறுத்துணர்வதற்கு விநாடி, நாழிகை, முழுத்தம், நாள், வாரம், மாதம், ஆண்டு என்னும் அளவைகள் சுட்டப்படுகின்றன. இவை கதிரவன் இயக்கத்தை ஆதாரமாக வைத்து வரையறுக்கப்பட்ட அளவுகள் ஆகும். இதே அடிப்படையில் தான் யோகம், இலக்கினம், இராசி முதலியவை கணக்கிடப்படுகின்றன.

மிகத் தொன்னெடுங் காலத்திலேயே முன்னோர்கள் வானநூற் கணிதத்தில் புலமை பெற்றிருந்தனர். நாள், கோள் இவற்றின் இயக்கங்களை வைத்துப் பல வரையறைகள் செய்துள்ளனர். சூரியனை ஆதாரமாகக் கொண்டது போலவே சந்திர கதியையும் வைத்துச் சில கணிப்புகள் செய்துள்ளனர். நட்சத்திரம், திதி போன்றவை அவற்றுள் சில.

ஒரு முழுத்தம் என்பது இரண்டரை நாழிகை கொண்டது. பகல் காலத்தில் தீமை தரத்தக்க வேளைகள் இராகுகாலம், எமகண்டம் என்ற பெயர்களால் குறிக்கப்படும். நன்மை விளையும் நேரம் குளிகைகாலம் எனப்படும். சித்தயோகம், அமிர்த யோகம் என்பன நலந்தருவன; மரணயோகம் தீமை தருவது என்பன போன்றவற்றைப் பஞ்சாங்கம் அறிவிக்கின்றது.

பஞ்சாங்கம் தொடக்கத்தில் கிரேக்கர்களால் கணித்துக் கூறப்பட்டதென்பர். இந்தியாவிலும் வான கணிதம் பரவலாக இருந்து வந்தது. காலப் போக்கில் இது வளர்ச்சியுற்றது. அதன் கூறுகளுள் ஒன்று பஞ்சாங்கம்.

ஆண்டிற்கான பலன் கூறுவதோடன்றி உழவு உழ, விதைவிதைக்க, கதிர் அறுக்க, மனை முகூர்த்தம் செய்ய, வீடுகுடிபுக, திருமணம், இருதுசாந்தி, சீமந்தம் போன்றவை செய்ய, குழந்தைகளைப் பள்ளியில் வைக்க-இப்படி ஒவ்வொன்றுக்கும் உரிய நன்னாள் இன்னதென்பதைப் பஞ்சாங்கம் கணித்துக் கூறுகின்றது.

ஆண்டொன்றில் நடைபெறும் சகலதேச உற்சவங்கள், சுபமுகூர்த்தங்கள், ஆழ்வார், நாயன்மார் நட்சத்திரங்கள், பண்டிகைகள், விரதங்கள், குருபூசைகள், சந்திர, சூரிய மறைப்பு போன்ற அனைத்தையும் பஞ்சாங்கத்தில் பார்த்தறியலாம்.

திருமணம் செய்வதில் பத்துப் பொருத்தங்கள் பார்க்க வேண்டுமெனப் பஞ்சாங்கம் கூறுகின்றது. அவை: தினப்பொருத்தம், பெண் தீர்க்கப் பொருத்தம், யோனிப் பொருத்தம், இராசிப் பொருத்தம், வசியப் பொருத்தம், இரச்சுப் பொருத்தம், நாடிப் பொருத்தம் முதலியன. பஞ்சாங்கம் கணிப்பது கடினமானதாகும். கணிதத்தில் நல்ல தேர்ச்சி இருந்தால் தான் பஞ்சாங்கம் கணிக்க முடியும். அ.ஆ.

**பஞ்சாபி**: பஞ்சாபி மொழி இந்தோ ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த இந்தோ ஆரிய மொழிகளுள் ஒன்றாகும். இது இந்தோ-ஆரியமொழிக் குடும்பத்தில் வடமேற்குக் குழுவைச் சேர்ந்த மொழிகளோடு தொடர்புடையது என்றாலும், மத்திய குழு மொழிகளின் செல்வாக்கு இதில் அதிகமாகக் காணப்படுவதால், மத்தியக் குழுவில் சேர்க்கப்பெற்றுள்ளது.

இம்மொழி சிறப்பாகப் பஞ்சாபு மாநிலத்தில் பேசப்படுகிறது. இம்மாநிலத்தின் மேற்குப் பகுதி பாகிசுத்தான் நாட்டில் உள்ளது. கிழக்குப் பகுதியே இந்தியாவிலுள்ள பஞ்சாபு மாநிலமாகும். இந்த இரு பகுதிகளிலும் உள்ள பஞ்சாபி மொழி பேசுவோரின்

எண்ணிக்கை ஏறத்தாழ மூன்று கோடியாகும். இந்தியாவில் பரவலாகப் பல மாநிலங்களில் பஞ்சாபி பேசுவோர் உள்ளனர். உலகளவில் கனடா, இங்கிலாந்து போன்ற வெளிநாடுகளிலும் பஞ்சாபி பேசுவோர் உள்ளனர். இந்தியாவில் பஞ்சாபி பேசுபவர்கள் என்றால் பெரும்பாலும் சீக்கியர்களையே குறிப்பதாகக் கருதும் எண்ணம் மேலோங்கி உள்ளது. ஆயின், சீக்கியர்களைத் தவிர பல இந்துக்களும் பிற சமயத்தினரும் பஞ்சாபி மொழி பேசி வருகின்றனர்.

பஞ்சாபி பேசப்படும் இடத்தைச் சுற்றிலும் இந்தி, இராசசுத்தானி, இலாந்தா(Lahnda) முதலியன பேசப்படும் இடங்கள் இருப்பதால் அம்மொழிகளோடு தொடர்பு கொண்டுள்ளது. மேலும், பஞ்சாபி மொழி வழங்குகின்ற இடம் வெளிநாட்டவரின் பல படையெடுப்புகளுக்குரிய இடமான வடமேற்கு எல்லையாக இருப்பதால் வரலாற்றடிப்படையில் நோக்கும்போது பஞ்சாபி மொழியில் பாரசீகம், அரபி போன்ற பல வெளிநாட்டு மொழிகளின் ஆளுமையும் நிரந்தரமாகக் காணப்படுகின்றன.

பல்வேறு வரலாற்றுக் காரணங்களால் பஞ்சாபி இலக்கியத்தின் சுதந்திரமான வளர்ச்சி பாதிக்கப்பட்டிருந்தது. இந்தியா மீது துருக்கியர்கள், ஆப்கானியர்கள் மற்றும் முகமதியர்களின் படையெடுப்பு, பஞ்சாபில் அவர்களுடைய நீண்ட கால ஆட்சி முதலியன பஞ்சாபி இலக்கிய வழக்குத் தோன்றுவதற்கு இடையூறுகளாக விளங்கின. இடைக்காலம் முழுவதும் பஞ்சாபில் தோன்றிய இலக்கியங்கள் பாரசீகம் கலந்த உருதுவில் எழுதப் பெற்றன. அரபி பாரசீக இலக்கியங்களின் செல்வாக்கினால் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் கிசா-கவி (Kissa - Kawi) என்ற காதல் இலக்கிய வகை (Romantic love poem) என்ற புதிய பாவகை பஞ்சாபில் தோன்றியது. தாமோதர், வாரிசு சா (Damodar, Varis Shah) போன்ற கவிஞர்கள் இப்பாவகையின் வளர்ச்சிக்குப் பெரிதும் காரணமாவர். பின்னால் தோன்றிச் சுபி (Sufi) கவிதை இலக்கியத்தில் புகழ் பெற்று விளங்கியவர்கள் சாகுசைன், புல்கா சா முதலியோராவர். அவர்களின் படைப்புகள் இந்தியாவில் மட்டுமன்றி ஈரான், எகிப்து போன்ற வெளிநாடுகளிலும் புகழ்பெற்று விளங்கின.

பஞ்சாபில் கி.பி. 1848-இல் ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்ட போதிலும், பல ஆண்டுக் காலமாக உருதுக் கல்விக்கே பெரிதும் ஊக்கம் அளிக்கப்பட்டு வந்தது. உருது மொழியே கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இடைக்காலம் வரை செல்வாக்குப்பெற்றமொழியாக விளங்கியது. அரசு மற்றும் கல்வி நிலையங்களில், பத்திரிகைகளில் உருது மொழியே உயர்ந்த நிலை பெற்றதாக விளங்கியது. நாடோடிக் கவிதைகளையும் சீக்கிய மத நூல்களையும் தவிர்த்து வேறு எதுவுமே பஞ்சாபி மொழியில் எழுதப் பெறவில்லை. பஞ்சாபி என்ற மொழி, நிலை பெற்றது 1950-ஆம் ஆண்டுக்குப் பின்னரேயாகும். அப்பொழுது அது இலாகூரிலுள்ள பஞ்சாபுப்பல்கலைக்கழகத்திலும் பிற கல்லூரிகளிலும் ஒரு பாடமாகச் சேர்க்கப் பெற்றது. பஞ்சாபி அறிஞர்களிடையே ஏற்பட்ட விழிப்புணர்ச்சி காரணமாக கி.பி. 20-ஆம் நூற்றாண்டு தொடங்கும் தறுவாயில் பஞ்சாபி மொழி இலக்கியம் வளரவும் சமூகப் பண்பாட்டுக் கூறுகளின் முக்கியவெளிப்பாடாகப் பஞ்சாபி மொழியை உருவாக்கவும் இயக்கம் தோன்றியது. அது முதல் கல்வியில் பஞ்சாபி மொழிக்குச் சிறப்பானபங்கு அளிக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. புதிய இலக்கிய வகைகளான புதினம், சிறுகதைகள் முதலியன தோன்றத் தொடங்கின. பஞ்சாபின் முன்னணி எழுத்தாளர்கள் சேர்ந்து 1926-இல் பஞ்சாபு இலக்கியக் கழகத்தை (Punjab Literary Society) உருவாக்கினார்கள்.

பஞ்சாபி மொழி வழங்கிய பஞ்சாபு, ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் பெரிய சமசுதானமாக விளங்கியது. இது 1947-இல் பாகிசுத்தானுக்கும் இந்தியாவிற்குமாக மேற்குப் பஞ்சாபு, கிழக்குப் பஞ்சாபு என்று இரண்டாகப் பிரிக்கப் பெற்றது. இப்பிரிவினைக்குப் பின், மேற்குப் பாகிசுத்தானில் உருதுவிற்கே அரசு அனுமதி இருப்பதால் அங்குப் பஞ்சாபி இலக்கிய வளர்ச்சிக்கு இடமில்லாமல் போயிற்று. பாகிசுத்தானில் வாழும் பஞ்சாபி பேசும் மக்கள் கல்வி நிலையங்களிலும், நீதி மன்றங்களிலும், மற்றும் அரசு அலுவலகங்களிலும், பல்வேறுபட்ட பண்பாட்டுத் துறைகளிலும், பொது நிகழ்ச்சிகளிலும் பஞ்சாபி மொழியைப் பயன்படுத்த வேண்டுமென்று தீவிரமாக விளம்பரம் செய்து வருகின்றனர். இன்று வரை மேற்குப் பஞ்சாபில் உள்ள பல எழுத்தாளர் தங்கள் படைப்புகளை உருது எழுத்தில் எழுதப் பெற்ற பஞ்சாபி மொழியில் வெளியிட்டு வருகின்றனர்.

இந்தியாவிலுள்ள கிழக்குப்பஞ்சாபைப் பொறுத்தவரை அதன் கிழக்குப் பகுதியிலுள்ள பேச்சு இந்தி மொழியின் செல்வாக்கை மிகுதியாகப் பெற்றுள்ளது. பஞ்சாபு மாநிலத்தில் 1966-க்கு முன், பஞ்சாபி மொழி இந்தி மொழியோடு ஆட்சி மொழியாகக் கொள்ளப்பட்டிருந்தது. இம்மாநிலத்தின் ஆட்சி மொழியாக 1968-இல் தான் பஞ்சாபி மொழி மட்டுமே ஆக்கப் பெற்றது. இந்தியா, குடியரசான (1950) பின், உள்நாட்டு மொழிகளின் மேம்பாட்டில் அரசு அக்கறை கொண்டிருந்ததால் பஞ்சாபி மொழியின் வளர்ச்சியும் சிறப்பான நிலையை எட்டியது. இன்று பஞ்சாபி

மொழி, பஞ்சாபு மாநிலத்தின் அரசாங்க மொழியாக மட்டுமன்றி, தொடக்கக்கல்வி உயர்நிலைக் கல்வி, செய்தித் தாள்கள் போன்றவற்றில் முக்கிய பங்கு கொண்டதாகவும் உள்ளது. தில்லியில் 1959-இல் ஏற்படுத்தப் பெற்ற பஞ்சாபி எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் பஞ்சாபி மொழியில் நிறைய நூல்கள் வெளியிட்டுப் பஞ்சாபி இலக்கிய வளர்ச்சியில் பெரும் பங்காற்றி வருகிறது.

பாகிசுத்தானில் பேசப்படும் பஞ்சாபிக்கும் இந்தியப் பஞ்சாபிக்கும் உள்ள வேறுபாடு குறிப்பிடத்தக்கது. அவ்வேறுபாடு சொற்கள் அளவில் மிகுந்து காணப்படுகிறது. பாகிசுத்தான் பஞ்சாபியில் உருது, பாரசீகம், அரபி முதலிய மொழிச் சொற்கள் மிகுதியான அளவில் உள்ளன. இந்தியப் பஞ்சாபியில் இந்தி, சமசுகிருதச் சொற்கள மிகுந்த அளவில் உள்ளன.

பஞ்சாபியின் முக்கியமான கிளைமொழிகள் வருமாறு: (1) இரவி, பியாசு ஆறுகளுக்கு இடையிலுள்ள இரண்டு முக்கிய நகரங்களான இலாகூரிலும், அமிர்தசரசிலும் பேசப்படுகிறது மாசி (Majhi). (2) பியாசு, சட்லசு ஆறுகளுக்கிடையே உள்ள முக்கிய மாவட்டங்களான சலந்தர், கோசியார்பூரில்பேசப்படுகிறதுதுஆபி (Doabi). (3) மால்வி (Malwi): இது உலூதியானா மாவட்டத்தில் பேசப்படுகிறது. (4) பாட்டியால்வி (Patialwi): இது பாட்டியாலா, சங்குர் மாவட்டங்களில் பேசப்படுகின்றது. (5) தோக்ரி (Dogri): இது சம்மு நிலப்பரப்பில் பேசப்படுகிறது. (6) பகாரி (Pahari): இது சம்பா, மந்தி ஆகிய இடங்களில் பேசப்படுகிறது. (7) இலையால்புரி (Laialpuri): இது இலையால்பூர், குச்ரன்வாலா மாவட்டங்களில் பேசப்படுகிறது. (8) முல்தானி: இது முல்தான் மாவட்டத்தில் பேசப்படுகிறது. (9) இந்துகோ (Hindko) மேற்குப் பஞ்சாபில் உள்ள கசரா (Hazara) மாவட்டத்தில் பேசப்படுகிறது. (10) பொத்தொகரி (Pothohari): இது சீலம், சிந்து நதிகளுக்கிடையே உள்ள இராவல் பிண்டியை முக்கிய நகரமாகக் கொண்ட பகுதியில் பேசப்படுகிறது.

இங்கு, கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பஞ்சாபி மொழியை ஆராயவந்த ஐரோப்பியர்களுக்கு மால்வி கிளைமொழியிலேயே கவனம் சென்றது. உலூதியானா சமய ஊழிய (Mission) அச்சகத்தாரால் வெளியிடப்பட்ட வழிபாட்டு நூல்கள், இலக்கண நூல்கள், அகராதிகள் முதலானவை இலக்கண மொழியை அடிப்படையாகக் கொண்டு வெளிவந்தன. வேதாகமத்தின் பஞ்சாபி மொழி பெயர்ப்பு கி.பி.1815-இல் வெளிவந்தது. முதன் முதலில் ஐரோப்பியர்கள் உலூதியானாவில் தங்கிப் பஞ்சாபி மொழியின் வழக்கான மால்வியை ஆராய்ந்ததால் இதுவே பொதுப் பேச்சு வழக்காகக் (Standard dialect) கருதப்பட்டது. இது ஐரோப்பியப் பஞ்சாபி பொது வழக்கு (European Standard Punjabi) என்றும் குறிக்கப்பெறுகின்றது. ஆனால், அரசியல், வணிகம், பண்பாட்டுச் செல்வாக்குப் பெற்ற அமிர்தசரசு, இலாகூர் நகரங்களில் பேசப்படும் மாசி கிளைமொழியையே பொதுப் பேச்சு வழக்காகப் பெரும்பாலோர் கருதுவர். இதுவே உயர்வழக்கு (Prestige dialect) எனக்கொண்டு, இதன் அடிப்படையில் பஞ்சாபி இலக்கிய வழக்கு விளங்குவதாகக் கூறுவர். இவ்வாறு இரண்டு நிலை பேறு பெற்ற வழக்குகள் (Standard dialects) பஞ்சாபியில் உள்ளன என்று கூறுவர்.

மாசி கிளைமொழியைப் பொதுவாகப் படித்தவர்கள் பயன்படுத்துவதாகக் கொள்வர். ஆயினும், படித்தவர்களிடையேயும் கிளைமொழி வேறுபாடு அவர்களுடைய பேச்சில் ஆங்காங்கே தோன்றாமல் இல்லை. தெற்குப் பகுதியில் பேசப்படும் மால்வி வழக்கில் 'நாங்கள்' என்ற இடப் பெயரைக் குறிக்கப் பொதுப்பேச்சு வழக்குச் சொல்லான அசீங் என்ற சொல் பயன்படுத்தப்படாது அபங் என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது.

பஞ்சாபின் மேற்குப் பகுதியில் பேசப்படுகிற முல்தானி, பொத்தொகரி, இந்துகோ (Hindko), முதலிய கிளைமொழிகள் இலக்கியப் பஞ்சாபி மொழியிலிருந்து மிகுதியாக வேறுபட்டுள்ளன. இதனால், கிரியர்சன் வழிவந்த அறிஞர்கள் இவற்றை வேறுபட்ட மூல மொழியிலிருந்து வந்தவையாகக் கருதுவர். இவற்றை இலாந்தா (Lahnda) மொழி என்ற தனிப் பெயரால் குறிப்பிடுவர். இலாந்தா என்பதற்குமேற்குப்பகுதிஇடம்என்பதுபொருள்படும். இந்த மேலைப்பகுதிக் கிளை மொழிகளில் உள்ள ஒலியனியல், சொல்லியல் கூறுகள், இந்தியாவிற்கும் பாகிசுத்தானிற்கும் வடமேற்குத் திக்கில் உள்ள சிந்தி, காசுகிரி போன்ற மொழிகளோடு ஒப்புமை கொண்டுள்ளன. அதே நேரத்தில் இலக்கிய வழக்கிற்கு அடிப்படையாக உள்ள கிழக்குப் பஞ்சாபிக் கிளை மொழிகள் (Eastern Punjabi dialects) இந்தி மொழியின் அமைப்புகளோடு ஒத்திருப்பதாகக் கூறுவர். மேலும், மேற்குக் கிளைமொழி சிரைக்கி (Siraiki) என்ற பெயரில் தனி இலக்கிய மொழியாக வளர்ந்து வருவதாகக் கூறுவர். இந்நிலைக்குக் கிரியர்சன் என்ற மேனாட்டு அறிஞர் அளிக்கும் விளக்கம் வருமாறு: பஞ்சாபியின் கிழக்குக் கிளை மொழிகளின் மொழி வளர்ச்சியில் அருகில் அமைந்துள்ள இந்தி மொழியின் செல்வாக்கு மிகுதியாகக் காணப்பட்டதும்,

**அதே நேரத்தில்** வடமேற்குத் திசையில் பேசப்படும், **வட இந்தோ ஆரிய** மொழிகளின் சிறப்பியல்புகள் **மேற்குப் பஞ்சாபிக்** கிளைமொழியில் (இலாந்தாவில்) புகுந்துவிட்டதுமே காரணம்.

ஆயின், பஞ்சாபியின் கிளைமொழிகள் பற்றிய முழுமையான கணக்கெடுப்பு (Survey) இதுவரை நடைபெறாத நிலையில் மேற்கு, கிழக்குப் பஞ்சாபிக் கிளைமொழிகளின் வேறுபாடு பற்றிய கிரியர்சன் கூற்று ஒப்புக் கொள்ளக் கூடியதாக இல்லை என்பது பெரும்பான்மை அறிஞர்களின் கருத்தாகும். மேலும், 'இலாந்தா' என்ற பெயரே ஒரு சில அறிஞர்களுக்கு மட்டும்தான் தெரியும். கிழக்கு மேற்குக் கிளைமொழி களைப் பேசும் மக்கள், ஒரே இலக்கியப் பஞ்சாபி யைத்தான் பயன்படுத்துகின்றனர் என்பதும் குறிப் பிடத்தக்கது. மேலும், அநேக பஞ்சாபி அறிஞர்கள் கிழக்கு மேற்கு வழக்கைப் பஞ்சாபியின் கிளைமொழி களாகவே கொள்கின்றனர்.

பஞ்சாபி மொழி வரலாற்றில் நான்கு முக்கிய நிலைகள் உள்ளன.

(1) **பழைய பஞ்சாபி**: இதனுடைய காலத்தை உறுதியாகச் சொல்ல முடியாது. இது ஏறத்தாழ கி.பி. 11-ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்குவதா கக் கூறுவர். இக்காலத்திய இலக்கியமொழி மேற்குப் பஞ்சாபியினைக் குறிப்பாக முல்தானி கிளை மொழியை அடிப்படையாகக் கொண்டது. பரீத்து இப்ராகிம், கமால், சந்த், கோரகநாத்து போன்றோர் இக்காலத்தைச் சேர்ந்த சிறப்பான அறிஞர்களாகக் கருதப்படுகிறார்கள்.

(2) **இடைக்காலப்பஞ்சாபி**: இதனுடைய காலம் கி.பி. 15-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு வரை ஆகும். இதனை 'நானக்கு' காலம் என்றும் கூறுவர். இதுவே பஞ்சாபியின் பொற் காலம் என்பர். பஞ்சாபியில் கி.பி.17-ஆம் நூற்றாண் டின் தொடக்கம் வரை சிறப்பான இலக்கியப்பணிகள் எதுவும் நடைபெறவில்லை என்று கூறலாம். அதன் பின்னர்க் கிழக்குப் பஞ்சாபில் உள்ள கிழக்குக் கிளை மொழி ஓர் இலக்கிய மொழியாக வளர்ந்தது. பஞ் சாபி இலக்கியத்தின் தொடக்கநிலையைப் புனித குருநானக்கு(கி.பி. 1468-1538) கி.பி.15-16-ஆம் நூற் றாண்டில் சீக்கிய சமயத்தை நிறுவியதிலிருந்து காணலாம். இக்காலக்கட்டத்தில்தான் உயிர், மெய் ஞானம் முதலிய கருத்துகளை எளிய முறையில் வெளிப்படுத்தப் பஞ்சாபி மொழி பயன்பட்டது. ஆயின், குருநானக்கின் இறைவழிபாட்டுப் பாடல்கள் உருது, இந்தி கலந்த மொழியில் உள்ளன. அதில், பஞ்சாபி அருகிய வழக்காகவே உள்ளது. பஞ்சாபி மொழி வரலாற்றில் குறிப்பிடத்தக்க காலமாகக் கருதப்படுவது கி.பி. 1604-ஆம் ஆண்டு ஆகும். அக் காலத்தில்தான் சீக்கியர்களின் ஐந்தாம் குருவான குரு அர்சுன், குருநானக்கும் அவருக்குப் பின்வந்தவர் களும் இயற்றிய பாடல்களை 'ஆதிகிரந்தம்' அல்லது 'குரு கிரந்தம்' என்ற பெயரில் தொகுத்தார். அதுவே, சீக்கியர்களின் புனித சமய நூலாகும். அந்நூல் தொகுக்கப்பட்ட காலம் வரை உள்ள பஞ்சாபி மொழியின் எல்லா வளர்ச்சி நிலைகளும் அப்பெரிய நூலில் இடம்பெற்றுள்ளன. அத்தொகுப்பில் பெரும் பாலானவை பழைய பஞ்சாபியில் எழுதப்பட்ட துதிப்பாடல்களாகும். ஆனால், மராத்தி போன்றபிற மொழியில் எழுதப்பெற்ற பகுதிகளும் உள்ளன. அதில் குருநானக்கினால் இயற்றப் பட்ட 'சப்சி' (Japji) என்ற தொடக்கப் பகுதி சிறப்பான பஞ் சாபிப் பகுதியாகக் கருதப்படுகிறது. நாமதேவர், கபீர், பரீத்துபோன்ற இந்து, முசுலிம் மதகுருக்கள் இயற்றிய துதிப்பாடல்களும் இதில் உள்ளன. குரு நானக்கின் வாழ்க்கையை விவரிக்கும் 'சனம் சாக்கி' என்ற நூல் இக்காலத்தில் வெளிவந்த சிறப்பான நூலாகும். இக்காலத்தில்தான் மாசி கிளைமொழியை அடிப்படையாகக் கொண்டு இலக்கியப் பஞ்சாபி தோன்றியதாகக் கூறுவர்.

(3) **பின் இடைக்காலப் பஞ்சாபி**: இரண்டு வகையான இலக்கியப் பணிகள் கி.பி. 18 -ஆம் நூற் றாண்டு முதல் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு வரை உள்ள இக்காலத்தில் நடைபெற்றன. இக்காலத்தைச் சேர்ந்த முகமதிய எழுத்தாளர்கள் மதச்சார்பற்ற இலக்கியங்களைப் (Secular literature) படைத்த தோடு அவற்றில் எண்ணற்ற அரபி பாரசீகச் சொற் களைக் கலந்தனர். மற்றொரு குழுவினரான சீக்கிய எழுத்தாளர்கள் இறைவனைப் பற்றிய கொள்கை களையும் (Theology) நூல்களையும் ஆக்குவதில் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் எடுத்தாண்ட மொழி அமிர்தசரசு மாவட்டத்தில் பேசப்படுகிற 'மாசி' கிளைமொழியினைஅடிப்படையாகக் கொண்டிருந்தது. ஆனால், எண்ணற்ற சமசுகிருதச் சொற்களும், 'சாது பாசை' (SADH BHAKHA) என்ற வட இந்திய அடியார்கள் (சாதுக்கள்) பயன்படுத்திய சாதாரண மொழியின் இலக்கண அமைப்புகளும் மிகுந்த செல்வாக்குப் பெற்று விளங்கின. இக்காலத் திய இன்பவியல் (Romance) ஆசிரியர்களில் சிறப்பான வர்கள் அமேத்யார், அசின் என்பவர்களாவர். மெய்ஞ்ஞானநூல்களின் ஆசிரியர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் தயாள்சிங்கு, சந்தோசுசிங்கு, கிருட்டிண லால் முதலியோராவர்.

(4) **இக்காலப்பஞ்சாபி**: இக்காலத்தில் பஞ்சாபி மொழியில் மேலைநாட்டு இலக்கியத்தின் குறிப்பாக

ஆங்கில இலக்கியத்தின் செல்வாக்கினைக் காணலாம். அண்மைக் காலத்தில் பொதுவுடைமைக் கொள்கைப் பற்றுடைய எழுத்தாளர்கள் தோன்றியுள்ளனர். இவர்கள் உருசிய இலக்கியங்களைத் தங்களின் தூண்டு கோல்களாகக் கொண்டுள்ளனர்.

பஞ்சாபி எழுதப் பயன்படும் 'குருமுகி' நெடுங் கணக்கில் 35 எழுத்துகள் உள்ளன. அதன் காரண மாக இது 'பெய்ந்தி' (Deinti = 35) என்றும் சொல் லப் பெறுகிறது. தேவநாகரி போன்றே இவ்வெழுத் தும் அசையெழுத்து ஆகும். குருமுகியில் உள்ள எழுத்துவரிசை (Syllabic) மற்ற இந்திய மொழிக ளின் எழுத்து வரிசையிலிருந்து மாறுபட்டுள்ளது.

கோ.சா.நா.

**துணை நூல்கள்:**

**Gill, H.S.**, A Descriptive Grammar of Panjabi, Ph.D thesis, microfilm-xerography, Ann Arbor Michigan, U. S. A. 1962.

**Grierson, G.**, Linguistic Survey of India Vol. IX Part-I, Indo Aryan Family, Central group Calcutta, 1916.

**Shackle C.**, Panjabi Teach Yourself, S. London 1972.

**பஞ்சாபிப்பல்கலைக்கழகம்:** பஞ்சாபிப்பல் கலைக்கழகம் பஞ்சாபு மாநில அரசினரால் 1960-இல் அமைக்கப்பட்ட குழுவால் பரிந்துரைக்கப்பட்ட பல் துறை ஒருமுனைப் பல்கலைக்கழகமாகக் கலை, இயல் துறைப் பாடங்களில் உயர்கல்வி அளித்து வருகிறது. இப்பல்கலைக் கழகம் 1962 ஏப்பிரல் 30-இல் அமைக் கப்பட்டு அவ்வாண்டு சூன் 24-இல் தொடங்கி வைக் கப்பட்டது. இதன் செயல்களில் இன்றியமையாத ஒன்று பஞ்சாபி மொழிக் கல்வியும் பஞ்சாபி இலக்கி யத்தில் ஆராய்ச்சி செய்வதுமாகும். பட்டிண்டா, பரீத்கோட்டு, பாட்டியாலா, உரோப்பர், சங்குரூர் மாவட்டங்களின் உயர் கல்விப் பொறுப்பினைக கொண்ட இப்பல்கலைக்கழகத்தின் 30 பயிற்றுத் துறைகள் 54 இணைப்புக் கல்லூரிகள் மூலம் முறையே 25633,12557 மாணவ மாணவியர்கள் 1984,85 – இல் பயின்று வந்தனர்.

பல்கலைக்கழகப்பகுதி மாவட்டங்களில் 12 மாதங் களுக்குக் குறையாமல் வாழ்ந்து வரும் எவரும் முன் பல்கலைத் தேர்வுகள், இளங்கலை, முதுகலைத் தேர்வுகளில் தனிக்கல்வி மாணவராகச் சேரத் தகுதி பெற்றவராவர். இப்பல்கலைக் கழக முதுகலைப் பட் டம் பெற்றவர் தம் தேர்வு நிலையை முன்னேற்றிக் கொள்ளும் பொருட்டு மீண்டும் அதே தேர்வு எழுத அனுமதிக்கப்படுவர். பஞ்சாபி, முதனிலை வகுப்பு (பஞ்சாபிப்பிரவேசிகள்), சிறப்பு வகுப்பு (ஞானி), முன் கலை வகுப்புகள், இளங்கலை வகுப்புகள், பஞ்சாபி, அரசியல், வரலாறு, பொருளியல், ஆங்கிலம் ஆகிய பாடங்களில் முதுகலை வகுப்புகள், நூலகவியல் பட் டயப் படிப்பு (Diploma) வணிக நிருவாகத்தின் பல் வேறு பாடங்களில் பட்டயப் படிப்பு ஆகியவற்றிற்கு அஞ்சல் வழிக் கல்வி வசதி இங்குண்டு. பொறியியலில் இளநிலை, முதுநிலைப் பட்ட வகுப்புகளிலும், நாளேட்டுத் துறை மற்றும் பொதுக் கருத்துத் தொடர்புக் கல்வியில் முதுகலை, பிற முதுகலை, இளங்கலை வகுப்புகள், சட்டம், நூலகவியல், வணிக நிருவாக முதுகலை வகுப்புகள் ஆகியவற்றிலும்அரை யாண்டுக் கல்விமுறை (Semester) நிலவியுள்ளது. பல இணைப்புக் கல்லூரிகளில் குறிப்பிட்ட பாடங் களில் மாலைக் கல்வி வசதியுண்டு.

கல்வியாண்டு சூலை இரண்டாம் வாரத்தில் தொடங்கும். 1983-84 இல் ஏறத்தாழ 19,96,000 உருபாய் நிதி ஒதுக்கீடு பெற்ற இதன் நூலகத்தில் 3,42,103க்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன. 164 தகுதிக் கல்வித்துணைத் தொகையும், 54 பட்ட மேற்கல்வித் தொகையும், 108 ஆராய்ச்சிக் கல்வித் தொகையும் வழங்கப்படுகின்றன.

மாநில ஆளுநரை வேந்தராகக் கொண்ட இப் பல்கலைக் கழகத்தில் துணைவேந்தர், முன் துணை வேந்தர், பதிவாளர், தேர்வுக் கட்டுப்பாட்டாளர், விளையாட்டுகளின் இயக்குநர், திட்ட வளர்ச்சி இயக்குநர், தலைமை நூலகர் ஆகியோர்களுடன் கல்விச் செயல்கள், மாணவர் நலம், கல்லூரி வளர்ச்சிக் குழு ஆகியவற்றிற்கான புலத் தலைவர்களும் (Deans) உள்ளனர். கலைகளும் சமூகவியல்களும், மனிதவிய லும், மதப்பாடங்களும், மருத்துவம், அறிவியல்கள், மொழிகள், பொறியியலும், தொழில் நுட்பவியலும், வணிக நிருவாகம், சட்டம், கல்வி, தொழில்நோக்க வகுப்புகள் (Vocational Courses), ஆயுர்வேதமும் யுனானியும், வாழ்வியல்கள் ஆகிய 12 பகுதிக்குரிய புலத்தலைவர்களும் உயர் நிருவாகத்தில் பங்கேற் றுள்ளனர்.

இப்பல்கலைக்கழகம்1983-84-இல் 594.28 இலட்சம் வருமானமும் உரு 556.48 இலட்சம் செலவுமுள்ள நிதித் திட்டத்தில் செயற்படுகிறது; உடல் நல மைய விடுதிகள், விளையாட்டு வசதிகள் யாவும் உள்ளன. பல்கலைக்கழகத் துறை மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும்இலவச மருத்துவ வசதி அளிக்கிறது. மாணவர்களுக்கான மூன்று விடுதிகளில் 600 பேரும், மாணவியருக்கான இரு விடுதிகளில் 150 பேரும் தங்கிக் கல்வி பெறுகின்றனர். அறைவாடகையாக உருபாய் 22-உம் ஒரு வேளை உணவுக்கு உருபாய்

இரண்டுமாக இவ்விடுதிகளில் கட்டணம் பெறப்படு கிறது.

கலை, சமூகவியல் பகுதிகளில் இளங்கலை வகுப்பு கள், பஞ்சாபி, பொருளியல் இவற்றில் சிறப்பு வகுப்பு கள் (Honours), முதுகலை வகுப்புகள், பஞ்சாபியில் முதுகலைச் சிறப்பு வகுப்பு (MA - Hons), நூலகவியல் இளங்கலைவகுப்பு ஆகியவைநடைபெறுகின்றன. அறி வியல்பகுதியில் இளநிலை, இளநிலைச் சிறப்பு வகுப்பு களுடன் முதுநிலை வகுப்புகளும் உண்டு. வணிகப் பகுதியில்வணிகவியல் இளநிலை, முதுநிலை வகுப்பு களுடன் வணிக நிருவாகத்தில் முதுநிலை வகுப்பும் உண்டு. பொறியியல் பகுதியில்ஓராண்டு முன் பொறி யியல் வகுப்பு, பொறியியல் 4-ஆண்டு இளநிலை, 2 - ஆண்டு முது நிலைவகுப்புகள் நடத்தப்படுகின்றன மருத்துவப் பகுதியில் முன் மருத்துவம் (ஓராண்டு), மருத்துவ இளநிலை (பயிற்சி உட்பட $5\frac{1}{2}$ ஆண்டுகள்), மருத்துவம் அறுவைச் சிகிச்சைகளில் முதுநிலை (2,3ஆண்டுகள்), மருந்தியல்முதுநிலை (2 ஆண்டுகள் ஆராய்ச்சி முறைக் கல்வி மட்டுமே), மருத்துவப் பின் னிலை பட்டயப் படிப்புகள் (2 ஆண்டுகள்) ஆகிய வகுப்புகள் உண்டு. கல்விப்பகுதியில் கல்வி இளநிலை முதுநிலை வகுப்புகளுடன் (B.Ed., M.Ed.,), கல்வி யில் முதுகலை (M.A. - EDUCATION) வகுப்பு, இளநிலைப் பட்டம் ஒன்றில் 45 விழுக்காடு மதிப் பெண்கள் பெற்றவருக்காக ஈராண்டு பட்ட மேற் கல்வி, உடல் நலக் கல்வியில் 3 ஆண்டு இளநிலை, ஈராண்டு முதுநிலை ஆகியவகுப்புகள் நடைபெறு கின்றன. இவற்றுடன் பட்டதாரிகளுக்கு ஓராண்டு உடல் நலக் கல்வி இளநிலைவகுப்புகளும் மெட்ரி குலேசன் படித்தோருக்குஓராண்டு உடல் நலக்கல்விச் சான்றிதழ் வகுப்புகளும் உண்டு.

சட்டப் பகுதியில் ஈராண்டு எல.எல் பி. 3 ஆண்டு எல். எல்.பி (பணியாளர்) வகுப்புகளும் 3 ஆண்டு எல் எல.பி. பெற்றவர்களுக்கு 2 ஆண்டு எல்.எல்.எம் வகுப்புகளும் உண்டு. மொழிப் பகுதியில் சான்றிதழ் பட்டய (Diploma) வகுப்புகள் நடைபெறுகின்றன. ஆயுர்வேதப் பகுதியில் முன் ஆயுர்வேதம், இளநிலை (BAMS), முதுநிலை (MAYM) வகுப்புகள் உண்டு. தொழில்வழிக் கல்விப்பகுதியில் தடைய அறிவியலில் முதுநிலை, பயன்படு இயற்பியலில் (M.Sc applied Physics) முதுநிலை, நாளேடு மற்றும் பொதுத் தொடர்பு இளநிலை, முதுநிலை வகுப்புகளும், இயற் பியல் முதுநிலைப் பட்டதாரிகளுக்காக ஓராண்டு கருவியாக்கத்தில் பட்டய வகுப்பும், அறிவியல் இள நிலைப் பட்டதாரிகளுக்காக மின்னியல் கருவிகளின் பழுது பார்த்தல் மற்றும் செயற்படு நிலையாக்கம், பொருள் நிருவாகம், அண்டவியல், காலநிலை மற்றும் வெளியியலில் ஓராண்டுப் பட்டயப்படிப்பும், கண் ணோய்க்கான கருவிகளின் உருவாக்கம் மற்றும் சோதனை செய்தலில் ஓராண்டுச் சான்றிதழ் வகுப்பு களும் உண்டு. ஆராய்ச்சி மூலம் எம்.பில் அல்லது எம்.லிட் பட்டங்களும், பிஎச்.டி. பட்டமும், டி.லிட். டி.எசுசி பட்டங்களும் பெறும் வசதிகளும் இங்குள் ளன. இவ்வாறு பல்துறைகளிலும் விரைந்து வளர்ந்து வரும் பல்கலைக்கழகமாக இப்பல்கலைக்கழகம் விளங்கி வருகிறது. எஸ்.சு.

**பஞ்சாபு** இந்திய மாநிலங்களில் ஒன்று. இது இநதியத் துணைக் கண்டத்தின் வடமேற்குப் பகுதி யில் உள்ளது. இதன் பரப்பு 50,376 ச.கி.மீ. மக்கள தொகை 16,669,755 (1981). சிந்து நதி மேற்கில் ஒரு பகுதியிலும், யமுனை நதி கிழக்கில் ஒரு பகுதியிலும இதன் எல்லைகள் உள்ளன. சிந்துநதியில் கலக்கும் ஆறுகள் (சீலம், சீனாபு, இரவி, சட்லசு, பியாசு) ஐந்தானபடியால், இவை ஓடும் பகுதி பஞ்சாபு எனப் பெயர் பெற்றது. இம்மாநிலத்தின் வட பகுதி, காடு களும் மலைகளும் நிறைந்தது. உப்பும் நிலக்கரியும் அங்கே மிகுதி. தெற்குப் பகுதியில் மழை குறைவு. நீர்ப்பாசனத் திட்டங்கள் மூலம் இங்கு வேளாண்மை வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. கோதுமை, தினை, வாற் கோதுமை, பருத்தி, கரும்பு, பழங்கள் முதலியன இங்கு உற்பத்தியாகின்றன. பஞ்சாலைகளும், மாவு அறைஆலையும்மிகுதி. இம்மாநிலத்தின்முக்கிய நகரங் களாவன: அமிர்தசரசு, சலந்தர், உலூதியானா. இம்மாநில மக்களில் முக்கால் பங்கினர், வேளாண மையையே நம்பியுள்ளனர்.

**அரசாங்கம்:** இம்மாநிலத்தில் 117 உறுப்பினர் களைக் கொண்ட ஓரவைச் சட்டசபை இயங்கிவரு கிறது. இரண்டாம் அவையாக இருந்த சட்டக்குழு, 1970-இல் நீக்கப்பட்டுவிட்டது. காங்கிரசும், அகாலி தலும் முக்கிய அரசியற் கட்சிகளாகும். இம்மாநிலத் தில் 12 மாவட்டங்கள் உள்ளன.

**வரலாறு:** புகழ்பெற்ற சிந்துவெளி நாகரிகம் வர லாற்றுக் காலத்திற்கு முன்னரே இப்பகுதியில் நில வியது. பிறகு ஆரியர் குடியேற்றங்கள் இங்கு ஏற் பட்டன. மகா அலெக்சாந்தர், கி.மு.4-ஆம் நூற் றாண்டில் இங்குத் தமது ஆட்சியை நிறுவினார். பிறகு இப்பகுதி மோரியப் பேரரசுக்கு உட்பட்டது. முசுலிம்கள் கி.பி.8-ஆம் நூற்றாண்டில் மேற்குப் பஞ்சாபைக் கைப்பற்றியபின் இசுலாமிய மதம் இங்கு நிலை நிறுத்தப் பெற்றது. ஆனால், கிழக்குப் பஞ்சா பில் இந்து சமயமே வேரூன்றியிருந்தது. இந்தியாவில் முகலாயர் ஆட்சிக் காலத்தில் (கி.பி.1526-1707) பஞ் சாபு, பண்பாட்டுத் துறையில் சிறப்பான நிலையை

எய்தியது. முகலாயப்பேரரசு கி.பி.18-ஆம் நூற்றாண்டில் சிதைவுற்ற பிறகு, பஞ்சாபில் சீக்கியரின் மேலாண்மை மேலோங்கியது, ஆங்கிலேயர் இரண்டு சீக்கியப் போர்களின் (கி.பி.1846-1849) விளைவாகப் பஞ்சாபைத் தமது ஆட்சிக்குட்படுத்தினர்.

ஆங்கிலேயர், 1937-இல் பஞ்சாபைத் தமது ஆட்சிக்கு உட்பட்ட ஒரு சுயேச்சை மாகாணமாக அறிவித்தனர். இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்கிய 1947-ஆம் ஆண்டுச் சட்டப்படி, பஞ்சாபு கிழக்குப் பஞ்சாபு என்றும், மேற்குப் பஞ்சாபு என்றும் சமய அடிப்படையில் பிரிந்தன. கிழக்குப் பஞ்சாபு பின்னர்ப் பஞ்சாபு என்ற பெயர் பெற்றது. மேற்குப் பஞ்சாபு பாகித்தானுக்கு உட்பட்டது. இந்தி பேசும் மக்கள் மிகுதியாக இருந்த பஞ்சாபின் பகுதி, 1966இல் அரியானா (Haryana) என்ற பெயருடன் ஒரு தனி மாநிலமாகியது.

தெ.பா.

## பஞ்சாபு வேளாண்மைப்பல்கலைக்கழகம்:

பசுமைப் புரட்சிக்கு வித்தாயமைந்த வேளாண்மைப் பல்கலைக்கழகங்களின் தோற்றம் நாட்டின் உணவு நிலையில் தன்னிறைவை அளித்தது. வேளாண்மை ஆராய்ச்சிக்கான இந்தியக் குழு 1958 – இல் பல்கலைக் கழக நிலையெய்தி, பிற வேளாண்மைப் பல்கலைக் கழகங்களுக்குவழியமைத்துக் கொடுத்து, அவ்வழியில் கோவிந்த வல்லப பந்து வேளாண்மை அறிவியல் மற்றும் தொழில் நுட்பவியல் பல்கலைக்கழகத்திற்குப் பின், நாட்டின் இரண்டாம் வேளாண்மைப் பல்கலைக் கழகமாக 1962 – இல் தோன்றியதே பஞ்சாபு வேளாண்மைப் பல்கலைக்கழகம். இன்று 19 வேளாண்மைப் பல்கலைக்கழகங்கள் பல்வேறு மாநிலங்களின் சூழ்நிலைக்குத் தக்க வளர்ச்சி பெற்று வருகின்றன.

1961 – ஆம் ஆண்டின் பஞ்சாபு வேளாண்மைப் பல்கலைக்கழகச் சட்டத்தின்படி அம்மாநில வேளாண்மை மேம்பாட்டிற்கென இப்பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. 1966 – இன் பஞ்சாபு புணரமைப்புச் சட்டத்தில் பஞ்சாபு, அரியானா மாநிலங்களின் வேளாண்மை மேம்பாட்டிற்கும் மத்திய பகுதியான சண்டிகர், இமாசலப் பிரதேசத்துடன் இணைக்கப் பட்ட பகுதிகளின் வேளாண்மைமேம்பாட்டிற்கும் இப் பல்கலைகழகம் வழிவகுப்பதாயிற்று. மூன்று கல்லூரிகள் உள்ளடங்கிய இப்பல்கலைக்கழகம் 1962அக்டோபர் முதல் செயற்படத் தொடங்கியது. பஞ்சாபு மாநில அரசின் ஆராய்ச்சி மற்றும் பயிற்றல் திட்டங்கள் யாவும் இப்பல்கலைக்கழகப் பொறுப்பிற்குள் கொண்டுவரப்பட்டன.

1970 பிப்பிரவரி 2 – ஆம் நாள் இரு தனித்தனி வேளாண்மைப் பல்கலைக்கழகங்கள் பஞ்சாபு, அரியானா மாநிலங்களுக்கென நிறுவப்பட்டன. பாலாம்பூர் வளாகமும் இமாசலப்பிரதேசத்தில் செயற்பட்டு வந்த ஆராய்ச்சி நிலையங்கள், துணைநிலையங்கள் ஆகியவையும் இமாசலப் பிரதேசப் பல்கலைக்கழகத்திற்கு மாற்றப்பட்டன. அமெரிக்க நாட்டின் நிலமானிய நிறுவனத்தை மாதிரியாகக் கொண்டு அமைக்கப்பட்ட இப்பல்கலைக்கழகம் 1200 ஏக்கர் நிலப்பகுதியுடையது. பஞ்சாபு மாநிலம், சண்டிகர் மத்தியப் பகுதி.ஆகியவற்றின் வேளாண்மைக் கல்விப் பொறுப்பினை மேற்கொண்டுள்ள இப்பல்கலைக் கழகத்தின் ஆறு உட்கல்லூரிகளில் 1983 – 84-ஆம் கல்வியாண்டில் 767 பெண்கள் உட்பட மொத்தம் 2928 மாணவர்கள் பயின்று வந்தனர். இங்குள்ள நூலகத்தில் 1984 – இல் 2,12, 072 நூல்கள் இருந்தன. நுண்பட, நுண்ணட்டை வசதிகள் இங்கு உண்டு. பல்வேறு கல்வித் துணைத் தொகைகளை எல்லா நிலைகளிலுள்ள மாணவர்களுக்கும் வழங்கி வருகின்றனர்; தனிக் கல்விக்கு இப் பல்கலைக்கழக விதிகள் இடம் தருவதில்லை. ஆகசுட்டு முதல் சூன் வரையுள்ள கல்வியாண்டை மூன்று பகுதிகளாகப் பிரித்து நவம்பர் நடுவிலும், பிப்பிரவரி இறுதியிலும் சூன் நடுவிலுமாகத் தேர்வு நடத்தி சூன் பின்பாதியும் சூலை முழுவதும் கோடைக்காலப் பகுதியாக நடத்தி வருகிறார்கள். பிஎச்.டி. வகுப்புகளுக்கு அக்டோபர் மாதத்திலும் பிற வகுப்புகளுக்கு சூலைத் திங்களிலும் மாணவர்கள் பதிவு பெறுகின்றனர்.

. பஞ்சாபு மாநில ஆளுநரை வேந்தராகக் கொண்ட இப் பல்கலைக்கழகத்திற்குத் துணைவேந்தர், பதிவாளர், மாணவர் நல இயக்குநர், நூலகர் ஆகியோருடன் வேளாண்மைப் பொறியியல், வேளாண்மை, அடிப்படை அறிவியல்களும் மனிதவியல்களும் மனையியல், விலங்கு மருத்துவ இயல், பட்டமேற்படிப்பு ஆகிய ஆறு பகுதிகளுக்கான புலத்தலைவர்களும் (Deans) உண்டு. 1983 – 84 ஆம் ஆண்டில் 178.98 இலட்சம் உரூபாய் வருமானமும் 144.64 இலட்சம் உரூபாய் செலவும் உள்ள நிதித்திட்டத்தில் இப்பல் கலைக்கழகம் செயற்பட்டது.

முப் பருவ முறை, உள்மதீப்பீடு, தனிப் பயிற்சித் திட்டம், முதியோர் கல்வி, விரிவாக்கக் கல்வி, உயர் கல்வி மையம், மதிப்புப் புள்ளி முறை ஆகியவை இங்குள்ள சிறப்புக் கல்விக் கூறுகளாம். மாணவர் தேர்வு நிலையைக் காட்டும் எழுத்துகளாவன:

A : மிக நன்று : மதிப்பு மணிக்கு 4 புள்ளிகள்

B : நன்று : மதிப்பு மணிக்கு 3 புள்ளிகள்

C : சுமார் : மதிப்பு மணிக்கு 2 புள்ளிகள்

D+ : தேர்வு,<br>ஆனால்,<br>நிறைவன்று : மதிப்பு மணிக்கு 1 புள்ளி

E : தோல்வி

S : நிறைவு

US : நிறைவன்று

W : பின்வாங்கப்பட்டது

NC : மதிப்புமுறை வகுப்பன்று

பட்டதாரி வகுப்புகளுக்கு 'D' தேர்வும் பட்ட மேனிலைக்கு 'C' தேர்வும் தேவை, பல்கலைக்கழகக் கல்விக்குழு பட்டம் பெறத் தக்க மதிப்புப் புள்ளிகளை அவ்வப்போது வரம்பிட்டுக் கூறும். ஒட்டு மொத்தக் கல்விநிலைப் புள்ளிச் சமநிலையாக (Overall grade Point average) பட்ட வகுப்புக்கு 2.00 உம் (மதிப்பு மணி 4 புள்ளிகள் அடிப்படையில்) பட்டமேனிலை வகுப்புக்கு 3.00 உம் (அதே அடிப்படையில்)குறைந்த அளவு ஆகும். பட்ட வகுப்புகளுக்கு ஒரு முப் பருவத்தில் முழுநேரப் பணியாக 18 மதிப்பு மணிகளும் (குறைந்த அளவு 12 உம் மிகுந்த அளவு 24 உம் ஆகும்) பட்ட மேல் வகுப்புகளுக்கு 15 மதிப்பு மணிகளும் (9க்குக் குறையாமல் 18க்கு மிகாமல்)ஒவ்வொரு மாணவனும் பயின்றிருக்க வேண்டும். இத்தகைய தேர்வு முறை இப் பல்கலைக்கழகத்தின் தனிச்சிறப்பு.

மாணவர் நல வசதிகள், உடல்நலக்கல்வி, விடுதிகள் ஆகியவை உண்டு.6-துணைகோல்புவிளையாடுமிடமும் நீச்சல்குளமும், உடற்பயிற்சிமன்றம், விளையாட்டரங்குகள் ஆகியவையும் இங்குள்ள பிற சிறப்புகளாகும்.

வேளாண்மைப்பகுதியில்பி.எசுசி(வேளாண்)(ஆனர்சு) எம்.எசுசி. (வேளாண்) வகுப்புகளுடன் ஓராண்டு ஆசிரியர் பயிற்சிக்கான பி.எட். வகுப்பும் ஈராண்டு பால் வளத் தொழில் நுட்பப் பட்டயப்படிப்பும் (Diploma) வேளாண் துணைக் கண்காணிப்பாளர் பட்டய வகுப்புகளும் உண்டு.

விலங்கு மருந்தியல் பகுதியில் பி.வி.எசு.சி &எ.எச் 4-ஆண்டுப் பட்டப்படிப்பும், எம்.வி.எசுசி 2-ஆண்டுப் பட்ட மேற்படிப்பும் நடத்தப்படுகிறது. மனையியற் பகுதியில் பி.எசுசி (மனையியல்) 4-ஆண்டுப் படிப்பாகவும் எம்.எசுசி. (மனையியல்) 2 ஆண்டுப் படிப்பாகவும் நடைபெறுகின்றன. வேளாண் பொறியியற் பகுதியில் பி.டெக்கு (வேளாண் பொறியியல்), எம் டெக்குப் பட்டப் படிப்புகளும் அடிப்படை அறிவியல் பகுதியில் பி.எசுசி. (புள்ளி விவரம்) எம்.சே. வகுப்புகளும் பட்ட மேற்படிப்புகளாக நடைபெறுகின்றன. ஆராய்ச்சி செய்து பிஎச்.டி.பட்டம் பெறவும் வாய்ப்பு உள்ளது.

இப்பல்கலைக்கழகம் வேளாண் வளர்ச்சிக்கு நீண்ட கால ஆய்வுத்திட்ட அடிப்படையில் செயற்படுகிறது.

எஸ்.சு.

**பஞ்சாயத்து**: காண்க: ஊராட்சி ஒன்றியங்கள்.

**பட்சி சாத்திரம்**: பட்சி சாத்திரம் என்பது வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் ஆகிய ஐந்து பட்சிகளைக் கொண்டு குறிசொல்லும் சாத்திரம். இது சோதிட சாத்திரத்தின் வகைகளுள் ஒன்று. இதனைச் சிவபெருமான் பார்வதிதேவிக்கு எடுத்துரைத்ததாகக் கூறுவர். அகத்தியர், உரோமரிசி, போகர் முதலிய சித்தர்கள் இந்நூலை அருளிச் செய்ததாகக் கூறப்படினும், அகத்தியர் பஞ்ச பட்சி சாத்திரம் மிகுதியாகப் பழக்கத்தில் இருந்து வருகின்றது.

ஒருவர் தம்முடைய பட்சி என்னவென்று அறியும் வகை பெயரின் முதலெழுத்தின் மூலம் சொல்லப்படுகிறது. அதாவது அ, ஆ என்ற உயிரெழுத்தும் அதைச் சார்ந்த உயிர்மெய்யெழுத்துகளும் வல்லூறையும்; முறையே இ, ஈ ஆந்தையையும்; உ, ஊ காகத்தையும்; எ,ஏ,ஐ கோழியையும்; ஒ,ஓ,ஔ மயிலையும் குறிக்கும். அதேபோன்று நட்சத்திரத்தில் பிறந்தவருடைய பட்சி என்னவென்றும் கூறப்பட்டுள்ளது. அசுவணி, பரணி, கார்த்திகை, ரோகிணி, மிருகசீரிடம் வல்லூறையும்; திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம் ஆந்தையையும்; உத்திரம், அத்தம், சித்திரை, சுவாதி, விசாகம் காகத்தையும்; அனுசம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் கோழியையும்; திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி மயிலையுங் குறிக்கும்.

இப்பட்சிகள் ஊண், நடை, அரசு, துயில், சாவு என்ற தொழில்களை முறையே தினமும் செய்கின்றன. பிரதமை, சட்டி, ஏகாதசி முதலிய திதிகளில் வல்லூறும்; துவிதியை, சப்தமி, துவாதசி திதிகளில் ஆந்தையும், திருதியை, அட்டமி, திரயோதசி திதிகளில் காகமும்; சதுர்த்தி, நவமி, சதுர்தசியில் கோழியும்; பஞ்சமி, தசமி, பௌர்ணமி அல்லது அமாவாசையில் மயிலும் செயற்படுகின்றன. பஞ்ச பட்சிகளின் தொழிலுக்காகப் பகலை ஐந்து சம பாகங்களாகவும், இரவை ஐந்து சமபாகங்களாகவும் பங்கிட்டு, ஒவ்வொரு சமபாகத்திற்கும் ஒரு யாமம் என்றுபெயர்குறிக்கப்படுகிறது முப்பது நாழிகைகள் கொண்ட ஒரு பகலில் அல்லது ஓர் இரவில் உள்ள ஐந்து யாமங்களில் ஒவ்வொரு யாமமும் ஆறு நாழிகைகளை உடையதாகும். இவற்றின் தொழில்கள் ஒரு யாமம் வரையில் நடைபெறும். மேலும் வாரம் என்ற கிழமை, பட்சம் என்ற வளர்பிறை, தேய்பிறை இவைகளை அனுசரித்தும் பட்சிகள் மாறிக்கொண்டே போகும். இவ்விதமாகப் பஞ்சபட்சிகள் தங்களுடைய தொழில்களை நடத்திக்கொண்டு வருகின்றன. வளர்

பிறையில் வியாழன், சனிக்கிழமைகளில் வல்லூறும்; வெள்ளி, ஞாயிற்றுக் கிழமைகளில், ஆந்தையும்; திங்களில் காகமும்; செவ்வாயில் கோழியும்; புதனில் மயிலும் மரிக்கும். தேய்பிறை திங்கட்கிழமையில் ஆந்தையும், ஞாயிற்றுக் கிழமையில் காகமும்; வியாழன், சனிக்கிழமைகளில் கோழியும்; புதன், வெள்ளிக் கிழமைகளில் மயிலும் மரிக்கும். இவை அப்போது படுபட்சியாகும்.

தன்னுடைய பட்சி, உண்டி, அரசு ஆகிய தொழில் செய்யுங் காலத்துப் பிரயாணம் பண்ணுதல், பயிர் செய்தல், பகை வெல்லல், அரசரைக் காணல், ஆடுமாடு வாங்குதல், விற்றல், தருக்கம் பண்ணுதல், சொற்பொழிவு செய்தல், உத்தியோகம், வாணிகத்திற்குப் போதல் ஆகிய நற்காரியங்கள் செய்யின் உத்தம பலனைக் கொடுக்கும். நடையில் மத்திம பலனைக் கொடுக்கும். துயில், சாவு அதமபலனைக் கொடுக்கும்.

பஞ்சபட்சி சாத்திரம் என்ற நூல் கி.பி. 1893-ஆம் ஆண்டும் அதற்குப் பின்னும் அச்சாகிப் பல பதிப்புகள் வெளிவந்துள்ளன. பத்து அதிகாரங்களைக் கொண்ட இந்நூலில், முறையே பட்சி சாத்திர வகைகளும், பூர்வபட்ச பகல் வகுப்பும், பூர்வ பட்ச இராவகுப்பும், அவற்றின் செயல்வினைப் பலன்களும், பட்சிகளின் பயனும், நதிகொள்பயனும், கணித விலக்கணப் பயனும், சாதன விலக்கப் பயனும் சொல்லப்பட்டுள்ளன. மேலும், உள்ளமுடையான் சூடாமணிசோதிடத்திலும், கேரள சாத்திரத்திலும், மண்டல புருடன் சொன்ன பன்னிரண்டாவது பல பெயர்க்கூட்டத் தொகுதியினும், யாப்பிலக்கண உரையிலும் இன்னும் பல நூற்களிலும் இருந்து எடுத்துச் சேர்த்துக் கோவையாக்கித் திரட்டித் தந்துள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. எம்.சீ.

**பட்டம் தாணுப் பிள்ளை (கி.பி. 1885-1970):** கேரள மாநிலத்தின் முதலமைச்சராகப் பணிபுரிந்து, கல்லாமையை ஒழிக்கப் பாடுபட்டவர். திருவாங்கூர்சமத்தானத்தில்பொறுப்புள்ளஅரசுபணியாளராக உழைத்தவர். மும்முறை முதலமைச்சர் பதவி வகித்தவர். கேரள காங்கிரசுக் கட்சித் தலைவராகவும் பிரசா-சோசலிஸ்ட்டுக்கட்சித் தலைவராகவும் பெரும்பணி யாற்றியவர். காந்தியடிகளின் சீடராகத் திகழ்ந்தவர், நாட்டுப் பற்று மிக்கவராகவும், இந்து தருமத்தில் நம்பிக்கை கொண்டவராகவும் விளங்கினார். எளிய வாழ்க்கையும் உயர்ந்த இலட்சியமும் கொண்ட இவர் கேரள மாநிலம் பெற்றெடுத்த தவப்புதல்வர்களுள் ஒருவராவார்.

சுப்பராயனின் மகனாகத் திருவனந்தபுரத்தில் கி.பி. 1885-இல் பிறந்த இவர் 1915-இல் வழக்குரைஞர் தொழிலில் அமர்ந்தார். 1917-இல் பி. சுமுகி அம்மாவை மணந்து கொண்டார். 1922-இல் இவ்வம்மையார் ஒரு மகனை விட்டுவிட்டு இறந்ததால், இவர் 1925-இல் பொன்னம்மாள் என்னும் நங்கையை மணந்தார். எழுத்தாளராகப் பணியைத் தொடங்கிய இவர் சில காலம் பள்ளி ஆசிரியராகவும் பணிபுரிந்தார். திருவாங்கூர்த் தொகுதியிலிருந்து திருவாங்கூர்ச்சட்டமன்றத்திற்கு 1927-ஆம் ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்டார். இதனைத் தொடர்ந்து பல ஆண்டுகள் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காந்தியடிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட இவர் திருவாங்கூர்க்காங்கிரசுக் கட்சியின் தலைவரானார்.

வழக்குரைஞர் தொழிலைக் கைவிட்டு, முழு நேர அரசியல் ஊழியரான பட்டம் தாணு, 1938-இல் திருவாங்கூருக்குப் பொறுப்பாட்சி வழங்க வேண்டுமென்ற கோரிக்கையைத் திருவாங்கூர் பேரரசர் முன் வைத்தார். எதிர்பார்த்த பலன் கிடைக்காத காரணத்தால், மாநிலக்காங்கிரசு சட்ட மறுப்பு இயக்கத்தில் குதித்தது. இதன் விளைவாகப் பட்டம் தாணுவும் மற்ற அரசியல் தலைவர்களும் கைது செய்யப்பட்டனர். திருவாங்கூர் அரசு காங்கிரசுக் கட்சியைத் தடை செய்தது. இந்நிலையில் காந்தியடிகளின் ஆலோசனையின் பேரில் காங்கிரசுக் கட்சிப் பொறுப்பாட்சிக் கோரிக்கையைத் திரும்பப் பெற்றுக் கொண்டது. கைது செய்யப்பட்ட அனைவரும் விடுதலை செய்யப்பட்ட போதிலும், அரசு காங்கிரசின் மீது தொடர்ந்து பகைமை பாராட்டியது. சட்ட மறுப்பு இயக்கம் தொடர்ந்து நடைபெற்றது. பட்டம் தாணு சிறையில் அடைக்கப்பட்டார். பொறுப்பாட்சிக்குப் போராடியதால், இவர் 1947 வரை பல முறை கைது செய்யப்பட்டார். திருவாங்கூருக்கு முழுப் பொறுப்பாட்சி 4.9.1947-இல் வழங்கப்பட்ட போது, இவர் சீர்திருத்தக் குழுவின் தலைவராக அமர்த்தப்பட்டார்.

சட்டமன்றக் காங்கிரசுக் கட்சியின் தலைவராக 1948-இல் தேர்ந்தெடுக்கப்பட்டதுடன் 24.3.1948-இல் முதலமைச்சரானார். ஆறாவது மாதத்திலேயே பதவி விலகிய இவர்சமஉடைமைக் கட்சியில் சேர்ந்து தலைவரானார். 'கேரள சனதா' எனும் சஞ்சிகையைத் தொடங்கினார். காங்கிரசின் ஆதரவுடன் கி.பி. 1954-இல் திருவாங்கூர்-கொச்சி மாநில முதலமைச்சர் ஆனார். ஓராண்டு முடிவதற்குள் காங்கிரசு தனது ஆதரவை விலக்கிக் கொண்டதால், இவர் பதவி விலகினார். ஒருங்கிணைந்த கேரள மாநிலத்தின் முதல்வராக 1960-இல் பதவியேற்றார். இவர் 1962-இல் பஞ்சாபின் ஆளுநராகவும், 1964-

68-ஆம் ஆண்டுகளில் ஆந்திரப் பிரதேசத்தின் ஆளுந ராகவும் பணிபுரிந்தார்.

எளிமையானவர்; சாதி, மத வேறுபாடு பாராதவர்; கதராடை மட்டுமே உடுத்திபவர்; சிறந்த பக்திமான்; அகிம்சைக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவர். பள்ளியிறுதி வகுப்பு வரை காமராசரைப் போன்று கேரளாவிலும் இலவசக் கல்வி வழங்கியவர். கேரளாவிற்கு நேர்மையான ஆட்சியை வழங்கிய இவர் கேரள மக்களால் பெரிதும் நேசிக்கப்பட்டவர். ஆங்கில ஆட்சியை அகற்றப் பாடுபட்டவர்; எல்லோருக்கும் அடிப்படைக் கல்வி வழங்கப்பட வேண்டுமென்பதில் ஆர்வம் காட்டியவர். க.ம.

**பட்டர்**: இவர் வைணவ மரபில் எம்பெருமானார் என்று கொண்டாடப்படுகின்ற சிரீ இராமானுசரின் முக்கிய சீடரான சிரீவத்சாங்கரெனும் கூரத்தாழ்வானின் திரு மகனாவார். இவர் தாய் ஆண்டாள் அம்மையாவார். இவர் திருவரங்கத்திலுறையும் அரங்கநாதனின் புரோகிதராய் விளங்கியவர். இச்செய்திகளைப் பராசரபட்டருக்கு ஏற்பட்ட தனியன் வாயிலாக அறியலாம். இவர் பிறந்தது திருவரங்கத்தலமாகும்.

இவர் இராமானுசமுனியின் (இளைய) காலத்தவராகையினால் இவர்கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது உறுதி. இவர் இராமானுசமுனிக்குப் பின்னர் எம்பாரைத் தொடர்ந்து ஆசாரிய பீடத்தை அலங்கரித்தார் என்பது பின்அழகிய பெருமாள் சீயர் அருளிச் செய்த ஆறாயிரப்படி, குருபரம்பரா பிரபாவத்திலிருந்து தெரிகிறது.

இவர் குழவிப் பருவத்திலேயே வைணவ மறுமலர்ச்சியாளரான இராமானுசரால் வாழ்த்தியருளப் பெற்றார். எம்பார் என்று பிற்காலத்தில் ஏற்றம் பெற்ற கோவிந்தரிடத்தில் கல்வி கற்றார். சிறுபருவம் முதற்கொண்டே கேள்வி-கல்வியில் சிறந்து விளங்கிய இவர் சர்வக்ஞர் (எல்லாம் தெரிந்தவர்) என்ற விருதுடைய புலவரைத் தமது அறிவுத்திறனால் வியப்புறச் செய்தார் என்பது மரபுச் செய்தி. மரபு வழியில் கற்க வேண்டியதனைத்தும் தம்தந்தையாரிடத்திலும் கோவிந்தரிடத்திலும் கற்றுத் தெளிந்த இவரைக் கண்டு இராமானுசர் மகிழ்வுற்று, இவரை எதிர்கால வைணவ சமயாச்சாரியராக உலகுக்கு அறிவித்தார். இவர் தம்பி இராமப்பிள்ளை என்னும் வேதவியாச பட்டர் ஆவார்.

அந்தக் காலக்கட்டத்தில் கருநாடகத்திலுள்ள திருநாராயணபுரத்தில் புகழ்பெற்று விளங்கிய அத்வைத வித்வான் வேதாந்த மாதவாசாரியர் என்பவரை வாதத்திலே வெற்றி கண்டு அவரை விசிட்டாத்வைத வைணவராக்கினார். அவரே பிற்காலத்தில் நஞ்சீயர் என்னும் திருநாமத்துடன் பட்டருக்குப்பின் திருவரங்கத்தில் வைணவ ஆசாரிய பீடத்தை அலங்கரித்தார். திருவாய்மொழிக்கு முதன் வியாக்யானமான திருக்குருகைப்பிரான் பின்னாளின் 'ஆறாயிரப்படியைப் பட்டரிடம் முறையாகக்கற்றுணர்ந்து 'ஒன்பதினாயிரப்படி' என்னும் மற்றுமோர் அருமையான வியாக்யானம்' எழுதினார்.

பட்டரின் ஏனைய சீடர்களுள் நலந்திகழ் நாராயண சீயர், கடகத்துப் பிள்ளை, அம்மணியாழ்வான், வீரசிகாமணி வல்லபராயன், பிள்ளை விளப்பரையர், நம்பி கோவர்த்தனதாசர், செடியெடுத்த நல்லான் முதலியோர் அடங்குவர். இவர்கள் திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்களையும், சிரீ பாடியம் முதலான கிரந்தங்களையும், ஏனைய இரகசியங்களையும் பற்றிய தெளிந்த அறிவைப் பட்டரிடம் பெற்றனர்.

திருவரங்கத் திருப்பதியில் எம்பெருமானாருக்குப் பின் ஆச்சாரிய பீடத்தை அலங்கரித்து வந்த பொழுது, அப்பகுதியில் சோழ மண்டலப் பேராளராக இருந்த வீர சுந்தரப்பிரமராயன் என்பவனுடன் திருவரங்கப் பெருமாளுக்குத் திருமதில் கட்டுவது தொடர்பாகப் பட்டருக்கு மனவருத்தம் ஏற்பட்டது. அதன் விளைவாக, பட்டர் திருவரங்கத்தை விட்டு நீங்கித் திருக்கோட்டியூர் சென்று தங்கினார். அதனால் விளைந்தன திருக்கோட்டியூர் எம்பெருமானைப் பற்றிய 'கோட்டிநாத தவமும்' அரங்கனைப் பற்றியதான 'சிரீரங்கநாத தோத்திரமும்' ஆகும். இவர் ஒன்பது சம்பிரதாய நூல்களை வைணவ உலகிற்கு அளித்துள்ளார் அவை வடமொழியில் உள. அவற்றில் ஐந்து மட்டுமே முழுமையாகக் கிடைத்துள்ளன.

இவை தவிர மணிப்பிரவாளநடையில் இரண்டு நூல்களும் பட்டரால் இயற்றப்பட்டன. வராகபுராணத்தில் ஓர் அத்தியாயத்திற்கு விளக்கவுரை எழுதி அதனைத் திருவரங்கப் பெரிய கோயிலில் அரங்கேற்றின நாள் கார்த்திகைத் திங்களில் சுக்ல துவாதசி நாளாகும். அன்று பட்டர் திருநாட்டுக்கு எழுந்தருளியதாக ஐதீகம், அன்று முதற் கொண்டு பராசர பட்டர் வழிவந்தோர், திருவரங்கம் பெரிய கோயிலிலே கார்த்திகைத் திங்கள் சுக்கில ஏகாதசி அன்று இரவில் கைசிக புராணத்தை நம்பெருமாள் அர்ச்சனை மண்டபத்தில் கொலு வீற்றிருக்கையில் படிக்கும் மரபு தொடர்கிறது.

இன்னும் சில நாள் இருந்தால்'பரம பதத்திற்குப் படிக்கட்டுக்கட்டிடுவேன்' என்று பட்டர் திருவாக்கிட்

டார் என்பது ஐதிகம். நஞ்சீயர், வேதாந்த தேசிகன் முதலானோர் அவர் நூல்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டி வைணவ சித்தார்த்தத்தை நிலை நிறுத்தியதாகப் பெரியோர் கூறுவர். எம்பெருமானுடைய கோயில் நிருவாகத்தினும் பட்டரின் நிருவாகம் மேற்பட்டது என்பது இவரது ஏற்றத்தைக் குறிப்பதாகும்.

இவரது பேரவையில் தமிழ்ப் புலவர்கள் நிரம்பியிருந்தனர். அவர்களுள் ஆலவாயுடையான், ஒப்பிலாத பெருமாள் என்ற இருவர் மதுரையைச் சார்ந்தவர். அங்கு நடைபெற்ற சொற்பொழிவுப் பேரவையில் பெருந்தமிழ்ப் புலவர்கள் தாமே சென்று கலந்து கொண்டு சமயக் கொள்கைகளைக் கேட்டறிந்து தமது ஐயப்பாடுகளை அகற்றிக் கொண்டனர். பிற்காலத்தில் மிக்க சிறப்புடன் திருவரங்கத்தில் வைணவ ஆசாரியராக வீற்றிருந்த நம்பிள்ளையின் உள்ளத்தில் உரைத்திறனை விதைத்தவர் பட்டரே என்பர். வெ.சீ.சே.

**பட்டினத்தடிகள்:** ஈண்டுக் குறிக்கப் பெறும் பட்டினம், காவிரிப் பூம்பட்டினமாகும். இங்குத் தோன்றித் துறவு பெற்றவர் பட்டினத்தடிகள் ஆவர். இவர் அருளியனவாகக் கிடைக்கும் பாடல்கள் முத்திறத்தவை. 1) பதினோராம் திருமுறையில் காணும் பாடல்கள். 2) பட்டினத்தார் பாடல் திரட்டு என்ற பெயரில் உள்ளவை. 3) பதினெண்சித்தர் ஞானக் கோவை எனும் நூலில் காணப்பெறும் பாடல்கள்.

இம்மூவகைத் தொகுப்பிலும் காணப்பெறும் பாடல்கள் ஒருவராலேயே செய்யப் பெற்றனவல்ல. காரணம் இம்மூவகைப் பாடல்களின் நடைநலம், பொருள் நலம், நுவலுந்திறன் ஆகியவை ஒன்றற்கு ஒன்று வேறுபட உள்ளன. ஆதலின், இப்பெயருடையார் மூவர் வாழ்ந்திருக்கலாம் எனத் தெரிகிறது. எனினும், இம்மூவரைப் பற்றித் தனித்தனியாக வரலாறு காணப்படவில்லை. பட்டினத்தார் எனப் பொதுவாகக் கூறப்பெற்று வரும் ஒருவர் வரலாறே அறிய இயலுகிறது. அவர்வரலாறுபின்வருவதாகும்.

திருவெண்காட்டில் வணிகர் குடியில் சிவநேசர், ஞானகலை எனும் இருவருக்கும் தோன்றியவர் திருவெண்காடர் என்னும் பட்டினத்தார். பிறவும் தம போலப் பேணிச் செய்த வாணிகத்தால் இவர் பெரும் பொருளீட்டினார். இவர் சிவகலை என்னும் பெயருடைய அம்மையாரை மணந்தார். மகப்பேறின்றி வருந்தியகாலை, திருவிடைமருதூரில் வாழ்ந்த சிவசருமர் என்பாருக்குத் திருவருளால் கிடைத்த குழந்தை ஒன்று மருதவாணர் என்னும் பெயரில் அவர் இல்லத்தில் வாழ்நது வந்தது. வறுமையால் வாடிய சிவசருமர் தம் மகனைத் திருவெண்காடரிடம் கொடுத்துப் பெரும் பொருள் பெற்றுக் கொண்டார். திருவெண்காடர் இல்லத்தில் வளர்ந்து வந்த அத் தெய்வக்குழந்தை ஒருநாள் தன் வளர்ப்புத் தந்தையார் வீட்டிலில்லாத போது 'காதற்ற ஊசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே' என ஓர் ஓலையில் எழுதிவைத்து விட்டு மறைந்து விட்டது. வீட்டிற்கு வந்த திருவெண் காடற்கு இவ்வோலையே ஞானம் வழங்கும் அருட்பேழையாயிற்று. பிறப்பு அறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகையாதலின் அனைத்தையும் துறந்தார் இவர். ஞானவயப்பட்டபின் இவருக்குப் பட்டினத்தடிகள் என்னும் பெயர் நிலவுவதாயிற்று. தம்மெய்யுணர்வால் பல அரிய அருட்பாடல்களைப் பாடிய இவரிடத்துத் தென்னாட்டுச் சேந்தனாரும், துளுவ நாட்டு மன்னன் பத்திரகிரியாரும் மாணாக்கராயினர். திருவருள் நலம் முதிர்ந்த நிலையில், திருவொற்றியூரில் இவர் வீடுபேறடைந்தார். இவருக்கென அமைந்த கோயில் இன்றும் அங்கு உள்ளது.

இத்தகைய வரலாறு மேற்கண்ட மூவரில் யாவருக்கு உரியதென விளங்கவில்லை. இக்கால ஆய்வாளர்கள் ஒரு பெயருடைய இம்மூன்று பெரியார்களைப் பின்வருமாறு கால அடைவு செய்து காட்டியுள்ளனர்.

**முன்னவராகக் காணும் பட்டினத்தார்** பதினோராம் திருமுறையில் காணும் பாடல்களை அருளியவராவர். இத்திருமுறையில் ஐந்து நூல்கள் இடம் பெற்றுள்ளன. அவையாவன: 1. கோயில் நான்மணிமாலை, 2) திருக்கழுமல மும்மணிக்கோவை, 3. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, 4. திருவேகம்பமுடையார் திருவந்தாதி, 5. திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது என்பனவாகும். இவை சொற்சுவையும், பொருட்சுவையும் நிறைந்து இலக்கண இலக்கிய நலம் சான்றவை. இவர் காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டெனக் கருத இடமுண்டு.

**இரண்டாமவரான பட்டினத்தடிகள்** அருளிய பாடல்கள் 203 உள்ளன. இவர் காலம் கி.பி. 14 – ஆம் நூற்றாண்டெனக் கருத இடமுண்டு,

**மூன்றமவரான பட்டினத்தடிகள்** பாடல்கள் 'பதினெண்சித்தர் ஞானக்கோவை' எனும் நூலில் தொகுக்கப் பெற்றுள்ளன. இவர் காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு எனக் கருத இடமுண்டு. கு.சு,

**பட்டினப்பாலை:** பத்துப்பாட்டு நூல்கள் வரிசையில் ஒன்பதாம் பாட்டாக அமைந்திருப்பது பட்டினப்பாலை என்பதாகும். இது 301 அடிகளைக் கொண்டது. பெரும்பான்மை வஞ்சியடியும், ஆசிரிய அடியும் கலந் தமைந்த நூலாகும். பெரும்பான்மை

வஞ்சியடிகளால் அமைந்துள்ளமையால் இது 'வஞ்சி நெடும்பாட்டு' எனவும் குறிப்பிடப்பெறும். காவிரிப் பூம்பட்டினத்தைச் சிறப்பித்துப் பாடும் பாலைத் திணைப் பாடலாதலின் இந்த நூலுக்குப் 'பட்டினப் பாலை' என்னும் பெயர் அமைந்தது.

வேற்று நாட்டிற்குச் சென்றுவர நினைத்த தலைவன் தன் நெஞ்சத்தை நோக்கித் தலைவியைப் பிரிந்து வர இயலாதென்று செலவழுங்கிக் கூறும் முறையில், சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது இந்நூல். தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பா (157) உரையில் நச்சினார்க்கினியர் இதனை வஞ்சிப்பாவின் இடையளவிற்கு எல்லையாகக் காட்டுகின்றார்.

இந்நூலாசிரியர் பெரும்பாணாற்றுப்படை, குறுந்தொகை 352-ஆம் பாடல், அகநானூறு 167-ஆம் பாடல் ஆகியவற்றையும் படைத்துள்ளார். பட்டினப் பாலையைப் பாடியமைக்காக இவர் கரிகாலனிடம் பதினாறாயிரம் பொன் பரிசு பெற்றாரென்றுதமிழ் நூல் பலவற்றில் கூறப்பட்டுள்ளது. பதினாறுகோடிப் பொன் பெற்றாரெனக் கலிங்கத்துப்பரணியும் (இராச. 21),சங்கரசோழனுலாவும் (10),தமிழ் விடு தூதும் (193) கூறுகின்றன.

இப்பாட்டில் சோழ நாட்டின் பெருமை, காவிரிப் பூம்பட்டினத்தின் சிறப்பு, சோழன் கரிகாலனின் வீரச் செயல்கள், உறையூரை அவன் வளமை யாக்கியமை ஆகியன கூறப்படுகின்றன.

பாடலின் தொடக்கத்தில் வறுமைக்காலத்தின் காரணங்களும் இயல்புகளும் காவிரியின் சிறப்பும் சோழநாட்டுக்குடிவளமும் சோமகுண்டம், சூரியகுண்டம் என வழங்கப்பெற்ற இருகாமத்திணையேரி, அறச்சாலை, தவப்பள்ளி, கொற்றவையின் கோயில் முதலியவற்றின் இயல்புகளும் கூறப்படுகின்றன. பிறகு, வலைஞர்கள் பகலிலும்- இரவிலும் பொழுது போக்கும் முறையைக்கூறும் பகுதி வருகின்றது. அங்குப் பரதவர் குடில்களின் தோற்றம், அவர்கள் சுறாக் கொம்பை நட்டு வருணனை வழிபடும் மரபு, உவாக் காலத்தில் மீன்வேட்டைக்குச் செல்லாத வழக்கம், தீவினை நீங்கக் கடலாடும் மரபு, கடலிற் சென்ற பரதவர் கரையிலுள்ள வீடுகளில் ஏற்றிய விளக்குகளை எண்ணும்செயல் ஆகியவை விளக்கப்படுகின்றன.

பரதவர் பெருமைபற்றிய செய்திகள் கூறுமிடத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் கடல்வாணிகம் நிகழ்ந்து வந்ததும், ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களில் சோழன் புலிப் பொறியைப் பொறிப்பதும் அவற்றிற்குச் சுங்கம் வாங்குவதும் இன்னபிற செய்திகளும் கூறப்படுகின்றன. அதனால், பல நாட்டிற்கும் சோழ நாட்டுப்பொருள்கள் சென்றன என்பதும் ஈழம், காழகம் முதலிய நாடுகளிலிருந்து பல பொருள்கள் சோழ நாட்டிற்கு வந்தன என்பதும் கூறப்படுகின்றன.

கடைத்தெருக்களின் வளம் கூறும்போது கோயில்களில் எடுத்த கொடி, பண்டங்களை விற்றற்குத்தூக்கிய கொடி, கற்றறிந்த ஆசிரியர்கள் வாதுகூறிக் கட்டியகொடி ஆகியவை அழகுறக் கூறப்படுகின்றன. அங்கு விற்கும் கங்கை, காவிரி, ஈழப்பொருள்கள், கடாரத்து நுகர்ச்சிப் பொருள், தென்கடல் முத்து, கீழ்க்கடல் செம்பவளம், வெளிநாட்டுக் குதிரைகள், உள்நாட்டு மிளகு, இமயத்துப் பொன் மணி, குடகின் சந்தனம் அகில் என இவை நிலம் நெளிய நிறைந்து கிடக்கும்.

அங்கிருக்கும் வணிகர்கள் கொலை, களவு முதலிய குற்றங்களைப் பிறரிடமிருந்து நீக்குவார்கள். நடுநிலைமை உடையவர்கள் அவர்களின் வணிக முறையும், அங்கு விரிவாகக் கூறப்படுகின்றது.

அடுத்ததாகக் கரிகாலன் சிறப்புக் கூறப்படுகின்றது. அவன் இளமையில் சிறையிலிருந்ததும், சிறையிலிருந்து நீங்கி அரசுரிமையடைந்ததும், பகைவர் நாட்டைப் பாழ்படுத்தியதும், ஒளியர், அருவாளர், வடவர், குடவர், இருங்கோவேள முதலிய சிற்றரசர்களையும் பாண்டியர்களையும் வென்றதும், உறையூரை விரிவாக அமைத்துப் பல குடிகளை அதில் நிலை நிறுத்தி மதிலும் வாயிலும் முதலியன அமைத்ததும் கூறப்படுகின்றன. கரிகாலனுடைய பகைவர் நாடுகள் மிக அழகாக இருந்தனவென்றும், அவை இவனால் இரங்கத்தக்க நிலையில் பாழ்பட்டனவென்றும் கூறப்படுகின்றன.

கப்பலில் கொண்டுவந்த பொருள்கள் கரையிலே பரப்பப்படுவதையும், கரையில் குவித்த பொருள்கள் கப்பலில் ஏற்றப்படுவதையும் உவமை கூறும்போது, மேகம் கடலிலே முகந்து வந்த நீரை மலையிலே சொரிதலும், அது திரும்பவும் கடலுக்கு வருவது போல இருப்பதும் ஆன காட்சி கூறப்படுகின்றது. இத்தொழில் இடைவிடாமல் நடைபெறுவதாகக் கூறப்படுவது அழகாக அமைந்துள்ளது.

காவிரிப்பூம்பட்டினத்தில் சோறுவடித்த கஞ்சி ஆறுபோலப் பரந்தொழுகி, எருதுகள் தம்மிற் பொருவதனாலே சேறாகிப் பல்தேர்களும் ஓடுவதினாலே புழுதியாகிப் பல்வேறு வகைப்பட்ட ஓவிய வேலைப்பாடுடைய வெண்மையான சுண்ணம் தீட்டிய அரண்மனைகளைப் புழுதிபடிந்த களிறுபோல அழுக்காக்கும் என்கின்றார். 'இத்தகைய பட்டினம் பெறினும் என்னால் விரும்பப்பட்ட காதலியைப் பிரிந்து நின் விருப்பப்படி பொருளீட்ட வரமாட்டேன். நீயே அங்குப்போய் வாழ்வாயாக' என்று கூறிச் செல

வழங்குகின்றான் தலைவன். செல்ல விரும்பியகாலம் கரிகாற்பெருவளத்தான் பகைவரைக் கொல்வதற்கு ஏந்திய வேலினும் கொடியதாக இருக்கும் என்றும், தன் தலைவியின் தோள்கள் அவன் செங்கோலினும் குளிர்ந்தவையாக இருக்கும் என்றும் தலைவன் கூறுகின்றான்.

இந்நூலாசிரியர் வானநூற்புலமையுடையாரென்பதை, மதியைச் சேர்ந்த மகவெண் மீனைப் பொய்கைக்கும் அதன் கரைக்கும் உவமை கூறுவதாலும், நாள்மீனும் கோள்மீனும் மோதினாற் போலப் பரதவர் ஒருவரோடொருவர் மல்லிடுவதைக் கூறுவதாலும், வெள்ளி திசை திரிந்து தெற்குச் சென்றால் பஞ்சம் தோன்றும் என்பதாலும் அறியமுடிகின்றது.

கடியலூர் உருத்திரங்கண்ணனார் பட்டினப் பாலையைப் பண்பாட்டுக் களஞ்சியமாகப் படைத்துள்ளதை அறிய முடிகின்றது. சங்ககாலப் புலவர்களின் சிறப்புப் பண்பான மானுடம்பாடுதல், என்னும் கருத்தையும் சங்ககாலச் சமுதாய நடப்புகளையும் இவர் பட்டினப்பாலையில் பதிவு செய்துள்ளார் எனலாம். சி.பா.

**பட்டேவியா:** அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நியூயார்க்குமாநிலத்தில் உள்ள ஒரு நகரத்திற்குப் பட்டேவியா(Batavia) என்று பெயர். இது உரோசெசுடருக்குத் தென்மேற்கில் 53 கி.மீ. தொலைவிலும், பப்பலோவுக்கு (Buffalo) வடகிழக்கில் 57 கி.மீ. தொலைவிலும் உள்ளது. ஆலந்திற்குச் சொந்தமான இக்குடியேற்றம், அப்பொழுது அந்நாடு பட்டேவியன் குடியரசு எனப்பட்டதால், இப்பெயர் பெற்றது. கூட்டரசில் கி.பி. 1826-இல் இணைந்த இது 1914-இல் ஒரு நகரமாயிற்று. இதனுடைய மக்கள் தொகை 18,210 (1960).

தச்சு முதலாளிகள் கி.பி. 1793-97-இல் நியூயார்க்கின் மேற்குப்பகுதியில் ஒரு பெரிய நிலப்பரப்பை விலைக்கு வாங்கினர். அங்கு இந்நகரமானது கி.பி. 1801-இல் உருவாக்கப்பட்டு, பட்டேவியா எனப் பெயரிடப்பட்டது. இப்பகுதி வேளாண்மையில் சிறந்து விளங்குவதுடன், தொழிற்சாலைகள் நிறைந்த நகரமாகவும் உள்ளது. இங்குத் தொலைக்காட்சிப் பெட்டிகள், கனரக, சாதாரண இயந்திரங்கள், இயந்திரப் பகுதிகள், படகுகள், பெண்களுக்கான காலணிகள், ஆண்களுக்கான ஆடைகள், உணவு வகைகள், மதுவகைகள், சாயங்கள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன.

**பட்டேவியா[2]:** இதே பெயரில் அமெரிக்காவில் வடகிழக்கு இல்லினாய்சு மாநிலத்தில் ஒரு தொழில் நகரம் உள்ளது. அது சிக்காகோவிலிருந்து 56 கி.மீ. தொலைவில் கேன் கவுண்டியில் பாக்சு ஆற்றங்கரையில் இருக்கின்றது. இங்கு இரும்பு, பித்தளை வார்ப்பு ஆலைகள், வேளாண்மைக் கருவிகள், மின்விளக்குப் பொத்தான்கள், தொலைக்காட்சிப்பெட்டி, குழாய்கள், மருந்துப் பொருட்கள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. இங்கு மக்கள் கி.பி. 1833 – இல் குடியேற, கி.பி. 1891-இல் இது நகரமானது. இதன் மக்கள் தொகை 11,600 (1975).

**பட்டேவியா[3]** இந்தோனேசியக் குடியரசின் தலைநகரமாகவும், சிறந்த துறைமுகமாகவும், இன்று விளங்கும் சாகர்த்தா (Jakarta)வின் பழையபெயர் பட்டேவியா ஆகும். இந்நாட்டில் தச்சுக்கிழக்கிந்தியக் குழுவினர் கி.பி. 1610 – இல் குடியேறி யகதிரா (Yacatra) என்றவிடத்தில் ஒரு வாணிக நிலையத்தை ஏற்படுத்தினர். அதனை அவர்கள் கி.பி. 1617-இல் கைப்பற்றி அதற்குப் பட்டேவியா எனப் பெயரிட்டனர். இந்தோனேசியா கி.பி. 1905-இல் விடுதலை அடைந்ததும் இதன் பெயர் சாகர்த்தா என மாற்றப்பட்டது. இதன் மக்கள் தொகை 6,503,449 (1980) சி.இரெ.

**பட்லர், சோசப்பு:** மெய்ப்பொருளியல் அறிஞரும், இயன்மை இறையியலாருமான பட்லர் சோசப்பு (கி.பி. 1692-1752) பெர்க்சயரிலுள்ள (Berkshire) வான்டேசில் (Wantage) ஒரு திருச்சபையைச் சார்ந்த குடும்பத்தில் பிறந்தவர். முதலில் குளொசெசுடர் (Gloucester), தியூகெசுபரி (Tewkesbury) என்னுமிடங்களிலுள்ள கல்விச்சாலைகளில் பயின்றார். பின்னர் ஆக்சுபோர்டு ஓரியல் (Orial) கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றார். பட்லர் தம் வாழ்நாளில் திருச்சபையின் சேவைகளில் பெரும் பகுதியைக் கழித்தார். இவர் கி.பி. 1718-இல் ஒரு திருச்சபையின் மதகுருவாகவும், கி.பி. 1738-இல் பிரிசுடலிலும் (Bristol)கி.பி, 1751-இல் தர்காமிலும் (Durham) மாவட்ட மறைமுதல்வராகவும் (Bishop) பணியாற்றினார். கரோலின் பேரரசிக்கும்(Caroline), இரண்டாம் சார்சுக்கும்(George II) தனி வழிபாட்டுச் சேவையாளராகவும் பணிபுரிந்தார். உடல் நலத்தை முன்னிட்டுப் பாத்து (Bath) என்னுமிடத்திற்குச் சென்றவர், அங்கேயே இயற்கையெய்தினார். மனித இயற்கை பற்றிய பதினைந்து விளக்கப்பேருரைகள் (Fifteen Sermons upon human nature – 1726), நற்பண்புகளைப் பற்றிய விளக்க ஆய்வேடுகள்(Dissertation upon virtue), சமயத்தின் ஒப்புமை (Analogy of Religion - 1736) முதலிய இவருடைய நூல்களில் முதலிரண்டும் மனித அறநடத்தைகள் பற்றியவை; மூன்றாவது இவரது இயன்மை இறையியலை(Natural theology) விளக்குவதாகும்.

பட்லர் சோசப்பு (Butler Joseph) ஆங்கில அறநெறியாளர்களைப் போன்று அறத்திற்கு அடிப் படையாகப் புலனுணர்ச்சியைப் பொதுவாக ஏற்றா லும், மனச்சான்றினை (conscience) வலியுறுத்துபவர் ஆவார். இவரது கருத்தின்படி மனச் சான்றானது, தன்னல விழைவு, அறச்செயல் விழைவு ஆகிய இரு மனித இயல்புகளையும் கொண்டு விளங்குவதாகும். இது மனிதனின் உள்ளக்கொள்கைகளையும், வெளிச் செயல்களையும் வேறுபடுத்துவதுடன், சில செயல் களை நல்லவை, சரியானவை என்றும், சில செயல் களைத் தீயவை, தவறானவை என்றும் தீர்மானிப் பதுமாகும். இந்நிலைகளில் மனச்சான்று தானாகவே செயற்படுகின்றது. இதுவே, மனிதனை அறச்செயலி (Moral agent) ஆக்குவதும், சமுதாய நற்பண்புகளை ஏற்கச் செய்வதும் ஆகும் என்று பட்லர் கருது கின்றார்.

மனிதனின் அறவியல்பாகிய மனச்சான்று சமுதாய முழுமைக்கும் நலன் பயக்கும் செயல்களை அங்கீகரிக் கும் என்றும், அவ்வாறு அல்லாதனவற்றை ஏற்காது என்றும் பட்லர் கருதுகின்றார். மனச்சான்று இச் செயல்களைச் செய்யுமாறே இறைவனால் வடிக்கப் பட்டுள்ளது என்பதுடன், மனச்சான்று தடுக்கப்படாத நிலையில் இயல்பாகவே எப்பொழுதும் சிறந்தன வற்றை எதிர்நோக்கிச் செயற்படும் என்றும் பட்லர் குறிப்பிடுகின்றார். சிலசெயலின் விளைவுகளினால் ஏற்படும் மனநிறைவும், சிலவற்றின் விளைவுகளினால் ஏற்படும் துன்ப உணர்வும் இறைவனால் விதிக்கப் பட்டவை என்று கருதுவதிலிருந்து மனிதன் இறை யாட்சிக்கு உட்பட்டவன் என்பதைப் பட்லர் தமது இயன்மை இறையியலில் விளக்குகின்றார். பி.ஆர்.ந.

**படகர்**, நீலகிரி மலைத் தொடர்களில் பல்லாண் டுக் காலமாக வாழ்ந்து வரும் பழங்குடியினர். ஒரு காலத்தில் நீலகிரியில் படகர்களே பெரும்பான்மை யாகஇருந்தனர். நீலகிரியில் படகர் மக்களைத்தவிரத் தோடர், கோத்தர், இருளர், பணியர், முள்ளு குறும் பர், பெட்ட குறும்பர், ஆலு குறும்பர், கசவர், காட்டு நாயக்கர் போன்ற பழங்குடி மக்களும் வாழ்ந்து வரு கின்றனர். தோடர் வாழ்க்கை எருமையைப் பரா மரிப்பதிலும் கோத்தர் வாழ்வு பல கருவிகளை உற் பத்தி செய்வதிலும், மற்றப்பழங்குடி மக்கள் வாழ்க்கை காட்டுப் பொருள்களைச் சேகரிப்பதிலும் தேன் எடுப்பதிலும் கழிகின்றன. படகர்களின் வாழ்வு வேளாண்மையில் கழிகின்றது. படகர்கள் நீலகிரிக்கு வந்தநாள் தொட்டுத் தோடர், கோத்தர், குறும்பர், இருளர் ஆகிய பழங்குடி மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு வாழ்ந்து வருகின்றனர்.



படகர்கள் பெரும்பாலும் கி.பி. 16-ஆம் நூற் றாண்டிற்குப் பின்னரே மைசூரிலிருந்து வந்து குடி யேறியிருக்கவேண்டும். முசுலிம்களின் கொடுமைக்குப் பயந்து நீலகிரியில் வந்து குடியேறிய மக்களே படகர் எனக் கோத்தரது நாட்டுப் புறக்கதை ஒன்று கூறு கிறது.


படக ஆண்

படகர்கள் சமூகம் 18 குலங்களைக் கொண்டது எனக் கிரிக்கும் (Grigg), 6 குலங்களைக் கொண்டது என நடேச சாத்திரியாரும், 12 குலங்களைக் கொண டது எனப் பால் ஆக்கின்சும் (Paul Hockins) கூறுவர்.

அக் குலத்தவர்களுள் ஒடையர் என்னும் பிரி வினர் மைசூரை ஆண்ட உடையார் வமிசத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், இலிங்கத்தைக் கழுத் தில் அணிந்திருப்பதால் இலிங்கக்கட்டிகள் என் றும் தம்மைக் கூறிக் கொள்கின்றனர். அவர் களிடையே மதுவெ, கோவேறு, கக்குச்சி என்ற உட்பிரிவுகள் இருப்பதாக ஆக்கின்சு குறிப்பிடு கிறார். இவர்களே உயர்ந்தவர்களாகக் கருதப்படு கின்றனர். உடையாருக்கு அடுத்தபடியாக எண்ணப் படுபவர் ஆருவா (Haruva) பிரிவினர். பூணூல் அணி கின்ற இவர்கள், கோயில் பூசாரியாகப் பணியாற்று கின்றனர். இவர்களுக்கு அடுத்த நிலையில் கருதப் படுபவர்கள் அதிகிரிகள். இவர்களிடையே இலிங்கம் கட்டுவோர்,கட்டாதார் என இருபிரிவுண்டு. இவர்கள் வீரசைவர்களாக இருந்தவர்கள் என்று கூறப்படுகின் றனர். உதயராய கோட்டைத் தலைவனால் கணக்கு களைக் கவனிக்க நியமிக்கப்பட்டவர்களே கணக்கர்

எனப்படுவர். கக்குச்சி என்னுமிடத்தில் முதலில் வந்து குடியேறியதால் கக்குச்சிப் படகர் என இவர்கள் கூறப்பட்டனர். இவர்களுக்கு அடுத்தபடியாகக் கௌடா என்னும் பிரிவினர் கருதப்படுகின்றனர். இவர்களிடையே கத்தூரி, மதுவெ, மாரி, பெள்ளி, மாணிக்க என்னும் பல குலங்கள் காணப்படுகின்றன. கத்தூரி குலத்தினர் வீரசைவர்களாக இருந்தனர். கத்தூரிக் குலத்தினரைக் கன்னட ஒக்கலிகருடன் ஒப்பிட்டுப் பேசுகிறார் தர்சுடன் (Thurston). கும்பாரா எனப்படும் பிரிவினர் மட்பாண்டம் செய்யும் பொருட்டு அழைக்கப்பட்டவர்களாயிருக்கலாம்.இவர்களுக்கும் மற்றப் பிரிவினர்க்கும் மண உறவு இல்லை என்பதும் குறிப்பிடத் தக்கது. தொரையா பிரிவு மிகவும் தாழ்ந்த பிரிவாகப் படகர்களால் கருதப்படுகிறது. அப்பிரிவைச் சேர்ந்தவர்கள் கிறித்தவர்களாக மாறியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.


படகப் பெண்கள்

படகர் வாழுமிடத்தை 'அட்டி' (Hatti) என்பர். ஒரு காலத்தில் இவர்களின் வீடுகள் மரத்தால் கட்டப்பட்டிருந்தன. இப்பொழுது மற்றவர்களைப் போன்று வீடுகள் கட்டியுள்ளனர். பெரும்பாலான வீடுகள் திண்ணை, முன் அறை(இத மனெ), உள் அறை (ஒகமனெ), பின்கட்டு (இம்பர) சமையல் அறை எனப் பல பகுதிகளைக் கொண்டிருக்கும். மாடிப்பகுதியை 'அட்டலு' என்பர். பெரும்பாலான வீடுகளில் பரணும் இருக்கும்.

முன்பு படகர்கள் தலைப்பாகை அணிந்திருந்தனர். குளிர்ப்பிரதேசமாகையால் உடலைப் போர்வையால் போர்த்திருப்பர். பெரும்பாலும் பெண்கள் வெள்ளை வேட்டியும் துண்டும் அணிந்திருப்பர். வயதான பெண்கள் உடல்முழுவதும் பச்சை குத்திக் கொள்கிறார்கள். பெண்கள் மூக்குத்தி, வளையல், மோதிரம் ஆகியவற்றை அணிகின்றனர். படகப் பெண்கள் கடும் உழைப்பாளிகள்.

ஒவ்வொரு குலத்துக்கும் ஒரு தலைவன் உண்டு. அவர் மக்களிடையே நடைபெறும் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்குவார். அக்காலத்தில் சத்தியம் செய்தல் பெரு வழக்காக இருந்தது.

படகரில் பெரும்பாலோர் இலிங்காயத்து நெறியைப் பின்பற்றுகின்றனர்.இலிங்கம் அணியும் சடங்கு 13-ஆம் வயதில் நடைபெறுகின்றது. குருக்கள் இலிங்கத்திற்குப் பூசை செய்து, மந்திரங்களை ஓதிப் பல சடங்குகளை மேற்கொண்ட பிறகு ஆண்மகனுக்கு இலிங்கத்தை அணிவிக்கிறார். இலிங்கத்தைக் கட்டிய பின், குருக்கள் 'ஓராயிர மாண்டுகள் நீ ஒளியுடன் திகழ்வாய்' என வாழ்த்துகிறார். படகர்கள் மகாலிங்கசாமி, நீலமலை அரங்கசாமி முதலியவற்றை வழிபடுகின்றனர். சிலர் காரமடை, மைசூர், நஞ்சன் கூடு போன்ற இடங்களுக்குச் சென்று வழிபடுவதும் உண்டு.

கால்டுவெல், படகரின் பேச்சு கன்னட மொழியின் கிளைமொழி என்று கூறுகிறார். நீலகிரி மக்களைப் பற்றி ஆராய்ந்த பிரிக்சு (Breeks), கிரீக்கு (Grigg) போன்றோரும் இக்கருத்தையே வெளியிட்டுள்ளனர்.

பெரும்பாலும் தூரத்து உறவில் படகர் திருமணம் செய்து கொள்வர். திருமணத்திற்கு முன் மணமகன் உறவினர் சூழ மணமகள் இல்லத்திற்குச் சென்று, பெரியோர்களின் தாள் தொட்டு வாழ்த்தைப் பெறுகிறான். பின் மணமகள் மணமகன் வீடு செல்கிறாள்.மண மகளை மாப்பிள்ளையின் உறவினர்கள் வரவேற்கிறார்கள். மணமகள் ஓடையிலிருந்து நீர் கொணர்கிறாள். பின்னர் அனைவரின் தாள்தொட்டு வணங்கிவாழ்த்தைப் பெறுகிறாள். பின்னர்ப் பெரிய விருந்து நடைபெறும். இதுவே படகர் திருமண முறையாகும்.

இவர்களிடையே மறுமணம் செய்து கொள்ளும் முறை உண்டு. மனைவியை இழந்தவர்களும் விதவைகளும் திருமணம் செய்து கொள்ளலாம். மணவிலக்கு இவர்களுக்குமுஏற்புடையதே.பெண்ணின் தலைப்பேற்றின் போது ஏழாம் மாதம் நடைபெறும் சடங்கினைக் 'கன்னி கட்டொடு – கன்னி காக்கொடு' என்பர். மகப்பேறு தாழ்வார அறையில் நடைபெறும். பிறை நிலவைக் காணும் வரை அங்கேயே தாயும் சேயும் இருக்க வேண்டும். பின்

னர்க் கணவன் வீட்டை அடைந்தவுடன், வயது முதிர்ந்தோர் ஒருவர் குழந்தையின் தலையைத் தொட்டு வாழ்த்துவார். உறவினர்கள் பாலையும் அரிசியையும் எடுத்துக் குழந்தையின் நாவில் வைப்பர். ஏழு, ஒன்பது அல்லது பதினோராம் நாளில் குழந்தைக்குப்பெயர் சூட்டுவர். ஏழாம் திங்களில் குழந்தைக்கு மொட்டை அடிப்பர்

ஒருவர் இறந்தவுடன் உறவினர்களுக்குச் சொல்லியனுப்பப்படும். பிணத்தைத் திறந்த வெளியில் வைப்பர். ஓர் எருமையைக் கொண்டு வந்து பிணத்தை மூன்றுமுறை வலம் வரச் செய்வர். எருமையின் பாலைக் கறந்து பிணத்தின் வாயில் ஊற்றுவர். பாடை ஐந்து முதல் பதினொரு மாடி வைத்துக் கட்டப்படும். இறந்தவன்இளைஞனாக யிருந்தால், கொடி சுற்றப்படும். ஐந்து குடைகள் வைத்தும் பாடை கட்டுகின்றனர். பாடையில் புகையிலை, வெல்லம், சாமை மாவு அடங்கிய கூடைகள் வைக்கப்படும். ஆண்கள் தலையைத் தொட்டு வணங்குவர். பெண்கள் காலைத் தொட்டு வணங்குவர். பாடையைத் தூக்கிச் செல்லும்போது ஓரிடத்தில் இறக்குவர். கணவன் இறந்தால், மனைவியின் நகைகளை நீக்குவர். பின்பு மூத்தமகன் தீ மூட்டுவான். கருமாதி ஏதாவது ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று நடைபெறும். சு.ச.

**படாரியின் பண்பாடு,** மத்திய எகிப்தில், ஏறத்தாழ கி.மு. 4000 - இல் நிலவிய கல்-செப்புக் காலப்(Chalcolithic Age) பண்பாடாகும். தாசியன் (Tasian) பண்பாட்டுக்குப் பின்பு தோன்றி, சிறப்பு வாய்ந்த அமரேதியப் (Amaratean) பண்பாட்டுக்கு முன்பு முடிவுற்றது. இப்பண்பாட்டுக் காலத்தில் மக்கள் முதன்முதலாக உலோகப் பயனை அறிந்தனர். சிறந்த மண்பாண்டங்கள், சிற்பங்கள் செய்யவும தெரிந்து கொண்டனர். இவையே இப்பண்பாட்டுக் காலத்தின் சிறப்புத் தன்மைகளாகும்.

செம்பைப் பயன்படுத்திய படாரியின் தொடக்கக் காலக் குடியிருப்புகளில் அல் படாரி (Al Badari), மாசுதகட்டா (Mostagadda), மாத்மர் (Matmar) ஆகியவை முக்கியமானவை. அவற்றுள், அல்படாரி என்ற ஊரில் முதன்முதலாகப் பண்பாட்டுச் சின்னங்கள் கிடைத்தமையால் 'படாரியின் பண்பாடு' என்று பெயர் இடப்பெற்றது. படாரியர்கள் நீண்ட தலையை உடையவர்கள், குட்டையானவர்கள்; பெருந்தலையர்களான தாசியர்களிலிருந்து மாறுபட்டவர்கள். படாரியப் பண்பாட்டின் மற்றொரு சிறப்புக்கூறு நன்முறையில் வனையப்பட்டு, நன்கு சுடப்பட்ட மண்பாண்டங்களாகும். மெல்லியதும், பளபளப்பானதும், வளைந்த விளிம்புகள் உடைய சிவப்பு நிற மண்பாண்டங்கள் பயன்படுத்தப்பட்டன. உட்புறமும் வாய்ப் பகுதியும் கருமையாயும், வெளிப்புறம் சிவந்தும் உள்ள மண்பாண்டங்களை இவர்கள் பயன்படுத்தினர். இப்புதுவகை மண்பாண்டங்கள் வனையும் கலை, வடிவமைப்பு ஆகியவை வெளிநாட்டு வணிகத் தொடர்பால் ஏற்பட்டிருக்கலாம். வாயகன்ற அகலமான பாத்திரங்கள் மற்றும் கூம்பு போன்ற அடிப்பாகம் கொண்ட பாத்திரங்கள், பருத்த உடலுடைய பானைகள் இவர்களால் முக்கியமாகப் பயன்படுத்தப்பட்டன. நான்கு கைப்பிடிகள கொண்ட பெரிய பானைகளும் வனையபபட்டன.

மக்கள் ஓலைகளால் வேயப்பட்ட கூரைக் குடிசைகளில் வாழ்ந்தனர். மரக்குச்சிகளை இடையிடையே அமைத்து மண்ணால் சுவர் எழுப்பினர். உரொட்டி, கஞ்சி, மீன், இறைச்சி ஆகியன இவர்களின் முககிய உணவாகும். தோல், கம்பளி முதலியவற்றாலான ஆடைகளை அணிந்தனர். அணிகள மீது நாட்டம் கொண்டிருந்த இவர்கள் சிப்பிகளையும் நவமணிக் கற்களையும் தீட்டி, மெருகூட்டி அணிந்தனர். கடகம், கழுத்தணி ஆகியவற்றை அணிந்தனர். உடம்பில பச்சை குத்திக் கொண்டு தங்களை அலங்கரித்தனர். மாலகைட் (Malachite) என்னும் பொருளை முகப் பூச்சுக்குப் பயன்படுத்தினர். இவர்கள் செம்புக் கருவிகளுடன், கல்லாயுதங்களையும் பயன்படுத்தினர். மற்ற கருவிகளில் தந்தஊசி, துளையிடும் கருவி ஆகியவற்றைச் சிறப்பாகக் குறிக்கலாம். வீட்டு விலங்குகள் சிலவற்றையும் வளர்த்தனர். வேளாண்மையினர், கோதுமை, பார்லி ஆகியவற்றை விளைவித்தனர். இடையர்களும், வேடுவர்களும் சமூகத்தில் முக்கிய இடம்பெற்றனர். அகழாய்வுச் சான்றுகள் சிலவற்றின் அடிப்படையில், இவர்கள் கடல்வாணிகம் செய்தனர் என்பது புலனாகின்றது. வணிகரும், வாணிகமும், சிறப்பிடம் பெற்றிருந்தனர். இக்காலத்தில் அழகுக் கலைகள் நன்கு வளர்ச்சியுறவில்லை என்றாலும் சிற்பக்கலை நுணுக்கங்களை அறிந்திருந்தனர். களிமண்ணிலிருந்து உருவங்களை ஆக்கினர். தொடக்கக் கால உருவங்கள், கலைச் சிறப்பு மிக்கதாக இல்லை. ஆயினும், காலப்போக்கில் கலைநயம் கொண்ட உருவங்களைப் படைத்தனர். படாரியின் கல்லறையில் கிடைத்த உருவங்களுள் பெண் உருவங்கள் சிறப்பானவை. எலும்பு, தந்தம் ஆகியவற்றாலும், பறவை, விலங்குகள் உருவங்களைச் செய்தனர். அழகிய சீப்புகளையும் இவர்கள் உருவாக்கினர்.

இறந்தோரைப் புதைப்பதில் புதிய கற்கால, கீழ் எகிப்து முறைகளிலிருந்து மாறுபட்டனர். குடியிருப்புப் பகுதியிலிருந்து தனித்து அமைந்த கல்லறைப் பகுதிகளில் மேற்கு நோக்கிப் புதைத்தனர். அவர்கள் பயன்படுத்திய அணிகள், பொருட்கள் ஆகியவற்றையும்

உடன் புதைத்தனர். புதைக்கப்பட்டோர் செய்திகளையும், கல்லறைகளில் குறித்தனர். விலங்குகளைப் புதைக்கும் வழக்கத்தையும் கொண்டிருந்தனர்.

வெ பா.

**படிக்காசுப்புலவர்**: இவர் தொண்டை மண்டலத்தில் சிறப்புற்று விளங்கிய புலவர்களுள் ஒருவர்; பொற்களத்தூர் என முன்னர் வழங்கி, இக்காலத்தில் தென்களத்தூர் என வழங்கும் ஊரில்செங்குந்தர் மரபில் வந்தவர்; சைவசமயத்தவர். இவரது காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்பர். இவருடைய இயற்பெயர் இன்னதென்று அறியப்படவில்லை. இவர் தென்னாட்டில் பல திருத்தலங்களை வழிபட்டுச் சென்றபோது, தில்லையில் நடராசப்பெருமானை வழிபட்டபின் சிவகாமி அம்மையாரைத் தம் வறுமையின் காரணமாக, 'பால்கொடுத்தாய் மதவேளுக்கு மூவர் பயப்படச் செங் கோல்கொடுத்தாயன்னையே யெனக்கேதுங் கொடுத்திலையே' என வருந்திப் பாடியபோது, ஐந்து பொற்காசுகளைப் பஞ்சாக்கரப் படியில் பெற்றதனால் படிக்காசர் எனப் பெயர்பெற்றார் என்பர். இப்புலவர் திருவாரூர் வைத்தியநாத தேசிகரிடம் இலக்கண இலக்கியக் கல்வி பெற்றார். இவர் இயற்றியனவாகக் காணப்படும் பெரும்பாலான பாடல்கள் பொருள் வேண்டிப் பாடியனவாகவே உள்ளன. அப்பாடல்களே புலவரின் வறுமைப்பிணி போக்கப் பெரிதும் உதவியதாகத் தெரிகிறது. இவரது 'பெற்றாள் ஒரு பிள்ளை' என்று தொடங்கும் பாடலைக் கேட்ட வல்லமா நகர் வள்ளல் காளத்தி பூபதி இவருக்குப் பசுவும் கன்றும் கொடுத்துச் சிறப்பித்தார். பரிசில் பெற்ற புலவர் 'வழிமேல் விழிவைத்து' என்ற பாடலில் காளத்தி பூபதியைப் போற்றிப் பாடுகிறார். புதுக்கோட்டைச் சீமையில் உள்ள வைத்தூர் என்னும் ஊரையும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளையும் ஆண்ட சிவந்தெழுந்த பல்லவரையரும், திருநெல்வேலியில் வாழ்ந்த மாதைத்திரு வேங்கடேச ஐயரும், அரியலூர் மழவரங்க பூபனும், கோயம்புத்தூரை அடுத்த கவசை என்னும் ஊரில் வாழ்ந்த மசக்காளி மன்றாடியும், இவர்தம் பாடல்களைப் போற்றிப் பரிசில் வழங்கியவர்களாவர். மோகூரில் வாழ்ந்த குமாரசாமிக் காங்கேயன் என்பவரைப் பாடித் தந்தச் சிவிகையும் பல பரிசுகளும் பெற்றார். அதன்பின் மாவண்டூரில் பெருஞ்செல்வராக விளங்கிய கத்தூரி முதலியார் புதல்வர் கறுப்பமுதலியார், கேட்டதற்கிணங்கத் தொண்டை மண்டல சதகம் பாடிய படிக்காசுப் புலவருக்குப் பல்லக்கும் விருதும் வழங்கியதோடு மட்டுமல்லாமல், தம் தம்பியருடன் புலவரை அப்பல்லக்கில் வைத்துச் சுமந்தும் சிறப்பித்தார்.

சேது நாட்டரசன் கிழவன் சேதுபதி என்னும் இரகுநாத சேதுபதி மீது 'மூவேந்தரும் மற்றும் சங்கமும் போய்' என்ற பாடலைப் பாடிப் பரிசில் பெற்றதோடு சிலகாலம் அவ்வரசனின் அவைப் புலவராகவும் இருந்தார். சிவகெங்கை அரசன் திருமலைத் தேவன் இவர் மீது பொறாமைகொண்டு புலவரைக் 'கிளிக்கூட்டுச்' சிறையிலடைக்க 'நாட்டில் சிறந்த திருமலை' என்னும் பாடலைப் பாடி அவனை மகிழ்வித்துப் பரிசிலும் பெற்றார். பின்னர், கீழ்க்கரையில் வாழ்ந்த சீதக்காதி என்னும் வள்ளலின் கொடைச் சிறப்பைப் பற்றிப் பல பாடல்கள் பாடினார். இறுதியாகப் பல ஊர்களைக் கடந்து, தருமபுரம் வந்தடைந்த படிக்காசுப் புலவர் தருமபுர ஆதினகர்த்தர் திருநாவுக்கரசு தேசிகரிடத்தில் சந்நியாசம் பெற்றார். அங்குப் பலகாலம் சிவப்பணி புரிந்து இறைவனடி சேர்ந்தார். இவருக்கும் குடந்தையில் வாழ்ந்த கும்பன் என்னும் புலவர்க்கும் இடையே நிகழ்ந்த வாதம் பற்றிய பாடல்களும் இவருடைய பாடல்களில் குறிப்பிடத்தக்கனவாகும்.

சந்தக்கவி பாடுவதில் வல்லவரான படிக்காசுப் புலவரின் புலமைத்திறனைப் 'பகர் சந்தம் படிக்காசலாதொருவர் பகரொணாதே' என்பதாலும்,'மட்டாரும் தென்களத்தை' என்று தொடங்கும் பாடலாலும் அறியலாம்.

சிவந்தெழுந்த பல்லவனுலா, சிவந்தெழுந்த பல்லவன் பிள்ளைத் தமிழ், உமைபாகர் பதிகம், பாம்பலங்காரர் வருக்கக்கோவை, தொண்டை மண்டல சதகம், தண்டலையார் சதகம், புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம் என்னும் நூல்களும் பலவகைத் தனிப் பாடல்களும் இவரால் இயற்றப்பட்டுள்ளன. இவர் தம் பாடல்கள் பிற்காலத்தில் தொகுக்கப்பட்டதனிப் பாடல் திரட்டிலும் காணப்படுகின்றன. ச.செ.

**படிநிலை இலக்கணம்**: அமெரிக்க மொழியியலாளர் சிட்னி எம். இலாம்பு (1929) என்பவரால் உருவாக்கப்பட்ட மொழியியற் கோட்பாட்டுக்குப் 'படிநிலை இலக்கணம்' என்பது பெயர். இப்படிநிலை இலக்கணக் கோட்பாடு 1962-ஆம் ஆண்டில் பேராசிரியர் இலாம்பின் நூலில் (Outline of Stratificational grammar) முதன்முதலில் விளக்கம் பெற்றது. மொழி என்பது பல்வேறு படிநிலைகளைக் (Strata) கொண்ட ஓர் அமைப்பு என்று சிட்னி இலாம்பு நிலைநாட்டினார். ஐரோப்பிய மொழியியல் அறிஞரான உலூயி எம்சுலேவு (Louis Hjemslev)என்பவரின் மொழியியற் கொள்கையை அடியொற்றி இலாம்பு தம் படிநிலைக் கோட்பாட்டை உருவாக்கினார்.

மனிதன் கருத்துகளைப் பரிமாறிக்கொள்ளப் பயன்படுத்தும் ஒரு கருவியே மொழியாகும். மொழி

யைப் பேசுபவனின் மனத்தில் எண்ணங்கள் உள்ளன. அவற்றை அவன் ஒலிகளின் வாயிலாக மற்றவர் களுக்கும் தெரிவிக்கிறான். அப்பேச்சைக் கேட்பவன் காற்றில் கலந்துவந்த அந்த ஒலிகளைச் செவிமடுத் துக் கேட்டுப் பேசுபவன் கூறவந்த கருத்துகளைப் புரிந்துகொள்கிறான். கருத்து இணைகளையும் ஒலி இணைகளையும் இணைக்கும் ஓர் அமைப்பு முறை யாக மொழியைக் கருதலாம். இம்மொழியமைப்பு பல திறப்பட்டது. பல்வேறு வகையான படிநிலை களைக் கொண்டுள்ளது என்பார் இலாம்பு. ஒவ்வொரு படிநிலையிலும் சங்கிலிக்கோவை போன்ற கோப்பு அமைப்பும் (Tactic pattern) இன்னபிற அமைப்புகளும் உள்ளன. இலாம்பு 1966-இல் வெளியிட்ட தம்நூலின் திருந்திய பதிப்பில் மொழியில் அதிக அளவு ஆறு படி நிலைகள் உள்ளன என்பது கூறப்பட்டுள்ளது. மனித மொழிகளில் குறைந்தது மூன்று படி நிலைகளா வது இருத்தல்வேண்டும்.

ஒலியன் நிலையில் கோப்பு அமைப்பு உண்டு. ஆங்கிலத்தில் 'திரான்' (Dran) என்றோ 'திலான்' (Dlan) என்றோ சொல் கிடையாது. அம்மொழியில் புதிதாகச் சொல் படைத்தால் முன்னதற்கு அத்த கைய புதுச் சொல்லாக வரும் தகுதி உண்டு. பின் னதை ஆங்கிலம் பேசுவார் ஒலிக்கத் திணறுவர். இதற்குக் காரணம் 'dl' என்ற இரு மெய் மயக்கம் ஆங்கில மொழியில் இல்லாமையே. பல்கேரியன் போன்ற பிற மொழிகளில் 'dl' மயக்கம் மொழி முதலில் இடம்பெறும். பல்கேரிய மொழியில் 'திலான்' (Dlan) என்பது 'உள்ளங்கை' என்று பொருள்படும். எனவே, ஆங்கிலத்துக்கும் பல்கேரிய மொழிக்கும் ஒலியன் கோப்பு அமைப்பில் வேறுபாடு உண்டு. ஆங்கிலத்தில் 'திரான்' (dran) என்ற சொல் இல்லா விடினும், மொழி முதலில் 'dr' என்ற மெய்மயக்கம் உண்டு. ஆதலால், அம்மொழி ஒலியன் கோப்பு அமைப்பின்படி 'திரான்' (dran) என்ற சொல்லுக்கு இடம் உண்டு. ஆங்கிலத்தில் உள்ள 'திராம்,திரெய்ன்' (dram,drain) என்ற சொற்களை, அடியொற்றிப் 'புதிதாகத் 'திரான்' (dran) என்ற சொல், ஆங்கிலத் தில் பொருள் தருமாறு தோன்றுமாயின் அது வியப் புக்குரியதன்று.

ஒலியன் நிலையில் போலவே, பொருள் நிலை யிலும் கோப்பு அமைப்பு உண்டு. 'முருகன் நேற்றுச் செல்வான்' என்ற தொடர் இலக்கண அடிப்படை யில் 'முருகன் நேற்றுச் சென்றான், முருகன் நாளை செல்வான்' என்ற தொடர்களைப்போல ஏற்றுக் கொள்ளத்தக்கதே எனினும், பொருள் அமைப்பு அடிப்படையில் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. நேற்று என்பது இறந்தகாலம் குறிக்கும். செல்வான் என்ற வினையோ எதிர்காலம் குறிக்கும். இப்பொருள்களுக் கிடையே இசைவு கிடையாது. 'இந்தப் பையன் நேற்றுச் செல்வான்' என்பது பொருள்நிலையில் வழு வுடையது. 'நேற்று இந்த சென்றான் பையன்' என் பது கோப்பு உறவில் இலக்கண வழுவுடையது.

மொழியில் இரண்டுவகை அடிப்படை உறவுகள் உள்ளன கருத்துகளையும் ஒலிகளையும் இணைக்கும். உறவுக்கு வடிவாக்க உறவு (Realizational relationship) என்பது பெயர். மொழிக் கூறுகளுக்கிடையே ஆன சேர்க்கை உறவுக்குக் கோப்பு உறவு (Tactical relationship) என்பது பெயர். வரைபடம் 1 இந்த உறவுகளைத் தெளிவுபடுத்தும்.




வரைபடம்:1

உருபன்கள் நம் செவிக்குப் புலனாகும் ஒலி களால் ஆனவை அல்ல. கருத்துக்குப் புலனாகும் ஒலி யன்களால் ஆனவை. ஒலியன்கள் ஒலிகளாக வடி வாக்கம் பெறுகின்றன. ஒரே ஒலியன் பல்வேறு சூழ் நிலைகளில் பல்வேறு ஒலிகளாக வடிவாக்கம் பெற லாம். இந்தக் கொள்கைப்படி பார்த்தால் உருபனுக் கும் ஒலியனுக்கும் இடையேயான உறவு கோப்பு உறவாகவும், ஒலியனுக்கும் ஒலிக்கும் இடையேயான உறவு வடிவாக்க உறவாகவும் கொள்ளப்படும். வரை படம் 2 இதனைத் தெளிவுபடுத்தும்.

உருபன்களுக்கு மாற்று வடிவங்கள் உள்ளன. அவற்றை மாற்றுருபுகள் என்பர். எனவே, உருபனுக் கும் மாற்றுருபுக்கும் இடையேயான உறவு வடிவாக்க உறவு ஆகும். மாற்றுருபுகளுக்கும் ஒலியன்களுக்கும் இடையேயான உறவு கோப்பு உறவு ஆகும். வரை படம் 3 இதனைத் தெளிவுபடுத்தும்.




வரைபடம்:2

உருபன்கள் மட்டுமல்லாமல் ஒலியன்களும் கோப்பு உறவு உடையன. எனவேதான் ஆங்கிலத்தில் 'திரான்' (Dran) என்பது ஏற்றுக்கொள்ளத் தக்கதாகவும் திலான் (Dlan) என்பது தகாததாகவும் உள்ளனஎன்பது முன்னர்க்கூறப்பட்டது. இரு படிநிலைகள் அமைந்த மொழியமைப்பை வரைபடம் 4 தெளிவுபடுத்தும்.

வரைபடம் 4-இன்படி மாற்றுருபுகள் ஒலியன்களால் ஆயினவே. ஆனால், உண்மையில் மாற்றுருபுகள் உருபொலியன்களால் ஆனவை. உருபொலியன்கள் ஒலியன்களாக வடிவாக்கம் பெறும். அத்துடன் ஒலியன்கள் ஒலித்துகளின் தொகுதி ஆகும். இச்செய்திகளை வரைபடம் 5 தெளிவுபடுத்தும்.

வரைபடம்-5இல் வடிவாக்க உறவுகள் கீழ்மேலாகவும், கோப்பு உறவுகள் இடம் வலமாகவும் இருக்கக் காணலாம். சிட்னி லாம்பு, சிறு கூறுகளுக்கு 'அணு' என்ற பெயரைச் சூட்டி ஒலியன் கோப்பிலுள்ள துகள்களுக்கு 'ஒலியணு' என்றும், உருபன் கோப்பிலுள்ள துகள்களுக்கு 'உருபணு' என்றும் புதிதாகப் பெயரிடுகிறார். புதுப் பெயராக்க முயற்சியில் பழைய 'மாற்றுருபு' உருபன் ஆகிறது. உருபன் கோப்புக்கு மேல் 'அகராதிக் கோப்பு' என்ற புதுப் படிநிலை உருவாக்கப்படுகிறது. அகராதியின் நிலையிலுள்ள துகளுக்குப் பெயர் 'அகராதியணு' ஆகும். இந்த முப்படி நிலை அமைப்பை வரைபடம் 6 காட்டும்.




வரைபடம்:7

தமிழிலுள்ள 'வெளியீடு' என்பது ஓர் அகராதியன் ஆகும். இது வெளி, இடு என்ற அகராதியணுக்களால் ஆனது. அந்த அகராதியணுக்கள் உருபன்களாக வடிவாக்கம் பெறும். எனவே, வெளி என்பதும் இடு என்பதும் உருபன்கள் ஆகும். உருபணுக்கள் ஒலியன்களாக வடிவாக்கம் பெறும். ஒலியன்கள் ஒலியணுக்களின் தொகுதியாகும்.

ஒலியன், உருபன், அகராதியன் என்ற முப் படிநிலைகளோடு மற்றொரு படிநிலையையும் சேர்த்துக்கொண்டால் நான்கு படிநிலை அமைப்பு உண்டாகும். இந்த நான்காம் படிநிலைக்குப் பொருளன் படிநிலை என்பது பெயர். தமிழில் பெரிய என்ற கிளவியும், பெருத்த என்ற கிளவியும் கிட்டத்தட்ட ஒரே பொருள் உடையன. பெரிய வயிறு என்பதும் பெருத்த வயிறு என்பதும் பொருளில் அதிக வேறுபாடு உடையன அல்ல. ஆனால், பெரிய தம்பி என்பதற்குப் பதிலாக பெருத்த தம்பி என்று கூற இயலாது. எனவே பெரிய[1], பெரிய[2] என்று இருவகைப் பொருள்களைப் படைத்துக்கொள்ள வேண்டியுள்ளது. பெரிய[1] என்னும் பொருளன், பெரிய என்னும் பெருத்த என்றும் அகராதியன்களாக வடிவாக்கம் பெறும். பெரிய[2] என்பதோ பெரிய என்றும் மூத்த என்றும் வடிவாக்கம் பெறும். பெரிய[1] என்பது அளவில் பெருமையையும், பெரிய[2] என்பது வயதில் பெருமையையும் குறிக்கும். வரைபடம் 7 நான்கு படிநிலை அமைப்பை விளக்கும்.

இவ்வாறு ஒன்றோடொன்று தொடர்புடைய பல்வேறு படிநிலைகளைக் கொண்ட அமைப்பு முறையே மொழியமைப்பு ஆகும் என்பது சிட்னி இலாம்பு உருவாக்கிய படிநிலை இலக்கணக் கோட்பாடு ஆகும்.

நி.கு.

**துணை நூல்கள்:**


**Lamb, Sydney, M.,** Outline of Stratificational Grammar, Berkely, University of California, 1962.

**Lockwood, David G,** Introduction to Stratificational Linguistics, New York, Harcourt Brace Jovanovich, 1972.

**Robin H.R.,** General Linguistics, An Introductory Survey, Longmans Green Co, Ltd., London, 1964.


**படுமரத்து மோசிகீரனார்:** இவர் கடைச் சங்கத்துப் புலவர்களுள் ஒருவர். 'மோசி' யென்னும் ஊரிலே தோன்றிய 'கீரன்' என்னும் இயற்பெயர் உடையவர். ஒரோவிடத்துப் படுமாற்றூர் மோசிகீரனெனவும் கூறப்படுவார் என்று அபிதான சிந்தாமணி இயம்புகின்றது. படுமாற்றூர் மதுரையைச் சார்ந்த தோர் ஊர். சிவகங்கை வட்டத்தில் 'படமாத்தூர்' என்றொரு ஊர் காணப்படுகின்றதென்பர். 'படுமாற்றூரில் வந்து தங்கிய மோசிகீரனார்' எனக் கொள்வாரும் உளர்.

'படிமரத்து மோசிகீரனார்' என்று இப்பெயர் டாக்டர் மு. வரதராசனாரின் 'குறுந்தொகைச் செல்வம்' என்னும் நூலில் (பக்.116) காணக்கிடக்கின்றது. 'படுமரம்' என்ற சொல்குறுந்தொகைப் பிரதிகளிற் சிலவிடங்களில் 'படுமாற்றூர்' என்றும் காணப்படுகிறது என்பர் டாக்டர் உ.வே. சாமிநாதையர்.

'படுமரத்து மோசிகீரனாரும், 'மோசிகீரனார்' என்று குறுந்தொகையுள் வந்துள்ள பெயருக்குரியாரும் ஒருவரே என்று கருத இடமுண்டு' என்று கூறு

வர் உ.வே. சாமிநாதையர். ஆயினும், முன்னுரையில் (குறுந்தொகைப் பதிப்பு) 'பாடினோர் வரலாறு எழுதும்போது 'படுமரத்து மோசிகீரனார்' 'மோசிகீர னார்' இருவருக்கும் தனித்தனியே வரலாற்றுக் குறிப்பு எழுதுகின்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

குறுந்தொகையில் படுமரத்து மோசிகீரன் என் னும் பெயரில் இரண்டு பாடல்களும் (குறுந்: 33,383) படுமரத்து மோசிகீரனார் என்னும் பெயரில் ஒரு பாடலும் (குறுந் :75) காணப்படுகின்றன.

ஆனால், சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை யின் குறிப்புப்படி, 'அகப்பொருள் மட்டும் பாடிய புல வரும் அவர்தம் பொருள் விளக்கமும்' என்னும் தலைப்பின்கீழ், 'படுமரத்து மோசிகீரனார் பாடிய தாகக் குறுந்தொகை 33, 75, 383 மூன்றுபாடல்கள் தாம் இடம் பெற்றுள்ளன. 'அகமும் புறமும் பாடிய புலவர்கள் வரிசையில் 'மோசிகீரனார்' ஒன்பது பாடல்கள் பாடியவராகக் குறிப்பிடப்பெற்றுள்ளார். ஆகவே முடிவாக, படுமரத்து மோசிகீரனார், மோசி கீரனார் இருவரும் வேறு வேறானவர் என்று துணிய லாம் 'அன்னா யிவனோ ரிளமா ணாக்கன்' எனத் தொடங்கும் பாடலால் பல புதிய செய்திகள் அறியக் கிடக்கின்றன:

1) அறிவார் என்னும் பெயருடையவராய்த் துற விகள் சிலர் பழங்காலத்தில் இருந்து வந்தனர். 2) அவர்களுக்கு அந்தணர் முதலியோர் வாழும் தெருக் களில் நாய் இல்லாத பெரிய வீடுகளில் நல்ல வகை யில் சோறு கிடைக்கும். 3) அறிவாாபல வீடுகளில் இரந்து வாழும் நிலையினர்; சில நாள்களில் ஒரே வீட்டிலேயே வேண்டிய உணவு கிடைக்கும்.

தலைமகன் வரவுணர்த்திய பாணற்குத் தலை மகள் கூறிய பாடல் (குறு.75) 'தலைவன் வரவை உரைத்த நினக்குச் செல்வம் பெருகுவதாகுக' என் னும் கருத்தினை உட்கொண்டுள்ளது. 'காதலர் வரவை நீ கண்டனையோ? கேட்டனையோ? யார் வாய்க் கேட்டனை? நசையினம் மொழிமோ?' என்னும் உரைமொழி நடைநயத்தினைப் புலப் படுத்துவதாகும்.

வடக்கேயுள்ள பாடலிபுத்திரம், தெற்கே வாழும் தலைவி கூற்றில், 'வெண்கோட்டு யானை சோணை படியும் பொன்மலி பாடலி' என வருணிக்கப்படுதல் நோக்கத்தக்கது.

உடன்போக வருந்துந் தலைமகளை நாணுக் கெடச் சொல்லிய குறுந்தொகைப் பாடல் சொற் சுவையும் பொருட்சுவையும் பொருந்தி விளங்கு கின்றது. ஒரு நாடகமே கண்முன்னால் உருப்பெறு கின்ற வகையில் பாடல் அமைந்துள்ளது. 'நீயுடம் படுதலின்' என்று தொடங்கும் அழுத்தம் நீ தலைவ னுடன் இப்பொழுதே செல்லுதல் நலம் என்னும் ஆழ்ந்த கருத்தினை அறைந்து காட்டுகின்றது.

குறுந்தொகை என்னும் ஒரு நூலில் மட்டும் பாடிய புலவராகப் படுமரத்து மோசிகீரனார் விளங்கு கின்றார். ந.க.

**படுமரத்து மோசி கொற்றனார்:** இவர் சங்ககாலப் புலவர். படுமரத்து மோசி கீரனாரின் இவர் வேறாவர். மோசி என்பது ஓர் ஊர் என்றும் அப்பெயர் தாங்கிய மோசிப்பட்டி திருப்பூவணம் வட்டத்தில் உள்ளது என்றும் மோசுகுடி பரமக்குடி வட்டத்தில் உள்ளது என்றும் பி. நாராயணசாமி ஐயர் குறிப்பிடுவர் (நற்றிணை உரை, பாடினோர் வரலாறு). படுமரம் என்பது சில ஏடுகளில் படு மாற்றூர் எனக் காணப்படுகிறது. படுமாற்றூர் மதுரையைச் சார்ந்ததோர் ஊர். கொற்றனா ரின் பிறந்த ஊர் மோசி என்றும், சென்று தங்கிய ஊர் படுமாற்றூர் என்றும் சிலர் கருதுகின்றனர். மோசி என்னும் ஊரில் முடமோசியார், மோசி கீர னார், மோசி சாத்தனார், மோசி கண்ணத்தனார் முதலிய புலவர் பலர் சங்க காலத்தே இருந்தனர் எனத்தெரிகிறது. பட மாற்றூர் என்பது படமாத்தூர் என வழங்கப்படுகிறது. இவ்வூர் சிவகங்கை வட்டத்தி லுள்ளது. படுமரத்து மோசிகீரனாரையும் மோசிகீர னாரையும் ஒருவராகக் கருதுவது போலவே படு மரத்து மோசி கொற்றனாரையும் மோசி கொற்ற னாரையும் ஒருவராகக் கருதலாமோ என்பர் உ.வே.சா. மேலும் படுமரத்து மோசி கொற்றனா ரும் படுமரத்து மோசிகீரனாரும் உடன்பிறந்தாராக இருக்கலாம் எனத் தோற்றுகிறது என உ.வே.சா. குறிப்பிட்டுள்ளார். இப் புலவர் பெயர் படுமாற்றூர் மோசிகீரன் கொற்றனார், படுமரத்து மோசிக் கொற்றன், படுமாத்து மோசிக்கொற்றன் என்னும் பாட வேறுபாடுகளுடன் காணப்படுவதாகச் சுட்டி யுள்ளார்.

இப்புலவர் பாடியதாகக் குறுந்தொகையிலுள்ள 376-ஆம் பாடலொன்றே காணப்பெறுகின்றது. அப் பாடலில், 'மக்களால் முற்றும் அறியவியலாத சிறப்பு வாய்ந்தது; நெருங்குதற்கரியது; தெய்வங்கள் நிறைந்தது; சந்தன மரம் மிக்கது பொதியில் மலை' என்று அதன் சிறப்புக் கூறுவர். பொருள்வயிற் பிரியக் கருதிய நெஞ்சை நோக்கித் தலைவியின் நல்லியல்பு களைக் கூறித் தலைவன் செலவழுங்கியது என்னும் துறையில் பாடலை இப்புலவர் அமைத்துள்ளார். வெம்மை மிக்க வேனிற்காலத்தில் பொதியில் மலை யிலுள்ள சந்தனம் ஒப்பத் தண்ணியளாகவும் குளிர் மிகுந்த பனிக்காலத்தில் ஞாயிற்றின் கதிர் மறையக்

குவிந்து அழகிதாக வெயிலைப் பொதிந்து கொண்ட தாமரை மலரின் உள்ளிடம் போலச் சிறு வெம்மையளாகவும் தலைவி முயங்கற்கினியளாதலைப் புலவர் நன்கு புலப்படுத்தியுள்ளார். வேனிற்காலத்துத் தண்ணியளாகவும் பனிக்காலத்துச் சிறு வெம்மையளாகவும் தலைவி இன்பஞ் செய்தலைத் தக்க உவமைகளால் படுமரத்து மோசி கொற்றனார் பாடியிருப்பது நயம் பயப்பதாகும். இரா.சா.

**படைக்கல உற்பத்திப் போட்டி**: முதல் உலகப்போர் (1914-18) ஏற்படுவதற்கானப் பல காரணங்களில் முக்கியமான காரணம் ஐரோப்பிய நாடுகளுக்கிடையே ஏற்பட்ட படைக்கல உற்பத்திப் போட்டியாகும். இப்போட்டியின் விளைவினால் ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் இரண்டு கூறுகளாகப் பிரிந்து உலகப் போரை ஏற்படுத்தி ஐரோப்பாவின் வரைபடத்தைச் சிதைவடையச் செய்தன.

இப்படைக்கல உற்பத்திப் போட்டியில் தீவிரமாகப் பங்கேற்ற நாடுகள் ஆசுத்திரியா (Austria), செருமனி, இத்தாலி, துருக்கி, இங்கிலாந்து, உருசியா, பிரான்சு, அமெரிக்கா, சப்பான் ஆகியவை. இந்நாடுகள் அனைத்தும் தங்களிடையே பல இரகசிய ஒப்பந்தங்களை ஏற்படுத்திக் கொண்டு, படைப்பலத்தைப் பெருக்க முனைந்தன. பிரான்சிற்கும், பிரசியாவிற்கும் (Brussia) ஏற்பட்ட போரில் இப்படைக்கலப் பெருக்கம் தொடங்கப்பெற்றுக் காலப்போக்கில் வளர்ச்சியடைந்து 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்உச்சக்கட்டத்தை அடைந்தது.

தொடக்கக்காலத்தில் இப்படைக்கல உற்பத்திப் போட்டியின் நோக்கமானது, மற்ற நாடுகளின் ஆக்கிரமிப்புகளிலிருந்துதங்களைப்பாதுகாத்துக்கொள்வதாகவும், உலகசமாதானத்திற்குவழிகோலுவதாகவும் இருந்தது. ஆனால், காலப் போக்கில் இந்நோக்கம் முற்றிலும் மாறிவிட்டது. இதற்கு முக்கிய காரணம் பொருளாதார வளர்ச்சியும், வாணிக முன்னேற்றமுமே ஆகும். பொருளாதாரத்தில் ஏற்பட்ட வளர்ச்சி, பன்மடங்கு உற்பத்திப் பெருக்கத்தைத் தந்தது. உற்பத்திப் பொருள்களை உலகச் சந்தையில் விற்கவும், அதற்கான சந்தைகளைத் தங்களுக்கு உரிமை ஆக்கிக் கொள்ளவும் எழுந்த போட்டி மனப்பான்மையே இப்படைக்கல உற்பத்தியின் முக்கிய நோக்கமாக அமைந்தது.

ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் இப்போட்டி மனப்பான்மையைக் கொண்டிருந்தாலும் இங்கிலாந்து, செருமனி, உருசியா மற்றும் பிரான்சு போன்ற நாடுகள் முன்னணியில் நின்றன. இந்நாடுகள் அனைத்தும் தங்களால் இயன்ற அளவு அண்மையில் உள்ள சின்னஞ்சிறு நாடுகளை ஆக்கிரமித்துக் கொண்டு, தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டின. உலகச் சந்தை முழுவதும் தனது ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வரவேண்டும் எனும் செருமனியின் பேராசை, மற்ற நாடுகளின் வியாபாரத்தைப் பாதித்தது. இதனால் மற்ற நாடுகளின் பொருளாதாரம் பெரிதும் பாதிக்கப்பட்டதால் இந்நாடுகள் அனைத்தும் தங்களுடைய வாணிகத் தலங்களைப் பாதுகாக்க முனைந்ததோடு, தற்காப்பு நடவடிக்கைகளில் தீவிரமாகவும்இறங்கினஇத்தற்காப்புமுயற்சியின் காரணமாக ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் தங்களிடையே மறைமுக ஒப்பந்தங்களை ஏற்படுத்திக் கொண்டு படைக்கல உற்பத்தியைப் பெருக்கின.

இப்படைக்கல உற்பத்திப் போட்டிக்குக் காரணமாக கூட்டுறவு (ஆசுத்திரியா, அங்கேரியா, செருமனி, இத்தாலி, துருக்கி), கூட்டு (இங்கிலாந்து, உருசியா, பிரான்சு, சப்பான்) ஒப்பந்தங்கள் அமைந்தன. இதனால் நாடுகளுக்கிடையே அச்சமும் ஐய மனப்பான்மையும், வெறுப்பும் ஏற்பட்டுச் சுமுகமான சூழ்நிலை நீங்கியது. இந்நாடுகள் பொருளாதாரத்தின் பெரும் பகுதியை இராணுவ நடவடிக்கைகளுக்குச் செலவு செய்தன. இதனால் புதிய சட்டதிட்டங்களும் உருவாக்கப்பட்டுக் கட்டாய இராணுவப் பயிற்சி அனைவருக்கும் அளிக்கப்பட்டது. இங்கிலாந்துக்கும் செருமனிக்குமிடையே இப்போட்டி விரைவாக வளர்ச்சி அடைந்தது. இங்கிலாந்து ஒரு கப்பலைஉருவாக்கினால்செருமனிஇரண்டுகப்பல்களை உருவாக்கியது. மேலும் இட்லர், முசோலினி போன்ற தலைவர்கள் சனநாயக ஆட்சிக் கொள்கைகளைப் புறக்கணித்து இராணுவக் கொள்கைகளைத் தீவிரமாகக் கடைப்பிடித்தனர். உலக நாடுகள் அனைத்தையும் தங்களது ஆட்சியின் கீழ்க் கொணர நினைத்துப்படைக்கல உற்பத்திப் போட்டியினை மிகுவித்து உலகப் போரைத் தோற்றுவித்தனர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இரா.கி.

**படைக்கலக் குறைப்பு**: இன்றைய உலகை நோக்கியுள்ள மிகப் பெரிய சிக்கல் படைக்கலக் குறைப்பாகும். படைக்கலக் குறைப்பு (Disarmament) என்றால் போர்க்கருவிகளைக் குறைத்தல், வரையறுத்தல், தடைசெய்தல்,நீக்குதல் அல்லது கட்டுப்படுத்துதல் என்று பொருள்படும். இதில் தரைப்படை, விமானப்படை, கடற்படை ஆகிய முப்படைகளும், வழக்கமான போர்க்கருவிகளுடன் அணுகுண்டுகள், நீர்க்குண்டுகள், ஏவுகணைகள், வேதியியல் போர்க் கருவிகள், நுண்கிருமிக் குண்டுகள் ஆகியவையும் அடங்கும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நாடுகள் ஒன்றுசேர்ந்து இப்போர்க்கருவிகளை அல்லது

படையினரைக் குறைக்க, கட்டுப்படுத்த, வரையறுக்க அல்லது உற்பத்தியைத் தடை செய்ய மேற்கொள்ளும் உடன்படிக்கையைப் படைக்கலக் குறைப்பு எனலாம்.

உலக நாடுகளிடையே புதிய புதிய படைக்கலன்களைப் படைத்தல், குவித்தல், அதில் போட்டியிடுதல் ஆகிய செயல்கள் போரில்தான் முடியும் என்பது இரு உலகப் போர்கள் மக்களுக்குக் காட்டிய உண்மையாகும். அவற்றின் விளைவாக மக்களுடைய உயிர், உடைமை, நாட்டின் பொருளாதாரம் ஆகியவற்றிற்கு ஏற்பட்டமாபெரும் அழிவு யாவரும் அறிந்ததே. அணுவாயுதப் போரினால் ஏற்படும் பெரும் அழிவுகளுக்கு இரோசிமா, நாகசாகி ஆகியவை எடுத்துக்காட்டாக இருக்கின்றன. இனி ஓர் உலகப்போர் நிகழ்ந்தால் உலகம் முழுவதும்,நாகரிகங்கள் அனைத்தும், உயிரினங்கள் எல்லாம் அழிக்கப்பட்டுவிடும் என்பது உறுதி. படைக்கலப் பெருக்கத்தால் உலகில் நெருக்கடி நிலையும் அமைதியின்மையும் நிலவுகின்றன. ஒவ்வொரு நாடும் தன்னுடைய வருவாயில் பெரும் பகுதியைப் படைக்கலங்களுக்காகச் செலவு செய்கிறது. எனவேதான், உலகில் அமைதி நிலவவும், உலகை அழிவிலிருந்து காப்பாற்றவும், மக்கள் பொருளாதார வளத்துடன் வாழவும் படைக்கலக் குறைப்புத் தேவையென வலியுறுத்தப்படுகிறது.

படைக்கலக் குறைப்பிற்கான முதலாம் பன்னாட்டு மாநாடு தி ஏகு (The Hague) நகரில் உருசிய மன்னர் தலைமையில் கூடியது. பின்னர் அதே இடத்தில் இரண்டாம் மாநாடு கூட்டப்பட்டது. அவை உலக நாடுகளைப் படைச் செலவைக் குறைக்கும் படி கேட்டுக்கொண்டன. அமெரிக்கக் குடியரசுத் தலைவர் உட்ரோவில்சன் தம் 14-அமிசத் திட்டத்தில் ஒவ்வொரு நாடும் தன்னுடைய உள்நாட்டுப் பாதுகாப்புக்குத் தேவையான அளவிற்குப் படையைக் குறைத்துக் கொள்ள வேண்டுமென்றார்.

**பன்னாட்டுக் கழகமும் படைக்குறைப்பும்: படைக்கலக்குறைப்பு மாநாடு:** பன்னாட்டுக் கழகம்(The League of Nations)1919 இலிருந்து1929-வரை படைக்கலக் குறைப்பை ஓரளவிற்குச் செய்துவந்தது. முப்படைகள் பற்றிக் கருத்துத் தெரிவிக்க 1920-இல் ஒரு நிலையான ஆலோசனைக் குழுவை ஏற்படுத்தியது. பின்னர் 1921-இல் போர்க்கருவிகள் குறைப்புப் பற்றிப் பரிந்துரைக்க ஆலோசனைக் குழு ஒன்றை நிறுவியது. பன்னாட்டுக் கழகத்தின் அவை 1925-இல் படைக்கலக் குறைப்பு மாநாடு ஒன்றைக் கூட்ட ஒரு நிலையான குழுவைத் தோற்றுவித்தது. அது ஆறு ஆண்டுகள் பெரிதும் முயன்று 1932 பிப்பிரவரி 3-இல் செனிவாவில் ஒரு மாநாட்டிற்கு ஏற்பாடு செய்தது. இங்கிலாந்தின் வெளிஉறவு அமைச்சர் எண்டர்சன் தலைமையில்கூடிய அம்மாநாட்டில் 57 நாடுகளைச் சேர்ந்த 232 பேராளர்கள் கலந்து கொண்டனர். கருத்துவேறுபாடு காரணமாக அது ஒத்திவைக்கப்பட்டது. அனைத்து நாடுகளும் ஏற்றுக் கொள்ளத்தக்க ஒரு திட்டத்தைக் கூற 1932 திசம்பரில் ஐந்தரசுகள் மாநாடு கூட்டப்பட்டது. அதில் இங்கிலாந்து, செருமனி, பிரான்சு, இத்தாலி, அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகியவை கலந்து கொண்டன. அவை 1932 திசம்பர் 11-இல் அனைத்து நாடுகளுக்கும் சம உரிமையும், பாதுகாப்பும் வழங்க முன்வந்தன. ஆயினும், சப்பானும் செருமனியும் பன்னாட்டுக் கழகத்திலிருந்து விலகிக்கொண்டதால் அது பயனற்றுப் போயிற்று.

**கடற்படை மாநாடு:** கப்பற்படையைக் குறைக்க நான்கு மாநாடுகள் நடைபெற்றன. வாசிங்டனில் கூடிய முதல் மாநாட்டில் 1921-22-இல் அமெரிக்கா, இங்கிலாந்து, சப்பான் ஆகிய நாடுகள் கலந்து கொண்டன. பெரிய கப்பல்களைப் பொறுத்த மட்டில் இங்கிலாந்தும் அமெரிக்காகவும் சம அளவும் அதில் 60 விழுக்காட்டைச் சப்பானும், 35 விழுக்காட்டைப் பிரான்சும், இத்தாலியும் வைத்துக் கொள்ளலாம் என முடிவு செய்யப்பட்டது. இரண்டாம் மாநாடு 1927 சூனில் செனிவாவில் கூடிய பொழுது பிரான்சும் இத்தாலியும் கலந்து கொள்ள மறுத்து விட்டன. இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் கருத்துவேறுபாடு ஏற்பட்டது. 1930 இல் இலண்டனில் கூடிய மாநாட்டின் முடிவில் ஏப்பிரல்-22-இல் ஏற்பட்ட இலண்டன் கடற்படை ஒப்பந்தத்தில் அமெரிக்கா, இங்கிலாந்து, சப்பான் ஆகிய நாடுகள் மட்டுமே கையொப்பமிட்டன. நான்காம் மாநாடு 1935-இல் இலண்டனில் கூடிய பொழுது கருத்து வேறுபாடு காரணமாக எவ்வித உடன்பாடும் ஏற்படவில்லை.

**ஐக்கிய நாடுகள் சபையின் முயற்சிகள்:** ஐக்கிய நாடுகள் சபையின் முக்கிய நோக்கங்களுள் ஒன்று படைக்கலக் குறைப்பாகும். 1941 ஆகசுட்டு 4-இல் கையெழுத்தான அட்லாண்டிக்குச் சாசனம் உலக நாடுகள் போரைக்கைவிட வேண்டுமென அறிவித்தது. அதன் 26-ஆம் பிரிவு (Article) உலகில் அமைதியும், பாதுகாப்பும் நிலவப் படைக்கலக் குறைப்புத் தேவை என வலியுறுத்துகிறது. ஐக்கிய நாட்டுச் சபை 1946 சனவரி 26-இல் ஒரு குழுவை நியமித்து அணுச்சக்தியை எவ்வாறு அமைதிப் பணிக்குப் பயன்படுத்தலாம் என ஓர் அறிக்கையை அளிக்கும்படி கேட்டுக் கொண்டது. பின்னர் 1952-இல் அணு சக்திக் குழு, வழக்கமான போர்க் கருவிகள் குழு, ஐ.நா. படைக்கலக் குறைப்புக்குழு ஆகிய

வற்றை நிறுவியது. அமெரிக்கா 1952 நவம்பரிலும், உருசியா 1953 ஆகசுட்டிலும் நீர்வளிக்குண்டுகளை (Hydrogen Bomb) வெடித்துச் சோதனை செய்த தால் மேலும் சிக்கல் ஏற்பட்டது.

**அமைதிப் பணிக்கு அணுசக்தி:** குடியரசுத் தலைவர் ஐசனோவர் 1953 - திசம்பர் 8 - இல் ஐ.நா. பொதுஅவையில் உரைநிகழ்த்தியபொழுது படைக் கலக்குறைப்புப்பற்றிப் புதியதோர் திட்டத்தை வெளியிட்டார். பண்டித சவகர்லால் நேரு 1954 ஏப்பிரல் 2-இல் வல்லரசுகள் அணுகுண்டுகளை வெடித்துச் சோதனை செய்வதை நிறுத்தவேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். இதுபற்றி அமெரிக்கா, உருசியா, போலந்து ஆகியவை தனித்தனித்திட்டங்களை வெளியிட்டன. ஆனால், அவற்றால் எவ்விதப்பயனும் ஏற்படவில்லை. 1955 ஏப்பிரலில் கூடிய பாண்டுங்கு மாநாட்டில் ஆப்பிரிக்க-ஆசிய நாடுகள், படைக்கலக் குறைப்பில் உலக நாடுகள் ஐ.நா. வுடன் ஒத்துழைக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டன. ஐ.நா. 1957 சூலை 29-இல் பன்னாட்டு அணுசக்தி நிறுவனத்தை ஏற்படுத்தியது. அதன் பணி உலகம் முழுவதிலும் அணுசக்தியை அமைதிப்பணிக்கும் உடல்நலத்திற்கும் பொருளாதார வளத்திற்கும் பயன்படச் செய்வதாகும். இந்தியா, அந்நிறுவனத்தின் ஆளுநர் அவையில் (Boardof Governors) ஓர் உறுப்பினராக நியமிக்கப் பட்டது.

**அணுஆயுதச்சோதனைக்குத் தடை:** சோவியத்து ஒன்றியம் 1958 மார்ச்சில்தானாகவே முன்வந்து அணு குண்டுகளையும், நீர்வளிக்குண்டுகளையும் வெடிக்கப் படுவதை நிறுத்திவிட்டதாக அறிவித்தது. அணுப் போர்க்கருவிகள் சோதனை செய்யப்படுவதைத் தடைசெய்ய ஒரு மாநாடு செனிவாவில் 1958 அக்டோபரிலிருந்து 1961 ஏப்பிரல் வரை நடைபெற்றது. அதன் இறுதியில் அணு ஆயுதங்கள் நிலப்பகுதியிலும், நிலத்திற்கு அடியிலும், கடலிலும், வான வெளியிலும், வெடித்துச் சோதனை செய்யப்படுவதைத் தடைசெய்ய வேண்டுமென முடிவு செய்யப் பட்டது. ஆனால், கருத்து வேறுபாடு காரணமாக அது பயனளிக்கவில்லை. பின்னர்ப் பல மாநாடுகள் கூட்டப்பட்டாலும் இரு வல்லரசுகளுக்கும் இடையிலான மாறுபட்ட கருத்துகளால் எந்த முடிவும் ஏற்படவில்லை. அமெரிக்கா 1960 சனவரியில் அப்போதைக்கு அணுஆயுதச் சோதனையை நிறுத்திவிட்டதாக அறிவித்தது.

உருசியா, இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகள் 'பகுதி அணுச் சோதனைத் தடுப்பு உடன்படிக்கையில்' (Partial Nuclear Test Ban Treaty) கையொப்பமிட்டன. இது முதன்முதலாகக் கிழக்கிற்கும் மேற்கிற்கும் ஏற்பட்ட முக்கிய உடன்படிக்கையாதலால் உலக அமைதிக்கான பெரும் சாதனையாகக் கருதப்பட்டது. இந்தியா இதில் கையொப்பமிட்ட முதலாம் நாடாகும். பிரான்சும் செஞ்சீனாவும் இதனை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டன. 1963 ஆகசுட்டில் சோவியத்து ஒன்றியம் இதனை ஏற்றுக் கொண்டதால், அவ்வாண்டு அக்டோபரிலிருந்து செயற்படத் தொடங்கியது. மத்தியதரைக்கடல் பகுதியை அவ்வாண்டு மே 13-இல் 'அணு ஆயுத மற்ற பகுதியாக' (Nuclear free zone) அறிவிக்கும்படி மேலைநாடுகளைச் சோவியத்து உருசியா கேட்டுக் கொண்டது.

**அணுசக்தி பரவுவதைத் தடுக்கும் உடன்படிக்கை.** 17 நாடுகள் படைக்கலக்குறைப்பு மாநாடு செனிவாவில் 1962 மார்ச்சிலும், பின்னர் 1965 சூலையிலும் கூடித்தோல்வியில் முடிந்தது. 1964 ஏப்பிரலில் 20-21-இல் அமெரிக்கா, சோவியத்து ஒன்றியம், இங்கிலாந்து ஆகிய நாடுகள் புளூடோனியம். விண்மம் 235 உற்பத்தியைக் குறைப்பதென்றும், அவற்றைப் பெரும்பாலும் அமைதிப்பணிக்கே பயன்படுத்துவது என்றும் முடிவு செய்தன. 1964 அக்டோபர் 10-இல் செஞ்சீனா அணுகுண்டு ஒன்றை வெடித்துச் சோதனை செய்து ஐந்தாம் அணுசக்தி நாடாக ஆயிற்று. இது படைக் கலக் குறைப்புத் திட்டத்தை மேலும் சிக்கலாக்கியது. அமெரிக்கக் குடியரசுத் தலைவர் இலிண்டன் சானசன் (Lyndon Johnson) 1966 சனவரியில் 7 அமிசத் திட்டமொன்றை வெளியிட்டார். இங்கிலாந்து, உருசியா, அமெரிக்கா ஆகிய நாடுகள் 1968-இல் 'அணு சக்தி பரவுவதைத் தடுக்கும் உடன்படிக்கையில் (The Nuclear non - Proliferation Treaty) கையொப்பமிட்டன. அணு ஆயுதங்கள் இல்லாத நாடுகளில் அது பரவாமல் தடுக்கவும், அவற்றிற்குப் பாதுகாப்பு அளிக்கவும் முடிவுசெய்தன. இந்தியா, சப்பான், மேற்குச் செருமனி, பிரான்சு, மக்கள் சீனக் குடியரசு ஆகியவை கையொப்பமிட மறுத்துவிட்டன. இதனை 1968 சூனில் ஐ.நா.வின் அரசியல் குழு ஏற்றுக்கொண்டது. சூலையில் அணுஆயுதமற்ற 87 நாடுகள் அதில் கையொப்பமிட்டன. உருசியாவும், அமெரிக்காவும் 1969 நவம்பரில் ஏற்றுக்கொண்டன. அதே மாதம் மேற்குச் செருமனியும் அதை ஒப்புக்கொண்டது.

சில போர்க்கருவிகளைக் குறைப்பதுபற்றிய பேச்சு (The Strategic Arms Limitation Talks - SALT.) 1969-இல் தொடர்ந்து நடந்தது. அதன் விளைவாக ஏவுகணைகளைக் கட்டுப்படுத்தும் (Limiting anti - ballistic missiles) ஒப்பந்தத்தில் 1972 மே 26-இல் அமெரிக்காவும், உருசியாவும் கையெழுத்திட்டன. பின்னர்அவ்விரு நாடுகளும் 1973 சூன் 21-இல் அணுப் படைக்கலன்களை நிலையாகக் கட்டுப்படுத்த ஒப்புக் கொண்டு, அதில் அமெரிக்கக் குடியரசுத் தலைவர்

நிக்சனும், சோவியத்துத் தலைவர் பிரசினேவும் கையொப்பமிட்டனர். ஒட்டாவாவில் கூடிய பொது நல நாடுகளின் மாநாட்டில் எல்லா அணுசக்தி நாடுகளும் கண்டிப்பாக அணுஆயுதத்தடை ஒப்பந்தத்தைப் பின்பற்ற வேண்டுமென்ற ஒரு தீர்மானத்தை இந்தியா 1973- ஆகஸ்ட்டில் கொண்டுவந்தது. இந்தியா அணு குண்டு ஒன்றை 1974-மே 19-இல் வெடித்து, அது அமைதிப் பணிக்காகவே பயன்படுத்தப்படும் என அறிவித்தது.

மத்திய கிழக்கிலுள்ள எகிப்து, ஈரான், ஈராக்கு, குவைத்து, ஓமன், கட்டார், சிரியா ஆகிய 7 நாடுகள் மத்திய கிழக்கை 'அணுவாயுதமற்ற மண்டலமாக (N-Arms Free Zone) அறிவிக்க வேண்டுமென்ற தீர்மானத்தை 1975 ஆகஸ்ட்டில் ஐ.நா. வின் பொது அவையில் கொண்டுவந்தன. அது நிறைவேற்றப்பட்டாலும், இசுரேல் அதில் சேரவில்லை. 1975 நவம்பரில் இலண்டனில் அமெரிக்கா, இங்கிலாந்து, சோவியத்து ஒன்றியம், கனடா, மேற்குச் செருமனி, சப்பான், பிரான்சு ஆகிய நாடுகள் கூடி, அணு ஆயுதத் தொழில் நுணுக்கத்தைப் பிற நாடுகளுக்கு விற்பதில்லை என முடிவு செய்தன. ஆனால், பிரான்சு இதில் கையொப்பமிட மறுத்துவிட்டது.

**ஐரோப்பாவில் படைக்கலக் குறைப்பு:** ஐரோப்பாவில் நாட்டோ (NATO) நாடுகளுக்கும், வார்சா (WARSAW) நாடுகளுக்குமிடையே ஆயுதப் போட்டி தோன்றி அமைதி குறைந்தது. எனவே, இப்பகுதியில் படைக்கலக்குறைப்பிற்காகப் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.அமெரிக்கா, உருசியா, உள்பட 35 நாடுகள் 1975 ஆகஸ்ட்டில் கூடிய எல்சிங்கி மாநாட்டில் (Helsinki Conference) கலந்து கொண்டன. அவை அப்பகுதியில் படைக்கல்ப் போட்டியைத் தவிர்த்துப் படைக்கலக் குறைப்பிற்கு வழிசெய்ய வேண்டுமென முடிவு செய்தன.

அமெரிக்காவும், உருசியாவும், 1987-செப்டம்பர் 18-இல் இப்பகுதியில் படைக்கலக்குறைப்புச் செய்ய முன்வந்துள்ளது வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்ச்சியாகும். அவை இப்பகுதியில் வைத்துள்ள 500 முதல் 5000 கி.மீ. வரை செல்லக் கூடிய ஏவுகணைகளை விலக்கிக் கொள்ள முடிவு செய்தன. அதுபோலவே பிற படைக்கலங்களைப் (Strategic arms) பற்றிய உடன்படிக்கை ஒன்று ஏற்படும் என எதிர்பார்க்கப்படுகிறது. விரைவில் உலகமுழுவதிலும் அணு ஆயுதச் சோதனைகளை முற்றிலும் நிறுத்த ஓர் உடன்படிக்கை ஏற்படலாம். பழைய அணு ஆயுதக் கருவிகள் மட்டுமல்லாது புதியகருவிகளும் (U.S. Pershing II and the Social SS-20) இப்பகுதியிலிருந்து விலக்கப்படலாம்.

இவ்வாறு பிற இடங்களிலும் அமெரிக்காவும், உருசியாவும் தங்களின் படைக்கலங்களை விலக்கிக் கொண்டால் அல்லது குறைத்துக் கொண்டால் உலக நெருக்கடி குறைந்து அமைதி ஏற்படும். வளர்ந்து வரும் நாடுகள் போரின் அச்சமின்றித் தங்களது பொருளாதாரத்தை வளர்த்துக் கொள்ளமுடியும். எனவே, உலகைப் பெரும் போரிலிருந்து, அழிவிலிருந்தும் காக்கப் படைக்கலக் குறைப்பே இன்றியமையாத வழியாகும். சி.இரெ.

**துணை நூல்கள்:**

**Asit Kumar Sen**, International Relations Since World War I, S. Chand and Co, Ltd., New Delhi, 1980.

**Atul Chandra Roy**, International Relations Since 1919, The World Press Private Limited, Calcutta, 1978.

***படைக்கலச் சட்டம்*** இலிட்டன் பிரபு (கி.பி. 1876-80) இந்தியாவில் அரசப் பேராளராக இருந்த போது, கி.பி. 1878-ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. பழமையில் ஊறிய இலிட்டன் இந்தியர்களின் எண்ணங்களையும் செயல்களையும் கட்டுப்படுத்தப் பல வகையான நடவடிக்கைகளை எடுத்தார். அவற்றுள் ஒன்று படைக்கலச்சட்டம். அந்தச் சட்டத்தின்படி இந்தியர் எவரும் அரசு அனுமதியின்றி எந்தவிதமான படைக்கலத்தையும் வைத்திருப்பது, எடுத்துச் செல்வது அல்லது விலைக்கு விற்பது குற்றமாகும். அச்சட்டத்தை மீறுபவர்களுக்கு மூன்று ஆண்டு சிறைத் தண்டனை அல்லது பணத் தண்டனை அல்லது இரண்டையும் கொடுக்க அரசு அதிகாரம் பெற்றிருந்தது. படைக்கலன்களை மறைத்து வைத்திருப்பவர்களுக்கு ஏழு ஆண்டுகள் சிறைத் தண்டனை அல்லது பணத் தண்டனை அல்லது இரண்டையும் கொடுக்கவும் அச்சட்டம் வழிவகுத்தது. அதன் மிக இழிவான ஓர் உட்கூறு என்னவென்றால், இந்தியர்கள் மட்டுமே அச்சட்டத்தின் வரம்புக்கு உட்படுத்தப்பட்டமையாகும். இந்தியாவில் இருந்த ஆங்கிலேயர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் மற்றும் அரசு அதிகாரிகள் சட்டத்தின் வரம்புக்கு உட்படுத்தப்படவில்லை. அதனால் மிகத் தெளிவாக ஒரு கருத்தை இந்தியர்கள் புரிந்து கொண்டார்கள். இந்தியர்கள் இழிந்தவர்கள், ஆங்கிலேயர்கள் உயர்ந்தவர்கள் என்ற இன வேறுபாட்டுக் கொள்கையை இலிட்டன் நடைமுறைப்படுத்துகிறார் என்பதை இந்தியர்கள் தெளிவாகப் புரிந்து கொண்டார்கள். இச்சட்டத்தை இந்தியர்கள் கடுமையாக எதிர்த்தனர். நா.ப.

***படை நீதிமன்றம்:*** தரைப்படை, கடற்படை, வான்படையில் பணியாற்றும் படைவீரர்கள்

தொடர்பான குற்றங்களை விசாரிப்பதற்கென அமைக்கப்பட்ட நீதிமன்றத்தைப் படை நீதிமன்றம் (Court Martial) என்பர்.

**அமைப்பு:** படை நீதிமன்றம், இராணுவச் சட்டம், 1950, பிரிவு 3 (Vii)-இன்கீழ் அமைக்கப்பட்டு, 1. பொது நீதிமன்றம் (Generel), 2. மாவட்ட நீதிமன்றம்(District), 3. களத்திற்கான பொது நீதிமன்றம் (Field General) என மூன்று பிரிவுகளாகப் பிரிந்து செயற்படுகிறது.

**படை நீதிமன்றப் பணி:** பொதுவான குற்றவழக்கு நீதிமன்றங்களுக்குத் தலைமை தாங்கும் அதிகாரிகள் இருப்பதுபோல் இந்நீதிமன்றத்திற்கும் தலைமை தாங்கும் அதிகாரிகள் நியமிக்கப்படுகிறார்கள். இந்த அதிகாரிகள் பல்வேறு படிநிலைகளில் அமர்த்தப்பட்டு அவரவருக்கும் உரிய அதிகார வரம்பிற்கேற்ப தண்டத் தொகைகளையும் தண்டனைகளையும் விதிக்கின்றார்கள்.

**ஆள்வரை:** படைத் துறையைச் சார்ந்த குற்றங்களைப் பொறுத்தவரை படைநீதிமன்றம் மட்டுமே விசாரிக்க அதிகாரமுடையதாகும். வேறு பொதுவான நீதிமன்றங்கள் அத்தகைய குற்றங்களை விசாரிக்க இயலாது. ஆனால், படைத் துறையைச் சார்ந்த ஒருவர் படைத் துறையைச் சாராத ஒருவருக்கு எதிராகக் குற்றமொன்றை இழைத்திருக்கும்போதும், படைத்துறையைச் சாராத ஒருவர் படைத்துறையைச் சார்ந்தோரை மேலதிகாரிகளுக்குக் கீழ்ப்படிய விடாமல் கிளர்ச்சி செய்யத் தூண்டுவது, மேலதிகாரிகளைத் தாக்க முயலுவது, படையைவிட்டுச் சட்ட விரோதமாகப் விலகுதற்கு உடந்தையாக இருப்பது, சட்ட விரோதமாகப் படையை விட்டு விலகி வந்த நிலையில் மறைவாகப் புகலளிப்பது, மோசடிக் கருத்துடன் படைத்துறைக்குரிய உடை அல்லது சின்னம் ஆகியவற்றை அணிவது போன்ற குற்றங்களை இழைத்திருக்கும் போதும் பொதுவான நீதிமன்றங்கள் அத்தகைய குற்றங்களை விசாரணை செய்யலாம். பு.வே.

**படைப்புக் கொள்கை:** இவ்வுலகத்தையும் அதில் உள்ள உயிர் வகைகளையும் படைத்தது ஒரு முழுமுதற் காரணமான பரம்பொருளே என்னும் கொள்கை படைப்புக் கொள்கையாகும்(Creationism). இது ஒரு சமயக் கொள்கை ஆகும். கிறித்தவம், இந்து சமயம், இசுலாம் ஆகிய சமயங்களில் படைப்புக் கொள்கை மிக முக்கிய இடம் வகிக்கின்றது. சமண சமயமும், பௌத்த சமயமும் இத்தகைய படைப்புக் கொள்கையை ஏற்றுக் கொள்வதில்லை. படைப்புக் கொள்கையை ஏற்றுக்கொள்ளும் சமயங்கள் எல்லாம் பிரபஞ்சப் படைப்புக்கு ஒரு நோக்கம் இருப்பதாகக் கருதுகின்றன. எல்லா உயிர் இனங்களின் அமைப்பையும் தோற்றத்தையும் கடவுள் தொடக்கத்திலேயே படைத்து விட்டார் என்று படைப்புக் கொள்கை கூறுகிறது.

கிறித்துவ சமயத்தில் இக்கொள்கை முதன்மையாக வலியுறுத்துவது இவ்வுலகம் கடவுளின்றி நிலைத்திருக்க இயலாது என்பதாம். அச்சமயத்தின் கருத்துப்படி இவ்வுலகைக் கடவுள் வெறும் பாழினின்று படைத்தார் (Creation exnihilo). அவரே அதைத் தோற்றுவித்துக் காப்பவர் ஆதலின், இவ்வுலகுக்கு ஒரு நோக்கமும் திட்டமும் இருக்கவேண்டும்.எனவே, எல்லா உயிர்களின் வாழ்க்கைக்கும் ஒரு நோக்கம் இருக்கிறது. கடவுள் உலகையும் உயிரையும் படைத்து விட்டு 'அது நல்லது' என்று கூறியதாகப் பழைய ஏற்பாடு கூறுகிறது. உலகம் இறைவனால் படைக்கப்பட்டதாயினும், அது இறைவனைப்போல் மாற்றமின்மை, குறையுடைமையின்மை, தற்சார்புடைமை போன்ற கடவுளின் குணங்களை உடையது அன்று. உருவாக்கப்பட்டுநிலையற்றதன்மை உடையதாதலின் குற்ற முடைமை அதன் இயல்பு. எனவே, மனிதனும் இயல்பிலேயே குற்றமுடையவன்.

உலகம், உயிர்கள் தவிர, காலத்தையும கடவுள் உலகுடன் படைத்தார். எனவே, காலமாற்றம் பொருளற்றதன்று. தொடக்கத்தில் இறைவன் உலகைப் படைத்தார் என்பதால் காலத்தைக் கிறித்தவம் நேர்க்கோட்டு முறையில் (Linear) சிந்திக்கின்றது; சுழற்சி போல் கருதுவதில்லை. கடவுள் இவ்வுலகையும் காலத்தையும் சுதந்திரமாகவே படைத்தார் என்பதால் இறைவன் இயல்பாகவே அன்புமயமானவன் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது.

கிறித்தவ சமயத்தைப் போலவே யூதசமயமும் கடவுள் ஒன்றுமில்லாமையில் இருந்து உலகையும் அதில் உள்ள உயிர்களையும் படைத்தார் என்ற கொள்கையை வலியுறுத்துகிறது.

இசுலாமிய சமயமும் உலகத்தை இறைவன் ஒன்றுமில்லாமையில் இருந்து படைத்ததாகவே கருதுகிறது. அச்சமயத்தின் வேத நூலாகக் கருதப்படுகின்ற குரானில் படைப்புக் கொள்கை காணப்படுகிறது. விளக்க உரையாளர்களின் கருத்துப்படி உலகமானது கடவுளால் இரண்டு நாள்களில் படைக்கப்பட்டதாகவும் இயற்கை வளங்கள் நான்கு நாள்களில் படைக்கப்பட்டதாகவும் அறியப்படுகிறது. அவர் ஏழு சுவர்க்கங்களை படைத்தார் என்றும், அவை அனைத்தும் அவருடைய அதிகாரத்திற்குட்பட்டவை என்றும் கூறப்பட்டுள்ளது. மேலும், கடைநிலை (Lowest) சுவர்க்கமானது வழிகாட்டும் தேவதைகளுடன் படைக்கப்பட்ட தாகக் கூறப்பட்டுள்ளது.

இந்து சமயத்தில் உலகப்படைப்புப் பற்றிய ஆய்வு கள் இருக்கு வேத காலங்களிலேயே தொடங்கப் பட்டுவிட்டன; பின்னர் வேதங்களின் பகுதிகளாகிய பிராமணங்கள், உபநிடதங்கள், அதன் பின்னர்ப்புரா ணங்கள், இதிகாசங்கள், அதேகாலத்தைச் சேர்ந்த பிற நூல்கள் ஆகியவற்றாலும், அதன் பின்னர் அவற்றை ஆய்ந்த மெய்ப்பொருள் வல்லுநர்களாலும் பல மாற்றங்களும் வளர்ச்சியும் பெற்று இன்றைய நிலையை அடைந்துள்ளது.

வேதங்களில் உலகம், பூமி, காற்று, ஆகாயம் (சுவர்க்கம்)என்ற மூன்று முக்கிய பாகங்களைத் தன்ன கத்தே கொண்டுள்ளது என்ற கருத்து காணப்படு கிறது. உலகம் வேதங்களில் பேசப்படுகின்ற போதெல்லாம் சுவர்க்கம், பூமி என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டுப் பேசப்படுகின்றது.இவைகள் கடவுளர் களால் படைக்க (Creation) அல்லது உருவாக்கப் (Generation) பட்டதாகவும், சில சமயங்களில் இந்திரன் அல்லது அக்கினி அல்லது உருத்திரன் அல்லது சோமன் ஆகியோரால் படைக்கப்பட்ட தாகவும் கூறப்படுகிறது. வேதம் சில சமயங்களில் தன் கூற்றிற்கே முரண்பட்ட கருத்துகளையும் வெளிப்படுத்துகிறது. தேவர்களுக்கு எல்லாம் அதி பதியாகத் திகழக்கூடிய ஒருவர்தான உலகைப் படைத் தார் என்றும், பிற்காலப் பழங்கதைகளில் (Myths) 'தேவர்களின் சிற்பி' என்று வருணிக்கப்படுகின்ற விசுவ்கர்மராலும், பின்னர் 'உயிர்களின் பிரபு' என்று அழைக்கப்பட்டு, பின்பு பிரமனுக்கு இணையாகப் பேசப்பட்ட பிரசாபதியினாலும் உலகம் படைக்கப் பட்டது என்றும் வேதங்களில் காணப்படுகிறது. அதருவண வேதத்தில், உரோகிதன், அனத்வான், வாசன், காலன், காமன் என்று பல்வேறு பெயர் களில் அழைக்கப்பட்ட தேவ அதிபதியால் உலகம் படைக்கப்பட்டது என்றும் கூறப்பட்டுள்ளது.

பிராமணங்களில் பிரசாபதி உலகைப் படைத்தது பற்றிப் பல்வேறு பழங்கதைகள் காணப்படுகின்றன. அப்பழங்கதைகள் அனைத்தும் கீழ்க்காணுமாறு தொடங்குகின்றன. 'ஆதியில் பிரசாபதி மட்டுமே இருந்தார். பின்னர் அவர் விருப்பப்பட்டு, தவம் செய்து, பல விதிமுறைகளைக் கடைப்பிடித்து ஒன் றாக இருந்த அவர் பலவாக மாறினார்.' பிரசாபதி யைத் தவிர சுயம்பு நாராயணன், சுயம்பு பிரம்மன் ஆகியோரும் உலகப் படைப்பினைச் செய்தார் என்பது கூறப்படுகின்றது.

உபநிடதங்களில் பிரசாபதிக்குப் பதிலாகப் பிரம்மன் என்ற உயர்ந்த தத்துவப் பொருள் உல கைப் படைத்ததாகக் கூறப்பட்டுள்ளது. இந்தத் தத்துவப் பொருள் பிரமன், ஆத்துமன், இல்பொருள் (Non-being), உள்பொருள் (Being) என்ற பெயர் களால் அழைககப்படுகின்றது. இந்த முதற்பொருள் உலகைப் படைத்தபிறகு அதில் வந்து தங்குவதோடு மட்டுமல்லாமல், அதனோடு ஒன்றாயும், வேறாயும் இருக்கின்றது. உபநிடதங்களில் கூறபபடும், பலவகை யான உலகத் தோற்றக் கொள்கைகளை ஒரே அடிப் படைக் கொள்கையின் மூலம் அறிந்து கொள்வது அரிது.

புராணங்களில் படைப்புக்கொள்கை மிக விரிவா கப் பேசப்பட்டுள்ளது. புராணங்களின் படி படைக் கப்பட்ட உலகம் அழிக்கப்பட்டு மீண்டும் தோற்று விக்கப்பட்டு அழிக்கப்படுகின்றது. இத்தகைய படைப் புக் கொள்கையை விளக்குவதற்கு வேதங்களில் காணப்படும் பழங்கதைகளைப் புராணங்கள் பயன் படுத்துகின்றன. அவற்றில் சில மிகவும் பிந்திய காலத் துக் கருத்துகளாகும். புராண ஆசிரியர்கள் தங்களு டைய சமயப் பிரிவுக்கு ஏற்றபடி உலகப் படைப்பைச் செய்யும் முதற் பொருளை ஆத்துமன் என்றும், நாராயணன், சம்பு போன்றவர் என்றும் குறிப்பிடு கின்றனர்.

சாங்கிய மதக் கொள்கையின் படி உலகம் புரு டன், பிரகிருதி என்ற இரு பொருள்களால் ஆனது: முந்தையது ஆன்மாவையும், பிந்தையது சடப்பொரு ளையும் குறிக்கின்றது. சடப்பொருள் தாமசம், இராசசம், சத்துவம் என்ற முக்குணங்களால் ஆனது. ஆதியில் இந்த முக்குணங்கள் சமநிலையில் இருந்தன வென்றும் பின்னர்ப் புரு டனின் முன்னிலையில் அச் சமநிலை தவறியபோது உலகமாகப் பரிணமித்தது என்றும் சாங்கிய மதம் கூறுகிறது. பிரகிருதியில் இருந்து முதலில் புத்தி தத்துவமும், அதன்பின் அகங் காரமும் தோன்றியது. அகங்காரத்தில் இருந்து மன மும், ஐம்புலன்களும் ஐம்பொறிகளும், ஐந்துதன்மாத் திரைகளும் தோன்றின. கடைசியில் கூறப்பட்ட ஐந்தும் ஒன்றோடு ஒன்று கலந்து ஆகாயம், நெருப்பு, காற்று, நீர், மண் ஆகிய ஐம்பூதங்களும் உருவாயின. இவையே சாங்கியர் உலகப் படைப்புப் பற்றிக் கூறும் இருபத்தி நான்கு தத்துவங்களாகும்.

சைவ சித்தாந்தப் படி படைப்புக் கொள்கையி உயிர்க் கூட்டங்கள் படிமுறையாகப் பக்குவம் பெற்று வீடுபேறு அடையும்பொருட்டு,முழுமுதற்காரணனான இறைவன் மாயை என்னும் உள்பொருளிலிருந்து உல கைத் தோற்றுவித்தும் ஒடுக்கியும் மீண்டும் தோற்று வித்தும் அருளாட்சி நடத்துகின்றார் என்பதாகும்.

பி. கி.

**படை மானியந் திட்டம்:** இத்திட்டம் இடைக்கால ஐரோப்பாவில் தோன்றி வளர்ந்த ஓர் அரசியல் முறையாகும். நிலஉடைமைக்கட்டுப்பாடுகளே

இம் முறையின் அடிப்படை. அக்கால நிருவாகம், பொருளாதார சமூக நிலமைகளையும் இம் முறை கட்டுப்படுத்தியது. இம் முறையின் தாக்கங்களை இங் கிலாந்து, துருக்கி, உருசியா, சப்பான், இந்தியா ஆகிய நாடுகளில் காணலாம்.

**தோற்றம்:** கிரேக்க, உரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர் மேற்கு ஐரோப்பாவில் செரு மானியப் பழங்குடிகள் மேலாதிக்கம் பெற்றனர். இவர்களால் பிராங்கிய அரசு (Frankis state) ஏற் பட்டது. இக்காலத்தில் நிலவிய அரசியல் குழப்பங்க ளால் சிறு நில உடைமையாளர்கள் மெல்ல மெல்ல அழிந்துபட்டனர். பெருநில உடைமையாளர்கள் மேற்கு ஐரோப்பா முழுவதும் தோன்றினர். பாதுகாப்புக் கருதி சிறு நிலஉடைமையாளர்கள் பெரு நிலக் கிழார் களிடம் தம் நிலங்களை ஒப்படைத்தனர். மேலும், அதிக வரி விதிப்பின் காரணமாகவும், முறைகேடான வரி வசூலிப்பு முறைகளாலும் வரி செலுத்த இயலாத சிறு நில உடைமையாளர்களின் நிலங்கள் பெரு நில உடைமையாளர்களால் கவரப்பட்டன. இந்நிலையில் கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஆண்ட சார்ல மான் (Charlemagne) பேரரசர் காலத்தில் பெரிய நிலப் பகுதிகள், அரசரை ஆதரித்த பிரபுக்களுக்கு மானியங்களாகத் தரப்பட்டன. அடுத்த நூற்றாண் டின் தொடக்கத்தில் (9-ஆம் நூ.) இப் பேரரசு வீழ்ச்சியுற்றதைத் தொடர்ந்து பெரிய நில உடைமை யாளர்கள் தம் அதிகாரத்தை நிலை நாட்ட முற் பட்டனர். இவர்கள் காடுகள், தரிசு நிலங்கள், ஆறு கள் ஆகியவற்றின் மீதும் உரிமை கொண்டாடினர். நிலங்களை இழந்தவர்கள், பெரிய நில உடைமையா ளர்களிடம் பாதுகாப்பு, பணி ஆகியவற்றை எதிர் பார்த்தனர்; தம்மை அடிமைகளாக அவர்களிடம் ஒப் படைத்துக் கொண்டனர். பெரிய நில உடைமையா ளர்கள் அரசரின் கட்டுப்பாட்டில் இருந்தனர். இதைத் தொடர்ந்து பெரிய நிலஉடைமையாளர்களிடம் ஒப் பந்தத்தின் பேரில் நிலம் பெற்றுச் சிறு நில உடைமை யாளர்கள் பயிர் செய்யத் தொடங்கினர். இவ்வொப் பந்த முறையே படைமானிய முறை (Feudalism) என்று குறிக்கப்பட்டது. இம்முறை ஐரோப்பா முழு மைக்கும் சீரான ஒரே அமைப்பாக இல்லை; நாட்டுக்கு நாடு, காலத்திற்குக்காலம், பண்ணைக்குப் பண்ணை வேறுபாடாகச் செயற்பட்டது.

இம்முறையில் அரசன் முதன்மை இடத்தைப் பெற் றிருந்தான். அடுத்த நிலையில் படை மானியப் பிர புக்கள் (Feudal Lords) இருந்தனர். கடை நிலையில் குடியானவர்கள் இருந்தனர். படை மானியப் பிரபுக் களில் நில மானியம் தருவோரைப்'பண்ணைத் தலை வர்' (Seignior) என்றும், நிலம் பெறுவோரைக் குடி யாள் (Vassal) என்றும், குறிப்பர். இவ்வகையில் ஒருவரே, தமக்கு மேற்பட்ட பிரபுவிடமிருந்து நிலம் பெறும் போது குடியாளாகவும், தமக்கு அடுத்த நிலை யில் உள்ளவருக்குக் கொடுக்கும் போது பண்ணைத் தலைவராகவும் ஆக முடியும். இப்படைமானியப் பிர புக்கள் பலவகைப்பட்டனர். மன்னனிடமிருந்து நேரடி யாக நில மானியம் பெறுவோர் கோமான் (Duke) மற்றும், இளவரசுகள் (Earl) ஆவர். இவர்களுக்கு அடுத்த நிலையில் உள்ளவர்கள் சிறிய பிரபுக்கள் (Barons)இவர்கள் தம் நில உடைமையைக் கோமான் கள் இளவரசர்களிடமிருந்து பெற்றனர். இவர்கள் 20, 30 கிராமங்களுக்கு உரிமையாளராக இருந்தனர். இவர்களுக்குக் கீழ் இருந்தவர்கள் மாவீரர் (Knight) எனப்படும் பிரபுக்கள். இவர்கள் அனைவரும் ஒப் பந்த அடிப்படையில் தமக்கு மேற்பட்டவரிடமிருந்து நில உரிமையைப் பெற்றனர். மூன்றாம்நிலையினரான குடியானவர்களில் இரண்டு பிரிவினர் உள்ளனர். இவர்களில் உட்குடி அடிமைகள் (Serf) மேலானவர் கள் அடிமைகள் (Slave) கீழானவர்கள். ஆயினும்; இவ் விருவரும் சுதந்திரமற்றவர்கள்.

நாட்டிலுள்ள நிலம் முழுவதும் அரசனுக்குச் சொந்தமானதாகக் கருதப்பட்டது. தனக்கு வைத் துக் கொண்டது போக மிஞ்சியதை அரசன் மற்றவர் களுக்கு மானியமாகப் பகிர்ந்து கொடுத்தான். மானியதாரர்களான (Feudal lors) பிரபுக்களும், தமக்குப் போக எஞ்சியதைத் தம் கீழ்மட்டப் பிரபு களுக்கும், பண்ணை முதலிகளுக்கும் வழங்கினர். அவர்கள் அடிமைகள்; மற்றும் உட்குடிகளைக் கொண்டு விவசாயம் செய்தனர். இவர்கள் அனை வரும், ஒருவருக்கொருவர் ஒப்பந்தத்தால் கட்டுப் பட்டவர்கள்.

மானியதாரர், அரசனிடமிருந்து நில உரிமை யைப் பெறும் போது மண்டியிட்டு அவருக்கு உண் மையாக இருப்பதாக வாக்குறுதி எடுத்துக கொளள வேண்டும். இவ்வாறே பண்ணை முதலிகள் மானிய தாரரிடமிருந்து நிலத்தைப் பெறும் போதும் வாக் குறுதி அளித்தல் வேணடும். பண்ணை முதலிகள் வாக்குறுதி எடுத்துக் கொள்ளும் போது, அவர் ஊழி யத்தை ஏற்றுக் கொண்டு ஒரு பிடி மண்ணை வழங்கு வது வழக்கம். சில சமயம், கொடி, ஈட்டி, கோல் போன்றவற்றையும் அளிப்பது உண்டு. பண்ணை முதலிகள் மானியதாரர்களுக்குப் பல பணிகளைச் செய்ய வேண்டும். மானியதாரர்களுக்கு, ஆண்டுக்கு 40 நாள்களுக்கு மிகாமல் போர்ப்பணி செய்ய வேண்டும். அரசனுக்கும் மானியதாரர்கள் இவ்வாறே பணி செய்ய வேண்டும். பண்ணை முதலி இறந்த பின் வாரிசுதாரர் பதவி ஏற்றுக் கொள்ளும் காலத் தில் வாரிசுக் கட்டணத்தை மானியதாரர்க்குத் தர வேண்டும். மானியதாரர் பயணம் மேற் கொள்ளும்

போதும், வேட்டைக்குச் செல்லும் போதும் அவருக்கு உணவு, உறையுள் ஆகியன கொடுத்துதவ வேண்டும். மானியதாரர் சிறைப்படுத்தப்பட்டால் விடுதலைப் பணமாகத் தன் பங்கைப் பண்ணை முதலி செலுத்த வேண்டும். பண்ணை முதலிகளின் மூத்த மகன் மாவீரர் (Knight) வீரராகும் போது மானியதாரர்க்கு உரிய கட்டணத்தைச் செலுத்த வேண்டும். இவ்வாறே முதல் மகளுக்குத் திருமணம் ஆகும் போதும் கட்டணம் செலுத்த வேண்டும். பண்ணை முதலிகள் வாரிசின்றி இறந்தால் மானியதாரர் வேறு ஒருவருக்குப் பண்ணை உரிமையை மாற்றித்தர இயலும். மேலும், வாரிசு வயதுக்கு வரும்வரை நில உடைமையை அனுபவிக்கும் உரிமையும் அவருக்கு உண்டு. மானியதாரர் அழைத்த போதெல்லாம் பண்ணை முதலி சென்று நீதி, நிருவாகம் ஆகியவற்றில் துணை செய்ய வேண்டும். இவ்வாறெல்லாம் செய்யத் தவறினால் மானியக் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டவராவார். இவ்வுரிமைகள் பற்றிச் சில சமயம் அரசனிடம் மேல் முறையீடும் செய்து கொள்ளலாம்.

பண்ணை முதலிகள் தம் பண்ணையைப் பொறுத்த மட்டில் முழு உரிமை பெற்றிருந்தனர். சட்டமியற்றுதல், ஆட்சி செய்தல், நீதி வழங்குதல் அனைத்திலும் உயர் அதிகாரம் பெற்றிருந்தனர். பண்ணைக் காரியங்களில் மானியதாரர்கள் தலையிடுவதில்லை.

அடிமட்டத்தில் இருந்த உட்குடி அடிமைகளுக்கும் அரசனுக்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. தமக்கு மேற்பட்ட பண்ணையாரின் நிலத்தை வாரத்தில் குறிப்பிட்ட நாட்களில் உழக் கடமைப்பட்டவர்கள். இவர்கள் சிறு நிலங்களைப் பெற்றிருந்தனர். அந்நிலங்களை உழுது, அதன் வருமானத்தில் ஒரு பகுதியைப் பண்ணையாருக்குத் தந்தனர். இவர்கள் நிலத்துடன் சம்பந்தப் பட்டவர்கள். நிலங்கள் கை மாறும் போது இவர்களும் மாறினர். இவர்களுக்கு ஒருபடி கீழானவர்கள் அடிமைகள். இவர்களுக்கு எவ்வித நில உரிமையும் கிடையாது. பண்ணையாரின் அனுமதியின்றி வெளியே செல்ல முடியாது. இவர்களை விற்றிடவும் பண்ணையாருக்கு உரிமையிருந்தது. இவ்விரு பிரிவினரும் உரிமை பெற வேண்டுமானால் திருச்சபையில் (Church) மத குருவாக வேண்டும், அல்லது பண்ணையாரிடம் தகுந்த பணம் தரவேண்டும். இம்முறைகளன்றி இவர்கள் விடுதலை பெற வேறு வழியில்லை.

இம்முறை கி.பி. 13-ஆம் நூற்றாண்டு வரை ஐரோப்பாவில் நிலவியது. பின்னர்த் தோன்றிய பொருளாதார மாறுதல்களால் இம்முறை சீரழியத் தொடங்கியது. வலிமையற்ற அரசுகள் ஐரோப்பாவின் பல பகுதிகளில் தோன்றத் தொடங்கின. நகரங்கள் வளர்ச்சியுற்றன, உற்பத்தி முறையில் மாறுதல்கள் ஏற்பட்டன, வெடி மருந்து போன்ற புதிய கண்டுபிடிப்புகளின் விளைவாகப் பொருளாதாரத்தில் பெரு மாற்றங்கள் ஏற்பட்டன. இவற்றால் கி.பி. 14-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் இம்முறை அழிந்தது. ஐரோப்பாவில் தோன்றிய இம்முறை மற்ற நாடுகளிலும் பரவிற்று. இம்முறையின் சிலமுக்கிய கொள்கைகள் அவ்வப் பகுதிகளில் நிலவி வந்தன. துருக்கிப் பகுதியில், வரி வசூலிக்கும் முறையில் ஏற்பட்ட விந்தையான விளைவுகளால் இம்முறை அங்கு வேரூன்றியது. வரித்தண்டல் குத்தகைதாரர்கள் அழிந்து நிலக் கிழார்கள் தோன்றினர். இங்கிலாந்தில் இம்முறை கி.பி. 1066 முதல் தோன்றத் தொடங்கியது. இங்கிருந்து இசுகாட்லாந்துக்குச் சென்றது. எனினும் படைமானிய முறை இப்பகுதிகளில் முழுவளர்ச்சி அடையவில்லை. சப்பான் பகுதிகளில் இம் முறை நன்கு வளர்ச்சியுற்றது. நம்பிக்கையே இங்கு முக்கிய தன்மையாகக் கருதப்பட்டது. இவ்வடிப்படையில் இம்முறை காமகுரா மன்னர் காலம் முதல் வளர்ந்தது. இந்தியாவில் இம் முறையின் தன்மைகள் உண்டென்பர். மொகலாயப் பேரரசுக் காலத்தில் இம் முறை தோன்றி வளர்ந்தது என்பர். ப.ச.

**பண்டகக் காப்பகம்**, பொருள்களைச் சேமித்துப் பாதுகாக்கப்பயன்படும் ஓர் இடம் எனலாம். பண்டகக் காப்பகம் (Ware House) ஒரு கட்டடமாகவோ, இடமாகவோ, அறையாகவோ இருக்கலாம். வழக்கில் இதனைச்சரக்கு அறை (Godown) என்று குறிப்பிடுவர். பழைய காலத்தில் இடைநிலை ஆட்கள், உற்பத்தியாளர்கள் தமக்கென்று சொந்தமாகச் சரக்குச் சேமிப்பு அறைகளை வைத்திருந்தனர். ஆனால், இக்காலத்தில் சரக்கு அறையும், பண்டகக் காப்பும் (Ware Housing) அங்காடியியலில் முக்கியமான இடத்தைப் பெறுகின்றன. பொருள்களைப் பாதுகாத்து வைப்பதற்கென்றே விலையுயர்ந்த, நுட்பமான இயந்திரங்கள், சாதனங்கள் பொருத்தப்பட்ட பண்டகக் காப்பகங்கள் அமைக்கவேண்டியுள்ளன. இப்பண்டகக் காப்பகங்கள் தீ, களவு முதலிய இடர்களிலிருந்து சரக்குகளைக் காக்கக்கூடிய திறன்பெற்றவையாகவும் அமைக்கப் படுகின்றன. சரக்கின் தரம் குறையாமல் பாதுகாப்பதற்குத் தேவையான அதிநுட்ப இயந்திரசாதனங்களும் அமைக்கப்படுகின்றன. இப்பண்டகக் காப்பகங்கள் சரக்குகளைப் பாதுகாக்கும் பணியோடு அங்காடிப்படுத்துதலோடு தொடர்புள்ள பணிகளையும் ஆற்றுகின்றன.

**காப்பகங்களின் பணிகள்:** இக்காலப் பண்டகக் காப்பகங்கள் பல்வேறு பணிகளை ஆற்றி, அங்காடிப் படுத்துதலுக்குத் துணைநிற்கின்றன, அதனை எளிமையாக்குகின்றன, தடைகளைக் களைகின்றன. அப்பணிகள் பின்வருமாறு:

**1. சேமிக்கும் இடவசதி:** சரக்குகளை அவற்றின் தரம் கெடாமல் சேமித்துப் பாது காக்கப் பண்டக சாலைகள் போதுமான இடவசதியைச் செய்து தரு கின்றன. இப் பண்டகக் காப்பகங்கள் இல்லா விட் டால் வணிகர்கள் தம் சரக்குகளைப் பாதுகாப்பதில் பெரும் சிரமத்துக்கு ஆளாக வேண்டி வரும்

**2. விலைவாசியை நிலைப்படுத்தல்:** அங்காடியில் ஏற்படும் தேவை மாறுதல்களுக் கேற்ப வழங்கீட்டுப் பணியைச் சரிசெய்துகொள்ளப் பண்டகக் காப்பகங் கள் பெரிதும் துணை செய்கின்றன. இதனால், பொருள்கள் தேவைக்கு மிகுதியாக அங்காடிக்கு வரு தல் அல்லது தட்டுப்பாடு ஏற்படுதல் தவிர்க்கப்படு கின்றன. விலைவாசி ஒரு நிலைப்படுத்தப் படுகிறது.

**3. இடர் ஏற்பு:** பண்டகக் காப்பக மேலாளர் (Ware House Keeper) சரக்குகளைத் தம்வசம் ஒப்படைத்த நேரம் முதல், அவற்றைத் திரும்பவும் எடுத்துக் கொள் ளும்வரை, அச்சரக்குகளின் பாதுகாப்பிற்குப் பொறுப் பாளி ஆகிறார். அவருடைய பொறுப்பில் பண்டகக் காப்பகத்தில் சரக்குகள் இருக்கும்பொழுது ஏற்படும் எல்லா நட்டங்களுக்கும் அவரே பொறுப்பு. எனவே, அங்காடிப்படுத்துபவர் சரக்குகளைச் சேமித்துவைக்கும் பொழுது ஏற்படும் இடர்களில் இருந்து விடுவிக்கப் படுகிறார். இவ்விடர் ஏற்புப் (Risk Bearing) பணி புதிய பண்டகக் காப்பகத்தில் மிக முக்கியமான சிறப்பு அமிசமாகும்.

**4. நிதி வசதி ஏற்படுத்தல்:** சரக்குகளைப் பண்டகக் காப்பகத்தில் விட்டுச் செல்லும்போது அங் காடியிடுபவர்வசம் காப்பகத்தில் உரிமையாளர் பண் டகக்காப்பக இரசீது (Ware House Keeper's Receipt) என்ற ஆவணத்தைத் தருகின்றார். இந்த இரசீது பொருள் உடைமை பற்றிய ஆவணமாகக் (Document of Title to Goods) கருதப்படுகிறது. இந்த இர சீதை ஈடாக வைத்து வங்கிகளிடம் இருந்து தேவை யான சமயம் கடன்வசதி பெறலாம். எனவே, பண் டகக் காப்பகத்தில் சேமித்து வைப்பதனால் பணத் தட்டுப்பாடு ஏற்படாது.

**5. துணைப் பணிகள்:** பண்டகக் காப்பகத்தில் சேமித்து வைக்கப்பட்ட பொருள்களை ஒன்றாக்கித் தரம்பிரித்து வெவ்வேறு பொதிகளில் கட்டிவைக்கும் பணியையும் பண்டகக் காப்பாளர் செய்கின்றார். இப்பணிகள் பண்டகக் காப்போடு தொடர்புடைய பணிகள் அல்ல. ஆயினும், அங்காடியிடுதலை எளி மைப்படுத்துவதால் இப்பணிகள் மிகவும் முக்கியமா னவை ஆகும். இப்பணிகளைச் செய்வதற்காக மிகக் குறைந்த கட்டணமே வசூலிக்கின்றார்.

**6. மற்ற பணிகள்** பண்டகக் காப்பகத்தின் காப் பாளர் இவைதவிர வேறுபல பணிகளையும் ஆற்று கிறார். அவை: 1) மாதிரிகளைக் கொள்முதல் செய் பவர்களுக்குக் காண்பிக்கத் துணை செய்கிறார்; (2) பெரிய பொதிகளாக (Parcels) உள்ளவற்றைப் பிரித்துச் சிறிய பொதிகளாகக் கட்டுவதற்கு உதவி செய்கிறார்; 3) கலால் அல்லது சுங்கவரி அதிகாரிகள் Customs Authorities) பரிசோதனையிடும்போது அவர் களுக்குப் பொருள்களைக் காண்பித்துப் பரிசோதனை யிடத் துணை செய்கிறார்; 4) சரக்கின் உரிமை யாளர் கூறுகின்றபடி கொள்முதல் செய்பவருக்கு வழங்கும் பொறுப்பையும் ஏற்றுக்கொள்கிறார்.

**பண்டகக் காப்பகத்தின் வகைகள்:** பண்டகக் காப் பகங்களைப் பலவிதமாகப் பிரிக்கலாம். இக் காப்பகங் களின் உரிமையாளர்களை அடிப்படையாக வைத்துப் பிரிக்கும் வழக்கம் நடைமுறைக்கு ஏற்றதாக உள்ளது. இவ்வாறு உடைமையாளர்களின் அடிப்படையில் பண்டகக் காப்பகங்களைக் கீழ்க்கண்டவாறு பிரிக்க லாம். அவை: 1) தனியார் பண்டகக் காப்பகங்கள் (Private Ware Houses), 2) பொதுப் பண்டகக் காப்ப கங்கள் (Public Ware Houses), 3) கூட்டுறவுப் பண்டகக் காப்பகங்கள் (Co-Operative Ware Houses) பிணைப் பண்டகக்காப்பகங்கள் (Bonded Ware Hou ses) முதலியவையாகும்.

இப்பாகுபாடு தவிரப் பண்டகக் காப்பகத்தில் அமைந்துள்ள சிறப்பு வசதிகளின் அடிப்படையில் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம். அவை: 1) பொது வணிகப் பொருள் பண்டகக் காப்பகங்கள் (General Merchandise Ware Houses), 2) சிறப்புப்பொருள் பண்டகக் காப்பகங்கள் (Special Commodity Ware Houses), 3) குளிர்பதனப் பண்டகக் காப்பகங் கள் (Refrigerated Ware Houses), 4) திறந்த வெளிப் பண்டகக் காப்பகங்கள் (Yard and Round Storage) முதலியவையாகும்.

**உரிமையாளர் இரசீதும் ஆணையும்:** பண்டகக் காப்பகத்தில் பொருள்களை ஒப்படைத்தவுடன் அதன் உரிமையாளர் பண்டகக் காப்பக ஆணை (Ware House Warrant) எனப்படும் ஆவணத்தை அளிக்கிறார். இவ்வாணையில் பண்டகக் காப்பகத் தில் ஒப்படைத்துள்ள பொருள்களைப் பற்றிய விவரங் கள் குறிப்பிடப்பட்டிருக்கும். இப் பண்டகக் காப்பக ஆணை பொருள் மீதான உரிமைதரும் ஆவணமாகக் கருதப்படுகிறது. இவ்வாணையை வைத்திருப்பவர் அதில் குறிப்பிடப்பட்டுள்ள பொருள்களுக்கு உரிமை யாளராகக் கருதப்படுவார். இவ்வாணையை மற்ற வருக்குக் கையெழுத்திட்டு வழங்குவதன்மூலம் உரிமையினை மாற்றித் தரமுடியும்.

பண்டகக் காப்பக உரிமையாளர் இரசீதும் (Ware House Keepere's Receipt) ஆணைக்குப் பதி

லாகச் சில சமயங்களில் வழங்கப்படுகிறது. ஆனால், இந்த இரசீது பண்டகக் காப்பக ஆணைபோல் பொருள் உரிமை ஆவணம் அன்று. இரசீதில் குறிப்பிடப்பட்டுள்ள பொருள்களைத் தம்வசம் ஒப்படைத்ததற்காக அதன் உரிமையாளர் காப்பாகத் தரும் சான்று ஆகும். எனவே, பண்டக ஆணைபோல இந்த இரசீதைப் புறக்குறிப்பிட்டு (Endorsement) மற்றவருக்கு மாற்றித்தர இயலாது; அவ்வாறு இரசீது வைத்திருப்பவர் மாற்றித்தர விரும்பினால் பண்டகக் காப்பக உரிமையாளருக்குத் தனியே ஒரு கடிதம் எழுதிக் குறிப்பிட்ட அளவு சரக்கைக் கடிதத்தில் குறிப்பிடப் பெற்றவரிடம் வழங்கும்படி கேட்டுக் கொள்ளலாம். அக்கடிதத்தின் பேரில் பண்டகக் காப்பக உரிமையாளர் குறிப்பிட்ட ஆளிடம் சரக்கை வழங்குவார். பி.ச.

**துணை நூல்:**

**Mamoria, C.B.,** Marketing in India, Kitab Mahal, Allahabad, 1979.

***பண்டகச் சேமிப்பு***: எல்லாப் பொருள்களும் எல்லாக் காலங்களிலும் கிடைப்பதில்லை. குறிப்பாக வேளாண்மை விளைபொருள்கள் சில குறிப்பிட்ட காலங்களில் மட்டுமே பயிராகும். ஆயினும், ஆண்டு முழுவதும் அவற்றிற்குத் தேவை இருக்கும். அத்தகைய பண்டங்களை அவை கிடைக்கும் காலத்தில் சேமித்து வைத்துக் கிடைக்காத காலங்களில் நுகர்பவர்களுக்கு வழங்க வேண்டியுள்ளது. எனவே, பண்டகச் சேமிப்பு (Storage) ஒரு முக்கியமான அங்காடியிடுதலின் பணியாகின்றது. பண்டங்களை உற்பத்தி செய்வதற்குத் தேவையான மூலப்பொருள்களை வாங்குவதிலிருந்து அவற்றை உற்பத்தி செய்து முழுப் பொருள்களாக்கி நுகர்பவர் வாங்கும்வரையில் ஒவ்வொரு நிலையிலும் சேமிப்பு அவசியமாகின்றது. நுகர்பவரும் சிறிது காலம் சேமித்து வைக்கவேண்டிய அவசியம் உள்ளது. எனினும், அங்காடியிடுதலில் பண்டகச் சேமிப்பு என்பது இடைநிலையர்களும், உற்பத்தியாளர்களும் ஆற்றும் பணியாகும். இச் சொல்லுக்குப் பலர் இலக்கணங்களை வகுத்துள்ளனர். அவற்றுள் 'பண்டகச் சேமிப்பு என்பது மனிதன் தனது திறமையைப் பயன்படுத்தி இப்போதைய தேவை போக உபரியாக (Surplus) உள்ள பொருள்களை எதிர்கால உபயோகத்திற்காக அவை கெடாமல் பாதுகாக்கின்ற பணி ஆகும்' என்று கிளாரும், கிளார்க்கும் கூறுகின்றனர். 'பண்டகச் சேமிப்பு என்பது பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்ட காலத்திலிருந்து அவற்றைப் பயன்படுத்தும் காலம்வரை உள்ள இடைப்பட்ட காலத்தில் பொருள்களின் தரம், தன்மை ஆகியவை கெடாதவாறு சேமித்து வைத்திருக்கும் பணியாகும், என்று இசுடான்டன் கூறுகிறார்.

பண்டகச் சேமிப்பின் நோக்கங்களைப் பின்வருமாறு கூறலாம். அவை: 1) வழங்கலுக்கும் (Supply), தேவைக்கும் (Demand) இடையே உள்ள ஏற்றத்தாழ்வுகளை, வேறுபாடுகளைப் போக்குதல்; 2) உற்பத்தியையும், மூலப்பொருள்களின் சேமிப்பையும் சீராக்குதல், 3) உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களுக்கு அங்காடிப்படுத்துதலை எளிதாக்குதல், 4) நுகர்பவர்களுக்கு இடையீடு அல்லது தங்குதடை இல்லாமல் பொருள்கள் கிடைக்கும்படி செய்தல், 5) பல வகைப்பட்ட பொருள்களை ஒன்றுதிரட்டும் பணிக்கு உதவுதல் என்பனவாகும்.

பண்டகச் சேமிப்பு, பொருளாதார முக்கியத்துவம் உடைய ஒரு பணியாகும். இதற்குக் காரணம் இப்பணியை ஆற்றுவதால் விளையும் பயன்களே ஆகும். இதன் பயன்கள் பின்வருமாறு:

**1) பண்டகங்களைப் பாதுகாத்தல்:** பண்டகங்களைச் சேமித்து வைப்பதன் முதல் பயன் பொருள்களைத் தரம் கெடாமல் பாதுகாப்பதாகும். குறிப்பாகப் பருவ காலங்களில் மட்டுமே விளையும் வேளாண்மை விளைபொருள்களை ஆண்டு முழுவதும் நுகர்வுக்குக் கிடைக்கச்செய்யப் பாதுகாப்பது அவசியமாகும்.

**2) விலை ஏற்றத்தால் விளையும் ஆதாயம்:** விலைவாசி இறங்குமுகமாக இருக்கும்பொழுது பண்டங்களைக் கொள்முதல் செய்வதும், ஏறுமுகமாக இருக்கும் பொழுது விற்பனை செய்வதும் பழங்காலத்திலிருந்தே வணிகர்கள் கடைப்பிடித்து வந்த ஒரு கொள்கையாகும். விலை ஏற்றத்தால் பொதுவாகக் கிடைக்கும் ஆதாயத்தைவிட மிகுதியான ஆதாயம் கிடைக்கிறது. எனவே, இடைப்பட்ட காலத்தில் பண்டங்களை அதன் தரம் கெடாதவாறு சேமித்து வைப்பதன் மூலமே இவ்விலை ஏற்றத்தால் கிடைக்கும் ஆதாயத்தை வணிகர்கள் அடையமுடியும்.

**3) அங்காடி விரிவடைதல்:** பொருள்களைச் சேமித்துவைத்துத் தேவையான இடங்களுக்குத் தேவையான காலத்தில் அனுப்புவதால் நல்ல ஆதாயம் கிடைப்பதோடு அங்காடியின் பரப்பும் விரிவடைய ஏதுவாகிறது. தொலை தூரத்தில் உள்ள அங்காடிக்கும் பண்டங்களை அனுப்புவதற்கு வாய்ப்பு உள்ளது. எனவே, பல்லாயிரக்கணக்கான வாடிக்கையாளர்களை உருவாக்கிக் கொள்ளவும், விற்பனையைப் பெருக்கவும் பண்டகச் சேமிப்பு வழிவகுக்கிறது.

**4) தேவைக்கேற்ற வழங்கீடு:** தேவைக்கேற்றபடி வழங்கீடு (Supply) இருந்தால் மட்டுமே விலைவாசியை ஏற்ற இறக்கமின்றி ஒருநிலைப்படுத்த இயலும். வேளாண்மை விளைபொருள்கள் விளையும் காலங்

களில் தேவை குன்றவாகவும், வழங்கீடு மிகுதியாக வும் இருக்கும். எனவே, விலை வீழ்ச்சியடையும். இது போல் இதர பருவக் காலங்களில் வழங்கீடு குறை வாகவும், தேவை மிகுதியாகவும் இருக்கும். அப் போது விலை ஏற்றமடையும். இவ்வாறான ஏற்ற இறக்கங்கள் பொருளாதாரத்தையே பாதிக்கும். எனவே, பொருள்கள் மிகுதியாகக் கிடைக்கும் காலத் தில் சேமித்து வைத்துத் தேவைக்கேற்றபடி வழங் கீட்டை நெறிமுறைப்படுத்த வேண்டும். இல்லாவிட் டால் உற்பத்தியாளர்கள், பயன்படுத்துவோர் ஆகிய இருவருமே இழப்புக்கு உள்ளாவர்.

**5) விலைவாசியை நிலைப்படுத்தல்:** பொருள் களின் தேவையும், வழங்கீடும் சமப்படுத்தப்படுவ தால் வீணான ஏற்ற இறக்கங்கள் தவிர்க்கப்படுகின் றன. இதனால் விலையும் நிலைப்படுத்தப்படுகிறது.

**6) நெறிமுறைப்படுத்துதல்:** எதிர்பாராமல்தேவை மிகுவதும் அல்லது வழங்கீடு மிகுதியாவதும் தவிர்க் கப்படுவதால் அங்காடியிடுதலை நெறிப்படுத்த இயலுகிறது. இதனால் அங்காடியில் உற்பத்தியாள ருக்கு நிலையான ஆதாயம் உறுதியாகக் கிடைக்க வழி ஏற்படுகிறது.

**7) பிற பயன்கள்:** மேலே குறிப்பிட்ட பொருளா தாரப் பயன்களைத்தவிர வேறுபல முக்கியமான தன்மைகளும் பண்டகச் சேமிப்பு மூலம் கிடைக்கின் றன. அவை: அ) உற்பத்தி செய்வதில் உள்ள தடை கள் நீக்கப்பட்டுத் தொடர்ச்சியாக உற்பத்தி நடக்க வழி ஏற்படுகிறது. ஆ) விற்பனை செய்வதற்கான கால அளவு நீடிக்கப்படுகிறது. இ) அங்காடியிடுதலில் உள்ள பல இடர்கள் நீக்கப்படுகின்றன. பி.ச.

**துணை நூல்:**

**Mamoria, C.B.,** Marketing in India, Kitab Mahal, Allahabad, 1979.

***பண்ட மாற்றம்:*** பணம் தோன்றாக் காலத் தில் வாழ்ந்த மக்களின் தேவைகள் மிகக் குறைவாக இருந்தமையால் அவர்களுடைய கொடுத்தல் வாங்கல் எல்லாம் பண்ட மாற்றாகவே இருந்தன. அதாவது ஒருவருக்கொருவர் பொருள்களை நேரடியாக மாற் றிக்கொண்டனர். எடுத்துக்காட்டாக நெய்தல் நிலத் தில் வாழ்ந்த மீனவர்கள் தங்களிடமுள்ள மீனை மருத நிலத்தில் வாழ்ந்த உழவர்களுக்குக் கொடுத்து அதற்கு ஈடாக அங்கு விளைந்த தானியத்தைப் பெற் றுக்கொண்டனர். இதுவே பண்ட மாற்று முறையா கும் (Barter System). இது எளிய வாழ்வுக்கு உதவி னாலும், காலப்போக்கில் இதில் பல இடர்ப்பாடுகள் காணப்பட்டன. அவை;

1. பண்ட மாற்றத்துக்கு இருமுகத் தேவைப் பொருத்தம் (Double Coincidence of wants) அவசிய மாகும். கோதுமையைக் கொடுத்து அதற்கு மாறா கத் துணியைப்பெறவிரும்பும் ஒருவர், கோதுமை யைப் பெற்றுக்கொண்டு அதற்கு மாறாகத்துணியைக் கொடுக்க விரும்பும் ஒருவரைச் சந்தித்துப் பண்ட மாற்றத்தில் ஈடுபடுவது எளிதன்று. உற்பத்திப் பெரு கிக், கொடுத்தல் வாங்கல் மிகுந்த காலத்தில் இத் தகைய சிக்கல்கள் பல எழுந்தன.

2) பண்ட மாற்றலில் நிலையான மதிப்பளவை இல்லாத குறையினால் மேலே கூறப்பட்ட பொருள் களை எந்த விகிதத்தில் மாற்றுவதென்று எளிதாக முடிவு செய்ய முடியாது. ஒரு பொது மதிப்பளவு இல் லாமல் பண்ட மாற்று முறையில் எண்ணற்ற பொருள் களை வணிகம் செய்ய முடியாது.

3) பெருமதிப்புடைய ஒரு பண்டத்திற்கு மாறா கச் சிறு மதிப்புடைய பல பொருள்களைப்பெற முற் படும்போது முதலில் கூறிய பொருளைப் பகுக்க இய லாமையால் இடையூறுகள் ஏற்படலாம். எடுத்துக் காட்டாக ஒரு குதிரையைக் கொடுத்து ஓர் ஆடு, பத்துப்படி அரிசி, 10 மீட்டர் துணியைப் பெற விரும் பினால் இப்பொருளை உடையஆளைப் பிடிக்கவேண் டும். இல்லையேல் குதிரையைப் பிரிக்கவேண்டும். இரண்டும் இயலாத செயல்.

4) ஆசிரியர், மருத்துவர் போன்றவர்களின் பணியை மதிப்பிடுவது, ஊதியமளிப்பது போன்றவை பண்ட மாற்று முறையில் சிக்கலாகிறது.

5) பண்ட மாற்று முறையில் செல்வத்தைப்பொரு ளாகத்தான் சேமிக்க முடியும். அழியாப் பொருளைச் சேமிப்பது எளிதாகும். ஆனால், காய்கறி, மீன், இறைச்சி, பால் போன்ற அழியும் பொருள் களைச் சேமித்து வைக்க முடியாது.

6) பண்ட மாற்று முறையில் வீடு, நிலம் போன்ற சொத்தை எடுத்துச் செல்லும் பொருளாக மாற்றிப் பின் அவற்றை எடுத்துச் செல்வது என்பது எளி தன்று.

7) கடன்கொடுத்து, கணக்குவைத்து வாங்குவது, பண்ட மாற்று முறையில் சிக்கலானதாகும். இத் தகைய இடர்ப்பாடுகளினால் பண்ட மாற்று முறை யானது பின்னர்க் கைவிடப்பட்டது. பி.ச.

**துணை நூல்:**

**Crowher, G.,** An outline of Money, Universal Book Stall, New Delhi. 1980.

# பொருளடைவு


அகவய நோக்குக் கோட்பாடு 181
அகில இந்தியத் தொழிலாளர் பேரியக்கம் 35
அச்சுதப்ப நாயக்கர் 476
அட்டநாகபந்தம் 321
அடவு 360
அடால்பு இட்லர் 343
அடைவு 361
அணு ஆயுத சோதனைக்குத் தடை 973
அணு சக்தி பரவுவதைத் தடுக்கும் உடன்படிக்கை 973
அந்தமானியர் 680
அபிநயக்கூத்து 408
அபிநயம் 363
அபு - சூபியான் 214
அமுதசுரபி 927
அமெரிக்க நீக்கிரோக்கள் 684
அமெரிக்காவில் நாணயம் 186
அமைப்பியல் கோட்பாடு 383
அயல் துறையின் வரவு செலவுக் கணக்கு 390
அயல்நாட்டு நிறுமம் 659
அயிட்டா 682
அர்னால்டு தாயின்பீ 47
அரசியல்மயமாதலும் நவீனமயமாதலும் 292
அரசுத் துறையின் வரவு செலவுக் கணக்கு 389
அரசுத் தொழிலாளர் குழு 18
அரசு நிறுமம் 659
அரசும் புரட்சியும் 28
அரிசுடாட்டில் 414
அரை உலகக் கோட்பாடு 384
அலுவல்முறைத் தோற்றுவிப்பாளர்கள் 107
அனைத்திந்தியத் தொழிலாளர் கழகம் 14
அனைத்திந்தியத் தொழிலாளர் பேரியக்கம் 14
ஆங்கில நாடகங்கள் 428
ஆங்கிலேயர் காலத்தில் பஞ்சம் 940
ஆசியக் கழகக் கிளை நூலகம் 767
ஆசியாவிற்கான சப்பானியத் தொழுநோய் இயக்கம் 52
ஆசுகார் ஒயில்டு 413
ஆசுத்திரிய-பிரசியப் போர் 803
ஆதம் சுமித்து 63
ஆதாய இடர்தாங்கு கோட்பாடு 917
ஆதாய உறுதியின்மை தாங்கும் கோட்பாடு 917
ஆதாயக் கூலிக் கோட்பாடு 917
ஆதாயக் கோட்பாடுகள் 916
ஆதாயப் புத்தாக்கக் கோட்பாடு 917
ஆதாய வாரக் கோட்பாடுகள் 916
ஆப்பிரிக்க நீக்கிரோக்கள் 682
ஆலன்டண்டசு 221
ஆழியில் ஆதவன் 280
இக்காலப் பஞ்சாபி 953
இகாமிருகம் 435
இங்கிலாந்தில் தொழிற்புரட்சி 48
இங்கிலாந்து நாடாளுமன்றத்தின் வரலாறு 441
இடைக்காலப் பஞ்சாபி 953
இத்தாலிய நாடகங்கள் 425
இந்தியத் தேசிய தொழிலாளர் கழகம் 14
இந்தியத் தேசிய தொழிலாளர் பேரியக்கம் 35
இந்தியத் தேசிய நூலகம் 766
இந்தியத் தொழிலாளர் குழு 18
இந்திய நாடாளுமன்றம் 442
இந்தியாவில் சமூகநலப் பாதுகாப்புத்திட்டங்கள் 267
இந்தியாவில் நகரமயமாதல் 154
இந்தியாவில் நிலவுரிமை முறை 634
இந்தியாவில் நிறும வரி 661
இந்தியாவில் நேர்முக வரிகள் 833
இந்தியாவில் பஞ்ச நடவடிக்கைகள் 945
இந்தியாவில் பஞ்ச நிவாரணக் குழு 945
இந்தியாவில் பஞ்சம் 939
இந்தியாவில் பணத்தின் அளிப்பு 187
இந்து மசுதூர் சங்கம் 36
இப்போதைய நிலவுரிமை முறை 635
இயக்கநிலைக் கோட்பாடு 917
இயந்திரம் சார்ந்த நாட்டம் 353
இர்விங் பிசர் 185
இர்விங் பிசரின் நாணய மாற்றுச் சமன்பாடு 453
இரட்டை நாகபந்தம் 319
இரட்டை நாகபந்தவுரைகள் 320
இரண்டாமவரான பட்டினத்தடிகள் 960
இரயத்வாரி நிலவுரிமை முறை 635
இராகு-கேது 281
இராசசேகரன் 436
இராச மகேந்திரவரம் 300
இராசிச் சக்கர வட்டம் 277
இராணாக்களின் ஆட்சி 823
இராணி மங்கம்மாள் 475
இராதாகிருட்டிண பக்தி 577
இராபர்ட்சனின் சமன்பாடு 454
இராபர்ட்டு ரெட்பீல்டு 354
இராபர்ட்டு மெர்ட்டன் 355
இராமச்சந்திர சரித புராணம் 312
இராமலிங்க மகாராசன் 253
இராமானுசர் 890

இரிக்கார்டோவின் வாரக் கோட்பாடு 909
இருகால் நடைப்பழக்கம் 523
இலக்கியத்தில் நடுகல் 189
இலட்சியக் கோட்பாடு 383
இலியசு அன்டராணிக்கசு 412
இலெனின் 28, 371
இறைக் கோட்பாடு 581
இன்பியல் நாடகங்கள் 411
இன்னா நாற்பது 701
இனக்கலப்பு 751
உச்ச நீதிமன்றத்தின் ஆள்வரை 709
உடல்வலி நரம்பமைவுச் சோதனைகள் 353
உண்மைக் கூலி 911
உணர்ச்சி முனைப்புடைய இன்பியல் நாடகம் 402
உத்தம நிறுவனம் 671
உயர் நீதிமன்றத்தின் ஆள்வரை 710
உயிர்க் கோட்பாடு 581
உரிச்சொல் 546
உரிச்சொற் பனுவல் 546
உருசிய நாடகங்கள் 429
உரோசாக்கு மைத்தடச் சோதனை 644
உலகத் தொழிலாளர் நிறுவனம் 18
உலகளவில் இயற்கைப் பஞ்சங்கள் 938
உலகளவில் நகரமயமாதல் 153
உலோகப் பணம் 186
உழைப்பாளர் அங்காடியின் செயற்பாடு 25
உழைப்பினால் உருவாகும் தேவைமாற்றம் 15
உழைப்புத் தேவை 25
உழைப்புப் பகுப்பு 63
உழைப்பைச் சேமிக்கவேண்டிய காரணங்கள் 5
உழைப்பைச் சேமிக்கும் வகைகள் 16
உழைப்பைப் பகுத்தாய்தல் 63
உள்ளங்கால் தோற்கூற்றியல் 98
உள்ளங்கைத் தோற்கூற்றியல் 98
உள்ளங்கைப் பகுதிகளை ஆராய்தல் 101
உளப்பகுப்பாய்வுக் கோட்பாடு 896
உளப்பகுப்பாய்வு முறை 307
உளப்பகுப்பியல் பள்ளி 382
உளமருத்துவ முறை 307
உளவியல் ஆய்வுக் கோட்பாடு 383
உற்பத்தித்திறன் கோட்பாடு 914
உறுதிமொழியால் வரையறுக்கப்பட்ட நிறுமங்கள் 658
ஊரக வாணிக நாட்டம் 916
ஊரக வேலைவாய்ப்புத் திட்டம் 367, 368
ஊனமுற்றோர் உதவி 267
எசுக்கிமோவினர் 72
எஞ்சியதில் பங்குபெறும் சலுகைப் பங்குகள் 918
எட்வர்டு, மூன்றாம் 776
எழுத்தர் தொழில் நாட்டம் 353
எள்ளல் நாடகம் 404
என்றி கிப்சன் 413
ஏகநாக பந்தம் 318
ஏகநாக பந்தம் பொழிப்புரை 319
ஐரோப்பாவில் படைக்கலக் குறைப்பு 974
ஐரோப்பிய நாடகங்கள் 424
ஒப்பாரிப் பாடல்கள் 379
ஒரு குடும்ப நிறுமம் 660
ஒரு மனிதர் நிறுமம் 660
ஓரங்க நாடகம் 417
ஓரளவு நடுவுநிலைமை 195
கங்கை கொண்ட சோழபுரம் 280
கட்டளை நரம்பமைவுச் சோதனைகள் 353
கடன் நிதிக் கோட்பாடு 916
கண்டத்திட்டுகள் 929
கண்ணுக்குப் புலனாகாத கரம் 54
கந்தசாமி முதலியார்,எம். 399
கல்வியும் நவீனமயமாதலும் 292
கலப்புப் பண்பாட்டுக் கோட்பாடு 384
கழிவு நீக்கிய உற்பத்தித்திறன் கோட்பாடு 913
களவியலுரையாசிரியர் 115
கற்பனை உருவமும் குறியீட்டுமுறையும் 729
கன்னிமரா பொது நூலகம் 767
கன்னையா 399
கனடாவில் நாணயம் 186
கனவு மனம் 308
காகிதப் பணம் 186
காசிராசன் 254
காட்மாண்டு 823
காத்திருத்தல் கோட்பாடு 915
காதல் பாடல்கள் 378
காரணிப் பதிலீட்டு முறை 16
காரல் மார்க்சின் சுரண்டல் கோட்பாடு 915
காரல் மார்க்சு 39, 915
காரல் மான்கைம் 555
கால் கூன் 652
காலக் கூலி 911
காளிதாசர் 435
கிண்டல் நாடகம் 404
கிரகம் 277
கிராமிய நாட்டியங்கள் 365
கிரிமியப் போர் 802
கிருட்டிணப்பர் 468,472
கிருட்டிணப்பர், முதலாம் 468,472
கிருட்டிணப்பர், இரண்டாம் 468,472
கிரேக்க உரோமானிய நாடகங்கள் 422
கிளைக்கதை சார்ந்த நாடகம் 409
கீழ் நீதிமன்றங்கள் 710

கீன்சின் கருத்துகள் 724
கீன்சின் சமன்பாடு 454
கீன்சின் நீர்மை விருப்பக் கோட்பாடு 915
குடிமையியல் நீதி 690
குடியிருப்பு மண்டலம் 135
குடிவாரச் சீர்திருத்தங்கள் 623
குணசீலன் 462
குவிவுச் சலுகைப் பங்குகள் 918
குழந்தை நாடகங்கள் 400
குழந்தைப் பாடல்கள் 378
குழு நிருவாகம் 613
குழுப்பாடல் 410
குற்றவியல் நீதி 690
குற்றவியல் நீதிமன்ற அவமதிப்பு 708
குறும்பர் 56
குறைந்த தேசிய வருவாய் 1
கூட்டுறவுக் குழுமுறை 11
கூட்டுறவுப் பண்ணை முறை 625
கூத்த நூல் 396
கூலி 911
கூலி அமைப்பும் வருமானப் பங்கீடும் 26
கூலிக் கோட்பாடு 64, 67, 69, 70, 911
கூலி நிதிக் கோட்பாடு 911
கூலி நிருணயம் 26
கூலியின் இறுதிநிலை ஆக்கக் கோட்பாடு 912
கூலியின் புதுமைக் கோட்பாடு 913
கேட்கும் திறனறி சோதனைகள் 353
கேளாப் பங்காதாயம் 905
கொண்கான நன்னன் 301
கொண்டாட்டப் பாடல்கள் 379
கொள்கை விளக்க நாடகம் 408
கோத்தர் 56
சங்க இலக்கியம் 700
சங்கரதாசர் 398, 399
சட்ட இயலான ஒப்புதல் 198
சட்டமுறை நிறுமங்கள் 658
சண்முகம், டி.கே. 400
சதகங்கள் 702
சதாவதானம் கிருட்டிணசாமிப் பாவலர் 399
சதுர்நாகபந்தம் 320
சந்திரன் 281
சந்தை விதி 65
சப்பான் நாடகங்கள் 431
சமதருமக் கொள்கை 70
சமவாகாரம் 435
சமுதாயக் கணக்கீட்டு முறை 386
சமூகச் சீர்திருத்த நாடகங்கள் 400
சமூக நாடகம் 406
சலுகைப் பங்குகள் 917
சனி 281
சாகுந்தல நாடக ஆராய்ச்சி 397
சாச்சன சோமனா 338
சாதாரணப் பங்குகள் 918
சாம்நகர் 283
சார்சு பெர்னாட்சா 413
சார்சு, மூன்றாம் 869
சான் இசுடுவர்டு மில் 69
சான் வாட்சன் 180
சிக்கல் நாடகம் 407
சிதம்பரம் 281
சியாப்ரே சாசர் 415
சிரீகர்டின் 435
சிவப்பிரகாச சுவாமிகள் 305
சிற்பங்களில் நவக்கிரகங்கள் 280
சீமாங்கு 681
சீன நாடகங்கள் 431
சுக்கிரன் 281
சுகவாசிகள் பற்றிய கோட்பாடு 664
சுந்தரர் 481
சுழல் வளையம் 100
சூத்ரகன் 435
சூரப்ப நாயக்கர் 468, 472
சூரியக் குடும்பத்திலுள்ள கிரகங்கள் 277
சூரிய நாராயணன் 281
சூரியன் 280
சூழ்நிலைக் கோட்பாடு 384
செஞ்சி நாயக்கர்கள் 467
செய்தித்தொடர்பும் நவீனம்யமாதலும் 292
செயல்திறன் கோட்பாடு 383
செருமானிய நாடகங்கள் 425
செருமி பெந்தம் 66
செல்வமும் நுகர்வும் 726
செவ்வாய் 281
செறிந்த உற்பத்திமுறை 16
சென்னைத் தொழிலாளர் கழகம் 14
சேக்கிழார் 481
சேம்சு கீர் ஆர்டி 30
சேரிகள் 125
சேன் பாப்டிசுட்டு சே 65
சொக்கநாத நாயக்கர் 474
சோதனை நாடகங்கள் 405
சோம்பன் 540
சௌரபீடம் 280
தஞ்சை நாயக்கர்கள் 475
தடையிலா இடப்பெயர்ச்சி 54
தடையிலாக் கொள்கை 53
தடையிலா வாணிகம் 55
தப்பிரோ 682

**தமயந்தி** 294, 295
**தமிழ்நாட்டில்** தோற்பாவை நிழற்கூத்து 103
**தமிழ்நாட்டில்** நகரமயமாதல் 154
**தமிழ்நாட்டில்** வளர்ச்சித் திட்டங்கள் 164
**தமிழில்** இசை நாடகங்கள் 400
தர்க்கைம் 38, 355
தரம்வீர் 406
தலைமைக் குற்றவியல் நீதிமன்றம் 710
தறுவாய்க்கான தோற்றுவிப்பாளர்கள் 108
தனநந்தன் 206
தனி நிறுமம் 659
தனியார் வரவு செலவுக் கணக்கு 387
தாமசு இராபர்ட்டு மால்தசு 68
தார்ன்டைக்கு 181
தால்டன் திட்டம் 781
தாலாட்டுப் பாடல்கள் 378
தாவீது இரிக்கார்டோ 66
தாளம் 361
திட்டமதிப்பீடு மீள்பார்வை உத்தி 615
திம்மபகத்து 558
திமம் 435
திரிகடுகம் 256
திரிபால்கர் போர் 809
திருக்குறள் 700
திருமலை நாயக்கர் 473
திருமழிசை ஆழ்வார் 531
திருவள்ளுவர் 927
துணை நிறுமம் 659
துய்ப்புத் தவிர்ப்புக் கோட்பாடு 915
துவாதச ஆதித்தர்கள் 280
துன்ப – இன்பியல் நாடகம் 405
துன்பியல் நாடக நோக்கம் 402
துன்பியல் நாடகம் 401, 414
தூயகிழக்குத் தேவாலயத்தின் வரலாறு 718
தெருக்கூத்து 397
தென்கிழக்குப் பசிபிக்கு 929
தென்மேற்கு ஆப்பிரிக்க மக்கள் அமைப்பு 234
தென்மேற்கு ஆப்பிரிக்கா 233
தென்மேற்குப் பசிபிக்கு 929
தேசிய தொழுநோய் ஆலோசனைக் குழு 52
தேவை அளிப்புக் கோட்பாடு 908
தொங்கும் தோட்டம் 826
தொடக்கக்கால நாடகங்கள் 398
தொல்காப்பியம் 699, 758, 759
தொல்காப்பியர் 760, 761
தொலைக்காட்சி நாடகம் 420
தொழில் நுட்ப மாற்றமும் முன்னேற்றமும் 16
தொழில் மயமாகாத நாடுகளின் நிலை 1
**தொழில்மயமாதல்** 1
தொழில்மயமாதலின் விளைவுகள் 5
தொழில்மயமாதலுக்குத்தடையாயுள்ள காரணிகள் 2
தொழில்மயமாதற் காரணிகள் 2
**தொழில் மனநிறைவு** 5
**தொழில்முறை வழிகாட்டல்** 7
**தொழில் முனைவோர்** 9
தொழில் வாரியங்கள் 664
தொழில் வாழ்க்கையின் தன்மை 672
**தொழிலக உளவியல்** 10
தொழிலாசிரியர் கடமைகள் 8
தொழிலாளர் அளிப்பு 25
தொழிலாளர் இடப்பெயர்வு 17
**தொழிலாளர் இயக்கம்** 11
**தொழிலாளர் உழைப்பைச் சேமிக்கும் வகைகள்** 14
தொழிலாளர் உற்பத்தித்திறன் 16
**தொழிலாளர் கல்வி** 17
தொழிலாளர் கல்வியின் வரலாறு 18
தொழிலாளர் குடும்ப மண்டலம் 135
தொழிலாளர் சங்கங்கள் 11
**தொழிலாளர் நலம்** 19
தொழிலாளர் நலனின் முக்கியத்துவம் 20
தொழிலாளர் நலனுக்கான அணுகுமுறைகள் 20
**தொழிலாளர் பதவி உயர்வு** 22
தொழிலாளர் பற்றாக்குறை 15
தொழிலாளர் பொருளியலின் பொருளடக்கம் 25
தொழிலாளர் மேலாண்மை உறவு 15
**தொழிலாளர் வருக்கத்தின் வல்லாட்சி** 28
**தொழிலாளி** 29
**தொழிற்கட்சி** 30
தொழிற்கட்சி அரசாங்கம் 31
தொழிற்கட்சியின் வளர்ச்சி 31
**தொழிற் கல்வி** 33
தொழிற்கூடக் குழு 13
தொழிற்கூடச் சட்டம் 13
தொழிற் சங்கங்கள் 42
**தொழிற் சட்டங்கள்** 34
**தொழிற் சமூகவியல்** 36
தொழிற்சாலைக் கூலிப் பட்டாளம் 39
**தொழிற்சாலைத் தொழிலாளர்கள்** 41
**தொழிற்சாலை முறை** 43
**தொழிற்சாலை விபத்துகள்** 45
தொழிற் பாடல்கள் 378
**தொழிற்புரட்சி** 47
தொழிற்புரட்சியின் விளைவுகள் 49, 162
**தொழிற்பெயர்** 49
தொழிற்பெயர் வகைகள் 50
**தொழுநோய் மறுவாழ்வுத் திட்டங்கள்** 51
**தொறு தத்து** 53
**தொன்மைக் கட்டுப்பாடற்ற பொருளியற் கருத்துகள்** 53

தொன்மைக் கலை 55
தொன்மைப் பண்பாடு 60
தொன்மைப் பொருளியல் வளர்ச்சிக் கோட்பாடு 61
தொன்மைப் பொருளியலறிஞர்கள் 63
தொன்மை மக்கள் 71
தொன்னூல் விளக்கம் 72
தொனி மொழி 74
தோ 76
தோக்கியோ 77
தோகாலாந்து 79
தோகான் 81
தோங்கா தீவு 83
தோடர் 85,56
தோடர்மல், இராசா 89
தோடா மொழி 90
தோதகத்த வள்ளி 91
தோதோத்து 92
தோபிகா 93
தோபு 93
தோரமானன் 96
தோலாமொழித் தேவர் 96
தோழப்பர் 97
தோற்கூற்றியல் 97
தோற்பாவை நிழற்கூத்து 102
தோற்பொம்மைகளைத் தயாரிக்கும் முறை 102
தோற்றக் கொள்கை 106
தோற்றுவிப்பாளர் 107
தோற்றுவிப்பாளரின் நிலை 108
தோற்றுவிப்பாளரின் பொறுப்பு 108
தோனிசு, பெர்டினாண்டு சூலியசு 109
தௌ 111
தௌலதாபாத்து 111
தௌலி 112
ந 113
நக்கண்ணையார் 113
நக்கவாரம் 114
நக்கீரர் 114
நகர அரசுகள் 117
நகர உளவியல் 123
நகர, ஊரகச் சுகாதாரம் 119
நகரங்களின் வகைப்பாடுகள் 149
நகரச் சமுதாயம் 124
நகரச் சமூகவியல் 122
நகரச் சிக்கல்கள் 124
நகரச் சூழலியல் 132,123
நகரச் சூழலியற் கோட்பாடுகள் 134
நகரப் பொருளியல் 140
நகரம் 141,124
நகர மக்கள் கல்வி 150
நகரமயமாதல் 152
நகரமயமாதலும் கிராம வளர்ச்சியும் 140
நகரமயமாதலும் நவீனமயமாதலும் 292
நகர மானிடவியல் 158
நகரமைப்புத் திட்டம் 162, 124
நகரமைப்பு முறைகள் 167
நகர வடிவமைப்பியல் 123
நகராட்சியியல் 169
நகருக்குப் போய் வருவோர் மண்டலம் 135
நகுடன் 171
நகுலன் 172
நகுவர் 173
நகைச்சுவை 404
நகைப்பு இன்பியல் 403
நங்கபர்வத சிகரம் 174
நச்சர் 174
நச்சினார்க்கினியர் 174
நச்சுமனார் 176
நச்செள்ளையார் 176
நசீர் அக்பராபாதீ 176
நசீர் சைநாப்பூர் 177
நசுருல் இசுலாம், காசி 176
நஞ்சன் குடி 178
நஞ்சீயர் 179
நஞ்சு நூல் 179
நட்சத்திரக் கோட்பாடு 134
நடத்தைக் கொள்கை 180
நடத்தைக் கோட்பாடு 181
நடத்தை மாற்றும் அறுவை மருத்துவம் 181
நடப்புக் கணக்கு 182
நடப்பு நாணயம் 185
நடராசன், பா. 187
நடராசனார், கீரனூர் 188
நடனக் கச்சேரி முறை 361
நடாதூர் அம்மாள் 188
நடுகல் 189
நடுநிலை நாடுகள் 191
நடுநிலைப் பள்ளிகள் 191
நடுவண் ஊதிய ஆணையம் 24
நடுவர் தீர்ப்பு உடன்பாட்டின் விளைவு 193
நடுவர் தீர்ப்பு உடன்பாடு 193
நடுவர் தீர்ப்புக்கு உரிய வழக்குகள் 193
நடுவர் தீர்ப்பு முறை 192
நடுவர் தீர்ப்பு முறையின் தீமைகள் 193
நடுவர் தீர்ப்பு முறையின் நன்மைகள் 193
நடுவில் திருவீதிப் பிள்ளைபட்டர் 194
நடுவுநிலைமை 195
நடுவுநிலைமை உடன்படிக்கை 196
நடேச சாத்திரி, ச.ம. 196

நடேச பிள்ளை, சு. 196
நடேசன், சி.ஏ. 197
நடைபாதைக் குடியிருப்புகள் 126
நடைமுறை ஒப்புதல் 198
நடைமுறைக் கூலி நிருணயம் 913
நடைமுறை மூலதனம் 198
நடையியல் 200
நத்தத்தனார் 202
நத்தானியல் ஆதார்ன் 202
நதிநீர்ப் போக்குவரத்து 203
நந்தகோபன் 205
நந்தர்கள் 205
நந்தனார் 206
நந்தனார் சரித்திரக் கீர்த்தனை 206
நந்தா தேவி 207
நந்தி 207
நந்திக் கலம்பகம் 209
நந்திக்கிராமம் 210
நந்திபுர விண்ணகரம் 210
நந்திவர்மன் 211
நந்தீசர் கண்ணி 211
நந்தீசுவர நோன்பு 211
நப்பசலையார் 212
நப்பண்ணனார் 212
நப்பாலத்தனார் 212
நப்பின்னை 213
நப்பூதனூர் 213
நபிகள் நாயகம் 213
நம்பகத்தன்மை 215
நம்பாசுப் பழங்குடி 216
நம்பாடுவான் 219
நம்பிக்கை உரிமைக் கோட்பாடு 219
நம்பிக்கைகள் 220
நம்பிக்கை மோசக் குற்றம் 222
நம்பிகாளியார் 222
நம்பி குட்டுவனார் 223
நம்பி திருவிளையாடல் 223
நம்பி நெடுஞ்செழியன் 223
நம்பியகப் பொருள் 223
நம்பியாண்டார்நம்பி 481
நம்பியாண்டார் நம்பிகள் 223
நம்பி யாரூரர் 224
நம்பிள்ளை 224
நம்புறுதி 224
நம்பூதிரிகள் 226
நம்மாழ்வார் 228
நமச்சிவாயத் தம்பிரான் 229
நமச்சிவாய மாலை 229
நமச்சிவாய முதலியார், கா. 230
நமச்சிவாயமூர்த்தி 231
நமிநந்தியடிகள் நாயனார் 232
நமீபியா 233
நயனப் பத்து 235
நயாகரா நீர்வீழ்ச்சி 235
நர்மதை 235
நரக அசுரன் 237
நரகம் 236
நரகாசூரன் 237
நரசிங்க முனையரைய நாயனார் 238
நரசிம்ம குகைக்கோயில் 462
நரசிம்ம மேத்தா 239
நரசிம்ம வர்மன் 239
நரம்பியல் உளவியல் 239
நரம்புசார் உடல்சோர்வு நோய் 241
நரம்புசார் கற்பனைப் பிணி 241
நரம்புவழி உளப்பிணிகள் 242
நரலோக வீரன் 243
நரிக்குரவர் 244
நரிவிருத்தம் 248
நரிவெரூஉத்தலையார் 248
நரேந்திரதேவு, ஆச்சாரியா 249
நரேந்திரதேவு வேளாண்மைத் தொழில்நுட்பப் பல்கலைக்கழகம் 249
நரேந்திரர் 250
நரைமுடி நெட்டையார் 250
நல்கொண்டா 250
நல்தகுநிலை 251
நல்லச்சுதனார் 252
நல்லசாமிப் பிள்ளை, சே. எம். 252
நல்லசிவன் பிள்ளை, 253
நல்லதம்பி 253
நல்லதங்காள் 253
நல்லதங்காள் கதை 253
நல்லந்துவனார் 254
நல்லழிசியார் 255
நல்லாதனார் 256
நல்லாப்பிள்ளை 256
நல்லாப்பிள்ளை பாரதம் 257
நல்லாவூர் கிழார் 257
நல்லாறன் மொழிவரி 258
நல்லியக் கோடன் 258
நல்லிறையனார் 258
நல்லுருத்திரனார் 259
நல்லூர் 259
நல்லூர்ப் புராணம் 259
நல்லெண்ணம் 260
நல்லெழுநியார் 260
நல்வழி 261

